உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாசபரம்பரைத்திருவாவடுதுறை ஆதீனத்துத்

திராவிடமஹாபாஷ்ய கர்த்தராகிய

சிவஞானயோகிகள்

அருளிச்செய்த

# காஞ்சிப்புராணம்.

## முதற்காண்ட மூலம்

சோடசாவதானம்

தி - க - சுப்பராயசெட்டியாரவர்களாலும்

ஸ்ரீமத் - கா ஏகாம்பரசிவயோகிகள்

மாணாக்கர்

கா - ஆலாலசுந்தரம்பிள்ளையவர்களாலும்

இயற்றிய உரையோடு

ஏகாம்பரநாதராலயதர்மகர்த்தர்

கர் - மு - சுப்பராயமுதலியார்

ஸ்ரீமத் - மெ - லக்ஷுமணஞ்செட்டியார்

விருப்பத்தின்படி

சின்னகாஞ்சிபுரம்

கு - அப்பாசாமிசெட்டியாரால்

சென்னை

பண்டித மித்திர யந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விகாரி௵ [illegible]

விலை ரூபா ௪

# அறிவிப்பு

இந்நூலுக்குரை, சிறப்புப்பாயிரம் விநாயகக்காப்பு "இருகவுட்டுளோ" என்னுஞ் செய்யுள் தொடங்கி வீராட்டகாசப்படலம் "புக்கபின்" என்னும் செய்யுள்காறும் சோடசாவதானம். தி-க-சுப்பராயசெட்டியாரவர்களாலும், ஷை படலம் (கூக) வது செய்யுள்தொடங்கி இறுதிகாறும், கா-ஆலாலசுந்தரம்பிள்ளையவர்களாலும் இயற்றப் பட்டன.

இப்புராணத்துள் ஆங்காங்கு எஞ்சிநின்ற சில சரித்திரங்களும் பொருள் விளக்கங்களும் வடமொழியிற் கண்டவாறு எடுத்துக்காட்டி யிருக்கின்றன.

ஸ்ரீ

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

மேலுமயிலுநதுணை.

# சிறப்புப்பாயிரம்.

## திருமயிலை - சண்முகம்பிள்ளையவர்கள் பாடிய

### அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

பூமேவுதிருவுந்திப்புதலேனான்வழிபாடுபொருந்தவாற்று
மாமேவுதியாகராசப்பெருமான்வாரூட்டினின்றுமண்மேற்
காமேவுகாவிரிநாட்டினினென்றும்வீற்றிருப்பக்கருதிவாழின்
நாமேவுமிந்நாட்டினுைத்தநாடெங்குளதோநவிலினம்மா. (௧)

அத்தகுநாட்டெமையாண்டமூலர்பிரானருந்தமிழ்மந்திரமாமாலை
இத்தறையோர்பாசமோசனமெய்தித்திருவடிப்பேறெய்தநல்குஞ்
சித்தரெலாம்வழிபடுந்தென்றுறைசைநகராதீனத்தேசிகேசன்
வித்தகசற்குருநமச்சிவாயன்மரபினில்வருமேதாவியாவோன், (௨)

சிவஞானபாடியமுஞ்சிற்றுரையுஞ்சிவஞானசித்திக்கென்றும்
பவஞானம்பாற்றுமொருபொழிப்புரையுமேனையவும்பரிவினாற்றி
சிவஞானமொருநாயேனெளிதெய்தச்சிறுமையெலாந்தவிர்த்தேயாண்ட
சிவஞானமாதவன்செய்காஞ்சிநகாமான்மியகருத்திறமபாவண்ணம். (௩)

பழுதின்முதற்காண்டவுரையஞ்ஞான்றகுறுந்தொகைக்குப்பரந்தகீர்த்தி
விழுமியபேராசிரியர்நச்சருரைசெய்தவாவியந்திஞ்ஞான்று
கழிமகிழ்வினுரைதந்தார்வடநூலைததழிஇயாருங்கவறெறத்தக்
கொழிதமிழ்வாணர்களென்னக்கடல்சூழ்மாஞாலததுக்குறுகிவாழ. (௪)

இணையரிலாரென்றறைதுமென்றனுருயிரிருகண்ணென்னவோங்குந்
தணையணையமீநாட்சிசுந்தரநாவலரேறுதன்பாற்கற்ற
வினையமலிகவிப்புலவன்சுப்பராயப்புலவன்வியனேகம்பத்
தினையறவாலாசுந்தனென்றிருவோருஞ்சிறப்பமாதோ. (௫)

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானயோகிகள் வரலாறு.

பாண்டிவளநாட்டிலே பொதியமலைச்சாரலிலே, பாபநாசமென்னுந் திருப்பதியைச்சார்ந்த விக்கிரம சிங்கபுரத்திலே, அகத்திய மகாமுனிவரிடத்தே ஏழுதலைமுறையளவும் பிறைமதிபோல முறைறயேவளர்ந்து அருட்புலமை நிரம்புமெண்ணம் வரம்பெற்ற பரம்பரைச் சைவ வேளாள குலத்திலே, சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவராய்க் கல்விச்செல்வம் போலப் பொருட்செல்வமும் ஒருங்குடையராயிருந்த ஆனந்தக்கூத்தர் என்பவருக்கு அவர் மனைவியாகிய கற்பினிற் சிறந்த மயிலம்மையார் திருவயிற்றிலே, ஏழாவது தலைமுறையாகத் தமிழ்நாடுசெய்த தவத்தானே, திருவவதாரஞ் செய்து முக்களாலிங்கம் என்னும் பிள்ளைத் திருநாமம்பெற்று ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களோடு வளருவாராயினர்.

பின்பு முக்களாலிங்கர் ஐந்தாமாண்டில் பிதா மாதாக்களாலே வித்யாரம்பஞ் செய்விக்கப்பெற்றுப் பாடசாலையில் அமர்ந்தனர்; அங்ஙனம் அமரும்பொழுது, திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து சிவஸ்தல யாத்திரையாகப் புறப்பட்ட சில முனிவர்கள் விக்கிரம சிங்கபுரத்துத் திருவீதியிலே சென்றார்கள்; பாடசாலையினின்றும் புறப்பட்ட முக்களாலிங்கர் அம்முனிவர்களைச் சந்தித்துத் தரிசித்து வணங்கி "சுவாமிகள் அடியேன் கிருகத்திற் றெழுந்தருளித் திருவமுதுசெய்து பின்பு சென்றருளவேண்டும்" என்று பிரார்த்திக்க அம்முனிவர்கள் மகிழ்ந்து இவர் ஆண்டின் இளையர் அறிவின் முதி[illegible]மென்று முக்களாலிங்கர் வழிபாட்டுக்கிரங்கி, விருப்பத்தோடு உடன்பட்டனர்; உடன்பட்ட முனிவர்கள் அவர் பிறகே கிருகத்துக்குப்போய் முக்களாலிங்கர் அருமைக் கருத்தையுணர்ந்து அருந்ததியனுஞ் சிறந்த மயிலம்மையார் உபசரிக்கத் திருவமுதுசெய்து சென்றருளினார்கள். முக்களாலிங்கர் தமது கருத்தின்படி அடியார்களை யுபசரித்த தாயாரைப்பற்றி "அருந்ததியென்னம்மை யடியவர்கட்கென்று-மிருந் தவமுதளிக்குஞ் செல்வி - பொருந்தவே, யானந்தக்கூத்தரகமகிழத் தொண்டுசெயு-மானந்தவாதமயில்." என்றொருசெய்யுளை இயற்றியருளினார். பிறகே போயிருந்த ஆனந்தக்கூத்தர் வீட்டிற்கு வந்து, நிகழ்ந்த அற்புதச் செய்திகளைக் கேள்வியுற்றுப் பேரின்பக்கடலிலே முழுகினார்.

உடனே ஆனந்தக்கூத்தர் புத்திரராகிய முக்களாலிங்கரோடு ஆதீன முனிவர்களிடத்தேபோய் வணங்கியவழிச் சத்திநிபாதமுடைய புத்திரர் பிறவிப்பெருந்துன்பக் கடலினின்றுங் கரையேறக்கருதி, அம்முனிவர்களோடு தாஞ்செல்லவேண்டுமென்னுங் குறிப்பினை யுணர்ந்தத் தந்தையார் புத்திரரைப் பிரியச்சிறிதும் மனமில்லாதிருந்தும் ஒருவாறிசைந்து வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

தந்தையார் நீங்கிய பின்பு, முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு வழிக்கொண்டு மார்க்கங்களிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு சோணாட்டிலுள்ள திருவாவடுதுறையை யடைந்து ஆலயத்திலுள்ளே புகுந்து, ஆதீனமுதற்

குரவராகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணோக்கம் பெற்றுக்கொண்டு அப்பொழுது சின்னபட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானாசாரியராகிய பின் வேலப்ப தேசிகரை ஒடுக்கத்திலேபோய்த் தரிசித்துப் பேரன்போடு வணங்கினார். பின்னர் ஞானதேசிகரிடத்தே சைவ சந்நியாசமும் சிவதீக்ஷையும் சிவஞானயோகிகளென்னுந் தீக்ஷாநாமமும் பெற்று மெய்கண்ட சாத்திர பண்டார சாத்திரங்களைக் கேட்டருளினார். சிவஞானயோகிகள் அகத்திய மகாமுனிவர் வரத்தால் அவதரித்தருளியவராகலின் எளிதிலே வடமொழிக்கடலும் தென்மொழிக்கடலும் முற்றொருங்குணர்ந்து மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராயமர்ந்தருளினார், வேலப்பதேசிகர் சிவஞானயோகிகளுக்கு உபதேசித்தருளிய ஞானாசாரியரென்பது "எவ்வெவைகோட்படு பொருளுமஞ்செழுத்தினடக்கியவற்றியல் காட்டி, மெய்ம்மை கையஞ்சவத்தையினு நிற்குமுறையோது முறை விளங்கத்தேற்றி, யவ்வெழுத்திறுவளீடு மறிவித்துச் சிவபோகத்தழுத்தி நாயேன், செய்வினையுங் கைக்கொண்ட வேலப்பதேசிகன்றாள் சென்னிசேர்ப்பாம்" என இக்காஞ்சிப்புராணத்துட் கூறியவாற்றால் விளங்கும்

சிவஞான யோகிகள் ஜமதக்கினி முனிவருடைய புத்திரரும் அகத்தியமுனிவருடைய முதன்மாணாக்கரும் இடைச்சங்கப் புலவர் ஐம்பத்தொன்பதின்மருள் ஒருவருமாகிய திரணதூமாக்கினியென்னுந் தொல்காப்பிய முனிவர் அருளிச்செய்த இலக்கணநூலாகிய தொல்காப்பியத்திற்கு உரையாசிரியராகிய இளம்பூரணர் செய்த உரையாகிய இளம்பூரணமும் சேனாவரையர் செய்த உரையாகிய சேனாவரையமும் நச்சினார்க்கினியர் செய்த நச்சினார்க்கினியமும் எனப்படுமூன்றுரைகளினுமுள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும் பொருட்டு அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும் முதற்சூத்திரத்திற்கும் சூத்திரவிருத்தியெனப் பெயர்பெற்ற பாஷ்யமும், வடமொழித் தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பும், நன்னூலுக்குச்சங்கர நமச்சிவாயப் புலவர்செய்த புத்துரையாகிய விருத்தியுரைத் திருத்தமும் செய்தருளினார். இவை மூன்றும் திராவிட மகாபாஷ்யத்திற்கு அங்கங்கள் எனப்படும்.

அன்றியும் சர்வாத்ம சம்பு சிவாசாரியர் அருளிச்செய்த சததிய ரூப சித்தாந்தப் பிரகாசிகையை அவ்வாறே மொழிபெயர்த்தருளினார். அன்றியும் மெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளிய வார்த்திகப் பொழிப்பாகிய சிவஞானபோதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் விளங்கும் வண்ணம் திராவிட மகாபாஷ்யமெனப் பெயர்பெற்ற விருத்தியுரையும், இலகு வியாக்கியானமாகிய சிற்றுரையும் அருணந்தி சிவாசாரியார் அருளிச்செய்த சிவஞானசித்தியார் சுபக்ஷத்திற்குப் பொழிப்புரையுஞ் செய்தருளினார். சிவாக்கிய சோழமகாராஜா காலத்திலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய ஆசாரிய சரணராகிய ஸ்ரீ ஹரதத்த சிவாசாரியர் வைஷ்ணவமத கண்டனஞ்செய்து சைவமதஸ்தாபனஞ் செய்யும்பொருட்டு நெருப்பிலே பழுக்கக்காய்ச்சிய இருப்பு முக்காலியிலே எழுந்தருளியிருந்து சிவபெருமானே பரம்பொருளென இருபத்திரண்டு ஏதுக்களாலே நாட்டியருளிய சுலோக பஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும், ஸ்ரீ அப்பய தீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவ விவேக மூலசுலோகங்களின் மொழிபெயர்ப்பும் இக்காஞ்சிப்புராணத்தின் முற்பாகமொழிபெயர்ப்புஞ் செய்தருளினார்.

அன்றியும் பெரும்பாலும் உண்மை நாயன்மார் சரிதமுதலியவற்றைத்தழுவிப் பூருவார்த்தமும் அ[illegible]க்காட்ட கத் திருவள்ளுவநாயனார் திருக்குறள் உத்தரார்த்தமுமாகக்கொண்டு சோமேசர் முதுமொழிவெண்பா, யமகரூபமான திருவேகம்பரந்தாதி, திருக்ரூபமான திருமுல்லைவாயிலந்தாதி, குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப் பத்தந்தாதி, இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி, கச்சியானந்த

## சிவஞானயோகிகள் வரலாறு.

விட்டமுதனுளவனுங் கொண்டொறுப்பு விசையேவுங், கறையேற விட்டமுதல்வா வுன்னையன்றியு மோர் கதியுண்டாமோ.' என்று செய்யுளைப் பேசுவதுபோலப் பூர்த்திசெய்தருளினர்.

இங்ஙனம் உலோகோபகாரமாகப் பலவுரைகளையும் பலநூல்களையும் பலகண்டனங்களையுஞ்செய்து பல நன்மாணாக்கர்களுக்குப் போதித்து, வடமொழியினுந் தென்மொழி சிறந்த தென்றும்படி அபிவிருத்திசெய்து தவமே திருவுருக்கொண்டாற்போலும் விளங்கிச் சிவப்பேற்றிற்குக் காரணமாகிய நிட்டையில் வீற்றிருந்தருளவெண்ணித் திருவாவடுதுறையை வந்தடைந்து நிட்டைகூடிச் சிவானந்தமுற்றுச் சித்திரை மதி ஆயிலிய நக்ஷத்திரத்திலே சிவபரிபூரண தசையடைந்தனர்.

"மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பரலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
றிரு மேனி நீங்கு தினம்."

சிவஞானயோகிகளுக்கு மாணாக்கர்கள் இலக்கணம் சிதம்பரநாதமுனிவர், கச்சியப்பமுனிவர்,தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர்,காஞ்சிபுரம் சரவணபத்தர்,இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளை முதலாகிய பன்னிருவருளர்.

அவருள்ளே இலக்கணம் சிதம்பரநாதமுனிவர் திருப்பாதிரிப்புலியூர்ப் புராணத்தை மொழிபெயர்த்தனர்.

கச்சியப்பமுனிவர் திருவானைக்காப்புராணம் பூவாளூர்ப்புராணம், பேரூர்ப்புராணம், திருத்தணிகைப்புராணம், விநாயகபுராணம், காஞ்சிப்புராணத்து இரண்டாங் காண்ட மொழிபெயர்ப்புகளையும், சென்னை விநாயகர்பிள்ளைத்தமிழ், யமகவந்தாதி, கச்சியானந்தருத்திரேசர்வண்டுவிடுதூது, பதிற்றுப்பத்தந்தாதி தணிகையாற்றுப்படை பதிற்றுப்பத்தந்தாதி, பஞ்சாக்கரதேசிகரந்தாதி,முதலியவற்றையும் இயற்றியருளினர்; இவர் தம்மாணாக்கரிற் சிறந்த கந்தப்பையர்க்குண்டான குன்மநோயை மாற்றற்பொருட்டுத் தணிகையாற்றுப்படை பாடியருளினர் பின்னும் பேரூரில் வசித்தபோது அம்பலவாணர்மீது ஒரு பிரபந்தம்பாடி மழை வருவித்ததும், பட்டீசர்மீது பல பதிகங்கள் பாடிப் பலருக்குக் குட்டநோய் முதலியவற்றைப் போக்கியுமருளினர்.

தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் துறைசைக்கோவை, கலைசைக்கோவை கலைசைச்சிலேடைவெண்பா, சிதம்பரேசர்வண்ணம், திருக்குற்றாலச்சித்தர் சபைத்திருவிருத்தம், பழநி முருகக்கடவுள் பஞ்சரத்நமாலை, சுப்பிரமணியர் திருவிருத்தம், திருத்தணிகை திருவிருத்தம், திருச்சிற்றம்பலதேசிகர்மீது சிந்து பஞ்சரத்நமாலை, அம்பலவாணதேசிகர்மீது ஆனந்தக்களிப்பு, சிவஞானயோகிகள்மீது கீர்த்தனைச் செய்யுள் முதலியவற்றை இயற்றியருளினர். சுப்பிரமணியர் திருவிருத்தமும் திருத்தணிகைத் திருவிருத்தமும் முறையே குட்டரோகியும் அந்தகனுமாகிய இருவர் பொருட்டுச் செய்து கொடுத்தவளவில் அவைகளை அவ்விருவரும் முருகக்கடவுள் சந்நிதியில் ஓதிக் குட்டரோகமும் அந்தகத்தன்மையு நீங்கியுய்ந்தனர்.

மெய்கண்டதேசிகன் றிருவடி வாழ்க.

சிவஞானயோகிகள் சேவடிவாழ்க.

வரலாறுமுற்றிற்று.

---

உ

சி வ ம ய ம்.

### திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

## திருஏகம்பத்

# தேவாரப்பதிகங்கள்.

பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

வெந்தவெண்பொடிப்பூசுமார்பின்விரிநூலொருபால்பொருந்தக்
கந்தமல்குகுழலியொடுங்கடிபொழிற்கச்சிதன்னு
ளந்தமில்குணத்தாரவர்போற்றவணங்கினோடாடல்புரி
யெந்தைமேவியவேகம்பந்தொழுதேத்தவிடர்கெடுமே. (௧)

வரந்திகழுமவுணர்மாநகர்மூன்றுடன்மாய்ந்தவியச்சரந்
துரந்தெரிசெய்ததாழ்சடைச்சங்கரன்மேயவிடங்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவந்
திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௨)

வண்ணவெண்பொடிப்பூசுமார்பின்வரியரவம்புனைந்து
பெண்ணமர்ந்தெரியாடல்பேணியபிஞ்ஞகன்மேயவிடம்
விண்ணமர்நெடுமாடமோங்கிவிளங்கியகச்சிதன்னுட்
டிண்ணமாம்பொழில்சூழ்ந்தவேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௩)

தோலுநூலுந்துதைந்தவரைமார்பிற்சுடலைவெண்ணீறணிந்து
காலன்மாள்வுறக்காலாற்காய்ந்தகடவுள்கருதுமிட
மாலைவெண்மதிதோயுமாமதிற்கச்சிமாநகரு
ளேலநாறியசோலைசூழேகம்பமேத்தவிடர்கெடுமே. (௪)

தோடணிமலர்க்கொன்றைசேர்சடைத்தூமதியம்புனைந்து
பாடலன்மறையாகப்பல்கணப்பேய்களவைசூழ
வாடல்வெண்டலையோடனலேந்திமகிழ்ந்துடனாடல்புரி
சேடர்சேர்கலிக்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௫)

சாகம்பொன்வரையாகத்தானவர்மும்மதில்சாயவெய்
தாகம்பெண்ணொருபாகமாகவரவொடுநூலணிந்து
மாகந்தோய்மணிமாடமாமதிற்காஞ்சிமாநகரு
ளேகம்பத்துறையீசன்சேவடியேத்தவிடர்கெடுமே. (௬)

வாணிலாமதிபுல்குசெஞ்சடைவாளரவம்மணிந்து
நாணிடத்தினில்வாழ்க்கைபேணிநகுதலையிற்பலிதேர்ந்
தேணிலாவரக்கன்றனீண்முடிபத்துமிறுத்தவனூர்
சேணுலாம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௭)

பிரமனுந்திருமாலுங்கைதொழப்பேரழலாயபெம்மா
னரவஞ்சேர்சடையந்தன்னணங்கினோடமருமிடங்
கரவில்வண்கையினார்கள்வாழ்கலிக்கச்சிமாநகருண்
மரவஞ்சூழ்பொழிலேகம்பந்தொழவல்வினைமாய்ந்தறுமே. (௯)

குண்டுபட்டமணாயவரோடுங்கூறைதம்மெய்போர்க்கு
மிண்டர்கட்டியகட்டுரையவைகொண்டுவிரும்பேன்மின்
விண்டவர்புரமூன்றும்வெங்கணையொன்றினாலவியக்
கண்டவன்கலிக்கச்சியேகம்பங்காணவிடர்கெடுமே. (௧௦)

ஏரினார்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரினார்மணிமாடமோங்குகழுமலநன்னகருட்
பாரினார்தமிழ்ஞானசம்பந்தன்பரவியபத்தும்வல்லார்
சீரினார்புகழோங்கிவிண்ணவரொடுசேர்பவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
யிறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே. (௧)

நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிள
முச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பமேயகறைக்கண்டனை
நச்சியேதொழுமினும்மேல்வினைநையுமே. (௨)

பாராருமுழவமொந்தைகுழல்யாழொலி
சீராலேபாடலாடல்சிதைவில்லதோ
ரேரார்பூங்கச்சியேகம்பனையெம்மானைச்
சேராதாரின்பமாயந்நெறிசேராரே. (௩)

குன்றேய்க்குநெடுவெண்மாடக்கொடிகூடிப்போய்
மின்றேய்க்குமுகில்கடோயும்வியன்கச்சியுண்
மன்றேய்க்குமல்குசீரான்மலியேகம்பஞ்
சென்றேய்க்குஞ்சிந்தையார்மேல்வினைசேராவே. (௪)

சடையானைத்தலைகையேந்திப்பலிதருவார்தங்
கடையேபோய்மூன்றுங்கொண்டான்கலிக்கச்சியுட்
புடையேபொன்மலருங்கம்பைக்கரையேகம்ப
முடையானையல்லதுள்காதெனதுள்ளமே. (௫)

மழுவாளோடெழில்கொள்சூலப்படைவல்லார்தங்
கெழுவாளோரிமையாருச்சியுமையாள்கங்கை
வழுவாமேமல்குசீரால்வளரேகம்பந்

விண்ணுளார்மறைகள்வேதம்விரித்தோதுவார்

(எ)

தூயானைத்தூயவாயம்மறையோதிய
பேவாட்டிய

(அ)

நாகம்பூண்ேறேறனறுங்கொன்றைத்தார்
பாகம்பெண்பலியுமேற்பாமறைபாடுவ
ரேகம்பமேவியாடுமிறையிருவர்க்கு
மாகம்பமறியும்வண்ணத்தவனல்லனே. (௯)

போதியார்பிண்டியாரென்றிவர்பொய்ந்நூலை
வாதியாவம்மினம்மாவெனுங்கச்சியு
ளாதியார்மேவியாடுந்திருவேகம்ப
நீதியாற்றொழுமினும்மேல்வினைநில்லாவே. (௧௦)

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக்

சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம்
பந்தன்சொற்பாடியாடக்கெடும்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

நக்குக்குறள். பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கருவார்கச்சித்திருவேகம்பத்
தொருவாவென்னமருவாவினையே. (௧)

மதியார்கச்சிநதியேகம்பம்
விதியாலேத்தப்பதியாவாறே. (௨)

கலியார்கச்சிமலியேகம்பம்
பலியார்போற்றநலியாவினையே. (௩)

வரமார்கச்சிப்புரமேகம்பம்
பரவாவேத்தவிரவாவினையே. (௪)

படமார்கச்சியிடமேகம்பத்
துடையாயென்னவடையாவினையே. (௫)

ேவகமபங்

குலவாவேத்தக்கலவாவினையே. (௬)

கரியின்னுரியன்திருவேகம்பன்
பெரியபுரமூன்றெரிசெய்கானே (எ)

இலங்கையரையன்...
கலங்கொ...விடர்கெடுமே.

மறையோனரியுமறியாவனலன்
னெறியேகம்பங்குறியாற்றொழுமே. (௯

பறியாத்தே
செறிகொள்கம்பங்குறுகுவோமே. (௧௦)

கொச்சைவேந்தன்கச்சிக்கம்ப
மெச்சுஞ்சொல்லைநச்சும்புகழே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருஇயமகம்.

பாயுமால்விடைமேலொருபாகனே பாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவர்வேதத்துவனியே சோதிமாலெரிவேதத்துவனியே
யாயுநன்பொருணுண்பொருளாதியே யாலநீழல்வரும்பொருளாதியே
காயவின்மதன்பட்டதுகம்பமே கண்ணுதற்பரமற்கிடங்கம்பமே. (௧)

சடையணிந்ததுவெண்டலைமாலையே தம்முடம்பிலும்வெண்டலைமாலையே
படையிலங்கையிற்சூலமதென்பதே பரந்திலங்கையிற்சூலமதென்பதே
புடைபரப்பனபூதகணங்களே போற்றிசைப்பனபூதகணங்களே
கடைகடோறுமிரப்பதுமிச்சையே கம்பமேவியிருப்பதுமிச்சையே. (௨)

வெள்ளெருக்கொடுதும்பைமிலைச்சியே வேறுமுன்செலத்தும்னபமிலைச்சியே
யள்ளுநீறதுபூசுவதாகமே யானமாசுணமூசுவதாகமே
புள்ளியாடையுடுப்பதுகத்துமேபோனவூழியுடுப்பதுகத்துமே
கள்ளுலாமலர்க்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. (௩)

முற்றலாமையணிந்தமுதல்வரே மூரியாமையணிந்தமுதல்வரே
பற்றிவாளரவாட்டும்பரிசரே பாலுநெய்யுகந்தாட்டும்பரிசரே
வற்றலோடுகலம்பலிதேர்வதே வானினோடுகலம்பலிதேர்வதே
கற்றிலாமனங்கம்பமிருப்பதே காஞ்சிமாநகாக்கம்பமிருப்பதே. (௪)

வேடனாகிவிசையற்கருளியே வேலைநஞ்சமிசையற்கருளியே
யாடுபாம்பரையார்த்ததுடையதே யஞ்சுபூதமுமார்த்ததுடையதே
கோடுவான்மதிக்கண்ணியழகிதே குற்றமின்மதிக்கண்ணியழகிதே
காடுவாழ்பதியாவதுமும்மதே கம்பமாபதியாவதுமும்மதே. (௫)

இரும்புகைக்கொடிதங்கழல்கையதே யிமயமாமகடங்கழல்கையதே
யரும்புமொய்த்தமலாப்பொறைதாங்கியே யாழியான்றன்மலாப்பொறைதாங்கியே
பெரும்பகனடமாடுதல்செய்துமே பேதைமாாமனம்வாடுதல்செய்துமே
கரும்புமொய்த்தெழுகம்பமிருப்பதே காஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. (௬)

முதிரமங்கைதவஞ்செய்தகாலமே முன்புமங்கைதவஞ்செய்தகாலமே
வெதிர்களோடகில்சந்தமுருட்டியே வேழமோடகில்சந்தமுருட்டியே
யதிரவாறுவரத்தெழுவத்தொடே யானையாடுவரத்தெழுவத்தொடே
கதிர்கொள்பூண்முலைக்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. (௭)

பண்டாக் ——— னெடுத்தபலத்தையே

யுண்டுழன்றதுமுண்டத்தலையிலே யுடுபதிக்கிடமுண்டத்தலையிலே
கண்டநஞ்சமடக்கினைகம்பமே கடவுணீயிடங்கொண்டதுகம்பமே. (அ)

தூணியானசுடர்விடுசோதியே சுத்தமானசுடர்விடுசோதியே
பேணியோடபிரமப்பறவையே பித்தனானபிரமப்பறவையே
சேணினோடுகீழூழிதிரிந்துமே சித்தமோடுகீழூழிதிரிந்துமே
காணநின்றனருற்றதுகம்பமே கடவுணீயிடமுற்றதுகம்பமே. (கூ)

ஓருடம்பினையீருருவாகவே யுன்பொருட்டிறமீருருவாகவே
யாருமெய்தற்கரிதுபெரிதுமே யாற்றலெய்தற்கரிதுபெரிதுமே
தேரும்மரியாதுதிகைப்பரே சித்தமும்மறியாதுதிகைப்பரோ
கார்நிறத்தமணர்க்கொருகம்பமே கடவுணீயிடங்கொண்டதுகம்பமே. (௧0)

கந்தமாரபொழில்சூழ்தருகம்பமே காதல்செய்பவர்தீர்த்திடுகம்பமே
புந்திசெய்துவிரும்பிப்புகலியே பூசுரன்றன்விரும்பிப்புகலியே
யந்தமில்பொருளாயினகொண்டுமே யண்ணலின்பொருளாயினகொண்டுமே
பந்தனின்னியல்பாடியபத்துமே பாடவல்லவராயினபத்துமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# திருவேகம்பத்தேவாரப்பதிகங்கள்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறும்வித்தகனை
யரவாடச்சடைதாழவங்கையினனலேந்தி
யிரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. (க)

தேனோக்குங்கிளிமழலையுமைகேள்வன்செழும்பவளந்
தானோக்குந்திருமேனிதழலுருவாஞ்சங்கரனை
வானோக்கும்வளர்மதிசேர்சடையானைவானோர்க்கும்
ஏனோர்க்கும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. (உ)

கைப்போதுமலர்தூவிக்காதலித்துவானோர்கள்
முப்போதுமுடிசாய்த்துத்தொழநின்றமுதல்வனை
யப்போதுமலர்தூவியைம்புலனு
மெப்போதுமுனியானை

அண்டமாயாதியாயருமறையோடைம்பூதப்
பிண்டமாயுலகுக்கோர்பெய்பொருளாம்பிஞ்ஞகனைத்
தொண்டர்தாமலர்தூவிச்சொன்மாலைபுனைகின்ற
இண்டைசேர்சடையானையென்மனத்தேவைத்தேனே. (௪)

ஆறேறுசடையானையாயிரம்பேரம்மானைப்
பாறேறுபடுதலையிற்பலிகொள்ளும்பரமபரனை
நீறேறுதிருமேனிநின்மலனைநெடுந்தூவி
யேறேறும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. (௫)

தேசனைத்தேசங்கள்தொழநின்றதிருமாலாற்
பூசனைப்பூசனைகளுகப்பானைப்பூவின்கள்
வாசனைமலைநிலநீர்தீவளியாகாசமாம்
ஈசனையெம்மானையென்மனத்தேவைத்தேனே. (௬)

நல்லானைநல்லானநான்மறையோடாறங்கம்
வல்லானைவல்லார்கண்மனத்துறையுமைந்தனைச்
சொல்லானைச்சொல்லார்ந்தபொருளானைத்துகளேது
மில்லானையெம்மானையென்மனத்தேவைத்தேனே. (௭)

புரித்தானைப்பதஞ்சக்திப்பொருளுருவாம்புண்ணியனைத்
தரித்தானைக்கங்கைநீர்தாழ்சடைமேன்மதில்மூன்றும்
எரித்தானையெம்மானையென்மனத்தேவைத்தேனே. (௮)

ஆகம்பத்தரவணையானயனறிதற்கரியானைப்
பாகம்பெண்பாகமாய்நின்றபசுபதியை
மாகம்பமறையோதுமிறையானைமதிற்கச்சி
யேகம்பமேயானையென்மனத்தேவைத்தேனே. (௯)

அடுத்தானையுரித்தானையருச்சுனற்குப்பாசுபதங்
கொடுத்தானைக்குலவரையேசிலையாகக்கூரம்பு
தொடுத்தானைப்புரமெரியச்சுனைமல்குகயிலாயம்
எத்தானைத்தடுத்தானையென்மனத்தேவைத்தேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

நம்பனைநகரமூன்றுமெரியுணவெருவநோக்கும்
அம்பனையமுதையாற்றையணிபொழிற்கச்சியுள்ளே
கம்பனைக்கதிர்வெண்டிங்கட்செஞ்சடைக்கடவுடன்னைச்
செம்பொனைப்பவளத்தூணைச்சிந்தியாவெழுகின்றேனே. (௧)

ஒருமுழமுள்ளகுட்டமொன்பதுதுளையுடைத்தா
யரைமுழமதனகலமதனில்வாழ்முதலையைந்து
[illegible] கிடந்துநான்பிதற்றுகின்றேன்

மலையினார்மகளோர்பாகமைந்தனார்மழுவொன்றேந்திச்
சிலையினான்மதில்கண்மூன்றுந்தீயெழச்செற்றசெல்வா
இலையினார்சூலமேந்தியேகம்பமேவினானைத்
தலையினால்வணங்கவல்லார்தலைவர்க்குந்தலைவர்தாமே. (௩)

பூத்தபொற்கொன்றைமாலைபுரிசடைக்கணிந்தசெல்வா
தீர்த்தமாங்கங்கையாளைத்திருமுடிதிகழவைத்து
வேத்துவாரோத்தநின்றவேகம்பமேவினானை
வாழ்த்துமாறறியமாட்டேன்மால்கொடுமயங்கினேனே. (௪)

மையினார்மலர்நெடுங்கண்மங்கையோர்பாகமாகி
கையிலோர்கபாலமேந்திக்கடைதொறும்பலிகொள்வார்தாம்
எய்வதோரேனமோட்டியேகம்பமேவினாரைக்
கையினாற்றொழவல்லார்க்குக்கடுவினைகளையலாமே. (௫)

கருவினைமருவுங்கங்கைதங்கியசடையனெங்கள்
அருவினையகலநல்குமண்ணலையமரர்போற்றுந்
திருவினைத்திருவேகம்பஞ்செப்பிடவுறையவல்ல
வுருவினைவுருகியாங்கேயுள்ளத்தாலுகக்கின்றேனே. (௬)

கொண்டதோர்கோலமாகிக்கோலக்காவுடையகூத்தன்
உண்டதோர்நஞ்சமாகிலுலகெலாமுய்யவுண்டான்
எண்டிசையோருமேத்தநின்றவேகம்பன்றன்னைக்
கண்டுநானடிமைசெய்வான்கருதியேதிரிகின்றேனே. (௭)

படமுடையரவினோடுபனிமதியதனைச்சூடிக்
கடமுடையுரிவைமூடிக்கண்டவராஞ்சவம்ம
இடமுடைக்கச்சிதன்னுளேகம்பமேவினான்றன்
நடமுடையாடல்காணஞாலந்தானுய்ந்தவாறே. (௮)

பொன்றிகழ்கொன்றைமாலைபொருந்தியநெடுந்தண்மார்பா
நன்றியிற்புகுந்தெனுள்ளமெள்ளவேநவிலநின்று
குன்றியிலடுத்தமேனிக்குவளையங்கண்டனெம்மை
இன்றுயில்போதுகண்டாரினியரேகம்பனாரே. (௯)

துருத்தியார்பழனத்துள்ளார்தொண்டர்கள்பலருமேத்த
அருத்தியாலன்புசெய்வாரவரவர்க்கருள்கள்செய்தே
யெருத்தினையிசையவேறியேகம்பமேவினார்க்கு
வருத்திநின்றடிமைசெய்வாரவல்வினைமாயுமன்றே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

ஓதுவித்தாய்முன்னறவுரைகாட்டியமணரொடே
காதுவித்தாய்கட்டநோய்பிணிதீர்த்தாய்கலந்தருளிப்
போதுவித்தாய்நின்பணிபிழைக்கிற்புளியம்வளாரால்
மோதுவிப்பாயுகப்பாய்முனிவாய்கச்சி

எத்தைக்கொடேதகையேழையமணொடிசைவித்தெனைக்
கொத்தைக்குமூங்கர்வழிகாட்டுவித்தென்னைக்கோகுசெய்தாய்
முத்திற்றிரளும்பளிங்கினிற்சோதியுமொய்பவளத்
தொத்தினையேய்க்கும்படியாய்பொழிற்கச்சியேகம்பனே. (௨)

மெய்யம்புகோத்தவிசையனோடன்றொருவேடனாகிப்
பொய்யம்பெய்தாவமருளிச்செய்தாய்புரமூன்றெறியக்
கையம்பெய்தாய்நின்கழலடிபோற்றாக்கயவர்நெஞ்சிற்
குய்யம்பெய்தாய்கொடிமாமதில்சூழ்கச்சியேகம்பனே. (௩)

குறிக்கொண்டிருந்துசெந்தாமரையாயிரம்வைகல்வைகல்
நெறிப்படவிண்டைபுனைகின்றமாலைநிறையழிப்பான்
கறைக்கண்டநீயொருபூக்குறைவித்துக்கண்சூல்விப்பதே
பிறைத்துண்டவார்சடையாய்பெருங்காஞ்சியெம்பிஞ்ஞகனே. (௪)

உரைக்குங்கழிந்திங்குணர்வரியானுள்குவார்வினையைக்
கரைக்குமெனக்கைதொழுவதல்லாற்கதிரோர்களெல்லாம்
விரைக்கொண்மலரவன்மாலெண்வசுக்களேகாதசர்க
ளிரைக்குமமிர்தாக்கறியவொண்ணானெங்களேகம்பனே. (௫)

கருவுற்றநாண்முதலாகவுன்பாதமேகாண்பதற்கு
உருகிற்றென்னுள்ளமுநானுங்கிடந்தலந்தெய்த்தொழிந்தேன்
திருவொற்றியூராய்திருவாலவாயாய்திருவாரூராய்
ஒருபற்றிலாமையுங்கண்டிரங்காய்கச்சியேகம்பனே. (௬)

அரியயனிந்திரன்சந்திராதித்தரமரரெல்லாம்
உரியநின்கொற்றைக்கடைத்தலையாருணங்காக்கிடந்தார்
புரிதருபுன்சடைப்போகர்முனிவர்புலம்புகின்றார்
எரிதருசெஞ்சடையேகம்பவென்னேதிருக்குறிப்பே. (௭)

பாம்பரைச்சேர்த்திப்படருஞ்சடைமுடிப்பால்வண்ணனே
கூம்பலைச்செய்தகரதலத்தன்பர்கள்கூடிப்பன்னாள்
சாம்பலைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்சரணென்
றேம்பலிப்பார்கட்கிரங்குகண்டாய்கச்சியேகம்பனே. (௮)

ஏன்றுகொண்டாயென்னையெம்பெருமானினியல்லமென்னிற்
சான்றுகண்டாயிவ்வுலகமெல்லாந்தனியேனென்றென்னை
யூன்றிநின்றைவர்க்கொற்றிவைத்தாய்பின்னையொற்றியெல்லாஞ்
சோன்றுகொண்டாய்கச்சியேகம்பமேயசுடர்வண்ணனே. (௯)

உந்திநின்றாருன்றனோலக்கச்சூளைகள்வாய்தல்பற்றித்
துன்றிநின்றார்தொல்லைவானவரீட்டம்பணியறிவான்
வந்துநின்றாரயனுந்திருமாலுமதிட்கச்சியாய்
இந்தநின்றோமினியெங்ஙனமோவந்திறைஞ்சுவதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்டுசெய்தபழவினையின்பயன்
கண்டுங்கண்டுங்களித்திகாணெஞ்சமே
வண்டுலாமலர்ச்செஞ்சடையேகம்பன்
றொண்டனாய்த்திரியாய்துயர்தீரவே. (௧)

நச்சிநாளுநயந்தடியார்தொழ
விச்சையாலுமைநங்கைவழிபடக்
கொச்சையார்குறுகார்செறிதீம்பொழிற்
கச்சியேகம்பமேகைதொழுமினே. (௨)

ஊனிலாவியியங்கியுலகெலாந்
தானுலாவியதன்மையராகிலும்
வானுலாவியபாணிபிறங்கவெங்
கானிலாடுவர்கச்சியேகம்பரே. (௩)

இமையாமுக்கண்ணரென்னெஞ்சத்துள்ளவர்
தமையாரும்மறிவொண்ணாத்தகைமையர்
இமையோரேத்தவிருந்தவனேகம்பன்
நமையாளும்மவனைத்தொழுமின்களே. (௪)

மருந்தினோடுநற்சுற்றமுமக்களும்
பொருந்திநின்றெனக்காயவெம்புண்ணியன்
கருந்தடங்கண்ணினாளுமைகைதொழ
விருந்தவன்கச்சியேகம்பத்தெந்தையே. (௫)

பொருளினோடுநற்சுற்றமும்பற்றிலர்க்
கருளுநன்மைதந்தாயவரும்பொருள்
சுருள்கொள்செஞ்சடையான்கச்சியேகம்பம்
இருள்கெடச்சென்றுகைதொழுதேத்துமே. (௬)

மூக்குவாய்செவிகண்ணுடலாகிவந்
தாக்குமைவர்தமாப்பையவிழ்த்தருள்
நோக்குவானமைநோய்வினைவாராமே
காக்குநாயகன்கச்சியேகம்பனே. (௭)

பண்ணிலோசைபழத்தினிலின்சுவை
பெண்ணொடாணென்றுபேசற்கரியவன்
வண்ணமில்லிவடிவுவேறாயவன்
கண்ணினுண்மணிகச்சியேகம்பனே. (௮)

திருவினாயகன்செம்மலர்மேலயன்
வெருவநீண்டவிளங்கொளிச்சோதியான்
ஒருவனையுணர்வாயுணர்வல்லதோர்
கருவுனாயகன்கச்சியேகம்பனே. (௯)

இடுகுநுண்ணிடையேந்திளமென்முலை
வடிவின்மாதர்திறமனம்வையன்மின்
பொடிகொள்மேனியன்பூம்பொழிற்கச்சியுள்
அடிகளெம்மையருந்துயர்தீர்ப்பரே. (௧௦)

கலங்கிக்கச்சியேகம்பவோவென்றலும்
நலங்கொள்செல்வமளித்தானெங்கணாதனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பூமேலானும்பூமகள்கேள்வனு
நாமேதேவரெனாமைநடுக்குறத்
தீமேவும்முருவாதிருவேகம்பா
ஆமோவல்லற்படவடியோங்களே. (௧)

அருந்திறலமரரயன்மாலொடு
திருந்தநின்றுவழிபடத்தேவியோ
டிருந்தவன்னெழிலார்கச்சியேகம்பம்
பொருந்தச்சென்றுபுடைப்பட்டெழுதுமே. (௨)

கறைகொள்கண்டத்தெண்டோளிறைமுக்கணன்
மறைகொணாவினன்வானவர்க்காதியான்
உறையும்பூம்பொழில்சூழ்கச்சியேகம்பம்
முறைமையாற்சென்றுமுந்தித்தொழுதுமே. (௩)

பொறிப்புலன்களைப்போக்கறுத்துள்ளத்தை
நெறிப்படுத்துநினைந்தவர்சிந்தையுள்
அறிப்புறுமமுதாயவனேகம்பங்
குறிப்பினாற்சென்றுகூடித்தொழுதுமே. (௪)

சிந்தையுட்சிவமாய்நின்றசெம்மையோ
டந்தியாயனலாய்ப்புனல்வானமாய்ப்
புந்தியாய்ப்புகுந்துள்ளநிறைந்தவெம்
எந்தையேகம்பமேத்தித்தொழுமினே. (௫)

சாக்கியத்தொடுமற்றுஞ்சமண்படும்
பாக்கியம்மிலார்பாடுசெலாதுறப்
பூக்கொள்சேவடியான்கச்சியேகம்ப
நாக்கொடேத்திநயந்துதொழுதுமே. (௬)

மூப்பினோடுமுனிவுறுத்தெந்தமை
யாப்பதன்முன்னணியமரர்க்கிறை
காப்பதாயகடிபொழிலேகம்பஞ்
சேர்ப்பதாகநாஞ்சென்றடைந்துய்துமே. (௭)

ஆலுமாமயிற்சாயனல்லாரொடுஞ்
சாலநீயுறுமால்தவிர்நெஞ்சமே
நீலமாமிடற்றண்ணலேகம்பனார்
கோலமாமலர்ப்பாதமேகும்பிடே. (அ)

பொய்யனைத்தையும்விட்டவர்புந்தியுண்
மெய்யனைச்சுடர்வெண்மழுவேந்திய
கையனைக்கச்சியேகம்பமேவிய
வையனைத்தொழுவார்க்கில்லையல்லலே. (க)

அரக்கன்றன்வலியுன்னிக்கயிலையை
நெருக்கிச்சென்றெடுத்தான்முடிதோணெரித்
திரக்கவின்னிசைகேட்டவனேகம்பந்
தருக்கதாகநாஞ்சார்ந்துதொழுதுமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவன்காண்கூற்றுவனைக்குமைத்தகோன்காண்குவலயன்காண்குவலயத்தி னீரானான்காண், காற்றவன்காண்கனலவன்காண்கலிக்குமின் காண்கனபவளச்செம்மே னிகலந்தவெள்ளை, நீற்றவன்காணிலாவூருஞ்சென்னியான்கா ணிறையார்ந்தபுனற்கங் கைநிமிர்சடைமேல், ஏற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனெ ன்னெண்ணத்தானே. (க)

பரந்தவன்காண்பல்லுயிர்களாகியெங்கும் பணிந்தெழுவார்பாவமும்வினையும் போகத், துரந்தவன்காண்மேலரங்கண்ணியான்காண் டோர்றநிலையிலுதிப்பொருளாய் வந்த, மருந்தவன்காண்வையங்கள்பொறைதீர்ப்பான்காண்மலர்தூவிநினைந்தெழுவாருள் ளநீங்கா, திருந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென்னெண் ணத்தானே. (உ)

நீற்றவன்காணீராகித்தீயானான்கா ணிறைமழுவுந்தமருகமுமெரியுங்கையிற் றேற்றவன்காண்டோற்றக்கேடில்லாதான்காண் டுனையிலிகாண்டுணையென்றுதொழு வாருள்ளம், போற்றவன்காண்புகழ்கடனைப்படைத்தான்றான்காண்பொறியரவும்விரிச டைமேற்புனலுங்கங்கை,யேற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவ னென்னெண்ணத்தானே. (ங)

தாயவன்காணுலகுக்குத்தன்னொப்பில்லாத் தந்தவன்காண்மலைமங்கைபங்கா வென்பார், வாயவன்காண்வரும்பிறவிநோய்தீர்ப்பான்காண்வானவர்க்குந்தானவர்க்கும ண்ணுளோர்க்குஞ், சேயவன்காணினைவார்க்குச்சித்தமாரத்திருவடியேயுள்கிநினைந்தெ ழுவாருள்ள, மேயவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென்னெ ண்ணத்தானே. (ச)

அடுத்தானையுரித்தான்காண். (ரு)

அழித்தவன்காணெயின்மூன்றுமயில்வாயம்பா லையாறுமிடைமருதுமாள்வான்ற ன்காண், பழித்தவன்காணடையாரையடைவார்தங்கள் பற்றவன்காண்புற்றரவநாணினு

ன்காண், சுழித்தவன்காண்முடிக்கங்கையடியேபோற்றுந் தூயமாமுனிவர்க்காப்பார்மே ணிற்க, விழித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ண த்தானே. (சு)

அசைந்தவன்காணடமாடிப்பாடல்பேணியழல் வண்ணத்தில்லடியுமுடியுந்தேடப், பசைந்தவன்காண்பேய்க்கணங்கள்பரவியேத்தும்பான்மையன்காண்பரவினைந்தெழுவார்தம்பாற், கசிந்தவன்காண்கரியினுரிபோர்த்தான்றான்காண்கடலில்விடமுண்டமரர்க்கமுதமீய, விசைந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (எ)

முடித்தவன்காண்வன்கூற்றைச்சீற்றத்தீயால்வலியார்தம்புரமூன்றும்வேவச்சாபம், பிடித்தவன்காண்பிஞ்ஞகனும்வேடத்தான்காண்பிணையல்வெறிகமழ்கொன்றையரவுசென்னி, முடித்தவன்காண்மூவிலைநல்வேலினான்காண்முழங்கியுருமெனத்தோன்றுமழையாய்மின்னி, யிடித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (அ)

வருந்தான்காண்மனமுருகிநினையாதார்க்குவஞ்சன்காணஞ்செழுத்துநினைவார்க்கென்று, மருந்தவன்காண்வான்பிணிகடீரும்வண்ணம்வானகமுமண்ணகமுமற்றுமாகிப், பரந்தவன்காண்படர்சடையெட்டுடையான்றான்காண்பங்கயத்தோன்றன்சிரத்தையேந்தியூரூர், இரந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (கூ)

வெம்மானவுழுவையதளுரிபோர்த்தான்காண் வேதத்தின்பொருளான்காணென்றியம்பி, விம்மாநின்றழுவார்கட்களிப்பான்றான்காண்விடையேறித்திரிவான்காணடுஞ்செய்பூதத், தம்மான்காணகலிடங்கடாங்கினான்காணற்புதன்காண்சொற்பதமுங்கடந்துநின்ற, எம்மான்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (க0)

அறுத்தான்காணயன்சிரத்தை யமரர்வேண்டவாழ்கடலினஞ்சுண்டங்கணிநீர்க்கங்கை,செறுத்தான்காண்டேவர்க்குந்தேவன்றான்காண்டிசையனைத்துந்தொழுதேத்தக்கலைமான்கையிற், பொறுத்தான்காண்புகலிடத்தைநலியவந்துபொருகயிலையெடுத்தவன்றன்முடிதோளைலஞ்,சிறுத்தான்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

உரித்தவன்காணுரக்களிற்றை யுமையாளொல்கவோங்காரத்தொருவன்காணுணர்மெய்ஞ்ஞானம், விரித்தவன்காண்விரித்தநால்வேதத்தான்காண்வியனுலகிற்பல்லுயிரைவிதியினாலே,தெரித்தவன்காண்சில்லுருவாய்த்தோன்றியெங்குந்திரண்டவன்காண்டிரிபுரத்தைவேவவில்லால், எரித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (க)

நேசன்காணேசர்க்குநேசந்தன்பாலில்லாதநெஞ்சத்துநீசர்தம்மைக்,கூசன்காண்கூசாதார்நெஞ்சுதஞ்சேகுடிகொண்டகுழகன்காணழகார்கொன்றை, வாசன்காண்மலைமங்கைபங்கன்றான்காண்வானவர்களெப்பொழுதும்வணங்கியேத்தும், ஈசன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (உ)

பொறையவன்காண்பூமியேழ்தாங்கியோங்குபுண்ணியன்காணண்ணியபுண்டரீகப்போதின், மறையவன்காண்மறையவனைப்பயந்தோன்றான்காண்வார்சடைமாசுணமணிந்துவளரும்பிள்ளைப், பிறையவன்காண்பிறைதிகழுமெயிற்றுப்பேழ்வாய்ப்பேயோடங்கிடுகாட்டிலெல்லியாடும், இறையவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௩)

பாரவன்காண்விசும்பவன்காண்பவ்வந்தான்காண்பனிவரைகளிரவினொடுபகலாய்நின்ற, சீரவன்காண்டிசையவன்காண்டிசைகளெட்டுஞ்செறிந்தவன்காண்சிறந்தடியார்சிந்தைசெய்யும், பேரவன்காண்பேராயிரங்களேத்தும்பெரியவன்காணரியவன்காண்பெற்றமூர்ந்த, ஏரவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௪)

பெருந்தவத்தெம்பிஞ்ஞகன்காண்பிறைசூடிகாண் பேதையேன்வாதையுறுபிணியைத்தீர்க்கு, மருந்தவன்காண்மந்திரங்களாயினான்காண்வானவர்கடாம்வணங்குமாதேவன்காண், அருந்தவத்தாளாயினழயாளுமையாள்பாகமமர்ந்தவன்காணமராகடாமர்ச்சித்தேத்த, விருந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௫)

ஆய்ந்தவன்காணருமறையோடங்கமாறுமணிந்தவன்காணடரவோடென்புமாமை, காய்ந்தவன்காண்கண்ணழலாற்காமனாகங்கனன்றெழுந்தகாலனுடல் பொடியாய்வீழப், பாய்ந்தவன்காண்பண்டுபலசருகாற்பந்தர்பயின்றநூற்சிலந்திக்குப்பாராள்செல்வம், ஈந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௬)

உமையவளையொருபாகஞ்சேர்த்தினான்கா ணுகநதொளிநீர்க்கங்கைசடையொழுக்கினான்காண், இமையவடகயிலைச்செல்வன்றான்காணில்பலிக்குச்சென்றுழலுநல்கூர்ந்தான்காண், சமையமவையாறினுக்குந்தலைவன்றான்காண்டத்துவன்காணுத்தமன்காண்டானேயாய, விமையவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௭)

தொண்டுபடுதொண்டர்துயர்தீர்ப்பான்றான்காண் மேலர்ச்சேவடியிணையென்சோதியான்கா, ணுண்டுபடுவிடங்கண்டதமைதாக்கினான்காணொலிகடலிலமுதமரர்க்குதவினான்காண், வண்டுபடுமலர்க்கொன்றைமாலையான்காண்வாண்மதியாய்நாண்மீனுமாயினான்காண், எண்டிசையுமெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௮)

முந்தைகாண்மூவரினுமுதலானான்காண் மூவிலைவேன்மூர்த்திகாண்முருகவேட்குத், தந்தைகாண்டண்கடமாமுகத்தினாக்குத்தாதைகாண்டாழ்ந்தடியேவணங்குவார்க்குச், சிந்தைகாண்சிந்தாதசித்தத்தார்க்குச்சிவனவனகாண்செங்கண்மால்விடையொன்றேறும், எந்தைகாணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௯)

பொன்னிசையும்புரிசடையெம்புனிதன்றான்காண் பூதகணநாதன்காண்புலித்தோலாடை, தன்னிசையமைந்தநல்வழிலராயினான்காணசங்கமவெண்குழைக்காதிற்சதிரன்றான்காண், மின்னிசையுமவெள்ளெயிற்றோனவெகுண்டுவேற்பையயக்கவடியடர்ப்பமீண்டவன்றன்வாயில், இன்னிசைகேட்டிலங்குவாள்வாளீந்தான்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

௮. திருநாவுக்கரசுசுவாமிக ளருளிச்செய்த

தேவாரத்திருப்பதிகம். (௭)

உ

சிவமயம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள்

அருளிச்செய்த

# திருவேகம்பத் தேவாரப்பதிகம்.

## பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமரர்தொழுதேத்துஞ்
சீலந்தான்பெரிதும்முடையானைச்சிந்திப்பாரவர்சிந்தையுளானை
யேலவார்குழலாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
காலகாலனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (க)

உற்றவர்க்குதவும்பெருமானையூர்வதொன்றுடையானும்பர்கோனைப்
பற்றினார்க்கென்றும்பற்றவன்றன்னைப்பாவிப்பார்மனம்பாவிக்கொண்டானை
யற்றமில்புகழாளுமைநங்கையாதரித்துவழிபடப்பெற்ற
கற்றைவார்சடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (உ)

திரியுமுப்புரந்தீப்பிழம்பாகச்செங்கண்மால்விடைமேற்றிகழ்வானைக்
கரியினீருரிபோர்த்துகந்தானைக்காமனைக்கனலாவிழித்தானை
வரிகொள்வெள்வளையாளுமைநங்கைமருவியேத்திவழிபடப்பெற்ற
பெரியகம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்டியேன்பெற்றவாறே. (ங)

குண்டலந்திகழ்காதுடையானைக்கூற்றுதைத்தகொடுந்தொழிலானை
வண்டலம்புமலர்க்கொன்றையினானைவாளராமதிசேர்சடையானைக்
கெண்டையந்தடங்கண்ணுமைநங்கைகெழுமியேத்திவழிபடப்பெற்ற
கண்டநஞ்சுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (ச)

வெல்லும்வெண்மழுவொன்றுடையானைவேலைநஞ்சுண்டவித்தகன்றன்னை
யல்லல்தீர்த்தருள்செய்யவல்லானையருமறையவையங்கம்வல்லானை
யெல்லையில்புகழாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
நல்லகம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (ரு)

திங்கள்தங்கியசடையுடையானைத்தேவதேவனைச்செழுங்கடல்வளருஞ்
சங்கவெண்குழைக்காதுடையானைச்சாமவேதம்பெரிதுகப்பானை
மங்கைநங்கைமலைமகள்கண்டுமருவியேத்திவழிபடப்பெற்ற
கங்கையாளனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (சு)

விண்ணவர்தொழுதேத்தநின்றானைவேதந்தான்விரித்தோதவல்லானை
நண்ணினார்க்கென்றுநல்லவன்றன்னைநாளுநாமுகக்கின்றபிரானை
யெண்ணில்தொல்புகழாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
கண்ணுமூன்றுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (எ)

சிந்தித்தென்றுநினைந்தெழுவார்கள்சிந்தையிற்றிகழுஞ்சிவன்றன்னைப்
பந்தித்தவினைப்பற்றறுப்பானைப்பாலோடானைஞ்சுமாட்டுகந்தானை
யந்தமில்புகழாளுமைநங்கையாதரித்துவழிபடப்பெற்ற
கந்தவார்சடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (அ)

வரங்கள்பெற்றுழல்வாளரக்கர்தம்வாலியபுரமூன்றெரித்தானை
நிரம்பியதக்கன்றன்பெருவேள்விநிரந்தரஞ்செய்தநிற்கண்டகனைப்
பரந்ததொல்புகழாளுமைநங்கைபரவியேத்திவழிபடப்பெற்ற
கரங்களெட்டுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (கூ)

எள்கலின்றியிமையவர்கோனையீசனைவழிபாடுசெய்வாள்போ
லுள்ளத்துள்கியுகந்துமைநங்கைவழிபடச்சென்றுநின்றவாகண்டு
வெள்ளங்காட்டிவெருட்டிடவஞ்சிவெருவியோடித்தழுவவெளிப்பட்ட
கள்ளக்கம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (க0)

பெற்றமேறுகந்தேறவல்லானைப்பெரியவெம்பெருமானென்றெப்போதுங்
கற்றவர்பரவப்படுவானைக்காணக்கண்ணடியேன்பெற்றதென்று
கொற்றவன்கம்பன்கூத்தனெம்மானைக்குளிர்பொழிற்றிருநாவலாரூர
னற்றமிழிவையீரைந்தும்வல்லார்நன்னெறியுலகெய்துவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இப்பதிகத்தால் இடக்கண் பெற்றனர்.

---

ஆ திருவேகம்பப்பதிகம் (கஉ.)

உ

சிவமயம்.

## திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்தது.

# திருநெறிக்காரைக்காடு

---

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வாரணவுமுலைமங்கைபங்கினராயங்கையினிற்
போரணவுமழுவொன்றங்கேந்திவெண்பொடியணிவர்
காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி
நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. (க)

காருருமணிமிடற்றூர்கரிகாடலுடைதலைகொண்
டூருரன்பலிக்குழல்வாருழைமானினுரியதளர்
தேருருநெடுவீதிச்செழுங்கச்சிமாநகர்வாய்
நீருருமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. (உ)

கூறணிந்தார்கொடியிடையைக்குளிர்சடைமேலிளமதியோ
டாறணிந்தாராடரவம்பூண்டுகந்தாரான்வெள்ளை
யேறணிந்தார்கொடியதன்மேலென்பணிந்தார்வரைமார்பி
ணீறணிந்தார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௩)

பிறைநவின்றசெஞ்சடைகள்பின்றாழப்பூதங்கண்
மறைநவின்றபாடலோடாடலராய்மழுவேந்திச்
சிறைநவின்றவண்டினங்கடங்கனிவாய்த்தேன்கதுவு
நிறைநவின்றகலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௪)

அன்றாலின்கீழிருந்தங்கறம்புரிந்தவருளாளர்
குன்றாதவெஞ்சிலையிற்கோளரவநாண்கொளுவி
யொன்றாதார்புரமூன்றுமோங்கெரியில்வெந்தவிய
நின்றாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௫)

பன்மலர்கள்கொண்டடிக்கீழ்வானோர்கள்பணிந்திறைஞ்ச
நன்மையிலாவல்லவுணர்நகர்மூன்றுமொருநொடியில்
வின்மலையினாண்கொளுவிவெங்கணையாலெய்தழித்த
நின்மலனார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௬)

புற்றிடைவாளரவினொடுபுனைகொன்றைமதமத்த
மெற்றொழியாவலைபுனலோடிளமதியமேந்துசடைப்
பெற்றுடையாரொருபாகம்பெண்ணுடையார்கண்ணமரு
நெற்றியினார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௭)

ஏழ்கடல்சூழ்தென்னிலங்கைக்கோமானையெழில்வரைவாய்த்
தாழ்விரலாலூன்றியதோர்தன்மையினார்நன்மையினா
ராழ்கிடங்குஞ்சூழ்வயலுமதில்புல்கியழகமரு
நீண்மறுகிற்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௮)

ஊண்டானுமொலிகடனஞ்சுடைதலையிற்பலிகொள்வர்
மாண்டார்தமெலும்பணிவர்வரியரவோடெழிலாமை
பூண்டாருமோரிருவரறியாமைப்பொங்கெரியாய்
நீண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே (௯)

குண்டாடிச்சமண்படுவார்கூறைதனைமெய்போர்த்து
மிண்டாடித்திரிதருவாருரைப்பனகண்மெய்யல்ல
வண்டாருங்குழலாளைவரையாகத்தொருபாகங்
கண்டாருங்கலிகச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௧௦)

கண்ணாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காடுறையும்
பெண்ணாருந்திருமேனிப்பெருமானதடிவாழ்த்தி
தண்ணாரும்பொழிற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
பண்ணாருந்தமிழ்வல்லார்பரலோகததிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

## திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்தது.

# திருமேற்றளி.

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

மறையதுபாடிப்பிச்சைக்கென்றகந்திரிந்துவாழ்வார்
பிறையதுசடைமுடிமேற்பெய்வளையாடன்னோடுங்
கறையதுகண்டங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளா
லிறையவர்பாடலாடலிலங்குமேற்றளியனாரே. (௧)

மாலியமாயன்றன்னைமகிழ்ந்தனர்விருத்தராகும்
பாலனார்பசுபதியார்பால்வெள்ளைநீறுபூசிக்
காலனைக்காலாற்செற்றார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏலநற்கடம்பன்றாதையிலங்குமேற்றளியனாரே. (௨)

விண்ணிடைவிண்ணவர்கள்விரும்பிவந்திறைஞ்சிவாழ்த்தப்
பண்ணிடைச்சுவையின்மிக்ககின்னரம்பாடல்கேட்டார்
கண்ணிடைமணியினொப்பார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எண்ணிடையெழுத்துமானாரிலங்குமேற்றளியனாரே. (௩)

சோமனையரவினோடுசூழ்தரக்கங்கைசூடும்
வாமனைவானவர்கள்வலங்கொடுவந்துபோற்றக்
காமனைக்காய்ந்தகண்ணார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏமன்றாடுமெந்தையிலங்குமேற்றளியனாரே. (௪)

ஊனவனுயிரினோடுமுலகங்களூழியாகித்
தானவர்தனமுமாகித்தனஞ்சயனோடெதிர்ந்த
கானவர்காளகண்டர்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏனமக்கோடுபூண்பாரிலங்குமேற்றளியனாரே. (௫)

மாயனாய்மாலனாகிமலரவனாகிமண்ணாய்த்
தேயமாய்த்திசையெட்டாகித்தீர்த்தமாய்த்திரிதர்கின்ற
காயமாய்க்காயத்துள்ளார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏயமென்றோளிபாகரிலங்குமேற்றளியனாரே. (௬)

மண்ணினையுண்டமாயன்றன்னையோர்பாகங்கொண்டார்
பண்ணினைப்பாடியாடும்பத்தர்கள்சித்தங்கொண்டார்
கண்ணினைமூன்றுங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எண்ணினையெண்ணவைத்தாரிலங்குமேற்றளியனாரே. (௭)

செல்வியைப்பாகங்கொண்டார்சேந்தனைமகனாக்கொண்டார்
மல்லிகைக்கண்ணியோடுமாமலர்க்கொன்றைசூடிக்
கல்வியைக்கரையிலாதகாஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எல்லியைவிளங்கநின்றாரிலங்குமேற்றளியனாரே. (௮)

வேறிணையின்றியென்றும்விளங்கொளிமருங்கினளைக்
கூறியலாகவைத்தார்கோளராமதியம்வைத்தார்
ஆறினைச்சடையுள்வைத்தாரணிபொழிற்கச்சிதன்னுள்
ஏறினையேறுமெந்தையிலங்குமேற்றளியனாரே. (௯)

தென்னவன்கயிலையெடுக்கச்சேயிழைநடுக்கங்கண்டு
மன்னவன்விரலாலூன்றமணிமுடிநெரியவாயாற்
கன்னலின்கீதம்பாடக்கேட்டவர்காஞ்சிதன்னுள்
இன்னவற்கருளிச்செய்தாரிலங்குமேற்றளியனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திசுவாமிகள்

அருளிச்செய்தது.

# திருமேற்றளி.

### பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

நொந்தாவொண்சுடரேநுனையேநினைந்திருந்தேன்
வந்தாய்போயறியாய்மனமேபுகுந்துநின்ற
சிந்தாயெந்தைபிரான்றிருமேற்றளியுறையும்
எந்தாயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே. (௧)

ஆட்டான்பட்டமையாலடியார்க்குத்தொண்டுபட்டுக்
கேட்டேன்கேட்பதெல்லாம்பிறவாமைக்கேட்டொழிந்தேன்
சேட்டார்மாளிகைசூழ்திருமேற்றளியுறைய
மாட்டேனுன்னையல்லால்மகிழ்ந்தேத்தமாட்டேனே. (௨)

மோறாந்தோரொருகால்நினையாதிருந்தாலும்
வேறாவந்தென்னுள்ளம்புகவல்லமெய்ப்பொருளே
சேறார்தண்கழனித்திருமேற்றளியுறையும்
ஏறேயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே. (௩)

உற்றார்சுற்றமெனுமதுவிட்டுநுன்னடைந்தே
னெற்றாலென்குறைவென்னிடரைந்துநறுந்தொழிந்தேன்
செற்றாய்மும்மதிலுந்திருமேற்றளியுறையும்
பற்றேயுன்னையல்லால்பணிந்தேத்தமாட்டேனே. (௪)

எம்மானெம்மனையேயென்பவரிட்டிறந்தொழிந்தார்
மெய்ம்மாலாயினதீர்த்தருள்செய்யுமெய்ப்பொருளே
கைம்மாவீருரியாய்கனமேற்றளியுறையும்
பெம்மானுன்னையல்லாற்பெரிதேத்தமாட்டேனே. (௫)

நானேயுன்னடியேநினைந்தேனினைதலுமே
யூனேரிவ்வுடலம்புகுந்தாயென்னொண்சுடரே

தேனேயின்னமுதே திருமேற்றளியுறையுங்
கோனேயுன்னையல்லாற்குளிர்ந்தேத்தமாட்டேனே. (சு)

மையார்வெஞ்சிலைநாண தன்மேற்சரங்கோத்தே
யெய்தாய்மும்மதிலுமெரியுண்ணவெம்பெருமான்
செய்யார்பைங்கமலத் திருமேற்றளியுறையும்
ஐயாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (எ)

வினையார்கொன்றையினுய்விமலாவினியுன்னையல்லால்
உனையேனுவதனுலுடலில்லுயிருள்ளளவுந்
தினையார்தண்கழனித்திருமேற்றளியுறையும்
அனையாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (அ)

நிலையாய்நின்னடியேநினைந்தேனினைதலுமே
தலைவாநின்னினையப்பணித்தாய்சலமொழிந்தேன்
சிலையார்மாமதில்சூழ்திருமேற்றளியுறையு
மலையேயுன்னையல்லால்மகிழ்ந்தேத்தமாட்டேனே. (கூ)

பாரூர்பல்லவனூர்மதிற்காஞ்சிமாநகர்வாய்ச்
சீரூரும்புறவிற்றிருமேற்றளிச்சிவனை
யாரூரன்னடியானடித்தொண்டனூரூரன்சொன்ன
சீரூர்பாடல்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# திருஅநேகதங்காபதம்.

## பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்திகழைங்கணையக்
கோனையெரித்தெரியாடியிடங்குலவானதிடங்குறையாமறையா
மானையிடத்ததோர்கைய னிடம்மதமாறுபடப்பொழியும்மலைபோல்
யானையுரித்தபிரானதிடங் கலிக்கச்சியனேகதங்காபதமே. (க)

கூறுநடைக்குழிகட்பகுவாயனபேயுகந்தாடநின்றோரியிட
வேறுபடக்குடகத்திலயம்பலவாணநின்றுடல்விரும்புமிட
மேறுவிடைக்கொடியெம்பெருமானிமையோர்பெருமானுமையாள்கணவ
னூறுசடைக்குடையப்பனிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே. (உ)

கொடிகளிடைக்குயில்கூவுமிடம்மயிலாலுமிடமழுவாளுடைய
கடிகொள்புனற்சடைகொண்டநுதற்கறைக்கண்டனிடம்பிறைத்துண்டமுடிச்
செடிகொள்வினைப்பகைதீருமிடந்திருவாகுமிடந்திருமார்பகலா
தடிகளிடமழல்வண்ணனிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே. (ங)

கொங்குநுழைத்தனவண்டறைகொன்றையுங்கங்கையுந்திங்களுஞ்சூடுஞ்சடை
மங்குனுழைமலைமங்கையைநங்கையைப்பங்கினிற்றங்கவுவந்தருள்செய்
சங்குகுழைச்செவிகொண்டருவித்திரள்பாயவியாத்தழல்போலுடைத்த
மங்கைமழுத்திகழ்கையனிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே. (௪)

பைத்தபடத்தலையாடரவம்பயில்கின்றவிடம்பயிலப்புகுவார்
சித்தமொருநெறிவைத்தவிடந்திகழ்கின்றவிடந்திருவானடிக்கே
வைத்தமனத்தவர்பத்தர்மனங்கொளவைத்தவிடமழுவாளுடைய
அத்தனிடமழல்வண்ணனிடங்கலிக்கச்சியநேகதங்காபதமே. (௫)

தண்டமுடைத்தருமன்றமரென்றமரைச்செயும்வன்றுயர்தீர்க்குமிடம்
பிண்டமுடைப்பிறவித்தலைநின்றுநினைப்பவராக்கையைநீக்குமிடங்
கண்டமுடைக்கருநஞ்சைநுகர்ந்தபிரானதிடங்கடலேழுகடந்
தண்டமுடைப்பெருமானதிடங்கலிக்கச்சியநேகதங்காபதமே. (௬)

கட்டுமயக்கமறுத்தவர்கைதொழுதேத்துமிடங்கதிரோனொளியால்
விட்டவிடம்விடையூர்தியிடங்குயிற்பேடைதன்சேவலொடாடுமிட
மட்டுமயங்கியவிழ்ந்தமலரொருமாதவியோடுமணம்புணரு
மட்டபுயங்கப்பிரானதிடங்கலிக்கச்சியநேகதங்காபதமே. (௭)

புல்லியிடந்தொழுதுய்துமெனாதவர்தம்புரமூன்றும்பொடிப்படுத்த
வில்லியிடம்விரவாதுயிருண்ணும்வெங்காலனைக்காற்கொடுவீந்தவியக்
கொல்லியிடங்குளிர்மாதவிமவ்வல்குராவகுளங்குருக்கத்திபுன்னை
யல்லியிடைப்பெடைவண்டுறங்குங்கலிக்கச்சியநேகதங்காபதமே. (௮)

சங்கையவர்புணர்தற்கரியான்றளவேனகையாடவிராமிகுசீர்
மங்கையவண்மகிழச்சுடுகாட்டிடைநட்டநின்றாடியசங்கரனே
யங்கையினனலேந்துமவன்கனல்சேரொளியன்னதோர்பேரகலத்
தங்கையவன்னுறைகின்றவிடங்கலிக்கச்சியநேகதங்காபதமே. (௯)

வீடுபெறப்பலவூழிகணின்றுநினைக்குமிடம்வினைதீருமிடம்
பீடுபெறப்பெரியோர்திடங்கொண்டுமேவினர்தங்களைக்காக்குமிடம்
பாடுமிடத்தடியான்புகலூரனுரைத்தவிம்மாலைகள்பத்தும்வல்லார்
கூடுமிடஞ்சிவலோகனிடங்கலிக்கச்சியநேகதங்காபதமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# திருஓணகாந்தன்றளி.

## பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தம்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைக்கழலடிதொழுதுய்யினல்லா
லைவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிப்பட்டழுந்துவேனுக்
குய்யுமாறொன்றருளிச்செய்யீரோணகாந்தன்றளியுளீரே. (௧)

திங்கடங்குசடைகண்மேலோர்திரைகள்வந்துபுரளவீசுங்
கங்கையாளேல்வாய்திறவாள்கணபதியேல்வயிறுதாரி
யங்கைவேலான்குமரன்பிள்ளைதேவியார்கோற்றட்டியாளா
லுங்களுக்காட்செய்யமாட்டோமோணகாந்தன்றளியுளீரே. (௨)

பெற்றபோதும்பெறாதபோதும்பேணியுங்கழலேத்துவார்கண்
மற்றோர்பற்றிலரென்றிரங்கிமதியுடையவர்செய்கைசெய்யீர்
அற்றபோழ்துமலர்ந்தபோழ்துமாவற்காலத்தடிகேளும்மை
யொற்றிவைத்திங்குண்ணலாமோவோணகாந்தன்றளியுளீரே. (௩)

வல்லதெல்லாஞ்சொல்லியும்மைவாழ்த்தினாலும்வாய்திறந்தொன்
றில்லையென்னீருண்டுமென்னீரெம்மையாள்வானிருப்பதென்னீர்
பல்லையுக்கபடுதலையிற்பகலெலாம்போய்ப்பலிதிரிந்திங்
கொல்லைவாழ்க்கையொழியமாட்டீரோணகாந்தன்றளியுளீரே. (௪)

கூடிக்கூடித்தொண்டர்தங்கள்கொண்டபாணிகுறைபடாமே
யாடிப்பாடியழுதுநெக்கங்கன்புடையவர்க்கின்பமோரீர்
தேடித்தேடித்திருந்தெய்த்தாலுஞ்சித்தமென்பால்வைக்கமாட்டீ
ரோடிப்போகீர்பற்றுந்தாரீரோணகாந்தன்றளியுளீரே. (௫)

வாரிருங்குழன்மைவாணெடுங்கண்மலைமகண்மதுவிம்முகொன்றைத்
தாரிருந்தடமார்புநீங்காத்தையலாளுலகுய்யவைத்த
காரிரும்பொழிற்கச்சிமூதூர்க்காமக்கோட்டமுண்டாகநீர்போ
யூரிடும்பிச்சைகொள்வதென்னேயோணகாந்தன்றளியுளீரே. (௬)

பொய்ம்மையாலேபோதுபோக்கிப்புறத்துமில்லையகத்துமில்லை
மெய்ம்மைசொல்லியாளமாட்டீர்மேலைநாளொன்றிடவுங்கில்லீ
ரெம்மைப்பெற்றாலேதும்வேண்டீரேதுந்தாரீரேதுமோதீ
ரும்மையன்றேயெம்பெருமானோணகாந்தன்றளியுளீரே. (௭)

வலையம்வைத்தகூற்றமீவான்வந்துநின்றவார்த்தைகேட்டுச்
சிலையமைத்தசிந்தையாலேதிருவடிதொழுதுய்யினல்லாற்
கலையமைத்தகாமற்செற்றகுரோதலோபமதமவருடை
யுலையமைத்திங்கொன்றமாட்டேனோணகாந்தன்றளியுளீரே. (௮)

வாரமாகித்திருவடிக்குப்பணிசெய்தொண்டர்பெறுவதென்னே
யாரம்பாம்புவாழ்வதாரூரொற்றியூரேலும்மதன்று
தாரமாகக்கங்கையாளைச்சடையில்வைத்தவடிகேளுந்த
மூருங்காடுமுடையுந்தோலேயோணகாந்தன்றளியுளீரே. (௯)

ஓவணமேலெருதொன்றேறுமோணகாந்தன்றளியுளார்தா
மாவணஞ்செய்தாளுங்கொண்டவரைதுகிலொடுபட்டுவீக்கிக்
கோவணமேற்கொண்டவேடங்கோவையாகவாரூரன்சொன்ன
பாவணத்தமிழ்பத்தும்வல்லார்க்குப்பறையுந்தான்செய்தபாவந்தானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இப்பதிகத்தால் பொன் பெற்றனர்.

உ

சிவமயம்.

## திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்தது.

# திருமாற்பேறு.

### பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஊறியார்தருநஞ்சினையுண்டுமை, நீறுசேர்திருமேனியர்
சேறுசேர்வயற்றென்றிருமாற்பேற்றின், மாறிலாமணிகண்டரே. (க)

தொடையார்மாமலர்கொண்டிருபோதும்மை,யடைவாராமடிகளென
மடையார்நீர்மல்குமன்னியமாற்பே, றுடையீரேயுமையுள்கியே. (உ)

பையாருமரவங்கொடாட்டிய, கையானென்றுவணங்குவீர்
மையார்நஞ்சுண்டமாற்பேற்றிருக்கின்ற, வையாநின்னடியார்களே. (ங)

சாலமாமலர்கொண்டுசரணென்று, மேலையார்கள்விரும்புவர்
மாலினார்வழிபாடுசெய்மாற்பேற்று, நீலமார்கண்டனின்னையே. (ச)

மாறிலாமணியேயென்றுவானவ, ரேறவேமிகவேத்துவர்
கூறனேகுலவுந்திருமாற்பேற்றி, னீறனேயென்றுநின்னையே. (ரு)

உரையாதாரில்லையொன்றுநின்றன்மையைப், பரவாதாரில்லைநாள்களுந்
திரையார்பாலியின்றென்கரைமாற்பேற், றரையானேயருணல்கிடே. (சு)

அரசளிக்குமரக்கனவன்றனை, யுரைகெடுத்தவனொல்கிட
வரமிகுத்தவெம்மாற்பேற்றடிகளைப், பரவிடக்கெடும்பாவமே. (எ)

இருவர்தேவருந்தேடித்திரிந்ததி, லொருவராலறிவுண்டிலன்
மருவுநீள்கழன்மாற்பேற்றடிகளைப், பரவுவார்வினைபாறுமே. (அ)

தூசுபோர்த்துழல்வார்கையிற்றுற்றுணு,நீசர்தம்முரைகொள்ளேலுந்
தேசமல்கியதென்றிருமாற்பேற், றீசனென்றெடுத்தேத்துமே. (கூ)

மன்னிமாலொடுசோமன்பணிசெயு, மன்னுமாற்பேற்றடிகளை
மன்னுகாழியுண்ஞானசம்பந்தன்சொற், பன்னவேவினைபாறுமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

### பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

குருந்தவன்குருகவன்கூர்மையவன், பெருந்தகைபெண்ணவனாணுமவன்
கருந்தடமலர்க்கண்ணிகாதல்செய்யு, மருந்தவன்வளநகர்மாற்பேறே. (க)

பாறணிவெண்டலைகையினேந்தி, வேறணிபலிகொளும்வேட்கையனாய்
நீறணிந்துமையொருபாகம்வைத்த, மாறிலிவளநகர்மாற்பேறே. (உ)

கருவுடையாருலகங்கள்வேவச், செருவிடையேறியுஞ்சென்றுநின்
றுருவுடையாளுமையாளுந்தானும், மருவியவளநகர்மாற்பேறே. (ரு)

தலையவன்றலையணிமாலைபூண்டு, கொலைநவில்கூற்றினைக்கொன்றுகந்தான்
கலைநவின்றான்கயிலாயமென்னும், மலையவன்வளநகர்மாற்பேறே. (சா)

துறையவன்றொழிலவன்றொல்லுயிர்க்கும், பிறையணிசடைமுடிப்பெண்ணோர்பாகன்
கறையணிமிடற்றண்ணல்காலற்செற்ற, மறையவன்வளநகர்மாற்பேறே. (௭)

பெண்ணினல்லாளையோர்பாகம்வைத்துக், கண்ணினாற்காமனைக்காய்ந்தவன்றன்
விண்ணவர்தானவர்முனிவரோடு, மண்ணவர்வணங்குநன்மாற்பேறே. (சு-எ)

தீதிலாமலையெடுத்தவ்வரக்க, னீதியால்வேதகீதங்கள்பாட
வாதியாகியவண்ணலங்கண், மாதிதன்வளநகர்மாற்பேறே. (அ)

செய்யதண்டாமரைக்கண்ணனோடுங், கொய்யணிநறுமலர்மேலயனு
மையனன்சேவடியதனையுள்க, மையல்செய்வளநகர்மாற்பேறே. (கூ)

துளித்துணவமணர்குண்டரக்கரென்றுங், களித்துநன்கழலடிகாணலுறார்
முளைத்தவெண்மதியினோடரவஞ்சென்னி, வளைத்தவன்வளநகர்மாற்பேறே. (க0)

அந்தமில்ஞானசம்பந்தனல்ல, செந்திசைபாடல்செய்திருமாற்பேற்றைச்
சந்தமின்றமிழ்கள்கொண்டேத்தவல்லா, ரெந்தைதன்கழலடியெய்துவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்தது.

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாணிக்குயிர்பெறக்கூற்றையுதைத்தனமாவலிபாற்
காணிக்கிரந்தவன்காண்டற்கரியனகண்டதொண்டர்
பேணிக்கிடந்துபரவப்படுவனபேர்த்துமஃதே
மாணிக்கமாவனமாற்பேறுடையான்மலரடியே. (க)

கருடத்தனிப்பாகன்காண்டற்கரியனகாதல்செய்யிற்
குருடர்க்குமுன்னேகுடிகொண்டிருப்பனகோலமல்கு
செருடக்கடிமலர்ச்செல்வி தன்செங்கமலக்கரத்தால்
வருடச்சிவப்பனமாற்பேறுடையான்மலரடியே. (உ)

திருச்சிற்றம்பலம்.

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பொருமாற்றின்படைவேண்டிநற்பூம்புனல், வருமாற்றின்மலர்கொண்டுவழிபடுங்
கருமாற்கின்னருள்செய்தவன்காண்டகு, திருமாற்பேறுதொழவினைதேயுமே. (க)

ஆலத்தார்நிழலில்லறநால்வர்க்குக், கோலத்தாலுரைசெய்தவன்குற்றமில்
மாலுக்காரருள்செய்தவன்மாற்பேறு, ஏலத்தான்றொழுவார்க்கிடரில்லையே. (௨)

துணிவண்ணச்சுடராழிகொள்வானெண்ணி, யணிவண்ணத்தலர்கொண்டடியர்ச்சித்த
மணிவண்ணற்கருள்செய்தவன்மாற்பேறு, பணிவண்ணத்தவர்க்கில்லையாம்பாவமே. (௩)

தீதவைசெய்துதீவினைவீழாதே, காதல்செய்துகருத்தினில்நின்றனன்
மாதவர்பயில்மாற்பேறுகைதொழப், போதுமின்வினையாயினபோகுமே. (௪)

வார்கொள்மென்முலைமங்கையோர்பங்கினன், வார்கொணன்முரசம்மறையவ்வறை
வார்கொள்பைம்பொழில்மாற்பேறுகைதொழூ, வார்கள்மன்னுவர்பொன்னுலகத்திலே.

பண்டைவல்வினைபற்றறுக்கும்வகை, யுண்டுசொல்லுவல்கேண்மினொளிகிளர்
வண்டுசேர்பொழில்சூழ்தருமாற்பேறு, கண்டுகைதொழத்தீருங்கவலையே. (௬)

மழுவலான்றிருநாமமகிழ்ந்துரைத், தழுவலார்களுக்கன்புசெய்தின்பொடும்
வழுவிலாவருள்செய்தவன்மாற்பேறு, தொழவல்லார்தமக்கில்லைத்துயரமே. (௭)

முன்னவனுலகுக்குமுழுமணிப், பொன்னவன்றிகழ்முத்தொடுபோகமாம்
மன்னவன்றிருமாற்பேறுகைதொழும், அன்னவரெமையாளுடையார்களே. (௮)

வேடனாய்விசயன்னொடுமெய்துவெங், காடுநீடுகந்தாடியகண்ணுதல்
மாடநீடுயருந்திருமாற்பேறு, பாடுவார்பெறுவார்பரலோகமே. (௯)

கருத்தனாய்க்கயிலாயமலைதனைத், தருக்கினாலெடுத்தானைத்தகரவே
வருத்தியாரருள்செய்தவன்மாற்பேறு, அருத்தியாற்றொழுவார்க்கில்லையல்லலே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

ஏதுமொன்றுமறிவிலராயினும், ஓதியஞ்செழுத்துமுணர்வார்கட்குப்
பேதமின்றியவரவருள்ளத்தே, மாதுந்தாமுமகிழ்வர்மாற்பேறரே. (௧)

அச்சமில்லைநெஞ்சேயரனாமங்கள், நிச்சலுந்நினையாய்வினைபோயறக்
கச்சமாவிடமுண்டகண்டாவென, வைச்சமாநிதியாவர்மாற்பேறரே. (௨)

சாத்திரம்பலபேசுஞ்சழக்கர்காள், கோத்திரமுங்குலமுங்கொண்டென்செய்வீர்
பாத்திரஞ்சிவமென்றுபணிதிரேல், மாத்திரைக்குளருளுமாற்பேறரே. (௩)

இருந்துசொல்லுவன்கேண்மின்களேழைகாள், அருந்தவந்தருமஞ்சடைச்சோதிநற்
பொருந்துநோய்பிணிபோகத்துரப்பதோர், மருந்துமாகுவர்மன்றுமாற்பேறரே. (௪)

சாற்றிச்சொல்லுவன்கேண்மின்றரணியீர், ஏற்றின்மேல்வருவான்கழலேத்திநற்
கூற்றைநீக்கிக்குறைவறுத்தாள்வதோர், மாற்றிலாச்செம்பொனாவர்மாற்பேறரே. (௫)

நாட்டுமாநிதிசாலவிழக்கிலும், வீட்டுங்காலன்விரையவழைக்கிலும்
காட்டின்மாநடமாடுவாய்காவெனில், வாட்டந்தீர்க்கவும்வல்லர்மாற்பேறரே. (௬)

ஐயனேயரனேயென்றரற்றினால், உய்யலாமுலகத்தவர்பேறுவார்
செய்யபாதமிரண்டுநினையவே, வையமாளவும்வைப்பர்மாற்பேறரே. (௭-௮-௯)

உந்திச்சென்றுமலையையெடுத்தவன், சந்துதோளொடுதாளிறவூன்றினான்
மந்திபாய்பொழில்சூழுமாற்பேறென, அந்தமில்லதோரின்பமணுகுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பாரானைப்பாரின்பயனானானைப்படைப்பாகிப்பல்லுயிர்க்கும்பரிவோன்றன்னை
யாராதவின்னமுதையடியார்தங்கட்கனைத்துலகுமானானையமரர்கோனைக்
காராருங்கண்டனைக்கயிலைவேந்தைக்கருதுவார்மனத்தானைக்காலற்செற்ற [னே.
சீரானைச்செல்வனைத்திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தே

விளைக்கின்றநீராகிவித்துமாகிவிண்ணோடுமண்ணாகிவிளங்குசெம்பொன்
றுளைக்கின்றதுளையாகிச்சோதியாகித்தூண்டரியசுடராகித்துளக்கில்வான்மேல்
முளைக்கின்றகதிர்மதியுமரவுமொன்றிமுழங்கொலிநீர்க்கங்கையொடுமூவாதென்றுந்
திளைக்கின்றசடையானைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தேனே.

மலைமகடங்கோனவனைமாநீர்முத்தைமரகதத்தைமாமணியைமல்குசெல்வக்
கலைநிலவுகையானைக்கம்பன்றன்னைக்காண்பினியசெழுஞ்சுடரைக்கனகக்குன்றை
விலைபெரியவெண்ணீற்றுமேனியானைமெய்யடியார்வேண்டியதேவேண்டுவானைச் [னே.
சிலைநிலவுகரத்தானைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தே

உற்றானையுடறனக்கோருயிரானானையோங்காரத்தொருவனையங்குமையோர்பாகம்
பெற்றானைப்பிஞ்ஞகனைப்பிறவாதானைப்பெரியனவுமரியனவுமெல்லாமுன்னே
கற்றானைக்கற்பனவுந்தானேயாயகச்சியேகம்பனைக்காலன்வீழச் [தேனே.
செற்றானைத்திகழொளியைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்

நீறாகிநீறுமிழுநெருப்புமாகிநினைவாகிநினைவினியமலையான்மங்கை
கூறாகிக்கூற்றாகிக்கோளுமாகிக்குணமாகிக்குறையாதவுவகைக்கண்ணீ
ராறாதவானந்தத்தடியார்செய்தவஞ்சாரம்பொறுத்தருளியவர்மேலென்றுஞ்
சீறாதபெருமானைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச் சென்றடைந்தேனே.

மருவினியமறைப்பொருளைமறைக்காட்டானைமறப்பிலியைமதியேந்துசடையான்றன்
னுருநிலவுமொண்சுடரையும்பரானையுரைப்பினியதவத்தானையுலகில்வித்தைக் [னை
கருநிலவுகண்டனைக்காளத்தியைக்கருதுவார்மனத்தானைக்கல்விதன்னைச் [னே.
செருநிலவுபடையானைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தே

பிறப்பானைப்பிறவாதபெருமையானைப்பெரியானையரியானைப்பெண்ணாணாய
நிறத்தானைநின்மலனைநினையாதாரைநினையானைநினைவோரைநினைவொன்றானை
யறத்தானையறவோனையையன்றன்னையண்ணானைநண்ணரியவமரரேத்துந் [தேனே.
திறத்தானைத்திகழொளியைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்

வானகத்தில்வளர்முகிலைமதியந்தன்னைவணங்குவார்மனத்தானைவடிவார்பொன்னை
யூனகத்திலுறுதுணையையுலவாதானையொற்றியூருத்தமனையூழிக்கன்றைக்
கானகத்துக்கருங்களிற்றைக்காளத்தியைக்கருதுவார்கருத்தானைக்கருவைமூலத் [னே.
தேனகத்தினின்சுவையைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தே

முற்றாதமுழுமுதலைமுளையைமொட்டைமுகைமலரின்மூர்த்தியைமுனியாதென்றும்
பற்றாகிப்பல்லுயிர்க்கும்பரிவோன்றன்னைப்பராபரனைப்பரஞ்சுடரைப்பரிவோர்நெஞ்சி
லுற்றானையுயர்கருப்புச்சிலையோனீறாயொள்ளழல்வாய்வேவவுறுநோக்கத்தானைச் [னே.
செற்றானைத்திரிபுரங்கடிருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தே

விரித்தானைநான்மறையோடங்கமாறும்வெற்பெடுத்தவிராவணனைவிரலாலூன்றி
நெரித்தானைநின்மலனையம்மான்றன்னைநிலாநிலவுசெஞ்சடைமேனிறைநீர்கங்கை
தரித்தானைச்சங்கரனைச்சம்புதன்னைத்தரியலர்கள்புரமூன்றுந்தழல்வாய்வேவச்[தேனே.
சிரித்தானைத்திகழொளியைத்திருமாற்பேற்றெறஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைக

திருச்சிற்றம்பலம்.

**சுவாமி - மால்வணங்குமீசர். தேவியார் - கருணைநாயகியம்மை.**

ஆஉ திருமாற்பேற்றுத் தேவாரப்பதிகம். (சா)

உ

சிவமயம்.

## திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்தது.

# திருக்குரங்கணின்முட்டம்.



### பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

விழுநீர்மழுவாட்படையண்ணல்விளங்குங்
கழுநீர்குவளைம்மலரக்கயல்பாயுங்
கொழுநீர்வயல்சூழ்ந்தகுரங்கணின்முட்டந்
தொழுநீர்மையர்தீதுருதுன்பமிலரே. (க)

விடைசேர்கொடியண்ணல்விளங்குயர்மாடக்
கடைசேர்கருமென்குளத்தோங்கியகாட்டிற்
குடையார்புனல்மல்குகுரங்கணின்முட்ட
முடையானெனையாளுடையெந்தைபிரானே. (உ)

சூலப்படையான்விடையான்சுடுநீற்றான்
காலன்றனையாருயிர்வவ்வியகாலன்
கோலப்பொழில்சூழ்ந்தகுரங்கணின்முட்டத்
தேலங்கமழ்புன்சடையெந்தைபிரானே. (ங)

வாடாவிரிகொன்றைவலத்தொருகாதிற்
றோடார்குழையானலபாலனநோக்கி
கூடாதனசெய்தகுரங்கணின்முட்ட
மாடாவருவாரவரன்புடையாரே. (ச)

இறையார்வளையாளையோர்பாகத்தடக்கிக்
கறையார்மிடற்றான்கரிகீறியகையான்
குறையார்மதிசூடிகுரங்கணின்முட்டத்
துறைவானெமையாளுடையொண்சுடரானே. (ரு)

பலவும்பயனுள்ளனபற்றுமொழிந்தோங்
கலவம்மயில்காமுறுபேடையோடாடிக்
குலவும்பொழில்சூழ்ந்தகுரங்கணின்முட்டந்
நிலவும்பெருமானடிநித்தல்நினைந்தே. (சு)

மாடார்மலர்க்கொன்றைவளர்சடைவைத்துத்
தோடார்குழைதானொருகாதிலிலங்கக்
கூடார்மதிளெய்துகுரங்கணின்முட்டத்
தாடாரரவம்மரையார்த்தமர்வானே. (எ)

மையார்றம் மணியரககாத
யுய்யாவகையாலடர்த்தின்னருள்செய்த
கொய்யார்மலர்சூடிகுரங்கணின்முட்டங்
கையாற்றொழுவார்வினைகாண்டலரிதே. (அ)

வெறியார்மலர்த்தாமரையானொடுமாலு
மறியாதசைந்தேத்தவோராரழலாகுங்
குறியாணியிர்ந்தான்றன்குரங்கணின்முட்டந்
நெறியாற்றொழுவார்வினைநிற்கிலாவே. (கூ)

கழுவார்துவராடைகலந்துமெய்போர்க்கும
வழுவாச்சமண்சாக்கியர்வாக்கவைகொள்ளேல்
குழுமின்சடையண்ணல்குரங்கணின்முட்டத்
தெழில்வெண்பிறையானடிசேர்வதியல்வே. (க0)

கல்லார்மதிட்காழியுள்ஞானசம்பந்தன்
கொல்லார்மழுவேந்திகுரங்கணின்முட்டஞ்
சொல்லார்தமிழ்மாலைசெவிக்கினிதாக
வல்லார்க்கெளிதாம்பிறவாவகைவீடே. (கக)

திருச்சிற்றமபலம.

சுவாமிபேயர் - வாலீசுவரர். தேவியார் - இறையார்வளையம்மை.

உ

சிவமயம்.

# திருஓத்தூர்.



## பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூத்தேர்ந்தாயனகொண்டுநின்பொன்னடி, யேத்தாதாரில்லையெண்ணுங்கா
லோத்தூர்மேயவொளிமழுவாளங்கை, கூத்தீருமகுணங்களே. (க)

இடையீர்போகாவிளமுலையாளையோர், புடையீரேபுள்ளிமானுரி
யுடையீரேயும்மையேத்துதுமோத்தூர்ச், சடையீரேயுமதாளே. (உ)

உள்வேர்போலநொடிமையினார்திறங், கொள்வீரல்குலோர்கோவண
மொள்வாழைக்கனிதேன்சொரியோத்தூர்க், கள்வீரேயுமகாதலே. (ரு)

நோட்டீரேறுத்தியைந்தலைநாகத்தை, யாட்டீரேயடியார்வினை
யோட்டீரேயும்மையேத்துமோத்தூர், நாட்டீரேயருணல்குமே. (௪)

குழையார்காதீர்கொடுமழுவாட்படை, யுழையாள்வீர்திருவோத்தூர்
பிழையாவண்ணங்கள்பாடிநின்றுவொ, ரழையாமேயருணல்குமே. (௫)

மிக்கார்வந்துவிரும்பிப்பலியிடத், தக்கார்தம்மடியீர்களென்
றுட்காதாருளரோதிருவோத்தூர், நக்கீரேயருணல்குமே. (௬)

தூர்தார்கொன்றைதயங்குமுடியுடை, நாதாவென்றுநலம்புகழ்ந்
தோதாதாருளரோதிருவோத்தூ, ராதீரேயருணல்குமே. (௭)

என்றானிம்மலையென்றவரக்கனை, வென்றார்போலும்விரலினா
லொன்றார்மும்மதிலெய்தவனோத்தூ, ரென்றார்மேல்வினையேகுமே. (அ)

நன்றாநான்மறையானொடுமாலுமாய்ச், சென்றார்போலுந்திசையெலா
மொன்றாயொள்ளெரியாய்மிகவோத்தூர், நின்றீரேயுமைநேடியே. (௯)

காரமண்கலிங்கத்துவராடையர், தேரர்சொல்லவைதேறன்மி
னோரம்பாலெயிலெய்தவனோத்தூர்ச், சீரவன்கழல்சேர்மினே. (௧௦)

குரும்பையாண்பனையினகுலையோத்தூ, ரரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுள்ஞானசம்பந்தன்சொல், விரும்புவார்வினைவீடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி பெயர் - வேதநாதர். தேவியார் - இளமுலை நாயகியம்மை.

இப்பதிகத்தாலாண்பனையைப் பெண்பனையாக்கியது.

சிவமயம்.

# திருமாகறல்.

## திருவிராகம் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

விங்குவிளைகழனிமிகுகடைசியர்கள்பாடல்விளையாடலரவ
மங்குலொடுநீள்கொடிகண்மாடமலிநீடுபொழின்மாகறலுளான்
கொங்குவிரிகொன்றையொடுகங்கைவளர்திங்களணிசெஞ்சடையினான்
செங்கண்விடையண்ணலடிசேர்பவர்கடீவினைகடீருமுடனே. (௧)

கலையினொலிமங்கையர்கள்பாடலொலியாடல்கவினெய்தியழகார்
மலையினிகர்மாடமுயர்நீள்கொடிகள்வீசுமலிமாகறலுளா
னிலையின்மலிவேலனுனையருலம்வலனேந்தியெரிபுன்சடையினு
ளலைகொள்புனலேந்துபெருமானடியையேத்தவினையகலுமிகவே. (உ

காலையொடுதுந்துபிகள்சங்குகுழல்யாழ்முழவுகாமருவுசீர்
மாலைவழிபாடுசெய்துமாதவர்களேத்திமகிழ்மாகறலுளான்
றோலையுடைபேணியதன்மேலோர்சுடர்நாகமசையாவழகிதாப்
பாலையனநீறுபுனைவானடியையேத்தவினைபறையுமுடனே. (௩)

இங்குகதிர்முத்தினொடுபொன்மணிசளுந்தியெழின்மெய்யுளுடனே
மங்கையருமைந்தர்களுமன்னுபுனலாடிமகிழ்மாகறலுளான்
கொங்குவளர்கொன்றைகுளிர்திங்களணிசெஞ்சடையினானடியையே
நுங்கள்வினைதீரமிகவேத்திவழிபாடுநுகராவெழுமினே. (௪)

துஞ்சுநறுநீலமிருளிங்கவொளிதோன்றுமதுவார்கழனிவாய்
மஞ்சுமலிபூம்பொழிலின்மயில்கணடமாடமலிமாகறலுளான்
வஞ்சமதயானையுரிபோர்த்துமகிழ்வானோர்மழுவாளன்வளரு
நஞ்சமிருள்கண்டமுடைநாதனடியாரைநலியாவினைகளே. (௫)

மன்னுமறையோர்களொடுபல்படிமமாதவர்கள்கூடியுடனா
யின்னவகையாலினிதிறைஞ்சியிமையோரிலெழுமாகறலுளான்
மின்னைவிரிபுன்சடையின்மென்மலர்கள்கங்கையொடுதிங்களெனவே
யுன்னுமவர்தொல்வினைகளொல்கவுயர்வானுலகமேறலெளிதே. (௬)

வெய்யவினைநெறிகள்செலவந்தணையுமேல்வினைகள்வீட்டலுறுவீர்
மைகள்விரிகானன்மதுவார்கழனிமாகறலுளானெழிலதார்
கையகரிகால்வரையின்மேலதுரிதோலுடையமேனியழகா
னையனடிசேர்பவரையஞ்சியடையாவினைகளகலுமிகவே. (௭)

தூசுதுகினீள்கொடிகண்மேகமொடுதோய்வனபொன்மாடமிசையே
மாசுபடுசெய்கைமிகமாதவர்களோதிமலிமாகறலுளான்
பாசுபதவிச்சைவரிநச்சரவுகச்சையுடைபேணியழகார்
பூசுபொடியீசனெனவேத்தவினைநிற்றலிலபோகுமுடனே. (௮)

தூயவிரிதாமரைகணெய்தல்கழுநீர்குவளைதோன்றமருவுண்
பாயவரிவண்டுபலபண்முரலுமோசைபயின்மாகறலுளான்
சாயவிரலூன்றியவிராவணனதன்மைகெடநின்றபெருமா
னாயபுகழேத்துமடியார்கள்வினையாயினவுமகல்வதெளிதே. (௯)

காலினலபைங்கழல்கணீண்முடியின்மேலுணர்வுகாமுறவினான்
மாலுமலரானுமறியாமையெரியாகியுயர்மாகறலுளா
னாலுமெரிதோலுமுரிமாமணியநாகமொடுகூடியுடனா
யாலும்விடையூர்தியுடையடிகளடியாரையடையாவினைகளே. (௧௦)

கடைகணெடுமாடமிகவோங்குகமழ்வீதிமலிகாழியவர்கோ
னடையும்வகையாற்பரவியரனையடிகூடுசெய்பந்தனுரையான்
மடைகொள்புனலோடுவயல்கூடுபொழின்மாகறலுளானடியையே
யுடையதமிழ்பத்துமுணர்வாரவர்கடொல்வினைகளொல்குமுடனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - அடைக்கலங்காத்தநாதர். தேவியார் - புவனநாயகியம்மை.

உ

சிவமயம்.

## பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்தது.

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி.

கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைப்போற்றுகின்ற
வித்தொண்டனேன்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே. (௧)

ஏகம்பனேயென்னையாள்பவனேயிமையோர்க்கிரங்கிப்
போகம்பன்னாளுங்கொடுக்கின்றநாயகபொங்குமைவாய்
நாகம்பொன்னாரமெனப்பொலிவுற்றநன்னீறணியும்
ஆகம்பொன்மாமலையொப்பவனேயென்பனாதரித்தே. (௨)

தரித்தேன்மனத்துன்றிகழ்தருநாமந்தடம்பொழில்வாய்
வரித்தேன்முரல்கச்சியேகம்பனேயென்றன்வல்வினையை
யரித்தேனுனைப்பணியாதவரேழைமைகண்டவரைச்
சிரித்தேனுனக்கடியாரடிபூணத்தெளிந்தனனே. (௩)

தெளிதருகின்றதுசென்றென்மனநின்றிருவடிவம்
மளிதருநின்னருட்கையமினியிலையந்திச்செக்கர்
ஒளிதருமேனியெம்மேகம்பனேயென்றுகந்தவர்தாள்
துளிதருதூளியென்றன்றலைமேல்வைத்ததன்மைபெற்றே. (௪)

பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகுநின்சீர்
கற்றுகந்தேனென்கருத்தினிதாக்கச்சியேகம்பத்தின்
பற்றுகந்தேறுமுகந்தவனேபடநாககச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றுணையடியே. (௫)

அடிநின்றசூழலகோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றசூழ்முடிகாண்பரிதாயிற்றுக்கார்முகிலின்
இடிநின்றசூழ்குரலேறுடையேகம்பயாமெங்ஙனே
வடிநின்றசூலப்படையுடையாயைவணங்குவதே. (௬)

வணக்கந்தலைநின்றிருவடிக்கேசெய்யுமையல்கொண்டோ
ரிணக்கன்றிமற்றோரிணக்கறியோமல்லல்வல்லரவின்
குணக்குன்றவில்லிகுளிர்கச்சியேகம்பம்பாடினல்லாற்
கணக்கன்றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே. (௭)

நலந்தரநாவென்றுசொல்லுவன்கேண்மினல்லீர்களன்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகனற்றிகிரி

சலந்தரனாகமொழிக்கவைத்தாய்தக்கன்வேள்வியெல்லா
நிரந்தரமாகச்செய்யாயென்றுபூசித்துநின்மின்களே. (௮)

மின்களென்றார்சடைகொண்டலென்றார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெளிப்பாடுதம்பொன்னடிபூண்டுகொண்ட
வென்களென்றாலும்பிரிந்தறியார்கச்சியேகம்பத்தான்
றன்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே. (௯)

தன்மையிற்குன்றாத்தவத்தோரிமையவர்தாம்வணங்கும்
வன்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கயிலைப்
பொன்மயிற்சாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலும்
மென்மையிற்சாயுமருங்குலுங்காதல்விளைத்தனவே. (௧௦)

தனமிட்டுமைதழுவத்தழும்புற்றவர்தம்மடியார்
மனம்விட்டகலாமதிற்கச்சியேகம்பர்வான்கயிலைச்
சினம்விட்டகலாக்களிறுவினாவியோர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதுநம்பூங்கொடியே. (௧௧)

பூங்கொத்திருந்தழையார்பொழிற்கச்சியேகம்பர்பொற்பார்
கோங்கத்திருந்தகுடுமிக்கயிலையெம்பொன்னொருத்தி
பாங்கொத்திருந்தனையாரணங்கேபடர்கல்லருவி
யாங்கத்திருந்திழையாடிவந்தாற்கண்டடிவருத்தே. (௧௨)

வருத்தந்தருமெய்யுங்கையிற்றழையும்வன்மாவினவுங்
கருத்தந்தரிக்குநடக்கவின்றையகழனிலையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்க்கயிலைத்
துருத்தந்திருப்பதன்றிப்புனங்காக்குந்தொழிலெமக்கே. (௧௩)

எம்மையுமெம்மைப்பணிகொள்ளுங்கம்பபொழிற்கயிலை
யும்மையுமாணிடமிப்புனத்தேவிட்டுவந்தமைந்தர்
தம்மையுமானையுஞ்சிந்தையுநோக்கங்கவர்வவென்றே
வம்மையுமம்மலர்க்கண்ணும்பெரியீரருளுமினே. (௧௪)

அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்கும்மிவளையருறுத்தியெய்ய
வெருளக்கலைகணைதன்னொடும்போயினவில்லினமக்கு
மருளைத்தருசொல்லியெங்கோவிலையுண்டிவ்வையகத்தே. (௧௫)

வையார்மழுப்படையேகம்பரீங்கோய்மலைப்புனத்து
ளையார்வருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்தவெம்பூங்கொடிகொங்கைபொருப்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே. (௧௬)

பருமுத்துதிர்த்திடுஞ்சீர்மத்தயானைநுதல்பகுத்திட்
டொருமொத்தநின்குரற்சீயந்திரிநெறியோங்குவைவாய்ப்
பொருமுத்தலைவேற்படைக்கம்பர்பூங்கயிலைப்புனத்துட்
டருமுத்தனகைதன்னைசையால்வெற்பசார்வரிதே. (௧௭)

அரிதன்றிருக்கண்ணிடநிரம்பாயிரம்போதணிய
வரிதன்றிருவடிக்கர்ச்சித்தகண்ணுக்கருளுகம்ப
ரரிதன்றிருக்கங்குலியாலழிந்தகயிலையல்லிங்
கரிதென்றிருப்பதெம்பால்வெற்பவெய்மையர்க்கஞ்சுதுமே. (௧௮)

அஞ்சரத்தான்பொடியாய்விழத்தீவிழித்தன்புசெய்வோர்
நெஞ்சரத்தாழ்வுகந்தோர்கச்சியேகம்பர்நீள்கயிலைக்
குஞ்சரத்தாழ்வரைவீழநுங்கொம்புய்யக்கும்பமூழ்கும்
வெஞ்சரத்தாரணவோவல்லவோவிவ்வியன்முரசே. (௧௯)

சேய்தந்தகைம்மையுமைகணவன்றிருவேகம்பத்தான்
றாய்தந்தையாயுயிர்காப்போன்கயிலைத்தயங்கிருள்வாய்
வேய்தந்ததோளிநம்மூசலொடும்விரைவேங்கைதன்னைப்
பாய்தந்துபூசலுண்டாங்கொண்டதோசைபகடுவந்தே. (௨௦)

வந்தும்மணம்பெறிற்பொன்னனையீர்மன்னுமேகம்பர்த
முந்துமருவிக்கயிலைமலையுயர்தேனிழிச்சித்
தந்துமலர்கொய்துந்தண்டினைமேயுங்கிளிகடிந்துஞ்
சிந்தும்புகர்மலைக்கச்சுமிச்சாரற்றிரிதவனே. (௨௧)

திரியப்புரமெய்தவேகம்பனார்திகழுங்கயிலைக்
கிரியக்குறவர்பருவத்திடுதரளம்விளையோம்
விரியச்சுருண்முதலானுமடைந்தோமவிரைவிரைந்து
பிரியக்கிர்முத்தினீர்பெற்றதென்னங்குப்பேசுமினே. (௨௨)

பேசுகயாவருமைக்கணியாளொன்றுபித்தரொங்கும்
பூசுகையார்திருநீற்றெழிலேகம்பர்பொற்கயிலைத்
தேசுகையார்சிலைவெற்பன்பிரியும்பரிசலரக்
கூசுகையாதுமில்லாக்குலைவேங்கைப்பெயர்நமக்கே. (௨௩)

பெயராநலத்தெழிலேகம்பனார்பிறைதோய்கயிலைப்
பெயராதிருக்கப்பெறுகிளிகாள்புனமேபிரிவின்
றுயரால்வருத்திமனமுமிங்கோடித்தொழுதுசென்ற
தயராதுறையும்வெற்பர்க்கடியற்கும்விடைதமினே. (௨௪)

தம்மைப்பிறவிக்கடல்கடப்பிப்பவர்தாம்வணங்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழிலேகம்பர்மொய்கயிலை
யம்மைக்கருங்கண்ணிதன்னொடின்பந்தருந்தண்புனமே
யெம்மைக்கவலைசெயச்சொல்லியோவல்லியெய்தியதே. (௨௫)

இயங்குந்திரிபுரமெய்தவேகம்பமொழிற்கயிலைத்
தயங்குமலர்ப்பொழில்காடையலாடருவித்தடங்கா
முயங்குமணியறைகாண்மொழியீரொழியாதுநெஞ்ச
மயங்கும்பரிசுபொன்னூர்சென்றசூழல்வகுத்தெமக்கே. (௨௬)

வகுப்பாரிவர்போன்மணத்துக்குநாண்மணந்தன்னொடின்ப
மிகுப்பார்களாருயிரொன்றுமிருவராவிள்ளக்கள்வாய்

நெருப்பான்மலர்கொண்டுநின்றார்கிடக்கநிலாவுகம்பர்
தொகுப்பான்மணிசிந்தருவிக்கயிலையிச்சூழ்புனத்தே. (௨௭)

புனங்குழையாதென்றுமென்றினைகொய்ததும்போகலுற்ற
கனங்குழையாடற்பிரியநமக்குறுங்கையறவால்
மனங்குழையாவருங்கண்கனிபண்பலபாடுந்தொண்ட
ரினங்குழையாத்தொழுமேகம்பரிக்கயிலாயத்துள்ளே. (௨௮)

உள்ளம்பெரியரல்லாச்சிறுமானிடருற்றசெல்வங்
கள்ளம்பெரியசிறுமனத்தார்க்கன்றிக்கங்கையென்னும்
வெள்ளம்பெரியசடைத்திருவேகம்பர்விண்ணரணந்
தள்ளம்பெரிகொண்டமைத்தாரடியவர்சார்வதன்றே. (௨௯)

அன்றும்பகையடர்க்கும்பரிமாவுமதவருவிக்
குன்றும்பதாதியுந்தேருங்குலவிக்குடைநிழற்கீழ்
நின்றும்பொலியினுங்கம்பர்நன்னீறுநுதற்கிலரேல்
என்றுமரசுமுரசும்பொலியாதிருநிலத்தே. (௩0)

நிலத்திமையோரிற்றலையாப்பிறந்துமறையொடங்கம்
வலத்திமைப்போதும்பிரியாரெரிவளர்த்தாலும்வெற்பன்
குலத்துமையோர்பங்கர்கச்சியுளேகம்பங்கூடித்தொழு
நலத்தமையாதவர்வேட்டுவர்தம்மினடுப்படையே. (௩௧)

படையாலுயிர்கொன்றுதின்றுபசுக்களைப்போலச்செல்லு
நடையாலறிவின்றிநாண்சிறிதின்றிநகுங்குலத்திற்
கடையாப்பிறக்கினுங்கச்சியுளேகம்பத்தெங்களையா
ளுடையான்கழற்கன்பரேலவர்யாவர்க்குமுத்தமரே. (௩௨)

உத்துங்கயானையுரியார்விரலாலரக்கன்சென்னி
பத்துங்கையானவிருபதுஞ்சோர்தரவைத்திலைய
மொத்துங்கையாலவன்பாடக்கயிலைகைவாளொடுநா
ளொத்துங்கையானென்றுகந்தளித்தார்கச்சியேகம்பரே. (௩௩)

அம்பரங்காலனலீர்நிலந்திங்களருக்கனனு
வம்பரங்கொள்வதோர்வேழத்துரியவன்றன்னுருவா
மெம்பரன்கச்சியுளேகம்பத்தானிடையாதடைவா
னம்பரன்றன்னடியாரறிவார்க்குநறுந்துணையே. (௩௪)

துணைத்தாமரையடியும்பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுங்கண்டத்துநீலமுமண்டத்துமின்
பணைத்தாலனசடையுந்திருமுக்கணும்பெண்ணொர்பக்கத்
தணைத்தாரொழிற்கம்பரெங்கள்பிரானார்க்கழகியவே. (௩௫)

அழகறிவிற்பெரிதாகியவேகம்பரத்தர்கொற்றம்
பழகறிவிற்பெரியோர்தமைப்பற்றலர்பற்றுமன்பின்
குழகறிவேற்பினுமொன்றறியாரறியாமைதெய்வங்
கிழகெறியப்பட்டுலந்தாருலகிற்கிடந்தனரே. (௩௬)

கிடக்குமொருபாலிமைக்கின்றபாம்பொருபான்மதியந்
தொடக்குண்டிலங்குமலங்குந்திரைக்கங்கைசூடுங்கொன்றை
வடக்குண்டுகெட்டத்தலைமாலைவாளான்மலைந்தவெம்போர்
கடக்கும்விடைத்திருவேகம்பர்கற்றைச்சடைமுடியே. (௩௭)

கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ்கொன்றையந்தார்
முற்றுற்றிலமதியின்கொழுந்தேகம்பர்மொய்குழலா
மற்றைத்திசையின்மணிப்பொற்கொழுந்தத்தரங்கழுநீர்
தெற்றிப்பொலிகின்றகூட்டழகாகித்திகழ்தருமே. (௩௮)

தருமருட்டன்மைவலப்பாற்கமலக்கணெற்றியின்மேற்
றிருமலர்க்கண்பிளவின்றிகழுந்தழல்செல்வக்கம்பர்
கருமலர்க்கண்ணிடப்பாலதுநீலங்கனிமதத்து
வருநுதற்பொட்டணங்குக்குயர்ந்தோங்குமலர்க்குழலே. (௩௯)

மலர்ந்தபடத்துச்சியைந்தினுஞ்செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலம்வலக்காதினிலாடிவரும்
நலந்திருநீள்வயிரம்வெயிற்பாயுநகுமணிகள்
கலந்தசெம்பொன்மகரக்குழையேகம்பர்காதிடமே. (௪௦)

காதலைக்கும்வலத்தோள்பவளக்குன்றமங்குயர்ந்து
போதலைக்கும்பனிப்பொன்மலைநீற்றின்பொலியகலந்
தாதலைக்குங்குழல்சேர்பணைத்தோணறுஞ்சாந்தணிந்து
சூதலைக்கும்முலைமார்பிடமேகம்பர்சுந்தரமே. (௪௧)

தரம்பொற்பழியுமுலகட்டியெய்த்துத்தரந்தளரா
வுரம்பொற்புடையதிருவயிறும்வலமும்பர்மும்மைப்
புரம்பொற்பழித்தகம்பர்க்குத்தரத்திடுபூண்முலையு
நிரம்பப்பொறுத்துதளரிளவஞ்சியுநேருடைத்தே. (௪௨)

உடைப்புலியாடையின்மேலுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந்தோன்றுமனாவலமற்றையல்குற்
றொடக்குறுகாஞ்சித்தொடுத்தவரசிலைதூநுண்டுகில்
அடற்பொலியேறுடையேகம்பமேயவடிகளுக்கே. (௪௩)

அடிவலப்பாலதுசெந்தாமரையொத்ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத்திறவைத்ததிளந்தளிரி
னடியிடப்பாலதுபஞ்சுறவஞ்சுஞ்சிலம்பணிந்த
வடிவுடைத்தார்க்கச்சியேகம்பமேயவரதருக்கே. (௪௪)

தருக்கவற்றுன்மிக்கமுப்புரமெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றேடமழுவாள்விசைந்ததுநேர்கனென்றும்
பருக்கவற்றுங்கச்சியேகம்பரத்தர்தம்பாம்புகளின்
றிருக்கயிற்றால்விட்டருளுங்கடகந்திருக்கரமே. (௪௫)

கரத்தத்தமருகத்தோசைகடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்டவளிதலநெரியத்

தாரத்தத்திசைகளுக்கப்புறம்போர்ப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகம்பராடுவொல்லியுமாநடமே. (௪௬)

நடனம்பிரானுகந்துய்யக்கொண்டானென்றநன்மறையோ
ருடன்வந்துமூவாயிரவரிறைஞ்சிநிறைந்தவன்பின்
கடனன்றிமற்றறியாத்தில்லையம்பலங்காளத்தியா
மிடமெம்பிரான்கச்சியேகம்பமேயாற்கினியனவே. (௪௭)

இனியவரின்றாரவரையொப்பார்பிறரென்னவொண்ணாத்
தனியவர்தையலுடனாமுருவரறம்பணித்த
முனியவரொன்றுமுகந்தமுக்கண்ணவர்தண்டியன்புக்
கினியவர்காய்மழுவாட்படையார்கச்சியேகம்பரே. (௪௮)

பரவித்தனைநினையக்கச்சியேகம்பர்பண்ணுமையல்
வரவித்தனையுள்ளதெங்கறிந்தேன்முன்னவர்மகனூர்
புரவித்தனையடிக்கக்கொடிதாய்விடியாவிரவி
லரவித்தனையுங்கொண்டார்மடவார்முன்றிலாட்டிடவே. (௪௯)

இடவஞ்சுறுக்கெனப்பாயுமஞ்சென்னிநருதலைகண்
டிடவஞ்சுவர்மடவாரிரிகின்றனரேகம்பத்தீர்
படமஞ்சுவாயதுநாகமிளைக்குமதனுக்குமுற்
படவஞ்சுவரெங்ஙனேபலிவந்திடும்பாங்குகளே. (௫௦)

பாங்குடைக்கோட்புலியின்னதள்கொண்டீர்நும்பாரிடங்க
டாங்குடைகொள்ளப்பலிகொள்ளவந்தீர்தடங்கமலம்
பூங்குடைகொள்ளப்புனற்கச்சியேகம்பங்கோயில்கொண்டீ
ரீங்கிடைகொள்ளக்கலைகொள்ளவந்தீரிடைக்குமின்றே. (௫௧)

இடைக்குமின்றேற்குமிணைமுலையாய்முதியார்கடஞ்சொற்
கடைக்கணன்றாங்கச்சியேகம்பனையங்கொளக்கடவும்
விடைக்குமுன்றோற்றநில்லேனின்றினியிந்தமொய்குழலார்
கிடைக்குமுன்றோற்றநெஞ்சங்கெதுவோதங்கிறித்துவமே. (௫௨)

கிறிபலபேசிச்சதிராநடந்துவிடங்குபடக்
குறிபலபாடிக்குளிர்கச்சியேகம்பனையங்கொள்ள
நெறிபலவார்குழலார்மெலிவுற்றநெடுந்தெருவிற்
செறிபலவெள்வளைபோயினதாயர்கடேடுவரே. (௫௩)

தேடுற்றிலகள்ளநோக்கந்தெரிந்திலசொற்கண்முடி
கூடுற்றிலகுழல்கொங்கைபொடித்திலகூறுமிவ்
மாடுற்றிலமணியின்மடவஃகுறுமற்றிவள்பா
றூடுற்றிலவெழிலேகம்பனார்க்குள்ளநல்கிடத்தே. (௫௪)

நல்கும்புகழ்கடவூர்நன்மறையவனுய்யநண்ணிக்
கொல்கின்றகூற்றைக்குமைத்தவெங்கூற்றங்குளிர்திரைகண்
மல்குந்திருமறைக்காட்டமிர்தென்றுமலைமகடான்
புல்கும்பொழிற்கச்சியேகம்பமேவியபொன்மலையே. (௫௫)

மலயத்தகத்தியனர்ச்சிக்கமன்னிவடகயிலை
நிலையத்தமரர்தொழவிருந்தானெடுமேருவென்னுஞ்
சிலையத்தன்பைம்பொன்மதிற்றிருவேகம்பத்தான்றிகழ்நீ
ரலையத்தடம்பொன்னிசூழ்திருவையாற்றருமணியே. (௫௬)

மணியாரருவித்தடவிமயங்கிடக்கொல்லிகல்லின்
றிணியாரருவியிஞர்த்தசிராமலையைவணங்க
ளணியாரருவிகவர்கிளிபோப்புமின்சாரல்விந்தம்
பணிவாரருவினைதீர்க்குமேகம்பர்பருப்பதமே. (௫௭)

பருப்பதங்கார்தவழ்மந்தரமிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றியங்கும்பரங்குன்றம்வில்லார்
நெருப்பதங்காகுதிநாறுமயேந்திரமென்றிவற்றி
லிருப்பதங்காவுகந்தான்கச்சியேகம்பத்தெம்மிறையே. (௫௮)

இறைத்தார்புரமெய்தவில்லிமைநல்லிமவான்மகட்கு
மறைத்தார்கருங்குன்றம்வெண்குன்றஞ்செங்குன்றமன்னற்குன்ற
நிறைத்தார்நெடுங்குன்றநீள்கழுக்குன்றமென்றீவினைகள்
குறைத்தார்முதுகுன்றமேகம்பர்குன்றென்றுகூறுமினே. (௫௯)

கூறுமின்றொண்டர்குற்றாலநெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின்வேள்விக்குடிதிருத்தோணிபுரம்பழன
மாறுமின்போற்சடைவைத்தவனூரிடைமருதென்
றேறுமினீரெம்பிரான்கச்சியேகம்பமுன்னினைந்தே. (௬0)

நினைவார்க்கருளும்பிரான்றிருச்சோற்றுத்துறைநியமம்
புனைவார்சடையோன்புகலூர்புறம்பயம்பூவணநீர்
புனைவார்பொழிற்றிருவெண்காடுபாச்சிலதிகையென்று
நினைவார்தருநெஞ்சினீர்கச்சியேகம்பநண்ணுமினே. (௬௧)

நண்ணிப்பரவுந்திருவாவடுதுறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர்கடம்பந்துறைமன்னுபுன்கூ
ரெண்ணற்கரியபராய்த்துறையோகொளிலிகோள்பாடிக்
கண்ணிப்பிறைச்சடையோன்கச்சியேகம்பங்காண்மின்சென்றே. (௬௨)

சென்றேறியின்னுறுமண்ணுமலைதிகழ்வல்லமென்பூ
வின்றேற்றல்பாய்திருமாற்பேறுபாகுமொழியழுந்தூர்
வன்றேரவன்றிருவிற்பெரும்பேறுமத்தவொற்றியூர்
நின்றோர்தருகச்சியேகம்பமேயார்நிலாயியவே. (௬௩)

நிலாவுபுகழ்த்திருவோத்தூர்திருவாமாத்தூர்நிறைநீர்
சுலாவுசடையோன்புலிவலம்வில்வலங்கோச்சைதொண்டர்
குலாவுந்திருப்பனங்காடுமாகறல்கூற்றம்வந்தா
லலாவென்றடியார்க்கருள்புரியேகம்பராலயமே. (௬௪)

ஆலயங்கார்கருகாவைகச்சூர்திருக்காரிகரை
வேலையங்கேறுதிருவான்மியூர்திருவூறன்மிக்க

சோலையங்கார்திருப்போந்தைமுக்கோணந்தொடர்கடுக்கை
மாலையன்வாழ்திருவாலங்காடேகம்பம்வாழ்த்துமினே. (௬௫)

வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யுமலர்க்கழலோர்
தாழச்சடைத்திருவேகம்பர்தம்மைத்தொழாதவர்போய்
வாழப்பரற்சுரமாற்றாதளிரடிபூங்குழலெம்
மேழைக்கிடையிறுக்குங்குயபாரமியக்குறினே. (௬௬)

உறுகின்றவெவ்வழலக்கடமிக்கொடிக்குன்பின்வரப்
பெறுகின்றவண்மையினாலையபேரருளேகம்பனார்
துறுகின்றமென்மலர்த்தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திளையோர்
குறுகின்றபூங்குவளைக்குறுந்தண்பணையென்றுகொளே. (௬௭)

நொள்ளுங்கடுங்கதிரிற்கள்ளித்தீச்சிலவேயுலர்ந்து
விள்ளும்வெடிபடும்பாலையென்பாலன்விடலைபின்னே
தெள்ளும்புனற்கச்சியுட்டிருவேகம்பர்சேவடியை
யுள்ளுமதுமறந்தாளெனப்போவதுகாப்பரிதே. (௬௮)

பரிப்பருந்திண்மைப்படையதுகாணொளிர்சிறகு
விரிப்பருந்துக்கிளையாம்வெய்யவனஞ்சலஞ்சடைமேற்
றரிப்பருந்திண்கங்கையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலையேயுமராயின்மறைகுவனே. (௬௯)

வளைவரித்திண்புலியின்னதளேகம்பமன்னருளே
யெனவருபொன்னணங்கென்னணங்கிற்கெனெழிற்கழற்சூழ்ந்
தனவரிப்பந்துங்கொடுத்தேனைப்புல்லியுமிற்பிரிந்தே
யினவரிக்கல்லதர்செல்வதெற்கொல்குமேழைநெஞ்சே. (௭௦)

நெஞ்சார்தரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியன்னார்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கள்பெற்றெடுத்த
வெஞ்சாரொழியர்தன்பின்செலமுன்செல்லுவெவ்விடன்ற
வஞ்சாவடுநிறைதகாளைதன்போக்கிவையந்தத்திலே. (௭௧)

இலவவெங்கானனையல்லாற்றொழுஞ்சரணேகம்பனார்
நிலவுஞ்சுடரொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகளிரத்தளிரடிசெல்சுரத்தன்
னுலவுங்கதிர்தணிவித்தருள்செய்யுன்றனதுணைக்கே. (௭௨)

துணையொத்தகோவையும்போலெழிற்பேதையுந்தோன்றலுமுன்
னிணையொத்தகொங்கையும்பாடொத்தகாதலொடேகினரோ
யணையத்தமரொத்தகாளையைக்கண்டனமற்றவரோற்
பிணையொத்தநோக்குடைப்பெண்ணிவடன்னொடும்பேசுமினே. (௭௩)

மின்னலிக்கும்வணக்கத்திடையாளையுமீளியையு
நென்னலிப்பாக்கையங்கெய்யெயிறியேலம்பனையிற்கண்டீர்
பின்னரிப்போக்கருங்குன்றுகடந்தாரேகம்பர்
மன்னரிமீதூர்ந்துதொழுங்கச்சிநாட்டிடைவைகுவரோ. (௭௪)

உவரச்சொல்வேடுடைக்காகேகந்தாடியவேகம்பனா
ரவரக்கன்போனவிமானத்தையாயிரமுண்மைசுற்றுந்
துவரச்சிகரச்சிவாலயஞ்சூலந்துலங்குவிண்மேற்
கவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்கார்மயிலே. (௭௫)

கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சி
யேர்மிக்கசேற்றெழினென்னடுவோரொலிபொன்மலைபோற்
போர்மிக்கசெந்நெல்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்னொலியேயொக்குநேரிழையே. (௭௬)

நேர்த்தமையாமைவிறற்கொடுவேடர்நெடுஞ்சுரத்தைப்
பார்த்தமையாலிமைதீர்ந்தகண்பொன்னையகட்டுரிவை
யோர்த்தமையாலுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலுட்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே. (௭௭)

சிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிவைசெம்பழுக்காய்
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலவைதீங்கனியின்
பொறைகொண்டவாழைப்பொதும்புவைபுன்சடையேகம்பனார்
உறைகொண்டபூங்கச்சிநாடெங்குமிவ்வண்ணநன்னுதலே. (௭௮)

நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவள்ளை
யென்னவெலாமொப்புக்காதென்றவீறிடுமேகம்பனார்
பொன்னுதலார்விழியார்கச்சிநாட்டுளிப்பொய்கையுளே. (௭௯)

உளவார்குளிரநெருங்கிக்கருங்கிடங்கிட்டநன்னீர்
வளவாளைகளோடுசெங்கயன்மேய்கின்றவெங்களையாட்
கொளவார்பிறவிகொடாதவேகம்பர்குளிர்குவளை
களவார்தருகச்சிநாட்டெழிலேரிகளப்பரப்பே. (௮0)

பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
தரப்பாசிகண்மிதுவண்பொடுசெம்படர்தண்பணைவாய்ச்
சுரப்பாரெருமைமலர்தின்னத்தன்றுகராவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்செல்வமக்கப்பாசப்பூங்கச்சியே. (௮௧)

கச்சார்முலைமலைமங்கைகண்ணாரவெண்ணான்கரமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிமகிழவிண்ணோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தனமயற்
வச்சாலையும்பரப்பாங்கணியாடங்களோங்கினவே. (௮௨)

ஓங்கினவூரகமுள்ளகமும்பருருகிடமாம்
பாங்கினினின்றதரியுறைபாடகஞ்செவ்விரிய
வாங்கினவாட்கண்ணிமற்றவர்மைக்களிவான்கவிக
டாங்கினநாட்டிருந்தாளதுதன்மனையாய்மையே. (௮௩)

இழையாரரவணியேகம்பர்நெற்றிவிழியின்வந்த
பிழையாவருணம்பிராட்டியதின்னைபிறங்கலுன்றா

நுழையாவருதிரிசூலத்தனைக்கரும்பொன்கடுக்கைத்
தழையார்பொழிலிதுபொன்னேநமக்குத்தளர்வில்லையே. (௮௪)

தளராமிகுவெள்ளங்கண்டுமையோடித்தமைத்தழுவக்
கிளையார்வளைக்கைவடுப்படுமீங்கோர்கிறிபடுத்தார்
வளமாப்பொழிற்றிருவேகம்பமற்றிதுவந்திறைஞ்சி
யுளராவதுபடைத்தோமடவாயிவ்வுலகத்துள்ளே (௮௫)

உலவியமின்வடம்வீசியுருமதிர்வுண்முழங்கி
வலவியமாமதம்பாய்முகிலியானைகள்வானில்வந்தாற்
சுலவியவார்குழல்பின்னனொன்பாரியொணகினைந்து
திலவியவேகம்பர்கோயிற்கொடியன்னநீர்மையனே. (௮௬)

நீவொன்னிலும்மழுங்கண்முகில்காணெஞ்சமஞ்சலையென்
ரூவொன்னிலுந்தமராயுறைப்பாரமராபதிக்கு
நேவொன்னிலுந்தகுங்கச்சியுளேகம்பர்நீண்மதில்வாய்ச்
சேவொன்னிலுந்தங்கும்வாட்கண்ணிதானன்பர்தேர்வரவே. (௮௭)

வரங்கொண்டிமையோர்நலங்கொள்ளுமேகம்பர்கச்சியன்னாய்
பரங்கொங்கைதூவன்மினீர்முத்தமன்பர்தந்தேரின்முன்னே
தரங்கொண்டுபூக்கொண்டுகொன்றைபொன்னாகத்தண்காந்தள்கொத்தின்
கரங்கொண்டுபொற்சுண்ணமேந்தவும்போந்தனகார்முகிலே. (௮௮)

கார்முகமாரவண்கைக்கொண்டகம்பர்கழற்றொழுது
போர்முகமாப்பகைவெல்லச்சென்றார்நினையார்புணரி
நீர்முகமாகவிருண்டுசுரந்ததுநேரிழைநா
மார்முகமாகவினைக்கடனீந்துதுய்வெய்துயிர்ப்பே. (௮௯)

உயிராயினவன்பர்தேர்வரக்கேட்டுமுன்வாட்டமுற்ற
பயிரார்புயல்பெற்றதென்னநம்பல்வளைபான்மைகளாந்
தயிரார்பாநெய்யொடுமாடியவேகம்பர்தம்மருள்போற்
கயிராவளையமுந்தக்கச்சிறுத்தனகார்மயிலே. (௯௦)

கார்விடைவண்ணத்தனன்றேழ்சழுவிறுமின்றுதனிப்
போர்விடைப்பெற்றெதிர்மாண்டாவெனவண்டர்போசவிட்டார்
தார்விடையேகம்பர்கச்சிப்புறவிடைத்தம்பொனன்பூண்
மார்விடைவைகல்பெறுவார்தழுவமழவிடையே. (௯௧)

விடைபாய்கொடுமையென்றுமைமேலாங்கன்னிபேற்கருங்கட்
கடையாய்மனத்திலெங்காளையர்புல்கொலேகம்பர்கச்சி
மடைபாய்வயலிளமுல்லையின்மான்கன்றொடாக்கன்றினங்
கடைபாய்தொறும்பதிமன்றிற்கடல்போற்கலந்தெழுமே. (௯௨)

எழுமலர்த்தண்பொழிலேகம்பர்கச்சியிருங்கடல்வாய்க்
கொழுமணப்புன்னைத்துணர்மணற்குன்றிற்பரதர்கொம்பே
செழுமலர்ச்சேலல்லவாளல்லவேலல்லநீலமல்ல
முழுமலர்க்கூரம்பினேரிரண்டாலுமுகத்தனவே. (௯௩)

பூகம்பாகம்பண்டமும்பாகமென்றோதியமூதுரையை
யுகம்பார்த்திரேலென்னலடியரேகம்பர்கச்சிமுன்னீ
ரகம்பாகவார்வினைவில்லையென்னின்பவளச்செவ்வாய்
நகம்பாற்பொழிற்பெற்றநாமுற்றவர்கொள்கநன்மயலே. (௯௪)

மயக்கத்தநல்லிருட்கொல்லுஞ்சுறவொடெறிமகர
மியக்கத்திடுசுழியோதங்கழிகிளரக்கழித்தார்
துயக்கத்தவர்க்கருளார்கம்பர்கச்சிக்கடலர்பொன்னூன்
முயக்கத்தகல்வுபொருள்கொண்கநீவருமூர்க்கஞ்சுமே. (௯௫)

மேயிரைவைகக்குருகுணராமதுவுண்டுபுன்னை
மீயிரைவண்டோதமர்புக்கடியவிரிகடல்வாய்ப்
பாயிரைநாகங்கொண்டோன்றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தூயிரைகானன்மற்றாரறிவார்நந்துறைவர்பொய்யே. (௯௬)

பொய்வருநெஞ்சினர்வஞ்சனையாரையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர்கச்சிவிலாயினவாய்க்
கைவரும்புள்ளொடுசெங்கினமார்ப்பநஞ்சேர்ப்பர்திண்டே
ரவ்வருதாமங்களினம்வந்தார்ப்பவலைகின்றதே. (௯௭)

இன்றுசெய்வோமிதனிற்றிருவேகம்பர்க்கெத்தனையு
நன்றுசெய்வோம்பணிநாளையென்றுள்ளிநெஞ்சேயுடலிற்
சென்றுசெயாரைவிடுந்துணைநாளும்விடாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களினீணெறிகாட்டுவோ. (௯௮)

காட்டிவைத்தார்தம்மையாங்கடிப்பூப்பெய்யக்காதல்வெள்ள
மீட்டிவைத்தார்தொழுமேகம்பரேதுமிலாதவெஃமைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பதுபெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பரவித்தொழுதாமவர்பாதங்களே. (௯௯)

பாதம்பரவியோர்பித்துப்பிதற்றிலும்பல்பணியு
மேதம்புகுதாவகையருளேகம்பரேத்தெனவே
போதம்பொருளாற்பொலியாதபுன்சொற்பனுவல்களும்
வேதம்பொலியும்பொருளாமெனக்கொள்வர்மெய்த்தொண்டரே. (௧௦௦)

திருச்சிற்றம்பலம்.

திருவேகம்பமுடையார் திருவந்தாதி முற்றிற்று.

சிவமயம்.

# திருவேகம்பமாலை.

திருச்சிற்றம்பலம்.

அறந்தானியற்றுமவனிலுங்கோடியதிகமில்லந்
துறந்தானவனிற்சதகோடியுள்ளத்துறவுடையோன்
மறந்தானறக்கற்றறிவோடிருந்திருவாதனையற்
றிறந்தான்பெருமையையென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (க)

கட்டியணைத்திடும்பெண்டிருமக்களுங்காலத்தச்சன்
வெட்டிமுறிக்குமரம்போற்சரீரத்தைவீழ்த்திவிட்டாற்
கொட்டிமுழக்கியழுவார்மயானங்குறுகியப்பா
லெட்டியடிவைப்பரோவிறைவாகச்சியேகம்பனே. (உ)

கைப்பிடிநாயகன்றூங்கையிலேயவன்கையையெடுத்
தப்புறந்தன்னிலசையாமன்முன்வைத்தயல்வளவி
லொப்புடன்சென்றுதுயினீத்துப்பின்வந்துறங்குவளை
யெப்படிநானம்புவேனிறைவாகச்சியேகம்பனே. (௩)

நன்னாரிற்பூட்டியசூத்திரப்பாவைநன்னார்தப்பினாற்
றன்னாலுமாடிச்சலித்திடுமோவந்தத்தன்மையைப்போ
லுன்னாலியானுந்திரிவதல்லான்மற்றுனைப்பிரிந்தா
லென்னாலிங்காவதுண்டோவிறைவாகச்சியேகம்பனே. (௪)

நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
யல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளு
மில்லாளுஞ்சுற்றமுமைந்தரும்வாழ்வுமெழிலுடம்பு
மெல்லாம்வெளிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே. (௫)

பொல்லாதவனெறிநில்லாதவனைம்புலன்கடமை
வெல்லாதவன்கல்விகல்லாதவன்மெய்யடியவர்பாற்
செல்லாதவனுண்மைசொல்லாதவனின்றிருவடிக்கன்
பில்லாதவன்மண்ணிலேன்பிறந்தேன்கச்சியேகம்பனே. (௬)

பிறக்கும்பொழுதுகொடுவந்ததில்லைப்பிறந்துமண்மே
லிறக்கும்பொழுதுகொடுபோவதில்லையிடைநடுவிற்
குறிக்குமிச்செல்வஞ்சிவன்றந்ததென்றுகொடுக்கறியா
திறக்குங்குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௭)

அன்னவிசாரமதுவேவிசாரமதுவொழிந்தாற்
சொன்னவிசாரந்தொலையாவிசாரநற்றோகையர்பாற்
பன்னவிசாரம்பலகால்விசாரமிப்பாவிநெஞ்சுக்
கென்னவிசாரம்வைத்தாயிறைவாகச்சியேகம்பனே. (௮)

கல்லாப்பிழையுங்கருதாப்பிழையுங்கசிந்துருகி
நில்லாப்பிழையுநினையாப்பிழையுநின்னஞ்செழுத்தைச்

சொல்லாப்பிழையுந்துதியாப்பிழையுந்தொழாப்பிழையு
மெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே. (௯)

மாயநட்போரையுமாயாமலமெனுமாதரையும்
வீயவிட்டோட்டிவெளியேபுறப்பட்டுமெய்யருளாந்
தாயுடன்சென்றுபின்றாதையைக்கூடிப்பின்றாயைமறந்
தேயுமதேநிட்டையென்றானெழிற்கச்சியேகம்பனே. (௧௦)

வரிக்கோலவேல்விழியாரனுராகமயக்கிற்சென்று
சரிக்கோதுவேனெழுத்தஞ்சுஞ்சொலேன்றமியேனுடல
நரிக்கோகழுகுபருந்தினுக்கோவெய்யநாய்தனக்கோ
வெரிக்கோவிரையெதுக்கோவிறைவாகச்சியேகம்பனே. (௧௧)

காதென்றுமூக்கென்றுகண்ணென்றுகாட்டியென்கண்ணெதிரே
மாதென்றுசொல்லிவருமாயைதன்னைமறலிவிட்ட
தூதென்றெண்ணாமற்சுகமென்றுநாடுமித்துர்ப்புத்தியை
யேதென்றெடுத்துரைப்பேனிறைவாகச்சியேகம்பனே. (௧௨)

ஊருஞ்சதமல்லவுற்றார்சதமல்லவுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்லபெண்டீர்சதமல்லபிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்லசெல்வஞ்சதமல்லவித்தேசத்திலே
யாருஞ்சதமல்லநின்றாள்சதங்கச்சியேகம்பனே. (௧௩)

சீறும்வினையதுபெண்ணுருவாகித்திரண்டுருண்டு
கூறுமுலையுமிறைச்சியுமாகிக்கொடுமையினாற்
பீறுமலமுமுதிரமுஞ்சாயும்பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலேனிறைவாகச்சியேகம்பனே. (௧௪)

பொருளுடையோரைச்செயலினும்வீரரைப்போர்க்களத்துந்
தெருளுடையோரைமுகத்திலுந்தேர்ந்துதெளிவதுபோ
லருளுடையோரைத்தவத்திற்குணத்திலருளிலன்பி
லிருளறுசொல்லினுங்காணத்தகுங்கச்சியேகம்பனே. (௧௫)

பருத்திப்பொதியினைப்போலவயிறுபருக்கத்தங்க
ளுருத்திக்கறுசுவைபோடுகின்றார்துறந்தோர்தமக்கு
வருத்தியமுதிடமாட்டாரவரையிம்மாநிலத்தி
லிருத்திக்கொண்டேனிருந்தாயிறைவாகச்சியேகம்பனே. (௧௬)

பொல்லாவிருளகற்றுங்கதிர்கூகையின்புட்கண்ணினுக்
கல்லாயிருந்திடுமாறொக்குமேயறிவோருளத்தில்
வல்லாரறிவாரறியார்தமக்குமயக்கங்கண்டா
யெல்லாம்விழிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே. (௧௭)

வாதுக்குச்சண்டைக்குப்போவர்வருவர்வழக்குரைப்பர்
தீதுக்குதவியுஞ்செய்திடுவார்தினந்தேடியொன்று
மாதுக்கழிந்துமயங்கிடுவார்விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தாரிறைவாகச்சியேகம்பனே. (௧௮)

ஓயாமற்பொய்சொல்வர்நல்லோரைநிந்திப்பருற்றுப்பெற்ற
தாயாரைவைவர்சதியாயிரஞ்செய்வர்சாத்திரங்க
ளாயார்பிறர்க்குபகாரஞ்செய்யார்தமையண்டினர்க்கொன்
றீயாரிருந்தென்னபோயென்னகாண்கச்சியேகம்பனே. (௧௯)

அப்பென்றும்வெண்மையதாயினுமாங்கந்நிலத்தியல்பாய்த்
தப்பின்றியேகுணவேற்றுமைதான்பலசார்தலினாற்
செப்பிலபக்குவம்பக்குவமாயுள்ளசீவனிலு
மிப்படியேநிற்பனெந்தைபிரான்கச்சியேகம்பனே. (௨௰)

நாயாய்ப்பிறந்திடினல்வேட்டையாடிநயம்புரியுந்
தாயார்வயிற்றினரராய்ப்பிறந்துபின்சம்பன்னராய்
காயாமரமும்வறளாங்குளமுங்கல்லாவுமென்ன
வீயாமனிதரையேன்படைத்தாய்கச்சியேகம்பனே. (௨௧)

ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாமலென்னன்பையெல்லாம்
போற்றித்திருவுளம்பற்றுமையாபுரமூன்றெரித்துக்
கூற்றைப்பணிகொளுந்தாளுடையாய்குன்றவில்லுடையா
யேற்றுக்கொடியுடையாயிறைவாகச்சியேகம்பனே. (௨௨)

பெண்ணாகிவந்தொருமாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டிமுலையான்மயக்கிக்கடிதடத்துப்
புண்ணாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
வெண்ணாதுனைமறந்தேனிறைவாகச்சியேகம்பனே. (௨௩)

நாவாரவேண்டுமிதஞ்சொல்லுவாருனைநான்பிரிந்தாற்
சாவேனென்றேயிருந்தொக்கவுண்பார்கள்கைதான்வறண்டாற்
போய்வாருமென்றுநடுத்தலைக்கேகுட்டும்பூவையருக்
கீவார்தலைவிதியோவிறைவாகச்சியேகம்பனே. (௨௪)

கல்லார்சிவகதைநல்லோர்தமக்குங்கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க்கன்னங்கொடார்குருசொன்னபடி
நில்லாரறத்தைநினையார்நின்னாமநினைவிற்சற்று
மில்லாரிருந்தென்னிறந்தென்புகல்கச்சியேகம்பனே. (௨௫)

வானமுதத்தின்சுவையறியாதவர்வண்கனியின்
றூனமுதத்தின்சுவையெண்ணல்போலத்தனித்தனியே
தேனமுதத்தின்றெளிவாயஞானஞ்சிறிதுமில்லார்க்
கீனமுதச்சுவைநன்றல்லவோகச்சியேகம்பனே. (௨௬)

ஊற்றைச்சரீரத்தையாபாசக்கொட்டிலையூன்பொதிந்த
பீற்றற்றுருத்தியைச்சோறிடுந்தோற்பையைப்பேசரிய
காற்றிற்பொதிந்தநிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
யேற்றுத்திரிந்துவிட்டேனிறைவாகச்சியேகம்பனே. (௨௭)

சொல்லால்வருங்குற்றஞ்சிந்தனையால்வருந்தோடஞ்செய்த
பொல்லாததீவினைப்பார்வையிற்பாவங்கள்புண்ணியநூ

லல்லாதகேள்வியைக்கேட்டிடுந்தீங்குகளாயவுமற்
றெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே. (௨அ)

ஓட்டற்றமஞ்சளையெண்ணெயிற்கூட்டிமுகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப்பித்தளையோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில்வெளிமயக்கேசெயும்பாவையர்மே
லிட்டத்தைநீதவிர்ப்பாயிறைவாகச்சியேகம்பனே. (௨௯)

பிறந்துமண்மீதிற்பிணியேகுடிகொண்டுபேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின்மேன்மயலாகிப்புன்மாதருக்குட்
பறந்துழன்றேதடுமாறிப்பொன்றேடியப்பாவையர்க்கீந்
திறந்திடவோபணித்தாயிறைவாகச்சியேகம்பனே. (௩௦)

புகங்களாற்றுப்பொறியற்றுச்சாணைப்புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப்பேராசைதானற்றுப்பின்முனற்றுக்
காதங்கரணங்களுமற்றவானந்தக்காட்சியிலே
யேதங்களைந்திருப்பேனிறைவாகச்சியேகம்பனே. (௩௧)

நல்லாயெனக்குமனுவொன்றுதந்தருண்ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்றுபோடும்பொழுதியல்பூசைசெபஞ்
சொல்லார்நற்கோயினியமம்பலசைத்தோத்திரமு
மெல்லாமுடிந்தபின்கொல்லுகண்டாய்கச்சியேகம்பனே. (௩௨)

சடக்கடுத்துக்கிரைதேடிப்பலவுயிர்தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்துமிகமெலிந்து
படக்கடுந்தின்றுழல்வார்கடமைக்கரம்பற்றிநம
னிடக்கடிக்கும்பொழுதேதுசெய்வார்கச்சியேகம்பனே. (௩௩)

நாறுமுடலைநரிப்பொசிசோற்றினைநான்றினமுஞ்
சோறுங்கறியுநிரப்பியபாண்டத்தைத்தோல்கயிற்றுங்
கூறுமலமுமிரத்தமுஞ்சேருங்குழியில்விழா
தேறும்படியருள்வாயிறைவாகச்சியேகம்பனே. (௩௪)

சொக்கிட்டரமனைப்புக்குட்டிருடியதுட்டர்வந்து
திக்கிட்டமன்னனைக்கேட்பதுபோற்சிவநிந்தைசெய்து
மிக்கிட்டுக்குருலிங்கசங்கமநிந்தித்துவீடிச்சிக்கு
மெத்துப்பெருத்தவர்க்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௩௫)

விருந்தாகவந்தவர்தங்களுக்கன்னமிகக்கொடுக்கப்
பொருந்தார்வளம்பெறவாழ்வார்நின்னுமத்தைப்போற்றிநித்த
மருந்தாமுலைப்பங்கரென்னததபாதகரப்புவியி
லிருந்தாவதேதுகண்டாயிறைவாகச்சியேகம்பனே. (௩௬)

எல்லாமறிந்தபடிச்சேயிருந்தெமக்குள்ளபடி
வல்லானறிந்துளனென்றுணராதுமதிமயங்கிச்
சொல்லான்மலைந்துறுசூழ்விதியின்படிதுக்கித்துப்பி
னெல்லாஞ்சிவன்செயலேயென்பர்காண்கச்சியேகம்பனே. (௩௭)

பொன்னைநினைந்துவெகுவாகத்தேடுவாபூவையன்று
டன்னைநினைந்துவெகுவாயுருகுவர்தாரணியி
லுன்னைநினைந்திங்குனைப்பூசியாதவுலுத்தரெல்லா
மென்னையிருந்துகண்டாயிறைவாகச்சியேகம்பனே. (௩௮)

கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைக்காமுகரைக்
கொடும்பவமேசெயுநிர்மூடர்தம்மைக்குவலயத்து
ணெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா
விடும்பரையேன்வகுத்தாயிறைவாகச்சியேகம்பனே, (௩௯)

கொன்றேனனேகமுயிரையெல்லாம்பின்புகொன்றுகொன்று
தின்றேனதன்றியுந்தீங்குசெய்தேனதுதீர்கவென்றே
நின்றேநின்சன்னிதிக்கேயதனாற்குற்றநீபொறுப்பா
யென்றேயுனைநம்பினேனிறைவாகச்சியேகம்பனே. (௪0)

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

## திருவேகம்பவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அன்னையெத்தனையெத்தனையன்னையோ வப்பனெத்தனையெத்தனையப்பனோ
பின்னையெத்தனையெத்தனைபெண்டிரோ பிள்ளையெத்தனையெத்தனைபிள்ளையோ
முன்னையெத்தனையெத்தனைசென்மமோ மூடனாயடியேனுமறிந்திலே
னின்னமெத்தனையெத்தனைசென்மமோ வென்செய்வேன்கச்சியேகம்பநாதனே.

திருச்சிற்றம்பலம்,

---

உ

சிவமயம்.

# கச்சித்திருவகவல்.

திருச்சிற்றம்பலம்.

திருமால் பயந்த திசைமுக னமைத்து, வருமேழ் பிறவியு மானுடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக், குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடும், மானிடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பே
விரிவெளி மாங்க டெளிவுறக் கேண்மின், முன்னுங் கல்லு முயன்று நடக்கும் [ன்
உள்ளங் காலைப் பற்றெனை வுரைத்தும், வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்
றன்னும் வராலெனச் சொல்லித் துதித்தும், தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை

இசையுங் கதலித் தண்டென வியம்பியும், நெடுமுட ரூங்கி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும், மலமுஞ் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும், சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி, உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும், முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன், நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவு முதவியிங் கியற்றும், அங்கையைப் பார்த்துக் காந்தளென் றுரை
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப், பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்[த்தும்
வெப்பு மூத்தையு மேவிய வாயைத், துப்பு முருக்கின் றூய்மல ரென்றும்
அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கும், முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்
நீருஞ் சளியு நின்றுநின் றொழுகும், கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்
தண்ணீர் பீழை தவிரா தொழுகும், கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்
உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை, வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்
கையு மெண்ணெயுங் கலவா தொழியில், வெய்ய வதரும் பேனும் விளையத்
தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த, சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள், நச்சிச் செல்லு நரக வாயில்
தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும், காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொலைபெறு வாயில், எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம், நச்சிக் காமுக ரூய்நா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில், திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி, புண்ணிது வென்று புடைவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண், மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி, தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி, பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே, சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்
இத்தை நீங்க ளினிதென வேண்டா, பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை, முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்ட ரண்டமு மனைத்துள புவனமுங், கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின், போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

தெய்வப்புலமை

# இரட்டைப்புலவர்கள்

அருளிச்செய்தது.

# ஏகாம்பரநாதருலா.

---

காப்பு.

நேரிசைவெண்பா.

சாற்றரியவாயிரக்கான்மண்டபத்தின்சார்வாக
வேற்றமுடனேயினிதிருந்து—போற்றும்
விறல்விகடசக்ரவிநாயகனையேததுந்
திறல்விகடசக்ராயுதம்.

கலிவெண்பா.

பவனி.

நிலம்போற்றும்பைந்துளபநீலப்பொருப்பும்
பொலம்போற்றும்போதிற்பொருப்பு — நலம்போற்று
மேருப்பொருப்பொருதன்வெள்ளிப்பொருப்பிலிரண்
டாரயபொருப்புடையவனுமுடன் — சேர
விருந்துமனமகிழ்வுற்றெப்போதுமின்பம்
பொருந்தியுறைகின்றம்போதிற — கரந்தையினி
தேந்துமுடியோனுடனேயினபங்கையாடிவளைக்
காந்தளிணைகொண்டுதிருக்கண்புதைப்ப — வாய்ந்த
படியும்விசும்பும்பரிதிமதிகாணு
தடையுமிடையிருளேயாக — நெடிதூழிக்
காலஞ்சிறிதுபொழுதிற்கழிதலாற்
சிலமுனிவர்க்குந்தேவர்க்குஞ் — சால
மறையவர்க்குமம்வேதம்வகுத்ததொழிலெல்லாங்
குறைவுபட்டதென்றிறையுட்கொண்டு — செறியளக
வோவியமேநின்றுலகநெறிமுறைமை
யாவுங்குறைவுபட்டதீங்கதற்கு — மேவியநல்
வேதாகமத்தில்விதித்தபெரும்பூசைதனைப்
போதார்குழலாயபுரிகென்ன — வீதெமக்கு
வாய்த்ததெனவிரும்பிவானோர்நஞ்சுண்டு
காத்தபெருமான்கழலினைறஞ்சி — யேத்தி
மடமாதுநின்னைவழிபடுதற்கான
விடமாவதேதருள்செய்கென்ன — விடையோனுங்

தென்பாலதானதிசையிற்றிரைவீசு
நன்பாலித்தண்டகநன்னாட்டகத்து — முன்பாக
வோதுதிருநகரியோரேழினுஞ்சிறந்த
வாதிநகர்காஞ்சியந்நகரிற் — போதநல
மன்னிவளர்வதொருமாவுண்டதனிழற்கீழ்க்
கன்னியெமையுனக்குக்காணலாஞ் — சொன்னபடி
யாகமபூசைபுரியவினிதவ்விடத்துப்
போகவெனவமரர்போற்றிசைப்ப — வேகிப்
பொருப்பரையனேவலொடுபோந்துபலகோடித்
திருத்தகுமாதருடன்சேர — விருப்புடனே
தென்றிசையிற்சென்றுதிருவாய்மலர்ந்தவுயர்
நன்றுதிகழ்காஞ்சிநகரெய்தி — வென்றியிய
மொன்றுகுழுமுயலுக்கோடுமிடம்பார்த்து
நின்றுவிடுங்காஞ்சிநிழல்பார்த்துச் — சென்றடைந்தோர்
தாம்பிறவாக்காணலாந்தம்மையவர்காணும
லாம்பரிசுநல்குமகம்பார்த்துக் — காம்பொன்றின்
மூன்றுமுளரிமுகிழ்க்குந்தடம்பார்த்துத்
தோன்றுமலர்த்தீபச்சுடர்பார்த்துத் — தான்ற
னிடத்துநிழலேக்கியாவருங்காணப்
படுத்துமொருகிணறுபார்த்துக் — குடக்கோடிக்
காணவரிதாய்க்கரக்குநதிபார்த்தமரர்
பேணுலகத்துய்க்கும்பிலம்பார்த்துக் — காணரிய
செம்பொனிறநல்குஞ்சிலைபார்த்துத்திண்காரி
வெம்பரியூர்செண்டுவெளிபார்த்துக் — கொம்பிற்
கடிக்கமலப்போதுங்கழுநீருஞ்சேரப்
படைக்குமொருபாடலமும்பார்த்து — நடுப்புகுந்தோர்
தோற்றங்குரங்காக்குந்தொல்லையிடம்பார்த்தவனை
மாற்றுங்கடவுண்மடுப்பார்த்துக் — கூற்று
விறவாவிடம்பார்த்திறந்தவர்பின்வந்து
பிறவாவிடம்பார்த்தபின்னர் — செறிதரங்கக்
கம்பைநதியின்கரையணுகிக்கண்டகைய
பைம்பொழில்சூழெழும்மாநுங்கும்பார்த்தருளி — யெம்பிரான்
யாமாதரவோடிருப்போமெனச்சொன்ன
தேமாவடிநீழலைச்சேர்ந்தருளிக் — கோமானை
நாமினிதுபூசிக்கவல்லவிடமீதென்று
பூமருவுதெய்வப்புனலாடித் — தாமாகக்
கம்பைமணலைக்குவித்துக்கசிந்துள்ள
மெம்பெருமாட்டியினிதிறைஞ்சித் — தம்பழைய
சேடியர்கணிற்பத்திருச்சூடகக்கையாற்
றேடவிழ்பூக்கொய்துதொடுத்தணிந்து — கூட



விரவுந்திருவுருவில்வெண்ணீறுநெருசிற்
றிருவஞ்செழுத்துந்திகழ — புரிமையுட

னந்தமில்பூசையின்மேலாருடையநாயகிக்குச்
சிந்தையொருப்படவேசெல்லுநா — ளிந்துநுத

லாதிக்குலமடந்தையன்புடைமைமுன்புபேர்
லொன்சோதிப்ப — மோதிக்

கரைபொருதுகம்பைநதிகற்பாந்தந்தன்னில்
விரிகடல்போற்றரங்கம்வீசி — யிருசுடரும்

விண்ணும்பொலன்சக்ரவெற்புங்குலகிரியு
மண்ணும்புதையவரப்பண்ணி — யெண்ணிறந்த

வாரிடத்துமெவ்விடத்துமெப்போதுமுள்ளபிரா
னோரிடத்துத்தாமுமொளித்திருப்பப் — பாரிடமு

மேனையமர்நாடுமேகோதகமாக
வானபெரும்பெருக்குக்கஞ்சாதே — வானவர்கோன்

செச்சைநிகருடம்பிற்செம்பாதியாகியதன்
பச்சையுடம்பருமைபாராதே — யிச்சையுடன்

றேசுதரும்பழையதிவ்யாகமப்படியே
பூசைதனையொழிந்துபோகாதே — மாசிலா

வன்புடைமைதன்னையகன்றலரன்மேனி
யென்படுமோவென்பதனையெண்ணியோ — தன்பழைய

பெண்மையோவன்போபிறப்போபெருங்காதற்
றிண்மையோகற்போதெரிகிலே — முண்மை

மறைபடைத்தமேனிவளையான்முலையாற்
குறிபடுத்திமார்புகுழைய — நறைபடைத்த

தாழ்ந்தபுரிகுழலாடாருகவம்பணன்மேல்
வீழ்ந்துதழுவவெளிப்பட்டோன் — சூழ்ந்தமரர்

மீளாவடிமையிலையாவணங்கொடுக்குந்
தாளானரிபிரமர்தம்பிரா — னாளாய

தொல்லைத்திருக்குறிப்புத்தொண்டன்றலைமோதக்
கல்லிற்புறப்பட்டகையுடையோன் — வில்லால்

வசையின்முடிமேன்மதியாமன்மோத
விசையவெறுபொருதவீரன் — பசியாற்

பதறியொருசிறவன்பால்வேண்டப்பாலி
னுததிகொடுத்தவுதாரன் — முதிபெருகத்

தேவர்நெருங்குந்திருப்பங்குனித்திருநாண்
மேவியவேதவிழாவொலியிற் — றாவிக்

குலாவுபலபொற்கொடிவீதியெங்கு
முலாவிவருநாளிலொருநா — ளிலாவியசீ

ரெவ்வானவருமிறைஞ்சும்பெரும்பூசை
திவ்யாகமப்படியேசெய்ததற்பின் — மைவானி

லாறுதொடவுயர்ந்தவாயிரக்கான்மண்டபத்தி
லேறியருளியினிதிருந்து சீறியெழக்
காணுந்தொறுமொருதன்கண்மூன்றினிலிரண்டு
நாணுந்திருக்காப்புநாணணிந்து சேணுலவு
மைவாரிமேகம்வளரும்பிறைபடைத்த
செவ்வானமீதுதிகழ்ந்ததென வெவ்வாயுந்
தோடுவிரியிதழிச்சூழறனிற்பல்கோடிப்
பாடலளிகள்படிந்ததென நீடுமிரு
பாலும்வெயிலுதவுபத்மராகக்கிரிமே
னீலவொளிபாய்நிறைந்ததெனக் கோலமுட
னன்றுதிருச்செங்காட்டணிந்ததிருச்சட்டைதனை
யின்றுமணிந்தாரினிதென்ன வொன்றாக
வெம்மையுடையானிருபாகமும்மங்க
ளம்மைதிருமேனியானதெனத் தம்மின்
முயங்கக்கிரிமான்முலைகுழைத்தமெய்யிற்
றயங்கத்திருச்சாந்துசாத்தி யுயர்ந்த
நனைத்தண்டுழாய்மௌலிநாபியில்வாழன்ன
மெனைத்துமறியாவிடத்தே தனக்கமையச்
சம்புகுலத்தொருவன்சாத்துகைக்காமென்றளித்த
செம்பொன்மணிமகுடஞ்சேர்வித்துத் தம்போ
னிகரற்றவிருவர்நீங்காவிடத்தே
மகரக்குழையங்குவைத்துத் திகழமரர்
சாதலொழிதரற்குச்சான்றிருக்குமவ்விடத்தே
சோதிமணிக்கட்டுடைச்சூழ்வித்துப் போதப்
பதுமவளைத்தழும்புபட்டவிடத்தே
புதுவயிரக்கேயூரம்பூட்டித் திதலை
பரந்தவளர்கடவுட்பச்சைக்குரும்பை
யிரண்டுருநியிட்டவிடத்தே திருந்துமுடிக்
காணிப்பிறைநிலவோகங்காநதிப்புனலோ
வேணிப்புனையிருபால்வீழ்ந்ததெனச் சேணிற்
பணித்தாரகையின்பரிசென்னமுத்தின்
றனித்தாழ்வடம்விளங்கச்சாத்திக் குனிப்பிற்
றிருந்துமபினயமுந்தெய்வத்துடியு
மிருங்கனலுமொழுமிடத்தே பொருந்தப்
பிறந்தவிளம்பரிதிப்பேரழகுபட்டச்
சிறந்தகடகஞ்செறித்து துறுங்கப்
பிசைந்துபிசைந்தண்ணலொருபிள்ளையறுத்தாக்க
விசைந்துபசிதோன்றுமிடத்தே விசும்பின்
முதிருமிருளைமுனிபதுமராகக்
கதிருதரபந்தனமுங்கட்டி மதுரைப்

புரவிதிகழிடத்தேபொற்பதுமராகத்
திருவுடையாடைதிருத்தி — பரதவிதக்
குஞ்சிப்புனல்லனிலைக்கூத்துந்திகழிடத்தே
செஞ்சித்ரரத்னச்சிலம்பணிந்து — துஞ்சிச்
செலவுற்றவானோர்சிரந்தொடுக்குமாலை
யிலகிக்கிடக்குமிடத்தே — குலவு
மதுமிக்ககல்லாரமாலையுடனே
யிதழித்திருமாலையிட்டு — மதில்பொருத
தம்பொற்சிலையைத்தலைக்கொண்டனரென்னச்
செம்பொற்றிருவாசிகைசேர்த்து — விம்ப
விரவியிடைதாளிலங்குவதேயென்னப்
பரவுமணிக்கண்ணாடிபார்த்துச் — சுருதியினன்
மூவாதபேரன்பின்மூவர்முதலிகளுந்
தேவாரஞ்செய்ததிருப்பாட்டும் — பாவனையாற்
போதவூர்கண்ணீர்புளகத்துடனணிந்த
வாதவூராளிதிருவாசகமுந் — தீதகல
வேட்டென்றெழுதாவிருபிறப்போர்கற்கத்தான்
பாட்டுண்டநாலுபழங்கவியுங் — கேட்டருளி
யைங்கைப்பவளநிறத்தானைப்பெருமானுஞ்
செங்கைச்சுடர்வடிவேற்சேவகனு — மெங்கு
நிறைபூதஞ்சூழநிலமெல்லாங்காப்ப
மறைஞாளியேறிவருவானு — நிறையருளாற்
றுண்ணெனத்தேவர்க்குச்சுதைபகுத்தமோகினியாம்
பெண்ணிடத்தில்வந்துபிறந்தோனும் — பண்ணுமக
மங்கும்படிக்கழற்கண்வாய்ந்திலங்குந்தம்முடைய
திங்களுநல்வேர்விற்செலுத்தோனுந் — துங்கமுடி
கொண்டகடவுட்குளிர்கொன்றைத்தாருமுடித்
துண்டபரிகலத்திலுண்டோனுந் — தண்டமிழான்
மண்புகழப்பாடிமறையூரிலாண்பனையைப்
பெண்பனையாக்கியபிள்ளையுந் — திண்பிடித்துப்
பாழியமணரியெம்பாரச்சிலையுடனே
யாழிகளின்மிதக்கவல்லவனுஞ் — சூழுமிருட்
பாதியிரவிற்பரவைக்குஞ்சங்கிலிக்குந்
தூதுநடப்பித்ததோழனுந் — தீதில்
ஒழுக்கில்பெருந்துறையில்வாழ்வித்தகோலங்
கழுக்குன்றிற்கண்டகவியும் — வழுத்திநர்க்குப்
போதவிளியவொருபொன்வண்ணத்தந்தாதி
யாதியுலாவோடமைத்தோனுஞ் — சோதிமணி
மன்றினருகுமலர்த்தூழாய்காணுமிடங்
கொன்றைகமழ்வித்தகொற்றவனு — மென்றும்

புடைமருவுதன்னிழலிற்போகாதபேயை
யிடைமருதிலிட்டவிறையு மடையத்

துயர்கடந்ததொண்டத்தொகையதனிலேனைச்
செயல்சிறந்ததொண்டத்திரளுங் கயிலைதனிற்

றந்தாள்படாமற்றலையானடந்துபோ
யந்தாதியாற்புகழ்ந்தவம்மையு மிந்தநிலங்

கோட்டிவளைத்தெடுத்துக்கூட்டிக்குலைத்தடுக்கிக்
காட்டவல்லபூதகணவரு மீட்டுநல

மெண்ணுமொருநாற்பத்தெண்ணாயிரவரெனும்
புண்ணியவேடப்புனிதரு நண்ணரிய

வோராயிதத்துத்தொளாயிரரென்றூழிமுதற்
பேராநிமந்தப்பெருமையருஞ் சேர

வுரியவிதிமுறையோடுள்ளமுருகிப்
பொருவரியவன்புடனேபோதச் சுராதைத்

திருவாசலினந்திசெங்கைப்பிரம்பா
ணிரையாகவெங்குநிறுத்தி வருவார்

கழல்சேவடிபணிந்துகண்களிப்பமுன்னே
யெழச்சேவியுநீங்களென்ன முழக்க

விருப்பதுவும்வெள்ளிமலையென்னுமற்செம்பொற்
பொருப்பினுமேறினார்போல விருப்பால்

வடித்தசுடர்வேற்சம்பன்வாழ்மல்லிநாதன்
கொடுத்ததிருத்தேர்மேற்கொண்டு முடித்தநதி

யாடும்விசையிலலையெழுந்துதன்மீதி
னீடும்வகைசுழித்துநின்றதெனக் கூட

விருகதிருஞ்சவெறிக்குநிலாவி
லொருதனிவெண்குடையோங்க விருபாலுங்

கங்கைநதியிற்கரைபுரண்டசீகரம்போன்
மங்கையர்கள்வெண்சாமரையிரட்ட வெங்களையு

மிட்டாவோபூணுகவென்றுரகமாடுவபோற்
பட்டாலவட்டம்பணிமாற விட்ட

வெருதுமராமரமுமெவ்வேழுஞ்சாயப்
பொருநவிடைக்கொடிமுன்போத வருவதொரு

மேருகிரிதொடரும்வெள்ளிக்கிரியென்ன
மூரிவிடையெம்பிரான்முன்போதப் பேரிகை

தண்ணுமைபணணையை

பல்லியமெங்கும்பரந்தார்ப்ப வல்லயடி

வாணன்குடமுழாவாசிப்பமாமதூர

வீணைபுதநிமிகவுயிர்ப்பப் பேணும்

பரிசிறமதுசெவிப்பாண்சேரிபெற்ற
விருவ ிசைபாடியேத்தச் சுருதியெழு

கலையையகலாதகன்னிமடமானு
மலையையகலாமயிலுங் கலைமகளும்
பொன்னினுலகாளும்பூவையருமாநதிக
ளென்னுமடவாரெழுவரு மன்னமயில்
சீறும்விடைகளிறுசேனங்கடாயாளி
யேறுமடவாரெழுவருங் கூறுங்
குலநாகமாதர்குழாமும்பணிந்து
பொலமாடவீதிபுகுத நிலமாதர்
தானுநுதல்விழிமேற்றுவடிபோகத்திரண்ட
பாணமலரோன்படையென்னப் பூணரவஞ்
சூடுந்தரங்கச்சுரநதியிற்றோய்ந்தவிளை
யாடும்படிதிரண்டவன்னமெனப் பாடலிறைற்
றம்பெருமைபாடுந்தமிழோன்றனக்களித்த
வெம்பகலிற்சேர்ந்தவிளக்கென்ன நம்பருறை
சூதத்தெழுந்ததுணர்ப்பல்லவப்படலங்
கோதத்திரண்டகுயிலென்னத் தீதற்ற
வெர்தைபெருமான்கரத்தினேந்துமிளமான்கண்டு
வந்துதிரண்டசிலமானென்னச் செந்தமிழின்
பாட்டுக்குழல்வோன்பசும்பாதியின்வார்த்தை
கேட்டுத்திரண்டகிளியென்னக் கூட்டகிலார்
தாழ்ந்தசடைமுடியோன்றனுடம்பைக்காரென்று
வாழ்ந்துதிரண்டமயிலென்னச் சூழ்ந்தரன்பா
னன்புதியதூதுக்குநான்செல்வேனுஞ்செல்வே
னென்பனபோன்மென்குழல்வண்டெங்குமெழ நின்புயமே
லெங்கடமும்பணிந்தாலெஞ்செய்யுமென்பனபோற்
செங்கைவளைகள்சிறந்தார்ப்பச் சங்கரன்மேற்
றள்ளவரியகுறித்தாமுமிட்டதாயங்
கொள்வனபோற்கொங்கைக்குவடசைய வுள்ளமகிழ்
செம்பதுமைகேள்வன்றிருமல்லிநாதனுயர்
சம்புபதிநல்குந்தடந்தேர்போல் கம்பரே
யித்தேருங்கண்டாலோவென்பனபோலல்குலெனு
மத்தேரின்மேகலைகளார்ப்பரிப்ப வித்தெருவிற்
சிற்றவிடையோனைச்சேவிக்கப்பெற்றபதம்
போற்றுவபோற்பொன்னூபுரஞ்சிலம்ப மேற்கனக
கூடம்வெளியடைத்தகோபுரத்துங்குன்றனைய
மாடநெடுமேத்தவாரணத்து மோடுகதிர்
விஞ்சுகொடிதடுக்குமேனிலாமுற்றத்து
மஞ்சுதவழ்ங்கைகொண்டாண்மண்டபத்தும் வெஞ்சமரிற்
றத்துபரிபல்லவன்சம்புகுலப்பெருமான்
வைத்ததுலாபாரமண்டபத்துஞ் சித்ரமணிச்

லுண்மைதனக்கிந்தவுமையாள்பிறந்ததற்பின்
பெண்மைதனக்கேற்றம்பெரிதென்பார் — பெண்மைக்
குறையாளிவளன்றோவென்பார்மற்றிங்ஙன்
மறுகிலெதிர்வந்தமாத — ரறுசமய
அண்டருக்குந்தாயாரறச்சாலையிப்படிபெற்
றுண்டிருக்குமூதூருடையானே — கொண்டவிருட்
காவிவிழியொருத்திகட்டிக்குறியிட்டு
மாவடியில்வைத்தவயிரமே — தேவிமுகஞ்
செவ்விபெருகத்திருச்சூடகைக்கையாற்
றவ்விபிடித்துச்சமைத்தன்ன — மெவ்வுயிர்க்கு
மாரச்சொரிதருநெலாட்டைக்கிருநாழி
சேரப்படியளக்குஞ்சீமானே — மார்புபோற்
கண்ணுஞ்சிலர்படைத்தகாணியோகாமவேள்
பண்ணுந்துயர்தீரப்பார்த்தருளீர் — வெண்ணிலவோ
டருமிளந்தென்றலீராமலும்முடைய
வாரம்பசிதணித்தாலாகாதோ — வாரவுளம்
வேவக்கறங்கும்விடைமணியையும்முடைய
சேவுக்கினிதளித்தாற்றீதாமோ — மேவியவிக்
கொக்கினிறகுடனேகூவுங்குயிற்சிறகை
யொக்கவணியவுமக்கொண்ணாதோ — மிக்க
வறஞ்செய்யுமூருடையீராகாதுகாணு
மறஞ்செயவென்றுமயங்கா — நிறந்திகழும்
விண்டகுவளைக்கும்விள்ளாததாமரைக்குந்
தண்டரளமும்பொன்னுஞ்சாத்துவா — ரொண்டொடியிர்
பாகம்பிரியாதபச்சைமயில்காணுமல்
ஏகப்பர்பார்த்தாரெமையென்பா — ராகமதன்
காதன்மலர்சொரிந்துகைசலிப்பவிவ்வண்ண
மாதர்பலர்மயங்கமற்றொருத்தி — பேதை

## பேதை.

திரையுதவுபேரமுதின்சிற்றரும்புமுற்றி
வருமுகையதானதொருவல்லி — கருதியளி
யூதமலராவொருதாமரைமுகிளங்
காதலுதவாதகாமசரம் — வேதத்
துழையானகலாதுறைநின்றருதங்
குழையாததென்றற்கொழுந்து — பழைதாகக்
கம்பருறையுங்கடவுளிளஞ்சுருத்தின்
கொம்பிலுறையாக்குயிற்பிள்ளை — யின்ப
வலையாரமுதத்திரைதாம்பவித்து
தொலையாதகாமத்தின்றோற்ற — முலகிற்

சிறந்தபிரானல்லாததேவர்களைப்போல
விறந்துபிறக்குமெயிற்று ணிறைந்துமைப்போன்

முத்தாரம்பூணமுலையெனக்குச்சூட்டுமென்று
கைத்தாயர்முன்னின்றுகண்பிசைவாள் சுத்த

வியல்புதனையொழியவேதும்பிறழாக்
கயலையனையவிருகண்ணாள் புயல்வரினு

மாடாததோகையதன்பிஞ்சம்போற்கூடுவதுங்
கூடாதுமானகுழலினா

வோங்கிவளர்தன்னுரியபரிணாமமெல்லாந்
தாங்கியவித்தன்னதனத்தினா ணீங்காத

வேகம்பமென்னீரிமவான்மகடழுவ
மாகம்பை

யாறென்னீரம்மையறச்சாலையென்னீர்நம்
பேரென்னீரென்றுதமைப்பேசுவித்த வாறெல்லாம்

பாவைக்குரைத்தந்தப்பாவைபகராததெல்லாம்
பூவைக்கழுதுபுகலுவாண் மேவுபல

தீவிற்பிறந்தசெழுமணியுந்தம்மூரின்
வாவிபிறந்தமணிமுத்துங் காவிவிழி

யம்பைமுதலாளரனைப்பூசித்த
கம்பைமணலுங்கலந்தெடுத்துக் கொம்பனையா

ளொண்டொடிமாதருடனேகரஞ்சிவப்ப
வண்டலிழைத்துமகிழ்போதிற் பண்டொருநா

டெண்டிணையிற்பெற்றதிருவமுதச்செவ்வாயும்
பண்டுகிராற்கொண்டபரிகலமு மண்டுமெரி

நாழுஞ்சினத்துழுவைதான்கொடுத்தவுட்சாத்தும்
வேழங்கொடுத்ததொருமேற்சாத்துஞ் சூழ்பனியி

னோங்கல்கொடுத்தவொருபாகமுமுடையார்
தாங்குமணிமறுகுசாருதலு மாங்கவனும்

வண்டறனையொழிந்துவந்தணிகிச்செந்துவர்வா
யொண்டொடிமாதருடனிறைஞ்சி யண்டருறை

நாகஞ்சிலையாகநண்ணார்புரமெரித்த
ஏகம்பர்தம்பெருமையெண்ணாதே கோகநக

வுந்திக்கணையோனொருபாகமுஞ்சடையு
மந்தப்புரமென்றறியாதே யிந்தப்

பெருத்தமணக்கோலப்பிள்ளையுடன்றோர்மே
விருத்துமெனைக்கொடுபோயென்ன வொருத்தியிவர்

பூணத்தவரிருவர்பொன்முடியுஞ்சேவடியுங்
காணக்கிடையாதகம்பர்காண் வாணுதலாய்

பாயவுலகம்பதினாலையும்பரந்தொன்
றாயபெருமானருகிருக்கத் தோயுமகிழ்

அ

பச்சைக்கிரியாற்பவளத்திருமார்பி
லச்சிட்டவர்க்கொழிந்துண்டாகுமோ — வச்சமுடன்
மீதெடுத்துக்கம்பைமிகுபெருக்குக்கஞ்சாத
மாதவத்தாட்கன்றியிதுவாய்க்குமோ — மூதண்ட
மெல்லாம்பெறநெல்லிருநாழியால்வளர்க்க
வல்லாடனக்கன்றிவாய்க்குமோ — சொல்லாய்
குறைவின்மடமயிலேகூசாதேயாமே
யிறைவரருகேறியிருப்போ — மறவிதனை
யென்னவிளையாளிருகண்கண்முத்தரும்ப
வன்னையர்தங்கையாலணைத்தாற்றி — மின்னேபோ
தென்றுபகர்வதன்முனேகம்பர்தேருடனே
தென்றலந்தேருந்தெரிவித்து — வென்றி
மதன்கைவிசாபம்வாஙகாமல்வாசம
பொதிந்தகணைபூட்டாமற்போந்தான் — பெதும்பை

---

பெதும்பை.

யிவண்மற்றொருத்தியெவர்க்குந்தெரியாப்
பவளத்தமுதுதரும்பாவை — தவளத்
திருப்பாற்கடற்பிறந்துசெந்தாமரைமே
விருப்பார்க்குநேரேயிளையாள் — விருப்புடனே
யார்க்குமளிகளவிழ்பதமீதென்று
பார்க்குமுகைபோலும்பருவத்தா — ளாக்கமுடன்
போராக்குமாமதனன்போதும்பனிக்குத்
தேராக்கவெண்ணுஞ்செழுந்தென்றல் — வேரிநறு
போதுபுனைவதற்கும்பூணாரம்பூண்பதற்கு
— ளாதிமதன்
பேறுமடநாணும்பெண்மைப்பெருமிதமும்
வீறுஞ்சிறிதரும்புமெய்யினாள் — சீறியெரி
யூட்டமதின்மூன்றுழிகிழ்ந்தவண்ணம்போற்
கூட்டிமுடிக்குங்குழலினாள் — வேட்டவர்தம்
புந்திகவர்வஞ்சனையும்பொய்யுங்கொலையுமிடம்
வந்துவந்துபார்க்குமதர்விழியாள் — மைந்த
ருகமையழகோடேயுள்ளநம்புங்கஞ்ச
முகையின்முகைபோலுமுலையா — ளிகுளையர்தம்
பிமாதகாதல்விழையார்க்கும்போததனைக்
கேளாதவர்போலக்கேட்டிருப்பாள் — கேளாய
மாதருமாறுமயிலும்பசுங்கிளியு
மோதிமமுஞ்சூழவுடன்போத — மாதவிப்பூம்
பந்தரிட்டநீழற்பளிக்குச்சிலாதனத்து
வந்திருப்பவெற்றிமடமாத — ருந்திக்

குவளைமலரிருகண்கொங்கைக்குறியிட்ட
பவளமலையிணையும்பாடித் — தவளநகை
யன்னையறஞ்செய்தவறசசாலையும்பாடிக்
கன்னியினிதாடுகெழுங்கென்னக் — கன்னிதனக்
காழிதருமுத்தமாகாதெனறவ்வூரி
லேழுநதிமுத்தமினிதெடுத்துச் — சூழ்தேரிற்
றட்டுநிகரல்குற்சங்கிலிபாற்றூதுதமை
விட்டவர்பாற்பெற்றவிழியொன்றும் — வட்டித்துப்
பாதமலர்துதித்தபட்டவாணன்றனக்குக்
காதலுடனளித்தகையிரண்டும் — பூதத்
திகலொழியநின்றுமிருந்துங்கிடந்து
முகிலுறையுந்தானங்கண்மூன்று — நகிலா
லிலங்குவரிவளையாலிவ்விரண்டாய்த்தம்மே
னலங்கொடழும்பொருநான்குந் — துலங்க
வுமைக்கமைததபொற்கோயிலூழிமுதனா
ளமைத்தனகோணங்களைந்து — மமைத்தோ
ளிளைக்குமருங்குலிருநாழிநெற்கொண்
டளிக்குஞ்சமயங்களாறுஞ் — குளிப்பா
செறியும்பவக்கடலைச்சிந்தித்திலாயா
லெறியும்புனிதநதியேழும் — பிறைநுதலா
ளன்பொடுபொடிக்கழுங்கையாடுகின்றவெல்லைக்க
ணென்பொருபெண்ணானவெழினகரு — மன்பனுள
மன்றுருத்திக்குண்மையறிவித்துத்தாமகிழ்க்கிழ்ச்
சென்றுளித்துநின்றதிருநகருஞ் — சென்று
முனககனகோளத்துமுற்பட்டகூத்தின்
பதுமமலர்நதபதியுங் — கதிராழிக்
காவித்திருநிறத்தோன்கைகுவித்துநின்றெதிரே
சேவித்துநிற்குந்திருப்பதியுந் — தாவுபரி
மல்லற்றுறைத்தொண்டைமான்கடவுந்தேனாயொரு
முல்லைக்கொடிதடுத்தமூதூரு — நெல்விலைக்குச்
சற்றளந்தநாட்புகலிச்சைவப்புலவனுக்குக்
கொற்றளந்தமாடக்கொடிநகரும் — பெற்றதொரு
தாயுமிலையென்னுந்தமதுகுறையையொரு
தூயகழைகவிர்த்ததொன்னகரும் — வாய்சலச
மாட்டியினிமையறிந்தவூனெச்சிறனை
யூட்டியவேடனுறைபதியுஞ் — நாட்டிலுள
வெண்ணிலமணலாமேறக்கழுவிலொரு
பெண்ணையியலறிந்தபேருரும் — விண்ணவர்தஞ்
சாநலுறைநாளுஞ்சாகாதபுள்ளிரண்டுந
நீதகலவாழுந்திருமலையுந் — தூதுதமை

யோட்டுந்திருநாவலூ ராற்கிரந்திட்டுப்
பாட்டுண்டவூரும்படைத்துடையோன் சூட்டு
வெருவும்வரியரவும்வெண்டலையு மாறு
மருவுமுடிக்கம்பவாண
செங்கலெறிக்குச்சிவலோகமீந்தபிரான்
றுங்கமணிமறுகுதோன்றுதலும் பைங்கொடியு
மாடுங்கழங்குதவிர்த்தாயத்துடன்கனக
மாடநெடுவீதிவந்தணுகிக் கூடப்
பணிந்துபரவிப்பகுவாயரவ
மணிந்ததிருத்தோளழகு மணங்கமழும்
பொன்னுனமார்பும்புனையும்புரிநூலு
மன்னுனகாதல்வரநோக்கி மின்னுந்
திருந்திழையீரிந்தத்திருமேனி தன்னி
லிருந்ததழும்பென்னதழும்பென்றாள் புரிந்தவரு
மின்னேகிளியேவிளங்கிழையேயன்னமே
யன்னேயிதனையறியாயோ தன்னருளாற்
பாராட்டிவையம்பதினாலையும்வளர்க்கும்
பேராட்டிமாதவத்தின்பேறுகாண் வாரிதிசூழ்
வையமுழுதறியவாங்குஞ்சிலைமார
னெய்யுங்கணைபடைத்தவேற்றங்காண் டெய்யகுழற்
பண்பிறந்தசொல்லாய்பலசொல்லியேனிந்தப்
பெண்பிறந்தார்க்கெல்லாம்பெருமைகாண் மண்பரவி
யேத்துமிறையாளிருகொங்கையால்வளையாற்
சாத்தியகோலத்தழும்புகாண் பார்த்தருளா
வென்னுமளவிலிலங்குமனத்துட்காதல்
பொன்னனையமெய்யிற்புறம்பொசியக் கன்னிவெயி
றீண்டமலர்வதொருசெந்தாமரைமுகைபோற்
காண்டகையசெவ்விக்கவின்படைத்தாண் மீண்டரனுங்
கோலமயிலைக்குறிப்பாற்கடைக்கணித்தாற்
போலமுறுவலுடன்போயகன்றான் மாலைமதன்
செங்கைவரிசிலையைச்சேரதொடைமடக்கி
யெங்கள்பெருமானேடேகினன் மங்கை

மங்கை.

புடையோதனாலமெலாம்போர்மதனன்
கிடையோதிவிக்குமொருகிள்ளை விடமும்
வளருங்கொடுங்கொலையும்வஞ்சனையும்பொய்யுங்
களவுங்குடிபுகுதுங்கண்ணை டெளிதேனுஞ்
சிலவுததியமுதுஞ்செழும்பாகும்
பாலுமுதவும்பனிமொழியாள் மாறுதவு

மிக்கதிருவழகின்வெள்ளத்தெழுந்தவிரு
மொக்குளனையமுலையிணுண் மைக்குழலிற்
பூவின்மிகுபொறையாள்பூணாரமென்முலையா
ணேவடியிட்டநுண்ணிடையா ளாவிபெற
வார்வுளதாகவாடவர்தன்மேல்வைத்த
பார்வையறியும்பருவத்தாள் சேரச்
சுடருற்றபூவளைக்கைத்தோழியருந்தானு
நெடுமெத்தவாரணத்தினின்று விடையோன்பா
லன்னத்தைத்தூதுவிடவங்கையிற்கொண்டனன்போற்
பன்னித்திலநிரைத்தபந்தேந்தி யன்னதுதான்
பாவையொருபாகன்பாலணுகமாட்டாமற்
போவதுவுமீள்வதுவும்போற்றோன்ற மேவி
நெறிந்திருள்கொண்டைநெகிழ்ந்துததும்ப
நறும்புழுகின்கணனைந்து செறிந்து
சுரும்பினினங்கள்சுழன்றுசுழன்று
நரம்பெனவெங்குநணுங்க விரும்பி
யிடுங்குழையஞ்சவெறிந்திருகண்க
ணெடுங்குமிழின்கணெருங்க வடங்கொண்
மணங்கமழ்குங்குமவண்டலணிந்து

மருங்குறளர்ந்துவருந்தவருந்த
விருங்கலைகொஞ்சியிரங்க நிரம்பி
யிலங்குபதங்களிடுந்தொறுநின்று
சிலம்புசதங்கைசிலம்ப நலந்திகழும்
வல்லியினிதாடமடவாரணைந்துமலர்
வில்லிபுரிவித்தமெய்த்தவமே நல்லமட
மானேகலாபமயிலேமலர்பொதியாத்
தேனேநிரையளித்ததெய்வமே கானேயுங்
கோவையிதழ்வாய்க்கொடியேநமக்கிந்தப்
பாவியிடைசெய்தபகையுண்டோ மேவியுடன்
மன்னுஞ்சிறையன்றின்மன்றிற்பனைமடன்மே
லின்னஞ்சிலநாளிருந்தாலோ முன்னமே
வென்றேயிருக்கும்விழியுடனேயுள்ளபகை
யின்றேமதன்முடிக்கவெண்ணமோ வென்றிமதன்
சேரும்வளைமலராற்றீண்டப்பெறும்வாழ்விவ்
வாரமணிப்பந்துக்கமையாதோ பாருலகி
ருவிறகைமைத்தபோதனர்தங்காலத்தே
யாவியுடனிருந்தாலாகாதோ பாவா
யமையுமமையுமெனுமவ்வளவிற்றேர்மே
லுமையொருபாகமுடையோன் சமரமுக

வீரனுக்குமெய்யன்பான்மேவுந்திருநீற்றுச்
சேரனுக்குஞ்சோழனுக்குந்தென்னனுக்கு மூரனுக்கு
மாரணற்கும்வாசவற்குமல்லாததேவர்க்கு
நாரணற்குமேலோர்க்குநாதனார் போர்முகத்தி
லாமகாட்கொண்டதலையாட்டுத்தலையாக
மாமனார்க்கீந்தமருகனார் தாமாக
விங்கெமையாட்கொள்ளவெழுந்தருளப்பெற்றோமென்
றங்குளமின்றோர்கண்டகமகிழச் செங்கேழ்
வயங்குமணிமாடமாமறுகிற்றோன்ற
வியந்தமணிப்பந்தாடல்விட்டு நயந்தணுகித்
திண்டோளுமார்புந்திருநீலகண்டமுங்
கண்டோரைவாழ்விக்குங்கண்மலருங் கண்டிறைஞ்சித்
தூயபவளந்துவளூற்றுடோழியருந்
தாயருநிற்கத்தலைப்பட்டா டைய
வெறியுமழவுடையாரிம்மாதின்காதல்
சிறிதுமுணரார்போற்செல்லக் குறைவின்
மறைபுகலும்பூசைமனுவாலயத்தி
லுறைதிருவேகம்பமுடையீர் செறியிருளிற்
பந்தணுகுஞ்செங்கைப்பாவைபாற்சங்கிலிபால்
வந்துழலுந்தூதுமறந்தீரோ நொந்தொசியுஞ்
சிற்றிடைபுல்லத்திருமார்பகங்குழைந்தீர்
நெற்றிவிழியுடையீர்நீரன்றோ வொற்றியூர்ப்
பெண்ணேவறிவார்தம்பேரின்றுதொட்டுமக்கு
விண்ணோர்பெருமானேவேண்டாவோ வண்ண
மமைந்தாரார்காதலினாலார்தலையிற்பெண்ணைச்
சுமந்தாரார்மற்றுமைப்போற்சொல்லீ ரமைந்து
துகைத்துமதுகரத்தாற்றோடுழுதார்தந்து
நகைத்துமுகம்பார்த்துநடவீர் வை
கண்ணன்றோவெப்படியுங்காதலித்தாடானுமொரு
பெண்ணன்றோகச்சிப்பெருமானே யெண்ணி
லிருக்கிலறஞ்சொன்னீரெனுமாசைவிட்டுத்
திருக்கடைக்கண்வைத்தவர்போற்செல்ல வொருக்காலு
மேவுண்டறிகிலளென்றெண்ணுதேயேவுண்டா பாவி
லாவிபடவெதறியாதே
விறல்வேள்சிலையம்புவிட்டானறன்னம்பின்
மறல்வேல்விழியாண்மனத்தே பிறைமுடியார்
பாதிகருகப்பஞ்சபாணமதிங்
காதலுக்குச்
சங்கம்விழுமென்றுந்தாழ்கலைநில்லாதென்று
மங்கம்பசலைநிறமாமென்றுந் திங்கணிலா

வீரஞ்சுடுமென்றுமேழிசைவேய்தீயென்று
மாரஞ்சுடுமென்றுமன்றறிந்தாள் சோர்வுற்
றடங்குமறிவினளாயன்னையர்தந்தோண்மேற்
றடங்கண்மயிறளர்ந்துசாய்ந்தாண் மடந்தை

---

## மடந்தை.

இளையார்மனம்வளையவெய்யுமதன்செங்கோல்
வளையாவகையசையும்வல்லி யளகநறை
தேங்குகருமுகிலுஞ்செவ்வாய்முருக்குமொளி
தாங்குபுருவத்திந்த்ரசாபமு மாங்கழையும்
வாய்ந்தமொழிக்குயிலுமைக்கட்கருவிளையும்
பூந்தரளஞ்சேர்கழுத்துப்பூங்கமுகு மேய்ந்தநகை
முல்லைநகையுமுலைக்கோங்குங்கைக்காந்தண்
மல்லன்மலரும்வரிச்சுணங்கா மல்லிமலர்
வேங்கையுஞ்சாயன்மயிலும்வியனழகுந்
தாங்குதிருநிறத்தசண்பகமும் வாங்குமிடை
மின்னும்பதச்சூதமென்குழையுங்கொண்டொன்றாய்
மன்னியகார்வேனிலுடன்வந்ததென மின்னுசுதை
பக்கநிலவெறிக்கப்பத்மராகத்துவெயின்
மிக்கவரங்கத்துமேனின்று முக்கணனைத்
தேவர்நெருங்குந்திருமயானம்பார்த்துத்
தாவிறிருமேற்றளிபார்த்து மேவி
யரன்விடாதானுமனேகதங்காபார்த்துப்
பரவுங்காரைக்காடுபார்த்துப் பெரிதிறைஞ்சிக்
கங்கைகொண்டான்மண்டபமுங்கண்டுமனமகிழ்ந்து
மங்கைகொண்டான்வாழுமனைபார்த்துத் திங்கண்
முடித்தமுடிக்குமுடிகொடுத்தசம்பன்
படைத்ததுலாமண்டபமும்பார்த்து விடைக்கொடியோன்
கச்சாலையும்பார்த்துக்கம்பர்தம்பாடியெனும்
பொற்சாலையும்பார்த்துப்பூவைமொழிப் பச்சைநிறச்
சைவமுதல்விதவஞ்செய்யப்பெற்றதொரு
தெய்வவுலகாணித்திருக்குளமுந் துய்ய
வறச்சாலையும்பார்த்தறுசமயம்வாழும்
புறச்சாலையும்பார்த்துப்பூவை சிறப்புடைய
விந்நகர்போலெந்நகருமில்லையிமையோர்பதியு
முன்னவரிதனுக்கொப்பென்ன வன்னநடை
மானேயிதன்பெருமைவல்லவரார்சொல்லுகைக்குத்
தானேயுவமைதனக்கல்லான் மானார்கட்
பொற்றொடியாள்கண்ணுதலைப்பூசித்தறஞ்செய்யப்
பெற்றதுபோற்பிறிதுண்டோ மற்றிவளுக்

கந்தமுதலில்லாதவாதியொருமாவடிக்கீழ்
வந்துவெளிபட்டநகர்மற்றுண்டோ நந்தா
மருக்கார
யொருக்காலுநீங்காதுறையுந் திருக்காமக்
கோட்டமெனிலிங்கேகுலவுங்கனகமழை
யீட்டமுகில்பொழிந்ததிவ்விடத்தே கூட்டியபே
ராசையுடன்மால்பத்தவதாரந்தம்மிலும்வந்
தீசனைப்பூசித்ததிவ்விடத்தே பேசுநல
மொன்றுபுரிந்ததொருகோடியாகுமிதி
லென்றுமொழிகின்றவெல்லைக்கண் மன்றற்
றிருக்கொன்றைமாலையளிசெவ்விமணமுண்டு
தருக்கியநாதந்ததும்ப வெருக்கமலர்
பாயுஞ்சடாடவிமேற்பாகீரதிமுகங்க
ளாயிரமும்வீசியலையெடுப்ப வோயா

பரிகலமுமாலையுடன்பாட வொருதன்
றிருக்கைத்தமருகத்துத்தெய்வச்சுருதி
பெருக்கத்திசைமுகத்திற்பெய்ய விருப்பொடரி
தேடுந்திருவடியிற்செம்பொற்சிலம்போசை
யூடுங்ககனத்துலாய்மிர நீடு
நடஞ்செய்தருள்காக்குநாயகரும்வானந்
தொடும்பொன்மணித்தேருந்தோன்ற கொடுங்குழையாள்
கோதையசையக்குழலசையக்கோல்வளைக்கை
மாதர்பலருடனேவந்திறைஞ்சிச் சோதி
மிகக்கருணையெப்போதும்வீற்றிருந்தசெவ்வி
ணிகர்ப்பி
றவளத்திருநீறுஞ்சந்தனமுந்தோய்ந்த
பவளத்திருத்தோள்கள்பார்த்தா ளிவளும்
மலர்மார்பிலாசையெலாம்வைத்தாண்மைக்கண்ணீர்
புலராமனெஞ்சம்புலர்ந்தா ளுலகுண்ட
திண்பால்விடையீர்திருத்தோணலங்கண்ட
பெண்பாவியாவிபெறுமாறு கண்பாரீ
ரென்றபொழுதிற்கச்சியேகம்பரேகுதலு
மன்றன்மலர்சொரியமாரவேள் நின்றயர்ந்த
தத்தைமொழிக்குயிலைத்தாயரொடுத்தணைத்துச்
சித்ரமணிமண்டபத்திற்சேர்வித்து முத்தினொரு
பந்தருமிட்டார்பனிநீரையுஞ்சொரிந்தார்
செந்தளிரின்பாயலின்மேற்சேர்த்தினார் சந்தனமும்
பூசினார்கொண்டமயல்போமோவென்றாயிரமும்
பேசினார்தாயார்பெரிதிருந்து கூசாதே

தண்மெணன்கழுநீருஞ்சாத்தினார்பார்த்தயலா
ரெண்ணமுமக்கொன்றுமில்லையோ வொண்ணுதலீர்
முத்தினொருபந்தன்முழுநிலாவீசுநிழ
னித்தருறைதேமாநிழலாமோ பித்துளதோ
வாசப்பனிநீர்மணலையவராகப்
பூசித்தவாற்றின்புனலாமோ பாசிழைக்குப்
பாயல்குளிரிபடுத்தாலப்பாய்விடையோன்
கோயிலிளமாவின்கொழுந்தாமோ நேயமுள
வொற்றொடிநல்லீர்புனைசந்தனச்சேறு
நெற்றிவிழி'' வர்தனீறாமோ கற்றறிஞ
னூற்றாயிரநீர்நொடித்தாலவையிவளுக்
கேற்றார்திருவஞ்செழுத்தாமோ மேற்றான்
பிணைந்தவணிகழுநீர்பெய்வளைக்குக்கம்ப
ரணிந்ததிருக்கொன்றையாமோ வணங்கனையீ
ரென்றுமொழியிவையவையாயினபோ
னின்றதிவளாவிநீங்காம லன்றோ
தெரியவேயாவர்க்குஞ்சிந்தாகுலமு
முனாயுந்தெளிவுதரலுற்றா ளரிவை

## அரிவை.

கமலமலர்சுமந்தாள்கட்டழகுமேனு
ளமுதமுடன்வந்தாளழகுஞ் சிமயமிசைக்
கூசிமழைதவழுங்கொல்லிக்கிரிபடைத்தாள்
பேசவரியதொருபேரழகும் வீசுமிளக்
தென்றலும்வென்றிசசிலைமாரனைங்கணையு
மன்றலுமொன்றானவடிவினாள் பொன்றுமொரு
காலமும்பார்த்துக்கயிறும்பிடித்தொருவன்
சூலமுமேந்திச்சுழலாமன் மால்செய்
துலவாநகையாவொசியாவசையா
குலவாவுயிருண்ணுங்கூற்று தலைவிக்கைங்
கோணம்பெறவகுத்தகோயில்போலியாவனையுங்
காணுந்தொருமயக்குங்காட்சியாள் பேணி
மகிழ்வுற்றவாயமுடன்வண்டரளமாலை
திகழ்சித்ரமண்டபத்திற்சேர்ந்து மகர
விடந்தோய்விழியங்கெழுதியவையெல்லாம்
நெடும்போதுபார்த்தகலாநிற்ப வடைந்தெவரு
மின்னதிதுவிதுவென்றெங்களுக்குக்காட்டியரு
ளன்னநடையாயடைவிலென மின்னிடையீர்
வெள்ளிமலைநீங்கிவிண்ணோருமண்ணோரு
முள்ளும்பிரானையுமையாள்போ யுள்ளமிகத்

தாங்காதபூசைக்குத்தக்கவிடமீதென்று
நீங்காதுநின்றநிலைபாரீர்

தேங்கமழுங்

காவிபுடைசூழ்ந்தகம்பாநதிப்புனலிற்
பாவைபடியும்படிபாரீர்

கோவையித

ழோசையளிகளுலவம்பிகாவனத்தில்
வாசமலர்கொய்யும்வகைபாரீர்

பேசரிய

வாதியமரரறியாவவராக
மாதுகுவித்தமணல்பாரீர்

கோதை

யணியுமிருளோதியன்பொடுபூசித்துப்
பணியும்வழிபாடுபாரீ

றவெலலகக்கண

ீருக்கொள்

விமுன்

யவுபுளகமுடன்வெண்ணீறுமெய்க்கணிந்து
தேவியிருந்தசெயல்பாரீர்

பூவிற்

கரந்துமழைபொழியாக்காலத்தேகம்பை
பரந்துவரும்பெருக்கைப்பாரீர்

விரிந்தபுனன்

மாகம்புதையவரப்பண்ணித்தம்மையொளித்
தேகம்பர்நின்றவிடம்பாரீ

தோகை

யரும்புனல்கண்டஞ்சியவராகமுறச்சென்று
பரிந்துதழுவியதுபாரீர்

புரிந்து

மலைக்குமகடன்வழிபாடுவந்து
பலித்தபெறும்பேறுபாரீர்

கலப்பொற்

றெரிவையுடனிந்தத்தேமாநிழலிற்
பரமனிருந்தவிடம்பாரீர்

பொருவி

திருக்கைவளையான்முலையாற்றிண்டோளுமார்பும்
பரித்த திருத்தழும்புபாரீ

விரித்தசடை

யண்ணல்வெளிப்பட்டருள்வரங்கள்பாரீரென்
றெண்ணும்புதுமையிவையெல்லா

மொண்ணுதலாள்

காட்டவருங்களிகூர்பொழுதிலொரு
தேட்டமுளதாயசிந்தையளாய்க்

கூட்டி

கரத்தேந்திவிருந்தகிளியை
வருந்திவினையேன்பெற்றவழ்வே

யருந்தவமே

தேமென்குதலைதருந்தெள்ளமுதேகம்பரணி
தாமந்தருவாய்தவிருவா

யாமெல்லாஞ்

சூழுநிலவிற்சுவைசொலாமுன்பிவின்யான்
வாழும்படிங் கயாட்டாயோ

வேழந்

திகழும்வரிசிலையாற்சேயகங்கள்காட்டும்
பகழிதரும்பூவாகப்பண்ணு

யிகழ்வார்மு

னென்னன்னையேயேதுமிரங்காயிரவுபக
லுன்னன்னையுன்னையொறுக்குமோ

தென்னன்

பொருப்பிற்பிறந்துபுகையாகவீசு
நெருப்புகுளிரவினையாய்

கிளைத்தரளத்

தாருங்கழுநீருஞ்சந்தனமுந்தோய்ந்தபனி
நீருங்குளிரநினைந்திடாய் — பேரரவச்
சேவின்மணிவருத்தந்தீர்த்தருளாயென்றிருந்து
பூவையினிதுரைக்கும்போதின்கண் — டேவருய்ய
வாலமினியவமுதாகவுண்டபிரான்
கோலமறுகுகுறுகுதலு — நீலவிழி
தூதுவிடக்கிள்ளைக்குச்சொல்லுவதெல்லாமறந்து
காதலுடன்வந்தனைக்கைதொழுது — நீதிபுரி
யிந்தமலைப்பாவையிடப்பாகங்கொண்டுமெக்குத்
தந்தவலப்பாகந்தரலாமோ — வெங்கைபிரான்
கங்கைத்திருமுடிமேற்கண்ணியலாவ்வெண்
தங்குபுயக்கொன்றைதரலாமோ — சங்கரா
வெம்பாகநீரணைந்தாலிவ்வுடம்பிற்பச்சென்ற
செம்பாகம்வந்துசிவக்குமோ — நம்பரநின்
சோதிமணிமுடிமேற்சோமப்பணிக்கொழுந்தை
மோதுமுறுதரங்கமோதாதோ — வோதாவென்
றோதியுடன்சொல்லவறம்வளர்க்குமுருடையா
னேதுமுரையானெழுந்தருள — மாத
ரறிந்துமகவையளித்தவர்களாக்கிச்
சொரிந்தகறியமுதுஞ்சோறு — மருந்த
விருப்பினொடுசெங்காட்டில்வேண்டும்பொழுதோ
திருப்பவளச்செவ்வாய்திறப்பீர் — விருப்பால்
வளைந்ததிரிபுரத்தைமாள்விக்கும்போதே
குளிர்ந்ததிருமுறுவல்கோள்வீர் — துளங்குநிலா
முத்தவரிசிலையான்மொய்ம்பூங்கணைபுகுந்து
தைத்தபொழுதோதிருக்கண்சாத்துவீர் — மெய்த்தக்
கொடியவிடஞ்சுரரைக்கொல்லும்பொழுதோ
வடையவருளுடையீராவீர் — மடமாத
ருற்றதுயர்கேட்பதற்கொன்றோதாதுபோகின்றீர்
கற்றறிதுவோகள்ளக்கம்பரே — பெற்றவர்தாம்
வீசுமழுவாற்றுணியவெட்டுமவர்க்கல்லாது
வாசமலர்க்கொன்றைவழங்கீரோ — பூசித்து
வல்லபங்கள்செய்துவழிபடுவார்க்கல்லாது
புல்லவொருவர்பொருந்தீரோ — சொல்லீ
ரொருவாசகமென்னவோராதுபோலப்
பொருமாரனைநிறுத்திப்போனார் — தெரிவை

## தெரிவை.

யொருத்திதவக்குறும்பையோட்டியுலகெல்லாந்
திருத்திமதனடத்துஞ்செங்கோ — னிருத்தனார்

தூதுவிடச்சங்கிலிபாற்றோழனுக்குத்தாழுழன்ற
போதிதுவென்றெண்ணும்புரிகுழலா ளாதிரையான்
[illegible] மொருதிங்கணமக்
குண்டெனவென்றெண்ணுமொளிநுதலா ண்டமதி
வேணியுடையோன்மிடற்றிலடக்குதற்கும்
பாணியிசையசையப்பண்ணுதற்கும் பாணந்
தொடுப்பதற்கும்பார்ப்பதற்குஞ்சூழ்கழற்காலன்மேல்
விடுப்பதற்குமெண்ணும்விழியாள் விடைக்கொடியோ
ராயபிறப்பையணுகாதவருடைய
தூயபிறப்புணர்த்துந்தோளினு ளையனார்
[illegible]மிவையென்று
[illegible]முடன்வெ[illegible]
தாமுட்குறிக்குநல்லதிணை மாமழுவோன்
தென்றல்படக்குழைந்ததேமாவின்கொம்பிது
வென்றுதிருவுள்ளத்திணிதெண்ண வொன்றாகத்
துய்யவளைக்கையுந்துவர்வாயுஞ்சோதிதிகழ்
மெய்யுநிறமும்விளங்குவாண் மொய்யமரிற்
றூவும்விடையுடையான்றன்மேன்மலர்வாழி
யேவுமதனையெரித்தநாண் மேவுற்
றெழும்புகையும்வானமுமென்னவுரோம
வொழுங்குமிடையுமுடையா டொழுஞ்சுரரைக்
காக்குமிடற்றார்க்குக்கச்சாநல்காப்பாத
மாக்கநிணையுமகலல்குலா ணைக்கரிய
தூவிமயிலனையார்சூழவொருகமல
வாவியருகுமகிழ்ந்திருப்ப மேவியயி
லுண்கண்விறலியொருத்திசெழுங்களபக்
கொங்கையிணைபடைத்தகூற்றமே யெங்குமளி
நினைறோலிடுகின்றநீள்வனசக்கோயிறனக்
கின்றோகுடிபுகுதவிட்டநா ளொன்றாக
விஞ்சவழகுடையார்வீற்றிருப்பதல்லாது
கஞ்சமலரொருத்திகாணியோ வஞ்சாதே
யிந்தவழகல்லாலேந்துமோகஞ்சமலர்
தந்தவழகுதனையென்று செந்திருமுன்
சென்றுபணியத்திருவாலவாயுமணி
மன்றுமொருகடவுண்மாநிழலு மென்றும்
விரும்பியுறைமழுவாள்வீரன்றசாங்க
மிருந்துவிறலிபாடென்னத் தெரிந்தபெரும்
பாகுபலவுடையான்பாட்டுக்கொருவடிவான்
றியாகமுதவுந்திருமலையு மாகம்
பெருக்குமறுகும்பிறைக்கொழுந்தும்பாம்பு
மெருக்குமுடித்தமணவியாறும் விருப்பொடர

ணந்தண்பெருந்துறையிவாளுடையாரம்மணலில்
வந்துசிறந்தவளாநாடுஞ் சந்தும
வடங்கொளிளமுலையால்வாளேரறியா
வுடம்புகுறிபெற்றவூரும் தொடர்ந்தவரி
நீலம்போற்கண்ணார்நிறமெல்லாந்தன்னுடைய
கோலம்போலாக்குங்குளிர்தாரு
சேக்கைப்புயலின்றிருநாபியிற்பனவன்
வாக்கிற்பிறந்தவயப்பரியு நோக்கித்
திரண்டாயிரங்கயிலைசெல்வதெனத்தோன்று
மிரண்டாயிரங்கோட்டிபமு நெருங்கு
கடிக்கற்பகவனத்தைக்காசினிமேலாயர்
கொடிக்குக்கொடுத்தகொடியுந் துடிக்கட்
டழங்குசதியுடையான்றாண்டவத்துக்கேற்ப
முழங்குதிருக்கைமுரசுந் தொழும்பா
லடுத்தசுரர்பரவவண்டாண்டமெல்லாம்
படுத்ததிருவாணையுமேபாடத் துடிக்கவிதழ்
நெஞ்சுதளர்ந்துநெறிமயங்கிநீடுயிர்த்து
வஞ்சியறிவழிந்துமாலாகி யஞ்சாதே
யாகம்பிரியாவவளையறியாம
லேகம்பர்தாமேவந்தெய்திலே மோகங்கொண்
டாரமருவியசன்மார்பிலென்னையவர்
சேரவரவணைக்கத்தேடிலேம் பாரடையத்
தாவும்விடையுடையோன்றன்மேற்றனத்தழும்பு
மேவுங்கலவிவிளைக்கிலேம் பூவினறும்
பாயலணுகிநலம்பாராட்டியென்னையவ
ராயபுலவியகற்றிலே நேயமுடன்
போகவுததியினிற்புக்கழுந்திநெக்குருகி
யாகமிருவருமொன்றாகிலே மாகத்
தணைத்ததறியவவரணிந்தநீறென்
பணைத்தமுலைமேற்படிலே மணிக்களத்தா
ரின்றுமணந்தபடிக்கென்னுடம்புசான்றாகக்
கொன்றைமணநாறக்கூடிலே மென்றிருந்து
வாழும்படிதன்மனத்திற்பிறந்ததெல்லாந்
தோழியுடனிருந்துசொல்லுங்காற் சூழு
நெருக்காரமாலைநெடுநிலாவீசுந்
திருக்காவணநிழலிற்சேயுந் திருத்தாள்சேர்
சீலம்படைத்துத்திருநீறிடவயிற்றிற்
சூலைகொடுத்தாண்டதொண்டனு மோலையுடன்
சென்றுதடுத்துத்திருவெண்ணெய்நல்லூரி
லன்றுபடைத்தவடியானுங் கொன்றைநறு

தேன்பாய்முடிமேற் றிருச்சேய்ஞலூர்தன்னி
லான்பால்சொரிந்தாட்டுமந்தணனுந் தேன்போலத்
தித்திக்குமாறுதிருவாசகஞ்சொன்ன
பத்திப்பெரும்பெருக்குப்பாலனு மெத்திசையுஞ்
செல்லவரியசிவதத்துவமல்லா
கல்லதவஞ்
சூழ்வாருஞ்சூழ்ந்துவரச்சூதத்திருநிழலின்
வாழ்வோன்மணிமறுகில்வந்தணுகத் தாழ்குழலு
முற்றநினைந்தவெல்லாமுன்வந்துகைப்புகுதப்
பெற்றவர்போல்வந்துபெரிதிறைஞ்சிப் பொற்றொடியா
டெய்யபுரிநூலுந்தோளுந்திருமார்பு
மையல்பெருக[illegible]ணை தையலா
ளீசன்றன்மார்புநல்வெண்டோளுநீங்காத
வாசநறுங்கொன்றைமாலையே பாசறையில்
வீசுபனிநீருமிக்கவகிற்சந்தனமும்
பூசவுனக்குப்பொறுக்குமே [illegible]வரும்
போதாருந்தென்றல்புகுதுகைக்குமாளிகையின்
வாதாயணந்திறந்துவைப்பையே நாத
மளவேயளவேயென்றுயரிராவூதுந்
துளைவேயுனக்குச்சுடாதே குளிர
வடுத்தசெழுங்கழுநீராலேபடுத்த
படுக்கைசருகுபடாதே கடக்கவரி
தாயவிரிகங்குலடன்மாமதனன்சொரியுஞ்
சாயகங்களுன்மீதுதையாவே மாயவிரா
வெண்ணிலாவூழியெறித்தாலுமிங்குனக்குத்
தண்ணிலாவேதுந்தழலாதே
லையவிடையாருமன்னையருந்தாமொறுக்கும்
வெய்யவுரைகேட்கவேண்டாவே பையவருஞ்
சேவின்மணியிசைக்குந்திராவலைகடற்குங்
கூவுங்குயிலுக்குங்கூசாயே மேவியநின்
முன்றிலுயர்பனையின்மூரிமடற்குடம்பை
யன்றிலரிக்குரற்குமஞ்சாயே யென்றாலும்
வெய்யபசலைவிளைவானேன்மேனியெங்குந்
துய்யமலர்க்கண்ணீர்சொரிவானேன் செய்யங்கை
வண்டுவிழுவானேன்மற்றெனக்குச்சொல்லென்று
கெண்டைவிழிமாதுகேட்பளவிற்
காவியொழிந்தகணைசொரிந்தானவ்வளவிற்
றேவர்களுந்தன்றெருவகன்றான் பாவைமே
லாரவடமுமணிந்தார்குளிர்ந்தபனி
நீருமடவார்நிரப்பினார் பேரிளம்பெண்

பேரிளம்பெண்.

டிண்மைமதனன்செலுத்துகின்றபேராண்மை
பெண்மையழகின்பெரும்பெருக்குத் தண்மலரோ
னுவமைவிறந்தனானத்தாற்பேரழகாற்
பூவுமரசாளப்போதுவா டேவ

தருநிழலில்வாழத்தகுவான் விரவி
யினியகலவிநலமெல்லாமதனன்
மனைவியையுங்கற்பிக்கவல்லாள் கனைகடல்சூழ்
பாரைப்பெரிதுழைக்கப்பண்ணிப்பழையசுர
ரூரைப்பெரிதுழைக்கவொட்டாமல் வாரிட்டுக்
கட்டுண்டனமென்றுநாணிக்கவிழ்ந்துதலை
யிட்டனபோற்சாய்ந்தவிளமுலையாள் சிட்டரிய
சைவப்பெருமைத்தமிழ்நாடறிவித்த
தெய்வப்புலவன்றிருமுறையும் வெவ்வமண
ரீருமதயானைக்கிடும்போதுமஞ்செழுத்தைத்
தேருமரசன்றிருமுறையுஞ் சேரனுட
னன்றுகயிலைக்கதிமதவெள்ளானையின்மேற்
சென்றபெருமான்றிருமுறையுந் தென்றிசையின்
மாடப்பெருந்துறையில்வந்தவருட்கோலந்
தேடித்திரிந்தோன்றிருமுறையுங் கூடவினி
தோதியவர்கடிருவுள்ளக்கருத்தினுள
கோதினிலைமையெல்லாங்குயிட்டுச் சோதிநிக
ழஞ்செழுத்துமேகம்பராடுந்திருக்கூத்து
நெஞ்சழுத்திவைக்குநிலைமையாண் மஞ்சு
பொருந்துமணிமாளிகையிற்பூங்கவரிவீச
விரும்புமணியாசனத்தின்மீதே யிருந்தெவரும்
பேசவரியபிரானார்திருவார்த்தை
யாசையுடன்கேட்புழிவந்தாங்கொருத்தி வாசலின்க
ணின்றாளொருமறையோனீறணிந்தகோலமுட
னென்றாள்வரவிடுகவென்றுரைத்துச் சென்றெதிர்கொண்
டங்கைகுவித்தோராரியாசனத்தினில்வைத்
தெங்கடவம்வந்தவாறென்றுரைசெய் தங்கமுடன்
முன்னைமறைநான்முதலாயவெக்கலையு
நின்னிலறிவார்நிலத்தில்லை மின்னுசடை
யீசனிலைமைக்குமேனையிமையோர்நிலைக்கும்
வாசியுரைதெளியும்வாறென்னப் பூசுரனு
மென்னிலைமைசோதிக்கவென்றோவிதுசொன்னா
யன்னுதலேயென்றுநகைசெய்யா வுன்னி
யிதனையிதனுடனேயெண்ணலாமென்னு
மதனைவினவுதலேயன்றி மதியதனி

லெண்ணமிலாதார்போலவெல்லர்மினிதுணர்ந்த
பெண்ணமுதேகேட்கப்பெறுதியோ மண்ணுலகிற்

குன்றிதனையொருபொற்குன்றமுடனிகரு
மென்றுதிரிவாரையென்செயலாந் துன்றிருள்போம்

விஞ்சுசுடருடைததாய்மின்மினியேவந்துதிக்குஞ்
செஞ்சுடரினென்பாரைச்செய்யுமதென் றஞ்சமென

கல்லானிழலிருந்தகண்ணுதலார்தம்முடனே
னல்லாயொப்

யேதுநிகராவிருமபினையுமபொன்னினையுந்
தாதுவெனவுரைக்குநதனமைகாண் மீதுலவு

நீடுசுடராழிநிலதேரிலீரிரண்டு
பாடுசுருதிப்பரிபூட்டித தோடார்

நளினத்துப்பாகனடததவெழிவாயத
துளவப்பகழிதொடுததுக் கொளுவியநாண்

மூரியரவாகமூதணடமுநதாங்கு
மேருவெனுஞ்சயிலமவிலலாக வார்வமுள

மூவருயிாவாழமுப்புரமுநீறுக
யாவாபொருதாரிமையோரிற் றேவர்

பழித்தபெருவேள்விபழுதாகவாள்விட்
டழிததவிமையவாவேறாதா னிழைத்து

வதைப்பானவருங்கூறறைமார்க்கண்டர்க்காக
வுதைததாரிவால்லாதுண்டோ வெதிர்த்த

கழற்கான்மதன்மாவககணமலரால்வெய்ய
[illegible] னிழற்பொற்

கலையானிடந்திட்டகண்ணுககோராழி
விலையாகநல்கினாவேறா நிலையாகத்

துன்னுமொருசிலநதிசோணடுஙகாவிரியு
பன்னெடோ

டேடியிருவாததிரியததெரியாம
னீடுசுடர்வடிவாய்நின்றவரா ராடலென

வுங்காரஞ்செய்தேயுலகுண்டமாலயனைத்
சங்காரஞ்செயதுபினனுந்தநதவராா பங்கயன்மால்

நவ.ரார் மாய்ந்திடவே

காராயணருட லுநாலுமுகனுருடலுங்
கூராயசூலமிசைகொண்டவரார் சேர

வெரிந்தபிறையெயிற்றுனீரைந்துவாயும்
பரந்துசெழுங்குருதிபாய நெரிந்தொருவன்

மான்றுகிடக்கமலையான்மகளுடனே
மூன்றுவிரலொன்றுடையவரார் தோன்றியட

லோதவிடமுண் டெயநிறத்தாமரைமேற்
கோதையர்க்குத்தாலிகொடுத்தவரார் மாதவனைக்

கூடியயனைக்கொடுத்தவரார்மோகினிபால்
நாடுமெழிற்சாத்தனை முனல்கினரார் பாடார்ந்த

புத்தேளிரென்னைப்புனைந்தவராரல்லினுமை
கைத்தாளங்கொட்டநடங்காண்பவரார் சுதமுறு

மாதிநெடுமாலுதிரமதனையுங்கைக்கலத்திற்
பாதிதனிலேநிறையப்பண்ணினரார் வேதமுடன்

றுண்ணெனவேயாழிபுகுஞ்சோமுகனைச்செற்றமீன்
கண்ணையுகிராற்களைந்தவரார்

ராமைவடிவந்தனிலுமாதிவராகந்தனிலு
மாமுதுகோட்டைகரததால்வாங்கினரார் ஆமரையும

பேசரியசிம்புளாய்ப்பேராடகனையடுங்
கேசரியையள்ளுகிராற்கீண்டவரார் கூசா

தடருஞ்சலந்தரனையன்றாழிகூட்டி
யுடலம்பிளந்தவர்வேறுண்டோ படிவிண

முழுதளந்தமாயன்முதுகெலும்பைச்செந்நீ
ரொழுகவேவாங்கினர்வேறுண்டோ பழுதெண்

ணட்டமலரோனுச்சித்தலையையுகிரா
லுடனேகுறைத்தவர்வேறுண்டோ செடிவிசும்பு

முற்றும்புதைத்தலையானமோதுருசுராசியைச
சுற்றுஞ்சடையிற்சுறுவிதது மற்றுமு

பகீரதனின் யாழிநாட்பாதமலர்போற்ற
மகிதலத்தேபாதுவிதுதார்மற்று புகழ்சு

செலுத்தசிறுதொண்டர்தேவியறுததாக்கிக
கலத்திடபடைத்தகறியைத் தலைகிட்ட

சுட்டியுமாலைச்சுரிகுஞ்சியுமுத்த
கட்டியைநகககிய யு பிட்டுகொரு

வாளியுங்கரமருப்பணிவடமுக
தாளியும் புதுசெய்பொருசாவமைபுயாய பிர

பிறபித, ர்,நயபெருடடைமைபயல்லா
மறும்சிகநவல்லவா யபறருர் மராக்கிக ல ற

யாதிசனையொழியவா று நத்கு ச நோ
மீ மகிழ்ந்திருக்கும்விண்ணவரா

பொருந,திவிடையாகப்பூர் துழுர்ப்பா?ல
விரும்பிநடத்தினர்வேறு நான்பெருமை

பின்னப்பலகோடியில்லையோயாயிருக்கு
சொன்னபொழுதேதொலையுமோ வுன்னரிய

மூவாமுதலாமுதல்வனையுமூவுலகித்
தாவார்பிறப்பார்கடங்களையுந் தேவர்கள

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# காஞ்சிப்புராணம்

## மூலமும் உரையும்.

### சிறப்புப்பாயிரம்.

காப்பு.

இருகவுட்டொளைவாக்குகார்க்கடங்களிங்குலிகக்
குருநிறத்திழிதோற்றமுன்குலாய்த்தவழ்ந்தேறிப்
பரிதிமார்பினிற்சமனொடுகாளிந்திபயிலும்
திருநிகர்த்தசீரைங்கரக்களிற்றினைச்சேர்வாம்.

(இதன்பொருள்.) இருகவுள் தொளைவாக்கு கார்கடங்கள் - இரண்டு கபோலக் கரடங்களும் வாக்கா நின்ற கரியமதங்கள், இங்குலிகம் குருநிறத்து இழிதோற்றம் - சாதிலிங்கம்போலுஞ் செந்நிறம்வாய்ந்த திருமார்பிலிழியுங் காட்சி, பரிதி மார்பினில் - சூரியனுடைய மார்பில், சமனொடு காளிந்தி - இயமனுங் காளிந்தியென்னும் பெண்ணும், முன்குலாய் தவழ்ந்து ஏறி பயிலும் - முன்னே குலவி மேலே தவழ்ந்தேறி விளையாடும், திரு நிகர்த்த சீர் ஐங்கரம் களிற்றினை சேர்வாம் - பொலிவையொத்த சிறப்புவாய்ந்த ஐந்துதிருக்கரங்களையுடைய யானைமுகக்கடவுளை நாம் சரணடைவாம்.

இயமனும் காளிந்தியும் சூரியன் பிள்ளைகளாதலால் பிதாவின்மார்பில் தவழ்ந்தேறிவிளையாடல் வழக்காதலின் பரிதிமார்பினிற்சமனொடுகாளிந்தி முன்குலாய்த்தவழ்ந்தேறிப்பயிலும் என்றார். மூத்தபிள்ளையார் செந்நிறமுடையவராதலால் அவர் திருமார்பினிருபாலுங் கபோலத்தினின்று இழியுங் கரியமதம் பொலியுங்காட்சி; கரியநிறமுடைய இயமனும் காளிந்தியும் செந்நிறமுடைய சூரியன்மார்பினிருபாலுந் தவழ்ந்தேறி விளையாடுதலையொக்கும் எனக்கூறுதலால் பண்புந் தொழிலும்பற்றிவந்த வுவமையணியும், அவர் பிரணவசொரூபமாகிய யானையாதலால் ஒருகரத்தையுடைய யானையன்றென விலக்குதற்குச் சீரைங்கரக்களிற்றினை யென்றமையால் விலக்கணியும் அமைந்துநிற்றலில் கலவையணி. ஒடு எண்ணொடு. முற்றும்மைதொகுத்தல். இங்குப் பொதுமுகத்தால் வணக்கம் கூறினார், பின்னர் அத்தலத்திற்குரிய விநாயகக்கடவுளைக்கூறுதலால். அயன்முதலியோர்க்குத் துன்பம் விளைத்த கசமுகாசுரனைக்கொல்லக் கொண்டருளிய மாறுபட்ட திருவுருவங்களினும் திருமுகஞ் சிறந்த திருவுருவாதலால் ஐங்கரக்களிறென்றார். (க)

விகடசக்கரவிநாயகர்காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**விகடசக்கரவாரணந்தொடர்வரும்வித்தகமுகில்வீழ**
**விகடசக்கரவிந்தமன்னவன்றனக்கருளுமெய்த்தலைவாகு**
**விகடசக்கரவாகமென்முலையுமைகான்முளையென்னுச்சே**
**விகடசக்கரரொந்திரமெனச்சுழல்வெம்பவக்கடனெஞ்சே.**

(இ-ள்.) நெஞ்சே - மனமே, விகடசக்கர - விகடசக்கரனென்னுந் திருநாமமுடையவனே, ஆரணம் தொடர் வரும் வித்தக - வேதங்கள் தொடர்ந்து நீண்டுதற்கரிய ஞானமே திருமேனியாகவுடையவனே, முகில் வீறு அவிகட-மேகத்தின் பெருமையைக் கெடுத்த மதத்தையுடையவனே, சக்கு அரவிந்தம் அன்னவன் தனக்கு அருளும் மெய்த்தலைவா - தாமரையையொத்த கண்களையுடைய திருமாலுக்குச் (சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை) அருளிய உண்மையாகிய தலைவனே, குவி கடம் சக்கரவாகம் என்முலை உமை கான்முளை - குவிந்த குடத்தையும் சக்கரவாகத்தையுமொத்த திருத்தனங்களையுடைய இறைவியின் புதல்வனே, என்றுசேவி-என்று துதித்து வணங்கு, சக்கரர் எந்திரம் என்ன சுழல் வெம்பவம் கடல் கட - குயவரது திரிகையைப்போலச் சுழலும் வெய்ய பிறவிக்கடலைத் தாண்டாய்.

திருமால் தக்கன் வேள்வியில் வீரபத்திரக்கடவுளோடு போர்புரிந்து சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை யிழந்து வைகுந்தமடைந்தகாலையில், அவர் சேனைமுதலிநோக்கி யச்சக்கரமிழந்த வரலாற்றையுணர்ந்து சிவபிரானருளால் காஞ்சிபுரத்தையடைந்து வீரபத்திரக்கடவுளைநோக்கித் தவஞ்செய்தகாலையி லக்கடவுள் காட்சிதந்து நின் வேண்டுகோளென்னென்று வினவியருள, சக்கரம் வேண்டுமென்று குறையிரந்தகாலையில் என் தலைமாலையிடத்துப் பெறுகவென்றருளினர்; அச்சேனைமுதலி விகடக் கூத்துச்செய்ய அதுகண்டு தலைமாலை நகைத்தபோது கௌவிய சக்கரம் நிலத்தில் வீழ மூத்தபிள்ளையார் அதனையெடுத்து மீளவும் அக்கூத்தினைப் பார்த்தருளி யச்சக்கரந்தந்து விகடசக்கரரெனத் திருநாமம்பூண்டமையால் விகடசக்கரவென்றும், விந்துதத்துவத்தின் காரியப்பாடாகிய பாசஞானமாதலால் ஆரணந்தொடர்வரும் வித்தக எனவும், ஆன்மாக்களிடத்துப் பேரருளுடைமையால் முகில்வீற விகட எனவும், பொய்க்கரி கூறினமையால் இறைவி சாபமேற்ற திருமால் பாம்புருவா யாலவனத்தில் ஆலமரப்பொந்திலிருந்து தவஞ்செய்த காலையில், கயமுகாசுரனைவென்று மூத்தபிள்ளையார் அங்கணுக, அவரைத் தரிசித்து அச்சாபநீங்கினமையால் சக்கரவிந்தமன்னவன்றனக் கருளுமெய்த்தலைவாவெனவும், குலாலனால் திரிகை யிடைவிடாது சுழலுதல்போல ஆணவமலத்தாலிடைவிடாது சுழலுதலால் சக்கரரெந்திரமெனச் சுழல்பவம் எனவுங் கூறினர். இது தொழில்பற்றிவந்த வுவமை

ஒருகருமஞ்செய்வோர் அக்கரும முட்டின்றி முடித்தற்கு முன்னர் விநாயகக்கடவுளை வணங்குதல் முறையாதலால் இந்நூலாசிரியரும் தாமெடுத்த கருமம் நன்கு முடித்தற்பொருட்டு அக்கடவுளைப் பொதுவுஞ் சிறப்புமாக இரண்டுகவிகளால் வணங்கினர்.

ஒருகருமஞ்செய்வோர் அக்கரும முட்டின்றிமுடித்தற்கு வணங்கவேண்டுமென்பது.

விநாயகபுராணம்-திருவவதாரப்படலம்.

" முராரியாதியதேவர்கள்முதலுறுமுழுதுலகினிலுள்ளோர்
விராவியாதொருகாரியமாயினும்விளங்குறச்செயவென்றே
பராவியுன்னருச்சனைசெய்வோர்மனத்துறுபான்மைதந்தருளுன்னன்
பிராதுசெய்பவர்காரியமூறுசெய்திடுதியென்றிவைசொல்வான்"

என்பதனாலுணர்க. மாறுபட்ட திருவுருவங்கள் என்றது சிரமுந் திருமேனியும் வேறுபட்டிருத்தலை " மணிகொண்டகோடொருமருங்குண்மையாலாண்மைவடிவென்றுமஃதின்மையோர் - மருங்குண்மையாற்பெண்மைவடிவென்றுமீதுகீழ்மாறியதிருக்காட்சியால்- அணிகொண்டவுயர்திணையதென்றுமஃறிணையென்றுமார்க்குங்கிளத்தலரிதாம் - ஐங்கரச்சிந்துரத்தின் " என இந்நூலாசிரியர் கூறிய திருவாக்காலுமுணர்க. இச்செய்யுளிரண்டும் பாடாண்டிணையுள் கடவுள்வாழ்த்தென்னுந் துறையுளடங்கும், பின்வருவனவற்றி

ற்கும்கொள்க. தொல்காப்பியம் - பொருளதிகாரம் புறத்திணையியலில் "அமரர்கண்மு டியுமறுவகையானும் - புரைதீர்காமம்புல்லியவகையினும் - ஒன்றன்பகுதியொன்றுமெ ன்ப" என்பதனாலுணர்க. விகடசக்கரர் எனத் திருநாமம் வந்தகாரணம் இப்புராணத் துள்ளும், திருமாலுக்குச் சாபம்போக்கியருளினமை காந்தத்திலும் அறிக. (உ)

## கடவுள்வாழ்த்து.

### நடேசர்.

சங்கேந்துமலர்க்குடங்கைப்புத்தேளுமறைக்கோவுந்தழல்கால்சூலம்
அங்கேந்துமம்மானுந்தத்தமதுதொழிற்றலைநின்றாற்றச்செய்தோர்
பங்கேந்தும்பெருமாட்டிவிழிகளிப்பவிருமுனிவர்பணிந்துபோற்றக்
கொங்கேந்துமணிமன்றுட்குனித்தருளும்பெருவாழ்வைக்குறித்துவாழ்வாம்.

(இ-ள்.) சங்கு ஏந்தும் மலர் குடங்கை புத்தேளும் - பாஞ்சசன்யமென்னுஞ் சங் கினையேந்திய தாமரைமலர்போன்ற உள்ளங்கையையுடைய திருமாலும், மறைக்கோ வும் - வேதங்களுக்குத் தலைவனாகிய பிரமனும், தழல் கால் சூலம் அங்கை ஏந்தும் அம் மானும் - தீயைக்கக்குஞ் சூலத்தை யுள்ளங்கையிலேந்திய உருத்திரமூர்த்தியும், தத்த மது தொழில் தலைநின்று ஆற்றச்செய்து - தத்தமக்குரிய படைப்புக் காத்தல் ஒழித்தலென் னும் தொழிலில் நின்றவற்றைச்செய்ய ஏவி, ஓர் பங்கு ஏந்தும் பெருமாட்டி விழிகளி ப்ப - இடப்பாகத்திலிருந்தருளும் பிராட்டியாரது திருக்கண்கள் களிகூரவும், இரு மு னிவர் பணிந்துபோற்ற - பதஞ்சலிவியாக்கிரபாதர் என்னும் இரண்டுமுனிவரும் வண ங்கித்துதிக்கவும், கொங்கு ஏந்தும் மணிமன்று உள் குனித்தருளும் பெருவாழ்வை குறி த்து வாழ்வாம் - மகரந்தம் நிறைந்த அழகிய பொன்னம்பலத்தில் இருவகை நடனமும் நடித்தருளும் அடியவர் பெருவாழ்வாகிய இறைவனைக்கருதி யுய்வாம்.

"இமயத்தியல்புடையம்பொற் - பொலிதருபுலியூர்" எனப் பெரியோர் பணித் தருளினமையால் மேருவின் கொடுமுடிகளில் பொன்னம்பலம் ஒன்றாதலால் மணிமன்று என்றதற்கு இரத்திநங்களமைந்த மன்று எனப் பொருள்கொள்ளலும் அமையும். அய ன், அரியென முறைபடக்கூறாது திருமால் ஒருகால் பிரமனைத்தந்தும் பிரமன் ஒருகால் திருமாலைத்தந்தும் நின்றமைதோன்றச் சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு மறைக் கோவும் எனப் பிறழக்கூறினாெனவும், உருத்திரமூர்த்தி இவ்விருவரையுந்தந்து இவர் க்கு இறைமைபூண்டு நிற்கின்றமைதோன்ற இறுதியிற்றழல்கால்சூல மங்கேந்துமம்மா னும் எனவும், மலத்திற் சிமிழ்ப்புண்ட ஆன்மாக்களுக்குச் சிவபெருமான் பெத்தமுத்தி களை யருளுதற்பொருட்டு ஸ்ரீபஞ்சாக்கரமே திருவுருவாகக்கொண்டு நடித்தருளும் ஊன நடனம் ஞானநடனம் என்னும் இருவகையுள் இது ஊனநடனம் என்பதுதோன்றத் தத்தமது தொழிற்றலை நின்றாற்றச்செய்து எனவும், பசுகரணம் சிவகரணமாய் நிற்றலால் சிவத்தோற்றமொன்றே பெற்றுப் பிரபஞ்சத்தோற்றரவில்லாத பதஞ்சலிவியாக்கிரபா தமுனிவர்களுக்கருளுவது ஞானநடனம் என்பதுதோன்ற இருமுனிவர் பணிந்துபோற்ற எனவும், இவ்வாறு உயிர்கள் பிறவித்தொடக்கொழிந்து முத்தியடைதற்பொருட்டே இறைவியானந்தத் திருநடனங் காணுதல் என்பதுதோன்றப் பெருமாட்டி விழிகளிப்ப எனவும் கூறினார்.

அயன் திருமாலைப் படைத்தனன் என்பதற்கும், திருமாலை யயன் படைத்தனன் என்பதற்கும், உருத்திரமூர்த்தி இருவரையும் படைத்தனன் என்பதற்கும் வாயுசங்

கிதையில் "மகிழ்ந்ததன்பின்னர்மதிமுகிழணிந்தோன்மணிநிறமாயனுக்கன்பாற் - நிகழ்ந் திடப்படைக்கும்வகையெலாமறியத்தெருட்டினன்றெருட்டலுமறிவால் - அகைந்தபூந் துளபமாலைதாழ்மோலியண்ணலுமகமகிழ்ந்தன்றே - முகைந்தலர்விரிந்தமலரவனோடுமு லகெலாமுறையினிற்படைத்தான். அழியாயோகத்துயில்புரியுமவனோடடைந்தவலர்மல ரோன்-மொழிவானென்னைநீவிழுங்கிமுன்னாட் படைத்தல்செய்தாய்வாய்-வழியால்விழு ங்கியானுமுனைப்படைப்பேனென்றுமாயவனை - விழைவால்விழுங்கிப்புருவநடுவேதனிலீ ன்றுவிட்டனனால்" "புரியாவந்தமகேச்சுரன்றனருளாங்கடைந்துபுகன்றவருள்-எரிநேர் மேனியுருத்திரனங் கிருவர்தமையும்படைத்தனனால்" எனவும், ஆன்மாளுக்குப் பெத்த முத்திகளை யருளுதற்பொருட்டு என்றதற்கு உண்மைவிளக்கத்தில் "தோற்றந்துடியத னிற்றோயுந்திதியமைப்பிற் - சாற்றியிடுமெங்கியிலேசங்காரம் - ஊற்றமாய்-ஊன்றுமலர்ப் பதத்திலுற்றதிரோதமுத்தி - நான்றமலர்ப்பதத்தேநாடு. மாயைதனையுதறிவல்வினையை ச்சுட்டுமலஞ் - சாயவமுக்கியருடானெடுத்து - நேயத்தால் - ஆநந்தவாரிதியிலான்மாவை த்தானழுத்தல் - தானெந்தையார்பாதந்தான்" எனவும், ஸ்ரீபஞ்சாக்கரமே திருவுருவாக க்கொண்டு என்பதற்கு "ஆடும்படிகேணல்லம்பலத்தினையனே - நாடுந்திருவடியிலேந கரம்-கூடும்-மகரமுதரம்வளர்தோள்சிகரம்-பகருமுகம்வாமுடியப்பார்" எனவும், ஊன நடனம் ஞானநடனம் என்பதற்குத் திருவருட்பயனில் "ஊனநடனமொருபாலொருபா லாம் - ஞானநடந்தானடுவேநாடு" எனவும், பதஞ்சலிவியாக்கிரபாதமுநிவர்களுக்கு அரு ளு ஞானநடனம் என்பதற்கு உண்மைவிளக்கத்தில் "நற்றவத்தோர்தாங்காணநாதாந்தத் தஞ்செழுத்தால் - உற்றுருவாய்நின்றுடல்" எனவும், ஆன்மாக்கள் மலத்தொடக்கொ ழிந்து முத்தியடைதற்பொருட்டே இறைவி ஆநந்தத்திருநடனங்காணுதல் என்பதற்கு "உரையுணர்வுங்கெட்டாவொருவன்மிகுபஞ்சாக் - கரத்தால்வரைமகடான்பாதி-பரையி டமாய்க் - காணும்படியேகருணையுருக்கொண்டாடல் - பேணுமவர்க்குண்டோபிறப்பு" எனவரும் ஏதுக்களால் உணர்க. (௬)

ஏகம்பநாதர்.

தணந்தபெருந்துயர்க்கடன்மீக்கூர்தலினான்மலைபயந்ததரளமூரல்
கணங்குழையாள்புரிபூசைமுடிவளவுந்தரியாமலிடையேகம்பை
அணங்கினைத்தூதெனவிடுத்துவலிந்திறுகத்தழீஇக்கொள்ளவமையாக்காதல்
மணந்தருளிக்குறிபூண்டவொருமாவிற்பெருமானைவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) தணந்த பெருந்துயர் கடல் மீக்கூர்தலினால் - (தம்மினின்றும் பிரியாது தாதான்மியமாக நின்ற இறைவி ஒருகாரணத்தால்) இடையே பிரிதலில் வந்த பெரிய துன்பமாகிய கடல்மீதூர்தலால், மலை பயந்த தரள மூரல் கணங் குழையாள் புரி பூசை முடிவு அளவும் தரியாமல் - இமயமலைபெற்ற முத்தினையொத்த பற்களையுடைய அவ்வி றைவி செய்யும் பூசனை முடிவுபெறுங்காறும் ஆற்றுமல், இடை யேகம்பை அணங்கினை தூது என்ன விடுத்து - அப்பூசனைக்கு இடையில் கம்பாநதியென்னும் பெண்ணினைத் தூதாகவேவி, வலிந்து இறுக தழுவிக்கொள்ள-தானேவந்து இறுகும்படி தழுவ, அமை யாத காதல் மணந்தருளி - பிறர்க்கமையாத விருப்பத்தோடு கலந்து, குறி பூண்ட ஒரு மாவில் பெருமானை வணக்கம் செய்வாம் - திருமுலைச்சுவடும் வளைச்சுவடும் இவ்விரண் டும் பூண்டருளிய ஒரு மாமரத்தின்கீழெழுந்தருளிய இறைவனை வணங்குவாம்.

இங்ஙனம் நூலுட்கூறப்படும் பொருளை யொருவாறு தொகுத்துக்கூறுதல் சிறப் புப்பாயிரத்திற்கு இலக்கணம் ஆதலால் தணந்தபெருந்துயர்க்கடன்மீக்கூர்தலினால் என வே, தம்மினின்றும் பிரியாது தாதான்மியமாக நின்ற இறைவி மந்தரகிரியில் அந்தர்ப்பு ரத்தில் இறைவரோடமர்ந்தருளி ஓர் திருவிளையாடலைக்கருதி யவ்விறைவர் திருக்கண்

களைப் புதைத்தருள, அத்திருக்கண்கள் சந்திரசூரியர்களாதலால் அவற்றினியக்கமொழிய வுலகமிருண்டமையால் அயன்முதலிய பல்லுயிர்களுந் தத்தஞ் செயலொழிந்து கவலைகூர்ந்து முறையிடுதலைநோக்கித் திருக்கரங்களை நெகிழ்த்தவுடன் முன்போலவைபல்க, அவ்விறைவியைநோக்கி நமக்குத் தீதில்லையாயினும் உயிர்களுக்கு அறிவுறுத்தற்பொருட்டு இப்பாவந்தீரக் காஞ்சியிற்சென்று நம்மைப் பூசிப்பாயென விடுத்துப் பிரிந்தருளிய பெருந்தகைமையும், மலைபயந்ததாளமூரற்-கணங்குழையாள்புரிபூசை எனவே, அதுபெற்று அவ்விறைவி தனக்கு ஆதிபீடமாகிய காஞ்சித்திருப்பதியிற்சென்று அவ்விறைவனை யென்றும் பிரியாது தாதான்மியமாய் நின்றருள விதிவழிப்பூசித்த தலைமையும், முடிவளவுந்தரியாம விடையேகம்பையணங்கினைத் தாதெனவிடுத்து எனவே, அவ்விறைவிக்கருளும் அருட்டன்மையும், வலிந்திறுகத்தழீஇக்கொள்ள எனவே, அவ்விறைவி சிவலிங்கப்பெருமானுக்கோரிடையூறு புகுதாதவண்ணம் முறுகிய அன்பின்வழிநின்ற சிறப்பும், அமையாக்காதல் மணந்தருளிக் குறிபூண்ட எனவே, அயன்முதலிய ஆன்மாக்களிடத்துவைத்த பேரருளுடைமையும், ஒருமாவிற் பெருமான் எனவே, பண்டாசுரனை யழித்தற்பொருட்டுப் பிரமன்முதலிய ஆன்மாக்களையும் ஒடுக்கி மீட்டும் படைத்தற்பொருட்டுத் தமதருளால் வேதமே உருக்கொண்டு நின்ற மாமரத்தின்கீழெழுந்தருளிப் பலர்க்குங் காட்சிதந்தருளும் வரம்பிலாற்றலுடைமையும், வணக்கஞ்செய்வாம் எனவே, இம்மான்மியத்தைக் கேட்டுஞ் சிந்தித்தும் வழிபட்டு வணங்குவோர்க்கு மலப்பிணிப்பொழியுமென்னும் நூற்பயனுங் குறிப்பாய்த்தோன்ற நின்றன. பராசத்தி உடம்பாகச் சிருட்டியாதிகளை யருளுதற்பொருட்டு இறைவனிற்றலால் தம்மினின்று பிரியாது தாதான்மியமாக நின்ற இறைவி என்றும். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய இறைவர் அயன்முதலிய ஆன்மாக்களுக்குப் போகம் அருளுதற்பொருட்டே உமையம்மையை மணந்தருளியது என்பதுதோன்ற நிற்றலால் இது நற்பொருட்காட்சியணி. (ச)

## காமாட்சியம்மை.

ஊன்பிலிற்றுமழுவாளிகலவிதனிலொண்ணாதென்றோர்ந்துநஞ்சம்
தான்பிலிற்றும்பாப்பணியைநீப்பவுங்கார்வண்டினங்கடதைந்துமூசத்
தேன்பிலிற்றுநறுங்கடுக்கைத்தெரியலைப்பாம்பெனமருண்டத்தெரியலுறுங்
கான்பிலிற்றத்தெருண்டணையுங்காமக்கோட்டத்துமையைக்கருத்துள்வைப்பாம்.

(இ-ள்.) ஊன்பிலிற்றும் மழுவாளி கலவி தன்னில் ஒண்ணாது என்று ஓர்ந்து - பகைவருடலினூனினைச்சிந்து மழுவினையேந்திய சிவபிரான் புணர்ச்சியிலமையாதென்றுணர்ந்து,நஞ்சம் தான் பிலிற்றும் பாம்பு அணியை நீப்பவும்-நஞ்சினைச்சிந்தும் சர்ப்பாபரணத்தைக்களையவும், கார் வண்டு இனங்கள் ததைந்து மூச-கரிய வண்டின் கூட்டங்கள் நெருங்கிமொய்க்க, தேன்பிலிற்றும் நறுங்கடுக்கை தெரியலை பாம்பு என்ன மருண்டு-தேனைச்சிந்து நறுமணங்கமழு மாலையைப் பாம்பென்று மயங்கி, அத்தெரியல் நாறும் கான்பிலிற்ற தெருண்டு அணையும் காமக்கோட்டத்து உமையை கருத்து உள் வைப்பாம் - அந்தக் கொன்றைமாலை கமழு மணத்தை வீச அதனை மாலையென்று துணியுங் காமக்கோட்டத்திலெழுந்தருளிய பிராட்டியாரை இதயத்தில் இடைவிடாது இருத்துவாம்.

இறைவி இறைவனை மணந்தகாரணம் ஆன்மாக்களைக் காத்தற்பொருட்டு என்னும் பிறகாரியந்தோன்ற இது நிற்றலால் தூரகாரியவேதுவும், வண்டினங்கள் ததைந்துமூசத்-தேன்பிலிற்று நறுங்கடுக்கைத்தெரியலைப்பாம்பு என மருண்டு என்றது ஒப்புமையால் ஒருபொருளை மற்றொருபொருளாகக் கருதிமயங்குதல் மேல்நிற்றலால் மயக்கவணியும், தெரியலுறுங் கான்பிலிற்றத் தெருண்டு என்றது கான்பிலிற்றல் என்னுங் காரணத்தால் பாம்பாகிய ஒருதருமத்தை மறுத்தலால் காரணவொழிப்பணியுங் கலந்து நிற்றலால் கலவையணி. (ரு)

இதுவுமது.

கருக்காமக்கோட்டிமிரவினையனைத்துமொருங்கெய்திக்கலகஞ்செய்யுந்
தருக்காமக்கோட்டியெலாமறவெறிந்தாமினியென்றுந்தகைசாலன்பு
சுருக்காமக்கோட்டினைச்சேயமைகரங்கொண்டார்க்குமுலைச்சுவடுநல்கும்
திருக்காமக்கோட்டியம்மைசேவடிப்போதெப்போதுஞ்சிந்திப்பாமால்.

(இ-ள்.) அக்கு-அக்குமணியை, சேயமை-செவந்த திருவமையிலும், ஒட்டினை-பிரமகபாலத்தை, கரம்-திருக்கரத்திலும், கொண்டார்க்கு-கொண்டருளிய இறைவர்க்கு, முலை சுவடு நல்கும் திருக்காமக் கோட்டி அம்மை-தனபாரச் சுவட்டினைக் கொடுத்தருளிய திருக்காமக்கோட்டி பீடத்தினையுடைய இறைவியினது, சே அடி போது எ போதும் சிந்திப்பாம்-செவந்த திருவடிமலரை யெக்காலத்துங்கருதுவாம்; கருக்கு ஆம் அ கோள் திமிரவினை அனைத்தும் ஒருங்கு எய்தி-பிறவிக்கு ஏதுவாகிய அந்தக் குற்றமமைந்த அந்தகாரமாதிய இருவினை முழுதும் ஒரு சேர அடைந்து, கலகம் செய்யும் தருக்கு ஆம் அ கோட்டி எல்லாம் அற எறிந்தாம் - கெடுதி விளைக்கும் இறுமாப்பாகிய அந்தக் கூட்டங்களை யெல்லாம் வேரோடறக் கெடுத்தாம், இனி என்றும் தகைசால் அன்பு சுருக்காம்-இனி யெக்காலத்திலும் பெருமைமிக்க அன்பினைப் பெருக்குவோம்.

படைத்தல் முதலிய தொழில்களைச் செய்தற்கு இறைவன் இறைவியைக்கொண்டே யியற்றுதலால், அயன்முதலிய ஆன்மாக்களுக்குப் பந்தமுத்திகளை யருளுதற்பொருட்டே இறைவர்க்கு இறைவி முலைச்சுவடு நல்கினள் என்பது தோன்ற அக்கோட்டினைச் சேயமை கொண்டார்க்கு முலைச்சுவடு நல்குந் திருக்காமக்கோட்டி யம்மை எனப் பின் வாக்கியார்த்தத்தைக் கொண்டு சாதித்தலால் இது வாக்கியப் பொருட் செய்யுட் குறியணி. இதனை வடநூலார் காவிய லிங்காலங்காரம் என்பார். படைத்தல் முதலிய தொழில்களைச் செய்தற்கு இறைவன் இறைவியைக்கொண்டே யியற்றுதல் என்றதற்குத் திருக்களிற்றுப்படியாரில் "நங்கையினுனைத்துஞ்செய்தாற்போனுடனைத்தும்-நங்கையினுற்செய்தளிக்குநாயகன்" எனவருந் திருப்பாசுரத்தால் அறிக. (சு)

விகடசக்கரவிநாயகக்கடவுள்.

விழிமலர்ப்பூசனையுஞற்றித்திருநெடுமால்பெறுமாழிமீளவாங்கி
வழியொழுகாச்சலந்தரன்மெய்க்குருதிபடிமுடைநாற்றமாறுமாற்றால்
பொழிமதநீர்விரையேற்றிவிகடநடப்பூசைகொண்டுபுதிதாநல்கிப்
பழிதபுதன்றாதையினும்புகழ்படைத்தமதமாவைப்பணிதல்செய்வாம்.

(இ-ள்.) திரு நெடு மால் விழி மலர் பூசனை உஞற்றி - நிலங் கடந்த நெடுமால் தமது நேத்திரமாகிய தாமரை மலரால் பூசைசெய்து, பெறும் ஆழி மீள வாங்கி வழி ஒழுகாத சலந்தரன் மெய் குருதிபடி முடை நாற்றம் மாறும் ஆறு ஆல்-பெற்ற சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை மீளவும் வாங்கி அறநெறியிலொழுகாத சலந்தராசுரனது உடம்பினின்று பிறிந்த உதிரத்திற் றோய்ந்த நாற்ற மாறும் வகையால், பொழி மத நீர்விரை ஏற்றி விகடநடப் பூசைகொண்டு புதிது ஆக நல்கி-தமது கரடத்தினின்றும் பொழிந்த மதநீர்ப்பெருக்கின் வாசனையை யேற்றி விடுவச்சேனர் செய்த விகடக்கூத்தாகிய பூசனையை விரும்பிப் புதிதாகத் தந்தருளி, பழிதபு தன் தாதையினும் புகழ்படைத்த மதமாவை பணிதல் செய்வாம்-இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய தமது பிதாவாகிய இறைவரினும் புகழினைப்பெற்ற விநாயகக் கடவுளை வணங்குவாம்.

குபன் என்னும் அரசன்பொருட்டுத் ததிசிமுனிவன்மேலெறிந்த தமது சக்கரம் வாய் மடிந்து மழுங்கினமையால் ஆயுதமில்லையே யென்று கவலைகூர்ந்த திருமால் சலந்த ரன்மடிய இறைவன் கண்ட சுதரிசன மென்னுஞ் சக்கர மொன்றுளதென் றுணர்ந்து காஞ்சித்.திருப்பதியில் வந்து பாசுபத விரதம் பூண்டு இறைவனை யாயிரந் தாமரை மல ர்களால் அருச்சித்து வழிபட்டு வருகையில் அவரன்பினைச் சோதித்தற்பொருட்டு ஒரு தாமரை மலரை யிறைவன் மறைத்தருள, அதனைத் திருமாலுணர்ந்து ஆயிரந்திருநாம ங்களில் ஒரு திருநாமத்திற்கு மலரில்லாமையை யுணர்ந்து வழிபாட்டிற்குக் குறைவுவா ராவண்ணம் தமது கண்ணிடந்து அருச்சிக்க; அவ்விறைவன் மகிழ் கூர்ந்து காட்சிதந்த ருளி, இழந்த கண்ணையும் பதுமாட்சன் என்னும் திருநாமத்தையும் சக்கரத்தையுந் தந்த ருளினமையால் விழிமலர்ப் பூசனை யுஞற்றித் திருநெடுமால் பெறுமாழி எனவும், தக்கன் வேள்விச்சாலையில் போர்புரிந்த திருமால் தாம் எறிந்த சக்கரத்தினை வீரபத்திரக்கடவுள் தலைமாலையிலொன்று கவ்வியதனு லதனையிழந்து வைகுந்தமடைந்தபோது, சக்கரமில்லா மையை விடுவச்சேன ருணர்ந்து காஞ்சியையடைந்து இறைவனை வழிபட்டு வீரபத்தி ரக் கடவுளைத் தரிசித்து விகடக்கூத்தைச்செய்ய அதுகண்டு தலைமாலை நகைத்தபோது கீழே யச்சக்கரம் வீழ்ந்தகாலையில் அவ்விகடநடனத்தை மீளவும் காண எடுத்து மறை த்தருளினமையால் மீளவாங்கியெனவும், தமது பிதா விழிமலர்ப்பூசை கொண்டமை போலத் தாமும் விகடநடனப்பூசை கொண்டமையால் விகடநடப்பூசைகொண்டு என வும், இறைவனருளிய சக்கரம் சலந்தரனுடலை யிருகூறுசெய்தலா லுதிரந்தோய்ந்து தீ நாற்றம் அடைந்தமையின் சலந்தரன் மெய்க்குருதிபடி முடைநாற்றம் எனவும், தாம் அருளும்போது மதநீரிற்கழுவுதலாலதன் நறுமணந்தோய்தலில், மாறும் ஆற்றால் பொ ழிமதநீர் விரையேற்றிப் புதிதாநல்கியெனவும், அவ்விறைவன் முடைநாற்றம் வாய்ந்த சக்கரத்தை வல்வினை வழிபாடுபூண்ட திருமாலுக்குத் தந்தருளிப் புகழ்பூண்டதிலும், மெல்வினை வழிபாடுபூண்ட விடுவசசேனருக்கு நறுமணம்வாய்ந்த சக்கரத்தைத்தந்து பூண்டபுகழ் பெரிதாதலால் பழிதபுதன்றாதையினும் புகழ்படைத்த எனவுங் கூறினர். "ஆங்கவனையெதிர்நோக்கிநின்பூசைக்ககமகிழ்ந்தேமுனக்கினுளான்று, தேங்கமலவிழிய ளித்தேம்பதுமாக்கனெனும்பெயரிற்றிகழ்வாயிவ்வூர் - பாங்குபெறுதிருமாற்பேறெனப் பொலிகவென்றருளிப்பானுகோடி - தாங்குகதிர்ச்சுதரிசனப்பெயராழித்தனிப்படையு முதவியெங்கோன்" எனவும், "போராழியதன்வாயிற்கழிந்துபுவிமிசைவீழப்பொருக் கென்றங்கை-ஏரானைமுகக்கடவுளதுகவர்ந்தங் கறியான்போன்றிருப்பநோக்கிப்-பேரா ண்மைப்படைத்தலைவனினிச்செயலேதென்றழுங்கிப்பேதுற்றந்தச்-சீராளன்றிருமுன்பு ங்கைகண்டவிகடநடஞ்செய்துவேண்ட. எக்கறவானவனியற்றும்விகடநடநெடும்போ தெம்பெருமானோக்கி-மாக்கருணைசுரந்தருளியாழியவன்றனக்களித்தான்" எனவும் இப் புராணத்தில் வருதல் பின்னர்க்காண்க. விழிமலர்ப்பூசனையுஞற்றித் திருநெடுமால் பெ றுமாழி என்றது இழிந்தபொருள் கொடுத்து உயர்ந்தபொருளைப் பெற்றமையால் பரிவி ர்த்தியணியையும்,விகடநடப்பூசைகொண்டு புதிதாநல்கி என்றது ஒன்றனைவாங்கி யொ ன்றனைத்தந்தமையால் பரிவருத்தனையணியையும், தன்றாதையினும் புகழ்படைத்த என் றதால் உறழ்ச்சியணியையும் உள்ளிட்டிருத்தலால் கலவையணி. (எ)

## குமாரக்கடவுள்.

முருகோட்டந்தரப்பாயுமும்மதமுமூற்றெடுப்பமுரிவிற்கோட்டு, மொ ருகோட்டுமழகளிற்றையிருகோட்டுமுதுகளிறுவலவக்காட்டிப், பருகோட் டநறைவேட்டுப்பைங்கோட்டுத்தினைப்புனத்துப்பரண்மேற்கொண்டு, குரு கோட்டும்பெடைமணந்தகுமரகோட்டத்தடிகள்குலத்தாள்போற்றி.

(இ-ள்.) முருகு ஓட்டம் தர பாயும் மும்மதமும் ஊற்றெடுப்ப-வாசனை பரவப் பாயாநிற்கும் மூன்று மதங்களுஞ் சுரக்க, மூரிவில் கோட்டும் ஒருகோடு மழகளிற்றை - பெரிய வில்லை வளைவிக்கும் ஒரு கொம்பினை யுடைய இளமை வாய்ந்த யானையை, இருகோடு முதுகளிறாக உலவக்காட்டி - இரண்டு கொம்பினையுடைய முதுமைவாய்ந்த யானையாக உலவாநிற்கப் புலப்படுத்தி, ஓட்டம் நறை பருகவேட்டு-திருவதரத்தில் வாய்ந்த தேனைப் பருகவிரும்பி, தினைபுனத்து பைங்கோடு பரண்மேற்கொண்டு குருகு ஓட்டும் பெடைமணந்த-தினைப்புனத்திலுள்ள பசிய கொம்பாலமைந்த பரண்மே லிருந்தருளிக் கவரவரும் பறவைகளை ஓட்டும் பெண்மயிலாகிய வள்ளிநாயகியை மணந்தருளிய, குமரகோட்டத்து அடிகள் குலத்தாள் போற்றி-குமரகோட்டத்துள் எழுந்தருளிய முருகக்கடவுளது நன்மையைத்தரும் திருவடிகளுக்கு வந்தனம்.

மூரிவில் கோட்டும் என்பதற்குச் சிவபெருமானேந்திய பெரிய வில்லாகிய மேருவில் பாரதமெழுதிய எனவும், இருதிணை ஐம்பால் மூவிடங்களிலும் வரும் போற்றிய என்னும் வியங்கோள் வினைமுற்று "வாழிய வென்பத னீற்றினுயிர்மெய்" என்ற சூத்திரத்தின் உபலக்கணத்தால் ஈற்றுயிர் மெய்கெட்டு நின்றதாகக் கொண்டு போற்றக்கடவேன் எனவும் பொருள் கொள்ளுதலும் அமையும். இ என்னும் பகுதிப்பொருள் விகுதியேற்றுநின்ற முதனிலைத் தனிவினைப் பெயர் "உனக்கொரு கும்பிடு" என்புழிப் போல வருதலின் வந்தனம் என்றும். தம்மையணைதற்குத் தவம்புரிந்த திருமால் புத்திரியாராகிய வள்ளிநாய்ச்சியார் குறவர் குலக்கொடியாய்த் தினைப்புனங்காத் தமரும்போது அவர் திருக்கருத்து முற்றும்படி இளையபிள்ளையார் விருத்தவடிவாய்ச்சென்று குறையிரக்க, அவ்வேண்டுகோளுக்கு இணங்காத அவ்வள்ளியாரிணங்க மூத்தபிள்ளையாரை நினைத்தருளிய காலத்தில் அவர் யானை வடிவங்கொண்டு சினந்துவருதற்கஞ்சி அந்நாய்ச்சியாரிறுகப் புல்லினர் என்பது புராண வரலாறு. "அந்தப்பொழுதி லறுமாமுகற்கிரங்கி, முந்திப் படர்கின்ற மொய்குழலாண் முன்னாகத் - தந்திக்கடவுட் டனிவாரணப் பொருப்பு, வந்துற்ற தம்மாமறி கடலேபோன் முழங்கி" "அவ்வேலையில் வள்ளியச் சமொடுமீண்டுதேவப் - பொய்வேடங்கொண்டு நின்ற புங்கவன்றன்பாலணுகி-இவ்வேழங்காத் தருள்க வெந்தைநீர் சொற்றபடி - செய்வேனென வொருபாற் சேர்ந்து தழீ இக் கொண்டனளே" இவை வள்ளியம்மை திருமணப்படலத்தில் வருதல்காண்க. மூரிவில் முரிவில் குறுக்கும் வழிக் குறுக்கல். முன்னடந்ததை இப்போது நடந்ததாகக் கூறுதல் நிகழ்வினவிற்சியணி. இதனைப் பாவிகாலங்காரம் என்பர். (அ)

வயிரவக்கடவுள்.

எளியரைவலியர்வாட்டின்வலியரையிருநீர்வைப்பி
னளியறத்தெய்வம்வாட்டுமெனுமுரைக்கமையவன்றே
தெளியுமாவலியைச்செற்றோற்செருத்துரிக்கவயம்போர்த்த
வளியுளர்கச்சிகாவல்வயிரவர்க்கன்புசெய்வாம்.

(இ-ள்.) இருநீர்வைப்பின் எளியரை வலியர்வாட்டின் - கடல்சூழ்ந்த நில உலகில் வன்மையில்லாதவர்களை வன்மையுடையோர் வருத்தினால், வலியரை அளி அறத் தெய்வம் வாட்டும் என்னும் உரைக்கு அமைய-அவ்வன்மையையுடையவரைக் கருணையையுடைய அறக்கடவுள் வருத்தும் என்னும் முதுரைக்குப் பொருந்த, அன்று தெளியும் மாவலியை செற்றோன் செருத்து - அக்காலையில் தெளிந்த மாவலி யென்பவனைக் கொன்ற வாமன வடிவங்கொண்ட திருமாலை வருத்தி, உரிகவயம் போர்த்த வளியுளர்கச்சிகாவல் வயிரவர்க்கு அன்புசெய்வாம் - அவரது தோலை மேற்போர்வையாகப் போர்த்

தருளிய, காற்று உலவும் கச்சித்திருநகர் காவல்பூண்ட வயிரவக்கடவுளுக்குத் தலையன்பு கூர்ந்து வழிபடுவோம்.

தீமைசெய்தவர்களை யறக்கடவுளொறுத்தல் அவர்கள் தீமைப்பயன் குறைத்தற் காதலால் அளியறத்தெய்வம் வாட்டும் எனவும், தனது ஆசாரியனுகிய சுக்கிரன் மூன்றடி மண்ணிரந்தவன் திருமால், குறளனல்லன், இவன் இரந்தபொருளைக் கொடாதேயென்று தடுத்தும், கொடுக்க வுடன்பட்ட பொருளை மறுக்காது கொடுத்தமையால் தெளியுமாவ லியையெனவும், தாம் தண்டித்ததைப் பலரும் உணர்ந்து இனித் தீமைசெய்யாதவண்ணம் அறிவுறுத்தற்கு அத்தோலைப் போர்வையாகக்கொண்டனராதலால் உரிக்கவயம் போர்த்த எனவும், இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளும் பல்குதலால் வளியுளர் கச்சியெனவும், வயிரவக்கடவுள் சிவபெருமானைப் பூசித்துக் கச்சியைக் காவல்பூண்டமையால் கச்சிகாவல் வயிரவர்க்கு எனவுங் கூறினர். பின்கூறிய வர்ணியமாகிய சிறப்புப்பொருளால் முன்சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப்பெயர் சாதிக்கப்பட்டமையால் வேற்றுப்பொருள் வைப்பணி. (௯)

அங்கணன்கயிலைகாக்குமகம்படித்தொழின்மைபூண்டு
நங்குருமரபிற்கெல்லாமுதற்குருநாதனுகிப்
பங்கயந்துளவநாறும்வேத்திரப்படைபொறுத்த
செங்கையெம்பெருமானந்திசீரடிக்கமலம்போற்றி.

(இ-ள்.) அங்கணன் கயிலைகாக்கும் அகம்படித்தொழின்மை பூண்டு-சிவபெருமான் திருக்கயிலையைக் காவல்கொள்ளும் அகம்படித் திருத்தொழிலை மேற்கொண்டு, நம் குருமரபிற்கு எல்லாம் முதல்குருநாதன் ஆகி-நமது குருமரபிற் கெல்லாம் முதன்மை வாய்ந்த குருமூர்த்தத்தலைவனுகி, பங்கயந் துளவம் நாறும் வேத்திரப்படை பொறுத்த செங்கை எம் பெருமான்-தாமரையும் துளவமுமாகிய இவற்றின் மணங்கமழும் பிரம்பாகிய ஆயுதத்தை ஏந்திய செவந்த திருக்கரங்களையுடைய எமது பெருமானுகிய, நந்தி சீர் அடிகமலம்போற்றி - திருநந்தி தேவருடைய அழகிய திருவடித்தாமரைகளை வந்திக்

வழிபாட்டில் அகம்படித்தொண்டு புறம்படித்தொண்டு என இருவகைப் படுத லால் அகம்படித் தொழின்மை யெனவும், சிவபெருமானிடத்துச் சிவாகமங்களை யோதியுணர்ந்த நந்திதேவர் தம்மை வழிபட்ட சநற்குமார முனிவருக் குபதேசித்தும், அவர்தம்மை வழிபட்ட சத்திய ஞானதரிசனிகளுக்கு உபதேசித்தும், அவர்தம்மை வழிபட்ட பரஞ்சோதி முனிவருக்கு உபதேசித்தும், அவர் திருக்கைலையினின்று நீங்கித் திருவெண்ணெய் நல்லூரில் வேளாளர் குலத்தில் திருவவதாரஞ் செய்த மெய்கண்டதேவர்க் குபதேசித்தும், அவர் தம்மை வழிபட்ட அருணந்தி சிவாசாரியர்க் குபதேசித்தும், அவர் தம்மை வழிபட்ட மறைஞான சம்பந்த சிவாசாரியர்க் குபதேசித்தும், அவர் தம்மை வழிபட்ட உமாபதி சிவாசாரியர்க் குபதேசித்தும், அவர் தம்மை வழிபட்ட அருணமச்சிவாய தேசிகர்க்குபதேசித்தும், அவர் தம்மை வழிபட்ட சித்தர் சிவப்பிரகாசதேசிகர்க்கு உபதேசித்தும், அவர் தம்மை வழிபட்ட நமச்சிவாய மூர்த்திகளுக்கு உபதேசித்தும் அருளினர், அங்ஙது திருவாவடுதுறையி லமர்ந்தருளித் தமது குராசாரியர் அனுஞையின் வழித்தாய் அதிதீவிர பக்குவரா யமர்ந்தருளிய சிவப்பிரகாசதேசிகர் முதலிய தேசிகோத்தமர்களுக்கு வழிவழி யொருவர்க்கொருவ ருபதேசித்துவந்த மரபாதலால் நங்குருமரபுக்கெல்லா முதற்குருநாதனுகியெனவும், தம்மையும் தமது

அரிட்டாரையும் அடக்கிக்கூறுதலால் நங்குரு எனவும், திருக்கைலையில் சேவைகாணத் தேவர்களோடு நெருங்கிய பிரமன் திருமால் நெருக்கற முடியில் ஓச்ச, அவர்கள் முடியி லணிந்த தாமரையிலும் துளவமலரிலுந் தோய்ந்து கமழுதலால் பங்கயத்துளவநாறும் வே த்திரப்படையெனவுங் கூறினர். இது ஒருபொருளின் தன்மையை யெடுத்துக்கூறுத லால் பொருட்டன்மையணி. அகம்படித்தொண்டு அருகிலிருந்துசெய்யுந் தொண்டு. புற ம்படித்தொண்டு புறம்பிலிருந்துசெய்யுந் தொண்டு. (கO).

தமிழாசிரியர்.

காசியினின் றும்போந்துகம்பர்தாமருளப்பெற்று
மாசிலாக்கச்சிமூதூர்மன்னிவீற்றிருந்துபூமே
லாசிலாத்தமிழ்பரப்பியருந்தமிழ்க்குரவுபூண்ட
தேசிகன்மலயவெற்பின்குறுமுனிதிருத்தாள்போற்றி.

(இ-ள்.) காசியினின்றும் போந்து கம்பர் தாம் அருளப்பெற்று-காசித் திருப்ப தியினின்றும் எழுந்தருளித் திருவேகம்பர் அருள்செய்யப்பெற்று, மாசு இல்லாத கச்சி மூதூர் மன்னி வீற்றிருந்து-குற்றமில்லாத கச்சியென்னும் தொன்றுதொட்டுள்ள திருநக ரில் நிகரின்றி வசித்திருந்து, பூமேல் ஆசு இல்லாத தமிழ் பரப்பி அருந்தமிழ் குரவுபூண் டதேசிகன்-நிலவுலகின்மேல் களங்கமில்லாத தமிழினைப்பரப்பி அரியதமிழாசிரியத் தன்மை மேற்கொண்ட விளக்கத்தையுடையவராகிய, மலயவெற் பின் குறுமுனி திருத் தாள் போற்றி-பொதியமலையிலெழுந்தருளிய அகத்தியமுனிவரது ஸ்ரீபாதங்களை வந்தி க்கக்கடவேன்.

மேருமலையோடு மாறுபட்டுச் சந்திர சூரியரியக்கமற நின்ற விந்தமலையி னிறுமாப் பொழியப் பிரமன் வேண்டுகோளால் அகத்தியமுனிவர் காசியினின்றுங் காஞ்சித் திருப் பதிக்கு வந்தமையால் காசியினின்றும் போந்து எனவும், அங்கு அம்முனிவர் சிவலிங்க ப்பெருமானைத் தாபித்துப் பூசித்து வேண்டுவன பெற்றமையால் கம்பர் தாமருளப்பெ ற்று எனவும், தாம் அணுக்கராயிருக்க விரும்பியது வேண்டிய வரங்களுளொன்றாத லால் மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற்றிருந்து எனவும், நிலவுலகில் எக்காலத்தோர்க் கும் எளிய நடையதாய்த் தேவர்களுக்கு இனிமை பயப்பதாகச் சிவபெருமா னருளப் பெற்றுத் தமிழை விரித்தமையால் பூமேலாசிலாத் தமிழ்பரப்பி யெனவும், தனது பெய ர்க்காரணத்தால் எல்லாப் பாடையினு மினியபாடை யாதலால் அருந்தமிழ் எனவும், அப்பாடைக்கு இறைவர் முதற்குரவராகத் தாம் இயல்வகுத்த ஆசிரியராய் விளங்கி னமையால் குரவுபூண்ட தேசிகன் எனவுங் கூறினர் (தமிழ் இனிமை) பண்பாகுபெ யராய்ப் பாடைமேல் நின்றது "எவ்வினையுமோப்புதலாற்றிராவிடமென்றியல்பாடை- எவ்வமறப்புதிதாகயான்வகுப்பனல்கியது - எவ்வருணத்துள்ளார்க்குமெளிதாகப்புத்தே ளி - ரெவ்வெவர்க்குஞ்சுவையமிழ்தினினிதாகச்செய்தருளாய். எனவும், இருமொழிக்கு ங்கண்ணுதலார்முதற்குரவரியல்வாய்ப்ப - இருமொழியும்வழிப்படுத்தார்முனிவேந்தரி சைபரப்பும் - இருமொழியுமான்றவரோதழீஇயினுரொன்றாலிவ் - விருமொழியுநிகரென்னு மிதற்கையமுளதேயோ" எனவும் இந்நூலில் வருதல் காண்க. ஒரு கருத்தாவின் பல செயல்கள் முறைபடக் கூறினமையால் வினைமுதல் விளக்கணி. (கக)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பாசமயகோளரியைப்பாலறுவாயனைப்பூம்பழனஞ்சூழ்ந்த
சிரபுரத்துத்திருஞானசம்பந்தபெருமானைத்தேயமெல்லாங்
குரவையிடத்தமிழ்வேதம்விரித்தருளுங்கவுணியர்தங்குலதீபந்தை
விரவியெமையாளுடையவென்றிமழவிளங்களிற்றைமறவிருப்பிவாழ்வாம்.

(இ-ள்.) பரசமய கோளரியை-பரசமயங்களாகிய யானைகளுக்குச் சிங்கம்போல்பவரை, பால் அமுத வாயனை-திருஞானப்பால் மணம் என்றுங் கமழும் திருவாயுடையவரை, பூம்பழனம் சூழ்ந்த சிரபுரத்து திருஞான சம்பந்தப் பெருமானை-பொலிவமைந்த வயல் சூழ்ந்த சீகாழியில் அவதரித்த திருஞான சம்பந்தரென்னும் திருநாமம் வாய்ந்த இறைவரை, தேயம் எல்லாம் குரவையிட தமிழ்வேதம் விரித்தருளும் கவுணியர்தம் குலதீபத்தை - எல்லாத் தேசங்களிலும் உள்ளோர் ஆனந்தக் கூத்தாடத் தமிழ்வேதமாகிய ஒளியை விரித்தருளிய அந்தணருள் கவுணியர் கோத்திரத்திற்கோர் தீபமாய் உள்ளவரை, எமை விரவி ஆளுடைய வென்றி மழ இளங்களிறை-எம்மைக் கலந்து ஆளாகக்கொண்ட வெற்றியையுடைய இளமைவாய்ந்த யானைக்கன்று போல்பவரை, விரும்பி வாழ்வாம்-மகிழ்கூர்ந்து வழிபட்டு வாழா நிற்போம்.

பரசமயங்களாகிய களைகளை வேரோடறக் களைந்து சைவவான் பயிரோம்பத் திருவவதாரஞ்செய்தருளினமைதோன்றப் பரசமயகோளரியெனவும், உமையம்மையார் பொற்கிண்ணத் தருளிய சிவஞானத் திருமுலைப்பாலுண்டு அன்றே "தோடுடைய செவியன்" முதலிய திருப்பதிகங்களை யோதி யளவிறந்த மான்மியங்களைப் பாலபருவத்தே செய்தன ரென்பது தோன்றப் பாலமுதவாயனை யெனவும், என்றும் விளைவு குன்றுததென்பது தோன்றப்பைம்பழனம் எனவும், மற்றைத் திரவியங்களோடு நாடுபடுதிரவியமுமிக்குளதென்பது தோன்றச் சூழ்ந்தவெனவும், பன்னிரண்டுதிருநாமங்களுள் எல்லாத் திருப்பதிகளிலும் உயர்ந்ததென்பது சொல்லாற்றலாற் றோன்றச்சிரபுரம் எனவும், அத்திருப்பாலால் சிவஞானத்தால் கலைஞானத்தையும் திருவருண்ஞானத்தால் மெய்ஞ்ஞானத்தையும் ஓதாதொருங்குணர்ந்த காரணத்தால் வந்த நாமம் என்பதுதோன்றத் திருஞானசம்பந்தப்பெருமானை எனவும், புறச்சமயமாகிய பேரந்தகாரத்தால் மூடுபட்டுத் தத்தஞ் செயலொழிந்து வருந்திய ஆன்மாக்கள் தமிழ்வேதமாகிய பேரொளியால் அவ்விருளினின்று நீங்கிக் களித்தமைதோன்றத் தேயமெல்லாங் குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளுங் கவுணியர்தங் குலதீபத்தையெனவும், எம்போலியராகிய அடியார்குறிப்பின் வழிப்பட்டு ஒழுகி யருள்வது தோன்ற விரவி யெமையாளுடைய வென்றி மதவிளங்களிறெனவும், கன்மமல மொழித்தற்பொருட்டு என்பது தோன்ற விரும்பிவாழ்வாம் எனவுங் கூறினர். பரசமயங்களை நிக்கிரகஞ் செய்தற்பொருட்டுத் திருவவதாரஞ் செய்தமையும் "தோடுடையசெவியன்" முதல் பதினாறாயிரந் திருப்பதிகங்களோதினமையும், திருவவதாரஞ்செய்த திருப்பதியும், காரணத்தால் வந்த திருநாமமும், செய்தருளிய பற்பல மான்மியங்களும், அடியவர்க்கருளும் அநுக்கிரகமும் ஆகிய இவற்றை முறையாகக் கூறுதலால் முறையிற் படர்ச்சியணி. அமுதம் பகிர்ந்த திருமால் கைக்கொண்ட சட்டுவத்தால் உடலிழந்த இராகு கேதுக்கள் இறைவனைச் சீகாழியிற் பூசித்துத் தம துடலம் பெற்றமையால் சிரபுரம் என அத்திருப்பதிக்கு ஓர் திருநாமம் பன்னிரண்டு திருநாமங்கள் "பிரமபுரம் வேணுபுரம் புகலிபெருவெங்குருநீர்ப்-பொருவி திருத்தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்-வருபுறவஞ் சண்பைநகர்வளர்காழி கொச்சைவயம்-பரவுதிருக்கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்" எனவும், சிவஞானத்தால் கலைஞானமும் திருவருண்ஞானத்தால் மெய்ஞ்ஞானமு முணர்ந்தமையை "சிவனடியேசிந்திக்குந்திருப்பெருகுசிவஞானம்-பவமதனையறமாற்றும்பாங்கினிலோங்கியஞானம்-உவமையிலாக்கலைஞானமுணர்வரியமெய்ஞ்ஞானந் - தவமுதல்வர்சம்பந்தர்தாமுணர்ந்தாரந்நிலையில்" எனவும் வரும் பெரியபுராணத்தாலும், பதினாறாயிரந் திருப்பதிகங்களை யோதியருளினமையை "நகரங்கெடப்பண்டுதிண்டேர்மிசைநின்றநான்மறைகள் - பகரங்கழலவனைப்பதினாறாயிரம்பதிகம் - மகரங்கிளர்கடல்வையத்துயர்கெடவாய்மொழிந்த - நிகரொங்கிலிகலிக்காழிப்பிரானென்பர்நீணிலத்தே" என

வரும் திருஞானசம்பந்தர் திருவந்தாதியிலும், திருப்பதிகங்களாற்செய்தருளிய பற்பல மான்மியங்களை "அடுசினக்கடகரியதுபடவுரித்த-படர்சடைக்கடவுடன்றிருவருளதனாற் பிறந்தது- கழுமலமென்னுங்கடிநகரதுவேவளர்ந்தது - தேங்கமழ்வாவிச்சிலம்பனையன் பெறு-பூங்குழன்மாதிடுபோனகமுண்டேபெற்றது-குழகனைப்பாடிக்கோலக்காப்புக்-கழகுடைச் செம்பொற்றா ளமவையே தீர்த்தது-தாதமர்மருகற் சடையனைப்பாடிப்-பேதுறுபெண்ணின் கணவனைவிடமே யடைத்தது-அரைசோடிசைய வணிமறைக்காட்டுக்-குரைசேர்குடுமிக் கொழுமணிக்கதவே யேறிற்று-அத்தியு மாவுந் தவிர வரத்துறை-முத்தின் சிவிகை முன்னாட் பெற்றே பாடிற்று-அருமறை யோத்தூ ராண்பனையதனைப்-பெருநிற மெய்தும் பெண்பனையாவே கொண்டது-பூவிடு மதுவிற் பொறிவண்டுழலும்-ஆவடு துறையிற் பொன்னா யிரமே கண்டது-உறியொடு பீலி யொருகையிற் கொள்ளும்-பறிதலைச் சமணைப் பல்கழுமிசையே நீத்தது-அவிழ்ச் சுவையேயறிந் தரனடி பரவும்-தமிழ்ச்சுவை யறியாத் தம்பங்களையே நினைந்தது-அள்ளற் பழனக் கொள்ளம்பூதூர்-இக்கரையோட மக்கரை செலவே மிக்கவர்-ஊனசம்பந்த மறுத்துயக் கொளவல-ஞானசம்பந்தனிஞ் ஞாலத்திடையே." எனவரும் திருஞானசம்பந்தர் திருமும்மணிக் கோவையிலும், கன்மமலமொழித்தலை "நேசத்தாற் றொழுதிடுநீ பாசத்தார் விடவே" என வரும் சிவஞான சித்தியாரிலும் காண்க. இதனை மற்றைய வற்றிற்குங் கொள்க. பரசமயங்களாவன. புறச்சமயம், புறப்புறச்சமயங்கள். அவை தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் ஆறும், உலோகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமிகம், வைபாடிகம், ஆருகதம் ஆறுமாம். (கஉ)

## திருநாவுக்கரசுநாயனார்.

இடையறாப்பேரன்புமழைவாருமிணைவிழியுமுழவாரத்திண்
படையறாத்திருக்கரமுஞ்சிவபெருமான்றிருவடிக்கேபதித்தநெஞ்சு
நடையறாப்பெருந்துறவும்வாகீசப்பெருந்தகைதன்ஞானப்பாடற்
றொடையறாச்செவ்வாயுஞ்சிவவேடப்பொலிவழகுந்துதித்துவாழ்வாம்.

(இ-ள்.) வாகீசப் பெருந்தகைதன் இடையறாத பேர் அன்பு உம்-திருநாவுக்கரசு நாயனாரது இடையில் நீங்காத உழுவலன்பும், மழைவாரும இணைவிழியும் திண் உழவாரம் படை அறாத திருக்கரம் உம்-ஆனந்த பாஷ்பம் சிந்தும் இரண்டு திருநேத்திரங்களும் திண்ணிய உழவார மாகிய ஆயுதம் நீங்காத திருக்கைகளும், சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சு உம் நடையறாத பெருந்துறவும்-சிவபெருமானது திருவடிக்கீழ் நிலைபெற்ற மனமும் நல்லொழுக்கத்தினின்று நீங்காத பெரியதுறவும், ஞானப்பாடல் தொடையறாத செவ்வாய் உம் சிவவேடப் பொலிவு அழகு உம் துதித்து வாழ்வாம்-சிவஞானங் கனிந்த தமிழ்வேதத்தைத் தொடுத்தலினின்றும் நீங்காத செவந்த திருவாயும் சிவவேடப்பொலிவின் சுந்தரமும் ஆகிய இவற்றை எந்நாளும் துதித்து வாழாநிற்போம்.

தலையன்பு என்பது தோன்ற இடையறாப் பேரன்பும் எனவும், ஒழித்த பற்றில் மீட்டுமனஞ் செல்லாமையாகிய அகத்துறவு என்பது தோன்ற நடையறாப் பெருந்துறவும் எனவும், சிவபெருமா னருளிய திருநாமம் என்பது தோன்ற வாகீசப் பெருந்தகை எனவுங் கூறினார். இடையறாப் பேரன்பும், சிவபெருமான் றிருவடிக்கே பதித்தநெஞ்சும், நடையறாப் பெருந்துறவும் என மனத்தாலும், ஞானப்பாடற் றொடையறாச் செவ்வாயும் எனவாக்காலும், மழைவாருமிணைவிழியும், உழவாரத்திண் படையறாத் திருக்கரமும் எனக் காயத்தாலும் திருவருட் பணிக்குரியர் என்பதுதோன்ற முன்னாய்

கூறி, அத்திரிகரணங்களாலுந் திருவருட்பணிக்கு ஒருங்கே யுடையவர் சிவமே என்பது தோன்றச் சிவவேடப் பொலிவழகும் எனப்பின்னர்க் கூறினர். உழவாரத்திண்படையுருத்திருக்கரமும்,ஞானப்பாடற்றொடையுருச்செவ்வாயும் என்னும் இவற்றைஞானச்சரியையிலும், இடையுருப் பேரன்பும், மழைவாரு மிணைவிழியும் என்னும் இவற்றை ஞானக்கிரியையிலும், சிவபெருமான் றிருவடிக்கே பதித்தநெஞ்சம் என்பதனை ஞானயோகத்திலும், நடையுருப் பெருந்துறவும், சிவவேடப் பொலிவழகும் என்பவற்றை ஞானத்திலும் அடக்கிப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. ஒழித்த பற்றில் மீட்டுமனஞ் செல்லாமையைத் திருப்புகலூரி லுழவாரத்திருப்பணி செய்துகொண்டு வருங்கால் அவரது தன்மையை யுலகின ரறிந்துய்யச் சிவபெருமான் றிருவருளால் செதுக்கு மிடந்தோறும், பொற்கட்டிகளும் நவமணிகளும் வெளிப்பட அவற்றைப் பருக்கைக்கற்கள் போலக்கருதி அவ்வுழவாரத்தால்வாரிப் பொய்கைகளிலெறிந்தன ரென்றும்,பின்னும் அவரை மயக்கும்படி அரம்பையர்களை யப்பெருமானேவ அவர்கள்வந்து அவர்முன் மயக்கவேண்டிய குறிப்புகளுணர்த்தவு மயங்காது; வினையைக் குறித்து "உம்மாலிங்கென்ன குறையுடையேனுன்" என்னுந் திருத்தாண்டகமோதியருள, அம்மங்கையர் நம்மாலிவரை மயக்க வியலாதென்று போய்விட்டா ரென்றும், சிவபெருமா னருளிய திருநாமம் என்பதனை "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்னுந் திருப்பதிகம் ஓதிச் சிவபெருமானார் திருவருளைச்சிந்தித்து ஆநந்தபரவசத்தராயிருக்குங்கால் அப்பெருமானார் கருணைசுரந்து "திருநாவுக்கரசு" என்னுந் திருநாமம் அருளினர் என்றும் பெரியபுராணத்தில்—

" அந்நிலைமைதனிலாண்டவரசுபணிசெய்யவவர்
நன்னிலைமைகாட்டுவார்நம்பர்திருமணிமுன்றில்
தன்னில்வருமுழவாரம்நுழைந்தவிடந்தாறெங்கும்
பொன்னிறொடுநவமணிகள்பொலிந்திலங்கவருள்செய்தார்.

செம்பொன்னுநவமணியுஞ்சேண்விளங்கவாங்கெவையும்
உம்பர்பிரான்றிருமுன்றிலுருள்பருக்கையுடனொக்க
எம்பெருமான்வாகீசருழவாரத்தினிலேந்தி
வம்பலர்மென்பூங்கமலவாவியினிற்புகவெறிந்தார்" எனவும்,

" வானகமின்னுக்கொடிகள்வந்திழிந்தாலெனவந்து
தானநிறைசுருதிகளிற றகுமலங்காரத்தன்மை
கானவமுதம்பரக்குங்கனிவாயிலொளிபரப்பப்
பானனெடுங்கண்கள்வெளிபரப்பியிசைபாடுவார்.

இத்தன்மையரம்பையர்களெவ்விதமுஞ்செயல்புரிய
அத்தனார்திருவடிக்கீழ்நினைவகலாவன்புருகும்
எத்தன்மையுணர்வுடையவிழுத்தவத்துமேலோர்தஞ்
சித்தநிலைதிரியாதுசெய்பணியின்றலைநின்றார்.

இம்மாயப்பவத்தொடக்காமிருவினைகடமைநோக்கி
உம்மாலிங்கென்னகுறைவுடையேன்யான்றிருவாரூர்
அம்மானுக்காளானேனலையேன்மினீரென்று
பொய்ம்மாயப்பெருங்கடலுளெனுந்திருத்தாண்டகம்புகன்றார்.

மாதரவர்மருங்கணையவந்தெய்திமதனவசக்
காதலவர்புரிந்தொழுகுங்கைதவங்கள்செய்திடவும்
பேதமிலாவோருணர்விற்பெரியவரைப்பெயர்விக்க
யாதுமொருசெயலில்லாமையிலிறைஞ்சியெதிரகன்றார்" எனவும்,

"மேவுற்றவிவ்வேலையினீடியசீர்வீரட்டமமர்ந்தபிரானருளப்
பாவுற்றலர்செந்தமிழின்சொல்வளம்பதிகத்தொடைபாடியபான்மையினால்
நாவுக்கரசென்றுலகேழினுநின்னுமங்கணயப்புறநண்ணுகவென்
றியாவர்க்கும்வியப்புறமஞ்சுறைவானிடையேயொருவாய்மையெழுந்ததுவே" என
வும் திருநாவுக்கரசுகள் புராணத்திலும், சிவவேடமே சிவமென்பதனை "அறிவரியான்ற
னையறியயாக்கையாக்கி - அங்கங்கேயுயிர்க்குயிராயறிவுகொடுத்தருளாற் - செறிதலினாற்
றிருவேடஞ்சிவனுருவேயாகும்" எனவரும் சிவஞானசித்தியாரிலும், உணர்க. செய்யுளா
தலால் முறைபடக்கூறாது முன்பின்னாகக்கூறினர். (கரு)

ஒருமணத்தைச்சிதைவுசெய்துவல்வழக்கிட்டாட்கொண்டவுவனைக்கொ
ண்டே, யிருமணத்தைக்கொண்டருளிப்பணிகொண்டவல்லாளனெல்லாமு
ய்யப், பெருமணச்சீர்த்திருத்தொண்டத்தொகைவிரித்த பேரருளின்பெரு
மாளென்றுந், திருமணக்கோலப்பெருமாண்மறைப்பெருமாளெமதுகுலதெ
ய்வமாமால்.

(இ-ள்.) ஒருமணத்தை சிதைவுசெய்து வல்வழக்கு இட்டு ஆட்கொண்ட உவ
னைக்கொண்டே - நடக்கும் ஒரு திருமணத்தை அழிக்க வலிய வழக்கைச்செய்து தன்
னை ஆளாகக்கொண்ட சிவபெருமானைக்கொண்டே, இருமணத்தை கொண்டு அருளி
பணிகொண்ட வல்லாளன் - இரண்டு திருமணங்களைக் கைக்கொண்டு அவரையும் ஏவ
ல்கொண்ட வன்மையையுடையவன், எல்லாம் உய்ய பெருமணம் சீர்திருத்தொண்டத்
தொகை விரித்த பேரருளின் பெருமாள்-எல்லா உலகங்களும் பிறவித்தொடக்கினின்று
தப்பி உய்ய மிக்க சிவமணங்கமழும் சிறப்பினையுடைய திருத்தொண்டத்தொகையை
விரித்தருளிய பெருங்கருணையையுடைய பெருமான், என்றும் திருமணக்கோலப்பெரு
மாள் மறைப்பெருமாள் எமது குலதெய்வம் ஆம் - எந்நாளுந் திருமணக்கோலத்தையே
வாய்ந்த பெருமான் வேதங்களில்வல்ல பெருமான் அவன் எமது குலத்திலுள்ளோரை
வழி அடிமையாகவுடைய இறைவனும்.

மணம்வந்த புத்தூரில் சடங்கவிமறையவர் புத்திரியாரைச் சுந்தரமூர்த்திநாயனார்
திருமணஞ் செய்யத்தொடங்குங்கால் சிவபெருமானார் திருக்கயிலையிலருளியவண்ணம்
அருளும்படி விருத்தவேதியராய்வந்து சபையார்முன் வழக்கிட்டு முறியோலை காட்டித்
தடுத்தாட்கொண்டருளினமையால் ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட்டாட்
கொண்ட எனவும், பரவைநாய்ச்சியாரையும் சங்கிலிநாய்ச்சியாரையும் அச்சுந்தரமூர்த்தி
நாயனருக்கு இடையே நின்று திருமணமுடித்தருளினமையால் அவன் இவன் என்று
சுட்டாது உவனைக்கொண்டே யெனவும், ஒருமணத்தைச் சிதைவுசெய்தவப்பெருமானா
ரால், அவ்விருவரையுந் திருமணஞ்செய்து முடித்தமையால் இருமணத்தைக்கொண்டரு
ளியெனவும், அதுவும் அமையாது வல்வழக்குச்செய்தாண்ட அவ்விறைவரை அப்பர
வையார், தம்மிடத்துக்கொண்ட வூடலைநீக்க ஒருதரமன்றி இரண்டுதரம் ஏவினமையால்
பணிகொண்ட வல்லாளன் எனவும், ஆன்மாக்களெல்லாம் அடியவர் வழிபாட்டின் திற
த்தையுணர்ந்து கடைத்தேறத் தொகுத்தருளிய திருத்தொண்டத்தொகைப்பதிகம் திரு
வாய்மலர்ந்தருளினமையால் எல்லாமுய்யத் திருத்தொண்டத்தொகை விரித்த பேரரு
ளின்பெருமாள் எனவும், அச்சிவபெருமானாரால் "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கு
மடியேன்" என்று முதலடியெடுத்துத் தந்தருளினமைதோன்ற நிற்றலால் பெருமணச்
சீர் எனவும், உம்மைத் தோழமைகொண்டோம் நாம் தடுத்தாட்கொண்ட அன்றுள்ள
திருமணக்கோலத்தோடு என்றும் உலவுவாயென்று அப்பெருமானார் அருளினமையால்

திருமணக்கோலப்பெருமாள் எனவும், திருநாவலூரில் ஆதிசைவமறையவர்குலத்தில் திருவவதாரஞ்செய்தருளினமையால் மறைப்பெருமாள் எனவுங்கூறினர்.

முறியோலைகாட்டித் தடுத்தாட்கொண்டமையை—

" பின்னுகனுநாவலர்பெருந்தகையைநோக்கி
என்னிடையுநின்னிடையுநின்றவிசைவால்யான்
முன்னுடையதோர்பெருவழக்கினைமுடித்தே
நின்னுடையவேள்வியினைநீமுயறியென்றான்.

நக்கான்முகநோக்கிநடுங்கிநுடங்கியார்க்கு
மிக்கான்மிசையுத்தரியத்துகிருங்கிமேற்சென்
றக்காலமுன்றந்தைதன்றந்தையாளோலையீதால்
இக்காரியத்தைநீயின்றுசிரித்ததென்னேடவென்றான்" எனவும்,

பரவைநாய்ச்சியாரையுஞ் சங்கிலிநாய்ச்சியாரையுஞ் சுந்தரமூர்த்திநாயனுர்க்கு இடையே நின்று திருமணமுடித்தமையை—

" மன்னும்புகழ்நாவலர்கோன்மகிழமங்கைபரவைதன்னைத்தந்தோம்
இன்னவகைநம்மடியாரறியும்படியேயுரைசெய்தனமென்றருளிப்
பொன்னின்புரிபுன்சடையன்விடையன்பொருமாகரியினுரிவைபுனைவான்
அன்னந்நடையாள்பரவைக்கணியஃதாரூரன்பான்மணமென்றருள" எனவும்,

" உம்பருய்யவுலகுய்யவோலவேலைவிடமுண்ட
தம்பிரானுர்வன்றொண்டர்தம்பாலெய்திச்சங்கிலியை
இம்பருலகில்யாவர்க்குமெய்தவொண்ணுவிருந்தவத்துக்
கொம்பையுனக்குத்தருகின்றேங்கொண்டகவலையொழிகென்றான்.

சாருந்தவத்துச்சங்கிலிகேள்சாலவென்பாலன்புடையான்
மேருவரையின்மேம்பட்டதவத்தான்வெண்ணெய்நல்லூரில்
யாருமறியயானுளவுரியானுன்னையெனையிரந்தான்
வார்கொண்முலையாய்நீயவனைமணத்தாலணைவாய்மகிழ்ந்தென்றார்.

நம்பியாரூரனுக்குநங்கைசங்கிலிதன்னை
இம்பர்ஞாலத்திடைநம்மேவலினுன்மணவினைசெய்
தும்பர்வாழுலகறியவளிப்பீரொன்றுணர்த்துதலும்
தம்பிரான்றிருத்தொண்டராருடலைமேற்கொண்டெழுந்தான்" எனவும்,

பரவையார்கொண்ட வூடலை நீக்க ஒருதரமன்றி யிருதரம் ஏவினமையை—

" நாயனீரோநானுமக்கிங்கடியேனாகினீரெனக்குத்
தாயினல்லதோழருமாந்தம்பிரானுரேயாகில்
ஆயவறிவுமிழந்தழிவேனயர்வுநோக்கியவ்வளவும்
போயிவ்விரவேபரவையுறுபுலவிதீர்த்துத்தாருமென.

அன்புவேண்டுந்தம்பெருமானடியார்வேண்டிற்றேவேண்டி
முன்புநின்றவிண்ணப்பஞ்செய்தநம்பிமுகநோக்கித்
துன்பமொழிநீயாமுனக்கோர்தூதனாகியிப்பொழுதே
பொன்செய்மணிப்பூண்பரவைபாற்போகின்றோமென்றருள்செய்தார்.

துளிவளர்கண்ணீர்வாரத்தொழுதுவிண்ணப்பஞ்செய்வார்
ஒளிவளர்செய்யபாதம்வருந்தவோரிரவுமாறு
தளிவருமன்பர்க்காகவங்கொடிங்குழல்வீராகி
யெளிவருவீருமானுலென்செய்கேனிசையாதென்றார்" எனவும்,

எல்லாமுய்ய என்பதனையும், சிவபெருமான் அடியெடுத்துத் தந்தருளினமையையும்—

" தொல்லைமால்வரைபயந்தசாயலாடன்றிருப்பாகன்
அல்லறீர்ந்துலகுய்யமறையளித்ததிருவாக்கால்
தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேனென்
றெல்லையில்வண்புகழாரையெடுத்திசைப்பாமொழியென்றான் " எனவும்,

உம்மைத் தோழமைகொண்டோம் ஆட்கொண்டவன்றுள்ள மணக்கோலத்தோ டென்றும் உலவுவாயென்றதை—

"வாழியமாமறைப்பற்றிடங்கொண்மன்னவனாரருளாலோர்வாக்குத்-தோழமையாக வுனக்கு நம்மைத்தந்தன நாமுன்பு தொண்டுகொண்ட-வேள்வியிலன்று நீகொண்ட கோலமென்றும் புனைந்துநின்வேட்கைதீர - வாழிநீமண்மேல் விளையாடுவாயென்றாரூரர்கே ட்கவெழுந்ததன்றே. எனவும் பெரியபுராணம் தடுத்தாட்கொண்டபுராணத்திலும், ஏய ர்கோன்கலிக்காமநாயனார்புராணத்திலும் வருதல் காண்க. செய்யுளாதலால் முன்பின் னாகக்கூறினார். திருவவதாரஞ்செய்தருளினமை முதல்பணிகொண்டமை யீறாகக்கூறி னமையால் முறையிற்படர்ச்சியணி. பெருமான் என்னுங் காரணப்பெயரின் ஆன்விகு தி ஆள்விகுதியாகத்திரிந்து ஆண்பாலையுணர்த்தி நிற்றல் புதியனபுகுதல் என்னும் விதி.

மாணிக்கவாசகசுவாமிகள்.

பெருந்துறையிற்சிவபெருமானருளுதலும்பெருங்கருணைப்பெற்றிநோக்கிக்
கரைந்துகரைந்திருகண்ணீர்மழைவாரத்துரியநிலைகடந்துபோந்து
திருந்துபெருஞ்சிவபோகக்கொழுந்தேறல்வாய்மடுத்துத்தேக்கிச்செம்மாந்
திருந்தருளும்பெருங்கீர்த்திவாதவூரடிகளடியிணைகள்போற்றி.

(இ-ள்) பெருந்துறையில் சிவபெருமான் அருளுதலும்-திருப்பெருந்துறையில் குருந்தமரத்தின்கீழ்ச் சிவபிரானார் சிவஞானோபதேசம் செய்தருள, பெரும் கருணை பெ ற்றி நோக்கி கரைந்து கரைந்து இருகண்ணீர் மழைவார துரியநிலை கடந்து போந்து - அவரது எல்லை இல்லாத திருவருளின் தன்மையை அகக்கண்ணால் நோக்கி மனம் நெக் குவிட்டுருகிப் புறத்திலுள்ள இரண்டுகண்களினின்றும் ஆநந்தக்கண்ணீரானது மேகம் போலப்பொழிய நின்மல துரியாதீதநிலையிற்சென்று, திருந்து பெரும் சிவபோகம் கொ ழுந்தேறல் வாய் மடுத்து தேக்கி - திருந்திய பெரிய சிவபோகமாகிய கனிந்த தேனைப் பருகி யேப்பமிட்டு, செம்மாந்து இருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூர் அடிகள் அடி இ ணைகள் போற்றி - இறுமாந்திருந்தருளிய அளவிறந்த கீர்த்தியையுடைய திருவாதவூரி லெழுந்தருளிய இறைவரது இரண்டு திருவடிகட்கும் வந்தனம்.

திருப்பெருந்துறையிற் குருந்தமரத்தின்கீழ்ச் சிவபெருமான் மானைக்காட்டி மா ன்பிடித்தல்போலச் சாதாரத்திருவுருக்கொண்டெழுந்தருளி யுடல்பொருளாவியேற்றுத் திருநோக்காலும் வாக்காலும் பரிசத்தாலும் பாசநாசஞ் செய்தருளினமையால் பெருந் துறையிற் சிவபெருமானருளுதலும் எனவும், எனையோர்க் கரிதாய்த் தமக்கெளிவந்தரு ளினமையால் பெருங்கருணைப்பெற்றிநோக்கி யெனவும், அதற்குத் தாஞ்செய்யுங்கைம் மாறொன்றின்மை கருதினமையால் கரைந்து கரைந்து எனவும், அப்பெருங்கருணையா லெழுந்த சிவாநந்த முள்ளேநிரம்பிப் புறம்பே வழிதல்போல வழிதலால் இருகண்ணீர் மழைவாரஎனவும், அக்கருணையால் பசுகரணஞ் சிவகரணமாய்க் கருவிகளோடுகூடிநிற் குஞ் சகல சாக்கிரத்தில் அக்கருவிகளோடுங்கூடாது நிற்கும் நின்மல துரியாதீதநிலையில் நின்றமையால் துரியநிலைகடந்துபோந்து எனவும், அந்நின்மல துரியாதீதநிலையிற் பேரி ன்பமயமான சிவத்தோ டிரண்டறக் கலந்துநிற்றலால் திருந்துபெருஞ்சிவபோகக் கொ

மூந்தேறல் வாய்மடுத்துத் தேக்கி எனவும், அச்சிவத்தி னிறைவிற்கலந்து முன்னுள்ள ஏகதேசவுணர்ச்சி யொழிதலின் ஏகதேசவுடம்பால்வரும் இன்பதுன்பங்களுக்கு ஏதுவாகிய உற்பாத முதலியனவற்றை நோக்கி வருங் கவலை சிறிது மிலராயிருந்ததாற் செம்மாந்திருந்தருளும் எனவும், பிரமன் முதலியோர்க் கரிய அச்சிவபெருமான் தமது வழிபாட்டிற்கிரங்கி நரியைப் பரியாக்கியும் பரியை நரியாக்கியும் திருமுடிமேன் மண் சுமந்தும் பாண்டியன் கைப்பிரம்பா லடிபட்டும் நின்றருளச்செய்து பத்தியோகத்தில் புகழ்பெற்றவராதலால் பெருங்கீர்த்தி வாதவூரடிக ளெனவுங் கூறினர்.

திருப்பெருந்துறையிற் குருந்தமரத்தின்கீ ழெழுந்தருளி யிருந்தமையை—

"நிருத்தனேநிமலாநீற்றனேநெற்றிக்கண்ணனேவிண்ணுளோர்பிரானே
யொருத்தனேயுன்னையோலமிட்டலறியுலகெலாந்தேடியுங்காணேன்
திருத்தமாம்பொய்கைத்திருப்பெருந்துறையிற்செழுமலர்க்குருந்தமேவியசீர்
அருத்தனேயடியேனுதரித்தழைத்தாலதெந்துவேயென்றருளாயே" எனவும்,

சாதாரத் திருவுருக்கொண் டெழுந்தமையை—

"அந்தமில் பெருமை யழலுருக் கரந்து - சுந்தரவேடத் தொருமுத லுருவுகொண்-டிந்திரஞாலம் போலவந்தருளி-எவ்வெவர் தன்மையுந் தன்வயிற்படுத்துத் - தானேயாகிய தயாபர னெம்மிறை." எனவும்,

உடல்பொரு ளாவி பெற்றமையை—

"அன்றேயென்றனுவியுமுடலுமுடைமையெல்லாமுங்
குன்றேயனையாயென்னையாட்கொண்டபோதேகொண்டிலையோ
இன்றோரிடையூறெனக்குண்டோவெண்டோண்முக்கணெம்மானே
நன்றேசெய்வாய்பிழைசெய்வாய்நானோவிதற்குநாயகமே" எனவும்,

திருநோக்காற் பாசநாசஞ் செய்தல் மீன் தனது பார்வையால் தன் சினைகளைத் தன் வுடிவாக்குதல்போலச் சிவபிரான் அருணோக்கால் மும்மலங்களிற் சிமிழ்ப்புண்டு கிடந்த ஆன்மாக்களை அம்மலங்களி னீக்கி யேகதேசவறிவினைக் கழித்து வியாபகவறிவினைத் தருதல்—

"புணர்ப்பதொக்க வெந்தையென்னை யாண்டு பூணநோக்கினய்" எனவும்,

திருவாக்காற் பாசநாசஞ்செய்தல் பதிபசுபாசத்தி னுண்மையை யறிவுறுத்தும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தை சிவத்தோ டிரண்டறக்கலக்க வுபதேசித்தல்—

"உடையாளுன்றனடுவிருக்குமுடையாணடுவுணீயிருத்தி
அடியேனடுவுளிருவீருமிருப்பதானாலடியேனுன்
னடியார்நடுவுளிருக்குமருளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்துமுடியும்வண்ணமுன்னின்றே" எனவும்,

பரிசத்தாற் பாசநாசஞ்செய்தல் வியாபகவறிவினின்றும் வழுவாமல் திருவருட் பதிவுசெய்தல்.—

"இணையார்திருவடியென்றலைமேல்வைத்தலுமே
துணையானசுற்றங்களத்தனையுந்துறந்தொழிந்தேன்" எனவும்,

வினையோர்க்கெளிதாய்த்தமக்கு எளிவந்தருளினமையை—

"இந்திரனுமாலயனுமேனோரும்வானோரும்
அந்தரமேநிற்கச்சிவனவனிவந்தருளி
எந்தரமுமாட்கொண்டுதோட்கொண்டநீற்றனுய்ச்
சிந்தனையைவைத்துருக்குஞ்சீரார்பெருந்துறையான்" எனவும்,

அதற்குத்தாஞ்செய்யுங் கைம்மாறின்மை கருதினமையை—

" அன்பினாலடியேனாவியோடாக்கையாநந்தமாய்க்கசிந்துருக
என்பரமல்லாஇன்னருடந்தாயானதற்கிலனோர்கைம்மாறு " எனவும்,

அப்பெருங்கருணையா லெழுந்த சிவாநந்தமுள்ளே நிரம்பிப் புறம்பே வழிதல் போல இருகண்ணீர்வார்தலை.—

" சொல்லுவதறியேன் வாழிமுறையோ - தரியேனாயேன் றானெனைச்செய்தது- தெரியேனாவா செத்தேனடியேற்-கருளியதறியேன் பருகியுமாரேன்-விழுங்கியு மொல்ல கில்லேன்-செழுந்தண்பாற் கடற்றிரைபுரைவித்து-உவாக்கடனள்ளுநீ ருள்ளகந்ததும்ப- வாக்கிறந்தமுத மயிர்க்காறோறும்-தேக்கிடச்செய்தனன் கொடியேனூன்றழை-குரம்பை தோறு நாயுடலகத்தே-குரம்பைகொண்டின் றேன்பாய்த்திநிரம்பிய-அற்புதமான வமுத தாரைகள்-எற்புத்துளைதொறு மேற்றினனுருகுவ-துள்ளங்கொண்டோ ருருச்செய்தா ங்கெனக்-கள்ளூறாக்கை யமைத்தனனொள்ளிய-கன்னற்கனிதேர் களிறெனக்கடைமு றை-என்னையுமிருப்ப தாக்கினனென்னிற்-கருணைவான் றேன்கலக்க-அருளொடுபரா வமுதாக்கினன்-பிரமன்மாலறியாப் பெற்றியோனே" எனவும்வருந் திருவாசகத்தாலும்;

பசுகரணஞ் சிவகரணமாய்க் கருவிகளோடு கூடிநிற்குஞ் சகல சாக்கிரத்தி ல் அக்கருவிகளோடுங் கூடாதுநிற்குந் துரியாதீத நிலைமையையுஞ் சிவபோகத்தையும்.

"இந்நிலைதானில்லையெல்லாமீச-னிடத்தினினுமீசனெல்லாவிடத்தினினுநின்ற- அந்நிலையையறிந்தந்தக்கரணங்களடக்கி-யறிவதொருகுறிகுருவினருளினாலறிந்து-மன்னு சிவன்றனையடைந்துநின்றவன்றனாலே - மருவுபசுகரணங்கள்சிவகரணமாகத்-துன்னிய சாக்கிரமதனிற்றுரியாதீதம்-தோன்றமுயல்சிவாநுபவஞ்சுவாநுபூதிகமாம்" எனவும்,

முன்னுள்ள வேகதேசவுணர்ச்சி யொழிதலால் ஏகதேச வுடம்பால்வரும் இன்ப துன்பங்களுக்கு ஏதுவாகிய உற்பாதமுதலியனவற்றை நோக்கிவருங் கவலை சிறிது மிலராயிருத்தலை—

" புண்ணியமே னோக்குவிக்கும் பாவங்கீழ்நோக்கும்-புண்ணியனைப் பூசித்த புண் ணியத்தினாலே-நண்ணிய ஞானத்தினா லிரண்டினையு மறுத்து-ஞாலமொடு கீழ்மேலு ந ண்ணாளுகி-எண்ணுமிக லோகத்தே முத்திபெறு மிவன்றான்-எங் கெழிலென் ஞாயிறெ மக்கென்று குறைவின்றிக்-கண்ணுதற எிறைவதனிற் கலந்துகாயங்-கழிந்தக்காலெங் குமாய்க் கருதரன்போ னிற்பன்" எனவும்வருஞ் சிவஞானசித்தியாராலும்;

சிவபெருமான், தமது வழிபாட்டிற்கிரங்கிப் பரியைநரியாகச் செய்தும் நரி யைப் பரியாகச்செய்தும் திருமுடிமேல் மண்சுமந்தும் பாண்டியன் கைப்பிரம்பா லடிப ட்டும் நின்றருளச் செய்தமையை—

" நரியாவும்பரியாக்கிநடத்தியும்பரமின்றித்
தரியாயான்தருதுகிலைத்திருமுடிமேற்றரித்துமறைக்
கரியாய்நீயென்பாசமறக்கவருந்திருமேனி
தெரியாதேபரியாசைதினைத்திறமாந்திருந்தேனே " எனவும்,

" கள்ளொழுக்குதார்மீனவன்கடிமனைபுகுந்த
புள்ளுவப்பரிநள்ளிருட்போதுவந்தெய்தப்
பிள்ளையாகியமதிமுடிப்பிரான்விளையாட்டால்
உள்ளவாறுதம்வடிவெடுத்தொன்றொடொன்றுசாவும்" எனவும்,

" இவ்வண்ணமிவரொருகாலிருகான்மண்சுமந்திளைத்துக்
கைவ்வண்ணமலர்கன்றக்குதிர்முடிமேல்வடுவெழுந்த

மைவண்ணனறியாதமலரடிசெம்புனல்பரந்து
செவ்வண்ணம்படைப்பவொருசெழுந்தருவின்மருங்கணைந்தார்'' எனவும்,
"அடையாளம்படவொருவனடித்தகொடுஞ்சிலைத்தழும்பும்
தொடையாகவொருதொண்டன்றொடுத்தெறிந்தகல்லும்போல்
கடையானேன்வெகுண்டடித்தகைப்பிரம்புமுலகமெலாம்
உடையானேபொறுத்ததோவுன்னருமைத்திருமேனி'' எனவும் வருந் திருவிளையாடலாலும் அறிக.

ஞானயோகம் பத்தியோகம் என்ற இருதிறத்தி லிதுபத்தி யோகத்தின் பாற்பட்டதாதலால் பத்தியோகத்திற் புகழ்பெற்றவர் என்றும்.

அறுபத்துமூவர்.

கலிவிருத்தம்.

தத்துமூதெயின்மூன்றுந்தழலெழ
முத்துமூரன்முகிழ்த்தநிராமய
சித்துமூர்த்திதன்றாளிணைசேரறு
பத்துமூவர்பதமலர்போற்றுவாம.

(இ-ள்.) தத்து மூது எயில் மூன்றும் தழல் எழ - திரிந்துசெல்லும் தொன்றுதொட்டுள்ள மூன்றுமதில்களும் தீப்பற்ற, முத்து மூரல் முகிழ்த்த நிராமய சித்து மூர்த்தி தன் தாள் இணை - முத்தினையொத்த புன்முறுவலரும்பிய தனக்கோர் கேடில்லாத அறிவுவடிவமாகிய சிவபிரானது இரண்டு திருவடிகளையும், சேர் அறுபத்துமூவர் பதம் மலர் போற்றுவாம் - அடைந்த அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய திருவடிகளை வணங்குவாம்.

தாரகாசுரன் பெற்ற வித்துமாலி, தாரகாக்கன், கமலாக்கன் என்னுமசுரர்கள் பிரமனைநோக்கித் தவஞ்செய்தகாலையில் பிரமன் காட்சி தந்து வேண்டிய வரங்கள் என்னவென்றுவினவ, ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பொன், வெள்ளி, இரும்பாலமைந்த மதில்கள் பூமி, அந்தர சுவர்க்கமென்னு மூன்றுலகங்களிலும்வேண்டும், அவைதம்முள் ஒன்றுபடுங்காற் சிவபெருமானா லழியவேண்டும் என அவ்வசுரர்கள் குறையிரக்க அவ்வாறேயருளினன், அவற்றோ டவ்வசுரர்கள் சென்றுலகிற் கெல்லாந் துன்பஞ் செய்யுங்கால் பிரமன் முதலியோர் சென்று வேண்ட அச்சிவபெருமான் புன்முறுவல்செய்தெரித்தனர் என்பது இலிங்கபுராணவரலாறு "மற்றவர்மாதவநோக்கிமலரவனுங்கெய்தியவர்வதனநோக்கிப், பெற்றிடுவான்யாதுளத்தில்விரும்பினீரெனக்கேட்பப்பெரிதுந்தாழா,அற்றமிலா வாழ்நாட் திடுதியென வதுநல்க வடாதானெஞ்சில், உற்றவரம்வேறுளதேற் கேண்மினென வாங்கவரு முரைக்க லுற்றார். அந்தரத்தி லியங்குமெயி லொருமூன்று வேண்டுமந்த வெயில்கண் மூன்றும்-வந்துதம்மி லெக்காலங் கூடுமந்தக் காலத்தில் வடவைகாலும்-முந்துகணை யொன்றெவரு முவமனிலா வொருவன்விடி லொருங்குமாய்ந்து-சிந்திடவல்லா லெவர்க்கு மழியாமலுறையும் வகை செய்தி யென்றான். ஆங்கவர்கள் கேட்டவர மருளிமலர்ப் பொருட் டுறைவோ னகன்றபின்னர்த்-தூங்கெயில்க ளொருமூன்று பொன்வெள்ளி யிரும்பிவற்றாற் றுலங்கித் தோன்றி-ஓங்குறுவா னிடைவெளி மண் ணிவற்றிடையே யுறைந்தோங்கி யியங்குமாறு-வீங்கறிவால் மயனியற்ற வாங்கவரும் விழைவினொடு மேவினரால். அவ்வெயில்க ளொருமூன்றுஞ் செலவியக்கி யாருயிர்மற் றெவருமாய - விவ்வகையே திரியுமவா'' என வருதலால் தத்துமூதெயி லென்றார். மூதெயில் மூன்றுந் தழலெழ மூரன் முகிழ்த்த என்னும் விசேடியம் அடைந்தவரது ஆணவமுதலிய மூன்றுமலங்களையுங் களையவல்லவ னென்னுங் கருத்தையுட்கொ

ண்டிருத்தலால் கருத்துடையடை கொளியணி. அறுபத்து மூவர் அறுபதின்மரு மூவரும் என உம்மைத் தொகைநிலைத் தொடராய் நிற்றலால் தனித்தனி கூறிய ஆளுடையபிள் ளையார்முதலிய மூவரையுங் கொள்க. (கசு)

சேக்கிழார்நாயனார்.

தூக்குசீர்த்திருத்தொண்டத்தொகைவிரி
வாக்கினாற்சொல்லவல்லபிரானெங்கள்
பாக்கியப்பயனாப்பதிகுன்றைவாழ்
சேக்கிழானடிசென்னியிருத்துவாம்.

(இ-ள்) சீர் தூக்கு திருத்தொண்டத்தொகை விரிவாக்கினால் சொல்லவல்ல பிரான் - அடியவர் சிறப்பை அளவறுத்துக்கூறிய திருத்தொண்டத்தொகையை விரித் துத் தமது திருவாக்கினால் சொல்லவல்ல பெருமானாரும், எங்கள் பாக்கியப்பயன் ஆக குன்றை பதிவாழ் சேக்கிழான்-எங்களதுபாக்கியப்பயனாகத் திருக்குன்றத்தூரைத் தமது திருப்பதியாகக்கொண்டு வாழ்ந்த சேக்கிழார் என்னுந் திருநாமமுடையவருமாகிய நா யனாரது, அடி சென்னி இருத்துவாம் - திருவடியை எமது தலைமேற் பதித்து வா ழ்வாம்.

அடியவர் திறம் இவ்வளவென அளவறுத்துக் கூறினமையால் தூக்குசீர் என வும், அடியவர்கள் வரலாற்றை யுயிர்கள் அத்திருத்தொகையால் முற்றும் உணர்ந்துய் தற்கருமையின் உணர்ந்துய்யும்பொருட்டுச் சிவபெருமான் "உலகெலாம்" என முதலடி யெடுத்துத் தந்தருள ஞானவாணி நின்றுதவுதலால் விரித்துக் கூறியருளினவராதலால் விரிவாக்கினாற், சொல்லவல்ல பிரானெனவும், தொகையைநோக்கும்போது வகைவிரி யாகவும், விரியைநோக்கும்போது வகைதொகையாகவும் நிற்றலால் வகைநூலாயுள்ள நம்பியாண்டார் நம்பிதிருவந்தாதியைக் கூறுதொழிந்தும், அந்நூலை விரித்தருளிய பெரி யோர் பரகதியடைதற் குலகினர் முயன்றுதேடிய பெருந்தவப்பயனால் வந்தவதாரஞ் செய்தலால் எங்கள் பாக்கியப் பயனாப்பதி குன்றைவாழ் சேக்கிழான் எனவுங் கூறினார்.

"ஒருலகோ வொருதிசையோ வொருபதியோ தம்மில்-ஒருமரபோ வொருபெ யரோ வொருகாலந்தானோ-பேருலகி லொருமைநெறி தருங்கதியோ பன்மைப் பெருங் கதியோ பேறொன்றோ வல்லவேயிதனை-ஏருலகெலா முணர்ந்தோதற் கரியவனென் றிறைவன்முதலடி யெடுத்துக்கொடுத் தருளக்கொண்டு-பாருலகி னுமைகணின்றெடுத்துக் கைநீட்டப்-பாடிமுடித்தனர் தொண்டர்சீர் பரவவல்லார்" எனச் சேக்கிழார் புராண த்தில் வருதல் காண்க. (கஎ)

திருக்கூட்டத்தார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பேயன்னபுறச்சமயப்பிணக்குநூல்வழியனைத்துப்பிழையேயன்றி
வாயன்மைதெளிந்துசைவசித்தாந்தவழிதேறியதீதவாழ்விற்
போயண்மியஞ்செழுத்துந்திருநீறுங்கண்டிகையும்பொருளாக்கொண்ட
நாயன்மார்திருக்கூட்டம்பணிந்திறைஞ்சுநம்பெரும்பேறுநான்பெற்றேனால்.

(இ-ள்.) பேய் அன்ன புறச்சமயம் பிணக்கு நூல் வழி அனைத்தும்-பேய் பிதற் றுதல்போல முன்னும் பின்னும் மலைவுபடக்கூறும் புறச்சமயங்களிலுள்ள மாறுபட்ட நூல்கள் முற்றும், பிழையே அன்றி வாய் அன்மைதெளிந்து-பொய்யே அன்றி உண் மையல்லாமையைத்தேறி, சைவசித்தாந்த வழிதேறி அதீதவாழ்வில் போய் அண்மி-

சைவசித்தாந்த நூல்வழியைத் தெளிந்து துரியாதீத வாழ்விற்சென்று கலந்து, அஞ்செழுத்தும் திருநீறும் கண்டிகையும் பொருளாகக்கொண்ட நாயன்மார் திருக்கூட்டம் - ஸ்ரீ பஞ்சாக்கரத்தையும் திருநீற்றையும் கண்டிகையையும் உண்மைப்பொருளாகக் கைக்கொண்ட சிவனடியார்களது திருக்கூட்டத்தை, பணிந்து இறைஞ்சும் பெரும் பேறு நான்பெற்றேன்-வணங்கித்துதிக்கும் பெரும்பலனை நான் அடைந்தேன்.

புறச்சமய நூல்கள் கண்ணில்லார் பலர்கூடி யானையைக் கையால் தடவித்தத் தம் சிற்றறிவிற்குப் புலப்பட்ட வண்ணம் பலபடக்கூறித் தம்மிற்பிணங்கு மாறுபோல முற்றறிவுடைய இறைவன் அருளிய வேதாகமங்களிற் கூறும் பொருளியல்பினையே கதேசம்படத் தத்தம் சிற்றறிவிற்குப் புலப்பட்டவாறு தம்மிற் கூறிப் பிணங்கும் பூர்வ நூல்களாதலால் பேயன்ன புறச்சமயப் பிணக்கு நூல் எனவும், அவ்வச்சமயங்களிற் கூறும் நெறிகள் முற்றும் பொருளியல்பு கூறலில் மாறுபட்டு நிற்றலால் வழியனைத்தும் பிழையேயன்றி வாயன்மையெனவும், அவ்வச்சமயங்களின் முன்னர் நின்று ஆராய்ந்து வழூவெனக்களைதலால் தெளிந்து எனவும், பல பொருள்படத்தோன்றும் வேதசூத்திரங்களை இன்னபொருளெனத் தெளித்துக் கூறும் பாடியமாகிய சிவாகமம் சைவசித்தாந்தமாதலில் அதன்வழிச்சென்று முத்தியடைதற்குச் சோபானமாகிய சரியை கிரியாயோகஞானங்களைச் சார்தலால் சைவசித்தாந்த வழிதேறி யெனவும், அதனால் நின்மலதுரியாதீத வாழ்வையடைதலால் அதீதவாழ்விற் போயண்மி யெனவும், அதுநிலை பெறுதற் குரிய சாதனங்கள் அஞ்செழுத்துந் திருநீறுங்கண்டிகையு மாதலால் அஞ்செழுத்துந் திருநீறும் கண்டிகையும் பொருளாக்கொண்ட நாயன்மார் எனவும், அவர்கள் தில்லைவா ழந்தணர்களும், பொய்யடிமை யில்லாப் புலவர்களும், பத்தராய்ப் பணிவார்களும், பரமனையே பாடுவார்களும்,சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர்களும், திருவாரூர்ப் பிறந்தவர்களும், முப்பொழுதுந் திருமேனிதீண்டுவார்களும், முழுநீறுபூசிய முனிவர்களும்,அப்பாலும் அடிச்சார்ந்தார்களுமாகிய ஒன்பதின்மரும்திருக்கூட்டத்தின ராதலால் திருக்கூட்டம் எனவுங் கூறினர். புறச்சமய நூல்கள்கூறும் பொருளியல்பு தம்மில் மாறுபட்டுப் பிணங்குதலும், பூர்வநூல் என்றதும்.

"ஓதுசமயங்கள் பொருளுணருநூல்க ளொன்றோ டொன்றொவ்வாமலுள" எனவும், "பிறநூல் திகழ்பூர்வம்" எனவும், பிதற்றுதல் என்றது "உலகரொல்லா மூர்க்கராகிப்-பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப்பாவப்- பெருங்குழியில் வீழ்ந்திடுவர்" எனவும், சைவசித்தாந்த மென்பதும் தெளிதலென்பதும், தேறியென்பதும் "வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள், வேறுரைக்கு நூலிவற்றின்விரிந்த நூல்கள் - ஆதிநூலநாதி யமலன் றருநூலிரண்டும், ஆரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்-நீதியி னு லுலகர்க்குஞ் சத்தி நிபாதர்க்கு, நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத்-தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூல், திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தநூலே" "புறச்சமய நெறிநின்று மகச்சமயம்புக்கும், புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச்சிரம-வகத்துறைக ளதுவடைந்து மருந்தவங்கள் புரிந்து, மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்தும்-சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதச், சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற்சைவத், திறத்தடைவரிதிற் சரியைகிரியாயோகஞ், செலுத்திப்பின் ஞானத்தாற்சிவனடியைச் சேர்வர்" எனவும்வருஞ் சிவஞான சித்தியாராலும், திருக்கூட்டம் ஒன்பதென்பது "அத்தரடியவர் கூட்டந் தில்லைவாழும் - அந்தணர் பொய் யடிமையிலாப் புலவராசில் - பத்தர்முத லெழுவரோ டொனபதின்மரோ ழொன்-பதின்மர்தனிப் பேரொண்ணொன்பதின்மராய-இத்தகையிற் றொண்டர் சீருரைத்தான்" எனவும்வரும் திருத்தொண்டர்புராணசாரத்தாலும் காண்க. புறச்சமயம் என்பதையும் அதீத வாழ்வு என்பதையு முன்னர்க்காண்க. "அயனார்" என ஒருவனா யு

யர்த்திக்கூறும் பன்மைக் கிளவிபோல நாயன்மார் என்பது நிற்பினும் சாதியொருமை யால் அடியவர் பலரையும் உணர்த்திநின்றது. பேய், பிதற்றுதல் மேல்நிற்றலால் விட்ட வாகுபெயர். (கஅ)

பஞ்சாக்கரதேசிகர்.

கயிலாயபரம்பரையிற்சிவஞானபோதநெறிகாட்டும்வெண்ணெய்
பயில்வாய்மைமெய்கண்டான்சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபானுவாகிக்
குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ்குருநமச்சிவாயதேவன்
சயிலாதிமரபுடையோன்றிருமரபுநீடூழிதழைகமாதோ.

(இ-ள்.) கயிலாய பரம்பரையில்-திருக்கயிலாய பரம்பரையில் நின்று, சிவஞா ன போத நெறிகாட்டும் வெண்ணெய் பயில் வாய்மை மெய் கண்டான் சந்ததிக்கு-சிவ ஞானபோதத்தினுட்கிடையைப் பரிபக்குவ ஆன்மாக்களுக்குத்தெரித்தருளும்படித் திரு வெண்ணெய்நல்லூரைத் திருப்படைவீடாகவுடைய உண்மைவாய்ந்தமெய்கண்டார்பர ம்பரைக்கு, ஓர் மெய்ஞ்ஞான பானுவாகி-ஒப்பில்லாத சிவஞானசூரியனாகி, குயில் ஆரும் பொழில் திருவாவடுதுறைவாழ் குருநமச்சிவாயதேவன் சயிலாதி மரபு உடையோன்- குயில்கள் நிறைந்த சோலைசூழ்ந்த திருவாவடுதுறையில் எழுந்தருளிய நமச்சிவாய குரு மூர்த்தியாகிய நந்திதேவர் பரம்பரையை உடையவரது, திருமரபு நீடூழிதழைக - அவ ரது திருமரபு எக்காலமும் தழைத்தோங்குக.

திருநந்திதேவர் சிலாதர்புத்திர ராதலிற் சயிலாதியென 'வந்தது தத்தி தாந்தப தம். திருக்கைலையில் சிவபெருமானார்பால் திருநந்திதேவர் இரவுரவாகமத்தில் பதிபசு பாசத்தினுண்மையைத் தெரிக்கும் ஞானபாதமாகிய சிவஞானபோத மென்னும் படல த்தை யனுக்கிரகம் பெற்றுத் தம்மாணாக்கர்களுக்கு உபதேசித்தருளினமையால் கயிலா யபரம்பரையில் எனவும், அங்குநின்றும் பரஞ்சோதிமுனிவர்கள் நிலவுலகிற்கு எழுந்த ருளினமையால் நீக்கப் பொருளில்வரும் இன்னுருபு தந்தும், அம்முனிவர்கள்பால் தாம் கேட்டருளிய பன்னிரண்டு சூத்திரங்களைத் தமதாசிரியரருளிய படித்தமிழில் பன்னி ரண்டு சூத்திரமாக்கிப் பொழிப்புரையும் வகுத்தருளித் தம்மாணாக்கர்களுக்கு உபதே சித்தருளினமையால் சிவஞானபோத நெறி காட்டும் எனவும், இரண்டு வயதிற்றானே யுண்மைப்பொருண் முற்றும் ஒருங்குணர்ந்தமையால் வாய்மையென வாளா கூறி யும், அவற்றை வழிவழி யுபதேசம்பெற்ற அருணந்தி சிவாசாரியார் முதலியோர் மெய் கண்டார் சந்ததியாராதலால் மெய்கண்டான் சந்ததிக்கு எனவும், தம்மை வழிபட் டோர்க்கு அப் பன்னிரண்டு சூத்திரங்களை முறையே விளக்கினமையால் மெய்ஞ் ஞான பானுவாகி யெனவும், அவரது திருமரபால் உண்மைஞானம் நிலைபெற்றுச் சை வம் தழைத்தோங்கி வருதலால் திருமரபு நீடூழி தழைக வெனவுங் கூறினர். சிலாத முனிவர் சற்புத்திரப்பேறு வேண்டுமெனச் சிவபெருமானை நோக்கி யாயிரந்தேவ ருடம் தவஞ்செய்து வருங் காலைப் பெருமானுமொழுந்தருளி யுமது கருத்தின்படிப் புத் ரப்பே றருளினோமென்று கூறிமறைந்தருளினர், அம்முனிவ ரதுகேட்டுப் பெருமகிழ் கூர்ந்து வேள்விசெய்தற் பொருட்டு நிலத்தையுழுங்கா லந்நிலத்தி லிருந்து நந்திதேவ ர்தோன்றி யருளினர் என்பது இலிங்கபுராண வரலாறு

"ஆங்கதன்பின்சிலாதமுனியமரர்கடம் பருவமாயிரமெய்யெல்லாம்-ஓங்குறுபுற் றுய்வளர்ந்தி யோகமுநல்லாதனத்தினெழியானுகித் - தீங்கறுமாதவமிகவுமியற்றுதல்கண் ணெமுருகிச்செழுந்தேனூற - மாங்குயின்மென்குதலைமொழி பங்கன்மழவிடையுகைத் துவந்தான்மன்னே, கண்ணேமுருகிக்களிக்குமாகந்தக் கடலினுளழுந்திமெய்விதிர்த்து -

வண்டுணவிரிந்தவள்ளிதழ்க்கொன்றை வார்சடையண்ணலைவணங்க - அண்டருங்கா ணுவிறையவன்மிகவு மகிழ்ந்தனனவன்முகநோக்கிப் - பண்டைவல்வினைகடொலைத் தமாமுனிவ வேட்டனபகர்தியென்றுரைத்தான். அறைந்திடக்கேட்ட மாதவமுனிவ னுயிழை பங்கவெந்நாளு - மிறந்திடாப் புதல்வற்றருதியென் றிரப்ப வெனதுகூறுக மெய்த் தவத்தோய் - சிறந்த மென் மழலைச்சிறுமகவைத் திகழ்தரவடைதி யென் றரு ளிக்-கறங்கு தெண்டிரைநீர்க் கங்கைதாழ் மவுலிக்கண்ணுதற் கடவுளேகினனல். ஏகிய பின்ன ரிருந்தவச் சிலாதனெச்சநன் கியற்றுவானெண்ணிச்-சேகறவுடுப்பு முகத்தகூன் கொழுவாற் றிருத்தகவுழுத நன்னிலத்தில் - ஒகையுற்றிடயா னுதித்தன னதுகண் டுவப் புடனமரர்க ளியாரும் - நாகிளந்தருவி னறுமலர்தூவி நவையற வழுத்தினர்பெரிதும்" என இலிங்கபுராணம் சிலாதர் பிள்ளை வேண்டிச் சிவனைநோக்கித் தவம்பண்ணின வ த்தியாயத்தில் வருதல்காண்க. (கக)

வேலப்பதேசிகர்.

எவ்வெவர்கோட்படுபொருளுமஞ்செழுத்தினடக்கியவற்றியல்புகாட்டி
மெய்வகையஞ்சவத்தையினுநிற்குமுறையோதுமுறைவிளங்கத்தேற்றி
யவ்வெழுத்தினுள்ளீடுமறிவித்துச்சிவபோகத்தழுத்திநாயேன்
செய்வினையுங்கைக்கொண்டவேலப்பதேசிகன்றாள்சென்னிசேர்ப்பாம்.

(இ-ள்.) எவ்வெவர் கோட்படுபொருளும் அஞ்செழுத்தின் அடக்கி-எவ்வெச் சமயத்தவராலுங் கொள்ளப்படும் பொருள்களையும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தில் அடக்கி, அவ ற்று இயல்பு காட்டி-அந்த ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் இலக்கணத்தினைத் தெரிவித்து, மெய் வகை அஞ் சவத்தையினும் நிற்கும் முறை ஓது முறை விளங்கத்தேற்றி-உடம்பில்வ கைப்பட்ட ஐந்தவஸ்தையிலும் நிற்கு முறையையும் ஓது முறையையும் ஐயமறத் தெ ளிவித்து, அ எழுத்தின் உள்ளீடும் அறிவித்து சிவபோகத்து அழுத்தி-அந்த ஸ்ரீ பஞ்சா க்கரத்தின் உட்கிடையாகிய சிவத்தையுந் தெரிவித்துச் சிவபோகத்தில் அழுத்தி, நா யேன் செய்வினையும் கைக்கொண்ட வேலப்பதேசிகன்தாள் சென்னிசேர்ப்பாம்-நாயி னுங் கடைப்பட்ட அடியேன் செய்யும் வினைகளையுங் கைக்கொண்டருளிய வேலப்ப தேசிகரது திருவடியை எமது சிரத்தில் இருத்துவாம்.

பதியே பொருள், ஆன்மாவே பொருள், பாசமே பொருளென்னும் எல்லாச் சமயத்தாராலுங் கொள்ளப்படும் பொருள்கள் பதிபசுபாசம் என்னு மூன்றனு ளடங்குத லால் எவ்வெவர் கோட்படு பொருளும் அஞ்செழுத்தி னடக்கியெனவும், பதியிலக்க ண மித்தன்மைத்து, பசுவிலக்கண மித்தன்மைத்து, பாசவிலக்கண மித்தன்மைத்து என ஞான நூன்முகத்தா லுணர்த்தினமையால் அவற்றியல்பு காட்டி யெனவும், இலா டத்தானத்தில் கருவிகளோடுங் கூடி நிற்குஞ் சகலசாக்கிரத்தில் அக்கருவிகளோடுங் கூடாதுநிற்கும் நின்மலசாக்கிரம், நின்மலசொற்பனம், நின்மலதுரியம், நின்மலதுரியா தீதம் என்னுஞ் சுத்தாவத்தைகளில் அச்சிபஞ்சாக்கரம் நிற்குமுறையும் அத்தானங் களில் நின்று உச்சரிக்குமுறையையும் அநுபவத்தால் விளக்கினமையால் மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை யோதுமுறை விளங்கத்தேற்றி யெனவும், அவ்வநுபவத்தால் மெய்யறிவைக் கொளுத்திச் சிவத்தோடிரண்டறக் கலந்தனுபவிக்கும் பேரின்பத்தழு த்தினமையால் அவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச் சிவபோகத்தழுத்தி யெனவும், தன்னிடத்து நிகழுஞ் செயல் சிவன்செயலென்று நின்றவழி அவன்செயலாகவே நிற்ற லால் நாயேன் செய்வினையுங் கைக்கொண்ட எனவுங் கூறினர். ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் பொருள் பதிபசுபாசம் என்பதை—

" அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்-பொருணூறெரியப் புகின்" எனவும்; பதியிலக்கணம் இத்தன்மைத்து என்பதை "அகரவுயிர்போலறிவாகியெங்கு-நிகரி லிறைநிற்குநிறைந்து" பசுவிலக்கணம் இத்தன்மைத்தென்பதை " சத்தசத்தைச்சாராத சத்தறியாதங்கணிவை-உற்றசதசத்தாமுயிர்" எனவும், பாசவிலக்கணம் இத்தன்மைதது என்பதை " அன்றளவி யுள்ளொளி யோடாவி யிடையடங்கி-இன்றளவு நின்றவிருள்" எனவும்வரும் திருவருட்பயனாலும், தன்னிடத்து நிகழுஞ் செயல் சிவன்செயலென்று நின்றவழியவன்செயல் என்பதை "கூறுநாவேமுதலாகக் கூறுங்கரணமெல்லாநீ - தே றும்வகைநீதிகைப்புநீ தீமைநன்மைமுழுதநீ-வேறோர்பரிசிங்கொன்றில்லை மெய்ம்மை யுன்னைவிரித்துரைக்கிற் - றேறும்வகையென்சிவலோகா திகைத்தாற்றேற்றவேண்டா வோ" எனவும்வருந் திருவாசகத்தாலுமுணர்க. ஏனையவற்றைக் குருமுகத்தாலறிக. உம்மை இறந்ததுதழீஇய உயர்வு சிறப்புப்பொருட்டு. எவரொவர் - எவ்வெர் எனவருதல் மரூஉ. (உ0)

மற்றையசிவநேசர்கள்.

மறைநான்கும்பயின்றொழுகியிட்டிகளும்பலவியற்றிமல்லன்ஞாலத்
திறவாதபுகழ்படைத்துமீசனிடத்தன்பிலரையெண்ணாதுள்ளம்
புறமோதிக்கொலைபயின்றுமதுமாந்துங்கொடும்பாவப்புலையரேனு
மறவாணன்றிருவடிக்கீழன்பினரேலவரெம்மையடிமைகொள்வார்.

(இ-ள்.) நான்கு மறையும் பயின்று ஒழுகி பல இட்டிகளும் இயற்றி-நான்கு வேதங்களையும் பழகி அந்நெறியிற் சென்று பலயாகங்களையுஞ்செய்து, மல்லல்ஞாலத்து இறவாத புகழ்படைத்தும்-வளமமைந்த நிலவுலகில் அழியாத புகழைப்பெற்றும், ஈசன் இடத்து அன்பிலரை உள்ளம எண்ணாது-சிவபெருமானிடத்தில் அன்பில்லாதவரை எமது மனங்கருதாது, புறம் ஓதி கொலைபயின்று மதுமாந்தும் கொடும்பாவப்புலையரேனும் - அறத்தாறல்லாத நூலைக்கற்றுக் கொலைத்தொழிலில் கைதேர்ந்து கள்ளைப்பருகும் கொடியபாவத்தையுடைய புலையராயினும், அறவாணன் திருவடிக்கீழ் அன்பினரேல் அவர் எம்மை அடிமை கொள்வார்-சிவபெருமானது திருவடியின் கீழ் அன்பினையுடையாரானல் அவர்கள் எங்களை வழியடிமையாகக் கொள்ளாநிற்பார்.

மறைநான்கும் என்றமையால் புறம் என்றதற்கு அறத்தாறில்லாத நூல் என்றும் சொற்பிரபஞ்சமாகிய பாசஞானத்தால் இறைவனையுணர்தலரிதாதலால் ஈசனிடத்தன்பிலரையெண்ணாதுள்ளம் எனவும், பதிஞானமுடையவர் இறைவனையுணர்ந்தோர் ஆதலால் அறவாணன்றிருவடிக்கீழன்பினரேலவரெம்மையடிமைகொள்வார் எனவும் கூறினார்.

"பாசமாஞானத்தாலும் படர்பசுஞானத்தாலும்-ஈசனையறிய வொண்ணா திறையருண் ஞானகண்ணித்-தேசுறுமதனுன் முன்னைச் சிற்றறிவொழித்து தேர்ந்து-நேசமோ டுயர்பரத்து நிற்பது ஞானநிட்டை" எனவருஞ் சிவப்பிரகாசத்தாலும் " சங்கநிதிபதுமநிதி யிரண்டுந்தந்து தரணியொடு வானாளத்தருவரேனு-மங்குவாரவர்செல்வ மதிப்போமல்லோம்-மாதேவர்க்கேகாந்த ரல்லாராகில்-அங்கமெலாங் குறைந்தொழுகு தொழுநோயாரா-யாவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்-கங்கைவார் சடைக்கணிந்தார்க் கன்பராகில் அவர்கண்டீர் நாம்வணங்குங் கடவுளாவார்" எனவருந் திருநாவுக்கரசுகள் திருவாக்காலும் உணர்க. புலையர் என்றது அன்பில்லாத கீழ்மக்களை. (உக)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உக.

நூல்செய்தற்குக் காரணமும், இது வழிநூல் என்பதும்.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலென்
றிருநிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
திருவருட்குரியான்றவர் கூறியசிறப்பா
லுரிமையுற்றெழுமாசையானுரைத்திடலுற்றேன்.

(இ-ள்.) பொருவில் அம் கச்சி புராணம் வண்மை தமிழினில் புகல் என்று-(வடமொழியிலுள்ள) ஒப்பில்லாத அழகிய காஞ்சிப்புராணத்தைச் சிறப்பமைந்த தமிழ்மொழியினால் மொழிபெயர்த்துச் சொல்லாய் என்று, இருநிலம் புகழ் மணிமதில் கச்சிஏகம்பர் - பெரிய நிலவுலகு புகழும் இரத்தினமழுத்திய மதில்சூழ்ந்த கச்சியில் எழுந்தருளிய திருவேகம்பரது, திரு அருட்கு உரிய ஆன்றவர் கூறிய சிறப்பு ஆல்-திருவருட்கு உரியபெரியோர் வினவிய மேன்மையால், உரிமை உற்று எழும் ஆசையான் உரைத்திடலுற்றேன்-அத்தொழிற்கு உரிமைபூண் டெழுந்த விருப்பத்தால் சொல்லத் தொடங்

வண்டமிழினில் என்றமையால் வடமொழியிலுள்ளவெனக் கூறினும். கச்சித்திருநகரிலுள்ள ஆன்ற்றோர்கேட்க வடமொழியிலிருந்து இந்நூல் செய்யத்தொடங்கினேன் என்பது இச்செய்யுளின் கருத்தாதலால் நூல்செய்தற்குக் காரணமும், இது வழிநூலென்பதும் இதனாற்கூறப்பட்டன. உரிய என்னும் பெயரொச்சத்தி னீறுதொக்கு நின்றது.

அவையடக்கம்.

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேலவையருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்நம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும்.

(இ-ள்.) மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம் ஆயவேல்-அசுத்த மாயாகாரியமாகிய சிலைதருமுதலிய பொருள்களும் எமது பெருமானார் திருவுருவமாகில், அவை அருள்மயமாகும் - அவைகள் திருவருள்வடிவமாகும், அதுபோல் பேயனேன பிதற்று உரையும் - அதனைப்போலப் பேய்போன்ற அடியேன் பிதற்றிய சுத்த மாயா காரியமாகிய மொழிகளாலமைந்த செய்யுள்களும், ஏகம்பர் தம்பெருமை தூயகாதை உள் உறுதலால் துகள் அற தோன்றும் - திருவேகம்பரது பெருமை அமைந்த குற்றமில்லாத சரித்திரம் தம்முள் அமைதலால் அவை குற்றமற விளங்கும்.

தத்துவங்கள் சுத்தம், மிச்சிரம், அசுத்தம் என மூவகைப்படுதலால் மாயையும் முத்திறப்படும் அதனால் சுத்த மாயாகாரியம், அசுத்த மாயாகாரியம் என்றும். மாயாகாரியமாகிய சிலைதருமுதலிய பொருள்கள் சிவபெருமான் திருவுருவங்களாயின் அவை அருள்வடிவம் என்றாரேனும் அவயவத்தைக்கருதிய வயவி கூறினாராதலால் கரசரணாதி முதலிய வுறுப்புகள் அருள்வடிவெனக்கொள்க. "உருவருள்குணங்களோடு முணர்வருளுருவிற்றோன்றுங் - கருமமுமருளரன்றன் கரசரணாதிசாங்கம் - தருமருளுபாங்க மெல்லாந் தானருடனக்கொன்றின்றி - அருளுருவுயிருக்கென்றே யாக்கினனசிந்தனன்றே" எனவருஞ் சிவஞானசித்தியாராலுணர்க. மொழிகள் செய்யுள்மேல் நிற்றலால் கருவியாகுபெயர். அவயவத்தைக்கருதி அவயவி கூறுதல் மரபுவழுவமைதி. இது பிம்பப் பிரதிபிம்பபாவங்களை யெடுத்துக் காட்டுதலால் எடுத்துக்காட்டுவமையணி. மற்று - அசைநிலை. (உசு)

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தவைவகையிலக்கணவழுவுக்குக்காட்டாப்
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர்.

(இ-ள்.) 'பல்வகைச்சுவையும் கொழித்த நாவினர் ஆகிய வழுதபு குணத்தோர்,- பலவகைப்பட்ட சொற்சுவையையும் பொருட்சுவையையும் கொழித்த நாவினையுடையவராகிய குற்றத்தினின்று நீங்கிய குணத்தையுடைய மேலோர், எளியனேன் இழித்த சொல் புணர்த்து இயம்பிய கவியும் - அறிவிற்சிறிய நான் அம்மேலோர்களைந்த வழுக்களமைந்த சொல்லால் தொடுத்துக்கூறிய செய்யுளும், ஐவகை இலக்கணம் கழித்த வழுவுக்கு காட்டு ஆக - எழுத்துமுதலிய ஐவகை இலக்கணங்களுக்கமைந்த விதிவிலக்குகளில் விலக்கென்று விலக்கிய வழுவுக்கு உதாரணமாக, பழித்திடாது எடுத்து ஆளுவர்- இகழாது இதனை எடுத்து ஆளாநிற்பர்.

பலவகைச்சுவையாவன-சொற்சுவை, பொருட்சுவையென விருவகைப்படும். சொற்சுவை-குணம், அலங்காரம் என இருவகையாம்; பொருட்சுவை-காமம், கருணை, நகை, வீரம், உருத்திரம், அச்சம், குறிப்பு, வியப்பு, சாந்தம் என ஒன்பதுவகைப்படும். இழித்த சொற்களாவன-திணைவழு, பால்வழு, இடவழு, காலவழு, வினாவழு, விடைவழு, மரபுவழுவமைந்த சொற்கள். ஐவகை யிலக்கணமாவன-எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி. இவற்றின் வழுக்களுள் எழுத்துவழு- புணர்ச்சிவழு, சந்திவழு. சொல்வழு முன்னர்க்கூறியவை. பொருள்வழு திணைமயக்கு முதலிய பதினொன்கின் வழுக்கள். யாப்புவழு எழுத்துக்குற்றமுதலிய அறுவகைக்குற்றங்கள். அலங்காரவழு பிரிபொருட்சொற்றொடர்வழு, மாறுபடுபொருண்மொழிவழு, மொழிந்தது மொழிவழு, கவர்படுபொருண்மொழிவழு, நிரனிறைவழு, சொல்வழு, யதிவழு, செய்யுள்வழு, சந்திவழு. ஆன்றோர், கல்வியினுண்ணறிவிலலாரியற்று நூலைத் தாமிகழில் பலரும் இகழ்வரே, அதனால் அவன் நன்குமதிப்படையானேயெனறு கருணைகூர்ந்து அந்நூலைப்பாராட்டல் வழக்கு ஆதலால் பல்வகைச்சுவையுங் கொழித்த நாவினராகிய வழுத்தபுகுணத்தோர் பழித்திடாதெடுத்தாளுவர் எனவும், அதுவுங் கற்போர்க்கு ஓர்பயன் கருதியாதலால் கழித்தவை வகையிலக்கண வழுவுக்குக்காட்டா எனவுங்கூறினார். அவமதித்தலில்லாமையால் ஆன்றோரை யுயர்த்திக்கூறினமையில் இன்மை நவிற்சியணி. (உ௪)

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யுட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொள்வரென்பதுபற்றி
விழுத்தநாணினேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன்.

(இ-ள்.) எழுத்துப்போலியும் எழுத்து என்ன ஆளுவர் - எழுத்துப்போலியையும் எழுத்தென்று கைக்கொள்வர், அதுபோல் புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுள் போலியையும் - அதனைப்போல புழுநெளிந்த வுடலினையுடைய நாயினுங் கடைப்பட்ட அடியேன் பிதற்றிய போலிச்செய்யுளையும், பழுத்த கேள்வியோர் கைக்கொள்வர் என்பதுபற்றி - சுவைகனிந்த நூற்கேள்வியையுடைய பெரியோர் எடுத்தாள்வர் என்பது கருதி, விழுத்த நாணினேன் சிவகதை விளம்புதற்கு இசைந்தேன் - நாணினின்று நீங்கிய யான் சிவகதை சொல்லுதற்குத் தொடங்கினேன்.

எழுத்துப்போலியாவது போலிச்சரக்கைப்போல அய் ஐ எனவும், அ இ ஐ எனவும், அவ் ஔ எனவும், அ உ ஔவெனவுங்கொள்ளுதல். நாணவிழுத்தினேன் என்

பது விழுத்த நாணினேன் எனவந்தது பொருத்தமில்புணர்ச்சி, விழுத்தினேன் என்பத னிறுதியில் நின்ற விகுதியைப் பிரித்து நாண் என்பதனோடு புணர்த்தினமையால். முத லுக்குஞ் சினைக்கும் ஒற்றுமையுண்மையால் சினைவினையை முதல்மேலேற்றிப் புழுத்த நாயினேன் எனவும், போலிச்சரக்குக் கொள்வோர்சகு ஒருவாறு பயன்படுதல்போல இதுவுங் கற்போர்க்கு ஒருவாறு பயன்படுதல் கருதி ஆன்றோர் கொள்வார் என்பார் பித ற்றிய செய்யுட்போலியையும் பழுத்த கேள்வியோர் கைக்கொள்வர் எனவும், என் சிறு மையைநோக்கிக் கற்றோ ரவையிலடங்கி யொழுகாது நானுங் கற்றோருளொருவனாக க்கருதிப் பெருங்காப்பியஞ்செய்யப் புகுந்தேன் என்பார் என்பதுபற்றி விழுந்த நாணி னேன் சிவகதை விளம்புதற்கிசைந்தேன் எனவுங் கூறினார், இவ்விரண்டுசெய்யுளினும் பழித்திடாதெடுத்தாளுவர். "பழுந்தகேள்வியோர்கைக்கொள்வர்" என்றது நிறையவை யுடையோர் செயலென வுணர்க. "நலனடக்கஞ்செம்மை நடுநிலைமைநான்கும்-குலனெ ன்றிவையுடையோர்கோதில் - புலனில்லோர் - சென்றுமொழிந்தனவுங்கேட்டோாசெ றிந்தவிடம் - அஃன்றோநிறைந்தவவை." எனவருஞ் சங்கச்செய்யுளாற்காண்க. (உரு)

> நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
> னெறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
> கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
> குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால்.

(இ-ள்.) நெறிவழாத உமை பூசனைபோல்-சைவாகமநெறியினின்றும் வழுவாத உமையம்மையின் பூசையைப்போல, நெறிபிறழ்ந்தோன் எறிதருங் கல்லும் கைக்கொ ள்ளும் கச்சி எம்பெருமான்கு - சைவாகமநெறியினின்றும் நீங்கிய சாக்கியநாயனர் எறி ந்த கல்லையும் கைக்கொண்டருளிய காஞ்சியில் எழுந்தருளிய எமது சிவபெருமானு க்கு, அறிவின்மே லவர் காப்பியப் பனுவல்போல் - அறிவில் மேம்பட்டோரியற்றிய பெருங்காப்பிய மென்னும் நூல்போல, அறிவின் குறியிலேன் புன்சொல் கவி உம் கொள்வது வழக்கு - கல்வியறிவென்று சொல்லப்பட்டவைகளுள் ஒருகுறியுமில்லாத அடியேன் புன்சொல்லால் தொடுத்த கவியையும் ஓர் கவியாகக் கைக்கொண்டருள்வது ம் அவர்க்கு ஓர் வழக்காகும்.

காஞ்சித்திருப்பதியில் உமையம்மையார் சைவாகமத்தின் விதிவழித் தமக்குச் செய்தருளிய பூசையைப்போலச் சாத்தமங்கையில் திருவவதாரஞ்செய்து பௌத்தசம யத்தில் நின்ற சாக்கியநாயனார் உளங்போடு எறிந்த கல்லையும் ஆகமத்தில் விதித்த மல ராகக்கொண்டருளினர் பெருமானா என்பார் நெறிவழாவுமைபூசனைபோனெறிபிற ழ்ந்தோன் - எறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்கு எனவும், தம்மேற் கல் வியறிவின் மேம்பட்டோர்செய்த காப்பியத்தைக் கைக்கொண்டருள்வதுபோலக் கல் வியறிவு சற்றுமில்லாத சிறியேன் புன்சொல்லாற்றொடுத்த காப்பியத்தையுங் கைக்கொ ண்டருள்வது வழக்கென்பார் புன்சொலுங்கொள்வது வழக்கால் எனவும், இது ஒருகா ப்பியமன்று என்பார் கவிப்புன்சொல் எனவுங்கூறினார். சாக்கியநாயனார் எறிந்த கல்லை மலராகக்கொண்டருளினர் என்பதை "கல்லாலேயெறிந்ததுவு மன்பானபடிகாணில், வில்வேடர்செருப்படியுந் திருமுடிமேல்மேவிற்றால், நல்லார்மற்றவர்செய்கை யன்பா லேயந்ததனை, அல்லாதார்கல்லென்பாரரனார்க்கஃதலராமால்" எனத் திருத்தொண்ட ர்புராணத்தில் வருதல் காண்க.

அவையடக்கமாவது நிறையவையிலுள்ள புலவர் பலர்க்கும் வழிபடுகிளவியாக அட ங்கிக்கூறுதல். அதனை இங்கு "மாயைகாரியவுருக்களும்" என்னுஞ் செய்யுள் முதலாக "நெறிவழாவுமைபூசனை" என்னுஞ் செய்யுளீறாக நான்குசெய்யுள்களாற் பலபடக்கூறி

ஞர். தொல்காப்பியம் செய்யுளியலில் "அவையடக்கியலேயரிறபத்தெரியின் - வல்லார் கூறினும் வருத்தனர்கொண்மினென்-றெல்லாமாந்தர்க்கும் வழிமொழிந்தனரோ" எனவரு ஞ்சூத்திரத்தால் அவையடக்கவிலக்கணமுணர்க. அவையடக்கம் என்பதற்கு இவ்வா றன்றித் தமது வழிபடுகிளவியால் அவையிலுள்ளோர் தமது செய்யுட்குக் குற்றங் கூறு தடங்கச்செய்தல் எனப் பொருள்கூறுவாரும் உண்டு. முன்னர்க்கூறிய செய்யுளும் இதுவும் எடுத்துக்காட்டுவமையணி. (உசு)

அவையடக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உசு

## நூற்சிறப்புப்பாயிரம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அருட்பணிக்குரியமயேச்சுரர்முதலாநால்வருநருகவென்றறைய
மருட்பகைதுமிக்குங்காஞ்சிமான்மியத்தைவழங்குதென்மொழியினுலுரை
கருப்பகையிரிக்குஞானமுமேனைக்கலைகளுங்கரிசறப்பயின்ற
மருப்பொழிலுடுத்தவாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே. [த்தான்

(இ-ள்) கருபகை இரிக்கும் ஞானமும் ஏனை கலைகளும் கரிசு அற பயின்ற - பிறப்பாகிய பகையை ஒழிக்கும் சிவஞானநூலையும் அதுஒழிந்த மற்ற நூல்களையும் ஐயம் திரிபறப்பழகிய, மருபொழில் உடுத்த ஆவடுதுறையில் வாழ் சிவஞான மாதவன்-வாசமிக்க சோலைசூழ்ந்த திருவாவடுதுறையில் வசித்தருளும் சிவஞானம் என்னும் திருநாமம்வாய்ந்த பெரியமுனிவர், அருள் பணிக்கு உரிய மயேச்சுரர் முதலாக நால்வரும் தருக என்று அறைய - திருவருளடைதற்குரிய திருப்பணியில் முயலும் மயேச்சுரர் முதலிய நால்வரும் புராணஞ்செய்து தருகவென்று வினவ, மருள் பகை துமிக்கும் காஞ்சி மான்மியத்தை வழங்கு தென்மொழியினுல் உரைத்தான் - அடைந்தோர் மலப்பகையை ஒழிக்கும் காஞ்சித்திருப்பதியின் மான்மியத்தை எப்பொழுது நிலைபெறுந் தென்மொழியால் மொழிபெயர்த்துப் பாடி அருளினர்.

மயேச்சுரர் முதலா நால்வர் என்றது மயேச்சுரர் நாற்பத்தெண்ணுயிரவர், எழுநூறு திருமடத்து முனிவர்கள், தில்லைவாழந்தணர் மூவாயிரவர், திருத்தொண்டுசெய்யுந் திருப்பேரேழாயிரத்துத் தொள்ளாயிரவர்களை. இவ்வாறன்றித் தாதமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கமென்னு மிம்மார்க்கங்களினிற்கும் நால்வர் எனவுங் கூறுவர். மயேச்சுரர் முதலா நால்வர் என்றதை "தில்லைமாநகர்வாழவாழ்தவசிந்தையந்தணராறைஞ்நூறு, நல்லதும்பலமடபதிதவராசரிசைகையிலுள்ளபேர், எல்லையில்லவரியாவருங்களிகொளவிளங்கசரீரிவாக், கொல்லைவந்தெழவனைவருங்கரமுச்சிவைத்துளமுருகினர்" எனச் சேக்கிழார்நாயனார்புராணத்தில் வருதல் காண்க.

இது சிறப்புப்பாயிரம் ஆதலில் சிவஞானமாதவன் என்றதனால் ஆக்கியோன்பெயரும், காஞ்சிமான்மியம் என்றதனால் நூல்வந்தவழியும், தென்மொழி என்றதனால் வைகையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின்மேற்குமாகிய சோழநாடென்னும் அகப்பாட்டெல்லையும், தென்மொழியினுலுரைத்தான் என்றதனால் நூற்பெயரும், மான்மியம் என்றதனால் நூல் நுதலியபொருளும், வழங்கு தென்மொழியென்றதனால் தமிழ்நூலை முறையாகக்கற்றோரே இந்நூல் கேட்கற்பாற்றென்னும் யாப்பும், அவரோ கேட்டற்குரியார் என்னும் அதிகாரிகளும், மருட்பகை துமிக்கும் என்றதனால் நூற்பயனும், மயேச்சுரர் முதலா நால்வர் என்றமையால் காலமும், தருக

என்றதனால் நூல்செய்தற்குக் காரணமும், காஞ்சியென்றதனால் நூலரங்கேற்றிய களனும் என்னும் அப்பாயிரத்தினிலக்கணங்களெட்டோடும், அத்துணைச் சிறப்பிலவாகிய காலமுங் களனுங் காரணமும் இதனாற் கூறப்பட்டன.

"மன்றவாணன்மலர்திருவருளால் - தென்றமிழ்மகிமைசிவணியசெய்த - அடியவர்கூட்டமுமாதிச்சங்கமும் - படியின்மாப்பெருமைபரவுறுசோழனும் - சைவமாதவருந்தழைத்தினிதிருக்கும் - மையறுசோழவளநாடென்ப" என்னுஞ் சூத்திரத்தால் எல்லையறிக. சோணாடு என்பது இமயமலைக்குத் தென்பாற்பட்டதாதலால் தென்றமிழ் என்றார். "தென்றில்லைமன்றினுளாடி போற்றி" எனப் பெரியோர்பணித்தருளினமையாலுமுணர்க. (உஎ)

நூற்சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

முதற்காண்டம்

# திருநாட்டுப்படலம்.



---

கலிநிலைத்துறை.

பணங்கொள்பாம்பணிகம்பனார்பணிவரைபயந்த
வணங்கினோடென்றுமமர்ந்தினிதரசுவீற்றிருக்கு
முணங்கரும்புகழ்க்காஞ்சியையகந்தழீஇயும்பர்
வணங்கமேவரும்பாலிநாட்டணிநலம்வகுப்பாம்.

(இ-ள்.) பணம் கொள் பாம்பு அணி கம்பனார் - படம்வாய்ந்த சர்ப்பாபரணத்தை அணிந்த திருவேகம்பனார், பணிவரை பயந்த அணங்கினோடு என்றும் அமர்ந்து இனிது அரசு வீற்றிருக்கும் உணங்கரும் புகழ் காஞ்சியை அகம் தழுவி - இமயமலைபெற்ற உமையம்மையோடு எந்நாளும் விரும்பி இனிதாக அரசுசெய்து நிகரின்றி இருக்கும் கெடுதலில்லாத புகழ்வாய்ந்த காஞ்சியைத் தன்னுள் தழுவி, உம்பர் வணங்க மேவரும் பாலிநாடு அணிநலம் வகுப்பாம் - விண்ணுலகு வணங்கும்படி நிலைபெற்ற பாலிநாட்டின் சிறப்பையும் வளத்தையும் இனிக் கூறுவாம்.

உலகினைச் சுமக்கும் ஆற்றலுடையதென்பதுதோன்றப் பணங்கொள் எனவும், தேவதாருவனமுனிவர் தம்மைக்கொல்ல வேவிய பாம்பை ஆபரணமாகக்கொண்டருளிய வரம்பிலாற்றலுடைமைதோன்றப் பாம்பணிகம்பனார் எனவும், ஆன்மாக்களுக்குப் பாகம் உறுத்தப் போகமுண்டாக்குதற்கென்பதுதோன்றப் பணிவரைபயந்த அணங்கினோடென்று மமர்ந்தினிதரசுவீற்றிருக்கும் எனவும், மகாபிரளயகாலத்து மழிதலின்மைதோன்ற உணங்கரும்புகழ்க் காஞ்சியெனவும், மற்றைத் திருப்பதிகளையுமன்றிக் காஞ்சித்திருப்பதியையுந் தன்னுள் தழுவிநிற்குந் தலைமைதோன்ற அகந்தழீஇயும்பர்வணங்க மேவரும் பாலிநாடு எனவும், மாடநிரைகளாலும் மேம்படு குடிகளாலும் பொலிவுடையதோடு நாடுபடுதிரவியமுதலிய வளங்களு மிக்குடையதென்பதுதோன்ற அணிநலம் எனவுங்கூறினார். முனிவர்கொல்ல வேவிய பாம்பு என்றதை "ஏந்தியபின்னர்வேள்வியெரியழற்கிடையேயெண்ணில், பாந்தளங்கெழுந்துதீயோர்பணியினாற்சீற்றத்தோடும், போந்தனவவற்றைமையோன்புள்ளினுக்கஞ்சித்தன்பால், சேர்ந்திடுபணிகளோடுஞ்செவ்விதிற்புனைந்தானெங்கோன்" எனவருங் காந்தத்தாலும்; நாடுபடுதிரவியமுதலியன "செந்நெல்செவ்விளநீர்சிறுபயறு - கன்னல்கதலியெனப்பெயர்பெற்ற - வை

ந்துநன்னூட்டமைந்த திரவியம். கண்ணாடி பித்தன்கருங்குரங்குகாட்டானே-மண்ணாளும் வேந்தனுடைந்த திரவியம். அகில்கறிகோட்டமொடுதக்கோலங் - குங்குமமைந்துமலை படுதிரவியம். அரக்கிருலின்றேனணிமயிற்பீலி-உப்புக்கடல்படுதிரவியமைந்தே. பவள முத்துச்சங்கொக்கோலை - உப்புக்கடல்படுதிரவியமைந்தே" எனவரும் பிங்கலந்தையா லும் உணர்க. இது கைக்கிளைப்புறனாகிய பாடாண்டிணையுள் நாடுவாழ்த்துத்துறை.(௬)

கடல்கடைந்திடச் செல்லுறாஉம்வெள்ளைமால்கடுப்பப்
படலைவெண்முகில்பரவைநீருழக்கிவாய்மடுத்து
விடமெழுந்தெனமீண்டவம்மாயனைவிழைய
வுடல்கறுத்துவிண்ணெறிப்படர்ந்தொய்யெனமீண்டு.

(இ-ள்.) படலை வெள் முகில் - திரண்ட வெள்ளிய மேகங்கள்,கடல் கடைந்தி ட செல்லுறும் வெள்ளை மால் கடுப்ப - கடல்கடையச்செல்லும் வெள்ளிய திருமாலை ஒப்ப, பரவை நீர் உழக்கி வாய்மடுத்து - கடல்நீரைக்கலக்கி உண்டுதேக்கி, விடம் எழு ந்தது என்ன மீண்ட அ மாயனை விழைய உடல் கறுத்து - விஷமானது பாற்கடலினி ன்றும் எழுந்ததென்று திரும்பிய அத்திருமாலை ஒப்ப உடம்பு கறுத்து, ஒய்யென விண் நெறி படர்ந்து மீண்டு - விரைந்து ஆகாயத்தின் வழிசென்று திரும்பி.

"கெடுப்பதூஉங்கெட்டார்க்குச்சார்வாய்மற்றாங்கே-எடுப்பதூஉமெல்லாமழை" என நாயனாரெடுத்துக்கூறிய முறையால் தாங்குதற்றொழிலில் உலகினைத்தாங்கு நிலங் கடந்த நெடுமுடியண்ணலை யுவமையாகக்கூறினார். சுரரும் அசுரரும் வாழ்நாள்வேண் டித் திருமாலைக் குறையிரந்தபோது அத்திருமால் கடல்கடைந்து அமுதுதவுறபொரு ட்டு அச்சுரர்முதலியவரோடு செல்லும்போது வெண்ணிறமுடையரா யிருத்தலால் கட ல்கடைந்திடச் செல்லுறாஉம் வெள்ளைமால்கடுப்பப் படலைவெண்முகில் எனவும், அத் திருமால் மந்தரகிரிமுதலியவற்றை மத்துமுதலிய துணைக்கருவிகளாகக்கொண்டு கடல் கடையும்போது விஷந்தோன்ற வுடல்கறுத்துத் திரும்பியதுபோலப் பரவைநீருழக்கி வாய்மடுத்து விடமெழுந்தென மீண்டவம்மாயனைவிழைய-உடல்கறுத்து மீண்டு எனவுங் கூறினதால் பண்புந்தொழிலும்பற்றிவந்த எடுத்துக்காட்டுவமையணி. எழுந்தென தொ குத்தல் விகாரம். திருமால்வெண்ணிறமுடைமையும் பின்பு கருநிறமுடைமையும் "வரு கனல்வல்விடந்தாக்கியாயவன்வெண்ணிறமேனி - கருகினனன்றுதொடங்கிக் கரியனென ப்பெயர்பெற்றான்- திருமலரோனுடற்பொன்மை தீர்ந்துபுகைநிறமுற்றான் - வெருவுதி சைக்கிறையோரும்வேற்றுருவெய்தியமுதார்" என இந்நூலில் வருதல் காண்க. இதுமு தல் தனது கீர்த்தியென்பதுகாறும் பாடாண்டிணையுள் மழைவாழ்த்துத்துறை. (௨)

அற்றைஞான்றுமால்கயிலையைச்சரணடைந்தாங்குப்
பொற்றநந்தியஞ்சாரல்சூழ்பொருப்பினைக்குறுகிக்
கற்றைவார்சடைச்சுந்தரன்கடவவான்மதுரை
முற்றுநான்முகிலெனவரைமுழுவதும்பொதிந்து.

(இ-ள்.) மால் அற்றை ஞான்று கயிலையை சரண் அடைந்தால் ஆங்கு - திரு மால் அந்நாளில் திருக்கயிலையைச் சரண் அடைந்தாற்போல, பொற்ற அம்சாரல் சூழ் நந்தி பொருப்பினை குறுகி - பொற்கட்டிகளையுடைய அழகிய சாரல் சூழ்ந்த நந்திமலை யை அடைந்து, கற்றை வார்சடை சுந்தரன் கடவ - நீண்ட சடாபாரத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் செலுத்த, வான் மதுரை முற்றும் நால் முகில் என்ன வரைமுழுவ தும் பொதிந்து-பெரிய மதுரைத்திருநகர் முழுதும் நான்குமேகங்களும் மூடியதுபோ ல அந்நந்திமலை முழுவதும் மூடி.

விஷத்தால் நிறமாறிய திருமால் திருக்கயிலையையடைந்தாற்போலக் கடல்நீருண் டமையால் நிறங்கருகிய மேகம் நந்திமலையையடைதலாலடைந்து எனவும், வருணனே விய சத்தமேகங்களின் வீறடக்கச் சோமசுந்தரக்கடவுள் அபிடேகபாண்டியன் வேண்டு கோளால் சடாபாரத்திலணிந்த புட்கலாவர்த்தமுதலிய நான்குமேகங்களையேவ, அம்மே கங்கள் மதுரையைச் சூழ்தல்போல இம்மேகங்கள் நந்திமலையைச் சூழ்தலால் சூழ்ந்து எனவும், தொழில்பற்றிவருதலால் தொழில்பற்றிவந்த எடுத்துக்காட்டுவமையணி. அடை ந்தாங்குதொகுத்தல் விகாரம். பொற்ற பொருளடியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெ ச்சம். நான்குமேகங்களு மதுரையை மூடியதுபோலென்றதை "வந்துநான்மாடமாகி வளைந்துநாற்றிசையுஞ்சூழ்ந்து - சந்துவாய்தெரியாதொன்றித் தாமொருகுடிலாய்மாடப் - பந்திகோபுரஞ்செய்குன்றங் கால்கள்போற்பரிப்பப்போர்த்த - விந்துவார்சடையோனே யவெழிலிமாநகரமெங்கும்" எனவருந் திருவிளையாடற்புராணத்தாலுணர்க. (௩)

முரிந்தவெண்டிரைக்கருங்கடன்முகட்டினைக்குழித்து
விரிந்தவெள்ளநீர்மடுப்புழிக்கரந்துடன்மேவிக்
கரிந்திடத்தனைச்செய்ததீவடவையின்களவைந்
தெரிந்துவில்லுமிழ்தடித்தெனத்திசைதொறுஞ்சிதறி.

(இ-ள்.) முரிந்த வெண் திரை கருங்கடன் முகட்டினைக் குழித்து விரிந்த வெ ள்ளநீர் மடுப்புழி - கரையொடுமோதி முறிபட்ட வெள்ளிய அலைகளையுடைய கரிய கடலின்முகட்டைக் குழிபடவாங்கிப் பரந்தநீர் வெள்ளத்தைப் பருகுமிடத்து, கரந்து உடல்மேவி தன்னை கரிந்திட செய்த வடவைத்தீயின் களவை தெரிந்து - ஒளித்துத் த ன் மேனியிற்புகுந்து தன்னைக் கருகச்செய்த வடவாமுகாக்கினியின் களவினையறிந்து, வில் உமிழ் தடித்து என்ன திசைதொறும் சிதறி-(அத்தீயினை) பிரகாசத்தை வீசும் மின் னலென்று கூறத் திசைகள்தோறு மின்னலை வீசி.

மடுப்புழி "வினைசெயல்வகை" என்றாற்போல நிற்றலால் மடுப்பு என்னும் தொ ழிற்பெயர் பெயரெச்சப்பொருளில் வந்தது. மேகம் மின்னல் வீசியதைத் தன்னை வஞ் சித்துத் தன்னுட்புகுந்த வடவாமுகாக்கினியின் களவையறிந்து அதனை வெளிப்படுத்தி யதை யொக்குமெனக் கூறுதலால் தற்குறிப்பணி. தன்னை வஞ்சித்த வடவாமுகாக்கி னியோடு போர்கொள்ளக் கருதினமையால் உழிஞைத்திணையுள் உழிஞை. (௪)

கான்றவக்கனன்மீட்டடையாவகைகருதி
வான்றனிற்குனிசிலையெனத்தடையினைவயக்கி
யேன்றநீயினியெதிர்த்தனையாயிடினின்னே
யூன்றனோடுயிர்குடிப்பலென்றுருமொலியெழுப்பி.

(இ-ள்) கான்ற அக்கனல் மீட்டு அடையாதவகை கருதி - தாங்கக்கிய அந்த த்தீ மீளத் தன்னை யடையாவண்ணங் கருதி, வான் தன்னில் குனிசிலை என்ன தடை யினை வயக்கி - ஆகாயத்தில் வளைந்த வில்லென்று சொல்லத் தடையாக இந்திரதனு சை விளங்கச்செய்து, ஏன்ற நீ இனி எதிர்த்தனையாயிடின் - எதிர்த்த நீ இனி என்னை எதிர்ப்பாயானால், இன்னே ஊன் தன்னோடு உயிர் குடிப்பல் என்று உரும் ஒலியெழு ப்பி - இப்பொழுதே உனது உடலோடும் உயிரைக் குடிப்பேனென்று இடி ஒலியை எழுப்பி.

இனி இன்னனவர்ததுமருஉ. கனல் என்றது கோடைத்தீயை. "வெங்கதுயர்க் கோடைமாத்தலைகரப்ப" என்றருளினர் பெரியோரும். ஊன் கருவியாகுபெயராய் உட ல்மேல் நின்றது. இது தற்குறிப்பணியும்; சிலையெனத்தடையினை வயக்கியெனவும், உயி ர்குடிப்பலென்றுருமொலியெழுபபியெனவும் உபமானத்திலுபமேய தருமத்தை யாரோ

பிக்கப்படுதலால் பதப்பொருட்காட்சியணியுங் கலந்துவருதலால் கலவையணி. வெளிப் படுத்திய அவ்வடவாமுகாக்கினியைநோக்கி நானிட்ட எல்லையைக்கடந்து நீ எதிர்ப்பா யாகில் உன்னுடலோடுயிரைக் குடிப்பேனென்று கூறியது வஞ்சித்திணையுள் நெடுமொ ழி வஞ்சித்துறை. (௫)

மோதுதெண்டிரைப்புனலளக்க
ருடுத்தபாரிலுன்கிளையெலாமுதலறவொருங்கே
படுத்துநின்வலிபாற்றுவன்யானெனப்பகைமை
தொடுத்தவெஞ்சினங்கொண்டழன்மேலமர்தொடங்கி.

(இ-ள்) அடுத்து அடுத்து அலைமோது தெண்டிரைப்புனல் அளக்கர் உடுத்தபா ரில் - கரையினை அடுத்து அலைகள் மோதும் தெள்ளிய அலைவாய்ந்த நீர்மயமாகிய கடல் சூழ்ந்த நில உலகில், உன் கிளை எல்லாம் முதல் அற ஒருங்கே படுத்து யான் நின்வலி பா ற்றுவன் என்ன - உனது உறவினரை எல்லாம் வேரோடு அற ஒருசேரக்கெடுத்து யா ன் உனது வலிமையைக் கெடுப்பேனென்று, பகைமை தொடுத்த வெம் சினம் கொ ண்டு அழல்மேல் அமர்தொடங்கி - பகையால் மூண்ட கொடிய கோபங்கொண்டு அவ் வடவைத்தீமேல் போர்த்தொழில் தொடங்கி.

பகைமை "இரண்டினை இருமையென்றாற்போலக் குணியைக் குணமாகக்கூறி யது மரபுவழுவமைதி. இது தற்குறிப்பணி. துறை அது. வலிபாற்றுவன் செயப்படு பொருளை வினைமுதல்போல் வைத்துக்கூறினமையால் கருமகருத்தா. (௬)

விச்சைமந்திரவலியினால்வீங்குநீர்மழையை
வச்சிரக்கணையாக்கிமெய்வளமெனக்கருளும்
பொச்சமின்மறைவேள்வியும்புனிதனேந்தழலு
மெச்சமாகமற்றெவையுமீண்டறுக்கெனவியம்பி.

(இ-ள்.) மந்திர விச்சை வலியினால் வீங்கு நீர் மழையை வச்சிரக்கணை ஆக்கி - மந்திரவித்தையின் வல்லமையால் மிக்க நீர்மயமாகிய மழைத்துளியை வச்சிரபாணமா க்கி, மெய்வளம் எனக்கு அருளும் பொச்சம் இல் மறை வேள்வியும் புனிதன் ஏந்து அழ லும் எச்சமாக - உண்மையாக வளங்களை எனக்குக்கொடுக்கும் பொய்மை இல்லாத வேதவிதிப்படி செய்யும் யாகமும் சிவபெருமான் ஏந்திய தீயும் ஒழிய, எவையும் ஈண்டு அறுக்க என்ன இயம்பி - எந்த நெருப்பையும் இந்நிலவுலகில் அறுக்கக்கடவாயென்று அம்மழைத்துளிக் கணைக்குக் கூறியேவி.

"வேள்விநற்பயன்வீழ்புனலாவது" என ஆளுடையபிள்ளையார்புராணத்தில் வரு தலால் மெய்வளமெனக்கருளும் பொச்சமின்மறை வேள்வியும் எனவும், தேவதாருமுனி வரேவிய வேள்வியின்முத்தீ யாவையும் அழிக்கும் வன்மையையுடையதா யிறைவனை லன்றி மற்றையவற்றாலழியு மியல்பின்மையையுடைமையால் புனிதனேந்தழலும் என வும்; இவ்விரண்டையுமழித்த லவற்றுக்கு இயலாதாகையால் எச்சமாக எனவுங்கூறினார். மற்று வினைமாற்றுப்பொருளில் வந்த விடைச்சொல். ஏவி சொல்லெச்சம். அறுக்கென வியங்கோளீறுதொகுத்தல். தேவதாருவன முனிவரேவிய வேள்வியின்முத்தீ இறைவ னலன்றி மற்றையவற்றாலழியு மியல்பின்மையுடைமையை, "முயலகன்றன்னைநோக்கி முகமனுஞ்சொற்றத்தங்கள், செயலகன்றிருந்தவேள்வித் தீயையும்விளித்துநந்தம், இய லகன்றிடவேசெய்த வீசனைமுடித்திரென்றே, மயலகன்றிலாதாருய்ப்ப வல்விரைந்தணை ந்தவம்மா. வன்னியந்தேவுமுட்க வந்திடுகனலையார்க்கும், முன்னவனொருகையேந்தி" எனவருங் காந்தபுராணத்தாலறிக. (௭)

காட்டகங்களுங்கழைநரல்கதிர்மணிச்சிமயக்
கோட்டகங்களுங்குளிர்புனற்கழனிசூழ்குலவு
நாட்டகங்களும்பரன்முரம்படுத்தெரிநடஞ்செய்
மோட்டகங்களுமுழுவதுங்குளிர்கொளச்சொரிந்து.

(இ-ள்.) காடு அகங்களும் கழை நரல் கதிர்மணி சிமயம் கோடு அகங்களும் - காட்டினிடங்களும் மூங்கில் நெருங்கியொலிக்கும் ஒளிவாய்ந்த முத்துகளையுடைய சிகரங்களையுடைய மலையினிடங்களும், குளிர் புனல் கழனி சூழ் குலவும் நாடு அகங்களும் பரல் முரம்பு அடுத்து எரி நடம் செய் மோடு அகங்களும்-குளிர்ந்த நீர் நிறைந்த வயல்கள் சூழ்ந்து விளங்கும் நாட்டினிடங்களும் பருக்கைக்கல்லுகள் அமைந்த முரம்பினை அடுத்துத் தீத்திரள்களைக் கொப்புளிக்கும் பாலைநிலமாகிய இடங்களும், முழுவதும குளிர்கொள்ளச் சொரிந்து-ஆகிய இவை முற்றும் குளிர்வாய்ப்ப அம்மழைக்கணையைச் சொரிந்து.

"கோத்தொழிலாளரொடுகொற்றவன்கோடி-வேத்தியல்பிழந்தவியலிடம்போல - வேனிற்கிழவனொடுவெங்கதிர்வேந்தன் - றானிலந்திருகத்தன்மையிற்குன்றி - முல்லையுங்குறிஞ்சியுமுறைமையிற்றிரிந்து - நல்லியல்பழிந்துநடுங்குதுயருறுத்துப் - பாலையென்பதோர்படிவங்கொள்ளும்" எனச் சிலப்பதிகாரத்திற்கூறுதலால் பரன்முரம்படுத்தெரிநடஞ்செய்மோட்டகங்களும் என்றதைப் பாலைநிலம் என்றும். இதனாற் கடலொழிய முல்லை, குறிஞ்சி, மருதம், பாலையென்னும் நான்கு நிலங்களையுங்கூறினர். இது மழையின்றன்மையைக்கூறுதலால் பொருட்டன்மையணி. இவ்விரண்டுசெய்யுளும் கோடைத்தீத்திரளாகிய பகைவர்மேல் மழைக்கணையை யேவி வென்றமையை யுணர்த்தினமையால் வாகைத்திணையுள் வாகை. (௮)

இற்றொழிந்தனவொழியமற்றெஞ்சியவெரிபோய்க்
கற்றவேதியர்வேள்வியஞ்சாலையுட்கரப்ப
வுற்றவாகண்டுதன்சினக்கனலையுமொருவி
வெற்றிமாமுரசெனமறைப்பேரொலிவிளக்கி.

(இ-ள்.) இற்று ஒழிந்தன ஒழிய - கெட்டொழிந்த நெருப்புகளொழிய, மற்று எஞ்சிய எரிபோய் கற்ற வேதியர் வேள்வி அம் சாலைஉள் கரப்ப-கெடாது நின்று எஞ்சிய தீச்சென்று வேதங்களைக்கற்ற அந்தணரது வேள்விச்சாலையிலொளிக்க, உற்ற ஆறு கண்டு தன் சினம் கனலையும் ஒருவி - அத்தீ அடைந்த வகையைக்கண்டு தனது கோபாக்கினியையும் ஒழித்து, வெற்றி மா முரசு என்ன மறைபேர் ஒலி விளக்கி - பெரிய சயமுரசு முழக்குவதுபோலப் பெரிய வேதகோஷங்கள் விளங்கச்செய்து.

மற்று வினைமாற்றுப் பொருளில்வந்த இடைச்சொல். கற்ற, வேதமென்னுஞ்சொல் எஞ்சநிற்றலால் சொல்லெச்சம். ஆறுதொகுத்தல். மேகம், தீயின் வெம்மையையொழிப்பது கடனாதலால் புறங்கொடுத்த கோடைத்தீயென்னும் பகைப்பொருள்தானுழைதற்கரிய வேறிடத்திற்சென்று மறைந்ததைக்கண்டு தன்னிடத்துத்தோன்றிய கோபமாகிய தீயையும் ஒழித்ததெனக்கூறுதலால் உடனிகழ்ச்சியணி. வெற்றிகொண்டபின் சயமுரசொலி எழுப்புதல் வழக்காதலால் இது வாகைத்திணையுள் முரசவாகைத்துறை.

தனதுகீர்த்தியுந்திறற்பிரதாபமுந்தனாமே
லனல்செய்கோபமுமுல்லையுமெனவெங்குமமைத்துப்
புனிதமாமவைதன்னையும்பொதிந்துகொண்டென்னப்
பனிவிசும்பினிற்செவந்துவெண்ணிறம்படைத்தன்றே.

(இ-ள்.) தனது கீர்த்தியும் திறல்பிரதாபமும் தரைமேல் அனல்செய் கோபமும் முல்லையும் என எங்கும் அமைத்து - தனது கீர்த்தியையும் வெற்றியால்வந்த பிரதாபத்தையும் நிலவுலகின்மேல் தீப்போலச் செந்நிறம்வாய்ந்த இந்திரகோபமும் முல்லைமலருமென்று கண்டோர் கூற எவ்விடத்திலும் அவற்றை யமையச்செய்து, புனிதம் ஆம் அவை தன்னையும் பொதிந்துகொண்டால்என்ன - புனிதமாகிய களங்கமில்லாத அக்கீர்த்திபிரதாபங்கள்என்னு மிரண்டும் தன்னையும் பொதிந்துகொண்டாற்போல, பனி விசும்பினில் செவந்து வெண்ணிறம் படைத்தன்று - குளிர்ந்த ஆகாயத்தில் செந்நிறம் வாய்ந்து வெள்ளியநிறம்படைத்தது.

கோபம் இந்திரகோபம் "கோபத்தன்னதோயாப்பூந்துகில்" என வருதலால் இது முன்மொழிகெட்ட பின்மொழி நிலையல். உலகு குளிரச்செய்த அறத்தால் வந்ததைக் கீர்த்தியெனவும், கோடைத்தீயென்னும் பகையைவென்ற மறத்தால் வந்ததைப் பிரதாபமெனவுங்கூறினார். கீர்த்தி, பிரதாபம் என்னும் பெயர்கள் கோபம் முல்லையென மாறிவந்த பெயர்ப்பயனிலைகளையும், செவந்து வெண்ணிறம்படைத்தது என மாறிவந்த வினைப்பயனிலைகளையுங்கொண்டு முடிதலால்எதிர் நிரனிறையணியும்,கோபம் பிரதாபமாகவும்,கீர்த்திமுல்லையாகவும், பிரதாபத்தாற் செவந்ததாகவும், கீர்த்தியால் வெண்ணிறம் பெற்றதாகவும் பிறிதின் குணம்பெறக்கூறுதலால் பிறிதின்குணம்பெறலணியுங் கலந்துவருதலால் கலவையணி. மேகம் கீர்த்திபிரதாபங்களால் ஒளிபெற்றதைக் கூறினதால் வாகைத்திணையுள் அரசமுல்லைத்துறை. மாறிவருதலா வது நேரே கொள்ளப் படாமை. (கo)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உடுவணிகுடுமிக்கோடுபிளவுபட்டுடையப்பெய்யுங்
கொடுமழைக்காற்ருதங்கட்குளிர்பெயன்மாறவெண்ணி
நெடுமலையெடுத்துக்காட்டுநெட்டிதழ்க்காந்தட்கொள்ளி
விடுசுடர்க்கனலியந்தப்புனலொடும்வீந்ததன்றே.

(இ-ள்.) நெடுமலை-நெடிய அந்நந்திமலையானது, உடு அணி குடுமி கோடு பிளவு பட்டு உடைய-நட்சத்திரமண்டிலத்தையளாவிய தனதுசிகரங்கள் பிளவுபட்டுச்சிதைய, பெய்யும் கொடு மழைக்கு ஆற்ருது அங்கண் குளிர்பெயல் மாற எண்ணி-விடாதுபெய்யாநின்ற பெரிய மழைத்துளிக்கு ஆற்ருமல் அவ்விடத்து நடுக்கஞ்செய்யும் மழைத்துளி மாறக்கருதி, எடுத்து காட்டும் நெடு இதழ் காந்தள் கொள்ளி விடுசுடர் கனலி-எடுத்துக் காட்டாநின்ற நெடிய இதழ்களையுடைய காந்தளாகிய கொள்ளிக்கட்டையில் ஒளிவிளங்கும் நெருப்பானது, அந்தப்புனல் ஒடும் வீந்தது-அந்த மழைத்துளியோடும் அழிந்தது.

விடாமழைபெய்தால் அம்மழை நீங்கக் கொள்ளிக்கட்டை யெடுத்துக்காட்டுவது உலகவழக்கு, அவ்வழக்கைத் தழுவிக்கூறுதலால் உலகவழக்கு நவிற்சியணி. உடு மண்டிலத்தின்மேல் நிற்றலால் தானியாகுபெயர். (கக)

போதமேலாகப்பண்டேபுல்லியமலநோய்தீர்ந்தும்
வாதனைதாக்குமாபோன்மழைப்பெயன்மாறிந்தீர்ந்துங்
காதல்செய்துறையும்புள்ளுமாக்களுங்கவன்றுநெஞ்ச
நோதகமரங்ளெல்லாநுண்டுளிதுவற்றுமாதோ.

(இ-ள்.) போதம் மேலாக பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும் வாதனை தாக்கும் ஆறுபோல் - சிவஞானமேலிட அநாதியேவிடாது சூழ்ந்த ஆணவமலநோய் நீங்கியும் பிராரத்தவாதனை நீங்காது நிற்கும் வகைபோல, மழைப் பெயல் மாறி தீர்ந்தும்

விடாமழை நிலைபெயர்ந்து நீங்கியும், காதல் செய்து உறையும் புள்ளும் மாக்களும் கவன்று நெஞ்சம் நோதக - தம்மிடத்து விரும்பிவசிக்கும் பறவைகளும் விலங்குகளும் சவலைகூர்ந்து மனம்வருந்த, மரங்கள் எல்லாம் நுண் துளி தூவற்றும்-எல்லாமரங்களும் சிறிய மழைத்துளிகளைச் சிந்தும்.

சிவஞானமேலீட்டால் ஆணவமலமொழிந்தும் வெந்தபடம்போலச் சத்திகெட்டுநின்ற பிராரத்தவினை இங்குவாங்கிய பாண்டம்போல வுடலுள்ளமட்டும் வாசனைமாத்திரையாய்நின்று தாக்குதலால் புல்லிய மலநோய் தீர்ந்தும் வாதனைதாக்குமாபோல் எனவும், "அடைமழைவிட்டும் செடிமழைவிடவில்லை" என்பது வழக்கு ஆதலால் புள்ளுமாக்களுங் கவன்றுநெஞ்சம் - நோதகமரங்களெல்லாம் நுண்டுளிதூவற்றும் எனவுங் கூறினர். இது எடுத்துக்காட்டுவமையணி. (௬௨)

கனைபெயலெழிலிக்கூட்டங்கலிவிசும்பகடுபோழ்ந்த
நனைமுடிநந்திக்குன்றநளிபடப்பொழியுந்தெண்ணீர்
புனைமறைவசிட்டமேலோன்செருத்தலான்பொழிந்ததீம்பால்
வனைபுகழ்வெள்ளமென்னத்திசைதொறும்வழிந்தமன்றே.

(இ-ள்.) கனைபெயல் எழிலி கூட்டம் - மிக்க மழைத்துளிகளையுடைய மேகபடலங்கள், கலி விசும்பு அகடு போழ்ந்த நனை முடி நந்திக்குன்றம் நளிபட பொழியும் தெள் நீர் - பெரிய ஆகாயத்தின் வயிற்றைப்பிளந்து சென்ற மலரரும்புகள் வாய்ந்த சிகரங்களையுடைய நந்திமலை குளிர்ச்சிவாய்க்க அதிற்பெய்யும் தெள்ளிய நீர்மயமாகிய வெள்ளமானது, புனை மறை வசிட்ட மேலோன் செருத்தல் ஆன்பொழிந்த தீம்பால் புகழ் வனை வெள்ளம் என்ன - பஞ்சாதிமுதலிய உறுப்புகளால் தொடுக்கப்பட்ட வேதங்களை உணர்ந்த வசிட்டமுனிவரது மடியையுடைய காமதேனுசொரிந்த இனிய பாலாகிய புகழமைந்த வெள்ளம்போல, திசைதொறும் வழிந்த - திசைகள்தோறும் பரவின.

ஒலித்தல்மேல் நின்ற கனை, கலியென்னு முதனிலைத் தொழிற்பெயர்ச்சொற்கள் வேறுபட்டு மிகுதி, பெருமையென்னும் பொருள்மேல் நிற்றல் "உண்டற்குரியவல்லாப்பொருளை - உண்டனபோலக்கூறலுமரபே" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்துள் வந்த எதிரதுதழீஇய எச்சவும்மையாற்கொள்க. நந்திமலையில் தவஞ்செய்து வசிக்கும் வசிட்டமுனிவர் நித்தவேள்வியை முடித்தற்குப் பஞ்சகவ்வியந் தந்துவருங் காமதேனு, ஓர்நாள் சிவபெருமானார் இடபவூர்தியிலெழுந்தருளி யங்குலவியருளுங்காலையில், அக்காமதேனு வவ்விடபதேவனைநோக்கிக் காமங்கொண்டு சூற்கொண்டமையால் வழிநாளிற் பால்வறப்ப, அதனை ஞானதிருட்டியாலுணர்ந்து தமது வேள்வி குறைவுறுவண்ணம் ஒருதருப்பையையெடுத்துக் கன்றுகச்சமைக்க அக்காமதேனு நோக்கி முலைசுரந்து பொழிந்த பால் பெருக்கெடுத்து வெள்ளமா யம்மலையினின்றிழிந்துவந்த காரணத்தாற் பாலாறு எனப் பெயர்பூண்டது என்பது புராணவரலாறு ஆதலால் வசிட்டமேலோன் செருத்தலான் பொழிந்ததீம்பால் - வனைபுகழ்வெள்ளமென்ன என்றார். மேகம் காமதேனுவாகவும், அதுபொழிந்த நீர்பாலாகவும், அப்பால் வெள்ளமாக வழிந்ததுபோல இதுவும் வெள்ளமாகவும் வழிந்ததென்றது ஒப்புமைக்கூட்ட வுவமையணி. (௬௩)

கண்ணகன்குடுமிக்குன்றிற்கல்லெனக்கறங்கியார்த்து
விண்ணிவரோணியென்னவியன்முடிதொடுத்துவீழ்
தண்ணறுவருவியெல்லாந்தலைத்தலைவிரிந்துதோன்றும்
புண்ணியப்பாலியாற்றிற்சேர்ந்துடன்போயமாதோ.

(இ-ள்.) கண் அகன் குடுமி குன்றில் - இடம்(பரந்த) அந்நந்திமலையில், கல் என கறங்கி ஆர்த்து விண் இவர் ஏணி என்ன வியன்முடி தொடுத்து வீழும் தண் அரு அருவி எல்லாம் தலைத்தலை விரிந்து - கல்லென்று ஒலித்து விண்ணுலகிற்குச்செல்லச் சாத்திய ஏணிகள்போலப் பரந்த சிகரங்களினின்றுந் தொடுத்து வீழாநின்ற குளிர்ச்சியினின்று நீங்காத அருவிகளெல்லாம் இடங்கள்தோறும் விரிந்து பரவி, புண்ணியம் தோன்றும் பாலியாற்றில் சேர்ந்து உடன்போய-புண்ணியம் பிறத்தற்கோர் இடமாகிய அந்தப் பாலிநதியிற்கலந்து அதனுடன் சென்றன. கண்ணகன் ஒருபொருட்பன்மொழி.(கச)

பாரிடங்குழித்துவீழும்பல்வயினருவியெல்லா
மோரிருமபாலியாற்றினொருங்குசென்றணையுந்தோற்றஞ்
சீரியபுவனந்தோறுஞ்சிதறியவினைகளெல்லா
மோரிடத்தொருவன்றன்பாலுடங்குசென்றுறுதல்போலும்.

(இ-ள்) பார் இடம் குழித்து பல்வயின் வீழும் அருவி எல்லாம் - நில உலகினிடத்தைக்குழித்து அம்மலையின் பல இடங்களினின்று வீழும் அருவிகளெல்லாம், ஓர் இரும்பாலி ஆற்றின் ஒருங்குசென்று அணையும் தோற்றம் - ஒப்பில்லாத பெரிய பாலாற்றில் ஒருசேரச்சென்று கலக்குந் தோற்றமானது, சீரிய புவனம் தோறும் சிதறிய வினைகள் எல்லாம் - சிறந்த புவனங்கள்தோறு முற்பிறப்பிற்சென்று செய்துமுடித்த இருவினைப்பயன்கள் யாவும், ஓர் இடத்து ஒருவன் தன்பால் உடங்கு சென்று உறுதல்போலும் - ஒருபுவனத்திற்பிறந்த ஒருவனிடத்து ஒருசேரச்சென்றடைதலை ஒக்கும்.

ஆன்மாக்கள் தாம் செய்த கன்மங்களுக்கீடாகவந்த பிரபஞ்சமாகிய தனுகரண புவனபோகங்களுள் தனுகரணங்களைக்கொண்டு புவனங்களிற்சென்று தமக்களந்த சத்த பரிச ரூப ரசகந்தமாகநின்ற போகங்களை நுகர்ந்தே யிருவினைப்பயனாகிய கன்மமலத்தைப் போக்கவேண்டுதலால் புவனந்தோறுஞ் சிதறிய வினைகளெல்லாம் - ஓரிடத்தொருவன் றன்பாலுடங்குசென்றுறுதல்போலும் எனக்கூறினார். இதுமுதல் மூன்றுசெய்யுளும் எடுத்துக்காட்டுவமையணி. (கரு)

விலகிவீழருவித்தாரைவேறுவேறாகவோடிக்
குலநதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
மலகில்பல்வழியுமூதூரணிமையிலொன்றுமாறும்
பலபலமதமுமீற்றிலொருவழிப்படலும்போலும்.

(இ-ள்.) விலகிவீழ் அருவித்தாரை வேறுவேறு ஆக ஓடி-விட்டுவிட்டு வீழாநின்ற அருவியின் தாரைகள் வெவ்வேறாகச்சென்று, பாலிக்குலநதிவைப்பின் ஏகம் ஆய் கூடும் தோற்றம் - பாலியென்னு மேன்மைதங்கிய நதியில் ஒன்றாய்க் கலக்குங்காட்சி, அலகு இல் பல் வழியும் மூது ஊர் அணிமையின் ஒன்று ஆம் ஆறு உம் - ஒரூர்க்குச்செல்லும் அளவில்லாத பலவழிகளும் தொன்றுதொட்டுள்ள பழமையாகிய அவ்வூரின் சமீபத்தில் ஒன்றாகும் வகையையும், பலபல மதம் உம் ஈற்றின் ஒருவழிப்படலும்போலும் - பற்பல மதங்களும் இடையிற்பிளவுபட்டு முடிவில் ஒருவழிப்பட்டு நிற்றலையும் ஒக்கும்.

ஒரூர்க்கு இடையிற் பலவழியிருப்பினும் அவ்வூரினையடையுங்கால் முடிவிலொருவழியாதலாலும், பற்பலசமயங்கள் பற்பலதேவர்களைக் கடவுளராகக்கூறினும் அரசன் தன்னாணையை மந்திரிமுதலானவர்களிடத்து வைத்துப் பலர்க்கும் பயன் தருதல்போல இறைவன் தன்னாணையைத் தன்னேவல்வழி நிற்கு மத்தேவர்களிடத்துவைத்து அவரகளை வழிபடுவோர்க்குப் பயன்கொடுப்பவன் அவ்விறைவனேயாதலாலும் அலகில்பல்

வழியுமூதூரணிமையினென்ருமாறும் - பலபலமதமுமீற்றினொருவழிப்படலும்போலும் என்ருர். " இங்குநாஞ்சிலர்க்குப்பூசையியற்றினலவர்களோவந் - தங்குவான்றருவரன்றேலத்தெய்வமத்தனைக்காண் - எங்கும்வாழ்தெய்வமெல்லாமிறைவனுணையாணிற்ப - தங்குநாஞ்செய்யுஞ்செய்திக்காணைவைப்பாலளிப்பன் " னவருஞ்சிவஞானசித்தியாரால் இறைவன் பயன்கொடுத்தலறிக. (௧௬)

மலைநகைத்தனையகாட்சிவயின்வயினருவித்தாரை
சிலையினின்றிழிந்துமண்மேற்றிரண்டுசென்றணையுந்தோற்ற
முலவையோடிகலிச்சேடனுயர்வரைக்குடுமியெல்லாம
பலதலைவிரிந்துப்பொத்திக்கிடந்தவப்பான்மைபோலும்.

(இ-ள்.) மலை நகைத்தால் அனைய காட்சி வயின் வயின் அருவித்தாரை - அந்நந்திமலை நகைத்தால் ஒத்த தோற்றத்தையுடைய பல இடங்களினின்றுவரும் அருவித்தாரையானது, சிலையின் நின்று இழிந்து மண்மேல் திரண்டு சென்று அணையும் தோற்றம் - அம்மலையினின்று இறங்கி நிலவுலகின்மேல் திரண்டு கூடிவருங்காட்சி, சேடன் உலவையோடு இகலி உயர்வரை குடுமி எல்லாம் - ஆதிசேடன் காற்ருேடு பகைத்து உயர்ந்த மேருவின் சிகரங்களில் எல்லாம், பலதலை விரித்து பொத்தி கிடந்த அ பான்மைபோலும் - பலதலைகளையும் விரித்து மறைத்துக்கிடந்த தன்மையையொத்துத் தோன்றும்.

திருக்கயிலைக்குச் சேவைசெய்யச்சென்ற பிரமன்முதலிய தேவர்கள் சமையம்பெற ஓரிடத்திற் கூடியிருந்தகாலத்தில் ஆதிசேடனைப் பலதேவர் முதலியோர் வாயுவைநுகர்ந் துலகினைத் தாங்குதல் முதலியவற்ருல் பெருங்கீர்த்தி பெற்றுள்ளா யுனக்கு நிகர் யாரென்று புகழுங்காலையில், வாயுதேவன் பொருமைகூர்ந்து இவனே என்னை நுகர்கின்றவன் என் வன்மையை நீங்க ளறியீர்களோவென்று இறுமாந்து கூற, அதனை அவ்வாதிசேடன்கேட்டு எங்களிருவர்வன்மையையும் நீங்களேயளந்தறியுங்களென்று அத்திருக்கயிலையைத் தன்னுடலா லிறுகச்சுற்றிப் படத்தினுலத்திருமலையின் கொடுமுடியை மறைத்து இவ்வாயு என்னை நெகிழச்செய்வானுகில் என்னிலும் வலியனிவனேயென்று சபதங்கூறி யவ்வாறு செய்திருந்தனன், வாயு என் வலிமையைப் பாருங்களென்று உலகு தட்டழிந்து தடுமாற எறிந்தும அவன்படம் சிறிதும் நெகிழாமையால் உலகு வருந்துவதை யத்தேவர்கள் நோக்கி யுன்படத்தைச் சிறிது நெகிழ்விப்பாயென்று அவ்வாதிசேடன் பாற்குறையிரப்ப அவன் சிறிது நெகிழ்வித்தனன் என்பது செவ்வந்தி புராணவரலாறு. மலைநகைத்தனையவெனச் செய்யாமரபினதைச் செய்தவெனக் கூறுதலாற் குணவணி. (௧௭)

குரைபுனற்றொண்டைநாட்டைக்குறும்பெறிந்தடிப்படுத்துப்
புரைதபநடாத்துகென்றுப்புதுமுகிலரசனந்தி
வரைமிசையிருந்துவேந்தாமணிமுடிசூட்டியுய்ப்பத்
திரைபடுபாலிவல்லேசிலையினின்றிழிந்துபோந்து.

(இ-ள்.) புதுமுகில் அரசன் நந்திவரை மிசை இருந்து - புதிய மேகமாகிய அரசன் நந்திமலையின்மேலிருந்து, குறும்பு எறிந்து குரை புனல் தொண்டைநாட்டை அடிப்படுத்து புரைதப நடாத்துக என்று - குறுநிலமன்னரைவென்று ஒலிக்கும் நீர்சூழ்ந்த தொண்டைநாட்டினை யுனதடிக்கீழ்ப்படுத்தி யமைதிபெற அரசியல் நடத்தக்கடவாயென்று, வேந்து ஆகமணி முடிசூட்டி உய்ப்ப-எல்லாநதிக்கும் அரசாக இரத்தினமகுடஞ் சூட்டிச்செலுத்த, திரைபடு பாலி வல்லே சிலையினின்று இழிந்துபோந்து - அலையமைந்த பாலிநதி விரைந்து அம்மலையினின்றிறங்கிச்சென்று.

இதுமுதல் பௌவமதுணர்ந்து என்பதுகாறு மொருதொடர். குறும்பு என்றது கோட்டையை. அடிப்படுத்தலாவது தன்வழிப்படுத்தலை. புரைதப நடாத்துக என்றது செல்வம், விளையுள், பல்வளம், செங்கோல், பிணியின்மையை. "செல்வம்விளையுள்பல் வளஞ்செங்கோல் - கொல்குறும்பின்மைகொடும்பிணியின்மையென் - றிவ்வகையாறு நன்னாட்டமைதி" எனவரும் பிங்கலந்தையாலுணர்க. (கஅ)

அரசுகள்சூழ்ந்துசெல்லவருங்கணிமலர்வாய்விள்ளச்
சரிகுழற்குறமின்னார்கள்பற்பலதானைவெள்ளம்
விரவிடப்பரியகாலாண்மேதகுமாக்களத்தி
யிருபுடைதழுவிப்போதவிகல்கொடுவையமூர்ந்து.

(இ-ள்.) அரசுகள் சூழ்ந்து செல்ல - அரசர்கள் புடைசூழ்ந்துவரவும், அருங்கணி மலர் வாய் விள்ள - நூலுணர்ச்சி மிக்க சோதிடர்கள் மலர்போன்ற வாய்திறந்து முகூர்த்ததினங் கூறவும், சரிகுழல் குறமின்னார்கள் பல்பல தானை வெள்ளம் விரவிட- சரிந்த கூந்தலையுடைய குறப்பெண்களாகிய பலவகைப்பட்ட சேனைகூட்டங்கள் கலந்து முன்செல்லவும், பரிய காலாள் மேதகு மாக்கள் அத்தி இருபுடை தழுவிப்போத - பருத்த காலாட்களும் மேன்மைதங்கிய குதிரைகளும் யானைகளும் இரண்டுபக்கங்களிலுந் தழுவிவரவும், இகல் கொடு வையம் ஊர்ந்து - பகைமேல் மாறுபாடுகொண்டு தேரைநடத்தி. (அரசுகள் சூழ்ந்துசெல்ல - அரசமரங்கள் புடைசூழ்ந்து செல்லவும், அருங்கணிமலர் வாய்விள்ள - அரியவேங்கைமரங்கள் மலர்ந்து தன்னுடன்போதவும், சரிகுழல் குறமின்னார்கள் பல்பல தானை வெள்ளம் விரவிட - (அஞ்சி விலகுதலாற்) சரிந்த கூந்தலையுடைய குறப்பெண்களது பலவகைப்பட்ட ஆடையின் கூட்டங் கலந்துவரவும், பரியகால் ஆண்மேதகும் மாக்கள் அத்தி இருபுடைதழுவிப்போத - பருத்த தூற்றையுடைய ஆண்மரங்களும் மேன்மைதங்கிய மாமரங்களும் அத்திமரங்களும் இரண்டுபக்கங்களிலுந் தழுவிவரவும், இகல்கொடு வையம் ஊர்ந்து - வலிமைகொண்டு நிலவுலகின்மேற்சென்று.)

அரசிலக்கணத்திற்கும் வெள்ளத்திற்குஞ் செம்மொழிச்சிலேடையாகவந்த ஒருவினைச் சிலேடையணி. செல்ல, விள்ள, விரவிட, போதவென வேறு பலவடுக்கிய வினையெச்சங்கள் ஊர்ந்து என்னும் பிறவினை முதல்வினையைத் தனித்தனி கொண்டன.

அணிவகுத்தெழுந்துகுன்றரரும்பெறற்குறிச்சிபுக்கு
மணிவகையாரம்பூண்டுமதுக்குடவிருந்துமாந்தித்
தணிவறவெளிக்கொண்டேகித்தலைத்தலைவேட்டம்போகித்
துணிபடமாக்களெல்லாந்தொலைத்துடனீர்த்துச்சென்று.

(இ-ள்.) அணிவகுத்தெழுந்து குன்றர் அரும்பெறல் குறிச்சி புக்கு - (மேற்கூறிய சேனைகளை) அணிகளாகவகுத்து மேலெழுந்து குறவரது பெறுதற்கரிய சிற்றூரிற் புகுந்து, மணிவகை ஆரம் பூண்டு விருந்து மதுக்குடம் மாந்தி-பலவகைப்பட்ட இரத்தினவடங்களைப்பூண்டு விருந்தாக எதிர்ந்த குடங்களிலுள்ள கள்ளைப்பருகி, தணிவு அற வெளிக்கொண்டு ஏகி - ஒழிவற எங்கும் வெளிசெய்து சென்று, தலைத்தலை வேட்டம் போகி-அவ்வவ்விடங்கள்தோறும் வேட்டஞ்செய்து, மாக்கள் எல்லாம் துணிபடந்தொலைத்து உடன் ஈர்த்துச்சென்று - மிருகங்களெல்லாந் துண்டுபட அவற்றை அழித்துத் தன்னுடன் சேர இழுத்துப்போய்.

இதனால் பாலியென்னும் அரசன் தன் நாட்டிலுள்ளோர்க்குப் பயமைந்தனுள் மிருகாதிகளால் வருந் துன்பத்தைப்போக்குதல், அரசநீதியுளொன்றாதலால் தனித்த

ணி வேட்டம் போகியென்றார். உயிர்களுக்குப் பயம் ஐந்தான. " மாநிலங்காவலனுவா ன்மன்னுயிர்காக்குங்காலைத் - தானதனுக்கிடையூறுதன்ஞற்றன்பரிசநத்தால் - ஊனமிகு பகைத்திறத்தாற்கள்வராலுயிர்தம்மால் - ஆனபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனே" எனவருந் திருத்தொண்டர்புராணத்தால் அறிக. (௨0)

நாற்சீரடியால்வந்த ஒருபோகு கொச்சகம்.

மண்டமர்மேல்கொடுவந்தனமின்னே
தண்டகநாட்டுறைதாபதர்நோயோர்
பெண்டிருநும்மரணேகுதிர்பெட்டென்
றெண்டிசையார்ப்பவிசைப்பறைசாற்றி.

(இ-ள்.) மண்டு அமர்மேல் கொடு வந்தனம்-நெருங்கிய போர்த்தொழிலை மேற்கொண்டு வந்தோம், தண்டக நாடு உறை தாபதரும் நோயோரும் பெண்டிரும்- தண்டகநாட்டில் வசிக்கும் விரதிகளும் நோயில் முதிர்ந்தோரும் பெண்களும், இன்னே நும் அரண் பெட்டு ஏகுதிர் என்று-இப்பொழுதே நுமக்குக் காவலாயுள்ள இடத்தை விரும்பிச் செல்வீரென்று, எண் திசை ஆர்ப்ப இசைபறை சாற்றி - எட்டுத்திசையிலு முழங்கத் தமது ஒலியாகிய பறையினாற் றெரிவித்து.

இருபெரு வேந்தர்கள் தம்முட் போர்செய்யக் கருதினால் மன்னுயிர்காக்கு மன்புடையரசர்க்கு மறத்துறையிலும் அறத்துறை நிகழவேண்டுதலால் ஒருவர்,ஒருவர் நாட்டில் வாழும் பார்ப்பார் தவசிகள் முதலியோர்க்குத் தீங்குசெய்தல்கூடாமையால் அவர்களை யங்குநின்றும் வேற்றிடத்துக்கு அகற்றல்போர்த்தருமமாதலால் இன்னேதாபதர்நோயோர்பெண்டிர் நும்மரணேகுதிரென்று பறைசாற்றி என்றார். "ஆவுமானியற் பார்ப்பனமாக்களும் - பெண்டிரும்பிணியுடையீரும்பேணித் - தென்புலவாழ்நர்க்கிருங்கடனிறுக்கும் - பொன்போற்புதல்வற்பெறுஅதீரும் - எம்மம்புகடிவிடுதுநும்மரண்சேர்மினென - அறத்தாறுநுவலும்பூட்கைமறத்தின்" எனச் சான்றோர் கூறிய செய்யுளாலுணர்க. இது ஆதந்தோம்பல் என்னும் வெட்சித்திணை. தாபதர் நோயோர் பெண்டிர் என்னும் படர்க்கைச் சொற்களை யெண்ணிப் படர்க்கைவினைகொண்டு முடிக்காது ஏகுதிர் என முன்னிலைவினைமுற்றி லமைத்து முடித்தல் தொல்காப்பியம் " செய்யுன்மருங்கினும் " என்னும் புறனடைச் சூத்திரத்தால் செய்யுள் முடிபு எனக்கொள்க. உம்மை கடைநிலைத் தீவகஅணி. (௨௧)

இருற்றிகிரிப்படைதாங்கியிபக்கோ
டருத்திறல்வெஞ்சிலைகாந்தளரும்பு
நருப்பயில்கோலெனவேநதிநல்வீர
மருப்பகைமாய்த்துறவெட்சிமலைந்து.

(இ-ள்.) இறால் திகிரிப்படை என்ன தாங்கி - தேனடையைச் சக்கராயுதமாகத்தாங்கி, இபம் கொடு அருதிறல் வெஞ்சிலை என்ன காந்தளரும்பு நருபயில் கோல் என்ன ஏந்தி - யானைக்கொம்பினை வெற்றியினின்றும் நீங்காத கொடிய வில்லாகவும் காந்தளினரும்பைத் தேன்சிந்து மம்பாகவுமேந்தி, மருதநல்வீரம் பகைமாய்த்துற வெட்சிமலைந்து - பிறராற்றடுக்க இயலாத நல்லவீரத்தையுடைய பகைவனைமாய்க்க வெட்சிமாலையைச் சூடி.

தேனடையும் யானையின் கொம்பும் காந்தளும் குறிஞ்சிக் கருப்பொருள்களாதலால் அவற்றையுருவகமாக்கிக் கூறுதலால் விரியுருவகவணி. போர்க்குச்செல்வோர் முன்னே பசுக்களைக்கவர்தற்குக் குறிஞ்சிக்குப் புறனாகிய வெட்சிமாலையைச்சூடி யிரவில்

செல்லுதல் வழக்காதலால் வெட்சிமலைந்து என்றார். பாலாறு என்னும் அரசன் முல்லை நிலத்தரசன் பசுக்களைக் கவர்தற்கு வேண்டுங் கருவிகளைக் கைக்கொண்டமையால் வெட்சித்திணையுள் மன்னுறு தொழில். (உஉ)

முல்லையின்வேந்துமுடித்தகரந்தை
யொல்லையலைத்துயரானிரைபற்றி
மெல்லிதழ்நின்றுசெவந்தெழுவேய்த்தோ
ணல்லவர்கற்பையழித்துநடந்து

(இ-ள்.) முல்லைவேந்து முடித்தகரந்தை ஒல்லை அலைத்து - முல்லைநிலத் தரசன் தான்முடித்த கரந்தைமாலையை விரைந்து கெடுத்து, உயர் ஆனிரை பற்றி மெல்லிதழ் நின்று செவந்து எழுவேய்த்தோள் நல்லவர் கற்பை அழித்து நடந்து - உயர்ந்தபசுக்களைக் கவர்ந்து மெல்லிய இதழ்களை யதுக்கிக் கோபித்து ஓங்கி யெழுந்த மூங்கிலையொத்த தோளையுடைய முல்லைநிலப் பெண்களோம்பிய கற்பினையழித்து அப்பாற்சென்று.

கற்பு பெண்கள் ஓம்பிய கற்பிற்கும், முல்லைச்செடிக்கும் பெயராதலால் முல்லைநிலப்பெண்கள்கொண்டகற்பினையும், அவர்கள் வளர்த்த முல்லைச்செடியையும் அழித்து என்னும் பொருள்கள்மேல்நிற்றலால் செம்மொழிச்சிலேடையணி. இன்வேண்டா வழிச்சாரியை. கரந்தைக்குத் திணைவேறின்றிமையால் பசுக்களைக் கோடலுக்கு மீட்டல் மறுதலைத் தொழிலாதலால் வெட்சித்திணைகோடலு மீட்டலு மென இருவகைப்படுதலில் வெட்சிக்கு மறுதலைப்பூ கரந்தையாதலால் இதனை வெட்சிக்கரந்தையெனக் கூறுவர். நல்லவர் கற்பையழித்து என்றது வெட்சித்திணையுள் ஊர்கொலைத்துறை. (உ௩)

வஞ்சிமலைந்தழல்பாலையைவாட்டி
யஞ்சியிடாதுதன்னாணையிருத்தி
யெஞ்சலுறாமருதத்திறையோடும்
வெஞ்சமரேற்றுழிஞைத்துணர்வேய்ந்து

(இ-ள்.) வஞ்சிமலைந்து அழல்பாலையை வாட்டி - வஞ்சிமாலையைச் சூடிக்கொதிக்கும் பாலைநிலமென்னும் பகைவனை வருத்தி, அஞ்சியிடாது தன் ஆணையிருத்தி - தான் சிறிதும் அஞ்சாமல் தனது ஆஞ்ஞையை அங்குநிலைபெறச்செய்து, உழிஞைத்துணர்வேய்ந்து எஞ்சலுறாத மருதத்து இறையோடும் வெஞ்சமர் ஏற்று-ஊமத்தைப்பூங்கொத்தால் வேய்ந்த மாலையைச்சூடி வளங் குறைவுபடாத மருதநிலமென்னும் பகையாசனோடுங் கொடிய போர்த்தொழிலை மேற்கொண்டு.

இருபெரு வேந்தருள் ஒருவர், ஒருவரை வெற்றிகொள்ளுதற்குச் செல்லுங்கால் முல்லைக்குப்புறனாகிய வஞ்சிமாலையைச்சூடிச்செல்லுதலும்; பகைவர்மதிலையழித்துத்தன்னடிப்படுத்த அதனை வளைத்தற்கு மருதத்திற்குப் புறனாகிய உழிஞைமாலையைச்சூடிச்செல்லுதலும் புலனெறிவழக்காதலால் வஞ்சிமலைந்து, உழிஞைத்துணர் வேய்ந்து என்றார். தன்னாணையிருத்தி யென்றது வஞ்சித்திணையுள் கொற்றவஞ்சித்துறை. வெஞ்சமரேற்று என்றது உழிஞைத்திணையுள் பாசி நிலைத்துறை. எஞ்சலுறாத ஒரு சொன்னீர்மையவாகிய பெயரொச்சவீறுதொகுத்தல். (உ௪)

தடுத்தெதிர்நின்றதடங்கரையெல்லாம்
படுத்துமதன்பயில்பாசறைவீட்டி
மடுக்குளமேரியின்வாட்டமனைத்துங்
கெடுத்தனமென்றுதும்பைக்கிளர்வுற்று

(இ-ள்.) தடுத்து எதிர்நின்ற தடகரை எல்லாம் படுத்து - தடுத்து எதிரே நின்ற பெரிய கரைகளையெல்லாமழித்து, மதன் பயில் பாசறை வீட்டி-மன்மதனிடைவிடாதுறும் படைவீட்டைத்தொலைத்து, மடு குளம் ஏரியின் வாட்டம் அனைத்தும் கெடுத்தன என்று தழுவி கிளர்வுற்று - மடுவுங் குளமும் ஏரியுமாகிய இவற்றின் குறையையெல்லாங் கெடுத்தோமென் றவற்றோடு தழுவியெழுந்து.

மதன்பயில்பாசறை என்றது பூஞ்சோலையை. "தடவுங்கயவுநளியும்பெருமை" என்பது தொல்காப்பியச்சூத்திரம். தடங்கரை பொதுவிதியால் வல்லெழுத்து மிகாது இனவெழுத்து மிகுந்தது அல்வழிச்சந்தியில் உரிச்சொற்றொடராதலால். இது பொருட்டன்மையணி. திணையுந் துறையும் அவை. (உடு)

வீறியடாவகைவெஞ்சிறைகோலித்
தூறிடுமெள்ளர்தொலைந்தழிவெய்தச்
சீறியடர்ந்துநெழித்துமுள்வேலி
கீறிவளைந்துகிடங்கினைநீங்கி.

(இ-ள்.) வீறிஅடாத வகை வெம் சிறை கோலி தூறு இடும் மள்ளர் தொலைந்து அழிவு எய்த - அவ்வெள்ளம் மேலெழுந்து வளங்களை யழிக்காதவண்ணம் கொடிய வேலியாகக்கோலி முட்டூறிட்ட மருதநிலமாக்கள் புறந்தந்து வருந்த, சீறி அடர்ந்து நெழித்து முள்வேலி கீறி வளைந்து கிடங்கினை நீங்கி - கோபித்து நெருங்கி, யதட்டி அந்த முள்வேலியை யழித்து முற்றுகைசெய்து அங்குள்ளஅகழிக்கிடங்கைக்கடந்து.

"பல்சான்றீரே பல்சான்றீரே - குமரிமகளிர்கூந்தல்புரைய - அமரினிட்டவருமுள்வேலிக் - கல்லென் பாசறைப்பல்சான்றீரே" என ஆன்றோர் கூறிய அமைதிநோக்கிக் கொண்ட முள்வேலி என்றபாடத்தை, அறியாதார் ஒருவர் பிழையென்று கருதி முன்வேலியென்று பிழைபடத்திருத்தினர்; அது இதுமட்டன்று, ஆங்காங்கு வருமிடந்தோறுங்காட்டுவம். திணை அது. முள்வேலிகீறி வளைந்து என்றமையால் துறைகோட்புறத்துழிஞைத்துறை. (உசு)

நொச்சியைமுற்றியந்நொச்சியினுள்ளார்
பச்சிளநொச்சிபறித்தணியாமே
நச்சியதும்பைநறுந்துணர்சூடி
யச்செழுமாமதின்முற்றுமகழ்ந்து.

(இ-ள்.) நொச்சியைமுற்றி அ நொச்சியின் உள்ளார் பச்சிள நொச்சி பறித்து அணியாமே - மதிலை முற்றுகைசெய்து அந்த மதிலினுள்ளே தங்குவோர் பசிய முதிராத நொச்சிமலரைப்பறித்து மாலையாகச்சூடாமல், நச்சிய தும்பை நறுந்துணர் சூடி அ செழு மாமதில் முற்றும் அகழ்ந்து - விரும்பிய தும்பையினது நறுமணங்கமழும் பூங்கொத்தைச்சூடி அந்தப்பொறியமைந்த பெரியமதில் முழுமையும் வேரோடுதோண்டி.

நொச்சி காவல். அது காவல்செய்யு மதில்மேல் நிற்றலால் விடாத ஆகுபெயர் நொச்சி மலர்மேல்நிற்றலால் முதலாகுபெயர். மதிலின்புறத்து முற்றுகைசெய்த அரசன், போர்செய்யக்கருதிய எண்ணத்தைக் காத்தற்பொருட்டு மதிலகத்திருந்த அரசன் நொச்சிப்பூமாலையைச்சூடுதல் வழக்காதலால் அந்நொச்சியினுள்ளார் பச்சிளநொச்சி பறித்தணியாமே என்றார், நொச்சிக்குத் திணைவேறின்மையால் 'உழிஞைத்திணையே வளைத்தலுங் காத்தலுமென விருவகைப்படுதலின் இது அவ்வுழிஞைத்திணையுள் முற்றியவகத்தோன் வீழ்ந்த நொச்சித்துறை. தனது வலிமையே யோர்பொருளாகப் போர்க்குவந்த

அரசனை அதுவே பொருளாக அவன்மேற் போர்க்குச்செல்வோன் சூடும் பூ தும்பை யாதலால் தும்பைநறுந்துணர்சூடியென்றார். இது தும்பைத்திணையுள் தும்பை. மதின் முற்று மகழ்ந்து என்றது உழிஞைத்திணையுள் கந்தழித்துறை. (உஎ)

இதுவும்அது.

இடித்துவெளிசெய்துநகரெங்கணுநுழைந்தாங்
கடுத்தமடவார்வயிறலைத்தனரிரங்கக்
கொடுத்திடுவளங்கள்பலகொள்ளைகொடுமண்ணி
னெடுத்துவருவெள்வரகுகொள்ளுடனிறைத்து.

(இ-ள்.) இடித்து வெளிசெய்து நகர் எங்கணும் நுழைந்து - இடித்து வெளியாகச்செய்து நகர்முற்றும் நுழைந்து பரவி, ஆங்கு அடுத்த மடவார் வயிறு அலைத்தனர் இரங்க - அவ்விடத்துள்ள பெண்கள் வயிறதுக்கி வருந்த, கொடுத்திடு வளங்கள் பல கொள்ளை கொடு - தாம் முன்புகொடுத்த பலவளங்களையுங் கொள்ளைகொண்டு, மண்ணின் எடுத்து வரு வெள் வரகு கொள் உடன் இறைத்து - முல்லைநிலத்தில் தாங்கவர்ந்து வந்த வெள்ளிய வரகைக் கொள்ளோடு வீசி.

கொள்ளும் வரகு முல்லைநிலக் கருப்பொருள்களாதலால் முல்லைநிலத்திற் கவர்ந்துவந்த என்றாம். நீராற் பலவளங்களுமுளவாதலால் கொடுத்திடு வளங்கள் என்றார். வளங்கள் என்றது கடல்படுதிரவியம் ஒழிந்த மற்றைத்திரவியங்களை. இது உழிஞைத்திணையுள் உழுதுவித்திடுதற்றுறை. "எழுதெழின்மாடத்திடமெல்லாநூறிக் - கழுதை யேர்கையொளிர்வேல்கோலா-வுழுதபின்-வெள்வரகுகொள்வித்திடினும்விளியாதாற்-கள்விரவுதாரான்கதம்" எனவருதல் காண்க. (உஅ)

வெற்றிபுனைமாலிகைமிலைச்சியிருபாலுஞ்
சுற்றிவருபுட்குலநிரைத்தொழுதிதன்னற்
கொற்றமிகுமார்கலியைநோக்கியறைகூவி
யெற்றுகழிநெய்தல்வழியெய்துறுதலோடும்.

(இ-ள்.) வெற்றி புனை மாலிகை மிலைச்சி - வென்றபின் சூடும் வெற்றிமாலையைச்சூடி, இருபாலும் சுற்றிவரு புள் குலம் நிரை தொழுதி தன்னல் - இரண்டுபக்கங்களினுஞ் சூழ்ந்துவரும் பறவைக்குலங்கள் வரிசையினொலியால், கொற்றம் மிகும் ஆர்கலியை நோக்கி அறைகூவி - வெற்றிமிகுந்த கடலைநோக்கிப் போர்க்கழைத்து, எற்று கழி நெய்தல் வழி எய்துறுதலோடும் - கரையொடுமோதுங் கழிசூழ்ந்த நெய்தனிலத்தின் வழியேயடைய.

பாலைக்குப்புறனாகிய வாகைத்திணை அறப்போர்செய்து திறக்கம்பெறுங் கருத்தால் வாளாலு முயற்சியாலும் நிறையாலும் பொறையாலும் வெற்றியடைந்தோர் சூடும் பூவாகைப்பூவாதலால் வெற்றிபுனைமாலிகை மிலைச்சியென்றார். இது வாகைத்திணையுள் வாகை. பாலை-குறிஞ்சி முதலிய நான்கு நிலத்தும் நிகழ்தல்போலவாகை-வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பையென்னும் நான்கும் இடமாக நிகழ்தலால் அறைகூவியென்றார். இது வஞ்சித்திணையுள் நெடுமொழி வஞ்சித்துறை. (உகூ)

பௌவமதுணர்ந்துபவளந்தரளமாதி
வௌவுதிரையேந்தியெதிர்கொண்டடிவணங்கச்
செவ்விதினுவந்துபயமீந்துசினமாறிக்
கௌவியமெய்யன்பொடுகலந்துளதையன்றே.

(இ-ள்.) பௌவம் அது உணர்ந்து பவளம் தாளம் ஆதி வௌவு திரை எந்தி எதிர்கொண்டு அடிவணங்க - கடலென்னும் வேற்றரசன் அவ்வெள்ளத்தின் வருகையையறிந்து பவளமு முத்துமுதலாகிய பொருள்களைக் கரையைக்கவரும் அலைகளாகிய கையிலேந்தி யெதிர்சென்று தன்னடியை வணங்க, செவ்விதின் உவந்து பயம் ஈந்து சினம் மாறி-நேரே பகையின்றி மகிழ்ந்து சிறிது பயமுறுத்தி (பயம் ஈந்து—யாவரும் விரும்பிய நறுந்தண்ணீர் தந்து) கோபத்தினின்றும் நீங்கி, கௌவிய மெய் அன்பொடு கலந்துளது - விடாதமைந்த உண்மையன்போடு கலந்தது.

தன்னிடத்தச்சநிகழ்ந்தே திறையளத்தலால் பயமீந்து என்றார், தம்மை வென்றோரிடத்துப் பெரிது மச்சநிகழ்தலின். இது ஒருவகையாய்நின்று பலபொருள்படுதலால் செம்மொழிச்சிலேடையணி. உவந்தபயமீந்து எனப் பாடங்கொண்டு உவந்து அபயமீந்து எனப்பிரித்து மகிழ்கூர்ந்து அபயந்தந்துஎனவும், உவந்தபயம் ஈந்து எனக்கொண்டுயாவருமகிழ்கூர்ந்த நீர்தந்து எனவும், ஒருவகையாகநின்ற தொகையை வெவ்வேறு தொகையாகப்பிரித்து வெவ்வேறு பொருள்கொள்ளும் பிரிநிலைச்சிலேடையணியுளமைத்துப் பொருள்கொள்ளலுமொன்று. இவ்வழக்கறியார் உவந்து பயமீந்து என்ற பாடத்தைப் பிழையாகக்கொண்டு பிழைபடுத்தினர். சிலேடையணியும், கடலில் வெள்ளங் கலந்ததைக் கவியிவ்வாறு கூறுதலால் பெயர்பொருட்டற்குறிப்பணியுங் கலந்துநிற்றலால கலவையணி. கடலென்னும் வேற்றரசன் திறைகொடுத்தடிவணங்கப் பயந்நீர்து சினந்தீர்ந்து கலந்தது என்றதனால் உழிஞைத்திணையுள் திறைகொண்டு பெயர்தற்றுறை ( )

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்னடிப்படுத்துமேலேந்தண்டகநாடுமுற்று
முன்னுறக்கவர்ந்துகொண்டவளத்தினுமூவிரட்டி
பின்னுறவளித்துவானிற்புலவரும்பெட்குமாற்று
லந்நிலையுயிர்களோம்பியரசுசெய்துறையும்பாலி.

(இ-ள்) பாலி தண்டக நாடு முற்றும் தன் அடிப்படுத்து மேலே முன் உற கவர்ந்துகொண்ட வளத்தினும் - பாலிநதியானது தண்டகநாடு முழுமையும் தன்னடிக்கீழ்ப்படுத்தி அதன்மேல் முன்பு மிகவுந் தான் கொள்ளைகொண்ட வளத்தைப்பார்க்கிலும், மூவிரட்டி பின் உற அளித்து - ஆறுபங்கு வளத்தைப் பின்பு மிகவுந் தந்து, வானில் புலவரும் பெட்கும் ஆறு ஆல் - விண்ணுலகிலுள்ள தேவரும் விரும்பும் வகையால், அந்நிலை உயிர்கள் ஓம்பி அரசுசெய்து உறையும் - அந்த நிலையில் உயிர்களைப் பாதுகாத்து அரசியல்செய்து வீற்றிருக்கும்.

வளம் என்றது காண்படு திரவியமுதலிய வைந்தினையும். அந்நிலையென்றது உளந்தருதலை. பாலாறனது உயிர்களுக்குப் பலகாலு மமுதூட்டி அவ்வுயிர்களை வளர்த்தலால் ஒவ்வொருகால் அமுதுபருகுந் தேவர்கள் அதனைநோக்கி நாமு மக்கட்பிறப்பினராயிற் பலகாலும் பருகி மகிழலாமென்று கருதுதலால் வானிற்புலவரும் பெட்குமாற்றால் - அந்நிலையுயிர்களோம்பியென்றார். இதனால் தேவருலகினுந் தொண்டைநாடு சிறந்ததென்பது குறிப்பாற்போதரலால் குறிப்பணி. தண்டகநாட்டிக்குத் தொண்டைநாடென்பதும் ஒருபெயர். "அண்டரும்புகழ்துண்டீரனாண்டுதுண்டீரநாடாய்த் - தண்டகன்பின்னராண்டுதண்டகநாடாய்ப்பின்னர்த் - தொண்டைமானாண்டுதொண்டைநாடெனத்துலங்கிற்றென்ப-பண்டயன்படைப்புத்தொட்டேப்புயிலுமித்தொண்டைநாடு" என விநாயகபுராணத்தில் வருதல் காண்க. (௩௧)

காரணப்பொருளின் றன்மைகாரியத்துளதாமென்ன
வாரணப்பனுவல்கூறுமரும்பொருடெளியத்தேற்றும்
பேரிசைப்புவிமேல்யார்க்கும்பெட்டனபெட்டவாறே
சீரிதிற்கொடுக்குந்தேனுத்தரவருஞ்செழுநீர்ப்பாலி.

(இ-ள்.) தேனு தரவரும் செழுநீர் பாலி - காமதேனு தரவந்த செழித்த நீர்மய மாகிய பாலாறானது, பேர் இசை புவிமேல் யார்க்கும் பெட்டன பெட்ட ஆறே சீரிதில் கொடுக்கும் - பெரிய புகழ்வாய்ந்த நிலவுலகின் மேல் எவர்க்கும் விரும்பினவற்றை விரும்பினபடியே அழகாகத் தாராநிற்கும் (அதனால்) காரணப்பொருளின் தன்மை காரியத்து உளது ஆம் என்ன ஆரணப் பனுவல் கூறும் அரும்பொருள் தெளியதேற்றும் - ஒருகாரணப்பொருளின் குணம் அதனால்வந்த காரியப்பாட்டிலு முளதென்று வேதங்கள் கூறு மரியபொருளைப் பலருந்தெரியத் தெளிவிக்கும்.

காமதேனுசுரந்த பாலே பாலாறுதலால் கருதியது தருங் காமதேனுவாகிய காரணத்தின்குணம் அதன்காரியப்பாடாகிய பாலிநதியிடத்து முளது என வர்ணியமாகிய சிறப்புப்பொருளால் முன்சொல்லிய அவர்ணியமாகிய பொதுப்பொருளைச் சாதித்தற்கு, யார்க்கும் பெட்டனபெட்டவாறே - சீரிதிற்கொடுக்கும் என்றதனால் வேற்றுப்பொருள் வைப்பணி. (கூஉ)

வறுமையுற்றுழியுந்தொண்டைவளமலிநாட்டோர்தங்க
ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல்காரற்றே
தெறுகதிர்கனற்றும்வேனிற்பருவத்துஞ்சீர்மைகுன்று
துறுமணலகடுகீண்டுமொண்புனலுதவும்பாலி.

(இ-ள்.) வறுமை உற்ற உழியும் வளம்மலி தொண்டைநாட்டோர் தங்கள் இறும் உடல் வருத்தியேனும் ஈவதற்கு ஒல்கார் - தமக்கு வறுமை நேரிட்டவிடத்தும் வளமிக்க தொண்டைநாட்டிலுள்ளோர் தமது அழியுமுடலை யொருபொருளாகக்கருதாது வருத்தியாயினுங் கொடுப்பதற்குச் சிறிதுந்தளரார், அற்று-அதுபோல, பாலி தெறு கதிர் கனற்றும் வேனில் பருவத்தும் - பாலிநதியானது தனது கிரணத்தால் உயிர்களை வருத்துஞ் சூரியன் வெதுப்பும் வேனிற்காலத்தும், சீர்மை குன்றாது உறுமணல் அகடு கீண்டும் ஒண்புனல் உதவும் - தனது வள்ளன்மை குன்றாமல் பொருந்திய தனது மணலாகிய வயிற்றைக் கிழித்தும் ஒள்ளிய நீரைத்தரும்.

பாலி உறுமணலகடுகீண்டு மொண்புனலுதவுமெனச் செய்யாமரபினதைச் செய்ததெனக்கூறுதல் புனைந்துரை-இது எடுத்துக்காட்டுவமையணி. இதுநிலை, நிலையாமையை யுணர்ந்து ஈதலைக்கூறினமையால் புறப்புறத்திணையுள் பெருங்காஞ்சித்துறை. (கூங)

சொற்றவித்தீர்த்தமேன்மைசுவைபடுபாலோடொக்கு
மற்றையதீர்த்தமெல்லாம்வாரதருபுனலோடொக்கும்
பெற்றிமையுணர்ந்துதொல்லோர்பெயரிடப்பட்டசீர்த்தி
பற்றியதெனலாம்பாலிப்பெருமையார்பகருநீரார்.

(இ-ள்.) சொற்ற இத்தீர்த்த மேன்மை சுவைபடும் பாலோடு ஒக்கும் பெற்றிமை - சொல்லப்பட்ட இத்தீர்த்தத்தின் மேன்மையானது சுவைகனிந்த பாலோடொத்துத்தோன்றுந் தன்மையையும், மற்றைய தீர்த்தம் எல்லாம் வார் தரு புனலோடு ஒக்கும் பெற்றிமை - இது ஒழிந்த மற்றுள்ள தீர்த்தங்களெல்லாம் செல்லும் நீரோடு ஒத்துத் தோன்றுந் தன்மையையும், தொல்லோர் உணர்ந்து பெயர் இடப்பட்ட சீர்த்தி பற்றி

யது எனலாம் - முதியோர் முன்னரே தெரிந்து பாலியெனப்பேரிட்டதால் வந்த கீர்த்திவிடாதமைந்ததென்று சொல்லப்படும், பாலிப்பெருமை பகரும் நீரார் யார்-ஆதலால் அந்தப் பாலிநதியின்பெருமையை யெடுத்துச்சொல்லுந் தன்மையையுடையவர் யாவர்.

வெண்ணிறமுடைய கீர்த்தி பொதிதலால் பாலாறு வெண்ணிறமுடையதென்பார் சீர்த்திபற்றியதெனலாமெனவும், தொன்றுதொட்டே கீர்த்திபொதியப்படுதலால் இன்று அதன்பெருமை யளவறுத்தற்கு அரிது என்பார் பாலிப்பெருமை யார்பகருநீரார் எனவுங்கூறினர். "ஆறுசென்றவியர்" என்றாற்போலப் பெயரிடப்பட்ட சீர்த்தியென வருதலால் காரணகாரியப்பொருளில்வந்த பெயரொச்சம். (௬௪)

விளம்புமித்தகைமணிகொழிவிரிதிரைத்தரங்க
வளம்புனற்றடம்பாலியான்வண்மைபெற்றோங்கி
யுளம்பயின்றுநாற்பொருள்களுமுளுற்றுநர்க்கிடமாய்த்
துளும்புமேன்மையிற்பொலிந்தது தொண்டைநன்னாடு.

(இ-ள்.) தொண்டை நல் நாடு - தொண்டையென்னும் நல்லநாடு, விளம்பும் இத்தகை மணி கொழி விரிதிரை தரங்கம் வளம் புனல் தட பாலியான் - சொல்லப்பட்ட இந்த அழகுவாய்ந்த முத்துகளைக்கொழித்து விரிந்த அலைகளின் வளத்தையுடைய நீர்மயமாகிய பெரிய பாலிநதியால், வண்மை பெற்று ஓங்கி - பிறர்க்குதவும் பெருமை பெற்றுச் சிறந்து, உளம் பயின்று நால்பொருள்களும் உளுற்று நர்க்கு இடமாய் துளும்பு மேன்மையில் பொலிந்தது - மனவூக்கங்கொண்டு அறம்பொருளின்பம் வீடென்னும் நான்குபொருளையுந் தேடுவோர்க்கு இடமாகி அதிகரித்த மேன்மையோடு விளங்கியது.

அறம் என்றது இல்லறந் துறவறம் என்னும் இரண்டையும்; பொருள் என்றது நிலைப்பொருளாகிய கல்விப்பொருளையும் நிலையாப்பொருளாகிய செல்வப்பொருளையும்; இன்பம் என்றது இல்லறத்தால் வரும் இம்மையின்பத்தையும் மறுமையின்பத்தையும்; வீடு என்றது துறவறத்தால் வரும் முத்திநிலையையும். "நற்றவஞ்செய்வார்க்கிடந்தவஞ் செய்வார்க்குமஃதிடம் - நற்பொருள்செய்வார்க்கிடம்பொருள்வார்க்குமஃதிடம்" நன்மையென்னும் விசேடணம் தந்தும் தாராதும் கூறிய தவம், பொருள் என்னும் இரண்டும் தமக்குரிய பொருள்மேல் நிற்கப் பிறர்கூறுதலால் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கிற்கும் இவ்வாறு கூறினும். (௬௫)

செக்கர்வார்சடைச்சிவபிரான்றிருவருள்செய்யத்
தக்கவாய்மையினுயிர்க்கெலாந்தன்னிடத்திருந்து
மைக்கணெம்பெருமாட்டியெண்ணான்கறம்வளர்க்குந்
தொக்கமாப்புகழ்படைத்தது தொண்டைநன்னாடு.

(இ-ள்.) தொண்டை நல் நாடு - தொண்டையென்னு நல்ல நாடானது, செக்கர் வார்சடை சிவபிரான் திருவருள் செய்ய - செவந்த நீண்ட சடாமுடியையுடைய சிவபெருமான் அறம்வளர்த்தற்கு இருநாழிநெல் திருவருள்செய்தருள, மை கண் எம்பெருமாட்டி தன்னிடத்திருந்து தக்க வாய்மையின் - மையெழுதிய கண்களையுடைய எமது பெருமாட்டி தனதிடத்திலிருந்து நடுநிலைமையோடு, உயிர்க்கு எல்லாம் எண்ணான்கு அறம் உம் வளர்க்கும் தொக்க மாப்புகழ் படைத்தது - முப்பத்திரண்டறங்களையு மோம்பும் நெருங்கிய பெரிய புகழ்பெற்றுள்ளது.

எல்லாவுயிர்களையு மொருசேர ஒப்பநோக்கி அறம்வளர்த்தி யோம்பினமையால் தக்க வாய்மையினெனவும், பிறநாட்டிவிருந்தோம்பாமையால் தன்னிடத்திருந்து எனவும், பிரமயாகமுதல் அபயந்தருதலிறுதியாகநின்ற முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தற்குத்தான் எல்லையாக இருத்தலால் எண்ணான்கறம்வளர்க்குந் தொக்கமாப்புகழ் படைத்ததெனவுங்கூறினார். வளர்க்கும் என்னும் பெயரெச்சம் தொண்டைநாடாகிய எல்லையென்னு மிடப்பெயர்கொண்டது. எண்ணான்கென்பதனிறுதியில் முற்றும்மை தொக்கது. "தெய்வந்தென்புலத்தார்பூதமானிடம்பிரமமென்றே—ரைவகையெச்சம்பூர்த்தந்துறந்தவர்மடங்களன்பு-செய்யுமில்வாழ்வார்க்கில்லமனைக்கு பகரணந்தேம்பூப்-பெய்தமைதண்ணீர்ப்பந்தரெங்கணும்பிறங்குசோலை. இரப்பவர்குருடரொவ்வமுற்றவர்ப்புரத்தல்வெந்நோய் - துரக்குநன்மருந்து தூவாய்மகவினையோம்பல்சுண்ணம்-பரித்தபாகடையேயெண்ணெய்பைம்புனல்குளிப்பவேண்டும் - மருக்கிளர்துவர்களாதிமலரணைநிலனான்கன்னி. கடிமணம்விளக்குமாருக்கடனொழித்திடுதலீச - னடியவர்விழைவவீகையக்கமாமணிவெண்ணீறு - படியிலாக்கடவுட்பூசையுபகரணங்கள்பாசந்-தடிதருவேதவாய்மைச்சைவநூல்புராணநல்கல். சிவபிரானடிக்கீழ்ப்பத்திசெவியறிவுறுத்தலோடும்-உவகையினபயம்யார்க்கும்வழங்குதலுள்ளிட்டோது - நவையணியறமெண்ணான்கும்" என முப்பத்திரண்டறங்களையும் பின்னர்க்கூறுதல் காண்க. புகழ்பொருளுக்கங்கமாகப் புகழத்தக்க சரித்திரத்தை யெடுத்துக்கூறுதலால் வீறுகோளணி. (௬௬)

பவம்விளைத்திடாப்பெரும்பதியெனத்திசைபோய
சிவம்விளைத்திடுநகரங்களேழுஞ்சிறந்து
தவம்விளைத்திடுகாஞ்சியைத்தன்னிடத்திருத்தி
நவம்விளைத்திடும்பெருமைபூண்டதுதொண்டைநாடு.

(இ-ள்.) தொண்டைநாடு-தொண்டைநாடானது, பவம் விளைத்திடாத பெரும் பதி என்ன - தம்மிடத்தில் வசிப்பவர்க்குப் பிறப்பினைத்தாராத பெரிய திருப்பதிகளென்று, திசைபோய சிவம் விளைத்திடு நகரங்கள் ஏழுஞ் சிறந்து - திசைகள் முற்றுஞ்சென்ற நன்மையை விளக்கு மயோத்திமுதலிய புரிகளேழுள்ளு மேம்பட்டு, தவம் விளைத்திடு காஞ்சியை தன்னிடத்து இருத்தி - தானே தவத்தை விளைக்குங் காஞ்சியென்னுந் திருப்பதியைத் தன்னிடத்தில் நிலைபெறச்செய்து, நவம் விளைத்திடும் பெருமை பூண்டது - என்றும் புதுமையையே விளைக்கும் பெருமையை மேற்கொண்டுள்ளது.

அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகையெனப் புரிகளேழாதலால் நகரங்களேழுமென்றார். முத்தியைத்தருந் தலங்களென்பார் பவம்விளைத்திடாப்பெரும்பதியெனவும், என்றுங் கெடாத நன்மையைத் தருவதென்பார் திசைபோய சிவம் விளைத்திடு நகரங்களெனவும், நினைக்க முத்தியைத்தருவதென்பார் சிறந்து தவம்விளைத்திடுங்காஞ்சியையெனவும், என்றும்உலவாத இன்பத்தை விளைக்கும் என்பார் தன்னிடத்திருத்தி நவம் விளைத்திடும் எனவுங்கூறினார். "மதுமலர்ப்பொழில்சூழ்காசியிறந்திடின்வழங்குமுத்தி - அதுவுநம்பெருமானார் தம்மருளுருப்பெறுவதாகும் -முதுநகர்க்காஞ்சிதன்னைநினைப்பவேமுத்திநல்கும் - கதுவருஞ்சிவபிரானார்திருவடிகலப்பதாமால்" எனப் பின்னர் வருதல் காண்க. (௬எ)

தரைவிளங்கியதண்டகநாட்டினிற்றகைசால்
வரையுங்கானமும்புறம்பணைப்பழனமுமணிநீர்த்
திரையும்வேலையுமென்னுநானிலத்தினுட்சிறந்த
புரையிலைந்திணைவளஞ்சிறிதறிந்தவாபுகல்வாம்.

(இ-ள்.) தகை விளங்கிய தண்டக நாட்டினில்-நிலவுலகில் மேம்பட்டு விளங்கிய தொண்டைநாட்டில், தகை சால் வரையும் கானமும் புறம்பு அணை பழனமும் மணி நீர் திரையும் வேலையும் என்னும் நால் நிலத்தினுள் - சிறப்பமைந்த மலையுங் காடும் புறத்தே யணைதலையுடைய வயலும் வற்றாத நீர் மறியும் கடலுமென்று சொல்லப்பட்ட நால்வகை நிலங்களுள், சிறந்த புரையில் ஐந்திணை வளம் சிறிது அறிந்த ஆறு புகல்வாம்-மேம்பட்ட குற்றமில்லாத குறிஞ்சிமுதலிய ஐந்துநிலங்களிலுள்ள வளங்களின் பெருமையுள் எமக்குச் சிறிது தெரிந்தவண்ணமெடுத்துச்சொல்வாம்.

நகர்ப்புறத்தே யணைதலால் புறம்பணைமருதம் எனவும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன மலை, காடு, வயல், கடல் இவற்றைச்சார்ந்த இடங்களாதலால் நானிலத்தினுள்எனவும், பாலை - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்போல ஒருபாற்படாது நால்வகை நிலத்தும் நிகழ்தலால் பாலையைக்கூட்டிச்சிறந்த புரையிலைந்திணையெனவுங் கூறினர், "புறம்பணையான்வாழ்கோட்டம்" எனச் சிலப்பதிகாரத்திலும், "இடைநகர்ப்புறம்பணையியம்புமோசை" எனச் சீவகசிந்தாமணியிலும் வருதலால் புறம்பணைமருதம் எனவும், "நடுவணைந்திணைநடுவணதொழிய" எனத் தொல்காப்பியம் பொருளதிகாரத்தில்வருதலால் பாலைக்கு நிலங்கூறாது நானிலத்தினுட்சிறந்த புரையிலைந்திணையெனவுங் கூறினர். (கஅ)

குறிஞ்சி.

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் இந்நிலங்களுக்குப் பெயர் வந்தகாரணம்அவ்வவ் நிலக்கருப்பொருள்களால் "கருங்கோற்குறிஞ்சிப்பூக்கொண்டு" எனவும், "கோட்டுறுபல்காய் வாலிணர்ப்பாலை" எனவும், "முல்லையந்தண்பொழில்" எனவும், "மருதமர்நீழல்" எனவும், "பாசடைநிவந்தகணைக்காநெய்தல்" எனவும் கூறப்படுதலால் அவ்வவ் நிலப்பொருள்களில் அவை சிறந்தனவாதலின் வந்தன.

முருகவேட்டுகிதூமமோம்புறமுளியகில்சந்
துருவவாரழற்பெய்துபுன்பயிர்விளைத்துவப்பார்
பெருவளந்துறந்தூர்தொறுமிடுபலிபேணும்
பொருவில்வாழ்க்கையர் தஞ்செயல்போன்மெனபபொருப்பர்.

(இ-ள்.) பெருவளம் துறந்து ஊர்தொறும் இடுபலி பேணும் பொருவு இல்வாழ்க்கையர் தம்செயல்போன்மென-பெருஞ்செல்வத்தைக் கைவிட்டு ஊர்கள்தோறுஞ் சென்று பிறரிடும்பலியை விரும்பியேற்கு மொப்பில்லாத துறவறவாழ்க்கையையுடையோர் செயலை யொக்குமென்று சொல்ல, பொருப்பர் - மலையில் வசிக்குங் குறவர்கள், முருகவேட்கு இடு தூமம் ஓம்புற முளி அகில்சந்து உருவம் ஆர் அழல் பெய்து புன்பயிர்விளைத்து உவப்பார்-முருகக்கடவுளுக்குப் புகைக்கு முகவாசத்தையோம்பப் புறத்தில் உலர்ந்த அகிற்கட்டையையுஞ் சந்தனக்கட்டையையும் நிறமமைந்த நிறைந்த தீயிற்போட்டுப் புல்லிய தினைமுதலிய பயிர்களை விளைவித்து மகிழ்வார்கள்.

பொருப்பர்க்குத் துறந்தோரும், அகிலும் சந்தும் பெருவளத்திற்கும் பலிக்குத் தினையுங்கூறுதலால் ஒப்புமைக்கூட்டவுவமையணி. முருகவேள் தெய்வமும், அகிலும் சந்தும்மரமும், தினை உணவும் ஆதலால் குறிஞ்சிக்கருப்பொருள் இதனாற்கூறினர். குறிஞ்சிமுதலிய ஐந்துநிலங்களின் வளங்களே நாட்டிற்கு வளங்களாதலால் குறிஞ்சிமுதலியவற்றை முறையேகூறுகின்றார். (கக)

ஏறுதன்னுடல்வருத்தியபகைமையெண்ணாது
தூறுபன்மணிமரமுதல்பொறையெலாந்தொலைத்த

வேறுநன்றியேகடைப்பிடித்திதைவியன்பொருப்பர்க்
கூறுநல்வளம்விளைத்திடுமுயர்ந்தவர்செயல்போல்.

(இ-ள்.) இதை - தினைப்புனமானது, ஏறு தன்னுடல் வருத்திய பகைமை எண்ணுது - வலிமை அமைந்த தனது உடம்பினை யுழுதுவருத்திய பகைமையைக்கருதாது- தாறு பல்மணி மரமுதல் பொறைஎல்லாம் தொலைத்த வேறுநன்றியே கடைப்பிடித்து, தாறுகளும் பல இரத்தினங்களு மரமுமுதலிய பாரங்களாகிய இவைகளையெல்லாங் கட்டோடழித்த வேறுதவியைக்கருதி, உயர்ந்தவா செயல்போல் - மேன்மக்கள் பிறர்க்குச் செய்யு முதவியைப்போல, வியன் பொருப்பர்க்கு ஊறு நல் வளம் விளைத்திடும் - பரந்த குறிஞ்சிநிலமாக்களுக்கு மிக்க பெருவளத்தைத்தரும்.

முதல் பொறைவினைத்தொகையாதலி னியல்பாயிற்று. வேறு நன்றியென்றது முன்புசெய்த வுதவியை. நன்றல்லது அன்றே மறத்தலால் உயர்ந்தவர் செயல்போல் என்றார். இது வேற்றுப்பொருள் வைப்பணி. இது புறப்புறத்திணையுள் முதுமொழிக் காஞ்சி. (௪0)

வேட்டைமேற்புகுவார்க்குநல்வினையுந்தமடவார்
கூட்டம்வாய்க்குமச்சாரலிற்றினைக்குரற்கெய்துஞ்
சேட்டிளங்கிளிகுலங்கள்,ந்தெரிவைமாரோப்பும்
பாட்டிசைத்திறமொளியிருந்தனுதினமபயிலும்.

(இ-ள்.) வேட்டைமேல் புகுவார்க்கு நல்வினை உந்த மடவார் கூட்டம் வாய்க்கும் அச்சாரலில் - வேட்டைமேற்செல்லுங் காளைப்பருவமுடைய புருடர்க்கு நல்வினை கூட்டிமுடிக்க மங்கைப்பருவமுடைய பெண்கள் புணர்ச்சிவாய்க்கும் அந்த மலையின் சாரலில், தினைக்குரற்கு எய்தும் சேடு இளம் கிளிக்குலங்கள்-தினையின்கதிரைக் கவரவரும் மிக்க இளமைவாய்ந்த கிளியின்கூட்டங்கள், அ தெரிவைமார் ஒப்பும்பாட்டு இசைத்திறம் ஒளியிருந்து அனுதினம் பயிலும்-அந்நிலத்தில்வாழுங் குறப்பெண்கள் தம்மைத் துரத்தற்குப் பாடும் பாட்டின் இசையின்றிறத்தை யொளித்திருந்து எந்நாளும் பழகாநிற்கும்.

குறிஞ்சி புணர்தற்பொருட்டாதலால்வேட்டைமேற் புகுவார்க்கு நல்வினையுந்தமடவார் - கூட்டம்வாய்க்கும் எனவும், அந்நிலப்புள்கிளியாதலால் சேட்டிளங்கிளிக்குலங்கள் எனவுங்கூறினார். இசைத்திறம் என்றது இசையின் கூறுபாடுகளை. ஒளியிருந்து ஒளியென்னு முதனிலை வினையெச்சப்பொருள்மேல் நின்றது. உபமானத்திற்குக் குறைவுதோன்ற அதனை யுபமேயமாக்கிக் கிளிக்குலங்கள் தெரிவைமாரோப்பும்-பாட்டிசைத்திறமொளியிருந்தனுதினம்பயிலும் எனக்கூறுதலால் எதிர்நிலையணி. (௪௧)

நங்குலத்தருவாழ்க்கையைக்கெடுத்துநம்மிருக்கை
தங்களுக்கெனக்கொண்டவிவ்வேனல்கடம்மை
யிங்கண்வாட்டுதுமென்பதோர்சூழ்ச்சியெண்ணியபோ
லங்கணெஞ்சியவேங்கைகள்போதுசெய்தலரும்.

(இ-ள்.) அங்கண் எஞ்சிய வேங்கைகள் - அவ்விடத்து வெட்டப்படாது எஞ்சிநின்ற வேங்கைமரங்கள், நம் குலத்தரு வாழ்க்கையை கெடுத்து நம் இருக்கை தங்களுக்கு என கொண்ட இ ஏனல்கள் தம்மை-நமது குலத்திற்றோன்றிய விருட்சங்களின் வாழ்வினைக்கெடுத்து நமக்குஇருக்கையாயுள்ள இடத்தினைத் தமக்குஇருக்கையாகக்கொண்ட இத்தத்தினைகளை, இங்கண் வாட்டுதும் என்பது ஓர் சூழ்ச்சி எண்ணியதுபோல்

இவ்விடத்தில் வாட்டுவோமென்று கருதும் ஓராலோசனையைக் கருதியதுபோல்,போது செய்து அலரும் - அரும்பிப் போதுசெய்து மலராநிற்கும்.

போது கிண்கிணிவாய்க்கொள்ளுமலர். வேங்கை குறிஞ்சிநிலத்துமரம் ஆதலால் உழுது தினைவிதைக்குங் குறவர்கள் அதனினத்தைக் கெடுத்தற்குத் தினைகாரணமாய் நிற்றலில் அவர்களால் வெட்டப்படாது நின்ற சில வேங்கைமரங்கள் நம்மினத்தைக் கெடுத்த இதனை யழிப்போமென்று நினைத்ததுபோல மலர்ந்தன என்பது கருத்து. தனக்குக் கேடுசூழ்ந்ததற்குத்தான் கேடுசூழ்ந்தது என்றதனால் தகுதியணி. கருதிய என்பதில் புடைபெயர்ச்சிப் பொருளில்வந்த துவ்விகுதிதொகுத்தல். வேங்கைமலர்ந்தால் தினையழியும் என்பதற்கு "மாதிடங்கொண்டம்பலத்துநின்றோன்வடவான்கயிலைப்-போதிடங்கொண்டபொன்வேங்கைதினைப்புனங்கொய்கவென்று - தாதிடங்கொண்டுபொன்வீசித்தங்கள்வாய்சொரியநின்று-சோதிடங்கொண்டிதெம்மைக்கெடுவித்தது தூமொழியே" எனக் கோவைத்திருவாசகத்தில் வருதல் காண்க. (௬௨)

என்னையூர்ந்தருள்சுடர்வடியிலையவேற்பெருமான்
றன்னைநன்மருகெனப்படைத்தவன்றனதூர்தி
யன்னதாமெனுங்கேண்மையானளிமுகிற்குலத்தைக்
கன்னிமாமயில்காண்டொறுங்களிசிறந்தகவும்.

(இ-ள்.) கன்னிமாமயில் - இளமைதங்கிய பெருமைவாய்ந்த மயில், என்னை ஊர்ந்தருள் சுடர்வடி இலையவேல் பெருமான் தன்னை - என்னை யூர்தியாக நடத்தியருளு மொளிவாய்ந்த வடித்த தகட்டுவடிவாகிய வேலேந்திய முருகக்கடவுளை, நல் மருகு என்ன படைத்தவன் தனது ஊர்தி அன்னது ஆம் என்னும் கேண்மையான்-நல்ல மருகனைப்படைத்த இந்திரனது வாகன மதுவாமென்னும் நட்பால், அளிமுகில் குலத்தை காண்தொறும் களிசிறந்து அகவும் - குளிர்ச்சிவாய்ந்த மேகக்கூட்டத்தைப் பார்க்குந்தோறு மகிழ்ச்சியில் மேம்பட்டாடாநிற்கும்.

அன்னது அதுவென்னுஞ் சுட்டுத்திரிபு. மயிலாடுதற்கு ஏதுகூறுதலால் ஏதுவணி

நெருங்குபைந்தழைவருக்கைமேனெடுவளியலைப்ப
வருங்கண்மாமயில்வீற்றிருந்தசைதருங்காட்சி
கருங்கணாயிரச்செம்மறன்மருகனைக்காண
மருங்குவந்துதன்னூர்தியைநிறுவுதன்மானும்.

(இ-ள்.) பைந்தழை நெருங்கு வருக்கைமேல் - பசிய தழைகள் நெருங்கிய பலாவின்மேல், நெடுவளியலைப்ப அருங்கண் மாமயில் வீற்றிருந்து அசைதருங் காட்சி - பெருங்காற்றலைக்க அரிய கண்கள் வாய்ந்த கலாபத்தையுடைய பெரிய மயில் நிகரின்றியிருந்து அசையுந்தோற்றம், கருங்கண் ஆயிரச்செம்மல் தன் மருகனைக்காண மருங்குவந்து தன் ஊர்தியை நிறுவுதல் மானும் - கரிய ஆயிரங் கண்களையுடைய இந்திரன் தனது மருகனாகிய முருகக்கடவுளைக்காண அக்குறிஞ்சிநிலத்தின் பக்கத்தில்வந்து தனது வாகனமாகிய மேகத்தை நிறுத்துதலையொக்கும்.

பசிய தழைநெருங்கிய பலாமரத்தை மேகமாகவும், அதன்மேலிருக்குங் கண்கள்வாய்ந்த கலாபத்தையுடைய மயிலை யிந்திரனாகவும், அம்மரம் நிற்றலை இந்திரன் தனது வாகனமாகிய மேகத்தை நிறுத்தியதாகவும், காற்றாலசையு மயில் தனது மருகனைக் காண இந்திரன் வந்ததாகவுங்கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. (௬௪)

சந்துமாரமுந்தாங்கிவம்பலர்ந்ததண்குவட்டான்
மைந்தர்கண்ணையுமனத்தையுங்கவர்ந்திடும்வனப்பின்
முந்துமோங்கலுங்கொடிச்சியர்குழுக்களுமுகிறோய்
கந்தமார்குழைமுகத்தலரிலவங்கங்காட்டும்.

(இ-ள்.) சந்துஉம் ஆரம்உம்தாங்கி வம்பு அலர்ந்ததண்குவடு ஆல்-சந்தனவிருட்சங்களையு முத்துகளையுஞ்சுமந்து வாசம்பரந்தகுளிர்ச்சிவாய்ந்த சிகரங்களால், மைந்தர்கண்ணை உம்மனத்தை உம் கவர்ந்திடுவனப்பு இல்முந்தும் ஓங்கலும் - பார்த்தஆண்மக்களதுகண்களையும் மனத்தினையுங் கொள்ளைகொள்ளுமழகில் முற்பட்டு விளங்குமலையும் (சந்து உம் ஆரம் உம் தாங்கி வம்புஅலர்ந்த தண்குவடு ஆல் மைந்தர்கண்ணை உம் மனத்தை உம் கவர்ந்திடுவனப்பு இல் முந்தும் கொடிச்சியர்குழுக்களும்-சந்தனக்குழம்பையு முத்தாரத்தையு மேற்கொண்டு கச்சுகட்டப்பட்ட அடிபரந்ததண்ணிய திரண்டதனத்தால் ஆடவர் பார்வையையு மனத்தையுங் கொள்ளைகொள்ளும் அழகில் பெண்களுள்முற்பட்ட குறப்பெண்களது கூட்டங்களும்,) முகில்தோய் கந்தம் ஆர் குழை முகத்து அலர் இலவங்கம்காட்டும்-மேகங்கள் சஞ்சரிக்கும் வாசமிக்க குழைகளிடத்து மலருமிலவங்கத்தைக் காட்டாநிற்கும் (முகில்தோய் கந்தம் ஆர் குழைமுகத்து இலவு அலர் அங்கம்காட்டும்-மேகம்போன்ற கூந்தலிற்றோய்ந்த கம்மியர்தொழில் தம்மிடத்து முற்றுப்பெற்ற குண்டலத்தையுடைய முகத்தினிடத்து முள்ளிலவமலரையொத்த அதரத்தைக் காட்டாநிற்பர்.)

ஓங்கல் இலவங்கம்காட்டும்எனவும், கொடிச்சியர்குழாங்கள் பொருளாலுயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் அஃறிணைப்பன்மையில்வந்த காட்டும் என்னும் வினையொடுகூட்டிக் கொடிச்சியர்குழாங்கள் முகத்தலரிலவங்கங்காட்டும் எனவும் முறைநிரனிறையாகக்கொள்க. குவடுதிரட்சி இதுபண்பாகுபெயராய் முலைமேல் நின்றது. தண்குவட்டால் கவர்ந்திடும்வனப்புஎன்றது ஏதுவணியும், ஓங்கல்காட்டும், கொடிச்சியர்குழாங்கள்காட்டும் என ஒரு தருமத்தின் முடித்தலால் ஒப்புமைக்கூட்டவணியும், முகில்தோய் முகிலாகிய உபமானச்சொல்லால் கூந்தலாகிய உபமேயப்பொருளை இலக்கணையாகக்கூறுதலால் உருவகவுயர்வுநவிற்சியணியும், சந்துமாரமுந்தாங்கி வம்பலர்ந்த தண்குவட்டால் எனச் செம்மொழிச்சிலேடையணியும்,முகிறோய் கந்தமார்குழை முகத்தலரிவங்கங்காட்டும் எனப் பிரிமொழிச்சிலேடையணியுங் கலந்துவருதலாற் கலவையணி. (௬௫)

கொங்கையேந்தியவாண்களும்மவணகொம்புடைய
துங்கவேங்கையின்குலமெலாமவணபால்சுரந்து
பொங்குநீடுசேவினங்களுமவணவான்புனலை
யங்கண்வேட்டுணுமொற்றைத்தாளெகினமுமவண.

(இ-ள்.) கொங்கை ஏந்திய ஆண்களும்-முலையையேந்திய ஆண்விருட்சங்களும், அவண - அவ்விடத்திலுள்ளன, கொம்பு உடைய துங்கவேங்கையின் குலம் எல்லாம்-கொம்புகளையுடைய உயர்ந்த வேங்கைப்புலியின் கூட்டங்களெல்லாம், அவண - அவ்விடத்திலுள்ளன, பால் சுரந்து பொங்கு நீடுசே இனங்களும்-பாலைச்சுரந்து விளங்கும் எருதின் கூட்டங்களும், அவண - அவ்விடத்திலுள்ளன, வான் புனலை அங்கண் வேட்டு உண்ணும் ஒற்றைத்தாள் எகினமும் - ஆகாயகங்கையை அவ்விடத்தில் விரும்பியுண்ணு மொருகாலையுடைய அன்னங்களும், அவண - அவ்விடத்திலுள்ளன.

கொங்கையேந்திய, கொம்புடைய, பால்சுரந்துபொங்கு, வான்புனலையங்கண் வேட்டுணும் என்னும் அடைமொழியாற்றல்களால் அல்லாத பொருட்செய்திகளைக்கூறி (கொங்கு ஐ ஏந்திய) வாசனையைப்பொருந்திய ஆண்மரங்களும், கிளைகளையுடைய வேங்கைமரத்தின் கூட்டங்களும், பால்சுரந்து விளங்குஞ் செம்மரத்தின் கூட்டங்களும், ஆகாயகங்கையினீரை விரும்பியுண்ணும் ஒருதூற்றையுடைய புளியமரங்களும் என வொருபொருட்செய்தியைக்கூறுதலால் சுருங்கச்சொல்லணி. "பாயாவேங்கை பறவாக்கொக்கு" என்பவற்றில் பாயா, பறவா என்னுங்குறிப்பால் பலபொருளையொழித்து மரத்தின்மேல் வேங்கை கொக்கு நின்றாற்போல கொங்கையேந்திய முதலிய குறிப்புகளால் ஆண்கள் முதலியவை மரங்கள்மேல் நிற்றலால் குறிப்பணியெனலும் ஒன்று. புளியமரம் அந்நிலக்கருப்பொருள். (சுசு)

ஆணெலாமொருகன்னியைமணப்பவானணையுங்
கோணைவேங்கைகள்யாட்டினோடுறவுகொண்டோங்கும்
பேணுசேவினஞ்சிங்கமேலேறிடும்பிழையா
தேணினாற்பொலியெகினங்களிடபத்தைவிழுங்கும்.

(இ-ள்.) ஆண் எல்லாம் ஒருகன்னியை மணப்ப - ஆண்மக்களெல்லாம் ஒப்பில்லாத கன்னிப்பெண்களைக்கூட, வான் அணையும் கோணை வேங்கைகள் யாட்டினோடு உறவுகொண்டு ஓங்கும் - ஆகாயத்தின் காறுந்தாவு மாறுபட்ட புலிகள் ஆடுகளோடு உறவுகொண்டு விளங்கும், பேணு சே இனம் சிங்கம் மேல் ஏறிடும் - விரும்பும் எருதின் கூட்டம் சிங்கத்தின்மேலேறும், ஏணினால் பொலி எகினங்கள் பிழையாது இடபத்தை விழுங்கும்-வலிமையால் விளங்கும் அன்னங்கள் தவறாமல் எருதினை விழுங்காநிற்கும்.

இங்குக் குறிக்கப்பட்ட சொற்கள் (ஆண் எல்லாம் ஒருகன்னியை மணப்ப.) ஆண்மரங்களெல்லாம் ஒரு கன்னிராசியைத்தோய எனவும், (வான் அணையும் கோணை வேங்கைகள் யாட்டினோடு உறவுகொண்டு ஓங்கும்) ஆகாயத்தையளாவிய பிளவுபட்ட வேங்கைமரங்கள் மேட இராசியோடு நட்புக்கொண்டு உயர்ந்து விளங்கும் எனவும், (பேணுசே இனம் சிங்கம் மேல் ஏறிடும்) விரும்புஞ் செம்மரத்தின் கூட்டங்களெல்லாம் சிங்க இராசியின்மேல் தோயும் எனவும், (ஏணினாற் பொலி எகினங்கள் பிழையாது இடபத்தை விழுங்கும்) சேகால் விளங்கும் புளியமரங்கள் தவறாமல் இடபராசியை மறைக்கும் எனவும் பலபொருளையுணர்த்துஞ் சொற்களாதலால் அவற்றால் இப்பொருள்களைக் குறித்தறிதற்குத் தகுதியாகக்கூறுதலால் குறிநிலையணி. செம்மை என்னும் பண்பு ஈறுகெட்டு முதனீண்டு பண்பிமேல் நிற்றலால் பண்பாகுபெயர். (சுஎ)

வில்லலர்ந்தபல்லுடுக்களும்விண்ணெறிப்படருஞ்
செல்லும்வெண்கதிர்க்கடவுளும்பானுவுந்திறல்சான்
மல்லல்வானவக்குழுவுமெய்ப்பாறவந்திருக்கு
மில்லமெங்கணும்வான்றொடவிழைத்திடுங்குன்றம்.

(இ-ள்.) குன்றம்-அங்குள்ள மலைகள், வில் அலர்ந்த பல் உடுக்கள் உம் விண் நெறி படரும் செல்லும் வெண் கதிர்க் கடவுளும் - ஒளிமிக்க பல நக்ஷத்திரக்கூட்டங்களும் ஆகாயத்தின்வழிச் செல்லு மேகக்கூட்டங்களும் சந்திரனும், பானுவும் திறல் சால் மல்லல் வானவக்குழுவும் எய்ப்பு ஆற வந்திருக்கும்-சூரியனும் வலிமைமிக்க செல்வவளம்வாய்ந்த தேவர்கூட்டங்களும் இளைப்பாற வந்திருக்கும், இல்லம் எங்கணும் வான் தொட விழைத்திடும் - இல்லங்களை யெவ்விடத்தும் ஆகாயத்தை யளாவ விரும்புச்செய்

யும், (இல்லம் எங்கணும் வான் தொட இழைத்திடும்) - தேற்றுமரங்கள் எவ்விடத்தும் ஆகாயத்தை யளாவ வவற்றை யுண்டாக்கும்.

பலபொருளை யுணர்த்துஞ் சொல்லாயினும் தேற்றுமரம் என்னும் ஒருபொருளையு முணர்த்துதலால் அப்பொருளைக் குறித்தறிதற்குத் தகுதியாகக் குன்றம் எனக்கூறுதலில் இதுவுங் குறிநிலையணி. (சஅ)

போதுமூன்றினும்போதுசெய்காவிசூழ்பொருப்பு
மேதகுந்தமிழ்க்கெல்லையாம்வேங்கடவரையுங்
காதல்பூப்பவத்தாணிகொண்டறுமுகக்கடவுள்
கோதுநீத்தரசாட்சிசெய்குறிஞ்சியக்குறிஞ்சி.

(இ-ள்.) அக்குறிஞ்சி போது மூன்றினும் போது செய் காவிசூழ் பொருப்பு உம் அந்தக்குறிஞ்சிலமானது காலைமுதலிய மூன்றுகாலத்தும் அரும்பி மலரும் நீலோற்பலங்கள் நிறைந்த திருத்தணிகையையும், மேதகும் தமிழ்க்கு எல்லை யாம் வேங்கட வரை உம்-மேன்மைதங்கிய தமிழ்வழங்குநிலத்திற்கு ஒரெல்லையாகிய திருவேங்கடமலையையும், அறுமுகக்கடவுள் காதல் பூப்ப அத்தாணிகொண்டு - முருகக்கடவுள் விருப்பமிக அரசிருக்கையாகக்கொண்டு, கோது நீத்த அரசு ஆட்சிசெய் குறிஞ்சி - குற்றத்தினின்று நீங்கிய அரசியலைச்செய்யுங் குறிஞ்சியாம்.

"தமிழ்நாட்டிற்கு வடக்கட் பிறவெல்லையுமுளவாக வேங்கடத்தைக்கூறினர், அகத்தியனார்க்குத் தமிழைச் செவியறிவுறுத்த செந்தமிழ்ப்பரமாசாரியனாகிய அறுமுகக் கடவுள் வரைப்பென்னும் இயைபுபற்றி" என இந்நூலாசிரியர் தொல்காப்பியச் சூத்திர விருத்தியில் "வடவேங்கடந் தென்குமரி" எனத் தமிழ்க்கெல்லை கூறுமிடத்திலுங் கூறுதலால் தமிழ்க்கெல்லையாம் வரையும் என அறுமுகக்கடவுள் அரசாட்சிசெய் குறிஞ்சியெனத் திருத்தணிகையோடு சேர்த்திக்கூறினர். நீத்த என்னும் பெயரெச்சத்தின் ஈறுதொகுத்தல். (சகூ)

அன்பெலாமொருபிழம்பெனத்திரண்டகண்ணப்ப
னெம்பிராற்கொருவிழியிடந்தப்புகாளத்தி
பொன்பிறங்கியமுகலிசூழ்கயிலையம்பொருப்புந்
தன்புலத்திடையுடையதுதடவரைக்குறிஞ்சி.

(இ-ள்.) தடவரைக்குறிஞ்சி - பெரிய மலையைச்சார்ந்த குறிஞ்சிநிலம், அன்பு எல்லாம் ஒரு பிழம்பு என்ன திரண்ட கண்ணப்பன் - அன்புகளெல்லாம் ஒரு திரட்சியாகத்திரண்டு ஒருருவெடுத்தாலொத்த கண்ணப்பநாயனார், எம்பிராற்கு ஒருவிழி உம் இடந்து அப்பு காளத்தி - எமது பெருமானுக்கு மற்றொரு கண்ணையும் பேர்த்து அப்புங் காளத்தியாகிய, பிறங்கிய பொன் முகலி சூழ் கயிலை அம்பொருப்பும் - விளங்குகின்ற பொன்முகலி நதிசூழ்ந்த திருக்கயிலைமலையையும், தன்புலத்திடை உடையது - தனது இடத்திலுடையது.

"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கலன்பென்றும்" எனவும், "அன்புபிழம்பாய்த்திரிவார்" எனவும் திருத்தொண்டர்புராணத்திலும் வருதலால் அன்பெலாமொருபிழம்பெனத் திரண்ட கண்ணப்பன் எனவும், இவர் முறுகிய அன்பினைச் சிவகோசரியார்க்குத் தெரிவித்தருள வலத்திருக்கண்ணிலுதிரஞ் சோரநின்ற சிவலிங்கப்பெருமானார் இருந்தருளியகாலையி லதுகண்டுயிர்பொறுக்கலாற்றாது ஊனனுக்கு ஊனே மருந்தென்று தமது கண்ணிடந்தப்ப அது மாறி இடக்கண்ணிலுங் குருதிசோரக்கண்டு மற்றைத்

தனது கண்ணையும் பேர்த்தப்பத்தொடங்கினமையால் ஒருவிழியிடந்தப்பு எனவும், காளத்தி தென்கயிலையாதலால் காளத்திக்கயிலையம்பொருப்பும் எனவுங்கூறினர். நக்கீரதேவநாயனாரும் கயிலைபாதி காளத்திபாதி யென்றருளியதும் அது. விழியென்பதனிறுதியில் இறந்ததுதழீஇய எச்சவும்மை தொகுத்தல். சிவகோசரியார்க்குத் தெரித்தருள என்றது "உனக்கவன்றன்செயல்காட்டநாளைநீயொளித்திருந்தால் - எனக்கவன்றன்பரிவிருக்கும்பரிசெல்லாங்காண்கின்றாய் - மனக்கவலையொழிகென்றுமறைமுனியர்க்கருள்செய்து - புனற்சடிலத்திருமுடியாரெழுந்தருளிப்போயினார்" என ஷை புராணத்தில் வருதல்காண்க. பண்புத்தொகையாமிடத்து வல்லெழுத்து மிகும் என்பதைத் திருத்தப்புகுந்தவர் மறந்தனர்போலும். (௩௦)

> நாவன்மன்னவர்க்கிரந்துசோறளித்திடுநம்மான்
> றேவியோடமர்திருக்கச்சூர்திருவிடைச்சுரமும்
> பாவகாரியரெய்தொணுக்கழுகுசூழ்பறம்பு
> மேவரத்திகழ்குறிஞ்சியின்பெருமையார்விரிப்பார்.

(இ-ள்.) நாவல் மன்னவர்க்கு இரந்து சோறு அளித்திடும் நம்மான் - திருநாவலூராளியாகிய ஆளுடைநம்பிக்குப் பலவிடத்துஞ் சென்றிரந்து திருவமுது தந்தருளிய சிவபெருமான், தேவியோடு அமர் திருக்கச்சூரும் திருவிடைச்சுரமும் - உமையம்மையோடு எழுந்தருளிய திருக்கச்சூரென்னுந் திருப்பதியும் திருவிடைச்சுரமென்னுந் திருப்பதியும், பாவகாரியர் எய்த ஒண்ணாத கழுகு சூழ் பறம்பும் - பாவத்தொழிலோர் அடைதற்கரிய திருக்கழுக்குன்றமும், மேவர திகழ் குறிஞ்சியின் பெருமை விரிப்பார் யார் - தன்னிடத்தில் பொருந்தவிளங்குங் குறிஞ்சிநிலத்தின் பெருமையை யெடுத்து விரித்துக்கூறுவோர் எவர். (ஒருவருமில்லையென்றபடி.)

ஆளுடைநம்பிகள் திருக்கச்சூருக்கு எழுந்தருளித் தமது பரிசனங்களி லொருவருந் தம்முடன் போதராமையால் பசியால் வருந்தியிருக்குங்காலையில் சிவபிரான் அந்தணத்திருவுருக்கொண்டெழுந்தருளி உம்முடைய பசிதீர இங்கிருக்கும் பிராமணர்கள் வீட்டிற்குச்சென்று அன்னம் வாங்கிவருகிறேனென்றருளி யவ்வாறே கொண்டுவந்து தந்தருளினமையால் நாவன் மன்னவர்க்கிரந்து சோறளிக்கு நம்பெருமான் எனவும், புறச்சமயிகளடைதற்கரிய தலமாதலால் பாவகாரிகளெய்தொணுக்கழுகுசூழ் பறம்புமெனவுங் கூறினர். இத்தலங்கள் தொண்டைநாட்டில் குறிஞ்சிநிலத்துளவாதலால் குறிஞ்சியிலடக்கிக்கூறினர். நாவன்மன்னவர்க் கிரந்து சோறளிக்கு நம்மான் என்றது—

> "மெய்ப்பசியான்மிகவருந்தியிளைத்திருந்தீர்வேட்கைவிட
> இப்பொழுதேசோறிரந்திங்கியானுமக்குக்கொடுக்கின்றேன்
> அப்புறநீரகலாதேசிறிதுபொழுதமருமெனச்
> செப்பியவர்திருக்கச்சூர்மனைதோறுஞ்சென்றிரப்பார்.
>
> வெண்டிருநீற்றணிதிகழவிளங்குநூலொளிதுளங்கக்
> கண்டவர்கண்மனமுருகக்கடும்பகற்போதிடும்பலிக்குப்
> புண்டரிகக்கழல்புவிமேற்பொருந்தமனைதொறும்புக்குக்
> கொண்டுதாம்விரும்பியாட்கொண்டவர்முன்கொடுவந்தார்.
>
> இரந்துதாங்கொடுவந்தவின்னடிசிலுங்கறியும்
> அரந்தைதரும்பசிதீரவருந்துமெனவளிப்பப்
> பெருந்தகையார்மறையவர்தம்பேரருளின்றிறம்பேணி
> யிரந்தபெருங்காதலினால்நேர்தொழுதுவாங்கினார்." எனத் திருத்தொண்டர்

புராணத்தில் வருதல் காண்க. எய்த என்னும் வினையெச்சத்தினீறுதொகுத்தல். (௩௧)

பாலை.

குராவளித்திடுபாவையைக்கோங்குபொன் கொடுத்துப்
பராரைப்பாடலம்பூந்தழற்பாங்கரின் மணப்ப
மராமரத்துளர்வண்டுபண்பாடவன்முருங்கை
விராவிவெண்பொரியிறைத்திடும்வியப்பினதொருபால்.

(இ-ள்.) ஒருபால் - ஒருபக்கத்து, குரா அளித்திடு பாவையை - குராமரம் பெற்ற பாவையை, கோங்கு பொன் கொடுத்து பரு அரைபாடலம் பூ தழல் பாங்கரின் மணப்ப-கோங்குமரங்கள் பொன்னைத்தந்து பருத்த தூற்றையுடைய பாதிரியின்மலராகிய வேள்வித்தீயின் பக்கத்தில் மணஞ்செய்ய, மராமரத்து உளர் வண்டு பண்பாட- மராமரத்தில் பறந்தசையும் வண்டுகளிசைபாடவும், வல் முருங்கை விராவிவெண் பொரி இறைத்திடும் வியப்பினது-வலிய முருங்கைமரங்கள் கலந்து வெள்ளிய பொரியைத் தூவும் வியப்பினையுமுடையது.

குராமரம் பதுமைபோலக்காய்த்தலால் அதன் காயைப் பாவையென்றார். குராவும் கோங்கும் பாதிரியும் மராமரமும் முள்முருங்கையும் பாலைநிலக்கருப்பொருள்களுளொன்றாகிய மரங்களாதலால் அவற்றை யொருசேரக்கூறினார். கோங்கு பொன்போலவும், பாதிரி நெருப்புப்போலவும், முண்முருங்கை பொரிபோலவு மலர்தலாலும், குரா பதுமைபோற்காய்த்தலாலும் பாவை, பொன், தழல்வெண்பொரி என உபமானச்சொற்களால் உபமேயங்களிலக்கணையாகத் தோன்றக்கூறுதலால் உருவகவுயர்வு நவிற்சியணியும், கோங்கு குராபெற்ற பாவையைத் தீமுன் மணஞ்செய்ய மராமுதலியன செய்தனவற்றைக் கேட்போர் வியப்ப வர்ணித்துக்கூறுதலால் பொருளதிசயவணியுங் கலந்துநிற்றலால் கலவையணி. பராரைமரூஉ. குராவின் காயைப் பாவை என்றது "பாயும்விடையோன்புலியூரனையவென்பாவைமுன்னே - காயுங்கடத்திடையாடிக்கடப்பவுங்கண்டுநின்று - வாயுந்திறவாய்குழையெழில்வீசவண்டோலுறுத்த - நீயுநின்பாவையுநின்றுநிலாவுவைநீள்குரவே" எனக் கோவைத்திருவாசகத்தில் வருதல் காண்க.

எயிற்றிமாரொழினலத்தினுக்கிரியல்போயுடைந்தாங்
கயற்பொதும்பர்புக்கலர்குராப்பாவைகண்டவர்தந்
துயிற்றுசேயெனக்கவன்றுபோய்த்தூதுணம்புறாக்கள்
வெயிற்றலைக்கணின்றுயங்குவநிலைமைவிண்டவர்போல்.

(இ-ள்.) தூதுணம் புறாக்கள் எயிற்றிமார் எழில் நலத்தினுக்கு இரியல்போய் உடைந்து-தூதுணம் புறவுகள் வேடப்பெண்களது அழகின் பொலிவுக்குப் புறங்காட்டித்தோற்று, ஆங்கு அயல் பொதும்பர் புக்கு அலர் குராப் பாவை கண்டு-அவ்விடத்தயலிலுள்ள சோலையிற்புகுந்து மலர்ந்த குராமரத்தின் காயாகிய பாவையைப்பார்த்து, அவர் தம் துயிற்று சேய் எனக்கவன்று போய்-அவர்களது துயில் செய்விக்கு மகவெனக்கவலைகூர்ந்து அப்பாற்சென்று, நிலைமை விண்டவர்போல் வெயில் தலைக்கண் நின்று உயங்குவ - இல்லறத்தினின்று நீங்கிய துறவிகள்போல வெயிலில் நின்று வருந்துவன.

தூதுணம்புறா-தூது உண் அம்புறா எனப்பிரித்துக் கல்லினையுண்ணும் அழகிய புறாவெனக்கொள்க. பொதும்பர் என்றது குராமரங்களின் செறிவினை. தூதுணம் புறா உடைந்து, கவன்று உயங்குவவெனக்கூறுதலால் தொழிலதிசயவணியும், முன்பு கூறிய சிறப்புப்பொருளால் பின்பு கூறும் வர்ணியமாகிய பொதுப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணியுங் கலந்துவருதலால் கலவையணி. எழில் தோற்றம் அதுபொலிவுமேல் நிற்றலால் தொழிலாகுபெயர், தூது-கல். (ருரு)

தூதுணம்புறவினமெலாந்துணையுடன்கெழுமிப்
போதவூடியுமுணர்த்தியுந்தலைந்தலைப்புணர்ந்து
காதலங்கலார்மொழியையுங்கடந்துசேணிடைச்செ
லேதிலாடவர்தமைச்செலவழுங்குவித்திடுமால்.

(இ-ள்.) தூதுணம் புறவு இனம் எல்லாம் துணையுடன் கெழுமிபோத ஊடியும் உணர்த்தியும் தலைத்தலை புணர்ந்து - தூதுணம் புறாக்களெல்லாம் தமது சேவலுடன் தழுவிப்பொருந்தப் பிணங்கியும் அவ்வூடலைத்தீர்த்து மிடங்கள்தோறுங்கலந்து, காதல் அங்கலார் மொழியையுங் கடந்து சேண் இடை செல் ஏதில் ஆடவா தம்மை செலவு அழுங்கு வித்திடும் - விருப்பந்தருந் தனது தலைவிமார் சொல்லையுங் கடந்து பொருண் மேற்பிரிந்து தூரநாட்டிற்செல்லுந் தமக்கயலாயுள்ள தலைவர்களை யவர்கள் கருதிச்செல் லுஞ் செலவினைத் தவிர்க்காநிற்கும்.

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என முறைப்பட்டு நிற்றற்கு உரிப் பொருள் காரணமாதலால் "வேட்டைமேற்புகுவார்க்குநல்வினையுந்தமடவார் - கூட்ட ம்வாய்க்கும்" எனப் புணர்தலாகிய வுரிப்பொருளை யங்குக்கூறினர். பாலைக்குப் பிரி தல் உரிப்பொருளாதலால் தலைவிசெலவைத் தவிர்க்கவும், பிரிந்து ஓதல் முதலியவற்றி ன்மேற் சென்றான் என்பதுதோன்றக் காதலங்கலார் மொழியையுங்கடந்து எனவும், தூ துணம் புறாக்கள் தமது பெட்டையோடு தழுவியூடல் தவிர்த்துப் புணர்தலைத் தலைவன் காணுதலால் தான் தலைவியைத் தழுவியூடல் தீர்த்துப்புணர்ந்த முன்னிகழ்ச்சியைக் கரு திக் கவலை கூர்ந்தனன் என்பதுதோன்றச் செலவழுங்குவித்திடும் எனவும்: பிரிவு ஓதற் பிரிவு, தூது வயிற்பிரிவு, துணைவயிற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு, பரத்தையிற் பிரிவு எனப் பலவகைப்படுதலால் உடன்போக்கு ஒன்றினையொழித்து மற்றைப் பிரிவுகளுள வென்பது தோன்றப் பொதுப்படக்கடந்து எனவுங்கூறினர். புணர்ந்தவழியல்லது பிரிவின்மையாலுமது தலைவனிடத்தே சிறந்ததென்பதும் புலனெறிவழக்காதலில் அது கூறிக் குறிஞ்சிப்பின் பாலையை வைத்தார். (௩௪)

வெங்கதிர்ப்பிரானண்பகற்போதினில்வேனின்
மங்கைகொங்கைதோய்ந்தளித்திடும்பாலையாமைந்த
னங்கணானிலவரசர்பாலிரந்துவன்முரம்பு
தங்குசூழலிற்சிற்றரசாள்வதுமுளதால்.

(இ-ள்.) வெம் கதிர்ப்பிரான் நண்பகல் போதினில் - சூரியதேவன் நடுப்பகற் காலத்தில், வேனில் மங்கை கொங்கை தோய்ந்து அளித்திடும் பாலையாம் மைந்தன் - வேனிற்காலமென்னும் பெண்ணினது தனத்தைக் கலந்துபெற்ற பாலைநிலமென்னு மொருபுருடன், அங்கண் நானிலவரசர் பால் இரந்து வன்முரம்பு தங்கு சூழலில் சிற் றரசு ஆள்வதும் உளது - அழகிய இடத்தையுடைய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்த லென்னும் பேரரசர்களிடத்துக் குறையிரந்து வலிய முரம்புதங்கிய இடத்திலிருந்து சிற்றரசு செய்வதுமுண்டு.

"கோத்தொழிலாளரொடு கொற்றவன்கோடி" என முன்னர் எடுத்துக்காட்டிய சிலப்பதிகாரச்செய்யுளின் கருத்தை வெங்கதிர்ப்பிரானண்பகற்போதினில்வேனின் - மங்கைகொங்கைதோய்ந்தளித்திடும்பாலையாமைந்தன் என உருவகமாக்கியும் "நடுவ ணைந்திணைநடுவணதொழிய" என்னுந் தொல்காப்பியப்பொருளதிகாரச் சூத்திரத்தால் பாலை என்பது ஒருபாற்படாது ஏனை நான்கு நிலங்களிலும் நிகழ்தற்குரியதாதலால் நடு

வண் எனப் பாலைக்குக் காரணம்பற்றிவந்த பெயரெனக்கூறுதலால் நானிலங்களைப் பேரரசராகவும் பாலையைச் சிற்றரசனாகவும் உருவகமாக்கியுங்கூறினார். இதில் உருபுதொக்கும் விரிந்தும் வந்த இயைபுருவகவணி. (ருரு)

முல்லை.

நவிலுமிந்நிலப்புறம்பயில்புறவநன்மடந்தை
குவிவருந்தழல்வெம்மைகூர்கொடும்பசிதணியச்
செவிலியாய்முகிறீம்பயமூட்டிடவளர்ந்தாங்
கவிழுநீள்வரகாதியாமகப்பயந்தளிக்கும்.

(இ-ள்.) நவிலும் இந்நிலம் புறம்பயில் புறவம் நன்மடந்தை-சொல்லும் இந்தப் பாலைநிலத்தின் புறம்பேயமைந்த முல்லைநிலமென்னு மோர் அழகிய பெண், குவிவு அரும் தழல் வெம்மை கூர் கொடும்பசி தணிய - பரந்த தீப்போலும் வெம்மைமிக்க கொடிய பசிதணிய, முகில் செவிலி ஆய் தீம் பயம் ஊட்டிட வளர்ந்து - மேகமென்னுஞ் செவிலித்தாய் இனிய பாலூட்ட (நீரூட்ட) வளர்ந்து, ஆங்கு அவிழும் நீள் வரகு ஆதியாம் மகப்பயந்து அளிக்கும் - அவ்விடத்துப் பரந்த நீண்ட வரகுமுதலிய பிள்ளைகளைப்பெற்று அந்நிலமாக்களை வளர்க்காநிற்கும்.

செவிலித்தாய் வளர்த்ததாய் "முல்லையுங்குறிஞ்சிமுறைமையிற்றிரிந்து" என்றதனாலும், பாலைக்கு உரிப்பொருளாகிய பிரிவினிமித்தங்களும் நிகழ்தற்கு அது இடமாதலாலும் நவிலுமிந்நிலப்புறம்பயில் புறவம் எனவும், வரகு, சாமை, கொள் அந்நிலத்து உணவுகளாதலால் வரகாதியாமகப்பயந்தளிக்குமெனவுங்கூறினார். இது உருபுதொக்கும் விரிந்தும் வந்த இயைபுருவகவணி. (ருசு)

கொல்லையெங்கணுங்கொழுமலர்ததைபுனமுருக்கின்
முல்லைமென்கொடிபடர்ந்தலர்நிரைநிரைமுகிழ்ப்ப
வல்லைவென்றகந்தரப்பிரானரக்கெறிமார்பிற்
றொல்லைவெண்டலைமாலிகைதுயல்வரன்மானும்.

(இ-ள்.) கொல்லை எங்கணும் கொழு மலர் ததைபுனம் முருக்கின் - அம்முல்லைநிலத்தில் எவ்விடத்தும் மலர் நிறைந்து நெருங்கிய காட்டுமுருங்கையில், முல்லை மென் கொடி படர்ந்து அலர் நிரை நிரை முகிழ்ப்ப - மெல்லிய முல்லைக்கொடிகள் படர்ந்து மலர்களை வரிசை வரிசையாக அரும்புதல், அல்லைவென்ற கந்தரப்பிரான் அரக்கு எறி மார்பில் - இருளைவென்ற ஸ்ரீகண்டத்தையுடைய பெருமானாரது சாதிலிங்கத்தைவென்ற திருமார்பில், தொல்லை வெண்மை தலை மாலிகை துயல் வரல் மானும் - தொன்றுதொட்டுள்ள வெள்ளிய தலைமாலை தொங்கியசைதலை யொக்கும்.

முகிழ்ப்ப தொழில்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். புனமுருக்குச் சிவபிரானாகவும், முல்லைக்கொடி மலர்தலைமாலையாகவும், அதன்படர்ச்சி அசைவாகவும் உபமான உபமேயதர்மங்களை இரண்டுவாக்கியங்களாகத் தனித்தனிச் சொல்லுதலால் எடுத்துக்காட்டுவமையணி. (ருஎ)

நீலம்பூத்தலர்பூவைவயைக்கோட்டுநீள்கரந்தாற்
கோலம்பூத்தபொற்கொன்றைகடமீஇக்கிடந்தசைவ
வாலம்பூத்தருண்மிடற்றினோனன்றுமோகினியாஞ்
சீலம்பூத்தமாலிளமுலைதிளைப்பதுதெளிக்கும்.

(இ-ள்.) நீலம் பூத்து அலர் பூவையை - கரிய மலர்கள் பூத்தலர்ந்த காயாவை பொன் கோலம் பூத்த கொன்றைகள் கோடு நீள் கரத்தால் தழுவிக்கிடந்து அசைவ - பொன்னிறம்போல மலர்ந்த கொன்றைமரங்கள் தமது கொம்பாகிய நீண்ட கரங்களால் தழுவிக்கிடந்தசைதல், ஆலம் பூத்தருள் மிடற்றினோன் அன்று மோகினியாம் சீலம் பூத்த மால் இளமுலை திளைப்பது தெளிக்கும் - விஷம் மலர்ந்த ஸ்ரீகண்டத்தையுடைய பெருமானார் அக்காலத்தில் மோகினிவடிவாகிய அழகுமிக்க திருமாலினது இளமுலைப் போகத்தை நுகர்தலையொக்கும்.

நீலம் பண்பாகுபெயராய் மலர்மேல் நின்றது. பூத்த காயாவைத் திருமாலாகவும், கொன்றையைச் சிவபெருமானாகவும், கொன்றையின் கிளையைக் கையாகவும், அம்மரங்கிளையால் காயாவைத்தழுவுதல் திருமாலாகிய மோகினியைத் தழுவுதலாகவும், உபமான உபமேயங்களுடைய தருமத்தை யிரண்டுவாக்கியங்களினால் தனித்தனி யெடுத்துக்கூறுதலால் இதுவும் எடுத்துக்காட்டுவமையணி. கடல்கடைய அமுதகலசந்தோன்றிய காலத்துத் தேவர்களும் அசுரர்களும் தம்முள் மாறுபட்டுப் போர்செய்யத்தொடங்கியதைத் திருமாலுணர்ந்து மோகினிவடிவங்கொண்டு அவர்முன்னிற்ப அவ்வசுரர்கள் மோகங்கொண்டு நெருங்கினார்கள், இவ்விரண்டுபொருள்களுள் யார் எதை விரும்பினார்களோ அவர்க ளதனைக் கைக்கொள்ளக்கடவரெனத் திருமால் கூற அதுகேட்டு அசுரர்கள் தன்னைக் கைக்கொண்டு செல்ல அதுநோக்கி உங்களில் வலியர் யாரோ அவர் களெம்மைப் புணர்கவென்றபோது யாம் வலியமென்று ஒருவர்க்கொருவர் தம்முள் போர் விளைத்து மாண்டனர்கள், பின்னர்த் திருமால் தேவர்களுக்கு அமுதம் பகிர்ந்து தேவர்கள் வணங்க இருந்த இடத்துச் சிவபெருமானார் பேரழகுவாய்ந்து மோகினிவடிவாய் நின்ற அத்திருமால் முன்சென்று எமது சத்திமாருள் நீ யொருசத்தியாதலால் என்னைப் புணர்கவென்று திருக்கையை நீட்டியவழி அத்திருமால் ஓட அவர்பின்சென்று கையைப்பற்றி நாவலந்தீவில் ஓர் கடற்சார்பில் வடபாலுள்ள ஓரிடத்திற் புணர்ந்தனர் ஆதலால் அன்று மோகினியாம் - சீலம்பூத்தமாலிளமுலைதிளைப்பதுதெளிக்கும் என்றார். இதுவும் எடுத்துக்காட்டுவமையணி. (௩௮)

பெண்ணலங்கனியிடைக்குலப்பிடிநடைமடவார்
விண்ணலங்கனிமாதரையெழிலினால்வென் று
பண்ணலங்கனிமிடற்றவர்பணைத்தமூக்கரிந்து
மண்ணிலெங்கணுந்தூக்கிவைத்தெனக்குமிழ்மலரும்.

(இ-ள்.) பெண் நலம் கனி இடைக்குலம் பிடிநடை மடவார் - பெண்களுக்குரிய இலக்கணமிகுந்த இடைக்குலத்திற்றோன்றிய பெண்யானைபோலும் நடையையுடைய ஆய்ச்சியர், விண் நலம் கனி மாதரை எழிலினால் வென்று - விண்ணுலகிலுள்ள அழகுமிக்க அரம்பையரைத் தமது அழகால் வெற்றிகொண்டு, பண் நலம் கனி மிடற்றவர் பணைத்த மூக்கு அரிந்து மண்ணில் எங்கணும் தூக்கிவைத்தால் என்ன குமிழ் மலரும் - பண்ணின் சுவைகனிந்த கண்டத்தையுடைய அவ்வரம்பையர்களது பருத்த மூக்கினையரிந்து நிலவுலகில் எவ்விடத்துந் தூக்கிவைத்தாற்போலக் குமிழமலர் மலராநிற்கும்.

காயாவுங் கொன்றையும் குமிழும் அந்நிலத்துமரங்கள். குமிழமலர்கள் நாசியின் குவிவைப்போல மலர்தலால் நாசிக்கு உவமைப்பொருள். ஆய்ச்சியர் அழகில் தமக்குப் பகையாயுள்ள அரம்பையரை வென்று அவர்கள் மூக்கரிந்து தமது நிலத்தில் தூக்கி வைத்ததைப்போலக் குமிழ்மலரும் எனப் பகைமேலவர்கள் பராக்கிரமத்தைக்கூறுதலால் விறல்கோளணி. வைத்தென தொகுத்தல் விகாரம். (௩௯)

மௌவலங்குழலார்விழிக்குடைந்துவான்குதிக்கு
நவ்விமீண்டகலாவகைமகளிரானனத்துக்
கொவ்வுறுதவராணையிற்றிரியுமொண்மதிகண்
டவ்வுழித்தனதிருக்கையிற்சிறைப்படுத்தலைக்கும்.

(இ-ள்.) மௌவல் அம் குழலார் விழிக்கு உடைந்து வான் குதிக்கும் நவ்வி - முல்லைமலரையணிந்த அழகிய கூந்தலையுடைய ஆய்ச்சியரது கண்களுக்குப் புறங்கொடுத்து ஆகாயத்திற் றேயக்குதிக்கு மானை, மகளிர் ஆனனத்துக்கு ஒவ்வுறாது அவர் ஆணையில் திரியும் ஒண் மதிகண்டு மீண்டு அகலாதவகை - அப்பெண்களது முகத்துக்கு (ஒப்பாகாது தோற்றமையால்) அவர் ஆணையிற்கட்டுண்டு திரியும் ஒள்ளிய சந்திரன் பார்த்துத் தன்னினின்று மீள நீங்காதவண்ணம், அ உழி தனது இருக்கையில் சிறை படுத்து அலைக்கும் - அவ்விடத்துத் தனது இருக்கையிற் சிறைப்படுத்த அம்மானை வருத்தும்.

சிறைப்படுத்து செயவெனெச்சத்திரிபு. ஆய்ச்சியர் முகத்திற்குத்தோற்ற சந்திரன் அவர்கள் முகத்திற்கு ஒப்பாக அவர்கள் பார்வைக்குத் தோற்றடைந்த மானைத் தான் சிறைப்படுத்தியது என்றதனால் சந்திரனென்னும் அவர்ணியத்திற்குக் குறைவுதோன்றவர்ணியத்தைப் புகழ்தலால் எதிர்நிலையணி. (௬௦)

கற்றைவார்குழலாய்ச்சியர்கயல்விழிமுகத்தின்
பெற்றியொப்புறப்பெருங்குருந்துச்சிமேற்றாவி
யொற்றைமானுடைக்கலைமதியதனிழலுறங்கு
மற்றைமானையும்பற்றுவான்கதிர்க்கையால்வருடும்.

(இ-ள்.) ஒற்றை மான் உடைய கலைமதி-ஒருமானையுடைய கலைநிறைந்த சந்திரன், வார் குழல் கற்றை ஆய்ச்சியர் கயல் விழி முகத்தின் பெற்றி ஒப்புற - நீண்ட கூந்தற்பாரத்தையுடைய இடைப்பெண்களது கயல்போன்ற கண்களையுடைய முகத்தின் றன்மையையொப்ப, பெரும் குருந்து உச்சிமேல் தாவி - பெரிய குருந்தமரத்தின் உச்சிமேற்றவழ்ந்து, அதன் நிழல் உறங்கும் மற்றை மானையும் பற்றுவான் - அக்குருந்தமரத்தினிழலிற் றுயில்கூரு மற்றொரு மானையும் பற்ற, கதிர் கையால் வருடும் - தனது கிரணமாகிய கையால் தடவாநிற்கும்.

பெண்கள் முகத்திற்கு ஒப்பாக ஒருமானையுடைய சந்திரன் மற்றொருமானையுங் கைக்கொள்ளக் குருந்தின்மேல் தாவித் தன் கிரணமாகிய கையால் தடவினான் எனக் கூறுதலால் இல்பொருட்பயன்றற் குறிப்பணி. மற்றொருமானைத் தேடுதலாகிய விஷயம் சந்திரனுக்கு இல்லாமையால் இல்புலம். தேடுதலாகிய பயன் அத்தியவசயித்தலால் விஷயி. அத்தியவசயம் ஆவது ஒருபொருளில் மற்றொருபொருளினபேதத்தைச் சந்தேகத்தோடறிதல். குருந்து அங்கிலக்கருப்பொருள். (௬௧)

நலம்பயின்றிளவேனிலினவிலுமாங்குயில்க
ளலம்புகார்வரும்போதுவாயடைப்பதுமுன்னாட்
புலம்புகொண்டவர்காரொடுநலைவர்நேர்புகுத
வலம்புனைந்துரைவளமொழிக்கிடைதலானன்றே.

(இ-ள்.) நலம் பயின்ற இளவேனிலின் நவிலும் மாங்குயில்கள் அலம்பு கார் வரும்போது வாய் அடைப்பது - நன்மைமிக்க இளவேனிற்காலத்திற்கூவும் மாமரத்திலுள்ள குயில்கள் ஒலிக்கு மேகம் வரும்போது வாயடைபடுதல், முன் நாள் புலம்புகொ

ண்டவர் - தமது தலைவர் பிரிந்த முன்னாளில் ஆற்றியிருந்து வருந்திய பெண்கள், கார் ஒடும் தலைவர் தேர் புகுத வலம் புனைந்து உறை வளம் மொழிக்கு இடைதலான் அன்றி ஏ - வருவேமென்று வரையறுத்துச்சென்ற கார்ப்பருவத்தோடும் தமது தலைவர் தேர் வர அவர்களது வெற்றியைப்புனைந்து வாழ்த்திக்கூறும் இனிய சொல்லுக்குத் தோற்ற லாலல்லவா.

தலைவன் பிரிந்தவழித் தலைவி கற்பால் ஆற்றியிருத்தல் முல்லைக்குரிய உரிப்பொருளாதலால் உரிப்பொருள் கூறுவார் புலம்புகொண்டவர் எனவும், பெரும்பொழுதாகிய காரும் சிறுபொழுதாகிய மாலையும் முல்லைக்குரிய முதற்பொருளாதலால் முதற்பொருள் கூறுவார் காரொடுந்தலைவர் தேர்புகுதவெனவுங்கூறினார். தலைவி வருந்தியிருந்த இளவேனிற்காலத்தில் இன்சொல்லுக்குத்தோற்ற குயில் கூவுதலும், பிரிந்துசென்ற தலைவர் வர மகிழ்ந்து இன்சொற்கூறுங் கார்காலத்திற் கூவாதொழிதலும் அக்குயிலுக்கு விதித்தலால் விதியணி. (சுஉ)

தொண்டைமான்கடக்களிற்றினைமுல்லையாற்றொடக்கி
யண்டர்தம்பிரான்வெளிப்படக்காட்சிதந்தருள்சீர்
கொண்டவான்பதிமுதல்பலநன்னிடைக்குலவக்
கண்டமுல்லையின்பெருமையார்கட்டுரைத்திடுவார்.

(இ-ள்.) தொண்டைமான் கடம் களிற்றினை முல்லையால் தொடக்கி - தொண்டைநாடாண்ட அரசனது மதத்தையுடைய யானையைத் தன்னிடத்துள்ள முல்லைக்கொடிகளாற் சிறைப்படுத்தி - அண்டர் தம்பிரான் வெளிப்பட காட்சிதந்தருள் சீர்கொண்ட வான்பதி முதல் பல-சிவபெருமான் அவ்வரசனுக்குப் புலப்படக் காட்சிதந்தருளிய புகழ்வாய்ந்த பெருமையமைந்த திருமுல்லைவாயில் முதலிய திருத்தலங்கள், நன் இடை குலவ கண்ட முல்லையின் பெருமையை கட்டுரைத்திடுவார் யார் - தன்னிடத்து விளங்கக்கொண்ட முல்லைநிலத்தின் பெருமையைத் தொகுத்துப் புகழ்ந்து கூறுவோர் எவர்.

தொண்டைமானாண்ட நாடாதலால் அந்நாட்டினுக்குத் தொண்டைநாடு என வந்தது காரணப்பெயர். தொண்டைநாடாண்ட ஆதொண்டைச்சக்கரவர்த்தியென்னும் ஒருசோழன் தன்பகைவரோடு போர்செய்யப் போர்க்கு அத்தலத்தின்வழியாய் யானைமேலேறிச்செல்லும்போது அங்குப் படர்ந்தடர்ந்த முல்லைக்கொடிகளால் கட்டுண்ட அந்த யானை அடிபெயர்த்துவைக்க வலிமையின்றித் தடைபட்டு நிற்பதை அவ்வரசனறிந்து அக்கொடிகளைத் தனது வாளால் தறிக்கவோக்கியபோது அவ்வாள் வெட்டு அங்கெழுந்தருளிய சிவலிங்கப்பெருமானார்மீது தாக்க, அதனை யுணர்ந்து வருந்தி நின்றவிடத்து அச்சிவபிரானார் காட்சிதந்தருளினர் என்பது புராணவரலாறாதலால் களிற்றினை முல்லையாற்றொடக்கி-அண்டர்தம்பிரான் காட்சிதந்தருள் என இடத்து நிகழ்பொருளின்றொழிலை யிடத்தின்மேலேற்றிப் பதிமுதல் பலநன்னிடைக்குலவக்கண்ட முல்லையெனவுங்கூறினார். அச்சோழன் ஆதொண்டைமலராற்றொடுத்த மாலையை யணிதலால் தொண்டைமான் என அவனுக்குப் பெயர்வந்தது. இடத்து நிகழ்பொருளின் பெயரோ இடத்திற்கும் தொண்டைநாடெனவருதலால் தானியாகுபெயர். "தொண்டைமானாண்டுதொண்டைநாடெனத்துலங்கிற்று" என வருதலுங்காண்க. (சுரு)

மருதம்.

பொலஞ்சிறைச்சுரும்புளர்தருகுறுஞ்சுனைப்புறவ
நிலந்தனைப்புடையுடுத்தநெட்டிளவாளை
யிலஞ்சியின்றுமீப்பாய்ந்துவெண்மதிகிழித்தேகித்
தலங்கொள்வானியாற்றுலவுபூந்தடம்பணைமருதம்.

(இ-ள்.) நெடு இளவாளை - மிக்க இளமைவாய்ந்த வாளைமீன், இல்ஞ்சி நின்று மீ பாய்ந்து வெள் மதி கிழித்து ஏகி வான் தலம் கொள் யாறு உலவு பூ தடம்பணை மருதம் - தடாகத்தினின்று மேலே பாய்ந்து வெள்ளிய சந்திரனைக்கீண்டு அப்பாற்சென்று விண்ணிலமைந்த கங்கையிலுலவுதற்கு எல்லையாகிய தாமரைமலர்களையுடைய பெரிய வயல்கள் நெருங்கிய மருதநிலம், பொலம் சிறை சுரும்பு உளர்தரு குறும் சுனை புறவம் நிலம் தனை புடை உடுத்தது - பொன்னிறம்வாய்ந்த சிறகினையுடைய வண்டுகள் பறந்தசைந்து திரியுஞ் சிறிய கற்சுனைகளையுடைய அம்முல்லைநிலத்தைத் தன்பக்கத்திலே சூழப்பெற்றுளது.

முல்லைக்கு நீர்கான் யாறன்றிக்குறுஞ்சுனையுமாதலால் குறுஞ்சுனைப்புறவம் எனவும், "நவிலுமிந்நிலப்புறம்பயில்புறவம்" என்றாற்போல மருதநிலத்தைக்கூற வந்தவர் புன்செய்யைப் புறத்தேயுடைமையாலும், ஆற்றியிருந்தகாலத்துப் பரத்தையிற்பிரிந்த தலைவன் வந்தபோது ஊடுதற்கு இடமாதலாலும் புறவநிலந்தனைப் புடையுடுத்தது எனவுங் கூறினார். சிற்றாறலுடைமையால் குறுஞ்சுனை என்றார். நிலவுலகிற்கும் விண்ணுலகிற்குஞ் சம்பந்தமில்லாதிருப்ப நிலவுலகிலுள்ள மருதநிலத்து வாளைமீன் சந்திரமண்டிலத்தைக்கிழித்து ஆகாயகங்கையிலுலவுமெனச் சம்பந்தங் கற்பித்தமையால் உயர்வு நவிற்சியணி. பொன் என்னும் பெயர்ச்சொலீற்றுமெய்கெட்டு லகரமு மகரமு முறையே பெற்றுப் பொலம் எனவந்தது "பொன்னென்கிளவியீறுகெடமுறையின் - முன்னர்த் தோன்றும்லகாரமகாரம் - செய்யுண்மருங்கிற்றொடரியலான" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால். (சுசு)

ஒருவனாகியசிவபிரானுலகுயிரளிப்பக்
கருணைகூர்ந்துதன்னவந்தருபேதமுங்காட்டுந்
திருநிகர்ப்பவோர்பாலியேவயல்வளஞ்செழிப்பப்
பெருகுதண்புனல்பற்பலகால்களாய்ப்பிரியும்.

(இ-ள்.) ஒருவனாகிய சிவபிரான் உலகு உயிர் அளிப்ப கருணைகூர்ந்து முன்னவம் தரு பேதமும் காட்டும் திரு நிகர்ப்ப - ஒருவனாயுள்ள சிவபெருமான் (தனது திருவருளால்) உலகிலுள்ள ஆன்மாக்களை யோம்பும்பொருட்டு முன்னொன்பதுவகைப்பட்ட திருவுருவத்தைக் கொண்டருளிய சிறப்பினையொப்ப, ஓர் பாலியே வயல் வளம் செழிப்ப பெருகு தண் புனல் பல் பலகால்கள் ஆய் பிரியும் - ஒரு பாலிநதியே வயல்களின் வளஞ் செழித்தோங்கத் தன்னிடத்துப்பெருகிய தண்ணிய நீராற் பலபல கால்வாய்களாகப் பிரிந்து தோன்றும்.

முப்பத்தாறுதத்துவங்களையுங் கடந்துநின்ற சித்தாந்த சைவத்தெய்வமாகிய சுத்தசிவம் என்பார் ஒருவனாகிய சிவபிரான் எனவும், ஆன்மாக்களுக்குப் பரிபாகம் வாய்க்கப் படைப்புமுதலிய வைந்தொழிலையும் நடத்துதற்கு அருவம், உருவம், உபயம் என்னும் நவமூர்த்தங்கொண்டனன் என்பார். உலகுயிரளிப்பக்—கருணைகூர்ந்து முன்னவந்தருபேதமுங்காட்டுந் - திரு எனவுங்கூறினார். நவமூர்த்தமாவன சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேஸ்வரன், உருத்திரன், திருமால், பிரமன். முன்னை நான்கும் அருவம், நடுநின்றது உபயம், பின்னைய நான்கும் உருவம் "சிவஞ்சத்திநாதம்விந்து சதாசிவன்றிகழுமீசன் - உவந்தருளுருத்திரன்றான்மாலயனொன்றினொன்றாய்ப் - பவந்தருமருவநாலிங்குருவநாலுபயமொன்றாய் - நவந்தருபேதமேகநாதனேநடிப்பனென்பர்" எனவருஞ் சிவஞானசித்தியாராலுணர்க. உவமைக்கும்பொருட்கு மொற்றுமையுண்மையால் தண்புனல் என்பதற்கேற்பத் திருவருளால் என்றாம். இது எடுத்துக்காட்டுவமையணி. ஆய் செயவெனெச்சத்திரிபு. (சுஎ)

பராரைமூலமேற்பணை கிளைவளாரொணைப்பலவும்
விராவியொன்றிலொன்றனந்தமாய்க்கவடுவிட்டென்னத்
தராதலம்புகும்பாலியிற்பிரிந்துதண்கரைக்க
ணராவுகால்களுமவைதருகால்களுமனந்தம்.

(இ-ள்.) பராரை மூலமேல் பணை கிளை வளார் ஏனை பல உம் விராவி ஒன்றில் ஒன்று அனந்தம் ஆய் கவடுவிட்டால் என்ன - பருத்த தூற்றையுடைய வொருமரத்தின் மேல் கொம்புங் கிளையும் வளாரும் இவையொழிந்த பலவுந் தம்முட்கலந்து ஒன்றிலிருந்தொன்று அளவில்லாது கவடுவிட்டெழுந்தாற்போல - தராதலம் புகும் பாலியின் பிரிந்து - உலகிற்செல்லும் பாலிநதியினின்று பிரிந்து, தண்கரை கண் அராவு கால்களும் அவைதரு கால்களும் அனந்தம் - தண்ணிய கரையை அராவிச்செல்லுங் கால்வாய்களும் அவற்றினின்று பிரிந்த கால்வாய்களும் அளவிறந்துள்ளன.

கரைக்கண் இரண்டனுருபு நிற்குமிடத்து ஏழனுருபுநிற்றலால் உருபுமயக்கம். விட்டென்ன தொகுத்தல் விகாரம். இதுவும் எடுத்துக்காட்டுவமையணி. (கூசு)

நான்முகப்பிரான்வேள்வியைத்தபவருநதியை
மான்மறுத்திடைக்குலையெனக்கிடந்தமைமான
மீன்முகப்பெருங்காற்புனறட்பவீழ்ந்துழக்கும்
பான்முலைக்கருமேதியாற்பருமடையுடையும்.

(இ-ள்.) நான்முகப்பிரான் வேள்வியை தபவரு நதியை மால் மறுத்து இடை குலை என கிடந்தமை மான - நான்கு திருமுகங்களையுடைய பிரமன் செய்யும் யாகத்தைக்கெடுக்க வாராநின்ற வேகவதியைத் திருமால் மறுத்து அந்நதியினிடையே கரையாகப் பள்ளிகொண்டமையையொப்ப, மீன் முகம் பெரும் கால் புனல் தட்ப வீழ்ந்து உழக்கும் பால் முலை கருமேதியால் பருமடை உடையும் - மீன்களைத் தனதிடத்துடைய பெரிய கால்வாய்களிலுள்ள நீரைத்தடுக்க அதில் வீழ்ந்துகலக்கும் பால்சுரக்கு மடியையுடைய கரிய எருமைகளால் பருத்த நீர்மடைகளுடைபடும்.

சிவபூசனையால் திருமாலோடு உலகைப் படைக்கக்கருதிய பிரமன் காஞ்சியிற் சென்று தன்பெயரால் சிவலிங்கப்பெருமானைத் தாபித்துப் பூசித்துச் சோமயாகம் ஒன்றுசெய்யத்தொடங்கிச் சாவித்திரி, காயத்திரியென்னு மனைவியரோடிருந்து வேள்விசெய்ய அதனையுணர்ந்த கலைமகள் தன்னையன்றி வேள்விசெய்யத்தொடங்கினமையால் சினங்கொண்டு அவ்வேள்வியையழிக்க நதிவடிவாய் வருதலை நாரதமுனிவன் கண்டு பிரமனிடத்துவந்து கூற, பிரமனுணர்ந்து சிவபெருமானிடத்துக் குறையிரக்க அப்பெருமானார் அஞ்சேலென்றருளித் திருமாலையழைத்து நீசென்று அவ்வேள்வியைக் காப்பாயென்றருள, அத்திருமா லந்நதியைத் தடுத்தற்பொருட்டு இடையே பள்ளிகொண்டனர் என்பது இப்புராணவரலாறு. தாழ்ந்த பொருளுக்கு உயர்ந்த பொருளுவமையாக வந்தது சிறப்பண்பின்மேல் ஆதலால் வழுவன்று எனக்கொள்க. (கூஎ)

பழங்கண்வேனிலைப்புயல்கொடுபாற்றுதன்னிறைக்குத்
தழங்குமோதையின்மருதம்வாழ்த்தெடுப்பதுதகைய
வழங்குதண்ணுமையோதையுமள்ளரார்ப்பொலியு
முழங்குதீம்புனற்சும்மையுமுடுகிவிண்புகுமால்.

(இ-ள்.) பழங்கண் வேனிலை புயல் கொடு பாற்று தன் இறைக்கு - துன்பந்தரும் வேனிற்காலத்தை மேகத்தைக்கொண்டு ஓட்டும் தனக்குத் தலைவனாகிய இந்திரனு

க்கு, தழங்கும் ஓதையின் மருதம் வாழ்த்து எடுப்பது தகைய - ஒலிக்கு மோசையையு டைய மருதநிலம் வாழ்த்தெடுத்தலையொப்ப, தண்ணுமை வழங்கு ஓதையும் மள்ளர் ஆர்ப்பு ஒலியும் முழங்கு திம்புனல் சும்மையும் மூடுகி விண்புகும் - மருதநிலப்பறையொ லிக்கு மோசையும் மருதநிலமாக்கள் ஒலிக்கு மாரவாரமும் கோஷிக்கு மினிய நீரின் முழக்கமும் ஒருசேரவிரைந்து விண்ணுலகிற் செல்லாநிற்கும்.

தகைய உவமவுருபடியாகப்பிறந்த வினையெச்சம். மருதநிலத்திலுள்ள ஓசையை அந்நிலந் தனக்கு நன்மைசெய்த தலைவனாகிய இந்திரனை வாழ்த்தெடுத்ததற்கு ஒக்கும் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. மருதநிலக்கருப்பொருளாகிய தெய்வத்தை யும் பறையையுங் கூறினர். (கூஅ)

பொறிகளைந்தையும்புறஞ்செலாதடக்கியோர்நெறிக்கே
குறிகொளும்படிசெலுத்துபேராளர்தங்கோள்போற்
பிறிவுறுமபலமடைகளிற்பிழைத்திடாதொதுக்கிச்
செறிதரும்புனன்முழுவதுமகன்பணைசெறிப்பார்.

(இ-ள்.) பொறிகள் ஐந்தையும் புறம் செல்லாது அடக்கி ஓர் நெறிக்கு ஏ குறி கொளும்படி செலுத்து பேராளர் தம் கோள்போல் - ஐம்பொறிகளையும் புறத்திற்செ ல்லாதடக்கி ஓர் நன்னெறியிற் குறிக்கொண்டு நிலைபெறச்செலுத்தாநின்ற பெருமை மையுடையோரது கொள்கைபோல, பிறிவுறும் பலமடைகளில் பிழைத்திடாது ஒதுக் கி-பிரிந்துதோன்றும் பல நீர்மடைகளினின்றுந் தவறாமல் குரம்பொதுக்கி, செறிதரும் புனல் முழுவதும் அகன்பணை செறிப்பார்-நெருங்கிய நீர் முற்றையு மிடமகன்ற மரு தநிலத்திற் சிறைசெய்வார்கள்.

இதுமுதல் "கொடுப்பகொண்டு" என்னுஞ் செய்யுள்காறும் நீர்கட்டுதல், உழு மூதல், வித்தல், களைகளைதல், நெல்லரிதல், போர்போடல், போரடித்தல் முதலியன கூறுதலால் புறப்புறத்திணையுள் உழவன் வென்றித்துறை. நீரையொருவழியொதுக்க லும் அந்நீரை வயலிற்கட்டுதலும் உழவர் தொழிலாதலால் தொழிற்றன்மையணி.(கூக)

பழியினீங்கிநன்கீட்டியபசும்பொருள்சிறிதுங்
கழிபடாதுநல்வழிப்பயன்படுவதுகடுப்பக்
கொழிதிரைச்சுவைப்பாலியின்குளிர்புனன்முழுதும்
வழுவுறாதுகால்வழிச்சென்றுவளவயனிறைக்கும்.

(இ-ள்.) பழியின் நீங்கி நன்கு ஈட்டிய பசும் பொருள் சிறிதும் கழிபடாது நல் வழி பயன் படுவது கடுப்ப - குற்றங்களினின்று நீங்கி விதிவழிச்சேகரித்த அரிய பொ ருள்கள் சிறிதும் தீவழியிற்செல்லாது நல்லவழியில் பயன் படுதலை யொப்ப, கொழி திரை சுவை பாலியின் குளிர்புனல் முழுதும் - கொழிக்கும் அலைகளையுடைய சுவை கனிந்த பாலிநதியினது குளிர்ந்த நீர்முற்றும், வழுவுறாது கால்வழி சென்று வளம் வய ல் நிறைக்கும் - சிறிதும் வழுவாமல் கால்வாய்வழியாகச்சென்று வளமிக்க வயல்களை

குற்றங்களாவன பிறர்பொருளைக்கண்டு பொறாமைப்படுதல், இந்திரியங்களின் வழிச்செல்லும் விருப்பம், இவை யேதுவாகப் பிறர்மேலுண்டாகுங் கோபம், அதனால் வரும் கடுஞ்சொற்கள். இவற்றினின்று நீங்குதலே அறமாதலால் நன்கீட்டிய எனவும், அது பெரும்பயன் விளைத்தலால் பசும்பொருள் எனவும், அது பயன்படுங்கால் சற்பாத் திரத்திற் பயன்படுதலால் நல்வழிப்பயன்படுவது எனவும், அதுபோலப் பாலிநதியினீர்

பயனற்ற நிலத்திற் பாயாது பயன்றரும் வயலிற்பாய்தலால் வளைவயல் எனவும், உடையவன்றொழிலை யுடைமைமேலேற்றி நிறைக்கும் எனவுங்கூறினர். (௭௦)

கண்ணகன்புவிமுழுதுமாங்கடுங்கொலையவுண
னண்ணன்மார்பகம்பிளப்பவர்போலவிர்மணியின்
வண்ணவனகடாநிரைநிரையாத்துவன்படையாற்
பண்ணைதோறுநின்றுழுநர்கம்பலைகளேயெங்கும்.

(இ-ள்.) கண் அகன் புவி முழுதும் ஆம் கடுங்கொலை அவுணன் அண்ணல் மார்பு அகம் பிளப்பவர்போல் - இடமகன்ற நிலவுலகமுற்றுமாகிய கொடிய கொலைத்தொழிலையுடைய அசுரனது பெருமையமைந்த மார்பைப் பிளப்பவர்போல, அவிர் மணியின் வண்ணம் வன்கடா நிரை நிரை யாத்து-விளங்கும் நீலமணிபோலு நிறத்தையுடைய வலிய எருமைக்கடாக்களை வரிசைவரிசையாகக்கட்டி, வன்படையால் பண்ணை தோறும் நின்று உழுநர் கம்பலைகளே எங்கும் - வலிய கலப்பையால் வயல்கள்தோறும் நின்று உழுகின்றவர்களது ஆரவாரங்களே யெவ்விடத்து முள்ளன.

மகாப்பிரளயகாலத்தின் வழிநாள் பிரமன் அப்புவைச் சிருட்டித்துத் தனது வீரியத்தை விட்டபோது அது முட்டையாய் மிதக்க, அதனை யுடைத்தனன், அதினின்று முக்குணந்தோன்றி யம்முக்குணத்தினின்றும் ஐம்பூதங்கள் தோன்றின, அக்காலையில் திருமால் தம்மிடத்துத்தோன்றிய மதுகயிடவர்களகங்கரித்து அத்திருமாலோடே போர்செய்ய அவர் விரைந்தவர்களைக் கொன்றனர், அவ்வசுரர்கள் அப்பிரமன் படைத்த வெள்ளத்தின்மேல் தமது மேதையைத் தூர்த்தனர், அதனால் நிலவுலகிற்கு ஓர் மேதினியெனப் பெயர்வந்த காரணத்தால் புவிமுழுது மாங்கடுங்கொலையவுணன் என்றார். பலரை "சிவிகைபொறுத்தான்" என்றாற்போல இருவரை அவுணன் என ஒருமையாற்கூறுதலால் சாதியொருமை. (௭க)

மருவுசாறொறும்வெருவிமுன்குதித்தெழுவாளை
யிருமருப்பிடையுதைந்துழுமெருமையைத்தடுக்கும்
பருவராற்குலமொய்யெனப்பாய்ந்தெழுந்தலைக்கு
முருவவாற்புறத்துதைந்துவல்விரைந்தெழவுந்தும்.

(இ-ள்.) மருவு சால் தொறும் வெருவி முன் குதித்து எழுவாளை - பொருந்திய படைச்சால்தோறும் அஞ்சி முன்னே குதித்தெழுந்த வாளைகள், உழும் எருமையை இரு மருப்பு இடை உதைந்து தடுக்கும் - உழாநின்ற எருமையை இரண்டுகொம்புகளிடையே யுதைந்து அவை யுழுதலினின்று தடைபட ஒருபாற்செய்யும், பருவரால் குலம் ஒய்யென பாய்ந்து எழுந்து - பருத்த வரால்மீனின் கூட்டம் விரைந்து மேலே பாய்ந்தெழுந்து, அலைக்கும் உருவம் வால் புறத்து உதைந்து வல்விரைந்து எழ உந்தும்-அச்சத்தாலசைக்கும் அவ்வெருமையின் உருவமமைந்த வாலின்புறத்துதைந்து மிகவும் விரைந்து செல்லச் செலுத்தும்.

எருமை, வாளை, வரால், மருதநிலக்கருப்பொருள்கள். உழும் படைச்சாலுக்கு அஞ்சிக்குதித்த வாளைமீன் எருமையின் கொம்பிற்றாக்குதலால் அதன்றொழிலைத்தடுக்கும் எனவும், தந்தொழிலிற் றடைபட்ட அவ்வெருமைகள் தத்தந் தொழில்மேல் நிற்க அதன் சாதியாகிய வரால் செலுத்தும் எனவுங்கூறியது மிகுதியணி. (௭௨)

பூண்டவன் கொடுந்தானவனுக்கைபோழ்ந்திடலுங்
காண்டரும்புவிதன்னிறங்காட்டியதென்னக்
கீண்டசாறொறுங்கேழ்கிளர்தமனியங்கிடந்து
மாண்டபேரொளிவயங்கிநீள்கனையிருண்மேயும்.

(இ-ள்.) காண் தரும் புவி பூண்டவன் கொடும் தானவன் ஆக்கை போழ்ந்திடலும் - யாவர்க்கும் புலப்படு நிலவுலகாகிய வலிமைபூண்ட கொடிய அசுரனது சரீரத்தைப்பிளக்க, தன் நிறம் காட்டியது என்ன-அது தனது பொன்னிறத்தைக்காட்டியது போல, கீண்ட சால் தொறும் கேழ்கிளர் தமனியம் கிடந்து மாண்ட பேர் ஒளி வயங்கி நீள் கனை இருள் மேயும் - கலப்பை கிழித்த படைச்சால்தோறும் செந்நிறங்கொண்டு விளங்கும் பொற்கட்டிகள் கிடந்து மாட்சிமைப்பட்ட பெரிய ஒளியோடு விளங்கிப் பரந்த மிக்க இருளினை மேயாநிற்கும்.

நிலவுலகு அசுரன்றசையால் அமைந்ததென முன்னர்க்கூறுதலால் காண்டரும் புவிபூண்டவன் கொடுந்தானவன் எனவும், பிருதுவி பொன்னிறமுடைமையில் அவனுடல் கிழிபட்டுச் செந்நிறங்காட்டுதலால் தன்னிறங்காட்டியதெனவுங்கூறினார். கொழுவால் விளாக்கோலியதை ஆக்கைபோழ்ந்திடலும் எனவும், பிருதுவியினியற்கை நிறத்தை யுடல் கிழிபட்டவிடத்துத் தோன்று நிறம் எனவும் அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், பொற்கட்டிகள் படைச்சால்தோறும் கிடந்து விளங்கி யிருளோட்டுமெனக் கூறுதலால் மிகுதியணியும் கலந்துவருதலால் கலவையணி. (எ௩)

வேறுசெய்துபின்பொருத்துறும்வினைவலவமைச்சிற்
கூறுசெய்ததண்சேறெலாங்குழப்பியொன்றாக்கிச்
சாறுசெய்துவாசவற்றொழுதுறுமிடர்தவிர்த்து
நாறுசெய்கெனவெண்முளைவித்துவர்நாளால்.

(இ-ள்.) வேறு செய்து பின் பொருத்துறும் வினைவல்ல அமைச்சு இல்-பகைவர்க்குத் துணையாயினோரை முன்பு பிரித்துப் பின்பு பொருத்துந் தொழில்வல்ல அமைச்சரைப்போல, கூறு செய்த தண்சேறு எல்லாம் குழப்பி ஒன்று ஆக்கி - முன்பு வெவ்வேறுபடுத்திய தண்ணிய சேற்றையெல்லாங்குழப்பி ஒருசேரக்குழப்பி யொன்றாக்கி, உறும் இடர் தவிர்த்து நாறு செய்க என - மிக்க இடையூற்றினைப்போக்கி நாற்றினை விருத்திசெய்யக் கடவாயென்று, வாசவன் தொழுது சாறு செய்து நாள் வெள் முளை வித்துவர் - அந்நிலத்துக்குரிய இந்திரனை வணங்கி உற்சவஞ்செய்து நல்ல முகூர்த்தநாளில் வெள்ளிய நெல்முளைகளை விதைப்பார்கள்.

இதனால் மருதநிலக்கருப்பொருளாகிய தெய்வத்தையும், நாறுசெய்தலும் முளைவித்தலுமாகிய அந்நிலமாக்களது செய்தியையுங்கூறினார். போர்வந்தவழி பகைவர்க்குத் துணையாயுள்ளவரை முன்பு பிரிக்கவேண்டுதலால் வேறுசெய்தெனவும், தம்மினின்றும்பிரிந்தாரைத் தந்துணையாகக் கொள்ளவேண்டிப்பொருத்தலுமாகிய வினையின் வன்மை மந்திரிகளுக்கு வேண்டும் ஆதலால் வினைவல அமைச்சின் என்றார். "பிரித்தலும் பேணிக்கொளலும்பிரிந்தார்ப் - பொருத்தலும்வல்லதமைச்சு" என்றார் நாயனார். (எ௪)

அருள்விளங்கலுமுடல்பொருளாதியபந்தந்
தருமவன்புடையெய்துறக்கொடுத்திடுந்தகைபோற்
பெருகயாத்தநீர்க்கலங்கல்போய்த்தெளிந்தபின்முழுது
மருவுகால்வழிவடிந்துறக்கவிழ்ப்பர்கண்மள்ளர்.

(இ-ள்.) அருள் விளங்கலும் உடல் பொருள் ஆதிய பந்தம் தரும் அவன் புடை ஏ எய்துற கொடுத்திடும் தகைபோல்-திருவருண்ஞானமேலிட உடல்பொருள் முதலிய பந்தங்களைத் நமக்குத்தந்தருளிய அச்சிவபெருமானிடத்தே அடையச் சகலான்மாக்கள் கொடுக்குந் தன்மைபோல, மள்ளர் பெருக யாத்த நீர் கலங்கல் போய் தெளிந்த பின் முழுதும் மருவு கால் வழி வடிந்துற கவிழ்ப்பர்கள் - மருதநிலமாக்கள் வயலிற் பெருக க்கட்டிய நீரின் கலங்கல் கழிந்து தெளிய அந்நீர் முழுமையையும் (முன்புதந்த) பொருந்திய அக்கால்வாய் வழியாகவே கவிழ்ப்பார்கள்.

மள்ளரைச் சகலான்மாக்களாகவும், கால்வாயைச் சிவபெருமானாகவும், அதுதந்த நீரை உடல்பொருளாதிய பந்தமாகவும், நீரின் கலங்கல் கழிந்து தெளிந்ததை அருள் விளங்கலாகவும், அந்நீரினை மீட்டுங் கால்வாயிற் கழித்தலைச் சிவபெருமான் தந்த உடல் முதலிய பந்தத்தை யவனிடத்தே கொடுத்தலாகவும் உபமான உபமேயதருமங்களை இரண்டுவாக்கியங்களாகத் தனித்தனி யெடுத்துக்கூறுதலால் எடுத்துக்காட்டுவமையணி. ஆன்மாக்களுக்குப் பரிபாகம் வரத்தந்த உடல்பொருள் முதலிய பந்தம் கன்மத்தை நுகர்ந்து பாகம் வந்தபின் அவையும் புனிதமாதலால் விந்திய முளைக்குப் பாகம் வருத்திய நீர்க்கலங்கல்போய்த் தெளிந்தபின் என்றார். பின் எச்சவிகுதி. தேற்றேகாரந்தொகுத்தல்.

கலிவிருத்தம்.

இளமகப்பசிதனக்கேந்துகொங்கைப்பா
லளவறிந்தூட்டுதாய்மானவாறறி
களமர்கண்முளைப்புனல்செவ்விகண்டுநீள்
வளவயல்பாய்த்தித்தம்மகவிளோம்புவார்.

(இ-ள்.) இளமை மக பசிதனக்கு ஏந்து கொங்கை பால் அளவு அறிந்து ஊட்டு தாய் மான - இளமைவாய்ந்த பிள்ளையின் பசிக்கு ஏந்திய கொங்கையினது பாலை யூட்டு மளவறிந்தூட்டுந் தாயையொப்ப, ஆறு அறிகளமர்கள் முளை புனல் செவ்வி கண்டு நீள் வளமை வயல் பாய்த்தி தம்மகவின் ஓம்புவார் - வைக்கோல் திரட்டுதல் முதலிய அறுவகைத்தொழில்களை யறிந்த மருதநிலமாக்கள் நென்முளைக்கு நீர்பாய்ச்சும் பருவத்தைக் கண்டு பரந்த வளமைவாய்ந்த வயலில் பாய்ச்சித் தமது பிள்ளையைப்போல அம்முளையைப் பாதுகாப்பார்.

வைக்கோல் திரட்டல் முதலிய அறுவகைத்தொழில்களாவன வைக்கோல் திரட்டல், உழுமாடுகளைப் பாதுகாத்தல், நிலந்திருத்தல், எருவைத்தல், உழுதல், பயிரோம்பல். இது தொழிலின் சுபாவதருமத்தைக்கூறுதலால் தொழிற்றன்மையணி. ஆறறி "ஆறறியந்தணர்" போல வருதலால் பண்பாகுபெயர். (எசு)

ஓரிடத்துயிர்த்ததன்பறழையோம்புவான்
பாரிடைப்பல்வயினுய்க்கும்பூஞைபோற்
காருடற்களமர்கைக்நாறுவாரிப்போய்ச்
சீருடைப்பணைதொறுநடுதல்செய்வரால்.

(இ-ள்.) ஓரிடத்து உயிர்த்த தன் பறழை ஓம்புவான்-ஓரிடத்துப்பெற்ற தனது குட்டிகளையோம்ப, பார் இடை பல்வயின் உய்க்கும் பூஞைபோல் - நிலவுலகில் பலவிடத்திலும் வைக்கும் பூனையைப்போல, கார் உடல் களமர் கைநாறு வாரிபோய் சீர் உடைய பணைதொறும் நடுதல் செய்வர் - கரிய உடலினையுடைய பள்ளர்கள் தமது கையால் நாற்றைவாரிச்சென்று செல்வத்தையுடைய வயல்கடோறும் நடுவார்கள்.

இதுவும் அவ்வணி. தனி ஐகாரத்திற்குமுன் மெல்லெழுத்து மிகுதலையுணராத வராதலால் திருத்த மறந்தனர்போலும். (எஎ)

மரகதந்தளிர்த்தெனவளர்பைங்கூழ்செறி
தரநிறைகழனியுட்சங்கமூர்வன
பரவைநீர்மேய்ந்தெழும்படலைக்கொண்டலுட்
சரமதிநுழைந்துசெல்காட்சிசாலுமால்.

(இ-ள்.) மரகதம் தளிர்த்தால் என்ன வளர் பைங்கூழ் செறிதர நிறை கழனி உள் சங்கம் ஊர்வன-மரகதந் தளிர்த்தாற்போல வளரும் பசிய பயிர்கள் நெருங்க நிறைந்த வயலில் சங்கந்தவழுதல், பரவை நீர் மேய்ந்து எழும் படலை கொண்டல் உள் சரமதி நுழைந்து செல் காட்சி சாலும் - கடல்நீரை மேய்ந்தெழுந்த திரண்ட சூற்கொண்ட மேகத்துள், அந்தச் சரத்காலத்துச் சந்திரன் நுழைந்து செல்லுங் காட்சியையொக்கும்.

இது பண்புந் தொழிலும்பற்றிவந்த வுவமையணி. (எஅ)

களமர்கள்களைகளைபருவங்காட்டலு
மிளமயில்வயல்வளங்காணவெய்தியாங்
குளமகிழ்கூர்தரவுழத்திமாரெலாம்

களமர்கள் களைகளை பருவம் காட்டலும்-பள்ளாகள பருவங்காட்ட, இளமயில் வயல் வளம் காண எய்திய ஆங்கு-இளமைவாய்ந்த மயில்கள் வயலின் வளத்தைக்காண அடைந்தாற்போல, உழத்திமார் எல்லாம் உளம் மகிழ்கூர் தர வளம் மலி பணைதொறும் வந்து மூற்றுவார் - மருதநிலப்பெண்களெல்லாம் மனத்தில் மகிழ்ச்சி மிகவளமைமிக்க வயல்தோறும் வந்து சூழ்வார்கள்.

எய்தியாங்கு தொகுத்தல் விகாரம். இளமயில் வயல்வளங்காண வெய்தியாங்கு என்றது இல்பொருளுவமையணி. (எக)

அம்புயமுற்பலமாம்பலாதியாம்
பைம்புதற்களையறப்பறித்ததம்முருக்
கொன்புனற்றோன்றலுங்கொய்தபுன்களை
பின்பினுமுளைபபதென்பெயர்த்தென்பார்சிலர்.

(இ-ள்.) அம்புயம் உற்பலம் ஆம்பல் ஆதியாம் பைம்புதல்களை அற பறித்த கொன் புனல் - தாமரைகளும் நீலோற்பலங்களும் ஆம்பல்களுமுதலாகிய பசிய புதலாகிய களைகளறப்பறித்த பெருமைமிக்க புனலில், தம் உரு தோன்றலும் கொய்த புன்களை பின்னும் பின்னும் பெயர்த்து முளைப்பது என் என்பார் சிலர் - தமது அவையவங்களந்நீரில் தோன்றத் தாங்கொய்த சிறிய களைகள் பின்னும் பின்னுமின முளைப்பது யாது காரணமோவென்று அந்நிலப்பெண்களுட்சிலர் கூறுவார்.

ஒப்புமையால் ஒன்றைக்கண்டு இது யாதென்று சந்தேகித்தலால் ஐயவணி. (அ0)

பங்கயமாம்பலுற்பலத்திற்றேனுண்டு
தங்கியவண்டினந்தமதுவாண்முகஞ்
செங்கனிவாய்விழிசேர்ந்துழூசுற
வங்கவைகட்டெறிந்தகற்றுவார்சிலர்.

(இ-ள்.) பங்கயம் ஆம்பல் உற்பலத்தில் தேன் உண்டு தங்கிய வண்டு இனம் - தாமரைகளிலும் ஆம்பல்களிலும் நீலோற்பலங்களிலுந் தேனினையுண்டு தங்கிய வண்டி

ண்கூட்டங்கள், தமது வாள் முகம் செங்கனிவாய் விழிசேர்ந்து மூசுற - தமது ஒள்ளிய முகத்திலுஞ் செவந்த கனிபோன்ற வாயிலுங் கண்களிலுஞ்சேர்ந்து மொய்க்க, அங்கு அவை கட்டு எறிந்து சிலர் அகற்றுவார்-அவ்விடத்து அவற்றைக் களைந்தெறிந்து சிலர் நீக்குவார்கள்.

வண்டுகள் பெண்கள்முகத்தையும் வாயையுங் கண்களையுந் தாமரை ஆம்பல் நீலோற்பலமலர்களாக மயங்கினமையால் மயக்கவணியும், அதனால் தமக்கு இஷ்டமாகிய மலர்களை யிழந்தமையால் தகுதியின்மையணியுங் கலந்துவருதலால் கலவையணி.

பாயிதழ்த்தாமரைபறித்தங்கொப்புமை
யாயுநரொனமுகஞ்சேர்த்திஐதுதேன்
வாய்மடுத்திணையிலதென்றுமாற்றல்போன்
மீயுயர்கரைப்புறம்வீசுவார்சிலர்.

(இ-ள்.) பாயிதழ் தாமரை பறித்து அங்கு ஒப்புமை ஆயுநர் என்ன முகம் சேர்த்து - பரந்த இதழ்களையுடைய தாமரைமலர்களைப்பறித்து அவ்விடத்திற் றமது முகங்களோடொத்திருத்தலை யாராய்வாரைப்போலத் தமது முகங்களோடு சேர்த்து, ஐது தேன் வாய்மடுத்து இணையிலது என்று மாற்றல்போல் மீ உயர் கரை புறம் சிலர் வீசுவார்- அவற்றிலுள்ள அழகிய தேனையுண்டு தமது முகத்தோடிவையொப்பாதலில்லையென்றுணர்ந்து களைதல்போல மேலே யுயர்ந்த கரையின்புறத்துச் சில பெண்கள் வீசுவார்கள்.

ஆயுநர் எதிர்காலவினைமுற்றுப்பெயர். தாமரைமலர்களைக்களைந்து கரையின்புறத்தெறிதலை, தமது முகத்துக்கு ஒக்குமோவென்று முகத்தோடு சேர்த்து ஒப்பாகாமையால் வீசினர் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. முகத்திற்சேர்த்தலால் தேன் வாய்மடுத்து என்றார். (அஉ)

இணைவிழிக்கிணையிலையென்பதண்மையி
னணுகிநீகாணெனவழைத்துக்காட்டல்போற்
பிணையுநாசியினெதிர்பிடித்துமோந்துதேன்
றணிவிலுற்பலமுடிசார்த்துவார்சிலர்.

(இ-ள்.) இணை விழிக்கு இணை இல்லை என்பது அண்மையின் அணுகி நீ காண் என அழைத்து காட்டல்போல்-தமது இரண்டுகண்களும் எங்களுக்கு ஒப்பாதல் இல்லையென்பதை நீ சமீபத்தில் வந்து காணுயென்று அழைத்துக்காட்டல்போல, பிணையும் நாசியின் எதிர் பிடித்து மோந்து-தம்முளொத்த நாசிக்கெதிரே பிடித்து மோந்து, தேன் தணிவு இல் உற்பலம் முடி சிலர் சார்த்துவார் - தேன் நீங்காத நீலோற்பலமலரைத் தமது மயிர்முடியில் சிலர் சூடுவார்கள்.

எங்கள் கண்களுக்கு நீ யொப்பாகாய் என்று சொல்லுவதை நீயே பார் என்று காட்டித்தோற்ற நீலோற்பலத்தை யுபசரிப்பவர்போலத் தமது மயிர்முடியிற் சூட்டினர் என்றாேனும் அற்பன் உயர்ந்த இடத்தைச் சார்ந்தாலும் கீழ்மையையேயடைவான் என்பது குறிப்பாற்போதரலால் உதாரவணி. இப்பொருட்காட்சியணியென்றலும் ஒன்று. மூக்கிற்கு நேரே பிடித்துக்காட்டினமையால் மோந்து என்றார். இல்லை, அல்லையென்னும் எதிர்மறைக் குறிப்புத்தொழிற்பெயர்கள். இன்மைப்பொருளிலும் ஒருபொருளை மறுத்து மற்றொன்று என்னும் பொருளிலும் வருவதுணராது அலையெனப் பிழைபடத் திருத்தினர், அவர் தமக்குக்கிடைத்த ஏட்டிலுள்ள பாடஞ்சரியென்று கருதினர்போலும்.

சைவலங்களைகுவான்குனியத்தாழ்குழ
லெய்தியெம்மினத்தினையொறேன்மினென்பபோற்
கைமிசைவிழுந்துசிக்குண்ணக்காணிமிர்த்
தையபூங்குழன்முடித்தணைகின்றார்சிலர்.

(இ-ள்.) சைவலம் களை குவான் குனிய-நீலோற்பலத்தைக் களையும்படி வளைய, தாழ் குழல் எய்தி எம் இனத்தினை ஒறேன் மின் என்பபோல் கைமிசை விழுந்து சிக்குண்ண - தாழ்ந்த கூந்தலை யடைக்கலமாக வடைந்து எமக்கு இனமாயுள்ள இப்பாசிக் கொத்தைக் களையாதொழியுங்களென்று கூறுதல்போலத் தமது கையின்மேல் விழுந்து சிக்குப்பட, கால் நிமிர்த்து ஐய பூங்குழல் முடித்து சிலர் அணைகின்றார் - சேற்றிற்புதைந்த தமது காலை வாங்கி அழகிய மலரணிந்த கூந்தலை வாரிமுடித்துச் சிலபெண்கள் கரைமேலேறுவார்கள்.

"நம்பிமார்" என ஒருமையிற்பன்மை விகுதிவந்ததுபோல ஒறேல் என்னும் எதிர்மறை ஏவலொருமை வினைமுற்றோடுமின் என்னும் பன்மை யேவல் விகுதிவந்ததெனக்கொள்க. பாசிக்கொத்தைக் களையப்புகுந்த மருதநிலப்பெண்கள் அது அவர்கள் கூந்தலுக்குத்தோற்று எங்களைக் களையாதொழிகவெனக் கையையுங்காலையும் பிடித்துக் கொண்டதாக உவமானத்திற்குக் குறைவுதோன்றக்கூறுதலால் எதிர்நிலையணி. நிமிர்த்து எனப் பிறவினை வரல் வேண்டும் என்பதுணராமையால் இருத்த மறந்தனர்போலும்.()

நறுமலர்ப்பங்கயங்களையநாரியர்
கறுவொடுமுள்ளரைக்காம்புபற்றலுந்
தெறுகரங்கிழியப்புண்செய்யுமேதமக்
கிறுதிசெய்வார்க்கெவரிடரிழைத்திடார்.

(இ-ள்.) நாரியர் நறுமலர் பங்கயம் களைய கறுவொடு முள் அரை காம்பு பற்றலும் - அந்நிலப்பெண்கள் நறுமணங்கமழுந் தாமரைமலரைக் களையக் கோபத்தோடு முள்வாய்ந்த அரைப்பகுதியுடைய அத்தாமரையின் காம்பைப்பற்ற, தெறு கரம் கிழிய புண் செய்யுமே-தம்மை வருத்துங் கைகள் புண்பட அத்தாமரை செய்யாநிற்கும், தமக்கு இறுதி செய்வார்க்கு இடர் இழைத்திடார் எவர் - தமக்குத் துன்பஞ்செய்வோர்க்குத் துன்பஞ் செய்யாதவர் உலகிலெவர்.

கொலைசெய்வார்க்கு எவர்தான் துன்பஞ்செய்யார் என்னும் பொருளால் தாமரை களையப்புகுந்த பெண்கள் அதன் முட்காம்பைப்பற்ற அது கையைக்கிழித்ததென வர்ணியமாகிய சிறப்புப்பொருளைச் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி.

அலமருவிழியினமாமெனுமுக
மலர்மிசைப்பாய்தருகயலுமாண்டதன்
குலமெனப்புறவடிகூடுங்கூர்மழு
மிலவிதழ்க்கடைசியரெளிதிற்கைக்கொள்வார்.

(இ-ள்.) அலமரும் விழி இனம் ஆம் என்று முகம் மலர்மிசை பாய்தரு கயலும்-சுழலுந் தமது கண்களைத் தனக்கு இனமாமென்று கருதி முகமாகிய தாமரைமலர்மேல் பாயாநின்ற கயல்மீனையும், மாண்ட தன்குலம் என புற அடிகூடும் கூர்மமும் - தனது குலமென்று புறவடியை அடையும் ஆமைகளையும், இலவு இதழ்க்கடைசியர் எளிதில் கைகொள்வார்-முள்ளிலவுபோலுஞ் செவந்த அதரத்தையுடைய மருதநிலப்பெண்கள் வருத்தமின்றிக் கைப்பற்றுவார்கள்.

கண்களைத் தமது இனமென்று கருதிக் கயலும், புறவடியைத் தமது இனமென்று கருதிக் கூர்மமும் பாயும் கூடும் என்றதனால் மயக்கவணியும், களை களையப்புகுந்த பெண்களுக்குப் பலஞ்சித்தித்தமையால் இன்பவணியுங் கலந்துநிற்றலால் கலவையணி.

பறிதரக்களைந்தெறிபாவைமாரையம்
மறிபுனற்குவளைகால்வளைத்துப்பாம்பெனப்
பொறிவெருவுறச்செயும்புடைப்பின்மொய்ம்பிலாச்
சிறியருந்தமமினுந்தீங்கிழைப்பரோ.

(இ-ள்.) பறிதர களைந்து எறி பாவை மாரை - பறியக் களைந்தெறியும் பதுமை போன்ற அந்நிலப்பெண்களை, அ மறி புனல் குவளை கால் வளைத்து பாம்பு என்ன பொறி வெருவுற செய்யும் - அந்த மடங்கிவரும் புனலிலுள்ள குவளைகள் காலைவளைத்துப் பாம்பென்று அவர்க ளிந்திரியங்கள் கலங்கி யஞ்சச்செய்யாநிற்கும், புடைப்பின் மொய்ம்பு இல்லாத சிறியரும் தம்மின் ஆம் தீங்கு இழைப்பர் - ஒருவனடித்தால் அடித்தற்கு வலிமையில்லாத சிறியவர்களுந் தம்மாலியன்ற தீங்கினைச்செய்வார்கள்.

அடித்தால் அடிபடும் வலிமையில்லாதவரும் தம்மால் கூடிய தீங்குசெய்வார் என்னும் பொருளால் முன்சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப் படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. (அஎ)

களிபடுசுரும்புளர்கமலக்கஞ்சமு
நளிபடுகுவளையுநனைகொளாம்பலுந்
தளிரியற்கடைசியர்முழுதுஞ்சாடுவா
ரளிமருவலர்க்கெவரன்புசெய்குவார்.

(இ-ள்.) களிபடு சுரும்பு உளர் கமலக்கஞ்சமும் நளிபடு குவளையும் நனை கொள் ஆம்பலும் - கள்ளுண்டு களிக்கும் வண்டுகள் அசைந்துதிரியுந் தாமரைகளும் பெருமையமைந்த குவளைமலருந் தேனமைந்த ஆம்பல்மலருமாகிய இவற்றை, தளிர் இயல் கடைசியர் முழுதும் சாடுவார் - மாந்தளிர்போலு மென்மைவாய்ந்த அம்மருதநிலப்பெண்கள் ஒருசேரக் களைவார்கள், மருவலர்க்கு அளி அன்பு செய்குவார் எவர்-பகைவர்க்கு மிக்க அன்பினைச்செய்குவோரெவர், (அளிமருவு அலர்க்கு அன்புசெய்குவார் எவர் - வண்டுகள் மருவி எச்சில்செய்த மலருக்கு அன்புசெய்வோர் யாவர்.)

தமது முகமுதலியவற்றிற்குப் பகையாயெழுந்த தாமரைமுதலியவற்றைக் களைந்தாரென்னும் வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதற்குக்கூறிய அளிமருவலர்க்கெவரன்புசெய்வோர் என்னும் பொதுப்பொருளை வண்டுகள் மருவி யெச்சில்செய்த மலரிடத்தன்புசெய்பவர் எவரெனச் சிலேடித்தார். இதுவும் வேற்றுப்பொருள் வைப்பணி. (அஅ)

புரைதபுபசும்பயிர்ப்பொலிவுங்கங்கெலா
நிரைநிரைகிடந்தபன்னிறந்தபூக்களும்
வரைதவழ்முகில்களும்வானவிற்களுந்
தரையிடைப்பயன்பெறச்சார்ந்ததொக்குமால்.

(இ-ள்.) புரைதபு பசும் பயிர் பொலிவும் கங்கு எல்லாம் நிரைநிரை கிடந்த பல் நிறத்த பூக்களும்-குற்றத்தினின்று நீங்கிய பசிய பயிர்களின் விளக்கமும் வயல் வரம்பின்பக்கங்களிலெல்லாம் வரிசைவரிசையாகக்கிடந்த பலநிறங்களையுடைய மலர்களும்,

வரைதவழ் முகில்களும் வானவிற்களும் தரை இடை பயன்பெற சார்ந்தது ஒக்கும் - மலையிற்றவழு மேகங்களு மதிற்றோன்று மிந்திர தனுசுகளும் உலகினிடத்து ஓர் பயனைப் பெற அடைதலையொக்கும்.

பயிரின் விளக்கமுதலியவற்றை மேகமுதலிய பொருள்களாக அத்தியவசயித்த லால் தற்குறிப்பணி. (அகூ)

இருண்முகிலுறழ்பயிரிடையெலாந்தடித்
துருகெழவயங்கியாங்குலவுமங்கலார்
திருமலர்ப்பதமெல்லப்பெயர்த்துத்தேங்குழற்
கருஞிமிறார்த்தெழக்கரையிலேறுவார்.

(இ-ள்.) இருள் முகில் உறழ் பயிர் இடை எல்லாம்-நீருண்டு கருகிய மேகத்தை யொத்த பசிய பயிர்களினிடங்களிலெல்லாம், தடித்து உருகெழ வயங்கி யாங்கு உலவும் அங்கலார்-மின்னல்போலத் தமது வடிவந்தோன்ற விளங்கி அவ்விடத்துலாவும் மருதநில ப்பெண்கள், திரு மலர் பதம் மெல்ல பெயர்த்து தேம் குழல் கரு ஞிமிறு ஆர்த்து எழ கரையில் ஏறுவார் - அழகிய தாமரையையொத்த தமது கால்களைச் சேற்றினின்றும் மெ ல்ல வாங்கித் தேன்சிந்துங் கூந்தலில் கரிய வண்டுகளொலித்து மேலேயெழக் கரையி லேறா நிற்பார்கள்.

மேகத்தையொத்த பசிய பயிரிடத்துநின்ற பெண்களை அம்மேகத்தினிடத்துத் தோன்றிய மின்னலென அத்தியவசயித்தலால் இதுவும் அவ்வணி. (கூ0)

தெறுங்களைகட்டநீர்ச்செறுவிற்பண்டுபோ
னறுங்களம்போருகசேக்கைநாடிவந்
துறுங்களியோதிமமுயங்கிவாடுவ
வறுங்களநாடியுண்மறுகுமாந்தர்போல்.

(இ-ள்.) தெறும் களை கட்ட நீர் செறுவில் - பயிர்களைவருத்துங் களைகளைக் களைந் தெறிந்த நீருடைய வயலில், களி உறும் ஓதிமம் பண்டுபோல் நறும் கள் அம்போருகம் சேக்கை நாடி வந்து - களிப்புமிக்க அன்னங்கள் முன்புபோலத் தாமிருக்கும் நறுமண ங்கமழுந் தேனையுடைய தாமரைகளாகிய படுக்கைகளை நாடிவந்து அவையில்லாமையா ல், வறும் களம் நாடி உள் மறுகும் மாந்தர்போல் உயங்கி வாடுவ - தலைவியல்ல குறிப்பட் டமையால் அவள் நீற்றலொழிந்த இடத்தைநாடி மனஞ்சுழலுந் தலைவனைப்போல மனம் வருந்தி வாடாநின்றன.

களவுப்புணர்ச்சியுள் இரவுக்குறியில் தோழிகூறிய குறியிடத்துச் சென்ற தலைவ ன் தலைவியல்ல குறிப்பட்டமையால் அக்குறியிடத்துத் தலைவியைக் காணாத தலைவன் வருத்தங்கூர்தல் இயல்பாதலால் மறுகுமாந்தர்போல் என்றார். தமக்குச் சேக்கையாகிய தாமரையில்லாமையால் அன்னம் வருந்தியது என்றமையால் வயலுக்குச் சிறப்பின்மை கூறுதலினின்மை நவிற்சியணி. (கக)

கொள்ளைபோய்கனிவறங்கூர்ந்தகாலையும்
வள்ளியோர்விருந்தினர்வாடக்காண்பரோ
கள்ளறுமலர்பளமிழக்துங்கார்வயல்
வெள்ளனமகிழமீன்விருந்துதல்குமால்.

(இ-ள்.) வள்ளியோர் கொள்ளை போய் நனிவறம் கூர்ந்த காலையும் விருந்தினர் வாட காண்பர் ஓ - வள்ளன்மையுடையோர் தமது பொருண்முற்றும் வறியோ கவர்தலால் மிகவும் வறுமையுற்றகாலத்துந் தம்மிடத்துவந்த விருந்தினர் பசியால் மெலியக் காண்பாரோ காணார், (அதுபோல) கார்வயல் கள் அருமலர் வளம் இழந்தும் - பயிரால் கருமைவாய்ந்த வயல்கள் தேன்சிந்தும் மலர்வளத்தை யிழந்தும், வெள் அனம் மகிழமீன் விருந்து நல்கும் - வெள்ளிய அன்னங்கள் மகிழ்கூரமீன்களை விருந்தாகத்தாரா நிற்கும்.

உவமைக்கும் பொருளுக்கும் ஒற்றுமையுண்மையால் மீன்விருந்து நல்கும் என்னும் உபமேயத்தின் தொழிற்கேற்ப உபமானத்திலும் தம்மை மாறியாகினும் விருந்தினர்க் கூட்டுவரெனக்கொள்ள நிற்றலால் எடுத்துக்காட்டுவமையணியாகக்கொள்க.(கூஉ)

மண்ணகமகளிர்கைவண்மைகண்டயாம்
விண்ணகமகளிர்கைமேன்மைகாண்டுமென்
றெண்ணிமேற்சேற லுற்றென்னவான்பயிர்
கண்ணிறைகவின்செழித்தோங்குங்காட்சித்தே.

(இ-ள்.) வான் பயிர் - மிக்க பயிர்கள், மண் அகம் மகளிர் கைவண்மை கண்டயாம் - நிலவுலகிலுள்ள பெண்கள் கைவளத்தைப் பார்த்தயாம், விண் அகம் மகளிர் கை மேன்மை காண்டும் என்று எண்ணி மேல் சேறல் உற்றுஎன்ன - விண்ணுலகிலுள்ள அரமகளிரது கைவளத்தையும் காண்போமென்று கருதி மேலெழுந்து சென்றாற்போல, கண் நிறை கவின் செழித்து ஓங்கும் காட்சித்து - கண்களுக்கு நிறைந்த அழகால் விளங்கி வளருங் காட்சியையுடையது.

மேலோங்கிவளர்ந்த பயிர்களை இந்நிலப்பெண்களது கைவளத்தைப்பார்த்தோம், இனி யரம்பையர் கைவளத்தையும் பார்க்கலாமென்று மேலெழுந்ததென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், விண்ணிற்கு மண்ணிலகிலுள்ள பயிர்க்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங்கற்பித்தலால் உயர்வுநவிற்சியணியுங் கலந்துவருதலால் கலவையணி.

தரவுகொச்சகக்கலிப்பா.

ஈன்றெடுத்தோர்குணமகவுக்கியையுமுறைப்படிவித்திற்
றோன்றுமுளைமுன்விளர்த்துப்பின்பசந்ததொடர்பினா
லான்றசெழுங்கதிர்களுமுன்றாவெள்ளையாயெழுந்து
மான்றுமரகதமேனிவாய்த்துமடல்கிழித்தெழுமால்.

(இ-ள்.) ஈன்று எடுத்தோர் குணம் மகவுக்கு இயையும் முறைப்படி - பெற்றெடுத்தோர் குணம் பிள்ளைகளுக்குப் பொருந்து முறையின்படி, வித்தில் தோன்றும் முளை முன் விளர்த்து பின் பசந்த தொடர்பினால் - வித்திற்றோன்றிய முளைகள் முன்னே வெளுத்துப் பின்னே பசந்தெழுந்த சம்பந்தத்தினால், ஆன்ற செழும் கதிர்களும் முன்று வெள்ளை ஆய் எழுந்து - அமைந்த செழித்த நெற்கதிர்களு முன்பு களங்கமில்லாத வெள்ளைநிறம் படைத்தெழுந்து, மான்று மரகதம் மேனி வாய்த்து மடல் கிழித்து எழும்-பின்பு பெருமையமைந்து மரகதம்போல மேனி பசந்து மடல்கிழித்தெழாநிற்கும்.

"பெற்றவர் குணம் பிள்ளைக்குண்டு" என்பது உலகவழக்காதலால் வெளுத்த நெல்லின்முளை பயிராகுங்காலத்துப் பசந்துதோன்றுதலால் அம்முளையீன்ற கதிர்களும் முன்பு வெண்ணிறம்படைத்தெழுந்து பின்பு பசந்தது என உலகவழக்கைத் தழுவிக்கூறுதலால் உலகவழக்கு நவிற்சியணி. (கூா)

அரமகளிரங்கைவளமறிபாக்குமேற்போந்து
திரையெறிநீர்க்கடல்வரைப்பிற்றெரிவையர்கைக்கிணையொவ்வா
மரபுணர்ந்துமீண்டென்னவானோக்கிக்கதிர்த்தெழுந்த
பரவுபுனற்றடஞ்சாலிபார்நோக்கியிறைஞ்சுமால்.

(இ-ள்.) அரமகளிர் அங்கை வளம் அறி பாக்கு மேல் போந்து - தெய்வப் பெண்களது அழகிய கையின் வளத்தையுணர மேலே சென்றெழுந்து, திரை எறி நீர் கடல் வரைப்பு இல் தெரிவையர் கைக்கு இணை ஒவ்வாத மரபு உணர்ந்து மீண்டால் என்ன - அலைகளெறியும் நீர்மயமாகிய கடல்சூழ்ந்த நில உலகில் பெண்கள் கைக்கு ஒப்பாகாத மரபினையறிந்து திரும்பினாற்போல, வான் நோக்கி கதிர்த்து எழுந்த பரவு புனல் தடசாலி பார் நோக்கி இறைஞ்சும் - விண்ணுலகைநோக்கிக் கதிர்வாங்கி மேலெழுந்த பரந்த நீரிலுள்ள பெருத்த நெற்பயிர்கள் அந்நிலவுலகை நோக்கி வளைந்து சாயாநிற்கும்.

கதிர்வாங்கி மேலெழுந்த நெற்பயிர்கள் பால்பற்றியபின் நிலவுலகைநோக்குதலை நிலவுலகிலுள்ள பெண்கள்கைக்கு அரம்பையர் கையிணையாகுமாவென்று மேலே போய் அது இணையில்லாமையை நோக்கித் திரும்பியது என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (சுரு)

பேதைமையிலாடவர்முன்வளைவின்றிப்பெதும்பைமையின்
மேதகச்சற்றெனவணங்கிமங்கைமையின்மிகநாணு
மாதரைப்போற்பைங்கூழின்மன்னனெதிர்கதிர்த்தெழுந்த
வேதமிலாக்கதிர்முதிர்ந்துவரவரக்கீழிறைஞ்சுமால்.

(இ-ள்.) பேதைமையில் ஆடவர் முன் வளைவு இன்றி - பேதைப்பருவத்தில் புருடர்கள் முன்னே தலையிறக்கமில்லாது, பெதும்பை மையின் மேதக சற்று என்ன வணங்கி மங்கைமையின் மிக நாணும் மாதரைபோல் - பெதும்பைப்பருவத்தில் மேன்மைபொருந்தச் சிறிது தலையிறங்கி மங்கைப்பருவத்தில் மிகவுந் தலையிறங்கும் பெண்களைப்போல, பைங்கூழ் இல் மன்னன் எதிர் கதிர்த்து எழுந்த ஏதம் இல்லாத கதிர் முதிர்ந்து வரவர கீழ் இறைஞ்சும் - பசிய பயிராயுள்ள பருவத்தில் தனது தலைவனாகிய இந்திரனுக்கெதிரே கதிர்கொண்டு தலையிறக்கமில்லாது குற்றமில்லாத அந்நெற்கதிர்கள் பால்பற்றி முதிர்ந்து வரவர நிலவுலகைநோக்கிக் கீழே தலையிறங்காநிற்கும்.

இல்மன்னன் என்றதற்குக் காதிநாயகன் எனப் பொருள்கொள்ளலும் ஒன்று. காதிநாயகன் எனல் நாயகனில்லாதகாலத்தில் நாயகனுளனாகத் தன் மனத்திற்கருதி யவன் முகத்துக்குத்தான் எதிர்முகமாக நிற்றல். "முகத்தோடெதிர்முகமாகநோக்கி-நயத்தக வொருவனுக்கவனுகிய - தோற்றமும்" என்பதனாலுணர்க. இது இசைநூல்வழக்கு. கதிர்முற்றியபின் வரவர நெற்பயிர் தலைவணங்கியதைப் பேதைப்பருவத்தில் தலைவணங்காது பெதும்பைப்பருவத்தில் சிறிது தலைவணங்கி மங்கைப்பருவத்தில் மிகவுந் தலைவணங்கும் பெண்களையொக்குமென அத்தியவசயித்தலால் இதுவுந் தற்குறிப்பணி. (சுசு)

உருத்திட்பமுமுக்காலைத்தலைநிறீஇயுற்றதற்பின்
றருக்கற்றுநனிவணங்கிப்பழுத்தகதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்துவேண்டுமாற்பெரும்பணிவுமிகச்சிறிய
சுருக்கத்துவேண்டுமுயர்வெனுமொழியின்சுவைதேற்றும்.

(இ-ள்.) உரு திட்பம் உறுத காலை தலை நிறுவி - நெற்கதிருருவம் பால்பற்றுத லடையாதகாலத்துத் தலையெடுத்து, உற்றதன்பின் தருக்கு அற்று நனி வணங்கி பழுத்த கதிர் தடசாலி-பால்பற்றியபின் செருக்கொழிந்து மிகவுந் தலையிறங்கிப் பழுத்துக்காய்த்த கதிர்களையுடைய பெரிய நெற்கதிர்கள், பெரும்பணிவு பெருக்கத்து வேண்டும் - யாவர்க்கு மிக்க பணிவு செல்வப் பெருக்கத்தில் வேண்டும், மிக சிறிய சுருக்கத்துவேண்டும் உயர்வெனும் மொழியின் சுவை தேற்றும் - உயர்வு மிகவுஞ் சுருங்கியகாலத்து வேண்டுமென்னு மூதுரையின் கருத்தைத் தெரிவிக்கும்.

"பெருக்கத்துவேண்டும்பணிதல்சிறிய-சுருக்கத்துவேண்டுமுயர்வு"என்பது மூதுரையாதலால் அந்த உலகவழக்கினைத் தழுவித் தலைநிமிர்இவணங்கிப் பழுத்த கதிர்த்தடஞ்சாலி தேற்றும் எனக்கூறுதலில் உலகுவழக்கு நவிற்சியணி. (கஎ)

தூமதிவாக்கியகிரணந்துளித்தென்னக்கதிர்ச்சாலி
காமர்மணித்தரளங்கள்கான்றுசெறுத்திடராக்கிப
பூமலரக்கால்யாத்தபுனன்முழுதும்புறங்கவிழ்த்து
மாமைநீர்புலர்த்தவருமள்ளருளமகிழ்விக்கும்.

(இ-ள்.) கதிர்ச்சாலி தூமதி வாக்கிய கிரணம் துளித்தால் என்ன - கதிர்களையுடைய நெற்பயிர்கள் களங்கமில்லாத சந்திரன் தம்மேலொழுக்கிய கிரணத்தைத் துளித்தாற்போல, காமம் மருவு மணி தரளங்கள் கான்று செறுதிடர் ஆக்கி - விருப்பஞ்செய்யு முத்துகளைத் தம்மிடத்தினின்றுங்கக்கி வயலை மேடாக்கி, பூ மலர கால் யாத்த புனல் முழுதும் புறம் கவிழ்த்து - மலர்கள் மலரத் தமது கால்கள்தோறுஞ் சிறைப்படுத்திய நீர்முழுமையும் புறத்திற்போகவிட்டு, மாமை நீர் புலர்த்த வரும் மள்ளர் உளம் மகிழ்விக்கும்-அழகிய நீரை வடிக்க வாராநின்ற அந்நிலமாக்களுடைய மனமகிழச்செய்விக்கும்.

சந்திரகிரணத்தால் நெற்கதிர் பால்பற்றுதல் வழக்காதலில் தூமதிவாக்கிய கிரணம் எனவும், விளைந்த நெற்பயிரிடத்து முத்துப்பிறத்தலால் கதிர்ச்சாலி காமர் மணித்தரளங்கள் கான்று எனவும் கூறினர். துளித்தென்ன, காமருவுகாமர் தொகுத்தல் விகாரம். நெற்கதிர் சிந்திய முத்தினால் விளைந்த வயறிடராகியது என்றது மிகுதியணியும், நீரைக் கவிழ்த்தலில் அம்முத்துத்திரளினை மள்ளர் பெறுதலால் இன்பவணியுங் கலந்து நிற்றலால் கலவையணி. நெல்லில் முத்துத்தோன்றுதல்—

" தந்திவராகமருப்பிப்பிபூகந்தனிக்கதலி
நந்துசலஞ்சலமீன்றலைகொக்குநளினமின்னார்
கந்தரஞ்சாலிகழைகன்னலாவின்பல்கட்செவிகார்
இந்துஉடும்புகராமுத்தமீனுமிருபதுமே." (கஅ)

வணங்குகுலைக்கதிர்ச்சாலிசிலையாகவளர்பதடி
யுணங்குகதிர்கணையாகவொளிர்முளரிக்கரம்பற்றி
யிணங்குபசுங்குரல்கவரவரும்புட்களிரிந்தோட
வணங்குபுரிந்தெதிர்கண்டோரதிசயிப்பச்செயும்பணைகள்.

(இ-ள்.) பணைகள் வணங்கு குலை கதிர் சாலி சிலையாக - வயல்கள் வளைந்த கதிர்க்குலையையுடைய நெற்பயிர்கள் வில்லாகவும், வளர் உணங்கு பதடி கதிர் கணையாக ஒளிர்முளரி கரம் பற்றி-வளர்ந்துலர்ந்த பதர்நெருங்கிய கதிர்கள் அம்பாகவும் விளங்குந் தாமரையாகிய கைகளிலேந்தி, இணங்கு பசும் குரல் கவரவரும் புள்கள் இரிந்து ஓட- இசைந்த பசிய கதிர்களைக் கவரவரும் பறவைகள் விலகியோட, அணங்கு புரிந்து எதி

ர்கண்டோர் அதிசயிப்ப செய்யும் - வருத்தஞ்செய்து எதிரே பார்த்தோர் அதிசயங்கூரச் செய்யாநிற்கும்.

வளைந்த நெற்கதிரை வில்லாகவும், பதராகவுலர்ந்த கதிரினை யம்பாகவும், தாமரையைக் கையாகவும் உருவகப்படுத்தி அவற்றின் காரணமாக நெற்கதிரைக் கவரவரும் பறவைகளஞ்சியோடச்செய்து பார்ப்போர்க்கு ஒரு வியப்பென்னுங் காரியத்தை வயல் செய்யும் எனக்கூறுதலால் கூட்டவணி. இதனை வடநூலார் சமுச்சயாலங்காரம் என்பர். (கக)

பாலொளிநீத்தெழும்விடத்தான் முகில்வண்ணம்படைத்திருந்த
மாலவனார்கலிக்கச்சிவந்தெய்தித்தவமுஞற்றி
மேலையுருச்செவந்தென்னவெள்ளொளிபோய்ப்பசந்தெழுந்த
சாலியெலாஞ்செங்கனகநிறம்வாய்ந்துதழைக்குமால்.

(இ-ள்.) எழும் விடத்தால் பால் ஒளி நீத்து முகில்வண்ணம் படைத்து இருந்த மாலவனார் - கடலிற்றோன்றிய விஷத்தால் பால்போன்ற முன்னுள்ள வண்ணத்தையிழந்து மேகம்போலுங் கருநிறவண்ணத்தைப் பெற்றிருந்த திருமாலானவர், கலி கச்சி வந்து எய்தி தவம் உஞற்றி மேலை உரு செவந்தால் என்ன - செல்வம் நிறைந்த திருக்கச்சிநகரை வந்தடைந்து தவத்தைச்செய்து முன்புள்ள கருவண்ணம் செவந்தாற்போல, வெள் ஒளிபோய் பசந்து எழுந்த சாலி எல்லாம் செம் கனக நிறம் வாய்ந்து தழைக்கும்- முன்புள்ள வெள்ளைநிறம் பருவத்தாலொழிந்து பின்பு பசுநிறங்கொண்டு மேலெழுந்த நெற்பயிர்களெல்லாம் கதிர்களால் செவந்த பொன்னிறம் வாய்ந்து தழைத்தோங்கும்.

உபமானத்துக்கும் உபமேயத்துக்கும் ஒற்றுமையுண்மையால் விடத்தால் மேகநிறம் பெற்ற மாலவனார் என்னும் உபமானத்தின் தொழிலிற்கேற்பப் பருவத்தால் பசந்து என உபமேயத்தின் தொழிலைக்கொண்டாம். இயற்கையாயுள்ள வெண்ணிறம் விஷத்தாலொழிந்து கரிய நிறம்பெற்ற திருமால் காஞ்சியில் வந்து தவஞ்செய்து செந்நிறம் வாய்ந்தது போல முன்புள்ள வெண்ணிறம் பருவத்தாலொழிந்து பசந்தெழுந்த நெற்கள் கதிர்களாற் செவந்தது என உபமான உபமேயதருமங்களை இரண்டுவாக்கியங்களால் தனித்தனி யெடுத்துக்கூறுதலால் எடுத்துக்காட்டுவமையணி. ஒருகாலத்தில் திருப்பாற்கடலில் போகமாபுரத்தில் சர்ப்பசயனத்தில் அறிதுயில் கூர்ந்த திருமால் திருமகளுக்குச் சிவபிரான் திருவிளையாடலை யெடுத்துக்கூற, அத்திருமகள் நீயுங் காஞ்சியிற்சென்று சிவபூசை செய்து கரிய நிறமொழிவாயென்று கூற, அதுகேட்டுத் திருமால் காஞ்சியையடைந்து வீரட்டகாசம் என்னுந் திருப்பதியையடைந்து வீரட்டகாசச் சிவபெருமானைப்பூசித்துக் குறையிரப்ப, அப்பெருமான் காட்சிதந்தருளிப் பவளவண்ணந் தந்தருளினர் என்பது இப்புராணவரலாறு.

"கச்சிமாநகரமெய்திவீராட்டகாசநல்வரைப்பினுக்கெதிரா
அச்சிவன்வீரநகைதிரண்டனையசக்கரதீர்த்தமுண்டாக்கி
முச்சகமேத்துங்கங்கையிற்சிறந்தவத்தடமூழ்கிநோன்பியற்றிப்
பச்சைமால்வதிந்தான்வதிந்திடம்பச்சைவண்ணராலயமெனப்படுமால்.
ஆங்கவன்வைகிநாடொறுமீரேழாயிரமளிகெழுபொகுட்டுத்
தேங்கமழ்கமலங்கொண்டுவீராட்டகாசமாதேவனையருச்சித்
தோங்குபேரன்பிற்றொழுதெழுந்திரப்பவுலப்பருங்கருணைமீக்கூர்ந்து
மாங்குயில்பாகனெதிரொழுந்தருளிவழங்கினன்பவளமேர்வடிவம்" என இந்நூலில் வருதல் காண்க. (௬00)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நாவலோர்புனைந்துரைக்குநலமுழுதுமமைந்துவடநாகஞ்சூழ்பொன்
னாவலோவெனவியப்பவளர்செந்நெலரிபருவநாடித்தெண்ணீர்
நாவலோனுளங்களிப்பப்படியெடுக்குங்குண்டைநகருழவர்போல்வார்
நாவலோவெனவிளிப்பத்தொழுவரொலாநயந்தெய்திவினையின்மூள்வார்.

(இ-ள்.) நாவலோர் புனைந்து உரைக்கும் நலம் முழுதும் அமைந்து - கல்வியில் வல்லோர் புனைந்துகூறும் வளமை முற்றுமமைந்து, வட நாகம் சூழ் பொன் நாவலோ என வியப்ப வளர் செம் நெல் அரிபருவம் நாடி-வடபாலுள்ள மேருவைச்சூழ்ந்த பொன்னிறம்வாய்ந்த நாவலந்தீவோ என்று கண்டோர் வியப்புக்கூர வளருஞ் செந்நெற்கதிரையரியும் பருவத்தை யாராய்ந்து, தெள் நீர் நாவலோன் உளம் களிப்ப படியெடுக்கும் குண்டை நகர் உழவர்போல்வார் - தெள்ளிய நீர்சூழ்ந்த திருநாவலூராளியாகிய ஆளுடைய நம்பிகள் மனங்களிகூர நெல்லளந்த குண்டையூர்க்கிழாரைப்போல, நாவலோ என்ன விளிப்ப தொழுவர் எல்லாம் நயந்து எய்தி வினையின் மூள்வார் - நாவலோவென்று அழைக்க மருதநிலமாக்களெல்லாரும் விரும்பியடைந்து தத்தமக்குரிய நெல்லரிதொழிலில் முயல்வாராயினர்.

நாவலோ என்பது நெல்லரிதற்கு மருதநிலமாக்களை யழைக்குங் குறியீடு. இது உழவர் கூட்டத்தார் ஒருபொருளை யுணர்த்துஞ் சொற்குறியையொழித்து வேறொரு சொற்குறியிற்கூறுங் கூற்றாதலால் குழூஉக்குறி. நாவற்றீவு சாம்பூநதமென்னும் பொன்னுடைமையால் பொன்னாவலோவென வியப்பவளர் செந்நெல் என்றார். குண்டையூர்க்கிழார் என்னுந் திருநாமமுடையவர் சிவபெருமானார் தடுத்தாட்கொண்ட ஆளுடைய நம்பிகள் திருவாரூரிலெழுந்தருளியிருக்குங்காலத்தில் பரவைநாய்ச்சியார் திருமனைக்கு வேண்டிய அரிசிமுதலிய உபகரணங்களை வேண்டுமளவு நடத்திவருங்கால், மழைவறங்கூர விளைவுகுன்றியதனால் இனிப் படியளந்துவரும் நமது வழிபாடுகுன்றியதேயென்று கவலைகூர்ந்தபோது அன்றிரவில் சிவபெருமானார் கனவிலெழுந்தருளிக் குண்டையூரடங்க நெற்குவை தந்தோம் இனிக் கவலையொழிகவென்றருளினர், அந்நெற்குவைகளைக் கண்டதிசயித்து நாயனாரிடத்துச்சென்று பணிந்துகூற அந்நாயனாருங் கண்டதிசயித்தனர்.

“ செந்நெல்லும்பொன்னன்னசெழும்பருப்புந்தீங்கரும்பின்
இன்னல்லவமுதுமுதலெண்ணில்பெரும்பலவளங்கள்
மன்னியசீர்வன்றொண்டர்க்கமுதாகவழுவாமல்
பன்னெடுநாட்பரவையார்மாளிகைக்குப்படிசமைத்தார்.

வன்றொண்டர்திருவாரூர்மாளிகைக்குநெல்லெடுக்க
இன்றுகுறையாகின்றதென்செய்கேனெனநினைந்து
துன்றுபெருங்கவலையினாற்றுயரெய்தியுண்ணாதே
அன்றிரவுதுயில்கொள்ளஅங்கணர்வந்தருள்புரிவார்.

ஆரூரன்றனக்குன்பாலெற்றந்தோமென்றருளி
நீரூருஞ்சடைமுடியார்நிதிக்கோமான்றனையேவப்
பேரூர்மற்றதனெல்லையடங்கவுநென்மலைபிறங்கக்
காரூருநெடுவிசும்புங்கரக்கநிறைந்தோங்கியதால்.”

“ குண்டையூர்க்கிழவனருமெதிர்கொண்டுகோதில்வாய்மைத்
தொண்டனார்பாதந்தன்னிற்றொழுதுவீழ்ந்தெழுந்துநின்று

பண்டெலாமடியேன்செய்தபணியெனக்கின்றமுட்ட
அண்டர்தம்பிரானார்தாமேகிநென்மலையளித்தாரென்று.

விண்ணினையளக்கும்நெல்லின்வெற்பினைநம்பிநோக்கி
அண்ணலைத்தொழுதுபோற்றியதிசயமிகவுமெய்தி" எனவருந் திருத்தொண்டர் புராணத்தாலறிக. (கoச)

கலிவிருத்தம்.

ஒருவருக்கொருசெல்லலுற்றாலஃ
தருகுளார்க்குமடுப்பதுதிண்ணமே
கருவிமள்ளர்கதிர்க்குலைதன்னொடும்
பருமென்பூக்களும்பற்றியரிகுவார்.

(இ-ள்.) ஒருவருக்கு ஒரு செல்லல் உற்றால் அஃது அருகு உள்ளார்க்கும் அடுப்பது திண்ணம் - ஒருவர்க்கொரு துன்பம் வந்தால் அத்துன்பம் பக்கத்திலுள்ளவர்க்கும் வருவது நிச்சயம் அதுபோல, கருவி மள்ளர் கதிர் குலை தன் ஒடும் பருமென் பூக்களும் பற்றி அரிகுவார் - அரிவாளேந்திய பள்ளர்கள் கதிர்முற்றிய நெற்குலைகளோடும் பரிய மெல்லிய பூக்களையுங் கைப்பற்றி யரியத்தொடங்குவார்கள்.

இது எடுத்துக்காட்டுவமையணி. (கoஉ)

அரிவர்சேர்ப்பரடுக்குவர்சிக்கென
வரிவர்சென்னியில்வைப்பர்களஞ்செலப்
புரிவர்பொன்னங்கிரியெனப்போர்செய்வர்
பிரிவர்மீள்வரிப்பெற்றியரெங்கணும்.

(இ-ள்) அரிவர் சேர்ப்பர் அடுக்குவர் சிக்கென வரிவர் சென்னியில் வைப்பர் களம் செல்ல புரிவர் - நெற்கதிர்களை யரிவார்கள் அரிந்த அவற்றைக் கற்றையாகச்சேர்ப்பார்கள் சேர்ந்தவற்றை யொன்றின்மேலொன்றாக அடுக்குவார்கள் அடுக்கினவற்றை விரைந்து கட்டுவார்கள் அவற்றைச் சிரசின்மேல் வைப்பார்கள் அவற்றைப்போடப் போர்போடுங்களத்தில் செல்வார்கள், பொன்னம் கிரி என்ன போர் செய்வர்-மேருவை ப்போலப் போர்போடுவார், பிரிவர் மீள்வர் இ பெற்றியர் எங்கணும் - அங்கு நின்றும் பிரிந்து திரும்புவார் இத்தன்மையரோ எவ்விடத்துமுள்ளவராயினர்.

தம்முள் வேறுபடாமல் ஒருகாலத்திற்கூடத்தக்க பொருள்களுக்குக் கூட்டத்தைச்சொல்லுதலால் கூட்டவணி. அரிவர், சேர்ப்பர், அடுக்குவர், வரிவர், வைப்பர், புரிவர், போர்செய்வர், பிரிவர், மீள்வர். இவை யொருகாலத்திற் கூடத்தக்க பொருள்கள். (கoஙு)

சிறைசெய்தீம்புனனாட்டிறைசெற்றுமுன்
சிறையரிந்தவரைகளைச்சீற்றத்தாற்
சிறைசெயக்கருதித்தன்னிலத்தொரு
சிறைவைத்தாலெனப்போர்கள்சிறக்குமால்.

(இ-ள்.) தீம்புனல் சிறைசெய் நாடு இறை - இனிய புனலைச் சிறைசெய்யு மருதநிலத்திறைவனாகிய இந்திரன், செற்று முன் சிறை அரிந்த வரைகளை - கோபித்து முன்பு சிறகுகளையரிந்த மலைகளை, சீற்றத்தால் சிறைசெய்யக்கருதி தன் நிலத்து ஒரு சிறை வைத்தால் என்ன - கோபத்தாற் சிறைப்படுத்தக்கருதித் தன்னிலத்தில் ஒருபக்கத்து வைத்தாற்போல, போர்கள் சிறக்கும் - நெற்போர்கள் சிறந்து விளங்கும்.

"வேந்தன்மேயதீம்புனலுலகமும்" என்றாற்போலச் சிறைசெய்தீம்புனல் நாட்டி றையென்றார். முற்காலத்தில் மலைகளெல்லாஞ் சிறகொடுபறந்து பற்பல தேசங்களிலுஞ் சென்றிருத்தலா லங்குள்ள இயங்கியற்பொருள்களாகிய எவ்வுயிர்களுந் துன்பங்கூர்த லைத் தேவர்கள்நோக்கி தமக்கிறைவனாகிய இந்திரனுக்குக்கூற, அவ்விந்திரன் கருணை கூர்ந்து அம்மலைகளின் சிறகரிந்தான் என்பது வரலாறு. சிறகரிந்த மலைகளைத் தன்னி லத்தி லவன் சிறைசெய்து வைத்திருத்தல்போலும் எனக்கூறுதலால், இல்பொருளுவ மையணி. (கoச)

வெற்பெலாமண்ணின்வீழ்த்துவலாரிதன்
னொப்பிலூர்தியையேவியொறுத்தல்போற்
பற்பல்போர்கள்சரித்துப்பகட்டின
முற்பிணைத்துநடத்துவர்மொய்ம்பினோர்.

(இ-ள்.) வலாரி வெற்பு எல்லாம் மண்ணின் வீழ்த்து தன் ஒப்பு இல் ஊர்தியை ஏவி ஒறுத்தல்போல்-இந்திரன் மலைகளையெல்லாம் நிலவுலகின்மேல் வீழ வுருட்டித் தனது ஒப்பில்லாத வூர்தியாகிய மேகத்தையேவித் தண்டித்தலைப்போல, மொய்ம்பினோர் பற்பல் போர்கள் சரித்து பகடு இனம் முன்பிணைத்து நடத்துவர் - வலிமையையுடைய மருதநிலத்துமாக்கள் போட்ட பல நெற்போர்களைச்சரித்து எருமைக்கடாவின் கூட்ட ங்களை முன்பு ஒன்றோடொன்று பிணைத்து மிதிப்பிப்பாராயினார்கள்.

வலாரி வலாசுரனைக்கொன்றதனால் வந்த காரணப்பெயர். சிறையரிந்து தன்னி லத்தில் வீழ்த்துச் சிறைசெய்த மலைகளை அவற்றின் குற்றந்தீரத் தனது வாகனமாகிய மேகத்தை யேவி அதனாற் றண்டித்தல்போலவெனக்கூறுதலால் இதுவும் இல்பொரு ளுவமையணி. (கoரு)

நெற்பலாலத்தினீங்கியதோவெனப்
பற்பல்கான்முகங்கோட்டினபார்ப்பபோற்
பொற்பவாயினிற்பூங்கதிர்கவ்வுபு
சொற்பகட்டினஞ்சுற்றியுழக்குமால்.

(இ-ள்.) நெல் பலாலத்தின் நீங்கியதோ என்ன பல்பல் கான்முகம் கோட்டின பார்ப்பபோல் - நெல்லைவைக்கோலினின்றும் நீங்கியதோவென்று பலகாலும் முகத்தை வளைத்துப் பார்த்தல்போல, பொற்ப வாயினில் பூங்கதிர் கவ்வுபு சொல் பகடு இனம் சுற்றி உழக்கும் - பொலிவுபெற வாயினாலழகிய நெற்கதிர்களைக்கவ்வி நெற்போர்களை எருமைக்கடாக்களின் கூட்டம் சுற்றிக் கலக்காநிற்கும்.

பிண்டம் ஆதற்குப் பிண்டிக்கப்படுபொருள் கருவியாதலால் நெல்போரின்மேல் நிற்றல் கருவியாகுபெயர். போரடிக்குங்காலத்தில் எருமைக்கடாக்கள் வைக்கோலைக் கவ்வ முகம் வளைத்துப் பார்த்தலை நெல்லைவைக்கோலினின்று நீங்கியதோவென்று முகம் வளைத்துப்பார்த்தல்போலுமென்று அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (கoசு)

உடலினாவிபிரிந்தெனவூழ்வினைத்
தொடர்புநீங்குவதொப்பத்தொகுத்தநெற்
படலைவையினினீங்கப்பகட்டின
மடையவுந்தொடர்நீங்கியகலுமால்.

(இ-ள்.) உடலின் ஆவி பிரிந்தென ஊழ்வினை தொடர்பு நீங்குவது ஒப்ப - ஒருவன் உடலினின்று உயிர்பிரிய அவ்வுயிரைச்சூழ்ந்த ஊழ்வினைப்பயனாகிய சம்பந்தம் நீங்

குதல்போல, தொகுத்த நெல் படலை வையினில் நீங்க பகடு இனம் அடையவும் தொடர் நீங்கி அகலும் - கதிரிற்செறிந்த நெற்றிரள் வைக்கோலினின்றும் நீங்க எருமைக் கடாக்களின் கூட்டங்கள் முற்று மப்பிணிப்பினின்று மகலாநிற்கும்.

பிரிந்தென செய்தெனவென்னும் இறந்தகாலவினையெச்ச வாய்பாடாதலால் செயவெனெச்சத்திரிபு. ஊழ்வினை ஊழ்வினையால்வரும் பயன்மேல் நிற்றலால் கருவியாகு பெயர். பிராரத்த வினைப்பயனுகர்தற்கே யுடல்வந்தமையால் உடல் நீங்கின அன்றே அப்பயனும் ஒழிதலால் உடலினுயிர் பிரிந்தென ஊழ்வினைத்தொடர்பு நீங்குவதென்றார் "இருவினைகொள்கலனுமுடல்" என வருதலுங்காண்க. உடல் வைக்கோலாகவும், ஆவி நெல்லாகவும், பகடு ஊழ்வினைப்பயனாகவும், ஆவிபிரிய உடலினின்று அப்பயன் பிரிதல் போல் நெல்லினின்று வைக்கோல்பிரிய அதினின்று பகடு பிரிதலாகவும் உபமான உபமேயதருமங்களை இரண்டிரண்டு வாக்கியங்களாகத் தனித்தனி யெடுத்துக்கூறுதலால் எடுத்துக்காட்டுவமையணி (கoஎ)

வையகற்றிவளியெதிர் தூற்றலும்
பொய்யகன்றவரைம்பொறிபோதல்போற்
கையகன்றுகழிவைப்பொடியொடு
மொய்யெனப்பதரப்புறத்தோடுமால்.

(இ-ள்.) வை அகற்றி வளி எதிர் தூற்றலும் - வைக்கோலினின்றும் நெல்லையகற்றிக் காற்றுக்கெதிரே தூற்ற, பொய் அகன்றவர் ஐம்பொறி போதல் போல் - பிரபஞ்சத்தினின்றும் நீங்கின சிவஞானிகளுடைய ஐம்பொறிகளுந் தமது சேட்டையொழிதல்போல, கை அகன்று கழிவை பொடி ஒடும் ஒய்யென பதர் அ புறத்து ஓடும்-(நெற்களினின்றும்) நீங்கிக்கழிந்த வைக்கோற்பொடியோடும் விரைந்து நெற்பதர்கள் அப்புறத்தோடாநிற்கும்.

பிரபஞ்சம் சத்தபரிசரூபரசகந்தவடிவாய் நிற்றலால் புலனொழியவே அதன்வழிச்செல்லும் இந்திரியங்களும் ஒழிதலால் பொய்யகன்றவ ரைம்பொறிபோதல்போல் என்றார். இதுவும் எடுத்துக்காட்டுவமையணி. (கoஅ)

அறத்துநால்வழியாற்றுவவாற்றியந்
திறத்தினெஞ்சியசெந்நெற்குவையெலாங்
குறித்தெடுத்துநெற் கூடுய்த்தறச்செயன்
மறப்பிலாதவளக்குடியெங்கணும்.

(இ-ள்.) அறத்து நால் வழி ஆற்றுவ ஆற்றி - தருமவியல்பைக்கூறும் நூல்வழியே தாம் கொடுப்பனவற்றைக் குறைவறக்கொடுத்து, அ திறத்தின் எஞ்சிய செம் நெல் குவை எல்லாம் குறித்து எடுத்து - அத்திறத்திற் கொடுத்ததுபோக மிஞ்சிய செந்நெற் குப்பைகளையெல்லாங் குறிபோட்டு அக்குறியினின்றும் எடுத்து, நெல் கூடு உய்த்து வளம் குடி எங்கணும் அறச்செயல் மறப்பிலாத - நெற்கூட்டில் நிறைத்துச் செல்வம்வாய்ந்த குடிகளெவ்விடத்தும் தாம் செய்யுந் தருமச்செயலினின்று மறவாமல் ஒழுகாநிற்கும்.

ஆறிலொருகூறு அரசனிறையாதலாலும், இரப்பவர் முதலியோர்க்குக் கொடுத்தலாலும் அறத்துநால்வழியாற்றுவவாற்றியெனவும், மற்றெஞ்சிய ஐந்துகூறும் "தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கலென்றாங்-கைம்புலத்தாறோம்பறலை" என நாயனாரருளினமையால் அவர் கடனுக்கேயாதலால் அறச்செயல் மறப்பிலாதவெனவுங் கூறினார். அவரது தொழிற் சுபாவதருமத்தைக்கூறுதலால் தொழிற்றன்மையணி. (கoகூ)

குறையவித்தினகொண்டுகுடியெலா
நிறையச்சாலிநிரப்புவபூம்பணை
யிறையளித்தவிருநாழிநெற்கொண்டே
யறமெலாநிறைவிக்குமமலைபோல்.

(இ-ள்.) பூம்பணை குடி எல்லாம் குறைய வித்தினகொண்டு நிறைய சாலி-மலர்களையுடைய வயல்கள் குடிகளெல்லாம் மிகச்சிறியவாக முன்பு வித்திய நென்முளைகளைக்கொண்டு ஒன்றுநூருக நெற்களை, இறை அளித்த இருநாழி நெல்கொண்டு அறம் எல்லாம் நிறைவிக்கும் அமலைபோல் நிரப்புவ - சிவபிரான் தந்தருளிய இருநாழிநெல்லைக்கொண்டு முப்பத்திரண்டறங்களையும் நிறைவித்த உமையம்மைபோல நிரம்பச்செய்யா

சிவபெருமானருளிய இருநாழிநெல்லைக்கொண்டு முப்பத்திரண்டு தருமங்களையும் உலகில் நிறையச்செய்த உமையம்மையைப்போல வயல் தம்மிடத்துக்குறைய வித்திய விதையைக்கொண்டு ஒன்று பலவாக நெற்களை நிறைவிக்கும் எனக்கூறுதலால் எடுத்துக்காட்டுவமையணி. (கக0)

கொடுப்பகொண்டுபெருக்கிக்கொடுத்தலா
லடுத்தவாணிகர்போலுமகன்பணை
யுடுத்தசோலைகளும்பர்கடவுணீர்
மடுப்பதென்னவளர்ந்தெழுந்தோங்குமால்.

(இ-ள்.) அகன் பணை கொடுப்ப கொண்டு பெருக்கி கொடுத்தலால் அடுத்த வாணிகர்போலும் - இடம்பரந்த வயல்கள் தம்மிடத்து வித்திய சிறிது நென்முளைகளைக்கொண்டு ஒன்று பலவாகப் பெருக்கிக்கொடுத்தலினுல் விருத்திசெய்யுந் தொழிலிலடுத்த வணிகரையொத்துத் தோன்றாநிற்கும், உடுத்த சோலைகள் உம்பர் கடவுள் நீர் மடுப்பது என்ன வளர்ந்து எழுந்து ஓங்கும் - அம்மருதநிலத்தைச்சூழ்ந்த சோலைகள் தேவரது தெய்வத்தன்மைவாய்ந்த கங்கையை வாய்மடுப்பதுபோல மேல்வளர்ந்தெழுந்து ஓங்காநிற்கும்.

அடுத்த வாணிகர்போலு மகன் பணையென்றது எடுத்துக்காட்டுவமையணியும், நிலவுலகிலுள்ள சோலைக்கும் சுரகங்கைக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணியுங் கலந்துவருதலால் கலவையணி கொடுப்ப செய்பொருள்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். உம்பர் கடவுணீர் என்னும் பாடத்தைப் பிழையாகக்கருதி உம்பர்க்கடவுணீரெனத்திருத்தினர். "பொதுப்பெயருயர்திணைப்பெயர்களீற்றுமெய்-வலிவரினியல்பாம்" என்னும் நன்னூற்சூத்திரத்தை யுணர்ந்திலர்போலும். (ககக)

கொண்டலுருக்குமாலிநிகர்ப்பக்குளிர்பாளை
விண்டுமுகைக்கும்பைங்கமுகெங்கும்விளையாட்டு
வண்டலர்கொங்கைக்கிடையிளநீர்மற்றவர்காணு
தண்டமிசைக்கொண்டெய்தியளிக்கும்வளர்தெங்கு.

(இ-ள்.) கொண்டல் உருக்கும் ஆலி நிகர்ப்ப குளிர் பாளை விண்டு முகைக்கும் பைங்கமுகு எங்கும் வளர் தெங்கு - மேகங்கள் சிந்து மழைத்துளியையொப்பக் குளிர்ந்த பாளைகள் கிழிபட்டு அரும்பாநின்ற பசிய கமுகினிடந்தோறும் வளராநின்ற தென்னமரம், விளையாட்டு வண்டலர் கொங்கைக்கு இடை இளநீர் அவர் காணுது அண்ட

மிசை கொண்டு எய்தி அளிக்கும் - (அவ்விடத்து) விளையாட்டுத்தொழிலையுடைய பெண்களது தனங்களுக்குத்தோற்ற இளநீரை அப்பெண்கள் காணுமல் அண்டத்தின் மேற்கொண்டுசென்று அதனைப் பாதுகாக்கும்.

மேலே வளர்ந்த தென்னமரங்கள் அங்குக் காய்விட்டிருத்தலைக் கமுகங் கொல்லையில் விளையாடும் பெண்களது தனத்திற்குத் தோற்றமையால் அவர்கள் காணுமல் இளநீரை மேலே கொண்டடைந்து அங்குப் பாதுகாக்கும் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (கக௨)

செற்றெயில்வென்றார்தேர்மிசைமேற்போக்கெனமென்பூத்
துற்றபொதும்பர்த்துறையினினத்தாற்செருவேற்றுப்
பற்றியவாவிநீங்குபுபைந்தேனடைகீறி
யுற்றெழுவாளைபொருதுயிர்விண்டார்கதிகாட்டும்.

(இ-ள்.) எயில் செற்று வென்றார் தேர்மிசை மேல் போக்கு என்னமென் பூதுற்ற பொதும்பர் துறையின் - பகைவர்மதிலை நெருங்கிவென்ற அரசர்கள் தேரின்மேல் விதானித்திருத்தல்போல மெல்லிய பூங்கொத்துகள் நெருங்கிய சோலையினிடங்களில், இனத்தால் செரு ஏற்று பற்றிய வாவி நீங்குபு - தம்மினத்தோடு போர்செய்து தாந்தங்கிய தடாகத்தினின்று நீங்கி, பைந்தேன் அடை கீறி உற்று எழுவாளை பொருது உயிர் விண்டார் கதிகாட்டும் - பசிய தேனடையைக்கிழித்து மேலெழுந்த வாளைமீன்கள் தம்மிற்போர்செய்து உயிர்நீங்கி வீரசுவர்க்கம் புகுவோர் நிலையைக் காட்டாநிற்கும்.

மேற்போக்கு மேற்கட்டி. பகையரசரைவென்று திறைகொண்டு பெயர்ந்த அரசரது தேர் பலநிறம்வாய்ந்த மேற்கட்டிகளைக்கொண்டு அலங்கரிக்கப்பட்டிருத்தல்போலப் பலநிறங்களையுடைய மலர்களைச் சோலையுடைமையால் தேர்மிசைமேற்போக்கு என்ன பூத்துற்ற பொதும்பர் எனவும், போர்க்களத்திற் புறங்கொடாது போர்செய்து உயிர்விட்டோர் வீரசுவர்க்கஞ்செல்லுங்காலையில் சூரியமண்டிலத்தைக்கிழித்துத் தெய்வதேகம்பெற்று வீரசுவர்க்கஞ்சேர்தலால் பொருதுயிர்விண்டார் கதிகாட்டும் எனவுங்கூறினுர். ஆலுருபு "தூங்குகையானோங்குநடைய" என்றாற்போல உடனிகழ்ச்சிப்பொருளில்வந்தது உவமையாய் வருவதனை உபமேயமாக்கிக் கூறுதலால் விபரீதவுவமையணி.

போதுகண்மேயநெடுங்கயமேவுபுனிற்றுக்கார்
மேதியையாயிடைவாளைவெகுண்டுவிசும்பேறி
பாதிவெரிந்புறமுட்குழியக்குதிபாய்ந்தாடி
மீதுயர்திண்கரையேறவுகைக்கும்வியப்பிற்றால்.

(இ-ள்.) போதுகள் மேய நெடும் கயம் மேவு புனிறு கார் மேதியை - மலர்கள் நெருங்கிய பரந்த தடாகத்தில் பொருந்திய இளமைவாய்ந்த கரிய எருமைகளை, ஆயிடை வாளை வெகுண்டு விசும்பு ஏறி வெரிந் புறம் பாதி உள் குழிய குதி பாய்ந்து ஆடி - அவ்விடத்திலுள்ள வாளைமீன்கள் கோபித்து ஆகாயத்திற்றாவி அவற்றின் முதுகின் பாதிப் புறம் நீருள்ளே குழிபடக் கீழே குதித்துக்கலக்கி, மீது உயர் திண்கரை ஏற உகைக்கும் வியப்பிற்று-மேலே யுயர்ந்த திண்ணிய அத்தடாகக்கரையிலேறச்செலுத்தும் அதிசயத்தையுடையது.

எருமை தானிருக்குந் தடாகத்தைக்கலக்கி வீழ்தலால் கோபித்தெழுந்த வாளைமீன் மேலெழுந்து அவ்வெருமையின் பாதிமுதுகு நீருள்ளே அழுந்த அதன்மேற் குதித்துக் கலக்குதலில் அது அஞ்சி கரையேறும் என்பது இதனது கருத்து. இதனுல் தனக்கிடர்செய்ததற்குத்தான் இடையூறுசெய்தது என்னும் கருத்துப்போதரலால் உதாரவணி.

சுவையொளியூறொலிநாற்றமெனைந்தின்றொடர்பற்றிக்
கவர்படுநெஞ்சிற்றிரைதிரைதோறுங்கடைநீர்நாய்
துவளவெழும்பாமுறைமுறைகீழ்நீர்ச்சுழல்காட்சி
யெவருமிறும்பூதுறவுளவேரித்தடமெங்கும்.

(இ-ள்.) சுவை ஒளி ஊறு ஒலி நாற்றம் என் ஐந்தின் தொடர்பற்றி கவர்படு நெஞ்சில் - சுவையொளி பரிசம் ஓசை நாற்றமென்று சொல்லப்பட்ட ஐம்புலன்களின் தொடர்ச்சியைப்பற்றிப் பிளவுபட்ட மனம்போல, திரைதிரை தோறும் கடை நீர்நாய் துவள எழும்பா முறைமுறை நீர் கீழ்வேரி தடம் எங்கும் சுழல் காட்சி-அலைகள் அலைக்குந்தோறு மவற்றினிடத்தகப்பட்ட நீர்நாயானது உடல் துவள மேலெழும்பி முறைமுறையே நீர்க்கீழ்ச்சென்று வாசமமைந்த தடாகமெங்குஞ் சுழலுங் காட்சியானது, எவரும் இறும்பூது உற உள்ள - எவரு மதிசயங்கூரவுள்ளன.

ஐம்பொறியின்வழியே மனஞ்செல்லுதலால் சுவைமுதலிய புலன்களிற் சிக்குண்டு அலையு மனம்போலத் தடாகத்திலுள்ள அலையிலகப்படுதலால் நீர்நாய் மேலெழும்பி நீர்க்கீழ்ச்சுழலும் என உபமான உவமேயதருமங்களை யெடுத்துக்கூறுதலால் எடுத்துக்காட்டுவமையணி. (கக௫)

களைத்துறுதண்பூங்காஞ்சிகள்சாகைக்கரமோச்சி
விளைத்தகரும்பைத்தைவருதோற்றம்விரிதார்வண்
டிளைத்தெழுதிண்டோட்கேள்வரொடூடுமிளையார்மே
னிரைத்தமர்செய்வான்வேள்சிலைபற்றுநிகழ்விற்றால்.

(இ-ள்.) களை துறு தண் பூங்காஞ்சிகள் சாகை கரம் ஓச்சி விளைத்த கரும்பை தைவரு தோற்றம் - களையில் நெருங்கிய தண்ணிய மலர்களையுடைய காஞ்சிமரங்கள் தமது கிளைகளாகிய கைகளை நீட்டி வாசமிக்க கரும்புகளைத் தடவுங்காட்சி, விரி தார் வண்டு இளைத்து எழு திண் தோள் கேள்வரொடு ஊடும் இளையார்மேல் - மலர்விரிந்த மாலைகளில் வண்டுகள் ஒலித்துப் பறந்தெழுந் திண்ணிய தோள்களையுடைய தமது புருடரோடும் பிணங்கிய பெண்கள்மேல், வேள் அமர் செய்வான் நிரைத்து சிலைபற்றும் நிகழ்விற்று-மன்மதன் போர்செய்ய வரிசைப்படுத்தி வில்லையேந்தும் இயல்பினையொக்கும்.

ஆற்றியிருந்த வழிப் பிரிவின்பகுதியதாகிய பரத்தையிற்பிரிந்த வழித், தலைவன் குற்றநோக்கிக் கலகஞ்செய்த லியல்பாதலாலும், அது காமத்திற்குச் சிறந்ததாதலாலும் ஆற்றியிருத்தலின்பினைர் மருதநிலத்திற்குரிய ஊடலாகிய உரிப்பொருள் கூறுவார் கேள்வரோடூடுமிளையார்மேல் என்றார். காஞ்சிமரத்தை மன்மதனாகவும், கரும்பினை அவன் வில்லாகவும் தடவுதலைப்பற்றுதலாகவும் எடுத்துக்கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. (கக௬)

மேதகுசெவ்வணிதாங்கினர்செல்லுமினன்னாருந்
தீதறவெள்ளணிபூண்டுசெல்சேடியராரும்
போதலுமீடலுமாய்ப்பொலிவீதிகளெங்கெங்கும்
காதல்செய்சேரிமடந்தையருள்ளங்கவல்விக்கும்.

(இ-ள்.) மேதகு செவ்வணி தாங்கினர் செல்லும் மின் அன்னாரும் தீது அற வெள் அணி பூண்டு செல் சேடியர் ஆனோரும் - மேன்மைதங்கிய செவ்வணி தாங்கிச்செல்

லு மின்னலையொத்த தோழிப்பெண்களுங் குற்றமற்ற வெள்ளணிபூண்டு செல்லும் பாங்கிமார்களும், எங்கு எங்கும் போதலும் மீள் தலும் ஆய் பொலி வீதிகள்-எவ்விடத்துஞ் செல்லுதலுந் திரும்புதலுமாகி விளங்கும் வீதிகள், காதல்செய் சேரி மடந்தையர் உள்ளம் கவல்விக்கும் - கண்டோர் விரும்பும் சேரியிலுள்ள பரத்தையருடைய மனத்தைக் கவலைப்படுத்தும்.

தலைவன் பரத்தையிற்பிரிந்து புறத்தொழுகுதலைக் கேள்வியுற்றுக் கவலைகூர்தலைப் பாங்கிதெரிந்து அச்சிறுகலகந்தணிக்கும்பொருட்டுத் தலைவி பூப்படைந்தாளென்பதைத் தலைவற்குணர்த்த, தோழி செம்மலரும் செம்பட்டும் செஞ்சாந்துஞ் செவ்வணியுந்தாங்கிப் பரத்தையர் வீதியிற்போகப்போக்குதலா லதனைத் தலைவனுணர்ந்து தலைவி பூப்புற்றனளென்று மனைக்கடனிறுக்கப் பரத்தையினின்று பிரிந்து தன் மனைக்கு வருதலாலும்; புதுவெள்ளம்வரப் பெருங்கலகமாகிய வூடல் விளையப் பரத்தையரோடு நீராடப்பிரிந்ததைத் தலைவியுணர்ந்து கவலைகூர்தலைப் பாங்கியுணர்ந்து அதுதணிக்கத் தலைவி புத்திரனைப்பெற்று நெய்யாடினள் எனத் தலைவன் உணர்ந்து தன் மகன்மேற் காதல்கொண்டு பரத்தையினின்று பிரிந்து தன் மனைக்குவரப் பாங்கி வெண்மலரும் வெண்பட்டும் வெண்சாந்தும் வெள்ளணியுமணிந்து பரத்தையர் வீதியிற்போதலாலும், போதலுமீடலுமாய்ப் பொலிவீதிகளெங்கெங்கும் - காதல்செய்சேரிமடந்தையருள்ளங் கவல்விக்கும் என்றார்.

தலைவி பூத்து நீராடியபின் பன்னிரண்டுநாளும் அவள் கருப்பங்கொள்ளுங்காலமாதலால் அவளினின்று பிரியாதொழுகுதல் மனைக்கடனாதலில் "மனைக்கடனிறுக்கப் பரத்தையினின்று பிரிந்து" என நச்சினார்க்கினியர் கூறினர். "பூத்தகாலைப்புனையிழை மனைவியை-நீராடியபின்னீராறுநாளும் - கருவயிற்றுறூஉங்காலமாதலிற்-பிரியப்பெறூஉ அன்பரத்தையிற்பிரிவோன்" எனவரும் அகத்திணை யியற்சூத்திரத்தால் அறிக.

செவ்வணியணிந்து தோழி செல்லுதற்கு—

" செவ்வந்தபொன்மேனிமணிதிருச்சிற்றம்பலமுடையான்
செவந்தவந்தாளணியூரற்குலகியலாறுரைப்பான்
செவந்தபைம்போதுமஞ்செம்மலர்ப்பட்டுங்கட்டார்முலைமேல்
செவந்தவஞ்சாந்தமுந்தோன்றினவந்து திருமனைக்கே" எனக் கோவைத்திருவாசகத்திலும்,

வெள்ளணியணிந்து பாங்கி செல்லுதற்கு—

" துதையஞ்சுரும்பறைமல்லிகைவேய்ந்துநுண்டேசுபுனைந்
திதையங்களிவரநித்திலப்பூண்டெதிர்தாருடலம்
புதையம்பனையவிழிமடமாதர்பொற்பூண்புதல்வன்
உதையம்புகலவகலமுன்றேடினரூரனுக்கே" என அம்பிகாபதிகோவையிலும் வருதல் காண்க.

இடத்திற்கும் இடத்தினிகழ்பொருளுக்கும் ஒற்றுமையுடைமையால் இடத்தினிகழ்பொருளின்றொழிலை இடத்தின்மேலேற்றி வீதிகள் சேரிமடந்தையருள்ளங் கவல்விக்கும் என்றார். முன்னர் ஊடலாகிய உரிப்பொருளை யுணர்த்திப் பின்னர் ஊடலினிமித்தங்களைக்கூறினர். (கசஎ)

தசும்புறழ்கொங்கையொடெம்பெருமான்மகிழ்தண்பாசூர்
விசும்பையுரிஞ்சுமதிற்றிருவல்லம்விரைச்செந்தே
னசும்புதடம்பொழிலேனையவைப்புமனந்தஞ்சூழ்
பசும்பணைமாமருதத்தெழில்யார்பகர்கிற்பாரே.

(இ-ள்.) தசும்பு உறழ் கொங்கையொடு எம்பெருமான் மகிழ் தண் பாரூர் வி சும்பை உரிஞ்சு மதில் திருவல்லம் - குடத்தையொத்த கொங்கையையுடைய உமை யம்மையோடு எமது பெருமான் மகிழ்ந்தமரும் தண்ணிய பாரூரும் ஆகாயத்தைத்தடவு மதில் சூழுந் திருவல்லமும், விரை செம் தேன் அசும்பு தட பொழில் ஏனைய வைப்பும் அனந்தம் சூழ் - வாசமமைந்த செந்தேன் துளிக்கும் பரந்த சோலைசூழ்ந்த மற்றைய த லங்களும் அளவில்லாது சூழ்ந்த, பசும் பணை மா மருதத்து எழில் யார் பகர்கிற்பார் - பசிய வயல்சூழ்ந்த பெரிய மருதநிலத்தின் பொலிவை யெடுத்துச்சொல்லும் வன்மை யையுடையார் எவர்.

வளங்குன்றாதென்பதுதோன்றப் பசும்பணையெனவும், மிக்க பொலிவுடைய து என்பதுதோன்ற எழில்யார் பகர்கிற்பார் எனவுங்கூறுதலால் உதாரவணி. (ககஅ)

நெய்தல்.

இது ஒருபோகுகொச்சகம்.

அம்மருதவைப்பிணையடுத்தகழிநெய்தன்
மம்மர்விடவாலமரனுக்குதவுமாற்றா
னம்மினமெனப்பொய்ம்மொழிநாடியுரைகைதை
சும்மையவளக்கரொடுசூழ்ந்துறவுகொள்ளும்

(இ-ள்.) அ மருதவைப்பிணை அடுத்த கழி நெய்தல் மம்மர் விட ஆலம் அர னுக்கு உதவும் ஆறு ஆல் - அந்த மருதநிலத்தையடுத்த கழிசூழ்ந்த நெய்தல்நிலமானது மயக்கஞ்செய்யும் விஷத்தைச் சிவபிரானுக்குத்தந்த தன்மையால், பொய்மொழி நா டி உரை கைதை நம் இனம் என்ன - பொய்யுரையை யாராய்ந்துகூறிய தாழைகள் நமது இனமென்று, சும்மை அ அளக்கர் ஒடு சூழ்ந்து உறவுகொள்ளும் - ஆரவாரத்தை யுடைய அக்கடலோடு அதனைச்சூழ்ந்து உறவுபூண்டு நிற்கும்.

பரத்தையிற்பிரிந்துவந்த தலைவன் பொருள்மேற்பிரிந்த வழிக் காமமிக்க தலைவி யிரங்குதற்கு உரிய நிலம் நெய்தனிலமாதலால் அம்மருதவைப்பிணை யடுத்த கழிநெய்தல் எனவும், கடலும் கடல்சார்ந்த இடமு முதற்பொருளாதலால் அவ்வொற்றுமைகருதிக் கடலுதவியதை நெய்தலுதவியதெனவும், நெய்தலை அளக்கர் எனவும், சிவபெருமான் திருமுடியைத்தேடச்சென்ற பிரமன் கண்டனனென்னப் பொய்ச்சாட்சி கூறினமையால் பொய்மொழிநாடியுரை கைதையெனவுங்கூறினார். நெய்தனிலத்தில் தாழைகளிருத் தலை அது சிவபெருமானுக்குத் தீங்குசெய்ய விஷமூட்டியதால் அப்பெருமானிடத்துப் பொய்கூறிய நமக்கு அது உறவாம் என்றிருந்தது எனக் கவி அத்தியவசயித்தலால் தற் குறிப்பணி. பொய்யுங்கொலையும் ஒரு நிகரனவாகிய தொழில்களாதலால் இவ்வாறுகூ றினார். அகரச்சுட்டு இரண்டனுள் முன்னது அண்மைப்பொருள் மேலும் பின்னது சே ய்மைப்பொருள் மேலு நின்றன. (ககக)

கண்டன்மடலேறவலர்தூற்றுகமழ்புன்னை
உண்டுநறைகாலுமளியொத்துடனிசைக்கும்
வண்டுளரரும்புவிரிநெய்தன்மணமிசையுங்
குண்டுகழிமேய்பறவைநோக்கிமகிழ்கூரும்.

(இ-ள்.) கண்டல் மடல் ஏற அலர் தூற்று கமழ் புன்னை காலும் நறை உண்டு அளி ஒத்து உடன் இசைக்கும் - தாழையானது மடல்விட (மடன்மாவேற) மலர்தூற் றும் (பழிதூற்றும்) நறுமணங்கமழும் புன்னைமரங்கள் சிந்துந் தேனையுண்டு வண்டுகள்

அவ்வலருக்கொத்துத் தாழும் கூடக்கூறுநிற்கும், வண்டு உளர் அரும்பு விரி நெய்தல் மணம் இசையும் - வண்டுகள் பறந்துதிரியு மரும்புகள் விரிந்த நெய்தல்மலர்கள் மணத்தை வீசும் (அது கலத்தலுக்குஇசையும்) குண்டு கழிமேய் பறவைநோக்கி மகிழ்கூரும்- ஆழ்ந்த கழிகளில் மேயும் பறவைகள் அதனை நோக்கி மகிழ்கூராநிற்கும்.

தாழை மடல்விடுதலைப் பாங்கியிடத்து இரந்து குறைபெறுது வருந்திய தலைவன் மடலேறலே பொருளாகக்கருதித் தன்ஞல் விரும்பப்பட்ட தலைவிபெயரையுந் தன்பெயரையும் எழுதிய படமேந்தி பனைமடலாற்புனைந்த குதிரையை யூர்ந்து அந்நாட்டரசனு லம்மாதைப்பெறுவது களவுப்புணர்ச்சியுள் பெருந்திணைக்குரித்தாதலால் தாழையும் தான் விரும்பிய மாதைப்புணர மடலேறியதெனவும், புன்னை அலர்தூற்றுவதைச் சிலேடையால் களவு வெளிப்படுதலில் பழிதூற்றவெனவும், அம்மரத்தில் வண்டுகளொலிப்பதை அதனோடு தாழுமொத்துக்கூறுவதெனவும், நெய்தல் மலர்ந்து மணம்வீசுவதை மடல்விலக்கிய பாங்கி தலைவன் தலைவியோடு மணத்தலுக்கிசைந்ததாகச் சிலேடையாக மணமிசையும் எனவும், கழிகளில் பறவைகள் மேய்ந்து களிகூர்தலை அதனைக்கண்டு களிகூர்ந்ததாகவும் கவி அத்தியவசயித்துக்கூறுதலில் தற்குறிப்பணி.

மடன்மாவேறுதலை—

“ காய்சினவேலன்னமின்னியல்கண்ணின்வலைகலந்து
வீசினபோதுள்ளமீனிழந்தார்வியன்தென்புலியூர்
ஈசனசாந்துமெருக்குமணிந்தோர்கிழிபிடித்துப்
பாய்சினமாவெனவேறுவர்சீறூர்ப்பனைமடலே” எனக் கோவைத்திருவாசகத்தாலறிக. (கஉ0)

கண்டுமொழியாரவயவத்தெழில்கவர்ந்து
தெண்டிரையளக்கரினொளித்ததுதெளிந்து
கொண்டதுறையோர்கடல்குளிப்பர்துகிர்சங்கம்
வண்டரளம்வாரிமடவாரெதிர்குவிப்பார்.

(இ-ள்.) கண்டு மொழியார் அவயவத்து எழில் கவர்ந்து துகிர் சங்கம் வண் தரளம் தெண் திரை அளக்கரின் ஒளித்தது - கற்கண்டையொத்த சொற்களையுடைய பெண்களினது அவயவத்தினழகைக்கவர்ந்து பவளமுஞ் சங்கமும் முற்றிய முத்துக்களும் தெள்ளிய அலைகளையுடைய கடலில் ஒளித்தலை, கொண்ட துறையோர் தெளிந்து கடல் குளிப்பர் வாரி மடவார் எதிர் குவிப்பார் - வளமைவாய்ந்த அந்நிலத்துப்பரதவர் தெளிந்து கடலிற்குளித்துத் தமது பெண்களுக்கெதிரே குவிப்பார்கள்.

நெய்தனிலமாக்கள் கடலிற்றோன்றிய பவளத்தையுஞ் சங்குகளையும் முத்துகளையும் அக்கடலிற்குளித்துத் தமது மனைவிமாரெதிரேகுவித்தலை, அவர்கள் அதரத்திற்கும் கழுத்திற்கும் பல்லுக்கும் தோற்று அவற்றினழகைக்கவர்ந்து கடலிலொளித்த கள்ளத்தையுணர்ந்து உள்ளே யொளித்ததைத்தேடி யவர்களுக்கெதிரே வெளிப்படுத்தினரென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், உவமைப்பொருளுக்குக் குறைவுதோன்றக்கூறுதலால் எதிர்நிலையணியுங் கலந்துநிற்றலில் கலவையணி. (கஉக)

எம்முடையுறுப்பெழிலைவவ்வினிர்களென்றுங்
கொம்மைமுலைவம்பணிபரத்தியர்வெகுண்டு
விம்முவலைசேல்பவளம்வெண்டரளமற்று
மம்மபிறர்கொள்ளவிலையாற்றிமகிழ்கூர்வார்.

(இ-ள்.) எம்முடைய உறுப்பு எழிலை வவ்வினிர்கள் என்று கொம்மை முலை வம்பு அணி பரத்தியர் வெகுண்டு - எம்முடைய அவயவத்தினழகைக் கொள்ளைகொண்டீரென்று திரண்டமுலையிற் கச்சணிந்த அந்நிலப்பெண்கள் கோபித்து, விம்முவளை சேல் பவளம் வெண் தரளம் மற்றும் பிறர் கொள்ள விலையாற்றி மகிழ்கூர்வார - ஒலிக்கும் வளையையும் சேற்கெண்டையையும் பவளத்தையும் வெள்ளிய முத்தையும் மற்றுள்ளனவற்றையும் பிறர் கைக்கொள்ள விலைசெய்து மகிழ்வார்கள்.

தங்கள் கணவர்கள் கொடுத்த பவளமுதலியவற்றை விலைப்படுத்தி மகிழ்தலை, எங்களவயத்தினழகைக் கொள்ளைகொண்டீர் அதனால் எங்களுக்கு உதவமாட்டீர் என்று விலக்கினராக அத்தியவசயித்தலாலும், உபமானப்பொருள்களுக்குக் குறைவுதோன்றக் கூறுதலாலும் அவ்வணி. அம்மவியப்புப்பொருளில்வந்த இடைச்சொல். (கஉஉ)

கண்ணெழில்கவர்ந்தகடன்மீன்களையுணக்கு
முண்ணமிழ்தமன்னமடவார்பறவையோப்பும்
பண்ணிசைமடுப்பவிழைபவ்வமுமருக்கன்
விண்ணெழுபகற்பொழுதின்மெல்லெனவொலிக்கும்.

(இ-ள்.) கண் எழில் கவர்ந்த கடல் மீன்களை உணக்கும் உண் அமிழ்தம் அன்னமடவார் - தமது கண்களின் அழகைக் கொள்ளைகொண்ட கடலிலுள்ள மீன்களை யுலர்த்தும் பருகும் அமுதினையொத்த பெண்கள், பறவை ஒப்பும் பண் இசை விழை பவ்வமும் மடுப்ப - பறவைகளையோட்டும் பண்ணினிசையை விரும்பிய கடலுங் கேட்க, அருக்கன் விண் எழு பகல் பொழுதின் மெல்லென ஒலிக்கும்-சூரியன் ஆகாயத்திலெழுந்த பகற்காலத்தில் மெல்லென்றொலிக்காநிற்கும்.

கடல் பகற்பொழுது மெல்லென வொலித்தல் அந்நிலப்பெண்கள் பாடும் பண்ணினைக்கேட்பதற்கு எனக் கேட்போர் வியப்பக் கவி அப்பண்ணினை விசேடித்துக்கூறுதலால் அதிசயவணி. (கஉ௩)

தணந்தவர்களாருயிர்வருத்தவிறல்சாற்றி
மணந்தழுவுதும்பைமலர்சூடியடன்மார
னணங்கமர்செய்காலமெனவோர்ந்துமுரசாழி
யிணங்குறவிராப்பொழுதின்மிக்கொலியெழுப்பும்.

(இ-ள்.) தணந்தவர்கள் ஆர் உயிர் வருத்த அடல் மாரன் விறல் சாற்றி மணம் தழுவு தும்பை மலர் சூடி - பிரிந்தவர்களது அரிய உயிரை வருத்த வெற்றியையுடைய மன்மதன் நெடுமொழிகூறி வாசமிக்க தும்பைமாலையைச்சூடி, அணங்கு அமர் செய் காலம் என்ன ஓர்ந்து - வருத்தும் போர்செய்யுங் காலமிதுவென்றுணர்ந்து, முரசு ஆழி இணங்குற இராப்பொழுதின் மிக்க ஒலி எழுப்பும் - அம்மன்மதன் முரசமாகிய கடல்பொருந்த இராக்காலத்தில் மிக்க ஆரவாரத்தை யெழுப்பாநிற்கும்.

மிக்க என்னும் பெயரெச்சத்தினீறுதொக்கது. கடல் இராப்பொழுதில் மிகவும் ஒலித்தலை இப்பொழுது மன்மதன் பிரிந்தோர்மேல் போர்செய்யுங்காலமென்றுணர்ந்து அவன் முரசாகிய கடல் மிக்கொலிக்கும் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. ()

வீழ்ந்தவர்தணத்தலின்விழிப்புனலுகுத்துத்
தாழ்ந்தழுதிரங்குமடமாதர்தமைநோக்கி
யாழ்ந்தகழிமாதுமுடனின்றழுவதென்னச்
சூழ்ந்துபுளரற்றமலர்தேத்துளிதுளிக்கும்.

(இ-ள்.) வீழ்ந்தவர் தணத்தலின் - தம்மால் விரும்பப்பட்ட புருடர் பிரிதலால், விழி புனல் உகுத்து தாழ்ந்து அழுது இரங்கும் மடமாதர் தமைநோக்கி - கண்களின் நீரைச் சிந்தித் துன்பத்திலழுந்தி அழுது இரங்காநின்ற மடமைக்குணத்தையுடைய பெண்களை நோக்கி, ஆழ்ந்த கழி மாதும் உடன் நின்று அழுவது என்ன - ஆழமுடைய கழியென்னும் பெண்ணுஞ் சேரநின்றழுதல்போல, புள் சூழ்ந்து அரற்றமலர் தே துளி துளிக்கும் - பறவைகள் சூழ்ந்து ஒலிக்க மலர்கள் தேன்றுளியைச்சிந்தும்.

பொருள்மேற் பிரிவு நீட்டித்தவழிக் காமமிக்கூர்தலால் தலைவி வருந்தி மரக்கலத்தின்மேற்சென்ற தலைவன் வரும் வழியைநோக்கி இரங்குதல் நெய்தலுக்கு உரிப்பொருளாதலால் அழுதிரங்குமடமாதர் என்றார். அடியில்வருஞ் செய்யுளும் அது. கழியில் மாலைப்பொழுதிற் பறவைகளொலிக்க மலர்கள் தேன்சிந்துதலைக் கழி-இரங்கும் பெண்களைநோக்கித் தானும் இரங்கியழுது கண்ணீர்சிந்தியதென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (கஉ௫)

நலம்பயில்பொருட்குமலிவங்கமிசைநண்ணும்
புலமபர்வருகின்றவழிநோக்கினர்புலம்பி
யிலம்படுமடந்தையர்களின்னுயிர்தளிர்ப்ப
வலம்புகுளிர்பூந்திவலைவீசுமலைவாரி.

(இ-ள்.) நலம் பயில் பொருட்கு மலி வங்கமிசை நண்ணும் புலம்பர் வருகின்றவழி நோக்கினர் புலம்பி இலம்படு மடந்தையர்கள் - நன்மைமிக்க பொருள்தேடுதற் பொருட்டுத் தொழின்முற்றிய கப்பலின்மேற்செல்லும் நெய்தனிலத்தலைவர் வருகின்ற வழியைநோக்கி வருந்தித் துன்பங்கூரும் பெண்கள், அலை வாரி இன் உயிர் தளிர்ப்ப அலம்பு குளிர் பூந்திவலை வீசும் - அலைகளையுடைய கடல் இனிய உயிர்-வாட்டம் ஒழியும்படி ஒலிக்குங் குளிர்ச்சிவாய்ந்த நீர்த்துளிகளை வீசாநிற்கும்.

நோக்கினர் முற்றெச்சம். இலம்படு, இல்லாமையுண்டாதல் என்னும் பொருள்மேல் நிற்றலால் ஒருசொல் நீர்மைய. (கஉகூ)

புன்புறமதத்தரும்வியந்துபுகழ்செய்ய
வென்பையொருபெண்ணெனவியற்றுநகரொற்றி
நன்பதிமுதற்பலவுடுத்தநளிநெய்த
றன்பெருமையாவரளவிட்டறிதரத்தோர்.

(இ-ள்.) புன் புற மதத்தரும் வியந்து புகழ்செய்ய - புல்லிய புறச்சமயத்தவரும் வியப்புற்றுப் புகழ்ந்துபேச, என்பு ஐ ஒரு பெண் என இயற்று நகர் ஒற்றி நன்பதி முதல் பல உடுத்த நளி நெய்தல் தன்பெருமை-எலும்பை யொருபெண்ணாகச்செய்த திருமயிலையுந் திருவொற்றியூரென்னும் நல்ல திருப்பதியுமுதலாகிய பலதலங்கள் புறத்திற் சூழ்ந்த பெருமைவாய்ந்த நெய்தல்நிலத்தின் பெருமையை, அளவிட்டு அறிதரத்தோர் யாவர் - வரையறுத்தறியுந் தகுதியையுடையோர் யாவர். (ஒருவருமில்லையென்றபடி.)

யாவர் என்னுங் குறிப்பு வினைமுற்றின் முதல்நின்றயா என்னும் வினாவிடைச்சொல் இன்மைப்பொருள்மேல் நின்றது. சிற்றறிவை விளக்கு மதத்தர் என்பார் புன்புறமதத்தரும் எனவும், எலும்பு பெண்ணாய்ச் சமைந்தகாலத்தொட்டிங்கூடிய பருவமுள்ள உருவாயெழச்செய்தலால் வியந்து புகழ்செய்யவெனவுங்கூறினர்.

தொண்டைநாட்டில் திருமயிலையில் வாழுஞ் சிவநேசச்செட்டியார்க்குக் கபாலீசர் திருவருளால் ஒருபுத்திரி பிறந்து வளருங் கன்னிப்பருவத்தில் ஓர்நாள் அப்பெண்

தோழியரோடுஞ்சென்று பூஞ்சோலையில் மலர்கொய்யும்போது பாம்பு தீண்டி யிறந்த னர்; அதுகண்ட செட்டியார் கவலைகூர்ந்து தகனஞ்செய்வித்து இந்தக் கன்னிகையை என் திரவியத்தோடு ஆளுடையபிள்ளையார்க்கு ஒப்புவிக்க நியமனஞ்செய்திருந்தமையா ல், அவரே யிக்கன்னிகையின் செய்கடன் கழித்தற்குரியவர் என்று தகனஞ்செய்த சா ம்பலை அஸ்தியோடு குடத்தில் நிரப்பி அக்கன்னிகாமாடத்தில் முன்போலத் தோழிமா ர்கள் உபசாரஞ்செய்து கொண்டுவரச்செய்தனர்; இவ்வாறு நிகழுங்காலத்து ஆளுடை யபிள்ளையார் திருவொற்றியூரிலெழுந்தருளியிருத்தலைக் கேள்வியுற்றுச்சென்று வணங்கி த் திருமயிலைக்கு எழுந்தருளும் பிள்ளையாரோடு தாமும் வந்தனர். பிள்ளையார் கபாலீ ஸ்வரரைத் தரிசித்துத் திருப்பதிகமோதிச் செட்டியாரைநோக்கி யவ்வங்கத்தை வரு வித்துச்சென்ற பருவத்தோடு உயிருங்கொடுத்தருளினர் என்பது ஆளுடையபிள்ளையார்

சென்ற பருவத்தோடு என்பதற்கு—

"ஆனதன்மையினத்திருப்பாட்டினிடைவே
போனவாயுவும்வடிவமும்பொலிவொடுநிரம்பி
ஏனையக்குடத்தடங்கிமுன்னிருந்தெழுவதன்முன்
ஞானபோனகர்பின்சமண்பாட்டினைநவில்வார்" என அப்புராணத்தில்

வருதல் காண்க. (கஉஎ)

திணைமயக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தொண்டைநன்னாட்டுநானிலத்தைந்திணைவளமுந்தெரித்துக்கா ட்ட, மருத்தொண்டைவாய்ச்சியர்சூழ்குன்றைநகர்க்குலக்கவியேவல்லான ல்லாற், கருத்தொண்டரெம்போல்வாரெவ்வாறுதெரிந்துரைப்பார்கலந்தார் க்கின்ப, மருத்தொண்டரணியிலவையொன்றோடொன்றியைந்தனவு மாங் காங்குண்டால்.

(இ-ள்.) திரு தொண்டை நல் நாட்டு நானிலத்து ஐந்திணை வளமும் தெரித்து காட்ட - அழகிய நல்ல தொண்டைநாட்டிலுள்ள மருதமுதலிய நான்கு நிலங்களுள் அடங்கிய ஐந்துநிலங்களின் வளங்களையும் விளக்கியுணர்த்த, மருதொண்டை வாய்ச்சி யர் சூழ் குன்றை நகர் குலக்கவியே வல்லான் அல்லால்-வாசமிக்க கோவைக்கனிபோ லும் வாயையுடைய பெண்கள் சூழ்ந்த குன்றைநகரில் எழுந்தருளிய சேக்கிழார்நாய னாரே வல்லவரல்லாமல், கரு தொண்டர் எம்போல்வார் எவ்வாறு தெரிந்து உரைப் பார் - பிறப்பால் அடிமைகொள்ளப்பட்டவராகிய எம்மையொப்பவர்கள் எவ்வகை யாகத் தெரிந்துகூறும் வன்மையையுடையார், கலந்தார்க்கு இன்பம் அருத்து ஒண் த ரணியில் அவை ஒன்றோடு ஒன்று இயைந்தனவும் ஆங்கு ஆங்கு உண்டு - தன்னிடத்து க்கலந்துவாழ்வோர்க்கு இன்பத்தை யூட்டு மொள்ளிய நிலவுலகில் அந்நிலங்கள் ஒன் றோடொன்று தம்முட்கலந்து தலைமயங்குதலும் அவ்விடங்களில் உளவாம்.

நானிலத்தைந்திணை என்றதை முன்னர்க்காண்க. நூல் கற்றற்குப் பயன் இறை வன் திருவருள் பெறுதலாதலால் கற்றோருட்டிருவருள்பெற்ற வரிவரொன்பதுதோன் றக் குலக்கவியெனவும், திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணத்தில் மெய்ம்மைகூறுந் திருவாக்கால் தொண்டைநாட்டின் பொலிவைப் பெரும்பாலும் பலசெய்யுளாற்புனை ந்துகூறியது மெய்ம்மையேயாதலால் இல்லதைப்புனைந்துகூறு மெம்போலியர் திறத்தி லந்நாட்டின் பொலிவுபுனைந்து கூறுவதற்கு வரையறைப்படாதென்பதுதோன்றக் கரு

த்தொண்டரொம்போல்வா ரெவ்வாறு தெரிந்துரைப்பாரெனவுங்கூறினர். ஐந்திணைப் பொருள்களும் ஒருசேரவிருப்பது நாட்டிற்குப் பெருவளமாதலால் ஒருநிலக்கருப்பொருளோடு மற்றொரு நிலக்கருப்பொருள்வந்து மயங்குதலைத் திணைமயக்கம் எனக் காவியங்களுட்கூறுவது சான்றோராட்சி. திணைக்கருப்பொருள் மயங்கல் "முத்திறப்பொருளுந்தத்தந்திணையொடு - மரபின்வாராதுமயங்கலுமுரித்தே" என அகப்பொருள் விளக்கத்திலும், தொல்காப்பியம் பொருள் அதிகாரத்தில் "திணைமயக்குறுதலுங்கடிநிலையிலவே" எனவருதலும் அறிக. முத்திறப்பொருளாவன முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள். "பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புக்லென்று" என்னுஞ் செய்யுள் அவையடக்கம் அன்றெனத்திருத்த மறந்ததுபோல, இது திணைமயக்கம் எனப் பிழைதிருத்தத்திற் காட்டமறந்தனர், அது தமக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதியின்மையால். (கஉஅ)

வரைப்பிண்டிமலர்தூவிவனப்பலாசெதிர்சொரிந்தமலருண்மூழ்கி
நினைக்கும்பூங்கணைதூவிமதனெம்மான்விழிநெருப்புணிற்றல்காட்டும்
வரைந்துன்றுகறிக்கொடிபோய்க்கடுக்கைமிசைமரகதத்தோரணம்போற்று
நிரைக்கிள்ளைவாரணமுமெதிர்நடப்பப்பொருநர்நெடுங்கயிறுகாட்டும. [வி

(இ-ள்.) வரை பிண்டி மலர் தூவி வனம் பலாசு எதிர் சொரிந்த மலர் உள் மூழ்கி-குறிஞ்சிநிலத்திலுள்ள அசோகுமலரைச் சிந்தி முல்லைநிலத்திலுள்ள முண்முருக்குகள் தம்மெதிரே சொரிந்த மலருள் முழுகுதலால், மதன் நினைக்கும் பூங்கணை தூவி எம்மான் விழி நெருப்பு உள் நிற்றல் காட்டும் - மன்மதனானவன் தன் வில்லில் வரிசைப்படுத்திய புஷ்பபாணங்களைச்சிந்தி யெமது பெருமானாகிய சிவபெருமான் நெற்றிக்கண்ணுமிழ்ந்த நெருப்பில் நிற்றலை அவ்வசோகு உணர்த்தும், வரை துன்று கறி கொடிபோய் கடுக்கை மிசை மரகதம் தோரணம்போல் தாவி-அக்குறிஞ்சிநிலத்தில் நெருங்கிய மிளகுக்கொடிசென்று கொன்றைமரத்தின்மேல் மரகதத்தோரணம்போலப் படர்தலால், நிரை கிள்ளை வாரணமும் எதிர் நடப்ப-வரிசையாகக் கிளியும் காட்டுக்கோழியும் தம்முளெதிர்ந்து நடக்க, பொருநர் நெடும் கயிறு காட்டும்-கழைக்கூத்தர்கள் ஒருவருக்கொருவர் தம்மெதிரே நடந்துசெல்லும் நெடிய கயிற்றினிலைமையை அக்கொடி காட்டாநிற்கும்.

அசோகும்மிளகுக்கொடியும் கிளியும் குறிஞ்சிநிலக்கருப்பொருள்கள். முள்முருக்கும் கொன்றையும் காட்டுக்கோழியும் முல்லைநிலக்கருப்பொருள்கள். இதனுதல் அசோகை மன்மதனாகவும் முண்முருக்கைச் சிவபெருமானாகவுங்கூறிக் குறிஞ்சியோடு முல்லைக்கும், கறிக்கொடியைக் கழையிற்பூட்டிய கயிறாகவும், கிளியையும் காட்டுக் கோழியையும் பொருநராகவுங்கூறி அக்குறிஞ்சியோடு முல்லைக்கு மயக்கங் கூறப்ப (கஉகூ)

சுற்றெல்லாமலர்முல்லைதழைந்துபெருந்தூறுசெயவதன்கீழெண்கு
பற்றிநுழைந்துறங்கநடுவளர்கொன்றைமிசைக்கறிதாய்ப்படருந்தோற்ற
மூற்றரக்கன்வெள்ளிமலையெடுத்தநாள்வெரீஇத்தழுவுமுமையாளோடுங்
கற்றைவார்சடைப்பெருமானின்றநிலைகாட்டுவதுமுண்டாலங்கண்.

(இ-ள்.) சுற்று எல்லாம் அலர் முல்லை தழைந்து பெரும் தூறுசெய்ய - சுற்றுப்புறங்களிலெல்லாம் அலர்ந்த முல்லைக்கொடிகள் நெருங்கிப் பெரிய தூறுசெய்யவும், அதன்கீழ் எண்கு பற்றி நுழைந்து உறங்க நடுவளர் கொன்றை மிசை கறிதாய் படரும்

தோற்றம் - அத்தூற்றின் கீழிடத்தைக் கரடிகள் தமக்கோர் பற்றுக்கோடாகப்பற்றி நுழைந்து கண்டுயில் செய்ய அதன் நடுவில் வளர்ந்த கொன்றையின்மேல் மிளகுக்கொடி தாவிப்படருங் காட்சியானது, அரக்கன் உற்று வெள்ளிமலை எடுத்த நாள் - இராவணன் புகுந்து வெள்ளி மலையை யெடுத்தநாளில், வெருவி தழுவும் உமையாளோடும் வார் சடை கற்றை பெருமான் நின்ற நிலை அங்கண் காட்டுவதும் உண்டு - அஞ்சித்தழுவிய உமையம்மையோடும் நீண்ட சடாபாரத்தையுடைய சிவபெருமானின்ற நிலைமையை யவ்விடத்துக்காட்டுவதும் உளது.

முல்லைக்கொடியுங் கொன்றையு முல்லைநிலக்கருப்பொருள்கள். கரடியும் மிளகுக்கொடியும் குறிஞ்சிநிலக்கருப்பொருள்கள். இதனால் மலர்ந்தமுல்லைச்செடியை வெள்ளிமலையாகவும் கரடியை இராவணனாகவும் கொன்றையைச் சிவபெருமானாகவும் மிளகுக்கொடியை உமையம்மையாகவுங்கூறி முல்லை குறிஞ்சிக்கு மயக்கங் கூறப்பட்டன. (ககூ0)

தாம்பயிலும்வரைக்கிளைத்தசெயலைமலர்கவர்மாரன்றன்மேற்சீறி,யாம்
பலினங்கழனியிற்போயவன்சேமச்சிலைக்கரும்பையழித்துண்டார்க்கும்,பூம்
படுகர்ப்பகட்டினங்கள்வெகுண்டெழுந்துமலைச்சாரற்புனிற்றுவாழை,தேம்
பயில்செந்தினையனைத்துமழித்துழக்கி மேய்ந்துவக்குஞ்செவ்வித்தோர்பால்.

(இ-ள்.) ஆம்பலினம் தாம் பயிலும் வரை கிளைத்த செயலை மலர் கவர் மாரன் தன்மேல் சீறி - யானையின் கூட்டங்கள் தாங்கள் சஞ்சரிக்கு மலையிற்றோன்றிய அசோக மலரைத் தனக்குப் பாணமாகக் கொள்ளைகொள்ளு மன்மதன்மேற் கோபித்து, கழனியில் போய் அவன் சேமம் சிலை கரும்பை அழித்து உண்டு ஆர்க்கும் - மருதநிலத்திற் சென்று அம்மன்மத னேந்திய சேமவில்லாகிய கரும்பினையழித்து நுகர்ந்து முழங்கும், ஓர்பால் பூம் படுகர் பகடு இனங்கள் வெகுண்டு எழுந்து-ஒருபக்கத்தில் பூக்களையுடைய அம்மருதநிலங்களிலுள்ள எருமைகளின் கூட்டங்கள் கோபித்தெழுந்து, மலை சாரல் புனிறு வாழை தேம்பயில் செந்தினை அனைத்தும் அழித்து உழக்கி மேய்ந்து உவக்கும் செவ்வித்து-மலைச்சாரலிலுள்ள இளமைவாய்ந்த வாழையையும் இனிமையமைந்த செவந்த தினைப்பயிர் முழுமையையும் அழிந்துக் கலக்கிமேய்ந்து மகிழும் தன்மையையுடையது.

இதனால் அசோகு, யானை, வாழை, தினை குறிஞ்சிக் கருப்பொருள்கள். கரும்பு, எருமை மருதக்கருப்பொருள்கள். இதனால் குறிஞ்சியோடு மருதத்திற்கும், மருதத்தோடு குறிஞ்சிக்கு மயக்கங் கூறப்பட்டன. தமக்குக் கெடுதிசெய்த ஒரு பொருள்தோன்று தற்குரிய நிலத்தில் கேடுற்ற வேற்று நிலக்கருப்பொருள்கள் சென்று அதற்குப் பிரதிக் கேடு விளைத்ததெனக் கூறுதலால் தகுதியணி. (ககூக)

வரைக்குறக்கன்னியர்புனத்துக்குருகோட்டுங் கவண்மணிக்கன்மருத
த்தெண்ணீர்த், திரைக்கயத்துத் திடர்செய்யவந்நிலத்துச்சிறுமகார்சினமீக்
கொண்டு, விரைத்தகுழற்பேதையர்கள்வண்டலாட்டயர்துறையின்மேவிப்ப
ந்து,நிரைக்கழங்குமவரலறப்பறித்தெறிந்துநீர்ச்சுனையைத்தூர்ப்பாரங்கண்.

(இ-ள்.) வரை குற கன்னியர் புனத்து குருகு ஓட்டும் கவண் மணிகல் மருதம் தெள் நீர் திரை கயத்து திடர் செய்ய-குறிஞ்சி நிலத்திலுள்ள குறப்பெண்கள் தினைப்புனத்தில் தினைக்கதிர்கவரவரும் பறவைகளை யோட்டுங் கவணில்வைத்தெறிந்த இரத்தினங்களாகிய கற்கள் மருதநிலத்திலுள்ள தெள்ளிய நீர் திரைத்தலையுடைய தடாகத்தைத்திடர்செய்ய, அ நிலத்து சிறு மகார் சினம் மீகொண்டு - அம்மருத நிலத்திலுள்ள

அச்சிறுவர்கள் கோபமீக்கூர்ந்து, விரைத்த குழல் பேதையர்கள் வண்டல் ஆட்டு அயர் துறையின் மேவி - வாசமமைந்த கூந்தலையுடைய குறிஞ்சிநிலச் சிறுமியர்கள் விளையாடும் துறைகளையடைந்து, பந்தும் நிரை கழங்கும் அவர் அலற பறித்து எறிந்து நீர் சுனையை அங்கண் தூர்ப்பார் - பந்தையும் வரிசைப்பட்ட அம்மனையையும் அச்சிறுமியர் அலறப்பறித்து வீசி நீர்மயமாகிய சுனையை யவ்விடத்துத் தூர்ப்பார்கள்.

சுனை குறிஞ்சிக்கருப்பொருள், கயம் மருதக்கருப்பொருள். இதனாற் குறிஞ்சியோடு மருதத்திற்கும், மருதத்தோடு குறிஞ்சிக்கு மயக்கங்கூறப்பட்டன. இதுவும் அவ்வணி. உருபுதொகாத இடத்து எப்பொருள் தருமோ அப்பொருளையே உருபுதொக்கவிடத்துந்தந்து நிற்பது இரண்டனுருபு என்று உணராது, உருபுதொக்குவந்த கயத்து என்பது பிழையெனக்கருதிக் கயத்தையெனத்திருத்தினர். புலவர்பெருமானாகிய இந்நூலாசிரியர் இலக்கணக்கடற்கோர்வரம்பமைத்த பேராசிரியரென அறிந்திலர்போலும். (கஙஉ)

தாமுமொருபயப்படார்பயப்படுவார்தம்மையுந்தம்போற்செய்வார்போற்
காமரளிநுகராமற்கழிப்பூமேலடுக்கலுறுங்கணிதேனூற்று
மாமிதனையறிந்துவெகுண்டெழுந்தென்னவணிவேங்கைக்குடுமிதன்னை
நாமநீள்கடல்பவளக்கரநீட்டிப்பற்றியிடுநலமுமோர்பால்.

(இ-ள்.) தாமும் ஒரு பயப்படார் பயப்படுவார் தமமையும் தம்போல் செய்வார்போல் - தாமும் ஒருபயன்படார் பயன்படுவாரையுந் தம்மைப்போற்செய்யு முலோபரைப்போல, காமர் அளி நுகராமல் கழி பூமேல் அடுக்கல் உறும் கணி தேன் ஊற்றும் - விருப்பஞ்செய்யும் வண்டுகள் நுகராமல் கழிகளிலுள்ள மலர்மேல் மலைகளிற்பொருந்திய வேங்கைமரங்கள் மதுவை யூற்றுகிற்கும், ஆம் இதனை நாமம் நீள் கடல் அறிந்து வெகுண்டு எழுந்தால் என்ன அணி வேங்கை குடுமி தன்னை - ஆகும் இதனை யச்சத்தைத்தரும் நெடிய கடலுணர்ந்து கோபித்தெழுந்தாற்போல அழகிய அவ்வேங்கை மரத்தின் குடுமியை, பவளம கரம் நீட்டி பற்றியிடும் நலமும் ஓர்பால் - பவளக்கொடியாகிய கையை நீட்டிப் பற்றியிழுக்கும் வளமும் ஓர்பக்கத்திலுள்ளது.

இதனால் நெய்தனிலத்தோடு குறிஞ்சிநிலத்திற்கு மயக்கங்கூறப்பட்டது. வேங்கைமலர் வண்டுணாத மலராதலால் அம்மலர் வண்டுகள் நுகருங் கழியிலுள்ள மலர்மேல் தேனைச்சிந்தி அம்மலரையும் பயன்படாமற் செய்நதென்பார் தாமுமொருபயப்படார் பயப்படுவா தம்மையுந் தம்போற்செய்வார்போல் என்றா. இது பின்சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப்பொருளால் முன்சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. (கஙஙு)

அலைக்காகமலைச்சாரற்பலாச்சுளையைக்கவ்வியெழுந்தரக்கர்கோமான்
சிலைத்தாசரதிமனையைக்கொண்டகன்றாலெனவங்கருஞ்சேருமிரா
ணிலைப்பானமதிலிலங்கையிசைத்தாவுமனுமனைப்போனீள்வான்மந்தி
மலைப்பானின்றலைத்தோணிபாய்ந்துநுழுக்கிமீண்டெய்துவாழ்வுமங்கண்.

(இ-ள்.) அலை காகம் மலை சாரல் பலா சுளையை கவ்வி எழுந்து-நெய்தல்நிலத்திலுள்ள நீர்க்காக்கை மலைச்சாரலிலுள்ள பலாவின்சுளையை வாயிற்கவ்வி மேலெழுந்து, அரக்கன் கோமான் சிலை தாசரதிமனையை கொண்டு அகன்றால் என்ன வங்கம் சேரும்-இராவணனானவன் வில்லினையேந்திய இராமன் மனைவியாகிய சீதையைக் கவர்ந்து இலங்கைக்குச் சென்றதுபோல நெய்தல்நிலத்துள்ள மரக்கலத்தையடையய, அ நாள் நிலைப்பு

ஆன மதில் இலங்கை மிசை தாவும் அனுமனைப்போல்-அக்காலையில் சீதையை நாடி அழிதலில்லாத மதில்சூழ்ந்த இலங்கைமேல் மயேந்திரகிரியினின்று தாவிப்பாயும் அனுமனைப்போல, நீள் வால் மந்தி மலை பால் நின்று அலை தோணிபாய்ந்து உழக்கி மீண்டு எய்தும் வாழ்வும் அங்கண் - நீண்ட வாலையுடைய குரங்கு மலையில் நின்று நெய்தல் நிலத்துள்ள தோணியிற்பாய்ந்து கலக்கித்திரும்பி அம்மலையையடையும் காட்சியும் அவ்விடத்துள்ளது.

இதனால் நெய்தனிலத்தோடு குறிஞ்சிநிலத்திற்கும், குறிஞ்சிநிலத்தோடு நெய்தனிலத்திற்கு மயக்கங் கூறப்பட்டன. நீர்க்காக்கையை இராவணனாகவும், பலாக்கனியின் சுளையைச் சீதையாகவும், மரக்கலத்தை இலங்கையாகவும்; மலையை மயேந்திரமாகவும் தோணியை இலங்கையாகவும், குரங்கை அனுமனாகவுங்கூறுதலால் ஒப்புமைக் கூட்ட வுவமையணி. (௧௩௪)

இடைச்சியர்பானடைகற்பச்செல்வதெனவயன்மேவுமெகினமெல்லாம், படைத்தவளம்பாடியிற்போயான்பாலைவாய்மடுத்துப்பையுணீங்கு,மடைத்தலைசூழ்வயன்மகளிர்மொழிபயிலப்போவதெனவனத்துள்வாழும, பெடைக்குயில்போய்ப்பணைக்கமுகின்கனிதொண்டைக்கனியென்னப பேணுமோர்பால்.

(இ-ள்.) இடைச்சியர் பால் நடை கற்ப செல்வது என்ன - ஆய்ச்சியருடைய நடையைக் கற்கும்பொருட்டு முல்லைநிலத்திற் செல்வதுபோல, வயல் மேவும் எகினம் எல்லாம் வளம்படைத்த பாடியில்போய் ஆன்பாலை வாய்மடுத்து பையுள் நீங்கும்-வயலிற்பொருந்திய அன்னங்களெல்லாம வளமைவாய்ந்த முல்லைநிலத்திற்சென்று பசுவின் பாலைப்பருகித் துன்பத்தினின்று நீங்கும், மடைத்தலை சூழ் வயல் மகளிர் மொழி பயில போவது என்ன - நீர்மடைகள் சூழ்ந்த மருதநிலத்துள்ள பெண்களது சொற்களைக் கற்கச்செல்வதுபோல, வனத்து உள்வாழும் குயில் பெடைபோய் பணை கமுகின் கனி தொண்டை கனி என்ன ஓர் பால் பேணும் - முல்லைநிலத்தில் வாழுங் குயிற்பெடைசென்று அம்மருதநிலத்திலுள்ள கமுகின் கனியைக் கோவைக்கனியென்று ஓர்பக்கத்தில் நின்று விரும்பாநிற்கும்.

இதனால் முல்லைநிலத்தோடு மருதநிலத்திற்கும், மருதநிலத்தோடு குறிஞ்சிநிலத்திற்கு மயக்கங் கூறப்பட்டன. வளம்பாடி வல்லெழுத்து மிகும் வழி மெல்லெழுத்து மிக்கது. (௧௩௫)

கொடும்பரவர்கழியுழக்கக்குதித்தெழுமீனாய்ச்சியர்பாற்குடத்துள்வீழ்ந்தங், கடும்பயத்தோடலமருமற்றவர் கடையுந்தயிரோதைக் கலமந்தோடி, யொடுங்குமுயல்கைதையினுளடங்கியங்கட் கடலொலிகேட்டுள்ளமாழ்குங், கடுங்கருமத்தொடரந்தோயாங்குறிஞ்சும்விடாதென்னக்காட்டுமோர்பால்.

(இ-ள்.) கொடும் பரவர் கழி உழக்க குதித்து எழும் மீன் - கொடுந்தொழில் வாய்ந்த பரதவர் வலைவீச உப்பங்கழியைக் கலக்கக்குதித்து மேலெழுந்த மீன், ஆய்ச்சியர் பால் குடத்துள் வீழ்ந்து அங்கு அடும் பயத்தோடு அலமரும் - முல்லைநிலத்திலுள்ள ஆய்ச்சியர் நிறைத்த பாற்குடத்தில் வீழ்ந்து அங்குக் காய்ச்சாநிற்கும் பாலோடு சுழலாநிற்கும், அவர் கடையும் தயிர் ஓதைக்கு அலமந்து ஓடி ஒடுங்கும் முயல் - அவ்வாய்ச்சியர் கடையுந் தயிர் ஓசைக்குச் சுழன்றோடி யம்முல்லைநிலத்தி லொடுங்கிய முயல், கைதையினுள் அடங்கி அங்கண் கடல் ஒலிகேட்டு உள்ளம் மாழ்கும், நெய்தல் நிலத்திலுள்ள தாழையுளடங்கி அவ்விடத்துக் கடலிரைச்சலைக்கேட்டு மனமயங்காநிற்கும்,

கடும் கருமத்தொடர் அந்தோ யாங்கு உறினும் விடாது என்ன ஓர்பால் காட்டும்-கடிய கருமத்தொடர்ச்சி ஐயோ தன்னைச்செய்தவன் எவ்விடத்திருந்தாலும் அவனை விடாது சூழ்தல்போல ஓர்பக்கத்திற் காட்டாநிற்கும்.

இதனால் நெய்தனிலத்தோடு முல்லைநிலத்திற்கும், முல்லைநிலத்தோடு நெய்தல் நிலத்திற்கு மயக்கங் கூறப்பட்டன. முயல் முல்லைநிலக்கருப்பொருள்களுள் ஒன்று. தாழை நெய்தனிலக்கருப்பொருள்களுள் ஒன்று. பின் சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப்பொருளால் தயிரோசைக்கு அஞ்சிய முயல் தாழையிலடங்கிக் கடலோசைக்கு அஞ்சும் எனக்கூறிய வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. கடுங்கருமம் கடியென்னும் உரிச்சொற்றிரிபு. (கஎசு)

இடுகுமிடைக்கடைசியர்கள்களைந்தெறிநறுங்கமலமிமைக்குமுந்நீர்ப்,
படுதிரைமேல்வயங்குதலுங்கடன்முளரிபூத்ததெவன்பாரீரென்பா,ருடைதி
ரைநீர்க்கடல்கிளைத்ததுகிர்க்கொடிபோய்ப்பழனமிசையொளிரக்கண்டோர்,
கடிவயலுந்துகிரீன்றதென்னென்பாரிப்பரிசுகவினுமோர்பால்.

(இ-ள்.) இடுகும் இடை கடைசியர்கள் களைந்து எறிந்த நறும் கமலம் - வருந்தும் இடையையுடைய மருதநிலப்பெண்கள் களைந்து வீசிய நறுமணங்கமழுந் தாமரை, இமைக்கும் முந்நீர் படு திரை மேல் வயங்குதலும் கடல் முளரி பூத்தது எவன் பாரீர் என்பார் - நெய்தல் நிலத்திலொலிக்குங் கடலிலமைந்த அலைமேல் விளங்க அக்கடல் தாமரைபூத்தது யாதுகாரணம் பாரீரென்று அந்நிலமாக்கள் கூறுவார்கள், உடை திரை நீர் கடல் கிளைத்த துகிர் கொடி போய் பழனம் மிசை ஒளிர - கரையொடு மோதியுடைந்த அலைகளையுடைய நீர்மயமாகிய கடலில் முளைத்த பவளக்கொடிபடர்ந்து வயலின்மேல் விளங்காநிற்க, கண்டோர் கடிவயலும் துகிர் ஈன்றது என் என்பார் இப்பரிசு ஓர்பால் கவினும் - அதனைக்கண்டவர்கள் விளக்கம் வாய்ந்த வயலும் பவளக்கொடியைப்பெற்றது யாதுகாரணமென்பார்கள் இத்தன்மை யோர்பக்கத்தில் அழகுசெய்யாநிற்கும்.

இதனால் மருதநிலத்தோடு நெய்தனிலத்திற்கும் நெய்தனிலத்தோடு மருதநிலத்திற்கு மயக்கங்கூறப்பட்டன. கமலம் மருதநிலக்கருப்பொருள். பவளம் நெய்தனிலக்கருப்பொருள். முந்நீர் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றுதன்மையையுடையது என்னும் பொருள்மேல் நிற்றலால் பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை நிலைத்தொடராய்க் கடல்மேல் நிற்றலால் காரணப்பெயர். ஆற்றுநீர், ஊற்றுநீர், மேகநீர் என்னு மூன்று நீரையுடையது என்னும் பொருள்மேல் நின்றதாகக் கொண்டு அத்தொடராகக்கொள்ளலும் ஒன்று. கமலம் கடலில் விளங்குதலும், பவளம் மருதநிலத்தில் விளங்குதலும் கூறுதலால் பொருளதிசயவணி. (கஎஎ)

வரைப்புறத்துப்பசுங்கிளியுங்கான்குயிலுமுடனான்பான்மடுத்துப்புட்க
ளிரைத்தெழுபூம்பணைமருதச்சேக்கைமிசையெதிரொதிருற்றிசைகள்பாடு
நிரைக்குடுமிவரைப்பகடும்வயற்பகடுங்கருமையொடுத்துநெரித்துமாந்தித்
திரைத்தடநீர்க்கான்யாற்றுத்திளைத்தாடியுடனுறங்குஞ்செவ்வித்தோர்பால்.

(இ-ள்.) வரை புறத்து பசும் கிளியும் கான் குயிலும் உடன் ஆன்பால் மடுத்து-குறிஞ்சிநிலத்திலுள்ள பசிய கிளிகளும் முல்லைநிலத்திலுள்ள குயில்களும் ஒருசேரப் பசுவின்பாலைப்பருகி, புட்கள் இரைத்து எழும் பூ பணைமருதம் சேக்கை மிசை எதிர் எதிர் உற்று இசைகள் பாடும்-பறவைகள் ஒலித்தெழாநின்ற மலர்களையுடைய வயலில் மருதமரத்திலுள்ள படுக்கையின்மேல் எதிரெதிரேயிருந்து இசைகள் பாடாநிற்கும்,ஓர்பால்-

ஒருபக்கத்தில், குடுமி கிளை வரை புகடும் வயல் பகடும் கரும்பு ஒடித்து நெரித்து மாந்தி-சிகரவரிசையையுடைய குறிஞ்சிநிலத்திலுள்ள யானைகளும் மருதநிலத்திலுள்ள எருமைக்கடாக்களும் அந்நிலத்திலுள்ள கரும்பினை யொடித்துத் தமது வாயால் நெரித்துச் சுவைத்து, தட திரை நீர் கான் யாறு இல் திளைத்து ஆடி உடன் உறங்கும் செவ்வித்து-பெரிய அலைகளையுடைய நீர்மயமாகிய காட்டாற்றில் படிந்து விளையாடி ஒருசேரக் கண்டுயில் செய்யுந் தன்மையையுடையது.

இதனால் குறிஞ்சி, முல்லைகளிலுள்ள கருப்பொருள்கள் மருதநிலக்கருப்பொருளோடும், குறிஞ்சிநிலக் கருப்பொருளோடு மருதநிலக்கருப்பொருளுக்கும், மருதநிலக்கருப்பொருளோடு குறிஞ்சிக்கு மயக்கங்கூறப்பட்டன. கிளி, யானை குறிஞ்சிநிலக்கருப்பொருள்கள். குயில், கான்யாறு முல்லைநிலக்கருப்பொருள்கள். மருதமரம், கரும்பு, எருமை மருதநிலக்கப்பொருள்கள். (கூ௮)

புறவகத்தகுமிழ்ம்போதுங்கழிக்கானற்கைதைதரும்பொலங்கேழ்ப்பூவுந்
தறைபொறுத்தவரைதோன்றித்தண்மலர்மேலிருபுடையுந்தாங்கிநின்றே
யிறைவனுக்காமலர்மோந்தாண்மூக்கரிந்துசுரிகையுடனேந்தியந்நாண்
முறைநிறுத்தசெருத்துணையார்நின்றநிலைகாட்டிவளமுகிழ்க்குமோர்பால்.

(இ-ள்.) ஓர்பால் புறவு அகத்த குமிழ்ம்போதும் கானல் கழி கைதை தரும் பொலம் கேழ் பூவும் - ஒருபக்கத்தில் முல்லைநிலத்திலுள்ள குமிழமலரையும் இளஞ்சோலை சூழ்ந்த கழிகளிலுள்ள தாழைகள் தரும் பொன்னிறம்வாய்ந்த மலரையும், தறை பொறுத்த வரைதோன்றி தண் மலர்மேல் இருபுடையும் தாங்கி நின்று - நிலவுலகு சுமந்த மலையானது தன்னிடத்து மலர்ந்த தண்ணிய காந்தளின்மேல் இரண்டுபக்கமுந் தாங்கிநின்று இறைவனுக்கு ஆம் மலர் மோந்தாள் மூக்கு அரிந்து சுரிகையுடன் ஏந்தி-சிவபெருமானுக்குச்சூட்டு மலரினை மோந்து வழிபாட்டின் முறைமையினின்று வழுவிய அரசன் மனைவியின் மூக்கினையரிந்து அவ்வுடைவாளோடு தமது கையிலேந்தி, அந்நாள் முறை நிறுத்த செருத்துணையார் நின்ற நிலை காட்டி வளம் முகிழ்க்கும் - அக்காலையில் வழிபாட்டு முறைமையை நிலைபெறச்செய்த செருத்துணைநாயனார் அன்பின் வழிப்பட்டு நின்ற நிலைமையைத் தெரிவித்து வளஞ்செய்யாநிற்கும்.

குமிழமலர் முல்லைநிலக்கருப்பொருள். தாழை நெய்தனிலக்கருப்பொருள். காந்தள் குறிஞ்சிநிலக்கருப்பொருள். இதனால் முல்லைநிலம நெய்தனிலங்களிலுள்ள கருப்பொருள்கள் குறிஞ்சிநிலக்கருப்பொருளோடு மயங்குதல் கூறப்பட்டன. சோழநாட்டில் மருகல் நாட்டைச்சேர்ந்த தஞ்சாவூரில் வேளாளர்குலத்திலவதரித்த செருத்துணைநாயனார் முறுகிய சிவநேசமுடையவராய்த் திருவாரூரிற்சென்று திருவாலயத்தில் தம்மாலியன்ற திருப்பணிசெய்தொழுகுநாளில் ஒருநாள் அங்குத் தரிசனத்தின்பொருட்டுவந்த பல்லவர்கோன் என்னும் அரசனுடைய பட்டத்து மனைவி சிவபெருமானுக்குத் திருப்பள்ளித்தாமந் தொடுக்குந் திருமண்டபத்தின்கீழ் வீழ்ந்திருந்த ஒருமலரையெடுத்து மோந்தனள், அதனை நாயனார் கண்டு சினங்கொண்டு அவள் கூந்தலைப்பிடித்துச் சிவஅபராதஞ்செய்த மூக்கினை உடைவாளாலரிந்தனர் என்பது திருத்தொண்டர் புராணவரலாறு.

" ஆனவன்பர்திருவாரூராழித்தேர்வித்தகர்கோயில்
ஞானமுனிவரிமையவர்கணெருங்குநலஞ்சேர்முன்றிலினுண்
மானநிலவுதிருப்பணிகள்செய்துகாலங்களின்வணங்கிக்
கூனல்விளவெண்பிறைமுடியார்தொண்டுபொலியக்குலவுநாள்.

உலகுநிகழ்ந்தபல்லவர்கோச்சிங்கருரிமைப்பெருந்தேவி
நிலவுதிருப்பூமண்டபத்துமருங்குநீங்கிக்கிடந்ததொரு

மலரையெடுத்துமோந்ததற்குவந்துபொருமைவழித்தொண்டர்
இலகுசுடர்வாய்க்கருவியெடுத்தெழுந்தவேகத்தாலெய்தி.
கடிதுமுற்றிமற்றவடன்கருமென்கூந்தல்பிடித்தீர்த்துப்
படியில்வீழ்த்திமணிமூக்கைப்பற்றிப்பரமர்செய்யசடை
முடியிலேறுந்திருப்பூமண்டபத்துமலர்மோந்திடுமூக்கைத்
தடிவனென்றுகருவியினலரிந்தார்தலைமைத்தனித்தொண்டர்" என வருதல் காண்க.

மலையைச் செருத்துணைநாயனுராகவும், குமிழமலரை நாசியாகவும், தாழைமலரை உடைவாளாகவும் உபமான உபமேயங்களை யெடுத்துக்கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. கேழ்கெழு என்னுஞ் சாரியை கேழெனத்திரிந்தது.

இச்செய்யுளின் அணியையும் எழுவாய்த்தொடரில் வரும் வல்லெழுத்தியல்பாமென்பதும் அறியார் வரைதோன்றியென்னும் பாடம் பிழையெனக்கருதி வரைத்தோன்றியெனப் பிழைபடத்திருத்தினர். (ககக)

விண்முட்டுங்குடுமிவரைத்திகிரிபடும்வெண்முத்தும்வேலைச்சூழன்
மண்முட்டநறும்புன்னையுகுமரும்புந்தலைமயங்கியவற்றுட்சேர்ந்த
தண்முட்டையிதுவென்னப்பகுத்தறியவல்லாதுதளர்வுகொண்டு
கண்முட்டவளம்படைத்தவயலன்னந்துயர்கூருங்காட்சித்தோர்பால்.

(இ-ள்.) ஓர்பால் விண் முட்டும் குடுமி வரை திகிரி படும் வெள் முத்தும்-ஒருபக்கத்தில் வானுலகையளாவிய சிகரத்தையுடைய மலையிலுள்ள மூங்கிலிற்றோன்றிய வெள்ளிய முத்தமும், வேலை சூழல் மண் முட்ட நறும் புன்னை உகும் அரும்பும் தலைமயங்கி-கடற்கரையின் நிலத்திற்பொருந்த நறுமணங்கமழும் புன்னை மரங்கள் சிந்திய அரும்புகளும் இடமயங்கிக்கிடத்தலால், அவற்றுள் சேர்ந்த தண்முட்டை இதுவென்ன பகுத்து அறிய வல்லாது - அவைகளோடு கலந்த குளிர்ந்த தமது முட்டை யிதுவென்று பகுத்துணரவல்லமையில்லாமையால், தளர்வுகொண்டு கண்முட்ட வளம் படைத்த வயல் அன்னம் துயர் கூரும் காட்சித்து ஓர்பால் - தளர்ச்சிகொண்டு பார்ப்பவர் கண்கள் வழுக்க வளம் நிறைந்த வயல்களில் அன்னங்கள் துன்பங்கூருங் காட்சியையுடையது.

வல்லாது பண்படியாகப்பிறந்த எதிர்மறைக் குறிப்புவினையெச்சம். மூங்கில் குறிஞ்சிநிலக்கருப்பொருள். புன்னை நெய்தனிலக்கருப்பொருள் அன்னம் மருதநிலக் கருப்பொருள். மூங்கில் சிந்திய முத்தும் புன்னைசிந்திய அரும்பும் அன்னப்பெடையிட்ட முட்டையும் ஒன்றோடொன்று கலந்து கிடத்தலாலெனவே, இதனால் குறிஞ்சிநிலத்தோடு நெய்தலுக்கும் அவற்றோடு மருதநிலத்திற்கு மயக்கங் கூறப்பட்டன. (கசo)

குறுஞ்சுனையிற்களிவண்டுசுழன்றுடுங்கான்குயில்கள்குரைநீர்ப்புன்னை,
தொறும்பொதுளுங்கருங்கொடிதன்குடம்பையிற் போய்க்கருவுயிர்த்துச்சுலவிமீண்டு, நறும்பிரசமலர்க்காஞ்சிச்சினையேறியொளியிருந்துகாடிக்காலை,
முறுக்குணையுமினிதுறையுமுலவாதவளங்காட்டியோங்குமோர்பால்.

(இ-ள்.) ஓர்பால்-ஒருபக்கம், குறுஞ்சுனையில் களிவண்டு சுழன்று ஆடும் கான் குயில்கள்-குறுஞ்சுனைகளிற் கள்ளுண்டு களித்தவண்டுகள் சுழன்றாடு முல்லைநிலத்திலுள்ள குயில்கள், குரை நீர் புன்னை தொறும் பொதுளும் கருங்கொடி தன் குடம்பையில் போய்-ஒலிக்குங் கடற்கரையிலுள்ள புன்னைமரங்கள்தோறும் நெருங்கிய கரிய காக்கையின் கூட்டிற்சென்று, கரு உயிர்த்து சுலவி மீண்டு நறும் பிரசம் மலர் காஞ்சி சினையேறி

ஒளி யிருந்து நாடி - முட்டையை யீன்று சுழன்று அங்குநின்று திரும்பி நறுமணங்கம ழுந்தேன் சிந்து மலர்களையுடைய காஞ்சிமரத்தின் கிளையிலேறி யொளித்திருந்து ஆரா ய்ந்து, காலம் உறும் துணையும் இனிது உறையும் உலவாத வளம் காட்டி ஓங்கும் - பா ர்ப்பாகுங்காலம் வாய்க்குமளவும் இனிதாக வசிக்கும் கெடாதவளத்தைக் காட்டியுயர்ந் து தோன்றுநிற்கும்.

குயில் முல்லை நிலக்கருப்பொருள், புன்னை காக்கைநெய்த னிலக்கருப்பொரு ள்கள். காஞ்சிமருத நிலக்கருப்பொருள். இதனால் முல்லை, நெய்தல், மருதம் இவற்றிற்கு மயக்கங் கூறப்பட்டன. குயில் காக்கையின் கூட்டில் முட்டையிடுதலும், அது குஞ்சா குங் காலமளவுஞ் சமையம்பார்த்தலும் அதற்குரிய தொழிலாதலால் தொழிற்றன்மைய ணி "மலராற்சிறந்த சோலையிலுள்ள கரியகுயிலே, நாங்கூவுதல் பிரிந்தோர்க்குத்தக்க தல்லவென்றும், அவருயிர் இறந்துபடும் என்றுங் கருதாது முழங்கக் கூவுகின்றாய், இத் தன்மையையுடைய வுன்னைவருந்திப்பெற்றவள், அவ்வருத்தத்தை மறந்து உன்னைக்கை விட்டனள். உன்னை வளர்த்த தாய் உன் கடுஞ்சொல்லைகேட்டலும் தன் சாதியல்லவெ ன்றுன்னைத் தன்னில்லினின்று மோட்டினாள், நீயோ எலும்பளவும் மயிரின் பரப்பினையு டையாய், ஆதலால் உன்னை வெறுப்பவர் உன்பிறப்பையா வளர்ப்பையா வடிவையா வெறுப்பார்" என்னும் பொருளை யுள்ளிட்ட—

"வருந்தியீன்றுண்மறந்தொழிந்தாய்வளர்த்தாள்சொற்கேட்டில்கடிந்தாள்
முருந்தின்காறுங்கூழையைமுனிவார்நின்னையென்முனிவார்
பொருந்திற்றன்றாலிதுவென்னும்பொன்றுமளித்திவ்வுயிரொன்றாய்
இருந்துசோலைக்கருங்குயிலேசிலம்பவிருந்துகூவுதியால்" எனவருஞ் சீவகசிந் தாமணிச் செய்யுளாலுணர்க. (கஅ)

கறிக்கொடியுந்துகிர்க்கொடியு நெடுவயலைப்பசுங்கொடியுங் கமழ்தேன்
மௌவல், வெறிக்கொடியுநாற்றிசையுந்தாய்ப்படரநடுவளர்ந்தவிரைக்குரா
மேற், கிறிக்கொடியபெருங்காற்றாற்பல்காலுமசைபாவைக்கிளர்ச்சிவாள்க
ண்,மறிக்கொடியுங் கூத்தியர்செய்கயிறுவிசிகழைக்கூத்தின்வயங்குமோர்பால்.

(இ-ள்.) ஓர்பால் கறி கொடியும் துகிர் கொடியும் நெடு வயலை பசும் கொடியும் தேன் கமழ் மௌவல் வெறி கொடியும் - ஒருபக்கத்தில் மிளகுக்கொடியும் பவளக்கொ டியும் நெடிய வயலையின் பசியகொடியும் தேன்கமழுமல்லிகையின் வாசமிக்க கொடி யும், நால் திசையும் தாய் படர நடு வளர்ந்த விரை குரா மேல் - நான்கு திசைகளிலுந் தாவிப்படர நடுவேவளர்ந்த வாசமிக்க குராமரத்தின்மேல், கிறி கொடிய பெரும் காற் றால் பல் காலும் அசை பாவை கிளர்ச்சி - கிறியென்னு மொலிக்குறிப்பையுடைய மிக வும் பெரியகாற்றினால் பலதடவையு மசையும் அக்குராவின்காயாகிய பாவையின் றோ ற்றம், கண் மறிக்கு வாள் ஒடியும் கூத்தியர் செய் கயிறு விசி கழை கூத்தின் வயங்கு ம் - கண்ணாகிய மானுக்கு வாள்தோற்கும் கழைக்கூத்தர்கள் ஆடுங் கயிறுகட்டிய கழை க்கூத்தைப்போல் விளங்கும்.

கிறி என்பது மரத்திலுண்டாகும் ஒருவகையோசை. அது இக்காலத்திற் கிறிச் என வழங்குகின்றது. கறிக்கொடி குறிஞ்சிநிலக் கருப்பொருள், துகிர்க்கொடி நெய்த னிலக்கருப்பொருள், வயலைக்கொடி மருதநிலக்கருப்பொருள், மௌவற்கொடி முல்லை நிலக்கருப்பொருள், குராபாலை நிலக்கருப்பொருள். இதனால் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தலைந்திற்கு மயக்கங் கூறப்பட்டன. தாய் தாவி என்னும் வினையெச்சத்தி ரிபு. கழைக்கூத்தின் என்றமையால் தொழிலுவமையணியும், கண்மறிக்குவாள் ஒடியும்

என்றமையால் உவமையுருவக வணியுங்கலந்து வருதலால் கலவையணி. வயலையென் பதைப்பசலையெனல் கிராமியம். (கசஉ)

இனையநானிலமடுத்தவளாகமெலாம்பெருங்குடிகளியல்பினோங்கித்
தினையளவுமுறைபிறழாத்தொண்டைநாட்டணிமுழுதுந்தெரித்துக்கூறக்
கனைதிரைநீர்க்கடலாடைநிலவரைப்பின்யாருளரோகற்பநாட்டுந்
தனைநிகர்பாதலதலத்துமன்னதேயெனிற்பிறிதுசாற்றுமாறென்.

(இ-ள்.) இனைய நானிலம் அடுத்த வளாகம் எல்லாம் பெரும் குடிகள் இயல்பின் ஓங்கி தினையளவும் முறை பிறழாத தொண்டைநாடு அணிமுழுதும் - இத்தன்மை வளங்களையுடைய மருதமுதலிய நான்கு நிலங்களுஞ் சூழ்ந்த இடப்பரப்புகளிலெல்லாம் செல்வமிக்க குடிகள் முறைபிறழாது மேம்படுதலால் தினையளவு மனுமுறையினின்றும் பிறழாத தொண்டைநாட்டின் சிறப்புமுழுவதும், தெரித்து கூற கனை திரை நீர் கடல் ஆடை நில வரைப்பில் யார் உளர் - ஆராய்ந்து சொல்ல ஒலிக்கும் அலைகளையுடைய நீர்மயமாகிய கடலை ஆடையாகவுடைய நிலவுலகில்யாருண்டு, கற்ப நாட்டும் தனை நிகர் பாதல தலத்தும் அன்னதே என்னில் பிறிது சாற்றுமாறு என் - கற்பகநாடாகிய தேவருலகிலும் தனக்குத் தானேயொத்த பாதல உலகத்திலும் அத்தன்மைத்தாறல் வேறே யெடுத்துச்சொல்லும் வகையாது.

முறையென்றது அவரவர்களுக்குரிய ஒழுக்கங்களை. இடத்தினிகழ் பொருளின் றொழிலையிடத்தின் மேலேற்றித் தினையளவு முறைபிறழாத் தொண்டைநாடு என்றார். தினை என்றது சிற்றளவையைக் காட்டும் ஓரளவைப் பெயர். தொண்டைநாட்டுச் சிறப்புமிகுதியையெடுத்துக் கூறுதலால் மிகுதியணி. இதனை அதியுக்தியலங்காரம் என்பர்.

எந்நாட்டுப்பெருவளமுமெவ்வெவர்கோட்பாடுகளுமியம்பவல்ல
பொன்னாட்டுப்பொன்செருக்கும்பன்னாக்குப்பணிச்செருக்கும்போக்குமிந்த
நன்னாட்டைப்புலவரெலாந்தொண்டைநாடெனவுரைப்பர்ஞாலமங்கை
தன்னாட்போதனையமுகக்கனிவாயாங்காரணத்தின்சார்பாற்போலும்.

(இ-ள்.) எ நாட்டு பெரு வளமும் எவ்வெவர் கோட்பாடுகளும் இயம்பவல்ல பொன் நாடு பொன் செருக்கும் பல் நாக்கு பணி செருக்கும் போக்கும் இந்த நல் நாட்டை-எந்தநாட்டிலுமுள்ள அளவிறந்த வளங்களையும் எவர் எவர் தழுவிய கொள்கைகளையுமெடுத்துச் சொல்லவல்ல பொன்னுலகிலுள்ள பிரகஸ்பதியி னிறுமாப்பையும் பல நாக்குகளையுடைய ஆதிசேஷன் இறுமாப்பையும் போக்குகின்ற இந்த நல்லநாட்டினை, புலவர் எல்லாம் தொண்டை நாடு என்ன உரைப்பர் - கல்வியிற் சிறந்த அறிவினையுடையவரெல்லாம் தொண்டைநாடென்று சொல்வார் - ஞாலமங்கை தன் நாள் போது அனைய முகம் கனி வாய் ஆம் காரணத்தின் சார்பு ஆல் போலும் - நிலமகளுடைய அன்றலர்ந்த தாமரைமலரையொத்த முகத்திலுள்ள கோவைக்கனிபோன்ற வாயாகியகாரணத்தின்சார்பினாற் போலும்.

எவற்றையும் அளவறுத்துச் சொல்லவல்லேம் எனப் பிரகஸ்பதியும் ஆதிசேடனுங்கொண்ட மனவெழுச்சி என்பார் செருக்கு எனவும், அவர்களால் அளவறுக்கொண்ணாத பெருவளத்தது என்பார் போக்குமிந்த நன்னாடு எனவும், வேதநூல்களிலுள்ள விதிவிலக்குகளை யான் மாக்களுக்கு உணர்த்தவல்லது தொண்டைநாடு என்பர் ஞாலமங்கைதன்னாட் போதனைய முகக்கனிவா யாங்காரணத்தின் சார்பால் எனவுங் கூறினார். ஞாலமங்கைதன்னாட் போதனைய முகக்கனிவாயாங் காரணத்தின்சார்பால் என ஒரு

பொருளின் தருமத்தை யாரோபித்தற்பொருட்டுத் தொண்டைநாடென்னும் ஒருபொருளின் தருமத்தையொழித்தலால் ஒழிப்பணி. ஏ என்னும் வினாவிடைச்சொல் எல்லாம் என்னும் பொருள்மேல் நின்றது. (கசச)

சலதியுடைச்சேயிழைக்குத்தமிழ்நாடேமதிமுகமாத்தமிழ்நாட்டுள்ளு
மலர்புகழ்த்தண்டகநாடேகனிவாயாவதனுள்ளுஞ்சாதிபேதங்
குலவுமாருயிர்க்கெல்லாந்தந்தமதுமரபொழுக்கங்குடங்கைசேரா
மலகமெனத்தேற்றுதலினாவெனலாங்காஞ்சிநகர்வண்மைசொல்வாம்.

(இ-ள்.) சலதி உடை சேயிழைக்கு தமிழ் நாடே மதி முகம் ஆக - கடலையாடையாகவுடைய நிலமகளுக்குத் தமிழ்வழங்கும் நாடே சந்திரனை யொக்கும் முகமாகவும், தமிழ் நாடு உள்ளும் அலர் புகழ் தண்டக நாடே கனிவாயாக - தமிழ்நாட்டுள்ளும் பரந்த புகழையுடைய தண்டகநாடே கோவைக்கனியையொத்த வாயாகவும், அதன் உள்ளும் சாதி பேதம் குலவும் ஆர் உயிர்க்கு எல்லாம் தத்தமது மரபு ஒழுக்கம் - அத்தண்டக நாட்டுள்ளும் பல சாதிபேதங்களாகக் குலவாநின்ற அரிய உயிர்களுக்கெல்லாம் தத்த மரபினையும் ஒழுக்கத்தினையும், குடங் கை சேர ஆமலகம் என்ன தேற்றுதலின் நா என்னலாம் காஞ்சி நகர் வண்மை சொல்வாம் - உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி போலத் தெளிவித்தலால் நாவென்று சொல்லப்படும் காஞ்சி நகரின் வளமையையினியெடுத்துச்சொல்லுவாம்.

தமிழ்நாடென்றது இன்னதென முன்னர்க் கூறியிருக்கின்றாம். எல்லா அவயவயங்களுள்ளுஞ் சிறந்தது முகமாதலால் தமிழ்நாடே மதிமுகமா எனவும், முகமாகிய நாட்டின் ஆதேயப்பொருளைப் பலர்க்கும் விளக்குதலில் அம்முகத்தினுஞ் சிறந்ததுவாயாதலால் தண்டகநாடே கனிவாயா எனவும், விளக்குதற்கோர் கருவியாகச் சாதியொழுக்கங்களையறிவித்தலில் வாயிற்சிறந்தது நாவாயிருத்தலால் நாவெனலாங் காஞ்சி எனவும், உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி உயிர்களுக்குப் புறத்திலறியப்படுவது அகத்தும் அறியப்படுதலால் குடங்கைசேரா - மலகமெனத் தேற்றுதலின் எனவுங் கூறினார். இதில் இயைபுபட உருவகஞ்செய்தலால் இயைபுருவகவணி. (கசரு)

திருநாட்டுப்படலம் - முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - கஎஉ.

## திருநகரப்படலம்.



இறவும்அது.

கச்சிமாநகரோர்தட்டுங்கடவுளருலகோர்தட்டும்
வைச்சுமுன்னயனார்தூக்கமற்றதுமீதுசெல்ல
நிச்சயமுறுகித்தாழ்ந்துநிலமிசைவிழுமிவ்வூரை
யிச்சகத்தூர்களோடுமெண்ணுதன்மடமைப்பாற்றே.

(இ-ள்.) கச்சி மா நகர் ஓர் தட்டும் - பெருமைவாய்ந்த கச்சித்திருநகரை யொருதட்டிலும், கடவுளர் உலகு ஓர் தட்டும் வைச்சு முன் அயனார் தூக்க அது மீது செல்ல - தேவருலகினை யொருதட்டிலும் வைத்து முன்பு பிரமனார் நிறுத்துப்பார்க்க அவ்விண்ணுலகு கனமின்மையால் மேலேசெல்ல, நிச்சயம் முறுகி தாழ்ந்து நிலமிசை விழும்

இ ஊரை - நிச்சயமாகக் கனமுடைமையால் முறுகித்தாழ்ந்து நிலவுலகின்மேல் வீழும் இவ்வூரினை, இ சகத்து ஊர்களோடும் எண்ணுதல் மடமை பாற்று - இந்நில உலகிலுள்ள நகரங்களோடும் இந்நகரை யொன்றாகக்கருதுதல் அறியாமையின் பகுதியினையுடையது.

காஞ்சி, விண்ணுலகு என்னும் இரண்டின் கனமும் கனமில்லாமையும் தெரிய, படைக்கும் பிரமன் துலையிலிட்டுத்தூக்குதலாகிய காரணத்தால் காஞ்சிகன முடைமையாற் கீழிறங்கியதென்னுங் காரியந்தோன்றுதலால் காரணப்புனைவிலிபுகழ்ச்சியணி, வைத்துவைச்சு மரூஉ. தாழ்ந்து எனப் பின்னர்க்கூறுதலால் கனமில்லாது என்றும். (க)

கவினெலாந்திரட்டிக்காஞ்சிக்கடிநகராக்கிக்கஞ்சத்
தவிசினோனதன்பானுட்பத்தொழில்செயச்சார்ந்தகாலைப்
புவியிடைக்கழிந்தசேடம்பொற்பவேறெடுத்துவிண்ணு
டவிர்தரச்செய்தான்போலுமன்றிவேறுரைப்பதென்னோ.

(இ-ள்) கஞ்சம் தவிசினோன் கவின் எல்லாம் திரட்டி காஞ்சி கடி நகர் ஆக்கி - தாமரையை ஆசனமாகவுடைய பிரமன் அழகினை யெல்லாந் திரட்டிக் காஞ்சியென்னுங் காவலமைந்த நகரமாகச்செய்து, அதன்பால் நுட்பத்தொழில் செய்ய சார்ந்த காலை - அதனிடத்து நுட்பத்தொழிலைச் செய்யத்தொடங்கியகாலத்து, புவி இடை கழிந்த சேடம் பொற்ப வேறு எடுத்து - நிலவுலகிற்கழிந்த சேடத்தை அழகுமிக வேறே யெடுத்து, விண்ணுடு அவிர்தரச் செய்தான் போலும் அன்றி வேறு உரைப்பது என் - விண்ணுலகு விளங்க அமைத்தான்போலும் இதுவன்றி வேறுசெயலெடுத்துக் கூறுவது யாது.

பிரமன் அழகினைத்திரட்டிக் காஞ்சி என்னும் நகரத்தைப் பெரும்படியாக முன்னர்ச் சிருட்டித்துப் பின்னர் நுட்பமாக அந்நகரைச் சித்திரிக்கப் புகுந்ததனிலிருந்து கழித்த சேடத்தைக்கொண்டு விண்ணுலகைச் சிருட்டித்தனனெனப் படைப்பிலிருக்கின்ற அபேதத்தில் பேதம் ஆரோபிக்கப் பட்டதால் பிரிநிலையுயர்வு நவிற்சியணி. (உ)

ஆதிநாண்முக்கணெம்மானயன்றனைப்படைத்துவேத
மோதுவித்தருளினோக்கியுலகெலாம்படையென்றேவும்
போதிதுபார்த்திவ்வாறுபடையெனப்புகன்றுவைத்தா
னீதெனலாகுங்காஞ்சியென்னுமாயளவைத்தாமே.

(இ-ள்.) ஆதி நாள் முக்கண் எம்மான் அயன் தனை படைத்து வேதம் ஓது வித்து அருளின் நோக்கி - முன்னாளில் திரிநேத்திரங்களையுடைய எமது பெருமானாகிய சிவபிரான் பிரமனைப்படைத்து வேதங்களையோதுவித்துக் கிருபையாற் பார்த்தருளி, உலகு எல்லாம் படை என்று ஏவும் போது இது பார்த்து இவ்வாறு படை என்ன புகன்று வைத்தான் - உலகங்களையெல்லாம் படையென்றேவிய காலையில் இதனைப்பார்த்து இவ்விதமாகப் படையென்று சொல்லிவைத்தான், ஈது என்னலாகும் காஞ்சி என் உரை அளவைத்தாமே-அது இதுதானென்று சொல்லப்படும் காஞ்சிநகரமானது எனது வார்த்தையி னளவிலடங்கியதோ. (இல்லையென்றபடி.)

பிரமன் முதலியோரைச் சிருட்டித்தற்பொருட்டு வேதத்தை மாமரமாகக்கொண்டு சிவபெருமானார் தமதிடப்பாலில் இலளிதையென்னும் பிராட்டியாரைத் தந்து அவரது வலக்கண்ணில் பிரமனைத்தந்து வேதத்தின்பெருமையை யவனுக்கருளிச்செய்து படையென்றேவினராதலால் ஆதிநாள்முக்கணெம்மானயன்றனைப்படைத்துவேதம்-ஓதுவித்தருளினோக்கியுலகெலாம்படையென்றேவும்போது என்றார். பிரமனுக்குச் சிவபெ

ருமான் படைத்தற்ஞெழிலைக் கற்பித்துக் காஞ்சிப்பதியைக்காட்டி இவ்வாறு மற்றை யுலகங்களைப்படைப்பாயென்று சொல்லினனென்றமையால் முன்னர்க் கூறியபிரிநிலை யுயர்வு நவிற்சியணியும், இதனைப்பார்த்துப் படையென்றமையால் முன்னரோ காஞ்சிநக ரம் பிரமன் படைப்பிலடங்கா தமைந்திருத்தல் புலப்படுதலால் உதாரவணியுங் கலந்தி ருத்தலால் கலவையணி.

"கொன்றைமாலிகைச்சடைமுடிக்குழகனங்கதன்கீழ்த்
துன்றுமானந்தப்பேரொளியிலிங்கமாத்தோன்றி
வென்றநல்லெழில்விரிந்ததன்மெய்யிடப்புறத்து
மன்றல்வார்குழலிலளிதைமாதினைப்படைத்தான்" எனவும்,

பிரமன் படைப்பிலடங்காமையை—

"உலகெலாமழிவுறுங்காலையுந்தன்னுடைக்காவலிற்
குலவுசீர்க்காஞ்சி" எனவும் இந்நூலில் வருதல் காண்க. (௩)

இந்நகர்நோக்குந்தோறுமிமையவர்தமதுநாடு
நன்னரென்றிருந்ததம்மைத்தாங்களேநாணிவைவர்
முன்ஞெருசமயந்தன்னைப்பொருளெனமுற்றிநின்ஞேர்
பின்னர்வான்சைவமெய்தப்பெறினவர்பேசுமாபோல்.

(இ-ள்.) முன் ஒரு சமயம் தன்னை பொருள் என முற்றி நின்ஞேர் பின்னர் வான் சைவம் எய்த பெறின் அவர் பேசும் ஆறு போல் - முன்பு ஒருசமயத்தையே பொருளென்று அன்பு முறுகிநின்றவர் பின்பு பெரிய சைவசமயத்தை யடையப்பெற்ஞல் அவர்கள் பின்பு தாமுன்னின்ற சமயத்தை யிகழ்ந்துபேசுமாறுபோல, இமையவர் இ நகர் நோக்கும் தோறும் - தேவர்களிந்தத் திருநகரைப்பார்க்குந்தோறும், தமது நாடு நன்னர் என்று இருந்த தம்மை தங்களே நாணி வைவர் - தமது பொன்னுடு நல்லநாடென்றகங் கரித்திருந்த தங்களைத்தாங்களே நாணிவைவார்கள்.

செய்யுளாதலால் முன்பின்னுக மாறிவந்தது. முன்னிரண்டடியிற் சொல்லப்பட்ட சிறப்புப்பொருளால் பின்னிரண்டடியிற் சொல்லப்பட்ட வர்ணியமாகிய பொதுப் பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. (௪)

நீடுமிந்நகரமன்னிநெடுந்தவமுயல்வோர்வான
நாடர்தம்பதமுங்கஞ்சஞரணன்வலாரிவைப்பும்
பாடிரிகான்றசோருக்காண்பதிப்பதியின்வண்மை
கோடியிலொருகூஞெவ்வாவவையெனக்குறித்தேயன்றே.

(இ-ள்) நீடும் இ நகரம் மன்னி நெடும் தவம் முயல்வோர் - செல்வமிக்க இந்நகரிற்றங்கி மிக்க தவத்தைச்செய்யும் பெரியோர், வான நாடர் தம்பதமும் கஞ்சன் நாரணன் வலாரி வைப்பும் பாடு இரி கான்ற சோறு ஆககாண்பது-மற்றைத் தேவர்களுடைய பதவியையும் பிரமனுந் திருமாலு மிந்திரனுமாகிய இவர்களுலகத்தையும் பெருமையினின்று நீங்கிய சத்திசெய்த அசனமாகக்காணுதல், இ பதியின் வண்மை கோடியில் ஒருகூறு ஒவ்வா அவை என குறித்தே அன்று ஏ-இக்காஞ்சிநகரத்தின் வளமையில் கோடியுளொருபங்கேனும் அப்பதவிமுதலியவுலகங்கள் ஒவ்வா என்று கருதியேயல்லவா.

கஞ்சஞரணன் வலாரிவைப்பும் என்றமையால் வானநாடர் தம்பதம் என்றது இயக்கர்முதலியோர் பதம் என்றதுதோன்ற மற்றைத்தேவர்களுடைய பதம் என்ஞம்.

"அமரர்சித்தர்அசுரர்தைத்தியர் - கருடர்கின்னரர்நிருதர்கிம்புருடர் - காந்தருவரியக்கர் விஞ்சையர்பூதர் - பசாசரந்தரர்முனிவருரகர் - ஆகாயவாசியர்போகபூமியரெனப்-பாகு பட்டனபதினெண்கணமே" என்னுஞ் சூத்திரத்துள் அமரரொழியக்கொள்க. இந்தக் காஞ்சித்திருநகர் முத்திதருந்தலமாதலால் முத்தியை விரும்பித் தவஞ்செய்வோர்கள் பரபோகவிராகம் உடையவராதலால் பாடிரிகான்ற சோறுக்காண்பது எனவும், வானுடர் முதலியோர் பதங்கள் அழியும் போகமூட்டும் பதங்களாதலால் அப்போகங்களை வெறுத்து முத்தியை விரும்பிய தமக்கு அழிவில்லாத முத்தியைத்தருதலால் இப்பதியின் வண்மை கோடியிலொருகூறுவ்வா வவையெனக் குறித்தே யெனவுங் கூறினார்.

" மறைமுடிவுமிவ்வாறேவீடுதவும்வளநகரங்காஞ்சியென்ன - அறைதருமால்" என இந்நூலில் வருதல் காண்க. (ரு).

புற்நகர்.

சுரும்புகாலுழக்கமுகையுடைந்தலர்ந்தூதுளித்ததீஞ்சுவைமதுப்பிலிற்று
மருமபெறற்சோலைமீமிசைக்கருவிமுகிற்குழாமடர்வபாட்டளிக்கு
விரும்புதேனளியாக்கற்பகநாட்டைவெல்லுவான்வருவதோர்ந்தஞ்சித்
தரும்புகழ்வலாரியூர்தியைச்செலுத்தித்தடுத்திடைமடக்குதன்மானும்.

(இ-ள்.) சுரும்ப கால் உழக்க முகை உடைந்து அலர்ந்து தீம் சுவை துளித்த மது பிலிற்றும் அரும்பெறல் சோலை மீமிசை கருவி முகில் குழாம் அடர்வ - வண்டுகள் காலாலுழக்க அரும்புகளுடைபட்டு மலர்ந்து இனிய சுவைமிக்க தேனைச்சிந்தும் பெறுதற்கரிய சோலையின்மேல் தொகுதியாகிய மேகக்கூட்டங்கள் நெருங்குதல், பாட்டு அளிக்கு விரும்பு தேன் அளியாத கற்பகநாட்டை வெல்லுவான் வருவது-இசைப்பாட்டையுடைய வண்டுகளுக்கு யாவரும் விரும்புந் தேனைக்கொடாத விண்ணுலகத்தை வெல்லவருதலை, தரும் புகழ் வலாரி ஓர்ந்து அஞ்சி ஊர்தியை செலுத்தி தடுத்து இடை மடக்குதல் மானும் - ஈட்டிய புகழையுடைய இந்திரன் தெரிந்து அச்சங்கூர்ந்து தனது ஊர்தியைச்செலுத்தி இடையே தடுத்து மடக்குதலையொக்கும்.

வெப்பந்திரவடைந்தோர்க்குத் தண்ணிய நிழலு நீரும் இனிய கனியுந்தந்து இளங்காற்று வீசுதலும் என்று முடைமையால் அரும்பெறற்சோலை என்றார். மலர்ச்சோலைக்கும் விண்ணுலகிற்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங் கற்பித்தலால் உயர்வு நவிற்சியணியும், வண்டுகளுக்குத் தேனூட்டுஞ் சோலைகளின்மேல் மேகந்தவழ்தலை நம்மைப்போல மேலுள்ள கற்பகச்சோலை வண்டுகளுக்குத் தேனூட்டாமையால் அதனை வெல்வோம் என்று போர்க்கு வருதலை இந்திரனுணர்ந்து தனதூர்தியாகிய மேகத்தைப் போக்கி இடையே மடக்கியதை யொக்குமென அதிசயவசமித்தலால் தற்குறிப்பணியுங்கலந்து வருதலால் கலவையணி. (சு)

நறவமூற்றெடுப்பச்சிறகர்வண்டிமிருநளிபொழிலிடும்பைகூர்ந்தழகு,
குறைபடப்பொதிந்தகுயின்களைவல்லே குதித்தெழுந்துதைத்துதைத்தகற்
றி, நிறைபுனற்றடத்துப்பிறழ்தருங்கிழமைகெட்டிளவாளைமீன்றனக்குத்;
துறைதொறுங்கைம்மாறெனக்கனிசெறூந்தேன்சொரிவன நெடுமரப்பொதும்பர்.

(இ-ள்.) நறவம் ஊற்று எடுப்ப சிறகர் வண்டு இமிரும் அளிபொழில் இடும்பை கூர்ந்து அழகு குறைபட பொதிந்த குயின் களை - தேனூற்றெடுக்கச் சிறகுகளையுடைய வண்டுகளிசைபாடு மலர்ச்செறிவினையுடைய சோலைகள் துன்பங்கூர்ந்து பொலிவு குறைய அதன்மேலே கவிந்த மேகங்களை, வல்லே குதித்து எழுந்து உதைத்து உதை

த்து அகற்றி புனல் நிறை தடத்து பிறழ்தரும் கிழமை நெடு இளவாளை மீன் தனக்கு - மேலே விரைந்து குதித்தெழுந்து உதைத்துப்போக்கி நீர் நிறைந்த தடாகத்தில் மீண்டு வீழ்ந்து பிறழுமுரிமையையுடைய நீண்ட இளமைவாய்ந்த வாளைமீனுக்கு, நெடு மரப்பொதும்பர் துறை தொறும் கைம்மாறு என்ன கனி செழும் தேன் சொரிவன-நீண்ட மரங்களையுடைய அச்சோலைகள் நீர்த்துறைகள்தோறு மதற்குப் பிரதியுபகாரஞ்செய்வதுபோலக் கனிகளையுஞ் செழித்த தேனையுஞ் சிந்தாநின்றன.

சுவைகனிந்த தேனெனினும் பொருந்தும். சிறகு சிறகர் எனவந்தது இறுதிநிலைப்போலி. மலர்ச்சோலைகளின் பொலிவுகுறைய மூடிய மேகத்தின்மேல் அங்குள்ள தடாகத்தின் வாளைமீன்கள் மேலே குதித்துக்கலக்க,அச்சோலைகளவற்றின்மேல் தேன் சிந்துதலை, சோலைகள் தமக்கு வாளைமீன்கள் செய்த வுதவியையுணர்ந்து பிரதியுபகாரஞ்செய்ததென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (எ)

வண்டலாட்டயரும்வாண்மருணெடுங்கண்மங்கையர்நெரிசுரிகூந்தற்
கொண்டலைக்காணுந்தொறுந்தொறுமவர்தங்கோமளச்சாயலுக்குடைந்து
தொண்டுபூண்டெதிர்நின்றுடுவதேய்ப்பத்தோகைமாமயினடங்குயிற்றுந்
தண்டளிர்துவன்றிப்புதுநறுத்துளிக்குந்தைநமலர்ச்சாகையம்பொதும்பர்.

(இ-ள்.) தண் தளிர் துவன்றி புது நறு துளிக்கும் ததை மலர் சாகை அம் பொதும்பர் - நண்ணிய தளிர்களால் நெருங்கப்பட்டுப் புதிய தேனைச்சிந்தும் பொலிவமைந்த மலர் நெருங்கிய கிளைகளையுடைய அழகிய சோலைகளில், வண்டல் ஆட்டு அயரும் வாள் மருள் நெடும் கண் மங்கையர் நெரி சுரி கூந்தல் கொண்டலை - விளையாடும் வாள் மயங்கும் நெடியகண்களையுடைய பெண்களது நெரித்த கடைகுழன்ற மேகமாகிய கூந்தலை, காணும் தொறும் தொறும் அவர் தம் கோமளச்சாயலுக்கு உடைந்து தொண்டு பூண்டு எதிர்நின்று ஆடுவது எய்ப்ப தோகை மாமயில் நடம் குயிற்றும் - அப்பெண்களுடைய மென்மைவாய்ந்த சாயலுக்குத்தோற்று அடிமைபூண்டு எதிரேநின்று ஆடுதலையொப்பக் கலாபத்தையுடைய பெருமைவாய்ந்த மயில்கள் நடனஞ்செய்யாநிற்கும்.

சோலைகளிற் பெண்கள் கூந்தலை மேகமாக மயில் கருதியாடுதலை, அவர்கள் சாயலுக்குத்தோற்று வேறே தாம் போதற்கு இடமில்லாமையால் அவர்களுக்கு அடிமைப்பட்டு ஆடியது எனக்கவி அத்தியவசயித்தலால் இதுவும் அவ்வணி. தொறும் தொழின் பன்மைப்பொருளில்வந்த இடைச்சொல். தொறுந்தொறும் என்னும அடுக்கு பன்மைப்பொருள்மேல் நின்றது. (அ)

வாம்பெருந்திரையதடம்புடையுடுத்தவளம்பொழிற்சாகைகடோறுந்
தீம்புனல்குடையுமாதரார்முன்னுட்செறித்தபட்டாடைபொன்னணிகள்
பூம்புனலகத்திற்றோன்றலுமிளையோர்புனலரமகளிரென்றஞ்சிக்
கூம்பியகரத்தரங்கலார்நகைப்பக்குலைமிசைநோக்கிவெள்குவரால்.

(இ-ள்.) வாம் பெருந் திரைய தடம் புடை உடுத்த வளம் பொழில் சாகைகள் தோறும் - தாவாநின்ற பெரிய அலைகளையுடைய தடாகங்களின் பக்கத்தே சூழ்ந்த வளம்வாய்ந்த சோலையின்கிளைகள்தோறும், தீம் புனல் குடையும் மாதரார் முன்னாள் செறித்த பட்டாடை பொன் அணிகள் பூம் புனல் அகத்தில் தோன்றலும் - இனியபுனலில் நீராடும் பெண்கள் முன்னுளில் நெருங்கச் சேர்த்த பட்டாடையும் பொன்னுபாரணமும் பொலிவமைந்த அத்தடாகப் புனலிற்றோன்ற, இளையோர் புனல் அரமகளிர் என்று அஞ்சி கூம்பிய கரத்தர் அங்கலார் குலை மிசை நோக்கி நகைப்ப வெள்குவர் - இளமை

வாய்ந்த புருடர்கள் அப்பிரிதிவிம்பங்களை நீரரமகளிரொன் றச்சங்கூர்ந்து தலைமேற்குவி த்தகையை யுடையவர்களாகப் பெண்கள் அவரொடு கரைமேல் நின்று நோக்கிப்புன் னகைசெய்ய அப்புருடர்கள் நாணங்கூர்வார்கள்.

கரத்தர் என்னுங் குறிப்புவினைமுற்று "பாயுமாரிபோற் பகழிசிந்தினர்" என் பதில் சிந்தினர் என்னுந் தெரிநிலைவினைமுற்றுச் சிந்த என்னும் எச்சம் ஆதல்போலக் கரத்தராக என எச்சம் ஆயிற்று. பட்டாடையும் ஆரணமுந் தடாகத்திற் பிரதிபிம்பித் தலை நீரரமகளிரொன்று புருடர்மயங்குதலால் மயக்கவணி. வளம்பொழில் வல்லெழுத்து மிகும்வழி மெல்லெழுத்து மிக்கது. (கூ)

கொங்கவிழ்பொதும்பர்க்கொழுமுகையுடைந்துகுளிர்மதுச்சொரிதலினாழ்ந்
பங்கயச்சேக்கைமீமிசையெகினம்பைப்பையமேனிவந்தெழுவ [த
பொங்குவெம்பாவக்கருமுருட்டமணற்புணரியுட்சிலையுடனமிழ்ந்து
மெங்கள்வாகீசரஞ்செழுத்தருளாலெழுந்துமேல்வயங்குதன்மானும்.

(இ-ள்.) கொங்கு அவிழ் பொதும்பர் கொழு முகை உடைந்து குளிர் மது சொரிதலின் - மகரந்தம் பரந்த சோலைகளில் கொழுவிய அரும்புகளுடைபட்டுக் குளி ர்ந்த தேனைச்சிந்துதலால், ஆழ்ந்த பங்கய சேக்கை மீமிசை எகினம் பையபைய மேல் நிவந்து எழுவ - அத்தேன் பெருக்காலழுந்திய தாமரையாகிய படுக்கையின்மேல் அன னங்கள் மூழ்கி மெல்லமெல்ல மேலே நிவந்தெழுதல், பொங்கு வெம்பாவம் கரு முரு டு அமணால் - மிக்ககொடிய பாவச்செயலையுடைய கரியமுருடராகிய சமணரால், புண ரியுள் சிலையுடன் அமிழ்ந்தும் எங்கள் வாகீசர் அஞ்செழுத்து அருளால் எழுந்து மேல் வயங்குதல் மானும் - கடலில் அவர்கள் பிணித்துவிட்ட கற்றூணோடு ஆழ்ந்த எங்கள் வாகீசராகிய ஆளுடைய அரசுகள் ஸ்ரீ பஞ்சாக்கரத்தி னருளாலெழுந்து மேலே தோன் றுதலையொக்கும்.

மீமிசை ஒருபொருட் கிருசொல் - பையப்பைய பைப்பைய மரூஉ. கருமை இழிவின்மேல் நின்றது. எழுவவினை முற்றுப்பெயர். எகினம் ஆளுடையரசுகளாகவும், பங்கயச்சேக்கை கற்றூணாகவும், தடம் கடலாகவும், மேனிவர்தெழுதல் எழுந்துமேல் வயங்குதலாகவுங் கூறுதலால் ஒப்புமைக் கூட்டவுவமையணி. திருவாமூரில் வேளாளர் மரபில் திருவவதாரஞ்செய்து மருணீக்கியார் என்னும் பிள்ளைத்திருநாமம் வாய்ந்து பல கலையுங்கற்றுணர்ந்து ஊழ்வினையாற் சமண்சமயம் புகுந்து தருமசேனர் எனப்பெயர்வா ய்ந்தனர்; இவ்வாறிருக்குநாளில் இவர் பொருட்டு உயிர்விடாது சிவபணி செய்துவந்த இவர் தமக்கையாராகிய திலகவதியார் தமது தம்பியார் சமண்சமயத்திற் புகுந்துழல்வ தைத்தெரிந்து கவலைகூர்ந்திருக்குநாளில், சிவபெருமான் றிருவருளாற் சூலைநோய்வர அதைத் தடுக்கமுயன்றுந் தீராமல் தமது தமக்கையார் அனுமதியால் சிவபெருமானைய டைந்து திருப்பதிகமோதி யந்நோய்தீர்ந்து [திருநாவுக்கரசுகளென்னுந் திருநாமம் அப் பெருமானாற்பெற்று மனவாக்குக் காயங்களால் திருத்தொண்டுசெய்து திருவதிகையி லிருந்தனர்; இது கேள்வியுற்ற சமணர்கள் நம்மைவஞ்சித்துச் சைவசமயம் புகுந்தனனெ னத்தம்மரசனுக்குத் தெரிவித்து நீற்றறையிலிட்டும், பாலொடு நஞ்சுகலந்தூட்டியும், மிதிப்பிக்க மதங்கொண்ட யானையைத்தூண்டியும் இறவாதிருத்தலையுணர்ந்து கற்றூ ணிற்பிணித்து கடுக்கடலிலிட "சொற்றுணைவேதியன்" என்னும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தி ருப்பதிகம் ஓதி அந்தக் கற்றூணனது தெப்பமாக அதன்மேலிருந்து திருப்பாதிரிப்புலி யூரை யடைந்தனர் என்பது திருநாவுக்கரசு சுவாமிகள்புராணத்தில் வருதல்காண்க.

"அவ்வினைசெய்திடப்போகுமவருடன்போயருகந்த
வெவ்வினையாளருஞ்சென்றுமேவிடநாவுக்கரசர்

செவ்வியதாந்திருவுள்ளஞ்சிறப்பவவருடன்சென்றூர்
பவ்வத்தின்மன்னவன்சொன்னபடிமுடித்தாரப்பதகர்.

சொற்றுணைவேதியனென்னுந்தூய்மொழி
நற்றமிழ்மாலையாநமச்சிவாயவென்
றற்றமுன்காக்குமைந்தெழுத்தையன்பொடு
பற்றியவுணர்வினுற்பதிகம்பாடினூர்.

அப்பெருங்கல்லுமங்கரசுமேற்கொளத்
தெப்பமாய்மிதத்தலிற்செறித்தபாசமுந்
தப்பியததன்மிசையிருந்துதாவில்சீர்
மெய்ப்பெருந்தொண்டரும்விளங்கித்தோன்றினூர்." என அப்புராணத்
தில் வருதல்காண்க. (க0)

கலிவிருத்தம்.

முறைமுறைபணைக்கைநீர்முகந்துவாய்மடீஉ

பிறைமருப்பொருத்தன்மாமதப்பெருக்கினுற்
குறைதடநிறைதடமாக்குங்கொள்கைத்தே.

(இ-ள்.) நீண்ட வெண் பிறை மருப்பு ஒருத்தல் மா - நீண்டவெள்ளிய இளஞ் சந்திரனையொத்த கொம்பினை யுடைய ஆண்யானை, முறை முறை பணைகை நீர் முகந்து வாய் மடீஉ நிறை தடம் குறை தடம் ஆக்கும் - முறைமுறையாகப் பணந்துண்டையொத்த துதிக்கையால் நீரினைமொண்டு வாய்மடுத்து நீர் நிறைந்த தடாகங்களை நீர்குறைந்ததடாகங்களாகச் செய்யாநிற்கும், மாமதப் பெருக்கினுல் குறை தடம் நிறை தடம் ஆக்கும் கொள்கைத்து - பெரிய மதப்பெருக்கினுல், நீர்குறைந்த அத்தடாகங்களை நீர்நிறைந்த தடாகங்களாகச்செய்யுங் கொள்கையை யுடையது.

யானைபருகுதலால் நிறைதடம் குறைதடம் ஆகும் எனவும், யானைமதப்பெருக்கினுல் குறைதட நிறைதடமாகு மெனவும் கூறுதலால் ஏதுவணி. பருகுதலும் மதப்பெருக்குங்காரணம். குறைதடமாதலும் நிறைதடமாதலுங் காரியம். (கக)

தாமுறையிடந்தரியலர்கட்கீந்தவர்
தாமுறையிடங்களிற்றங்கிளைக்குலந்
தாமுறப்பரிவருத்தனைசெய்வேழங்க
டாமுறைமுறைதிரிதண்டமெண்ணில.

(இ-ள்.) தாம் உறை இடம் தரியலர் கட்கு ஈந்து அவர் தாம் உறை இடங்களில் - தாம் வசிக்குங் காட்டிடத்தைப் பகைவர்களுக்குக் கொடுத்து அவர்கள் வசிக்கும் இடங்களில், தம் கிளை குலம் தாம் உற பரிவருத்தனை செய் வேழங்கள் தாம் - தமது யானையின் கூட்டங்கள் தாம் வசிக்கப் பரிவருத்தனைசெய்யும் யானைகள், முறைமுறை திரிதண்டம் எண்ணில - முறை முறையாக உலவும் யானைசெல்லும் வழிகள் அளவிறந்தன.

காடாகிய இழிந்த பொருளைக்கொடுத்து நாடாகிய உயர்ந்த பொருளைப்பெறுதலால் மாற்று நிலையணி. இதனைப் பரிவருத்தனை யணியெனவும், பரிவிர்த்தியணியெனவுங் கூறுவர். (கஉ)

மழைப்புனறங்கண்மேலூற்றுமாமுகி
லுழைச்செலவெகுண்டெதிரிறைப்பதொப்பநீள்

புழைக்கையினிறையநீர்முகந்துபோர்மதத்
தழைச்செவிக்கரிகள்விண்டலத்துவீசுவ.

(இ-ள்.) போர் மதம் தழை செவி கரிகள் - போர்த்தொழிலையும் மதப்பெருக்கையுடைய செவிகளையும் உடைய யானைகள், மழை புனல் தங்கள் மேல் ஊற்றும் மா முகில் உழை செல்ல வெகுண்டு எதிர் இறைப்பது ஒப்ப - மழைநீரைத் தங்கள்மேற் பெய்யும் பெரிய மேகத்தினிடத்திற்செல்லத் தாங்கோபித்து எதிரே நீரிறைத்தலை ஒப்ப, நீள் புழை கையின் நிறைய நீர் முகந்து விண் தலத்து வீசுவ - நீண்ட துவாரம் பொருந்திய துதிக்கைகளால் நீர்நிறைய மொண்டு ஆகாயத்தில் வீசாநின்றன.

தழையென்னு முசனிலைத்தொழிற்பெயர் வெள்ளத்தின்மேல் நிற்றலால் தொழிலாகுபெயர். தமக்கு இடையூறுசெய்த மேகத்திற்கு யானைகளிடையூறுசெய்தனவெனக்கூறுதலால் தருதியணி. (கங)

கறையடிச்சுவடெனுங்கனகவட்டில்க
ணிறையவாக்கியமதநீரைச்செல்வர்போற்
சிறையளிக்குலமெலாந்தெவிட்டவுண்டுவாழ்ந்
தறைபெருவளத்தனவாம்பல்வீதியே.

(இ-ள்.) ஆம்பல் வீதி - யானைசெல்லும் வீதிகள், கறை யடி சுவடு எனும் கனக வட்டில்கள் நிறைய வாக்கிய மதநீரை - (யானைகள்) உரலையொத்த தமது காற்சுவடென்னும் பொன்வட்டில்களில் நிறையவார்த்த மதநீரை,செல்வர்போல் சிறை அளிக்குலம் எல்லாம் தெவிட்ட உண்டு வாழ்ந்து அறை பெரு வளத்தன-செல்வ வான்களைப்போலச் சிறகினையுடைய வண்டின் கூட்டங்களெல்லாம் தெவிட்டவுண்டு வாழ்ந்து ஒலிக்கும் பெரிய வளத்தையுடையன.

யானைகள் செல்லும் வீதியில் அவற்றின் சாற்சுவடுதோய்ந்த இடங்கள்தோறு மதநீர் பெருகியிருப்பதாகக் கூறுதலால் மிகுதி நவிற்சியணி. (கச)

கொடையினிற்கீழ்ப்படுங்கொண்டல்யாவையுந்
தடைபடச்சிறையிலிட்டாங்குச்சார்கடு
நடையிருமுறச்செவிநான்றவாய்க்களி
றடையவும்பிணித்தனவளவில்கூடமே.

(இ-ள்.) அளவில் கூடம் - அளவில்லாத யானைக்கூடங்கள், கொடையினில் கீழ்படும் கொண்டல் யாவையும் தடைபட சிறையில் இட்டால் ஆங்கு - கொடையில் தமக்குக் கீழ்ப்பட்ட மேகங்களெல்லாவற்றையும் தடைபடும்படி சிறையில் வைத்தாற் போல, சார் கடு நடை இரு முறம் செவி நான்ற வாய் களிறு அடைய பிணித்தன-பொருந்திய கடிய நடையையும் இரண்டு முறங்களையொத்த காதுகளையும் தொங்கியவைசயும் வாயையுமுடைய யானைகளை யொருசேரக்கட்டின.

உடையவர் தொழிலை யுடைமைமேலேற்றிக் கூடம் பிணித்தன என்றார். கூடமுடையவர் தொழில் தமது கொடையால் மேகத்தைப் புறங்காணுதலும் கட்டுதலுமாம். உம்மை சாரியை யிடைச்சொல். நகரில் வாழ்வோர் தமது கூடங்களில் யானைகளைக்கட்டியிருத்தலைத் தமது கொடைக்குப் புறங்கொடுத்த மேகங்களைப்பற்றிச் சிறை வைத்ததாக அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (கரு)

கரியுமிழ்விலாழியுங்காய்சினக்கடும்
பரியுமிழ்விலாழியும்பாய்ந்துசேறுசெய்
தெருவெலாமநலார்சிறடிச்சுவ
டுருகெழுதாமரைத்தோற்றமொக்குமே.

(இ-ள்.) கரி உமிழ் விலாழியும் காய்சினம் கடும் பரி உமிழ் விலாழியும் பாய்ந்து சேறு செய் தெரு எல்லாம் - யானையுமிழும் வாய்நுரையும் காயுங் கோபத்தையுங் கடுநடையையுமுடைய குதிரைகளுமிழும் வாய்நுரையும் எங்கும் பாய்ந்து சேறுசெய்யுந் தெருக்களிலெல்லாம் தோய்ந்த, அ நல்லார் சீறடி சுவடு உரு கெழு தாமரை தோற்றம் ஒக்கும் - அந்நகரிலுள்ள பெண்களது சிற்றடிச்சுவடானது வடிவமிக்க தாமரையின் பொலிவினை யொத்துத்தோன்றும்.

பெண்கள் காற்சுவட்டின்றோற்றம் தாமரைத்தோற்றம்போலும் எனக்கூறுதலால் தொழில்பற்றிவந்த அதிசயவுவமையணி. (கசு)

சுலவுகொய்யுளையடிச்சுவடுதோறுமேற்
கலனையினுக்கசெம்மணிகதிர்ப்பன
பலசுடர்த்தகழிகள்பரப்பிவைத்தெனக்
குலவுநல்வளத்தனகுந்தவீதியே.

(இ-ள்.) குந்தம் வீதி - குதிரைகள் செல்லும் வீதிகள், சுலவு கொய்யுளை அடி சுவடு தோறும் மேல் கலனையின் உக்க செம்மணி கதிர்ப்பன - கொள்ளிவட்டமாகச் சுழன்றுசெல்லுங் குதிரைகளின் காற்சுவடுகள்தோறும் அக்குதிரைகளின்மேலுள்ள கல்லணையினின்றுஞ் சிந்திய செவந்த மாணிக்கங்கள் விளங்குதல், பல சுடர் தகழிகள் பரப்பிவைத்தால் என்ன குலவு நல் வளத்தன - பலவிளக்குகளைப் பரப்பிவைத்தாற்போல விளங்கும் நல்ல வளங்களையுடையன.

குதிரையின் காற்சுவட்டைத் தகழியாகவும், மாணிக்கங்களைத் தீபங்களாகவுங் கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணியும், கலனையினின்று மணிகள் சிந்துவனவாகக்கூறுதலால் செல்வமிகுதியைப் புகழ்ந்துகூறுதலில் வீறுகோளணியுங் கலந்துவருதலால் கலவையணி. (கஎ)

மல்லமைமயில்களைவானரங்களைப்
புல்லியமுயல்களைப்பொருசரங்களை
வல்லவாபுறக்கொடைகண்டவான்கதிப்
பல்லியற்புரவியின்பந்தியாயிரம்.

(இ-ள்.) மல்லமை மயில்களை வானரங்களை புல்லிய முயல்களை பொருசரங்களை - மல்லமையு மயில்களையுங் குரங்குகளையும் அற்பத்தன்மையையுடைய முயல்களையும் போர்செய்தற்குரிய பாணங்களையும், வல்ல ஆறு புறக்கொடை கண்ட வான் கதி பல் இயல் புரவியின் பந்தி ஆயிரம் - (வெற்றிகொள்ளுதலில்) வல்லபடி அவற்றை முதுகுகண்ட பெரிய கதிகளையுடைய பல இலக்கணமமைந்த குதிரையின் பந்திகள் அளவில்லாதன.

ஆயிரம் என்றது அளவின்மைமேல் நின்றது. தமது கதியில் ஒப்பாயுள்ளவற்றை வென்றன என உபமானத்திற்குக் குறைவுதோன்றக்கூறுதலால் எதிர்நிலையணி. (கஅ)

மதக்கரிதனைமுயல்வயங்கொள்காதையைப்
புதுக்கவீங்கிருளொளிப்பொலிவைப்பற்றியீர்த்

தநிர்ப்பதென்றுளங்கொளக்கரியவாங்குர
கதத்தொகைபற்றுபொற்றேர்கணக்கில.

(இ-ள்.) மதம் கரி தனை முயல் வயம் கொள் காதையை புதுக்க - மதத்தையுடைய யானையை முயல் வெற்றிகொள்ளும் பழங்கதையைப் புதுக்க, வீங்கு இருள் ஒளி பொலிவை பற்றி ஈர்த்து அதிர்ப்பது என்று உளம் கொள-மிக்க இருளானது ஒளிமிகுதியைப்பற்றியிழுத்து ஒலிக்கின்றதென்று கண்டோர் கருத, கரிய ஆம் குர கதத்தொகை பற்று பொற்றேர் கணக்கில - கரிய நிறத்தினையுடையனவாகிய குதிரையின் கூட்டங்கள் பிடித்திழுக்கும் பொன்னாலாகிய தேர்கள் அளவில்லாதன.

யானையை முயல் வெற்றிகொள்ளுந் தானம் பொதுத்தானங்களிலொன்றாதலால் மதக்கரிதனை முயல் வயங்கொள்காதை எனவும், இது பழங்கதையாதலால் இன்று யாவர்க்கும் புலப்படச்செய்தலால் இருள் ஒளியைப்பற்றி இழுத்தல்போலக் கரிய குதிரை பொற்றேரைப்பற்றி யிழுக்கும் எனவுங்கூறினார். இது பின்சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப்பொருளால் முன்சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி.

"வானுடர்வார்த்தைசெவிப்புலனுமொன்றின்மதகரியைமுயலூக்கித்தூரக்குமொன்றின் மேனகருலகுவிழிப்புலனுமொன்றின்மேவினர்க்குத்திசைமயக்கமேவுமொன்றிற் [ல் கானார்நெய்யின்றிவிளக்கெரியுமொன்றிற்பாதலத்தோர்கழறுமொழிகேட்குமொன்றி ஆனதுதுந்துமிகண்முழங்குமொன்றிலாகவேழ்பொதுத்தானம்வயங்குமாலோ" எனவிந்நூலில் விம்மிதப்படலத்தில் வருதல் காண்க. (கக)

எரிமணிச்சோதியுண்மூழ்கியீர்த்துச்செல
பரிகளைக்காண்கிலர்பார்த்துச்சூரனூர்
திருவுடையிந்திரஞாலத்தேர்கொலென்
றுருகெழச்செல்லுதேருலப்பில்வீதியே.

(இ-ள்.) எரி மணி சோதி உள் மூழ்கி ஈர்த்து செல் பரிகளை காண்கிலர் பார்த்து - தீப்போல விளங்கும் மாணிக்கத்தினொளியுள்ளே முழுகி இழுத்துச்செல்லுங் குதிரைகளைக்காணாது தேரைப்பார்த்து, சூரன் ஊர் திருவுடை இந்திரஞாலத்தேர் கொல் என்று உருகெழ செல்லு தேர் உலப்பு இல் வீதி - சூரபன்மா நடத்துஞ் செல்வத்தையுடைய செல்வமிக்க இந்திரஞாலத்தேரோ என்று அச்சமிகச்செல்லுந் தேர்கள் நீங்காத

இந்திரஞாலம் கண்களுக்குப் புலப்பட்டு மறைவது, அதுவே சூரனுக்குத் தேராச்சமைதலால் இந்திரஞாலத்தேர் என்றார். சூரபன்மன் வீரயாகஞ்செய்து சிவபெருமானிடத்துப் பலவரங்களையும் பெற்று இந்திரஞாலத்தேரையும் பெற்றனன் என்பது கந்தபுராணவரலாறு.

"எண்டொகைபெற்றிடுகின்றவவ்வண்டப்பரப்பெங்குமேகும்வண்ணந் திண்டிறல்பெற்றிடுகின்றவிந்திரஞாலமதென்னுந்தேருநல்கி" எனவரும் அப்புராணத்தாலறிக. குதிரையைப்பாராது தேரைப்பார்த்துச் சூரனது இந்திரஞாலத்தேரோவென்று மயங்கினமையால் மயக்கவணி. (உo)

நால்வகைநிலையினுற்பயிலுநாமவில்
வேல்வளைபலகைவாள்கற்கும்விஞ்சையர்
கோலவான்விஞ்சையர்குழாங்களேக்குபு
சால்பினைவியத்தருதலைமைப்பாலரோ.

(இ-ள்.) நால் வகை நிலையினால் நாமம் பயிலும்வில் வேல் வளை பல கை வாள் கற்கும் விஞ்சையர் - பைசாசமுதலிய நான்குவகைகளி னிலைமையால் அச்சந்தரும் வில்லையும் வேலையும் சக்கரத்தையும் கேடகத்தையும் வாளையும் ஏந்திக்கற்கும் வித்தை பயில்வோர், கோலம் வான் விஞ்சையர் குழாங்கள் நோக்குபு சால்பினை வியத்தகு தலைமைப்பாலர் - அழகிய விண்ணுலகிலுள்ள வித்தியாதரர் கூட்டங்கள் பார்த்துத் தமது தன்மையை யதிசயிக்கத்தகுந்த தலைமைத்தன்மையையுடையோராவார்.

பைசாசமுதலிய நால்வகை நிலைகளாவன. பைசாசம், மண்டிலம், ஆலீடம், பிரத்தியாலீடம். பைசாசம் ஒருகால் நிலைநின்றொருகால்முடக்கி யம்பினையெய்தல். மண்டிலம் இருகாலும் பக்கல் வளையமண்டிலித்தெய்தல். ஆலீடம் வலக்கால் மண்டிலித்திடக்கால் முன்வைத்தெய்தல். பிரத்தியாலீடம் வலக்கால் முன்வைத்திடக்கால் மண்டிலித்தெய்தல்.

" ஒருகாணிலைநின்றொருகால்முடக்கும் - பரிசாயநிலையது பைசாசநிலையே. இருகால்மண்டிலித்திடுதல்மண்டிலநிலை. வலக்கான்மண்டிலித்திடக்கால்முந்துறில் - அதற்பெயராலீடநிலையதாகும். வலக்கான்முந்துற்றிடக்கால்மண்டிலித்-திடற்பெயர்பிரத்தியாலீடநிலையே" எனவரும் பிங்கலத்தாலறிக. (உக)

கிம்புரிபுரசைகள்கிடுகுகூவிர
மம்பொனிற்கலனைகுப்பாயமாதிய
வெம்படையேனவும்வேறுவேறுசெய்
பம்பியவினைஞர்வாழிடம்பல்லாயிரம்.

(இ-ள்.) கிம்புரி புரசைகள் கிடுகு கூவிரம் அம் பொன்னில் கலனை குப்பாயம் ஆதிய - யானைக்கொம்பின் பூணும் யானைகளின் கழுத்திடு கயிறுகளும் தேரின் மரச்சுற்றுகளும் தேர்க்கொடிஞ்சிகளும் அழகிய பொன்னாலமைந்த கல்லணைகளும் சட்டைகளு முதலாகிய, வெம்படை ஏனவும் வேறு வேறு செய் பம்பிய வினைஞர் வாழ் இடம் பல்லாயிரம் - கொடிய ஆயுதங்களும் அவையொழிந்தனவும் வெவ்வேறாகச்செய்யும் நெருங்கிய தொழிலையுடையோர் வாழும் இடங்கள் அளவிறந்தன.

புறநகரிலுள்ளோர் செயல்களிவையாதலால் வேறுவேறு செய் பம்பிய வினைஞர் வாழிடம் என்றார். இது புறநகரினிலக்கணமாதலால் சாதித்தன்மையணி. (உஉ)

இடைநகர்.

நடைநகமுதலியவுலவுநாமநீர்ப்
புடைநகர்வளமிதுபுகன்றும்திங்களே
ருடைநகமழைநிகரோதியார்பயி
லிடைநகர்வளமினியியம்பலுற்றதே.

(இ-ள்.) நடை நகம் முதலிய உலவும் நாம நீர் புடை நகர் வளம் இது புகன்றும்- யானைகள் முதலியன சஞ்சரிக்கும் அச்சத்தைத்தரும் நீர்ப்பெருக்குச்சூழ்ந்த புறநகரின் வளப்பத்தை யிதுகாறு மெடுத்துச்சொன்னோம், இனி இயம்பல் உற்றது திங்கள் ஏர் உடை நகம் மழை நிகர் ஓதியார் பயில் இடை நகர் வளம்-இனிநாம் எடுத்துக்கூறத்தொடங்கியது அர்த்தசந்திரனைப்போலும் அழகுவாய்ந்த நகத்தினையும் மேகத்தையொத்த கூந்தலையும் உடைய பெண்கள் பயிலும் இடைநகரின் வளமாம்.

நகம் மலை. நடை என்னும் அடைதந்து உருவகமாக்கி யானையைக்கூறுதலால் சிறப்புருவகவணி. புடைநகர் வளமிது புகன்றும் என்றது முடிந்தது முடித்தலும், இனியியம்பலுற்றது இடைநகர் வளம் என்றது நுதலிப்புகுதலும் என்ற உத்திகளாம். (உ௩)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குடமுலைக்கெதிரொன்றோதுங்குரும்பையைவெகுண்டுமின்னார்
பொடியிடியுலக்கைமீப்போய்ப்புடைத்தனமீளாமுன்ன
முடிமிசையதிரத்தாக்கிச்சிந்துமுப்புடைக்காய்த்தெங்கீங்
கிடரிடர்க்கெதிர்செய்வோரின்வியத்தகவெங்குமோங்கும்.

**(இ-ள்.)** குடம் முலைக்கு எதிர் என்று ஓதும் குரும்பையை மின்னார் வெகுண்டு பொடி இடி உலக்கை மீ போய் புடைத்தன மீளா முன்னம் - தமது குடத்தையொத்த முலைக்கு எதிரொன்று சொல்லப்படுந் தென்னங்குரும்பையை மின்னலையொத்த பெண்கள் கோபங்கூர்ந்து சுண்ணப்பொடியை யிடிக்கும் உலக்கையை மேலோச்சச்சென்று மோதித் திரும்புதற்கு முன்னமே, முடிமிசை அதிர தாக்கி சிந்து முப்புடைக்காய் தெங்கு-தலையின்மீதே அதிரமோத வுதிர்க்கும் இளநீரையுடைய தெங்குகள், ஈங்கு இடர்க்கு எதிர இடர் செய்வோரின் வியத்தக எங்கும் ஓங்கும் - இந்நிலவுலகில் துன்பஞ்செய்வோர்க்கு எதிரே துன்பஞ்செய்வோரைப்போல அதிசயிக்க எவ்விடங்களிலும் மிக்கு விளங்கும்.

முப்புடைக்காய் மூன்றுபக்கங்களில் புடைப்பினையுடைய காய். புடைத்தன முற்றெச்சம். தாக்கி செயவெனெச்சத்திரிபு. முலைக்கு ஒப்பென்று கருதிய தென்னங் குரும்பையைப் பெண்கள் சுண்ணப்பொடியை யிடித்தற்கெடுத்த உலக்கை மேலே சென்று அக்குரும்பையைத்தாக்க, அதற்கு எதிராக அவர்கள் தலைமேல் தெங்கு காய் சிந்தியதென முன்சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப்பொருளால் இடரினுக்கு இடர்செய்வோரின் எனப் பின்சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. (உச)

கோல்வளைகறங்கக்கொங்கையசைதரக்குலையக்கூந்தன்
மேலணிகலகலென்னவியர்வெழவுயிர்ப்புநீள
வால்வரிப்புனைபந்தாடுமாதரார்செயல்காண்டோறுங்
கால்வரிகழலினோர்க்குக்காமமீக்கூருமாதோ.

(இ-ள்.) கோல் வளை கறங்க கொங்கை அசை தர கூந்தல் குலைய மேல் அணி கலகலென்ன வியர்வு எழ உயிர்ப்பு நீள - கோல்போலத் திரண்ட வளையல்கள் ஒலிக்கவும் கொங்கைகளசையவுந் தமது கூந்தலவிழ்ந்து சோரவும் தம்மேலணிந்த ஆபரணங்கள் கலகலென்று ஒலிக்கவும் வேர்வை யெழவும் பெருமூச்சு அதிகரிக்கவும், வால் வரி புனை பந்து ஆடும் மாதரார் செயல் காண் தோறும் கால் வரி கழலினோர்க்கு காமம் மீ கூரும் - வெள்ளிய வரிந்து புனைந்த பந்தினையாடும் பெண்களது செயலைப்பார்க்குந் தோறுங் காலிற்கட்டிய வீரகண்டையையுடைய புருடர்களுக்குக் காமமீதூரும்.

கறங்கல், அசைதல், குலைதல், கலகலெனல், வியர்வெழல், உயிர்ப்புநீளுதல் முதலிய தொழில்கள் தம்முள் வேறுபாடில்லாமல் ஒருகாலத்திற் கூடுங் கூட்டமாதலால் கூட்டவணியும், இவைகள் தோன்றப் பெண்கள் பந்தாடுஞ் செயலைக் காணும் புருடர்க்குக் காமமீக்கூர்தலால் ஏதுவணியும் கூறுதலில் கலவையணி. (உரு)

தமதுருநிறத்தைவவ்வுந்தருக்கறிந்தொறுப்பார்போலத்
தமனியந்தகர்த்தசுண்ணமொருவர்மேலொருவர்வீசத்
தமனியச்சுண்ணமெங்கும்பரந்தனதவழ்நலாமே
தமனியவுலகந்தன்னையசிப்பனதடந்தேர்வீதி.

(இ-ள்.) தமனியம் தமது உரு நிறத்தை வவ்வும் தருக்கு அறிந்து ஒறுப்பார் போல - பொன்னனது தமதுருவின் பொலிவைக் கொள்ளைகொள்ளுஞ் செருக்கினைய றிந்து தண்டிப்பவர்போல, தகர்த்தசுண்ணம் ஒருவர்மேல் ஒருவர் வீச - அதனையுடை த்த சுண்ணப்பொடியை யொருவர்மே லொருவர்வீசி விளையாட, தமனியம் சுண்ணம் எங்கும் பரந்தன தவழ்தலால் - அப்பொற்சுண்ணம் எங்கும் பரவித்தவழ்தலால், தட தேர் வீதி தமனிய உலகந்தன்னை அசிப்பன - பரந்ததேர் செல்லும் வீதிகள் பொன்னு லகத்தை நகையாடுதலை யொத்திருந்தன

சுண்ணமாக்கப் பொற்கட்டிகளைத் தகர்த்தலைத் தமதுருவினிறத்தைக் கவர்ந்த தென்றுதெரிந்து தண்டித்தற்கு ஒக்கும் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், பொற்சுண்ணந் தவழ்தலால் வீதி நகையாடுதல்போலும் என்றமையால் ஏதுவுவமைய ணியும் கலந்துநிற்றலில் கலவையணி. பரந்தன முற்றெச்சம். (உ௬)

எரிமணி சோதிகாலவிருள்வரவறியாமாடத்
தரிவையர்கூந்தலூட்டுமகிற்புகைநாகத்தெய்திப்
பெரிதிருள்விளைப்பநோக்கும்பெற்றியோர்தட்டுமாறு
மரீஇயினவுலகமென்னேயெனமனமருள்வரம்மா.

(இ-ள்.) எரி மணி சோதி கால இருள் வரவு அறியா மாடத்து அரிவையர் கூந் தல் ஊட்டும் அகில் புகை நாகத்து எய்தி பெரிது இருள் விளைப்ப - தீப்பொரிபோலும் மாணிக்கங்கள் ஒளியைக் கக்குதலால் இருள் வரவினையறியாத மாடத்தில் பெண்கள் கூந்தலுக் கூட்டும் அகிலின் புகை விண்ணுலகத்தை யடைந்து மிகவும் இருளைத்தர, நோக்கும் பெற்றியோர் தட்டு மாறு உலகம் மரீ இயின என்னே என மனம் மருள்வர் - அதனைப்பார்த்த தன்மையையுடைய தேவர்கள் நமது பொன்னுலகும் நிலவுலகமுந் தட் டுமாறி மருவின இது யாது காரண மென்று மனமயங்குவார்கள்.

மாணிக்கம் ஒளியை வீசுதலால் இருள் வருகையில்லாத என்றமையாற் குணவ திசயவணியும், இங்குப் பெண்கள் கூந்தலுக்கு ஊட்டும் அகிற்புகை விண்ணுலகிற்செ ன்று இருளைப் பரப்ப விண்ணுலகு இருண்டமையால் அங்குள்ள தேவர்கள் நிலவுலகு விண்ணுலகாய்த் தட்டுமாறியதோவென்று மயங்கினமையால் மயக்கவணியுங் கலந்துவ ருதலிற் கலவையணி. (உ௭)

மாற்றவள்பூசையாற்றிவரம்பெறுமுறைமைகேளா
வேற்றமார்கங்கையாளுங்கம்பர்பால்வரத்திற்கெய்திச்
சாற்றருங்கச்சிமூதூர்வலங்கொளுந்தகைமைத்தாய
வாற்றல்சாலகழியாழமகலமாரளக்கவல்லார்.

(இ-ள்.) மாற்றவள் பூசை யாற்றி வரம் பெறு முறைமை கேளா எற்றம் ஆர் கங்கையாளும் - தனது மாற்றவளாகிய உமையம்மை பூசனையைச்செய்து வரம்பெற்ற முறைமையைக் கேள்வியுற்று உயர்ச்சியமைந்த கங்கைமாதும், கம்பர்பால் வரத்தி ற்கு எய்தி சாற்றரும் கச்சி மூதூர வலம் கொளும் தன்மைத்து ஆய - திருவேகம்பரிட த்துத் தானும்வரம்பெற அடைந்து சொல்லுதற்கரிய காஞ்சியென்னுந் தொன்றுதொட் டுள்ள ஊரைப் பிரதக்ஷிணஞ் செய்யுந் தன்மையையுடையதாகிய, ஆற்றல் சால் அகழி ஆழம் அகலம் அளக்கவல்லார் யார் - வலிமைமிக்க அகழியின் ஆழத்தையும் அகலத் தையும் அளவிடவல்லவர் யாவர்.

காஞ்சித்திருநகரை அகழிபுடைசூழ்தலை உமையம்மை காஞ்சியிற் சிவபிரானைப் பூசித்து வரம்பெற்றதைக்கேட்டுக் கங்காதேவியும் வரம்பெற அந்நகரில்வந்து பிரதக்ஷி

ணம்செய்தலை யொக்குமென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், வர்ணியத்தையு யர்த்திக்கூற அகழியினுழத்தையும் அகலத்தையும் அளக்கவல்லவரில்லை யென்றமை யால் இன்மைநவிற்சியணியுங் கலந்துவருதலிற் கலவையணி. கங்கைக்கு உமையம்மை யை மாற்றாள் என்றது—

"தொல்லையிலிறைவியங்கைத்தோன்றியகங்கைநீத்தம்
ஒல்லையிலுலகங்கொள்ளாதடக்கியவுண்மையன்றே
அல்லிருளனையகண்டத்தாதியங்கடவுண்முன்னோர்
மெல்லியறன்னைப்பேணிமிசைக்கொண்டானென்னுமாதோ" எனக்

கந்தபுராணத்திலும்,

உமையம்மை பூசித்தது—

"அகிற்புகைதீபமெல்லாமினிதளித்தரக்குநன்னீர்
மகிழ்ச்சியிற்சுழற்றிப்பல்கால்வலஞ்செய்துவணங்கிப்போற்றி
யிகப்பிலஞ்செழுத்துமெண்ணியின்னனபிறவுமாற்றி
முகிழ்த்தபேரன்பினுன்றபூசனைமுற்றச்செய்தாள்" என் இப்புராணத்தி

லும் வருதல்காண்க. (உஅ)

நெடிபடுபொதும்பர்சூழநிரைதிரைக்கரத்தாற்செம்பொற்
றடமதில்பொதியப்புல்லுந்தண்கிடங்கிறைவரேவக்
கடல்களைவளையநோக்கிக்கம்பனாயிறுகப்புல்லுஞ்
சுடர்ம

(இ-ள்.) நெடி படு பொதும்பர் சூழ நிரை திரை கரத்தால் செம்பொன் தட மதில் பொதிய புல்லும் தண் கிடங்கு - வண்டுகள் நெருங்கிய சோலைகள் புறத்திற்சூழ வரிசைப்பட்ட அலையாகிய கையினால் செவந்த பொன்னாலமைந்த பெரிய ம
இறுகப்புல்லுந் தண்ணிய நீர்க்கிடங்கு, இறைவர் ஏவ கடல் களை வளைய நோக்கி -
பிரானார் ஆற்றுமல் ஏவக்கடல்களை தன்னைச்சூழ வளையப்பார்த்து, கம்பனை இறுக புல் லும் சுடர் மணி கங்கை மானும் - கம்பனை யிறுகத்தழுவும் விளங்கும் இரத்தினங்களை யுடைய கங்காதேவியையொக்கும், துளித்த நீர் தழும்பு மானும்-அவ்வகழி மதில்மேற் றுளித்த நீர்தழும்பினையொக்கும்.

பொன்மதிலைச் சிவபிரானாகவும், நீர்க்கிடங்கினைக் கங்கையாகவும், புறத்திற் சூழ்ந்த சோலையைச் சிவபெருமான் ஏவிய கடல்களாகவும், அலைகளால் மதிலைத்தழுவுத லை அக்கடலுக்கு அஞ்சிக் கைகளாற் றழுவுவதாகவும், அம்மதிலின்மேற்றுளித்த நீர்த்து ளியைச் சிவபிரான்மேல் தழும்பிய தழும்பாகவுங்கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமை யணி. உமையம்மை சிவபூசை செய்யுங்காலத்துச் சிவபெருமானார் கம்பாநதியையேவ, அதற்கஞ்சி அப்பெருமானாைத்தழுவி முலைச்சுவடும் வளைச்சுவடுந் தந்ததுபோலக் கட லுக்கஞ்சிக் கங்காதேவி வளைச்சுவட்டைத்தந்தாள் என்பது கருத்து.

"மருமலர்த்தனிமாநீழல்வள்ளலார்மேன்மேலன்பு
பெருகியகருத்தினாட்குப்பேரருட்கருணைகூர்ந்த
யொருதிருவிளையாட்டாலேபத்தியினுறதிநோக்கித்
திருவருள்புரிவானெண்ணியிடத்திருவுள்ளஞ்செய்தார்.

விழுமியவண்டத்துள்ளும்புறத்ினும்விரவுதீர்த்தம்
முழுவதுமொருங்குநண்ணமுன்னினார்முன்னலோடும்
ஒழுகுநீர்க்கம்பையாற்றினுடன்விராய்க்கடைக்கால்வெள்ளம்
எழுவதுகடுப்பவெல்லாப்புனலும்வந்திறுத்தவன்றே" எனவும்,

"ஒருகொடியெழுந்துசெம்பொனுயர்வரைக்குடுமிதன்னை
இருகொழுந்திருபாற்போக்கித்தழீஇயெனவெழுந்துவல்லே
முருகலர்வேதியும்பர்த்தன்வலமுழந்தாளூன்றிக்
கருமணிப்பாவையன்னாள்கணவரைத்தழுவிக்கொண்டாள்.
மணிமலைக்குவட்டிரேண்டுவளைக்கையானெருங்கப்புல்லித்
தணிவருங்காதல்விம்மக்காதலிதழுவலோடுந்
திணியிருளறுக்குஞ்சோதித்திருவுருக்குழைந்துகாட்டி
அணிவளைத்தழும்பிரேண்டுமுலைச்சுவடணிந்தாரையர்" எனவும் இப்புரா
ணத்திலும் வருதல் காண்க. (உகூ)

திரையெறிதரளம்பாங்கர்த்திரண்டுவாலொளிகள்வீசிக்
குரைபுனல்குளிக்கும்வேழக்குழாத்தைவெண்கயமாச்செய்யக்
கரைமிசைக்காண்போரொன்னேயிம்மையேகடவுட்டன்மை
புரைதபத்தருமித்தீர்த்தமெனவிறும்பூதுகொள்வார்.

(இ-ள்.) திரை எறி தரளம் பாங்கர் திரண்டு வால் ஒளிகள் வீசி-அலைகளெறியு முத்துகள் பக்கத்திற்றிரண்டுவெள்ளிய கிரணங்களைவீசி, குரைபுனல்குளிக்கும் வேழம் குழாத்தைவெண்கயம் ஆகசெய்ய-ஒலிக்கும்நீரிற்குளிக்கும் கரியயானைகளை வெள்ளையா னையாகச்செய்தலால், கரைமிசை காண்போர் என்னே இம்மையே கடவுள் தன்மை புரை தப தரும் இ தீர்த்தம் என்ன இறும்பூதுகொள்வார் - கரையின்மேல்நின்றுகாண்போ ர் இதுஎன்னவியப்பு இப்பிறப்பிலேயே தெய்வத்தன்மையைக்குற்றந்தீர இத்தீர்த்தந்தா ராநிற்குமென்று வியப்படைவார்கள்.

அகழியில் அலைகளெறியு முத்துகள் வெள்ளிய ஒளியைப்பரப்புதலால் அவ்வக ழியினீரிற் குளித்தெழுந்த யானைகள் வெண்ணிறமடைந்து வெள்ளையானையாக எழு தலில் அவற்றைக் கரைமேலிருந்து கண்டோர் ஏனைய தீர்த்தம் மறுபிறப்பில் தெய்வத் தன்மையைத்தருவது,இத்தீர்த்தம் இப்பிறப்பிலேயே தெய்வத்தன்மையைத்தந்தது என அதிசயித்தலால் குணவதிசயவணி. (கூo)

கடம்படுகளிநல்யானைகுண்டகழ்கலக்கிக்கொட்பத்
தடங்கரையேறற்கார்த்துத்தாட்டொடர்பிணித்துப்பாக
ரிடம்படவிருபாலீர்ப்பவிருங்கடலமுதமுண்ணத்
தொடங்குநாட்சிலம்புநட்டுச்சுராசுரர்கடைதன்மான.

(இ-ள்.) கடம் படு களி நல் யானை குண்டு அகழ் கலக்கி கொட்ப - மதத்தால் மிக்க செருக்கினையுடைய நல்ல யானை ஆழ்ந்த அகழியைக்கலக்கிச் சுழலுதலால், தட கரை ஏறற்கு ஆர்த்து தாள் தொடர் பிணித்து பாகர் இடம் பட இருபால் ஈர்ப்ப-அது பெரிய கரையிலேறுதற்குக் காலிற் சங்கிலிபூட்டிப் பிணித்து யானைப்பாகர்களிருபா லும் விசாலமாக நின்று இழுத்தல், இரும் கடல் அமுதம் உண்ண தொடங்கு நாள் சில ம்பு நட்டு சுராசுரர் கடைதல் மான - பெரிய கடலில் அமுதமுண்ணும்படி தொடங்கி யநாளில் மந்தரகிரியை நாட்டித் தேவர்களும் அசுரர்களும் இருபாலும் நின்று கடைத லையொப்பத்தோன்றும்.

ஈர்ப்ப தொழில்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். தோன்றும் என்னும் வி னைமுற்றுப்பயனிலை தொக்குநின்றது. யானை மந்தரகிரியாகவும், அகழியைக் கடலாக வும், பாகரைச் சுராசுரர் ஆகவும், இழுத்தலைக் கடைதலாகவுங் கூறுதலால் ஒப்புமைக் கூட்ட வுவமையணி.

கடல் கடையும் வகையை—

"கடைகயிறடைதூண்
மெத்துசந்திரன்சுராசுரர்வேறுவேறுள்ளார்
கொத்திரண்டுபோல்வலிப்பவரோடதிகொடுத்துக்
கத்துவாரிதிமறுகுறவமிழ்தெழக்கடைமின்" எனவருதலால் காண்க. (௬௧)

நவமணிகொழித்துபொங்குநளிதிரையகழிநாப்பட்
கவளமாக்கடத்தயானைக்கணஞ்சுலாயுழக்குங்காட்சி
யுவர்படாப்பௌவமீதென்றுவந்துவந்தெழிலிதெண்ணீர்
சுவறவாய்மடுப்பக்கொட்குந்தோற்றமேயனையதம்மா.

(இ-ள்.) நவமணி கொழித்து பொங்கு நளி திரை அகழி நாப்பண் - மாணிக்கமுதலிய இரத்தினங்களைக் கரையிற்கொழித்துப் பொங்காநின்ற செறிந்த அலைகளையுடைய அகழியினடுவில், கவள மா கடத்த யானைகணம் சுலாய் உழக்கும் காட்சி - கவளங்கொள்ளும் பெரிய மதத்தையுடைய யானையின் கூட்டங்கள் சூழ்ந்து கலக்குந்தோற்றம், எழிலி உவா படாத பௌவம் ஈதென்று உவந்துவந்து தெள் நீர் சுவற வாய்மடுப்ப கொட்கும் தோற்றமே அனையது - மேகங்கள் உப்பமையாத கடலிதுவென்று மகிழ்ந்துவந்து தெள்ளிய நீர்வற்றப் பருகச்சுழலுந் தோற்றத்தை யொத்திருந்தது.

மாக்கடத்த யானை இரண்டும் வடசொற்களாதலால் மிகாதெனக்கருதிப் பிழைபட்டதாகக்கொண்டு மாகடத்தவெனத்திருத்தினவர் "கங்கைச்சடை" என்றாற்போல முன்னர் மதக்கரியென வந்ததைத் திருத்த மறந்தனர்போலும். யானைகள் அகழியில் கலக்குங்காட்சி மேகங்கள் அகழியை நல்ல தண்ணீர்க்கடலாகக்கருதி யதனைப் பருகச்சுழலுங் காட்சியை யொக்குமெனக்கூறுதலால் தொழிலுவமையணியும், மேகம் அகழியை நல்ல தண்ணீர்க்கடலாகக்கருதிப பருகச்சுழன்றதென்றலால் மயக்கவணியுங் கலந்துவருதலில் கலவையணி. (௬௨)

இத்தகையகழியென்னுமிதுவுமோர்கடலேயாக
வத்திறலிரட்டியென்றேழெனவறைவர்மேலோர்
தத்தலைக்கடைக்கால்வட்டஞ்சலதியுமிதுமன்றச்
சுத்தநீர்க்கடலென்றெண்ணியொருமையிற்றொகுத்தார்போலும்.

(இ-ள்.) இ தகை அகழி என்னும் இதுவும் ஓர் கடலே ஆக - இத்தன்மையையுடைய அகழியென்னு மிதுவும் ஒருகடலாயிருக்க, அத்திறல் மேலோர் இரட்டி என்றது ஏழ் என அறைவர் - அதனால் அறிவின்மேலோர் சுத்த நீர்க்கடல் இரட்டைப்பட எட்டென்று கூறுது உவர்க்கடல் முதலியவற்றோடுகூடி ஏழென்று கூறுநிற்பர், கடைக்கால் தத்து அலை வட்டம் சலதியும் இது மன்ற சுத்த நீர் கடலென்று எண்ணி ஒருமையில் தொகுத்தார் போலும் - ஏழென்னும் இறுதியில் உள்ள தாவிப்பாவும் அலைகளையுடைய வட்டமாகிய நன்னீர்க்கடலும் இவ்வகழியும் நிச்சயமாகச் சுத்தநீராதலால் சுத்தநீர்க்கடலென்று கருதிச் சாதியொருமையாற் றொகுத்து ஏழென வைத்தனர்போலும்.

ஒருசாதியாயுள்ள பலபொருள்களை ஒருமையாகக்கூறுதல் சாதியொருமை. அகழியும் ஒருகடலாக அதுகூட்டிக் கடலெட்டென்னுது தொன்றுதொட்டுப் பெரியோர் உவர்நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், நன்னீர் எனக் கடல் ஏழென வழங்கிவருதற்குக்காரணம் நன்னீர்க்கடலும் அகழியும் சுத்தநீராதலால் சாதியொருமைபற்றி இரண்டையும் ஒன்றாகக்கொண்டனர் என ஊகித்துணரவைத்தலால் உய்த்துணர்வைப்பணி.

நன்னீர்க்கடலிறுதியிலுள்ளது என்பது—

" பரவுமிவ்வுலகிலுப்புப்பாறயிர்நெய்யேகன்னல்
இரதமாமதுநீராகுமெழுகடலேழுதீவும்
வரன்முறைவிரவிச்சூழுமற்றதற்கப்பாற்சொர்ன
தரையதுசூழ்ந்துநிற்குஞ்சக்கரவாளசையம்" எனவருங் கந்தபுராணத்தாலறிக.

புடைபயில்பொதும்பர்த்தேனும்புனன்மலர்த்தேனும்பாய்ந்து
விடையவர்க்குமையாளாட்டவருமதுவேலையொக்குங்
குடநிகர்செருத்தன்மேதிகொட்புறச்சொரிந்தபாலா
லுடைதிரையகழிதீம்பாலளக்கருமுற்றலொக்கும்.

(இ-ள்.) உடை திரை அகழி - கரையொடு மோதியுடைந்த அலையையுடைய அகழியானது, புடை பயில் பொதும்பர் தேனும் புனல் மலர் தேனும் பாய்ந்து - பக்கத்திலமைந்த சோலையிலுள்ள தேனும் நீரில் மலர்ந்த மலரிலுள்ள தேனும் பாயப்படுதலால், விடையவர்க்கு உமையாள் ஆட்ட வரும் மது வேலை ஒக்கும் - இடபவாகனத்தையுடைய இறைவர்க்கு உமையம்மை யாட்டவரும் மதுக்கடலை யொத்துத்தோன்றும், குடம் நிகர் செருத்தல் மேதி கொட்புற சொரிந்த பாலால் தீம்பால் அளக்கரும் உற்றல் ஒக்கும் - குடத்தையொத்த மடியினையுடைய எருமைகள் விழுந்து சுழலச்சொரிந்த பாலினால் இனிய பாற்கடலும அங்குவந்து அடைந்தாலொக்கும்.

மலர்சொரிந்த தேனையும், வீழ்ந்து கலக்கிய எருமைகள் சொரிந்த பாலையும் அகழியுடைமையால் அதனை, உமையம்மை சிவபெருமானைப்பூசித்தற்கு மதுக்கடலும் பாற்கடலும் அங்குவந்தடைந்தமையை யொக்கும் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி.

உமையம்மை தேன்முதலியவற்றால் பூசித்தற்கு—

" இணங்கியநெய்பால்பெய்தவின்னமுதிசையால்கி
மணங்கமழெண்ணெய்க்காப்புமாநெல்லிமஞ்சட்காப்பு
மணங்கருங்கபிலையைந்தைந்தமுதுபல்குடத்துத்தீம்பால்
குணங்கெழுதயிர்நெய்செந்தேன்குளிரிளநீருமாட்டி" என இந்நூலில் வருதல் காண்க. (கஅ)

பழமுதல்பொருள்கள்விற்கும்பாவையர்நாளுமந்திப்
பொழுதினக்கலன்கழீஇயவண்டலாற்புனற்கிடங்கு
வழிபடுமுமையாளெந்தைக்காட்டுமாலியங்களொன்றுங்
கழிவுறாசூழத்தேங்கிக்கிடந்ததேகடுக்குமன்றே.

(இ-ள்.) புனல் கிடங்கு - நீர்மயமாகிய அகழிக்கிடங்கு, பழம் முதல் பொருள்கள் விற்கும் பாவையர் நாளும் அந்தி பொழுதின் அக்கலன் கழீஇய வண்டலால் - பழமுதலிய பொருள்களை விற்கும் பெண்கள் எந்நாளும் அந்திப்பொழுதில் அப்பொருள்களமைந்த கூடைகளைக் கழுவுதலால் வந்த சேற்றோடு கலத்தலில், வழிபடும் உமையாள் எந்தைக்கு ஆட்டும் மாலியங்கள் - யாவரும் வழிபாடுசெய்து வணங்கும் உமையம்மை இறைவர்க்கு ஆட்டிய நிர்மாலியங்கள், ஒன்றும் கழிவுறா சூழ தேங்கி கிடந்ததே கடுக்கும் - சிறிதுங் கழியாது சூழத் தேங்கிக்கிடத்தலையொக்கும்.

பழமுதலிய பொருள்களை விற்பவர் அந்திப்பொழுதில் அக்கூடைகளை வந்து கழுவுதலால்சேறடைந்த அகழியை உமையம்மை சிவபிரானுக்குத்திரு மஞ்சனமாட்டிய தீர்த்தம் நிர்மாலியங்களோடு தேங்கிக்கிடந்ததை யொக்குமென்று அத்தியவசயித்தலால்

தற்குறிப்பணி. கழிவுறு எதிர்மறைப்பன்மை வினைமுற்று எச்சமாய் நின்ற இடத்து வருமொழி வல்லெழுத்தியல்பாமாதலால் வருமொழி வல்லெழுத்தியல்பாயிற்று. (௬௫)

பாசடைக்கவயம்போர்த்துப்பகைஞரோடிகலித்தானும்
பூசலைவிளைப்பவன்னோர்கணைபொருபுழைகடோறுந்
தேசுறவெழுந்தசோரியாமெனச்செய்யகஞ்ச
மூசுவண்டீயினார்ப்பமொய்த்துளதகழித்தெண்ணீர்.

(இ-ள்.) அகழி தெள் நீர் - அகழியிலுள்ள தெள்ளிய நீரானது, பசுமை அடை கவயம் போர்த்து பகைஞரோடு இகலி தானும் பூசலை விளைப்ப - பசிய இலையாகிய கவசத்தைப் போர்த்துப் பகைவரோடு பகைத்துத் தானும் போர்த்தொழிலைச்செய்ய, அன்னோர் கணை பொரு புழைகள் தோறும் தேசு உற எழுந்த சோரி ஆம் என்ன - அப்பகைவர் அம்புதொளைத்த தொளைகள்தோறும் பிரகாசமிக எழுந்த உதிரமாமென்று சொல்ல, செய்ய கஞ்சம் மூசு வண்டு ஈயின் ஆர்ப்ப மொய்த்துளது-செவந்த தாமரைகளும் அம்மலரில் மொய்த்த வண்டுகள் அவ்வுதிரத்தில் மொய்த்த ஈயைப்போலொலிக்கவும் நெருங்கப்பட்டுள்ளது.

பகைவர் போர்செய்ய வருதற்குத் தடையாக அமைத்த அகழியை, அதுவும் அவரோடு போர்செய்யப் பசிய இலையாகிய கவசத்தைப் போர்செய்வதாக அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், பகைவரம்பு தொளைத்த தொளைவழியே சோரும் உதிரம் தாமரையாகவும், தாமரையில் மொய்த்த வண்டுகள் சோரியில் மொய்க்கும் ஈயாகவும் உருவகஞ்செய்தலால் உருவகவணியும் கலந்துவருதலால் கலவையணி. (௬௬)

அணிமலரழகேநோக்கியகழியுளிழிகின்றோருந்
திணியுமுட்கொடுமைநோக்கிசசேயிடைவிலகுவோருங்
கணிகையர்கோலநோக்கிக்காதலித்தகப்பட்டோரும்
பிணியுமுட்கருத்துநோக்கிவெரீஇப்பெயர்ந்தகல்கின்றோரும்.

(இ-ள்) அணிமலர் அழகே நோக்கி அகழியுள் இழிகின்றோரும் - அழகிய தாமரைமலரழகொன்றையே பார்த்து அகழிக்கிடங்கி லிறங்குவோரும், திணியும் முள்கொடுமை நோக்கி சேயிடை விலகுவோரும் - நெருங்கிய முள்ளின் கொடுமையைநோக்கி இறங்காது தூரத்தில் விலகுகின்றவரும், கணிகையர் கோலம்நோக்கி காதலித்து அகப்பட்டோரும்-விலைமாதர்களழகொன்றையே பார்த்து விரும்பி மயக்கவலையிலகப்பட்டவரும், பிணியும் உள் கருத்து நோக்கி வெருவி பெயர்ந்து அகல்கின்றோரும்-தம்மை மீளாது கட்டும் அவர்களுள்ளக்கருத்தைநோக்கி அஞ்சி அந்நிலையினின்று நீங்குகின்றவருமானார்கள்.

ஆனார்கள் என்னும் பயனிலை தொக்குநின்றது. அணிமலரழகுநோக்கி யகழியுளிழிகின்றோர் கணிகையர்கோலநோக்கிக் காதலித்தகப்பட்டோர் எனவும், திணியுமுட்கொடுமைநோக்கிச் சேயிடைவிலகுவோர் பிணியுமுட்கருத்துநோக்கி வெரீஇப்பெயர்ந்தகல்கின்றோர் எனவும் பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நேரே பொருள்கொள்ள நிற்றலால் நிரனிறையணியும், ஒப்புமைக்கூட்ட வுவமையணியுங் கலந்து வருதலால் கலவையணி. (௬௭)

கலிநிலைத்துறை.

கம்பையைத்தடுத்தபின்புகம்பனாரழைத்தலும்
பம்பியார்த்தொருங்குவெளவமேழுமுற்றுமாறுணர்ந்

தம்பையண்டபித்திகாறுமாக்குமாத்தடைபொர
வம்பலர்க்கிடங்குசூழ்ந்தமல்லனொச்சியோங்குமே.

(இ-ள்.) கம்பையை தடுத்த பின்பு கம்பனுர் அழைத்தலும் - கம்பாநதியைத் தடுத்த பின்பு திருவேகம்பரழைக்கவும், பம்பி ஆர்த்து ஒருங்கு பௌவம் ஏழும் முற்றும் ஆறு உணர்ந்து - நெருங்கி யொலித்து ஒருசேரக் கடலேழும் முற்றும் வகையை யுணர்ந்து, அம்பை அண்ட பித்தி காறும் ஆக்கும் மா தடை பொர-(அவற்றைத்தடுக்க) உமையம்மை யண்டபித்திகைகாறும் சமைத்த பெரிய ஓர் தடையையொப்ப, வம்பு அலர் கிடங்கு சூழ்ந்த மல்லல் நொச்சி ஓங்கும் - வாசமிக்க மலர்களையுடைய அகழிசூழ்ந்த வளமிக்க மதில்கள் உயர்ந்தோங்கும்.

தாஞ்செய்யுஞ் சிவபூசனைக்கு இடையூருகக் கம்பாநதிவர அதை உமையம்மையுணர்ந்து தடுத்தபின் திருவேகம்பரழைக்க எழுகடலும் வந்து சூழ்தலைத்தெரிந்து அவை தமது பூசனைக்கு இடையூறுசெய்யாமல் நிற்க அவ்வுமையம்மை யண்டபித்திகாறும் ஒருதடைசெய்துவைத்ததுபோல என்றது இல்பொருளுவமையணியும், இதனுல் அகழி எழுகடல்போலுள்ளதெனவும், மதில் சக்கரவாளகிரிபோலுள்ளதெனவும் ஆராய நிற்றலால் பிறிதாராய்ச்சியணியுங் கலந்துநிற்றலில் கலவையணி. எழுகடலுக்கப்பால் சக்கரவாளகிரியுள்ளது என்பது முன்னர்க்காட்டிய உதாரணச்செய்யுளால் உணர்க. (௫௮)

திருக்கிளர்ச்சியிற்செருக்குதேவநாடுபாதலந்
தருக்குநோக்கிவெஞ்சினந்தலைக்கொள்காஞ்சியவ்வலி
முருக்கவெண்ணிமுன்புபோய்வளைப்பவேவிமூண்டென
மருக்கிடங்குமிஞ்சியும்வியத்தரும்வளத்தவே.

(இ-ள்.) காஞ்சி - காஞ்சிநகரம் ஆனது, திரு கிளர்ச்சியில் செருக்கு தேவ நாடு பாதலம் தருக்கு நோக்கி வெம் சினம் தலைக்கொள்-செல்வமிகுதியா லகங்கரிக்குந் தேவருலகையும் பாதலத்தினது இறுமாப்பையும் பார்த்துக் கொடிய சினமதிகரித்து, அவ்வலி முருக்க எண்ணி முன்பு போய் வளைப்ப ஏவி மூண்டால் என்ன-அவற்றின் வலிமையைக்கெடுக்க எண்ணி முன்புபோய் வளைக்க ஏவிப் போர்த்தொழிலில் அவற்ருேடு மூண்டாற்போல, மருகிடங்கும் இஞ்சியும் வியத்தரும் வளத்த - வாசமிக்க அகழியு மதிலும் அதிசயிக்கத்தரும் வளத்தினையுடையன.

அகழியாழ்ந்து வளைந்தும் மதில் ஓங்கிவளைந்துமிருத்தலை, தேவருலகும் நாகருலகமும் செல்வமிகுதியால் நம்மை யொக்கு நாடுகள் வேறில்லையென்றுணர்ந்து அகங்கரித்தலைக் காஞ்சியுணர்ந்து அவற்ருேடுதான் போர்செய்து அவற்றின் செருக்கினையொழிக்க அகழியையும் மதிலையு முன்பு ஏவியதுபோலிருந்ததென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (௫௯)

கிடங்கினெல்லைகாண்பதன்றுகீழுமேலுமாகநீள்
விடங்கர்தாளணிந்தவிண்டுநோக்கமேவியன்மதிற்
றடங்கொளெல்லைகாண்பதுந்தலைவர்தஞ்சடைத்தலை
யிடங்கொள்வெண்டலையலாமலேவர்காணவல்லரோ.

(இ-ள்.) கிடங்கின் எல்லைகாண்பது அன்று-கிடங்கினளவையை யாவருங் காண்பதல்ல, கீழும் மேலும் ஆக நீள் விடங்கர் தாள் அணிந்த விண்டு நோக்கமே-பாதலத்தின் கீழும் அண்டமுகட்டின் மேலுமாக உயர்ந்த இறைவரது திருவடியிலணிந்த திருமாலின் திருக்கண்ணே காண்பது, வியன் மதில் தடங்கொள் எல்லை காண்பதும் - விசா

வித்த மதிலினது எல்லையைக்கண்டறிவதும், தலைவர் தம் சடைத்தலை இடம்கொள் வெண் தலை அல்லாமல் காணவல்லர் எவர் - இறைவரது சடாமுடியைத் தனக்கு இடமாகக்கொண்ட வெள்ளிய தலைமாலையேயல்லாமல் காணவல்லவர் எவர்.

இறைவர் அண்டங்களெல்லாம் அணுத்தோற்றமாக மகத்தாய் நிற்றலால் அவர் திருவடியில் திருமால் தாமரைமலராக அருச்சித்த அவர் கண்ணே அகழியினெல்லையையறியும் எனவும், சடாமுடியிலணிந்த வெண்டலைமாலையே மதிலினெல்லையை யறியுமெனவுங்கூறுதலில் அகழியின் ஆழமும் மதிலினுயர்வும் அளவிறந்ததென்பது தொழிலாற் புலப்படுதலால் நட்பவணி. சலந்தராசுரன் திருமால் முதலியோரோடு போர்செய்து அவர்களை வென்று போர்பெருமையால் சிவபெருமானோடு போர்க்குவா அவனிலையையுணர்ந்து நீ யிதனை யெடுத்து நின் தலைமேல் வைப்பாயாறல் என்னை வென்றவனவாயென்று திருக்காற்பெருவிரலால் நிலத்திற்கிழித்து ஒருசக்கரம் சமைத்தனன், அதனை யவனெடுத்துத் தன் றலைமேல் வைக்க அவனுடலைப்பிளந்த அச்சக்கரம் சிவபெருமானிடத்து உள்ளதென்று திருமாலுணர்ந்து அச்சக்கரம்பெற ஆயிரந்தாமரைகளால் அருசசித்து வழிபட்டொழுகுநாளில் அத்திருமால் வழிபாட்டினிலையை யுணரும் பொருட்டு ஒருநாள் அத்தாமரைகளி லொன்று குறையத் திருவுளஞ்செய்தனன், அது திருமாலுணர்ந்து குறைபட்ட தாமரைக்குப் பிரதியாகத் தனது கண்ணாகிய தாமரையை யிடந்தருச்சித்தான் எனக் கூர்மபுராணத்திலும், தேவதாருவனமுனிவர் கொல்ல வேவிய வெண்டலையைத் திருமுடிமேலணிந்தான் என்பது கந்தபுராணத்திலும் வருதல் அறிக.

சலந்தரனுடலங் கீண்டதற்கு—

" ஏற்றிகலவுணன் றன்னையெம்பிரானகைத்துநோக்கி
யாற்றலையெனதுவாளிக்கெனவுரைத்தலங்குசெம்பொற்
காற்றலைவிரலாற்கீறிக்கடுப்பிஞேர்நேமிபண்ணித்
தோற்றுமீதெடுக்கிலுன்னோடமர்செயத்துணிவலென்ருன்.

என்றலுமவுணர்கோமானிலங்குவாளெயிறுதின்று
பொன்றவழ்கிகிரிக்கூற்றைவருந்தொடுமெடுத்துப்பொங்கித்
தன்றலைமீதுவைப்பத்தலைமுதலடியீருகக்
குன்றிருகூறுசெய்தாலெனவுடல்குறைத்ததன்றே" எனவும்,

" மோட்டானைந்தினிதாட்டித்தீபமுருகார்புகையடிசில்
வேட்டாதரவினுடனேந்திவிரைகொப்புளிக்குந்துழாய்மார்பன்
சூட்டாடரவகங்கணத்தோன்பெயராயிரநாடொறுந்துதித்துத்
தாட்டாமரையாயிரஞ்சாத்தித்தயாவின்வழிபட்டிடுநாளின்.

வெண்ணெய்கமழுஞ்செங்கனிவாய்விமலனிமிலேறுயர்த்தருளு
மண்ணல்பெயராயிரமோதிப்பொற்றாளிணையிலருச்சிக்கும்
தண்ணங்கமலத்தாயிரத்திலொன்றுகாணான்றளர்வெய்திக
கண்ணென்றுரைக்குஞ்செய்யமலர்க்கமலம்பறித்துச்சாத்தினன்.

வையம்பொதிந்தசெங்கனிவாய்மாயோனன்புக்குண்மகிழ்வுற்
றையன்கையாற்புறநீவியடியிற்புனைந்தமலர்க்கண்ணும்
எய்தால்கிச்சுதரிசனமென்னுஞ்சுடராழியுமீந்து
செய்யகமலக்கண்ணனெனும்பெயருஞ்சிறப்பாகவிருன்" எனக் கூர்மபுராணத்திலும்,

வெண்டலைமாலையணிந்ததற்கு—

"ஆற்றல்சேர்பூதர்யாருமாதியீதுரைப்பவன்றற்
போற்றியேதானையாகிப்புடையுறநிற்றலோடும்
சீற்றமார்முனிவர்வேள்வித்தியில்வெண்டலைதானென்று
தோற்றியேயுலகம்யாவுந்தொலையநக்கெழுந்ததன்றே.

நக்கெழுசிரத்தையன்னோர்நாதன்மேல்விடுத்தலோடும்
அக்கணமணுகவற்றலகிலமுமிறவாவண்ணம்
முக்கணனருள்செய்தந்தமுண்டமுண்டகக்கைபற்றிச்
செக்கரஞ்சடைமேற்கொண்டுன்செயலினைப்புரிதியென்றான்" எனக் கந்தபுராணத்திலும் வருதல் காண்க. (௬௦)

கச்சிவாணர்சென்னிதாள்கள்காணமுன்பறந்தகழ்ந்
தச்சழிந்தமால்விரிஞ்சரன்றுசென்றவெல்லைக
ணிச்சயிப்பவவ்வளவுமேகவைத்தநீள்குறி
நொச்சியுங்கிடங்குமென்னநோக்குவார்க்கிலங்குமே.

(இ-ள்.) கச்சி வாணர் சென்னி தாள்கள் காண - கச்சியிலெழுந்தருளிய இறைவரது திருமுடியையுந் திருவடிகளையுங் காணும்பொருட்டு, முன் பறந்து அகழ்ந்து அச்சு அழிந்து மால் விரிஞ்சர் அன்று சென்ற எல்லைகள் நிச்சயிப்ப-முன்பு பறந்துந் தோண்டியு முருவழிந்த பிரமனுந் திருமாலும் அக்காலத்திற்சென்ற எல்லைகளை இக்காலத்துள்ளாரும் நிச்சயிப்ப, அவ்வளவும் ஏகவைத்த நீள் குறி நொச்சியும் கிடங்கும் என்ன நோக்குவார்க்கு இலங்கும் - அவர்கள் பறந்தும் இடந்தும் சென்ற எல்லையளவுஞ்செல்ல அளவறுத்து வைத்த நீண்ட குறிகளே மதிலும் அகழியுமென்று கண்டோர் கூறப் பார்ப்போர்க்கு விளங்கித்தோன்றும்.

மதிலும் அகழியும் மிகவுமுயர்ந்தும் மிகவுமாழ்ந்துமிருத்தலைப் பிரமனுந் திருமாலும் அடிமுடிகாண வன்னமும் வராகமுமாய்ப் பறந்து மிடந்தும் அந்நாளிற்சென்ற எல்லைகளை யின்று யாவருங்காண நிருமித்துவைத்த அடையாளங்களாமென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. ஓர்காலத்தில் பிரமனுந் திருமாலும் நான் பிரமம் நான் பிரமமென அகங்கரித்துப் போர்தொடங்கியகாலத்தில் அவர்களகந்தையையொழிக்கச் சிவபெருமான் கருணைகூர்ந்து ஓரொளிப்பிழம்பா யவர்களுக்கு இடையேதோன்ற அவர்கள் போரொழிந்திதனடிமுடிகளிலொன்றைக் காண்பவரெவரோ அவர்கள்தான் பெரியரென்று தம்முட்சபதங்கூறிப் பிரமன் திருமுடியைக்காண அன்னவடிவா யண்டமுகடுருவி அளவில்காலம் பறந்துசென்றுங் காண்கிலனெனவும், திருமால் திருவடியைக்காண வராகவடிவாய் அண்டத்தினடியுருவி அளவில்காலம் இடந்துசென்றுங் காண்கிலனெனவும் கந்தபுராணத்தில் வருதல் காண்க.

"தீதறுகாலின்வந்தசெந்தழலன்றலீது
யாதுமொன்றறிதரேற்றாமி ருவருமிதனையின்னே
ஆதியுமுடியுநாடியன்னதேகாண்டுமென்ன
மாதவன்றானும்யானும்வஞ்சினமிசைத்துமன்றே.

முடியினைக்காண்பனென்றேமொழிந்தனன்தமியனேனை
அடியினைக்காண்பனென்றேயரியுமங்கிசையாநின்றான்
நடைபயில்மழலையோவாநாகிளஞ்சிறுவர்வானிற்
சுடர்மலிகதிரைக்கையாற்றீண்டுவான்றுணியுமாபோல்.

ஒருபதுநூறதாகும்யோசனையுகப்பினோடு
பருமையுமாகுமந்தப்பகட்டுருவாகிமுனனந்
தரணியையிடந்துகீழ்போய்த்தடவியேதுருவிச்சென்று
திரைபடுபுவனமயாவுநீந்தியேபோயினனால்.

பாதலநாடியன்றேன்படர்நலமயானுமங்கோர்
ஓதிமவடிவமாகியொல்லையிலெழுந்துமீப்போய்
மேதகுவிசும்பின்மேலாம்வியன்புவனங்களுநாடிப்
போதலுஞ்சோதிமுன்னம்போலமேல்போயிற்றம்மா.

நின்றதொருபானெடுமாலது நிற்கயான்முன்
பின்றுவகையாற்பெருஞ்சூளிவைபேசிவானிற்
சென்றுயிரம்பாணடுதிரிந்துதிரிந்துநாடிக்
குன்றுதசோதிக்கொழுந்தினறலைகூடலேன்யான்'' என அப்புராணத்தி
ல் வருதல் காண்க (சுக)

இடிந்தகழ்ந்துதமதிருக்கையெற்றிநீர்க்கிடங்கினில்
வெடித்தெழுந்துதாவுவாளைமீனைமீணடுறுவகை
யடுத்தவிக்கவுன்மேற்றகங்கியமபரத்துமீனையுந்
தடுத்துவென்றிகொள்ளவுள்ளசாமதிற்பொறிக்குலம்.

(இ-ள்) தம் இருகரை இடித்து அகழ்ந்து எற்றி நீர் கிடங்கினில் வெடித்து எழுந்து தாவு வாளைமீனை மீணடு உறுத வகை - தமதிருக்கையையிடித்து அகழ்ந்து மோதி நீர்மயமாகிய கிடங்கினின்று மேலே தாவிய வாளைமீனைத் திரும்பி மீள அவ்வக ழியிலடையாதபடி, மதில் சார் பொறி குலம் - அம்மதிலைச்சார்ந்த யந்திரத்தின கூட்டம், அடுத்து விக்க உ... தேகவி அமபரத்து மீனையும தடுத்து வென்றி கொள்ள உள்ள - அதனைப் பிடித்து விக்குமபடியுண்டு தேக்கெறிந்து ஆகாயத்திலுள்ள நாண மீனை யுந்தடுத்து வெற்றிகொள்ள உள்ளன.

முழுவதானதலால் பகைவர் எதிர்ந்து போர்செய்ய வருவராதலால் வஞ்சித்தவ ர்களோடு போர்செய்ய வினைமுற்றிய யந்திரங்கள் பல, மதில்களிலமைத்துவைத் திருத்தலால் வென்றிகொள்ளவுள்ள சாமதிற்பொறிக்குலம் எனத்தொகுத்துக்கூறினர்.

" இனையுங்கிடங் தம்வளைவிற்பொறியும்-கருவிரலூகமுங்கல்லுமிழ்கவணும்-பரி வுறுவெந்நெயும்பாகடுகுழிசியும் - காய்பொனுலையுங்கல்லிடுகூடையும் - தூண்டிலுந் தொடக்குமாண்டலையடுப்பும்-கவையுங்கழுவும்புதையும்புழையும் - ஐயவித்துலாமுங் கைபெயரூசியும் - சென்றெறிசிரலும்பன்றியும்பணையும் - எழுவுஞ்சீப்புமுழுவிறற்கணை யமும் - கோலுங்குந்தமும்வேலும்பிறவும்'' எனச் சிலப்பதிகாரத்திலும்,

" மாற்றவர்மறப்படைமலைந்தமதில்பற்றின்
தூற்றுவனக்கோலவியொடெறக்கிவெறிபொறியும்
தோற்றமுறுபேய்களிறநூற்றுபெரும்பாம்பும்
கூற்றமனகழுகுதொடாருக்தமொடுகோண்மா.

விற்பொறிகள்வெய்யவிற்குதிரைதொடாயில்வாள்
கற்பொறிகள்பாவையனமாடுமடுசெந்திக்
கொற்புனைசெய்கொள்ளிபெருங்கொக்கெழில்செய்கூகை
நற்றலைகடிருக்கும்வலிநெருக்குமாதிலையே.

செம்புருகுவெங்களிகளுமிழ்வதிரிந்தெங்கும்
வெம்புருகுவட்டுமிர்வவெங்நெய்முகந்துமிழ்வ
அம்புமிழ்வவேலுமிழ்வகல்லுமிழ்வவாகித்
தம்புலங்களால்யவனர்தாட்படுத்தபொறியே'' எனச்சீவகசிந்தாமணியிலும், ''முழுமுதலரணம்'' என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தில் '' சேமவருமதில்வஞ்சனைபலவும் வாய்ந்து தோட்டி முள் முதலியன பதித்த காவற்காடும், அதனுள்ளே யிடங்கர் முதலியன வுள்ளுடைத்தாகிய கிடங்கும் புறஞ்சூழ்ந்தும், யவனரியற்றிய பலபொறிகளு மேனைப்பொறிகளும் எப்புழைஞாயிலும ஏனைய பொறியுமமைந்து'' என நச்சினார்க்கினியர் கூறிய வுரையிலும் மதில்களுள்ள பொறிகளை விரித்துக்கூறுதல் காண்க.

மதிற்பொறிகள் தமதிருக்கையாகிய மதிலை யிடித்தகழ்ந்து மோதி நீர்க்கிடங்கினின்று மேலே தாவுங் காரணத்தால் அப்பொறிக்குலங்கள் கோபங்கொண்டு அவை மீளாவண்ணம் விழுங்கினவெனக் காரணகாரியங்கள் தோன்ற நிற்பதையுணராது எற்றியென்னும் பாடத்தைப் பிழையென்று எற்றும் என நீரின்மேலேற்றிப் பெரும்பிழைபடத்திருத்தினர், அந்தோ இவரறியாமைக்கு இரங்குவேனோ, ஒருவர் ஆராய்ந்து பதிப்பித்த நூலைத் திருத்தினதற்கு இரங்குவேனோ; மிகவுங் கொடிது கொடிது. (சஉ)

உடல்படைத்தியக்கவோர்நிமித்தனுண்டெனக்கொளத்
திடம்வலித்தசான்றதாயவனர்தாட்செயப்படுந்
தொடர்புடைப்பொறிக்குலஞ்சுழன்றெழும்விழும்பகை
மிடல்கெடத்தெழிக்குமோடுமீளுமின்னநீரவே.

(இ-ள்.) உடல் படைத்து இயக்க ஓர் நிமித்தன் உண்டு என்ன கொள்ள திடம் வலித்த சான்று ஆக - தேவர்முதலியோர்க்குச் சரீரங்களைத்தந்து அவற்றைச்செலுத்த ஒரு நிமித்தகாரணனாகிய இறைவனுண்டென்று கண்கூடாகக்கொள்ள வற்புறுத்திய சாக்ஷியாக, யவனர் தாள் செய்யப்படும் தொடர்பு உடைய பொறி குலம் - சிற்பிகள் தமது முயற்சியால் செய்யப்படும் மதிலோடு சம்பந்தமுடைய யந்திரக்கூட்டங்கள், சுழன்று எழும் விழும் பகை மிடல் கெட தெழிக்கும் ஓடும் மீளும் இன்ன நீர - சுழன்றெழாநிற்கும் வீழாநிற்கும் பகைவரது வலிமைகெட அதட்டாநிற்கும் ஓடாநிற்கும் திரும்பாநிற்கும் இத்தன்மையை யுடையனவாயுள்ளன.

முன்னர்க்கூறிய பொறிகள் பகைவரெதிர்ப்படிற் செய்யுந் தொழில்களைப் பொதுப்படக்கூறினார். அது பகுதிப்பொருள் விதி யவனரை நிமித்தகாரணமாகவும், சிவபிரான் படைத்தற்குச் சத்தி துணைக்காரணமாதல்போல யவனர் செய்தற்கு முயற்சி துணைக்காரணமாகவும், அவற்றால் உடலாகிய காரியம் புலப்படல்போலப் பொறிகள் புலப்படுங் காரியமாகவுங்கூறுதலால் ஒப்புமைக்கூட்டவணி.

'' காரியகாரணங்கள்முதறுணைநிமித்தங்கண்டாம்
பாரின்மண்டிரிகைபண்ணுமவன்முதறுணைநிமித்தம்
தேரின்மண்மாயையாகத்திரிகைதன்சத்தியாக
ஆரியன்குலாலனுய்நின்றாக்குவனகிலமெல்லாம் '' எனவருஞ் சித்தியாரால் உணர்க். (சங)

இம்மதிற்பொறிக்குலமெதிர்த்துளோர்தமைச்செருத்
திம்மெனுமுன்வென்றிகொள்ளுமீதுணர்ந்துதெவ்விர்கா
ளம்மவீண்டுறேன்மினென்றுகையெடுத்தசைப்பபோ
லம்மதிற்றலைத்துகிற்கொடிதுடங்குமாலரோ.

(இ-ள்.) இ மதில் பொறி குலம் எதிர்த்துள்ளோர் தமை செகுத்து இம் என்னும் முன் வென்றி கொள்ளும் - இந்த மதிலிலுள்ள யந்திரக்கூட்டம் தம்மோடெதிர்த்த பகைவரை இம்மென்பதற்குமுன் கொன்று வெற்றிகொள்ளாநிற்கும், தெவ்விர்காள் ஈது உணர்ந்து ஈண்டு உறேன் மின் என்று கை எடுத்து அசைப்பபோல் - பகைவரோ இதனை யுணர்ந்து இவ்விடத்து வருகை யொழியுங்கள் என்று மேலே கையெடுத்தசைத்தல் போல, அ மதில் தலை துகில் கொடி நுடங்கும் - அந்த மதிலின் சிகரத்திற்கட்டிய துகிற்கொடிகள் துவளாநிற்கும்.

அம்ம இரக்கப்பொருளைத்தரும் இடைச்சொல். இம்மெனல் விரைவுப்பொருளைத்தரு மிடைச்சொல். அசைப்ப வினைமுற்றுப்பெயராய்த் தொழின்மேல் நின்றது. மதிலின்மேல் துகிற்கொடியசைதலை, பகைவர்களைநோக்கி இங்கு வருதலொழியுங்கள் வந்தா லுயிரிழப்பீரென்று மேலே கையெடுத்தசைப்பதையொக்கும் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (சச)

கலிவிருத்தம்.

வளமகன்றிருநகர்கிழத்திமாமைசா
லிளமுலைதிளைப்பக்காரெழினிசேர்த்துபு
தளர்வறநாட்டியதம்பமேயெனக்
கிளர்மதிலிடந்தொறுஞ்செறியுங்கேதனம்.

(இ-ள்.) வளம் மகன் திரு நகர் கிழத்தி மாமை சால் இள முலை திளைப்ப-செல்வமென்னு மொருபுருடன் பொலிவமைந்த காஞ்சிநகரென்னுந் தலைவியினது பேரழகமைந்த இளமுலைப்போகத்தை நுகர, கார் எழினி சேர்த்துபு தளர்வு அற நாட்டிய தம்பம் என்ன - பெரிய திரைச்சீலையைச் செறித்துக் குற்றமற நாட்டிய தம்பமேயென்று கண்டோர் சொல்ல, கேதனம் கிளர் மதில் இடந்தொறும் செறியும் - கொடிகள் விளங்கு மதிலினிடந்தோறும் நெருங்கித்தோன்றும்.

மதிலினிடந்தோறுங் கட்டிய கொடிகளை, செல்வம் என்னும் ஒருபுருடன் காஞ்சிநகரம் என்னும் தலைவியின் போகநுகரத் திரைச்சீலையைச்சேர்த்து நாட்டிய தம்பத்தையொக்குமென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. எழினி ஒருமுகவெழினி, பொருமுகவெழினி, கரந்துவரல் எழினியென மூன்றுவகைப்படும். "வழுவில்கேள்வி நன்னூ லுணர்ந்தோர் - எழினிதானேமூன்றெனமொழிப. அவைதாம் - ஒருமுகவெழினியும் பொருமுகவெழினியும் - கரந்துவரலெழினியுமெனமூவகையே" என்னுஞ் சூத்திரங்களாலுணர்க. இவற்றுள் இங்குக்கூறிய எழினி பொருமுகவெழினியெனக்கொள்க.

நேமிமால்வரைமிசைக்கிளைத்துநீண்டவே
யாமெனக்கொடிமிடையம்பொன்மாமதின்
மீமிசைக்கோபுரமேலுஞ்சேறலால்
யாமினிப்புகல்வதற்குவமையில்லையே.

(இ-ள்.) மால் நேமி வரை மிசை கிளைத்து நீண்ட வேய் ஆம் என்ன கொடி மிடை அம் பொன் மாமதில் - பெரிய சக்கரவாளகிரியின்மேல் கிளைத்துயர்ந்த மூங்கில்களாமென்று சொல்லக் கொடிகள் நெருங்கிய அழகிய பொன்னாலமைந்த பெரியமதிலின், மீமிசை கோபுரம் மேலும் சேறலால் - மேலுள்ள கோபுரம் அப்பாலுஞ்சென்று உயர்ந்தோங்குதலால், இனி யாம் புகல்வதற்கு உவமை இல்லை - இனியாம் அம்மதிலோடொப்புச்சொல்வதற்கு வேறுவமையில்லை.

மதிலின்மேலுள்ள கோபுரம் என்றது மதிலின் வாயிலிலுள்ள கோபுரத்தை. "மலையுங்காடுநீருமல்லாத அக்நாட்டுட்சேமவருமதிலாதலால் எழுவுஞ்சீப்புமுதலியவற்ருல் வழுவின்றமைவாயிற்கோபுரம்" என நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் சூத்திரத்திற்கூறுதல் காண்க. சக்கரவாளகிரி மதிலாகவும், அதில் முளைத்த மூங்கில் மதிலிற் கட்டிய கொடியாகவும் கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணியும், அதின்மேலுள்ள கோபுரம் அப்பாலுஞ்செல்லுதலால் இது தனக்குத்தானே யொப்பு, இரண்டாவதொன்றில்லையெனக்கூறுதலால் இயைபின்மையணியுங் கலந்துவருதலால் கலவையணி. (சுகூ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மகதநாடென்னக்காஞ்சிவைப்பினுங்கடைஞரெய்தி
யிகலறவளர்க்குமெண்ணான்கறத்தினுக்கிடர்செய்யாமைத்
தகையணங்குமையாள்வைத்ததடைநிகர்மதிற்சீர்முற்றும்
புகாறவியம்பப்புக்காற்புலவர்க்குமுலப்புறாதே.

(இ-ள்.) மகத நாடு என்ன காஞ்சி வைப்பினும் கடைஞர் எய்தி இகல் அற வளர்க்கும் எண்ணான்கு அறத்தினுக்கு இடர் செய்யாமை - மகதநாடுபோலக் காஞ்சிநகரத்திலும் இழிகுலத்தோரடைந்து பகையறவளர்க்கு முப்பத்திரண்டறங்களுக்கு இடையூறுசெய்யாமல், தகை அணங்கு உமையாள் வைத்த தடைநிகர் மதில் சீர் முற்றும் - மிக்க அழகினையுடைய உமையம்மை நியமித்துவைத்த தடையையொக்கும் மதிலின் சிறப்பு முழுமையும், புகர் அற இயம்ப புக்கால் புலவர்க்கும் உலப்புறாது - குற்றமற எடுத்துச்சொல்லப்புகுந்தால் தேவர்களாலும் அளவுபடாது.

தேவர்க்குமன்றிக் கல்வியறிவுடையோர்க்கும் எனப் பொருள்கொள்ளலும் ஒன்று. புலவர் தேவர், அறிவுடையோர். இது செம்மொழிச்சிலேடை.

உமையம்மை சிவபெருமானரிடத்தி லனுஞைபெற்றருளித் திருக்காஞ்சிநகர்க்கு எழுந்தருளுங்காலையி லிடையில் மகதநாடு ஒன்பதுவருட மழையில்லாமையால் அந்நாடெல்லாம் வேனிற்காலமே கைக்கொள்ளுதலில் யாவுந்தீந்து நீரும் வறந்தமையால் அனைத்துயிர்களும் உணவின்றி வாட நல்லொழுக்கமுடையோரும் தீயொழுக்கத்தைச் செய்தொழுகவற் கடம்குடிகொண்டமையை அம்மையுணர்ந்துகருணையாலங்கெழுந்தருளி அறச்சாலையமைத்து முப்பத்திரண்டறங்களையும் வளர்த்தருளுங்காலத்தில் வறுமைகூர்ந்த அந்நாட்டரசன் அவ்வறச்சாலையிலுள்ள பொருள்களைக் கவரக்கருதினமையைத் திருவுளத்தமைத்து அங்குநின்று மெழுந்தருளினர் என்பது இந்நூல் வரலாறு.

"மகதநாடெலாமொன்பதுவருடமூழ்வலியால்
முகில்வழங்குதலின்றிநீர்வறந்துயிர்முழுதும்
மிகுபெரும்பசியுழந்துகண்சாம்பிமெய்தளர்ந்து
பகைமைகூரிலம்பாடுகோட்பட்டனவந்நாள்.

தண்டமாயிரமகழினுந்தண்புனலூற்றங்
கண்டிடாபிறநாட்டுறுகயத்துநீர்முகந்து
கொண்டுநெண்ணினுநண்ணுமுன்கொடுந்தழல்வெப்பம்
உண்டுதேக்கிடவுணங்குறுமழக்கொண்டபொருள்போல்.

பொய்மைசொல்லுதற்கஞ்சியபுலனறிவோரும்
மெய்ம்மைசொல்லுதற்கஞ்சினார்விதியுளியுகந்த
தெய்வபூசனைசெய்தன்றிமற்றொன்றுஞ்செய்யார்
உய்யுமாறுதேர்ந்துடலினையோம்பியேகழிந்தார்.

மகதநாடெலாமங்கலம்பொலியவெண்ணுன்கு
நிகரிலாவறநிருமலிவளர்த்தனள்வருங்காற்
புகரிலாதவிப்பொலிவினைமகதநாடாளும்
தகவின்மன்னவன்யாவருஞ்சாற்றிடக்கேட்டான்.

கேட்டமன்னவன்கிளரொளியிறைவியென்றறியான்
மாட்டுநல்குரவோவறிவின்மையோமனத்தை
மூட்டவவ்வறச்சாலையைக்கவருவான்முன்னிக்
கோட்டங்கொண்டனனஃதுமைதிருவுளங்குறித்தாள்'' என இந்நூலில் வருதல் காண்க.

மதில் நிற்றலை, மகதநாட்டைப்போல இந்நாட்டிலும் கீழ்மக்கள் தாம் செய்தருளும் தருமங்களுக்கு இடையே புகுந்து தீங்குசெய்யாவண்ணம் உமையம்மை அமைத்த ஒருதடையாமென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (சஎ)

அகநகர்.

மிடைபுறத்தூர்களெல்லாம்விண்ணவர்நகராவங்கட்
புடைநகரயனூராகப்பூமகள்கொழுநன்றன்னூ
ரிடைநகராகமற்றையீசனூருலகமேயா
நடைபிறழாதகீர்த்திபடைத்தவுண்ணகரஞ்சொல்வாம்.

(இ-ள்.) புறத்து மிடை ஊர்கள் எல்லாம் விண்ணவர் நகர் ஆக - புறத்து நெருங்கிய ஊர்களெல்லாம் தேவர்கள் நகரமாகவும், அங்கண் புடை நகர் அயன் ஊராக - அவ்விடத்திலுள்ள புடைநகர் பிரமனூராகிய சத்தியலோகமாகவும், பூமகள் கொழுநன் தன் ஊர் இடை நகர் ஆக-இலக்குமிநாயகனாகிய திருமால் வைகுந்தமே இடைநகராகவும், மற்றை ஈசனூர் உலகமே ஆக நடைபிறழாத கீர்த்திபடைத்த உள் நகரம் சொல்வாம் - அவரொழிந்த சிவபிரான் சிவலோகமேயாகச் செல்வம் ஒழுக்கமுதலியவற்றிற் குன்றாத புகழமைந்த அந்நகரத்தை யினி யெடுத்துக்கூறுவாம்.

காஞ்சித்திருநகர்க்குச் சிவபுரம் என ஓர் பரியாயநாமமாதலால் தேவருலகினைப் புறத்தூர்களாகவும், புறநகரினைச் சத்தியலோகமாகவும், இடைநகரினை வைகுந்தமாகவும் உருவகமாக்கிக்கூறுதலால் இயைபுருவகவணி. காஞ்சித்திருநகர்க்குச் சிவபுரம் எனவோர் திருநாமம் வந்ததற்கு " இங்கெமைக்கண்டோர்-பேதமின்றிச்சிவனுண்மை பெறலாலாகுஞ்சிவபுரமே'' என இப்புராணத்திற் பின்னர் வருதலாலுணர்க. (சஅ)

அளிமதனூலினாற்றாலாடவர்தம்மோடாடிக்
களிமனைக்குள்ளாற்றாங்கள்விளைத்திடுங்கலவியெல்லாந்
தெளிதரமாடந்தோறுஞ்சித்திரந்தன்னிற்காட்டி
யிளையரைமயக்கிக்காமமேற்றுவோர்சேரிமல்கும்.

(இ-ள்.) அளி மதன் நூலின் ஆற்றால் ஆடவர் தம்மோடு ஆடி - காமநூலிற்கூறிய முறையால் புருடர்களோடு கலந்து, களி மனைக்கு உள் தாங்கள் விளைத்திடும் கலவி எல்லாம் - களிப்பைத்தரும் அறைக்குள் தாங்கள் விளைக்குங் கலவி முதலிய விகற்பங்களையெல்லாம், மாடம் தோறும் தெளிதர சித்திரந்தன்னில் காட்டி-மாடங்கள்தோறுங் கண்டோர் அவ்வேறுபாடுதெரியச் சித்திரங்களாலுணர்த்தி, இளையரை மயக்கி காமம் ஏற்றுவோர் சேரி மல்கும் - போகநுகரவரும் இளைஞர்களை ஆடையணிமுதலியவற்றால் மயக்கிக் காமமூட்டும் பரத்தையர் சேரிகள் எங்கும் நிறைந்துதோன்றும்.

காமவின்பம் அறுவகையில் ஆலிங்கனம் முன்னுள்ளதாதலால் கலவியெனவும், நகக்குறி, தாடனம், கரணம், சுவைத்தல், பற்குறியெனப்படுதலால் எல்லாம் எனவும், தமது மனைக்குவரும் இளைஞரோடு காமநூலிற்கூறிய முறைமையே தாம் கலந்துசெய்யும் புணர்ச்சிமுதலிய விகற்பங்களையெல்லாம் முன்னரோ அவ்விளைஞருணர்ந்துதேறப் புறத்திற்சித்திரித்தனர் ஆதலால் தெளிதரமாடந்தோறுஞ் சித்திரந்தன்னிற் காட்டியெனவுங் கூறினர். இளைஞரை மயக்குதற்கு ஆடையணிமுதலியன காரணங்களாதலால் ஆடையணிமுதலியவற்றால் என்றும்

நகக்குறிமுதலியவற்றை—

" பற்குறிநகக்குறிகள்பாணிகொடுதட்டல்
நற்கமிழ்துதுய்த்தல்களிநன்கெழவணைத்தல்
அற்குகரணங்களறியார்களெவரோனுங்
கற்கும்வகைநின்றனகதிர்த்தமணியோவம்" எனவருதலானும்,

" மாடக்குசசித்திரமுமாநகர்க்குக்கோபுரமும்
ஆடமைத்தோணல்லார்க்கணியும்போல் " எனவருதலாலும் உணர்க.
இது தொழிற்றன்மையணி. (சுக)

வரியளிமுரலாவாடாமாலையவிமையாநோக்க
தரைமிசைத்தோயாத்தாளசித்திரந்தயங்குகாட்சி
வரைவிலாமகளிரின்னோர்மாணலம்வேட்டுவானிற்
சுரர்களுமெய்திச்செவ்விபார்த்துறைதோற்றமொக்கும்.

(இ-ள்.) வரி அளி முரலாத வாடாத மாலைய - வரியமைந்த வண்டுகளொலியாத வாடாத மாலைகளையுடையனவும், இமையாத நோக்க - இமையாத கண்களையுடையனவும், தரைமிசை தோயாத தாள சித்திரம் தயங்கு காட்சி-நிலவுலகின்மேற்றோயாத கால்களையுடையனவுமாகிய சித்திரங்கள் சுவர்த்தலங்கள்தோறும் விளங்குந்தோற்றம, வரைவில்லாத மகளிர் இன்னோர் மாண் நலம் வானில் சுரர்களும் வேட்டு எய்தி-விலைமாதரது மாட்சிமைப்பட்ட அழகினை வானிலுள்ள தேவர்களும் விரும்பியடைந்து, செவ்வி பார்த்து உறை தோற்றம் ஒக்கும் - அவர்களழகினைப்பார்த்து வசிக்குங் காட்சியையொத்துத்தோன்றும்.

பாடிருத்தலை வண்டுமூசாதமாலையையும் இமைகொட்டாத கண்களையும் நிலத்திற்றோயாத கால்களையுமுடைய தேவர்கள் இங்குள்ள விலைமாதர்போகத்தை விரும்பி விண்ணுலகினின்றுவந்து அம்மாதர்கள் சமையத்தையுணர்ந்து காத்திருக்கும் தோற்றத்தையொக்கும் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி.

பூத்தபினீராறுநாளுங்கிழத்தியர்ப்புணர்ந்துதம்மை
நீத்தனரொனுஞ்சீற்றத்தானின்றவீரொன்பானாளு
மேத்துமாடவரைத்தங்களிளமுலைத்துருக்கமேற்றிப்
பாத்திருநிதியமெல்லாம்பறித்தனர்கொள்ளைகொள்வார்.

(இ-ள்.) பூத்தபின் ஈராறு நாளும் கிழத்தியர் புணர்ந்து - பூத்து நீராடியபின் பனிரண்டுநாளும் தமது மனைவியைப்புணர்ந்து, தம்மை நீத்தனர் என்னும் சீற்றத்தால் நின்ற ஈரொன்பான் நாளும் - தம்மைப்பிரிந்தனரென்னுங் கோபத்தால் கழிந்துநின்ற மற்றைப்பதினெட்டுநாளும், ஏத்தும் ஆடவரை தங்கள் இளமுலை துருக்கம் ஏற்றி பாத

து இருநிதியம் எல்லாம் பறித்தனர் கொள்ளை கொள்வார் - (அழகுசெல்வ முதலியவற்றால்) யாவராலும் வணங்கப்படும் புருடரைத் தங்கள் இளமுலையாகிய மலைமேற் கோட்டையில் சிறைப்படுத்திப் பெரிய பொருள் முற்றும் அளவுசெய்து பறித்துக் கொள்ளையாடுவார்கள்.

பூப்புற்று நீராடியபின் பன்னிரண்டுநாளும் தமது மனைவியர் கருப்பங்கொள்ளுங்காலமாதலால் செவ்வணிமுதலியவற்றை யணிந்துவந்த தோழியாலுணர்ந்து மனைக்கடனிறுக்கத்தலைவன்வந்து புணர்தலால் பூத்தபினிராறுநாளுங் கிழத்தியர்ப்புணர்ந்து எனவும், தம்மைப் பன்னிரண்டுநாளுந் தலைவன் பிரிதலில் பெருங்கோபங்கொண்டனராதலால் நீத்தனனொனுஞ்சீற்றத்தால் எனவும், தமக்குப் பிழைசெய்து பிரிந்தவனைத் தண்டித்தல்போல மற்றைப் பதினெட்டுநாளும் இவ்வாறுசெய்தலால் இளமுலைத்துருக்கமேற்றிப் - பாத்திருநிதியமெல்லாம் பறித்தனர்கொள்ளைகொள்வார் எனவுங்கூறினர். இது சாதித்தன்மையணி. இராறு குறுக்கல். (கூக)

கோலத்தினிசையின்யாணர்க்கூத்தினினவிநயத்திற்
சீலத்திற்கலவிச்செய்கைத்திறத்தினிற்பிறவாற்றானு
ஞாலத்துமைந்தர்தம்மைமருட்டிநற்பொருள்கள்வவ்விக்
காலுற்றசாற்றுவேழக்கோதுபோற்கழியநீப்பார்.

(இ-ள்.) கோலத்தின் இசையின் யாணர் கூத்தினின் அவிநயத்தின்-அழகாலும் இசையாலும் அழகிய கூத்தினாலும் அபிநயத்தாலும், சீலத்தில் கலவிசெய்கை திறத்தினில் பிற ஆறு ஆனும் - தமது ஒழுக்கத்தாலும் புணர்ச்சிச்செய்கையின் வேறுபாட்டாலும் இவையொழிந்தனவற்றாலும், ஞாலத்து மைந்தர் தம்மை மருட்டி நல்பொருள்கள் வவ்வி - உலகிலுள்ள புருடர்களை மயக்கி அவர்களிடத்துள்ள பொருள்களைக் கொள்ளையாடி, சாறு கால் உற்ற வேழம் கோதுபோல் கழிய நீப்பார்-சாற்றினை முற்றுமொழுக்கிய கரும்பின் கோதுபோலத் தம்மினின்றுங்கழிய அவர்களைக் கழிப்பார்கள்.

தமது வலையிற்சிக்கிய ஆடவர்கள் கைப்பொருள் வறந்தபின் அவர்களைக் கைவிடுதல் பரத்தையர்க்கு இயற்கையாதலால் நற்பொருள்கள் வவ்விக்காலுற்ற சாற்றுவேழக்கோதுபோற்கழிய நீப்பார் எனக்கூறினர் "தலையுமாகமுந்தாளுந்தழீஇயதன் - நிலைநிலாதிறைநின்றதுபோலவே - மலையினுள்ளவெலாங்கொடுமண்டலால் - விலையின்மாதரையொத்ததவ்வெள்ளமே" எனவருஞ் செய்யுளாலுணர்க. இதுவுஞ் சாதித்தன்மையணி.

அலகினல்லறஞ்சூழ்காஞ்சியமர்பெருஞ்செல்வராயுங்
குலமுறைச்சார்பால்வெங்கோய்க்கோட்பட்டாரிழிஞரோனுஞ்
சிலகொடுப்பனவுங்கொண்டுசேர்ந்துபொய்வஞ்சமெல்லா
நிலைபெறவடைத்துவைத்தநெஞ்சினராகிவாழ்வார்.

(இ-ள்.) அலகு இல் நல் அறம் சூழ் காஞ்சி அமர் பெருஞ் செல்வர் - அளவில்லாத நல்ல முப்பத்திரண்டு தருமமுஞ் சூழ்ந்த காஞ்சித்திருநகரிற் றங்கிய பெரியசெல்வர்கள், வெம் கோய் கோட்பட்டார் ஆயும் குல முறை சார்பால் இழிஞரோனும் - கொடியநோயால் விழுங்கப்பட்டவராய் ஆராயுங் குலமுறை முதலிய ஒழுக்கத்தால் இழிஞராயிருந்தாலும், சில கொடுப்பனவும் கொண்டுசேர்ந்து - சிலவற்றைக் கொடுப்பனவுங் கைக்கொண்டு புணர்ந்து, பொய் வஞ்சம் எல்லாம் நிலை பெற அடைத்து வைத்த நெஞ்சினராகி வாழ்வார் - பொய்யும் வஞ்சமுமாகிய இவையெல்லாம் இடைவிடாது நிலைபெற்றோங்க அடைத்துவைத்த மனமுடையவராய் அப்பரத்தையர் வாழ்வார்கள்.

உமையம்மையார் முப்பத்திரண்டு தருமங்களும் வளர்த்தருளினமையால் அல னெல்லறஞ் சூழ் காஞ்சியெனவும், தமது இன்பம் விலைகொடுப்பவர் எவர்க்கும் விற்ப தன்றி அதற்கு இவர் ஆவார் ஆகார் என வரைவின்மை வரைவின்மகளிர்க்கு இயல்பா தலால் ஆயுங்குல முதற்சார்பால் வெங்நோய்க் கோட்பட்டா ரிழிஞரோனும் எனவும், செல்வர் பல கொடுப்பனவுமன்றி யேனையோர் சில கொடுப்பனவுங் கைக்கொள்ளுத லால் இறந்ததுசழீஇய எச்சவும்மைதந்து சில கொடுப்பனவுங்கொண்டு எனவும், அவர் அவர் குலப்பெண்டிர்போ லவரவர்க்கு நடித்துக்காட்டுதலால் பொய்வஞ்சமெல்லாம் நிலைபெற அடைத்துவைத்த நெஞ்சினராகி யெனவுங் கூறினர். (௫௩)

அலைவிழிக்கணிகைநல்லாராடவர்தமக்குநல்கு
மிலைநிகரொனுமின்பத்திற்கின்பமுஞ்சமமாக்கொண்டு
விலையெனநிதியுங்கோடல்வியப்பிற்றேயேற்றமாக
மலைநிகர்தனங்களீந்தோர்மலைநிகர்தனமுங்கொள்வார்.

(இ-ள்.) அலை விழி கணிகை நல்லார் ஆடவர் தமக்கு நல்கும் நிகர் இல்லை என் னும் இன்பத்திற்கு இன்பமும் சமம் ஆக கொண்டு - காமுகரை அலைக்குங் கண்களை யுடைய பரத்தையர் இளைஞர்க்குத்தாங் கொடுக்கும் ஒப்பில்லை யென்னுங் காமநுகர்ச் சிக்குத் தமக்கவர்தருங் காமநுகர்ச்சியையும் ஏற்றக்குறைவில்லாமற்கொண்டு, நிதியும் விலையெனகோடல் வியப்பிற்று ஏ-பொருளையும் விலையெனக்கொள்ளுதல் ஓர் அதிசயமு டையதே, ஏற்றமாக மலை நிகர் தனங்கள் ஈந்து ஓர் மலை நிகர் தனமும் கொள்வார் - மி கையாகமேருமலையை யொத்த தமது தன போகத்தைத்தந்து மேருமலையையொத்த அ வர்கள் தனங்களையுங் கொள்வார்கள்.

ஒரு பொருளை விற்போர் அப்பொருளுக்குப் பரிவருத்தனையாக மற்றொருபொ ருளைக்கொள்ளுதல் வாணிபத்தினியல்பு, இப்பரத்தையர் தாம்விற்கும் அருபமாகிய இன் பத்திற்குப் பரிவருத்தனையாய் ஏற்றக்குறைவில்லாமல் அவர்கள்பால் தாமும் இன்பங் கொள்வதுமன்றி அதற்கு விலையாக உருவமாகிய பொருளையுங்கொள்ளுதல் மிகையாத லால் விலையெண நிதியுங்கோடல் வியப்பிற்றேயெனத் தேற்றேகாரந்தந்தும், அருவப் பொருளிலும் அன்றி உருவப்பொருளில் தமது தனபோகத்தைத் தந்து அவர்கள் தன முற்றுங் கொள்ளுதலால் எதிரதுதழீஇய எச்சவும்மை தந்து ஏற்றமாக மலைநிகர் தனங்க ளீந்தோர் மலை நிகர்தனமுங் கொள்வாரெனவுங் கூறினர். இது தொழிலதிசயவணி.()

தவமறைக்கிழவன்மாயன்றாணுவென்றிவருமிவ்வூர்க்
கவர்மனப்பரத்தைமாதர்கண்வலைப்பட்டேயின்று
மிவறியவலரோன்மாலோன்பித்தனென்றிப்பேர்பெற்றார்
சிவசிவயாவரோயோவவர்திறந்தகப்படாதார்.

(இ-ள்.) தவ மறை கிழவன் மாயன் தாணு என்ற இவரும் - மிகவும் பிரமனும் திருமாலும் உருத்திரமூர்த்தியுமென்று சொல்லப்பட்ட இவர்களும், இ ஊர் கவர் மன பரத்தை மாதர் கண் வலைப்பட்டே - இவ்வூரிலுள்ள பிளவுபட்ட மனத்தையுடைய பர த்தையர்களது கண்களாகிய வலையிற்சிக்கியே, இன்றும் இவறிய அலரோன் மாலோன் பித்தன் என்று இ பேர் பெற்றார்-இப்பொழுதும் விருப்பமிக்க அலரோனென்றும் மா லோனென்றும் பித்தனென்றும் இப்பேர்களைப்பெற்றார்கள், சிவசிவ அவர்திறந்து அக ப்படாதார் யாவரோயோ - சிவ சிவ அப்பரத்தையர் திறத்திலகப்படாதவர் யாருளார்.

மலரில்வசிப்பவன், மாயையால் உயிர்களை மயக்கவல்லவன், ஞானமுடையவன் என்னும் பொருள்மேல் நின்ற அலரோன், மாலோன், பித்தன், என்னுமிப் பெயர்களு

க்குப் பகுதிவிகுதிமுதலிய உறுப்பாற்றலால் இங்குள்ள பரத்தையர்கண் வசை
ப்பழிச்சொல்லேயுடையவன், மயக்கமுடையவன், பித்துக்கு
பொருள்படக்கூறுதலால் பிரிநிலை நவிற்சியணி. ஏகாரமிரண்டனுள் முன்னது தேற்ற
ம், பின்னது இரக்கம். (௫௫)

விற்றிடுமல்குறன்னைமீளவுந்தமதேயாக்கி
மற்றையநாளும்விற்கும்வரைவிலார்வீதியிச்சீர்
கற்றிலாவணிகமாக்களாவணக்கவினைநோக்கிப்
பற்றுவெண்டாளக்கோவைப்பத்தியாற்சிரிக்குமன்றே.

(இ-ள்.) விற்றிடும் அல்குல் தன்னை மீளவும் தமதேயாக்கி மற்றைய நாளும் வி
ற்கும் வரைவிலார் வீதி - முன்னாளிலொருவனுக்கு விற்ற அல்குலையும் மீளவுந்தமக்கே
யுரித்தாக்கி வழிநாளும்வந்த மற்றையோருக்கு விற்கும் பரத்தையரது வீதியானது,
இ சீர் கற்றிலாத வணிகமாக்கள் ஆவணம் கவினை நோக்கி - இவ்வாணிகத்தின் சிறப்
பைக்கற்காத வணிகரது கடைவீதியின் பொலிவைநோக்கி, பற்று வெள் தாளம் கோ
வை பத்தியால் சிரிக்கும் - தொங்கவிட்ட வெள்ளிய முத்துக்கோவையின் வரிசை
யால் சிரிக்காநிற்கும்.

பரத்தையர் வீதியிற் கட்டிய முத்துக்கோவைகள் வெள்ளிய கிரணம் வீசுதலை
அப்பரத்தையர் செய்யும் வாணிபம் போல வணிகர் தாம் ஒருவருக்கு விற்றபொருளை
த்தமக்குரித்தாக்கி வழிநாள் புதிதாக மற்றொருவனுக்கு விற்கும் வாணிபத்தை அவர்
கள் கற்காமையால் அவர்கள் கடைவீதியின் பொலிவைநோக்கிப் புன்னகைசெய்தலை
யொக்குமென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (௫௬)

இருமைவாணிபத்திற்கூர்த்தமதியருமிறும்பூதெய்த
வருவமாமின்பந்தன்னையிம்மியினளவுமேறா
துருவமாம்பொருளுக்கேற்பநிறுத்துவிற்றொழுகவல்ல
விருமனப்பெண்டிர்தம்முட்டருக்கிவாழிருக்கையீதால்.

(இ-ள்.) இருமை வாணிபத்தில் கூர்த்த மதியரும் இறும் பூதெய்த-பெருமை
யமைந்த வாணிபத்திற் கூர்ந்த புத்தியை யுடையவரும் வியக்க, அருவம் ஆம் இன்பந்
தன்னை இம்மியின் அளவும் ஏறாது-அருவமாகிய இன்பத்தினை யோரிம்மி யளவும் ஏற்ற
மாகாது, உருவம் ஆம் பொருளுக்கு ஏற்ப நிறுத்து விற்று ஒழுக வல்ல இருமனப்பெண்
டிர் தம்முள் தருக்கி வாழ் இருக்கை ஈது-உருவப்பட்ட பொருளுக்குச் சமமாக நிறுத்து
விற்று நடக்க வல்ல கவர்பட்ட மனத்தையுடைய பரத்தையர்கள் தங்களுக்குள் இறுமாந்
துவாழும் பரத்தையர் சேரியிதுவாம்.

இம்மி என்பது மிகவுஞ் சிற்றெண். பிறர் கொடுக்கும் உருவப் பொருளுக்குத்
தாம் கொடுக்கும் உருவப்பொருள் காணியளவு ஏற்றமாகவும் குறைவாகவும் வாணிபஞ்
செய்வோரை இருமை வாணிபத்திற் கூர்த்த மதியர் எனவும், பரத்தையர் பிறர்கொ
டுக்கும் உருவப் பொருளுக்குத் தாம் விற்கும் அருவப் பொருளாகிய இன்பம் இம்மியள
வுமதிகப்படாது நிறுத்து விற்றலால் இறும்பூதெய்த அருவமா மின்பந் தன்னை யிம்மி
யினளவு மேறா துருவமாம் பொருளுக் கேற்ப நிறுத்து விற்று எனவும், மிக்க பொருள்
கொடுத்த புதியவனோடு புணர்தலும், குறைந்த பொருள் கொடுக்கும் பழங்கேண்மைய
ரோடு புணராமையும் ஒருகாலத்தே யுடைமையால் இருமனப் பெண்டிர் எனவுங் கூறி
னர். இது சாதித்தன்மையணி. பெண்டிர் பெண்டுபெகுதி,ஈர் புதியனபுகுதலால்வந்த பலர்

பால் விகுதி. பெண்டிர் என இர் விகுதிபெற்று வருதலும் உண்டு. பகுபத இலக்கணந் தெரியாத ஒருவர் பெண்டிர் என வருதல் பிழையெனக் கருதிப் பெண்டீர் என வருமிடந்தோறும் பெண்டிர் எனத் திருத்துக வெனப் பிழைபடத்திருத்தினர் "அங்கட்கமலத்தலர்கமலமேயீருநீரோபோலும் - வெங்கட்சுடிகைவிடவரவின்மேயீருநீரோபோலும் - திங்கட்சடையீருந்தில்லைவனத்துள்ளீருநீரோபோலும்" என ஆன்றோர்கூறிய செய்யுளில் மேயீர்முதலிய வினைமுற்றுப்பெயர்கள் படர்க்கைப்பொருளில் ஈர் விகுதிபெற்றுவந்தமையை யுணர்ந்திலர்போலும், நிகண்டேயவர்க்குப் பேரிலக்கியமாதலால். (௩எ)

இன்னவீங்குளவோவென்னக்கடாதலுமியம்பியோர்கட்
கன்னவிங்குள்ளவில்லென் றிறுத்தலுமறியாதியாரு
மென்னவுந்தருதிரொன்னவிலைகொடுத்தேற்பவீய
மன்னியெப்பொருளுமென்று நிறையுமாவணமனந்தம்.

(இ-ள்.) ஈங்கு இன்ன உளவோ என்ன கடாதலும்-இவ்விடத்து இப்பொருள்கள் உளவோ என்று ஒருவன் வினவுதலும், இயம்பியோர்கட்கு அன்ன இங்கு உள்ள இல்லென்று இறுத்தலும் அறியாது-அவ்வாறு வினவியவர்க்கு அப்பொருள்கள் இவ்விடத்து உள்ளன இல்லனவென்று விடைதருதலுமறியாமல், யாரும் என்னவும் தருதிர் என்ன விலை கொடுத்து ஏற்ப-எவரும் எப்பொருளையுங் கொடுப்பீரென்று விலைகொடுத்து வாங்க, ஈய எப்பொருளும் மன்னி என்றும் நிறையும் ஆவணம் அனந்தம் - கொடுக்கப்பட்ட எவ்வகைப்பட்ட பொருளும் நிலைபெற்று எக்காலத்தும் நிறைந்துள்ள கடைவீதிகள்

வணிகீர் பயறுண்டோ என வினவினவனுக்கு இருகலமுண்டு, இரு தூணியுண்டு அதனளவையைக்கூறி எவ்வளவுண்டு என்னும் வினவும்,அதற்கு விடையும் பெருகாமற்காக்க உள்ளனவென் றிறுத்தலும், துவரையுண்டோ என வினவினவனுக்கு உழுந்தும் பயறும் உண்டென்று அதனினத்தா வில்லையென்று விடை தருதலுமன்றி உழுந் துண்டோ பயறுண்டோ, என்னும் வினவும் அதற்கு விடையும் பெருகாமற்காக்க இல்லென்றிறுத்தலுமெனக்கூறுந் தொன்றுதொட்டுள்ள வழக்கினை வணிகர் அறியார் என்பார் இன்ன வீங்குளவோவென்னக் கடாதலு மியம்பியோர்கட்-கன்னவிங்குள்ள வில்லென் றிறுத்தலுமறியாது எனவும், உடையவர் தொழிலையுடைமைமேலேற்றி - யாரும் என்னவுந் தருதிரொன்ன விலைகொடுத்தேற்பவீய-மன்னியெப்பொருளுமென்று நிறையுமாவணமனந்தம் எனவுங்கூறினர். இது தொழிற்றன்மையணி. தொன்றுதொட்டுள்ள வழக்கை. "தம்பாலில்லதில்லெனினினனுய்-உள்ளதுகூறிமாற்றியுமுள்ளது - சுட்டியுமுரைப்பர்சொற்சுருங்குதற்கே" எனவருஞ் சூத்திரத்தாலுணர்க. (௩அ)

செய்வினையனைத்துந்தன்பாற்சேர்த்துவைத்துயிர்க்குப்பின்ன
ரவ்விறையாணையாற்றலளித்திடுமாயையேபோற்
கொய்வளம்வருவமுற்றுங்கொண்டுபின்னுய்கர்மாறப்
பௌவநீருலகுக்கெல்லாமுதவுவபைம்பொன்மாடம்.

(இ-ள்.) செய்வினை அனைத்தும் தன்பால் சேர்த்து வைத்து உயிர்க்கு பின்னர் அ இறை ஆணை யாற்றால் அளித்திடும் மாயையே போல் - உயிர்கள்செய்யும் வினைமுற்றுந் தன்னிடத்துச் சேர்த்துவைத்துப் பின்பு அவ்வுயிர்களுக்கு அவ்விறைவன் ஆணையின் வழியால் கொடுக்கு மாயையைப்போல, பொன் மாடம் கொய் வளம் வருவ முற்றும் கொண்டு-பொன்னாலமைந்த வணிகர் மாடங்கள் பிறரீட்டிய வளங்களுள் தம்மிடத்

தில் வருவன முழுமையுங்கொண்டு, பின் நாய்கர்மாற டௌவம் நீர் உலகுக்கு எல்லாம் உதவுவ - பின்பு வணிகர் விற்கக் கடல்சூழ்ந்த உலகத்திற் கெல்லாந் தாராநின்றன.

கன்மமலம் உயிர்களிடத்துச் சுகதுக்கங்களைத் தோற்றுவித்தற்குத் துணைக்காரணமாய்த் தனுகரணமுதலியவற்றை உயிர்களோடு கூட்டுவித்தலால் செய்வினை யனைத்துந் தன்பாற் சேர்த்துவைத்து எனவும், தான் சடமாகையால் இறைவனுற் காரியப் படுதலில் உயிர்க்குப்பின்னர் - அவ்விறையாணையாற்றுலளித்திடுமோயையேபோல் எனவுங் கூறினர். மாயையை மாடமாகவும், நாய் கரை இறைவராகவும், உயிர்க்கு இருவினைப் பயன்களை அளித்திடுதலை வளம் வருவமுற்றும் உலகுக்கெல்லாம் உதவுவன ஆகவுங் கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி.

உயிர்களிடத்துச் சுகதுக்கங்களைத் தோற்றுவித்தற்குத் தனுகரணமுதலியவற்றை உயிர்களோடு கூட்டுவித்தற்கும் தான்சடமாதலால் இறைவனுற்காரியப்படுதற்கும்.

"மாயையிற்காலமோடுநியதிபின்கலாதிதோன்றும்
ஆயவக்காலமூன்றுயாக்கியுமளித்தும்போக்கிக்
காயமோடுலகுக்கெல்லாங்காலசங்கையினைப்பண்ணி
நாயகனுணையாலேநடத்திடுஞ்சகத்தையெல்லாம்." எனவருஞ் சிவஞான

சித்தியாரால் உணர்க. (௩௧)

அணங்கனார்பரப்பிவிற்குமணிகிளர்கோங்கந்தாரிற்
சுணங்கினைக்கணியென்றஞ்சிச்சுரும்பினமுருமைநோக்கிப்
பணங்கிளர்பாந்தளல்குற்பாவைமீர்பொன்னேபொற்பூ
மணங்கமழ்கின்றதென்பாராடவர்மருட்சியெய்தி.

(இ-ள்.) அணங்கு அன்னார் பரப்பி விற்கும் அணிகிளர் கோங்கம் தாரில் சுணங்கினை கணிஎன்று அஞ்சி சுரும்பு இனம் உருமை நோக்கி-தெய்வப் பெண்களை யொத்த பெண்கள் தமது மார்பிற் சார்த்திப் பரப்பிவிற்கும் அழகால் விளங்கும் கோங்கமலராலாகிய மாலையி னிடையிற்றோன்றும் அவர்கள் மார்பின்றே மலேவேங்கை மலராலாகிய மாலை யென்றஞ்சி வண்டின் கூட்டங்கள் அடை யாமையைப் பார்த்து, ஆடவர் மருட்சி எய்தி பாந்தள் பணம் கிளர் அல்குல் பாவை மீர் பொன்பூ மணம் கமழ்கின்றது என்னே என்பார்-புருடர்கள் மயக்கங்கூர்ந்து பாம்பினது படம்போல விளங்கும் அல்குலையுடைய பெண்காள் இந்த மாலையிலமைந்த பொன்மலர் வாசம் வீசுகின்றது யாது காரணமென்று வினவுவார்கள்.

பையரவல்குலார் என்றுற் போலக்கொண்டு கூட்டாகப் பணங்கிளர் பாந்தளல்குல் என்றூர். கோங்கமாலையைப் பெண்கள் மார்பிற் சார்ந்தி விற்றலால் அங்குள்ள தேமலே வேங்கைமலர்மாலையென்றையுற்று வண்டினம் அஞ்சுதலால் ஐயவணியும், கோங்கமலர் பொன்னிற முடைமையால் அதனைப் பொற் பூவாகக் கருதிப் புருடர் மயங்கி இது வாசனை வீசுகின்ற தற்குக்காரணம் என்னவென்று வினவுதலால் மயக்கவணியுங் கலந்து வருதலிற் கலவையணி. சிப்பியில் வெள்ளி தோன்றுதற்கு மாலைக்காலம் ஏதுவாதல்போல் கோங்கமலர்மாலையை வேங்கைமலர்மாலை யென்றையுறுதற்கு மார்பிற் சார்ததுதல் ஏதுவாதலறிக. (௬௦)

வீழ்பொருளெடுக்கலாற்றுவுறுசனமிடைந்தவீதித்
தாழ்குழன்மடவார்மைந்தர்தங்களுண்முட்டுங்காலைக்
காழ்மணிமுலையுந்தோளுங்கலந்துறவுவகைபொங்கி
வாழ்கருஞ்சிலரோபல்லோர்வாடிநைந்தழுங்குவார்கள்.

(இ-ள்.) வீழ் பொருள் எடுக்கல் ஆற்றாத உறுசனம் மிடைந்த வீதி - கீழேவிழுந்தபொருளை யெடுக்க இயலாத மிக்கசனங்கள் நெருங்கிய வீதியில், தாழ்குழல் மடவார் மைந்தர் தங்கள் உள்முட்டும் காலே-சோர்ந்த கூந்தலையுடைய பெண்களும் புருடர்களும் தங்களுக்குள் ஒருவரோடொருவர் முட்டும்படி நெருங்கியகாலத்தில், மணிகாழ் முலையும் தோளும் கலந்தற உவகை பொங்கி வாழ்நரும் சிலர் - மணிவட மணிந்த முலையுந் தோளுந் தம்முட்கலக்க அதனால் மகிழ்ச்சி கூர்ந்து வாழ்வாருஞ்சிலர், வாடி நைந்து அழுங்குவார்கள் உம் பல்லோர் - அந்நெருக்கால் உடல்வாடி மெலிந்து வாடுவார்களும் பல பேர்கள்.

சிலர் என்றது நூர்த்தரை, பல்லோர் என்றது நல்லொழுக்கமுடையவரை. எண்ணும்மை தொகுத்தல். வீழ்பொருளெடுக்கலாற்றா உறுசனமிடைந்தவீதி என்றது மிகுதியணி. (சுக)

கலிநிலைத்துறை.

நெருங்குபல்சனமுழக்கருக்கூலநீல்விடத்தைக்
கரந்தகம்பர்மேற்றெழித்தறுங்கடல்பெருந்தெருவாற்
சுரந்துவந்துநாற்புறத்தினுஞ்சனமிகத்தொருவ
பரந்தவீரையுட்புகுந்திடும்பற்பலநதியே.

(இ-ள்.) நெருங்கு பல் சனம் முழக்கு அருந்தகூலம் நீல்விடத்தை கரந்த கம்பர் மேல் தெழித்தறும் கடல்-நெருங்கிய பலசனங்களின் முழக்கமருந்த கடை வீதி கரியவிடத்தைத் தமது ஸ்ரீகண்டத்தில் ஒளித்த இறைவர்மேல் அதட்டி யெழுந்த கடலையொக்கும், பெரும் தெருவால் சுரந்து வந்து நால் புறத்தினும் சனம் மிக தொருவ-பெரிய தெருக்களால் அதிகரித்துவந்து நான்கு புறங்களிலுஞ் சனங்கள் அக்கடைவீதியில் மிகவும் நெருங்கல், பரந்த வீரை உள் புகுந்திடும் பல்பல நதி-பரவிய கடலிற்புகும் பற்பல நதியையொக்கும்.

தொருவ தொழில்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். கூலம் எண்வகைத்து, அவை நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, மலைநெல், மூங்கில் நெல் இது தானத்தின்மேல் நிற்றலால் தானியாகுபெயர். தன்னிடத்துள்ள பொருளாகிய நஞ்சினைச் சிவபெருமான் கொள்ளை கொண்டமையால் அதுதெரிந்து கடல், போர்க்கு வந்திறுத்ததென்பார் தெழித்தறுங் கடல்என்றார். இதில் ஒருபொருட்குப் பலவுவமை வந்தமையால் மாலையுவமையணி. (சுஉ)

அறத்தினீணகர்புவனைசக்கரமெனவான்ற
திறத்தபொன்மதிலேழுடைச்சின்மயக்கோயிற்
புறத்தவான்மிசைப்புலவர்கண்ணூறுபட்டிடாமை
மறைந்தெனக்குயினுரிஞ்சுபூம்பந்தர்சான்மறுகு.

(இ-ள்.) வான் மிசை புலவர் கண்ணூறு பட்டிடாமை மறைத்தால் என்ன குயின் உரிஞ்சு பூம்பந்தர் சால் மறுகு - விண்ணுலகிலுள்ள தேவர்கள் கண்ணேறுபடாமல் மறைத்தாற்போல மேகங்கள் தவழும் பூம்பந்தல் மிக்க வீதிகள், அறத்தின் நீள் நகர் புவனை சக்கரம் என்ன - முப்பத்திரண்டு தருமங்களான்மிக்க காஞ்சித் திருநகரில் நிலமகள் வடிவமென்று கண்டோர் கூற, ஆன்ற திறத்த பொன்மதில் ஏழுடைய சின்மயன் கோயில் புறத்த - அமைந்த பகுதியையுடைய பொன்னாற்சமைத்த ஏழுமதில்களையுடைய சிவபிரானது திருக்கோயிலின் புறத்திலுள்ளன.

ஏழாம் வேற்றுமைத் தொகையாதலால் "வரைபாய்வருடை" என்றாற்போல வருமொழிமுதல் வல்லெழுத்தியல்பாய் நகர்புவனையென நின்றது. புவனசக்கரம் என்னும் பாடத்துக்கு நகரமானது பூமியின் வட்டவடிவாக எனப் பொருள்கொள்க. புவனைசக்கரம் என ஆன்றமதில் என்றது பிருதுவியின் வடிவு நாற்கோணமாதலால் நாற்கோணமாக அமைந்த மதில் எனக்கொள்க. திறத்த பொன்மதி லேழுடை என்பதை இடைப்பிறவரலாக்கிப் புவனைசக்கரமென வான்றசின்மயக்கோயில் எனக்கொண்டு உமையம்மையின் முக்கோணவடிவாகிய சக்கரம்போல அமைந்த திருக்கோயிலெனக்கொள்க. நிலமகளுக்குப் பொருள்கொள்ளுங்கால் நிலவடிவாயுள்ளவள் எனவும், உமையம்மைக்குப் பொருள்கொள்ளுங்கால் புவனங்களைத் தந்தவளெனவும் பொருள்கொள்க. "குமரக்கோட்டம்" என்றாற்போல உயர்திணைப்பெயரீறுகெட்டு வருமொழிமுதல் வல்லெழுத்து மிக்குச் சின்மயக்கோயில் என நின்றது. காமக்கோடிபீடம் முக்கோணவடிவாயுள்ளதாதலால் புவனைசக்கரம் என்றார் என்க. "ஆயிடைநின்றானந்தப்பரவெளியாம்பிலச்சூழலணையச்செல்வாள்-பாயமணிப்பெருவாய்தலேழனையுந்தான்றுறந்துபையவுள்புக் - கேயுமருட்பீடத்தினியவ்ஞேக்கிவிம்மிதமிக்கெய்தியந்த - மாயிரும்பீடத்தலையின்முக்கோணவடிவினெலாமகிழவைகி" என இப்புராணத்திலும், "சிவகோணமுற்பகர்வதொருநாலுசத்திநெறிசெறிகோணமத்தொடொருமருவுகோண் - நவகோணமுட்படுவதெழுமூவிரட்டியொரு நவில்கோணமுற்றதிமூவலயமாய்-இவராநிரைத்ததளமிருநாலுமெட்டினையுமெழிலாய வட்டமொடுசதுரமாய்-உவமானமற்றதனிதனிமூவகைக்கணுமெனுமைபாதமுற்றசிறுவரைகளே" என்வருஞ் செய்யுளுரையில் சிவகோணநான்கும் கீழ்நோக்கியுஞ் சத்திகோணம் ஐந்தும் மேல்நோக்கியுந் தம்முட்புணரவே முக்கோணம் என்றார். இதனைத் திரிபுரைசக்கரம்என்பர். பிருதுவி நாற்கோணம்என்பது "மண்புனலனல்கால்வான்பால்வடிவுநாற்கோணமாகும்-தண்பிறைமூன்றுகோணந் தருமறுகோணம்வட்டம்" எனச் சிவஞானசித்தியாரிலும் வருதலறிக. நிலைமொழியீறுகெடுதலுக்கும் வருமொழி வல்லெழுத்து மிகுதலுக்கும். "உயிரீறாகியவுயர்திணைப்பெயரும்-எல்லாவழியுமியல்பெனமொழிப" எனவருந் தொல்காப்பியச்சூத்திரத்தில், உயிரீறுபுள்ளியீறு என்ற மிகையால். (கூகூ)

மகரப்பொற்குழைப்பிரான்றளிசூழ்மதில்குறடு
நகரச்சீரெயில்சுற்றுமாளிகைநிரையாருந்
திகழச்சூழ்தெருவாரிடைவெளியுமாய்ச்சிவன்றேர்ச்
சகடத்தேருடைச்சகடமற்றொன்றெனத்தயங்கும்.

(இ-ள்.) மகரம் பொன்குழை பிரான் தளி சூழ் மதில் குறடும்-பொன்னாலமைந்த மகரகுண்டலத்தை யணிந்த சிவபிரானது திருக்கோயிலைச் சூழ்ந்த திருமதிலானது தேருருளையின் குறடாகவும், நகரம் சீர் எயில் சுற்று மாளிகைநிரை ஆரும்-அத்திருநகரிற் சிறந்த மதில்களாற்சூழப்பட்ட மாளிகையின் வரிசைகள் உருளையின் அகவாயாகவும், திகழ சூழ் தெரு ஆரிடை வெளியும் ஆய்-(அம்மாளிகையின் வரிசைகள்) விளங்கச்சூழ்ந்த தெருக்கள் அவ்வுருளையின் அகவாயிலுள்ள வெளியுமாகி, சிவன் தேர் சகடத்து ஏர் உடைய சகடம் மற்று ஒன்று என்ன தயங்கும் - சிவபிரானது நிலவுலகாகிய தேரிலுள்ள இரண்டு சகடங்களோடு அழகினையுடைய மற்றொரு சகடம் இதுவென்றுகூற விளங்கா நிற்கும்.

சிவபெருமான் திருத்தேர் முன்னமே சந்திரசூரியர்கள் என்னும் சகடங்களையுடைய தென்பார் சகடத்தேருடை எனவும், அது நிலவுலகே யாதலால் அதற்குத்தக்க சகடம் இதுவென்பார் மற்றொன்றெனத் தயங்கும் எனவுங்கூறினார். மதிலைக் குறடாக

வும், மாளிகையின் வரிசைகளை அகவாயாகவும், தெருக்கள் அகவாயிலிலுள்ள வெளிக ளாகவும் அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (சுச)

சரிக்குங்குஞ்சரமதப்பெருங்கலுழியுந்தளவைச்
சிரிக்குமூரலார்களைந்ததார்நறவமுஞ்சேறாய்
விரிக்கும்வீதியிலடிவழுக்காவகைவெயிலைப்
புரிக்குஞ்செம்மணிபதித்துமேனடப்பராற்புரியோர்.

(இ-ள்.) சரிக்கும் குஞ்சரம் மதம் பெரும் கலுழியும்-சஞ்சரிக்கும் யானையினது மதமாகிய பெரியகாட்டாறும், தளவை சிரிக்கும் மூரலார் களைந்த தார் நறவமும் - முல் லையரும்பைச்சிரிக்கும் பற்களையுடைய பெண்கள் களைந்த மாலைகள் சிந்தும் தேனும், சேறாய் விரிக்கும் வீதியில் அடி வழுக்காதவகை - இவை சேறாய்ப்பரந்த வீதியில் தம து கால்கள் வழுக்காதவண்ணம், புரியோர் வெயிலை புரிக்கும் செம்மணி பதித்து மே ல் நடப்பர் - அந்நகரிலுள்ளோர் வெயிலையுமிழும் செவந்த மாணிக்கங்களை அச்சேற்றி ற்பதித்து அவற்றின்மேல் நடப்பார்கள்.

சேறுபட்ட வீதியில் கால்வழுக்காமல் அச்சேற்றில் மாணிக்கங்களைப்பதித்து அவற்றின்மேல் நடப்பனென அந்நகரிலுள்ளோர் செல்வமிகுதியை யுயர்த்திக்கூறுதலால் உதாத்தவணி. (சுரு)

ஞெள்ளற்பாங்கரினறியநீர்வண்டலாட்டயரு
மள்ளற்சேறுகள்புலர்த்துவானிடையிடையகழ்ந்து
பள்ளத்தாற்சிறுகால்பலவகுத்தெனப்பிறங்கும்
வள்ளற்காவலர்செலுத்துதேர்ச்சகடுபோம்வழியே.

(இ-ள்.) ஞெள்ளல் பாங்கரின் நறிய நீர் வண்டல் ஆட்டு அயரும் அள்ளல் சேறு கள் புலர்த்துவான் - வீதியின் பக்கத்தில் நறுமணங்கமழும் நீர்விளையாட்டைச்செய் யும் குழம்பிய சேறுகளைப்புலர்த்த, இடை இடை அகழ்ந்து பள்ளத்தால் பல சிறுகால் வகுத்தால் என்ன - அச்சேறுகளினிடையிடையே அகழ்ந்து பள்ளமாகப் பல சிறுகால் களை வகுத்தாற்போல, வள்ளல் காவலர் செலுத்து தேர் சகடு போம் வழிபிறங்கும்-பெ ருங்கொடையையுடைய அரசர்கள் செலுத்தாநின்ற தேர்க்கால்கள் செல்லும் வழிகள் விளங்காநிற்கும்.

வகுத்தென தொகுத்தல்விகாரம். தேர்க்கால் சென்றவழியை நீர்விளையாட்டா லமைந்த சேற்றைப்புலர்த்த அந்நகரிலுள்ளோர் சிறுகால் தோண்டியதுபோலுமென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. "ஆறுசெல்வருத்தம்" என்றாற்போல அயரும் அள் ளற்சேறு விளையாடுதலாலுண்டான சேறு என நிற்றலால் காரணகாரியப்பொருளில் வந்த பெயரெச்சம். (சுசு)

செய்யதிண்புயத்தெழிலினைக்கவர்ந்தமைதெரிந்து
வெய்யமாந்தர்கள்வெதும்புறப்பன்முறைதாக்க
வையவோவெனவலறுவபோலணிமுழவ
மையவேலையுஞ்சமழ்ப்புறவயின்றொறுங்கறங்கும்.

(இ-ள்) வெய்யமாந்தர்கள் - யாவரும் விரும்பும் புருடர்கள், செய்ய திண் புயத் து எழிலினை கவர்ந்தமை தெரிந்து வெதும்புற பல்முறை தாக்க - தமது குங்குமக்கு ழம்பாற் செவந்த திண்ணிய புயத்தினது அழகைக் கொள்ளைகொண்டமையையறிந்து

வருந்தும்படி பலமுறையுமோத, அணி முழவம் ஐயவோ என்ன அலறுவபோல் மைய வேலையும் சமழ்ப்புற வயின் தொறும் கறங்கும்-அழகிய மத்தளங்கள் ஐயோவென்று கதறுதல்போலக் கரிய நிறத்தையுடைய கடலும் நாண இடங்கள்தோறு முழங்காநிற்கும்.

வாச்சியம் வாசித்தலில் வல்லோர் மத்தளம் வாசித்தலையும், அது ஒலித்தலையும் தமது புயத்தினழகை மத்தளங் கவர்ந்ததுதெரிந்து அதனை யடித்தனரெனவும், அது ஒலித்தலை யடியாற்ருது கதறுவதெனவும் அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், கடலொலியும் குறைபட மத்தளங்களொலிக்குமென்றமையால் மிகுதியணியுங் கலந்துருவதலிற்கலவையணி. (கூஎ)

விலாழிநீருமொண்சந்தனவிரைச்செழுஞ்சேறுங்
குலாயவீதிகால்வழுக்குமென்றஞ்சுபுகோண
னிலாமுடித்தவர்திருவிழாத்தொழவந்துநெருங்கும்
வலாரியாதியோரடிபடியுருவகைநடப்பார்.

(இ-ள்.) விலாழி நீரும் ஒண் சந்தன விரை செழும் சேறும் குலாய வீதி கால் வழுக்கும் என்று - குதிரையின் வாய்நுரை நீரும் ஒள்ளிய சந்தனமாகிய கூட்டமைந்த குழம்பும் விளங்கிய வீதியில் தமது கால்வழுக்குமென்றே, கோணல் நிலா முடித்தவர் திருவிழா தொழவந்து நெருங்கும் வலாரி ஆதியோர் அஞ்சுபு - வளைந்த இளஞ்சந்திரனை முடித்த சிவபிரானுர் திருவிழாவைத் தொழவந்து நெருங்கிய இந்திரன்முதலிய தேவர்களஞ்சி - அடிபடியுருத வகை நடப்பார் - தமது கால்கள் பூமியிற்ருேயாதவண்ணம் நடப்பார்கள்.

சிவபிரான் மகோற்சவத்தைச் சேவிக்கவந்த தேவர்கள் காற்சுவடு இயற்கையாய்ப் பூமியிற்ருேயாது நடத்தல் சந்தனக்குழம்பு முதலியவற்ருலமைந்த வீதியின் சேறு காலிற்ருேயாமைக்கு எனப்பிறிதொன்ருல் நிகழ்ந்ததெனக்கூறுதலில் சமாயுதவணி.

புரசைத்திண்களிறுலாத்தரும்பொலஞ்சுடர்மறுகிற்
பாசப்போதருமன்னவர்பணிமுடிநெருக்கி
னரசப்பன்மணிதெறித்துவீழ்ந்திமைப்பனவவியா
முரசப்பேரொலியதிர்பயினிலுக்கமுதுடுப்போல.

(இ-ள்.) புரசை திண் களிறு உலாத்தரும் பொலம் சுடர் மறுகில் பாச போதரும் மன்னவர் பணிமுடி நெருக்கின் - கழுத்திடு கயிற்றையுடைய திண்ணிய யானைகளுலாவும் பொன்னின விளக்கமமைந்த காஞ்சித்திருநகரின் வீதியில் நிறைவரை யணங்கவந்த அரசர்கள் பணியு மகுடத்தினெருக்கத்தால், அரச பல் மணி தெறித்து வீழ்ந்து-நடுநாயகமாயுள்ள பலவகைப்பட்ட இரத்தினங்கள் அவற்றினின்று தெறித்து விழுந்து, அவியாத முரசம் பேர் ஒலி அதிர்ப்பினில் உக்க மூது உடுபோல் இமைப்பன-ஒயாத முரசங்களின்பேரொலியினுற் சிந்திய பெரியநக்ஷத்திரங்களைப்போல விளங்காநின்றன

முடிநெருக்கின் அரசப் பன்மணிதெறித்து வீழ்ந்து எனச் செல்வமிகுதியைப்புகழ்ந்துகூறுதலால் வீறுகோளணியும், அவியாமுரசப் பேரொலி யதிர்ப்பினிலுக்க மூதுடுப்போலிமைப்பன என்றமையால் இல்பொருளுவமையணியுங் கலந்துவருதலில் கலவையணி. (கூஅ)

அங்கண்வீதியினணிநலங்காறுமாதரத்தி
னெங்களுரநுந்திருவிழாவென்பதோர்பெயரான்
மங்கையாளொடுமகாரொடும்வானவர்பயிச்சத்
திங்கடோறெழுந்தருளுமேலதன்வளஞ்சுற்றோ.

(இ-ள்.) அங்கண் வீதியின் அணி நலம் காணும் ஆதரத்தின்-அவ்விடத்திலுள்ள வீதியினது அழகினலத்தை விரும்பும் விருப்பத்தால், எங்கள் நாதனும் திருவிழா என்பது ஓர் பெயரால்-எங்களிறைவனுகிய சிவபிரானும் திருவிழாவென்னும் ஓர் பெயர் வைத்து, மங்கையாளொடும் மகாரொடும் வானவர் பழிச்ச திங்கள்தோறும் எழுந்தருளுமேல் அதன் வளம் சிறிதோ - உமையம்மையோடும மூத்தபிள்ளையார் இளையபிள்ளையாரோடும் தேவர்கள் வணங்க மாதந்தோறு மெழுந்தருளுவாராகுல் அவ்வீதியின் வளமை சொல்லுதற்கெளிதோ.

திங்கள்தோறும என்றது பிரதோடமுதலிய பஞ்சபருவங்களை. மாதந்தோறும் சிவபிரான் உமையம்மை முதலியரோடு எழுந்தருளுதலை வீதியின் சிறப்பைக காணுதற் பொருட்டென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (எ0)

பாலியேமுதல்பலநதித்திவலைபாய்ந்தழகின்
பாலவாயமாளிகையடித்தலத்தினைப்பாராப்
பாலவெண்சுதைமாடமேறசிகரமும்பனிவிண்
பாலியாற்றுநீர்த்திவலைகள்போர்ப்பவான்படரும்.

(இ-ள்) பாலியேமுதல் பலநதி திவலை பாய்ந்து அழகின் பால ஆய மாளிகை அடி தலத்தினை - பாலாறுமுதலிய பலநதிகளின் துளிகள் பாய்தலால் அழகின் பகுதியனவாகிய மாளிகைகளின் அடித்தலங்களை, பால வெண் சுதை மாடமேல் சிகரமும் பாரா - பால்போலும் வெள்ளிய சுதை தீற்றிய மாடங்களின்மேலுள்ள சிகரங்களும் பார்த்து, பனி விண பாலி ஆற்றுநீர் திவலைகள் போர்ப்ப வான் படரும் - குளிர்ந்த ஆகாயத்திலுள்ள கங்கையினீர்த்துளிகள் தமமைப்போர்க்க விண்ணுலகமட்டும் உயர்ந்தோங்கும்.

உபரிகைகளின் சிகரங்கள் அவற்றின் அடித்தலம் பாலிநதிமுதலியவற்றி னீர்த்துளிகளையடைதலால் தாமும் ஆகாசகங்கையினீர்த்துளியையடைய ஆகாயத்திற்செல்லும் எனச் சம்பந்தமில்லாதிருக்கச் சமபந்தத்தை யாரோபித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி. (எக)

பன்னிறப்பரிகருங்கரிதொழிலமைபஃறே
ரின்னகீழ்நிலைவாயிலினியங்குதனோக்கி
மன்னுமேனிலைவாயில்வெண்கரிபசுமான்றே
ரன்னவேனவுந்தன்னிடத்தியங்கவானணவும்.

(இ-ள்.) பல் நிற பரி கரும கரி தொழில் அமை பல் தேர் இன்ன கீழ் நிலை வாயிலின் இயங்குதல் நோக்கி - பலநிறங்களையுடைய குதிரைகளுங் கரிய யானைகளுந் தொழில்முற்றிய பலதேர்களும் இவைபோல்வனவும் கீழ்மாடங்களின் வாயிலிற் சஞ்சரித்தலைப்பார்த்து, மன்னும் மேல் நிலை வாயில் வெண் கரி பசு மான் தேர் அன்ன எனவும் தன்னிடத்து இயங்க வான் அணவும்-நிலைபெற்ற மேன்மாடங்களின் வாயிலும் இந்திரனது அயிராவதமும் பசிய உச்சைச்சிரவமென்னுங் குதிரையுந் தேரும் அவைபோன்ற மற்றப்பொருள்களுந் தன்னிடந்துச் சஞ்சரிக்க ஆகாயத்தையளாவும்.

ஏனவும் என்றது காமதேனுமுதலியவற்றை. மாடங்களின் கீழ்நிலைவாயிலில் குதிரைமுதலியன சஞ்சரித்தல்நோக்கி மேனிலைவாயிலும் இந்திரன் குதிரைமுதலியன சஞ்சரிக்க ஆகாயத்திற்சேரும் எனக்கூறுதலால் இதுவும் அவ்வணி. (எஉ)

அலங்குகீழ்நிலைமாடமங்கடுப்பினின்மாட்டு
மிலங்ககிற்புகையான்விரையேற்றுவர்மடவார்

புலங்கொண்மேனிலைமாடமும்புரிகுழற்கூட்டுந்
துலங்ககிற்புகையான்மணங்கனுலுறத்தொகுப்பார்.

(இ-ள்.) மடவார் அலங்கு கீழ்நிலை மாடம் அங்கு அடுப்பினின் மாட்டும் இலங்கு அகில் புகையான் விரை ஏற்றுவர் - பெண்கள் விளங்காநின்ற கீழ்நிலையாகிய மாடங்களை அக்கீழ்நிலையின் அடுப்பில் மாட்டிய விளங்கும் அகிற்புகையால் வாசம் ஊட்டுவார், மடவார் புலம் கொள் மேல் நிலை மாடமும் புரிகுழற்கு ஊட்டும் துலங்கு அகில் புகையால் - பெண்கள் கண்ணுக்கமைந்த மேனிலையாகிய மாடங்களையு முறுக்கமைந்த தமது கூந்தலுக்கூட்டும் விளங்கும் அகிற்புகையால், மணம் கனுலுற தொகுப்பார்-நறுமணம் நெருங்கச்செறிப்பார்கள்.

பொலங்கொண்மேனிலைமாடமெனப்பாடமானால், பொன்னாற்செய்த மேனிலை மாடமெனப்பொருள்கொள்க.

பெண்கள் மாடங்களின் கீழ்நிலைக்கு வாசமூட்ட அடுப்பில் அகிற்கட்டையை மாட்டுவரெனவும், அதுபோல மேனிலைக்கு வாசமூட்ட அகிற்புகையால் கூந்தலைப் புலர்த்துவரெனவும் அவர்கள் செல்வத்தினை யுயர்த்திக்கூறுதலால் உதாத்தவணி. (எகூ)

இருசுடர்ப்பெருஞ்சிலைகளினியன்றமாளிகைக
ளுருகுவெங்கதிர்தடவரச்சுடுகனலுமிழு
மருகுதண்கதிர்தடவரகுளிர்புனலளிக்கு
மருவினோர்குணமபிடிபடல்வையகத்தியல்பே.

(இ-ள்.) இருசுடர் பெரும் சிலைகளின் இயன்ற மாளிகைகள் - பெருமைவாய்ந்த சூரியசந்திரகாந்தக்கற்களாற்செய்த உபரிகைகள், உருகு வெங்கதிர் தடவர சுடு கனல் உமிழும் - எப்பொருளும் உருகுதற்குக்காரணமாகிய சூரியன் தடவுதலால் சுடாநின்ற அக்கினியை ஒருபாலுமிழாநிற்கும், அருகு தண் கதிர் தடவர குளிர் புனல் அளிக்கும் - தங்கிய சந்திரன் தடவுதலால் குளிர்ந்த நீரை யொருபால் தாராநிற்கும், மருவினோர் குணம் பிடிபடல் வையகத்து இயல்பே - சிநேகரது குணம் அவரோடு சிநேகிக்கப்பட்டவர்க்குப் பிடிபடுதல் உலகியல்பாம். (ஆதலால்)

சிநேகருடைய குணம் அவரோடு சிநேகிக்கப்பட்டவர்க்குப் பிடிபடுமென்ற அவர்ணியமாகிய பொதுப்பொருளால் சூரியசந்திரகாந்தக்கற்களாற்செய்த மாளிகைகள் சூரியசந்திரர்கள் கிரணங்கள் மருவும்போது நெருப்பையும் நீரையுமுமிழுமென்ற வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. ()

செறித்தகூந்தலார்மேனிலைச்சாளரக்கதவு
திறந்தலுந்தடைபடுமகிற்புகையெலாந்திரண்டு
புறத்தினேகுவவழுதிதன்சிறைப்படுமுயல்கண்
மறித்துவிட்டநாள்விரைந்துவிண்சேறலைமானும்.

(இ-ள்.) செறித்த கூந்தலார் மேல் நிலை சாளரம் கதவு திறந்தலும் - அறல்பட்ட கூந்தலையுடைய பெண்கள் மேனிலையிலுள்ள சாளரத்தின் கதவைத்திறக்க, தடைபடும் அகில் புகை எல்லாம் திரண்டு புறத்தின் ஏகுவ-தடைபட்ட அகிலின் புகையெல்லாந்திரண்டு புறத்திற்செல்லுதல், வழுதி தன் சிறைப்படு புயல்கள் மறித்துவிட்ட நாள் விரைந்து விண் சேறலை மானும் - உக்கிரகுமாரபாண்டியர் தமது சிறைச்சாலையிலகப்படுத்திய மேகங்களைச் சிறையினின்று மீளவிட்டகாலத்தில் அவை விரைந்து விண்ணுலகத்தை யடைதலையொக்கும்.

உக்கிரகுமாரபாண்டியர் தமது பாண்டிநாட்டில் மழைவறந்தமையால் மழை பெய்யாமைக்குக் காரணம் யாதென்றிந்திரனை வினவச் சோமவாரவிரதபலனால் விண்ணுலகையடைந்து அவ்விந்திரனாசனத்தி லொக்கவிருக்க, தாழவிட்ட ஆசனத்திலிருந்த சேரசோழர்களது முகத்தைநோக்கி உங்கள் நாட்டில் மழைபெய்யுமென்றவர்களையே வி யவ்வுக்கிரகுமாரபாண்டிய ரிறுமாப்பைநோக்கி யொன்று மொழியாடாதிருந்தனன், அதுகண்டு அப்பாண்டியர் தமது நாட்டிற்கு மீளவந்து ஓர்நாள் வேட்டையாடச் சென்றகாலையில் புட்கலாவருத்தமுதலிய நான்குமேகங்களும் பொதியமலையில் மேய்தலை நோக்கி யவற்றைப்பிடித்து விலங்குபூட்டிச் சிறைக்களத்திலிட்டனர், அதனை யிந்திரன் கேள்வியுற்றுக் கோபமூண்டு போர்க்குவந்து அவ்வுக்கிரகுமாரபாண்டியர்க்குத் தோற்றுத் தன்னுலகடைந்து அம்மேகங்களை விடுக்கில் மழைபொழிவிப்பனென ஓலை போக்க, அவ்விந்திரன் வார்த்தையை யுண்மையாகக்கருதாது அவ்விந்திரனுக்குச் சினேகனாகவிருந்த ஒருவேளாளன் பிணையாக அம்மேகங்களை விடுத்தனர் என்பது திருவிளையாடற்புராணவரலாறு.

"மைக்கடல்வறப்பவென்றவாகைவேற்செழியன்மௌலிச்
செக்கர்மாமணிவிற்காலத்தேவர்கோன்றவிசிலேறி
யொக்கவீற்றிருந்தானாகவும்பர்கோனழுக்காறெய்திப்
பக்கமேயிருந்தவேனைப்பார்த்திபர்முகத்தைப்பாரா.
முகமனன்கியம்பிநீவிர்வந்ததென்மொழிமினென்ன
மகபதியெங்கணாட்டின்மழைமறுத்தடைந்தேமென்றார்
அகமலர்ந்தனையார்நாட்டினளவும்வான்சுரக்கநல்கி
நகைமணிக்கலன்பொன்னாடைநல்கிநீர்போமினென்றான்."

"பொன்றத்துமருவிக்குன்றிற்புட்கலாவருத்தமாதி
மின்றத்துமேகநான்கும்வீழ்ந்தனமேயக்கண்டு
குன்றத்தினெடியதிண்டோட்சொற்றவனவற்றைப்பற்றிக்
கன்றத்திண்களிறுபோலக்கடுந்தளைசிக்கயாத்தான்.
இட்டவன்சிறையைநீக்கியெழிலியைவிடானுமாறு
பட்டசிந்தையனேயாகப்பாகசாதனனுக்கென்று
நட்டவனொருவேளாளனன்பிணையென்றுதாழ்ந்தான்
மட்டவிழ்த்தொழுகுநிம்பமாலிகைமார்பினானும்.
இடுக்கண்வந்துயிர்க்குமூற்றமெய்தினும்வாய்மைகாத்து
வடுக்களைந்தொழுகுநாலாமரபினானுரையையாத்தன்
எடுத்துரைமறைபோற்சூழ்ந்துசிறைக்களத்திட்டயாப்பு
விடுத்தனன்பகடுபோலமீண்டனமேகமெல்லாம்" என அப்புராணத்தில் வருதல் காண்க.

அகிற்புகை சூழ்ந்திருத்தலால் உபரிகையின் சாளரக்கதவினைத்திறக்க அப்புகைப்படலம் அச்சாளரத்தின் வழிச்செல்லுதல், உக்கிரகுமாரபாண்டியர் சிறைக்களத்திலிட்ட மேகங்களை விட்டகாலத்து அம்மேகம் ஆகாயத்தில் செல்லுதலை யொக்குமென்றலால் எடுத்துக்காட்டுவமையணி. (எ௫)

தெரித்தபன்மணிமாடமேற்றிகழ்ந்தபொற்குடத்து
விரித்ததண்கதிர்க்கடவுணின்றசைதல்வேட்கோவர்
திரித்துவிட்டசக்கரமெனலாகுமத்திகிரி
பரித்தபச்சைமண்ணெனலாமதற்பயில்களங்கம்.

(இ-ள்.) தெரித்த பல்மணி மாடமேல் திகழ்ந்த பொன் குடத்து விரித்த தண் கதிர்க்கடவுள் நின்று அசைதல் - ஆராய்ந்த பலமணிகள் பதித்த உபரிகைமேல் விளங்கிய பொன்னாலமைந்த குடத்தில் பரப்பிய தண்ணிய கதிரையுடைய சந்திரனின்றசைதல், வேட்கோவர் திரித்துவிட்ட சக்கரம் என்னலாகும் - குயவர்கள் குடத்தினின்று சுழற்றிவிட்ட சக்கரமென்று சொல்ல அமையும், அதன் பயில் களங்கம் அ திகிரி பரித்த பச்சைமண் என்னலாம் - அச்சந்திரனிடத்துப்பொருந்திய களங்கம் அச்சக்கரஞ்சுமந்த பச்சைமண்ணென்று சொல்ல அமையும்.

உவமைக்கும் பொருளுக்கும் ஒற்றுமையுண்மையால் குடத்தினின்று எனப் பொருள்கொண்டாம். பொற்குடத்தில் சந்திரனின்றசைதல் குயவர்குடத்தினின்று சுழற்றிவிட்ட சக்கரம் எனவும், அச்சக்கரம் சுமந்த பசுமண் அச்சந்திரனிடத்துப்பொருந்திய களங்கமாகவுங்கூறுதலால் தெரிதருதேற்ற வுவமையணி. (௭௬)

நிரவுநித்திலத்தோரணச்செழுங்கதிர்நிரைகள்
விரவிவிண்ணெலாம்வெள்ளொளிவிரித்தலானன்றே
பரவைமேலெழும்போதும்வீழ்பருவத்துமல்லா
விரவிமண்டிலச்சேயொளிவிளங்கிடாவியல்பே.

(இ-ள்.) பரவை மேல் எழும்போதும் வீழ் பருவத்தும் அல்லாமல் - சூரியன் கடலில் உதயஞ்செய்யுங்காலத்தும் அத்தமிக்குங்காலத்தும் அல்லாமல், இரவி மண்டிலம் சே ஒளிவிளங்கிடாத இயல்பு - அச்சூரியமண்டிலத்தின் செவந்த ஒளிவிளங்காத தன்மை, நிரவு நித்திலம் தோரணம் செழும் கதிர் நிரைகள் விண் எல்லாம் விரவி வெள் ஒளி விரித்தலான் அன்று ஏ-வரிசைப்பட்ட முத்தாலமைந்த தோரணத்தின் மிக்க கிரணத்தின் வரிசைகள் ஆகாயமுற்றுங்கலந்து வெள்ளிய கிரணத்தை விரித்தலாலல்லவா.

சூரியன் கடலிற்றோன்றும் போதும் அத்தமிக்கும்போதும் தனக்குரிய செந்நிறம்படைத்தலேயல்லாமல் இடையில் அந்நிறத்தையடையாமை காஞ்சியிலுள்ள முத்துத் தோரணங்களினொளிகள் வெள்ளிய கிரணத்தைப் பரப்புங்காரணத்தால் எனக்கூறுதலால் கருவி காரகவேதுவணி. (௭௭)

திங்கள்செங்கதிராளனென்றுரைப்பதேதேற்ற
மங்கணித்திலத்தோரணத்தொளியினிலரிபோற்
றங்கிவெண்கதிராயினனதற்குறுஞ்சான்று
துங்கமாலையுங்காலையுஞ்செவந்துதோன்றுவதே.

(இ-ள்.) திங்கள்-சந்திரன், அங்கண் நித்திலம் தோரணத்து ஒளியினில் தங்கி அரிபோல் வெண்கதிர் ஆயினன் - அவ்விடத்திலுள்ள முத்துத்தோரணத்தினொளியிற் றங்கிச் சூரியனைப்போல வெள்ளிய கிரணமுடையவனாயினன், செங்கதிராளன் என்று உரைப்பது ஏ தேற்றம்-அச்சந்திரனைச் செவந்த கிரணமுடையவனென்று சொல்லுவதே நிச்சயம், அதற்கு உறும் சான்று - அதற்குத்தக்க சாட்சி, துங்கமாலையும் காலையும் செவந்து தோன்றுவது - மேம்பட்ட மாலைப்பொழுதிலும் காலைப்பொழுதிலுஞ் செந்நிறமுடையவனாகத்தோன்றுதலே.

சந்திரனுடைய வெண்மைக்குணத்தையொழித்துச் செம்மைக்குணத்தைக் கூறுதலால் குணவவறுதியணி. (௭௮)

அணங்கனார்நகைத்திடுந்தொறுமாங்கவர்வளர்த்த
கணங்கொண்முல்லைகண்முகைப்பனவவர்நகைக்கவினை

பிணங்கினாங்கவர்நகைத்தொளித்தமையறிந்தனரென்றே
வணங்கினாணினுடன்சிரித்திடுவதுமானும.

(இ-ள்.) அணங்கு அன்னார் நகைத்திடும் தொறும் - தெய்வப்பெண்களையொத்த அந்நகர்ப்பெண்கள் நகைக்குந்தோறும், ஆங்கு அவர் வளர்த்த கணம கொள் முல்லைகள் முகைப்பன - அவ்விடங்களில் அப்பெண்கள் வளர்த்த கூட்டங்கொண்ட முல்லைச்செடிகளரும்புதல், அவர் நகை கவினை நாம் இணடகி கவாந்து ஒளித்தமை அறிந்தனர் என்று-அப்பெண்களது முறுவலழகினை நாமிணங்கிக்கவர்ந்து ஒளித்த தன்மையை யவரறிந்தாரென்று, நாணினால் வணங்கி உடன் சிரித்திடுவது மானும்-நாணால் வணங்கி அவருடன் சிரித்தலையொக்கும்.

பெண்களால் மலருமரங்களில் முல்லையொன்றாதலால் அணங்கனார் நகைத்திடுந்தொறுமாங்கவர்வளர்த்த - கணங்கொண்முல்லைகண்முகைப்பன என்றார். முல்லைகள் அரும்புதலை அவர் நமது களவையறிந்து நகைத்தனரென்று கருதித் தாமும் நாணால் நகைத்தனவென அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. மகளிரால் மலர்மரங்கள் - மகிழமரஞ்சுவைக்கவும், எழிலைம்பாலைமரம் நட்புக்கொள்ளவும், பாதிரிமரம் நிந்திக்கவும, முல்லைக்கொடி நகைககவும, புன்னை யாடவும், குரா அணைக்கவும்,அசோகு உதைக்கவும், குருக்கத்தி பாடவும், மரா பார்க்கவும், சண்பகநிழல்படவுந் தளிர்த்துப் பூப்பனவாகப் பத்துவகைப்படும. (௭௯)

ஆடகத்தியன்மேனிலைமிசையணங்கனையார்
மாடகந்தனியாழிசைக்குவந்துறும்வான
நாடகந்துவெண்களிற்றினைநளினமென்மலர்ப்பூம்
பாடகத்தடிநடையினாற்பருவரலுறுப்பார்.

(இ-ள்) ஆடகத்து இயல் மேல் நிலை மிசை அணங்கு அனையார் மாடகம் தனியாழ் இசைக்கு - ஒருவகைப்பொன்னாலமைத்த மேன்மாடத்தின்மேல் தெய்வப்பெணகளையொத்த பெண்கள் தடவும் முறுக்காணியமைந்த ஒப்பில்லாத வீணையினிசைக்கு, உவந்து உறும் வான நாடு அகத்து வெண் களிற்றினை-மகிழ்கூர்ந்தடைந்த விண்ணுலகிலுள்ள வெள்ளையானையை, நளின மெல் மலர் பூம பாடகத்து அடி நடையினால் பருவரல் உறுப்பார் - மெல்லிய தாமரைமலரையொத்த பொலிவமைந்த பாடகத்தையணிந்த தமது கால்நடையால் துன்பஞ்செய்வார்கள்.

நால்வகைப்பொன்னுள் ஒன்றாதலால் ஆடகத்து எனவும், யாழினுறுப்பைந்தனுள் ஒன்றாதலால் மாடகத்தனியாழ் எனவுங்கூறினார். நால்வகைப்பொன்னாவன ஆடகம, கிளிச்சிறை, சாதரூபம், சாமபூநதம். யாழினுறுப்பு ஐந்தாவன கோடு, பத்தர், ஆணி, நரம்பு, மாடகம். "சாதரூபங்கிளிச்சிறையாடகம்-சாம்பூநதமிவைநால்வகைப்பொன்னே" எனவரும் பிங்கலத்தாலும, "கோடேபத்தராணிநரம்பே - மாடகமெனவரும் வகையினதாகும்" எனவருமஇசைநூலாலும் உணர்க. தான் விரும்பியடைந்ததற்குத் துன்பமாகிய பகைப்பொருள் சித்தியானதால் துன்பவணி. (௮௦)

பளிக்குமேனிலத்தந்நலார்பணைமுலைநெருங்கக்
களிக்குமாடவாதமைத்தழீஇங்காமப்போர்க்கலவி
விளைக்குமாற்றலைக்குரவனில்விழைந்தவனெருநா
ரொளித்திருந்துகாண்போனெனச்சுருங்கையுணுழையும்.

(இ-ள்.) பளிக்கு மேல் நிலத்து அந்நலார் - பளிங்காலமைத்த மேன்மாடங்களிலுள்ள பெண்கள், பணைமுலை நெருங்க களிக்கும் ஆடவர் தமை தழுவி காமம கல

வி போர் விளைக்கும் ஆற்றலை - தமது நெருங்கிய முலைகளழுந்தக் களிகூரும் புருடரை த்தழுவிக் காமக்கலவிப்போரைச்செய்யும் வன்மையை, குரவன் இல் விழைந்தவன் ஒருசார் ஒளித்து இருந்து காண்போன் என்ன சுருங்கையுள் நுழையும் - தனதாசிரிய ன் மனைவியை விரும்பிய சந்திரன் ஒருபக்கத்திலொளித்திருந்து காண்பவனைப்போலத் திட்டி வாசலின்வழியாய் நுழைவான்.

ஆசிரியன் மனைவியை விரும்பிச் சந்திரன் புணர்ந்தமையால் குரவனில் விழை ந்தவனெனக் காரணவாக்கப்பெயர்தந்து கூறினர். பரதாரங்களில் ஆசிரியன் மனைவி யை விரும்பிய பெருங்காமுகனுதலால் எல்லாப்பாதகங்களுக்கும் உடம்படுவான் என் பார் ஒருசாரொளித்திருந்து காண்போனெனச் சுருங்கையுணுழையும் என்றார்.

சந்திரன் குரவனில் விழைந்தமையை, சந்திரன் பரதாரங்களை விரும்புதல் பா தகமென்று தெரிந்திருந்தும் தனதாசிரியன் மனைவியாகிய பிரகற்பதியின் இல்வாழ்க்கை க்குரிய தாரையின்மேல் விருப்பங்கொள்ள அவளுமிவனழகில் விருப்பங்கொண்டு வரு ந்தியிருக்குங்கால், ஓர்நாள் அவ்வியாழனில்லாத சமையநோக்கி யங்குச்சென்று அவள் கையைப்பற்றித் தன்னில்லிற்கொண்டுவந்து அவள் போகத்தை நெடுநாள் நுகர்ந்திருக் கும்போது அப்பிரகற்பதி தன்னில்லிற்குவந்து தன் மனைவியைக்காணுமல் பலவிடங்க ளிலுந் தேடிச்சென்று சந்திரனில்லிலிருப்பது தெரிந்து தனது சீடனுகிய தேவேந்திர னிடத்தி லிச்செய்தியைக்கூறி நானினித்துறவுபூண்பேனெனக் கவலையுற்றுக்கூற, இத னை யிந்திரன்முதலிய தேவர்கள் கேள்வியுற்று மனம் புழுங்கி யச்சந்திரனைத்தொலைத்து உன் மனக்கவலையைத் தொலைப்போமெனப் போர்க்கு எழுந்தனர்; இதனைச் சந்திரன் கேள்வியுற்று மனநடுங்கி அசுரகுருவாகிய சுக்கிரனையடைந்து தனது நிலையையுரைக்க அவன் அஞ்சாதேயென்று கூறிப் போர்க்குவந்த தேவர்களோடு போர்செய்ய அசுரரை யேவினுன், இவ்விருதிறத்தினரும் நெடுநாள் எவ்வுலகமும் வருந்தப் போர்செய்யுங்கா லையில் பிரமனுணர்ந்து இவர்கள்செய்யும் போரினைத்தணித்துச் சந்திரனையழைத்து என் னகாரியஞ்செய்தாய் குருபத்தினியை விடுவாய் என்று கூறித் தன்னுலகமடைந்தனன் என்பது திருநாகைக்காயாரோகணப்புராணவரலாறு.

“ பரமடந்தையர்ப்புணர்தலிற்படுபழிபாவந்
திரமடைந்திடுமென்பதுதன்னுளந்தெரிந்தும்
சிரநெடுந்துயர்விளைத்திடுகருமலச்செருக்கால்
வரமிகுங்குருமனைநலம்புணர்வதுமதித்தான்.

ஆன்றசாலிமுற்பற்பலருயர்புற்றதறிந்தும்
சான்றபேரொழிற்றாரையுஞ்சந்திரனழகே
மான்றவுள்ளத்துமதித்தனள்வருபழிமதியாள்
தோன்றவாண்டளப்பாற்பிழைத்திடுவதேதுணிந்தாள்.

வருமலர்க்கணைபாய்தலுநெஞ்சமாழாந்து
கருகிருட்கதிரரசனில்லமையத்திற்கசிந்து
வெருவரச்சென்றுதாரைமென்மலர்க்கரம்பிடித்தான்
அருவருப்புறுதவளுமற்றவனுடனணைந்தாள்.

கொண்டுபோயொருதன்மனைகுறுகிமெல்லமளி
மண்டுவான்பரியங்கத்தினிருத்துபுவரம்பு
விண்டுமேல்விழாமெய்யுறத்தழுவிவாயூற
லுண்டுதேக்கியொண்முகத்தொடுமுகமியைத்துவந்தான்.

மதியழிந்தொருமதிகுருமனையொடிவ்வண்ணங்
கதியமைந்தவர்போன்றுபன்னாளுளங்களிக்க

விதிகொளந்தணன்மனைவியைக்காணலன்வெருவித்
திதியமைந்தவைப்பெங்கணுந்தேடினன்றெரிந்தான்.

பாவகாரியீதாற்றியதென்னெனப்பதறித்
தேவர்வேந்தனோடோருழியடைதரத்திரட்டி
மேவவெவ்வியமதிபுரிசெயலாம்விளம்பி
ஆவநாந்துறவடைகுதுமினியெனவறைந்தான்.

குரவன்வாய்மொழிசெவித்தொளைகுறுகலுங்கொதித்துப்
பரவுவானவர்யாவருமிகமனம்பதறிக்
கரவனுகியமதியினைப்புடைத்திவட்கழித்து
விரவுதுன்பமுங்கழிக்குதுமெனவெகுண்டெழுந்தார்.

அதுதெரிந்துமிக்கஞ்சுபுவிதிர்விதிர்ப்படைந்து
விதுபளிங்கமரிடம்புகூஉவவனடிவீழ்ந்து
கதுமெனச்சுரர்வளைந்துபோர்குறித்ததுகளைய
விதுவெனுவதென்றவனுமற்றவுணருக்கிசைத்தான்.

இந்தவாறமர்நிகழ்வுழியுலகெலாமேங்கச்
சந்தநான்முகனறிந்தவணடைந்தமர்தணித்துப்
பந்தமேவியமதியினைக்கூயவற்பார்த்து
நந்தநீயவன்செய்தனையென்றிதுநவில்வான்.

தீயசெய்தனைதாரையைவிடுமெதிசெத்தோன்
ஆயசெய்கையையுயிருடனிருந்துமென்றறைந்தான்
தூயதேவர்கள்குரவனைப்பிழைத்தவித்துட்டன்
மேயவேள்வியிற்பாகமெய்தானெனவிதித்தார்" என அப்புராணத்தில் வருதல் காண்க.

சந்திரமண்டிலத்திற்குந் திட்டிவாசலுக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி. (அக)

மேனிலத்தரமியத்திடைத்துயிலுமெல்லியலா
ரானனத்தெழில்கவர்ந்துசென்மதியினையவர்தங்
கானலர்க்குழற்காரளிபின்றொடர்ந்துதைப்ப
வீனமுற்றவத்தழும்புவான்கறையெனவிலங்கும.

(இ-ள்.) மேல் நிலத்து அரமியத்து இடை துயிலும் மெல்லியலார் ஆனனத்து எழில் கவர்ந்து செல்மதியினை - மேன்மாடத்திலுள்ள நிலாமுற்றத்தில் துயில்கூரும் பெண்களது முகத்தினழகைக் கொள்ளைகொண்டு செல்லுஞ் சந்திரனை, அவர் தம் கான் அலர்க்குழல் கார் அளி பின் தொடர்ந்து உதைப்ப - அப்பெண்களது வாசமிக்க மலரையணிந்த கூந்தலிலுள்ள கரிய வண்டுகள் பின்னே தொடர்ந்துதைக்க, ஈனம் உற்ற அ தழும்பு வான் கறை என்ன இலங்கும் - அதனால் வடுப்பட்ட அத்தழும்பே பெரிய கறையென்று சொல்ல விளங்காநிற்கும்.

சந்திரனிடத்துள்ள களங்கத்தினை, நிலாமுற்றத்தில் துயிலும் பெண்கள் முகத்தினழகைச் சந்திரன் கவர்ந்துசெல்வதை யவர்கள் கூந்தலிலுள்ள வண்டுகள் கண்டு அச்சந்திரன்பின்னே தொடர்ந்துதைத்தலால் வடுப்பட்ட தழும்பு என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணியும், வலிமையையுடைய பகையின்மேல் வண்டு தன் பராக்கிரமத்தைச் செ

லுத்தினதாக வண்டு தைப்ப என்றமையால் விறல்கோளணியுங் கலந்துவருதலிற் கலவையணி. உதைப்ப காரணப்பொருண்மேனிற்றலால் இறந்தகாலவினையெச்சம். (அஉ)

உங்கண்மாதரார்முகத்தெழினோக்கியோர்வடிவங்
கங்கணான்குளான்படைத்ததிலவயவங்காண்பா
னங்கண்முன்னுறவகுப்புழியஞ்சனங்குலையப்
பங்கமுற்றதென்றொழித்ததைமதியெனப்பகர்வார்.

(இ-ள்.) உங்கண் மாதரார் முகத்து எழில் நோக்கி ஓர் வடிவம் கண்கள் நான்கு உளான் படைத்து - அத்திருநகரிலுள்ள பெண்களது முகத்தினது அழகைப்பார்த்து அதுபோலும் ஒருருவினை நான்கு சிரசுடைய பிரமன் படைத்து, அதில் அவயவம் காண்பான் அங்கண் முன் உற வகுப்புழி-அவ்வுருவத்தில் அவயவத்தைக்காண அழகிய கண்ணை முன்னே படைக்குமிடத்து, அஞ்சனம் குலைய பங்கம் உற்றது என்று ஒழித்ததை மதியென பகர்வார் - எழுதிய அஞ்சனங்குலைய மறுவடைந்ததென்று அப்பிரமனொழித்ததைச் சந்திரனென்றுலகிலுள்ளோர் கூறுவார்.

அங்கண், இங்கண் என்றாற்போல உங்கண் எனவும், வகுப்பு என்னுந் தொழிற்பெயர் பெயரெச்சப்பொருளிலும் வந்தன. காரணமாகிய சந்திரசாரத்திறுல் உயர்ந்த முகத்தழகாகிய காரியம் புலப்படுதலால் காரணப்புனைவலி புகழ்சசியணி. (அரு)

இவ்வரைப்பினிலிரவியுமதியமும்வழியே
செவ்வனேகுறுதொதுங்குவவிவர்முகச்சீக்கும்
பவ்வநேரகலல்குற்கும்வடிவொடுபணைத்தே
ரொவ்வுறாமைகண்டுட்கொளுமுட்கினாலன்றே.

(இ-ள்.) இ வரைப்பினில் இரவியும மதியமும் வழியே செவ்வன் எகுறாது ஒதுங்குவ - இத்திருநகரத்தில் சூரியனுஞ் சந்திரனும் அவ்வழியே நேராகச்செல்லாது ஒதுங்குதல், இவர் முகம் சீக்கும் பவ்வம் நேர் அகல் அல்குற்கும் வடிவொடு பணைத்தேர் ஒவ்வுறாமை கண்டு உள்கொளும் உட்கினால் அன்றே - இப்பெண்களது முகத்தின் பொலிவிற்கும் கடலையொத்த அகன்ற அல்குலுக்கும் வடிவோடு பெருத்த தேர் ஒப்பாகாமையைக்கண்டு மனத்திற்கொள்ளும் நாணத்தினலல்லவா.

ஒதுங்குவ என்னும் பலவின்பாற்படர்க்கை வினைமுற்று சூரியசந்திரர் தொழில்மேல் பெயராய் நிற்றலை, சந்திரன் முகவடிவிற்கும் சூரியன் தனது தேர்த்தட்டு அவர் அல்குற்பரப்பிற்கும் ஒவ்வாதிருத்தலைக்கண்டு தாம்கொண்ட நாணத்தினல் என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. இரவிமதியம் என்னும் பன்மை யெழுவாய்க்கு ஒதுங்குவது என்னும் ஒருமை முடிபு பொருந்தாதென்பது கருதாது ஒதுங்குவவிவர் என்னும் பாடம் பிழையெனக்கருதி யொதுங்குவதிவரெனப் பிழைபடத்திருத்தினர், இவர் சொன்முடிபுணர்ந்திலர்போலும். (அசு)

தங்கள்வாண்முகமதியெனச்சார்தரும்பணிக்குத்
துங்கமாடமேன்மின்னனுரவேற்றுமைதோற்றந்
திங்கண்மாட்டறிகுறியொன்றுசெய்துவைத்தனரா
லங்கண்மாநிலங்களங்கமென்றிடப்படுமதுவே.

(இ-ள்.) தங்கள் வாள்முகம் மதி என்ன சார்தரும் பணிக்கு - தங்களது ஒள்ளிய முகத்தைச் சந்திரனென்று வந்தடையும் இராகுவென்னும் பாம்புக்கு, துங்கம் மா

டம் மேல் மின் அன்னார் வேற்றுமை தோற்ற - உயர்ந்த மேன்மாடத்திலுள்ள மின்னலை யொத்த பெண்கள் இது முகமென்றுஞ் சந்திரனென்றும் வேறுபாடறிய, திங்கள் மாடு அறிகுறி ஒன்று செய்துவைத்தனர்-அச்சந்திரனிடத்து ஓரடையாளத்தைச் செய்துவைத்தார்கள், அது அங்கண் மாநிலம் களங்கம் என்று இடப்படும் - அதனை அழகிய இடமகன்ற பெரிய உலகம் களங்கமென்று கூறப்படும்.

மேன்மாடத்திலுள்ள பெண்கள் தங்கள் முகத்தினைச் சந்திரனாக இராகுவென்னும் பாம்பு கருதியடைதலால் மயக்கவணியும் அது மயங்காவண்ணம் அச்சந்திரனிடத்துப் பெண்கள் செய்வித்த அடையாளத்தினை உலகிலுள்ளோர் கண்டு களங்கமென்று கூறுகின்றார்களெனப் பெண்கள் முகப்பொலிவினை விசேடித்துக் கவிகூறுதலால் குணவதிசயவணியுங் கலந்துவருதலால் கலவையணி. (அரு)

மறைந்திடா மறுப்பயின்மதிமுகத்தெழில்பெறு து
குறைந்துபாாக்குமங்கரிவைமார்கோ ணுதல்கடுப்ப
நிறைந்துபார்க்குமீண்டவர்முகநிகர்ப்ப ற்றிவ்வா
றறைந்ததிங்கடோறலமருமக்கரைப்பசுப்போல்.

(இ-ள்.) மறைந்திடாது மறுபயில் மதி - மாறாமல் மறுவமைந்த சந்திரன், அங்கு அரிவைமார் முகத்து எழில் பெறுது கோள் நுதல் கடுப்ப குறைந்து பார்க்கும்-அத்திருநகரத்திலுள்ள பெண்களது முகப்பொலிவினைப் பெறாமையால் வளைந்த நெற்றியையேனும் ஒத்துத்தோன்றத் தனது கலை நிறைந்த உருவம் குறைந்து பார்ப்பான், மீண்டு அவர் முகம் நிகர்ப்ப நிறைந்து பார்க்கும் - ஒவ்வாமையால் மீள அப்பெண்களது முகத்துக்கு ஒத்துத்தோன்ற உருவம நிறைந்து பார்ப்பான், இவ்வாறு அக்கரை பசுபோல் அறைந்த திங்கள் தோறும் அலமரும் - இப்படியே அக்கரையிலுள்ள பசுவைப் போலவாராநின்ற சொல்லிய மாதந்தோறுஞ் சுழலாநிற்பான்.

ஆற்றினக்கரையிற் புல்மேயவந்த பசு இக்கரையிலும் புல்லுள்ளது என அக்கரைக்கும் இக்கரைக்கும் அலைந்து வயிறு நிரம்பாது திரிந்தது என ஒருதொழிலேனு முற்றுப்பெறாமைக்கு எடுத்துலகு கூறும் வழக்காதலால் அக்கரைப் பசுப்போலென்றார். பெண்கள் நெற்றிக்கு முகத்திற்கும் உபமானமாயுள்ள சந்திரன் எழில்பெறாது குறைந்துபார்க்கும், நிறைந்துபாாக்கும் என்றமையால் எதிர்நிலையணியும், அக்கரைப்பசுப்போலலமரும் எனப் பின்சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப்பொருளால் முன சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணியுங் கலந்துவருதலால் கலவையணி. (அசு)

கதிர்செய்மாடமேற்புலவிதீர்கலவியின்முடிவின்
வெதிர்செய்தோளியர்கொண்கா தம்மருமமேல்வதனம்
பதியவைத்தனர்துயிலுவாற்றம்பார்த்திருந்து
புதுமுகத்தெழிலுடுபதிவெளவுறாப்பொருட்டே.

(இ-ள்.) அற்றம் பார்த்து இருந்து புதுமுகத்து எழில் உடு பதி வெளவுறாமல் பொருட்டு - சமையம் பார்த்திருந்து தமது புதிய முகத்தினழகைச் சந்திரன் கொள்ளை கொள்ளாமற்பொருட்டே, வெதிர் செய் தோளியர் கதிர்செய் மாடம் மேல் புலவி தீர் கலவியின் முடிவில்-மூங்கிலையொத்த தோளையுடைய பெண்கள் விளக்கஞ்செய்யும் உபரிகைமேல் ஊடல் தவிர்ந்துபுணரும் ஆலிங்கனத்தின் முடிவில், தம் கொண் கர் தம் மருமம் மேல்வதனம் பதிய வைத்தனர் துயிலுவர் - தமது புருடரது மார்பின்மேல் முகம் பதியவைத்து நித்திரை கூர்வர்.

வெளவுறாமல் என்னும் வினையெச்சம் ஈறுதொக்குநின்றது. வைத்தனர் முற்றெச்சம். பெண்கள், சோர்வால் தமது புருடர்மார்பில் முகம் பதியவைத்துத் துயில்கூருதலைச் சந்திரன் அவர்கள் முகத்தழகைச் சமையம்பார்த்துக் கவராமல் இவ்வாறு துயில்கூருகின்றார்களெனக் கவி அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (அஎ)

தேங்குமூடலின் மாதரார்பறித்தெறிசெங்கே
ழோங்குபன்மணியவரடிவருந்திநைந்துளைய
வாங்குநாடொறும்பைதுறுத்தவிர்வனகொடிதாத்
தாங்கள்செய்வினைதங்களுக்கேபகையாமே.

(இ-ள்.) தேங்கும் ஊடலின் மாதரார் பறித்து எறி செம் கேழ் ஓங்கு பல் மணி - நிறைந்த ஊடலால் பெண்கள் பறித்தெறிந்த செந்நிறமோங்கிய பல மாணிக்கங்கள், அவர் அடி வருந்தி நைந்து உளைய ஆங்கு நாள்தொறும் பைதுறுத்து அவிர்வன - அவர்கள் பாதங்கள் வருத்தங்கூர்ந்து நைந்து மெலிய அவ்விடத்து நாள்தோறும் வருத்தஞ்செய்து விளங்காநின்றன, கொடிது ஆக தாங்கள் செய்வினை தங்களுக்கே பகையாம் ஏ-கொடிதாக ஒருவருக்குத் தாங்கள் செய்யுங்கருமம் தங்களுக்கே பகையாமல்லவா.

பெண்கள் தமது நாயகரிடத்திலூடல் நிகழ்ந்தபோது தாம் பறித்தெறிந்த வடத்திலுள்ள இரத்தினங்கள் முற்றங்களில் சிந்திக்கிடத்தலால் அவர்கள் அடியெடுத்துவைக்க வருந்துவரென வர்ணியமாகிய சிறப்புப்பொருளைச் சாதிக்க, கொடிதாத் - தாங்கள் செய்வினை தங்களுக்கே பகையாமேயென்னும் அவர்ணியமாகிய பொதுப்பொருளால் சாதிக்கப்படுதலில் வேற்றுப்பொருள் வைப்பணி.

பையுள், பைதல் என வருத்தத்திற்குப் பரியாயநாமமாகவந்த பெயர்கள் காரணமோ இடுகுறியோவெனத் தெரியாத வொருவர் பைதுறுத்து என்னும் பாடத்தைப் பிழையெனக்கருதிப் பேதுறுத்து எனத் திருத்தினர், இது பகுபதம், இது பகாப்பதம் எனத் தெரியாதவர்கள் பிழையென ஒன்றைச் சொல்லப்புகுதல் "எழுத்தறியார்கல்விப் பெருக்கமனைத்தும-எழுததறிவார்க்காணினிலையாம" என்னும் ஆன்றோர்வாக்கியத்தை யுட்கொள்ளாமையே. பைதல், பையுள் என்பவற்றிற்குப் பை பகுதியெனவறிக. விரிக்கிற்பெருகும். (அஅ)

விருந்துநாடொறுமிடையறாதெதிருமேதகவா
லருந்திறற்சிறுபுதல்வர்சூழ்ந்தணுகிடுந்திறத்தான்
முருந்துமூரலார்க்காயிடைக்கொழுநர்பான்மூண்ட
மருந்திலூடலுஞ்சிறுவரையன்றிமேவாதால்.

(இ-ள்.) விருந்து நாள்தொறும் இடையறாது எதிரும் மேதகவு ஆல் - விருந்தினை நாள்தோறும் இடைவிடாது எதிர்கொள்ளு மேன்மையாலும், அரும் திறல் சிறுபுதல்வர் சூழ்ந்து அணுகிடும் திறத்தால்-அடைதற்கரிய வன்மையையுடைய இளம்புதல்வர்கள் தம்மைச்சூழ்ந்து நெருங்கிய திறத்தினாலும், முருந்து மூரலார்க்கு ஆயிடை கொழுநர்பால் மூண்ட மருந்து இல் ஊடலும் சிறுவரை அன்றி மேவாது - மயிலிறகினடியையொத்த பற்களையுடைய பெண்களுக்குத் தமது நாயகரிடத்துண்டாகிய வாயிலாலன்றி மருக்தாற்றீராத ஊடலும் சிறுபொழுதன்றி நீடித்து நில்லாது.

விருந்தும் புதல்வனுமன்றிப் பெருங்கலாமாகிய வூடலும்-உணர்த்தவுணராவூடலுமாகிய நோய்களுக்கு அவ்வாயிலே மருந்தன்றி வேறுமருந்தில்லாமையால் மருந்திலூடலும் என்றார். பரத்தையிற்பிரிந்த வழிப்பெருங்கலாமாகிய ஊடல் தவிர்த்தற்கு விருந்தன்றி

வேறில்லாமையால் விருந்து நாடோறுமிடையறாதெதிருமோகவால் எனவும், உணர்த்த உணரா ஊடல் தீர்த்தற்குத் தம் புதல்வரையன்றி வேறின்மையால் அருந்திறற் சிறுபுதல்வர் சூழ்ந்தணுகிடுந் திறத்தாலெனவும், இவ்விருவகையூடலும் இவற்றாலன்றிப் பாணன் முதலாகப் பாங்கி யீறாயுள்ள வாயில்களால் ஒழியாதாதலால் சிறுவரையன்றி மேவாது எனவுங் கூறினர்.

விருந்தொடுவெந்துழிப் பொறுத்தல் கண்டு தலைமகன் மகிழ்தற்கு—

"கருந்தன்றுவார்குழற்கன்னியில் வாழ்க்கையுங்கையுஞ்செவ்வாய்
முருந்தொன்றமூரன்முறுவலுங்காணமுகமறியா
விருந்தன்றிவேறொன்றின்மீளாவருந்துனிமீட்கநல்ல
மருந்தொன்றுவந்திங்ஙனேமனமேவந்துவாய்த்ததுவே" எனவரும் அம்பிகாபதிகோவையிலும்,

புதல்வன்மேல் வைத்துப் புலவிதீர்தற்கு—

"கதிர்த்தநகைமன்னுஞ்சிற்றவ்வைமார்களைக்கண்பிழைப்பித்
தெதிர்த்தெங்குநின்றெப்பரிசளித்தானிமையோரிறைஞ்சும்
மதுத்தங்கியகொன்றைவார்சடையீசர்வண்டில்லைநல்லார்
பொதுத்தம்பலங்கொணர்ந்தோபுதல்வாவெம்மைப்பூசிப்பதே" எனவரும் திருவாசகத்திருக்கோவையாரிலும் வருதல் காண்க. (அக)

மேனிலத்துவந்துலாவிடுங்கடவுண்மெல்லியலார்
தாழ்நிலத்துறுங்கூவல்கணோக்கிநந்தமைப்போற்
கீழ்நிலத்தவர்தாமுமிங்கெய்தினர்கெழீஇப்போ
மூழ்நிலைத்தபல்பிலங்கொலாமுவையெனவியப்பார்.

(இ-ள்.) மேல் நிலத்து வந்து உலாவிடும் கடவுள் மெல்லியலார் தாழ் நிலத்து உறும் கூவல்கள் நோக்கி - அந்நகரிலுள்ள மேன்மாடத்தின்கண்வந்து உலாவுந் தெய்வப் பெண்கள் கீழ்நிலத்திலமைந்த கிணறுகளைப்பார்த்தலால் அதனிற் புலம்படுந் தமது பிரதிபிம்பத்தை, நம் தம்மைப்போல் கீழ் நிலத்தவர் தாமும் இங்கு எய்தினர் - நம்மைப் போல நாகலோகத்திலுள்ள நாககன்னியரும் இங்குவந்தனரோ, கெழீஇ போம் ஊழ் நிலைத்த பல் பிலம் கொல் ஆம் உவை என வியப்பார் - இங்குவந்து போகும் முறையாக நிலைத்த பல பிலங்களோ இவையென்று அதிசயங்கூறுவார்கள்.

மேனிலைகள் விண்ணைத்தோய்தலால் அங்குவந்துலவுந் தெய்வப்பெண்கள் கீழ்நிலையிலுள்ள கிணற்றைப்பார்த்து அதிற்றோன்றிய தமது பிரதிபிம்பங்களை நம்மைப் போல நாகலோககன்னியரு மிங்குவந்தனரோ, இங்குத்தோன்றிய கிணறு அவர்கள் போக்குவரவுசெய்தற்கு அமைந்த பிலத்துவாரமோவென்று மயங்குதலால் மயக்கவணி.

கலிவிருத்தம்.

காலமன்றிக்கனிவுறமாதளைக்
கேலவான்புகையேற்றுதல்போன்மினார்
சாலவெம்முலைச்சாந்தம்புலர்த்திடு
நீலதூமமிர்ந்தெழுமெங்கணும்.

(இ-ள்.) காலம் அன்றி கனிவுற மாதளைக்கு ஏல வான் புகை ஏற்றுதல்போல்— பருவகாலத்திலன்றி மற்றைக்காலத்திற் பழுக்க மாதளைக்குப் பொருந்தப் பெரிய புகை

யை ஊட்டுதல்போல, மின்னார் சால வெம்முலை சாந்தம் புலர்த்திடும் நீலம் தூமம் நிமிர்ந்து எங்கணும் எழும் - மின்னலையொத்த பெண்கள் மிகவும் விருப்பத்தைத்தரு முலையிற் றிமிர்ந்த சந்தனக்குழம்பைப் புலர்த்த மூட்டிய கரிய அகிற்கட்டையின்புகை எவ்விடத்து நிமிர்ந்து மேலெழாநிற்கும்.

மாதளை பருவகாலமல்லாதகாலத்திற் கனியப் புகையேற்றுதல்போல முலையிற் பூசிய சாந்தம் காலமல்லாதகாலத்திற் புலரத் தூபமேற்றினர் என்றது தெரிதருதேற்றவுவமையணியும், அவ்வகிற்புகை யெங்கு நிமிர்ந்தெழும் என்றமையால் மிகுதியணியுங் கலந்துவருதலாற் கலவையணி மாதளை இயற்சொல். மாதுளை திரிசொல். மாதளையென்னும் பாடத்தைப் பிழையெனக்கருதி மாதளையென வருமிடந்தோறும் மாதுளையெனத் திருத்துகவென்றார். அவர்—

“ சுளைவாய் ... டைதிறக்கும்பலவால்வயற்றூன்றுசெங்நெல்
விளைவா ... லியுந்திருவெங்கைவாணர்தம்வெற்பிடைமா
தளைவா ... டமயிலேதனிவேழந்தனையொருபுன்
வளைவா... ஞமலிகுழைத்திங்குருமன்மறித்ததுவே ” என வெங்கைக்கோவையில் வருதலை யுணர்ந்திலர்போலும். (௧௧)

கொன்னும்வார்குழற்கூட்டுங்குருஉப்புகை
யங்கலாரைப்பொதிவதவர்தமைத்
தன்னினீங்கியமின்னெனத்தண்முகி
லுன்னிவந்துவளைந்திடலொக்குமே.

(இ-ள்.) கொன்னும் வார் குழற்கு ஊட்டும் குரு புகை அங்கலாரை பொதிவது - மிகவும் நீண்ட கூந்தலுக்கூட்டும் கருநிறம்வாய்ந்த அகிற்புகை பெண்களைச்சூழ்ந்து மூடுதல், அவர் தம்மை தண்முகில் தன்னில் நீங்கிய மின் என்ன உன்னிவந்து வளைந்திடல் ஒக்கும் - அப்பெண்களைத் தண்ணிய மேகம் தன்னினின்று நீங்கிய மின்னலென்று கருதிவந்து வளைதலையொத்துத்தோன்றும்.

பெண்கள் கூந்தற்க்கு ஊட்டிய புகை அவர்களைச்சூழ்ந்து பொதிதலை மேகமானது தன்னினின்று நீங்கிய மின்னலைத் தான்வந்து வளைதல்போலிருந்தது எனக் கவியத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி. (௧௨)

வார்கொள்கொங்கைமலர்க்கணையேறிடு
மேர்கொடொய்யிற்கருப்புவிலேந்துவார்
தார்மலர்க்குழனாரியர்தாங்கடாம்
வீரவேள்படையென்றறிவிப்பபோல்.

(இ-ள்.) வார் கொள் கொங்கை - கச்சணிந்த கொங்கைமேல், மலர் கணை ஏறிடும் கருப்புவில் ஏர் கொள் தொய்யில் - மலரம்பினை யேறிட்ட கருப்புவில்லினை யழகமைந்த தொய்யிலாக, மலர் தார் குழல் நாரியர் தாங்கள் தாம் வீரவேள் படை என்று அறிவிப்பபோல் ஏந்துவார் - மலராற்றொடுத்த மாலையையணிந்த கூந்தலையுடைய பெண்கள் தாம் வீரத்தையுடைய மன்மதன் சேனையென்று பிறர்க்கறிவித்தல்போல ஏந்துவார்கள்.

பெண்கள் கொங்கையில் மலர்க்கணையேறிட்ட கரும்புவில்லினைத் தொய்யிலாக எழுதலை, பெண்கள் தாம் மன்மதன் சேனையென்று பிறர் சொல்லுவதை யாமென்று தெரிவித்தற்கு ஒக்குமென அத்தியவசயிதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி. (௧௩)

நாறுதோட்டுநளினமிரண்டினின்
மாறிமாறிவீழ்வண்டினமாமெனக்
கூறுமாதர்குழீஇயிருந்தாடுசீ
ரேறுமம்மனைப்பாட்டிசையெங்கணும்.

(இ-ள்.) நாறு தோடு நளினம் இரண்டினில் மாறி மாறி வீழ் வண்டு இனம் ஆம் என்ன - மணங்கமழும் இதழினையுடைய இரண்டுதாமரைகளின்மேல் மாறிமாறி விழும் வண்டின் கூட்டங்களாமென்று கண்டோர் சொல்ல, கூறுமாதர் குழுவி இருந்து ஆடு சீர் ஏறும் அம்மனை பாட்டு இசை எங்கணும் - யாவரும் புகழ்ந்துகூறும் அத்திருநகர்ப் பெண்கள் கூடியிருந்து விளையாடுஞ் சிறப்பமைந்த அம்மனையின் பாட்டிசைகள் எவ்வி

உவமைக்கும் பொருட்கும் உண்மையால் நளினம் இரண்டு என்றது எஞ்சிநின் ற இரண்டுகைகளாகவும், மாறிமாறிவீழ்தல் மேலெறிந்த அம்மனை மாறிமாறி வீழ்தலாக வும், அம்மனையை வண்டாகவுங் கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணியும், பொ ட்குறை விசேடவணியும் பாட்டிசையெங்கணும் என்றமையால் மிகுதியணியுங் கலந்து வருதலால் கலவையணி. (கச)

தங்கள்பண்மொழிக்கொக்குந்தகைமையை
யங்கணுய்பவரேய்ப்பவணிமலர்ச்
செங்கைமெல்விரல்சேர்த்தித்திவவியா
ழெங்குமங்கையர்பாடுவரெண்ணிலார்.

(இ-ள்.) மங்கையர் தங்கள் பண் மொழிக்கு ஒக்கும் தகைமையை அங்கண் ஆய் பவர் எய்ப்ப - பெண்கள் தங்களது இசையையொத்த சொல்லுக்கு யாழிசையொக்குந் தன்மையை அவ்விடத்து ஆராய்ந்து பார்ப்பவரையொப்ப, திவவு யாழ் அணிமலர் செ ங்கை மெல் விரல் சேர்த்தி எங்கும் பாடுவர் எண்ணிலார் - வார்க்கட்டமைந்த வீணை யினரம்பை அழகிய தாமரைமலர்போன்ற செவந்த கைகளிலுள்ள மெல்லிய விரலாற் றடவி யெங்கும் பாடுவோர் அளவிறந்தவராவார்.

பெண்கள் யாழ்வாசித்தலைத் தங்கள் மொழிக்கு ஒக்கும் என்பதை யாராய்வார் போல என அத்தியவசயித்தலால் தற்குறிப்பேற்ற வுவமையணியும், மங்கையர் யாழ் பா டுவர் என்றமையால் அவர்கள் செல்வமிகுதி குறிப்பாகப் புலப்படுதலிற் குணவணியுங் கலந்து வருதலால் கலவையணி. (கரு)

கொங்கையினெதிருறக்கூசினலெனப்
பொங்கொளித்தாளம்பின்னொலிப்பப்பூவைமார்
மங்கலச்சதிநெறிவழாமலாடரங்
கெங்கணுநூபுரத்திசையினீட்டமே.

(இ-ள்) கொங்கையின் எதிர் உற கூசினல் என்ன ஒளி பொங்கு தாளம் பின் ஒலிப்ப - தமது கொங்கைக்கெதிரேவரக் கூசியதுபோல ஒளிமிக்க தாளம் பின்னி ன்றொலிக்க, பூவைமார் மங்கலம் சதிநெறி வழாமல் ஆடு அரங்கு எங்கணும் நூபுரத்து இசையின் ஈட்டம் - பெண்கள் மங்கலமமைந்த தாளவொத்தின் முறைவழுவாமல் நட னஞ்செய்யும் நாடகசாலை முழுமையுஞ் சிலம்பினோசையின் கூட்டமுள்ளன.

உபமானத்திற்குக் குறைவுதோன்றக் கொங்கையினெதிருறக்கூசினல் எனப் பின்னொலிப்ப என்றமையால் எதிர்நிலையணியும், எங்கணு நூபுரத்திசையினீட்டம் என் றமையால் மிகுதியணியுங் கலந்துவருதலால் கலவையணி. (கசு)

மைந்தர்பந்தெறிதலுமாடப்பித்திகை
சிந்துவபன்மணிசெழியன்செண்டெடுத்
துந்தியன்றுச்சலுமுலப்பிலாநிதி
தந்திடும்வடதிசைச்சாரற்குன்றுபோல்.

(இ-ள்.) செழியன் செண்டு எடுத்து அன்று உந்தி ஒச்சலும் உலப்பு இல்லாத நிதி தந்திடும் வடதிசை சாரல் குன்றுபோல் - உக்கிரகுமாரபாண்டியர் செண்டாயுதத்தையெடுத்து அக்காலத்தில் மோதித்தாக்க அளவில்லாத நிதியைத்தந்த வடதிசையிலுள்ள சாரலமைந்த மேருமலையைப்போல, மைந்தர் பந்து எறிதலும் மாடம் பித்திகை பன்மணி சிந்துவ - புருடர்கள் எறிந்த பந்து தாக்குதலால் மாடங்களிலுள்ள சுவர்த்தலங்கள் பல இரத்தினங்களைச் சிந்தாநின்றன.

மழைபெய்யாது வற்கடமிருந்தமையால் பாண்டிநாடு வருந்துதலை உக்கிரகுமாரபாண்டியர் நோக்கிச் சிவபெருமானனுமதியால் வடதிசைசென்று மேருத்தெய்வத்தை நோக்கியழைக்க வாராமையால் செண்டாயுதத்தாலடிக்க அஞ்சிவந்து அப்பாண்டியர் கருத்தமையப் பொருள் தந்தது என்பது திருவிளையாடற்புராணவரலாறு.

"மல்குமாறுகோடிரிந்துமழைசுருங்கிநதியுநீ
ரொல்குமாறுபருவமாறியுணவுமாறியுயிரெலாம்
மெல்குமாறுபசியுழந்துவேந்தனுக்குவிளைபொருள்
நல்குமாறிலாமையின்னலியவந்தநாடெலாம்

மகவுறுநோயைநோக்கிவருந்துறுதாய்போன்மன்னன்
பகவுறுமதியஞ்சூடும்பரஞ்சுடர்முன்போய்த்தாழ்ந்து
மிகவுறுபசியால்வையமெலிவதையையவென்றுத்
தகவுறவிரங்கிக்கண்ணீர்ததும்பிநின்றிரந்துவேண்ட.

அடற்கதிர்வேலோய்மாரியரிதிப்போதநனைவேண்டி
யிடர்ப்படல்வரைக்குவேந்தாயிருக்கின்றவெரிபொன்மேருத்
தடப்பெருவரையின்மாடோர்தனிப்பெருமுழையிலிட்டுக்
கிடப்பதோரொல்லையில்லாக்கேடிலாச்சேமவைப்பு.

கிடைத்துமற்றனையமேருகிரிச்செருக்கடங்கச்செண்டாற்
புடைத்துநின்றுணைத்தாக்கிப்பொன்னறைபொதிந்தபாறை
துடைத்துநீவேண்டுங்காறுந்தொட்டெடுத்தநனைமீள
அடைத்துநின்குறியிட்டையவருதியென்றடிகள்கூற.

அவ்வரையரசைநோக்கிவரைகளுக்கரசேயெந்தை
கைவரிசிலையேபாரின்களைகணேயளவில்வானந்
தைவருசுடருங்கோளுநாள்களுந்தழுவிச்சூழுந்
தெய்வதவரையேமேலைத்தேவராலயமேயென்று.

மாணிக்கமிமைக்கும்புணுன்விளித்தலும்வரைக்குவேந்தன்
பாணித்துவாவுதாழ்ப்பப்பாகசாதனனைவென்றோன்
நாணித்தன்சினமுமேருநகைவரைச்செருக்குமாறச்
சேணுற்றசிகரந்தன்னிற்செண்டினாலடித்துநின்றான்.

புடைத்தபின்மேருத்தெய்வம்புடைக்குலவரையெட்டென்னப்
படைத்தவெண்டோளுநான்குமுடியுமேற்படுவெண்சோதி

யுடைத்தனிக்குடையுங்கொண்டவுருவினேடெழுந்துநாணிக்
கிடைத்ததுகருணைவேந்தன்கிளர்சினந்தணிந்துநோக்கா.
மன்னவன்வெறுக்கைவேண்டிவந்தனனென்றுனைய
உன்னதுபுலத்தோர்க்கேற்பவுரைபடுமாற்றதாய
பொன்னவிர்தேமாநீழற்புதைபடக்கிடக்குஞ்செம்பொன்
என்னவங்கையாற்சுட்டிக்காட்டியதெரிபொற்குன்றம்" எனவரும் அப்பு
ராணத்தாலறிக.

நிதிதந்திடும் வடதிசைச்சாரற்குன்றுபோல் மாடப்பித்திகை பன்மணிசிந்துவ என்றமையால் பயன்பற்றிவந்த வுவமையணியும், பித்திகை பன்மணிசிந்துவ என்ற குறிப்பால் அளவில் செல்வமுடைமைபோதரலால் உதாரவணியுங் கலந்துவருதலால் கலவையணி. (கஎ)

மணிப்பொலம்பூட்சிறூர்விடுக்கும்வான்படந்
தணித்தொறும்விடுந்தொறுந்தணிந்துநீள்வன
கணிப்பருநந்திநெட்டுயிர்ப்பின்காற்றிடைப்
பணிப்பகைமுன்னுழல்பரிசுகாட்டுமே.

(இ-ள்.) மணி பொலம் பூண் சிறூர் விடுக்கும் வான் படம் தணி தொறும் விடும் தொறும் தணிந்து நீள்வன - இரத்தினமழுத்திய பொன்னுலமைந்த பூணணிந்த மைந்தர்கள் விடுக்காநின்ற பெரிய காற்றாடியை யிழுக்குந்தோறும் விடுந்தோறும் உள் வாங்கிப் பின்பு நீளுதல், கணிப்பரும் நந்தி நெட்டுயிர்ப்பின் காற்று இடை பணி பகை முன் உழல் பரிசு காட்டும்-அளத்தற்கரிய இடபதேவரது பெருமூச்சாகிய காற்றில் கருடன்முன்பு சுழன்று திரியுந் தன்மையைக் காட்டாநிற்கும்.

ஒருகாலத்தில் கருடன் திருமாலைச்சுமந்து ஒருநொடிப்பொழுதில் உலகமுற்றுஞ் சுற்றிவந்து அத்திருமாலைநோக்கி எல்லாப்பொருளுமாகிய உன்னைச்சுமக்கும் வன்மையிலும் விரைவிலும் என்னைப்போலுளரோவென்று தன்னை வியந்துகூறத், திருமாலதனைக் கேள்வியுற்று இது செருக்கடைந்தது எனத் தனது மனத்தமைத்து நன்று கூறினுய் நின்னையொப்பா ரொருவருமில்லையென்று கூறி, ஓர்நாள் திருக்கயிலைக்குச் செல்வோமெனக் கருடனுக்குக்கூறி அத்திருக்கயிலையையடைந்து போகமாபுரத்தெல்லையி லவ்வூர்தியினின்றிழிந்து சிவபெருமானருகுசென்றனன், ஐந்தாமாவரணத்திலுள்ள விடபவூர்தி அக்கருடனது இறுமாப்பைநோக்கித் தொடையில் தலையைவைத்து உறங்குவதுபோலப் பெருமூச்செறிந்தது, அப்பெருமூச்சிற்கட்டுண்ட கருடன் உசுவாசத்தால் அளவில்லாத யோசனைதூரமும் நிசுவாசத்தால் நாசியினுனியிலுஞ்சார்ந்து சுழன்று பெருந்துன்பமுற்றுத் திருமாலைநோக்கி யோலமிட்டழைக்கச் சிவபெருமான் திருச்செவி சார்த்தியருளினர் என்பது இந்நூல் வரலாறு.

"பின்னொருகாலத்துப்பிறங்குமாற்றல்சால்
பன்னகப்பகைமைகொள்பறவைநாயகம்
பொன்னமர்மார்பனைப்பொறுத்துவல்லையே
அந்நிலையுலகெலாமணுகிமீண்டதால்.
மீண்டபின்றருக்குமீக்கொண்டுவீறுடன்
ஆண்டகைமாயனைநோக்கியண்ணலே
காண்டகுமாற்றலிற்கதழ்வினென்னிகர்
மாண்டவருளர்கொலோவையமூன்றினும்.

மெய்யுரைவிளம்பினையுலகமீமிசை
ஐயநிற்கிணையெவராருமில்லெனக்
குய்யம்வைத்தணிமுடிதுளக்கிக்கூறினான்
செய்யவள்வனமுலைதிளைக்குமார்பனே.

வார்சடைப்பிரானடிவணங்குவாமெனப்
போர்வலிப்புள்ளொடுங்கயிலைபுக்கனன்
ஏர்கெழுபோகமாபுரத்தினெல்லையவ்
வூர்தியினிழிந்துசென்றங்கணெய்தினான்.

ஐந்ததாமாவரணத்தினெம்மெதிர்
ஐந்துகோமாதர்சூழ்ந்தணுகிவைகவாழ்
மைந்துடைவிடையவண்மாயனோடுறும்
வெந்திறற்புட்குலவேந்தைக்கண்டதால்.

தன்னெதிரிகழ்ச்சியாற்றருக்குமாங்கதன்
புன்னிலைநோக்குபொருக்கெனச்சிரந்
தன்னிடக்குறங்கினிற்சார்த்தித்துஞ்சுவ
தென்னநெட்டுயிர்ப்பினிற்சிமிழ்த்ததேந்திழாய்.

விட்டுவிட்டடக்குதோறுயிர்ப்பின்வேகத்தால்
அட்டநூறியோசனையவதிபோந்துபின்
கட்டெழிஞ்சியினுனிக்கட்சார்தரக்
கொட்புறுத்தலைத்ததுபறவைக்கோவினை.

சரிந்ததுதருக்குடல்சழங்கலுற்றதால்
இரிந்ததுமிடலிறுமாப்புமிற்றது
முரிந்தனபொலஞ்சிறைமுதிர்ந்ததின்னனோய்
கரிந்ததுமாமையுங்கருடற்கென்பவே.

ஐயவோவுலகங்காக்குமடிகளோகாயாம்பூவின்
மெய்யவோவென்னையாண்டவிமலவோதிகிரியேந்துங்
கையவோவெய்ப்பின்வைப்பாங்களைகணோகலந்தார்க்கென்று
மெய்யவோகலவாதார்க்குவெய்யவோவேந்தனேயோ.

சீறுவெம்பணிவாய்ப்பட்டதேரையின்மறுகியோசை
வேறுபாடெய்திமாலைவிளிப்பதெஞ்செவியிற்கேட்டே
மாறடுதிகிரியோயீதென்னெனவட்கார்தம்மை
நூறியசீற்றத்துப்பினோன்றகைநெடியோன்சொல்வான்.

உள்ளதுபுகன்றுயென்னநந்தியையூங்குநோக்கிக்
கள்ளவிழ்தொடையாய்நம்மைவழிபடுங்கருத்தானெய்தும்
புள்ளரசினையாவண்ணம்பொருக்கெனப்போந்துசீற்ற
வெள்விடையுயிர்ப்பினின்றுவிடுவித்துக்கொணர்தியென்றான்" எனவரு
மிப்புராணச்செய்யுள்களாலுணர்க. இது எடுத்துக்காட்டுவமையணி. (௯௮)

மாடமேற்சிறுமகார்விடுக்கும்வண்படம்
பாடல்சாலிருசுடர்தம்மைப்பற்றுவா
னாடினதிரிதருகாகமென்னவு
மாடுவவிசும்பிடையமரர்நோக்கவே.

(இ-ள்.) மாடமேல் சிறு மகார் விடுக்கும் வண் படம் - உபரிகையின்மேற் சிறுவர்கள் நின்றுவிடுக்கும் பெரிய காற்றாடிகள், பாடல் சால் இருசுடர் தம்மை பற்றுவான் நாடின திரிதரும் நாகம் என்ன - பாடலிலமைந்த சந்திரசூரியர்களைக்கவர நாடித்திரியும் ராகுகேதுக்களைப்போல, விசும்பு இடை அமரர் நோக்க ஆடுவ-ஆகாயத்தினிடத்துத் தேவர்கள் பார்த்துவியக்க ஆடாநின்றன.

நாடின முற்றெச்சம். உம்மை அசைநிலை. வண்படம் அமரர்நோக்கத் திரிதரு நாகம் என்ன ஆடுவ என்றமையால் அதிசயவுவமையணி. (கக)

அட்டிலிற்குய்ப்புகையணங்கனார்குழற்
கிட்டிடுமகிற்புகைமகத்தெழும்புகை
முட்டிமேற்பரந்தெங்குமொய்த்ததோர்கிலார்
வட்டவான்செழும்புகைவண்ணமென்பரே.

(இ-ள்.) அட்டிலில் குய் புகை அணங்கு அன்னார் குழற்கு இட்டிடும் அகில் புகை மகத்து எழும்புகை - சமையல்வீட்டில் தாளிக்கும் புகையும் தெய்வப்பெண்களையொத்த பெண்கள் கூந்தலுக்கூட்டும் அகிற்புகையும் யாகத்திலெழும் புகையும், முட்டி மேல் பரந்து எங்கும் மொய்த்தது ஓர் கிலார் - அளாவி மேலே பரந்து எவ்விடத்தும் நெருங்கியதை யுணராது, வட்டம் வான் செழும் புகை வண்ணம் என்பர் - வட்டமாயுள்ள ஆகாயம் செழித்த புகையினிறமென்று கூறுவார்கள்.

புகைமொய்த்தது என்றமையால் குறைவில்லாத வளங்களையுடையதென்பது குறிப்பாற்போதரலில் உதாரவணியும், ஓர்கிலார் வட்டவான்செழும் புகைவண்ணமென்பர் என்றமையால் மயக்கவணியுங் கலந்துவருதலிற் கலவையணி. (க00)

இந்திரனூர்தியிங்கெய்தித்தன்முடிச்
சுந்தரஞ்சிதைதரத்துதையச்சீறித்தன்
மந்திரப்புகையினால்வலாரியூரெழில்
சிந்திடச்செய்வசீர்வேள்விச்சாலையே.

(இ-ள்.) இந்திரன் ஊர்தி இங்கு எய்தி தன்முடி சுந்தரம் சிதை தர துதைய - தேவேந்திரனூர்தியாகிய மேகங்கள் இவ்விடத்துவந்து தனது சிகரத்தின் அழகுகெட நெருங்குதலால், வேள்விசாலை சீறி தன் மந்திரம் புகையினால் வலாரி ஊர் எழில் சிந்திட செய்வ - யாகசாலையானது கோபித்துத் தன்னிடத்து மந்திரவிதியாலமைந்த வேள்விப் புகையால் அவ்விந்திரனது நகரத்தின் அழகு சிந்தச்செய்யாநின்றன.

யாகசாலையிலுள்ள புகை விண்ணிற்படர்தலை, தேவேந்திரன் வாகனமாகிய மேகம் இங்குவந்து தனது சிகரத்தின்பொலிவைக் கெடுக்காநின்றது, அதனால் நாம் அவன் உலகின்பொலிவைக்கெடுக்கலாம் என்று கோபித்து வேள்விச்சாலை மந்திரம் அமைந்த புகையை விண்ணிற்பரப்பியதென்றலால் தொடர்புயர்வு நவிற்சியணி. (க0க)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆகுதித்தழலினறுதொழிலாளரருமறைமனுவெடுத்தோதி
யோகையிற்சொரிநெய்தெறித்தெழும்பிதிர்வுமொலிபடுபுலிங்கமுங்கொண்
மேகமாய்ப்படர்ந்ததூமமேயிடித்துமின்னிநீர்பொழிவனபோலு [டு
மீகைசால்வேள்விமறுத்துழிமாரியின்மையேயிதற்குசான்றால்.

(இ-ள்.) அறுதொழிலாளர் ஆகுதி தழலின் அருமறை மனு எடுத்து ஓதி ஓகையில் சொரி நெய் தெறித்து எழும் பிதிர்வும் ஒலிபடு புலிங்கமும் கொண்டு - ஓதல்முத

விய அறுதொழிலையுடைய அந்தணர்கள் ஆகுதியாக வேள்வித்தீயில் சொல்லுதற்கரிய வேதமந்திரங்களை யெடுத்துக்கூறி விருப்பத்தோடு சொரியும் நெய்யைத்தெறித்தலால் அதிலெழுந் திவலையையும் சடசடவென்னு மொலிமிக்க தீப்பொறியையுங்கொண்டு, மேகம் ஆய் படர்ந்த தூமமே இடித்து மின்னி நீர் பொழிவனபோலும் - மேகமாகிப் பரந்த புகையே இடித்து மின்னல்செய்து நீரைப் பொழிதல்போலும், ஈகை சால் வேள்வி மறுத்த உழிமாரி இன்மையே இதற்கு உறுசான்று - தேவர்களுக்குக் கொடுத்தலமைந்த இவ்வேள்வி செய்யாதகாலத்தில் மழையில்லாமையே இதற்கு மிக்க சாட்சியாம்.

"வேள்விநற்பயன்வீழ்புனலாவது" என ஆளுடையபிள்ளையார்புராணத் திற் கூறுதலால் வேள்விப்பயனே மழையாக, போலும் என்பதனால் அப்பொருளினுண்மையை மறுத்து வேள்விப்புகையே மேகமாகவும், ஆகவநீயமுதலிய வேள்வித்தீயினொலியும் பொறியும் இடியும் மின்னலுமாகவும் ஆகுதியாகிய நெய்யின் பிதிர்வே மழையாகவுங் கூறுதலால் பொருளவநுதியணி.

வேள்வியால் மழையுண்டென்பது—

" கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கள்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே" எனவரும் ஆளுடையபிள்ளையார்

தேவாரத்தால் உணர்க.

வேள்வியில்லாமையால் மழைவறத்தலை—

குலபூடணபாண்டியன் சோமவாரமுதலிய சிவவிரதங்களை யனுட்டித்துச் சிவபெருமானுக்கு வழிபட்டு வேதவிதிப்படி வேள்விசெய்யும் அந்தணரைக் கைவிட்டொழுகுநாளில் மழையில்லாது தன்னாடு வறங்கூர, அதற்காற்றாது சிவபெருமானிடத்துச் சென்று முறையிடச் சிவபெருமான் கனவிலெழுந்தருளி உன்னாட்டில் வேள்வியில்லாமையால் மழைவறந்தது நாம் தரும் உலவாக்கிழியால் அந்தணரைப்பேணி முட்டின்றி வேள்வி நடத்துவையாயின் மழைபெய்யும் எனக் கூறியருளி மறைந்தருளினர், அப்பாண்டியன் சிவபெருமானருளிய உலவாக்கிழியால் வேள்வியை யோம்பினமையால் மழைபெய்தது என்பது திருவிளையாடற்புராணவரலாறு.

" வள்ளல்குலபூடணன்றிங்கள்வாரந்தொடுத்துச்சிவதருமம்
உள்ளவெல்லாம்வழாதுகோற்றொழுகும்வலியாற்றன்னாட்டில்
எள்ளவில்லாவேதியரையிகழ்ந்தானதனான்மழைமறுத்து
வெள்ளமருகவளங்குன்றிவிளைவஃகியதுநாடெல்லாம் "

" ஏடாரலங்கல்வரைமார்பவெம்பாலென்றுமன்புடைமை
வாடாவிரதவிழுச்செல்வமுடையாய்வையமறங்கடிந்து
கோடாதளிக்குஞ்செங்கோன்மையுடையாயுனக்கோர்குறையுளதுன்
வீடாவளஞ்சேர்நாட்டிந்நாள்வேள்விச்செல்வமருகியதால்.

அந்தமறைநடமக்குறுதியாவாரந்நூல்வழிகலிநோய்
சிந்தமகத்தீவளர்த்தெம்பாற்சிந்தைசெலுத்துமந்தணராம்
இந்தமறையோர்வேள்விமழைக்கேதுவாகுமிவர்தம்மை
மைந்தவிகழ்ந்துகைவிட்டாயதனான்மாரிமறுத்தன்றால்.

மும்மைப்புவனங்களுமுய்யமுத்தீவேட்குமிவர்தம்மை
நம்மைப்போலக்கண்டொழுகினாளுமறம்பெருக்கிச்

செம்மைத்தருமக்கோலோச்சித்திகிரியுருட்டிவாழ்தியென
உம்மைப்பயன்போலெளிவந்தாருலவாக்கிழியொன்றுதவுவார்'' என அப்புரா
ணத்தில் வருதல் காண்க.

அறுதொழிலாளர் என்றது ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், கொ
டுத்தல், கோடல் என்னும்அறுவகைத்தொழிலையுடையவரை. ஓதலாவது இருக்கு, எசுர்,
சாமம் என்னுந் தலையாய ஒத்தினையும், அதர்வம் ஆறங்கம் தருமநூலாகிய இடையாய
ஒத்தினையும், இதிகாசமும் புராணமுமாகிய கடையாயவோத்தினையும் ஓதல். ஓதுவித்
தலாவது பாடங்கேட்போன் கொள்ளும் வகையையறிந்து அவன் கொள்ளக்கொடுக்கு
ம் ஆசிரியன்றன்மையும் பாடஞ்சொல்லுந் தன்மையுமாம். வேட்டலாவது ஐந்தீயாயினு
முத்தீயாயினும் உலகியற்றீயாயினும் ஒன்றுபற்றி மங்கலமரபினால் அவிமுதலியவற்றை
மந்திரவிதியினால் தேவர்களுக்குக்கொடுத்துச் செய்யுஞ்செய்தி. வேட்பித்தலாவது வே
ள்வியாசிரியர்க்கோதிய இலக்கணமுடையவனாய் மாணாக்கனுக்கு அவன்செய்த வேள்வி
யின் பயனை யெல்லாந்தரவல்லனாதல். கொடுத்தலாவது வேள்வியாசானும் அதற்குத்
துணையாயினாரும் அவ்விடத்து வந்தோரு மகிழ்கூர உபசரித்தல். கோடலாவது கொ
ள்ளத்தகும் பொருள்களை யறிந்துகொள்ளுதல்.

இருக்குமுதலிய மூன்றனையுந் தலையாய ஒத்து என்றது வேள்விமுதலியவற்றை
விதித்தற்கு இலக்கணமாய் நிற்றலால். அதர்வமுதலியவற்றை இடையாய ஒத்து என்ற
து அதர்வம் வேள்விமுதலிய ஒழுக்கங்கூறுது பெரும்பான்மையும் உயிர்களுக்கு ஆக்க
மேயன்றிக் கேடுதருமந்திரங்களைக் கூறுதலாலும், ஆறங்கங்களுள் நிருத்தம் உலகியற்
சொல்லையொழித்து வைதிகச்சொல்லைக்கூறுதலாலும், வியாகரணம் அவ்விருவகைச்
சொல்லையும் உடனாராயப்படுதலாலும், கற்பம் போதாயனீயம், பாரத்துவாசம், ஆபத்த
ம்பம், ஆத்திரையமாதலாலும், பிரமம் எழுத்தாராய்ச்சியாதலாலும், சந்தம் செய்யுளிலக்
கணமாதலாலும், தருமநூல் உலகியல்பற்றிவருதலாலும் இவை வேதத்திற்கு அங்கமாய்
வருதலால். இதிகாசமுதலியவற்றைக் கடையாய ஒத்து என்றது வேதத்திற்கு மாறுபடு
வாரை மறுக்கும் உறழ்ச்சிநூலாதலால். இதனால் வாகைத்திணையுள் அறுவகைப்பார்ப்ப
னப் பக்கத்துறை கூறப்பட்டது. (கoஉ)

பூசுரப்பெயரினிருமொழிப்பொருட்குமுரிமைபூண்டுறுநிலைக்கேற்பக்
காசினிவரைப்பினாடொறும்வழாதுகமழ்சுவையடிசிலானதிதி
பூசையும்வேள்வியவியினாற்கடவுட்பூசையுமொருங்குசெய்கடப்பா
டாசறவாற்றும்பார்ப்பனவாகையறிஞர்வாழிடம்பலவவண.

(இ-ள்.) பூசுரர் பெயரின் இருமொழி பொருட்கும் உரிமை பூண்டு உறும் நிலை
க்கு ஏற்ப - தமக்கு வாய்ந்த பூசுரரென்னும் பெயரிலுள்ள இருமொழிக்கும் உரிய பொ
ருளினுக்கும் தாம் உரிமை பூண்டு நிற்கும் நிலையினுக்குப்பொருந்த, காசினி வரைப்பில்
நாள் தொறும் வழாது கமழ் சுவை அடிசிலான் அதிதிபூசையும் - நிலவுலகில் நாள்தோ
றும் வழுவாமல் நறுமணங்கமழுஞ் சுவைமிக்க உணவால் விருந்தினர்களுக்குச்செய்யும்
பூசையும், வேள்வி அவியினால் கடவுள் பூசையும் ஒருங்கு செய் கடப்பாடு-வேள்வியில்
பெய்யு மவியினாற் றேவர்களுக்குச்செய்யும் பூசனையையும் ஒருசேரச்செய்யு முறையை,
ஆசு அற ஆற்றும் பார்ப்பன வாகை அறிஞர்வாழ் இடம் பல அவண - குற்றமறச்செய்
யும் பார்ப்பனவாகையையுடைய அந்தணர்கள் வாழும் இடங்கள் பல அவ்விடத்தில்
உள்ளன.

பூசுரர் பூ, சுரர் என நிற்றலால் இருமொழியெனவும், பூவுலகில் வேள்வியைந்த
னுள் மானுடவேள்வியையும், சுரர் என்றமையால் தேவவேள்வியையும் ஓம்புதலால்

இருமொழிப்பொருட்கும் உரிமைபூண்டு எனவும், இவ்விரண்டும் கிரகாச்சிரமநிலையில் நிற்கும் அந்தணர்களுக்கு இன்றியமையாத செயல்களாதலால் காசினிவரைப்பினுடொறும் வழாது கமழ்சுவையடிசிலா னதிதிபூசையும் வேள்வியவியினாற் கடவுட்பூசனையும் எனவும், இவை வழாதுசெய்து வருதலால் ஆசறவியற்றும் எனவும், இவை வாகைத்திணையுள் பார்ப்பனவாகைத் துறையாதலால் பார்ப்பனவாகையறிஞர் எனவுங்கூறினார். வேள்வியைந்தாவன பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகம். பிரமயாகமாவது வேதமோதுதல். தேவயாகமாவது ஓமம் வளர்த்தல். மானுடயாகமாவது விருந்தோம்பல். பிதிர்யாகமாவது நீர்க்கடனாற்றல். பூதயாகமாவது பலிகொடுத்தல்

கிரகாச்சிரமநிலைமைக்கு இவ்விருவகை வேள்வியும் வேண்டுமென்றலை—

“ பாரியோடவுபாசனஞ்செயல்விடிற்பதிதன்
ஆருமற்றவள்பூத்துநீராடுபின்பதினு
ரேருநாளிற்சந்ததிபெறப்புணர்ச்சியையுறுதல்
நாரின்வானவர்நல்லழலதிதியர்நிமித்தம்” எனவருஞ் சூதசங்கிதையாலும்,

பார்ப்பனவாகையை—

“ ஓசந்தவழ்கமைநீர்வேலியுலகினில்
வேதங்களைகண்டான்வீற்றிருக்கும் - ஏதம்
சுடுசுடர்தானுகிச்சொல்லவேவீழ்ந்த
விடுசுடர்வேள்வியகத்து” எனவரும் புறப்பொருள் வெண்பாமாலையாலும் உணர்க. இது சாதித்தன்மையணி. (சு0௯)

தகைபெறுவலியாற்றெம்முனைமுருக்கிக்காவற்சாகாடுகைத்தெங்குந்
திகிரியொன்றுருட்டிமுறையுளிச்செங்கோல்செலுத்துநர்கள்வர்மற்றுயிர்கள்
பகைவர்தாந்தமரொன்றிவ்வயினெய்தும்பயந்தடுத்துலகெலாம்புரக்கு
மிகுபுகழ்படைத்தவரசியல்வாழ்க்கைவீரர்வாழிடம்பலவவண.

(இ-ள்.) தகைபெறு வலியால் தெம்முனை முருக்கி காவல் சாகாடு உகைத்து எங்கும் திகிரி ஒன்று உருட்டி - பொலிவுபெற்ற வலிமையால் பகைவரைப் போர்முனையிற்சாய்த்து காவலாகிய பண்டியைச்செலுத்தி ஒருசக்கரத்தைச்செலுத்தி, முறையுளி செங்கோல் செலுத்துநர் - மனுமுறைப்படியே செங்கோல் செலுத்து மரசர், கள்வர் உயிர்கள் பகைவர் தாம் தமர் என்ற இவ்வயின் எய்தும் பயம் தடுத்து - கள்வரும் உயிர்களும் பகைவர்களுந் தாமும் உறவினருமென்று சொல்லப்பட்ட இவ்விடங்களால் குடிகளுக்கு வரும் பயத்தைத்தடுத்து, உலகு எல்லாம் புரக்கும் மிகு புகழ்படைத்த அரசு இயல் வாழ்க்கை வீரர் வாழ் இடம் பல அவண - மிக்க புகழைப்படைத்த அரசியல் வாழ்க்கையையுடைய வீரர்கள் வாழும் பல இடங்கள் அவ்விடத்திருந்தன.

பகைவர்நாடு கொள்ளுதல் அரசர்க்கு அறமும் பொருள் கூடுதலுமாதலால் தெம்முனை முருக்கியெனவும், காவல் நடாத்துதல் அரசநீதியாதலால் காவற்சாகாடுகைத்து எனவும், எல்லாவுலகையுந் தன்னடிப்படுத்தலால் எங்குந் திகிரியொன்றுருட்டி எனவும், உயிர்களிடத்துச் செய்யப்படுமுறையாதலால் முறையுளியெனவும், அம்முறையானொருபாற்கோடாது நடுநிற்றலால் செங்கோல் செலுத்தும் எனவும், இவ்வாறு தம்மாற் காக்கப்படும் உயிர்களுக்குத் துன்பஞ்செய்யும் தமது பரிசனங்களையு மிருகங்களையும் பகைவர்களையும் கள்வரையும் தம்மையும் ஒறுத்தல் அரசர் ஐந்தொழிலில் தண்டமாதலால் கள்வர் மற்றுயிர்கள் பகைவர் தாம் தமரொன்றிவ்வயினெய்தும் பயந்தடுத்தெனவும், இவ்வாறு காத்தல் அரசவாகையாதலால் அரசியல் வாழ்க்கைவீரர் எனவுங் கூறினார்.

தண்டித்தலை—

"மாநிலங்காவலனவான்மன்னுயிர்காக்குங்காலை
தானதனுக்கிடையூறுதன்னாற்றன்பரிசனத்தால்
ஊனமிகுபகைத்திறத்தாற்கள்வராலுயிர்தம்மால்
ஆனபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனோ" எனவரும் திருத்தொண்டர்புராணத்தாலும்,

அரசவாகைத்துறையை—

"காவலமைந்தான்கடலுலகங்காவலா
லோவலறியாதுயிர்க்குவகை - மேவருஞ்சீர்
ஐந்தொழிலான்மறைமுத்தீயிருபிறப்பு
வெந்திறற்றண்ணளியெம்வேந்து" எனவரும் புறப்பொருள் வெண்பாமாலையாலும் உணர்க. முறையுளி உளி மூன்றும் உருபிடைச்சொல்.

ஐந்தொழிலாவன ஓதல், வேட்டல், ஈதல், காத்தல், தண்டங்களாம். இது சாதித்தன்மையணி. தெவ்முனை தெம்முனையென நிலைமொழியீறு மகரமாகத்திரிந்தது. "வேனை வகரந்தொழிற்பெயரியற்றே" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தால். (௧0௪)

மேதகுவிரிஞ்சனரும்பெறற்குறங்கைவிழைதகையாயெனப்படைத்தோ
ரேதிலர்பொருளுந்தம்மபோற்பேணிவாணிபமீட்டுநர்வடாது
மாதிரத்தலைவன்புறங்கொடுத்திரியும்வளத்தினார்மறைநெறியொழுக்க
மாதரித்துயர்ந்தவிழுக்குடிவணிகரமர்ந்துவாழிடம்பலவவண.

(இ-ள்.) மேதகு விரிஞ்சன் அரும்பெறல் குறங்கு ஐ விழை தகை ஆய் என படைத்தோர் - மேன்மைமிக்க பிரமனது பெறுதற்கரிய தொடையைத் தாயாகப்பெற்றவரும், ஏதிலர் பொருளும் தம்மபோல் பேணி வாணிபம் ஈட்டுநர் - அயலாருடைய பொருளையுந் தமது பொருளைப்போல விரும்பி வாணிபத்தாற் பொருள் தேடுவோரும்- வடாது மாதிரம் தலைவன் புறம்கொடுத்து இரியும் வளத்தினார்-வடதிசைக்கிறைவனாகிய குபேரன் முதுகுகொடுத்துப் பின்னிடும் பெருஞ்செல்வத்தையுடையவருமாகி, மறை நெறி ஒழுக்கம் ஆதரித்து உயர்ந்த விழுக்குடி வணிகர் அமர்ந்து வாழ் இடம் பல அவண-வேதநெறி யொழுக்கங்களை விரும்பியுயர்ந்த மேம்பாடுள்ள குடிகளாகிய வணிகர்கள் மனமகிழ்ந்து வாழும் இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

பிரமன் தொடையிலுற்பவித்தலால் மேதகு விரிஞ்சனரும் பெற்ற குறங்கை விழைதகையாயெனப்படைத்தோர்எனவும், பிறர்பொருளையுந் தம்பொருள்போற்போற்றி, கொள்வது மிகையுங்கொடுப்பது குறையுமாகாமல் ஒப்பநின்று வாணிகஞ்செய்தல் வாணிகச்சிறப்பாதலால் ஏதிலர்பொருளுந் தம்மபோற்பேணி வாணிபமீட்டுநர் எனவும், அவ்வாறீட்டிய பொருளால் குபேரனும் புறங்கொடுக்கும் பெருஞ்செல்வத்தினராதலால் வடாது மாதிரத்தலைவன் புறங்கொடுத்திரியும் வளத்தினாரெனவும், வணிகர் அறுவகைத்தொழிலில் வேதம் ஓதல் அவர்க்குரிய தொழிலால் மறைநெறியொழுக்கமாதரித்துயர்ந்த எனவும், இது வாணிகவாகைத்துறையாதலால் விழுக்குடி வணிகர் எனவுங்கூறினார்.

பிரமன் தொடையிற்பிறத்தலை—

"வேதியர்முகத்தில்வேந்தர்விறல்கெழுதுணைத்தோள்வெற்பிற்
றீதறுவணிகர்செம்பொற்குறங்கினிற்சதுர்த்தர்செய்ய
பாதபங்கயத்திலீன்றான்பதுமன்முன்படைத்தமூவர்
ஓதியமகங்களியாவுமாற்றுதற்குரியராவார்" எனவரும் கூர்மபுராணத்தாலும்,

ஏதிலர்பொருளுந்தம்மபோற்பேணி என்ற வாணிகச்சிறப்பை "வாணிகம்செய்வார்க்கு வாணிகம்பேணிப் - பிறவுந்தமபோற்செயின்" என்னுந் திருக்குறளாலும்,

> " உழுதுபயன்கொண்டொலிநிரையோம்பிப்
> பழுதிலாப்பண்டம்பகர்ந்து - முழுதுணரா
> ஓதியழல்வழிபட்டோம்பாதவீகையான்
> ஆதிவணிகர்க்கரசு" எனவரும்புறப்பொருள் வெண்பாமாலையாலும் உணர்க.

அறுதொழிலாவன ஓதல், வேட்டல், ஈதல், உழவு, நிரையோம்பல் வாணிகம், தம்ம பொருளடியாகப்பிறந்த குறிப்பு முற்றுப்பெயர். (சுoடு)

முருகுயிர்த்தலர்ந்தமலரவன் றனதுமுகமுதலுறுப்பெலாந்தாங்கிச்
சரணமென் றுரைக்குமுறுப்பினிற் றோன்றிச்சாற்றுமம்முகமுதலுறுப்பின்
வருமொருமூவர் தங்களையுழவின்வண்மையானிலைபெறந்தாங்கு
முரியவேளாண்மைபூண்டபேர்தமக்கேயுடையவரிடம்பலவவண.

(இ-ள்.) முருகு உயிர்த்து அலர்ந்த மலரவன் தனது முகம் முதல் உறுப்பு எல்லாம் தாங்கி சரணம் என்று உரைக்கும் உறுப்பினில் தோன்றி-வாசம் வீசி மலர்ந்த தாமரைமலரை யிருக்கையாகவுடைய பிரமனது முகமுதலிய அவயவங்களையெல்லாந் தாங்குதலால் அவைகளுக்குச் சரணமென்று சொல்லப்படும் பாதத்தில் பிறந்து, சாற்றும் அம்முகம் முதல் உறுப்பின் வரும் ஒரு மூவர் தங்களை-சொல்லப்படும் அம்முகமுதலிய அவயவங்களிற்றோன்றிப்பிறக்கும் அந்தணர் அரசர் வணிகரென்னும் மூவர்களையும்,உழவின் வண்மையால் நிலைபெற தாங்கும் உரிய வேளாண்மை பூண்டபேர் தமக்கு ஏ உடையவர் இடம் பல அவண - உழுதற்றொழிலின் பெருமையால் அம்மூவரும் நிலைபெற்று விளங்க அவர்களையோம்புதலால் உபகாரமென்னுந்தொழில் தமக்கே உரிய ஆதலாலதனால் வந்த வேளாளரெனனும் பெயர்க்கு உரியவராகிய நான்காம்வருணத்தினவர் இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

முகமுதலுறுப்பு என்றது முகம், தோள், தொடையை. முகமுதலுறுப்பின் வருமொருமூவர் என்றது அந்தணர், க்ஷத்திரியர், வைசியரை. இவற்றைத் தாங்குதலால் வந்த காரணப்பெயர் என்பார், தாங்கிச் சரணமென்றுரைக்கு முறுப்பினிற் றோன்றியெனவும், அவர்கள் அறுதொழிலில் ஒன்றாகிய உழவு வேளாளர்க்கே பெரும்பாலும் உரித்தென்பார் உழவின்வண்மையால் எனவும், அதனால் அவர் மரபிற்குவந்த பெயர் காரணப்பெயர் என்பார் தாங்கி உரிய வேளாண்மைபூண்ட பேர் தமக்கே யுடையவர் எனவுங் கூறினார். அறுதொழில் என்றது வேதமொழிந்த நூல்களை ஓதல், ஈதல், உழவு, நிரையோம்புதல், வாணிகம், வழிபாடு. வேளாளரை இருவகையராக்கி அரசராற் சிறப்படைந்த வேளாளரை வேட்டலுக்கு உரியவராக்கி வழிபாடு ஒழித்து ஆறு என்பாரும், அரசராற் சிறப்பெய்தாத வேளாளர் வழிபடுதற்கு உரியராதலால் வேட்டலையொழித்து வழிபாடு கூட்டி யாறென்பாரும் உளர். வழிபாடு என்றதை—

> " இருக்கையெழலுமெதிர்செலவுமேனை
> விடுப்பவொழிதலோடின்ன-குடிப்பிறந்தார்
> குன்றாவொழுக்கமாக்கொண்டார்கயவரோ
> டொன்றாவுணரற்பாற்றன்று" எனவரும் நாலடியாராலும்,

நிரைகாத்தற்சிறப்பை—

" போர்வாகைவாய்த்தபுரவலரின்மேதக்கார்
ஏர்வாழ்நரொன்பதற்கேதுவாம் - சீர்சால்
உரைகாக்குமன்னர்க்கொளிபெருகத்தாந்தம்
நிரைகாத்துத்தந்தநிதி" என வருதலாலும்,

உழவின்சிறப்பை—

" உழுவாருலகத்தார்க்காணியஃதாற்றா
தெழுவாரையெல்லாம்பொறுத்து" எனவரும் திருக்குறளாலுமுணர்க. முக முதலுறுப்பின் என்றதும், முகமுதலுறுப்பின் வருமொருமூவர் என்றதும் "மேதகுகுற ஙகையாயெனப்படைத்தோர் எனவருவதற்குக்காட்டிய செய்யுளாலுணர்க.

இது வாகைத்திணையுள் வேளாண்வாகைத்துறை.

" மூவருநெஞ்சமராமுற்றியவரவர்
ஏவலெதிர்கொண்டுமீட்டுரையான் - ஏவல்
வழுவான்வழிநின்றுவண்டார்வயலுள்
உழுவானுலகிற்குயிர்" எனவரும் புறப்பொருள்வெண்பாமாலையாலுமுணர்க.

அநுலோமர்முதலியோர்வீதி.

நால்வகைவருணத்துயர்குடிப்பிறந்தநல்லவரிருக்கையைச்சூழ்வ
சால்புறுமவரிலுயர்ந்தவரிழிந்தோர்தங்களுட்குழீஇமணந்தளித்த
பால்படுமேனைச்சாதிபேதத்தோர்பலர்களுந்தந்தமநெறியின்
சீலராய்ந்துவன்றிமரபுளியொழுகுந்திருமலிபல்வகைக்குடியே.

(இ-ள்.) நால்வகை வருணத்து உயர்குடி பிறந்த நல்லவர் இருக்கையை - அந் தணர்முதலிய நால்வகை வருணமாகிய உயர்ந்த குடியிற்பிறந்த நல்லவரது இருக்கை யை, சால்பு உறும் அவரில் உயர்ந்தவர் இழிந்தோர் தங்களுள் குழுவி மணந்து அளித்த பால் படும் ஏனை சாதிபேதத்தோர் பலர்களும் - மேன்மைமிக்க அந்நான்குவருணங்க ளுள் உயர்ந்தவர்களும் இழிந்தவர்களும் தங்களுள் நெருங்கிக்கலந்துபெற்ற வகுப்பமை ந்த மற்றைச் சாதிபேதத்தோர் பலர்களும், தத்தம நெறியின் சீலராய் துவன்றி மரபுளி ஒழுகும் திருமலி பல்வகை குடி சூழ்வ - தங்கள் தங்களுக்குரிய நடையினொழுக்கத் தையுடையவராகி நெருங்கித் தத்தமக்குக்கூறிய மரபினெறியினின்று நடக்கும் செல் வமிக்க பலவகைக்குடிகளுஞ் சூழாநின்றன.

உயர்குலத்து ஆணும் இழிகுலப்பெண்ணும், இழிகுலத்து ஆணும் உயர்குலப் பெண்ணுங் கூடிப்பிறந்த அனுலோமரும் பிரதிலோமரும், அனுலோமத்து ஆணும் பிர திலோமப்பெண்ணும், பிரதிலோமத்து ஆணும் அனுமலோமப்பெண்ணுங் கூடிப்பிறந் த அந்தராளனும், விராத்தியனும் என்பார் சால்புறு மவரிலுயர்ந்தவரிழிந்தோர் தங்களு ட்குழீஇமணந்தளித்த - பால்படுமேனைச் சாதிபேதத்தோர் பலர்களும் என்றார்.

" குலமுயாாணுந்தாழ்ந்தகுலமுறுபெண்ணுங்கூடி
அலமரப்பிறந்தமைந்தனனுலோமனென்னும்பேரான்
குலமுயர்பெண்ணுந்தாழ்ந்தகுலம்வருமாணுங்கூடி
வலனுறப்புணர்ந்துபெற்றவன்பிரதிலோமனுவான்.
மருவனுலோமத்தந்தைவளர்பிரதிலோமத்தாய்பா
லொருவரப்பிறந்தபிள்ளையுறுபெயரந்தராளன்

தருபிரதிலோமத்தந்தைதருமனுலோமத்தாய்பால்
வெருவறப்பிறந்தமைந்தன்விராத்தியனென்னும்பேரான்" எனவருஞ் சூதசங்கிதை சாதிவரலாறுரைத்த வத்தியாயத்தில் இப்பகுதிகளைப்பற்றிவருஞ் செய்யுள்களாலறிக. (கoஎ)

வளரிலைத்தருப்பைநுனியெனக்கூர்த்தமதியினர்தொன்றுதொட்டுடைய
பளகறுகேள்விப்பயிற்சியர்மேற்கோண்முதற்பகர்மூன்றினுந்தெருட்டி
யிளையருக்குணர்த்துமிலக்கணநெறியோரீரிருபுலமையர்தம்முட்
களவிகலிகந்துகுழாங்குழாமாகிக்கலைதெரிகழகமும்பலவால்.

(இ-ள்.) வளர் தருப்பை இலை நுனி என கூர்த்த மதியினர் தொன்றுதொட்டு உடைய பளகு அறு கேள்விப்பயிற்சியர் - வளருந் தருப்பையிலையின் நுனியைப்போலுங் கூரிய அறிவினையுடையவரும் தொன்றுதொட்டுள்ள குற்றமற்ற நூற்கேள்வியின் பயிற்சியையுடையவரும், மேற்கோள்முதல் பகர் மூன்றினும் தெருட்டி இளையருக்கு உணர்த்தும் இலக்கண நெறியோர்-உதாரணமுதலாகக்கூறு மூன்றினாலும் நூலிலுள்ள ஐயத்தை நீக்கி மாணாக்கர்களுக்குப் பொருளை விளக்கிக்காட்டும் இலக்கணநெறியையுடையவருமாகிய ஆசுகவிஞர்முதலிய நான்குகவிஞர்களும், தம்முள் களவு இகல் இகந்து குழாம் குழாம் ஆகி கலை தெரி கழகமும் பல - தங்களுள்ளே வஞ்சமும் பகையுமாகிய இவற்றினின்று நீங்கிக் கூட்டங்கூட்டமாய் நூல்களை யாராயும் கல்விச்சாலைகளும் அவ்விடத்திற் பலவுள்ளன.

தருப்பையிலையினுனி மிகவு நுண்ணிய கூரியது ஆதலால் தருப்பைநுனியெனக்கூர்த்த மதியினர் எனவும், கல்விகேள்விகளில் கேள்வி சிறந்ததாதலால் கேள்வியர் எனவும், பரம்பரையாகக் கற்றுவல்லவர்பாற் கற்றலுங்கேட்டலும் சிறந்தன ஆதலால் தொன்றுதொட்டுடைய பளகறு எனவும், மாணாக்கருளங்கொளப் பாடஞ் சொல்லுமிடத்துக் கருத்துரையாலும் பதவுரையாலும் உதாரணத்தாலும் நூலிலுள்ள பொருளைத் தெளிவித்தல் வேண்டுதலால் மேற்கோள் முதன்மூன்றினுந் தெருட்டியுணர்த்து மிலக்கணநெறியோர் எனவும், புலமையோர் கவி, கமகன், வாதி, வாக்கியென நாலவகையராதலால் ஈரிருபுலமையோர் எனவும், இவர்கள் தம்முள் வஞ்சமும் பகையுமின்றிக்கூடி வாழ்தலரிதாதலால் களவிகலிந்து குழாங்குழாமாகியெனவுங்கூறினர்.

கவி—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப்பாடுவோன். கமகன் அரும்பொருளைச் செம்பொருள் நடையாகப்பாடுவோன். வாதிகாரணமும் மேற்கோளும் எடுத்துக்காட்டிப் பிறர்மதத்தை மறுத்துத் தன்மதத்தை நிறுத்துவோன். வாக்கி அறம், பொருள், இன்பம், வீடு என்னு நான்குறுதிகளைக்கேட்கவும் விரும்பவு மினியனவாக விரித்துக்கூறுவோன்.

" கவியேகமகன்வாதிவாக்கியென் - றிவையொருநான்கும்புலமைக்கியல்பே.
ஆசுமதுரஞ்சித்திரம்வித்தாரமெனப் - பாவகைபாடுவோன்கவியெனப்படுமே.
ஞாபகஞ்செம்பொருணடையினெப்பொருளும் - காசின்றுரைப்போன்கமகனுகும்.
ஏதுவுமேற்கோளுமெடுத்துக்காட்டித் - தன்கோணிறீஇப்பிறர்கோண்மறுப்போன் - மன்பதைமதித்தவாதியாகும்.
அறம்பொருளின்பம்வீடெனுந்திறங்கள் - கேட்கவேட்கவினியனகூறும் - ஆற்றலுடையான்வாக்கியாகும்" எனவரும் பிங்கலத்தாலும்,

கேள்வி சிறந்தது என்பதை—

" கற்றிலனாயினுங்கேட்கவஃதொருவற்
கொற்கத்தினூற்றாந்துணை" எனவருந் திருக்குறளாலும்,

களவி கலிகந்து என்றதை—

" தவலருந்தொல்கேள்வித்தன்மையுடையார்
இகலிலரெஃகுடையார்தம்முட்குழீஇ
நகலினினிதாயிற்காண்பாமகல்வானத்
தும்பருறைவார்பதி" எனவரும் நாலடியாரும் உணர்க. (கo-அ)

காமனை முனிந்துநெடுஞ்சடைதரித்துக்கவின்றகல்லாடைமேற்புனைந்தி
யாமெலாம்வழுத்துந்துறவியென்றிருந்துமொருத்திதனிளமுலைச்சுவடு
தோமுறக்கொண்டாரெனச்சிறையிடல்போற் சுடர்மனக்குகையுளேகம்பத்
தோமொழிப்பொருளையடக்கியானந்தமுறுநர்வாழிடம்பலவுளவால்.

(இ-ள்.) காமனை முனிந்து நெடும் சடை தரித்து கவின்ற கல் ஆடைமேல் புனைந்து - மன்மதனைக் கோபித்தெரித்துத் திக்கினையளாவ நீண்ட சடைமுடியினைத்தரித்து இயற்கையழகமைந்த காவியாடையைத் திரு இடைமேற்றரித்திருத்தலால், யாம் எல்லாம் வழுத்தும் துறவி என்று இருந்தும்-திருவேகம்பர் நம்மெல்லாராலும் வணங்கப்படும் பெருந்துறவினரென்று சரணடைந்திருந்தும், ஒருத்தி தன் இளமுலைசுவடு தோம்உற கொண்டார் என்ன சிறை இடல்போல் - ஒருத்தியாகிய உமையம்மையினது இளமைவாய்ந்த தனபாரச்சுவட்டைத் தமது துறவற அங்கத்திற்குக் குற்றமமையக்கொண்டாரென்று சிறைச்சாலையிலடைத்தல்போல, சுடர் மனம் குகையுள் ஏகம்பத்து ஓம் மொழி பொருளை அடக்கி ஆனந்தம் உறுநர் வாழ் இடம் பல உள - தமது விளங்கு மனமாகிய சிறைச்சாலையில் திருவேகம்பத்தெழுந்தருளிய பிரணவப்பொருளாகிய இறைவனைச் சிறையிட்டுப் பேரானந்தமடையுந் துறவிகள் வாழும் இடங்கள் பல உள்ளன.

போகமிழந்த பிரமன் முதலிய தேவர்கள் ஏவக்காமமூட்டவந்த மன்மதனைக் கட்டோடெரித்த பெருந்துறவினர் என்பார் காமனை முனிந்து எனவும், அத்துறவற வங்கத்திற்கேற்பத் திக்கினையளாவும் நீண்ட சடாமுடியுடையவர் என்பார் பொதுவினை தந்து நெடுஞ்சடை தரித்து எனவும், இயற்கையாயமைந்த காவியுடையவர் என்பார் கவின்ற கல்லாடைமேற்புனைந்து எனவும், இவையுடைமையால் தம்மீலும் சிவபெருமானைப் பெருந்துறவினரென்று அங்குள்ள துறவினர் கருதினர் என்பார் யாமெலாம் வழுத்துந் துறவியென்றிருந்தும் எனவும், தனக்கொப்பின்றி யெங்கு நிறைந்த உலககாரணியென்பார் ஒருத்தியெனவும், அம்மைவலிந்து தழுவத் துறவறங்குறைபடத் திருமேனி குழைந்து காட்டினார் என்பார் இளமுலைச்சுவடுதோமுறக்கொண்டார் எனவும், இவனை நாம் இனி வெளிவிடுவோமாயின் இறைவரல்லரென நாம் நியதிசெய்து களைந்த பிரமனுந் திருமாலும் நம்மை நகைப்பர் என உள்ளேயடைத்தனர் என்பார் சிறையிடல்போல் சுடர்மனக்குகையுளே கம்பத்தோ மொழிப்பொருளை யடக்கியெனவும், பிரணவம் சிவத்தையன்றி மற்றொருபொருளை யிறையெனச் சுட்டாதென்பார் ஓ மொழிப் பொருள் எனவும், திருவடிஞானத்தால் சிவானந்தம் அடைந்தனர் என்பார் ஆனந்தமுறுநர் எனவுங்கூறினார்.

தேவர்களேவக்காமமூட்டவந்த மன்மதனை யெரித்ததை—

" செற்றநீர்மைகொள்ளலையசெஞ்சடைப்பிரானிடத்
திற்றைவைகல்மரியற்றவேகுவேனியானெனக்
கொற்றவேளுரைத்தலுங்குளிர்ந்தபூவிருக்கைமேல்
உற்றபோதன்மகிழ்சிறந்துளங்களித்துரைசெய்வான்.

விட்டவெம்பகழியைந்தும்வியத்தகுவிமலன்மீது
பட்டலுஞ்சிறிதுவேளைப்பார்த்தனன்பார்த்தலோடும்
கட்டழல்பொதிந்தநெற்றிக்கண்ணதுகடிதேகாமற்
சுட்டதுகயிலைமுற்றுஞ்சூழ்புகைபரவிற்றன்றே'' எனவருங் கந்தபுராணத்
தாலும்,

நெடுஞ்சடை என்றதை—

"தன்றாற்படைத்தபொன்னணியண்டம்
எண்டிக்களந்துகொண்டனவென்னப்
புரிந்தசெஞ்சடைநிமிர்ந்துசுழல" எனவருங் கல்லாடத்தாலும்,

திருமேனி குழைந்து காட்டியதை—

"மணிமுலைக்குவட்டிரேடுவளைக்கையாளெருக்கிப்புல்லித்
தணிவருங்காதல்விம்மக்காதலிதழுவலோடுந்
தினியிருளறுக்குஞ்சோதித்திருவுருக்குழைந்துகாட்டி
யணிவளைத்தழும்பிரேடுமுலைச்சுவடணிந்தாரையர்'' எனவரும் இப்புராணத்
தாலும்,

ஓ மொழிப்பொருள் என்றதை—

"எல்லாமச்சிவசொருபமிப்பொருள்சம்மதமான்முன்யாவருக்கும்
பொல்லார்களிதுணரார்மாயையினான்மயக்கமேபொருந்துவார்கள்
மல்லாரும்பிரணவமென்சிலைவளைத்துசசிவனெனும்வண்டுபூட்டி
நல்லார்சொல்சிவவெனிலக்கணவேவிலச்சிவமேயாவளூரும்'' எனவரும் சூத
சங்கிதையில் முண்டகோபநிடததாற்பரியமுரைத்தவத்தியாயத்திலும்,

ஒருத்தியென்றதை—

"பகர்பராசத்தியபரசத்திகளைப்படைத்திடும்படைத்தவச்சத்தி
தகைபெறுமூலப்பருதியேயாயையுமுக்குணப்பகுதிதானென்னப்
புகல்செயப்பிரியும்திகழ்பராசத்திபுகழ்சிவதத்துவமுதலா
வகனிலமீறுஞ்சகத்தினைத்தோற்றவணிபெறவிரித்திடுமன்றே'' எனவரும் வா
யுசங்கிதையாலும்,

ஆனந்தம் உறுநர் என்றதை—

"மலமறுப்போரான்மாவின்மலரடிஞானத்தாற் - சிந்தனைசெய்தர்ச்சிக்கச்சிவனு
ளத்தேதோன்றித் - தியிருப்பைச்செய்வதுபோற்சிவமன்னைப் - பந்தனையையறுத்துத்
தானுக்கித்தன்னுருவப் - பரப்பெல்லாங்கொடுபோந்துபதிப்பினிவன்பாலே'' எனவரு
ஞ் சிவஞானசித்தியாராலும் உணர்க.

இச்செய்யுளின்பொருளால் அங்குள்ள துறவிகள் எந்நாளும் சிவசிந்தனையால்
சிவானந்தமடைவர் எனக் குறிப்பாற்போதலால் உதாரவணி.

பொதுவினைதந்து நெடுஞ்சடைதரித்து என வழங்கும் பாடத்தை முடித்து என்ப
து சிறப்புவினையெனக்கொடுத்துப் பிழைபடத்திருத்தினவர் கல்லாடைமேற்புனைந்து
எனப் பொதுவினைதந்து முடிந்ததைக் கல்லாடைமேலுடுத்து எனச் சிறப்புவினைதந்து
திருத்த மறந்தனர்போலும். "சடைமறைத்துக்கதிர்மருடந்தரித்து" எனப் பொதுவினை
யால் முடியும் இலக்கணத்தை யறியாராயினும் இச்செய்யுள் வழக்கினையாயினுங் கேட்ட
றியாரோ? இவர் பாடங்களைத் திருத்தப்புகுந்தது பெருவியப்பு. (கoசு)

இருண்மலந்துமிக்குஞ்சிவாகமமுறையினீரிருபாதமுமனுட்டித்
தருள்பெறுமாதிசைவர்களாதியவாந்தரசைவரீருளோர்
மருவிவாழ்மாடமாளிகைப்பத்திமருங்குடுத்துயர்வனப்பினதாற்
றெருடருமனாதிசைவர்வீற்றிருக்குந்திவவொளிப்புரிசையேகம்பம்.

(இ-ள்.) தெருள் தரும் அநாதிசைவர் வீற்றிருக்கும் திவவ் ஒளி புரிசை ஏகம்பம் - ஆன்மாக்களுக்குச் சிவஞானந்தந்தருளும் அநாதிசைவராகிய சிவபெருமானார் நிகரின்றி வாழும் விளங்கும் ஒளியையுடைய மதில் சூழ்ந்த திருவேகம்பமானது, இருள் மலம் துமிக்கும் சிவாகமம் முறையின் ஈர் இருபாதமும் அனுட்டித்து - ஒதுவோராணவமலத்தைக்கெடுக்குஞ் சிவாகமநூலிற்கூறிய முறையால் ஞானமுதலிய நான்குபாதங்களையு மனுட்டித்து, அருள்பெறும் ஆதிசைவர்கள் ஆதி அவாந்தரசைவர் ஈறுளோர் - திருவருள்பெற்ற ஆதிசைவர் முதலாக அவாந்தரசைவரிறுதியாயுள்ளோர், மருவிவாழ் மாடமாளிகை பத்தி மருங்கு உடுத்து உயர் வனப்பினது - தம்முட்கலந்துவாழும் உபரிகையமைந்த மாளிகையின் வரிசைகளால் பக்கங்களிற் சூழப்பட்டு உயர்ந்துதோன்றும் பொலிவினையுடையது.

ஆதிசைவர்களாதி யவாந்தரசைவரீறுளோர் ஆதிசைவர், மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர், அந்தியசைவர் என்னும் அறுவகைச்சைவர்களை. ஆதிசைவர் ஆவார் சதாசிவமூர்த்தியின் சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் ஐந்துதிருமுகங்களினின்றுதோன்றிய கௌசிகர், காசியபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர் என்னும் பஞ்சருஷிகோத்திரத்திலே சனித்த சிவப்பிராமணர்கள், மகாசைவர் ஆவார் பிரமாமுகத்திற்றோன்றிய வைதிகப்பிராமணருள்ளே சிவதீக்ஷைபெற்றவர்; அநுசைவர் ஆவார் சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியருமாம்; அவாந்தரசைவராவார் சிவதீக்ஷைபெற்ற சூத்திரர்; பிரவரசைவர் ஆவார் சிவதீக்ஷைபெற்ற அநுலோமர்; அந்தியசைவர் ஆவார் இவரொழிந்தோர். அநாதிசைவர் சிவபெருமானார்.

"அரியசதாசிவனென்போனநாதிசைவனவன்பால்
அவதரித்தசிவமறையோராதிசைவரிவர்பால்
உரியசிவதீக்கைபெற்றபூசுரர்மாசைவர்
உயர்ந்தவரசன்வணிகனனுசைவராவார்
பெரியகுவளைப்புயத்தோனவாந்தரசைவன்சீர்
பெறுசவன்னனுதியநுலோமர்பிரவரராம்
விரியவனிசிசையொழிந்தோரந்தியசைவத்தோர்
விரிந்திடுமேழ்சைவவிதமிவையெனநூல்விளம்பும்" எனவருஞ் செய்யுளால் உணர்க.

காமிகமுதலிய சிவாகமங்கள் இருபத்தெட்டும் ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்று தனித்தனி நான்குபாதங்களையும் உடையனவாயிருத்தலால் சிவாகமமுறையி னீரிருபாதமும் என்றார். (கக௦)

விண்ணழிவுறநீமிர்வீறடக்குவா
னண்ணலாணையினிமிலூர்தியாண்டுறீஇ
யெண்ணிலவுருவுகொண்டிருத்துநீரதே
பண்ணமைமதின்மிசையிடபப்பந்தியே.

(இ-ள்.) பண் அமை மதில் மிசை இடபபந்தி - செயல்முற்றிய மதிலின்மேலு ள்ள இடபவரிசை, விண் அழிவுற நிமிர் வீறு அடக்குவான்-விண்ணுலகழிய நிமிர்ந்தோ ங்கிய அம்மதிலின் செருக்கையடக்க, அண்ணல் ஆணையின் இமில் ஊர்தி ஆண்டு உற் று எண் இல உருவுகொண்டு இருத்தும் நீரது - சிவபெருமான் ஆணையால் அவ்விறைவ னது திமிலையுடைய ஊர்தியாகிய இடபதேவன் அவ்விடத்துப்பொருந்தி யளவில்லாத வடிவங்களைக்கொண்டு அவ்வடிவங்களை ஆங்கு இருத்திய தன்மையையொக்கும்.

மதிலின்மேல் இடபங்கள் வரிசையாயிருத்தலை, சிவபெருமான் ஆஞையால் வி ண்ணுலகுகெட நிமிர்ந்த மதிலின் செருக்கினையடக்க இடபதேவர் அங்குவந்து பலவு ருக்கொண்டு அவ்வுருவங்களை யவ்விடத்திலிருத்தியதையொக்குமென்று கவி அத்தியவ சயித்தலால் தற்குறிப்பணியும், விண்ணுலகிற்கும் மதிலுக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணியுங் கலந்துவருதலாற் கலவையணி.

ஒன்பதுகோள்களுமுலாவிவைகுவா
ஞென்பதுமாடமங்கூழிற்செய்தென
வொன்பதுமணிகளினியன்றவொண்மைசா
லொன்பதுநிலைதழீஇயோங்குங்கோபுரம்.

(இ-ள்.) ஒன்பது கோள்களும் உலாவி வைகுவான்-ஒன்பது கிரகங்களும் உலா வித்தங்க, ஒன்பது மாடம் அங்கு ஊழில் செய்தால் என்ன - ஒன்பதுமாடங்களை யங்கு அடுக்காகச் செய்துவைத்தாற்போல, கோபுரம் ஒன்பது மணிகளின் இயன்ற ஒண்மை சால் ஒன்பது நிலை தழுவி ஓங்கும் - கோபுரங்கள் நவமணிகளாற்செய்த ஒளிமிக்க ஒன் பது நிலைகளைத் தழுவி உயர்ந்துதோன்றும்.

ஒன்பதுநிலைகளையுடைய கோபுரங்கள் நவமணிகளாற் செய்யப்பட்டிருத்தலால் ஒன்பதுகோள்களும உலாவிவைகுவான் என்றார், இரத்திநங்கள் ஒன்பதிற்கும் ஒன்பது கோள்களும் அதிதேவதையாதலால். மாணிக்கம் கோமேதகம் இவற்றிற்குச் சூரியனு ம், முத்து வயிரேரியங்கட்குச் சந்திரனும், செவ்வாய்க்குப் பவளமும், பச்சைக்குப் புத னும், புருடராகத்திற்கு வியாழனும், வயிரத்திற்கு வெள்ளியும், நீலத்திற்குச் சனியும் அதிதேவதைகளெனக்கொள்க. இராகுவும் கேதுவும் இக்கிரகங்களுளடங்குதலால் அக் கிரங்களுக்கு வகுத்த இரத்திநங்களுள் இவற்றை யடக்குக.

"அன்புறுபதுமராகமாதியாமரதனங்கள்
ஒன்பதுங்கதிரோனாதியொன்பதுகோளுமேற்றி
முன்புனைகமலப்போதுமுதலொன்பான்மலருஞ்சாத்தி
இன்புறநினைந்துபூசையியன்முறைவழாதுசெய்தல்" எனவருந் திருவிளையாட ற்புராணத்தாலும்,

"ஞாயிறுமாணிக்கங்கோமேதகந்திங்கள்முத்தம்
வாய்வயிடூரியஞ்செவ்வாய்வளப்பவளங்களாகும்
மேயவன்புதனிற்பச்சைவியாழமாம்புட்பராகம்
காய்கதிர்வெள்ளிவச்சிரங்கருஞ்சனிநீலமாமே" எனவரும் பிறநூலாலுமுணர்க.

ஒன்பதுமணிகளாலியன்ற ஒன்பதுநிலைகளையுடைய கோபுரங்களுக்கும் ஒன்பது கிரகங்களுக்கும் சம்பந்தமில்லாதிருக்க அக்கோள்களிருத்தற்குச் செய்துவைத்திருத்த லொக்கும் என அவற்றிற்குச் சம்பந்தங்கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி. (கக௨)

கார்முகிலுடுக்கையாக்கதிரின்வானவன்
மார்பணிமணிபதாவட்டமாமதி

சீர்நுதற்பூதியாச்செல்வக்கோபுரம்
பார்புகழ்புருடனிலோங்கும்பான்மைத்தே.

(இ-ள்.) செல்வம் கோபுரம் - செல்வமிக்க கோபுரமானது, கார்முகில் உடுக்கை ஆக கதிர்வானவன் மார்பு அணி மணியது ஆக-கரிய மேகம் ஆடையாகவும் கிரணத்தை யுடைய சூரியன் மார்பிலணிந்த மாணிக்கமாவும், வட்டம் மாமதி சீர் நுதல் பூதி ஆக புகழ் பார் புருடனில் ஓங்கும் பான்மைத்து-வட்டவடிவாகிய பெரியசந்திரன் அழகிய நெற்றியிலணிந்த விபூதியாகவும்கொண்டு புகழும் உலகவடிவாகிய விராட்புருடனைப் போல உயர்ந்தோங்குந் தன்மையையுடையது.

கோபுரங்கள் விராட்புருடனைப்போல உயர்ந்துதோன்றும் என்றமையால் பண்புபற்றிய வுவமையணியும், அப்புருடனுக்கு மேகம் ஆடையாகவும், சூரியன் மார்பிலணிந்த மாணிக்கமாகவும், சந்திரன் நெற்றியிலணிந்த விபூதியாகவும் உருவகஞ்செய்தலால் இயைபுருவகவணியுங் கலந்துவருதலாற் கலவையணி. இன் வேண்டாவழிச்சாரியை.

உலகபுருடனை—

" அரைக்குமேலுலகேழென்றுமரைக்குக்கீழுலகேழென்றும்
உரைக்கலாலுலகமெல்லாமுருவமாம்புருடற்கிந்த" எனவருந் திருவிளையாடற் புராணத்தாலறிக. (கசரு)

நச்சியேகம்பனைத்தொழுதுநாடொறுங்
கச்சியில்வாழ்பவரிறுதிக்காலையி
லச்சிவலோகத்தையணுகவைத்ததோர்
பொச்சமிலேணியும்போலுங்கோபுரம்.

(இ-ள்.) கோபுரம்-கோபுரமானது, ஏகம்பனை நச்சிநாள் தொறும் தொழுது கச்சியில் வாழ்பவர்-திருஏகமபனை விரும்பிநாள்தோறுந்தொழுது காஞ்சித்திருப்பதியில் வாழுகின்றவர், இறுதிகாலையில் அசிவலோகத்தை அணுகவைத்தது ஓர் பொச்சம் இல் ஏணியும்போலும்-இறக்குங்காலத்தில் உயர்ந்த சிவலோகத்தை யடையும்படி ஏறவைத்த ஒப்பில்லாத குற்றமிகந்த ஏணியையுமொக்கும்.

சிவலோகத்திற்கும் கோபுரத்திற்கும் சம்பந்த மில்லாதிருக்கச் சம்பந்தங்கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி. (கசசா)

பரிதியினிழல்செயக்கதிர்க்கும்பன்மணித்
திருவியல்கோபுரச்செல்வவாய்தலின்
முரசுகாலந்தொறுமுழங்குஞ்செவ்வியென்
றருகுறவமரரையழைத்தன்மானவே.

(இ-ள்) பரிதியின் நிழல் செய கதிர்க்கும் பல்மணி திரு இயல் கோபுரம் செல்வவாய்தலின் முரசு-சூரியனைப்போல ஒளிவீச விளங்கும் பல இரத்தினங்களா லமைந்த பொலிவுவாய்ந்தகோபுரத்தினது செல்வமமைந்தவாசலிலுள்ள முரசுகள்,செவ்வி என்று அமரரை அழைத்தல் மானகாலந்தொறும் முழங்கும்-இதுதான் சிவபிரானைத் தொழவருஞ் சமையமென்று தேவர்களை யருகில்வர வழைத்தலை யொப்பக் காலந்தோறு முழங்காநிற்கும்.

கோபுரவாசலில் முரசமுழங்குதலைச் சிவபெருமானைத் தொழவருஞ் சமையமிதுதானென்று தேவர்களை அம்முரசு அழைத்தலையொக்கும் என அத்திய வசயித்தலால் தற்குறிப்பணி. (கசகு)

மடுத்தவைம்பாசமாவரணமைந்தனாற்
றடுத்தருள்கோயிலிற்றம்பிரானெதி
ரெடுத்தபூங்கொடிமிசையிடபம்வான்மிசை
யடுத்ததோரிடபத்தோடளவளாவுமே.

(இ-ள்) மடுத்த ஐம்பாசம் ஆவரணம் ஐந்தனால் தடுத்தருள் கோயிலில்-விடாது சூழ்ந்த ஐவகைப் பாசங்களையும் ஐந்துவகைப்பட்ட பிரகாரங்களால் தடுத்தருளுந் திருக்கோயிலில், தம்பிரான் எதிர் எடுத்த பூங்கொடிமிசை இடபம்-சிவபிரானுக்கு எதிரே மேல்எடுத்த பொலிவமைந்த கொடியின்மே லெழுதிய இடபம், வான்மிசை அடுத்தது ஓர் இடபத்தோடு அளவளாவும் - விண்ணிலடுத்து வாழும் ஒப்பில்லாத இடபராசியோடு கலந்துவிளங்கும்.

ஆன்மாக்களைப் பந்தித்து நிற்றலால்மடுத்த ஐம்பாசம் என்றார். ஐந்துபாசங்களாவன போகமாகிய சுகதுக்கங்களைத் தோற்றுவிக்குங் கன்மமலமும், பந்தமாகிய தனுகரண புவனபோகங்களையு முயிரையுங் கூட்டுவிக்கும் மாயாமலமும், அப்போக பந்தங்களை நுகருமாறு செய்யும் ஆணவமலமும், அச்சுகதுக்க விளைவுக்கு இடமாய் ஆன்மாக்களின் அறிவிச்சை செயல்களையேக தேசப்படுத்து மாயேயமலமும், அவ்வவ்மலங்களை அவ்வத்தொழில்களிற் படுத்திப் பாகம்வருவிக்குந் திரோதாயிமலமுமாம்.

இவற்றை—

"மும்மலநெல்லினுக்குமுளையொடுதவிடுமிப்போல்
மம்மர்செய்தணுவினுண்மைவடிவினைமறைத்துநின்று
பொய்மைசெய்போகபந்தபோத்திருத்துவங்கள்பண்ணு
மிம்மலமூன்றினோடுமிருமலமிசைப்பனின்னும்.
மாயையின்காரியத்தைமாயேயமலமதென்று
மேயுமும்மலங்கடத்தந்தொழிலினையியற்றவேவுந்
தூயவன்றனதோர்சத்திதிரோதானகரியதென்றும்
ஆய்வரிம்மலங்களைந்துமணுக்களையணைந்துநிற்கும்" எனவருஞ் சிவஞான சித்தியாரால் உணர்க.

இடபக்கொடிக்கும் இடபராசிக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங்கற்பித்தலால் தொடர்புயர்பு நவிற்சியணி. (கசகூ)

தங்குலத்திறைவிசெய்பூசைச்சால்பினை
யங்கணன்மகிழ்வொடுங்காணுமாசையி
னெங்குளவரைகளுமீண்டினாலெனப்
பொங்கெழிற்சிகரங்கள்பொலிந்துதோன்றுமால்.

(இ-ள்) தங்குலத்து இறைவிசெய் பூசைசால்பினை - தமதுகுலத்திற் றோன்றிய உமையம்மையின் பூசையின் மேன்மையை, அங்கணன்மகிழ்வொடும்காணும் ஆசையின் எங்கு உள்ள வரைகளும் ஈண்டினால் என்னபொங்கு எழில் சிகரங்கள் பொலிந்துதோன்றும்-அவ்விடத்து நல்லமகிழ்ச்சியோடு காணும் ஆசையால் எவ்விடத்திலுமுள்ள மலைகளும்வந்து நெருங்கினாற்போலத் திருக்கோபுரமுதலியவற்றிலுள்ள மிகுந்த அழகினையுடைய சிகரங்கள் நெருங்கித்தோன்றாநிற்கும்.

இமயமலையி லுமையம்மை உற்பவித்தருளிய சார்பால் நமது மரபிலுதித்தவர் செய்யும் சிவபூசனையைக் காண்போமென மற்றைமலைகள் வந்துநெருங்கின வென்பார்

தங்குலத்திறைவி செய்பூசைச்சால் பினைக்காணும் ஆசையின் எங்குளவரைகளுமீண்டிருலெனவென்றூர். உமையம்மை இமயமலையி லுற்பவித்தருளியதை—

" மெய்த்தவமியற்றியவெற்பன்காணிய
அத்தடமலருமோரரவிந்தத்தின்மேற்
பைத்ததோர்குழவியின்படிவத்துற்றனள்
எத்திறத்துயிரையுமீன்றதொன்மையாள்" எனவருங் கந்தபுராணத்தால் அறிக.

மலைகள்வந்து நெருங்கினாற்போல் என்றமையால் இல்பொருளுவமையணி. சிகரியெனப் பாடமாயில் கோபுரங்கள் எனக்கொள்க. (ககஎ)

கன்மநோய்குடைபவர்கடப்பச்செய்திடும்
பன்மலர்துவன்றியதீர்ந்தப்பாங்கரிற்
பொன்மலர்மண்டபம்பொலிந்துதோன்றுவ
தென்மணிப்பேழையைத்திறந்தமூடிபோல்.

(இ-ள்.) குடைபவர் கன்மநோய் கடப்பச் செய்திடும் பல்மலர் துவன்றிய தீர்த்தம்பாங்கரில்-தம்மையடைந்து மூழ்குவோர் கன்மமலமாகிய நோயினின்று நீங்கச்செய்யும் பலவகைப்பட்ட மலர்கள் நெருங்கிய தீர்த்தக்கரையின் பக்கத்தில், பொன்மலர் மண்டபம் பொலிந்து எல்மணி பேழையை திறந்த மூடிபோல் தோன்றுவது - பொன்னாற்செய்த மண்டபமானதுவிளங்கிச் சூரியனையொத்த மாணிக்கங்களழுத்திய பெட்டியைத்திறந்த மேன்மூடியைப்போலத் தோன்றுகின்றது.

கன்மமலம்ஆவது உயிரினிடத்துச் சுகதுக்கங்களை முதற்காரணமாய்நின்று தோற்றுவிப்பது, இது சிவதீர்த்தங்களில் விதிப்படித்தோயுஞ் சிவபுண்ணியத்தால் இருவினையொப்பு மலபரிபாகத்தில்வந்த திருவருண்ஞானத்தால் கழிதலால் கன்மநோய் குடைபவர் கடப்பச்செய்திடும் பன்மலர்துவன்றிய தீர்த்தம்என்றூர்.

சிவபுண்ணியத்தால்வந்த திருவருண்ஞானத்தால் கன்மமலம் நீங்கும் என்றதை—

" என்றவினையுடலோடேகுமிடையேறும்வினை-தோன்றிலருளேசுடும் " எனவரும் திருவருட்பயனும்,

சிவபுண்ணியம் என்றதை—

" அயிங்கிதைபொறையேமெய்ம்மையறைதலேயரியானே
உயர்ந்தவாதரவேயுள்ளமொடுக்கலேகொடுக்கைதானே
வியந்தவர்ச்சனையேமெய்யுன்வெறுத்துறுதவமேமேனி
நயந்தபாவனையேயென்னத்தசமிவைநன்றெந்நாளும் " எனவரும் சிவதருமோத்தரத்தாலும் உணர்க.

இன்னதற்கு இதுவே உவமை யெனத்தெரிந்து கூறுதலால் தெரிதருதேற்றவுவமையணி. (ககஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சேந்தபொற்குண்டத்தோங்குஞ்சிகைத்தழன்மிசையேகம்ப
வேந்தையாவாகித்தேத்தும்புகைபொதிவேள்விச்சாலை
யேய்ந்தசீர்த்தகரவித்தைமுறைப்படியிதயகஞ்சப்
பூந்தழற்சிகைமேலீசற்போற்றுமாயவனையொக்கும்.

(இ-ள்.) சேந்த பொன் குண்டத்து ஓங்கும் சிகை தழல் மிசை-செவந்த பொன்னாலமைந்தவேள்விக்குண்டத்தி லுயர்ந்தோங்குஞ் சுவாலையையுடையவேள்வித்தீயின்

மேல், ஏகம்பவேந்தை ஆவாகித்து ஏத்தும் புகை பொதி வேள்விசாலை - திருவேகம்பத் திறைவனை யாவாகனஞ்செய்து துதிக்கும் புகையால் மூடியயாகசாலை, சீர் எய்ந்ததகர வித்தை முறைப்படி இதயம் கஞ்சம் பூதழல் சிகைமேல் ஈசன் போற்றும் மாயவனை ஒக்கும்-சிறப்புவாய்ந்த தகரவித்தையின்முறையே மனமென்னுந் தாமரையாகிய பொலிவமைந்த தீக்கொழுந்தின்மேல் இறைவனைவணங்குந் திருமாலையொக்கும்.

வேள்வி திருமாலும் வேள்விக்கு இறைவர் சிவபெருமானும் ஆதலால் ஏகம்பவேந்தையா வாகித் தேத்தும்எனவும், பிருகு முனிவன் சாபத்தால் திருமால் மனம்வருந்திக் காஞ்சித் திருப்பதியை யடைந்து சிவவேடம்பூண்டு இதய தாமரையில் சிவபெருமானை இருத்தி, அப்பெருமானை நோக்கித் தவம் புரிந்தமையால் எய்ந்த சீர்த்தகர வித்தை முறைப்படி யிதயகஞ்சப் பூந்தழற்சிகைமே லீசற்போற்று மாயவனை யொக்கும் எனவும் கூறினர்—

வேள்வி திருமாலும் வேள்விக்கு இறைவர் சிவபெருமானும் என்றதை,

"வேள்விநீவரதராசவுயர்வேள்வியிறைநாம்
வாழியம்மகமழிப்பநிவாணிவரலாற்
காழறக்கடிதுகாத்திடுதியென்றுகருதார்
பாழிமும்மதிலழித்தவர்பணித்தருளலும்" எனவும், திருமால் சிவவேடம்பூண்டு சிவபெருமானை யிதயத்திருத்தித் தவம்புரிந்தமையை.

"பூதிமேனியனெற்றி திட்டுமுப்புண்டரத்தினனக்கமாலையன்
சீதவேணியன்றிருவுருத்திரஞ்செப்புநாவினனடுநீர்கனி
வாதவுண்டியன்பிரமமைவகைமனுக்கணித்துளக்கமலநள்ளுற
மாதுபாகனையிருத்தியைந்தழன்மத்திநின்றருந்தவமுஞற்றினன்" எனவும்
வரும் இப்புராணத்தாலும்.

இதயகஞ்சப் பூந்தழற்சிகைமேலீசன் எனப்பின்னர்க் கூறப்படுநிலையே தகரவித்தை என்றுார்.

தகரவித்தை என்றது பிரமபுரமாகிய இச்சரீரத்திலிருக்கும் தகரமாகிய இதய புண்டரீகம் என்னும வீட்டுளிருக்கும் தகராகாசமாகிய பரமசிவத்தை.

"பிரமபுரமென்றெடுத்துரைக்கப்பிறங்குஞானவதிகார
வரமன்னியசரீரத்தில்வயங்குதகரமெனச்சிறந்தா
தரமாரிதயகமலத்திற்றுேன்றுந்தகராகாசமே
பரமசிவனென்றெம்மறையும்பகராநிற்கும்பண்ணவர்காள்" எனவருஞ் சூதசங்கிதையில் சாந்தோக்கிய வுபநிடதத்தமைந்த தாற்பரியத்தைப் பின்னுமுரைத்த அத்தியாயத்தாலும் உணர்க.

இடத்தினிகழ்பொருளின்றெழிலையிடத்தின்மேலேற்றி ஆவாகித்தேத்தும்புகை பொதி வேள்விச்சாலை மாயவனை யொக்கும் என்றமையால் பண்புந்தொழிலும் பற்றி வந்த உவமையணி. (கஅக)

கோழரைகாம்பாச்சாகைவட்டமேற்குடையாப்பொற்பின்
வாழியவொருமாமீதுவளநிழல்கவிப்பவாங்க
ணூழ்முறையுயிர்கட்கெல்லாமைந்தொழிலோம்பியெம்மா
னூழ்புனலுலகமேத்தவரசுவீற்றிருக்குமன்றே.

(இ-ள்.) பொற்பின் ஒருமா கோழ் அரை காம்பு ஆக சாகைவட்டம் மேல் குடை ஆக மீது வளம் நிழல் கவிப்ப-பொலிவமைந்த ஒரு மாமரமானது கொழுவியதா

றே காம்பாகவும் கிளைகளின் வட்டமே மேற்குடையாகவுங்கொண்டு வளமைவாய்ந்த நிழல்செய்ய, எம்மான் ஆங்கண் ஊழ் முறை உயிர்கட்கு எல்லாம் ஐந்தொழில் ஓம்பி ஆழ்புனல் உலகம்ஏத்த அரசுவீற்றிருக்கும்-எமதுபெருமான் அவ்விடத்துத் தாஞ்செய்த ஊழின்முறையே அவ்வுயிர்களுக்கெல்லாம் படைப்புமுதலிய ஐந்தொழிலையுஞ் செய்து கடல்சூழ்ந்த உலகங்கள் துதிக்க அரசியல்செய்து நிகரின்றியிருந்தருள்வார்.

படைப்புமுதலிய ஐந்தொழில்களும் உயிர்களுக்குப் பாகம் வருவிக்குந் தொழில்களாதலால் ஊழ்முறை யுயிர்கட்கெல்லா மைந்தொழி லோம்பியென்றார். கோழரை காம்பாச் சாகைவட்டமேற்குடையா என்றது இயைபுருவகவணி. வாழிய அசையிடைச்சொல். (கஉ0)

பற்பலதேயமெல்லாம்பாங்குடைத்தொண்டைநாடு
பற்பலசங்கநாப்பட்படர்வலம்புரியாமங்கட்
பற்பலநகரமெல்லாம்வட்டமாப்படைத்தகாஞ்சி
பற்பலவலம்புரிக்குட்சலஞ்சலப்பணிலமாமால்.

(இ-ள்.) பல் பல தேயம் எல்லாம் பாங்கு உடைய தொண்டை நாடு பல் பல சங்கம் நாப்பண் படர் வலம் புரி ஆம்-பல பல நாட்டினையெல்லாம் தன்னருகிலுடைய தொண்டைநாடானது பல இடம்புரிச்சங்குகளினடுவே செல்லும் வலம்புரிச்சங்காம், பல் பல நகரம் எல்லாம் வட்டமாக படைத்த காஞ்சி பல் பல வலம்புரிக்கு உள் சலஞ்சலம் பணிலம் ஆம் - அந்நாடுகளுட் பல்வகைப்பட்ட எல்லா நகரங்களுந் தன்னைச்சூழ வரப்பெற்ற திருக்காஞ்சிநகரமானது பலவகைப்பட்ட வலம்புரிச்சங்கங்களுள் சஞ்சலமென்னுஞ் சங்கமாம்.

சங்கம் என்றது ஆயிரஞ்சங்குகள் சூழ்ந்த இடம்புரிச்சங்கினை. வலம்புரி இடம்புரிச்சங்கு ஆயிரங்களாற்சூழப்பட்டது. சலஞ்சலம் வலம்புரி ஆயிரங்களாற்சூழப்பட்டது. இது பின்னர்வருஞ் செய்யுளோடு முடிதலால் குளகம். (கஉக)

அத்திருக்காஞ்சிவைப்பினலகிலாத்தலங்கடம்முட்
பத்திசேர்மாடக்கம்பம்பாஞ்சசன்னியமாமந்த
வுத்தமச்சுரிமுகத்துள்விலைவரம்புணராச்சாதி
முத்தமேயொருமாமூலத்திருந்தருண்முக்கண்மூர்த்தி.

(இ-ள்.) அ திரு காஞ்சி வைப்பின் அலகு இல்லாத தலங்கள் தம் உள் பத்தி சேர் மாடம் கம்பம் பாஞ்சசன்னியம் ஆம் - அந்த அழகிய காஞ்சித்திருநகரில் அளவில்லாத தலங்களுள் வரிசையாயுள்ள மாடங்கள் நெருங்கிய திருவேகம்பமென்னுந் தலம் பாஞ்சசன்னியமென்னுஞ் சங்காம், ஒரு மாமூலத்து இருந்த அருள் முக்கண் மூர்த்தி - ஒப்பில்லாத மாமரத்தின்கீழெழுந்தருளிய இறைவன், அந்த உத்தமம் சுரி முகத்து உள் விலைவரம்பு உணராத சாதிமுத்தம் ஏ-அந்த உத்தமம்வாய்ந்த பாஞ்சசன்னியத்தில் தோன்றிய விலையினளவறிதற்கரிய ஆணிமுத்தமாம்.

காஞ்சித்திருப்பதியில் பல திருத்தலங்களுள ஆதலால் காஞ்சிவைப்பினலகிலாத் தலங்கடம்முள் என்றார். பாஞ்சசன்னியம் சலஞ்சலம் ஆயிரங்களாற்சூழப்பட்டது. தொண்டைநாடு வலம்புரியெனவும், அதனுட்காஞ்சி சலஞ்சலமாகவும், அதனுள் திருவேகம்பம் பாஞ்சசன்னியமாகவும், அங்கெழுந்தருளிய இறைவர் அதில்தோன்றிய முத்தமாகவும் வரிசைப்படக்கூறுதலால் மாலையுருவகவணி. (கஉஉ)

பன்மணிவெயில்கள்கான்றுபடரிருள்சீப்பவட்டப்
பொன்மதில்சூழ்ந்துநாப்பட்சதாசிவப்புத்தேள்வைகுந்

தன்மையாற்கச்சிமூதூர்தரைமிசையுயிர்கள்செய்த
கன்மமோர்ந்தளிப்பான்வந்தகதிர்செய்மண்டிலமேயாமால்.

(இ-ள்) கச்சி மூதூர் - காஞ்சியென்னுந் தொன்றுதொட்டுள்ள திருநகர், பல் மணி வெயில்கள் கான்று படர் இருள் சீப்ப வட்டம் பொன் மதில் சூழ்ந்து நாப்பண் சதா சிவப்புத் தேள் வைகும் தன்மையால் - பலமாணிக்கங்கள் ஒளிகளைவீசிப் பரவிய இருளையோட்ட வட்டமாகிய பொன்னாலமைந்த மதிலாற்சூழப்பட்டு அதனடுவில் சதாசிவமூர்த்தி யெழுந்தருளுந் தன்மையையுடைமையால், தரை மிசை உயிர்கள் செய்த கன்மம் ஓர்ந்து அளிப்பான் வந்த கதிர் செய் மண்டிலமே ஆம் - நிலவுலகின்மேலான்மகோடிகள் செய்த கன்மங்களையுணர்ந்து அதற்குத்தக்க சுகதுக்கஙளைத்தந்து பாகம் வருவிக்க வந்தருளிய சூரியமண்டிலமேயாகும்.

சூரியமண்டிலத்தில் சதாசிவப்பெருமான் எழுந்தருளியிருத்தலால் சதா சிவப்புத்தேள் வைகுந்தன்மையால் கதிர்செய்மண்டிலமேமாளும் என்றார். பொருளின்றொழில் உவமைக்குக் குறைபடக்கூறிக் காஞ்சியின் மேம்பாட்டைக்கூறுதலால் தொழிற்குறை விசேடவணி. (கஉரு)

விலக்கிலாவறநூல்சொன்னமுனிவரும்விதிவிலக்கா
மிலக்கியமிதன்பாற்கண்டேயிலக்கணம்விதித்தார்போலு
மலக்கணீத்தறமெண்ணான்குமம்பையேவளர்க்குநீரால
கலக்கமிலறங்கட்கெல்லாமாகரங்காஞ்சியன்றே.

(இ-ள்) அலக்கண் நீத்த அறம் எண்ணான்கும் அம்பையே வளர்க்கும் நீரால் - துன்பத்தினின்றும் நீங்கிய முப்பத்திரண்டறங்களையும் உமாதேவியே வளர்க்குந் தன்மையால், கலக்கம் இல் அறங்கட்கு எல்லாம் ஆகரம் காஞ்சி - நிலைகலங்குதலில்லாத தருமங்களுக்கெல்லாம் பிறப்பிடங் காஞ்சித்திருநகராதலால, விலக்கு இல்லாத அறநூல் சொன்ன முனிவரும விதிவிலக்கு ஆம் இலக்கியம் இ தன்பால் கண்டே இலக்கணம் விதித்தார்போலும - யாவருங் கைக்கொள்ளத் தருமநூலை வகுத்த முனிவர்களும் தாங்கூறும் விதிவிலக்காகிய இலக்கியங்களுக்கு இத்திருநகரிடத்திற் கண்டே இலக்கணங்களை யமைத்தனர்கள்போலும.

விதிவிலக்கு விதித்தன செய்தலும் விலக்கியனவொழிதலுமே அறம் ஆதலால் விதிவிலக்காம் இலக்கியம எனவும், இலக்கியத்தினமைதியே யிலக்கணமாதலில் அறத்தினமைதி முற்றும் காஞ்சித்திருப்பதியினிரம்பி யிருத்தலால் இதன்பாற்கண்டே யிலக்கணம் அமைத்தார போலும என்றார். விதிவிலக்காகிய இலக்கியத்தினமைதியே காஞ்சியென விதித்தலால் விதியணி. (கஉசு)

உவரிசூழுலகவைப்பினுரையமைகேள்விசான்ற
கவிகளென்றுரைப்போர்தம்முட்காஞ்சியைப்புகழாரில்லை
யவரெலாம்புகழ்ந்துமின்னுமுலப்புறுவதன்சீர்முற்றுஞ்
சிவநிறைகல்விசாலாச்சிறியனேகிளக்கவல்லேன்.

(இ-ள்.) உவரி சூழ் உலகவைப்பின் உரை அமை கேள்வி சான்ற கவிகள் என்று உரைப்போர் தம்முள் காஞ்சியைபுகழார் இல்லை கடல்சூழ்ந்த நிலவுலகிலுள்ள புகழமைந்த நூற்கேள்விகணிறைந்தகவிகளென்று சொல்லப்படுவோருள் திருக்காஞ்சிநகரைப்புகழ்ந்துகூறாதாருலகினில்லை, அவர் எல்லாம் புகழ்ந்தும் இன்னும் உலப்புறுத அதன் சீர்முற்றும்-அக்கவிகளெல்லாராலும் புகழப்பட்டும் இன்னமும் வரையறைப்படாத அத்திருநகரின் சிறப்புமுழுமையும், சிவம் நிறை கல்வி சாலாத சிறியனே கிளக்கவல்லேன்-

ன்மைநிறைந்தகல்வியிற்போதாத அறிவிற்சிறியயானோ அளவறுத்துச்சொல்லவல்லமை யுடையேன் (அல்லன் என்றபடி.)

கவிகள் என்றது ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் கவிகளைப்பாடவ ல்லவரை, இதனை முன்னர்க்காண்க யாவரும் புகழ்ந்தனர், சொல்ல அல்லன் என்பதை குறிப்பாற் போதரலால் உதாரவணி. (கஉரு)

இத்திருக்காஞ்சிவைப்பிற்பலதளியிடத்துமேவி
யத்தகுகம்பவாணரவரவர்க்கருளிச்செய்த
வுத்தமக்காதையெல்லாஞ்சூதனன் றுரைத்தவாறே
முத்தமிழறிஞர்தேறமொழிபெயர்த்துரைப்பேனுய்ந்தேன்.

(இ-ள்.) அ தகு கம்பவாணர் இ திரு காஞ்சி வைப்பில் பல தளி இடத்தும்மேவி- அந்தமேன்மைவாய்ந்த ஏகம்பவாணர் இந்தச்சிறந்த காஞ்சிநகரிலுள்ளபல திருக்கோயில் களிலிடங்கொண்டருளி, அவரவர்க்கு அருளிச்செய்த உத்தமக்காதையெல்லாம்சூதன் அன்று உரைத்த ஆறே-ஒன்றனைவேண்டி வழிபடுமவரவர்க்கு அருள்கூர்ந்த வரலாறு முழுமையும் சூதமுனிவ ரக்காலத்திற் கூறியவண்ணமே, முத்தமிழ் அறிஞர்தேற மொ ழிபெயர்த்து உரைப்பேன் உய்ந்தேன்-இயலிசை நாடகமென்னு முத்தமிழின் றேர்ச்சி யையுடைய சான்றோர் தெளிய வடமொழியினின்றுந் தென்மொழியிற் பெயர்த்துக் கூறத் தொடங்கும் யான் பிறவிக்கடலினின்றுந் தப்பினேன்.

உய்வேனென்றுது உய்ந்தேனென இறந்தகாலத்தாற் கூறியது துணிவுபற்றி வந்த காலவழுவமைதி. பொருட்டொடர் நிலைச்செய்யுள் முற்றும் நோக்கிக்கூறுவதால் இது பாவிகவணி. (கஉசு)

திருநகரப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உகூஅ.

## பதிகம்.

பதிகம் ஆவது பலவகைப்பொருளையுந் தொகுத்துக்கூறுவது.
இங்குப் பலவகைப்பட்ட சிவபெருமான் மான்மியங்களைத்தொகுத்துக்கூறுவதால், பதிகம் எனப்

"பதிகக்கிளவிபல்வகைப்பொருளைத்
தொகுதியாகத்தொகுத்துரைப்பதுவே" என்பது சூத்திரம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவபரஞ்சுடரைக்காண்டருமேதுச்செய்தவர் வினவியவாறுந்
தவலருஞ்சிறப்பினந்தியெம்பெருமான் சனற்குமாரனுக்குவெஞ்சாப
நவையறுத்தருளிச்செவியறிவுறுத்தநலமெலாஞ்சூதமாமுனிவ
னவர்தமக்கியம்பிப்பின்னுநகனுமையாட்கருளியவுண்மைசெப்பியதும்.

(இ-ள்.) சிவ பரஞ் சுடரை காண்டரும் ஏது செய்தவர் வினவிய ஆறும் - சிவ பெருமானைத் தரிசித்துய்தற்குரிய காரணத்தைச் செய்யுந்தவத்தையுடைய வசிட்டர்மு தலிய முனிவர்கள் சூதமுனிவரை நோக்கி வினவியவரலாறும், தவல் அரும் சிறப்பின்

நந்தி எம்பெருமான் சனற் குமாரனுக்கு வெம் சாபம் நவை அறுத்தருளி செவி அறிவுறுத்த நலம் எல்லாம் - கெடுதலில்லாத சிறப்பினையுடைய திருநந்திதேவர் சனற்குமாரமுனிவனுக்குத் தாமிட்ட கொடிய சாபக்குறையை யொழித்தருளி உபதேசித்த நலங்களையெல்லாம், சூத மா முனிவன் அவர் தமக்கு இயம்பி பின்னுகன் உமையாட்கு அருளிய உண்மை செப்பியதும் - அச்சூதமாமுனிவர் அம்முனிவர் களுக்குக்கூறிச் சிவபெருமான் உமையம்மைக்கு உபதேசித்தருளிய வாய்மையைக்கூறியவரலாறும். (க)

கன்னியாழ்க்கிழவன்வரம்பெறுகாரைக்காட்டினிற்பூசனையுருற்றி
மின்னவிர்மணிப்பூட்சிவியெனுமகவான்வீடுபேறெய்தியவாறும்
பொன்னுடைப்புத்தேள்புண்ணியகோடிப்புனிதனையருச்சனையாற்றி
யன்னவேறுகைக்குமண்ணலோடுலகையுண்டுமீட்டுதவியவாறும்.

(இ-ள்.) கன்னி யாழ் கிழவன் வரம் பெறுகாரை காட்டினில் மின் அவிர் மணி பூண் சிவி எனும் மகவான் பூசனை உருற்றி வீடு பேறு எய்திய ஆறும் - அழியாத மகதியாழையுடைய நாரதமுனிவர் நன்மைபெற்ற திருநெறிக் காரைக்காட்டில் மின்னல்போலவிளங்கும் இரத்தினமழுத்திய ஆபரணத்தையுடைய சிவியென்னும் இந்திரன் பூசனைசெய்து முத்திப்பயனை யடைந்தவரலாறும், பொன் உடைய புத்தேள் புண்ணிய கோடி புனிதனை அருச்சனை ஆற்றி அன்ன எறு உகைக்கும் அண்ணலோடு உலகை உண்டு மீட்டு உதவிய ஆறும் - திருமகளைத் திருமார்பிலுடைய திருமால் புண்ணியகோடியிலுள்ள இறைவனை யருச்சித்து அன்னத்தை நடத்தும் பிரமனோடு உலகினையுண்டுமீளத்தந்தவரலாறும்.

யாழிற்குக் கன்னியென அடைதந்து கூறியது வடநூல்வழக்கு நோக்கியாதலால் குணவணி. (உ)

அத்தகுமாயோன்வலம்புரிக்களிற்றையடியிணைவணங்குபுதனது
கைத்தலத்திழந்ததெம்மருள்சிலைப்பிற்கதிர்வளைநனைப்பெறுமாறு
மெய்த்தபேரன்பின்மலர்மிசைக்கடவுள்வேள்விசெய்துயர்சிவாத்தானத்
துத்தமனருளான்மாயனோடுலகையுண்டுமீட்டுதவியவாறும்.

(இ-ள்.) அதகு மாயோன் வலம்புரி களிற்றை அடி இணை வணங்குபு - அந்தப் பெருமையையுடைய திருமால் வலம்புரி விநாயகரைத் திருவடிவணங்கி, தனது கைதலத்து இழந்த தெவ்மருள் சிலைப்பில் கதிர்வளை நனைபெறும் ஆறும்-தனது கையினின்றும் இழந்த பகைவர் மருளுங் கோஷத்தையுடைய விளங்கும் வலம்புரிச்சங்கைப் பெற்றவரலாறும், மெய்த்தபேர் அன்பின் மலர்மிசை கடவுள் வேள்விசெய்து-உண்மைவாய்ந்த பெரிய அன்பினையுடைய தாமரைமலரின்மேல் வசிக்கும் பிரமன் யாகத்தைச் செய்து, உயர் சிவாத் தானத்து உத்தமன் அருளால் மாயன் ஒடு உலகை உண்டு மீட்டு உதவிய ஆறும்-மேம்பட்டுயர்ந்த சிவாத்தான மென்னுந் திருத்தலத்தி லெழுந்தருளிய இறைவனது திருவருளால் திருமாலோடு உலகினையுண்டுமீள அருளிய வரலாறும்.

தெம்மருளும் நிலைமொழியீற்று வகரமெய் மகரமெய்யாகத் திரிந்ததற்கு முன்னர்க்காட்டிய தொல்காப்பியச் சூத்திரத்தாலுணர்க. (ரு)

கருகிருள்விடத்தையிறையவன்பருகக்காட்டியவறக்கடைதணப்ப
விருமறைவிதியாற்கடவுளர்மணிகண்டேசனையேத்தியவாறு
மருளூறுசெருக்கிற்பொய்யுரைகிளர்ந்தவல்வினைகழிதரவியாதன்
பொருவருஞ்சார்ந்தாசயப்பெருவரைப்பிற்பூசனையியற்றியவாறும்.

(இ-ள்.) கடவுளர் கருகு இருள்விடத்தை இறையவன்பருககாட்டிய அறக்கடைணப்ப - தேவர்கள் கருகிய இருள்போன்ற விடத்தினைச் சிவபெருமான் உண்டருளதாம்தந்த பாவம் தம்மினின்றுநீங்க,இருமறை விதியால்மணி கண்டேசனை எத்திய ஆறும்-பெருமைவாய்ந்த வேதவிதியால் மணிகண்டேச்சுரரைத் துதித்த வரலாறும்,வியாதத்ன்மருள்ஊறு செருக்கில்பொய் உரைகிளர்நவல்வினைகழிதர-வியாதமுனிவன்மயக்கமிக்க ஆணவமலச்செருக்கால் நாரணனே பரப்பிரமமென்று பொய்கூறியதால் விளைந்த வலியதீவினைப்பயன்கழிய,பொருவு அரும்சார்ந்தாசயம்பெருவரைப்பில் பூசனை இயற்றிய ஆறும்-ஒப்பில்லாத சார்ந்தாசயம் என்னும்பெரியதிருப்பதியில்இறைவனைப்பூசித்தவரலாறும்.

அறக்கடை ஒரு சொல் நீர்மைய, அறத்தினிறுதியென விருசொல்லாய் நிற்றலால் வல்வினை யென்றது பிராரத்தம் நுகரும்போதே இடையே யேறுங் கன்மவினையை. (ச)

வீட்டினை விழைந்தேழ்முனிவரும்பூசைவேறுவேறியற்றியவாறுங்
கோட்டமில்கொள்கைப்பராசரமுனிவன்றொழுதுதன் றாதையர்க்கொன்று
மாட்டியவரக்கன்குலத்தொடுமடியச்செற்றதும்விளக்கொளிமாயோ
னாட்டமூன்றுடையநாதனைப்பரவிநதிதடுத்தோம்பியவாறும்.

(இ-ள்.) ஏழ் முனிவரும் வீட்டினை விழைந்து பூசை வேறு வேறு இயற்றிய ஆறும்-அத்திரி முதலிய ஏழு முனிவர்களு முத்தியை விரும்பித் தனித்தனிச் சிவபூசை செய்த வரலாறும், கோட்டம் இல்கொள்கை பராசரமுனிவன் தொழுது-மாறுபடுதலில்லாத கொள்கையையுடைய பராசர முனிவனென்பவன் சிவபூசைசெய்து, தன்தாதையர்கொன்று மாட்டிய அரக்கன் குலத்தொடும் மடிய செற்றதும் - தனது தந்தையைக் கொன்ற சுதாசனென்னு மரக்கன் தனது குலத்தோடு மடியத் தான் செய்யும் வேள்வியிற் கொலைசெய்த வரலாறும், விளக்கொளி மாயோன் நாட்டம் மூன்று உடைய நாதனை பரவி நதி தடுத்து ஓம்பிய ஆறும்-விளக்கொளிவடிவமாய்த்திருமால் மூன்று திருக்கண்களையுடைய இறைவனை வணங்கி வேகவதியைத் தடுத்துப் பிரமன் வேள்வியைப் பாதுகாத்த வரலாறும்.

கொன்றுமாட்டிய ஒருசொன்னீர்மைய. (ரு)

ஈண்டியபுகழ்முத்தீச்சரம்பரசியீன்றவள்சிறையினைவிடுவித்
தாண்டகைக்கலுழனஞ்சுபில்கெயிற்றுப்பணிகளையலைத்தெழுமாறு
நீண்டவனுணராத்திருவடிபோற்றிநெளியுடற்பணிகளுமெம்மான்
பூண்டுகொண்டருளப்பெற்றமேதகவாற்புள்ளினைவினவியவாறும்.

(இ-ள்.) ஆண்டகை கலுழன்-ஆண் தன்மையையுடைய கருடன், புகழ் ஈண்டியமுத்தீச்சரம் பரசி ஈன்றவள் சிறையினை விடுவித்து - புகழ்நெருங்கிய முத்தீச்சரத்திலெழுந்தருளிய இறைவனை வணங்கித் தன்னைப்பெற்ற சுபருணையின் சிறையை விடுவித்து, நஞ்சு பில்கு எயிறு பணிகளை அலைத்து எழும் ஆறும் - நஞ்சினைச்சிந்தும் பற்களையுடையபாம்புகளை வருத்தி எழும் வரலாறும், நெளி உடல் பணிகளும் நீண்டவன் உணராத திருவடி போற்றி - நெளிந்துசெல்லும் உடம்பினையுடைய பாம்புகளும் நெடியோனாகிய திருமால் அறியாத திருவடியை வணங்கி, எம்மான் பூண்டு கொண்டருள பெற்ற மேதக வால் புள்ளினை வினவிய ஆறும் - எமதிறைவன் பூண்டருளப்பெற்ற மேன்மையால் என்கருடாசுகமாவென்று வினவியவரலாறும்.

மேதகவு ஒருசொல் நீர்மைய. (சு)

*இறுதிநாளிருவர்காய்மேற்றூங்கிவியாழமுமியமனும்வழுத்த*
*மறுவறுகாயாரோகணவளைப்பினெம்பிரான்மன்னியவாறு*
*மறுகணிவேணிமஞ்சணீர்க்கூத்தரடியிணையருச்சனைசெய்து*
*தெறுபுலனவித்தசித்தரெண்ணரியசித்திபெற்றுய்ந்திடுமாறும்.*

(இ-ள்.) எம்பிரான் இறுதி நாள் இருவர் காயம் மேல் தாங்கிவியாழமும் இயம னும் வழுத்த-எமது பெருமானார் மகாபிரளயகாலத்தில் பிரமன் திருமாலென்னு மிருவ ர்களுடைய உடலைத்தமது திருமேனிமேற் றாங்கிப் பிரகஸ்பதியும் இயமனுந்துதிக்க, மறு அறுகாயா ரோகண வளைப்பில் மன்னிய ஆறும் - குற்றமற்ற காயாரோகணமென் னுந் திருப்பதியில் எழுந்தருளிய வரலாறும், தெறு புலன் அவித்த சித்தர் அறுகு அணி வேணி மஞ்சள் நீர் கூத்தர் அடி இணை அருச்சனை செய்துஎண்ணரிய சித்தி பெற்று உய்ந்திடும் ஆறும் - வருத்தும் இந்திரியச் சேட்டைகளை யொழித்த சித்தர்கள் அறுகினை யணிந்த சடாபாரத்தையுடைய மஞ்சள் நீர்க்கூத்தருடைய திருவடிகளை யருச்சித்து அளவறுத்தற்கரிய சித்திகளைப்பெற்று உய்ந்த வரலாறும்.

காயம் என்றது முழுவெலும்பினை. பிரமன் திருமால் என்னும் இவர்கள் முழு வெலும்பினை இறைவன் திருமேனியிற் றாங்கியது, மீட்டும் பிரமன் திருமால்தோன்றி யகாலத்தில் அவர்களுக்குத் தானித்தியனென் றுணர்த்தற்கு.

"ஆதலாற்றனைவியப்பதற்கன்றவையணிதல்
ஈதலாதொருதிறமுளதியாவருமெவர்க்கு
நாதனேயிவனென்றுதன்பாங்கரோநண்ணித்
தீதெலாமொரீஇமுத்திபெற்றுயந்திடுஞ்செயலே" எனவருங் கந்தபுரா ணத்தால் அறிக. (௭)

*மாதவன்பரசிப்பிருகுவன்சாபவன்பயந்தபப்பெறுமாறு*
*மேதகுமொருசார்முனிவரர்மதங்கன்வெண்கரிபோற்றியவாறு*
*மேதமில்வெள்ளிமொழிப்படித்ததிசியிட்டசித்தீசனைத்தொழுது*
*கோதறுவயிரயாக்கைபெற்றோங்கிக்குபன்றனைப்புறங்கண்டவாறும்.*

(இ-ள்.) மாதவன் பரசி பிருகு வன் சாபம் வன்பயம் தப பெறும் ஆறும் - திரு மால் வணங்கிப் பிருகுமுனிவனிட்ட வலியசாபத்தின் மிக்கபயம் கெடப்பெற்றவரலா றும், மேதகும் ஒரு சார் முனிவரர் மதங்கன் வெண்கரி போற்றிய ஆறும் - மேன்மைமி க்க அத்தலத்தின் ஒருபக்கத்தில் முனிசிரேஷ்டர்களும்மதங்கரும்வெள்ளையானையுந் துதி த்த வரலாறும், ததிசி ஏதம் இல் வெள்ளி மொழிப்படி இட்ட சித்தீசனை தொழுது-ததீ சிமுனிவர் குற்றமில்லாத சுக்கிரன் கூறியபடி இட்டசித்தீசனை வணங்கி, கோது அறு வயிர யாக்கை பெற்று ஓங்கி குபன்றனை புறம் கண்ட ஆறும் - குற்றமற்ற வச்சிரதேக த்தைப்பெற்று வலிமைமிகுந்து குபனென்னு மசுரனை முதுகுகண்ட வரலாறும்.

வினையையடுத்துவரும் படியென்னும்இடைச்சொல்முன்வல்லெழுத்துமிகாவெ ன்பதும்,பெயரையடுத்துவரும்படியென்னும் இடைச்சொல்முன் மிகுதலும்மிகாமையு முண்டென்பது உணராதுமொழிப்படித் ததிசியென்னும் பாடத்தைமொழிப்படி ததிசி யென வடமொழிமுதல் வல்லெழுத்து இயல்பாய்வரும் எனத்திருத்தினார், "ஆதிபக வன்" என்றாற்போல நிலைமொழிவருமொழி இரண்டும் வடசொல்லாயிருந்தாலல்லவா இயல்பாகும், இது பாடசாலைகளிற் கற்குமாணாக்கர்களுக்கு இவ்விலக்கணம் எளிதிற் புலப்படுமே? இவர்க்குப் புலப்படாத தொருபெருவியப்பு. (அ)

அந்தணன்கச்சபாலயத்திறைஞ்சிப்படைத்திடுமாற்றல்பெற்றதுவும்
பைந்துழாய்க்கூர்மமாயிடைப்பரசிப்பாதகந்தவிர்ந்துய்ந்தவாறு
மைந்துறுமாண்டுகன்னிமாமுனிவன்வழுத்திவானரம்பையரைவர்
சந்தனந்திளைக்குமிளமுலைப்போகந்தரைமிசைநுகர்ந்துவாழ்ந்ததுவும்.

(இ-ள்.) அந்தணன் கச்ச பாலயத்து இறைஞ்சி படைத்திடும் ஆற்றல் பெற்றதுவும்-பிரமன் கச்சபாலயத்திறைவனை வணங்கி உலகைச் சிருட்டிக்கும் வலிமை பெற்றவரலாறும், பைந்துழாய் கூர்மம் ஆயிடை பரசி பாதகம் தவிர்ந்து உய்ந்த ஆறும்-பசிய துளசிமாலையையணிந்த கூர்மமூர்த்தங்கொண்ட திருமால் அவ்விடத்து வணங்கிப் பாதகத்தினின்று தப்பிப்பிழைத்த வரலாறும், மைந்து உறு மாண்டு கன்னிமா முனிவன் வழுத்தி - வலிமைமிக்க மாண்டுகன்னிமுனிவர் துதித்து, வான் அரம்பையர் ஐவர் சந்தனம் திளைக்கும் இள முலை போகம் தரை மிசை நுகர்ந்து வாழ்ந்ததுவும் - விண்ணுலகிலுள்ள ஐந்தரம்பையரது சந்தனஞ்செறிந்த இளமுலைப்போகத்தை நிலவுலகின்மேல் நுகர்ந்துவாழ்ந்த வரலாறும்.

"தன்முகமாகத் தானழைப்பதுவே" என்றாற்போலப் பெற்றதுவும், வாழ்ந்ததுவும் எனக் குற்றியலுகரங் கெடாதுவந்தது. (௯)

அங்கியங்கடவுளேத்திவிண்புலத்தாரவிப்பொறைமதுகைபெற்றதுவும்
பங்கமின்றிறைஞ்சிச்சவுனகமுனிவன்வீட்டினைத்தலைப்படும்பரிசு
மங்கருவெப்புவிழியவற்செகுத்தசுரகரம்வானவர்வழுத்திப்
புங்கவர்பெருமான்சுக்கிலம்பருகுவெப்புநோய்போக்கியவாறும்.

(இ-ள்.) அங்கி கடவுள் ஏத்தி விண்புலத்தார் அவிபொறை மதுகைபெற்றதுவும் - அக்கினிக்கடவுள் வணங்கி விண்ணுலகிலுள்ள தேவர்களுக்கூட்டும்அவிப்பாகமாகிய பாரத்தைச் சுமக்கும் வலிமையைப் பெற்றவரலாறும், சவுனக முனிவன் பங்கம் இன்று இறைஞ்சி வீட்டினை தலைப்படும் பரிசும் - சவுனகமுனிவர் ஆகமவிதிப்படி வணங்கி முத்திநெறியை யடையும் வரலாறும், மங்கரு வெப்பு விழியவன் செகுத்த சுரகரம் வானவர் வழுத்தி - கெடுதலில்லாத சுராக்கனைக்கொன்ற சுரகரமென்னுந் திருப்பதியைத்தேவர்கள் வணங்கி, புங்கவர் பெருமான் சுக்கிலம் பருகு வெப்பு நோய் போக்கிய ஆறும் - தேவ தேவனாகிய சிவபெருமானது சுக்கிலத்தைப் பருகுதலால் வந்த சுர நோயைப் போக்கியவரலாறும்—

அம்சாரியை யிடைச்சொல். (௧௦)

புலிப்பதமுனிவன்கான்முளைபோற்றிப்பொங்குதீம்பாற்கடல்பெற்று
வலித்திறற்பார்த்தன்வலவனைமுடிமேன்மலரடிசூட்டியாண்டதுவுங்
கலித்தெழுமிமையோர்மலைமகண்மொழியாற்கரிசறத்தெளிந்தருட்குறியிற்
சலிப்பறுமியக்கவடிவுகொண்டணைந்ததலைவனைத்தொழுதுய்ந்தவாறும்.

(இ-ள்.) புலிப் பத முனிவன் கான்முளைபோற்றி பொங்குதீம்பால் கடல்பெற்று-வியாக்கிரபாதமுனிவர் புத்திரராகிய உபமன்னியு முனிவர்துதித்து அலைகள் எழுந்தோங்கும் இனிய பாற்கடலைப்பெற்று, வலி திறல் பார்த்தன் வலவனை முடிமேல் மலர் அடி சூட்டி ஆண்டதுவும்-வலிமையையுடைய அருச்சுனனது தேர்ப்பாகனாகிய கண்ணனது தலைமேல்தாமரைமலர்போன்ற திருவடித் தீக்ஷைசெய்து அடிமைகொண்டவரலாறும், கலித்துஎழும்இமையோர் மலைமகள்மொழியால் கரிசு அறதெளிந்து-ஆர

வாரஞ்செய்து போர்க்கெழுந்த தேவர்கள் உமையம்மை யருளியமொழியால் குற்றம றச் சிவபிரானென்றுதெளிந்து-சலிப்பு அறும் இயக்கவடிவுகொண்டு அணைந்ததலைவனை அருள் குறியில் தொழுது உய்ந்த ஆறும் - சலனமற்ற யக்ஷத்திருவுருக்கொண்டுவந்த இறைவனைச் சிவலிங்கமூர்த்தத்தில் வணங்கிப் பவத்தினின்றுந் தப்பிப்பிழைத்த வரலாறும்.

ஆறனுருபுநிற்குமிடத்து இரண்டனுருபுநிற்றலால் உருபுமயக்கம். (கக)

ஏதமில்பதிற்றுப்பதின்மரோடொரோன்பதின்மருமேத்தியவாறு
மாதர்மேற்றளியிற்கவுணியன்பாட்டான்மால்சிவனுருவுபெற்றதுவு
மாதரம்பூப்பவைங்கரப்புத்தேளநேகதங்காவதம்பரசிக்
கோதறவுலகமெண்ணியாங்குதவக்கொடுத்திடுமிறைமைபெற்றதுவும்.

(இ-ள்.) ஏதம் இல் பதிற்றுப் பதின்மரோடு ஓர் ஒன்பதின் மரும் ஏத்திய ஆறும்-குற்றமில்லாத உருத்திரர்முதலிய நூற்றுப்பதினெண்மரும பூசித்துத்துதித்த வரலாறும், மால் மாதர் மேற்றளியில் கவுணியன் பாட்டால் சிவன் உருவு பெற்றதுவும் திருமால் அழகிய திருமேற்றளியில் ஆளுடைய பிள்ளையார் திருப்பாசுரத்தால் சிவசாரூப்பியம்பெற்ற வரலாறும், ஐங்கரப்புத்தேள ஆதரம்பூப்ப அநேக தங்காவதம்பரசி ஐந்து திருக்கரங்களையுடைய மூத்தபிள்ளையார் ஆசைமிக்கூர அநேக தங்காவதமென்னுந் திருப்பதியைவணங்கி, உலகம் எண்ணியாங்கு கோது அற உதவக்கொடுத்திடும் இறைமை பெற்றதுவம்-உலகிலுள்ளோர் கருதியது கருதியபடியே குற்றமறக்கொடுத்தருளுந் தலைமையைப்பெற்ற வரலாறும். (உ௨)

மகதியாழ்முனியும்புத்தருக்கிறையும்வளமபொழிற்றிருக்கயிலாயப்
பகவனைத்தொழுதுமுப்புரத்தவரைமருட்டியபாவமாற்றியது
மிகலுநர்செகுப்பவிராகவனவழுத்தியெறுழ்வலியெய்தியவாறும்
புகழுறுங்கற்கிபோற்றுபுகடைநாட்கயவரைப்புரட்டியவாறும.

(இ-ள்) மகதியாழ் முனியும் புத்தருக்கு இறையும் வளம் பொழில் திருக்கயிலாயம் பகவனை தொழுது-மகதியென்னும் யாழையேந்திய நாரதமுனிவரும் திருமால் மூர்த்தமாகிய புத்ததேவனும் வளம்வாய்ந்த சோலைசூழ்ந்த திருக்கயிலாயமென்னுந் திருப்பதியி லெழுந்தருளிய சிவபெருமானைத் தொழுது, முப்புரத்தவரை மருட்டிய பாவம் மாற்றியதும், திரிபுரத்திலுள்ள அசுரரை மயக்கிய பாவத்தைநீங்கியவரலாறும், இராகவன் இகலுநர் செகுப்ப வழுத்தி எறுழ்வலி எய்திய ஆறும் - இராமமூர்த்தி இராவணனாதியரைக்கொல்லப்பூசித்து வலிமையையடைந்த வரலாறும், புகழ் உறுங்கற்கி போற்று புகடை நாள் கயவரை புரட்டிய ஆறும் - யாவரும புகழுங் கற்கிமூர்த்தந்கொண்ட திருமால் பூசித்து யுகாந்தத்திலுள்ள அசுரரைக்கொன்ற வரலாறும.

இகலுநா போர்செய்வோர் என்னும பொருள்மேல் நிற்றலால எதிர்காலவினைமுற்றுப்பெயர். எறுழ்வலி ஒருபொருட்பன்மொழி. (கங)

நறைமலர்ப்பணந்தார்முடியவன்வழுத்திநலம்பயில்வரமபெறுமாறு
மறைகழன்மகவான்றொழுதுசெல்லுருவாயசுதன்சென்னியைத்துணித்து
நிறைபெருங்கீர்த்திகவர்ந்துமீட்டுய்யப்பூசனைநிகழ்த்தியவாறு
மறையவன்றலையைகொய்துவெம்பலிமேதாவயிரவன்பூசித்தவாறும்.

(இ-ள்) நறைமலர் பணந்தார் முடியவன் வழுத்தி நலம் பயில் வரம் பெறும் ஆறும்-தேன்சிந்தும் பனைமலர் மாலையயணிந்த முடியையுடைய பலபத்திராமன்

பூசித்து நன்மைமிக்க வரத்தைப்பெறும் வரலாறும், அறைகழல் மகவான் தொழுது செல் உருவாய் அச்சுதன் சென்னியை துணித்து - ஒலிக்கும் வீரகண்டையையுடைய இந்திரன் வணங்கிச் செல்லின் வடிவமாய்த் திருமாலுடைய தலையைச்சேதித்து, நிறை பெரும் கீர்த்தி கவர்ந்து மீட்டு உய்ய பூசனை நிகழ்த்திய ஆறும் - அவன் தன்னிடத்தி னின்று கவர்ந்த நிறைந்த பெருங்கீர்த்தியைக் கைக்கொண்டு மீள அத்திருமால் பிழைக் கப் பூசித்தவரலாறும், மறையவன் தலையைகொய்து வெம்பலி சேர் வயிரவன் பூசித்த ஆறும்-பிரமனது தலையைக்கொய்து திருமாலிடத்து உதிரப்பலியையேற்ற வயிரவமூர் த்தி பூசைசெய்த வரலாறும். (௧௬)

விண்டுநேர் விடுவச்சேனனார் பரவிவீரபத்திரனிறத்தணிந்த
வெண்டலைவிழுங்குமாழியைவிகடக்கூத்தினாலெய்தியவாறு
மிண்டினால்வேள்வியாற்றியதக்கன்வினைகெடவருச்சித்தவாறும்
விண்டவர்புரத்தினுய்ந்திடுமூவர்தொழுதுமெய்வரம்பெறுமாறும்.

(இ-ள்.) விண்டு நேர் விடுவச் சேனனார் பரவி வீரபத்திரன் நிறத்து அணிந்த வெண்டலை விழுங்கும் ஆழியை விகடம் கூத்தினால் எய்திய ஆறும்-திருமாலையொத்த விசுவச்சேனர் பூசித்து வீரபத்திரக்கடவுளுடைய மார்பிலணிந்த உக்கிய தலை மாலை விழுங்கிய சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை விகடக்கூத்தாலடைந்த வரலாறும், மிண்டி னால் வேள்வி ஆற்றிய தக்கன் வினைகெட அருச்சித்த ஆறும்-ஆணவமல வலியால் யாக ஞ்செய்த தக்கன் தனது தீவினைகெடப்பூசித்தவரலாறும்,விண்டவர்புரத்தின் உய்ந்திடும் மூவர் தொழுது மெய்வரம்பெறும் ஆறும்-பகைவரது திரிபுரத்தினின்று தப்பிய சுதன் மன்முதலிய மூவரும பூசித்துந் துவாரபாலகராகிக் காக்கும்விதம் பெற்றவரலாறும்.()

பொன்பெயர் படைத்தோன்கிளைஞரோடெய்திப்பூசைசெய்தரசுபெற்றதுவு
ங், கொன்பயில்விடையோனருளவழிமாயோன்மடங்கலாயவனுயிர்குடித்து
பின்புகுந்தருக்கைச்சரபமாய்த்ததற்பின்பிழைகெடப்பூசித்தவாறும் [ப்
வன்புடையிரணியாக்கனையிறுத்தபன்றிபின்வழிபடுமியல்பும்.

(இ-ள்.) பொன் பெயர் படைந்தோன் கிளைஞரோடு எய்தி பூசைசெய்து அர சுபெற்றதுவும் - இரணியன் றனது உறவினரோடடைந்து சிவபூசைசெய்து அரசியல டைந்தவரலாறும், மாயோன் கொன்பயில் விடையோன்அருள்வழி மடங்கல் ஆய் பின் புகும் தருக்கை-திருமால் பெருமைமிக்க இடப ஊர்தியையுடைய சிவபெருமான் திரு வருள் வழிநின்று நரசிங்க மூர்த்தமா யவ்விரணியனுடைய உயிரைக் குடித்தலால் பின் புவந்த செருக்கினை, சரபம் மாய்த்ததன் பின் பிழைகெட பூசித்த ஆறும் - வீரபத்திர மூர்த்தமாகிய என் காற்புள் அழித்த தன்பின் குற்றம்நீங்கப் பூசித்தவரலாறும். வன்பு உடைய இரணியாக்கனை இறுத்த பன்றிபின் வழிபடும் இயல்பும் - வலிமையையுடைய இரணியாக்கனைக்கொன்ற திருமால் மூர்த்தமாகியவராகம் பின்பு வழிபட்டவரலாறும்.

அந்தகன்பரசிப்புவிமுழுதாண்டிசடைமுறையருள்பெறுமாறும்
வெந்திறல்வாணனிறுதியிற்பரவிவிறற்கணத்தலைமைபெற்றதுவுங்
கந்தமென்மலர்கொண்டடிதொழுதோணகாந்தனுங்கதிபெறுமாறு
மைந்துறவழுத்திச்சலந்தரன்கடைக்கால்வீட்டின்பமருவியவாறும்.

(இ-ள்.) அந்தகன் பரசி புவிமுழுதும் ஆண்டு கடைமுறை அருள் பெறும் ஆறு ம் - அந்தகாசுரன் வணங்கி நிலவுலகமுழுமையும் ஆண்டு இறுதியில திருவருளடைந்த

வரலாறும், வெம் திறல் வாணன் இறுதியில் பரசி விறல் கணத்தலைமைபெற்றதுவும் - வெய்ய வலிமையையுடைய வாணாசுரன் முடிவிற்பூசித்து வெற்றிவாய்ந்த சிவகணங்களுக்குத் தலைமைபெற்ற வரலாறும், ஓணகாந்தனும் கந்தம் மெல்மலர் கொண்டு அடிதொழுது கதிபெறும் ஆறும் - ஓணனும் காந்தனும் வாசமமைந்த மலரைக்கொண்டு இறைவனது திருவடியைப்பூசித்து முத்திபெறும் வரலாறும், சலந்தரன் மைந்து உற வழுத்தி கடைக்கால் வீடு இன்பம் மருவிய ஆறும்-சலந்தராசுரன் வலிமைபொருந்தப் பூசித்து மோக்ஷவின்பத்தையடைந்த வரலாறும்.

முற்றும்மைதொகுத்தல். (௧௭)

கேசவன்றிருமாற்பேற்றினிற்போற்றிக்கிளரொளியாழிபெற்றதுவும்
வேசறுபரசிராமனேத்தெடுத்துவெம்மழுப்படைபெறுமாறு
தேசுறப்பரவியிரேணுகையென்பாடெய்வதமாகியவாறு
மாசறுயோகாசாரியர்தொழுதுவயங்குதம்பதம்பெறுமுறையும்.

(இ-ள்.) கேசவன் திருமாற்பேற்றினில் போற்றி கிளர் ஒளி ஆழி பெற்றதுவும்- திருமால் திருமாற்பேற்றிற்பூசித்து விளங்கு மொளியையுடைய சுதரிசனமென்னுஞ் சக்கரத்தைப்பெற்ற வரலாறும், வேசு அறு பரசிராமன் ஏத்தெடுத்து வெம்மழுபடை பெறும் ஆறும் - இளைப்பொழிந்த பரமசிராமன் பூசித்துக் கொடிய மழுவாயுதத்தைப் பெற்ற வரலாறும், இரேணுகை என்பாள் தேசு உற பரவி தெய்வதம ஆகிய ஆறும் - இரேணுகையென்பவள் விளக்க மிகப்பூசித்துத் தெய்வமாகிய வரலாறும், மாசு அறும் யோகாசாரியர் தொழுது வயங்கு தம்பதம் பெறும் முறையும் - குற்றமற்ற யோகாசாரியர் வணங்கி விளங்குந் தமது பதவியைப்பெற்ற வரலாறும்.

வேசு இளைப்பு, இது தேசியச்சொல் "அரைசேபொன்னம்பலத்தாடுமமுதே யென்றுன்னருணோக்கி - இரைதேர்கொக்கொத்திரவுபகலேசற்றிருந்தேவேசற்றேன்" எனவரும் திருவாசகத்தாலுணர்க. (௧௮)

சித்தசன்போற்றியுலகெலாங்காமஞ்செறித்திடுமிறைமைபூண்டதுவு
மத்தரேவலாற்றினலணைந்தவகிலதீர்த்தங்களும்வணங்கிப
பைத்தபாப்பல்குல்பாகனார்தம்பாற்பற்பலவரங்கள்பெற்றதுவுந்
தத்துநீர்க்கிறைவனருச்சனையாற்றித்தங்குமப்பதம்பெறுமாறும்.

(இ-ள்) சித்தசன் போற்றி உலகு எல்லாம் காமம் செறித்திடும் இறைமை பூண்டதுவும் - மன்மதன் பூசித்து உலகிலுள்ள எல்லாவுயிர்களுக்குங் காமமூட்டுந் தலைமையைப்பெற்ற வரலாறும், அத்தனார் ஏவல் ஆற்றினால் அணைந்த அகில தீர்த்தங்களும் வணங்கி - சிவபெருமான் ஏவல் முறையால் வந்த எல்லாத்தீர்த்தங்களும் வணங்கி, பைத்த பாப்பு அல்குல் பாகனார் தம்பால் பல்பல வரங்கள் பெற்றதுவும் - விரித்த பாம்பின்படத்தையொத்த அல்குலையுடைய உமையம்மையை இடப்பாகத்திலுடைய இறைவரிடத்துப் பலவரங்களைப்பெற்ற வரலாறும், தத்துய நீர்க்கு இறைவன் அருச்சனை ஆற்றி தங்கும் அப்பதம் பெறும் ஆறும் - தாவும் அலைகளையுடைய நீர்க்கிறைவனாகிய வருணன் பூசித்து நிலைபெற்ற அந்நீர்க்குத் தலைமையெய்திய வரலாறும். (௧௯)

காசிவாழ்விசுவநாதனுங்காஞ்சிப்பெட்பினாலணைந்துவைகியதும்
பூசனையுஞற்றிக்காற்றினன்கந்தவாகனப்பொலிவுறுமாறு
மாசறுகோள்களொன்பதும்வழுத்தியெண்ணியவரம்பெறுமாறுந்
தேசுறுவாமதேவனன்முனிவன்றொழுதுவெம்பிறவிதீர்ந்ததுவும்.

(இ-ள்.) காசிவாழ் விசுவநாதனும் காஞ்சி பெட்பினால் அணைந்து வைகியதும் - காசியிலெழுந்தருளிய விசுவநாதப்பெருமானும் காஞ்சியென்னுந் திருத்தலத்தை விருப்பாலடைந்து தங்கிய வரலாறும், காற்றினன் பூசனை உஞற்றி கந்தவாகன் ஆக பொலிவுறும் ஆறும் - வாயுதேவன் செவ்வந்திமலர்கொண்டு பூசித்துக் கந்தவாகனாக விளங்கும் வரலாறும், மாசு அறுகோள்கள் ஒன்பதும் வழுத்தி எண்ணிய வரம் பெறும் ஆறும் - குற்றமற்ற நவக்கிரகங்களும் பூசித்துத் தாம் கருதிய வரத்தைப்பெற்ற வரலாறும், தேசு உறு வாமதேவன் நன்முனிவன் தொழுது வெம் பிறவி தீர்ந்ததுவும் - விளக்கமிக்க வாமதேவனென்னு நல்ல முனிவன் பூசித்துக் கொடிய பிறவியினின்று நீங்கிய வரலாறும். (உ௦)

அகனுறப்பரசிமார்க்கண்டிமுதலோரிறப்பினைக்கடந்ததுமயன்மா
லிகலுறுசெருக்கின்வருவினைதணப்பவிலிங்கமங்கருச்சித்தவாறுஞ்
சகமெலாமிறுத்துமுக்கணெம்பெருமான்றங்குவீராட்டகாசத்தின்
முகினிறப்புத்தேள்பூசனையுஞற்றித்துகிர்நிறம்பெற்றிடுமுறையும்.

(இ-ள்.) மார்க்கண்டி முதலோர் அகன் உறபரசி இறப்பினை கடந்ததும் - மார்க்கண்டேயமுனிவர் முதலினோர் மனமாரப்பூசித்து மரணத்தைக்கடந்த வரலாறும், அயன் மால் இகல் உறு செருக்கின் வருவினை தணப்ப இலிங்கம் அங்கு அருச்சித்த ஆறும் - பிரமனுந் திருமாலுந் தம்முள் மாறுபட்ட இறுமாப்பால்வந்த தீவினை தம்மினின்று நீங்க அங்குக் காட்சிதந்த சிவலிங்கத்தைப்பூசித்த வரலாறும், முக்கண் எம்பெருமான் சகம் எல்லாம் இறுத்து தங்கு வீராட்டகாசத்தின் - திரிநேத்திரங்களையுடைய வெமது பெருமானார் எல்லாவுலகங்களையுமழித்து எழுந்தருளிய வீராட்டகாசமென்னுந் திருப்பதியில், முகில் நிறம் புத்தேள் பூசனை உஞற்றி துகிர் நிறம் பெற்றிடும் முறையும் - மேகம்போலு நிறத்தையுடைய திருமால் பூசித்துப் பவளநிறம்வாய்ந்த வரலாறும்.

மாண்டகுகாமக்கண்ணியைவணங்கிமலர்மகள்சாபமாற்றியதும்
பாண்டவர்முதலோர்தொழுதுநல்வரங்கள்பரித்ததும்வணங்கியீசான
வாண்டகையாசைக்கிறைமையெய்தியதுமச்சுதன்மச்சமாய்ப்போற்றி
வேண்டலர்ச்செகுத்துவேதநூல்கொணர்ந்துவேதியர்தமக்களித்ததுவும்.

(இ-ள்.) மலர்மகள் மாண் தகு காமக்கண்ணியை வணங்கி சாபம் மாற்றியதும் - திருமகள் திருவருண்மாட்சிமையமைந்த காமாட்சியம்மையை வணங்கித் தனக்குவந்த சாபத்தை நீக்கிய வரலாறும், பாண்டவர் முதலோர் தொழுது நல்வரங்கள் பரித்ததும் - தருமன்முதலிய ஐவர்முதலான வேனையோர்களும் பூசித்து நல்ல வரங்களைப்பெற்ற வரலாறும், ஈசான ஆண்டகை வணங்கி ஆசைக்கு இறைமை எய்தியதும் - ஈசானமூர்த்தியாகிய பெருவன்மையையுடையோன் பூசித்து வடகீழ்த்திசைக்குத் தலைமைபெற்ற வரலாறும், அச்சுதன் மச்சம் ஆய்போற்றி வேண்டலர் செகுத்து வேதம் நூல்கொணர்ந்து வேதியர் தமக்கு அளித்ததுவும் - திருமால் மச்சரூபங்கொண்டு பூசித்துப் பகைவனைக் கொன்று வேதநூலைக்கொண்டுவந்து அந்தணர்களுக்குக்கொடுத்த வரலாறும். (உஉ)

மீயுயர்குறளோனவுணனைச்சிறையிற்புகுத்துமீண்டிறைஞ்சியவாறு
மாயவன்பரவிக்கடல்விடந்தாக்கும்வெப்புநோய்மாறநின்றதுவு
நாயகியுருவிற்கவுசிகைதோன்றிநாதனைப்பூசித்தவாறுந்
தூயமாகாளப்பாப்பரசிறைஞ்சித்தொல்லைவீடுறப்பெறுமாறும்.

(இ-ள்.) மீ உயர் குறளோன் அவுணனை சிறையில் புகுத்து மீண்டு இறைஞ்சிய ஆறும் - திரிவிக்கிரமமூர்த்தங்கொண்ட திருமால் மாவலியைச் சிறையிற்புகுத்து மீள வணங்கிய வரலாறும், மாயவன் பரவி கடல் விடம் தாக்கும் வெப்புநோய் மாற நின்றதுவும் - திருமால் வணங்கிக் கடலிற்றோன்றிய விடந் தாக்குதலால்வந்த வெப்பநோய் தன்னினின்று நீங்கிய வரலாறும், நாயகி உருவில் கவுசிகை தோன்றி நாதனை பூசித்த ஆறும் - உமையம்மை திருவுருவில் கௌசிகையென்பவர் தோன்றி யிறைவனைப்பூசித்த வரலாறும், தூயமாகாளன் பரப்பு அரசு இறைஞ்சி தொல்லை வீடு உற பெறும் ஆறும்- களங்கமில்லாத மகாகாளனென்னும் சர்ப்ப அரசன் வணங்கித் தொன்றுதொட்டுள்ள முத்தியையடைந்த வரலாறும்.

மாகாளன் பாப்பரசு உயர்திணைப்பெயரிலீறுகெட்டு வருமொழிமுதல் வல்லெழுத்து மிகுந்தது. இதற்கு முன்னர்க்காட்டிய தொல்காப்பியச்சூத்திரத்தால் அறிக. (௨௬)

அண்ணலாராணைமறுத்தவெந்தீமையறுத்திடக்குமரகோட்டத்தி
னண்ணிவீற்றிருந்துசேயிலைநெடுவேனாயகன்பூசித்தவாறு
மண்ணெலாம்பரவுமார்க்கண்டமுனிபால்வஞ்சகங்கருதியமாயோன்
கண்ணுதற்பிரானையத்தலத்திறைஞ்சியவ்வினைகழுவியவாறும்.

(இ-ள்.) சேயிலை நெடுவேல் நாயகன் அண்ணலார் ஆணை மறுத்த வெம் தீமை அறுத்திட குமரகோட்டத்தில் நண்ணி வீற்றிருந்து பூசித்த ஆறும் - உதிரந்தோய்ந்த தகட்டுவடிவுவாய்ந்த நீண்ட வேலையேந்திய முருகக்கடவுள் சிவபெருமானுடைய ஆணையை மறுத்த கொடிய தீமையை யொழிக்கக் குமரகோட்டத்திலெழுந்தருளி நிகரின்றியிருந்து பூசனைசெய்த வரலாறும், மண் எல்லாம் பரவு மார்க்கண்டமுனி பால் வஞ்சகம் கருதிய மாயோன் கண்ணுதல் பிரானை அதலத்து இறைஞ்சி அ வினை கழுவிய ஆறும் - உலகமெல்லாம் வணங்கு மார்க்கண்டமுனிவரிடத்து வஞ்சகத்தைக் கருதிய திருமால் சிவபெருமானை அக்காஞ்சியிற்றுதித்து அத்தீவினையினின்று நீங்கிய வரலாறும். (௨௭)

சாத்தனார்போற்றியுரிமைபெற்றதுவுமங்கலைத்தையல்போற்றியதுந்
தீத்தொழிலரக்கர்செகுத்துவந்திராமன்பணிந்ததுந்தேவர்கோன்வலவ
னேத்தியவாறுநாரணன்பரவிப்பாப்புருவிரித்ததுமயானக்
கூத்தனார்முழுதுந்தழலிடையொடுக்கிப்பண்டனைக்கொலைசெய்தவாறும்.

(இ-ள்.) சாத்தனார் போற்றி உரிமை பெற்றதுவும் - சாத்தன் பூசித்துக் கணங்களுக்குத் தலைமைபெற்ற வரலாறும், மங்கலை தையல் போற்றியதும் - மங்கலையென்பவர் பூசித்த வரலாறும், இராமன் தீ தொழில் அரக்கர் செகுத்து வந்து பணிந்ததும் - இராமமூர்த்தி கொடுந்தொழிலையுடைய இராவணனாதியரைக்கொன்று வந்து பூசித்த வரலாறும், தேவர்கோன் வலவன் ஏத்திய ஆறும் - தேவேந்திரன் சாரதியாகிய மாதலியென்பவன் பூசித்த வரலாறும், நாரணன் பரவி பாப்பு உரு இரித்ததும் - திருமால் பூசித்து உமையம்மை சாபத்தால் வந்த பாம்புருவம் நீக்கிய வரலாறும், மயானம் கூத்தனார் முழுதும் தழல் இடை ஒடுக்கி பண்டனை கொலைசெய்த ஆறும் - கச்சித்திருமயானத்திலெழுந்தருளிய இறைவர் உலகமுற்றும் வேள்வித்தீயிலொடுக்கிப் பண்டாசுரனைக் கொன்ற வரலாறும். (௨௮)

ஒவியவுலகைத்தோற்றுவானெங்கோனொற்றைமாமூலத்தின்மூனைத்துத்
தாவறுசிறப்பினிலனிதைப்பிராட்டிதனைப்பயந்தாங்கவள்விழியின்
மூவரைப்படைத்துச்செய்தொழில்வகுத்துச்செவியறிவுறுத்துமொய்கூந்தற், றேவியுங்கடவுண்மூவரும்பரவச்சிறப்பொடுவீற்றிருந்ததுவும்.

(இ-ள்.) எங்கோன் ஓவிய உலகை தோற்றுவான் ஒற்றை மாமூலத்தின் மூலைத்து தாவு அறு சிறப்பின் இலளிதை பிராட்டி தனை பயந்து - எமது பெருமான் வெள்வித்தீயிலொடுக்கிய உலகினை மீளச்சிருட்டிக்க ஒப்பில்லாத மாமரத்தினடியி லெழுந்தருளிக் குற்றமற்ற சிறப்பினையுடைய இலளிதைப்பிராட்டியைத்தந்து, ஆங்கு அவள் விழியின் மூவரையும் படைத்து செய்தொழில் வகுத்து செவியறிவுறுத்து - அப்பிராட்டியினது திருக்கண்களினின்று பிரமன் முதலிய மூவரையுந்தந்து அவர்கள் செய்யும் படைப்புமுதலிய தொழில்களை வகுத்து உபதேசித்து, மொய் கூந்தல் தேவியும் கடவுள் மூவரும் பரவ சிறப்பொடு வீற்றிருந்ததுவும்-நெருங்கிய கூந்தலையுடைய அவ்விலளிதைப்பிராட்டியும் அப்பிரமன்முதலிய மூவரும் வணங்கச் சிறப்போடெழுந்தருளியிருந்த வரலாறும்.

மூவரை என்பதனிறுதியில் முற்றும்மை தொகுத்தல். (உகு)

திருவிளையாட்டான்மந்தரத்துமையாள்சிவபிரான்விழியிணைபுதைப்பக்
கருகிருட்பிழம்பினுலகெலாமூழ்கிக்கடப்பருங்கவலையுற்றதுவும்
வருவினைதணப்பப்பூசனைபுரிவான்மழவிடைச்செய்கையும்புகன்று
பெருநகர்க்காஞ்சிக்கிறையவன்விடுப்பப்பிராட்டியங்கெய்தியவாறும்.

(இ-ள்.) உமையாள் மந்தரத்து திருவிளையாட்டால் சிவபிரான் விழி இணை புதைப்ப கருகு இருள் பிழம்பின் உலகு எல்லாம் மூழ்கி கடப்பரும் கவலை உற்றதுவும் - உமையம்மை மந்தரகிரியில் ஒரு திருவிளையாட்டால் சிவபிரானது இரண்டு திருக்கண்களைப் புதைத்தலால் கருகிய இருளின் திரட்சியில் உலகமெல்லாமழுந்தி யொழித்தற்கரிய கவலையை யடைந்த வரலாறும், காஞ்சி பெருநகர்க்கு இறைவன் வருவினை தணப்ப பூசனை புரிவான் மழவிடை செய்கையும் புகன்று விடுப்ப பிராட்டி அங்கு எய்திய ஆறும்-காஞ்சியென்னும் பெரிய திருநகரில் இறைவராகிய சிவபெருமானுர் அதனல் வந்த தீவினை நீங்கத் தம்மைப்பூசிக்கும்பொருட்டு வாகனநந்தியின் செய்கையையுங் கூறி விடைகொடுக்க உமையம்மை யத்திருந்தலத்தை யடைந்து பூசித்த வரலாறும்.

நகர்க்கு எழனுருபு நிற்குமிடத்து நான்கனுருபு வந்தமையால் உருபுமயக்கம்.(உஎ)

மெய்த்தநல்லறங்கள்வளர்த்திடுமாறும்விண்டுவீச்சரமகத்தீச
மத்தளமாதவீச்சரம்வணங்கிப்போந்துமாந்தருவடிமுளைத்த
சத்தறிவின்பத்தனிமுதற்பொருளைத்தவத்தினுற் கண்டுகொண்டிறைஞ்சிப்
புத்தமிழ்தனையாள்விதியுளிவழாமைப்பூசனையுஞற்றியவாறும்.

(இ-ள்.) புத்தமிழ்து அனையாள் மெய்த்த நல் அறங்கள் வளர்த்திடும் ஆறும்-புதிய அமிர்தையொத்த அவ்வுமையம்மை உண்மைவாய்ந்த நல்ல முப்பத்திரண்டு தருமமும் வளர்க்கும் வரலாறும், விண்டு வீச்சரம் அகத்தீசம் மத்தள மாத வீச்சரம் வணங்கி போந்து - விண்டு வீச்சரத்தையு மகத்தீசத்தையு மத்தளமாத வீச்சரத்தையுந் துதித்து வந்தருளி, மாந்தரு அடி முளைத்த சத்து அறிவு இன்பம் தனிமுதல் பொருளை தவத்தினுல் கண்டுகொண்டு இறைஞ்சி விதியுளி வழாமை பூசனை உஞற்றிய ஆறும் - மாமரத்தின்கீழ் எழுந்தருளிய உண்மையறிவானந்தமே திருவுருவாய்ந்த ஒப்பில்லாத இறைவரைத் தவத்தாற்கண்ணுற்று வணங்கி ஆகமவிதியால் வழுவாமற்பூசித்த வரலாறும்.

". வழாமையென்னும் வினையெச்சம் செயவென்னும் உடன்பாட்டு வினையெச்சத்திற்கு எதிர்மறையாதலால் வழாமைப்பூசனையென வருமொழி வல்லெழுத்து மிக்கது. உண்மைப்பொருள் நோக்காது விதியுளிவழாமலும் பூசனையும் என விபரீதப்பொருள்

கொண்டு உம்மைத்தொகையாக்கி வருமொழிமுதல் வல்லெழுத்தியல்பாமென வழ்ர் மை பூசனையெனப் பெரும் பிழைபடத்திருத்தினர், இயல்பாலும் விகாரத்தாலும் பொருள் வேறுபடுமேயென்பது நோக்காமை இலக்கணமறியார் செயற்கையென வுணர்க.

கருணைமீப்பொங்குந்திருவிளையாட்டாலழைத்துறுங்கம்பைநீர்ப்பெருக்கைக்,குருமணிக்குழையாள்கண்டுளம்பதைத்துக்குழகனைத்தழுவியவாறுந்
திருமுலைச்சுவடும்வால்வளைத்தழும்புஞ்சிவபிரான்பொலிவுறப்பூண்டு
மருமலர்க்குழலாள்காணமுன்னின்றுவரம்பலவருளியவாறும்.

(இ-ள்.) கருணை மீ பொங்கும் திருவிளையாட்டால் அழைத்துறும் கம்பை நீர் பெருக்கை - திருவருள் மீக்கூருந் தமது திருவிளையாட்டால் இறைவர் வருவித்த கம்பாநதியினீர்ப்பெருக்கினை, குருமணி குழையாள் கண்டு உளம் பதைத்து குழகனை தழுவிய ஆறும் - நிறந்தங்கிய இரத்தினமழுத்திய குண்டலத்தையுடைய உமையம்மை கண்டு மனம் பதைத்து அவ்விறைவரைத்தழுவிய வரலாறும், திருமுலை சுவடும் வால் வளைதழும்பும் சிவபிரான் பொலிவுற பூண்டு - அழகிய தனபாரச்சுவட்டையும் வெள்ளிய வளையற்றழும்பையும் அவ்விறைவர் விளங்கத் திருமேனியிற்கொண்டருளி, மருமலர் குழலாள் காண முன் நின்று பலவரம் அருளிய ஆறும் - வாசமிக்க கூந்தலையுடைய அவ்வுமையம்மை கண்டருள முன்னே காட்சிதந்து பலவரங்களையுந் தந்தருளிய வரலாறும்.

அழைத்துறும் ஒருசொன்னீர்மைய. (உக)

இமவரைப்பிராட்டிகவுரமாநிறம்பெற்றெம்பிரான்வதுவைவேட்டதுவு
முமையவள்காளவுரியினிலுயிர்த்தவொளியிழையவுணரைமாட்டி
விமலநாயகன்றனருள்பெறுமாறுமேதகுவிம்மிதத்திறமு
மமைவரவொழுகுமொழுக்கமுமெங்கோனருட்சிவபுண்ணியப்பேறும்.

(இ-ள்.) இமவரை பிராட்டி கவுரமா நிறம்பெற்று எம்பிரான் வதுவை வேட்டதுவும்-இமயமலையிற்றோன்றிய பெருமாட்டி அழகிய கவுர நிறம் வாய்ந்து எமது பெருமானது திருமணத்தை விரும்பிய வரலாறும், உமையவள் காளம் உரியினில் உயிர்த்த ஒளி இழை அவுணரை மாட்டி விமலநாயகன் தன் அருள் பெறும் ஆறும் - அவ்வுமையம்மையினது கரிய சட்டையிற்றோன்றிய காளி டசுரரைக்கொன்று இறைவரது திருவருள்பெற்று அத்திருநகர்க்குக் காவல்பூண்டு நிற்கும் வரலாறும், மேதகு விம்மிதம் திறமும் - மேன்மைதங்கிய அற்புதப்பகுதியின் வரலாறும், அமைவர ஒழுகும் ஒழுக்கமும் எங்கோன் அருள் சிவபுண்ணியம் பேறும் - அந்தணர்முதலிய வருணத்தார் அமையத் தத்தமக்குரிய நிலையில் நின்று ஒழுகும் ஒழுக்கமும்.

அமைவர ஒருசொல் நீர்மைய. (௩0)

மற்றுமோராற்றூற்கிளந்திடுந்திறத்தின்மால்வரைக்கயிலையினுமையாள்
கற்றையஞ்சடையார்விழியிணைபுதைத்துக்காஞ்சியிற்பூசனையாற்றும்
பெற்றியுமந்தர்வேதியுங்கரிகால்வளவர்கோன்பெருமையும்வினைநோய்
செற்றிடுந்தீர்த்தமுதலியமூன்றின்சிறப்புமீண்டியம்பிடப்படுமால்.

(இ-ள்.) மற்றும் ஓர் ஆற்றூல் கிளந்திடும் திறத்தில்-வேறுமோர் புராணங்களிற் கூறும் பகுதியால், கயிலை மால் வரையின் உமையாள் கற்றை அம் சடையார் விழி இணை புதைத்து காஞ்சியில் பூசனை ஆற்றும் பெற்றியும் - பெரிய கயிலைமலையின் கணு

மையம்மை நெருங்கிய அழகிய சடாபாரத்தையுடைய இறைவரது இரண்டுதிருக்கண்களையும் புதைத்துக் காஞ்சித்திருப்பதியிற் பூசிக்கும் வரலாறும், அந்தர் வேதியும் கரிகால் வளவர்கோன் பெருமையும் - அந்தர் வேதியின் வரலாறும் கரிகாற்சோழனது பெருமையின் வரலாறும், வினைநோய் செற்றிடும் தீர்த்தம் முதலிய மூன்றின் சிறப்பும் ஈண்டு இயம்பிடப்படும் - அடைந்தோரது இருவினைப்பிணியையொழிக்குந் தீர்த்தந் தலமூர்த்தியென்னு மூன்றினது மான்மியவரலாறும் இவ்விடத்துக் கூறப்படும்.

கரிகாற்சோழன் கலிகாலத்திற் பிறந்தவனாதலால் கலிகால் வளவன் எனவும் வழங்கப்படும். "சிவபரஞ்சுடரை" என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் பொருட்டொடர் நிலைச்செய்யுள் வரலாறுகள் கூறப்படுதலால் பாவிகவணி. இதனால் இரண்டாங்காண்டத்தின் வரலாறு கூறப்பட்டன. (கூக)

பதிகம்-முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கூஉகூ.

## புராணவரலாற்றுப்படலம்.

இது புராணம்வந்த செய்தியின் சமூகம் என்னும் பொருள்மேல் நின்றது.

இதுவும் அது.

மிடல்கெழுதவத்தோர்வேள்விசெய்வினைக்குவேண்டியவேண்டியாங்குதவக்
கடவுளான்பயிலுங்காட்சியாலவியூண்கைக்கொளத்துதைந்தவானவராற்
றொடர்வுறுமோமப்புகைதழீஇச்சுரும்பருளர்தராப்பன்மலர்ப்பொழிலா
லடர்தருங்காமர்கற்பகவனமேயாயதுநைமிசாரணியம்.

(இ-ள்.) நைமிசாரணியம் மிடல் கெழு தவத்தோர் வேள்விசெய் வினைக்கு வேண்டிய வேண்டி யாங்கு உதவ கடவுள் ஆன் பயிலும் காட்சியால் - நைமிசாரணியமானது வலிமைமிக்க தவத்தினையுடைய முனிவர்கள் செய்யும் வேள்வித்தொழிலுக்கு வேண்டிய உபகரணங்களை வேண்டியபடி கொடுக்கக் காமதேனு சஞ்சரிக்குங் காட்சியாலும், அவி ஊண் கைகொள துதைந்த வானவரால் - அவியுணவைப்பெற நெருங்கிய தேவர்களாலும், தொடர்வுறும் ஓமம் புகை தழூவி சுரும்பர் உளர் தராத பன்மலர் பொழிலால் - தொடர்ந்த அவ்வேள்வியின் புகைசழுவுதலால் வண்டுகள் சஞ்சரியாத பலமலர்களையுடைய சோலைகளாலும், அடர் தரும் காமர் கற்பகவனமே ஆயது - நெருங்கிய விருப்பந்தருங் கற்பகவனமாகவே விளங்கியது.

கலியுகத்தோற்றத்தில் முனிவர்கள் பிரமன்பாற்சென்று யாங்கள் தவஞ்செய்தற்கு ஓரிடங்கூறுகவெனக் குறையிரப்ப, அப்பிரமன் தருப்பையால் ஓர் சக்கரஞ்செய்து இதுபோய் நின்றவிடத்து இருந்து தவஞ்செய்யக்கடவீரென்றுருட்ட அந்நேமி நின்று சம்பந்தமான இடம் நைமிசம் எனத் தந்தி தாந்தபதமா யவ்விடத்துக்கு வந்ததால் காரணப்பெயர். நேமியோய்ந்த இடம் எனவும் பொருள் கூறுவர். "தாமரைக்கிழவனுய்த்த தருப்பையினேமிதன்னால் - நாமமதொன்றுபெற்றநைமிசம்" எனக் காந்தத்திலும், இப்படலத்தில் "சிறகர்வண்டிமிரும்" எனவருஞ் செய்யுளாலும் உணர்க. புகையுள்ளவிடத்து வண்டுகள் மூசுதலின்மையால் புகைதழீஇச் சுரும்பருளர் தராவெனவும், வசிட்ட முனிவரும் வசித்தலால் வேள்விசெய்வினைக்கு வேண்டிய வேண்டியாங்குதவக் கடவுளான் பயிலுங்காட்சியால் எனவுங்கூறினர். வேண்டிய வினைமுற்றுப்பெயர். காமமருவு காமர் எனவந்தது விகாரம். இது கருவிகாரகவேதுவணி. (க)

தாதவிழ்கடுக்கைநறுந்தொடைமிலேச்சுந்தம்பிரானடியலதுணரா
மாதவரியற்றுமகவினைசிதைப்பவருகருந்தயித்தியரவர்தங்
காதுவெஞ்சாபவலிக்குடைந்தோடுங்காட்சியேகடுக்குமம்மகத்தீ
மீதுயர்ந்தண்டச்சுவர்த்தலமுரிஞ்சவிசும்பெழுநறும்புகைப்படலை.

(இ-ள்.) அ மகம் தீ மீது உயர்ந்து அண்டம் சுவர்த்தலம் உரிஞ்ச விசும்பு எழும் நறும்புகை படலை - அந்த யாகத்தீயின்மேலெழுந்துயர்ந்து அண்டங்களின் சுவர்த்தலமாகிய சக்கரவாளகிரியை யுரிஞ்சும்படி ஆகாயத்திலெழுந்த நறுமணங்கமழும் புகையின் திரட்சி, தாது அவிழ் கடுக்கை நறும் தொடை மிலைச்சும் தம்பிரான் அடியலது உணராத மாதவர் இயற்றும் மகவினை-மகரந்தத்தோடு மலர்ந்த கொன்றைமலராற்றொடுத்த நறுமணங்கமழு மாலையையணிந்த இறைவரது திருவடியன்றி மற்றொன்றையுணராத பெரியமுனிவர்கள் செய்யும் யாகத்தொழிலை, சிதைப்ப வருகரும் தயித்தியர் அவர் தம் காது வெம் சாபம் வலிக்கு உடைந்து ஓடும் காட்சியே கடுக்கும் - அழிக்கவருங் கரிய நிறத்தையுடைய அசுரர்கள் அம்முனிவர்களிடம் வருத்துங் கொடிய சாபவன்மைக்குத் தோற்றுப் புறங்கொடுத்தோடுங் காட்சியையே ஒத்துத்தோன்றும்.

வேள்விக்கு இறைவன் சிவபிரான் ஆதலால் தாதவிழ்கடுக்கை நறுந்தொடைமிலேச்சுந் தம்பிரானடியலதுணராமாதவர் எனவும், அம்முனிவர் செய்யும் வேள்விக்கு இடையூறுதேடுவோர அசுரர் ஆதலால் இயற்றுமகவினை தணப்பவருகருந்தயித்தியர் எனவுங்கூறினர். வேள்வியினின்றெழுந்து புறம்போந்த புகைமுனிவர் செய்யும் வேள்வியையழிக்கவந்த கரிய அசுரர்கள் அவர்களிடுஞ் சாபவலிக்குப் பயந்தோடுதலையே யொக்குமெனத் தேற்றேகாரந்தந்து கூறியதால் பண்புபற்றிவந்த நியமவுவமையணியும், வேள்விப்புகைக்குஞ் சக்கரவாளகிரிக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணியுங் கலந்துவருதலால் கலவையணி. (உ)

கருந்திரையளக்கரகடுடைத்தெழுந்தகனையிருள்பருகுவெங்கதிரோ
னிருந்தவர்வேள்விக்களத்தவிப்பாகமேற்பவந்தணுகுவோன்மான
மருந்தெனக்கிளைத்துவானுறநிவந்தவளம்பொழிற்கிளைகளைக்கரத்தாற் [ல்.
றிருந்துறவொதுக்கிக்குனிந்துபுக்குலாவிச்சேணிடைப்போய்நிமிர்ந்துறுமா

(இ-ள்.) கரும் திரை அளக்கர் அகடு உடைத்து எழுந்து கனை இருள் பருகு வெம்கதிரோன்-பெரிய அலைகளையுடைய கடலின்வயிற்றைக்கிழித்தெழுந்து மிக்க விருளைப்பருகுஞ் சூரியன், இருந்தவர் வேள்விக்களத்து அவிபாகம்ஏற்பவந்து அணுகுவோன் மான-பெரியதபோதனர்கள் செய்யும் வேள்விச்சாலையி லவிப்பாகத்தைப் பெறத்தானும் வந்து சேருவோனையொப்ப, மருந்து என கிளைத்து வான் உற நிவந்த வளம் பொழில் கிளைகளை-சல்லியகரணிமுதலிய நால்வகை மருந்தென்று சொல்லக்கிளைத்து ஆகாசத்தை யளாவவுயர்ந்த சோலையிலுள்ள மரத்தின்கிளைகளை, கரத்தால் திருந்துற ஒதுக்கி குனித்து புக்கு உலாவி சேண் இடை போய்நிமிர்ந்து உறும் - கிரணமாகிய கரங்களால் ஒதுக்கி வளைந்துபுகுந்துஅங்குலாவிச்சிறிதுதூரஞ்சென்று பின்புநிமிர்ந்துதோன்றுவான்.

மருந்து சல்லியகரணி, சந்தானகரணி, சமனியகரணி, மிருதசஞ்சீவனியென நான்குவகைப்படுதலால் மருந்துஎன்றதற்குச் சல்லியகரணி முதலிய நால்வகை மருந்து என்றாம்.

**சல்லியகரணி அத்திரசத்திரங்கைதைத்த புண்ணையாற்றுமருந்து. சந்தானகரணி துண்டு பட்ட அவயவத்தைப் பொருத்துமருந்து. சமனியகரணி விரணந்தழும்புகளை நீக்குமருந்து, மிருதசஞ்சீவனி உயிர்தருமருந்து.**

"சல்லியகரணி சந்தானகரணி - சமனியகரணி முதலிலுதித்த - மிருதசஞ்சீவனி மருந்து நால்வகைத்தே"

" தைத்தவத்திரஞ்சத்திரந்தணிக்கும்
மெய்த்தருமருந்தேசல்லியகரணி.

சந்துசெய்மருந்தேசந்தானகரணி.
விரணமூந்தழும்புநீக்கிமெய்வினைத்
தகைமைசெய்மருந்தேசமனியகரணி.
உயிர்தருமருந்தேமிருதசஞ்சீவனி" எனவரும் பிங்கலத்தால் உணர்க.

சூரியன் நைமிசாரணிய வழிவருதலை அவிப்பாகம்பெறக் கிளைகளையொதுக்கிப் புகுந்துவந்து சிறிது தூரஞ்சென்று ஆகாயத்தில் விளங்குவன் எனக் கவி அத்தியவசயித்து உவமையுருபுதந்து கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி. (ரு)

சிறகர்வண்டிமிரும்வட்டவாய்க்கமலச்செழும்பொகுட்டரசுவீற்றிருக்கு
மறைமுதற்கிழவன்முனிவரர்வேண்டவளைத்தனன்விடுந்தபுன்னேமி
யிறவுறுதின்றுமாயிடையுறைவதெனக்கவின்காட்டிடுந்தேத்தீ
யறைதரச்செறிந்துநறவமூற்றெடுக்குமரும்பெறன்மதுவிருல்வலயம்.

(இ-ள்.) தேனீ அறைதர செறிந்து நறவம் ஊற்றெடுக்கும் அரும்பெறல் மது இருல் வலயம்-தேனீக்களொலிக்க வுறைந்து தேனூற்றெடுக்காநின்றபெறுதற்கரிய தேனடையின் வட்டம், சிறகர்வண்டு இமிரும் வட்டவாய் கமலம் செழும் பொகுட்டு அரசு வீற்றிருக்கும் மறை முதல்கிழவன் - சிறகினையுடைய வண்டுகள் தேனுண்டொலிக்கும் வட்டவடிவாகிய வாயையுடைய தாமரையின்செழித்த பொகுட்டிற் படைத்தற்றொழிலைச் செய்ய நிகரின்றியிருக்கும் பிரமன், முனிவரர் வேண்ட வளைத்தனன் விடுத்த புல் நேமி இறவுறுது இன்றும் ஆயிடை உறைவது என்ன கவின் காட்டிடும் - முனிசிரேஷ்டர்கள் குறையிரப்ப வளைத்துவிடுத்த தருப்பையாலமைந்த சக்கரம் இப்பொழுதும் அவ்விடத்தில் வசித்தலைப்போல அழகைக்காட்டிப்பொலியும்.

இதன்வரலாறு முன்னர்க்காண்க அகரவீற்றின் முன்னன்றி யேனை யுயரீற்றின் முன்னும் அத்துச்சாரியை யொரோவழிவருமென " அத்தேவற்றே " என்னுஞ் தொல்காப்பியச்சூத்திரத்துள் நச்சினார்க்கினியர் விதித்தலின் தேன் ஈ என்பதில் னகரவீறுகெட்டு அத்துச்சாரியை பெற்றுத் தேத்தீயெனவந்தது. அங்குள்ள தேனடையானது பிரமன்விடுத்த நேமியானது இன்னும் அழியா தவகிருத்தலைப்போல் அழகுசெய்யும் எனக் கூறுதலால் பிறிதின்குணம்பெறலணி. (சு)

விரும்பியவிடபந்தாங்குதோற்றத்நால்விளங்கெரியுருவினிற்பூத்த
வரும்பணிகொண்டகாட்சியாற்பெரியவரையவணிருந்தவராக
விரும்புவியுய்யக்கோடலால்யாருமேத்திடும்பெற்றியாலுலவாப்
பெரும்பெயர்க்கயிலைக்கடவுளேபோலும்பிறங்கொளிநைமிசக்கானம்.

(இ-ள்.) பிறங்கு ஒளி நைமிசம் கானம்-விளங்குமொளியையுடைய நைமிசாரணியம், விரும்பிய இடபம் தாங்கு தோற்றத்தால் - யாவரும் விரும்பும் இடபவூர்தியால் தாங்கப்படுங் காட்சியாலும், விளங்கு எரி உருவினில்பூத்த அரும்பணிகொண்ட காட்சியால்-விளங்குந் தீயையொத்த திருமேனியிலமைந்த அரிய சர்ப்பாபரணத்தையணிந்த தோற்றத்தாலும், பெரிய வரை அவண் இரும் தவர் ஆக இரும்புவி உய்ய கோடலால்

மேருமலையை யவ்விடத்துப் பெரியவில்லாகப் பெரிய நிலவுலகு பிழைக்கவேந்துதலாலும், யாரும் ஏத்திடும் பெற்றியால்-எல்லோரும் வணங்குந் தன்மையாலும், (விரும்பிய இடபம் தாங்கு தோற்றத்தால்-யாவரும் விரும்பிய இடபராசியைத் தாங்குங் காட்சியாலும், விளங்கு எரி உருவினில்பூத்த அரும்பு அணி கொண்ட காட்சியால் - விளங்குந் தீநிறம்போல அரும்பிய அரும்பின் வரிசைகளைக்கொண்ட தோற்றத்தாலும், பெரியவரை அவண் இருந்தவர் ஆக இரும்புவி உய்ய கோடலால்-பெரியோரை யவ்விடத்துப் பெரிய தபோதனர்களாகப் பெரிய நிலவுலகம் பிழைக்கக் கொள்ளுதலாலும், யாரும் ஏத்திடும் பெற்றியால்-எவரும் வணங்குந் தன்மையாலும்,) உலவாத பெரும்பெயர் கயிலை கடவுளே போலும்-கெடாத புகழ்வாய்ந்த கயிலையிலெழுந்தருளிய சிவபெருமானையே யொக்கும்.

செம்மொழிச் சிலேடையும் பிரிமொழிச்சிலேடையுமாகவந்த ஏதுவுவமையணி.

திசைமுகனுந்தியுறவளைநேமிசேர்ந்திடுங்கொள்கையாலென்று
மசைவில்வானவர்க்குப்புரையவியமிழ்தமளித்தலாற்பூமணம்பெறலால்
வசைதபுகாட்சிக்கருநிறக்கருவிமழைமுகின்மேனிவந்தழகா
யிசைதலாற்சார்ங்கமேந்தியோனிகர்க்குமிணையிலாநைமிசக்காடு.

(இ-ள்.) இணையில்லாத நைமிசம் காடு-ஒப்பில்லாதநைமிசாரணியம்,திசைமுகன் உந்தி உற வளை நேமி சேர்ந்திடுங் கொள்கையால் - பிரமன் தமது உந்தித் தாமரையிற் றோன்றச் சங்கையுஞ் சுதரிசனமென்னுஞ் சக்கரத்தையு மேந்துங் கொள்கையாலும், என்றும் அசைவில் வானவர்க்கு புரை அவி அமிழ்தம் அளித்தலால்-எக்காலத்துந் தளர்ச்சியில்லாத தேவர்களுக்குயர்ந்த அமுதவுணவைக் கொடுத்தலாலும், பூமணம் பெறலால்-பூதேவியின் திருமணத்தைப் பெறுதாலும், கருநிறம் கருவி மழை முகில்வசைதபு காட்சிவந்த மேனி அழகாயிசைதலால்-கருநிறம்வாய்ந்த தொகுதியாகியமேகம்போலக் குற்றமற்ற காட்சிபோலமைந்த திருமேனியை யழகாய்ப் பொருந்துதலாலும் (திசைமுகன் உந்தி உறவளைநேமி சேர்ந்திடும் கொள்கையால் - பிரமன்செலுத்த வளைந்த தருப்பைப்புற் சக்கரஞ்சேர்ந்த கொள்கையாலும், என்றும் வானவர்க்கு புரை அவி அமிழ்தம் அளித்தலால்-எக்காலத்துந் தளர்ச்சியில்லாத தேவர்களுக்கு உயர்ந்த அவிப்பாகமாகிய அமிர்தத்தைக் கொடுத்தலாலும், பூமணம பெறலால்-பூவின்மணத்தைப் பெறுதலாலும், வசைதபுகாட்சி கருநிற கருவி மழை முகில்மேல் நிவந்து அழகாய் இசைதலால்-குற்றத்தினின்று நீங்கிய தோற்றத்தையுடைய கருநிறம வாய்ந்த தொகுதியாகிய மேகங்கள் மேலே உயர்ந்து அழகாய்ப்பொருந்துதலாலும்,) சார்ங்கம் ஏந்தியோன் நிகர்க்கும்-கோதண்டத்தையேந்திய திருமாலையொக்கும்.

இதுவும் அவ்வணி. (௬)

குலவுநால்வாய்கண்மருவலாலகலங்கொண்டமுந்நூல்வயங்குதலாற்
சலமறவேதமொழிதலால்வனத்துத்தாமரையிருக்கைமேவுதலாற்
பலபொறிச்சுடிகைப்பையராச்சுமந்தபாரவைகுறும்புடவியேமுதலா
மலர்தலையுலகமுழுதுமின்றளித்தவன்னலாநைமிசப்புறவம்.

(இ-ள்.) நைமிசம் புறவம் - நைமிசாரணியம், குலவு நால்வாய்கள் மருவலால் - விளங்கும் நான்கு திருமுகங்களைப்பொருந்துதலாலும், அகலம்கொண்ட முந்நூல் வயங்குதலால்-மார்பிற்கொண்ட முப்புரிநூல் விளங்குதலாலும், சலம் அற வேதம் மொழிதலால்-குற்றமற வேதங்களைக்கூறுதலாலும், வனத்து தாமரை இருக்கை மேவுதலால்-நீரி

லுள்ள தாமரையாகிய ஆசனத்திலிருக்கையினாலும் (குலவு நால்வாய்கள் மருவலால் விளங்கும் யானைகள் சஞ்சரித்தலாலும், அகலம்கொண்ட மூந்நூல் வயங்குதலால் - பரந்த மூன்று வேதங்களும் விளங்குதலாலும், சலம் அற எதம் ஒழிதலால்-பொய் வேரோடறக்குற்றம் நீங்குதலாலும், வனத்து தாவும் மரை இருக்கைமேவுதலால்-காட்டில் தாவிச்செல்லு மரையென்னும் மிருகங்களிருத்தலாலும்) பல பொறி சுடிகை பை அரா சுமந்த பரவை சூழ் புடவியே முதலாம் மலர் தலை உலகம் முழுதும் ஈன்று அளித்த வள்ளல் ஆம் - பல பொறிகளமைந்த உச்சிவாய்ந்த படத்தையுடைய ஆதிசேடன் சுமந்த கடல் சூழ்ந்த நிலவுலகமுதலாகிய பரந்த இடத்தையுடைய விண்ணுலகமுழுமையும் படைத்த பிரமனையொக்கும்.

இதுவும் அவ்வணி. (எ)

புகலுமிவ்வனத்தில்வசிட்டன்வேதாரணியன்புலத்தியன்றுருவாசன்
சுகன்வசுச்சிரவனாணிமாண்டவியன்சுனப்புச்சன்சமுவர்த்தன்மணிமே
சகன்சுனச்சேபனிரைக்குவன்சம்புதற்பரவாத்திரேயன்சௌ
நகமுனிபுலகனாசுவலாயனன்சமதக்கினிசங்கன்.

(இ-ள்.) புகலும் இவனத்தில் வசிட்டன் வேதாரணியன் புலத்தியன் துருவாசன் சுகன் வசுச்சிரவன் ஆணி மாண்டவியன் சுனப்புச்சன் சமுவர்த்தன் மணிமேசகன் சுனச்சேபன் இரைக்குவன் சம்பு தற்பர ஆத்திரேயன் சவுனகமுனி புலகன் ஆசுவலாயனன் சமதக்கினி சங்கன்-சொல்லப்படு மிந்த நைமிசாரணியத்தில் வசிட்டனும் வேதாரணியனும் புலத்தியனும் துருவாசனும் சுகனும் வசுச்சிரவனும் ஆணிமாண்டவியனும் சமுவர்த்தனும் மணிமேசகனும் சுனச்சேபனும் இரைக்குவனும் உருத்திரமூர்த்தியையே பரமாகக்கருதும் ஆத்திரேயனும் சவுனகனும் புலகனும் ஆசுவலாயனனும் சமதக்கினியும் சங்கனும்.

வடநூல் காஞ்சிமான்மியத்தில் சம்புதற்பர என்பதை முனிவர்க்கு விசேடமாகக்கொண்டிருத்தலால் சம்புதற்பரன் என ஒருவர் பெயராகக்கொண்டிருந்ததை விலக்கி நாமும் விசேடமாகக்கொண்டாம். (அ)

ரைவதன்குசுருவிந்தன்மாதேசனிலிகிதன்பராசரன்கற்கன்
கிருதுவக்கினிபன்பருப்பதனாசிகேதநாரதனசிகர்த்த
னுருருவிச்சுவாமித்திரன்குணிபரத்துவாசனுத்தாலகன்வாசச்
சிரவன்சாண்டிலியன்காசிபன்வாமதேவன்றாற்பியனிரசனியே.

(இ-ள்.) இரைவதன் குசுருவிந்தன் மாதேசன் இலிகிதன் பராசரன் கற்கன் கிருது அக்கினிபன் பருப்பதன் நாசிகேதன் நாரதன் அசிகர்த்தன் உருருவிச்சுவாமித்திரன் குணி பரத்துவாசன் உத்தாலகன் வாசச்சிரவன் சாண்டிலியன் காசிபன் வாமதேவன் தாற்பியன் இரசனி-இரைவதனும் குசுருவிந்தனும் மாதேசனும் இலிகிதனும் பராசரனும் கற்கனும் கிருதுவும் அக்கினிபனும் பருப்பதனும் நாசிகேதனும் நாரதனும் அசிகர்த்தனும் உருருவும் விச்சுவாமித்திரனும் குணியும் பரத்துவாசனும் உத்தாலகனும் வாசச்சிரவனும் சாண்டிலியனும் காசிபனும் வாமதேவனும் தாற்பியனும் இரசனியும்.

அசிகர்த்தன் என்றே யொருமுனிவனுக்குப் பெயராதலால் சிகாத்தன் எனப் பிழைபட்டதை அசிகர்த்தன் எனத்திருத்தினும். நாம் அச்சிட்ட காஞ்சிப்புராணத்தைத் திருத்தப்புகுந்த இயற்றமிழ்ப்புலவர் "வாழைப்பழம்" என வந்த இடத்து "வாழைபழம்" எனத் திருத்துவதுபோலத் திருத்தப்புகுந்தனரேயன்றி உலகோபகாரமாக முதனூலைக்கொண்டு இன்னோரன்னவற்றைத் திருத்தப்புகாமை யாதுகுறையோ அறியோம்.

**கண்ணுவன் முதலாமெண்ணருமுனிவர்கழிபெருஞ்சீர்த்தியர்மாசு
மண்ணியமனத்தார்பசுபதியடியார்வடிவெலாநீறுசண்ணித்த
புண்ணியர்மும்மைப்புண்டரநிரையாரக்கமாலிகையர்போர்விடையூ
ரண்ணல்வாழ்தலத்திற்பற்றினோரன்னானருச்சனையியற்றுமார்வத்தார்.**

(இ-ள்.) கண்ணுவன் முதலாம் எண்ணரும் முனிவர் கழிபெரும் சீர்த்தியர் மாசு மண்ணிய மனத்தார் பசுபதி அடியார் - கண்ணுவன்முதலிய அளவிறந்த முனிவர்களு மிக்க கீர்த்தியையுடையவருங் குற்றத்தினின்று நீங்கிய மனத்தையுடையவரும் சிவபெருமானடியவரும், வடிவு எல்லாம் நீறு சண்ணித்த புண்ணியர் மும்மை புண்டர நிரையார் அக்கமாலிகையர் போர் விடையூர் அண்ணல் வாழ் தலத்தில் பற்றினோர் அன்னான் அருச்சனை இயற்றும் ஆர்வத்தார் - தமது திருமேனியெல்லாம் விபூதி உத்தூளிதஞ்செய்த சிவபுண்ணியத்தை யுடையவரும் திரிபுண்டரக்கீற்றையுடையவரும் உருத்திராக்கமாலையையுடையவரும் போர்த்தொழிலையுடைய இடப ஊர்தியைச்செலுத்தும் இறைவர் வாழுந் தலத்திற் பற்றுடையவரும் அவ்விறைவரது அருச்சனையைச் செய்யும் விருப்பத்தினையுடையவரும்.

விபூதி, உருத்திராக்கந்தரித்தல் சிவதலங்களிலன்புடைமை சிவார்ச்சனை இவைகள் சிவபுண்ணியமாதலால் புண்ணியத்தர் என்றார். ஆணவமுதலிய மலத்துன்பங்களை நீறுபடுத்தலால் விபூதிக்கு நீறு எனவந்தது காரணப்பெயர். இங்குள்ள முனிவர்கள் வானப்பிரத்தம், சந்நியாசம் என்னும் நிலையையுடையவர் ஆதலால் வடிவெலாம்நீறு சண்ணித்த புண்ணியமுனிவர் எனவும் மும்மைப் புண்டரநிரையார் எனவும், உருத்திராக்கம் நேத்திரமாதலால் அக்கமாலிகையார் எனவுங்கூறினர்.

ஆணவமுதலிய மலத்துன்பங்களை நீறுபடுத்துவது என்பதை—

"அருத்தமதாவதுநீறு ... மறப்பதுநீறு - வருத்தந்தணிப்பதுநீறு வானமளிப்பதுநீறு" எனவருந் திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகத்திலும்,

"மாயனவ்வழிமுதல்வனை நோக்கி மாதியான் - நீயெவன்சொலென்றறிவயர்ந்தொாத்தலுநிமலன் - ஆயமாயையினடைந்தனனிவனெனவருளித் - தூயநீறளித்தவனுளமாயையைத்துடைத்தான்" எனவரும் உபதேசகாண்டத்திலும்,

வானப்பிரத்தம் சந்நியாசமென்னும் நிலையுடையோர்கள் விபூதியுத்தூளனமும் திரிபுண்டரமுமுடையவர் என்பதை—

"ஓமக்கருவியுதவாதேவெளிரக்கினியையான்மாவிற்
சேமத்துறவாரோபணமேசெய்தல்வேண்டுமில்லறத்தாற்
காமற்புதமந்திரவிதிகொண்டணிநீறுத்தூளனஞ்செய்தல்
நாமப்பவநோயறத்துணிக்குநன்மைத்திரிபுண்டரந்தரித்து" எனவும்,

"சிகையுபவீதஞ்செங்கல்லுடையாடைதிரிதண்டங்கமண்டலந்தரித்தல்
தகைகெழுநீற்றுத்தூளனஞ்சருவாங்கமுந்தகச்செய்திடல்விதியின்
வகையொளிர்திரிபுண்டரந்தரித்திடுதல்வயங்குகாயத்திரிசெபித்தல்
பகையரனொரித்தோனருட்குறிப்பூசைபத்தியிறபுரிந்திடன்மரபால்" எனவும்

வருஞ் சூதசங்கிதையாலும்,

உருத்திரமூர்த்தி கண்ணிற்றோன்றியதென்பதை—

தேவர்கள் திரிபுரத்தசுரர்களாலே தங்களுக்கு நிகழ்ந்த துன்பத்தை விண்ணப்பஞ்செய்துகொள்ளத் திருக்கைலாயபதி ஆயிரந்தேவவருடம் தம்முடைய மூன்று திருக்கண்களையு மலர்த்திக்கொண்டிருப்ப, அவைகளினின்றும் நீர்பொழிந்தன; சூரியருப

மாகிய வலக்கண்பொழிந்த நீரிலே பன்னிரண்டு ருத்திராக்ஷமரமும், சந்திரரூபமாகிய இடக்கண்பொழிந்த நீரிலே பதினாறு ருத்திராக்ஷமரமும், அக்கினிரூபமாகிய நெற்றிக் கண்பொழிந்த நீரிலே பத்துருத்திராக்ஷமரமும் உதித்தன எனவுங்கூறுஞ் சைவசமயத் திருக்குறளாலும் உணர்க. (கo)

அங்கமுமறையுந்தெளிந்தவர்வேதமந்தித்தவறிவினர்விமலர்
தங்குமஞ்செழுத்தேகிளப்பவர்பொறியைத்தடுத்துயர்ந்தவர்மகமனைவி
செங்கனலோடுமுறைபவர்தமைப்போற்சிற்றுயிரனைத்தையுங்காணும்
பொங்குபேரருளினெல்லையரினையோர்பொலிவுறவொழுங்குடன்குழுமி.

(இ-ள்.) அங்கமும் மறையும் தெளிந்தவர் வேதம் அந்தித்த அறிவினர் விமலர் தங்கும் அஞ்செழுத்தே கிளப்பவர் பொறியை தடுத்து உயர்ந்தவர் - ஆறங்கங்களையும் வேதங்களையுந் தெளிந்தவரும் வேதத்தோடு சம்பந்தித்த அறிவுடையவருஞ் சிவபெருமானது ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையே யுச்சரிப்பவரும் ஐம்பொறியை வென்றுயர்ந்தவரும் மக மனைவி செம் கனலோடும் உறைபவர் - தமது புத்திரரோடும் பத்தினிமாரோடும் வேள்வியோம்புந் தொழிலோடும் வசிப்பவரும், தம்மைபோல் சிற்றுயிர் அனைத்தையும் காணும் பொங்குபேர் அருளின் எல்லையர் இனையோர் பொலிவுற ஒழுங்குடன் குழுமி- தம்மைப்போலச் சின்னுட்களையுடைய உயிர்முழுமையு மொப்பக்காணு மிக்க பெரிய அருளின் எல்லையையுடையவரும் ஆகிய இத்தன்மையையுடையோர் விளங்க ஒழுங்கோடு நெருங்கி.

அங்கம் என்றது சிட்சை, வியாகரணம், சந்தம், நிருத்தம், சோதிடம், கற்பம் என்ற ஆறனையும். சிட்சை வேதத்தினுச்சாரலக்ஷணத்தை யுணர்த்துவது. வியாகரணம் வேதத்தின் பதலக்ஷணத்தை யுணர்த்துவது, சந்தம் வேதத்தில் உக்தைமுதலிய சந்தோபேதங்களுக்கு அக்ஷரசங்கியை கற்பிப்பது, நிருத்தம் வைதிகச்சொல்லாராய்ச்சி, சோதிடம் நாரணீயம் வராகமுதலியன. இவை வைதிககருமத்துக்குக் காலமுணர்த்துவது, கற்பம் போதாயநீயம், பாரத்துவாசம, ஆபத்தம்பம், ஆத்திரையமுதலிய சூத்திரத்திலிருந்து வைதிககருமத்தைப் பிரயோகிக்கு முறையைக் கற்பிப்பது எனவரும் இவ்வாறனையும், இது ஒருவகை. வேதத்தினுட்கிடையை யறிந்தவர் என்பார் வேதமந்தித்தவறினர் எனவும், வேதத்திலுள்ள திருமந்திரங்களெல்லாவற்றிலுஞ் சிறந்ததென்பார் விமலர் தங்குமஞ்செழுத்தேகிளப்பவர் எனவும், அவ்வுச்சரிப்பால்வரும் பயன் இதுவென்பார் பொறியைத்தடுத்துயர்ந்தவர் எனவும், இதுகாறும் இருவகைநிலையோர்க்கும் பொது, இனி வானப்பிரத்த நிலையுடையோர்க்கு என்பார் மகமனைவி செங்கனலோடும் உறைபவர் எனவும், சீவகருணையுடையவர் என்பார் தமைப்போற் சிற்றுயிரனைத்தை யுங்காணும் - பொங்குபேரருளினெல்லையர் எனவுங்கூறினர்.

திருமந்திரங்களெல்லாவற்றிலுஞ் சிறந்ததென்பதையும், அதனை யுச்சரிப்பதால் வரும் பயனையும்—

"ஓதுமந்திரங்கட்கெல்லாமுயர்ச்சியுமுயர்ந்துநின்ற
நீதிநல்மறையின்சாரமாகுமால்சிவன்றனன்பர்
ஏதமின்முத்திவீட்டையெய்திடக்கொடுக்குமென்றும்
ஆதியாயுறையுமீசனுருவமாயமருமன்றே" எனவரும் வாயுசங்கிதையாலும் உணர்க. (கக)

கறைமிடற்றிறையைக்கண்ணுறக்காணுங்காட்சியாங்கணிச்சியினல்லான்
மறவினைக்கனிகண்மல்கியவுலகவாழ்வெனுமச்சுமாமரத்தை

யிறுமுறைகாண்பதரிதெனத்துணிந்தாரிதுபெறுமுபாயமற்றெவனென்
றறிவினினெடும்போதாய்வுழியவருளருந்ததிகொழுநனீதறையும்.

(இ-ள்.) கறை மிடறு இறையை கண்ணுற காணும் காட்சி ஆம் கணிச்சியின் அல்லால் - காளகண்டத்தையுடைய இறைவனை மனக்கண்ணுறப்பொருந்தத் தரிசிக்குங் காட்சியாகிய மழுவாயுதத்தாலல்லாமல், மறவினை கனிகள் மல்கிய உலகவாழ்வு என்னும் நச்சு மாமரத்தை இறும் முறை காண்பது அரிதென்ன துணிந்தார் - பாபத்தொழில்களாகிய கனிகள் நெருங்கிய பிரபஞ்சவாழ்க்கையென்னும் நச்சுமரத்தினைத்தறிக்கு முறையினைக் காண்பதரிதென்று மனந்துணிந்த அவர்கள், இது பெறும் உபாயம் எவன் என்று அறிவினில் நெடும்போது ஆய்வுழி அவருள் அருந்ததி கொழுநன் ஈது அறையும்- இதனைப்பெறும் உபாயம் யாதென்று தமதறிவால் நெடும்பொழுது ஆராயுமிடத்து அம்முனிவருள் அருந்ததிகணவராகிய வசிஷ்டமுனிவ ரிதனைக்கூறுகின்றார்.

ஆய்வுழி "செல்வுழிச்செல்க" என்றாற்போல வினைத்தொகையில் வந்தமையால் வகரத்தோற்றம் உடம்படுமெய் அன்றெனக்கொள்க. உலகவாழ்வை நச்சுமரம் என்றமையால் அதனால்வரும் பாவங்களை மறவினைக்கனிமல்கியவெனவுருவகஞ்செய்தும், சிவதரிசனத்தாலன்றி அதனைப்போக்கல் அரிதாதலால் காட்சியாங்கணிச்சியினல்லால் இறுமுறை காண்பதரிதெனவுங் கூறினார்.

சிவதரிசனையால் வரும் பயனை—

" நிறைமொழித்தவப்பிருகுவோதியசாபமெய்திநெஞ்சழுங்கியேங்குபு
நறைமலர்த்துழாய்ப்படலைமார்பினுடிைணிதன்றீர்வியாதெனப்
பிறைமுடிச்சடைப்பிரானுளன்மனுப்பிரமமைந்துளயாமுளேமினிக்
குறையெமக்கெவனென்றுதேறினன்கொழிதிரைப்புனற்கச்சியெய்தினன்" எனவரும் இப்புராணத்தால் அறிக. (கஉ)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

தவமேமேலாநெறியாகுந்தவமேசிவனார்தமைக்காட்டுந்
தவமேதுறக்கமடைவிக்குந்தவமேநரனைத்தேவாக்குந்
தவமேவலாரிதிசைக்கிறைவர்சார்ங்கனயனுமாக்குவிக்குந்
தவமேகிடைப்பிற்கிடையாததுண்டோவென்றுசாற்றினனால்.

(இ-ள்.) தவமே மேலாம் நெறியாகும் தவமே சிவனார் தம்மை காட்டும் - தவமே மேலாகிய மார்க்கமாகும் அத்தவமே சிவபெருமானார் திருக்கோலத்தை யுணர்த்தும், தவமே துறக்கம் அடைவிக்கும் தவமே நரனை தே ஆக்கும் - அத்தவமே சுவர்க்கலோகத்தை யடைவிக்கும் அத்தவமே நரனைத் தேவனாகச்செய்யும், தவமே வலாரி திசைக்கு இறைவர் சார்ங்கன் அயனும் ஆக்குவிக்கும் - அத்தவமே இந்திரனு மற்றைத் திசைக்காவலருந் திருமாலும் பிரமனுமாகச்செய்விக்கும், தவமே கிடைப்பில் கிடையாதது உண்டோ என்று சாற்றினன் - அத்தவமே கைகூடில் கைகூடாததொன்று உண்டோவென்று கூறினார்.

மாதனம், வாசிகம், காயிகம் எனத் தவம் மூன்றுவகைப்படுதலால் அவற்றைத் தொகுத்துத் தவம் எனச் சாதியொருமைப்படக்கூறினார். மானததவங்கள் தருமதானகளின்மே லறிவைச்செலுத்தல், சீவகருணை, பொறுமை, இன்சொற்சொல்லுதல், மௌனமாகச் சிவத்தைத் தியானித்தல், பஞ்சேந்திரியநிக்கிரகங்கள் முதலியன. வாசிகதவங்கள் ஸ்ரீபஞ்சாக்கரங்களை யுச்சரித்தல், பஞ்சப்பிரம மகாமந்திரங்களையும் உபநிடதபாகங்களையும் ஓதுதல், சதவுருத்திரமந்திரங்களை யுச்சரித்தல், தோத்திரங்கூறுதல், தருமங்

கூறுதல் முதலியன. காயிகதவங்கள் சிவபெருமானை யர்ச்சித்தல், திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்தல், சந்நிதியிற்சென்று வணங்கல், சிவதலங்களுக்குச்செல்லுதல், திருப்பணிமுடித்தல், தீர்த்தயாத்திரை முதலியன.

"மானதமேவாசிகமேகாயிகமேயெனவகுத்த
ஈனமில்சீர்த்தவமூன்றுமிவற்றின்மானதந்தரும
தானமிசைமதிவைத்தறயவுபொறைமெய்சிவனை
மோனமுறத்தியானித்தலேந்தடக்கல்முதலனந்தம்.

வாசிகமைந்தெழுத்தோதன்மனுப்பஞ்சசாந்திமறை
பேசுசதவுருத்திரந்தோத்திரமுரைத்தல்பெருந்தருமம்
காசகலவெடுத்தோதன்முதலனந்தங்காயிகங்கள்
ஈசனருச்சனைகோயில்வலஞ்செய்கையெதிர்வணங்கல்.

திருத்தனுறைபதிபலபோய்ப்பணிதல்பணிநிறைவேற்றல்
திருத்தன்முடிநதியாதிதீர்த்தயாத்திரைபோய்மெய்
வருத்தமுறவாடலிவைமுதற்பலவவ்வகைமூன்றில்
பொருத்தமுறுகாயிகங்கள்சிறந்தனவிப்புண்ணியத்துள்" எனவருந் திருவிளையாடற்புராணத்தால் அறிக. (கரு)

அறமேமறங்கண்முழுதழிக்குமறமேகடவுளுலகேற்று
மறமேசிவனுக்கொருவடிவமாகுஞ்சிவனைவழிபடுவோர்க்
கறமேயெல்லாப்பெரும்பயனுமளிக்கும்யார்க்குமெவ்விடத்து
மறமேயச்சந்தவிர்ப்பதெனவறைந்தான்சாதாதபமுனிவன்.

(இ-ள்.) சாதாதப முனிவன் அறமே மறங்கள் முழுது அழிக்கும் அறமே கடவுள் உலகு ஏற்றும் - அவருள் சாதாதபமுனிவர் தருமமே பாதகங்கள் முற்றையும் வேரோடறுக்கும் அத்தருமமே விண்ணுலகிற்செலுத்தும், அறமே சிவனுக்கு ஒருவடிவம் ஆகும் சிவனை வழிபடுவோர்க்கு அறமே எல்லாம் பெரும்பயனும் அளிக்கும் - அத்தருமமே சிவபெருமானுக்கு ஒருவடிவமாகும் அச்சிவபெருமானைப் பூசிப்பவர்க்குத் தருமமே யெல்லாப் பெரும்பயனையுந் தாராநிற்கும், யார்க்கும் எவ்விடத்தும் அறமே அச்சம் தவிர்ப்பது என்ன அறைந்தான் - எவர்க்கும் எவ்விடத்திலும் அத்தருமமே பகைமுதலியனவற்றால் வரும் அச்சத்தைப் போக்குவதென்று கூறினார்.

பலவகைப்பட்ட அறங்களையும் சிவபிரதிட்டைமுதலியன செய்தலாகிய மேம்பட்ட சிவதருமத்தையுமே அறம் எனக்கொள்க. சிவபெருமானுக்கு அறமே திருவுருவம் என்றதை "அறவாழியந்தணன்றாள்சேர்ந்தார்க்கல்லாற் - பிறவாழிநீந்தலரிது" என்னுந் திருக்குறளாலும், "அறவுருவனலவாயரனுமஞ்செவிமடுத்தால்" எனவருந் திருவிளையாடற்புராணத்தாலும் உணர்க. அறச்செயலையுடையோர்க்கு அச்செயலே அவர் தேடிய பாவமுற்றையும் ஒழிக்குமாதலால் அறமே மறங்கண் முழுதளிக்கும் எனவும், அறத்தால் சுவர்க்காதிபோகங்களுளவாதலால் அறமே கடவுளுலகேற்றும் எனவும், பிறர்செல்வங்கண்டாற் பொறாமையும், புலன்களின்மேற்செல்லும் ஆசையும், அவை காரணமாகவரும் கோபமும், அதுபற்றிவருங் கடுஞ்சொல்லுமாகிய இந்நான்குமொழிதலே அறம் ஆதலில் இந்த அறத்தையுடையார்க்கேயாவருங்கீழ்ப்பட்டு நடப்பார்களாதலால் அறமே யச்சந்தவிர்க்குமெனவுங்கூறினார்.

அறமே மறங்கண் முழுதழிக்கும் என்றதை—

"விளக்குப்புகவிருண்மாய்ந்தாங்கொருவன்
தவத்தின்முன்னில்லாதாம்பாவம் - விளக்குநெய்

தேய்விடத்துச்சென்றிருள்பாய்ந்தாங்குநல்வினை
தீர்விடத்துநிற்குமாந்தீது'' எனவரும் நாலடியாரிலும்,

அறமே கடவுளுலகேற்றும் என்றதை—

"சிறப்பீனுஞ்செல்வமுமீனுமறத்தினூஉங்
காக்கமெவனோவுயிர்க்கு" எனவும்,

நான்கு தீக்குணங்களையும் ஒழித்தலே அறம் என்றது—

" அழுக்காறவாவெகுளியின்னாச்சொனான்கு
மிழுக்காவியன்றதறம்" எனவும் வருந் திருக்குறளாலும் அறிக. (கசு)

கொடையேயெவர்க்குமெப்பேறுங்கொடுக்குநெறியிற்பிறழாத
கொடையேயாருந்தன்வழியினொழுகச்செய்யுங்குறைதீர்ந்த
கொடையேபகையையுறவாக்குங்குலவும்பூதமனைத்தினையுங்
கொடையேபுரக்குமென்றுள்ளங்கொள்ளப்புகன்றான்கவுதமனே.

(இ-ள்.) கௌதமன் கொடையே எவர்க்கும் எ பேறும் கொடுக்கும்-(அவருள்) கௌதமமுனிவர் கொடைத்தொழிலே எல்லோருக்கு மெந்தப்பயனையுங்கொடுக்கும் நெறியில் பிறழாத கொடையே யாரும் தன் வழியின் ஒழுகச்செய்யும் - நன்னெறியினின்றுந் தவறாத அக்கொடையே எவருந் தன்வழியினின்று ஒழுகச்செய்யாநிற்கும், குறை தீர்ந்த கொடையே பகையை உறவு ஆக்கும் - நிறைந்த அக்கொடையே பகைவரை உறவினராகச்செய்யும், குலவும் பூதம் அனைத்தினையும் கொடையே புரக்கும் என்று உள்ளம் கொள்ள புகன்றான் - விளங்கும் எல்லா உயிர்களையும் அக்கொடையே யோம்புமென்று மனங்கொள்ளக்கூறினார்.

பலவகைப்பேற்றிலும் முத்திப்பேறும் ஒன்றாதலால் எப்பேறுங்கொடுக்கும் எனவும், கொடுப்போன் வழிப்பட்டது உலகமாதலால் கொடையே யெவருந் தன் வழியினொழுகச்செய்யும் எனவும், பகைவரை நட்பினராக்குதலுங் கொடையேயாதலால் பகையையுறவாக்கும் எனவும், யாவரையும் ஓம்புதலால் பூதமனைத்தினையுங் கொடையே புரக்கும் எனவுங்கூறினார்.

முத்திப்பேற்றையுந் தரும் என்றதை—

" இழிந்தமாந்தர்கைப்பொருள்களுமிகபரத்தாசை
கழிந்தயோகியர்கைப்படிற்றூயவாய்க்களங்கம்
ஒழிந்தவாறுபோல்'' எனத் திருவிளையாடலிலும்,

" உறக்குந்துணையதோராலம்வித்தீண்டி
இறப்பநிழற்பயந்தாஅங் - கறப்பயனுந்
தான்சிறிதாயினுந்தக்கார்கைப்பட்டக்கால்
வான்சிறிதாய்ப்போர்த்துவிடும்'' எனவும்,

உலகம் கொடுப்போர் வழிப்படுதல் முதலியவற்றை—

" பெயற்பான்மழைபெய்யாக்கண்ணுமுலகஞ்
செயற்பாலசெய்யாவிடினுங் - கயற்புலால்
புன்னைகடியும்பொருகடற்றண்சேர்ப்ப
வென்னையுலகுய்யுமாறு'' எனவும் நாலடியாரிலும் வருதல் காண்க. (கஎ)

மெய்யேசிறந்தபெருநலமாமெய்யேயெவையுநிலைபெறுத்து
மெய்யாலழல்கால்கதிர்பிறவுந்தத்தந்தொழிலின்விலகாவா

மெய்யேயெவைக்குமிருப்பிடமாமெய்யேமெய்யேசிவமாகு
மெய்யேபிரமபதமுமெனப்புகன்றான் வினைதீர்காசிபனே.

(இ-ள்.) வினைதீர் காசிபன் - இருவினையினின்று நீங்கிய காசிபமுனிவர், மெய்யே சிறந்த பெருநலமாம் மெய்யே எவையும் நிலைபெறுத்தும் - உண்மையே மேம்பட்ட பெரிய இன்பத்தைத்தரும் அவ்வுண்மையே எப்பொருளையும் நிலைபெறச்செய்யும், மெய்யால் அழல் கால் கதிர் பிறவும் தத்தம் தொழிலின் விலகாவாம்-அவ்வுண்மையால் தீயும் வாயுவும் சந்திரசூரியர்முதலிய மற்றப்பொருள்களுந் தத்தமக்குரிய தொழிலினின்று விலகாவாம், மெய்யே எவைக்கும் இருப்பிடம் ஆம் மெய்யே மெய்யே சிவம் ஆகும் மெய்யே பிரமபதமும் என்ன புகன்றான் - அவ்வுண்மையே எப்பொருளும் இருத்தற்கு இடமாகும் அவ்வுண்மையே உண்மையாகச் சிவமாகும் அவ்வுண்மையே பிரமவுலகமென்றுங்கூறினார்.

மெய்கூறுதலால் எல்லா அறங்களும் தலைப்படுதலில் மெய்யே சிறந்த பெருநலமாம் எனவும், மெய்மையால் இம்மைக்குவேண்டிய புகழு மறுமைக்குவேண்டிய அறமுங் கைகூடுதலால் மெய்யே யெவையு நிலைநிறுத்தும் எனவும், மெய்யொன்றுண்மையால் தீ முதலிய பொருள்களுந் தத்தம் நிலைவழுவா துலவச்செய்தலால் அழல்கால் கதிர்பிறவுந் தத்தந் தொழிலின் விலகாவாம் எனவும், இறைவன் கூறிய வேதாகமங்களின் பொருள் மெய்யே ஆதலால் மெய்யேயெவைக்கு மிருப்பிடமாமெனவும், சிவபெருமானுக்குத் திருவுருவம் உண்மையறிவானந்தமாதலால் மெய்யே மெய்யே சிவமாகும் எனவும், பிரமனது உலகம் சத்தியலோகமாதலால் மெய்யே பிரமபதமும் எனவுங்கூறினார்.

எல்லா அறங்களுந் தலைப்படும் என்றதை—

"பொய்யாமைபொய்யாமையாற்றினறம்பிற
செய்யாமைசெய்யாமைநன்று" எனவும்,

இம்மைக்கு வேண்டிய புகழையு மறுமைக்கு வேண்டிய அறங்களையுந்தரும் என்றதை—

"பொய்யாமையன்னபுகழில்லையெய்யாமை
எல்லாவறமுந்தரும்" எனவும்,

இறைவன் கூறிய வேதாகமங்களின் பொருள் மெய்யே என்றதை—

"யாமெய்யாக்கண்டவற்றுளில்லையெனைத்தொன்றும்
வாய்மையினல்லபிற" எனவுந் திருக்குறளில் வருதல் காண்க. (கசு)

எச்சமொன்றேயிருமையினுமேலாமிமையோர்க்குவப்பாவ
தெச்சமொன்றேமகத்திறையாமெம்மான்விழையப்படுவதுவு
மெச்சமொன்றேநனிசாலச்சிறந்தபொருளுமிருங்கரும
வெச்சநிகர்வேறில்லையெனப்பரத்துவாசனியம்பினனால்.

(இ-ள்.) பரத்துவாசன் எச்சம் ஒன்றே இருமையினும் மேலாம் - அவருள் பரத்துவாச முனிவர் வேள்வியொன்றே இம்மையினு மறுமையினு மேன்மையைத்தரும், இமையோர்க்கு உவப்பாவது எச்சம் ஒன்றே - தேவர்களுக்கு மகிழ்ச்சி தருவது வேள்வியொன்றே, மகத்து இறையாம் எம்மான் விழையப்படுவதும் எச்சம் ஒன்றே - வேள்விக்கிறைவனாகிய எமது பெருமான் விரும்பப்படுவதும் அவ்வேள்வியொன்றே, இருங் கருமம் எச்சம் நிகர் நனி சால சிறந்த பொருளும் வேறு இல்லை என்ன இயம்பினன் - பெருமைவாய்ந்த கருமமாகிய அவ்வேள்விக்கொப்பாக மிகவுஞ் சிறந்த கருமம் வேறில்லையென்று கூறினார்.

இம்மையிலு மறுமையிலுந்தான் கருதியவற்றையெல்லாந் தருதலால் எச்சமொன்றே யிருமையிலுமேலாம் எனவும், தேவர்களுக்கு அவியுணவூட்டுதலால் இமையோர்க்குவப்பாவ தெச்சமொன்றேயெனவும், வேள்விக்குத்தலைவனாகிய சிவபெருமானுக்கு அவ்வேள்வியே பூசையாதலால் எம்மான் விழையப்படுவதும் எச்சமொன்றேயெனவும், ஞானவேள்வி, கருமவேள்வி யென்னும் இரண்டனுள் கருமவேள்வி காமியம், நித்தியம், நைமித்தியம் என மூவகைப்பட்டு எல்லாச்சற்கருமங்களுள்ளும் சிறந்ததாதலால் எச்சம் நிகர்நனிசாலச் சிறந்த பொருள் வேறில்லையென்னவெனவுங்கூறினார்.

இம்மை மறுமையிற்கருதியனவெல்லாந் தருமென்றது—

நோயினை யொழிக்கவேண்டில் எள்ளினாலும், வறுமையை யொழிக்கவேண்டில் நெய்யாலும் பாலாலும் தாமரைப்பூவாலும், வசியம் வேண்டில் பிச்சிப்பூவாலும், யாருந் தன்னை வணங்க விரும்பில் அலரிப்பூவாலும், பகைவரை யோட்டவிரும்பில் காரெள்ளெண்ணெயாலும், தமது மனத்தை யடக்கவேண்டில் தேனினாலும், அட்டமாசித்தியை விரும்பில் பாலினாலுந் தயிரினாலும் நெய்யினாலும் ஒருவகைக் கோதுமையினாலும், அரிசியினாலும், சோற்றினாலும், உபசாந்தி, வசியம், பகைவர்கள் சாய வெல்லுதலுமாகிய இவற்றை விரும்பில் வில்வத்தாலும் வேள்வியில் ஆகுதிபெய்யில் இவைகளை,

“ நோயினையொழிக்கவேண்டிடினெள்ளானுடிவரும்வறுமைதான்றீர்க்கத்
தூயநெய்திம்பால்தாமரைப்போதாற்சோர்விலாவசியமேவேண்டின்
வாய்விரிபிச்சிப்பூவினாற்றன்பால்யாரையும்வணக்கிடவேண்டில்
ஆயிதழலரிப்பூவினாலழலிலாகுதிபெய்திடவேண்டும்.
பகைவரையோட்டவேண்டிடிற்காரெள்ளெண்ணெயாற்பதைப்பறவடக்கம்
மிகவுளம்வேண்டிற்றேனினால்கடுகால்வீழ்த்திடவேண்டிலுள்ளியினால்.
பாலினாற்றயிரானெய்யினாற்றேனால்யவையினாலரிசியாற்பாங்காய்
எல்வுறுசோற்றுலோரன்கிபற்றிவெய்துமால்சித்திவில்வத்தால்
சால்வுறவோடஞ்செபசிடிற்சாந்திவசியநற்பொருள்பகைசாயத்
தோல்விசெய்திடுதவெய்துமாலென்னமுன்னைநாலுருத்துரைத்திடுமால்” என வரும் வாயுசங்கிதையாலும்,

சிவபிரானுக்கு வேள்விபூசையென்றலை—

“ பொலிதிருப்பெயரிற்பொருளினிலுயர்ச்சிபூண்டுமாதேவனென்றேவன் - மலியருளோடிருக்கின்றுனவனேமகங்கள்யாவினும்மேவராலும் - நலியறவாராதனைசெயப்படுவோனனிதுரைத்தலென்முரணி - வலியுடைத்தக்கன்றலையிழந்தடுத்தவானருங்குறைந்தியாரறியார்” எனவும்,

கருமயாக மூன்றுவகைப்படுதலை—

“ தரைகொள்காமியமேதயங்குநித்தியமேசாற்றுநைமித்தியமேயென் - றுரைசெய்காயிகநல்யாகமூவகைத்தால்” எனவருஞ் சூதசங்கிதையிலும் உணர்க. (௧௭)

மகமேமேலாங்கதியாக்குமகவானுலகந்தனைவெல்லு
மகவின்மகவான்முடிவின்மையெய்துமகவின்மகவனிந்த
மகவான்மேலைப்பதமுறுந்தென்புலத்தார்கடனைமாற்றுவது
மகவானன்றியில்லையெனவகுத்நான்மறைநிந்துக்கண்ணுவனே.

(இ-ள்.) கண்ணுவன் மகவே மேலாம் கதி ஆக்கும் மகவான் உலகம் தனைவெல்லும் - (அவருள்) கண்ணுவமுனிவர் புத்திரப்பேறே மேன்மையாகிய முத்தியைத்த

ரும் இந்திரனது பதவியைக் கீழ்ப்படுத்தும், மகவின் மகவால் முடிவின்மை எய்தும் - தனது புத்திரனது புத்திரனாகிய பௌத்திரனால் அழியா இன்பம் வாய்க்கும், மகவின் மகவு அளித்த மகவால் மேலே பதம் உறும் - தனது புத்திரனது புத்திரன் பெற்ற புத்திரனாகிய நப்தாவால் சிவபதங் கைகூடும், தென்புலத்தார் கடனை மாற்றுவதும் மகவான் அன்றி இல்லை என்ன தெரித்து வகுத்தான் - பிதிர்க்கடனை மாற்றுவது அப்புத்திரராலன்றி வேறில்லையென்று ஆராய்ந்து கூறினார்.

புத்திரனால் மோட்சங் கைகூடுதலும், இந்திரபதவி பெறுதலும் உளதாதலால் மகவே மேலாங்கதியாக்கு மகவானுலகந்தனைவெல்லும் என்றார்.

“ எழுபிறப்புந்தீயவைதீண்டாபழிபிறங்காப்-பண்புடைமக்கட்பேறின்” எனவருந் திருக்குறளாலும், “ இந்தவுலகிற்காமுதவியியற்றுதொழில்கள்பலசெய்யும்-மைந்தன்வேண்டுமெனவிருப்போன்மக்கட்பதடியாகுவான் - அந்தவுலகிற்காவிருப்போனறங்கூர்மகனுமத்துவிதா-னந்தமுதவுமகவிருப்போன்ஞானியாகுமென்றெண்ணி” எனவரும் பிரபுலிங்கலீலையாலும் உணர்க. (கஅ)

துறவேயறங்களெவற்றினுக்கும்பெரிதாம்விடையூர்தோன்றலுக்குந்
துறவேயுவகைவரச்செய்யுந்துறவேயயன்மாலுலகளிக்குந்
துறவேயீசனிடத்திருத்துமெவருமேலாச்சொல்லுவதுந
துறவேயாமென்றெழுந்துநின்றுசொற்றான்சைவத்துருவாசன்.

(இ-ள்.) சைவம் துருவாசன் துறவே அறங்கள் எவற்றினுக்கும் பெரிதாம் - அவருள் சைவவேடம் புனைந்த துருவாசமுனிவர் துறவறமே எல்லா அறங்களுக்கு மேலாகும், துறவே விடை ஊர் தோன்றலுக்கும் உவகை வர செய்யும்-துறவறமேஇடப ஊர்தியை நடத்துஞ் சிவபெருமானுக்கும மகிழ்ச்சிவரச்செய்யும், துறவே அயன்மால் உலகு அளிக்கும் - அத்துறவறமே பிரமன் திருமால் பதவிகளைத்தரும், துறவே ஈசன் இடத்து இருத்தும் - அத்துறவறமே சிவபெருமானிடத்திருக்கச்செய்யும், எவரும் மேலாக சொல்லுவதும் துறவே ஆம் என்று எழுந்துநின்று சொற்றான் - யாவரு மேலாக எடுத்துக்கூறுவதும் அத்துறவறமே யாமென்று எழுந்துநின்று சொன்னார்.

பிரமசரியம், இல்லறம, வானப்பிரத்தமாகிய இந்நிலையினின்று செய்யும் அறங்களிலெல்லாம் துறவறம்பெரிதாதலால் துறவேயறங்களெவற்றினுக்கும் பெரிதாம்எனவும், துறவறநிலைக்குச் சிவபெருமானே தெய்வமாதலால் விடையூர் தோன்றலுக்குந் துறவே யுவகைவரச்செய்யும் எனவும், பிரமன்முதலியோர் பதங்களையெளிதாகக்கூட்டுதலால் துறவே யயன்மாலுலகளிக்கும் எனவும், சிவத்தில் இரண்டறக்கலக்கச்செய்தலால் துறவே யீசனிடத்திருத்தும் எனவும், துறவறத்தினைச் சிவபெருமானென்றே வழிபடவேண்டுதலால் எவரு மேலாச்சொல்வதுவும் எனவுங்கூறினார்.

எல்லா அறங்களிலுந் துறவறம் பெரிதென்றலை—

“ பகவன்மறையந்தமுந்தொடராப்பரமனடியாருளத்தகலாத்
தகவன்றெய்வமாதலினாற்சந்நியாசவாச்சிரமம்
மிகவுஞ்சிறந்தஅறத்ததால்” எனவும்,

துறவறத்துக்குச் சிவபெருமானே தெய்வமென்றதை—

“ மருவுபிரமசரியனுக்குமன்றன்மலரவன்றெய்வம்
திருவமிகுமில்லறத்தாற்குத்திகிரிக்குடங்கையான்றெய்வம்
ஒருவில்வானப்பிரத்தனுக்கொள்ளொளியேழ்பரித்தேரோன்றெய்வம்
பொருவில்சந்நியாசிக்குப்போற்றுமசேசனேதெய்வம்.

எவரு மேலாச்சொல்லுவதும் என்றதை—

" பொறியவித்தொழுக்கினின்றுபொலிபவனேயானும்
நெறியவித்தடாதுசெய்துநிற்பவனேயானும்
குறிபடுபுகழ்ச்சந்நியாசிகொண்டவேடத்தினாலே
அறிவுருமமலனென்றேயாவரும்வணங்கத்தக்கோன்" எனவருஞ்சூதசங்கிதை

யாலும்,

பிரமன்முதலியோர் பதங்களை யெளிதாகக்கூட்டுவதுஞ் சிவத்தோடிரண்டறக் கலக்கச்செய்வதுமென்றதை—

" யானெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்தவுலகம்புகும்" என்ற திருக்குறளாலும் உணர்க. (கக)

இன்னவாறுபன்முனிவருமியம்பினர்பிணங்குழியிவரீட்டு
நன்னர்வான்றவங்கொணர்ந்தெனவாயிடைநணுகினான்விடையூரு
மென்னையாளுடையிறையடிதைவருமிடையறாத்தியானத்தான்
பன்னுமெய்த்தவப்பராசரன்பயந்தருள்பண்ணவன்மாணுக்கன்.

(இ-ள்.) இன்ன ஆறு பல்முனிவரும் இயம்பினர் பிணங்குழி - இவ்வகையாகப் பலமுனிவர்களுங்கூறித் தம்முள் மாறுபட்டவிடத்து, இவர் ஈட்டும் நன்னர் வான் தவம் கொணர்ந்தால் என்ன - இம்முனிவர்கள் வருந்தித்தேடிய நல்ல பெரிய தவமே கொண்டுவந்து விட்டாற்போல, விடையூரும் என்னை ஆளுடைய இறை அடி தைவரும் இடை அறாத தியானத்தான் - இடபவூர்தியை நடத்துமென்னை யாளாகவுடைய சிவபெருமானது திருவடியைத்தோய்ந்து தடவு மிடையறாத தியானத்தையுடையவரும், பன்னும் மெய் தவம் பராசரன் பயந்தருள் பண்ணவன் மாணுக்கன் ஆயிடை நணுகினான் - யாவரும் புகழ்ந்துகூறும் பராசரமுனிவன்பெற்ற வியாசரது மாணுக்கருமாகிய சூதமுனிவர் அவ்விடத்து வந்தார்.

இன்ன சுட்டுத்திரிபு. கொணர்ந்தென தொகுத்தல் விகாரம். இயம்பினர் முற்றெச்சம், பிணங்குழி என்பது அதன் முடிபாய் வினைத்தொகை நிலைத்தொடராய் நின்றது.

விளங்குநீற்றொளிகதிர்செயவீங்கிருளக்கமாலிகைவீசும்
வளங்கனிந்தபொன்மேனியான்புண்ணியம்வடிவெடுத்தெனவந்தான்
றுளங்குறாதுயர்புராணமுற்றளந்தறிதொல்லையோனமரர்க்காக்
களங்கறுத்தவனுண்மைதேர்ந்துயிர்க்கெலாங்கருணைகூர்ந்தருள்சூதன்.

(இ-ள்.) விளங்கு நீறு ஒளி கதிர் செய்ய வீங்கு இருள் அக்க மாலிகை வீசும் வளம் கனிந்த பொன்மேனியான் - விளங்குந் திருநீற்றொளி யொருபால் விளங்க ஒருபால் மிக்க இருளை உருத்திராக்கமாலை வீசும் பொலிவின் மிகுதி பழுத்த பொன்போலுஞ் செந்நிறம்வாய்ந்த திருமேனியையுடையவரும், உயர் புராணம் முற்றும் துளங்குறாது அளந்து அறி தொல்லையோன்-உயர்ந்த பதினெண்புராணங்களையுஞ் சிறிதும் ஐயப்படாது வியாசரிடத்து அளந்தறிந்த முதியோருமாகி, அமரர்க்கு ஆக களம் கறுத்தவன் உண்மைதேர்ந்து உயிர்க்கு எல்லாம் கருணைகூர்ந்தருள் சூதன் புண்ணியம் வடிவெடுத்தால் என்ன வந்தான் - தேவர்களுக்காக ஸ்ரீகண்டங்கறுத்த இறைவரது திருவருளுண்மையைத்தெரிந்து உயிர்களுக்கெல்லாங் கருணைசுரக்குஞ் சூதமாமுனிவர் அவர்கள் செய்த புண்ணியமே யோர் திருவுருவெடுத்து வந்தாற்போல வந்தனர்.

வடிவெடுத்தென தொகுத்தல் விகாரம். சிவபெருமான் திருமால்முதலிய தேவர்களிடத்து மிக்க கருணையையுடையவர் என்பார் அமரர்க்காக்களங்கறுத்தவன் எனவு

ம், அவ்விறைவனைப்போலத் தாமும் அவரது திருவருளுண்மையை யளந்தறிந்ததைச் சிற்றுயிர்களுமறிந்துய்யப் புராணங்கள் வகுத்தவனென்பார் உண்மைதேர்ந்துயிர்க்கெலாங் கருணைகூர்ந்தருள்சூதன் எனவும், வசிட்டர் முதலியோர் தாம் கொண்ட மலவினையொழித்து முத்திகாண்டற் கேதுவை மொழிந் தருளினமையால் அவர்கள் செய்த புண்ணியம் ஓர் வடிவெடுத்து வந்தாற்போல் வந்தனர் என்பார் புண்ணியம் வடிவெடுத்தென வந்தான் எனவுங்கூறினர். ஒரு பாலொளி வீச ஒருபால் இருள்மிருந்து தன்னிறங்காட்டியதென்றது குணவதிசயவணி.

திருமால் முதலியோர் குறையிரப்ப விடமுண்டு கறுத்தமை.—

ஒருகால் தேவரும் அசுரரு மிறப்புக்கஞ்சிப் பிரமனிடத்துச் சென்றுகூறப் பிரமன் அவர்களோடு வைகுந்தமடைந்து திருமாலுக்குக்கூற, அத்திருமால் நன்றுகூறினீர், கடல்கடைந் தமுதெடுத்தருந்தில் சாவேமென்றுகூறி அவர்களோடுசென்று கடல்கடையும்போது தேவரும் அசுரரு முடியா திளைத்துநிற்க, அங்குவந்த வாலி அதுகண்டு கடையும்போது மந்தரகிரி கடலுளாழ்ந்தது, அதுநோக்கித் திருமால் கூர்மமாய்த் தாங்கி அம்மலையைப் பண்டுபோலிருத்த, அவ்வாலி கடையும்போது விடந்தோன்றியது, அதனால் யாவுந்தீயத் திருமால் முதலியோர் வருந்தித் திருக்கயிலைக்குச்சென்று சிவபெருமானிடத்து முறையிட அஞ்சலியென்று அதனைப்பருகி ஸ்ரீகண்டங் கறுத்தனனொன்பது இந்நூல்வரலாறு.

“ கண்டுநாத்தழும்பத்தனித்தனிதுதித்துக்கண்டியிலெழுப்பிமுன்வணங்கி
முண்டகன்முதலாஞ்சுராசுரர்குழுமிமொழிவராலிறப்பினுக்கஞ்சி
யொண்டளிர்ச்சரணஞ்சரணமென்றடைந்தேமுலப்பினைக்கடக்குமாறெமக்குத்
தண்டுழாயலங்கற்கருணையங்கடலேசாற்றெனநாரணனெழுந்து.

இந்திரைகொழுநனுளத்திடையெண்ணியெறிபுனலருவியஞ்சாரல்
மந்தரப்பறம்புமத்தெனநாட்டிவாசுகிகயிறெனப்பூட்டிச்
சுந்தரத்திருப்பாற்கடலினைக்கடைந்துசுவையமிழ்தெடுத்துமென்றுரைப்ப
அந்தநாளவர்தாம்பெற்றபேருவகையாரொடுத்தியம்பவல்லவரே.

பருங்கொலைப்படத்தையசுரருஞ்சுரரும்பற்றினர்தனித்தனியீர்த்து
மொருங்குநின்றீர்த்துமாற்றலாதுடைந்துதன்புடையொதுங்குதல்காணாஉக்
கருங்கழல்வாலிவிடுமினீரென்றுக்கட்செவிவாலமும்பணமும்
இருங்கையிற்பற்றிமுறுகுறவாங்கியீர்த்தனன்கடைந்தனன்புணரி.

ஐயனேயடியேங்களறியாமைத்தொடக்குண்ட
கையரோமாதலினுன்கண்ணருள்பெற்றெய்தாது
வெய்யநறுஞ்சுவையமிழ்தம்பெறற்பொருட்டுவெவ்வினையேம்
பையரவான்மந்தரத்தாற்பாற்கடலைக்கடைந்தேமால்.

துன்றியதீஞ்சுவையமிழ்தந்தோன்றுதவிடந்தோன்றி
யின்றுசராசரமனைத்துமெரிசெய்துநீறுக்கிற்
றன்றினருளொரித்தாயுன்னருளன்றிமுயல்வதெலாம்
ஒன்றொழியவொன்றுமென்றுரைக்குமொழிமெய்யாமே ”

“ சகமெலாம்பொடிபடுத்தெழுந்தழல்விடமிடற்றின்
நிகழவைத்தனன்முப்புரமெரியெழச்சிரித்தோன்
அகலருந்திறத்தெண்குணநிறைந்தபேராண்மைப்
பகவன்மேன்மைமற்றெம்மனோரளவிடற்பாற்றே ” என இந்நூலில் மணி கண்டீச்சுரப்படலத்தில் வருதல்காண்க. (உக)

புக்கசூதனைமுனிவரர்யாவரும்பொங்கியபெருங்காதன்
மிக்கவோகையினெதிர்கொடுபூசனைவிதியுளிவழாதாற்றித்
தக்கவாதனத்திருத்தினர்வினவுவார்தறுகணைம்புலவாழ்க்கை
யொக்கநீப்பயாமுன்னரோயருந்தவமுஞற்றினமதனாலே.

(இ-ள்.) புக்க சூதனைமுனிவரர் யாவரும் பொங்கிய பெருங்காதல்மிக்க ஓகையின் எதிர்கொடு-வந்த சூதமாமுனிவரை முனிசிரேஷ்டர்களெல்லோரு மீதூர்ந்த பெரியகாதலால் முதிர்ந்த மகிழ்ச்சியோடெதிர்கொண்டு, பூசனை விதியுளிவழாது ஆற்றி தக்க ஆதனத்து இருத்தினர் வினவுவார் - (பெரியோர்க்குச்செய்யும்) பூசனையை நூலிற் கூறிய முறையாற் சிறிதும் வழுவாமற் செய்து விதிவழியமைத்த ஆசனத்திலிருத்தி வினவாநின்றார், தறுகண் ஐம்புலவாழ்க்கை ஒக்க நீப்பயாம் முன்னரோ அருந்தவம் உஞற்றினம் அதனால்-கொடுமையையுடைய பஞ்சேந்திரிய வாழ்க்கையை யொருசேர அகத்தே நீக்க நாம் முன்பே பெறுதற்கரிய தவத்தைச்செய்தோம் அதனால்.

பூசனையாவது அருக்கியம், பாத்தியம், ஆசமனம். வாய்பூச நீர்தருதல் அருக்கியம். கால் சுத்திசெய்ய நீர் தருதல் பாத்தியம். உட்கொள்ள நீர்தருதல் ஆசமனம். இது முதல் ஆதலால் என்பது காறும் ஒருதொடர். (உஉ)

வென்றிவெள்விடைப்பிரானடிகாண்பதேவீடுபேற்றினுக்கேது
வென்றுதேறினங்காண்பதற்குபாயமற்றிதுவெனத்தெளிகிலமே
லொன்றலாதனவேறுவேறுரைத்தனமுயங்கினம்பிணக்குற்றே
மன்றகண்டிலேந்துணிவுமெய்யுணர்வினான்மலக்குறும்பறச்செற்றோய்.

(இ-ள்.) மெய் உணர்வினால் மலக்குறும்பு அற செற்றோய்-உண்மை யுணர்ச்சியால் மும்மலக் குறும்பை வேரோடறக்களைந்த பெரியோய், வென்றி வெள்விடை பிரான் அடி காண்பதே வீடு பேறினுக்கு ஏது என்று தேறினம் - வெற்றியையுடைய வெள்ளிய இடபவூர்தியையுடைய பெருமானார் திருவடியைக் காணுதலே முத்திப்பயனுக்கோர் காரணமென்று தெளிந்தோம், காண்பதற்கு உபாயம் இதுவென்ன தெளிகில்லேம் - அத்திருவடியைக் காண்பதற் குபாயம் இதுவென்னத் தெளியேம்ஆதலால், ஒன்று அல்லாதன வேறு வேறு உரைத்தனம் உயங்கினம் பிணக்கு உற்றேம்-ஒன்றல்ல பலபல வெவ்வேறாகத் திருவடிகாண்டற் கேதுக்கூறி மயங்கிப்பிணங்கினேம், துணிவு மன்ற கண்டிலேம்-எதனாலும் துணிவினைத் தேற்றமாகக் கண்டறிந்திலேம்.

மன்ற அசைநிலை யிடைச்சொல். மன்ற தேற்றப் பொருளில்வந்த இடைச்சொல் நாம் செய்தற் கரியதவத்தால் சிவபிரான் திருவடியைக் காண்பதே முத்திப் பேற்றிற்கு ஏதுவெனத் தெளிந்தோம் என்றது காரணகாரியவணி தவமுதலாகப் பல படமுன்னர்க்கூறினோமென்பார் ஒன்றலாதன வேறு வேறுரைத்தனம் எனவும், அதனால் எங்களுக்கு வந்தது மலவென்பார் உயங்கினேம் பிணக்குற்றே மெனவுங்கூறினார். (உக)

எங்கள்பாக்கியப்பயனெனநீயிவணெய்திடப்பெற்றேம்யாங்
கொங்குயிர்த்ததார்த்தாளவனைவியாதனந்தலமுனியருளாலே
யங்கண்மூவறுபுராணமுமுணர்ந்தனையறமுதல்பொருணான்கிற்
பொங்குசீர்த்தியோய்நீயறியாததுபுவனமூன்றினுமில்லை.

(இ-ள்.) எங்கள் பாக்கியம் பயன் என நீ இவண் எய்திட யாம் பெற்றேம்-எங்களது பாக்கியப்பயனென்று சொல்லத் தேவரீரிங்கெழுந்தருள யாம் பெற்றேம், கொ

ங்கு உயிர்த்ததார் துளவனே வியாதன் - வாசனைவீசுந் துளபமாலையணிந்த திருமாலே வியாசமுனிவர், அகுலமுனி அருளாலே அங்கண் மூவறு புராணமும் உணர்ந்தனே-அவ்வியாதமுனிவர் கருணையால் நிலவுலகிலுள்ள பதினெண் புராணங்களையும் ஐயமறத் தெளிந்தீர், பொங்கு சீர்த்தியோய் அறம் முதல் பொருள் நான்கில் நீ அறியாதது புவனம் மூன்றினும் இல்லை - மேம்பட்ட கீர்த்தியையுடையீர் தருமமுதலிய நான்கு பொருளில் நீரறியாததொன்று மூன்றுலகங்களிலுமில்லை.

வியாதன் வேதத்தை விரித்தவன். அறமுதல் பொருள்நான்கு என்றது அறம் பொருள், இன்பம் வீடு என்னு நான்கனை. அறமுதலிய நான்குபொருளினையேபதினெண்புராணங்களும் உணர்த்துதலால் அறமுதல்பொருள்நான்கில் நீ அறியாதது புவனமூன்றினுமில்லை என்றார் எனக்கூறினார். (உச)

ஆதலாற்பலநெறியினுந்துணிந்தவாறரன்றிருவடிகாண்டற்
கேதுவெங்களுக்கருளுதிவறிதுநீயேகலையுயர்வானிற்
பாதவம்பொரப்பெரியவர்காட்சியும்பயன்படாதொழியாதால்
சூதமாதவவென்றலுமகங்களிதுளும்பியோதுவன்சூதன்.

(இ-ள்.) சூத மாதவ - பெரிய சூதமுனிவரே, ஆதலால் அரன் திருவடி காண்டற்கு ஏது பல நெறியினும் துணிந்த ஆறு எங்களுக்கு அருளுதி-ஆகையால் சிவபெருமான் றிருவடியைக்காணுதற்குக்காரணமாகப் பலதுறையினு நீர் துணிந்தவழியையெங்களுக்கருள்செய்வீர், உயர் வானில் பாதவம் பொர பெரியவர்காட்சியும் பயன்படாது ஒழியாது வறிது நீ ஏகலை என்றலும் - உயர்ந்த விண்ணுலகிலுள்ள கற்பகத்தைப் போலப் பெரியோர்காட்சியும் பயன்படாமலொழியாது ஆதலால் தேவரீர் எங்களுக்குப்பயன்படாமற் போதலொழிவீர் என்றுகூறவும், சூதன் அகம் களி துளும்பி ஓதுவன் - அச்சூதமாமுனிவர் மகிழ்ச்சி மீதூர்ந்து கூறுகின்றார்.

கற்பகத்தை யெதிர்ப்பட்டோர் ஒருபயன் பெறும லொழிதலில்லை, அதுபோலப் பெரியோரைக்கண்டவர்கள் தங்கள் மனத்திலுள்ள ஐயத்தை யவர்களாலொழியாதுபோத லில்லை யென்பார் பெரியவர் காட்சியும் பயன்படாதொழியாது என்றார். இது எடுத்துக்காட்டுவமையணி. உயிர்க்குச் சகசமாகிய மலத்தையொழித்தலால் சிவபெருமானுக்கு அரன் எனவந்தது காரணப்பெயர்.

" உயிர்க்குண்மலமொடுக்கலாலேயுயிருள்
உயிர்க்குமரனெனும்பேருண்டு" எனவரும் சைவசமயநெறித்திருக்குறளாலறிக. (உரு)

மொழியுமிப்பொருண்மூவறுபுராணத்துட்காந்தமூவிருகூற்றிற்
கழிவில்சீர்ச்சனற்குமாரசங்கிதையினிற்காளிகாகண்டத்திற்
றழுவுதீர்த்தமான்மியத்ததுநந்திபாற்சனற்குமாரன்கேட்டங்
கழிவிலாவருள்வியாதனுக்குரைத்திடவவனெனக்கருள்செய்தான்.

(இ-ள்.) மொழியும் இ பொருள் - நான்கூறும் இப்பொருள், மூவறு புராணத்துள் காந்தம் மூவிரு கூற்றில் கழிவு இல் சீர் சனற்குமார சங்கிதையில் காளிகாகண்டத்தில் தழுவுதீர்த்த மான்மியத்தது - பதினெண்புராணத்து ளொன்றாகிய கந்தபுராணத்திலுள்ள ஆறு சங்கிதைகளிலொன்றாகிய நீங்குதலில்லாத சிறப்புவாய்ந்த சனற்குமார சங்கிதையில் காளிகாகண்டத்திற் கூறியதீர்த்தமான்மியத்துளடங்கியது, நந்திபால்

சனற்குமாரன் கேட்டு அங்கு அழிவு இல்லாத அருள் வியாதனுக்கு உரைத்திட அவன் எனக்கு அருள் செய்தான் - நந்திநாயனாரிடத்துச் சனற்குமாரமுனிவர் கேட்டு அவ்விடத்துத்தம்மை வழிபட்ட அழிவில்லாத கருணையையுடைய வியாதமுனிவர்க்குக் கூற அம்முனிவரெமக் கருள்செய்தனர்.

பதினெண் புராணங்களாவன பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவிடியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மச்சம், காருடம், பிரமாண்டங்களாம். மூவிரு சங்கிதை சனற்குமாரசங்கிதை, சூரசங்கிதை, பிரமசங்கிதை, விஷ்ணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூதசங்கிதையாம். (உகூ)

நீயிர்பேரறிவாளராய்விரதநன்னெறியினிற்பிறழாமே
தூயமெய்த்தவவலியினாற்பழமலத்துகளறுத்துமையோர்பா
னாயனாருள்பெற்றுளீராதலினன்றுமிப்பொருளுங்கட்
கேயவோதுவனொருங்கியமனத்தொடுங்கேண்மின்களெனவோடும்.

(இ-ள்.) நீயிர் பேர் அறிவாளராய் விரத நல்நெறியினில் பிறழாமே தூய மெய் தவவலியினால்-நீங்கள் பெரிய அறிவினையுடையராய் விரதநெறியினின்றுந்தவறாமல் களங்கமில்லாத உண்மையாகிய தவவலிமையினால், பழ மலம் துகள் அறுத்து உமை ஓர் பால் நாயனார் அருள் பெற்றுளீர் ஆதலின் - தொன்றுதொட்டுள்ள ஆணவமலக்குற்றத்தையொழித்து உமையம்மையை யொருகூறுடைய இறைவர் திருவருளைப்பெற்றுள்ளீராதலால், நன்றும் இ பொருள் உங்கட்கு ஏய ஓதுவன் ஒருங்கிய மனத்தொடும் கேண்மின்கள் எனவோடும் - பெரிதும் இப்பொருளை யுங்களுக்குப் பொருந்தக் கூறுகின்றேன் ஒன்றுபட்ட மனத்தோடுங் கேளுங்களென்று கூற.

விரதமாவன சிவ விரதங்களை. அவைகள் சித்திரபூரணை முதலாக விதித்த தினங்களினோற்றல்.

அவை ஆவன.

" சித்திரைபூரணைப்பக்கஞ்சுக்கிரவாரம்பயில்வாதிரைதீர்த்து
முத்திதருமைப்பசியுத்திரத்தொடுமாநவமியிவைமூன்றும்பச்சைத்
தத்தைமொழியுமைவிரதந்தர்திமுகன்விரதம்வெள்ளிசதுர்த்தியன்றி
ஒத்துறுமார்கழிசட்டியிவைமூன்றுமாங்கவனுக்குரியநோன்பே.

ஐப்பசிவெள்ளிக்கிழமைகார்த்திகைகார்த்திகைச்சட்டியனையமூன்றுங்
கொற்பநிவேற்றனிக்குமரமுருகவேள்விரதம்வெய்யோன்குலவுதையிற்
சொற்பநிஞாயிறுசித்திரைப்பரணியைப்பசியிற்பெருகுத்தவந்நாள்
உற்பவிக்குமிவைமூன்றும்வைரவற்குற்றிடும்விரதமுரைக்கின்மன்னோ.

பரித்திடுசெவ்வாய்விரதந்திறல்வீரபத்திரற்குப்பகுத்தநோன்பு
தெரித்தவரன்முறைநோற்றோரிருநிலத்திற்பெரியநிலச்செல்வராகி
விரித்தபெருங்கிளைகளொடுமெக்களொடுநலனுகர்ந்துமிகுநாள்வைகிப்
புரித்தபெருஞ்சடைப்பெருமான்றிருக்கயிலைபுகுந்துகதிபுகுதுவாரால்" எனவருவனவாம். இதனை உபதேசகாண்டத்திற்காண்க. (உஎ)

அண்டர்நாயகனடம்புரிநாயகனடியவருளக்கோயில்
கொண்டநாயகன்றிருவடித்தரிசனங்கூடுதற்குபாயஞ்சீர்
மண்டுதீர்த்தயான்மியத்துநீபெற்றதெவ்வாறெனக்கடாவுற்ற
பண்டைமெய்த்தவர்க்கிருமையும்புலப்படப்பகாலுற்றனன்சூதன்.

(இ-ள்.) அண்டர் நாயகன் நடம்புரி நாயகன் அடியவர் உளம் கோயில் கொண்ட நாயகன் திருவடி தரிசனம் கூடுதற்கு உபாயம் - தேவர்களுக்கிறைவனும் ஆனந்த நடனஞ்செய்யுந் தலைவனும் அடியவரது உளத்தையே திருக்கோவிலாகக்கொண்டருளிய பெரியோனுமாகிய சிவபெருமானது திருவடித்தரிசனத்தைக் கூடுதற்குபாயமாக, சீர் மண்டு தீர்த்த மான்மியத்து நீ பெற்றது எவ்வாறு என்ன - சிறப்புமிக்க தீர்த்தமான்மியத்தில் தேவரீர் பெற்றது எவ்விதமென்று, கடாவுற்ற பண்டை மெய்த்தவர்க்கு இருமையும் புலப்பட சூதன் பகரலுற்றனன்-வினவிய தொன்றுதொட்டுள்ள உண்மை வாய்ந்த கண்ணுவர் முதலிய முனிவர்க்கு இம்மைப்பயனும் மறுமைப்பயனுங் கைகூட அச்சூதமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

அண்டர்நாயகன், நடம்புரிநாயகன், அடியவருளக்கோயில் கொண்ட நாயகன் ஒருபொருள்மேல்வந்த பலபெயர்கள். (உஅ)

புராணவரலாற்றுப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூ௬எ.

---

## சனற்குமாரப்படலம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தொடுகடல்வளைப்பின்மன்பதைத்தொகைகள் சோழன்மீனவனெனவீண்டிப், படர்பொலங்குவைகள்கவர்ந்துருவண்ணம் பரிந்துகாப்பவரெனவசுரர், கடவுளரியக்கர்சித்தர்கந்தருவர்கின்னரர்சாரணர்பிறரு
முடனுறநெருங்கிப்போற்றமூவுலகுமுருவிமேனிவந்ததுமேரு.

(இ-ள்.) தொடுகடல் வளைப்பின் மன்பதை தொகைகள் சோழன் மீனவன் என ஈண்டி படர் பொலம் குவைகள் கவர்ந்து உருத வண்ணம் பரிந்து காப்பவர் என்ன - சகரர் தோண்டிய கடல்சூழ்ந்த நிலவுலகில் மக்கட்கூட்டங்களுள் சோழனெனவும் பாண்டியனெனவுந்தோன்றி யவர்களால் பரவிய பொற்குப்பல்களைக் கொள்ளை கொள்ளாதபடி வருந்திக்காப்போரைப்போல, அசுரர் கடவுளர் இயக்கர் சித்தர் கந்தருவர் கின்னரர் சாரணர் பிறரும் உடன் உற நெருங்கி போற்ற மேரு மூவுலகும் உருவி மேல் நிவந்தது - அசுரருந் தேவரு மியக்கருஞ் சித்தருங் கந்தருவருங் கின்னரருஞ் சாரணரு மேனையோரும் ஒருசேர செருங்கிக் காவல்செய்ய மேருவானது மூன்றுலகங்களையும் உருவி அதன்மேலுயர்ந்தது.

சோழரிற் கரிகாற்சோழனும் பாண்டியருள் உக்கிரகுமாரபாண்டியனும் பொற்குவை கவர்ந்து தங்களிலச்சினையையிட்டமையால் சோழன் மீனவனென வீண்டிப்படர் பொலங்குவைகள் கவர்ந்துருவண்ணம் என்றார். அசுரர்முதலியோர் நெருங்கியிருத்தலை, மேருகிரியிலுள்ள பொற்குவியல்களைச் சோழன்முதலானவர்கள் முன்போற் கவராதவண்ணங் காப்பதுபோலிருந்ததென்று கவி அத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி.

சோழனும் பாண்டியனும் பொற்குவையைக் கவர்ந்தமையை—

"செண்டுகொண்டுகரிகாலனொருநாளிலிமய-சிமயமால்வரைதிரித்தருளிமீளவதனைப் - பண்டுநின்றபடிநிற்கவிதுமேருமுதுகிற் - பாய்புலிக்குறிபொறித்ததுமறித்தபொழுதே" எனக் கலிங்கத்துப்பரணியிலும்,

*மின்னகுவேலான்முந்நீர்வேலையைவணக்சங்கண்டோன்*
*பொன்னறைமருங்கிற்போகிப்பொத்தியபாறைநீக்கித்*
*தன்னவாவளவிற்றுயதமனியமுகந்துமுடிப்*
*பின்னதுந்தன்னதாகபபெயரிலச்சினையுந்தீட்டா" எனத் திருவிளையாடற்பு*
*ராணத்திலும் வருதல் காண்க* (௧)

*சேர்ந்தனமுழுதுந்தன்னிறமாக்குஞ்செய்கையாற்றனக்கினமாகிச்*
*சார்ந்தமாணிக்கவண்ணரேகம்பர்தமக்கலால்வணங்கிடாதாகி*
*வார்ந்தபல்கோளுநாள்களுநாளும்வலம்வரவிராப்பகல்விளக்கி*
*நேர்ந்தபேராசையெட்டையும்பகுத்துநின்றதத்தமனியக்குன்றம்.*

(இ-ள்.) அதமனியம் குன்றம் சேர்ந்தன முழுதும் தன்நிறம் ஆக்கும் செய்கையால்-அந்தப் பொன்மலையானது தன்னைச்சேர்ந்த பொருள் முழுதையுந் தன்னிறமாகச் செய்விக்குஞ் செய்கையால், தனக்கு இனமாகி சார்ந்த மாணிக்க வண்ணர் ஏகம்பர் தமக்கு அல்லாமல் வணங்கிடாதாகி-தனக் கினமாய்ச்சேர்ந்த மாணிக்கம்போன்ற நிறம் வாய்ந்த இறைவராகிய திருவேகம் பருக்கன்றி ஏனையோர்க்கு வணங்காமல், வார்ந்த பல் கோளும் நாள்களும் நாளும் இராபகல் வலம்வர விளக்கி நேர்ந்த பேராசை எட்டையும் பகுத்து நின்றது-ஒளி மிகுந்த சூரியன்முதலிய ஒன்பது கிரகங்களும் நட்சத்திரங்களும் எந்நாளிலும் இரவிலும் பகலிலும் பிரதிக்ஷணம் வர இரவையும் பகலையுந் தோற்றுவித்து அமைந்த பெரிய எட்டுத்திக்கையும் உலகினர் அறியப் பாகுபாடு செய்

மேரு தன்னையடைந்த பொருளைத் தன்னிறமாக்குதல்போலச் சிவபிரான் தன்னையடைந்த வுயிர்களைத் தன்மயமாக்குஞ் செய்கையாலும், தன்னைப்போலுஞ் செந்நிறமுடைமையாலும் அச்சிவபிரானுக்கு வில்லாக வணங்கியதென்பார் சேர்ந்தன முழுதுந் தன்னிறமாக்குஞ் செய்கையாற் றனக்கினமாகிச்-சார்ந்தமாணிக்கவண்ணரேகம்பர்தமக்கலால் வணங்கிடாதாகியெனவும், துருவசக்கரத்தால் சந்திராதித்தர் முதலியோர் கட்டுண்டு வலம்வருதலாற் சார்ந்த பல்கோளும் நாள்களுநாளும் வலம்வர விராப்பகல் விளக்கியெனவுங்கூறினார்.

மேரு தன்னைச்சார்ந்த பொருளையுந் தன்னிறமாக்குதலை—

" பனிமாலிமயப்பொருப்பகஞ்சேர்ந்தபொல்லாக்கருங்காக்கையும்பொன்னிறமாய்
இருக்குமென்றிவ்வாறுரைக்குமன்றேயிவ்விருநிலனே" என்பதனாலும்,

சிவபெருமான் தன்னையடைந்தவரைத் தன்மயமாக்குதலை—

" மன்னுமருட்குருவாகிவந்தவரின்க்கி மலமகற்றித்தாளுக்கிமலரடிக்கீழ்வைப்பன்" எனவருஞ் சிவஞானசித்தியாராலும்,

துருவசக்கரத்தாற் சந்திராதித்தர் முதலியோர் கட்டுண்டு வலம்வருதலை—

" நீணிறக்கலிக்கம்புனைந்தவெஞ்சனியின்பரியிருநான்குடைநெடுந்தேர்
மாணிறவிருப்பினியன்றதாமிராகுகேதுவின்மணிநெடுந்தடந்தேர்
ஊனமின்றியாரும்வாம்பரியவாறேமெனவுரைப்பர்மற்றிவரைப்
பான்மையிற்றுருவன்காற்றெனுங்கயிற்றிற்பனிவரைவலம்வரவியக்கும்" எனவருங் கூர்மபுராணத்தாலும் அறிக. ஏகம்பர் தமக்கலால் வணங்கிடாதாகி என்றது தற்குறிப்பேற்றவணியும், பேராசையெட்டையும் பகுத்துநின்றது என்றது தொழிற்றன்மையணியும் கலந்துவருதலாற் கலவையணி. (௨)

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

நயக்குமற்றிதனொளிபரந்திமையோர்நாடுபொன்னிறம்படைத்ததென்றெவரும,வியத்தகுங்கிரிமணிபலவரன்றிமீதுநின்றிழிமுழங்குவெள்ளருவி வயக்கமாண்டமுப்புரிசையன்றிறுத்தவள்ளல்பூட்டிவிட்டிருத்தியசிலையி னியக்கமேவுபல்பொறியபன்னகநாணிணைந்துகொண்டொளிர்தொடக்கமே யொக்கும்.

(இ - ள்.) நயக்கும் இதன் ஒளி பரந்து இமையோர் நாடு பொன் நிறம் படைத்தது என்று எவரும் வியத்தகும் கிரி - விரும்பும் இம்மேருவினது ஒளி பரத்தலால் தேவருலகு பொன்னிறம் படைத்ததென்று யாவரும் அதிசயிக்கப்படும் அம்மேருமலையில், மணிபல வரன்றி மீது நின்று இழி முழங்கு வெள் அருவி - பல ரத்தினங்களை வாரிக்கொண்டு மேனின்றிழியும் ஒலிக்கும் வெள்ளிய அருவியின் காட்சியானது, வயக்கம் மாண்ட முப்புரிசை அன்று இறுத்த வள்ளல் பூட்டி விட்டு இருத்திய சிலையின் - விளங்குதல் மிக்க திரிபுரங்களை யன்று நகைத்தெரித்த சிவபெருமான் நாணிறக்கி உலகம் நிலைபெற இருத்திய அம்மேருமலையாகிய வில்லின்கண், இயக்கம் மேவு பொறிய பல் பன்னகம் நாண் இணைந்து கொண்டு ஒளிர் தொடக்கமே ஒக்கும் - சஞ்சரித்தலமைந்த பல பொறிகளையுடைய சர்ப்பங்கள் அதற்கு நாணாக வரிசையாயமைந்து விளங்குந் தொட

பல இரத்தினங்களையும் வாரிக்கொண்டு வருதலால் அருவி பலநிறம் பெற்றது என்பார் மணிபலவரன்றிமீது நின்றிழி அருவியெனவும், பலநிறங்களையுடைய சர்ப்பம் என்பார் இயக்கமேவு பல்பொறியபன்னகம் எனவுங்கூறினர். தேற்றேகாரந்தந்து தொடக்கமேயொக்கும் எனக்கூறினமையால் நியமவுவமையணி. மற்று அசைநிலை. (ரு)

மலையெவற்றையுஞ்சிறகரிவலாரிவயங்கெடப்பொருதழித் தவன்வணக்குஞ்
சிலையினைப்பறித்தூங்குவைத்தெனத்திவலைபிந்திரதிருவிலைக்காட்டு
மலைதிரைப்புனலருவிசூழ்மேருவம்பொன்மாற்றினிலதிகமாயதுதா [ம்.
னிலைபெறத்தவரெண்ணிலர்குழீஇசெய்நிறைதவக்கனல்கதுவலிற்போலு

(இ-ள்.) அலை திரை புனல் அருவிசூழ் மேரு மலை எவற்றையும் சிறகு அரிவலாரி வயம்கெட பொருது அழித்து அவன் வணக்குஞ் சிலையினை பறித்து ஊங்கு வைத்தால் என்ன - அலைக்கும் அலையையுடைய நீர்மயமாகிய அருவிசூழ்ந்த மேருமலை எல்லா மலையினையுஞ் சிறகினையரிந்த இந்திரனது வெற்றிகெடப் போர்செய்தழித்து அவ்விந்திரன் வளைக்கும் வில்லினைப்பறித்து மிகவும் வைத்தாற்போல, திவலை இந்திர திருவில்லை காட்டும் - அம்மலையிலுள்ள அருவியின்றி வலைகள் அவ்விந்திரதனுசினிறத்தைக்காட்டாநிற்கும், அம்பொன் மாற்றினில் அதிகம் ஆயது நிலைபெற தவர் எண்ணிலர் குழுமி செய் நிறை தவம் கனல் கதுவலில் போலும் - அம்மலையழகிய பொன்வகையுள் மாற்றினி லதிகமானது நிலைபெறும்படி அளவிறந்த தபோதனர்கள் நெருங்கிச்செய்யும் நிறைந்த தவநெருப்புப்பற்றுதலாலெலாக்கும்.

முற்காலத்தில் மலைகளெல்லாஞ் சிறகொடுபறந்து பற்பல தேசங்களிலுஞ்சென்றிருத்தலால் அங்குள்ள எவ்வுயிர்களும் மிகவுந் துக்கித்தலைத் தேவர்கள் நோக்கித் துக்கித்து இந்திரனுக்கு முறையிட, அப்பொழுது இந்திரன் அம்மலைகளுடைய சிறகுகளைச் சேதித்துவருங்கால் அச்சங்கூர்ந்து உவர்க்கடலில் பன்னிரண்டுமலைகள் பறந்துவந்து கிழக்குமுதலிய திக்குகளில் விழுந்தன. அவை அக்கடலின் கீழ்த்திசையில் இடபகிரியுந் துந்துபிகிரியும், தாமிரகிரியும், தென்பால் சக்கரகிரியும், மைநாககிரியும், வலாககி

ரியும்; மேல்பால் சோககிரியும், வராககிரியும், நந்தனகிரியும், வடபால் கங்கிரியும், சந்திரகிரியும், துரோணகிரியுமாம். இவைகள் தேவேந்திரனுக்குப் புறங்கொடுத்தமையால் மலையெவற்றையுஞ் சிறகரிவலாரி என்றார். நெருப்பிற்காய்ச்சுதலால் மாற்றுயர்ந்தது என்றதை "சுடச்சுடப்பொன்போலொளிவிடும்" என்பதனாலுணர்க. முன்னது பண்புபற்றிவந்த வுவமையணியும், பின்னது ஏதுவணியும் ஆதலாற்கலவையணி. (ச)

தடாதபேரொளித்தமணியம்பழுத்ததண்ணருச்சுனைக்குடுமியங்குவட்டு, வடாதுமாமலைக்காந்தியின்பிறக்க மடங்கிடாதுபல்சுடர்விரித்தெழுந்த கெடாததோற்றமேயுறழமற்றதன்மேற் கிளர்சுரும்பினம்பெடையொடுதழுவி, விடாதுகண்படுபொழிற்சதசிருங்கவெற்பெனத்திசைபோயதொன்றுளதால்.

(இ-ள்.) தடாத பேர் ஒளித மணியம் பழுத்த தண் அருத சுனைகுடுமி அம் குவடு வடாது மாமலை காந்தியின் பிறக்கம்-தடுத்தற்கரிய பெரியவொளிவாய்ந்த பொன்னிறங் கனிந்த குளிர்ச்சிநீங்காத சுனைகள்வாய்ந்த சிகரங்களையுடைய வடக்கின்கண்ணுள்ள பெரிய மேருவின் ஒளியின்மிகுதி, மடங்கிடாது பல்சுடர் விரித்து எழுந்த கெடாத தோற்றமே உறழ - மடங்காத பல கிரணங்களையும் விரித்தெழுந்த அழியாத காட்சியையே யொப்ப, அதன்மேல் கிளர் சுரும்பு இனம் பெடையொடுதழுவிவிடாது கண்படு பொழில் சதசிருங்க வெற்பு என திசைபோயது ஒன்று உளது - அம்மலையின்மேல் விளங்கும் ஆண்வண்டின்கூட்டம் பெட்டை வண்டுகளோடு தழுவிப் பிரியாதுதுயில் கூருஞ்சோலைசூழ்ந்த சதசிருங்க மலையென்று திசையளவும் பரந்த ஒருமலையுளது.

மேருமலையில் சதசிருங்கமலையுண்டென்பதும் அதனளவும்—

"பொன்னங்கிரியின்வடபுலத்துமேல்கீழ்ப்புணரியளப்பதற்கு
மன்னுகோல்போனிலவரைகிடக்குமதற்குவடபுலத்தில்
தன்னேரில்லாச்சுவேதவரைசாருமதனின்வடபுலத்தின்
பன்னுஞ்சிருங்கவரைகிடக்குமவற்றினளவைப்பகருத்துரைப்பாம்."

"திரிசிருங்கஞ்சாருதியென்றரைசெயுமால்வரையிரண்டுங்கிழக்குமேற்காம்
இருகடலுந்தனித்தழுவியெண்பதினாயிரமாம்யோசனையவாகி" எனக்கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (ரு)

குரவுமாதவியுழிஞைமந்தாரங்குருந்துபாடலம்பாலைமுந்திரிகை
மருதுபோதிபிடாஞெமையோமைவஞ்சிகாஞ்சிகுங்குமநமையொடுவா
ணைதளாவுதிசெருந்திசேவெகினமகில்பலாசுசந்தில்லமாவில்லம்
வனைதமாலமாதளைகணியதிங்கம்வகுளமின்னனைநெருங்கினவோங்கும்.

(இ-ள்.) குரவு மாதவி உழிஞை மந்தாரம் குருந்து பாடலம் பாலை முந்திரிகை மருது போதி பிடா ஞெமை ஓமை வஞ்சி காஞ்சி குங்குமம - குராகுருக்கத்தி சிறுபூளை மந்தாரம் குருந்து பாதிரிபாலை முந்திரிகை மருது அரசு பிடாஞெமை ஓமை வஞ்சி காஞ்சி குங்குமம், நமை ஆண் நனை தளா உதி செருந்தி சே எகினம் அகில் பலாசு சந்து இல்லம் மாவில்லம் - நமை ஆண் நனை உதிசெருந்தி செம்மரம் புளி அகில் முள்முருக்கு சந்தனம் தேற்றுமரம் வில்வம், வனை தமாலம் மாதளைகணி அதிங்கம் வகுளம் இன்னனை நெருங்கின ஓங்கும்-மூங்கில் பச்சிலை மாதளை வேங்கை மதூகம் மகிழ் இவைபோலு மரங்களும் நெருங்கி வளர்ந்தோங்கும். (சு)

அன்றினார்புரமழலெழநகைத்தவண்ணல்சேவடிக்கன்பறுவியல்பிற்
றுன்றுமெய்த்தவயோகியர்க்கெல்லாந்தூயநற்றவச்சாலையுமாகித்
தென்றலூர்தரப்பூமணங்கஞலத்தெளிபுனற்சுனையளவிலகவின்று
பொன்றிடாக்கடவுளர்முதலோர்க்குப்போகபூமியுமாயதப்பொருப்பு.

(இ-ள்.) அ பொருப்பு அன்றினார் புரம் அழல் எழ நகைத்த அண்ணல் சேவடிக்கு அன்பு அறுத இயல்பில் துன்று மெய் தவயோகியர்க்கு எல்லாம் தூய நல் தவம் சாலையும் ஆகி - அந்தச் சதசிருங்கமலையானது பகைவரது திரிபுரங்களில் நெருப்புப் பற்ற நகைத்தருளிய இறைவரது செவந்த திருவடிக்கு அன்புநீங்காத இயற்கையையுடைய நெருங்கிய உண்மைவாய்ந்த தவத்தையுடைய யோகியர்களுக்கெல்லாம் களங்கமில்லாத நல்ல தவஞ்செய்தற்குரிய சாலையுமாகி, தென்றல் ஊர்தர பூமணம் கஞல அளவு இல தெளிபுனல் சுனை கவின்று பொன்றிடாத கடவுளர் முதலோர்க்கு போக பூமியும் ஆயது-தென்றல் தவழ்தலால் மலர்மணம் நெருங்கத்தெளிந்த நீர்மயமாகிய அளவில்லாத நீர்ச்சுனைகளாற் பொலிந்து அழியாத பிரமன் முதலியோர்க்குப் போகபூமியுமா

தென்றற்காற்றால் அலர்ந்ததென்பார் தென்றலூர்தர எனவும், அதனாற் பொலிவுபெற்றதென்பார் பூமணங்கஞலத்தெளிபுனற்சுனையளவிலகவின்று எனவும், அப்பொலிவு என்று நீங்காது என்பார் பொன்றிடாதெனவுங்கூறினார். கவின்று என்னும் பெயரடியாகப்பிறந்த வினையெச்சம் பொன்றிடாத என்னும் எதிர்மறைப்பெயரெச்சத்தின் முதனிலையைக்கொண்டு முடிந்தது. (எ)

அங்கண்வாழ்தருமயன்மனைக்கிழத்தியங்கிநாப்பணின்றருந்தவஞ் செயல்போற், கொங்குலாந்துவர்ப்பங்கயத்திறைதேர்குறிப்பினோதிமமசைவறவிருக்கும், பொங்குவெண்டிரைத்தீர்த்தத்தின்மாடேபுரங்கடந்தவர்வரமவட்குதவித், தங்குகாட்சியினறுமலர்பொதுளித்ததைகடுக்கைபொன்சொரிவனவுடைத்தால்.

(இ-ள்.) அங்கண் வாழ்தரும் அயன் மனைக்கிழத்தி அங்கி நாப்பண் நின்று அரும் தவம் செயல் போல் - அவ்விடத்து வாழும் பிரமனது மனைவியாகிய கலைமகள் நெருப்பினடுவில் நின்று செய்தற்கரிய தவத்தைச் செய்தல்போல, கொங்கு உலாம் துவர் பங்கயத்து இறை தேர் குறிப்பின் ஓதிமம் அசைவு அற இருக்கும் - மகரந்தம் நிறைந்த செவந்த தாமரையில் இறைகவருங் குறிப்பால் அன்னமானது அசைவற்று நின்றிருக்கும், பொங்கு வெண் திரை தீர்த்தத்தின் மாடே புரம் கடந்தவர் வரம் அவட்கு உதவி தங்கு காட்சியின் - எழுந்தோங்கும் வெள்ளிய அலைகளையுடைய தீர்த்தத்தின் பக்கத்தில் திரிபுரங்களை வென்ற இறைவர் வரத்தை அக்கலைமகளுக்குத் தந்தருளி நிலைபெற்றிருக்குங் காட்சிபோல, நறுமலர் பொதுளி ததை கடுக்கை பொன் சொரிவன உடைத்து - நறுமணங்கமழு மலர்கள்செறிந்து நெருங்கிய கொன்றைமரங்கள் மலர் சொரிதலையுடையது.

கலைமகள் அன்னமாகவும், நெருப்பு தாமரையாகவும், தவஞ்செய்தல் அசைவற்றிருத்தலாகவும், கொன்றை சிவபெருமானாகவும், வரந்தருதல் மலர்சொரிதலாகவுங் கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. (அ)

மீதுசந்திரசூரியர்கிரணம்விரவலாமையினொருபொழுதலர்ந்தோர், போதுகூம்புமச் செய்கையாங்கின்றிப் புரிமுறுக்குடைந் தென்றுமோரியல்பிற்,

கோதில்பன்மணிக் கதிரொளிவருடக் குளிர்ந்தலர்ந்திரண்டவத்தையுங்கட ந்து, மாதர்வெண்பிறைக்கண்ணியரடிசேர்மாந்தரொத்துளவளஞ்சுனைமல ர்கள்.

(இ-ள்.) வளம் சுனைமலர்கள் மீது சந்திர சூரியர் கிரணம் விரவலாமையின் - வளமிக்க நீர்ச்சுனையிலுள்ள மலர்கள் தம்மேல் சந்திரசூரியர்கள் கிரணம் கலத்தலில்லாமையால், ஒருபொழுது அலர்ந்து ஓர்போது கூம்பும் அ செய்கை ஆங்கு இன்றி - ஒருபொழுது மலர்ந்து ஒருபொழுது குவியு மச்செய்கை தமகிடத்தில்லாமல், கோது இல் பல் மணி கதிர் ஒளி வருட புரி முறுக்கு உடைந்து என்றும் ஓர் இயல்பில் குளிர்ந்து அலர்ந்து - குற்றமில்லாத பல இரத்தினங்களினொளி தடவுதலாற் கட்டவிழ்ந்தெப் போதும் ஒரே தன்மையாய் வாடாது மலர்ந்து, இரண்டு அவத்தையும் கடந்து மாதர் வெண்பிறை கண்ணியர் அடிசேர் மாந்தர் ஒத்துள - கேவலாவத்தை சகலாவத்தை யென்னு மிரண்டவத்தைதயையுங்கடந்து சுத்தாவத்தையில் அழகிய இளம்பிறை மாலை சூடிய இறைவரது திருவடியைச்சேர்ந்த சிவஞானச்செல்வர்களை யொத்திருந்தன.

பல இரத்தினங்கள் என்றது மாணிக்கத்தையு முத்தையும். கேவலாவத்தை யென்றது மாயாகருவிகளாயுள்ள காரியமாயையினின்று நீங்கி யாணவமலத்தால் மறைப்புண்டு காரணமாயை தாரகமாகவொடுங்கின வவதரத்தை. சகலாவத்தையென்றது தத்துவமுப்பத்தாறுடுங் கூடிநின்ற வவதரத்தை. சுத்தாவத்தையென்றது கேவல சகலம் இரண்டுநீங்கிச் சிவனுடைய திருவருளால் அச்சிவத்தோடுங் கூடிநின்ற வவத ரத்தை. மலர் கூம்புதலைக் கேவலாவத்தையாகவும், ஒருபொழுது மலர்தலைச் சகலாவ த்தையாகவும், இவ்விரண்டுமின்றியென்றும் ஓரியல்பாய் மாணிக்கம் முத்து இவைகளி னொளியால் மலர்ந்திருத்தலைச் சுத்தாவத்தையாகவுங்கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. மலர்கள் என்றது தாமரையையுங் குமுதத்தையும்.

கேவலாவத்தையை—

"அறிவிலனமூர்த்தனித்தனராகாதிகுணங்களோடுஞ்
செறிவிலன்கலாதியோடுஞ்சேர்விலன்செயல்களில்லான்
குறியிலன்கருத்தாவல்லன்போகத்திற்கொள்கையில்லான்
பிறிவிலன்மலத்திஞேடும்வியாபிகேவலத்திலான்மா" எனவும்,

சகலாவத்தையை—

"உருவினைக்கொண்டுபோகபோக்கியத்துன்னல்செப்பல்
வருசெயன்மருவிச்சத்தமாதியாம்விடயந்தன்னில்
பரிவதுஞ்செய்திங்கெல்லாயோனியும்புக்குழன்று
திரிதருஞ்சகலமானவவத்தையிற்சீவன்சென்றே" எனவும்,

சுத்தாவத்தையை—

"இருவினைச்செயல்களொப்பினீசன்றன்சத்திதோயக்
குருவருள்பெற்றுஞானயோகத்தைக்குறுகிமுன்னைத்
திரிமலமறுத்துப்பண்டைச்சிற்றறிவொழிந்துஞானம்
பெருகிநாயகன்றன்பாதம்பெறுவதுசுத்தமாமே" எனவும் சிவஞானசித்தி யாரில் வருதல் காண்க. (கூ)

**வென்றவைம்புலவாழ்க்கையர்வடிவின்விளங்குபூதியும்விளைகமழ்கடாந்த குன்றுபோலுயர்களிற்றுநீள்கோட்டுக்குலவுமுத்தமும்வேயுகுமணியுக் யோ துன்றிவானிலாக் கற்றைகாலவெண்மை தூயபொன்மைமைய விழுங்கியதே வன்றியவ்வரைப்பொன்மையேவெண்மைதனைவிழுங்கியதோவதுவறியேம்.**

(இ-ள்.) ஐம்புலம் வென்ற வாழ்க்கையர் வடிவின் விளங்கு பூதியும்-ஐம்புலன்களைவென்ற தவவாழ்க்கையையுடையவரது திருவுருவத்தில் விளங்குந் திருநீறும், விரை கமழ் கடாத்த குன்றுபோல் உயர் களிறு நீள் கோடு குலவு முத்தமும் வேய் உகு மணியும் துன்றி வால் நிலா கற்றை கால் வெண்மை-மணங்கமழு மதத்தையுடைய மலைபோலுயர்ந்த ஆனையினது நீண்ட கொம்பிற்றோன்றிய முத்தும் மூங்கிலுகுத்த முத்தும் நெருங்கி வெள்ளிய கிரணநெருக்கை வீசும் வெள் ஒளி, தூய பொன்மையை விழுங்கியதேயோ அன்றி அ வரை பொன்மையே வெண்மைதனை விழுங்கியதோ அது அறியேம் - களங்கமில்லாத அப்பொன்னிறத்தை விழுங்கியதோ அதுவன்றி யம்மலையின் பொன்னிறமே அவ்வெண்மைநிறத்தை விழுங்கியதோ அதனை நாமறியோம்.

திருநீறு முதலியவற்றினொளியையும் பொன்னினொளியையும் புகழ்ந்துகூறுதலால் மிகுதியணியும், அவ்வொளி பொன்னிறத்தை விழுங்கியதோ, பொன்னிறம் அவவொளியை விழுங்கியதோவென அவ்விரண்டுபட்சத்தையும் எடுத்துக்காட்டி விகற்பித்தலால் உறழ்ச்சியணியுங் கலந்துவருதலால் கலவையணி. வானிலா என்னும் பாடத்தை வாணிலாவெனத் திருத்தினவர் அது எவற்றினொளியெனக் கருதிலர்போலும். (க0)

இனையசீர்பெறுசதசிருங்கத்தினெண்ணிலாப்பெருவளத்தனவாகி
நனைமலர்ப்பொழில்சண்பகஞ்சரளநரந்தந்தெங்குகோங்கரம்பைகளுடுத்து
வனசநீள்சுனைமல்கியபிரமவனமொன்றுள்ளதுமற்றதனுப்பட்
டனைநிகர்ப்பதுநான்மறைக்கிழவன்றானமாயதுபிரமமாநகரம்.

(இ-ள்.) இனைய சீர் பெறு சத சிருங்கத்தின் எண்ணிலாத பெருவளத்தன ஆகி - இத்தன்மைவாய்ந்த சிறப்பினையுடைய சதசிருங்கமலையில் அளவில்லாத பெரிய வளங்களையுடையனவாகி, நனைமலர் பொழில் சண்பகம் சரளம் நரந்தம் தெங்கு கோங்கு அரம்பைகள் உடுத்து - தேனொழுகு மலர்களையுடைய சோலைகள் சண்பகமும் சரளமும் நாரத்தையும் தென்னையும் கோங்கும் வாழைகளுமாகிய இவைகளாற்சூழ, வனசம் நீள் சுனை மல்கிய பிரமவனம் ஒன்று உள்ளது - தாமரைகள் மிக்க சுனைகள் நிறைந்த பிரமவனமென்று ஒருவனம் உள்ளது, அதன் நாப்பண் நான்மறைக்கிழவன் தானமாயது பிரமமாநகரம் தனை நிகர்ப்பது - அவ்வனத்தின்மத்தியில் அயனது தானமாயுள்ள பெரிய பிரமநகரம் தன்னைத்தானொத்துள்ளது.

சதசிருங்கத்தில் எனத் தொக்குநின்ற ஏழாமுருபும், ஆகியென்னும் இறந்தகால வினையெச்சமும், உள்ளது என்னுங் குறிப்பு வினைமுற்றைக்கொண்டன. உடுத்து செயவெனெச்சத்திரிபு. (கக)

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

பொற்பமரினையநகர்க்கொருபாங்கர்ப்பொங்கொளிமடங்கலேறொன்று
பற்பலமடங்கல்சூழவீற்றிருக்கும்பரிசெனத்தவளநீற்றொளியி
னற்புதக்கோலத்தறிஞர்சூழ்ந்தேத்தவருட்சனற்குமாரமாமுனிவ
னெற்பணிபெருமான்சரணுளத்திருத்தியோகுசெய்திருக்குநாளொருநாள்.

(இ-ள்.) பொற்பு அமர் இனைய நகர்க்கு ஒரு பாங்கர் பொங்கு ஒளி மடங்கல் ஏறு ஒன்று பல்பல மடங்கல் சூழ வீற்றிருக்கும் பரிசு என்ன - அழகுதங்கிய இப்பிரமநகரத்துக்கொருபக்கத்திலே விளங்கும் ஒளியையுடைய ஆண்சிங்கமொன்று பல சிங்கங்கள் புடைசூழ நிகரின்றியிருக்கும் தன்மைபோல, தவள நீறு ஒளியின் அற்புதம் கோலத்து அறிஞர் சூழ்ந்து ஏத்த - வெள்ளிய திருநீற்றொளியால் சிவஞானக்கோலத்தையுடைய யோகியர்கள் சூழ்ந்து துதிக்க, அருள் சனற்குமாரமாமுனிவன் என்பு அணிபெ

ருமான் சரண் உளத்து இருத்தி யோகு செய்து இருக்கும் நாள் ஒருநாள் - திருவருளை யுடைய சனற்குமாரமுனிவர் எலும்பாபரணத்தையணிந்த இறைவரது திருவடியை த் தமது மனத்தில் நிலைபெறச்செய்து சிவயோகஞ்செய்து இருக்கும் நாளிலொருநாள்.

சிங்கம் வெண்ணிறமுடைமையால் தவளநீற்றொளியின் அற்புதக்கோலத்தறிஞ ர் சூழ்ந்தேத்த அருட்சனற்குமாரமாமுனிவன் மடங்கலேறொன்று பற்பல மடங்கல் சூழ வீற்றிருக்கும் பரிசெனவிருக்கும் என்று கூறியதால் பண்புவமையணி. இதுமுதல் "என்றெடுத்துரைக்கும்" என்னுஞ் செய்யுள்காறும் ஒருதொடர். (கஉ)

வைகறையெழுந்துகங்கைநீராடிவானவர்முனிவர்தென்புலத்தார்
செய்கடனுவப்பத்தெண்புனலிறைத்துநியாசமுந்தியானமுமாற்றிப்
பொய்களைவிரசையங்கியின்விதியாற்பூத்தநீறங்கையினெடுத்து
கைகரந்தீர்ந்தவன்பொடுநியாசநடைபெறுதியானமுன்னாக.

(இ-ள்.) வைகறை எழுந்து கங்கை நீர் ஆடி - விடியற்காலத்திலெழுந்து கங் கையில் ஸ்நானஞ்செய்து, வானவர் முனிவர் தென்புலத்தார் செய்கடன் உவப்ப தெண் புனல் இறைத்து - தேவர்களையும் முனிவர்களையும் பிதிரர்களையும் முன்பு கருதித் தா ஞ்செய்யுந் தருப்பணத்தில் அவர்கள் மகிழ்கூரத் தெள்ளிய நீரை யருக்கியந்தந்து, நியா சமும் தியானமும் ஆற்றி - அங்கநியாசகரநியாசங்களையுந் தியானத்தையுஞ்செய்து, பொ ய்களை விரசை அங்கியின் விதியால் பூத்த நீறு அங்கையின் எடுத்து - உண்மைவாய்ந்த விரசாவோமவிதியினால் மலர்ந்த திருநீற்றினை அழகிய கையாலெடுத்து, கைகரம் தீர்ந்த அன்பொடு நியாச நடைபெறு தியானமுன்னாக-வருத்தத்தினின்று நீங்கிய அன்பினோடு அவ்விருவகை நியாசமுறையின் வழியுள்ள தியானமுதலாக.

காலையில் நீராடியபின் தேவர் முனிவர் பிதிரர்களாகிய மூவர்களையு முவப்பிக்கத் தருப்பணஞ்செய்தல் முறையாதலால் வானவர் முனிவர் தென்புலத்தார் செய்கடனுவ ப்பத் தெண்புனலிறைத்து எனவும், பாவவிமோசனஞ்செய்விக்கும் வைதிகவோமமாத லால் பொய்களை விரசையங்கியின் எனவும், வேதத்தில் விதித்த முறைப்படி நீற்றியதால் விதியால் எனவும், சிவபெருமானிடத்துப்பெற்ற கங்கை பிரமலோகத்திருத்தலால் கங் கைநீராடியெனவுங் கூறினார்.

உமையம்மை திருவிரலிற்றோன்றிய பத்துக்கங்கைகளுள் மூன்றுகங்கைகளைத் திருமாலும் பிரமனும் இந்திரனும் ஆகிய இவர்களுக்குச் சிவபெருமானருளினர் என் பதை—

"இறையவன்வேணியுள்புக்கிருந்ததோர்கங்கைதன்னிற்
சிறுவதைவாங்கிமூவர்செங்கையுஞ்செறியநல்க
நிறைதருமன்பாற்சூழ்ந்துநிகழ்விடைபெற்றுத்தத்தம்
உறைநகரெய்தியங்கணுய்த்தனரனையநீத்தம்" எனவருங் கந்தபுராணத்தால்

அறிக.

தருப்பணம் மகிழச்செய்தல். வைகறை அற்றைநாள் கழிதல் என்னும் பொரு ள்மேல் நின்று விடியற்போது என்னும் பொருள்மேல் நின்றது. (கங)

அடைவுறுபஞ்சப்பிரமமந்திரத்தாலங்கியென்றற்றொடக்கத்தான்
முடிவில்சாபாலமனுக்களேழாற்றூன்மூவிரண்டதர்வமந்திரத்தால்
வடிவுறுமிடக்கைவைத்துமுன்முக்கான்மந்திரித்தறவினற்குழைத்துக்
கடிகெழுசென்னிமுதலடிகாறும்பிரமமோரைந்தையுங்கழறி.

(இ-ள்.) அடைவுறு பஞ்சப்பிரமமந்திரத்தால் அங்கியென்றல் தொடக்கத்தால் முடிவில் சாபால மனுக்கள் ஏழால் அதர்வம் மூவிரண்டு அதர்வமந்திரத்தால்-முறையா

யுள்ள பஞ்சப்பிரமமந்திரத்தாலும் அங்கியென்பதை முதலிலுள்ள திருமந்திரத்தாலும் அழிவில்லாத சாபாலமுனிவர் தொகுத்த திருமந்திரங்களேழாலும் அதர்வவேதத்திலிருந்து அறுவகைப்பட்ட திருமந்திரங்களாலும், முன் வடிவுறும் இடக்கை வைத்து முக்கால் மந்திரித்து அறலினால் குழைத்து-முன்பு அழக்மைந்த இடக்காத்தில் வைத்து மூன்று தரம் அம்மனுக்களை மந்திரித்து நீரினாற்குழைத்து, சடிகெழு சென்னி முதல் அடிகாறும் பிரமம் ஓர் ஐந்தையும் கழறி - தலைமுதல் முழங்கால்காறு மந்தப் பஞ்சப்பிரமமந்திரங்களைந்தையு முச்சரித்து.

பாதம் என்றது முழங்காலையாதலால் முழங்கால் என்றும். பஞ்சப்பிரமமந்திரமென்றது ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதமாகிய ஐந்து திருமந்திரங்களை. அக்கினியென்பதை முதலிலுள்ள திருமந்திரங்கள் ஏழாதலால் அங்கியென்றற்றொடக்கத்தால் எனவும், சாபாலமுனிவர் வேதசிரசுகளினின்றுந் தொகுத்ததால் அவர் பெயரா லத்திருமந்திரங்கள் வழங்குதலில் சாபாலமனுக்களேழால் எனவும், அதர்வணவேதம் மந்திரவடிவாதலா லதினின்றுந் தொகுத்த திருமந்திரங்கள் ஆறுதலால் மூவிரண் டதர்வமந்திரத்தால் எனவுங் கூறினார். பிரமமோரைந்து என்றது அந்தப் பஞ்சப்பிரமமந்திரமாதலால் சுட்டு வருவித்துரைத்தாம். (கச)

நிறையவுத்தூளஞ்செய்துபின்றிரியம்பகங்களானிகழ்த்துமஞ்செழுத்தா
லறலினாசமித்துப்பின்னருந்திரியாயுடந்திரியம்பகமனுவான்
முறையினஞ்செழுத்தாற்புண்டரமூன்றுமுச்சுடர்முக்குணமும்மை
மறைகண்மூவுலகுமுந்நிறமுத்தீவடிவெனச்சிந்தையிற்கண்டு.

(இ-ள்.) நிறைய உத்தூளம் செய்து - நிறைந்துவிளங்க முன்பு திருநீற்றை உத்தூளனமாகவணிந்து, பின் திரியம்பகங்களால் நிகழ்த்தும் அஞ்செழுத்தால் அறலின் ஆசமித்து - பின்பு திரியம்பகமந்திரத்தாலும் சொல்லப்படும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தாலும் நீராலாசமனஞ்செய்து, பின்னரும் திரியாயுடம் திரியம்பகமனுவால் முறையின் அஞ்செழுத்தால் புண்டரம் மூன்றும் - மீளவும் திரியாயுடமந்திரத்தாலுந் திரியம்பகமந்திரத்தாலும் முறையினோடு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினாலும் திரிபுண்டரங்களையும், முச்சுடர் முக்குணம் மும்மை மறைகள் மூவுலகு முந்நிறம் முத்தீவடிவு என சிந்தையில் கண்டு - சூரியன் முதலிய மூன்றொளிகளும் மூன்றுகுணங்களும் மூன்றுவேதங்களும் மூன்றுலகங்களும் மூன்றுநிறமும் முத்தீயும் ஆகிய இவற்றின் வடிவாக மனத்திற் பாவனைசெய்து.

முன்பு பஞ்சப்பிரமமந்திரங்களை யுச்சரித்து உத்தூளனம் செய்யவேண்டுதலால் நிறைய வுத்தூளஞ்செய்துபின் எனவும், அபமிருத்துவைப்போக்குந் திருமந்திரம் ஆதலால் திரியம்பகமனுவால் எனவும், ஆயுளை விருத்திசெய்யுந் திருமந்திரம் மூவகைப்படுதலால் திரியாயுடம் எனவும், முக்குறித்தொகுதியாதலால் திரிபுண்டரம் எனவும், முச்சுடர், முக்குணம், மும்மறை மூவுலகு முந்நிறம், முத்தீவடிவாக மனத்திற் றிரிபுண்டரத்தைப் பாவனை செய்யவேண்டும் என ஆகமங்களில் ஒவ்வொன்றெடுத்துக்கூறுதலால் அவற்றுளொன்றனைக்கூறாது அவற்றையெல்லாந் திரட்டிப் பொதுமைப்படச் சிந்தையிற்கண்டு எனவும், சத்தியோசாதம் வெண்ணிறமும், தற்புருடம் மஞ்சணிறமும், வாமதேவம் செந்நிறமுமுடைமையால் அந்நிறமூன்றனையு முந்நிறம் எனவும் கூறினார் முச்சுடர் சோமசூரியாக்கினிகள். முக்குணம் சாத்துவிகம், இராசதம், தாமதம். மும்மறை இருக்கு, யசுர், சாமம். மூவுலகு சுவர்க்கமத்தியபாதலங்கள். முத்தீ ஆகவனீயம், தட்சணாக்கினியம், காருகபத்தியம். குளகமாதலால் கழறியென்னும் வினையெச்சம்செய்து என்னும் வினையெச்சத்தின் முதனிலைகொண்டது. (கரு)

ஐந்துமூவிடத்துமழகுறவணிந்தாங்கருக்கற்குச்சந்திநீருதவி
யிந்திரதிசையைநோக்குபுமோனமெய்திநல்லாதனத்தும்பர்ப்
பந்தமில்சுகஞ்சேரிருக்கையணுகிப்பஞ்சபூதத்தையொன்றொன்றி
னுந்துறவொடுக்கியாவியைப்பிரமரந்திரத்தொடுக்கியபின்னர்.

(இ-ள்.) ஐந்து மூவிடத்தும் அழகு உற அணிந்து ஆங்கு அருக்கற்கு சந்தி நீர் உதவி - உச்சிமுதலிய பதினைந்திடத்தும் பொலிவுபெற அணிந்து அவ்விடத்துச் சூரியனுக்கு அருக்கியங்கொடுத்து, இந்திரதிசையை நோக்குபு மோனம் எய்தி நல் ஆதனத்து உம்பர் பந்தம் இல் சுகம் சேர் இருக்கையணுகி - கீழைத்திசையைநோக்கி மவுனமடைந்து நல்ல ஆசனத்தின்மேல் பந்தத்தினின்று நீங்கிய சுகாசனத்திலிருந்து, பஞ்சபூதத்தை ஒன்று ஒன்றின் உந்துற ஒடுக்கி ஆவியை பிரமரந்திரத்து ஒடுக்கிய பின்னர் - பிருதிவி முதலிய பஞ்சபூதங்களை முறையே ஒன்று ஒன்றிலொடுங்க ஒடுக்கிப் பிராண வாயுவைப் பிரமரந்திரத்திலொடுக்கியபின்பு.

பதினைந்திடமாவன உச்சி, நெற்றி, காதுகள், கழுத்து, மார்பு, புயங்கள், உந்தி, இரண்டு முழங்கை, இரண்டுமணிக்கட்டு, இரண்டுமுழந்தாள் என்னும் உறுப்புகளில் அணியவேண்டுதலால் ஐந்துமூவிடத்தும் அழகுறவணிந்து எனவும், ஒருசற்கருமஞ்செய்வோர் கீழ்த்திசையைநோக்கி யிருக்கவேண்டுதலால் இந்திரதிசையை நோக்குபு எனவும், மான்றோல், புலித்தோல், வெள்ளாடை, சித்திரம், தருப்பை என்னும் ஆசனத்துள் ஒன்றுதலால் நல்லாதனம் எனவும், அதன்மேல் சுவஸ்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் என முக்கிய ஆதனம் ஒன்பதுவகைப்படுதலால் சுகஞ்சேரிருக்கையணுகியெனவும், எவ்வாறிருக்கிற் சுகங்கிட்டுமோ அவ்வாறிருத்தல் சுகாதனம் ஆகையால் பந்தமில் எனவும், சங்காரக்கிரமமாகப் பூதசுத்தி செய்யவேண்டுதலில் பிருதுவியை அப்புவிலும், அப்புவைத் தேயுவிலும், தேயுவை வாயுவிலும், வாயுவை ஆகாயத்திலும் ஒடுக்கவேண்டுதலால் பஞ்சபூதத்தை யொன்றொன்றினுந் துறவொடுக்கியெனவும், இரேசகபூரககும்பகங்களால் பிராணவாயுவைத்தடுத்தல் பிராணாயாமமாதலால் ஆவியைப் பிரமரந்திரத்தொடுக்கிய பின்னர் எனவும் கூறினார். ஆயாமம் தடுத்தல். இரேசகம் என்றது உள்ளிருக்கிற அசுத்தவாயுவைப் புறத்திற்கழித்தல். பூரகமாவது புறத்துள்ள சுத்தவாயுவினாலே யியன்றமட்டுஞ் சரீரத்தை நிறைத்தல். கும்பகமாவது கழித்தலையும் உட்கொள்ளுதலையும் ஒழித்து உள்ளேயுள்ள வாயுவைத் தடுத்தல். சுகஞ்சேரிருக்கையணுகியென்றது ஆதனயோகம்; ஆவியைப் பிரமரந்திரத்தொடுக்கல் பிராணாயாமயோகம். (கசு)

பாதகக்குழிசிப்புலையுடற்றொடக்கைப்பவனபீசத்தினுலுணக்கிப்
போதரவன்னிபீசத்தால்வேவப்பொடித்ததுவாரிபீசத்தாற்
சீதமாகனைத்துத்தரணிபீசத்தாற்றிரட்டிவேறுறுப்பெலாம்பகுத்து
மேதகச்சத்திபீசத்தானிறைந்தமேயபின்விதியுளியுயிரோ.

(இ-ள்.) பாதகம் குழிசி புலை உடல் தொடக்கை பவன பீசத்தினால் உணக்கி - பாதகம் நிறைத்த பாண்டமாகிய கீழ்மையான தேகபந்தத்தை வாயுபீசமந்திரத்தினால் உலரச்செய்து, அது போதர வன்னி பீசத்தால் வேவ பொடித்து வாரி பீசத்தால் சீதம் ஆக நனைத்து - அதனைப்பொருந்த ஆக்கினேயபீசயந்திரத்தால் வேவ நீறுபடுத்தி அதனை வாருணபீசமந்திரத்தினால் குளிர நனைத்து, தரணிபீசத்தால் திரட்டி வேறு உறுப்பு எல்லாம் பகுத்து - பிருதிவிபீசமந்திரத்தினால் ஒருசேரத்திரட்டிச் சிரமுதலாக வெவ்வேறுயமைந்த உறுப்புகளை எல்லாம் பகுத்து, மேதகசத்திபீசத்தால் நிறைந்து, மே

ய பின் விதியுளி உயிரை - மேன்மைபொருந்தச் சத்திபீசமந்திரத்தினுல் முன்போலச் செய்து அமைந்தபின் விதிப்படி பிராணவாயுவை.

பாபபுஞ்சமாகிய சரீரதை வாயுபீசமந்திரத்தினுலுலர்த்தினர் என்பார் பாதகக் குழிசிப்புலையுடற்றெருடக்கைப் பவனபீசத்தினுலுணக்கியெனவும், அப்பாபபுஞ்சத்தை யென்பார் அது வன்னிபீசத்தால் வேவப்பொடித்து எனவும், பூதசுத்தியானபின் உற்ப த்திக்கிரமங்கூறுவார் வாரிபீசத்தாற் சீதமாநனைத்துத் தரணிபீசத்தாற்றிரட்டி வேறுறு ப்பெலாம்பகுத்து மேதகு சத்திபீசத்தானிறைத்து எனவுங் கூறினர். பீசம் மந்திரம் இங்குக்கூறியவையெல்லாம் யோகஞ்செய்தற்குரிய பாவனைகளெனவும், அருக்கற்குச் சந்தி நீருதவியென்பதுகாறும் நித்தியம் எனவும், நல்லாதனத்தும்பர் என்பதுமுதல் "என்றெடுத்துரைக்கும்" என்னுஞ் செய்யுள்காறுங்கூறியது விசேடம் எனவுங்கொள்க. வேவப்பொடித்து முறைவழாதமைத்து என்பதுகாறும் தாரணையோகம். (கஎ)

ஆசுதீருடம்பின்முன்புபோலிருத்தியங்கணுதாரபக்கயத்துத்
தேசுறுமவன்னரூபியாய்நிறைந்ததேவியைமுறைவழாதமைத்துப்
பேசிருபத்தோராயிரத்தறுநூறுயிர்ப்பினைப்பிரித்தசபையினுன்
மாசறுமானைமுகப்பிரான்முதலோர்மகிழ்வுறும்படியவர்க்குதவி.

(இ-ள்.) ஆசு திர் உடம்பின் முன்புபோல் இருத்தி - சுத்தியாகிய அச்சரீரத்தில் முன்புபோல் நிலைபெறச்செய்து, அங்கண் ஆதார பங்கயத்து தேசு உறும் வன்ன ரூபி யாய் நிறைந்த தேவியை முறைவழாது அமைத்து - அச்சரீரத்தில் ஆருதாரமாகிய தா மரைகளில் விளக்கம் வாய்ந்த அக்ஷரரூபியாய் நிறைந்த காயத்திரியென்னுஞ் சத்தியை முறையினின்றும் வழுவாமல் நியாயஞ்செய்து, பேசு இருபத்து ஓராயிரத்து அறுநூறு உயிர்ப்பினை அ சபையினுல் பிரித்து மாசு அறும் ஆனைமுகப்பிரான் முதலோர் மகிழ் வுறும்படி அவர்க்கு உதவி - சொல்லு மிருபத்தோராயிரத்தறுநூற்றுச் சுவாசங்களை அம் சமந்திரத்தாற்பிரித்துக் குற்றமற்ற விநாயகக்கடவுள் முதலியோர் மகிழ அவர்க்கு அவ ற்றை நிவேதித்து.

சுத்தியாகிய சரீரம் என்பார் ஆசுதீர் உடம்பு எனவும், முன்புள்ள பிராணவாயுவி ன் இயக்கம்போலச் சுத்தியானபின் அதனை நியாசஞ்செய்தனர் என்பார் முன்புபோலிரு த்தியெனவும், அவ்வுடம்பிலுள்ள மூலாதாரமுதலிய ஆருதாரங்கள் என்பார் அங்கண் ஆதாரம் எனவும், மூலாதாரம் நான்கிதழும், சுவாதிட்டானம் ஆறிதழும், மணிபூரகம் பத்திதழும், அநாகதம் பன்னிரண்டிதழும், விசுத்தி பதினறிதழும், ஆக்கினை இரண்டி தழும், பிரமரந்திரம் ஆயிரவிதழுமுடைய தாமரைகளாதலால் ஆதாரபங்கயத்து என வும், மூலாதாரமுதல் ஆக்கினைகாறும் உள்ள இதழ்களில் காயத்திரி அகரமுதலிய அட்ச ரரூபமாயிருத்தலால் வன்னரூபியாய் நிறைந்த தேவியெனவும், அந்த ஆதாரங்களில் மு ன்னர் அவ்வட்சரங்களை முறைப்படி நியாசஞ்செய்யவேண்டுதலால் முறைவழாதமைத் து எனவும், அம்சமந்திரம் நாப்புடைபெயராதுச்சரிக்கும் அசபாமந்திரம் அவ்வாருதா ங்களுக்கும் வேண்டும் .ஆதலால் அ சபையால் எனவும், இருபத்தோராயிரத்தறுநூற்று உ சுவாச நிசுவாசங்களை அம்மந்திரத்தாற் கூறுபடுத்தவேண்டுதலால் பிரித்து எனவும், கூ றுபடுத்திய அவற்றை மூலாதாரமுதலிய ஆருதாரங்களிலுமுள்ள மூத்தபிள்ளையார் முத லிய அதிதேவதைகளுக்கு நிவேதனஞ் செய்யவேண்டுதலால் ஆனைமுகப்பிரான் முத லோர் மகிழ்வுறும்படி யவர்க்குதவியெனவுங்கூறினர். நாப்புடைபெயராதுச்சரித்தலாவ து உள்ளிருத்தல். அசபையினுல் உதவி என்றது தியானயோகம். (கஅ)

ஆவியாமிலிங்கத்தந்தரியாகவருச்சனைவிதியுளியாற்றி
யேவியபின்னர்ப்புறத்தினுஞ்சென்னிமுகமுதல்விளம்புறுப்பெல்லாங்

தேவியையைம்பானெழுத்துருவானசெல்வியைநலம்வரவமைத்துப்
பாவுறும்பிராணுயாமங்கண்முறையிற்செய்துபின்பரிதிகாணளவும்.

(இ-ள்) ஆவியாம் இலிங்கத்து அந்தரியாக அருச்சனை விதியுளி ஆற்றி மேவிய பின்னர் - பிராணனுகிய இலிங்கத்தில் மானதயாகமாகிய அருச்சனையை வேதாகமங்களிற்கூறிய விதியால் செய்து முடித்தபின், புறத்தினும் சென்னி முகம் முதல் விளம்பு உறுப்பு எல்லாம் தேவியை ஐம்பான் எழுத்து உருவான செல்வியை நலம்வர அமைத்து - அகத்துமன்றிப் புறத்திலும் தலைமுகம் முதலாகச்சொல்லும் அவயவங்களிலெல்லாம் தேவியும் ஐம்பதெழுத்தின்வடிவான செல்வியுமாகிய காயத்திரி சத்தியைத் தாங் கருதிய நன்மை கைகூட அமைத்து, பாவுறும் பிராணுயாமங்கள் முறையில் செய்து பின் பரிதி காணளவும் - பரவிய பிராணுயாமங்களைப் பதினாறுதாஞ்செய்து பின்பு சூரியோதயத்தைக்காணுமளவும்.

பிராணனை பிரமரந்திரத்திலுள்ள அங்குட்ட ரூபியாகிய சிவவடிவாகக் கருத வேண்டுமென்பார் ஆவியாமிலிங்கத்து எனவும், அவ்வடிவிற்கு மானதபூசையாற் பூசிக்கவேண்டும் என்பார் அந்தரியாக வருச்சனை விதியுளியாற்றியெனவும், இதுகாறும் அகப்பூசை என்பார் மேவியபின்னர் எனவும், இனிப் புறப்பூசையென்பார புறத்தினும் எனவும், சிரம், கண், காது, மூக்கு, கபோலம், உதடு, பல், வாய், புயம், கண்டம், இருதயம், மார்பு, கை, கால், வயறு, முகம் ஆகிய வுறுப்புகளில் காயத்திரிதேவியை நியாசஞ் செய்யவேண்டும் என்பார் சென்னிமுகமுதல்விளம்புறுப்பெல்லாம் - தேவியையைம்பானெழுத்துருவாயசெல்வியைநலம்வரவமைத்து எனவும், பிராணவாயுவைத்தடுத்தல் கிட்டைகளுளொன்ருதலால் பாவுறும் பிராணுயாமங்கள் எனவும், அதனைப் பதினாறுதாஞ் செய்யவேண்டுதலால் முறையிற்செய்து எனவுங்கூறினர். பிராணுயாமங்கள் முறையிற்செய்தல் பிராணுயாமயோகம். (கக)

அருமறைக்காயத்திரிப்பெருமனுவையாயிரத்தெட்டுருக்கணித்துக்
கருதியயோகசித்தியின்பொருட்டுக்கணேசனைமுன்புபூசித்துப்
பரிதிமண்டிலத்துந்தண்டிலந்தனினும்பகர்தருமிலிங்கமூர்த்தியினு
மருவுமங்குட்டரூபியாஞ்சிவனைவரன்முறையருச்சனைபுரிந்து.

(இ-ள்.) அருமறை காயத்திரி பெருமனுவை ஆயிரத்து எட்டு உரு கணித்து - அரிய வேதகாயத்திரியாகிய பெரியமந்திரத்தை ஆயிரத்தெட்டுத்தரம் உருப்போட்டு, கருதிய யோகசித்தியின்பொருட்டு முன்பு கணேசனை பூசித்து - (அக்காயத்திரியைச் செபித்தலைவிட்டு) தாங்கருதிய சிவயோகஞ் சித்தியாதற்பொருட்டு முன்பு மூத்தபிள்ளையாரைப்பூசித்து, பரிதிமண்டிலத்தும் தண்டிலம் தனினும் பகர்தரும் இலிங்கமூர்த்தியினும் - சூரியமண்டிலத்திலும், ஒருவகையாசனத்திலும் சொல்லப்படும் இலிங்கமூர்த்தியிலும், மருவும் அங்குட்ட ரூபியாம் சிவனை வரன்முறை அருச்சனைபுரிந்து - பிரமாந்திரத்தில் பொருந்திய அங்குட்ட ரூபியாகிய சிவபெருமானை வேதாகமங்களிற்கூறிய முறைப்படி அருச்சனைசெய்து.

சூரியன் உதயஞ்செய்யுங்காறும் வேதகாயத்திரி திருமந்திரத்தைச் செபிக்கவேண்டுதலால் பின் பரிதிகாணளவும் - அருமறைக்காயத்திரிப்பெருமனுவை யாயிரத்தெட்டுருக்கணித்து எனவும், தாம் செய்யும் யோகம் விக்கினமின்றிக் கைகூடுதற்கு மூத்தபிள்ளையாரை முன்பு பூசிக்கவேண்டுதலால் கருதிய யோகசித்தியின்பொருட்டுக் கணேசனை முன்பு பூசித்து எனவும், கணேசனை முன்பு பூசித்து என்றமையால் வேதகாயத்திரியைச் செபித்தலை விட்டெனவும், சூரியமண்டிலத்திலும் தண்டிலாசனத்திலும் மூ

ன்னர்க்கூறிய பிராணலிங்கமூர்த்தத்திலும் சிவத்தை அங்குட்டரூபமாகத்தாபித்து அரு ச்சிக்கவேண்டும் ஆதலால் பரிதிமண்டிலத்துந் தண்டிலந்தனினும் பகர்தருமிலிங்கமூர்த் தியினும்-மருவுமங்குட்டரூபியாஞ்சிவனைவரன்முறையருச்சனைசெய்து எனவுங்கூறினர்.

யோகினைக்கூடித்தன்னுடையிதயத்தீசமென்றுரைக்குமெட்டிதழுஞ்
சேகறும்வயிராக்கியமெனும்பொகுட்டுஞ்செப்புவாமாதிகேசரமு
மாகியகமலமாவியாயாமத்தலர்தரக்கண்டுமேற்றதன்மே
லேகன்மும்மூர்த்தியாகிமுக்குணங்கட்கிறைவன்மும்மண்டிலவீசன்.

(இ-ள்.) யோகினை கூடி தன்னுடைய இதயத்து ஈசம் என்று உரைக்கும் எட்டு இதழும் - யோகத்தைக்கூடித் தம்முடைய மனத்தில் ஐசுவரியமென்று சொல்லப்படும் எட்டிதழ்களும், சேகு அறும் வைராக்கியம் என்னும் பொகுட்டும் செப்பும் வாமாதி கேசரமும் ஆகிய கமலம் ஆவி ஆயாமத்து அலர்தர கண்டு - குற்றமற்ற வயிராக்கிய மென்னும் பொகுட்டுஞ் சொல்லாநின்ற வாமைமுதலிய சத்தியாகிய மகரந்தத்தையுமு டைய தாமரையானது பிராணயாமநிட்டையால் மலரக்கண்டு, அதன்மேல் ஏகன் மும் மூர்த்தி முக்குணங்கட்கு இறைவன் மும்மண்டில ஈசன் ஆகி - அத்தாமரையின்மேலே கனாகிய விறைவன் திரிமூர்த்தியும் முக்குணங்களுக்கு இறைவனும் சோமசூரியாக்கி னி மண்டிலங்களுக்கு ஈசனுமாகி.

இருதயதாமரையாகிய அநாகதத்தைத் தாமரையாக வுருவகஞ்செய்யவந்தவர் இதய த்து எனவும், அத்தாமரைக்கு ஐசுவரியமே யிதழென்று சொல்லவந்தவர் ஈசமென்று ரைக்கு மெட்டிதழும் எனவும், அதற்குப் பொகுட்டு வயிராக்கியமென்று சொல்லவந்த வர் சேகறும் வயிராக்கியமெனும் பொகுட்டும் எனவும், அதற்கு வாமை, சேஷ்டை, ர வுத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனியென்னுஞ் சத்திகளே மகரந்தமென்று சொல்லவந்தவர் செப்புவாமாதி கேசரமும் எனவும், இவை களையுடைய அத்தாமரை பிராணயாம நிட்டையா லலருமென்று சொல்லவந்தவர் ஆவி ஆயாமத்தலர்தரக்கண்டு எனவும், அத்தாமரை மேலெழுந்தருளிய விறைவன் மும்மூ ன்றுவகைப்பட்டிருப்பானென்று சொல்லவந்தவர் மும்மூர்த்தி முக்குணங்கட்கிறைவன் மும்மண்டிலவீசன் எனவுங்கூறினர். ஆகி என்னும் இறந்தகாலவினையெச்சம் முதனிலை த் தீவகவணியாய் முக்குணங்கட்கு இறைவன் முதலியவற்றோடு நின்றது. அநாகதத்தி ற்கு எட்டிதழும், வாமைமுதலிய சத்திகளென்மரும்என்றது ஒருவகை. ஆவியாயாம த்தலர்தரக்கண்டு என்றது தியானயோகம். (உ௧)

முக்கணன்புட்டிவருத்தனனீலப்பொன்மயன்முதிர்கறைமிடற்றன்
றக்கவீசானன்வன்னிகோதாநற்சத்தியனருவினனுருவன்
புக்கசீர்ப்புருடன்விச்சுவரூபன்புருட்டுதன்சிவன்புருகூதன்
வைக்குமெய்ச்சத்துப்பராபரம்பரமான்மாமகத்துயர்பரப்பிரமம்.

(இ-ள்) முக்கணன் புட்டி வருத்தனன் நீலம் பொன்மயன் முதிர் கறைமிடற்ற ன் தக்க ஈசானன் வன்னிகோதா நல் சத்தியன் அருவினன் உருவன் சீர் புக்க புருடன் வி ச்சுவரூபன் புருட்டு தன் சிவன் புருகூதன் வைக்கும் மெய்ச்சத்து பராபரம் பரமான் மா மகத்து உயர் பரப்பிரமம்-முக்கணனும் புட்டிவருத்தனனும் கிருஷ்ணபிங்களனும் மிகவுங் கறுத்த ஸ்ரீகண்டனும் தகுதியையுடைய ஈசானனும் வன்னிகோதாவும் நல்ல சத் தியனும் அருவினனும் உருவினனும் சிறப்பமைந்த புருடனும் விச்சுவரூபனும் புருட்டு தனும் சிவனும் புருகூதனும் நிலைபெற்ற உண்மையாகிய சத்தும் பராபரமும் பரமான் மாவும் மகத்தும் உயர்ந்த பரப்பிரமமும்.

புட்டிவருத்தனன் - அடியவர்களுக்கு நன்மையை மிகுதியாக விருத்திசெய்கிற வன். நீலப்பொன்மயன் ஸ்ரீகண்டக்கருமையையும் திருமேனியின் செந்நிறத்தையுமு டையோன். ஈசானன் யாவையும் ஆளுதலுடையவன். விச்சுவரூபன் பிரபஞ்சரூபமா யுள்ளவன், புருட்டுதன் எல்லாராலு முன் துதிக்கப்பட்டவன். புருகூதன் முன்னழைக் கப்படுபவன். வன்னிரேதா அக்கினிக்கு மூலமாயுள்ளவன். மற்றையவை வெளி. (உஉ)

என்றெடுத்துரைக்கும்பெயர்களின்பொருளாயியம்பரும்பரவெளிநாப்ப
ணின்றபேரொளியின்பிழம்பினையினையசத்தியினேடுநேர்நோக்கி
யொன்றுதன்னுயிரையப்பெரும்பொருளோடொன்றுவித்திருபகுப்பிறந்து
மன்றயோகத்தினசைவறவிருந்தான்மறையவனீன்றருண்மதலை.

(இ-ள்.) என்று எடுத்து உரைக்கும் பெயர்களின் பொருளாய் இயம்பரும் பர வெளி நாப்பண் நின்ற பேர் ஒளியின் பிழம்பினை - என்றெடுத்துக்கூறுந் திருநாமங்க ளின் அருத்தமாய்ச் சொல்லுதற்கரிய பரமாகாசத்தினடுவினின்ற பெரிய ஒளியின் திர ளினை, இனைய சத்தியினேடு நேர்நோக்கி ஒன்று தன் உயிரை அ பெரும்பொருளோடு ஒன்றுவித்து இருபகுப்பு இறந்து-இந்தப் பராசத்தியினேடுசென்று நேரே தியானித்துப் பொருந்திய தமதுயிரை யந்தப் பெரியபொருளோடு கலக்கவைத்து ஆண்டானடிமை யென்னும் இரண்டுபகுப்புமிறந்து, மறையவன் ஈன்றருள் மதலை மன்றயோகத்தின் அசை வு அற இருந்தான் - பிரமன் பெற்ற புத்திரராகிய சனற்குமாரமுனிவர் தேற்றமாகப் பிராணயாமநிட்டையில் சித்திரம்போல அசைவற இருந்தனர்.

முக்கணன் முதலிய பெயர்கள் வேதாகமங்களில் எடுத்துரைக்குங் காரணப் பெயர்கள் என்பார் என்றெடுத்துரைக்கும் பெயர்களின் பொருளாய் எனவும், சிதாகாச ம் என்பார் பரவெளியெனவும், முதனிலைத்தீவகமாகநின்ற ஆகியென்னும் வினையெச்ச த்தின் முடிபு என்பார் நின்ற எனவும், திருவருளால் சென்று தியானிக்கவேண்டுதலால் இனையசத்தியினேடு நேர்நோக்கியெனவும், ஆதித்தன் ஒளி யேதுவாகக் கண்கள் அச் சூரியனைக்கண்டு பிறிவர நின்றாற்போல ஆன்மா திருவருளேதுவாக அச்சிவத்தினைச் சென்று கூடிப் பிறிவற்றச் சிவன் சீவன் என்னு மிருபகுப்பொழிந்து நிற்கும் என்பார் ஒன்று தன்னுயிரை யப்பெரும்பொருளோடொன்றுவிந் திருபகுப்பிறந்து எனவுங்கூறி னர். யோகத்தினசைவற இருந்தானென்றது நிட்டை. (உ௩)

ஆங்கவனவ்வாறரியயோகத்தினனந்தபரவசனகி
யோங்குபேரறிவின்விழித்தனனுறங்குமேல்வையினும்பர்தம்பெருமான்
மாங்குயிற்கிளவிமலைமகளோடுமலர்தலையுலகுகாத்தளிப்பான்
வீங்கியகருணையூற்றெழத்தருமவெள்விடையூர்திமேல்கொண்டு.

(இ-ள்.) ஆங்கு அவன் அவ்வாறு அரியயோகத்தின் ஆனந்த பரவசனகி ஓங்கு பேர் அறிவின் விழித்தனன் உறங்கும் எல்லையின் - அவ்விடத்து அச்சனற்குமாரமுனி வ ரவ்விதமாகச் செய்தற்கரிய யோகத்தால் ஆனந்தபரவசத்தையுடையவராகி நிலைபெ ற்ற அப்பரமாகாசத்திற் சாக்கிராதீதமடைந்தகாலத்தில், உம்பர் தம்பெருமான் மாங்கு யில் கிளவி மலைமகளோடு மலர்தலை உலகு காத்து அளிப்பான் - அயன்முதலிய தேவர் பெருமானகிய இறைவன் மாமரத்திலுள்ள குயிலிசைபோலுஞ் சொல்லையுடைய உமை யம்மையோடு பரந்த இடத்தினையுடைய உலகினைக் காத்தோம்ப, வீங்கிய கருணை ஊற் றெழ தரும வெள் விடை யூர்திமேல் கொண்டு - மிக்க கருணைசுரந்தெழத் தருமமாகிய வெள்ளிய இடபவூர்திமேலாரோகணித்தருளி,

சாக்கிரத்தில் சிவத்தில் கலந்து கருவிகள் தத்தம் விடயத்திற்செல்லாது அவை கழன்று நின்றவிடம் சாக்கிராதீதமாகையால் ஓங்குபேரறிவின் விழித்தனனுறங்குமேல் வையின் என்றதற்குப் பரமாகாசத்திற் சாக்கிராதீதத்தையடைந்து என்றும். இது பிரா தானுங்கமாகிய யோகம். விழித்தான் முற்றெச்சம். பிரமன் முதலியோரழியுந் தேயுப் பிரளயத்தி லறக்கடவுளிறப்புக்கஞ்சி இடபவடிவங்கொண்டு சிவபிரானையடைந்து அடியேனை யூர்தியாகக்கொண்டு இறப்பினையொழித்தருளாயென்று குறையிரக்க, அவ் வாறேயருளி யூர்தியாகக்கொண்டருளினராதலால் தருமவெள்விடையூர்தியென்றார்.

தருமம் ஊர்தியானதை—

“ பெருகுதேயுப்பிரளயமன்னதிற் - றருமம்யாவினுக்குந்தனித்தெய்வதம்
வெருவியாமிவண்வீடுதுமேலினிப்-புரிவதேதெனப்புந்தியிற்சூழ்ந்ததே.

ஆறுலாஞ்சடையண்ணலைச்சேர்வனே-லீறிலாதென்றுமுற்றிடுவேனெனாத்
தேறியேயறத்தெய்வதஞ்செங்கணன்-ஏறதாயொரொழிலுருக்கொண்டதே.

ஏற்றின்மேனிகொண்டீசன்முனேகியே-போற்றியானின்றுபொன்றிடுந்தன்மையை
மாற்றியாற்றல்வழங்கினிற்கூர்தியாம்-பேற்றையெற்குப்பிரானருளென்னவே.”

“ இறத்தலையின்மையும்யானமாய்த்தனைப்-பொறுத்திடுந்தன்மையும்பொருவில்வன்மை
யும், உறைத்திடுயென்பும்வாலுணர்வுநல்கியே - அறத்தனிக்கடவுளுக்கண்ணல்கூறுவா
ன்” எனக் கந்தபுராணத்தில் வருதல் காண்க. (உ௪)

உரகர்கந்தருவரிராக்கதர்சித்தர்யோகிகளாசைகாப்பாளர்
கிரைமணிமோலிபாதுகைவருடநிகழுமாகாவுடனூகூ
விரிபுகழேனைவீணைவல்லவரும்விருதெடுத்தோதியாழ்தடவ
விருவிசும்பகத்தினினிதெழுந்தருளியுலவினனென்னையாளுடையான்.

(இ-ள்.) என்னை ஆள் உடையான் - என்னை யாளாகவுடைய அவ்விறைவன், உரகர் கந்தருவர் இராக்கதர் சித்தர் யோகிகள் ஆசை காப்பாளர் மணி நிரை மோலி பாதுகை வருட - நாகலோகத்தாருங் கந்தருவரும் இராக்கதரும் சித்தரும் யோகிகளுந் திசைகளைக்காக்கும் இந்திரன் முதலியோருமாகிய இவர்களது இரத்தினவரிசையையுடைய கிரீடங்களில் திருவடிப்பாதுகை யொருபால் தடவவும், நிகழும் ஆகாவுடன் ஊகூ புகழ்விரி ஏனை வீணை வல்லவரும் விருது எடுத்து ஓதியாழ் தடவ - யாவராலும் புகழப்படும் ஆகாவோடு ஊகூவும் புகழ்மிக்க மற்ற வீணையில் வல்லவரும் விசயத்தை யெடுத்துப்பாடி வீணையினரம்பை யொருபால் தடவவும், இருவிசும்பு அகத்தின் இனிது எழுந்தருளி உலவினன் - பெரிய விண்ணிலினிதாக எழுந்தருளி யுலாப்போந்தரு

ஆகா, ஊகூ என்னும் இருவரும் வீணையில்வல்ல கந்தருவர்களாதலால் ஆகாவுடனூகூவிரிபுகழேனை வீணைவல்லவரும் என்றார். (உ௫)

அதுசனற்குமாரன்யோகினில்வைத்தகருத்தினாலறிந்திலனாகிக்
கதுமெனவிருக்கையெழாமைகண்டெம்மான்கருணை கூர்ந்துமையவளோடு
விதுவணிசடிலத்தெம்மையேயுளத்தின்விழைதரவிருத்திமற்றெம்பாற்
பொதுவறவொருக்குமனத்தினனென்னாப்புரிவொடுங்கோயில் புக்கனனால்.

(இ-ள்.) அது சனற்குமாரன் யோகினில் வைத்த கருத்தினால் அறிந்திலன் ஆகி - திருவுலாப்போந்தருளியதைச் சனற்குமாரமுனிவர் யோகத்தில் வைத்த கருத்தா லறியாதவராகி, கதுமென இருக்கை எழாமை எம்மான்கண்டு - விரைந்து இருக்கை

யினின்றெழாமையை எமது பெருமான் பார்த்தருளி, கருணைகூர்ந்து உமையவள் ஒடு விது அணி சடிலத்து எம்மையே உளத்தின் விழைதர இருத்தி - கிருபைமிக்கூர்ந்து உமையம்மையோடு இளஞ்சந்திரனையணிந்த சடாபாரத்தையுடைய எம்மையே மனத்தில் விரும்ப இருத்தி, எம்பால் பொது அற ஒருக்கும் மனத்தினன் என்று - என்னிடத்தே யுரிமையாக ஒருசேர நிலைபெறுத்து மனத்தினையுடையவனென்றருளி, புரிவொடும் கோயில் புக்கனன் - அன்போடுந் திருக்கோயிலிற் புகுந்தருளினான்.

அகத்திற்கண்டு தரிசித்திருத்தலால் அது சனற்குமாரன் யோகினியில் வைத்த கருத்தினாலறிந்திலனாகிக்-கதுமென விருக்கையெழாமைகண்டு எனவும், வேறியோரிடத்து மனஞ்செலுத்தாமையால் எம்மாற் பொதுவறவொருக்கு மனத்தினனாகி யெனவுங் கூறினார். (உசு)

நந்தியெம்பெருமானோக்கினன்வெருண்டுநலமிலாவொட்டகமேபோ
லந்திலெம்பிரானையிகழ்ந்திருந்ததனாலவ்வுருவாகெனச்சபிப்பச
சிந்தைகூர்முனியுமொட்டகமாகிசெழுநிலத்துழிதருகாலை
முந்தைஞான்றியற்றுநல்வினைப்பயனான்முன்னினன்கச்சிமாநகரம்.

(இ-ள்.) நந்தி எம்பெருமான் நோக்கினன் வெருண்டு நலம் இல்லாத ஒட்டகமே போல் அந்தில் எம்பிரானை இகழ்ந்து இருந்ததனால் அ உரு ஆக என சபிப்ப-நந்தியாகிய எமது பெருமான் பார்த்துக் கோபித்துச் சிறிதும் நன்மையில்லாத ஒட்டகத்தைப்போல அவ்விடத்தில் எமது பெருமானை யவமதித்து மௌனாயிருந்தமையால் அவ்வொட்டகவடிவமாகக் கடவாயென்று சபிக்க, சிந்தைகூர் முனியும் ஒட்டகம் ஆகி செழு நிலத்து உழிதரு காலை-வருத்தமிக்க அச்சனற்குமார முனிவரும் ஒட்டகமாகி வளமிக்க நிலவுலகிற் சுழன்றுதிரியுங்காலத்தில், முந்தை ஞான்று இயற்றும் நல்வினை பயனால் கச்சி மாநகரம் முன்னினன் - முன்னாளிற்செய்த நல்வினைப்பயனாற் கச்சியென்னும் பெரிய திருநகரத்தை யடைந்தனன்.

செவ்வே தலையை நிறுத்தியிருத்தலில் ஒட்டகமேபோலிருந்ததனால் அவ்வுருவாகெனச்சபிப்ப என்றார். அந்தில் இடப்பெருள்மேல் நின்ற இடைச்சொல். (உஎ)

ஆயிடைக்கச்சபேசனுமிறைவனமர்ந்தருள்கோயிலின்மாடே
காயுமைம்பொறியினுலகெலாப்படைக்குங்கருத்தினான்மலரணைப்புத்தே
ளேமாதவத்தினினிதுவீற்றிருக்குஞ்சூழலினணுகுதலோடு
தீயபாவத்தினொட்டகவடிவாஞ்சிறுவனைக்கண்டனன்முந்தை.

(இ-ள்.) ஆயிடை கச்சபேசனும் இறைவன் அமர்ந்தருள் கோயிலின்மாடு-அவ்விடத்திற் கச்சபேசனெழுந்தருளிய திருக்கோயிலின்பக்கத்து, மலர் அணை புத்தேள் உலகு எலாம் படைக்கும் கருத்தினான் காயும் ஐம்பொறியின்-பிரமன் எல்லாவுலகங்களையும் படைக்கும் கருத்தோடு அடக்கிய பஞ்சேந்திரியங்களையுடையவனாய், தூய மாதவத்தின் இனிது வீற்றிருக்கும் சூழலில் அணுகுதலோடு - களங்கமில்லாத பெரிய தவத்தில் இனிதாக வீற்றிருக்குமிடத்திற்சேர, தீயபாவத்தின் ஒட்டக வடிவாம் சிறுவனை முந்தை கண்டனன் - கொடிய பாவத்தினையுடைய வொட்டகவடிவாகிய தனது புத்திரனை அப்பிரமன் பார்த்தனன்.

ஓர்கால் யாவுஞ்சிருட்டித்தலைப் பிரமன் பெறும்பொருட்டுக் காஞ்சியிலெய்திக் கச்சபேசத்தில் தவஞ்செய்திருந்தமையால் உலகெலாம் படைக்குங் கருத்தினான் மலரணைப்புத்தேள் - தூயமாதவத்தினினிதுவீற்றிருக்குஞ்சூழலின் என்றார். (உஅ)

பாவடிநெடுங்காற்றிரையெழுதோல்வாய்ப்பழியுடனெளிந்துநீள்கழுத்தின்
யாவருமிழிக்குமொட்டகயாக்கையிளவலைநோக்கிநின்றந்தோ
சேவுயர்கொடியானடித்தொழும்பாற்றுந்திருவருட்குரியனுமிவனுக்
காவவென்செய்கோவென்மகற்கிதுவந்தடுத்ததெவ்வாறெனவெண்ணி.

(இ-ள்.) பா அடி நெடும் கால் திரை எழு தோல் வாய் பழி உடல் நெளிந்து நீள் கழுத்தின் யாவரும் இழிக்கும் ஒட்டக யாக்கை இளவலை நோக்கிநின்று - பரந்த அடியையும் நீண்டகாலையும் திரைந்தெழுந்த தோல்வாயையும் யாவரும் பழிக்கும் உடம்பையும் நெளிந்து நீண்ட கழுத்துமாகிய இவ்வுறுப்புகளோடு கண்டோர் யாவரும் இழிவுபடுத்தும் ஒட்டகசரீரத்தையுடைய தனது புத்திரனைப்பார்த்து நின்று, அந்தோ - ஐயோ, சே உயர் கொடியான் அடி தொழும்பு ஆற்றும் திரு அருட்கு உரியனும் இவனுக்கு - உயர்ந்த இடபக்கொடியையுடைய இறைவன் திருவடித்தொண்டு செய்தற்குக் காரணமாகிய அவன் திருவருளுக்குரியனாகிய இவனுக்கு, ஆவ என் செய்கோ-ஐயோ நானென்னசெய்வேன், என் மகற்கு இது வந்து அடுத்தது எ ஆறு என எண்ணி - என் புத்திரனுக்கு இச்சரீரம் வந்தடுத்தது எவ்வாறென்று கருதி.

யோகினைக்கூடிமுன்னிகழ்வனைத்துமுணர்ந்தனனவ்வினைதவிர்ப்பா
னாகமமுறையாற்கச்சபேசன்பாலடைந்துபூசனைசெய்தேத்தெடுப்பான்
மாகர்போற்றிசைக்குமிளம்பிறைமோலிவள்ளலேயுலகளித்தழிக்கு
மேகனேயாமையுருவொழித்தரியையாண்டநின்னிணையடிபோற்றி.

(இ-ள்.) யோகினை கூடி முன் நிகழ்வு அனைத்தும் உணர்ந்தனன் அ வினை தவிர்ப்பான் - சிவயோகங்கூடி முன்னடந்தவெல்லாவற்றையுந்தெரிந்து தன்மகனுக்குவந்த தீவினையையொழிக்க, ஆகமமுறையால் கச்சபேசன் பால் அடைந்து பூசனை செய்து ஏத்தெடுப்பான் - சிவாகமமுறையால் கச்சபேசனாகிய இறைவனது சந்நிதியையடைந்து பூசைசெய்து துதிக்கும் பிரமன், மாகர் போற்றிசைக்கும் இளம்பிறை மோலி வள்ளலே உலகு அளித்து அழிக்கும் ஏகனே-தேவர்கள் துதிக்கும் இளஞ்சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய பெருங்கொடையோய் உலகினைத்தந் திளைப்பாற்றும் ஏகனே, யாமை உரு ஒழித்து அரியை ஆண்ட நின் இணை அடி போற்றி - திருமால்கொண்ட கூர்மவடிவத்தையொழித்து அத்திருமாலை யடிமைகொண்ட நின்றிருவடிக்கு வந்தனம்.

இளம்பிறை மோலிவள்ளலே, உலகளித்தழிக்கும் ஏகனே, யாமையுருவொழித்தரியையாண்ட நின்னிணையடி என்னும் விசேடணங்கள் இரப்போர் தமது குறையினின்று நீங்கி வேண்டியவற்றை வேண்டியபடியே பெறுவர் என்னுங்கருத்தை யுட்கொண்டிருத்தலால் கருத்துடையடையணி.

சந்திரன் தக்கன் சாபத்தால் சோடசகலைகளுள் பதினைந்து கலைகளிழந்து ஒரு கலையையும் இழப்பதன்முன்னமே சரணடையச் சிவபிரானார் கருணைகூர்ந்து அத்தக்கன் சாபந்தொடராமல் அவ்வொருகலையைத் தமது திருமுடியிலணிந்து கலைவளரும்படி அனுக்கிரகஞ்செய்தார் என்பதை—

“ தீர்ந்தனவன்றியேதிங்கடன்னிடை
ஆர்ந்திடுகலையினையங்கையிற்கொளா
வார்ந்திடுசடைமிசைவயங்கச்சேர்த்தினன்
சார்ந்திலதிவ்வழித்தக்கன்சாபமே” எனக் கந்தபுராணம் சந்திரசாபப்படலத்திலும்,

படைப்பு உயிர்களுக்கு மலபாகம் வரச்செய்தலும், அழிப்பு இளைப்பொழித்தலு மாதலால் இவை இறைவன் உயிர்களிடத்துவைத்த கருணையென்பதை—

"அழிப்பிளைப்பாற்றலாக்கமவ்வவர்கன்மமெல்லா
கழித்திடனுகரச்செய்தல்காப்பதுகன்மவொப்பிற்
றெழித்திடன்மலங்களெல்லாமறைப்பருள்செய்திதானும்
பழிப்பொழிபந்தம்வீடுபார்த்திடினருளேயெல்லாம்" எனச் சிவஞானசித்தியாரிலும்,

திருமால் கூர்மவடிவங்கொண்டு கடல்கடைந்து தேவர்களுக்கு அமுதுதந்த செருக்கால் உலகஞ்சக் கடலைக்கலக்கியபோது தேவர்களஞ்சி வேண்டச் சிவபெருமான் அதன் செருக்கினையொழித்துக் கூர்மத்தின் ஓட்டினையணிந்து அத்திருமால் வேண்டிய வரங்களைத்தந்தனன் என்பதை—

"முன்னொருபிரமகற்பத்திடைநாரணன்மூரிநீர்
மன்னுமந்தரமலையாமையாய்த்தாங்கிவார்கடல்கடைந்
தின்னமுதஞ்சுரர்க்கீந்தபின்வெஞ்செருக்கெய்தியாங்
கன்னமுந்நீர்முழுதுழக்கினனுலகெலாமஞ்சவே.

அச்சநீத்தாருயிருய்வகையருள்சுரந்தாங்குறீஇக்
கச்சபத்தினுயிர்செற்றதனோட்டினைக்கதுமென
நச்சியவெண்டலைமாலிகைநடுவுறக்கொண்டனன்
பச்சிளங்கிள்ளை பால்வீற்றிருந்தருளியபண்ணவன்.

இப்பெரும்பிழைசவிர்ந்துய்யுமாறாரணனெம்பிரான்
வைப்பெனுடகஞ்சியிற்சோதிலிங்கத்தினைவழிபடூஉ
மெய்ப்படுமன்பினாலிரந்திரந்தேத்தலும்விடைமிசைத்
துப்புறழ்செஞ்சடைத்தோன்றலங்கவனெதிர்தோன்றினன்" என இப்புராணத்திலும் வருதல் காண்க. (௬௦)

காசிகேதாரம்புட்கரங்குருக்கேத்திரங்கடிநைமிசங்களினு
மோசைகொள்காஞ்சியதிகமென்றுரைப்பதுரைப்பிரமாணமொன்றன்று
லீசனேநீயுமுமையுமேயல்லாலிந்நகர்படைத்தவரில்லை
தேசுறயானேகண்ணுறக்கண்டுதெளிந்ததாமெந்தவூழியினும்.

(இ-ள்.) காசி கேதாரம் புட்கரம் குருகேத்திரம் கடி நைமிசங்களினும் ஓசை கொள் காஞ்சி அதிகம் என்று உரைப்பது உரை பிரமாணம் ஒன்று அன்று - காசியுங் கேதாரமும் புட்கரமுங் குருக்ஷேத்திரமும் விளக்கமமைந்த நைமிசாரணியமுமாகிய இவைகளிலும் புகழ்ச்சிமிக்க காஞ்சியே அதிகமென்று கூறுவது ஆகமப்பிரமாணம் ஒன்றுமட்டுமல்ல, ஈசனே நீயும் உமையுமே அல்லால் இ நகர் படைத்தவர் இல்லை - சிவபெருமானே நீயும் உமையம்மையுமல்லாமல் இந்த நகரைப்படைத்தவரொருவருமில்லை, யானே எந்த ஊழியினும் தேசுற கண்ணுற கண்டு தெளிந்தது ஆம் - நானே யெந்த ஊழிகாலத்திலும் இதனைப் பிரத்தியக்ஷமாகக்கண்டு தெளிந்தது.

காசிமுதலிய திவ்யக்ஷேத்திரங்களிலுங் காஞ்சி யதிகம் என்பது ஆகமப்பிரமாணமொன்றுமட்டுமல்ல பிரத்தியக்ஷப்பிரமாணம் என்பான் ஈசனேநீயுமுமையுமேயல்லாலிந்நகர்படைத்தவரில்லை - தேசுறயானேகண்ணுறக்கண்டுதெளிந்ததாம் எந்தவூழியினும் என்றான் என்றார்.

சிவபெருமானே யுமையோடு காஞ்சியைப்படைத்தனன் என்பதை—

" அக்காஞ்சிகவினாசப்பொருட்டுநாம்படைத்துவைத்ததாதலாலே
எக்காலுமங்ககரினகத்துயரும்வினைத்துயருமெய்தாவாகும்" என இந்நூலில் வருதல் காண்க. (௩க)

புரியுநின்னருளாலுயர்ந்தவரனேகர்புரவுபூண்டெட்டுருவெடுத்தோய்
வரிவிழியுமையாண்மணந்தபேரின்பவடிவமேயிடும்பைநோயறுக்குங்
கருணைவாரிதியேயிரங்கிடாயெமக்குக்களைகணீயன்றிவேறிலையென்
றிருகணீர்சொரியநெக்குநெக்குருகியேத்தினுனுத்தழும்பேற.

(இ-ள்.) புரியும் நின் அருளால் உயர்ந்தவர் அனேகர் - விரும்பத்தக்க உனது கருணையால் உயர்ந்துளோர் பலர், புரவு பூண்டு எட்டு உரு எடுத்தோய் - ஆன்மாக்களைக் காத்தற்பொருட்டு அட்டமூர்த்தங்கொண்டோய், வரி விழி உமையாள் மணந்த பேரின்ப வடிவமே - வரியமைந்த கண்களையுடைய உமையம்மையோடு கலந்த பேரின்பசொரூபமே, இடும்பை நோய் அறுக்கும் கருணைவாரிதியே - பிறவித்துன்பநோயை யொழித்தருளுங் கிருபாசமுத்திரமே, எமக்கு களைகண் நீ அன்றி வேறு இல்லை இரங்கிடாய் என்று-எமக்குப் பற்றுக்கோடு நீயேயல்லாமல் வேறில்லையாதலா லிரங்கியருளாயென்று, இருகண் நீர்சொரிய நாதழும்பு ஏற நெக்குநெக்குருகி ஏத்தினுன்-இரண்டு கண்களும் ஆனந்தபாஷ்பஞ்சிந்தவும் நாத்தழும்பேறவும் நெக்குவிட்டுருகித்துதித்தான்.

இந்திரன்முதலியோர் தத்தம் பதங்களைப்பெற்று மேம்பட்டது சிவபெருமான் றிருவருளாலாதலால் புரியுநின்னருளாலுயர்ந்தவரனேகர் எனவும், எங்கும் நிறைந்து ஆன்மாக்களுக்கு அருளுதலால் புரவுபூண்டெட்டுருவெடுத்தோய் எனவும், ஆன்மாக்களுக்குப் பந்தமும் வீடும் அருளுதற்பொருட்டே உமையம்மையோடு கலத்தலால் வரிவிழியுமையாள் மணந்த பேரின்பவடிவமே யிடும்பைநோயறுக்குங் களைகணேயெனவும் என்றான் என்றார்.

இந்திரன்முதலியோர் தத்தம் பதங்களைப்பெற்று மேம்பட்டது சிவபெருமான் றிருவருளால் என்பதை—

" வாழ்த்துவதும்வானவர்கடாம்வாழ்வான்மனநின்பால்
தாழ்த்துவதுந்தாமுயர்ந்துதம்மையெல்லாந்தொழவேண்டிச்
சூழ்த்துமதுகரமுயலுந்தாரோயைநாயடியேன்
பாழ்த்தபிறப்பறுத்திடுவான்யானுமுன்னைப்பரவுவனே" எனவும்,

எட்டுருவென்றது பிருதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், ஆன்மா.

" நிலனீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்
புலனுயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்துநின்றான்
உலகேழெனத்திசைபத்தெனத்தானொருவனுமே
பலவாகிநின்றவாதோணோக்கமாடாமோ" எனவும்,

எங்கும் நிறைதலை—

" அருக்கனிற்சோதியமைத்தோன்றிருத்தகு - மதியிற்றண்மைவைத்தோன்றிண்டிறற் - றீயின்வெம்மைசெய்தோன்பொருடிகழ் - காலினூக்கங்கண்டோனிழறிகழ் - நீரின்சுவைநிகழ்ந்தோன்வெளிப்பட - மண்ணிற்றிண்மைவைத்தோன்" எனவும்,

" பாரிடையைந்தாய்ப்பரந்தாய்போற்றி - நீரிடைநான்காய்நிகழ்ந்தாய்போற்றி- தீயிடைமூன்றாய்த்திகழ்ந்தாய்போற்றி - வளியிடையிரண்டாய்மகிழ்ந்தாய்போற்றி-வெளியிடையொன்றாய்விளைந்தாய்போற்றி" எனவும் வருந் திருவாசகத்திலும்,

உயிர்களிடத்துப் பிறிவரும் அத்துவிதமாய் நின்றருளுதலை—
" உலகெலாமாகிவேறாயுடனுமாய்" எனவும்,

உயிர்கட்குப் பந்தமும் வீடும் அருளுதற்பொருட்டு உமையம்மையோடு கலத்தலை—
" போகியாயிருந்துயிர்க்குப்போகத்தைப்புரிதலோரார்" எனவும் வரும் சிவ ஞானசித்தியாரிலும் வருதல் காண்க.

புரியுநின்னருளாலுய்ந்தவரனேகர் எனவும் பாடம். (கூஉ)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

**திசைமாமுகன்வாழ்த்தொலியஞ் செவியிற்சென்றேற லுமாரருளுந்துதலான், மிசைவானவர்பூதகணம்புடையின் மிடையப்பெருமானெதிர்நின்றருளி வசைதீர்தரவேட்டவரந்தருகேம்மைந்தாவுரைசெய்கெனவாய்மலர விசைபாடினனோகைதுளும்பிடநின்றிதுகூறுதலுற்றனன்வேதியனே.**

(இ-ள்.) திசை மாமுகன் வாழ்த்து ஒலி அம் செவியில் சென்று ஏறலும் - பிரமன் வாழ்த்தொலி திருச்செவியுட்சென்றடைய, ஆர் அருள் உந்துதலான் - பெறுதற்கரிய திருவருள் தன்னைச் செலுத்துதலால், மிசைவானவர் பூதகணம் புடையில் மிடைய பெருமான் எதிர் நின்று அருளி - ஆகாயத்தின்மேல் தேவர்களும் பூதகணங்களும் இரண்டுபக்கங்களினும் நெருங்கச் சிவபெருமான் எதிரே நின்று, வசை தீர்தர வேட்ட வரம் தருகேம் மைந்தா உரைசெய்க என வாய்மலர - குற்றந்தீர நீ விரும்பிய வரத்தைக்கொடுப்பேம் மைந்தனே சொல்லக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருள, வேதியன் இசைபாடினன் ஓகை துளும்பிட நின்று இது கூறுதல் உற்றனன் - பிரமனானவன் இசைபாடி மகிழ்ச்சி ததும்பநின்று இதனைச் சொல்லத்தொடங்கினன்.

சிவபெருமான் கருணாமூர்த்தியாதலால் அக்கருணை தன்னைச் செலுத்தக் காட்சி தந்தருளினன் என்பார் ஆரருளுந்துதலால் பெருமான் எதிர்நின்று என்றார். இது விதியணி. (கூகூ)

**நின்றொண்டுவழாதவனென்புதல்வனீடுந்தவமுற்றுசனற்குமரன் முன்றின்சதகோட்டிடைநின்னிருதாண்முன்னிச்சிவயோகுமுயன்றுதவத் தொன்றும்பொழுதாயிடைநீவருதலுணர்ந்தானலனிட்டைகருத்துறலா லன்றங்கருணந்திசபித்தருளமரொட்டகவாக்கையனாயினனே.**

(இ-ள்.) என் புதல்வன் நீடும் தவம் முற்று சனற்குமரன் நின் தொண்டு வழாதவன் - எனது புத்திரனாகிய அளவிறந்த தவத்தைச் செய்துமுடித்த சனற்குமாரமுனிவனென்பவன் உனது திருவடித்தொண்டினின்று நீங்காதவன், முன் இன் சதகோட்டிடை நின் இருதாள் முன்னி சிவயோகு முயன்று தவத்து ஒன்றும் பொழுது நிட்டை கருத்து உறலால் ஆயிடை நீ வருதல் உணர்ந்தானலன் - முன்பு இனிமையாகிய சதசிருங்கமலையிடத்து உனது இரண்டு திருவடிகளையுங்கருதிச் சிவயோகஞ்செய்து அத்தவத்திற் கலந்து நிற்குங்காலையில் சமாதியிற் கருத்துச்சேர்தலால் அவ்விடத்து நீ வருதலையறிந்தானலன், அன்று அங்கு அருள் நந்தி சபித்ததருள் அமர் ஒட்டக ஆக்கையன் ஆயினன் - அக்காலையில் அவ்விடத்திற் திருவருள்வாய்ந்த நந்திதேவர் சபித்ததனாற் உலகத்திற்பொருந்திய ஒட்டகசரீரமெடுத்தான்.

தவம் என்றது தியானத்தை. நிட்டையென்றது சமாதியை. (கூச)

**இன்றேயிதுதீர்த்தருளென்னவிரங்கெந்தைதிருத்தொழுமெங்கையுமெம்மடியார் கன்றேகொடுசெய்தனையாவையவைகம்மால்விலகாவதனுன்மறையோய்**

பொன்றுதிதுநந்திதவிர்ப்பனெனப்புரிவுற்றருள்செய்துமறைந்தனனு
லன்றேமலராளிதவத்திறனலங்குற்றருணந்தியைவேண்டுதலும்.

(இ-ள்.) இன்றே இது தீர்த்தருள் என்ன இரந்து ஏத்திதொழ - இப்பொ ழுதே இவ்வடிவினைத் தீர்த்தருளாயென்று குறையிரந்து துதித்துவணங்க, எந்தையும் எம் அடியார் நன்றே கொடு செய்தன யாவை அவை நம்மால் விலகா - இறைவரும் எமது அடியார் உய்தற்பொருட்டுச்செய்த காரியங்களெவை அக்காரியங்கள் நம்மால் விலக்கமுடியா, அதனால் மறையோய் இது பொன்றுது - அச்செய்கையால் பிரமனே இத்தீமை நம்மால் நீங்காது, நந்தி தவிர்ப்பன் என்ன புரிவுற்று அருள்செய்து மறைந்த னன் - நந்தி தவிர்ப்பானென்று விரும்பித் திருவருள்செய்து மறைந்தருளினர், அன்றே மலராளி தவம் திறனல் அங்கு உற்று அருள் நந்தியை வேண்டுதலும் - அப்பொழுதே அப்பிரமன் தவப்பகுதியினு லவ்விடந்தடைந்தருளிய நந்திதேவரைக் குறையிரப்ப.

சிவனடியவர் ஒருவர்செய்த பிழையைக்கருதிச் சபித்தல் அப்பிழைதீர்த்தற் பொருட்டேயாதலால் நன்றே கொடுசெய்தன யாவையெனவும், அடியவரிட்ட சாபத் தை அவ்வடியவரோ தீர்க்கச்செய்வித்தலன்றித் தான் தீர்க்காமை அவ்வடியவர்க்கு மகிமையை யுண்டாக்கற்பொருட்டேயாதலால் அவை நம்மால் விலகாவதனுல் மறை யோய்பொன்றுதிதுவெனவுங்கூறினர்.

இதனை —

" ஈசனுக்கிழைத்தகுற்றந்தேசிகனெண்ணித்தீர்க்கும்
தேசிகற்கிழைத்தகுற்றந்தேசிகன்றீர்ப்பதன்றிப்
பேசுவதெவனேதன்பாற்பிழைத்தகாரணத்தால்வந்த
வாசவன்பழியைத்தீர்ப்பான்குரவனேவழியுங்கூற" எனத் திருவிளையாடற்பு ரில் வருதல் காண்க. (கூ௩)

நந்திப்பெருமானுமகிழ்ந்தலரோய்நங்கச்சபவீசனெதிர்ப்படலா
லந்தப்பொழுதுன்புதல்வன்பெறுசாபந்தீர்ந்ததுவாயினுமன்பர்கள்பாற்
பந்தித்தபெருங்கருணைகரனென்பதுநாட்டினனெம்மிறைநின்புதல்வன்
கந்தப்பொழில்சூழ்வடமேருவினங்கண்ணெய்துகவிவ்வுருநீங்குமரோ.

(இ-ள்.) நந்தி பெருமானும் மகிழ்ந்து அலரோய் நம் கச்சப ஈசன் எதிர்ப் படலால் அந்த பொழுது உன்புதல்வன் பெறுசாபம் தீர்ந்தது - நந்திதேவரு மகிழ்கூர்ந்து பிரமனே நமது கச்சபேசரது திருமுன்னெதிர்ப்படுதலால் அக்காலையே யுனது புத்தி ரன் சாபம் நீங்கியது, ஆயினும் எம்மிறை அன்பர்கள் பால் பந்தித்த பெருங் கருணைகர ன் என்பது நாட்டினன் - ஆனாலும் எமது இறைவர் அடியவரிடத்துப் பந்தித்த பெரிய கருணைகரனென்பதை நிலைநிறுத்தினர், நின் புதல்வன் கந்தம்பொழில் சூழ் வடமேருவி ன் அங்கண் எய்துக இ உரு நீங்கும் - உனது புதல்வன் வாசமிக்க சோலைசூழ்ந்த வடதி சையிலுள்ள மேருமலையில் வரக்கடவன் இவ்வொட்டகவடிவம் அவனினின்று நீங்கும்.

கச்சபேசர் சந்நிதியிலெதிர்ப்பட்ட அப்பொழுதே யிச்சாபம் நீங்கியது என்பார் நங்கச்சபவீசனெதிர்ப்படலால் - அந்தப்பொழு துன்புதல்வன் சாபந்தீர்ந்தது எனவும், என்றுந்தீரும் என்றது தமது அடியவர்க்கு மேம்பாடு உண்டாக்கும் பெருங்கருணைத் திறன் என்பார் அன்பர்கள்பாற் - பந்தித்தபெருங்கருணைகரனென்பது நாட்டினன் என வுங்கூறினர். (கூச)

கவைதீர்த்தபின்னெம்மருளாலிவனம்மானுக்கனுமாகியசுத்தவுஞ்
சியதீக்கைகையுற்றுவிரிந்தகலைத்திரள்யாவுமுணர்ந்திச்சிவஞானமுணர்ந்

தவமாற்றுவனென்றருள்செய்தகலவலரோனவண்மைந்தனையன்புறுத
னிவர்வுற்றகணத்தரொடும்புகுவித்திப்பாலருமாதவமுற்றியபின்.

(இ-ள்.) நவை தீர்ந்தபின் எம் அருளால் - குற்றத்தினின்று நீங்கியபின் எமது அருளால், இவன் நம்மாணக்கனும் ஆகி நயந்து உதவும் சிவதீக்கையை உற்று விரிந்த கலை திரள் யாவும் உறி சிவஞானம் உணர்ந்து அவம் மாற்றுவன் என்று அருள்செய்து அகல - இவன்நமது மாணாக்கனுமாய் நாம் விரும்பியருளும் சிவதீக்ஷையைப்பெற்றுப் பலவகைப்பட்டு விரிந்த நூற்றிரளையெல்லா மாராய்ந்து சிவஞானநூலோதிக் குற்றத்தினின்று நீங்குவனென்று திருவருள்செய்து நீங்க, அலரோன் அவண் மைந்தனை அன்புறு தன் இவர் வுற்ற கணத்தரொடும் புகுவித்து இப்பால் அருமாதவம் முற்றியபின்-பிரமன் அவ்விடத்துத் தனது புத்திரனை அன்புமிக்க தனது பரந்த கூட்டத்தாரோடும் மேருவிற்செல்லவிடுத்து இப்புறம் செய்தற்கரிய பெரிய தவத்தைசசெய்தபின்.

சிவதீக்கை என்றது சைவாகமத்தில் விதித்த சட்சுதீக்ஷை, பரிசதீக்ஷை, வாசகதீக்ஷை, பாவனாதீக்ஷை, சாஸ்திரதீக்ஷை, யோகதீக்ஷைகளை. சட்சுதீக்ஷயாவது மும்மலங்களினின்று ஆன்மாவை நீக்குகை. பரிசதீக்ஷயாவது ஸ்ரீபஞ்சாக்கரத்தால் பிராரத்தவாதனையை நீக்குதற்பொருட்டுச் சீடனுடைய தலையில் திருக்கையாற் பரிசித்தல். வாசகதீக்ஷயாவது ஸ்ரீபஞ்சாட்சரத்தை யுபதேசித்தல். பாவனாதீக்ஷயாவது சீடனைத் தன்னைப்போலப் பாவனைசெய்து மும்மலங்களிற்றேய்வற நிறுத்துதல். சாஸ்திரதீக்ஷயாவது சாஸ்திரங்களில் கேள்வி, விமரிசம், பாவனையென்னும் இந்நெறியால் நிறுத்துதல். யோகதீக்ஷயாவது அட்டாங்கயோகத்தில் நிறுத்துதல்.

இதனை—

"மூவகையாருயிர்வர்க்கமலத்தார்கன்மமூலமலந்தார்மூன்றுமுடையாரன்றே
தீவகமாமெனவுருவாய்வந்துநாதன்றிருநோக்காற்பரிசத்தாற்றிகழும்வாக்காற்
பாவனையான்மிகுநூலால்யோகப்பண்பாற்பரவிவருமவுத்திரியாற்பாசநாசம்
மேவவருளுதவும்" எனவரும் சிவப்பிரகாசத்தாலுணர்க. (௩௭)

உயர்கச்சியிலோங்குபலாசடியினுறைகச்சபவீசனருட்கருணை
பயில்வுற்றுமுறைப்படியெவ்வுலகுமபண்டேயெனநன்குபடைத்தனன்மற்
றியல்பின்வடமேருவினந்திபிரானிருக்குநிலயத்தின்மலர்த்தலைவா
ழயன்மைந்தனொடுஞ்செல்கணத்தவரப்பெருமானடியேத்தியியம்புவரால.

(இ-ள்.) உயர் கச்சியில் ஓங்கு பலாசு அடியின் உறை கச்சப ஈசன் அருள் கருணை பயில் உற்று - எல்லாத்தலங்களினுமுயர்ந்த திருக்கச்சியிலோங்கிய முருக்கமரத்தடியிலெழுந்தருளிய கச்சபேசரது திருவருளைப்பெறுதலால், முறைப்படி எவ்வுலகும் இயல்பின் பண்டே என நன்கு படைத்தனன் - முறையே எல்லா உலகங்களையும் இயல்பாக முன்போலவே நன்றாகப்படைத்தனன், வடமேருவின் நந்தி பிரான் இருக்கும் நிலயத்தின் மலர்த்தலை வாழ் அயன் மைந்தனொடும் செல் கணத்தவர் அப்பெருமான் அடி ஏத்தி இயம்புவர் - வடதிசையிலுள்ள மேருவின் கண் நந்தி தேவரிருந்தருளுந் திருக்கோயிலையடைந்து தாமரையில் வாழும் பிரமன் மைந்தனாகிய சனற்குமாரனோடுஞ் சென்ற அப்பிரமகணத்தவர் அந்நந்திதேவருடைய திருவடியைத் துதித்தனர்.

நந்திப்பிரான் நந்திபிரான் எனவருதல் செய்யுளிசைநோக்கித்தொகுக்கும் வழித்தொகுத்தல். (௩௮)

வேதாவெமையேயினனீயிர்கள்போய்மேருப்புடைநந்திமுதற்குரவன்
பாதாம்புயமேத்தியிம்மைந்தனவன்மாணக்கனுமாய்ப்படிசேர்த்திடியட்

போதிரெனவென்றருள்பெற்றவர்தாம்போகத்தனருட்கணிெனட்டகமாங்
கோதாருருநீத்தொளிபெற்றவனைமாணுக்கனெனும்படிகொண்டனனே.

(இ-ள்.) வேதா எம்மை ஏயினன் நீயிர்கள் போய் மேருபுடை நந்தி முதல் குரவன் பாதாம்புயம் எத்தி - பிரமன் எம்மை ஏவினன் (அச்செய்தி யாதென்னில்) மேருவின்கண் நீங்கள் போய் நந்திதேவராகிய முதலாசிரியரது திருவடித்தாமரையை வணங்கி, இ மைந்தன் அவன் மாணுக்கனும் ஆம்படி சேர்த்தி இவண் போதிர் என என்று - இப்புத்திரன் அந்நந்திதேவர் மாணுக்கனாகும்படி யடைவித்து இவ்விடத்து வருவீரென்று கட்டளையிட்டனன் என்று கூறி, அருள்பெற்று அவர் தாம் போக - அந்நந்திதேவரது கிருபைபெற்று அப்பிரமகணத்தவர் செல்ல, தன் அருள் கண்ணின் ஒட்டகம் ஆம் கோது ஆர் உரு நீத்து ஒளிபெற்றவனை மாணுக்கன் என்னும் படிகொண்டனன்-தமது திருவருட்பார்வையால் ஒட்டகமாகிய குற்றம் நிறைந்த உருவைவிட்டு (அஸ்தமஸ்தக சையோகத்தால்) ஒளிபெற்ற அச்சனற்குமாரனை யாவருந் தமது மாணுக்கனெனும்படி யாட்கொண்டனர்.

சட்சுதீகைஷசெய்தனர் என்பார் அருட்கணினெட்டகமாங்கோதாருருநீத்து எனவும், பரிசதீகைஷயால் ஒளிவடிவாக்கினர் என்பார். ஒளிபெற்றவனையெனவுங்கூறினர்.

அறுசீர்க்கழி நெடில்விருத்தம்.

அன்னோனவன்பாற்றீக்கையுறீஇவழிபாடாற்றிமுழுதுணர்ந்தான்
முன்னர்ப்புராணநியாயநூல்கருமமுதனூறருமநூன்
மன்னுசிக்கையேழ்சந்தைவழங்குமொன்பான்வியாகரணம்
பன்னுமெண்ணூன்முக்கந்தம்பலவுமுறையினோதினனால்.

(இ-ள்.) அன்னோன் அவன்பால் தீக்கை உறீஇ வழிபாடு ஆற்றி முன்னர் புராணம் முழுது உம் உணர்ந்தான் - அச்சனற்குமாரன் அந்நந்திதேவரிடத்துச் சிவதீகைஷபெற்றுத் தொண்டுசெய்து முன்பு சிவபுராணங்களை முழுதும் அறிந்தனன், நியாயநூல் கருமமுதல் நூல் தருமநூல் மன்னு சிக்கை ஏழ் சந்தை ஒன்பான் வழங்கும் வியாகரணம் பன்னும் எண் நூல் முக்கந்தம் பலவும் முறையின் ஓதினன் - பின்பு உத்தரமீமாஞ்சையும் முதலாகிய பூர்வமீமாஞ்சையுந் தருமநூலும் நிலைபெற்ற சிகைஷயும் எழுவகைப்பட்ட சந்தையும் ஒன்பதுவகைப்பட்டு வழங்கும் வியாகரணமும் சொல்லுஞ் சோதிடநூலுள் மூன்றுவகைப்பட்ட கந்தமும் மற்றப் பலநூல்களுமாகிய வவற்றையு முறையாகக்கற்று.

புராணநூல் தருமநூல் இரண்டும் வேதங்களின் வழியே வந்தனவாதலால் வழிநூல் எனவும், நியாயநூலுங் கருமநூலும் வேதங்களிலுள்ள பொருளை யாண்டாண்டெடுத்துத்தொகுத்தும் விரித்துஞ்செய்யப்பட்ட நூல்களாதலால் பூர்பக்கநூலெனவும், சிகைஷ எழுவகைப்பட்டு வேதத்தினுச்சாரலக்ஷணத்தையுணர்த்தியும், வியாகரணம் ஒன்பதுவகைப்பட்டு வேதத்தின் பதலக்ஷணத்தையுணர்த்தியும், சந்தை ஏழுவகைப்பட்டு வேதத்தில் உக்தைமுதலிய சந்தோபேதங்களுக்கு அக்ஷரசங்கியையுணர்த்தியும், சோதிடநூல் வைதிக கருமத்துக்குக் காலமுணர்த்தியும் வேதங்களுக்குச் சார்பாய்ப் புடைபட்டு நடத்தலாற் சார்புநூல் எனப்படும். மீமாஞ்சையில் சிவப்பேற்றை உத்தரங்கூறுதலால் அதனை நியாயம் எனவும், சிவபூசையைப் பூர்வங்கூறுதலால் அதனைக் கருமமுதனூலெனவுங்கூறினர். முற்றும்மை தொகுத்தல். (௬௦)

ஏழுங்கற்பசூத்திரங்களிருக்குமுதலாநான்மறைக
ளாயுள்வேதம்வில்வேதமமல்காந்தருவமருத்தநூல்

பாயபலவும்விதிமுறையாற்பயின்றுநந்திப்பிரானருள்சேர்
தூயமுனிவன்பின்னருமொன்றிரந்துவேண்டித்தொழுதுரைப்பான்.

(இ-ள்.) ஏயும் கற்பசூத்திரங்கள் இருக்கு முதலாம் நான்மறைகள் ஆயுள் வேதம் வில் வேதம் அமல் காந்தருவம் அருத்த நூல் பாய பலவும் விதிமுறையால் பயின்று - இவைகளோடமைந்த கற்பசூத்திரங்களும் இருக்குமுதலிய நான்குவேதங்களும் ஆயுள்வேதமும் நிறைந்த தனுவேதமும் இசைநூலுந் தருக்கநூலும் ஆகிய பரந்த பல நூல்களையும் நூலில் விதித்த விதிப்படி பயின்று, நந்திப்பிரான் அருள்சேர் தூயமுனிவன் பின்னரும் ஒன்று இரந்துவேண்டி தொழுது உரைப்பான் - நந்திதேவரது திருவருளையடைந்த களங்கமில்லாத சனற்குமாரமுனிவர் பின்னுமொருபொருளைக் குறையிரந்து வணங்கிக்கூறுவார்.

போதாயனீயம், பாரத்துவாசம், ஆபத்தம்பம், ஆத்திரேயமுதலிய சூத்திரங்களாகப் பலவகைப்பட்டு அவை வைதிககருமத்தைப் பிரயோகிக்கு முறையைக்கற்பித்து வேதத்திற்கு அங்கமாய்ச் சார்புநூலாய் நிற்றலால் கற்பசூத்திரங்கள் எனவும், முற்றுணர்வுடைய இறைவனுலருளிய முதல்நூலாதலால் அங்கங்களுக்குப்பின் இருக்குமுதலா நான்மறைகளெனவும், வழிநூல் சார்புநூல் பூருவபக்கநூல் என்பவற்றுளொன்றாய் நிற்றலால் ஆயுள்வேதம் வில்வேதமமல்காந்தருவமருத்தநூல் எனவும், ஆசிரியனுக்கு வழிபாடுசெய்து கற்குமுறை பலவாதலால் விதிமுறையாலெனவுங்கூறினர். இது சாஸ்திரநிக்ஷை. (௪௧)

உன்புடைக்கல்வியெல்லாமுணர்ந்தனனவைகளெங்கு
மின்புடைச்சிவப்பேறொன்றேமுத்தியென்றியம்புமெந்தாய்
புன்புலையுடம்புநீங்கிப்பரவெளிப்பொருளைக்கூடு
மன்புடைப்பசுவேயன்றோசிவனியல்பதனைச்சேரும்.

(இ-ள்.) எந்தாய் உன் புடை கல்வி எல்லாம் உணர்ந்தனன் அவைகள் எங்கும் இன்பு உடைய சிவபேறு ஒன்றே முத்தி என்று இயம்பும்-என்றந்தையே தேவரீரிடத்தெல்லாநூலையு மறிந்தேன் அந்நூல்கள் எவ்விடத்து நோக்கினும் நோக்குவோர்க்கின்பந்தருஞ் சிவசாயுச்சிய மடைதலாகிய ஒரு நிலையையே மோக்ஷமென்று கூறுகிற்கும், புன் புலை உடம்பு நீங்கி பரவெளி பொருளை கூடும் அன்பு உடைய பசுவே அன்றோ சிவன் இயல்பு அதனை சேரும் - அசுத்தமாகிய மாமிசஞ்செறிந்த தேகப்பற்றினின்று நீங்கி ஞானாகாசமாகிய அம்மெய்ப்பொருளையடையும் தலையன்பினையுடைய ஆன்மாவல்லவோ சிவசொரூபத்தினியல்பையடையாநிற்கும்.

அன்பு தலையன்பு, இடையன்பு, கடையன்பு என மூவகைப்படும். தலையன்பு தலைவன் பெயர், குணங்கேட்டவழித் தன்வசம் அழிதல். இடையன்பு அவனைக் கேட்டவண்ணங் கண்டபொழுது தன்வசம் அழிதல், கடையன்பு கூடினபொழுது தன்வசமழிதல். சிவன் திருநாமங்களைக்கேட்டபொழுதே தன்வசம் அழியும் அடியவர்ஆதலால் அன்பு என்றதற்குத் தலையன்பு என்றும். (௪௨)

மானிடன்விசும்பைத்தோல்போற்சுருட்டுதல்வல்லோனுயி
னீனமில்சிவனைக்காணுதிடும்பைதீர்வீடுமெய்து
மானமார்சுருதிகூறும்வழக்கிலையாதலாலே
யானமரிறையைக்காணுமுபாயமேயறிதல்வேண்டும்.

(இ-ள்.) மானிடன் விசும்பை தோல்போல் சுருட்டுதல் வல்லோன் ஆயின் ஈனம் இல் சிவனை காணாது இடும்பை தீர் வீடும் எய்தும் - மானிடப்பிறவியுற்றவன் ஆகாயத்தைத் தோல்போற் சுருட்டுதலில் வல்லவனானால் களங்கமில்லாத சிவபெருமானைத் தரிசியாமல் பிறவித்துன்பத்தினின்று நீங்கிய முத்தியையடையக்கூடும், மானம் ஆர் சுருதி கூறும் வழக்கு இவை ஆதலால் - பெருமைநிறைந்த வேதங்களெடுத்துக்கூறும் வழக்கு இவையாதலால், யான் அமர் இறையை காணும் உபாயமே அறிதல்வேண்டும் - அடியேனும் எங்கும் நிறைந்த அச்சிவபெருமானைக்கண்டு தரிசிக்கும் உபாயத்தினையே அடியேன் உணரவேண்டும்.

ஆகாயத்தைத் தோல்போற் சுருட்டுதலுமில்லை, சிவகாட்சியின்றி முத்தியடைதலுமில்லையென்னும் பொருள்மேல் நிற்றலால் உடன்பாட்டில்வந்த எதிர்மறையணி. ௪௩

ஆங்கதுபலவாற்றானுமருளினையவற்றினுள்ளுந்
தீங்கறவெளிதிற்கூடுமுபாயமுஞ்செப்புகென்றா
வோங்குசீர்ச்சனற்குமாரனுரைத்தலுஞ்செவிமடுத்து
வீங்குபேருவகைபூப்பவிளம்புவானந்தியெங்கோன்.

(இ-ள்.) அது பல ஆற்றானும் அருளினை - அவ்வுபாயத்தினைப் பலவகையாலுமருள்செய்தீர், அவற்றின் உள்ளும் தீங்கு அற எளிதில் கூடும் உபாயமும் செப்புக என்றா - அப்பலவகையுள்ளுங் குற்றமற எளிதாக அடையு முபாயத்தையுஞ் சொல்லக்கடவீரென்று, சீர் ஓங்கு சனற்குமாரன் உரைத்தலும் - ஞானச்சிறப்புமிக்க சனற்குமாரமுனிவர் வினவ, நந்தி எம் கோன் செவி மடுத்து வீங்கு பேர் உவகை பூப்ப விளம்புவான் - நந்திதேவராகிய எமது பெருமானார் திருச்செவிசாத்தி மிக்க பெருமகிழ்வுதோன்றக் கூறியருளுவார். (௪௪)

அருள்பெறுசனற்குமாரனறுமுகன்கூறென்றுன்னைச்
சுருதியிற்கிளந்தவாற்றாலறிவினிற்றூயைமுற்று
மிருளறவுணர்ந்தாய்நீயேயிருந்தவத்தலைவன்கேட்டி
மருளிதீர்ந்துலகமுய்யவினையதுவகுத்துச்சொல்வாம்.

(இ-ள்.) இருந் தவ தலைவன் கேட்டி-பெரிய தவசிரேட்டனே கேளாய், அருள் பெறு சனற்குமாரன் அறுமுகன் கூறு என்று உன்னை சுருதியில் கிளந்த ஆற்றால் - சிவபெருமான் திருவருள்பெற்ற சனற்குமாரமுனிவன் முருகக்கடவுளம்சமென்று உன்னை வேதத்திற்கூறிய முறையால், நீயே அறிவினில் தூயை முற்றும் இருள் அற உணர்ந்தாய் - நீயே அறிவிற்றூய்மையுடையாய் (ஆதலால்) நாம் கூறிய நூல்முழுமையும் அறியாமை யறத்தெரிந்தாய், உலகம் மருளி தீர்ந்து உய்ய வினையது வகுத்து சொல்வாம் - உயிர்கள் குற்றத்தினின்று நீங்கிக் கடைத்தேற நீ வினவியதையும் வகைப்படுத்திக் கூறுவாம்.

தலைவன் அண்மைவிளி. ஐயந்திரிபறவுணர்ந்தாய் என்பார் இருளறவுணர்ந்தாய் என்றார். (௪௫)

அந்தணரரசர்நாய்கரிருபிறப்பாளர்வேத
மந்திரக்குரியோர்நான்குவகைநிலையிவர்கட்கென்ப
சிந்தையில்பிரமசாரிநிலையுயர்மனையின்வாழ்க்கை
கந்தரவனத்தின்வாழ்க்கைதுறவறமநான்காமால்.

(இ-ள்.) அந்தணர் அரசர் நாய்கர் இருபிறப்பாளர் - மறையவரும் க்ஷத்திரியரும் வைசியரும் இருபிறப்பாளராம், (ஆதலால்) வேதமந்திரத்துக்கு உரியோர் இவர்கட்கு நான்குவகை நிலை என்ப - வேதகாயத்திரிக்கு உரியவராவர் (ஆதலால்) இவர்களுக்குப்பிரமசரியமுதலாக நான்குவகைப்பட்ட ஆச்சிரமங்கள் உரியனவென்று கூறுவர், அந்நான்கு நிந்தையில் பிரமசாரி நிலை உயர்மனையின் வாழ்க்கை சுந்தரவனத்தின் வாழ்க்கை துறவறம் ஆம் - அந்த நான்கும் பழிப்பில்லாத பிரமசரியநிலை உயர்ந்த இல்லறநிலை மனையாளோடு காட்டில் வசிக்கும் வானப்பிரத்தநிலை சன்னியாசநிலையுமாகிய இவைகளாம்.

உபநயனஞ்செய்தவழி ஒருபிறப்பு ஆதலால் இருபிறப்பாளர் என்றார். நிலையென்றது ஆச்சிரமத்தை. (சசு)

கருநிலைக்கெட்டாமாயுள்பதினொன்றுகருதீராறும்
வருடத்தின்மறையோராதிமூவர்க்குமறையினருசான்
றெருளுபநயனஞ்செய்வன்முனிவர்தங்கடன்றீர்த்தற்குப்
பொருவிலாமறைகளங்கமோதுதற்பொருட்டுமன்றே.

(இ-ள்) முனிவர் தம் கடன் தீர்த்தற்கு பொருவு இல்லாத மறைகள் அங்கம் ஓதுதல்பொருட்டு - முன்பு முனிவர் கடனைச்செய்து முடித்தற்கு ஒப்பில்லாத வேதங்களும் ஆறங்கங்களுமாகிய இவைகளைக் கற்றோதுதற்கு, ஆசான் - ஆசிரியன், கரு நிலைக்கு எட்டாம் ஆயுள் பதினொன்று கருது ஈராறும் வருடத்தின் - கருப்பவாசந்தொடங்கி யெட்டாம்வயதிலும் பதினோராம்வயதிலும் நினைக்கும் பன்னிரண்டாம்வயதிலும், மறையோர் ஆதிமூவர்க்கும் மறையின் தெருள் உபநயனம் செய்வன் - அந்தணர் முதலிய மூன்றுவருணத்தாருக்கும் வேதத்திற் கூறியவண்ணம் தெளிவுதரும் உபநயனத்தைச்செய்து முடிப்பான்.

இதனால் முனிவர்கடன் செய்துமுடித்தற்கு உபநயனஞ் செய்துகொள்ளுதல் கருவியாதலால் அதற்குக் காலவரையறையும் பிரமசரியநிலையுங் கூறப்பட்டன. நான்களுருபு நியமித்தப்பொருட்டு. பிரமசரியநிலை உவகுருவாணன், நைட்டிகனெனவும் இருவகைப்படும்.

உவகுருவாணன் வேதாங்கங்களைக்கற்றபின் இல்லறநிலையிற்செல்பவன். நைட்டிகன் வேதாங்கங்களையுணர்ந்து உயிர்போங்காறும் அந்நிலையில் ஒழுகுவோன்.

இதனை—

“ உவகுருவாணனென்போன்மறைமுழுதுணர்ந்தபின்னர்
கவையறுமகளிர்தம்மைவேட்டுளோனயிட்டிகன்சீர்
தவலருங்கேள்விமுற்றித்தன்னுயிருலக்குங்காறுந்
துவரிதழ்மடவாரின்பந்துய்த்திடாதொழுகுவோனே” எனக் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (சஎ)

ஆங்கதன்பின்னர்க்காமமறம்பொருட்பேற்றினோடு
மோங்குசீர்ப்பிதிரர்வானோர்கடன்களினொழிவும்வேண்டி
மாங்குயிற்கிளவிமென்றோண்மனைவியையமணப்பர்பின்னர்த்
தாங்கரும்வனத்துச்செல்வர்தவமிகக்கிடைத்தல்வேண்டி.

(இ-ள்.) அதன் பின்னர் - அதன்பின்பு, காமம் அறம்பொருள் பேற்றினோடு - அறம்பொருளின்பமாகிய பலன்களோடு, சீர் ஓங்கு பிதிரர் வானோர் கடன்களின்

ஒழிவும் வேண்டி - புகழ்மிக்க பிதிரர்களுந் தேவர்களுமாகிய இவர்களது கடன்களொழித்தலுமாகிய இவற்றை விரும்பி, மாங்குயில் கிளவி மென் தோள் மனைவியை மணப்பர் - மாமரத்திலுள்ள குயிலிசைபோலுஞ் சொல்லையு மெல்லிய தோளையுமுடைய மனைவியோடு கலந்தொழுகுவார், தவம் மிக கிடைத்தல் வேண்டி தாங்கு அரும்வனத்தில் செல்வர் - தவமிகவுங் கைகூடுதலை விரும்பியடைதற்கரிய காட்டிற்செல்வர்.

தேவர்கடனும் பிதிரர்கடனும் ஒழித்தற்குக் கிருகாச்சிரமம் வேண்டுமாதலால் பிதிரர் வானோர் கடன்களினொழிவும் வேண்டி மனைவியை மணப்பர் எனவும், அவற்றோடு தவங் கைகூடுதற்கு வானப்பிரத்தநிலை வேண்டுதலால் தவமிகக் கிடைத்தல்வேண்டித் தாங்கரும் வனத்திற்செல்வர் எனவுங்கூறினார். காமமறம்பொருள் உம்மைத்தொகையாதலால் இயல்பாய்வந்தன. இல்லறநிலை உதாசீனன், சாதகனென விருவகைப்படும்.

• உதாசீனன் மூன்றுகடன்களையுமுடித்தபின் துறவறத்திற்செல்வோன். சாதகன் சாங்காறும் இல்லறநிலையினிற்போன்.

"ஓதுமில்லிறத்தினின்றோனுயருதாசீனன்மிக்க
சாதகனெனவிரண்டாந்தன்மையனவற்றின்முன்னோன்
ஏதமில்கடன்கண்மூன்றுங்கழித்தபினில்லிற்றீர்ந்தோன்
தீதில்சாதகன்சாங்காறுமில்லொழுக்கதனிற்சேர்வோன்" எனவும்,

வானப்பிரத்தநிலை சந்நியாசி, தாபசியென விருவகைப்படும்.

சந்நியாசி மனைவியைத்துறந்து காட்டில் வசிப்பவன். தாபசி மனைவியோடு காட்டிற்சென்று அக்கினிகாரியமுதலியவற்றைச்செய்வோன்.

"வானப்பிரத்தன்சந்நியாசிவளர்தாபசியென்றிருவகையாந்
தானத்துறும்வானப்பிரத்தர்தம்மின்முன்னோன்மனைநீத்துக்
கானத்துறைவோன்மற்றையவன்கன்னிக்கற்பின்மனைவியொடு
மோனத்திருந்துதீக்கருமமுறையினாற்றுமுரவோனே" எனவுங் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (௬அ)

கடனெலாம்விண்டபின்புகருதருந்துறவிற்செல்வர்
கடலைகூருலகவாழ்வைவெறுத்துநல்லறிவுதூய்தா
யிடனுடைத்துறவிற்சென்றேயிருவகைநியாயத்தோடு
மடனறநன்னூல்பற்றிமறைமுடிவுணர்தல்வேண்டும்.

(இ-ள்.) கடன் எல்லாம் விண்டபின்பு கருதரும் துறவில் செல்வர்-வானவர் முதலிய மூவர்கடன்களையெல்லாஞ் செய்துமுடித்தபின் நினைத்தற்கரிய துறவறநெறியிற்செல்வார்கள், கடலை கூர் உலகவாழ்வை வெறுத்து நல் அறிவு தூய்து ஆய் - வஞ்சமிக்க உலகவாழ்க்கையை வெறுத்து நல்ல அறிவு தெளிய, இடன் உடைய துறவில் சென்று - பரந்த துறவறநெறியிற்சென்று, வகை நியாயத்து ஓடு மடன் அற நல் நூல் பற்றி மறைமுடிவு உணர்தல் வேண்டும் - பின்னர்க்கூறப்படும் இருவகை நியாயங்களினோடு அறியாமை நீங்கச் சிவஞானநூலைத் துணையாகக்கொண்டு வேதத்தின்முடிவையறியவேண்டும்.

முன்னர்க்கூறிய முனிவர்கடன், தேவர்கடன், பிதிரர்கடன் என்னு மூன்றென்பார் கடனெலாம் விண்டபின்பு எனவும், பிரமசரியமுதலிய மூவகைநிலையில் நிற்போ

ரும் சந்நியாசநிலையில் செல்லுதற்குரியராயினும் மூவகைநிலையினு முறையேநின்று பின்பு சந்நியாசநிலையிற்செல்லுதல் முறையென்பார் பின்பு எனவும், சந்நியாசநிலை பரமேட்டி, யோகியென விருவகைப்படுதலால் கருதருந்துறவெனவுங்கூறினார்.

பரமேட்டியென்பவன் இந்திரியங்களையடக்கிச் சிவயோகஞ்செய்து முத்தியையடைபவன். யோகியென்பவன் சிவமாகத் தன்னைப்பாவித்துச் சீவன்முத்தனாயுள்ளவன்.

" பரவுஞ்சந்நியாசிற்பாரமேட்டியோகியென
இருவருளர்மற்றவரின்முன்னோனிகலும்புலன்களுள்ளடக்கி
மருவும்யோகத்திருந்துமுத்தியடையமுயல்வோன்மற்றையவன்
கருதுமெவையுந்தானுகிக்கைவல்லியத்திற்களிப்போனே" எனவருங் கூர்ம புராணத்திலறிக. (சக)

இருவகைநியாயம்பூர்வமுத்தரமெனப்பேரெய்து
மொருவகைசிவபூசைக்காமொருவகைசிவப்பேற்றிற்காஞ்
சுருதியேயிலிங்கஞ்சொற்சேர்வெடுத்துக்கோளிடமேசொல்லின்
வருபெயரிவற்ருன்மென்மைவன்மையென்றிவற்றையாய்தல்.

(இ-ள்.) இருவகை நியாயம் பூர்வம் உத்தரம் என்ன பேர் எய்தும் ஒருவகை சிவபூசைக்கு ஆம் ஒருவகை சிவப்பேற்றிற்கு ஆம் - இரண்டுவகை நியாயங்களும் பூர்வமீமாஞ்சை உத்தரமீமாஞ்சையெனப் பேர்பொருந்தும் அவற்றுளொருவகை சிவபூசைக்குரிய தாம் ஒருவகை சிவத்தைப் பெறுதற்குரியதாம், சொல்லின் சுருதி இலிங்கம் சொல் சேர்வு எடுத்து கோள் இடம் - சொல்லுமிடத்துச் சுருதியு மிலிங்கமும் பதசந்தியு மேற்கோளும் தானமுமாக, வருபெயர் இவற்ருல் மென்மை வன்மை என்று இவற்றை ஆய்தல்-வரும்பெயர்களாகிய இவ்வேதுக்களால் அபலம் பலமென்று சொல்லப்பட்ட இவைகளை ஆராயக்கடவன்.

கேள்வியும், குறியும் பதசந்தியும் பிரகரணமும் தானமும் ஒன்றன்பொருளையாராய்ந்தறிதற்குவரும் சங்கேதங்களின் பெயர்களாதலால் சுருதியே யிலிங்கஞ் சொற்சேர்வெடுத்துக் கோளிடமே வருபெயரிவற்ருல் மென்மை வன்மையென்றிவற்றையாய்தல் என்ருர். தானம் முன்பின்னோக்கிப் பொருள்கொள்கை ஆய்தல் உடன்பாட்டில் வந்த வியங்கோள் வினைமுற்று. ஆய்பகுதி, து சாரியை, உகரக்கேடுசந்தி, அல் வியங்கோள் விகுதி. ஏகாரம் எண்ணிடைச்சொல். (சo)

கடப்படுபூசைபூர்வகருமநூனியாயத்தாகுந்
தொடக்கமீறப்பியாசம்பூர்வதைபலமேசொல்லி
னெடுத்துரையருத்தவாதமிவைசிவப்பேறுகூறற்
ரிவதற்கிலிங்கமாமால்.

(இ-ள்.) கடப்படு பூசை பூர்வகரும நூல் நியாத்தாகும் - முறைப்பட்ட சிவபூசை பூர்வமீமாஞ்சையாகிய கருமநூலென்னும் நியாயத்திலடங்கும், சொல்லின் தொடக்கம் ஈறு அப்பியாசம் பூர்வதை பலம் எடுத்து உரை அருத்தவாதம் இவை - சொல்லுமிடத்து உபக்கிரமமும் உபசம்மாரமும் இவ்விரண்டையும் அப்பியசித்தலும் பூர்வதையும் பலமும் எடுத்துக்கூறும் உபாக்கியானமுமாகிய இவைகள், சிவப்பேறு கூறற்கு அத்த உத்தரநூல் உண்மை துணிவதற்கு இலிங்கம் ஆம்-சிவத்தையடைதலை சொல்லுதற்கு அமைந்த உத்தரமீமாஞ்சையினுண்மையைத் துணிதற்குக் காரணங்களாம்.

ஏகாரம் எண்ணிடைச்சொல். உபக்கிரமமாவது ஒன்றைச்செய்யத்தொடங்கல், உபசம்மாரம் ஆவது செய்யத்தொடங்கியதைச் செய்துமுடித்தல், பூர்வதையாவது முன்னடத்துவது. பலம் ஆவது அவற்றால் வரும் பிரயோசனம், உபாக்கியானம் ஆவது அவற்றால்வரும் பிரயோசனத்தைக் கதாரூபமாக்கூறுதல். இவை உத்தரமீமாஞ்சையின் உண்மைப்பொருளை யறிதற்குவருஞ் சங்கேதப்பெயர்களாதலால் இவை துணிவதற்கி லிங்கமாம் என்றார். பூர்வதையென்னும் பாடத்தை அபூர்வதையெனத்திருத்தினர், அதன்பொருளின்னதென வுணரார்போலும். (ருக)

இரவெரியாடுந்தேவையிம்முறைதுணிந்தஞானி
பிரணவமனுவாற்போற்றிப்பேதுறாதுடல்சாங்காறும்
பரவிடினவற்குமுக்கட்பரன்வெளிப்படுவன்பட்டான்
மருவுபேரின்பந்துய்த்துவிமலனில்வாழலாமே.

(இ-ள்.) இரவு எரி ஆடும் தேவை இ முறை துணிந்த ஞானி - இரவில் உலகமாகிய மயானநெருப்பிற் பவுரிக்கூத்தைச்செய்யு மிறைவனை முற்கூறிய கருவிகளாற்றுணிந்த சிவஞானி, பேதுறாது பிரணவமனுவால் போற்றி உடல் சாங்காறும் பரவிடின் அவற்கு முக்கண் பரன் வெளிப்படுவன் - மயங்காது ஸ்ரீபஞ்சாக்கரமாகிய பிரணவமந்திரத்தால் துதித்துச்சரீரம் அழியுமளவுந் வணங்கில் அவனுக்கு அவ்விறைவர் காட்சிதந்தருளுவர், பட்டால் மருவு பேரின்பம் துய்த்து விமலனில் வாழலாம் - காட்சிதந்தருளினால் பொருந்தியபேரின்பத்தை நுகர்ந்து அவ்விறைவனிடத்து அழியாது நிலைபெறலாம். (கலப்பானென்றபடி.)

சிவம், சத்தி, ஆணவம், ஆன்மா, மாயையென்பவை ஸ்ரீபஞ்சாக்கரத்திலடங்கி நிற்றல்போலப் பிரணவத்திலும் அடங்கிநிற்றலால் ஐந்தெழுத்தோராகிய பிரணவம என்பார் பிரணவமனுவாற்போற்றியென்றார். இது வாசகதீக்ஷை.

இதனை—

"இறை சத்தி பாசமெழில் மாயையாவி - உறநிற்குமோங்காரத்துள்" எனத் திருவருட்பயனிலும்,

உலகமாகிய மயானம் என்றதை—

"பொறியுறுமுயிர்களும்புவனம்யாவயும்
இறுதியாயழிவுறுமிரந்தெல்லையின்
மறையெனுஞானியையுயர்த்துமற்றவன்
உறவுசேர்மயானமீதாகுமென்பவே" எனக் கந்தபுராணத்திலும் வருதல் காண்க. (ருஉ)

பின்னவன்மாயவாழ்வின்பிறந்திறான்சிவமேசேர்வன்
முன்னருஞ்சிவப்பேற்றிற்குமுறைவருமுபாயமீதா
மிந்நெறிசிறியோர்யார்க்குமெளியதன்றெளிதாய்நேரா
மந்நெறிமுக்கணெம்மான்பதிகளினமர்தலாகும்.

(இ-ள்.) பின்அவன் மாயவாழ்வில் பிறந்து இறான் சிவமே சேர்வன் - பின்பு அவன் உலகவாழ்க்கையிற்பிறந்தழியாது சிவமொன்றையேயடைவான், (ஆதலால்) முன்னருஞ் சிவப்பேற்றிற்கு முறைவரும் உபாயம் ஈது ஆம் - நினைத்தற்கரிய சிவத்தைப் பெறுதற்கு முறையாக முன்னாக்கூறிய உபாயமிதுவாம், இநெறி சிறியோர் யார்க்கும் எளியது அன்று-இவ்வுபாயம் அறிவிற்சிறியோர் யாவருக்கும் அடைதற்கரியதாம், எளி

தாய் நோரம் அ நெறி முக்கண் எம்மான் பதிகளின் அமர்தலாகும்-அவர்களுக்கு எளிதாய்க் கைகூடு முத்திநெறி திரிநேத்திரங்களையுடைய எமது இறைவன் திருப்பதிகளில் வசித்து வாழ்தலாம்.

சிறியோர் என்றது இயமாதி யட்டாங்கயோகங்களிற் பழகுதலில்லாதவரை. பாவனுதிரைக்ஷசொல்லவந்தவர் பின்னவன் மாயவாழ்விற்பிறந்திருன் சிவமேசேர்வன் என்றுர். இருன்முற்றெச்சம். (௫௩)

ஆயிடைச்சாக்கடெய்தின்விலங்குநாயடுவான்புள்ளு
மேயபுன்மரங்களேனுமவீடுபேறடைவதுண்மை
நீயிதற்கையங்கொள்ளேலென்றனுநெடிதுவாழ்ந்து
தூயசீர்நந்திபாதந்தொழுதெதிர்குமாரன்கூறும்.

(இ-ள்.) அயிடை சாக்காடு எய்தின் விலங்கு நாய் அடுவான் புள்ளு மேய புல் மரங்கள் எனும் வீடு பேறு அடைவது உண்மை - அத்திருப்பதிகளில் வசித்து மரணத்தைப்பொருந்தின் மிருகமும் நாயும் கொல்லும் பெரிய பறவையும் பொருந்திய புல்லு மரங்களுமாகிய இவைகள் இழிபிறப்பினையுடையனவாயினும் முத்தியையடைவது சத்தியமாம், நீ இதற்கு ஐயம் கொள்ளேல் என்றனும் - நீ நாம் கூறிய இதற்குச் சிறிதும் ஐயப்படாதேயென்று நந்திதேவரருளலும், குமாரன் நெடிது வாழ்ந்து தூயசீர் நந்தி பாதம் தொழுது எதிர்கூறும் - சனற்குமாரமுனிவர் மிகவும் ஆலோசித்துக் களங்கமில்லாத புகழையுடைய நந்திதேவரது திருவடியை வணங்கி எதிரே வினவுகின்றனர்.

நெடிது வாழ்ந்து என்னுந் தொடருள் குற்றியலுகரங்கெடாது உடம்படுமெய் பெறுதல் 'தன்முகமாகத்தானழைப்பதுவே'' என்றாற்போல நின்றது. (௫௪)

சீர்த்தலவாழ்க்கையொன்றேசெவ்வழியென்றனையைய
பார்த்தலத்திறைவன்மேவும்பதிகளெண்ணிலவாமிக்க
கீர்த்திசாலவற்றுண்மேலாய்க்கிளர்சிவப்பேற்றன்முத்தி
யார்த்தியின்றுதவுந்தானம்யாதுநீயருளுகென்றான்.

(இ-ள்) ஐய சீர் தலவாழ்க்கை ஒன்றே செவ்வழி என்றனை - ஐயனே யெளியோர்க்குச் சிறந்த சிவதலங்களில் வாழ்தலொன்றே சிவத்தைப்பெறுதற்கு நேர்வழியென்று கூறினை, பார் தலத்து இறைவன் மேவும் பதிகள் எண்ணிலவாம் - நிலவுலகில் அவ்விறைவன் எழுந்தருளுந் திருப்பதிகள் அளவிறந்தன, மிக்க கீர்த்தி சால் அவற்றுள் மேலாய் கிளர் சிவப்பேற்றால் முத்தி ஆர்த்தி இன்று உதவும் தானம் யாது நீ அருளுக என்றான் - மிகுந்த புகழமைந்த அத்திருப்பதிகளில் மேம்பட்டு விளங்குஞ் சிவதரிசனப் பயனுல் முத்தியையடைதலை யின்றே கொடுக்குந் திருப்பதி யாது அதனைத் தேவரீர் அருளக்கடவீரென்று குறையிரந்தனர்.

சனற்குமாரமுனிவர் ஆன்மகோடிகளிடத்துள்ள அருளுடையவராதலால் இதனை வினவினர் என்பார், கிளர்சிவப்பேற்றன்முத்தி-ஆர்த்தியின்றுதவுந்தானம் யாது நீயருளுகென்றான் என்றார் எனக்கூறினர். (௫௫)

நீபுத்தேள்கணம்பொழுதென்னாமுன்னர்
வன்றிறல்விடையோன்றேவிக்குரைத்ததுமனத்துட்கொண்டா
னன்றவர்ப்பணிந்துமைந்தாவரனுமைக்கியம்புமாற்ற
கன்றுநீகேட்டியென்னவான்முறைநவிலலுற்றான்.

(இ-ள்.) என்றலும்-என்றுகுறையிரப்ப,நந்திபுத்தேள் கணப்பொழுது எண்ணி நந்திதேவர் கணப்பொழுது ஆலோசித்து, முன் நாள் வன் திறல் விடையோன் தேவிக்கு உரைத்தது மனத்து உள் கொண்டான் அன்று அவர் பணிந்து - முற்பொழுதில் மிக்க வன்மைவாய்ந்த இடபவூர்தியையுடைய அவ்விறைவர் உமையம்மைக்கருளியதைத் தமது மனத்திற்கருதி அப்பொழுது அவர்களை வணங்கி, மைந்தா அரன் உமைக்கு இயம்பும் மாற்றம் நன்று நீ கேட்டி என்ன வரன்முறை நவிலல் உற்றான் - மைந்தனே அவ்விறைவர் உமையம்மைக்குச் சொல்லியருளிய சரிதத்தை மிகவும் நீ கேளாயென்று கிரமமாகச் சொல்லத்தொடங்கினார்.

சிவதலங்களுள் சிறந்தது எதுவென்று முன்பு ஆலோசித்தனர் என்பார் கணப்பொழுதெண்ணியெனவும், இதுதான் மேம்பட்டதென்று கருதினர் என்பார் விடையோன் றேவிக்குரைத்தது மனத்துட்கொண்டான் எனவுங்கூறினார். கொண்டான் முற்றெச்சம். (௫௬)

சனற்குமாரப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௪௬.

## தலவிசேடப்படலம்.

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

இழைந்தபல்மணிகள்காந்திவிட்டெறிக்குமெரிசுடர்ப்பேரொளிப்பரப்பு
மழைக்களத்திறையைத்தொழப்புகுந்திறல்சால்வானவர்நோக்கலாற்றது
விழித்துணையிமைப்பச்செய்தொறுமவரவ்விளைவறியாதெமக்கெனனே
பழுத்ததோமுடிவுகாலமென்றழுங்கும்படியதோர்கனகமண்டபத்தில்.

(இ-ள்.) இழைந்த பல் மணிகள் காந்திவிட்டு எறிக்கும் எரிசுடர் பேர் ஒளி பரப்பு - தன்னிடத்திழைத்த பல இரத்தினங்கள் ஒளிவீசி விளங்குந் தீயினது விளக்கம் போன்ற பெரிய வொளியின் றிரட்சி, மழைகளத்து இறையை தொழ புகும் திறல் சால் வானவர் நோக்கல் ஆற்றாது விழிதுணை இமைப்ப செய்தொறும் - மேகம்போலக் கறுத்த ஸ்ரீகண்டத்தையுடைய இறைவனை வணங்கப்புகும் வெற்றிமிக்க தேவர்கள் தரிசிக்க இயலாமல் அவர்களது இரண்டுகண்களும் இமைகொட்டச்செய்யுந்தோறும், அவர் அ விளைவு அறியாது எமக்கு என்னே முடிவுகாலம் பழுத்ததென்று அழுங்கும்படி யது ஓர் கனகமண்டபத்தில் - அத்தேவர்கள் அவ்விளைவினையறியாது எங்களுக்கு யாதோ முடிவுகாலம் வந்ததென்று வருந்தும் வகையதாகிய ஒரு பொன்மண்டபத்தில்.

கண்ணிமை கொட்டுதற்குக் காரணம் ஒளியிருக்கவும் முடிவுகாலம் வந்ததோவென்று தேவர்கள் வருந்துதலாகிய காரியம் பிறந்ததாகக் கூறுதலால் தொடர்பின்மையணி. (௧)

எறும்வலித்திரடோளிரணியன்மருமத்திரத்தநீர்வாய்மடுத்தெழுந்த
வெறிமயக்கறுத்தபெருவலிநரமாமடங்கலைநோக்கிவிலக்குறும்மலமயக்குந்
தெறுமெனநரமாமடங்கலுன்முழுதுமடங்கலாய்த்திருவடிதாங்கி
யுறுவதுகடுக்குமடங்கலேற்றெருத்தத்தொளியெறிமணிப்பொலந்தவிசின்.

(இ-ள்.) எறும் வலி திரள் தோள் இரணியன் மருமத்து இரத்தநீர் வாய் மடுத்து எழுந்த வெறி மயக்கு அறுத்த பெருவலி நரமாமடங்கல் நோக்கி - மிக்க வலிமைவாய்ந்த திரண்ட தோளையுடைய இரணியனது மார்பைக்கீண்டு உதிரநீரைப்பருகுத

லால் மேலெழுந்த தனது வெறியின்மயக்கினைக்களைந்த மிக்க வலிமையை நரசிம்மமூர்த்தி பார்த்து, விலக்குறாத மும்மலமயக்கும் தெறுக என தான் முழுதும் மடங்கலாய் திருவடி தாங்கி உறுவது கடுக்கும் மடங்கல் ஏறு எருத்தத்து - தன்னால் என்றும் விலக்குதல் அமையாத ஆணவமுதலிய மும்மலத்தின் மயக்கங்களையும் அந்நரசிம்மமானது அழிக்கக்கடவாயென்று சரீரமுற்றுஞ் சிங்கவடிவாய்த் திருவடிகளைத் தாங்கியிருத்தலையொக்கும் சிம்மேற்றின் பிடரியில், ஒளி எறிமணி பொலம் தவிசின் - ஒளிவீசும் இரத்தினமிழைத்த பொன்னாலமைந்த ஆசனத்தில்.

சிங்காசனத்தைச் சிங்கஞ் சுமந்து நிற்றலை நரவடிவமுஞ் பெற்ற நரசிம்மமூர்த்தி இரணியனது உயிர்பருகியகாலத்தில் தான் உலகஞ்சக்கொண்ட புறமயக்காகிய வெறிமயக்கினைச் சிவபெருமான் சரபவடிவாய் ஒழித்தருளினமையைத்தெரிந்து அகமயக்காகிய மும்மலமயக்கினைப் பெருமானாலொழித்துக்கொள்ள முற்றுஞ் சிம்மவடிவாய்ச்சென்று திருவடி தாங்கிக்கொண்டிருத்தலை யொக்குமெனக் கவி உவமவுருபுதந்து அத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி. (உ)

எரியவிர்ந்தனையதுவர்மணிச்சடிலத்தெறிதிரைக்கங்கையூடலைந்து
பருவருங்கேண்மைச்சிறுபிறைக்கிரங்கிப் பற்றித்தனிருக்கையிற்கொடுபோ
தெருமரா ளிப்பான்முழுமதியணுகிச்செவ்விபார்த்துறைவதுமானும் [யத்
விரிகதிர்த்தரளத்தொங்கல்சூழ்வட்டவெண்குடைமீமிசைநிழற்ற.

(இ-ள்.) முழுமதி - பூரணசந்திரன், எரி அவிர்ந்தால் அனைய துவர் மணி சடிலத்து எறி திரை கங்கையூடு அலைந்து பருவரும் கேண்மை சிறுபிறைக்கு இரங்கி - நெருப்பு விளங்கினாலொத்த பவளம்போன்ற சடாமுடியில் வீசும் அலையையுடைய கங்கையினிடத்தலைந்துவருந்தும் தனக்கு நட்பாயுள்ள இளம்பிறைக்கு வருத்தங்கூர்ந்து, பற்றி தன் இருக்கையில் கொடுபோய் தெருமராது அளிப்பான் அணுகி - அவனைப்பற்றித் தன்னிருக்கையிற்கொண்டுபோய் வருந்தாது பாதுகாக்க அவனைக்கிட்டி, செவ்வி பார்த்து உறைவது மானும் விரிகதிர் தரளம் தொங்கல் சூழ்வட்டம் வெண்குடை மீமிசை நிழற்ற - சமையம்பார்த்துறைதலையொக்குங் கிரணம் விரிந்த முத்துமாலைசூழ்ந்த வட்டவடிவாகிய தவளக்குடைமேலே யொருபால் நிழலைச்செய்யவும்.

"உவமைக்குவமையில்லெனமொழிப" என்ற விதியால் அடுத்துவரல் வழுவாதலால் எரியவிர்ந்தனையசடிலத்து துவர்மணிச்சடிலத்தெனக்கொள்க. தவளக்குடைநிழல்செய்தலைப் பூரணசந்திரன், இளஞ்சந்திரன் சடாமவுலியிலிருந்து கங்கையினலையால் வருத்தமடைதலைநோக்கி யிரங்கி அவனைத் தன்னிடத்திற்குக் கொண்டுபோகக் காலம்பார்த்திருத்தலை யொக்குமெனக் கவி அத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி. (௩)

தொல்லைநாட்புகழ்களெங்கணுநெருங்கத்துன்றிவெற்றிடங்களின்மையினு
லல்லுறழ்மிடற்றுப்பிரானிடத்துயிர்த்தவற்றைநாட்கீர்த்திகளிருபாற்
செல்லிடந்துருவிக்கொட்பபோலரிமான்செழுந்தவிசொடுமணிக்குடைக்கீ
ழெல்லையுமேனும்வெள்ளொளிபரப்புமிடையினிற்சாமரையிரட்ட.

(இ-ள்.) தொல்லை நாள் புகழ்கள் எங்கணும் துன்றி நெருங்க - முன்னாளிலுள்ள புகழ்களெவ்விடத்துஞ் செறிந்து நெருங்க, வெற்று இடங்கள் இன்மையினால் அல் உறழ் மிடறு பிரான் இடத்து உயிர்த்த அற்றைநாள் கீர்த்திகள் இருபால் செல் இடம் துருவி கொட்பபோல் - தாமிருத்தற்கு வெளியிடங்கள் சிறிது மில்லாமையால் இருளையொத்த கண்டத்தையுடைய இறைவரிடத்துத்தோன்றிய அந்நாளிலுள்ள கீர்த்திகள் இரண்டு

பக்கத்திலுஞ் சென்றடையுமிடத்தைத் தேடிச்சுழலும் வகைபோல, அரிமான் செழும் தவிசொடு மணிகுடைக்கீழ் எல்லையும் மேலும் வெள் ஒளிபரப்பும் இடையினில் சாமரை இரட்ட - சிஙகஞ்சுமந்த செழித்த ஆசனத்தின்மேலும் விளிம்பில் முத்துக்கோத்த தவளக்குடைக்கீழெல்லையிலுமுள்ள வெள்ளொளியை வீசு மிடையிடத்தில் சாமரைகள் ஒருபால் அசையவும்.

வெண்கவரிகள் அசைதலைச் சிவபெருமானுக்குந் தொன்றுதொட்டுள்ள புகழ் முன்னும் பின்னுமுறைதலால் அற்றைநாள் உண்டானபுகழ் அடையுமிடத்தைத் தேடிச்சுழலுதல்போலச் சிம்மாசனத்தின்மேலும் தவளக்குடைக்குக்கீழுமாகிய இடையிடத்திலடைய அசையாநின்றதென அத்தியவசயித்தால் தற்குறிப்பேற்ற வுவமையணி. (ச)

வேட்டவேட்டாங்குவரங்கள்பெற்றேரும்விண்ணவரதுகொடுசெருக்கிக்
கோட்டமுற்றழியாதறிவுறுப்பவர்போற்கோட்டமுற்றழிகயமுகத்தன்
வாட்டிறற்சூரன்முதலியோர்ச்செகுத்தமருப்பொடுசுடர்வடிநெடுவேல்
காட்டியகரத்தினறுமுகத்தேவுங்கணேசனுமிருபுடைவயங்க.

(இ-ள்.) வேட்ட வேட்டாங்கு வரங்கள் பெற்று ஏரும் விண்ணவர் அது கொடு செருக்கி கோட்டம் உற்று அழியாது அறிவுறுப்பவர்போல் - தாம் விரும்பியபடி விரும்பிய வரங்களைப்பெற்றுச் செல்லுந் தேவர்கள் அவ்வரங்களாலிறுமாந்து மயங்கி யழியாமல் அறிவினையுறுத்துவோர்போல, கோட்டம் உற்று அழிகயமுகத்தன் வாள் திறல் சூரன்முதலியோர் செகுத்த மருப்பொடு சுடர்வடி நெடுவேல் - தம்மொடு மாறுபட்டழிந்த கயமுகாசுரனையும் வாளின் வன்மைவாய்ந்த சூரபன்மன்முதலிய அசுரர்களையும் கொன்ற கொம்போடு விளங்கும் வடித்த நெடிய வேலை, காட்டிய கரத்தின் அறுமுகத்தேவும் கணேசனும் இருபுடை வயங்க - ஏந்திய திருக்கங்களையுடைய இளையபிள்ளையாரும் மூத்தபிள்ளையாரும் இரண்டுபக்கங்களிலும் ஒருபால் விளங்கவும்.

அயன்முதலிய தேவர்கள் தாம் விரும்பினவற்றை விரும்பியபடியடைய வரங்கள் பெறுதலால் ஓர்காற் சிவபெருமானை யவமதித்துத் தாமே கடவுளொன்று செருக்கியழிவது திண்ணமாதலில் அவ்வாறழியாது வாழ்தற்கு நினைப்பூட்டுவார்போலப் பலவரங்களையும்பெற்றுச் செருக்கி யயன்முதலியோர்க்குத் தீங்குவிளைத்த கயமுகாசுரன் முதலியோரைக்கொன்ற கொம்பையும் வேலையுமேந்தி மூத்தபிள்ளையாரும் இளையபிள்ளையாரும் இரண்டுபாலும் நின்றனர் என்பார் மருப்பொடு சுடர்வடிநெடுவேல்-காட்டியகரத்தினறுமுகத்தேவுங் கணேசனுமிருபுடைவயங்க வெனவுங்கூறினர்.

சிவபெருமானிடத்து ஆயுதமுதலியவற்றாலழியாமைமுதலிய பலவரங்கள் பெற்றுச்செருக்கித் தேவர்களுக்கு இடையூறுசெய்ய அவர்கள் வேண்டுகோளால் மூத்தபிள்ளையாரால் அழிந்ததை—

" நின்றவன்றன்னைநோக்கிநெடியபல்படைகளேவிற்
சென்றிவன்றன்னைக்கொல்லாசிவனருள்வரத்தின்சீரால்
இன்றினிச்செய்வதென்னென்றிறைவரையுன்னியெந்தை
தன்றிருக்கோட்டிலொன்றுதடக்கையின்முரித்துக்கொண்டான்.

தடக்கையிலேந்துகோட்டைத்தந்தியாமவுணன்மீது
விடுத்தலுமனையன்மார்பைவெய்தெனக்கீண்டுபோகி
யுடற்படிமிசையேவீழ்த்தியொல்லையிலோடித்தெண்ணீர்க்
கடற்படியமலன்மைமர்தன்கரத்தில்வந்திறுத்ததன்றே" எனக் கந்தபுராணத்தில் வருதல் காண்க.

மருப்பொடுசுடர்வேல் என்னும் பெயர்ச்சொல் காட்டிய கரத்தினறுமுகத்தே என்னும் பெயர்ப்பயனிலையையும், மருப்பென்னும் பெயர்காட்டிய கரத்திற் கணேச னுமென்னும் பெயர்ப்பயனிலையையும் கொண்ட எதிர்நிரனிறையணியும், அயன்முத லிய தேவர்கள் தாம்பெற்ற வரங்களாற்செருக்கி யழியாதவண்ணம் நினைக்கச்செய் வார்போலக் கொம்பையும் வேலையும் ஏந்திநிற்றலால் நினைப்பணியுங் கலந்துவருத லால் கலவையணி. (ரு)

உருவினிற்பெருமைபெருமையன் றுருவிற்சிறுமையெய்தினுமுமைபாக
னருளினிற்பெருமைபெருமையென் றுலகவகிலமுந்தெளிதரக்காட்டி
மருமலர்க்கிழவன்முதலியோர்புறத்துமன்னிடநகுநடைக்குறுந்தாட்
பெருவயிற்றழல்கால்குழிவிழிப்பூதப்பெருங்கணமருகுநின்றேத்த.

(இ-ள்.) உருவினில் பெருமை பெருமை அன்று - உருவால் வரும் பெருமை பெருமையல்ல, உருவில் சிறுமை எய்தினும் - உருவில் சிறுமையை யடைந்தாலும் உமைபாகன் அருளினில் பெருமை பெருமை என்று உலக அகிலமும் தெளிதர காட்டி - வடிவத்தாற் சிறுமையடைியினும் இறைவரது திருவருளால் வந்த பெருமையே பெருமையென்று எல்லாவுலகங்களுந்தெளிந்து ஐயம் நீங்கத் தமது செயலாலுணர்த்தி, மருமலர் கிழவன் முதலியோர் புறத்து மன்னிட - வாசமிக்க தாமரைமலரிடத்துள்ள பிரமன்முதலியோர் அருகராகாது புறத்திலொருபால் நிற்க, நகு நடை குறுந்தாள் பெருவயிறு அழல் கால் குழிவிழி பூதம் பெரும் கணம் அருகு நின்று ஏத்த-கண்டோர் நகைக்கும் நடைவாய்ந்த சிறிய காலையும் பெரிய வயிற்றையும அக்கினியைக்கக்குங் குழிந்த கண்களையுமுடைய பெரிய பூதகணங்கள் பக்கத்தினின்று ஒருபாற்றுதிக்கவும்.

"உருவுகண்டெள்ளாமைவேண்டுமஉருள்பெருந்தேர்க்-கச்சாணியன்னாருடைத்து" என்னுந் திருக்குறளின்பொருளினை யெடுத்துக்கூறிப் பிரமன்முதலியோர் உருவிற்பெரியராயினுந் திருவருளுக்குரியரல்லாமையால் அருகராகாமையையும், பூதகணங்கள் உருவிற்சிறியவாயினும திருவருளுக்கு உரியனவாதலால் அருகாய் நிற்றலையும் எடுத்துக்கூறுதலால் எடுத்துக்காட்டுவமையணி. குறுந்தாள் வலித்தல். (சு)

கண்ணிணைக்கடங்காத்திருவுருவழகைக் காண்டொறும்பண்டுதான்கொண்
பெண்ணுருவெடுப்பகருதிநீண்முகுந்தன் பிரிவிலாதொருபுடையமர்ந்த[ட
பண்ணிசைமொழியாள்வனப்புமெம்பெருமான் பார்வையுநோக்கிமற்றெமக்
கெண்ணியவெண்ணமுற்றுறுதினியென்றெழுநதவக்கருத்தினைமீட்ப. [கிங்

(இ-ள்.) கண் இணைக்கு அடங்காத திரு உரு அழகை நீள் முகுந்தன் காண்தொறும் பண்டு தான்கொண்ட பெண் உரு எடுப்ப கருதி - பார்ப்போர் இரண்டுகண்களுக்கடங்காத இறைவர் திருவுருவழகை நெடுமால் காணுந்தோறும் முன்பு தான்கொண்ட மோகினிவடிவெடுப்பநினைத்து, பிரிவு இல்லாது ஒருபுடை அமர்ந்த பண் இசை மொழியாள் வனப்பும் எம்பெருமான் பார்வையும் நோக்கி - இறைவனைப் பிரியாமல் ஒருபாலமர்ந்த இசையையொத்த சொல்லையுடைய உமையம்மையினழகையும் அந்த எமது பெருமான் உமையம்மையின்மேற்செலுத்திய பார்வையையும் பார்த்து, எமக்கு ஈங்கு எண்ணிய எண்ணம் இனி முற்றுறாது என்று எழுந்த அ கருத்தினை மீட்ப - எமக்கு இவ்விடத்தில் எண்ணிய எண்ணம் இனி முடியாதென்று மேலெழுந்த அந்த எண்ணத்தைத்திருப்பவும்.

சிவபெருமானுரது அளவிறந்த திருவழகைத் திருமால்நோக்கித் தான்கொண்ட பேரவாவா லொன்றுமுணராது அவரைப்புணர முன்பு தான் பலகாற்கொண்டு கை

தேர்ந்த மோகினிவடிவெடுக்கக்கருதி, பின்பு இடப்பாலுள்ள உமையம்மையின் திருவழகையும், அவ்வழகின்மேற்செல்லு மிறைவர் திருவருட்பார்வையையும் நோக்கித் தான்கொண்ட கருத்து இன்று முற்றுமோ வெனக்காலம்பார்த்து அவ்வெண்ணத்தை விடுத்தனன் என்றமையால் உய்த்துணர் வைப்பணி.

திருமால் தேவர்முதலியரோடு கடல்கடைந்தவழி யமுதகும்பந்தோன்ற, கடல்கடைந்த தேவரும் அசுரர்களும் நம்மாலிதுவந்தது என்று தம்முள் மாறுபட்டுப் போர்செய்யத்தொடங்குங்கால் அப்போரினையொழிக்கத் திருமால் மோகினிவடிவாய் அசுரர்முன்னிற்க அவர்கள் மோகங்கொண்டு நெருங்கினர். அமுதத்தையும் என்னையும் விரும்பினோர் எவரோ அவரவர் அவ்வப்பொருள்களைப் பெறலாமென்று கூற அசுரர்கள் தன்னைக் கைக்கொண்டு செல்ல, அவர்களைநோக்கி வலியர் யாரோ அவர் என்னைப்புணர்கவென, அசுரர்கள் யாம் வலியோம் யாம் வலியோமென்று யாவருந் தம்முள் முந்திப் போர்செய்து மாண்டனர்கள். பின்னர் திருமால் தேவரிடஞ்சென்று அமுதம் பகிர்ந்துகொடுத்துத் தேவர்கள் வணங்கவிருந்தவிடத்துச் சிவபெருமானார் பேரழகுவாய்ந்த திருவுருவத்தோடு மோகினிவடிவாய்நின்ற அத்திருமால் முன்சென்று எமது சத்திமாருள் நீயொருசத்தியாதலால் என்னைப் புணர்கவென்றனர். என்பதை—

“ இந்தவண்ணமிருக்கமுராரியும் - அந்தவண்ணத்தமலனுமாகியே.
முந்துகூடிமுயங்கியவேலையில் - வந்தனன்னைமைவாழ்விக்குமையனே” என்னுங் கந்தபுராணத்தாலறிக. (எ)

ஆடலைத்தொடங்குந்தொறுந்திருமேனியழகினைக்கண்களான்மடுத்து
வாடருமயல்பூண்டவசராய்ச்சதியின்வழிப்பதம்பெயர்தாநிலையை
நாடகத்தலைவர்க்கெதிரடியேங்கணடிப்பதற்கஞ்சுதுமென்னுஞ்
சேடமைவனப்பினுருப்பசிமுதலோரவிநயசெய்கையான்மறைப்ப.

(இ-ள்.) சேடு அமை உருப்பசி முதலோர் வனப்பின் ஆடலை தொடங்குந்தொறும் திருமேனி அழகினை கண்களான் மடுத்து - பெருமையமைந்த அழகினையுடைய உருப்பசிமுதலிய அரம்பையர்கள் நடனத்தைத் தொடங்குந்தோறும் இறைவரது திருமேனியினழகைக் கண்களால் நோக்கி, வாடரும் மயல் பூண்டு அவசராய் சதியின்வழி பதம் பெயர்தரா நிலையை-நீங்குதலில்லாத காமமயக்கம் பூண்டு தம்வசமழிந்து தாளத்தின்வழித் தமது கால்பேராத நிலையை, நாடகம் தலைவர்க்கு எதிர் அடியேங்கள் நடிப்பதற்கு அஞ்சுதும் என்னு அபிநயசெய்கையான் மறைப்ப - நடித்தற்றொழிலில் மேம்பட்ட அவ்விறைவருக்கெதிரே அடியேங்களாகிய நாங்கள் நடனஞ்செய்தற்கு அஞ்சுகின்றோமென்று அபிநயச்செய்கையினாலே யொருபால் மறைக்கவும்.

திருமால் முதலியோர்களுக்குப் பேரின்பம் விளக்கும் திருநடனத்தில் சிவபெருமான் வல்லராதலால் நாடகத்தலைவர் எனவும், அவர் யாவரையுந் தம் வசத்தாக்குந் திருநடனத்தையுடையராதலில் அவரை நாங்கள் எவ்வாறு எங்கள் நடனத்தால் வசப்படுத்தப்போகின்றோமென்று மயங்கினராதலால் அடியேங்கணடிப்பதற்கஞ்சுதுமென்னு எனவுங் கருதினார் எனக்கூறினார். சிவபெருமான் றிருவழகைத் தமது கண்களாற்பருகி மயங்குதலால் தாம் செய்யும் நடனந் தவறுதலைப் பிறர் அறியாமல் அவிநயச்செய்கையை மறைத்தனரென்றமையால் யுத்தியணி. (அ)

மல்லலங்கமலத்திருவடிநோவமறுவலுமறுவலுமோடிக்
கல்லொளிபரப்புமணிமுடியழுத்துங்கடவுளர்தொகையினைவிலக்கு

நல்லமெய்ப்பணியைநான்பெறநல்கியவரவர்க்கருள்செய்துபோக்கி
யெல்லைதீர்கருணைமலையினேலக்கத்திருந்தனனென்னையாளுடையான்.

(இ-ள்.) என்னை ஆள் உடையான் - என்னை யாளாகவுடைய இறைவன், மல்ல அம் கமல திருவடி நோவ மறுவலும் மறுவலும் ஓடி-சிவபெருமானது வளமமைந்த அழகிய தாமரைபோன்ற திருவடிகள் வருந்த மீளவுமீளவுந் தாஞ்சென்று, கல் ஒளி பரப்பும் மணிமுடி அழுத்தும் கடவுளர் தொகையினை விலக்கும் நல்ல மெய் பணியை நான் பெற நல்கி-ஒளிவீசு மிரத்தினக்கல்லிழைத்த கிரீடத்தை அத்திருவடியிலழுத்தும் பிரமன்முதலிய தேவர்கூட்டத்தை வேத்திரப்படையால் விலக்கும் நல்ல உண்மைவாய்ந்த திருப்பணியை அடியேன் பெறக்கொடுத்தருளி, அவரவர்க்கு அருள்செய்து போக்கி எல்லை தீர் கருணை மலையின் ஓலக்கத்து இருந்தனன் - அவ்வத்தேவர்களுக்குக் கருணைசெய்து விடைதந்து அளவிறந்த கிருபையோடு கயிலையங்கிரியில் கொலுமண்டபத்தி லெழுந்தருளினார்.

சிவபெருமானார் திருவடியை வணங்கிய அயன்முதலிய தேவர்கள் மீளவும் தமது முடிகள் அத்திருவடியிற்சென்றழுந்தி வருத்தஞ்செய்யும்படி ஆராவன்பால் வணங்க அடிக்கடி சென்றனர் என்பார் மல்லலங்கமலத்திருவடிநோவ மறுவலுமறுவலுமோடிக்-கல்லொளிபரப்புமணிமுடியழுந்துங்கடவுளர் எனவும், தமது திருவடிக்கு இடையூறுசெய்தலை விலக்கும்பொருட்டு வேத்திரப்படையால் விலக்கும் பணியைத் தந்தனர் என்பார் விலக்கும் நல்ல மெய்ப்பணியை நான்பெற நல்கியெனவுங்கூறினார். (கூ)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

இருந்தருள்காலைவெண்கேழிமம்பொதியடுக்கலீன்ற
முருந்திளமுறுவற்செவ்வாய்முகிழ்முலைக்கடவுட்கற்பிற்
றிருநதிழையுலகமீன்றசெல்விமுத்தேவுங்காணாப்
பெருந்தகையடிகள்போற்றியிதுவொன்றுபேசலுற்றாள்.

(இ-ள்.) இருந்தருள் காலை - இவ்வாறெழுந்தருளியிருக்குமமையத்து, வெண் கேழ் இமம்பொதி அடுக்கல் ஈன்ற முருந்து இள முறுவல் செவ்வாய் முகிழ் முலை கடவுள் கற்பில் திருந்திழை உலகம் ஈன்ற செல்வி - வெள்ளிய நிறமமைந்த பனியால் மூடப்பட்ட இமபர்வதம் பெற்ற மயிலிறகினடியையொத்த புன்முறுவலையுஞ் செவந்த வாயையுந் தாமரையரும்பையொத்த தனத்தையுந் தெய்வத்தன்மையையுடைய கற்பினையும் வாய்ந்த எல்லாவுலகங்களையுமபெற்ற உமையம்மை, முத்தேவும் காணாத பெருந்தகை அடிகள்போற்றி இது ஒன்று பேசல் உற்றாள் - பிரமன்முதலிய மூன்றுதேவர்களுங் காணுதற்கரிய இறைவரது திருவடியைத்துதித்து இந்தச்செய்தியொன்றை வினவத்தொடங்கினார்.

அன்னைக்குத் தானீன்ற மக்கள்மேற் காதலுண்மையால் ஆன்மாக்களீடேற உபாயம் ஒன்று சிவபெருமானை வினவத்தொடங்கினர் என்பார் உலகமீன்ற செல்வி இதுவொன்று பேசலுற்றாள் என்றார். (க0)

கடப்படும்வீடுபேறுன்றிருவடிக்காட்சிதன்னாற்
கிடைப்பதாமறையீறாய்ந்துகிளர்தவந்தியானநிட்டை
நடைப்படிமுதிர்ந்துவாய்ந்தநல்லவர்க்கன்றியுன்ற
னடித்துணைகாண்டலேனோர்க்கரிதரிதாகுமம்மா.

(இ-ள்.) மறை ஈறு ஆய்ந்து கிளர் தவம் தியானம் நிட்டை நடைப்படி முதிர்ந்து வாய்ந்த நல்லவர்க்கு - வேதமுடிபினை யாராய்ந்து விளங்குந் தவமும் தியானமும்

சமாதியும் முறைப்படி செய்துமுடித்து அவை கைகூடிய நல்லவர்க்கு, உன் திருவடி காட்சி தன்னால் கடப்படும் வீடு பேறு கிடைப்பதாம் - உனது திருவடிக்காட்சியால் முறைப்பட்ட முத்திபெறுகை கைகூடுவதாம், அன்றி உன்றன் அடி துணைகாண்டல் ஏனோர்க்கு அரிது அரிது ஆகும் - அவர்களுக்கன்றி யுனது இரண்டுதிருவடிகளையுங் கண்டு துதித்தல் மற்றையோர்க்குக் கைகூடாது கைகூடாது.

தியானம் ஐம்புலன்கள்வழி மனஞ்செல்லாம லடக்கிச் சிவயோகஞ்செய்தல். நிட்டை ஆதாரதரிசனத்தையும் நிராதாரதரிசனத்தையுங்கடந்து மீதானத்துநிற்றல். இவை தம்முள் வேற்றுமையாதலால் தியானநிட்டையெனவும்,இவை யுடையோர்க்கன்றி யுன் றிருவடிக்காட்சி யேனையோர்க்குக் கிட்டுதல் அரிதாதலால் துணிவுப்பொருள்பட அடித்துணைகாண்டல் ஏனோர்க்கரிதரிதாகும் எனவுங்கூறினார். (௯௦)

ஏனையோர்விலங்குபுட்களிங்குனைக்கண்டுமுத்தி
மேனிலத்துறுவதெவ்வாறென்றனள்வினைதலோடு
மூனுடையுயிர்கள்யாவுமுய்யுமாகருணைகூர்ந்து
மானமர்கரத்துப்புத்தேள்வாய்மலர்ந்தருளுமன்றே.

(இ-ள்) ஏனையோர் விலங்கு புட்கள் இங்கு உனை கண்டு முத்திமேல் நிலத்து உறுவது எ ஆறு என்றனள் வினைதலோடும் - மற்றையோரும் விலங்குகளும் பறவைகளும் உன்னைத்தரிசித்து மேலுலகமாகிய முத்தியைப்பெறுவது எவ்விதமென்று உமையம்மை வினவ, ஊன் உடைய உயிர்கள் யாவும் உய்யும் ஆறு கருணை கூர்ந்து மான் அமர் கரத்து புத்தேள் வாய்மலர்ந்து அருளும்-சரீரத்தையுடைய உயிர்களெல்லாம் பிழைக்கும்வண்ணம் கிருபைமிக்கூர்ந்து மானேந்திய திருக்கரத்தையுடைய இறைவர் திருவாய்மலர்ந்தருளுவர்.

உமையம்மை தாம் தந்த வுயிர்களிடத்துக் கருணைகூர்ந்த அன்றே அவரொடு தாதான்மியமாயுள்ள இறைவரும் திருவருள்கொண்டனர் என்பார் ஊனுடையுயிர்கள் யாவுமுய்யுமா கருணைகூர்ந்து மானமர்கரத்துப்புத்தேள்வாய்மலர்ந்தருளும் எனக்கூறினார்.

அரிபரந்தகன்றவுண்கணலர்முலையணங்குகேள்யாம்
பரவெளிபரப்பின்வைகும்பண்பினேமுலகமெங்கும்
விரவியேநிறைந்துநிற்பேம்விளங்குமெந்நாலாம்பாதந்
தரைமுதலுலகாமூன்றுபாதம்வான்றலத்துமேவும்.

(இ-ள்.) அரி பரந்து அகன்ற உண் கண் அலர் முலை அணங்கு கேள்-செவ்வரி பரந்து விசாலித்தமையுண்ட கண்களையும் அடிபரந்த தனத்தையுமுடைய உமையம்மையே நீகேள், யாம் பரவெளி பரப்பின் வைகும் பண்பினேம் உலகம் எங்கும் விரவியே நிறைந்து நிற்பேம்-நாம் சிதாகாசப்பரப்பிற்றங்குந் தன்மையையுடையேம் எவ்வுலகத்துங் கலந்து நிறைந்து நிற்பேம் (ஆதலால்), விளங்கும் எம் நாலாம் பாதம தரைமுதல் உலகு ஆம்-எமது நான்குபாதங்களுள் விளங்காநின்ற எமது ஞானமாகிய நாலாம்பாதம் நில உலகமுதலிய கீழ் உலகுகாறும் உள்ளது, மூன்றுபாதம் வான் தலத்து மேவும் - மற்ற மூன்றுபாதங்களும் மேலுலகமாகிய விண்ணுலகிலுள்ளன.

நமக்குத் தானம் சிதாகாசம் என்பார் பரவெளிப்பரப்பின்வைகும் பண்பினேம் எனவும், உயிர்களோடொன்றாகியும் வேறாகியும் நிற்போம என்பார் உலகமெங்கும் விரவியே நிறைந்து நிற்பேம் எனவும், எமக்கு நான்குபாதங்களுள்ளனவெனபார் விளங்குமெந்நாலாம்பாதம் எனவும்,அந்நான்கனுள் ஒன்று நிலவுலகிலும், மற்றை மூன்று விண்ணுலகி

கினும் பரவுமெனக்கூறுவது வேதவாக்கியமென்பார் நாலாம்பாதம் தனைமுதலுலகாம் மூன்றுவான் தலத்துமேவு மெனவுங்கூறினர். நான்குபாதம் என்றது சரியை, கிரியை, யோகஞானங்களை. இதனாற் சுருதிவாக்கியங்கூறப்பட்டது. (கஉ)

ஆவகைவயங்குநம்மையாவருமறியமாட்டா
ரோவநம்பெருமைசான்றவுத்தமதலங்கடம்மி
னேவருங்காணவாழ்வேமென்றலுமுவகைபொங்கி
யாவையத்தலங்களென்றாட்கெம்பிரானருளிச்செய்யும்.

(இ-ள்.) ஆவகை வயங்கும் நம்மை யாவரும் அறியமாட்டார் - அவ்வாறாக வி ளங்கும் நம்மை நிட்டையையுடையோரன்றி யெவரும் உணர்ந்தறியமாட்டார்கள், ஓவ ரும் பெருமை சான்ற உத்தமம் தலங்கள் தம்மின் ஏவரும் காண வாழ்வேம் என்றலும் - ஒழிதலில்லாத பெருமைமிக்க உத்தமதலங்களில் எவருங்காண வாழ்கின்றேமென்றரு ள்செய்ய, உவகை பொங்கி அ தலங்கள் யாவை என்றாட்கு எம்பிரான் அருளிச்செய்யு ம் - மகிழ்கூர்ந்து அத்தலங்கள் எவையென்று வினவிய உமையம்மைக்கு எமது இறை வர் அருளிச்செய்வார்

திருவடிஞானமுடையவர்க்கன்றி யேனையோர்க்குக் காணலரிது என்பார் யாவ ரும் உணரமாட்டார் எனவும், அவவேனையோர் தரிசித்துச் சிவஞானமடைதற்கே யுத்தமதலங்களில் அருள்வடிவாயெழுந்தருளி யிருக்கின்றேமென்பார் ஓவரும்பெரு மைசான்ற வுத்தமதலங்கடம்மில் எவருங்காணவாழ்வேம் எனவும் என்றருளினர். (கங)

இதுவும் அது.

திருச்சேதுவாலவாய்சிராப்பள்ளிதிருவழுவூர்திருவையாறு
தருச்சூழிடைமருதூர்யாமென்றுநடம்புரியச்சலியாத்தில்லை
கருச்சாடுமுதுகுன்றமருணகிரிதிருவிரிஞ்சைகவினோரோத்தூர்
மருச்சூழுங்குழலுமையேநின்னொடியாமகிழ்ந்துறையும்வளஞ்சூழ்காஞ்சி.

(இ-ள்) மருசூழும் குழல் உமையே திருசேது ஆலவாய் சிராப்பள்ளி திருவ ழுவூர் திருவையாறு தரு சூழும இடை மருதூர் யாம் என்றும் நடம்புரிய சலியா தில்லை- வாசமிக்க கூந்தலையுடைய வுமையே திருச்சேதுந் திருவாலவாயுந் திரிசிராப்பள்ளியு ந் திருவழுவூருந் திருவையாறும் சோலைசூழ்ந்த திருவிடைமருதூரும் நாம் எப்பொழு துந் திருநடனஞ்செய்ய மனஞ்சலியாத திருத்தில்லையும, கருசாடும் முதுகுன்றம் அருண கிரி திருவிரிஞ்சை கவின் ஆர் ஓத்தூர் நின்னொடு யாம் மகிழ்ந்து உறையும் வளம் சூழ் காஞ்சி - அடைந்தோர் பிறவியையொழிக்குந் திருமுதுகுன்றமுந் திருவருணையுந் திரு விரிஞ்சையு மழகமைந்த திருவோத்தூரும் உன்னொடு நாமகிழ்வோடு வசிக்கும் வளப்ப மிக்க திருக்காஞ்சியும். (கச)

ஆலவனங்காளத்திதிருச்சயிலஞ்சித்தவடமடியார்சைவக்
கோலநிறைவிரூபாக்கந்திரியம்பகந்திருக்கோகன்னமின்பஞ்
சாலவுதவுச்சயினிமாகாளங்காசிகேதாரமென்றுங்
காலனுருப்பிரபாசமிமயமலைமந்தரஞ்சீர்க்கயிலையாதி.

(இ-ள்.) ஆலவனம் காளத்தி திருசயிலம் சித்தவடம் அடியார் சைவக்கோலம் நிறை விரூபாக்கம் திரியம்பகம் திருகோ கன்னம்-திருவாலங்காடுந் திருக்காளத்தியும் ஸ்ரீசயிலமுஞ் சித்தவடமும் அடியவர் சைவக்கோலம் நிறைந்த விரூபாக்கமுந் திரியம் பகமுந் திருக்கோகன்னமும், இன்பம் சால உதவு உச்சயினி மாகாளம் காசி கேதாரம்

என்றும் காலன் உறாத பிரபாசம் இமயமலை மந்தரம் சீர் கயிலையாதி - அடைந்தோர்க்குப் பேரின்பத்தை மிகவுந்தரும் உச்சயினிபுறத்திலுள்ள மகாகாளமும் காசியுந் திருக்கேதாரமும் எந்நாளும் இயமன் அடையாத பிரபாசமும் இமயமலையு மந்தரமும் சிறந்த திருக்கயிலையுமாகிய இவைமுதலாக

ால் உத்தமதலங்கள் இன்னவெனக்கூறப்பட்டன. (௧௫)

எண்ணிலவாம்யாமருவுமிடங்களெனவுரைத்தருளவிறைவிகேளா
வண்ணலேயிவற்றுள்ளுஞ்சிறந்ததலம்யாதென்னவருளிச்செய்வான்
புண்ணியமெய்த்திருக்காஞ்சியெவற்றினுமேம்படுபுரியாமவ்வூர்தன்னை[கும்.
யெண்ணினுங்கேட்பினுஞ்சொலினும்வணங்கினும்பேரின்பவீடெவர்க்குநல்

(இ-ள்.) யாம் மருவும் இடங்கள் எண்ணிலவாம் என்ன உரைத்தருள - யாம் எழுந்தருளும் இடம் அளவிலவாமென்று கூறியருள, இறைவி கேளா அண்ணலே இவற்றுள்ளும் சிறந்த தலம் யாது என்ன - உமையம்மை கேட்டு இறைவனே இத்திருத்தலங்களுள்ளும் மேம்பட்ட தலம் யாதென்று வினவியருள, அருளிச்செய்வான் - அவ்விறைவரருளிச்செய்கின்றனர், புண்ணியமெய் திருக்காஞ்சி எவற்றினும் மேம்படு புரியாம்-சிவபுண்ணியத்தின் உண்மைமிக்க திருக்காஞ்சி எத்தலங்களினு மேம்பட்ட தலமாம், அ ஊர் தன்னை எண்ணினும் கேட்பினும் சொல்லினும் வணங்கினும் பேரின்ப வீடு எவர்க்கும் நல்கும்-அத்திருப்பதியைச் சிந்தித்தாலுங் கேட்டாலுஞ் சொன்னாலும் அது இருக்குந் திசையை நோக்கி வணங்கினாலும் பேரின்பமுத்தியை யாவர்க்குந் தாரா நிற்கும்.

இதனால் உத்தமதலங்களுள் உத்தமதலம் இதுவெனக்கூறப்பட்டது. (௧௬)

அப்பதியினெஞ்ஞான்றுமகிழ்கூர்ந்துநின்னொடுநாமமர்வேமவ்வூர்
பற்பலர்சூழவிமுத்தத்தலந்தினுமேமபட்டதுவாமவிமுந்தத்தி
னிப்புவனங்காப்பயாம்விச்சுவநாதப்பெயரானிலிங்கந்தாபித்
தொப்பருஞ்சீர்பெறவைத்தேங்காஞ்சிநகரிடத்தொருமாமூலந்தன்னில்

(இ-ள்) அ பதியின் எஞ்ஞான்றும் மகிழ்கூர்ந்து நின்னொடு நாம் அமர்வேம்-அத்திருப்பதியில் எந்நாளும் மகிழ்கூர்ந்து உன்னோடு நாம் எழுந்தருளியிருப்போம், அ ஊர் பற்பலர் சூழ் அவிமுத் தம் தலத்தினும மேம்பட்டது ஆம்-அத்திருப்பதியானது பலருஞ்சூழுந் திருக்காசியினு மேம்பட்டது, (எவவாறென்னில்) அவிமுத்தத்தின் இ புவனம் காப்ப-அக்காசியில் இவ்வுலகங்களைக் காத்தற்பொருட்டு, யாம் விச்சுவ நாதன் பெயரான் இலிங்கம் தாபித்து ஒப்பரும் சீர்பெற வைத்தேம் - நாம் விசுவநாதனென்னுந் திருநாமத்தால் ஓர் அருட்குறியைத் தாபனஞ்செய்து ஒப்பிறந்த இலக்கணம்பெற வைத்தருளினேம், காஞ்சி நகரிடத்து ஒருமாமூலம் தன்னில் - திருக்காஞ்சியில் ஒருமாமரத்தினடியில்.

ஒவ்வொருதலங்களில் சிவபெருமானாவது உமையம்மையாவது விசேடமுடையராயிருத்தல், நாம் இருவரும் இத்தலத்தில் விசேடமுடையரா யெழுந்தருளியிருத்தலால் அதிகம் என்பார் அப்பதியினெஞ்ஞான்று மகிழ்கூர்ந்து நின்னொடு நாமமர்வேம் எனவும், ஏனைய தலங்களில் தேவர்முதலியோர்க்கருள நாமெழுந்தருளினேம், உலகுய்யக் காசியில் நாமே விச்சுவநாதன் என ஒரு சிவலிங்கப்பெருமானைத் தாபித்தலால் அத்தலங்களிலுங் காசி யதிகமென்பார் இலிங்கந்தாபித் - தொப்பருஞ்சீர்பெறவைத்தோம் எனவுங்கூறினார். (௧௭)

தோற்றநிலையிறுதிமறைப்பருளென்னுமைந்தொழிலுநடாத்தயாமே
யேற்றமுடையேகம்பநாதனெனுந்திருப்பெயர்பூண்டிலிங்கமானோந்
தேற்றுமிதனாற்காஞ்சியெவற்றினுக்குமதிகமெனத்தெளிவாயாங்கட்
போற்றியொருநாளேனுமமர்ந்துறையின்முத்திநிலைபுகுதலாமால்.

(இ-ள்.) தோற்றம் நிலை இறுதி மறைப்பு அருள் என்னும் ஐந்தொழிலும் நடாத்த - சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னு மைந்துதொழில்களையும் நடத்த, யாமே ஏற்றம் உடைய ஏகம்பநாதன் எனும் திரு பெயர் பூண்டு இலிங்கம் ஆனோம் - நாமே உயர்ச்சியையுடைய திருவேகம்பநாதனென்னுந் திருப்பெயர் பூண்டு ஓரிலிங்கவடிவானோம், தேற்றும் இதனால் காஞ்சி எவற்றினுக்கும் அதிகம் என்ன தெளிவாய் - தெளிவிக்குமிதனால் திருக்காஞ்சி யெத்தலங்களுக்கும் அதிகமெனத்துணிவாய், ஆங்கண் போற்றி ஒருநாளேனும் அமர்ந்து உறையில் முத்தி நிலை புகுதலாம் - அவ்விடத்துத்துதித்து ஒருநாளாயினும் விரும்பி வசிக்கில் மோக்ஷநிலையையடையலாம்.

ஒருமாமரத்தின்கீழ்ச் சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களையும் நடத்த நாமே ஒருசிவலிங்கவடிவமானதால் அக்காசியினுங் காஞ்சி யதிகம் என்பார் காஞ்சியிடத்தொருமாமூலந்தன்னில். தோற்றநிலையிறுதி மறைப்பருளென்னுமைந்தொழிலுநடாத்தயாமே - ஏற்றமுடையேகம்பநாதனெனுந்திருப்பெயர்பூண்டிலிங்கமானோம் எனவும், அதனால் ஏனையோர் ஒருநாளாயினும் எம்மைத்துதித்து அத்தலத்தில் வசிப்பாராஞல் முத்தியையடைவார் என்பார் முத்திநிலைபுகுதலாம் எனவும் அருளினர் எனக்கூறினர். இதனால் புத்திபூர்வத்தால் வரும் பயன் கூறப்பட்டது. (கஅ)

வழிச்செலவிற்புகுந்தேனுமறந்தேனும்பொருளாசைமருவியேனுங்
கழிப்பருஞ்சீர்க்காஞ்சியினிற்கணப்பொழுதுவதிந்தோருங்கலப்பர்முத்தி
பழிப்பிலாக்காஞ்சியெனத்தன்னியல்பானொருபொழுதுபகரிற்கண்ணி
லொழிப்பரும்பாதகமனைத்துமொழிந்துபெருந்துறக்கவீடுறுதலுண்மை.

(இ-ள்.) வழி செலவில் புகுந்தேனும் மறந்தேனும் பொருள் ஆசை மருவியேனும் கழிப்பரும் சீர் காஞ்சியினில் கணப்பொழுது வதிந்தோரும் முத்தி கலப்பர்-ஓரூர்க்குச்செல்வோர் இடையிற்சென்றாயினு மறந்தாயினும் பொருள்தேடுமாசையைப்பொருந்தியாயினும் நீங்குதலில்லாத புகழ்வாய்ந்த காஞ்சித்திருப்பதியில் கணப்பொழுதாயினுந் தங்குவோரும் முத்தியிற்கலப்பார், பழிப்பு இல்லாத காஞ்சி என்ன தன் இயல்பான் ஒருபொழுது பகரில் கண்ணில் - புகழமைந்த காஞ்சியென்று அவ்வாறன்றித் தன்னியற்கையறிவால் ஒருவன் ஒருகாலெடுத்துச் சொன்னாலுங் கருதினாலும், ஒழிப்பரும் பாதகம் அனைத்தும் ஒழிந்து பெரும் துறக்க வீடு உறுதல் உண்மை-ஒழித்தலமையாத பாதகமுற்றுமொழிந்து பெரிய மோக்ஷவீட்டையடைதல் சத்தியம்.

ஓரூர்க்குச்செல்வோன் வழியில் தங்கினாலும் இது காஞ்சியென்று தெரியாது வசித்தாலும், பொருள் ஈட்டுதல் காரணமாகச்சென்றிருந்தாலும், வழிச்செல்வோன் கணப்போதிருந்து அப்பாற்சென்றாலும் அக்காஞ்சி முத்தியிற்புகுத்தும் என்பார் கலப்பர் முத்தியெனவும், காரணங்கருதாது ஒருவன் தன்சுபாவத்தால் ஒருகாற்சொன்னாலும் நினைத்தாலும் பாதகமுற்றும் ஒழித்து முத்திசேர்வன் என்பார், துறக்கவீடுறுதல் எனவும், இது உபசாரவார்த்தையன்றென்பார் உண்மையெனவும் அருளினர் என்றார். இதனால் அபுத்திபூர்வத்தால் வரும் பெரும்பயன் கூறப்பட்டது. (கக)

அக்காஞ்சிகலிநாசப்பொருட்டுநாம்படைத்துவைத்ததாதலாலே
யெக்காலுமந்நகரினகத்துயரும்வினைத்துயருமெய்தாவாகு
மைக்காளஞ்சுவையமிழ்தின்மணந்தவிழிமணிநீவியல்குலெட்டுத்
திக்காளர்தமைப்பொதியும்பெருங்கீர்த்திநகரவளஞ்சிறிதுகேட்டி.

(இ-ள்.) மைக்காளம் சுவை அமிழ்தின் மணந்த விழிமணி நீவி அல்குல் - கரிய விஷத்தின் குணத்தையும் சுவையமைந்த அமுதின்குணத்தையுங் கலந்த திருக்கண்களையும் விளிம்பில் முத்துக்கோத்த கொய்சகத்தையுடைய அல்குலையுமுடையோய், அ காஞ்சி கலிநாசப்பொருட்டு நாம் படைத்து வைத்தது - அந்தக் காஞ்சித்திருநகரம் கலியை நாசஞ்செய்தற்பொருட்டு நாம் சிருஷ்டிசெய்து வைத்தது, ஆதலாலே எக்காலும் அ நகரின் அகத்துயரும் வினைத்துயரும் எய்தாவாகும்-ஆகையாலெந்தக்காலத்திலும் வினையுந் துன்பமும் இருவினையால்வருந் துன்பமும் ஆன்மாக்களையடையாவாகும், எட்டு திக்காளர் தமைபொதியும் பெரும் கீர்த்தி நகரவளம் சிறிது கேட்டி - எட்டுத்திக்கிலுமுள்ள இந்திரன்முதலியோரைப்பொதிந்த பெரிய கீர்த்திவாய்ந்த காஞ்சித்திருநகரின் வண்மையைச் சிறிதுகேளாய்.

அபுத்திபூர்வத்தால் நிகழ்ந்ததற்கும் பலனுண்டு என்றதற்குக் காரணம் இதனால் என்பார் அக்காஞ்சி கலிநாசப்பொருட்டு நாம் படைத்துவைத்ததாதலாலே - எக்காலு மந்நகரினகத்துயரும் வினைத்துயருமெய்தாவாகும் என்றருளினார். இது ஏதுவணி. (உ௦)

கலிமுதற்றீங்கணுகரியவேலியெனச்சூழ்பொழிலுங்காவன்மாறு
நிலையுடையுட்சேனையெனக்குவளைவிழிநந்தனநீள்வனமுந்தேவ
குலநிறைபல்தீபமெனநிரைக்கமலக்குளிர்தடமுங்கயிலைதன்னி
லிலகுறுபல்குவடென்னப்பலதளியுமுடைத்தாகுமெறிநீர்க்காஞ்சி.

(இ-ள்.) கலிமுதல் தீங்கு அணுகரிய வேலியென சூழ் பொழிலும்-கலிமுதலாகிய பொல்லாங்குகள் ஆன்மாக்களை யடைதற்குக் கூடாதிட்ட வேலியைப்போலச் சூழ்ந்த சோலைகளையும், காவல் மாறுத நிலை உடைய உள் சேனை என்ன குவளை விழி நந்தன நீள் வனமும் - காவலினின்றும் நீங்காமல் நிற்கும் நிலையையுடைய அந்தரங்கத்தில் வைத்த சேனையைப்போலக் குவளைமலர்கள் விழித்தல்போலலர்ந்த பரந்த நந்தனவனங்களையும், தேவகுலம நிறை பல் தீபம் என்ன கமலம் நிறை குளிர் தடமும் - தேவர் கோயில்களில் நிறைந்த பலதீபங்களைப்போலத் தாமரைப்பந்திகளாற் குளிர்ந்த தடாகங்களையும், கயிலை தன்னில் இலகுறு பல் குவடு என்ன பலதளியும் எறி நீர் காஞ்சி உடைத்தாகும் - கயிலையங்கிரியில் விளங்கும் பல சிகரங்களைப்போலப் பல திருக்கோயில்களையும் அலையெறியும் நீர்சூழ்ந்த திருக்காஞ்சிநகரம் உடையதாகும்.

அத்தீங்கு அணுகாவகை என்பார் காவன்மாறுநிலையுடையுட்சேனையெனவென்றார். பல திருக்கோயில்கள் என்றது திருமால் திருக்கோயில்களையும் இது பலவுவமைகளையும் எடுத்துக்கூறுதலால் பலவயிற்போலி யுவமையணி. (உ௧)

பம்பைகம்பைபுண்ணியநீர்மஞ்சணதிவேகவதிபாலிசேயா
றென்பனவேழுலகுமிடுமேழ்மாலையெனவொழுகுமெய்துவோரைச்
செம்பதுமர்கரமெடுத்துவிளையநகர்விளிப்பதுபோற்றெங்குநீளும்
வம்பவிழ்பூஞ்சோலைகளுண்மழைமறைத்தகதிர்போலவயங்குமூதூர்.

(இ-ள்.) வம்பு அவிழ் பூஞ்சோலைகள் உள் மழை மறைத்த கதிர்போல வயங்கும் மூதூர் - வாசனையோடு அவிழ்ந்த மலர்களையுடைய சோலைகளுள்ளே மேகத்தால் மறை

க்கப்பட்ட சூரியனைப்போல விளங்குந் தொன்றுதொட்டுள்ள அத்திருநகரில், பம்பை கம்பை புண்ணிய நீர் மஞ்சள் நதி வேகவதி பாலி சேயாறு என்பன ஏழ் உலகும் இடும் ஏழ் மாலை என ஒழுகும் - பம்பையுங் கமபையும் புண்ணியதீர்த்தமு மஞ்சள் நதியும் வேகவதியும் பாலாறுஞ் சேயாறும் என்று சொல்லப்பட்ட ஏழுதீர்த்தங்களும் ஏழுலகங்களுஞ்சாத்திய ஏழுமாலையைப்போல இடையறாதொழுகாநிற்கும், எய்து வோரை செம்பதுமம் கரம் எடுத்து விரைய நகர் விளிப்பதுபோல் தெங்கு நீளும் - தம்மை விரும்பி அடைவோரைச் செந்தாமரைபோன்ற தனது கையையோசசி விரைந்துவர அந்நகரமழைத்தல்போலத் தென்னமரங்கள் உயர்ந்தோங்கும்.

சோலைகளுள் மேகம் மறைத்த கதிர்போல வயங்குமூதூர் என்றது பண்புவமையணியும், ஏழுலகும் சாத்திய ஏழுமாலைபோல ஏழுநதிகளுமொழுகுமென்றது அற்புதவுவமையணியும், வருவோரை விரையவருவீர் என்று நகரழைப்பதுபோலத் தென்னமரம் ஓங்கியசையும் என்றது தற்குறிப்பணியும் சேர்ந்து வருதலாற் கலவையணி. (உ௨)

ஐயிருநூற்றுயர்சாகைசாகைகளாப்படைத்திங்கணமர்ந்துவாழு
மையனேயென்முதலென்றெழுகோடிமநுக்களுபமநுவால்யார்க்கு
மையமறத்தெரிவிக்குமறைமாவின்சாரூபமடைந்தபோலு
மையநறுமாம்பொழில்களெஞ்ஞான்றுங்கனிகளறாதமலுமாங்கண்.

(இ-ள்.) உயர் ஐயிரு நூறு சாகை சாகைகளாக படைத்து இங்கண் அமர்ந்து வாழும் ஐயனே என் முதலென்று - உயர்ந்த தனது ஆயிரஞ்சாகைகளே ஆயிரங்கிளைகளாகப்பெற்று இவ்விடத்தில் விரும்பி வாழாநின்ற சிவபிரானே யென் முதலாயுள்ளவனென்று, எழுகோடி மநுக்கள் உபமநுவால் யார்க்கும் ஐயம் அற தெரிவிக்கும் மறை மாவின் சாரூபம் அடைந்தபோலும் - சத்தகோடி மகாமந்திரங்களாலும உபமந்திரங்களாலும் எவர்க்குஞ் சந்தேகமறத்தெரிவிக்கும் வேதத்தின் வடிவாகிய மாமரத்தின் சாரூப்பியத்தை யடைந்தனபோலமைந்த, ஐயநறும் மாம்பொழில்கள் எஞ்ஞான்றும் கனிகள் அறாது ஆங்கண் அமலும் - அழகினையுடைய நறுமணங்கமழு மாமரச்சோலைகள் எந்நாளுங் கனிகள் நீங்காமல் அவவிடத்து நிறைந்து விளங்கும்

சாமவேதம் ஆயிரஞ்சாகைகளையுடையதாதலால் சாமவேதம் என்பதுதோன்ற ஐயிருநூற்றுயர் சாகைசாகைகளாகப்படைத்து எனவும், அது சிவபெருமானையே சுட்டிக்கூறும் என்பதுதோன்ற எழுகோடிமநுக்களுபமநுவால்யார்க்கும்-ஐயமறத்தெரிவிக்குமெனவும், தன் கீழிறைவனருள்வடிவாயெழுந்தருளியிருக்கின்றனன் என்பதுதோன்ற என்முதலெனவும், ஒருகால்மாறாது எக்காலமுங் கனிகளுடைமையால் சாரூபமடைந்தபோலும் எனவுங்கூறினர்.

சாமவேதம் என்பதும், அது ஆயிரஞ்சாகைகளையுடையதென்பதும்—

" கீட்டிசைமுகத்தொன்றடுத்தநாலேந்திற்கிளைத்ததாலிருக்கதுதென்பால்
ஈட்டியவிரண்டாம்வேதநூறுருவோடெழுந்ததுகுடதிசைமுகத்தில்
நீட்டியசாமமாயிரமுகத்தானிமர்ந்தது" எனத் திருவிளையாடற்புராணத்தில் வருதல்காண்க. இதனை யின்னதெனத்தோன்றுகிறது என்றமையால் தகுதியணி. (உ௩)

விப்பிரர்கணமுதனல்வர்சங்கரர்செய்தொழிலர்மயிர்வினைஞர்செக்கார்
செப்பிடையர்தச்சர்கொல்லர்பொன்வினைஞர்தேவகணிகையர்கள்கூத்தர்
விற்புருவப்பாத்தைமுதலோர்தெருக்கள்கலப்பின்றிவெவ்வேறாகிப் [ண்.
பொற்பநீண்டகன்றொழுங்காய்மதிக்கணிசெய்கதிர்களெனப்பொலியுமாங்க

(இ - ள்.) விப்பிரர்கள் முதல் நால்வர் சங்கரர் செய் தொழிலர் மயிர் வினைஞர் செக்கார் செப்பு இடையர் தச்சர் கொல்லர் பொன் வினைஞர் தேவகணிகையர்கள் கூத்தர் - அந்தணர்முதலிய நான்குவருணத்தாரும் அநுலோமர் முதலிய சங்கரரும் காருகரும் நாவிதருஞ் செக்காருஞ் சொல்லப்படும் இடையருந் தச்சருங் கொல்லருந் தட்டாருந் தேவகணிகையருங் கூத்தரும், வில் புருவம் பரத்தை முதலோர் தெருக்கள் கலப்பின்றி வெவ்வேறாகி பொற்ப நீண்டு அகன்று ஒழுங்காய் மதிக்கு அணிசெய் கதிர்கள் என்ன ஆங்கண் பொலியும் - வில்லையொத்த புருவத்தையுடைய பரத்தையர் முதலோருமாகிய இவர்கள் தெருக்கள் தம்முட்கலப்பில்லாமல் வெவ்வேறாய் அழகுசெய்யத் தூரமாய் நீண்டு பரந்து ஒழுங்குபட்டுச் சந்திரனுக்கு அழகுசெய்யுங் கிரணங்களைப் போல அவ்விடத்தில் நிறையும்.

சந்திரன் நாள்தோறும் தனித்தனி யொவ்வொருகலைகளோடுந் தோன்றுதலால் மதிக்கணிசெய்கதிர்களென வயங்குமோர்பாலென்றார். இது பண்புவமையணி. (உ௪)

தந்தைதாயிரண்டொழியப்பிறவெலாங்கொளத்தருமாவணங்கண்மல்கு
மெந்நகரூர்வேதவேதாந்தங்கண்மூவுலகுமெடுத்துக்கூறு
மந்நகரூரொனக்கோடிமடமயிலேகவ்வென்பதயன்பேரொன்ன
முந்துமிருக்கோதுமஞ்சென்பகுதியடைவொடுபூசைமொழியுமாதோ.

(இ-ள்.) மடமயிலே தந்தை தாய் இரண்டு ஒழிய பிற எல்லாம் கொள தரும் ஆவணங்கள் மல்கும் எந்நகரூர்-இளமைதங்கிய மயில்போல்வாய் தந்தை தாயரிருவரொழிய மற்றைப் பொருள்களெல்லாம் வாங்கத்தருங் கடைவீதிகள் நிறைந்த ஊர் எந்த வூரோ, வேதவேதாந்தங்கள் மூவுலகும் எடுத்துக்கூறும் அந்த ஊர் என கோடி - வேதங்களும் வேதசிரசுகளும் மூன்றுலகங்களு மெடுத்துச்சொல்லும் அந்தவூரொன்று கொள்ளாய், கவவென்பது அயன்பேர் என்ன முந்தும் இருக்கு ஓதும்-கவவென்பது பிரமன் பேரென்று முற்பட்ட இருக்குவேதங் கூறாநிற்கும், அஞ்சு என் பகுதி அடைவொடு பூசை மொழியும் - அஞ்சென்னும் பகுதி முறையோடு பூசையென்னும் பொருளைத் தாராநிற்கும்.

தந்தைதாயர்கள் ஒவ்வொருவர்க்குந் தனித்தனி யுரியராதலால் அரியதொன்பது தோன்றத் தந்தைதாயிரண்டொழிய எனவும், ஏனைப்பொருள்கள் கிடைத்தற்கெளிதென்பதுதோன்றப் பிறவெல்லாங்கொளத்தரும் எனவும், நான்குவேதங்களுள் முற்பட்டதென்பதுதோன்ற முந்து மிருக்கு எனவும், இத்தலம் வேதங்களால் எடுத்துக்கூறப்படுவதென்பதுதோன்ற ஓதும் எனவுங்கூறினார். தந்தைதாயிரண்டொழியவென்பது ஒழிப்பணி. (உ௫)

திசைமுகனலஞ்சிக்கப்படுதலினாற்காஞ்சியெனத்திசைபோய்மல்கு
மிசையுடையதிதுபிரமலோகமென்றுமிதனாற்பேரெய்தமாற்றா
னசைவிலாதங்குறைவோரெல்லார்க்கும்வீடுதவுமவ்வூர்நாப்பண்
வசையின்றிததிப்பியமாய்ப்புண்டரிகம்போலெமக்குவயங்குங்கோயில்.

(இ-ள்.) இது திசை முகனால் அஞ்சிக்க படுதலினால் காஞ்சி என திசைபோய் மல்கும் - இது பிரமனால் அஞ்சிக்கப்படுதலினாற் காஞ்சியெனப் பேர்வாய்ந்து திசைதோறும் பரந்து நிறைந்த புகழையுடையது, பிரமலோகம் என்று இதனால் பேர் எய்தும் ஆற்றால் - பிரமலோகமென்று இக்காரணத்தால் பேர்பெற்ற வகையால், அசைவிலாது அங்கு உறைவோர் எல்லார்க்கும் வீடு உதவும் - சற்று மனங் கம்பியாது அத்

திருநகரில் வசிப்போரெல்லோருக்கு முத்தியைத் தாராநிற்கும், அவ்வூர் நாப்பண் வசை இன்றி திப்பியமாய் புண்டரிகம்போல் எமக்கு கோயில் வயங்கும்-அத்திருப்பதியி னடுவில் குற்றமின்றித் தெய்வத்தன்மையையுடையதாய் ஒருதாமரையைப்போல எனக்குக் கோயில் விளங்காநிற்கும்.

அஞ்சிக்கப்படுதல் பூசிக்கப்படுதல் இதனால் இருக்கு வேதவாக்கியங் கூறப்பட்டது. (உசு)

அங்கதனிற்சோதிலிங்கவடிவாகியாமென்றுமமர்வேமிவ்வா
றிங்கிரண்டாமறைவிளம்புஞ்சந்தோகாமறையெம்மையொளிவானென்னுந்
துங்கநகர்தனைப்பிரமபுரமென்னுமிறுதிமறைசுவர்க்கமென்னும்
பங்கமறுதயித்திரியஞ்சோதிசூழ்சுவர்க்கமெனப்பகராநிற்கும.

(இ-ள்.) அங்கு அதனில் சோதிலிங்க வடிவாகி யாம் என்றும் அமர்வேம்-அத்திருநகரில் நாம் ஒளிவாய்ந்த அருட்குறிவடிவா யெந்நாளு மெழுந்தருளி யிருப்பேமென்று, இ ஆறு இங்கு இரண்டாம் மறை விளம்பும் - இவ்வகையாக இங்கு யசுர் வேதங் கூறாநிற்கும், சந்தோகாமறை எம்மை ஒளிவான் என்னும் - சாந்தோக்கிய உபநிடதம் எம்மைச் சிதாகாசமென்று கூறாநிற்கும், துங்கம் நகர்தனை பிரமபுரம் என்னும் - உதவு மன்றி உயர்ச்சிவாய்ந்த அந்தத்திருநகரை அவவேதம் பிரமபுரமெனவுங் கூறாநிற்கும், இறுதிமறை சுவர்க்கம் என்னும் - அதர்வவேதஞ் சுவர்க்கமென்று கூறாநிற்கும், பங்கம் அறு தயித்திரியம் சோதி சூழ் சுவர்க்கம் என்ன பகராநிற்கும் - குற்றமற்ற அந்த யசுர் வேதம் ஒளிமிக்க சுவர்க்கமெனவுங் கூறாநிற்கும்.

இதனால் யசுர்முதலிய வேதங்களின் வாக்கியமும் உபநிடதவாக்கியமுங் கூறப்பட்டன. தயித்திரியம் என்பதை உபநிடதமெனவுங்கூறுவர். உபநிடதமும் வேதம் ஆகையால் சந்தோகாமறை என்றார். (உஎ)

அப்பிரமபுரங்காஞ்சிநகரல்லால்வேறில்லையாகுமென்றே
செப்புமுபநிடதமெலாஞ்சிவாகமங்களொடுமுழங்குஞ்செல்வீயிந்த
வைப்பினைச்சேயிடையானுமாயிடையாயினுமிருந்துவணங்கிற்கண்ணி
லெப்பெரும்பாவமுநீங்கிவீடெய்துமுனக்குண்மையியம்பினேமால்.

(இ-ள்.) செல்வீ அ பிரமபுரம் காஞ்சி நகர் அல்லால் வேறு இல்லையாகும் என்றே செப்பும் உபநிடதம் எல்லாம் சிவாகமங்களொடு முழங்கும் - உமையே அந்தப் பிரமபுரங் காஞ்சித்திருநகரன்றி வேறில்லையாமென்று கூறும் வேதசிரசுகள் யாவுஞ் சைவாகமங்களோடு முழங்காநிற்கும், இந்த வைப்பினை சேயிடையாயினும் ஆயிடை ஆயினும் இருந்து வணங்கில் கண்ணில் எ பெரும்பாவமும் நீங்கி வீடு எய்தும்-இத்திருநகரினைத் தூரதேசத்திலிருந்தாயினும் அத்திருநகரத்திலாயினுமிருந்து வணங்கினாலுங் கருதினாலும் எவ்வகைப்பட்ட பெரிய பாவங்களும் நீங்க முத்தி கைகூடும், உனக்கு உண்மை இயம்பினேம் - உனக்கு அத்திருநகரினுண்மையை யெடுத்துச்சொன்னோம்.

இருக்குவேதமும் அதர்வவேதமும் அன்றி, உபநிடதங்களும் அவற்றின் வாச்சியமாகிய ஆகமங்களும் பிரமபுரம் என்று கூறாநிற்கும் என்பார் ஒடு உருபுதந்து உபநிடதமெலாம் சிவாகமங்களொடு முழங்கும் எனவும், வேறில்லையெனவும், அவ்விசேடங்களுண்மையால் வணங்கில் கண்ணில் வீடெய்தும் எனவும், ஏனையதலங்கள் வேதங்களாலும் உபநிடதங்களாலும் ஆகமங்களாலும் எடுத்துக்கூறப்படாது இத்தலமட்டும் எடுத்துக்கூறப்படுதலால் அதில் வரும் பயன் உண்மையென்பார் உண்மையியம்பினேமெனவும் அருளினார் என்றார். நீங்கி செயவெனெச்சத்திரிபு. (உஅ)

என்றிறைவனுலகுய்யவினவுமலைப்பெருமாட்டிக்கியம்பும்வாய்மை
யன்றுவினவியசனற்குமாரனுக்குத்திருநந்தியறைந்தானன்னோன்
வென்றபொறிவாதராயணற்குரைப்பவவனெனக்குவிளம்பல்செய்தான்
குன்றனையபெருந்தவத்தீர்சிவனைக்காணபதற்கேதுவிதுவேகொண்மின்.

(இ-ள்.) என்று இறைவன் உலகு உய்ய வினவும் மலைப்பெருமாட்டிக்கு இயம்பும் வாய்மை - என்று சிவபெருமான் ஆன்மகோடிகள் உய்ய வினவிய உமையம்மைக்குக் கூறியருளிய உண்மையை, குன்று அனைய பெரும் தவத்தீர் அன்று வினவிய சனற்குமாரனுக்கு திருநந்தி அறைந்தான் - மலையையொத்த பெரிய தவத்தினையுடைய முனிவரே அக்காலத்தில் வினவிய சனற்குமாரமுனிவருக்குத் திருநந்திதேவர் கூறியருளினர், அன்னோன் பொறிவென்ற வாதராயணற்கு உரைப்ப அவன் எனக்கு விளம்பல் செய்தான் - அம்முனிவர் இந்திரியங்களைவென்ற வியாசமுனிவருக்குக்கூற அவர் எனக்குக்கூறினர். சிவனை காண்பதற்கு ஏது இதுவே கொண்மின் - சிவபெருமானைக் காணுதற்குக் காரணம இத்திருநகரமேயென்று (யாங்கூறியதை) கைக்கொள்ளுங்கள்.

பதர அயனன் வாதராயணன் எனவந்தது தத்திதாந்தபதம். இலந்தைக்காட்டில் வசிப்பவன் என்பது பொருள். உலகு இடவாகுபெயராய் உயிர்கள்மேல் நின்றது.

பரவருமந்தணமாகுமிக்காதைமெய்யன்பிற்படிப்போர்கேட்போர்
கரிசுறுநோய்நீங்கிநெடுநாட்புவியின்மக்களொடுங்களித்துவாழ்ந்து
வரகுணராய்மறுமையினும்பெரும்போகமினிதுண்டுமாறுமுத்தி
விரவுவரென்றுளங்கொள்ளசூதமுனிமுனிவரர்க்குவிளம்பினனால்.

(இ-ள்.) பரவரும் மந்தணம் ஆகும் இ காதை மெய் அன்பில் படிப்போர் கேட்போர் கரிசு உறு நோய் நீங்கி நெடுநாள் புவியின் மக்களொடும் களித்து வாழ்ந்து - சொல்லுதற்கரிய இரகசியமாகிய இந்தச் சரித்திரத்தை மெய்யன்போடு படிப்பவருங் கேட்பவருங் குற்றமிக்க நோயினின்றும் நீங்கிப் பலநாளும் நிலவுலகிற் சற்புத்திரர்களோடுங் களிகூர்ந்து வாழ்ந்து, வரகுணராய் மறுமையினும் பெரும்போகம் இனிது உண்டு மாறுமுத்தி விரவுவர் என்று சூதமுனிவர் உளம்கொள்ள முனிவரர்க்கு விளம்பினன் - சாத்துவிதகுணமுடையவராய் மறுபிறப்பினும் சுவர்க்கபோகத்தை இனிது நுகர்ந்து அழியாத முத்தியிற் கலப்பரென்று சூதமுனிவர் மனத்திற்பொருந்தக் கண்ணுவர் முதலிய முனிவர்களுக்குக்கூறினர்.

வேதாகமங்களாலும் உபநிடதங்களாலும் கூறப்படுதலால் பரவருமந்தணமாகுமிக்காதையெனவும், நெடுநாள் களிகூர்ந்து வாழ்தற்கு நோயின்மை காரணமாதலால் கரிசுறுநோய் எனவும், சுவர்க்கபோகம் ஆதலால் மறுமையினும் பெரும்போகம் எனவும், அது நுகர்ந்துகழித்தலே முத்தியாதலால் இனிதுண்டுமாறுமுத்திவிரவுவர் எனவுங் கூறினர். படித்தலுங் கேட்டலுமாகிய காரணங்களால் வருங் காரியங்கள் கூறப்படுதலால் காரணமாலையணி. (௩0)

தலவிசேடப்படல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௬௪௬.

## திருநெறிக்காரைக்காட்டுப்படலம்.

மெய்த்தவர்யாவருமங்கதுகேட்டுவிழித்துணைநீர்வாரக்
கைத்தலமுச்சிமுகிழ்த்துமயிர்ப்புளகங்கண்மலிந்தயர்வார்
முத்திபெறற்குயர்காரணமின்றுதொகுத்துமொழிந்தனைநீ
யத்தலமேன்மையனைத்தும்விரித்தருளென்றலுமச்சுதன்.

(இ-ள்.) மெய்தவர் யாவரும் அங்கு அதுகேட்டு விழிதுணை நீர்வார கைத்தலம் உச்சி முகிழ்த்து மயிர் புளகங்கள் மலிந்து அயர்வார் - உண்மைவாய்ந்த முனிவர்கள் யாவரும் அவ்விடத்து அதனைக்கேட்டு இரண்டு கண்களினும் நீர் சிந்த இரண்டுகரங்களையுஞ் சிரமேற்குவித்து உரோமம் புளகித்துச் சோர்வாராகி, நீ முத்தி பெறற்கு உயர் காரணம் இன்று தொகுத்து மொழிந்தனை - நீ மோக்ஷத்தையடைதற்கு உயர்ந்த காரணத்தையிப்பொழுதே தொகுத்துக்கூறினை, அ தலம் மேன்மை அனைத்தும் விரித்தருள் என்றலும் - அந்தத்தலத்தின்மேன்மை முற்றும் விரித்துக்கூறியருளாயென்று வினவ, அச்சுதன் - அச்சுதமுனிவர்.

அயர்வார் முற்றெச்சம். (க)

கச்சியுளெண்ணறுதீர்த்தநிறைந்துளகாமுறுபலதானம்
பொச்சமில்போகமும்வீடுமளிப்பனபோக்கருமேன்மையவா
மச்சமறுத்துவியாதனெனக்கருள்செய்தமுறைப்படியே
இச்சையினோதுவலந்தணிர்கேண்மினெனச்சொலலுற்றனனால்.

(இ-ள்.) கச்சியுள் எண்ணறு தீர்த்தம் நிறைந்துள - காஞ்சித்திருநகருள் அளவில்லாத தீர்த்தங்கள் நிறைந்துள்ளன, (அதுபோல) காமுறு பலதானம் பொச்சம் இல்போகமும் வீடும் அளிப்பன போக்கருமேன்மைய ஆம்-விரும்பும் பலதலங்கள் மறதியில்லாத போகத்தையு முத்தியையுங்கொடுப்பன (ஆதலால் இவ்விரண்டும்) ஒழிதலில்லாத மேன்மையையுடையனவாம், அச்சம் அறுத்து வியாதன் எனக்கு அருள்செய்த முறைப்படியே இச்சையின் ஓதுவல் - ஐயந்திரிபு என்னும இரண்டினையுமொழித்து வியாதமுனிவனெனக்குக்கூறிய முறையே மகிழ்வோடு கூறுகிறேன், அந்தணிர் கேண்மின் என்னசொல்லலுற்றனன் - முனிவர்களே கேளுங்கள் என்று சொல்லத்தொடங்கினன்.

கச்சியுள் என்பதனோடு காமுறுபலதானம என்பதனைக்கூட்டுக. ஊழியினும் அழியாதனவாதலால் போக்கருமேன்மையவாம் எனவும், ஐயம் திரிபு என்னும் இரண்டும் பிறர்க்கு ஒன்றினைக்கூறுங்கால் அச்சத்தை விளைத்தலால் அவ்விரண்டனையுந்தொகுதியொருமையால் அச்சம் எனவுங்கூறினர். சொல்லலுற்றனன் ஒருசொல் நீர்மைய. வியாதன் வேதத்தை விரித்தவன். ஏழனுருபுகூட்டிப்பிரித்தற்பொருளில்வந்தது.

இந்நகரிற்புகல்சத்தியமாவிரதப்பெயரிற்குணபாற்
றன்னிகர்மெய்த்தலமொன்றுளதங்கமர்சத்தியவிரதீச
னொன்னையுடைப்பெருமாட்டியுமோரிருமைந்தருமுடன்மேவ
மன்னியிருத்தலினத்தலமேன்மையையாவர்வகுக்கவலார்.

(இ-ள்.) இ நகரில் புகல்மா சத்திய விரதம் பெயரில் குணபால் தன் நிகர் மெய்த்தலம் ஒன்று உளது-இந்தத்திருநகரில் சொல்லப்படும் பெருமைவாய்ந்த சத்தியவிரதமென்னும் பெயரினால் அத்திருநகர்க்குக் கீழ்த்திசையில் தனக்கொத்த உண்மைவாய்ந்த

திருப்பதியொன்றுளது, அங்கு அமர் சத்தியவிரதீசர் - அத்திருத்தலத்திலெழுந்தருளிய சத்தியவிரதீசரொன்னுந் திருநாமம்வாய்ந்த இறைவர், என்னையுடை பெருமாட்டியும் ஓர் இருமைந்தரும் உடன் மேவ மன்னி இருத்தலின் அ தல மேன்மையை யாவர் வகுக்க வல்லார்-என்னை யாளாகவுடைய பெருமாட்டியு மொப்பில்லாத மூத்தபிள்ளையாரும் இளையபிள்ளையாருந் தம்முடனே யெழுந்தருளியிருப்ப நிலைபெற்றிருத்தலால் அந்தத்தலத்தினுடைய மேன்மையை எவர்தான் எடுத்துச்சொல்லவல்லவர்.

காஞ்சியில் இறைவரும் உமையம்மையும் விசேடமுடையவராக எழுந்தருளியிருத்தல்போலாது இத்தலத்தில் இறைவரும் உமையம்மையும் மூத்தபிள்ளையாரும் இளையபிள்ளையாரும் விசேடமுடையவராக எழுந்தருளியிருக்கின்றனர்களென்பார சத்தியவிரதீசர் என்னையுடைப்பெருமாட்டியு மோரிருமைந்தருமுடன்மேவ எனவும், அதனால் விசேடமுடையதென்பார் அத்தலமேன்மையை யாவர் வகுக்கவலார் எனவுங் கூறினார். (௩)

சத்தியசத்தியர்சத்தியசோதகர்சத்தியசங்கற்பர்
சத்தியகாமரிருத்தலினப்பதிசத்தியவிரதமதாஞ்
சத்தியநன்னெறியார்க்குமவிரைந்தருள்செய்துறுதானமதிற்
சத்தியமாவிரதத்தடமொன்றுளதத்தடநீராடி.

(இ-ள்.) சத்திய சத்தியர் சத்திய சோதகர் சத்திய சங்கற்பர் சத்திய காமர் இருத்தலின் அ பதி சத்திய விரதம் ஆம் - சத்தியசத்தியர் சத்தியசோதகர் சத்திய சங்கற்பர் சத்தியகாமரொன்னுங் காரணப்பெயர்களையுடைய இறைவர் எழுந்தருளியிருத்தலால் அந்தத்திருப்பதியானது சத்தியவிரதமென்னுந் திருப்பெயருடையது, சத்திய நல் நெறியார்க்கும் விரைந்து அருள் செய்துறு தானம் அதில் - சத்தியமாகிய நல்ல மார்க்கத்தை யெவர்க்கும் விரைந்து அருள்செய்யு மத்திருப்பதியில், சத்திய மாவிரதம் தடம் ஒன்று உளது - சத்தியமாவிரதமென்னுந் தடாகமொன்றுள்ளது, அ தடம் நீர் ஆடி-அத்திருத்தடத்தில் ஸ்நானஞ்செய்து.

சத்தியசத்தியர் அழிதலில்லாத சத்தியமுடையவர். சத்தியசோதகர் உயிர்களிடத்துள்ள உண்மையைச்சோதித்து அனுக்கிரகஞ்செய்கிறவர். சத்தியசங்கற்பர் உண்மையையே சங்கற்பமாகவுடையவர். சத்தியகாமர்-உண்மையை விரும்புகின்றவர். சிவபெருமான் திருவுருவாகிய சத்துச்சித்தாநந்தமென்னு மூன்றனுள் சத்து என்பது சத்தியமாதலால் சத்தியசத்தியர் சத்தியசோதகர் சத்தியசங்கற்பர் சத்தியகாமர் என்றார். அது பகுதிப்பொருள் விகுதி. (௪)

புதனமர்நாளினினீர்க்கடனாதிபொருந்தமுடித்தங்க
ணிதமுறுசத்தியமாவிரதீசரையேத்திவணங்குநர்தாங்
கதழ்வினைதீர்ந்தருளுண்மையுணர்ந்துகலப்பர்கண்முத்தியினை
மதமுறுகாமமயக்கமனைத்துமறுத்துயர்முனிவீர்காள்.

(இ-ள்.) மதம் உறு காமம் மயக்கம் அனைத்தும் அறுத்து உயர் முனிவீர்காள் - கோபமுமிக்க காமமு மயக்கமுமாகிய எல்லாவற்றையுமறுத்துத் தவத்தாலுயர்ந்தமுனிவர்களே, புதன் அமர் நாளினில் நீர் கடன் ஆதி பொருந்த முடித்து - புதவாரத்தில் நீர்க்கடன்முதலியவற்றைப் பொருந்த முடித்து, அங்கண் இதம் உறு சத்திய மாவிரதீசரை ஏத்தி வணங்குநர் தாம் - அவ்விடத்தில் இன்பமிக்க சத்தியவிரதீசரைத் துதித்து வணங்குவோர்கள், கதழ் வினை தீர்ந்து அருள் உண்மை உணர்ந்து முத்தியினை கலப்பர்கள்-

விளைந்தடையும் இருவினையினின்றும் நீங்கித் திருவருளால் பதியுண்மையையுணர்ந்து முத்தியைக்கல்ப்பார்கள்.

நீர்க்கடன் ஆதி என்றது முனிவர் தேவர் பிதிரர் தர்ப்பணங்களுமாகிய நித்திய மும், வபனம் தானமுதலிய நைமித்திகமுமாம். (௫)

மனைவியர்மக்கணிலங்கலைசெல்வமும்மற்றெவைவேண்டிடினு
மனையவைமுற்றுமளித்துயர்வீடுமளித்திடுமத்தீர்த்த
மினையதடம்பதியிந்திர தீர்த்தமுமிந்திரபுரமுமெனப்
புனைபெயரும்பெறுமப்பெயரெய்தியகாரணமும்புகல்வேன்

(இ-ள்.) அ தீர்த்தம் - அந்தத்தீர்த்தமானது, மனைவியர் மக்கள் நிலம் கலை செல்வம் எவை வேண்டிடினும் அனையவை முற்றும் அளித்து உயர் வீடும் அளித்திடும் - மனைவியரும் பிள்ளைகளும் நிலமும் கல்விச்செல்வமும் பொருட்செல்வமுமாகிய எவை களை விரும்பினாலும் அவை முற்றுங்கொடுத்துப் பின் உயர்ந்த மோக்ஷத்தையுந் தாரா நிற்கும், இனைய தடம் பதி இந்திர தீர்த்தமும இந்திரபுரமும் என்ன புனை பெயரும் பெறும் - இத்தன்மையயுடைய தடமும் நகரமும் இந்திரதீர்த்தமும் இந்திரபுரமும் என்று அலங்கரித்துக்கூறும் பேரும் பெறும், அ பெயர் எய்திய காரணமும் புகல்வேன் - அந்தப்பெயர்வந்த காரணத்தையு மெடுத்துச்சொல்வேன்.

இந்திரபுரத்திற்குப் பவுந்தரம் என வடமொழியில் வரும். பந்தமும் வீடும் ஆன் மாக்களுக்குத்தரும் என்பார் மனைவியர்மக்கணிலங்கலைசெல்வமுமற்றெவை வேண்டி டினும் - அனையவைமுற்றுமளித்துயர்வீடுமளிததிடும் என்றார். (௬)

மதுமலராளிதன்மேதகுகற்பம்வராகமதுறுமாறு
முதுமனுவந்தரநாட்சிவியென்றொருவாசவன்முன்னுளனால்
விதுவினையொப்பனரம்பையராகியமென்குமுதங்களிடைப்
பொதுவறுதானவமாக்கடலுக்குவடாதெரிகனல்போல்வான்.

(இ-ள்.) மதுமலராளிதன் மேதகு கற்பம் வராகம் உறும் முது ஆறு ஆம் மனு அந்தரநாள் சிவி என்று ஒரு வாசவன்முன் உளன்-பிரமனது மேன்மைவாய்ந்த கற்பங் களுள் சுவேதவராககற்பத்தில் பொருந்திய தொன்றுநெறாட்டுள்ள ஆறுமனுவந்தரநா ளில் சிவியென்று ஒரு தேவேந்திரன் முன்னிருந்தனன், அரம்பையர் ஆகிய மென் குமுதங்கள் இடைவிதுவினை ஒப்பன் - அரம்பையரென்னும் மெல்லிய ஆம்பல்களுக்குச் சந்திரனையொப்பான், பொது அறு தானவர் மாகடலுககு வடாது எரிகனல் போல்வான்-பொதுவில்லாத அசுரரென்னும் பெரிய கடலுக்கு வடவாக்கினியை யொப்பவன்.

இடை உருபுமயக்கம். தானவர்மாக்கடல் உயர்திணைப்பெயரினீறுகெட்டது. கற்பம் என்பது பிரமனுக்கு ஒருநாள், தேவவருடம் பன்னீராயிரம் சென்றது ஒரு சதுரயுகம், அது எழுபத்தொன்று கழிந்தால் ஒரு மனுவந்தரம், அம்மனுவந்தரம் பதினான் குகழிந்தால் ஒருகற்பம் எனப்படும். ஒவ்வொரு மனுவந்தரத்திற்கு ஒவ்வொரு இந்திரர்களாகப் பதினான்கிந்திரர்களுளர். கற்பம் என்பது பகற்பொழுதினை. பதினான்குமனுக்களாவார் சுவாயம்பு, சுவாரோசிஷன், உத்தமன், தாமசன், இரைவதன், சாக்ஷுஷன், வைவச்சுதன், சூரியசாவர்ணி, தக்ஷசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, உருத்திரசாவர்ணி, ரௌச்சியன், பௌதியன். பதினான்கிந்திரர்களாவார் - அரி, விபச்சித்து, சுசாந்தி, விபு, மநோசவன், சிவி, புரந்தரன், மாவலி, அற்புதன், சாந்தி, விருடன், இருததாமன், திவற்பதி, சுசி. சாக்ஷுஷமனுவந்தரத்தில் இச்சரிதை நிகழ்ந்தது. இப்போது நிகழ்வது வைவச்சுத மனுவந்தரம்.

"முறையோடக்குஞ்சதுரயுகமெழுபத்தொன்றுமுடிந்தொழியின்
அறையுமனுவந்தரமாகுமதுதான்பதினான்கக்கன்றொழிதல்
குறைவில்கற்பமெனப்படுமால்கற்பங்குளிர்நாண்மலர்ப்பொகுட்டில்
உறையுமுகநான்குடையமறையொருவன்றனக்கோர்பகலாமால்.
மலரோன்பகலிற்பதினான்கிந்திரர்தாமிறப்பர்" எனவரும் வாயுசங்கிதையால் உணர்க. (எ)

கடவுளர்சேனைப்பங்கயபானுகற்சிறையரிவயிரப்
படையவனோர்நாட்கடவுளவைக்கட்பாசிழைவெதிர்பொருதோட்
படவரவல்குற்சசிபுடைமேவப்பன்மணியரியணைமேல்
வடிவமடங்கன்மேலொர்மடங்கல்போன்மெனவைகினனால்.

(இ-ள்.) கடவுளர் சேனை பங்கயபானு - தேவர்களது சேனையாகிய தாமரைக்கு ஓர் சூரியன்போல்வான், கல் சிறை அரி வயிரம் படையவன் ஓர்நாள் கடவுள் அவை கண் - மலையின் சிறகினையரிந்த வச்சிராயுதத்தையுடைய இந்திரன் ஓர்தினம் தேவர்சபையில், பாசு இழை வெதிர் பொருதோள் பட அரவு அல்குல் சசிபுடை மேவ பல் மணி அரி அணைமேல் வடிவ மடங்கல் மேல் ஓர் மடங்கல் போன்மென வைகினன் - பசிய ஆபரணத்தையுடைய மூங்கிலையொத்த தோளையும் பாம்பின் படத்தையொத்த அல்குலையுமுடைய இந்திராணி யொருபக்கத்திலிருக்கப் பல இரத்தினமழுத்திய சிம்மாதனத்தின்மேல் வடிவத்தையுடைய சிங்கத்தின்மேலோர் சிங்கமிருந்ததுபோலத் த

தேவசேனையைத் தாமரையாகவும் இந்திரனைச் சூரியனாகவும் கூறியது சிறப்புருவகவணியும், சிம்மாசனத்தில் மேலிருந்தலை ஓர்சிம்மத்தின்மேல் ஓர் சிம்மமிருந்தது போலெனக்கூறியதால் தொழிற்பண்புவமையணியுங் கலந்துவருதலாற் கலவையணி.

இருபுடைவெண்கவரித்தொகைதுள்ளமிசைக்குடையெழில்செய்ய
விருதுகண்மாகதர்சூதர்முழக்கவியன்மணிமாநிதியைந்
தருவொடுதேனுவிழிக்கடைநோக்கினைநோக்குபுதலைநிற்ப
வருகுறுகின்னரர்யாழமிர்தஞ்செவியாரவிருந்தயர.

(இ-ள்.) இருபுடை வெண் கவரி தொகை துள்ள மிசை குடை எழில் செய்ய - இரண்டுபக்கமும் வெள்ளிய சாமரையின் கூட்டங்கள் ஒருபால் துள்ளவும் மேலே வெண்கொற்றக்குடை ஒருபால் நிழல்செய்தழகுசெய்யவும், மாகதர் சூதர் விருதுகள் முழக்க - இருந்து வாழ்த்துவோரும் நின்று வாழ்த்துவோரும் சயவிருதுகளையொருபால் எடுத்துக்கூறவும், வியன் மணி மாநிதி ஐந்தரு தேனு விழி கடை நோக்கினை நோக்கு புதலை நிற்ப - பெருமைவாய்ந்த சிந்தாமணியும் உயர்ச்சிவாய்ந்த சங்கநிதியும் பதுமநிதியும் பஞ்சதருக்களுங் காமதேனுங் கடைக்கட்பார்வையைநோக்கி யொருபால் நிற்கவும், அருகு உறு கின்னரர் யாழ் அமிர்தம் செவி ஆர விருந்தயர - அருகிற்பொருந்திய கின்னரர் தடவும் வீணையினிசையாகிய அமுது ஒருபால் செவிதெவிட்ட விருந்துசெய்யவும்.

ஒடு எண்ணொடு. இதுமுதல் "கணங்கொள்தயித்தியர்" என்பதுகாறும் ஒரு தொடர். ஐந்தரு ஆவன சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம். (க)

மணங்கமழ்தோளணிகற்பகமாலைதுளித்தமதுப்புனல்பாய்ந்
துணங்கருமின்பவிழிப்புனலொப்பவுறைத்துவிழிக்கெல்லா

மணங்குபுரிந்திடல்கண்டுபுலர்த்துநர்போலவிர்சாந்தாற்றி
நுணங்கிடைமங்கையரோவறவெங்கணுநொய்தினசைத்தணுக.

(இ-ள்) மணம் கமழ் தோள் அணி கற்பக மாலை துளித்த மது புனல் பாய்ந்து-வாசங்கமழுந் தோளிலணிந்த கற்பகமாலையானது துளித்த மதுநீரானது பாய்ந்து, உணங்கரும் இன்ப விழி புனல் ஒப்ப உறைத்து - மாறாத இன்பத்தால் கண்களினின்றொழுகும் நீரையொப்பத்துளித்து, விழிக்கு எல்லாம் அணங்கு புரிந்திடல் கண்டு புலர்த்துநர்போல்-ஆயிரங்கண்களுக்கெல்லாந் துன்பஞ்செய்தலைக்கண்டு புலர்த்துவோரைப்போல, அவிர் சாந்தாற்றி நுடங்கு இடை மங்கையர் ஓவற எங்கணும் நொய்தின் அசைத்து அணுக - விளங்கும் ஆலவட்டத்தைத் துவளு மிடையையுடைய அரம்பையர்கள் ஒழிவற எவ்விடத்தும் நின்று விரைந்து அசைத்து ஒருபால் நெருங்கவும்.

அரம்பையர்கள் ஆலவட்டம் வீசுதலைக் கற்பகமாலை துளிக்குந் தேனை உலர்த்துவாரைப்போல வீசினரென அத்தியவசயித்து உவமையுருபுதந்து கூறினதால் தற்குறிப்பேற்றவுவமையணி. (௧௦)

அரம்பையுருப்பசிமேனகைமுதலியவரிமதர்விழிமடவார்
நிரம்பியகாமநலங்கனியவிநயநெறிமுறைகரமசையப்
பரம்புமிடற்றிசைவிம்மிடவிழியிணைபுடைபெயர்பயில்வினொடும்
வரம்பெறுமற்புதமின்னவிர்கொடியெனமகிழ்நடமெதிர்புரிய.

(இ-ள்.) அரம்பை உருப்பசி மேனகை முதலிய அரிமதர் விழி மடவார் - அரம்பையு முருப்பசியு மேனகையுமுதலிய செவ்வரிபரந்த மதர்த்தகண்களையுடைய தேவகணிகையர்கள், நிரம்பிய காம நலம் கனி அவிநய நெறிமுறை கரம் அசைய - நிறைந்த காமச்சுவைகனிந்த அவிநயவழியின் முறையே கையசைய, பரம்பு மிடறு இசை விம்மிட-பரம்பிய கண்டத்திலிசைவிம்ம, விழி இணை புடை பெயர் பயில்வினொடும்-இரண்டு கண்களும் புடைபெயருங் குறிப்பினோடும், வரம் பெறும் அற்புதம் மின் அவிர் கொடி என மகிழ் நடம் எதிர் புரிய - நன்மைபெற்ற அற்புதமாகிய ஒளிவாய்ந்த மின்னுக்கொடியைப்போல மகிழ்கூரும் நடனத்தை யெதிரே யொருபாற் செய்யவும்.

அவிநயத்தின்வழியே கையும், கையின் வழியே கண்களுஞ்சென்றமையால் பயில்வினொடும் என்றார். (௧௧)

மருத்துவர்வானவர்கின்னரர்சித்தர்வசுக்கண்மருத்துக்க
ளுருத்திரர்சாத்தியர்கந்தருவத்தருடுக்கணவக்கோள்க
ளிருக்கிளர்மெய்த்தவர்யோகிகள்கையிணைசென்னிமிசைக்குவியா
நெருக்கினுளெய்தியிறைஞ்சிமருங்குறநிரல்படநிற்பவரோ.

(இ-ள்.) கை இணை சென்னி மிசை குவியா நெருக்கினுள் எய்தி இறைஞ்சி மருங்கு உற நிரல்பட நிற்பவர் - இரண்டு கைகளையுந் தலைமேற்குவித்து நெருக்கிலடைந்து வணங்கிப் பக்கத்திற்பொருந்த வரிசையாக ஒருபால் நிற்பவர்கள், மருத்துவர் வானவர் கின்னரர் சித்தர் வசுக்கள் மருத்துக்கள் உருத்திரர் சாத்தியர் கந்தருவத்தர் உடுக்கள் நவகோள்கள் இருக்கிளர் மெய்த்தவர் யோகிகள் - அச்சுவினிதேவரும் வானவருங் கின்னரருஞ் சித்தரும் வசுக்களும் சத்தமருத்துக்களும் உருத்திரர்களுஞ் சாத்தியருங் கந்தருவரும் நக்ஷத்திரங்களும் நவக்கிரகங்களும் ஞானச்செல்வத்தால் விளங்கும் உண்மைவாய்ந்த தபோதனர்களுஞ் சிவயோகிகளுமாவார்.

அச்சுவினிதேவர் இருவர். இவர்கள் ஒருருவினராதலால் அச்சுவினிதேவர் எனப் பெயர்வாய்ந்து முப்பத்துமுக்கோடிதேவர்களுளடங்குவர். சத்தமருத்துக்கள் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல், கீழ், பலயோனியுயிர். (௬௨)

கணங்கொடயித்தியர்யாவரும்வந்துகடைத்தலைவாய்தலின்மாட்
டுணங்குபுசெவ்விகிடைத்திலர்நிற்பவொழிந்தவர்தங்குறைதீர்த்
தணங்கருமின்பவெள்ளத்திலழுந்தியளப்பருசெல்வத்தா
னிணங்கலர்கோளரியின்னணமேவுழியெண்ணினனிவையெல்லாம்.

(இ-ள்.) கணங்கொள் தயித்தியர் யாவரும் வந்து கடைதலை வாய்தலின் மாடு உணங்குபு செவ்வி கிடைத்திலர் நிற்ப - கூட்டங்கொண்ட அசுரரும் அவரொழிந்த யாவரும் வந்து கடைவாயிலில் வருந்திச் சமையங்கிடைக்காது ஒருபால் நிற்கவும், ஒழிந்தவர் தம் குறை தீர்த்து அணங்கரும் இன்பவெள்ளத்தில் அழுந்தி - அவரொழிந்த ஏனையோர் தமது குறையையொழித்துத் துன்பமில்லாத இன்பவெள்ளத்தி லொருபாலழுந்தவும், அளப்பரு செல்வத்தால் இணங்கலர் கோளரி இன்னண மேவுழி இவையெல்லாம் எண்ணினன்-அளத்தற்கரிய ஐசுவரியத்தால் பகைவர்க்குச் சிம்மேற்றையொத்த இந்திரன் இவ்வாறாக இருக்குமிடத்து இவையெல்லாம் கருதினன்.

அழுந்தி செயவெனெச்சத்திரிபு. இன்பமுள்ள இடத்துத் துன்பமும் இருத்தலால் அணங்கருமின்பம் என்றார். (௬௩)

இருவினையொப்புவாய்ந்தபருவம்வந்தெய்தலாலே
மருவருந்துறக்கவைப்பினரசியல்வாழ்க்கைதன்னை
யருவருத்துவர்த்துக்காவற்சிறையிடையகப்பட்டோரின்
வெருவரும்பதைக்குமஞ்சும்வேறிவைகருத்துட்கொள்வான்.

(இ-ள்) இருவினை ஒப்பு வாய்ந்த பருவம் வந்து எய்தலாலே - இருவினைச்சமத்துவம்வாய்ந்த பருவம் வந்தடைதலால், மருவரும் துறக்க வைப்பின் அரசு இயல் வாழ்க்கை தன்னை அருவருத்து உவர்த்து - அடைதற்கரிய விண்ணுலகரசியல் வாழ்வை யருவருத்து வெறுத்து, காவல் சிறையிடை அகப்பட்டோரின் வெருவரும் பதைக்கும் அஞ்சும் வேறு இவை கருத்துள் கொள்வான் - காவலாகிய சிறைக்கூடத்தில் அகப்பட்டோரைப்போல வாய்புலர்ந்து பதைத்து அஞ்சி வேறே இவற்றை மனத்திற்கருதுவான்.

இருவினையொப்பு ஆவது புண்ணியபாவங்கள் தம்முள் நேரொத்தல். இருவினையொப்புக்கு மூலமாகிய சிவபுண்ணிய முன்னரே அவனுடைமையால் இருவினையொப்புவாய்ந்த எனவும், அதன்மேல் சிவனுடைய அருட்சத்திபதிவாகிய சத்திநிபாதம் வருமாதலால் பருவம்வந்தெய்தலாலேயெனவும், அச்சத்திநிபாதத்திற்கு மூலமாகிய மலபரிபாகம் வந்தமையால் துறக்கவைப்பின் அரசியல்வாழ்க்கை தன்னை யருவருத்துவர்த்துக் காவற்சிறையிடையகப்பட்டோரின்-வெருவரும் பதைக்குமஞ்சும் என்றார்.

அழியுமிவ்விடயவாழ்விற்களித்திருந்தந்தோகெட்டேன்
பழிபவக்கடலிற்காலப்பாந்தள்வாய்க்கிடந்துநாணேன்
வழிமுறையறியாமாயவல்லிருட்படுகர்ச்சேற்று
ளிழியுமூர்ப்பன்றியேபோலுழந்தவென்னறிவுநன்றால்.

(இ-ள்.) அழியும் இ விடய வாழ்வில் களித்திருந்து அந்தோ கெட்டேன்-நிலையின்றித்தேயு மிந்த விஷயானந்தத்தில் மகிழ்கூர்ந்திருந்து ஐயோ கெட்டனன், பழிபவம் கடலில் காலம் பாந்தள்வாய் கிடந்து நாணேன் - பழிக்கும் பிறப்பாகிய கடலில் காலமாகிய பாம்பின்வாயிலகப்பட்டுச் சிறிதும் நாணமில்லாதிருந்தேன், வழிமுறை அறியாமாய வல் இருள பங்கா சேற்றுள் இழியும் ஊர் பன்றியேபோல் உழந்த என் அறிவு நன்று - (இதனால்) சரியைமுதலிய சோபானங்களை யறியாமல் வஞ்சத்தை விளைக்கும் வலிய ஆணவமாகிய வயலின்கணுள்ள சேற்றிலிறங்கியழுந்திய ஊர்ப்பன்றியைப்போலத் துன்புற்றழிந்த எனதறிவு நல்லது.

காலம் என்றது காலதத்துவத்தை. பவக்கடல், காலப்பாந்தள் என்றது இயைபுருவகவணி. உயிரைப் பந்தித்துநிற்றலால் பங்கர்ச்சேறென்றார். ஆணவமலத்தைச் சேறாகவுருவகஞ்செய்து வயலையுருவகஞ்செய்யாமையால் ஏகதேசவுருவகவணி. (கரு)

அருவினையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குங்காலங்
கருவுறுமெவையுங்காலவயத்தவாங்காலந்தான்மற்
றொருபொருள்வயத்ததன்றாலுந்தியோன்கற்பத்தீரேழ்
பொருவிலிந்திரர்கண்மாய்வர்பொன்றுவர்மனுக்கடாமும்.

(இ-ள்.) காலம் அருவினை உலகம் எல்லாம் படைத்து அளித்து அழிக்கும் - காலமெனனு மொருதத்துவம் அடைதற்கரிய இருவினைகளையும் உலகம் யாவையும் சிருட்டித்து ஓம்பியளிக்காநிற்கும், கருவுறும் எவையும் காலவயத்தவாம் - உலகிலுற்பவிக்கு மெப்பொருளு மக்காலதத்துவத்தின் வசப்பட்டனவாம், காலம் தான் ஒருபொருள் வயத்தது அன்று - அக்காலமானது ஒருபொருளின் வசப்பட்டதல்ல, உந்தியோன் கற்பத்து ஈர் ஏழ் பொருவில் இந்திரர்கள் மாய்வர் மனுக்கள் தாமும் பொன்றுவர் - பிரமனுக்கொருதினமாகிய பிரமகற்பத்தில் ஒப்பில்லாத பதினான்கிந்திரர்களழிவார்கள் மனுக்களும் அவ்வளவே யழிவார்கள்.

காலதத்துவம் உலகினையாக்கலும் காத்தலும் அழித்தலும் காலவரைசெய்தலும் கன்மத்தை வரையறுத்தலுமுடைமையால் அருவினையுலகமெல்லாம் படைத்தளித்தழிக்குங்காலம் - கருவுறுமெவையுங்காலவயத்தவாம் எனக்கூறினார்.

" மாயையிற்காலமோடுநியதிபின்கலாதிதோன்றும்
ஆயவக்காலமூன்றாயாக்கியுமளித்தும்போக்கிக்
காயமோடுலகுக்கெல்லாங்காலசங்கையினைப்பண்ணி
நாயகனாணையாலேநடத்திடுமுலகமெல்லாம்" எனவருஞ் சிவஞானசித்தியாரால் அறிக. (கசா)

ஓதுமிக்கற்பம்வேதற்கொருதினமந்நாண்முப்ப
தாதலோர்மதியாந்திங்களாறிரண்டாயினாண்டா
மேதமில்வருடநூறேலிருவகைப்பரார்த்தமாகப்
போதரும்போதிலன்னான்பொன்றுவன்மன்றமாதோ.

(இ-ள்.) ஓது இ கற்பம் வேதற்கு ஒருதினம் அ நாள் முப்பது ஆதல் ஓர் மதியாம் - சொல்லப்படு மிந்தக் கற்பம் பிரமனுக்கொருதினமாம் அந்நாள் முப்பது கழிந்தால் ஒருமாதமாம், திங்கள் ஆறு இரண்டு ஆயின் ஆண்டாம் - அம்மாதம் பன்னிரண்டானால் அவனுக்கொருவருடமாம், ஏதம் இல் வருடம் நூறேல் இருவகை பரார்த்தம் ஆக போதரும் - குற்றமில்லாத அவ்வருடம் நூறாயின் அவை இரண்டுவகைப்பட்ட

பரார்த்தமாக வாராநிற்கும், போதில் அன்னான் மன்ற பொன்றுவன் - அககாலத்தில் அப்பிரமன் தேற்றமாக அழிவான்.

பரார்த்தம் என்றது ஆயுளளவு. அப்பரார்த்தம் இருவகையென்றது பிரமனுக்கு வகுத்த நூறுவருடத்தின் பகல் இரவினை. (௧௭)

அம்மலர்க்கிழவன்காலமரிக்கொருதினமன்னோனு
மம்முறைதிங்கள்கூடுமாண்டுநூறெய்திற்பொன்று
மம்மவோசீசீயிந்தவநித்தியவாழ்வுவேண்டே
னம்மையில்வீடுபேற்றிற்குபாயமேயறிதல்வேண்டும்.

(இ-ள்.) அ மலர் கிழவன் காலம் அரிக்கு ஒருதினம் - அப்பிரமனழியுங்காலந் திருமாலுக்கொருநாள், அன்னோனும அ முறை திங்கள் கூடும் ஆண்டு நூறு எய்தில பொன்றும் - அப்பிரமனும் முற்கூறிய முறையாக மாதங்கூடிய வருடம் நூறுசென்று ல் அழிவான், அமமவோ சீசீ இந்த அநித்திய வாழ்வு வேண்டேன் - ஐயோ சீசீ இந்த அநித்தியமாகிய வாழ்வினை விரும்பேன், அம்மையில் வீடுபேற்றிற்கு உபாயமே அறிதல் வேண்டும் - மறுமையில் முத்திபெறுகைக்கு உபாயமெதுவோ அதனையே நாமறியவேண்டும்.

அம்ம என்னும் இடைச்சொல் இரக்கப்பொருள்மேலும், சீசீ என்னும் இடைச்சொல் இகழ்ச்சிக்குறிப்பின்மேலும் நின்றன. (௧௮)

எண்ணருந்தவந்தானங்கள்பட்டினியெச்சந்தானோ
புண்ணியநன்னீராடப்போதலோமுத்திக்கேது
நண்ணுமிவ்வனைத்துந்தேறநமக்கெலாங்குருவாம்பொற்பே
ரண்ணலைவினுதுமென்னத்துணிந்தனனமரர்கோமான்.

(இ-ள்.) எண்ணரும் தவம் தானங்கள் பட்டினி எச்சம் தானோ புண்ணிய நல் நீர் ஆட போதலோ முத்திக்கு ஏது - நினைத்தற்கரிய தவமுந் தானங்களும் உபவாசமும் வேள்விசெய்தலுமோ நல்ல புண்ணியநீரில் நீராடச்செல்லுதலோ மோக்ஷத்திற்குக் காரணம், நண்ணும் இ அனைத்தும் தேற நமக்கு எல்லாம் குரு ஆம் பொன்பேர் அண்ணலை வினுதும் என்ன அமரர்கோன் துணிந்தனன் - பொருந்திய இவற்றையெல்லாந் தெளிய நமக்கெல்லா மாசிரியனாகிய பொன்னென்னும் பேர்வாய்ந்த இறைவனாகிய பிரகஸ்பதியை வினவுவோமென்று தேவர்களுக்கு இறைவனாகிய சிவியென்னு மிந்திரன் துணிந்தான்.

ஓகாரம் ஐயப்பொருட்டு. (௧௯)

அவையகத்துள்ளார்க்கெல்லாம்விடையளித்தெழுந்துபோந்து
நவையறவினைவினந்தப்புரத்தினைநணுகியங்கட்
புவிபுகழ்குரவற்கூவிப்போற்றிநின்றிதனைவிள்வான்
சிவியெனந்திசைபோங்கீர்த்தித்தேவர்கட்கிறைவன்மன்னோ.

(இ-ள்.) சிவி என்ன திசை போம் கீர்த்தி தேவர்கட்கு இறைவன் அவையகத்து உள்ளார்க்கு எல்லாம் விடை அளித்து எழுந்து போந்து - சிவியென்னும் பெயர்வாய்ந்து திசைகள்தோறும் பரந்த கீர்த்தியையுடைய தேவர்களுக்கரசனாகிய தேவேந்திரன் சபையினிடத்துள்ளவர்களுக்கெல்லாம் விடைகொடுத்தெழுந்துபோய், நவை அற வினைவின் அந்தப்புரத்தினை நணுகி அங்கண் புவி புகழ் குரவன் கூவி போற்றி நின்று

இதனை வினவுவான் - குற்றமற விரைந்து அந்தப்புரத்தினைச்சேர்ந்து அவ்விடத்து உலகு புகழும் ஆசிரியனை அழைப்பித்துத் துதித்து நின்று இதனை வினவுவான். (உ0)

இவ்வரசியற்கைதன்னிலினியெனக்காசையில்லை
யவ்விதிமுகுந்தனேனோர்வாழ்க்கையுமவாவுகில்லேன்
மெய்வகையுணர்ந்துமுத்திமேவுதற்குபாயமொன்று
செவ்வனோர்ந்துரைத்தியென்னத்தேசிகன்றேர்ந்துசொல்வான்.

(இ-ள்) இ அரசு இயற்கை தன்னில் இனி எனக்கு ஆசை இல்லை - இந்த அரசியலில் இனி யெனக்காசை சிறிதுமில்லை, அ விதி முகுந்தன் ஏனோர் வாழ்க்கையும் அவாவுகில்லேன் - அந்தப்பிரமனும் திருமாலு மற்றையோருமாகிய இவர்களது வாழ்க்கையையும் விரும்பிலேன், மெய்வகை உணர்ந்து முத்தி மேவுதற்கு உபாயம் ஒன்று செவ்வன் ஓர்ந்து உரைத்தி என்ன தேசிகன் தேர்ந்து சொல்வான் - உண்மையின் கூறுபாட்டை யுணர்ந்து மோட்சமடைதற்கு உபாயமொன்றினை யையந்திரிபற ஆராய்ந்து கூறுயென்று வினவ அவ்வாசிரியன் தெளிந்து கூறுவானாயினன்.

செவ்வன் என்றமையால் ஐயந்திரிபற என்றும். செயற்கையை இயற்கையாகக் கூறியது இலக்கணை. (உக)

நன்றுநீவினவுமுத்திநற்றவம்வேள்விதானங்
கன்றுபட்டினிவேறொன்றாற்காண்பரிதாகுமைந்தா
துன்றியமாயவாழ்க்கைத்தொடக்கறுத்துய்யக்கொள்வா
னென்றுமெம்பெருமானுள்ளானவன்றிறமியம்பக்கேட்டி.

(இ-ள்.) மைந்தா நன்று நீ வினவு முத்தி நல் தவம் வேள்வி தானம் கன்றுபட்டினி வேறு ஒன்றால் காண்பரிதாகும் - மைந்தனே மிகவும் நீ வினவிய முத்தியை நல்ல தவமும் யாகமுந் தானமும் வருத்தும் உபவாசமும் இவையொழிந்த மற்றுமாகிய இவைகளால் அடைதற்கரிதாகும், துன்றிய மாயவாழ்க்கை தொடக்கு அறுத்து உய்ய கொள்வான் என்றும் எம்பெருமான் உள்ளான் அவன் திறம் இயம்ப கேட்டி - நெருங்கிய பிரபஞ்சவாழ்வாகிய கட்டினை யறுத்து நாம் பிழைக்க ஆட்கொள்ள எக்காலத்தும் எமது இறைவனிருக்கின்றான் அவனது வரலாற்றைச் சொல்லக்கேளாய்.

தவம், யாகம், தானமென்னு மிம்மூன்றும் அசுத்தமாயையின் காரியப்பாடாகிய பாசஞானங்களாதலின் அவற்றால் அடைதல் அரிது என்பார் நற்றவம்வேள்விதானம்-கன்றுபட்டினிவேறொன்றாற்காண்பரிதாகும் என்றார். (உஉ)

கலிவிருத்தம்.

குறைவிலாமங்கலக்குணத்தனாதலி
னிறைமலமநாதியினீங்கிநிற்றலி
னறைகுவர்சிவனெனவறிவின்மேலவ
ரிறையவன்பெருமையையாவர்கூறுவார்.

(இ-ள்) குறைவு இலாத மங்கலம் குணத்தன் ஆதலின் நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின் சிவன் என்ன அறிவின்மேலவர் அறைகுவர் - நிறைந்த மங்கலகுணத்தையுடையவனாதலாலும் நிறைந்த ஆணவமலத்தினின்று இயல்பாகவே நீங்கி நிற்றலாலும் அறிவின் மேலோர் சிவனென்று அவனைக்கூறுவர், இறையவன் பெருமையை யாவர் கூறுவார் - அவ்விறைவனது பெருமையை யெடுத்துக்கூறுவோர் யார்.

இதனால் இறைவனுக்குச் சிவனெனவந்த பெயர்க்காரணங் கூறப்பட்டது. (உ௩)

மேலெனப்படுவனவெவைக்குமேலவன்
மாலெனப்படுவனவெவையுமாற்றுவா
னூலெனப்படுவனவெலாநுவன்றவன்
வேலெனப்படும்விழிபாகமேயினான்.

(இ-ள்.) வேல் என்ன படும் விழி பாகம் மேயினன் - வேலென்று சொல்லப்படும் திருக்கண்களையுடைய உமாதேவியை யொருபாகத்திலுடைய இறைவன், மேல் என்ன படுவன எவைக்கும் மேலவன் - மேலென்று சொல்லப்படுவன எவற்றிற்கும் அப்பாற்பட்டவன், மால் என்ன படுவன எவையும் மாற்றுவான் - மயக்கமென்று சொல்லப்பட்ட யாவையும் நீக்கத்தக்கவன், நூல் என்ன படுவன எல்லாம் நுவன்றவன் - நூலென்று சொல்லப்படுவன யாவையும் ஆன்மாக்கள்பொருட்டுத் திருவாய்மலர்ந்தரு

எல்லாச்சமயிகளும் எடுத்துப் பரம் எனக்கூறும் பொருள்களெவையோ அவைகளையெல்லாங்கடந்து நிற்பவன ஆதலால் மேலெனப்படுவன வெவைக்குமேலவன் எனவும், அவ்வத்தெய்வங்களால் போக்குதற்கரிய ஆணவமுதலிய மலங்களை ஆன்மாக்களுக்கு ஒழித்து அருள்செய்வோன் ஆதலால் மாலெனப்படுவனவெவையுமாற்றுவான் எனவும், ஓதல், ஓதுவித்தல், கேட்டல, கேட்பித்தல், சிந்தித்தல் என்னும் ஐந்தினால் ஆன்மாக்கள் சிவஞானம் பெறவேண்டுதலால் நூலெனப்படுவனவெலாநுவன்றவன் எனவுங்கூறினார். (உ௪)

பங்கயன்றன்னைமுன்படைத்துமான்முதற்
புங்கவர்தம்மைப்பினுதவும்பொற்பின
னங்கவனிலனெனிலகிலலோகமும்
பொங்கியவல்லிருள்பொதிந்தநீரவே.

(இ-ள்.) பங்கயன் தன்னை முன் படைத்து மால் முதல் புங்கவர் தம்மை பின் உதவும் பொற்பினன் - பிரமனை முன்னாலே படைத்துத் திருமால் முதலாகிய தேவர்களைப் பின்பு தந்த பொலிவினையுடையவன், அவன் இல்லன் எனில் அகிலலோகமும் பொங்கிய வல் இருள் பொதிந்த நீர - அதனாலச்சிவபெருமானிலனானால் எல்லாவுலகங்களு மிக்க வலிய இருளில் மூடப்பட்ட தன்மையையுடையனவாம்.

படைப்புக்குப்பின் காத்தல்முதலிய தொழினிகழ்ச்சியுண்மையால் பங்கயன்றன்னை முன்படைத்து மான்முதல் புங்கவர்தம்மைப் பின்னுதவும் பொற்பினன் எனவும், அப்படைப்புமுதலிய தொழிற்கு நிமித்தகாரணனாகிய இறைவனிலனானால் பிரபஞ்சத்தோற்றமின்மையால் அவனிலனெனிலகிலலோகமும் - பொங்கியவல்லிருள்பொதிந்தநீரவே எனவுங்கூறினார். அங்கு அசைநிலையிடைச்சொல். (உ௫)

பகலிரவிலதுளதெனும்பகுப்பிலா
வகலருமிருள்பொதியநாதிகாலையி
னுகலரும்பரசிவனொருவனேயுளன்
மிகுமுணர்வவனிடைவெளிப்பட்டோங்குமால்.

(இ-ள்.) பகல் இரவு இல்லது உள்ளது என்னும் பகுப்பு இல்லாத அகலரும் இருள்பொதி அநாதிகாலையில் - பகலும் இரவும் உண்டு இல்லையென்றுணரும் பாகுபாடில்லாத நீங்குதற்கரிய இருள்பொதிந்த சம்மாரகாலத்தில், உகலரும் பரசிவன் ஒருவனே உளன் - தனக்கோரழிவில்லாத அவ்விறைவனொருவனே நிலைபெற்றுள்ளான், அ

வன் இடைவெளிப்பட்டு மிரும் உணர்வு ஓங்கும் - அவவிறைவனிடத்து வெளிப்பட்டு ஞானசத்திதோன்றும்.

பகலும் இருளும் சிருட்டிகாலத்துண்டு என்றும், சங்காரகாலத்தில்லையென்றுங் கூறும் பகுப்புண்மையால் பகலிரவுளதிலதெனும்பகுப்பு எனவும, சங்காரகேவலததில் ஆன்மாக்கள் காரணமாயையிலொடுங்குங்காலம் பேரிருளாதலால் இலா அகலருமிருள் பொதியநாதிகாலையில் எனவும், அயன்முதலிய பல்லுயிர்களும் அக்காரணமாயையிலொடுங்க அது தன்னிடத்திலொடுங்கநிற்பவன் இறைவனொருவனேயாதலால் உகலரும் பாசிவனொருவனேயுளன் எனவும், ஒடுங்கிய அவ்வான்மாக்களுக்குப் பாகம் வருவித்தற்பொருட்டுக் காரணமாயையினின்றுங் கலையாதியாகிய காரியமாயையைத் தோற்றுவித்தற்கு இறைவ னிச்சாஞானகிரியாசத்திகளை மேவுதலால் மிருமுணர்வு அவனிடைவெளிப்பட்டோங்குமெனவுங்கூறினர். கேவலம் என்றது மாயைதாரகமாக ஆணவமலத்தால் ஆன்மாக்கள் மறைப்புண்டு கிடத்தலை.

கேவலத்தைப் பேரிருள் என்றதை—

"ஒருபொருளுங்காட்டாதிருளுருவங்காட்டும் - இருபொருளுங்காட்டாதிது" எனவருந் திருவருட்பயனிலும்,

அயன்முதலிய பல்லுயிர்களுங் காரணமாயையிலொடுங்க அது தன்னிடத்திலொடுங்கநிறபவன் இறைவனொருவனேயென்றதை—

"சொற்றவிவ்விருவர்மூர்த்தபேதங்கடோன்றியகாரணத்தொடுங்கும்
உற்றிம்சகமுமொடுங்குமாலனைத்துமொடுங்கிடங்கொடுப்பதுமாயை
மற்றவம்மாயையபேதமாய்ப்பரமன்மாமலரடித்தலத்தொடுங்கும்" எனவருஞ் சூ

ஒடுங்கிய அவ்வான்மாக்களுக்குப் பாகம் வருவித்தற்பொருட்டுக் காரணமாயையினின்றுங் கலையாதியாகிய காரியமாயையைத் தோற்றுவித்தற்கு இறைவன் இச்சாஞானகிரியைகளை மேவுதலை—

"உயிரவையொடுங்கிப்பின்னுமுதிப்பதெனரன்பாலென்னிற்
செயிருறுமலத்தினுகுஞ்சிதைந்ததேதென்னிற்சித்தத்
தயர்வொழிகாரியங்களழியுங்காரணங்கிடக்கும்
பயிறருகாரியம்பின்பண்டுபோற்பண்ணுமீசன்" எனவும்,

"ஒன்றதாயிச்சாஞானகிரியையென்றொருமூன்றாகி
நின்றிடுஞ்சத்தியிச்சையுயிர்க்கருணைசமாகும்
நன்றெலாஞானசத்தியானயந்தறிவனுதன்
அன்றருட்கிரியைதன்னாலாக்குவனகிலமெல்லாம்" எனவும் சிவஞானசித்தியாரிலும் வருதல் காண்க. (உசு)

எங்குளயாவையுமிவன்வயத்தவா
மெங்கணுமிவனொருவயத்தினெய்திடா
னெங்கணும்விழிமுகமெங்குங்கால்கர
மெங்கணுந்திருவுருவிவனுக்கென்பவே.

(இ-ள்.) எங்குள்ள யாவையும் இவன் வயத்த ஆம்-சுதந்திரனாதலால் எவ்விடத்துள்ள பொருள்களு மிவன் வசப்பட்டனவாம், எங்கணும் இவன் ஒருவயத்தின் எய்திடான் - எவ்விடத்தும் இவன் ஒருவசப்பட்டவனல்லன், எங்கணும் விழிமுகம்-எவவிடத்துந் திருக்கண்களுந் திருமுகமும், எங்கும் கால் கரம் - எவவிடத்துந் திருக்கால்க

ளூந் திருக்கரமுமுடையவனாதலால், இவனுக்கு எங்கணும் திரு உரு என்ப - இவ்வி றைவனுக்கு எங்குந் திருவுருவென்று சொல்லுவார்கள்.

எங்குளபொருள்களுமிவன் வயத்தவாம் என்பதனால் சுதந்தரன் எனப்படுந் தன் வயத்தனாதலும், எங்கணுமிவனொருவயத்தினெய்திடான் என்பதனால் அநந்த சத்தியு டைமையெனப்படும் முடிவிலாற்றலுடைமையும், எங்கணும்விழிமுகமெங்குங்கால்கரம்- எங்கணுந்திருவுரு என்பதனால் விசுத்ததேகமுடையவனாதலெனப்படும் தூயவுடம்பின னாதலுங் கூறப்பட்டன.

இதனால் வேதத்தினடுப்பாகத்திலுள்ள ஸ்ரீருத்திரங் கூறப்பட்டது. (உஎ)

அரியயனமரர்களசுரர்யோகிக
ளிருளறுவேதவேதாந்தம்யாருமிப்
பெரியவனடியிணைகாணும்பெட்பினாற்
றெரிகிலர்மாறுகொண்டின்னுந்தேடுவார்.

(இ-ள்.) அரி அயன் அமரர்கள் அசுரர் யோகிகள் இருள் அறு வேதவேதாந்தம் யாரும் - திருமாலும் பிரமனுந் தேவர்களு மசுரர்களும் யோகிகளு மயக்கத்தினின்றும் நீங்கிய வேதங்களும் வேதசிரசுகளும் இவையொழிந்த எவரும், இ பெரியவன் அடி இணைகாணும் பெட்பினால் மாறுகொண்டு தெரிகிலர் இன்னும் தேடுவார் - இப்பெரி யோனது இரண்டு திருவடியைக்காணும் ஆசையால் தம்முள் மாறுபட்டுத் தெரியாது இன்னுந் தேடாநின்றார்.

அரிமுதல் யோகிகள்காறும் பரதந்திரராதலாலும், வேதம், வேதாந்தங்கள் விந்துதத்துவத்தின் காரியப்பாடாகிய பாசஞானங்களாதலாலும் தெரிகிலர்மாறுகொண் டின்னுந்தேடுவார் எனவுங்கூறினார். அரியயன் அமரர்களசுரர் யோகியர் இருளறுவேத வேதாந்தம்யாரும் என்பன திணைவிரவி மிகுதியினாலுயர்திணைமுடிபேற்றன. (உஅ)

அவனவளதுவெனுமவைதொறுமொன்றுமிச்
சிவனலான்முத்தியிற்சேர்த்துவாரிலை
துவளருமிம்முறைசுருதிகூறுமா
லிவனடிவழிபடின்முத்தியெய்துவாய்.

(இ-ள்.) அவன் அவள் அது என்னும் அவைதொறு ஒன்றும் இ சிவன் அல்லா ல் முத்தியில் சேர்த்து வார் இல்லை - அவன் அவள் அதுவென்னு மச்சுட்டுப்பொருள்க ள்தோறும் விரவிநிற்கு மிச்சிவனையன்றி முத்தியிற்கூட்டுவோ ரொருவருமில்லை, துவ ளரும் சுருதி இ முறைகூறும் - கெடுதலில்லாத வேதமிம்முறையாற் கூறாநிற்கும், இவ ன் அடி வழிபடின் முத்தி எய்துவாய் - இவன் திருவடிக்கீழ் வழிபட்டொழுகின் முத் தியையடைவாய்.

பிரபஞ்சம் அவன், அவள், அது என முத்திறப்படுதலால் அவனவளதுவெனு மவைதொறும் எனவும், எங்கணும் விழிமுகமெங்குங்கால்கரம் - எங்கணுந்திருமுகம் என முன்னர்க்கூறப்படுதலில் ஒன்றுமிச்சிவன் எனவும், பேரருளுடையனாதலால் சிவ னலான் முத்தியிற்சேர்த்து வாரிலையெனவும், இவ்வாறு ஸ்ரீருத்திரத்தில் கூறப்படுத லில் துவளருமிம்முறை சுருதிகூறும் எனவுங்கூறினார். (உக)

பன்னுவடுதவன்பலபரித்துநெஞ்சினு
மங்கியர்தமையொழித்தானையேத்துதி
யின்னதேவீட்டினுக்கேதுவாமெனும்
பொன்னுரைமனக்கொடுபுகலுவான்சிவி.

(இ-ள்) பல பரிந்து பன்னுவது எவன் - பலவாகவருந்தி யான் எடுத்துக்கூறுவது என்னபயன், நெஞ்சினும் அந்நியர் தமையொழித்து அரனை ஏத்துதி - வாக்காலுமன்றி மனத்திறாலும் அந்நியனையொழித்து அவ்விறைவனையே வாழ்த்தாய், இன்னதே வீட்டினுக்கு ஏதுவாம என்னும் பொன் உரை மனக்கொடு சிவி புகலுவான் - (யான் கூறிய) இதுவே முத்திக்குக் காரணமாமென்னும் பிரகற்பதியின் வார்த்தையை மனத்திற்கொண்டு சிவியென்னு மிந்திரன் வினவுவான்.

உம்மை இறந்ததுதழீஇய உயர்வு சிறப்புப்பொருட்டு. (௬0)

குரவனேயயனரிகுரவனேசிவன்
குரவனேதந்தைதாய்குரவனேயெலாங்
குரவனேயென்றுநூல்கூறுமுண்மையைக்
குரவனேயென்னிடையின்றுகாட்டினாய்.

(இ-ள்.) அயன் ஏ குரவன் அரி ஏ குரவன் சிவன் ஏ குரவன் தாய் தந்தை ஏ குரவன் எல்லாம் ஏ குரவன் என்று நூல் கூறும் உண்மையை-பிரமனே ஆசாரியன் திருமாலே ஆசாரியன் சிவபெருமானே ஆசாரியன் தாயொடு தந்தையுமே ஆசாரியன் பெறுதற்கரிய எல்லாப்பொருளுமே ஆசாரியனென்று நூல்தெளிக்குமுண்மையை, குரவனே என் இடை இன்று காட்டினாய் - ஆசிரியனே நீ என்னிடத்தில் இன்று தெரிவித்தாய்.

அயன்முதலியோர் தனித்தனி யொவ்வொருவர்க்கும் ஆசாரியர், நீயே அவர்கள் எல்லாம் என்பான் நூல்கூறு முண்மையை - குரவனேயென்னிடையின்றுகாட்டினாய் என்றான். (௬௧)

உன்பெருங்கருணையாலுறுதிபெற்றுளே
னின்பொடுமெவ்விடத்தெவ்விதிப்படி
பொன்பொதிசடையனைப்போற்றுமாறிது
வன்பொடுமடியனேற்கருளுகென்றலும்.

(இ-ள்.) உன்பெரும் கருணையால் உறுதிபெற்று உள்ளேன் - உனது பெரிய திருவருளால் உறுதியை இன்றடைந்தேன், இன்பொடும் எ இடத்து எ விதிப்படி பொன்பொதி சடையனை போற்றும் ஆறு - மகிழ்ச்சியோடும் எந்தத்தலத்தில் எந்த விதிப்படி பொன்போலும் நிறம்பொதிந்த சடையையுடைய சிவபெருமானைத்துதிக்கும் வழி, இது அன்பொடும் அடியனேற்கு அருளுக என்றலும் - இதனை யன்போடு அடியேனுக்கருளக்கடவாயென்று சிவி வினவ. (௬௨)

கடலுடைவளைப்பினிற்காஞ்சிமாநக
ரிடனுடைக்குணக்கினிலெய்தினோலாம்

முடிவில்சத்தியவிரதீசன்முன்பரோ.

(இ-ள்.) கடல் உடை வளைப்பினில் காஞ்சிமாநகர் இடன் உடை குணக்கினில் - கடலை யாடையாகவுடைய காஞ்சியென்னும் திருப்பதியின் பரந்த கீழ்த்திசையில், எய்தினோர் எல்லாம் விடலரும் சத்தியவிரததானத்தின் முடிவு இல் சத்தியவிரதீசன் முன்பு - அடைந்தோரெல்லாம் நீங்குதற்கரிய சத்தியவிரதமென்னும் திருப்பதியில் எழுந்தருளிய முடிவில்லாத சத்தியவிரதீசர் திருமுன். (௬௩)

மேற்றிசைச்சத்தியவிரததீர்த்தமொன்
றூற்றவுமேன்மைபெற்றுடையதாயிடைப்

போற்றுறும்பசுபதிவிரதம்பூண்டுசென்
றூற்றெழுந்துறுதடத்துதகமாடியே.

(இ-ள்.) மேல் திசை சத்தியவிரத தீர்த்தம ஒன்று ஆற்றவும் மேன்மை பெற்று உடையது - மேற்றிசையில் சத்தியவிரதமென்னுந் தீர்த்தமொன்று மிகவு மேன்மைபெற்றுள்ளது, ஆயிடை போற்றுறும் பசுபதிவிரதம் பூண்டு சென்று - அவ்விடத்து யாவருந்துதிக்கும் சைவவிரதம் மேற்கொண்டு சென்று, ஊற்று எழுந்து உறு தடந்து உதகம் ஆடி - சிறப்பமைந்த அத்தீர்த்தத்தில் நீராடி.

சிவபெருமான் சந்நிதிக்கு மேல்பாலுள்ளது என்பார் மேற்றிசைச் சத்தியவிரத தீர்த்தம் என்றார். (ருச)

விதியுளிமுடித்துநித்தியநைமித்திகம்
புதியநீறுடலெலாம்பொதிந்துபுண்டர
மதிநுதல்விளங்கிடவக்கமாமணி
நிதியெனப்பூண்டுநல்லொழுக்கநீடியே.

(இ-ள்.) விதியுளி நித்திய நைமித்திகம் முடித்து - ஆகமமுறையால் நாள்தோறுஞ்செய்யும் நீர்க்கடன் முதலிய கடன்களை முடித்து, புதிய நீறு உடல் எல்லாம் பொதிந்து புண்டரம் மதிநுதல் விளங்கிட அக்கமாமணி நிதியென்ன பூண்டு நல் ஒழுக்கம் நீடி - புதிய திருநீற்றை யுடம்பெல்லாம்பூசித் திரிபுண்டாத்தை யிளஞ்சந்திரனையொத்த நெற்றியிலணிந்து உருத்திராக்ஷகண்டிகையைப் பொன்போலப்பூண்டு நல்லொழுக்கத்தால் மேம்பட்டு.

நித்தியம் நாள்தோறுஞ் செய்யுங்கடன்கள். நைமித்திகம் விசேடமாகச்செய்யுங் கடன்கள். (ருரு)

தெள்ளொளிப்பளிங்கெனச்சிறந்தசெவ்விசால்
வெள்ளொளிச்சத்தியவிரதநாதனை
யுள்ளகக்கமலத்தின்வழிபட்டுண்மையா
னள்ளலர்க்கடந்தவமுத்திநண்ணுவாய்.

(இ-ள்.) நள்ளலர் கடந்தவ - பகைவரைக்கடந்த இந்திரனே, தெள் ஒளி பளிங்கு என்ன சிறந்த செவவி சால் வெள் ஒளி சத்திய விரத நாதனை - தெளிந்த ஒளியையுடைய பளிங்குபோலச் சிறந்த பொலிவுமிக்க வெள்ளிய ஒளிவாய்ந்த சத்தியவிரதேசனை, உள் அகம் கமலத்தின் உண்மையால் வழிபட்டு முத்தி நண்ணுவாய் - இதயதாமரையில் உண்மையோடு வழிபட்டு முத்தியுலகை யடைவாய். (ருசு)

என்றலுமிந்திரனிறைஞ்சியென்கொலோ
வென்றிகொள்சத்தியவிரதங்கேள்வியாற்
றொன்றுளதொடர்புபோற்சுழலுமென்மனஞ்
சென்றுபற்றியதெனக்குரவன்செப்புவான்.

(இ-ள்.) என்றலும் - என்று கூற, இந்திரன் இறைஞ்சி என்கொலோ வென்றி கொள் சத்திய விரதம் கேள்வியால் தொன்று தொடர்பு உள்ளபோல் சுழலும் என்மனம் சென்று பற்றியது என்ன - தேவேந்திரன் வணங்கி யாதுகாரணமோ வெற்றியமைந்த சத்தியவிரதமென்னுந் தீர்த்தத்தைத் தேவரீர் சொல்லக்கேட்டலோடு முன் சம்பந்த முள்ளதுபோல இந்திரியத்தின் வயத்ததாய்ச்செல்லு மென்மனமானது சென்று கைக்கொண்டதென்று சிவிகூற, குரவன் செப்புவான் - ஆசிரியன் கூறுவான்.

விரதம் கேள்வியால் இரண்டாம்வேற்றுமைத்தொகையில் திரியாதியல்பாதல் "மெல்லெழுத்துமிகுவழி" என்ற சூத்திரத்தில் "வல்லெழுத்துமிகுவழிமெலிப்பொடு தோன்றலும்" என்ற விதியால். உளது என்னும் ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்பு வினை முற்றினீறுதொகுத்தல். தொடர்பின் இறுதியில் வரும் உளது என்பது செய்யுளாதலால் மாறிநின்றது. (௩௭)

உள்ளது கூறினையும்மையாயிடை
யள்ளிலைக்குலிசிநீயணைந்துபுந்திநாள்
வெள்ளநீர்சசத்தியவிரதமூழ்கிமீண்
டெள்ளரும்விண்ணகர்க்கிறைமையெய்தினாய்.

(இ-ள்.) அள் இலை குலிசி உள்ளது கூறினை - கூரிய தகட்டுவடிவுவாய்ந்த வச்சிராயுதத்தையுடைய இந்திரனே உள்ளதை யெடுத்துச்சொன்னாய், நீ உம்மை ஆயிடை அணைந்து புந்தி நாள் வெள்ளம் நீர் சத்தியவிரதம் மூழ்கி - நீ முற்பிறப்பி லத்திருப்பதியையடைந்து புதவாரத்தில் நீர்மயமாகிய சத்தியவிரததீர்த்தத்தில் மூழ்குதலால், ஈண்டு எள்ளரும் விண் நகர்க்கு இறைமை எய்தினாய் - இப்பொழுது இகழ்ச்சியில்லாத விண்ணுலகிற்குத் தலைமைபெற்றாய்.

மூழ்கியென்னும் வினையெச்சம் காரணகாரியப்பொருளில் வந்தது. (௩௮)

ஒருபொழுதாடினரும்பர்கோனிட
மிருபொழுதயனிடமெண்ணுமுப்பொழு
தரியிடநாற்பொழுதாயின்முத்தியே
மருவுவர்யாரதன்வண்மைகூறுவார்.

(இ-ள்.) ஒருபொழுது ஆடினர் உம்பர்கோன் இடம் - ஒருநாளில் ஒருபோழ்து நீர் ஆடினவா இந்திரன் பதத்தையும், இருபொழுது அயன் இடம் - இரண்டுபொழுது நீராடினவர் பிரமபதத்தையும், எண்ணும் முப்பொழுது அரி இடம் - வரையறுக்கு மூன்றுபொழுது நீராடினவர் விஷ்ணுபதத்தையும், நால்பொழுதாயின் முத்தியே மருவுவர் - வரையறுத்து நான்குபொழுது நீராடில் முத்தியையடைவாகள், யார் அதன் வண்மை கூறுவார் - (ஆதலால்) யார் அத்தீர்த்தத்தின் பெருமையை யெடுத்துச்சொல்லுவோர். (௩௯)

புந்திநாண்முழுகுநர்புகுவர்முத்தியி
னந்தநாண்மூழ்கலினரசநீயுமிப்
பந்தமில்வீடுறற்பாலையாயினை
மந்தணமிதுவெனக்கேட்டவாசவன்.

(இ-ள்.) புந்தி நாள் முழுகுநர் முத்தியில் புகுவர் - புதவாரத்தில் மூழ்குவோர் முத்தியுலகிற்புகுவார், அரசநீயும் அந்தநாள் மூழ்கலின் - அரசனே நீயும் அந்தநாளில் மூழ்கலால், இ பந்தம் இல் வீடு உறற்பாலை ஆயினை - இந்தப் பந்தமில்லாத மோக்ஷநெறியையடையுந் தன்மையையுடையையானாய், இது மந்தணம் என்ன கேட்ட வாசவன் - இது இரகசியமென்று பிரகற்பதி சொல்லக்கேட்ட சிவியென்னு மிந்திரன்.

பந்தம் என்றது உயிரைப் பந்தித்துநின்ற ஆணவமுதலிய மலங்களை. (௪0)

இப்பெருந்தீர்த்தநீரொற்றைஞான்றினு
மப்புதவாரநாளதிகமாயதென்
செப்புதியென்றலுநதேசிகப்பிரா
னெப்புறுகருணையினுரைத்தன்மேயினான்.



LITHO. MEENAKSHIAMMAH. PRESS. MYLAPORE 1899

(௭) திருநெறிக்காரைக் காட்டுப் படலம்.

(இ-ள்.) இ பெரும் தீர்த்தநீர் - இந்தப் பெரிய தீர்த்தநீரானது, எற்றை ஞான்றினும் அ புதவாரநாள் அதிகம் ஆயது என் செப்புதி என்றலும்-எந்தநாளிலும் அந்தப் புதவாரநாள் அதிகமானது யாது அதைக் கூறுயென்று வினவவும், தேசிகப்பிரான் ஒப்பு அறு கருணையின் உரைத்தல் மேயினான் - ஆசிரியனாகிய பிரகற்பதி ஒப்பிகந்த கிருபையோடு சொல்லத்தொடங்கினான். (௬௪)

மதிக்கடவுடாரைதனைமணந்தீன்றமகவான
புதக்கடவுள்கிரகநிலைபெறுவதற்குப்புரிதாதை
கதித்துரைத்தமொழியாறேகருதருஞ்சத்தியவிரதப்
பதிக்கணணைந்துயர்தீர்த்தம்படிந்தாடித்தவஞ்செய்தான்.

(இ-ள்.) மதி கடவுள் தாரைதனை மணந்து ஈன்ற மகவான புதன் கடவுள் கிரக நிலை பெறுவதற்கு - சந்திரன் தாரையொடு கலந்துபெற்ற புத்திரனாகிய புதன் கிரகங்களோடு தான் ஒருவனாக நிற்கும் நிலைபெறுதற்பொருட்டு, புரிதாதை கதித்து உரைத்த மொழி ஆறே - விரும்பிய தனது பிதாவாகிய சந்திரன் மகிழ்கூர்ந்து கூறிய மொழிப்படியே, கருதரும் சத்திய விரதம் பதிகண் அணைந்து உயர்தீர்த்தம் படிந்து ஆடி தவம் செய்தான் - நினைத்தற்கரிய சத்தியவிரதமென்னும் பதியிற்சேர்ந்து உயர்ந்த தீர்த்தத்தில் மூழ்கி நீராடித் தவஞ்செய்தான்.

புதக்கடவுள் உயர்திணைப்பெயனீறுகெட்டு வருமொழிமுதல் வல்லெழுத்து மிக்கது. சந்திரன் தாரையைப்புணர்ந்து புதனைப்பெற்ற சரிதத்தை முன்னர்க்காண்க.()

மேதகுசத்தியவிரதப்பெருமானும்வெள்விடைமேன்
மாதுமையாளுடனேறிவயக்கரிமாமுகனிளையோன்
காதல்புரியருணந்திகணநாதர்புடைசூழ
வாதரமோடெழுந்தருளித்திருக்காட்சியளித்தருள.

(இ-ள்.) மேதகு சத்தியவிரதப் பெருமானும் வெள் விடை மேல் மாது உமையாள் உடன் ஏறி - மேன்மைவாய்ந்த சத்தியவிரதேசரும் வெள்ளிய இடபத்தின்மேல் உமையவளுடனே யாரோகணித்தருளி, வயம் கரி மாமுகன் இளையோன் காதல் புரியருள் நந்தி கணநாதர் புடைசூழ - வெற்றியமைந்த ஆனைமுகத்தையுடைய மூத்தபிள்ளையாரும் இளையபிள்ளையாரும் ஆன்மாக்களிடத்து விருப்பஞ்செய்யும் நந்திதேவரும் கணநாதரும் பக்கத்திற் சூழ்ந்துவர, ஆதரமோடு எழுந்தருளி திருக்காட்சி அளித்தருள-விருப்பத்தோடெழுந்தருளித் திருக்காட்சி கொடுத்தருள.

சத்தியவிரதேசர்முதலிய ஐவரும்வர தராகையால் மேதகுசத்தியவிரதப்பெருமானும்வெள்விடைமேல் - மாதுமையாளுடனேறிவயக்கரிமாமுகனிளையோன் எனக் கூறினார். (௬௫)

க்கைதொழுதுபெருங்காதன
மண்டியெழுமயிர்சிலிப்பமனத்தடங்காப்பேருவகை
கொண்டுநிலமுறவீழ்ந்துகுழைந்துருகிவிழிதுளிப்பத்
தொண்டனேனுய்ந்தேனென்றெழுந்தாடித்துதிசெய்வான்.

(இ-ள்.) கண்டு பரவசன் ஆகி கைதொழுது பெரும் காதல் மண்டி எழ மயிர் சிலிர்ப்ப - தரிசித்துப் பரவசனாய்க் கைகூப்பி மிக்க ஆசை மீதூர்ந்தெழவும் புளகிக்கவும், மனத்து அடங்காதபேர் உவகைகொண்டு நிலத்து உற வீழ்ந்து குழைந்து உருகி

விழி துளிப்ப - மனத்திலடங்காத பெருமகிழ்ச்சி கூர்ந்து பூமியின்மேற் பொருந்த விழுந்து மனங்குழைந்துருகிக் கண்கள் நீர்சிந்த, தொண்டனேன் உய்ந்தேன் என்று எழுந்து ஆடி துதிசெய்வான் - அடியேனுகிய யான் பிழைத்தேனென்று எழுந்து ஆடித்துதிசெய்யாநின்முன்.

உருகியென்னும் வினையெச்சம் எழுந்து என்னும் எச்சத்தின் முதனிலைகொண்டது. (சச)

நெடியோனுமலரவனுநேடரியதிருவடிக
ளடியேனுக்கெளிவந்தவருட்கருணைத்திறம்போற்றி
யொடியாதவெண்குணங்களுடையானேயெனையுடையாய்
கடியார்சத்தியவிரதநாயகநின்கழல்போற்றி.

(இ-ள்.) நெடியோனும் மலரவனும் நேடரிய திருவடிகள் அடியேனுக்கு எளிவந்த அருள் கருணை திறம் போற்றி - திருமாலும் பிரமனும் பன்றியும் அன்னமுமாகித் தேடுதற்கரிய அழகிய வடிகளே அடியேன்பொருட்டு எளிதாகவந்தருளிய திருவருளின்பகுதிக்கு வந்தனம், ஒடியாத எண்குணங்கள் உடையானே என்னை உடையாய் கடி ஆர் சத்திய விரத நாயக நின் கழல் போற்றி - அழியாத எட்டுக்குணங்களையுடையவனே என்னை யாளாகவுடையவனே காத்தலமைந்த சத்தியவிரதமென்னுந் திருப்பதியிலெழுந்தருளிய இறையவனே யுனது திருவடிக்கு வந்தனம்

திருமாலும் பிரமனும் தேடுதற்கு அரியனுய் நின்றதனை முன்னர்க்காண்க. அவர்கள் நாம் பிரமம் நாம் பிரமம் என்று செருக்கினமையால் நேடரிய எனவும், "பத்திவலையிற்படுவோன்" ஆதலால் அடியேனுக்கெளிவந்த அருட்கருணைத்திறம்போற்றியெனவும், சுதந்திரனுதலால் தன்வயத்தனுதலும், விசுத்ததேகமுடையவனுதலால் தூயவுடம்பினனுதலும், நிராமயான்மாவாதலால் இயற்கையுணர்வினனுதலும், சர்வஞ்ஞத்துவனுதலால் முற்றுமுணர்தலும், அநாதிபோதமுடைமையால் இயல்பாகவே பாசங்களினீங்குதலும், அலுப்தசத்தியுடைமையால் பேரருளுடைமையும், அநந்த சத்தியுடைமையால் முடிவிலாற்றலுடைமையும், திருப்தியுடைமையால் வரம்பிலின்பமுடைமையும் என்னும் எண்குணங்களையும் ஆன்மாக்களின்பொருட்டுக்கொண்டருளிய இச்சாஞானசத்திகளாலுடைமையால் ஒடியாதவெண்குணங்களுடையானே யெனவுங் கூறினுனென்முர். எண்குணங்களுடைமையை—

" எட்டுமூர்த்தியாய்நின்றியலுந்தொழில் - எட்டுவான்குணத்தீசனெம்மான்றனை
எட்டுமூர்த்தியுமெம்மிறையெம்முளே - எட்டுமூர்த்தியுமெம்முளொடுங்குமே" என வருந் திருநாவுக்கரசுநாயனுர் தேவாரத்தால் உணர்க. (சரு)

என்றேத்தியெந்தையெனயான்கிரகநிலைபெறவுங்
குன்றாதுன்றிருவடிக்கீழ்மெய்யன்புகூர்ந்திடவு
மின்றாதியென்வாரத்திதீர்த்தம்படிந்துபொறி
வென்ருேர்முன்னையினிரட்டிப்பயனெய்திவீடுறவும்.

(இ-ள்.) என்று ஏத்தி எந்தையென யான் கிரக நிலை பெறவும் - என்று துதித்து என்றந்தையாகிய சந்திரனைப்போல யானுங் கிரகநிலை பெற்றிருக்கவும், உன் திருவடி கீழ் குன்றாது மெய் அன்புகூர்ந்திடவும் - உனது திருவடியின்கீழ்க் குறைவுபடாது மெய்யன்பு கூரவும், இன்று ஆதி என் வாரத்து இ தீர்த்தம் பொறி வென்ருேர் படிந்து முன்னையின் இரட்டி பயன் எய்தி வீடு உறவும் - இன்றுமுதல் என்வாரத்தில் இத்தீர்த்தத்தில் இந்திரியங்களைவென்ற பெரியோர் நீராடி முன்னிலு மிரண்டேங்கு பயனடைந்து முத்தியையடையவும்.

முன்னையினிரட்டிப் பயன் என்றது முன்பு சத்தியவிரததீர்த்தத்தில் நீராடினோரடைந்த பயனை. (சுசு)

வேண்டுமெனவிரந்தேற்பவளித்தருளிவெள்விடைமே
லாண்டகையங்ககன்றனனன்றுமுதலத்தீர்த்தம்
பூண்டபுதவாரத்துச்சிறப்பெய்தும்புந்தியுறக்
காண்டியெனுங்குரவனுரைகாரூர்திசெவிமடுத்தான்.

(இ-ள்.) வேண்டும் என்ன இரந்து ஏற்ப - வேண்டுமெனக் குறையிரந்து யாசிக்க, வெள்விடைமேல் ஆண்டகை அளித்தருளி அங்கு அகன்றனன் - வெள்ளிய இடபவூர்தியின்மேலெழுந்தருளிய இறைவர் தந்தருளி யங்குநின்றும் நீங்கினர், அன்றுமுதல் அ தீர்த்தம் பூண்ட புதவாரத்து சிறப்பு எய்தும் - அக்காலமுதல் அந்தத்தீர்த்தமானது நீங்காத புதவாரத்திற் சிறப்பையடைந்து விளங்கும், புந்தி உற காண்டி என்னும் குரவன் உரை கார் ஊர்தி செவிமடுத்தான் - மனத்திற்பொருந்தக் காணாயென்றருளிய ஆசிரியன்மொழியைச் சிவியென்னு மிந்திரன் காதிற்கேட்டு.

மடுத்தான் முற்றெச்சம். (சுஎ)

அப்பொழுதேயரசுரிமையம்மறையோன்புடைவைத்துச்
செப்பருஞ்சத்தியவிரதத்திருநகரின்விரைந்தெய்தி
முப்பொழுதுநீராடிமுழுநீறுமெய்பூசி
மெய்ப்படுகண்டிகைபூண்டுபுண்டரமுநுதல்விளங்க.

(இ-ள்.) அ பொழுதே அரசு உரிமை அ மறையோன் புடைவைத்து - அக்காலத்தே யரசுரிமையை அப்பிரகற்பதியினிடத்து வைத்து, செப்பரும் சத்தியவிரதம் திருநகரின் விரைந்து எய்தி - சொல்லுதற்கரிய சத்தியவிரதமென்னுந் திருநகரை விரைந்தடைந்து, முப்பொழுதும் நீர் ஆடி முழு நீறு மெய் பூசி மெய் படு கண்டிகை பூண்டு புண்டரமும் நுதல் விளங்க - திரிகாலத்திலும் நீராடித் தேகமுழுதிலுந் திருநீறுபூசித் தனது மேனியிலமைந்த உருத்திராக்கக்கண்டிகை பூண்டு திரிபுண்டரங்களும் நெற்றியில் விளங்க

முதல்மந்திரியாதலால் அம்மறையோன்பால் வைத்து என்றார். (சுஅ)

உருத்திரமுங்கணித்துள்ளப்புண்டரிகத்துமைபாகன்
றிருப்பதங்கள்சிந்தித்துக்கோயிலினுட்சென்றெய்தி
யருத்தியொடும்பூசனைசெய்தாராமைமீக்கொள்ளப்
பெருத்தெழுந்தபேரன்பிற்பெருமானைத்துதிக்கின்றான்.

(இ-ள்.) உருத்திரமும் கணித்து - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையுஞ் செபித்து, உள்ளம் புண்டரிகத்து உமைபாகன் திருபதங்கள் சிந்தித்து கோயிலினுள் சென்று எய்தி - தனது இதயமாகிய தாமரையில் உமையை யோர்பாகத்திலுடைய இறைவரது திருவடிகளைச் சிந்தித்துத் திருக்கோயிலுட்சென்றடைந்து, அருத்தி ஓடும் பூசனை செய்து ஆராமை மீகொள்ள - விருப்பத்தோடும் பூசைசெய்து தெவிட்டாத அன்புமீக்கூர, பெருத்து எழுந்தபேர் அன்பின்பெருமானை துதிக்கின்றான் - அதிகரித்தெழுந்த பேரன்போடு அவ்விறைவரைத் துதிக்கின்றானாயினன்.

தெவிட்டாமையாவது ஆசைநிரம்பாமையை. காரியம் தனக்கு முதலாகிய காரணத்தைப் புலப்படுத்துமாதலால் ஆராமையால் முறுகியெழுந்ததலையன்பு என்பார், பெருத்தெழுந்த பேரன்பில் என்றார்.

ஆசை அன்பினைத்தந்தது என்றதை "அன்பீனுமார்வமுடைமை" எனவருந் திருக்குறளால் அறிக. (சக)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மறைமுடிவின்னுந்தேறாமலர்சிலம்படியாய்போற்றி
யறைபுனலுலகமெல்லாம்படைத்தளித்தழிப்பாய்போற்றி
சிறைநிறைவாசத்தெண்ணீர்சசத்தியவிரததீர்த்தத்
துறைகெழுவரைப்பின்மேயசுந்தரவிடங்காபோற்றி.

(இ-ள்.) மறை முடிவு இன்னும் தேறாத மலர்சிலம்பு அடியாய் போற்றி - வேதசிரசின்னமுந்தெரியாத அடியவருளத்தில் மலரும் சிலம்பினையணிந்த திருவடித்தாமரையையுடையாய் வந்தனம், அறை புனல் உலகம் எல்லாம் படைத்து அளித்து அழிப்பாய் போற்றி ஒலிக்குங் கடல்சூழ்ந்த உலகத்தையெல்லாம் படைத்து ஓம்பி யழிப்பவனே வந்தனம், சிறை நிறை வாசம் தெண்ணீர் சத்தியவிரத தீர்த்தம் துறை கெழுவரைப்பின்மேய சுந்தர விடங்கா போற்றி - சிறையில் நிறைந்த வாசமமைந்த தெளிந்த நீர்மயமாகிய சத்தியவிரதமென்னுந் தீர்த்தத்தின் றுறையிலமைந்த திருப்பதியிலெழுந்தருளிய பேரழகையுடையாய் வந்தனம்.

டங்கம் உளி. விடங்கம் உளிநீக்கமுடையவன். ஆதலால் பேரழகுடையாய் என்றனம். விந்துதத்துவத்தின் காரியப்பாடாகிய பாசஞானமாதலால் மறைமுடிவின் னுந்தேறா எனவும், ஆன்மாக்களுக்குப் பாகம் வருவித்தற்பொருட்டு ஆக்கல் காத்தலழித்தலுடைமையால் அறைபுனலுலகமெல்லாம் படைத்தளித்தழிப்பாயெனவுங்கூறினார். மலர் என்னுங் காலங்கரந்த பெயரொச்சத்தால் அடியவருளம் எனவும் தாமரையெனவுங் கொள்ளநிற்றலால் சொல்லெச்சம். (ருo)

அண்ணலேவிடயத்துன்பமாற்றிலேனோலமோல
மெண்ணரும்யோனிதோறுந்திரிந்தலைந்தெய்த்தேனோலங்
கண்ணினுண்மணியேவேறுகண்டிலேன்களைகணோலம்
புண்ணியமுதலேயின்பப்பூரணாவோலமோலம்.

(இ-ள்.) அண்ணலே விடயம் துன்பம் ஆற்றிலேன் ஓலம் ஓலம் - இறைவனே விஷயானந்தத்தால் வருந் துன்பத்திற்குச் சிறிதுஞ்சகியேன் ஆதலால் தேவரீர் அடியேனுக்கபயம் அபயம், எண்ணரும் யோனிதோறும் திரிந்து அலைந்து எய்த்தேன் ஓலம் - அளவறுத்தற்கரிய பலயோனிகள்தோறுந் திரிந்தலைந்திளைத்தேன் அபயம், கண்ணின் உள் மணியே களைகண் வேறு கண்டிலேன் ஓலம் - கண்மணிபோல்வாய் உன்னையன்றி வேறு பற்றுக்கோடு கண்டிலேன் அபயம், புண்ணிய முதலே இன்பம் பூரணா ஓலம் ஓலம் - தருமவடிவாகிய முதல்வனே வரம்பிலின்பமுடையவனே அபயம் அபயம்.

இந்திராதிபோகங்கள் சத்தாதிவிடயங்களால் வரும் துன்பங்கள் என்பான் விடயத்துன்பம் ஆற்றிலேன் எனவும், கன்மமலத்தால் வரும் பிறவிகளளப்பிலவென்பான் எண்ணரும் யோனிதோறுந் திரிந்தலைந்தெய்த்தேன் எனவும், கண்மணி இருளையோட்டி யொளியைத்தருதல்போல மலவிருளையோட்டிச் சிவஞானவொளியை ஆன்மாக்களுக்குத் தந்தருள்வோனென்பான் பிறிது நவற்சியணியாகக் கண்ணினுண்மணியேயெனவும், நீ ருத்திரனெனக் காரணப்பெயருடைமையால் பிறப்பிலலைப்புண்டிளைத்த வெனக்கு நின்னையன்றி வேறு பற்றுக்கோடில்லையென்பான் வேறு கண்டிலேன் களைகணோலம் எனவும், சிவபுண்ணியங்களுக்கு நீ காரணன் என்பான் புண்ணியமுதலேயெனவும், நீ வரம்பிலின்பமுடைமையால் எனக்கு இன்பருளுதல் உனக்கொருபாரமன்றெ

ன்பான் இன்பப்பூரணனெனவுந் துதித்தனன் என்றார். ருத்திரன் துக்கசாகரத்தினின் றுங் கரையேற்றுவான்.

"இன்னலங்கடலுட்பட்டோர்யாரையுமெடுக்குநீரால்
உன்னரும்பரமமூர்த்தியுருத்திரனெனப்பேர்பெற்றான்" எனக் கந்தபுராண த்தில் வருதல் காண்க. (௬௧)

புழுப்பொதிந்தசும்புபாயும்புன்புலையுடலேயோம்பிக்
கழித்தனன்காலமெல்லாங்கடையனேன்பொறிகள்யாண்டு
மிழுத்திழுத்தலைப்பநொந்தேனினித்தினைப்பொழுதுமாற்றேன்
சழக்கறுத்தருள்வாயுன்றன்சரணமேசரணமையா.

(இ-ள்.) கடையனேன் புழுபொதிந்து அசும்பு பாயும் புன் புலை உடலே ஓம்பி காலம் எல்லாம் கழித்தனன் - நாயிற் கடைப்பட்ட யான் புழுக்களாற்பொதியப்பட்டு உதிரப்பொசிவு சுரந்து பாயும் புல்லிய கீழ்மையான சரீரத்தை யோர்பொருளாகக் காத்துக் காலங்களையெல்லாங் கழித்தனன், பொறிகள் யாண்டும் இழுத்து இழுத்து அலைப்ப நொந்தேன் இனி தினைபொழுதும் ஆற்றேன் - இந்திரியங்க ளென்னை யெவ்விடத்து மிழுத்திழுத்து வருத்துதலால் நொந்தலைப்புறறேன் இனித் தினையளவுகாலமுஞ் சகியேன், (ஆதலால்) ஐயா சழக்கு அறுத்து அருள்வாய் உன்றன் சரணமே சரணம்-ஐயனே என் கெடுதிநிலையை யொழித்தருள் செய்வாய் உனது திருவடியே அடியேனுக்கடைக்கலம்.

வழக்கிற்கு மாறுபட்டது சழக்கு ஆதலால் சழக்கு என்பதற்குக் கெடுதிநிலையென்றாம். தினை என்பது சிறுமையைக்காட்டும் ஓரளவை. பாகம் வருவித்தற்கு நீயருளிய தநுகரணபுவனபோகங்களுள் தநுவாலாய சிவபுண்ணியங்களைக் கைக்கொள்ளாது சத்தாதிவிடயமாகிய போகத்தை யொருபொருளாகக்கருதினமையால் புன்புலையுடலே யோம்பிக் காலங்கழித்தனன் எனவும், போகத்தைப் பொருளாகப் புவனங்களிற்கருதுதலால் கரணங்கள் அதன்வழிப்படுமாதலால் பொறிகள்யாண்டும் இழுத்திழுத்தலைப்பநொந்தேன் எனவும், அதனால்வரும் இளைப்பொழிக்குங் கருணாநிதி நீயாதலால் சரணடைந்தனனாதலில் சழக்கறுத்தருள்வாயுன்றன் சரணமே சரணமையாவெனவுங் கூறினான் என்றார். (௬௨)

அடைக்கலமடியேனென்றென்றழுதிரந்தயருங்காலை
விடைத்தனிப்பெருமானன்னோன்பத்தியின்விளைவுநோக்கி
நடைப்பிடியுமையாளோடுநண்ணிநீவேண்டிற்றென்னை
யெடுத்துரைதருதுமென்றானிந்திரன்றொழுதுவேண்டும்.

(இ-ள்.) அடியேன் அடைக்கலம் என்று என்று அழுது இரந்து அயரும் காலை-அடியேன் அடைக்கலம் என்று என்று அழுது குறையிரந்து சோருங்காலத்தில், விடை தனி பெருமான் அன்னோன் பத்தியின் விளைவு நோக்கி - இடபவூர்தியையுடைய ஒப்பில்லாத இறைவர் அவ்விந்திரனது பத்தியின் முதிர்ச்சியைநோக்கி, நடைபிடி உமையாளோடும் நண்ணி நீ வேண்டிற்று என்னை எடுத்து உரைதருதும் என்றான்-பெண்யானைபோலும் நடையையுடைய உமையம்மையோடும் எழுந்தருளி நீ கருதியது யாது அதை யெடுத்துக்கூறாய் அதை நாந்தந்தருளுவோமென்று கூறினார், இந்திரன் தொழுது வேண்டும் - சிவியென்னு மிந்திரன் றொழுது குறையிரக்கின்றனன்.

இந்திரன் வேண்டுகோளுக்கு இரங்கி யெழுந்தருளியது திருவருளாலாதலால் நடைப்பிடியுமையாளோடு நண்ணி என்றார். என்று என்று அவலப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (௬௩)

வினைவழிப்பிறந்துவீந்துமெலிந்தநாளெல்லையில்லை
யனையவற்றடிகேளுன்றனடிதொழப்பெற்றிலேனு
னினைவருந்தவத்தாலின்றுநின்னருட்குரியனானே
னினிவரும்பிறவிமாற்றியென்றனையுய்யக்கோடி.

(இ-ள்.) வினைவழி பிறந்து வீந்து மெலிந்த நாள் எல்லை இல்லை - இருவினையி ன்வழியே பிறந்து இறந்து மெலிவடைந்த நாள்களளவில்லை, அடிகேள் அனையவற்று உன்றன் அடி தொழ பெற்றிலேன் - அடிகளே அப்பிறப்புகளுளுன்றன் றிருவடிகளை வணங்கப்பெற்றிலேன், நினைவரும் தவத்தால் இன்று நின் அருட்கு உரியன் ஆனேன் - நினைத்தற்கரிய சிவபுண்ணியமுதிர்ச்சியினால் இப்பொழுது நின் திருவருளுக்குரியவனாயினேன், (ஆதலால்) இனிவரும் பிறவி மாற்றி என்றனை உய்ய கோடி - இனிவரும் பிறவியையொழித்து என்னையுய்ய ஆட்கொள்வாய்.

யான் எடுத்த பிறவிகளில் இன்றுபோல் வணங்கப்பெறுவேனாகிற் பிறப்பொழிவேன், அதுபெறாது இருவினைகளையே யீட்டியிருந்தமையால் பிறப்பொழிந்திலேனென்பான் வினைவழிப்பிறந்துவீந்து மெலிந்த நாளெல்லையில்லையெனவும், இப்பிறப்பில் நான் ஈட்டியது சிவபுண்ணியம் என்பான் நினைவருந்தவத்தால் எனவும், அதனால் இருவினையொப்பும் சத்திநிபாதமும் வாய்ந்தேனென்பான் இன்று நின்னருட்குரியனானேன் எனவும், அவற்றால் மலமொழிப்பாயென்பான் இனிவரும் பிறவி மாற்றியென்றனை யுய்யக்கோடியெனவும் என்றான் என்றார். (ருச)

இத்தலந்தீர்த்தமென்றன்பெயரினாலிலகவேண்டு
மத்தனேயென்னலோடுமெவ்வவையருளிமீளா
முத்திசேர்கணநாதர்க்குண்முதல்வனுந்தன்மைநல்கிப்
பைத்தபாம்பாரம்பூண்டபண்ணவனிலிங்கத்தானான்.

(இ-ள்.) அத்தனே இ தலம் தீர்த்தம் என்றன் பெயரினால் இலகவேண்டும் என்னலோடும் - இறைவனே இந்தத்தலமுந் தீர்த்தமும் எனது பெயரினால் இந்திரபுரம் இந்திரதீர்த்தமென்று விளங்கவேண்டுமென்று குறையிரக்க, பைத்த பாம்பு ஆரம் பூண்ட பண்ணவன் அவை அருளி மீளாத முத்திசேர் கணநாதர்க்கு உள் முதல்வனாகும் தன்மை நல்கி இலிங்கத்து ஆனான் - படம் விரித்த பாம்பினை ஆரமாகப்பூண்ட அவ்விறைவன் அவ்விந்திரன் குறையிரந்தவண்ண மருள்செய்து மீண்டு பிறத்தலில்லாத கணநாதர்க்குள் தலைவனாகுந் தன்மையை யருளிச் சிவலிங்கத்துள் மறைந்தருளினான்.

பேறுகளுள் கணாதிபத்தியம் பெரும்பேறாதலால் மீளாமுத்திசேர் கணநாதர்க்குள் முதல்வனுந் தலைமைநல்கியெனக் கூறினார். (ருரு)

அற்றைநாண்முதலச்சூழலிந்திரபுரமாமங்கட்
கற்றைவார்சடையீரோர்காற்கண்ணுறப்பெற்றோர்தாமும்
வெற்றிவேற்காலன்றன்பால்விரவிடார்கருவிலெய்தா
ரிற்றதன்பெருமைமுற்றும்யாவரோவியம்பவல்லார்.

(இ-ள்) அற்றைநாள் முதல் அ சூழல் இந்திரபுரமாம் - அந்நாள் முதல் அந்நிருநகர் இந்திரபுரமென்னும் பேருடையதாம், அங்கண் கற்றைவார் சடையீர் ஓர்கால் கண்ணுற பெற்றோர் தாமும் - அவ்விடத்து நீண்ட சடைநெருக்கினையுடைய முனிவர்களை யோர்காலத்து வணங்கப்பெற்றோருமன்றித் தரிசிக்கப்பெற்றோரும், வெற்றி வேல் காலன் தன்பால் விரவிடார் கருவில் எய்தார் - வெற்றிவாய்ந்த வேலையேந்திய

இயமன் கையிற்படார் பிறப்படையார், அதன் பெருமை இற்று - அதன்பெருமை யித் தன்மைத்து, முற்றும் இயம்பவல்லார் யாவர் - முழுதும் எடுத்துச்சொல்லவல்லவர் யார்.

இந்திரன் சிவகருணையால் யாவருந் தன்போற் பேறடையச் சிவபெருமான் றி ருவருளைப்பெற்றமையால் ஓர்காற் கண்ணுறப்பெற்றோர்தாமும் - வெற்றிவேற்காலன் றன்பால் விரவிடார்கருவிலெய்தார் எனவுங்கூறினர். உம்மை இறந்ததுதழீய வெச்சப் பொருட்டு. இற்று பண்படியாகவந்த ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்புவினைமுற்று. ()

சத்தியவிரதங்காரைத்தருவனஞ்செறிதலாலே
சித்திசேர்ந்தவர்க்குநல்குநதிருநெறிக்காரைக்காடென்
றித்திருப்பெயரினோங்குமென்பரான்மாசுநீர்ந்த
வுத்தமக்கேள்விசான்றவுணர்வுடையும்பாமேலோர்.

(இ-ள்.) மாசுதீர்ந்த உத்தமம் கேள்விசான்ற உணர்வு உடைய உம்பர் மேலோர்- குற்றத்தினின்று நீங்கிய உத்தமநூற்கேள்வியில் மிக்க அறிவினையுடைய தேவர்களு மு னிவரரும், சத்திய விரதம் காரை தருவனம் செறிதலாலே சித்தி சேர்ந்தவர்க்கு நல்கு ம் திருநெறி காரை காடு என்று இ திரு பெயரின் ஓங்கும் என்பா - சத்தியவிரதமென் னுந் திருப்பதியானது காரையென்னும் விருக்ஷாரணியம் நெருங்குதலால் அட்டமாசி த்தியடைந்த முனிவர்களுக்கருளுந் திருநெறிக்காரைக்காடென்று இந்த மேம்பட்டபே ரால் உயர்ந்து விளங்குமென்று கூறுவர்.

சத்தியவிரதம் என்னுந்தலம் காரையென்னும் விருட்சக்காட்டாற் சூழப்படுதலால் அத்தலத்திற்குவந்த காரணப்பெயர் என்பார் காரைத்தருவனஞ்செறிதலாலே-சித்திசே ர்ந்தவர்க்கு நல்குந் திருநெறிக்காரைக்காடு எனவும், அக்காரணப்பெயர்வந்தது மக்க ளால் அன்று என்பார் உத்தமக்கேள்விசான்ற வுணர்வுடையும்பர்மேலோர் எனவுங்கூறி னர். திருநெறியென்னும் விசேடணம் சிவஞானத்தின்மேல் நின்றது, இடத்தினிகழ் பொருளை யிடத்தின்மேலேற்றிக்கூறுதல் உபசாரவழக்காதலால். " தொட்டனைத்தூ எனவருதல் காண்க. (௩எ)

திருநெறிக்காரைக்காட்டுப்படல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩0க.

---

## புண்ணியகோடீசப்படலம்.

செச்சைச்சடையந்தணிர்தேமலரோடைசூழ்ந்த
மெய்ச்சத்தியமாவிரதத்தலமேன்மைசொற்றுங்
கச்சிப்பதியிற்கவர்புண்ணியகோடிமேன்மை
நச்சிப்புகல்கின்றனநன்குமதித்துக்கேண்மின்.

(இ-ள்.) செச்சை சடை அந்தணிர் - செவந்த சடைமுடியையுடைய முனிவர் களே, தேம் மலர் ஓடை சூழ்ந்த மெய் சத்திய மாவிரத தலமேன்மை சொற்றும் - தே ன்சிந்து மலரோடைசூழ்ந்த உண்மைவாய்ந்த சத்தியமாவிரதமென்னுந் தலமேன்மை யைக்கூறினும், கச்சி பதியில் கவர் புண்ணிய கோடி மேன்மை நச்சி புகல்கின்றனம்

நன்கு மதித்து கேண்மின் - கச்சியென்னுந் திருப்பதியில் கண்டோர் மனத்தைக் கொள்ளைகொள்ளும் புண்ணியகோடீசத்தின் மேன்மையை விரும்பிக் கூறுகின்றோம் அதனை நன்கு மதித்துக்கேளுங்கள்.

விரதத்தலம் பொதுவிதியால் வல்லெழுத்து மிக்கது. (க)

மின்பாய்பொழிற்சத்தியமாவிரதத்தலத்தின்
றென்பாலதுபுண்ணியகோடிநந்தேவன்வைப்பு
வன்பாலர்களெய்தரும்புண்ணியதீர்த்தமாடே
யென்போலிகட்குஞ்சிவப்பேறெளிதெய்துமங்கண்.

(இ-ள்.) புண்ணிய கோடி நம் தேவன் வைப்பு மின்பாய் பொழில் சத்தியமா விரததலத்தின் தென்பாலது - புண்ணியகோடீசமென்னும் நமதிறைவன் திருப்பதி மேகந் தவழ்தலால் மின்னல் பரந்த சோலைசூழ்ந்த சத்தியமாவிரதமென்னுந் தலத்தின் தென்பாலுள்ளது, வன்பாலர்கள் எய்தரும் புண்ணியதீர்த்தம் மாடு என்போலிகட்கும் சிவ பேறு அங்கண் எளிது எய்தும் - கொடியர்களாகிய புன்சமயிகளடைதற்கரிய புண்ணிய தீர்த்தத்தின் கரையில் என்னையொத்த அறிவில்லோர்க்குஞ் சிவபுண்ணியப்பேறு எளிதாக அவ்விடத்திற் கைகூடும்.

முத்தியடைதற்குச் சிவபுண்ணியமூலமாதலால் பேறு என்றார். (உ)

மலர்மேயவன்மேகநல்வாகனகற்பமொன்றிற்
றலமேழ்புகழ்நாரணன்றாமரையாளியாதி
யுலகேழையுமீன்றிடுமாசையினும்பர்கோனைப்
பலநாண்முகிலினுருக்கொண்டுபரித்தல்செய்தான்.

(இ-ள்.) மலர் மேயவன் மேக நல் வாகன கற்பம் ஒன்றில் - பிரமனது கற்பங்களில் மேகவாகன கற்பம் ஒன்றில், தலம் ஏழ் புகழ் நாரணன் தாமரையாளி ஆதி உலகு ஏழையும் ஈன்றிடும் ஆசையின் - ஏழுலகங்களும் புகழுந் திருமால் பிரமன் முதலாக ஏழுலகங்களையுஞ் சிருட்டிக்குமாசையால், உம்பர் கோனை பலநாள் முகிலின் உரு கொண்டு பரித்தல் செய்தான் - தேவர்கள்தேவனாகிய இறைவனைப் பலநாளும் மேகவுருக்கொண்டு சுமந்தனன்.

பிரமன் ஒவ்வொருநாளுங் கற்பங்களாதலில் அக்கற்பங்கள்தோறும் திருமால் ஒவ்வொருசெயலைப்புரிதலால் அக்கற்பங்களுக்கு அதனால் காரணப்பெயர்களாகவரும் என்பார் மேகவாகனகற்பம் எனவும், மேகவாகனகற்பமெனப் பெயர்வந்ததற்குக் காரணங்கூறத்தொடங்கினவர் அற்றைநாளில் திருமால் ஓரந்தணர் மரபிற்றோன்றிப் பிரமனோடு எல்லாவுலகங்களையுஞ் சிருட்டிக்க மேகவுருக்கொண்டு சிவபெருமானை யாயிரந் தேவவருடம் சுமந்துதிரிந்தமையில் அற்றைநாளுக்கு மேகவாகனகற்பம் எனப் பெயர் வந்ததென்பார் நாரணன்தாமரையாளியாதி - உலகேழையுமீன்றிடுமாசையினும்பர்கோனைப் - பலநாண்முகிலினுருக்கொண்டுபரித்தல்செய்தான் எனவுங் கூறினார். நாரணன் நீரில் வசிப்பவன் என்னும் பொருள்மேல் நிற்றலால் காரணப்பெயர். "நாரத்திலுறையுமாற்றானாரணன்" எனக் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (ங)

நம்மானிரங்கிக்கடைக்கண்ணருணல்கிமாலோய்
வம்மோசுராண்டினிலாயிரவாண்டுமேற்றிங்
கிம்மேகவுருக்கொடுதாங்கினையெம்மைவேண்டு
மம்மாவரநல்குதுமோதுதியென்னவன்றோன்.

(இ-ள்.) நம்மான் இரங்கி கடைக்கண் அருள் நல்கி - நமதிறைவர் இரங்கிக் கடைக்கண்ணால் திருவருள்செய்து, மாலோய் இங்கு வம்மோ - திருமாலே யிங்குவா, சுரர் ஆண்டினில் ஆயிர ஆண்டு இ மேக உருகொடு தாங்கினை - தேவவருடத்தில் ஆயிரவருடம் இந்த மேகவுருவங்கொண்டு சுமந்தாய், எம்மை வேண்டும் வரம் அம்மா நல்குதும் ஓதுதி என்ன - எம்மிடத்துக் குறையிரக்கும் வரத்தை மிகவும் அருள்வோங் கூறுயென்றருள, அன்னோன் - அத்திருமால்.

வம்மோ வா என்னும் முன்னிலை யேவலொருமை வினைமுற்றுக்குறுகி, மோ என்னு முன்னிலையசை யிடைச்சொல்லு மகரத்தோற்றமும்பெற்று வம்மோ எனவந்தது.

எந்தாயொருநின்திருமேனியிடப்புறத்து
வந்தேனடியேனுயர்நின்னருள்வண்மைதன்னா
னந்தாதவிவ்வாழ்க்கையுமெய்தினனின்றுஞாலமுற்றும்
பைந்தாண்மலரோனையுமின்றுபடைத்தல்வேட்டேன்.

(இ-ள்.) அடியேன் எந்தாய் ஒருநின் திருமேனி இடப்புறத்து வந்தேன் - அடியேனாகிய யான் என்றந்தையே ஒப்பில்லாத நினது திருமேனியினிடப்பாலில் வந்தேன், உயர் நின் அருள் வண்மை தன்னால் நந்தாத இ வாழ்க்கையும் எய்தினன் - உயர்ந்த நினது அருட்கொடையால் கெடாத இந்த வாழ்க்கையையுமடைந்தேன், இன்று ஞாலம் முற்றும் பைந்தாள் மலரோனையும் படைத்தல் வேட்டேன் - இப்பொழுது உலக முழுமையும் பசிய தண்டையுடைய தாமரையிலுள்ள பிரமனையுஞ் சிருட்டிக்க விரும்பினேன்.

நின்னிடப்பாகத்தில் வந்தமையால் காத்தற்றொழிலை யுடைமையுமன்றிப் பிரமன்முதலாயினோரையும் சிருட்டிக்க விரும்பினேனென்பான் நின்திருமேனி யிடப்புறத்துவந்தேன் இவ்வாழ்க்கையுமெய்தினன் ஞாலமுற்றும் மலரோனையும் இன்று படைத்தல் வேட்டேன் என்றான். இடப்பாலிலுமையம்மையும் சந்திரனும் திருமாலும், வலப்பாலில் சூரியனும் அக்கினியும் பிரமனும் உற்பத்தி என்பது சுருதிவாக்கியம் ஆதலால் நின்திருமேனி யிடப்புறத்துவந்தேனென வேண்டினான் என்றார். (கூ)

அவ்வாற்றலளித்தருளென்னுமரிக்குநாத
னிவ்வாற்றல்கச்சிப்பதியெய்தியிலிங்கந்தாபித்
தொவ்வாநளினங்களினாலுயர்பூசையாற்றிற்
செவ்வேபெறுகிற்பையெனத்திருவாய்மலர்ந்தான்.

(இ-ள்) அ ஆற்றல் அளித்தருள் என்னும் அரிக்கு - அவ்வன்மையைத் தந்தருளாயென்று குறையிரக்குந் திருமாலுக்கு, நாதன் கச்சி பதி எய்தி இலிங்கம் தாபித்து ஒவ்வாத நளினங்களினால் உயர் பூசை ஆற்றில் - இறைவர் கச்சித்திருநகரையடைந்து சிவலிங்கந்தாபித்துத் தம்மோடொருமலரு மொவ்வாத தாமரைகளினால் உயர்ந்த சிவபூசையைச்செய்தால், இ ஆற்றல் செவ்வே பெறுகிற்பை என்ன திருவாய் மலர்ந்தான் - இந்த வலிமையை நேரே பெறுவாயென்று திருவாய்மலர்ந்தருளினார்.

மலர்களுள் உயர்ந்தது தாமரையாதலால் ஒவ்வாநளினங்களினால் என்றார்.

"பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை" எனவரும் ஆளுடையரசுகள் தேவாரத்தால் உணர்க. (கூ)

அங்கப்பொழுதேவிடைகொண்டருட்காஞ்சியெய்திப்
பொங்கிப்பொலிதீர்த்தநறும்புனலாடிச்சூழ்ந்

தெங்கிற்பொலியிந்திரநன்னகர்த்தென்றிசைக்கட்
டுங்கச்சிவலிங்கமிருத்திமெய்யன்புதோன்ற.

(இ-ள்.) அங்கு அ பொழுதே விடைகொண்டு அருள் காஞ்சி எய்தி பொங்கி பொலி தீர்த்த நறும் புனல் ஆடி - அவ்விடத்தி லப்பொழுதே விடைபெற்று ஆன்மாக்களுக்கருள்சுரக்குங் காஞ்சித்திருநகரையடைந்து மேம்பட்டு விளங்குந் தீர்த்தமாகிய நல்ல நீரில் மூழ்கி, சூழும் தெங்கில் பொலி இந்திரநல் நகர் தென் திசை கண் துங்கம் சிவலிங்கம் இருத்தி மெய் அன்புதோன்ற - சூழ்ந்த தென்னமரங்களால் விளங்கும் நல்ல இந்திரபுரத்தின் றென்றிசையில் உயர்ந்த சிவலிங்கமொன்றைத்தாபித்து உண்மையாகிய அன்புதோன்ற.

திருமால் பூசிக்கத்தொடங்கியகாலத்தின் முன்னுள்ள தீர்த்தம் என்பார் பொங்கிப்பொலிதீர்த்த நறும்புனலாடியெனவும், எழுந்த அன்பு தலையன்பு என்பார் மெய்யன்பு எனவுங்கூறினர். (எ)

தெண்ணீர்த்தடமொன்றுவகுத்துத்திருந்தமூழ்கி
வெண்ணீற்றணியக்கமணித்தொடைமெய்விளங்கக்
கண்ணீர்க்கமலம்பலகொய்துகருத்துவாய்ப்ப
வண்ணீர்ச்சிவபூசனைநித்தலுஞ்செய்துவாழ்ந்தான்.

(இ-ள்.) தெள் நீர் தடம் ஒன்று வகுத்து திருந்த மூழ்கி - தெள்ளிய நீர்மயமாகிய தடாகமொன்று வகுத்து அத்தீர்த்தத்தில் விதிவழி முழுகி, வெண்ணீறு அணி அக்கமணி தொடை மெய் விளங்க-வெள்ளிய விபூதிப்பொலிவோடு உருத்திராக்கக்கண்டிகை தனது திருமேனியில் விளங்க, கள் நீர் கமலம் பலகொய்து கருத்து வாய்ப்ப வள் நீர் சிவபூசனை நித்தலும் செய்து வாழ்ந்தான் - மதுநீரைச்சிந்தும் பல தாமரைகளைக் கொய்து தனது கருத்து முற்ற ஆகமவண்மையின் றன்மைவாய்ந்த சிவபூசனையை யெந்நாளுஞ்செய்து வாழ்ந்திருந்தனன்.

திருந்த என்றது முன்னர்க்கூறிய நீர்க்கடன்முதலிய நித்தியநைமித்திகங்களை. கருத்துவாய்ப்ப என்றது பிரமனுடெல்லாவுலகங்களையுஞ் சிருட்டிக்கக்கருதியது கைகூடுதலை. (அ)

அன்னேனேவன்மெய்ப்பணியாற்றுமன்புந்தத்
தன்னேரில்லாதோர்மதவேழந்தானெய்தி
யென்னாயகனேயென்பணிகொள்வாயென்றேத்திப்
பொன்வாடோன்றுமுன்னரெழுந்துபுனலாடி.

(இ-ள்.) அன்னோன் ஏவல் மெய் பணி ஆற்றும் அன்பு உந்த தன் நேர் இல்லாத ஓர் மதவேழம் தான் எய்தி - அத்திருமாலேவும் உண்மைவாய்ந்த பணிவிடையைச் செய்யுமன்பு பின்பு நின்று தள்ளத் தனக்குத்தானேயொத்த மதத்தையுடைய ஒரு கசேந்திரனென்னும் யானையடைந்து, என் நாயகனே என் பணிகொள்வாய் என்று ஏத்தி பொன் வாள் தோன்றும் முன்னர் எழுந்து புனல் ஆடி - எனதிறைவனே அடியேன் செய்யும் பணிவிடையைக் கொண்டருள்வாயென்று துதிசெய்து பொன்போலும் நிறம் வாய்ந்த சூரியன் உதையஞ்செய்தற்கு முன்னெழுந்து நீராடி.

கசேந்திரன் ஆதலால் ஓர்மதவேழம் எனவும், ஒளி என்பது சந்திரசூரியர்களுக்குப் பொதுப்பெயராதலால் பிறிதினியைபுநீக்கிய விசேடணந்தந்து பொன்வாள் எனவுங்கூறினர். (கூ)

நாளலர்தாமரைபாதிரிவில்வநறும்புன்னை
தாளுயர்சண்பகமல்லிகைதண்கழுநீர்மௌவல்
கோளறுகோங்குமுதற்பலகொய்துகொடுத்தென்றும்
வேளையளித்தவனுண்மகிழ்வித்திடுமந்நாளில்.

(இ-ள்.) நாள் அலர் தாமரை பாதிரி வில்வம் நறும் புன்னை தாள் உயர் சண்பகம் மல்லிகை தண் கழுநீர் மௌவல் - அன்றலர்ந்த தாமரையும் பாதிரியும் வில்வமும் நறுமணங்கமழும் புன்னையும் தாற்றுயர்ந்த சண்பகமும் மல்லிகையும் தண்ணிய கழுநீரும் வனமல்லிகையும், கோள் அறு கோங்கு முதல் பல கொய்து என்றும் கொடுத்து வேளை அளித்தவன் உள் மகிழ்வித்திடும் அ நாளில் - குற்றமற்ற கோங்கும் இவை முதலாகிய பலவற்றின் மலர்களைக் கசேந்திரன் கொய்து எப்பொழுதுங்கொடுத்து மன்மதனையீன்ற திருமால் மனமகிழச்செய்தொழுகும் அக்காலத்தில். (௧௦)

ஓர்பகனீர்நிறைபூந்தடமொன்றுறுபூக்கொய்வான்
சீர்தருதிண்கரிசேறலுமங்கொருவன்மீன
நீரிடைநின்றுவெகுண்டடிபற்றிநிமிர்ந்தீர்ப்பக்
காரொலிகாட்டியகன்கரையீர்த்ததுகாய்வேழம்.

(இ-ள்.) ஓர்பகல் நீர் நிறை பூம் தடம் ஒன்று உறு பூ கொய்வான் சீர் தரு திண்கரி சேறலும் - ஓர்நாள் நீர்நிறைந்த மலர்த்தடமொன்றிற் பூத்த மலரைக்கொய்யச் சிறப்பால் மிக்க திண்ணிய கசேந்திரனடைய, அங்கு ஒரு வன் மீனம் நீர் இடை நின்று வெகுண்டு அடி பற்றி நிமிர்ந்து ஈர்ப்ப - அத்தடத்திலுள்ள ஒரு முதலையானது நீரில் நின்று கோபித்துக் காலைப்பற்றி அந்நீருளிழுக்க, காய் வேழம் கார் ஒலிகாட்டி அகன் கரை ஈர்த்தது - கோபிக்கும் அந்தக் கசேந்திரன் மேகம்போல முழங்கி யிடமகன்ற கரையிலிழுத்தது. (௧௧)

இவ்வகைதண்புனலிற்கரைமீதிவையோவாமே
தெவ்வுடனீர்ப்புழியாண்டுகளெண்ணிலசென்றேகக்
கைவரையாற்றரிதாயலறிக்கருமாமேகத்
தவ்வடிவோனையழைத்ததுமூலமெனக்கூவி.

(இ-ள்.) இ வகை தண் புனலில் கரைமீது இவை ஓவாமே தெவ் உடன் ஈர்ப்பு உழி எண் இல ஆண்டுகள் சென்று ஏக - இவ்வகையாகத் தண்ணிய நீர்த்தடத்திலுங் கரையிலும் இவ்விரண்டு மொழியாமல் பகையோடு ஒன்றையொன்றிழுக்குமிடத்து அளவிறந்த வருடங்கள் சென்று கழிய, கைவரை ஆற்று அரிதாய் அலறி கருமா மேகத்து அ வடிவோனை மூலம் என்ன கூவி அழைத்தது - கசேந்திரன் பொறுத்தற்கரிதாய்க் கதறிக் கரிய மேகம்போலத் திருவுருவாய்ந்த அத்திருமாலை மூலமேயென்று கூவியழைத்தது.

நீருள் முதலை வெல்லுமேயன்றிக் கரையில் வெல்லுதலின்மையால் தண்புனலிற்கரைமீதிவையோவாமே - தெவ்வுடனீர்ப்புழி என்றார். ஈர்ப்பு என்னுந் தொழிற்பெயர் பெயரெச்சப்பொருள்மேல் நின்றது. கைவரை சிறப்புருவகவணி.

"நெடும்புனலுள்வெல்லுமுதலையடும்புனலின்
நீங்கினதனைப்பிற" எனவருந் திருக்குறளால் அறிக. (௧௨)

அண்டரொலாம்யாமூலமலேமென்றகல்போழ்திற்
புண்டரிகக்கட்புண்ணியனன்புள்ளரசின்மேல்

கொண்டெதிரெய்திக்கரியரசெய்துங்கொடுவெங்நோய்
கண்டுளநெக்கானஞ்சலையஞ்சேல்களிறென்று.

(இ-ள்.) அண்டர் எல்லாம் யாம் மூலம் அல்லேம் என்று அகல்போழ்தில் - (காணவந்த) தேவர்களெல்லாம் நாம் மூலமல்லேமென்று நீங்கியகாலத்தில், புண்டரிகம் கண் புண்ணியன் நன் புள் அரசின்மேல் கொண்டு எதிர் எய்தி - தாமரைபோலுங் கண்களையுடைய திருமால் நல்ல கருடவூர்தியின்மே லாரோகணித்து எதிரே காட்சிதந்து, கரி அரசு எய்தும் கொடு வெம் நோய் கண்டு உளம் நெக்கான் அஞ்சலை அஞ்சேல் களிறு என்று-கசேந்திரனடையுங் கொடிய வெவ்விய நோயைக்கண்டு மனமுடைந்து நீ அஞ்சுதலொழிக அஞ்சுதலொழிக என்ற பயந்தந்து.

அயன்முதலிய தேவர்களுக்குத் திருமால் மூலமாதலால் தேவர்கள் மூலம் என்னும் சொற்கு நாம் பொருளல்லேமென்று நீங்கினர் ஆதலால் அண்டரெலாம் யாமூலமலேமென்றகல்போழ்தில் எனவும், அவர்களுக்குத்தான் மூலமாய் அவ்வாசகத்திற்கு வாச்சியமாய் நிற்றலால் புண்டரிகக்கட்புண்ணியனன் புள்ளரசின்மேல் கொண்டெதிரெய்தி யஞ்சலையஞ்சேல் எனவுங் கூறினரென்முர். அஞ்சலை என்றதில் அல் எதிர்மறைவிகுதியும், ஐவியங்கோள்விகுதியும், அஞ்சேல் என்றதில் ஏல் விகுதி எதிர்மறை முன்னிலையேவலொருமை விகுதியும் புணர்ந்து நிற்றலால் அஞ்சாதொழிக அஞ்சாதொழிக எனப் பொருள்கூறினும். அஞ்சலையஞ்சேல் துணிவுப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். கூ

ஆழியெறிந்தானதனுயிருண்டான்கரியோடும்
வாழியகாஞ்சிமாநகரெய்திசசிவபூசை
வேழமளிக்குமேதகுபள்ளித்தாமத்தா
லூழ்முறையாற்றித்தவநனிசெய்தங்குறைகாலை.

(இ-ள்.) ஆழி எறிந்தான் அதன் உயிர் உண்டான் கரியோடும் வாழிய காஞ்சிமா நகர் எய்தி-சுதரிசனமென்னுஞ் சக்கரத்தையெறிந்து அம்முதலையினுயிரையுண்டு கசேந்திரனேடும் பெருவாழ்வடையக் காஞ்சித்திருநகரையடைந்து, சிவபூசை வேழம் அளிக்கும் மேதகு பள்ளி தாமத்து ஆல் ஊழ்முறை ஆற்றி தவம் நனி செய்து அங்கு உறைகாலை- சிவபூசனைக்கு அந்தக்கசேந்திரன் தந்த மேன்மைமிக்க திருப்பள்ளித்தாமத்தால் ஆகமமுறையால் அச்சிவபூசனையைச்செய்து மிக்க தவத்தினின்று அவ்விடத்து வசிக்குங்காலத்தில்.

வாழியசெய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம், இது எய்தியென்னும் வினையெச்சத்தின் முதனிலைகொண்டது. (கச)

எண்ணருவானேரின்னமுநாடற்கரியானைக்
கண்ணிணையாரக்காண்டகுகாதல்கைமிக்கங்
குண்ணிகழன்பானெக்குருகிக்கணுறைசிந்தப்
புண்ணியவேதப்பழமொழியோதிப்புகழ்கிற்பான்.

(இ-ள்.) எண்ணரும் வானோர் இன்னமும் நாடற்கு அரியானை - அளவிடுதற்கரிய தேவர்கள் இன்னமுந் தேடுதற்கரிய இறைவனை, கண் இணை ஆர காண்டகு காதல் கைமிக்கு - தனது இரண்டுகண்களால் காணும் விருப்பம் அதிகரித்து, அங்கு உள் நிகழ் அன்பால் நெக்குருகி கண் உறை சிந்த புண்ணியம் வேதம் பழமொழி ஓதி புகழ்கிற்பான் - மனத்தினிகழு மன்பினாற் கசிந்துருகிக் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்

சிந்தப் புண்ணிவடிவமாகிய தொன்றுதொட்டுள்ள வேதவாக்கியங்களால் துதித்துப் புகழ்வானுயினன்.

அளவிறந்த புண்ணியங்களை யான்மாக்களுக்கு எடுத்துக்கூறுதலால் புண்ணிய வேதம் எனவும், பசுக்களின்பொருட்டுக் குருபரம்பரை விளங்க அன்றே யிறைவன் திருவாய்மலர்ந்தருளினமையால் வேதப்பழமொழியெனவுங் கூறினர். காண்டகு ஒரு சொன்னீர்மையவாய்க் காலங்கரந்த பெயரெச்சத்தின்மேல் நின்றது. (௧௫)

ஒருபோகுகொச்சகப்பா.

நீராய்நிலனுய்நெருப்பாய்வளிவானு
யோராரிருசுடராயாவியாயாவைக்கும்
வேராகிவித்தாய்விளைவாகியெல்லாமாம்
பேராளாவெங்கள்பிரானேயடிபோற்றி.

(இ-ள்.) நீராய் நிலனுய் நெருப்பாய் வளி வானுய் ஏர் ஆர் இருசுடராய் ஆவியாய் - அப்புவாகியும் பிருதிவியாகியும் நெருப்பாகியும் வாயுவாகியும ஆகாயமாகியும் அழகுநிறைந்த சந்திரசூரியராகியும் ஆன்மாவாகியும், யாவைக்கும் வேர் ஆகி வித்து ஆய் விளைவு ஆகி எல்லாம் ஆகும் பேராளா எங்கள் பிரானே அடிபோற்றி - அவ்வெல்லாப்பொருளுக்கு மூலமாய் அவை தோன்றுதற்குக்கருவியாய் அவற்றின்பயனுகி யாவுமாகிய பேராளனே எங்களிறைவனே திருவடிக்கு வந்தனம்.

பளிங்குமணிகளை நூலிற்கோத்ததுபோலத் தன்பாற்றேன்றிய பிருதுவிமுதல் ஆன்மாகாறும் விரவி நிறைதலால் நீராய்நிலனுய்நெருப்பாய்வளிவானுய் - ஏராரிருசுடராயாவியாய் எனவும், சருவன் பிருதிவியாகியும், பவன் அப்புவாகியும், உருத்திரன் அக்கினியாகியும், உக்கிரன் வாயுவாகியும், வீமன் ஆகாயமாகியும், பசுபதி ஆன்மாவாகியும், ஈசானன் சூரியனுகியும், மாதேவன் சந்திரனுகியும், இவ்வாறு சிவபெருமான் அட்டமூர்த்தியாயமர்தலால் யாவைக்கும் வேராய் எனவும், அவைகள் தோன்றுதற்குக்காரணனுய் நிற்றலால் வித்தாய் எனவும், அவற்றில் நிகழும் பயன்கள் தானுய் நிற்றலால் விளைவாகியெனவும், இவையெல்லாமாய் நிற்றலால் எல்லாமாம் பேராளாவெனவுங்கூறினன்.

பளிங்குமணிகளை நூலிற்கோத்ததுபோல் உலகம் சிவபெருமானிடத்து நிலை

" நிலவொளிமணிகணூலினிற்கோத்துவைத்தெனநிறைந்தபேருலகம்
மலைமகள்பாகனட்டமூர்த்திகளின்மன்னிடும்" எனவும்,

சிவபெருமான் பிருதுவிமுதலிய பொருள்களில் விரவி அட்டமூர்த்தியாயமர்ந்து மூலமாதலை—

" மாநிலஞ்சருவன்புனல்பவன்கனலேவயங்குருத்திரனியல்வளிதான்
கானமர்தொடையலுக்கிரன்விசும்புவீமனுங்கருதியமானன்
தானனிவிளங்கும்பசுபதியிரவிதயங்குமீசானன்வெண்மதியம்
ஏனமாதேவனுகுமாலறியவிங்குநாமெடுத்தியம்பிடிலே" எனவும் வரும் வாயுசங்கிதையாலும்,

அவைகள் தோன்றுதற்குக் காரணனுய் நிற்றலை—

" விந்துவின்மாயையாகிமாயையினவ்வியத்தம்
தந்திடும்விந்துத்தன்பான்வைகரியாதிமாயை
வந்திடுமேராகமாதிமுக்குணமாதிமூலம்
தந்திடுஞ்சிவனவன்றன்சந்நிதிதன்னினின்றே" எனச் சிவஞானசித்தியாரிலும்,

அவற்றில் நிகழும் பயனும் எல்லாமாதலும் என்பவற்றை—

"பாரின் மேயினை பாரொருவடிவினை பாரினுக்கறிவொண்ணுய்
பாருமற்றையப்பாரிடைப்பொருளுநின்றுணையிற்பயில்வித்தாய்
நீரின் மேயினைநீரொருவடிவினைநீரினுக்கறியொண்ணுய்
நீருமற்றையந்நீரிடைப்பொருளுநின்றுணையினிலைப்பித்தாய்.
நெருப்பின்மேயினைநெருப்பொருவடிவினைநெருப்பினுக்கறிவொண்ணுய்
நெருப்புமற்றையந்நெருப்பிடைப்பொருளுநின்றுணையினிறுவித்தாய்
மருத்தின்மேயினைமருத்தொருவடிவினைமருத்தினுக்கறிவொண்ணுய்
மருத்துமற்றையம்மருத்திடைப்பொருளுநின்றுணையின்வதிவித்தாய்.
விண்ணின்மேயினைவிண்ணொருவடிவினைவிண்ணினுக்கறிவொண்ணுய்
விண்ணுமற்றையவ்விண்ணிடைப்பொருளுநின்றுணையினிறுவித்தாய்
கண்ணுமாருயிருசுடரொவற்றினுமிம்முறைநகலந்தோங்கி
யெண்ணிறலறிவரும்பெருமுதல்வநின்னிணையடிமலர்போற்றி" எனச் சுருதிவாக்கியமாகிய இவை இந்நூலிலும் வருதல் காண்க. (கசு)

கொண்டுநிறைந்தோங்கியபேரின்பக்குரைகடலே
தொண்டரெலாமுண்ணத்தெவிட்டாச்சுவையமிர்தே

(இ-ள்.) அண்ட பகிரண்டம் அனைத்தும் அகத்து அடக்கிக்கொண்டு நிறைந்து ஓங்கிய பேரின்பம் குரைகடலே-அண்டம்போலத் திரண்ட பகுப்பாயுள்ள அண்டங்களாகிய வெல்லாவற்றையுந் தன்னுளடக்கிக்கொண்டு எங்கும் நிறைந்தவைக்கு மேற்பட்டு ஆரவாரிக்கும் பேரின்பசமுத்திரமே, தொண்டர் எல்லாம் உண்ண தெவிட்டாத சுவை அமிர்தே-அடியார்களெல்லா முண்ணும்படி தெவிட்டாத சுவைகனிந்த அமுதமே, தண்டலை சூழ் கச்சி தலைவா அடி போற்றி - சோலைசூழ்ந்த கச்சித்திருப்பதியிலெழுந்தருளிய இறைவனே உன் திருவடிக்கு வந்தனம்.

அண்டம் முட்டை. தன்பெருமைக்கு அண்டம் அணுத்துணையாக நிற்றலால் அண்டபகிரண்டமனைத்து மகத்தடக்கிக்கொண்டு எனவும், அவ்வண்டங்கள் தன்னுள் வியாப்பியமாகத்தானெங்கும் வியாபகமாக நிறைந்து நிற்றலால் நிறைந்தோங்கி எனவும், ஒருகாற்சுருக்கமும் ஒருகாற்பெருக்கமுமின்றி யெக்காலத்தும் ஒருபடித்தா யளவிறந்து நிற்றலால் சிறப்புருவகவணியாய் நிறைந்தோங்கிய பேரின்பக்குரைகடலேயெனவும், கடலிற்றோன்றிய வமுதை வருந்திமுயன்றோர் பெறுமாறுபோலப் பேரின்பக்கடலிற்றோன்றிய திருவருளாகிய அமுதினைத் தலையன்பினின்று பெறுமாறு சிவோகம் பாவனைசெய்து நிற்குந் தொண்டினையுடையோர் தத்தமக்கு வேண்டியவாறு பருக நிற்றலால் அவ்வணிதோன்றத் தொண்டரொலாமுண்ணத்தெவிட்டாச்சுவையமுதேயெனவுங்கூறினன்.

தன்பெருமைக்கு அண்டம் அணுத்துணையாக நிற்றலும், அவை தன்னுள் வியாப்பியமாகத்தானெங்கும் வியாபகமாக நிறைந்து நிற்றலும்—

"அண்டப்பகுதியினுண்டைப்பிறக்கம்
அளப்பருந்தன்மைவளப்பெருங்காட்சி
யொன்றனுக்கொன்றுநின்றெழில்பகரின்
நூற்றொருகோடியின்மேற்படவிரிந்தன

இன்னுழைகதிரின்றுன்னணுப்புரையச்
சிறியவாகப்பெரியோன்" எனவும்,

பேரின்பத்தைக் கடல் என்றதை—

" கடலேயனையவானந்தங்கண்டாரெல்லாங்கவர்ந்துண்ண" எனவும்,

பேரின்பக்கடலிற்றோன்றிய அருளமுது என்றதை—

" அருளாரமுதப்பெருங்கடல்வாயடியாரெல்லாம்புக்கழுந்த
இருளாராக்கையிதுபொறுத்தேயெய்த்தேன்கண்டாயெம்மானே " எனவும்

திருவாசகத்தில் வருதல் காண்க. (கஎ)

மாறுவறக்கடவுண்மானவடியேனு
மேறுகித்தாங்கவருள்சுரந்தவெம்மானே
சீறுதுமைகளிப்பத்தேவியாக்கொண்டென்னைநின்
கூறுடவைத்தகுணக்குன்றேயடிபோற்றி.

(இ-ள்.) மாறுத அறம் கடவுள் மான அடியேனும் ஏறுகி தாங்க அருள் சுரந்த எம்மானே - தனது நிலைகெடாத தருமதேவதையையொப்ப அடியேனுகிய யானும் இடபவடிவாய்த் தாங்கக் கருணைசுரந்த எனது பெருமானே, உமை சீறுது களிப்ப தேவியாக கொண்டு என்னை நின் கூறு ஆடவைத்த குணம் குன்றே அடிபோற்றி - உமையம்மை கோபியாது களிகூர என்னையு மோர் மனைவியாகக்கொண்டு என்னை நின் இடப்பாகத்திலிருக்கவைத்த குணபருவதமே உன் திருவடிக்கு வந்தனம்.

தேயுப்பிரளையந்திலிறத்தலுக்கு அஞ்சி அறக்கடவுள் இடபவடிவாய் வந்து என்னை யூர்தியாகக்கொண்டருள்கவென்று குறையிரக்கச் சிவபெருமான் கொண்டருளினராதலால் மாறுவறக்கடவுள் மானவெனவும், திரிபுரசம்மாரகாலத்தில் இடபவூர்தியாய்த் தாங்கினமையால் அடியேனும் - ஏறுகித்தாங்கவருள்சுரந்தவெம்மானேயெனவும், உமையம்மையோடு இடப்பால் தோன்றினமையால் சீறுதுமைகளிப்பத்தேவியாக்கொண்டென்னைநின் - கூறுடவைத்த எனவும், பரதந்திரவயத்தராகிய அயன்முதலிய தேவர் போலாது தன்வயத்தனுதலால் கலங்காமைதோன்றக்குணக்குன்றேயெனவுங்கூறினுன்.

அறக்கடவுள் இடபவூர்தியாய்த் தாங்கினமையை முன்னர்க்கூறினும்.

திருமால் இடபவடிவாய்த் தாங்கினமையை—

" வீறுர்தருமக்கடவுட்சினவெள்விடைக்கோர்
கூறுதலின்மாயனுமுப்புரங்கொன்றவஞ்ஞான்
றேறுயெமைத்தாங்கினன்" என இந்நூலிற்காண்க.

உமையம்மையும் திருமாலும் இடப்பாலிற்றோன்றினர் என்பது சுருதிவாக்கியம் என முன்னர்க் கூறியிருக்கின்றும். (கஅ)

திக்காடையாதியணியோடுதீவினையே
னக்கோடுகண்ணேடுரியென்பணிந்தானே
யிக்காய்மழுமுதலாம்வான்படையோடென்றனையுந்

(இ-ள்.) திக்கு ஆடை ஆதி அணியோடு தீவினையேன் அக்கோடு கண் ஓடு உரி என்பு அணிந்தானே - திக்காகிய ஆடைமுதலிய ஆபரணங்களோடு தீவினையேனுகிய எனது அந்தக்கொம்பினையுங் கண்ணெலும்பினையும் ஓட்டையுஞ் சருமத்தையு மெலு

ம்பையுமணிந்தவனே, இ காய் மழு முதல் ஆம் வான் படையோடு என்றனையும் தக்கோர் புகழ் கணையாக கொண்டாய் சரண்போற்றி-இந்தக்காயு மழுமுதலிய பெரிய ஆயுதங்களோடு என்னையு மேலோர் புகழுமோரம்பாகக்கொண்டவனே உன் திருவடிக்கு வந்தனம்.

தாருகாவனமுனிவர்கள் செருக்கினையொழிக்கச் சிவபெருமான் பயிக்க திருவேடங்கொண்டருளியகாலத்தில் நக்கனாய் நிற்றலால் திக்காடையெனவும், பாம்புமுதலியவற்றை ஆபரணமாகக்கொண்டமையால் ஆதியணியோடு எனவும், இரணியாட்சன் உலகினைப் பாயாகச்சுருட்டிப் பிலத்திற்புகுந்தகாலையில் தேவர் வேண்டுகோளால் வராகவுருக்கொண்டு சென்று அவனைக்கொன்று கொம்பினாலுலகினைத்தந்தமையா லிறுமாப்புற்றுப் பல மலைகளையெல்லா மக்கொம்பிற்கோத்தெறியத் தேவர்கள் வேண்டுகோளால் குமரக்கடவுளையேவி யவ்வராகத்தைக்கொன்று கொம்பினைத் தரித்தமையால் அக்கோடெனவும், சோமகன் என்னும் ஒரு அசுரன் வேதங்களைக்கவர்ந்து கடலிலொளிக்க முனிவர்கள் கலங்கி முறையிட்டபோது திருமால் மீனமூர்த்தங்கொண்டு கடலிற்புகுந்து அவனுயிரை வாங்கி யவ்வேதங்களைக்கொண்டுவந்து அம்முனிவர்களுக்குக் கொடுத்துக் கடலினை நிலைபெயரக்கலக்கியகாலத்தில் தேவர்கள் மருண்டு குறையிரப்பச் சிவபெருமான் ஐயனாரையேவி யம்மீனத்தைக் கொல்வித்து விழியெலும்பினை யணிந்தமையால் கண் எனவும், அமுதுதோன்றத் தேவரும் அசுரருங் கடல்கடைந்தகாலையில் மத்தாகிய மந்தரகிரி கடலிலழுந்தியகாலையில் தான் கமடமூர்த்தங்கொண்டு அம்மந்தரகிரியைத்தாங்கி யக்கடல்கடைந்து அமுதுதவிச் செருக்கிக் கடலைக்கலக்கத் தேவர்கள் வேண்டுகோளால் விநாயகக்கடவுளையேவிக் கொல்வித்து ஓட்டினையணிந்தமையால் ஓடு எனவும், தன் பிதாவாகிய இரணியனால் துன்படைந்த பிரகலாதனால் தூணிற்றோன்றி நரசிம்மமூர்த்தங்கொண்டு அவ்விரணியனுயிர் மாய்த்த செருக்கால் தேவர்களை வருத்த, அத்தேவர்கள் வேண்டுகோளால் சரபமூர்த்தங்கொண்ட வீரபத்திரக்கடவுளால் அந்நரசிம்மத்தை மாய்த்துச் சருமத்தையணிதலால் உரியெனவும், சர்வசம்மாரகாலத்திலழிந்த தனது எலும்பினைப்பூண்டமையால் என்பணிந்தானேயெனவும், திரிபுரதகனஞ்செய்தற்குத்தான் அம்பாயமைந்தமையால் தக்கோர்புகழ்கணையாக்கொண்டாய் எனவுந் துணித்தனன் என்றார்.

நக்கன் ஆதலை—

“ நராரியினுரிவைநீத்துநக்கனேயாகி” எனவும்,

எலும்பினைப்பூண்டதை—

“ பரமனிவ்வகையடுந்தொறுமடுந்தொறும்பரமன் - பிரமனாதியோரென்பினைத் தரிக்கும்” எனவும் வருதலைக் கந்தபுராணத்திலும்,

முருகக்கடவுளால் வராகத்தினை மாய்த்ததை—

“ கண்டபொழுதேசினந்துகோலங்காருங்கடலுநடுங்கவார்த்துக்
கொண்டவரைகள்பலமருப்பிற்கோத்துப்புவனங்குலையவீச
அண்டமனைத்தும்புரக்குஞ்செவவேளத்தனையும்பொடியாகநூறி
மண்டமுடுகியெதிர்நடந்துமற்றதன்கோடுபிடுங்கினனே” எனவும்,

[illegible]

“ மாயமகரவலிசிதைத்துவம்மெனச்சாத்தனையேவினனத்
தூயவன்மீன்வலைவீசுவோனாய்த்தொக்கதிரைக்கடல்வாய்ப்புகுந்தான்
நாறுந்துழாயணிமீன்பிடித்துநலியச்சவட்டிவிழியெலும்பு
தேறும்படியிடந்தேகியெங்கள்சின்மயனங்கைவிரலிற்சேர்த்தான்” எனவும்,

கூர்மத்தின் ஓட்டினையணிந்ததை—

“ அந்தப்பொழுதுதொழுதுதேவரமலற்குரைப்பவனையறும்மோர்
தந்தப்பிரான்முகநோக்கியாமைதருக்குமுழுதுமுருக்குகென்னக்
கந்தப்பகன்றைத்தொடையலானுங்கருதும்பரதவனுகிப்போகி
முந்தப்பிடித்தொருகச்சபத்தைமுருக்கித்திருக்கிக்கருக்கினனே” எனவும்,

நரசிம்மத்தின் சருமத்தையணிந்ததை—

“ வயவீரவிப்பொழுதேநரமடங்கல்வெறிமாய்த்து
நயமாரவருதியெனநங்கள்பிரானருள்செய்யச்
சயவீரபத்திரனுஞ்சரபவுருக்கொண்டெழுந்து
புயனேருமுடம்பினரமடங்கலுயிர்பொருதழித்து” எனவும் வரும் மாயூரப்புராணத்திலும்,

திருமால் அம்பானதை—

“ தடநெடுவடவரைசாபமும் - படவரவிறைபகர்நாரியும்
மடல்விரிதுளவினன்வாளியும் - கடவுளர்பிறர்பிறகருவியும்” எனவும் இந்நூலிலும் வருதல் காண்க.

அ, இ என்னுஞ் சுட்டிடைச்சொற்கள் உயர்வு குறித்தலின்மேல் நின்றன. (கக)

மெய்யடியார்சாத்தும்விரைமலர்போலன்பிலாப்
பொய்யடியேனூன்விழியுங்கொண்டருளும்பொன்னடியாய்
செய்யானேநந்திகணத்தவர்போற்சேயேனு
மெய்தியருட்கூத்தினியமுழக்குமபேறளித்தோய்.

(இ-ள்.) மெய்யடியார் சாத்தும் விரைமலர்போல் அன்பு இல்லாத பொய் அடியேன் ஊன் விழியும் கொண்டு அருளும் பொன்னடியாய் - உண்மைவாய்ந்த அடியர் சாத்தும் வாசம்வாய்ந்த தாமரைமலர்போல அன்பு சிறிதுமில்லாத பொய்மைவாய்ந்த அடியேனது ஊனக்கண்ணையுமோர் தாமரைமலர்போலக்கொண்ட பொன்போலுமரிய திருவடியையுடையவனே, செய்யானே நந்திகணத்தவர்போல் சேயேனும் எய்தி அருள் கூத்தின் இயம் முழக்கும் பேறு அளித்தோய் - செந்நிறம் வாய்ந்தவனே நந்திதேவர் முதலிய சிவகணத்தவர்போலத் தூரத்தில் நிற்கும் அடியேனாகிய யானும் அண்மையில் நின்று உனது திருவருட்கூத்துக்கியைய மத்தளமுழக்கும் பலனைத் தந்தருளினவனே.

இந்திரன்முதலியோர் அசுரர்செய்யும் இடருக்காற்றாது குறையிரக்கத் திருமாலருள்கூர்ந்து கவலையொழிமின், நாம் சிவபெருமானிடத்துச் சுதரிசனமென்னுஞ் சக்கரத்தைப்பெற் றுங்களிடர்தவிர்ப்பேனென்று விடைநல்கி இமயமலைச்சாரலையடைந்து ஆயிரந்தாமரைமலர்களைக்கொய்து சிவபூசனைசெய்துவருங்கால், அத்திருமாலன்பினையளந்தறிய அத்தாமரைகளுளொன்றை மறைத்தருளினர், அத்திருமாலொன்று குறைபட, சிவபூசனைக்குக் குறைவுவாராமல் தனது கண்ணிலொன்றை யிடந்தருச்சித்தனனாதலால் ஊன்விழியுங்கொண்டருளும் பொன்னடியாய் என்றனன்.

“ வெண்ணெய்கமழுஞ்செங்கனிவாய்விமலனிமிலேறுயர்த்தருளும்
அண்ணல்பெயராயிரமோதிப்பொற்றாளிணையிலருச்சிக்கும்
தண்ணங்கமலமாயிரத்திலொன்றுகாணான்றளர்வெய்திக்
கண்ணொன்றுரைக்குஞ்செய்யமலர்க்கமலம்பறித்துச்சாத்தினன்” எனக் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (உ0)

ஆலமளக்கரெழுமந்நாளடைக்கலமென்
றோலமிடுமெங்கட்குயிரளித்தசீராளா
காலமேகாலங்கடந்தபெருங்கருணைக்
கோலமேயானந்தக்குன்றேயடிபோற்றி.

(இ-ள்.) ஆலம் அளக்கர் எழும் அ நாள் அடைக்கலம் என்று ஓலம் இடும் எங்கட்கு உயிர் அளித்த சீராளா - விஷங் கடலிலெழுந்த அக்காலத்திலடைக்கலமென்று முறையிடு மெங்களுக்குயிர்தந்தருளிய சீராளனே, காலமே காலம் கடந்த பெரும் கருணை கோலமே ஆனந்தம் குன்றே அடி போற்றி - காலமே அக்காலத்தைக் கடந்துநின்ற பெரிய திருவருட்கோலமே ஆனந்தபருவதமே உன் திருவடிக்கு வந்தனம்.

கடல் கடையும்போது தோன்றிய விஷந்தால் திருமால்முதலியோர் நிறந்திரிந்து கயிலையையடைந்து வேண்ட அவர்க்கு அருளினர் என்பதையும், காலதத்துவம் இத்தன்மைத்து என்பதையு முன்னர்க்கூறினும். காலம் என்றது காலதத்துவத்தை. சுதந்திரனாதலால் காலங்கடந்த பெருங்கருணைக்கோலமே என்றார். (உக)

என்னப்பலபன்னியிரந்தயரும்
பொன்னுக்கிறைமேலருள்பொங்கியெழ
மின்னற்சடையோன்விடைமீதுவரை
யன்னத்தொடுகாட்சியளித்தனனால்.

(இ-ள்.) என்ன பல பன்னி இரந்து அயரும் பொன்னுக்கு இறைமேல் அருள் பொங்கி எழ - என்று பல துதித்துக் குறையிரந்துசோருந் திருமகள் நாயகனாகிய திருமால்மேல் திருவருள் மீதூர்ந்தெழ, மின்னல் சடையோன் விடைமீது வரை அன்னத்தொடு காட்சி அளித்தனன் - மின்னலையொத்த சடையையுடைய இறைவன் இடபவூர்திமேல் இமயமலையிற்றோன்றிய அன்னத்தையொத்த உமையம்மையோடு காட்சிதந்தருளினன்.

வரையன்னம் சிறப்புருவகவணி. (உஉ)

கண்டானிருகண்களிகூரமகிழ்
கொண்டான்வறியோன்கொழிதெள்ளமுத
முண்டானெனவோடினனாடினனால்
வண்டாமரைமாதுமணாளனரோ.

(இ-ள்.) வண் தாமரை மாது மணாளன் - வளப்பம்வாய்ந்த தாமரைமலரில் வசிக்கும் இலக்குமிநாயகனாகிய திருமால், இருகண் களிகூர கண்டான் மகிழ் கொண்டான் - இருகண்களுங் களிகூரத்தரிசித்து மகிழ்ச்சிகொண்டனன், கொழி தெள் அமுதம் வறியோன் உண்டான் என்ன ஓடினன் ஆடினன் - சுவைகனிந்த தெள்ளிய அமுதத்தை வறியனொருவன் பருகினாற்போல வோடியாடினன்.

கண்டான், ஓடினன் முற்றெச்சங்கள். ஏனையோர்க்குக் கிட்டுதற்கரிய அமிர்தம் வறியனொருவன் தன் கைப்பட்டுப்பருகில் தன்வசமழிந்து பரவசப்பட்டு நிற்றல்போலச் சிவபெருமான் திருவருள் வசப்பட்டுத் தன்வசமழிந்து நிற்றலால் வறியோன் கொழிதெள்ளமுதம் - உண்டானெனவோடினனாடினன் என்றார்.

திருவருள் வசப்பட்டோர் நிலையை—

" பித்தரின்மயங்கிமத்தரின்மதித்து - நாட்டவர்மருளவுங்கேட்டவர்வியப்பவும்- கடக்களிறேற்றாத்தடப்பெருமதத்தின்-ஆற்றேனாகவவயஞ்சுவைதரு- கோற்றேன்கொண்டுசெய்தனன்" எனவரும் உண்மைத்திருவாக்கால் அறிக. (உரு)

அதுகண்டுமைபாலருளுக்குதவி
விதுவொன்றுபொலஞ்சடைவிண்ணவனோர்
முதிருங்குறுமூரன்முகத்தலர
மதுசூதனகேட்டிவரந்தருகேம்.

(இ-ள்.) விது ஒன்று பொலம் சடை விண்ணவன் அதுகண்டு உமைபால் அருள் நோக்கு உதவி - இளஞ்சந்திரனையணிந்த சடாபாரத்தையுடைய இறைவன் அத்திருமாலின் முறுகிய அன்பினைக்கண்டு உமாதேவிபால் அருள்நோக்கஞ்செய்து, ஏர் முதிரும் குறு மூரல் முகத்து அலர - அழகுமுதிர்ந்த புன்னகை திருமுகத்துத்தோன்ற, மதுசூதன கேட்டி வரம் தருகேம் - மதுசூதனனே வேண்டியவரத்தைக்கேள் நாம் தாராநிற்போம்.

உமையம்மையுந் திருமாலும் ஒருகூறுதலால் உமைபாலருளுக்குதவி என்றார். மதுசூதனன் மதுவென்னும் அசுரனைக்கொன்ற காரணத்தால் திருமாலுக்குவந்த காரணப்பெயர். (உ௪)

நரர்வானவர்தம்மினுநாரணநீ
பெருவான்வலிபெற்றுனையெம்மருளாற்
பொருபோரினுளெம்மினும்வென்றிபுனை
வரமெம்மிடைமுன்பெறுமாதவனே.

(இ-ள்.) எம் அருளால் பொருபோரினுள் எம்மினும் வென்றி புனை வரம் எம்மிடை முன்பெறும் மாதவனே-எமது கருணையாற் பகைவரொடும் போர்செய்யும் போரினுள் எம்மைப்பார்க்கிலும் வெற்றி மேற்கொண்ட வரத்தை யெம்மிடத்து முன்பெற்ற திருமாலே, நாரண நீ-நாரணனே நீ, நரர் வானவர் தம்மினும் பெருவான் வலிபெற்றுனை-(அதனால்) நரருந் தேவருமாகிய இவர்களுள்ளு மிக்க வலிமையைப் பெற்றுள்ளாய்.

பாரதத்தில் சாந்தியானுசாதபருவத்தில் வீஷ்மரிடத்தில் தருமமுதலியவற்றைக் கேட்கச்சென்ற தருமமூர்த்தி அவரால் தருமமுதலிய யாவுங்கேட்டு முடிந்தபின் சிவபெருமான் மான்மியத்தையுஞ் சொல்லியருள்கவெனக்குறையிரப்ப, அவ்வீஷ்மர் கூறுதற்கு நானருகனல்லன் சிவபெருமான்கூறு கண்ணமூர்த்தியாதலால் அவர்பாற்கேட்டுத் தெளிகவென்றபோது, தருமபுத்திரன் வேண்டுகோளுக்கு இரங்கிக் கூறத்தொடங்கிய கண்ணமூர்த்தி; ஓர்கால் பதினாயிரந்தேவவருடம் சிவபெருமானைநோக்கி நாம் தவஞ்செய்தகாலத்தில் சிவபெருமான் காட்சிதந்தருள, அசுரர், இராக்கதர்கள் நரராகவும் தேவராகவும் பிறந்து தேவரீர் அருட்பிரசாதத்தைப்பெற்று நரரையுந் தேவரையும் வருத்துவார்களே, அவர்களைத் தேவரீர் கொல்லீர், அடியேன் பலமூர்த்தங்கொண்டு அவர்களைக்கொன்று நரருக்குந் தேவர்க்கும் நன்மைசெய்யவேண்டும் வன்மை கொடுத்தருளவேண்டுமெனக் குறையிரப்ப,சிவபெருமான் எம்மினு மிக்க வலிமைபெறுவாயென வரந்தந்தருளினனெனக் கூறினமையை வடமொழியில் காஞ்சிமான்மியத்தில் மேற்கோளாகக் கூறியதைத் தாமும் கூறுவாராதலால் பொருபோரினுளெம்மினும்வென்றிபுனை-வரமெம்மிடைமுன்பெறுமாதவனேயெனவும், நீ தவஞ்செய்தது இன்னதற்கெனப் புலப்பட்டமையால் நரர்வானவர்தம்மினுநாரணநீ-பெருவான்வலிபெற்றுனையெனவுங் கூறினார். ()

எனவங்கருள்செய்தலுமிந்திரைகோன்
மனமொன்றவணங்கிவணங்கியெழூஉந்
துனதம்புயபாதயுகத்தடியேற்
கனகம்பெறுபத்தியளித்தருளாய்.

(இ-ள்.) என்ன அங்கு அருள் செய்தலும் - என்று அங்குத் திருவருள் செய்ய இந்திரை கோன் மனம் ஒன்ற வணங்கி வணங்கி எழுந்து - இலக்குமிக்குத் தலைவனாகி ய திருமால் மனம்பொருந்த வணங்கி வணங்கியெழுந்து, உனது அம்புய பாத யுகத்து அடியேற்கு அனகம் பெறுபத்தி அளித்தருளாய் - உனது தாமரைபோன்ற இரண்டு திருவடிகளின்கீழ் அடியேனாகிய எனக்குக் குற்றமில்லாத அன்பினைத் தந்தருளாய்.

மனத்தின் வழிப்பட்டது காயம் ஆகலால் மனமொன்ற வணங்கி வணங்கியெ னவும், பத்தியால் பாசநீக்கம் பெறுதலில் காரணத்திற்கும் காரியத்திற்கும் ஒற்றுமை யுண்மையால் காரணத்தின்மேல் காரியத்தையேற்றி அனகம்பெறுபத்தியெனவுங் கூறி னார்.

"பத்திசெய்யடியரைப்பரம்பரத்துய்ப்பவன்" என உண்மைத்திருவாசகத்தில் வருதல்காண்க. வணங்கிவணங்கி மகிழ்ச்சிப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (உசு)

வரதாமரையோனொடுமற்றுலகும
வரதாதரல்வேட்டமனத்தனன்யான்
வரதாவரமீதுவழங்குதிநீ
வரதாவெனவோதிவழுத்தினனால்.

(இ-ள்.) வரதா யான் வரம் தாமரையோனொடு மற்று உலகும் தரல் வேட்ட மனத்தினன் - வரதனே நான் நல்ல தாமரையில் வசிக்கும் பிரமனோடு மற்றெல்லாவு லகங்களையுஞ் சிருட்டிக்கவிரும்பிய மனத்தையுடையவனாயினேன், வரதா நீ ஈது வரம் வழங்குதி - வரதனே நீ யிந்த வரத்தை யருளுவாய், வரதா என்ன ஓதி வழுத்தினன் - வரதனே யென்று கூறித்துதித்தான்.

மற்று பிறிது பொருளில்வந்த இடைச்சொல். (உஎ)

நின்னாசைநிரம்பவரங்களெலா
மின்னேகொளநல்கினமேரிழைமா
மன்னாபலகால்வரதாவெனநீ
சொன்னாயெமையன்புதுளும்புறவே.

(இ-ள்.) ஏர் இழை மா மன்னா நின் ஆசை நிரம்ப வரங்கள் எல்லாம் இன்னே கொள்ள நல்கினம் - அழகிய ஆபரணமணிந்த இலக்குமிக்குத்தலைவனே உனது விருப் பம் நிரம்ப வரங்களெல்லாம் இப்போதே தந்தோம், எமை அன்பு துளும்புற வரதா என்ன நீ பலகால் சொன்னாய்- எம்மை யன்பு ததும்பி வழியப் பலகாலும் வரதா வர தாவென்று புகழ்ந்து கூறினாய்.

நல்கினம் துணிவுபற்றிவந்த காலவழுவமைதி. (உஅ)

வாசத்துளவோயினிநீவரத
ராசப்பெயராற்பொலிவாயெமதாள்
பூசித்தனைபுண்டரிகங்களினாற்
பேசிற்பதுமாக்கனெனப்பெறுவாய்.

(இ-ள்.) பேசில் - ஆராயில், வாசம் துளவோய் இனி நீ வரதராசன் பெயரா ல் பொலிவாய் - வாசமிக்க துளபமாலையையணிந்தவனே இனி நீ வரதராசனென்னும் பெயரால் விளங்குவாய், புண்டரிகங்களினால் எம தாள் பூசித்தனை - தாமரைகளால் எ மது திருவடிகளைப்பூசித்தாய், பதுமாக்கன் என்ன பெறுவாய் - (அக்காரணத்தால்) ப துமாக்கனென்னும் ஓர்பெயரும் பெறுவாய்.




(A.) புண்ணியகோடீசப்படலம்.

"உண்டற்குரியவல்லாப்பொருளை - உண்டதுபோலக்கூறலுமரபே" என்ற சூத்திரத்தின் ஆக்கவும்மையால் பேசில் என்றதற்கு ஆராயின் எனப் பிறபொருள் கொண்டாம். தன்னடியவரை மேம்படுத்தும் பேரருளாளனாதலால் இனிசீவரத-ராசப் பெயராற்பொலிவாய் எனவும், புண்டரிகங்களினாற் பூசித்தலை பதுமாக்கனெனப்பெ றுவாய் எனவுங்கூறினார்.

அடியரை மேம்படுத்துவோன் என்பதை—

"பூமேலயனோடுமாலும்புகலரிதெனன்
றேமாறிநிற்கவடியேனிறுமாக்க
நாய்மேற்றவிசிட்டுநன்றாப்பொருட்படுத்த
தீமேனியானுக்கேசென்றூதாய்கோத்தும்பீ" எனவரும் உண்மைத்திரு வாக்கால் உணர்க. (உக)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

என்றருள்புரிந்தவள்ளலிணையடிவணங்கிமாயோன்
வென்றிவெள்விடையாயின்னும்விண்ணப்பமொன்றுகேட்டி
நின்றிருப்பாதபூசைநித்தலுமடியேனாற்ற
நன்றுமிவ்வத்தியேவற்பணிநயந்தொழுகிற்றன்றே.

(இ-ள்.) என்று அருள்புரிந்த வள்ளல் இணை அடி மாயோன் வணங்கி - என்று திருவருள்செய்த இறைவனது இரண்டுதிருவடிகளையுந் திருமால் வணங்கி, வென்றி வெள் விடையாய் இன்னும் விண்ணப்பம் ஒன்று கேட்டி - வெற்றிவாய்ந்த வெள்ளிய இடபவாகனத்தையுடையவனே இன்னமும் அடியேன் விண்ணப்பமொன்றைக்கேளா ய், நின் திரு பாதம் பூசை நித்தலும் அடியேன் ஆற்ற நன்றும் இ அத்தி ஏவல் பணி நய ந்து ஒழுகிற்று - உனது திருவடிப்பூசனையை நாள்தோறும் அடியேன் செய்துவர மிக வும் இந்தக் கசேந்திரன் யான் ஏவும் பணியைச் சிரமேற்கொண்டு நடந்தது.

நான் ஏவியபணி நின்றிருவடிப்பூசனையை முட்டின்று முடித்தற்குக் கருவியாத லால் அதுவும் நின்பணிசெய்தது என்பான் நித்தலுமாற்ற-நன்றுமிவ்வத்தியேவற்பணி நயந்தொழுகிற்று என்றான். (௩0)

என்னிடையன்புசாலப்பூண்டதாலிதன்பேர்தன்னா
லுன்னெதிரடியேன்வாழுமுயர்வரைக்குடுமியோங்கன்
மன்னுசீருலகினத்திகிரியெனவழங்கல்வேண்டுங்
கன்னலஞ்சிலைவேளாகங்கனல்விழிக்குதவவல்லோய்.

(இ-ள்) கன்னல் அம் சிலை வேள் ஆகம் கனல் விழிக்கு உதவ வல்லோய்-அழ கிய கருப்புவில்லேந்திய மன்மதனது சரீரத்தை நெற்றிக்கண்ணுக் குணவாகத்தரவல்ல வனே, என் இடை அன்பு சால பூண்டது - என்னிடத்தில் அன்பினை மிகவும் பூண்டது, இதன் பேர் தன்னால் உன் எதிர் அடியேன் வாழும் உயர் வரை குடுமி ஓங்கல் மன்னு சீர் உலகின் அத்திகிரி என்ன வழங்கல் வேண்டும் - (அதனால்) இந்தக் கசேந்திரன்பே ரால் உனக்கெதிரே யடியேன் வாழும் உயர்ந்த மூங்கில்செறிந்த சிகரத்தையுடைய இம்மலை நிலைபெற்ற சிறப்பினையுடைய இந்நிலவுலகில் அத்திகிரியெனப் பெயர்பெற்று வழங்கவேண்டும்.

நின்னிடத்தன்றி யென்னிடத்தும் அன்புபூண்டதென்பான் என்னிடையன்பு சாலப்பூண்டது எனவும், இதன்பெயரால் நான் வசிக்கு மிம்மலையென்றும் வழங்கவே

ண்டும் என்பான் தேற்றப்பொருளில்வந்த தொழிற்பெயர்தந்து வழங்கல் வேண்டும் எனவுங்கூறினன். (௬௧)

புண்ணியதீர்த்தப்பொய்கைப்புனல்படிந்திங்குளார்செய்
புண்ணியமொன்றுகோடிமடங்குறப்புரிந்துமற்றிப்
புண்ணியகோடிவைப்பிலுயிர்க்கெலாங்கருணைபூத்துப்
புண்ணியகோடிநாதவிலிங்கத்திற்பொலிகநாளும்.

(இ-ள்.) புண்ணிய தீர்த்தம் பொய்கை புனல் படிந்து இங்கு உள்ளார் செய் புண்ணியம் ஒன்று கோடி மடங்கு உற புரிந்து - புண்ணியதீர்த்தமாகிய இப்பொய்கையிலுள்ள நீரில் மூழ்கி இங்குள்ளவர் செய்யும் ஒருபுண்ணியம் கோடிபங்காகச்செய்து, இ புண்ணிய கோடி வைப்பில் உயிர்க்கு எல்லாம் கருணை பூத்து புண்ணிய கோடி நாத இலிங்கத்தில் நாளும் பொலிக - இந்தப்புண்ணியகோடியாகிய திருப்பதியில் உயிர்களுக்கெல்லாந் திருவருள்செய்து புண்ணியகோடீசரென்னுந் திருப்பெயர்வாய்ந்த இச்சிவலிங்கத்தில் எந்நாளும் விளங்கக்கடவாய்.

புண்ணியகோடிதீர்த்தம், புண்ணியகோடீசம் என்னும் இப்பெயர்கள் தீர்த்தத்தில் மூழ்கினோரும், அத்தலத்திற்சென்றோரும் செய்யும் புண்ணியம் ஒன்று பலவாய்ப் பெருகுதலும், அத்தலத்தில் தான் தாபித்துப்பூசித்தலால் சிவலிங்கப்பெருமான் புண்ணியகோடீசன் எனப் பெயர்பெறுதலும் தன் வேண்டுகோளால் வந்தன என்பதுதோன்ற இவ்வாறு வேண்டினன். இன்று அத்தீர்த்தத்திற்குப் பொற்றாமரைதீர்த்தமென வழங்குகின்றது. (௬௨)

அடியனேன்றண்டாதென்றுநின்னெதிரமர்ந்துபோற்றக்
கடிகெழுகற்பத்தண்டார்க்கடவுளர்முனிவர்யார்க்கு
முடிவறுவரங்கணல்கிமுழுதருள்சுரந்துவாழி
கொடியவெஞ்சீற்றத்துப்பிற்கூற்றுயிர்ப்பருகுந்தாளோய்.

(இ-ள்.) கொடிய வெம் சீற்றம் துப்பில் கூற்று உயிர் பருகும் தாளோய் - கொடிய கோபவன்மையையுடைய இயமனது உயிரைப்பருகுந் திருவடியையுடையாய், அடியனேன் தண்டாது என்றும் நின் எதிர் அமர்ந்து போற்ற - அடியனேனாகிய யான் எப்பொழுதும் நீங்காது உனக்கெதிரே தங்கித்துதிக்க, கடி கெழு கற்பம் தண் தார் கடவுளர் முனிவர் யார்க்கும் முடிவு அறு வரங்கள் நல்கி முழுது அருள் சுரந்து வாழி - வாசமிக்க கற்பகமலராற்றொடுத்த தண்ணிய மாலையையணிந்த தேவர்கள் முனிவர்களெல்லோருக்கும் அளவில்லாத வரங்கள் முழுதுந் தந்தருளித் திருவருள் சுரந்து வாழக்கடவாய்.

வரதராசப்பெருமானுக்குப் புண்ணியகோடீசப்பெருமான் ஆன்மார்த்தம் ஆதலால் அடியனேன்றண்டாதென்று நின்னெதிரமர்ந்துபோற்ற எனவும், தான் தேவர்முதலியோர்க்கு அருளுதல் சிவபெருமான் திருவருளாலாதலால் கடவுளர் முனிவர்யார்க்கும் - முடிவறுவரங்கணல்கிமுழுதருள்சுரந்துவாழி எனக் குறையிரந்தனனெனவுங்கூறினர்.

சிவபெருமானர் அருளுதலை—

“ யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியாங்கே
மாதொருபாகனர்தாம்வருவர்” எனச் சிவஞானசித்தியாரில் வருதல்காண்க.

பொருள் ஐயந் தீர்த்தற்பொருட்டு இயல்பாம் வழிவல்லெழுத்துமிக்கது 'இயற்கைமருங்கின் மிகற்கைதோன்றலும்” என்ற சிறப்புவிதியால். இதனை யுணராதார் பிழையெனக்கருதிக் கூற்றுயிர்பருகுந்தாளோய்” எனப் பிழைபடத்திருத்தினர். (௬௩)

அண்ணலேயென்றுவேண்டவவற்கவையருளியெங்கோன்
புண்ணியகோடிநாதவிலிங்கத்துட்புக்கானந்நாட்
கண்ணுதற்பரனைமாயன்காருருக்கொண்டுதாங்கும்
வண்மையாற்கற்பமேகவாகனப்பெயர்பூண்டன்றே.

(இ-ள்.) அண்ணலே என்று வேண்ட - இறைவனேயென்று குறையிரக்க, எங்கோன் அவற்கு அவை அருளி - எமது இறைவன் அத்திருமாலுக்கு அவற்றைத் தந்தருளி, புண்ணிய கோடி நாத இலிங்கத்துள் புக்கான் - புண்ணியகோடீசனென்னுஞ் சிவலிங்கத்திற் கரந்தனன், அ நாள் கண்ணுதல் பரனை மாயன் கார் உரு கொண்டு தாங்கும் வண்மையால் - அக்காலத்திற் சிவபெருமானைத் திருமால் மேகவடிவுகொண்டு தாங்குந் தன்மையால், கற்பம் மேகவாகனப்பெயர் பூண்டன்று - அந்தக்கற்பம் மேகவாகன கற்பமென்று பெயர்பூண்டது.

"நின்னுளைசநிரம்பவரங்களெலாம் - இன்னேகொளநல்கினம்" என முன்னருளியதால் திருமாலுக்கு வேண்டிய வரங்களையெல்லாம் நல்கினர் என்பார் அண்ணலேயென்று வேண்டவவற்கவையருளியெங்கோன் - புண்ணியகோடிநாதவிலிங்கத்துட்புக்கான் எனவும், மேகவாகனகற்பம் எனப் பிரமன் ஓர்நாளுக்குப் பெயர்வந்த காரணங்கூறுவார் கண்ணுதற்பரனைமாயன் காருருக்கொண்டுதாங்கும் - வண்மையாற்கற்பமேகவாகனப்பெயர்பூண்டன்றே எனவுங்கூறினார். (௬௪)

புண்ணியகோடீசப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௫௬௫.

## வலம்புரிவிநாயகப்படலம்.

கலிவிருத்தம்.

நலம்புரிபுண்ணியகோடிநாதர்தம்
புலம்புரிபெருமையைப்புகன்றுளேமினி
நிலம்புரிதவத்தினீரத்திநீள்வரை
வலம்புரிவிநாயகன்மாட்சிசெப்புவாம்.

(இ-ள்.) நலம்புரி புண்ணிய கோடி நாதர் தம் புலம் புரி பெருமையை புகன்றுளேம் - ஆன்மாக்களுக்கின்பஞ்செய்யும் புண்ணியகோடீசரது (அடியவர்களுக்கு) ஞானத்தை வளர்க்கு மான்மியத்தைக் கூறினேம், இனி நிலம் புரி தவத்தினீர் அத்தி நீள் வரை வலம்புரி விநாயகன் மாட்சி செப்புவாம் - இனி நிலவுலகிற்செய்யுந் தவத்தையுடையீர் உயர்ந்த அத்திகிரியிலெழுந்தருளிய வலம்புரிவிநாயகரது பெருமையைக்கூறுவாம்.

தவமுதலிய சாதனங்களை யனுட்டித்தற்குரிய கருமபூமி நிலவுலகு ஆதலால் நிலம்புரிதவத்தினீர் என்றார். (௧)

முன்னைநாளயனரிமுனிவர்வானவர்
கின்னரரோரிடைக்கெழுமித்தங்களுட்
பன்னுதலுற்றனர்படிறர்செய்வினை
யந்நிலையூறின்றியழகின்முற்றுமால்.

(இ-ள்.) முன்னை நாள் அயன் அரி முனிவர் வானவர் கின்னரர் ஓரிடை நெருழ மி - முன்னாள் அயனுந் திருமாலு முனிவர்களுந் தேவர்களுங் கின்னரர்களு மோரிட த்தில் நெருங்கி, தங்களுள் பன்னுதலுற்றனர் படிறர் செய்வினை அநிலை யூறு இன்றி அழகின் முற்றும் - தங்களுக்குள்ளே யொருவரோடொருவர் ஆராய்வாராகி வஞ்சனை யையுடைய அசுரர் செய்யத்தொடங்குங்காரியங்கள் அப்பொழுதே யிடையூறின்றி யழ கிதாக முடியாநிற்கும்.

நாம் தொடங்குங்காரிய மிடையூறு படுகின்றது என்பதைப் படிறர்செய்வினை- அந்நிலையூறின்றி யழகினமுற்றும் என்ற உபலக்கணத்தாற்கொள்க. பன்னுதலுற்றனர் மு ற்றெச்சம். (உ)

அங்கவர்தமக்கிடையூற்றையாக்கவு
நங்களுக்கூறு நீர்த்தினிதுநல்கவு
மிங்கொருகடவுளைப்பெறுதற்கெம்பிரான்
பங்கயத்திருவடிபழிச்சிவேண்டுவாம.

(இ-ள்.) அங்கு அவர் தமக்கு இடையூற்றை ஆக்கவும் நங்களுக்கு ஊறு நீர்த் து இனிது நல்கவும் இங்கு ஒரு கடவுளை பெறுதற்கு - அவ்விடத்தி லவ்வசுரர்செய்யுங் காரியஙகளுக்கு இடையூற்றைச்செய்யவும் நாம் செய்யுங் காரியங்களுக் கிடையூற்றை யொழித்தினிதாக அருள்செய்யவும் இவ்விடத்தி லொருகடவுளைப்பெற, எமபிரான் ப ங்கயம் திருவடி பழிச்சி வேண்டுவாம் - எமது சிவபெருமானது திருவடியைத்துதித்து வேண்டுவாம்.

ஊறு உறுதல்மேல் நிற்றலால் முதனிலை திரிந்ததொழிற்பெயர். (ங)

என்றுளந்துணிந்தனரெய்திமந்தரக்
குன்றமீதெம்பிரான்கோயிலுள்ளுறாச்
சென்றனர்தொழுதனா செவ்விநோக்கிமுன்
னின்றனர்மறைகளாற்றுதிநிகழ்ந்தினார்.

(இ-ள்.) என்று உள்ளம் துணிந்தனர் எய்தி மந்தரம் குன்றம் மீது எம்பிரான் கோயில் உள் உறா சென்றனர் தொழுதனர் - என்று மனந்துணிந்தடைந்து மந்தரமலை மேலெழுந்தருளிய எமது பெருமான் றிருக்கோயிலில் நெருங்கிச்சென்று தொழுது, செவ்வி நோக்கி முன் நின்றனா மறைகளால் துதி நிகழ்ந்தினார் - அமயம் நோக்கித் தி ருமுன்னின்று வேதமொழிகளாற் றுதிக்கத்தொடங்கினார்கள்.

சென்றனர், தொழுதனர், நின்றனர் முற்றெச்சங்கள். மந்தரமும் ஓர் கயிலாயம் ஆதலால் மந்தரக்குன்றம் என்றார். பொருந்தச்சென்றனர் எனப் பொருள்கொண்டு உறா என்னும் பாடம் பிழையென்று கருதி உற எனப் பிழைபடத்திருத்தினவர், செய் யாவென்னும் வாய்பாட்டு உறா என்னும் வினையெச்சம் செயவெனெச்சமாய்த்திரிந்து அப்பொருளும் படுமேயென்பது நோக்காமை "சொற்றிரியினும்பொருடிரியாவினைக்கு றை" என்னும் நன்னூற்சூத்திரம் இன்னதிசையிவிருப்பதென அறியாமையே காரண ம்போலும். இங்கு நெருங்கியென்பது பொருள். (ச)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

சற்றிதுதிருவுளஞ்செய்துகேட்டருளுதிதலைவனேவெங்
குற்றமேதுறுமனத்தானவக்கொடியவர்தொடங்குசெய்கை
முற்றுறாதூறுபட்டழியவுமெமமனோர்முயன்றசெய்கை
யிற்றுறாதூறுதீர்ந்தாகவுங்கருணைசெய்யெனவிரந்தார்.

(இ-ள்.) தலைவனே சற்று இது திரு உளம் செய்து கேட்டருளுதி - இறைவனே சிறிது இதனைத் திருவுளஞ்செய்து கேட்டருள்வாய், வெம் குற்றமே துறு மனம் தானவர் கொடியவர் தொடங்கு செய்கை முற்றுஉறாது ஊறு பட்டு அழியவும் - கொடியகுற்றமே நெருங்கிய மனத்தையுடைய கொடிய அசுரர்கள்தொடங்குஞ் செய்கைமுடியாது இடையூறுபட்டழியவும், எம் அன்னோர் முயன்ற செய்கை இற்று உறாது ஊறு தீர்ந்து ஆகவும் கருணை செய் என்ன இரந்தார் - எம்போலியர் செய்தசெய்கைகெடாது இடையூறுதீர்ந்து பல்கவும் திருவருள்செய்யாயென்று குறையிரந்தார்கள்.

தங்கள்கருமங்களுக்கு ஊறுசெய்தலே அவர் உட்கோளாதலால் வெங்குற்றமே துறுமனத்தானவக் கொடியவர் எனவும், அவர்கள் தொடங்குஞ்செய்கை நாங்கள் தொடங்குஞ்செய்கை முற்றுறாமைக்கே ஆதலால் தொடங்குசெய்கை முற்றுறாதுறுபட்டழியவும் வேண்டினார் எனவுங் கூறினார். (ரு)

அம்மொழிசெவிமடுத்தருள்புரிந்தகிலமுமுய்யுமாற்றா
லிம்முறைபுரிதுமென்றவர்க்கெலாம்விடையளித்தெழுந்துபோந்து
கொம்மைவெள்விடையினான்சித்திரச்சாலையைக்குறுகியங்கட்
செம்மைசால்சித்திரமியாவையுநோக்கினான்றேவியோடும்.

(இ-ள்.) அ மொழி செவி மடுத்து அருள் புரிந்து அகிலமும் உய்யும் ஆற்றால் இ முறை புரிதும் என்று அவர்க்கு எல்லாம் விடை அளித்து எழுந்து போந்து - அந்த வார்த்தையைத் திருக்காதிற்கேட்டுத் திருவருள்செய்து எல்லா உலகங்களும் பிழைக்கும் வகையால் இவ்வாறு செய்வோமென் றவர்களுக்கெல்லாம் விடைதந்தெழுந்து சென்றருளி, கொம்மை வெள் விடையினான் சித்திரம் சாலையை குறுகி - இளமைதங்கிய வெள்ளிய இடபவூர்தியை யுடைய பெருமான் சித்திரச்சாலையையடைந்து, அங்கண் செம்மை சால் சித்திரம் யாவையும் தேவியோடும் நோக்கினான் - அவ்விடத்து அழகு நிறைந்த சித்திரம்யாவையும் உமையம்மையோடும் பார்த்தருளினர்.

பேரருளுடையராதலால் உங்களுக்கன்றி யெல்லாவுயிர்களுக்கும் அருள்செய்வோம் என்பார் அகிலமுமுய்யுமாற்றால் இம்முறைபுரிதும் என்றருளினர் என்றார். (சு)

வானகத்தச்சனாலகிலமுஞ்சித்திரித்தெழுதிவாய்ந்த
வூனமில்சாலையுளெழுதுமாமனுக்களோடுபமனுக்க
ளானவெல்லாமுமைக்கெம்பிரான்காட்டுபோதவற்றுளாதித்
தானமாரிருவகைப்பிரணவமனுக்களைத்தையல்கண்டாள்.

(இ-ள்.) வானகம் தச்சனால் அகிலமும் சித்திரித்து எழுதி வாய்ந்த ஊனம் இல் சாலை உள் எழுது மா மனுக்களோடு உப மனுக்கள் ஆன எல்லாம் - விண்ணுலகிலுள்ள தச்சனால் எல்லாவற்றை யுஞ்சித்திரித்தெழுதப்பட்ட குற்றமில்லாத சித்திரச்சாலையிலெழுதிய சத்தகோடி மஹாமந்திரங்களோடு சத்தகோடி உபமந்திரங்களுமாகிய எல்லாவற்றையும், உமைக்கு எம் பிரான் காட்டு போது அவற்றுள் ஆதி தானம் ஆர் இருவகை பிரணவ மனுக்களை தையல் கண்டாள் - உமையம்மைக்கு எமதுபெருமான் காட்டியருளுங்காலையில் அத்திருமந்திரங்களுக்கு முதலாயுள்ள தானத்திற் பொருந்திய பரம் அபரமென்னும் இருவகைப்பிரணவ மனுக்களை யுமையம்மை பார்த்தருளினாள்.

எழுதிவாய்ந்த ஒரு சொன்னீர்மையவாய்ப் பெயரொச்சப்பொருள் மேல் நின்றன. பிரணவமொன்றே வாச்சியரூபமாய் நிற்கும்போது பரப்பிரணவம் எனவும், வாசகரூபமாய் நிற்கும்போது அபரப்பிரணவமெனவும் இருவகைப்படுதலால் இருவகைப்பிரணவமனுக்களென்றார்.

" பரமென்றுமபரமென்றும்பிரணவமீர்வகையாகும்பரம்யாதெனில்
வரமொன்றுசிதானந்தசொரூபமாகியசிவமே " எனவும்
" மருவபரப்பிரணவமென்பதுமாயாசொரூபமாய்வயங்குசத்த
உருவமே " எனவும் சூதசங்கிதையில் வருதல்காண்க. (எ)

யெனனச்

சிவபிரான்றேவியைத்தழீஇயினன்கூறுவான்செல்விகேட்டி
தவலிலிப்பிரணவநமதுகாண்மூவரைத்தந்ததாகு
நவிலின்மற்றதுநினதாகுமுச்சத்தியைநல்குமூலம்.

(இ-ள்.) உவகையால் பல் பல் கால் நோக்கி இங்கு இவை எவை உரைத்தி என்ன - மகிழ்ச்சியாற் பலகாலும்நோக்கி யிவ்விடத்தி லிவைகளெவை அவற்றைக்கூறுவாயென்று வினவியருள, சிவபிரான் தேவியை தழீஇனன் கூறுவான் - இறைவன் உமையம்மையைத் தழுவிக் கூறுகின்றனர், செல்வி கேட்டி - உமையே கேளாய், தவல் இல் இ பிரணவம் நமது காண் மூவரை தந்தது ஆகும் - கெடுதலில்லாத இப்பரப்பிரணவம் நமது திருவுருவம் இது பிரமன்முதலிய மூவரைத்தந்த மூலமந்திரமாம், நவிலின் மற்றது நினது ஆகும் முச்சத்தியை நல்கும் மூலம் - சொல்லுமிடத்து மற்ற அந்த அபரப்பிரணவம் நினது திருவுருவமாகும் இது இச்சாசத்திமுதலிய மூன்று சத்திகளைத்தரு மூலமந்திரம்.

மூலம் என்பதைக் கடைநிலைத்தீவக வணியாகக்கொண்டு முன்னுங்கூட்டுக. முச்சத்தி என்றது இச்சாஞானக்கிரியைகளை. வாசகம் வாச்சியமாகிய சொல்லும்பொருளும் சத்திசிவமாதலால் வாசகப்பிரணவத்தைச் சத்தியெனவும், வாச்சியப்பிரணவத்தைத்தாமெனவுங் கூறுவார் இப்பிரணவ நமதுகாண் எனவும், மற்றது நினதாகுமெனவும்அருளினர். (அ)

மும்மறைமுதலெலாமீன்றிடுமிருமுதுகுரவரான
விம்மனுக்கரியொடும்பிடியெனத்தோன்றலினிவைகளாகி
யம்மநாம்புணர்துமென்றவ்வுருக்கொண்டனராடுகாலைச்
சும்மைநீருலகெலாமுய்யவந்துதித்தனன்றோன்றலன்றே.

(இ-ள்.) மு மறை முதல் எல்லாம் ஈன்றிடும் இரு முது குரவர் ஆன . மூன்றுவேதங்கள்முதலிய எல்லாவற்றையும்பெற்ற தாய்தந்தையராகிய வங்கள், கரி யொடும் பிடி என்ன தோன்றலின் இவைகள் நாம் ஆகி அம்ம நாம் புணர்தும் என்று அ உரு கொண்டனர் ஆடு காலை - ஆண்யானை பெட்டையானைபோலத்தோன்றுதலால் இந்தயானைகள் நாமாகிவியக்கும்படி கலப்போமென்று அத்திருவுருக்கொண்டு விளையாடுங்காலத்தில், தோன்றல் சும்மை நீர் உலகு எல்லாம் உய்ய வந்து உதித்தனன் - மூத்தபிள்ளையார் கடல்சூழு முலகமெல்லாம் பிழைக்கும்படிவந்து தோன்றினர்.

மூன்றுவேதங்களாவன இருக்கு, எசுர், சாமம். முதலெலாம் என்றது வழிநூல், சார்புநூல், பக்கநூல்களை. இவை முன்னர்க்காண்க. பிரணவம் குஞ்சராகாரமாதலால் கரியொடும் பிடியெனத்தோன்றலின் என்றார். அம்ம வியப்புப்பொருண்மேல் நின்ற இடைச்சொல், ஒடு வும் உம் மும் எண்ணிடைச்சொற்கள். கொண்டனர் முற்றெச்சம்.க

கயமு

வயமுறமடித்தலத்திருதது்மயககலனபலவணிந்துவாழ்த்த

வியல்புடைப்புதல்வனுமுவகையானெழுந்தெதிர்நடித்தல்செய்தா
னயனமாக்களிகொளநோக்கினளுலகெலாமீன்றநங்கை.

(இ-ள்.) கய முகம் பிள்ளையை இருவரும் காதலான் எடுத்து அணைத்து வயம் உற மடித்தலத்து இருத்தி - அம்மூத்தபிள்ளையாரை யிருவரும் விருப்பத்தோடெடுத்த ணைத்து வெற்றிமிகத் திருமடித்தலத்திருத்தி, மெய் கலன் பல அணிந்து வாழ்த்த - சுப மாகிய பல ஆபரணங்களையுமணிந்து ஆசீர்வதிக்க, இயல்பு உடைய புதல்வனும் உவகை யான் எழுந்து எதிர் நடித்தல் செய்தான் - அவ்வியல்புவாய்ந்த அந்த மூத்தபிள்ளையா ரும் விருப்பத்தோடெழுந்து தாய்தந்தையர் எதிரே நடனஞ்செய்தருளினர், உலகு எல் லாம் ஈன்ற நங்கை நயனம் மா களிகொள நோக்கினள் - எல்லா உலகங்களையும்பெற்ற ருளிய உமையம்மை தமது கண்கள் மிக்ககளிகூரப் பார்த்தருளினள்.

தம்மை வழிபட்டொரு கருமமுயல்வோர் அக்கரும முட்டின்றி முடிவுபெற ற்கு அவர்க்குச் சுபஞ்செய்தலையே அணிகலமாகவுடைமையால் அதனை உருவகமாக்கி மெய்க்கலன் என்றார். (௧0)

அங்கையானொத்திநின்றுடல்கண்டகங்களிதுளும்பியையன்
பங்கயப்பதந்தொழுதிறைவநீபயந்தசேயிவனையின்னே
யெங்குளகணங்களும்பல்கணநாதருமெவருமேத்தத்
துங்கமாமிறைமையீந்தருளென வேண்டலுஞ்சூலபாணி.

(இ-ள்.) அங்கையான் ஒத்தி நின்று ஆடல் கண்டு அகம் களி துளும்பி - அழ கிய திருக்கரத்தால் ஒத்தறுத்து நின்று ஆடும் ஆடலைக்கண்டு மனக்களிப்புமிகுந்து, ஐய ன் பங்கயம் பதம் தொழுது - இறைவனது தாமரைமலர்போன்ற திருவடியை வண ங்கி, இறைவ நீ பயந்த சேய் இவனை இன்னே எங்கு உள்ள கணங்களும் பல் கணநா தரும் எவரும் ஏத்த - இறைவனே நீபெற்றபிள்ளையாகிய இவனை இப்பொழுதே யெ வவிடத்திலுமுள்ள தேவகணங்களும் பல சிவகணத்தலைவரு மிவரொழிந்த எவருந்து திக்க, துங்கம் ஆம் இறைமை ஈந்தருள் என்ன வேண்டலும் - உயர்ச்சிவாய்ந்த அக் ணங்களுக்கெல்லாந் தலைமைதந்தருளாயென்று வேண்ட, சூலபாணி - அவ்விறைவர்.

ஒத்தறுத்தல் - தாளமறுத்தல், தேவகணங்களாவார்,

" கின்னரர்கிம்புருடர்விச்சாதரர்கருடர்
பொன்னமர்பூதர்புகழியக்கர் - மன்னும்
உரகர்சுரர்சாரணர்முனிவர்மேலாம்
பரகதியோர்சித்தர்பாலர்.
காந்தருவர்தாரகைகள்காணப்பசாசுகள்
ஏந்துபுகழ்மேயவிராக்கதரோ - டாய்ந்ததிறல்
போகாவியல்புடையபோகபூமியாருடனே
ஆகாயவாசிகளாவார் " எனவருதல் காண்க. (௧௧)

கடவுளர்முனிவரரயனரிபலகணநாதரெல்லா
முடன்வரத்திருவுளஞ்செய்தழைத்தோதுவான்மடித்தலத்தின்
மிடலுடைச்சிறுவனையிருத்திமற்றிங்கிவன்வெற்பின்வந்த
மடமயிற்கினியவன்யாம்பெறுமூத்தமாமைந்

(இ-ள்.) கடவுளர் முனிவரர் அயன் அரி பல கணநாதர் எல்லாம் உடன் வர திருவுளம் செய்து அழைத்து ஓதுவான் - தேவர்களு முனிவர்களும் பிரமனுந் திருமா

னும் பல கணநாதர்களுமாகிய இவர்களெல்லாரும் விரைந்துவரத் திருவுள்ளஞ்செய்து அழைத்துக் கூறுகின்றனர், மடித்தலத்தின் மிடல் உடை சிறுவனை இருத்தியாம் பெறும் மூத்தமாமைந்தன் - தமது திருமடித்தலத்தில் வலிமைவாய்ந்த அப்பிள்ளையாரை இருத்தி நாம்பெற்ற மூத்தமகனாகிய பெருமைவாய்ந்த இப்பிள்ளை, இங்கு இவன் வெற்பின் வந்த மடமயிற்கு இனியவன் ஓர் மின் - இவ்விடத்து இவன் இமையமலையிலுதித்த இளமைவாய்ந்த மயில்போலும் உமையம்மைக்கு இனியவன் அறியுங்கள்.

தாமும் பராசத்தியும் பூவினுற்றம்போல ஒற்றித்து நிற்றலால் மூத்தமகனிடத் துட் பெற்றெடுத்த பிதாவுக்கு மிக்கவிருப்பம் என்னும் உலகவழக்கிற்கு மாறாகத் தம் மிருவரிடத்தும் ஒத்த அன்புநிகழ்ந்தது என்பார் வெற்பின்வந்த மடமயிற்கு இனியவ னென்றருளினர். "மூத்தமகனிடத்தார்வமீன்றெடுத்தபிதாமகற்குமுதிருமாற்றல்" என வருதல் காண்க. (கஉ)

> இவனையிவ்வுலகெலாந்தொழுதெழுமிறைமையினிருத்துகின்றோங்
> குவிமுடிசூட்டுவான்வேண்டுபகரணநீர்கொணர்மினென்றே
> யவரவைகொணர்ந்தபின்மைந்தனைமடங்கலாதனத்தினேற்றிச்
> சிவபிரான்றிருவபிடேகநீராட்டினன்மகுடஞ்சேர்த்தான்.

(இ - ள்.) இவனை இ உலகு எல்லாம் தொழுது எழும் இறைமையின் இருத்துகின்றோம் - இப்பிள்ளையை இவ்வுலகெல்லாந் தொழுதெழாநின்ற இறைமைத்தன்மையில் நிலைபெறச்செய்கின்றோம், குவிமுடி சூட்டுவான் வேண்டு உபகரணம் நீர் கொணர்மின் என்று எய் - குவிந்த மகுடத்தைச் சூட்டவேண்டுங் கருவியாகிய உபகரணங்களை நீங்கள் கொண்டுவாருங்களென்றேவி, அவர் அவை கொணர்ந்தபின் மைந்தனை மடங்கல் ஆதனத்தின் ஏற்றி-அவர்களவ்வுபகரணங்களைக் கொண்டுவந்தபின் அப்பிள்ளையாரைச் சிம்மா தனத்திலேற்றி, சிவபிரான் திரு அபிடேக நீர் ஆட்டினன் மகுடம் சேர்த்தான்-அச்சிவபிரான் திருவபிடேகஞ்செய்து திருமுடிசூட்டி யருளினன்.

மூத்தபிள்ளையார் தம்மோடொத்த இறைமைத் தன்மையுடையராதலால் தாமே திருமஞ்சனமாட்டி மகுடஞ்சூட்டினர் என்றார். (கங)

> அரசினுக்குரியநல்லணிகளானலங்கரித்தன்புகூரப்
> பிரமனைமாயனைத்தேவரைமுனிவரைப்பெட்பினோக்கி
> யுரனுடையுமக்கெலாநாயகனிவனிடையூற்றினுக்குங்
> கரவிலாநாயகனாகநாம்வைத்தனங்கண்டுகொண்மின்.

(இ-ள்.) அன்புகூர அரசினுக்கு உரிய நல் அணிகளான் அலங்கரித்து - அன்பு மிக அரசிற்குரிய நல்ல ஆபரணங்களா லலங்காரஞ்செய்து, பிரமனை மாயனை தேவரை முனிவரை பெட்பின் நோக்கி-அயனையுந் திருமாலையுந் தேவரையு முனிவரையும் விருப்பத்தோடுநோக்கி, உரன் உடைய உமக்கு எல்லாம் நாயகன் இவன் இடையூற்றினுக்கும் கரவு இல்லா நாயகன் ஆக நாம் வைத்தனம் கண்டுகொண்மின் - இப்பிள்ளையார் வலிமையை யுடைய உங்களுக்கெல்லாந் தலைவனும் தன்னைச் சிந்திப்போர்க்கு நேரும் இடையூற்றை யொழித்தற்குஞ் சிந்தியாதார்க்குத் தருதற்கும் ஒளித்தலில்லாத நாயகனுமாக நாம் வைத்தோம் அதனைக் கண்டுகொள்ளுங்கள்.

அதனை என்றது வைத்தற் றொழிலினை. ஒழித்தற்குந் தருதற்கும் நாயகனாதலால் இடையூற்றினுக்குங் கரவிலாநாயகன் என்றார்.

> " என்னரேயாயினும்யாவதொன்றெண்ணுதல்
> முன்னரேயுனதுதாண்முடியுறப்புணிவரேல்

அன்னார்தஞ்சிந்தைபோலாக்குதியலதனை
யுன்னலார்செய்கையையூறுசெய்திடுதி'' எனவருங் கந்தபுராணத்தாலறிக.

தீயவத்தானவர்க்கூறிழைப்பானிவனென்றுசெப்புந்
தூயவன்வாய்மொழிதலைமிசைக்கொண்டனர்துதிந்திறைஞ்சி
மாயவன்முதலியோர்கணேசனைவணங்கினர்கையுறைக
ளேயுமாறுதவினர்விடைகொடுதத்தமதிருக்கைசேர்ந்தார்.

(இ-ள்.) இவன் தீய அதானவர்க்கு ஊறு இழைப்பான் என்று செப்பும் தூயவன் வாய் மொழி தலை மிசைகொண்டனர் - இப்பிள்ளையார் உங்களுக் கிடையூறு செய்யுமசுரர்களுக் கிடையூறு செய்வான் என்றுகூறிய இறைவனது திருவார்த்தையைத் தலையின் மேற்கொண்டு, மாயவன்முதலியோர் கணேசனைதுதித்து இறைஞ்சி வணங்கினர்- திருமால்முதலியோர் சிவகணங்களுக்கிறைவனாகிய அப்பிள்ளையாரைத் துதித்துத்தொழுது வணங்கினார்கள், கையுறைகள் ஏயும் அறு உதவினர் விடைகொடு தத்தமது இருக்கை சேர்ந்தார் - கையுறைகளைத் திருவுளத்திற்கு ஏற்குமாறுகொடுத்து விடைபெற்றுத் தங்கள் தங்களுக்குரிய இருக்கையை யடைந்தார்கள். (கரு)

கலிவிருத்தம்.

பொருவருந்தடநெடும்புழைக்கையேந்தலு
மிருமுதுகுரவர்தாளிறைஞ்சிமேவுநா
ளொருவருங்கணங்களோடுலவியெங்கணுந்
திருவிளையாடலிற்சிந்தைவைத்தனன்.

(இ-ள்) பொரு வரும் தட நெடும் புழை கை ஏந்தலும் இரு முது குரவர் தாள் இறைஞ்சி மேவும் நாள் - ஒப்பில்லாத பெரிய நெடியது வாரம்பொருந்திய துதிக்கையையுடைய பிள்ளையாரும் தமது தாய்தந்தையருடைய திருவடியைவணங்கி யிருந்தருளுங்காலையில், ஒருவரும் கணங்களோடு உலவி எங்கணும் திருவிளையாடலில் சிந்தை வைத்தனன் - நீங்குதலில்லாத சிவகணங்களோடு சஞ்சரித்து எவ்விடத்துந் திருவிளையாடல்செய்வதில் திருவுளம்வைத்தருளினர். (கசு)

ஒளித்துநின்றுடன்பயிலுழைச்சிறார்மிசைத்
தெளித்தெழுபுழைக்கைநீர்த்திவலைதூஉயிது
துளித்ததுமுகிலெனச்சொல்லியுள்ளகங்
களிப்பவான்கருமையைக்காட்டிவஞ்சித்தும்.

(இ-ள்.) ஒளித்து நின்று உடன் பயில் உழை சிறார் மிசை எழு புழைக்கை நீர் திவலை தெளித்து தூய் - கரந்துநின்று தம்மோடுபயிலுஞ் சிவகணச் சிறுவர்மேல் ஓச்சிய துதிக்கையினீர்த்துளியைத்தெளித்துத்தூவி, இது முகில் துளித்தது என்ன சொல்லி - இத்திவலை மேகந்துளித்தது என்று அவர்கட்குக்கூறி, உள்ளகம களிப்ப வான் கருமையை காட்டி வஞ்சித்தும் - அதற்குச் சான்றாக அவர்கள்மனங் களிகூர மேகத்தின் கருமையைக்காட்டி வஞ்சனைசெய்தும். (கஎ)

குழித்துமுன்னணிந்தனபழமைகூர்ந்தவென்
றொழித்தகல்பாதலத்துரகம்யாவையு
மிழுத்தெடுத்தணியெனப்புயத்தினேற்றியும்.

(இ-ள்.) புழை கையின் பூமியை மோந்து உயிர்ப்பு எறிந்து குழித்து- பூமியைத் துவாரம்பொருந்திய துதிக்கையினால் மோந்து மூச்செறிந்து குழிசெய்து, முன் அணிந்தன பழமை கூர்ந்தன என்று ஒழித்து அகல் பாதலத்து உரகம யாவையும் இழுத்து எடுத்து அணி என்ன புயத்தின் ஏற்றியும் - முன்பணிந்த பாம்புகள் பழமைவாய்ந்தனவென்றொழித்து அகன்ற பாதலவுலகிலுள்ள ஆதிசேடன் முதலிய எல்லாப்பாம்புகளையுமிழுத்தெடுத்து ஆபரணமாகத் திருப்புயத்திலேற்றியும். (கஅ)

ஒன்பதுகோள்களுமுடுக்கணங்களுந்
துன்பறப்பிணித்தசைதுருவசூத்திரம்
வன்பனைக்கரத்தினாற்பறித்துமார்பிடை
யன்பமர்நவமணியாரமாக்கியும்.

(இ-ள்.) ஒன்பது கோள்களும் உடுகணங்களும் துன்பு அற பிணித்து அசை துருவ சூத்திரம் - ஒன்பது கிரகங்களையு நட்சத்திரக்கூட்டங்களையுந் துன்பமறத் தன்வசப்படுத்தியசைக்குந் துருவசூத்திரத்தை, வன்பனை கரத்தினால் பறித்து மார்பு இடை அன்பு அமர் நவமணி ஆரம் ஆக்கியும் - வலிய பனையையொத்த துதிக்கையினாற்பறித்து மார்பிலன்பமைந்த நவமணிகளாலாகிய ஆரமாகக்கொண்டும்.

நவக்கோள்களையும் நட்சத்திரங்களையுந் தன்வசப்படுத்தி மேருவை வலம்வரவியக்குதலால் பிணித்தசைதுருவசூத்திரம் என்றார். "மற்றிவரை - பான்மையிற்றுருவன் காற்றெனுங்கயிற்றிற் பணிவரைவலம்வரவியக்கும்" எனக் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (கக)

என்னைநீர்கண்டெழாதிருப்பதென்னெனப்
பன்னகமெவற்றையுங்கனன்றுபற்றிவான்
மன்னிடவீசியங்குடைந்தவானதி
தன்னுடைத்தந்தைபோற்சடிலத்தேந்தியும்.

(இ-ள்.) என்னை நீர் கண்டு எழாது இருப்பது என் என்ன பல் நகம் எவற்றையும் கனன்றுபற்றி - என்னை நீங்கள் கண்டு எழாதிருப்பது யாதென்று பலமலைகளெல்லாவற்றையுங் கோபித்துப்பறித்துப்பற்றி, வான் மன்னிட வீசி - ஆகாயத்திற்பொருந்த வீசுதலால், அங்கு உடைந்தவான் நதி தன் உடைய தந்தைபோல் சடிலத்து ஏந்தியும் - அவ்விடத்திலுடைபட்ட ஆகாசகங்கையைத் தன்னுடைய தந்தைபோலச் சடாபாரத்திலேந்தியும்.

உடையவென்னுங் குறிப்பு வினைப்பெயரெச்சத்தி னீறுதொக்கு நிற்றலால் வருமொழிமுதல் வல்லெழுத்து மிக்கது. (உ0)

இவ்வகைப்பலசிறுகுறும்பெங்கணுமியற்றிக்
கௌவைநீர்விளையாட்டினிற்காதலனொருநாட்
பௌவம்யாவையுமுழக்கினன்பாற்கடல்புகுந்தான்
கொவ்வைவாயுமைபயந்தருள்குஞ்சரக்குரிசில்.

(இ-ள்.) கொவ்வை வாய் உமை பயந்தருள் குஞ்சரம் குரிசில் - கோவைக்கனிபோலும் வாயையுடைய உமையம்மைபெற்றருளிய மூத்தபிள்ளையார், இ வகை பல சிறுகுறும்பு எங்கணும் இயற்றி கௌவை நீர் விளையாட்டினில் காதலன் - இவ்வகையாகப் பல சிறுகுறும்புகளை யெவ்விடத்துஞ்செய்து ஒலிக்கும் நீர்விளையாட்டில் விருப்பு

டையவனும். ஒரு நாள் பௌவம் யாவையும் உழக்கினன் பால் கடல் புகுந்தான் - ஒரு தினங் கடன்முழுதையுங் கலக்கித் திருப்பாற்கடலிற்புகுந்தனர். (உக)

புகுந்துவெள்ளநீர்முழுவதும்புழைக்கையின்மடுத்தான்
மிகுந்தபன்மணிநீருறையுயிர்கள்வெம்பணிக்கோன்
முகுந்தனுந்தியன்றிருந்தநான்முகப்பிரான்முகுந்தன்
சகுந்தமன்னவன்றிருவுமப்புழைக்கையுட்சார்ந்தார்.

(இ-ள்.) புகுந்து வெள்ளம் நீர்முழுவதும் புழைக்கையின் மடுத்தான் - சென்று திருப்பாறகடல் நீர்முழுவதையுந் துவாரம்பொருந்திய கரத்தினுற்பருகினுர், மிகுந்த பல் மணி நீர உறை உயிர்கள் - மிகுந்த பல இரத்தினங்களும் நீரில் வசிக்கு முயிர்களும், வெம் பணிக்கோன் முகுந்தன் உந்தி அன்று இருந்த நான்முகப்பிரான் - கொடிய பாம்பிற்கரசனுகிய ஆதிசேடனுந் திருமாலுந்தியி லக்காலத்திருந்த பிரமனும், முகுந்தன் சகுந்த மன்னவன் திருவும் அ புழை கையுள் சார்ந்தார் - அத்திருமாலுங் கருடனு மிலக்குமியு மந்தத்துவாரம்பொருந்திய துதிக்கையிற்சேர்ந்தார்கள். (உஉ)

வறுங்கடற்பரப்பகட்டினிலெஞ்சுகூர்மங்க
ளுறுங்கரும்பெருஞ்சேற்றிடையொளிப்பனமுன்னு
ணறுந்துழாயணியாமையைநலிவுறப்பற்றிக்
குறும்படக்கியபிரான்வருதிறங்குறித்தனபோல்.

(இ-ள்.) முன் நாள் நறும் துழாய் அணியாமையை நலிவு உற பற்றி குறும்பு அடக்கிய பிரான் வருதிறம் குறித்தனபோல் - முன்னுளில் நறுமணங்கமழுந் துழாய் மாலையையணிந்த ஆமையை வருந்தப்பிடித்து அதன் குறும்பினையடக்கிய இறைவன் வாராநின்ற திறத்தைக்கருதியதுபோல, வறும் கடல் பரப்பு அகட்டினில் எஞ்சு கூர்மங்கள் உறும் கரும் பெரும் சேற்றிடை ஒளிப்பன - வற்றிய கடற்பரப்பினடுவிலெஞ்சிய ஆமைகள் பொருந்திய கரிய பெரிய சேற்றினிடத்து ஒளிக்காநின்றன.

குறித்தன செயல்மேல் நிற்றல்லால் வினைமுற்றுப்பெயர். திருமால் கூர்மாவதாரங்கொண்டகாலத்தில் மூத்தபிள்ளையார் அக்கூர்மத்தை வதைத்து ஓட்டினை வாங்கினதை முன்னர்க்காண்க. (உரு)

மாயன்மீன்விழிபறித்தவன்முன்வருமிளவன்
மேயவாறுகண்டனவெனத்துடிப்பனசிலமீன்
பாயபூம்புனலரசனம்பனுக்கிடுந்திறைபோற்
சேயபன்மணிவயின்றொறுமிமைப்பனசிலவே.

(இ-ள்.) மாயன் மீன் விழி பறித்தவன் முன் வரும் இளவல் மேய ஆறுகண்டன என்ன சில மீன் துடிப்பன - திருமாலாகிய மச்சத்தின் கண்களைப்பறித்த மாசாத்தனுக்கு முன்வந்த மூத்தபிள்ளையார் இவ்விடத்துவந்த வகையை யறிந்தனபோலச் சிலமீன்கள் துடிக்காநின்றன, பாய பூம்புனல் அரசன் நம்பனுக்கு இடும் திறைபோல் சேய பல் மணி சில வயின்தொறும் இமைப்பன - பரந்த அழகிய நீர்க்கிறைவனுகிய வருணன் அப்பிள்ளையார்க்கு இறுத்த திறைபோலச் செந்நிறம் வாய்ந்த சில இரத்தினங்கள் அக்கடலிடந்தோறும் விளங்காநின்றன.

திருமால் மச்சாவதாரங்கொண்டகாலையில் மாசாத்தனுர் சென்று அம்மச்சத்தைக்கொன்றமையை முன்னர்க்காண்க. (உச)

ஐயன்வார்செவிக்காற்றினிலலேகண்மிக்கெறிந்து
வெய்யபேரொலிகாட்டுவபிறவியன்கடல்கண்
மையகன்றதங்கிளைவறங்கூர்ந்தமைகாணூஉக்
கையெறிந்தழுதிரங்கிவீழ்ந்தரற்றுவகடுக்கும்.

(இ-ள்.) பிறவியன் கடல்கள் ஐயன் வார் செவி காற்றினில் அலேகள் மிக்கு எறிந்து வெய்ய பேர் ஒலி காட்டுவ - இது ஒழிந்த பெரிய கடல்கள் பிள்ளேயாரது நீண்டசெவியி லெழுந்த காற்றினுல் அலேகள் மிகவும் மிக்க பேரொலியை யெழுப்புதல், மை அகன்ற தம் கிளேவறம் கூர்ந்தமை காணூ உகை எறிந்து அழுது இரங்கி வீழ்ந்து அரற்றுவ கடுக்கும்-குற்றம் நீங்கிய தமது உறவாகிய பாற்கடல் வறுமை யடைந்தமையைப் பார்த்துக் கையை மேலெடுத்து அழுது இரங்கி வீழ்ந்து கதறுதலே யொக்கும்.
அரற்றுவ செயல் மேல்நிற்றலால் விளேமுற்றுப்பெயர். (உரு)

இன்னவாறுபாற்கடல்வறந்தழிவுறவிருங்கை
தன்னிலேற்றநீர்மீளவுந்தரைமிசைவிடுத்தா
னன்னநீருடன்வீழ்ந்தனரயனரிமுதலோர்
துன்னுநீர்படுதுரும்பெனத்திசைதொறுஞ்சிதறி.

(இ-ள்.) இன்ன அறு பாற்கடல் வறந்து அழிவுற இருங் கை தன்னில் ஏற்ற நீர் மீளவும் தரை மிசை விடுத்தான் - இவ்வாறு பாற்கடல் வறந்தழியப் பெரிய துதிக்கையிலேற்ற நீரை மீளவும் நிலவுலகில் விடுத்தனர், அயன் அரிமுதலோர் துன்னும் நீர்படு துரும்பு என்ன திசை தொறும் சிதறி அன்ன நீருடன் வீழ்ந்தனர் - பிரமனுந் திருமாலு முதலியோர்கள் நெருங்கிய நீரிற்பட்ட துரும்புபோலத் திசைகள் தோறுஞ் சிதறி அந்த நீருடன் நிலத்தில் வீழ்ந்தனர்
இன்ன அன்ன சுட்டுத்திரிபுகள். (உசு)

பின்னரோரிடைத்திரண்டுடன்குழீஇயினர்பெரிது
மின்னலுற்றமைதத்தமுட்பேசினரெளியோ
முன்னேநல்விளேப்பயத்தினுலின்றுமுதுலகந்
தன்னில்வந்தவாமறுபிறப்பெனமதித்தனரால்.

(இ-ள்.) பின்னர் ஓரிடை திரண்டு உடன் குழீ இனர் பெரிதும் இன்னல் உற்றமை தத்தமுள் பேசினர் - பின்பு ஓரிடத்திற்றிரண்டு தம்முள் நெருங்கி மிகவுந் துன்பமடைந்தமையைத் தங்களுட் கலந்துபேசும் அரியயன்முதலோர், எளியோம் முன்னே நல்விளே பயத்தினுல் இன்று முது உலகம் தன்னில் வந்த ஆறு மறுபிறப்பு என்ன மதித்தனர். வல்லமையை யிழந்தோமாகிய நாம் முன்பு செய்த நல்விளேயின் பயனுல் இந்நாளிற் றென்று தொட்ட நிலவுலகில்வந்த வகை மறுபிறப்பென்று தங்களுட்கருதினுர்.

பின்னர் அர்பகுதிப் பொருள்விகுதி. தம்முட்கூடிப் பேசுவோருள் ஒவ்வொருவரும் ஏனேயோரையுளப்பாட்டுத்தன்மைப் பன்மையாக்கிக்கூறுதல் இருவகைவழக்கினும்வருமாதலால் எளியோம் என உளப்பாட்டுத் தன்மைப்பன்மையாகக்கூறினுர் இஃதறியார் எளியோர் எனப்பிழைபடத்திருத்தினமையால், அவரிலக்கிய இலக்கணப்பயிற்சி கற்ருேர்க்குப் பெருநகை விளேப்பது வியப்பன்று. (உஎ)

மருட்சிதீர்ந்தபின்மாயவனிடக்கையின்வழுவு
முருட்சிகூர்ந்தவெண்சங்கிளேக்காண்கிலனுயங்கி .

வெருட்சிகொண்டனன்றேடினன்வியன்றிசைப்புறத்துத்
தெருட்சிகொண்டதுவொலிப்பதுகேட்டனன்செவியில்.

(இ-ள்.) மாயவன் மருட்சிதீர்ந்த பின் இடக்கையின் வழுவும் உருட்சிகூர்ந்த வெண் சங்கினை காண்கிலன் உயங்கி வெருட்சி கொண்டனன் தேடினன்-திருமால் மயக்கம் நீங்கியபின் தனது இடக்கையினின்று வழுவிய உருண்ட வெள்ளிய வலம்புரிச் சங்கினைக்காணது மயங்கி யஞ்சித்தேடினான், வியன்திசை புறத்து அது தெருட்சிகொண்டு ஒலிப்பது செவியில் கேட்டனன். பரந்த திசையின் புறத்தில் அச்சங்கு தெளிந்து ஒலித்தலைத் தனது காதிற்கேட்டனன்.

காண்கிலன் முற்றெச்சம். துதிக்கையுளடங்கி வெளிவந்த இளைப்பினை மருட்சி என்றார். (உ௮)

ஓசையாலதுபாஞ்சசன்னியமெனவுணர்ந்தவ்
வாசையிற்சிலர்தமைச்செலவிடுத்தனனவர்போய்
மாசிலைங்கரப்பிரான்கணம்வாயிடைக்கொண்ட
வேசறுஞ்சுரிமுகத்தினைக்கண்டுமீண்டுரைத்தார்.

(இ-ள்.) ஓசையால் அது பாஞ்சசன்னியம் என்ன உணர்ந்து அ ஆசையில் சிலர் தமை செலவிடுத்தனன் - கோஷத்தால் அந்தச் சங்கினைத் திருமால் தனது பாஞ்சசன்னியமென அறிந்து அந்தத்திசையிற் சிலரைச்செல்ல ஏவினான், அவர்போய் மாசு இல் ஐங்கரப்பிரான் கணம் வாயிடைகொண்ட வேசு அறும் சுரிமுகத்தினைகண்டு மீண்டு உரைத்தார்-அவர்கள் சென்று குற்றமில்லாத ஐந்து திருக்கரங்களை யுடைய மூத்தபிள்ளையார் கணங்களுள் ஒருகணநாதன்தனது வாயிற்கொண்டூதிய இளைத்தலில்லாத அச்சங்கினைப்பார்த்துத் திரும்பிவந்து கூறினார்கள்.

பகைவரஞ்ச ஒலித்தலில் குன்றுதலில்லாததென்பார் வேசறுஞ்சுரிமுகம் என்றார்.

சொன்னவாசகங்கேட்டுளந்துளங்கிமற்றினிநா
னென்னைசெய்வலென்றுசாவினன்கணங்களோடெழுந்து
பன்னகப்பகையரசுமேலகொண்டனன்படர்ந்தான்
கன்னிபாகன்வீற்றிருந்தருள்வெள்ளியங்கயிலை.

(இ-ள்.) சொன்ன வாசகம் கேட்டு உளம் துளங்கி இனி நான் என்னை செய்வல் என்று உசாவினன் கணங்களோடு எழுந்து-சொன்ன வார்த்தையைக்கேட்டு மனம் நடுங்கி நான் இனி யாதுசெய்வேனென்று தனதுகணங்களோடு வினவி யெழுந்து, கன்னி பாகன் வீற்றிருந்தருள் வெள்ளி அம் கயிலை பன்னகப்பகை அரசுமேல் கொண்டனன் படர்ந்தான் - உமையை யிடப்பாகத்திலுடைய இறைவன் எழுந்தருளிய திருக்கயிலைக்குப் பாம்பிற்குப் பகையாகிய கருடன் மேலாரோகணித்துச் சென்றனன்.

உசாவினன், மேல்கொண்டனன் முற்றெச்சங்கள். (௩0)

அங்குநந்திதன்னருளினாற்றடைகடந்தணுகி
யெங்கணாயகன்றிருமுன்புவீழ்ந்துதாழ்ந்தெழுந்து
பங்கயக்கரங்குவித்துநின்றிமவரைபயந்த
நங்கையோடுறைசெவ்விகண்டின்னதுநவில்வான்.

(இ-ள்.) அங்கு நந்தி தன் அருளினால்தடைகடந்து அணுகி எங்கள் நாயகன் திருமுன்பு வீழ்ந்து தாழ்ந்து எழுந்து - அவ்விடத்து நந்திதேவருடைய திருவருளினாற்

றடைகடந்துள்ளே சென்று எங்களிறைவன் சந்நிதியில் வீழ்ந்து தாழ்ந்து எழுந்து, பங்கயம் கரம் குவித்து நின்று இமவரை பயந்த நங்கையோடு உறை செவ்வி கண்டு இன்னது நவில் வான்-தாமரைமலர்போன்ற கைகளைக்கூப்பி இமையமலைபெற்ற உமையம்மையோடு எழுந்தருளியிருக்குஞ் சமையத்தைக்கண்டு இதனைக்கூறுவான்.

தடையாவது நந்திதேவராதிகாவலிற் றடைபட்டு நிற்குமிடம். (கூக)

அண்ணலே யுனதாணையினடியனேன்கடலுட்
கண்வளர்ந்தனனுயிடையாடல்செய்கணேசப்
பண்ணவன்கடற்புனலொடுமென்னையும்பனைக்கை
யுண்மடுத்தனன்விடுத்தனன்மீளவுமுலகில்.

(இ-ள்.) அண்ணலே உனது ஆணையின் அடியனேன் கடலுள்கண்வளர்ந்தனன்-இறைவனே யுனதாணையா லடியேன் பாற்கடலி லறிதுயிலமர்ந்தேன், ஆயிடை ஆடல் செய் கணேசன் பண்ணவன் கடல் புனலொடும் என்னையும் பனைகை உள் மடுத்தனன் மீளவும் உலகில் விடுத்தனன்-அவ்விடத்துத் திருவிளையாடல் செய்யுங் கணேசப்பிள்ளையார் அக்கடலிலுள்ள நீரோடும் என்னையும் பனைபோன்ற துதிக்கையில் வாங்கித் திரும்பவும் உலகிலென்னை விடுத்தான். (கூஉ)

மறுகுசூழ்மணிமன்றுளாய்நின்னருள்வலியான்
மறுபிறப்பெனவுய்ந்துநின்பால்வரப்பெற்றேன்
மறுகுமப்பொழுதென்கையில்வழீஇயினசங்கை
மறுவிலைங்கரப்பிரான்கணத்தொன்றுவௌவியதால்.

(இ-ள்.) மறுகு சூழ் மணி மன்றுளாய் நின் அருள் வலியால் மறு பிறப்பு என்ன உய்ந்து நின்பால் வர பெற்றேன்-வீதிகள் சூழ்ந்த மாணிக்கங்களமைந்த பொன்னம்பலத்தி லெழுந்தருளியவனே உனது கருணையின் வலியால் இது மறுபிறப்பென்று தப்பித் தேவரீரிடத்து வரப்பெற்றனன், மறுகும் அப்பொழுது என் கையில் வழுவின சங்கை மறு இல் ஐங்கரப்பிரான் கணத்து ஒன்று வவ்வியது-சுழலு மக்காலையி லென்கையினின்று வழுவிய அச்சங்கினைக் குற்றமில்லாத ஐந்து திருக்கரங்களை யுடைய மூத்த பிள்ளையார் கணத்திலொன்று கவர்ந்தது.

கணத்தொன்று என்றதனை கணங்களுள் தலைவனொருவனை. (கூக)

ஐயனேயதுவடியனேன்கரத்தெய்தவருளிச்
செய்யவேண்டுமென்றிரந்திரந்திறைஞ்சலுஞ்சிறுமான்
கையனெம்பிரான்கவுரிபாற்கட்கடைசெலுத்தி
வையமுண்டவகேளெனவாய்மலர்ந்தருள்வான்.

(இ-ள்.) ஐயனே அது அடியனேன் கரத்து எய்த அருளிச் செய்யவேண்டும் என்று இரந்து இரந்து இறைஞ்சலும்-இறைவனே யது அடியேன் கையில்வரத் திருவருள் செய்யவேண்டு மென்று பலகாலுங் குறையிரந்து வணங்க, சிறுமான் கையன் எம்பிரான் கவுரிபால் கண் கடை செலுத்தி வையம் உண்டவ கேள் என்ன வாய் மலர்ந்தருள் வான்-சிறிய மானை யேந்திய திருக்கரத்தையுடைய இறைவர் உமையம்மை யிடத்துத் திருவருட் பார்வைசெய்து உலகினையுண்ட திருமாலேகேளென்று திருவாய் மலர்ந்த ருளுவார்.

பார

த்தி வையமுண்டவ கேள் என்றார். (கூச)

வலம்புரிந்தபேராண்மையோயாமிது வல்லேம்
வலம்புரிச்சங்குநீபெறக்காஞ்சியில்வைகி
வலம்புரிக்கணபதியைநின்னத்திமால்வரைமேல்
வலம்புரிந்துதாபித்தருச்சனைபுரிமரபால்.

(இ-ள்.) வலம் புரிந்த பேராண்மை யோய்யாம் இது வல்லேம் - வெற்றியமைந்த பெரிய ஆண்மையையுடையோய் யாம் இதனைத்தரவல்லோம் அல்லேம், வலம்புரி சங்கு நீ பெற காஞ்சியில் வைகி - வலம்புரிச் சங்கினை நீ பெறுதற் பொருட்டுக் காஞ்சித்திருப்பதியிலிருந்து, வலம்புரி கணபதியை நின் அத்தி மால்வரை மேல் வலம்புரிந்து தாபித்து அருச்சனை புரி மரபால் - வலம்புரிவிநாயகரை யுனது பெரிய அத்திகிரியின் மேல்பால் தாபித்து ஆகமமுறையா லருச்சனை செய்யாய்.

தெட்சணாவர்த்தமாயுள்ள வலம்புரிச்சங்கினை யருளுதற்பொருட்டு இடத்திருக்கரத்திலுள்ள மோதகம் வலத்திருக்கரத்திலும், வலத்திருக்கரத்திலுள்ள கொம்பு இடத்திருக்கரத்திலுந் தெட்சணாவர்த்தமாயுள்ள விநாயகரை வலம்புரிக் கணபதியென்றார். ஏனைய தலங்களிலுள்ள விநாயகர்கள் இடத்திருக்கரத்தில் மோதகமும் வலத்திருக்கரத்தில் கொம்பும் வாமாவர்த்தமாயுடைய இடம்புரிவிநாயகர்களாதலால் அத்திகிரியிலுள்ள விநாயகரொருவரோ வலம்புரிவிநாயகரெனவுணர்க. (௩௫)

அன்னவன்றிருவருளினாற்பெறுகெனுமருளைச்
சென்னிமேல்கொண்டுவிடைகொண்டுமீண்டுகாஞ்சியினிற்
கொன்னுமேற்றிசைவாயிலார்குகையுடையத்திக்
கன்னகந்தனில்வலம்புரிக்கணேசனையிருத்தி.

(இ-ள்.) அன்னவன் திருவருளினால் பெறுக என்னும் அருளை சென்னி மேல் கொண்டு விடைகொண்டு மீண்டு - அக் கணேசனது திருவருளினா லச்சங்கினைப் பெறக் கடவாயென்னுந் திருவருளைச் சிரமேற்கொண்டு விடைகொண்டு திரும்பி, காஞ்சியினில் கொன்னும் மேல் திசை வாயில் ஆர் குகை உடை அத்தி கல் நகம் தன்னில் வலம்புரி கணேசனை இருத்தி - அக்காஞ்சித் திருப்பதியின் மேன்மையமைந்த மேற்றிசையிடத்துப் பொருந்திய குகையினையுடைய அத்தி கிரியில் வலம்புரிக் கணேசப்பிள்ளையாரை யெழுந்தருளச்செய்து.

பெறுக என்னும் வியங்கோளீறு தொக்கது. (௩௬)

தருக்குநீங்கியாவாகனம்பாத்தியாசமன
மருக்கியம்புனலாட்டுடைபூணுநூல்கந்த
வருக்கந்தூபதீபம்பலபண்ணியவருக்கங்
குருக்கொள்சுண்ணமார்பாகடைகுளிர்புனல்பிறவும்.

(இ-ள்.) தருக்கு நீங்கி ஆவாகனம் பாத்தியம் ஆசமனம் அருக்கியம் புனல் ஆட்டு உடை பூணு நூல் கந்த வருக்கம் தூபம் தீபம் பலபண்ணிய வருக்கம் - இறுமாப்பினின்றும் நீங்கி யாவாகனமும் பாத்தியமும் ஆசமனமும் அருக்கியமும் திருமஞ்சனமும் ஆடையும் பூணு நூலுங்கந்த வருக்கமுந் தூபமும் தீபமும் பலசிற்றுண்டி வகைகளும், குரு கொள் சுண்ணம் ஆர் பாகு அடைகுளிர் புனல் பிறவும் - நிறமமைந்த சுண்ணமும் வாசமார்ந்த வெற்றிலைச் சுருளும் பனிநீரும் மற்றுள்ளனவுமாகியவற்றை.

பிறவும் என்றது ஆகாயசம்பந்தமான மணியோசைமுதலியவற்றை. தசோபசாரங்களுள் ஆவாகனமும் பாத்தியமும் ஆசமனமும் அருக்கியமும், பஞ்சோப சாரங்க

ளுள் பிருதிவி சம்பந்தமான பண்ணிய வர்க்கமும் கந்தவருக்கமும் சுண்ணமும் குளிர் புனலும் பாகடையும்; அப்பு சம்பந்தமான திருமஞ்சனமும், ஆடையும் உபவீதமும், தேயுசம்பந்தமான தீபமும், வாயுசம்பந்தமான தூபமும்; பிறவும்என்றதனால் மணியோசைமுதலிய வற்றையும், வாயுசம்பந்தமான சாமரம், மயில் விசிறியாதிகளையும் அடக்கி இதனாற் கூறப்பட்டன. (கூஎ)

ஓங்குதந்திகாயத்திரிமனுவினாலுதவி
வீங்குகாதலால்வலஞ்செய்துபுவியிடைவீழ்ந்தா
னாங்குநின்றுகைகொட்டினனாடினனழுதான்
றீங்குதீர்மறைமொழிகளாற்றுதிபலசெய்தான்.

(இ-ள்) ஓங்கு தந்தி காயத்திரி மனுவினால் உதவி - பன்னிரண்டு காயத்திரிகளில் உயர்ந்தோங்கிய விநாயககாயத்திரி மந்திரத்தினாற்பூசித்து, வீங்கு காதலால் வலஞ்செய்து புவியிடை வீழ்ந்தான்-மிக்க விருப்பத்தால் வலஞ்செய்து நிலவுலகின்மேல் வீழ்ந்து, ஆங்குநின்று கைகொட்டினன் ஆடினன் அழுதான் தீங்கு தீர் மறைமொழிகளால் துதி பல செய்தான் - அவ்விடத்து நின்று கைகொட்டி ஆடி யழுது குற்றத்தினின்று நீங்கிய வேதமொழிகளாற் பல துதிசெய்தான்.

காயத்திரி பன்னிரண்டனுள் தந்திகாயத்திரியொன்றாதலால் ஓங்குதந்தி காயத்திரியென்றார். பன்னிரண்டுகாயத்திரிக்குரியராவார் பரசிவம், பிரமன், திருமால், உருத்திரன், உமை, விநாயகக்கடவுள், குமாரக்கடவுள், நந்திதேவர், நரசிம்மமூர்த்தி, அக்கினி, சூரியன், கருடதேவன்.

வீழ்ந்தான் கைகொட்டினன், ஆடினன், அழுதான் முற்றெச்சங்கள். (கூஅ)

ஒருபோகுகொச்சகம்.

ஐயாமறைமுடிவுந்தேராதவானந்த
மெய்யாபிரணவத்தினுட்பொருளேவேழமுகக்
கையாய்வெளியாய்கரியானேபொன்மையாய்
செய்யாய்பசியாய்பெருங்கருணைத்தெய்வமே.

(இ-ள்) ஐயா மறை முடிவும் தேராத ஆனந்த மெய்யா - மேலானவனே வேதந் தெளிந்தறியாத இன்ப வடிவாகிய திருமேனியை யுடையவனே, பிரணவத்தின் உள் பொருளே வேழம் முகம் கையாய் வெளியாய் கரியானே பொன்மையாய் செய்யாய் பசியாய் - பிரணவத்திலமைந்த பொருளே யானையின் திருமுகத்தையுந் துதிக்கையையு முடையாய் வெள்ளிய நிறமுடையாய் கரியநிறமுடையாய் பொன்னிற முடையாய் செந்நிறமுடையாய் பசியநிறமுடையாய், பெரும் கருணை தெய்வமே-பெரியகருணைவடிவமாகிய தெய்வமே.

விந்து தத்துவத்தின் காரியப்பாடாகிய சொற் பிரபஞ்ச மாதலால் மறைமுடிவுந் தேராத எனவும், சத்துச் சித்தானந்தமே திருமேனியாக வுடைமையால் ஆநந்த மெய்யாவெனவும், பிரணவத்தினின்றுந் தோன்றினமையால் பிரணவத்தி னுட்பொருளேயெனவும், அந்தத் திருவுருவத்தி லுணர்த்தி னமையால் வேழமுகக் கையாய் எனவும் திருக்கொம்பால் வெண்ணிற முடைமையால் வெளியாய் எனவும், மும்மதத்தாற் கருநிற முடைமையால் கரியானே எனவும், திருமுகத்திலுள்ள புகராற் பொன்னிற முடைமையால் பொன்மையாய் எனவும், திருமேனியிற் செந்நிற முடைமையால் செய்யாய் எனவும், கருமையுட் பசுமை யடங்குதலால் பசியாய் எனவும், தன்னைச் சிந்

திப்போர்க்கு வரும் இடையூற்றைத் தவிர்க்கத் திருவவதாரஞ் செய்தமையால் பெருங் கருணைத் தெய்வமே யெனவுங்கூறினார். மூர்த்தபேதங்களு ளிங்கிறங்க ளுடைமையா லிவ்வாறு கூறினாரெனினுமொன்று

பிரணவ வடிவுடைமைக்கும் பேரருளுடைமைக்கும்—

" மருளறப்புகலுநான்மறைகளிற்றிகழுமெய்ப்
பொருளெனப்படுமேவன்புவனமுற்றவர்கடம்
மிருளறுத்தவர்மனத்திடர்தவிர்த்தருளவோ
ரருளுருத்தனையெடுத்தவதரித்துளனவன்" எனக்காந்தத்தில்வருதலையும்

பிரணவத்தி னுட்பொருளே யென்றதை—

" மொழியின்மறைமுதலேமுன்னயனத்தேறே
கழியவருபொருளேகண்ணே - தெழியதலால்
ஐயனேயெங்கள்கணபதியேநின்னையலா
தையனேசூழாதெனன்பு" என மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவையில் வருதலையுங்காண்க. (௩௯)

நல்லோர்க்கும்வானோர்க்குநண்ணுமிடையூற்றுக்
கில்லாமைநல்கவவதரித்தவெம்மானே
வல்லார்முலையுமையாளீன்றமழகளிறே
பொல்லார்க்குந்தானவர்க்குமூறிழைக்கும்புத்தேளே.

(இ-ள்.) நல்லோர்க்கும் வானோர்க்கும் நண்ணும் இடையூற்றுக்கு இல்லாமை நல்க அவதரித்த எம்மானே - நல்லவர்களுக்குந் தேவர்களுக்கும் வருந் துன்பத்திற்குத் துன்பந்தரத் திருவவதாரஞ்செய்த எமது பெருமானே, வல் ஆர் முலை உமையாள் ஈன்ற மழகளிறே - சூதாடு கருவியை யொத்த தனபாரத்தையுடைய உமையம்மை யீன்ற இளமை வாய்ந்த யானைக்கன்றே, பொல்லார்க்கும் தானவர்க்கும் ஊறு இழைக்கும் புத்தேளே - கொடியவர்களுக்கும் அசுரருக்கும் இடையூற்றை விளைவிக்குந் தெய்வமே.

நல்லோர் என்றது வானவரிற்சிறந்த அயன் முதலியோரை. பொல்லார்என்றது அசுரரிற் சிறந்த கொடியோரை. உமையம்மை பிரணவப்பிடி வடிவமாய்ப் பெற்றருளினமைதோன்ற மழகளிறே யென்றார். நல்லோர் முதலியோர்க்கு ஊறு தவிர்த்தலும் பொல்லோர்க்கு ஊறு உண்டாக்கலு முன்னர்க்காண்க. (௪0)

சூரனுயிருண்டுசுரருலகங்காத்தளித்த
வீரனுக்குமுன்பிறந்தவித்தகாமுப்புரமுஞ்
சேரவுருத்ததிருவாளனீன்றெடுத்த
வாரணமேயெந்தாய்வலம்புரிக்குஞ்சரமே.

(இ-ள்.) சூரன் உயிர் உண்டு சுரர் உலகம் காத்து அளித்த வீரனுக்கு முன்பிறந்த வித்தகா - சூரபன்மனுயிரையுண்டு தேவருலகத்தைக் காத்தோம்பிய முருகக்கடவுளுக்கு முன்றோன்றிய சதுரப்பாடுடையவனே, முப்புரமும் சேர உருத்த திருவாளன் ஈன்று எடுத்த வாரணமே - திரிபுரத்தையும் ஒருசேரக்கோபித்த ஞானச்செல்வத்தையுடைய இறைவன்தந்த யானைக்கன்றே, எந்தாய் வலம்புரி குஞ்சரமே - என்றந்தையே வலம்புரி விநாயகப்பெருமானே.

சிவபிரான் பிரணவக்களிறாய் எழுந்தருளித் தந்தருளினமைதோன்ற திருவாளனீன்றெடுத்த வாரணமே யென்றார். (௪௧)

பண்ணியமும்வெண்கோடும்பாசாங்குசப்படையு
நண்ணியசெங்கைத்தலத்துநாதாவொருகோட்டுத்
தண்ணியவெண்பிறைத்தாழ்சடையாய்மெய்யடியா
ரெண்ணியவெண்ணியாங்கீந்தருளும்வள்ளலே.

(இ-ள்.) பண்ணியமும் வெண் கோடும் பாசாங்குசம் படையும் நண்ணிய செங் கை தலத்து நாதா-பண்ணிகாரத்தையும் வெள்ளிய கொம்பையும் பாசமும் அங்குசமு மாகிய ஆயுதங்களையும் பொருந்திய செவந்த திருக்கரத்தையுடைய நாதனே, ஒரு கோட்டு தண்ணிய வெண் பிறை தாழ் சடையாய் - ஒப்பில்லாத வளைந்த தண்ணியவெண்பி றைதங்கிய சடையையுடையவனே, மெய் அடியார் எண்ணிய எண்ணி யாங்கு ஈந்தருளு ம் வள்ளலே-உண்மைவாய்ந்த அடியவர் எண்ணியவற்றை எண்ணியபடியே தந்தருளும் பெருவள்ளலே.

சிவபெருமானைப்போலச் சடையில் கொன்றைமாலை முதலியன வணிந்திருந்த லால் தண்ணியவெண்பிறை தாழ்சடையாய் எனவும், அடியார் எண்ணியவண்ணம் அரு ள்வோனாதலால் எண்ணியவெண்ணியாங் கீந்தருளும் வள்ளலே யெனவுங் கூறினன்.

கொன்றைமாலை முதலியவற்றையணிதலை.

"அலங்கன்மணிகனகமுந்தியருவி
விலங்கன்மிசையிழிவதொக்கும் - பலன்கனிகள்
உண்டணைந்தகோன்மகுடத்தொண்கடுக்கைத்தாதளைந்து
வண்டணைந்துசோருமதம்" எனவும்,

"சூர்தந்தபொற்குவட்டின்சூளிகையின்வானயிர்த்து
வார்தந்தெழுமதியமன்னுமே - சீர்தந்த
மாமதலைவான்மதியங்கொம்புவயிறுதித்த
கோமதலைவாண்மதியங்கொம்பு" எனவும் மூத்தபிள்ளையார் திருமும்ம ணிக்கோவையிலும்,

அடியார்க்கு வேண்டியாங்கருளுதலை.

"விநாயகனேவெவ்வினையைவேரறுக்கவல்லான்
விநாயகனேவேட்கைதணிவிப்பான் - விநாயகனே
விண்ணிற்குமண்ணிற்குநாதனுமாந்தன்மையினாற்
கண்ணிற்பணிமின்கனிந்து" என மூத்தபிள்ளையார் திருவிரட்டைமணி மாலையிலும் வருதல்காண்க. (சஉ)

வழிபடுவோர்க்கெய்ப்பிடத்தின்வைப்பேயுமையாள்
விழிகளிப்பமுந்நீர்விளையாடுங்காலை
பொழிமதக்கையூடுபுகுந்துவரப்பெற்றே
னிழிவகன்றுமெய்த்தூய்மையெய்தினேன்யானே.

(இ-ள்.) வழி படு வோர்க்கு எய்ப்பிடத்தின் வைப்பே - தன்னை வழிபடுவோ ர்க்குத் துன்பம்வந்த விடத்து உதவும் வைப்புத்திரவியமே, உமையாள் விழிகளிப்ப மு ந்நீர் விளையாடும் காலை - உமையம்மை கண்களிகூரச் சமுத்திரத்தில் விளையாடுங்காலத் தில், யான் மதம் பொழி கை யூடு புகுந்து வர பெற்றேன் - யான் மதம்பொழியுந் துதி க்கையினிடத்துப் புகுந்துவரப்பெற்றேன் ஆதலால், இழிவு அகன்று மெய் தூய்மை எய்தினேன் - இழிவினின்று நீங்கிப் புனிதமான சரீரத்தையடைந்தேன்.

வறுமையாலடிபட்டிளைத்த வொருவனுக்கு அவன்கனவிலும் நினைத்திராத சேமநிதிகிடைத்தால் அவனடையும் பெருமகிழ்ச்சிபோலப் பிறவித்துன்பங்களா லடிபட்டிளைத்து வழிபட்ட அடியவர்க்கு அப்பிறவித்துன்பங்களையொழித்துப் பேரின்பு உதவியருளுதலால் வழிபடுவோர்க் கெய்ப்பிடத்தின் வைப்பேயெனவும், அவர் திருக்கைப்பரிசத்தால் களங்கமொழிந்தமையால் இழிவகன்று மெய்த்தூய்மை யெய்தினேன் எனவுங் கூறினன். (ருந)

அங்கப்பொழுதினடியேன்கரத்தகன்ற
துங்கப்பணிலமுனைச்சூழுங்கணநாதன்
செங்கைத்தலத்துளதாற்செல்வாவெனக்கதனை
யிங்கிப்பொழுதேயளித்தருளாயென்றிரப்ப.

(இ-ள்.) அங்கு அப் பொழுதின் அடியேன் கரத்து அகன்ற துங்க பணிலம் - அவ்விடத்து அக்காலத்தில் அடியேன் கரத்தினின்று நீங்கிய உயர்ந்தசங்கம், உன்னை சூழும் கணநாதன் செங்கை தலத்து உள்ளது - உன்னைச்சூழ்ந்த கணநாதனது செவந்த கரத்திலுள்ளது, செல்வா எனக்கு அதனை இங்கு இ பொழுதே அளித்தருளாய் என்று இரப்ப - செல்வனே யெனக்கதனையிங்கு இப்பொழுதே தந்தருளாயென்று குறையிரக்க. ()

வேண்டுந்திருநெடுமாற்கெங்கோன்வெளிநின்று
காண்டகையபூதகணங்கரத்துக்கொண்டிருந்த
மாண்டபுகழ்ச்சங்கமளித்தருளிமாயோனே
யீண்டுநினக்கின்னும்வேண்டுவதென்னென்றருள.

(இ-ள்) வேண் டும் திரு நெடு மாற்கு எங் கோன் வெளி நின்று காண் டகைய பூத கணம் கரத்து கொண் டிருந்த மாண்ட புகழ் சங்கம் அளித்தருளி - குறையிரந்த திருமாலுக்கு எம இறைவராகிய மூத்தபிள்ளையார் காட்சிதந்து காணத்தக்க கணநாதன் தனது கையிற்கொண்டிருந்த மாட்சிமைவாய்ந்த புகழமைந்த சங்கினைத்தந்தருளி, மாயோனே ஈண்டு நினக்கு இன்னும் வேண் டுவது என் என்று அருள - திருமாலே இவ்விடத்து உனக்கு இன்னும் வேண்டுவதுயாது அது கூறென்றருள்செய்ய. (ருடு)

முன்னாயபுண்ணியகோடீசர்திருமுன்பென்
றன்னோடிவ்வத்திதடங்கிரியில்வீற்றிருந்திங்
கென்னாளுமெல்லார்க்குமெவ்வரமுமீந்தருளாய்
மன்னுவென்றேத்தமகிழ்ந்தங்கண்வைகினனால்.

(இ-ள்.) முன் ஆய புண்ணிய கோடீசர் திரு முன்பு - அயன்முதலிய எல்லாத் தேவர்க்கு முன்னிலுள்ள புண்ணியகோடீசர் திருமுன்னே, என் தன்னோடு இ அத்தி தடகிரியில் வீற்றிருந்து - என்னோடு இந்தப்பெரிய அத்திகிரியி லெழுந்தருளியிருந்து, இங்கு மன்னு எந்நாளும் எல்லார்க்கும் எ வரமும் ஈந்தருளாய் என்று ஏத்த-இவ்விடத்து இறைவனே எக்காலத்தும் எல்லாருக்கும் எந்தவரத்தையுந் தந்தருளாயென்று துதிக்க, மகிழ்ந்து அங்கண் வைகினன் - மகிழ்கூர்ந்து அவ்விடத்துத் தங்கியருளினர். (ருசு)

ஒன்னலரைவாட்டுமுலவைப்படைத்தேவும்
பன்னகப்பூம்பாயற்றிகிரிப்படைக்கோவு
மன்னநடைக்குன்றமால்வரையினுருயிர்கட்
கென்னவரமுமளித்தென்றுமேவுவார்.

(இ-ள்) ஒன்னலரை வாட்டும், உலவை படை தேவும் - பகைவரை வாட்டுங் கொம்பாகிய ஆயுதத்தையுடைய மூத்தபிள்ளையாரும், பன்னகம் பூம் பாயல் திகிரி படை கோவும் மன்ன - ஆதிசேஷனையழகிய பாயலாக உடைய சுதரிசனமென்னுஞ் சக்கரத்தையுடைய திருமாலும் நிலைபெற, நடை குன்றம் மால் வரையின் ஆர் உயிர்கட்கு - பெரிய அத்திகிரியிடத்தண் அரிய உயிர்களுக்கு, என்ன வரமும் அளித்து என்றும் மேவுவார் - அடியவர்க்கு எவ்வரத்தையும் எக்காலத்துங்கொடுத்து எழுந்தருளியிருக்கின்றார்கள்.

நடைக்குன்றம் யானை இது நடையால் யானைமேல் நிற்றலால் சிறப்புருவக வணி. கயமுகாசுரன் முதலியோரை வதைத்தலால் ஒன்னலரை வாட்டும் என்றார். என்ன விஞவிடைச்சொ சாற்றிரிபு. (௬எ)

மற்றிதனைக்கற்றோருங்கேட்டோருமாசிலர்க்குச்
சொற்றவருமூறுதவிர்ந்தென்றுந்தொல்லுலகிற்
பெற்றமகவாதிப்பெருஞ்செல்வத்தோடுறைந்து
பற்றறுத்துமேலைப்பரபோகமேவுவரால்.

(இ-ள்.) இதனை கற்றோரும் கேட்டோரும் மாசு இலர்க்கு சொற்றவரும் ஊறு தவிர்ந்து - இதனைக் கற்றவருங் கேட்டவருங் குற்றமில்லாதவருக்குச் சொன்னவரு மிடையூற்றினின்று நீங்கி, என்றும் தொல் உலகில் பெற்ற மகவாதி பெரும் செல்வத்தோடு உறைந்து பற்று அறுத்து மேலை பரபோகம் மேவுவர் - எக்காலத்துந் தொன்றுதொட்டுள்ள உலகத்தில் தாம்பெற்ற புத்திரரோடு பெருஞ் செல்வத்துடனிருந்து பாசத்தையறுத்து இறுதியில் பரபோகத்தை யடைவார்கள்.

மற்று அசைநிலை யிடைச்சொல். உறுதல் ஊறு எனநிற்றலால் முதனிலை திரிந்த தொழிற்பெயர். விக்கினத்தை யொழித்தருளும் கடவுளாதலால் அவரது சரித்திரத்தைக் கற்றவர்களும் கேட்டவர்களும் பிறர்க்குச்சொன்னவர்களும் அடையும்பயன் இதனாற் கூறப்பட்டது. (௬அ)

வலம்புரிவிநாயகப்படல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩௬அ௬.

## சிவாத்தானப்படலம்.

ஒருபோகுகொச்சகம்.

அலம்புநீர்வாவிசூழத்திமாமலைமிசை
வலம்புரிவிநாயகன்வரவிதுபோதிற
னலம்புரிபூசைசெய்நவில்சிவாத்தானமாம்
புலம்புரிபெருமையைப்புகலுதுங்கேண்மினே.

(இ-ள்.) அலம்பு நீர் வாவி சூழ் அத்தி மா மலை மிசை வலம் புரி விநாயகன் வரவு இது - ஒலிக்கும் நீரமயமாகிய தடாகஞ்சூழ்ந்த பெரிய அத்திகிரியின்மேல் வலம்புரிவிநாயகரது வருகையிது, போதினன் நலம் புரி பூசை செய் நவில் சிவாத் தானம் ஆம் புலம் புரி பெருமையை புகலுதும் கேண்மின் - தாமரைமலரில் வசிக்கும் பிரமன் நன்மைமிக்க சிவபூசனையைச் செய்யும் யாவரும் புகழுஞ் சிவாத்தானமாகிய இடத்தினது விரும்பும் மான்மியத்தைச் சொல்லுவோங் கேளுங்கள். (க)

ஆதிநாட்சிவனிடத்துதித்தவனருளினாற்
பேதியாதுலகெலாம்படைத்திடப்பெற்றுள
சீதநாண்மலர்மிசைத்திசைமுகன்றன்னைமான்
மூதுலகோடுமுண்டாக்கினன்முறைமையால்.

(இ-ள்.) ஆதி நாள் சிவன் இடத்து உதித்து அவன் அருளினால் - முன்னாளில் சிவபெருமான் இடப்பாலிற்றோன்றி யப்பெருமான் றிருவருளால், உலகு எல்லாம் பேதியாது படைத்திட பெற்றுள்ள சீதம் நாள் மலர் மிசை திசை முகன் தன்னை-எல்லாவுலகங்களையும் பேதியாமல் படைக்கப்பெற்றுள்ள குளிர்ந்த அன்றலர்ந்த தாமரைமலர் மேலுள்ள பிரமனை, மால் முது உல கோடும் முறைமையால் உண்டாக்கினன் - திருமால்தொன்றுதொட்டுள்ள உலகத்தோடு முறையாற் சிருட்டித்தான்.

இடப்பாலிற் றிருமால்தோன்றினமையைப் பின்னர்க்காண்க. (உ)

வேறு

விதுமுடிப்பிரான்றிருக்கயிலையின்மேயினான்
பொதுவறத்தொழுதனன்போற்றிநின்றுரைசெய்வான்
மதுமலர்ப்பொருட்டணிமாளிகைப்பண்ணவன்.

(இ-ள்.) அது மனத்து எண்ணினான் அழுக்கறுத்து இள நிலா விது முடிபிரான் திரு கயிலையின் - அதனை மனத்திற்கருதிப் பொறாமைப்பட்டு இளங்கிரணத்தையுடைய சந்திரனையணிந்த சடைமுடியையுடைய பெருமானது திருக்கயிலையை, மது மலர் பொருட்டு அணி மாளிகை பண்ணவன் மேயினான் - தேன்சிந்துந் தாமரையின் பொருட்டை யாதனமாகவுடைய பிரமனடைந்து, பொது அற தொழுதனன் போற்றி நின்று உரை செய்வான் - தனக்குரிமையாகத்தொழுது துதித்துநின்று கூறுவான்.

தன்வேண்டுகோளுக்கு இரங்கியருள்செய்யு மிறைவன் அச்சிவபெருமானேயாதலால் பொதுவறத்தொழுதனன் என்றார். (ங)

பெருமநின்னிடப்புறத்தரிதனைப்பெற்றனை
யருளொடும்வலப்புறத்தென்னையீன்றளித்தனை
யுருவவைகுந்தமுஞ்சத்தியவுலகமு
மிருவரும்பெற்றுளேமெந்தைநின்னருளினால்.

(இ-ள்.) பெரும நின் இடப் புறத்து அரி தனை பெற்றனை-பெருமானே உனது இடப்புறத்தில் திருமாலைப்பெற்றாய், அருளொடும் வலம்புறத்து என்னை ஈன்று அளித்தனை - அருளோடும் வலப்பாலென்னைத் தந்தாய், எந்தை நின் அருளினால் உருவ வைகுந்த மும் சத்திய உலகமும் இருவரும் பெற்றுளேம் - என்றந்தையே உனது கிருபையால் வடிவம்வாய்ந்த வைகுந்தத்தையுஞ் சத்திய உலகத்தையும் நாங்களிருவரும் பெற்றோம்.

இது சுருதிவாக்கியமாதலால் தேவரீர் ஆன்மாக்களுக்குத் தனுகரண புவனபோகந் தருதற்பொருட்டு திருமாலையும் என்னையுந் தந்தனை யென்பான் இடப்புறத்தரிதனை வலப்புறத்தென்னை யீன்றருளினையெனவும், எங்களுக்கு ஓர் தானமாக வைகுந்தமும் சத்தியலோகமுந் தந்தனையென்பான் உருவவைகுந்தமுஞ் சத்தியவுலகமும் இருவரும்பெற்றுளே மெந்தைநின்னருளினால் எனவுங் கூறினான். (ச)

படைப்பதுங்காப்பதும்பணியெமக்காக்கினை
தொடைப்பொலங்கொன்றையந்துணர்துறுஞ்சடைமுடி

விடைக்கொடிப்பகவனேவிருப்பொடுவெறுப்பினை
யுடைத்தநின்னருட்கிருவேங்களுமொத்துளேம்.

(இ-ள்.) தொடை பொலம் கொன்றை அம் துணர் துறும் சடை முடி விடை கொடி பகவனே - மாலையாகப் பொன்னிறம்வாய்ந்த கொன்றையினது அழகிய பூங்கொத்து நெருங்கிய சடாமுடியையுடைய இடபக்கொடியையுயர்த்த பகவனே, படைப்பதும் காப்பதும் பணி எமக்கு ஆக்கினை - படைத்தலுங் காத்தலுமாகிய தொழிலை யெங்களுக் கமைத்தாய் ஆதலால், விருப்பொடு வெறுபினை உடைத்த நின் அருட்கு இருவேங்களும் ஒத்துளேம் - விருப்பு வெறுப்பென்னும் இரண்டினின்றும் நீங்கிய நின் திருவருளுக்கு நாங்களிருவரு மொருதன்மையேம்.

எங்களுக்குத் தானந்தந்தருளினமைபோல ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தொழிலினையுந் தந்தருளினை யென்பான் படைப்பதுங் காப்பதும் பணியெமக்காக்கினை யெனவும், அதனாலெங்களிருவர்பாலும் ஒத்த திருவருளையுடையையென்பான் விருப்பொடு வெறுப்பினையுடைத்த நின்னருட்கு எனவும், இதனால் நாங்களிருவரும் ஏற்றத்தாழ்ச்சியின்றிச் சமமாயுள்ளேமென்பான் இருவரும் ஒத்துளே மெனவுங்கூறினான். (ரு)

பத்திசெய்துன்னருள்பெற்றுவெம்பாம்பணை
யுத்தமனென்னையிவ்வுலகொடுமீன்றனன்
னத்திறத்தியானுமம்மாயனோடகிலமுஞ்
சித்தனேபடைக்குமாதிருவுளஞ்செய்குவாய்.

(இ-ள்.) வெம் பாம்பு அணை உத்தமன் - கொடியபாம்பினை மெத்தையாகவுடைய புருடோத்தமனாகிய திருமால், பத்தி செய்து உன் அருள் பெற்று என்னை இ உலகொடும் ஈன்றனன் - உனக்கன்புசெய்து உனது திருவருளைப்பெற்று என்னை இவ்வுலகத்தோடுந்தந்தனன், சித்தனே அ திறத்து யானும் அ மாயனோடு அகிலமும் படைக்கும் ஆறு திரு உளம் செய்குவாய் - சித்துவடிவாயுள்ள இறைவனே அப்பகுதியால் யானும் திருமாலோடு எல்லா உலகங்களையும் படைக்கும் வண்ணந் திருவுளஞ்செய்குவாய்.

உன் திருவடிக்கன்புபூண்டு என்னிலும் ஏற்றமுடையவனாய் என்னைப்படைத்தனன் என்பான் பத்திசெய்து என்னை யிவ்வுலகொடு மீன்றனன் எனவும், அதுபோல உன்றிருவடிக்கீழ் யானும் அன்புடைமையால் ஏற்றமுடையவனாய் அவனையுலகோடும் படைக்கவேண்டுமென்பான் அத்திறத்தியானுமம்மாயனோடகிலமும் - சித்தனேபடைக்குமாதிருவுளஞ்செய்குவாய் எனவுங்கூறினான். (சு)

என்றசொற்செவிமடுத்தெம்பிரானுரைசெய்வா
னொன்றுகேண்மைந்தனேயுனக்கிதுவேண்டுமேற்
சென்றுகாஞ்சியினெமைப்பூசைசெய்திருத்தியான்
மன்றவங்கெய்திநீவேட்டவாவழங்குதும்.

(இ-ள்.) என்ற சொல் எம்பிரான் செவி மடுத்து உரை செய்வான் - என்று குறையிரந்த சொல்லைத்திருச்செவியிற் சாத்திக்கூறியருளுவான், மைந்தனே ஒன்று கேள் - மைந்தனே ஒன்று நீகேள், உனக்கு இது வேண்டு மேல் காஞ்சியில் சென்று எம்மை பூசை செய்து இருத்தி - உனக்கிவ்வரம் வேண்டுமாகில் காஞ்சிப்பதியிற்சென்று எம்மைப் பூசைசெய்திருப்பாய், யான் அங்கு எய்தி நீ வேட்ட ஆறு மன்ற வழங்குதும் - யாம் அங்குவந்து நீ விரும்பியவகையை நிச்சயமாகத் தந்தருளுவோம்.

யார், பெறுதற்கரியதொன்றை விரும்பினோர்களோ அதனைப்பெறுதற்குரிய திருப்பதிகாஞ்சியிலெய்தி யெம்மை வழிபட்டாலன்றிப் பெறுதலரிதென்பார் காஞ்சியினெமைப் பூசை செய்திருத்தி யான் அங்கெய்தியருளுவோம் எனக்கூறியருளினார். (எ)

ஐயுறேலென்றலுமம்புயன்றாழ்ந்தெழுந்
தொய்யெனக்கச்சியிற்போந்துமைகோன்வளர்
கொய்பொழிற்புண்ணியகோடியின்குணதிசை

(இ-ள்.) ஐயுறேல் என்றலும் - நீ சிறிதும் ஐயப்படாதே என்று இறைவன் கூறியருள, அம் புயன் தாழ்ந்து எழுந்து கச்சியில் ஒய் என்ன போந்து - பிரமன் வணங்கி யெழுந்து காஞ்சிப்பதிக்கு விரைந்துபோய், உமை கோன் வளர் கொய் பொழில் புண்ணியகோடியின் குணதிசை - உமையம்மையின் தலைவனாகிய இறைவனெழுந்தருளி மலர் முதலியனவற்றைக் கொய்தற்குரிய சோலைசூழ்ந்த புண்ணியகோடீசத்தின் கீழ்த்திசையில், எய்து தன் பெயரினால் இலிங்கம் ஒன்று இருத்தினான் - அடைந்து தன் பெயரினாலே சிவலிங்கமொன்று தாபித்தான்.

அங்கெய்தி மன்ற நீ வேட்டவாவழங்குதும் என்பதற்குப்பொருந்த அருளுவோம் என்பார் ஐயுறேலென்றலும் என்றருளினார். எய்து என்னு முதனிலை வினையெச்சத்தின் மேல்நின்றது. (அ)

போக்கரும்பிரமதீர்த்தப்பெயர்ப்பொய்கையொன்
றாக்கினனங்குநீராடிநல்வினைமுடித்
தூக்கமாரன்பினான்மலரெடுத்துடையவன்
பூக்கமழ்சேவடிப்பூசனைசெய்தபின்.

(இ-ள்.) போக்கரும் பிரமதீர்த்தம் பெயர் பொய்கை ஒன்று ஆக்கினான் - அழித்தற்கரிய பிரம தீர்த்தமென்னும் பெயர் வாய்ந்த பொய்கை யொன்றமைத்து, அங்கு நீர் ஆடி நல் வினை முடித்து - அவ்விடத்தில் நீராடி நித்திய முதலியவற்றை முடித்து, ஊக்கம் ஆர் அன்பினால் மலர் எடுத்து உடைய வன்பூ கமழ் சேவடி பூசனை செய்த பின் - உள்ளக்கிளர்ச்சி நிறைந்த அன்பினால் அப் பொய்கையிலுள்ள மலரை யெடுத்து இறைவனது தாமரைமலர்போன்ற மணங்கமழுஞ் செவந்த திருவடியைப் பூசித்தபின்.

நித்திய முதலியவற்றை முன்னர்க் கூறினும் அங்குக்காண்க. அங்கு என்றமையால் அப் பொய்கை யென்றாம். (கூ)

தீயவிர்குடங்கையான்றிருவுளங்களிவரக்
காயழற்சோமயாகஞ்செயக்கருதினா
னாயவக்கருத்துணர்ந்தண்டருமுனிவரு
மேயினராயிடைவிண்ணவர்கோனொடும்.

(இ-ள்.) தீ அவிர் குடங் கை யான் திரு உளம் களிவர காய் அழல் சோமயாகம் செய்ய கருதினான் - வேள்வித்தீ விளங்கு முள்ளங்கையையுடைய இறைவனது திருவுளங் களி கூரச்சுட்டு வருத்துந் தீ வாய்ந்த சோமயாகஞ் செய்யக்கருதினான், ஆய அகருத்து உணர்ந்து ஆயிடை அண்டரும் முனிவரும் விண்ணவர் கோனொடும் மேயினர் - ஆகிய அந்தக்கருத்தினை யறிந்து அவ்விடத்துத் தேவர்களு முனிவர்களும் இந்திரனோடும் வந்தார்கள்.

சிவபெருமானார் திருக்கரத்திலேந்தியதீ தேவதாரு வநமுனிவரேவிய வேள்வி த்தீ யாதலால் தீயவிர்குடங்கையான் எனவும், அவரிடத்து ஒன்றுபெறவிரும்பினோர் அவர்க்கு விருப்பமுள தொன்றைச்செய்து பெறுதல் எளிதாதலால் திருவுளங் களிவரக்- காயழற் சோமயாகஞ் செயக்கருதினான் எனவுங்கூறினார்.

தேவதாரு வநமுனிவர் ஏவியவேள்வித்தீ என்றதை—

" வன்னியந்தேவுமுட்கவந்திடகனலையார்க்கு
முன்னவனொருகையேந்திமுயலகன்றன்னைமெல்லத்
தன்னடியதனால்வீழத்தள்ளியக்கமலத்தாளை
வென்னிடையருளானூன்றிவிண்ணவர்போற்றநின்றான் " எனக்கந்தபுராணத்தில்வருதல்காண்க. (௧0)

மங்கருந்திறன்மொழிக்கிழத்திவானாட்டவர்

பங்கயன்வேள்வியைப்பற்றுமக்காலையிற்
றுங்கமார்தருக்களிற்றொக்கனளென்பவே.

(இ-ள்.) மங்கு அரும் திறல் மொழிக்கிழத்தி வான் நாட்டவர் தங்களின் நீங்கி நீர் தன் அகத்து உற்றனள் - கெடுதலில்லாத வெற்றி வாய்ந்த நாமகள் தேவர்களினின்றும் நீங்கி நீரிற் கரந்தனள், பங்கயன் வேள்வியை பற்றும் அகாலையில் துங்கம் ஆர் தருக்களில் தொக்கனள் - பிரமன் யாகத்தைத் தொடங்கிய அக்காலத்தில் உயர்ச்சி வாய்ந்த விருக்ஷங்களில் வசித்தனள்.

என்ப் அசைநிலை. (௧௧)

எழில்வளர்நாமகளென்றுமிவ்வுலகிடை
முழவினில்வீணையின்முழங்குதீங்குரல்படுங்
குழலினினிசையெனக்குலவுகின்றாளெனப்
பழமறைமுழுவதும்பன்னுமிவ்வகையரோ.

(இ-ள்.) எழில் வளர் நாமகள் என்றும் இ உலகிடை முழவினில் வீணையில் முழங்கு தீங்குரல் படும் குழலில் நல் இசை என்ன குலவுகின்றாள் என்ன - தோற்றமிக்க கலைமகள் எக்காலத்தும் இவ்வுலகில் வாச்சியங்களிலும் வீணையிலும் ஒலிக்கும் இனிய குரலமைந்த வேய்ங்குழலிலும் இசையாக விளங்குகின்றாளென்று, பழமறை முழுவதும் இ வகை பன்னும் - தொன்றுதொட்டுள்ள வேதங்கள் முழுது மிவ்வகையாகக் கூறாநிற்கும்.

தருக்களில் வசித்தமையால் வாச்சியங்களிலும் வீணையிலும் வேய்ங்குழலிலும் இசைவடிவாகவிருக்கின்றாள் என்பது வேதவாக்கியம் என்பார் முழவினில் வீணையில் முழங்குதீங்குரல்படுங் - குழலினிலிசையெனக்குலவுகின்றாள்என - பழமறைமுழுவதும்பன்னும் என்றார். (௧௨)

ஆதலிற்காண்கிலானயனுஞ்சாவித்திரி
வேதகாயத்திரியென்னுமின்னருட
னேதமிறீக்கையுற்றிருமகச்சாலையுட்
போதலுங்கலைமகள்கேட்டுளம்புழுங்கினள்.

(இ-ள்.) ஆதலில் அயனும் காண்கிலான் - ஆதலாற் பிரமனுங் கலைமகளை [illegible] னாதவனாகி, சாவித்திரி வேதகாயத்திரி என்னும் மின்னார் உடன் ஏதம் இல் தீக்கை உற்

று இருமகம் சாலை உள் போதலும் - சாவித்திரி சாயத்திரியென்னு மாதர்களுடனே குற்றமில்லாத தீக்கைவாய்ந்து பெரிய யாகசாலையுட்செல்ல, கலைமகள்கேட்டு உள்ளம் புழுங்கினாள் - நாமகள் கேட்டு மனங் கொதித்தாள்

தனது ஞானசத்தியாகிய கலைமகள் தருக்களிலொளித்தமையாற் காணான் என்பார் ஆதலிற் காண்கிலனயனும் எனவும், தனது இச்சாசத்தியாகிய சாவித்திரியோடும் கிரியாசத்தியாகிய காயத்திரியோடும் வேள்வியைச்செய்து முடிக்கத் தீட்சைபெற்றனன் என்பார் சாவித்திரி வேதகாயத்திரியென்னு மின்னாருடன் ஏதமில்தீக்கையுற்று எனவும், அதுகண்டு மனம் புழுங்கினள் என்பார் உளம் புழுங்கினள் எனவுங்கூறினார். (௧௩)

திருமகச்சாலையைப்பாழ்படச்செய்வலென்
றிருவிசும்பூழிநாளிடித்தெனக்கொதித்தெழுந்
தொருநதிவடிவுகொண்டுருகெழத்தோன்றினாள்
கருநிலையுயிரெலாமீன்றருள்காரணி.

(இ-ள்.) கரு நிலை உயிர் எல்லாம் ஈன்றருள் காரணி - கருப்பத்தானத்திலெல்லாவுயிர்களையும் பெற்ற கலைமகள், திருமகம் சாலையை பாழ்பட செய்வல் என்று இருவிசும்பு ஊழி நாள் இடித்தால் என்ன கொதித்து எழுந்து - அழகிய வேள்விச்சாலையைப் பாழ்படச் செய்வேனென்று பரந்த மேகங்கள் ஊழிகாலத்திலெழுந்தாலென்னக் கொதித்தெழுந்து, ஒருநதி வடிவுகொண்டு உருகெழ தோன்றினாள் - ஒருநதி வடிவத்தைக்கொண்டு யாவருக்கு மச்சமிக வந்தனள். (௧௪)

மலர்மிசைவருதிசைமுகனுயர்மகவினைபுரியிடமே
யலவவனுறையுலகமுமுடனழிவுசெய்திடவெழல்போற்
பலகுமிழிகளலைதிரைநுரைபயில்வுறவகல்ககனத்
தலமிசைநிமிர்விசையொடுவருதகையதுகுலநதியே.

(இ-ள்.) குலநதி - நன்மைவாய்ந்த அந்நதி, மலர்மிசை வருதிசை முகன் உயர் மகவினை புரி இடமே அல்ல அவன் உறை உலகமும் உடன் அழிவு செய்திட எழல்போல் - திருமாலுந்தித்தாமரையில்வந்த பிரமன் உயர்ந்த யாகத்தொழில் செய்யு மிடமேயல்ல அவன் வசிக்குஞ் சத்தியவுலகத்தையும் விரைந்தழிப்பேனென்றெழுதல்போல், பல குமிழிகள் அலை திரை நுரை பயில் வுற அகல் ககனம் தலமிசை நிமிர் விசையொடு வருதகையது - பல குமிழிகளும் அலைகின்ற திரையும் நுரையும் நெருங்கப்பரந்த விண்டலத்தின்மேல் நிமிர்ந்த விசையோடும் வருந்தன்மையையுடையது. (௧௫)

வரியளியினமுளர்நறைமதுமலரவன்மகவினையைப்
புரிவுறவிடமுதவியதொருபுவியிதுவெனவெகுளா
விரிபணமணிவிடவரவிறைவெருவரவுடனெளிய
வரில்றுகடனிலமுழுவதுமகழ்வதுகுலநதியே.

(இ-ள்.) குலநதி - அந்நதியானது, ஒரு புவி இது வரி அளியினம் உளர் நறை மது மலரவன் மகவினையை புரிவுற இடம் உதவியது என்ன வெகுளா - ஒப்பில்லாத நிலவுலகமாகிய இது வரிவாய்ந்த வண்டின் கூட்டங்கள் பரவத் தேன் சிந்தும் மலரில் வசிக்கும் பிரமன் வேள்வித்தொழிலைச்செய்ய இடந்தந்ததென்று கோபித்து, விரி பணம் மணி விடம் அரவு இறை வெருவா உடல் நெளிய அரில் அறு கடல் நிலம் முழுவதும் அகழ்வது - விரிந்த படங்கள்தோறு மிரத்தினங்களையும் விஷத்தையுமுடைய ஆதிசே

ஷன் அஞ்சவும் அவனுடல் வெளியவுங் குற்றமற்ற கடல்சூழ்ந்த வுலகமுற்றையுந் தோ

வெள்ளம் பூமியை அகழ்ந்துவருதலை நிலவுலகு பிரமனுக்கு இடந்தந்ததென்று கருதி யகழ்ந்தது எனக்கவி அத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. (கசு)

விரவியமறைவிதியுளிமகவினைபுரியுபகரணத்
திரவியமுழுதுதவினவிவையெனவெழுசினமதனாற்
பரவியபுனனிறைகழனிகள்பலகயநிரைபொழிலி
னுரவியல்வளமுழுதழிவுசெய்துறுவதுகுலநதியே.

(இ-ள்.) குலநதி - மேன்மைவாய்ந்த அந்நதி, விரவிய மறை விதி உளி மகவினை புரி உபகரணம் திரவியம் முழுதும் இவை உதவின என்ன எழும் சினம் அதனால்- எப்பொருளுமமைந்த வேதவிதியால் வேள்வித்தொழிலைச் செய்தற்குக் கருவியாகிய உபகரணங்கள் முழுவதையு மிவைகள் தாராநின்றன என்னுங் கோபத்தால், பரவிய புனல் நிறை கழனிகள் பல கயம் நிரை பொழிலின் உரவு இயல் வளம் முழுதும் அழிவுசெய்து உறுவது - பரந்த நீர்நிறைந்த வயலிலும் பல கயங்களிலும் வரிசையாயுள்ள சோலையிலும் உள்ள பெருமையமைந்த வளமுழுவதையும் அழித்து வாராநின்றது.

உளி மூன்றும்வேற்றுமைச் சொல்லுருபிடைச்சொல். முழுது என்னும் உரிச்சொல்லடியாகப்பிறந்த பெயர்ச்சொல்லினிறுதியில் இனைத்தென அறிபொருளில்வந்த முற்றும்மை தொகுத்தல். கழனிகளிலும் சோலைகளிலும் உள்ள வளங்களை நதிவாரி வருதலைக்கவி இவ்வாறத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. (கஎ)

ஒடிவறுமகமதுதனிலவியுணவருமிருசுடரை
யிடைவழியினிலெதிருறுதலுமெழுவெகுளியினொடுகைப்
பிடியெனவுடன்வினைவொடுகொடுபெயர்வதுபொரவிருகேழ்க்
கடிகெழுமரைமலர்பலகொடுகடுகிடுவதுநதியே.

(இ-ள்.) நதி - அந்நதியானது, ஒடிவு அறும் மகம் அது ரும் இருசுடரை இடை வழியினில் எதிர் உறுதலும் எழு வெகுளியினொடு - அழிதலில் லாத அந்தவேள்வியில் அவிப்பாகத்தை யுண்ணவருஞ் சந்திரசூரியர் நடுவழியிலெதிர்ப் பட எழாநின்ற கோபத்தோடு, கைபிடி என்ன உடன் விரைவொடு கொடு பெயர்வது பொர - கையிலடங்கிய கவளத்தைப்போல அவர்களை ஒருசேர விரைந்துகொண்டு வருவதையொப்ப, கடிகெழு இருகேழ் மரைமலர் பலகொடு கடுகிடுவது - வாசமிக்க செம்மை வெண்மையென்னும் நிறம்வாய்ந்த தாமரைமலர் பலவற்றையுங்கொண்டு வா

இருகேழ்மரைமலர் என்றது செந்தாமரை வெண்டாமரைகளை. வெள்ளம் சந்திர சூரியர்களை யெதிர்ப்படுதலில்லையாக எதிர்ப்பட்டுப் பிடித்துவருவதுபோல உவமையுரு புதந்து கூறினமையால் இல்பொருளுவமையணி. (கஅ)

அயனிடையுறும்வெகுளியினணைபொழுதிணைவிழியவைசேர்
தியல்வதுபொரவெரிமருள்குவளைகளிடையிடையொளிர
வெயரொனவுறைசிதறிடமுலைமிசையணிதுகில்குழறித்
துயல்வரல்பொரவரையொடுதிரைதொகவருவதுநதியே.

(இ-ள்.) நதி அயனிடை உறும் வெகுளியின் அணை பொழுது - அந்நதி பிரமனிடத்து மிக்க கோபத்தோடு வாராநின்ற காலையில், இணை விழியவை சேர்ந்து இயல்

வது பொரா எரி மருள் குவளைகள் இடை இடை ஒளிர - இரண்டு கண்களுஞ் செந்நிறம் வாய்ந்து வருவதை யொப்ப நெருப்பு மருளுஞ் செங் குவளைக ளிடங்கள் தோறும் விளங்கவும், வெயர் என்ன உறை சிதறிட - வெயர்வை போலத் துளிகள் சிந்தவும், முலை மிசை அணி துகில் குழறி துயல்வரல் பொர வரை யொடு திரைதொக வருவது - தனத்தின் மேலணிந்த உத்தரீயந் தடுமாறி யசைதலை யொப்ப மலையோடு அலைகள் நெருங்க வாராநின்றது.

இணை விழியவை சேந்தியல்வது பொர எனவும், வெயர் என எனவும், முலை மிசையணி துகில் குழறித் துயல்வரல் பொர எனவும், உபமேயத்தை யுபமானமாக்கி உபமானத்திற்குக் குறைவுதோன்றச் சொல்லுதலால் எதிர் நிலையணி. (௧௯)

அவியுணநிறைசுரர்பலரையுமலைசெயவெழுசெயல்போற்
கவிழ்தலையனகுவடுகளொடுவெதிர்களிளொடுகடுகிப்
புவிமுதலறவருபிரளயநிலையுணர்புரையவருஞ்
செவியொடுவிழிவெருவரவருதிறலதுகுலநதியே.

(இ-ள்) குல நதி அவி உண நிறை சுரர் பலரையும் அலை செய்ய எழு செயல் போல்-மேன்மை தங்கிய நதியானது அவிப் பாகத்தையுண்ணவேள்விச்சாலையில் நிறைந்த தேவர் பலரையும் வருத்த எழுஞ் செயலைப்போல, கவிழ் தலையன குவடுகளொடு வெதிர் களிளொடு கடுகி - கவிழ்ந்த தலையை யுடையனவாகிய மலைகளோடு மூங்கில்களோடும்விரைந்து, புவிமுதல் அற வரு பிரளயம் நிலையுணர் புரையவரும் செவியொடு விழிவெருவர வருதிறலது - எல்லாவுலகங்களும் வேரோ டறவரும் பிரளயநிலையைக் கண்டுணர்ந்த மேலோருங் காதோடு கண்களுங் கேட்டும் பார்த்தும் அஞ்ச வாராநின்ற வன்மையை யுடையது. (௨0)

அள்ளவிநிறைகளமுழுவதுமழிவுசெய்தபினதனி
னுள்ளுறநடவெனமிகுசினமொடுகறகறவழிபாற்
கள்ளிகள்பலபலகொடுவிடுகணைநுதிநிகரயில்வாய்
முள்ளுடைமுதல்பலபலகொடுமுடுகுவதுயர்நதியே.

(இ-ள்) உயர் நதி அள்அவி நிறை களம் முழுவதும் அழிவு செய்த பின் - உயர்ந்த நதியானது மிக்க அவிப்பாகம்நிறைந்த வேள்விகளைமுற்று மழிவுசெய்த பின்பு, அதனின் உள்உற நட மிகு சினமொடு கற கறவென வழிபால் கள்ளிகள் பல பல கொடு - அக்களத்தினுள்ளே பொருந்த நடம்படி மிக்க கோபத்தோடு கறகறவென்று பால்வழியும் பல கள்ளிகளையுங்கொண்டு, விடு கணை நுதி நிகர் அயில் வாய் முள் உடை முதல் பல பல கொடு முடுகுவது - எய்யு மம்பினுனியையொத்த கூரிய வாயையுடைய முள் செறிந்த உடைமுதலிய பல முட்செடிகளைக் கொண்டு விரைந்து வாராநின்றது.

கற கற வென கற கற என்னும் ஒலிக் குறிப்புப் பொருள் மேல் நின்ற இரட்டைக் கிளவியாகிய இடைச்சொல்லி னிறுதியில் நிற்கும் எனவென்னும் இடைச்சொல் நட என்னும் பெயரச்சத்தி னிறுதியில் நின்றது, செய்யுளாதலால். நடவருவது என்றதற்கு "இடித்து வெளிசெய்து" என்பதற்குக்கூறிய துறைகொள்க. (௨௧)

மேற்படுகலைமகணதியெனவேற்றுருவுறுசால்பிற்
கேற்புறவவயமவைகளுமேத்தெழிலுருமாறித்
தோற்றியவெனவறன்மிசைவருதூத்திரண்மணிமலர்கள்
போற்றுறுபலகொடியுடனெழில்பூத்தணவதுநதியே.

(இ-ள்.) நதி மேற்படு கலைமகள் நதியென வேற்றுரு உறு சால்பிற்கு ஏற்புற- நதியானது மேற்பட்ட கலை மகளானவள் நதியாக வேற்றுரு வமைந்த தகுதிக்கேற்ப, அவயம் அவைகளும் ஏத்து எழில் உரு மாறி தோற்றிய என - முகமுதலிய அவயவங்களும் பலருந் துதிக்கு மழகிய உருவமாறித் தோற்றினவை போல, அறல் மிசை வரு துதிரள் மணி மலர்கள் போற்றுறு பல கொடி உடன் எழில் பூத்து அணைவது - கருமணலு மேலே வரும் புனிதமாகிய திரண்ட முத்துகளு மலர்கள்பூத்து விளங்கும் பலபூங் கொடியுடனே அழகமைந்து வாரா நின்றது.

நதி வடிவமாக வுருவமாறிய கலைமகள் அப்பொழுது நிகழுஞ்செய்கையிற் பயன்படுதற் பொருட்டு உபமானப் பொருள்கள் கூந்தல்முதலிய உபமேயத்தி னுருவத்தைக்கொண்டு பரிணமித்தலால் திரிபணியும், கூந்தல் பற்கள் முகமுதலிய வுறுப்புகளாகிய உபமேயப் பொருள்களை அறல் முதலிய உபமானச் சொற்களால் இலக்கணையாகக் கூறுதலால் உயர்வு நவிற்சியணியுங் கலந்துவருதலாற் கலவையணி. (௨௨)

வருநெறியெதிருறுபுரிசைகண்மாளிகைநிரையகழுற்
றுருமிடியெனவதிர்தருமொலியோடொருநதிவடிவாய்ப்
பருவரல்செய்யவிம்முறைவருபாரதிசெயலதனை
முருகலரளியெனவிசைபயினாரதமுனிகண்டான்.

(இ-ள்.) வரும் நெறி எதிர் உறு புரிசைகள் மாளிகை நிரை அகழ் உற்று - வரும் வழியி லெதிர்ப்பட்ட மதில்களின் வரிசைகளையு மாளிகையின் வரிசைகளையு பறித்து, உரும் இடியென அதிர் தரும் ஒலியோடு ஒரு நதி வடிவாய் பருவரல் செய்ய இம்முறை வரு பாரதி செயல் அதனை-இடியைப்போல ஒலிக்குங் கோஷத்தோடு ஒரு நதியின் வடிவமாய் எல்லா வுயிர்களுக்குந் துன்பஞ் செய்ய இம்முறையாக வருங்கலைமகளது செய்கையை, முருகு அலர் அளியென இசைபயில் நாரத முனி கண்டான் - வாசமிக் கமலரில் ஒலிக்கும் வண்டுகளைப்போல நரம்புகளில் விரலா லிசையெழுப்பும் நாரதமுனிவன் பார்த்தான்.

"மெல்விரல்கள்வண்டின்கிளைபோலப் - பண்ணரம்பின்மிசைபயில" எனச்சிலப்பதி காரத்திலும் "பசும் பொன்யாழ் - நரம்பு தேனார்த்தெனத்தீண்டி" சீவகசிந்தாமணியிலும் வருதலால் முருகலரளியென விசைபயில் என்பதற்கு இவ்வாறு பொருள் கூறினும். (௨௩)

கண்டுசெய்யசடைகட்டவிழவோடிமுனிவன்
புண்டரீகனைவணங்கியெதிர்நின்றுபுகல்வா
னண்டர்நாயகநின்வேள்வியையழிக்கமுனிவு
கொண்டுவாணிநதியாய்க்குறுகுகின்றனளரோ.

(இ-ள்.) முனிவன் கண்டு செய்ய சடை கட்டு அவிழ ஓடி புண்டரீகனை வணங்கி எதிர் நின்று புகல்வான் - அம் முனிவன் பார்த்துச் செவந்த சடை முடியின் கட்டுக்குலைந்த விழவோடிப் பிரமனை வணங்கி யெதிர்நின்று கூறுவான், அண்டர் நாயக நின் வேள்வியை அழிக்க முனிவுகொண்டு வாணி நதியாய் குறுகுகின்றனள் - தேவர்களுக்குத் தலைவனே உனது யாகத்தை யழிக்கக் கோபங்கொண்டு கலைமகள் ஓர் நதிவடிவமாய் வருகின்றனள். (௨௪)

கடிதுநீதடையியற்றுதியெனக்கழறலும்
படியினான்முகனுளத்திலுமைபங்கரிருசே

வடியிருத்தினனறிந்தன ரனைத்துமிறைவர்
நெடியமாயனை விளித்திது நிகழ்த்தலுறுவார்.

(இ-ள்.) நீ கடிது தடை இயற்றுதி என கழறலும் - நீ விரைந்து தடைசெய்வா யென்று அம்முனிவன்கூற, படியில் நான் முகன் உளத்தில் உமை பங்கன் இருசேவடி இருத்தினன் - நிலவுலகில் பிரமனானவன் றனது மனத்தில் உமை யம்மையை யிடப் பாலிலுள்ள இறைவரது இரண்டு செவந்த திரு வடிகளையு மிருத்தினான், இறைவர் அனைத்தும் அறிந்தனர் நெடிய மாயனை விளித்து இது நிகழ்த்தலுறுவார் - இறைவர் எல்லாவற்றையு மறிந்து நீண்ட திருமாலை யழைத்து இதனைக் கூறுவார்.

பவ னென்னுந் திருப்பெயர்க்காரணத்தால் அடியவர் உளக் கோயிலி லெழுந்தருளி யிருப்பவராதலின் இருந்தபடி யறிந்தனர் என்பார் இறைவரனைத்து மறிந்தனர் என்றார். புவன் எனச் சுருதிகூறுந் திருநாமத்திற்கும் அப்பொருட்டு. (உ௫)

வேள்விநீவரதராசவுயர்வேள்வியிறைநாம்
வாழியமகமழிப்பநதிவாணிவரலாற்
காழறக்கடிதுகாத்திடுதியென்றுகருதார்
பாழிமும்மதிலழித்தவர்பணித்தருளலும்.

(இ-ள்.) வரதராச நீ வேள்வி-வரத ராசனே நீ யாகம், நாம் உயர் வேள்வி இறை - நாம் உயர்ந்த யாகத்திற் குரிய பயனை யருள்வோ னாதலினதற் கதிபதி, அமகம் அழிப்ப வாணி நதி வரலால் - அந்த யாகத்தை யழிக்கக் கலைமகள் நதிவடிவாய் வருகையால், கருதார் பாழி மும் மதில் அழித்தவர் காழ் அற கடிது காத்திடுதி என்று பணித்தருளலும் - பகைவரது உயர்ந்த மூன்றுமதில்களையும் அழித்த இறைவர் அக்கலைமகள் கொண்ட வயிரமற விரைந்து காப்பாயென்று திருவுளம்பற்ற,

திருமால் வேள்வி வடிவ மெனவும், அவ் வேள்விக் குரிய பயனைத் தந்தருளுவோன் சிவபெருமா னெனவுஞ், சுருதி கூறுதலால் வேள்வி நீ வரதராச வுயர் வேள்வி யிறை நாம் என்றனர்.

வேள்வி திருமாலென்பதும் வேள்விக்கிறைவன் சிவபிரான் என்பதும்—
"மரகதமேனிமாயவனெச்சமற்றதற்கிறையிளமதியோ
டரவணிபெருமானெனத்தெரிந்திட்டியாற்றுவோர்பிறப்பொழிந்துய்வார்
பிரமன்மால்வலாரிமுதலியசுரரைப்பெருமகத்திறைவனென்றெண்ணி
உரமிசைசெய்வோர்கற்பகாலாந்தமுழலுவரிரௌரவவளற்றில்" எனவரும் சூதபால் உணர்க. வாழி அசைநிலை. (உ௬)

உந்துவேள்விவினைகாப்பமனமூக்கியெதிர்சென்
றைந்தியோசனையினாகணைவிரித்ததன்மிசை
மைந்துநீலமலைபோல்வழிமறுத்துமலரோன்
றந்தைகண்வளர்தல்கண்டனள்கலைத்தலைவியே.

(இ-ள்.) உந்து வேள்வி வினை காப்ப மனம் ஊக்கி எதிர் சென்று ஐந்துயோசனையில் நா கணை விரித்து - அவிப் பாகத்தைத் தேவர்களுக்குத் தரும் வேள்வித் தொழிலைக் காக்க மனஞ் செலுத்தி யபிமுகமாகச் சென்று ஐந்து யோசனை தூர வளவில் சர்ப்பசயனத்தை விரித்து, அதன் மிசை மைந்து நீல் மலைபோல் மலரோன் தந்தை வழி மறுத்து கண் வளர்தல் கலை தலைவி கண்டனள் - பிரமன் றந்தையாகிய திருமால் திருக்கண் வளர்தலைக் கலைமகள் பார்த்தாள். (உ௭)

கண்டுசேயிடையகன்றுநெறிகண்டுவடபான்
மண்டியேகவதுநோக்கியரிபாதிவழியின்
மிண்டிநாப்பண்விழிதுஞ்சமலர்வாணிவிலகிக்
கொண்டவேகமொடுதென்றிசையுறக்குறுகினாள்.

(இ-ள்.) கண்டு சேயிடை அகன்று நெறி கண்டு வடபால் மண்டி ஏக அரி அது நோக்கி - அதனைக்கண்டு தூரத்தில் நீங்கி வேறொரு வழிகண்டு வேள்விச்சாலைக்கு வடபாலாக நெருங்கிச்செல்ல, பாதி வழியின் மிண்டி நாப்பண் விழி துஞ்ச - பாதி வழியில் விரைந்துசென்று அவ்வழி நடுவில் திருக்கண் வளர, மலர் வாணி விலகி கொண்ட வேகமொடு தென்றிசை உறகுறுகினாள் - வெண்டாமரையில் வசிக்குங் கலைமகளங்கு நின்றும் விலகித்தான் கொண்டவேகத்தோடு தென்றிசை முகமாகப் பொருந்தச் சென்றாள். (௨௮)

ரமஙகவன்விடாதுபிணைகச்சிநகரந
தன்னிடைக்குலையெனக்கிடைகொளத்தவளமான்
முன்னர்நோக்கிமுடிசாய்த்துநனிநாணமுதிர
வன்னதென்றிசையினீளிடையகன்றுவிலகி.

(இ-ள்.) பின்னும் அங்கு அவன் விடாது பிணை கச்சி நகரம் குலை என்ன இடை கொள்ள - மீளவு மத்திருமால் விடாது செல்வஞ் செறிந்த அக்காஞ்சி நகரத்தில் ஓர் கரைபோலக்கண் வளர, தவளமான் முன்னர் நோக்கி முடிசாய்த்து நனி நாணம் முதிர - வெள்ளிய கலைமகள் முன்பு பார்த்துத் தலைசாய்த்து மிகவும் வெட்கமுறுக, அன்ன தென்திசையில் நீளிடை அகன்று விலகி - அந்தத் தென்திசைக்குத் தூரமாகவே அங்கு நின்று அகன்று நீங்கி. (௨௯)

வேள்விசெய்களமதன்குணதிசைக்கண்விரவி
யாழியிற்செலநடந்தனளயன்றன்மனைவி
தாழ்வுதீர்ந்தயனுகந்தனன்மகிழ்ந்துதலைவன்
சூழ்கணங்களொடுமாயனெதிர்தோன்றியருள்வான்.

(இ-ள்.) அயன் தன் மனைவி வேள்வி செய் களம் அதன் குணதிசை கண் விரவி ஆழியில் செல நடந்தனள் - பிரமன் மனைவியாகிய கலைமகள் யாகசாலையின் கீழ்த்திசையிற் கலந்து கடலிற் கலக்கச்சென்றனள், அயன் தாழ்வு தீர்ந்து உகந்தனன் - பிரமன் அக்குறையினின்று நீங்கி மகிழ்கூர்ந்தனன், தலைவன் மகிழ்ந்து சூழ் கணங்களொடு மாயன் எதிர் தோன்றி அருள்வான் - இறைவ னன்புகூர்ந்து புடைசூழ்ந்த சிவகணங்களோடுந் திருமாலுக்கெதிரே காட்சிதந்தருளுவான். (௩0)

இதுவும்அது.

சொன்னவண்ணஞ்செய்தநீசொன்னவண்ணஞ்செய்தவ
னென்னவென்றுமோங்குதியித்திருப்பெருநதி
மன்னுவல்வினையெலாம்வாட்டுவேகவதியென
விந்நிலத்தினிற்சிறந்தின்பவாழ்வளிக்கவே.

(இ-ள்.) சொன்ன வண்ணம் செய்த நீ சொன்னவண்ணம் செய்தவன் என்ன என்றும் ஓங்குதி - சொன்னவண்ணஞ்செய்த நீ சொன்னவண்ணஞ் செய்த பெருமானென்று எக்காலத்தும் உயர்ந்து விளங்கு வாய், இ திரு பெரு நதி மன்னு வல்வினை எலாம்

வாட்டுவேகவதி என்ன இ நிலத்தினில் சிறந்து இன்பவாழ்வு அளிக்க - இந்த அழகிய பெரியநதி நிலை பெற்ற வலிய வினைகளை யெல்லா மொழிக்கும் வேக வதியென்று இந் நிலவுலகத்திற் சிறந்து ஆன்மாக்களுக்கு இம்மை யின்பமும் மறுமை யின்பமுந் தரக் கடவது.

சொன்னவண்ணஞ் செய்தபெருமாளுக்கு, யதோத்காரியெனத் திருநாமம் வழங்கும்; அத்திருநாமத்திற்கும் அதுவேபொருள். (கூக)

இரவிருட்கணிந்நதியிப்பதிக்கணெய்திடும்
வரவுகாணநீயொருவாள்விளக்கொளியென
விரவினாய்விளக்கொளிவிண்டுவென்னமேவுகென்
றருளியெந்தையிம்முறைவேள்விகாத்தளித்தபின்.

(இ-ள்.) இரவு இருள் கண் இ நதி இ பதி கண் எய்திடும் வரவு காண - இரவி சண் இருளில் இந்த நதியானது இந்நகரில் வரும் வரவைக்காண, நீ ஒரு வாள் விளக்கு ஒளி என்ன விரவினாய் - நீ ஒப்பில்லாத விளக்கொளியைப்போலக் கலந்தாய், விளக்கு ஒளி விண்டு என்ன மேவுக என்று எந்தை அருளி இ முறை வேள்வி காத்து அளித்தபின் - விளக்கொளிப் பெருமானெனப் பேர்வாய்ந்து விளங்கக்கடவாயென்று எமது இறைவன் அருள்செய்து இம்முறையாக வேள்வியையோம்பிப்பாது காத்தபின்.

நன்னராற்றுநீரெனநண்ணினாடருக்களின்
மன்னிநிற்பநோக்கிவன்றருவிற்செய்தண்டிேனா
டின்னவாணிதன்னையேற்றேய்ந்ததீக்கையுற்றனன்
றுன்னுசீர்கலையினாற்சோமமேற்றபின்னரோ.

(இ-ள்.) நன்னர் ஆற்று நீர் என்ன நண்ணினாள் தருக்களின் மன்னி நிற்ப நோக்கி - நன்மைவாய்ந்த நதிவடிவமாகவந்த கலைமகள் விருட்சங்களில் நிலைபெற்று நிற்றலைப் பார்த்து, வன் தாருவில் செய் தண்டி னோடு இன்ன வாணி தன்னை ஏற்று ஏய்ந்த தீக்கை உற்றனன் - வலிய அம்மரத்திற்செய்த தண்டத்தால் இந்தக் கலைமகளையேற்று வேள்விக்குரிய திட்சைவாய்ந்து, சீர் துன்னு சீர்கலையினால் சோமம் ஏற்ற பின்னர்-அத் தண்டத்திற்பொருந்திய கலைமகள் கலையோடு அச்சோமயாகத்தைச் செய்யத்தொடங்கியபின்.

தருவிலுள்ள கலை மகள் கலையை அம் மரத்தாற் செய்த தண்டத்தி லேற்று வேள்வி செய்யத் தொடங்கினமையால் ஏய்ந்த தீக்கை யுற்றனன் எனவும், பின்னர்க் கலையெனப் படுதலால் வாளா வாணி தன்னை யேற்று எனவும் கூறினார் - வடமொழியில் கலைமகள் தேசினைத் தண்டத்தி லேற்று என்று வருதலால் கலையினா லென்னும் பாடத்தைக் கலையினால் என்றும். ஓடு என்னும் உருபு ஏதுப்பொருளில்வந்த ஆலுருபிலும், ஆல் உருபு தலைமையில்வந்த வுடனிகழ்ச்சிப் பொருளிலும் வந்தன. (கூகூ)

இன்னவட்பகுத்திநீயிருத்துவிக்கெனப்படு

நனமயித்திராவருணன்கரத்தளிப்பவம
மின்னைவாங்கிமீட்டவர்வேதன்மாட்டிருத்தினர்.

(இ-ள்) இருத்து விக்கு என்ன படும் அன்னவர்க்கு இன்னவள் பகுத்தி நீ என்ன கிளர்ந்து அம் புயத்தன் அஃதை நன் மயித்திரா வருணன் கரத்து அளிப்ப - இரு

த்து விக்குக ளெனப்படும் அத்தன்மையோருள் இக்கலைமகளை அத்தண்டத்தினின்று வேறு பிரிப்பாய் நீ யென்று கூறிப் பிரமனுனவன் அத் தண்டத்தை வசிட்ட முனிவர் கையிற் கொடுக்க, அமின்னை வாங்கி மீட்டு அவர் வேதன் மாடு இருத்தினர் - அந்தக் கலைமகளை யத்தண்டத்தினின்றும் வாங்கிப் பிரித்து அவ்விருத்துவிக்குகள் அப்பிரமன் பக்கத்தி லிருத்தினுர்கள்.

இருத்து விக்குகள் வேள்விச் சாலையிலுள்ள கல சாராதனைசெய்வோர்கள், அவர் களுள் தலைமையாய் முதலி லுள்ளவர் வசிட்ட முனிவராதலால் இருத்து விக்கெனப் படும் அன்னவர்க்கு மயித்திராவருணன் கரத்தளிப்பவெனக்கூறினுர். சூரியன் வருண ன் இவர்கள் சம்பந்தமுள்ளவன் என்னுங் காரணத்தால்வந்த மித்திரா வருணசம்பந்தி என்பது மயித்திரா வருணனெனவந்தது தத்திதாந்த பதம். அன்னவர்க்குஎன் பதனிறு தியில் கூட்டிப் பிரித்தற்பொருளில்வந்த ஏழனுருபு தொக்குநின்றது. (௬௪)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

மீண்டுதிசைமுகன்றன்பான்மேவியவாணிமகிழ்ந்தாங்
கீண்டியதன்னுருக்கொண்டேயெச்சத்துணைவியுமாகிக்
காண்டகுபாங்கரிருப்பக்காதலன்வேள்விமுடித்தா
ணண்டைவிதிமுறைத்தெண்ணீராடினன்வல்வினைவென்றுன்.

(இ-ள்) மீண்டு திசை முகன் தன்பால் மேவிய வாணி மகிழ்ந்து ஆங்கு ஈண்டி ய தன் உரு கொண்டே எச்சம் துணைவியும் ஆகி காண்டகு பாங்கர் இருப்ப - அத்தண் டத்தினின்றுந் திரும்பிவந்த கலைமகளானவள் மகிழ்கூர்ந்து அவ்விடத்து நெருங்கிய தன து வடிவைக்கொண்டு யாகத்துக்குத் துணைவியாய்க் காணத்தக்க தனது கணவன் பக் கத்திருக்க, காதலன் வேள்வி முடித்தான் ஆண்டை விதி முறை தெள் நீர் ஆடினன் வல்வினை வென்றுன் - அவர் கணவனுகிய பிரமன் யாகத்தை முடித்து அவ்விடத்து விதியின்முறையே தெளிந்த நீரில் அவமிருதஸ்நானஞ்செய்து வலியவினையினின்றும் நீங் கினுன்.

பாரரத்தம் புசிக்கும்போதே யிடையிலேறுதலால் ஆகாமியவினையை வல்வி னையென்றுர். (௬௫)

அங்கணிலிங்கத்தின்முன்னரணைந்துமனைவியர்மூவர்
துங்கவசிட்டன்முதலோர்சுராசுரர்சூழ்ந்துதுதிப்பத்
தங்குமவைக்கணிருந்துசம்புவையுள்ளத்திருத்திப்
பொங்கியவன்பிற்றியானம்புரிந்துவழிபடும்போது.

(இ-ள்.) அங்கண் இலிங்கத்தின் முன்னர் அணைந்து மனைவியர் மூவர் துங்கவ சிட்டன்முதலோர் சுரர் அசுரர் சூழ்ந்து துதிப்ப - அவ்விடத்திற் சிவலிங்கத்தின் முன் சென்று கலைமகள் சாவித்திரி காயத்திரியென்னும் மனைவியர் மூவரும் தவத்தாலுயர்ந்த வசிட்டன் முதலிய முனிவர்களுந் தேவரு மசுரரும்புடைசூழ்ந்து துதிக்க, தங்கும் அ வை கண் இருந்து சம்புவை உள்ளத்து இருத்தி பொங்கிய அன்பில் தியானம் புரிந்து வழிபடும்போது - தான்றங்கிய சபைக்களத்திலிருந்து இறைவனைத்தனது மனத்திலிரு த்தி மேலெழுந்த அன்பினுற்றியானித்து வழிபடுங்காலத்தில்.

அவமிருதஸ்நானஞ் செய்தபின் மீண்டும் யாகசாலையிற் சென்றிருத்தல் முறையாத லால் வசிட்டன் முதலோர் சுராசுரர் சூழ்ந்து துதிப்பத்-தங்குமவைக் கணிருந்து எனக்கூறினுர். (௬௬)

வானவியங்கள்கலிப்பமலர்மழையண்டர்சொரிய
வூனமில்சாமரையேந்தியுருத்திரமாதரிரட்டப்
பான்மையினுற்கந்தருவர்பாடிவிருதெடுத்தோத
ஞானசநந்தர்முதலோர்நண்ணியிருபுடையேத்த.

(இ-ள்.) வான இயங்கள் கலிப்ப மலர் மழை அண்டர் சொரிய - தேவதுந்துபிக ளொருபா லொலிக்கவும் மலர் வருஷத்தைத் தேவர்க ளொருபாற் சொரியவும், உருத்திர மாதர் ஊனம் இல் சாமரை ஏந்தி இரட்ட - உருத்திர கணிகையர் குற்றமில்லாத சாமரையையேந்தி ஒருபால் வீசவும், கந்தருவர் பான்மையினுல் விருது எடுத்து பாடி ஓத - கந்தருவர் முறையால் செய விருதை யெடுத்துப் பாடி யோர்பாற் புகழவும், ஞானசநந்தர் முதலோர் நண்ணி இரு புடை ஏத்த - அருள் ஞானம் வாய்ந்த சநந்தர் முதலிய முனிவர்வந்து இரண்டு பக்கத்திலும் நின்று துதிக்கவும்.

சநந்தர், சநாதர், சனற்குமாரர், சநகர் நால்வரும திருவருண் ஞாநமுடையவராதலால் ஞானசநந்தர் முதலோர் என்ருர். (௬எ)

எண்டிசையாளர்முடிகளிணையடிதாங்கிநடப்ப
வண்டுளர்கோதையுமையைமடித்தலமீதுறக்கொண்டு
பண்டைமழவிடையேறிப்பண்ணவர்தம்பெருமானும
விண்டலமேர்கொளவெய்திவிழைதருகாட்சியளித்தான்.

(இ-ள்.) எண் திசை ஆளர் முடிகள் இணை அடி தாங்கி நடப்ப - அட்டதிக்குப் பாலர்கள் தமது தலைகளில் இரண்டு திருவடிகளைத் தாங்கி நடக்கவும், பண்ணவர் தம் பெருமானும் வண்டு உளர் கோதை உமை யை மடி தலம் மீது உற கொண்டு பண்டை மழ விடை ஏறி - தேவர்கள் தலைவனுகிய இறைவனும் வண்டுக ளொலிக்குங் கூந்தலை யுடைய உமை யம்மையைத் தன் மடித்தலத்தின் மேற்பொருந்த அமைத்துத் தொன்று தொட்டுள்ள இடப ஊர்தியின் மேலா ரோகணஞ் செய்து, விண் தலம் ஏர் கொள எய்தி விழைதரு காட்சி அளித்தான் - ஆகாயத்தி லழகமையப் பொருந்தி விரும்பத்தக்க காட்சி தந்தருளினுன்.

அறக் கடவுளே இடப தேவர் ஆதலால் பண்டை மழவிடையென்ருர். இதனை முன்னர்க்காண்க. (௬அ)

கண்டுவிரிஞ்சனெழுந்துகரையறுகாதல்கைமிக்குக்
கொண்டபுளகங்கண்மல்கக்குவித்தகைசென்னியிலேற
விண்டமொழிகள்குழறவின்பவெள்ளத்திடையாடி
மண்டனில்வீழ்ந்துவணங்கிமறைமொழிகொண்டுதுதிப்பான்.

(இ-ள்.) விரிஞ்சன் கண்டு எழுந்து கரை அறுகாதல் கைமிக்குகொண்ட புளகங்கள் மல்க குவித்தகை சென்னியில் ஏற-பிரமன் கண்டெழுந்து அளவில்லாத ஆசைமீதூர்தலாலரும்பிய புளகங்கள் நிரம்பக்கூப்பிய கை சிரசின்மேலேற, விண்ட மொழிகள் குழற இன்பவெள்ளத்திடை ஆடி - கூறிய துதிகள் தடுமாறப் பேரின்பவெள்ளத்தில்முழுகி, மண் தனில் வீழ்ந்து வணங்கி மறைமொழிகொண்டு துதிப்பான் - நிலவுலகின்மேல் வீழ்ந்து வணங்கி வேதவாக்கியங்களாற் றுதிக்கத்தொடங்கினுன்.

தான் கருதியது கைகூடியதாதலால் கரையறுகாதல்மிக்கு எனவும், காதல் அன்பின் காரியப்பாடாதலால் அன்பினைக் காதலாகவுபசரித்தும், மீதூர்ந்த பேரின்பத்தால் விளைந்ததாதலால் கொண்டபுளகங்கண்மல்கக் குவித்தகைசென்னியிலேற-விண்டமொ

ழிகள்குழறியெனவும்,தண்டாகாரமாக வீழ்ந்தனன் ஆதலால் மண்டனில் வீழ்ந்து வண ங்கியெனவுங்கூறினர். (௩௯)

அடியவரிழைத்தகுற்றமனந்தமும்பொறுப்பாய்போற்றி
கொடியவர்தம்மைச்செய்யுங்குற்றங்கண்டொறுப்பாய்போற்றி
யொடிவறுவணக்கமுற்றுங்கைக்கொளுமுடையாய்போற்றி
முடிவிலாமொழிகட்கெல்லாம்வாச்சியமுதலேபோற்றி.

(இ-ள்.) அடியவர் இழைத்த குற்றம் அனந்தமும் பொறுப்பாய்போற்றி - அடியவர்செய்த அளவில்லாத குற்றமனைத்தையும் பொறுப்பவனே வந்தனம், கொடியவர் தம்மை செய்யும் குற்றம் கண்டு ஒறுப்பாய்போற்றி - கொடியோர் செய்யுங் குற்றங்களைக்கண்டு அவர்களைத் தண்டிப்பவனே வந்தனம், ஒடிவு அறும் வணக்கம் முற்றும் கைகொளும் உடையாய் போற்றி - ஆன்மாக்கள் செய்யும் நீங்குதலில்லாத வணக்க முழுமையுங் கைக்கொள்ளும் எல்லை யாளாகவுடையவனே வந்தனம், முடிவு இல்லாத மொழிகட்கு எல்லாம் வாச்சியமுதலேபோற்றி - அளவுபடாத வேதவாசகங்களுக்கெல்லாம் வாச்சியமாயுள்ள காரணனேவந்தனம்.

கொள்வோன் வன்மையால் அடியவர் செய்யுங் குற்றம் புண்ணியமாய் முடிதலால் குற்றமனந்தமும் பொறுப்பாய்போற்றியெனவும், அடியவரல்லாதவர் கொடியராதலால் கொடியவர் எனவும், அவர்கள்செய்யும் புண்ணியம் பாவமாதலால் குற்றங் கண்டொறுப்பாய்போற்றியெனவும், அயன்முதலிய எல்லாத்தேவர்களும் தானாய் நிற்றலால் அவவத்தேவர்களுக்குச்செய்யும் வணக்கங்கள் முற்றும் இறைவனாய் நிற்குந் தன்னைவந்து சார்தலால் ஒடிவறுவணக்கமுற்றுங் கைக்கொளுமுடையாய் எனவும், வேதம் வரையறுத்தற்கரியதாதலால் அதனை முடிவிலாமொழிகள் எனவும், அது அவவிறைவனையே சுட்டிக்கூறுதலால் வாச்சியமுதலேயெனவுங்கூறினர்.

அடியவர்செய்த பாவம் புண்ணியமாம் என்றது சிவாபராதியாய் நின்ற தனது பிதாவின் காலையறவெறிந்த சண்டேசநாயனாரிடத்தும், அடியவரல்லாரசெய்யும் புண்ணியம் பாவமாமென்றது தக்கனிடத்துங்காண்க. இவற்றை—

"அரனடிக்கன்பர்செய்யும்பாவமுமறமதாகும்
பரனடிக்கன்பிலாதார்புண்ணியம்பாவமாகும்
வரமுடைத்தக்கன்செய்தமாவேள்விதீமையாகி
நரரினிற்பாலன்செய்தபாதகம்நன்மையாய்த்தே" எனவும்,

எல்லாத்தேவர்களுந் தானாய் நிற்றலால் அவ்வவர்களுக்குச்செய்யும் வணக்கந் தன்னைச்சாரும் என்றதை—

"யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியாங்கே
மாதொருபாகனார்தாம்வருவர்" எனவும் சிவஞானசித்தியாரிலும்,

வேதம் இறைவனையே சுட்டிக்கூறும் என்றதை—

"பரவுறுமறையருத்தம்பரமென்றுமபரமென்றும்
இருவகையாகுமுன்னதியல்சகளத்தின்வேறாய்ப்
பொருவினிட்களமாய்நின்றபூரணசிவமேயாகும்" எனச் சூதசங்கிதையிலும் வருதல் காண்க. (௪0)

சீதரீருலகம்போற்றுந்தேவர்க்குந்தேவேபோற்றி
கோதறவுண்மைகாட்டுங்குரவர்க்குங்குருவேபோற்றி

பூதநாயகனேபோற்றிபுரீசர்க்குமீசாபோற்றி
பாதியிலுமையைவைத்தபசுபதிபோற்றிபோற்றி.

(இ-ள்) சீதம் நீர் உலகம் போற்றும் தேவர்க்கும் தேவேபோற்றி - குளிர்ந்த கடல்சூழ்ந்த உலகிலுள்ள ஆன் மாக்கள் போற்றுந் தேவர்க்கும் தேவனே வந்தனம், கோது அற உண்மை காட்டும் குரவர்க்கும் குருவேபோற்றி - குற்றமற உண்மை நெறியை ஆன்மாக்களுக் குணர்த்தும் ஆசியர்க்கும் ஆசிரியனே வந்தனம், பூதநாயகனே போற்றி புரி ஈசர்க்கும் ஈசா போற்றி - பஞ்சபூதங்களுக்குத் தலைவனே வந்தனம் இந்திர பதமுதலிய வற்றையாளும் இந்திராதியர்க்கும் இறைவனே வந்தனம், பாதியில் உமையையவைத்த பசுபதி போற்றி போற்றி - இடப்பாலில் உமையம்மையை வைத்த பசுபதியே வந்தனம் வந்தனம்

அயன்முதலிய தேவர்களுக்குந் தேவனுதலால் சீதநீருலகம்போறறுந் தேவர்க்குந்தேவேயெனவும், ஆன்மாக்களுய்ய உண்மைநூலை விளக்கிய ஆசிரியர்களுக்கு ஆசிரியனுதலால் கோதறவுண்மைகாட்டுங் குரவர்க்குங்குருவேயெனவும், பஞ்சபூதாதிகளாயிருத்தலால் பூதநாயகனேயெனவும், இந்திரபதமுதலியவற்றையாளு மிந்திராதியரையாளுஞ் சருவாதிகனுதலால் புரீசர்க்கு மீசா எனவும், பிரமன்முதல் பிபீலகாந்தமுள்ள ஆன்மாக்களுக்குத் தலைவனுதலால் பசுபதியெனவுங்கூறினர்.

உண்மைகாட்டுங் குரவர்க்குங்குருவே என்றதை—

"தும்பியுமிஞிறும்வண்டுஞ்சுரும்பருநிறைந்து பாட
பம்பியமுகைவாய்விண்டுபசுநறுவெள்ளம்வாக்கும்
வம்பியல்கடுக்கைமாலைமலிசடைப்பெருமானெங்கள்
அம்பிகைபாகத்தோனேயாதியாசிரியனுவான்.

அன்னவனடிமாணுக்கனுயிரமணிவாயம்பொற்
பன்னகப்பாயன்மீதுபயோதரம்போலத்துஞ்சும்
மின்னகுமணிப்பூண்மாயன்விளம்புமற்றவன்மாணுக்கன்
கன்னலங்குதலைத்தீஞ்சொற்கலைமகண்மணுளன்மாதோ.

மொழிதருமவன்மாணுக்கன்முக்குறும்பெறிந்துசன்மப்
பழிதபுத்துயர்ந்துநின்றபடர்புகழ்ச்சனற்குமாரன்
இழிவறுமவன்மாணுக்கனிந்திரியங்கள்செல்லும்
வழிமனம்போகவொட்டாமாதவவியாதன்மன்னே.

மற்றவனடிமாணுக்கன்மாதவத்துயர்ந்துளீர்யான்" எனவும்,

வேதத்தினடுக்கண்டத்திலுள்ள சதவுருத்திரதோத்திரங்களாதலால் தேவர்க்குந்தேவே, பூதநாயகனே புரீசர்க்குமீசா பசுபதியே என்றதை—

"தருவாதிசொரூபபோற்றிதகுபசுபதியேபோற்றி
திருவாளர்புகழும்பல்கேத்திரபதிபோற்றிபோற்றி
மருவாரோடதிவிருக்கவன்செந்துபதியேபோற்றி
யொருவாதயாவருக்குமொருபதிபோற்றிபோற்றி" எனவும் வருஞ் சூதசங்கிதையிற்காண்க. (௪௧)

ஒருமுறைபத்துநூறுயிரமுறையுனதாள்போற்றி
மருவரும்பொருளேபோற்றிமறுவலும்போற்றிபோற்றி
யிருணிறமிடற்றுய்போற்றியென்றுநாத்தழும்பவேத்தித்
திருமலர்க்கடவுள்போற்றச்சிவபிரானருளிச்செய்யும்.

(இ-ள்.) ஒரு முறை பத்து நூறாயிரம்முறை உன தாள் போற்றி - ஒரு தரமு மன்று, பத்து, நூறு, ஆயிரந்தாமும் உனது திருவடிக்கு வந்தனம், மருவரும் பொரு ளே போற்றி மறுவலும் போற்றி போற்றி - எப்பொருளிலுங் கலந்த அரிய பொருளே வந்தனம் மீளவும் வந்தனம் வந்தனம், இருள் நிற மிடற்றாய்போற்றி என்று - இருள்போ லுங் கரிய நிறம்வாய்ந்த ஸ்ரீ கண்டனே வந்தனமென்று, திருமலர் கடவுள் நா தழும்ப ஏத்தி போற்ற சிவபிரான் அருளிசெய்யும் - அழகிய தாமரையில் வசிக்கும் பிரமன் நாத்தழும்பேறத் துதித்து வணங்கச் சிவபிரானு ரருளிச்செய்வார். (௩௨)

உவந்தன மறையோயுன்றன்பத்தியினுறுதிநோக்கிச்
சிவந்தருமெம்பானீமுன்வேட்டவாதிருமாலோடும
பவந்தருமுலகமெல்லாம்படைத்தியாலென்றுநல்கத்
தவந்திகழ்வேதன்மற்றுமிதுவொன்றுதாழ்ந்துவேண்டும்.

(இ-ள்.) மறையோய் உன்றன் பத்தியின் உறுதி நோக்கி உவந்தனம் - பிரமனே உனதுபத்தியின் உறுதியைப் பார்த்து மகிழ் கூர்ந்தோம், சிவம் தரும் எம்பால் நீ முன் வேட்ட ஆறு திருமாலோடும் பவம் தரும் உலகம் எல்லாம் படைத்தி என்று நல்க-நன் மை மிக்க எம்மிடத்து நீ விரும்பியபடி திருமாலுடனே தோன்று முலகமெல்லா வற் றையும் படைப்பா யென்று திருவருள்செய்ய, தவம் திகழ் வேதன் மற்றும் இது ஒன்று தாழ்ந்து வேண்டும் - தவத்தால் விளங்கும் பிரமன் மீளவும் இதனைத் தாழ்ந்து வே ண்டுவான்.

மற்று பிறிது பொருளில்வந்த இடைச்சொல். (௩௩)

என்றனுத்தானமாகயானுறையிருக்கைதன்னை
யுன்றனுத்தானமாகக்கோடலாலும்பரேறே
நன்றுமித்தானமென்றுநவில்சிவாத்தானப்பேரா
னின்றிடவிங்குநாளுநீயினிதுறைதல்வேண்டும்.

(இ-ள்.) உம்பர் ஏறே என்தன் ஆத்தானம் ஆக யான் உறை இருக்கை தன்னை உன் தன் ஆத்தானம் ஆக கோடலான் - திருமால்முதலிய தேவர்களாகிய ஆனைகளுக்கு ஓர் ஆண்சிங்கம் போன்றவனே எனக்குரிய தானமாக நானிருக்கும் இருக்கையை உன க்குரிய தானமாக நீ கைக்கொள்ளுதலால்,நன்றும் இ தானம் என்றும் நவில் சிவாத்தான ப்பேரால் நின்றிட இங்கு நாளும் நீ இனிது உறைதல் வேண்டும்-மிகவும் இந்தத்தானம் எக்காலத்தும் யாவரும் புகழுஞ் சிவாத்தான மென்னும் பேரால் நிலை பெற இவ்விடத் து எந்நாளும் நீ இனிதாக வாசஞ்செய்ய வேண்டும்.

சிவாத்தானமெனவந்ததுபோல் என்றனுத்தானமாக எனவந்தது. ஆ து என்னும் ஆறனுருபு ஈறுதொக்கு நின்றதாகக்கொண்டு என்றனுத்தானமாக என்பதற்கு எனது தா னமாக எனப் பொருள்கொள்ளலும் ஒன்று. பிரமேச்சரம் என்பது சிவாத்தானம் என் னும் பெயரால் வழங்கவேண்டும் என்பான் இத்தானம் என்றும் நவில் சிவாத்தானப்பே ரால் நின்றிட இங்குநாளும் நீயினிதுறைதல்வேண்டும் என்றான். வேண்டும் என்பது வேண்டிக்கோடற்பொருட்கண்வருதலால் வேண்டிக்கோடற்பொருட்கண்வந்த வியங் கோள் வினைமுற்று. (௩௪)

நின்னருட்குரியேனுகிநின்பணிதலைநின்றானு
வுன்னடியிணைக்கீழ்ப்பத்தியுலப்புறாதடியேனென்று
நன்னெறியொழுகச்செய்யாய்நவில்சிவாத்தானத்தெய்தி
யென்னரோயெனினுநின்னையேத்தினேருய்யக்கோடி.

(இ-ள்.) நின் அருட்கு உரியேன் ஆகி நின் பணிதலைநின்று - உனது திருவருட் குரியவனாகி உனது திருப்பணியினின்று, ஆறு உன் அடி இணைகீழ் பத்தி உலப்புறாது அடியேன் என்றும் நல் நெறி ஒழுக செய்யாய் - நீங்காத உனது திருவடிக்கீழ் யான் கொண்ட அன்பு அழியாது அடியேன் எக்காலத்தும் உனது அருள் நெறிப்பட்டொழுகச்செய்தருளாய், நவில் சிவாத்தானத்து எய்தி என்னரோ எனினும் நின்னை எத்தினோர் உய்ய கோடி - யாவரும் புகழுமிச் சிவாத்தானத்தை யடைந்து எத்தன்மையராயினும் முன்னை வணங்கினோர் கடைத்தேற ஆட்கொண்டருள்வாய்.

என்னரோ யெனினும் என்றது கீழாயினோரை. (சரு)

உவாமுதற்சிறந்தநாளினுடைதிரைப்பிரமதீர்த்தத்
தவாவுடனாடிச்செய்யுங்கடன்முடித்தடிகேளுன்னைத்
தவாதசீர்ச்சிவாத்தானத்துவழிபடுந்தகையோர்செல்வக்
குவாலொடுமினிதுவாழ்ந்துமுத்தியிற்கூடச்செய்யாய்.

(இ-ள்.) அடிகேள் - அடிகளே, உவா முதல் சிறந்த நாளில் உடை திரை பிரமதீர்த்தத்து அவாவுடன் ஆடி செய்யும் கடன் முடித்து உன்னை தவாதசீர் சிவாத்தானத்து வழிபடும் தகையோர் - அமாவாசை முதலாக சிறந்த நாள்களில் கரையொடு மோதி யுடைந்த அலைகளையுடைய பிரமதீர்த்தத்தில் விருப்பத்தோடு நீராடித் தாஞ்செய்யுங் கடன்களை முடித்துத் தேவரீரைக் கெடாத சிறப்புவாய்ந்த இச்சிவாத் தானத்திற் றெண்டு படுந்தன்மையை யுடையோர், செல்வம் குவாலொடும் இனிதுவாழ்ந்து முத்தியில்கூட செய்வாய்-செல்வத்திரளோடும் இம்மையில் இனிதாக வாழ்ந்து மறுமையில் முத்திநெறியிற்கூடச் செய்வாய்.

உவாமுதற் சிறந்தநாளென்றது விதிபாதம், கிருஷ்ணாட்டமி, கிருஷ்ணசதுர்த்தசி, கிரகணம், பிதிர்தினங்கள். செல்வக்குவாலொடும் இனிதுவாழ்ந்து என்றது இம்மையிலும், முத்தியிற்கூட என்றது மறுமையிலும் எனக்கொள்க. (சசு)

என்றிரந்தேத்தவெல்லாமருள்புரிந்திலிங்கத்தெங்கோ
னொன்றினனயனுமாலையுலகொடும்விழுங்கிமீளத்
தொன்றுபோன்முறையானல்கித்துகளறுசிவாத்தானத்தின்
மன்றவனருளான்முன்னர்வைகினனுவகைகூர்ந்து.

(இ-ள்.) என்று இரந்து ஏத்த எங்கோன் எல்லாம் அருள்புரிந்து இலிங்கத்து ஒன்றினன் - என்று குறையிரந்து பிரமன்றுதிக்க எமது பெருமான் அவன் குறையிரந்த எல்லா வற்றையு மருள்செய்து சிவலிங்கத்திற் கலந்தனன், அயனும் மாலை உலகு ஒடும் விழுங்கி மீள தொன்றுபோல் முறையால் நல்கி - பிரமனுந் திருமாலையுலகோடும் தன்னுளடக்கி மீளவும் முன்போல முறையாற் சிருட்டித்து, துகள் அறு சிவாத்தானத்தின் மன்றவன் அருளால் முன்னர் உவகைகூர்ந்து வைகினன் - குற்றமற்ற சிவாத்தானத்திலவ்விறைவன் றிருவருளால் அவன் திருமுன்மகிழ்கூர்ந்துதங்கி.

வைகினன் முற்றெச்சம். (சஎ)

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

மூந்துறமனத்தைத்தோற்றினனதன்பான்முழங்குகாயத்திரியதனிற்
சந்தைகளவற்றிற்சாமமச்சாமந்தன்னிடையெசுர்களங்கவற்றின்
மைந்துடைநெடுமாலவனிடைப்பைங்கூழ்பயிர்களின்மதியமம்மதியி
னுந்துறும்பசுக்கள்பசுக்களின்மகவானுவனிடையுலகெலாந்தந்தான்.

(இ-ள்.) முந்துற மனத்தை தந்தனன் - முற்பட மனத்தைச் சிருட்டித்தனன், அதன்பால் முழங்கு காயத்திரி - அம்மனத்தினிடத்து முழங்காநின்ற காயத்திரியையும்,

அதனில் சந்தைகள் அவற்றில் சாமம் அசாமந்தன்னிடை எசுர்கள் - அதனிடத்திலிருந்து வேதங்களையும் அவ்வேதங்களிலிருந்து சாமத்தையும் அச்சாமத்திலிருந்து எசுர்களையும், அவற்றின் மைந்து உடை நெடுமால் அவனிடை பைங்கூழ் பயிர்களின் மதியம்-அவைகளிலிருந்து வலிமையையுடைய திருமாலையும் அத்திருமாலிடத்திலிருந்து பசியபயிர்களையும் அப்பயிர்களிடத்திலிருந்து சந்திரனையும், அமதியின் உந்துறும் பசுக்கள் பசுக்களின் மகவான் உவனிடை உலகு எல்லாம் தந்தான் - அச்சந்திரனிடத்திருந்து பசுக்களையும் அப்பசுக்களிடத்திருந்து இந்திரனையும் அவ்விந்திரனிடத்திருந்து உலகமெல்லாவற்றையுஞ் சிருட்டித்தான்.

பைங்கூழ் என்றது ஓடதிகளை. (௪அ)

இம்முறையொருவரொருவரைப்படைத்துச்செருக்குமற்றிவர்களைப்ப
ரமென்,றும்மைவல்வினையான்மருளுநர்மருள்கவுண்மைநூலுணர்ந்தருள்கூ
டுஞ், செம்மையோரெல்லாம்விடமிடற்றடக்கித்தேவரைப்புரந்துயர்குணங்
கண்,மும்மையுங்கடந்தமுதல்வனேயெவர்க்குமூலகாரணனெனத்தெளிவார்

(இ-ள்) இ முறை ஒருவர் ஒருவரை படைத்து செருக்கும் இவர்களை பரமென்று - இம்முறையாக ஒருவர் ஒருவரைப்படைத்து இறுமாக்கும் இத்திருமாலையும் பிரமனையு மோர்பொருளென்று, உம்மை வல்வினை யான் மருளுநர் மருள்க - முற்பிறப்பிற் செய்த வலிய தீவினையால் மயங்குவோர் மயங்குக, உண்மை நூல் உணர்ந்து அருள்கூடும் செம்மையோர் எல்லாம் விடம் மிடறு அடக்கி தேவரை புரந்து உயர் குணங்கள் மும்மையும் கடந்த முதல்வனே எவர்க்கும் மூலகாரணன் என்ன தெளிவார் - பொய்ந்நூலையொழித்து மெய்ந்நூலையுணர்ந்து திருவருளோடுகூடும் நடுநிலைமையையுடையோர் யாவரும் விஷத்தை ஸ்ரீகண்டத்திலடக்கிப் பிரமன்முதலிய தேவரைப் பாதுகாத்து உயர்ந்த முக்குணங்களையுங்கடந்த இறைவனே யாவர்க்கும் மூலகாரணனென்று தெளிவார்கள்.

பிரகிருதிதத்துவத்தின் காரியப்பாடாதலால் குணங்கள் மும்மையுங்கடந்த என்றார். (௪௯)

சிவாத்தானப்படலம்-முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௬௬௨.

## மணிகண்டீச்சரப்படலம்.

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

ஞிமிறுகாலுழக்கமுகையுடைந்தலர்ந்துநெட்டிதழ்வாய்தொறுநறவ,
முமிழ்மலர்த்தடஞ்சூழ்திருச்சிவாத்தானத்துண்மையைத்தெரிந்தவாறுரை
த்தா, மமிழ்தமுங்கைப்பக்குழாங்குழாமாகியறிஞர்தாங்கழகங்கடோறுந்,
தமிழ்தெரிகாஞ்சிவரைப்பினின்மணிகண்டீச்சரத்தலத்தியல்புரைப்பாம்.

(இ-ள்.) ஞிமிறு கால் உழக்க முகை உடைந்து அலர்ந்து நெட்டிதழ் வாய் தொறும் நறவம் உமிழ் மலர் தடம் சூழ் திரு சிவாத்தானத்து உண்மையை தெரிந்த ஆறு உரைத்தாம் - வண்டுகள் மிதித்துக் காலாற்கலக்க அரும்புகள் நெகிழ்ந்துவிரிந்து நீண்ட இதழின் வாய்தோறுந் தேனைச்சிந்து மலர்கள்நெருங்கிய தடாகஞ்சூழ்ந்த அழகிய சிவாத்தானத்தினுண்மையைத் தெரிந்தபடி கூறினோம், அறிஞர் தாம் குழாம் குழா மாகி அமிழ்




LITHO. M. PRESS MYLAPORE 1899.

மணிகண்டச்சரப்படலம்.

தமும் கைப்ப தமிழ் தெரி காஞ்சி வளைப்பினில் - அறிவுடையோர் கூட்டங் கூட்டமாய் அமுதமுங் கசக்கக் கல்விச்சாலைகள்தோறுந் தமிழ்நூலை யாராயுங் காஞ்சித்திருநகரில், மணிகண்டேச்சரம் தலத்து இயல்பு உரைப்பாம் - மணிகண்டேச்சரமென்னுந் தலத்தியல்பினை யெடுத்துக்கூறுவாம்.

வடமொழிக்கு எதிராகிய தென்மொழிக்குத் தமிழ் எனப்பெயர்வந்தது இனிமையைத்தருவது என்னுங்காரணம் பற்றியாதலால் சுவைப்பொருளெல்லாவற்றினு மிக்க சுவைப்பொருள் அமிழ்தமாதலால் அமிழ்தமுங்கைப்ப என்றார். இதனை முன்னர்க்காண்க. (க)

பாட்டளியுளருங்கற்பகநறுந்தார்ப்பனிமுடிக்கடவுளர்தாமும்
வாட்டிறல்படைத்தவசுரருமுன்னுள்வல்வினையிறப்பினுக்கஞ்சி
வேட்டனர்சாவாமருந்தினைப்பெறுவான்வெறிநறுக்கொப்புளித்தலர்ந்த
தோட்டணிக்கமலக்கிழவனையெய்தித்துணையடிபழிச்சிநின்றுரைப்பார்.

(இ-ள்.) பாட்டு அளி உளரும் கற்பக நறும் தார் பனி முடி கடவுளர் தாமும்-இசைபாடி வண்டுகளுலாவுங் கற்பகமலராற் றொடுத்த நறுமணங்கமழு மாலையின் குளிர்ச்சிவாய்ந்த கிரீடத்தையுடைய தேவர்களும், வாள் திறல் படைத்த அசுரரும் முன்னுள் வல் வினை இறப்பி னுக்கு அஞ்சி சாவா மருந்தினை வேட்டனர் பெறு வான் - வாளின் வன்மையைப்பெற்ற அசுரரு முற்காலத்தில் வலியவினையால் வரும் இறப்பினுக்கஞ்சி அமுதத்தினை விரும்பிப்பெற, வெறி நறு கொப்புளித்து அலர்ந்த தோடு அணி கமலம் கிழவனை எய்தி துணை அடி பழிச்சி நின்று உரைப்பார் - மணங்கமழுந் தேனைக் கொப்புளிக்கு மலர்ந்த இதழின்வரிசையையுடைய தாமரைமலரில்வசிக்கும் பிரமனையடைந்து அவனது இரண்டு பாதத்தையுந் துதித்துநின்று கூறுவார். (உ)

முக்குணப்பகுப்பின்மூவுருக்கொண்டுமுத்தொழிலியற்றியோயெங்குந்
தொக்கநின்விழிப்பினிமைப்பினிலெமக்குத்தோற்றமுமொடுக்கமுமாமா
லொக்கநாமிறப்புக்கஞ்சிவந்தடைந்தேமுலப்புறாதிருந்துபோர்புரியத்
தக்கதோருபாயந்தெரித்தெமக்குரையாய்தலைவனேயென்பதுகேட்டு.

(இ-ள்.) முக்குணப்பகுப்பின் மூ உரு கொண்டு முத்தொழில் இயற்றி யோய் - சத்துவமுதலிய முக்குணங்களின்பகுதியால் பிரமன்முதலிய மூவர்வடிவுகொண்டு சிருட்டிமுதலிய முத்தொழிலையுஞ் செய்கின்றவனே, எங்கும் தொக்க நின் விழிப்பின் இமைப்பினில் எமக்கு தோற்றமும் ஒடுக்கமும் ஆம் - எவ்விடத்தும் நெருங்கிய உமது விழிப்பாலும் இமைப்பாலு மெங்களுக்குப் பிறப்புமிறப்புமாகும், நாம் ஒக்க இறப்புக்கு அஞ்சிவந்து அடைந்தேம்-நாங்கள் ஒருசேர இறப்பினுக்கஞ்சிவந்து சரணடைந்தோம், உலப்பு உறாது இருந்து போர்புரிய தலைவனே தக்கது ஓர் உபாயம் தெரித்து எமக்கு உரையாய் என்பது கேட்டு - நாங்களழியாதிருந்து போர்செய்ய எமது தலைவனே தக்கதோருபாயத்தை யாராய்ந்து எமக்குக் கூறுயென்பதைச் செவிசார்த்தி.

பிரமனையுந் திருமாலையும் எடுத்துக்கூறுமிடத்து அவர்களையே பரமாகக் கூறுவது நூல்வழக்காதலால் முத்தொழிலியற்றியோய் எனவும், சத்துவகுணத்திற் சத்துவ குணம் திருமேனியும், தொழிலிற் றமோகுணமும் உருத்திரனுடைமையாலும், தமோ குணம் திருமேனியும் தொழிலிற் சத்துவகுணம் திருமாலுடைமையாலும், தொழிலால் இராசதகுணமுந் திருமேனியக்குணமுமே பிரமனுடைமையாலும் முக்குணப்பகுப்பின் மூவுருக்கொண்டு எனவும், பிரமனோர்கற்பத்தில் பதினொன்கிந்திரரழிவராதலால் நின் விழிப்பிற் றோற்றமு மிமைப்பிலொடுக்கமுமாமாமெனவுங் கூறினார்கள்.

" உயர்சத்துவநற்குணதேகமுடையனுயுஞ்சங்காரம்
அயரத்தகுதமோதகுணமுடையனுயுமவிர்கின்றோன்
இயலிற்பொலியுமுருத்திரனுலியைதாமதவண்குணவுடம்பும்
வயமார்திதிக்காச்சத்துவநற்குணமுமுடையோன்மாதவனே."
" இராசதகுணமெய்யுமியைதருசிருட்டிக்கா
வொராதொளிரக்குணமுமுடையவனேபிரமன் " என வருதலைச் சூதசங்கிதையிற்காண்க.

பிரமகத்பத்தில் பதினன்கிந்திரரழிவர் என்பதை முன்னர்க்காண்க. (௩)

மடநடைக்கலைமானிளமுலைதிளைக்குமார்பினனவரொடுமெழுந்து
நடலைநீர்காட்சிவைகுந்தவரைப்பினண்ணுபுவிழியுறக்கண்டான்
படவராவணையின்முனிவரர்பழிச்சமலர்மகள்பதாம்புயம்வருட
வடர்சிறைக்கலுழன்முதலியோர்சூழவறிதுயிலமர்ந்தநாயகனை.

(இ-ள்.) மட நடை கலை மான் இள முலை திளைக்கும் மார்பினன் அவரொடும் எழுந்து நடலை நீர் காட்சி வைகுந்த வரைப்பின் நண்ணுபு - தளர்ந்து நடக்கும் நடையினையுடைய கலைமகளது இளமைவாய்ந்த முலைகளிடையமுறுந் நுகருமார்பினையுடைய பிரமனவ்விருதிறத்தாரோடுமெழுந்து பொய்யினின்று நீங்கிய வைகுந்த வெல்லையிலடைந்து, பட அரா அணையில் முனிவரர் பழிச்ச மலர் மகள் பதாம்புயம் வருட - படத்தையுடைய சற்பசயனத்தின்மேல் முனிவர்கள் வணங்கவும் திருமகள் திருவடிவருடவும், அடர் சிறை கலுழன்முதலியோர்சூழ அறிதுயில் அமர்ந்த நாயகனை விழியுற கண்டான் - நெருங்கிய சிறகினையுடைய கருடன்முதலியோர் புடைசூழ அறிதுயில்செய்யுந் திருமாலைக் கண்களாற்பார்த்தனன். (௪)

கண்டுநாத்தழும்பத்தனித்தனிதுதித்துக்கண்டுயிலெழுப்பிமுன்வணங்கி
முண்டகன்முதலாஞ்சுராசுரர்குழுமிமொழிவராலிறப்பினுக்கஞ்சி [குத்
யொண்டளிர்ச்சரணஞ்சரணமென்றடைந்தேமுலப்பினைக்கடக்குமாறெமக்
தண்டுழாயலங்கற்கருணையங்கடலேசாற்றெனநாரணனெழுந்து.

(இ-ள்.) கண்டு நா தழும்ப தனி தனி துதித்து கண் துயில் எழுப்பி முன் வணங்கி - கண்டுநாத் தழும்பேறத் தனித்தனிதுதித்து அறிதுயிலினின்று மெழுப்பி முன்னேநின்றுவணங்கி, முண்டகன் முதலாம் சுரர் அசுரர் குழுமி மொழிவர் - பிரமன் முதலிய தேவர்களும் அசுரர்களுங்கூடிக் கூறுவார், இறப்பினுக்கு அஞ்சி ஒண் தளிர் சரணம் சரணம் என்று அடைந்தேம் - நாங்களிறப்பிற்கஞ்சி யொள்ளிய தளிர்போன்ற திருவடியைச் சரணமென்று அடைந்தோம், உலப்பினை கடக்கும் ஆறு எமக்கு - அவ்விறப்பைக் கடக்கும்விதம் எங்களுக்கு, தண் துழாய் அலங்கல் கருணையங்கடலே சாற்று என்ன நாரணன் எழுந்து - தண்ணிய துழாய்மாலையையணிந்த கிருபாசமுத்திரமே கூறுயென்று குறையிரப்ப அத்திருமாலெழுந்து. (௫)

நெடிதுபோதெண்ணிச்செய்வகைதுணிந்துநீயிர்மற்றஞ்சலிரினிநா
முடிவுறுதிருப்பக்கடல்கடைந்தெடுத்துமுனிவறப்பருகுவாமமிழ்தங்
கடிபடுமமிழ்தம்பருகிடினிறப்பைக்கடக்கலாமென்றலுங்களிகூர்ந்
தடியிணைவணங்கிக்கடையுமாறெவ்வாறளக்கனாவெனவினுயினரால்.

(இ-ள்.) நெடிது போது எண்ணி செய் வகை துணிந்து நீயிர் அஞ்சலிர் - நெடும்போது கருதித்தாஞ்செய்யும் வகையைத்துணிந்து நீங்களஞ்சாதொழியுங்கள், இனி

நாம் முடி வுறுது இருப்ப கடல் கடைந்து எடுத்து முனிவு அற அமிழ்தம் பருகுவாம்- இனி நாமழியாதிருக்கக் கடலைக்கடைந்து அமுதத்தையெடுத்து வெறுப்பறப் பருகுவாம், கடி படும் அமிழ்தம் பருகிடின் இறப்பைக் கடக்கலாம் என்றலும் - மணமமைந்த அமுதத்தைப்பருகினால் இறப்பைத்தாண்டலாம் என்றுகூற, களி கூர்ந்து அடி இணை வணங்கி அளக்கரை கடையும் ஆறு எ ஆறு என்ன வினயினர் - களிப்புமிக்கு இரண்டு திருவடிகளையும் வணங்கிக் கடலைக்கடையும் வகையெவ்வகை யென்று வினவினார்கள்.

சுராசுரர்கள் இறப்பினைக் கடக்கும் உபாயந்தேடுத லரிதாதலால் நெடிதுபோதெண்ணியெனவும், அதனைச் செய்விக்கும் இறைவன் தானாதலாலிவர்களைத் தன்னோடுளப்படுத்தித் தன்மைப்பன்மை வினைதந்து நாம் பருகுவாம் எனவுங்கூறினான். புராணங்களிற்கூறும் ஐந்துறுப்புகளுள் பாற்கடல்கடைதல் ஒன்றாதலால் இங்குக்கூறினார்.(௬)

இந்திரைகொழுநனுளத்திடையெண்ணியெறிபுனலருவியஞ்சாரன்
மந்தரப்பறம்புமத்தெனநாட்டிவாசுகிகயிறெனப்பூட்டிச்
சுந்தரத்திருப்பாற்கடலினைக்கடைந்துசுவையமிழ்தெடுத்துமென்றுரைப்ப
வந்தநாளவர்தாம்பெற்றபேருவகையாரொடுத்தியம்பவல்லவரே.

(இ-ள்.) இந்திரை கொழுநன் உளத்திடை எண்ணி எறி புனல் அருவி அஞ்சாரல் மந்தரம் பறம்பு மத்து என்ன நாட்டி வாசுகி கயிறு என்ன பூட்டி - இலக்குமி நாயகனாகிய திருமால் தன்மனத்திடையெண்ணி யலையெறியும் நீர்மயமாகிய அருவியொழுகும் அழகிய சாரலமைந்த மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகியென்னும் பாம்பைக் கடைகயிறாகப்பூட்டி, சுந்தரம் திரு பால்கடலினை கடைந்து சுவை அமிழ்து எடுத்தும் என்று உரைப்ப - அழகிய திருப்பாற்கடலைக்கடைந்து சுவையமைந்த அமுதத்தையெடுப்போமென்றுகூற, அந்த நாள் அவர் தாம் பெற்ற பேர் உவகை யார் எடுத்து இயம்ப வல்லவர் - அக்காலையிலவர்கொண்ட பெருமகிழ்ச்சியை யாரெடுத்துக் கூறவல்லவர்.

இறப்பினுக் கஞ்சியடைந்தவர் அவ்விறப்பினைக் கடத்தற்கு ஒருபாயங்கூறினமையால் அன்றெழுந்த மகிழ்ச்சிக்கு ஓரளவின்மையால் பெற்ற பேருவகையார் எடுத்தியம்பவல்லவர் என்றார். (எ)

கரைபொருதிரங்கும்வெண்டிரைத்திருப்பாற்கடலிடையாவருமெய்தி
நிரைமணிக்குவட்டுமந்தரநிறுவிநெளியுடல்வாசுகிசுற்றி
வரைபடுதிரடோளசுரருஞ்சுரரும்வலிப்புழியவர்தமைநோக்கி
விரைநறுத்துளிக்கும்பசுந்துழாயலங்கல்விண்ணவனொன்றுபேசுவனால்.

(இ-ள்.) கரை பொருது இரங்கும் வெள் திரை திரு பால் கடலிடை யாவரும் எய்தி-கரையொடு மோதியொலிக்கும் வெள்ளிய திரையையுடைய திருபாற்கடலிடை யாவருமடைந்து, மணி நிரை குவடு மந்தரம் நிறுவி நெளி உடல் வாசுகி சுற்றி - இரத்தினவரிசைகளமைந்த மந்தரகிரியை மத்தாக நாட்டி நெளிந்த சரீரத்தையுடைய வாசுகியென்னுங் கடைகயிற்றைச்சுற்றி, வரைபடு திரள்தோள் அசுரரும் சுரரும் வலிப்புழி- மலையையொத்த திரண்ட தோளையுடைய அசுரருந் தேவர்களு மிழுக்கும்போது, அவர் தம்மைநோக்கி விரை நறு துளிக்கும் பசும் துழாய் அலங்கல் விண்ணவன் ஒன்று பேசுவன் - மணங்கமழுந் தேன்துளிக்கும் பசிய துழாய்மாலையையணிந்த திருமாலொன்று கூறுவான். (அ)

இருதிறத்தவருள்வான்சுவையமிழ்தமெறுழினுற்கடைந்தெடுத்தவரே
பருகிடத்தகுமாலேனையோரெய்தற்பாலதன்றென்பதுகேட்டுப்

பொருதிறலசுரர்மகிழ்ந்தெழுந்தார்த்துப்பொறியராவிருபுடைபற்றித்
தருவலிமிகையாலீர்த்தனரசலந்தன்பெயர்நாட்டியதன்றே.

(இ-ள்) இரு திறத் தவருள் வான் சுவை அமிழ்தம் எறுழினல் கடைந்து எடுத்த வரோ பருகிட தகும் - இவ்விருதிறத்தோருள் பெரியசுவையமைந்த அமுதத்தை வலிமையினல் கடைந்தெடுத்தவரோ பருகத்தகும், ஏனையோர் எய்தல் பாலது அன்று என்பது கேட்டு - மற்றையோர் அவ்வமுதினை யடையுந் தரத்தினர் அல்லரென்பது கேட்டு, பொரு திறல் அசுரர் மகிழ்ந்து எழுந்து ஆர்த்து பொறி அரா இரு புடை பற்றி தரு வலி மிகையால் ஈர்த்தனர் - போர்செய்யும் வலியமைந்த அசுரர்கள் மகிழ்கூர்ந்தெழுந்து கோஷித்துப் படப்பொறியையுடைய அவ்வாசுகியை இரண்டுபக்கத்தும் நின்று பற்றிமிக்க வலியாலிழுத்தனர், அசலம் தன் பெயர் நாட்டியது - அம்மந்தரகிரியானது காரணத்தால் தனக்குவந்த பெயர்ப்பொருளை நிலைநாட்டியது.

அசலம் அசைதலில்லாதது என்னும் பொருள்மேல் நிற்றலால் மலைக்கு ஓர்காரணப்பெயராதலால் அசலந்தன் பெயர்நாட்டியதெனவும், சுராசுரர்கள் சோர்வில்லாது முயலுதற்குக் கூறினராதலால் வான்சுவையமிழ்தமெறுழினற் கடைந்தெடுத்தவரோ பருகிடத்தகுமா லேனையோரெய்தற்பாலதன்றெனவுங் கூறினர். (௯)

இயக்கலாற்ருமையிளைத்ததானவரையெதிருறுங்கடவுளர்நோக்கி
வியத்தகவெழுந்துநீரினிவிடுமின்விடுமினென்றெய்திவாசுகியை
வயத்துடன்பற்றியீர்த்தனரவரும்வலியிழந்தெய்த்தனர்நின்ருர்
செயத்தகுந்திறமேதினியெனயாருஞ்சிந்தையிற்கவலைகூர்பொழுது.

(இ-ள்.) இயக்கல் ஆற்ருமை இளைத்த தானவரை எதிர் உறும் கடவுளர் நோக்கி - மந்தரகிரியைத்திரிக்க இயலாமையாலிளைப்புற்ற அசுரரை யெதிர்நின்ற தேவர்கள் பார்த்து, வியத்தக எழுந்து இனி நீர் விடுமின் விடுமின் என்று எய்தி வாசுகியை வயத்து உடன்பற்றி ஈர்த்தனர் அவரும் வலி இழந்து எய்த்தனர் நின்ருர் - அதிசயங்கூர எழுந்து இனி நீங்கள் விடுங்கள் விடுங்களென்றெழுந்து அத்தேவர்களும் வலிமையிழந்து இளைத்து நின்ருர்கள், இனி செய தகும் திறம் ஏது என யாரும் சிந்தையில் கவலை கூர் பொழுது-இனி நாம் செய்யத்தகுங் கடமை யாதென்று யாவரும் மனத்திற் கவலைகொண்டபொழுது.

இறப்பினைக்கடத்தற்கோருபாயம்பெற்றும் அவ்வுபாயங் கைகூடச்செய்யும் வலியிலராய் நிற்றலால் கவலைகூர்ந்தார் என்பார் செயத்தகுந் திறமேதினியென யாருஞ்சிந்தையிற் கவலைகூர்பொழுது என்ருர். விடுமின் விடுமின் துணிவுப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (௧0)

வலனுயிர்செகுத்தவானவனுயிர்த்தவாலியாங்குரக்கினத்தலைவன்
பலகடலிடத்துஞ்சென்றுபாண்டரங்கன்பதாம்புயமருச்சனைபுரிவான்
புலனுயர்சிறப்பினுயிடையியல்பாற்போதலுமாலயன்முதலோர்
நலமுறநோக்கியுவகைமீதூரநல்வரவேற்றுநின்றனரால்.

(இ-ள்.) வலன் உயிர் செகுத்த வானவன் உயிர்த்த வாலியாம் குரங்கு இனம் தலைவன் - வலாசுரனுடைய உயிரைக்கொன்ற இந்திரனற்பெறப்பட்ட வாலியாகிய குரங்கின் கூட்டங்களுக்குத்தலைவன், பல கடலிடத்தும் சென்று பாண்டரங்கன் பதாம்புயம் அருச்சனை புரிவான் புலன் உயர் சிறப்பின் ஆயிடை இயல்பால் போதலும் - பலகடல்களிலுள்ள தீவுகள்தோறுஞ் சென்று சிவபெருமானது பாததாமரைகளை யருச்சனைபுரிய

அறிவாலுயர்ந்த சிறப்பினால் அவ்விடத்து இயல்பாகச்செல்ல, மால் அயன் முதலோர் நலம் உற நோக்கி உவகைமீதூர நல்வரவு ஏற்று நின்றனர் - திருமால் பிரமன் முதலியோர் இன்பமிகப் பார்த்துக் களிப்பதிகரிக்க அவனது நல்லவருகையை ஏற்று நின்றார்கள்.

தன்னொடு போர்க்குவந்த வலாசுரனொடு போர்புரிய இந்திரன்வலிமையில்லாது அவனை வஞ்சத்தால் வென்றவனாதலால் வலனுயிர் செகுத்தவானவன் எனவும், அவன் புதல்வனாதலால் வானவனுயிர்த்த வாலியெனவும், அவனாடோறுங்கடனீராடிச் சிவபிரானை வணங்குதல் நியமமாதலால் வாலியாங்குரக்கினத்தலைவன் பலகடலிடத்துஞ்சென்று பாண்டரங்கன் பதாம்புயத்தருச்சனைபுரிவான் எனவும், சிவபெருமான் திருக்கூத்திற்குப் பாண்டரங்கம் என்பது திருநாமமாதலாலக்காரணந்தோன்றப் பாண்டரங்கனெனவும், அதுபோல அன்று அங்குவந்தனனாதலால் ஆயிடையியல்பாற்போதலும் என்றார்.

வந்தவனயனை மாயனை வணங்கிவானவர்க்கஞ்சலியளித்துச்
சிந்தனையொருக்கிநீரிவண்முயலுஞ்செயலிதுவென்னெனவினவக்
கந்தமாமலரோனுள்ளவாறுரைத்துக்கருதருந்தெய்வமிங்குன்னைத்
தந்ததாலெமக்குநீதுணைசெய்யத்தகுமெனவிறுத்தனனவனும்.

(இ-ள்.) வந்தவன் அயனை மாயனை வணங்கி வானவர்க்கு அஞ்சலி அளித்து - வந்த வாலி பிரமனையுந் திருமாலையும் வணங்கித் தேவர்களுக்கு அஞ்சலிவந்தனஞ்செய்து, சிந்தனை ஒருக்கி நீர் இவண் முயலும் செயல் இது என் என்ன வினவ - நீங்கள் மனத்தை யொருப்படுத்தி யிவ்விடத்து முயலுஞ்செய்கை யென்னென்று வினவ, கந்த மாமலரோன் உள்ள ஆறு உரைத்து கருதரும் தெய்வம் இங்கு உன்னை தந்தது - வாசமிக்க பெருமையையுடைய தாமரைமலரிலுள்ள பிரமன் உள்ளபடி கூறி நினைத்தற்கரிய தெய்வமிங்கு உன்னைக்கூட்டி முடித்தது, எமக்கு நீ துணைசெய்ய தகும் என்ன இறுத்தனன் அவனும் - எமக்கு நீ துணைசெய்யவேண்டுமென விடைதந்தனன் அந்த வாலியும்.

தேவர்களுக்குத் தலைவராதலால் அயனை மாயனை வணங்கியெனவும், அவர்களுக்குத் தேவர்கள் கீழ்ப்பட்டவராதலால் வானவர்க்கஞ்சலியளித்து எனவும், இச்சுராசுரர்களாலியலாத காரியம் இவனால் முடியும் எனப் பிரமன் கருதினனாதலால் தெய்வமிங்குன்னைத் - தந்ததாலெமக்கு நீ துணைசெய்யத்தகுமென விறுத்தனனெனக் கூறியதாகவுங்கூறினார். (கஉ)

பெருவலிபடைத்தசுராசுரர்குழுமிப்பெறலருந்திறத்தினிலெளியே [வன்
னொருவனேவல்லேன்யாமெலாமொருங்குற்றுததியைக்கடைதுமேற்றெய்
தருவதுகாண்டுமெனநகைத்தியம்பித்தானவர்கடவுளரெல்லாம்
வருகெனவிளித்துவாலிமாசுணத்தின்வாற்புறம்பற்றிநின்றீர்த்தான்.

(இ-ள்.) பெருவலி படைத்த சுராசுரர் குழுமி பெறல் அரும் திறத்தினில் எளியேன் ஒருவனே வல்லேன் - மிக்க வலிமையைப்படைத்த அசுரர்களுந் தேவர்களும் நெருங்கி அடைதற்கரிய விப்பகுதியில் எளியேனாகிய யான் ஒருவனே வன்மையையுடையேன், யாம் எல்லாம் ஒருங்கு உற்று உததியை கடைதும் மேல் தெய்வம் தருவது காண்டும் என்ன நகைத்து இயம்பி - நாமெல்லாம் ஒருசேரத்திரண்டு கடலைக்கடைவோம் அதன்மேல் தெய்வந் தருவதைக் காண்போமென்று நகைத்துக்கூறி, தானவர் கடவுளர் எல்லாம் வருகென விளித்து வாலி மாசுணத்தின் வால் புறம் பற்றி நின்று ஈர்த்தான் - அசுரர்களுந் தேவர்களும் யாவரும் வரக்கடவீரென்று அவர்களை வாலியழைத்து அவ்வாசுகியினது வாற்புறத்தைப்பற்றி நின்று இழுத்தனன்.

பிரமன் தன் வலியைக்கருதிக் கூறியதற்குத் தாணிறுயாப்படைந்து தன்னை நன்கு மதியாது கூறினான் என்பார் எளியேன் ஒருவனேவல்லேனெனவும், இவர்களோ டு நானும் ஒருவனாகநின்று கடைகின்றேன் அதன்மேல் தெய்வங்கூட்டிமுடிப்பது பார்ப்போமென்றானென்பார் ஒருங்குற்றுததியைக் கடைதுமேற்றெய்வந் தருவதுகாண்டும் எனவும், தேவர்கள் வலியிலர் எனக் கருதினானென்பார் நகைத்தியம்பியெனவும், இவர்கள் வலியளவறுத்தற்கு நினைத்தனன் என்பார் அவர்களை யொருபால் நிறுத்தித் தான் வாற்புறம்பற்றி நின்றீர்த்தான் எனவுங்கூறினார். (௧௩)

பருங்கொலைப்படத்தையசுரருஞ்சுரரும்பற்றினர்தனித்தனியீர்த்து
மொருங்குநின்றீர்த்துமாற்றலாதுடைந்துதன்புடையொதுங்குதல்காணா உ
கருங்கழல்வாலிவிடுமினீரென்னுக்கட்செவிவாலமும்பணமு [க்
மிருங்கையிற்பற்றிமுறுகுறவாங்கியீர்த்தனன்கடைந்தனன்புணரி.

(இ-ள்) பரும் கொலை படத்தை அசுரரும் சுரரும் பற்றினர் தனிதனி ஈர்த்தும் ஒருங்கு நின்று ஈர்த்தும் ஆற்றலாது உடைந்து தன் புடை ஒதுங்குதல் காணா உ - மிக்ககொலையையுடைய அம்பாம்பின் படத்தை யசுரருந்தேவருஞ் சேரப்பற்றி நின்று தனித்தனியிழுத்து மொருசேர விழுத்தும் ஆற்றாமையால் தோற்றுத்தன்பக்கத்திலொதுங்குதலைக்கண்டு, கரும் கழல் வாலி நீர் விடு மின் என்னு கட் செவி வாலமும் பணமும் இரும் கையில் பற்றி முறு குற வாங்கி ஈர்த்தனன் புணரி கடைந்தனன் - பெருமைவாய்ந்த வீரகண்டையையுடைய வாலி நீங்கள்விடுங்களென்று அப்பாம்பினது வாலையும் படத்தையுந் தனது பெரியகையாற்பற்றித் தேகமுறுகவளைத்து இழுத்துக் கட

சுராசுரர்கள் வன்மையைக்கண்ட வாலி தனது வன்மையைக்காட்டினன் என்பார் விடுமினீரென்னுக் கட்செவிவாலமும் பணமும் இருங்கையாற்பற்றிக் கடலைக் கடைந்தனன் என்றார். (௧௪)

ஒருகரமுடக்கியொருகரநீட்டியுவவுநீர்மதுகையிற்கடைபோ
தருவரைக்குடுமிமந்தரங்கடலுளாழ்தலுங்கச்சபவடிவாய்த்
திருமறுமார்பன்றாங்கவச்சயிலந்தெண்கடன்மீச்செலமிதப்பக்
கருமுகில்வண்ணன்கரமிசைநீட்டிக்கனங்கொளவிருத்தினன்வரையே.

(இ-ள்.) ஒருகரம் முடக்கி ஒருகரம் நீட்டி உவவு நீர் மதுகையில் கடைபோது - ஒருகையை முடக்கி ஒருகையை நீட்டிப் பெரியகடல் நீரைவலிமையோடு கடையுங்காலத்தில், குடுமி அரு மந்தர வரை கடலுள் ஆழ்தலும் - அடைதற்கரிய சிகரத்தையுடைய மந்தரமலை கடலிலாழ, திரு மறு மார்பன் கச்சப வடிவாய் தாங்க - இலக்குமியும் சீவற்சமென்னு மறுவும்பொருந்திய மார்பகத்தையுடைய திருமால்சுமத்தலால், சயிலம் தெண் கடல் மீ செல மிதப்ப கரு முகில் வண்ணன் மிசை கரம் நீட்டி வரை கனம் கொள இருத்தினன் - அழுந்திய அம்மலை தெள்ளியகடல்மேலெழுந்து மிதக்கக் கரியமேகம்போலு நிறத்தையுடைய திருமால் கையைமேலே நீட்டிக் கனக்க அம்மலையை

கடலிலழுந்திய மந்தரகிரிமேலெழ திருமால் அம்மூர்த்தங்கொண்டனர் ஆதலால் தாங்கக் கச்சபவடிவாய் எனவும், மேலெழுந்து மிதக்குங் கனம்வாய்ந்து மிதக்கத் திருக்கரங்களை நீட்டி யிருத்தினனாதலால் கரங்களை நீட்டிக் கனங்கொளவிருத்தினன் எனவுங் கூறினார். கனங்கொள் என்பதற்கு வரைவினைமுதலாதலால் ஏகாரம் அசைநிலையாகக்கொள்க. இதனையுணராது வாளாவரையையெனத் திருத்தியினைத்தனர். (௧௫)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

இருத்தியபின்னரியேறுமிடம்வலமாகவரையைத்
திரித்துக்கடுகச்சுழற்றித்தெண்டிரைவேலையலறிச்
சுரித்துவிரித்துப்பரந்துதுள்ளிக்கொதித்தெழுந்தாட
வருத்திக்கலக்கிமறுகவலித்துக்கடைந்திடுகாலை.

(இ-ள்.) இருத்தியபின் அரி ஏறும் இடம் வலமாக வரையை திரித்து கடுக சுழற்றி - திருமால் இருத்திய பின்பு ஆண்சிங்கத்தையொத்த அவ்வாலியும் இடமும் வலமுமாக அந்த மலையைத்திரித்து விரையச்சுழற்றுதலால், தெள் திரை வேலை அலறி சுரித்து விரித்து பரந்து துள்ளி கொதித்து எழுந்து ஆட - தெள்ளிய அலையையுடைய கடல் கதறி அந்நீரைச் சுருக்கி மீளவிரித்துப் பரந்து துள்ளிப் பொங்கியெழுந்து மேலெழ, வருத்தி கலக்கி மறுக வலித்து கடைந்திடு காலை - அக்கடலை வருத்திக்கலக்கி அது சுழல அம்மலையை இழுத்துக் கடைந்திடுங்காலத்தில்.

கடையுங்காலத்தில் கடையப்படும் பொருளின் றொழில்களிவையாதலால் அலறிச்சுரித்து விரித்துப் பரந்து துள்ளிக்கொதித்தெழுந்தாட எனத் தொழிற்றன்மையணிபடக்கூறினர். (௧௬)

ஆற்றரிதாகியிளைப்புற்றரவிறைவாயினுரைகள்
காற்றியுயிர்ப்புவிடலுங்கடுஞ்சுடுநீர்க்கடலெங்குந்
தோற்றுநுரைகள்பரம்பித்தொக்ககலப்பிடைநின்றுங்
கூற்றுறழாலாலமென்னுங்கொடுவிடந்தோன்றியதன்றே.

(இ-ள்.) அரவு இறை ஆற்றரிதாகி இளைப்பு உற்று வாயில் நுரைகள் காற்றி உயிர்ப்பு விடலும் - வாசுகியென்னும் பாம்பு ஆற்றற்கரிதாகி யிளைத்து வாயினின்று நுரைகளைக் கக்கிப் பெருமூச்செறிய, கடும் சுடு நீர் கடல் எங்கும் தோற்று நுரைகள் பரம்பி தொக்க கலப்பு இடை நின்றும் - மிகவுஞ் சுடாநின்ற நீர்மயமாகிய கடலில் எவ்விடத்துந் தோன்றிய அந்நுரைகள் பரவுதலால் நெருங்கிய கலப்பினிடத்தில் நின்றும், கூற்று உறழ் ஆலாலம் என்னும் கொடுவிடம் தோன்றியது - இயமனையொத்த ஆலாலமென்னுங் கொடிய விடமானது தோன்றியது.

வாலி யிருபாலும்பற்றி மாறிமாறியிழுத்தலால் அதற்கு வாசுகி யாற்றாமையில் ஆற்றரிதாகியெனவும், பெருமூச்சோடு வாய்நுரை நீரிற்கலந்தவிடத்து விடந்தோன்றியதால் பரம்பித்தொக்க கலப்பிடைநின்றுங் - கூற்றறழாலாலமென்னுங்கொடுவிடந் தோன்றியதெனவுங்கூறினர். பரம்பி காரணகாரியப்பொருளில் வந்த வினையெச்சம். தோற்றிய தன்வினைப்பொருளில்வந்த பிறவினைப்பெயரெச்சம். ஆலஹாலம் - ஆலாலம் வடமொழிச்சிதைவு. (௧௭)

அளக்கர்முழுதும்வறப்பவண்டகடாகமழற்றத்
துளக்கிலுயிர்த்தொகைமுற்றுஞ்சுட்டெழும்வல்விடத்தீயின்
கிளக்கருவெம்மைகதுவிக்கேழுடல்வாடிவெதும்பி
விளக்கமுறும்புகழ்வாலிவெரீஇனனோட்டமெடுத்தான்.

(இ-ள்.) அளக்கர் முழுதும் வறப்ப அண்டகடாகம் அழற்ற துளக்கு இல் உயிர் தொகை முற்றும் சுட்டு எழும் வல்விடம் தீயின் - கடல் முழுதும் வறக்கவும் அண்டகடாகந் தீப்பற்றவும் நடுக்கமில்லாத உயிர்த்தொகை முழுவதையுஞ்சுட்டு வருத்தியெழாநின்ற வலிய விஷமாகிய தீயினால், கிளக்கு அருவெம்மை கதுவி கேழ் உடல் வாடி வெ

தம்பி - சொல்லுதற்கரிய வெம்மை பற்றுதலால் நிறம்வாய்ந்த தனதுடல் வாடிவருந்தி, விளக்கம் உறும் புகழ் வாலிவெரீ இனன் ஓட்டம் எடுத்தான் - ஒளிமிக்க புகழ்வாய்ந்த வாலி யஞ்சியோடினன். வெரீஇனன் முற்றெச்சம்.

கடலருகு நின்று வாலி கடைதலா லக்கடலிற்றோன்றிய விஷவேகம் முன்பு வாலியைப்பற்றியதென்பார் வெம்மைகதுவிக்கேழுடல்வாடிவெ தும்பி - விளக்கமுறும் புகழ்வாலிவெரீஇனனோட்டமெடுத்தான் என்றார். (௧அ)

வருகனல்வல்விடந்தாக்கிமாயவன்வெண்ணிறமேனி
கருகினனன்றுதொடங்கிக்கரியனெனப்பெயர்பெற்றான்
றிருமலரோனுடற்பொன்மைதீர்ந்துபுகைநிறமுற்றான்
வெருவுதிசைக்கிறையோரும்வேற்றுருவெய்தியழுதார்.

(இ-ள்.) வருகனல் வல்விடம் தாக்கி மாயவன் வெண்ணிறமேனி கருகினன் அன்றுதொடங்கி கரியன் என்ன பெயர்பெற்றான் - கடலிற்றோன்றிய தீயையொத்த வலியவிடந் தாக்குதலால் திருமால் வெள்ளிய நிறம்வாய்ந்த திருமேனி கருகி அக்காலந் தொடங்கிக் கரியனென்று பேர்பெற்றான், திருமலரோன் உடல் பொன்மை தீர்ந்து புகை நிறம் உற்றான் - அழகிய தாமரைமலரில் வசிக்கும் பிரமன் தேகத்தின் பொன்னிறம் நீங்கிப் புகைநிறம் பெற்றான், வெருவு திசைக்கு இறையோரும் வேற்றுரு எய்தி அழுதார் - யாவருமஞ்சு மட்டதிக்குப்பாலகரும் நிறம் திரிந்து வேறு வடிவமடைந்தார்கள்.

திருமால் கருநிறம்பெற்றமைக்கும் பிரமன் தூமிரநிறமடைந்தமைக்குங் காரண மிதுவெலென்பார் கரியனெனப் பெயர்பெற்றான், மலரோன் புகைநிறமுற்றான் என்றார். (௧௯)

யாரும்பதைபதைத்தோட்டமெடுத்தினிச்செய்வதென்னென்று
சார்புபிறிதொன்றுங்காணார்தாளொடுதாள்களிடற
நாரணனேமுதலானோர்நண்ணினர்க்கின்பமளிக்குஞ்
சீர்கெழுவெள்ளிக்கயிலைத்திருமலைநோக்கிநடந்தார்.

(இ-ள்.) யாரும் பதை பதைத்து ஓட்டம் எடுத்து இனி செய்வது என் என்று சார்பு பிறிது ஒன்றும் காணார் - எவரும் பதை பதைத்தோடி யினிநாஞ்செய்வ தென்னென்று தமக்கோர் புகலிடங்காணாது, நாரணனே முதலானோர் நண்ணினர்க்கு இன்பம் அளிக்கும் சீர் கெழு வெள்ளி கயிலை திருமலை நோக்கி தாளொடு தாள்கள் இடற நடந்தார்-திருமால் முதலியோர் தம்மை யடைந்தோர்க்கு இன்பத்தைச் செய்யும் புகழ் வாய்ந்த வெள்ளியாகிய கைலையென்னுந் திருமலையைநோக்கிக் காலொடுகால் பின்ன நடந்தார்கள்.

அரசன் கோற்கீழ்வாழுங் குடிகள் பிறரால் தமக்கோரிடையூறுவரின் அவ்விடையூற்றைக் களைந்துய்தற்பொருட்டுத் தம்மையாளும் அரசனிடத்துச் செல்லுதல் போல, இறைவன் ஆணையின் கீழ்வாழும் அயன்முதலிய தேவர்களும் அசுரர்களும் விஷத்தால் தமக்குவந்த இடையூற்றைக் களைந்துய்வதற்கு அவ்விறைவன்பாற் சென்றடைதல் முறையாதலால் சார்பு பிறிதொன்றுங்காணார் நாரணனேமுதலானோர் வெள்ளிக்கயிலைத் திருமலைநோக்கி நடந்தார் என்றார். (௨௦)

வெங்கதிர்தாக்கவுடைந்தோர்மென்னிழல்சேர்ந்தெனச்சென்று
மங்கலவெற்பிணையெய்திவஞ்சவிடத்துயர்நீங்கி
யங்கண்வரையைவணங்கியருளொடுமேறியிளங்கா
றங்கியபோகபுரமுன்சற்றிளைப்பாறியிருந்தார்.

(இ-ள்.) வெம் கதிர் தாக்க உடைந்தோர் மெல் நிழல் சேர்ந்தால் என்ன சென்று மங்கல வெற்பினை எய்தி - சூரியகிரணஞ் சுட்டு வருத்துதலால் அதற் கிளைத்தவர்கள் தண்ணிய நிழலைச் சேர்ந்தாற்போலச் சேர்ந்து அடைந்தோர்க்கு மங்களத்தைச் செய்யுந் திருக்கயிலையை யடைதலால், வஞ்சவிடம் துயர் நீங்கி அங்கண் வரையைவணங்கி அருளோடும் ஏறி - கொடியவிஷத்தால் விளையுந்துன்பத்தினின்றும் நீங்கி அழகிய இடத்தையுடைய திருக்கயிலையை வணங்கித் திருவருளாலேறி, இளங் கால் தங்கிய போக புரம் முன் சற்று இளைப்பாறி இருந்தார்-தென்றல் தங்கிய முதலிடமாகிய போக புரத்தில் முன்பு சிறிது இளைப்பாறி யிருந்தார்கள்.

போகபுரம் சிவபெருமான் உமையம்மையோடு உல்லாசமாய் ஓர்கா லிருக்குந் தானம், மென்னிழல் சேர்ந்தெனச் சென்று இருந்தார் எனக்கூட்டித் தொழிலும் பயனும் பற்றிவந்த உவமை யணியாகக்கொள்க. (உக)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

படைத்தபெருந்துயர்நீங்கிநாற்றிசையுங்கண்விடுத்துப்பார்ப்போரங்கண், விடைக்கொடியோன்றிருக்கயிலைவிரிசுடர்வெண்கதிர்நீட்டும்விளக்கந் தன்பா, லடைக்கலமென்றுறுந்தம்மைத்தொடர்ந்துவருங்கொடுவிடமங்கணைவுறாமைப், புடைத்துந்தித்தள்ளுவானீட்டுதடங்கைகளெனப்பொலிவ கண்டார்.

(இ-ள்) அங்கண் விடை கொடியோன் திருகயிலை விரிசுடர் வெண் கதிர் நீட்டும் விளக்கம் - அவ்விடத்து இடபக் கொடியையுடைய சிவபெருமானது திருக்கயிலையானது விளங்கும் வெள்ளிய கிரணத்தைவீசும் விளக்கமானது, படைத்த பெருந்துயர் நீங்கி நால் திசையும் கண் விடுத்து பார்ப்போர் - தாம்படைத்த பெரிய துன்பத்தினின்றும் நீங்கி நானகு திசையிலுந் தம்முடைய கண்களைச் செலுத்திப் பார்க்குந் திருமால் முதலிய தேவர்கள்; தன்பால் அடைக்கலம் என்று உறும் தம்மை தொடர்ந்து வரும் கொடு விடம் அங்கு அணை வுறாமை புடைத்து உந்தி தள்ளுவான் நீட்டு தடம் கைகள் என்ன பொலிவ கண்டார் - தன்னிடத் தடைக்கலமென வடையுந் தங்களைப் பின்றொடர்ந்துவருங் கொடிய விடமானது அவ்விடத்திலவர்களைச்சேராமல் தாக்கியுந்தித்தள்ள நீட்டிய நீண்ட கைகளைப்போல விளங்குவதைப் பார்த்தார்கள்.

திருக்கயிலை கிரணம் வீசுதலைத் தன்னையடைந்த திருமால்முதலிய தேவர்களைப் பின்றொடர்ந்துவரும் விஷவேகத்தைத் தடுத்துத் தள்ளுதற்குக் கைகளை நீட்டியது போலிருந்ததெனக் கவி அத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி. தள்ளுவசெயல்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். (உஉ)

கடலகடுகிழித்தெழுந்தவிடவேகமாற்றாதுகழியநொந்தா
ரிடர்பெரியரளித்தக்காரந்தோவென்றிரங்கினபோலிலகும்வெள்ளித்
தடவரைமேற்றூங்கருவிபனித்திவலைநீர்தங்கண்முகத்துவீசப்
படருநெடுந்தடங்கொடிகள்சாந்தாற்றித்தொழில்செய்யும்பான்மைகண்டார்.

(இ-ள்.) கடல் அகடு கிழித்து எழுந்த விடவேகம் ஆற்றாது கழிய நொந்தார்-கடலின்வயிற்றைக்கிழித்தெழுந்த விஷத்தின் வேகத்துக்குச்சிறிதும் பொறாது மிகவும்வருந்திய திருமால்முதலிய தேவர்கள், அந்தோ இடர் பெரியர் அளித்தக்கார் என்று இரங்கினபோல்-ஐயோ துன்பத்தில் மிக்கவராயினர் நம்மாற் பாதுகாக்கத் தக்கவர் என்றவர்களுக் கிரங்கினதுபோல, இலகும் வெள்ளி தடவரை மேல் தூங்கு அருவி பனி திவலை நீர் தங்கள் முகத்து வீச - விளங்காநின்ற பெரிய வெள்ளி மலையின்மேல் அசைந்

திழியும் அருவியானது குளிர்ந்த நீர்த்துளியைத் தங்கள் முகத்தில் வீசவும், படரும் நெடும் தடம் கொடிகள் சாந்தாற்றி தொழில் செய்யும் பான்மை கண்டார். பரவிய நெடிய பெரிய கொடிகள் சிற்றால வட்டம்போல வீசுந்தொழில் செய்யுந் தன்மையை யும் பார்த்தார்கள்.

திருமால் முதலிய தேவர்கள் விஷவேகத்தால் மிகவு மெலிந்தனர், ஆதலால் நம்மாற் பாதுகாக்கத் தக்கவரான அருவிகளும் கொடிக ளசைதலும் சீதள வுபசார ஞ்செய்தலையொப்ப அவர்கள் முகத்தில் நீர்த்துளிகளை வீசியதெனவும் ஆலவட்டம் இ ரட்டியதெனவுங் கவியத் தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. இரங்கின வினைமுற்றுப்பெயர். (உ௩)

அச்சமுறவருவிடத்தையானெடுத்துப்பருகுவலென்றாற்றல்சாலப்
பச்சைவரையுயர்கயிலைப்பறம்புவாயங்காந்தபரிசேபோலச்
செச்சைமணிகிடந்திமைக்குமுழைகடொறும்வெண்ணீறுதிகழப்பூத்த
பொச்சமிலாமுனிவர்குழாநிரைநிரையாவீற்றிருக்கும்பொலிவுகண்டார்.

(இ-ள்.) அச்சமுற வருவிடத்தை யான் எடுத்து பருகுவல் என்று ஆற்றல் சால பச்சை வரை உயர் கயிலை பறம்பு வாய் அங்காந்த பரிசேபோல - பயமிகவாராநின்ற விஷத்தை நானே யெடுத்துப் பருகுவேனென்று வலிமைமிகப் பசியமூங்கில்களுயர்ந்த திருக்கயிலை மலைவாயைத்திறந்த தன்மையே போல், செச்சை மணிகிடந்து இமைக் கும் முழைகள் தொறும் வெண்ணீறு திகழ பூத்த பொச்சம் இல்லா முனிவர் குழாம் நிரை நிரையா வீற்றிருக்கும் பொலிவு கண்டார் - செவந்த மாணிக்கங்கள் கிடந்து வி ளங்குங் குகைகள்தோறும் வெள்ளிய திருநீறு திருமேனியில் விளங்க அணிந்த உண் மை நிலையில் மறத்தலில்லாத முனிவர் கூட்டங்கள் வரிசை வரிசையாக நிகரின்றியிருக் கும் அக்குகைகளின் விளக்கத்தைப் பார்த்தார்கள்.

குகைக ளிருத்தலைத் திருமால்முதலியோர் அஞ்சவரும் விஷத்தைத் திருக்கயி லை நான் பருகுவேனென்று வாய்திறந்ததை யொக்குமெனக் கவி அத் திடீவசயித்தலால் தற்குறிப்பேற்ற வுவமையணி. (உ௪)

அழுந்தாழிப்புனலகத்துவடவையுமக்கடுவெம்மைக்காற்றாதங்க
ணெழுந்தோடிமுன்னாகத்திருக்கயிலைப்பருப்பதத்திலெய்திமுன்னர்
விழுந்தாறுதன்னில்வரங்கிடப்பதெனவயங்குமொளிமேவுசெக்கர்ச்
செழுந்தாமமணிபடுத்தநெறிநோக்கியந்நெறிமேற்சேறலுற்றார்.

(இ-ள்.) அழுந்து ஆழி புனல் அகத்து வடவையும் அகடு வெம்மைக்கு ஆற்றா து அங்கண் எழுந்து ஓடி முன்னாக திருகயிலை பருப்பதத்தில் எய்தி முன்னர் விழுந்து ஆறு தன்னில் வரம் கிடப்பது என்ன - ஆழ்ந்த கடல் நீரினுள் இருக்கும் வடவாமுகாக் கினியும் அந்த விடத்தின் வெம்மைக்குச் சிறிதுமாற்றாது அவ்விடத்து நின்றெழுந்தோ டி அத்தேவர்களுக்கு முன்பு திருக்கயிலை மலையையடைந்து திருமுன் விழுந்து வழியில் வரங்கேட்கக் கிடத்தலைப்போல, வயங்கும் ஒளிமேவு செக்கர் செழும் தாமம் மணிபடு த்த நெறி நோக்கி அ நெறி மேல் சேறல் உற்றார் - விளங்காநின்ற ஒளிமிகுந்த செந்நிறம் வாய்ந்த மாணிக்கங்களைப் படுத்த வழியை நோக்கி யவ்வழியின்மேற் செல்லத் தொ டங்கினார்.

மாணிக்கக் கற்பதித்த சோபானங்களைக் கடலிற்றோன்றிய விஷத்தின் வெம் மைக்கு ஆற்றாது அக்கடலிலுள்ள வடவா முகாக்கினியும் திருமால்முதலிய தேவர்களு

க்குமுன் சென்று வரங்கேட்பக் கிடந்ததை யொக்குமெனக் கவி அத்திய வசயித்தலால்

இந்திரனுர்பட்டதுயர்க்குளமிரங்கியவரூருமெழிலிசேர
வந்தணுகியெந்தைபிரானெதிர்நின்றுமுறையிட்டான்மானமுன்னர்
முந்துகுடமுழமுதலாம்பேரியங்கள்பலமுழங்குமுழக்கங்கேட்டுச்
சிந்தைநனிகளிகூரச்சார்ங்கனயன்முதலியோர்திளைந்துச்சென்ருர்.

(இ-ள்.) இந்திரனுர் பட்டதுயர்க்கு உளம் இரங்கி அவர் ஊரும் எழிலிசேர வந்து அணுகி எந்தை பிரான் எதிர் நின்று முறையிட்டால் மான - தேவேந்திரன் பட்ட துன்பத்திற்கு மனமிரங்கியத் தேவேந்திரன் செலுத்து மேகங்கள் ஒரு சேரவந்தடைந்து எமது தந்தையாகிய சிவபிரா னெதிர்நின்று முறையிட்டா லொப்ப, முன்னர் முந்து குடமுழ முதலாம் பல பேர் இயங்கள் முழங்கு முழக்கம் கேட்டு சார்ங்கன் அயன் முதலியோர் சிந்தைநனி களிகூர திளைத்து சென்ருர். அப்பெருமான் திருமுன் முந்திய குடமுழாமுதலிய பல பெரியவாச்சியங்கள் ஒலிக்கு மொலியைக் கேட்டுத் திருமாலும் பிரமனுமுதலிய தேவர்கள் மன மிகவுங் களிகூர ..க்களிப்பி லிடையருத முந்திச் சென்ருர்கள்.

குடமுழா முதலிய வாச்சியங்க ளொலித்தலைத் தன்னை யூர்தியாகக் கொண்ட இந்திரன் விஷத்தினுல் வருந்தியதற்கு மனம்வருந்தி முன்பு வந்து சிவபிரானிடத்து முறையிட்டதை யொக்குமெனக் கவி அத்தியவசயித்தலால் இது வும் அவ்வணி. (உ௬)

யாமெய்திமுறையிடும்போதருடருமோமுனிந்திடுமோவெம்மானென்று
நாமெய்திச்செல்வோர்களாங்காங்குப்பூதகணநாதர்கூடித்
தோமெய்திப்பிழைத்தோருஞ்சரணடையினருள்சுரக்குமெங்கோனென்று
தாமெய்தித்தம்மியல்பிற்புகழெடுத்தோதுவகேட்டுத்தளர்வுதீர்ந்தார்.

(இ-ள்.) யாம் எய்தி முறையிடும்போது எம்மான் அருள் தருமோ முனிந்திடுமோ என்று நாம் எய்தி செல்வோர்கள் - நாமடைந்து முறையிடுங் காலத்தில் எமது பெருமானுர் அருள் செய்வாரோ கோபிப்பாரோ என்று அச்சமடைந்து செல்லுந் திருமால்முதலிய தேவர்கள், ஆங்கு ஆங்கு தாம் எய்தி பூதகணநாதர்கூடி தோம் எய்தி பிழைத்தோரும் சரண் அடையின் அருள் சுரக்கும் எங்கோன் என்று தம் இயல்பில் புகழ் எடுத்து ஓதுவ கேட்டு தளர்வு தீர்ந்தார் - அவ்வவ்விடங்களில் தாம் அடைந்து கணநாதர்கூடிக் குற்றம் வாய்ந்து தமக்குத் தவறுசெய்தவர்களுந் தம்மைச் சரணடைந்தாற் கிருபை செய்வாரென்று தமது இயல்பாலப் பெருமானுர் புகழை யெடுத்தோதுவதைக்கேட்டுத் தளர்ச்சியில் நின்றும் நீங்கினுர்கள்.

தாஞ்செய்யு முயபற்சிக்குச் சிவபெருமான் அருள்வானே முனிவானே வென்று அச்சங்கூர்ந்து செல்லுந் திருமால்முதலிய தேவர்கள் அப்பெருமான் திருமுன் கணநாதர்கள்நின்று திருவடிக்குப் பிழைத்தோருஞ் சரணடையினத் தீங்கினைப்பொறுத்தருளு மிறைவ னியல்லவாவென்று புகழ்தலைக்கேட்டு மகிழ்கூர்ந்து சென்றனர் என்றமையால் இன்பவணி. (உ௭)

தம்மினத்தோர்வரவுதனைமுன்னெய்தியறிவிப்பச்சார்வோரொன்ன
வம்மலைவாழெண்ணிலாவரிபிரமர்சேவைசெய்யுமமையம்பார்த்துக்
கொம்மைமழவிடைப்பெருமான்கோயிலினுட்சென்றணையக்குறித்துநோக்கி
விம்மியெழும்பெருமகிழ்ச்சிதலைசிறப்பமாலயனும்விரைந்துசெல்வார்.

(இ-ள்.) தம் இனத்தோர் வரவு தனை முன் எய்தி அறிவிப்ப சார்வோர் என்ன- தமது இனத்தோராகிய திருமால் பிரமன் வருகையைத் தாமுன்னடைந் தறிவிக்கச் செல்லுவோரைப் போல, அமலை வாழ் எண்ணிலா அரி பிரமர் சேவை செய்யும் அ ஸமயம் பார்த்து கொம்மை மழவிடை பெருமான் கோயிலினுள் சென்று அணைய குறி த்து நோக்கி - அந்தத் திருக்கயிலையில் வாழும் அளவில்லாத அரி பிரமர்கள் சேவை செய்யுஞ் சமையத்தைப் பார்த்து இளமைவாய்ந்த இடப ஊர்தியையுடைய சிவ பெரு மான் திருக்கோயிலினுள்ளே சென்று சேர அதனைக் குறித்துப்பார்த்து, விம்மி எழும் பெருமகிழ்ச்சி தலை சிறப்ப மால் அயனும் விரைந்து செல்வார் - அதிகரித்தெழும் பெ ருமகிழ்ச்சியானது மீக்கூர அத்திருமாலும் பிரமனும் விரைந்துசெல்வார்கள்.

திருக்கயிலையில் வாழும் அளவிறந்த அரிபிரமர்கள் சிவபெருமான் சேவை செய்தற்குச் சென்றணைதலைத் தம்மினத்தோர் வருகையைத் தெரிவிப்பதற்கு முன் செ ன்றனர் எனக் கவியத்திய வசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணியும், அவர்கள் செல்வதை நோக்கி யிவர்கள் தடையின்றிக் களிகூர்ந்து சென்றனர் என்ற மையால் இன்பவணியுங் கலந்து வருகையாற் கலவையணி.

அரிபிரமர்கள் திருக்கயிலையில் வாழ்தலை—

" வியன்கமலத்தயன்றென்பால்விரவிமெய்ம்மைச்
சரசுவதிமுனிவர்க்குத்தலைமையவங்கிரரிவருஞ்சாரக்கண்டார்" எனவும்,

" உத்தரத்திற்றிருமாறு முருத்திரரும்பரிதியருமுள்ளாரன்றே" எனவும் சிவதருமோத் தரத்தில் வருதல் காண்க. (௨௮)

எம்பிரானுருக்கொண்டங்குறைவோரையவனெனச்சென்றெய்திஓர்பா
லம்பிகையிலாமையினலவனல்லரெனத்தெளிந்தேயப்பாலேகிச்
செம்பதுமைவளர்மார்பனயன்முதலாம்யாவர்களுஞ்சேரவீண்டி
நம்பனமர்ந்தினிதுறையுந்திருக்கோயிற்கடைத்தலையைநண்ணினரால்.

(இ-ள்.) எம்பிரான் உரு கொண்டு அங்கு உறை வோரை அவன் என்ன சென்று எய்தி ஓர் பால் அம்பிகை இலாமையினால் அவன் அல்லர் என்ன தெளிந்தே அப்பால் ஏகி - எமது பெருமானார் திருவுருக்கொண் டங்குவசிப்போரை யப்பெருமா னென் றடைந்து ஓர்பாகத்தி லுமையம்மை யில்லாமையால் இவர் அவரல்லரெனத் தெளிந்து அப்பாற் சென்று, செம்பதுமை வளர் மார்பன் அயன் முதலாம் யாவர்களும் சேர ஈண்டி நம்பன் அமர்ந்து இனிது உறையும் திருக்கோயில் கடைத்தலையை நண் ணினர் - இலக்குமி வசிக்கு மார்பினையுடைய திருமாலும் பிரமனுமுதலிய தேவர்கள் ஒருசேர நெருங்கி யப்பெருமானார் விரும்பி யினிதாக எழுந்தருளியிருக்குங் கோயிலி ன் கடைவாயிலை யடைந்தார்கள்.

திருக்கயிலையில் வசிக்கும் உருத்திரர்களைச் சிவபெருமான் எனச்சென்றணைந்த திருமால் முதலியோர் ஓர்பாலுமையம்மை யில்லாமையா லவனல்லரெனத் தெளிந்த மையால் ஏதுவிலக்கணி.

திருக்கயிலையில் உருத்திரரிருத்தலை முன்னர்க்காண்க. (௨௯)

கணங்கண்மிடைமுதற்றடையிற்றடையுண்டுநின்றனர்கள்கருமதேவ
ருணங்குதயித்தியரிரண்டிற்கடவுளர்கண்மூன்றிலொருநான்குதன்னி
லணங்கருசாத்தியர்முதலோர்மருத்துக்கண்முனிவரொலாமைந்திலாறி
னிணங்கமழ்வேற்றிசைக்கிறைவரொண்மர்களுந்தடையுண்டுநின்றாரன்றே.

(இ-ள்.) கருமதேவர் கணங்கள் மிடை முதல் தடையில் தடையுண்டு நின்றனர்கள் - கருமதேவர்கள் சிவகணங்கள் நெருங்கிய முதற்றிருவாயிலிற் றடைபட்டு நின்றார்கள், இரண்டில் உணங்கு தயித்தியர் மூன்றில் கடவுளர்கள் ஒரு நான்கு தன்னில் அணங்கு அறுசாத்தியர் முதலோர் - இரண்டாந்திருவாயிலில் வருந்திய அசுரரும் மூன்றாந்திருவாயிலிற் றேவர்களும் நான்காந்திருவாயிலில் வருத்தத்தினின்றும் நீங்கிய விசுவேதேவர் முதலோர்களும், ஐந்தில் மருத்துக்கள் முனிவர் எல்லாம் ஆறில் நிணம் கமழ் வேல் திசைக்கு இறைவர் எண்மர்களும் தடையுண்டு நின்றார்-ஐந்தாந்திருவாயிலில் சத்தமருத்துக்களு முனிவரெல்லோர்களும் ஆறாந்திருவாயிலில் நிணங்கமழும் வேலையேந்திய அட்டதிக்குப்பாலகருந் தடைபட்டு நின்றார்கள்.

தேவர்கள் மகாதேவர், கருமதேவர் என இருவகையர். மகாதேவர் பிரமன் சிருட்டியிற்பட்ட தேவர்கள். கருமதேவர் நிலவுலகில் யாகாதிபுண்ணியஞ்செய்து தேவ சரீரம் பெற்றவர்கள்.

கணங்களாவாரிவ்வகையர் என்பதை—

"திணமேயுடையார்சிவனேவியதே
எணமேயுடையாரிடரோதுமிலார்
கணமேயிவரேகரிசேதுமில்லார்
நணமேன்மையரோநலரோநலரோ" எனச் சிவதருமோத்தரத்தில் அறிக. (௬௦)

தாமரையோன் றிருமாலுந்தடையின் றியணைந்துதனித்தடையின்வைகுந்
தேமருதார்நந்திபிரானடிபணிந்தாரவன்கொண்டுசெலுத்தச்சென்று
காமருசீரரம்பையர்களாடலொடுபாடலறாக்கடியார்செல்வப்
பூமருபேரவைநாப்பணமர்ந்தருளும் பெருவாழ்வின்பொலிவைக்கண்டார்.

(இ-ள்) தாமரையோன் திருமாலும் தடையின்றி அணைந்து தனி தடையின் வைகும் தேமரு தார் நந்தி பிரான் அடிபணிந்தார் - பிரமனுந் திருமாலுந் தடையில்லாமற்சென்று ஏழாம்பிரகாரத்திற்றங்கிய தேன்பொருந்திய மாலையையணிந்த நந்திதேவரது திருவடியை வணங்கினார்கள், அவன் கொண்டு செலுத்த சென்று காமருசீர் அரம்பையர்கள் ஆடலொடு பாடல் அறாத கடியார் செல்வம் பூமருபேர் அவை நாப்பண் அமர்ந்தருளும் பெருவாழ்வின் பொலிவை கண்டார் - அந்நந்திதேவர்கொண்டு செலுத்த வுள்ளேபோய் விருப்பமிக்க அழகுவாய்ந்த அரம்பையர்களது பாடலோடு ஆடலறாத ஒளிமிக்க ஞானச்செல்வப்பொலிவுவாய்ந்த பெரிய சபையினடுவிலெழுந்தருளிய பெருவாழ்வாகிய சிவபெருமானது பொலிவைத் தரிசித்தார்கள்.

ஏழாம்பிரகாரம் சிவபெருமானுக்கு அணித்தாதலால் தனித்தடையென்றார். ()

கண்டுபெருங்களிகூர்ந்துகணநாதர்பிரம்படியிற்கலங்கியேங்கி
மண்டியபேரச்சமுடனன்புமிருபுடையீர்ப்பவணங்கித்தாழ்ந்தே
யண்டனெதிர்நீளிடைநின் றஞ்சலிசென்னியிலேறவிழிநீர்வாரக்
கொண்டமயிர்ப்புளகமுறப்பலமுறையும்பணிந்தெழுந்துகுடந்தம்பட்டார்.

(இ-ள்.) கண்டு பெரும் களிகூர்ந்து கணநாதர் பிரம்பு அடியில் கலங்கி ஏங்கி மண்டிய பேர் அச்சமுடன் அன்பும் இருபுடை ஈர்ப்ப வணங்கி தாழ்ந்து - தரிசித்து மிக்க களிப்படைந்து சிவகணநாதரது பிரம்படியாற்கலங்கி வருந்தி நெருங்கிய பெரிய அச்சத்தோடு அன்பு முன்னும் பின்னு மீர்ந்த வணங்கித் தாழ்ந்து, அண்டன் எதிர் நீளிடை நின்று அஞ்சலி சென்னியில் ஏற விழிநீர் வார கொண்ட மயிர் புளகம் உற ப

வழுமுறையும் பணிந்து எழுந்து குடந்தம் பட்டார் - சிவபிரானெதிரே தூரத்தினின்று கூப்பிய கைதலை மேலேறவும் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சிந்தவும் அரும்பிய மயிர்ப்புளகம் உடலிற் புளகிக்கவும் பல தடவையு மெய்கோட்டிக் கைகுவித்து வணங்கியெழுந்து நின்றார்கள்.

திருவோலக்கத்தில் நெருக்கினை விலக்கக் கணநாதர்களோச்சிய பிரம்படி தம் மேலுந் தாக்குமோவென்றஞ்சினராதலால் பிரம்படியிற் கலங்கியேங்கி மண்டியபேரச்சமுடன் எனவும், அச்சந்தோன்றினுங் குன்றுத தலையன்பினராதலால் அன்பு மிருபுடையீர்ப்பவெனவுங்கூறினர். குடந்தம் மெய்கோட்டிக் கைகுவித்தல் "குடந்தமெய்கோட்டிக் கைகுவித்தலென்ப" எனவரும் பிங்கலந்தையாலுணர்க.

கணநாதர் ஆவார் இவ்வகையர் என்பதை—

" படிசேர்பலமேனியரேபடரும்
சடைமாமுடியார்தகுநீறுடையார்
புடையேபுயமுமொருநாலுடையார்
அடியாரவரேகணநாயகரே" எனச் சிவதருமோத்தரத்தாலுணர்க. (௩௨)

ஒருபோகுகொச்சகம்.

வாரத்தானந்திபிரான்மலரோனுந்திருமாலுஞ்
சேரத்தாம்வந்ததிறம்விண்ணப்பஞ்செயக்கொன்றை
யீரத்தாருடையானுமீண்டவரைத்தருகென்றான்.

(இ-ள்.) தூரத்தே இவர் நிற்ப வாரத்தால் நந்திபிரான் அணித்து ஆக தொழுது அணைந்து - சேய்மையிலே யிவர்கள் தாழ்ந்து நிற்க உரிமையால் நந்திதேவர் சிவபிரான் சமீபமாகத்தொழுது சென்று, மலரோனும் திருமாலும் சேர தாம் வந்த திறம் விண்ணப்பம் செய்ய - பிரமனுந் திருமாலு மொருசேரவந்த திறத்தை விண்ணப்பஞ்செய்ய, கொன்றை ஈரம் தார் சடையானும் ஈண்டு அவரை தருக என்றான் - கொன்றைமலராற்றொடுத்த குளிர்ந்த மாலையையுடைய அவ்விறைவனும் இவ்விடத்தி லவரைத் தரக்கடவாயென்றருளினர்.

வாரம் என்றது அகம்படித்தொண்டினுரிமையை. (௩௩)

நந்திபிரான்றிருப்பிரம்பையசைத்தருளநாண்மலர்மே
லந்தணனுநெடியோனுமஞ்சலிசேர்கரத்தோடும்
வந்தணுகிமருங்குறலுமணிநிலாநகைமுகிழ்ப்பப்
பைந்தொடியாளொருகூற்றிற்பரம்பொருண்மற்றிதுகூறும்.

(இ-ள்.) நந்தி பிரான் திரு பிரம்பை அசைத்தருள நாள் மலர்மேல் அந்தணனும் நெடியோனும் அஞ்சலிசேர் கரத்தோடும் வந்து அணுகி மருங்கு உறலும் - நந்திதேவர் திருப்பிரம்பையசைத்தருள அன்றலர்ந்த தாமரைமலர்மேல்வசிக்கும் பிரமனுந் திருமாலு மஞ்சலிகூப்பிய கையோடுவந்தடைந்து பக்கத்திற்பொருந்த, மணி நிலா நகை முகிழ்ப்ப பைந் தொடியாள் ஒரு கூற்றில் பரம் பொருள் இது கூறும் - முத்துநிலவைப்போலப் புன்னகையரும்ப உமையம்மையை யொருபாகத்திலுடைய இறைவர் இதனைத்திருவாய் மலர்ந்தருளுவார்.

சிவபெருமான் இங்கு அவரைத்தருகவெனப் பணித்தருள நந்திதேவர் சமிக்கை செய்தழைத்தனர் என்பார் பிரம்பையசைத்தருள என்றார். (௩௪)

மாயனீயிருந்தையுருவாய்த்தனையென்மலர்மேவுந்
தூயநீபுகையுருவந்தோற்றினையென்னென்றருளு
மாயபொழுதாண்டாண்டிக்கணநாதரலைப்பமெலிந்
தேயமுறைறமுறையிட்டார்புறநின்றவிமையவர்கள்.

(இ-ள்.) மாயன் நீ இருந்தை உரு வாய்த்தனை என் மலர் மேவும் தூய நீ புகை உருவம் தோற்றினை என் என்று அருளும் ஆய பொழுது - திருமாலே நீ கரிபோலுங் கரிய உருவினைவாய்ந்தாய் அது யாதுகாரணம் தாமரை மலரில்வசிக்கும் பிரமனே நீ புகைவடிவம் வாய்ந்தாய் அது யாதுகாரணம் என்று திருவாய்மலர்ந்தருளுங்காலத்தில், ஆண்டு ஆண்டு கணநாதர் அலைப்ப மெலிந்து ஏய புறம் நின்ற இமையவர்கள் முறை முறையிட்டார் - அவ்வவ்விடங்களிற் சிவகணநாதர் வருத்தப் புறத்தில் நின்ற தேவர்கள் மெலிவுகூர்ந்து சிவபெருமான் திருச்செவியிற்பொருந்த முறையோ முறையோவென் றோலமிட்டார்கள்.

முறைமுறை அவலப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (௬௫)

ஆங்கவர்கண்மிகமுழக்குமரவோசைதிருச்செவியேற்
றீங்கிதெவனென்றருளவம்புயத்தோனெதிர்வணங்கிப்
பாங்குடையசுராசுரருன்பாதங்கடொழப்போந்தார்
பூங்கழற்கால்வெம்பூதகணந்தடுப்பப்புறநின்றார்.

(இ-ள்.) ஆங்கு அவர்கள் மிகமுழக்கும் அரவோசை திருசெவி ஏற்று ஈங்கு இது எவன் என்று அருள - அவ்விடத்தி லவர்கள் மிகவு முழக்குமர வோசையைத் திருச் செவியிலேற்று இவ்விடத்து இக்குறையீடு யாதென்று திருவாய்மலர, அம்புயத்தோன் எதிர் வணங்கி பாங்கு உடைய சுரர் அசுரர் உன்பாதங்கள் தொழ போந்தார் - பிரமன் எதிரே வணங்கித் தொண்டுசெய்யுந் தேவர்களும் அசுரர்களுந் தேவரீருடைய திருவடிகளை வணங்கவந்தனர்கள், பூ கழல் கால் வெம்பூதகணம் தடுப்ப புறம் நின்றார் - பொலிவமைந்த வீரகண்டைகட்டிய காலையுடைய பூதகணங்கள் தடுக்கப் புறத்தில் நின்றார்கள்.

அவருட் பெரியோனாகிய திருமால் கடைக்கணிக்கப்பிர மன்கூறினானாதலால் அம்புயத்தோ னெதிர்வணங்கி யென்றார். (௬௬)

விளித்தருளிக்கருணைசெயவேண்டுமெனத்திருநோக்க
மளித்தெந்தைநந்திதனைப்பணித்தருளவவனெய்தித்
தெளித்தெழுபல்கணத்தோரைத்தடுத்துள்ளாற்செல்கவெனத்
துளித்தமதுப்பிரம்பசைத்துச்சுராசுரரைப்புகுவித்தான்.

(இ-ள்.) விளித்தருளி கருணை செய்ய வேண்டும் என்ன - ஆதலாலவர்களை யழைத்தருளித் திருவருள் செய்யவேண்டுமென்று பிரமன் குறையிரக்க, எந்தை நந்தி தனை திரு நோக்கம் அளித்து பணித்தருள - எமது பெருமான் நந்திமேல் திருநோக்கஞ்செய்து அருள்செய்ய, அவன் எய்தி தெளித்து எழு பல்கணத்தோரை தடுத்து உள் செல்க என்ன மது துளித்த பிரம்பு அசைத்து சுரா சுரரை புகுவித்தான் - அந்த நந்திதேவரடைந்து தேவர்க ளசுரர்கள்மேல் அதட்டியெழுந்த பலபூதகணத்தலைவரைத் தடுத்து உள்ளேசெல்லக் கடவீரென்று தேனைத்துளித்த பிரம்பினையசைத்துத் தேவர் களையும் அசுரர்களையும் உள்ளே செல்லச்செலுத்தினர்.

பிரமன் வேண்டுகோளால் சுராசுரர்களைத் தருகவென்று பணித்தருள நந்திதேவர்முதலாம் ஆவரணங்காறுஞ் சென்றெய்தி வருகவென அனுஞைசெய்ய, செல்லுஞ்

சுராசுரர்களைத் திருவோலக்கஞ் சென்றடையுந் தரத்தினரிவர்களல்லரோ வெனக் குண்டோதரனுந் தண்டியும் செல்லுமவர்களைத் தடுத்தமையால், அவர்களைத்தடுத்து உள்ளே செலுத்தினரென்பார் தடுத்துள்ளாற் செல்கவெனப் பிரம்பசைத்துச் சுராசுரரைப்புகுவித்தான் எனவும், உடைமைக்கு முடையதுக்கும் ஒற்றுமையுண்மையால் மலரார்ற்றொடுத்த மாலை வேய்ந்திருத்தலால் அம்மலர் மாலை தேன் துளித்தலை உடையதின்மேலேற்றித் துளித்தமதுப்பிரம்பு எனவுங்கூறினர். (௩௭)

உய்ந்தனமுய்ந்தனமென்றேயும்பர்களுந்தானவரு
முந்திமணிவாய்தலிடைமுடிநெருங்கநுழைந்தேகி
யெந்தைபிரான்வீற்றிருக்குமோலக்கமெதிர்நோக்கிப்
புந்திநிறைகளிகூரத்தொழுதெழுந்துபோற்றினர்.

(இ-ள்.) உம்பர்களும் தானவரும் உய்ந்தனம் உய்ந்தனம் என்று முந்தி மணிவாய்தல் இடைமுடி நெருங்க நுழைந்து ஏகி - தேவர்களு மசுரர்களும் நாம் பிழைத்தோம் பிழைத்தோமென்று முற்பட்டு இரத்தினமழுத்திய வாயிலினிடத்துத் தங்கள் கிரீடம் நெருங்க உள்ளேசென்று, எந்தை பிரான் வீற்றிருக்கும் ஓலக்கம் எதிர் நோக்கி - எமது பெருமான் நிகரின்றியிருக்குங் கொலுமண்டபத்தை யெதிரேநோக்கி, புந்தி நிறை களி கூரதொழுது எழுந்து போற்றினர் - மனத்தில் நிறைந்தகளிப்பு மிகவணங்கியெழுந்து

உய்ந்தனம் உய்ந்தனம் உவகைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (௩௮)

அங்கவரையெதிர்நோக்கிநகைத்தருள்கூர்ந்தருள்வாரி
பங்கயத்தோயுருமாறிமுகஞ்சாம்பிமெய்பனிப்ப
விங்கிவர்கட்குற்றதெவனென்றருளமறைப்புத்தேள்
செங்கையிணைமுகிழ்த்திறைஞ்சிவிண்ணப்பஞ்செய்கின்றான்.

(இ-ள்.) அருள் வாரி அங்கு அவரை எதிர் நோக்கி நகைத்து அருள் கூர்ந்து - கிருபாசமுத்திரமாகிய இறைவர் அங்கவர்களை யெதிரேபார்த்துப் புன்னகைசெய் தருள்கூர்ந்து, பங்கயத்தோய் உருமாறி முகம் சாம்பி மெய் பனிப்ப இங்கு இவர் கட்கு உற்றது எவன் என்று அருள-தாமரைமலரில் வசிக்கும் பிரமனே யுருவமாறி முகம் வாடித் தேகம்நடுங்க இவ்விடத்து இவர்களுக்கு நேரிட்டது யாதென்று திருவாய் மலர்ந்தருள, மறை புத்தேள் செங்கை இணை முகிழ்த்து இறைஞ்சி விண்ணப்பம் செய்கின்றான் - பிரமன் செவந்த இரண்டுகரங்களையுஞ் சிரமேற்கூப்பி வணங்கிவிண்ணப்பஞ் செய்கின்றான்.

அறிந்தும் அறியான்போல் வினவியருளினன் என்பான் நகைத்துப் பங்கயத்தோய் இவர்கட்குற்ற தெவனென்றருள என்றார். (௩௯)

ஐயனேயடியேங்களறியாமைத்தொடக்குண்ட
கையரோமாதலினுன்கண்ணருள்பெற்றெய்தாது
வெய்யநறுஞ்சுவையமிழ்தம்பெறற்பொருட்டுவெவ்வினையேம்
பையரவான்மந்தரத்தாற்பாற்கடலைக்கடைந்தேமால்.

(இ-ள்.) ஐயனே அடியேங்கள் அறியாமை தொடக்கு உண்ட கையரோம் ஆதலின் - மேலானவனே அடியேங்களாகிய யாம் அஞ்ஞானத்திற் சிமிழ்ப்புண்ட கீழ்மக்களாதலால், உன் கண் அருள் பெற்று எய் தாது வெய்ய நறும் சுவை அமிழ்தம் பெறல் பொருட்டு-தேவரீர் திருநோக்கம் பெறாதடைந்து விரும்பும் நறுமணங்கமழுஞ் சுவை

வாய்ந்த அமுதத்தைப் பெறும்பொருட்டு, வெவ்வினை யேம் ஊப் அரவால் மந்தரத்தா ல் பால் கடலை கடைந்தேம் - கொடிய தீவினையையுடைய யாம் படத்தினையுடைய வா சுகியாலு மந்தரகிரியாலும் பாற்கடலைக் கடைந்தோம்.

மலச்சிமிழ்ப்புண்ட பரதந்திரர் என்பான் அறியாமைத் தொடக் குண்டகைய ரோமென்றான். (௬0)

துன்றியதீஞ்சுவையமிழ்தந்தோன்றாதுவிடந்தோன்றி
யின்றுசராசரமனைத்துமெரிசெய்துநீறாக்கிற்
றன்றினரூரெரித்தாயுன்னருளன்றிமுயல்வதெலா
மொன்றொழியவொன்றாமென்றுரைக்குமொழிமெய்யாமே.

(இ-ள்.) அன்றினர் ஊர் எரித்தாய் - பகைவரது திரிபுரம் எரித்த இறைவனே, துன்றிய தீம் சுவை அமிழ்தம் தோன்றாது விடம் தோன்றி இன்று சரா சரம் அனைத் தும் எரி செய்து நீறாக்கிற்று-(கடைந்தகாலத்தில்) நெருங்கிய இனிய சுவையமைந்த அ முதந்தோன்றாமல் விஷந்தோன்றி யிப்பொழுது சராசரங்கள் யாவையுமெரித்து நீறா க்கியது, உன் அருள் அன்றி முயல்வது எல்லாம் ஒன்று ஒழிய ஒன்றாம் என்று உரைக் கும் மொழி மெய்யாம் - உன்றிருவருளன்றி யொருவன் முயலுமுயற்சி யெல்லாமொன் றொழிய வொன்றாகுமென்று கூறியவார்த்தை மெய்யாகும்.

உன்னருளன்றி முயலுமுயற்சி பயன்படாதென்னும் பொருளால் முன்சொல் லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. (௬௧)

இற்றொழிந்தோரொழியவேறெஞ்சியயாஞ்சிலர்வந்திங்
குற்றனம்வண்ணமுமாறியுயங்கினேநீயலதோர்
பற்றிலேமிவ்வளவிலுலகமெலாம்பாழாகுஞ்
சற்றுமினித்தாழாதுதண்ணளிசெய்திரங்காயால்.

(இ-ள்.) இற்று ஒழிந்தோர் ஒழிய வேறு எஞ்சிய யாம் சிலர் வந்து இங்கு உற் றனம் வண்ணமும் மாறி உயங்கினேம் - இறந்தொழிந்தோரொழிய இறவா தெஞ்சிய யாமுஞ் சிலரும் வந்து இங்குச் சரணடைந்தேம் நிறமு மாறி மயங்கினேம், நீ அலது ஓர் பற்று இலேம் இவ்வளவில் உலகம் எல்லாம் பாழாகும் - நீயன்றி யாதொரு பற்றுக் கோடும் இல்லேம் இவ்வளவுக்குள் உலகமெல்லாம் பாழாய் முடியும், சற்றும் இனி தா ழாது தண் அளிசெய்து இரங்காய் - சிறிதும் இனித் தாழாது தண்ணிய கருணைசெய் து இரங்கியருளாய்.

தேவரீர் கருணைசெய்யத் தாழ்த்தால் விஷத்தால் பெருங்கேடு வரும் என்பான் முக்காலத்துக்கும் பொதுவாகிய ஆகும் என்னும் வினைமுற்றுத்தந்து கூறினன். (௬௨)

மயாம

விதுமுடித்தபெருங்கருணைவெள்ளமேயென்றிரந்தான்
மதுமலர்த்தார்விண்ணவருமனங்கலங்கிமுறையிட்டா
ரதுவுணர்ந்தெம்பெருமானுமஞ்சலீரென்றருளி.

(இ-ள்.) விது முடித்த பெருங்கருணை வெள்ளமே இதுபொழுது காத்திலை யேல் எமக்கு இறுதி இன்றே யாம் என்று இரந்தான் - இளஞ்சந்திரனை முடித்த பெரிய கிருபா வெள்ளமே இப்பொழுது காத்தலொழிந்தா லெமக்கு முடிவு இப்பொழுதே யாமென்று பிரமன் குறை யிரந்தான், மது மலர் தார் விண்ணவரும் மனம் கலங்கி மு

றையிட்டார் - தேன் சிந்துங் கற்பகமலராற் றெருகுத்த மாலையணிந்த தேவரு மனங் கலங்கி முறையிட்டார்கள், எம்பெருமானும் அது உணர்ந்து அஞ்சலீர் என்று அருளி- எமது இறைவனு மதனைத் திருவுளத்தி லெண்ணி யஞ்சுத லொழியுங்களென்று கடைக்

பரமகருணாநிதியாதலால் அவர் முறையீட்டுக்கிரங்கி அபயந்தந்தனர் என்பார் அதுவுணர்ந் தஞ்சலீரென் றருளியென்றார். (௪௩)

இருந்தவாறுளத்தெண்ணினன்மலர்க்கரநீட்டக்
கருந்தழற்கடுகமலமீச்சிறையளிகடுப்பப்
பெருந்திருக்கரத்தெய்தியேர்செய்துபேராளன்
றிருந்துபார்வையிற்சிற்றுருவாயடங்கியதால்.

(இ-ள்.) இருந்த ஆறு உளத்து எண்ணினன் மலர் கரம் நீட்ட - தாம் இருந்த விடத்தே [illegible]ருந்தருளித் திருவுளத்திற் கருதித் தாமரை மலர்போன்ற திருக்கரம் நீட்ட, கருந்தழல் கடு கமலம் மீசிறை அளி கடுப்ப பெரும் திரு கரத்து எய்தி ஏர் செய்து பேராளன் திருந்து பார்வையில் சிற்றுருவாய் அடங்கியது-பெரிய தீப்போன்ற விடம் தாமரைமலர்மேற் சிறகினையுடைய வண்டையொப்பப் பெரிய அழகிய திருக்கரத்தடைந்து அழகுசெய்து யாவர்க்குமேம்பட்ட அவ்விறைவனது திருந்திய திருநோக்காற் சிறிய வடிவமாயடங்கியது.

சருவஞ்ஞத்துவம் எனப்படு முற்று முணர்தற்றன்மைதோன்ற ஆலாலமுலக மெல்லாம் பரவி நீறாக்குவதை யுணர்ந்தனன் என்பார் இருந்தவாறுளத்தெண்ணினன் எனவும், பிரமன்முதலிய பசுக்களிடத்துப் பெருங்கருணையாளன் என்பார் அனுத்த சத்தியென்னும் பேரருளுடைமைதோன்ற மலர்க்கரநீட்டினன் எனவும்,சுதந்திரன் எனப் படுந் தன்வயத்தனாதல் தோன்றப் பேராளன் எனவும், அனந்தசத்தி யெனப்படும் அளவிலாற்றலுடைமைதோன்ற அதனதாற்றல் குன்றியதென்பார் மலர்க்கரமெய்தித் திருந்துபார்வையிற் சிற்றுருவாயடங்கியதெனவுங் கூறினார். (௪௪)

அண்டர்மாலயனுலகெலாமதிர்வுறப்பரந்து
மண்டுவெஞ்சினக்கடுவலிபோய்மலர்க்கரத்தி
னொண்டளிர்ப்பதத்தடியவர்சிந்தைபோலொடுங்கக்
கண்டவெம்பிரான்பெருமையார்கட்டுரைத்திடுவார்.

(இ-ள்.) அண்டர் மால் அயன் உலகு எல்லாம் அதிர் உற பரந்து மண்டு வெம் சினம் கடுவலிபோய் - தேவர்களுந் திருமாலும் பிரமனு மற்ற உயிர்களும் நடுங்க வெங்கும் பரவி நெருங்கிய கொடிய கோபத்தையுடைய விஷமானது தனது வலிமை கெட்டு, மலர் கரத்தின் ஒண் தளிர் பதத்து அடியவர் சிந்தைபோல் ஒடுங்க கண்ட - தாமரை மலர்போன்ற திருக்கரத்திற் றனது ஒள்ளிய தளிர்போன்ற மெல்லிய திருவடியிலொடுங்கிய அடியார் மனம்போலொடுங்கி நிற்கச்செய்த, எம்பிரான் பெருமையார் கட்டுரைத்திடுவார் - எமதிறைவர் பெருமையை யெவர்தாம் தொடுத்துச்சொல்லும் வலிமையையுடையவர். (ஒருவருமில்லையென்றபடி.)

விடயங்கள்தோறும் பரவிய மனம் திருவருள் மேலீட்டா லவ்விடயவாதனை குறைந்து என்னுந் தொழில் பொருளிலிருந்து கொள்ளப்படுதலால் தொழிற்குறை விதேழுவணி. (௪௫)

தன்னடித்தொழும்பாற்றுமோர்தமிழ்முனிகரத்தி
லுன்னுமுன்கடற்புனலெலாமுழுந்தளவாமே
லன்னதெண்கடற்றோன்றியபெருவிடமம்மான்
பொன்னலர்க்கரத்தடங்கியதென்பதோர்புகழோ.

(இ-ள்.) தன் அடி தொழும்பு ஆற்றும் ஓர் தமிழ்முனி உன்னுமுன் கரத்தில் கடல் புனல் எல்லாம் உழுந்து அளவா மேல் - தனது திருவடித்தொண்டு செய்யும் ஓர் அகத்தியமுனிவன் நினைத்தற்கு முன் திருக்கரத்தில் கடலிலுள்ள நீரெல்லாம் ஓர் உழுந்தளவா யடங்குமாயில், அன்ன தெண் கடல் தோன்றிய பெருவிடம் அம்மான் பொன் அலர் கரத்து அடங்கியது என்பது ஓர்புகழோ - அந்தத் தெள்ளிய கடலிற்றோன்றிய பெருவிடமானது அவ்விறைவனது தாமரை மலர்போன்ற திருக்கரத்திலடங்கிய தென்று நம்மால் புகழ்ந்து கூறுவது அவனுக்கோர் புகழ்ச்சியோ.

கடலிலொளித்த விருத்திராசுரனை வெளிப்படுத்தற் பொருட்டு இந்திரன் வேண்டுகோளால் அகத்திய முனிவர் கடலை ஆசமித்தலால் தமிழ் முனிகரத்தில் உன்னுமுன் கடற்புனலெலா முழுந்தளவா மேல் என்றார். தனது அடியவர்களுள் ஒருவராகிய அகத்தியமுனிவர் கருதியபோதே விரிந்த கடற்புனல் சுருங்கியுழுந் தளவாமானால் இறைவன் கருதியகாலையில் அக்கடலிற்றோன்றி யுலகமுற்றும் பரவிய ஆலாலம் சிற்றளவாய்ச் சுருங்கித் திருக்கரத்திடங்கியது என்பது அவ்விறைவனுக்கோர் புகழல்ல என்றது மேன்மேலுயர்ச்சியணி. (௬௬)

சேயிதழ்த்தடம்பங்கயக்கரத்திடைச்சிவணுங்
காயுநஞ்சினைக்காண்டோறும்பதைக்கும்வானவரைப்
பாயுமால்விடைப்பண்ணவன்பரிந்தெதிர்நோக்கித்
தூயவெண்ணிலாக்குறுநகைமுகிழ்த்தனன்சொல்வான்.

(இ-ள்.) சேய் இதழ் தடம் பங்கயம் கரத்து இடை சிவணும் காயும் நஞ்சினை காண்டொறும்பதைக்கும் வானவரை-செவந்த இதழையுடைய தாமரைமலரையொத்த கையினிடத்துப்பொருந்திய வருத்தும் நஞ்சினைப் பார்க்குந்தோறு மனம் பதைக்குந் தேவர்களை, பாயும் மால் விடை பண்ணவன் பரிந்து எதிர்நோக்கி - பாய்ந்து செல்லுந் திருமாலாகிய இடபத்தையுடைய இறைவன் அன்புகூர்ந்து எதிரேபார்த்து, தூய வெள் நிலா குறுநகை முகிழ்த்தனன் சொல்வான்-புனிதமாகிய வெள்ளிய கிரணம்வாய்ந்த புன்னகை செய்தருளிக் கூறுகின்றான்.

நிலங்கடந்த நெடுமுடியண்ணலாதலால் அடியவர் கருதியதை விரைந்தருள அவ்வண்ணலை விடையாகக்கொண்டனன் என்பார் பாயுமால்விடைப் பண்ணவன் என்றார். (௬௭)

செறியுநஞ்சினையுண்குமோசேயிடைச்செல்ல

வறிதுமூங்கையர்போறலுமொருபுடைமணந்த
நெறிகருங்குழன்மலர்முகநோக்கினனிகழ்த்தும்.

(இ-ள்.) செறியும் நஞ்சினை உண்குமோ சேயிடை செல்ல எறிகுமோ புகன்மின்கள் என்று அருள் செய்ய - நெருங்கிய நஞ்சையுண்போமோ அன்றித் தூரத்திற் செல்ல எறிவோமோ இவற்றுள் யாதுசெய்வோம் சொல்லுங்களென்று வினவியருள, இமையோர் வறிது மூங்கையர் போறலும் - தேவர்கள் வாளா ஊமைகள்போலிருக்கவும், ஒரு புடை மணந்த நெறி கருங் குழல் மலர் முகம் நோக்கினன் நிகழ்த்தும் - ஒரு

பால் கலந்த நெறிந்த கரியகூந்தலையுடைய உமையம்மையின் தாமரை மலர்போன்ற முகத்தைநோக்கிக் கூறுவான்.

இறைவ நஞ்சினைப்பருகி யெம்மைக்காக்க வெனக்கூறில் பாவமாதலாலும், பருகாதொழிக வெனக்கூறில் தமக்குத் தீங்குவருமாதலாலும் சிவபெருமானருளிய வினவுக்கு விடையில்லாதொழிந்தனர் என்பார் வறிதுமூங்கையர்போறலும் என்றார்.

அரிவைகேட்டியிக்கொடுவிடமகிலமுமொருங்கே
யெரிமடுத்ததுன்பார்வையாலின்னமுதாமாற்
புரிவதொன்றிலைபருகினுற்புகறீயென்ன
வரிவிழிக்கடைதோய்மணிக்கணங்குழைமடமான்.

(இ-ள்.) அரிவை கேட்டி இ கொடு விடம் அகிலமும் ஒருங்கே எரி மடுத்தது-உமையே கேட்பாய் இந்தக்கொடியவிடமானது எல்லா உலகங்களையும் ஒருசேரத்தீவாய்ப்பெய்தது (ஆயினும்), உன் பார்வை யால் இன் அமுது ஆம் - உனது அருட்பார்வையால் அது இனியஅமுதமாம், பருகினல் புரிவது ஒன்று இல்லை - இதனைப் பருகினலிது செய்வதொன்றில்லை, நீ புகறி என்ன - நீ கூறுயென்று வினவ, வரி விழி கடை தோய் மணி கணம் குழை மடமான் - வரியமைந்த கட்கடைதோய்ந்த இரத்தினமழுத்திய திரண்ட குண்டலத்தையணிந்த உமையம்மை.

கணம் திரட்சி. திருமால்முதலிய தேவர்கள் மூங்கையராய் நிற்க அவர்கள்மேலுள்ள கருணையால் அருள்வடிவாகிய உமையம்மையைநோக்கி வினவினர் என்பார். அரிவைகேட்டி யெனவும், நீ ஆன்மாக்களிடத்துக் கொண்ட கருணையால் உலகமுற்றும் நீறுக்கியவிடம் முக்காலத்து மமுதமாயிற்றென்பார் முக்காலத்துக்கும் பொதுவாகியவினைதந்து இன்னமுதாம் எனவும், இதனைப்பருகில் தனக்குத் தீங்கு தருவதொன்றில்லையென்பார் பருகினுற் புரிவதொன்றில்லை யெனவும், இறைவன் திருவாய்மலர்ந்தருளினன் என்றார். (௪௯)

உலகெலாந்தருமன்னையவ்வுலகின்மேல்வைத்த
வலகிலாப்பெருங்கருணையாற்கொழுநன்மாட்டமைந்த
தலைமையன்பினுன்மலர்முகமொருபுடைசாய்த்துக்
குலவுசெங்கையின்விடத்தினைநோக்கினள்குறித்து.

(இ-ள்.) உலகு எல்லாம் தரும் அன்னை அ உலகின் மேல் வைத்த அலகு இலா பெரும் கருணையால் - எல்லா உயிர்களையுந்தந்த உமையம்மை அவ்வுயிர்களின்மேல் வைத்த மிக்ககருணையாலும், கொழு நன் மாடு அமைந்த தலைமை அன்பினுல் மலர் முகம் ஒரு புடை சாய்த்து குலவு செங்கையின் விடத்தினை குறித்து நோக்கினள் - நாயகனிடத்துவைத்த தலையன்பினுல் தாமரைமலர்போன்ற முகத்தை யொருபக்கத்தில் வளைத்து விளங்காநின்ற செவந்த கையிலேந்திய விஷத்தினைக் குறித்துப்பார்த்தாள்.

உமையம்மை உலகமாதா ஆதலால் உண்ணுதலொழிக வெனக்கூறுத லமையாமையாலும், இறைவனிடத்துத் தாதான்மியமாய் நிற்குந்தலையன்பின ராதலால் உண்ணெனக்கூறுத லமையாமையாலும், சிறக்கணித்து நோக்கினர் என்பர் ஒருபுடைசாய்த்துநோக்கினள் என்றார். சிறக்கணித்தல் குறுக்கேபார்த்தல். (௫௦)

மாழையுண்கணிநோக்கலுந்திருவுளமகிழ்ந்து
பாழிமால்விடைகொடிமிசையுயர்த்தருள்பகவ
னேழைவானவர்க்கிரங்கியேயினிதுகண்ணுேடி
யாழிவல்விடம்பருகினனகிலமுமுய்ய.

(இ-ள்.) மாழை உண் கணி நோக்கலும் - மாவடுவின் பிளவையொத்த கண்களையுடைய உமையம்மைபார்த்தருள, பாழி மால் விடை கொடி மிசை உயர்த்தருள் பகவன் திரு உளம் மகிழ்ந்து - பெருமையமைந்த திருமாலாகிய இடபத்தைக் கொடியின்மேலுயர்த்தருளிய இறைவன் திருவுளமகிழ்கூர்ந்து, ஏழை வானவர்க்கு இரங்கியே இனிது கண் ஒடி ஆழி வல் விடம் அகிலமும் உய்ய பருகிறான்-ஏழமையையுடைய தேவர்களுக் கிரக்கங்கூர்ந்தே யினிதாகக் கண்ணோட்டஞ்செய்து கடலிற்றோன்றிய விஷத்தையெல்லா உலகமும் பிழைக்கப்பருகிறான்.

சிறக்கணித்த பார்வையால் பெருங்கருணையளெனத் திருவுளத்தமைத்தனராதலால் திருவுளமகிழ்ந்து எனவும், அவரொடு தாதான்மியமாய் நின்ற இவரும் பேரருளாளராதலால் ஏழை வானவர்க்கிரங்கிக் கண்ணோடிப் பருகினன் எனவுங் கூறினார். மாழை வடுவின்மேல் நிற்றலால் முதலாகுபெயர். (௫௧)

பருகுவெங்கடுமிடற்றிடையேகுழிப்பாரா
மருமலர்ப்பிரான்முகுந்தனேவஞ்சநஞ்செம்மான்
றிருமிடற்றினுக்கழகுசெய்தமரர்சேயிழையா
ரருமிடற்றுநூல்காத்ததுகாண்கெனவறைந்தான்.

(இ-ள்.) பருகு வெம் கடு மிடறு இடை ஏகுழி மருமலர் பிரான் பாரா-இறைவன் பருகிய கொடிய விடம் கண்டத்திற் செல்லுமிடத்து வாசமிக்க தாமரை மலரில் வசிக்கும் பிரமன் பார்த்து, முகுந்தனே வஞ்ச நஞ்சு எம்மான் திருமிடற்றினுக்கு அழகு செய்து அமரர் சேயிழையார் அரு மிடறுநூல் காத்தது காண்க என அறைந்தான் - திருமாலே வஞ்சமமைந்த நஞ்சு எமது இறைவனது ஸ்ரீகண்டத்திற்கு அழகு செய்து இந்திரன் முதலிய தேவர்களது மனைவியரது அரிய மங்கல நாணைக்காத்தது காணக்கடவாயென்று கூறினன்.

ஸ்ரீகண்டத்தில் விடம் தங்க இறங்கு தலைப்பிரமன் நோக்கித் திருமாலே சிவபிரான் ஸ்ரீகண்டத்தில் விஷந்தங்கச் செய்தல் நம்முடைய மனைவிமார் கழுத்திலுள்ள மங்கல நாணைக்காத்தற்குச் செய்யும் ஓரறிகுறியென்பான் சேயிழையார் - அருமிடற்று நூல் காத்ததுகாண்கென வறைந்தான் என்றார்.

"செற்றாலமுயிரனைத்துமுண்டிடவேநிமிர்ந்தெழலுஞ்சிந்தைமேற்கொள்
பற்றாலங்கதுநுகர்ந்துநான்முகனேமுதலோர்தம்பாவைமார்க்குப்
பொற்றாலிதனையளித்தோன்" எனக் காந்தத்தில்வருதல்காண்க. (௫௨)

சகர்வானமிசைவிடக்கருமுகிலுறநோய்
கெடத்தளிர்த்தபைங்கூழெனச்சுராசுரர்கெழுமிக்
கடற்பெரும்புனலுடைந்தெனக்காதன்மீக்கூர
வடற்கணிச்சியோய்சயசயபோற்றியென்றார்த்தார்.

(இ-ள்.) மிடறு செக்கர் வான்மிசை விடம் கரு முகில் உற - கண்டமாகிய செக்கர் வானத்தின் மேல் விஷமாகிய கரிய மேகம் பொருந்த, நோய் கெட தளிர்த்த பைங்கூழ் என்ன சுராசுரர் கெழுமி கடல் பெரும் புனல் உடைந்தால் என்ன காதல் மீக்கூர - நோய் கெடத்தளிர்த்த பசிய பயிரைப்போலத் தேவர்களு மசுரர்களும் நெருங்கிக் கடலிலுள்ள பெரிய நீருடைந்தாற்போல மகிழ்ச்சி யதிகரிக்க, அடல் கணிச்சியோய் சயசயபோற்றி என்று ஆர்த்தார்-கொல்லுதலமைந்த மழுவாயுதத்தையுடையோய் சயசய உனக்கு வந்தனமென்று கோஷித்தார்கள்.

ஸ்ரீகண்டம் செக்கர் வானமாகவும், அதிற்றங்கிய விஷம் மேகமாகவும், அதனை நோக்கிய சுராசுரர்கள் பைங்கூழாகவும் இயைய வுருவகஞ்செய்தலால் இயைபுருவக வணியும், கடலுடைந்ததுபோல ஆர்த்தார் என்றது தொழிலுவமையணியுங் கலந்துவருதலாற் கலவையணி. உடைந்தெனதொகுத்தல் விகாரம். (௫௩)

காரணுதியர்கிளர்ச்சியைநோக்கிநன்கருளிக்
கோரவல்விடமிடற்றிடையமைத்தனன்குழக
னாரவாயிடைவயிற்றிடையன்றிமற்றிடைக்க
ணாரமைத்திடவல்லவரமிழ்தமேயாளும்.

(இ-ள்.) குழகன் நாரணுதியர் கிளர்ச்சியை நோக்கி நன்கு அருளி கோரம் வல் விடம் மிடறு இடை அமைத்தனன் - பேரழகை யுடைய இறைவன் திருமால்முதலிய தேவர்களது கிளர்ச்சியைப் பார்த்து மிகவு மருள்செய்து கொடிய வலியவிஷத்தை ஸ்ரீகண்டத்தில் வைத்தனன், அமிழ்தமே ஆயினும் வாய் இடை வயிறு இடை ஆர அன்றி இடை கண்யார் அமைத்திட வல்லவர் - அமுதமே யாளுலும் வாயில் வயிற்றில் பொருந்த அல்லாமல் இடையில் எவர் அமைக்க வல்லவர்.

கடவுளராயினும் உண்ணு மொருவர் பெறுதற்கரிய அமுதங் கிடைப்பின் வாயிலாவது வயிற்றிலாவது வைத்தலேயன்றி அவற்றினிடையில் வைப்பவர் ஒருவருமில்லையென்பார் இடைக்கண் ஆரமைத்திடவல்லவர் எனவும், அநந்த சத்தியாகிய அளவிலாற்ற லுடைய இறைவன் தான் என்பதைத் திருமால் முதலிய தேவர்கட்கு உணர்த்தினன் என்பார் மிடற்றிடை யடக்கினன் எனவும், விடவேகத்துக்கு ஆற்றுது நிறமாறிய திருமால் முதலியோர்போல உண்டருளியும் பொலிவுகுன்று திருந்தனன் என்பார் குழகன் எனவுங் கூறினுர். குழகன் பேரழகுடையவன். இது கவி கூறுதலால் கவிகூற்றுத்துறை. ஆயின் என்னும் எச்சம் இடைக்குறை. (௫௪)

சகமெலாம்பொடிபடுத்தெழுந்தழல்விடமிடற்றிற்
றிகழவைத்தனன்முப்புரமெரியெழச்சிரித்தோ
னகலருந்திறத்தெண்குணநிறைந்தபேராண்மைப்
பகவன்மேன்மைமற்றெம்மனோரளவிடற்பாற்றே.

(இ-ள்.) முப்புரம் எரி எழசிரித்தோன் சகம் எல்லாம் பொடி படுத்து எழும் தழல் விடம் மிடற்றில் திகழவைத்தனன்-திரிபுரங்கள் தீயெழச்சிரித்தருளிய இறைவன் எல்லா உலகங்களையும் நீறு படுத்தி யெழுந்த தீயை யொத்த விஷத்தை ஸ்ரீகண்டத்தில் விளங்க வைத்தருளினன், அகலரும் திறத்து எண்குணம் நிறைந்த பேர் ஆண்மை பகவன்மேன்மை எம்மனோர் அளவிடற்பாற்றே - நீங்குதலில்லாத எண்குணப்பகுதியையும் நிறைந்த பேராண்மையையுடைய ஐசுவரியமுதலிய அறுகுணங்களையுமுடைய இறைவனது மேன்மை எம்போலியர்களால் அளவிடும் பகுதியையுடையதோ.

என்குணங்களாவன தன்வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், இயற்கையுணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமையுமாம் அறுகுணங்களாவன ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம். பகம் என்னும் பெயர்க்கு இவ்வறுகுணங்களு முண்மையால் இறைவன் ஆவான் பகவனுதலில் இதனை யியற்பெயராக்கி யெண்குணங்களையுமுடைய பகவன் எனப் பொருள்கொள்ளுதலுமொன்று. முப்புரங்கள் தீயெழச்சிரிக்க வல்லோனென்னும் விசேஷணம் உலகினை நீறுபடுத்தும் விடத்தீயைத் திருமிடற்றிலடக்கவல்லோனென்னுங்கருத்தை யுட்கொண்டிருத்தலால் கருத்துடையடையணி. (௫௫)

சுந்தரத்திருமாலயன்சுராசுரர்முனிவ
ரிந்திராதியர்கவலைதீர்ந்தெண்ணருங்களிப்பாற்
சிந்தையன்பொடுமஞ்சலிசென்னிமேற்கொண்டு.

(இ-ள்.) கந்தரத்து இடை அடக்கிய கறை விடம் காணூஉ - ஸ்ரீகண்டத்தி லடக்கிய கரிய விஷத்தைக்கண்டு, சுந்தரம் திருமால் அயன் சுரர் அசுரர் முனிவர் இந்திராதியா கவலைதீர்ந்து - அழகிய திருமாலும் பிரமனும் தேவர்களும் அசுரர்களு முனிவர்களு மிந்திரன் முதலியோர்களுங் கவலையினின்று நீங்கி, எண்ணரும் களிப்பால் சிந்தை அன்பு ஒடும் அஞ்சலி சென்னி மேல் கொண்டு - வரை யறுத்தற்கரிய களிப்பால் மனத்திற்கொண்ட அன்போடும் அஞ்சலிவந் தனத்தைச் சிரசின்மேற்கொண்டு.

ஆலகாலத்தை ஸ்ரீகண்டத்தி லமைத்தருளியதைத் திருமால்முதலியோர் கண்டபோதே அவர்க்குப் பொலிவுவந்ததுஎன்பார் சுந்தரத்திருமாலயன் என்றார். (௬௬)

நீலகண்டனேபோற்றியெண்குணங்களானிறைந்த
மூலகாரணபோற்றிமுன்சிறுவனுக்கிரங்கும்
காலகாலனேபோற்றியின்றெம்முயிர்காத்த
வேலவார்குழல்பங்கனேபோற்றியென்றிசைத்தார்.

(இ-ள்.) நீலகண்டனே போற்றி எண் குணங்களால் நிறைந்த மூலகாரண போற்றி - ஸ்ரீகண்டத்தை யுடையவனே வந்தனம் அட்ட குணங்களால் நிறைந்த மூல காரணனே வந்தனம், முன்சிறுவனுக்கு இரங்கும் காலகாலனே போற்றி - முன்பு ஓர் சிறுவனாகிய மார்க்கண்டேயனுக்கு இரங்கிய காலனுக்குக்காலனாயுள்ளவனே வந்தனம், இன்று எம் உயிர்காத்த ஏலவார குழல் பங்கனேபோற்றி என்று இசைத்தார் - இப்பொழுது எமதுயிரை யோம்பிய மயிரசசாந்தணிந்த நீண்ட குழலையுடைய உமையம்மையை இடப்பாகத்திலுடையவனே வந்தனமென்று துதித்தார்கள்.

தம்மைக் காத்தருளியது ஸ்ரீகண்டமாதலால் நீலகண்டனே போற்றியெனவும், உலகமுற்றும் நீறுபடுத்த வெழுந்த விடவேகத்தை யொழிக்க வல்லோன் இறைவனாதலால் எண் குணங்களா னிறைந்த மூலகாரண வெனவும், அவ்விஷத்தால் மெலிந்த வெங்களுக் கிரங்கிய பரமகருணாநிதியே என்பார் முன் சிறுவனுக்கிரங்குங் காலகாலனேஎனவும், எம்மைக் காத்தற்பொருட்டே அம்மையப்பனாய் நின்றாய் என்பார் எம்முயிர்காத்த வேலவார்குழல் பங்கனேபோற்றி எனவும் வரும் அபிப்பிராயத்தோடுகூடிய விசேஷணங்களை வாக்கியரூபங்களாகக்கூறுதலால் கருத்துடையடையணி. காலகாலன் காலனுயிர்வாங்கினவன் என்னும் பொருளின் மேற்று. (௬௭)

என்றபோதருள்சுரந்துமக்காற்றலின்றளித்தேந்
தொன்றுபோற்கடல்கடந்துவான்சுவையமிழ்துண்பீர்
பொன்றிலீரெனத்திருவருள்புரிந்தனன்புனித
னென்றுபின்னரும்வேண்டுவர்மான்முதலும்பர்.

(இ-ள்.) என்ற போது புனிதன் அருள் சுரந்து உமக்கு ஆற்றல் இன்று அளித்தேம் - என்றுகூறிய காலத்தில் இறைவன் கருணைசுரந்து உங்களுக்குக் கடல்கடையும் வலிமையை இப்போது தந்தோம், தொன்றுபோல் கடல் கடைந்து வான் சுவை அமிழ்து உண்பீர் பொன்றிலீர் என்ன திருவருள் புரிந்தனன் - முன்போலக் கடலைக்க

டைந்து பெரியசுவைகனிந்த அமுதத்தையுண்பீர்கள் இறத்தலொழிவீர்களென்று திரு வருள் சுரந்தனன், மால் முதல் உம்பர் ஒன்று பின்னரும் வேண்டுவர் - திருமால்முத லியதேவர்கள் ஒருகாரியத்தைப் பின்னருங்குறையிரப்பார்கள்.

எமது திருவருள்பெருமையால் முன் கடல்கடையும் வலிமையில்லீர் என்பார் அருள்சுரந்துமக்கு ஆற்றலின்றளித்தேம் எனவும், இன்று எமது அருள்பெறுகையால் முன்போலக் கடல்கடைமின் என்பார் தொன்றுபோற் கடல்கடைந்து எனவும்,அமுதம் பருகுதல் இறத்தலொழிதற்கன்றே என்பார் அமிழ்துண்பீர் பொன்றிலீர் எனவும அரு ளினர் என்றார்.காகு என்னும வடமொழிநியாயத்தால் இப்பொருள்பட நின்றதெனவுண ராது தொன்றுபோற் கடல்கடைந்து என்னும்பாடத்தைத் தொன்றுபாற் கடல்கடை ந்து எனப்பெரும் பிழைபடத்திருத்தினர், முன்பு நீங்கள் கடைந்தது புதுப்பாற்கடல் இன்று பழம்பாற்கடல்கடைந்து எனப்பொருளகொண்டனாபோலும்; தண்டிலமைந்த கலைமகள்தேசால் என ஒருபுடைவலிந்து பொருள்கொள்ளநின்ற “துன்றுசீர்விலையிரு ல்” எனச் சிவாத்தானத்திலிருக்கும்பாடத்தை “துன்றுசீரவிலையினல்” எனத்திருத் தினர். வேள்விசெய்யுங்கால் மரவுரியாலும் இலையாலும் வேள்விசெய்ய வேண்டுமென விதியுளதோவென வுணர்ந்தோாகள்பாற் கேட்டுணராது ஏடுகளிற் புள்ளியிடவேண்டு மிடத்து புள்ளியிடாமல் எழுதிவழங்கும் பாடத்தைச் சுத்தபாடமாகக்கருதினவர் தொ ன்றுபாற்கடலெனத்திருத்த அஞ்சுவரோ? அஞ்சார், அஞ்சார். (௫௮)

பொதுமைநீத்துநின் றிருவடிக்கன்பபூண்டொழுகக்
கதுவுநின்னருணாடொறுமெம்வயிற்கலப்ப
விதுமுடிச்சடைவள்ளலேயருளெனவேண்ட
வதுவிழங்கினன்விடைகொடுத்தருளினனமலன்.

(இ-ள்) பொதுமை நீத்து நின் திருவடிக்கு அன்பு பூண்டு ஒழுக கதுவும் நின் அருள் நாள் தொறும் எம் வயின் கலப்ப - பொதுமையினின்று நீங்கி உனதுதிருவடிக் குத் தலையன்புபூண்டுநடக்க நீங்காத உனதுதிருவருள் நாள்தோறும் எமதிடத்திற் கலக் கும்படி, விது முடி சடை வள்ளலே அருள் என்ன வேண்ட அமலன் அது வழங்கினன் விடைகொடுத்து அருளினன் - இளஞ்சந்திரனையணிந்த சடாமுடியையுடைய இறைவ னேயருளாயென்று குறையிறக்க அவ்விலறவன் அதுதந்து விடைகொடுத்தருளினன்.

ஏகான்மவாதிகள் பிரமனேபரம் எனவும், திருமாலே பரமெனவும், உருத்திர னேபரம் எனவும் அன்புபூண்டொழுகுதல்போல வொழுகாது நீயேபரமெனத்தேர்ந்து ஒழுகவேண்டும் என்பார் பொதுமைநீத்து எனவும், நினதிருவடிக்கீழன்புபூண்டொழு கல் நின்றிருவருளாலாதலால் அன்புபூணடொழுகக்கதுவும் நின்னருணாடொறும் எம் வயிற்கலப்ப என இரந்தனா என்றார் “அவனருளாலே யவன்றாள்வணங்கி” எனப்பெ ரியோரும் பணித்தனர். (௫௯)

மீண்டுநம்பொருட்டிருள்விடம்பருகினனிறைவன்
பூண்டவிப்பெரும்பிழையறும்படிசிவபூசை
யாண்டுசெய்துமென்றெண்ணினர்தெளிந்தனரிதனை.

(இ-ள்.) மீண்டு மால் அயன் முதலிய விண்ணவர் குழுமி ஈண்டு நம்பொரு ட்டு இருள் விடம் இறைவன் பருகினன் - மீளவுந் திருமாலும் பிரமன்முதலிய எல்லா த்தேவர்களும் நெருங்கி யிவ்விடத்து நமதுபொருட்டு இருள்போன்ற விடத்தை இறை

வன் பருகினன், பூண்ட இ பெரும் பிழை அறும்படி சிவ பூசை யாண்டு செய்தும் எ ன்று எண்ணினர் இதனை தெளிந்தனர் - நாமேற்கொண்ட இந்தப்பெரிய தவறுநீங்கச் சிவபூசையை யெவ்விடத்துச் செய்வோமென்று கருதியிதனைத்தெளிந்தனர்.

இறைவன் விடம்பருகுதற்கு நாம் மூலமாயிருந்தோம் என்பார் பூண்டவிப் பெரும்பிழை யென்றார். மீண்டு செயவெ னெச்சத்திரிபு. (சுo)

தலமுந்தீர்த்தமுமூர்த்தியுஞ்சிறந்தமெய்த்தானங்
குலவுகாஞ்சிமாநகரமாமந்நகர்குறுகி
நலமுறச்சிவபூசனையுஞற்றிடினசியா
வலகில்பாவமுநசிக்குமென்றப்பதியெய்தி.

(இ-ள்.) தலமும் தீர்த்தமும் மூர்த்தியும் சிறந்த மெய் தானம் குலவு காஞ்சி மாநகரமாம் - தலமுந் தீர்த்தமுமூர்த்தியு மேம்பட்ட உண்மையாகிய தானம்விளங்கா நி ன்ற காஞ்சியென்னும் பெரியநகரமாம், அநகர் குறுகி நலம் உற சிவ பூசனை உஞற்றிடி ல் - அந்தத்திருநகரையடைந்து நன்மைமிகச் சிவபூசனைசெய்தால், நசியா அலகில் பாவ மும் நசிக்கும் என்று அபதி எய்தி - அழியாத அளவில்லாத பாவமும் அழியுமென்று அத்திருநகரையடைந்து.

மூர்த்திதலம் தீர்த்தங்கள் சிறந்ததானம் காஞ்சித்திருப்பதியன்றி வேறின்மையா ல் மெய்த்தானம் குலவு காஞ்சிமாநகரமாம் எனவும், தாஞ்செய்த பெரும்பாவம் அங் கெய்திச் சிவபூசனைசெய்வோர்க்கன்றி யொழியாவென்பார் சிவபூசனையுஞற்றிடினசியா அலகில்பாவமும் நசிக்குமென்று எனவும் தேற்றப்பொருள்பட முக்காலத்துக்கும் பொ துவாகிய வினைமுற்றுகள்தந்து கூறினார். (சுக)

அன்றுதம்முயிரளித்ததுமணிகண்டமென்னு
நன்றியான்மணிகணடநாதப்பெயரிலிங்கம்
வென்றபுண்ணியகோடிநாதர்க்குமேல்பாங்க
ரொன்றுமன்பினுலிருத்தினர்பூசனையுஞற்றி.

(இ-ள்.) அன்று தம் உயிர் அளித்தது மணி கண்டம் என்னும் நன்றியால் மணி கண்ட நாதன்பெயா இலிங்கம் - அக்காலத்தில் தமது உயிர்தந்தது மணிகண்டமே யெ ன்னும் நன்மையால் மணிகண்டநாதனென்னுந் திருப்பெயருடைய இலிங்கத்தை, வெ ன்ற புண்ணிய கோடி நாதர்க்கு மேல் பாங்கர் ஒன்றும் அன்பினுல் பூசனை உஞற்றி இ ருத்தினர் - பாபத்தைவென்ற புண்ணியகோடி நாதர்க்கு மேற்றிசையின் பக்கத்திற் பொருந்திய தலையன்பினுற் பூசனைசெய்து தாபித்தார்கள்.

தம்முயிர்காத்தது ஸ்ரீகண்டமாதலால் அந்நன்றிகருதித் தாமருச்சிக்கத் தாபித்த சிவலிங்கப்பெருமானுக்கு அத்திருநாமந்தந்தனர் என்பார் மணிகண்டப்பெய ரிலிங் கம் இருத்தினர் எனவும், காலத்திற்செய்த நன்றியாதலால் அந்நன்றிக்குக் கைம்மாறு பூசையேயென்பார் பூசனையுஞற்றியெனவுங் கூறினர். (சுஉ)

மணிகண்டேசர்தம்மருளினுல்வன்பிழைதவிர்ந்து
பணியினுற்கடல்கடைந்தமிழ்தெடுத்தனர்பருகித்
தணிவில்வெஞ்சினத்தானவர்தமைத்துரந்தகற்றிப்
பிணியுநீங்கினரிறப்புறுப்பெருநலம்பெற்றார்.

(இ-ள்.) மணி கண்டேசர் தம் அருளினுல் வன் பிழை தவிர்ந்து பணியினுல் கடல் கடைந்து அமிழ்து எடுத்தனர் - மணிகண்டேசரது திரு அருளினுல் வலியபிழை யினின்றும் நீங்கி வாசுகியினுற் கடலைக்கடைந் தமுதெடுத்து, பருகி தணிவு இல் வெம்

சினம் தானவர் தமை துரந்து அகற்றி பிணியும் நீங்கினர் இறப்பு உறாத பெரு நலம் பெற்றார் - அதனைப்பருகி நீங்காத பெரிய கோபத்தையுடைய அசுரரையோட்டி விலக்கி நோயினின்றும் நீங்கினார் இறவாதபெரிய இன்பத்தையும் அடைந்தார்கள்.

எடுத்தனர் முற்றெச்சம். (௬௩)

அத்தலத்திடைத்தன்பிழையகலவாசுகியும்
பத்தியிற்பணாமணீசனைப்பண்புறவிருத்திச்
சுத்தநீர்நிறையனந்த தீர்த்தத்தடந்தொட்டு
நித்தமக்கரைக்கண்ணிருந்தருச்சனை நிரப்பி.

(இ-ள்) அதலத்து இடை தன்பிழை அகல வாசுகியும் பத்தியில் பணாமணீசனை பண்பு உற இருத்தி - அந்தத் திருத்தலத்தில் தனது குற்றம் நீங்க வாசுகியென்னும் பாம்பும் அன்பினால் பணாமணீசரை ஆகம விதியமையத் தாபித்து, சுத்தம் நீர் நிறை அனந்ததீர்த்தம் தடம் தொட்டு நித்தம் அகரை கண் இருந்து அருச்சனை நிரப்பி - புனிதமாகிய நீர் நிறைந்த அனந்த தீர்த்தமென்னுந் திருக்குளந்தோண்டி நாள்தோறு மந்தக்கரையிலிருந்து அச்சிவபெருமானுக்கு அருச்சனைசெய்துமுடித்து.

சிவபெருமான் விஷம்பருகத் தந்தவன் தானாதலால் அத்தவறுதீர அருச்சித்தற்கு வாசுகியும் சிவலிங்கப் பெருமானைத் தாபித்தனன் என்பார் வாசுகியும் பணாமணீசனைப் பண்புற விருத்தியென்றார். உம்மை இறந்ததுதழீஇய வுயர்வு சிறப்புப்பொருட்டு. (௬௪)

பணாமணீசனைத்தன்பணமணிகளாற்பரவி
நணாவகத்தமர்நமபனேநலிவுசெய்விடத்தை
யுணாவெனக்கொளுமுத்தமாவெனத்துதிந்துமையாண்
மணாளன்மேனியிலிழையெனப்பயில்வரம்பெற்றான்.

(இ-ள்.) பணா மணீசனை தன் பணம் மணிகளால் பரவி - பணாமணீசனென்னுந் திருப்பெயருடைய இறைவனைத் தனது படத்திலுள்ள இரத்தினதிரளாற் பூசித்து, நணா அகத்து அமர் நம்பனே நலிவு செய்விடத்தை உணா என்ன கொளும் உத்தமா என்ன துதித்து - நணாமரத்தின் கீழெழுந்தருளும் இறைவனே உயிர்களுக்குத் துன்பஞ்செய்யும் விஷத்தனை யுணவுகொள்ளும் உத்தமனே யென்று துதித்து, உமையாள் மணாளன் மேனியில் இழை என்ன பயில்வரம் பெற்றான்-உமை யம்மையினது தலைவனாகிய அவ்விறைவனது திருமேனியில் ஆபரணமாகப் பொருந்தும் வரத்தினைப்பெற்றனன்.

திருநணா கொங்கு நாட்டிலுள்ள திருப்பதி. நணா அகத்தமர் என்பதற்குப் பவன் என்னும் பெயர் உண்மையால் இதயத்தில் நண்ணியமர்ந்த எனப்பொருள் கொள்ளுதலும் ஒன்று. (௬௫)

கொங்கலர்ந்தபூந்துணர்தொறுநறுநறாக்கொழிக்கும்
பொங்கர்சூழ்கவிக்கச்சியுட்பழமறைப்பொருளா
யங்கண்வாழ்மணிகண்டனையருச்சனையாற்றித்
துங்கமுத்தியிற்சேர்ந்தவர்தொகுப்பினெண்ணிலரால்.

(இ-ள்.) கொங்கு அலர்ந்த பூ துணர்தொறும் நறு நறா கொழிக்கும் பொங்கர் சூழ் கவிக்கச்சியுள் - மகரந்தத் தோடலர்ந்த பூங்கொத்துகள் தோறும் தேனைத்துளிக்குஞ் சோலைசூழ்ந்த புகழ்மிகுந்த காஞ்சியுள், பழமறைபொருளாய் அங்கண்வாழ் மணிகண்டனை அருச்சனை ஆற்றி துங்கம் முத்தியில் சேர்ந்தவர் தொகுப்பின் எண்ணிலர் - தொ

ன்று தொட்டுள்ள வேதங்களி னருத்தமா யவ்விடத்தில் வாழும் மணிகண்டநாதனை யருச்சனை செய்து உயர்ந்த முத்திநெறியிலடைந்தவரை வரையறைசெய்யின் அளவில்லாதவராவார்கள்.

முதலுக்குஞ் சினைக்கும் ஒற்றுமையுண்மையால் சினைவினையை முதல்மேலேற்றி நருக்கொழிக்கும் பொங்கர் என்றார். (௩௬)

அடுங்காலமிதுவென்னவிடமெழலுநனிவெருவியயன்மாலேனோர்
கொடுங்காலன்றனைக்குமைததகுரைகழற் கீழ்ச்சரணபுகுதக்கொதித்துவா
ழ்நாள், பிடுங்காமலருள்புரிந்தபரமபொருளையன்றியுமோர்பிரானுண்டென்
ன, நடுங்காதார்தமைக்காணபபெற்றிடினுமென்னுள்ளநடுங்குமாதோ.

(இ-ள்.) அடும் காலம் இது என்ன விடம் எழலும் நனி வெருவி அயன் மால் ஏனோர் கொடும் காலன் தனை குமைத்த குரை கழல கீழ் சரண்புகுத - சர்வசங்காரங் காலமிக்கால மென்று ஆலகாலவிடந்தோன்ற மிகவு மஞ்சிப் பிரமனுந் திருமாலும் அவரொழிந்தோரும் கொடுமைவாய்ந்த காலனைகொன்ற வீரகண்டை யொலிகருந் திருவடிக்கீழ்ச் சரணடைய, கொதித்து வாழ் நாள் பிடுங்காமல் அருள் புரிந்த பரம் பொருளை அன்றி - அவ்விடங் கொதித்து அத்தேவர்கள் வாழ்நாளைக களையாமல் திருவருள்செய்த இறைவனை யல்லாமல், ஓா பிரான் உம உண்டு எனன நடுங்காதார் தமை காணபெற்றிடினும் என் உள்ளம் நடுங்கும் - ஓா இறைவனு முண்டென்றுகூறச் சிறிதும் நடுங்காதவரைக் காணப் பெறுதலில்லை பெறுறுவும எனதுமனம நடுங்காநிற்கும்.

அன்றி யென்னும் வினையெச்சத்தினின்று பிரிந்து பிரான் என்பத னிறுதியிற் கூட்டும் பொருததமில் புணர்ச்சிக்கண்வந்த உம்மை உயாவு சிறப்புப் பொருளினும், நஞ்சுண்டதனுற் சுதந்திரனுதலையுணாந்த காட்சிப்பிரமாணத்தினுல் பிறர் உண்டென்று கூற யாவரும் நடுங்குவோரேயென்னும் பொருள்மேல் நிற்றலால் பெற்றிடின் என்னும் வினையெச்சத்தில்வந்த வுமமைபெறத லில்லையென்னும் பொருள்மேல் நிற்றலால் எதிர் மறையிலும்வந்தன. இடத்தினிகழ்பொருளுக்கும் இடத்துக்கும் ஒற்றுமையுண்மையால் வீரகண்டையாகிய இடததினிகழ்பொருளின் றொழிலை இடத்தின்மேலேற்றிக் குரைகழல் என்றார். (௩௭)

மணிகண்டேச்சரப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௧௧.

## சார்ந்தாசயப்படலம்.

கலிநிலைத்துறை.

வளைத்தபாப்பணியணிமணிகண்டநாயகனு
முளைத்தவெண்பிறைக்கண்ணியோன்வரவிதுமொழிந்தாம்
விளைத்தருளினுவிளைத்துறும்வியாதனைக்காத்த
விளைத்துசசார்நதவர்சாரபினுன்வரவினியிசைப்பாம்.

(இ-ள்.) வளைத்த பாம்பு அணி அணி மணிகண்ட நாயகனும் முளைத்த வெண் பிறை கண்ணியோன் வரவு இது - மண்டிலித்த சற்பமாகிய ஆபரணத்தை யணிந்த மணிகண் டேசுரராகிய தோன்றிய இளஞ் சந்திரனைக் [illegible] யாக அணிந்த இ

றைவரது வருகை யாகிய இதனைக் கூறினேம், விளைத்த சூளினல் இளைத்துறும் வியா தனை காத்த இளைத்து சார்ந்தவர் சார்பினன் வரவு இனி இசைப்பாம் - தாம் செய்த சபதத்தினல் இளைத்துச் சரண்புகுந்த வியாதமுனிவரைக் காத்த இளைத்துச் சார்ந்தோர்க் கோர் சார்பாயுள்ள இறைவரது வருகையை யினிக்கூறுவாம்.

சார்ந்தாயசம் சார்ந்த வியாதனல் ஆச்சிரயித்தல். (க)

பராசரப்பெயர்முனிவரன்பழுதறுவரத்தாற்
றராதலத்திடைத்தோன்றினன்மறைதனிப்பதினெண்
புராணமேனவுமபகுத்துயர்புரவுபூண்டோங்கிப்
பிரானெனத்தகுவியாதனும்பெரியவன்மேனள்.

(இ-ள்.) பராசரன் பெயர் முனிவரன்பழுது அறு வரத்தால் தராதலத்து இ டைதோன்றினன்-பராசரனென்னு முனிவரது குற்றத்தினின்று நீங்கியதவத்தினல் நில வுலகத்திற்றேன்றி, நான் மறை தனி பதினெண் புராணம் எனவும் பகுத்து உயர்புரவு பூண்டு ஓங்கி உயா பிரான் என்ன தகு வியாதன் ஆம் பெரியவன் மேல் நாள் - நான்கு வேதங்களையு மொப்பற்ற பதினெண் புராணங்களையும் அவை யொழிந்த னவற்றையும் பகுத்து அவற்றல் ஆன்மாக்களைக் காத்தலைப்பூண்டு மேம்பட்டுயர்ந்த முனிவர்களுக்கு இறைவனென்னும் பெரிய முனிவரன் துவாபரயுகத்தினிறுதியில்.

தோன்றினன் முற்றெச்சம். (உ)

நப்
படியில்யாங்கினிச்செல்வதென்றஞ்சிமெய்பனித்துக்
கடிநறும்புனற்கங்கைசூழ்காசியினெய்தி
முடிவின்மாதவஞ்செய்துவீற்றிருந்தனன்முறையால்.

(இ-ள்.) கொடிய பாதகம் கலியுகம் வரும் நிலை குறித்து படியில் யாங்கு இனி செல்வது என்று அஞ்சி மெய் பனித்து-கொடுமைவாய்ந்த பாதகத்தை விளைக்குங் கலி யுகம் வருங் காலத்தைக்குறித்து நிலவுலகில் எவ்விடத்தில் இனி நாம் செல்வது என்று பயந்து தேகம் நடுங்கி, கடி நறும் புனல் கங்கை சூழ் காசியின் எய்தி முடிவு இல் மா தவம் முறையால் செய்து வீற்றிருந்தனன் - மிக்க நறுமணங்கமழும் நீர்மயமாகிய கங் கைசூழ்ந்த காசித் திருப்பதியையடைந்து அளவில்லாத பெரிய தவத்தை வேதத்திற் கூறிய முறையாற்செய்து நிகரின்றியிருந்தான். (௩)

அங்கண்மெய்த்தவர்யாவருமவனடிவணங்கி
யிங்கெமக்குநீமறைமுடிபுண்மையீதென்னச்
செங்கைநெல்லியிற்றெளிவாத்தெருட்டுகென்றிரந்தார்
வெங்கொடும்பகைவினைக்குறுமபெறிந்துயர்வியாதன்.

(இ-ள்.) அங்கண் மெய்தவர் யாவரும் அவன் அடிவணங்கி - அவ்விடத்து உ ண்மைவாய்ந்த தபோதனர் யாவரும் வியாதனுடைய பாதத்தை வணங்கி, இங்கு எம க்கு நீ மறை முடிபு உண்மை ஈது என்ன செங்கை நெல்லியில் தெளிவா தெருட்டுக என்று இரந்தார் - இவ்விடத்தி லெமக்கு வேதசிகையினுண்மையை யிதுவென்று செவந்த உள்ளங்கையில் வாய்ந்த நெல்லிக்கனிபோல ஐயம் நீங்கத் தெளியச்செ ய்வாயென்று குறையிரந்தார்கள், வெம் கொடும் பகை வினை குறும்பு எறிந்து உயர் வியாதன் - கொடிய பகையாகிய இருவினையென்னுங் குறும்பினைவென்ற உயர்ந்த வி யாதமுனிவன்.

பல்படக்கூறும் வேதம்போலன்றி இறைவனுவான் ஒருவனையே கூறுவது வே தமுடிபென்பார். மறைமுடி புண்மையெனவும், யாங்கள் முன்னரோ யுணர்ந்திருப்பி னும் ஐயமுளதென்பார் தெருட்டுக எனவும், உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி தன் னகத்துள்ள வித்தின் வடிவத்தைப் புறம்பே யுணர்த்துவதுபோல இலைமறைகாய்போ ல வேதசிரசில் மறைந்துகிடக்கும் உட்கிடையைப் புலப்படுத்தவேண்டும் என்பார் ஈதென்னச் செங்கை நெல்லியிற் றெளிவரத்தெருட்டுக எனவும், நலவினையும் பொன் விலங்குபோ விடருறுத்தும் என்பார் கொடுவினைக்குறும்பெனவுங்கூறினார். (ச)

வ

மிருவகைப்படுநியாயமாயுண்மறையெழிற்கந்
தருவவேதம்வில்வேதமோடருத்தநூலிவற்றின்
பொருளினுண்மைமற்றிதுவிதுவெனத்தனிபுகன்றான்.

(இ-ள்.) மிருதி நூல் புராணம் தொகை வேதநூல் அங்கம் இருவகைப்படும் நியாயம் ஆயுள் மறை எழில் கந்தருவ வேதம் வில்வேதமோடு அருத்தநூல் - மிருதிநூ லும் பதினெண்புராணமும் நான்கு வேதங்களும் ஆறங்கங்களும் பூர்வ மீமாஞ்சையும் உத்தர மீமாஞ்சையும் ஆயுள்வேதமும் அழகிய கீதவேதமும தனுவேதமும் தருக்கநூ லுமாகிய, இவற்றின் பொருளின் உண்மை இது இது என்ன தனி புகன்றான் இந்நூல் களின் பொருளுண்மையிது விதுவென்று தனித்தனி யெடுத்துக்கூறினான்.

மிருதி நூல் சுருதியர்த்தத்தை வாதிக்கிற வைதிகநூல். பதினெண் புராணங்க ளாவன பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவுடியம், நாரதீயம், மாாக் கண்டேயம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், மற்சம், கூர்மம், காருடம், பிரமாண்டம். ஆறங்கங்களாவன சிட்சை, வியாகரணம், சந் தம், நிருத்தம், சோதிடம், கற்பம். ஆயுள்வேதம், கந்தருவவேதம், தநுவேதம் அருத்த வேதம் ஆகிய இந்நான்கும் உபவேதம் எனக் கூறப்படுதலால் இவற்றை யிறுதியில் வைத்தும், இங்குக் கூறியவை முதனூலும், வழிநூலும், சார்புநூலும், பூருவபக்கநூ லும் ஆதலின் இவை இறைவனுண்மையை யுணர்தற்குக் கருவிநூல்களாதலால் முன்ன ரவற்றின் பொருட்டுணிபைத் தனித்தனி கூறினான் எனவுங்கூறினார். (௫)

பெருவலித்தவமுனிவரர்கேட்டுளம்பிறழா
தொருவழிப்படத்துணிந்தொருவார்த்தையினெமக்குச்
சுருதிநூன்முடிபிதுவெனத்தொகுத்துரையென்றார்
மருளின்மூழ்கியசிந்தையின்வியாதமாமுனிவன்.

(இ-ள்.) தவம் பெருவலி முனிவரர் கேட்டு உளம் பிறழாது ஒருவழிப்பட து ணிந்து ஒரு வார்த்தையின் எமக்கு சுருதி நூல் முடிபு இது என்ன தொகுத்து உரை என்றார் - தவத்தின் பெரியவன்மை வாய்ந்த முனிச் சிரேஷ்டர்கள் கேட்டுத் தமது மனம் ஒன்றினும் பிறழாது ஒரு வழிப்பட்டுநிற்கத் துணிந்து ஒரு வார்த்தையாலெமக்கு வேதநூல்முடிபு இது வென்றுதொகுத்துக் கூறென்றார்கள், மருளில்மூழ்கிய சிந்தையி ன் வியாதமாமுனிவன் - ஆணவமல மயக்கத்தின் மூழ்கிய மனத்தையுடைய வியாத முனிவன்.

முனிவர்க ளவற்றைக்கேட்டு இவற்றால் எங்கள் மனம் ஒரு வழிப்படவில்லை யென்பார் உளம் பிறழாது எனவும், அவற்றின் பொருட்டுணிபை யுள்ளங்கை நெல்லிக் கனிபோல அளந்தறிந்த வனீயாதலால் பலபடக்கூறாது ஐயந்தீர ஒரு வார்த்தையால் வேத சிரசின்துணிபு இது வெனத் தெருட்டுக வென்பார் ஒரு வழிப்படத் துணிந்தொ

ரு வார்த்தையி னெமக்குச் சுருதிநூன் முடிபிது வெனத் தொகுத்துரை யெனவுங் கூறினனெனக் கூறினர். (சு)

உறுவர்யாரையுநோக்கிமுன் னுரைக்குமாறாகத்
தறுகணாண்மையிற்கூறுதலுற்றனன்றவத்தீ
ரறிவுநூலெலாம்பன்முறையாயினுந்தெளியப்
பெறுவதொன்றதுநாரணனேபரப்பிரமம்.

(இ-ள்.) உறுவர் யாரையும் நோக்கி முன் உரைக்கு மாறு ஆக தறுகணாண்மையில் கூறுதல் உற்றனன் - முனிவாக ளெல்லோரையும்பார்த்து முன்புகூறியவார்த்தைக் குமாறாகத் தீத்தொழி லமைந்த ஆண்மையோடு சொல்லத் தொடங்கினன், தவத்தீர் அறிவு நூல் எல்லாம் பல் முறை ஆயினும் தெளிய பெறுவது ஒன்று - உண்மை நூலெல்லாவற்றையும் பல தடவை யாராயப்பெற்றாலு மனந் தெளியப்படுவ தொருபொருளே, அது நாரணனே பரப்பிரமம - அப்பொருள் நாரணனே அதுவே பரபபிரமம்.

சுருதி நூல் முதலியவற்றின் துணிபு இது பரம், இது பரம் என முன்னர்த் தனித்தனி யெடுத்துக் கூறினனாதலால் முன்னுரைக்கு எனவும், ஆணவமலச் சிமிழ்ப் பிற்பட்டவனாதலால் முன்னர்க் கூறியதை மறத்தலின் மாறாக எனவும், அச்சிமிழ்ப்பின் செருக்கால் உரைத்தன னாதலால தறுகணாண்மையில் நாரணனே பரப்பிரமம் கூறுதலுற்றனன் எனவுங் கூறினர்

செருக்கு ஆணவமலத்தின் குணமென்பதை—

" வேறுகிளக்கின்விகற்பங்கற்பம் - குரோதமோகங்கொலையளுர்மதநகை
விராயெண்குணனுமரணவமெனவிளம்பிஃ" எனவரும் இருபாவிருபஃதிற் காண்க. (எ)

வண்ணமாமறைநூற்குமேனூலிலைமதியோ
ரெண்ணுகேசவன்றனக்குமேற்றெய்வமுமில்லை
கண்ணுமெவ்வகைநூல்கட்குந்துணிபிதுகாண்மி
னுண்மையுண்மையீதெனக்கரமெடுத்துநின்றுரைத்தான்.

(இ-ள்.) வண்ணம் மாமறை நூற்குமேல் நூல் இல்லை மதியோர் எண்ணு கேசவன் தனக்கு மேல் தெய்வமும் இல்லை-சந்தவிகற்பங்களையுடைய பெரிய வேதநூலுக்கு மேற்பட்ட நூலுமில்லை அறிவுடையோரெண்ணுந் திருமாலுக்குமேறபட்ட தெய்வமுமில்லை, கணணும் எவகை நூல் கட்கும் துணிபு இது காண்மின் - ஆராயும் எவ்வகைப்பட்ட உண்மை நூல்களுககுந் துணிபிதுவே காணுங்கள், ஈது உண்மை உண்மை என்னகரம் எடுத்து நின்று உரைத்தான் - இது சத்தியம சத்தியம் என்று கையை மேலெடுத்துக் கூறினன்.

வேதங்களி னொருவகை யுறுப்பென்பான் வண்ணமா மறையெனவும், சுருதிமுத னூலென்பான் மறை நூற்குமே னூலிலையெனவும், அதுபோலப் பிரதிபிம்ப பாவந்தோன்ற நாரணனேயன்றி பரப்பிரமம்வேறில்லை என்பான் எண்ணு கேசவன் றனக்கு மேற்றெய்வமு மில்லையெனவும் இது சத்தியம் என்பான் உண்மை யுண்மை யீதெனக் கரமெடுத்து நின்றுரைத்தான் எனவும் கூறினர். (அ)

கேட்டமாதவர்வெரீஇயினர்கிளர்மறைப்பொருட்குக்
கோட்டமாமிது வெம்மனோர்கோட்டக்கதன்று
ஞட்டியீங்கிவன்புகன்றதென்னென்றுளநடுங்கி
நீட்டுசெஞ்சடைமுனிவரன்றன்னைநோக்கி.

(இ-ள்.) கேட்ட மாதவர் வெரீ இனர் இது ஸ்ரீர் மறை பொருட்கு கோட்டம் ஆம் எம்மனோர் கோள் தக்கது அன்று - கேள்வியுற்ற தபோதனர்களஞ்சி இவ்வாக்கி யம் விளங்கும் வேதப் பொருளுக்கு மாறு பட்டதாம எம்போலியராலும் இது கொள் ளத்தக்கதல்ல, ஈங்கு இவன் நாட்டி புகன்றது என் என்று உளம் நடுங்கி நீட்டு செம் ச டை முனிவரன் தன்னை நேர் நோக்கி-இவ்விடத்து இவன் வற்புறுத்திக்கூறியது யாது காரணமென்று மனம் நடுங்கி நீட்டிய செவந்த சடாமுடியை யுடைய வியாதமுனிவனை நேரேநோக்கி.

ஸ்மிருதி நூலுணர்ந்த வைதிக முனிவர்களாதலால் கேட்டமாதவர் வெரீஇனர் எனவும், தாமுணர்ந்த சுருதி நூற்பொருளை வாதிக்கிற மிருதிநூற்கு வியாதன் கூறியது மாறுபட்டிருத்தலால் மறைப பொருட்குக் கோட்டமா மிது வெனவும, இது நமது கோட் பாட்டிற்கு மறுதலைப் பட்டதாதலால் இதுநம்மனோர கோட்டககதனறெனவும், இது விபரீதமென்று கருதின ராதலால் உளநடுங்கியெனவுங்கூறினர். (கூ)

வாதராயணநீயிவண்மொழிதருமாற்றம்
வேதநூற்பொருளுண்மையேயாமெனில்விசுவ
நாதனாதிருமுன்பெமக்குரையெனநவின்றா
ரோதுகேனெனமூர்க்கனுமெழுந்துசென் றுற்று.

(இ-ள்) வாதராயண நீ இவண் மொழி தரு மாற்றம் வேதநூல் பொருள் உண் மையே ஆம் என்னில் - வியாதனே நீ யிவ்விடத்துக்கூறிய வார்த்தை வேதநூற் பொரு ளின் உண்மையே யாமென்றால், விசுவநாதனா திருமுன்பு எமக்கு உரை என்னநவின் றார் - விசுவநாதனா திருமுன்னின்று எமக்கு இதனைக் கூறுயென்று கூறினார்கள், ஓது கேன் என்ன மூர்க்கனு ம எழுந்து சென்று உற்று- அவ்வாறே சொல்வேனென்று மூர்க் கனாகிய வியாதனும் சந்நிதிமுன் சென்று அடைந்து.

நீகூறியது சத்தியமாயின் விசுவேசர் திரு முன்னின்று கூறுகவென்பார் வேத நூற் பொருளுண்மையே யாமெனின் விசுவ - நாதனா திருமுன் பெமக்குரையென நவின்றார் எனவும், அவன் ஆணவமலச் செருக்காலெழுந்தனன் என்பார் ஓதுகேனென மூர்க்கனுமெழுந்து சென்றுற்று எனவுங் கூறினர். (௧௦)

விசுவேசன்முன்னின்றிருகரமிசைநிமிர்த்தாங்
கச்சமின்றிமுன்புகன்றதேபுகன்றனனந்தோ
விச்சைநூல்பலகற்பினுஞ்சிவனருள்விரவாக்
கொச்சையோர்தமைவிடுவதோகொடுமலச்செருக்கு.

(இ-ள்.) விச்சுவேசன் முன் நின்று இருகரம் மிசை நிமிர்த்து ஆங்கு அச்சம் இன்றி முன் புகன்றதே புகன்றனன் - விசுவேசன் திருமுன்பு நின்று இரண்டு கைக ளையு மேலே யெடுத்து அவ்விடத்துச் சிறிதும் அச்சமில்லாமல் முன் சொல்லியதையே சொன்னான், அந்தோ விச்சை நூல் பல கற்பினும் சிவன் அருள் விரவாத கொச்சை யோர் தம்மை கொடு மலம் செருக்கு விடுவதோ - ஐயோ அறிவு நூல் பலவற்றையுங் கற்றாலுஞ் சிவனருளோடு கலவாத அறிவீனரைக் கொடிய மலச்செருக்கு விடுமோ.

மலச்செருக்குடையோர் பழிபாவங்கட்குச் சிறிதும் அஞ்சார் என்பார் விச்சு வேசன்முன்னின்றிருகரமிசைநிமிர்த்தாங் - கச்சமின்றிமுன்புகன்றதேபுகன்றனன் என வும், அவனறியாமை பெரிதென்றிரங்குவார் அந்தோவெனவும், ஞானநூல் பலகற்பி னும் சிவபிரான் திருவருளைத் தலைப்படாதார்க்கு மெய்யுணர்ச்சிதோன்றாதென்பார் வி

ச்சைநூல் பல்கற்பினுஞ் சிவனருள் விரவாக் - கொச்சையோர்தமைவிடுவதோகொடு மலச்செருக்கு எனவுங்கூறினார். இது கவிகூற்றுத்துறை. (கக)

அறிவுபோலடர்ந்தெழுமறியாமையின்வலியாற்
பொறியிலாணிதுகிளப்பவும்வெகுண்டிலன்புனிதன்
மறுவில்கூற்றெலாந்தன்பெயரொனுமறைவழக்கால்
வெறிமலர்க்குழலுமையொடுமகிழ்ந்துவீற்றிருந்தான்.

(இ-ள்.) அறிவு போல் அடர்ந்து எழும் அறியாமையின் வலியால் பொறியிலான் இது கிளப்பவும் - அறிவுபோல் நெருங்கி மேலெழும் அறியாமையின் வலிமையால் அறிவில்லாத வியாதமுனிவனிதைக்கூறவும், மறு இல் கூற்று எல்லாம் தன் பெயர் என்னும் மறை வழக்கால் புனிதன் வெகுண்டிலன் - குற்றமில்லாத வேத சிரசின் வாக்கியங்களெல்லாந் தனது திருநாமமே யென்னும் வழக்கினால் இறைவன் சிறிதும் முனியாது, வெறி மலர் குழல் உமையொடு மகிழ்ந்து வீற்றிருந்தான் - வாசமிக்க மலரணிந்த கூந்தலையுடைய உமை யம்மையோடு மகிழ்கூர்ந்து நிகரின்றி யிருந்தருளினன்.

வியாதமுனிவர்க்கு மெய்யுணர்ச்சி மேலிட்டிருந்ததுபோல இன்று பொய்யுணர்ச்சிமேலிட்டது என்பார் அறிவுபோலடர்ந்தெழுமறியாமையின்வலியால் எனவும், வேதத்தினடுக்கண்டமாகிய ஸ்ரீருத்திரம் பிரமன்முதல் பிபீலிகாந்தமளவுந்தானேயெனக் கூறுதலால மறுவில்கூற்றெலாந்தன்பெயரொனுமறைவழக்கால் இது கிளப்பவும் வெகுண்டிலன்புனிதன் வெறிமலர்க்குழலுமையொடுமகிழ்ந்து வீற்றிருந்தானெனவுங் கூறினார். உம்மை இழிவு சிறப்புப்பொருட்டு. (கஉ)

நந்தியெம்பிரான்வெகுண்டுநாண்மலர்க்கரமெடுத்த
வந்தவண்ணமேயசைவறநிற்குமாசபிப்ப
மந்தனாயினானிமிர்த்தகைமடக்கவல்லாமை

(இ-ள்.) நந்தி எம்பிரான் வெகுண்டு நாள் மலர் கரம் எடுத்த அந்த வண்ணமே அசைவு அற நிற்கும் ஆறுசபிப்ப - நந்திதேவராகிய எமதுபெருமானார் கோபங்கூர்ந்து அன்றலர்ந்த தாமரை மலரையொத்த கைமேலெடுத்த அந்தப்படியே அசைவற்று நிற்கும் வண்ணம் சபிக்க - மந்தன் ஆயினான் நிமிர்த்த கைமடக்கவல்லாமை நிந்தையால் சிலை தூணம் ஒத்து அசைவு அற நின்றான் - அறிவீனனாகிய வியாதன் நிமிர்த்த கையைமடக்க வன்மை யின்மையாகச் செய்த சிவநிந்தனையினாற் கற்றூணையொத்துச் சிறிதும் அசைவற நின்றனன்.

சிவபிரான் வாளாவிருக்கவும் சந்நிதியினின்று செய்த அசத்தியத்துக்கு நந்திதேவர் ஆற்றாராயினர் என்பார் மலர்க்கரமெடுத்த அந்தவண்ணமே யசைவறநிற்குமாசபிப்ப எனவும், அச்சாபநேரிட்ட அன்றே சிவநிந்தை முதிர்தலில் கையன்றி யேனையுறுப்புகளும் அசைவற நின்றதென்பார் சிலைத்தூணமொத்தசைவறநின்றான் எனவும், வேதநூலுணர்ச்சி மிக்கிருப்பினும் திருவருண்ஞானத்திற் றலைப்படாமையா லறிவிலானாயினான் என்பார் மந்தனாயினான் எனவுங்கூறினார். (கங)

தெற்றற்செஞ்சடையெம்பிரான்றிருமுன்புநாட்டும்
வெற்றித்தம்பமொத்திலகிலவ்விடும்பைகூர்வியாதன்
பற்றிச்சிந்தையினெடியமாலிணையடிபரவ
வுற்றைப்போதுமுன்றோன்றினின்றச்சுதனறைவான்.

(இ-ள்.) தெற்றல் செம் சடை எம்பிரான் திருமுன்பு நாட்டும் வெற்றி தம்டம் ஒத்து இலகி வல் இடும்பை கூர் வியாதன் - பின்னிய செவந்த சடை முடியையுடைய எமது இறைவன் சந்நிதியில் நாட்டிய வெற்றியமைந்த துவசத்தம்பத்தை யொத்து விளங்கிக் கொடிய துன்பமிகூர்ந்த வியாதமுனிவன், சிந்தையில்பற்றி நெடிய மால் இணை அடிபரவ அற்றைப்போது முன் தோன்றி நின்று அச்சுதன் அறைவான்-மனத்திற்றியானித்துத் திருமாலினுடைய இரண்டு திருவடிகளையுந் துதிக்க அக்காலையில் அவன் முனனே காட்சிதந்து நின்று இதனைத் திருமால் கூறுவான்.

பொய்ம்மையால் வந்த பயன் அன்றே பலித்தலால் வெருவினன் என்பார் வல்லிடும்பைகூர்வியாதன் - பற்றிச்சிந்தையினெடியமாலிணையடிபரவ என்றார். (கஅ)

என்னகாரியஞ்செய்தனையென்னையுங்கெடுத்தாய்
பன்மறைப்பரப்பியாவையும்பாற்படுத்தவற்றுட்
சொன்னமெய்ப்பொருளுண்மையைத்துணிந்தநீயந்தோ
கொன்னுமிம்மயக்கெவ்விடைப்பெற்றனை கூறாய்.

(இ-ள்) என்னகாரியம் செய்தனை என்னையும் கெடுத்தாய் - நீ கெட்டதுமன்றி யென்னையுங் கெடுத்தாய், பல் மறை பரப்பு யாவையும் பாற் படுத்து அவற்றுள் சொன்ன மெய் பொருள் உண்மையை துணிந்த நீ - பலவேதங்களின் பரப்புகளை யெல்லாம் பகுதிப்படுத்தி யவ்வேதங்களுள்கூறிய உண்மைப் பொருளி னிச்சயத்தைத் துணிந்த நீ, அந்தோ கொன்னும் இமயக்கு எ இடை பெற்றனை கூறாய் - ஐயோ அச்சந்தரும் இந்த மயக்கத்தை யெவ்விடத்திற் பெற்றாய் இதனைச் சொல்லாய்.

காட்சிதந்த திருமால் பயனில் காரியஞ் செய்தனையென்பார் என்னகாரியஞ்செய்தனையெனவும், நீ யறியாமையாற் கெட்டதுமன்றி எனக்குங் கேடுசூழ நினைத்தாய் என்பார் இறந்ததுதழீஇய எச்சவும்மைதந்து என்னையுங்கெடுத்தாய் எனவும், வேதங்களினுட்கிடையைத் தெரிந்தன்றோ அளவிறந்த வேதங்களை ஆன்மாக்களுணர்ந்துய்தற்பொருட்டுத் துறைப்படுத்தினாய், அவ்வாறு துறைப்படுத்திய வுனக்கு இந்தக்கெடுமதி யெங்கிருந்து முளைத்ததென்பார் கொன்னுமிமயக்கெவ்விடைப்பெற்றனை கூறாயெனவுங் கூறினர். (கசு)

ஏனையாரையுமறத்துறந்தியாவருமென்றும்
பான்மையிற்றியானஞ்செயப்படுமொருமுதல்வன்
மேன்மைகூர்சிவனொருவனேயெனவிரித்தன்றே
நான்மறைத்தலையாமதர்வசிகைநவிலும்.

(இ-ள்.) ஏனை யாரையும் அற துறந்து யாவரும் என்றும் பான்மையில் தியானம் செய்ய படும் ஒரு முதல்வன் - பிரமன்முதலிய தேவர்கள் பரமல்லவென அறக்களைந்திட்டு யாவராலும் எக்காலத்தும் முறையால் தியானஞ் செய்யப்படும் ஒரு இறைவன், மேன்மை கூர் சிவன் ஒருவனே என்ன விரித்து நால் மறை தலையாம் அதா வசிகை நவிலும் - மேன்மை நிறைந்த சிவனொருவனே பரமென்று விரித்து நான்கு வேதங்களுள் தலைமைவாய்ந்த அதர்வ சிரசு கூறாநிற்கும்.

பிரமன்முதலிய தேவர்களையென்பார் ஏனையாரையுமெனவும், அவர்கள் தியானஞ் செய்யப்படும் பொருளல்லர் என்பார் அறத்துறந்து எனவும், தியானிப்போர் முனிவர்முதலிய எல்லோருமென்பார் யாரும் எனவும், அவரால் தியானிக்கப்படும் இறைவன் சிவபெருமான் ஒருவனேஎன்பார் தியானஞ்செயப்படு முதல்வன் மேன்மை கூர்சிவனொருவனேயெனவும், நான்குவேதங்களுள் சிவமே பரப்பிரமமெனக்கூறும்

உபநிடதங்களைத் தொகுத்து வரையறுத்துக்கூறுவது வேதாந்தநூலாகிய அதர்வசிகை யென்பார் நான்மறைத்தலையாம் அதர்வச்சிகைகவிலும் எனவுங்கூறினார்.

" சருவகாரணஞ்சிவனேயாகின்றபடியாலுந்தயங்கவற்கே
பொருவில்சுபத்தைச்செய்தல்பூரணமாயிருக்கின்றபொலிவினாலும்
ஒருசாம்பமூர்த்திதானுயவவனேயுளத்தாமரையினுப்பண்
திருவார்ந்தமாதவத்தீர்முக்கியமாத்தியானமதுசெய்யத்தக்கோன்.

காரியசொரூபமாகியசெந்தாமரைத்தடங்கட்கரியோன்முன்னோர்
சீரியர்காள்முக்கியமாத்தியானஞ்செய்தேவரல்லர்
பேரியன்மெய்ச்சிவசேடமெல்லாருமாதலிற்பேசிதரமான
தாரியரேட்டேவரைநீத்துச்சிவனையேயுள்கறருதிமாதோ.

அறையதாவச்சிகையிந்தத்தாற்பரியத்தேமுடிவுண்டாயிருக்கும் " எனச் சூத சங்கிதை சருவசாத்திர சங்கிரகமுரைத்த வத்தியாயததில் வருதல்காண்க. (௧௬)

யாமெலாமவனிணையடித்தியானஞ்செய்பசுக்க
ளாமெனத்தெளியவனருள்சேர்தலிற்பசுவும
பூமிசைத்தியானப்பொருளாமெனப்புனைந்து
தோமறசசிலநூல்புகலுண்மையுந்துணியாய்.

(இ-ள்.) யாம் எல்லாம் அவன் இணை அடி தியானம்செய் பசுக்கள் ஆம் என்ன தெளி-நாங்களெல்லாம் பசுபதியாகிய அவ்விறைவனது இரண்டுதிருவடிகளையுந் தியானஞ் செய்யும் பசுக்களென்று நீ தெளியாய், அவன் அருள் சேர்தலில் பசுவும பூமிசைதியானப் பொருளாம் என்ன புனைந்து தோம் அற சில நூல் புகல் உண்மையும் துணியாய்-அவவிறைவனது திருவருளை யடைதலாற் பசுக்களாகிய யாங்களும் நிலவுலகின்மேற் றியானஞ் செய்யப்படும் பொருளா மென்று புனைந்து குற்றமறச் சிலநூல் புகலும் உண்மையையும் நீ துணியாய்.

அயன்முதல்யோரை யுளப்படுத்தி யாமெலாம் எனவும், நாங்கள் சிவனைத் தியானஞ்செய்யும் பொருள்களாதலால் எங்களைப் பசுக்கள் எனவும், எங்களால் தியானஞ்செய்யப்படுவோன் அவனாதலால் அவன் பசுபதியென்பார் யாமெலாமவனிணையடித்தியானஞ்செய் பசுக்கள் ஆமெனத்தெளியெனவும், அவன் திருவடித்தியானத்தால் நிலவுலகில் மானிடராகிய பசுக்களாற் றியானஞ்செயப்படும பொருள்களாக விளங்குகின்றோ மென்பார அவனருள் சேர்தலிற் பசுவும பூமிசைததியானப்பொருளாம் எனவும், இது உண்மையன்று எமக்குப் புனைந்துரையாதலால் புனைந்துரையெனவும், இவ்வாறு கூறுதல் வேதங்களுட் சில வுபநிடதங்கள் என்பார் தோமறச்சிலநூல் புகலுண்மையுந் துணியாய் எனவுங் கூறினார்.

திருமால் முதலியோர் நிலவுலகில் தியானப்பொருள்களாக நிலவுதலை—

" வாழ்த்துவதும்வானவர்கடாம்வாழ்வானமனநினைவால்
தாழ்த்துவதுந்தாமுயர்ந்துதம்மையெலாந்தொழவேண்டி " என வேதசிரசி னருத்தமாகிய திருவாசகத்தில் வருதல்காண்க. (௧௭)

அறிஞர்கொண்டகோட்பாடிதுவறிந்திலையம்மா
பிறிவிலாணவச்செருக்கினின்மயங்கியபேதாய்

குறிபிறழ்க்கிடாதென்னுரைமெய்யுறக்கோடி.

(இ-ள்.) பிறிவு இல் ஆணவம் செருக்கினில் மயங்கிய பேதாய் அறிஞர் கொண்ட கோட்பாடு இது அறிந்திலை அம்மா - நீங்குதலில்லாத ஆணவச் செருக்கால் அறிவு நிலைகலங்கிய பேதையே அறிவுடையோர் கொண்ட கொள்கை யிது இதனை யறியா தொழிந்தா யிஃதோர் பெருவியப்பு, வெறிய நீ இனி உய்வது வேட்டனை ஆயில் குறி பிறழ்ந்திடாது என் உரை மெய் உற கோடி - பயனிழந்த நீ இனிப்பிழைத்தலை விரும்பினையானால் வேதங்கள் விதித்த குறியினின்றும் பிறழாது யாங்கூறும் வாக்கியத்தைச் சத்தியமாகக் கைக்கொள்ளாய்

செம்புள்ளவளவுங் களிம்பு நிற்றல்போல ஆன்மபோதம் உள்ளவளவும் மலம் நிற்றலால் பிறிவிலாணவம் எனவும், ஆணவம் விளைக்குந் தீக்குணங்களில் கொடிதாதலால் செருக்கால்எனவும், அச்செருக்கால் விதிவிலக்குகளை மறத்தலால் மயங்கிய எனவும், முன்னர்க்கூறிய வாக்கியங்கள் அறிவுடையோர்கொண்ட கோட்பாடாதலால் அதனைச்சுட்டி அறிஞர்கொண்ட கோட்பாடிது எனவும், எல்லாமுணர்ந்த நீ இதனை யுணராதது பெருவியப்பு ஆதலால் அம்மா எனவும், நீ உய்யக்கருதினையாயில் முன்னர்க்கூறிய குறியில் நிற்கவேண்டுமாதலால் குறிபிறழ்ந்திடாதெனவும், நீ கூறியது போலன்று நாம் கூறுவது மெய்யுரையாதலால் கோடியெனவுங்கூறினர். (௧௫)

மந்திரத்தழன்மகத்தினுக்கிறையவன்மகவான்
சந்தமாமறைக்கிறையவன்றாமரைக்கிழவ
னிந்திராதியாமுலகினுக்கிறையவன்யானே
மைந்தனேயெனக்கிறையவன்மணிமிடற்றிறையோன்.

(இ-ள்.) மைந்தனே மந்திரம் தழல் மகத்தினுக்கு இறையவன் மகவான்-மைந்தனே வேத மந்திர விதியாலமைந்த அக்கினிவாய்ந்த வேள்விக்குத் தலைவன் இந்திரன், சந்தம் மாமறைக்கு இறையவன் தாமரை கிழவன் (அவ்வேள்வியைவிதிக்கும்) சந்தமமைந்த பெரிய வேதத்திற்குத் தலைவன் தாமரையில் வசிக்கும் பிரமன், இந்திராதியாம் உலகினுக்கு இறையவன் யானே-இந்திரன் முதலாகிய எவ்வுயிருக்குந் தலைவன் நானே, எனக்கு இறையவன் மணி மிடறு இறையோன் - எனக்குத் தலைவன் ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானே.

ஏகாரம் எண்ணின்மேல் நின்று தேற்றப்பொருளில் வந்தது. மகவான், இறையவன் இவற்றினிறுதியில் ஏகாரந்தொகுத்தல். உலகு இடவாகுபெயரா யுயிர்களின்மேல் நின்றது. இந்திரனுயர்ந்தவன், அவனினும் பிரமனுயர்ந்தவன், அவனினு நானுயர்ந்தவன், என்னினுஞ் சிவபிரானுயர்ந்தவன் என மேன்மேலும் உயர்குணத்தால் ஒன்றற்கொன்றுயர்வாதலைக் கூறுதலால் மேன்மேலுயர்ச்சியணி. (௧௬)

அகிலநாயகனவற்குமேலிறையவனில்லை
யகிலலோகமுமவன்றிருவாணையினடக்கு
மகிலலோகமும்படைத்தளித்தழிப்பவனவனே
மால்.

(இ-ள்.) அகில நாயகன் அவற்கு மேல் இறையவன் இல்லை - எல்லாப் பொருள்களுக்குந் தலைவனாகிய அச்சிவபெருமானுக்கு மேற்பட்ட தலைவனொருவனுமில்லை, அகில லோகமும் அவன் திரு ஆணையில் நடக்கும் - எல்லா உலகங்களும் அவ்விறைவது திருவாணையின் வியங்கும், அகிலலோகமும் படைத்து அளித்து அழிப்பவன் அவனே - எல்லா உலகங்களையுஞ் சிருட்டித்துக் காத்தழிப்பவன் அவவிறையவனே யென்று, அகில நூல்களும் உரைத்திடும் துணிபு இதுவாம் - வேதமுதலிய எல்லா நூல்களும் எடுத்துக் கூறும் நிச்சயம் இதுவேயாம்.

சிவபிரானை எப்பொருட்கும் இறைவன் என்று கூறியது என் கோட்பாடுமட்டும் அன்று, சுருதிமுதலிய நூற்றுணிபும் இதுவாமெனக்கூறுவார் அகிலநூல்களுமுரைத் திடுந் துணிபிதுவாம் என முக்காலத்திற்கும் பொதுவாகிய வினைமுற்றுத்தந்து கூறினார். காரணத்தைக் காரியத்துடன் சேர்த்துக்கூறுதலால் ஏதுவணி. (௨௦)

வானமேத்தயான்வைகுந்தவாழ்வுபெற்றதுவு
ஞானநான்முகன்சத்தியவுலகநண்ணியது
மேனைவிண்ணவர்தத்தபவாழ்க்கையெய்தியது
மானுயர்த்தவனருட்குறியருச்சனைப்பயனால்.

(இ-ள்) வானம் எத்த யான் வைகுந்த வாழ்வு பெற்றதுவும் - உலகிலுள்ளோர் துதிக்க நான் வைகுண்ட வாழ்வை அடைந்ததுவும், ஞான நான்முகன் சத்திய உலகம் நண்ணியதும் - உண்மை ஞானம் வாய்ந்த பிரமன் சத்திய உலகை யடைந்ததும், ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கை எய்தியதும் - அவரொழிந்த தேவர்கள் தத்தமக்குரிய பதங்களை யடைந்ததும், ஆன் உயர்த்தவன் அருள் குறி அருச்சனை பயனால் - இடபக்கொடியை யுயர்த்த சிவபெருமான் திருவுருவாகிய சிவலிங்கப் பெருமானை வழிபட்டருச்சித்த பயனாலென்றறி.

தாம் முதலியோர் வைகுண்டமுதலிய வாழ்வைப்பெற்றது சிவார்ச்சனைப்பயனாலென்றதை—

" வளங்கனியும்வைகுந்தப்பெருநகரமீமருவிவாழுமாறும்
விளங்குசதுமறைக்கிழவன்சத்தியலோகத்திருக்கைமேவுமாறும்
உளங்கவர்மற்றைப்பதங்களிந்திரன்முன்னோர்மருவிமேவுமாறும்
களங்கனியைநிகர்களத்தாற்பூசித்தபலனென்றுகருதிடாய்கொல்" எனவரும் சூதசங்கிதையாலுணர்க. (௨௧)

அன்னவன்றிருவடிகளேசரணமென்றடைமோ
வின்னதாயநின்மயக்கினைவிடுமதியின்றேற்
பின்னல்வேணிநீகெட்டனைபிறரையுங்கெடுக்க
வுன்னுகின்றனையெனவெகுண்டுரைத்தனன்றிருமால்.

(இ-ள்) அன்னவன் திருவடிகளே சரணம் என்று அடைமோ இன்னது ஆய நின்மயக்கினை விடு-அவவிறைவரது திருவடிகளையே சரணமென்று நீ அடையாய் இத்தன்மையான நின்மயக்கத்தை யொழியாய், மதி இன்றேல் பின்னல் வேணி நீ கெட்டனை பிறரையும் கெடுக்க உன்னுகின்றனை என்ன வெகுண்டு திருமால் உரைத்தனன் - உனக்கு இவ்வறிவில்லையாயில் பின்னிய சடாமுடியையுடைய நீ கெடுவாய் நீ கெடுவதுமன்றிப் பிறரையுங் கெடுக்கக் கருதுகின்றாயென்று கோபித்துத் திருமால் கூறினன்.

மதியின்றேல் என்பதற்கு மதி இன்றேல் எனப்பிரித்து நான் சொன்னவற்றைத் துணி இல்லையாயில் எனப் பொருள்கொள்ளுதலும் அமையும். மோ, மதி முன்னிலையொருமை யேவற்பொருண்மையாகிய கட்டுரைச் சுவைப்பொருள் காட்டவந்த அசைநிலை யிடைச்சொற்கள். நீ நரகமடைவது திண்ணம் என்பார் துணிவுபற்றிவந்த காலவழுவமைதியாக இறந்தகாலந்தோன்றக் கெட்டனையெனவும், நீயடைவதுமன்றி ஐயந்தீர வினவினரும் நரகடையச்செய்கின்றாய் என்பார் பிறரையுங்கெடுக்க வுன்னுகின்றனையெனவுங் கூறினார்.

ஏனையோரைப் பரமெனக்கூறுவோர் நரகடைதலை—

" சுற்றதேகாகாரத்தினாலொன்றாயிருக்கினுந்தலையொடுதாளும்
காற்றியமலத்திரொப்பெனவுரைக்கிற்சுழிமடர்தாமுங்கொள்வாரோ

ஆற்றல்சேருருத்திரப்பிராற்கரியையயனையொப்பதிகமென்றுரைப்போர்
பாற்றரிதாயகொடுநிரயத்துப்பற்பஞண்மூழ்குவருண்மை" எனவருஞ் சூத்ச
ங்கிதையால் உணர்க. (உஉ)

வாயுறுத்தியகடுமொழிகேட்டனன்மற்றைத்
தூயவானவத்தொகையெலாந்துரும்பெனக்கழித்தான்
பாயுமால்விடைப்பகவனேபரமெனத்தெளிந்தா
னேயுமாறருள்கிடைத்துயரிருந்தவத்தலைவன்.

(இ-ள்.) ஏயும் ஆறு அருள்கிடைத்து உயர் இருந்தவம் தலைவன்-பொருந்தும் வண்ணந் திருவருள் வாய்ந்துயர்ந்த பெரிய தவத்தலைவனாகிய வியாதன், வாய் உறுத்திய கடு மொழி கேட்டனன் மற்றை தூயவானவர் தொகை எல்லாம் துரும்பு என்ன கழித்தான்-அத்திருமால் வற்புறுத்திக்கூறிய கடுஞ்சொல்லைக்கேட்டு அச்சிவபெருமானொழிந்த புனிதமாகிய திருமால் முதலிய தேவாகூட்டங்களையெல்லா மோர் துரும்பாகக்கருதிக் கழித்து, பாயும் மால் விடை பகவனே பரம் என்ன தெளிந்தான் - பாய்ந்து செல்லுந் திருமாலாகிய இடபவூர்தியையுடைய இறைவனையே பரமென்று தெளிந்தனன்.

தன்னைச் சரணடைந்த வியாதமுனிவனுக்குத் திருமால் இடித்துக்கூறிய கடுஞ்சொல்லே சிவபிரான் திருவருள் மேலிடச்செய்தது என்பார் ஏயுமாறருள்கிடைத்துயரிருந்தவத்தலைவனெனவும், அத்திருவருளால் திருமால் முதலியோரைப் பரமல்லரெனக் கழித்தனனென்பார் தூயவானவத்தொகையெலாந் துரும்பெனக்கழித்தான் எனவும், தான் பற்றுக்கோடாகச் சரணடைந்த திருமாலே சிவத்தைப் பரமெனக்கூறுதலால் அவரைப்பரமென்று தெளிந்ததை யொழிந்தனன் என்பார் பாயுமால்விடைப்பகவனே பரமெனத் தெளிந்தானெனவுங்கூறினார். (உ௩)

மெய்த்தவத்தவர்தமையெதிர்நோக்கிமேதகையீ
ரித்தகைத்தமாலுமக்குமென்போலவெய்தியதோ
சுத்தமாமறைமுழுவதுந்துகளறத்தெரிந்த
சித்தர்காளெனைவினவியதென்கொலோசெப்பீர்.

(இ-ள்.) மெய் தவத்தவர் தம்மை எதிர்நோக்கி மேதகையீர் இ தகைத்த மால் உமக்கும் என்போல எய்தியதோ-உண்மையான தபோதனரரை யெதிரோ பார்த்து மேன்மையையுடையீர் இத்தன்மையையுடைய மயக்கம் உங்களுக்கும் என்போலவந்ததோ, சுத்தம் மா மறை முழுவதும் துகள் அற தெரிந்த சித்தர்காள் என்னை வினவியது என்கொலோ செப்பீர் - புனிதம் வாய்ந்த பெருமையமைந்த வேதங்கள் முற்றுங் குற்றமறத்தெரிந்த மனமுடையவர்களே என்னைப் பரம்பொருள் யாதென்று வினவியது யாதுகாரணம் கூறீர்.

என்னைப்போல நீங்களும் வேதமுற்றும் ஐயந்திரிபறவுணர்ந்தீர் என்பான் மாமறைமுழுவதும் துகளறத்தெரிந்த சித்தர்காள் எனவும், உணர்ந்தும் எனக்கு விபரீதவுணர்ச்சி முளைத்ததுபோல உங்களுக்கு முளைத்ததோவென்பான் இத்தகைத்தமால் உமக்குமென்போல வெய்தியதோவெனவும், என்னை வினவியது என்மடமையை வெளிப்படுத்தற்பொருட்டோவென்பான் என்னை வினவியதென்கொலோவெனவுங்கூறினான். ()

விச்சுவன்சிறைப்புள்ளரசுயர்த்தவன்விளம்பும்
விச்சுவாதிகனெறுழ்வலிச்சினவிடையூர்தி
யெச்சமேசுரும்புளர்துழாயலங்கலானென்ப
வெச்சநாயகன்பொலந்துணரிதழிமாலிகையான்.

(இ-ள்.) சிறை புள் உயர்த்தவன் விச்சுவன் - சிறையையுடைய கருடக்கொடியை யுயர்த்த திருமால் பிரபஞ்ச வடிவாயுள்ளவன், எறுழ்வலி சின விடை ஊர்தி விளம்பும் விச்சுவாதிகன் - வன்மையையுங் கோபத்தையுமுடைய இடபவூர்தியாகிய சிவபெருமான் சொல்லப்பட்ட அப்பிரபஞ்சத்திற்கு அதீதப்பட்டவன், சுரும்பு உளர் துழாய்அலங்கலான் எச்சமே-வண்டுகள் பரந்த துழாய்மாலையையணிந்த திருமால் வேள்விவடிவாயுள்ளவன், பொலம் துணர் இதழி மாலிகையான் எச்சநாயகன்-பொன்னிறம் வாய்ந்த கொன்றைப்பூங்கொத்தாற்றொடுத்த மாலையையணிந்த இறைவன் அவ்வேள்விக்குத்தலைவன்.

திருமால் பிரபஞ்சவடிவாயுள்ளவன் என்பான் சிறைப்புள்ளரசுயர்த்தவன் விச்சுவன் எனவும், சிவபெருமான் பிரபஞ்சாதீதப்பட்டவன் என்பான் சினவிடையூர்தி விச்சுவாதிகன் எனவும், திருமால் வேள்வியும் அப்பெருமான் வேள்விப்பயனைத்தரும் இறையும் என்பான் துழாயலங்கலான் எச்சம் பொலந்துணரிதழியான் யச்சநாயகனெனவுங்கூறினன் திருமாலையே யிடபமாகவுடையவன், பிரணவப்பொருள் தானுயுள்ளவனென்பதைக் குறிப்பித்தற்குச் சினவிடையூர்தியெனவும், பொலந்துணரிதழிமாலிகையான் எனவுங்கூறினர். என்னபயன் கருதியோ விச்சுவன் என்னும் பாடத்தை விச்சுவமெனத் திருத்தினர்போலும். (உரு)

மாயையாங்கொடுமுரன்றனைச்செகுத்துயர்வயவன்
மாயையாள்பவன்முப்புரங்கனற்றியவள்ளல்
சாயன்மாமயில்வனிதையேநாரணன்றரியார்
சாயவென்றசீர்ப்புருடனுங்கண்ணுதற்றலைவன்.

(இ ள்.) கொடு முரன் தனை செகுத்து உயர் வயவன் மாயை ஆம் - கொடிய முராசுரனைக்கொன்ற திருமால் மாயைவடிவாயுள்ளவன், முப்புரம் கனற்றிய வள்ளல் மாயை ஆள்பவன் - திரிபுரங்களையும் நகைத்தெரித்தவன் அம்மாயையை ஆளாநிற்பவன், நாரணன் சாயல் மாமயில் வனிதையே - திருமால் பெரிய மயில்போலுஞ் சாயலையுடைய பெண்பால் ஆவான், கண்ணுதல் தலைவன் தரியார் சாயவென்ற சீர் புருடனும் - நெற்றிக்கண்ணையுடைய இறைவன் பகைவர்கள் சாய்ந்து பின்னிட வெற்றிகொண்ட சிறப்புவாய்ந்த ஆண்பாலேயாவான்.

திருமால் மாயை, சிவபிரான் மாயையைத் தன்வயத்தனுக வுடையான் என்பான் முரனுயிர் செகுத்தோன் மாயை, முப்புரங்கனற்றியவள்ளல் மாயை யாள்பவன் எனவும், திருமால் யோனி, சிவபிரான் பும்ஷத்துவம்என்பான் திருமால்வனிதை, கண்ணுதல் சிவபிரான் புருடனும் எனவுங்கூறினன். முரனுயிர் வாங்குதலிலும் திரிபுரங்களிலுள்ளாரை நகைத்தெரித்தல் உயர்ந்தோன் செயலென்பதைக் குறிப்பித்தற்கு முரனுயிர் செகுத்துயர் வயவன் எனவும், முப்புரங்க னற்றியவள்ளல் எனவும், இந்திரன் வேண்டுகோளால் நரகாசுரனைக் கொல்லப் பாதலவுலகிற்சென்று அவனது நீரரண்முதலிய ஆறரண்களுள் பாசவரணுக்குத் தலைவனுகிய முராசுரனுயிர் குடித்தமையால் முரனுயிர்செகுத்தவ னெனவும், ஆண்பாலுக்குரிய சாதியடை யாதலால் தரியார் சாயவென்ற சீர்ப்புருடனுமெனவுங் கூறினர். (உசு)

என்னமாமறைமிருதிநூல்புராணமற்றெவையும்
பன்னுகின்றநிலையுறற்பாலதொன்றுளதோ
புன்மருட்சியின்மயங்கினேன்புலங்கொளத்தெருட்டா
தென்னையிவ்வணங்கண்டனிரிதுநுமக்கழகோ.

(இ-ள்.) என்ன மாமறை மிருதி நூல் புராணம் மற்று எவையும் பன்னுகின்றதில் ஐயுறல் பாலது ஒன்று உளதோ-என்று பெரிய வேதங்களும் மிருதிநூல்களும் புராணங்களும் அவை யொழிந்த யாவும் அவ்வாறெடுத்துக்கூறுவதில் சந்தேகங்கொள்ளும் பகுதிய தொன்றுண்டோ, புல் மருட்சியின் மயங்கினேன் புலம் கொள்ள தெருடாது என்னை இவண்ணம் கண்டனிர் இது நுமக்குஅழகோ - எவற்றிலும் புல்லியமயக்கத்தால் மயங்கிய யான் அறிவுகொள்ளத் தெளிவிககாமல் என்னை யிவ்விதமாகச் செய்திர் இச்செய்கை யுங்களுக் கழகாகுமோ.

இல்லையெனவும், அழகல்லவெனவும் நிற்றலால் ஓகாரங்கள் எதிர்மறைப் பொருள்மேல் நின்றன. இது முன்னர் யானெடுத்துக் கூறியதுபோலன்று அருள் வயந்ததாகிய சுருதிமுதலிய நூற்றுணிபென்பான் ஐயுறற்பாலதொன்றுளதோவெனவும், யான் முன்னர்க்கூறியது ஆணவச்செருக்காலென்பான் புன்மருட்சியின்மயங்கினேனெனவும், என்னைப்போலச் சுருதிமுதலிய நூற்றுணிபை நீவிரு முணர்ந்திர் என்பான் புலங்கொளத்தெருட்டாதெனவும்,தெருட்டிவீராயின் நாவெழாமலும் அசைவறநிற்றலு மொழிவேனெனென்பான் என்னை யிவ்வணங்கண்டனிரிது நுமக்கழகோவெனவுங் கூறினான்.

சிவனையாவரோயருச்சனைசெயாதவர்சிவன்மற்
றெவரையாயினுமருச்சனையியற்றியதுண்டோ
கவர்மனத்தினையொழித்தினியாமெலாங்கவலா
தவன்மலர்த்துணைச்சரணமேயடைதுமென்றியம்பி.

(இ-ள்.) யாவரோ சிவனை அருச்சனை செய்யாதவர் சிவன் மற்று எவரை ஆயினும் அருச்சனை இயற்றியது உண்டோ - யார்தான் சிவபெருமானை யருச்சனைசெய்யாதவர் அச்சிவபெருமான் தன்னையொழிந்து யாரையாகிலும் அருச்சனைசெய்ததுண்டோ, கவர் மனத்தினை இனி யாம் எல்லாம் ஒழித்து கவலாது அவன் மலர் துணை சரணமே அடைதும் என்று இயம்பி - பிளவுபட்ட மனத்தினை யினியாமெல்லா மொழித்துச் சிறிதுங் கவலைகூராது அவவிறைவனது தாமரைபோன்ற திருவடியையடைவோமென்றுகூறி.

சிவபிரானை யயன்முதலியோர் நிலவுலகிற் பூசித்து நிற்றலை முக்காலத்தும் காண்கின்றேமேயன்றி, அச்சிவபிரான் அயன்முதலிய தேவர்களுள் ஒருவரை யாயினும் அருச்சித்து நிற்றலைக் காட்சிப் பிரமாணத்தாற் கண்டிலம் என்பான் சிவனை யாவரோ யருச்சனை செயாதவர் சிவன்மற் - றெவரையாயினும் அருச்சனை யியற்றிய துண்டோ வெனவும், ஆகமப் பிரமாணத்தாலு மன்றிக் காட்சிப் பிரமாணத்தாலும் இது காணப்பட்டதாதலால் இனி ஐயமொழிக வென்பான் கவர்மனத்தினை யொழித்து எனவுங் கூறினான். உருத்திரமூர்த்தி சிவலிங்கப்பெருமானைத் திருவிடைமருதில் யருச்சித்தமையால் தன்னையொழித்து என்றும் மற்று வினைமாற்றுப்பொருளில்வந்த இடைச்சொல்.

பவளமுண்டகக்கிழத்திதோய்பணைப்புயக்குரிசி
றவளமேனியைநீனிறமாக்கிவெண்சலதி
துவளவந்தெழுங்கொடுவிடமிடற்றினிற்றூங்கக்
கவளமாக்குநின்பெருமையார்கணித்திடவல்லார்.

(இ-ள்.) பவளம் முண்டகம் கிழத்தி தோய் பணை புயம் குரிசில் தவளமேனியை நீல் நிறம் ஆக்கி - பவளம் போலுஞ் செந்நிறம் வாய்க்த தாமரையில் வசிக்கும் இலக்குமி தோயும் பருத்த புயத்தையுடைய திருமாலது வெள்ளிய மேனியை நீல நிறஞ்

செய்து, வெண் கலதி துவள வந்து எழும் கொடுவிடம் மிடற்றினில் தூங்க கவளம் ஆக்கும் நின் பெருமையார் கணித்திடவல்லார் - திருமால் முதலியோருமன்றித் திருப் பாற்கடலும் வருந்த வந்து தோன்றிய கொடியவிடம் ஸ்ரீகண்டத்தில் நிலைபெற அத னைக் கவளமாகச்செய்த உனது பெருமையை யார்தான் அளவறுக்கவல்லார்.

திருமால் பரதந்திரனென்பான் குரிசில் தவளமேனியை நீனிறமாக்கியெனவும், நீ சுதந்திரனென்பான் கொடுவிடமிடற்றினிற்றூங்கக் கவளமாக்குநின் எனவும், சுதந் திரனுவான் பெருமை பரதந்திரர் எடுத்துக்கூறும் அளவில் அடங்காதென்பான் பெரு மையார் கணித்திடவல்லார் எனவுங் கூறினன். (உக)

சிரித்தெரித்தனை முப்புரந்திறற்சமன் வாழ்நா
ளிரித்தழித்தனை யுதையினுவிலங்கையார்க்கிறையை

பொரித்துவிட்டனை காமனைப்பொறிநுதல்விழியால்.

(இ-ள்.) முப்புரம் சிரித்து எரித்தனை உதையினுல் திறல் சமன் வாழ்நாள் இரித்து அழித்தனை - திரிபுரங்களை நகைத்தெரித்தாய் உதையால் வலியையுடைய இயமனு டைய வாழ்நாளைக் கெடுத்தழித்தாய், பெருவிரல் நுதியின் இலங்கையார்க்கு இறையை நெரித்து வீழ்த்தினை - திருவடியின் பெருவிரல் நுனியால் இராவணனை நெரித்துக்கொ ன்றாய், நுதல் பொறி விழியால் காமனை நீறு ஆக பொரித்து விட்டனை - நெற்றியிலுள் ள தீக்கண்ணினுல் மன்மதனை நீறாகப் பொரித்துவிட்டாய்.

மிருககண்டேயமுனிவர் புத்திரராகிய மார்க்கண்டேயர் தமது பிதாவினனுமை பெற்றுக் காசியிலடைந்து சிவபெருமானைப்பூசித்து இயமனைவென்றா என்பதை—

“ எறிந்தான்பாசமீர்த்திடலுற்றனிதுபோழ்திங்
கறிந்தான்றானுமீசனையேதுதியடிநீழற்
பிறிந்தானல்லன்மற்றினியிந்தப்பெருமைந்தன்
மறிந்தானன்றேவென்றிமையோருமருளுற்றார்.

ஈர்க்கும்பாசங்கந்தரமுற்றுமிடறில்லா
மார்க்கண்டன்முற்றேன்றினனின்பால்வருதுன்பந்
தீர்க்கின்றாநீயஞ்சலையென்றேதிசையாழிக்
கார்க்கண்டத்துக்கண்ணுதலையன்கழறுற்றான்.

மதத்தான்மிக்கான்மற்றிவன்மைந்தனுயிர்வாங்கப்
பதைத்தானென்றுவுன்னிவெகுண்டான்பதிமூன்றுஞ்

யுதைத்தான்கூற்றன்விண்முகில்போன்மண்ணுறவீழ்ந்தான்” எனவும்,

சூரபன்மாதிய ரிடர்நீங்கப் பிரமன் வேண்டுகோளால் மன்மதன் திருக்கயிலைக் குச்சென்று பாணப்பிரயோகஞ்செய்து நீறாகினன் என்பதை—

“ எறிதருகணிச்சிச்செங்கையீசன்மேலிலக்காடுங்
குறியினர்போலநின்றகொடுந்தொழின்மாரன்றுஞ்சும்
நெறியினர்க்கச்சமுண்டோநினைப்பதுமுடிப்பனென்று
நறுமலர்வாளியைந்துநாதன்மேற்செல்லவிட்டான்.

விட்டவெம்பகழியைந்தும்வியத்தகுவிமலன்மீது
பட்டலுஞ்சிறிதுவேளைப்பார்த்தனன்பார்த்தலோடும்

கட்டழல்பொதிந்தநெற்றிக்கண்ணதுகடிதேகாமற்
சுட்டதுகயிலைமுற்றுஞ்சூழ்புகைபரவிற்றன்றே'' எனவும் வருங் புறங்கண் டந்தின ராணத்தாலும்,

இராவணன் குபேரனைவென்று அவன் விமானங்கவர்ந்து அவ்வூர்தியின்மேல் சம வணத்திற்கு அண்மையில் வரும்போது அவ்விமானம் அப்பாற்செல்லாது நிற்க, நந்தி தேவர் நோக்கி யிவ்வழியூர்தியோடு செல்லுதலொழிகவென மறுக்க இராவணன் கோ பித்துத் திருக்கயிலையை யெடுத்தபோது சிவபிரான் திருவடிப்பெருவிரலாலூன்றி யக் கால் அக்கயிலையின்கீழ் நெரிபட்டோய்ந்தனன் என்பதை—

" வைதலுந்தசக்கிரீபன்வான்றொடர்கயிலைவெற்பை
வெய்தினிலெடுப்பவேந்தன்விரற்றலைநுனியாலூன்றப்
பையுளுற்றழுங்கிமாழ்கிப்பரமனைப்பழிச்சிவெய்யோன்
ஐதுணர்சாமகானமறிவுடன்பாடலுற்றான்.

ஆயிரம்பருவமிவ்வாறழுதலாலரக்காகோனுக்
கேய்வுறவியம்புநாமமிராவணனென்றுகூறி
மாய்வறுவரமுநல்கிவிடுப்பவாளரக்கன்போந்து
மீயுயரிமயவெற்பின்மேவியோரணங்கைக்கண்டான்'' எனவருங் கூர்ம புராணத்தாலும் அறிக. திரிபுரவிசயம் முன்னர்க்காண்க. (௯0)

பிரமனார்சிரமுகிரினிற்பேதுறக்கொய்தாய்
சுரர்கள்யாரையுஞ்சிறுவிதிவேள்வியிற்றொலைத்தாய்
நரமடங்கன்மீன்வாமனங்கூர்மநற்கேழ
லுரமெலாமறத்தடிந்தனையொவ்வொருகூற்றால்.

(இ-ள்.) பிரமனார் சிரம் உகிரினில் பேது உற கொய்தாய் - பிரமனது தலையைப் பெருவிரல் நகத்தால் மயங்கக்கொய்தாய், சுரர்கள் யாரையும் சிறுவிதி வேள்வியில் தொலைத்தாய் - பிரமன் திருமால் முதலிய தேவர்கள் யாரையும் தக்கன் யாகத்திலழித் தாய், ஒவ்வொரு கூற்றால் நரமடங்கல் மீன் வாமனம் கூர்மம் நல் கேழல் உரம் எல் லாம் அற தடிந்தனை - ஒவ்வோரமிசத்தால் நரசிம்மமும் மற்சமும் வாமனமும் கூர்ம மும் வராகமுமாகிய இவற்றின் வன்மையையெல்லாம் நீங்கப்போக்கினாய்.

நானே பிரமமென்றகங்கரித்த பிரமன் நடுத்தலையைக் காலவயிரவர் தோனறி நகத்தாற்கொய்ததை—

" என்னக்குடிலைதெருட்டவுளந்தெருளாதெகினப்பாகனொடுங்
கன்னிப்படலைத்துழாய்மார்பன்செம்மாந்துறைதல்கண்ணுற்றாங்
குன்னற்கரியபேரொளியாமுக்கட்பெருமானொருகோடி
மின்னுக்கதிரெண்டிசையளப்பவிசும்பூடறுத்துவெளிநின்றான்.

சுடர்பன்னிரண்டுமின்மினியிற்றோன்றவெறிக்கும்பேரொளியும்
படைகடிகழுமெண்டோளுமுகமோரைந்தும்பானிறத்த
வடலையணிந்தவெழின்மெய்யுமலங்குசோதிமுக்கண்ணும்
உடையவுருவநோக்கியயனஞ்சாமுகமீதுரைத்ததுவே.

முன்னமெனதுநுதலுப்பணுதித்தநீயோமுதல்வனெனப்
பின்னும்வெகுண்டுகூறுதலும்பிள்ளைப்பிறைதாழ்மணிமவுலிப்
பொன்னங்குடுமிவனைகுழைத்தபுனிதன்காரிமுகநோக்க
அன்னோனிடக்கைநகநுதியான்மலரோனைந்தாந்தலையகழ்ந்தான்'' எனவும்,

செய்து, தக்கன் சிவபெருமானொழிகளி வேள்விக்கு இறையாகத் திருமாலைக்கொண்டு ஆக்கும் தேவர்களோடு வேள்விசெய்தகாலத்தில் வீரபத்திரக்கடவுளால் அத்திருமால் பாற்கலியோர் ஒறுக்கப்பட்டதை—

உள "புவனகோடிகளுந்திக்கும்புராரிவெஞ்சிற்றத்தீயில்
கவைபடுசூலவைவேற்காய்சினவீரன்றேன்றி.

கள்ந
அள்ளிமண்ணிடைகளிற்றெருமேனைத்ததொருகை
பிள்ளைவெண் பிறையெயிற்றபிலவாய்மறலியை

ஆரழற்கடவுளுவினையகழ்ந்ததொருகை
கார்நிறத்தநிருதிக்கடவுள்கைகள்விழிதோள்
ஈருண்மூளைகுடர்சிந்திடவெறிந்ததொருகை
வாரிதிக்கிறையைவாரியின்மடுத்ததொருகை" எனவும் வருங் கூர்மபுராணத்திலும்,

வாமனவதாரத்தில் மாவலியை வாட்டிச் சிறையில் வைத்துச் செருக்கியகாலத்தில் வயிரவர்தோன்றி யொறுத்து உரியுரித்துப் போர்வையாகக்கொண்டதை—

" பற்றினன்வயிரத்தண்டம்பகிரண்டமதிரவோச்சிச்
சுற்றினனுருமுக்காலத்தெழித்தனன்றுளவமார்பில்
எற்றினனெற்றலோடுமெறிபடுசண்டவாயு
முற்றுறவிற்றுவீழுமரிவெங்கிரியிற்சாய்ந்தான்.

கருநிறக்கமஞ்சூன்மேகக்காரதனுரித்துவாங்கித்
திருநிறத்தமையக்காளகஞ்சுகமென்னச்சேர்த்தி
வெரிநுறப்பிடுங்குமென்புதண்டெனவிடுத்துக்கொண்டான்
மருமலர்த்துளவமாயோனுணவமயக்கந்தீர்ந்தான்" எனவரும் உபதேசகாண்டத்திலும் உணர்க.

நரசிம்மம், மற்சம், கூர்மம், வராகம் இவ்வவதாரங்களிலொறுத்ததை முன்னர்க்காண்க. (கூக)

அந்தகன்றனை மாயனைச்சூலமீதமைத்த
வெந்தைநின்பெருந்தகைமையானென்னறிந்திசைப்பேன்
சிந்தைமையவிற்றொழுத்தையேன்செய்பிழைபொறுத்தே
யுந்துபேரருட்கருணையாலுய்வகையருளாய்.

(இ-ள்.) அந்தகன் தன்னை மாயனை சூலம் மீது அமைத்த எந்தை நின் பெரும் தகைமை யான் என் அறிந்து இசைப்பேன் - அந்தகாசுரனையுந் திருமாலையுஞ் சூலத்திற் கோத்தமைந்த என்றந்தையே உன் பெருந்தன்மையை நான் எவ்வாறறிந்து கூறப்போகின்றேன், தொழுத்தையேன் சிந்தை மையலில் செய் பிழை பொறுத்தே உந்து பேர் அருள் கருணையால் உய்வகை அருளாய் - அறிவிற்சிறிய யான் மனத்திற்கொண்ட மயக்கத்தாற்செய்த குற்றமனைத்தும் பொறுத்துப் பிறவியைப்போக்கும் உனது பெரிய திருவருளால் யான் உய்யும்வண்ணங் கருணைசெய்யாய்.

சிவபெருமான் தாருகவனத்திற்சென்று பலியிரந்து மீண்டு மந்தரகிரியிற்சென்றெழுந்தருளி யிருக்குங்காலையில் அந்தகாசுரன் போர்க்குவர அதனை யுணர்ந்து நந்தி தேவராதிகணங்களையும் திருமால் முதலிய தேவரையும் காலவயிரவரையும் போர்செ

ய்ய அனுப்பியகாலையில் கணங்களையுந் தேவர்களையும் நெருக்கி அந்தகாசுரன் புறங்கண் டகாலையில் காலவயிரவர்தோன்றி அந்தகாசுரனைச் சூலத்தாற்குத்திக் கோத்து ஏந்தின ர் என்பதை—

" நந்திதன்னயர்வுநோக்கிநாகிளம்பரிதிகோடி
அந்தரத்தெழுந்ததென்னவவிர்மணிக்கதிர்கள்வீசச்
சந்திரமவுலியண்டகோளகைசென்றுதாக்கக்
கந்தடுதிரடோட்காலவயிரவன்கடிதின்வந்தான்.

ஆல்மும்வடவைத்தீயுங்கொப்புளித்தவுணர்நெய்த்தோர்
வேலையிற்குளித்துத்தெவ்வர்வெண்ணிணச்சேறுபூசிக்
காலன்வெம்பசியுருதுகளித்துயிர்விருந்தூால்கும்
சூலவேறிருமித்தந்தகாசுரற்றொடர்ந்துசென்றான்.

கந்தடுபுழைக்கைநால்வாய்க்கடாக்களிற்றொருத்தல்போலும்
அந்தகாசுரன்றன்மார்பத்தழிபெருங்குருதிகால
இந்திரன்முதலதேவரிறைஞ்சினர்தொழுதுவாழ்த்தக்
கொந்தழற்சூலவேலாற்குத்திமீதேந்தினானே" எனவும்,

சிவபெருமானனுஞையால் பன்னிரண்டுதேவவருடம் பலியேற்றுலவுங் காலவயிரவமூர்த்தி வைகுந்தமடைந்தகாலையில் சங்கமுதலிய பஞ்சாயுதங்களையேந்தி விடுவச்சேனன் போர்செய்தற்குக்கருதிச் சக்கரத்தைச்சுழற்றி யெதிர்த்துப் போர்செய்ய அவ்வயிரவமூர்த்தி சூலத்தாலவனுடலினைக்கோத்து ஏந்தினர் என்பதை—

" பங்கயன்றலையோடேந்தியகாரிமாலுழைப்படர்தலுஞ்சினவிச்
சங்கொடுநேமிநாந்தகம்வரிவிற்றண்டமென்றுரைக்குமைம்படையும்
சிங்கவேறனையவிச்சுவசேனனெடுத்தமர்திளைப்பதற்கெண்ணி
அங்கிகொப்புளிக்குஞ்சக்கரந்திரியாவழலின்வீழ்பதங்கமொத்தெதிர்ந்தான்.

விச்சுவசேனன்வெகுண்டுமுன்னெய்திவெஞ்சமம்புரிதலுநகைத்துக்
கச்சையங்களிற்றினீருரிபுனைந்தகனலுமிழ்கண்ணுதற்காரி
அச்சணங்கெரிகான்முத்தலைப்படையினுங்கவனுடலினைக்கோத்துப்
பச்சைமாலுறையுளெய்தலும்" எனவும் வருங் கூர்மபுராணத்திலும்,

" அல்லதங்கவர்தங்களைமுத்தலையயிலால்
மெல்லவேயெடுத்தேந்திடும்" எனக் கந்தபுராணத்திலும்,

அவர்கள் செய்த அபராதத்தின்பொருட்டு ஒறுத்தலே அநுக்கிரகம் என்பார் அமைத்த எந்தை நின்பெருந்தகைமை என்றார்.

" தந்தைதான்புதல்வனைத்தண்டஞ்செய்தவன்

எந்தைதான்றண்டங்களியற்றியெய்திய
பந்தமங்ககற்றிநல்லருள்பணிப்பனால்" எனவரும் வாயுசங்கிதையிலுங் காண்க.

சிற்றறிவினேன்செய்த அபராதத்தை யொறுத்துத் தீர்த்தமையா லருளவேண்டும் என்பான் பேரருட்கருணையா லுய்வகையருளாயென்றான். (கூ௨)

யொன்றுகாதலானெக்குநெக்குருகியான்பிரிந்த

கன்றுபோற்பதைத்தலந்திரந்தயருமக்காலைக்

(இ-ள்) என்று கண்கள் நீர் சொரிய நாதழும்ப நின்று ஏத்தி - என்று துதித்துக் கண்களினின்று ஆனந்தபாஷ்பஞ்சிந்தவும் நாத்தழும்பேறவும் நின்று வணங்கி, ஒன்று காதலான் நெக்கு நெக்கு உருகி ஆன் பிரிந்த கன்றுபோல் பதைத்து அலந்து இரந்து அயரும் அ காலை - பொருந்திய அன்பால் மனம் நெக்குவிட்டுருகிப் பசுவைப்பிரிந்த கன்றைப்போலப் பதைபதைத்து வருந்திக்குறையிரந்து சோரும் அக்காலத்தில், கொன்றை வார் சடை குழகனும் கருணைகூர்ந்தருளி - கொன்றைமாலையையணிந்த சடைமுடியையுடைய இறைவனுங் கிருபைசெய்தருளி.

நெக்கு நெக்கு பன்மைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (௩௩)

வெள்ளியங்கிரியெழுந்தென விளங்கொளிவிடைமேல்
வள்ளைவார்குழையுமையொடுமகிழ்ந்தினிதேறிப்
பிள்ளைவாரணக்கடவுளும்பிறங்கெரிவடிவே
லள்ளிலைப்படையேந்தலுமிருபுடையணுக.

(இ-ள்.) வெள்ளியங்கிரி எழுந்தால் என்ன விளங்கு ஒளி விடை மேல் வள்ளை வார் குழை உமையொடு மகிழ்ந்து இனிது ஏறி - வெள்ளிமலை யெழுந்தாற்போல விளங்கு மொளிவாய்ந்த இடப வூர்தியின்மேல் வள்ளைத் தண்டையொத்த திருக்காதில் நீண்டசையுங் குண்டலத்தை யுடைய உமை யம்மையோடு இனிதாக ஆரோகணித்து, பிள்ளை வாரணம் கடவுளும் பிறங்கு எரி வடி வேல் அள் இலை படை ஏந்தலும் இரு புடை அணுக - யானை முகத்தையுடைய மூத்தபிள்ளையாரும் விளங்கும் தீவாய்ந்த வடித்தவேலாகிய கூரிய தகட்டுவாகிய ஆயுதத்தை யேந்திய இளையபிள்ளையாரும் இரண்டு பக்கத்தில்வரவும்.

எழுந்தென தொகுத்தல் விகாரம். (௩௪)

பிறங்குசக்கரபாணியும்பிரமனுமிருபா
லறங்குலாந்திருவடியிணை தாங்கினர் நடப்ப
மறங்குலாம்படைக்கடவுளர்வான்மிசைமிடைந்து
கறங்குவண்டுருக்கற்பகமலர்மழைபொழிய.

(இ-ள்.) பிறங்கு சக்கர பாணியும் பிரமனும் இருபால் அறம் குலாம் திருவடி இணை தாங்கினர் நடப்ப - விளங்குந் திருமாலும் பிரமனும் இரண்டு பக்கத்திலுந் தருமவடிவாகிய திருவடி யிணைகளைத்தாங்கி யொருபால் நடக்கவும், மறம் குலாம் படை கடவுளர் வான் மிசை மிடைந்து கறங்கு வண்டு உருத கற்பக மலர் மழை பொழிய - கொலைத்தொழில் விளங்கும் ஆயுதத்தை யேந்திய தேவர்கள் ஆகாயத்தின் மேல் நெருங்கி யொலிக்கும் வண்டுக ளடையாத கற்பக மலர் மாரியை யொருபாற் பொழியவும்.

தாங்கினர் முற்றெச்சம். சிவபிரான் அறவடிவாதலால் அறங்குலாந்திருவடியிணையென்றார். (௩௫)

எட்டுமாதிரத்தலைவரும்போற்றெடுத்திறைஞ்ச
வட்டவெண்குடைநந்திதன்றிருக்கரம்வயங்கக்
கட்டுசாமரையுருத்திரகன்னியரிரட்ட
வொட்டிமாகதர்சூதர்கள்வாழ்த்தொலியெடுப்ப.

(இ-ள்.) எட்டு மாதிரம் தலைவரும் போற்று எடுத்து இறைஞ்ச - எட்டுத் திசையிலுள்ள இந்திரன் முதலிய எண்மரும் ஒருபால் போற்றியென்றுகூறித் துதிக்கவும் வட்டம் வெண் குடை நந்தி தன் திரு கரம் விளங்க - வட்டமாகிய வெள்ளிய குடையானது நந்திதேவரது திருக்கரத்தில் ஒருபால் விளங்கவும், கட்டு சாமரை உருத்திர கன்னியர் இரட்ட-அமையக் கட்டிய சாமரையை உருத்திர கன்னியர் ஒருபால் அசைக்கவும், ஒட்டி மாகதர் சூதர்கள் வாழ்த்தொலி எடுப்ப - நெருங்கி யிருந்து புகழ்பாடுவோரும் நின்று புகழ்வோரும் வாழ்த்தொலியை யொருபாலெடுக்கவும். (௬௬)

நீண்டசெஞ்சடைப்புதுமதியிளநிலாவிரிப்ப
வீண்டுபூதவெங்கணங்களோடெதிரொழுந்தருளி
மூண்டபேரருளுற்றெழக்குறுநகைமுகிழ்த்து
மாண்டசீர்முனித்தலைவனைநோக்கிவாய்மலரும்.

(இ-ள்.) நீண்ட செம் சடை புது மதி இள நிலா விரிப்ப - நீண்ட செவந்த சடாமுடியில் இளஞ் சந்திரன் இள நிலவை யொருபால் வீசவும், ஈண்டு பூத வெம் கணங்களோடு எதிர் எழுந்தருளி - நெருங்கிய கொடிய பூதகணங்களோடு எதிரே காட்சி தந்தருளி, மூண்ட பேர் அருள் உற்று எழ குறு நகை முகிழ்த்து மாண்ட சீர் முனி தலைவனை நோக்கி வாய் மலரும் - மேலெழுந்த பெருங்கருணை மிக்கெழப் புன்னகையரும்பி மாட்சிமைப்பட்ட சிறப்பு வாய்ந்த வியாதமுனிவனைப்பார்த்துத் திருவாய் மலர்ந்தருளுவான். (௬௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எவனைநீமதித்துநம்முன்சூளுறவிசைத்தாயிந்நா
ளவனிதோகாண்டிமற்றெம்மடியிணைதாங்கிநின்றான்
சவலைநீபேதைநீராற்சாற்றினையெம்மைத்தேறா
துவலையாமதத்திற்பட்டோரிடும்பைநோயுழப்பர்கண்டாய்.

(இ-ள்.) எவனை நீமதித்து நம்முன் சூள் உற இசைத்தாய் இ நாள் அவன் இதோ காண்டி எம் அடி இணைதாங்கி நின்றான் - எவனை நீ பொருளாகக்கருதி நம்முன் னுணைகூறினாய் இப்போது அவனை யிதோ காணாய் அவன் எனது திருவடிகளைத் தாங்கி நின்றனன், சவலை நீ பேதை நீரால் சாற்றினை - அறிவிழந்த நீ பேதைமைத்தன்மையால் அத்திருமாலைப் பரம்பொருளென்று கூறினாய், எம்மை தேறாது உவலை ஆம் மதத்தில் பட்டோர் இடும்பை நோய் உழப்பர் கண்டாய் - எம்மைப் பரமெனத்தெளியாது சுழற்சியமைந்த கொள்கையிற் சிக்குண்டோர் துன்பநோயில் எக்காலத்தும் வருந்துவர் நீயே காணாய்.

வினையோரைப் பரம் எனத்தெளிந்தோரை உவலையாமதத்திற்பட்டோர் என்றார். எம்மைப் பரமெனத் தேறார் அடைவதை—

"மாயவற்குமலர்மகற்குமுருத்திரதேவன்குறைந்தமாண்பனென்றும்
நேயமுறுசமமானேனென்றுமுளத்திடைநினைப்போர்நீத்தற்கொணாத்
தீயநரகிடைவீழ்வாரிருவருக்குமுருத்திரனேசிறந்தோனென்று
தூயமனத்திடைநினைவார்முத்தியெனும்பெருவாரிதொளைத்துவாழ்வார்" எனச்சூதசங்கிதையில் வருதல்காண்க. (௬௮)

வடிவுடையெமதிடப்பால்வந்தவன்மாயனேனைக்
கடிமலர்ப்பொருட்டுமேயகடவுளெம்வலப்பால்வந்தோ
னிடிபுரிதகையோயின்னவிருவருமெம்பாலன்பா
மடியவர்க்கடிமைபூண்டேயணுக்கராயமர்வர்கண்டாய்.

(இ-ள்.) மாயன் வடிவு உடைய எமது இடப்பால் வந்தவன்-திருமால் வடிவம் அமைந்த எமதிடப் பாகத்திற் றோன்றினவன், ஏனை கடி மலர் பொருட்டு மேய கடவுள் எம் வலம் பால் வந்தோன்-அவனொழிந்த வாசமிக்க மலரிற்றோன்றிய பிரமன் எமது வலப்பாகத்திற் றோன்றினவன், இடி புரி தகை யோய் இன்ன இருவரும் எம்பால் அன்பு ஆம் அடியவர்க்கு அடிமை பூண்டே அணுக்கராய் அமர்வர் கண்டாய் - உறுதி மொழிகூறுந் தன்மையையுடையோய் இந்த இருவரும எமதிடத்தன்புபூண்ட அடியார்க்கு அடிமைத்திறம்பூண்டே யெமக்கு அணுக்கராயிருக்கின்றனர் நீ யதனைக்காணாய்.

புரிதல் இடைவிடாது செய்தல். (ருக)

கற்பங்கடோறுந்தோன்றுங்கணக்கிலாப்பிரமர்மாயர்
முற்பொன்றுதலைகள்கோத்துநாற்றியமுளிபுன்மாலை
பொற்பொன்றுநமதுசென்னிபுயமரைசரணமெங்குஞ்
சிற்பங்கள்விளங்கப்பூண்டதிறமிதுநோக்கிக்காணாய்.

(இ-ள்.) கற்பங்கள் தோறும் தோன்றும் கணக்கு இல்லாத பிரமர் மாயர் முன் பொன்று தலைகள் கோத்து நாற்றிய முளி புன் மாலை - கற்பங்கள்தோறுந் தோன்றிய அளவிறந்த பிரமர்களுந் திருமால்களு முன்பழிந்தகாலையில் அவர்கள் தலைகளைக்கோத்துத் தொங்கவிட்ட உலர்ந்த புல்லிய மாலைகள், பொற்பு ஒன்று நமது சென்னி புயம் அரை சரணம் எங்கும் சிற்பங்கள் விளங்க பூண்ட திறம் இது நோக்கி காணாய் - அழகமைந்த நமது சிரம் தோள் இடை பாதமாகிய எவ்விடத்தும் சிற்பத்தொழில் விளங்க நாம தரித்தவகையை அறிவுகூர்ந்து காணாய்.

அடியில் வருஞ் செய்யுளோடு முடிதலால் ஒருதொடர். இது பகுதிப்பொருள் விகுதி. (௬0)

மாண்டவிண்ணவர்களெற்புமாலையும்பலவும்பூண்டே
மீண்டிவைபூண்டதெற்றுகென்றியேனின்போல்வார்க்குப்
பூண்டமாலொழிப்பானன்றோர்பொன்றுறுமநித்தவாழ்வுங்
காண்டகுமெமதுநித்தத்தன்மையுங்காட்டக்கண்டாய்.

(இ-ள்.) மாண்ட விண்ணவர்கள் என்பு மாலையும் பலவும் பூண்டு மீண்டு இவை பூண்டது எற்றுக்கு என்றியேல் - அழிந்த அத்தேவர்களுடைய எலும்புமாலையையும் பலவற்றையும் பூண்டு மீளவும் கண்ணெலும்புமுதலிய இவற்றைப்பூண்டது யாதுக்கு என்று வினவுவாயாகில், நின்போல்வாாக்கு பூண்ட மால் ஒழிப்பான் அன்னோர் பொன்றும் அநித்தவாழ்வும் காண்டகும் எமது நித்த தன்மையும் காட்ட கண்டாய் - உன்னையொத்த தேவர்முதலியோர்க்கெழுந்த அகந்தையையொழிக்க அப்பிரமர் முதலியோர் அழியும் அநித்தவாழவையுங் காணத்தக்க எமது நித்தியத்தன்மையையுந் தெரிவிக்கக் காணாய்.

கண்டாய் துணிவுப்பொருட்கண்வந்த காலவழுவமைதி. கண்ணெலும்புமுதலியவற்றைப் பூண்டதை முன்னர்க்கூறிய "நரமடங்கல்மீன்" எனவருஞ் செய்யுளால் உணர்க. பல என்றது அவர்கள் சிகையை உபவீதமாயணிதல் முதலியவற்றை.

" ஆதலாற்றனெவியப்பதற்கன்றவையணிதல்
ஈதலாதொருதிறமுளதியாவருமெவர்க்கு
நாதனேயிவனென்றுதன்பாங்கரோநண்ணித்
தீதெலாமொரீஇமுத்திபெற்றுய்ந்திடுஞ்செயலே" எனக் கந்தபுராணத்திலும் வருதல் காண்க. (௬௧)

சொன்மறைமுடிபுதேறுந்தூயருட்டலைவனீயே
பன்முறையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குமெம்மை
நன்மைகூர்வழிபாடாற்றிமுத்தியினண்ணுகென்றுப்
புன்மருளகலநல்கிமறைந்தனன்பூதநாதன்.

(இ-ள்.) சொல் மறை முடிபு தேறும் தூயர் உள் தலைவன் நீயே - சொல்லமைந்த வேதசிரசினுட்கிடையைத்தெளியு முனிவர்களுள் சிரேஷ்டன் நீயே, பல்முறை உலகம் எல்லாம் படைத்து அளித்து அழிக்கும் எம்மை - பலமுறையும் உலகமெல்லாவற்றையுஞ் சிருட்டித்துக் காத்தழிக்குமெம்மை, நன்மை கூர் வழிபாடு ஆற்றி முத்தியில் நண்ணுக என்று பூதநாதன் புல் மருள் அகல நல்கி மறைந்தனன் - நன்மைமிக்க தொண்டுசெய்து மோக்ஷத்திலடையக்கடவாயென்று பூதகணநாதனாகிய இறைவன் அற்பமாகிய மயக்கம் நீங்கக் கருணைசெய்து மறைந்தருளினன்.

தேவதாருவனமுனிவர் கொல்ல வேவிய பூதகணங்கள் சிவபிரானிடத்து வர அவைகளை நோக்கி நீங்கள் நமக்குச் சேனையாகவென்றருள அவ்வாறே சேனையாயமைந்து நிற்றலால் பூதநாதன் என்றார்.

"ஆரிடரோவல்போற்றியண்டமுந்துளங்கவார்த்துச்
சாரதர்வருதலோடுஞ்சங்கரனவரைநோக்கி
நீரொமையகன்றிடாதுநித்தலுந்தானையாகிச்
சேருதிரொன்றுனூற்றோர்தீவினைநீக்கவல்லான்" எனக் கந்தபுராணத்தில் வருதல் காண்க. பஞ்சபூதங்களுக்கு நாயகன் எனினும் அமையும். (௪௨)

நாயகன்கிளந்தவெல்லாங்கேட்டுளநடுங்கியஞ்சித்
தீயனேனந்தோகெட்டேனென்னிதுசெய்தேனிந்நா
ளேயுமிம்மடமைக்கேதியாதெனவியாதனெண்ணி
யாயதோர்மூர்த்தமெம்மானடியிணைசிந்தைசெய்து.

(இ-ள்.) நாயகன் கிளந்த எல்லாம் கேட்டு உள்ளம் நடுங்கி அஞ்சி தீயனேன் அந்தோ கெட்டேன் இது என்செய்தேன்-இறைவன் திருவாய்மலர்ந்தருளிய மெய்ம்மொழிகளை எல்லாங்கேட்டு மனம் நடுங்கிப் பயந்து கொடியேனாகிய யான் ஐயோ கெட்டேனே இது என்னகாரியஞ்செய்தேன், இ நாள் ஏயும் இ மடமைக்கு ஏது யாது என்ன வியாதன் ஆயது ஓர் மூர்த்தம் எண்ணி எம்மான் அடி இணை சிந்தை செய்து - இக்காலையிற்பொருந்திய இந்த அறியாமைக்குக் காரணம் யாதென்று அமைந்த ஒரு முகூர்த்தகாலம் வியாதமுனிவன்கருதி எமது இறைவனது இரண்டுதிருவடிகளையுஞ்சிந்தித்து.

அறியாமையால் வந்த பழிக்குத் தீர்வு யாதுகாரணமென்று சிறிதுபொழுது ஆலோசித்தனன் ஆதலால் ஓர்மூர்த்தம் எண்ணியென்றார். (௪௩)

விருதுடைக்காசிவைப்பின்விச்சுவநாதன்யார்க்கு
மருள்வதுமெய்யேயாகுமாயினுமீங்குவாழ்வார்
தெருமரத்தேவர்கூடியூறுகள்செய்பவென்ப
விருவினையுடையேனிங்குவைகுதற்கிடையூறீதால்.

(இ-ள்.) விருது உடைய காசி வைப்பின் விச்சுவநாதன் யார்க்கும் அருள்வது மெய்யே ஆகும் ஆயினும் - வெற்றியமைந்த காசியென்னுந் திருப்பதியில் விசுவேசர் எவர்க்கும் கருணைசெய்வது உண்மையேயாம் ஆனாலும், ஈங்கு வாழ்வார் தெருமர தேவர் கூடி ஊறுகள் செய்ப என்ப - இவ்விடத்து வாழ்வோர்மனச்சுழற்சியடையத் தேவ

ர்கள்கூடி யிடையூறு செய்வார்களென்று பெரியோர் சொல்லுவார்கள், இருவினையு டையேன் இங்கு வைகுதற்கு ஈது இடையூறு - ஆதலால் நல்வினை தீவினையென்னும் இருவினையுடையேன் இங்கு வசித்தற்கு ஈதோர் இடையூறாம்.

காசியில் வசிப்போர்க்குப் புண்ணிய மேலிடுதற்கஞ்சி இந்திரன்முதலியோர் கூடி அப்புண்ணியத்திற்கு இடையூறு தேடுதலால் தேவர்கூடி யூறுகள்செய்ப என்றார்.

தீராப்பாதகமுடையோர்க்கு மரணகாலத்தில் பிரமதாரகமுபதேசித்து முத்தி யிற்புகுத்தலால் விச்சுவநாதன் யார்க்கும் அருள்வது மெய்யேயாகும் என்றார்.

" மேவருதெய்வக்கங்கைசூழ்காசிவிருப்பமிக்கதுநமக்கென்றும்
ஆவயினுடம்பினீங்குமெவ்வுயிர்க்குமருள்செறிபிரமதாரகத்தை
ஓவறவுணர்த்திமுத்தியீத்திடுவோமொப்பிலத்தலத்திடையொழியாப்
பாவவல்லுயிர்க்குமரணத்தான்முத்திபயப்பதற்கையமொன்றின்றே" எனச் சூதசங் கிதையில் வருதல் காண்க. முக்காலத்திலும் அருள்வது மெய்ம்மையாதலால் ஆகும் என முக்காலத்திற்கும் பொதுவினைதந்து கூறினர். (சச)

இடையறுகாசிமூதூர்தன்னினுமிருமைசான்ற
விடையறுக்காஞ்சிமூதூரெம்பிராற்கினியதாகு
மிடையொசிமுலையாள்பாகன்கருணையாலெவாக்குமவ்வூ
ரிடையிடையூறொன்றின்றிமுத்திவீடெளிதினெய்தும்.

(இ-ள்.) இடை அறு காசி மூதூர் தன்னினும் இருமை சான்ற இடையறாத காஞ்சிமூதூர் எம்பிராற்கு இனியது ஆகும் - சார்ந்தார்க்கு அருளுதலில் பின்னிடுதலி ல்லாத காசியென்னும் தொன்றுதொட்டுள்ள திருப்பதியைப்பார்க்கினும் இம்மை மறு மையின்பங்கள் நிறைதலால் அவ்வின்பம் நீங்காத காஞ்சியென்னும் தொன்றுதொட்டு ள்ள திருப்பதியானது எமது பெருமானுக்கு இனியதாம், இடை ஒசி முலையாள் பாக ன் கருணையால் எவர்க்கும் அ ஊர் இடை இடையூறு ஒன்று இன்றி முத்திவீடு எளிதி ன் எய்தும் - இடைமுறிதற்குக் கருவியாகிய தனத்தையுடைய உமையம்மையை யிடப் பாகத்திலுடைய அவ்விறைவரது திருவருளால் யாவர்க்கும் அவ்வூரிடத்து இடையூறு சிறிதுமில்லாமல் மோக்ஷவீடு எளிதில் வந்தடையும்.

வைரவர் காவலால் தேவர்செய்யும் இடையூறில்லையென்பார். இவ்வூர்-இடை யிடையூறொன்றின்றி முத்திவீடெளிதினெய்தும் எனவும், ஏனைத்தலங்களிலும் இத்தல ம் என்றுஞ் சிறந்ததென்பார் எம்பிராற்கினியதாகுமெனவுங்கூறினர். சான்ற காரணப் பொருளில்வந்த இறந்தகாலப்பெயரெச்சம். (சரு)

காசியினிறப்பமுத்திகாஞ்சியைநினைப்பமுத்தி
யாசறவுதவுமென்னுமருமபொருடுணிந்துசிந்தை
மாசுதீர்முனிவர்கோமான்விரைந்துமாணுக்கரோடுந்
தேசினுற்றிசைபோங்காஞ்சித்திருநகரடைந்தான்மன்னோ.

(இ-ள்.) காசியின் இறப்ப முத்தி காஞ்சியை நினைப்பமுத்தி ஆசு அற உதவும் என்னும் அரும்பொருள் துணிந்து - காசியினிறத்தலால் முத்தியுங் காஞ்சியை நினைத் தலால் முத்தியுங் குற்றமற அத்திருப்பதிகள் தருமென்னும் அரிய பொருள்முடிபை யாராய்ந்து, சிந்தை மாசு தீர் முனிவர் கோமான் விரைந்து மாணுக்கரோடும் தேசினு ல் திசைபோம் காஞ்சி திருநகர் அடைந்தான் - மனக்கோட்டத்தினின்று நீங்கிய முனி வர் தலைவனாகிய வியாதமுனிவன் விரைந்துசென்று தனது மாணுக்கரோடும் புகழினுற் றிசையளவுஞ்சென்ற காஞ்சியென்னுந் திருநகரை யடைந்தனன்.

வேதாகமங்களின் முடிபு இதுவாதலால் ஆசறவுதவும் என்னும் அரும்பொருணெனிந்து என்றார். இறப்ப, நினைப்ப செயல்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். (சசு)

திகழ்சிவகங்கையாடித்தேமலரொருமாமூலப்
பகவனைவழிபாடாற்றிமஞ்சணீர்நதியின்பாங்கர்
நிகழ்மணிகண்டநாதநெடுந்தகைநிருதிவைப்பிற்
றகவினாலினைத்துச்சார்ந்தார்சார்பினுன்றனைத்தாபித்து.

(இ-ள்.) திகழ் சிவகங்கை ஆடி தேமலர் ஒருமா மூலம் பகவனை வழிபாடு ஆற்றி - விளங்குஞ் சிவகங்கையில் நீராடித் தேன்மிக்க மலர்கள் நிறைந்த ஒப்பில்லாத மாமரத்தினடியி லெழுந்தருளிய இறைவனை வழிபாடுசெய்து பூசித்து, மஞ்சள் நீர் நதியின்பாங்கர் நிகழ் மணிகண்டநாதன் நெடுந்தகை நிருதிவைப்பில் - மஞ்சள் நீர் நதியின் பக்கத்து விளங்கு மணிகண்டநாதனென்னு மழியாத தன்மையையுடைய அவ்விறைவருக்குத் தென்மேற்குத்திசையில், தகவினால் இனைத்துச் சார்ந்தார் சார்பினான் தனை தாபித்து - ஆகமமுறையால் இனைத்துச் சார்ந்தார் சார்பினான் என்னுந் திருநாம முடையவனைத் தாபனஞ்செய்து. (சஎ)

விதியுளிப்பூசையாற்றிவிழைதகத்துதிக்குங்காலை
மதிபொதிசடிலமோலிவரதனுமகிழ்ச்சிபொங்கி
யெதிரொழுந்தருளிவேண்டும்வரமெவனியம்புகென்ன
முதிர்பெருங்காதனீடிமுனிவரன்வேண்டுகிற்பான்.

(இ-ள்.) விதி உளி பூசை ஆற்றி விழைதக துதிக்கும் காலை - ஆகமவிதியாற் பூசித்து இறைவர் விருப்பங்கூரத் துதிக்குங் காலத்தில், மதி பொதி சடில மோலி வரதனும் மகிழ்ச்சி பொங்கி எதிர் எழுந்தருளி வேண்டும் வரம் எவன் இயம்புகஎன்ன- இளஞ்சந்திரனை யணிந்த சடாமகுடத்தையுடைய அவ்விறைவரு மகிழ்ச்சிகூர்ந்து எதிரே காட்சிகொடுத்தருளி வேண்டும் வரம் யாது அதனைக் கூறுயென்றருள, முதிர் பெருங்காதல் நீடி முனிவரன் வேண்டுகிற்பான் - முறுகிய பேரன்பு மீதூர்தலால் முனிசிரேட்டனாகிய வியாதமுனிவன் வேண்டுவான்.

இயம்புக என்னும் வியங்கோளீறு தொகுத்தல். உளி மூன்றும்வேற்றுமைச் சொல்லுருபாதலால் "இயல்புளிக்கோலோச்சும்" எனவருதல்போல வருமொழி வல்லெழுத்துமிக்கது. இயல்பாதலும் மிகுதலும் தொடர் குறித்த பொருள் குறித்தற்கன்றோ? அங்ஙனமாக இங்கு மிக்க விடத்துத் தொடர்குறித்த பொருள் வேறுபட்டதுண்டோ? அன்றி வழக்கிற்கு மாறுபட்ட துண்டோ? இஃது சிறிது முணராது இயல்பாமெனத் திருத்தினவர் எங்கு இலக்கணங் கற்றனரோ? யாம் அறியோம்,யாம் அறியோம்,(சஅ)

ஐயனேயினைத்துச்சார்ந்தேற்கரும்பெறற்சார்பாமிந்தத்
தெய்வலிங்கத்துநாளுஞ்செழித்துவீற்றிருந்துஞால
முய்வகையவரவர்க்குவேட்டனவுதவாய்நின்றூண்
மெய்வகைப்பத்திநாயேற்கருளிவைவேண்டுமென்றான்.

(இ-ள்.) ஐயனே இனைத்து சார்ந்தேற்கு பெறல் அரும் சார்பு ஆம் இந்த தெய்வ லிங்கத்து நாளும் செழித்து வீற்றிருந்து - ஐயனே யினைத்தடைந்த எனக்குப் பெறதற்கரிய சார்பாய் முளைத்தெழுந்த இந்தத் தெய்வத் தன்மையையுடைய சிவலிங்கத்தி லெந்நாளும் பிரியாது நிகரற்றிருந்து, ஞாலம் உய் வகை அவரவர்க்கு வேட்டன உதவாய்- உயிர்கள் பிழைக்கும் வண்ணம் அவரவர்களுக்கு விரும்பினவைகளைத் தந்தருளாய்,நின்

தான் மெய் வகை பத்தி நாயேற்கு அருள் இவை வேண்டும் என்றான் - உனது திருவடியில் உண்மை யமைந்த தலை அன்பினை நாயிற் கடைப்பட்ட எனக்கருளாய் இவை தான் அடியேனுக்கு வேண்டுமென்று குறையிரந்தான். (சக)

அவ்வரமுழுதுமந்நாள்வியாதனுக்கருளியெங்கோன்
பௌவநீருலகம்போற்றப்பைத்தபாம்பல்குற்செங்கேழ்க்
கொவ்வைவாய்க்களபக்கொங்கைக்குலவரைப்பிடியினோடுஞ்
செவ்விதின்வியாதசார்ந்தாச்சிரயமாவிலிங்கத்துற்றான்.

(இ-ள்.) அவரம் முழுதும் அநாள் வியாதனுக்கு எங்கோன் அருளி - அந்த வரமுற்று மக்காலையில் வியாத முனிவனுக்கு எங்கோன் தந்தருளி, பௌவம் நீர் உலகம் போற்ற பைத்த பாம்பு அல் குல் செம் கேழ் கொவ்வை வாய் களபம் கொங்கை குல வரை பிடியினோடும் - கடல் சூழ்ந்த உலகு போற்ற விரித்த பாம்பின் படத்தை யொத்த அல் குலையுஞ் செந்நிறம்வாய்ந்த கோவைக் கனிபோன்ற திருவாயினையுங் கலவைச்சாந்தணிந்த திருத்தனத்தையுமுடைய நன்மையமைந்த இமயமலையிற்றோன்றிய பெண்யானையையொத்த உமையம்மையோடும், செவ்விதின் வியாத சார்ந்தாச்சிரயமா இலிங்கத்து உற்றான் - செவ்விதாக வியாத சார்ந்தாச் சிரயமென்னுந் திருப்பெயர் வாய்ந்த மகத்துவம் அமைந்த சிவலிங்கத்துள் மறைந்தருளினன். (ருo)

முழுதுணர்கேள்விசான்றவியாதனேமுறைமைமாறிப்
பழுதுபூண்டிவ்வாறெள்ளப்பட்டனனென்னிலன்றோ
வழுவறுநூலொன்றானுமுள்ளவாறுணரமாட்டா
விழுதையோர்தெளிவர்கொல்லோவிருவருக்கரியானுண்மை.

(இ-ள்.) முழுது உணர் கேள்வி சான்ற வியாதனே முறைமை மாறி பழுது பூண்டு இ ஆறு எள்ளப்பட்டனன் என்னில் - முற்று முணர்ந்த கேள்வியில் வல்ல வியாதமுனிவனே முறையினின்று மாறிக் குற்றம்பூண் டிவ்வாறாகப் பலராலும் இகழப்பட்டானானால், அன்றோ வழு அறு நூல் ஒன்று ஆயினும் உள்ள ஆறு உணரமாட்டாத இழுதையோர் இருவருக்கு அரியான் உண்மை தெளிவர் கொல் ஓ-ஐயோ குற்றத்தினின்று நீங்கிய ஒரு நூலையாயினும் உள்ளபடி யறியமாட்டாத அறிவில்லோர் பிரமன் றிருமாலிருவருக்கு மறிதற்கரிய இறைவனது உண்மையைத் தெளிந்தறிவாரோ. (அறியார் என்றபடி.)

ஒருபொருளை மற்றொரு பொருளாகத்துணியும் விபரீதமும், பல தலைப்படவுணரும் ஐயமுமாகிய மயக்கவுணர்ச்சியோடுணர்ந்தவரென்பார் உள்ளவாறுணரமாட்டா என்றார். ஒருபொருளை மற்றொருபொருள் எனத் துணிதல் குற்றியை மகனென்றுணர்தல். பல தலைப்பட வுணர்தலாவது பழுதையைக்கண்டு பழுதையோ, பாம்போவெனத் துணியாது நிற்றல். (ருக)

சார்ந்தாசயப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - எருo.

## சத்ததானப்படலம்.

சாத்திரம்வல்லவியாதனையாண்டருள்சார்ந்தாரைக்
காத்தபிரான்றிறமிங்கிதுகட்டுரைசெய்தேமா

லேத்தருமஞ்சணதிப்புடையேழ்முனிவோரெந்தாய்
சோத்தெனவேத்தியவேழிடமேயவளஞ்சொல்வாம்.

(இ-ள்.) சாத்திரம் வல்ல வியாதனை ஆண்டருள் சார்ந்தாரை காத்த பிரான் இறம் இது இங்கு கட்டுரை செய்தேம் - பலநூல்களிலுந்தேர்ந்த வியாதமுனிவரை யாண்டருளுஞ் சார்ந்தாரைக்காத்த பிரானாகிய இறைவனது அருட்டிறமாகிய இதனை யிவ்விடத்துக்கூறினோம், எத்து அரும் மஞ்சள் நதிபுடை ஏழ் முனிவோர் எந்தாய் சோத்து என்ன ஏத்திய ஏழ் இடம் மேய வளம் சொல்வாம் - துதித்தற்கரிய மஞ்சள் நதிதீரத்தில் ஏழுமுனிவர்களும் என் தந்தையே வந்தனமென்று துதித்த சத்ததானங்களிற்பொருந்திய வரலாற்றைக்கூறுவாம்.

சோத்தம் இழிந்தோர் செய்யும் வந்தனம். (க)

அத்திரிகுச்சன்வசிட்டனருட்பிருகுப்பாசங்
கைத்துயர்கௌதமர்காசிபரோடங்கிராவென்றேழ்
மெய்த்தவரும்பனிசூழிமயக்கிரிமேன்முன்னா
ளுத்தமமானவருந்தவமாற்றலுறுங்காலை.

(இ-ள்.) அத்திரி குச்சன் வசிட்டன் அருள் பிருகு பாசம் கைத்து உயர் கௌதமர் காசிபரோடு அங்கிரா என்ற ஏழ் மெய் தவரும் - அத்திரியுங் குச்சனும் வசிட்டனுங் கருணைவாய்ந்த பிருகுவும் பாசபந்தத்தை வெறுத்துயர்ந்த கௌதமனுங் காசிபனும் அங்கிராவுமென்று சொல்லப்பட்ட ஏழென்னு மிலக்கத்தையுடைய உண்மைவாய்ந்த முனிவர்களும், பனிசூழ் இமயம் கிரிமேல் முன் நாள் உத்தமம் ஆன அருந்தவம் ஆற்றலுறும் காலை - பனிசூழ்ந்த இமயமலையின்மேல் முன்னாளில் நன்மையான செய்தற்கரிய தவத்தைச்செய்யுங்காலையில்.

ஓடு எண்ணொடு. என்ற என்னும் பெயரெச்சத்தினீறுதொக்கது. (உ)

ஆயிதழம்புயவாழ்க்கைநெடுந்தகையாங்கெய்தி
நீயிர்விழைந்தமைகூறுமினென்றலுநேர்போற்றிப்
பாயிருள்சீத்துவிளங்கொளிகான்றெழுபானுப்போன்
மீயுயர்தோற்றமுறுந்தவவேந்தர்விளம்புற்றார்.

(இ-ள்.) ஆய் இதழ் அம்புயவாழ்க்கை நெடுந்தகை ஆங்கு எய்தி நீயிர் விழைந்தமை கூறுமின் என்றலும் - ஆராய்ந்த இதழையுடைய தாமரைமலரில் வாழும் பிரமனவ்விடத்தடைந்து நீங்கள் விரும்பினவற்றைக் கூறுங்களென்று கூற, நேர் போற்றி பாய் இருள் சீத்து விளங்கு ஒளி கான்று எழு பானுபோல் மீ உயர் தோற்றம் உறும் தவம் வேந்தர் விளம்புற்றார் - நேரே துதித்துப் பரவிய இருளைக்கெடுத்து விளங்குமொளியைப் பரப்பியெழுந்த சூரியனைப்போல மேம்பட்டுயர்ந்த தோற்றமிக்க தவத்தையுடைய முனிவர்கள் கூறுவார்கள்.

தெளிவுபற்றி எதிர்காலத்தை இறந்தகாலமாக விளம்புற்றார் எனக் கூறியது துணிவுபற்றிவந்த காலவழுவமைதி. (ங)

முதுக்குறைவாளர்பெறத்தகுமுத்தியருட்செல்வ
மதிக்குறைவுற்றுழல்வோர்களுமற்றெளிதிற்கூடப்
புதுக்குமுபாயமெமக்கருளென்னமலர்ப்போதன்
விதுக்குறைசூடிமலர்ப்பதமேத்திவிரிக்கின்றான்.

(இ-ள்) முதுக்குறை வாளர் பெற தகு முத்தி அருள் செல்வம் மதி குறைவு உற்று உழல்வோர்களும் எளிதில் கூட புதுக்கும் உபாயம் எமக்கு அருள் என்ன - பேரறிவுடையோரடையத் தகுமுத்தியாகிய அருட்செல்வத்தைச் சிற்றறிவுடையராய் வருந்திச்சுழலும் பேதையரு மெளிதாகக்கூடப் புதுக்காநின்ற உபாயத்தை யெமக்கருளாயென்று வேண்ட, மலர் போதன் விது குறை சூடி மலர் பதம் ஏத்தி விரிக்கின்றான் - தாமரைமலரில் வசிக்கும் பிரமன் இளஞ்சந்திரனையணிந்த இறைவனது மலர்போன்ற திருவடிகளைத்துதித்து விரித்துக்கூறுகின்றான்.

முதுக் குறைவுடையோரடையக்கூடு முத்தியை முதுக்குறைவில்லாரடையச் செய்யும் உபாயம் வியக்கத்தக்கதாதலால் புதுக்கும் உபாயம் என்றார். (ச)

பற்றிகலற்றுக்குற்றமில்சிந்தைப்பனவீர்காள்
கற்றுயர்காட்சிக்கொற்றமிலோருங்கருநோய்தீர்
பெற்றியினுற்றுப்பெறலருமுத்திப்பேறெய்து
மற்றமிலேதுக்கேண்மினுமக்கின்றறைகிற்பேன்.

(இ-ள்.) பற்று இகல் அற்று குற்றம் இல் சிந்தை பனவீர்காள் - விருப்பு வெறுப்பற்றுக் குற்றத்தினின்று நீங்கிய மனத்தையுடைய முனிவர்களே, கற்று உயர் காட்சி கொற்றம் இல்லோரும் கருநோய் தீர் பெற்றியின் உற்று பெறல் அரும் முத்தி பேறு எய்தும் அற்றம் இல் ஏது கேண்மின் உமக்கு இன்று அறைகிற்பேன் - பலநூல்களைக் கற்றுயர்ந்த அறிவின் வெற்றி சிறிதும் இல்லோரும் சனனமாகிய நோயினின்றும் நீங்கிய தன்மையில் மேம்பட்டுப் பெறுதற்கரிய முத்திப்பலனையடையுங் குற்றமில்லாத காரணத்தைக் கேளுங்கள் உமக்கு இப்பொழுது கூறுவேன்.

கற்றுவல்லோர்க்கு வெற்றி நுண்ணறிவேயாதலால் காட்சிக்கொற்றம் எனவும், இல்லார் என்னும் எதிர்மறை வினைமுற்றால் சொல்லெச்சமாய் நின்ற உடையோர் என்னுங் குறிப்பு வினைமுற்றுப்போதரலால் பெறலருமுத்தியெனவுங்கூறினார். பதிஞானத்தாலன்றிக் கற்றறிவு சொற்பிரபஞ்சமாகிய பாசஞானமாதலால் பெறுதற்கரிதாதலின் கொற்றமுடையோரும் பெறலருமுத்தியென்றார்.

"நூலுணர்வுணராதுண்ணியோன்காண்க" எனவும், "பாசஞானத்தாலும்பசுஞானத்தாலும் பார்ப்பரியபரம்பரனை" எனவும் பெரியோர்களும் பணித்தருளுதல் காண்க. (ரு)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

தருமமென்றியம்புமொன்றேதழல்விடம்பருகுமெங்கோன்
றிருவுளங்கருணைபூப்பச்செய்யுமவ்வருளால்யார்க்கு
மருவருமுத்திப்பேறுவாய்க்குமத்தருமந்தானு
மருள்சிவதருமமாவித்தருமமென்றிருகூறாமால்.

(இ-ள்.) தருமம் என்று இயம்பும் ஒன்றே தழல் விடம் பருகும் எங்கோன் திரு உளம் கருணை பூப்ப செய்யும் - தருமமென்று சொல்லப்பட்ட ஒரு பொருளே தீயை யொத்த விடம்பருகிய எமது இறைவனது திருவுளம் அருள் பூப்பச் செய்யாநிற்கும், அ அருளால் மருவரு முத்திபேறு வாய்க்கும் - அத்திருவருளா லெவர்க்கு மடைதற்கரிய முத்திப்பேறு கிடைக்கும், அ தருமம் தானும் அருள் சிவ தருமம் ஆவி தருமம் என்று இரு கூறு ஆம் - அத்தருமமும் அருள் வடிவாகிய பதி புண்ணியமென்றும் பசு புண்ணிய மென்றும் இருவகைப்படும்.

தருமத்தால் சித்தசுத்தியும், சித்தசுத்தியால் சாந்தியும், சாந்தியா லட்டாங்கயோகமும் உண்டாதலால் தருமமென்றியம்புமொன்றே தழல்விடம்பருகுமெங்கோன்-திருவுளங்கருணைபூப்பச்செய்யும் எனவும், அத்தருமஞ்செய்வோர் யாவராயினும் அத்திருவருளால் முத்தியையடைதலால் அவ்வருளால் யார்க்கு மருவருமுத்திப்பேறவாய்க்கும் எனவும், அத்தருமம் இரண்டுவகைப்படுதலால் அருள் சிவதருமமாவித்தருமமென்றிருகூறுமால் எனவுங்கூறினர்.

"கருமத்தான்ஞானமுண்டாங்கருமத்தைச்சித்தசுத்தி
தருமத்தாலிகந்தசுத்தியைத்தருமநல்கும்
அருமைத்தாந்தருமத்தாலேசாந்தியுண்டாகுமாண்ட
பெருமைத்தாஞ்சாந்தியாலேபிறப்பதட்டாங்கயோகம்" எனவரும் திருவிளையாடற்புராணத்தால் அறிக. (௬)

பளகறுமிட்டியாதிபசுதருமங்கள்காலத்
தளவையிற்கழியுமென்றும்வச்சிரவரிசிமானத்
தளர்வுறுநிலைபேறெய்துமுயர்சிவதருமமன்பா
லுளமுறச்சிவனையெண்ணன்முதற்பலவுளவாமன்றே.

(இ-ள்.) பளகு அறம் இட்டியாதி பசு தருமங்கள் காலத்து அளவையில் கழியும்-குற்றமற்ற வேள்விமுதலிய பசுபுண்ணியங்கள் வரையறுத்தகாலத்திலழியும், என்றும் வச்சிர அரிசி மான தளர் உறுத நிலை பேறு எய்தும் உயர் சிவதருமம் - எக்காலத்தும் வயிர அரிசியையொப்பத் தளராத நிலைபெறும் உயர்ந்த சிவதருமமானது, அன்பால் உளம் உற சிவனை எண்ணல் முதல் பல உள ஆம் - அன்பினால் மனத்திற்பொருந்தச் சிவனைத் தியானித்தல் முதலாகப் பலவகைப்படும்.

யாகமுதலிய சற்கருமங்களால் வரும் சுவர்க்காதிபயன்களை யுள்ளடக்கிப் பளகறுமிட்டியாதி பசுதருமங்கள் எனவும், அப்பயன்கள் அத்தருமத்தளவு வரையறைப்பட்டிருத்தலால் காலத்தளவையிற்கழியும் எனவும், வயிரத்தாற்செய்த வரிசி ஏனைய இரத்திநங்களால் அழியாது நிலைபெறுதல்போலச் சிவதருமத்தால் வந்த பயன் என்று நிலைபேறுடைமையால் வச்சிரவரிசிமானத் - தளர்வுறுநிலைபேறெய்தும் எனவும், அச்சிவதருமம் கொல்லாமை, பொறுமை, உண்மைகூறல், பழிபாவங்களுக்கு நாணுதல், புண்ணியங்களிலே மிக்க விருப்பம், மனமுதலியவற்றை யொடுக்கல், சற்பாத்திரங்களிற் கொடுத்தல், தவம், சிவார்ச்சனை, சதா சிவாதிவிக்கிரங்களைத் தியானித்தல் எனப் பத்துவகைப்பட்டுப் பிரதிட்டைமுதலிய பலவகைப்படுதலால் சிவனை யெண்ணன்முதற் பலவுளவாம் என்றார்.

ஏனைய இரத்திநங்களா லழியாமையை—

"வயிரவூசியுமயன்வினையிரும்புஞ் - செயிரறுபொன்னைச்செம்மைசெய்யாணியுந்
தமக்கமைகருவியுந்தாமாமவைபோல்-உரைத்திறமுணர்த்தலுமுரையதுதொழிலே"
எனவரும் அகத்தியத்தாலும்,

கொல்லாமை முதலிய சிவதருமங்கள் பத்துவகைப்படும் என்பதை—

"அயிங்கிஷைதபொறையேமெய்ம்மையறைதலேயரியநாணே
உயர்ந்தவாதரவேயுள்ளமொடுக்கலேகொடுக்கைதானே
வியந்தவர்ச்சனையேமெய்யூன்வெறுத்துறுதவமேமேனி
நயந்தபாவனையேயென்னத்தருமிவைநான்றெந்நாளும்" எனவரும் சிவதருமோத்தரத்தாலும் உணர்க. (௭)

சிவலிங்கப்பதிட்டைசெய்தலெவற்றுளுஞ்சிறந்ததாகுஞ்
சிவபத்தர்பதிட்டைதானுமன்னதேயிவைதாஞ்செல்வச்
சிவனமர்தலங்கடம்மிற்செய்பயன்கோடிமேலாஞ்
சிவநிறைகாஞ்சிவைப்பிற்செய்திடினனந்தகோடி.

(இ-ள்.) சிவலிங்கம் பதிட்டை செய்தல் எவற்றுளும் சிறந்தது ஆகும் சிவபத்தர் பதிட்டை தானும் அன்னதே - சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தல் எல்லாத் தருமங்களினு மேம்பட்டதாம் சிவனடியார் பிரதிஷ்டையும் அத் தன்மையதே, இவை தாம் செல்வம் சிவன் அமர் தலங்கள் தம்மில் செய்பயன் கோடி மேலாம் - இவ்விரண்டையும் அருட் செல்வத்தையுடைய சிவபெருமானெழுந்தருளிய தலங்களில் செய்யும் பலன்கள் ஏனைத்தலங்களிற்செய்தலிலுங் கோடியினும் மேம்பட்டதாம், சிவம் நிறை காஞ்சி வைப்பில் செய்திடில் அனந்தகோடி - நன்மை நிறைந்த காஞ்சியென்னுந் திருப்பதியிற்செய்தால் அளவில்லாத கோடிபங்கு மேலாம்.

சிவலிங்கபிரதிஷ்டைசெய்தல் சிவார்ச்சனையிலும், சதா சிவாதிவிக்கிரகங்களைத் தியானித்தலிலும் அடங்குதலால் இவ்விரண்டும் ஏனைத்தருமங்களிலும் சிறந்ததென்பார் சிவலிங்கப்பதிட்டைதானு மெவற்றுளுஞ் சிறந்ததாகும் எனவும், அவனடியார் ஏனையோர்க்கு அவனோடொப்பாராதலால் சிவபத்தர் பதிட்டைதானும் அன்னதேயெனவுங்கூறினர். இங்கு மேன்மேலும் ஒன்றற்கொன்றுயர்குணத்தைக்கூறுதலால் மேன்மேலுயர்ச்சியணி. (அ)

காஞ்சியைநினைப்பிற்காசிக்கடிநகர்வசித்தபேறுங்
காஞ்சியேயெவற்றினுள்ளுஞ்சிறந்ததுகாண்மினென்னுங்
காஞ்சிசூழல்குல்வாணிகணவனூர்மொழியுட்கொண்டு
காஞ்சியையடைந்தார்மாசுகடிந்துயரெழுவர்தாமும்.

(இ-ள்.) காஞ்சியை நினைப்பில் காசி கடி நகர் வசித்த பேறு ஆம் - காஞ்சியென்னுந் திருப்பதியை நினைத்தால் காசியென்னுங் காவல்பூண்ட பெரிய நகரில் வசித்தபலனும் அதனால், காஞ்சியே எவற்றினுள்ளும் சிறந்தது காண் மின் என்னும் காஞ்சி குழ் அல் குல் வாணி கணவனூர் மொழி உள் கொண்டு - காஞ்சித்திருப்பதியே எல்லாத் திருப்பதியுள்ளு மேம்பட்டது அதனைக்கண்டு தரிசியுங்களென்றுகூறுங் காஞ்சியென்னு மாபரணத்தை யணிந்த அல்குலையுடைய கலைமகள் கணவனாகிய பிரமனது சொல்லை யுட்கொண்டு, மாசு கடிந்து உயர் எழுவர் தாமும் காஞ்சியை அடைந்தார் - குற்றத்தினின்றும் நீங்கி யுயர்ந்த சத்தமுனிவர்களுங் காஞ்சித் திருநகரையடைந்தனர்.

காஞ்சி ஏழுகோவைகளா யிடையிற்கட்டும் ஒருவகை ஆபரணம். (௯)

அருட்சிவகங்கைநன்னீராடியேகம்பவாணர்
திருப்பதந்தொழுதுமஞ்சட்செழுநதிக்கரையினெய்தி
யருத்திகூர்வியாதநாதனணிமையிற்றத்தம்பேரா
னிருத்தினரிலிங்கம்பூசையியற்றினரார்வத்தோடும்.

(இ-ள்.) அருள் சிவ கங்கை நல் நீர் ஆடி ஏகம்ப வாணர் திருபதம் தொழுது - திருவருள் வாய்ந்த நல்ல சிவ கங்கையில் முழுகி ஏகம்ப வாணரது திருவடிகளை வணங்கி, மஞ்சள் செழு நதி கரையின் எய்தி அருத்தி கூர் வியாத நாதன் அணிமையில் - செழித்த மஞ்சள் நதி தீரத்தை யடைந்து ஆன்மாக்களிடத்தில் அன்பு மிக்க சார்ந்தாரைக்காத்தபிரானூர் சமீபத்தில், தத்தம் பேரான் இலிங்கம் இருத்தினர் ஆர்வத்தோ

டும் பூசை இயற்றினர் - தத்தமக்குரிய நாமங்களால் சிவலிங்க தாபனஞ் செய்து அன்போடுஞ் சிவபூசை செய்தனர். (௧௦)

பச்சிலைபழம்போதேனும்பறித்திட்டுப்பத்திசெய்வோர்க்
கெச்சமிலிருமைப்பேறுமளித்தருளிறைவாபோற்றி
முச்சகமுதலேபோற்றிமூலைச்சுவட்டணியாய்போற்றி
நச்சினார்க்கினியாய்போற்றியெனத்துதிநவிலுங்காலை.

(இ-ள்.) பச்சிலை பழம் போதேனும் பறித்து இட்டு பத்தி செய்வோர்க்கு எச்சம் இல் இருமை பேறும் அளித்தருள் இறைவாபோற்றி - பச்சிலையாயினும் பழமலராயினுங் கொய்து அருச்சித்து அன்பு செய்வோர்க்குக் குறைவில்லாத இம்மை மறுமைப் பயனைத் தந்தருளும் இறைவனே வந்தனம், முச்சகம் முதலே போற்றி மூலை சுவடு அணியாய் போற்றி என்ன துதி நவிலும் காலை - மூன்றுலகுக்குங் காரணனே வந்தனம் உமை யம்மையினது தனச் சுவடாகிய ஆபரணத்தை யுடையவனே வந்தனம், நச்சினார்க்கு இனியாய்போற்றி - விரும்பியடைந்தவர்க்கு இனியவனே வந்தனம் என்று துதிக்

''பத்திவலையிற்படுவோன்'' ஆதலால் தன்பாற் பத்திசெய்வோர் ஆகமவிலக்காயுள்ள பொருள்களைக்கொண்டு பூசிப்பினும் அதனை நோக்கான் என்பார் பச்சிலைபழம் போதேனும் பறித்திட்டுப்பூசைசெய்வோர்க் - கெச்சமிலிருமைப்பேறுமளித்தருளிறைவா எனவும், தோன்றியழியுமாலையதென்பார் முச்சகம் எனவும், தோன்றியழியும் பொருள்களுக்குத் தோற்றமும் அழிவுமில்லாதவனே முதல்வனாவான் என்பார் முச்சகமுதலேயெனவும், ஆன்மாக்களுக்குப் போகம் ஊட்டுதற்பொருட்டே யறிகுறியாக வுமையம்மையை மணந்தருளினன் என்பார் மூலைச்சுவட்டணியாய்போற்றியெனவும், தன்னை வேண்டினவர்க்கு இன்பம் அருள்வோன் என்பார் நச்சினார்க்கினியாய் போற்றியெனவுங் கூறினார்.

''போகியாயிருந்துயிர்க்குப்போகத்தைப்புரிவதோரார்'' எனச் சிவஞானசித்தியாரிலும், ''ஆற்றேனுகவவயஞ்சுவைதரு-கோற்றேன்கொண்டுசெய்தனன்'' எனத் திருவாசகத்திலும் வருதல் காண்க. (௧௧)

ஆயிடைவெளிநின்றெம்மானத்திரிபிருகுவாதித்
தூயரைநோக்கிவைவச்சுதமனுவந்தரத்தி
னீயிரெம்மாணையாற்றுநிகழுமேழ்முனிவராமின்
மாயிருமுத்தியீற்றின்வழங்குதுமென்றுபின்னும்

(இ-ள்) ஆயிடை எம்மான் வெளி நின்று அத்திரி பிருகு ஆதி தூயரை நோக்கி - அவ்விடத்தில் எமதிறைவன் காட்சிதந்து அத்திரி பிருகு முதலாகிய புனிதசிலரைப்பார்த்து, வை வச்சுத மனு அந்தரத்தில் நீயிர் எம் ஆணை ஆறு ஆல் நிகழும் ஏழ் முனிவர் ஆமின் - வை வச்சுத மனு வந்தரத்தில் எமது ஆணை வழியால் நிகழும் ஏழு முனிவரா குங்கள், மாயிரு முத்தி ஈற்றின் வழங்குதும் என்று பின்னும் - பெரிய முத்தியை முடிவில் அருளுவோமென்று அருளி மீளவும்.

ஏழு முனிவராவார் காசிபர், கௌசிகர், பரத்துவாசர், அத்திரி, கௌதமர், வசிட்டர். (௧௨)

ஏழிலிங்கத்துமெம்மைத்தரிசித்தோர்க்கிருமைப்பேறும்
வாழ்வளித்தருள்கேமென்றுவரங்கொடுத்தகன்றனையன்
பாழ்வினையறுக்குஞ்சத்ததானத்திற்பணியப்பெற்றோ
ரூழ்வலித்தொடக்குநீங்கியும்பர்கோனடியிற்சேர்வார்.

(இ-ள்.) எழு இலிங்கத்தும் எம்மை தரிசித்தோர்க்கு இருமை பேரும் வாழ்வு அளித்தருள் கேம் என்று வரம்கொடுத்து ஐயன் அகன்றான் - எழிலிங்கத்திலும் எம்மைத் தரிசித்தவர்க்கு இகபர போகமாகிய வாழ்வினைத் தந்தருள்வோமென்று வரந்தந்து அவ்விறைவனீங்கியருளினன், பாழ்வினை அறுக்கும் சத்ததானத்தில் பணிய பெற்றோர் ஊழ்வலி தொடக்கு நீங்கி உம்பர்கோன் அடியில் சேர்வார்-சஞ்சிதவினையைப்போக்குஞ் சத்ததானத்தில் வணங்கப் பெற்றவர்கள் ஊழாகிய வலிய கட்டினின்றும் நீங்கி யவ்விறைவனது திருவடியை யடைவார்கள்.

சஞ்சிதம் தொன்றுதொட்டுவரும் வினையாதலால் பாழ்வினையென்றார். பழமையென்னும் பண்பு ஈறுகெட்டு முதனீண்டு பாழ் என நின்றது. ஊழ் ஆகுஉழ், போகூழ்களை. சஞ்சிதவினை நீங்கினோர் ஏனை வினைப்பயன்களினீங்குதல் எளிதாதலால் ஊழ்வினைத்தொடக்கு நீங்கியென்றார். (கக)

சத்ததானப்படலம் முற்றிற்று.

- எகக.

## பராசரேசப்படலம்.

ஒருபோகுகொச்சகம்.

தருமம்பிறழாதசத்ததானத்தின்
பெருமையுரைசெய்தாஞ்சத்திபெறுமைந்தன்
றருதந்தையர்க்கொன்றவரக்கர்தமதாவி
பருகவழிபட்டபாராசரஞ்சொல்வாம்.

(இ-ள்.) தருமம் பிறழாத சத்த தானத்தின் பெருமை உரை செய்தாம் - தருமத்தினின்றுந் தத்த நிலையில் மாறுபடாத சத்த தானத்தின் பெருமையைக் கூறினும், சத்தி பெறுமைந்தன் தரு தந்தையர் கொன்ற அரக்கர் தமது ஆவி பருக வழிபட்ட பராசரம் சொல்வாம் - சத்திபெற்ற புத்திரன் றன்னைப்பெற்ற சத்திமுதலாகிய தந்தையர்களைக் கொலைசெய்த அரக்கர்களுடைய பிராணனைப்பருக வழிபட்டுப்பூசித்த பராசரேசமென்னுந் திருப்பதியின் பெருமையைக் கூறுவாம்.

தருமம் என்றது பசுதருமம், சிவதருமங்களை. இடத்தினிகழ்பொருளின் றொழிலை யிடத்தின்மேலேற்றித் தருமம் பிறழாத சத்ததானம் என்றார். (க)

மத்தப்புலன்வென்றவசிட்டன்றரவந்தார்
பத்தையிருமக்கள்பதுமத்தவனொப்பார்
சத்திமுதலானோர்தகவாலிவர்வாழ்நாட்
சுத்தநெறிதேர்விச்சுவாமித்திரனென்போன்.

(இ-ள்.) மத்தம் புலன் வென்ற வசிட்டன் தரவந்தார் ஐ இருபத்து மக்களும் பதுமத்தவனொப்பார் - மயங்கிய ஐம்புலன்களை வென்ற வசிட்ட முனிவர் புத்திரராகிய நூறுமக்களும் பிரமனையொப்பாவார், சத்தி முதலானோர் இவர் தகவால் வாழ்நாள்-சத்திமுதலான அந்நூற்றுவருந் தகுதியா லிவர்வாழுங்காலத்தில், சுத்த நெறி தேர் விச்சுவாமித்திரன் என்போன் - புனிதமாகிய நன்னெறியை யாராய்ந்த விசுவாமித்திரனென்பவன். (உ)

அசித்துப்புரஞ்செற்ருேனருளானுயர்ந்தோங்கும்
வசிட்டனுடனென்றுமாறுகொண்டுள்ளான்
வசிக்குந்தவவாழ்க்கைவசிட்டன்குலமெல்லா
நசிக்கும்படியொன்றுநாடியிதுசெய்தான்.

(இ-ள்.) அசித்து புரம் செற்ருேன் அருளான் உயர்ந்து ஓங்கும் வசிட்டன் உடன் என்றும் மாறு கொண்டு உள்ளான்-புன்னகைசெய்து திரிபுரத்தை யெரித்தருளிய இறைவனது திருவருளால் மேம்பட்டுயர்ந்த வசிட்டனோடு எக்காலத்தும் பகைமை பூண்டுள்ளோன், தவவாழ்க்கை வசிக்கும வசிட்டன் குலம் எல்லாம் நசிக்கும்படி ஒன்று நாடி இது செய்தான் - தவவாழ்வில் வசிக்கும் வசிட்டனது குலங்களெல்லாம் நசிக்கும் வண்ணம் ஒன்றை ஆலோசித்து இதனைச்செய்வான்.

செய்வானெனற்பாலது செய்தான் என வந்தது விரைவுபற்றிவந்த காலவழுவமைதி. (௩)

மன்னர்வழித்தோன்றிவசிட்டன்சாபத்தாற்
றுன்னுமரக்கன்சுதாசனெனும்பெயரோன்
றன்னைவிளித்தேவத்தறுகண்ணவனெய்தி
யிந்நூற்றுவர்தம்மையெடுத்துவாய்ப்பெய்தான்.

(இ-ள்.) மன்னர் வழி தோன்றி வசிட்டன் சாபத்தால் துன்னும் அரக்கன் ஆம் சுதாசன் என்னும் பெயரோன் தன்னை விளித்து ஏவ-அரசர்மரபிற்றோன்றி வசிட்டனது சாபத்தால் அரக்கவடிவுவாய்ந்த சுதாசனென்னும் பேரையுடைய அரக்கனை யழைத்துக்கொல்ல ஏவ, தறு கண்ணவன் எய்தி இ நூற்றுவர் தம்மை எடுத்து வாய் பெய்தான்-கொடுமையையுடைய அவ்வரக்கன் சென்று சத்திமுனிவன் முதலிய இந்த நூறுபேரையும் எடுத்து விழுங்கினான்.

தனக்குப் பகைவராயினோர் உயிர்வாங்க ஒருவன் கருதில் அவர்க்குப் பகைவராயுள்ளவரை யேவில் அக்காரியம் எளிதின் முடியுமாதலால் வசிட்டமுனிவர் சாபத்தால் இராக்கதனாகிய சுதாசனை விசுவாமித்திரன் ஏவினான் என்பார் விளித்தேவ எனவும், தான் அம்முனிவரிடத்திற்கொண்ட கோபமாறுதற்குத் தனக்கோர் கனைகளைக விசுவாமித்திரன் நேர்ந்ததால் தன் வஞ்சினத்தை முடித்தனனென்பார் இந்நூற்றுவர் தம்மை யெடுத்து வாய்ப்பெய்தான் எனவுங் கூறினார். அரக்கனும் தறுகண்ணவன் விரித்தல் விகாரம். (௪)

வடமீனவளோடும்வசிட்டனதுகேட்டுப்
படர்கூர்ந்தழுதேங்கியாற்றிப்பறம்பேறிப்
புடவிமிசைவீழப்பூமாதுளநெக்கா
ளுடல்விண்டொழியாமேதாங்கியுய்வித்தாள்.

(இ-ள் ) வடமீன் அவளோடும் வசிட்டன் அதுகேட்டு படர் கூர்ந்து அழுது எங்கி ஆற்றி பறம்பு ஏறி புடவி மிசை வீழ - அருந்ததியோடும் வசிட்டமுனிவன் அதனைக்கேட்டுத் துன்பங்கூர்ந்தழுது சிறிது ஆற்றி மலைமேலேறி நிலத்தின்மேல் வீழ, பூமாது உளம் நெக்காள் உடல் விண்டு ஒழியாமே தாங்கி உய்வித்தாள் - நிலமகள் மனமுடைந்து அவர்கள் தேகம் உயிரின் நீங்கி யொழியாமல் தாங்கிச் சீவிக்கச்செய்தாள்.

உயிரிழந்த மக்கள் சோகத்தால் தாமிறத்தற்குச் சிறிதுபொழுதுயிர்தாங்கி நிற்றலால் ஆற்றி என்றார்.

"கடந்தமக்களுங்கடப்பரோமக்கள்மேற்காதல்" என்றார் பிறரும். (௫)

வன்பற்பதமேறிவீழ்ந்துமாயாமே
யன்பிற்புவிதாங்கவயர்ச்சிதெளிந்தேங்கி
யின்பமகவெல்லாமிழந்தசோகத்தாற்
றுன்பக்கரைகாணார்புலம்பிச்சோர்காலை.

(இ-ள்.) வன் பற்பதம் ஏறி வீழ்ந்து மாயாமே அன்பில் புவி தாங்க - வலிய மலைமேலேறி வீழ்ந்தும் உயிர்கழியாதய்ய அன்போடு நிலமகள் தாங்குதலால், அயர்ச்சி தெளிந்து ஏங்கி இன்பம் மகவு எல்லாம் இழந்த சோகத்தால் துன்பம் கரைகாணார் புலம்பி சோர் காலை - சோகஞ் சிறிது தெளிந்து வருந்தி யின்பத்தைத்தரு மக்களையெல்லாமிழந்த சோகத்தினால் துன்பமாகிய கடற்கரையைக்காணமல் வருந்திச் சோருங்காலத்தில்.

சோகம் தன்வயமழிந்திருத்தல். தன்வயமழிந்தவன் கடலிலழுந்தினால் கரைகாணுதலரிதாதலால் சோகத்தாற் றுன்பக்கரைகாணார் புலம்பிச் சோர்காலையென்றார். காணார் முற்றெச்சம். (௬)

கொன்னும்வசிட்டன்றன்குலமைந்தரின்மூத்தோன்
மன்னுந்தவச்சந்தியென்பான்மனையாட்டி
யன்னசெயல்கேளாவரற்றிக்கருப்பத்தாற்
றுன்னும்வயிறெற்றிப்புரளுந்துயர்கண்டான்.

(இ-ள்.) கொன்னும் வசிட்டன் தன்குலம் மைந்தரின் மூத்தோன் மன்னும் தவம் சத்தி என்பான் மனையாட்டி - நிலைபெற்ற வசிட்டமுனிவரது நூறுபுத்திரருள் மூத்தவனாகிய நிலைபெற்ற தவத்தினையுடைய சத்தியென்பவன் மனையாள், அன்ன செயல் கேளா அரற்றி கருப்பத்தால் துன்னும் வயிறு எற்றி புரளும் துயர் கண்டான் - அந்தச் செயலைக்கேட்டுக் கதறிக் கருப்பம் வாய்ந்த தனது வயிற்றின்மேலடித்துக்கொண்டு நிலத்திற் புரளுந் துன்பத்தை யவ்வசிட்டமுனிவன் பார்த்தனன்.

துன்பத்தின்மேற் றுன்பமடைந்தனன் என்பார் எற்றிப்புரளுந் துயர்கண்டான் என்றார். அன்ன அகரச்சுட்டின் றிரிபு. (௭)

ஆவாவென்செய்தாயந்தோகெட்டேனென்
றாவாச்சந்தானத்தானந்தனையெற்றி
மூவாக்குலமுற்றுமுடிக்கமுயல்கின்றாய்
பாவாயெனநைந்துகூறப்பணைத்தோளி.

(இ-ள்.) ஆவா என் செய்தாய் அந்தோ கெட்டேன் என் தாவாத சந்தானம் தானம் தன்னை எற்றி மூவாத குலம் முற்றும் முடிக்க முயல்கின்றாய்-ஐயோ என்னகாரியஞ்செய்தாய் அந்தோ கெட்டேனே எனது கெடாத சந்ததியின்றானமாகிய வயிற்றை மோதிக்கெடாத என் குலமுழுமையும் வேரோடறுக்க முயலுகின்றாய், பாவாய் என்ன நைந்து கூற பணை தோளி - பாவைபோல்வாயென்று வருந்தி யவ்வசிட்டன் கூற மூங்கிலையொத்த தோளையுடைய அதிர்சந்தியானவள்.

ஆவா இரக்கப்பொருளிலும், அந்தோ அச்சப்பொருளிலும், கெட்டேன் இரக்கக்குறிப்பின்மேலும் வந்த இடைச்சொற்கள். (அ)

மாமன்மொழிக்கஞ்சிவாளாவமர்போது
தூமென்மலர்க்கூந்தலெற்றுந்துயர்க்காற்றாப்

பூமென்கருப்பத்துட்பொலியுங்குழவிநைந்
தாமென்கனிவாய்விண்டழுபேரொலிகேட்டு.

(இ-ள்.) மாமன் மொழிக்கு அஞ்சி வாளா அமர்போது தூ மெல் மலர் கூந்தல் எற்றும் துயர்க்கு ஆற்ருது - மாமனது வார்த்தைக்குப்பயந்து சும்மாவிருக்குங்காலத்தில் குற்றமில்லாத மெல்லிய மலரையணிந்த கூந்தலையுடைய அவ்வதிர்சந்தி தன் கையாலறைந்த துன்பந்திற்குச் சிறிதும் ஆற்ருது, பூமென் கருப்பத்து உள் பொலியும் குழவி நைந்து ஆமென் கனிவாய் விண்டு அழுபேர் ஒலி கேட்டு - அழகிய மெல்லிய கருப்பத்தில் விளங்குங் குழந்தை வருந்தி ஆவென்று கோவைக்கனிபோன்ற மெல்லிய வாயைத்திறந்தழாநின்ற பேரோசையைக்கேட்டு.

ஆ குறிப்பிடைச்சொல். (௯)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

இவ்வோதையெவரோதையெனவசிட்டன்றன்னுள்ளத்தெண்ணுநிற்கு
மவ்வேல்வைப்படநாகச்சேக்கைமிசைக்கண்படுக்குமறவோன்ருேன்றிச்
செவ்வாய்மைமுனிவரநின்சந்தானந்தழைத்தோங்கத்தேயம்வாழ
வொவ்வாதார்குலஞ்சிதையநின்மகனுக்கொருமைந்தனுதிக்கின்ருனல்.

(இ-ள்) இ ஓதை எவர் ஓதை என்ன வசிட்டன் தன் உள்ளத்து எண்ணுநிற்கும் அ எல்லை - இந்த ஓசை யாரோசையென்று வசிட்டமுனிவன் தன்மனத்திற் கருதாநிற்கும் அச்சமையத்தில், பட நாகம் சேக்கை மிசைகண் படுக்கும் அறவோன் தோன்றி செவ்வாய்மை முனிவரநின் சந்தானம் தழைத்து ஓங்க தேயம் வாழ-படத்தையுடைய ஆதிசேடனுகிய அணையின்மேல் அறிதுயில்செய்யுந் தருமமூர்த்தியாகிய திருமால் காட்சிதந்து செவ்விய வாய்மையையுடைய முனிசிரேட்டனே நின் சந்தானந் தழைத்தோங்கி வளரவும் உலகிலுள்ள வுயிர்கள் வாழவும், ஒவவாதார் குலம் சிதைய நின் மகனுக்கு ஒருமைந்தன் உதிக்கின்ருன் - பகைவரது குலம் அழியவும் உனது புத்திரனுக்கோர் புத்திரன் தோன்றுகின்ருன்.

திருமால் உயிர்களைக்காக்குங் கடவுளாதலால் அறவோன் என்ருர். (௧௦)

அணங்கொருபாலமர்ந்தபிரான்றிருவடிக்குமெய்யன்பனகிலநூலு
முணர்ந்துதெளிந்தெனையொப்பான்பாணியாதின்னேவந்துறுமாகாணென்
றிணங்கமொழிந்தேகியபின்வசிட்டனுந்தன்மனக்கவலையின்றிவாழ்ந்து
வணங்குமிடையருந்ததியோடானந்தந்தலைசிறப்பவைகும்போது.

(இ-ள் ) அணங்கு ஒருபால் அமர்ந்தபிரான் திருவடிக்கு மெய் அன்பன்-உமையம்மையை யொருபாகத்திலுடைய இறைவனது திருவடிக்கு மெய்யன்புபூண்டவன், அகில நூலும் உணர்ந்து தெளிந்து என்னை ஒப்பான் பாணியாது இன்னே வந்து உறும் ஆறு காண் என்று இணங்க மொழிந்து ஏகியபின் - எல்லா நூல்களையும் ஆராய்ந்து தெளிந்து அசுரரைக்கொல்லுதலில் என்னையொப்பவன் சிறிதுந் தாமதியாது இப்பொழுதேவந்து தோன்றும் வகையைக் காணுயென்று பொருந்தக்கூறிச் சென்றபின், வசிட்டனும் தன்மனம் கவலை இன்றி வாழ்ந்து வணங்கும் இடை அருந்ததியோடு ஆனந்தம் தலைசிறப்ப வைகும்போது - வசிட்டமுனிவனுந் தன்மனத்திற் சிறிதுங் கவலையில்லாமல் வாழ்ந்து துவளும் இடையையுடைய அருந்ததியோடு ஆனந்தமீதூர வசிக்குங்காலத்தில்.

அரக்கரை வேரோடு களைதலால் ஏனையொப்பான் என்ருர். (௧௧)

சத்திமனைக்கிழத்தியதிர்சந்திபாலுலகுய்யத்தருமம்வாழ
வுத்தமச்சீர்ப்பராசரன்வந்தவதரிப்பவிராக்கதர்தம்மூர்கடோறு
மொய்த்தெழுந்துகுருதிமழைபொழிந்தனவான்முனித்தலைவன்மகவைநோக்கி
மெய்த்தமனங்களிகூர்ந்துசாதமுதற்சடங்கனைத்துமவிதியிற்செய்தான்.

(இ-ள்.) சத்தி மனைக்கிழத்தி அதிர் சந்திபால் உலகு உய்ய தருமம் வாழ உத்தமம் சீர் பராசரன் வந்து அவதரிப்ப - சத்திமுனிவரது மனையாளாகிய அதிர்சந்தியினிடத்து உலகமீடேறவுந் தருமம் நிலைபெறவும் நன்மைவாய்ந்த புகழினையுடைய பராசர முனிவன் வந்துதோன்ற, இராக்கதர் தம் ஊர்கள்தோறும் வான் மொய்த்து எழுந்து குருதி மழைபொழிந்தன - இராக்ஷதர்களுடைய ஊர்கள்தோறும் மேகங்கள் நெருங்கி மேலெழுந்து உதிர மழையைச் சிந்தின, முனி தலைவன் மகவை நோக்கி மெய்த்த மனம் களிகூர்ந்து சாதம் முதல் சடங்கு அனைத்தும் விதியில் செய்தான் - முனிவர்களுக்குத் தலைவனாகிய அவ்வசிட்டமுனிவன் குழந்தையைப்பார்த்து உண்மைவாய்ந்த மனங்குதுகுலித்துப் பிறந்த நாள்முதல் செய்யுஞ் சடங்குமுற்று முறையாற்செய்தான்.

பிறந்தநாள்முதல் செய்யுஞ் சடங்குகளாவன சாதகன்மம், உத்தாபனம், நாமகரணம், அன்னப்பிராசநம், பிரவாசம், பிண்டவிர்த்தி. சவுளம், உபநயனம், காண்டோபக்கிரமணம், காண்டமோசநம், சமாவர்த்தநமுதலியன. சாதகன்மம்-புத்திரோற்பத்தியானகாலத்திற்செய்யுங் கிரியை, உத்தாபனம்-அசுத்தமாகிய வறை வீட்டினின்றுஞ் சுத்தமாகிய வுயர்ந்தவிடத்திற் குழந்தையைச் சேர்ப்பிக்குங் கிரியை, நாமகரணம்-பேரிடுதலிற்செய்யுங் கிரியை, அன்னப்பிராசநம்-சோறூட்டுதலிற்செய்யுங் கிரியை, பிரவாசம்-குழந்தையை யெடுத்துக்கொண்டாலயத்திற்குச்செல்லுங் கிரியை, பிண்டவிர்த்தி-சரீரத்தை விர்த்திசெய்யுங் கிரியை, சவுளம்-மயிர்வினைக்குச்செய்யுங் கிரியை, உபநயனம்-பரசிவத்தைத் தரிசிப்பதற்குச் சமீபமாகிய நயனத்தை யுண்டாக்குங் கிரியை, காண்டோபக்கிரமணம்-வேதபாதங்களை யத்தியயநம்பண்ண வாரம்பிக்குங் கிரியை, காண்டமோசநம்-அத்தியயநத்தை விடச்செய்யுங்கிரியை, சமாவர்த்தநம-பிரமசரியவிரதத்தை யொழித்தற்குச்செய்யுங் கிரியை. (௧௨)

இளம்பிறைபோல்வளர்மைந்தனொருஞான்றுமடித்தலமீதிருந்துநோக்கி
வளம்பயிலுமங்கலமின்றிருந்தனையால்யாண்டையன்மற்றெந்தையென்ன
வுளம்பரியப்பயந்தாளைவினவுதலுமவள்கேட்டங்குள்ளமாழ்கி
விளம்புவாள்பிள்ளாயுன்றந்தைதனைவெகுண்டரக்கன்மிசைந்தானென்று.

(இ-ள்.) இளம்பிறைபோல் வளர் மைந்தன் ஒரு ஞான்று மடித்தலம் மீது இருந்து நோக்கி வளம் பயிலும் மங்கலம் இன்று இருந்தனை - இளஞ்சந்திரன்போல் நாளுக்குநாள் வளரும் பராசரமுனிவன் ஒருநாள் தன் தாயின் மடிமேலிருந்து அன்னையைப்பார்த்து வளம் அமைந்த மங்கலநாணில்லாமலிருந்தாய், எந்தை யாண்டையன் என்ன உளம் பரிய பயந்தவளை வினவுதலும் - எமது பிதா எவ்விடத்திலிருக்கின்றானென்று மனம் வருந்தத் தன்னைப் பெற்றவளை வினவ, அங்கு அவள் கேட்டு உள்ளம் மாழ்கி விளம்புவாள் பிள்ளாய் உன் தந்தைதனை வெகுண்டு அரக்கன் மிசைந்தான் என்று - அவ்விடத்தி லவ்வதிர்சந்தி கேட்டு மனமயங்கிக்கூறுகின்றாள் குழந்தாய் உனது பிதாவைக் கோபித்துச் சுதாசனென்னும் அரக்கன் விழுங்கினான் என்று.

இது பின்வருஞ் செய்யுளைக்கொண்டு முடிதலால் ஒருதொடர். (௧௩)

அழுதிரங்கிக்கண்ணீரானிளமைந்தன்றனையாட்டவருகுசூழ்ந்த
வழுவகன்றமுனிமடவார்முனிவரருமருந்ததியுமவசிட்டன்றானுங்

தொழுதியெனக்கிடந்தரற்றியழக்கண்டுசூலிதிருவருளாலின்னே
முழுதுலகும்வாய்மடுப்பலெனவெகுண்டான்முனிவரிளவேறுபோல்வான்.

(இ-ள்.) இரங்கி அழுது கண்ணீரால் இளமைந்தன் தனை ஆட்ட - மனமிரங்கி யழுது கண்ணீரினால் இளஞ்சிறுவனாகிய பராசரனை நீராட்ட, அருகுசூழ்ந்த வழு அகன்ற முனி மடவாரும் முனிவரரும் அருந்ததியும் வசிட்டன் தானும் தொழுதி என்ன அரற்றி அழ கண்டு - பக்கத்திற்சூழ்ந்த குற்றத்தினின்று நீங்கிய முனிவர் பன்னியரும் முனிசிரேஷ்டரும் அருந்ததியும் வசிட்டமுனிவரும் மயிற்குரல்போல நிலமேற்கிடந்து கதறியழப் பார்த்து, முனிவர் இள ஏறுபோல்வான் சூலிதிரு அருளால் இன்னே முழுது உலகும் வாய் மடுப்பல் என்ன வெகுண்டான் - முனிவரருள் இளஞ்சிங்கம்போன்ற பராசரமுனிவன் இறைவனது திருவருளால் இப்பொழுதே உலகமுற்றும் விழுங்குவேனென்று கோபித்தான்.

முனிமடவார் என்பதனிறுதியில் எண்ணும்மை தொகுத்தல். (௧௪)

அம்மொழிகேட்டுயர்வசிட்டனுலகெல்லாமென்செய்யுமப்பாவந்த
வெம்மைநிலையரக்கர்குலம்வேரறுப்பச்சிவபூசைவிழையாயென்ன
விம்முறையேல்விடையூர்தியென்பூசைகொண்டருளியின்னேநல்குஞ்
செம்மைநூற்றுணிபானசிறந்ததலம்யாததனைச்செப்புகென்றான்.

(இ-ள்.) உயர் வசிட்டன் அ மொழி கேட்டு - உயர்ந்த வசிட்டமுனிவன் அவ்வார்த்தையைக்கேட்டு, அப்பா உலகம் முற்றும் என்செய்யும் அந்த வெம்மை நிலை அரக்கர் குலம் வேர் அறுப்ப சிவபூசை விழையாய் என்ன - அப்பனே யுலகமுழுமையும் யாதுசெய்யும் அந்தக் கொடிய நிலையையுடைய இராக்ஷதர்குலத்தை வேரோடறுக்கச் சிவபூசையை விரும்புவாய் என்று கூற, இ முறையேல் விடையூர்தி என் பூசைகொண்டருளி இன்னே நல்கும் செம்மை நூல் துணிபு ஆன சிறந்த தலம் யாது அதனை செப்புக என்றான் - நீ கூறிய இதுமுறையானால் இறைவன் எனது பூசையைக் கைக்கொண்டருளி யிப்பொழுதே வேண்டி யாங்குக் கொடுக்கும் வேதநூற்றுணிபாயுள்ள மேம்பட்ட தலம் யாது அதனைக் கூறக்கடவாயென்று பராசரமுனிவன் வினவினான்.

அப்பனே யுலகு நமக்கென்னசெய்தது அதனை வருத்தாதேயென்பான் உலகெல்லாமென்செய்யும் என்றான். (௧௫)

கலிவிருத்தம்.

என்றலுநன்றுநீவினயதிந்நலந்
துன்றியபெரும்பதிதூயவானவர்
முன்றிலுமரங்கமுமுகிலுரிஞ்சநீண்
மன்றமுமுழவறுக்காஞ்சிமாநகர்.

(இ-ள்.) என்றலும் நீ வினயது நன்று - என்று கூற நீ வினவியது நல்ல காரியம், இ நலம் துன்றிய பெரும்பதி - இந்த வேதநூற்றுணிபமைந்த பெரிய திருப்பதி, தூயவானவர் முன்றிலும் அரங்கமும் முகில் உரிஞ்ச நீள் மன்றமும் முழவு அறுத காஞ்சி மாநகர் - பரிசுத்தமாகிய தேவர்கள் வசிக்குந் திருக்கோயில் முற்றத்திலும் நாடகசாலையிலும் மேகந்தடவ உயர்ந்த அம்பலத்திலு முழவோசை நீங்காத காஞ்சியென்னும் பெரிய நகரமாம். (௧௬)

மறுவறுவானவர்மனிதர்மற்றுளோ
ருறுபெருந்தவரொனையுள்ளிட்டோர்களும்
பெறலரும்பேறுபெற்றெய்தும்பெட்பின
திறுவழிநினைப்பினுமுத்தியீவது.

(இ-ள்.) மறு அறு வானவர் மனிதர் மற்றுளோர் உறுபெருந்தவர் என்னை உள்ளிட்டோர்களும் பெறல் அரும் பேறுபெற்று எய்தும் பெட்பினது - அத்திருப்பதி குற்றமற்ற தேவர்களு மனிதர்களும் அவரொழிந்தோரும் மிக்க பெரிய தபோதனர்களும் என்னை உள்ளிட்டவர்களும் அடைதற்கரிய பயன்பெற்றடையும் விருப்பத்தையுடையது, இறுவழி நினைப்பினும் முத்தி ஈவது-சாங்காலத்தில் நினைத்தாலும் முத்தியைத்தருவது.

மற்று என்னும் இடைச்சொல் பிறிதுபொருள்மேல் நிற்றலால் மற்றுளோர் என்றது நரகரை. இதனுல் அங்கு வசிப்போரடையும் பயனும் பிறதலத்திலிருந்து சாங்காலத்தில் நினைத்தாலடையும் பயனுங் கூறப்பட்டன. பெட்பினது, ஈவது என்னும் வினைமுற்றுகள் இடத்தின்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர்கள். (கஎ)

பன்னருங்கொடியவெம்பாதகர்க்குமப்
பொன்னகர்வரைப்பினோர்தினத்துட்போர்விடை
மன்னவன்றிருவருள்வாய்க்குமேயெனி
னுன்னையொப்போர்க்கினியோதல்வேண்டுமோ.

(இ-ள்.) பன்னரும் கொடிய வெம்பாதகர்க்கும் அ பொன்னகர் வரைப்பின் ஓர் தினத்து உள் - சொல்லுதற்கரிய மிக்க கொடிய பாதகர்களுக்கும் இலக்குமி வசிக்கும் அந்நகரெல்லையில் ஓர்காலத்தில், போர்விடை மன்னவன் திரு அருள் வாய்க்குமே என்னின் உன்னை ஒப்போர்க்கு இனி ஓதல் வேண்டும் ஓ-போர்செய்யு மிடபவூர்தியையுடைய இறைவன் திருவருள் வாய்க்குமாகுல் உன்னையொத்தவர்க்கு இனி நான் கூற வேண்டுவதொன்றுண்டோ.

பாதகர்க்கும் என்பதனிறுதியில் நின்ற வும்மை ஏனையோர்க்குமன்றியென நிற்றலால் இறந்ததுதழீஇய எச்சப்பொருட்டு. ஏனையோர் என்றது மத்திமரை. ஒருதினம் அதன்மர் அங்கு வசிப்பினும் சிவபெருமான் திருவருள் வாய்க்குமாயின், உத்தமனுகிய உனக்கு அத்திருவருள் வாய்த்தல் எளிதென்பான் உன்னையொப்பார்க் கினியோதல் வேண்டுமோ என்றுன் என்றுர். (கஅ)

ஆயிடைச்செல்கெனும்வசிட்டனம்புயத்
தூயமென்மலர்ப்பதந்தொழுதெழுந்துதன்
ருயினைவிடைகொடுதடங்கொள்காஞ்சியிற்
காய்பொறிப்பராசரன்கடுகவெய்தினுன்.

(இ-ள்.) ஆயிடை செல்க என்னும் வசிட்டன் அம்புயம் தூயமென் மலர் பதம் தொழுது எழுந்து - அவ்விடத்திற் செல்லக்கடவாயென்று கூறிய வசிட்டமுனிவரது புனிதமாகிய தாமரைமலரையொத்த பாதத்தைத் தொழுதெழுந்து, தன் தாயினை விடை கொடு தடம் கொள் காஞ்சியில் பொறிகாய் பராசரன் கடுக எய்தினுன் - தனது தாயிடத்து விடைபெற்றுத் தடாகஞ்சூழ்ந்த காஞ்சித்திருநகரில் இந்திரியங்களைவென்ற பராசரமுனிவன் விரைந்தடைந்தான். (கக)

கம்பைநீராடியேகம்பநாயகர்
தம்பனிமலர்ப்பதந்தாழ்ந்துமஞ்சணீர்
வம்பவிழ்கரைமிசைமணிகண்டீச்சர
நம்பர்தம்வடகுடஞூங்கர்நண்ணினுன்.

(இ-ள்.) கம்பை நீர் ஆடி ஏகம்ப நாயகர் தம் பனி மலர் பாதம் தாழ்ந்து - கம்பையில் நீராடி ஏகம்பநாயகரது குளிர்ந்த தாமரைமலர்போன்ற திருவடிகளைப்ப

ணிந்து, மஞ்சள் நீர் வம்பு அலர் கரைமிசை மணிகண்டீச்சர நம்பர் தம் வடகுட ஞாங்கர் நண்ணினான் - மஞ்சள்நதியினது மலாவாசனை பரந்த கரையின்மேல் உள்ள மணிகண்டீச்சரத்திலெழுந்தருளிய இறைவர்க்கு வடமேற்றிசையின் பக்கத்தடைந்தான்.()

தன்பெயரிலிங்கமொன் றிருத்தித்தாவிலா
வன்பினின் மலரெடுத் தருச்சித்தேத்துழிப்
பொன்புரிவேணியோன் கருணைபூத்தெதிர்
வன்பழவிடைமிசைவந்துதோன்றியே.

(இ-ள்.) தன்பெயர் இலிங்கம் ஒன்று இருத்தி தாவு இல்லாத அன்பினின் மலர் எடுத்து அருச்சித்து ஏத்து உழி - தனது பேரா லிலிங்கமொன்று தாபித்துக் கெடுதலில்லாத அன்போடு மலரெடுத்தருச்சனைசெய்து துதிக்குமிடத்து, பொன்புரி வேணியோன் கருணைபூத்து எதிர் பழ வல் விடைமிசை வந்து தோன்றி - பொற்புரியையொத்த சடாபாரந்தையுடைய இறைவன் கருணைசெய்து அம்முனிவனுக்கெதிரே வலிய பழைய இடபவூர்தியின்மேல் வந்து காட்சிதந்து.

திருமால் இடபவடிவாய்த் தாங்குவதற்குமுன் தருமவிடையுளதாதலால் பழவிடையென்றது அறக்கடவுளாகிய இடபத்தை. (௨௧)

வேட்டனகூறுகென்றருளவேதநூற்
பாட்டினாற்பலமுறைபழிச்சித்தாழ்ந்துமுன்
வாட்கதிரைம்படைமார்பிற்கிண்கிணித்
தாட்டுணைமழமுனிசாற்றன்மேயினான்.

(இ-ள்) வேட்டன கூறுக என்றருள - நீ விரும்பினவற்றைச் சொல்லக்கடவாயென்று வினவியருள, முன் வேதநூல் பாட்டினால் பலமுறை பழிச்சி தாழ்ந்து - திருமுன்னின்று வேதநூற்பாட்டினாற் பலமுறையுந் துதித்து வணங்கி, வாள் கதிர் ஐம்படை மார்பில் கிண்கிணி தாள் துணை மழமுனி சாற்றல் மேயினான் - ஒளிவாய்ந்த பஞ்சாயுதவடிவாயமைந்த ஆபரணத்தையணிந்த மார்பினையுஞ் சதங்கையணிந்த இரண்டுகால்களையுமுடைய இளமைப்பருவம்வாய்ந்த பராசரமுனிவன் கூறத்தொடங்கினான்.

மக்களுக்குப் பிள்ளைமைப்பருவத்திற் காப்புடைக்கடவுளாகிய திருமாலின் பஞ்சாயுதவடிவாகச்செய்த ஆபரணங்களைப்பூட்டுதல் மரபாதலால் வாட்கதிரைம்படைமார்பு என்றார். பஞ்சாயுதங்களாவன சங்குசக்கர கதாகட்க கோதண்டங்கள். சாற்றன்மேயினான் விரைவுபற்றிவந்த காலவழுமைதி. (௨௨)

எறும்விடைப்பரிமிசையெந்தையெந்தையோர்
குறுவலியரக்கனாற்கோட்பட்டானவ
னுறுகுலமுழுவதுமறலியூர்புகத்
தெறுவரமெனக்கருள்செய்யவேண்டுமால்.

(இ-ள்.) எறும் விடை பரிமிசை எந்தை எந்தை ஓர் குறுவலி அரக்கனால் கோட்பட்டான் - வலிமையையுடைய இடபமாகிய குதிரையின்மேலெழுந்தருளும் எந்தையே என்றந்தையானவன் சிறிய வலிமையையுடைய ஓர் இராக்கதனால் கொல்லப்பட்டான், அவன் உறுகுலம் முழுவதும் மறலி ஊர்புக தெறுவரம் எனக்கு அருள் செய்ய வேண்டும் - அந்த இராக்கதனது வலிமைமிக்க குலமுற்றும் இயமனது ஊரிற்செல்லக் கொல்லும் வரத்தை யெனக்குத் தேவரீர் அருள்செய்யவேண்டும்.

யானை, குதிரை, தேர் ஊர்திகளாதலால் விடைப்பரியென்றார். (௨௩)

ஈண்டுநீயினிதமர்ந்தெவர்க்குமின்னருண்
மாண்டகுசிறப்பினின்வழங்கவேண்டுமா
லாண்டகையென்றிரந்தன்புமேதக
வேண்டலுமெம்பிரான்விளம்பன்மேயினன்.

(இ-ள்,) ஆண்டகை ஈண்டு நீ இனிது அமர்ந்து எவர்க்கும் இன் அருள் மாண் தகுசிறப்பினின் வழங்கவேண்டும் என்று - ஆண்தன்மையையுடையாய் இவ்விடத்து நீ யினிதாக எழுந்தருளி யாவர்க்கும் இனிய அருளை மிக்க சிறப்போடு தந்தருளவேண்டுமென்று, இரந்து அன்பு மேதக வேண்டலும் எம்பிரான் விளம்பல் மேயினன் - குறையிரந்து அன்பு மேம்படவேண்ட எமது இறைவன் கூறத்தொடங்கினன்.

அயனரிமுதலிய பலருந் தன்வயத்தராயொழுகுதலால் சிவபிரானை ஆண்டகையென்றார். இவ்வாறன்றி அயன்முதலிய தேவர்களுள் மேம்பட்ட திருமாலே பலகாலும் பெண்வடிவங்கொள்ளுதலால் ஆண்டகையென்றாரெனினுமமையும். (௨௪)

மைந்தநின்பூசையிற்றம்பிமாரொடு
நுந்தைமற்றெமையடைந்துற்றுநோன்மைசா
லந்தணனுனைக்காணுமாசையின்
முந்துறநின்றவாகாண்டிமொய்ம்பினோய்.

(இ-ள்.) மைந்த நின் பூசையில் நுந்தை தம்பிமாரொடு எம்மை அடைந்துற்று - மைந்தனே உனது பூசையால் உனது பிதாவானவன் தனது தம்பிமாரோடெமமையடைந்து, நோன்மைசால் அந்தணன் ஆம் உன்னை காணும் ஆசையின் முந்துற நின்ற ஆறு மொய்ம்பினோய் காண்டி - முயற்சியால் தவமிக்க அந்தணனாகிய உன்னைக்காணும் விருப்பால் முற்பட்டு நின்ற வகையை வலிமையுடையோய் காண்பாய்.

காண்டி விரைவுபற்றிவந்த காலவழுவமைதி. அடைந்துற்று, முந்துற ஒருசொன்னீர்மைய. (௨௫)

அரக்கரைக்கொலைசெயும்வேள்வியாற்றியந்
நெருப்பினிலவர்தமைநீறுசெய்தியிவ்
வரைப்பினிலென்றுநாமகிழ்ந்துவாழ்துமென்
றுரைத்தனன்மறைந்தனன்வேதத்துச்சியில்.

(இ-ள்.) இ வரைப்பினில் அரக்கரை கொலைசெய்யும் வேள்வி ஆற்றி அ நெருப்பினில் அவர் தமை நீறு செய்தி - இந்த எல்லையில் இராக்கதரைக் கொலைசெய்யும் இரட்சோக்கனயாகஞ்செய்து அவ்வேள்வி நெருப்பில் அவரை நீறுசெய்வாய், என்றும் இ வரைப்பு இல் நாம் மகிழ்ந்து வாழ்தும் என்று உரைத்தனன் வேதத்துஉச்சியில் மறைந்தனன் - எப்பொழுது மித்தானத்தில் நாம் மகிழ்ந்து வாழ்வோமென்று கூறி வேதசிரசில்மறைந்தருளினன்.

இரட்சோக்கனம் தீயரைக் கொலைசெய்தற்குச்செய்யும் யாகம். தானிருந்தருள்வது வேதசிரசு ஆதலால் வேதத்துச்சியில் என்றார். (௨௬)

பராபரன்றிருவருள்பெற்றுப்பாய்புகழ்ப்
பராசரநெடுந்தகைபணைத்தவேள்வியிற்
பராய்மனத்தரக்கரைநீற்றிப்பாற்றினன்
பராயசீருறுவர்தம்பகர்ச்சியாற்கதம்.

(இ-ள்.) பாய் புகழ் பராசரன் நெடும் தகை பராப்ரன் திரு அருள் பெற்று மனத்து பணித்த வேள்வியில் பராய் - பரந்த புகழையுடைய பராசரனென்னும் பேரையுடைய பெரியோன் இறைவனது திருவருளைப்பெற்றுமனத்தால் பெரியயாகத்தில்வணங்கி, அரக்கரை நீற்றி பராய சீர் உறுவர் தம் பகர்ச்சியால் கதம் பாற்றினன் - இராக்ஷதரைக்கொன்று பரந்த சிறப்பினையுடைய முனிவரது இன்சொல்லாற் கோபத்தினின்றும் நீங்கினன்.

பராபரன் பரைக்கு நாயகன் எனவும், பரம் அபரம் எனப்பிரித்து மேலும் கீழும் ஆனவன் எனவும், மேன்மையுங் கீழ்மையும் ஆனவன் எனவும் பொருள்கொள்க. ()

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

விரிபுனல்படிந்தோர்பருகினோர்தீண்டப்பெற்றுளோர்தமக்கும்வீடளிக்கு
மூரிதிரைமுகட்டுவராலினமுகளுமுழங்கொலிமஞ்சணீராற்றங்
கரைமிசைத்தகைசான்முனிவரர்வழுத்துங்கண்ணுதல்வளாகங்களின்னு
முரைசெயப்புக்காலுலப்புறுகாண்மினுயர்நிலைப்பெருந்தவமுனிவீர்.

(இ-ள்.) உயர் நிலை பெரும் தவம் முனிவீர் - உயர்ந்த நிலையையும் பெரிய தவத்தையுமுடைய முனிவர்களே, விரிபுனல் படிந்தோர் பருகினோர் தீண்டப்பெற்றுளோர் தமக்கு உம் வீடு அளிக்கும் - விரிந்த மஞ்சணதிதீர்த்த நீரில் மூழ்கினோரும் அதனைப் பருகினோரும் பரிசிக்கப்பெற்றோருமாகிய இவர்களுக்கு மோக்ஷத்தைத்தரும், மூரி திரை முகடு வரால் இனம் உகளும் முழங்கு ஒலி மஞ்சள் நீர் ஆற்றங்கரைமிசை - முரிந்த அலையின் முகட்டில் வராலின்கூட்டங்கள் தாண்டு முழங்காநின்ற ஒலியையுடைய மஞ்சள்நீர் ஆற்றங்கரைமேல், தகைசால் முனிவரர் வழுத்தும் கண்ணுதல் வளாகங்கள் இன்னும் உரை செய்ய புக்கால் உலப்புறு காண்மின் - பெருமையமைந்த முனிசிரேஷ்டர்கள் துதித்துத் துதிக்கும் இறைவனது திருக்கோயில்களை யின்னமுங் கூறப்புகுந்தால் அளவுபடா அவற்றைக்காணுங்கள்.

ஏனைய தீர்த்தங்களில் நீராடினோர் அடையும் பயன்போலப் பருகினோரும் பரிசித்தோரும் அடைதலரிது, இம்மஞ்சணதி தீர்த்தத்தில் படிந்தடைந்த பயன் பருகினோரும் பரிசித்தோரு மடைதலெளிதென்பார் வீடளிக்கும் என்றார். தமக்கும் என்பதை ஏனையிடங்களிலுங் கூட்டிப் பொருள்கொள்ளப்படுதலால் கடைநிலைத் தீவகவணி. ()

பராசரேசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௭௯௧.

---

## ஆதிபிதீசப்படலம்.

---

கலிவிருத்தம்.

பராரைமாநிழற்பண்ணவன்மேவிவாழ்
பராசரேசம்பகர்ந்தனமாதவன்
பராயபைம்பொழிலாதிபிதீச்சரம்
பராகமாவினைப்பற்றறவோதுவாம்.

(இ-ள்.) பாரரை மாநிழல் பண்ணவன் மேவிவாழ் பராசரேசம் பகர்ந்தனம்- பருத்த அரையையுடைய மாமரத்தி னிழற்கீழ் எழுந்தருளிய இறைவன் விரும்பிவாழும்

பராசரேசமென்னுந் திருப்பதியின் பெருமையைக் கூறினேம், மாதவன் பராய பைம் பொழில் ஆதீபிதீச்சரம் வினைபற்று பராகம் ஆக அற ஓதுவாம் - திருமால் வணங்கிப் பூசித்த பசிய சோலைசூழ்ந்த ஆதீபிதீச்சரம் என்னுந் திருப்பதியின் பெருமையை இரு வினையின் பற்றுத் துகளாக நீறுபட இனி யெடுத்துக்கூறுவாம்.

ஆதீபிதீசம் நான்குபக்கங்களிலும் விளக்கஞ்செய்த தீபப்பிரகாசரால் பூசித்த திருப்பதி. ஆ உபசர்க்கம். தீபிதம் விளக்கஞ்செய்தல். (௧)

அன்னவூர்திமகத்தையழிப்பலென்
றுன்னிவாணிநதியுருக்கொண்டநாட்
கன்னிபால்வளர்கண்ணுதலேவலின்
முன்னரேகிமுகுந்தன்றடுத்தனன்.

(இ-ள்.) அன்னவூர்தி மகத்தை அழிப்பல் என்று வாணி உன்னி நதி உருகொண்ட நாள்-பிரமன் வேள்வியை யழிப்பேனென்று கலைமகள் கருதி யொரு நதி வடிவு கொண்டகாலத்தில், கன்னி பால் வளர் கண்ணுதல் ஏவலின் முகுந்தன் முன்னர் ஏகி தடுத்தனன் - உமையை இடப்பாகத்திலுடைய இறைவன் ஏவலால் திருமால் முன் சென்று தடுத்தனன்.

வளர் என்னுஞ் சொல்லாற்றலால் இடப்பாகத்தினின்றும் உமையம்மையென் றும் பிரியப்பெற்றிலர் என்பார் கன்னிபால் வளர் என்றார், தாதான்மிய சத்தியாதலின்.

அங்கங்கெய்தித்தடுத்துமடங்கிடாப்
பொங்குவேகப்புதுநதிநள்ளிராத்
துங்கக்காஞ்சியிற்றுண்ணெனத்தோன்றலுஞ்
சங்கபாணித்ளர்ந்தழிவுற்றரோ.

(இ-ள்.) அங்கு அங்கு எய்தி தடுத்தும் அடங்கிடாத பொங்கு வேகம் புது நதி நள் இராதுங்கம் காஞ்சி இல் துண் என்ன தோன்றலும் - தடுத்தும் பலவழிப்பட்டுச் செல்லுதலால் அவ்வவ்விடங்களிற்சென்று தடுத்தும் அடங்காமல் மிக்க வேகத்தையு டைய புதிய அந்நதிப்பெருக்கானது நடுவிரவில் உயர்ந்த காஞ்சியென்னுந் திருப்பதியி ல் விரைந்து தோன்ற, சங்கபாணி தளர்ந்து அழிவுற்று - சங்கையேந்திய கரத்தையு டைய அத்திருமால் மனந்தளர்ந்து வருந்தி. (௩)

பெருவிளக்கொளியாகிப்பிறங்கிமற்
கருணைமால்கரிகாத்தவன்சூழலி
னருகுமேற்றிசையாதீபிதீசமென்
றொருசிவக்குறியுங்கணிருத்தியே.

(இ-ள்.) மன்பெரு விளக்கு ஒளி ஆகி பிறங்கி - திருமாலது ஒழிந்து பெரிய விளக்கொளியாய் விளங்கி, கருணை மால் கரி காத்தவன் சூழல் இன் அருகு - தனது கருணையால் மயங்கிய கஜேந்திர னென்னும் யானையைக்காத்த வரதராச ரொழுந்தரு ளிய புண்ணியகோடீசத்தின் பக்கத்தில், மேல் திசை ஆதீபிதீசம் என்று ஒரு சிவக்குறி உங்கண் இருத்தி - மேற்றிசையில் ஆதீபிதீசரென்று திருநாமம்வாய்ந்த ஒரு சிவலிங்க ப்பெருமானை அவ்விடத்துத்தாபித்து.

மன் வினைமாற்றுப்பொருளில்வந்த விடைச்சொல். (௪)

பூசையாற்றிப்புரிவரம்பெற்றெழூந்
தோசைநீத்தந்தடுத்துயர்வேள்விகாந

தாசையாடையவனெதிர்வைகினன்
வீசுசோதிவிளக்கொளியண்ணலே.

(இ-ள்.) சோதி வீசு விளக்கு ஒளி அண்ணல் பூசை ஆற்றி புரி வரம் பெற்று எழுந்து ஓசை நீத்தம் தடுத்து - ஒளிவீசுந் தீபப்பிரகாசனென்னுந் திருநாமம்வாய்ந்த திருமால் அச்சிவலிங்கப்பெருமானைப் பூசித்துத் தான் விரும்பிய வரத்தைப் பெற்றெழுந்து ஓசையையுடைய அவ்வெள்ளத்தைத்தடுத்து, உயர் வேள்வி காத்து ஆசை ஆடை அவன் எதிர்வைகினன் - பிரமன்செய்யு முயர்ந்த யாகத்தைக் காத்துத் திக்கையே யாடையாக உடைய இறைவனெதிரி லமர்ந்திருந்தனன்.

தேவதாருவனமுனிவர் பன்னியர் அகந்தையையொழித்தற்பொருட்டுச் சிவபெருமான் பிட்சாடனமூர்த்தங்கொண்ட காலையில் திக்கே ஆடையாகவிருத்தலால் ஆசையாடையென்றார். (ரு)

செங்கண்மாறொழுமாதீபிதீச்சரம்
பொங்குகாதலிற்போற்றப்பெறுநர்தா
மிங்கண்வேண்டும்வரங்களுமெய்திமற்
றங்கண்முத்திப்பதமுமடைவரால்.

(இ-ள்.) செங்கண்மால் தொழும் ஆதீபிதீச்சரம் பொங்கு காதலில் போற்ற பெறுநர்தாம் - செவந்த கண்களையுடைய திருமால் வணங்கும் ஆதீபிதீச்சரமென்னுந் திருப்பதியை மிக்க விருப்பத்தோடு வணங்கப்பெறுவோர், இங்கண் வேண்டும் வரங்களும் எய்தி அங்கண் முத்தி பதமும் அடைவர் - இவ்வுலகத்தில் வேண்டும் வரங்களையுமடைந்து மேலுலகத்தில் மோக்ஷத்தையுமடைவர்.

இங்கண் என்றமையால் அங்கண் என்றதை மேலுலகம் என்றும். பெறுநர் நகரம் இடைநிலையாய் எதிர்காலத்தின்மேல் நிற்றலால் எதிர்காலவினைமுற்றுப்பெயர். (சா)

ஆதீபிதீசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எகஉ.

---

# முத்தீசப்படலம்.

கலிவிருத்தம்.

கற்றைச்செஞ்சடைக்காமருகொள்கையீ
ரற்றநீத்தருளாதீபிதீச்சரஞ்
சொற்றனம்புள்ளரசுதொழுதுசீர்க்
கொற்றமுற்றமுத்தீச்சரங்கூறுவாம்.

(இ-ள்.) செஞ்சடை கற்றை காமரு கொள்கையீர் அற்றம் நீத்தருள் ஆதீபிதீச்சரம் சொற்றனம் - செவந்த சடாபாரத்தையுடைய விருப்பந்தருந் தவக்கொள்கையையுடையீர் குற்றத்தை நீக்கியருளும் ஆதீபிதீச்சரத்தின் பெருமையைச் சொன்னோம், புள்ளரசு தொழுது சீர் கொற்றம் உற்ற முத்தீச்சரம் கூறுவாம் - கருடன் வணங்கிச் சிறப்புவாய்ந்த வெற்றியடைந்த முத்தீச்சரத்தின் பெருமையைக் கூறுவாம். (க)

மன்னுகாசிபன்றன்மனையாட்டியர்
பன்னுகத்துருப்பாவைசுபருணை

யென்னுமாதரிருவருந்தம்முரு
நன்னலத்தைநயந்துகொண்டாடினார்.

(இ-ள்.) மன்னு காசிபன் தன் மனையாட்டியர் பன்னுகத்துருபாவை சுபருணை என்னும் மாதர் இருவரும் - நிலைபெற்ற காசிபனது மனைவியராகிய சொல்லப்பட்ட கத்துருவென்னும் பதுமைபோல் வாளுஞ் சுபருணையென்னுஞ் சொல்லப்பட்டவளுமாகிய பெண்களிருவரும், தம் உருநல் நலத்தை நயந்து கொண்டாடினார் - தமதுருவின் மிக்க அழகினை விரும்பித் தம்முட்கொண்டாடி.

நன்னலம் ஒருபொருட்பன்மொழி ஆதலால் மிக்கவழகு என்றும். ஆடினார் முற்றெச்சம். (௨)

தத்தமேனித்தகைநலஞ்சாற்றுபு
மெய்த்தபூசல்விளைத்தனர்தோற்றவ
ருய்த்தவெஞ்சிறைமேவுகென்றொட்டினா
ரத்தவத்தனையண்மிவினாயினார்.

(இ-ள்) மெய்த்த பூசல் விளைத்தனர்-மிக்க போராடிய அவ்விருவரும், தம் தம் மேனி தகை நலம் சாற்றுபு-தத்தமக்குரிய மேனியினழகை நமது நாயகனிடத்துக்கூறி, தோற்றவர் உய்த்த வெம் சிறை மேவுக என்று ஒட்டினார்-அம்முனிவரால் அழகில் தோற்றவர்கள் செலுத்துங் கொடிய சிறைக்கூடத்திலடையக்கடவதென்று தம்முட் சபதங் கூறி, அ தவத்தனை அண்மி வினாயினார் - அக்காசிபமுனிவனையடைந்து எங்களுள்ளழகுடையவர் யாரென்று வினவினார்.

மெய்த்த என்னும் பெயரடியாகப்பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம் மிக்கவென்னும் பொருள்மேல் நின்றது. "உண்டற்குரியவல்லாப்பொருளை - உண்டனபோலக் கூறலுமரபே" என்ற சூத்திரத்தில் "கூறலும்" என்ற எதிரதுதழீஇய எச்சவும்மையால்.

பைத்தபாப்பகலல்குற்பணிமொழிக்
கத்துருப்பெயர்க்காரிகைவேறலாற்
சுத்தநீர்மைச்சுபருணைப்பேரிய
மைத்தகண்ணியைவெஞ்சிறைமாட்டினாள்.

(இ-ள்) பைத்த பாம்பு அகல் அல்குல் பணிமொழி கத்துரு பெயர் காரிகை வேறலால் - விரிந்த பாம்பின்படத்தையொத்த அகன்ற அல்குலையும் இனிய சொல்லையுமுடைய கத்துருவென்னும் பெயரையுடையாள் வெல்லுதலால், சுத்தம் நீர்மை சுபருணை பேரிய மைத்த கண்ணியை வெம் சிறை மாட்டினாள் - புனிதமாகிய குணத்தையுடைய சுபருணையென்னும் பெயரையுடைய மையெழுதிய கண்களையுடைய வளைக் கொடிய சிறைக்களத்திற் செலுத்தினாள்.

தனது நாயகனாகிய முனிவனால் தான் மிக்க வழகுடையவளென்று சொல்லப்பட்டாள் ஆதலால் வெஞ்சிறைமாட்டினாள் என்றார். (௩)

வீடுசெய்யெனவங்கவள்வேண்டலுங்
கூடுமூன்றும்விசும்பிற்குளிர்மதிப்
பாடுதோன்றுமமிழ்தமப்பண்ணவர்
நீடுகாவலினுள்ளதுநேரிழாய்.

(இ-ள்.) வீடு செய் என்ன அங்கு அவள் வேண்டலும் - என்னைச் சிறைக்களத்தில் நின்று விடுவிப்பாயென்று அவ்விடத்து அச்சுபருணை வேண்ட, நேரிழாய் கூடும் மூன்றும் விசும்பில் குளிர்மதி பாடு தோன்றும் அமிழ்தம் - பெண்ணே கூடிய மூன்றும் உலகமாகிய சுவர்க்கத்தில் குளிர்ந்த சந்திரனிடத்துத்தோன்றும் அமுர்தம், அ பண்ணவர் நீடு காவலின் உள்ளது-அங்குள்ள தேவர்களது மிக்ககாவலில் உள்ளது.

பூமி யந்தரசுவர்க்கம் என்றதனால் கூடு மூன்றும் விசும்பு என்றார். அடியில்வருஞ் செய்யுளைக்கொண்டு முடிதலால் ஒருதொடர். (௫)

அதுகொணர்ந்திங்களித்துநின்வெஞ்சிறை
விதுமுகத்திவிடுவித்துக்கொள்ளெனக்
கதிர்செய்பூண்முலைக்கத்துருகூறலு
மதியழிந்துவருந்திச்சுபருணை.

(இ-ள்.) விது முகத்தி அது கொணர்ந்து இங்கு அளித்து நின் வெம் சிறை விடுவித்து கொள் என்ன - சந்திரனை யொத்த முகத்தையுடைய சுபருணையே அதனையிங்குக் கொண்டுவந்து கொடுத்து உனது கொடிய சிறையை விடுவித்துக் கொள்ளாயென்று, கதிர் செய் பூண் முலை கத்துருகூறலும் சுபருணை மதி அழிந்து வருந்தி-விளங்கும் ஆபரணத்தையுடைய கத்துருவென்பவள் கூறச் சுபருணை யறிவழிந்துவருந்தி.(௬)

ஆசின்மெய்த்தவமாற்றியரும்பெறற்
காசிபன்னருள்பெற்றுக்கலுழனை
மாசிலாதமகவெனவீன்றனள்
பேசினளம்மகற்கிதுபெற்றியே.

(இ-ள்.) ஆசு இல் மெய் தவம் ஆற்றி பெறல் அருங் காசிபன் அருள் பெற்று - குற்றமில்லாத உண்மை வாய்ந்த தவத்தைச் செய்து பெறுதற்கரிய காசிப முனிவனுடைய கருணையைப் பெற்று, கலுழனை மாசு இல்லாத மகவு என்ன ஈன்றனள் - கருடனைக் குற்றமில்லாத புத்திரனைப் பெற்ற அச்சுபருணை, அ மகற்கு இது பெற்றி பேசினள் - அப்புத்திரனுக்குத் தான் சிறையினின்று நீங்குதற்குக் காரணமான தன்மை

தவமாவது சிவபெருமானைப் பூசித்தலே. (௭)

கேட்டெழுந்துகிளர்ந்துவிடைகொடு
கோட்டமில்புட்குலத்தரசன்னைதன்
வாட்டநீப்பவலிந்துகடுகிவிண்
ணாட்டினின்னமிழ்துற்றுழிநண்ணினன்.

(இ-ள்.) கோட்டம் இல் புள் குலத்து அரசு கேட்டு எழுந்து கிளர்ந்து விடைகொடு - மாறுபடுதலில்லாத பறவைக் கூட்டங்களுக் கரசனாகிய கருடன் அதனைக் கேட்டு மேலெழுந்து விளங்கி விடைபெற்று, அன்னை தன் வாட்டம் நீப்ப வலிந்து கடுகி - தனது தாயினது வாட்டத்தை நீக்க வலிந்து விரைந்து சென்று, விண் நாட்டின் இன் அமிழ்து உற்ற உழி நண்ணினன் - விண்ணுலகில் இனிய அமிழ் திருக்கு மிடத்து அடைந்தான்.

சுபருணை தவத்தால் முட்டையினின்று தோன்றிய கருடனது கிளர்ச்சியை நோக்கித் தேவர்கள் நடுங்கிய காலத்தில் நீங்க ளஞ்சன்மின் உங்களுக்குப் பகைஞர்க

ளாகிய அசுரர்களை வேரோடு கல்லுவேனென அவர்க்கு அபயந் தந்தமையால் கோட்டமில் எனக் கூறினர். (அ)

அங்கண்வைகியகாவலராயினர்
தங்கள்வீரந்தபப்பொருதேற்றெதிர்
வெங்கண்வெண்கயவேந்தனையோப்பினன்
பொங்குவேகப்பொலஞ்சிறைக்காற்றினல்.

(இ-ள்) அங்கண் வைகிய காவலர் ஆயினர் தங்கள் வீரம் தப பொருது - அவ்விடத்து அமுதத்தைக் காத்திருந்த காவலாளருடைய வீரங்கெடப் போர்செய்து, ஏற்று எதிர் வெம் கண் வெண் கய வேந்தனை பொங்கு வேகம் பொலம் சிறைகாற்றினல் ஒப்பினன் - எற்றெதிர்ந்த கொடிய கண்களையுடைய வெள்ளையானை யூர்தியையுடைய இந்திரனை அதிகரித்த வேகத்தையுடைய பொன்னிறம் வாய்ந்த சிறகின் காற்றின் வேகத்தால் ஓட்டினன். (கூ)

அமிழ்தம்வெளவியகல்வுழிமாலெதிர்ந்
துமிழ்சினத்தினுருத்துவெம்போர்செயத்
தமியனுயவுவணனுந்தாக்கின
னிமிழிசைப்போரிருவர்க்குமூண்டதே.

(இ-ள்.) அமிழ்தம் வெளவி அகல்வுழி மால் எதிர்ந்து உமிழ் சினத்தின் உருத்து வெம் போர் செய்ய-அமுதத்தைக் கவர்ந்து நீங்குமிடத்துத் திருமாலெதிர்ந்து மிக்க சினத்தோடு கோபித்துக் கொடிய போரைச்செய்ய, தமியன் ஆய உவணனும் தாக்கினன் இமிழ் இசை போர் இருவர்க்கும் மூண்டது - தனியனகிய கருடனும் போர்செய்ய ஒலிவாய்ந்த போர்த்தொழில் இருவர்க்கு மூண்டது.

இந்திரன் புறந்தரத் திருமால் அவனுக்குத் துணையாகப் போர்க்குவந்தனர் என்பார் மாலெதிர்ந் - துமிழ்சினத்தினுருத்துவெம்போர்செய எனவும், தனக்கோர் துணையில்லாது கருடன் போர்க்கெதிர்ந்தனன் என்பார் தமியனுயவுவணனுந்தாக்கினன் எனவுங்கூறினர். இமிழிசை ஒருபொருட்பன்மொழி. (கய)

ஏழடுக்கியமுந்நாளிருவருந்
தாழ்வொன்றின்றிச்சமர்பெரிதாற்றுழி
யாழிமாயனகமகிழ்கூர்ந்துயர்
பாழிவன்சிறைப்பார்ப்பினேநோக்கியே.

(இ-ள்.) ஏழ் அடுக்கிய முந்நாள் இருவரும் தாழ்வு ஒன்று இன்றி சமர் பெரிது ஆற்று உழி - இருபத்தொருநாள்காறும் அவ்விருவருந் தம்முள் தாழ்வு சிறிதுமில்லாமல் போர்த்தொழிலை மிகவுஞ் செய்யுமிடத்து, ஆழி மாயன் அகம் மகிழ் கூர்ந்து உயர் பாழி வன்சிறை பார்ப்பினை நோக்கி-சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை யேந்திய திருமால் மனமகிழ்ந்து உயர்ந்த பெருமைவாய்ந்த வலிய சிறகினையுடைய கருடனைப்பார்த்து.

இவனைப் போரில் வெல்லுத லரிதென்று திருமாலோர் வஞ்சனை சூழ்ந்தார் என்பார் ஆழிமாயனகமகிழ் கூர்ந்துயர் பாழிவன் சிறைப்பார்ப்பினை நோக்கி யென்றார் அதனைப் பின்னர்க்காண்க. (கக)

வன்புள்வேந்தநின்வீரமகிழ்ந்தன
னென்புடைவரங்கொள்ளெனவீங்கிய

னுன்பெருந்திறற்குண்மகிழ்ந்தேன்மற்றென்
றன்புடைவரங்கொள்ளெனச்சாற்றினான்.

(இ-ள்.) வன் புள் வேந்த நின் வீரம் மகிழ்ந்தனம் என்புடை வரம் கொள் என்ன - வலிய பறவைகளுக் கரசனாகிய கருடனே உனது வீரத்தை மகிழ்ந்தேம் என்னிடத்து வரங்கொள்ளா யென்று திருமால்கூற, இவன் ஈங்கு உன் பெரும் திறற்கு உள் மகிழ்ந்தேன் என்தன் புடை வரம் கொள் என்ன சாற்றினான் - இக்கருடன் இவிடத்து உனது பெரிய வன்மைக்கு மன மகிழ்ந்தேன் என்னிடத்து வரங் கொள்ளா யென்று கூறினான்.

திருமால் போல இவன் வஞ்சனை சூழ்ந்தில னென்பார் ஈங்கிவன் உன் பெருந் திறற்குள் மகிழ்ந்தேன் மற்றென் றன்புடை வரங்கொள் ளெனச் சாற்றினான் என்றார். திருமாலிடத்து வரங்கோடலை மாற்றி நிற்றலால் மற்று வினை மாற்றுப் பொருளில் வந்த விடைச்சொல். (கஉ)

மாயனம்மொழிகேட்டுமகிழ்ச்சியிற்
றூயையோதியசொற்றவறுயெனி
னீயெனக்குநெடுந்தகையூர்தியா
யேயுமிவ்வரம்யான்கொளநல்கென்றான்.

(இ-ள்.) மாயன் அ மொழி கேட்டு மகிழ்ச்சியின் தூயை ஓதிய சொல் தவறாய் என்னின் - திருமாலந்த வார்த்தையைக் கேட்டு மகிழ்ச்சியோடு புனித குணமுடையாய் நீ சொன்ன சொல் தவறுயானால், எனக்கு நீ நெடுந் தகை ஊர்தியாய் ஏயும் இ வரம் யான் கொள்ள நல்கு என்றான் - எனக்கு நீ பெருந் தன்மையை யுடைய வாகனமாகப் பொருந்திய இவ்வரத்தை நான் பெற அருளா யென்று கூறினான்.

தன்னினும் வலிய னிடத்து வலியில்லோன் கூறும் இரப்புரையாகத் திருமால் கூறினர் என்பார் இவவரம் யான்கொள நல்கென்றான் என்றார். (கங)

ஆர்த்திகூர்தரவம்மொழிகேட்டொரு
மூர்த்தமெண்ணியுயிர்த்துமொழிந்தமெய்
வார்த்தையிற்பிறழ்வஞ்சியற்றாகெனச்
சீர்த்தியாளன்விடைபெற்றுச்சென்றனன்.

(இ-ள்.) ஆர்த்தி கூர்தர அ மொழி கேட்டு ஒரு மூர்த்தம் எண்ணி உயிர்த்து - ஆசை மிக அந்த வார்த்தையைக் கேட்டு ஒரு முகூர்த்த காலங் கருதிப் பெருமூச்செறிந்து, மொழிந்த மெய் வார்த்தையில் பிறழ்வு அஞ்சி அற்று ஆக என்ன சீர்த்தி ஆளன் விடைபெற்றுச் சென்றனன் - தான்கூறிய உண்மை வார்த்தையிற் பிறழ்தற்கஞ்சி யப்படியே யாகட்டுமென்று புகழையுடைய அக்கருடன் விடைபெற்றுப் போயினன்.

கருடன் திருமால் சூழ்ந்த சூழ்ச்சி வஞ்சனை யென்று கருதினன் என்பார் ஒரு மூர்த்தமெண்ணி யுயிர்த்து எனவும், பராக்கிரமம்போல வுண்மையிலும் பிறழ்ச்சியில்லான் என்பார் மொழிந்த மெய்வார்த்தையிற் பிறழ்வஞ்சி யெனவும், தன் தாய்க் கருத்தை முற்று வித்து மீண்டு வந்து ஊர்தியாவே னென்பான் விடைபெற்றுச் சென்றனன் எனவுங்கூறினான். (கச)

மறுவில்கத்துருமாட்டுச்சுதைக்குடங்
குறியெதிர்ப்பைகொளக்கொடுத்தன்னையைச்

சிறையினீக்கினன்சீறரவங்கள்பாற
கறுவுசெய்துகொலைசெயுங்காதலான்.

(இ-ள்.) சீறு அரவங்கள் பால் கறுவு செய்து கொலை செய்யும் காதலான் - கோபிக்கும் பாம்புகளிடத்துக் கோபங்கொண்டு கொலை செய்யும் அக்கருடன், மறு இல்கத்துரு மாடு சுதை குடம் குறி யெதிர்ப்பை கொள்ள கொடுத்து அன்னையை சிறையில் நீக்கினன் - குற்றமில்லாத கத்துரு விடத்து அமுத கலசத்தைக் குறி யெதிர்ப்பையாகக் கொள்ளக் கொடுத்துத் தனது தாயைச் சிறையில் நின்று நீக்கினான்.

அவள் குறித்ததைக் கொடுத்து அதற் கெதிராகத் தன் தாயினைச் சிறையினின்று மீட்டமையால் குறி யெதிர்ப்பை கொளக் கொடுத் தன்னையைச் சிறையி னீக்கினன் எனவும், தன் தாய் கத்துருவுக்குத் தொழும்பு பூண்டொழுகுங்கால் அவளைச் சுமந்து திரிந்தது போலத் தானும் அவளீன்ற மக்களைச் சுமந்து கொண்டு என்றுந் திரிந்தமையால் அவர்களைக் கொலைசெய்யக் கறுவின னாதலால் அரவங்கள் பாற்கறுவு செய்து கொலைசெய்யுங் காதலான் எனவுங் கூறினார். குறியெதிர்ப்பை என்பதற்கு அளவு குறித்து வாங்கிய படியே யதற்கெதிர் கொடுத்தல், என "வறியார்க் கொன்றீவதே" என்னுந் திருக்குறளில் பரிமேலழகரெழுதி யிருத்தலைக்காண்க. (௧௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கச்சிவைப்பினையெய்தியாதிபிதக்கடிநகர்வடகீழ்பா
னச்சுமன்னைதன்சிறைக்குவீடருளுமுத்தீசனை நயந்தேத்தி
யிச்சையாற்றினிற்பெருவரம்பெற்றனனெறுழ்வலிப்பணிக்கூட்ட
மச்சமுற்றிடச்சிறகெழுவளியினிலலைத்தெழுபுள்வேந்தன்.

(இ-ள்.) எறுழ் வலி பணி கூட்டம் அச்சம் உற்றிட சிறகு எழு வளியினில் அலைத்து எழு புள் வேந்தன் - வலிமை மிக்க பாம்பின் கூட்டம் அச்சமடையச் சிறகில் நின்றும் எழாநின்ற காற்றினால்வருத்தி யெழுங் கருடன், கச்சிவைப்பினை எய்தி ஆதி பிதம் கடி நகர் வடகீழ் பால்-காஞ்சி யென்னுந் திருப்பதியையடைந்து ஆதீ பிதமென்னுங் காவல்பூண்ட நகரத்தின் வடகீழ்த் திசையில், நச்சும் அன்னை தன் சிறைக்கு வீடு அருளும் முத்தீசனை நயந்து ஏத்தி - விரும்புந் தனது சிறைக்கு விடுதலையைத் தன் தாய் முன்பு பூசித்ததா லருளிய முத்தீசனென்னு மிறைவனை விரும்பித் துதித்து, இச்சை ஆற்றினில் பெருவரம்பெற்றனன் - தனது இச்சைவழியால் பெரிய வரத்தையடைந்தான்.

அன்னை தன் சிறைக்கு வீடருளு முத்தீசன் என்றமையால் சிறையினின்று நீங்குதற்குத் தன் தாய் முன்பு பூசித்தனள் என்பது போதரலால் தாய் முன்பு பூசித்த என்றாம். (௧௬)

சித்தமாசொரீஇவிளங்குமேகாலியார்திருக்குறிப்புத்தொண்ட
ரத்தலத்தினில்வீடுபேறெய்தினர்மற்றுமாயிடைப்போற்றி
முத்திசேர்ந்தவரெண்ணிலார்மதிமுடிமுழுமுதலடிப்போதின்
வைத்தசிந்தையின்மூக்குறும்பெறிந்துயர்மாதவத்தலைவீர்காள்.

(இ-ள்.) மதி முடி முழு முதல் அடி போதின் வைத்த சிந்தையின் மூக் குறும்பு எறிந்து உயர் மாதவம் தலை வீர்காள் - இளஞ் சந்திரனை யணிந்த சடா முடியையுடைய இறைவனது திருவடித் தாமரையில் நிலை பெற வைத்த மனத்தால் காமம் வெகுளி மயக்கமென்னு மூக் குறும்புகளையும்வீசி யுயர்ந்த பெரிய தவத்தினை யுடைய சிரேட்டர்களே, சித்தம் மாசு ஒருவி விளங்கும் ஏகாலியார் திருக்குறிப்புத் தொண்டர் அத்

லத்தினில் வீடு பேறு எய்தினர் - மனத்திலுள்ள களங்கத்தைப் போக்கி விளங்காநின்ற ஏகாலியர் குலத்திற் றோன்றிய திருக்குறிப்புத் தொண்ட நாயனார் அந்தத் திருப்பதியில் முத்திப் பயனை யடைந்தனர், மற்றும் ஆயிடை போற்றி முத்தி சேர்ந்தவர் எண்ணிலார் – மீளவும் அத்திருப்பதியில் இறைவனைத் துதிசெய்து மோக்ஷ மடைந்தவர்கள் அளவில்லாதவர்கள்.

காஞ்சித்திருநகரில் முத்தீசத்தினருகில் ஏகாலியர் குலத்திலவதரித்துச் சிவனடியார் ஆடைகளை யொலித்துத் திருக்குறிப்புத்தொண்டநாயனார் முத்தியடைந்தனர் என்பது திருத்தொண்டர்புராணவரலாறு.

"அவ்வகையதிருநகரமதன்கணொருமருங்குறைவார்
இவ்வுலகிற்பிறப்பினாலேகாலிக்குலத்துள்ளார்
செவ்வியவன்புடைமனத்தார்சீலத்தினெறிநின்றார்
மெய்விரவுகண்டரடிவழித்தொண்டருளரானார்" எனத் திருத்தொண்டர் புராணத்தில் வருதல்காண்க. (௧௭)

முத்தீசப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அ௦௧௪.

## பணாதரீச்சரப்படலம்.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

கவையடிக்கயவாய்க்கருமேதிகளுழக்கியகடிவாவிச்
சுவைநறும்புனல்வாளைமீன்குதிக்குமுத்தீச்சரத்தியல்சொற்றாங்
குவைமலர்ச்செழும்பொதும்பரிற்பாட்டளிகொழிநறுமடுத்தும்ப
ரவைவியத்தகப்பண்பயில்பணாதரீச்சரமினியறைகிற்பாம்.

(இ-ள்.) கவை அடி கயவாய் கரு மேதிகள் உழக்கிய - பிளவுபட்ட காலையும் பெரிய வாயையும் உடைய கறுத்த எருமைகள் கலக்குதலால், கடி வாவி சுவை நறும் புனல் வாளை மீன் குதிக்கும் முத்தீச்சரத்து இயல் சொற்றாம் - வாச மிக்க தடாகத்தில் சுவை மிக்க நல்ல நீரில் வாளைமீன் குதித்தெழு முத்தீச் சரத்தினது இயலை முன் கூறினும், குவை மலர் செழும் பொதும் பரில் பாடு அளி கொழி நறுமடுத்து உம்பர் அவை வியத்தக பண் பயில் பணாதரீச்சரம் இனி அறைகிற்பாம் - மலர்க்குப் பலையுடைய மரஞ் செறிந்த சோலையில் இசைப் பாட்டினை யுடைய வண்டுகள் அச்சோலை கொழிக்குந் தேனை வாய் மடுத்துத் தேவர் சபை அதிசயங்கூர இசைபாடும் பணாதரீச் சரத்தின் பெருமையை யினியெடுத்துக் கூறுவாம்.

இங்குள்ள சோலைகளில் தேனை யுண்ட வண்டுகள் பாடும் இசைப் பாட்டுவிண்ணுலகிற் சென்றது எனச் சம்பந்த மில்லாதிருக்கவுஞ் சம்பந்தங் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி "தடவுங்கயவும் நளியும்பெருமை" என்ற சூத்திரத்தால் கயவாய் என்றதற்குப் பெரியவாய் என்றாம். (௧)

பழுக்கச்சுட்டபொற்பிழம்பெடுத்தப்பியபரிசுறழ்திருமேனிக்
கழுக்கடைப்படையேந்துமுத்தீசனெண்கழலடிதொழும்பேற்றா
லிழுக்கித்தங்கிளைமுருக்குறுங்கலுழனதெறுழ்வலித்திறனோக்கி
வழுக்கில்வெம்பணிக்குலங்களும்பிரானடிவழிபடநினைவுற்று.

(இ-ள்.) ப்ழுக்க சுட்ட பொன் பிழம்பு எடுத்து அப்பிய பரிசு உறழ் திருமேனி கழுக் கடை படை ஏந்தும் முத்தீசன் ஒண் கழல் அடி தொழும் பேறு ஆல் - பழுக்கக் காய்ச்சிய பொன்றிரட்சியை யெடுத்தப்பிய தன்மையையொத்த திருமேனியை யுடைய சூலாயுதத்தை யேந்திய முத்தீசனது ஒள்ளிய வீர கண்டையை யணிந்த திருவடியைத் தொழும் பலனால், இழுக்கு இல் தம்கிளை முருக்குறும் கலுழனது எழும் வலி திறன் நோக்கி வழுக்கு இல் வெம் பணி குலங்களும் பிரான் அடி வழிபட நினைவுற்று - தப்பாது தங்கள் சுற்றமுழுமையையுங் கெடுக்கும கருடனது வலிமையின் றிறத்தைப் பார்த்துக்கொடுந் தொழிலினின்றும் வழுவாத கொடிய பாம்பின் கூட்டங்களும் அவ்விறைவனது திருவடியை வழிபடக்கருதி.

சிவபிரானை வழி படுதலால் பகைவரை யழிக்கும் வன்மைபெற்றதென்பார் தொழும்பேற்றால் இழுக்கில்தங்கிளை முருக்குறுங்கலுழனெனவும், அப்பெருமான் றிருவருளால் தங்களை வருத்துங் கருடன் செயலைமாற்ற அப்பெருமானையன்றி மற்றொரு கடவுளரை வழிபட்டால் முற்றாதெனப் பாம்புகள் கருதினவென்பார் பிரானடி வழிபட நினைவுற்று எனவுங்கூறினார். தமது சுற்றங்களைக்கெடுத்தலால் அஞ்சிய பாம்புகள் தாமுய்ய வழிபட்டன என்னும் பொருள்மேல் நிற்பதெனவுணராது தங்கிளை முருக்குறும் என்னும் பாடத்தைத் தங்களை எனத் திருத்தினர். இவற்றுள் நயமுடைய தின்னதென வுணரார்போலும் (உ)

தழங்குதீங்கிணைமுழக்கருத்தடநெடுங்கச்சிமாநகர்சார்ந்து
முழங்குவெண்டிரைசுழித்துவானிமிர்ந்துநான்முகன்மகந்தபச்சீறி
வழங்குநன்னதிவடக்கணாதிபிதவளநகர்த்தென்பாங்கர்ப்
பழங்கணோயறப்பணாதரீச்சரன்றனைப்பத்தியிற்றாபித்து.

(இ-ள்.) தழங்கு தீங்கிணை முழக்கு அருத தட நெடும் கச்சிமா நகர் சார்ந்து - ஒலிக்கும் கொடிய மருத நிலப்பறையின் முழக்கமருத பரந்த நெடிய கச்சி யென்னும் பெரிய திருநகரை யடைந்து, முழங்கு வெண் திரை சுழித்து வான் நிமிர்ந்து நான் முகன் மகம் தபசீறி வழங்கும் நல் நதி வடக்கு கண் - ஒலிக்கும் வெள்ளிய அலைகள் சுழித்து ஆகாயத்தையளாவ நிமிர்ந்து பிரமன்செய்யும் வேள்விகெடக் கோபித்துவரும் அழகிய வேகவதிநதியின் வடக்கில், ஆதிபிதவளநகர் தென்பாங்கர் - ஆதிபிதீச்சரமென்னும் வளமைவாய்ந்த நகரின் தென்பக்கத்தில், பழங்கண் நோய் அற பணாதரீச்சரன் தனை பத்தியில் தாபித்து - தமக்கு நேர்ந்த துன்பநோய் நீங்கப் பணாதரீச்சரனென்னுந் திருநாமம்வாய்ந்த சிவலிங்கப்பெருமானை யன்போடு தாபனஞ்செய்து.

பிரமன் செய்த வேள்வியை யழிக்க நதி வடிவாய்வந்ததை முன்னர்க்காண்க.

விதிமுறைச்சிவபூசனையாற்றிமால்விடைக்கொடிப்பெருமானின்
புதியபூங்கழலருச்சனைப்பேற்றினாற்புள்ளிறைமிடலெய்தி
யதிர்வுறுத்தெமையலைத்திடவெரீஇயினமடைக்கலமபுகுந்தேம்யாங்
கதியெமக்குவேறில்லையென்றிரத்தலுங்கண்ணுதலருள்கூர்ந்து

(இ-ள்.) மால் விடை கொடி பெருமான் - திருமாலாகிய இடபக்கொடியை யுயர்த்த பெருமானே, விதி முறை சிவ பூசனை ஆற்றி நின் புதிய பூங்கழல் அருச்சனை பேற்றினால் - ஆகமவிதியின் முறையே சிவ பூசனையைச்செய்து உனது அன்றலர்ந்த தாமரை மலரை யொத்த திருவடிக்குச் செய்யும் அருச்சனைப் பலத்தினால், புள் இறை மிடல் எய்தி அதிர் வுறுத்து எம்மை அலைத்திட யாம் வெருவினம் அடைக்கலம் புகுந்தேம் - கருடன் வலிமை யடைந்து நடுக்கஞ் செய்து எம்மை வருத்த நாங்க ளஞ்சி

26.



பஞ்சாக்ஷரப்படலம்

யடைக்கலம் புகுந்தேம், எமக்குக் கதிவேறு இல்லை என்று இரத்தலும் கண்ணுதல் அருள் கூர்ந்து - எங்களுக்குக் கதி நின்னை யன்றி வேறில்லை யென்று குறையிரக்கச் சிவபெருமா னருள்கூர்ந்து.

அதிர்வுறுத்து ஒரு சொன்னீர்மைய. பெருமான் அண்மைவிளி. தம்மின் மிக்க பகைவரைக் கெடுக்கும் வலிமை வேண்டினோர் சிவபிரானை யடைய வேண்டுதலால் அருச்சனைப் பேற்றினாற் புள்ளிறை மிடலெய்தி யதிர்வுறுத்தெமை யலைத்திட வெனவும், பகைவரா லலைக்கப்பட்டவர் அவ்வலைப்பினை நீக்கிக் கொள்ளுதற்கு அப் பெருமானையே சரணடைய வேண்டுதலால் யாம் வெருவின மடைக்கலம் புகுந்தேம் எனவுங்கூறிய தாகக் கூறினார். சூரபன்மனிடத்தும், அச்சூரபன்மனா லலைப்புண்ட அயன் முதலிய தேவரிடத்துங்காண்க. (௭)

பன்னகங்களைப்பணியெனத்தாங்கினன்பன்னகாபரணன்ற
னின்னருட்பெறுமதுகையான்மற்றவையெந்தைபாலரியோடுந்
துன்னவெம்பகைக்கலுழனைக்கலுழனேசுகங்கொலென்றஞ்சாமே
பன்னிமேன்மையின்வினவினவிமமொழிபாரெலாமெடுத்தோதும்.

(இ-ள்.) பன்னகங்களை பணி என்ன தாங்கினன் பன்னகாபரணன் தன் இன் அருள்பெறும் மதுகையால் அவை - சர்ப்பங்களை யாபரணமாகத் தாங்கியருளினன் (அதனால்) அச்சர்ப்பாபரணத்தையுடைய இறைவனது இனிய அருளைப்பெறும் வன்மையால் அப்பாம்புகள், எந்தைபால் அரியோடும் துன்னும் வெம் பகை கலுழனை கலுழனே சுகம் கொல் என்று அஞ்சாமேபன்னி மேன்மையின் வினவின - எந்தையாகிய அவ்விறைவனிடத்துத் திருமாலோடும் அடைந்த தமக்குக் கொடிய பகையாகிய கருடனை நோக்கிக் கருடனே சுகமாவென்று சிறிதும் அஞ்சாமற்கூறி மேன்மையோடு வினவின, இ மொழி பார் எல்லாம் எடுத்து ஓதும் - இந்தப்பழமொழியை உலகிலுள்ள யாவரும் எடுத்துக்கூறுவர்.

தேவ தாருவன முனிவர் முரணிப் பின்னரேவப் பகைத்து வந்த பாம்புகளை அணியாகக் கொண்டவன் தன்னைச் சரணமடைந்த பாம்புகளை யணியாகக் கோடலரிதன்றாதலால் பன்னகங்களை யணியெனத் தாங்கினன் எனவும், தம்மைத் தாங்கிய சிவபெருமான் திருவருளைப் பெறுதலால் கருடனினும் மிக்க வன்மையடைந்து அக்கருடனை நோக்கி யேன் கருடா சுகமா வென்று வினவிய தாதலால் துன்னு வெம்பகைக் கலுழனைக் கலுழனே சுகங்கொலென் றஞ்சாமே பன்னி மேன்மை யின் வினவின எனவும், இவ்வாக்கியம் அன்று தொட்டு உலகில் வழங்கி வந்த தாதலால் இம் மொழி பாரெலா மெடுத்தோதும் எனவுங் கூறினார்.

தேவதாருவன முனிவரேவிய பாம்புகளை யணியாகவணிந்தனர் என்பதை.

"ஏந்தியபின்னர்வேள்வியெரியழற்கிடையேயெண்ணில்
பாந்தளங்கெழுந்துதீயோர்பணியினாற்சீற்றத்தோடும்
போந்தனவவற்றைமாயோன்புள்ளினுக்கஞ்சித்தன்பால்
சேர்ந்திடுபணிகளோடுஞ்செவ்விதிற்புனைந்தானெங்கோன்
பணியெலாம்பணியதாகிப்பரனிடைத்திகழ" எனக் கந்தபுராணத்தில் வருதல் காண்க. (௮)

சிறியராயினார்சார்பினைவிழையன்மின்றிறல்கெழுபெரியோரா
மறிஞராயினார்சார்பினைவிழைமினேவலரிதழ்விரிகொன்றை
வெறிநறுந்தொடையெம்பிரான்சார்பினைவிழைதலாலுரகங்கண்
மறுவிலாற்றல்சால்கலுழனைவினவினவாழ்ந்தனையோவென்ன

(இ-ள்.) உரகங்கள் அலர் இதழ் விரி கொன்றை வெறி நறும் தொடை எம்பிரான் சார்பினை விழைதலால் - பாம்புகள் அலர்ந்து இதழ் விரிந்த கொன்றை மலராற் றொடுத்த வாசமிக்க நறுமணங் கமழு மாலையை யணிந்த எமது பெருமானது சார்பினை விரும்புதலால், மறு இல் ஆற்றல் சால் கலுழனை வாழ்த்தனையோ என்ன வினவின குற்றமில்லாத வலிமைமிக்க கருடனைநோக்கி என்கருடா சுகமாவென்று வினவின, (அதனால்) சிறியராயினும் சார்பினை விழையன் மின் திறல் கெழு பெரியோராம் அறிஞர் ஆயினும் சார்பினை விழைமின் - சிறியோர் சார்பினை விரும்பாதொழியுங்கள் வலிமைமிக்க அறிவிற் சிறந்தோர் சார்பினை விரும்புங்கள்.

முன்னது நற்பொருட் காட்சியணியும் பின்னது விதியணியுங் கலந்து வருதலாற் கலவையணி. (சு)

பவளச்செந்தளிர்நீட்டியபைம்பொழிற்பணாதரீச்சரவைப்பிற் [ங்
குவளைக்கண்ணியோடுயிர்க்கெலாமின்னருள்கொழித்து வீற்றிருந்தோங்கு
கவளக்கைவளையுரித்தவனிக்கதைகற்றவர்கேட்டோர்க்குந்
தவளப்பூதிகொண்மேனியீர்வெம்பணித்தழல்விடமணுகாதால்.

(இ-ள்.) தவளம் பூதி கொள் மேனியீர் - வெள்ளிய விபூதியை யணிந்த மேனியையுடைய முனிவர்களே, பவளம் செம் தளிர் நீட்டிய பைம் பொழில் பணாதரீச்சர வைப்பில் குவளை கண்ணியோடு உயிர்க்கு எல்லாம் இன் அருள் கொழித்து வீற்றிருந்து ஓங்கும் கவளம் கைவளை உரித்தவன் இ கதை - பவளம் போலச் செந்நிறம்வாய்ந்த தளிர்கள் தளிர்த்த பசிய சோலை சூழ்ந்த பணாதரீச்சர மென்னுந் திருப்பதியில் குவளைமலரை யொத்த திருக் கண்களையுடைய உமாதேவியோடு ஆன்மாக் களுக்கெல்லா மினிய திருவருள்செய்து நிகரின்றியிருந் துயர்ந்தோங்கிய கவளத்தையுண்ணும் யானையையுரித்துத் தோலைப் போர்வையாகப்போர்த்த இறைவனது இச்சரிதத்தை, கற்றவர் கேட்டோர்க்கும் வெம்பணி தழல் விடம் அணுகாது - கற்றோர்க்குங் கேட்டோர்க்குங் கொடிய பாம்பினது தீயையொத்த விஷத்தால் வருமரணம் வந்தடையாது.

"அள்ளிக்கொள்வன்னகுறுமுகிழவாயினும்" என்றாற்போலச் செந்தளிர் நீட்டிய பைம்பொழில் எனவந்தது "உண்டற்குரிய அல்லாப்பொருளை" என்ற சூத்திரத்தில் வந்த வும்மையால். இவ்விரண்டுங் கவி கூற்றுத்துறை. (எ)

பணாதரீச்சரப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அஉக.

## காரோணப்படலம்.

வயிறுளைந்தலறிச்சங்கினமுயிர்த்தமணிநிலாவெறித்திருள்சீத்துப்
பயில்விளைமுளரியிலஞ்சிசூழ்கிடந்தபணாதரீச்சரமிதுபகர்ந்தாந்
துயில்வரவறியாப்பல்லியந்துவைக்குந்தூமணிநெற்றிசூழ்காஞ்சிக்
குயிரெனச்சிறந்தவுத்தமத்திருக்காரோணத்தினுண்மையையுரைப்பாம்.

(இ-ள்.) சங்கு இனம் வயிறு உளைந்து அலறி உயிர்த்த மணிநிலா எறித்து இருள் சீத்து பயில் விளை முளரி இலஞ்சி சூழ்கிடந்த பணாதரீச்சரம் இது பகர்ந்தாம் - சங்கின் கூட்டங்கள் கருப்ப வாதனைப் பட்டுக் கலங்கிப் பெற்ற முத்துகள் கிரணங்களை வீசி யிருளைக் கெடுத்து விளங்கும் வாசம் வாய்ந்த தாமரைகளை யுடைய தடாகஞ் சூழ்

ந்த பஞ்சரீச்சரமாகிய இதனைக் கூறினும், துயில் வரவு அறியாத பல்லியம் துவைக்கும் தூமணி தெற்றி சூழ் காஞ்சிக்கு உயிர் என்ன சிறந்த உத்தமம் திருக் காரோணத்தின் உண்மையை உரைப்பாம் - நித்திரை செய்தலையறியாத பல வாச்சியங்க ளொலிக்குங் களங்க மில்லாத இரத்தினங்க ளிழைத்த வேதிகை சூழ்ந்த காஞ்சித் திருப்பதிக்கு உயிர் போலச் சிறந்த உத்தமம் வாய்ந்த திருக்காரோணத்தினது உண்மையை யினி யெடுத்தோதுவாம்.

காயா ரோகணம் காரோணம் எனவந்தது வடமொழிச் சிதைவு. துயில் வர வறியாப் பல்லியம் என்றது என்று மொலிக்கும் என்னு முக்கியப் பொருளின் வினை யை யொப்புடைப் பொருண்மேற்றந்து கூறுதலால் குணவணி. (௧)

படுங்கலைமுகுர்த்தங்காட்டைகளென்றுபகலிராப்பக்கமேதிங்க
ளொடும்புணரிருதுவாண்டுகத்தொடக்கத்தோதியவவயவப்பகுப்பா
னிடும்பைநீர்காலங்கழிவுறுங்காலத்தெல்லையில்யாவருமிறுவர்
நெடும்புலக்குறும்புகடந்துளீருலகினிலைப்பதோர்பொருளுமற்றின்றால்.

(இ ள்.) நெடும் புலம் குறும்பு கடந்துளீர் படும் கலை முகுர்த்தம் காட்டைகள் பகல் இரா பக்கம் திங்கள் ஒடும் புணர் இருது ஆண்டு உகம் தொடக்கத்து ஓதிய அ வயவம் பகுப்பான்-விஷயங்களிற் செல்லுதலில் மிக்க இந்திரியங்களாகிய குறுநிலமன்ன ரைக்கடந்த முனிவர்களே அமைந்த கலையும் முகூர்த்தமும் காட்டைகளும் பகலும் இரவும் பக்கமும் மாதமும் இவற்றோடுகூடிய இருதுவும் வருடமும் யுகமுமாகிய தொ டக்கத்தோடுகூறிய அவயவமாகிய பகுப்பினால், இடும்பை நீர் காலம் கழிவுறும் காலத் து எல்லையில் யாவரும் இறுவர் - நிறைந்த காலமானது கழியு மக்கால அளவில் தேவர் முதலிய யாவரும் அழிவார்கள், உலகில் நிலைப்பது ஓர் பொருளும் இன்று - உலகத்தி லழியாது நிலைபெறும் ஒருபொருளுமில்லை.

நிமிடம் பதினைந்து கூடியது காட்டை, காட்டை முப்பது கூடியது கலை, கலை முப்பதுகூடியது முகூர்த்தம், முகூர்த்தம் முப்பது கூடியது இரவும் பகலும், அது பதினைந்து கூடியது பக்கம், பக்கம் இரண்டு கூடியது மாதம், ஆறு மாதங் கூடியது ஒரு அயனம், இரண்டயனங் கூடியது ஒரு வருடம், இவ்வளவை கூடிய வருடம் மா னுட வருடம், இவ்வருடம் தேவர்களுக்கு ஒருநாள். இதனைமுன்னர்கூறிய வகையாக உறழ்ந்துகொள்க. என்று எண்ணிடைச்சொல்.

“ உற்றிடுநிமிடமோர்பதினைந்துகாட்டையென்றுரைத்திடப்படுமால்
மற்றவக்காட்டைமுப்பதுகலையாம்வகுத்திடுங்கலையொருமுப்பான்
பெற்றிடுமுகுர்த்தமாமதுமுப்பானிராப்பகல்பின்னராங்கவையே
பக்கமோரிரண்டுமாதமாமதனுட்பகர்ந்திடுமமரபக்கந்தான்.

பக்கமோரிரண்டுமாதமாமதனுட்பகர்ந்திடுமமரபக்கந்தான்
மிக்கதாம்பகலாமிரவெனலாமான்மேவுறுபூருவபக்கம்
தொக்கதென்புலத்தார்தமக்கறுதிங்களயனமாஞ்சொற்றவீரயன
தக்கவோர்வருடமானுடர்க்கென்னச்சாற்றுவரறிவின்மிக்காரே.

மானுடவருடந்தேவர்கட்கொருநாண்மாசறுவடதிசையயனம்
ஆனதோர்பகலாந்தென்றிசையயனமிரவெனவறைந்திடலாமால்
பான்மைசால்வருடமுப்பதோர்திங்களாகுமாற்பகர்ந்திடுதிங்கள்
ஊனமிலோர்பானிரண்டுமோர்வருடமாகுமாலுணர்ந்துரைத்திடிலே” என வா யுசங்கிதையில் வருதல்காண்க. (௨)

*ஈண்டுமோரிருபானுயிரந்தலையிட்டியன்றநாற்பத்துமூன்றிலக்க*
*யாண்டெனப்படுவநான்குகத்தளவையிம்முறையாயிரமிறந்தாற்*
*காண்டகுமயனுக்கொருபகலதுவேகற்பமாமிரவுமத்துணைத்தவ்*
*வாண்டகைக்கந்நாண்முப்பதோர்திங்களஃதொருபன்னிரண்டாண்டே.*

(இ-ள்.) நான்கு உகத்து அளவை ஈண்டும் ஓர் இரு பான் ஆயிரம் தலையிட்டு இயன்ற நாற்பத்து மூன்று இலக்க ஆண்டு என்ன படுவ - கிரேதாயுக முதலிய நான்கு யுக அளவைகள் இப்ப குப்பால் நெருங்கிய நாற்பத்துமூன்றுலக்ஷத்திருபதினாயிரவருடங்கள் என்று சொல்லப்படுவன, இ முறை ஆயிரம் இறந்தால் காண்டகும் அயனுக்கு ஒருபகல்-இம்முறையாக ஆயிரம் கடந்தால் காணத்தகும் பிரமனுக்கு ஒருபகல், அதுவே அ ஆண்டகைக்கு கற்பம் ஆம்-அப்பகலே அப்பிரமனுக்கு ஒருகற்பமாம், இரவும் அத்துணைத்து-இராப்பொழுதும் அவ்வளவினது, அ நாள் முப்பது ஓர் திங்கள் அஃது ஒரு பன்னிரண்டு ஆண்டு - அவ்வாறமைந்த நாள் முப்பதும் ஒருமாதம் அம்மாதம் பன்னிரண்டுவருடமாம்.

"மூன்று தலையிட்ட முப்பதிற் றெழுத்தும்" என்றாற்போல இருபானாயிரந் தலையிட் டியன்ற நாற்பத்து மூன்றிலக்கம்" என்றார். இருபதி னாயிரத்தைத் தனது தலையிலிட்ட நாற்பத்து மூன்றிலட்சம் என்பது பொருள். (௩)

*பகர்ந்தவாண்டொருநூறிருவகைப்பராத்தம்பற்றறில்வெள்ளிவண்டோடு*
*தகர்ந்திடவுடைத்துமுடங்குகான்ஞிமிறுதழங்கிசைப்பேட்டோடுநறுந்தே*
*னுகர்ந்துபண்பயிற்றும்பொருட்டலர்கமலநோன்மலரணங்கினுக்கரங்க*
*நிகர்ந்தநாவகத்துப்பழமறைகொழிக்குநெடுந்தகைக்கிறுதிவந்துறுமால்.*

(இ-ள்.) பகர்ந்த ஆண்டு ஒரு நூறு இருவகை பராத்தம் - சொல்லப்பட்ட அவ்வருடம் ஒரு நூறு இருவகைப் பராத்தமாகும், பற்று அறில் வெள்ளி வண்டோடு தகர்ந்திட உடைத்து முடங்கு கால் ஞிமிறு தழங்கு இசை பேடு ஓடு நறும் தேன் நுகர்ந்து பண் பயிற்றும் பொருட்டு அலர் கமலம் நோன் மலர் அணங்கினுக்கு - இக்கால வளவை யொழிந்தால் முடங்கிய காலையுடைய ஆண் வண்டுகள் வெள்ளிய வளவிய இதழ் உடைபட வுடைத்து ஒலிக்கும் இசையையுடைய பெண்வண்டோடு நறுமணங் கமழுந் தேனைப்பருகி யிசைபாடும் பொருட்டோடலர்ந்த பொறுத்தலமைந்த தாமரை மலரில் வசிக்குங் கலைமகளுக்கு, அரங்கம் நிகர்த்த நா அகத்து பழமறை கொழிக்கும் நெடுந் தகைக்கு இறுதிவந்துறும் - நாடகசாலையையொத்த நாவினிடத்துப் பழமையாகிய வேதங்களைக்கொழிக்கும் பிரமனுக்கு முடிவுவந்து கூடும்.

வாக்கின் செல்வியெனவந்த காரணப்பெயர்க்கமையப் பிரமனாவின் நடித்தலால் கமலமலரணங்கினுக் கரங்கம் நிகர்த்தநாவென்றார். (௪)

*அங்கதுமுகுந்தன்றனக்கொருபகலாமம்முறையாண்டுநூறெய்திற்*
*செங்கதிர்ப்பரிதிமழுங்கவிட்டெறிக்குஞ்சேயொளிவிலைவரம்பிகந்த*
*பைங்கதிர்க்கடவுட்கவுத்துவமிமைப்பப்பசுந்துழாய்துயல்வருமார்பிற்*
*கொங்கலர்கதுப்பிற்றிருவினையாடுங்குரிசிலுமெய்துவனொடுக்கம்.*

(இ-ள்) அங்கு அது முகுந்தன் தனக்கு ஒரு பகலாம் அ முறை ஆண்டு நூறு எய்தில் - அப்பிரமனிறுதிக்காலம் திருமாலுக்கொருநாளாம் அம்முறையாக நூறுவருடம் வந்தால், செம் கதிர் பரிதி மழுங்க சேயொளி விட்டு எறிக்கும் விலை வரம்பு இகந்த பைங்கதிர் கடவுள் கவுத்துவம் இமைப்ப - சிவந்த ஒளிவீசி விளங்கும் விலையளவுகடந்த அரிய கிரணத்தையுடைய தெய்வத்தன்மைவாய்ந்த கவுத்துவமணி விள

ங்க, பசும் துழாய் துயல் வரும் மார்பில்கொங்கு அலர் கதுப்பின் திரு விளையாடும் சூரி சிலும் ஒடுக்கம் எய்துவன் - பசிய துழாய்மாலை தொங்கியசைய மார்பில் மகரந்தத்தோ டலர்ந்த கூந்தலையுடைய திருமாது விளையாடும் திருமாலும் ஒடுக்கம் அடைவான்.

பசுமையென்னும் பண்பு முன்னர்ப் "பச்சைப்பிள்ளை" என்றாற்போல அருமை மேலும் பின்னர் நிறத்தின் மேலு நின்றது. இருளுள்ள விடத்தில் ஒளித்தோற்றஞ் சிற க்கு மாதலால் கவுத்து வமிமைப் பப்பசுந் துழாய் துயல் வரும் என்றார். (௯)

இருவருமொருங்கேயிறவருங்காலையெந்தையேயொடுக்கியாங்கவர்த
முருவமீதேற்றிக்கோடலாற்காயாரோகணப்பெயரதற்குறுமால்
வருமுறையிவ்வாறெண்ணிலாவிரிஞ்சர்மாயவர்காயமேற்றாங்கிக்
கருணையாலங்கணடம்புரிந்தருளுங்கால்மாய்க்காலமுங்கடந்தோன்.

(இ-ள்.) இருவரும் ஒருங்கே இற வரும் காலை எந்தையே ஒடுக்கி ஆங்கு அவர் தம் உருவம் மீது ஏற்றி கோடலால் காயாரோகணம் பெயர் அதற்கு உறும் - பிரமனுந் திருமாலும் ஒரு சேர அழிய வருங் காலத்தில் என் றந்தையாகிய சிவ பெருமானே அவ்விருவரையும் ஒடுக்கி அவ்விடத்து அவ்விருவர் தம் முழுவெலும்பைத் தமது திரு மேனியி லேற்றிக்கொள்ளுதலால் காயாரோகணமென்னும் பேர்பொருந்தும், இ ஆறு வரு முறை எண் இல்லாத விரிஞ்சர் மாயவர் காயம் - இவ்வாறு வருமுறையால் அள வில்லாத பிரமர்களுந் திருமால்களுமாகிய இவர்களது காயத்தை, காலம் ஆய் காலமும் கடந்தோன் மேல் தாங்கி கருணையால் அங்கண் நடம்புரிந்தருளும் - காலமாகி அக்கால த்தையுங்கடந்த இறைவன் திருமேனிமே லவற்றைத்தாங்கிக் கருணையோடு அவ்விடத் தில் நடனஞ்செய் தருளுவான்.

அவர்களழியுங் காலதத்துவந் தானாய் நின்றான் என்பார் காலமாய் எனவும், அக் காலதத்துவந் தானாய் நிற்றலால் அவர்களுக்கு வரையறுத்த காலம்போலத் தனக்கோர் கால வரையறையில்லாதானென்பார் காலமுங்கடந்தானெனவுங் கூறினார்.

காலமாய்க்காலமுங் கடந்தோன் என்றதை—

"ஆதலினப்பிரளயத்தைப்பிரகிருதிப்பிரளயமென்றறைவரந்தண்
போதுறைபுத்தேண்முதலாமெத்தேவுமிறந்துபிறந்துழல்வர்போற்றும்
மேதகுகாலத்துருவாய்க்காலவரைகடந்துவெறுவெளியாயென்றுஞ்
சாதல்பிறப்பில்லாததனைப்பிரமமகேச்சரனென்றுரைப்பர்தக்கோர்" எனக்
கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (௬)

ஆதலாற்சிறந்ததிருநகரதனையடைந்துளோரிருமையுமெய்தி
மேதகுதுரியங்கடந்தபேரின்பவீட்டினைத்தலைப்படவல்லர்
சீதளகமலப்பொருட்டணைக்கிழத்திசெஞ்சடைப்பிரானைவில்லத்தாற்
கோதறவழிபட்டச்சுதன்றனக்குக்கொழுநனைப்பெற்றனளங்கண்.

(இ-ள்.) ஆதலால் சிறந்த திருநகர் அதனை அடைந்துளோர் இருமையும் எய்தி மேதகு துரியம் கடந்த பேரின்ப வீட்டினை தலைப்பட வல்லர் - ஆகையால் மேம்ப ட்ட அத் திருநகரை யடைந்த வர்கள் இம்மைப் பயன் மறுமைப் பயனென்னு மிரண் டினையு மடைந்து மேம்பட்ட துரியத்தைக் கடந்த பேரின்பந் தரு முத்தி யினையடை ய வல்லவ ராவார், அங்கண் சீதளம் கமலம் பொருட்டு அணை கிழத்தி செம் சடை பி ரானை வில்லத்தால் கோது அற வழி பட்டு அச்சுதன் தனக்கு கொழுநன் ஆக பெற்ற னள் - அத் தலத்தில் குளிர்ந்த தாமரையின் பொருட்டாகிய அணையில் வசிக்குந் திரு

மகள் செவந்த சடாமுடியையுடைய இறைவனைக் குற்றமற வழிபட்டுத் திருமாலைத் தனக்கு நாயகனாக அடைந்தனள்.

பசுகரணம் சிவகரணமாய் நிற்றல் நின்மலதுரீய நிலையாதலால் மேதகு துரியமெனவும், அப்பசுகரணஞ் சிவகரணமாய்க் கருவிகளோடுகூடி நிற்குஞ் சகலசாக்கிரத்தில் அக்கருவிகளோடுங் கூடாநிற்கும் நின்மலதுரியாதீத நிலையே பேரின்பமயமான முத்தியாதலால் கடந்த பேரின்பவீட்டினைத் தலைப்படவல்லார் எனவும் கூறினார் (எ)

பிறங்கொளிவிசும்பிற்குரவனும்வியாழப்பெருந் தகையாயிடையெய்திக்
கறங்கிசைவிளரிப்பாட்டளியிமிர்ந்துகளிமதுவுண்டுதேக்கெறிந்தங்
குறங்குபொன்னிதழிநறுந்தொடைவேணியொருவனையருச்சனையாற்றி
யறங்கரைசிறப்பிற்சேந்தநாத்தழுப்பவாரணமொழிகளாற்றுதிப்பான்.

(இ-ள்.) பிறங்கு ஒளி விசும்பில் குரவன் ஆம் வியாழன் பெருந்தகை ஆயிடை எய்தி - விளங்கு மொளி வாய்ந்த விண்ணுலகிற்குக் குருவாகிய பிரகற்பதி யென்னும் பெருந் தன்மையை யுடைய கடவுள் அவ்விடத்து வந்து, அளி கறங்கு இசை விளரி பாட்டு இமிர்ந்து களி மது உண்டு தேக்கெறிந்து அங்கு உறங்கு பொன் இதழி நறும் தொடை வேணி ஒருவனை அருச்சனை ஆற்றி - வண்டுகள் ஒலிக்கும் விளரிப் பண்ணமைந்த பாட்டினைப் பாடிக் களித்துத் தேனுண்டு தேக்கெறிந்து அவ்விடத்து உறங்கும் பொன்போன்ற கொன்றைமலராற்றொடுத்த நறுமணங்கமழு மாலையையணிந்த சடாமுடியையுடைய இறைவனை யருச்சனை செய்து, அறம் கரை சிறப்பில் சேந்த நா தழுப்ப ஆரண மொழிகளால் துதிப்பான் - தருமநூலை யெடுத்துக்கூறுஞ் சிறப்பாற் செவந்த நாத்தழும்பேற வேதமொழிகளாற் றுதித்தான்.

தருமம் தானியாகு பெயராய் நூல்மேல் நின்றது. அந்நூலைத் தன்னை வழிபடுவோர்க்கு என்றுங் கூறுதலால் வந்த செம்மையென்பார் அறங்கரை சிறப்பிற்சேந்தநா என்றார். (அ)

பிராமணனீயேகடவுளர்தம்முட்பிஞ்ஞகாவேனையோர்தம்முட்
பிராமணன்யானேபிராமணன்றனக்குப்பிராமணன்கதியுனையிகழ்வோன்
பிராமணனல்லன்றன்குலதெய்வம்விண்டுபின்னொருன்றனைத்தொழுமப்
பிராமணற்கிரண்டும்பயப்படாநிரையம்புகுவனென்றுயர்மறைபேசும்.

(இ-ள்.) பிஞ்ஞகா கடவுளர் தம் உள் நீயே பிராமணன் - இறைவனே அயன் முதலிய தேவர்களுள் நீயே பிராமணன், ஏனையோர் தம் உள் யானே பிராமணன் - மற்றையோருள் யானே பிராமணன் (ஆதலால்) பிராமணன் தனக்கு பிராமணன் கதி - பிராமணனுக்குப் பிராமணனே கதி, உன்னை இகழ்வோன் பிராமணன் அல்லன் உன்னை யிகழ்ந்துபேசுவோன் அப்பிராமணனேயாவன், தன் குலதெய்வம் விண்டு பின் ஒன்றனை தொழும் அ பிராமணற்கு இரண்டும் பயப்படா நிரையம் புகுவன் என்று உயர் மறை பேசும் - தனது குலதெய்வமாகிய உன்னை யடையாது பின்பு மற்றொரு தெய்வந்தொழும் அந்தப் பிராமணனுக்கு இம்மை மறுமைப்பயன் சிறிதும் பயன்படா நரகத்தையே யடைவானென்று உயர்ந்த வேதங்கள் சொல்லாநிற்கும்.

திருமால் சத்திரியருள் வணங்கப்படும் சத்திரியனுதல்போலப் பிரமன் முதலிய தேவர்களுள் நீயே பிராமணனென்பான் பிரிநிலை ஏகாரந்தந்து பிராமணனீயேயெனவும், அவரொழிந்தோர்க்குப் பிராமணன்தான் என்பான் பிரிநிலை ஏகாரந்தந்து ஏனையோர் தம்முட்பிராமணன் யானேயெனவும், ஆதலால் உன்னைச் சரணடைந்தேன் என்பான் பிராமணன் றனக்குப் பிராமணன் கதியெனவும், தன்குலதெய்வமாகிய வுன்

னை யிகழ்ந்து தன்னை யுபசரித்து வழிபடும் சத்திரிய வைசியசூத்திரர்களுக்குத் தெய்வங்களாகிய திருமாலையும் பிரமனையும் இந்திரனையும் வழிபட்டு வணங்குவோன் அப்பிராமணன் என்பான் உனை யிகழ்வோன் பிராமணனல்லன் எனவும், அவன் பிறகடவுளை வணங்குதல் அஃறிணைப்பொருள்களுளொன்றனை வணங்குதலோடொக்கும் என்பான் தன் குலதெய்வம் விண்டு பின்னென்றனைத்தொழும் எனவும், அஃறிணைப் பொருள்களுள் ஒன்று இருமையுந் தருமென்பது கருதலுங் கூடாதென்பான் இருமையும் பயப்படா எனவும், தம் கணவனை யிகழ்ந்து பரபுருடரை விரும்பும் பெண்டிர்களுக்கு நரகஞ் சித்திக்குமாறுபோல உன்னை யிகழ்ந்து பிறகடவுளை வழிபடும் பிராமணனுக்கு நரகஞ் சித்திக்குமென்பது திண்ணம் என்பான் நிரையம்புகுவன் எனவும், இது வேதவாக்கியம் என்பான் உயர்மறைபேசும் எனவுங்கூறினர். பின்னுகன் தலைக்கோலமுடையவன் பிராமணன் வேதமுணர்ந்தவன். இமயம், மலயம் என்பன இடைநிலைப்போலியாய் இமையம், மலையம் என வழங்குதல்போல நிரயம் நிரையம் என வந்ததெனக்கருதாது நிரையம் எனவரும் இடந்தோறும் நிரயம் எனத் திருத்துகவென்றனர் நோக்குங்காற் போலியிலக்கணமும் உணரார்போலும். (க)

அடியனேனுன்றாளடைக்கலநீயேயன்னையுமத்தனுங்குருவுந்
துடியிடைப்பதுமைகேள்வனுமயனுந்தொடர்வருஞ்சோதியேசெல்வக்
கொடிமிசையிடபமுயர்த்தருள்கருணைக்குன்றமேயருட்பெருங்கடலே
படிபுகழ்மறைநூல்வடித்ததெள்ளமிழ்தேபகவனேயிணையடிபோற்றி.

(இ-ள்.) அடியனேன் உன் தாள் அடைக்கலம் அன்னையும் அத்தனும் குருவும் நீயே - உன்றிருவடிக்கு அடியேனடைக்கலம் தாயுந்தகப்பனும் ஆசிரியனும் நீயே, துடி இடை பதுமை கேள்வனும் அயனும் தொடர்வரும் சோதியே செல்வம் கொடிமிசை இடபம் உயர்த்தருள் கருணை குன்றமே அருள் பெருங் கடலே - உடுக்கையையொத்த இடையையுடைய திருமகள்நாயகனாகிய திருமாலும் பிரமனுந் தொடர்ந்து காணுதற்கரிய பேரொளியே செல்வம்வாய்ந்த கொடியின்மேல் இடபத்தை யுயர்த்தியருளிய கிருபாமலையே வரையறுத்தற்கரிய திருவருட்கடலே, படி புகழ் மறை நூல் வடித்த தெள்ளமிழ்தே பகவனே இணை அடி போற்றி - உலகு புகழும் வேதநூலாகிய கரும்பினின்றும் வடித்தெடுத்த அமுதமே இறைவனே உன் திருவடிக்கு வந்தனம்.

அன்னையு மத்தனுங் குருவும் நீயேயாதலால் அடைக்கலம் எனவும், வேதசிகையினுட்கிடைப்பொருளாயிருத்தலால் படிபுகழ்மறைநூல் வடித்ததெள்ளமிழ்தேயெனவுந் துதித்தான்என்றார். வேதநூலைக்கரும்பெனக்கொள்ள நிற்றலால் ஏகதேசவுருவகவணி.

என்றெடுத்தேத்துமாண்டளப்பானுக்கெம்பிரானெதிரெழுந்தருளி
நன்றுநீவேட்டகூறுகென்றருளவீழ்ந்துவீழ்ந்திறைஞ்சினனவில்வான்
குன்றவிற்குழைத்துப்புரிசைமூன்றிறுப்பக்குறுநகைமுகிழ்த்தருள்குழக
நின்றிருவடிக்கீழிடையறாப்பத்திநெறியெனக்கருள்செயவேண்டும்.

(இ-ள்.) என்று எடுத்து ஏத்தும் ஆண்டளப்பானுக்கு எம்பிரான் எதிர் எழுந்தருளி நன்று நீ வேட்ட கூறுக என்று அருள - என்று எடுத்துக்கூறும் பிரகற்பதிக்கு எமது பெருமான் எதிரே காட்சிதந்தருளி மிகவும் நீ விரும்பினவற்றைச் சொல்லுகவென்றருள, வீழ்ந்து வீழ்ந்து இறைஞ்சினன் நவில்வான் - நிலத்தின்மேல் வீழ்ந்து வணங்கிக்கூறுவான், குன்ற வில் குழைத்து புரிசை மூன்று இறுப்ப குறுநகை முகிழ்த்தருள் குழகா - மலையாகிய வில்லை வளைத்து மூன்றுமதிலையுமழிக்கப் புன்னகை முகிழ்த்தருளிய பேரழகனே, நின் திருவடி கீழ் இடையறாத பத்திநெறி எனக்கு அருள்செய்யவேண்டும்-

உனது திருவடியின்கீழ் நீங்காத பத்திமார்க்கத்தை யடியேனுக்குக் கருணைசெய்யவேண்டும்.

பகைவரை வெல்லுதற்கு வீரர் வில்லை வளைப்பது வழக்கு என்பதுதோன்றக் குன்றவில் குழைத்து எனவும், அவ்வில்லிற்றொடுத்து எய்யும் அம்பிற்குத் திரிபுரம் இலக்காகும் வலியிலதென்பதுதோன்றத் திரிபுரமிறுப்பக் குறுநகை மூகிழ்த்தருள் எனவும், திருமால் அழகிற்சிறந்தான் அல்லனென்பது குறிப்பித்தற்கு மூத்தோனெனவும், சிவபெருமான் அழகிற்சிறந்தவனென்பது குறிப்பித்தற்கு இளையோன் எனவும் வேதநூல்களில்வழங்கும் வழக்குத்தோன்றக் குழகாவெனவுங்கூறினான் என்றார். வீழ்ந்து வீழ்ந்து உவகைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். வேட்டன செயப்படுபொருள்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். (கக)

வளங்கெழுவேகவதிநதித்தென்பால்வயங்குமித்தீர்த்தநீர்படிந்து
விளங்குமென்வாரத்துன்னடிச்சேவைவிழைதகப்பெற்றுளோர்தத்த
முளங்கொளுமுறுதிப்பயனளித்தருளிமுத்தியுமுதவியீண்டென்று
மிளங்கதிர்முலையோடினிதமர்ந்தருளாயிவ்வரம்வேண்டுமென்றிரந்தான்.

(இ-ள்.) வளம் கெழு வேகவதி நதி தென்பால் வயங்கும் இ தீர்த்தம் நீர் படிந்து விளங்கும் என் வாரத்து உன் அடி சேவை விழை தக பெற்றுளோர் - வள மிக்க வேகவதி நதியின் தென் பக்கம் விளங்கா நின்ற இத்தீர்த்த நீரில் மூழ்கி விளங்கா நின்ற என் வாரத்தில் உனது திருவடிச் சேவையை விரும்பப் பெற்றவர்கள், தம் தம் உளம் கொளும் உறுதி பயன் அளித்தருளி முத்தியும் உதவி ஈண்டு என்றும் இளங் கதிர் முலையோடு இனிது அமர்ந்தருளாய் இ வரம் வேண்டும் என்று இரந்தான் - தமது மனத்திற்கருதும் உறுதிப் பயனைத் தந்தருளி மறுமையி லவர்க்கு மோக்ஷத்தையுந் தந்து இவ்விடத்தி லெப்பொழுதும் இளமை தங்கிய கிரணத்தை யுடைய தனத்தையுடைய உமையம்மையோடு இனிதாக வெழுந்தருளாய் இவ்வரந்தா னடியேனுக்கு வேண்டுமென்று குறையிரந்தான்.

உளங்கொளு முறுதி யென்றது இகபோகத்தை. (கஉ)

அங்கவைவழங்கிக்கடவுளர்க்காசானுமபெருந்தகைமையுநல்கிச்
சங்கவெண்குழையானிலிங்கத்தின்மறைந்தான் றருமனங்கெய்தியேத்தெடுப்பப்
புங்கவன்றோன்றித்தென்றிசைக்கிறையாம்புரவளித்தெமைவணங்குநர்க்கு
மங்கருந்தண்டமியற்றிலன் றுனக்குமாளுமிப்பதமெனவிடுத்தான்.

(இ-ள்.) அங்கு அவை வழங்கி கடவுளர்க்கு ஆசான் ஆம் பெருந் தகைமையும் நல்கி சங்கம் வெண் குழையான் இலிங்கத்தின் மறைந்தான் - அவ்விடத்து அவ்வரங்களைத் தந்து தேவர்களுக் காசிரியனாகும் பெருந் தன்மையையுங் கொடுத்தருளிச் சங்கமாகிய வெள்ளிய குண்டலத்தை யுடைய இறைவன் சிவலிங்கத்தில் மறைந்தருளினன், தருமன் அங்கு எய்தி ஏத்தெடுப்ப - இயமன் அவ்விடத் தடைந்து துதிக்க, புங்கவன் தோன்றி தென் திசைக்கு இறை ஆம் புரவு அளித்து எம்மை வணங்குநர்க்கு மங்கு அரும் தண்டம் இயற்றில் அன்று உனக்கு இ பதம் மாளும் என்ன விடுத்தான் - இறைவன் காட்சி தந்து தென்றிசைக் கிறைவனாகிய காவலையருளி யெம்மை வணங்குவோர்க்குக் கெடுதலில்லாத தண்டத்தைச் செய்தா லக்காலத்தே உனக்கு நாமருளிய இப்பத மழியுமென்றருளிச் செய்தனன்.

தேவர்களுக்குப் பிரகற் பதி ஆசிரியனா யிருத்தல் முன்னரில்லை யென்பார் ஆசானும் பெருந்தகைமையும் நல்கியெனவும், இயமன் தென்றிசைக்கு முன்னர்க் காப்

புடைக் கடவுளாத லில்லையென்பார் தென்றிசைக்கிறையாம் புரவளித்தெனவும், எமது அடியவர் செய்யும் பாவமும் அறமாய் முடிதலால் அறம் எனக் கருதாது தண்டஞ் செய்வாயாகில் அது உனக்குத் தீராப் பாவமா யுன்பதத்தை யிழப்பிக்கும் எனபர் அன்றுனக்கு மாளும் இப்பதம் எனவிடுத்தார் எனவும் அருளினார். (௧௩.)

தென்புலத்தவர்க்குச்செய்கடனாங்குச்செலுத்திடின்வீடுபெற்றுய்வார்
மின்பழுத்தன்னநெறித்தவார்சடிலம்வீழெனவெரிந்புறங்கிடப்பப்
பொன்பழுத்தனையவைந்தழனாப்பட்புரிதவக்கொள்கையீரனேக
ரன்புசெய்தங்கட்பேறுபெற்றுயர்ந்தாரத்தலமேன்மையார்மொழிவார்.

(இ-ள்.) மின் பழுத்தால் அன்ன நெறித்த வார் சடிலம் வீழ் என்ன வெரிந் புறம் கிடப்ப பொன்பழுத்தால் அனைய ஐந்தழல் நாப்பண் புரி தவம் கொள்கையீர்-மின்பழுத்தா லொத்த நெறித்த நீண்ட சடை பொன் விழுது போல முதுகின் புறத்துக் கிடக்கப் பொன் பழுத்தா லொத்த பஞ்சாக்கினியின் மத்தியிற் செய்யுந் தவத்தினையுடையீர், தென் புலத்தவர்க்கு செய் கடன் ஆங்கு செலுத்திடின் வீடு பெற்று உய்வார் - பிதிர்களுக்குச் செய்யுங் கடமைகளை யத்தலத்திலிருந்து செய்து ஒருவன் முடிக்கில் அவன் மரபிலுள்ளோர் முத்திபெற் றுய்வார்கள், அனேகர் அன்புசெய்து அங்கண் பேறு பெற்று உய்ந்தார் அதலம் மேன்மை யார் மொழிவார் - அளவில்லோர் அன்பு கூர்ந்து வழிபட்டு அத்தலந்தில் ஆன்ம லாபத்தைப் பெற்றுயர்ந்தார்கள் ஆதலால் அத்தலத்தின் மேன்மையை யெடுத்துக் கூறுவோர் எவா.

ஐந்தழலாவன நாற்றிசையில் வளர்த்த தழலும் சூரியன் வெப்பத் தழலுமாம் பழுத்தன்ன தொகுத்தல்விகாரம். (௧௪)

காரோணப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அ௯௫.

## சித்தீசப்படலம்.

கொச்சகப்பா.

மருககாவிவண்டூதமதுவூறறுமவாவித
திருக்காயாரோகணத்தின்சீர்மையிதுசொற்றுங்
கருக்காயுமற்றதற்குவடகீழ்சார்கண்டோர்
தருக்காதசித்தீசந்தன்னியல்புசொல்வாம்.

(இ-ள்.) மரு காவி வண்டு ஊத மது ஊற்றும் வாவி திரு காயாரோகணத்தின் சீர்மை இது சொற்றும் - வாசமிக்க நீலோற் பலத்தில் வண்டுகள் குடைந்தூதத் தேனை யூற்றுந் தடாகஞ் சூழ்ந்த திருக் காயாரோகணத்தின் மான்மிய மாகிய இதனை யெடுத்துக் கூறினும், கரு காயும் அதற்கு வடகீழ் சார் கண்டோர் தருக்காத சித்தீசம் தன் இயல்பு சொல்வாம் - தன்னை யடைந்தோர் பிறப்பை யொழிக்கும் அத்தலத்திற்கு வடகீழ்ப் பக்கத்தில் அடைந்தோர் ஆணவ மலத்தாற் செருக் கடைதலில்லாத சித்தீசத்தினியல்பை யெடுத்துக்கூறுவாம். (௧)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

கம்பைமாநதியின்கரைப்பெருங்காதல்கூர்தவமாற்றுமால்வரைக்
கொம்புமஞ்சளின்காப்பணிந்துமெய்குளிரவாடுநீர்மணங்கமழ்ந்தெழுஉப்

பம்புமஞ்சணீர்நதியெனப்புடைபரந்துசேறலும்பாய்புனற்சடை
யெமபிரானருள்பொங்குமோகையினிலிங்கமாயவணெழுந்துதோன்றினன்.

(இ-ள்) கம்பை மா நதியின் கரை பெருங்காதல் கூர் தவம் ஆற்றும் மால் வ
ரை கொம்பு மஞ்சளின் காப்பு அணிந்து மெய் குளிர ஆடும நீர் மணம் கமழ்ந்து எழுந்
து பம்பு மஞ்சள் நீர் நதிஎன புடை பரந்து சேறலும் - கம்பை யென்னும் பெரிய நதியி
ன் கரையில் மிக்க அன்பு கூர்ந்து பெரிய தவத்தைச்செய்யும் பெரிய இமயமலையிற் றோ
ன்றிய பூங் கொம்புபோன்ற உமை யம்மை மஞ்சட் காப்பினை யணிந்து திருமேனி கு
ளிர ஆடும் நீர் வாசங் கமழ்ந் தெழுதலால் நெருங்கிய மஞ்சள் நீர் நதியென்றுகூற இடம்
பரந்துவர, பாய் புனல் சடை எமபிரான் அருள் பொங்கும் ஓகையின் இலிங்கம் ஆய்
அவண் எழுந்து தோன்றினன் - பரந்த கங்கையை யணிந்த சடாமுடியை யுடைய எம
திறைவன் தனது திருவருளாற் பொங்கிய மகிழ்ச்சியோடு சிவலிங்கவடிவா யவவிடத்
தெழுந்து தோன்றினன்.

சிவ பெருமான் உலகமுற்றும் பரவுங் கங்கையைச் சடையிற் றரித்தனன் என்
பார் பாய் புனற் சடையெனவும், அக் கங்கையைப் புல்லிதென்று நினைத் தருளினன்
என்பார் எம்பிரானருள் பொங்கு மோகையி னெனவும், உமை யம்மை யாடிய மஞ்ச
ணீரில் விருப்புடைய னென்பார் இலிங்கமா யவணெழுந்து தோன்றினன் எனவுங் கூ
றினர். ஆய் செய வெனெச் சத்திரிபு. (௨)

கூடுகொள்கையாற்குலவுமஞ்சணீர்க்கூத்தனென்றுபேர்கொண்டநாயக
னாடுதாளிணைசித்தர்பற்பலரணைந்துபோற்றிவான்சித்தியெய்தலாற்
பாடுசான்றசித்தீசனும்பெயர்பார்விளங்குமவ்வண்ணல்சந்நிதி
மாடுகூவலொன்றுன்னினோர்க்கெலாம்வழங்குசித்திசால்சித்ததீர்த்தமே.

(இ-ள்.) கூடு கொள்கையால் குலவும் மஞ்சள் நீர் கூத்தன் என்று பேர் கொ
ண்ட நாயகன் ஆடு தாள் இணை சித்தர் பற்பலர் அணைந்து போற்றி வான் சிதத்தி எய்த
லால் - இவ்வா றெழுந்தருளிய கொள்கையால் விளங்காநின்ற மஞ்சள் நீர்க் கூத்தனெ
ன்று திருநாமம் வாய்ந்த இறைவனது நடனஞ் செய்யும் இரண்டு திருவடிகளையும் பல
சித்தர்களுங்கூடித் துதித்துப் பெரிய அட்டமா சித்திகளையும் அடைதலால், பாடு சா
ன்ற சித்தீசனும் பெயர் பார் விளங்கும் அ அண்ணல் சந்நிதி மாடு கூவல் ஒன்று - பெரு
மை நிறைந்த சித்தீசனென்னும் பெயர் உலகில் விளங்க எழுந்தருளிய அவ்விறைவனது
சந்நிதியின் பக்கததில் கிணறொன்று, உன்னினோர்க்கு எல்லாம் வழங்கு சித்தி சால் சி
த்த தீர்த்தம் - கருதினவர்க் கெல்லாம் அருளும் சித்தி நிறைந்த சித்த தீர்த்தமென்னும்
பெயர்வாய்ந்துளது.

வாய்ந்துளது என்னும் பயனிலை தொக்கு நின்றது. சிவபெருமான் மஞ்சணீர் நதி
க்கரையில் எழுந்தருளிய விருப்பத்தால் மீதூர்ந்த மகிழ்ச்சியா லாடியருளிய காரணத்
தால்வந்த திருப்பெயர் என்பார மஞ்சணீர்க் கூத்தனென்று பேர்கொண்ட நாயகன்
என்றார். (௩)

ஒற்றையாழியங்கொடிஞ்சிவையமீதொளிபரப்பிவீங்கிருடுமித்தெழுங்
கற்றைவெங்கதிர்க்கடவுளினுங்கருமூடத்திறற்காரிநாளினு
மெற்றுதெண்டிரைசசித்ததீர்த்தநீரொய்தியாடியவ்வேந்தருடொழுங்
கொற்றவாழ்வினர்க்கெழுபிறப்புநோய்கோடியோசனைக்கப்புறந்ததே.

(இ-ள்.) ஒற்றை ஆழி அம் கொடிஞ்சி வையம் மீது ஒளி பரப்பி வீங்கு இருள்
துமித்து எழும் கற்றை வெம் கதிர் கடவுள் நாளினும், கரு மூடம் திறல் காரி நாளி




A. அரிசாபபயந்தீர்த்ததானப்படலம்.

னும் - ஒருருளை பூண்ட அழகிய கொடிஞ்சி வாய்ந்த தேரின்மேலொளிவீசி மிக்க ஊத் துண்டு செய்து எழுந்த நெருங்கிய கொடிய கிரணத்தை யுடைய ஞாயிற்றுக் கிழமையிலும் கரு நிறமும் மூடத் தன்மையு முடைய வலிமை வாய்ந்த சனிக்கிழமையிலும், எற்று தெண் திரை சித்த தீர்த்தம் நீர் எய்தி ஆடி அரன் தன் தாள் தொழும் கொற்றம் வாழ்வினோர்க்கு - கரை யொடு மோதுந் தெள்ளிய அலையை யுடைய சித்த தீர்த்தத்தை யடைந்து நீராடி அவ்விறைவனது திருவடியை வணங்கும் வெற்றி வாய்ந்த வாழ்வினை யுடைய வர்க்கு, எழுபிறப்பு நோய் கோடி யோசனைக்கு அப்புறத்தது - எழு பிறப்பென்னும் நோய் கோடியோசனைக்கு அப்பாலுள்ளதாம்.

திருவடி வணங்கும் பேற்றால் எழு பிறப்பினையும் புறங் காணுதலால் தாள் தொழுங் கொற்ற வாழ்வினோர்க்கு என்றார். (௪)

சித்தீசப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அ௩௬.

---

## அரிசாபபயந்தீர்த்ததானப்படலம்.

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

புரிமுறுக்குடைந்தவிழவாறடிப்புண்முரன்றுவாய்மடுக்குமின்னறை
விரிமலர்த்தடம்புடையுடுத்தசித்தீசமேன்மையின்விளைவியம்பினு
முரியமற்றதனுத்தரத்துறுமுவணவூர்தியாச்சிரமவைப்பினிற்
றிரிவிலாவரிசாபவெம்பயந்தீர்த்தவானவன்சீர்த்திகூறுவாம்.

(இ-ள்.) புரி முறுக்கு உடைந்து அவிழ ஆறு அடி புள் முரன்று வாய்மடுக்கும் இன் நறை விரி மலர் தடம் புடை உடுத்த சித்தீசம் மேன்மையின் விளைவு இயம்பினும்- மலர்க் கட்டின் முறுக்குடைந் தவிழ அறு காற் புள்ளாகிய பறவைகள் ஒலித்துப் பருகும் இனிய தேனோடு விரிந்த தாமரை மலரை யுடைய தடாகம் புடைசூழ்ந்த சித்தீசத்தினது மேன்மையின் விளைவை யெடுத்துக் கூறினும், உரிய அதன் உத்தரத்து உறும் உவண ஊர்தி ஆச்சிரமம் வைப்பினில் திரிவு இல்லாத அரி சாபம் வெம் பயம் தீர்த்த வானவன் சீர்த்தி கூறுவாம் - கருதிய நன்மைகள் பெறுதற்குரிய அத் திருப்பதியின் உத்தர திசையிற் பொருந்திய உலகளந்த பெருமானாச்சிரமமாகிய அத் திருப்பதியில் அரிசாபத்தின் மாறுபடாத கொடிய பயந்தீர்த்த இறைவனதுகீர்த்தியை யெடுத்துக் கூறுவாம். (௧)

செப்புமுன்னைநாளதிதிமைந்தருந்திதியின்மக்களுமிடையறாதுபே
ரப்புமாரிபெய்தெண்ணிலாண்டுகளழுக்கறுத்துவெஞ்சமரியற்றுழி
மைப்புறுத்தகண்ணரம்பைமார்முலையுழுதமார்பினர்வலியிழந்தலுந்
துப்பெறிந்தபூங்கமலவாள்விழித்தோன்றலெய்திவெம்படைவிதிர்த்தனன்.

(இ-ள்.) செப்பும் முன்னை நாள் அதிதி மைந்தரும் திதியின் மக்களும் இடையறாது பேர் அப்பு மாரி பெய்து எண் இல் ஆண்டுகள் அழுக்கு அறுத்து வெம் சமர் இயற்றுழி-சொல்லு முன்னாளில் அதிதி புத்திரராகிய அசுரருந் திதிபுத்திரராகிய தேவர்களுஞ் சிறிது பொழுதும் நீங்காது மிகவுஞ் சரவருஷத்தைச் சிந்தி அளவில்லாத வருடங்களெல்லாம் பொறாமை கொண்டு கொடிய போர்செய்யுங் காலத்தில், மைப்பு உறுத்த கண் அரம்பை மார் முலை உழுத மார்பினர் வலி இழத்தலும் - மையெழுதிய கண்

களையுடைய அரம்பையர் முலை தோய்ந்த மார்பையுடைய தேவர்கள் தத்தம் வலிமை யையிழக்க, துப்பு எறிந்த பூம் கமல வாள் விழி தோன்றல் எய்தி வெம்படை விதிர்த் தனன் - செந்நிறத்தை வீசாநின்ற செந் தாமரையை யொத்த ஒள்ளிய கண்களையுடைய திருமால் அங்கு வந்து கொடிய ஆயுதத்தை யசைத்தனன்.

அசுரர்கள் முன்னேரும் தேவர்கள் பின்னேரும் ஆதலால் ஒருவர்க் கொருவர் அழுக்காறு கொண்டனர் என்பார் அழுக்கறுத்து எனவும், இதனுல் போர்விளைந்தது என்பார் எண்ணிலாண்டுகள் வெஞ்சம ரியற்றுழி யெனவும், தேவர்களுக்கு அசுரரால் வரும் இடையூற்றைத் திருமால் ஒழிப்பவன் என்பார் தோன்ற லெய்தி வெம்படை விதிர்த்தனன் எனவுங் கூறினர். மைப்பு தொழிலாகுபெயராய் அஞ்சனத்தில் மேல் நின்றது. (உ)

எஞ்சுதானவரஞ்சியோட்டெடுத்திருமையோகுசெய்பிருகுமாமுனி
தஞ்சமாமனைக்கிழத்திபூமகடாயெனப்படுங்கியாதிதன்புடை
வஞ்சமின்றிவந்தடைக்கலம்புகவருந்துறேன்மினென்றபயநல்கியப்
பஞ்சின்மெல்லடிபபாவையாச்சிரமத்தினுள்ளுறப்பாதுகாத்தனள்.

(இ-ள்) எஞ்சு தானவர் அஞ்சி ஓட்டெடுத்து இருமை யோகு செய் பிருகு மாமுனி தஞ்சம் மாமனை கிழத்தி பூமகள் தாய் என்னப்படுமெ கியாதி தன் புடை - போரில் இறவாதெஞ்சிய அசுரர்கள்அஞ்சிப் புறங்காட்டியோடிப் பெருமையமைந்த சிவயோகு செய்யும் பிருகு முனிவனுக்குப் பற்றுக்கோடாகிய இல்லறக் கிழமை பூண்டவளும் திருமகளுக்குத் தாயென்று சொல்லப் படுபவளுமாகிய கியாதியினிடத்து, வஞ்சம் இன்றி வந்து அடைக்கலம் புக வருந்துறேன் மின் என்று அ பஞ்சின் மெல் அடி பாவை அபயம் நல்கி - மனக்கோட்ட மில்லாது வந்து அடைக்கலம் புக வருந்துதலொழியுங்களென்று அந்தப் பஞ்சினு மெல்லிய பாதத்தையுடைய கியாதியான வள பயந்தந்து, ஆச்சிரமத்தின் உள் உற பாது காத்தனள் - தனது ஆச்சிரமத்தினுள்ளே அவ்வசுரர்களிருக்க இடந்தந்து ஓம்பினள்

தம் மரபினுக்குக் குருவாயுள்ள சுக்கிரன் தாய் கியாதி யானதால் நம்மைப் பாதுகாப்பாளென்று அடைக்கலம் புகுந்தனர் என்பார் வஞ்சமின்றி வந்தடைக் கலம்புக வெனவும், தனது புத்திரனுகிய சுக்கிரனை வழிபடுவோர்க ளிவர்களெனக் கருதினளாதலால் அபய நல்கி யாச்சிரமத்தி னுள்ளுறப் பாதுகாத்தன ளெனவுங் கூறினர். பிருகுவின் புத்திரனுதலால் பார்க்கவன் எனவந்த காரணப்பெயரால் உணர்க. (௩)

சீற்றமிக்கெழச்சேந்தகண்ணினன்றிகிரியோச்சியங்கெய்துமாதவன்
போற்றிவாய்தலின்வைகுமாமியைப்பொருக்கெனச்சிரந்துணித்துவீழ்த்தலு
மேற்றெழுந்தகூகூவொலித்திரளிருசெவித்தொளையேறுமாமுனி
மாற்றருந்திறல்யோகுநீங்கிமுன்மனைவிபட்டதுமற்றுநோக்கினன்.

(இ-ள்.) சீற்றம் மிக்கு எழ சேந்த கண்ணினன் திகிரி ஓச்சி அங்கு எய்தும் மாதவன் - கோபமீதூர்ந் தெழச் சிவந்த கண்களை யுடையவனுகிச் சுதரிசன மென்னுஞ் சக்கரத்தை யெறிந்து அங்கடைந்த திருமால், போற்றி வாய்தலின் வைகும் மாமியை பொருக்கென சிரம் துணித்து வீழ்த்தலும் - அவர்களை யோம்பி யவ்வாச்சிரமத்தின் வாயலிற் றங்கிய தனது மாமியை விரைந்து தலையைத் துணித்து வீழ்த்த, ஏற்று எழுந்த கூகூ ஒலி திரள் இரு செவி தொளை ஏறும் மாமுனி - மிகுந் தெழுந்த கூகூ வென்னு மொலியின் திரட்சி தன திரண்டு செவியிலு மேறப்பெற்ற பெருமையை யுடைய அப் பிருகு முனிவன், மாற்றரும் திறல் யோகு நீங்கி முன் மனைவி பட்டதும் மற்றும் நோக்கினன் - நீங்குதற்கரிய வெற்றி வாய்ந்த சிவயோகத்தி னின்றும் நீங்கி முன்பு தன்மனைவி யிறந்ததையு மங்கு நிகழ்ந்ததையும் பார்த்தான்.

அடைக்கலம் புகுந்தோரை யோம்புங் கருத்துடையோர் அவர்களுக்குப் பகையாயினோர்க்கு உதவியாயினோர் உறவினராயினும் அது நோக்காது அவர்களை யொறுப்பார் என்பார் போற்றி வாய்தலின் வைகுமா மியைப் பொருக்கெனச் சிரந்துணித்து எனவும், தனது மனைவி யிறத்தற்கு நேர்ந்த காரணத்தையும் பிருகுமுனிவ னுணர்ந்தான் என்பார் பிறிது பொருள் படமற்று நோக்கினான் எனவுங்கூறினார். (௪)

கண்டுமாழ்கினன் றுயரின் மூழ்கினன் கண்கள்சேந்தனனிதழ்துடித்தனன்
மண்டுவெங்கனற்பொறிதெறிப்பவம்மாதவன் றனைவெகுண்டுநோக்கினு
னொண்டளிர்க்கரத்தரிவைதன்னைமற்றுனக்குமாமியைத்தறுகணாளனாய்
மிண்டினாற்கொலைசெய்துவிட்டினாய்வெய்யபாவிநீயுய்யுமாறெவன்.

(இ-ள்) கண்டு மாழ்கினன் துயரின் மூழ்கினன் கண்கள் சேந்தனன் இதழ் துடித்தனன் - கண்டு மயங்கித் துன்பத்தில் மூழ்கிக் கண்கள் செவந்து இதழ் துடித்து, மண்டு வெம் கனல் பொறி தெறிப்ப அம்மாதவன் தனைவெகுண்டு நோக்கினான் - நெருங்கிய கொடிய கோபத் தீப்பொறி தெறிக்க அத்திருமாலைப்பார்த்து, ஒண் தளிர் கரத்து அரிவை தன்னை உனக்கு மாமியை-ஒள்ளிய தளிர்போலுங் கையை யுடைய எனக்குப் பத்தினியும் உனக்கு மாமியுமாயுள்ள இவளை, தறுகணாளன் ஆய் மிண்டினால் கொலை செய்து வீட்டினாய் வெய்ய பாவி நீ உய்யும் ஆறு எவன் - பழிக்கஞ்சாதவனாய் கொடுமையையுடைய வலிமையாற் கொலைசெய்து கொன்றாய் நீகொடியபாவி நீபிழைக்கும்வகை எவ்வாறு என்று.

பெண்டிர்களைக் கொலைசெய்வது போரில் வீரர்க்கு விலக்கென்பதையும், அதுவுமன்றி இருடியின் பத்தினியென்பதையும், மாமி தாயோடொப்பாள் என்பதையுஞ் சிறிதுமுணராது கொன்றனை, ஆதலால் நீ பெரும்பாவியென்பான் தறுகணாளனாய் மிண்டினாற் கொலைசெய்து வீட்டினாய் வெய்ய பாவி நீ எனவும், இப்பெரும்பாவத்திற்குத் தீர்வில்லையென்பான் உய்யுமாறெவன் எனவுங் கூறினார் என்றார். மாழ்கினன், மூழ்கினன், சேந்தனன், துடித்தனன், நோக்கினான் இவை முற்றெச்சங்கள்.

போர்வீரர் பெண்டிரைக் கொலைசெய்தல் பெரும்பாவம் என்றதை—

"ஆவுமானியற்பார்ப்பனமாக்களும் - பெண்டிரும்பிணியுடையீருந்தென்புல - வாழ்நர்க்கருங்கடனிறுக்கும்-பொன்போற்புதல்வர்ப்பெறாதீரும் - எம்மம்புகடிதுவிடுதும் நும்மரண்சேர்மின்" எனவும், பார்ப்பனியைக் கொலைசெய்தல் பெரும்பாதகம் என்றதை—"அந்தணர்முதலோரரசரைச்செகுப்பினந்தணற்கடிந்தவர்க்குரைத்த

மைந்துறுகழுவாயியற்றலக்கழுவாய்வயங்குபார்பனிக்கொலைக்கோரொண்" எனவுஞ் சூதசங்கிதையில் வருதல் உணர்க. (௫)

எடுத்தியம்பியசைவமேயெவற்றுள்ளுமுத்தமமென்னில்யாங்களுங்
கடுத்ததும்பியகண்டனாரடிக்கமலமன்றிவேறறிகிலேமெனிற்
றொடுத்துரைக்குமிச்சத்தியத்தினாற்றுயருழந்துநீநரகவல்வினை
மடுத்தவெம்பிறப்பொருபதிற்றுகவழுவுபாதகக்குழிசியாயினாய்.

(இ-ள்.) வழுவு பாதகம் குழிசி ஆயினாய் - நன்னெறியினின்றும் வழுவிய பெரும்பாதகத்திற்கு ஓர் பாத்திரமாயுள்ளவனே, எடுத்து இயம்பிய சைவமே எவற்று உள்ளும் உத்தமம் என்னில் - வேதங்களாலெடுத்துக் கூறப்பட்ட சைவமே எச்சமயங்களுள்ளும் உத்தமமான சமயமாயில், யாங்களும் கடுததும்பிய கண்டனார் அடி கமலம் அன்றி வேறு அறிகிலேம் என்னில் - நாங்களும் விஷம்நிறைந்த ஸ்ரீகண்டத்தையுடைய இறைவரது திருவடித் தாமரையையன்றி மற்றொன்றை யறியோமாயில், தொடுத்து உரைக்கும் இசத்தியத்தினால் நீ துயர் உழந்து நரக வல்வினை மடுத்த வெம் பிற

ப்பு ஒரு பதி எய்துக - என்றுற்றெடுத்துக் கூறப்பட்ட இந்தச்சத்தியமொழியினாலே நீ துன்பமடைந்து நரகிற்கேதுவாகிய தீவினையமைந்த கொடிய பிறவிபத்தையு மடையக்கடவாய்.

சைவம் வேதமுடிவிற் கூறப்படுவதாலும், ஏனைச்சமயங்கள் வேதமுதலிற் கூறப்படுதலாலும் சைவமே சிறந்ததென்பான் எடுத்தியம்பிய சைவமே யெவற்றுள்ளு முத்தமமென்னில் எனவும், சிவபெருமான் றிருவடித்தொண்டு பூண்டொழுகற்கு மேம்பட்டதொன்றில்லை என்பான் கடுத்ததும்பியகண்டிறைடிக்கமலமன்றிவேறறிகிலேம் எனவுங் கூறினன்.

> "தீங்கிலாதுயர்சைவநற்றருமமேசிறப்ப
> ரோங்குமுத்தமகருமமென்றுரைத்திடப்படுமால்" எனவும்,

> " அழிவின்மறைமுடிவினிலறைந்திடுதருமம்
> பழுதிலாப்பரதருமமென்றுரைத்திடப்படுமால்
> மொழியுமம்மறைமுதலினின்மொழிந்திடுதருமம்
> விழையவெய்திடுமபரநற்றருமமேவிரிக்கில்" எனவும் வரும் வாயுசங்கி

தையிலும்,

சிவபெருமான் திருவடித்தொண்டுக்கு மேம்பட்டதொன்றில்லையென்றதை—

> " சாற்றிடுமுறுப்பியாவுந்தலைக்குமேலுயராபாவங்
> காற்றிடுநதிகள்யாவுங்கங்கைகமேலுயராவான
> மாற்றிடும்பலவைப்போற்றும்பலமெலாமடுத்தோர்சன்மம்
> பாற்றிடுஞ்சிவனைப்போற்றும்பலத்தின்மேலுயராவன்றே" எனச் சூதசங்கிதையில் வருதலுங் காண்க. (சு)

> நின்றனக்கடித்தொண்டுபூண்டவர்நெறியலாப்புறத்தாற்றுநூல்வழித்
> துன்றுதீக்கையுற்றென்றுமுப்புரஞ்சுட்டவெம்பிரான்றிருவடிபபிழைத்
> தொன்றுமூன்றுதண்டேந்தினராயுலப்பிலாதவெந்நிரயமேவுக
> மன்றவங்கவாக்கண்டுளோர்களுமறலியூரினைக்குறுகிமாய்கவே.

(இ-ள்.) நின் தனக்கு அடி தொண்டு பூண்டவர் நெறி அல்லாத புறத்து ஆறு நூல் வழி துன்று தீக்கை உற்று - உனக்கு அடித்தொண்டு பூணடவர்கள் வேதநெறிக்குமாறான புறச்சமய நூல்வழியேயமைந்த தீக்கைபெற்று, என்று உம் முப்புரம் சுட்ட எம்பிரான் திருவடி பிழைத்து ஒன்று மூன்று தண்டு ஏந்தினராய் உலப்பு இலாத வெம் நிரயம் மேவுக-எக்காலத்தும் திரிபுரத்தை நகைத்தருளிய எமது பெருமானது திருவடிக்குத் தவறுசெய்து ஏகதண்டத்தையும் திரிதண்டத்தையுமேந்தி இழிந்த தன்மையராகி யளவிலலாத கொடிய நரகததிலடையக்கடவர், மன்ற அங்கு அவர் கண்டுளோர்களும் மறலி ஊரினை குறுகி மாய்க - தேற்றமாக அங்கு அவரைக் கண்டவர்களும் யமபுரியையடைந்து அழியக்கடவார்கள்.

சுமார்த்தசந்நியாசம் - சைவசந்நியாசம், வைணவசந்நியாசமென விருவகைப்படும், அச்சுமார்த்தசந்நியாசத்தில் வைணவசந்நியாசமுடையவா ஏகதண்டம் ஏந்தித் திருமாலை வழிபடுகின்றவர்களாதலால் திரிதண்டமேந்திய வைணவசந்நியாசிகளோடு அவர்களையுங் கூட்டியுரைத்தார். பிருகுமுனிவ னிங்குத் திருமாலை வழிபடு மறையவர்க்குச் சாபமிட்டதுபோ லக்கௌதமமுனிவர் அந்தணர்களைநோக்கிச் சினந்து சாபந்தந்தது சூதசங்கிதையிலும், தக்கன் யாகத்துவந்த அந்தணர்களைத் ததீசிமுனிவர் சபித்தது காந்தத்திலும், கூர்மபுராணத்திலும் இப்புராணத்திலும் உருதலை யடியிற்காண்க.

ஓர்காலத்துப் பன்னீராண்டு மழைவறந்து உற்கடமிகுந்தமையால் சில அந்தணர்கள் பசியால் வருந்திச் சிவபெருமானே பொருளெனவுணர்ந்த கௌதமமுனிவரைச்

சரணடைய, அவர்களுக்கு அபயந்தந்து ஓம்பிவருங்கால் எங்கு மழைபெய்து வற்கட நீங்க அம்மறையவர்கள் தத்தம் நாட்டிற்குச்செல்ல முனிவரைநோக்கி விடைதருகவென வினவியபோது அவர் இசையாதவராக, அதனைநோக்கி ஒரு சூழ்ச்சியா லிவரைவிட்டு நீங்கவேண்டுமென்று கருதிக் கோவதைசெய்தவரிடத்து நாம் வசித்தல் முறையன்றென்று நிந்தைகூறியபோது அவர்களைச் சினந்து நோக்கிச் சாபமொழிந்ததை—

“ சீவர்கள்போற்பிறந்திறந்துதிரிகின்றமாயன்முதற்சிறியதேவர்
பாவமறுத்தன்பரையாள்பரசிவனினதிகமெனப்பற்றியாயுந்
தாவரியமயக்கநுமக்குண்டாகமாயன்முதல்சாற்றுந்தேவர்
யாவர்களுமவர்தகுதிக்கேற்பனவுமுமக்கருளாகிரிந்துபோக.

சக்கரஞ்சங்கங்கதைதாமரைமுதலாமடையாளந்தனுவிற்றுங்கித்
துக்கமிகவரசிலைபோற்பாதிமதிபோற்சுடருந்தீபமேபோல்
மிக்கநுதலங்கிதங்கொண்டுறவட்டவடிவும்விழைந்திட்டுநீவிர்
தக்கநெறியொழுகாதுதீநெறிச்சென்றளறனைத்துந்தாழ்ந்துசோர்க” எனச் சூதசங்கிதையிலும்,

“ பேசரியமறைகளெலாம்பராபரனீயெனவணங்கிப்பெரிதுபோற்றும்
ஈசனையுமன்பரையுநீற்றொடுகண்டிகையினையுமிகழ்ந்துநீவிர்
காசினியின்மறையவராயெந்நாளும்பிறந்திறந்துகதியுறாது
பாசமதினிடைப்பட்டுமறையுரையாநெறியதனிற்படுவீரென்றான்” எனக் காந்த

“ என்னவேதக்கன்கூறவிருந்தவமுனிவர்தாமும்
மன்னுயிரனைத்துங்காக்குமணிநிறவண்ணன்யார்க்கும்
முன்னையோனென்னநெஞ்சின்முதுக்குறைவனைத்துநீங்கத்
துன்னியமாயையுள்ளமறைப்பமாழாந்துசொன்னார்.

என்றலுந்ததீசிநெஞ்சமெரியெழக்கனன்றுசீறிக்
குன்றவிற்கடவுடன்னையிகழ்ந்திடுகுற்றந்தன்னால்
பொன்றிவெந்நரகந்தன்னிற்புகுந்துநெஞ்சழிதிரென்னாத்
துன்றியமுனிவருள்ளஞ்சோர்வுறமுனிந்துவைதான்” எனக் கூர்மபுராணத்திலும்,

“ அவைக்களத்துறையும்பார்ப்பார்தருபொருட்காசைகூர்ந்து
கவர்த்தபுல்லறிவின்மான்றுகடுந்தொழிற்றக்கன்கூற்றே
நிவப்புறப்புகறலோடுநெடுந்தகைமறுவில்காட்சித்
தவத்திறற்றதீசிசீறிவிப்பிரர்தம்மைநோக்கி.

படுபொருள்வெஃகுநீராற்பார்ப்பனக்கடையீர்காணீர்
நடுவிகந்துரைத்தவாற்றானடலைகூரொழுக்கம்பூண்டு
கெடுநெறிபற்றிச்சைவநிந்தையிற்கிளர்ச்சிகொண்டு
கொடுமுகக்கலியிற்றோன்றிக்கலாய்த்தனிரிடும்பைகூர்ந்து.

வைதிகப்புறத்தராகிச்சைவநூல்வழியைக்கைவிட்
டுய்தியில்புறநூல்பற்றியுலப்பருமறையினிந்தை
யையெனப்புகன்றுவேற்றுமொழியினையாதரித்துப்
பொய்திகழ்நரகினுய்க்கும்புண்டரம்பொலியக்கொண்டே.

எண்டிகழ்மறையீரெல்லாமியம்புவெண்ணீற்றுமும்மைப்
புண்டரமக்கமாலைசிவலிங்கபூசைதம்மில்

விண்டிடாவயிரங்கொண்டுதிகிரியான்வெந்தபுண்ணைத்
தண்டுசெங்காழிகஞ்சக்குறிகளைத்தனுவிர்ருங்கி.
அர்தணர்தமக்குத்தேவாமரனடிதழாதநோளின்
வந்தவர்தமக்குத்தேவாமாயனைந்தழுவிப்பேணி
நிந்தனைக்குரியமாகிநிலமிசைத்திரிசவாளா
நொந்தநீர்தழுவுமாலுறுங்களுக்கருள்செய்யாருல்'' என இப்புராணத்திலும் வருதல் காண்க. (எ)

எவ்வமேமிகுந்தமோகுணம்பயின்றிழிந்தயோனியின்மீனமாதியாம
வெவ்வினைப்பவந்தோறுமின்னலேவிரவுவாயெனவெய்யசாபமிட்
டவ்வியத்தொகையிரியநூறுமப்பிருகுவெள்ளியாலாவிபெற்றெழு
நவ்விவாள்விழிமனைவிதன்னெடுநாரிபாகனைவழுத்திவைகினன்.

(இ-ள்.) அவ்வியம் தொகை இரிய நூறும் அ பிருகு - பிறவித் துன்பக்கூட்டம் பின்னிட அழிக்கும் அந்தப் பிருகுமுனிவன், எவ்வமே மிகும் தமோகுணம் பயின்று இழிந்த யோனியில் மீனம் ஆதியாம் வெவ்வினை பவம் தோறும் இன்னலே விரவுவாய் என்ன வெய்ய சாபம் இட்டு - துன்பமே மிகுந்த தமோகுணத்தில்முழுகி யிழிவுபட்ட யோனிகளில் மச்சமுதலாகிய கொடிய வினையமைந்த பிறப்புகள்தோறுந் துன்பமேயடைவாயென்று கொடியசாபமிட்டு, வெள்ளியால் ஆவிபெற்று எழும் நவ்வி வாள் விழி மனைவி தன் ஒடும் நாரிபாகனை வழுத்தி வைகினன் - சுக்கிரனாலுயிர்பெற்றெழுந்த மானையும் வாளையுமொத்த கண்களையுடைய மனைவியாகிய கியாதியோடு உமையம்மையை யிடப்பாகத்திலுடைய இறைவனைத் துதித்து இல்வாழ்க்கையிலமர்ந்தனன்

தன்மனைவி சீவித்தெழச் சுக்கிரனைநினைத்தளவே அச்சுக்கிரன்வந்துதவினன் என்பார் வெள்ளியா லாவிபெற்றெழும என்றார். (அ)

நிறைமொழித்தவப்பிருகுவோதியசாபமெய்திநெஞ்சழுங்கியேங்குபு
நறைமலர்த்துழாய்ப்படலைமார்பினுடினனிதன்றீர்வியாதெனப்
பிறைமுடிச்சடைப்பிரானுளன்மனுப்பிரமமைந்துளயாமுளேமினிக்
குறையெமக்கெவனென்றுதேறினன்கொழிதிரைப்புனற்கச்சியெய்தினன்.

(இ-ள்.) நிறை மொழி தவம் பிருகு ஓதிய சாபம் நறை மலர் துழாய் படலை மார்பினன் எய்தி நெஞ்சு அழுங்கி ஏங்குபு இதன் தீர்வியாது என்ன நாடினன் - நிறைமொழிவாய்ந்த தவத்தையுடைய பிருகுமுனிவன்கூறிய சாபத்தைத் தேன்சிந்துந் துழாய்மாலையையணிந்த மார்பையுடைய திருமாலடைந்து மனநொந்துவருந்தி யிதற்குப் பிராயச்சித்தம் யாதென்று நாடி, பிறை முடி சடை பிரான் உளன் மனு பிரமம் ஐந்து உள்ள யாம் உள்ளேம் இனி குறை எமக்கு எவன் என்று தேறினன் கொழி திரை புனல் கச்சி எய்தினன் - இளஞ்சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபிரானொருவனுண்டு அவனருள்பெறுதற்குப் பஞ்சப்பிரம மந்திரமுமுண்டு நாமுமிருக்கின்றோம் இனிக் குறைபாடு எமக்குயாது என்று தெளிந்து முத்துகளை ஒதுக்கும் நீரையுடைய கச்சித்திருநகரை யடைந்தான்.

அருள்கூர்ந்து கூறினும் வெகுண்டு கூறினும் அம்மொழிகள் அவ்வப்பயன்களை யன்றே கொடுத்தலின் நிறைமொழியெனவும், அவற்றிற்குத் தவம் காரணமாதலால் நிறைமொழித்தவம் எனவும், தனக்குவேண்டி யாங்கருளுஞ் சிவபெருமானொருவனிருத்தலால் பிறைமுடிச்சடைப்பிரானுளன் எனவும், சகளவடிவாகிய சகுணோபாசனைக்குப் பஞ்சப்பிரமமந்திரம் உரியதாதலால் மனுப்பிரம மைந்துள எனவும், என்றும் சிவ

பெருமானை வழிபடுதல் தனக்கு என்றும் இயல்பாதலால் அவ்விலேசுதோன்ற யாமு ளேமெனவும், வேண்டுஞ் சாதனங்கள் குறைவின்றிருத்தலால நமக்கு யாதுகுறையெ ன்று கருதினனாதலின் இனி குறையெமகெவனென்று தேறினை எனவுங் கூறினார்.)

தூயநீர்ச்சிவகங்கைவாவியுட்டோய்ந்தெழுந்தொருமாவினீழல்வாழ்
நாயனாரடிவழுத்தியேகியஞ்ஞாங்கர்வைகுமாச்சிரமமொன்றமைத்
தாயிடைச்சிவலிங்கமொன்றுகண்டன்புகூர்தரவருச்சித்தேத்தியங்
கேயுமாரருள்பெற்றுமாதவமியற்றலுற்றனன்வயப்புளூர்தியே.

(இ-ள்.) வயம் புள் ஊர்தி - வெற்றிவாய்ந்த கருடவூர்தியையுடைய திருமால், தூய நீர் சிவகங்கை வாவி உள் தோய்ந்து எழுந்து ஒரு மாவின் நீழல் வாழ் நாயனார் அடி வழுத்தி ஏகி அ ஞாங்கர் வைகும் ஆச்சிரமம் ஒன்று அமைத்து - புனிதமவாய்ந்த நீர்மயமாகிய சிவகங்கைத் திருக்குளத்தில் நீராடியெழுந்து ஒரு மாமரத்தினிழலில் வாழும் இறைவரது திருவடியைத் துதித்துச்சென்று அச்சிவகஙகை தீர்த்தசந்நிதானபக்கத்தில் தான்வசிக்கும் ஒரு ஆச்சிரமத்தை அமைத்து, ஆயிடை சிவலிங்கம் ஒன்று கண்டு அன்பு கூர்தர அருச்சித்து ஏத்தி - அவ்விடத்திற் சிவலிங்கமொன்றைத் தாபித்து அன்புமிக அருச்சனைசெய்து துதித்து, அங்கு ஏயும் ஆர் அருள் பெற்று மாதவம் இயற்றல் உற்றனன் - அவ்விடத்துப் பொருந்தும்வண்ணம் திருவருள்பெறப் பெரியதவஞ் செய்யத் தொடங்கினன்.

சலபட்சண முதலியவற்றைச்செய்து தவஞ்செய்யத் தொடங்கினமையால் மாதவம் என்றார். பெற்று செயவெனெச்சத்திரிபு. (கo)

பூதிமேனியனெற்றிநீடமுப்புண்டரத்தினனக்கமாலையன்
சீதவேணியோனறிருவுருத்திரஞ்செப்புநாவினனடகுநீர்கனி
வாதவுண்டியன்பிரமமைவகைமனுக்கணித்துளக்கமலநள்ளுற
மாதுபாகனையிருத்தியைந்தழனமாதிநின்றருந்தவமுஞற்றினன்.

(இ-ள்) பூதிமேனியன் நெற்றி நீடும் முப்புண்டரத்தினன் அக்கம் மாலையன் சீத வேணியோன் திரு உருத்திரம் செப்பும் நாவினன் — விபூதியணிந்த மேனியையுடையவனும் நெற்றியிலணிந்த திரிபுண்டரத்தையுடையவனும் உருத்திராக்க மாலையையுடையவனும் குளிர்ந்த சடாமுடியையுடைய இறைவனது சதஉருத்திரங்களைக்கூறும் நாவையுடையவனுமாகி, அடகு நீர் கனி வாத உண்டியன் - இலையும் நீருங் கனியுங் காற்றுமாகிய இவைகளையுண்ணும் உணவினையுடையவனுமாகி, ஐ வகை பிரமம் மனு கணித்து உள்ளம் கமலம் நள் உற மாது பாகனை இருத்தி ஐந்தழல் மத்தி நின்று அருந்தவம் உஞற்றினன்-பஞ்சப்பிரமமந்திரத்தைச்செபித்து இதயதாமரை நடுவிற்பொருந்த இறைவனையிருத்திப் பஞ்சாக்கினிமத்தியினின்று செய்தற்கரிய தவத்தைச்செய்தான்.

ஐந்தழலினின்று தவஞ்செய்தலாவது நான்குபக்கமுந் தீவளர்த்திச் சூரியனை நோக்கித் தவஞ்செய்தல். (கக)

இன்னவாறுபல்லாண்டுமாதவமிவனியற்றுழிமுக்கணாயகன் [றப்
பொன்னிமாசலப்பூவை தன்னொடும் புடைமிடைந்துபல்கணங்கள்போற்
பண்ணுமவ்விலிங்கத்தினின்றெழூஉப்பாய்விடைப்பரிமேலணைந்துநீ
நன்னர்வேட்டனகூறுகென்றலுநறுந்துழாய்மலர்ப்படலைமோலியான்.

(இ-ள்.) இவன் இன்ன ஆறு பல் ஆண்டு மாதவம் இயற்று உழி-இத்திருமால் இவ்விதமாகப் பலவருடம் பெரிய தவத்தைச்செய்யுங்காலத்து, முக்கண் நாயகன் பொ

ன் இமாசலம் பூவை தன்னொடும் பல்கணங்கள் புடை மிடைந்து போற்றுற பன்னும் அ இலிங்கத்தின் நின்று எழூஉ - திரிநேத்திரத்தையுடைய இறைவன் பொற்கட்டி நி றைந்த இமயமலையிற்றோன்றிய உமையம்மையோடும் பலசிவகணங்கள்நெருங்கிப் பக் கத்திற்றுதிக்க யாவரும்புகழும் அச்சிவலிங்கத்தினின்றும் எழுந்து, பாய் விடை பரி மேல் அணைந்து நீ நன்னர் வேட்டன கூறுக என்றலும் - பாய்ந்துசெல்லும் இடபமா கிய குதிரையின்மே லாரோகணித்து நீ மிகவும் விரும்பினவற்றைக்கூறுவாயென்றரு ள, நறும் துழாய் மலர் படலை மோலியான் - நறுமணங்கமழுந் துழாய்மலராற்றொடுத்த மாலையணிந்த கிரீடத்தையுடையதிருமால்.

பலவருடம் என்றது பலதேவவருடத்தை. வேட்டன செயப்படுபொருள்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். (கஉ)

எட்டுறுப்பினுமைந்துறுப்பினுமிருநிலத்திடைவீழ்ந்துவீழ்ந்தெழுந்
தட்டமூர்த்தியாய்போற்றியென்னையாளண்ணலேயடிபோற்றியென்வினைக்
கட்டறுத்தவாபோற்றிமாறிலாக்கருணைவெள்ளமேபோற்றிபோற்றியென்
றுட்டதும்பியகாதலாற்றொழுதுருகிநீர்விழிசொரியவிள்ளுவான்.

(இ-ள்.) எட்டு உறுப்பினும் ஐந்து உறுப்பினும் இருநிலத்து இடை வீழ்ந்து வீழ்ந் து எழுந்து அட்டமூர்த்தியாய்போற்றி-அட்டாங்கத்தாலும் பஞ்சாங்கத்தாலும் பெரிய நிலவுலகின்மேல் தண்டாகாரமாய் விழுந்துவிழுந்து எழுந்து அட்டமூர்த்தியாயுள்ளவ னே வந்தனம்,என்னை ஆள் அண்ணலே அடி போற்றி என் வினை கட்டு அறுத்தவாபோ ற்றி மாறு இல்லாத கருணை வெள்ளமே போற்றி போற்றி என்று - என்னை யடிமை கொண்ட இறைவனே நின்றிருவடிக்குவந்தனம் எனது வினையின்கட்டையறுத்தவனே வந்தனம் மாறுதலில்லாத கிருபாவெள்ளமே வந்தனம் வந்தனமென்று, உள் ததும்பிய காதலால் தொழுது உருகி நீர் விழி சொரிய விள்ளுவான் - மனதில் நிரம்பிய விருப் பத்தால்தொழுது மனநெக்குவிட்டுருகிக் கண்கள் நீர்சிந்தக்கூறுவான்.

அட்டாங்கம் எட்டுறுப்புகள் நிலத்திற்றோயப்பணிதல். எட்டுறுப்புகள் தலை, இர ண்டுகை, இரண்டுசெவி, மோவாய், இரண்டுதோள். இதனைச் சாஷ்டாங்கம் எனவுங் கூறுவர். பஞ்சாங்கம் ஐந்துறுப்புகள் நிலத்திற்றோயப்பணிதல். ஐந்துறுப்புகள் தலை, இரண்டுகை, இரண்டுமுழந்தாள்,

இவற்றை—

"வலஞ்செய்துதண்டனைமானவிதிவழிதழுவத்
தலந்தன்னிற்பணிந்தெழுகதலைகரமற்றிருகன்னந்
துலங்குமோவாய்புயங்களெனுமெட்டுந்தோயமயிர்
இலங்குசிரங்கரமுழந்தாளெனுமைந்துமிசைந்திடவே" எனவருஞ் சிவ தருமோத்தரத்தால் உணர்க.

பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், ஆன்மா, சூரியன், சந்திரனாகிய வுலகம் நிலைபெறச் சருவன், பவன், உருத்திரன், உக்கிரன், வீமன், பசுபதி, ஈசானன், மாதேவ னென அட்டமூர்த்தியாய் நிற்றலால் அட்டமூர்த்தியாய் போற்றியெனவும், மெய்யன்ப ரிடத்து என்று மொருபடித்தான கருணையையுடையோனாதலால் மாறிலாக்கருணைவெ ள்ளமேயெனவுந் துதித்தனன் என்றார்.

அட்டமூர்த்தியாயிருத்தலை—

"நிலவொளிமணிகணாலினிற்கோத்துவைத்தெனநிகழ்ந்துபேருலக
மலைமகள்பாகனட்டமூர்த்திகளின்மன்னிடுஞ்சருவனற்பவன்சீர்

இலகுருத்திரன்சொலுக்கிரன்வீமன்பசுபதியிறைஞ்சுமீசானன்
அலகிலாக்குணங்களுடையமாதேவனுவராலட்டமூர்த்திகளே.
மாநிலஞ்சருவன்புனல்பவன்கனலேவயங்குருத்திரனியல்வளிதான்
கானமர்தொடையுலுக்கிரன்விசும்புவீமனுங்கருதியமானன்
தானனிவிளங்கும்பசுபதியிரவிதயங்குமீசானன்வெண்மதியம்
ஏனமாதேவனுகுமாலறியவிங்குநாமெடுத்தியம்பிடிலே" எனவரும் வாயுசங்கி தையாலும்,

மெய்யடியாரிடத்து என்றும் ஒருபடித்தான கருணையையுடையான் என்பதை—

" மாறிலாதமாக்கருணைவெள்ளமேவந்துமுந்திநின்மலர்கொடாளிணை
வேறிலாப்பதப்பரிசுபெற்றநின்மெய்ம்மையன்பருன்மெய்ம்மைமேவினர்" எனவரும் உண்மைத்திருவாசகத்தாலும் உணர்க (௧௩)

ஐயனேயுனைச்சரணமெய்தினேனடியனேனினிமற்றோர்பற்றிலேன்
பொய்யில்கேள்விசால்பிருகுமாமுனிபுகன்றசாபநோய்க்கஞ்சிநொந்துளே
னுய்யுமாறருள்செய்யவேண்டுமென்றுரைத்தலந்துநின்றிரப்பவெம்பிரான்
மையுலாமவிழிப்பதுமைகொங்கைதோய்மார்பகேளெனவாய்மலர்ந்தனன்.

(இ-ள்) அடியனேன் ஐயனே உன்னை சரணம் எய்தினேன்இனி ஒரு பற்று இல்லேன் - அடியேன் ஐயனே உன்னைச் சரணமடைந்தேன் உன்னையன்றி வேறொரு பற்றுக்கோடுமில்லேன், பொய் இல் கேள்வி சால் பிருகுமாமுனி புகன்ற சாபம் நோய்க்கு அஞ்சி நொந்துளேன் - உண்மையமைந்த நூற்கேள்விமிகுந்த பிருகுமுனிகூறிய சாபநோய்க்கஞ்சி வருந்தினேன், உய்யும் ஆறு அருள் செய்ய வேண்டும் என்று உரைத்து அலந்து நின்று இரப்ப - நான் பிழைக்கும்வண்ணம் திருவருள் செய்யவேண்டுமென்றுகூறி வருந்திநின்று குறையிரப்ப, எம்பிரான் மை உலாம் விழி பதுமை கொங்கை தோய் மார்ப கேள் என்ன வாய் மலர்ந்தனன்-எமதிறைவன் மையெழுதிய கண்களையுடைய திருமகளது தனந்தோயு மார்பையுடைய திருமாலே கேளெனத் திருவாய் மலர்ந்தருளுவான். (௧௪)

நடுவிகந்திடாநம்மடித்தொழும்பராலுட்டப்
படுவதொன்றெதுவஃதவ்வப்பயன்றனைப்பயந்தே
விடுவதல்லதுபழுதுறாதின்றுநீமெலிய
வடுமிச்சாபமுமனுபவித்தல்லதுவிடாதால்.

(இ-ள்.) நடு இகந்திடாத நம் அடி தொழும்பரால் ஊட்டப்படுவது ஒன்று எதுவோ அஃது அ அ பயன்றனை பயந்தே விடுவது அல்லது பழுது உறாது - நடுவு நிலைமையினின்றும் நீங்காத நம்முடைய திருவடித்தொண்டராலிடப்படுஞ் சாபமெதுவோ அச்சாபம் அந்தந்தப் பயனைத்தந்தே விடுவதன்றித் தவறுபடாது, இன்று நீ மெலிய அடும் இச்சாபமும் அனுபவித்தல்லது விடாது - இப்பொழுது நீ வருந்த வருத்தும் இச்சாபமும் அனுபவித்தாலல்லது அச்சாபம் உன்னைவிடாது.

அடியவரைவிட்டு நாமகலோம், நம்மைவிட் டவரகலாராதலால் அவரோ நாம் அவரிடுஞ்சாபம் பழுதுபடாது ஆதலால், நீயனுபவித்துத் தீரவேண்டுமேயன்றி யது விடாதாதலால், பயந்தேவிடுவதல்லது பழுதுறாது எனவும், அனுபவித்தல்லது விடாதாதலால் எனவும் அருளினர்.

அடியவரைவிட்டு நாமகலோம் அவர் நம்மைவிட்டகலார் என்பதை—

" புன்னெறியிலேச்சரேனுமின்னவைபொருந்திநிற்கில்
அன்னவர்தாமேயாசின்மறையுணரந்தணாளர்
உன்னிமென்பர்தம்மையொழிந்தகன்றுறையேம்யாமும்
நன்னெறியவருநாளுநம்மைவிட்டகன்றிடாரோ" என வாயுசங்கிதையில் வருதல் காண்க. (கரு)

தாங்குகொள்கையினுயர்ந்தநம்மடியவர்தமக்கோர்
தீங்கிழைத்திடுங்கொடியரைச்செகுப்பதேகரும
மாங்குமவல்லிருட்குழிவிழுந்தழுங்குவரந்தோ
யாங்கணுய்வரெம்மடியவர்தமக்கிடரிழைத்தோர்.

(இ-ள்.) தாங்கு கொள்கையின் உயர்ந்த நம் அடியவர் தமக்கு ஓர் தீங்கு இழைத்திடும் கொடியரை செகுப்பது ஏ கருமம்-எண்வகையடையாளங்களையும் மேற்கொண்ட கொள்கையாலுயர்ந்த நமது அடியருக்கோர் குறைவுசெய்திடுங் கொடியரை யிம்மையிற் கொல்லுவதே கருமமாம், ஆங்கும் வல் இருள் குழிவிழுந்து அழுங்குவர்-மறுமையிலும் வலிய நரகக்குழியில் விழுந்து வருந்துவார்கள், எம் அடியவர் தமக்கு இடர் இழைத்தோர் அந்தோ யாங்கண் உய்வர் - எமது அடியவாக்குத் துன்பஞ்செய்தவர்கள் ஐயோ எவவிதத்தில் உயிர் பிழைப்பாாகள்.

எண்வகையடையாளங்களாவன—

" பத்தரோடுறவுகோடல்பூசனைமகிழ்ந்துபார்த்தல்
உத்தமபூசைசெய்தலுடம்பாற்பொருட்டால்வாட்டல்
வித்தகக்கதைகள்கேட்டல்கேட்டுமெய்விதிர்த்தலெம்மைச்
சித்தமீதிருத்தல்பாவித்திடலெனலாமால்செப்பில" எனவும்,

நமது அடியவாக்குத் தீங்குசெய்தார் இம்மையிலும் ஒறுக்கப்பட்டு மறுமையிலும் நரகத்தில் அழுந்துவர் என்பதை—

" ஆங்கவர்நோக்காற்பாவம்யாவையுமகலச்செய்வோர்
ஈங்கிவர்தம்மைநெஞ்சிலிகழ்ந்துரையாடினோர்கள்
வீங்கழனரகந்தன்னில்வீழ்ந்துவீழ்ந்தாவிசோர்ந்து
தீங்குறுபிறவிதன்னிற்சேர்ந்துசேர்ந்துழலுவாரே" எனவும் வாயுசங்கிதையில் வருதல் காண்க. (கசா)

பெருகுமன்பினுலெம்மைநீவழிபடும்பேற்றா
லிருமைசான்முனிசபித்திடுமையிருபிறப்புந்
திரிபுறுதுலகினுக்குபகாரமாந்தெளிநீ
யருளுமைந்தினிலைந்துணிற்றண்டமும்புரிகேம்.

(இ-ள்.) பெருகும் அன்பினுல் எம்மை நீ வழிபடும் பேறுல் - பெருகிய அன்பினுல் நம்மை நீ வழிபடும் பலனுல், இருமை சால் முனி சபித்திடும் ஐயிரு பிறப்பும் திரிபு உறுது உலகினுக்கு உபகாரம் ஆம் நீ தெளி - இம்மை மறுமைப்பயனில் நிறைந்த பிருகுமுனிவன் சபித்த பத்துப்பிறப்பில் நீ புரியுஞ்செயலும் ஆன்மகோடிகளுக்கு உபகாரமாய் முடியும் அதனை நீ தெளியாய், ஐந்தினில் அருளும் ஐந்தினில் தண்டமும் புரிகேம் - உன்பிறப் பைந்தினில் பரிக்கிரகமும் மற்ற ஐந்தில் நிக்கிரகமும் யாம் செய்வேம் என்று வாய்மலர்ந்தருளலும்.

நம்மடியவர்க்குச்செய்த தீங்கினையொழிக்க நம்மையே வழிபட்டபயனால் அப்பிறப்புகளிற்புரியுஞ் செயல் ஆன்மகோடிகளுக்குப்பெரும்பயனாகியு முனக்குப்பெரும்பயனாகியு முடியும் என்பார் ஐயிருபிறப்புந்திரிபுறா துலகினுக்குபகாரமாம் எனவும், ஐந்தினிலருளும் மைந்தினிற்றண்டமும் புரிகேம் எனவும் அருளினார் என்றார். பரசிராமன், இராமன், பலராமன், கண்ணன், கற்கியென்னும் ஐந்தவதாரங்களில் சிவனைப் பூசித்துப் பேறுபெற்றனர்கள் என்பதை—

தனது பிதாவாகிய சமதக்கினியேவிய பணியைமறாது செய்துபெற்ற வரமொன்றனுட் பரசிராமன் சிவபிரான் திருவடிக்கீழ் இடையறா அன்புபெற்றமையை—

“ தென்றிசையடையவெய்திமகேந்திரப்பொருப்புச்சேர்ந்து
கொன்றையஞ்சடிலத்தெந்தைகுரைகழன்மறவானாகி
யின்றளவிறவானன்பினருச்சனையியற்றிநின்றான்
பொன்றிணிசடையீசன்றன்மையார்புகலற்பாலார் ” எனவும்,

இராமன் சிவபூசைசெய்ததை—

“ வந்திழிவுற்றுச்சேதுவினோர்பான்மயில்பாகத்
தெந்தைபிரானுக்கற்சனைசெய்தானிகலாடித்
தந்தபெரும்பாவந்தொலைவுற்றான்றனிவெள்ளேற்
றந்தணனுக்கங்காலயமுற்றுமமைவித்தான் ” எனவும்,

பலராமன் பூசித்ததை—

“ எந்தைபிரானைச்சேவடிபூசித்திகலேறாய்
வந்திடுபோராலசுரரையெல்லாமடிவித்தான்
உய்ந்திடவெண்ணித்தன்னிலையோகத்துடனின்றான்
சிந்தனைமுற்றித்தன்னுறுகதியிற்சென்றுற்றான்” எனவும்,

கிருஷ்ணாவதாரத்தில் உபமன்னியுமுனிவரிடத்தில் சிவதீட்சைபெற்றுச் சிவபெருமான் திருவடிக்கீழிடையறா அன்புபூண்டமையை—

“ பன்னுதவத்தோனுபமன்னியனைப்பணிவுற்றுப்
பொன்னவிர்வேணிக்கன்புபுரிந்தப்புயல்வண்ணன்
அந்நிலைநின்றானர்ச்சனைசெய்தானவையற்றான்
செந்நிலைபற்றிச்செய்வனயாவுஞ்செயமுற்றான் ” எனவும். உபதேசகாண்டத்தில் வருதலையுணர்க.

மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனம் என்னும் ஐந்தவதாரங்களிலும், சோமுகாசுரன் முதலிய அசுரர்களும் இராக்கதர்களும் அயன்முதலிய பல்லுயிர்க்குந் தீங்குசெய்தலை யொழித்தருளுதற் பொருட்டுக்கொண்ட மச்சாவதார முதலிய ஐந்தவதாரங்களிலும் அத்தீயவர்களைக்கொன்று செருக்கால் மயங்கிப் பல்லுயிர்களுக்கும் நடுக்கம்வாய்க்க நின்றமையில் தேவர்கள் வேண்டுகோளால் மச்சமுதலிய அவ்வவதாரமூர்த்திகளை யொறுத்துச் சிவபெருமா னருளினமையை முன்னர்க் கூறியிருக்கின்றோம் அங்குக்காண்க. (௧௭)

என்றுவாய்மலர்ந்தருளலுநெடியவனிறைஞ்சி
நன்றுமுய்ந்தனனடியனேன்ஞாலத்தினீயே
சென்றுதண்டமுமருளுமற்றியான்பெறச்செய்யின்
மன்றவிப்பெரும்பேற்றினும்பேறுமற்றுளதோ.

(இ-ள்.) என்று வாய்மலர்ந்து அருளலும்-என்று இறைவன் திருவாய்மலர்ந்து அருளலும்,நெடியவன் இறைஞ்சி அடியனேன் நன்றும் உய்ந்தனன்-திருமால்வணங்கி யடியேன் மிகவும் பிழைத்தேன், நீயே ஞாலத்தில் சென்று தண்டமும் அருளும் யான்பெற செய்யின் -நீயே நிலவுலகத்தில் வந்து நிக்கிரகத்தையும் அனுக்கிரகத்தையும் யானடையச்செய்தால், மன்ற இ பெரும் பேற்றினும் பேறு உளதோ - தேற்றமாகிய இப்பெரிய பயனிலும் வேறுபயனுண்டோ.

தண்டமும் அருளோடொக்குமாதலால் இருவகையிலும் அருளைப்பெற்றேனென்று களித்தான் என்பார் தண்டமு மருளுமற்றி யான்பெறச்செய்யின் மன்றவிப் பெரும் பேற்றினும் பேறுமற்றுளதோவெனக் கருதினான் என்றார்.

தண்டமும் அருளோடொக்கும் என்பதை—

"மற்றவன்றேன்வழிமலரிறேனென்றுதல்
உற்றுறைந்தமர்ந்திடுமுயிர்வர்க்கங்களைத்
தெற்றெனத்தண்டங்கள்செய்துசேர்ந்துறப்
பற்றியபாவங்கள்பறியநீக்குவான்.

தந்தைதான்புதல்வனைத்தண்டஞ்செய்தவன்
சிந்தைகொடுவினைசிதைக்குமாறுபோல்
எந்தைதான்றண்டங்களியற்றியெய்திய
பந்தமதகற்றிநல்லருள்பணிப்பனால்" என வாயுசங்கிதையில் வருதல் காண்க. (கஅ)

இன்னுமோர்வரம்வேண்டுவெலெளியனேற்குன்பான்
மன்னுமேதகுமுழுவலன்பருண்மதிவள்ளால்
பன்னுமிவ்வரிசாபவெம்பயந்தவிரிலிங்கந்
தன்னிலென்றுநீயமர்ந்தருளென்றலுந்தலைவன்-

(இ-ள்.) வள்ளால் இன்னும் ஓர் வரம் வேண்டுவல் - வள்ளலே இன்னமும் ஓர் வரம் வேண்டுகின்றேன், எளியனேற்கு உன்பான் மன்னும் மேதகு முழுவல் அன்பு அருள் மதி - எளியேனாகிய எனக்கு உன்னிடத்து நிலைபெற்ற மேன்மைதங்கிய எழுமையும்விடாது தொடர்ந்த அன்பு எனக்கருளாய், பன்னும் இ அரி சாபம் வெம் பயம் தவிர் இலிங்கம் தன்னில் என்றும் நீ அமர்ந்தருள் என்றலும் - கூறும் இந்த அரிசாபபயந்தீர்த்த சிவலிங்கத்தில் எக்காலத்தும் நீ அமர்ந்தருளாயென்று குறையிரப்ப, தலைவன்-

முறுகி வளர்ந்த பேரன்பே சிவமாதலின் அச்சிவத்தை யடையவேண்டும் என்று கருதினானாதலால் உன்பால் மன்னுமேதகு முழுவலன்பருண்மதி வள்ளால்என்றான். மதி முன்னிலையசை.

அன்பே சிவமாதலை—

"அன்புஞ்சிவமுமிரண்டென்பரறிவிலார்
அன்பேசிவமாவதாருமறிகிலார்
அன்பேசிவமாவதாருமறிந்தபின்
அன்பேசிவமாயறிந்திருப்பாரே" எனவருந் திருமந்திரத்தால் அறிக.

வேட்டயாவையும்வழங்கினனுவகைமீதூர்ந்து
பாட்டளிக்குலம்விருந்தயர்பசுந்துழாய்மார்பன்
றேட்டலர்க்கரங்குவித்தெதிர்நிற்பமுச்சுடரா
காட்டமூன்றுடைநாயகனிலிங்கத்தின்மறைந்தான்.

(இ-ள்.) வேட்ட யாவையும் வழங்கினன் - விரும்பின எல்லாவற்றையுந் தந்தருளினன், உவகை மீதூர்ந்து பாட்டு அளி குலம் விருந்து அயர் பசும் துழாய் மார்பன் தோடு அலர் கரம் குவித்து எதிர்நிற்ப - மகிழ்ச்சி மீதூர்ந்து இசைப்பாட்டையுடைய வண்டின்கூட்டங்களுக்கு விருந்துசெய்யும் பசிய துழாய்மாலையையணிந்த திருமால் இதழோடலர்ந்த தாமரைமலர்போன்ற கையைக்குவித் தெதிரேநிற்க, முச்சுடராம் நாட்டம் மூன்று உடைய நாயகன் - சோமசூரியாக்கினியாகிய மூன்றுகண்களையுடைய இறைவன், இலிங்கத்தில் மறைந்தான் - சிவலிங்கத்தில் மறைந்தருளினான்,

வண்டுகளுக்குத்துழாய்மாலைவிருந்துசெய்தலாவது தேனையூட்டுதல். அஃறிணைப் பொருளை யுயர்திணைப்பொருள் போலவைத்து விருந்துசெய்யும் எனக்கூறியது புனைந்துரை. (உ0)

அனையசூழலின் குணாது முக்காலமுமறிவான்
முனிவர்சிற்சிலரெய்தி முனிலிங்கமொன் றிருத்தி
யினியபூசனை யியற்றிட வவர்க்கது வீந்தார்
கனியுமன்பருக்கருளு முக்காலஞானேசம்.

(இ-ள்.) முக்காலமும் அறிவான் முனிவர் சிற்சிலர் எய்தி முன் இலிங்கம் ஒன்று இருத்தி இனிய பூசனை இயற்றிட அவர்க்கு அது ஈந்தார் - திரிகாலங்களையும் உணரச் சிலமுனிவரங்கடைந்து முன்பு சிவலிங்கமொன்றினைத்தாபித்து இனியபூசனையைச்செய்ய அவர்க்குத் திரிகாலஞானத்தைத் தந்தருளினார், கனியும் அன்பருக்கு அருளும் முக்கால ஞானேசம் - (ஆதலால்) முறுகிய அன்பருக்கருளுந் திரிகால ஞானேசமென்னுந் திருப்பதி, அனைய சூழலின் குணாது - அத்தன்மையையுடைய அரிசாபபயந்தீர்த்த தானத்தின் கீழ்பாலுள்ளது.

குணக்குள்ளது குணாதென வந்தது மரூஉ. (உக)

விதந்தமற்றிதன் வடக்கது வெம்புலனடங்க
மதங்கமாமுனியருச்சனை புரிமதங்கேச
மதன்குடக்கபிராமீசமச்சுதன்குறளாய்ச்
சிதைந்துமாவலிதபத்தெறவழுத்தியவரைப்பு.

(இ-ள்.) வெம்புலன் அடங்க மதங்க மாமுனி அருச்சனை புரி மதங் கேசம் விதந்த இதன் வடக்கது - கொடிய ஐம்புலனடங்க மதங்கமாமுனி யருச்சனைபுரிந்த மதங்கேசமென்னுந் திருப்பதியெடுத்துக்கூறிய இத்திரிகால ஞானேசமென்னும் இத்திருப்பதிக்கு வடபாலுள்ளது, அச்சுதன் குறளாய் மாவலி சிதைந்து தப தெற வழுத்திய அபிராமீசம் வரைப்பு அதன் குடக்கு உள்ளது - திருமால் குறள்வடிவாய் மாவலியென்பவனழிந்துகெடக் கொல்லும்பொருட்டுத் தாபித்துப்பூசித்த அபிராமீசமென்னுந்திருப்பதி மதங்கேசமென்னுந் திருப்பதியின் மேற்கிலுள்ளது.

அபிராமீசம் என்னுந்திருப்பதி அயிராவதத்திற்குப் பெண்யானையாகிய அபிராமம் பூசித்ததனா லப்பெயர்வந்தது. அந்ததலத்தில் வாமனமூர்த்தி பின்பு பூசித்து வலிமைபெற்றார் என்பதுகருத்து. குடக்குஎன்பதனிறுதியில் உள்ளதுஎன்பது தொகுத்தல்.

அத்தளிக்குடபாலதன் றிலமையவர்கடைபோ
தத்திமேலெழும்வெண்கரியருச்சனையாற்றி
யத்திகட்கரசாகிவிண்ணரசினைத்தாங்க
வத்தனாருள்பெறுமயிராவதீச்சரமால்.

(இ-ள்.) அன்று இமையவர் கடைபோது அத்திமேல் எழும் வெண் கரி அருச்சனை ஆற்றி - அக்காலத்தில் தேவர்கள் கடையும்போது கடலிலெழுந்த வெள்ளையானை யருச்சனைசெய்து, அத்தி கட்கு அரசு ஆகி விண் அரசினை தாங்க அத்தனார் அருள் பெறும் அயிராவதீச்சரம் அதனி குடபாலது - மற்றத் திக்குயானைகளுக்கரசா யிந்திரனைத்தாங்க இறைவர்திருவருளைப்பெற்ற அயிராவதீச்சரமென்னுந்திருப்பதி அந்த அபிராமீசமென்னுந் திருப்பதிக்கு மேல்பாலுள்ளது, (உ௩)

துவற்றுதேத்துளிதுறுமலர்ப்பொதும்பர்சூழ்கிடந்த
விவற்றுளொன்றனிலெந்தைதாள்வழிபடப்பெற்றோர்
கவற்றும்வல்வினைப்பிறவிவித்தாயகாமாதி
யவற்றினீங்குபுமழுவலானடியிணைசேர்வார்.

(இ-ள்.) துவற்று தேத்துளி துறுமலர் பொதும்பர் சூழ்கிடந்த இவற்றுள் ஒன்றனில் - செறிந்த தேன்றுளியைசிந்தும் நெருங்கியமலரையுடைய சோலைகள்சூழ்ந்துகிடந்த இத்திருப்பதிகளொன்றில், எந்தை தாள் வழிபட பெற்றோர் கவற்றும் வல்வினை பிறவிவித்து ஆயகாமாதி அவற்றின் நீங்குபு மழுவலான் அடி இணை சேர்வார் - இறைவனது திருவடிக்கு வழிபாடுசெய்யப்பெற்றவர்கள்வருத்துங் கொடிய ஆகாமியவினையாகிய பிறவிக்கு வித்தாயுள்ள காமமுதலிய அவற்றினின்று நீங்கி அவவிறைவனது இரண்டுதிருவடிகளையு மடைவார்கள்.

பிராரத்தவினை நுகரும்போது இடையிலேறும்வினை ஆகாமியமாதலாலதனை வல்வினை எனவும், அதுவே காமம், மயக்கம், கோபம் எனப் பிறவிக்கு வித்தாய் மூவகைப்படுதலால் பிறவிவித்தாய காமாதியெனவுங் கூறினார்.

"அவாவென்பவெல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றும்-தவாப்பிறப்பீனும்வித்து" என நாயனார் கூறினமை காண்க. (உச)

அரிசாபபயந்தீர்த்ததானப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அ௫௩-

---

## இட்டசித்தீச்சரப்படலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திகழரிசாபந்தீர்த்ததிருநகர்முதல்வானாடர்
புகழயிராவதீசப்பொன்மதில்வளைப்பீறாக
நிகழ்தருதளிகள்சொற்றாநிறையயிராவதீசத்
திகழ்தருந்தென்சாரிட்டசித்தீசத்துண்மைசொல்வாம்.

(இ-ள்.) திகழ் அரி சாபம்தீர்த்த திருநகர்முதல் வானாடர் புகழ் அயிராவதீசம் பொன் மதில் வளைப்பு ஈறு ஆக நிகழ் தருதளிகள் சொற்றாம் - விளங்காநின்ற அரிசாபந்தீர்த்த திருநகர்முதலாக விண்ணுலகினர்புகழும் அயிராவதீசமென்னும் பொன்மதில்சூழ்ந்ததிருப்பதி யீறாகச்சொல்லுந் திருப்பதிகளின் பெருமையைக்கூறினோம், நிறை அயிராவதீசம் திகழ் தரும் தென்சார் இட்டசித்தீசத்து உண்மை சொல்வாம் - வளம் நிறைந்த அயிராவதீசமென்னுந் திருப்பதிக்குவிளங்காநின்ற தென்பாகத்திலுள்ள இட்டசித்தீசமென்னுந் திருப்பதியினுண்மையை யெடுத்துக்கூறுவாம். (க)




A. இட்டசித்தீச்சரப்படலம்.

தொழுதகுபெருமைசான்றசுக்கிரனங்கணெய்திக்
கெழுதகுபூசையாற்றிக்கிடைத்தனன்சித்தியெல்லா
முழுதருள்பெற்றவன்னோன்மொழிவழித்ததீசியெய்தி
வழிபடுமுறையினேத்திவச்சிரயாக்கைபெற்றான்.

(இ-ள்.) தொழுதகு பெருமைசான்ற சுக்கிரன் அங்கணெய்தி கெழுதகு பூசை ஆற்றி சித்தி எல்லாம் கிடைத்தனன் - யாவருந்தொழத்தக்க பெருமையமைந்த சுக்கிரனென்பவன் அத்திருப்பதியையடைந்து நிறைந்த சிவபூசைசெய்து அட்டமாசித்திகளையும் பெற்றனன், அருள் முழுது பெற்ற அன்னோன் மொழி வழி ததீசி எய்தி வழிபடும் முறையின் ஏத்தி வச்சிர யாக்கை பெற்றான் - சிவபெருமான் திருவருள்முற்றும் பெற்ற அச்சுக்கிரன் மொழிவழியே ததீசிமுனிவனடைந்து வழிபடுமுறையாற் சிவபெருமானுக்குவழிபட்டு வச்சிரதேகத்தைப்பெற்றனன்.

இகபரசாதனங்களையு முத்தியையும் பெறவேண்டினோர் சிவபூசனையாலன்றி யேனையவற்றால் பெறுதலரிதாதலால் கெழுதகுபூசை என்றார்.

" மலர்ந்தமண்புரக்கவேண்டின்வானகங்காக்கவேண்டின்
அலர்ந்தபூவிருக்கவேண்டினவிர்கடற்கிடக்கைவேண்டின்
நலந்தருமின்பமுத்திநண்ணிடவேண்டிற்கூற்றின்
வலந்தருமுயிர்குடிந்தமலரடிப்பூசைசெய்வார்.

திருவமிக்கடையவேண்டிற்செம்மகப்பேறுவேண்டின்
மருவலர்ச்செருக்கவேண்டின்மாணபொருள்கல்விவேண்டின்
வரும்பெரும்புகழ்ச்சிவேண்டின்வான்முதலெவ்விடத்தும்
பொருவிலிபூசையன்றிமற்றெவற்றாலும்பூவா " எனச் சூதசங்கிதையில் வருதல்காண்க. (உ)

உதீசிமாநாகங்கோட்டிமுப்புரமொறுத்தவயிரா
வதீசனுக்கணியதென்பால்வைகியவுணர்வுக்கெட்டா
வதீதனைவழுத்தியந்நாள்வச்சிரயாக்கைபெற்ற
ததீசியின்செயல்விரித்துச்சாற்றுவன்முனிவீர்கேண்மின்.

(இ-ள்.) உதீசி மா நாகம் கோட்டி முப்புரம் ஒறுத்த அயிராவதீசனுக்கு அணிய தென்பால் வைகிய உணர்வுக்கு எட்டாத அதீதனை வழுத்தி - வடக்கின்கணுள்ள பெரிய பொன்மலையைவளைத்துத் திரிபுரங்களை நகைத்தெரித்த அயிராவதீசனுக்குச் சமீபித்த தென்பாலுள்ள இட்டசித்தீச்சரத்திலெழுந்தருளிய நூலுணர்ச்சிக்கெட்டாத அதீதனாகிய இறைவனைத்தொழுது, அநாள் வச்சிர யாக்கை பெற்ற ததீசியின் செயல் விரித்து சாற்றுவன் முனிவீர் கேண்மின் - அக்காலையில் வச்சிரயாக்கையைப்பெற்ற ததீசி முனிவரது செய்கையை விரித்துக்கூறுவன் முனிவர்களே கேளுங்கள்.

நூலுணர்வு விந்துதத்துவத்தின் காரியப்பாடான நால்வகைவாக்கைப்பற்றி நிகழுஞ் சாத்திரஞானம் ஆதலால் உணர்வுக்கெட்டா வதீதனை என்றார்.

"மறைத்திறநோக்கிவருந்தினர்க்கொளித்தும்" எனவும்,

" இத்தந்திரத்திற்காணுமென்றிருந்தோர்க்
கத்தந்திரத்தினவ்வயினொளித்தும் " எனவும் வாதவூரடிகள் பணித்தருளினமையாற்காண்க. (௩)

பிருகுவின்மரபிற்றோன்றும்பிறங்குசீர்த்ததீசிமேலோ
னருவிமாமதமால்யானைக்குபனெனுமரசன்றன்னோ

டொருவருங்கேண்மையெய்தியளவளாயுறையுங்காலை
யிருவருமொருநாள்கூடி நகுபொழுதினையசொல்வார்.

(இ-ள்.) பிருகுவின் மரபில் தோன்றும் பிறங்குசீர் ததீசி மேலோன் அருவி மா மத மால் யானை குபன் என்னும் அரசன் தன்னோடு - பிருகுவின்மரபில் சியவனமுனிவர்க்குத்தோன்றிய விளங்காநின்ற புகழையுடைய சாவனியென்னுங் காரணப்பெயரையுடைய ததீசியென்னும் பெரியோன் அருவிபோலொழுகும் பெரியமதத்தையும் அம்மதமயக்கத்தையும் வாய்ந்த யானைச்சேனையையுடைய பிரமனது தும்மலிற்பிறந்த காரணத்தால் குபனென்னுங் காரணப்பெயரையுடைய அரசனோடு, ஒருவு அரும் கேண்மை எய்தி அளவளாய் உறையும் காலை - நீங்குதலில்லாத நட்பினையடைந்து கலந்து வசிக்குங்காலத்தில், இருவரும் ஒருநாள்கூடி நகு பொழுது இனைய சொல்வார் - இவ்விருவம் ஒருநாள் தம்முட்கலந்து சிரிக்குங்காலத்தில் இத்தன்மையனவான வார்த்தைகளையெடுத்துப் பேசுவார்.

சியவனர்புத்திரன் சாவனியெனவந்தது தத்திதாந்தபதம் (௪)

விப்பிரர்கொல்லோவன்றிவேந்தரோபெரியரென்னு
மப்பொழுதந்தணாளரரசரிற்சிறந்தோரென்னச்
செப்பினன்றதீசிமன்னன்மன்னரேசிறந்தோரென்று
னிப்பரிசிருவருக்குமெழுந்ததுவயிரப்பூசல்.

(இ-ள்.) விப்பிரர் கொல்லோ அன்றி வேந்தரோ பெரியர் என்னும் அப்பொழுது ததீசி அந்தணாளர் அரசரில் சிறந்தோர் என்ன செப்பினன் - அந்தணர்களோ அவர்களன்றி யரசர்களோ தம்முட்பெரியவர் என்று அரசன் வினவியபோது ததீசிமுனிவன் அரசரிலும் அந்தணரே சிறந்தோர் என்று கூறினன், மன்னன் மன்னரே சிறந்தோர் என்றான் - குபன் என்னும் அரசன் அந்தணரிலும் அரசரே சிறந்தவரென்று கூறினான், இப்பரிசு இருவருக்கும் வயிரம் பூசல் எழுந்தது - இத்தன்மையாக முனிவனுக்கும் அரசனுக்கும் வயிரம் வாய்ந்த போர் எழுந்தது. (௫)

அழலெனமுனிவன்சீறியடித்தனனடித்தலோடு
மழலைவண்டிமிருந்தாரான்வச்சிரஞ்சுழற்றிவீசிப்
பழமறைமுனிவனாக்கையிருதுணிபடுப்பவன்னோன்
கிழமைகூர்வெள்ளிதன்னைநினைந்துகீழ்நிலத்துவீழ்ந்தான்.

(இ-ள்.) முனிவன் அழல் என்ன சீறி அடித்தனன் அடித்தலோடும் - ததீசிமுனிவன் தீப்போலக்கோபித்து அடித்தான் அவனடிக்க, மழலை வண்டு இமிரும் தாரான் வச்சிரம் சுழற்றி வீசி பழ மறை முனிவன் ஆக்கை இரு துணி படுப்ப - மழலைச்சொற்களைப்போல வண்டுகளிசைபாடுமாலையையணிந்த குபனென்னுமரசன் வச்சிராயுதத்தைச் சுழற்றிவீசித் தொன்றுதொட்டுள்ள ததீசிமுனிவனது சரீரத்தை இரண்டு துண்டு செய்ய, அன்னோன் கிழமை கூர் வெள்ளி தன்னை நினைந்து கீழ்நிலத்து வீழ்ந்தான் - அத்ததீசிமுனிவன் றன்னொடுநட்புகொண்ட சுக்கிரனைக்கருதிப் பூமியின்மேல்விழுந்தனன்.

சுக்கிரனுணர்ந்துபோந்துதுணியுடல்பொருத்திக்கூட்டி
யக்கணத்தெழுப்பித்தேற்றியறைகுவான்முனிவகேண்மோ
நக்கலர்கமலவாவிக்காஞ்சியினணுகியன்பாற்
முக்கணற்றொழுதியாண்டுங்கொலையுறாமுதன்மைகோடி.

(இ-ள்.) சுக்கிரன் உணர்ந்து போந்து துணி உடல் பொருத்தி கூட்டி அக்கணத்து எழுப்பி தேற்றி அறைகுவான் - சுக்கிரன் அறிந்துவந்து துண்டுபட்ட சரீரத்தைப்பொருத்திக்கூட்டி யப்பொழுதே யெழுப்பித் தேற்றிக் கூறுவான், முனிவ கேண்மோ - முனிவனே கேளாய், நக்க அலர் கமல வாவி காஞ்சியில் நணுகி அன்பால் முக்கணன் தொழுது யாண்டும் கொலை உறாத முதன்மைகோடி - விளங்கிய தாமரைகள் நிறைந்த தடாகஞ்சூழ்ந்த காஞ்சித்திருப்பதியையடைந்து முறுகிய அன்பால் சிவபெருமானை வணங்கி எக்காலத்தும் கொலையுண்ணாத முதன்மையைக் கொள்ளாய். (௭)

இழைமணிமாடக்காஞ்சியிட்டசித்தீசவைப்பின்
மழைதவழ்மிடற்றுப்புத்தேண்மலரடிவழுத்திப்பெற்றேன்
விழைதகுமிருதசஞ்சீவனியிதுவதன்றென்பாங்கர்த்
தழைபுகழிட்டசித்திதரும்புனற்றடமொன்றுண்டால்.

(இ-ள்.) மணி இழை மாடம் காஞ்சி இட்டசித்தீசம் வைப்பில் மழை தவழ் மிடற்று புத்தேள் மலர் அடி வழுத்தி விழைதகு மிருதசஞ்சீவனி இது பெற்றேன் - இரத்தினமிழைத்த மாடங்கள்நெருங்கிய காஞ்சியிலுள்ள இட்டசித்தீச்சரத்தி லெழுந்தருளியமேகம்போலக் கருநிறம்வாய்ந்த ஸ்ரீகண்டத்தையுடைய இறைவரது தாமரை மலர்போன்ற திருவடியைத்துதித்து விரும்பத்தக்க மிருதசஞ்சீவனியென்னு மிம்மந்திரத்தைப்பெற்றேன், அதன் தென்பாங்கர் புகழ் தழை இட்டசித்தி தரும் புனல் தடம் ஒன்று உண்டு - அத்திருப்பதியின்தென்பாலில் புகழ்நிறைந்த இட்டசித்திதரும் நீர்மயமாகிய தடாகமொன்றுள்ளது.

மிருதசஞ்சீவனிமந்திரம் மரணத்தை நீக்கி உயிர்தருமந்திரம், அது உயிர்தருமருந்துபோனிற்றலின் உவமையாகுபெயரா யம்மந்திரத்திற்குவந்தது "உயிர்தருமருந்தேமிருதசஞ்சீவனி" எனப் பிங்கலத்தில் வருதல் காண்க. இதனைப் பின்னர்க்காண்க. இட்டசித்தி விரும்பியபயன் கைகூடுதல். (அ)

அத்தடம்படிந்தோர்தம்பாலாரருள்சுரக்குமீசன்
பத்தியாலதனைக்கண்டோர்தீண்டினோர்பருகலுற்றோர்
புத்தியோடாடப்பெற்றோரறம்பொருளின்பமவீடாஞ்
சித்திகள்பெறுவாரென்றாலதன்புகழ்செப்பற்பாற்றோ.

(இ-ள்.) அதடம் படிந்தோர் தம்பால் ஈசன் ஆர் அருள் சுரக்கும்-அந்தத்திருக்குளத்தில் நீராடினோரிடத்து இறைவன்நிறைந்த திருவருளைச்சுரப்பான், பத்தியால் அதனை கண்டோர் தீண்டினோர் பருகலுற்றோர் புத்தியோடு ஆடபெற்றோர் அறம் பொருள் இன்பம் வீடு ஆம் சித்திகள் பெறுவர் என்றால் - அன்போடு அத்தீர்த்தத்தைக் கண்டவர்களும் பரிசித்தவர்களும் பருகினவர்களும் புத்திபூர்வத்தோடு நீராடப்பெற்றவர்களும் அறமும்பொருளும் இன்பமும் வீடுமாகிய சித்திகளைப்பெறுவார்களானால், அதன் புகழ் செப்பல் பாற்று ஓ - அத்திருப்பதியின்புகழை நம்மாலெடுத்துக்கூறும் பகுதியையுடையதோ (அல்ல என்றபடி.)

பெறுவார் என்னும் பாடத்தைப் பெறுவர் எனத் திருத்தினர். ஆர் விகுதி அர் விகுதியுணர்த்தும் பொருளை யுணர்த்தாதெனக் கருதினர்போலும். இதனைப் பாடசாலைகளிற் கற்குஞ் சிறுவர்களை வினவின் ஐயம் ஒழியுமெனக. (௯)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மல்லனீரரிவாரமூழ்கிடின்மகவிலான்மகவின்றிடு
மில்லமில்லவன்மனைவியெய்துவனுயுளில்லவனஃதுறும்

கல்வியில்லவன் கல்வியெய்துவன் கண்ணிலான் விழிபெறுகுவன்
செல்வமில்லவன் செல்வமேவுவனரசிலானரசுசெய்யுமால்.

(இ-ள்) மல்லல் நீர் அரி வாரம் மூழ்கிடின் மகவு இல்லான் மகவு ஈன்றிடும் — வளமமைந்த இட்டசித்திதீர்த்தத்தில் அதிவாரமூழ்கினால் புத்திரனில்லாதவன் புத்திரனைப்பெறுவான், இல்லம் இலலவன் மனைவி எயதுவன் ஆயுள் இல்லவன் அஃது உறு — மனைவியில்லாதவன் மனைவியையடைவான் ஆயுளில்லாதவன் ஆயுளையடைவான், கல்வி இல்லவன் கல்வி எய்துவன் கண் இல்லான் விழி பெறுகுவன் - கல்வித்தேர்ச்சியில்லாதவன் கல்வியைப்பெறுவான் கண்ணில்லாதவன் கண்களைப்பெறுவான், செல்வம் இல்லவன் செல்வம் மேவுவன் அரசு இல்லான் அரசு செய்யும் - செல்வம் இல்லாதவன்செல்வம்பெறுவான் அரசியலில்லாதவன் அரசியலைப்பெறுவான். (௧௦)

அலகைபூதமதாதிபற்றியலைக்கநின்றவரிரவிநாள்
குலவுமத்தடமாடினங்கவைகோடியோசனைபின்னிடுங்
கலிகெழுந்துயர்குட்டவெம்பிணிமுயலகன்பெருநோயெலாம்
விலகிநீங்குமகநீர்படிந்திடுமக்கணத்திதுமெய்மையே.

(இ-ள்) அலகை பூதம் ஆதி பற்றி அலைக்க நின்றவர் இரவி நாள் குலவும் அதடம் ஆடின் அங்கு அவை கோடியோசனை பின்னிடும்-பசாசும் பூதமுமுதலானவை பற்றிவருத்த நின்றவர்கள் ஞாயிற்றுக்கிழமையில் விளங்கும் அத்தீர்த்தத்தில் நீராடில் அவ்விடத்து அவைகள் கோடியோசனைதூரம பின்னிட்டோடும், அநீர் படிந்திடும் அக்கணத்து கலிகெழும் துயர் குட்ட வெம்பிணி முயலகன் பெருநோய் எலலாம் விலகி நீங்கும் - அத்தீர்த்தில்மூழ்கும் அப்பொழுதேமிக்கதுன்பத்தைவிளைக்குங் குட்டநோயு முயலகனென்னும் பெருநோயுமாகிய இவையெல்லாம்விட்டுத் தூரத்தில் நீங்கும், இது மெய்மை - இது சத்தியம்.

முயலகநோய்நாளுக்குநாள் உடம்புமெலியும் நோய். அது பகுதிப்பொருள் விகுதி.

காதளாவியகுழைகிழித்துவிடங்கனிந்துகுமிழ்மிசை
மோதுமையரிவாட்டடங்கண்முகிழ்த்தகொங்கைநுணங்கிடை
மாதராயினுமைந்தராயினும்வந்துபூம்புனலாடினோர்
யாதியாதுவிரும்பினுமவ்விட்டசித்தியளிக்குமால்.

(இ-ள்) காது அளாவிய குழை கிழித்து விடம் கனிந்து குமிழ் மிசை மோதும் ஐயரி வாள் தடம் கண் - காதிலணிந்த குண்டலத்தைக்கிழித்து விஷத்திற்பழுத்துக் குமிழம்பூவையொத்த நாசிமேல்மோதும் ஐயரிபடர்ந்த வாள்போன்றபரந்தகண்களையும், முகிழ்த்த கொங்கை நுணங்கு இடை மாதராயினும் மைந்தராயினும் வந்து பூம்புனல் ஆடினோர் - அரும்பிய கொங்கையையும்சிறுகிய இடையையுமுடைய பெண்களாயினும் புருடர்களாயினும்வந்து பொலிவடைந்த அத்தீர்த்தத்தில்முழுகினோர், யாது யாது விரும்பினும் அ இட்டசித்தி அளிக்கும் - எதையெதை விரும்பினாலும் அவ்விட்டசித்தி தீர்த்தங்கொடுக்கும்.

மல்லனீர் என்பதுமுதல் இச்செய்யுள்காறும் புத்திபூர்வத்தால் நீராடப்பெற்றோரடையும் பயன்கள் கூறப்பட்டன. (௧௨)

முந்துகந்தனில்வாணிதன்னொடுமுளரிமெல்லணைநான்முகன்
வந்துமேதகுமிட்டசித்திமலர்ந்தடந்தனிலாடினன்
றுந்துசத்தியலோகவாழ்க்கைபடைத்திடுந்தொழுமேலோடுற
விந்துசேகரனருள்கிடைத்தனனொருழ்வலித்தவமுனிவனே.




B. கச்சபேசப்படலம்.

B. இட்டசித்தீசப்படலம். குபேரன்.

(இ-ள்.) எறுழ்வலி தவம் முனிவனே - மிக்கதவத்தையுடையதநீசியே, மூன்று உகம் தனில் வாணி தன்னெடு மூளரி மெல் அணை நான்முகன் வந்து - கிரேதாயுகத்தில் கலைமகளோடு தாமரையாகிய மெல்லியதளிமத்தில் வசிக்கும்பிரமன்வந்து, மேதகும் இட்டசித்தி மலர் தடத்தினில் ஆடி நன்று உந்து சத்தியலோக வாழ்க்கை படைத்திடும் தொழிலோடு உற இந்து சேகரன் அருள் கிடைத்தனன் - மேன்மைமிக்க இட்டசித்திதீர்த்தத்தில்நீராடி நன்மைமிக்க சத்தியலோகவாழ்க்கையும் படைக்குந் தொழிலும் அமைய இறைவனது திருவருள்பெற்றனன்.

ஓடு எண்ணிடைச்சொல். (கரு)

ஏயுநற்றிரேதாயுகத்தினென்றூழ்படிந்துமறைத்தனு
வாயிரங்கதிராண்டுதன்றினத்தத்தடம்படிந்தோர்க்கரன்
மேயசித்திகள்விரைவினல்கவும்விருச்சிகந்தினநாளுறின்
வாயுமப்பயன்மிகவிரைந்துவழங்கவும்வரமெய்தினான்.

(இ-ள்.) என்றூழ் ஏயும் நல் திரேதாயுகத்தின் படிந்து மறைதனு ஆயிரம் கதிர் ஆண்டு-சூரியன் பொருந்திய நல்ல திரேதாயுகத்தில்நீராடி வேதவுடம்பையும் ஆயிரங்கிரணங்களையுமடைந்து, தன் தினத்து அ தடம் படிந்தோர்க்கு அரன் மேய சித்திகள் விரைவில் நல்கவும்-தனது வாரத்தில் அத்தீர்த்தத்தில் முழுகினோர்க்கு இறைவன் விரும்பத்தக்கசித்திகளை விரைவோடருளவும், விருச்சிகத்தின் அ நாள் உறின் வாயும் அ பயன் மிக விரைந்து வழங்கவும் வரம் எய்தினான் - கார்த்திகைமாதத்தில் அவ்வாரத்தில் நீராடில் பொருந்திய அப்பயன்களை மிகவும் விரைந்துவந்தருளவும் வரம்பெற்றான்.

சூரியன் வேதசொரூபியென்னும் பெயர்பெற்றமையும் ஆயிரங்கிரணங்களை யடைந்தமையும் அத்தீர்த்தநீரிலாடிய பின்பெற்றமையால் படிந்து மறைத்தனுவாயிரங் கதிராண்டு என்றார். (கச)

துவாபரத்தரிபூவின்மாதொடுதோன்றியத்தடமாடினான்
றவாதுபல்லுயிர்காக்கும்வாழ்வொடுமால்பதந்தனைப்பெற்றன
னுவாமதிக்கலையானனம்பிகைகலியுகத்திலந்நீர்படிந்
தவாநிறைந்தருள்கம்பநாயகர்பாதிமேனியடைந்தனள்.

(இ-ள்.) துவாபரத்து அரி பூவின் மாதொடு தோன்றி அ தடம் ஆடினான் - துவாபரயுகத்தில் திருமால் திருமகளோடுவந்து அந்தீர்த்தத்தில் நீராடி, மால் தவாது பல் உயிர் காக்கும் வாழ்வொடு பதந்தனை பெற்றனன் - அத்திருமால் கெடாத பலவுயிர்களையும் காக்கும் வாழ்வோடு வைகுந்தபதவியையும்பெற்றான், உவா கலை மதி ஆனனம் அம்பிகை கலியுகத்தில் அ நீர் படிந்து அவா நிறைந்தருள் கம்பநாயகர் மேனி பாதி அடைந்தனள்-கலைகணிறைந்த சந்திரனையொத்த முகத்தையுடைய உமையம்மை கலியுகத்தில் அத்தீர்த்தத்தில்நீராடி விருப்பத்தோடு நிறைந்தருளிய ஏகம்பநாதரது திருமேனியிற் பாதிபெற்றனர்.

திருவேகம்பர் பிரிவாற்றாமைதோன்ற அவாநிறைந்தருள் கம்பநாயகர் என்றார்.

இவர்களால்வருநான்குகங்களுக்கிறைவராயினர்மற்றுமிச்
சிவமுறும்புனலாடிமுன்றினகரனிழந்தபலெய்தினான்
றவளமாமதிமுயகலபிணிசாடினன்பகனென்பவன்
றவளுமாறுயர்வீரபத்திரன்றொட்டவாள்விழிபெற்றனன்.

(இ-ள்.) இவர்கள் நால்வரும் நான்கு உகங்களுக்கு இறைவர் ஆயினர் - இவர்கள்நான்குபேரும் நான்குயுகங்களுக்குத் தலைவர்களானார்கள், மற்றும் இ சிவம் உறும் புனல் முன் தினகரன் ஆடி இழந்த பல் எய்தினான் - மீளவும் இந்த நன்மைமிக்க தீர்த்

தத்தில் முன்பு சூரியன்மூழ்கித் தக்கன் யாகத்திலிழந்த பல்லைப்பெற்றான், தவளம் மாமதி முயலகம் பிணி சாடினன் - வெள்ளிய பூரணசந்திரன் நாளுக்குநாளிளைக்குமுயலகனென்னும் நோயினின்றுநீங்கினான், பகன் என்பவன் துவளும் ஆறு உயர் வீரபத்திரன் தொட்டவாள் விழி பெற்றனன் - பகன்என்னும் பெயரையுடையசூரியன் வருந்தும் வண்ணம் வெற்றியில்மிக்க வீரபத்திரக்கடவுள் தக்கன்யாகத்திற்றோண்டிய ஒளிவாய்ந்த கண்களைப்பெற்றனன்.

கிரேதாயுகத்தில் பிரமனும்,திரேதாயுகத்தில் சூரியனும்,துவாபரயுகத்தில் திருமாலும் கலியுகத்தில் உமையம்மையும் நீராடித் தாங்கள்கருதிய இட்டசித்திகளையும் பெற்றதுமன்றி அவ்வவ்யுகங்களுக்கு அவரவர்களேயிறைவர்களாயினார் என்பார் இவர்கள் நால்வரும் நான்குகங்களுக் கிறைவராயினர் எனவும், முன் தினகரனிழந்தபலெய்தினான் எனக்கூறிப் பகனென்பவன் வீரபத்திரன்றொட்டவாள் விழிபெற்றனன்னெனப் பின்னர் கூறியது கற்பபேதம் எனக்கொள்க. மேடமுதலிய இராசிகளிற்பிரவேசிக்கும் ஆதித்தர் பன்னிருவரில் கன்னிராசியிற்பிரவேசிக்கும் ஆதித்தனுக்குப் பகன்என்பது பெயராதலில் அந்த ஆதித்தன்எனக்கொள்க.

“ சூரியனார்தொண்டைவாயினிற்பற்களை
வாரிநெரித்தவாறுந்தீபற
மயங்கிற்றுவேள்வியென்றுந்தீபற ” எனவும்,

“ உண்ணப்புகுந்தபகனொளித்தோடாமே
கண்ணைப்பறித்தவாறுந்தீபற
கருக்கெடநாமெலாமுந்தீபற” எனவும்,

கன்னிராசியிற் பிரவேசிக்கும் ஆதித்தனுக்குப் பகன் எனப் பெயர்வந்ததை—

மாசிநீள்வருணன்பங்குனிபூடாசித்திரையஞ்சன்வைகாசிக்
காசறுதாதாவாணியிந்திரனாடியிற்சவிதாநபாவணிக்கு
நாசமில்விச்சுவான்புரட்டாசிபகனைப்பசிபருச்சனிசிர்
வீசுகார்த்திகைதொட்டாநன்மார்கழிக்குமித்திரன்றைக்குவிட்டுணுவே” எனவும் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. பகன் ஒருதேவன் என்பாரும் உளர். (௧௬)

வடதிசைக்கிறைவரைமடக்கொடிவடிவுநோக்கியிழந்தகண்
ணுடனாற்கொருநட்புமெய்தினனோதுதுச்சருமேளனு
முடல்கணைக்கருவிழியுருப்பசியுகளகொங்கைமணந்தனன்
மிடல்கொள்கண்ணனளித்தசாம்பனுங்குட்டவெம்பிணிநீங்கினான்.

(இ-ள்) வடதிசைக்கு இறை வரை மடமை கொடி வடிவு நோக்கி இழந்த கண் உடன் அரற்கு ஒரு நட்பும் எய்தினன் - வடதிசைக் கிறைவனாகிய குபேரனும் உமையம்மையின் திருவுருவத்தினழகை விரும்பப்பார்த்தலால் தானிழந்தகண்களோடு சிவபிரானுக்கு ஒருநட்பையு மடைந்தான், ஓது துச்சருமேளன் உம் கணை உடல் கருவிழி உருப்பசி உகள கொங்கை மணந்தனன் - யாவரும் புகழ்ந்துபேசுந் துச்சருமேளனென்னுமொருமுனிவனும் அம்பொடுபோர்செய்யுங் கரியகண்களையுடைய உருப்பசியினுடைய இரண்டுதனங்களையுங்கலந்தனன், மிடல் கொள் கண்ணன் அளித்த சாம்பனும் குட்ட வெம்பிணி நீங்கினான் - வலிமைமிக்க கண்ணமூர்த்திபெற்ற சாம்பனென்பவனும் குட்டமாகிய கொடிய நோயினின்றுநீங்கினான்.

சாம்பன் என்பவன் கண்ணன் தேவிமாருள் சாம்பவதியின்புத்திரன். ஊர்வசி [illegible]ப்பசியெனவந்தது வடமொழிச்சிதைவு. பிரமனுடைய தொடையிற்றோன்றினவ[illegible]ல் அப்பெயர்வந்தது. (௧௭)

நிடதமன்னியநளனயோத்தியிராமனீள்புகழ்ப்பாண்டவர்
மடனிலிங்கிவர்முத்திறத்தருமருவலாரையழித்துவென்
றிடனிழந்திடுமிறைமையெய்தினரிரியுமைம்புலவாழ்க்கையோய்
தடவுமென்மலரிட்டசித்திதருந்தடம்படிபேற்றினல்.

(இ-ள்.) இரியும் ஐம்புல வாழ்க்கையோய் - இந்திரியவாழ்வினின்று நீங்கியத நிசியே, நிடதம் மன்னிய நளன் அயோத்தி இராமன் நீள் புகழ் பாண்டவர் மடன் இல் இவர் முத்திறத்தரும் இங்கு-நிடதத்தில்வாழும்நளனும் அயோத்தியில்வாழும்ராமனும் மிக்கபுகழ்வாய்ந்த பாண்டவருமாகிய அறியாமையினின்று நீங்கிய இந்தமூவரும் இத்தி ருப்பதியில், தடவு மெல் மலர் இட்ட சித்திதரும் தடம் படி பேறினால்-பரந்த மெல் லிய தாமரைகள்நெருங்கிய இட்டசித்திதீர்த்தத்தில் நீராடியபலனால், மருவலாரை அ ழித்து வென்று இடன் இழந்திடும் இறைமை எய்தினர் - பகைவரையழித்து வென்று தமது நாட்டையும் இழந்த அரசுரிமையையு மடைந்தார்கள். (௧அ)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

தோற்றமார்வடாதுவெங்கோய்துமித்திடுந்தருமதீர்த்தம்
போற்றருங்குணாதுவிண்ணோர்புகழ்தருமருத்ததீர்த்தங்
கூற்றுறுந்தெனாதுமாறாக்குறைபுனற்காமதீர்த்தஞ்
சாற்றியகுடாதுமுத்தித்தீர்த்தமத்தடத்துளோங்கும்.

(இ-ள்.) அ தடத்துள் தோற்றம் ஆர் வடாது வெம் நோய் துமித்திடும் தருமம் தீர்த்தம்- அவ்விட்டசித்திதீர்த்தத்தின்காட்சி நிறைந்த வடபாலிலுள்ளதுறையில் கொ டிய நோயைப்போக்குந் தருமதீர்த்தமும், போற்றரும் குணாது விண்ணோர் புகழ்தரும் அருத்த தீர்த்தம் - புகழ்தற்கரிய கீழ்பாலுள்ளதுறையில் தேவர்கள்புகழு மருத்ததீர்த்த மும், கூற்று உறும் தெனாது மாறாது குறை புனல் காமதீர்த்தம்-இயமன்வசிக்குந் தென் பாலிலுள்ளதுறையில் நீங்காதொலிக்கு நீர்மயமாகிய காமதீர்த்தமும், சாற்றிய குடாது முத்திதீர்த்தம் ஓங்கும் - சொல்லப்பட்ட மேல்பாலுள்ள துறையில் முத்திதீர்த்தமும் உயர்ந்துவிளங்கும்.

வடக்குள்ளதுவடாது, குணக்குள்ளதுகுணாது, தெற்குள்ளதுதெனாது, குடக்குள்ளதுகுடாது எனவருதல் மரூஉ. அத்தீர்த்தத்திலுள்ள நான்குதுறைகளும் தருமார்த்த காமமோட்சங்களைத்தருமென இதனாற்கூறப்பட்டன. (௧௯)

நாற்பயனுதவுந்தீர்த்தநான்குடையினையதீர்த்த
மேற்புறத்திங்கடோறுஞ்சிறந்ததேயெனினுஞ்சால
மேற்படுமிடபங்கும்பம்விருச்சிகங்கடகந்தன்னிற்
பாற்படுமவற்றின்மேலாங்கார்த்திகைப்பானுவாரம்.

(இ-ள்.) நால் பயன் உதவும் தீர்த்தம் நான்கு உடைய இனைய தீர்த்தம் - அறமு தலிய நான்கு பயன்களையுந்தரும் இத்தீர்த்தமானது, ஏற்பு உற திங்கள் தோறும் சிறந் ததே எனின் உம் - அமையமாதங்கள்தோறுஞ் சிறந்ததேயாயினும், இடபம் கும்பம் வி ருச்சிகம் கடகம் தன்னில் சால மேற்படும்-வைகாசியும் மாசியுங் கார்த்திகையும் ஆடியு மாகிய இம்மாதங்களில் மிகவு மேம்பாடுடையதாம், கார்த்திகை பானுவாரம் பாற்படு ம் அவற்றில் மேலாம் - கார்த்திகைமாதத்தில் வரும் ஞாயிற்றுக்கிழமை பகுதிப்பட்ட அந்நான்கு மாதங்களிற்கு மேம்பட்டதாம்.

இடபரவியிலுங் கும்பரவி மேற்பட்டது, கும்பரவியினும் விருச்சிகரவி மேற்ப ட்டது, அதினும் கடகரவி மேற்பட்டது என்பார் முறைபிறழவைத்துத் தம்மில் என்று

து தன்னில் எனவும், கூறிய மாதங்களில் கடகரவி மேற்படினும் விருச்சிகரவியில் வந்த ஞாயிற்றுக்கிழமை மேற்பட்டது என்பார் பாற்பமெவற்றின்மேலாங் கார்த்திகைப் பானுவாரம் எனவுங் கூறினர். (உ௦)

பானுநாள்விடியற்போதினத்தடம்படிந்தோர்யாவ
ரேனுமங்கவர்களெய்தும்பேறெவரியம்பற்பாலார்
தானநீராடலோமங்கணித்தலத்தடவுக்கஞ்சத்
தேனலரிட்டசித்திதீர்த்தத்தொன்றனந்தமாயால்.

(இ-ள்.) பானுநாள் விடியல் போதில் அ தடம் படிந்தோர் யாவரேனும் அங்கு அவர்கள் எய்தும் பேறு எவர் இயம்பற்பாலார் - ஆதிவாரத்தி லுதயகாலத்தி லத்தீர்த்தத்தில் நீராடினோ ரெவராயினும் அவ்விடத்தவர்களடையும் பயன் யார்தானெடுத்துக்கூறும் பகுதியையுடையார், அ தடவு கஞ்சம் தேன் அலர் இட்டசித்தி தீர்த்தத்து தானம் நீர் ஆடல் ஓமம் கணித்தல் ஒன்று அனந்தம் ஆம் - அந்தப் பெரிய தேன்சிந்துந் தாமரைமலர் நிறைந்த இட்டசித்தி தீர்த்தக்கரையிலிருந்து பூதானமுதலியவற்றைச்செய்தலும் நீராடுதலும் ஓமஞ்செய்தலும் செபித்தலுமாகிய இவைகளைச்செய்தால் அவையொன்றுக்கொன்று அளவில்லாத பயனைத்தரும். (உக)

ஆதலினங்கண்மூழ்கியருங்கொலையுறுதமேன்மை
தீதறப்பெறுகென்றோதிமிருதசஞ்சீவனிப்பேர்
மேதகுமனுவுநல்கிச்சுக்கிரன்விடுப்பப்போந்து
கோதிலாமுனிவனோகைகூர்ந்துகாஞ்சியினைச்சேர்ந்தான்.

(இ-ள்.) ஆதலின் அங்கண் மூழ்கி அரும் கொலை உறுத மேன்மை தீது அற பெறுக என்று ஓதி - ஆதலா லத்தீர்த்தத்தில் நீராடி அடைதற்கரிய கொலையை யினியடையாத மேன்மையைக் குற்றமறப் பெறக்கடவாயென்று கூறி, மிருதசஞ்சீவனிபேர் மேதகு மனுவும் நல்கி சுக்கிரன் விடுப்ப போந்து - மிருதசஞ்சீவனியென்னும் பேர்வாய்ந்த மந்திரத்தையும் உபதேசித்துச் சுக்கிரனனுப்பச்சென்று, கோது இல்லாத முனிவன் ஓகை கூர்ந்து காஞ்சியினை சேர்ந்தான் - குற்றமில்லாத ததீசிமுனிவன் மகிழ்கூர்ந்து காஞ்சியென்னுந் திருப்பதியை யடைந்தான். (உஉ)

சேர்ந்தவனிட்டசித்திதீர்த்தநீர்படிந்துகண்ணீர்
வார்ந்திடவிட்டசித்திவரதனையருச்சித்தன்பு
கூர்ந்தனன்சின்னாள்பின்னர்க்குழப்பிறைமோலிதோன்றி
யீந்தனன்வயிரயாக்கையினிவருங்கொலையெய்தாமே.

(இ-ள்.) சேர்ந்தவன் இட்டசித்தி தீர்த்தம் நீர் படிந்து கண் நீர் வார்ந்திட இட்டசித்தி வரதனை சின்னாள் அருச்சித்து அன்பு கூர்ந்தனன் - சேர்ந்த ததீசிமுனிவன் இட்டசித்தித்தடத்தில்மூழ்கிக் கண்ணீர்சிந்த இட்டசித்திவரதனைச் சிலநாளருச்சித்து அன்புகூர்ந்தான், பின்னர் குழ பிறை மோலி தோன்றி இனி வரும் கொலை எய்தாமே வயிர யாக்கை ஈந்தனன் - பின்பு இளம்பிறையையணிந்த சடாமகுடத்தையுடைய இறைவன் காட்சிதந்து இனிவருங் கொலைசாராமல் வச்சிரசரீரத்தைத் தந்தருளினன்.

மிருதசஞ்சீவனியென்னு மந்திரத்தைச் சுக்கிரனிடத்துப்பெற்றுப் பூசித்தமையால் சிவபெருமான் அருளடைந்து இனிவருங் கொலையெய்தாமே வச்சிரயாக்கையீந்தான் என்றார். (உ௩)

அவ்வகைவரங்களெல்லாமண்ணல்பாற்பெற்றுமீண்டு
மெய்வகைத்ததீசியெய்திவேத்தவைவேந்தன்சென்னி
யெவ்வமிலிடத்தாளோச்சியுதைத்தனனிவனுக்கென்று
தெவ்வெனசசமரினேற்றமாயனைச்செயிர்த்துவென்றான்.

(இ-ள்.) அ வகை வரங்கள் எல்லாம் அண்ணல் பால் பெற்று மீண்டு மெய் வகை ததீசி வேத்து அவை எய்தி - அவ்வகையாக எல்லாவரங்களையும் இறைவனிடத்துப் பெற்றுத்திரும்பி உண்மைவாய்ந்தததீசிமுனிவன் அரசசபையையடைந்து, வேந்தன் சென்னி எவ்வம் இல் இடம் தாள் ஓச்சி உதைத்தனன் - குபனதுதலையின்மேல் குற்றமில்லாத இடக்காலைநீட்டியுதைத்தான், இவனுக்கு என்று தெவ் என்ன சமரின் ஏற்ற மாயனை செயிர்த்து வென்றான் - இவனுக்காகப் பகைபூண்டுபோரிலேற்ற திருமாலைக்கோபித்தெதிர்த்து வென்றனன்.

என்று நான்காம்வேற்றுமைச் சொல்லுருபு. வச்சிரயாக்கைபெற்றமையால் திருமாலையும் வென்றமையில் செயிர்த்துவென்றான் என்றார். (௨௪)

இடனுடைப்புரிசைசுற்றுமிட்டசித்தீசவைப்பிற்
குடதிசைமுகமாவைகுங்குழகனைவழிபட்டின்னு
நடலைதீர்ந்திட்டசித்திநண்ணினரெண்ணிலாதார்
புடவியிலதன்றனீர்மையாவரோபுகலுநீரார்.

(இ-ள்.) இடன் உடைய புரிசை சுற்றும் இட்ட சித்தீச வைப்பில் குடதிசை முகமாக வைகும் குழகனை - பரப்பமைந்த மதில்சூழ்ந்த இட்டசித்தீசமென்னுந் திருப்பதியில் மேற்றிசைமுகமாக எழுந்தருளிய இறைவனை, எண் இல்லாதார் இன்னும் வழிபட்டு நடலை தீர்ந்து இட்டசித்தி நண்ணினர் - அளவில்லாதார் இன்னும் வழிபட்டுப் பிறர்செய்யும் வஞ்சனையினின்றுநீங்கி யிட்டசித்திகளையடைந்தார்கள், புடவியில் அதன் தன் நீர்மை புகலும் நீரார் யாவர் - நிலவுலகில் அதன்றன்மையை யெடுத்துச்சொல்லுவோர்யாவர். (௨௫)

இட்டசித்தீச்சரப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அஅஅ.

## கச்சபேசப்படலம்.

கலிநிலைத்துறை.

ஓடரிக்கண்ணியாராடலும்பாடலுமோவுறாச்
சேடமையிட்டசித்தீசமேன்மையிதுசெப்பினு
மாடமைத்தோளியோர்பாகர்வாழன்னதன்றென்புடைத்
தோடவிழ்சோலைசூழ்கச்சபேசத்தியல்சொல்லுவாம்.

(இ-ள்.) அரி ஓடு கண்ணியார் ஆடலும் பாடலும் ஓவுறாத சேடு அமை இட்ட சித்தீசம் மேன்மை இது செப்பினும் - செவ்வரிபரந்தகண்களையுடைய பெண்களது ஆடலும்பாடலும்நீங்காத பெருமையமைந்த இட்டசித்தீச்சரத்தின் பெருமையைக்கூறினும், அமை ஆடு தோளி ஓர் பாகர் வாழ் அன்ன தன் தென்புடை தோடு அவிழ் சோலை சூழ் கச்சபேசத்து இயல் சொல்லுவாம் - மூங்கிலைவென்ற தோளையுடைய உமையம்மை யோர்பாகத்துவாழும் இறைவரது இட்டசித்தீச்சரத்தின் தென்பாலில் மலர் இதழவிழ்ந்த சோலைசூழ்ந்த கச்சபேசத்தின் மான்மியத்தை யெடுத்துகூறுவாம். (௧)

ஐவகைப்பூதமாலயன்முதலாயபல்சராசர
மெவ்வகையுள்ளவுமீறுசெய்திமயமாமயிலொடு
மவ்விரவாட்டயர்ந்தங்கவைமீளவுமாக்குவான்
றெவ்வடுகுறுநகைச்சிற்பரன்றிருவுளஞ்செய்தனன்.

(இ-ள்.) ஐவகை பூதம் மால் அயன் முதலாய பல் சரம் அசரம் எ வகை உள்ளவும் ஈறு செய்து - பிருதிவிமுதலாகிய ஐந்துவகைப்பட்டபூதங்களும் திருமாலும் பிரமனுமுதலாகிய பலஇயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாக எவ்வகையாய்உள்ளனவற்றையுமழித்து, இமயம் மா மயிலொடும் அ இரவு ஆட்டு அயர்ந்து அங்கு அவை மீளவும் ஆக்குவான் - உமையம்மையோடு அவ்விராப்போதில் பவுரிக்கூத்தைச்செய்து அவ்விடத்து அவற்றை மீளவும்படைக்க, தெவ் அடு குறு நகை சிற்பரன் திரு உளம் செய்தனன்-திரிபுரங்களை முறுவலித்தெரித்த புன்னகையையுடைய இறைவன் திருவுளங்கொண்டனன்.

சம்மாரகாலம் இரவிலாதலால் அவ்விரவு எனவும், யாவையுமொடுக்கியபின் முன்புபோலத் தருதற்பொருட்டுத் திருக்கூத்துப்புரிந்தனன் என்பார் இமயமாமலையொடும் ஆட்டயர்ந்தங் கவைமீளவுமாக்குவா னெனவுங்கூறினார். (௨)

உலகெலாமழிவுறுங்காலையுந்தன்னுடைக்காவலிற்
குலவுசீர்க்காஞ்சியிற்சோதிலிங்கத்துருக்கொண்டெழூந்
திலகுதன்சத்தியான்முன்புபோல்யாவையுநல்கினு
னலகிலாநாமரூபங்களுமாக்கினுனண்ணலே.

(இ ள்.) உலகு எல்லாம் அழிவுறும் காலையும் தன்னுடைய காவலில் சீர் குலவு காஞ்சியில் அண்ணல் சோதி லிங்கத்து உரு கொண்டு எழுந்து - எல்லாவுலகங்களுமழியுங்காலத்தும அழியாது தனதுகாவலிற் சிறப்போடுவிளங்குங் காஞ்சித்திருப்பதியிலிறைவன் சோதிலிங்கத் திருவுருவங்கொண்டெழுந்து, இலகு தன் சத்தியால் முன்பு போல் யாவையும் நல்கினுன் அலகு இல்லாத நாம ரூபங்களும் ஆக்கினுன் - விளங்கா நின்ற தனது கிரியாசத்தியால் இறுதிக்காலத்தின் முன்புபோல அண்டங்கள் யாவையும்படைத்து அவற்றில் வரையறைப்படாத இயங்கியற்பொருள்களையும் நிலையியற்பொருளையுந் தந்தருளினுன்.

யாவையுநல்கினுன் என முன்னர்க்கூறி அலகிலா நாமரூபங்களுமாக்கினுன் எனப் பின்னர்க்கூறுதலால் யாவையும் என்பதற்கு அண்டங்கள் எனவும், நாமரூபங்களெனக்கூறுதலால் அயன்முதலியயோர்களையும் எனக்கூறினும். (௩)

போற்றுசீரவ்விலிங்கத்தினைப்போற்றினோர்யாவரு
மாற்றரும்வீடுபேறெய்துவர்நான்முகன்வாணியோ
டாற்றலானுயிடைமாதவமாற்றியவ்வங்கண
னூற்றமாரருளினுற்படைத்திடுந்தலைமைபெற்றோங்கினுன்.

(இ-ள்.) போற்று சீர் அ இலிங்கத்தினை போற்றினோர்யாவரும் மாற்றரும் வீடுபேறு எய்துவர் - திருமால்முதலிய யாவரும்போற்றுஞ் சிறப்புவாய்ந்த அச்சோதிலிங்கத்தைத்துதித்தோர் யாவரும் நீங்குதற்கரிய முத்திப்பயனையடைவார்கள், நான்முகன் வாணியோடு ஆற்றலான் ஆயிடை மாதவம் ஆற்றி அ அங்கணன ஊற்றம் ஆர் அருளினுல் படைத்திடும் தலைமை பெற்று ஓங்கினுன் - பிரமன் கலைமகளோடு வலிமையால்

அவ்விடத்துப் பெரியதவத்தைச்செய்து அவ்விறைவனுடைய ஊற்றமார்ந்த திருவருளாற்சிருட்டிக்குந் தலைமையையடைந்து சிறப்புற்றான்.

என்று மாறுதலின்மைதோன்ற ஊற்றமாரருள் என்றார். (௪)

முன்னொருபிரமகற்பத்திடைநாரணன்மூரிநீர்
மன்னுமந்தரமலையாமையாய்த்தாங்கிவார்கடல்கடைந்
தின்னமுதஞ்சுரர்க்கீந்தபின்வெஞ்செருக்கெய்தியாங்
கன்னமுந்நீர்முழுதுழக்கினானுலகெலாமஞ்சவே.

(இ-ள்.) முன் ஒரு பிரமகற்பத்து இடை நாரணன் மூரி நீர் மன்னும் மந்தரம் மலை ஆமையாய் தாங்கி வார் கடல் கடைந்து - முன்பொருபிரமகற்பத்தில் திருமால் பெரியகடலில் மத்தாகநாட்டிய மந்தரமலையைக் கூர்மவடிவங்கொண்டுதாங்கி நீண்ட அக்கடலைக்கடைந்து, இன் அமுதம் சுரர்க்கு ஈந்த பின் வெம் செருக்கு எய்தி ஆங்கு அன்ன முந்நீர் முழுது உலகு எல்லாம் அஞ்ச உழக்கினான் - இனிய அமிர்தத்தைத் தேவர்களுக்குக்கொடுத்தபின் கொடிய இறுமாப்பையடைந்து அவ்விடத்து அத்தன்மையையுடைய கடல்முற்றும் உலகமெல்லாம் அஞ்சக்கலக்கினான். (௫)

அச்சநீத்தாருயிருய்வகையருள்சுரந்தாங்குற்றிக்
கச்சபத்தின்னுயிர்செற்றதனோட்டினைக்கதுமென
நச்சியவெண்டலைமாலிகைநடுவுறக்கொண்டனன்
பச்சிளங்கிள்ளைபால்வீற்றிருந்தருளியபண்ணவன்.

(இ-ள்.) பச்சிளங் கிள்ளை பால் வீற்றிருந்தருளிய பண்ணவன் - பசியஇளங்கிளிபோன்ற உமையம்மை யிடப்பாலாக நிகரின்றியெழுந்தருளிய இறைவன், ஆர் உயிர் அச்சம் நீத்து உய்வகை அருள் சுரந்து ஆங்கு உற்று கச்சபத்தின் இன் உயிர் செற்று - அரியஉயிர்கள் அச்சம்நீங்கிப் பிழைக்கும்வண்ணந் திருவருள்சுரந்து அவ்விடத்துச்சென்று திருமாலின்வடிவாகிய கூர்மத்தின் இனியஉயிரைவாங்கி, அதன் ஓட்டினை கதும் என்ன நச்சி வெண் தலை மாலிகை நடு உற கொண்டனன் - அக்கூர்மத்தினோட்டினை விரைந்து விரும்பத்தக்க உட்கிய தலைமாலையினடுவே மதாணியாகப் பொருந்தக்கொண்டனன்.

அயன்முதலிய பல்லுயிர்களும் உய்யும்வண்ணங் கொண்டருளிய சகளத்திருவுருவென்பது தோன்றப் பச்சிளங் கிள்ளைபால் வீற்றிருந்தருளிய பண்ணவனெனக் கூறினார். கூர்மத்தை யொறுத்ததை முன்னர்க்காண்க. (௬)

இப்பெரும்பிழைதவிர்ந்துய்யுமாநாரணனெம்பிரான்
வைப்பெனுங்காஞ்சியிற்சோதிலிங்கத்தினைவழிபடூஉ
மெய்ப்படுமன்பினாலிரந்திரந்தேத்தலும்விடைமிசைத்
துப்புறழ்செஞ்சடைத்தோன்றலங்கவனெதிர்தோன்றினான்.

(இ-ள்.) நாரணன் இ பெரும் பிழை தவிர்ந்து உய்யும் ஆறு எம்பிரான் வைப்பு என்னும் காஞ்சியில் சோதி லிங்கத்தினை வழிபட்டு மெய் படும் அன்பினால் இரந்து இரந்து ஏத்தலும்-திருமால் இந்தப்பெரிய குற்றத்தினின்று நீங்கிப்பிழைக்கும்வண்ணம் எமதிறைவன் தானமாகிய காஞ்சியென்னுந்திருப்பதியிலுள்ள சோதிமயமாயெழுந்தருளிய இலிங்கத்தைவழிபட்டு மெய்ம்மைவாய்ந்த அன்பாலிரந்து இரந்துதுதிக்க, விடை மிசை துப்பு உறழ் செம் சடை தோன்றல் அங்கு அவன் எதிர் தோன்றினான் - இடபவூர்தியி

ன்மேல் பவளத்தையொத்த செவந்த சடாமுடியையுடைய இறைவன் அத்திருப்பதி யில் அத்திருமாலுக்கெதிரே காட்சிதந்தருளினன்.

ஆன்மாக்களுக்கு நடுக்கம் விளைத்தது சிவபிரான் ஆணைவழி நில்லாமையால் ஆதலின் இப்பெரும்பிழை தவிர்ந்து என்றார். இரந்திரந்து பன்மைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (எ)

காண்டலுங்கண்கணீர்வார்தரக்கரையறுகாதலிற்
பூண்டபேரன்பினல்வீழ்ந்துவீழ்ந்திறைஞ்சினன்போற்றின
ளுண்டகாயாருயிர்த்தலைவனேயங்கணவடியனேன்
வேண்டுவயாவையுந்தந்தருளென்றெதிர்வேண்டினன்.

(இ-ள்.) காண்டலும் கண்கள் நீர் வார்தர கரை அறு காதலில் பூண்ட பேர் அன்பினல் வீழ்ந்து வீழ்ந்து இறைஞ்சினன் போற்றினன் - தரிசித்த அப்பொழுதே கண்களினின்றும் நீர்சிந்த அளவிறந்த ஆசையாலு மேற்கொண்ட பெரிய அன்பினலும் நிலத்தின்மேல் வீழ்ந்து வீழ்ந்து வணங்கித் துதித்தான், ஆண்ட காய் ஆர் உயிர் தலைவனே அங்கண அடியனேன் வேண்டுவ யாவையும் தந்தருள் என்று எதிர் வேண்டினன் - ஆண்தன்மையையுடையாய் பெறுதற்கரிய எனது உயிர்த்தலைவனே அங்கணனே அடியேன் வேண்டும் வரங்கள் யாவையுந் தந்தருளாயென்று எதிர்நின்று குறையிரந்தான்.

காரியமுள்ளவிடத்துக் காரணமுண்மையால் கரையறுகாதலின் என்றமையாது பூண்டபேரன்பினல் எனவும், சிவபெருமான் பும்ஸத்துவமுடைமையோனதலால் ஆண்டகாய் எனவும், ஆண்டகையுடைமையால் யோனியாகிய தனக்குப் பிராணநாயகனதலால் ஆருயிர்த்தலைவனேயெனவும் கூறினன். (அ)

மழுவலானிணையடிப்பொதுவறுபத்தியுமால்பதத்
தழிவிலாவிறைமையுமவ்விலிங்கந்தனக்கன்றுதொட்
டொழிவருங்கச்சபேசத்திருநாமமுமும்பரார்
தொழுதெழவாங்கரனுமையொடுமினிதமர்தோற்றமும்.

(இ-ள்.) மால் - திருமால், மழுவலான் இணை அடி பொது அறு பத்தியும் பதத்து அழிவு இல்லாத இறைமையும் - மழுவேந்திய இறைவனது இரண்டு திருவடிகட்கும் உரிய பத்திமையும் வைகுந்தத்தில் நிலைபேருயுள்ள இறைமைத்தன்மையும், அ இலிங்கம் தனக்கு அன்று தொட்டு ஒழிவு அரும் கச்சபேசம் திருநாமமும் - அச்சோதிலிங்கந் தனக்கு அக்காலந்தொட்டு ஒழிதலில்லாத கச்சபேசமென்னுந் திருநாமமும், உம்பரார் தொழுது எழ ஆங்கு அரன் உமை ஒடும் இனிது அமர் தோற்றமும் - தேவர்கள் வணங்கியெழ அவ்விடத்து இறைவன் உமையம்மையோடினிதாக எழுந்தருளுங் காட்சியும்.

தனக்குமேற் சிவத்தையன்றி மற்றொரு பொருளின்மையால் பொதுவறுபத்தியும் எனவும், இந்திரன்முதலியோர் சூரபன்மன்முதலிய அசுரர்களால் தத்தம் பதங்களிலரசியலிழந்து நிற்றல்போலாது என்று நிலைபெற்ற இறைமைத்தன்மையை நிலைபெறவேண்டுதலால் பதத்தழிவிலாவிறைமையும் எனவும், தன்னாற் பூசிக்கப்பட்டதால் அன்று தொட்டு ஒழிவருங் கச்சபேசத்திருநாமமும் எனவும், முன்பு சோதிலிங்கமெனத் திருநாமமுடைமையால் அவ்விலிங்கந் தனக்கு எனவும், தனக்கு உமையம்மையோடருளிய காட்சியின் பொலிவுபோல இங்குத்தரிசிக்கும் ஆன்மகோடிகளுக்குந் தந்தருள விரும்பின

மையால் உம்பரார் தொழுதெழவாங்கரனுமையொடு மினிதமர்தோற்றமும் என வேண்டினன் என்றார். (க)

அத்தலந்திகழவிமுத்தமாந்தலத்தினுமதிகமா
வைத்திடுந்தலைமையும்வரமெனக்கொண்டனன்வள்ளலுஞ்
சித்தநீடுவகையினங்கவைமுழுவதுந்தேத்துழாய்ப்
பத்தனுக்கருள்புரிந்தாயிடைமறைந்தனன்பரையொடும்.

(இ-ள்.) அ தலம் திகழ் அவிமுத்தம் ஆம் தலத்தினும் அதிகம் ஆக வைத்திடும் தலைமையும் வரம் என்ன கொண்டனன் - அந்தக் காஞ்சித்திருப்பதி விளங்குங் காசித் திருப்பதியினும் அதிகமாக நிலைபெற்றோங்குந் தலைமையுமாகிய இவைதனக்கு வரமாகத் திருமால் கொண்டனன், வள்ளலும் சித்தம் நீடு உவகையின் அங்கு அவை முழுவதும் தேம் துழாய் பத்தனுக்கு அருள் புரிந்து ஆயிடை பரையொடும் மறைந்தனன் - அவ்விறைவனுந் திருவுளத்தில் மிக்க மகிழ்ச்சியால் அவ்விடத்து அவ்வாமுற்றும் தேன்சிந்துந் துழாய்மாலையணிந்த அத்திருமாலுக்கு அருள்செய்து அவ்வுமையம்மையோடு மறைந்தருளினன்.

எடுத்த பிறப்பிலேயே முத்தியையருளுவது காசித்திருப்பதியென்பதுதோன்ற திகழவிமுத்தமாம் எனவும், தனது செருக்கால் விளைந்த பாவத்தை யொழித்தருளினமைபோலத் தன்னை நினைத்தவளவில் புத்திபூர்வமாக ஆன்மகோடிகள் செய்த பாவத்தைப்போக்கி முத்தியருளவேண்டினனென்பதுதோன்ற அத்தலந்திகழவிமுத்தமாந்தலத்தினுமதிகமா - வைத்திடுந்தலைமையும்வரமெனக்கொண்டனன் எனவும், இவற்றிலொன்றுங் குறைபடாதருளினன் என்பதுதோன்றச் சித்தநீடுவகையினருளினன் எனவுங்கூறினார்.

காசித்திருப்பதியினும் காஞ்சித்திருப்பதி அதிகம் என்பதை—

"ஆயிடைநாம்வதிந்துறையுந்திருப்பதிகள்பலகோடியவற்றுண்மேலா
மாயிரத்தெட்டவற்றதிகமொருநூற்றெட்டவற்றதிகமறுபத்தெட்டா
மாயினவற்றுயர்காசிகாஞ்சியெனுமிரண்டதிகமறிவான்மிக்கோ
ராயினவையிரண்டுள்ளுஞ்சாலநமக்கினியநகரணிநீர்க்காஞ்சி" என இப்புராணத்தில் வருதல் காண்க. (௬௦)

அன்றுதொட்டென்றுமக்காஞ்சியினீங்கலாதமர்ந்திடுங்
கொன்றைவார்சடையனைக்கச்சபேசன்றனைக்கும்பிடச்
சென்றவர்கண்டவர்கருதினர்யாவருந்தீதுதீர்ந்
தொன்றியொன்றுநிலைமாறிலாமுத்திபெற்றுய்வரே.

(இ-ள்.) அன்றுதொட்டு என்றும் அ காஞ்சியின் நீங்கலாது அமர்ந்திடும் கொன்றைவார் சடையனை கச்சபேசன்றனை கும்பிட சென்றவர் - அக்காலந்தொட்டு எக்காலத்தும் அந்தக் காஞ்சித்திருப்பதியினின்று நீங்காதெழுந்தருளிய கொன்றைமாலையையணிந்த நீண்ட சடாமுடியையுடைய கச்சபேசனைக் கும்பிடச்சென்றோரும், கண்டவர் கருதினர் யாவரும் தீது தீர்ந்து ஒன்றி ஒன்று நிலைமாறிலாத முத்தி பெற்று உய்வர்-தரிசித்தவர்களுஞ் சிந்தித்தவர்களும் ஆகிய எவர்களும் ஆணவமலத்தினின்றும் நீங்கிச் சிவத்தொடுகலந்து அநந்நியமாய் நிற்குஞ் சீவன்முத்த நிலையினின்று பின்னர் மாறுதலில்லாத பரமுத்தியைப் பெற்றுய்வார்கள்.

கலந்து அநநியமாய் நிற்றலாவது பேரறிவாகிய சிவமும் சிற்றறிவாகிய தாமும் சூரியவொளியுங் கண்ணொளியும்போல அத்துவிதமாய் நின்று அங்குத் தாமுளராதலை யுணராது சிவமொன்றனையே யுணர்ந்து நிற்றல்.

"சங்கரனே-டொக்கவுறைந்திவரவனையவனிவரைவிடாதே
உடந்தையாய்ச்சிவன்றானேற்றமொன்றுமேகாண்பர்" எனச் சிவஞானசித்தியாரில் வருதல் காண்க.

இந்நூலாசிரியர் வடமொழியின்படியே தமிழில் மொழிபெயர்த்தருளினமையால் வடமொழியில் "கச்சபேசர் பிரணவசொரூபமாகிய முருக்கமரத்தினிழற்கீழ் எழுந்தருளியிருக்கின்றனர்" என்றிருக்கிறது, இது தமிழில் மொழிபெயர்த்திருக்கவேண்டும், இச்செய்யுள் திருவாவடுதுறையிலிருந்து எனக்குவந்த பிரதியினும் தொண்டைநாட்டில் கிடைத்த பிரதிகளினும் இன்மையால் இடையில் விடுபட்டதுபோலக் காணுகிறது. (௧௧)

துர்க்கையுஞ்சாத்தனுமிரவியும்வயிரவத்தோன்றலு
நற்கரிமுகனுடனைவருங்கச்சபநாயகன்
பொற்கமலப்பதம்பூசனையாற்றியங்குடனமர்ந்
தொற்கமில்கணங்களோடப்புரிக்காவல்பூண்டுறுவரால்.

(இ-ள்.) துர்க்கையும் சாத்தனும் இரவியும் வயிரவத்தோன்றலும் நல் கரிமுகன் உடன் ஐவரும் - துர்க்கையுஞ் சாத்தனுஞ் சூரியனும் வயிரவக்கடவுளும் நல்ல ஆனைமுகத்தையுடைய மூத்தபிள்ளையாருமாகிய ஐவரும், கச்சப நாயகன் பொன் கமலம் பதம் பூசனை ஆற்றி அங்கு உடன் அமர்ந்து ஒற்கம் இல் கணங்களோடு அ புரி காவல் பூண்டு உறுவர் - கச்சபேசரது பொன்னிறம்வாய்ந்த திருவடித்தாமரைக்குப் பூசனைசெய்து அங்கு ஒருசேரவசித்துக் குறைவில்லாத சிவகணங்களோடு அத்திருநகர்க்குக் காவல்பூண்டிருப்பார்கள்.

துர்க்கைமுதலிய ஐவரும் கச்சிக்காவல்பூண்டொழுகற்பொருட்டே சிவபூசனை செய்தார் என்பார் பொற்கமலப்பதம் பூசனையாற்றி யப்புரிக்காவல் பூண்டுறுவரால் என்றார். உடன் எண்ணிடைச்சொல். (௧௨)

அந்தணீர்கச்சபேசக்குடவைப்பினிலாயிதழ்க்
கந்தமாமலர்மிசைச்செல்விதன்கணவனார்போற்றிசெய்
துய்ந்தசத்தியமொழிவிநாயகனுளனவற்போற்றினா
ரெந்தவூறுந்தவிர்ந்திம்மையேவேட்டவையெய்துவார்.

(இ-ள்.) அந்தணீர் கச்சபேசம் குடவைப்பினில் ஆய் இதழ் கந்தம் மாமலர்மிசை செல்விதன் கணவனார் போற்றிசெய்து உய்ந்த சத்தியமொழி விநாயகன் உளன்-முனிவர்களே கச்சபேசத்தின் மேற்றிசையின் ஆராய்ந்த இதழமைந்த வாசமிக்க பெருமை வாய்ந்த தாமரைமலரிலெழுந்தருளிய இலக்குமியின் கணவனாகிய திருமால் வணங்கிப் பிழைத்த சத்தியவசன விநாயகக்கடவுள் எழுந்தருளியிருக்கின்றனர், அவன் போற்றினார் எந்த ஊறும் தவிர்ந்து இம்மையே வேட்டவை எய்துவார் - அக்கடவுளை வணங்கினோர் எந்த இடையூற்றினின்றும் நீங்கி யிப்பிறப்பிலேயே விரும்பினவற்றை யடைவார்கள். (௧௩)

கச்சபேசப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௯௦௧.

# சகோதரதீர்த்தப்படலம்.

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

வெள்ளிக்குப்பாயம்போர்த்தெனப்பொதிந்தவெண்டிருநீற்றொளிக்கதிர்க
ளள்ளிக்கொள்வனையமேனியீர்கச்சபாலயமறைந்தனமலநோய்
தள்ளிப்பேறுதவுமந்தலக்குடபாற்சகோதரதீர்த்தநீர்க்கரையிற் [வாம்.
புள்ளித்தோலாடைபுனைந்தநம்பெருமான்பொலிவுறு மிருக்கைகண்மொழி

(இ-ள்) வெள்ளி குப்பாயம் போர்த்தால் என்ன பொதிந்த வெள் திரு நீறு ஒளி கதிர்கள் அள்ளி கொள்வனைய மேனியீர் கச்சபாலயம் அறைந்தனம் - வெள்ளியாலமைந்த சட்டையைப்போர்த்தாற்போல நெருங்கிய வெள்ளிய திருநீற்றினொளிகள் அள்ளிக்கொள்ளும்படி அமைந்தமேனியையுடையீர் கச்சபாலயமென்னுந் திருப்பதியின்மேன்மையைக்கூறினோம், மலம் நோய் தள்ளி பேறு உதவும் அ தலம் குடபால் சகோதர தீர்த்தம் நீர் கரையில் புள்ளி தோல் ஆடை புனைந்த நம்பெருமான் பொலிவுறும் இருக்கைகள் மொழிவாம் - ஆணவமலநோயைநீக்கி முத்தியையடைவோர்க்கருளும் அக்கச்சபாலயத்தின்மேற்றிசையிலுள்ள சகோதரதீர்த்தக்கரையில் புள்ளிவாய்ந்த புலித்தோலாடையையுடுத்த நமதிறைவன் எழுந்தருளியிருக்குந்திருப்பதிகளை யெடுத்துக்கூறுவாம்.

நீற்றொளியின் மிகுதியைக்கூறுவார் அள்ளிக்கொள்வனையவென்றார். உடம்படுமெய்யல்லாதவகரம் "விண்வத்துக்கொட்கும்" என்றாற்போலவந்தது. (க)

மன்னுமெய்க்கிளவிக்கரிமுகன்றென்பான்மாண்டகன்னீசனைவழுத்திக்
கன்னியோர்பாகனருளினான்மாண்டகன்னிமாமுனிவரனென்பான்
மின்னிடைக்கடவுண்மடந்தையரைவர்வீங்கிளவனமுலைதிளைத்துப்
பொன்னுலகிடத்தினுகர்பெரும்போகம்புவிமிசையிருந்தவாறுகர்ந்தான்.

(இ ள்.) மன்னும் மெய்கிளவி கரிமுகன் தென்பால் மாண்ட கன்னீசனை மாண்ட கன்னி மாமுனி வரனென்பான் வழுத்தி கன்னி ஓர்பாகன் அருளினால் - நிலைபெற்ற சத்தியவிநாயகக்கடவுளின் தென்பாலிலெழுந்தருளிய மாண்டகன்னீசரை மாண்டகன்னி முனிசிரேஷ்டன் துதித்து உமையம்மையை யோர்பாகத்திலுள்ள இறைவனது திருவருளால், மின் இடை கடவுள் மடந்தையர் ஐவர் வீங்கு இள வனம் முலை திளைத்து - மின்னல்போன்ற இடையையுடைய அரம்பையரைவரை அவரது பருத்த இளமையுஞ் சந்தனக்கோலமுமணிந்த தனபோகத்தை யிடையறாது நுகர்ந்து, பொன் உலகு இடத்தின் நுகர் பெரும் போகம் புவி மிசை இருந்த ஆறு நுகர்ந்தான் - பொன்னுலகாகிய போகபூமியில் நுகரும் பெரிய போகத்தை நிலவுலகின்மேலிருந்தபடி யனுபவித்தனன்.

மாண்டகன்னி மண்ட என்னும் வடசொல்லின் தாது அடியாகவந்தமையால் அலங்காரமான காதையுடையவன் என்பது பொருள். அவனால் வழிபட்ட இறைவராதலால் சிவபெருமானார்க்கு மாண்டகன்னீசரொன்னுந் திருநாமம் வந்தது. மாண்டுகன்னியென வந்ததுபோலச் சிற்சில இடங்களில்வந்த வழக்களை யுணர்ந்து திருத்தாது பெறுவார் என்பதைப்பெரும் பிழைபட்டதாகக்கருதிப்பெறுவர் எனத் திருத்தியதுபோல இன்னோரன்னவற்றைத் திருத்தியது பெரும்புலமை வருமெனக் கருதியதுபோலும். ()

மதமலமறுக்குஞ்சகோதரத்தடநீர்வரைப்பிடைவளாகமொன்றியற்றி
யதனிடையினிதுவீற்றிருந்தரம்பையர்கலாரிளமுலைப்போகஞ்

சதமகன்சமழ்ப்பநுகர்ந்தனனெடுநாள்கடைமுறைமுத்தியிற்சார்ந்தான்
சிதரரித்தடங்கணையரம்பையர்தந்தீர்த்தமென்றுரைப்பதந்தடமே.

(இ-ள்.) மதம் மலம் அறுக்கும் சகோதரத் தடம் நீர் வரைப்பு இடை வளாகம் ஒன்று இயற்றி-வலிய ஆணவமலத்தை யறுக்குஞ் சகோதரதீர்த்தத்துள் மாளிகையொன்றமைத்து, அதன் இடை இனிது வீற்றிருந்து அரம்பை அ நலார் இளமுலை போகம் சதமகன் சமழ்ப்ப நெடுநாள் நுகர்ந்தனன்-அம்மாளிகையினிடத்து இனிதாக வீற்றிருந்து அவ்வரம்பையரது இளமைவாய்ந்த தனபோகத்தை இந்திரனும் நாணங்கூர நெடுநாள் நுகர்ந்தனன், கடைமுறை முத்தியில் சார்ந்தான் - இறுதியில் வாமதேவமுனிவர் அநுக்கிரகத்தால் முத்தியையடைந்தான், அ தடம் அரி சிதர் தட கண் ஐயரம்பையர் தம் தீர்த்தம் என்று உரைப்பது-அந்தத்தீர்த்தம் செவ்வரிபரந்த பெரிய கண்களையுடைய ஐயரம்பையர் தீர்த்தமென்று கூறப்படும்.

தனது தவப்பலத்தினால் அத்தீர்த்தத்துள் ஒருமாளிகையையமைத்தனனென்பார் நீர்வரைப்பிடைவளாகமொன்றியற்றியெனவும், நெடுநாள் அரம்பையர் போகநுகர்ந்து உவர்ப்புத்தோன்றச் சிவபிரானை முன்னர் வழிபட்ட பேற்றால் வாமதேவமுனிவர் அநுக்கிரகம்பெற்று முத்தியையடைந்தான்என்பார் கடைமுறை முத்தியிற்சார்ந்தான் எனவுங் கூறினார். இத்தீர்த்தம் வடமொழியில் பஞ்சாப்ஸரசரசு என வழங்கப்படும்.(ரு)

வரிவிழிசேப்பக்குடமுலைமதர்ப்பவால்வளைகறங்கவண்டிமிருந்
தெரிமலர்க்கூழைத்தையலார்குடையுந்தெண்புனற்றடமதன்குலைமே
லெரியலர்குடங்கைமாண்டகன்னீசனினிதமரிருக்கையின்குடசா
ரரிலறுத்தருள்வன்னீசமொன்றுண்டாலதுவருங்காரணங்கேண்மின்.

(இ-ள்.) வரி விழி சேப்ப குடம் முலை மதர்ப்ப வால்வளை கறங்க வண்டு இமிரும் தெரிமலர் கூழை தையலார் குடையும் தெண் புனல் தடம் அதன்குலைமேல் - வரியமைந்த கண்கள் செவக்கவும் குடம்போன்ற முலைகள் மதர்க்கவும் வெள்ளிய வளையல்கள் ஒலிக்கவும் வண்டுகளொலிக்கு மாராய்ந்த மலரையணிந்த கூந்தலையுடைய ஐயரம்பையர்கள் நீராடுந் தெள்ளிய நீர்மயமாகிய அத்தீர்த்தக்கரைமேல், எரி அலர் குடங்கை மாண்ட கன்னீசன் இனிது அமர் இருக்கையின் குடசார் - யாகாக்கினியையேந்திய அகங்கையையுடைய மாண்டகன்னீசரினிதாக எழுந்தருளுந் திருக்கோயிலின் மேல்பால், அரில் அறுத்தருள் வன்னீசம் ஒன்று உண்டு அதுவரும் காரணம் கேண்மின் - அடியவர் மலக்குற்றத்தை யொழித்தருளும் வன்னீசமென்னுந் திருப்பதி யொன்றுண்டு அத்தலம்வந்த காரணங் கேளுங்கள்.

தேவதாருவநமுனிவர் கொல்ல ஏவிய யாகாக்கினியைத் தான் அந்தணனாதலால் அகங்கையில் ஏந்தினன் என்பார் எரியலர் குடங்கை என்றார்.

"வன்னியந்தேவுமுட்கவந்திடுகனலையார்க்கு
முன்னவனொருகையேந்திமுயலகன்றன்னைமெல்ல" எனவும்,

அந்தணனாதலை—

"அந்தணர்க்காதியீசனேனையோர்க்கரியேவேதா
விந்திரனென்றுவேதமியம்பியமறையோர்தங்கண்
முந்தையின்முதலைநீத்துமுறையகன்றொழுகல்பெற்ற
தந்தையைவிலக்கிவேறுதேடுவான்றன்மையன்றே" எனவும் கந்தபுராணத்தில் வருதல் காண்க. (சா)



B. சகோதரதீர்த்தப்படலம். வன்னீசர்.

மூதழற்கடவுடன்னுடன்பிறந்தமுன்னவர்மும்மையருள்ளார்
பேதுறுமதுகைமூவரும்விண்ணோர்பெறுமவிசுமக்கலாற்றுது
மேதகுமாவியிறந்தனரதனைவிரிதழற்பண்ணவனோக்கி
யாதினிப்புரிவலெனக்குமிவ்விடும்பையெய்துமேயென்றுளமழுங்கி.

(இ-ள்.) முது அழல் கடவுள் தன்னுடன் பிறந்த முன்னவர் மும்மையர் உள்ளார்-பெரிய அக்கினிக்கடவுளோடுபிறந்த முன்னோர் மூன்றுபேருள்ளார், பேது உறுத மதுகை மூவரும் விண்ணோர் பெறும் அவி சுமக்கல் ஆற்றுது மேதகும் ஆவி இறந்தனர் - பிறர்வலிமைக்குமயங்காத வன்மையையுடைய அம்மூவருந் தேவர்கள்பெறும் அவிப்பாகத்தைத்தாங்க இயலாது மேன்மைவாய்ந்த தமதுபிராணனை விட்டார்கள், அதனை விரி தழல் பண்ணவன் நோக்கி இனி யாது புரிவல் எனக்கும் இ இடும்பை எய்துமே என்று உளம் மழுங்கி - அவரிறத்தலை அக்கினிதேவன் பார்த்து இனி என்ன செய்வேன் எனக்கும் இத்துன்பம் வருமேயென்று மனம் வருந்தி.

முன்னவர் மூவர் என்றது காருகபத்தியம், தக்கணாக்கினியம், ஆகவனீயம்என்னும் யாகாக்கினிமூன்றையும். அக்கினிக்கு அவவியவாகனன் எனப்பெயராதலால் விண்ணோர் பெறும அவிசுமக்கலாற்றுது என்றார். அவ்வியம் தேவருணவு. கவ்வியம் பிதிர்க்களுணவு. (ரு)

மகோததியனையவையரம்பையர்தம்வாவியினுள்ளுறக்கரந்து
சகோதரர்தம்மையிழந்தவென்றனக்குச்சகோதரநீதடம்புனலே
யுகாதெனைப்புரத்தியென்றுரைத்தங்கணுறைந்தனனன்றுதொட்டளிகண்
முகேரெனப்பாயுமலர்த்தடமதற்குமொழிபெயர்சகோதரதீர்த்தம்.

(இ-ள்.) ஐ யரம்பையர் தம் மகோததி அனைய வாவியினின் உள் உற கரந்து சகோதரர் தம்மை இழந்த என்றனக்கு - ஐயரம்பையரது பெருங்கடலையொத்த தடாகத்தினுள்ளே பொருந்தமறைந்து சகோதரரையிழந்த எனக்கு, தடம் புனலே நீசகோதரம் என்னை உகாது புரத்தி என்று உரைத்து அங்கண் உறைந்தனன்-பரந்த தீர்த்தமே நீ சகோதரம் என்னைவருந்தாது பாதுகாப்பாயென்றுகூறி அவ்விடத்திருந்தனன், அன்று தொட்டு அளிகள் முகேரென பாயும் மலர் தடம் அதற்கு மொழி பெயர் சகோதரதீர்த்தம் - அக்காலந்தொட்டு வண்டுகள் முகேரென்று மொய்த்துப்பரவும் மலர்நெருங்கின அத்தடத்திற்குக் கூறும்பெயர் சகோதரதீர்த்தம்.

முகேரென மொய்த்தலின்கணிகழு மொலிக்குறிப்பு. சகோதரர் சகவுதரர் என நிற்றலால் கூடப்பிறந்தவரென்னும் பொருட்டு. மகா உததி மகோததி எனவந்தது வடமொழிப்புணர்ச்சி. தம்மைச்சரணமடைந்தவர்க்கு அபயந்தருவோர் தமதுவருத்தத்தை நோக்காதிருத்தலை முன்னர்வேண்டிக்கோடல் கடனாதலால் உகாதெனைப்புரத்தியென்றான் என்றார். (சு)

எரிதழற்புத்தேளன்னணமுறையவிமையவரெங்கணுந்துருவிப்
பெரிதிளைப்பெய்தியாண்டுவந்துறலும்பெருந்தடத்துறையுமினவர்க்குத்
தெரிதரவியம்பிற்றுகவெங்கனலோன்செயிர்த்ததடைக்கலம்புகுந்தேனைப்
பரிவுறக்காட்டிக்கொடுத்தநீர்தூண்டிற்படுகொலையுறுகெனச்சபித்து.

(இ-ள்.) எரி தழல் புத்தேள் அன்னணம் உறைய இமையவர் எங்கணும் துருவி பெரிது இளைப்பு எய்தி ஆண்டு வந்துறலும் - எரியும் அழற்கடவுள் அவ்வாறுமறைந்து வசிக்கத் தேவர்களெவ்விடத்துந்தேடி மிகவும் இளைப்படைந்து அவ்விடத்துவர, பெ

ருந் தடத்து உறையும் மீன் அவர்க்கு தெரிதர இயம்பிற்றாக - பெரிய அவ்வரம்பை யர் தீர்த்தத்தில்வசிக்குமீன்கள் அவர்களுக்கு விளங்கக்கூற, வெம் கனலோன் செயிர்த்து அடைக்கலம் புகுந்தேனை பரிவுற காட்டி கொடுத்த நீர் தூண்டில் படு கொலை உறுக என்ன சபித்து - அவ்வழற்கடவுள்கோபித்து அடைக்கலம்புகுந்த என்னை இங்கு வருந்தக்காட்டிக்கொடுத்தநீங்கள் தூண்டிலிலகப்படுங்கொலையை யடையக்கடவீர்க ளென்றுசபித்து.

இயம்பிற்றுஎன்னும் வினைமுற்று வினையெச்சப்பொருளில்வரும் ஆகவென்னும் இடைச்சொல்லையடுத்து வினையெச்சப்பொருள்மேல் நின்றது. (எ)

மின்னென வெளிக்கொண்டிரந்துநின்றழைக்கும் விண்ணவர் தங்களை நோக்
முன்னுறப்போமின் வருவலென்றியம்பி முளரிநீர்த்தடமதன் கரையின் [கி
மன்னுவன்னீசவள்ளலையிருத்திமரபுளியருச்சனையாற்றி
யன்னவனருளாற்பெற்றனனிமையோரவியெலாஞ்சுமந்திடுமாற்றல்.

(இ-ள்.) மின் என்ன வெளி கொண்டு இரந்து நின்று அழைக்கும் விண்ணவர் தங்களை நோக்கி முன் உற போமின் வருவல் என்று இயம்பி - மின்னல்போல அத்தீர்த்தத்தினின்றும் வெளிப்பட்டுத் தங்கள்குறைகூறி நின்றழைக்குந் தேவர்களைப்பார்த்து முன்னே செல்லுங்கள் பின்னேவருவனென்றுகூறி, முளரி நீர் தடம் அதன் கரையில் மன்னும் வன்னீச வள்ளலை இருத்தி மரபுளி அருச்சனை ஆற்றி இமையோர் அவி எல்லாம் சுமந்திடும் ஆற்றல் அன்னவன் அருளால பெற்றனன் - தாமரைகள்நெருங்கிய நீர்மயமாகிய அத்தடத்தின்கரையில் நிலைபெற்ற வன்னீசனென்னுந்திருநாமம்வாய்ந்த இறைவனைத்தாபனஞ்செய்து ஆகமமுறையாலருச்சனைசெய்து தேவர்களுக்கிடும் அவியெல்லாம்சுமக்கும் வன்மையை அவ்விறைவன் திருவருளாலடைந்தனன்.

உறஎன்னும் வினையெச்சம் முன் என்னுங் காலவேற்றுமையை வற்புறுத்திநிற்றலால் பிரிநிலை ஏகாரந்தந்து முன்னே என்றார். (அ)

தமையன்மார்மூவர்சுமக்கலாற்றாது தளர்வுறுமவியெலாந்தானே [லோ
கமையுறப்பொறுக்குமதுகைபெற்றிமையோர்குழாத்தினுட்கலந்தனன்கனை
னிமையவில்வாங்கிப்புரிசைமூன்றிறுத்தவெந்தைவன்னீசனையண்மி
யமைவருமன்பால்வழிபடப்பெற்றோரருந்திறலெய்திவீடடைவார்.

(இ-ள்.) கனலோன் தமையன் மார் மூவர் சுமக்கலாற்றாது தளர்வுறும் அவி எல்லாம் தானே கமை உற பொறுக்கும் மதுகை பெற்று இமையோர் குழாத்தினுள் கலந்தனன் - அவ்வழற்கடவுள் தனது தமையன்மார்மூவருஞ்சுமக்க இயலாதுவருந்தும் அவ்வவிப்பாகங்களையெல்லாம் தானேயமையச்சுமக்கும்வலிமையைப்பெற்றுத் தேவர்கள் கூட்டத்திற் கலந்தனன், இமைய வில்வாங்கி புரிசை மூன்று இறுத்த எந்தைவன்னீசனை அண்மி அமைவரும் அன்பால் வழிபட பெற்றோர் அரும் திறல் எய்தி வீடு அடைவார் - மேருவில்லைவளைத்துத் திரிபுரங்களைநகைத்தெரித்த எமதிறைவனாகிய வன்னீசனையடைந்து அமைந்த அன்பினால் வழிபடப்பெற்றவர்கள் அடைதற்கரிய வன்மையையடைந்து மோக்ஷத்தையடைவார்கள்.

பகைவரை வணக்கும் வலிமையையடைய விரும்பினோர் வன்னீசரை வழிபட்டால் அடைவர் என்பது தோன்ற வழிபட்டோ ரருந்திறலெய்தி யெனவும், இறுதியில் முத்தியையும் அடைவர் என்பது தோன்ற வீடடைவார் எனவுங் கூறினார். (கூ)

விளம்புவன்னீசந்தனக்குமேல்பாங்கர்விழைதருஞ்சவுனகேச்சரத்திற்
களங்கனிவிளர்ப்பவிடங்கிடந்திமைக்குங்கறைமிடற்றடிகளையிருத்தி

வளம்பயில்காதற்சவுனகமுனிவன்மரபுளியருச்சனையாற்றி
யுளம்பயின்மலநோய்தவிர்ந்துபேரின்பவீடுபேறுற்றதவ்வரைப்பு.

(இ-ள்.) விளம்பு வன்னீசம் தனக்கு மேல் பாங்கர் விழைதரும் சவுனகீச்சரத்தில் களங்கனி விளர்ப்ப விடம் கிடந்து இமைக்கும் கறை மிடறு அடிகளை இருத்தி - யாரும்புகழும் வன்னீசத்துக்குமேற்றிசையில் விரும்பப்படும் சவுனகீச்சரமென்னுந்திருப்பதியில் களம்பழம்வெளுப்ப விஷம்நிலைபெற்றுவிளங்குஞ் ஸ்ரீகண்டத்தையுடைய இறைவனைத்தாபித்து, வளம் பயில் காதல் சவுனகமுனிவன் மரபுளி அருச்சனை ஆற்றி உளம் பயில் மலநோய் தவிர்ந்து பேரின்பம் வீடு உற்றது அ வரைப்பு - முறுகிய அன்பினையுடைய சவுனகமுனிவர் ஆகமவிதிப்படி யருச்சனைசெய்து ஆன்மாவினின்று நீங்காத மலநோய் நீங்கிப் பேரின்பத்தைத்தரு முத்திப்பயனை யடைதற் கிடமாயிருந்தது அச்சவுனகீச்சரம்.

ஆணவம், மாயை, காமியம்என்னு மும்மலங்களும் அரிசியினின்று நீங்காத முளை, தவிடு, உமிபோல் ஆன்மாவினின்று நீங்காது நிற்றலால் உளம்பயில் மலநோய்என்றார். மலம் சாதியொருமை. (௧0)

சகோதர தீர்த்தப்படலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௧௧.

## சுரகரீசப்படலம்.

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

தாண்டவமாடுதல்வல்லபெம்மான்றங்குஞ்சகோதர தீர்த்தப்பாங்கர்
மாண்டகன்னீசம்வன்னீசமவிண்ணுமண்ணும்புகழுஞ்சவுனகீச
மீண்டுவிளங்கவெடுத்துரைத்தாமெம்மையுநல்கிடுஞ்சவுனகீசத்
தாண்டகைவைப்பின்வடக்கண்மேவுமண்ணற்சுரகரம்பன்னுகிற்பாம்.

(இ-ள்.) தாண்டவம் ஆடுதல் வல்ல பெம்மான் தங்கும் சகோதர தீர்த்தம் பாங்கர் மாண்ட கன்னீசம் வன்னீசம் விண்ணும் மண்ணும் புகழும் சவுனகீசம் ஈண்டு விளங்க எடுத்து உரைத்தாம் - நடனஞ்செய்தலில்வல்ல இறைவர் எழுந்தருளிய சகோதர தீர்த்தத்தின் பக்கத்தில் மாண்டகன்னீசமும் வன்னீசமும் விண்ணுலகமு மண்ணுலகமும் புகழுஞ் சவுனகீசமுமென்னுந் திருப்பதிகளை இவ்விடத்தில் விளங்க எடுத்துக்கூறினும், எம்மையும் நல்கிடும் சவுனகீசத்து ஆண்டகை வைப்பின் வடக்கண்மேவும் அண்ணல் சுரகரம் பன்னுகிற்பாம் - எப்பிறப்பின்பயனையும் ஆன்மாக்களுக்குத்தந்தருளுஞ் சவுனகீசத்தி லெழுந்தருளிய இறைவரது திருப்பதிக்கு வடபாலுள்ள பெருமையமைந்த சுரகரமென்னுந் திருப்பதியின்மான்மியத்தை இனிக்கூறுவாம்.

அயன்முதலிய தேவர்க்குவாய்ந்த சுரத்தை யரித்தருளினமையால் அத்திருப்பதிக்குச் சுரகரம் எனப் பெயர்வந்தது. (௧)

கலிவிருத்தம்.

சுந்தரத்திருமான்முதற்சூழ்சுட
ரந்தரத்தவர்க்காரமுதீந்தது

கந்தரத்துமுனிக்கணம்யோகுசெய்
மந்தரப்பெயர்மால்வரையுண்டரோ.

(இ-ள்.) சுந்தரம் திருமால் முதல் சூழ் சுடர் அந்தரத் தவர்க்கு ஆர் அமுது ஈந்தது-அழகிய திருமால்முதலாகிய ஒளிபரந்த விண்ணுலகத்தவர்க்குப்பெறுதற்கரிய அமிர்தத்தைக்கொடுத்ததாகிய, கந்தரத்து முனி கணம் யோகு செய் மந்தரம் பெயர் மால்வரை உண்டு - குகைகளில் முனிவர்கூட்டங்கள் சிவயோகஞ்செய்யு மந்தரமென்னும் பெயர்வாய்ந்த ஒரு பெரியமலையுண்டு.

ஈந்தது என்னுந் தெரிநிலைவினைமுற்றுப் பெயரெச்சத்தின்மேல் நின்றது. (௨)

சுற்றும்யாளிமுழைதொறுந்துஞ்சுவ
வெற்றிமத்தெனவேலைகடைந்தநா
ளற்றநீக்குமமுதமிடையிடைப்
பற்றிநின்றிடும்பான்மைநிகர்க்குமால்.

(இ-ள்.) சுற்றும் யாளிமுழை தொறும் துஞ்சுவ - எப்பக்கத்தும் யாளிகள் அம்மலையின்குகைகள்தோறுந் துயில்கூர்தல், வெற்றி மத்து என்ன வேலை கடைந்த நாள் அற்றம் நீக்கும் அமுதம் இடை இடை பற்றி நின்றிடும் பான்மை நிகர்க்கும்-அம்மலையை வெற்றிவாய்ந்த மத்தாகக்கொண்டு தேவாசுரர்கள் கடலைக்கடைந்தகாலத்தில் மரணத்தைநீக்கும் அமுதமானது அம்மலையினிடந்தோறும்கலந்துநிற்குந்தன்மையையொக்கும்.

யாளி வெண்மையாதலால் பண்புபற்றிவந்த வுவமையணி. (௩)

வஞ்சிக்கப்படுதானவர்வாரியின்
விஞ்சத்தீஞ்சுவைவேறுகடைந்தெய்தத்
தஞ்சத்தற்பெயர்பானகழ்தன்மையி
னஞ்சப்புற்றங்ககழ்வகுடாவடி.

(இ-ள்.) வஞ்சிக்கப்படு தானவர் வாரியின் விஞ்ச தீம் சுவை வேறுகடைந்து எய்த - யாரையும்வஞ்சிக்குமசுரர்கள் கடலில்மேம்பட்ட இனிய அமுதை தேவரையன்றித்தாமே வேறேகடைந்தடைய, தஞ்சம் தன் பெயர்ப்பான் அகழ் தன்மையின் அஞ்ச புற்று அங்கு குடா வடி அகழ்வ - பற்றுக்கோடாயுள்ள தன்னைப்பெயர்க்கத்தோண்டுந் தன்மையைப்போல யாவருமஞ்சப்புற்றுஞ் சோற்றைக்கரடிகள் தோண்டாநிற்கும்.

குடாவடிவளைந்த காலையுடையது என்னும் பொருள்மேல் நிற்றலால் காரணப்பெயர். வஞ்சிக்கப்படு "உட்கப்படாஅர்" என்றாற்போலப் படுசொற்குப் படுபொருள் வாராமைகாண்க. கரடி கிழங்ககழ்தலை அசுரர்கள் கடல்கடையப் பெயர்த்தற் கொக்குமெனக் கவி அத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்றவுவமையணி. (௪)

துன்னுதானவர்சூழுஞ்செயலறிந்
தன்னகுன்றம்பெயர்ப்பரிதாகமா
மன்னுமார்பினன்பள்ளிகொண்மாட்சியின்
மின்னுநீன்முகின்மீமிசைத்துஞ்சுமால்.

(இ-ள்.) துன்னு தானவர் சூழும் செயல் அறிந்து அன்ன குன்றம் பெயர்ப்பு அரிது ஆக — நெருங்கிய அசுரர்கள் தோண்டக்கருதுஞ் செயலையறிந்து அம்மலையவர்கள் பெயர்த்தற்கரிதாக, மா மன்னும் மார்பினன் பள்ளி கொள் மாட்சியின் மின்னும் நீல்முகில் மீமிசை துஞ்சும் - திருமகள்வசிக்கும் மார்பினையுடையதிருமால் பள்

ளி கொள்ளும் மாட்சிமையைப்போல விளங்குங் கரியமேகங்கள் அம்மலைமேல் நிலைபெற்றுலவும்.

மேகம் அம்மலையிற் றுயில்கூருதலைத் தயித்தியவயிரியாகிய திருமால் அவர்களுக்கு அம்மலை மத்தாகப் பயன்படாதிருத்தற்கு இருத்துதல்போலப்பள்ளிகொண்டார் எனக்கவி அத்தியவசயித்துக்கூறுதலால் இதுவும் அவவணி. (௫)

திரிபு.

செல்லியங்குழல்வண்டிமிர்தேக்கடி
வல்லியங்குழவாட்கண்படுப்புவ
வல்லியங்குழலார்வெறியாடிய
பல்லியங்குழலாற்பனித்தஞ்சுமால்,

(இ-ள்.) செல் இயங்கு உழல் வண்டு இமிர் தேக்கு அடி - மேகங்கள் தவழா நின்ற (உன்னதத்தையும்) சுழன்று திரியாநின்றவண்டுகள் (தேனுண்டு) இசைபாடும் (பூங்கொத்தையுமுடைய) தேக்கமரத்தின்கீழ், வல்லியம் குழவாள் கண் படுப்புவ - புலிகள் தமதுகுட்டியை யொள்ளிய கண் துயிலச்செய்யும், அல்லி அம் குழலார் வெறியாடிய-அகவிதழால் (ஆகியமாலையையணிந்த) அழகிய கூந்தலையுடைய குறமகளிர் வெறியாட்டயருமிடத்தினிகழும், பல் இயம் குழல் ஆல் பனித்து அஞ்சும் - பலவாச்சியங்களினொலியாலும் வேய்ங்குழலொலியாலும் நடுக்குற்று அஞ்சும்.

குழவென்னும் பண்பு ஆகுபெயராய்க் குட்டிமேல்நின்றது. வெறியாடல் குறிஞ்சிநிலத்திற்குரிய கருப்பொருள்களுள்ஒன்று. இயம். குழல் கருவி யாகுபெயராகவொலிமேல்நின்றன. ஆல் இரண்டனுள் முன்னது ஏதுப்பொருளில்வந்த மூன்றுமுருபு பின்னது அசைநிலை. (௬)

இரண்டடிப்பாடகமடக்கு.

காமரம்புகனற்றமரம்பரர்
காமரம்புகனற்றமரம்பர
ரேமமல்கியிருந்துணர்கான்றரு
வேமமல்கியிருந்துணர்கான்றரும்.

(இ-ள்.) காமர் அம்பு கனற்று அமர் அம்பரர் - மன்மதபாணம் உடற்றுநின்ற போரினுக்கு (உடைந்த) அரமடந்தையர்கள், புகல் காமரம் நல் தமரம் - பாடுங்காமரமென்னும் (ஓரிசையாகிய) நல்ல ஒலியை. பரர் ஏமம் அல்கிஇருந்து உணர் கான்தரு - அந்நியரானகுறவர் மறைவிடத்திற்றங்கியிருந்து (கேட்டு இசைவிகற்பங்களை) ஆராயும் காட்டின்கண்ணுள்ள மரங்களில், ஏமம் மல்கிய இருமை துணர்கான் றரும்-பொன்னொளிபோல் நிறைந்து மலர்ந்த பெரியபூங்கொத்துக்கள் வாசம்வீசும்.

அம்மலையிலுள்ள குறவரும் பண்விகற்பங்களுணர்ந்தோர் என்பார். உணரென்றார். மகளிர்பாடலால் மலருமரம் குருக்கத்தியாதலால் இருந்துணர்கான்றரும் என்றார். மல்கியவென்னு பெயரெச்சத்தின் னீறுகெட்டது. காமர் ரகரவீறு உயர்வின்கண்வந்த பால்வழுவமைதி. (௭)

வண்டலம்படர்மாவரையாரமை
வண்டலம்படர்மாவரையாரமை
பிண்டியையவனாறியவில்லமுன்
பிண்டியையவனாறியவில்லமும்.

(இ - ள்.) வண்மை தலம் படர் மா வரையார் - வளவிய இடங்களிற் செல்லும் கரியமலையின்கணுள்ளகுறவராது, அமை பிண்டி ஐவனம் நாறிய இல்லம் முன் - செய்து வைத்த தினைமாவும் மலைநெல்லும்பொருந்திய குடில்களின் முன்னர், பிண்டி ஐவனம் நாறிய வில்லம் உம் - அசோகும் அழகிய சுனைநீரும் மணம் வீசாநின்ற வில்லமரமும், வண்டு அலம்பு அடர் மா அரை ஆர் அமை - வண்டுகளிசைபாடாநின்ற நெருங்கிய மா மரமும் தூரையுடைய ஆத்தியும் மூங்கிலும் உள்ளன.

நிலைமொழி யுயிரீறுதலின் வருமொழியின் இகரவுயிரூர்ந்த மெய்யை வகர உடம்படு மெய்யாக்கி இல்லமெனக்கொண்டு தேற்றுமரமெனினும் அமையும். விரிந்துந் தொக்குநின்ற உம்மைகள் எண்ணுப்பொருளில்வந்தன. அன்றிக் கடைநிலைத்தீவக அணியெனு மமையும். உள்ளன என்னும் பயனிலைதொக்கது. இத்தொடர் பொருள்குறித்துவந்த அடிமறிமாற்று. (அ)

வானரம்பையராவிற்பயந்துதாய்
வானரம்பையராவிற்பயந்தரத்
தானிரப்பவியக்கணத்துண்டிசை
தானிரப்பவியக்கணந்துஞ்சுமே.

(இ - ள்.) வானரம் பை அராவின் பயந்து வான் தாய் - குரங்கினங்கள் படத்தையுடைய பாம்பிற்குப்பயந்து விண்ணுலகிற்றாவி, அரம்பையர் ஆ வின் பயம் தர - அங்ஙனம் வசிக்கும் தெய்வமகளிர் காமதேனுவின் ஒளிபொருந்திய பாலையூட்ட தாம் நிரப்பு அவிய கணத்து உண்டு - அக்குரங்கினங்கள் தாம் (பசியென்னும்) வறுமை கெடக்கணப்போதினுண்டு, தால் இசை நிரப்ப வியம் அம் கண் துஞ்சும் - அம்மகளிர் நாவாலிசையைப்பாட (தாலாட்டுப்பாடல் செய்ய என்றபடி) (அக்குரங்கினங்கள்) பரந்த அழகிய கண்டுயில்கூரும்.

தாநிரப்பவிய என்பது எதுகைநோக்கி நகரம் ணகரமாகவந்தது. யமகம் திருகல்களில் இவ்வாறு பெரும்பாலும்வருதலையுணர்க. ஏ-ஈற்றசை. அராவின் - உருபுமயக்கம்.

முரசபந்தம்.

ஒவ்வோரடி ஒவ்வொருவரியாக நான்கடியும் எழுதி மேலிரண்டுவரியும் தம்முட்கோமூத்திரியாகவும், கீழிரண்டுவரியும் தம்முட்கோமூத்திரியாகவும், சிறுவார் போக்கப்பட்டு மேல்வரி யிரண்டாம் வரியினும் மூன்றாம் வரியினும் நான்காம் வரியினும் கீழுற்று மீண்டு மேல் நோக்கவும், கீழ்வரி அவ்வாறே மேலுற்று மீண்டு கீழ்நோக்கவும் பெருவார் போக்கப்பட்டு இந்தவார் நான்கும் நான்குவரியாகவருவது.

வஞ்சிவிருத்தம்.

அடிமடக்கு.

தானமாந்தருமஞ்சரி,வானமாந்தருமஞ்சரி
தானமாந்தருமஞ்சரி,வானமாந்தருமஞ்சரி.

(இ - ள்.) தானம் ஆம் தருமம் சரி - சோடசதானமும் உண்டாகிய முப்பத்திரண்டறங்களும் (உலகத்தில்) சஞ்சரிக்க, வானம் ஆம் தரும் அம் சரி - மேகங்கள்நீரைப்பொழியாநின்ற அழகிய அம்மலையின்பக்கத்தில், தானம் மாந்தரு மஞ்சரி - யானையின் மதசலங்களும் மாமரங்களின் பூங்கொத்துக்களும், வானம் மாந்தர் உம் அஞ்சு அரி - விண்ணுலகத்திலுள்ளோரும் நிலவுலகிலுள்ளவரும் அஞ்சாநின்ற சிங்கங்களு முள்ளன.

சரிஎன்னு முதனிலைத்தனி வினை எச்சப்பொருளில் வந்தது. ஈறு கெட்ட தெனினு மமையும். தானம் மாந்தரு மஞ்சரி அரி இவை விகுதி பெறுதுவந்தசாதி யொருமைகள். வானம் இடவாகுபெயர். தொக்கும் விரிந்தும் வந்த உம்மைகள் எண்ணுப்பொருளில்வந்தன. (கo)

கலிவிருத்தம்.

தகாவிகற்பத்தான்வந்தமடக்கு.

தந்தைதித்தித்ததோதிதைதாதுதேத்
தொத்துதித்துத்திதித்ததந்திந்நுதூந்
துத்தித்தேதத்ததீதுதைதித்தத்தத்

(இ-ள்.) தத்தை தித்தித்தது ஓது இதை - கிளிகள் தித்தித்தவசனங்களைப்புகலாநின்ற புதியதினைப்புனம், தாது தேம் தொத்து உதித்து திதித்தது - (வேங்கைமரங்களில்) மகரந்தத்தையுந் தேனையுமுடைய பூங்கொத்துகளரும்பக் குறமகளிர் காவலுடையதாய், அத்தித்து-யானையின் கொம்புகளும், அதுத்தித்து - பாம்பினது புனிதமான தலையின்கணுள்ள ரத்னங்களும், ஏதத்த தீது உதை தீதத்து அத்து ஒத்த தாது - துன்பப்பகுதியவான தீங்குகளையோட்டாநின்ற நெருப்பிற் சுடப்படுதலால் (மாற்றுயர்ந்து) செவந்த நிறம்பொருந்திய பொற்கட்டிகளும், ததைத்து துதித்தது - நெருங்கப்பெறுதலால்(யாவரும்) புகழுந்தன்மையையுடையது.

தித்தித்தது வினைமுற்றுப்பெயர். திதித்ததென்னும் வினைமுற்று எச்சமாய்த் துதித்ததென்னும் குறிப்பு வினைமுற்றின் தொழிற்பண்பைக்கொண்டுமுடிந்தது யானைக்கொம்புமுதலியவை குறிஞ்சிக்கருப்பொருளாதலாலும், அந்நிலத்துள்ள புனத்தின் சிறப்புக்கூறுதலாலும் அத்தித்து துத்தித்து என்னும் ஏழாம் வேற்றுமை யிடப்பொருளின்கண்வந்த குறிப்பு வினைமுற்றுகள் கொம்பையும் மணியையும் உணர்த்தின. துத்தி இருமடியாகுபெயர் துத்தி படப்பொறி. அது படத்தையுணர்த்தித்தானியாகுபெயராய் அது தலையை யுணர்த்திச் சினையாகு பெயராயிற்று. உதித்து செயவெனெச்சத்திரிபு. தத்து படுவிகுதி குன்றிவந்த செயப்பட்டுவினைத்தொழிற்பெயர். ததைத்து மெல்லொற்று வல்லொற்றாய் வந்த பிறவினையெச்சம். (கக)

கோமூத்திரி.

இரண்டிரண்டுவரியாக ஒருசெய்யுள் எழுதப்பட்டு மேலுங்கீழும் ஒன்றிடையிட்டு வாசித்தாலும் அச்செய்யுளேவருவது.

வானளாவினவார்கனியாவிரை
கானறுவிளவார்கடியாவரை
தேனலம்பினதீங்கடமாருமான்
தானவம்பனறுங்கெடவூருமால்.

(இ-ள்.) வான் அளாவின வார் கனி ஆவிரை - ஆகாயத்தைபளாவிய நீண்டகனிகளையுடைய ஆவிரையும், கான் அறு விள ஆர் கடியா வரை - வாசம் நீங்காத விளாமரமும் ஆத்திமரமும் நீங்காத அம்மலையின்கணுள்ள, தேன் அலம்பின தீம் கடம் ஆரும் மான் தானம் அம்பு-வண்டுகளாரவாரிக்க இனிய மதநிறைந்த யானைகளின் மதநீரானது, அனல் தாம் கெட ஊரும் - (புனங்களிற்பற்றிய) நெருப்பு அவியச்செல்லும்

தாம் சாரியை. (கஉ)

ஈற்றடி யெழுத்துகள் ஏனை மூன்றடியுள்ளுங் கரந்து நிற்கவருவது.

கந்தமல்கியகாவிற்குலாய்க்கமழ்ந்
தந்திமானுமவிர்தளிர்க்கொக்குதிர்
செந்துவர்க்கனிதித்திக்குமாசினி
மந்திமாந்திமகிழ்ந்துகுதிக்குமால்.

(இ-ள்.) கந்தம் மல்கிய காவில் குலாய் - வாசம் நிறைந்த சோலையின்கண்குல வி, கமழ்ந்து அந்தி மானும் அவிர் தளிர் கொக்கு உதிர் செம்மை துவர் கனி - வாச ம்வீசி வண்ணத்தாற் செவ்வானத்தைநிகர்க்கும் விளங்குந் தளிரையுடைய மாமரத்தி னின்று முதிர்ந்த செவந்த கனியையும், தித்திக்கும் ஆசினி - தித்தியாநின்ற ஈரப்ப லாவின் கனியையும், மந்தி மாந்தி மகிழ்ந்து குதிக்கும் - பெண்குரங்குகள் புசித்துக் களிகூர்ந்து குதித்து விளையாடும்.

அந்தி மானுந்தளிர் பண்புபற்றிவந்த வுவமை அணி. (௧௯)

மாத்திரைச்சுருக்கம்.

ஒருபொருள் பயக்கும் ஒருசொல் ஒருமாத்திரையைக்குறைப்ப வேறுபொருள் பயக்குஞ் சொல்லாய் வருவது.

*விடியற்காலத்தோர்மாத்திரைவீந்தது
||மடியுநஞ்சொன்றுமாய்ந்ததுமொன்றுமாய்
கடிகொளந்தியிற்கானவர்தங்களொன்
றொடியுநீளறையார்ப்பொடுலம்புமால்.

(இ-ள்.) விடியற்காலத்து - விடியலாகியகாலம், (விடியல் - காலை) ஓர் மாத்தி ரை வீந்தது உம் - ஒருமாத்திரையைச் சுருக்க அது கலையென்றாயிற்று, கலை-கலைமான் ஒலியும் - மடியும் நஞ்சு - மடியச்செய்யுந் நன்மையையுடையநஞ்சு, (நஞ்சு - காரி,) ஒன்று மாய்ந்தது உம் - ஒரு மாத்திரையைச்சுருக்க கரிஎன்றாயிற்று, கரி - யானையொலி யும், ஒன்று மாய் கடிகொள் அந்தியில் - ஒரு மாத்திரை குறைந்த அச்சத்தைத்தாரா நின்றமாலையில் (அந்தி மாலை) (ஒரு மாத்திரை குறைந்த மாலை யென்றமையால்-மலையெ ன்றாயிற்று) அம்மலையில்வசிக்கும், கானவர் தங்கள் ஒன்று ஒடியும் நீள் அறை - குறவர் களது ஒருமாத்திரை குறைந்த நீண்டபாறை) பாறையென்றமையால் பறையென்றாயி ற்று) பறை-பறையினது, ஆர்ப்பொடு உலம்பும்-சத்தத்தோடுகூடி யொலிக்கும்.

---

* இந்நூலாசிரியர் நடுவுநிலைத்திணையினியல் கூறப்புகுந்த அதிகாரத்தில் திணை யை முறைசெய்தற்கேதுவாக வகுத்த சிறுபொழுதுள் வைகறையை விடியலெனக் கொண்டு, வைகறை, விடியல், புலரி என்பன ஒரு பொருட்கிளவியெனவும், விடியல் இருள் புலர்தற்பொருட்டெனவும், காலையை விடியலென்றல் பொருந்தாதெனவும், கூறி எற்பாட்டைக்காலையெனவும், எற்பாடு ஞாயிற்றினுதயமெனவும், தொல்காப்பியச் சூத்திரவிருத்தியிற்கொண்டார், அற்றாக இங்ஙனம் விடியலைக்காலையெனக்கொண்டது, மாறுகொளக்கூறலன்றோவெனின். அற்றன்று இலக்கணையாகக்கொண்டதென்க.

|| எனப்படுவா னெனற்பாலது இல்வாழ்வானென்பான் என்புழிப்படுவிகுதி தொக்குநின்றாற்போலக், குடிமடிந்து குற்றம்பெருகும், என்புழிமடிவித்து எனற்பால து பிறவினைப்பொருளுணர்த்தும் விவ்விகுதி தொக்கு மடிந்தென நின்றதென இந்நூ லாசிரியர் தொல்காப்பியச்சூத்திர விருத்தியுட்கொண்டமைகாண்க.

கலைமான் ஒலியும் யானையொலியும் குறவர் பறையொலியோடுகூடியொலிக்கும் என்பது கருத்து. விடியல்காலம் பிறிதினியையுநீக்கத்திவ்வந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அத்துச்சாரியை தவிர் வழிவந்தமையின்விரித்தல் சாரியை காலை காரி என்பவற்றின் பயனிலையாகிய வீந்தது மாய்ந்ததுஎன்னும் வினைமுற்றுப்பெயர்கள். அவற்றோடு சார்த்திய மாத்திரையின் பயனிலையாயும் வந்தன. மடியும்பிறவினை விகுதி தொக்குநின்ற பெயரொச்சம். (௧௪)

மாத்திரைவருத்தனை.

ஒருபொருள் பயக்கும் ஒருசொல் ஒருமாத்திரைபெற்று வேறுசொல்லாய்ப் பொருள் பயந்து நிற்பது.

> அளபொன்றேறியவண்டதிரார்ப்பினு
> லளபொன்றேறியமண்ணதிர்ந்துக்கன
> வளபொன்றேறியபாட்டலரீர்ஞ்சுனை
> யளபொன்றேறழகூடலைந்தாடுமரல்.

(இ-ள்.) அளபு ஒன்று ஏறிய வண்டு - ஒரு மாத்திரைகூடிய வண்டு, (வண்டு அளி) (அளபொன்றேறிய அளியென்றமையால்) ஆளி - ஆளியென்னும் ஓர் மிருகம், அதிர் ஆர்ப்பினால் - ஒலிக்கு முழக்கத்தால், அளபு ஒன்று ஏறிய மண் - ஒரு மாத்திரை கூடிய மண் (மண் தாரை) (அளபொன்றேறிய தரையென்றமையால்) தாரை - நட்சத்திரங்கள், அதிர்ந்து உக்கன-கம்பித்துதிர்ந்தன, அளபு ஒன்று ஏறிய பாட்டு - ஒருமாத்திரைகூடியபாட்டு (பாட்டு கவி) அளபொன்றேறிய கவியென்றமையால்) காவி-நீலோற்பலங்கள், அலர் ஈரம் சுனை - அலராநின்ற குளிர்ந்த சுனையிலுள்ள நீரானது, அளபு ஒன்று ஏறு அழகு ஊடு - ஒரு மாத்திரைகூடிய, அழகு-ஊடு (அழகு-வனப்பு) (அளபொன்றேறியவனப்பு என்றமையால் வானப்பு) வான் அப்பு ஊடு - ஆகாசகங்கையினிடத்தில், அலைந்து ஆடும் - கலந்தசையும்.

ஆளி முழக்கத்தால் நட்சத்திரங்கள் விண்ணினின்றுதிரும் என்பதும், சுனைநீர் ஆகாசகங்கையோடு கலக்கும் என்பதும் கருத்து. ஈரம் ஈரொனநின்றது செய்யுண்மரூஉ. சுனை இடஆகுபெயர். (௧௫)

எழுத்துவருத்தனை.

ஒருபொருள் பயப்பதோர் சொல்கூறி யதனில் ஒவ்வோரெழுத்து நீக்க வெவ்வேறு பொருள் பயப்பது.

> காந்தள்போல்வனகாமுகர்வீழ்வன
> போந்துசேர்ப்பர்கள்பூக்குறிவைப்பன
> சாந்தநாறியசாரலினாரிமா
> ரேந்துசீரெழிற்கைதகைகேதகை.

(இ-ள்.) சாந்தம் நாறிய சாரலின் நாரிமார் ஏந்து சீர் எழில் கை - சந்தனமரம் வாசம் வீசாநின்ற அம்மலைப் பக்கங்களில் வசிக்குங் குறமகளிரது சிறப்புவாய்ந்த அழகியகைகள், காந்தள் போல்வன - காந்தண்மலரை யொப்பனவாம், நாரிமார் தகை-அம்மடவார் அழகு, காமுகர் வீழ்வன - காமிகளால்மயங்கி வீழப்படுவனவாம், போந்து சேர்ப்பர்கள் பூகுறிவைப்பன கேதகை - (இரவுக்குறிக்கண்) வந்து (தலைவிவரப்பெருமையாறுரும் வந்தமை யறிதற்கு) தலைவர்களா லழகியவறிகுறியாக வைக்கப்படுவன தாழை மலர்கள்.

கைதகை கேதகை என்பனவற்றைக் கைதகை கேதகைஎனப்பிரித்துக் காந்தள் போல்வன காமுகர்வீழ்வன போந்து சேர்ப்பர்கள் பூக்குறிவைப்பன என்பவற்றோடு முறை நிரனிறையாகக்கொள்க நாரிமார் என்னுஞ்சொல் தலைவியென்பதனையும் பொருணிலையாகக் கொண்டு நிற்றலின் அது முதனிலைப்பொருட்டிவக அணி ஒருசொன்னிற்றே தனித்தனி யுசவுமென்னும் பொருள்கேளெனினும் அமையும். நாரிமார் ஒருமையிற பன்மைவந்தபால் வழுவமைதி. கேதகை பொருளாகு பெயர். இரவுக்குறிக்கட்போந்த தலைவர் தலை வீவரப்பெருமையின் குறிவைத்துச் சென்றமை தலைவிக்கிரங்கலைத்தரும் ஆதலின் இரங்கலுரிப் பொருட்குரிய நெய்தறறலைவராகச் சேர்ப்பரென்றார (கசு)

உபயநாகபந்தம்.

இரண்டுபாம்பு தம்முள் இணைவனவாக உபதேசமுறையால் வரைந்த வற்றுளிரண்டுகவிடெழுதப்பட்டுச், சந்திகளினின்ற எழுத்தே மற்றையிடங்களினும் உறுப்பாய் நிற்கவருவது.

> ஆம்பனீண்மருப்பாரமுமாசறு
> காம்புமாணவுருங்கதிர்முத்தமும்
> பூம்பசும்பொழினீடும்புரையிரு
> ளோம்பிப்பப்பொளிமேவுமுட்டாதரோ.

(இ-ள்) ஆம்பல் நீள் மருப்பு ஆரம் உம் - யானையினது நீண்ட கொம்பிற்பிறந்த முத்தமும், மாசு அறு காம்பு மாண உரும் கதிர் முத்தம் உம் - குற்றமற்ற மூங்கில்கள் மாட்சிமைப்படச்சிந்திய கிரணங்களையுடைய முத்தமும், பூ பசுமை பொழில் நீடும் புரை இருள் ஓம்பி - பூக்களையுடைய பசியசோலையின்கண் நீடிய பெரிய இருளையோட்டி, முட்டாது பப்பு ஒளிமேவும் - குறைபாடில்லாமல்பரவிய ஒளியை வீசும்.

முத்தங்களிலொளி சந்திரகிரணம்போலக் குறைபாடின்றி யிருளையோட்டுமென வியப்புத்தோன்றக் கூறினமையினாகுண அதிசய அணி. (கஎ)

> செம்பொனன்சுனைசேர்முகைநீலமா
> வம்புநீடுமருங்களியாரவின்
> கொம்புபூமலிபொன்னவிர்குன்றத்தூர்
> பம்புசேணதிப்பாமருட்டாருமே.

(இ-ள்.) செம்பொன் நன்மை சுனை சேர் முகை நீலம் மா வம்பு நீடு மருங்கு அளி-செவந்தபொன்னலாகிய நல்லசுனையிற்பொருந்திய முகைத்த நீலோற்பலங்களின் பெருமை பொருந்தியவாசம் நீடிய பக்கங்களில் (சஞ்சரிக்கும்) வண்டுகள், ஆரவின் கொம்புப்பூ மலி பொன் அவிர் குன்றத்து ஊர் பம்புசேண் நதி - மிகவுமலர்ந்த கோட்டுப்பூக்கள் நிறைந்த பொற்கட்டிகள் விளங்காநின்ற அம்மலையின்கண் தவழாநின்ற நெருங்கிய ஆகாயகங்கையில், பா மருட்டு ஆரும்-பாய்ந்து அவ்வாகாயகங்கையைச் சுனைநீரென்றே மயக்குதலைப் பொருந்தும.

பா முதனிலைத்தனிவினை வினைஎச்சப்பொருளில்வந்தது. மருட்டு முதனிலைத்தொழிற்பெயர். ஆகாசகங்கைநீரைச் சுனைநீரொன்று மயங்கினமையின் மயக்க அணி. ()

சுழிதளம்.

ஒருசெய்யுள் எவ்வெட் டெழுத்தாக நான்குவரி யெழுதப்பட்டு மேனின்று கீழிழிந்தும் கீழ் நின்று மேலேறியும், புறநின்று வந்துள் முடிய அவ்வரி நான்குமே யாகியச் செய்யுளே வருவது.

வஞ்சித்துறை.

மதிபகவேயான்ற, றினைமணிமாவாவன்
பமர்துறுசேவாயா, கனிதுவன்றுமாவே.

(இ-ள்.) மதி பக வேய் ஆன்ற தினை மணி - சந்திரனுடல்பிளவுபட (உயர்ந்த) மூங்கில்களமைந்த தினைப்புனத்திற்சென்று, மா ஆ அன்பு அமர் துறுசே ஆயா - பெரிய பசுக்களுடன் அன்புபொருந்திய நெருங்கிய இடபங்கள் (அப்புனத்தி லுள்ள தினைக்கதிர் களையேய்ந்து) (உடல்) வாடா, மா கனி துவன்றும் - (அம்மலையிலுள்ள) மாமரங்கள் (எப்போதும்) கனிகளால் நெருங்கி நிற்கும். (௧௯)

சருப்பதோபத்திரம்.

நிரையாக அறுபத்து நான்கறைகீறி எவ்வெட்டெழுத்தால் ஒவ்வோரடியாகத் தொடுத்த நான்கடியுமேனின்று கீழிழியவுங், கீழ்நின்று மேலேறவும் எழுதப்பட்டு மேனின்று கீழிழியவும் கீழ்நின்று மேலேறவும் முதலொடுதொடங்கியிறுதியாகவும், இறுதிதொடங்கி முதலாகவும் மாலைமாற்றாக நான்குமுகத்திலும் வாசித்தாலும் அச்செய்யுளே வருவது.

கலிவிருத்தம்.

வீயாவாமாமாவாயாவி, யாவாயாராராயாவாயா
வாயாடேமாமாடேயாவா, மாராமாதேராதேமாராமா.

(இ-ள்.) ஆமா வீயாவாம் - (அம்மலையிலிருக்கும்) காட்டுப்பசுக்கள் (எந்நாளும்) இறவாவாம், வாயா வீ ஆ ஆராயா வாயார் ஆயா - கிடைத்தற்கரிய பூக்களைப் பசுக்களாராய்ந்து வாய்நிரம்பக் (குதட்டிப்புசித்து) (உடல்) வாடாவாம், வாய் ஆடு மா மாடு ஏயா - பொருந்திய வரையாடுகள் (தமக்குக் குறைவின்மையின்) பெரிய (அம்மலை) ப்பக்கங்களிலுள்ள வேறிடத்திற் செல்லாவாம் - ஆம் ஆர் ஆம் - அருவிநீரும் ஆத்திமரமும் எங்குமுளவாம், மாது மா தோம் ஆரா - அழகியமாமரங்கள் (குறைவின்றி நிற்றலின்) குற்றத்தைப்பொருந்தா

ஏகாரம் தேற்றப்பொருளிலும், ஓகாரம் அசைநிலைப்பொருளிலும்வந்தன. அம்மலை தெய்வத் தன்மையுளதாதலின் அங்கிருக்குங் காட்டுப்பசுக்கள் வீயாவென்றார். தெய்வமணமும் வாடாமையுமுளதாதலின் கிடைத்தற்கரியமலர் என்றார். பருவகாலமன்றி எந்நாளும் பூத்துக்காய்த்துப் பழுத்துநிற்றலின் அவையின்மையென்னுங் குற்றங்கள் கண்டோர்சொல்லப் பொருந்தாஎன்பார். மாதோம் ஆரா என்றார். ஆர்என்னும் வினைப்பகுதி வினையெச்சப் பொருளில்வந்தது. (௨௦)

மாலைமாற்று.

ஒருசெய்யுளை ஈற்றடியைமுதலாகக்கொண்டு வாசிப்பினும்.
அச்செய்யுளேவருவது.

தேடாவாழைமாவீடாதே, தேனாராமாவாழாயாதே
தேயாழாவாமாராறுதே, தேடாவீமாழைவாடாதே.

(இ-ள்.) தேள் தா வாழை மா வீடாது - வானத்திலுள்ள விருச்சிகராசியைத் தோயாநின்ற (உன்னதத்தையுடைய) வாழைமரங்களும் மாமரங்களும் (எந்நாளும்) கெடாமல் நிற்கும், தேன் ஆர் ஆமா வாழ் ஆயாது - (சோலையிலுள்ளமலர்கள் ஒழுக்கும்) தேனைப்புசித்துச் (சஞ்சரிக்கும்) காட்டுப்பசுக்கள் தம்வாழ்விற்கெடாது நிலைபெறும், தேயாழ் ஆ ஆம் - தெய்வத்தன்மையுடைய மிதுனராசியைத் (தீண்டாநின்ற உய

ர்ச்சியையுடைய) ஆச்சாமரங்கள் பல்கிநிற்கும், ஆர் ஆறுதா - ஆத்திமரங்கள் நீங்காது நிலைபெறும், தேடா வீ மாழை வாடாது - எளிதிற்கிடைக்கும் மலர்களையுடைய புளியமரங்களும் உலராது நிற்கும.

ஏகாரம் நான்கும் அசைநிலையிடைச்சொற்கள். அம்மலைதெய்வத்தன்மையையும் கயிலைமுதலியவற்றோடொன்றுகச்சேர்த்தெண்ணப்படு மான்மியத்தையுமுளதாதலின், அங்கிருக்கும் மரங்களும் மிருகங்களும் கெடா என்பார் வாழை மா மாழை வீடாதென்றும் ஆமாவாழாயா தென்றும் கூறினர். (உக)

காதைகரப்பு.

ஒருசெய்யுள்முடிய எழுதப்பட்டதனிற்று மொழியின் முதலெழுத்துத்தொடங்கி ஒவ்வோரெழுத்து இடையிட்டு வாசிக்கப் பிறிதொருசெய்யுள் போதுவது.

ஒருபோகுகொச்சகம்.

இனநீடியயானைவிலாருலாவ
வனமோடிடமாதவியாருநாவி
புனமோடிநையாதவிலாருண்மன்னி
யனல்வாயவியாருவகன்றிமாதோ.

(இ-ள்.) வில்லார் உலாவ நீடியயானை இனம் வனம் ஒடிட - வில்லையுடையகுறவர்கள் உலாவுதலைக்கண்டு அச்சமுற்ற யானையின்கூட்டங்கள் காட்டில் விரைந்தோடும் அரவத்தைக்கேட்ட, மாதவி ஆரும் நாவி - குருக்கத்திமரங்களில் (மறைந்து) தங்கிய கத்தூரிமிருகம், புனம் ஓடி நையாத இல் ஆர உள் மன்னி - தினைப்புனத்தின்கட்பயந்தோடிக் குறைவின்மையின் வருந்துதலில்லாத குறவர் குடிசையுட்சேர்ந்து, அனல்வாய் கன்றி அவி ஆருவ - (அக்குடிசையிலுள்ள) நெருப்பிற்பட்டுவாடி (அக்குறவர்கட்கு) உணவாகப் பொருந்தும்.

வாய் என்னும் முதனிலை வினையெச்சப்பொருளில்வந்தது. (உஉ)

காதைகரப்பிற்கரந்தது.

வஞ்சித்துறை.

கருவிவானனி, மருவியாடின, விருவிமாடின, வருவியாடின.

(இ ள்.) கருவி வான் நனி ஆடின அருவி - கூட்டமாகிய மேகங்கள் மிகவும் பொழியாநின்ற நீராலாய (அம்மலையினின்றுவீழும்) அருவியினீர்ப்பெருக்கில், மாடு இருவி இனம் மருவி ஆடின - பக்கத்திலுள்ள தினைத்தாட்கூட்டங்கள் பொருந்தி மூழ்காநிற்கும்.

இனம் அருவி நிலைமொழியினது மகரம் கெடுதல் விகாரம். (உங)

திரிபங்கி.

ஒருசெய்யுளாய் உறுப்பமைந்து ஒருபொருள் பயப்பதனை மூன்றாகப்பிரித்து எழுத வெவவேறுசெய்யுளாய்த் தனித்தனியே பொருள் பயந்து தொடையும் கிரியையும் தனித்தனியேகாண வருவது.

காப்பியக்கலித்துறை.

சந்தனமார்தடஞ்சாரலெலாந்தனிவானளவுங்
கொந்துலர்வீநெடுங்காவினெலாங்குனிமாந்தருவி
னந்தியதேன்படுஞ்சூழலெலாநனிமாந்தர்விழை
கந்தநிலாங்கடந்தாழ்கரிபோங்கனிவீழ்ந்தழியும்.

(இ-ள்.) சந்தனம் ஆர் தட சாரல் எலாம் நனி மாந்தர் விழை கந்தம் நிலாம்- சந்தனமரங்கள் நிறைந்த விசாலித்த மலைப்பக்கங்களெல்லாம் மிகவும் மனிதர் விரும்பும் மலர்வாசனை விளங்கும், தனி வான் அளவும் கொந்து அலர் வீ நெடுமை காவின் எல்லாம் கடம் தாழ் கரிபோம் - ஒப்பற்ற ஆகாயத்தை யளாவிய பூங்கொத்தின்கண் அலர்ந்த பூக்களையுடைய நெடிய சோலைகளிலெல்லாம் மதமொழுகாநின்ற யானைகள் சஞ்சரிக்கும், சூழல் எல்லாம் குனி மாந்தரு இன் நந்திய தேன் படும் கனி வீழ்ந்து அழியும் - அம்மலையினிடமெல்லாம் (கனிப்பொறையால்) தலைவளைந்த மாமரங்களினது மிகுந்த தேன் பொருந்திய கனிகள் சிந்தி அழியும்.

இத்தொடர்கொண்டு கூட்டிப்பொருள்கோள். (௨௪)

இக்கவியுட்பிரித்தசெய்யுள்கள்.

சந்தனமார்-கொந்தலர்வீ
நந்தியதேன்-கந்தநிலாம்.

(இ-ள்.) சந்தனம் ஆர் - சந்தனவிருக்ஷத்தில்நிறைந்த, கொந்து அலர் வீ - பூங்கொத்துகளில்மலர்ந்த மலர்களாலும், நந்தியதேன் - அம்மலரில் உண்டாகிய தேனாலும், கந்தம்நிலாம் - வாசம் எங்கும் பரவும். (௧)

தடஞ்சாரலெலாம்-நெடுங்காவினெலாம்
படுஞ்சூழலெலாம் கடந்தாழ்கரிபோம்.

(இ-ள்.) தடசாரல் எல்லாம் - பெரிய மலைப்பக்கங்களெல்லாவற்றிலும், நெடும் காவின் எல்லாம் - நெடிய சோலைகளெல்லாவற்றிலும், படும் சூழல் எல்லாம் - அவற்றினயலிலமைந்த மரச்செறிவுகள் எல்லாவற்றிலும், கடம் தாழ் கிரி போம் - மதந்தங்கிய யானைகள்செல்லும். (௨)

தனிவானளவும்-குனிமாந்தருவின்
நனிமாந்தர்விழை-கனிவீழ்ந்தழியும்.

(இ-ள்.) தனிவான் அளவும் - ஒப்பில்லாத விண்ணுலகை யளாவும், குனிமாந்தருவின்-கனிப்பொறையால்வளைந்த மாமரத்தினது, நனிமாந்தர்விழை - மிகவும் மானிடர்விரும்பும், கனிவீழ்ந்து அழியும் - கனிகள் அங்குவீழ்ந்து அழியாநிற்கும். (௩)

நாம் இச்சித்திரகவிகட்கு உரையெழுதி யச்சிட்டகாலையில் சோர்வால் கட்டளைக்கலித்துறை யெனவந்த வழு, பிழைதிருத்தத்திலடங்காததோர் பெருவியப்பு.

பிறிதுபடுபாட்டு.

ஒருசெய்யுள் அடியையுந் தொடையையும் வேறுபடுப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறொரு செய்யுளாய் வருவது.

கலிவிருத்தம்.

ஆன்றார்ந்தகாவினளியாடுபூந்தேன்
மான்றீன்றவோன்மணியீர்ங்கவுண்மாச்
சான்றோங்குகாட்டிற்றயங்குமணிமுத்தோ
டேன்றார்ந்துநாட்டினடக்கவெழுமார்த்து.

(இ-ள்.) ஆன்று ஆர்ந்த காவின் அளி ஆடு பூ தேன் - பெருமை அமைந்து நிறைந்த சோலையிலுள்ளவண்டுகள் திளைத்தாடாநின்ற - பூவினின்றொழுகுந் தேன்பெ

ருக்கானது, வேரல் மான்று ஈன்ற மணி - மூங்கில்கள் ஒன்றோடொன்று தாக்குதலா ல்சிந்திய முத்துக்களை, ஈரம் கவுள் மா சான்று ஓங்கு காட்டில் தயங்கு மணி முத்தோடு- மதத்தாற்குளிர்ந்த கபோலத்தையுடைய யானைகளால் நிறைந்தோங்கிய முல்லைநிலத் தில்விளங்கு முத்துகளோடு, என்று ஊர்ந்து நாட்டின் நடக்க ஆர்த்து எழும் - வாரிச் சென்று கோஷித்து மருதநிலத்திற்செல்ல எழாநிற்கும்.

மான்று மால் என்னும் பண்படியாகப் பிறந்த வினையெச்சம்.

வேறுபடுப்ப ஒழுகிசைச்செப்பலோசைத்தாய் ஈராசிடையிட்டு இரு குறளிரு விக ற்பத்தானடந்து காசென்னுவாய்பாட்டாலிற்ற நேரிசைவெண்பாவாய் வந்தசெய்யுள்.

"ஆன்றூர்ந்தகாவினளியாடுபூந்தேன்மான்
றீன்றவேரன்மணியீர்ங்கவுண்மா - சான்றோங்கு
காட்டிற்றயங்குமணிமுத்தோடேன்றூர்ந்து
நாட்டினடக்கவெழுமார்த்து"

கலிவிருத்தத்திற்குக்கூறிய பொருளே இவ்வெண்பாவிற்குங் கொள்க. (உ௫)

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

இனையவளம்பலபெற்றுநீடியிம்பருமும்பருமேத்தவாய்ந்து [க்
கனைமலர்க்காவுமருங்குடுத்துநளிர்மழைப்போர்வைதன் மெய்யிற்போர்த்து
கனைகதிர்ப்பன்மணிச்சென்னிமேல்வான்கங்கைதலைசசுற்றுமானவோங்கிப்
புனைபுகழ்மல்கவரசுவைகும்பொற்பமர்மந்தரவெற்பின்மாதோ.

(இ-ள்.) இனைய பலவளம்பெற்று நீடி - இதுபோலும் பலவளங்களையும் பெ ற்றோங்கி, இம்பர் உம் உம்பர் உம் ஏத்தவாய்ந்து - மண்ணுலகமும் விண்ணுலகமுந் துதிக்க வமைந்து, நனைமலர் காவு மருங்கு உடுத்து - கள்ளொழுகு மலரையுடைய சோலையாகிய ஆடையை மருங்கிலுடுத்து, நளிர்மழை போர்வை தன்மெய்யில்போர்த் து - குளிரும் மேகமாகியபோர்வையைத் தனது உடம்பில்போர்த்து, கனை கதிர் பல் மணி சென்னிமேல் - மிக்ககிரணம்வாய்ந்த பல இரத்தினங்கள்நிறைந்த சென்னியின் மேல், வான் கங்கை தலைச்சுற்றுமான ஓங்கி - ஆகாயகங்கை தலைச்சாத்தைஒப்ப உயர்ந் து, புனைபுகழ் மல்க அரசு வைகும் பொற்பு அமர் மந்தரவெற்புஇல் - மேற்கொண்ட புகழ்நிரம்ப அரசியல்செய்திருக்கும் பொலிவுநிறைந்த மந்தரமலையில்.

மந்தரமலை சோலைகளாற்சூழப்பட்டு மேகந்தவழ ஆகாயகங்கையைத் தோயவி ருத்தலை, சோலையை ஆடையாகவும், மேகத்தைப் போர்வையாகவும், ஆகாயகங்கையை த் தலைச்சாத்தாகவுங் கவி அத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்ற வுவமையணி.

ஆருயிர்யாவையுமுய்யுமாற்றாலற்புதமேனியெடுத்துநின்று
பேரருளைந்தொழிலாட்டுகந்தபிஞ்ஞகன்கந்தனைநல்கவேண்டிச்
சீரிமயத்துமடப்பிடியைத்திருமணஞ்செய்தபினெய்தியங்க
ணேரியலந்தப்புரத்தின்மன்னியின்பக்கலவிடைாத்தலுற்றான்.

(இ-ள்.) ஆர் உயிர் யாவை உம் உய்யும் ஆறு ஆல் - நிறைந்த பிரமன்முதலிய ஆன்மகோடிகளெல்லாம் பிழைக்கும் வகையால், அற்புதம் மேனி எடுத்து நின்று-ஞான மே திருமேனியாகக்கொண்டு நின்று, பேர் அருள் ஐந்தொழில் ஆட்டு உகந்த பிஞ்ஞகன்- தனதுபெருங்கருணையால் சிருட்டிமுதலிய வைந்தொழில்களை விளையாட்டாகவிரும்பிய விறைவன், கந்தனை நல்கவேண்டி சீர் இமயத்து மடமைபிடியைதிருமணஞ்செய்தபின்- தேவர்கள் இடையூற்றைநீக்க முருகக்கடவுளைத் தந்தருளவிரும்பிய சிறப்புவாய்ந்த இம

மலையிற்றோன்றிய இளமைவாய்ந்த பெண்யானையையொத்த உமையம்மையைத் திருமணஞ்செய்தபின்பு, அங்கண் எய்தி ஏர் இயல் அந்தப்புரத்தில் மன்னி இன்பம் கலவி நடாத்தல் உற்றான் - அம்மந்தரமலையை அடைந்து அழகமைந்த அந்தப்புரத்தினைப் பொருந்தி இன்பமமைந்த புணர்ச்சிசெய்யத் திருவுளங் கொண்டருளினான்.

திருமால்முதலிய பல்லுயிர்களும் சூரபன்மன்முதலிய அசுரர்கள்செய்யு மிடையூற்றினின்று நீங்கியுய்யும்வண்ணம் உமையம்மையோடு அந்தப்புரத்திலுற்றார் என்பார் ஆருயிர்யாவையு முய்யுமாற்றால் ஏரியலந்தப்புரத்தின் மன்னியின்பக்கலவிநடாத்தலுற்றான் எனவும், நிஷ்களவடிவமாகிய சுத்தசிவம் ஆன்மாக்களுக்குப் பந்தம் அருளுதற்பொருட்டு ஞானவடிவமாகிய பராசத்தியையே திருவுருவாகச் சகளீகரித்துச் சிருட்டிமுதலிய ஐந்தொழில்களைக் கொண்டருளினர் என்பார் அற்புதமேனியெடுத்து நின்று பேரருளைந்தொழிலாட்டுகந்த பிஞ்ஞகன் எனவுங் கூறினார்.

திருமால்முதலியோர் அசுரர்களிடையூற்றினின்று நீங்குதற்பொருட்டே என்

" புங்கவர்யாவரும்பொருமல்கொள்ளலீர்
உங்கடம்பொருட்டிலவ்வோங்கல்வைகிய
மங்கையைமணந்துநும்வருத்தநீக்குதும்
இங்கினியாவருமேகுகென்றனன் " எனவும்.

பராசத்தியே திருவுருவாகச் சகளீகரித்து என்பதை—

" பொன்மைநீலாதிவன்னபொருந்திடப்பளிங்கவற்றின்
தன்மையாய்நிற்குமாபோற்சத்திதன்பேதமெல்லாம்
நின்மலன்றானாய்த்தோன்றிநிலைமையொன்றாயேநிற்பன்
முன்னாட்சத்திதன்பால்முகிழ்க்குந்தான்முளையானன்றே" எனச்சித்தியாரிலும்வருதல் காண்க.

கந்தன் ஆறுதிருவுருவங்களு மொன்றாகத் திரட்டப்பட்டவனென்னும்பொருமேல்நிற்றலால் காரணப்பெயர்.

" சேயவன்வடிவமாறுந்திரட்டிநீயொன்றாச்செய்தா
யாயதனாலேகந்தனுமெனுநாமம்பெற்றான் " எனவும், கந்தபுராணத்தில் வருதல்காண்க. (உஎ)

வண்டிமிர்கூந்தலிமயவல்லிவனமுலைநாக்கமகிழ்ந்துபுல்லிக்
கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றுப்பன்னாட்கலவிப்பெருநலந்துய்க்குங்காலை
யண்டருணர்ந்துவெருவியஞ்சியம்பிகைதன்பாற்கருப்பவீறு
கொண்டிடுமுன்னஞ்சிதைவுசெய்யுங்கொள்கையினங்கியையேவினார்கள்.

(இ-ள்.) வண்டு இமிர் கூந்தல் இமயவல்லி வனம் முலை தாக்க மகிழ்ந்து புல்லி - வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையுடைய உமையம்மையின் சந்தனக்கோலமணிந்த தனங்கள் திருமார்பிலழுந்த மகிழ் கூர்ந்து தழுவி, கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று பல் நாள் கலவி பெருநலம் துய்க்கும் காலை - கண்டுகேட்டுண்டுயிர்த்துப் பரிசித்துப்பலநாளும் புணர்ச்சியால்வரும் மிக்கவின்பத்தைத் திளைக்குங்காலையில், அண்டர் உணர்ந்து வெருவி அஞ்சி அம்பிகை தன் பால் கருப்ப வீறு கொண்டிடுமுன்னம்-திருமான்முதலியதேவர்கள்உணர்ந்து வாய்புலர்ந்து பயந்து உமையம்மையினிடத்துக் கருப்ப வீறு கொள்வதற்குமுன், சிதைவு செய்யும் கொள்கையின் அங்கியை ஏவினார்கள் - அதனையழிக்குங் கோட்பாடுடைமையால் தீக்கடவுளையேவினார்கள்.

சிவபெருமான் வீரியத்தைத் தாம்பருகுங் கருத்தினராதலாலும், தீக்கடவுள் அவ்வியவாகனன் ஆதலின் அவன் வாய்ப்படுவது தம்வாய்ப்படுவதாதலாலும் அத்தீக்கடவுளையேவினாராதலால் அங்கியையேவினார்கள் என்றார். அம்மையைத் திருமணம்புணர்ந்தபின் தேவர்கள் வேண்டுகோளால் பண்டுள்ள ஆறுதிருமுகங்களோ டெழுந்தருளினர், அத்திருமுகங்களாறிலுமுள்ள ஆறு நெற்றிக்கண்களினின்றும் ஆறுதீப்பொறிகள் தோன்றி யாவையுந்தகிக்க, அதற்கஞ்சிச்சரணடைந்த தேவர்க்கு அஞ்சலினொன்று அபயந்தந்து தீக்கடவுளையும் வாயுவையும் அழைத்து அவர்கள் பாற்கொடுத்துக் கங்கையில் விடுகவெனக் கட்டளையிட்டருள, அவர்கள் சுமந்துசென்று கங்கையில்விட்டனரெனக் கந்தபுராணத்திற் கந்தருற்பத்திசொல்லி யிருக்கின்றது, இது வேறுபடுதல் கற்பபேதத்தால் எனவுணர்க. (உஅ)

ஏவலுமங்கிமற்றங்கணேகியெம்பெருமான்கோயில்வாயின்முன்னர்த்
தேவியுகைக்குமடங்கல்வைகுஞ்செய்கையைநோக்கிநடுங்கிமீண்டு
மேவியவிண்ணோர்குழாத்தைநண்ணிவினவுமவர்க்குவிளைந்ததோதி
நீவிர்களேயவணெய்தியூறுநிகழ்த்திடுமின்களெனக்கரைந்தான்.

(இ-ள்.) ஏவல் உம் அங்கி அங்கண் ஏகி - ஏவ அத்தீக்கடவுள் மந்தரகிரியிற் சென்று, எம் பெருமான் கோயில் வாயின் முன்னர் தேவி உகைக்கும் மடங்கல் வைகும் செய்கையை நோக்கி நடுங்கி மீண்டு - எமதுபெருமான் திருக்கோயில்வாயிலின்முன்னே உமையம்மை ஊர்தியாகநடத்துஞ் சிங்கம் செருக்கோடுவீற்றிருக்குஞ் செய்கையைப்பார்த்து நடுக்கங்கூர்ந்து திரும்பி, மேவிய விண்ணோர் குழாத்தை நண்ணி - தன்னைவிரும்பியேவிய அத்திருமால்முதலிய தேவர்கூட்டத்தையடைந்து, வினவுமவர்க்கு விளைந்தது ஓதி - தான்சென்றசெய்தியை வினவிய அத்தேவர்களுக்குநிகழ்ந்த செய்தியைக்கூறி, நீவிர்களே அவண் எய்தி ஊறு நிகழ்த்திடு மின்கள் என கரைந்தான் - நீங்களே அவ்விடத்தடைந்து இடையூற்றைச்செய்யுங்கள் என்று அவ்வக்கினிகூறினான். ()

அரியயனாதியமரரெல்லாமம்மொழிகேட்டுளழுங்கிநொந்து
பெரிதுயர்மந்தரப்பாங்கரெய்திப்பேணிநிலமிசைவீழ்ந்திறைஞ்சி
யுரியமுறையிற்பழிச்சிநின்றேயோலிடுமாற்றமுணர்ந்துநம்மான் [ண்
றெரிவையொடாடுமெ புணர்ச்சிநாப்பட்சென்றனன்வெற்றரையோடு மங்க

(இ-ள்.) அரி அயன் ஆதி அமரர் எல்லாம் அ மொழி கேட்டு உள் அழுங்கி நொந்து - திருமால் பிரமன்முதலிய தேவர்கள்யாரும் அந்த வார்த்தையைக்கேட்டு மனம்வருந்தி நொந்து, பெரிது உயர் மந்தரம் பாங்கர் எய்தி - மிகவும் உயர்ந்த மந்தரமலையின் பக்கத்தையடைந்து, நிலமிசை பேணி வீழ்ந்து இறைஞ்சி உரிய முறையின் பழிச்சிநின்று ஓலிடுமாற்றம் உணர்ந்து-நிலத்தின்மேல்விரும்பித் தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கித் தத்தமக்குரிய முறையோடு துதித்துநின்ற முறையிடும் வசனத்தை, நம்மான் உணர்ந்து தெரிவை ஒடு ஆடும் புணர்ச்சி நாப்பண் வெற்றரையோடும் அங்கண் சென்றனன்-நமதிறைவனுணர்ந்து உமையம்மையோடு கலந்துநிற்கும் புணர்ச்சிக்கிடையில் வெற்றரையோடும் அத்தேவரிடத்துச் சென்றனன்.

தாங்கள் நிற்குமுறையில்நின்று துதித்தனர் என்பார் உரியமுறையிற் பழிச்சிநின்று என்றார். (௩0)

கண்டனர்காமனைச்செற்றகோவைக்கழிபெருங்காதல்கரையிகப்பப்
புண்டரிகக்கண்முகுந்தன்வாசப்பூந்தவிசாளியுருத்திரர்க

ளண்டர்மருத்துவர்சாத்தியர்களனைவருமெல்லையிலன்புபொங்கிச்
கொண்டமயிர்ப்புளகங்கண்மல்கக்குவித்தகரத்தொடுமேத்தலுற்றார்.

(இ-ள்.) காமனை செற்ற கோவை கண்டனர் - மன்மதனைப்பொடித்த விறைவனைக்கண்டு, கழி பெரும்காதல் கரை இகப்ப புண்டரீகம் கண் முகுந்தன் வாசம் பூம் தவிசு ஆளி உருத்திரர்கள் அண்டர் மருத்துவர் சாத்தியர்கள் அனைவரும் எல்லை இல் அன்பு பொங்கி-மிக்கபெரிய ஆசைவரம்புகடந்து செல்லத்தாமரைமலரையொத்த கண்களையுடைய திருமாலும்வாசமிக்க தாமரையை ஆசனமாகவுடையபிரமனும் பதினொருகோடி உருத்திரர்களும் தேவர்களும் மருத்துவர்களும் சாத்தியர்களுமாகிய எல்லோரும் அளவில்லாத அன்புமீதூர்தலால், கொண்டமயிர்ப் புளகங்கள்மல்க குவித்த கரத்தொடும்ஏத்தல் உற்றார் - தமது உடம்பிலரும்பிய புளகங்கள் நிரம்பக்கூப்பிய கையோடுந்துதிக்கத் தொடங்கினார்கள்.

பாகம் பெண்ணோடாதல் ஆன்மாக்களின்பொருட்டே, தனக்கெனச் சிறிதும் வேண்டாதவன் என்பார் காமனைச்செற்ற கோவை என்றார். (௬௧)

வெள்விடைபூங்கொடிமீதுவைத்துவென்றிமழுப்படையேந்திவஞ்சக்
கள்ளர்கருத்தினகப்படாதகண்ணுதற்சாமிநின்றாளிணையி
லள்ளலளக்கரமிர்தந்தன்னாற்பூசனையாற்றியமிர்தரானே
மெள்ளருமாமலரிட்டிறைஞ்சிச்சுமனரென்னும்பெயரெய்தினேமால்.

(இ-ள்.) பூம் கொடி வெள் விடை மீ வைத்து வென்றிமழுபடை ஏந்திவஞ்சம் கள்ளர் கருத்தில் அகப்படாத கண்ணுதல் சாமி - பொலிவமைந்த கொடியின்மேல் வெள்ளிய இடபம் நிலைபெறவைத்துவெற்றிவாய்ந்த மழுவாயுதத்தையேந்தி வஞ்சமுங் கள்ளமுமுடையோர் இதயத்திலகப்படாத நெற்றிக்கண்ணையுடைய சுவாமியே, நின் தாள் இணை இல் அள்ளல் அளக்கர் அமிர்தம் தன்னால் பூசனை ஆற்றி அமிர்தர் ஆனேம்- உனது இரண்டு திருவடியிலும் சேற்றையுடைய கடலிற்றோன்றிய அமிர்தத்தாற்பூசனை செய்து அமிர்தரெனப் பெயர்பெற்றோம், எள் அரும் மாமலர் இட்டு இறைஞ்சி சுமனர் என்னும் பெயர் எய்தினேம் - விலக்கில்லாத பெருமைகொண்ட மலர்கொண்டருச்சித்துவணங்கிச் சுமனர்என்னும் பெயரையும் அடைந்தேம்.

தேவர்களுக்கு அமிர்தர் சுமனர் எனவந்த பெயர்க்காரணங்கூறினார். சுமனர் நல்லமனமுடையவர். அசுரர்கள் தங்களை நன்குமதித்தலால் உன்னை வழிபடுங்கருத்திலர் என்பார் வஞ்சக்கள்ளக் கருத்தினகப்படாத கண்ணுதற் சாமியெனவும், அவர்கள் செய்யுந் துன்பத்தினின்று நீங்குதற்கு என்றும் வழிபடுதலுடைமையால்வந்த காரணப் பெயருடையேம் என்பார் அமிர்தரானேம் சுமனரொனும் பெயர் எய்தினேம் எனவும், அவர்கள் செய்யும் துன்பத்தினை யொழித்தருளாய் என்பார் வெள்விடை பூங்கொடிமீதுவைத்து வென்றிமழுப்படை யேந்தியெனவுங் கூறினார். (௬௨)

ஆழியுடைப்புவிமீதொர்சிற்றூராள்பவர்தம்மையடுத்தவருந்
தாழ்வருமின்பமகிழ்ச்சியெய்தித்தகைபெறவாழுகின்றார்களென்னிற்
பாழியுயாகிலாண்டகோடிப்பரப்புமுழுதுமரசுசெய்யு
மாழைவிழியுமைபாகநின்னைவந்தடுத்தேங்களுக்கென்குறையே.

(இ-ள்.) ஆழி யுடைய புவி மீது - கடலையாடையாகவுடைய நிலவுலகின்மேல், ஒரு சிற்றூரை ஆள் பவர் தம்மை அடுத்தவர் உம் தாழ்வு அரும் இன்பம் மகிழ்ச்சி எய்தி - ஒரு சிற்றூரை யாள்பவரையடுத்தவர்களும் குறைதலில்லாத இன்பத்தை

யும் மகிழ்ச்சியையுமடைந்து, தகை பெற வாழுகின்றார்கள் என்னில் - பொலிவுபெற வாழுகின்றார்களானால், பாழி உயர் அகிலாண்டகோடி பரப்பு முழுது உம் - மிகவும் உயர்ந்த அகிலாண்டகோடிப் பரப்புமுற்றும், அரசு செய்யும் மாழை விழி உமைபாக - அரசியல்செய்யும் மாவடுவின் பிளவையொத்த கண்களையுடைய உமாதேவியை இடப் பாகத்திலுடையவனே, நின்னைவந்து அடுத்தேங்களுக்கு குறை என் - நின்னைவந்தடுத்த எங்களுக்குக் குறையாது.

சிற்றரசாள்வோரையும் அண்டகோடிகளாள்வாரையும் அடைந்தோர் பெறும் பயனுக்குப் பிம்பப் பிரதிபிம்ப பாவங்கூறுதலால் முரணெடுத்துக் காட்டுவமையணி.

துறந்தவருள்ளக்கமலமேவுஞ்சோதித்திருவுருபோற்றிபோற்றி
மறந்திகழ்வோரையெறிந்துவீசுமறந்திகழ்வாட்படையாளிபோற்றி
யுறாந்தமலர்ப்பதம்போற்றியாங்களுன்றனடைக்கலங்கண்டுகொள்ளென்
றறந்தலைநின்றவமரர்போற்றவங்கணனோக்கியருள்சுரந்து.

(இ-ள்.) துறந்தவர் உள்ளம் கமலம் மேவும் சோதி திரு உரு போற்றி போற்றி - பற்றிகந்தோர் இதயமாகிய தாமரையிலெழுந்தருளிய பிரகாசவடிவாயுள்ளவனே வந்தனம், மறம் திகழ் வோரை எறிந்து வீசும் மறம் திகழ் வாள் படை ஆளி போற்றி - தனக்குப் பகையாயினோரைக் கொன்றுதுணிக்கும் கொலைத்தொழிலால் விளங்கும் ஒள்ளிய சூலப்படைமுதலிய ஆயுதங்களையுடையவனே வந்தனம், உறந்த மலர் பதம் போற்றி - அனுக்கிரகத்தில்மிக்க தாமரைமலரையொத்த திருவடிக்குவந்தனம், யாங்கள் உன்தன் அடைக்கலம் கண்டு கொள் என்று அறம் தலை நின்ற அமரர் போற்ற - நாங்கள் உனதடைக்கலம் கண்டுகொள்ளாயென்று தருமத்தின் தலைநின்ற திருமால்முதலியதேவர்கள் துதிக்க, அங்கணன் நோக்கி அருள்சுரந்து - சிவபெருமான் நோக்கி அருள்கூர்ந்து.

பவன் என்னும் பெயர்க் காரணங்கூறுவார் துறந்தவருள்ளக் கமலமேவுஞ் சோதித்திருவுரு போற்றியெனவும், சூலாயுதமுதலியவற்றை யேந்துதல் பாவத்தின் வழிநிற்போரை யொறுத்தற்கு எனக் கூறுவார் மறந்திகழ்வோரை யெறிந்துவீசு மறந் திகழ்வாட்படை போற்றியெனவும், அறத்தின்வழி நிற்போர்க்கு நீ யருள்வாயெனக்கூறுவார் யாங்களுன்றனடைக்கலங்கண்டுகொள் ளென்றறந்தலை நின்றவமரர் போற்றவெனவுங் கூறினர். (௩௪)

வேண்டுவகூறுமினுங்கட்கின்னேமேவரநல்குதுமென்றருள
வீண்டியமாயனையுள்ளிட்டோர்தம்மேவலினான்முகனேத்தியெந்தாய்
மாண்டமலைமகள்பாற்கருப்பம்வாய்ப்பதுவேண்டிலர்மான்முலோர்
காண்டகவந்தனர்மேலியற்றுங்கடனறியேங்களெனக்கரைந்தான்.

(இ-ள்.) வேண்டுவ கூறுமின் நுங்கட்கு இன்னே மே வரம் நல்குதும் என்று அருள - வேண்டுவனவற்றைச் சொல்லுங்கள் உங்களுக்கு இப்பொழுதே விரும்பும் வரத்தைத் தந்தருள்வோமென்று அருள்செய்ய, ஈண்டிய மாயனை உள்ளிட்டோர் தம் ஏவலின் - நெருங்கிய திருமாலைஉள்ளிட்ட தேவர்களினது ஏவலினால், நான் முகன் ஏத்தி எந்தாய் மாண்ட மலைகள் பால் கருப்பம் வாய்ப்பது மால் முதலோர் வேண்டிலர் காண்டக வந்தனர் - பிரமன்வணங்கி என்தந்தையே மாட்சிமைப்பட்ட உமையம்மையினிடத்துக் கருப்பம்வாய்த்தலைத் திருமால்முதலியோர் விரும்பாது தேவரீரைக்காணவந்தார்கள், மேல் இயற்றும் கடன் அறியேங்கள் என்ன கரைந்தான் - இனித் தேவரீர்செய்தருளும் கடமையை யாங்களறியோம் எனக்கூறினான்.

கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அந்நிதா கர்த்தத்துவமென்னும் பிரபுத்துவ சாமர்த்திய குணமுடையோய் என்பார் மேலியற்றுங் கடனாறியேங்களெனக் கரைந்தார் என்றார். அவையாவன ஆன்மாக்கள் நினைத்த வொன்று கைகூடாது வேறொன்று கைகூடுதலும், நினைத்த அதுவேவந்து கைகூடுதலும், நினையாத வொன்று கைகூடுதலும் ஆம்.

> "ஒன்றைநினைக்கினதுவொழிந்திட்டொன்றாகும்
> அன்றியதுவரினும்வந்தெய்தும் - ஒன்றை
> நினையாதமுன்வந்துநிற்பினுநிற்கும்
> எனையாளுமீசன்செயல்" என ஔவையார் அருளிய திருவாக்கால்

உணர்க. (௯௫)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

> தனக்கெனச்சிறிதும்வேண்டாத்தன்மையனுயிர்கட்கென்றே
> நினைப்பருநடனம்பூண்டநின்மலனற்றேலிந்தப்
> பனித்தமுத்துருகியன்னவெண்புனல்பருகுமின்க
> ளெனப்புகன்றருளவல்லேயெரியிறையங்கையேற்றான்-

(இ-ள்.) தனக்கு என்ன சிறிதும் வேண்டாத தன்மையன் - தனக்கென்று ஒரு பொருளையும் வேண்டாத தன்மையையுடையவனாய், உயிர் கட்கு என்றே நினைப்பு அரும் நடனம் பூண்ட நின்மலன் - உயிர்களின்பொருட்டே சங்கற்பமொழிந்த திருவிளையாடலை மேற்கொண்ட நின்மலனாகிய இறைவன், அற்றேல் - அத்தன்மைத்தாயின், இந்த பனித்தமுத்துஉருக்கினால் அன்ன வெண் புனல் பருகுமின்கள் என்ன புகன்று அருள - இந்தக் குளிர்ந்தமுத்தினை யுருக்கினாலொத்த வெள்ளியபுனலை உண்ணுங்களென்று கூறியருள, எரி இறை அங்கை வல்லே ஏற்றான் - அக்கினிக்கடவுள் விரைந்து உள்ளங்கையிலேற்றினன்.

ஆன்மாக்களைப்போல விருப்பு வெறுப்புச்சார்தலில்லாத நின்மல சொரூபனாதலால் தனக்கெனச் சிறிதும் வேண்டாத்தன்மையன் எனவும், தன்னைவிட்டு நீங்கித் தனித்தொருமுதலாய் நிலவாத உயிர்களுக் கோருயிராய் உடனிற்றலில் அவ்வுயிர்களுக்குத் தனதாணையால்வரும இருவினைப்பயன்களை நுகர்வித்தற்குப் பஞ்சகிருத்தியங்களை நடத்துதலால் உயிர்கட்கென்றே நினைப்பரு நடனம்பூண்டநின்மலனெனவுங் கூறினார்.

> எண்ணரும்வருடங்காறுமாயிரவிரவிப்பொற்பி
> னண்ணல்பானின்றுவீழுமதனையவ்வனலோனுண்ண
> விண்ணவரெவர்க்குமந்நாண்மேவருங்கருப்பநீடத்
> துண்ணெனத்துளங்கிவெப்புநோயினிற்றொடக்குண்டார்கள்.

(இ-ள்.) எண் அரும் வருடம் காறும் இரவி பொற்பின் அண்ணல் பால் நின்று வீழும் அதனை - வரையறுத்தற்கரிய தேவவருடங் காறும் ஆயிரஞ் சூரியர்கள் உதயமானதுபோன்ற பொலிவோடு சிவபெருமானிடத்து நின்று வீழும் அவ்வெண்புனலை, அ அனலோன் உண்ண - அத்தீக்கடவுளுண்ண, விண்ணவர் எவர்க்கும் அந்நாள் மேவரும் கருப்பம் நீட துண்ணென துளங்கி வெப்பு நோயினில் தொடக்குண்டார்கள்- திருமால்முதலிய தேவர்களெவர்க்கும் அடைதற்கரியகருப்பம் ஓங்கவிரைந்து நடுங்கிச் சுரநோயில் கட்டுண்டார்கள்.

அக்கினிதேவன் தங்களவ்விய வாகனனாதலால் அவன் பருகியது தாங்கள் பருகியதாதலில் அவ்வனலோனுண்ண விண்ணவரெவர்க்கு மந்நாண்மேவருங் கருப்பநீட என்றார். (௯௬)

மீளவுமிரந்துவேண்டும்விண்ணவர்குழாத்தைநோக்கி
வாளெனப்பிறழ்ந்துநீண்டுமதர்த்தரிபரந்துகூற்றை
யாளெனக்கொண்டுமைதோய்ந்தகல்விழிச்சேனைவில்வேட்
காளையைமுனிந்தவீரன்கருணையால்விளம்பலுற்றான்.

(இ-ள்.) மீளவும் இரந்து வேண்டும் விண்ணவர் குழாத்தை - மீளவும் இரந்து வேண்டிய தேவர்கூட்டத்தை, வாள் என்ன பிறழ்ந்து நீண்டு மதர்த்து அரிபரந்து கூற்றை ஆள் என்ன கொண்டுமை தோய்ந்து அகல் விழி சேனை வில் வேள் காளை முனிந்த வீரன் நோக்கி - வாளைப்போலப்பிறழ்ந்து நீண்டு மதர்த்துச் செவ்வரிபரந்து இயமனை யடிமையாகக்கொண்டுமை யெழுதப்பட்டுப் பரந்த கண்களையுடைய பெண்களாகிய சேனையையும் வில்லையையுமுடைய மன்மதனை நீறுக்கிய இறைவன் பார்த்தருளிக் கருணையோடு சொல்லத்தொடங்கினன்.

இயமனுக்குக் கொலைத்தொழிலைப் பெண்கள் கண்கள் கற்பித்தனஎன்பார் கூற்றையாளெனக்கொண்டு என்றார். மை தோய்ந்த கல்விழிச்சேனையென்றது சிறப்புருவகவணி காமனையெரித்த வரலாற்றை முன்னர்க்கூறினும் அங்குக்காண்க. (சுஅ)

கராத்துயிர்பருகிவேழங்காத்தவன்முதலாநீவிர்
பராய்த்தொழுங்காஞ்சிவைப்பிற்பயில்சுரகரீசமென்னச்
சுராக்கனுமவுணனாவிதொலையநாமமைத்ததான
மிராக்கதிரெறிக்குமிந்துமுடிநமக்கினியசூழல்.

(இ-ள்.) கராத்து உயிர் பருகி வேழங் காத்தவன் முதல் ஆம் நீவிர் - முதலையினது உயிரைப்பருகிக் கஜேந்திரனென்னும் யானையைக்காத்த திருமான்முதலாகவுள்ள நீங்கள், பராய் தொழும் காஞ்சி வைப்பில் பயில் சுரகரீசம் என்ன - துதித்துவணங்கும் காஞ்சியென்னுந் திருப்பதியிலமைந்த சுரகரீசமென்று, சுராக்கன் ஆம் அவுணன் ஆவி தொலைய - சுராக்ஷனாகிய அசுரனுடையவுயிர்கழிய, நாம் அமைத்த தானம் - நாமமைத்தருளிய திருப்பதி, இரா கதிர் எறிக்கும் இந்து முடி நமக்கு இனிய சூழல் - இரவில் கிரணத்தைவீசும் இளஞ்சந்திரனையணிந்த சடாமுடியையுடைய நமக்கு இனிய இடமாம்.

சுர அக்கன் சுராக்கன் எனவந்தது. கராத்துயிர் இடையில்வந்த அத்துச்சாரியையின் அகரவுயிர் கெடவந்தது. (சுகூ)

சுரகரீசத்தின்பாங்கர்ச்சுரகரதீர்த்தமுண்டால்
விரவிநீர்படிந்தோர்பாவவெப்புநோய்முழுதுநீங்கு
மிரவிநாள்கழியநன்றாநீரவணெய்திநம்மைப்
பரவிநீராடிவிந்தவெப்புநோய்பாறுங்காண்மின்.

(இ-ள்.) சுரகரீசத்தின் பாங்கர் சுரகரதீர்த்தம் உண்டு - சுரகரதீர்த்தத்தின்பக்கத்தில் சுரகர தீர்த்தமென்றொன்றுண்டு, நீர் விரவி படிந்தோர் பாவ வெப்பு நோய் முழுதும் நீங்கும் - அத்தீர்த்தத்தில் கலந்து நீராடினோர் பாவமும் சுரநோயும் முற்றுங்கழியும், இரவி நாள் கழிய நன்று ஆம் - ஞாயிற்றுக்கிழமையில் மிகவும் நல்லதாம், (ஆதலால்) நீர் அவண் எய்தி நம்மைபரவி நீராடில் - நீங்கள் அவ்விடத்தில் சென்று நம்மைவணங்கி யத்தீர்த்தத்தில் மூழ்கினால், இந்த வெப்பு நோய் பாறும் காண் மின்-இந்தச்சுரநோய் கெடும்பாருங்கள். (சுo)

ஆயிடைநீங்கிப்பின்னர்மேருவையணுகியங்கண்
மேயவிக்கருப்பந்தன்னைவிடுமினென்றகன்றுநீங்க
மாயனேமுதலாம்விண்ணோர்மகிழ்ந்தெழுமுள்ளத்தோடுந்
தூயசீர்க்காஞ்சியெய்திச்சுரகரந்தன்னைக்கண்டார்.

(இ-ள்.) ஆயிடை நீங்கி பின்னர் மேருவை அணுகி அங்கண் மேய இ கருப்பம் தன்னை விடுமின் என்று அகன்று நீங்க - அச்சுரகரத்தினின்று நீங்கிப் பின்பு மேருகிரியையடைந்து அவ்விடத்துப் பொருந்திய இக்கருப்பத்தை விடுங்களென்று அவரினின்றும்பிரிந்து நீங்கியருள, மாயனே முதல் ஆம் விண்ணோர் மகிழ்ந்து எழும் உள்ளத்தோடும் தூய சீர் காஞ்சி எய்தி சுரகரம் தன்னைகண்டார் - திருமாலுள்ளிட்ட தேவர்கள் மகிழ்ச்சிமீதூர்ந்தோங்கிய மனத்தோடும் புனிதமாகிய சிறப்புவாய்ந்த காஞ்சித்திருப்பதியை அடைந்து சுரகரீசத்தைக் கண்டார்கள்.

தாமடைந்த வெப்புநோய்க்குத்தீர்வருளப் பெற்றனராதலால் மகிழ்கூர்ந்தனர் ஆதலின் மகிழ்ந்தெழு முள்ளத்தோடும் என்றனர். (௪௬)

காண்டலுமுவகைபொங்கிச்செயத்தகுகடன்கண்முற்றித்
தீண்டினோர்பிறவிமாய்க்குஞ்சுரகரதீர்த்தமாடி
மாண்டருசுரகரீசவள்ளலையருச்சித்தேத்தி
வேண்டினர்வேண்டலோடும்வெப்புநோயொழியப்பெற்றார்.

(இ-ள்.) காண்டல் உம் உவகை பொங்கி செய தகு கடன்கள் முற்றி - கண்டபொழுதே மகிழ்ச்சிமீதூரச் செய்யத்தகுங் கடன்களைச்செய்துமுடித்து, தீண்டினோர் பிறவி மாய்க்கும் சுரகரதீர்த்தம் ஆடி - பரிசித்தவர்களது பிறப்பினையொழிக்குஞ் சுரகரதீர்த்தத்தில் நீராடி, மாண் தரு சுரகரீச வள்ளலை அருச்சித்து ஏத்தி வேண்டினர் - மாட்சிமையமைந்த சுரகரீசத்தில் எழுந்தருளிய இறைவனை அருச்சனைசெய்து துதித்துக் குறையிரந்தார்கள், வேண்டல் ஓடு உம் வெப்பு நோய் ஒழிய பெற்றார் - வேண்டலால் சுரநோயொழியப்பெற்றார்கள்.

செயத்தகு கடன்களாவன சங்கற்பமுதலியன. பொங்கிசெயவெனெச்சத்திரிபு ஓடு உருபு ஏதுப்பொருளில்வந்தது. (௪௭)

பெற்றபினங்கணீங்கிப்பெறலருமேருக்குன்றி
னுற்றமாத்திரையினன்னோர்வயாவுநோயொழிவுபெற்றார்
மற்றவரகட்டினீங்கிவளங்கெழுசுடர்பொற்சோதி
பற்றிளம்பரிதிநூறாயிரமெனப்பரந்துதோன்றி.

(இ-ள்.) பெற்ற பின் அங்கண் நீங்கி - சுரநோய்நீங்கப்பெற்றபின் அவ்விடத்தினின்றுநீங்கி, பெறல் அரும் மேருக் குன்றில் உற்ற மாத்திரையின் அன்னோர் வயாவு நோய் ஒழிவு பெற்றார் - அனையோர் அடைதற்கரிய மேருமலையை யடைந்தவளவில் அத்திருமால் முதலியோர் கருப்பநோயொழிந்தார்கள், வளம் கெழு சுடர் பொன் சோதி அவர் அகட்டின் நீங்கி - வளமைமிக்க விளங்கும் பொன்னிறமமைந்த ஒளியானது அவர்களது வயிற்றினின்றுநீங்கி, பற்று இளம் பரிதி நூறாயிரம் என்ன பரந்து தோன்றி - அகலாத இளமைவாய்ந்த இலக்ஷம் சூரியர்களைப்போல எங்கும் பரவித் தோன்றி. (௪௮)

வடவரைமுழுதுஞ்செம்பொன்வண்ணமாச்செய்துதெண்ணீர்த்
தடநெடுங்கங்கையாற்றாற்சரவணப்பொய்கைமேவிக்
கடவுளர்முனிவரெல்லாமுய்யுமாகருணைகாட்டிச்
சுடர்வடிநெடுவேலண்ணலறுமுகன்றோன்றினானால்.

(இ-ள்.) வடவரை முழுது உம் செம்பொன் வண்ணம் ஆக செய்து - வடபாலுள்ள மலைமுழுதும் செம்பொன்னிறமாகச்செய்து, தெள் நீர் தட நெடும் கங்கை ஆற்றால் சரவணம் பொய்கை மேவி - தெள்ளிய நீர்மயமாகிய பெரிய நெடியகங்கையின் வழியால் சரவணப்பொய்கையையடைந்து, கடவுளர் முனிவர் எல்லாம் உய்யும் ஆறு கருணை காட்டி - தேவர்களும் முனிவர்களும்ஆகிய எல்லோரும் பிழைக்கும்வண்ணங் கிருபைசெய்து, சுடர் வடி நெடு வேல் அண்ணல் அறுமுகன் தோன்றினான் - விளங்க வடித்த நெடியவேலேந்திய ஆறுதிருமுகங்களையுடைய முருகக்கடவுள் உதயஞ் செய்தார்.

சரவணத்திற் றோன்றினமையால் சரவணபவன் எனவும், கங்கைசுமந்து சரவணத்திற் செலுத்தியதால் காங்கேயன் எனவும், கார்த்திகை முலையூட்ட நின்றமையால் கார்த்திகேயனென்னவுந் திருநாமமும், உமையம்மை கூட்டியருள ஒருருவா யமைந்தனனாதலால் கந்தனெனவுந்திருநாமமும் வாய்ந்தனன் என்பதுதோன்றச்சுருக்கி, தடநெடுங் கங்கையாற்றாற் சரவணப்பொய்கை மேவிக் கடவுளர் முனிவரெல்லா முய்யுமா கருணைகாட்டிச் சுடர்வடி நெடுவேலண்ண லறுமுகன்றோன்றினானால் என்றார்.

“ ஈங்கனநமதுகண்ணிலெய்தியகுமரன்கங்கை
தாங்கினள்கொண்டுசென்றுசரவணத்திடுதலாலே
காங்கெயனெனப்பேர்பெற்றான்காமர்பூஞ்சரவணத்தின்
பாங்கரில்வருதலாலேசரவணபவனென்றானான்.
தாயெனவாரல்போந்துதனங்கொள்பாலருத்தலாலே
ஏயதோகார்த்திகேயனென்றொருதொல்பேர்பெற்றான்
சேயவன்வடிவமாறுந்திரட்டிநீயொன்றாய்ச்செய்தாய்
ஆயதனாலேகந்தனுமெனநாமம்பெற்றான ”
எனக் கந்தபுராணத்தில் வருதல் காண்க. (௪௪)

சுரந்தவிர்த்தமரர்க்காத்தசுரகரதீர்த்தமாடி
வரந்தருஞ்சுரகரீசவள்ளலைவணங்கிப்போற்றி
நிரந்தரமன்புசெய்யப்பெற்றவர்நெடுநீர்ஞாலத்
தரந்தைநோய்தவிர்ந்துமுத்திப்பேற்றினையடைவர்மாதோ.

(இ-ள்.) சுரம் தவிர்த்து அமரர் காத்த சுரகர தீர்த்தம் ஆடி - சுரத்தையொழித்துத் திருமால்முதலிய தேவர்களைக்காத்த சுரகரதீர்த்தத்தில் நீராடி, வரம் தரும் சுரகரீச வள்ளலை வணங்கி போற்றி நிரந்தரம் அன்பு செய்ய பெற்றவர் - அடியவர்க்குவேண்டிய வரங்களைத்தந்தருளும் சுரகரீசத்தில் எழுந்தருளிய இறைவனைவணங்கித் துதித்து எந்நாளும் வழிபாடுசெய்யப் பெற்றவர்கள், நெடு நீர் ஞாலத்து அரந்தை நோய் தவிர்ந்து முத்தி பேறினை அடைவர் - கடல்சூழ்ந்த நிலவுலகில் துன்பந்தரும் சுரநோய்முதலிய நோயினின்று நீங்கிப் பின்னர் மோக்ஷத்தையடைவார்கள்.

வழிபாட்டிற்கு அன்பு காரணமாதலால் காரணத்தைக் காரியமாக வுபசரித்தார். முத்தியே பேறாதலால் முத்திப்பேறென்றார்.




A - தான்றோன்றீச்சரப்படலம்.

சுரகரீசம் சுரகரீ ஈசம் எனப்பிரித்துச் சுரகரீசம் எனக்கொள்ளுதல் சம்பாவனு பூர்வபத சமாசம்என வடமொழிவிதி கொள்க. சுரத்தினை யரித்தலையுடைய வீசம் எனப்பொருள். சுரகர ஈசம் என வரில் சுரகரேசமெனவரும். இதுபோல வருவனவற்றை யெல்லாம் பொருளறிந்து சமாசங்கொள்க. "அர்த்தநாரீ ஈசன் அர்த்தநாரீசன்" எனவருதல் உணர்க. (௬)

சுரகரீசப்படலம் - முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௯௫௬.

---

## தான்றோன்றீச்சரப்படலம்.

கிளைத்தெழுங்குழவித்திங்கட்கீற்றிளங்கொழுந்துமோலி
வளைத்தழும்பாளன்வைகுஞ்சுரகரவளாகஞ்சொற்றாந்
திளைத்தவர்கருவிலெய்தாச்சுரகரதீர்த்தத்தென்பா
லிளைத்தவர்க்கிரங்குந்தான்றோன்றீச்சரத்தியல்புசொல்வாம்.

(இ-ள்.) கிளைத்து எழும் குழவி திங்கள் கீற்று இளம் கொழுந்து மோலி - இருகோடுவாய்ந்தெழுந்த இளஞ்சந்திரனாகிய கீற்றின் கொழுந்தினையணிந்த சடாமகுடத்தையுடைய, வளை தழும் பாளன் வைகும் சுரகர வளாகம் சொற்றாம் - உமையம்மையின் வளையற்றழும்பினையணிந்த திருமேனியையுடைய இறையவன் எழுந்தருளிய சுரகரீசமென்னுந்திருப்பதியை எடுத்துக்கூறினாம், திளைத்தவர் கருவில்எய்தாத சுரகர தீர்த்தம் தென்பால் இளைத்தவர்க்கு இரங்கும் தான்றோன்றீச்சரத்து இயல்பு சொல்வாம் - நீராடினோர் அன்னைகருப்பத்திலடையாத சுரகரதீர்த்தத்தின் தென்பக்கத்தில் பிறப்பினிளைத்தடைந்தவர்க்கு இரங்கியருளும் தான்றோன்றீச்சரத்தின் றன்மையை எடுத்துக் கூறுவாம்.

கிளைத்தெழும் என்றமை இருகோடுவாய்ந்து எழும் எனவும், இளந்திங்கள் என்றமையால் இளந்திங்களாகிய கீற்றெனவும், இளமையே கொழுந்தாதலால் கொழுந்து எனவும் பொருள்கூறினாம். (௧)

முழுமலத்தொடக்குநீங்கியாருயிர்முத்திசேர்வான்
மழுவலான்றானேதோன்றும்வாய்மையாற்றான்றோன்றீசக்
கெழுதகுபெயரினோங்குங்கிளக்குமவ்விலிங்கந்தன்னைத்
தொழுதொருசிறுவனாம்பால்பெற்றவாசொல்லக்கேண்மின்.

(இ-ள்.) முழுமலம் தொடக்கு நீங்கி ஆர் உயிர் முத்தி சேர்வான் மழுவலான் - ஆணவமலச்சிமிழ்ப்பினின்றும் நீங்கி அரியவுயிர்கள் முத்தியை யடைய மழுவேந்தியவல்ல இறைவன், தானே தோன்றும் வாய்மையால் தான் தோன்று ஈசன் கெழு தகு பெயரின் ஓங்கும் கிளக்கும் அ இலிங்கம் தன்னை - தானே தோன்றிய வுண்மையால் தான்தோன்றீசமென வமைந்த பெயராலோங்கிய சொல்லப்பட்ட அவ்விலிங்கத்தை, ஒரு சிறுவன் தொழுது தீம்பால் பெற்ற ஆறு சொல்ல கேண்மின் - ஒருமழமுனிவன் வணங்கி இனியபாலைப்பெற்ற வரலாற்றைச்சொல்லக் கேளுங்கள்.

மாயை காமியங்களுக்கு ஆணவம் காரணமாதலால் முழுமலமெனவும், திருமான்முதலியோர் ஆன்மவர்க்கமாதலால் உயிரெனவும், நெல்லின்கணின்று தோன்று

முளைக்கு நிமித்தகாரணமாக உமிநிற்றல்போலக் கன்மமாயாமலங்களுக்கு நிமித்தகாரணம் ஆதலால் முழுமலம் எனவும், தேவதாருவனமுனிவர்கள் கொல்லவேவிய மழுவினையேந்துதலால் மழுவலானெனவுங் கூறினர்.

ஏனைமலங்களுக்கு ஆணவங் காரணமாதல்—

" மும்மலநெல்லினுக்குமுளையொடுதவிடுமிப்போல்
மம்மர்செய்தணுவினுண்மைவடிவினைமறைத்துநின்று
பொய்ம்மைசெய்போகபந்தபோத்திருத்துவங்கள்பண்ணும் " எனவருஞ் சித்தியாரிலும்.

தேவதாருவனமுனிவர்களேவிய மழுவாயுதத்தை யேந்துதலை—

" இங்கிதுபோயபின்றையிறுதிசெய்கணிச்சியொன்று
செங்கனலிடையிற்றோன்றித்தீயவர்விடுப்பவேகிச்
சங்கரன்றனதுமுன்னஞ்சார்தலுமதனைப்பற்றி
அங்கையிலேந்திநம்மபடையாதியென்றான் " எனக் கந்தபுராணத்திலும் வருதல் உணர்க. (உ)

சலிப்பறுதவவசிட்டன்றங்கையைமணந்துஞானப்
புலிப்பதமுனிவனீன்றபுகழுபமனியனென்னு
மொலிச்சிறுசதங்கைத்தாளோன்மாதலனுறையுண்மேவிக்
கலிப்பகைச்சுரபித்தீம்பாலுண்டுளங்களித்துவாழ்நாள்.

(இ-ள்.) ஞானம் புலிப் பத முனிவன் சலிப்பு அறு தவ வசிட்டன் தங்கையை மணந்து ஈன்ற - சிவஞானம்வாய்ந்த வியாக்கிரபாதமுனிவர் கலங்குதலில்லாத தவத்தையுடைய வசிட்டமுனிவரது தங்கையைமணஞ்செய்து பெற்ற, புகழ் உபமனியன் என்னும் ஒலி சிறு சதங்கை தாளோன்-யாவராலும்புகழப்பட்ட உபமன்னியமுனிவனென்று சொல்லப்படும் ஒலியமைந்த சிறியசதங்கையையணிந்த காலையுடைய மழமுனிவர், மாதுலன் உறையுள் மேவி கலி பகை சுரபி தீம்பால் உண்டு உளங் களித்து வாழ் நாள்- தனதுமாதுலராகிய வசிட்டமுனிவரது ஆச்சிரமத்தையடைந்து வறுமைக்குப் பகையாகிய காமதேனுவின் இனியபாலைஉண்டு மகிழ்கூர்ந்து வாழுங்காலையில்.

விடயங்களிற்கலங்காத நிலையே தவமாதலால் சலிப்பறு தவமெனவும், கருதியடைந்தோர் வறுமையை யொழிக்கவேண்டி யாங்குதவுதலால் கலிப்பகைச் சுரபியெனவுங்கூறினர். (ங)

தாதையுந்தாயுமேகித்தநயனைக்கொண்டுதங்கண்
மேதகுமிருக்கைபுக்குமேவுழிச்சிறுவன்றீம்பாற்
காதரமெய்தியன்னையடிபணிந்திரப்பவந்நாள்
கோதறுநெல்மாநீரிற்குழைத்திதுகோடியென்றாள்.

(இ-ள்.) தாதையும் தாயும் ஏகி தநயனைக் கொண்டு தங்கள் மேதகும் இருக்கை புக்கு மேவுழி - வியாக்கிரபாதரும் அவர்மனைவியும் வசிட்டர் ஆச்சிரமஞ்சென்று தமதுபுத்திரரைக் கைக்கொண்டு தமது மேன்மையடைந்த ஆச்சிரமத்தையடைந்து இருக்குங்காலத்தில், சிறுவன் தீம்பாலுக்கு ஆதாரம் எய்தி அன்னை அடி பணிந்து இரப்ப - மழமுனிவர் இனியபாலுக்கு விருப்பங்கூர்ந்து தமது தாயின்பாதத்தைவணங்கிக் குறையிரப்ப, அந்நாள் கோது அறு நெல்மா நீரில் குழைத்து இது கோடி என்றாள்- அக்காலத்தில் குற்றமற்ற அரிசியின்மாவை நீரிற் செறிவாகக்குழைத்து இதனை உண்ணுயென்று கொடுத்தாள்,

தமது மாதுலர்வீட்டில் பாலுண்டு வளர்ந்தமையால் தீம்பாற்கு ஆதரமெய்தி எனவும், இங்கு அது அரிதாதலால் அன்னையடி பணிந்து இரப்ப எனவும், தவிடு மிகளி னின்றுநீங்கிய தாகலால் கோதறு எனவும், முதலுக்குஞ் சினைக்கும் ஒற்றுமை யுண்மை யால் அரிசியை நென்மா எனவுங் கூறினர். (௪)

ஏற்றனன்பருகித்தீம்பாலன்றிதுபுனலென்றோச்சி
மாற்றினன்மாதுலன்றன்மனைவயிற்பருகுதீம்பா
லாற்றவுநினைந்துதேம்பியழுதழுதிரங்கநோக்கிக்
கோற்றொடிநற்றாய்நெஞ்சமுளைந்திதுகூறலுற்றாள்.

(இ-ள்.) ஏற்றனன் பருகி - தாய் தந்தையர்கொடுத்ததை யேற்றுண்டு, இது தீம் பால் அன்று புனல் என்று ஓச்சி மாற்றினன் - இது இனியபாலல்ல நீரென்று எறிந்தொ ழித்து, மாதுலன் தன் மனை வயின் பருகு தீம்பால் ஆற்றவும் நினைந்து தேம்பி அழுது அழுது இரங்க நோக்கி-தமது மாதுலரது ஆச்சிரமத்தில் இருந்து பருகிய இனிய பாலை மிகவும் நினைந்து தேம்பி அழுது வருந்துதலைப்பார்த்து, கோல் தொடி நல் தாய் நெஞ் சம் உளைந்து இது கூறல் உற்றாள் - கோல்போலத்திரண்ட வளையலையணிந்த நல்ல தாயானவள் மனம்வருந்தி இதனைச் சொல்லத்தொடங்கினாள்.

ஏற்றனன், மாற்றினன் முற்றெச்சங்கள். அழுதழுது பன்மைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். பாலென வருமிடந்தோறும் தீம்பாலெனவருதல் காமதேனுவின் பாலென்பது குறிப்பித்தற்கு. (௫)

தவம்புரிநிலையின்வைகுஞ்சார்பினேமதாஅன்றுமுன்னாட்
சிவன்றனைவழிபடாமையிலம்படுந்திறத்தினேங்க
ளவந்தெறுமான்பால்யாண்டுப்பெறுகுவமப்பாமுக்கட்
பவன்றனைவழிபாடாற்றிப்பான்மிகப்பெறுதிகண்டாய்.

(இ-ள்) தவம் புரி நிலையில் வைகும் சார்பினேம் - நானும் உன்றந்தையும்தவ ஞ்செய்யும் நிலையினிற்குஞ் சார்பையுடையேம், அதா அன்று - அதுவுமன்றி, முன்நா ள் சிவன்றனை வழிபடாமை இலம்படு திறத்தினேங்கள் - முற்பிறப்பிற்சிவபெருமானைச் செல்வத்தின்பொருட்டு வழிபடாமையால் வறுமையடையும் பகுதியுடையேம், அப்பா அவம் தெறும் ஆன் பால் யாண்டு பெறுகுவம் - அப்பனேகுற்றத்தினின்றுநீங்கிய பசுவி ன்பாலை எவ்விடத்துப்பெறுவோம், முக்கண் பவன்றனை வழிபாடு ஆற்றி பால் மிக பெ றுதி-மூன்றுகண்களையுடைய சிவபெருமானுக்கு வழிபட்டு மிகவும் பாலைப்பெறுவாய்.

பவன் அடியாருளக் கோயிலில் அமர்வோன். சிவபெருமானை வழிபட்டால்வே ண்டியபொருளைக் குறைபாடின்றிப் பெறுவாயென்பதுதோன்ற மிகப்பெறுதியென்றாள். சிவன்றனை நான்கனுருபுநிற்குமிடத்து இரண்டனுருபுவந்தது உருபுமயக்கம். சிவபிரா ன்முதலியோரும் உமையம்மைமுதலியோரும் பசுவின் உடலாயிருத்தலாலதனை வழிபடு வோர் அவர்களை வழிபட்டார் அடையும்பயன் அடைவார் ஆதலால் அவந் தெறுமான் என்றாள்.

"அரனுதியொருமூவரமரேசன்மருமானும்
ஒருவாமலுறைவார்களுமையாதிமடவாரும்
அரிதாயமறையோர்களுடலாவினுடலார்வம்
ஒருவாதுவழிபாடுபுரிவார்களுயர்வாரே" எனச் சிவதருமோத்தரத்தில் வ ருதல் காண்க. (௬)

கச்சிமாநகரத்தெய்திக்கண்ணுதல்பூசையாற்றி
இச்சையினேற்றமாகப்பெறுவையென்றியம்புமன்னை
மெச்சிடவிடைகொண்டேகிவிழைதருகாஞ்சியெய்தி
முச்சகம்புகழுந்தான்றோன்றீச்சரமுதலைக்கண்டான்.

(இ-ள்.) கச்சி மாநகரத்து எய்தி கண்ணுதல் பூசை ஆற்றி - காஞ்சி என்னும் பெரியதிருப்பதியையடைந்து சிவபெருமானைப்பூசிக்கில், இச்சையின் ஏற்றம் ஆக பெறுவை என்று இயம்பும் அன்னை மெச்சிட விடை கொண்டு ஏகி-உன்விருப்பத்துக்கு ஏற்றமாகக் கருதியதைப் பெறுவாயென்றுகூறிய தமதன்னைமெச்ச விடைபெற்றுச் சென்று, விழை தரு காஞ்சி எய்தி முச்சகம் புகழும் தான்றோன்றீச்சரமுதலை கண்டான்-யாவரும் விரும்பத்தக்க காஞ்சித்திருப்பதியையடைந்து சுவர்க்கமுதலிய மூன்றுலகத்தாரும்புகழும் சுவாயம்புவ முதல்வனைத்தரிசித்தார்.

ஏனைத்தலங்களிற் சென்று சிவபெருமானை வழிபடுதலிலும் காஞ்சியையடைந்து சிவபெருமானை வழிபடில் அன்றேபெறுதல் திண்ணமாதலால் கண்ணுதல் பூசையாற்றி னிச்சையினேற்றமாகப் பெறுவை யென்றாள். (எ)

கண்டுளங்குழைந்துநெக்குக்கரையிலாக்காதல்பொங்கித்
தொண்டனேனுய்ந்தேனென்றுதொழுதெழுந்தாடிப்பாடி
யிண்டைவார்சடிலத்தண்ணலிணையடியருச்சித்தங்க
ணண்டருமியகுமாற்றாலருந்தவம்புரியுமெல்லை.

(இ-ள்.) கண்டு உளம் குழைந்து நெக்கு கரை இலாத காதல் பொங்கி-தரிசித்து மனங்குழைந்து நெக்குவிட்டு வரம்பிகந்த அன்புமீதூர்தலால், தொண்டனேன் உய்ந்தேன் என்று தொழுது எழுந்து ஆடி பாடி - தொண்டனேனுகியயான் ஈடேறினேனென்று தண்டாகாரமாகவீழ்ந்து வணங்கி எழுந்து ஆனந்தக்கூத்தாடிப்பாடி, இண்டைவார் சடிலத்து அண்ணல் இணை அடி அருச்சித்து - கொன்றைமாலையையணிந்த நீண்டசடாமுடியையுடைய இறைவனது இரண்டுதிருவடிகளையுமருச்சித்து, அங்கண் அண்டரும் வியக்கும் ஆற்றால் அருந் தவம் புரியும் எல்லை - அவ்விடத்துத் தேவர்களும் அதிசயங்கூரும் வகையால் செய்தற்கரியதவத்தைச் செய்யுமிடத்து.

இண்டை தண்டவடிவமாகச்செய்தமாலை. இண்டை இண்டைமலராற்றொடுத்தமாலை எனப்பொருள் கூறுவாருமுண்டு. உளங் குழைதற்கும் நெக்குவிடுதற்கும் அன்புகாரணமாதலால் காரியத்தைக் காரணமாகவுபசரித்துக் காதல்பொங்கி என்றார். (அ)

தகைபெறுசயம்புலிங்கதலத்துறைகணிச்சிப்புத்தே
ளுகைமுகிலூர்தியண்ணலுருவுகொண்டெய்திப்பத்தி
மிகையினையளந்துதானுந்தன்மையைவிளங்கக்காட்டி
நகைமுகமருளித்தீம்பாற்கடலினையழைத்துநல்கி.

(இ-ள்.) தகை பெறு சயம்புலிங்க தலத்து உறைகணிச்சி புத்தேள் - பொலிவமைந்த சுவாயம்புவதலத்தில் எழுந்தருளியபராசயுதமேந்திய இறைவன், முகில் ஊர்தி உகை அண்ணல் உருவு கொண்டு எய்தி-மேகத்தை யூர்தியாகச்செலுத்தும் இந்திரனது வடிவுகொண்டு அங்கடைந்து, பத்திமிகையினை அளந்து தான் ஆம் தன்மையை விளங்கக்காட்டி - அவன் தன்பாற்கொண்ட அன்பின் மிகையையளந்தறிந்து அவ்வடிவந்தானே யென்னுந் தன்மையை அம்மழமுனிவர்க்குவிளங்க வுணர்த்தி, நகை முகம் அருளி தீம்பால் கடலினை அழைத்து நல்கி - புன்னகையரும்பும் திருமுகப்பொலிவுகாட்டி இனிய பாற்கடலையழைத்துத்தந்து.

அவனது அன்பினை யளத்தற்குக் காமதேனுவையுடைய இந்திரனுருக்கொண் டானென்பார் மூகிலூர்தி யண்ணலுருவுகொண்டெய்தி எனவும், அந்த இந்திரன் வருகையை நன்குமதியாது அவனை யிகழ்ந்தமையால் பத்திமிகையினை யளந்தெனவும், தன் பாலன்புடைமை தோன்றுதலால் தானுந் தன்மை விளங்கக்காட்டி எனவுங் கூறினர்.

இந்திரனை யிகழ்ந்தமையையும் பத்திமிகையை யளந்தமையையும்—

"ஆயகாலேமணிமிடற்றோனமரர்கோமானுருத்தாங்கி
யேயப்பொருந்திமழுவேந்துமிறைவன்றன்னையிகழ்ந்திடலும்
வாயினகோராத்திரந்தன்னைச்செபித்தாங்கவனைமாய்த்திடுவான்
தூயநீற்றையங்கையிற்றல்வாங்கிச்சுளித்தேயெறிந்தனனால்.

எறிந்தவகோராத்திரந்தன்னைநந்திவிலக்கவெழிற்சிறுவன்
சிறந்தவாவிவிடுவனெனமூலாக்கினியைச்செவ்வனே
உறைந்தாங்கெழுப்பச்சிவனுணர்ந்தேயாங்குகணேயவித்தவன்முன்
மறங்கொண்மழுவாள்பிடித்திடபமேறிவரைமாதொடும்வந்தான்"

என வாயுசங்கிதையில் வருதல்காண்க. (௯)

முற்றுணர்தெளிவுமூவாவிளமையுஞ்சாக்காடெய்தாப்
பெற்றியுமுதவியின்னும்வேண்டுவபேசுகென்றான்
கற்பகஞ்சுரபிசிந்தாமணிவளைகமலமெல்லாம்
பற்றுடையடியாரேவற்பணிசெயப்பணிக்கும்வள்ளல்.

(இ-ள்.) கற்பகம் சுரபி சிந்தாமணி வளை கமலம் எல்லாம் பற்று உடை அடியார் ஏவல் பணி செய பணிக்கும் வள்ளல் - கற்பகமும் காமதேனுவும் சிந்தாமணியும் சங்கநிதியும் பதுமநிதியும்ஆகிய எல்லாப்பொருளும் தன்பாலன்புடைய அடியவர்ஏவும் ஏவல் கேட்டு நிற்பப்பணித்தருளும் வள்ளலாகிய இறைவன், முற்று உணர் தெளிவு உம் மூவாத இளமையும் சாக்காடு எய்தாத பெற்றி உம் உதவி - எல்லாவற்றையும ஒருங்குணருந் தெளிவும் மூப்படையாத இளமைப்பருவத்தையும் மரணத்தையடையாத தன்மையையுந்தந்து, இன்னும் வேண்டுவ பேசுக என்றான் - இன்னும் வேண்டுவன வற்றைக் கேட்க என்றருளினன்.

கற்பகமும், சுரபியும், சிந்தாமணியும், சங்கநிதியும், பதுமநிதியும் இந்திரனுக்குரிய பொருள்களாயினும் அவனுக்கு அப்பொருள்களில் சுதந்தரமில்லையென்பது தோன்ற அடியாரேவற்பணிசெய எனவும், தனதடியவர் வேண்டியக்கால் அவற்றையருளுஞ் சுதந்தரன் இறைவனென்பதுதோன்றப்பணிக்கும் வள்ளல் எனவும், இளமை மூப்பதே மூப்பென்பதுதோன்ற இளமையின் வினையாக்கி மூவாவிளமை யென்றதனால் என்றும் பாலபருவமும், வேதாகமங்கள் முற்றையும் ஐயந்திரிபற ஓதாதுணர்ந்த உணர்ச்சியென்பதுதோன்ற முற்றுணர்தெளிவும் எனவும், அந்த மூவாவிளமையை யுடைமையால் சிரஞ்சீவியென்பது தோன்றச் சாக்காடெய்தாப் பெற்றியுமெனவுங் கூறினர்.

"பணிந்தவனையுழைக்கூவியுச்சிமோந்துபரமேட்டி
பிணங்குவிழிமாதினைநோக்கியுன்றன்பிள்ளையிவனென்ன
வணங்குமருங்குன்மற்றவளுமலர்க்கையவன்றன்றலைமேல்வைத்
துணங்கிறவாப்பதந்தன்னையடைதியென்னவுதவினளால்.
புரட்டுதிரையபாற்கடலும்போதாச்சுவையதீம்பாலும்
திரட்டியவன்றன்கைக்கொடுப்பச்செம்பொன்வடபான்மேருவினை

மருட்டகிதிடம்பலகுலியாவளகைவேந்தன்மகிழ்ந்தவன்றன்
பொருட்டாங்குதவமற்றவனும்பொங்குமுவகையாற்பணிந்தான்'
அரன்றன்பாசுபதஞானம்விரதயோகமழிவின்றித்
திருந்திவிரிந்தசங்கிதையாகமங்கள்செய்யுஞ்செயல்கொடுத்து " என வாயுசங்கிதையில் வருதல்காண்க. (௪௦)

என்னலுமுனிவன்போற்றிஎளியனேற்குனதுநோன்றாண்
மன்னுபேரன்புவேண்டுமற்றுமிவ்விலிங்கமூர்த்தி
தன்னிலெக்காலுநீங்காத்தண்ணருள்கொழித்துவாழ்ந்து
துன்னினோரெவர்க்கும்பாவந்துமித்துவீடுதவவேண்டும்.

(இ-ள்) என்னலும் முனிவன் போற்றி எளியனேற்கு உனது நோன்தாள் மன்னு பேர் அன்பு வேண்டும் - என்று இறைவனருள மழமுனிவர் வணங்கி எளியனாகிய எனக்கு உனது அருள் வன்மையமைந்த திருவடியில் நிலைபெற்ற பெரிய அன்புவேண்டும், மற்றும் இ இலிங்கமூர்த்தி தன்னில் எக்கால உம் நீங்காததண் அருள் கொழித்து வாழ்ந்து துன்னினோர் எவர்க்கும் பாவம் துமித்து வீடு உதவவேண்டும் - அதுவுமன்றி இச்சுவாயம்புவ மூர்த்தத்தில் எந்நாளும் நீங்காமல் ஆன்மகோடிகளுக்குத் தண்ணிய அருள்சுரந்து அடைந்தோர் எவர்க்கும் பாவத்தைவேரோடறுத்து மோக்ஷந்தந்த

அடியார்க்கருளும் வன்மைவாய்ந்த திருவடிஎன்பார் நோன்தாள்எனவும், எழுமையையும்விடாது தொடர்ந்த அன்புவேண்டுமென்பார் மன்னு பேரன்பு வேண்டுமெனவும், சரணடைந்தோர் எவர்க்கும் பிறப்பொழித் தருளவேண்டுமென்பார் பாவந்துமித்து வீடுதவவேண்டுமெனவுங்கூறினர். மற்று பிறிது பொருளில்வந்த இடைச்சொல்.

என்றுநின்றிரந்துபோற்றுமிளவலுக்கருளிச்செய்து
மன்றலங்குழலியோடுமிலிங்கத்தின்மறைந்தானைய
னன்றுதொட்டறிஞர்க்கெல்லாமருட்பெருங்குரவனாகி
வென்றிவெள்விடையான்சைவம்விளக்கிவீற்றிருந்தானன்னோன்.

(இ-ள்.) என்று நின்று இரந்து போற்றும் இளவலுக்கு அருளிச்செய்து - என்று கூறிநின்று குறையிரந்து துதிக்கும் உபமன்னியமுனிவருக்கு அவ்வாறேஅருளிச்செய்து, ஐயன் மன்றல் அம் குழலி யோடும் இலிங்கத்தில் மறைந்தான் - இறைவன்வாசமிக்க கூந்தலையுடைய உமையம்மையோடு சுவாயம்புவ இலிங்கத்தின் மறைந்தருளினான், அன்னோன் - அம்மழமுனிவர், அன்று தொட்டு அறிஞர்க்கு எல்லாம் அருட்பெரும் குரவன் ஆகி வென்றி வெள் விடையோன் சைவம் விளக்கி வீற்றிருந்தான் - அக்காலந்தொட்டுப் பக்குவர்க்கெல்லாங் கருணைமிக்க ஆசாரியமூர்த்தமாய் வெற்றிவாய்ந்த வெள்ளிய இடபவூர்தியையுடைய சிவபெருமானது சைவநிலையைப் புலப்படுத்தி நிகரின்றியிருந்தான்.

தீயநெறியினின்று நீங்கிச் சிவபத்திவாய்ந்த சிவனடியார் என்பார் அறிஞர்க்கெல்லாம் எனவும், அந்த அடியவர்களது பக்குவமுணர்ந்து சாம்பவிமுதலிய தீக்ஷையால் மும்மலங்களையும்போக்கிய வ்வான்மாவுள்விரவிய சிவபெருமான் திருவடிகளைத்தரிசிப்பிப்பவனே யாசாரியனாதலால் அருட்பெருங்குரவனாகி யெனவும், சிவபெருமானே அநாதிசைவனாதலால் அவனிடத்துத்தோன்றிய ஆதிசைவம், மகாசைவம், அநுசைவம், அவாந்தரசைவம், பிரவரசைவம், அந்தியசைவம் என்னும் சைவங்களினிலையை ஆகமம் உணர்த்தலின் ஆன்மாக்களுக்கு அதனை விளக்கஞ்செய்திருந்தமையால் வென்விடையான் சைவம் விளக்கியெனவுங் கூறினர்.

அறிஞர் என்றதை—

“ அறைந்திடுவிபூதிதன்னைமாணுக்கரன்றியேயுறைபவர்தமக்கும்
சிறந்திடுபத்தியில்லவர்தமக்குந்தீநெறியொழுகுவோர்தமக்கும்
மறங்கெழுமழுவாளண்ணறன்னடியாரல்லவர்தமக்குமாசறவே
திறம்பலினருகிச்செப்பொணுதென்னச்செய்யநான்மறையுரைத்திடுமால் ”
எனவரும் வாயுசங்கிதையிலும்,

அருட்பெருங் குரவனுகி யென்றதை—

“ சாம்பவியாற்சத்தியான்மாந்திரியாற்சத்திபதிந்
தாம்பயத்தின்பேதமாராய்ந்து
வீட்டிமலமூன்றுமுயிருள்விமலன்பொற்பாதங்
காட்டுமவன்றேசிகனேகாண் ” எனவரும் சைவசமயநெறியாலும்,

வெள்விடையான் சைவம் விளக்கி என்றதை—

“ அரியசதாசிவனென்போனநாதிசைவனவன்பால்
அவதரித்தசிவமறையோராதிசைவரிவர்பால்
உரியசிவதீக்கைபெற்றபூசுரர்மாசைவர்
உயர்ந்தவரசன்வணிகனநுசைவராவார்
பெரியகுவளைப்புயத்தோனவாந்தரசைவன்சீர்
பெறுசவன்னனுதியநுலோமர்பிரவராராம்
விரியவணிமிசையொழிந்தோரந்தியசைவத்தோர்
விரிந்திடுமேழ்சைவவிதமிவையெனநூல்விளம்பும ” எனவருஞ்செய்யுளா லும் உணர்க. (கஉ)

பிருகுமாமுனிவன்சாபப்பிணிப்பிறைற்பிறந்துவீயு
மருமலர்த்துளவோன்கண்ணனுயநாண்மனிதயாக்கை
யருவருப்பெனவாங்கெய்தியத்தகுமுனிவன்றன்பாற்
றிருவளர்தீக்கையுற்றுத்தேகசுத்தியினைப்பெற்றுன்.

(இ-ள்.) பிருகு மா முனிவன் சாபம் பிணிப்பினல் பிறந்து வீயும் மருமலர் துளவோன் கண்ணன் ஆய நாள் - பிருகுவென்னும் பெருமைவாய்ந்த முனிவனிட்ட சாபத்தொடக்கினுல் பிறந்திறக்கும்வாசமிக்க துளபமாலையையணிந்த திருமால் கண்ணனுக அவதரித்தகாலையில், மனித யாக்கை அருவருப்பு என்ன ஆங்கு எய்தி அ தகு முனிவன் தன்பால் திருவளர் தீக்கை உற்று - மனுடதேகம் அருவருக்கத் தக்கதென்று அக்கச்சித் திருப்பதியையடைந்து அந்த நடுவுநிலைமையையுடைய உபமன்னியமுனிவ ரிடத்து ஞானமிக்க சிவதீக்ஷைபெற்று, தேகசுத்தி யினை பெற்றுன் - தேகசுத்தியினை யடைந்தான்.

பிருகுமுனிவனுல் திருமாலுக்குவந்த சாபத்தினை முன்னர்க்காண்க. கண்ணனவதாரத்தில் அக்கண்ணன் உபமன்னிய முனிவரையடைந்து சிவதீக்ஷைபெற்று ஞானுபதேச மடைந்தமையால் முனிவன்றன்பால் திருவளர் தீக்கையுற்றுத் தேகசுத்தினைப்பெற்றுன் என்றுர்.

உபமன்னிய முனிவரிடத்துச் சிவதீக்ஷைபெற்றுத் தேகசுத்தி யடைந்ததை—

“ கண்ணன்ஞானமடைந்திடவுங்கனிவாயமுதச்சின்மழலை
வண்ணமகவையடைந்திடவும்வேண்டிமுனிவன்பாலடைந்து

நண்ணிவலங்கொண்டிறைஞ்சுதலுநவைசெய்மலம்யாவையுங்கழிந்த
தெண்ணிமுனிவன்வெண்ணீற்றையெடுத்தாங்கவன்றன்மெய்யணிந்தான்.
பன்னிருதிங்கள்பாசுபதவிரதத்தைப்பாங்கா
மன்னுறவியற்றுவித்துமாசிலாஞானஞ்சொற்றான்
அன்னதையடைந்துதூயபுதல்வனையடையவேண்டிப்
பொன்னலர்சடையோன்றன்னைப்போற்றிமாதவங்கள்செய்தான்" எனவாயு சங்கிதையில் வருதல்காண்க. (கரு)

பாண்டவர்தூதனென்னப்பயிலியபெயரானங்க
ணாண்டகையடிகள்போற்றிவைகினனன்றுதொட்டு
நீண்டுலகளந்தமாலேநிறைதிருநீற்றுக்கோலம்
பூண்டுயர்சைவனென்னப்புகன்றிடுமுலகமெல்லாம்.

(இ-ள்.) பாண்டவர் தூதன் என்ன பயிலிய பெயரான் அங்கண் ஆண்டகை அடிகள் போற்றி வைகினன் - பாண்டவதூதப்பெருமாள் என்ன வந்தபெயரோடு அவ்விடத்து இறைவனது திருவடிகளைவணங்கி இருந்தருளினன், அன்று தொட்டு நீண்டு உலகு அளந்த மாலே - அக்காலந்தொட்டுத் திருவிக்கிரம வடிவங்கொண்டு உலகினையளந்த திருமாலே, நிறை திரு நீற்று கோலம் பூண்டு உயர் சைவன் என்ன உலகம் எலாம் புகன்றிடும் - பொலிவுநிறைந்த திருநீற்றுக்கோலம்பூண்டு உயர்ந்த சைவனென்று உலகமெல்லாஞ் சொல்லாநிற்கும்.

இடையிற் கண்ணன் சிவதீக்கை பெற்றமையால் பாசுபதசைவனாயின் என்பார் திருநீற்றுக்கோலம் பூண்டுயர் சைவனென்னப் புகன்றிடுமுலகமெல்லாம் என்றார். பாசுபதசைவனானதை முன்னர்க்காட்டிய மேற்கோளால் உணர்க. (கசா)

தான்றோன்றீச்சரப்படலம் - முற்றிற்று.

திருவிருத்தம் - கஎ0.

# அமரீசப்படலம்.

அமரீ தேவர்கள் பலரையும் உணர்த்தும் வெகுவசனமாதலால் அமரீசப்படலம் எனவந்தது. அமரேசப்படலம் எனவரில் பலரையுமன்றி யொருவரையுஞ் சுட்டும் ஆதலால் அமரீசம் எனக்கொண்டார்.

தெத்தேயெனவரிவண்டினமுரலமதுச்சிந்துந்
தொத்தேர்மலர்ப்பொழில்சுற்றுசுவாயம்புவஞ்சொற்று
முத்தார்துறையதன்கீழ்த்திசைமுப்பத்துமுக்கோடிப்
புத்தேளிரும்வழிபாடுசெயமரீச்சரம்புகல்வாம்.

(இ-ள்.) வரி வண்டு இனம் தெத்தே என முரல் - வரியமைந்த வண்டின்கூட்டங்கள் தெத்தேஎன்று இசைபாட, மது சிந்தும் தொத்து ஏர் மலர் பொழில் சுற்று சுவாயம்புவம் சொற்றும் - தேனைச்சிந்தும் பூங்கொத்துகளிற் பொலிவுவாய்ந்த மலர்களையுடைய சோலைசூழ்ந்த சுவாயம்புவமென்னும் தான்றோன்றீச்சரத்தைக் கூறினும், முத்து ஆர் துறை அதன் கீழ்த்திசை - முத்தம்ஆர்ந்த நீர்த்துறையையுடைய அதன் கீழ்த்திசையில், முப்பத்து முக்கோடி புத்தேளிரும் வழிபாடு செய் அமரீச்சரம் புகல்

வாம் - முப்பத்துமுக்கோடி தேவர்களும் வழிபாடுசெய்யும் அமரீச்சரம் என்னுந் திருப்பதியை எடுத்துக் கூறுவாம்.

தெத்தே இசைக் குறிப்பை யுணர்த்தும் இடைச்சொல். புத்தேளிர் காண்போர்க்குப் புதுமையை விளைப்போர் என்னும் பொருள்மேல் நிற்றலால் காரணப்பெயர்.()

வரிவண்டினமுரலாமணமாலைக்கடவுளரு
முரிநுண்ணிடைத்திதிமைந்தருமுன்னுளொருகாலத்
தெரிமண்டியெனச்சீறியெதிர்த்துப்பொரலுற்றார்
நரிபேய்கொடிசேனங்கழுகுழலுங்களனோங்கர்.

(இ-ள்.) வரி வண்டு இன முரலாத மணமாலை கடவுளர் உம்-வரிவாய்ந்த வண்டின்கூட்டங்கள் மொய்த்து ஒலிக்காத மணம்வாய்ந்த கற்பகமாலையையணிந்த தேவர்களும், முரி நுண் இடை திதிமைந்தர் உம் முன்னாள் ஒருகாலத்து - தனத்தைச்சுமக்கலாற்றாது முரியும் நுண்ணிய இடையையுடைய திதிபுத்திரராகிய அசுரரும், பண்டோர்காலத்தில், நரி பேய் கொடி சேனம் கழுகு உழலும் களனோங்கர் - நரியும்பேயும் காகமும் பருந்தும் கழுகுஞ்சுழன்றுதிரியும் போர்க்களத்தின் பக்கத்து, எரி மண்டினால் என்ன சீறி எதிர்த்து பொரல் உற்றார் - தீநெருங்கினாற்போலக் கோபித்துத் தம்முளெதிர்த்துப் போர்செய்யத் தொடங்கினார்கள்.

தேவர்களணியுமலர்மாலை வண்டுகள்மூசாத மலர்மாலையாதலால் வரிவண்டினமுரலா மலர்மாலையென்றார். (௨)

முற்றிப்பலவுகமங்கவர்தண்டாதமர்முயலக்
கற்றைச்சடையிறையோன்மலைமகளோடுயர்ககனத்
துற்றுச்சமராடற்றிறநோக்கியுறைந்தனனால்
வெற்றித்திறந்தோலாவகைமேன்மேலமர்மூண்ட.

(இ-ள்.) பல உகம் முற்றி - பலயுகமாகக் கோபமுதிர்ந்து, அங்கு அவர் தண்டாது அமர் முயல - அவ்விடத்துச்சுரரும் அசுரரும் நீங்காது போர்செய்ய, கற்றை சடை இறையோன் மலைமகள் ஓடு - நெருங்கியசடையினையுடைய உமையம்மையோடு, உயர் ககனத்து உற்று சமராடல் திறம் நோக்கி உறைந்தனன்-உயர்ந்த விண்ணிற்பொருந்திப் போராடுந்திறத்தைநோக்கி யிருந்தருளினன், வெற்றி திறம் தோலாவகை மேன்மேல் அமர்மூண்ட - வெற்றியின்பகுதியில் தோற்படையாதவண்ணம் மேலும் மேலும் அவர்களுக்குப் போர்மூண்டன.

சிவபிரான் திருவருளின்றிப் போர்செய்ய முயன்றமையால் இருவருள் ஒருவர்பாலும் வெற்றிதோன்றிலது என்பார் வெற்றித்திறந்தோலா வகையெனவும், வெற்றிபெறப்போர்த்தொழிலில் மூண்டனராதலால் மேன்மே லமர்மூண்டஎனவுங்கூறினார்.

உண்ணாவமுதனையாளெனையுடையான்முகநோக்கி
யெண்ணாலுணர்வரியாயிருதிறத்தோரிவர்தம்முண்
மண்ணாவிறலொருகூற்றினர்வாகைபுனைகெனலும்
விண்ணாடனைவன்றானவர்வென்றார்திறல்கொண்டார்.

(இ-ள்.) உண்ணாத அமுது அனையாள் என்னை உடையான் முகம் நோக்கி - உண்ணாத அமுதத்தையொத்த உமையம்மை என்னையாளாகவுடைய சிவபெருமான் திருமுகத்தைநோக்கி, எண்ணால் உணர்வு அரியாய் இருதிறத்தோர் இவர் தம் உள் -

மனத்தால் அறிதற்கரிய இறைவனே இருகூற்றாராயுள்ள இச்சுராசுரருள், விறல் மண்ணு ஒருகூற்றினர் வாகை புனைக எனலும் - வெற்றியின் மாட்சிமைப்படாத இருதிறத்தருள் ஒருவர் வெற்றிமாலை புனையக் கடவரென்றுகூற, விண்ணுடைமை வன் தானவர் வென்றார் திறல் கொண்டார் - சிவபிரான் திருவருள்செய்யச் சுரர்களைவலிய அசுரர்கள்வென்று வாகைமாலை புனைந்தார்கள்.

வென்றார் முற்றெச்சம். உண்ணு வமுதனையாள் விலக்குருவகவணி. சிவபெருமான் திருவருளை யசுரர்பால்வைக்க வென்றனர் என்பார் விண்ணுடைமை வன்றானவர் வென்றார் என்றார். (௬)

அதுகண்டுமையந்தோபெருமானேயருள்புரியாய்
மதுவொன்றியவெற்றித்தொடைவானோர்புனைகெனலும்
விதுவொன்றியசடையோனருள்விண்ணோர்புடைவைப்ப
முதுவன்பகையறவென்றனர்முடிவானவரம்மா.

(இ-ள்.) அது கண்டு உமை அந்தோ பெருமானே அருள் புரியாய் - உமையம்மை அதுநோக்கியருளி ஐயோ இறைவனே திருவருள்செய்யாய், மது வொன்றிய வெற்றி தொடை வானோர் புனைக எனலும் - தேன்பொருந்திய வெற்றிமாலையாகிய வாகையைத் தேவர்கள் அணியக்கடவர்என்று குறையிரப்ப,விது ஒன்றிய சடையோன் அருள்விண்ணோர் புடைவைப்ப - சந்திரனையணிந்த சடாபாரத்தையுடைய சிவபெருமான் அசுரர்களிடத்துவைத்தஅருளைத் தேவர்களிடத்து வைத்தலால், முடி வானவர் முது வன் பகை அற வென்றனர் - கிரீடத்தையணிந்த தேவர்கள் தொன்றுதொட்டுள்ள வலிய அசுரர்களது பகைமையை வேரோடறவென்றார்கள்.

தேவாசுரர் வன்மையும் வலியின்மையுந் தனது செயல்என்பது தோன்ற முன்னர் வென்ற அசுரர் பின்னர்தோற்க வானவர்க்கு அருள்செய்தனன் என்பார் முதுவன் பகை யறவென்றனர் முடிவானவர் என்றார். (௭)

வெற்றிப்பறைசாற்றிப்பெருவிறல்விண்ணவர்மீண்டு
கொற்றத்துயர்கடவுள்ளவைக்களமேவரக்குறுகிச்
செற்றுச்செருவென்றோங்கியதிறலோடுறைகுற்றார்
மற்றப்பொழுதுயர்வாசவன்மதமுற்றுரைசெய்வான்.

(இ-ள்.) பெருவிறல் விண்ணவர் வெற்றி பறை சாற்றி மீண்டு - பெரியவன்மையையுடைய தேவர்கள் வெற்றிப்பறை யறைந்து திரும்பி, கொற்றத்து உயர் கடவுள் அவைக்களம் மேவர குறுகி - வெற்றியாலுயர்ந்த தெய்வசபைக்களத்தைப் பொருந்த அடைந்து, செற்று செருவென்று ஓங்கியதிறல் ஒடு உறை குற்றார் - கோபித்துப் போரில்வென்றுயர்ந்த வன்மையா லிறுமாந்திருந்தார்கள், மற்று - அது வொழிந்து, அப்பொழுது உயர் வாசவன் மதம் உற்று உரை செய்வான் - அக்காலையில் வெற்றியாலோங்கிய இந்திரன் அகங்கரித்துக்கூறுவான்.

மற்று என்னும் இடைச்சொல் வினைமாற்றுப் பொருளில் வந்தது. (௮)

அச்சோவெனதாண்மைத்திறமார்கூறுவரொன்று
னச்சிரவன்றனைவெங்கனலவனைச்சமனிருதி
யச்சூரனையவனைப்புனலரசன்வளியவனை
யச்சிலனையளகைக்கிறையீசானனங்கவனை

(இ-ள்.) அச்சோ எனது ஆண்மை திறம் ஆர் கூறுவர் என்றான் - ஐயோ எனது ஆண்மைத்திறத்தை யாரெடுத்துக்கூறுவர் என்று கூறினன், அச்சேர் அவன் தன்னை வெங்கனல் - அந்தச்சீராக அவ்விந்திரனைநோக்கி அக்கினிக்கடவுளும், அவனை சமன் - அவ்வக்கினிக் கடவுளைநோக்கி இயமனும், அச்சூரனை நிருதி - அவ்வியமனைநோக்கி நிருதியும், அவனை புனல் அரசன் - அந்நிருதியைநோக்கி வருணனும், அவனை வளி - அவ்வருணனைநோக்கி வாயுவும், அச்சிலனை அளகைக்கிறை - அந்த வாயுவைநோக்கிக் குபேரனும், அங்கு அவனை ஈசானன் - அவ்விடத்து அக்குபேரனைநோக்கி ஈசானனும்.

ஈசானனைமலரோனவன்றனைநாரணனிகலிப்
பேசாவிறல்பேசிப்பிணக்குறுபூசலைநோக்கித்
தூசார்வனமுலையம்பிகைதுணைவற்றொழுதின்னோர்
மாசார்செருக்கொழியும்படிவள்ளாலருளென்றாள்.

(இ-ள்.) ஈசானனை மலரோன் - அவ்வீசானனைநோக்கிப் பிரமனும், அவன்றனை நாரணன் - அப்பிரமனைநோக்கித் திருமாலும், இகலி - தம்மைப்புகழ்ந்து ஒருவர்க்கொருவர் பகைத்து, பேசா விறல் பேசி - எடுத்துப் பேசுதற்கரிய வலிமைகளையெல்லாம் எடுத்துப்பேசி, பிணக்குறு பூசலை நோக்கி-தம்முட்பிணங்கும் பெரிய வாரவாரத்தைக் கடைக்கணித்தருளி, தூசு ஆர் வன முலை அம்பிகை துணைவன் தொழுது - உத்தரீயமணிந்த சந்தனக்கோலம்வாய்ந்த தனங்களையுடைய உமையம்மைதமது துணைவராகிய இறைவனைவணங்கி, இன்னோர் மாசு ஆர் செருக்கு ஒழியும்படி வள்ளால் அருள் என்றாள் - இவர்போல்வாரது குற்றம்வாய்ந்த ஆணவச்செருக்கு ஒழியும் வண்ணம் வள்ளலே அருளாயென்று கூறினர்.

வள்ளல் பெருங்கொடையாளன். (அ)

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

நிணம்புல்குசூலம்வலமாகவேந்திநெடுமால்விரிஞ்சன்முதலோர்
பிணம்புல்குகாட்டினடமாட்டுகந்துபிறைவேணிவைத்தபெருமான்
கணம்புல்குதேவர்முரணைத்தவிர்ப்பவவர்முன்புகாமரளிவீழ்
மணம்புல்குதொங்கலணிதோளியக்கவடிவொன்றுகொண்டணுகினன்.

(இ-ள்.) நிணம் புல்கு சூலம் வலமாக ஏந்தி - பகைவரது நிணம்வாய்ந்த சூலத்தை வலப்புறமாகஏந்தி, நெடுமால் விரிஞ்சன் முதலோர் பிணம் புல்கு காட்டில் நடம் ஆட்டு உகந்து பிறை வேணி வைத்த பெருமான் - திருமாலும் பிரமனும்முதலிய தேவர்கள் பிணமாகவமைந்த சர்வசங்காரகால வெளியாகிய மயானத்தில் நடனஞ்செய்தலைவிரும்பி இளஞ்சந்திரனைச் சடாமகுடத்தில்வைத்த இறைவன், தேவர் கணம் புல்கு முரணைத் தவிர்ப்ப அவர் முன்பு - தேவர்கூட்டங்கொண்ட மாறுபாட்டையொழித்தருள அவர்கள்முன்னே, காம மருவு அளி வீழ் மணம் புல்கு தொங்கல் அணி தோள் இயக்க வடிவு ஒன்று கொண்டு அணுகினன் - தேனைவிரும்பிய வண்டுகள்வீழும் வாசம்வாய்ந்த மாலையணிந்த தோளையுடைய யக்ஷத்திருவுருவொன்றுகொண்டடைந்தான்.

காமமருவு காமர் - தொகுத்தல். நடமாட்டுகந்து பிறைவேணிவைத்த பெருமான் என்ற விசேஷணம் அழிந்த திருமால்முதலியோர் தத்தம் பதங்களையும் அதிகாரங்களையு மீளவடைந்துய்தற்கு என்னுங் கருத்தை யுட்கொண்டிருத்தலால் கருத்துடையடையணி.

சந்திரன் தக்கன்சாபத்தால் சோடசகலைகளுள் பதினைந்து கலையையுமிழந்து ஒரு கலையையு மிழப்பதன்முன் சரணடையச், சிவபிரான் கருணைகூர்ந்து அந்தத் தக்க

ன்சாபந் தொடராமல் அந்த வொருகலையைத் தனது திருமுடியிலணிந்து இழந்த கலை களையடைய அப்பெருமான் அருள்செய்தனன் என்பதை—

" தீர்ந்தனவன்றியேதிங்கடன்னிடை
ஆர்ந்திடுகலைகளையங்கையிற்கொளா
வார்ந்திடுசடைமுடிவயங்கச்சேர்த்தினன்
சார்ந்திலதிவ்வழித்தக்கன்சாபமே" எனக் கந்தபுராணத்தில் வருதல் காண்க. (கூ)

அணுகித்துரும்பையெதிர்நட்டுமுன்னரிறுமாந்துவைகுமவனைப்
பணிலத்தனாதியிமையோர்களேக்கியிவணீபயிற்றுமிதுவென்
றுணிபுற்றுவைகுமொருநீயெவன்கொல்புகலென்றுசொல்லுமொழிகேட்
டுணர்விற்சிறந்ததவர்கண்டுகொள்ளுமுவனின்னபேசலுறுவான்.

(இ-ள்.) அணுகி துரும்பை எதிர் நட்டு முன்னர் இறுமாந்து வைகும் அவனை- தேவர்சபையையடைந்து ஒருதுரும்பினை அவர்களெதிரேநட்டு அவர்முன்னே இறுமாப்புற்று இருந்தருளும் இறைவனை, பணிலத்தன் ஆதி இமையோர்கள் நோக்கி இவண் நீ பயிற்றும் இது என் - சங்கினையேந்திய திருமால்முதலிய தேவர்கள்பார்த்து இவ்விடத்திலே நீ செய்யும் இக்காரியமென்ன, துணிபு உற்று வைகும் ஒரு நீ எவன் கொல் புகல் என்று சொல்லும் மொழிகேட்டு - சிறிதும் அச்சமின்றி இறுமாந்திருக்கும் நீயார் சொல்லாயென்று வினவும் வார்த்தையைக்கேட்டு, உணர்வில் சிறந்ததவர் கண்டுகொள்ளும் உவன் இன்ன பேசல் உறுவான் - அறிவின் மேம்பட்ட தவத்தையுடையோர் மனக்கண்ணாற்கண்டு தரிசிக்கும் இறைவன் இதனைக்கூறுவான்.

திருமால்முதலியோர் மலச்சிமிழ்ப்புடையராதலாலறியாது வினாயினர் என்பார் ஒரு நீ யெவன் கொல்புகல் எனவும்,மலச்சிமிழ்ப்பினின்று நீங்கித் திருவருளாற் றன்னை வழிபட்டோரா லுணரப்படுவா னென்பார் உணர்விற்சிறந்த தவர் கண்டுகொள்ளும் எனவுங் கூறினர். (கo)

எவனேனுமாகவருநானுமாதுவலியின்றளக்கலுறுவேன்
றுவளாதுநம்முனடுமித்துரும்புதுணிசெய்யவல்லனெவனோ
வவனேதயித்தியரைவென்றமீளியறிகென்றுரைப்பமகவா
னிவராவெழுந்துகுலிசத்தைவீசிவறிதேயிளைத்தனனரோ.

வரும் நான் எவனேனும் ஆக - வந்த நான்யாராயினுமாக, நுமாது வலியின்று அளக்கல் உறு வேன் - உங்களுடைய வலியையின்று வரையறுக்க வந்தேன், நம்முன் துவளாது நடும் இத்துரும்பு துணி செய்ய வல்லன் எவன் ஓ - நம்முன் துவளாமல்நட்ட இத்துரும்பினைத் துண்டுசெய்ய வல்லவனெவனோ, அவனே தயித்திரை வென்ற மீளி அறிக என்று உரைப்ப - அவனே அசுரரைவென்ற திண்ணியனென்று அறியக்கடவாய் என்றுகூற, மகவான் இவரா எழுந்து குலிசத்தை வீசி வறிதே இளைத்தனன் - இந்திரன் றுள்ளியெழுந்து வச்சிராயுதத்தைவீசி வலியிழந்து இளைத்தான். (கக)

மற்றைத்திசைக்கணுறைவோரும்வன்மைமுழுதுஞ்செலுத்திவலியி
லொற்றைத்துரும்பையசைவிக்குமாற்றலிலராயுடைந்துவிடலுஞ்
செற்றத்தெழுந்தவயனுர்தமாதுபடையைச்செலுத்தவரியு
மற்றப்படாதபடைவீசியார்ப்பவவைகூர்மழுங்கியனவே.

(இ-ள்.) மற்றை திசை கண் உறைவோரும் வன்மை முழுதும் செலுத்தி - அவனொழிந்த தென்கிழக்குமுதலிய திசையிலுள்ள வெனைத்திக்குப் பாலகர்களும் தங்கள் வன்மைமுற்றுஞ் செலுத்தி, வலி இல் ஒற்றைத் துரும்பை அசைவிக்கும் ஆற்றல் இலராய் உடைந்துவிடல் உம் - வலிமையில்லாத ஒருதுரும்பை அசைவிக்கச்செய்யும் வன்மையில்லாதவராய்ப் பின்னிட, செற்றத்து எழுந்த அயனுர் தமாது படையை செலுத்த - கோபத்தோடெழுந்த பிரமன் தனது தண்டத்தைச்செலுத்த, அரியும் அற்றப்படாத படை வீசி ஆர்ப்ப - திருமாலும் பின்னிடுதலில்லாத தனது சுதரிசனமென்னுஞ் சக்கரத்தையெறிந்து கொக்கரிக்க, அவை கூர் மழுங்கியன - அத்தண்டமுஞ் சக்கரமுங் கூர்மழுங்கி ஒய்ந்தன. (கஉ)

துரும்பொன்றுதன்னில்வலிமுற்றிழந்தசுரரச்சமெய்திவியவா
விரும்பண்புகூரவெவனீயியம்புகெனலும்மியக்கவடிவாய்
வரும்பாண்டரங்கனுருவங்கரப்பமறுகித்திகைக்குமவர்முன்
கரும்பொன்றுதோளிமலையாண்மடந்தையெதிர்காட்சிதந்தருளினள்.

(இ-ள்.) துரும்பு ஒன்று தன்னில் வலிமுற்றும் இழந்த சுரர் அச்சம் எய்தி வியவா - ஒருதுரும்பால் தமது வலிமைமுற்றுமிழந்த திருமால் முதலிய தேவர்களச்சங்கூர்ந்து அதிசயித்து, இரும் பண்பு கூர எவன் நீ இயம்புக எனலும் - மிக்கவளிப்பினையாங்கள்கூர நீயார்என்று சொல்லுகவென்று வினவ, இயக்கவடிவாய்வரும் பாண்டரங்கன் உருவம் கரப்ப-யக்ஷவடிவாய் வந்தருளிய இறைவனது திருவுருவம் மறைந்தருள, மறுகித்திகைக்கும் அவர் முன் - மனஞ்சுழன்று மயங்குமவர்கள் முன்னே, கரும்பு ஒன்று தோளி மலையாள் மடந்தை எதிர் காட்சி தந்தருளினள் - கரும்பையொத்த தோளையுடையவராகிய உமையம்மை அவர்களெதிரே காட்சிதந்தருளினார்.

திரிபுரமெரிக்க நிலவுலகாகிய தேரின்மேற் பிரமன் சாரதியாகச் செலுத்தச்சென்ற காலத்து அப்பிரமன் கலைமகள் பிரிவால் வருந்துதலை, சிவபெருமான் தன்னுள்ளத்தில் கொண்டு அக்கலைமகளுருவாய் அவன்முன் நின்றாடிய கூத்திற்குப் பாண்டரங்கமெனப் பெயராதலால் பாண்டரங்கனென்பது காரணப்பெயர். "தேர்முன்னின்ற திசைமுகன்காணப்-பாரதியாடியவியன் பாண்டரங்கமும்" எனச்சிலப் பதிகாரத்தில் வருதல்காண்க. பாண்டரங்கனென்றதைப் பண்டரங்கனெனத் திருத்திஞரும் உளராலோவெனின்? பண்டரங்கனென்பதே பதமெனக்கருதினரோ? அன்றிச் செய்யுளிசை நோக்கிக் குறுக்கல் விகாரமாகக்கொண்டனரோ? யாதோஅறியோம். பாண்டரங்கனெனவருவதில் செய்யுளின்ஞேசை குன்றுமை காண்க. (கங)

எதிர்காணநின்றகருணைப்பிராட்டியிருதாள்பழிச்சியிமையோர்
முதிர்காதல்கொண்டுவழிபட்டுவண்கைமுடிமீதுகூப்பியுலகம்
பதினுலுமீன்றமுதல்வீயியக்கர்பதியாயணைந்தவவன்யார்
மதியேமெமக்குமொழிகென்றிரப்பமலைவல்லியின்னபுகலும்.

(இ-ள்.) எதிர்காண நின்ற கருணை பிராட்டி இருதாள் இமையோர் பழிச்சி - எதிரேதரிசிக்கக் காட்சிதந்துநின்ற அருள்வடிவாகிய உமையம்மையின் இரண்டுதிருவடிகளையும் தேவர்கள் வணங்கி, முதிர்காதல் கொண்டு வழிபட்டு வண்கை முடிமீது கூப்பி - முறுகிய அன்பால் வழிபாடுசெய்து வளவிய தமதுகையைச்சிரமேற்குவித்து, உலகம் பதினுன்கும் ஈன்ற முதல்வீ இயக்கர் பதியாய் அணைந்த இவன் யார் - பதினுன்குலகங்களையும் பெற்றருளிய முதல்வியே யக்ஷர்களுக்குத் தலைவனுய் இங்குவந்தவன்யார், மதியேம் எமக்கு மொழிக என்று இரப்ப மலைவல்லி இன்னது புகலும் -

அவனை இன்னனெனக் கருதாத எமக்கு இன்னனெனச் சொல்லக் கடவாயென்று குறையிரக்க உமையம்மை யிதனைக்கூறுவார்.

காதல் அன்பின் காரிய மாதலால் காரியத்தைக் காரணமாக வுபசரித்துக் காதல் கொண்டென்றார். இன்னது துவ்விகுதி தொகுத்தல் விகாரம். (கச)

எவன்வாணிகேள்வன்முதலோர்பதங்கணிலைபேறுசெய்யுமிறைவ
னெவனெப்பொருட்குமாதாரமாகியெவருந்தொழப்படுபவ
னெவன்முற்றுமாக்கிநிலைசெய்துபோக்கியறிஞர்க்கினிக்குமமுத
னவனென்றுகாண்மினிமையீரியக்கவடிவாகிவந்தவழகன்.

(இ-ள்.) இயக்க வடிவாகிவந்த அழகன் - இங்கு யக்ஷவடிவாயெழுந்துவந்தருளிய பேரழகன், வாணி கேள்வன் முதலோர் பதங்கள் நிலைபேறு செய்யும் இறைவன் எவன் - பிரமன்முதலியோர் பதங்கள் நிலைபெறச்செய்வோனெவன், எப்பொருட்கும் ஆதாரம் ஆகி எவரும் தொழப்படுபவன் எவன்-சித்தசித்தாகிய எவ்வகைப்பட்ட பொருட்கும் அவை ஆதேயமாகத்தான் ஆதாரமாகி எவராலும் வணங்கப்படுவோனெவன், முற்றும் ஆக்கி நிலை செய்து போக்கி அறிஞர்க்கு இனிக்கும் அமுதன் எவன் - யாவையுஞ் சிருட்டித்துக் காத்தழித்துத் தன்னை உணரும் பக்குவர்க்கு இனிக்கும் அமுது போல்பவன் எவன், அவன் என்று இமையீர் காண்மின் - அவனேயென்று தேவர்களே உணருங்கள்.

திருமான்முதலிய தேவர்களிலும் இவன் பேரழகன் என்பது குறிப்பித்தற்கு அழகனென்றார். இதனால் பலவேறுவகைப்பட நிற்கும் அநந்தசத்தியாகிய வரம்பிலாற்றலுடைமை கூறப்பட்டது. (கரு)

எவனுக்குமுற்றும்வடிவங்களாகுமெவனுண்மையாருமறியா
ரெவனெங்கும்யாவுமறிவுற்றுநிற்பனெவனாணடக்குமுலக
மெவனைத்துதிக்குமறையீறுமுற்றுமெவனங்கவைக்குமரியா
னவனென்றுகாண்மினிமையீரியக்கவடிவாகிவந்தவழகன்.

(இ-ள்.) இயக்க வடிவு ஆகி வந்த அழகன் - யக்ஷவடிவாகிவந்த பேரழகையுடையவன், எவனுக்கு முற்றும் வடிவங்கள் ஆகும் - எவனுக்கு உலகமுற்றும் உருவங்களாகும், உண்மை யாரும் அறியான் எவன் - தனதுண்மையை எவரும் உணர்தற்கரியனாய் நிற்பவனெவன், எங்கும் யாவும் அறிவுற்று நிற்பன் எவன் - எவ்விடத்தும் எவ்வுயிரிலும் அறிவுறுத்திநிற்பவனெவன், எவனால் உலகம் நடக்கும் - எவனால் உலகங்களியலும், மறையீறு முற்றும் எவனைத் துதிக்கும் - வேதாந்தமுற்றும் எவனைத் துதியாநிற்கும், அங்கு அவைக்கும் அறியான் எவன் - அவ்விடத்து அவ்வேதாந்த முற்றுக்கும் உணர்தற்கரியான் எவன், இமையீர் அவன் என்று காண்மின் - தேவர்களே அவனேயென்றறியுங்கள்.

எவனுக்கு முற்றும் வடிவங்களாகும் என்றதனாலும், எங்கும் யாவு மறிநிற்பன் என்றதனாலும் சர்வஞ்ஞத்துவம் எனப்படும் முற்றுமுணர்தலும், எவனுண்மை யாரும் அறியான் என்றதனாலும், எவனங்கவைக்கு மரியான் என்றதனாலும், சுதந்திரனெனப்படுந் தன்வயத்தனாதலும், எவனால் நடக்கு முலகம் என்றதனால் அநந்தசத்தியாகிய அளவிலாற்ற லுடைமையும், அநாதிபோதம் அநாதி முத்தத்தன்மை யெனப்படும் இயல்பாகவே பாசங்களீங்குதலும் இதனாற் கூறப்பட்டன.

எவனுமமெண்ணினெவன்றாள்பழிச்சினெவனைக்கருத்திணிறுவில்
னெவனன்பர்சேவைபுரியிற்பவங்களிரிவுற்றுமுத்திமருவு
மெவனுண்மையின்பவறிவாகிநிற்பனெவனிந்துவேணிமுடியா
னவனென்றுகாண்மினிமையீரியக்கவடிவாகிவந்தவழகன்.

(இ-ள்) இயக்க வடிவாகி வந்த அழகன் - யக்ஷவடிவாகிவந்த பேரழகுடைய வன், எவன் நாமம் எண்ணின் - எவனுடைய திருநாமங்களைக்கருதினால், எவன் தாள் பழிச்சின் - எவனுடைய திருவடியைத்தரிசித்தால், எவனைக் கருத்தில் நிறுவில் - எவனை இதயத்தில் இருத்தினால், எவன் அன்பர் சேவை புரியில் - எவனுடை யடியவர் சேவை செய்தால், பவங்கள் இரி வுற்று முத்தி மருவும் - சனனங்க ளொழிந்து முத்திகைகூடும், உண்மை இன்பம் அறிவாகி நிற்பவன் எவன் - சத்துச்சித்து ஆனந்தவடிவாய் நிற்பவனெவன், இந்து வேணி முடியான் எவன் - சந்திரனையணிந்த சடாமுடியையுடையவனெவன், அவன் என்று இமையீர் காண்மின் - அவனேயென்று தேவர்களேகாணுங்கள்.

இதனால் எவனுமமெண்ணின் என்பதுமுதல் முத்திமருவும் என்பது காறும் அனுத்த சத்தியெனப்படும் பேரருளுடைமையும், எவனுண்மை யின்பவறிவாகி நிற்பன் என்றதனால் விசுத்ததேகம் எனப்படும் தூயவுடம்பினனாதலும்,இந்து வேணி முடியான் என்றதனால் பலவேறுவகைப்பட நிற்கும் அநந்தசத்தியாகிய வரம்பிலாற்ற லுடைமையுங் கூறப்பட்டன. முன்னர்க்கூறின குணங்களையே மீட்டுங்கூறியது செயல் வேறுபாட்டின்மேல் நிற்றலால் கூறியது கூறலன்றுசெய்யுளாதலால் கூட்டிப்பொருள் கொள்கவெனினும் அமையும். (கஎ)

இவ்வாறுகூறித் தானே யவனெனத் திருமால்முதலிய தேவர்களுக்கு இறைவனுணர்த்தினமையை—

“ அண்டத்தொகுப்பெலாமெவனிறைகுமவனெண்ணில்லாத
அண்டத்துயிருக்குயிராகியமைந்தானெவன்மற்றவனென்றும்
அண்டத்தகத்தும்புறத்துமெவன்சான்றாயமைந்தானவனிகரின்
றண்டத்திருநலுருவனெவனவனென்றறிமினெனையிமையீர்.

எவனும்பதங்கணிலைபெறுதல்செய்யுமிறைவனெஞ்ஞான்றும்
எவனெப்பொருட்குமாதாரமாகியிருக்குமிணையில்லான்
எவனுன்மறைநும்போல்வார்க்குமுண்மைதெரிந்திட்டிடப்படான்
எவன்மெய்யன்பின்வலைப்படுவானவனென்றறிமினெமையிமையீர்.

எவனைவணங்கின்யாவுமுறுமெவனைவழுத்தினினித்திருக்கும்
எவனைநினையிற்பிறவியறுமெவனைமறையீறெடுத்துரைக்கும்
எவனைமெய்ஞ்ஞானியர்தொழுவரெவனையரியனென்றுரைப்பர்
எவனைநாசமிலியென்பரவனென்றறிமினெனையிமையீர் ”

எனச் சூதசங்கிதையில் வருதல்காண்க.

ஒற்றைத்துரும்பினுமதாற்றன்முற்றுமொழிவித்தகன்றவவனைப்
பற்றுற்றுநீவிரறிகின்றிலீர்கள்பழையோனவன்றன்வலமே
யற்றத்தினீக்குமவன்பாலுதித்தவகிலந்தனக்குவலமா
மற்றுத்தமக்குமுதலாயமண்ணின்வலியேகடாதிவலிபோல்.

(இ-ள்.) தமக்கு முதலாய மண்ணின் வலியே கடாதி வலிபோல் - தமக்கு முதற்காரணமாகிய மண்ணின் வலிமையே காரியப்பாடாகிய கடகலசாதிமுதலிய பாண்

டங்களின் வலிமையைப்போல, அற்றத்தின் நீக்கும் அவன் பால் உதித்த அகிலம் தனக்கு வலம் ஆம் - பக்குவான்மாக்களை மலக்குற்றத்தினின்று நீக்கியருளும் அம்முதற்காரணனாகிய இறைவனிடத்திற்றோன்றிய காரியப்பாடாகிய எல்லாப்பொருளுக்கும் அவன் வலிமையாம் (ஆதலால்) ஒற்றை துரும்பின் நுமது ஆற்றல் முற்றும் ஒழிவித்து அகன்ற அவனை - ஒருதுரும்பால் உமதுவலிமைமுற்றும் ஒழிவித்து நீங்கிய அவனை, நுவிர் பற்றுற்று - நீங்கள் உமதுவன்மையைப் பெரிதாகக்கருதி, பழையோன் அவன்றன் வலமே அறிகின்றி லீர்கள் - தொன்று தொட்டுள்ள அவனதுவன்மையே உங்களது வலிமையென்று அறிந்திலீர்கள்.

காரணகாரியங்களின் பிம்பப்பிரதிபிம்பபாவங்களை யெடுத்துக்கூறுதலால் எடுத்துக்காட்டுவமையணி. (௧அ)

இனிநீவிருய்திபெறுமா றுரைப்பலிமையாதமுக்கணிறையோன்
பனிவீசுகம்பைநளிநீர்துளிக்குமொருமாநிழற்படியிலென்
றனையாண்டுகொண்டுமகிழ்காமர்கச்சிதனிலெய்திவெள்ளைவிடையோன்
றுனிதீர்சரண்கள்சரணென்றடைந்துதொழுமின்களும்பருலகீர்.

(இ-ள்.) உம்பர் உலகீர் - விண்ணுலகிலுள்ளதேவர்களே, இனி நீவிர் உய்தி பெறும் ஆறு உரைப்பல்-இனிநீங்கள் பிழைக்கும்வண்ணங் கூறுகின்றேன், இமையாதமுக்கண் இறையோன்-இமையாத மூன்றுகண்களையுடைய இறைவன், பனி வீசு கம்பை நளிநீர் துளிக்கும் ஒருமா நிழல் படியில்-குளிர்ச்சிவீசுங் கம்பாநதி பெருமைவாய்ந்த நீர்த்துளியைத் துளிக்கும் ஒருமாவினிழலின்கீழ், என்தனை ஆண்டுகொண்டு மகிழ் - என்னையிடப்பாகந்தந்து ஆண்டுகொண்டு மகிழ்கூரும், காம மருவு கச்சி தனில் எய்தி - விருப்பந்தருங் கச்சித்திருப்பதியையடைந்து, வெள்ளை விடை யோன் துனி தீர் சரண்கள் சரண் என்று அடைந்து தொழுமின்கள் - வெள்ளிய இடபவூர்தியை இறைவனது இயல்பாகவே துன்பத்தினின்று நீங்கிய திருவடிகளை அடைக்கலமென்று அடையுங்கள்.

பிறவித் துன்பத்தினின்று நீக்கப்படும் உயிர்கட்கு இயல்பாகவே துன்பத்தினின்று நீங்கிய பொருளால் இயலுமென்பதுதோன்ற துனிதீர் சரண்கள் சரணென்று எனவும், யான் கம்பாநதியிற் பூசித்தமையா லெனக்கு இடப்பாகந் தந்தருளினர் என்பது தோன்றக் கம்பை நளி நீர் துளிக்கு மொருமா நிழற் படியிலென்றனை யாண்டுகொண்டு எனவுங்கூறினார். காமர்மருவு காமருவு தொகுத்தல். (௧௯)

என்றுகூறினண்மறைந்தனளுலகமீன்றெடுத்தா
ளன்றுமாலயன்றொடக்கமாமமரர்களெல்லா
நன்றுநம்மறிவிருந்தவாறென்றுளநாணிச்
சென்றுசேர்ந்தனர்கச்சியந்திருநகர்த்தேத்து.

(இ-ள்.) என்று உலகம் ஈன்று எடுத்தவள் கூறினள் மறைந்தனள் - என்று உலகத்தையீன்றெடுத்த வுமையம்மைகூறி மறைந்தருளினார், அன்று மால் அயன் தொடக்கம் ஆம் அமரர்கள் எல்லாம்-அக்காலத்துத்திருமால் பிரமன்முதலியதேவர்களெல்லோரும், நம் அறிவு இருந்த ஆறு நன்று என்று உளம் நாணி - நமதறிவிருந்தவகை நன்றாயிருந்தது என்று தங்களைத் தாங்களேயிகழ்தலால் மனங்கூசி, கச்சி அம் திரு நகர் தேத்து சென்று சேர்ந்தனர் - கச்சியாகிய அழகிய திருநகரிடத்துச் சென்றடைந்தார்கள்.

தமதறியாமையைக்கருதி நொந்தனர் என்பார் நன்று நம்மறிவிருந்தவா றென்றுளநாணியென்றார். (௨0)

திரிதசீச்சரப்பெயரினாற்சிவக்குறியிருத்திக்
கரியகண்டனையருச்சனைகரிசறவாற்றிப்
பெரிதுமாமிடல்பெற்றனர்வரங்களும்பெற்றா
ரரிவைபாகனுக்கினியதாமத்திருக்கோயில்.

(இ-ள்.) திரிதசீச்சரப் பெயரினால் - மூன்றாந்தசையாகிய கௌமாரதசையை யுடைய திருமால்முதலிய தேவர்களால் பூசிக்கப்படுதலினால் திரிதசீச்சரர் என்னும் திருநாமத்தால், சிவக்குறி இருத்தி - சிவலிங்க தாபனஞ்செய்து, கரிய கண்டனை கரிசு அற அருச்சனை ஆற்றி - ஸ்ரீகண்டத்தையுடைய இறைவனைக் குற்றமற ஆகமவிதியாலருச்சித்து, பெரிது மாமிடல் பெற்றனர் - மிகவும் பெரியவன்மைகளைப் பெற்றார்கள், வரங்களும் பெற்றார்-அதுவன்றிப் பலவரங்களையும் பெற்றார்கள், அத்திருக்கோயில் அரிவைபாகனுக்கு இனியது ஆம் — அந்தத்திருக்கோயில் உமையம்மையை இடப்பாகத்திலுடைய இறைவனுக்கு மகிழ்ச்சிதருவதாம்.

பால யவ்வன கௌமார மென்னும் மூன்று தசையில் திருமால்முதலிய தேவர்கள் மூன்றாம்தசையாகிய கௌமாரதசையை யுடையவராதலால் திரிதசரென அவர்க்குப்பெயர்வந்தது காரணப்பெயர். பாலபருவம் முருகக்கடவுளுக்கும், யவ்வனபருவம் சிவபெருமானுக்கும் உள்ளன என்பது வேதநூற்றுணிபு. (உக)

அமரீசப்படலம் — முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கககக.

---

## திருமேற்றளிப்படலம்.

துளிமதுத்தொடைக்கடவுளர்தொழுமமரீசங்
களிவரப்புகன்றனமுருத்திரகணமுதலோ
ரளியினாற்றொழுதேத்துமீரைம்பதிற்றொன்பான்
றளிகளீண்டெடுத்தியம்புதும்வழுத்தபுநெறியீர்.

(இ-ள்.) மது துளி தொடை கடவுளர் தொழும் அமரீசம் - தேன்துளிக்கும் மலர்மாலையையணிந்த திருமால்முதலிய தேவர்கள்வணங்கும் அமரீசத்தை, களி வர புகன்றனம் - களிப்புண்டாக முன்புசொன்னோம், உருத்திர கணமுதலோர் அளியினால் தொழுது ஏத்தும் - சதஉருத்திரர்முதலியோர் அன்பால்தொழுதுதுதிக்கும், ஈரைம்பதிற்று ஒன்பான் தளிகள் - நூற்றுப்பதினெட்டுத் திருத்தளிகளை, வழுதபு நெறியீர் ஈண்டு எடுத்து இயம்புதும் - குற்றத்தினின்றுநீங்கிய நெறியையுடையீர் இவ்விடத்து எடுத்துக்கூறுகின்றோம். (க)

சேகுதீரமரீசத்தின்சேயிடைத்தென்பான்
மாகவைப்பினையுரிஞ்சியமணிமதிற்காயா
ரோகணக்குடபாங்கர்நூற்றுப்பதினெட்டு
நாகர்போற்றிடநலங்கெழுதலங்கணன்குளவால்.

(இ-ள்.) சேகு தீர் அமரீசத்தின் சேயிடை தென்பால் - குற்றத்தினின்று நீங்கிய அமரீசத்திற்குத்தூரமாகிய தென்திசையில், மாக வைப்பினை உரிஞ்சிய மணிமதில் காயாரோகணம் குடபாங்கர் - விண்ணுலகையளாவிய இரத்தினமிழைத்த மதில்சூழ்

ந்த காயாரோகணமென்னுந் திருப்பதியின்மேற்பக்கத்தில், நூற்றுப் பதினெட்டு நாகர் போற்றிட நலம் கெழு தலங்கள் நன்கு உள - உருத்திரகணங்களாகிய நூற்றுப்பதினெண்மர்கள் வணங்க நன்மையமைந்த திருப்பதிகள் மிகவு முள்ளன.

திருமால்முதலிய தேவர்கள் தமதிறுமாப்பால் விளைந்த குற்றத்தினின்று நீங்குதற்கு வழிபட்ட தலமாதலால் சேகுதீ ரமரீசம் என்றார். (உ)

அண்டங்காத்தமருருத்திரர்நூற்றுவரருட்சீ
கண்டன்வீரன்குரோதனேமுதற்கருதெண்மர்
மண்டலத்திறையோரிருநால்வரும்வழுத்திப்
பண்டுபூசனைபுரிந்திடப்பட்டவத்தளிகள்.

(இ-ள்.) அண்டம் காத்து அமர் உருத்திரர் நூற்றுவர் - அண்டங்களைக்காத்து அமர்ந்த கபாலீசர்முதலிய உருத்திரர்நூற்றுவரும், அருள் சீ கண்டன் வீரன் - கருணையையுடைய ஸ்ரீகண்டரும் வீரரும், குரோதனே முதல் கருது எண்மர் - குரோதனே முதலாகக்கருதும் எண்மரும், மண்டலத்து இறையோர் இருநால் வரும் - புவனாதிபரொண்மரும் (ஆகிய இவர்களால்) அதளிகள் வழுத்தி பண்டு பூசனை புரிந்திடப் பட்ட - அந்தத்திருத்தளிகள் துதித்து முன்பு பூசிக்கப்பட்டுள்ளன.

கபாலீசன், அசன், புத்தன், வச்சிரதேகன், பிரமத்தனன், விபூதி, அவ்வியன், சத்தா, பிநாகி, திரிசோதியன் என்னும் இப்பதின்மரும் இந்திரதிக்கிலும், உருத்திரன், உதாசனன், பிங்கலன், காதகன், அயன், சுவலன், தகனன், வெப்புரு, பிரமாந்தகன், க்ஷயாந்தகன் என்னும் இப்பதின்மரும் அக்கினிதிக்கிலும், யாமியன், மிருத்தியு, அரன், தாதா, விதாதா, கத்திரு, காலன், தன்மன், சங்யோத்தா, வியோக்கிருதன் என்னும் இப்பதின்மரும் யமதிக்கிலும், நிருதி, மாரணன், அரந்தா, குரூரதிருட்டி, பயாந்தகன், ஊர்த்துவ காயன், விரூபாக்ஷன், தூமிரு, லோகிதன், தெங்கிட்டிருணன், என்னும் இப்பதின்மரும் நிருதிதிக்கிலும், பெலன், அதிபெலன், பாசஅத்தன், மகாபெலன், சுவேதா, செயபத்திரன், தீர்க்கவாகு, செலாந்தகன், வடவாமுகன், தீமான் என்னும் இப்பதின்மரும் வருணதிக்கிலும், சீக்கிரன், லகு, வாயு வேகன், தீக்ஷணன், சூக்குமன், க்ஷயாந்தகன், பஞ்சாந்தகன் பஞ்சசிகன், கபத்தி, மேகவாகனன் என்னும் இப்பதின்மரும் வாயுதிக்கிலும், நிதீசன், ரூபலான், கன்னியன், சௌமியன், சௌமியதேகன், பிரமத்தனன், சுப்பிரகடன், பிரகாசன், இலக்குமிவான், சோமேசன் என்னும் இப்பதின்மரும் குபேரதிக்கிலும், வியாத்தியதிபன், ஞானபுகன், சருவன், வேதபாரகன், மாத்திருவிருத்தன், பிங்கலாக்ஷன், பூதபாலன், பெலீப்பிரியன், சர்வவித்யாதிபன், தாதா என்னும் பதின்மரும் ஈசானதிக்கிலும், அனந்தன், பாலகன், வீரன், பாதாளாதிபதி, விபு, இடபத்துவசன், உக்கிரன், சுப்பிரன், உலோகிதன், சருவன் என்னும் இப்பதின்மரும் அண்டகடாகத்தின் கீழாகிய விஷ்ணுதிக்கிலும், சம்பு, விபு, கெணத்தியக்ஷன், திரியக்ஷன், திரீதேசகவாதகன், சன்வாகன், விவாகன், நபன், லீபசு, விலக்ஷணன் என்னும் இப்பதின்மரும் அண்டகடாகத்தின் மேலாகிய பிரமதிக்கிலும் ஆக அண்ட கடாகத்தின் புறம்பேயுள்ள இந்திரதிக்குமுதலிய பத்துத்திக்கிலுமிருந்து அவ்வத்திக்குப்பாலகரால் பூசிக்கப்பட்டு நூறுபுவனங்களையும் பாதுகாப்போராதலால் அண்டங்காத்தம ருருத்திரர் நூற்றுவரென்றார். குரோதனர்முதலிய எண்மரையும், மண்டலத்திறையோர் எண்மரையும் வருமிடங்களிற்காண்க. (ங)

இருமையுந்தருமேன்மையத்தளிகளையென்றும்
பொருவின்மெய்த்தவர்பற்பலரருச்சனைபுரிவார்

கருதரும்புகழவற்றிடைக்கண்டவர்கருநோ
யொருவிவீடுறுமேற்றளியென்பதொன்றுளதால்.

(இ-ள்.) இருமை உம் தரும் மேன்மை அ தளிகளை - அடைந்தோர்க்கு இகபர போகங்களையுந் தாராநின்ற மேன்மையையுடைய அந்தத் திருத்தளிகளை, என்றும் பொருவில் மெய்த்தவர் பல் பலர் அருச்சனை புரிவார் - எக்காலத்தும் ஒப்பில்லாத உண்மைவாய்ந்த தவசிரோஷ்டர்கள்பலரும் அருச்சியாநின்றார்கள், கருது அரும் புகழ் அவற்று இடை கண்டவர் கருநோய் ஒருவி வீடு உறும் மேற்றளியென்பது ஒன்றுளது - நினைத்தற்கரிய புகழ்ச்சிவாய்ந்த திருத்தளிகளுள் தரிசித்தோர் பிறவியாகிய நோயினின்று நீங்கி மோட்சத்தையடையும் திருமேற்றளியென்னுந் திருத்தளி ஒன்றுளது.

தெரிசித்தோர்க்கு இகபரபோகங்களை விரைந்தருளுவது என்பார் இறுமையுந் தரு மேன்மையத் தளிகளெனவும், கண்களால்கண்டு பரிசித்தவரும் பந்தத்தினின்று நீங்கி முத்தியடைவரென்பார் கருநோயொருவி வீடுறுமெனவுங் கூறினார். (ச)

நவிலுமத்தலத்தெய்திமுன்னாகணைப்புத்தேள்
கவிரிதழ்ச்சிறுநுணுகிடைக்கவுரிதன்களபக்
குவிமுலைத்தடச்சுவடுதோய்குரிசில்சாரூபம்
புவிமிசைப்பெறவிழைந்துமெய்த்தவம்புரிந்தனனால்.

(இ-ள்.) நவிலும் அதலத்து - சொல்லாநின்ற அத்திருப்பதியை, முன் நாகணைப் புத்தேள் எய்தி - சர்ப்பசயனத்தையுடைய திருமாலங்கடைந்து, கவிர் இதழ் சிறுநுணுகு இடை கவுரிதன் - முருக்கமலரையொத்த இதழையும் சிறுகிய நுணுகிய இடையையுமுடைய உமையம்மையினது, களபம் குவி முலை தட முலை சுவடு தோய் குரிசில் சாரூபம் புவிமிசைபெற விழைந்து - கூட்டுவர்க்கமணிந்த குவிந்த பெரிய தனச்சுவடுதோய்ந்த சிவபெருமானது சாரூபத்தை நிலவுலகின்மேற்பெற விரும்பி, மெய் தவம் புரிந்தனன - உண்மையாகிய தவத்தைச்செய்தனன்.

அங்கையேந்தும் அம்மானும் அங்கேந்துமம்மானும் என முன்னர் வந்ததுபோல நாக அணை நாகணையென வந்தது மரூஉ என இந்நூலாசிரியர் கொண்டனர். (ரு)

ஐம்புலன்களையடக்கிநின்றறுபகைதுறந்து
நம்புநீற்றணியக்கமாலிகையுடனயந்து
கம்பியாதுருத்திரங்கணித்திதயநற்கமலத்
தெம்பிரானருள்வடிவினையிடையறாதிருத்தி.

(இ-ள்.) ஐம்புலன்களை அடக்கி நின்று - பஞ்சேந்திரியங்களைப் பரிசமுதலிய விடயங்களிற் செல்லாதொடுக்கி நின்று, அறுபகை துறந்து - காமம் முதலிய அறுவகைப்பகையையும் புறங்கண்டு, நம்பு நீறு அணி-விரும்பும் திருநீற்றுக்கோலத்தை, அக்கமாலிகை உடன் நயந்து - உருத்திராக்கமாலையோடு கைக்கொண்டு, கம்பியாது உருத்திரம் கணித்து - மனஞ்சலியாது ஸ்ரீருத்திரத்தைச் செபித்து, இதயம் நல் கமலத்து எம்பிரான் அருள்வடிவினை இடை அறாது இருத்தி - இதயமாகிய பொலிவமைந்த தாமரையில் எமது பெருமானது திருவருள்வடிவை இடையறாமல் நிலைபெறச்செய்து.

அறுவகையென்றது காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியங்களை. அடக்கியென்றது காமமுதலிய அறுவகையிலுஞ் செல்லாது நிறுத்துதலாதலால் அடக்கிநின்று எனவும், அவற்றை யடக்கியகாலத்தில் அவை தாமே கழலுதலால் பகை துறந்து எனவும், நீறும் அக்கமாலையும் உருத்திரங்கணித்தற்கு ஓர் அறிகுறியாகிய அங்க

மாதலால் நீற்றணியக்கமாலிகையுடனயந்து எனவும், முத்திபெறுவோர்க்குரிய சாதனம் உருத்திரம் கணிப்பதாதலால் உருத்திரங்கணித்துஎனவும்,சிவபெருமானுக்கு இருதயன் என்பது ஒரு திருநாமமாதலால் இதயநற்கமலத்து இடையறாதிருத்தியெனவுங்கூறினார்.

சிவபெருமானுக்கு இருதயன் என்பது ஓர் திருநாமம் என்றதனை—

" எல்லாருடையவிருதயத்துமிருத்தலாலேசிவத்தினுக்கு
நல்லாருரைப்பரிருதயமென்றொருபேர்புகலுநான்மறையும்" எனச் சூதசங்கிதையில் சாந்தோக்கிய உபநிடதத்தமைந்த தாற்பரியம் உரைத்த அத்தியாயத்திற்காண்க.

ஆற்றருந்தவமியற்றுழியழல்விழித்தறுகட்
கூற்றைவென்றருள்பரம்பொருள்கருணைகூர்ந்தடலா
னேற்றின்மீதெழுந்தருளியெம்மடியரிற்சிறந்தோய்
நோற்றுநொந்தனைவேட்டனநுவறியென்றருள.

(இ-ள்.) ஆற்று அருந்தவம் இயற்று உழி - செய்தற்கரிய தவத்தைச் செய்யுமிடத்து, அழல் விழி தறுகண் கூற்றை வென்றருள் பரம் பொருள் - தீக்கொப்புளிக்குங் கண்களையும் அஞ்சாமையையும் உடைய இயமனை உதைத்து வென்றருளிய சிவபிரான், கருணைகூர்ந்து அடல் ஆன் ஏற்றின் மீது எழுந்தருளி - கிருபைகூர்ந்து வலிய விடபவூர்தியின் மேலெழுந்தருளி, எம்மடியரில் சிறந்தோய் நோற்று நொந்தனை, எமது அடியவருட்சிறந்தவனே நீ தவஞ்செய்து உடல் வாடினாய், வேட்டன நுவறி என்றருள - நீ விரும்பினவற்றை சொல்லாயென்றருள்செய்ய.

அடியவருள் திருமால் உத்தம அடியவனாதலால் அடியரிற்சிறந்தோயென்றருளினார். (எ)

உந்திபூத்தவனளப்பருமுவகையுட்டிளைத்துச்
சந்தமாமலரடிமிசைவீழ்ந்துதாழ்ந்தெழுந்தா
னெந்தைநீதரமுழுவதும்பெற்றுளேனிந்நா
ளந்திலென்றனக்களித்தருளையநின்னுருவம்,

(இ-ள்.) உந்திபூத்தவன் அளப்பரும் உவகை உள் திளைத்து - உலகமுற்றும் பூத்த உந்தியையுடைய திருமால் அளவறுத்தற்கரிய மகிழ்ச்சியில் இடையறாதழுந்தி, சந்த மாமலர் அடிமிசை வீழ்ந்து தாழ்ந்து எழுந்தான் - நிறம்வாய்ந்த பெருமையமைந்த தாமரைமலரையொத்த திருவடியின்மேல் தண்டாகாரமாகவீழ்ந்து வணங்கி எழுந்து, எந்தை நீ தர முழுவதும் பெற்றுளேன் - என் தந்தையே முன்னரோ நீ தந்தருள வரமுற்றும் பெற்றேன், இந்நாள் ஐய நின் உருவம் என் தனக்கு அளித்தருள்-இந்நாளில் ஐயனே உனது திருவுருவத்தை அடியேனுக்குத் தந்தருளாய்.

கoooo-தேவவருடம் தவஞ்செய்து வேண்டிய வரங்கள் முன்னரோ பெற்றுளேனாதலால் மீட்டு மவைபெறவிருப்பிலேனென்பான் நீதரமுழுவதும்பெற்றுளேனெனவும், இன்று நினது சாரூப்பியத்தில் விருப்புளதென்பான் இந்நாள் ஐயநின்னுருவம் அளித்தருளெனவுங் கூறினனென்றார். அந்தில் அசைநிலை இடைச்சொல். (அ)

என்றவாய்மொழிதிருச்செவியேறலுமெங்கோ
னென்றுகூறுதலுற்றனனுவணமீதுயர்த்தோய்
நன்றுதேர்வைவச்சுதமனுவந்தரநணுகு
மன்றுகாலிரண்டீற்றுடையிருபதாங்கலியில்.

(இ-ள்.) என்று வாய்மொழி திரு செவி ஏறலும் - என்று திருமால் குறையிரந்த வாய்ச்சொல் திருச்செவியிற்செல்லவும், எங்கோன் ஒன்று கூறுதல் உற்றனன் - எமதிறைவன் ஒருமொழி சொல்லத்தொடங்கியருளினன், உவண மீது உயர்த்தோய் நன்று தேர் - கருடக்கொடியை உயர்த்த திருமாலே மிகவும் தெரிவாய், வைவச்சுதமனுவந்தரம் நாலிரண்டு ஈற்று உடை இருபதில் கலியுகம் நணுகும் - வைவச்சுவதமனுவந்தரத்தில் வரும் எட்டை இறுதியிலுடைய இருபதாஞ்சதுரயுகத்தில் கலியுகம்வரும், அன்று - அக்காலையில்.

வைவச்சுவமனுவந்தரம் ஏழாவது மனுவந்தரம். சென்றமனுவந்தரங்கள் சுவாயம்பு, சுவாரோசிஷன், உத்தமன், தாமசன், இரைவதன், சாக்குஷன். நாலிரண்டீற்றுடையிருபது என்றதை இருபத்தெட்டை. (கூ)

காழிமாநகர்க்கவுணியர்குலத்தொருகாளை
யேழிசைத்தமிழ்ஞானசம்பந்தனெம்மடியான்
யாழநீபெறவெம்முருவிங்குவந்தளிப்பா
னாழியோயதுகாறுமிவ்வரைப்பினிலமர்ந்து.

(இ-ள்.) காழிமாநகர் கவுணியர்குலத்து ஒருகாளை-சீகாழியென்னும் பெருமைவாய்ந்த திருநகரில் கவுணியகோத்திரத்திலவதரித்த ஒருமைந்தன், ஏழிசை தமிழ்ஞான சம்பந்தன் எம் அடியான்-ஏழிசையமைந்த தமிழில்வல்ல திருஞானசம்பந்தனெனத் திருப்பெயர் வாய்ந்து எமக்கு அடிமைபூண்டு உள்ளான் ஒருவன், நீ எம் உரு பெற இங்கு வந்து அளிப்பான் - நீ எமதுதிருவுருவைப்பெற இவ்விடத்துவந்தே கொடுப்பான், ஆழியோய் அது காறும் இவரைப்பினில் அமர்ந்து - சுதரிசனமென்னுஞ் சக்கரத்தையுடையோய் அச்சாரூப்பியத்தைப் பெறுங்காறும் இத்திருப்பதியிற்றங்கி.

யாழமுன்னிலையசை. காளியென்னும் நாகத்தினாற் பூசிக்கப்படுதலில் அத்திருப்பதிக்குக் காழியெனப் பெயர்வந்த காரணத்தால் காழிமாநகர் எனவும், அங்குள்ள அந்தணர் குலத்தில் கவுணியர்கோத்திரத்தில் புறச்சமய களைகட்டுச் சைவவான் பயிரோங்கத் திருவவதாரம் செய்தருளினமையால் அந்தணர்குலமென்பது தோன்ற கவுணியர்குலமெனவும், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்என இசை எழுவகைப் படுதலால் ஏழிசையெனவுங் கூறினர். (கo)

ஈட்டருந்தவமியற்றுகென்றருளிநீங்குதலுங்
கோட்டமின்றிமாலம்முறைவதிந்துபூங்கொன்றைத்
தோட்டலங்கலாற்றொழப்புகுமுத்தமிழ்விரகர்
பாட்டலங்கலாற்பரஞ்சுடர்திருவுருப்பெற்றான்.

(இ-ள்.) ஈட்டு அரும் தவம் இயற்றுக என்றருளி நீங்குதலும் - செய்தற்கரிய தவத்தைச்செய்யக் கடவாயென்றருளிநீங்க, மால் கோட்டம் இன்றி அ முறை வதிந்து - திருமால் மனக்கோட்டமில்லாது அருளியமுறையே தவஞ்செய் திருந்து, பூ கொன்றை தோட்டு அலங்கலான் தொழ புகும் முத்தமிழ் விரகர் பாட்டு அலங்கலான் - பூங்கொன்றை யிதழாற்றொடுத்த மாலையணிந்த இறைவனை வணங்கப்புகுந்த இயலிசைநாடகமென்னு முத்தமிழையும் ஓதாதுணர்ந்த பிள்ளையார்தொடுத்த திருப்பதிகமாகிய மாலையால், பரஞ் சுடர் திருவுரு பெற்றான் - இறைவனது திருவுருவத்தை அடைந்தான்.

திருநெறித் தமிழ்வேதத்தின் மான்மியத்தை யுலகறிந்துய்யும் வண்ணம் ஆளுடையபிள்ளையார் திருப்பாசுரத்தால் சாரூப்பியம்பெறுதற்கு இத்திருப்பதியிலிருந்து

தவமியற்றுகவென்பார் ஈட்டருந் தவமியற்றுகென்றருளி யெனவும், இயலிசைநாடக மென்னு முத்தமிழையு மோதாதுணர்ந்தவ னென்பார் முத்தமிழ் விரகனெனவும், செய் தவங் கைகூடுதலால் வந்தருளினர் என்பார் தொழப்புகும் எனவும், அத்தவப்பயனாற் சாரூப்பியம் பெற்றனன் என்பார் பாட்டலங்கலாற் பரஞ்சுடர் திருவுருப்பெற்றனெ னவுங்கூறினார். (கக)

திருமேற்றளிப்படலம் - முற்றிற்று.

திருவிருத்தம் - ௬௦௦உ.

## அனேகதங்காவதப்படலம்.

அச்சதருத்திராதியர்போற்றுபு
மெச்சியபஃறளிமேன்மைவிளம்பினு
மெச்சமின்மேற்றளியின்வடசாரமர்
கச்சியநேகதங்காவதங்கூறுவாம்.

(இ-ள்.) அச்ச தருத்திரர் ஆதியர் - அந்தச்சதருத்திரர் முதலியோர், போற்றுபு மெச்சிய பஃறளிமேன்மை விளம்பினும் - போற்றிவியந்த பலதளியின் மேன்மையை எடுத்துக்கூறினும், எச்சம் இல் மேல் தளியின் வடசார் - குறைதலில்லாத திருமேற்ற ளியின் வடாதுபக்கத்தில், அமர் கச்சி அனேக தங் காவதம் கூறுவாம் - யாவராலும் விரும்பப்பட்ட கச்சியிலுள்ள அனேகதங் காவதமென்னுந் திருப்பதியை எடுத்துக் கூறுவாம்.

முன்னர்க்கூறிய கபாலீசனமுதலிய உருத்திராதியர்கள் பூசித்துத் தத்தங் கருத்து முற்றும் ஒரு சேரப்பெற்றனராதலால் வியந்தனர் என்பார் மெச்சிய பஃறளியென்றார். அநேக தங்காவதம் அநேகபலன்களைத் தருகிற வேள்வித்தானம்என அத்திருப்பதியின் மேல் நிற்றலால் காரணப்பெயர். அநேகபலன்களைத்தரும் பிரமபுரம் எனினுமமையும்.

கறையடிச்சிறுவிழிக்கடுநடைச்சொரிமதப்
பிறையெயிற்றெறுழ்வலிப்பிளிறொலிக்கரிமுகத்
திறைபுகழ்க்கச்சியிலெய்தியெம்பிரான்றனை
நிறையுமெய்க்காதலானருச்சனைநிரப்புவான்.

(இ-ள்.) கறை அடி சிறு விழி கடு நடை சொரிமதம் - உரலையொத்த காலை யும் சிறுகிய விழியையும் விரைந்துநடக்கும் நடையையும் சொரியும் மதத்தையும், பி றை எயிறு எறுழ் வலி பிளிறு ஒலி - பிறையையொத்த தந்தத்தையும் மிக்கவலிமையும் பிளிறும் ஒலியையுமுடைய, கரி முகத்து இறை - யானைமுகக்கடவுள், புகழ் கச்சியி ல் எய்தி - புகழ்ச்சியையுடைய கச்சித்திருப்பதியிலடைந்து, எம்பிரான் றனை நிறை யும் மெய் காதலான் - எமதுபெருமானை நிறைந்த உண்மையாகிய விருப்பத்தால், அ ருச்சனை நிரப்புவான் - அருச்சனைசெய்யத் தொடங்கினன். (உ)

சயமிகுமநேகபேச்சுரனெனத்தன்குறிப்
பெயரினுலிலிங்கமொன்றிருத்தினன்பெட்பொடு
மயர்வறும்பூசனைமரபுளிப்புரிதரு
மியல்புகண்டெம்பிரானெதிரெழுந்தருளினன்.

(இ-ள்.) சயம் மிகும் அநேக பேச்சுரன் என - வெற்றிமிகுந்த அநேகபேச்சுரனென்று, தன் குறி பெயரினுல் - தனதுகாரணப்பெயரால், இலிங்கம் ஒன்று இருத்தினுன்-சிவலிங்கமொன்றைத் தாபித்து, பெட்பு ஒடும் - விருப்பத்தோடும், மயர்வு அரும் பூசனை - மயக்கமொழிந்த சிவபூசனையை, மரபு உளி - ஆகமமுறையால், புரிதரும் இயல்பு கண்டு - செய்யும் இயல்பினைக்கண்டு, எம்பிரான் எதிர் எழுந்தருளினுன் - எமதுபெருமானுகிய இறைவன் எதிரே காட்சிதந்தருளினுன்.

அநேகபம் யானை, அநேகமரங்களை முறித்துத் தள்ளுதலென்னும் பொருள்மேல்நிற்றலால் காரணப்பெயர். இருத்தினுன் முற்றெச்சம். (௩)

வேட்டதென்மைந்தனேவிளம்பெனத்தாதைதன்
ருட்டுணைமலர்மிசைத்தாழ்ந்தெழுந்திபமுக
ஞட்டினில்யான்செயும்பணியெவனல்கெனப்
பாட்டளிதுதைமலர்க்கொன்றையான்பகர்தரும்.

(இ-ள்.) மைந்தனே வேட்டது என் விளம்பு என்ன - மைந்தனே நீ விரும்பியது யாதுகூறுயென்றுவினவ, தாதை தன் தாள் துணை மலர்மிசை தாழ்ந்து எழுந்து-தனதுபிதாவின் இரண்டு பாததாமரை மலர்மேலும்வணங்கி எழுந்து, இப முகன் நாட்டினில் யான் செயும் பணி எவன் நல்கு என - யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் உலகில் யான்செய்யும் பணியாது அருளாயென்றுகூற, பாட்டு அளி துதை கொன்றை மலரான்பகர்தரும் - இசைப்பாட்டோடு வண்டுகள்நெருங்கிய கொன்றைமலர்மாலையையணிந்த இறைவன்சொல்லுவான். (௪)

கலிநிலைத்துறை.

சுருதிநூன்முறைநிறுவவுந்தூயவர்தொடங்குங்
கருமமூறுதீர்த்தளிப்பவுந்தயித்தியர்கயமைத்
திருவிலார்க்கிடையூற்றினைச்செய்யவுமிவணீ
வருதல்வேட்டெமைமுன்னரோவழுத்தினர்வானோர்.

(இ-ள்.) சுருதி நூல் முறை நிறுவவும் - வைதிகமுறையை நிறுத்தவும், தூயவர் தொடங்கும் கருமம் ஊறு தீர்த்து அளிப்பவும் - புனிதமுடையோர் தொடங்கும் கருமத்திற்குவரும் இடையூற்றைத் தவிர்த்து அதனைப்பாதுகாக்கவும், தயித்தியர் கயமை திருவு இல்லார்க்கு இடையூற்றினைச் செய்யவும் - அசுரராகிய கீழ்மைத்தன்மையுடைய செல்வமில்லார் செய்யும் காரியத்திற்கு இடையூற்றைச் செய்யவும், இவண் நீ வருதல் வேட்டு - இவ்விடத்து நீவருதலைவிரும்பி, வானோர் எம்மை முன்னரோ வழுத்தினர் - திருமால்முதலிய தேவர்கள் எம்மை முன்னரோ வழிபட்டு வணங்கினுர்கள்.

சுருதியின் சம்பந்தம்சிரௌதம் எனவும், வேதசம்பந்தம் வைதிகம் எனவும் வருதலில் இரண்டும் ஒருபொருட்கிளவிகளாதலால் சுருதிநூன்முறையென்றதற்கு வைதிகமுறையென்ருும், தேவர்கள் வேண்டுகோளை முன்னர்க் கூறியிருக்கின்ருும். அங்குக்காண்க. (௫)

ஆதலாற்புறச்சமயநூலரட்டருக்கென்றுந்
தீதுசாலிடையூற்றினைவிளைமதிசிவனுல்
வேதநன்னெறியொழுகுநர்க்கூறுகள்விரவா
தேதநீத்தருள்புரிதியெம்மாணையின்வலியால்.

(இ-ள்.) ஆதலால் எம் ஆணையின் வலியால் - ஆகையால் எமது ஆஞ்ஞையின் வலிமையால், புறச்சமய நூல் அரட்டருக்கு - புறச்சமய நூல்வழியொழுகும் கீழ்மக்களுக்கு, என்றும் தீது சால் இடை யூற்றினை விளை - எக்காலத்துந் தீங்குநிறைந்த இடையூற்றைச்செய், சிவன்நூல் வேதம் நல்நெறி ஒழுகுநர்க்கு - ஆகமநூல்நெறியிலும் வேதநூல் நெறியிலும் ஒழுகுவோர்க்கு, ஊறு கள் விரவாது ஏதம் நீத்து அருள் புரிதி- இடையூறுகள் வந்தடையாது அவ்விடையூறுகளை யொழித்தருள் செய்வாய்.

மதிமுன்னிலை யசைநிலை இடைச்சொல்.

புறப்புறச் சமயங்களைத் தொகுத்துப் புறச்சமயம் என்றார். புறப்புறச்சமயம் ஆவன உலோகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமீகம், வைபாடிகம், ஆருகம் என ஆறு, புறச்சமயமாவன தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம்என ஆறு. இவைபதிபசுபாச விலக்கணங்களை யுணர்த்து நூலுக்கு முற்றுமறுதலைப்பட்டன வாதலால் புறச்சமய நூலரட்டருக்கெனவும், சிவனது நூல்என ஆகமத்தின்மேல் நிற்றலால் சிவனூல் எனவும், விக்கினேஸ்வரன் என்னும் பெயர்க்காரணத்தால் புறச்சமயநூல் அரட்டருக்கு விக்கினஞ்செய், வைதிக சைவநூல் வழிநிற்போர்க்கு விக்கினத்தை யொழியென்பராதலால் இடையூற்றினை விளை ஊறுகள் விரவாதருள்புரிதி யெனவுங்கூறினார். விக்கினேஸ்வரர் விக்கினத்தைத் தடுப்பவர்,விக்கினத்தை யாள்பவரென்னும்பொருள்மேல் நிற்றலால் பெயர்க்காரணம் என்றாம். அதுவென்னும் ஆறனுருபு "கபிலரதுபாட்டு" என்றாற்போலச் செய்யுட் கிழமைக்கண் வந்தது. (சு)

உலகெலாமுனை வழுத்துகவழிபடாதொழியிற்
கலிகொள்வேதியரும்பராயினுமவர்கரும
நிலமிசைப்பயனெய்துறாதழிகநின்னிணைத்தாண்
மலர்வழுத்தினோர்பெரும்பயனெய்துகமாதோ.

(இ-ள்.) உலகு எல்லாம் உன்னை வழுத்துக - உலகங்கள்முற்றும் உன்னைத்துதித்து வழிபடக்கடவன, வழிபடாது ஒழியில் - உன்னைத்துதித்து வழிபடாதொழிந்தால், கலி கொள் வேதியர் உம்பர் ஆயினும் அவர் கருமம் நிலமிசை பயன் எய்துறாது அழிக - புகழ்ச்சிமிக்க முனிவர்களாயினும் தேவர்களாயினும் அவர்கள்செய்யுங் கருமங்கள் நிலவுலகின்மேல் பயன்படாதொழியக்கடவன, நின் இணை தாள் மலர் வழுத்தினோர் பெரும் பயன் எய்துக - உனது இரண்டு திருவடித்தாமரைகளைத்துதித்து வழிபட்டோர் செய்யுங் கருமங்களும் பெரும்பயன் அடையக்கடவன

வழிபடாதொழியில் திருமால் முதலியோர்க்கன்றித் தமக்கும் என்பார் நிலமிசைப்பயனெய்துறாதழிகவெனவும், வழிபடில் தமக்கும் அவ்வாறென்பார் நின்னிணைத்தாள் மலர்வழுத்தினோர் பெரும்பயனெய்துக வெனவுங்கூறினார். திரிபுரதகனஞ்செய்தருளச் சென்றகாலையில் அச்சுமுறிந்ததும், பூசித்தகாலையில் திரிபுரம் வென்றமையும் "திங்களணிசடைப்பெருமான் பூசையாற்றித் திரிமதிலுங் கடந்திடமுன் னின்றான்யாவன்" எனவருதல்காண்க. (எ)

மங்கலங்களுமமங்கலமாமுனைவழுத்தார்
தங்களுக்கிவைவரமுனக்கருளினந்தக்கோ
யிங்குநீயின்னுமொன்றுகேளிரணியபுரமா
மங்கண்வாழ்பவர்கேசியேமுதற்பலரசுரர்.

(இ-ள்.) உன்னை வழுத்தார் தங்களுக்கு மங்கலங்களும் அமங்கலமாம் - உன்னைத்துதித்து வழிபடாதவர் செய்யும் மங்கல காரியங்களும் அமங்கலமாய் முடியும்,

இவை வரம் தக்கோய் உனக்கு அருளினம் - இவ்வரங்களை நடுவுநிலைமை யுடையோய் உனக்குத்தந்தருளினோம், இங்கு நீ இன்னும் ஒன்று கேள் - இவ்விடத்து நீ இன்னம் ஒரு செய்தியைக்கேள், இரணிய புரம் ஆம் அங்கண் வாழ்பவர் கேசியே முதல் அசுரர் பலர் - இரணிய புரமாகிய அவ்விடத்தில் வாழ்வோர் கேசிமுதலாகிய பல அசுரருள்ளார்.

பகைவர், நொதுமலர், நட்பினரென ஒருபாற் கோடாது பொதுவாகத் தண்ணருள்புரிவான் நீயாதலால் இவ்வரம் உனக்குத் தந்தோம் என்பார் தக்கோய் என்றார்.

அவனியாவையுமலைத்துவெங்கொலைபுரிந்தமர்வார்
அவர்களாருயிர்தாளினுற்செகுத்தவர்கருவு
ளவர்கள்சத்தியாம்வல்லபையணங்குவீற்றிருக்கு
மவளைநாடொறுங்கெழீஇக்கலந்தன்புகொண்டமர்வாய்.

(இ-ள்.) அவனி யாவையும் அலைத்து வெம் கொலை புரிந்து அமர்வார் - உலக முற்றையும் வருத்திக்கொடிய கொலைசெய்து அவ்வசுரரிருக்கின்றனர், அவர்கள் ஆர் உயிர் தாளினுல் செகுத்து - அவர்களது அரியஉயிரை உனதுகாலால் உதைத்தழித்து, அவர் கருவுள் அவர்கள் சத்தியாம் வல்லபை அணங்கு வீற்றிருக்கும் - அவர்களது கருப்பத்துள் அவர்கள் சத்தியாகிய ஓர் தெய்வப்பெண் வீற்றிருப்பாள், அவளை நாடொறும் கெழுவி - அவளை நாடோறுந்தழுவி, கலந்து அன்பு கொண்டு அமர் வாய் - அச்சத்தியோடுகலந்து அவளிடத் தன்புகூர்ந்தமர்வாய்.

உன்னை வழிபடுவோர்க்கு அருள அச்சத்தியோ டிருப்பாயென்பார் அவளை நாடொறுங்கெழீஇக்கலந் தன்புகொண்டமர்வாய் என்றார். (கூ)

வல்லபைத்திருவோடுனைவழிபடப்பெற்றோர்க்
கொல்லைவேட்டனயாவையுமுறுகெனவருளி
யெல்லையில்பெருங்கருணையாலுச்சிமோந்தெடுத்துப்
புல்லியெம்பிரான்விடுத்தனன்மீண்டனன்புதல்வன்.

(இ-ள்.) வல்லபை திருவோடு - வல்லபை என்னுஞ் சத்தியோடு, உன்னைவழிபடபெற்றோர்க்கு - உன்னை வழிபாடு செய்யப் பெற்றவர்க்கு, ஒல்லை வேட்டன யாவையும் உறுக என அருளி - விரைந்து அவர்கள் விரும்பிய யாவும் அடையக்கடவவென்று அருள் செய்து, எம்பிரான் எல்லை இல் பெருங்கருணையால் உச்சிமோர்ந்து எடுத்து புல்லி விடுத்தனன் - எமதுபெருமான் அளவில்லாத பெரியகருணையோடு உச்சியை மோர்ந்து எடுத்துத்தழுவி விடைதந்தருளினன், புதல்வன் மீண்டனன் - விநாயகக்கடவுள் திரும்பினார்.

நாம் அருளியவண்ணம் வல்லபையோடுன்னை வழிபடுவார்க்கு வேண்டிய வேண்டியாங்குவரக் கடவனவென்பதுதோன்ற வல்லபைத் திருவோடுனை வழிபடப்பெற்றோர்க் கொல்லைவேட்டன யாவையு முறுகெனவென்றருளினார். (௧0)

மீண்டநாயகனிரணியபுரத்தினைமேவி
யீண்டுதானவக்குழுக்களைத்தாளினுலெற்றிக்
காண்டகுந்திறன்முருங்கவன்றழுத்தவாகருவின்
மாண்டசத்தியைவாங்கினன்மணந்துவீற்றிருந்தான்.

(இ-ள்.) மீண்டநாயகன் இரணிய புரத்தினைமேவி - திரும்பிய விநாயகக்கடவுள் இரணியபுரத்தையடைந்து, ஈண்டுதானவர் குழுக்களை - நெருங்கிய அசுர கூட்

டங்களை, தாளினுல் எற்றி - திருவடியால் உதைத்துருட்டி, காண் தகும் திறல்முருங்க-யாவர்களு மெச்சத்தகும் அவர்கள் வலிமைகெட, வென்று அழித்து - வெற்றிகொண்டழித்து, அவர் கருவில்மாண்ட சத்தியை - அவர்கருப்பத்தில் மாட்சிமைப்பட்டு இருந்த வல்லபையென்னுஞ் சத்தியை, வாங்கினன் மணந்து வீற்றிருந்தான் - வாங்கி அவளோடுகலந்து வீற்றிருந்தருளினன்.

வாங்கினன் முற்றெச்சம். (கக)

விநாயகப்பிரானருச்சனைபுரியவீற்றிருக்கு
மநேகபேசனையநேகதங்காவதத்திறைஞ்சி
ஞுதவெந்துயர்ப்பிறவிதீர்ந்தென்னையாளுடையான்
றனுதுவெள்ளியங்கயிலையிற்சார்ந்துவைகுவரால்.

(இ-ள்.) விநாயகப்பிரான் அருச்சனைபுரிய வீற்றிருக்கும் அனேகபேசனை - விநாயகக்கடவுள் அருச்சனைசெய்ய எழுந்தருளியிருக்கும் அனேக பேசனை, அனேகதங்காவதத்து இறைஞ்சின் - அனேகதங்காவதமென்னுந் திருப்பதியில் வணங்கில், இன்னுத வெம்துயர் பிறவிதீர்ந்து-தீங்குவிளைக்குங் கொடியபிறவித் துன்பத்தினின்று நீங்கி, என்னை ஆளுடையான் தனுது வெள்ளி அங்கைலையில் சார்ந்து வைகுவர் - என்னை ஆளாகவுடைய சிவபெருமானது கைலைமலையை யடைந்து தங்குவார்கள்.

விக்கினங்களை நீக்கியருளுங் காரணத்தால் விநாயகனெனத் திருப்பெயர்வாய்ந்த இறைவனுல் பூசிக்கப்பட்ட பெருமானுதலால் அப்பெருமானைப் பூசிக்கில் தாம் எடுத்த கருமமுட்டின்றி முடித்துப் பெறுவாராதலால் வெந்துயர்ப்பிறவி தீர்ந்து வெள்ளியங்கயிலையிற் சார்வார் என்முர். (கஉ)

அனேகதங்காவதப்படல முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - கoகசு.

## கயிலாயப்படலம்

அல்லிப்பூஞ்சேக்கைமிசையன்னச்சேவல்பெடைக்குருகைப்
புல்லிக்கண்படுபொய்கையநேகதங்காவதம்புகன்று
மெல்லைச்செய்மணிக்கோயிலதன்மேல்பாங்கரிறைஞ்சினவர்க்
கொல்லைப்பேரருள்கூருங்கயிலாயத்தையுரைசெய்வாம்.

(இ-ள்.) அல்லிபூ சேக்கைமிசை - அகவிதழையுடைய தாமரையாகிய ஆசனத்தின்மேல், சேவல் அன்னம் - ஆணன்னமானது, பெடைகுருகை புல்லி கண்படு பொய்கை - பெட்டையன்னத்தைத் தழுவித் துயில்கூரும் பொய்கை சூழ்ந்த, அநேகதம் காவதம் புகன்றும்-அனேகதங்காவதமென்னுந் திருப்பதியை யெடுத்துக்கூறினும், எல்லை செய்மணிகோயில் அதன்மேல் பாங்கர்-பகலைச்செய்யும் மாணிக்கங்களிழைத்த அத்திருகோயிலின் மேற்றிசையில், இறைஞ்சினவர்க்கு ஒல்லைபேர் அருள்கூரும் கயிலாயத்தை உரைசெய்வாம் - வணங்கினவர்க்கு விரைந்து பெரிய திருவருள்செய்யும் திருக்கயிலாயமென்னுந் திருப்பதியைக் கூறுவாம். (க)

நிலமீதுமந்தரத்துநெறிதாழ்கூந்தலரம்பையர்வாழ்
புலமீதும்வெவ்வேறுபொன்னின்வெள்ளிதனிலிரும்பில்

வலமேவுமாதவத்தான்மயனூர்வகுத்தமுப்புரிசை
யுலமேவுபுயத்தவுணர்க்குளவாயினவான்முன்னாளில்.

(இ-ள்.) நிலம் மீதும் அந்தரத்தும் - பூமிமேலும் அந்தரத்தின்மேலும், நெறி தாழ் கூந்தல் அரம்பையர் வாழ்புலம் மீதும் - நெளிந்து தாழ்ந்த கூந்தலையுடைய அரம்பையர்கள் வாழுஞ் சுவர்க்கத்தின்மேலும், வெவ்வேறு பொன்னில் வெள்ளிதனில் இரும்பில் - தனித்தனியாகப் பொன்னினாலும் வெள்ளியினாலும் இரும்பினாலும், வலம் மேவும் மாதவத்தால் மயனூர்வகுத்த முப்புரிசை - வன்மையமைந்த அவ்வசுரர்கள் பெரியதவத்தால் மயனென்பவன் வகுத்த மூன்றுமதில்களும், உலம்மேவும் புயத்து அவுணர்க்கு முன்னாளில் உளவாயின - திரண்டகல்லையொத்த புயத்தையுடைய அசுரர்களுக்கு முற்காலத்தில் உண்டாயின.

சுவர்க்கத்தில் பொன்மதிலும், அந்தரத்தில் வெள்ளிமதிலும், நிலவுலகில் இருப்புமதிலும், என எதிர்நிரனிறைப்பொருள் கோளாகக்கொள்ள வைத்தார். தாரகாசுரனென்பவனை முருகக்கடவுளுயிர்வாங்கியபின் அவன் புத்திரராகிய வித்துமாலி, தாரகாக்கன், கமலாக்கன் என்னுமூவர்கள் பிரமனைநோக்கி நெடுங்காலந் தவஞ்செய்தமையால் வலமேவுமாதவத்தாலெனவும், அத்தவவன்மையால் மயன் தமதேவலின்வழி நின்றியற்றுதலால் மயனூர்வகுத்தவெனவுங் கூறினார்.

"தாரகாசுரனென்போன்றனைக்கொல்லத்தேவரொலாந்தாழ்ந்துவேண்டச்-சூர்தடிந்தோன்கொன்றதற்பினவனீன்றதிறல்வித்துமாலியுஞ்சூர்க் - காரனையமெய்த்தாரகாக்கனுஞ்சொல்கமலாக்கன்றானுந்தேனார் - வேரிமலர்ப்பொருட்டுறைவான்றனைநோக்கியரியதவம்விருப்பிற்செய்தான்" என லிங்கபுராணத்தில் வருதல்காண்க. (உ)

அங்கவற்றினுறுமவுணர்சுருதிமிருதியாய்ந்துணர்ந்தோர்
துங்கநிலையாகமங்கண்முழுதுந்தேர்ந்துதுகளில்லோர்
கங்கையணிசடைப்பெருமான்வழித்தொண்டாற்றுங்கடப்பாட்டோர்
தங்குதிருவெண்ணீறுசண்ணித்தொளிகால்வடிவினர்.

(இ-ள்.) அவற்றின் உறும் அவுணர் சுருதி மிருதி ஆய்ந்துணர்ந்தோர் - அம்மதிலில் வசிக்கும் அசுரர்கள் வேதநூலையும் அவ்வேதசம்பந்தமாகிய வைதிகநூலையும் ஆராய்ந்தறிந்தவரும், துங்கம் நிலை ஆகமங்கள் முழுதும் தேர்ந்து துகள் இல்லோர் - உயர்ந்த முத்திநிலையை யுணர்த்தும் சைவாகமங்கள்முற்றும் ஆராய்ந்து மலக்குற்றத்தினின்று நீங்கினவரும், கங்கை அணிசடை பெருமான் வழிதொண்டு ஆற்றும் கடப்பாட்டோர் - கங்கையையணிந்த சிவபெருமான் அருள்வழிநின்று திருத்தொண்டு செய்யும் கடமையையுடையவரும், தங்கு திருவெள்நீறு சண்ணித்து ஒளிகால் வடிவினர்-நிலைபெற்ற அழகிய வெள்ளிய விபூதியைப்பூசி ஒளிவீசும் வடிவினையுடையவரும்.

ஆகமம் - ஆ-பாசம், க-பசு, ம-பதியெனவும் பொருள்படுதலில் திரிபதார்த்தலக்ஷணத்தை யுணர்த்துநூலாதல் துங்கநிலையாகமங்கள் எனவும், ஆ - சிவஞானம், க - மோக்ஷம், ம - மலநாசம் என்பது பொருளாதலால் அதனையுணர்ந்து மலக்குற்றமொழிதலில் ஆகமங்கள்முழுதுந் தேர்ந்துதுகளில்லார் எனவும், அதனாற் சிவஞானமேவிடுதலில் கங்கைடணிசடைப்பெருமான் வழித்தொண் டாற்றுங் கடப்பாட்டோர் எனவும், தங்குதிருவெண்ணீறு சண்ணித் தொளிகால்வடிவினர் எனவுங்கூறினார். (௩)

சிவலிங்கத்தருச்சனையேசெய்யுநியதிக்கடன்பூண்டார்
சிவதருமந்தலைநின்றார்திகழப்பூணுஞ்சாதனத்தார்

சிவனடியார்தமைக்காணினுவகைதுளும்புஞ்சிந்தையினர்.
சிவநெறியிற்பிறழாதசெயலிற்றமக்குநிகரில்லார்.

(இ-ள்.) சிவலிங்கத்து அருச்சனையே செய்யும் நியதிகடன் பூண்டார் - சிவலிங்கத்தை யருச்சித்தொழுகும் நியமத்தை மேற்கொண்டவரும், சிவதருமம் தலைநின்றார் - சிவதருமத்தின் வழிநின்றவரும், திகழப்பூணும் சாதனத்தார் - விளங்க உருத்திராக்கமாலைபூணும் சாதனத்தையுடையவரும், சிவன் அடியார் தம்மைகாணின் - சிவனடியவரைக் கண்டால், உவகைதுளும்பும் சிந்தையினர் - மகிழ்ச்சி ததும்பும் மனமுடையவரும், சிவநெறியில் பிறழாதசெயலில் தமக்குநிகர் இல்லார் - சைவநெறியில் நின்றுவழுவாத செய்கையால் தமக்குப் பிறர் ஒப்பில்லாதவரும்.

சிவதருமங்கள் பத்துவகைப்படும் - அதனை முன்னர்க்காண்க. சாதனம் ஸ்ரீபஞ்சாக்கரமுச்சரித்தல், அதற்கு அவயவம் விபூதியும் உருத்திராக்கமாலிகையும் ஆதலால் அவயவியாகிய சாதனத்தை அவயவம் அவயவிக் கொற்றுமையுண்மையால் அதன் றொழிலை அவயவிமேலேற்றித் திகழப்பூணுஞ்சாதனத்தார் எனவுங் கூறினர். சிவஞானமேலிட்டால் மோக்ஷவிருப்பினராதலால் சிவலிங்கத் தருச்சனையே செய்யுநியதிக் கடன்பூண்டார் முதலாக ஆன்மாக்களுக்கு மலநாசம்பண்ணிச் சிவஞானமுதிப்பித்து மோக்ஷங்கொடுக்கு நூலுணர்ச்சியின் பயன் இதனுற் கூறப்பட்டன. (ரு)

எவ்விடத்துஞ்சிவகதையேயியம்புவோருங்கேட்போரு
மெவ்விடத்துஞ்சிவபணியேயியற்றுவோருமெச்சுநரு
மெவ்விடத்துஞ்சிவனடியாரெதிர்கொள்விருந்துபுரந்தருத
லெவ்விடத்துஞ்சிவநாமமுழக்கமன்றியிலையங்கண்.

(இ-ள்.) எவ்விடத்தும் சிவகதையே இயம்புவோரும் கேட்போரும் - எந்த இடத்திலும் சிவகதையையே படிப்பவரும் அதனைக் கேட்பவரும், எவ்விடத்தும் சிவபணியே இயற்றுவோரும் மெச்சுநரும் - எந்தவிடத்தும் சிவபணியையே செய்வோரும் அதனைப் புகழ்வோருமாயிருத்தலால், எவ்விடத்தும் சிவன் அடியார் எதிர்கொள் விருந்து புரந்தருதல் - எந்தவிடத்திலுஞ் சிவனடியவரை எதிர்கொண்டு விருந்தோம்புதலும், எவ்விடத்தும் சிவநாமம்முழக்கம் அன்றி அங்கண் இல்லை - எந்தவிடத்திலும் சிவநாமத்தை யுச்சரித்தலுமன்றி அத்திரிபுரத்தில் வேறுசெயலில்லை.

சிவனடியார்க்குரிய எண்வகையடையாளங்களுள், எவ்விடத்துஞ் சிவகதையே யியம்புவோர் என்றதனால் வித்தகக்கதைகள் கேட்டல் எனவும், கேட்போர் என்றதனால் கேட்டுமெய்விதிர்த்தல் எனவும், எவ்விடத்துஞ் சிவபணியேயியற்றுவோர் என்றதனால் உத்தமப்பூசைசெய்தல் எனவும், மெச்சுநர் என்றதனால் பூசனைமகிழ்ந்துபார்த்தல் எனவும், சிவனடியார் எதிர்கொள் விருந்துபுரந்தருதல் என்றதனால் பத்தரோடுறவுகோடல், உடம்பு நம்பொருட்டால் வாட்டல்எனவும், எவ்விடத்துஞ் சிவநாமமுழக்கம் என்றதனால் நம்மைச் சித்தத்தில் பாவித்திடலெனவும் கூறினர்.

"குழைந்துநற்றருமஞ்செய்துகோதறவுறைந்திங்கென்பாற்
றழைந்தபேரன்பினேடுந்தாழ்விலாஞானந்தன்னில்
அழுந்தடியார்கட்கெட்டுவகையடையாளமுண்டால்" எனவும்,

"பத்தரோடுறவுகோடல்பூசனைமகிழ்ந்துபார்த்தல்
உத்தமபூசைசெய்தலுடம்புநம்பொருட்டால்வாட்டல்
வித்தகக்கதைகள்கேட்டல்கேட்டுமெய்விதிர்த்தனம்மைச்
சித்தமீதிருத்தல்பாவித்திடலெனலாமாற்செப்பில்" எனவும் வாயுசங்கிதையில் வருதல்காண்க. (சு)

இத்தகையதயித்தியராலிரியல்போகியுடைந்தழியுஞ்
சித்தமுடைக்கடவுளர்போய்த்திருமால்சரணஞ்சரணடைந்தார்
பைத்தபணிச்சேக்கைமிசைமலர்க்கண்படுக்கும்பசுந்துளபத்
தொத்துவிரியுநறுந்தாரானவரோடிதனைத்தொடங்கினான்.

(இ-ள்.) இத்தகைய தயித்தியரால் - இத்தன்மையையுடைய அசுரராதளால். இரியல்போகி உடைந்து அழியும் சித்தம் உடைய - புறங்கொடுத்து நிலை கெட்டழியும் மனத்தை உடைய, கடவுளர்போய் திருமால் சரணம் சரண் அடைந்தார் - தேவர்கள் சென்று திருமால் திருவடியைப்புக லடைந்தார்கள், பைத்தபணிசேக்கை மிசை மலர்கண்படுக்கும் பசுந்துளபம் தொத்து விரியும் நறும்தாரோன் - படம்விரித்த ஆதிசேடனாகிய சயனத்தின்மேல் தாமரைமலர்போன்ற திருக்கண்துயிலும் பசிய துளவின் பூங்கொத்துவிரிந்த நறுமணங்கமழும் மாலையையணிந்த திருமால், அவரோடு இதனை தொடங்கினான் - அத்தேவர்களோடு இவ்வேள்வியைச்செய்யத் தொடங்கினான்.

அசுரர்களை வேரோடறக்களையும் வரம் திருமால் சிவபிரானிடத்துப் பெற்றுடைமையால் அவரால் வருந்துன்பங்களைதற்குத் திருமால்புகலிடமாதலால் திருமால்சரணஞ் சரனடைந்தார் எனக்கூறினார். (௬)

வேதமனுவெடுத்தோதிக்கொடியவேள்விபுரிகாலைப்
பூதமிகத்தோன்றினவாலவைதாமும்மைப்புரஞ்சிதையக்
காதுகென்னுந்திருநெடுமாலேவலாற்றிற்கடிதணைந்து
நீதிநிலைத்தயித்தியர்முன்னிற்கலாற்றுதழிந்தனவே.

(இ-ள்.) வேதமனு எடுத்து ஓதி கொடியவேள்வி புரிகாலை - வேதத்திற்கூறிய மனுவினையெடுத்துச் சரித்துக்கொடிய ஆபிசார யாகத்தைச செய்யுங்காலையில், பூதம் மிக தோன்றின-பூதங்கள்பெரும்பாலும் அந்த யாகத்தினின்றுந் தோன்றின, அவை தாம் மூம்மைபுரம் சிதைய காதுக என்னும் திருநெடுமால் - தோன்றிய அப்பூதங்களை நோக்கித் திரிபுரங்களும் அழியக் கொல்லக்கடவீர் என்று ஏவிய திருமாலினது, ஏவல ஆற்றில் கடிது அணைந்து - ஏவலின்வழியே விரைந்தடைந்து, நீதிநிலைதயித்தியர் முன் நிற்கலாது அழிந்தன - நீதியினிலையையுடைய அசுரர்முன்னே நிற்க இயலாது புறங்

திதியின்புத்திரர் தயித்தியர் என நிற்றலால் தத்திதாந்தபதம். (௭)

அதுகாணாஉநனிநடுங்குமமரர்தம்மைமுகநோக்கி
மதுவாருநறுந்துளபமாயனிதனைவகுத்துரைப்பா
னிதுகேண்மினமரங்காளச்சோவவுணரெல்லாரும்
பொதுமேவிநடநவிற்றும்புத்தேள்சரணஞ்சரணடைந்தார்.

(இ-ள்.) அதுகாணா உநனிநடுங்கும் அமரர்தம்மை முகம்நோக்கி - அப்பூதங்கள் புறங்கொடுத்துவருதலைக்கண்டு நடுக்கங்கூறும் தேவர்களது முகத்தைநோக்கி, மதுவாரும் நறுந்துளபமாயன் இதனைவகுத்து உரைப்பான் - தேனொழுகும் நறுமணங்கமழுந் துளபமாலையையணிந்த திருமால் இம்மொழியைவகுத்துக் கூறுவான், நமரங்காள் இதுகேண்மின் - நம்முடையவர்களே இதனைக்கேளுங்கள், அச்சோ - இது ஆச்சரியமான செய்கை, அவுணர் எல்லாம் - அத்திரிபுரத்திலுள்ள அசுரர்களெல்லாரும், பொதுமேவி நடம் நவிற்றும் புத்தேள் சரணம் சரண் அடைந்தார்-பொன்னம்பலத்தி லெழுந்தருளித் திருநடனஞ்செய்யும் இறைவனது திருவடியைப் புகலாகவடைந்தார்கள்.

அமரர்தம்மை-ஆறனுருபுநிற்குமிடத்து இரண்டனுருபுநின்றது உருபுமயக்கம்.

தீத்தொழிலின்றலைநின்றகொடியரோனுஞ்சிவபத்தி
வாய்த்தவர்கள்சாவாதமதுகையுடையர்யாமவரைப்
பூத்தநுதிக்கணையொன்றாற்பொருக்கென்றழிக்கும்வலியில்லே
மார்த்தபுகழ்ச்சிவபெருமான்றானேயதற்குவல்லவனும்.

(இ-ள்.) தீத்தொழிலின் தலை நின்ற கொடியரேனும் சிவபத்தி வாய்த்தவர்கள்- கொடிய தொழிலில் மேம்பட்டு நின்ற கொடியவராயினும் சிவபத்தியுடையவர்களாத லால், சாவாத மதுகையுடையர் யாம் அவரை பூத்த நுதி கணை ஒன்றால் - நாம் அவர்க ளை விஷந்தோய்ந்த கூர்மையையுடைய ஒரம்பால், பொருக்கென்று அழிக்கும் வலி இல்லேம்-விரைந்தழிக்கும் வன்மையில்லேம், புகழ் ஆர்ந்த சிவபெருமான் தானே அத ற்கு வல்லவன் ஆம் - மெய்ப்புகழ்ச்சி நிறைந்த சிவபெருமானே அவரை அழித்தற்கு வலைவனுவான்.

ஆர்த்தவலிக்கும் வழிவலித்தல். திருமால்முதலிய தேவர்கள் பரதந்திரர்போலா து சிவபெருமானைப்போலச் சுதந்திரராகையால் சாவாதமதுகையுடையர் எனவும், நம து அம்பால் அவரை அழிக்கவலியில்லேமெனவும், அவர்களைப்போற் சுதந்திரமுடைய சிவபெருமானு லவரழிக்கப்படுவாராதலால் ஆர்த்தபுகழ்ச்சிவபெருமான்றானேயதற்கு வல்லவனும் எனவுங்கூறினர்.

"அம்பலத்தாடிபொற்றாட்கடியருமனையர்பாத
வம்பலர்க்கடிமையுற்றமதியருமெந்தஞான்றும்
உம்பரும்புகழாநின்றசுதந்திரமுடையராகில்
எம்பிரான்சுதந்திரத்தையிசைத்திடவேணடுங்கொல்லோ" எனச் சூத சங்கிதையில் வேதப்பிரமாணியவிசாரமுரைத்த வத்தியாயத்தில் வருதல் காண்க. (௬)

ஒருபோகுகொச்சகம்.

அனையவனடிபேணியடைந்தவரவர்கண்டீ
ரினியவர்சிவபத்திசிதைவுசெய்திடுகேம்யா
நினைதருமிதுவல்லாற்பிறிதிலைநெறியென்றுப்
புனைபுகழ்நெடுமாயன்புகன்றிதுபுரிகிற்பான்.

(இ-ள்) அவர் அனையவன் அடிபேணி அடைந்தவர் - அவ்வசுரர்கள் சிவபெ ருமானது திருவடியை விரும்பிப்புகலடைந்தவர்கள், இனி அவர் சிவபத்தி சிதைவு செய்திடுகேம் - இனி யவர்கொண்ட சிவபத்தியை யழிப்போம், யாம் நினை தரும் இது அல்லாமல் பிறிது நெறி இல்லை என்று - யாம் நினைக்கும் இச்செயலன்றி வேறு செயலி ல்லையென்று, புகழ் புனை நெடு மாயன் புகன்று இது புரிகிற்பான்-புகழ்பூண்ட நிலங்கடந் த திருநெடுமால் கூறி இதனைச் செய்வான்.

நாம் வஞ்சத்தா லவர்களை வெல்லவேண்டுமென்பான் இனி யவர் சிவபத்தி சி தைவுசெய்திடுகேம் என்றான். (௭0)

மறைநெறிபழுதென்றுமறுமையொன்றிலையென்று
முறைதருபொருளெல்லாங்கணத்தழிவுறுமென்று
மறைதருமொருநூலையாக்குபுவடிவத்திற்
பொறைபுரிதன்கூற்றோர்புருடனைவருவித்தான்.

(இ-ள்.) மறை நெறி பழுது என்றும் மறுமை ஒன்று இலையென்றும் - வேதநெ றி வழுவென்றும் மறுபிறப்பொன்றில்லையென்றும், உறைதரு பொருள் எல்லாம் கண

த்து அழிவுறும் என்றும்-உலகிலுள்ள பொருள்களெல்லாம்கணபங்கமாகு மென்றும், அறைதரும் ஒருநூலைஆக்குபு-கூறும் ஒரு சித்தாந்தத்தைச்செய்து, பொறை புரிதன் வடிவத்தின் கூறு - யாவையுந் தாங்குந் தனது திருவுருவத்தின் அம்சத்தினின்று, ஓர் புருடனை வருவித்தான் - ஒரு மாயாபுருடனை வருவித்தனன்.

மண்ணினின்று கடாதிகள் தோன்றுவதுபோலப் பிருதுவி, அப்பு, தேயு, வாயு வென்னு நான்குபூதங்களின் கூட்டுறவால் உருவாதிகடோன்றுமேயன்றி, கன்மமொன்றுளதென்றும், சிவனென்றொரு பொருளுண்டென்றும், இறைவனொருவனுளனென்றுங்கூறு நெறிவழுவென்பது திருமால்தந்த சித்தாந்தமாதலால் மறைநெறி பழுதென்றும் எனவும், காட்சியொன்றே யவர்களுக்குப் பிரமாண மாதலால்இவ்வுலகிற் பெண்களோடு நுகரும்போகமே சுவர்க்கபோகமன்றி வேறில்லையென்பது அச்சித்தாந்தத்தின் மதமாதலால் மறுமை யொன்றில்லையெனவும், உலகிலுள்ள பொருள்களெல்லாம் காட்சி, அநுமானமென்னும் அளவைகளால் அறிவும் அறியப்படும்பொருளுமாயொருமாத்திரையிற் கெடுமென்பது அவர்கள் உட்கோளாதலால் உறைதருபொருளெல்லாங் கணத்தழிவுறுமென்றும்-அறைதருமொருநூலையெனவுங்கூறினர்.

மறைநெறி பழுதென்றதை—

"இப்படியன்றிக்கன்மமுயிரிறைவேறுண்டென்று
செப்பிடுமவர்க்குமண்ணோர்செய்திடுங்குற்றமென்னோ
ஒப்பிலாமலடிபெற்றமகனொருமுயற்கொம்பேறித்
தப்பிலாகாயப்பூவைப்பறித்தமைசாற்றினாரோ" எனவும்,

மறுமை யொன்றில்லையென்றதை—

"வாசமார்குழலினார்கண் மணியல்குற்றடத்தேமூழ்கி
நேசமார்குமுதச்செவ்வாயமுதினைநிறையவுண்டு
தேசுலாமணிமென்றோண்மேற்சேர்ந்துவீற்றிருந்திடாதே
மாசுலாமனத்தோரெல்லாமறுமைகொண்டழிவர்மன்னோ" எனவும்,

பொருளெல்லாங் கணத்தழிவுறும் என்றதை—

"மருவியவளவைகாட்சிமானமென்றிரண்டிவற்றால்
கருதியபொருள்கள்ஞானஞேயமாய்க்கணத்திற்பங்கம்வரும்" எனவும்

சித்தியார் பரபக்கத்தில் வருதல் காண்க. உலோகாயத சம்பந்தமு முடைமைபற்றி யவர்கள் சித்தாந்தமும் எடுத்துக்கூறினும் (கக)

அங்கவன்முகநோக்கியடலரிபுகல்கிற்பா
னிங்கிதுபுத்தாகேளினையதொர்நூல்கொண்டே
பொங்கியசிவநேசம்பூண்டுயர்புரவுணர்
தங்களைமயல்பூட்டிச்சிவநெறிதபுவிப்பாய்.

(இ-ள்.) அங்கு அவன் முகம்நோக்கி-அவ்விடத்தில் அம்மாயாபுருடன் முகத்தைப்பார்த்து, அடல் அரி புகல்கிற்பான் - வலிமைவாய்ந்த திருமால் கூறுவான், புத்தா இங்கு இது கேள்-புத்தனே இவ்விடத்து இதனைக்கேள், இனையது ஓர் நூல் கொண்டு-இனைய தொருநூலைக்கொண்டு, பொங்கிய சிவநேசம் பூண்டு உயர் புர அவுணர் தங்களை-மீதூர்ந்த சிவநேசத்தை மேற்கொண்டுயர்ந்த திரிபுரங்களிலுள்ள அசுரர்களை, மயல் பூட்டி சிவநெறி தபுவிப்பாய் - மயக்கிச் சைவநெறியினின்றும் தப்புவாய். (கஉ)

நாரதன்றுணையாகநடமதியிருவீர்க்குஞ்
சீரியமறைவாய்மைசிந்தையினிலைபெறுகென்

றேர்பெறவிடைநல்கயாழிசைமுனிவோனும்
தேரனும்விரைந்தெய்தித்திரிபுரமணுகுறலும்.

(இ-ள்.) நாரதன் துணையாக நட - நாரதமுனிவன் துணையாக நீ செல்லாய், இருவீர்க்கும் சீரிய மறைவாய்மை சிந்தையில் நிலைபெறுக என்று ஏர்பெறவிடைநல்க-(வேதவாய்மையை விலக்கச்செல்லும் உங்களிருவருக்கும்) சிறந்தவேதவாய்மை பிறழாது உங்கள்மனத்தில் நிலைபெறக்கடவதென்று பொலிவுபெற விடைதந்தருள, யாழிசைமுனிவோனும் தேரனும் விரைந்து எய்தி திரிபுரம் அணுகுறலும்- வீணையினிசையின்வல்ல நாரதமுனிவனும் புத்தனும் விரைந்துசென்று திரிபுரத்தையடைய.

மதிமுன்னிலையசையிடைச்சொல். அடுத்தது காட்டும் பளிங்குபோல ஆன்மா அடுத்தவிடயங்களின் றன்மையாதலால் நீங்கள் திரிபுரவாசிகளுக்குக்கூறும் வேதபாகிய மொழிகளால் உங்கள் மனந்திரியாது நீங்கள் முன்பயின்ற வேதவாய்மையில் நிலைபெறுகவென்று திருமாலருளினராதலால் சீரியமறைவாய்மை சிந்தையினிலைபெறுகென் - றேர்பெற விடைநல்க என்றார்.

அடுத்ததின்றன்மை ஆன்மா ஆதலை—

"பன்னிறமேகாட்டும்படிகம்போலிந்திரியந்
தன்னிறமேகாட்டுந்தகைநினைந்து - பன்னிறத்துப்
பொய்ப்புலனைவேறுணர்ந்துபொய்பொய்யாமெய்கண்டான்
எப்பொருட்குந்தெய்வமாம்வேறு" எனச் சிவஞானபோதத்தில் வருதல் காண்க. (௧௩)

மீயுயர்புரமூன்றின்மேவுநரவர்செய்யு
மாயையின்மருளுற்றுமற்றவர்மாணுக்க
ராயினரவர்கூறுஞ்சாத்திரமதுநம்பித்
தீயதொர்வழியொழுகிச்சிவநெறிதனைவிண்டார்.

(இ-ள்.) மீ உயர் புரமூன்றில் மேவுநர்-மேலே உயர்ந்த திரிபுரங்களில் வாழ்வோர், அவர் செய்யு மாயையில் மருள் உற்று அவர் மாணுக்கர் ஆயினர். அவர்கள் செய்யும் மாயையால் மயங்கி அவர்கள் மாணுக்கராயினுர்கள், அவர் கூறும் சாத்திரம் அது நம்பி - அப்புத்தனும் நாரதமுனியுங்கூறும் சித்தாந்தத்தை நம்பி, தீயது ஓர் வழி ஒழுகி சிவநெறிதனை விண்டார் - அந்நூலிற்கூறுந் தீயவழியில் ஒழுகிச் சைவவொழுக்கத்தைக் கைவிட்டார்கள். (௧௪)

தாழ்நெறிதலைநின்றுசாதனந்திருநீறு
வாழ்வுறுஞ்சிவதருமமறைநெறிகைவிட்டா
ரூழ்வலியெவர்வெல்வாரூங்குவர்மனைவியரும்
யாழ்முனிமொழிகேட்டுக்கற்பினையிழந்தார்கள்.

(இ-ள்.) தாழ் நெறி தலைநின்று-இழிந்த தீயநெறியில் இடைவிடாது நின்று, சாதனம் திருநீறு வாழ்வுறும் சிவதருமம் மறை நெறி கைவிட்டார் - ஸ்ரீபஞ்சாக்கரமுச்சரித்தலையும் திருநீறணிதலையும் நிலைபெறும் சிவதருமத்தையும் வேதநெறியையுங் கைவிட்டார்கள், ஊழ்வலி எவர் வெல்வார் - ஊழின் வலிமையை எவர் வெல்வார்கள், உவர் மனைவியரும் - இத்திரிபுரவாசிகள் மனைவியரும், ஊங்கு யாழ்முனி மொழிகேட்டு கற்பினை இழந்தார்கள் - மிகவும் நாரதமுனிவன் கூறும் மொழியைக் கேட்டுக் கற்பினிலையைக் கைவிட்டார்கள்.

சாதனம் என்பது ஸ்ரீபஞ்சாக்கரமுறைத்தலையெனப் பொருள்கூறியதை—

" நீதறவிவன்றனுண்மைசெப்புமந்திரங்கடாமே
சாதனமவனையொத்துத்தயங்கல்சாத்தியமதாமால்
ஓதியவிவற்றைநன்காவுற்றுறவுணர்ந்தோன்றானே
ஏதமின்றாகயாவுமெய்திடவுணர்ந்தமேலோன்" என வாயுசங்கிதையில்

வருதல் காண்க. (கரு)

விழியுறக்கண்டதுவேமெய்யெனுந்துணிபினரா
யிழிதொழில்பலபுரியுமிவர்செயன்முழுதோர்ந்து
பழுதறுபுகழ்மாயோன்பண்ணவர்புடைசூழக்
கழிபெறுமகிழ்வோடுங்கைலையையணுகினனால்.

(இ-ள்.) விழி உற கண்டதுவே மெய் என்னுந் துணிபினர் ஆய் - கண்கூடாகக்கண்ட காட்சியே மெய்யென்று துணியுந் துணிபினை யுடையவராய், பல இழிதொழில் புரியும் இவர் செயல் முழுதும் ஓர்ந்து-பல இழிதொழில்களைச் செய்யும் இவரது செயலை முற்றுமுணர்ந்து, பழுது அறு புகழ் மாயோன் - குற்றத்தினின்று நீங்கிய திருமால், பண்ணவர் புடைசூழ கழிபெறு மகிழ்வு ஓடும் கைலையை அணுகினன் - தேவர்கள் புடைசூழ்ந்துவர மிக்கமகிழ்ச்சியோடும் திருக்கைலையை அடைந்தான்.

திருமால் இவர்கள் சைவநெறியினின்று வழுவுதற்குத் தீயது சூழ்ந்தானாதலால் தான் செய்தொழில் கைதந்தது கருதினனென்பார் கழிபெறு மகிழ்வோடும் எனவும், நாம் தேவர்கள் கருத்து முற்றுப்பெற வெற்றியடைந்தோமென் றெழுந்தானென்பார் கைலையை யணுகினனால் எனவுங் கூறினர். (கசு)

அங்கணைந்திறையோனையடியிணைதொழுதேத்திப்
பங்கயக்கரங்கூப்பிப்பரிவொடுமுரைசெய்வான்
சங்கணிகுழையாய்முப்புரமுறுதானவர்தா
மெங்களுக்கிடர்செய்ய நொந்தனமிதுகாறும்.

(இ-ள்.) அங்கு அணைந்து இறையோனை அடி இணை தொழுது ஏத்தி-அத்திருக்கைலையை யடைந்து இறையவனது இரண்டு திருவடிகளையுந் தொழுது துதித்து, பங்கயம் கரம் கூப்பி பரிவொடும் உரை செய்வான் - தாமரைமலரையொத்த கைகளைக் குவித்து அன்போடு கூறுவான், சங்கு அணி குழையாய்-சங்காகிய குண்டலமுடையாய், முப்புரம் உறு தானவர் தாம் எங்களுக்கு இதுகாறும் இடர் செய்ய நொந்தனம் - திரிபுரவாசிகளாகிய அசுரர்கள் எங்களுக்குத் துன்பஞ்செய்ததால் இதுகாறும் மெலிந்தோம்.

தேவர்கள் தன்பால்வந்து குறையிரந்ததுபோலத் திருமால் சிவபெருமான் திருக்கயிலையை யடைந்து குறையிரந்தனனாதலால் முப்புரமுறுதானவர்தாம்-எங்களுக்கிடர்செய்ய நொந்தன மிதுகாறும் என்றான். (கஎ)

மாயையினெறிகாட்டும்புத்தனின்மருளுற்றுத்
தூயநன்னெறிவிட்டார்துகள்படுமவர்தம்மை
மாய்வுசெய்தெமையாள்வாயாமளைவனிதைமுத
லாயினர்தமைமுன்னாண்மருள்புரியடிகேளோ-

(இ-ள்.) யாமளை வனிதை முதல் ஆயினர் தம்மை-யாமளையென்னும் பெயரையுடையவள் முதலாகவுள்ள தேவதாருவனமுனிவர் பன்னியர்களை, முன்னாள் மருள் புரி அடிகேள்-முன்னாளில் எங்கள்பொருட்டு மயக்கிய அடிகளே, மாயை

யின் நெறி காட்டும் புத்தன் இல் மருள் உற்று-தனது மாயையால்புன்னெறியைப் புல ப்படுத்திய புத்தனால் அறிவுமயங்கி, தூய நல் நெறி விட்டார்-களங்கமில்லாத வைதி கசைவ நெறிகளைக் கைவிட்டார்கள், துகள் படும் அவர் தம்மை மாய்வு செய்து எம் மை ஆள் வாய்-(ஆதலால்) தேவரீர் திருவடி பிழைத்தொழுகிய அவர்களை யழித்து எம்மை அடிமைகொள்வாய்.

ஓ முறை மீட்டின்கண் வந்தது. யாமளை முதலாக நாற்பத்தெண்ணுயிரவர் என்பார் யாமளை வனிதை முதலாயினர் எனவும், இவர்கள் தங்கள் கணவர்களாகிய பிருகுமுதலிய முனிவர்கள் கருமத்தைக் கடவுளாகக்கொண்டு ஏனைக் கடவுளர்களை அவமதித்தமைபோலத் தமது கற்பினைக் கடவுளாகக்கொண்டு உமையம்மை முதலி யோரை யவமதித்தமையால் அவர்களை மயக்கினையென்பான் மருள்புரியடிகேள் என வும், அதுபோலத் தீங்குசெய்யும் திரிபுரவாசிகளைப் புத்தனால் மயக்கினேம் என் பான் புத்தனின் மருளுற்றுத் தூய நன்னெறிவிட்டார் எனவுங் கூறினார்.

தமது கற்பினைக் கடவுளாகக்கொண்டதை—

"இன்னணங்கன்னிக்கற்பினையன்றிக்கடவுள்வேறின்றெனவிருந்த
அந்நலாரியாரும்பின்றொடர்ந்தேக" எனவருங் கூர்மபுராணத்தால் அறிக.

வஞ்சிவிருத்தம்.

என்றுமாலியம்புசொல், சென்றுவார்செவிசேர்தலு
மன்றுளாடியவான்பொரு, ளொன்றுகூறுதலுற்றிடும்.

(இ-ள்.) என்று மாயன் இயம்பு சொல் சென்று வார்செவி சேர்தலும்-என்று திருமால் கூறியசொல் சென்று நீண்ட திருச்செவியையடைய, மன்று உள் ஆடி ய வான் பொருள்-பொன்னம்பலத்தில் திருநடனஞ் செய்தருளிய பொருளாயுள்ள வன், ஒன்று கூறுதல் உற்றிடும்-ஒருமொழி கூறத்தொடங்கினான். (கக)

கருவிமூதெயில்காதுபோர்க், கருவியொன்றிலங்காண்வரக்
கருவிகூடிற்கணத்தவர், கருவெலாமிறல்காண்டியால்.

(இ-ள்.) கருவி மூது எயில் காது போர் கருவி ஒன்றிலம்-கூட்டமாகிய தொ ன்றுதொட்டுள்ள மூன்று மதில்களையும் நீறாக்கும் போர்க்குரிய கருவிகள் ஒன்றுங் காணேம், காண்வர கருவி கூடில்-அமைய அக்கருவிகள் கூடினால், கணத்து அவர் கரு எல்லாம் இறல் காண்டி-அவ்வசுரர்கருவெல்லாம் அழிதலை இன்றே காண்பாய்.

என்னும்வாய்மொழியெம்பிரான், முன்னர்நந்திமுகத்தினாற்
சொன்னகாலைத்துழாயனு, மன்னதேவரோடாய்ந்தனன்.

(இ-ள்.) என்னும் வாய் மொழி-என்றருளும் மெய்யுரையை, எம்பிரான் முன்னர் நந்தி முகத்தினால் சொன்ன காலை - எமது பெருமான் திருமால் முதலிய தேவர்முன்னே நந்திதேவர் திருமுகத்தை நோக்கிச் சொல்லியருளியகாலத்தில், துழாயனும் அன்னதேவரோடு ஆய்ந்தனன் - துளபமாலையையணிந்த திருமாலும் அத்தேவர்களோடு ஆராய்வான்.

ஆய்ந்தனன் என்பது விரைவுபற்றிவந்த காலவழுவமைதி. மொழி என்றதை வாய்மொழியென்றது வேண்டாகூறல், இது போர்த்தொழிற்கு வேண்டுவென என் பது தோன்றற்கு. (உக)

இதுவும் அது.

உருகெழுநிலமொருவையமு, மிருசுடரிருபுடையாழியுஞ்
சுருதிகடுகளறுவாசியு, மருமலரணையவன்வலவனும்.




B கயிலாயடபடலம

(இ-ள்.) உருகெழு நிலம் ஒருவையமும - வடிவமிக்க நிலவுலகு ஒருதேரும், இரு சுடர் இரு புடை ஆழியும் - சந்திர சூரியர் என்னும் இருசுடரும் இரண்டுபக்கத்திலுள்ள உருளையும், சுருதிகள் துகள் அறுவாசியும் - நான்குவேதங்களும் குற்றமில்லாத குதிரைகளும், மருமலர் அணையவன் வலவனும் - வாசமிக்க மலரில் வசிக்கும் பிரமன தேர்ப்பாகனும். (உ௨)

தடநெடுவடவரைசாபமும், படவரவிறைபகர்நாரியு
மடல்விரிதுளவினன்வாளியுங், கடவுளர்பிறபிறகருவியும்.

(இ-ள்.) தட நெடு வடவரை சாபமும் - பெரிய நெடிய மேருமலை விலலும், பட அர வுஇறை பகர் நாரியும் - படத்தையுடைய ஆதிசேடன்சொல்லும் நாணும், மடல் விரி துளவினன் வாளியும்-இதழ்விரிந்த துளபமாலையையணிந்த திருமால் பாணமும், கடவுளர் பிறர் பிற கருவியும் - ஏனைக்கடவுளர் போர்க்குரிய மற்றைக் கருவிகளும்.

அவ்வில்லிற்கு மணி கலைமகளாகவும், பிரணவம் வேதக்குதிரைகளை நடத்தும் முட்கோலாகவும், மேருவில்லிற்கு நாண் ஆதிசேடனாகவும், திருமாலாகிய அம்பினிறகு வாயுவாகவும், அம்பின் வாயியமகனாகவும், அம்பினுனிவடவையாகவும் அமைதலாற் கடவுளர் பிறர்பிற கருவியும் என்றார். (உ௩)

ஆயினரதுபொழுதண்ணலு, மேய்வுறுமிரதமதேறினன்
மாயிருநெடியவில்வாங்கினன், காய்கனலுமிழ்கணைபூட்டினன்.

(இ-ள்.) ஆயினர் - ஆனார்கள், அது பொழுது - அக்காலையில், அண்ணலும் ஏய்வுறும் இரதம் அது ஏறினன், சிவபிரானும் அவரமைத்ததேரிலேறி, மாயிரு நெடிய வில் வாங்கினன் - பெரிய நெடிய வில்லினைவளைத்து, காய் கனல் உமிழ் கணை பூட்டினன் - சுட்டெருத்தும் தீயுமிழும் அம்பினைப்பூட்டி.

ஏறினன், வாங்கினன், பூட்டினன் முற்றெச்சங்கள். அது பகுதிப்பொருள் விகுதி (உ௪)

எறுழ்வலிமுழுவதுமெண்ணினன், கறுவுறுகுறுநகைகாட்டினன்
முறுவலினுயர்புரமும்மையு, நெறுநெறுநெறுவெனநீறின.

(இ-ள்.) எறுழ் வலி முழுவதும் எண்ணினன் - திரிபுரவாசிகள் வலிமை முற்றுங்கருதுதலால் தான்கோத்தெய்யும் அம்பிற் கிலக்காகாமையைக்கருதி, கறுவுறு குறுநகை காட்டினன் - கோபமிக்க புன்னகையரும்பினன், முறுவலின் உயர் புரம் மும்மையும் - அவனது புன்னகையால் உயர்ந்த திரிபுரங்களும், நெறு நெறு நெறுவென நீறின-நெறுநெறு நெறு என்று சாம்பலாயின. (உ௫)

பரவுறுமிமையவர்பார்த்தனர், குரவையிெனாடுமகிழ்கூர்த்தனர்
பொருபுளகமுமுடல்போர்த்தனர், அரகரகரவெனவார்த்தனர்

(இ-ள்.) பரவுறும் இமையவர் பார்த்தனர் - வணங்குந் தேவர்கள்பார்த்து, குரவையினொடு மகிழ் கூர்ந்தனர் - கைகோத்து ஆடுதலோடு மகிழ்கூர்ந்து, பொரு புளகமும் உடல் போர்த்தனர் - தம்முளொத்த மயிர்ப்புளகம்போர்த்து, அரகர கர என ஆர்த்தனர் - அரகர கரவென்று கோஷித்தார்கள்.

பார்த்தனர், கூர்த்தனர், போர்த்தனர் முற்றெச்சங்கள். கூர்த்தனர் வலித்தல் விகாரம். (உ௬)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

அனையவானவர்க்கரும்பெறல்வரம்பலவருள்செய்துகயிலாயத்
தெனையுடைப்பிரானினிதெழுந்தருளினனிமையவரொல்லாரு

நனைமலர்த்துழாயநாரணனயனொடுநயம்பெறக்குழீஇயந்நாள்
வினையிகந்துலகுய்யுமாறிஃதொன்றுவிதிக்கலுற்றனர்மன்னோ.

(இ-ள்.) அனையவானவர்க்கு பெறல் அரும் வரம் பல அருள்செய்து-அந்தத் தேவர்களுக்குப் பெறுதற்கரிய பலவரங்களையும் தந்தருளி, என்னை உடைய பிரான் கயிலாயத்து இனிது எழுந்தருளினன்-என்னை யாளாகவுடைய பெருமான் திருக் கயிலாயத்தில் மகிழ்கூர்ந்து எழுந்தருளினான், இமையவர் எல்லாரும்-தேவர்களெல் லாரும், நனைமலர் துழாய் நாரணன் அயனொடு நயம்பெற குழீஇ-தேன்சிந்துந் துள பமாலையையணிந்த திருமாலும் பிரமனும் நன்மைபெறத் தம்முட்கூடி, அ நாள் உலகுவினை இகந்து உய்யும் ஆறு-அக்காலத்தில் உயிர்கள் இருவினையினின்று நீங்கி உய்யும்வண்ணம், இஃது ஒன்று விதிக்கல் உற்றனா - இச்செய்தியொன்றை விதிக் கத்தொடங்கினார்கள்.

திருமால்முதலிய தேவர்கள் விதிக்கத்தொடங்கியது ஆன்மாக்கள் உடம் பெடுத்தற்குரியபயனை யடைதற்குவேண்டிய விதியையாதலால் உலகுய்யுமாறிஃ தொன்று விதிக்கலுற்றனர் என்றார். (௨௭)

இற்றைநாண்முதற்சைவலிங்கார்ச்சனையில்லவர்வினைமாசு
செற்றநீற்றணிகண்டிகையிகந்தவர்சிவன்பெயர்வழுத்தாதார்
கற்றுமஞ்செழுத்துருத்திரங்கணித்திடாரெமக்கயலவராக
வற்றவாறவர்கடையரோவெனவகுத்தவரவரிடம்புக்கார்.

(இ-ள்.) இற்றை நாள் முதல்-இந்த நாள்முதல், சைவலிங்க அர்ச்சனை இல் லவர்-ஆகமவழியே சிவலிங்கார்ச்சனை யில்லாதவரும், வினையாகு செற்ற நீற்று அணி கண்டிகை இகந்தவர் - இருவினை யென்னுங் களங்கத்தைப் போக்கிய விபூதியின் பொலிவையும் உருத்திராக்கக் கண்டிகையையும் கைவிட்டவரும், சிவன் பெயர் வழுத்தாதார்-சிவனுடைய நாமத்தை யெடுத்துத் துதியாதவரும், கற்றும-வேதநூல் களைக் கற்றும், அஞ்செழுத்து உருத்திரங் கணித்திடார் - ஸ்ரீபஞ்சாக்கரத்தையும் ஸ்ரீருத்திரங்களையும் செபிக்காதவர்களும், எமக்கு அயலவர் ஆக - எங்களுக்கு அய லாராகக்கடவர், அற்ற ஆறு - அவர்க்கு அற்றபடியே, அவர் கடையரே என்ன வகுத்து - நாரதமுனிவனும் புத்தனும் எங்களுக்கு அயலாரோவென எடுத்துக்கூறி, அவர் அவர் இடம் புக்கார் - திருமால்முதலிய அத்தேவர்கள் தத்தம் பதங்களிற்

இற்றை நாள்முதல் என்றமையால் இதற்குமுந்திய நாளிலுள்ளவரும் என நாரதமுனிவனையும் புத்தனையுங் குறிப்பித்துக்கூறலால் அற்றவாறவர் கடையரோ வென வகுத்து என்றார். சைவலிங்கார்ச்சனை, விபூதி உருத்திராக்கமணிதல், சிவ நாமமோதல் ஆகிய இவைசைவசமயிகளுககுரிய புறத்திலக்கணம், ஸ்ரீபஞ்சாக்கரத் தையும் ஸ்ரீருத்திரத்தையுஞ் செபித்தல் அவர்களுக்குரிய அகத்திலக்கணம், ஆத லால் இவையில்லோர் புறச்சமயிகளாதலில் எமக்கயலவராக என்றார்.

" வாசப்பூதியுருத்திரமாமணி
பூசிப்பூணல்குரவனைப்பூசித்தல்
ஆசைப்பாட்டினரனைப்புகழுதல்
ஈசற்குள்ளனநாமமியம்புதல்."

" எந்தையீசனருச்சனையோம்புதல்" எனவும்,

" உளத்திலக்கணமூன்றென்றுரைத்தனம்
அளக்கினஞ்செழுத்துன்னல்" எனவும் உபதேசகாண்டத்தில் வரு தல் காண்க. (௨௮)

மன்னுநாரதமுனிவனும்புத்தனுமனங்கவன்றழிந்தேங்கி
யென்னகாரியமியற்றினமிமையவரியம்பியமொழிகேட்டுப்
பன்னருஞ்சிவபத்தரிலுயர்ந்தவர்பழமறைகளைகண்டோ
ரன்னதானவர்தமைவறிதேமயல்பூட்டினமந்தோவே.

(இ-ள்.) மன்னும் நாரத முனிவனும்-நிலைபெற்ற நாரதமுனிவனும், புத்தனும்-புத்தனும், மனம் கவன்று அழிந்து ஏங்கி - மனங் கவலைகூர்ந்து வருந்தியிரங்கி, இமையவர் இயம்பிய மொழி கேட்டு- திருமால்முதலிய தேவர்கள்கூறிய வார்த்தையைக்கேட்டு, என்னகாரியம் இயற்றினம் - என்னகாரியஞ் செய்தோம், பன் அரும் சிவபத்தரில் உயர்ந்தவர் - சொல்லுதற்கரிய சிவபத்தியிலுயர்ந்தவரும், பழ மறைகளை கண்டோர் - தொன்றுதொட்டுள்ள வேதவரம்பைக் கண்டவருமாகிய, அன்ன தானவர் தம்மை - அந்த அசுரர்களை, அந்தோ வறிதே மயல் பூட்டினம்- ஐயோ வாளா புன்னெறியில் மயக்கினோம்.

திருமால்முதலிய தேவர்கள் தம்முட்குழுவிச் சைவசமயிகட் குரியபுறத்திலக்கணமும் அகத்திலக்கணமு மில்லாதவர்கள் தங்கட்கயலவரோ என்றமையால் நாரதமுனிவனும் புத்தனு மனங்கவன் றழிந்தேங்கி என்றார். (உ௬)

பழியில்வாய்மையர்பலர்தமைத்தீவழிப்படுத்தவிப்பெரும்பாவக்
கழிவுவேதநூல்யாங்கணுங்கண்டிலேங்கற்பகோடியின்மேலு
மொழிவுறாதெமக்கிருணரகினிச்செயல்யாதெனவுளநெக்கார்
சுழிபுனற்பணைக்காஞ்சியினெய்தினர்தொடுபழிவினைமாற.

(இ-ள்.) பழியில் வாய்மையர் பலர் தம்மை - குற்றமற்ற வுண்மைநெறியில் நின்ற அவ்வசுரர்கள் பலரையும், தீவழி படுத்த இ பெரும்பாவம் கழிவு - கொடுவழியில் செலுத்திய இப்பெரும் பாதகத்திற்குத்தீர்வு, வேதநூல் யாங்கணும் கண்டிலேம் - வேதநூல் முழுதிலும் கண்டறியோம், எமக்கு இருள் நரகு - எமக்கு அந்தகாரம்போன்ற நரகு, கற்ப கோடியின் மேலும் ஒழிவுறாது - கோடிகற்பங்கள் மேலும் ஒழியாது, இனி செயல் யாது என உளம் நெக்கார் - இனி இதற்கு நாம்செய்யும் பிராயச்சித்தம் யாதென்று மனமுடைந்து, தொடு பழி வினைமாற - தம்மைத் தொட்டலைக்கும் தீவினைப்பயன்மாற, சுழி புனல் பணை காஞ்சியின் எய்தினர்-சுழிக்கும் நீர்மயமாகிய வயல்சூழ்ந்த காஞ்சிபதி திருப்பதியை யடைந்தார்கள்.

கருத்தவிர்த்தருள்மழுவலான்புரந்தருள்காஞ்சியிற்புகலோடு
மிருப்புக்குன்றுறழ்திண்பெருந்தீவினையெம்பிரானருளாலே
பருத்திக்குன்றெனநொய்மையதாயதுபார்த்தனரிருவோரு
மருத்திகூர்ந்தனரவ்விடம்பருத்திக்குன்றுமெனப்பெயரிட்டார்.

(இ-ள்.) கருதவிர்ந்தருள் மழுவலான் - அடியவர் பிறவியை ஒழித்தருளும் மழுவேந்திய வல்லவனாகிய இறைவன், புரந்தருள் காஞ்சியில் புகலோடும்-பாதுகாத்தருளும் காஞ்சித்திருப்பதியிற்புக, இரும்புகுன்று உறழ் திண் பெரும் தீவினை-இரும்புமலையையொத்த திண்ணிய பெரிய பாவப்பரப்பு, எம்பிரான் அருளாலே பருத்தி குன்று என்ன நொய்மையது ஆயது - எமது இறைவன் திருவருளால் பருத்திமலையைப்போல நொய்மையதானது, இருவோரும் பார்த்தனர் - நாரதனும் புத்தனும் பார்த்து, அருத்தி கூர்ந்தனர் - அன்புமிகூர்ந்து, அ இடம் பருத்திக்குன்று ஆம் என பெயர் இட்டார்-அந்தவிடத்துக்குப் பருத்திக்குன்றென ஓர் நாமந்தந்தனர்.

ரம்புமலைபோலப் பாரமாயிருந்த தங்கள் தீவினைப்பரப்புக் காஞ்சித்திருப் பதியையடைந்த வன்றே நொய்துபட்டதென்பார் பருத்திக்குன்றென நொய்மை யதாயது எனவும், அக்காரணத்தால் அவ்விடத்திற்கு வந்தபெயரொன்பார் பருத்திக்கு ன்று எனவும், இன்றுகாறும் அப்பெயரே வழங்கிவருவதென்பார் துணிவுபற்றி ஆமெ னப்பெயரிட்டார் எனவுங் கூறினர். (௬௧)

அவ்வரைப்பினிலிருந்துகொண்டிருவருமதன் வடகீழ்பாங்க
ரெவ்வமில்லதோர்விசித்திரக்கோயிலங்கியற்றினரதனுள்ளாற்
சைவர்சூழ்கயிலாயநாதன்றனைத்தாபனஞ்செய்தேத்திச்
செவ்வன்மாதவம்பன்னெடுநாளுறச்செய்தனரதுகாலை.

(இ-ள்:) இருவரும் அ வரைப்பினில் இருந்துகொண்டு - நாரதமுனிவனும் புத்தனும் அந்த வெல்லையிலிருந்து, அதன் வடகீழ்பாங்கர் - அப்பருத்திக் குன்றின் வடகீழ்த்திசையில். எவ்வம் இல்லது ஓர் விசித்திரம் கோயில் அங்கு இயற்றினர்-குற் றமில்லாத ஒப்பில்லாத பலவகைச் சித்திரம்வாய்ந்த கோயிலொன்றை அவ்விடத்த மைத்து, அதனுள் - அத்திருக்கோயிலுள், சைவர் சூழ் கயிலாய நாதன் தன்னை தாபனஞ்செய்து எத்தி - சைவர்கள்சூழ்ந்த கயிலாயநாதனைத் தாபனஞ்செய்துவண ங்கி, செவ்வன் மாதவம் பல் நெடுநாள் உற செய்தனர்-செவ்வேபெரிய தவத்தைப் பலநாள் மிகவுஞ் செய்தனர்.

சிற்பநூல்வழிச் சித்திரம் வாய்ந்ததென்பார் எவ்வமில்லதோர் விசித்திரக்கோ யில் என்றார். (௬௨)

பளிக்குமால்வரைநிமிர்ந்தனவிடைமிசைப்பல்கணம்புடைசூழ
வொளிக்குழாந்திரண்டெழுந்தெனவெழுந்தருளொருவனைக்கண்ணுற்றார்
தெளிக்குமின்னிசைத்திவவியாழ்முனிவனுந்தேரனும்விழிநீருட்
குளிக்குமேனியர்பலமுறைபணிந்தனர்கூறுதலுற்றாரால்.

(இ-ள்.) மால் பளிக்கு வரை நிமிர்ந்தால் அன்ன விடை மிசை - பெரிய பளிங்குமலை நிமிர்ந்தாலொத்த இடபவூர்தியின்மேல், பல் கணம் புடை சூழ ஒளி குழாம்திரண்டு எழுந்தால் என்ன எழுந்தருள் ஒருவனை - பலசிவகணங்கள் புடை சூழ ஒளிக்கூட்டம் ஒருசேரத் திரண்டெழுந்தாற்போல எழுந்தருளிய இறைவனை, கண்ணுற்றார் - தெரிசித்து, இன் இசை தெளிக்கும் திவவு யாழ் முனிவனும் தேர னும் - இனிய இசையை விரிக்கும் வார்க்கட்டமைந்த வீணையையேந்திய நாரதனும் புத்தனும், விழி நீருள் குளிக்கும் மேனியர் - கண்கள்சுரக்கும் ஆநந்தபாஷ்பத்தில் மூழ்கும் மேனியை யுடையவராய், பலமுறை பணிந்தனர் கூறுதலுற்றார்-பலமுறை பணிந்து சொல்லத்தொடங்கினார்கள்-

நிமிர்ந்தன தொகுத்தல் விகாரம். (௬௩)

ஐயனேயுனக்கடியனையடியரேமரில்படுபுறநூலான்
மையல்பூட்டினேமிப்பிழைபொறுத்தருள்வள்ளலேயெனவேண்டத்
தொய்யில்பூத்துவிம்மாந்தெழுந்தணிகெழுதுணைத்தபூண்முலைகோபச்
செய்யவாயுமைக்கொருபுறமளித்தருள்சிவபிரானிதுபேசும்.

(இ-ள்.) ஐயனே உனக்கு அடியனை - இறைவனே யுனக்கு அடியவராயி னை, அடியரேம் அரில் படு புற நூலால் மையல் பூட்டினேம் - உனக்கு அடியரா கிய யாம் குற்றமமைந்த புறச்சமயநூலால் மயக்கம் பூட்டினேம், வள்ளலே இபிழை பொறுத்தருள் என்ன வேண்ட - வள்ளன்மையையுடையாய் இந்தப் பிழையைப்

பொறுத்தருளாயென்று குறையிரக்க, தொய்யில் பூத்து விம்மாந்து எழுந்து அணி கெழுதுணைத்த பூண் முலை-தொய்யிலெழுதி இறுமாந்து எழுந்து பொலிவுமிக்க இரண்டாயுள்ள பூண்முலையையும், கோபம் செய்ய வாய்உமைக்கு- இந்திரகோபத்தையொத்த செவந்த வாயையுமுடைய வுமையம்மைக்கு, ஒருபுறம் அளித்தருள் சிவபிரான் இது பேசும்-ஒருபாகந் தந்தருளும் சிவபெருமானார் இதனையருளுவார்.

தீவழியிற்புகுத்துவ தென்பது தோன்ற அரில் எனவும், அந்நூலால் மயக்கியது தீராப் பெரும்பாதகம் என்பதுதோன்றப் புறநூலால் மையல் பூட்டினேம் பழியெனவும், உடைமைக்கும் உடையதற்கும் ஒற்றுமை யுண்மையால் உடையவள் வினையையுடைமை மேலேற்றித் தொய்யில்பூத்து எனவுங் கூறினார். (௩௪)

கொடியநீரிழைத்தபாவங்கோடியாண்டவதியாற்றுங்
கடனெறியெவற்றினுனுங்கழிவுறுகண்டீர்நந்த
மடியரைப்படிற்றுநூலாற்பொருளினாலாசைகாட்டிப்
படிமிசைமயக்குவோர்கள்படுகுழிநரகில்வீழ்வார்.

(இ-ள்.) கொடிய நீர் இழைத்த பாவம் - கொடுமையையுடைய நீங்கள் செய்தபாவங்கள், கோடி யாண்டு அவதி ஆற்றும் கடன் நெறி எவற்றினானும் கழிவுறு- கோடிவருடத் தெல்லைகாறும் நீங்கள் செய்யும் தவநெறிகளுள் எவற்றினாலும் நீங்கா, நந்தம் அடியரை படிறு நூலால் பொருளினால் ஆசைகாட்டி படி மிசை மயக்குவோர்கள் - நமது அடியவர்களைப் பொய்ந்நூலாகிய புறச்சமயநூலாலும் பொருளாலும் ஆசையையுறுத்தி நிலவுலகின்மேல் மயக்குகின்றவர்கள், நரகு படுகுழியில் வீழ்வார் - நரகமாகிய படுகுழியில் வீழ்ந்தழுந்துவார்.

பலயுகங்காறும் தீர்வாக அரியதவங்களைச்செய்யினும் தீராத பெரும்பாதகச் செய்கையை நீவிருடையீர் என்பது தோன்றக் கொடியநீர் என்றார்.

பாதகமெவற்றினுக்குந்தீர்திறம்பகருநூல்கண்
மேதகுமடியார்தம்மைமயக்கியவினையினோர்க்கு
நோதகுநரகேயன்றிநுவன்றிடாவேறுதண்ட
மோதுழியதுவுங்காஞ்சியுற்றவர்க்கொழிவுகூடும்.

(இ-ள்.) பாதகம் எவற்றினுக்கும் தீர் திறம் பகரும் நூல்கள் - எல்லாப்பாதகங்களுக்குந் தீர்வுவிதிக்கும் தருமநூல்கள், மேதகும் அடியார் தம்மை மயக்கிய வினையினோர்க்கு - மேன்மைதங்கிய சிவனடியவர்களை மயக்கிய கீழ்நின்ற புன்சமயத் தீவினையுடையோருக்கு, நோதகு நரகே அன்றி - வருந்தத்தக்க நரகமேயன்றி, வேறு தண்டம் நுவன்றிடா-வேறுதண்டங்கூறா, ஓது உழி - சொல்லுமிடத்து, அதுவும் காஞ்சி உற்றவர்க்கு ஒழிவு கூடும் - அத்தீவினைக்கும் காஞ்சித் திருப்பதியையடைந்தவர்க்குத் தீர்வுண்டாகும்.

மேதகுமடியார் தம்மை யெனக் கூறுதலால் சிவனடியவர்களை யெனவும், மயக்கிய வினையினோர் என்றதனால் கீழ் நின்ற புன்சமயத் தீவினையுடையோர்க்கு எனவும், பொதுநூல் என்பது தோன்றப் பாதகம் எவற்றினுக்குந் தீர் திறம் பகரு நூல்கள் என்றதனால் தருமநூல்கள் எனப்போதரலால் அந்நூலுட் சிறப்புவிதியெனவுங் கொள்க. (௩௫)

கச்சியிலுறுதலானுங்கடுவினைமெலிதாய்விட்ட
திச்சையினிலிங்கமிங்கணிருத்துபுவழிபாடாற்று
மச்செயல்வலியாற்சாலக்கழிந்ததேயானுங்கேண்மின்
முச்சகம்புகழுநல்யாழ்முனிவனேபுத்தரோறே.

(இ-ள்.) கச்சியில் உறுதலால் - காஞ்சித்திருப்பதியை யடைதலால், நம் கடு வினை மெலிதாய் விட்டது- நமதுகடியதீவினை மெலிதாகியது, இச்சையின்- இச்சையால், இலிங்கம் இங்கண் இருத்துபு வழிபாடு ஆற்றும் அச்செயல் வலியால்- சிவலிங்கத்தை யிவ்விடத்தில் தாபித்து வழிபாடுசெய்யும் அந்தச்செயலின் வன் மையால், சாலகழிந்ததே ஆயினும் - மிகவுந் தீர்ந்ததேயானாலும், முச்சகம் புகழும் நல் யாழ் முனிவனே புத்தர் ஏறே - மூன்றுலகமும் புகழும் நாரதமுனிவனே புத்த ருள் ஆண்சிங்கம் போன்றவனே, கேண்மின் - கேளுங்கள். (கூஎ)

பிறர்க்குபகாரமாதற்பெற்றியானொருகாற்பாவத்
திறத்தினைப்புரிவரோனுஞ்சிவநெறிச்சிதைவுதன்னை
மறப்பினுமெண்ணலோம்பலெண்ணினோர்வழங்கல்செல்லா
நெறிப்படுநரகில்வீழ்ந்துநீந்தருமிடும்பைகூர்வார்.

(இ-ள்.) பிறர்க்கு உபகாரம் ஆதல் பெற்றியான் - பிறர்கருபகாரமாகுந் தன் மையால், ஒருகால் பாவம் திறத்தினை புரிவரோனும்- ஒருகாலத்தில் பாவத்தின் பகு தியினைச் செய்வாராயினும், சிவன் நெறி சிதைவு தன்னை மறப்பினும் எண்ணல்-சிவ தருமத்துக்கு வைத்தபொருளைச் செலவுசெய்தலை மறதியிலும் எண்ணுதொழியக் கடவர், ஓம்பல் எண்ணினோர் - அச்சிவதருமத்துக்குவைத்த சொத்தைக்கொண்டு வேறுதருமத்தை வளர்த்தலைக் கருதினோர், வழங்கல் செல்லாத நெறிப்படு நரகில் வீழ்ந்து-எவரும் அடைதலில்லாத வழியமைந்த நரகத்தில் வீழ்ந்து, நீந் தரும் இடு ம்பை கூர்வார் - கடத்தற்கரிய துன்பம் நுகர்வார்.

பிறர்க்கு உபகாரஞ் செய்தற்பொருட்டு விலக்குவழியில்நின்று ஒருகால் பொ ருளீட்டலும் பாவம் ஆதலால் அதனை விலக்குக என்பார் எதிர்காலவினையெச்சந்தந்து புரிவரோனும் எனவும், சிவதருமஞ் செய்தற்கு வைத்தபொருளைக் கொண்டு பிறர் க்கு உபகாரஞ் செய்தலையும், அச்சொத்தைக்கொண்டு வேறுதருமம் வளர்த்தலையு மறதியிலும் எண்ணுதல் அதனிலும் பெரும்பாவம் என்பார் வழங்கல்செல்லா நெறி ப்படு நரகின் வீழ்ந்து நீந்தருமிடும்பைகூர்வார் எனவுங்கூறினார் மேன்மேலும் ஒன்ற கொன்றிழிகுணத்தா லுயர்வாதலைக் கூறினமையால் மேன்மே லுயர்ச்சியணி.

இன்றுநீர்வழுத்துமன்புக்கிரங்கினேநுமதுபாவந்
துன்றுபல்பிறவிதோறுஞ்சுழன்றலாற்கழியாதாகும்
நன்றதுகழியுமாறுநவிலுதுமினையவைப்பின்
மன்றமற்றெமைப்பூசித்துவலம்புரிந்துறைதிரென்றும்.

(இ-ள்.) இன்று நீர் வழுத்தும் அன்புக்கு இரங்கினேம் -இப்போது நீங கள் எம்மைத்துதித்து வழிபடு மன்பினுக்கு மனமிரங்கினேம், நுமது பாவம் துன்று பல் பிறவி தோறும் சுழன்று அல்லாமல் கழியாதுஆகும்-நும்முடையபாவம் நெருங் கியபலபிறவிகள்தோறும் உடம்பெடுத்துச் சுழன்றுதிரிந்தல்லாமல் நீங்காதாகும், அது கழியு மாறு நன்று நவிலுதும் - அத்தீவினைநீங்கும் வண்ணம் மிகவுங் கூறுவோம். இனைய வைப்பில் - இந்தத்திருப்பதியில், மன்ற எம்மை பூசித்து - எம்மைத் தேற்ற மாகப்பூசித்து, என்றும் வலம் புரிந்து உறைதிர் - எக்காலத்தும் பிரதக்ஷிணஞ்செ ய்து வாசஞ்செய்யுங்கள்.

நீங்கள் செய்த பாதகத்திற்குத் தீர்வு பலபிறவிகள் தோறும் பிறந்தாலன்றி யொழியாதென்பது தோன்றச் சுழன்றலாற் கழியாதாகும் எனவும், நாம் அருளைக் கஞ் செய்தலால் இம்மையிலேயே பற்பல பிறப்பெடுத்து இறத்தலையொக்கும் என்

பது தோன்ற வலம்புரிந்துறைதிர் எனவும் கூறினர். வலம்புரிதல் பிறப்பிறப்போ டொக்கும் என்பதைப் பின்னர்க்காண்க. (கூகூ)

வலஞ்செயப்புகுமப்போதும்வெளிக்கொளும்போதும்வாயிற்
புலந்தனைச்சுருங்கையாகப்புரிதுமங்கவையேகன்மப்
பலங்களைநுகருந்தோற்றமிறப்பெனும்பகுதியாகி
யிலங்கவீண்டினிதுவாழ்மினிறுதியிற்றருதுமுத்தி.

(இ-ள்.) வலம் செய்ய புகும் அப்போதும் - பிரதக்ஷிணஞ் செய்யப்புகும் அக்காலத்தும், வெளிக் கொள்ளும் போதும் - புகுந்து வெளிப்படுங் காலத்தும், வாயில் புலந்தனை சுருங்கையாக புரிதும்-அவ்வாயிலைத்திட்டி வாயிலாகச்செய்வோம், அங்கு அவையே - அவ்விடத்து அத்திட்டிவாயில்களே, கன்மப் பலங்களை நுகரும் தோற்றம் - புகுதல் கன்மபலத்தாலாகிய பயன்களை நுகரவரும் பிறப்பும், இறப்பு என்னும் பகுதி ஆகி - வெளிப்படுதல் இறத்தலென்னும் பகுதியுமாய், இலங்க ஈண்டு இனிது வாழ்மின் - விளங்க இவ்விடத்தி லிவ்வாறு பிரதக்ஷிணஞ்செய்து இனிதாக வாழுங்கள், இறுதியில் முத்தி தருதும் - முடிவில் முத்திகொடுப்போம்.

நீவிர்செய்த பாதகத்திற்குத் தீர்வில்லை யாயினும் இவ்வாறு வலஞ்செய்தே பிறப்பிறப்பைக் கழிக்கவேண்டும் என்பார் இலங்க வீண்டினிது வாழ்மினிறுதியிற் றருது முத்தியென்றார். (சo)

சித்திகளெவையுநல்கும்விசித்திரச்சிற்பம்வாய்ந்து
சித்தர்களருச்சித்தேத்தத்திகழ்கயிலாயமேன்மை
சித்தமாசகன்றோர்க்கன்றித்தெரிவுறாகாண்மினென்று
சித்தசனெரியநோக்குஞ்சேவகன்கரந்துபோந்தான்.

(இ-ள்.) சித்திகள் எவையும் நல்கும்- எல்லாச்சித்திகளையுந் தந்தருளும், விசித்திரம் சிற்பம் வாய்ந்து - விசித்திரம் அமைந்த பணிதிபெற்று, சித்தர்கள் அருச்சித்து ஏத்த-சித்தியுடையோர் அருச்சனைசெய்து துதிக்க, திகழ் கயிலாயம் மேன்மை- விளங்கும் திருக்கயிலாயமென்னும் திருப்பதியின்மேன்மை,சித்தம் மாசு அகன்றோர்க்கு அன்றி-மனக்குற்றமொழிந்தவர்க் கல்லாமல், தெரிவுறா-காணப்படா, காண்மினென்று-நீங்கள் கண்டுகொள்ளுங்களென்று, சித்தசன் எரிய நோக்கும் சேவகன்-மன்மதனை நீறாகப் பார்த்தருளும் வெற்றியையுடைய பெருமான்,கரந்து போந்தான்-திருவுருக்கரந்து எழுந்தருளினன்.

பற்பல சமயங்களுக்கு இறைவராயுள்ள பிரமன்முதலியோரை யொறுத்து அநுக்கிரகஞ்செய்த இறைவனுயுள்ள வீரனுதலால் சித்தசனெரிய நோக்குஞ் சேவகன் என்றார்.

"தெரிமறையந்தணன்றலையைச்சிறியே
இருவிரனுதியினுற்கிள்ளியேந்தினன்"
"மானுடமடங்கலைச்சரபவல்லுருத்
தானுறத்தாங்கியேசாயமோதினன்
ஆனதோர்வீரனுலன்றுதக்கனை
வானவர்தம்மொடுமாயநூறினன்"
"வயங்கெயிலெரித்தனன்மதனைநீற்றினன்" எனவாயுசங்கிதையில் சிவன் விசயமுரைத்த வத்தியாயத்திற்காண்க.

இருவருமவ்வாறங்கணிறைவனைவலஞ்செய்தேத்திக்
கருவறநெடுநாள்வைகித்திருவருட்கலவிபெற்றார்
திருவளர்காஞ்சிமூதூர்த்திண்பெருங்கயிலைபோலும்
மொருதலமதுவேயன்றியுலகமூன்றிடத்துமில்லை.

(இ-ள்.) இருவரும் அஆறு அங்கண் இறைவனை வலஞ்செய்து எத்தி- புத்தனும் நாரதமுனிவனும் அவ்வகையாக அவ்விடத்துச் சிவபெருமானைப் பிரதக்ஷிணஞ்செய்து துதித்து, கருஅற நெடுநாள்வைகி திருவருள் கலவிபெற்றார்- தமது பிறவிநீங்கப் பலநாள் தங்கி அவ்விறைவனது திருவருளோடு கலத்தலைப் பெற்றார்கள், திருவளர் காஞ்சி முதூஊர்-பொலிவுமிக்க காஞ்சி என்னும் தொன்றுதொட்டுள்ள நகரில், திண்பெருங் கயிலைபோலும் ஒருதலம் அதுவே அன்றி - கலங்கா நிலையையுடைய பெரிய திருக்கயிலையையொத்த ஒரு திருப்பதி அதுவே யல்லாயல், உலகம் மூன்றுஇடத்தும் இல்லை-சுவர்க்க மத்திய பாதலம் என்னும் மூன்றிடங்களிலுமில்லை.

நெடுநாள் வலஞ்செய்து துதித்து அங்குவசித்தலால் திருவருள் பதிவுபெற்றனராதலின் திருவருட்கலவி பெற்றாரெனவும், திருவருட்பதிவு பெற்றவழிச் சஞ்சித மொழிதலில் கருவற எனவும், இந்திரன் முதலியோர் நிலையைக் கலக்கிய இராவணன் நிலைமை கலங்கத் தன்கீழ்ப்படுத்தலில் திண்பெருங் கயிலையெனவும், அக்கயிலைபோல இக்கயிலாயம் நிலவுலகில் இருத்தலின் திருவளர் காஞ்சிமூதூர் ஒரு தலமெனவும், அது தனக்குத்தானே ஒத்துளதாதலில் அதுவேயன்றி உலக மூன்றிடத்து மில்லையெனவும் கூறினார்.

கயிலாயப்படல முற்றியது.

---

ஆஉ திருவிருத்தம் - க0சுசு.

# வீராகவீசப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புத்தருக்கிறையுநல்யாழ்ப்புலங்கெழுமுனியும்போற்ற
வத்தனாினிதுவைகுங்கயிலையினடைவுசொற்றாம்
மித்தகுவரைப்பின்கீழ்பால்ளநருக்கொப்புளித்துத்
தொத்தலர்பொழில்சூழ்வீராகவஞ்சொல்லலுற்றாம்.

(இ-ள்.) புத்தருக்கு இறையும் நல்யாழ் புலங்கெழு முனியும் போற்ற - புத்தருக்கு இறைவனும் நல்லயாழின் புலமைமிக்க நாரதமுனிவனும் துதிக்க, அத்தனா் இனிது வைகும் கயிலையின் அடைவு சொற்றாம் - இறைவன் இனிதாக எழுந்தருளிய திருக்கயிலையின் முறைமையைக் கூறினாம், இத்தகு வரைப்பின் கீழ்பால்- இந்தமேன்மை தங்கிய திருப்பதியின் கீழ்பாலில், இளநறா கொப்புளித்து தொத்து அலர் பொழில்சூழ் வீராகவம் சொல்லலுற்றாம் - பதனழியாத தேனைக்கொப்புளிக்கும் பூங்கொத்தலர்ந்த பூஞ்சோலை சூழ்ந்த வீராகவமென்னும் திருப்பதியை இனியெடுத்துக் கூறுவாம் (க)

ஒன்னலர்குருதிமாந்தியொளிறுவேலிராமனென்பான்
றன்மனைக்கிழத்திதன்னைத்தண்டகவனத்துமுன்னாட்

கொன்னுடைத் தறுகட்சீற்றக்கொடுந்தொழிலரக்கன்வெளவித்
துன்னருமிலங்கைபுக்கான்மேல்வருதுயரநோக்கான்.

(இ-ள்.) ஒன்னலர் குருதிமாந்தி ஒளிறுவேல் இராமன் என்பான் தன்மனைக் கிழத்தி தன்னை-பகைவரது உயிரைவாங்கிப் பிரகாசிக்கும் வேலையுடைய இராமனென்பவனது இல்லறக் கிழமைபூண்ட மனைவியை, முன்நாள் - முன்னாளில, கொன் உடைய தறுகண் சீற்றம் கொடுந்தொழில் அரக்கன் - அச்சத்தைத்தரும் அஞ்சாமையையும் கோபத்தையும் கொடியதொழிலையுமுடைய இராவணன், மேல்வருதுயரம் நோக்கான் - இனித் தனக்குவரும் துன்பத்தை நோக்காதவனாய், தண்டகவனத்து வெளவி - தண்டகாரணியத்தில் பஞ்சவடிதீரததினின்று வஞ்சகத்தாற் கவர்ந்து, துன் அரும் இலங்கைபுக்கான் - அடைதற்கரிய இலங்கை நகரிற்புகுந்தான்.

வெளவி - என்ற சொல்லாற்றலால் வஞ்சத்தாற் கவர்ந்து என்றும், தன்கிளையோடறக்கெடும் துன்பமாதலால் - மேல்வரு துயரம்நோக்கான் என்றார். (உ)

பெய்கழல்கறங்குநோன்றாட்பெருவிறலிராமனந்நா
ளெய்சிலைத்தம்பியோடுமிடருழந்தழுங்கியேங்கிக்
கொய்தழைவனங்களெங்குங்கொட்புறீஇக்கமலவாவிச்
செய்புடையுடுத்தகாஞ்சித்திருவளர்நகரஞ்சேர்ந்தான்.

(இ-ள்.) பெய்கழல் கறங்கு நோன்தாள் பெருவிறல் இராமன் - கட்டியவீரகண்டை யொலிக்கும் வன்மைமிக்க திருவடியையும் பெருமைவாய்ந்த வெற்றியையுமுடைய இராமன், அந்நாள் எய்சிலை தம்பியோடும் இடர் உழந்து அழுங்கி ஏங்கி - அக்காலையில் அம்பெய்யும் வில்லினையேந்திய இலக்குமணனோடும் துன்பத்தில் வருந்திப் பொலிவழிந்திரங்கி, கொய்தழை வனங்கள் எங்கும் கொட்புற்று-கொய்தற்கமைந்த தழைகளமைந்த காடுகளெங்குஞ் சுழன்று திரிந்து, கமலம்வாவி செய்புடை உடுத்தகாஞ்சி திருவளர் நகரஞ்சேர்ந்தான் - தாமரைகள் நிறைந்த தடாகங்களையும் வயல்களையும் தன்பக்கத்தில் சூழ்ந்த காஞ்சியென்னும் நகரத்தை அடைந்தான்.

உடையவனது வெற்றியின் வன்மையை உடைமைமேலேற்றிக் கழல்கறங்கு நோன்றாள் எனவும், சீதையை இழத்தலால் இடருழந்தழுங்கி யேங்கியெனவும், அவளைத் தேடுதற்பொருட்டுக் கொட்புற்றனனாதலால் கொய்தழை வனங்களெங்கும் கொட்புறீஇ எனவும் கூறினர். (௩)

இடும்பைநோயறுக்குந்தெண்ணீரொழிற்சிவகங்கையாடி
நெடும்பணையொருமாமூலநின்மலக்கொழுந்தையேத்திக்
கொடும்படைச்சனகனீன்றகோதையைப்பெறுவான்கூற்றை
யடும்புகழ்ச்செய்யதாளையிரந்துநின்றழுதுவேண்டி.

(இ-ள்.) இடும்பை நோய் அறுக்கும் தெள்நீர் எழில் சிவகங்கை ஆடி-பிறவித் துன்பங்களை வேரோடறுக்கும் தெள்ளிய நீர்மயமாகிய தோற்றமிக்க சிவகங்கையில் நீராடி, நெடும்பணை ஒருமாமூலம் நின்மலக்கொழுந்தை ஏத்தி- நீண்ட சாகைகளையுடைய வொப்பில்லாத மாமரத்தின்கீழ் அங்குரித்த ஞானக்கொழுந்தாகிய இறைவனைத்துதித்து, கொடும்படை சனகன் ஈன்றகோதையை பெறுவான்— கொடிய சேனைகளையுடைய சனகன்பெற்ற புத்திரியாகிய சீதையைப்பெற, கூற்றை அடும்புகழ் செய்யதாளை இரந்து நின்று அழுதுவேண்டி - இயமனை வென்று புகழ்வாய்ந்த திருவடிக்கீழ்த் தனது குறையிரந்து அழுது துதித்து.

வேதத்தின் சாகைகளே சாகையென்பது தோன்ற நெடும்பணை யெனவும், வேதமே மாமரமென்பதுதோன்ற ஒரு மாமரமெனவும், அவ்வேதத்துளடங்கிய ஞா

ணகாண்டமென்பது தோன்ற மூலநின் மலக்கொழுந்தையெனவும், கூற்றுவனையன்றி இராவணனையும் வென்றது உபலக்கணத்தாற் றேன்றக் கூற்றை யடும்புகழ்செய்ய தானையிரந்து நின்று அழுதுவேண்டியெனவும், சீதையைப்பெறக் கருதினனுதலில் கருத்துடை யடையணிதோன்றக் கோதையைப் பெறுவான் எனவுங்கூறினர். தானை - ஏழனுருபு நிற்குமிடத்து இரண்டனுருபு வந்தது உருபுமயக்கம். (௪)

தாழ்ந்தெழுந்தேகித்தென்பாலகத்தியீச்சரத்தின்முன்னர்
வாழ்ந்திடுந்தகைமைசான்றவண்டமிழ்முனியைக்கண்டான்
சூழ்ந்தவெந்துயரத்தோடுமோடினன்றுணைத்தாண்மீது
வீழ்ந்தனன்புலம்பலோடும்வெருவலோலென்னத்தேற்றி.

(இ-ள்.) தாழ்ந்து எழுந்து ஏகி - வணங்கியெழுந்து அப்பாற்சென்று, தென்பால் அகத்தியீச்சரத்தின் முன்னர் - அதன் தென்பாலுள்ள அகத்தியீச்சரத்தின் முன்னே, வாழ்ந்திடும் தகைமைசான்ற வண்தமிழ் முனியைக் கண்டான் - வாழுந் தன்மை வாய்ந்தவளவிய தமிழ்க்கரசாகிய அகத்தியமுனிவரைக் கண்டு, சூழ்ந்த வெந்துயரத்தோடும் ஓடினன் - தன்னை விடாது சூழ்ந்த கொடிய துன்பத்தோடும் ஓடி, துணைத்தாள்மீது வீழ்ந்தனன் புலம்பலோடும் - அவரது இரண்டு திருவடிகள் மீது விழுந்து அழுது புலம்ப, வெருவலோல் என்னதேற்றி - சற்றும் அஞ்சாதே என்று இராமனைத்தேற்றி.

கண்டான், ஓடினன், வீழ்ந்தனன்-என்பன முற்றெச்சங்கள். பிரிவால் வந்ததாகலின் சூழ்ந்த வெந்துயரமென்றார். (௫)

இத்துணையிடும்பைக்கேதுவெவனெனவினவுஞ்செல்வ
முத்தமிழ்முனிவன்கேட்பப்புகுந்தவாமொழியலுற்றான்
மைத்தவார்கரியகூந்தற்கௌசலைமணந்ததிண்டோட்
சத்துவகுணத்தான்மிக்கதசரதனீன்றசெம்மல்.

(இ-ள்.) இத்துணை இடும்பைக்கு ஏது எவன் என்ன வினவும் - இவ்வளவு துன்பத்திற்குக்காரணம் என்ன எனறுவினவும், முத்தமிழ் செல்வம் முனிவன்கேட்ப இயலிசை நாடகமென்னும் முத்தமிழ்ச் செல்வத்தையுடைய அகத்தியமுனிவர் வினவ, மைத்தவார் கரியகூந்தல் கௌசலை மணந்ததிண் தோள் - மைபோலும் நிறத்த கரியகூந்தலையுடைய கௌசலையைப்புணர்ந்த திண்ணியதோளையுடைய, சத்துவ குணத்தால் மிக்க தசரதன் ஈன்ற செம்மல் புகுந்த ஆறு மொழியலுற்றான் - சாத்துவிதகுணத்தால் மேம்பட்ட தசரதசக்கரவர்த்திபெற்ற பெருமையிற்சிறந்த இராமன் நடந்தவரலாற்றினைச் சொல்லத்தொடங்கினன்.

அரசியலைத்துறந்து காட்டில்புகுந்ததும், தன்னைக்கண்டு மகிழ்கூராது துயரத்தோடு ஓடிவந்து வீழ்ந்து புலம்புதலும் நோக்கினனுதலால் இத்துணை இடும்பைக்கு ஏது எவனென வினவினரென்றார். (௬)

கலிநிலைத்துறை.

எம்பிரானிதுகேட்டருளேழிரண்டாண்டு
வெம்புகாட்டகத்துறைதிநீவியனிலந்தாங்கி
நம்பியாகியபரதனேவாழ்கெனநுவன்று
கம்பியாதெனையெந்தையிக்கானிடைவிடுத்தான்.

(இ-ள்.) எம்பிரான் இது கேட்டருள் - எமது பெருமானே இதனைக் கேட்டருளாய், நீஏழு இரண்டு ஆண்டு வெம்புகாட்டகத்து உறைதி - நீ பதினான்குவரு

டம் நீயால்வெதும்பும் காட்டில் வாசஞ்செய்வாய், நும்பி ஆகிய பரதனே வியன நிலம் தாங்கி வாழ்க எனநுவன்று - உனது தம்பியாகிய பரதனே பரந்த நிலவுலகத்தைத்தாங்கி வாழக்கடவனென்றுகூறி, எந்தை கம்பியாது என்னை இகான் இடைவிடுத்தான்-என்தந்தை சிறிதும் நடுக்கமுறாது என்னை இக்காட்டினிடத்துச் செல்ல

தனது வாய்மை காத்தற் பொருட்டுச் சிறிது நடுங்கிலனென்பான கம்பியாதென்னை விடுத்தான் என்றார். (எ)

ஏயவாணையைச்சிரமிசைக்கொண்டெழுமென்னையே
தூயசீரிலக்குமணனுஞ்சீதையுந்தொடர்ந்தா
ராயமூவருந்தண்டகவனத்தமர்ந்திடுநாண்
மாயமானெனததோன்றினனங்கண்மாரீசன்.

(இ-ள்.) ஏய ஆணையை சிரமிசைக்கொண்டு எழும் என்னை - எந்தையேவிய ஆணையைத் தலைமேற்கொண்டு காட்டிற் செல்லும் என்னை, தூயசீர் இலக்குமணனும் சீதையும் தொடர்ந்தார் - புனிதமாகிய புகழ்வாய்ந்த இலக்குமணனும் சீதையும்பின் தொடர்ந்தார்கள், ஆய மூவரும் - ஆகிய நாங்கள் மூவரும், தண்டகவனத்து அமர்ந்திடுநாள் - தண்டகாரணியத்தில் பஞ்சவடி தீரத்தில் வசிக்குங் காலையில், மாரீசன் மாயமான்என்ன அங்கண் தோன்றினன்-மாரீசனென்பவன் வஞ்சனையுடைய மான்வடிவமாக உருவங்கொண்டு தோன்றினன். (அ)

தோன்றிமற்றெனைச்சேயிடைக்கொண்டுபோய்சுலவி
மான்றவம்பினிற்பொன்றுவான்சீதையைவலியா
னுன்றவெம்பியைவிளித்துவீழ்ந்தனனதுகேளா
வேன்றசீதையைவிடுத்தெனைத்தொடர்ந்தனனிளவல்.

(இ-ள்.) தோன்றி என்னை சேயிடை கொண்டுபோய் சுலவி - எங்களுக்குப் புலப்பட்டு என்னைத் தூரத்திற்கொண்டுபோய்ச் சுழன்றுதிரிந்து, மான்ற அம்பினில் பொன்றுவான் - பெருமையமைந்த எனது அம்பினால் உயிர்விடுமாரீசன், சீதையை வலியான் ஆன்ற எம்பியை விளித்து வீழ்ந்தனன் - சீதையையும் வலிமையாலமைந்த என் தம்பியையும் அழைத்துவீழ்ந்தான், இளவல் அது கேளா ஏன்ற சீதையை விடுத்து என்னைத் தொடர்ந்தனன்-இலக்குமணன் அதனைக்கேட்டுத் தனது பாதுகாப்பில் அமைந்த சீதையைவிடுத்து என்னைக் காணவந்தனன்.

எனது கையிலகப்படாது சென்றனனென்பான் சுலவியெனவும், எனது குரல்போல் அழைத்து வீழ்ந்தனனென்பான் - சீதையை வலியானுன்ற வெம்பியை விளித்து வீழ்ந்தானெனவும் கூறினன். (கூ)

"உழைத்வாளிஉரம்புகப்புல்லியோன்
இழைத்தமாயையின்என்குரலாலிசைத
தழைத்ததுண்டதுசேட்டயர்வெய்துமால்
மழைக்கணேழையென்றுள்ளம்வருந்தினன்." எனவருமதுவால் உணர்க.

அனையகாலையிலிராவணனவட்கவர்ந்தகன்றான்
புனைமலர்க்குழற்பூங்கொடிதனத்தவிற்புலம்பி
யினையுமென்னுயிர்பொன்றுமுனிரங்குதியெனதா
யுனையடைந்தனன்சரணமென்றமுதழுதுரைத்தான்.

(இ-ள்.) அனையகாலையில் - அக்காலையில், இராவணன் அவள் கவர்ந்து அகன்றான் - இராவணன் அச்சீதையைக்கவர்ந்து நீங்கினான், மலர் புனை குழல் பூங்கொடி தணத்தலில்-மலரையணிந்த கூந்தலையுடைய பூங்கொடிபோன்ற சீதையைப் பிரிதலால், புலம்பி இனையும் என் உயிர் பொன்றுமுன் - புலம்பிவருந்தும் எனதுயிர் இறந்துபடுதற்குமுன், எந்தாய் இரங்குதி - என் தந்தையே திருவுளமிரங்குவாய், சரணம் உனையடைந்தனன் என்று அழுது அழுது உரைத்தான் - உன்னைச் சரணடைந்தேனென் றழுதழுது கூறினான். (௪௦)

உரைத்தவாய்மொழிகேட்டெதிரகத்தியனுரைப்பான்
விரைத்ததார்ப்புயவேந்தகேள்வீங்குநீருலகி
னிரைத்தவைம்பெருமபூதத்தினிலைபெறுமுடலந்
தெரிக்கில்யாவையுமுடன்பிறந்தவையெனத்தெளிதி.

(இ-ள்.) உரைத்தவாய் மொழிகேட்டு அகத்தியன் எதிர் உரைப்பான் - இராமன்கூறிய உண்மைமொழியைக்கேட்டு அகத்தியமுனிவர் எதிரே கூறுகின்றார், விரைத்ததார் புயவேந்த கேள்-வாசம்வீசும் மலராற்றொடுத்த மாலையையணிந்த தோளையுடைய இராமனே கேளாய், வீங்கு நீர் உலகில் - மிக்கநீர் மயமாகிய கடல்சூழ்ந்த நிலவுலகில், நிரைத்த ஐம்பெரும் பூதத்தின் நிலைபெறும் உடலம்யாவையும் - வரிசைப்பட்ட பிருதிவிமுதலிய ஐந்து மகாபூதங்களால் நிலைபெற்ற சரீரங்கள் யாவையும், தெரிக்கில் உடன் பிறந்தவை எனத் தெளிதி - ஆராயில் யாவுந் தன்னுடன் பிறந்த வையே யென்று நீ தெளிவாய்.

இருவகைப்பிரபஞ்சத்துள் காயப்பிரபஞ்சம்போல உலகப்பிரபஞ்சத்திற்கும் பகுப்புடைமைதோன்ற உலகில் நிரைத்த வைம்பெரும் பூதத்தினெனவும், திரியக்கு முதலிய உயிர்களின் சரீரமும் ஐந்து மகாபூதங்களால் நிலைபெறுதலில் அவையும் உடன்தோன்றின வென்பதுதோன்ற யாவையு முடன்பிறந்தவையெனவுங்கூறினார்.

மற்றுயிர்க்குவேறாணலிபெண்ணெனவழக்கஞ்
சற்றுமில்லைநீர்ச்சலதியுட்படுபலதுரும்பின்
பெற்றிபோலுமிப்பூதத்தின்கூட்டமும்பிரிவுங்
கற்றுளோயிவையிருமைக்குமாயைகாரணமாம்.

(இ-ள்.) மற்று உயிர்க்கு வேறு ஆண் அலி பெண் எனவழக்கம் சற்றும் இல்லை-தேகத்திற்கன்றி உயிர்களுக்கு வேறே ஆணென்றும் அலியென்றும் பெண்ணென்றும் வழங்குதல் சிறிதுமில்லை, பூதத்தின் கூட்டமும் பிரிவும்- இந்தப் பஞ்சமகாபூதங்களின் கூட்டமும் பிரிவும், நீர் சலதி உள்படு பல துரும்பின் பெற்றிபோலும் - நீர் மயமாகிய கடலிற்பட்ட பலதுரும்பின் தன்மையையொக்கும், கற்றுளோய்-வேதமுதலிய நூல்களைக்கற்ற இராமனே, இவை இருமைக்கும் - பஞ்சமகாபூதங்களின் கூட்டமும் பிரிவுமாகிய இவ்விரண்டற்கும், மாயையே முதற்காரணமாம் -மாயையே முதற்காரணமாகும்.

ஆண் அலி பெண் என்றல் காயத்திற்கன்றி உயிர்க்கில்லையென்பார் வினைமாற்றுப்பொருளில் வந்த மற்றென்னும் இடைச்சொல் தந்து மற்றுயிர்க்கு வேறாணலி பெண்ணெனவும், அம்மூன்றும் அவயவப் பகுப்பால் வந்ததென்பார் வழக்கஞ் சற்றுமில்லையெனவும், அதுபோல உலகப்பிரபஞ்சத்திற்கும் பிருதிவிமுதலிய பஞ்சமகாபூதங்களின் பரிணாமங்களே அவயவப் பகுப்பென்பார் பொதுப்பட இப்பூதத்தின் கூட்டமும் பிரிவுமெனவுங் கூறினார். கடலிலகப்பட்ட துரும்பு ஒருகால் தம்முட்கூடுதற்கும் பிரிதற்கும் காற்றுக் காரணமாதல்போல் பஞ்சமகாபூதங்

கள் கூடுதற்கும் பிரிதற்கும் மாயை காரணமென்பார் இவையிருமைக்கும் மாயைகாரணமாம் எனவும் கூறினர். கூட்டமென்பது தோற்றமும் பிரிவென்பது அழிவுமெனக்கொள்க.

இருவகைப்பிரபஞ்சத்தின் தோற்றக்கேடுகளை—

"காயத்தினழிவுதோற்றங்கண்டனமுலகிற்காணு
நீயித்தையுரைத்தவாறிங்கென்னெனினிகழ்த்துமுன்னை
மாயத்தவுலகம்பூநீர்தீவளிவானமாதி
யாயித்தானென்றினென்றுதோன்றிநின்றழிதலாலே" எனவும்,

மாயை முதற்காரணமென்றதை—

"தோற்றமுநிலையுமீறுமாயையின்றொழிலதென்றே
சாற்றிடுமுலகம்வித்துச்சாகாதியணுக்களாக
வேற்றதேதவீண்டுநிற்குமில்லதேலியையவின்று
மாற்றநீமறந்தாயித்தான்மாயையைமதித்திடாயே" எனவும் சிவஞானசித்தியாரில் வருதல் காண்க. (சஉ)

செய்வினைப்பயனுள்ளதுவருமெனத்தெளிதி
யெவ்வமுற்றுழந்திரங்கலைமகிழ்ந்திருவெனலும்
பௌவமுற்றுமோருழுந்தளவாக்கிமுன்பருகுஞ்
சைவமாமுனிமொழிச்கெதிரரசனுஞ்சாற்றும்.

(இ-ள்.) செய்வினைப்பயன் உள்ளது வரும் என்னத் தெளிதி - தாம்செய்த இருவினையின் பயனுள்ளது எதுவோ அதுவே வருமென்று நீ தெளிவாய், எவ்வம் உற்று உழந்து இரங்கலை மகிழ்ந்து இரு என்னலும்-துன்பமுற்று மனம்வருந்தி இரங்குதலொழிக நீமகிழ்கூர்ந்திரு என்று முனிவர்கூற, பௌவம்முற்றும் ஓர் உழுந்து அளவாக்கிமுன் பருகும் சைவமாமுனி மொழிக்கு-கடல்முழுமையும் ஓர் உழுந்தமிழாவண்ணஞ்செய்து முன்பு இந்திரன்பொருட்டு ஆசமனஞ்செய்த சைவ தவவேடம் பூண்ட தவசிரேஷ்டராகிய அகத்தியமுனிவ ரருளியமொழிக்கு, அரசனும் எதிர் சாற்றும் - இராமனும் எதிரே கூறுவான்.

போர்க்குப் புறங்கொடுத்துக் கடலிலொளித்த விருத்திராசுரன் உயிரைவாங்க இந்திரன் வேண்டுகோளால் கடலினை அந்நாள் ஒருழுந் தமிழாவண்ணமாக்கி அகத்தியர் ஆசமனஞ் செய்தாரென்பது புராணவரலாறு.

செய்வினைப்பயன் உள்ளது வருமென்பதை

"வளம்படவேண்டாதார்யார்யாருமில்லை
அளந்தனபோகம்அவரவராற்றால்
விளங்காய்திரட்டினாரில்லைகளங்கனியைக்
காரொனச்செய்தாருமில்"

என நாலடிநானூற்றில் வருதல் காண்க. (சரு)

அத்தநின்னுரைமுழுவதுமுண்மையேயானு
மித்தலைக்கிதுவிணங்குமோமனையவண்மாற்றான்
கைத்தலத்தகப்பட்டுழித்தத்துவங்காண்போன்
பித்தனென்றுலகுரைத்திடுமாதலிற்பெரியோய்.

(இ-ள்.) அத்த நின் உரை முழுவதும் உண்மையே ஆயினும் - இறைவனே உனது வார்த்தை முற்றும் உண்மையே யானாலும், பெரியோய் மனையவள் மாற்றான்

கைத்தலத்து அகப்பட்ட உழி - முனிவரில் சிரேஷ்டனே தனது மனையாள் பகைவன் கையில் அகப்பட்டவிடத்து, தத்துவங்காண்போன் பித்தனென்று உலகம் உரைத்திடும் ஆதலில்-ஞானநூலை ஆராய்ந்து துறவறம் பூண்பவனைப் பிச்சனென்று உலகினர் கூறுவராதலால், இத்தலைக்கு இது இணங்குமோ-இந்தச் சமயத்திற்கு தேவரீர் கூறியவார்த்தை ஒக்குமோ.

ஒரு பொருளை இழந்தவழித் துறவறம்பூண்போன் ஏனைப்பொருளில் பற்று விடானுதலால் மனையவள் மாற்றான் கைத்தலத் தகப்பட்டுழித் தத்துவங் காண்போன் பித்தனென் றுலகுரைத்திடும் ஆதலின் எனவும், நான் வீரன்மரபிற் பிறந்தவனுதலில் என் வீரத்தைக் காட்டாதொழியேனுதலால் இத்தலைக்கிது இணங்குமோ எனவும்கூறினன். ஏனைப்பற்றுகளை விடானென்பதை "துப்புரவில்லாத் துவரத்துறவாமை-உப்பிற்குகாடிற்கும்கூற்று" என்னும் திருக்குறளிற்குப் பரிமேலழகர் எழுதிய உரையானும், வீரர்மரபிற்பிறந்த எனக்கு இது இணங்குமோ என்பதனை, கணவனையிழந்த ஒருவீரமகள் தன்ஏகபுத்திரன் போர்க்குச் செல்லுகையில அவனை நோக்கிக் கூறுவதாகப் புறப்பொருளிலக்கணத்திற் கூறிய "எந்தைகண்ணின்றான் நுந்தை யெய்போற்கிடக்கின்றான்" எனவரும் ஏதுவாலு முணர்க. (௧௪)

பறந்தலைப்புகுந்தொன்னலர்ச்செகுத்துயிர்பருகிச்
சிறந்தசீதையைமீட்டபினையநீதெரிக்கு
முறந்ததத்துவஞானத்துக்குரியவனுவே
னறைந்தவாறலதென்னுளமடங்கிடாதென்றான்.

(இ-ள்.) பறந்தலைபுகுந்து ஒன்னலர் செகுத்து உயிர் பருகி சிறந்த சீதையை மீட்டபின்- போர்க்களத்திற் புகுந்து இராவணன்முதலிய பகைவர்களைக் கொன்று அவர்களுயிரைப்பருகி மேம்பட்ட சீதையைத் திருப்பியபின், ஐயநீ தெரிக்கும் உறந்த தத்துவஞானத்திற்கு உரியவன் ஆவேன் - ஐயனே நீவற்புறுத்திய ஆராய்ந்துணரும் தத்துவஞானத்திற்கு உரியவனுவேன், அறைந்த ஆறு அல து என் உள்ளம் அடங்கிடாது என்றான் - நான் சொன்ன வகைசெய்தாலன்றி என்மன மடங்காதென்று இராமன் கூறினன்.

உறந்த என்பது ஆராய்ந்துணருமெனக் "கூறியதை உறக்கும் துணையதோர் ஆலம் வித்து" என்பதனுலுணர்க. (௧௫)

மலையமாதவன்கேட்டுநின்மனத்துறும்விழைவு
கலைமதிக்கழுஞ்சிறுவனேடொக்குமக்கதிர்ப்பூண்
முலைமடந்தையைராவணன்கவர்ந்துபோமுறைமை
யிலைகொள்வேலினுயெவருனக்கியம்பினரென்றான்.

(இ-ள்.) மலைய மாதவன் கேட்டு - பொதியமலையில் வசிக்கும் அகத்தியமுனிவர் கேட்டு, நின் மனத்து உறும் விழைவு கலைமதிக்கு அழும் சிறுவனேடு ஒக்கும் - உன்மனத்திலமைந்த பற்றுக்கலையையுடைய சந்திரனை நோக்கிப் பிடித்துத்தாவென்று அழும் பிள்ளையோடொக்கும், அ கதிர்ப் பூண்முலை மடந்தையை இராவணன் கவர்ந்துபோம் முறைமை-அந்த ஒளியமைந்த முத்தாரத்தை யணிந்த தனத்தையுடைய சீதையை இராவணன்கவர்ந்துசென்றமுறைமையை, இலைகொள்வேலினுய்-தகட்டுவடிவை யமைந்த வேலையேந்திய இராமனே, உனக்கு இயம்பினர் எவர் என்றான் - உனக்குச் சொல்லினவர் யாரென்று வினவினர்.

நிலையில்லாததை நிலையினதெனக் கொண்ட விருப்பம் கற்பிதமென்பார்-மனத்துறும் விழைவு கலைமதிக்கழுஞ் சிறுவனே டொக்கும் எனக்கூறினர். (௧௬)

சடாயுவென்றுயர் கழுகிறைசானகிபொருட்டு
விடாதுபோருழந் திறப்பவன் விளம்பிடத்தெளிந்தேன்
கடாதுகொண்டவட்பெறுந்திறமருளெனக்கரையும்
வடாதுவெற்புறழ்புயத்தனை மாமுனிநோக்கி.

(இ-ள்.) சடாயு என்று உயர் கழுகு இறை - சடாயுவென்று சொல்லப்பட்டு மேம்பட்டுயர்ந்த கழுகிற்கிறைவனுயுள்ளவன், சானகி பொருட்டு போர்விடாது உழந்து இறப்பவன் விளம்பிடத் தெளிந்தேன் - சீதையினிமித்தம் போர்முகத்து விடாமலிராவணனோடு போர்செய்து உயிர்விடும் அச்சடாயு கூறத்தெளிந்தேன், கடாது கொண்டு அவள் பெறும்திறம் அருள்என்ன-அச்சடாயு கூறியதால் அச்சீதையையானடையுந் திறத்தை எனக்கு அருளாயென்று, கரையும் வடாது வெற்பு உழ் புயத்தனை மாமுனி நோக்கி - குறை இரந்து கூறும் வடக்கின்கண்ணுள்ள மேருமலையையொத்த புயத்தையுடைய இராமனை அகத்திய முனிவர் நோக்கி.

சடாயுவென்பவன் நீங்களிச்சீதையோடு இக்காட்டில் வசியுங்கள் நான் உங்களைக் காப்பேனென்று அடைக்கலந் தந்தமையால் சானகிபொருட்டு விடாது போருழந் திறப்பவன் என்றார்.

"கேட்டுவந்தனன்கேழ்கிளர்மௌலியான்
தோட்டலங்கலினீர்துறந்திர்வளம்
நாட்டில்நீவிரும்நன்னுதலதானுமிக்
காட்டில்வைகுதிர் காக்குவல்யானென்றான்.

வார்ப்பொற்கொங்கைமருகியைமக்களை
ஏர்ப்பச்சிந்தனையிட்டுவரககர்தம்
சீர்ப்பைச்சிக்கறத்தேறினன்சேக்கையில்
பார்ப்பைப்பார்க்கும்பறவையிற்பார்க்கின்றான்.

எனவருவனவற்றாற் காண்க. (கஎ)

நின்கருத்திதுவேலுயர்நெடுவரைகுழைத்து
வன்கண் மாற்றலர்புரம்பொடிபடுத்தவன்மலர்த்தாள்
புன்கணீங்குமாறடைக்கலம்புகுமதியவனே
யுன்கருத்தினை முடித்திடவல்லனென்றுணராய்.

(இ-ள்.) நின்கருத்து இதுவேல் - உன்னுடைய கருத்து இதுவாகில், உயர் நெடுவரை குழைத்து வன்கண் மாற்றலர்புரம் பொடிபடுத்தவன் மலர்தாள் - உயர்ந்த நெடிய மேருமலையை வில்லாகவளைத்து அஞ்சாமையையுடைய பகைவரது திரிபுரங்களை நீறுபடுத்திய இறைவனது தாமரை மலர்போன்ற திருவடி, புன்கண் நீங்கும் ஆறு அடைக்கலம்புகு- உனது துன்பம நீங்கும்வண்ணம் சரணடைவாய், அவனே உன்கருத்தினை முடித்திட வல்லன் என்று உணராய் - அவனே உன்னுடைய எண்ணத்தை முற்றுவிக்க வல்லானென்று நீ அறியாய்.

நீ வீரம்வேண்டினை யாதலால் திரிபுரங்களை நீறுபடுத்த மேருமலையை வில்லாகவளைத்தவன் சரண்புகுந்தால் உன்கருத்து முற்றுமென்பான் மலர்த்தாள் புன்கணீங்குமா றடைக்கலம்புகு எனவும், அவ்விறைவனீங்கலாகப் பிறரைச்சரணடைந்தால் உன்கருத்து முற்றாதெனபான் பிரிநிலை ஏகாரந்தந்து அவனே உன்கருத்தினை முடித்திட வல்லனென்றுணராய் எனவுங் கூறினர். மதி-முன்னிலையசை. உயர் நெடு

வரைகுழைத்து வன்கண்மாற்றலர் புரம்பொடிபடுத்தவன் என அபிப்பிராயத்தோடு கூடிய விசேடியத்தை யெடுத்துக்கூறுதலால, கருத்துடையடை கொளியணி. (கஅ)

உலகம்யாவையுமொருநொடிப்பொழுதினிலழிப்போ
னிலையும்விலவினன்கொடுங்கொலைப்பகழியனிகரா
வலகிலாற்றலனுருத்திரனொருவனேயன்றி
யிலையெனப்புகன்றோலிடுமியம்பருஞ்சுருதி.

(இ-ள்.) உலகம் யாவையும் ஒருநொடிப் பொழுதினில் அழிப்போன் - எல்லா உலகங்களையும ஒரு நொடிப்பொழுதில் அழிப்பவனும், நிலையும் வில்லினன் - கேடில்லாத வில்லையுடையவனும், கொடும் கொலை பகழியன் - கொடிய கொலைத் தொழிலுடைய அம்பையுடையவனும், நிகரா அலகு இல் ஆற்றலன் - தனக்கு ஒப்பில்லாத வரம்பில்லாத வன்மையை யுடையவனும், உருத்திரன் ஒருவனே-உருத்திரமூர்த்தி யொருவனே, அன்றி இல்லை என - அவனையன்றி இலலையென்று, இயம்பு அரும் சுருதி புகன்று ஓலிடும் - சொல்லுதற் கரிய வேதங்கள் முறையிடும்.

நாணறுதல் முதலாகிய கேடில்லாத திரவில்லினனென்பார் நிலையும் வில்லினனெனவும், கொன்றே திரும்புவதன்றிப் பிறரால் கண்டிக்கப்படாத அம்பையுடையவனென்று கூறும்என்பார் கொடுங்கொலைப் பகழியனெனவும், உலகமுற்றையும் நீறுபடுத்தத் திருவுளத்திற் கருதிய அன்றே நீறுபடுத்துதலில் வல்லவனென்று கூறும் என்பார் உலகம்யாவையும் ஒரு நொடிப்பொழுதினி லழிப்போன் எனவும், இவை முற்றும் உடைமையால் எண்குணத்துள் வரம்பிலாற்றலுடையோன் என்று கூறும் என்பார நிகராவலகிலாற்றல னெனவும், ஆன்மாக்களைத் துன்பத்தினின்று நீக்கி இன்பததை யருளும் காரணத்தால் உருத்திரனெனப் பெயர்வாய்ந்த இவனொருவனேயன்றி வேறில்லையென்று கூறுமென்பார் உருத்திரனொருவனேயன்றி இலையெனப்புகன்று எனவும், இவ்வாறுமுறையிடுதல் இருக்கு, யசுர், சாமம் என்று மூன்றுவேதங்களு மென்பார் ஓதிடும் இயம்பரும் சுருதி எனவுங் கூறினர். (௧௯)

தென்றிசைக்கிறையிராவணன்றிருவடிவிரலி
னொன்றனுலிறக்கண்டனனொருசிறுதுரும்பா
லன்றுவிணணவா தருக்கொடுமிடலறச்செய்தான்
வென்றிபூண்டுயர்நகைவிழிக்கூருகிர்ப்படையான்.

(இ-ள்.) தென் திசைக்கு இறை-தென் திசைக்கு இறைவனாகிய இயமனை, திருவடி ஒன்றனால்-திருவடியொன்றாலும், இராவணன் விரலின் ஒன்றனாலு-இராவணனைத திருவடிவிரலி னொன்றினாலும், இறக் கண்டனன்-அழியக் கண்டனன், ஒரு சிறு துரும்பால அன்று விண்ணவர் தருக்கொடு மிடல் அற செய்தான்-ஒரு சிறிய துரும்பினால் அக்காலையில தேவர்களது இறுமாப்போடு வலிமைகெடச் செய்தவனும், வென்றிபூண்டு உயர் கூர உகிர்-வெற்றியை மேற்கொண்டுயர்ந்த கூறிய நகத்தையும், நகை விழி படையான்- புன்னகையையும் நெற்றிக்கண்ணையும் ஆயுதமாக வுடையவன்.

தென்றிசைக்கிறை இராவணன் றிருவடிவிரலி னொன்றனலிறக் கண்டனன் பெயரும் வினையுமாய் நின்றமுறை நிரனிறை. இயமனைத் திருவடியா லுதைத்ததும், சிறுதுரும்பால் தேவரிறுமாப்பையொழித்ததும், திரிபுரங்களைப் புன்முறுவலாலெரித்ததும், மன்மதனை நெற்றிக்கண்ணா லழித்ததும் முன்னர்க் காண்க. இராவணன திக்குவிஜயங்கொண்டு சரவணப்பொய்கையி னண்டையில் வரும்போது

அவன் விமானஞ் செல்லாது தடைபட்டு நிற்க, நந்திதேவர் நோக்கி இங்குச் செல்லுதலொழியெனத் தடுக்கவும், அவரை யிகழ்ந்து, கைலையை வேரோ டகழ்ந்து, என் நகர்க்குச் செல்லுவேனென்று அகழுங்காலையில் சிவபெருமானுணர்ந்து திருவடிப் பெருவிரலாலூன்ற அதன்கீழகப்பட்டு நெடுநாள் அழுதனன் என்பதும், ஒருக்கால் பிரமன் யாவையும் படைத்தலால் யானே இறைவனென்று இறுமாந்தபோது வேதம் பிரணவம், நீஇறைவனல்லவென்று இறுமாப்பு ஒழிக்கவும், இறுமாந்தமையால் வயிரவமூர்த்தி வெளிப்பட்டு அவனடுத்தலையைக் கொய்தனனென்பதும் புராண வரலாறுகள்.

ஆயுதங்களாகிய உபாங்கங்களால் வெல்வோ ரிறைவரல்லர், தனது சாங்கத்தால் பிறரால் வெல்லுதற்கரியவற்றை வென்றோ னொருவனே இறைவனென்பது தோன்ற இச்செய்யுளாற் கூறப்பட்டது. (உ0)

அனையனுகிய தனிமுதல்பாற்சாணடைந்தோ
ரெனையவேட்பினுமெண்மையினெய்துவரதனுற்
கனைகொள்பூந்தடமுடுத்தவிக்காஞ்சிமாநகரிற்
புனைமலர்க்குழல்பாகனையருச்சனைபுரிவாய்.

(இ-ள்.) அனையன் ஆகிய தனி முதல் பால் சரண் அடைந்தோர் - அத்தன்மையையுடைய ஒப்பற்ற இறைவனிடத்துச் சரண்புகுந்தவர்கள், எனைய வேட்பினும் எண்மையின் எய்துவர்-எத்தன்மைகளையுடைய செயல்களை விரும்பினுலும் எளிதாயடைவார், அதனுல் - அச்செய்கையால், கனைகொள் பூ தடம் உடுத்த இ காஞ்சிமா நகரில்-மிக்க மலர்களையுடைய தடாகங்கள் சூழ்ந்த இந்தக் காஞ்சியென்னும் பெரிய திருப்பதியில், மலர் புனை குழல் பாகனை அருச்சனை புரிவாய் - மலரை யணிந்த கூந்தலையுடைய உமாதேவியை இடப்பாகத்திலுள்ள இறைவனை யருச்சனை செய்வாய்.

உபாங்கங்களால் வெல்லவேண்டுவோர் சாங்கங்களால்வெல்லும் இறைவனை வழிப்படில் அவர்கள் வெல்லுதல் எளிதாதலால் எனைய வேட்பினும், எண்மையினெய்துவரென்றார். (உக)

வீரம்வேண்டினையாதலின் விதியுளிவழாது
வீரராகவப்பெயரினுல்விமலனையிருத்தி
வீரனேதொழுதேத்துதியெனமுனிவிளம்ப
வீரர்வீரனுமம்முறைபூசனைவிளைப்பான்.

(இ-ள்.) வீரம் வேண்டினை ஆதலின்-வீரத்தை விரும்பினை யாதலால், விதியுளி வழாது-ஆகம வழியால் தவருமல், வீரராகவன் பெயரினுல்-வீரராகவனென்னும் உனதுபெயரினுல், விமலனை யிருத்தி-சிவபெருமானைத் தாபித்து, வீரனே தொழுது எத்துதி என்ன முனி விளம்ப - வீரனே நீ தொழுது துதிப்பாயென்று அகத்தியமுனிவர் கூற, வீரர் வீரனும் - வீரருள் வீரனுகிய இராமனும், அ முறை பூசனை விளைப்பான்-அம்முறையே தாபனஞ்செய்து சிவபூசைசெய்யத் தொடங்கினுன்.

அறுசீர்க் கழிநெடில் விருத்தம்.

வெண்ணீறுங்கண்டிகையுமுடல்விரவப்பாசுபதவிரதம்பூண்டு
தண்ணீடுமலர்க்கடுக்கைவீரராகவமுதலைத்தாபித்தன்பா
லெண்ணுறுமிருநூறுமாயதிருப்பெயரியம்பியருச்சித்தேத்தி
யுண்ணீடுபெருங்காதல்வளர்ந்தோங்கத்தொழுதுநயந் துருகுங்காலை.

(இ-ள்:) வெண்ணீறுங் கண்டிகையும் உடல் விரவ - வெள்ளிய விபூதியும் உருத்திராக்கக்கண்டிகையும் தமது திருமேனியில் பொருந்த, பாசுபத விரதம் பூண்டு-பாசுபத விரதத்தை மேற்கொண்டு, தண் நீடு மலர் கடுக்கை வீராகவ முதலைத் தாபித்து-குளிர்ச்சிமிக்க கொன்றைமாலையணிந்த வீராகவ சிவலிங்கப்பெருமானைத் தாபனஞ்செய்து, அன்பு ஆல-அன்போடு, எண்ணூறும் இருநூறும் ஆய திருப்பெயர் இயம்பி - ஆயிரந் திருநாமங்களை எடுத்துக்கூறி, அருச்சித்து ஏத்தி-அருச்சனைசெய்து துதித்து, உள் நீடு பெருங்காதல் வளர்ந்து ஓங்க தொழுது - மனத்தில் மிக்க பேராசை வளர்ந்து மீதூரவணங்கி, நயந்து உருகுங்காலை - இன்பங்கூர்ந்து மனமுருகுங்காலையில். (உ௩)

எவ்வமறப்புரிபூசைக்கெம்பெருமான்றிருவுள்ளமிரங்கிப்போற்று
மவ்விலிங்கத்திடைநின்றுமெழுந்தருளிவிடைமேற்கொண் டமராசூழ
நவ்விவிழியுமையோடுங்காட்சிகொடுத்தருளுதலுநலியாவென்றித்
தெவ்வடுதிண்புயத்தோன்றல்பலமுறையுந்தொழுதேத்திச்செப்பலுற்றான்

(இ-ள்.) எவ்வம் அற புரி பூசைக்கு-குற்றமறச்செய்யுஞ் சிவபூசைக்கு, எம்பெருமான் திரு உள்ளம் இரங்கி-எமது பெருமான் மனமிரங்கி, போற்றும் அ இலிங்கத்து இடை நின்றும் எழுந்தருளி விடைமேல் கொண்டு - அவ்விராமமூர்த்தி துதிக்கும் அச்சிவலிங்கப்பெருமானிடத்தினின்றும் எழுந்தருளி ரிஷபாரூடனாய், அமரர் சூழ நவ்வி விழி உமையோடும் காட்சி கொடுத்தருளுதலும் - தேவர்கள் சூழ்ந்துவர மான்போலுந் திருநோக்கத்தையுடைய உமையம்மையோடும் காட்சிகொடுத்தருள, நலியாத வென்றி தெவ் அடு திண் புயம் தோன்றல் - பிறரால் வருந்துதலொழிந்த வெற்றிவாய்ந்த பகைவரைக் கொல்லும் திண்ணிய புயத்தையுடைய அவ்விராமன், பலமுறையுந் தொழுது ஏத்தி செப்பலுற்றான் - பலமுறையும் வணங்கித் துதித்துச் சொல்லத்தொடங்கினன். (உ௪)

அண்ணலையடியேனுக்கெளிவந்தபெருங்கருணையமுதேயன்பர், புண்
ணியமேயிராவணனுமரக்கர்கோன்பொலந்தொடித்தோட் சீதையென்னும்,
பெண்ணரசைக் கவர்ந்தெடுத்துப்போயினன் முறைபிறழுமவனையின்னே,
நண்ணலருபறந்தலையிற்கிளையோடுமுடிக்கவரநல்குகென்றான்.

(இ-ள்.) அண்ணலே அடியேனுக்கு எளிவந்த பெருங்கருணை அமுதே-இறைவனே அடியேன்பொருட்டு எளிதாகவந்தருளிய பெரிய திருக்கருணை யமுதே, அன்பர் புண்ணியமே-அன்பர் தேடிய சிவபுண்ணியப்பேறே, இராவணனும் அரக்கர் கோன் - இராவணனாகிய இராட்சதத் தலைவன், பொலந் தொடி தோள் சீதை என்னும் பெண் அரசை கவர்ந்து எடுத்து போயினன் - பொன்னாலாகிய வளையலையணிந்த தோளையுடைய சீதையென்று சொல்லப்படும் பெண்களுக்கரசியை வஞ்சித்தெடுத்து இலங்கைக்குப் போயினன், முறை பிறழும் அவனை இன்னே நண்ணலரும் பறந்தலையில் கிளையோடு முடிக்க வரம் நல்குக என்றான்-மனுநீதியினின்றுந் தவறிய அவ்விராவணனை இப்பொழுதே யடைதற்கரிய போர்க்களத்தில் அவன் சுற்றத்தோடு உயிர்வாங்க வரம் அருளக்கடவாயென்று குறையிரந்தான். (உ௫)

எனப்புகலச்சிவபெருமான்றிருவருள்கூர்ந்தெமக்குநீயின்றுதொட்டு
மனக்கினியனாயுலகில்வீராகவனெனும்பேர்மருவிவாழ்வா
யுனக்கிகலியெதிர்ந்தோர்களெனைத்துணையரோனுமவருடையக்காண்டி
பணித்தநறுந்தொடையோயென்றருள்செய்துபாசுபதப்படையுநல்கி.

(இ-ள்.) என புகல - என்றுவேண்டிக்கூற, சிவபெருமான் திரு அருள் கூர்ந்து - சிவபெருமான் திருவருள்செய்து, எமக்கு நீ இன்றுதொட்டு மனக்கு இனியன் ஆய் உலகில் வீரராகவன என்னும் பெயர் மருவி வாழ்வாய் - எமக்கு இக்காலந் தொட்டு எமது திருவுளத்திற்கு இனியனாகி நிலவுலகில் வீரராகவனென்னும் பெயரைப்பொருந்தி வாழக்கடவாய், உனக்கு இகலி எதிர்ந்தோர்கள் எத்தனைத் துணையரேனும் அவர் உடைய காண்டி - உன்னோடுபகைத்துப் போர்செய்ய எதிர்ந்தவர்கள் எவ்வளவு வீரத்தை யுடையவராயினும் அவர் புறங்காட்டியோடக் காண்பாய், பனித்த நறுந் தொடையோய் என்று அருள் செய்து பாசுபதம் படையும் நல்கி - தேன்துளிக்கும் நறுமணங்கமழும் மாலையையுடையோய் என்று அருள்செய்து பாசுபதாஸ்திரத்தையுந் தந்தருளி. (உகூ)

முள்ளரைக்காம்பணிமுளரிப்பொகுட்டணையோன்றனிப்படையுமுரன்றுமாக்கள், கொள்ளையிடுநறைத்துளவோன்படையுமவர்தமைக்கொண்டு கொடுப்பித்தேனைக், கள்ளவிழ்தார்க்கடவுளர்தம்படைபிறவுநல்குவித்துக் கருணைகூர்ந்து, நள்ளலரைப்பொடிபடுக்கும்பெருவலமுமளித்தருளிநவிலுகிற்பான்.

(இ-ள்.) முள் அரை காம்பு அணி முளரிப் பொகுட்டு அணையோன் தனிப்படையும் - முள்வாய்ந்த அரையுடைய காம்பில்அலர்ந்த தாமரைமலர்ப் பொகுட்டையாசனமாகவுடைய பிரமனென்னும் பெயர்வாய்ந்த ஒப்பில்லாத அத்திரத்தையும், மாக்கள் முரன்று நறை கொள்ளையிடும் துளவோன் படையும் - வண்டுகளொலித்துத் தேனைக் கொள்ளைகொள்ளும் துளவமாலையையுடைய நாராயணனென்னும் அத்திரத்தையும், அவர் தமைக்கொண்டு கொடுப்பித்து - அப்பிரமனுந் திருமாலும் கொடுக்கச்செய்தருளி, ஏனை - அவர் ஒழிந்த, கள் அவிழ் தார் கடவுளர் தம் படை பிறவும் நல்குவித்து - தேன்சிந்தும் மாலையையுடைய இந்திரன்முதலியோர்களாலே அவரவர் அத்திரங்களையும் பிறவற்றையும் தரச்செய்தருளி, நள்ளலரை பொடிபடுக்கும் பெரு வலமும் அளித்தருளி - பகைவரை நீறாக்கும் பெரிய வன்மையுந் தந்தருளி, கருணைகூர்ந்து நவிலுகிற்பான் - கிருபைசெய்து சொல்லியருளுவான். (உஎ)

கவற்றிநெடும்பகைதுரக்குமிவையுனக்குக்கருணையினலளித்தேங்கண்டாயிவற்றினொடுமிளவலொடுங்கிட்கிந்தையிடத்தமர்சுக்கிரீபன்சேனையவற்றொடும்போய்ப்பரவைகடந்திராவணனைக்கிளையோடுமறுத்துவீரஞ்சுவறறியபின்சீதையொடுமீண்டரசுபுரிந்துகலிதுரந்துவாழ்வாய்.

(இ-ள்.) நெடும் பகை கவற்றி துரக்கும் இவை - பெரிய பகைவர்களைக் கவலைப்படுத்தியோட்டும் அத்திரங்களை, உனக்கு கருணையினால் அளித்தேம் - உனக்கு நமதுகிருபையினால் தந்தருளினேம், இவற்றினொடும் - இவற்றோடும், இளவலொடும் - இலக்குமணனோடும், கிட்கிந்தை இடத்து அமர் சுக்கிரீபன் சேனை அவற்றொடும் போய் - கிட்கிந்தையினிடத்து வசிக்கும் சுக்கிரீபனோடும் அவன் சேனையோடும் சென்று, பரவை கடந்து இராவணனை கிளையோடும் அறுத்து வீரம் சுவற்றியபின் - கடலைக்கடந்து இராவணனை அவன் சுற்றத்தோடும் வேரறுத்து வீரத்தைக் கெடுத்தபின், சீதையொடு மீண்டு அரசுபுரிந்து கலி துரந்து வாழ்வாய் - சீதையோடும் திரும்பி அரசியல்செய்து உயிர்களுக்கு வருந் துன்பத்தைநீக்கி வாழ் வாய். (உஅ)

என்றருளவெதிரிறைஞ்சியிராகவன்மற்றிதுவொன்றுவிளுதலுற்றுனன்றினார்புரமெரித்தோய்குறுமுனிவனருயிர்கட்காண்மைபெண்மை

யொன்றுமிலேயாக்கையெலாமுடன்பிறந்தவாகுமெண வுரைத்தல்செய்தான்.
மன்றவெனக்கவைமுழுதுந்தேறவிரித்தருளென்றுவணங்கிவேண்ட.

(இ-ள்.) என்றருள-என்று இறைவன் அருள, இராகவன் எதிர் இறைஞ்சி இது ஒன்று வினுதல் உற்ருன் - இராமன் எதிரேவணங்கி இந்தச்செய்தியொன்றை வினவுவான், அன்றினர் புரம் எரித்தோய்-பகைவாது திரிபுரங்களை யெரித்தவனே, குறுமுனிவன ,ஆர் உயிர்கட்கு ஆண்மை பெண்மை ஒன்றும் இல்லை-அரிய உயிர்க ட்கு ஆணென்றும் பெண்ணென்றும் கூறும்வகை சிறிதுமில்லை, யாக்கை-அவ்வகை சரீரத்தைப் பற்றிவந்ததே, எல்லாம் உடன்பிறந்த ஆகும் என்ன உரைத்தல் செய் தான்-இவ்வுயிர்களெல்லாம் தம்முடன்பிறந்தனவாமென்று கூறினன், மன்ற எனக்கு அவை முழுதுந் தேற விரித்தருள் என்று வணங்கி வேண்ட - தேற்றமாக எனக்கு அவைமுழுதும் விரித்தருளென்று வணங்கிவேண்ட. (உகூ)

வேதாந்தநிலேயனைத்துமவன்றெளியவிரித்துரைத் துவரங்கணல்கி
காதார்ந்தகுழையுமையாளுடனுகவிலிங்கத்துட்கரந்தானெங்கோ
னுதாந்தப்பரஞ்சுடராமிவ்விலிங்கந்தனைத்தொழுதுநயந்தோரெல்லாங்
கோதார்ந்தபகைவென்றுபெருஞ்செல்வமெய்தியருள்கூடுவாரால்.

(இ-ள்.) எம் கோன்-எமது இறைவனுகியசிவபெருமான், வேதாந்த நிலேஅனை த்தும்-வேதாந்த நிலைமைமுற்றும், அவன் தெளிய விரித்து உரைத்து வரங்கள் நல்கி- அந்த விராமன்மனந்தெளிய வெடுத்துக்கூறி வேண்டும் வரங்களைத்தந்தருளி, காது ஆர்ந்த குழை உமையாள் உடனுக - குண்டலத்தையணிந்த திருச்செவியையுடைய உமையம்மையோடு, இலிங்கத்துள் கரந்தான் - சிவலிங்கத்துள் மறைந்தருளினர், நாத அந்தப் பரஞ்சுடராம் அ இலிங்கம் தன்னைத் தொழுது-நாததத்துவத்திற்கு அப் பாலுள்ள மேலான ஒளியாகிய இச்சிவலிங்கத்தை வணங்கி, நயந்தோர் எல்லாம் கோது ஆர்ந்த பகை வென்று - விரும்பி வழிபட்டோர் யாவரும் குற்றமிக்க பகை வரைவென்று, பெருஞ் செல்வம் எய்தி அருள் கூடுவார்-பெரியசெல்வத்தை யடை ந்து திருவருளைக்கூடி வாழ்வார்கள்.

உபநிடதம் என்பார்-வேதாந்தநிலையனைத்தும், சத்தியின் செயலாகிய அநு க்கிரகம் என்பார்-அவன்தெளியவிரித்துரைத்து எனவும், எல்லா ஆன்மாக்களுக்கும் ஞானத்தையுண்டாக்கும் நாததத்துவத்தின் அப்பாலுள்ள நிர்விகாரமாகிய சுத்தமா யையென்பார் - நாதாந்தம் எனவும், அதனிடத்தே சிவபெருமான் வேண்டுந் திரு மேனி கொண்டருள்வா னென்பார் - பரஞ்சுடரா மிவ்விலிங்கந் தன்னை எனவுங் கூறினர்.

வேதாந்தநிலே-பராசத்தியின் செயலாகிய அநுக்கிரகம் என்றதை,
" வேதாநதத்தே யிருப்பர் " எனவருந் திருக்களிற்றுப்படியாரிலும்,
நாதாந்தம்-குடிலே யென்றதை,
" பலகலைநாதவிந்துவாதிகூடுமொளிவளர்குடிலை " எனவரும்
சிவப்பிரகாசத்திலும், உணர்க. (கூ0)

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்,

தகைபெறுமிக்கடிவரைப்பின்தென்பான்மண்ணித் தடங்கரையிற்கற்
கீசத்தலமொமங்க, ஞுகமுடிவிற்கயவர்தமையழிப்பமாயோ னுயர்பிருகுசா
பத்தாற்கற்கியாகி, யிகழுருஞ்சீர்க்காஞ்சியில்வந்திலிங்கந்தாபித்தினிதேத்தி
யெண்ணிறைநும்வரங்கள்பெற்ருன், புகழுறுமவ் விலிங்கத்தைத் தொழுது
மண்ணிப் புனலாடுமவர்பெறுவார்போகமவீடு.

(இ-ள்.) தகைபெறும் இகடிவரைப்பின் தென்பால் - பொலிவுமிக்க காவல்வாய்ந்த இந்த வீராகவீசத்தின் தென்பக்கத்தில், மண்ணி தடங்கரையில் கற்கீசத்தலம் ஆம் - மிர்த்தனுதீர்த்தத்தின் பெரியகரையின்கண் கற்கீசமென்னுந் தலமுள்ளது, அங்கண் - அத்திருப்பதியின்கண், உகம்முடிவில் கயவர்தம்மை மாயோன் அழிப்ப - யுகாந்தத்தில் கீழ்மக்களைத் திருமால் அழிக்க, உயர்பிருகு சாபததால் கற்கி ஆகி - உயர்ந்த பிருகுமுனிவருடைய சாபத்தால் கற்கியவதாரங்கொண்டு, இகழ் அருஞ் சீர்காஞ்சியில்வந்து - இகழ்தலில்லாத சிறப்புவாய்ந்த காஞ்சித்திருப்பதியில் வந்து, இலிங்கம் தாபித்து எண்ணிலரும் வரங்கள் பெற்றான் - சிவலிங்கத்தாபனம் செய்து அளவிடுதலிலரிய வரங்களைப்பெற்றனன், புகழ்உறும் அ இலிங்கத்தை தொழுது - யாவரும் புகழும் அக்கற்கீசப்பெருமானை வணங்கி, மண்ணிபுனலாடு மவர் போகம் வீடுபெறுவார் - அம்மிர்த்தனுதீர்த்தத்தில் நீராடுவோர் இம்மைப்பயனாகிய போகத்தையும் மறுமைப்பயனாகிய முத்தியையும் பெறுவார்.

பிருகுசாபத்தால் திருமால் பிறப்புவாய்ந்ததை முன்னர்க் காண்க.

வீராகவீசப்படலம் முற்றிற்று.

- கO௪ள.

# பலபத்திராமீசப்படலம்.

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

பகலோனைப்பல்லுகுத்துமதியைத்தேய்த்துப்படைவேளைப்பொடிபடுத்தபழையோனென்றுந், திகழ்வீராகவீச்சரத்திேனாடுதிருத்தகுகற்கீச்சரமும்புகன்றாமிப்பாற், புகழூறுகற்கீச்சரத்தின்மேல்பாற்கண்டோர்பொருவலித்திண்பகட்டூர்தியுடையக்காணும், திகழ்பலபத்திராமீச்சரமென்றோதுநீடுதிருத்தானவளம்பாடலுற்றாம்.

(இ-ள்.) பகலோனை பல் உகுத்து - சூரியனது பல்லைத்தகர்த்து, மதியை தேய்த்து - சந்திரனைத்தேய்த்து, படைவேளை பொடிபடுத்த பழையோன் - பெண்கள்சேனையையுடைய மதனை நீறுபடுத்திய தொல்லோனாகிய இறைவன், என்றும் திகழ் வீராகவீச்சரத்தினோடு - எக்காலமும் விளங்கும் வீராகவீச்சரமென்னும் திருப்பதியோடு, திருத்தகு கற்கீச்சரமும் புகன்றாம் - செல்வமிக்க கற்கீசமென்னும் திருப்பதியையும் எடுத்துக் கூறினோம், இப்பால் - இனி, புகழூறு கற்கீச்சரத்தின்மேல் பால் - யாவரும் புகழும் கற்கீச்சரமென்னும் திருப்பதியின்மேலைத் திசையில், கண்டோர் - தெரிசித்தோர்கள், பொருவலி திண்பகடு ஊர்தி உடைய காணும் திகழ் பலபத்திராமீச்சரம் என்று ஓதும் நீடுதிருத்தான வளம்பாடலுற்றாம் - போர்செய்யும் வன்மைவாய்ந்த திண்ணிய எருமைக் கடாவை யூர்தியாகவுடைய இயமன் புறங்காட்டி யோடச்செய்யும் எல்லையாக திகழும் பலபத்திராமீச்சரமென்று கூறப்படும் செல்வமிக்க திருப்பதியின் வளப்பத்தினைச் சொல்லத் தொடங்குவாம்.

தக்கன் வேள்வியில் அவிப்பாகம்பெற வந்த சூரியன்பல்லை யுகுத்தா னென்பதும், சந்திரனைத் தேய்த்தானென்பதும் புராணவரலாறுகள். உலகத் தோற்றத்திற்கு முன்னுள்ளோனாதலால் பழையோன் என்றார்.

" மூப்பா ளிளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள் " எனக் கோவைத் திருவாசகத்தில் வருதல் காண்க. (க)

மண்ணின்மிக்குவயங்குதுவரைவாழ்
கண்ணன்முன்வருகாளையலப்படை
யண்ணலாம்பலபத்திரவாண்டகை
பண்ணுவெஞ்சமர்ப்பாரதமூண்டநாள்.

(இ-ள்.) மண்ணில் மிக்கு வயங்கு துவரை வாழ் கண்ணன் முன்வரு காளை-நிலவுலகில் மேம்பட்டு விளங்கும் துவாரகாபுரியில் வாழும் கண்ணமூர்த்திக்கு முன் பிறந்த காளையாகிய, அலப்படை அண்ணல் ஆம் பலபத்திர ஆண்டகை-கலப்பையெனும் ஆயுதத்தை ஏந்திய இறைவனாகிய பலபத்திரராமனென்னும் பெயரையுடைய ஆண்தன்மை மிக்கோன், பண்ணு வெஞ்சமர் பாரதம் மூண்ட நாள்-கொடிய போர்செய்யும் பாரதப்போர் மூண்டகாலையில். (உ)

கார்த்தடக்கைக்கடும்புசெய்கைதவப்
போர்த்தொழிற்குப்பொருதமனத்தனாய்த்
தீர்த்தயாத்திரைசெய்யத்தொடங்கினு
னேர்த்தவாணிநதிக்கரையெய்தினன்.

(இ-ள்.) கார் தடகை கடும்பு செய்-மேகம்போலக் கைம்மாறுகருதாது கொடுக்கும் நீண்ட கையையுடைய தமது உறவினர் செய்யும், கைதவம் போர் தொழிற்கு பொருத மனத்தன் ஆய்-வஞ்சம் வாய்ந்த போர்த்தொழிலுக்கு ஆற்றாத மனமுடையவனாய், தீர்த்தம் யாத்திரை செய்ய தொடங்கினன்-தீர்த்தயாத்திரை செய்யத் தொடங்கி, ஏர்த்த வாணி நதிக்கரை எய்தினன் -அழகுவாய்ந்த சரசுவதி தீர்த்தத்தில் வந்தடைந்தான்- (௩)

அங்கண்முப்புரமட்டபிரான்றளி
யெங்குமுள்ளனநோக்கியிறைஞ்சியத்
துங்கவைப்பினிற்றொக்கமுனிவரர்
தங்கள்சேவடிதாழ்ந்துவினவுவான்.

(இ-ள்.) அங்கண் முப்புரம் அட்டபிரான் தளி எங்கும் உள்ளன நோக்கி இறைஞ்சி-அவ்விடத்தில் திரிபுரத்தை நகைத்து எரித்தருளிய இறைவனது திருக்கோயில்கள் எவ்விடத்தும் உள்ளனவற்றைப்பார்த்து வணங்கி, அ துங்க வைப்பினில் தொக்க முனிவரர் தங்கள் சேவடி தாழ்ந்து வினவுவான்-அந்தத்திருப்பதியில் நெருங்கிய முனிசிரேட்டர்களது செவந்த திருவடிகளை வணங்கி வினவுவான். (ச)

ஈசன்வைகுமிடங்களெவையெவை
யாசின்றோங்குமவற்றுளுமேலதாந்
தேசின்மிக்கதிருநகர்யாவது
பேசுகென்னமுனிவரர்பேசுவார்.

(இ-ள்.) ஈசன் வைகும் இடங்கள் எவை எவை - சிவபிரான் எழுந்தருளிய திருப்பதிகள் யாவையாவை, ஆசு இன்று ஓங்கும் அவற்று உள்ளும்-குற்றமில்லாமல் உயர்ந்து விளங்கும் அத்திருப்பதிகளுள்ளும், மேலது ஆம் தேசு இல் மிக்க திருநகர் யாவது-விளக்கத்தில்மிக்க திருநகரம் யாது, பேசுக என்ன முனிவரர் பேசுவார்-சொல்லக்கடவீரென்று வினவ முனிசிரேஷ்டர்கள் சொல்லுவார்கள். (ரு)

பருவரைத்தோட்பரதன்வருடமே
கருமபூமியெனப்படுங்காணது

மருவுமெவ்வுலகத்தினுமாண்டதாந்
திருமலர்ப்பனந்தேந்தொடைமார்பனே.

(இ-ள்.) பனம் திரு மலர் தேன் தொடை மார்பனே-பொலிவமைந்த பனை மலராற்றொடுத்த தேன்சிந்தும் மாலையையுடைய மார்பனே, பருவரை தோள் பரதன் வருடமே கருமபூமி என்னப்படும் - பெரிய மலையையொத்த தோளையுடைய பரதன் வருடமானது கருமபூமியென்று சொல்லப்படும், அது மருவும் எவ்வுலகத்தினும் மாண்டது-அக்கருமபூமி பொருந்திய எவ்வுலகத்தினும் மாட்சிமைப்பட்டது.

பரதவருடமானது - தென்கடலுக்கும், இமயகிரிக்கும் நடுவிலுள்ளபாகம். இதுகண்டமெனவும்படு மாதலால், பரதன் வருடமெனவும்,கிம்புருடகண்ட முதலிய எட்டுக்கண்டத்தி லுள்ளவர்களும், விண்ணுலகிலுள்ளவர்களும், நாகலோகத்திலுள்ளவர்களும் பரதகண்டத்தை யடைந்து நல்வினை தீவினைப் பயன்களை அனுபவித்தற்கு மூலமானகண்ட மாதலாலும், தேவர்களும், முனிவர்களும் ஓர் குறைபெற்றால் அக்குறை தீர்தற்பொருட்டுத் தவம்,பூசை முதலியன செய்தற்குரியபூமியாதலாலும், அக்கண்டத்தைக் கருமபூமியெனப் படுமெனவும், மேற்கூறிய கண்டமுதலிய எல்லாவற்றிற்கும் அது சிறந்ததாகையால் அது மருவுமெவ்வுலகத்தினு மாண்டதாமெனவுங் கூறினர்.

பரத வருடம் என்றதை
"அம்புவியினிசதமுதலேமங்காறுமரிவருடமேமமுதலிமையநாப்பண்
கிம்புருடந்தென்கடற்குமிமையமென்னுங்கிரிக்குநடுப்பாரதமாம்"எனவும்.
கருமபூமிஎன்றதை
"நாலிருகண்டத்தோரும்விண்ணுளோரும்நரகினருமவ்விடத்தினண்ணிவைகி
மேலையிருவினையாற்றியவற்றிற்கேற்றவியன்பயன்கடுய்ப்பொனவிளம்புமாற்றாற்
சீலமிகுபாரதமாங்கண்டமொன்றேதீவினைநல்வினையாகுஞ்செயற்கைக்கெல்லா
மூலமொருகுறைபெறினேவந்துதேவர்முனிவர்களுந்தவம்பூசைமுயல்வரங்கண்"
எனக் கந்தபுராணத்திலும்,

"பாரதவருடமொன்றேபழிப்பருங்கருமபூமி
யோருமிவ்வருடந்தன்னிலுலப்பினல்வினைகள்செய்தோ
ரோர்கெழுதுறக்கமெய்தியிருப்பர்தீவினைகள்செய்தோர்
சேர்வருநரகினெய்தித்தீவினையுழப்பரன்றே"எனக் கூர்மபுராணத்திலும்
வருதல் காணக.

கருமபூமிவரைப்பிற்கடவுளர்
மருவிடங்கள்சிறந்தனமாட்சியோ
யருள்விளக்குமவற்றினுமேலவாந்
தருமசக்கரபாணிதலங்களே.

(இ-ள்.) மாட்சியோய் - பெருமைபொருந்திய பலபத்திராமனே, கருமபூமி வரைப்பில் - கருமபூமியெல்லையில், கடவுளர் மருவு இடங்கள் சிறந்தன - தேவர்கள் வசிக்கும் இடங்கள் சிறந்தன, தரும சக்கரபாணி தலங்கள் - தருமவடிவாகிய திருமால் வசிக்கும் திருப்பதிகள், அருள் விளக்கும் அவற்றினும் மேலவாம்-ஆன்மாக்களுக்குக் கருணைசெய்யும் அக்கடவுளர் தலங்களினும் மேம்பட்டனவாம். (எ)

அவற்றின்மிக்கனமாணிடராக்கிய
சிவத்தலங்கள்கடவுளர்செய்தன
வவற்றின்மேலனவாகுஞ்சயம்புவாஞ்
சிவத்தலங்களவற்றிற்சிறந்தன

(இ-ள்.) மானிடர் ஆக்கிய சிவத்தலத்தங்கள்- மானிடர் தாபித்து அருச்சித்த சிவஸ்தலங்கள், அவற்றில் மிக்கன - அத்திருமால் திருப்பதிகளினும் மேம்பட்டன, கடவுளர் செய்தன அவற்றில் மேலன ஆகும் - தேவர்கள் தாபித் தருச்சித்த திருப்பதிகள் அத்திருப்பதிகளினும் மேம்பட்டனவாகும், சயம்பு ஆம் திருத்தலங்கள்-சயம்புவாகிய சிவஸ்தலங்கள், அவற்றில் சிறந்தன-அத்திருப்பதிகளினும் மேம்பட்டன.

சிவலிங்கம் இருவகையுட் பரார்த்த இலிங்கம் சயம்பு, தைவிகம், ஆரிடம், மானுடம் என நான்கு வகைப்படுதலால் தைவிகத்தில் ஆரிடத்தையடக்கி மானுடமூர்த்தமாய்வந்த இராமன் முதலியோர் பதிட்டைசெய்த சிவதலம், திருமால் திருப்பதியிலும் மேம்பட்டதாதலால் அவற்றின்மிக்கன எனவும், அவற்றிலும் திருமால் முதலிய தேவர்களும் அகத்தியமுனிவர் முதலியோரும் பதிட்டைசெய்த சிவத்தலங்கள் மேம்பட்டன ஆதலால் கடவுளர்செய்தன வவற்றின்மேலன எனவும், குருக்ஷேத்திர முதலிய புண்ணியஸ்தலங்களிற்றானே தோன்றிய சயம்புலிங்கம் மேம்பட்டது ஆதலால் அவற்றிற் சிறந்தன எனவுங் கூறினர்.

சிவலிங்கம் நான்குவகைப் படுதலை,

"சயம்புவுந்தைவிகமுமாரிடமுமாந்தர்
நயந்தலிங்கந்தானுமெனநான்கு" எனவரும் சைவசமயநெறித் திருக்குறளாலும், இவர்களாற் பதிட்டை செய்தல் முதலியனவற்றை

"பரவைமாநிலத்துயிர்க்கெலாங்குருவெனப்பட்ட
வரனமர்ந்திடுமிலிங்கங்கள்பலவிதமவற்றிற்
குரவரேத்துறத்தோன்றினகொழும்புயல்வண்ணன்
மரபினுற்பிரதிட்டையின்மாநிலத்தமர்ந்த.

முனிவராற்பிரதிட்டையினமர்ந்தனமற்றை
மனிதராற்பிரதிட்டையினமர்ந்தனமற்றைப்
புனிதர்விஞ்சையரரக்கர்வாளசுரர்கிம்புருட
ரனையராற்பிரதிட்டையினமர்ந்தனவிலிங்கம்." எனவரும் உபதேசகாண்டத்தாலும் உணர்க.

சயம்புவைகுந்தலங்களுண் மிக்கவாம்
வியந்தெடுத்துவிளம்பப்படுமவை
நயந்தவங்கவற்றுள்ளுநற்காசிமிக்
குயர்ந்ததன்னதிற்காஞ்சியுயர்ந்ததே.

(இ-ள்.) சயம்புவைகும் தலங்களுள் - சயம்புமூர்த்தியெழுந்தருளிய திருப்பதிகளுள், வியந்து எடுத்து விளம்பப்படும் அவை மிக்க ஆம்-அயோத்திமுதலாக அதிசயித்தெடுத்துக் கூறப்படும் திருப்பதிகள் மேம்பட்டவாம், நயந்த அவற்றுள்ளும் - விரும்பிக் கூறப்படும் அவ்வேழு திருப்பதிகளுள்ளும், நல் காசி மிக்கு உயர்ந்தது - நல்ல காசியென்னும் திருப்பதி மேம்பட்டுயர்ந்தது, அன்னதில் காஞ்சி உயர்ந்தது- அத்திருப்பதியிலும் காஞ்சியென்னும் திருப்பதி மேம்பட்டது.

அயோத்தி முதலிய திருப்பதிகளாவன - அயோத்தி, மதுரை, காசி, அவந்திகை, துவாரகை, மாயை, காஞ்சி.

"நிலத்திடைச்சிறந்த நகரெனப்படுவநீள்புகழயோத்திமா மதுரை
மலர்ப்பொழிற் காசி யவந்திகை துவரைமாயை வண்காஞ்சியென்றுரைப்
பார்" என இந்நூலிற் பின்வருதல் காண்க.

ஓதுகாஞ்சிக்குயர்ந்ததுமொப்பதும்
தலத்திடையில்லைபுகலுமம்

மாதலத்தினுகத்தின வருத்தமும
பாதகப்பயனுமபடாவரோ.

(இ-ள்.) ஓதுகாஞ்சிக்கு உயர்ந்ததும் ஒப்பதும் - யாவரும் புகழும் காஞ்சி திருநகர்க்கு மேம்பட்டதும் ஒத்துள்ளதும், பூதலத்து இடை இல்லை - நிலவுலகத்தில் வேறு இல்லை, புகலும் அமாதலத்தின் - சொல்லப்படும் அந்தப் பெரிய திருப்பதியில், உகத்தின் வருத்தமும் - கலியுகத்தின் வருத்தமும், பாதகப் பயனும் படரா- பாதகத்தால் வரும் தீங்கும் வந்தடையா.

உகத்தின் வருத்தமும் என்றமையால் வருத்தந்தருவது கலியுகமாதலால் கலியுகமென்றும், அக்கலியுகத்தில் பாவப்பகுதியே விளைதலால் பாதகப்பயனும் என்றலால்.

பிறந்துளோர்கள்வதியப்பெறுநரங்
கிறந்துளோருளத்தெண்ணுநர்யாவரு
மறந்தழைக்குமேகம்பரருளினாற்
சிறந்தமுத்தியுறுவதுதேற்றமே.

(இ-ள்.) பிறந்துளோர்கள் - அததிருப்பதியிற் பிறந்தவர்களும், வதியம் பெறுநர் - வசிக்கப் பெறுவோரும், அங்கு இறந்துளோர் - அங்கு இறந்தவர்களும், உளத்து எண்ணுநர் யாவரும் - மனத்தில் சிந்திப்பவர்களு மாகிய இவர்முதலிய எல்லோரும், அறந்தழைக்கும் ஏகம்பர் அருளினால் - தருமவடிவாகிய ஏகம்பரது திருவருளால், சிறந்த முத்தி உறுவது தேற்றம்-மேம்பட்ட முத்தியையடைவது நிச்சயம்.

கலியுகத்தால்வரும் தீங்கு அக்காஞ்சித் திருப்பதியிற் பிறந்தவர் முதலியோர்க்கு இன்மையால் சிறந்த முத்தியுறுவது தேற்றம் என்றார். (௧௧)

இதுவும் அது.

என்றறிவுறுத்திய வியலபின்மாதவர்
மன்றலம்பூங்கழல்வணங்கியாதவ
னன்றவரேவலிற்காஞ்சியண்மியங்
கொன்றியவளனெலாமுவந்துநோக்கினான்.

(இ-ள்.) என்று அறிவு உறுத்திய இயல்பின் மாதவர் மன்றல் அம் பூங்கழல் வணங்கி - என்று தெரிவித்த இயல்பினையுடைய பெரிய தபோதனர்களது வாசமமைந்த அழகிய தாமரைபோன்ற திருவடியை வணங்கி, யாதவன் அன்று அவர் ஏவலில் காஞ்சி அண்மி - யதுமரபிற்றோன்றிய பலபத்திரராமன் அன்று அவர்களது ஏவலால் காஞ்சித் திருப்பதியை யடைந்து, அங்கு ஒன்றியவளன் எல்லாம் உவந்து நோக்கினான்-அவ்விடத்துப் பொருந்திய வளங்களையெல்லாம் மகிழ்கூர்ந்து பார்த்தான்.

யாதவன் யதுமரபிற் றோன்றினவன் என்னும் பொருள்மேல் நிற்றலால் பதம். (௧௨)

தெறுமழுப்படைச்சிவதீர்த்தம்யாவையு
முறைமையினாடினான்முரசுகண்படா
விறையவன்கோயில்களெவையும்போற்றிவண்
டறைபெழிலேகம்பமருச்சித்தேத்தினான்.

(இ-ள்.) தெறு மழுப்படை சிவதீர்த்தம் யாவையும் முறைமையின் ஆடினான் - கொல்லும் மழுவாயுதத்தை யேந்திய சிவபிரானுக்குரிய தீர்த்தம் எல்லாவற்றையும் முறைமையோடு நீராடி, முரசு கண்படாத இறையவன் கோயில்கள் எவையும்போற்றி-முரசு கண்டுயிலாத சிவபெருமானது திருக்கோயில்களெவற்றையும் தெரி

சித்து, வண்டு அறைபொழில் ஏகம்பம் அருச்சித்துஎத்திஞன்-வண்டுகள் ஒலிக்குஞ் சோலைசூழ்ந்த திருவேகம்பத்தை யருச்சித்துவணங்கி,

காஞ்சித்திருப்பதியிற் பல திருப்பதிகளும் பல சிவதீர்த்தங்களும் இருத்தலால் சிவதீர்த்தம்யாவையும், கோயில்களெவையும் என்றார். (கரு)

அந்நகர்வயினமர்ந்தருளுஞ்சீருப
மன்னியனிணைய டிவணங்கித்தொண்டுபூண்
டின்னருந்திருச்சிவதீக்கையுற்றனன்
றன்னுடைப்பெயரிஞோரிலிங்கந்தாபித்தான்.

(இ-ள்.) அநகர்வயின் அமர்ந்தருளும் சீர் உபமன்னியன் இணை அடி வணங்கி - அந்த நகரத்திலெழுந்தருளிய சிறப்புவாய்ந்த உபமன்னிய முனிவரது இரண்டு திருவடிகளையும் வணங்கி, தொண்டுபூண்டு - அவர்க்குத் தொண்டுபூண்டு, உன் அரும் திருசிவதீக்கை உற்றனன் - நினைத்தற்கரிய பொலிவுவாய்ந்த சிவதீக்ஷையைப்பெற்று, தன் உடைய பெயரின் ஓர் இலிங்கம் தாபித்தான். தனது பெயரிஞல் ஒரு சிவலிங்கப் பெருமானைத் தாபித்து.

தனது பின்ஞேன் சிவதீக்கைபெற்றுப் பயன்பெற்றது போலத் தானும் உபமன்னிய முனிவரிடத்துச் சிவதீக்கை பெற்றனன் என்பார் சீர் உபமன்னியனிணையடி வணங்கித் தொண்டுபூண் - டின்னருந் திருச்சிவதீக்கை யுற்றனன் என்றார்.(கசு)

உண்ணிறைகாதலினருச்சித்தோகையாற்
பண்ணிசைமொழிகளிற்பழிச்சுமேல்வையிற்
கண்ணுதற்சிவபிரான்கருணைகூர்ந்தெதிர்
விண்ணவர்தொழவிடைமீதுதோன்றியே.

(இ-ள்.) உள்நிறைகாதலின் அருச்சித்து - மனத்தில் நிறைந்த அன்போடு அருச்சனைசெய்து, ஓகையால் பண் இசைமொழிகளில் பழிச்சும் எல்வையில்-மகிழ்ச்சியால் பண்ணும் இசையும் நிறைந்த பாசுரங்களால் வணங்குங் காலத்தில், கண்நுதல் சிவபிரான் கருணைகூர்ந்து - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் திருவருள் கூர்ந்து, எதிர் விண்ணவர்தொழ விடைமீது தோன்றி-அப்பலபத்திரராமனுக் கெதிரே தேவர்கள் வணங்க இடபவூர்தி மேல் ஆரோகணித்துக் காட்சிதந்தருளி.

பண்ணும் இசையும் பாவோடணைந்தது என்பார் பண்ணிசைமொழிகளில் என்றார்."பா வோடணைதலிசையென்றார் பண்ணென்றார். என இசைமரபில் வருதல் காண்க. பண் இந்தளமுதலியன. இசைநாத நாமக்கிரியை முதலியன.

என்றறிவுறுத்திய என்னுஞ் செய்யுள்முதல் இதுகாறும் ஒரு தொடராதலால் வினைமுற்றுகளை யெச்சங்களாக்கி அருச்சித்து என்னும் வினையெச்சத்தோடு முடிக்க.

வேண்டுவகூறுகென்றருளமெய்யெலாம்
பூண்டபேருவகையிற்புளகம்போர்த்தனன்
றாண்டவநவிற்றுநின்சரணிலேழையேற்
காண்டகையிடையறாவன்புநல்குதி.

(இ-ள்.) வேண்டுவகூறுக என்றருள - வேண்டுவனவற்றைக் கேளாயென்று அருள்செய்ய, மெய் எல்லாம் பூண்டபேர் உவகையில் புளகம்போர்த்தனன்- தனது உடலமுற்றும் மீதூர்ந்த மிக்கமகிழ்ச்சியால் புளகம்போர்த்து, தாண்டவம் நவிற்று நின் சரண் இல்-ஆனந்த நடனஞ்செய்யும் உனது திருவடியில், ஆண்டகை இடை அறாத அன்பு ஏழையேற்கு நல்குதி - ஆண்டகாய் இடையறாத அன்பினை ஏழையேற்குத் தந்தருளாய்.

(இ-ள்.) தேன்தாழ்பொலம்பூங்கடுக்கை - தேன்தங்கிய பொன்னிறம்வாய்ந்தகொன்றை மலரால்தொடுத்த, செழுந்தார் விராக்கின்றதோள்-வாடாதமாலைமணங் கமழும் தோளையும், வான்தாழ் மிடறு அண்ணல்வைகுற்ற பலபத்திரம் சொற்றனம்- விண்ணுலகு வணங்கும் ஸ்ரீகண்டத்தையுடைய இறைவன் எழுந்தருளிய பலபத்திராமீச்சரத்தைக் கூறினோம், மீன்தாழ் தடஞ்சூழ் அதன் பச்சிமம் திக்கின் - மீன்தங்கிய தடாகம் சூழ்ந்த அத்திருப்பதியின் மேலைத்திக்கில், விண்ணுட்டவர் கோன் தாழநிலை பெற்றவன் மீகநாதத்தின் இயல் கூறுவாம் - இந்திரன் வணங்க நிலைபெற்றுள்ள வன்மீகநாதமென்னும் திருப்பதியி னியல்பை எடுத்துக் கூறுவாம். (க)

புத்தேளிர்முன்னாளொருங்கேகுழீஇக்கொண்டுபுகழெய்துவான்
முத்தீவளர்த்தோர்மகம்வேட்கலுற்றார்கண்மொழிகின்றன
ரித்தால்வருங்கீர்த்தியெல்லாநமக்கும்பொதுத்தானெனக்
கொத்தார்மலர்க்கூந்தல்பங்கன்றுணைத்தாள்குறிக்கொண்டரோ.

(இ-ள்.) புத்தேளிர் முன்நாள் ஒருங்கே குழீஇக்கொண்டு - திருமால்முதலிய தேவர்கள் முன்னாளில் ஒருசேரக்கூடி, புகழ் எய்து வான் முத்தீ வளர்த்து ஓர் மகம் வேட்க லுற்றார்-புகழுடைய ஆகவனீயமுதலிய மூன்று தீயையும்வளர்த்து ஓர் யாகம்செய்யத் தொடங்கினவர்கள், இத்தால் வருங்கீர்த்தி எல்லாம் நமக்கும் பொதுத்தான் என்ன மொழிகின்றனர் - இவ்வேள்வியால் வரும் புகழ் நமக்கெல்லாம் பொது என்றுகூறி, மலர் கொத்து ஆர் கூந்தல் பங்கன் துணைத்தாள் குறிக்கொண்டு - மலர்க்கொத்து நிறைந்த கூந்தலையுடைய உமையை யிடப்பாகத்திலுள்ள இறைவனது இரண்டு திருவடிகளையும் கருதி.

முத்தீ என்றது காருகபத்தியம், தக்கணாக்கினியம், ஆகவனீயம். (உ)

குருக்கேத்திரத்தேமகஞ்செய்யுமெல்லைக்கொழுங்கொன்றைவெள்
ளெருக்கோடணைகருஞ்சடைச்செம்மலார்தம்மினருள்கூர்தலா
லுருக்கூர்பளிக்குப்புறம்பிற்பெருங்கீர்த்தியுண்டாதலுந்
தருக்கான்முகுந்தன்கவர்ந்தாநடந்தான்றடுப்பக்கொடான்.

(இ-ள்.) குருக்கேத்திரத்து எமகம் செய்யும் எல்லை - குருக்ஷேத்திரத்தில் வேள்விசெய்யுங் காலையில், கொழுங்கொன்றைவெள்ளெருக்கு ஓடு அணைக்கும் சடைச்செம்மலார் - கொழுவிய கொன்றைமலராற் றொடுத்த மாலையை வெள்ளியவெள்ளெருக்கோடு சூடிய சடாமுடியையுடைய இறைவர், தம் இன் அருள் கூர்தலால் தமது இனிய திருவருள் கூர்தலால், உருகூர்பளிங்கு பறம்பு இல் பெருங்கீர்த்தி உண்டாதலும் - உருமிக்க பளிங்குப் பாறைபோலப் பெரும்புகழ் உண்டாக, முகுந்தன் தருக்கால் கவர்ந்தான் நடந்தான் - திருமால் இறுமாப்பால் அப்புகழைக்கொள்ளைகொண்டு நடந்தனன், தடுப்பகொடான் - தேவர்கள் இடையே நின்று தடுக்கவும் கொடானாகி.

சிவபிரானார்க்கு அருளே திருவுருவாதலால் அவர்க்கே யவ்வருளுரிய தென்பார் தம்மினருள் என்றார். (௩)

ஓடுந்திறங்கண்டுவிண்ணோர்தொடர்ந்தெய்தலுற்றாரவன்
பீடொன்றுவில்லம்புகைக்கொண்டுவெம்பூசல்பெரிதாற்றுபு
நீடும்பர்தம்மைப்புறங்கண்டுபின்னீளிடைச்சென்றுகின்
றீடின்றியெல்லீருமொருவேற்குடைந்தீர்களெனநக்கனன்.

(இ-ள்.) ஓடும் திறம் கண்டு விண்ணோர் தொடர்ந்து எய்தலுற்றார் - கொடானாகியோடுந் திறத்தைக்கண்டு தேவர்கள் பின்தொடர்ந்து சென்றார்கள், அவன் பீடு

ஒன்று வில் அம்பு கைக்கொண்டு வெம்பூசல் பெரிது ஆற்றுபு - அத்திருமால் பெருமையமைந்த வில்லினையும் அம்பினையும் கையிலேந்திக் கொடியசண்டையை மிகவும் செய்து, நீடு உம்பர் தம்மை புறம் கண்டு பின்னீளிடை சென்று நின்று - அளவில்லாத தேவர்களை முதுகுகண்டு பின்பு சேய்மையிற்சென்று நின்று, எல்லீரும் ஈடு இன்றி ஒரு வேற்கு உடைந்தீர்கள் என நக்கனன்-நீங்கள் எல்லீரும் தனி நின்ற எனக்கு நிகராகாது புறங்கொடுத்தீர்களென்று சிரித்தனன்.

பலரும் திரண்டு ஒருசேரப் போர்க்கெதிர்த்தும் துணையின்றி நின்ற என்னோடு போர்க்காற்றாது புறங்கொடுத்தீரென்பான் ஈடின்றி யெல்லீரு மொருவேற்குடைந்தீர்களென நக்கனன் என்றார். (௪)

நக்கான்முகத்தாலவன்றேசுமுற்றுநறுஞ்சாமையா
யக்காலைநீங்குற்றவாற்றாலடல்விற்கழுத்தூன்றுபு
மைக்காளமன்னானெடும்போதுவாளாதுநின்றான்குண
திக்காளியன்னான்றனிலைகண்டுபுகழ்வௌவுதிறமெண்ணினான்.

(இ-ள்.) நக்கான் - சிரித்ததிருமாலது, முகத்து ஆல் அவன் தேசு முற்றும் நறுஞ் சாமை ஆய் அக்காலை நீங்குற்ற ஆறு ஆல் - முகத்தினின்றும் அத்திருமாலது ஒளிமுற்றும் நறுமணங்கமழும் சாமையரிசியாய் அக்காலத்தில் நீங்கிய வகையால், அடல் வில் கழுத்து ஊன்றுபு - வலியவில்லில் தனது கழுத்தையூன்றி, மைகாளம் அன்னான் நெடும்போது வாளாது நின்றான்-மேகத்தையொத்த நிறத்தையுடையதிருமால் நெடும்போது அசைவற நின்றனன். குணதிக்காளி அன்னான்தன் நிலைகண்டு புகழ்வௌவு திறம எண்ணினான் - கீழைத்திசையைத் தனக்குரிய திசையாகவுடைய இந்திரன் அத்திருமாலினது நிலைமையைக்கண்டு அவன் புகழைக் கொள்ளைகொள்ளுந் திறத்தைக்கருதினன்.

ஆல் உருபுமயக்கம். தேசுமுற்று நீங்கினமையால் வலியிழந்தான் என்பார் அடல்விற்கழுத்தூன்றுபு நெடும்போது வாளாது நின்றான் எனவும், இது தான் அவன்கவர்ந்தபுகழை நாம் கவரும் அமையமென்று கருதினன் என்பார் புகழ்வௌவுதிறமெண்ணினான் எனவுங் கூறினார். (௫)

கச்சிப்பதிக்கண்விரைந்தெய்தியங்கட்கடுக்கைப்பிரா
னிச்சித்தகயிலாயநிருதித்திசைக்கணிலிங்கந்நிறீஇ
நச்சித்தொழுங்காலையெங்கோனணைந்தென்னைநவில்கென்றலும்
பச்சைத்துழாயண்ணல்கவர்கீர்த்திவிண்ணோர்பெறப்பாலியாய்.

(இ-ள்) கச்சி பதிக்கண் விரைந்து எய்தி - கச்சித்திருப்பதியை விரைந்து அடைந்து, அங்கண் கடுக்கைப்பிரான் இச்சித்த கயிலாயம் நிருதித்திசைக்கண் இலிங்கம் நிறீஇ - அவ்விடத்துக் கொன்றைமாலையையணிந்த இறைவன் விருப்பிய கயிலாயத்தின் நிருதித்திசையில் சிவலிங்கம் ஒன்றைத் தாபனஞ்செய்து, நச்சி தொழுங்காலை-விரும்பி வணங்குங்காலத்தில், எங்கோன் அணைந்து என்னை நவில்க என்றலும்-எமது பெருமான் எழுந்தருளி உனது எண்ணம் யாது அதனைச்சொல்லு என்றருளுதலும,பச்சைத்துழாய் அண்ணல் கவர்கீர்த்தி விண்ணோர் பெறபாலியாய்-பசிய துழாய் மாலையையணிந்த திருமால் கொள்ளையாடியகீர்த்தியைத் தேவர்கள்பெறஅருள்செய்யாய். (௬)

என்னாநவின்றேத்துசசிகேள்வனுக்கெம்பிரானோதுவான்
வன்மீகநாப்பட்சிறுச்செல்லுருக்கொண்டுவோர்வில்லுடை

யங்நாணறத்தின்றுபின்கீர்த்திகொள்கென்னவருள்செய்தலும்
பொன்னுடர்கோமானும்விடைகொண்டுமீண்டான்பொருக்கென்றரோ.

(இ-ள்.) என்று நவின்று எத்து சசிகேள்வனுக்கு எம்பிரான் ஓதுவான்-என்று கூறித்துதிக்கும் இந்திராணிக்குத் தலைவனாகிய இந்திரனுக்கு எமது பெருமான் கூறுவான், வன்மீகம் நாப்பண் சிறுச்செல் உருக்கொண்டு வார்வில் உடைய அநாண் அறதின்று பின்கீர்த்திகொள்க என்ன அருள்செய்தலும், புற்றின் மத்தியில் சிறிய செல்லின் வடிவங்கொண்டு நீண்டவில்லிற்பூட்டிய அந்நாண் அறத்தின்று பின்பு கீர்த்திகொள்ளக் கடவாயென்று அருள்செய்ய, பொன் நாடர் கோமானும் விடைகொண்டு பொருக்கென்று மீண்டான் - பொன்னுலகிலுள்ள தேவர்களுக்கு இறைவனாகிய இந்திரனும் விடைபெற்று விரைந்துதிரும்பி. (எ)

அவ்வாறுபுற்றிற்கிளைத்தெய்தியங்நாணறத்தின்றழிப்
பைவாய்ப்பணிப்பாயலான்சென்னியறுபட்டுவீழ்ந்தவ்விட
மிவ்வாய்மையாற்சின்னமாகேசவத்தானமென்றுயதாற்
செவ்வேகுறைச்சென்னியாறங்கணோடுந்திருத்தக்கதே.

(இ-ள்.) அஆறு புற்றில் கிளைத்து எய்தி அ நாண் அறதின்ற உழி-அவ்வகையாகப் புற்றிற்றோன்றி அந்த நாணறத்தின்றவிடத்து, பைவாய் பணி பாயலான் சென்னி அறுபட்டு வீழ்ந்த இடம் - படம்பொருந்து தலையுடைய ஆதிசேடனைப் பாயலாகவுடைய திருமாலினது தலை யறுபட்டு வீழ்ந்த இடம், இ வாய்மையால் சின்னமா கேசவத்தானம் என்றுஆயது-இந்த உண்மையால் சின்னமாகேசவ மென்னும் ஒரு திருப்பதி உண்டாகியது, செவ்வே - செவ்விதாக, குறைசென்னியாறு- குறைபடுதலையுடைய சிரோநதியென்னும் ஆறு, அங்கண் ஓடும் திருதக்கது - அவ்விடத்திலோடும் பொலிவால் மேம்பட்டது.

கேசவன் என்பதற்கு மயிராலழகன் எனவும், பிரமனையும் உருத்திரமூர்த்தியையும் தத்தந்தொழிலிற் பிரேரிக்கச்செய்கிறவன் எனவும் பொருள் கூறுவர். இங்குத் திருமால்சிரசு அறுபட்டு வீழ்ந்தகாரணத்தால் சின்னமடைந்த மகாசிரசால் சவத்தன்மையை யடைந்தானெனப் பொருள்கொள்ளப்படுதல் இவ் வாய்மையாற் சின்னமா கேசவத்தானமென்றுயது என்றதனுலுணர்க. (அ)

(இதுவும்அது.)

ஆயகாலையிலவன்புடை நின்றுமப்புகழைப்
பாயவிண்ணவர்கவர்ந்துகொண்டோகையிற்படர்ந்தார்
மாயிரும்புவிமிசைவளரிருபிறப்பாளர்க்
கேயுமெச்சனுமாயவனின்மையினுயங்கி.

(இ-ள்.) ஆயகாலையில - அவ்வாறான காலத்தில், அவன்புடை நின்றும் அப்புகழை பாயவிண்ணவர் கவர்ந்துகொண்டு ஓகையிற் படர்ந்தார் - அத்திருமாலினிடத்து நின்றும் அப்புகழைப் பரவிய விண்ணவர்கள் கொள்ளையாடி விரைந்து சென்றார்கள், மாயிரும் புவி மிசைவளர் இருபிறப்பாளர்க்கு - பெரிய நிலவுலகின்மேல் வசிக்கும் அந்தணர்களுக்கு, ஏயும் எச்சன் ஆம் மாயவன் இன்மையின் உயங்கி-பொருந்திய எச்சனாகிய திருமாலில்லாமையால் மனம்வருந்தி.

வேதத்திற் கூறுங் கருமகாண்டத்தின் வடிவாயுள்ளவன் திருமாலாதலால் வேள்விசெய்த லொழிந்தனரென்பார் இருபிறப்பாளர்க் - கேயு மெச்சனுமாயவனின்மையினுயங்கி என்றார். (கூ)

மீட்டுமெய்தினன்காஞ்சியைவிதியுளிவழிபட்
டீட்டுமன்பினுக்கெம்பிரானெதிரெழுந்தருளப்
பாட்டிசைப்பழமறைகளாற்பரசினனவிலவான்
றோட்டலர்க்குழற்சசிமுலைதிளைத்ததோட்குரிசில்.

(இ-ள்.) மீட்டும் காஞ்சியை எய்தினன் - மீளவுமக் காஞ்சிப்பதியையடைந்து, விதியுளிவழிபட்டு ஈட்டும் அன்பினுக்கு எம்பிரான் எதிர் எழுந்தருள-ஆகமவிதியால் வழிபட்டுத் தேடிய அன்பின்பொருட்டு எமது பெருமானாகிய இறைவன் எதிரே காட்சிதந்தருள, பழமறைபாட்டு இசைகளால் - தொன்றுதொட்டுள்ள வேதத்தின் பொருள்களமைந்த இசைப்பாடல்களால், தோடு அலர் குழல் சசிமுலை திளைத்ததோள் குரிசில் பரசினன்நவில் வான்-இதழமைந்த மலரையணிந்த கூந்தலையுடைய இந்திராணியினது முலைப்போகத்தை இடையறாது நுகர்ந்த தோளையுடைய இந்திரன் வணங்கிக் கூறுவான். (௧௦)

அறுபதமுரன்றிசைமுழக்குமாயிதழ்
நறுமலர்க்கடுக்கைசூழ்சடிலநாயக
வெறுழ்வரிச்சிலையினுலெச்சனுகிய
சிறுமலர்த்துளவினன்சென்னியற்றதால்.

(இ-ள்.) அறுபதம் முரன்று இசைமுழக்கும் ஆய்தழ் கடுக்கை நறுமலர் சூழ் சடிலநாயக - வண்டுகளொலித்து இசைபாடும் ஆராய்ந்த இதழ்களையுடைய கொன்றையினது நறுமணங் கமழும் மலர்மாலைசூடிய சடாபாரத்தையுடைய இறைவனே, எறுழ்வலி சிலையினுல் எச்சனுகிய சிறுமலர் துளவினன் சென்னி அற்றது - மிக்கவன்மையையுடைய வில்லினுல் எச்சனுயுள்ள குறுமலராற் றொடுத்த துளபமாலையையணிந்த திருமாலினது தலை யறுபட்டது. (௧௧)

உறப்புறுமெங்களுக்குதவுமுண்டியு
மறத்தொழில்பயிலியமானர்க்கான்றவான்
றுறக்கமுமில்லையாய்விட்டதுட்கென
விறத்தலினெச்சனிவ்வுலகினெம்பிரான்.

(இ-ள்.) எம்பிரான் - எமது பெருமானே, உறப்புஉறும் எங்களுக்கு உதவும் உண்டியும் - வன்மையமைந்த எங்களுக்கு உதவும் உணவும், அறம்தொழில் பயில் இயமானர்க்கு ஆன்றவான் துறக்கமும்-வேள்வித்தொழிலில் கைவந்த ஆன்மாக்களுக் கமைந்த சுவர்க்கபோகமும், எச்சன் இ உலகினில் உட்கென இறத்தலில் - திருமால் இவ்வுலகில் யாவரும் அஞ்ச இறத்தலால், இல்லை ஆய்விட்டது - இன்றாய் முடிந்தது.

தேவர்களுக்கு அவியும், வேள்விசெய்வோர்க்குச் சுவர்க்கமும் திருமாலின்மையின் இல்லையாயின வென்பார் இறத்தலினில்லையாய் விட்டது என்றான். (௧௨)

ஆதலினெச்சனுக்களித்திசென்னியென்
றோதினர்வேண்டலுமுமைத்தன்மேயினுன்
மாதர்வெண்குழச்சிறுமதிக்கொழுந்தினை
போதொடுமிலைச்சியசடிலப்புங்கவன்.

(இ-ள்.) ஆதலின் எச்சனுக்கு சென்னி அளித்தி என்று ஓதினர் - ஆதலால்

அத்திருமாலுக்குத் தலைதாராயென்று குறையிரந்துவேண்ட, மாதர்வெண்குழ சிறும திக் கொழுந்தினை போதொடு மிலைச்சிய சடிலம் புங்கவன் -அழகியவெள்ளிய இளமையாய்ந்த பிறைக்கீற்றினைக் கொன்றைமலர் முதலியவற்றாற் றொடுத்த மாலைகளைச் சூடிய சடாபாரத்தையுடைய இறைவன், உரைத்தல் மேயினன் - சொல்லத் தொடங்கினன். (கங)

எம்புடைவரம்பெறுமிருமருத்துவ
உம்பரினவன்றலையொன்றிக்கூடுக
நம்புமிவ்விருவருநந்தமாணையாற்
பம்பியவேள்வியில்பாகமெய்துக.

(இ-ள்.) எம்புடை வரம்பெறும் இருமருத்துவ உம்பரின் அவன்தலை ஒன்றி கூடுக - எம்மிடத்து வரம்பெற்ற இருமருத்துக்களாகிய தேவரா லத்திருமால் சென்னி கண்டத்தோடு ஒன்றுபட்டுக் கூடக்கடவது, நம்பும் இவ்விருவரும்-நம்மைப் பற்றுக்கோடாகக் கொண்டஇந்த அசுவினிதேவ ரிருவரும், நந்தம் ஆணையால்-நமது ஆஞையால், பம்பியவேள்வியில் பாகம் எய்துக - நெருங்கிய வேள்வியில் உங்களோடொப்பாக அவிப்பாகம் அடையக்கடவர்.

அசுவினி தேவர் இரட்டை வடிவாயுள்ளவர், அவர்கள் செல்லும்போது இருவரும் உடன்செல்லுவோராதலால் இருமருத்துவவும்பர் எனவும், அவர்கள் தேவகணத்துள் அடங்காது வேறுநிற்றலில் இதுமுதல் தேவகணத்துளடங்கி அவிப்பாகம் பெறுக என்றருளுதலால் நந்தமாணையாற் பம்பிய வேள்வியிற் பாகமெய்துகவெனவுங் கூறினர். (கச)

என்றருண்மழுவலான்சரணமேத்திமற்
றொன்றிதுவேண்டுவானுடையநாதனே
மன்றநின்னருளினாற்புற்றின்வாயெழூஉத்
தின்றுநாணறச்செயுந்திறல்பெற்றேனரோ.

(இ-ள்.) என்றருள் மழுவலான் சரணம் எத்தி - என்றருளிய இறைவனது திருவடியை வணங்கி, இது ஒன்று வேண்டுவான் - இதனை யொன்று குறையிரக்குமிந்திரன், உடைய நாதனே - என்னையாளாகவுடைய இறைவனே, மன்ற நின் அருளினால்புற்றின் வாய் எழூஉ நாண் அற தின்று - தேற்றமாக உனது கருணையால் புற்றினகண்ணெழுந்து நாணறத்தின்று, செய்யும் திறல்பெற்றேன - பொருதடையும் வெற்றியைப்பெற்றேன். (கரு)

ஆதலின்வெவ்வினைத்தொடக்கறுக்குமிம்
மேதகுவரைப்புவன்மீகநாதமென்
ரோதவுங்கண்டவர்பிறவியோவவு
மீதிநீவரமெனவிடையினேந்தலும்

(இ-ள்.) ஆதலின் - ஆதலால், வெவ்வினைதொடக்கு அறுக்கும் இமேதகு வரைப்பு - கொடியதீவினையின் சம்பந்தத்தை வேரோடறுக்கும் இந்தமேன்மைதங்கிய திருப்பதி, வன்மீகநாதம் என்று ஓதவும் - பலரும் வன்மீகநாதமென்று கூறவும், கண்டவர் பிறவிஓவவும் - தரிசித்தவர்பிறவியினின்று நீங்கவும், நீவரம் ஈதி என்ன - நீ வரந்தந்தருளாயென்று இந்திரன் குறையிரக்க, விடையின் எந்தலும் - இடபவூர்தியையுடைய இறைவனும். (கசு)

தந்தனம்வரமெனச்சாற்றிநீங்கினு
னிந்திரன்மீண்டனனிருமருத்துவத்
தந்திரத்தலைவராலெச்சன்றன்சிர
முந்துபோற்பொருத்தலுமுளரிக்கண்ணினுன்

(இ-ள்.) வரம்தந்தனம் என்ன சாற்றிநீங்கினுன் - அவ்வாறு வரந்தந்தோமென்றுகூறி இறைவனங்கு நின்றும் நீங்கியருளினுன், இந்திரன்மீண்டனன் - இந்திரன் அங்கு நின்றுந் திரும்பி, இருமருத்துவத் தந்திரத்தலைவரால் - அசுவினிதேவராகிய ஆயுள் நூல் ஆராய்ச்சியுடையோரால், எச்சன்தன் சிரம்முந்துபோல் பொருத்தலும் - திருமாலினது தலையை முன்பு போற் பொருந்தச் செய்ய, முளரிக்கண்ணினுன் - தாமரைமலரை யொத்த கண்களையுடைய அத்திருமால். (கஎ)

தெய்வத்தின்வலியினுற்சென்னிபெற்றெழூஉக்
கொவ்வைச்செவ்வாயுமைகூறன்றுடொழு
தவ்வத்தனுணையாலவியின்பாகமங
குய்வித்தோர்க்கமைத்துத்தன்னுலகம்புக்கனன்.

(இ-ள்.) தெய்வத்தின்வலியினுல் சென்னிபெற்று எழூஉ - சிவபெருமான் றிருவருள்வலியினுல் தலைபெற்றெழுந்து, கொவ்வை செவ்வாய் உமைகூறன் தாள் தொழுது - கோவைக்கனியையொத்த செவந்தவாயையுடைய உமையம்மையை இடப்பாகத்திலுடைய இறைவனது திருவடியைவணங்கி, அ அத்தன் ஆணையால் அவியின்பாகம் - அந்த இறைவனது ஆஞையால் அவிப்பாகத்தை, அங்கு உய்வித்தோர்க்குஅமைத்து தன் உலகம் புக்கனன் - அவ்விடத்துத் தன்னைச்சீவிக்கச்செய்த அசுவினிதேவர்க்குத் தேவர்களோ டொப்ப விதித்துத் தனது உலகமாகிய வைகுந்தத்திலடைந்தனன்.

எம்புடை வரம்பெறு மிருமருத்துவத்- தந்திரத்தலைவரால் என முன்னர்க்கூறியதனுல் தெய்வத்தின் வலியினுற் சென்னிபெற்று என்றுர். (சஅ)

இகழருமுகுந்தனேயிந்தவாறிழி
தகவுறவிடுமைபயிற்றங்குநீர்மையா
லுகலருஞ்செல்வத்தையுடம்பையலது
புகழினைவிரும்பலும்போதத்துன்பமே.

(இ-ள்.) இகழ் அருமுகுந்தனே - பழிப்பில்லாத திருமாலே, இந்த ஆறு - இப்படி, இழி தகவுஉற இடும்பையில் தங்கும் நீர்மையால்-இழிந்த தன்மைமீக்கூரத் துன்பத்திற்றங்கிய தன்மையால், உகல் அரும் செல்வத்தை உடம்பை அல்லது புகழினை - அழிதலில்லாத செல்வத்தையும், உடம்பையும் இவையன்றிப் புகழினையும், விரும்பலும் போததுன்பம் - விரும்புதலும் மிகவுந் துன்பமாம்.

திருமால் புகழைவிரும்பி யித்துன்பம் நுகர்ந்தனராதலில் செல்வமுந் தேகமும் ஆன்மாக்களுக்குத் துன்பந்தருதல்போலப் புகழினை விரும்பித்தேடுதலும் அவைகளுக்குத் துன்பந்தருதல் எளிதெனக் கூறுதலால் சிறப்பணி. (சகூ)

வன்மீகநாதப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கசஉசு.

# வயிரவீசப்படலம்.

கலிவிருத்தம்.

வயிரவாளினன்வணங்கிவெந்துயர்
வயிரமாற்றுமவன்மீகமோதினும்
வயிரமாடமற்றதற்குத்தென்றிசை
வயிரவீச்சரமரபியம்புவாம்.

(இ-ள்.) வயிர வாளினன் வணங்கி வெம்துயர் வயிரம் மாற்றும் வன்மீகம் ஓதினும் - வச்சிராயுதத்தையேந்திய இந்திரன் வணங்கித் தனக்குநேர்ந்த கொடிய துன்பத்தின் மிகுதியை மாற்றிய வன்மீகமென்னுந் திருப்பதியை யெடுத்துக்கூறினும், வயிரம் மாடம் அதற்கு - வயிரமென்னும் ஒருவகைரத்தினத்தாலமைந்த மாடவரிசையையுடைய அவ்வன்மீக நாதத்திற்கு, தென்திசை வயிர வீச்சரம் மரபு இயம்புவாம் - தென்திசையிலுள்ள வயிரவீச்சரமென்னுந் திருப்பதியின் வரலாற்றை எடுத்துச்சொல்லுவாம்.

வடவரைத்தலைமுஞ்சமானெனுந்
தடநெடுங்கிரிதன்னிடைச்சிலர்
படிமவுண்டியர்பாங்கினோற்றுழி
யடலனப்பிரானருளினெய்தினன்.

(இ-ள்.) வடவரை தலை முஞ்ச மான் என்னும் தடநெடுங்கிரி தன்இடை - மேருமலையின் சிகரத்திலுள்ள முஞ்ச மான் என்னும பெரிய நெடியமலையில், சிலர் படிம உண்டியர் பாங்கின் நோற்றஉழி - சில முனிவர் தவவேடத்திற்குரிய வுணவினராய் முறையாகத் தவஞ்செய்துகொண்டிருந்த விடத்தில், அடல் அன்னப்பிரான் அருளின் எய்தினன் - வலிமைவாய்ந்த அன்னவூர்தியையுடைய பிரமன் அருளோடு அவர்பாலடைந்தனன்.

மேருவின்சிகரத்தில் பலதானங்களுளவாதலால் முஞ்சமானெனுந் தடநெடுங்கிரி தன்னிடை எனவும், வாயுபட்சணமுதலிய உணவினராதலால் படிமவுண்டியரெனவுங்கூறினா. (௨)

வதனமைந்தொடும்வந்துதோன்றினன்
பதமலர்த்துணைபணிந்திறைஞ்சினர்
துதிமுழக்கினாற்சூழ்ந்துகைதொழூஉக்
கதமறுத்தவரிதுகடாயினர்.

(இ-ள்) வதனம் ஐந்தொடும் வந்து தோன்றினன் - தனக்கு இயல்பாயுள்ள ஐந்துமுகங்களோடும்வந்து காட்சிதந்தனன, கதம்அறுத்தவர் பதமலர் துணைபணிந்து இறைஞ்சினர் - கோபத்தையறுத்த அம்முனிவர் அவனது இரண்டு பாததாமரை மலர்களையும் தாழ்ந்துவணங்கி, துதிமுழக்கினால்சூழ்ந்து கைதொழூஉ - தோத்திரமுழக்கத்தால் பிரதக்ஷிணஞ்செய்து கைகூப்பி, இது கடாயினர் - இதனை வினவுவார்.

இறைஞ்சினர் முற்றெச்சம். முக்குறும்புகளு மொன்றாதலால் கதமறுத்தவரென்றார். (௩)

இலகுமிச்சகம்யார்முதற்றுமன்
னுலகெவன்புடையுயிர்த்தொடங்கிடும்




A. வயிரவீசப்படலம.

பலபசுக்களின்பாசநீத்தரு
டலைவன்யாரிதுசாற்றுகென்றனர்.

(இ-ள்.) இலகும் இசகம் யார் முதற்று-விளங்கும் இவ்வுலகு யாரைமுதலாக வுடையது, மன் உலகு எவன்புடை உயிர்த்து ஒடுங்கிடும் - நிலைபெற்ற அவ்வுலகு யாரிடத்தில்தோன்றி ஒடுங்கும், பல பசுக்களின் பாசம் நீத்தருள் - பல ஆன்மாக் களின் மலத்தைப்போக்கி அருளும், தலைவன் யார் - இறைவனயார், இது சாற்றுக என்றனர் - இதனைச்சொல்லுக என்றார்.

இதனுற் பதியிலக்கணமும், அப்பதியாற்பாசங் காரியயப்படுதலும், அவற் கிடையேயுள்ள ஆன்மாக்கள் முத்தியடைதற்குக் காரணமுங் கூற்றிறப்பட்டன. (௫)

ஐம்முகத்தயனனையகாலையின்
மம்மர்நெஞ்சினன்மயங்கிக்கூறுவான்
இம்மறைப்பொருள்யாருமுய்வகை
நும்மனக்கொளநுவலக்கேண்மினே.

(இ-ள்.) ஐமுகத்து அயன் அனையகாலையில் - ஐந்துமுகங்களையுடைய பிர மன் அக்காலத்தில, மம்மர்நெஞ்சினல் மயங்கி கூறுவான் - மாயையால் மயங்கிய நெஞ்சத்தால் மயக்கமுற்றுச் சொல்லுவான், இ மறைப் பொருள் யாரும் உய்வகை- இந்தக் கூடப்பொருளினை யாவருமீடேறும் வண்ணம், நும்மனம்கொளநுவலகேண் மின் - உமதுமனம் நிலைபெற யாம் சொல்லக்கேளுங்கள்.

மலச்சிமிழ்ப் புடையோனுய்ப் பரதந்திரப்பட்டவ னுதலால் மம்மர்நெஞ்சி னன் எனவும், இவன்கூறுங்கூற்றுட்பொய்மையாதலால் மயங்கி எனவும், உங்கட்குக் கூறும் இது பலர்க்கும் பயன்படுமாதலால் இம்மறைப் பொருள்யாரு முய்வகை என வுங் கூறினன்.

உலகினுக்கியானொருவனேயிறை
யுலகமென்கணேயுதித்தொடுங்கிடு
முலகெலாமெனைவழிபட்டும்பர்மே
லுலகினைத்தலைப்படுங்களுண்மையே.

(இ-ள்.) உலகினுக்கு யான் ஒருவனே இறை- உலகத்திற்கு யானொருவனே பதியாயுள்ளவன், உலகம் என்கணே உதித்து ஒடுங்கிடும்-உலகம் என்னிடத்தே தோன்றி யொடுங்கும், உலகு எல்லாம் என்னை வழிபட்டு உம்பர்மேல் உலகினைத் தலைபடுங்கள் - உலகமெல்லாம் என்னை வழிபட்டு விண்ணுலகிற் கெல்லா மேலாயு ள்ள முத்திநிலையிற் கூடும், உண்மை - இது சத்தியம்

உம் விகுதி ஒருமை பன்மைகட்குப் பொதுவாதலால் அப்பொதுமையை நீக்குதற்குக் கள் விகுதி பன்மைப்பொருளில் வந்ததெனக் கொள்க.

கலிநிலைத்துறை.

என்றான்விரிஞ்சனதுகாலையில்வேதமெல்லா
முன்றோன்றியங்கண்மொழிகுற்றனமுண்டகத்தின்
வென்றோய்புராணம்பலசாத்திரம்வேதமற்றுங்
குன்றான்றவில்லான்றனையேமுதலென்றுகூறும்.

(இ-ள்.) என்றான் விரிஞ்சன் - என்று இவ்வாறு கூறினன் பிரமன், அதுகா லையில் வேதம் எல்லாம் முன்தோன்றி - அக்காலையில் வேதம் எல்லாம் அவனுக்கு

முன் புறப்பட்டு, அங்கண்மொழி குற்றன - அவ்விடத்திற் சொல்லத்தொடங்கின, முண்டகத்தின்வென்றோய் - தாமரைமலரில் வசிக்கும் ஐம்புன்களை வென்றவனே, புராணம் பலசாத்திரம் வேதம் மற்றும்-புராணங்களும் பலசாத்திரங்களும் வேதங்களும் மற்றுள்ளனவும், குன்று ஆன்றவில்லான்தனையே முதல் என்று கூறும்- மேருவை வில்லாகக்கொண்ட இறைவனையே உலகிற்கு முதலவனென்று கூறுநிற்கும்.

ஐம்புலன்களையும் வென்றோன் விதிவழி யொழுகுவோனென்பது தோன்ற வென்றோய் எனவும், அவரது தூய்மையை அவன்மேலேற்றிக் கூறியது இழிவு தோன்ற நிற்றலின் குறிப்பெனவுங்கொள்க.

உருத்திரன்முதல் என்றதை—

"மறைகளாகமங்களுருத்திரனுக்குமன்சுயசொரூபத்திறனும்
அறைதருபரதத்துவசொரூபத்திறனுமயமாபெருவிசேடம்
நிறைதரவுரைத்தபடிமுடித்துளவெநெடுந்தொடைமாயவன்றனக்கு
நறைவழிந்தொழுகுங்கமலநான்முகற்குநவின்றதின்றுணர்ந்திடுவீர்"

எனச் சூதசங்கிதையில் பரமவிஞ்ஞானமுரைத்த அத்தியாயத்தில் வருதல் காண்க.

அவனேமறுவற்றபரமபிரமம்புராண
னவனேமுழுதுந்தருகாரணமாங்கெவர்க்கு
மவனேயிறைவன்றொழுவார்க்கருள்வீடளிப்போ
னவனேயெனவோதிவெவ்வேறுமுரைப்பவங்கண்.

(இ-ள்.) அவனே மறுவு அற்ற பரம் பிரமம் - அவ்விறைவனே குற்றமற்ற மேலான பிரமமாயுள்ளவன், புராணன் - திருமால் முதலிய தேவர்களுக்கு முன்னுள்ளவன், அவனே முழுதும் தரும்காரணம் - அவ்விறைவனே யாவையுந் தந்தருளுங் காரணனுயுள்ளவன், ஆங்கு - அதுபோல, எவர்க்கும் அவனே இறைவன் - யாவர்க்கும் அவனே பதியாயுள்ளவன், தொழுவார்க்கு அருள் வீடு அளிப்போன் அவனே என்ன - என்று தன்னைவணங்கி வழிபடுவோர்க்கு முத்தியையுங் கொடுப்பவன் அவனேயென்று, அங்கண் ஓதி - அவ்விடத்தில் நான்குவேதங்களும் எடுத்துக்கூறி, வெவ்வேறும் உரைப்ப - தனித்தனியாகவும் எடுத்துக் கூறுநின்றன.

அவனேமுழுதுந் தருங்காரணம் என்பதையும் அவனே இறைவன் என்பதையும்.

"அறிவொன்றில்லாப்பாசமுமற்றறிவுமயங்கியுறைபசுவும்
செறியுஞ்சிருட்டிதனைநன்காச்செய்யவறியாவாதலினல்
உறையுங்கருத்தாவுளனவன்றான்யாவனெனினுயாபதியாய்க்
குறையின்றுறையீச்சுனெனக்கூறும்பழையநான்மறையே"

எனவாயுசங்கிதையிலும்,

தொழுவார்க்கருள் வீடளிப்போன் என்பதை

"ஆதலின்முத்திவிருப்பினேனையுமாழியங்கதலத்தனையும்
காதலியாமற்பரசிவனடியேகருத்துறத்தியானிக்கவேண்டும்"

எனச் சூதசங்கிதை சாமகோபநிடத தாற்பரியமுரைத்த அத்தியாயத்திலுங் காண்க.

எச்சன்றனக்குமிமையோர்க்குமெவ்வேதியர்க்கு
மச்சங்கரனேயரசன்விசுவாதிகன்சீர்
நச்சும்முனையீன்றருட்பார்வையினேக்கிநல்கு
மெய்ச்சித்துருவென்றதியென்றதிருக்குவேதம்.

(இ-ள்.) இருக்குவேதம் - இருக்குவேதமானது, எச்சன்றனக்கும் இமையோர்க்கும் எவேதியர்க்கும் - திருமாலுக்கும் தேவர்களுக்கும் எவ்வகைப்பட்ட முனிவர்களுக்கும், அ சங்கரனே அரசன் - அந்த வுருத்திரமூர்த்தியே தலைவனாயுள்ளவன், விசுவாதிகன் - பிரபஞ்சத்திற்கு அதீதப்பட்டவன், சீர்நச்சும் உன்னை ஈன்று அருள் பார்வையில் நோக்கி நல்கும் - புகழை விரும்பியவுன்னைப்படைத்துத் தனது திருவருட் பார்வையால் கடைக்கணித்துப் படைப்புத் தொழில் தந்தருளும், மெய்சித்துரு என்று அறிஎன்றது - உண்மை யமைந்த அறிவுவடிவாயுள்ளவனென்று அறியாயென்று கூறியது.

யாவுஞ் சிவபிரானிடத் துதித்தொடுங்குதலாலே எச்சன்றனக்கு மிமையோர்க்கு மெவ்வேதியர்க்கும் அச்சங்கரனே யிறைவனெனவும், பிரபஞ்சத்திற்கு அதீதப்பட்டு நிற்றலால் விசுவாதிகனெனவும், படைப்புத்தொழிற்குப் பிரமாவினைத் தந்து அத்தொழிலையும் அவனுக்குப் புலப்படுத்தி யருளினமையால் உனையீன் றருட்பார்வைநோக்கி நல்கும் எனவும், இயல்பாகவே பாசங்களினின்று நீங்கினவனாதலால் மெய்ச்சித் துருவெனவும் இருக்குவேதங் கூறியதென்றார்.

யாவுஞ் சிவபிரானிடத் துதித்தொடுங்கும் என்றதையும் விசுவாதிகன் என்றதையும்,

"ஆதலான்மறையிற்சொல்லியபடியேயனைத்துலகமுஞ்சிவனிடத்தே
போதமிக்கீருற்பத்தியிலயமாம்பொலியவன்மகிமைதேர்பவரார்" எனவும்,
"ஆதலாலிருபக்கத்தினும்மறை-யளவையென்னும்விடயத்திலையமென்
மேதகும்பரமார்த்தமதாகவேவேதந்தான்சொலநாதியென்றோருவீர்
சேதமில்லாவறிவுருவாகியசிவனதற்குவியஞ்சகனென்பரால்"எனவும் சூதசங்கிதையில் வேதப்பிரமாணிய விசாரமுரைத்த வத்தியாயத்தில் வருதல் காண்க.

வடமொழியில் காஞ்சித்தல மான்மியத்தில் இருக்குவேதங் கூறுதலை.

"ஸர்வாணாஞ்சைவ லோகானாம் - ப்ரஹ்மணா நாம் ஹரிஹராம் - விஸ்வயிகொஞ்சை ஹைஸ்வரம் - ஜ்ஞாய தாம் வ்ருஷபத்வஜ்" இதனை யுணர்க. (௯௰)

தன்கூற்றில்வருங்கணநாதர்தடுக்கலாற்றாக்
கொன்கூர்சரபாதியரால்வயங்கூறும்விண்ணோர்
வன்காழ்வலிசெற்றவன்யாரவனேமதிக்கு
நன்காரணமென்றுநவின்றதடுத்தவேதம்.

(இ-ள்.) அடுத்தவேதம் - யசுர்வேதமானது, தன்கூற்றில்வருங் கணநாதர் - தனது அம்சத்தினின்றுவந்த கணநாதர்களாகிய, தடுக்கல் ஆற்றாதகொன்கூர் சரபாதியரால் - பிறரால் தடுக்கவியலாத அச்சமுறுத்தும் வீரபத்திரர்முதலியோரால், வயம்கூறும் விண்ணோர் வன்காழ்வலிசெற்றவன்யார் - தமது வெற்றியைப் புகழ்ந்து பேசும் திருமால்முதலியோரது பேர்த்தற்கரிய இறுமாப்பின் வன்மையை அழித்தவன்யார், அவனேமதிக்கு நன்காரணம் என்று நவின்றது - அவனே மதிக்கப்படும் முதற் காரணமாயுள்ளவனென்று எடுத்துக் கூறியது.

மச்சமூர்த்தத்தைச் சாத்தனாராலும், கூர்மமூர்த்தத்தை மூத்த பிள்ளையாராலும் வராகமூர்த்தத்தை முருகக்கடவுளாலும், நரசிம்மமூர்த்தத்தையும் தக்கனையும் சூரியசந்திராதியர்களையும் வீரபத்திரக்கடவுளாலும், வாமனமூர்த்தத்தையும் பிரமன்முத

வியோனையும் வயிரவக்கடவுளாலும் ஒறுத்து அருளினமையால் கொன்கூர் சரபாதி யரால் எனவும், இவர்கள் தனது அம்சத்தினின்று வந்தவராதலால் தன்கூற்றில் வருங் கணநாதர் எனவுங்கூறினர். இவ்வரலாறுகளை முன்னர்க் கூறியிருத்தல் காண்க.

யசுர்வேதங்கூறுதலை

"யஸ்ய ப்ரஸாதெஜஸா [illegible] மஹாதெவ ப்ரமுகா தெவாஃ ।
ஸாவிதா ஸ்ருஷ்டி [illegible] காரணம் ॥ இதனுலுணர்க.

தோலாவவைநாப்பணடைந்துதுரும்புநட்டு
மாலாதிவிண்ணோர்வலிமுற்றவுமாற்றவல்லோ
ஞலாலமுண்டோனவனேயகிலங்களுக்கு
மேலாயவேதுவெனவிண்டதுசாமவேதம்.

(இ-ள்.) சாமவேதம் - சாமவேதமானது, தோலாத அவைநாப்பண் அணைந்து - தம்முள்தோல்வியடையாத தேவர்கள் சபையினடுவில் வந்து, துரும்புநட்டு - ஒரு துரும்பினைநட்டு, மால்ஆதி விண்ணோர் வலிமுற்றவும் மாற்றவல்லோன் - திருமால்முதலிய தேவர்களது வலிமைமுற்றும் நீக்கவல்லவன், ஆலாலமுண்டோன் - விஷத்தையுண்டவன், அவனே அகிலங்களுக்கும் மேலாய ஏது எனவிண்டது - அவனே எல்லாவற்றிற்கும் முதற்காரணமென்று கூறியது.

தோலாவவைநாப்பணடைந்துதுரும்புநட்டு என்றதை
"கேட்டமாதேவன்குறுநகைமுகிழ்த் துக்கிளர் துரும்பொன்றெதிர்நாட்டி
வாட்டமினினதுவலியெலாங்கொண்டிதற்றிதைத்ததறித்தியென் றுரைப்ப
நீட்டமுற்றெழுந்துமானம்வா திப்பஞேலெனச்செந்தழறனது
தீட்டரும்வலியாவையுமுறத்தெரித்துந் திரணமவ்வாறிருந்ததுவே" எனவருதலை,

சூதசங்கிதையில் சாம சாகோபநிடத தாற்பரியமுரைத்த அத்தியாயத்திலும் விடமுண்டருளினமையை

"தூயவனுயபெம்மான்சுதந்திரனுகையாற்றுன்
பாயபல்சுரருமுய்யப்பாற்கடலெழுந்தபொல்லாத்
தீயவல்விடமுமுண்டான்" எனவருதலை, வேதப்பிரமாணியவிசாரமுரைத்த வத்தியாயத்திலும் முணர்க.

சாமவேதங்கூறுதலை,

"யஜ்ஞாங் ப்ஸ்ஷி [illegible] வைஸ்வாநரம் [illegible]
வாஸவஞ்சு [illegible] ஜஹ்மதஸ்ஸிவஃ॥" இதனுலுணர்க. (கக)

வளிதாழ்விசும்பைப்பசுந்தோலிற்சுருட்டவல்லோ
ருளரேற்புடைவீங்கியெழுந்துதிரண்டுருண்ட
விளவெம்முலைபங்கனேயன்றியுமின்பமுத்தி
யளவிற்பெறலாமெனவிண்டதகர்வவேதம்.

(இ-ள்.) அதர்வவேதம் - அதர்வசிகையானது, வளிதாழ்விசும்பை பசுந்தோலில் சுருட்டவல்லோர் உளரேல்-காற்றுழலும் ஆகாயத்தைப் பசியதோலைப்போலச்சுருட்டவல்ல வருளராஞல், புடைவீங்கி எழுந்துதிரண்டு உருண்ட இளவெம் முலை பங்கனை அன்றியும் - பக்கத்திற்பருத்து எழுந்துதிரண்டு உருட்சிவாய்ந்த இளமைய

மைந்த விருப்பந்தரும் தனத்தையுடைய வுமையம்மையை ஒரு பாகத்திலுடைய உருத்திரமூர்த்தியைப் பற்றுக்கோடாகப்பெறுமலும், இன்பம் முத்தி அளவில் பெறலாம் எனவிண்டது - பேரின்ப மீனுருப் முத்தியைத் தான்கருதிய அளவில் ஒருவனடையலாமெனக் கூறியது.

விண்ணினைத் தோல்போலச் சுருட்ட வலலவருமில்லை, சிவபிரானையன்றி முத்திபெறுதலு மில்லையென உளரோல், பெறலாம் என்னும் உடன்பாட்டு வினையில் நின்று போதரலால் எதிர்மறை யணி. ஒரு பொருளைப் பொய்யாக்குதற்கு மற்றொரு பொய்ப்பொருளைக் கற்பித்தலால் பொய்த்தற் குறிப்பணி.

சிவபிரானையன்றி முத்தி கைகூடாதென்றதை,

"மாயவற்குமலர்மகற்குமுருந்திரதேவன்குறைந்தமாண்பனென்று
நேயமுறுசமமானேனென்றுமுளத்திடைநினைப்போர்நீந்தற்கொண்ணாத்
தீயநரகிடைவீழ்வாரிருவருக்குமுருத்திரனேசிறந்தோனென்று
ஆயமனத்திடைநினைவார்முத்தியெனும்பெருவாரிதுளைந்துவாழ்வார்.
சருவகாரணஞ்சிவனேயாகின்றபடியாலுந்தயங்கவற்கே
பொருவில்சுபத்தைச்செய்தல்பூரணமாயிருக்கின்றபொலிவினாலும்
ஒருசாம்பமூர்த்திதானுயவவனேயுளத்தாமரையினுப்பண்
திருவார்ந்தமாதவத்தீர்முக்கியமாத்தியானமதுசெய்யத்தக்கோன்.
காரியசொரூபமாகியசெந்தாமரைத்தடங்சட்கரியோன்முன்னோர்
சீரியர்காள்முக்கியமாத்தியானஞ்செய்திடத்தக்கதேவரல்லர்
பேரியன்மெய்ச்சிவசேடமெல்லாருமாதலிற்பேசிதரமான
தாரியரேட்டேவரைநீத்துச்சிவனையேயுள்கறகுதிமாதோ.
அறையதர்வச்சிகை யிந்தத் தாற்பரியத்தே முடிவுண்டாயிருக்கும்
மறைபலவினுக்கு மதர்வண மறையே முடிவு"எனச் சூதசங்கிதையில்
சருவசாத்திர சங்கிரகமுரைத்த வத்தியாயத்திலும்.

பரசிவனுணர்ச்சியின்றிப்பல்லுயிர்த்தொகையுமென்றும்
விரவியதுயர்க்கீறெய்திவீடுபேறடைதுமென்ற
லுருவமில்விசும்பிற்றோலையுரித்துடுப்பதற்கொப்பென்றே
பெருமறையியம்பிற்றென்னிற்பின்னுமோர்சான்றுமுண்டோ
எனக் கந்தபுராணத்தில் உபதேசப் படலத்திலும் வருதல் காண்க.

அதர்வணவேதங் கூறுதலை

"[illegible]" இதனாலுணர்க. (கஉ)

முனிவோரெதிரந்தணன்வேதமொழிந்தகேட்டுத்
தனிநாயகன்மாயையின்மூழ்கிவெகுண்டுசாற்றும்
சினநீடுதமோகுணசீலனுருத்திரன்றான்
மனமோடுரைசெல்லருநிட்களம்வான்பிரமம்.

(இ-ள்.) முனிவோர் எதிர் வேதம்மொழிந்த - முனிவர்களுக்கெதிரே நான்கு வேதங்களுங்கூறிய வாக்கியத்தை, அந்தணன்கேட்டு - பிரமன்கேட்டு, தனிநாயகன் மாயையின்மூழ்கி வெகுண்டுசாற்றும் - ஒப்பில்லாத வுருத்திரமூர்த்தி எவியமாயையிற் சிமிழ்ப்புண்டு கோபித்துக் கூறுவான், சினம்நீடும் தமோகுண சீல உரு

தகிரன்றுன் - கோபமிக்க தமோகுண சீலஞகிய உருத்திரனே, மனம் உரைசெல்ல ரும் நிட்களம் வான்பிரமம் - மனவாக்குகளுக்கு அதீதமாகிய நிட்களமும் பெரிய பிர மமுமாவான்.

நிர்க்குணமாகிய நிட்களம் முக்குணங்களு ளொன்றுகிய தமோகுணத்தை யே யொழுக்கமாகவுடைய வுருத்திரனே ஆவான என்பான் நிட்களமெனவும், மா யாதீதமாகிய பிரமம் மாயையின் காரியப்பாடாகிய குணவசத்ததோ என்பான் வா ன்பிரமம் எனவும்,இவையல்லன் என்பான் தமோகுணசீல வுருத்திரன்றுன் மனமோ ரைசெல்லரு நிட்களம் வான்பிரமம் எனவுங் கூறினுனெனவும், இவன் இவ்வாறு மயங்கிக் கூறுதற்கு அவ்விறைவனது மாயையிற் சிமிழ்ப்புண்ட காரணத்தாலென் பார் தனிநாயகன் மாயையின் மூழ்கியெனவுங் கூறினர். (கரு)

சால்பானுயரோமென்மொழிப்பொருள்சம்புவென்ற
லேலாதெனவம்மனுவேவடிவெய்திவந்து
மாலாலுரைசெய்தனைநீகமலப்பொகுட்டின்
மேலாயிதுகேண்மதியென்றுமுன்னின்றுசொல்லும்.

(இ-ள்.) சால்பான் உயர் ஓம் என்மொழிப்பொருள் சம்பு என்றல் ஏலாது என்ன - நிறைவால் உயர்ந்த பிரணவத்தினுட்கிடைப்பொருள் உருத்திரமூர்த்தியே என்று கூறுதல் பொருந்தாது என்று அப்பிரமன்கூற, அ மனுவே வடிவு எய்திவ ந்து - அப்பிரணவமே ஒருருவெடுத்துவந்து, நீமாலால் உரைசெய்தனை - நீ மயக்க த்தாற் கூறினை, கமலப்பொகுட்டின் மேலாய்-தாமரைப்பொருட்டின்மேல் வசிக்கும் பிரமனே - இது கேள்மதி என்று முன்நின்று சொல்லும் - இதனைக் கேளாயென்று அவன் முன்னின்று கூறுநிற்கும்.

வேதங்கள் கூறியதை மறுத்தற்கு அவற்றிற்கு முதலாகிய பிரணவத்தின் பொருள் உருத்திரனல்லவென்பான் ஓமென் மொழிப்பொருள் சம்புவென்ற லேலா தெனவும், இவ்வாறுகூறிய பிரமனது மயக்கினை யொழித்தற்கு அப்பிரணவமே ஒருரு க்கொடுவந்து நீ கூறியது மயக்காலென மறுத்தது என்பார் முன்னின்று சொல்லும் எனவும் கூறியதாகக் கூறினர். மதிமுன்னிலை யசை. (கசு)

வேதத்தலையிற்புகலுற்றுயர்வேதவீற்றும்
போதச்சுரமாய்நிறுவப்படுபொற்பினேன்யான்
மாதர்ப்பகுதிக்குளடங்கிவயங்கினேற்கு
மாதிபரம்யாரவனுகுமகேசனம்மா.

(இள்.) யான் - நான், வேதம்தலையில் புகல் உற்று-வேதத்தின்முதலினுஞ் சொ ல்லப்பட்டு, உயர்வேத ஈறும் - உயர்ந்தவேதங்களினீறுதியிலும், போதசுரம் ஆய் நிறுவப்படு பொற்பினேன் - பொருந்தச் சுரவடிவாய் நாட்டப்படும் பொலிவினை யுடையேன், மாதர்பகுதிக்கு உள் அடங்கி வயங்கினேற்கும். ஸ்திரீ வாசகமாகிய சுத்தமாயைக்குளடங்கி விளங்கிய எனக்கும, ஆதிபரம்மகேசன் - முதலாயுள்ள பரம னும் இறைவனும், யார் அவனுகும் - யாரென்னில் அவ்வுருத்திரனே யாவான்.

வேதத்தின்முதலிலும் இறுதியிலும் யான் கூறப்படுதலால் வேதத்தலையிற் புகலுறறுயர் வேதவீற்றும் எனவும், அவ்வேதத்தில் உதாத்தம், அநுதாத்தம் சொ ரிதம் என மூவகைச்சுரவடியாய் நிற்றலால் போதச்சுரமாய் நிறுவப்படுபொற்பி னேன் யான் எனவும், விந்துதத்துவத்தின் காரியப்பாடாதலால் மாதர்ப்பகுதிக்குள

டங்கி வயங்கினேற்கும் எனவும், தானும் உருத்திரனும் வேறல்லாமையாலும், தனக்குத் தெய்வம் அவனாதலாலும் ஆதிப்ரம் யாரவனுக்கு மகேசனம்மாவெனவும் பிரணவங் கூறியதாகக் கூறினார்.

போதச்சுரமாய்நிறுவப்படுபொற்பினேன்யான் என்றதை

“சோர்தாவிலுநாத்தவனுதாத்தசொரிதங்களொளுஞ்சுரமோர்மூன்றில்” எனவும், தானும் உருத்திரனும் வேறல்லாமையாலும் தனக்குத் தெய்வம் அவனாதலாலும் என்றதை.

“அகரமுதன்மூன்றனையுமுறச்சேர்த்தோமெனவைத்தானலரின்மேலோன்
அகநிலவிப்பிரணவத்துப்பரசிவமேபிரதிவிம்பமாயிருக்கும்
அகலமுறவாதலின்மற்றதுசிவவாசகமென்றேயறிஞர்சொல்வர்
அகமில்பரம்பொருளதுவாகிதுவுமிரண்டலவிரும்புமழலும்போலும்.
தன்னியவிம்மந்திரத்திற்குறுதெய்வப்பரசிவமே” எனவும் சூதசங்கிதையில் வருதல் காண்க.

பிரணவங்கூறுதலை

“யோஹம்வேதாதிராத்யாத: - வேதாதௌஸ்வராஜ்ஞாதக:-ஸ்வாஹ்யா ப்ரக்ருதிலீநஸ்ய - ய:பரஸ்ஸமஹேஸ்வர:॥” இதனாலுணர்க. (௩௫)

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

என்றிதுவிளம்பும்பிரணவந்தனையுமிகழ்ந்துதன்பெருமையேவியப்ப
மன்றலந்துளவோனாயிடைத்தோன்றிமன்றயான்கருத்தனென்றுரைத்தான்
குன்றருங்கொடுநோயாணவக்குறும்பாற்கோட்படுமிருவருமிவ்வா
றொன்றியசெருக்கான்மீமிசையிகலியோவறப்பிணங்குமவ்வேலை.

(இ-ள்.) என்றுஇது விளம்பும் பிரணவம்தனையும் இகழ்ந்துதன் பெருமையே வியப்ப - என்று இதனைக் கூறும் பிரணவத்தையும் இகழ்ந்து கூறித்தனதுபெருமையையே நன்குமதித்துப் பிரமன்கூற, மன்றல் அம் துளவோன் ஆயிடைதோன்றி - வாசமிக்க துளவமாலையை யணிந்த திருமால் அவ்விடத்துத்தோன்றி, மன்றயான் கருத்தன் என்று உரைத்தான் - தேற்றமாக யானேமுதல்வனென்று கூறினான், குன்றுஅரும் கொடுநோய் ஆணவம் குறும்பால் கோட்படும் இருவரும் - குறைதலில்லாத கொடியநோயாகிய ஆணவமெனனும் குறும்பினால் சிமிழ்ப்புண்ட அவ்விருவரும், இ ஆறு ஒன்றிய செருக்கால் மீமிசை இகலி - இவ்வகையா லமைந்த இறுமாப்பால் மேலுமேலுந் தம்முள்மாறுபட்டு, ஒவு அறபிணங்கும அ வேலை - ஒழிவறப் பிணங்கும் அச்சமையத்தில்.

பிரமனும் திருமாலும் ஆணவக் கோட்பட்டவராதலால் குன்றருங்கொடுநோயாணவக் குறும்பால் கோட்படு மிருவரும் என்றார். (௩௬)

மலர்ந்தபொன்னிறத்தகேசமுமுகரோமங்களும்வடிவமுங்காட்டி
நலந்திகழிரவிமண்டிலத்துறையுநாயகனனையதுகண்டான்
சலந்தவிர்த்தருள்வானுருகெழத்தோன்றித்தமனியக்கிரியெனநின்றான்.

(இ-ள்.) நலம் திகழ்இரவி மண்டிலத்து உறையும் நாயகன் - ஒளிநலந்திகழும் சூரியமணடிலத்தில் வசிக்கும் இறைவன், அலர்ந்தசெம்கமலம் நிகர்இணை விழி

யும் - மலர்ந்த செந்தாமரை மலரையொத்த இரண்டு நேத்திரங்களும், அது முகிழ்த்தால் அனையது ஓர்விழியும் - அதுகுவிந்தாலொத்ததோர் நுதற்கண்ணும், மலர்ந்த பொன்நிறத்தகேசமும் முகரோமங்களும் வடிவமும் காட்டி - விளங்கிய பொன்னிறம் வாய்ந்த சிகையும் முகரோமங்களும் திருவுருவமுமாகிய இவற்றைக்காட்டி, சலம்தவிர்த்தருள்வான் உருகெழ தோன்றி தமனியம்கிரி என்னநின்றான் - இவ்விருவருங்கொண்ட பெருங்கலகத்தைத் தவிர்த்தருளவும் அவர்களுக்கு அச்சந்தோன்றவும் புலப்பட்டு மேருவைப்போல அவர்களுக்கெதிரே நின்றருளினன், அனையதுகண்டான் - அத்தோற்றத்தைத் திருமால் பார்த்தான்.

சூரியமண்டிலத்தில் வசிக்குஞ் சதாசிவம் இத்திருவுருவமுடையதென யசுர்வேதத்திற் கூறப்பட்டுளது ஆதலால் அதனையிங்குக் கூறினர். (கஎ)

காண்டலுநெடியோனடுங்கிநீத்தகன்றான்கமலநாண்மலர்மிசைக்கடவு
ளீண்டையென்புதல்வாவருகெனவிளிப்பவெகுண்டருளெம்பிரானுருவி
னண்டுவந்துதித்தவயிரவப்புத்தேளயன்மிசைச்செல்வுழியயனு
மாண்டகுபிரமப்படையெதிர்விடுத்தான்வந்ததுதடும்பரும்படையே.

(இ-ள்) நெடியோன்காண்டலும் நடுங்கிநீத்து அகன்றான் - திருமால் கண்ட அன்றே நடுக்கங்கூர்ந்து அங்குநின்றும் நீங்கினன், கமலம் நாள்மலர்மிசை கடவுள் ஈண்டை என்புதல்வாவருக என்னவிளிப்ப - தாமரையினது அன்றலர்ந்த மலர்மேல் வசிக்கும் பிரமன் இவ்விடத்து என் புத்திரனே வரக்கடவாயென்றழைக்க, வெகுண்டருள் எம்பிரான் உருவின் ஆண்டுவந்து உதித்த வயிரவப்புத்தேள் அயன்மிசை செல்வுழி - கோபித்தருளிய எமது பெருமான் திருவுருவினிடத்து வந்துதோன்றிய வயிரவக்கடவுள் பிரமன் மேற்செல்லுமிடத்து, அயனும் மாண்டகு பிரமப்படை எதிர்விடுத்தான் - அப்பிரமனும் மாட்சிமைதங்கிய பிரமாத்திரத்தை எதிரே செலுத்தினன், அ தடுப்பரும் படைவந்தது - தடுத்தற்கரிய அப்பிரமாத்திரம் எதிரேவந்தது.

முன்னொரு கற்பத்தில் பிரமன் யாவுஞ் சிருட்டித்துத் தான்பரம் என்று இறுமாந்தகாலையில் அவன் சிருட்டி பல்காமையால் திருமாலால் தெருட்டப்பட்டுச் சிவபெருமானே பொருளெனத்தேறி நிட்டைகூடியகாலையில், அச்சிவபெருமான் திருவருளால் சிருட்டியைத் தேற்றுவிக்க மாதேவன் முதலிய பதினொருருத்திரர் அப்பிரமன் நெற்றியிலொவ்வோர் கற்பத்திற்றோன்றிய காரணத்தால் ஈண்டையென்புதல்வாவருகென என்றான். பதினொரு ருத்திரர் மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன். (கஅ)

வருபடைவேகக்காற்றினின்முரியவிரைந்துசெல்வயிரவப்புத்தே
டிருமலர்க்குரிசில்பழித்திடுமஞ்சாஞ்சிரத்தினையுகிரினற்கொய்தான்
பெருவிறலுயிர்போய்விழுந்தபின்மீளப்பின்னுகனருளினலுய்ந்து
மருள்வலிநீங்கியெழுந்தனன்மறையோன்வள்ளலைவணங்கிநின்றேத்தும்.

(இ-ள்.) வருபடைவேகம் காற்றினில்முரிய விரைந்துசெல் வயிரவப் புத்தேள் - வரும் ஆயுதம் கதியின்காற்றால் முறிபட விரைந்துசென்ற வயிரவக்கடவுள், திருமலர் குரிசிலபழித்திடும் அஞ்சுஆம் சிரத்தினை உகிரினல் கொய்தான் - பொலிவமைந்த தாமரைமலரில் வசிக்கும் பிரமனது பழிக்கும் அஞ்சாந் தலையை நகத்தினற் கொய்தனன், பெருவிறல் உயிர்போய் விழுந்தபின் - பெரியவன்மையோடு தனது

யிர்சோர்ந்து விழுந்தபின், மறையோன்மீள பிஞ்ஞகன் அருளினால் உய்ந்து மருள் வலி நீங்கி எழுந்தனன் - அப்பிரமன் மீளச் சிவபிரானருளினாலே உயிர்பெற்று ஆணவமலத்தின் கட்டினின்று நீக்கியெழுந்து, வள்ளலை வணங்கி நின்று எத்தும் - இறைவனை வணங்கிநின்று துதிக்கின்றான்.

எழுந்தனன முற்றெச்சம். (௧௯)

விளைநறையுகுக்குங்கமலமென்பொகுட்டுமேவருமெனையெடுத்தாண்ட
களைகணேயாவித்துணைவனேசருமக்கலிங்கனேபிரமனேயிருகால்
வளைதருபிஞ்ஞகபாணியேயுனக்குநெய்யவிமடுத்துநலமோம
முளைவறப்புரிகேமுலப்பரும்வாழ்நாளுதவிமற்றெந்தமைக்காக்க.

(இ-ள்) விளைநறை உகுக்கும் கமலம்மென் பொகுட்டு மேவரும என்னை எடுத்து ஆண்ட களைகணே - சுரக்குந் தேனைச்சிந்துந் தாமரையினது மெல்லிய பொகுட்டில்வசிக்கும் என்னைத் துன்பக்கடலினின்று எடுத்து அடிமைகொண்ட பற்றுக்கோடாயுள்ளவனே, ஆவிதுணைவனே சருமம் கலிங்கனே பிரமனே - உயிர்க்கோர் துணைவனே தோலை ஆடையாகவுடையவனே பிரமமூர்த்தமாயுள்ளவனே, இருகால் வளைதரு பிஞ்ஞகபாணியே - இரண்டுகுதையும் வளையும் பிஞ்ஞகத்தையேந்திய திருக்கரத்தையுடையவனே, உனக்கு நெய்அவி மடுத்து நல் ஓமம்உளைவு அற புரிகேம் - உனக்கு நெய்யாகிய அவியைச் சொரிந்து நல்லவேள்வியைத் துன்பமறச் செய்கின்றேம், உலப்பு அரும்வாழ்நாள் உதவி எந்தம்மை காக்க - அழிவில்லாத ஆயுள்நாளைத் தந்து எம்மைக் காத்தருள்க.

எனக்குப் பதியாயுள்ளவனே என்பான் ஆவித்துணைவனே யெனவும், நரசிம்மத்தின் சருமத்தினை யாடையாகவுடைமையால் எனக்கன்றித் திருமாலுக்கும் பதியாயுள்ளவனே என்பான் சருமக்கலிங்கனேயெனவும், எங்களுக்கு அதீதப்பட்டபொருளாயுள்ளவனே யென்பான் பிரமனேயெனவும, என்றும் நிக்கிரத்தலையே குறித்த வில்லினையென்பான் இருகால் வளைதரு பிஞ்ஞகபாணியேயெனவும், இன்றுநேர்ந்தது போல இனிநேராவண்ணம் சிவவோமஞ் செய்கின்றேன் காக்க வென்பான் நல்லோமமுளை வறப்புரிகே முலப்பரும் வாழ்நாளுதவி மற்றெந்தமைக் காக்கவெனவுங் கூறினான். (௨௦)

கரைபொருதிரங்கிவெண்டிரைசுருட்டுங்கருங்கடற்புடையுடுத்தகன்ற
தரையொடுவிசும்பினள்ளிடைப்போந்ததழனிறச்சுடரொறிகாந்திக்
குரைபுனன்மோலிக்குழகனேதறுகட்கொடுஞ்சினக்கடுந்தொழிற்பகட்டு
விரைசெலற்கூற்றினடுதிறற்பாசமிடலறத்துணித்தெமைக்காக்க.

(இ-ள்.) வெண்திரை கரைபொருது இரங்கி சுருட்டும் கருங்கடல்புடை உடுத்து அகன்ற தரையொடு விசும்பின் நள் இடை-வெள்ளிய அலைகள்கரையொடுமோதியொலித்துச் சுருட்டாநின்றகரிய கடல்புடைசூழ்ந்து பரந்தநிலவுலகிற்கும் விண்ணுலகிற்கும் நடுவே, போந்த தழல் நிறம்சுடர் எறிகாந்தி - வெளிப்பட்ட தீப்போலும் நிறம் வாய்ந்து ஒளிவீசும் ஒளிப்பிழம்பாகிய, குரைபுனல் மோலிகுழகனே - ஒலிக்குங் கங்கையையணிந்த சடாமவுலியையுடைய பேரழகுடையவனே, தறுகண் கொடும் சினம் கடும்தொழில்பகடு விரைசெலல் கூற்றின் அடுதிறல் பாசம்இடல் அறதுணித்து எம்மை காக்க - அஞ்சாமையும் கொடிய கோபத்தையும் கொடிய தொழிலையுமுடைய எருமைக்கடா வூர்தியோடு விரைந்து வரும் இயமனது கொல்லும் வலிமைவாய்ந்த பாசத்தின் வலிமையை அறச்சேதித்து எம்மைக் காத்தருள்க.

தாமே பிரமமெனு இறுமாந்த தனக்குந் திருமாலுக்கும் இடையே சழலுருவா யெழுந்தருளித் தமது இறுமாப்பை யொழித்தருளுலலால் போந்த தழனிறச் சுடரொ றிகாந்தி - குழைபுனன்மோலிக் குழகனேயெனவும், தன்னைச்சரணடைந்த மார்க்கண் டேயர் மரணத்தை யொழித்தருளியதுகண்டோனுதலில்அடியேன்மரணத்தையுமொ ழித் தருள்கவெனக் குறையிரந்தா னுதலால் விரைசெலற் கூற்றினடுதிறற்பாச மிட லறத் துணித்தெமைக் காக்கவெனவுங் கூறினனென்றார். (உக)

உலகெலாம்விரியுமாதிகாலத்தினொருவனேயாகிநின்றுள்ளாய்
பலதிறப்புவனநாயகர்தம்மைப்பாற்படப்பயந்தளித்தருள்வோய்
மலர்தலையுலகமீளவந்தொடுங்கமன்னிவீற்றிருந்தருண்முதலே
யலகிலாவருளானெய்யவிமிசைந்தீண்டாயுளையளித்தெமைக்காக்க.

(இ-ள்.) உலகு எல்லாம் விரியும் ஆதிகாலத்தில் ஒருவனே ஆகி நின்று உள் ளாய் - எல்லாவுலகங்களுந் தோன்றும் ஆதிகாலத்தில் ஒருவனாய் நின்றுள்ளவனே, பலதிறம் புவனம் நாயகர் தம்மை பாற்பட பயந்தளித்து அருள்வோய் - பலதிறப்ப ட்ட புவனங்களுக்கு இறைவராயுள்ள பிரமன்முதலியோரைப் பகுதிப்பட வீன்று ஓம்பி அருளுகின்றவனே, மலர்தலை உலகம் மீளவந்து ஒடுங்க மன்னி வீற்றிருந்த ருள் முதலே - பரந்த இடத்தையுடைய அவ்வுலகங்கள் இறுதிக்காலத்தில் தன்பால் மீளவந்து ஒடுங்கத் தனக் கொடுக்கமில்லாது நிகரின்றி யிருந்தருளும் முதலாயுள்ள வனே, ஈண்டு அலகு இல்லாத அருளால் நெய்அவி மிசைந்து ஆயுளை அளித்து எம்மை காக்க - இவ்விடத்து வரம்பில்லாத திருவருளால் அவிப்பாகத்தை நுகர்ந்து ஆயுளைத் தந்து எம்மைக் காத்தருள்க.

மஹா பிரளயகாலத்தில் பிரமனுந் திருமாலும் உபசம்மாரத்தைப்பொருந்த, மீட்டும் பிரபஞ்சத்தைத் தருதற்பொருட்டுத் தனதிச்சையாற் றிருமேனிகொண்டுள் ளவ னுருத்திர னொருவனேயென்பான் உலகெலாம்விரியு மாதிகாலத்தி லொருவ னே யாகிநின் றுள்ளாய் எனவும், அவ்வுருத்திரனே சூக்கும சிருட்டியை யுண்டாக் கித் தூலகிருத்தியங்களுக்குப் பிரமாதியரைத் தனது பாகத்தினின்றுந் தருதலால் பலதிறப் புவன நாயகர் தம்மைப் பாற்படப் பயந்தளித்தருள்வோ யெனவும், யாவு முதிக்குங் காலத்தில் அவன் சந்நிதியில் உதித்ததுபோல ஒடுங்குங்காலத்தில் அவன து சந்நிதியிலொடுங்கத்தான் நித்தமாயிருத்தலால் மலர்தலையுலக மீளவந்தொடுங்க மன்னிவீற்றிருந்தருண் முதலேயெனவுங் கூறினர்.

ஆதிகாலத்தி லொருவனேயாகிநின் றுள்ளாய் என்றதை.

"மூப்பானிளையவன் முன்னவன் பின்னவன்" எனவருங் கோவைத் திருவா சகத்திலும்,

பிரமாதியரைத் தனதுபாகத்தில் தருதலை

"புரிதலுமந்தத்சவத்தினுக்கிரங்கிப்பொன்னெடுங்குன்றினைவாங்கி
வரிசிலையாகவளைத்தவன்வரலுமலரவன்வணங்கிநின்வலப்பால்
பரிவுறவுதித்தேன்யானினைதிடப்பாற்பங்கயக்கண்ணன்வந்துதித்தான்

யாவுந் தன்னிடத்திலொடுங்கத் தானொன்றிலுமடுங்காது நிற்குநிலைமையை
"உழிதருகாலுங்கனலும்புனலொடுமண்ணும்விண்ணு
இழிதருகாலமெக்காலம்வருவதுவந்ததற்பின்

உழிதருகாலத்தஙின்னடியேன்செய்தவல்வினையைக்
கழிதருகாலமுமாயவைகாத்தெம்மைக்காப்பவனே" எனத் திருவாசகத்தி
லும் வருதல் காண்க. (உஉ)

**சிறுவிதிமகவாய்முன்வரும்பிராட்டியம்பிகைசீரிலக்குமிகோ**
**மறுவறுமகிலகாரணிமலையான்மகளெனப்பெயரியதலைவி**
**நறுமலர்க்கடுக்கைத்தொடையலெம்பெருமானலங்கெழுசத்தியேவினைமா**
**சறுமுறையிருதாள்வழிபடுகின்றேமாயுளையளித்தெமைக்காக்க.**

(இ-ள்.) சிறுவிதி மகவாய் முன்வரும் பிராட்டி அம்பிகை சீர் இலக்குமி கோ-தக்கனுக்குப் புத்திரியாய் முன்புவந்தருளிய பிராட்டியும் அம்பிகையும் சிறப்புவாய்ந்த இலக்குமியும் பூதேவியும், மறுவு அறும் அகிலகாரணி மலையான்மகள் என்ன பெயரியதலைவி-குற்றமற்ற அனைத்துலகங்கட்குங் காரணியும் இமோற்பர்வத ராசன் புத்திரியும் எனப்பெயர்வாய்ந்த தலைவியே, கடுக்கைநறுமலர்தொடையல் எம்பெருமான் நலம் கெழுசத்தியே - கொன்றையினது நறுமணங்கமழும் மலராற்றொடுத்த மாலையை யணிந்த எமது பெருமானது அருட்சத்தியே, வினைமாசு அறுமுறை இருதாள் வழிபடுகின்றேன் - இருவினையெனனுங் களங்கம் நீங்கும் வண்ணம் உனது இரண்டு திருவடிகளையும் வழிபட்டுத் துதிககின்றேன், ஆயுளை அளித்து எம்மை காக்க - ஆயுளைத்தந்து எம்மைக் காத்தருள்க.

தக்கன் தவத்திற்கிரங்கிக் காளிந்தியில் ஓர்பால் தாமரைமலர்மேற் சங்கவடிவா யவன்கண்ணிற்குப் புலப்பட்டுப் பின்னாப் புத்திரியாய் முன்னிருந் தருளினமையால் சிறுவிதிமகவாய் முன்வரும் பிராட்டியெனவும், பின்னர் அவனிடத்துவர்ப்புத்தோன்றி இமோற்பருவத அரசன் தவத்திற்கிரங்கித் தடாகத்திலோர் தாமரை மலர்மேல் புத்திரிவடிவாக விருந்தருளினமையால் மலையான் மகளெனவும், இவற்றால் அயோனிஜமுடையவளென்பதும், தக்கனுக்குப் புத்திரியாயிருந்த நாமமுற்று மொழிய இமவான்மகள் என்னும்பெயரைப் பூண்டனளென்பதுந்தோன்ற இமவான் மகளெனப் பெயரிய தலைவியெனவும், தாய்போ லெவ்வுயிர்க்கண்ணும் அருளுடைமையால் அம்பிகையெனவும், தன்னைச் சரணடைந்தோர்க்குப் பெருஞ்செல்வம் அருளுதலால் இலக்குமியெனவும், உயிர்களைத் தாங்குதலால் கோவெனவும், பிரமன் முதலிய பல்லுயிர்த் தொகையுந் தோன்றுதற்குக் காரணமாயிருத்தலால் அகிலகாரணி யெனவும், நிட்களமாகிய சிவபெருமா னுன்மாக்களுக்குப் பந்தமுமுத்தியும் அருளுதற்குத்தா னிச்சாஞான கிரியாசத்தியாய் நிற்றலால் எம்பெருமா னலஙகெழுசத்தி யேயெனவுங் கூறினன்.

தக்கனுக்குக் காளிந்தி நதியில் தாமரையில் ஓர்சங்க வடிவாயிருந்தனள் என்பதை

"போனதோா தக்கனென்போன்புனைதவிப்புனற்காளிந்தித்
தூநதியிடைபோய்மூழ்கித்துண்ணெனவரலுமோர்பால்
தேனிமிர்கமலமொன்றிற்சிவனிடத்திருந்ததெய்வ
வானிமிர்பணிலம்வைகமற்றவனதுகண்ணுற்றான்" எனவும்

இமவானுக்கு இமயமலையிலுள்ள தடாகத்தில் மலர்ந்த தாமரையில் மகண்மையாயிருந்தனள் என்பதை

"மெய்த்தவமியற்றியவெற்பன்காணிய
அத்தடமலருமோராவிந்தத்தின்மேல்

வைத்ததோர்குழவியினையடிவத்துற்றனள்
எத்திறத்துயிர்யுமீன்றதொன்மையாள்'' எனவும் கந்தபுராணத்தில் வருதல் காண்க.

காமதேனுவடிவா யுமையம்மை நின்று பிரமாதி முதலிய உயிர்களுக்கு அருளுகின்றனளென்று ஸ்ரீசூதசங்கிதையில் கூறுதலால் கோ என்பதற்குக் காமதேனுவெனப் பொருள்கொள்ளலு மொன்று. (௨௩)

அகிலமீன்றெடுத்தவிருமுதுகுரவிரடியிணைபோற்றியென்றேத்து
நகுமலர்ப்பதுமத்தவிசிஞேன்றுதிக்குநயந்துளங்கருணைகூர்ந்தருளி
முகிழ்முலையொருபான்மணந்துவீற்றிருந்துமுரண்கெடக்கூற்றுயிர்குடித்த
பகையடுகணிச்சியாதியமபகவன்பிரமனைப்பார்த்திதுபகரும.

(இ-ள்.) அகிலம் ஈன்று எடுத்த இருமுது குரவீர் - அனைத்துலகையுந் தந்தருளிய தாய்தந்தையராயுள்ளீர், அடி இணைபோற்றி என்று ஏத்தும் நகுமலர்பதுமம் தவிசிஞேன் துதிக்கு - உமது இரண்டு திருவடிகளுக்கும் வந்தனமென்று துதிக்கும் விளங்குந் தாமரைமலரை யாசனமாகவுடைய பிரமனது துதிக்கு, நயந்து உளம் கருணைகூர்ந்தருளி-விரும்பித் திருவுளங்கருணைகூர்ந்து, முகிழ்முலை ஒருபால் மணந்து வீற்றிருந்து முரண்கெடகூற்று உயிர்குடித்த - தாமரை யரும்பையொத்த திருத்தனத்தையுடைய உமையம்மையை ஒருபாகத்துமணந்து இயமனது வலிமைகெட அவனுயிர் குடித்தருளிய, பகை அடுகணிச்சி ஆதியமபகவன் - பகைவரது உயிர்பருகும் பரசினை யேந்திய ஆதியாகிய பகவன், பிரமனை பார்த்து இதுபகரும் - பிரமனை நோக்கி இது கூறுவான்.

பிரபஞ்சம் யாவுந் தோன்றுதற்கு மொடுங்குதற்கும் ஒருருவே அம்மையப்பனென்னுமிருருவாய் நின்றருளினீர் என்பான் அகிலமீன்றெடுத்த இருமுதுகுரவீர் எனவும், சிவபெருமான் பிரமசாரியாகவும், அம்மை கன்னியாகவும உள்ளீர்என்பான் குரவீர் என்றமையாது முது குரவீரெனவுங் கூறினன். (௨௪)

பிரபஞ்சம் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் அம்மையப்பனுயிருத்தலை
"அம்மையப்பனேயலகுக்கம்மையப்பனென்றறிக'' எனத் திருக்களிற்றுப்படியாரிலும்,

சிவபெருமான் பிரமசாரியாகவும் அம்மை கன்னியாகவுமிருத்தலை
"சிவஞ்சத்திதன்னையீன்றுஞ்சத்திதான்சிவத்தையீன்றும்
உவந்திருவரும்புணர்ந்திங்குலகுயிரெல்லாமீன்றும்
பவன்பிரமசாரியாகும்பான்மொழிகன்னியாகும்'' எனச்சிவஞானசித்தியாரிலும் வருதலையுணர்க

இன்றுதொட்டுநீநான்முகனுகியெம்மாணையிற்பிறழாமே
நன்றுவாழ்தியால்வேட்டதுநவில்கெனநாயினேனுய்நதேனிங்
கொன்றுநின்னடிக்கன்புதந்தடியனேனுற்றபிழையெல்லா
மன்றநீபொறுத்தருளெனத்திசைமுகன்வேண்டலும்வரமீந்து.

(இ-ள்.) இன்றுதொட்டு நீ நான்முகன் ஆகி-நீ இந்நாள்தொடங்கி நான்குமுகங்களையுடையவனுகி, எம் ஆணையில் பிறழாமே நன்று வாழ்தி - எமது ஆஞ்ஞையினின்றும் வழுவாமல் மிகவும் வாழ்வாய், வேட்டது நவில்க என்ன - நீ விரும்பிய

தைக் கூறக்கடவாயென்று இறைவனருள, காயினேன் உய்ந்தேன் - காயிற்கடைப்பட்ட அடியேன் பிழைத்தேன், இங்கு நின் அடிக்கு ஒன்றும் அன்பு தந்து அடியனேன் உஞற்றிய பிழை எல்லாம் மன்ற நீ பொறுத்தருள் என்ன திசைமுகன் வேண்டலும் - இவ்விடத்து நின் திருவடிகளி லமைந்த அன்பினைத் தந்து அடியேன்செய்த தவறுகளையெல்லாம் தேற்றமாக நீ பொறுத்தருளாயென்று பிரமன் குறையிரந்து கூற, வரம் ஈந்து - அவ்வரத்தைத்தந்து. (௨௫)

கூர்த்தசூலமுங்கபாலமுங்கொண்டுகைதொழுதொருபுடைநிற்கும்
சூர்த்தநோக்குடைவயிரவத்தோன்றலைநோக்கினனிதுசொல்வான்
கார்த்தமேனியோய்வயிரவகாலனீகலவிகரணன்சீர்சால
வார்த்தைசூழ்பெலவிகரணன்பெலப்பிரமதனனுமாகின்றாய்.

(இ-ள்.) கூர்த்த சூலமுங் கபாலமும் கொண்டு கைதொழுது ஒருபுடை நிற்கும் சூர்த்த நோக்கு உடைய வயிரவத் தோன்றலை நோக்கினன்-கூரிய சூலப்படையையும் கபாலத்தையும் ஏந்திக் கைகூப்பி ஒருபால் ஒதுங்கிநிற்கும் பார்ப்போருக்கு அச்சத்தைத்தரும் பார்வையையுடைய வயிரவக்கடவுளைநோக்கி, இது சொலவான் - இறைவனிது கூறுவான், கார்த்தமேனியோய் - கரியமேனியை யுடையோய், நீவயிரவகாலன் கலவிகரணன் சீர்சால் வார்த்தைசூழ் பெலவிகரணன் பெலப்பிரமதனனும் ஆகின்றாய் - நீ காலவயிரவன் கலவிகரணன் சிறப்பமைந்த புகழிடைவிடாது சூழ்ந்த பெலவிகரணன் பெலப்பிரமதனனும் ஆகின்றாய். (௨௬)

சறுவபூதைகதமனனீயெம்முடைத்தனயர்கடமின்மூத்த
சிறுவனேயெனத்திருவருள்செய்துநீதிறற்கணம்புடைசூழ
வெறிமலர்த்துழாய்ப்பண்ணவன்முதலியவிண்ணவருலகெல்லாங்
குறுகிவார்கறைப்பிச்சையேற்றவர்மனக்கொடுஞ்செருக்கறமாற்றி.

(இ-ள்.) சறுவபூதைகதமனன்-சறுவபூதைகதமனன், நீஎம்முடை தனயர்கள் தம்மில் மூத்த சிறுவனே என்ன திருவருள்செய்து-நீ எம்முடையபுதல்வர்களுள் மூத்தபிள்ளையே யென்று திருவருள்செய்து, நீ திறல்கணம் புடைசூழ வெறிமலர் துழாய் பண்ணவன்முதலிய விண்ணவர் உலகு எல்லாம் குறுகி-நீவெற்றியமைந்த சிவகணங்கள் புடைசூழ்ந்துவர வாசமிக்க துளபமாலையையணிந்த திருமால்முதலிய தேவர்களது வைகுந்த முதலிய அனைத்துலகையுமடைந்து, வார்கறைபிச்சை ஏற்று-மிக்க உதிரப்பிச்சையையேற்று- அவர்மனம் கொடுஞ்செருக்கு அற மாற்றி - அத்திருமால் முதலியோர் மனத்திலெழுந்த கொடிய இறுமாப்பினை வேரோடற வொழித்து.

வேதத்தில வாமதேவ திருமந்திரத்தில் தனக்கமைந்த கலவிகரணன் முதலிய திருநாமங்கள், தானே அவனாய் நிற்றலால் நீயே நான் என்பார கலவிகரணன் பெலவிகரணன், பெலப்பிரமதனன், சர்வபூதை கதமனன் நீயென்றருளினார். (௨௭)

விதியைப்பற்றுமிம்முனிவராசெருக்கையும்வீட்டுகென்றருள்கூரும்
பதியைத்தாழ்ந்தனன்விடைகொடுவயிரவப்பண்ணவன்படர்குற்றான்
மதியக்கீற்றணியெம்பிரான்மறைந்தனன்வார்கழற்றொழுதேத்தி
யதிர்விற்றீர்ந்திடுமலரவன்முதலியோரவரவரிடம்புக்கார்.

(இ-ள்.) விதியைபற்றும் இ முனிவரர் செருக்கையும் வீட்டுக என்று அருள் கூரும்பதியை - பிரமனைப்பற்றுக் கோடாகப்பற்றிய இந்தமுனி சிரேஷ்டர்களுடைய இறுமாப்பையும் அழிக்கக்கடவாயென்று திருவருள் கூர்ந்த இறைவனை,

வயிரவப் பண்ணவன் தாழ்ந்தனன் விடைகொடு படர்குற்றான் - வயிரவக்கடவுள் வணங்கி விடைகொண்டு சென்றனன், மதியம் கீற்று அணி எம்பிரான் மறைந்தனன் - இளஞ்சந்திரனை யணிந்த எமதிறைவன் மறைந்தருளினன், வார்கழல் தொழுது எத்தி - அடைதற்கரிய திருவடியை வணங்கித் துதித்து, அதிர்வில்தீர்ந்திடு மலரவன் முதலியோர் அவரவர் இடம்புக்கார் - நடுக்கத்தினின்று நீங்கிய பிரமன் முதலியோர் தத்தமக்குரிய பதத்திற் சென்றனர்.

தானே பிரமமென இறுமாந்த பிரமனைவழிபட்ட முனிவர்களுக்கும் அந்த இறுமாப்பு உண்மையால் அவர்களுக்கும் பரிக்கிரக முளதாக நிக்கிரகியென்பார் விதியைப் பற்றுமிம் முனிவரர் செருக்கையும் வீட்டுகென் றருள்கூரும் பதியையென்றார் (உஅ)

உட்கத்தோன்றியவயிரவன்முன்னுறநெடியவனுலகுற்றான்
றட்கச்செம்நெறிவாயிலோர்த்துரந்தனன்விடுவச்சேனனைத்தாக்கிக்
கொட்கச்சூலத்திலுதியினிற்கோத்தனன்குறுகினன்வட்காரை
வட்கப்போர்புரிமாயவனிருக்கையுண்மதுகையினிகரில்லான்.

(இ-ள்.) உட்கதோன்றிய வயிரவன் முன்னுற நெடியவன் உலகுற்றான் - கண்டோர் நடுங்கத் தோன்றியருளிய வயிரவக்கடவுள் முன்னே திருமாலுலகையடைந்து, வாயிலோர் எதிர்தட்கசென்று துரந்தனன் - வாயில்காப்போரெதிரோதை செய்யச் சென்று முதுகுகண்டு, விடுவச் சேனனைதாக்கி சூலத்தில் நுதியினில் கொட்க கோத்தனன் - விஷ்வசேனனைப் போரில்மோதிச் சூலத்தினுனியில், சுழலக் கோத்து, வட்காரை வட்கபோர்புரி மாயவன் இருக்கை உள்குறுகினன் - குன்றப் பகைவரைப் புறங்கொடுக்கப் போர்செய்யும் திருமாலது இருக்கையுட் சென்றான், மதுகையில் நிகர் இல்லான்-வலிமையில் தனக்கொப்பில்லாத அவ்வயிரவக்கடவுள்.

பிச்சைதேரியவரும்செயல்கேட்டனன்பெட்பொடும்விரைந்தெய்தி
பச்சைமேனியோன்மனைவியரிருவரும் பாங்குறவெதிர்கொண்டு
செச்சைநாண்மலர்த்திருவடி வணங்கினன்செம்புனற்பலியாரு
மெச்சநெற்றியினரம்பினைப்பிடுங்குபுவிட்டனன்கபாலத்துள்.

(இ-ள்.) பிச்சைதேரிய வரும்செயல் பச்சைமேனியோன் கேட்டனன்-பிச்சைநாடிவந்த செயலினைத் திருமால் கேட்டு, மனைவியர் இருவரும் பாங்குற பெட்பு ஓடும் விரைந்து எய்தி எதிர்கொண்டு - சீதேவி பூதேவி என்னும் இருவரும் இருபாலும் வர விருப்பத்தோடும் விரைந்து சென்று எதிரேற்று, செச்சைநாள்மலர் திருவடிவணங்கினன் - செவந்த அன்றலர்ந்த சாமரைமலரை யொத்த திருவடியை வணங்கி, செம்புனல் பலி - அத்திருமாலினது உதிரத்தைப் பலியாக, யாரும் எஞ்ச நெற்றியின் நரம்பினை பிடுங்குபு கபாலத்துஉள் விட்டனன் - கண்டோர் யாரும் நடுங்க நெற்றியி னரம்பினைப் பிடுங்கிக் கபாலத்தில் விட்டான்.

எஞ்ச எச்சவலித்தல் விகாரம். நம்மைப் பரிக்கிரகித்தற்பொருட்டு வந்தனன் என்பது தோன்றப் பெட்பொடும் விரைந்தெய்தியெனவும், அப்பிரமனோடு தானும் விரவி யானே பிரமமெனத் திருமாலு மிறுமாந்தனனாதலால் அவனையு மொறுத்தனனென்பது தோன்ற யாரும் எச்சநெற்றியி னரம்பினைப் பிடுங்குபு செம்புனற்பலி விட்டனன் எனவுங்கூறினார். (கூ௦)




B. வயிரவீசப்படலம்.

தாரையாகிநூறாயிரமாண்டளவொழுகியுந்தருநெய்த்தோ
ரீரவெண்டலைக்கபாலத்தைநிறைத்திலதிரத்தமுற்றறலோடும்
வீரமாதவனிலமிசைமூர்ச்சித்துவீழ்ந்தனனதுகாலை
வாரமுற்றருள்வயிரவன்றிருக்கையால்வருடினன்மயறீர்த்தான்.

(இ-ள்.) தாரையாகி நூறாயிரம் ஆண்டு அளவும் ஒழுகியும் - தாரை தாரையாய் நூறாண்டு காறும் ஒழுகியும், தரும் நெய்த்தோர் ஈரம்வெண் தலைகபாலத்தை நிறைத்திலது - மிகவுஞ் சோர்ந்த வுதிரமானது குளிர்ந்த வெள்ளிய தலையாகிய பிரமகபாலத்தை நிறைக்காதொழிந்தது, இரத்தம் முற்றும் அறலோடும் - இரத்தமுழுமையும் அறச்சோர்ந்தவுடனே, வீரமாதவன் நிலமிசை மூர்ச்சித்து வீழ்ந்தனன் - வீரத்தையுடைய திருமால் பூமியின்மேல் மயங்கி வீழ்ந்தான், அது காலை - அக்காலையில், வாரம் உற்றருள் வயிரவன் - அன்புகூர்ந்தருளும் வயிரவக்கடவுள், திருகையால் வருடினன் மயல்தீர்த்தான் - தனது திருக்கையால் வருடி அத்திருமாலின் மூர்ச்சையை யொழித்தருளினான். (௬௧)

அயர்வுயிர்த்தனனெழுந்தனனஞ்சலியளித்தனன்குனிசார்ங்கன்
வயிரவப்பிரான்றிருவடிப்பத்தியுமற்றவன்றன்மாட்டுப்
பயிலுமின்னருட்கருணையும்வேண்டினான்பரிந்தவற்கவைநல்கிப்
பெயர்புமீண்டனன்பிச்சைதேர்ந்தருளியபிறண்டுமெய்தினன்மாதோ.

(இ-ள்.) குனிசார்ங்கன் அயர்வு உயிர்த்தனன் எழுந்தனன் அஞ்சலி அளித்தனன் - வளைந்த வில்லினையேந்திய திருமால் சோர்வுநீங்கி எழுந்து கரங்கூப்பி, வயிரவப்பிரான் திருவடிப்பத்தியும் அவன்தன் மாடுபயிலும் இன் அருள் கருணையும் வேண்டினான் - வயிரவக் கடவுளது திருவடிக்கீழ்ப் பத்திமையையும் அவனிடத்தமைந்த இனிய திருவருளையும் குறையிரந்து வேண்டினான், அவற்கு அவைபரிந்து நல்கி - அத்திருமாலுக்கு அவற்றை அன்புகூர்ந்துதந்தருளி, பெயர்பு மீண்டனன் பிச்சைதேர்ந்தருளிய பிறண்டும் எய்தினன் - அவ்வைகுந்தத்தினின்றும் பெயர்ந்து திரும்பிப் பிச்சைதேர்ந்தருள ஏனைய இடங்களிலுஞ் சென்றருளினான்.

பிற ஆண்டு பிற என்னும் இடைச்சொல்லி னீறுகெட்டது. (௬௨)

உலகமெங்கணுந்திரிந்துநெய்த்தோர்ப்பலியேற்பவனெனவொன்னார்
வலமிசைந்தவேற்கடவுளர்தருக்கறவாங்கினன்முனிச்செல்வர்
குலமடப்பிடியங்கலாரையுங்குறுநகையினின்மயல்பூட்டி
நிலவரைப்பினிற்காஞ்சியையணுகினனெடுந்தகைநெறியானே.

(இ-ள்.) நெடுந்தகை நெறியான் - ஒருபாற் கோடாது நடுநிலைமையின்வழிநின்ற வயிரவக்கடவுள், உலகம் எங்கணும் திரிந்து நெய்த்தோர்பலி ஏற்பவன் என்ன - உலகமுற்றுந் திரிந்து உதிரப்பலியை யிரப்பவனைப்போல, ஒன்னார்வலம் இசைந்த வேல்கடவுளர் தருக்கு அற வாங்கினன் - பகைவரது வலிமையைக் குடித்த வேலேந்திய திருமால்முதலிய கடவுளரது இறுமாப்பை அறவாங்கி, முனிசெல்வர் குலம்மடப்பிடி அங்கலாரையும் குறுநகையினின் மயல்பூட்டி - முனீந்திரரையுமன்றியவர்கள் பன்னியராகிய இளமைவாய்ந்த பெண்யானையை யொத்தகுலமடவாரையும் புன்னகையால் மையல்பூட்டி, நிலவரைப்பினில் காஞ்சியை அணுகினன் - நிலவுலகின்மேலுள்ள காஞ்சித் திருப்பதியை யடைந்தனன்.

தாமே பிரமமென இறுமாந்தவரைக் கண்ணோடாதொறுக்கும் நடுநிலையினின் ரு னென்பார் நெடுந்தகை நெறியோன எனவும், சிவபெருமான் விதித்தவழி நின் றனனென்பார் முனிச்செல்வர் - குலமடப்பிடி அந்நலாரையுமெனக் கூறினர். அந் நலாரையும் என்றதில் உம்மை இறந்தது தழீஇய எச்சப்பொருட்டு. (௰௩)

கறைக்கபாலத்தையொருவயினிறுவினன்சேனைகாவலன்றன்னை
யிறைத்தசெம்புனற்சூலத்தினுதியினின்றிழிச்சுபுமாலவேண்ட
நிறைத்தபேரருட்கருணையாலுதவினனிகழ்ந்ததன்பெயரானே
மறைக்குநாயகன்வயிரவீச்சரன்றனைநிறீஇயினன்வழிபட்டான்.

(இ-ள்.) கறைகபாலத்தை ஒருவயின் நிறுவினன் - உதிரமேந்திய கபால த்தை ஓரிடத்தில் வைத்து, சேனைகாவலன் தன்னை - விடுவச்சேனனை, செமபுனல் இறைத்த சூலத்தின் நுதியினின்று இழிச்சுபு-உதிரத்தை வீசிய சூலத்தினுதியினின் று இரக்கி, மால்வேண்ட நிறைத்தபேர் அருள்கருணையால் உதவினன் - திருமால் வேண்ட நிறைநதபேரருளால் அவனைத்தந்து, நிகழ்ந்த தன் பெயரான்-நிலைபெற்ற தனதுபெயரினுல், மறைக்கு நாயகன் வயிரவீச்சரன் தன்னை நிறுவினன் வழிபட்டா ன் - வேதஙகளுக் கிறைவனாகிய வயிரவீச்சரச் சிவலிங்கப்பெருமானைத் தாபனஞ் செய்து வழிபட்டுப் பூசித்தான்.

நிறுவினன், உதவினன், நிறீ இயினன் முற்றெச்சங்கள். (௰௪)

ஐயனேமறைமுடிமிசைநடித்தருளமலனேயெனையாண்ட
மெய்யனேயெனப்பழிச்சிநெக்குருகினன்விளங்கியிவ்விலிங்கத்தே
தையலோடினிதமர்ந்தருள்யானுநின்சந்நிதியெதிர்வைகி
யுய்யுமாறருளடியனேன்செயத்தகுமுறுபணியருளென்றான்.

(இ-ள்) ஐயனே - யாவர்க்கு மேலானவனே, மறைமுடிமிசை நடித்தருள் அமலனே-வேதசிரசின்மேல் நடித்தருளும் இறைவனே, என்னையாண்ட மெய்யனே என்னபழிச்சி நெக்கு உருகினன் - எனனையடிமைகொண்ட உண்மையனே என்ன வணங்கி மனம்நெக்குவிட்டுருகி, இ இலிஙகத்துவிளஙகி-இச்சிவலிங்கத்தேவிளஙகி, தையலோடு இனிது அமர்ந்தருள் - உமையம்மையோடு இனிதாக வமர்ந்தருளாய், யானும் நின்சந்நிதி எதிர்வைகி உய்யும் ஆறு அருள் - யானும் உனது சந்நிதியி னெ திரோ தங்கிப் பிழைக்கும் வண்ணம் அருளாய், அடியனேன் செயத்தகும் உறுபணி அருள் என்றான் - அடியேன்செய்யக்கூடியமிக்கபணியைஅருளாயென்று குறை யிரந்தான். (௰௫)

வேண்டிநின்றிரந்துரைத்தலுங்கருணையான்மேவியிங்குறைகின்றே
மீண்டுநீயெதிர்வைகியித்திருநகர்புரந்தினிதமர்வாயாற்
காண்டகுங்கபாலத்தினெய்த்தோரைநின்கணங்களுக்கருளென்னாப்
பூண்டபேரருள்வழங்கினனெம்பிரான்வயிரவப்புத்தேளும்.

(இ-ள்.) வேணடி நின்று இரந்து உரைத்தலும் - தனது குறைவேண்டியிரந் துகூற, எம்பிரான் கருணையான் மேவி இங்கு உறைகின்றேம் - எமது பெருமான் திருவருளால் காட்சிதந்து இச்சிவலிங்கதது இடைவிடாது வசிக்கின்றேம், ஈண்டு நீ எதிர்வைகி இதிருநகரபுரந்து இனிது அமர்வாய்-நீ இவ்விடத்திலே எதிரோதங்கி இத்திரு நகரைப்பாதுகாக்க இனிதாக எழுந்தருள்வாய், காண்டகும் கபாலத்திலெ

ய்த்தோனை - காணத்தரும் கபாலத்திலுள்ள உதிரத்தை, நின்கணங்களுக்கு அருள் என்று - உன்கணங்களுக் கருளாயென்று, பூணடபோ அருளவழங்கினன் - தனக இயல்பாயுள்ள பெரிய திருவருளை வழங்கினான, வயிரவப்புதம்தேளும - வயிரவக்கட வுளும். (௬௯)

குருதியீாம்புனல்கணங்களுக்களித்தனன்குடிப்புழிச்சிலவெனும
பருகுதற்குப்போதாமைகண்டவனிமேற்பறந்தலைபெருவேந்த
செருவிலேற்றுயிர்மடிந்தவா விண்மிசைத்திகழவங்கவர்செந்நீ
ரிரணமண்டிலவயிரவன்கணங்களுக்கினிதமைத்தருள்செய்தான்.

(இ-ள்.) ஈர்குருதிபுனல் கணங்களுக்கு அளித்தனன் - குளிர்ந்த உதிரபபு னலைத் தனதுகணங்களுக்குக கொடுத்தனன, குடிப்புழி - அககணங்கள் குடிக்கு மிடத்து, சிலவேனும் பருகுதற்கு போதாமைகண்டு-அக்கணங்களுட் சிலவற்றிற் கா யினும் பருகுகற்குப் போதாமையைப் பார்த்து; அவனிமேல் பறந்தலை பெருவேந் தர்செருவில் ஏற்று உயிாமடிந்தவர்-நிலவுலகின்மேல் போர்க்களத்திற் பெரிய அரசர் கள் போரிலேற்று உயிர்மடிந்தோர், விண்மிசைதிகழ அங்கு அவர் செந்நீர் இரண மண்டில வயிரவன்-வீரசுவர்க்கத்தில் விளங்க அப்போர்க்களத்தில் அவர்களது உதி ரத்தை இரணமண்டில வயிரவக்கடவுளாய் நின்று, கணங்களுக்கு இனிது அமைத்த ருள்செய்தான் - தனது கணஙகள் பருகுதற்கு இனிதாக அமைத்தருளினன்.

தமது கணஙகளுக்குச் சிவபெருமானனுஞையால் தன்கபாலத்திலுள்ள உதி ரத்தை யக்கணங்களுக்குணபித்தும் போதாமையால் போரிலேற்றுயிரிழந்த வேந்தா கள் வீரசுவர்க்கம் புகுவோர்களதுதிரத்தை அக்கணங்களுக கூட்ட நின்றனனென் பார். இரணமண்டில வயிரவனென்றார். (௭௦)

கயிரவத்தெழில்கவர்ந்தவாயாய்ச்சியர்பாடியிற்கவர்ந்துண்ட
தயிரவற்கயர்வொழித்தருள்வயிரவத்தம்பிரான்றொழுதேத்தும்
வயிரவப்பெயரீசனைவணஙகுநரவமிருத்துவினீங்கிச்
செயிரவத்தைகண முழுவதுங்கடந்துபோய்ச்சிவனடிநிழல்சேர்வார்.

(இ-ள்.) கயிரவத்தொழில் கவர்ந்தவாய ஆய்ச்சியர் பாடியில் - ஆம்பலினது அழகைக் கொள்ளைகொண்ட வாயையுடைய இடைப்பெண்களது பாடியில், கவர்ந்து உண்ட தயிரவற்கு அயர்வொழித்தருள்வயிரவத தம்பிரான் - தயிரைக் கவர்ந்துண்ட திருமாலுக்கு மூர்ச்சையை யொழித்தருளும் வயிரவக்கடவுள், தொழுது எத் தும் - வணங்கித் துதிக்கும், வயிரவப்பெயர் ஈசனை வணங்குநர்-வயிரவீசனைவணங் குவோர், அவமிருத்துவில் நீங்கி - அவமிருத்துவினின்று நீங்கி, செயிர் அவத்தை கள் முழுவதும் கடந்துபோய் - குற்றந்தரும் சகல கேவலாவத்தைகள் முற்றும் நீங்கி, சிவன் அடிநிழல் சேர்வார் - சிவபெருமானது திருவடி நிழலைச் சேர்வார்கள்.

கலாதிமுதலிய கருவிகளின்றி ஆணவமலத்தால் மறைப்புண்டு மாயையிலொ டுங்கிக் கிடத்தலாலும், நிமித்தகாரணமாகிய அவ்வாணவமலத்தால் தோன்றும் மா யை, கன்மமென்னு மலங்களைப் பொருந்தி யிருவினைப்பயன்களை நுகர்தற்குப் பிறப் பிறப்புகளிற் பட்டுக் கலையாதி தத்துவங்களை யடைதலாலும் செயிரவத்தைகள் எனவும், இருவினை யடைதற் கேதுவாகிய மலங்களினின்று நீங்க இருவினையொப் பும், சத்திநிபாதமும், குருவருளும், ஞானசாதனமும், பெற்று, மும்மல நீக்கமும், வாசனை நீக்கமும், ஞானப்பெருக்கமுமாகிய இவற்றைக்கூடித் திருவளைக் கூடுத ற்குச் சுத்தாவத்தை காரணமாதலால் முழுவதுங் கடந்துபோய் எனவுங் கூறினர்.

" கேவலசகலசுத்தமென்னுமூன்றவத்தையான்மா
மேவுவன்கேவலந்தன்னுண்மைமெய்பொறிகளெல்லாங்
காவலன்கொடுத்தபோதுசகலனுமலங்களெல்லாம்
ஓவினபோதுசுத்தமுடையனுற்பவந்துடைத்தே'' எனச் சிவஞானசித்தி
யாரில் வருதல் காண்க. (௯௮)

வயிரவீசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௧௬௨.

# விடுவச்சேனீசப்படலம்.

கலிநிலைத்துறை.

போதணிபொங்கருடுத்ததண் கச்சிப்புரத்திடை
மாதர்வண்கோயில்வயிரவீசத்தைவகுத்தன
மாதியுமந்தமுமில்லானமர்ந்தருளங்கதன்
மேதகுதென்பால்விடுவச்சேனீச்சரம்விள்ளுவாம்.

(இ-ள்.) போதுஅணிபொங்கர் உடுத்ததண் கச்சிபுரத்து இடை-மலர்கள் பொலியும் சோலைசூழ்ந்த தண்ணிய காஞ்சிநகரத்தின்கண், மாதர்வண்கோயில் வயிரவீசத்தை வகுத்தனம் - அழகுவாய்ந்த வளவிய திருக்கோயிலமைந்த வயிரவீசத் திருப்பதியை எடுத்துக்கூறினும், ஆதியும் அந்தமும் இல்லான் அமர்ந்தருள் அதன் மேதகு தென்பால் - தனக்கோர் முதலுமிறுதியு மில்லாத அவ்விறைவனெழுந்தருளிய அத் திருப்பதியின் மேன்மைவாய்ந்த தென்பாலிலுள்ள,விடுவச்சேனீச்சரம் விள்ளுவாம்- விடுவச் சேனீச்சரத்தை எடுதெதுக் கூறுவாம். (௧)

சந்திரசேகரன்றாளிணையேத்திவிடைகொண்டே
யந்தண்விரசைகடந்துவைகுந்தமடைந்தபின்
சுந்தரப்பொற்றவிசேறியிருந்திதுசூழ்ந்தனன்.

(இ-ள்.) வெம்தொழில் தக்கனர் வேள்விவிளிந்தநாள்-கொடியதொழிலையுடைய தக்கன் வேள்வி யழிந்தகாலையில், மாயவன் சந்திரசேகரன் தாள்இணை எத்தி-திருமால் சிவபெருமானது இரண்டு திருவடிகளையும் வணங்கி, விடைகொண்டு அந்தண் விரசை கடந்து வைகுந்தம் அடைந்தபின் - விடைபெற்று அழகிய தண்ணிய விரசாநதியைக் கடந்து வைகுந்தத்தை யடைந்தபின்னர், சுந்தரம் பொன் தவிசு ஏறி இருந்து இது சூழ்ந்தனன்-அழகிய பொன்னாலமைந்த ஆசனத்தின்மே லேறியிருந்து இதனை ஆலோசித்தனன். (௨)

மலைவறுகாட்சிவிடுவச்சேனன்முதன்மந்திரித்
தலைவர்தமக்குநிகழ்ந்ததுசாற்றிக்கவன்றனன்
குலவுமரக்கரவுணரைப்போரிற்கொலைசெய்திவ்
வுலகமுழுவதுமோம்புதலென்றொழிலாகுமால்.

(இ-ள்.) மலைவு அறுகாட்சி விடுவச்சேனன் முதல்மந்திரி தலைவர்தமக்கு - மாறுபடுதலில்லாத தோற்றத்தையுடைய விடுவச்சேனன் முதலிய மந்திரித்தலைவர்க்கு, நிகழ்ந்தது சாற்றி கவன்றனன்- வேள்வியில் நடந்த செய்தியைக் கூறிக் கவலைகூர்ந்தான், குலவும் அரக்கர் அவுணரைபோரில் கொலைசெய்து - எங்கும் தீங்குசெய்து உலவும் அரக்கரையும் அசுரரையும் போரில் உயிர்வாங்கி, இ உலகம்முழுவதும் ஓம்புதல் என்தொழில ஆகும் - இவ்வுலகமுழுமையும் பாதுகாத்தல் எனது தொழிலாம்.

காவற்றொழில் செய்வோர் ஆன்மகோடிகளுக்குத் தீங்குசெய்வோரை யொறுப்பதுங் காவற்றொழிற் கீழ்ப்பட்டமையால் குலவுமரக்கரவுணரைப் போரிற் கொலைசெய்திவ் - வுலகமுழுவது மோம்புத லென்றொழிலாகும் என்றான். (௩)

ஏயுமலங்கரத்தின் றித்தொடங்குமுழவன்போ
லாயுதங்கையின்றியெவ்வாறகிலம்புரப்பல்யான்
காய்கதிர்மண்டிலந்தோற்றுங்கடவுண்மாசக்கர
மாய்வறும்யாக்கைத்ததீசியினால்வாய்மடிந்ததே.

(இ-ள்.) கரத்து ஏயும் அலம் இன்றிதொடங்கும் உழவன்போல் - கையில் பொருந்திய கலப்பையில்லாமல் உழத்தொடங்கும் உழவன்போல, யான் ஆயுதம் கைஇன்றி எ ஆறு அகிலம்புரப்பல் - நான் ஆயுதங் கையிலில்லாமல் எவ்வகையான் உலகினைப் பாதுகாப்பேன், காய்கதிர் மண்டிலம் தோற்றும்கடவுள் மாசக்கரம் - சுட்டெரிக்கும் சூரியன் மண்டிலம்போலப் புலப்படும் தெய்வத்தன்மையை யுடைய எனது பெரியசக்கரமானது, மாய்வு அறும் யாக்கைததீசியினால் வாய்மடிந்தது - அழிவில்லாத சரீரத்தையுடைய ததீசிமுனிவரால் வாய்மழுங்கியது.

திருமால் சக்கரம் ததீசிமுனிவரால் வாய்மடிந்தது என்பதை இட்டசித்தீசப் படலத்திற் காண்க. (௪)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

மதனுடைத்திண்சலந்தரனையுயிர்செகுப்பச்சிவபெருமான்வகுத்தசோதிச்
சுதரிசனப்படையன்னோன் றரப்பெற்றேனஃதின்று தக்கன்வேள்வி
சிதைவுசெயுந்திறல்வீரபத்திரன்மேல்விடுத்தலுமச்செல்வன்பூண்ட
கதமுறுவெண்டலையொன்றுகவ்வியதாலினிச்செய்யக்கடவதென்னே.

(இ-ள்.) மதன் உடைய திண் சலந்தரனை உயிர்செகுப்ப - வலிமையையுடைய திண்ணிய சலந்தராசுரனை உயிர்வாங்க, சிவபெருமான் வகுத்த சோதி சுதரிசனப்படை அன்னோன் தரபெற்றேன் - சிவபெருமான் கால்விரலுகிரால் வகுத்த ஒளியமைந்த சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை அப்பெருமான் தரப் பின்புபெற்றேன், அஃது- அச்சக்கரத்தை, இன்று தக்கன் வேள்வி சிதைவுசெய்யும் திறல்வீரபத்திரன் மேல்விடுத்தலும் - இக்காலையில் தக்கன்செய்த யாகத்தை யழித்த வெற்றிவாய்ந்த வீரபத்திரக்கடவுள் மேலெறிய, அ செல்வன் பூண்ட கதம் உறுவெண் தலைஒன்று கவ்வியது-அக்கடவுள்பூண்ட கோபமிக்க வெள்ளியதலைமாலையில் ஒருதலை கவ்வியது- இனி செய்யக்கடவது என் - இனிநான் செய்யக்கடவது யாது.

சலந்தரனுயிர்வாங்கச் சிவபெருமான் கால்விரலுகிரால் சக்கரம் வகுத்தமையை முன்னர்க் காண்க. (௫)

நஞ்சுபடுதொளையெயிறுதனையிழந்தநாகத்தினுயிர்ப்புமொன்னா
ரஞ்சுதகத்தலைச்செல்லுங்கோடிழந்தகடாக்களிற்றினடலுமேற்றார்

நெஞ்சுருவப்பாயுமிருமருப்பிழந்தவிடையேற்றினெறிப்புங்கூர்வாய்
வஞ்சநெடும்படையிழந்தமதவீரன்வீறுமெவன்செய்யுமாதோ.

(இ-ள்.) நஞ்சுபடு தொளை எயிறுதனை இழந்த நாகத்தின் உயிர்ப்பும் - நஞ்சு அமைந்த தொளைவாய்ந்த பல்லினையிழந்த பாம்பின் மூச்சும், ஒன்னார் அஞ்சுதகத் தலைசெல்லும் கோடு இழந்த கடாகளிற்றின் அடலும் - பகைவரஞ்ச அவர்மேற்செல்லும் கொம்பினையிழந்த மதத்தையுடைய யானையின் வலிமையும், ஏற்றார் நெஞ்சு உருவப் பாயும் இருமருப்பு இழந்த விடை ஏற்றின் நெறிப்பும் - பகைவரது மார்பிலுருவப்பாயும் இரண்டு கொம்பையு மிழந்தகாளையினது காதின் நெறிப்பும், கூர்வாய் வஞ்சநெடும்படை இழந்த மதவீரன் வீறும் எவன்செய்யும்-கூர்மைவாய்ந்த கொலைத் தொழிலையுடைய நெடிய ஆயுதத்தை இழந்தவலிமை யிழந்தவீரனது பெருமிதமும் யாது செய்யும்.

இது எடுத்துக்காட்டு வமையணி (சு)

ஆழிகரத்துளதாயிற்சிவனருளால்வியனுலகமளிப்பேனன்றிப்
பாழிவரைத்தடம்புயத்தீரென்செய்வேனெனக்கவன்றுபரியுங்காலை
வாழிநெடும்பொலஞ்சிறையபுள்ளூர்திதனக்கிரண்டாமவடிவமான
காழிகந்தபெருங்கீர்த்தி யுலம்பொருதோட் கனைகழற்கால்விடுவச்சேனன்.

(இ-ள்.) பாழிவரை தடம்புயத்தீர் - பருத்தமலையையொத்த பெரியபுயத்தை யுடையவர்களே, ஆழிகரத்து உளது ஆயில் - சக்கரங்கையிலிருந்தால், சிவன் அருளால் வியன் உலகம் அளிப்பேன் - சிவனுடைய திருவருளால் பரந்தவுலகத்தைப் பாதுகாப்பேன், அன்றி என்செய்வேன் என கவன்று பரியுங்காலை - அச்சக்கரமன்றி யாதுசெய்வேன் என்று கவலைகூர்ந்து வருந்துங்காலத்து, நெடும்பொலம்சிறைய புள்ளூர்திதனக்கு இரண்டாம்வடிவம் ஆன - நெடிய பொன்னிறம் வாய்ந்த சிறகினையுடைய ஊர்தியாகிய கருடனுக்கு இரண்டாம் வடிவாயுள்ள, காழ் இகந்த பெருங்கீர்த்தி உலம் பொருதோள்கனை கழல்கால் விடுவச்சேனன் - பகைமைகடந்த பெரிய கீர்த்தியையும் திரண்டகல்லோடு போர்செய்யுந் தோளையும் ஒலிக்கும் வீரகண்டை கட்டிய காலையுமுடைய விடுவச்சேனன்.

வாழிஅசைநிலை. காழ்வயிரம் - பண்பாகு பெயராய்பகைவர்மேனின்றது.

திருமால்போலக் கருடனும் பரத்துவ முடைமையால் அக்கருடனுக்கு விசுவச்சேனன் கீழ்நின்றவன் என்பார் வாழி நெடும்பொலஞ்சிறைய புள்ளூர்தி தனக்கிரண்டாம் வடிவமான என்றார். (எ)

அன்றென்னைவயிரவனார்சூலத்தின்விடுவித்தேயருளுநீலக்
குன்றன்னான்றனக்காழிகொணர்ந்தளித்துக்கடன்றீர்த்துக்கொள்வேனிந்நா
ளென்றெண்ணியெழுந்திறைஞ்சிவயவீரபத்திரன்பாலயான்போயின்னே
நன்றுளமகிழ்வித்துக்கொடுவருவலாழியெனநவின்றுபோற்ற.

(இ-ள்.) அன்று வயிரவனார் என்னை சூலத்தின் விடுவித்து அருளும் நீலம் குன்று அன்னான் தனக்கு - அக்காலத்தில் வயிரவனார் என்னைச் சூலத்தினின்றும் விடுவித்தருள்செய்த நீலமலையையொத்த திருமாலுக்கு, இ நாள் ஆழி கொணர்ந்து அளித்து கடன் தீர்த்து கொள்வேன் என்று - இந்நாளிற் சக்கரங்கொண்டுவந்து கொடுத்து எனது கடனைத் தீர்த்துக்கொள்வேனென்று, எண்ணி எழுந்து இறைஞ்சி - கருதி எழுந்து வணங்கி, இன்னே வயவீரபத்திரன்பால் யான்போய் - இப்பொழுது

வெற்றியையுடைய வீரபத்திரக்கடவுளிடத்துயானே சென்று, நன்று உள்ளமகிழ்வித்து ஆழிகொடு வருவல் என்ன நவின்று போற்ற - அவனது உள்ளமிகவுமகிழச்செய்து சுதரிசனமென்னும் சக்கரத்தைக் கொண்டுவருவேனென்று சொல்லித்துதிக்க.

வயிரவக்கடவுள் சூலத்திற் கோப்புண்டுகிடந்த தன்னைவிடுவித்தது கைம்மாறு கருதாத நன்றியெனக் கருதினனுதலால் ஆழிகொணர்ந்தளித்துக் கடன்கழித்துக் கொள்வேனிந்நாள் - என்றெண்ணி என்றார். இதனை வயிரவீசப்படலத்திற் காண்க.

அங்கவனைக்கொண்டாடிவிடைகொடுத்தான்றிருமார்பனவனும்போந்து
புங்கவர்சூழ்வயவீரனிருக்கைமுதற்கோபுரமுன்புக்ககாலை
மங்கருஞ்சீர்பானுகம்பனமுதலாயவாயில்காவலர்கணோக்கிப்
பங்கமுறவெருண்டெழுந்தாரச்சுறுத்தாரதுக்கினுர்பழங்கணீட.

(இ-ள்.) திருமார்பன் அங்கு அவனை கொண்டாடி விடைகொடுத்தான் - இலக்குமிவசிக்கும் மார்பினையுடைய திருமால் அவ்விடத்து அவனைப்புகழ்ந்து விடைதந்தனன், அவனும் போந்து புங்கவர்சூழ் வயவீரன் இருக்கைமுதல் கோபுரமுன் புக்ககாலை - அவ்விடுவச்சேனனுஞ் சென்று தேவர்கள் சூழ்ந்த வெற்றியையுடைய வீரபத்திரக்கடவுளது அரசிருக்கையின் முதற்கோபுரவாயலின் முன்புகுந்தகாலையில், மங்கரும் சீர்பானுகம்பன் முதலாயவாயில் காவலர்கள் நோக்கி - அழிதலில்லாத பெருமைவாய்ந்த பானுகம்பன் முதலாகிய வாயில்காப்போர் பார்த்து, பங்கம் உற வெருண்டு எழுந்தார் அச்சுறுத்தார் அதுக்கினுர் பழங்கண்நீட - அவ்விடுவச்சேனன் அவமதிப்புறக் கோபித்தெழுந்து அச்சமுறுத்தத் துன்பமுற இதழ் அதுக்கினுர்கள். (௯)

பிறைசெய்தகரங்கொண்டுபிடர்பிடித்துநீளிடைக்கணுந்தலோடுங்
கறைசெய்தவேற்றானைக்காவலனுங்கிருந்தெண்ணிக்கவலைகூர்ந்தான்
முறைசெய்தமுனிவோர்களந்நெறியிற்செலநோக்கிமுன்போய்நின்று
மிறைசெய்தசெயலனைத்துந்தன்வரவுமாங்கவர்க்குவிளங்கக்கூறி.

(இ-ள்) பிறைசெய்த கரம்கொண்டு பிடர்பிடித்து நீள் இடைக்கண் உந்தலோடும் - அர்த்த சந்திரன்போல விரலிடை வளைந்த கையைக்கொண்டு பிடரைப்பிடித்து வெள்ளிடையிற்றள்ள, கறைசெய்த வேல்தானை காவலன் ஆங்கு இருந்து எண்ணி கவலை கூர்ந்தான் - உதிரந்தோய்ந்த வேலேந்திய சேனையையுடைய விசுவசேனன் அவ்வெள்ளிடையிலிருந்து தான்வந்த செய்தியை எண்ணிக் கவலை கூர்ந்தனன், முறைசெய்த முனிவோர்கள் அந்நெறியில் செலநோக்கி - ஆன்மாக்களுக்கு நன்னெறியைவிதித்த முனிவர்களவ்வழியிற் செல்லப்பார்த்து, முன்போய் நின்று மிறைசெய்த செயல் அனைத்தும் தன்வரவும் ஆங்கு அவர்க்கு விளங்ககூறி - அவர்கள் முன்சென்றுவாயில் காப்போர் தனக்கு அச்சமுறுத்திய செய்திமுழுமையையும் தனது வருகையையும் அவர்களுக்கு விளங்க எடுத்துச்சொல்லி.

ஆங்கு அசைநிலை. அங்குட்டத்துக்கும் தற்சனிக்கும் இடையிலுள்ள வெளியைப் பிறைசெய்த கரங்கொண்டு என்றார். (௧௦)

இனிச்செய்யுந்திறநீவிர்கூறுகெனத்தாபதருமெண்ணிநோக்கிப்
பனித்துண்டமிலைந்தானைக்காஞ்சியினிற்றுபித்துப்பரவிப்போற்றின்
மனத்தொன்றுமெண்ணமெலாம்பெறுவாயென்றியம்புதலுமகிழ்ச்சிகூர்ந்து
கனித்தொண்டைவாயுமையாளொடுபாகன் றிருக்காஞ்சிநகரஞ்சேர்ந்தான்.

(இ-ள்.) இனி செய்யும் திறம் நீவிர் கூறுக என்ன - இனி யான்செய்யும் வகையை நீங்களே யெடுத்துக் கூறுங்களென்று வினவ, தாபதரும் எண்ணி நோக்கி - முனிவர்களும் ஆராய்ந்துபார்த்து, பனிதுண்டம் மிலைந்தானை காஞ்சியினில் தாபித்து பரவிபோற்றின்-குளிர்ந்த இளஞ்சந்திரனை யணிந்த சிவபெருமானைக் காஞ்சியென்னுந் திருப்பதியில் தாபனஞ்செய்து வணங்கித்துதித்தால், மனத்து ஒன்றும் எண்ணம் எல்லாம் பெறுவாய் என்று இயம்புதலும் - உன்மனத்திலமைந்த எண்ணத்தை யெல்லாம் பெறுவாயென்றுகூற, மகிழ்ச்சி கூர்ந்து தொண்டைகனிவாய் உமையாள் ஒருபாகன் திருக்காஞ்சி நகரஞ்சேர்ந்தான் - களிகூர்ந்து கோவைக்கனியையொத்த வாயையுடைய உமையம்மையை ஒருபாகத்திலுடைய இறைவனது காஞ்சியென்னுந் திருநகரை யடைந்தனன்.

அடைந்தோர் துன்பமொழிப்பவன் என்பார் பனித்துண்ட மிலைந்தானை யெனவும், துன்பந்துடைத்தற்கே நீ கருதியதாதலால் அது கைகூடுமென்பார் மனத்தொன்று மெண்ணமெலாம் பெறுவாயென்றியம்புதலு மெனவும் கூறினர், (௧௧)

அங்கடைந்துதன்பெயராற்சிவலிங்கமிருத்திமகிழ்ந்தருச்சித்தேத்திப்
பொங்குபெருங்காதலினூலினியதவம்பூண்டிருந்தானாகவந்நாள்
வெங்கடுநேர்வியாக்கிரனுமசகரனும்பஞ்சமேட்டிரனுமென்னு
மிங்கிவர்முத்தானவரும்வரப்பேற்றாலெவ்வுலகும்வருந்தச்செய்வார்.

(இ-ள்.) அங்கு அடைந்து - அத்திருநகரையடைந்து, தன்பெயரால் சிவலிங்கம் இருத்தி மகிழ்ந்து அருச்சித்து எத்தி - தனது பெயரால் சிவலிங்கதாபனஞ்செய்து மகிழ்கூர்ந்து பூசித்து வணங்கி, பொங்குபெருங் காதலினால் இனிய தவம் பூண்டு இருந்தானாக - மீதூர்ந்த பெரியவிருப்பத்தால் இனிய தவத்தை மேற்கொண்டிருக்க, அந்நாள் - அக்காலையில், வெங்கடுநேர் வியாக்கிரனும் அசகரனும் பஞ்சமேட்டிரனும் என்னும் முத்தானவர் இவரும்-கொடிய விஷத்தையொத்த வியாக்கிரனும் அசகரனும் பஞ்சமேட்டிரனும் என்று சொல்லப்படும் அசுரர்களாகிய இம்மூவர்களும், வரம்பேற்றால் எவ்வுலகும் வருந்த செய்வார் - தான்பெற்ற வரத்தின் பயனால் எந்தவுலகமும் வருந்தச்செய்வாராயினார்கள்.

வியாக்கிரன் புலிவடிவாயுள்ளவன், அசகரன் மலைப்பாம்பின்வடிவாயுள்ளவன், பஞ்சமேட்டிரன் ஐந்து ஆண் குறியையுடையவன். இருந்தான் என்னும் வினைமுற்றை ஆகஎன்னும் இடைச்சொல்லோடு புணர்த்தினமையால் வினையெச்சமாகக் கொள்க - தானவரும் என்பதில் நின்றவும்மை பொருத்தமில் புணர்ச்சி (௧௨)

அன்னோரைத்தெறுபாக்குவிண்ணாடர்விரிஞ்சனொடுமளவளாவிப்
பொன்னாடையுடையான்கைப்படையின்றிவறங்கூரும்புதுமைநோக்கி
யென்னாதனிடத்தணுகிமகிழ்ந்திறைஞ்சியியம்புதலுமிமயமீன்ற
மின்னாளுமிடத்தாளும்வயவீரபத்திரனைவிடுத்தான்மன்னோ.

(இ-ள்.) அன்னோரை தெறுபாக்கு விண்ணாடர் விரிஞ்சனொடும் அளவளாவி - அவ்வசுரரைக் கொல்லத் தேவர்கள் பிரமனோடுங் கலந்து, பொன் ஆடை உடையான் கைபடை இன்றி வறங்கூரும் புதுமைநோக்கி - பீதாம்பரத்தையுடைய திருமால் தனது கையில் சுதரிசனமென்னுஞ் சக்கரமில்லாமையால் வறுமையை யடையுந் துன்பத்தைப் பார்த்து, என்நாதன் இடத்து அணுகி - எனது இறைவனாகிய சிவபெருமானிடத்துச் சென்று, மகிழ்ந்து இறைஞ்சி இயம்புதலும்-மகிழ்கூர்ந்து வணங்

லிக்கூற, இமயம் ஈன்ற மின் ஆளும் இடத்தானும் - இமயமலை பெற்ற உமையம் மையை இடப்பாகத்திலுடைய அச்சிவபெருமானும், வயவீரபத்திரனை விடுத்தான் - வெற்றியையுடைய வீரபத்திரக்கடவுளை யேவினன்.

காவற் றொழிலுக்குச் சக்கரமின்மையால் வறங்கூர்ந்தனன் ஆதலால் பொன்னுடையுடையான் கைப்படையின்றி வறங்கூரும் என்றார். (கரு)

அவனணுகித்தயித்தியர்கண்மூவரையுமெதிர்ந்துபொருதழித்துவீட்டித்
தவநிறையுந்திருக்காஞ்சிவளநகர்க்குநெறியானேசார்தலோடுஞ்
சிவமுதலைத்தொழுதுறையுமுகுந்தனார்தஞ்சேனைத்தலைவனங்கே
கவலையெலாம்விண்டகலவயவீரன்றனையெளிதிற்காணப்பெற்றான்.

(இ-ள்.) அவன் அணுகி தயித்தியர்கண் மூவரையும் எதிர்ந்து பொருது அழித்துவீட்டி - அவ்வீரபத்திரக்கடவுள் சென்று வியாக்கிரன் முதலிய அசுரர் மூவரையும் போரிலெதிர்ந்து போர்செய்து அழித்துக்கொன்று, தவம்நிறையும் திருக்காஞ்சி வளநகர்க்கு நெறியானே சார்தலோடும்-தவம்நிறைந்த திருக்காஞ்சி என்னும் வளமைவாய்ந்த நகருக்கு அவ்வழியேவந்து சார, சிவமுதலை தொழுது உறையும் முகுந்தனார்தம் சேனைத்தலைவன் - சிவபிரானைவணங்கி வசிக்கும் விசுவச்சேனன், ஆங்கேகவலை எல்லாம் விண்டு அகல வயவீரன்தனை எளிதில் காண பெற்றான் - அவ்விடத்தே எல்லாக்கவலையும் நீங்கியொழிய வீரபத்திரக்கடவுளை எளிதாகத் தெரிசிக்கப் பெற்றனன்.

சிவபூசையின் பேற்றால் எளிதில் தெரிசிக்கப் பெற்றனன் என்பார் சிவமுதலைத் தொழுதுறையு முகுந்தனார் தஞ்சேனைத்தலைவன் வயவீரன்றனை யெளிதிற் காணப்பெற்றான் என்றார். (கச)

முயல்வுற்றுமரிதாயதிருக்காட்சிமுயலாமேயெய்தப்பெற்றா
னியல்புற்றபெருந்தவத்தீர்சிவபூசைப்பயனெவரோயளக்கற்பாலார்
பெயர்வுற்றுச்சென்றாடுந்தீர்த்தமெதிர்வந்தாடப்பெற்றோனன்னான்
பயில்வுற்றமகிழ்வோடும்வீழ்ந்திறைஞ்சிமறைமொழியாற்பரசலுற்றான்.

(இ-ள்.) முயல்வுற்றும் அரிது ஆய திருக்காட்சி முயலாமே எய்த பெற்றான் - காணமுயன்றும் காண்டற்கரிய திருக்காட்சியைச் சிறிதும் முயலாமலே அடைய விசுவச்சேனன் பெற்றனன், (ஆதலால்) இயல்பு உற்ற பெருந்தவத்தீர்-இயல்பாகவே அடைந்த பெரியதவத்தையுடையீர், சிவபூசைபயன் எவர் அளக்கற் பாலார்- சிவபூசையின்பயனை அளந்தறியும் பகுதியையுடையார் எவர், பெயர்வு உற்று சென்று ஆடும் தீர்த்தம் எதிர்வந்து ஆட பெற்றோன் அன்னான்- தனது நிலையினின்றும் பெயர்ந்துபோய் ஆடும் சிவதீர்த்தம் தனக்கெதிரேவர நீராடப்பெற்றவனை யொத்த விசுவசேனன், பயில்வு உற்ற மகிழ்வோடும் வீழ்ந்து இறைஞ்சி மறைமொழியால் பரசலுற்றான் - நிறைந்த மகிழ்ச்சியோடும் தண்டாகாரமாய் வீழ்ந்து வணங்கி வேதவாக்கியங்களால் துதிக்கத்தொடங்கினன்.

தான் வீரபத்திரக்கடவுளைக் கண்டு தெரிசிக்க வருந்திச் சென்றும் வாயில்காப்போரால் கோபுரவாயிலினுள் அடையப்பெறாது வருத்தங்கூர்ந்தவனாதலால் முயல்வுற்று மரிதாய திருக்காட்சியெனவும், சிவபூசைப்பேற்றாலின்று எளிதாயடைந்தமையால் முயலாமே யெய்தப்பெற்றான் எனவும், பிரமன் சிருட்டியிற்பட்ட முனிவர்களாதலால் இயல்புற்ற பெருந்தவத்தீர் எனவும், இவனிடத்துச் சிவபூசைப் பேற்றி

னைக் காட்சிப் பிரமாணத்தா லறியப்படுதலால் சிவபூசைப் பயனெவரோ யளக்கற்பா லார் எனவும், உடல்வாட நெடுந்தூரஞ்சென்று ஒருவனுடுதற்குரிய கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்கள் அவனிடத்தே யவையடைய நீராடினுனை யொத்தவனு யிருந் தமையால் பெயர்வுற்றுச் சென்றுடும் தீர்த்தமெலா முவந்தாடப் பெற்றோனன்னுன் எனவுங் கூறினர். (௬௫)

நன்பார்நீர் தீவெளிவா னுலகெங்கும்விராய்நின்றநலமேபோற்றி
முன்பாலுந் தென்பாலும்பின்பாலும்வடபாலுமேலுமூவா
நின்பாரச்சிலைபோற்றியன்பாளர்க்கன்பானநித்தபோற்றி
வன்பாளர்தமைச்சீறும்வெம்புலிப்போத்தன்னுனேயென்றுவாழ்த்தா.

(இ - ள்.) நன்பார் நீர் தீவெளிவான் உலகு எங்கும் விராய்நின்ற நலமே போற்றி - நல்ல பிருதிவியும் நீரும் அக்கினியும் வாயுவும் ஆகாயமுமாகிய பஞ்சபூதங் களிலுமவற்றாலமைந்த உலகத்திலும்கலந்து குணவடிவாயுள்ளவனேவந்தனம், முன் பாலும் தென்பாலும் பின்பாலும் வடபாலும் மேலும் மூவாதநின்பாரம் சிலைபோற்றி- கீழ்பாலும் தென்பாலும் மேல்பாலும் வடபாலும் ஆகிய நான்குதிக்கிலும் அதற்கு மேலுள்ள விண்ணுலகிலும் ஓங்கிக்கெடாதுநின்ற உனது கனத்த வில்லுக்கு வந்த னம், அன்பாளர்க்கு அன்பான நித்தபோற்றி - அன்பினையுடையோர்பால் அன்பு நீங்காத நித்தனே வந்தனம், வன்பாளர் தம்மைச்சீறும் வெம்புலிபோத்து அன்னுனே என்று வாழ்த்தா-கொடியவரைக் கோபித்தொறுக்கும் கொடிய புலிப்போத்தையொ த்தவனேயென்று வாழ்த்த.

பிருதிவியிற் சத்தமுதலிய ஐந்தும், அப்புவில் கந்தம் நீங்கலாக வேனைநா ன்கும், தேயுவில் ரசம் கந்தம் நீங்கலாக ஏனைமூன்றும், வாயுவில் ரூபம், ரசம், கந் தம் நீங்கலாக ஏனை இரண்டும், விண்ணில் ஏனை நீங்கலாகச் சத்தமொன்றும் ஆக நின்று அவற்றை நிலைபெறச் செய்தலால் நன்பார் நீர் தீவெளி வான் நின்ற நலமே யெனவும், ஆன்மாக்கள் வினைக்கீடாக அவற்றின்பய னுகர்வித்தற்கு அவ்வான்ம கோடிகளோடு சத்திவடிவாய் விரவிநிற்றலால் உலகெங்கும் விராய்நின்ற நலமே யெனவும், பஞ்சபூதங்களிற் றன்மாத்திரை வடிவாகவும், உயிர்கள்தோறுஞ் சத்திரு பமாகவும் நிற்றலால் நலமேயெனவும், தென்பால், வடபால் என்றமையால் கீழ்பாலை முன்பாலெனவும் மேல்பாலைப் பின்பாலெனவும், இத்திக்குகளிலும் வானிலு முருவி நிற்பது மேருவாதலால் நின்பாரச்சிலைபோற்றியெனவுங்கூறினுன்.

பிருதுவிமுதலிய பூதங்களி லவ்வவற்றின் குணமாய் நிற்றலை

"பாரிடையைந்தாய்ப்பரந்தாய்போற்றி - நீரிடைநான்காய்நிகழ்ந்தாய்போற் றி - தீயிடைமூன்றாய்த்திகழ்ந்தாய்போற்றி- வளியிடையிரண்டாய்மகிழ்ந்தாய்போற் றி - வெளியிடையொன்றாய்விளைந்தாய்போற்றி'' எனத் திருவாசகத்திலும், ஆன்மாக்கள் வினைக்கீடாக அவற்றின் பயனுகர்வித்தற்கு விரவிநிற்றலை,

"உலகெலாமாகிவேறாயுடனுமாயொளியாயோங்கி
அலகிலாவுயிர்கள்கன்மத்தாணையினமர்ந்துசெல்லத்
தலைவனாய்'' எனச் சிவஞான சித்தியாரிலும் வருதல்காண்க. வாழ்த்தா செய்து என்னும் எச்சத்திரிபு. (௬௬)

திருவுள்ளங்களிசிறப்பவேட்டதேவன்புகலென்னச்செம்மல்கேட்பக்
கருவண்ணன்றமனுனேன்கைகூப்பிநின்றியம்புங்கவுரிபாக
வருளுண்மைதெளியாதகக்கன்றன்வேள்வியைநீயழித்தஞான்று
தெருளின்றியமரேற்றுநெடுமாலுன்மிசைவிடுத்தநேமிதன்னை.

(இ-ள்.) திருவுள்ளக்களிசிறந்து வேட்டது எவன் புகல்என்று செம்மல்கேட்ப - திருவுள்ளங் களிகூர்ந்து நீவிரும்பியது யாது அதுகூறுயென்று வீரபத்திரக்கடவுள் கேட்க, கருவண்ணன் தமன்ஆனோன் - கரியநிறத்தையுடைய திருமாலுக்கு உறவினனாகிய விசுவசேனன், கைகூட்பிநின்று இயம்பும் - கைகுவித்துநின்று சொல்லுவான், கவுரிபாகன் அருள் உண்மை தெளியாத தக்கன்தம் வேள்வியை நீ அழித்தஞான்று - உமையம்மையை இடப்பாகத்திலுடைய இறைவனது திருவருளுண்மையை யுணராத தக்கனது யாகத்தை நீயழித்த காலத்தில், நெடுமால் செருள் இன்றி அமா் எற்று உன்மிசை விடுத்த திகிரிதன்னை - நெடியதிருமால் உனது வன்மையைச் சிறிதும் உணராது போரில எதிர்த்து உன்மேல் வீசிய சக்கிரத்தை.

காஞ்சிப்புராணத்தைப் பரிசிப்பவர் கற்றவரேயன்றி யேனையோரல்லர், அவர்கட்குச் செம்மல் என்னும் பதத்தில் உயிர்மெய்யின்மேலிட்ட புள்ளியைத் தவறென வொழித்தல் அவர்க்கரிதன்று, அதைப் பிழைதிருத்தத்தில் போடத் துணிந்தவர் புகலென்று என்னும் பாடம் புகலென்னும் எனவந்த வழுவைவழுவென் றுணர்ந்திலர்போலும்.

அற்றவர்கட்கினியாயுன்றிருமேனிமிசைப்பூண்டவயன்கபாலம்
பற்றிவிழுங்கியதிந்நாளடியேனுக்களித்தியெனப்பகரக்கேளாச்
சொற்றதுநங்கரத்திலைகபாலத்தின்வாயுளதேற்றுகளொன் றிலலாய்
மற்றதுவேதரக்கோடியெத்திறத்துமெனப்புகன்றான்வாகைவேலான்.

(இ-ள்.) அற்றவர்கட்கு இனியாய் உன்திருமேனி மிசைபூண்ட அயன்கபாலம் பற்றிவிழுங்கியது - தஞ்சமில்லாது சரண்புகுந்தோர்க்கு இனியவனே உனது திருமேனியிற் பூண்ட பிரமகபாலமானது அச்சக்கரத்தைப்பற்றி விழுங்கியது, இந்நாள் அடியேனுக்குஅளித்தி என்ன பகர - இப்பொழுது அடியேனுக்குக் கொடுப்பாயென்று வினவ, கேளா - கேட்டருளி, வாகைவேலான் - வெற்றிமாலையை யணிந்த வேலையுடைய வீரபத்திரக் கடவுள், சொற்றது நம்கரத்து இல்லை - நீவினவியது நமதுகையிலில்லை, கபாலத்தின்வாய் உளதேல் - பிரமகபாலத்தின் வாயிலுள்ளதானால், துகள் ஒன்று இல்லாய் யாதொரு தவறுஞ் சிறிதுமில்லாதவனே, எதிறத்தும் அதுவேதரக்கோடி என்னபுகன்றான் - எவ்வகையும் அப்பிரம கபாலமே தரக் கொள்ளுவாயென்று விடையிறுந்தான். (கஎ)

உரைத்தமொழியுளங்கொள்ளாவினிச்செய்வதென்னேயெனவோர்ந்தான்யாருஞ்
சிரிக்கலுறக்காலிரண்டுங்கரமிரண்டுங்குஞ்சிதமாய்ச்செய்துகொண்டு
வரித்தகழல்வீரனெதிர்வாய்நாசிவிழியிணையைமாறிமாறிச்
சுரித்தசைத்துநடஞ்செய்தானெவ்வமொடுபயங்காட்டியெயிறுதோன்ற.

(இ-ள்) உரைத்தமொழி உளங்கொள்ளா - கூறிய சொற்பொருளை மனத்திற் கருதி, இனிச்செய்வது என்னே என்று ஓர்ந்தான் - இனிசெய்வது என்னவென்று கருதிய விசுவசேனன், யாரும் சிரிக்கலுற காலிரண்டும் கரம் இரண்டும் குஞ்சிதமாய் செய்துகொண்டு - எவருஞ்சிரிக்க இரண்டுகால்களையும் கைகளையும் வளைத்துக்கொண்டு, கழல்வரித்தவீரன் எதிர்வாய் நாசி விழி இணையை மாறிமாறி சுரித்து அசைத்து - வீரகண்டைகட்டிய வீரபத்திரக்கடவுளுக்கெதிரே வாயையும் மூக்கையும் இரண்டு கண்களையும் மாறிமாறிச்சுழித்து அசைதது, எவ்வமொடு பயமகாட்டி எயிறு தோன்ற நடனஞ்செய்தான் - கண்டோர்க்குத் துன்பத்தையும் பயத்தையும் காட்டிப் பற்கள்தோன்ற நடனஞ்செய்தனன். (கஅ)

இவ்வண்ண முடல்கூனிவளைந்துநெளிந்தொருவிகடமியற்றநோக்கிச்
செவ்வண்ணவயவீரன்வறிதுநகைதோற்றுதலுந்திரண்டோரெல்லா
மைவண்ணக்கடல்கிளர்ந்தாலென நகைத்தாரக்காலைமலர்மேல்வைகும்
அவ்வண்ணநகுபைங்கண்வெண்டலையுமதுநோக்கிச்சிரித்தலோடும்.

(இ-ள்.) இவ்வண்ணம் உடல்கூனி வளைந்து நெளிந்து ஒருவிகடம் இயற்ற நோக்கி - இவ்வாறு உடல் கூனிவளைந்து நெளிந்து ஒருவிகடநடத்தைச் செய்யப் பார்த்து, செவ்வண்ணம் வயவீரன் வறிது நகைதோற்றுதலும்-செந்நிறமுடைய வீரபத்திரக்கடவுள் புன்னகைசெய்தருள, திரண்டோர் எல்லாம் மைவண்ணம் கடல் கிளர்ந்தால் என்னநகைத்தார் - அங்குக் கூடினவரெல்லோரும் கரியநிறம் வாய்ந்த கடல் கிளர்ந்தெழுந்தனபோல நகைத்தனர், அக்காலைமலர்மேல் வைகும் அவ்வண்ணம் நகுபைங்கண் வெண்தலையும் அதுநோக்கி சிரித்தலோடும்- அந்தக்காலத்தில் தாமரை மலர்மேல் வசிக்கும் அந்தப்பிரமனது விளங்கும் பசியகண்களையுடைய உக்கியதலையும் அவனைநோக்கிச்சிரிக்க. (கசு)

போராழியதன்வாயிற்கழிந்துபுவிமிசைவீழப்பொருக்கென்றங்கை
யோரானைமுகக்கடவுளதுகவர்ந்தங்கறியான்போன்றிருப்பநோக்கிப்
பேராண்மைப்படைத்தலைவனினிச்செயலேதென்றழுங்கிப்பேதுற்றந்தச்
சீராளன்றிருமுன்புங்கைகண்டவிகடநடஞ்செய்துவேண்ட.

(இ-ள்.) போர் ஆழி அதன்வாயில் கழிந்து புவிமிசைவீழ- போர்த்தொழிற்குரிய சக்கரம் அதன் வாயினின்றுங்கழிந்து நிலவுலகின்மேல் வீழ, பொருக்கென்று அங்கை ஓர் ஆனைமுகக்கடவுள் அதுகவர்ந்து அங்கு அறியான்போன்று இருப்ப - விரைந்து அழகிய திருக்கரத்தால் பொலிவமைந்த விநாயகக்கடவுள் அச்சக்கரத்தைக் கவர்ந்து அவ்விடத்து அறியாதவனைப்போலிருக்க, பேர் ஆண்மை படை தலைவன் நோக்கி-பெரிய ஆண்தன்மையையுடைய விசுவசேனன் பார்த்து, இனிசெயல் ஏது என்று அழுங்கி பேதுற்று - இனிச்செய்வது யாதென்று மனம்புழுங்கி மயங்கி, அந்தசீராளன் திருமுன்பும் கைகண்ட விகடநடம்செய்து வேண்ட - அந்தவிநாயகன் சந்நிதியிலும் தனக்குக்கைவந்த விகடநடத்தைச்செய்து குறையிரக்க. (உ0)

ஏக்கறவானவனியற்றும்விகடநடநெடும்போதெம்பெருமானோக்கி
மாக்கருணைசுரந்தருளியாழியவன்றனக்களித்தான்வரத்தான்மிக்கீர்
போக்கறுமிக்காரணத்தாலன்றுமுதற்காஞ்சியினப்புழைக்கைத்தேவை
யூக்கமுறுந்திறல்விகடசக்கரவிநாயகனென்றுலகங்கூறும்,

(இ-ள்.) ஏக்கறவான் அவன் இயற்றும் விகடநடம் நெடும்போது எம்பெருமான்நோக்கி - தாழ்ந்துநின்று அவ்விசுவசேனன்செய்யும் விகடநடனத்தினை நெடுநேரம் எமது பெருமானாகிய விநாயகக்கடவுள் பார்த்தருளி, வரத்தால் மிக்கீர்-வரத்தால் மேம்பட்டவர்களே, மாகருணை சுரந்தருளி ஆழி அவன் தனக்கு அளித்தான்-பெரிய கருணைகூர்ந்தருளிச் சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை அவ்விசுவசேனனுக்குக் கொடுத்தருளினன், போக்கறும் இக்காரணத்தால்-குற்றமற்ற இந்தக்காரணத்தினால், அன்றுமுதல் காஞ்சியில் அபுழைக்கை தேவை - அக்காலமுதல் காஞ்சியிலெழுந்தருளிய விநாயகக்கடவுளை, ஊக்கம் உறும் திறல் விகடசக்கரவிநாயகன் என்று உலகம் கூறும் - உள்ளக்களிப்பு மிக்க வெற்றிவாய்ந்த விகடசக்கர விநாயகனென்று உலகிலுள்ளோர் கூறுநிற்பர்.

ஏக்கறவு தாழ்ந்துநிற்றல் "உடையார்முன்னில்லார்போலேக்கற்றுங்கற்றார், கடையரேகல்லாதவர்" என்னுந் திருக்குறளால் அறிக. (௨௧)

ஷ தம்.

விகடசக்கரவிநாயகனளித்தவத்திகிரி
அகமலர்ச்சியாற்பெற்றனன்மீண்டனனகிலம்
புகழுமால்புரத்தெய்தினன்பொலம்புனையாடைத்
தகவினனடியிறைஞ்சியச்சக்கரமீந்தான்.

(இ-ள்.) விகடசக்கரவிநாயகன் அளித்த அதிகிரி அகமலர்ச்சியாற் பெற்றனன் மீண்டனன் - விகடசக்கரவிநாயகர் கொடுத்த அந்தச்சக்கரத்தை மனமகிழ்ச்சியால்பெற்று மீண்டு, அகிலம்புகழும் மால்புரத்து எய்தினன் - எல்லாவுலகமும் புகழும் வைகுந்தத்தையடைந்து, பொலம்புனை ஆடை தகவினன் அடி இறைஞ்சி அ சக்கரம் ஈந்தான் - பீதாம்பரத்தையணிந்த அத்திருமாலது திருவடியைவணங்கி அச்சக்கரத்தைத் தந்தனன்.

பெற்றனன், மீண்டனன், எய்தினன் முற்றெச்சங்கள். (௨௨)

கண்டனன்பணிப்பாயலான்கவலேகண்முழுதும்
விண்டனன்றழீஇக்கொண்டனன்மீமிசைவியப்புக்
கொண்டனன்றனதமைச்சியல்பூண்டவக்குரிசிற்
கண்டர்போற்றுசேனுபதித்தலைமையன்றளித்தான்.

(இ-ள்.) பணிபாயலான் கண்டனன் கவலைகள் முழுதும் விண்டனன் தழுவி கொண்டனன் - ஆதிசேடனைப் பாயலாகவுடைய திருமால்கண்டு கவலைகள் முற்று நீங்கித் தழுவிக்கொண்டு, மீமிசை வியப்புகொண்டனன் - அளவிறந்த வியப்பினை மேற்கொண்டு, தனது அமைச்சியல்பூண்ட அக்குரிசிற்கு - தனது அமைச்சியலை மேற்கொண்ட அவ்விசுவசேனனுக்கு, அண்டர்போற்று சேனுபதிதலைமை அன்று அளித்தான் - தேவர்கள் வணங்கும் சேனுபதிபட்டத்தை அக்காலத்தில்

மீமிசை மிகுதிப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். அமைச்சியலின்மேல் சேனுபதிப்பட்டமும் தந்தனன் என்பார் அண்டர்போற்று சேனுபதித்தலைமையன்றளித்தான் என்றார். (௨௩)

உருத்திரச்செயல்வீரபத்திரன்புடையுற்றுத்
திருத்தகும்படைபெற்றவாசெப்புகென்றிசைக்குங்
கருத்தனுக்கவணிகழ்ந்தனயாவையுங்கரைந்தா
னருத்திகூர்படைக்கிறையவனச்சுதன்கேளா.

(இ-ள்.) உருத்திரச்செயல் வீரபத்திரன்புடை உற்று திரு தகும்படை பெற்ற ஆறு செப்புக என்று இசைக்கும் கருத்தனுக்கு - உருத்திர மூர்த்தியின் செயலையுடைய வீரபத்திரக் கடவுள்பாலடைந்து செல்வமிக்க சுதரிசனமென்னுஞ் சக்கரத்தைப் பெற்றவகையைச் சொல்லக்கடவாயென்று கூறுந் திருமாலுக்கு, அருத்திகூர் படைக்கு இறையவன் அவண் நிகழ்ந்தன யாவையும் கரைந்தான் - விருப்பமிக்க சேனைக்குத் தலைவனாகிய விசுவசேனன் அவ்விடத்து நிகழ்ந்த செய்திகள் யாவும் எடுத்துக்கூறினன், அச்சுதன்கேளா - அத்திருமால் கேட்டு.

ஒறுத்தற் செயல்தோன்ற உருத்திரச் செயல் எனவும், காத்தற்றொழிற்குரிய படையென்பது தோன்றத் திருத்தகும் படையெனவும், காக்கும் வினைமுதல் என்பது தோன்றக் கருத்தனுக்கு எனவும், அழியாமையை யுடையோன் என்பது தோன்ற அச்சுதனெனவுங் கூறினர். ஆறு ஆ தொகுத்தல். (௨௪)

முறுவல்பூத்தனன்மொழியுமவ்விகடநாடகத்தை
யுறுவரேறனையெம்மெதிர்காட்டுகென்றுரைப்பத்
தெறுபெரும்படைக்கிறைவனுந்திருந்தவைக்களத்து
நறுமலர்த்துழாயவனெதிர்நடித்தனனதனை.

(இ-ள்.) முறுவல் பூத்தனன்-புன்முறுவல் செய்து, உறுவர் ஏறு அன்னாய் - முனிவராகிய யானைகளுக்கு ஆண்சிங்கம்போல்வாய், மொழியும் அ விகடநாடகத்தை எம் எதிர் காட்டுக என்று உரைப்ப -நீகூறிய அந்தவிகடக் கூத்தினை எமக்கெதிரே காட்டக் கடவையென்று, தெறுபெரும் படைக்கு இறைவனும் - கொல்லும் பெரிய சேனைக்குத் தலைவனாகிய விசுவசேனனும், திருந்து அவைக்களத்து நறுமலர்த் துழாய் அவன் எதிர் அதனை நடித்தனன் - திருந்திய அவைக்களத்தில் நறுமணங் கமழுந் துளபமாலையணிந்த அத்திருமாலுக்கெதிரே அக்கூத்தினை நடித்தான். (௨௫)

நோக்கியற்புதமெய்தினன்மாயவனுவல்வா
னூக்குமாற்றலோயுள்ளமும்விழிகளுமுவகை
மீக்கொளப்புரிவியத்தகுமிப்பெருவிகடம்
பார்க்கில்யாவரேகழிபெருமகிழ்ச்சியிற்படாதார்.

(இ-ள்.) நோக்கி அற்புதம் எய்தினன் மாயவன் நுவல்வான் - பார்த்து அதிசயங்கூர்ந்து திருமால் கூறுவான், ஊக்கும் ஆற்றலோய் - பகைவரைப் புறங்காணும் வன்மையையுடையவனே, உள்ளமும் விழிகளும் உவகை மீக்கொள புரி வியத்தகும் இ பெரு விகடம் பார்க்கில் - மனமும் கண்களும் களிகூர நீ செய்யும் விரும்பத்தகும் இப்பெரிய விகடக் கூத்தைப் பார்த்தால், யாவரே கழிபெருமகிழ்ச்சியில் படாதார் - யார்தான் மிக்கமகிழ்ச்சியைக் கூராதவர். (௨௬)

எமக்குநன்மகிழ்வளிக்குமிக்கூத்தினையிதன்மே
னமக்குமுன்னுறநலங்கெழீஇநடிக்குநம்மடியார்
தமக்குவேட்டனவழங்குவேந்தழன்மணிக்கதிர்க
ளிமைக்குங்காஞ்சியின்வரதராசப்பெயரெம்முன்.

(இ-ள்.) தழல் மணிகதிர்கள் இமைக்கும் காஞ்சியின் - மாணிக்கங்களொளி வீசுங் காஞ்சித்திருநகரில், வரதராசப் பெயர் எம்முன் - வரதராசனென்னும் பெயரையுடைய வெமது சந்நிதியில், எமக்கு நல்மகிழ்வு அளிக்கும் இ கூத்தினை- எமக்கு நல்ல மகிழ்ச்சியைத்தரும் இந்த விகடக்கூத்தினை, இதன்மேல நமக்குமுன் உற நலம் கெழுவி நடிக்கும் நம் அடியார் தமக்கு வேட்டன வழங்குவேம் - இந்நாள் முதல் நமக்கு முன்னமைய அன்பினலங்கூர்ந்து நடனஞ்செய்யும் நமது அடியவர்க்கு விருப்பினவற்றைத் தருவேம்.

இதனால் விகடக்கூத்தால் விளையும் பயன் கூறப்பட்டது. (௨௭)

எவர்களித்தனிக்கூத்தினையியற்றுமார்வத்தா
ரவர்களேயெமக்கினியவர்சாலவென்றருளிப்
புவனமேத்துமத்திகிரியைவிதியுளிப்பூசித்
துவகைமீக்கொளக்கரமிசைக்கொண்டனனுரைப்பான்.

(இ-ள்.) எவர்கள்இத்தனிக் கூத்தினை இயற்றும் ஆர்வத்தார் - எவர்கள் இந்த வொப்பில்லாத விகடக்கூத்தினைச் செய்யும் விருப்பினையுடையவரோ, அவர்களே எமக்கு சால இனியவர் என்று அருளி - அவர்களே எமக்கு மிகவும் இனியவரென் றருள்செய்து, புவனம் ஏத்தும் அ திகிரியை விதியுளி பூசித்து - நிலவுலகு வணங் கும் அச்சக்கரத்தை விதிவழியே பூசித்து, உவகை மீக்கொள கரமிசை கொண்ட னன் உரைப்பான் - களிப்பு மீதூரத் தனது கையின்மேலேந்திக் கூறுவான்.

சிவபெருமானிடத்திருந்து பெற்ற சுதரிசனமாதலால் விதியுளிப்பூசித்து என்றார். (உஅ)

முன்னைநாளுயர்கச்சியின்வயிரவமுதல்வன்
றன்னைவேண்டிநின்றிரந்துசூலத்தலைக்கிடந்த
நின்னையான்விடுவித்தனனதற்குநேராக
வின்னதாயகைம்மாறுநீயளித்தனையிந்நாள்.

(இ-ள்.) முன்னைநாள் உயர்கச்சியின் வயிரவ முதல்வன் தன்னை வேண்டி நின்று இரந்து சூலத்தலை கிடந்த நின்னையான் விடுவித்தனன் - முன்னாளில் வளத்தா லுயர்ந்த காஞ்சியின்கண் வயிரவக்கடவுளைவேண்டி மிகவுங் குறையிரந்து அச்சூலத் தினுனியிற்கிடந்த வுன்னை நான் விடுவித்தேன், அதற்கு நேராக இன்னது ஆயகைம் மாறு இந்நாள் நீ அளித்தனை - அதற்கொப்பாக இத்தன்மையையுடைய பிரதியுபகா ரத்தை இந்நாளில் நீ செய்தாய்.

செய்ந்நன்றி யறிவோர்க்குச் செய்யும்நன்றி பயன்படாதொழியாதென்பான் சூலத்தலைக்கிடந்த நின்னையான்விடுவித்தன னதற்குநேராக, இன்னதாயகைம்மாறுநீ யளித்தனையிந்நாள் என்றான். (உகூ)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

செய்ந்நன்றியறிவோருமதன்பயனைப்பெறுவோருந்திரைநீர்வைப்பி
னின்னன்றியாருளரோகாஞ்சியினீதொழுதேத்துமிலிங்கம்போற்றி
யுன்னன்பின்செயலிதனைக்கேட்டோர்களெம்முலகமுறுகவென்றுத்
தன்னன்பின்கிழவோனைத்தழீஇக்கொண்டுமகிழ்ந்திருந்தான் சார்ங்கபாணி.

(இ-ள்.) செய் நன்றி அறிவோரும் அதன்பயனை பெறுவோரும் - ஒருவர் செய்த நன்றியை அறிகின்றவர்களும் அச்செய்ந்நன்றியாலாய பயனை மீட்டளிக்கக் கருதுகின்றவர்களும், திரைநீர்வைப்பில் நின் அன்றி உளர் யாரோ - கடல்சூழ்ந்த நிலவுலகில் நின்னையன்றி வுள்ளவர்யாரோ, காஞ்சியில் நீ தொழுது ஏத்தும் இலிங் கம்போற்றி - திருக்காஞ்சியில் நீ வணங்கித்துதிக்கும் சிவலிங்கத்தை வந்தித்து, உன் அன்பின்செயல் இதனை கேட்டோர்கள் - உனது அன்பால் நிகழ்ந்த இச்செய் தியைக் கேட்டவர்கள், எம் உலகம் உறுக என்று - எமது பதத்தையடையக்கடவ ரென்றுகூறி, சார்ங்கபாணி தன் அன்பின் கிழவோனை தழீஇக்கொண்டு மகிழ்ந்து இருந்தான் - கோதண்டத்தை யேந்திய திருக்கரத்தையுடைய திருமால் தனது அன்பிற்குரிய விசுவசேனனை தழுவி மகிழ்கூர்ந்திருந்தனன்.

பிறர்செய்த நன்றியை மறவாதிருப்போருமரியர், அதற்குக் கைம்மாறென்று செய்வோமென்று அமையம்பார்ப்போருமரியர், இவ்விருதிறத்தாரியல்பையும் நின்னி டத்திற்கண்டேனென்பான், செய்ந்நன்றியறிவோரு மதன்பயனைப்பெறுவோருந் தி ரைநீர்வைப்பின் - நின்னன்றி யாருளரோ என்றான். (கூ0)

விடுவச்சேனீசப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ககசுடு.

# தக்கீசப்படலம்.

கலிநிலைத்துறை

விரவினோர்தணக்கலாற்றாவிடுவச்சேனீச்சரத்தின்
வரவினைத்தெரிந்தவாறுவகுத்தெடுத்துரைத்தேமிப்பா
லிரவெரியாடுமெம்மானினிதமர்நெடுங்கீழ்ப்பாங்கர்க்
கரவிலார்க்கருளுந்தக்கீச்சரத்தியல்கட்டுரைப்பாம்

(இ-ள்.) விரவினோர் தணக்கல் ஆற்றாத விடுவச்சேனீச்சரத்தின் வரவினை தெரிந்த ஆறு வகுத்து எடுத்து உரைத்தேம் - தன்னைக் கலந்து வழிபட்டோர் பிரிதற் கமையாத விடுவச்சேனீச் சரத்தின் வருகையைத் தெரிந்தவண்ணம் வகுத்து எடுத்துக் கூறினேம், இப்பால் - இதன்மேல், இரவு எரி ஆடும் எம்மான் இனிது அமர்நெடும் கீழ்பாங்கர் - இரவில் தீயாடிய எமதிறைவன் இனிதாக வெழுந்தருளிய அப்பெரிய திருப்பதியின் கீழ்த்திசையில், கரவு இலார்க்கு அருளும் தக்கீச்சரத்து இயல் கட்டுரைப்பாம் - பொய்யடிமை யில்லாதவர்க்கு அருளும் தக்கீச்சரத்தின் வரலாற்றைத் தொகுத்துக் கூறுவாம்.

பிரமன் இருவகைப் பரார்த்தத்தில் இரண்டாம் பரார்த்த மிரவாதலால் இரவு எனவும், அதுவே சங்காரகால மாதலால் எரியாடுந் தேவையெனவும், மெய்யடிமை யுடையோர்க்கு அருள்வோன் ஆதலால் கரவிலார்க் கருளுமெனவுங் கூறினார். (க)

பொறிவரிச்சுரும்புமூசப்புரிமுறுக்குடைந்துவிள்ளுஞ்
செறியிதழ்ப்புழற்காற்கஞ்சத்திருமலர்ப்பொகுட்டுவாழ்க்கை
யறிவனதேவலாற்றாலடல்வலித்தக்கனென்போன்
மறிவருவரத்தாற்பல்லோர்மைந்தரைப்படைத்தான்மன்னோ.

(இ-ள்.) பொறி வரி சுரும்புமூச புரிமுறுக்கு உடைந்து விள்ளும் - புள்ளியும் வரியும் அமைந்த வண்டுகள் புறத்தில் மொய்க்கக் கட்டின் முறுக்குடைந்து மலரும், செறி இதழ் புழல்கால் கஞ்சம் திருமலர் பொகுட்டு வாழ்க்கை- நெருங்கிய இதழையும் தொளையமைந்த தண்டையுமுடைய பொலிவுவாய்ந்த தாமரைமலரின் பொகுட்டில் வாழும் வாழ்க்கையையுடைய, அறிவனது ஏவல் ஆற்றால் அடல்வலி தக்கன் என்போன் - பிரமனது ஏவல்வழியால் மிக்க தவவன்மையையுடைய தக்கனென்று சொல்லப்படுவோன், மறிவருவரத்தால் பல்லோர் மைந்தரை படைத்தான்- அழிதலில்லாத தவப்பேற்றினால் அரியஸ்வன் முதலிய பலபுத்திரர்களைப்பெற்றான்.

அங்கவர்தக்கனேவலாற்றினாற்படைப்பானெண்ணித்
தங்களுண்முயலுங்காலைத்தந்திரிக்கருவிச்சால்பி
னங்கையோர்பாகற்பேணுநாரதனவர்பாற்றோன்றி
யிங்குநீருழக்குஞ்செய்கையென்னெனக்கடாவவன்னோர்.

(இ-ள்.) அங்கு அவர் தக்கன் ஏவலாற்றினால் படைப்பான்எண்ணி - அவ்விடத்துஅவ்வரியஸ்வன் முதலிய புத்திரர்கள் தமது தந்தையாகிய தக்கனது ஏவல் வழியினால் படைக்கக் கருதி, தங்களுள் முயலுங்காலை - தம்முள் படைக்க முயலுங் கால், தந்திரி கருவிசால்பின் நங்கைஓர் பாகன்பேணும் நாரதன் - யாழ்நரம்புக்கருவியில் குரல்முதலிய இசையெழுப்பும் நிறைவால் பாகம் பெண்ணோடாகிய இறை

வனை வழிபட்டுப்பாடும் நாரதமுனிவன், அவர்பால் தோன்றி இங்குநீர் உழக்கும் செய்தி என்னெனகடாவ-அம்முனிவர்களிடத்து வெளிப்பட்டு இவ்விடத்து நீர்வருந்திமுயலுஞ் செய்தியாதென்று வினவ, அன்னோர் - அந்த அரியஸ்வன் முதலிய முனிவர்கள். (௩)

படைமினென்றெம்மைத்தாதைபணித்தனன்படைக்குமாற்ற
லடைவெமக்கருளிச்செய்யாயையவென்றிறுத்தார்கேளா
நடைநெறிபிறழாவாய்மைநாரதன்மகதிநல்யா
ழுடையவனனையார்தேறச்செவியறிவுறுக்கலுற்றான்.

(இ-ள்.) படைமின் என்று எம்மை தாதைபணித்தனன் - படையுங்களென்று எங்களை எமது தந்தையாகிய தக்கன் ஏவினான், படைக்கும் ஆற்றல் அடைவு எமக்கு அருளிச்செய்யாய் - படைக்கும் வலிமையினடைவை எங்களுக் கருளுவாய், ஐய என்று இறுத்தார் - ஐயனே என்று வினவினார், கேளா - அதனைக்கேட்டு, நடைநெறிபிறழாதவாய்மை நாரதன் மகதிநல்யாழ் உடையவன் - வேதநடையினெறியினின்றும் பிறழாத உண்மையையுடையநாரதனென்னும் பெயரிய மகதி வீணையையுடையோன், அனையார்தேற செவி அறிவுறுக்கலுற்றான்-அவர்கள்தெளியச்சொல்லத்தொடங்கினான். (௪)

ஐந்தொழினடாத்துமுக்கணையனேயுலகமெல்லா
மைந்துறப்படைக்கின்றானன்மற்றுநீருழந்தீராயிற்
பந்தமேபயக்கும்பந்தப்படைப்பினாற்பயப்பதென்னே
வெந்தளைப்பட்டோர்வேறுநிகளமும்விழைவரோயோ.

(இ-ள்.) ஐந்தொழில் நடாத்தும்முக்கண் ஐயனே உலகம் எல்லாம் மைந்துஉறபடைக்கின்றான் - படைப்பு முதலியவைந்தொழில்களை நடத்தும் மூன்றுகண்களையுடைய சிவபெருமானே உலகனைத்தும் நிலைபெறச் சிருட்டிக்கின்றனன், மற்றுநீர் உழந்தீர் ஆயின்- அவனொழிய நீங்கள் இத்தொழிலில் வருந்தி முயல்வீரானால், பந்தமேபயக்கும் பந்தப்படைப்பினால் பயப்பது என்-பந்தத்தைத்தரும் பந்தமாகிய சிருட்டித்தொழிலால் உங்களுக்கு வரும்பயன் யாது, வெந்தளைப்பட்டோர் வேறுநிகளமும் விழைவரேயோ - கொடியவிலங்கின் கோட்பட்டோர்கள் அதன்மேல் வேறொருவிலங்கினையும் பூண விரும்புவரோ. (விரும்பாரென்றபடி)

படைப்பு, நிலை, ஒடுக்கம், மறைப்பு, அருள் என்னும் ஐந்தொழில்களும் சூரியன்சந்நிதியில் தாமரை மலர்தலுங் குவிதலும் இயல்பாதல்போலத் தனது சந்நிதியில் படைப்புமுதலிய ஐந்தொழில்களும் நிகழத் தான் விகாரமின்றி யிருப்பானென்னும் பொருளாற்றல் தோன்ற ஐந்தொழினடாத்தும் எனவும், தனக்கென வின்றி யான்மாக்களுக்குப் பாகம்வருவித்தற் பொருட்டுத் தனதிச்சாஞானக் கிரியைகளால் படைக்கின்றான் என்பதுதோன்ற மைந்துறப் படைக்கின்றான் எனவும், நீவிர்படைக்கத் தொடங்கியது புகழைவிரும்பியாதலால் அது தோன்றப்பந்தமே பயக்குமெனவும், அது தம்பொருட்டாதல் தோன்றப் பந்தப்படைப்பினாலெனவும், இயல்பாகவே பாசமுடைய நீங்கள் வேறுமோர் பெரும்பாசத்தை விரும்பினீரென்பது தோன்ற வெந்தளைப்பட்டோர் வேறுநிகளமும் விழைவரேயோவெனவுங் கூறினார். மற்றுபிறிதுபொருளில்வந்த இடைச்சொல். (௫)

பிணிப்புறுநிகளநீக்கும்பெற்றியேயெவரும்பெட்பர்
கணிப்பருந்தவத்தான்மிக்கீர்தெளிமினோகருணைவெள்ள

மணிக்களத்திறைவன்பாதம்வழிபடலொன்றேயன்றிப்
பணித்திடுமெவையுந்தீயபந்தமேபயக்குங்கண்டீர்.

(இ-ள்.) எவரும் - உலகில்யாவரும், பிணிப்பு உறுநிகளநீக்கும் பெற்றியேபெட்பர் - தம்மைச் சிறைப்படுத்தும் விலங்கினை நீக்கும் தன்மையையே விரும்பாநிற்பர், கணிப்பரும் தவத்தான் மிக்கீர் தெளிமின் - வரையறுத்த தவத்தான் மேம்பட்டவரோ யாம் கூறுவதைத் தெளிந்துணருங்கள், கருணைவெள்ளம் மணிக்களத்து இறைவன் பாதம் வழிபடல் ஒன்றே அன்றி - கிருபாசமுத்திரமாகிய இறைவனது திருவடிக்கீழ் வழிபடுதலொன்றே பந்தமொழிதலன்றி, பணித்திடும் எவையும் தீயபந்தமே பயக்கும்கண்டீர்கூறும் எத்தொழிலும் கொடியபந்தமே தாராநிற்கும்.

உலகிற் சுறரேருமன்றி யேனையோரும் தமது சிறையினைநீக்க முயலுவர், நீவிர் சிறைப்பட முயலுகின்றீரென்பார் பிணிப்புறு நிகளநீக்கும் பெற்றியே யெவரும் பெட்பர் எனவும், தவத்தாலாயபயனை யடைகிலீர் என்பார்கணிப்பருந்தவத்தான் மிக்கீர் தெளிமினோ எனவுங்கூறினார். (சு)

ஆருயிர்க்குறுதிப்பேறுமரும்பயனெவற்றினுள்ளுஞ்
சீரியமுத்தியொன்றேசிறந்ததாமேனைப்பேறு
பேரிடர்ப்பாலவாகுமாதலாற்பேசக்கேண்மி
னாரியோர்பாகன்மேயகச்சிமாநகரநண்ணி.

(இ-ள்.) ஆர் உயிர்க்கு உறுதிபேறும் அரும்பயன் எவற்றின் உள்ளும் - பெறுதற்கரிய வுயிர்களுக்கு உறுதிப்பேறுகிய அடைதற்கரிய பயன்களெவற்றினுள்ளும், சீரியமுத்தி ஒன்றே சிறந்தது ஆம் - சிறந்த முத்திப்பேறொன்றே மேம்பட்டதாம், ஏனைபேறு பேரிடர்பால ஆகும் - மற்றப்பேறுகள் துன்பத்தின் பகுதியவாகும், ஆதலால் பேசகேண்மின் - ஆதலால் நான்சொல்லக் கேளுங்கள், நாரி ஓர்பாகன் மேய கச்சிமா நகரம் நண்ணி - உமையம்மையை யோர்பாகத்திலுடைய இறைவனெழுந்தருளிய கச்சியென்னும் பெரிய திருநகரத்தை யடைந்து.

சற்கருமங்களிற் றலைப்படும் உயிர்கள் மக்களுயிர்களாதலால் ஆருயிர் எனவும், அச் சற்கருமங்கள் பசுபுண்ணியங்களாதலில் அதனால் வரும்பயன் அத்துணைச் சிறப்பின் றாதலால் அரும்பய னெவற்றினுள்ளும் எனவும், சிவபுண்ணியத்தால் வரும் முத்திப்பயனொன்றே யழியாததால் சீரியமுத்தியொன்றே சிறந்ததாமெனவும், அதுவொழிந்த அந்தச் சற்கருமங்களால்வந்த சுவர்க்காதி போகங்கள் பந்தத்தைத் தருவதாதலால் பேரிடர்ப்பால வாகுமெனவும், அம்முத்திப் பேறடைவதற்குச் சரியைமுதலிய நான்குஞ் சாதனங்களாதலால் நாரியோர்பாகன் மேய கச்சிமாநகர நண்ணியெனவுங் கூறினார்.

சற்கருமங்களிவை என்பதும் அவற்றால்வரும் பயனழியும் என்பதும்
"தானமியாகந்தீர்த்தமாச்சிரமந்தவங்கள் - சாந்திவிரதங்கன்மயோகங்கள்சரித்தோர்
ஈனமிலாச்சுவர்க்கம்பெற்றிமைப்பளவின்மீள்வர்" எனவும்,
அச்சற்கருமங்களில் மேம்பட்டு முத்தியைத் தருவது சரியைமுதலிய என்றது.
"ஈசனியோகக்கிரியாசரியையினினின்றோர் - ஊனமிலாமுத்திபதம்பெற்றுலகமெல்லாம், ஒடுங்கும்போதரன்முனிலாதொழியினுற்பவித்து - ஞானநெறியடைந்தடைவர்சிவனையங்கு - நாதனைமுன்னிற்கினணுகுவர்நற்றோே"
எனவரும் சிவஞான சித்தியாராலுணர்க. (எ)

சிவலிங்கநிறுவிப்போற்றித்திகழ்சிவஞானப்பேற்றாற்
கவலும்பொய்ப்பிறவிமாசுகழுவிவீடுறுமினென்று

நுவலுஞ்சீர்முனிவர்கோமானேனைகழலிறைஞ்சியேத்தித்
தவலின்றத்தக்கனீன்றூர்தொழிறலைநின்றுய்ந்தார்.

(இ-ள்.) சிவலிங்கம் நிறுவிபோற்றி- சிவலிங்க தாபனஞ்செய்து வழிபட்டு, திகழ்சிவஞானம்பேற்றால்-விளங்கும் சிவஞானப் பேற்றினால், கவலும்பொய் பிறவி மாசு கழுவி வீடு உறுமின் என்று- துன்புறுத்தும் வாழ்க்கையமைந்த பிறவி என்னும் அழுக்கைக்கழுவி முத்தியை யடையுங்களென்று, நுவலும் சீர்முனிவர் கோமான் நோன்கழல் இறைஞ்சி ஏத்தி- கூறுஞ் சிறப்புவாய்ந்த நாரதமுனிவரது அடைந்தோர் துன்பத்தை யொழிக்கும் வன்மைவாய்ந்த திருவடியை வணங்கித் துதித்து, தக்கன ஈன்றூர் தவல் இன்று அதொழில் தலைநின்று உய்ந்தார்-தக்கனாற் பெறப்பட்ட அரிய ஸ்வன்முதலிய முனிவர்கள் ஓர் கேடில்லாது அந்தச் சிவார்ச்சனைத் தொழிலில் நின்று முத்திப்பேறு பெற்றூர்கள்.

சிவலிங்கபூசனையாற்சிவஞானம்கைகூடும், அச்சிவஞானத்தால்பிறவி நீங்கி முத்திவாய்க்கும் என்பார் சிவலிங்க நிறுவிப்போற்றித் திகழ்சிவஞானப்பேற்றூற் - கவலும்பொய்ப்பிறவிமாசுகழுவிவீடுறுமினென்று என்றூர்.

சிவலிங்கபூசனையாற்சிவஞானம் அடைந்து முத்தியடைவார் என்றதை
" ஈசனியோகக்கிரியாசரியையினினின்றோர்" என முன்னெடுத்துக் காட்டிய
சித்தியாரால் உணர்க. (அ)

வினைவலித்தக்கன்கேளாவெய்துயிர்த்தழுங்கிவேறு
தனையரைப்படைத்தானன்னோர்தமககுமம்முனிவனெய்தி
யினையவாறியம்பிமீட்பக்காஞ்சியினிலிங்கந்தாபித்
தனையவாறருச்சித்தேத்தியவர்களுமுத்தரானூர்.

(இ-ள்.) வினைவலி தக்கன்கேளா வெய்துயிர்த்துஅழுங்கி - தீவினையின்வன்மைவாய்ந்த தக்கன் கேட்டுப் பெருமூச்செறிந்து மனம்புழுங்கி, வேறுதனையரை படைத்தான் - வேறு புத்திரர்களைச் சிருட்டித்தனன், அன்னோர் தமக்கு அ முனிவன் எய்தி இனைய ஆறு இயம்பி மீட்ப - அப்புத்திரர்கட்கு அந்த நாரதமுனிவனடைந்து முன்னரவர்கட்குக் கூறியவண்ணமே கூறிச்சிவார்ச்சனை வழியிற்செலுத்த, காஞ்சியின் இலிங்கம் தாபித்து - அவர்களும் காஞ்சித் திருப்பதியிற் சென்று சிவலிங்கப் பெருமானைத் தாபனஞ்செய்து, அனைய ஆறு அருச்சித்து ஏத்தி அவர்களும் முத்தர் ஆனூர் தமக்கு முன்னோர் பூசித்தவண்ணமே தாமும் பூசித்து வணங்கிப் பின்வந்தோர்களும் சீவன்முத்தரானூர்கள். (க)

தக்கனூரிடருண்மூழ்கித்தழலெழநோக்கியென்றன்
மக்களைச்சிவன்பாலன்புமருவுறுத்துலகவாழ்க்கை
யொக்கநீகெடுத்தாய்மக்கண்மனையுனக்கின்மையாக
முக்கணற்குரியாயென்றுமுனிவனைச்சபித்துப்பின்னர்.

(இ-ள்.) தக்கனூர் இடர் உள் மூழ்கிதழல் எழநோக்கி - தக்கன் துன்பத்தில் மூழ்கிக் கோபமெழப்பார்த்து, என்தன் மக்களைச் சிவன்பால் அன்புமருவுறுத்து - எனது பிள்ளைகளைச் சிவனிடத்து அன்புகொளுவச்செய்து, உலகவாழ்க்கை ஒக்க நீ கெடுத்தாய் - உலகவாழ்வினை ஒருசேர நீ கெடுத்தனை (ஆதலால்) முக்கணற்கு உரியாய் - மூன்றுநேத்திரங்களுடைய சிவனுக்குரிய வழிபாடு பூண்டொழுகும் நாரத

முனிவனே, மக்கள்மனை உனக்கு இன்மை ஆக என்று - மக்களும் மனைவியும் உனக்கு இல்லாதொழியக் கடவதென்று, முனிவனைசபித்து-அம்முனிவனைச்சபித்து, பின்னர் - பின்பு. (௧0)

கன்னியர்தமையேபெற்றான்முனிவனுங்கனன்றுநோக்கி
நின்னுடைப்புதல்வரெல்லாநெறிச்செலவிடுத்தேனற்றா
லென்னைமற்சபித்தாய்பேதைத்தக்கநீயின்னேநெற்றித்
தன்னிடைவிழித்தவெம்மான்றண்டிக்கப்படுகவென்றான்.

(இ-ள்.) கன்னியர்தமையே பெற்றான் - பெண்களையே தக்கன் பெற்றனன். முனிவனும் கனன்று நோக்கி -நின்னுடை புதல்வர் எல்லாம் நெறிசெல விடுத்தேன் - நாரதமுனிவனுங் கோபித்துப் பார்த்து உன்னுடைய புத்திரர்களெல்லாரையும் முத்திநெறியிற் செல்லவிடுத்தேன், அற்று - அத்தன்மைத்தாக, என்னைமன் சபித்தாய் - என்னை உபசரியாது சபித்தனை, பேதைதக்க - பேதைத்தன்மையையுடைய தக்கனே, நீ இன்னே நெற்றிதன்னிடைவிழித்த எம்மான் தண்டிக்கபடுக என்றான் - நீ இப்பொழுது நெற்றியில் விழித்த விரூபாக்கத்தையுடைய எமதிறைவனால் தண்டிக்கப்படுவாயென்று சபித்தனர்.

மன் உபசரியாதென்னும் பொருண்மேனிற்றலால் ஒழியிசைப் பொருட்டு. (௧௧)

இவனிலையிதுவாமேனையிமையவர்தமைத்ததீசித்
தவமுனிசபித்தான்பார்ப்பான்றவறிலிதமியனென்னை
யவமுறப்பொருதெல்லீருமகாரணத்தெதிர்த்தீர்நீயிர்
சிவபிரான்வெகுளித்தீக்கோட்படுகெனச்செயிர்த்துமேனாள்.

(இ-ள்.) இவன் நிலை இதுவாம் - இத்தக்கனுடைய நிலைமை யிங்குக்கூறியதாம், பார்ப்பான் தவறிலிதமியன் - யானோ அந்தணன் சிறிதுங் குற்றமில்லாதவன் பின்னுந் துணையில்லாதவன், என்னை அவம் உறபொருது - என்னோடு வீணாகப் போர்செய்து, எல்லீரும் அகாரணத்து எதிர்த்தீர் - நீங்களெல்லீருங் காரணமின்றி எதிர்த்தீர்கள், நீயிர் சிவபிரான் வெகுளிதீ கோட்படுக என செயிர்த்து - நீங்கள் சிவபெருமானது கோபத்தீயால் கொள்ளப்படுக வெனக்கோபித்து, ஏனை இமையவர் தம்மை - மற்றைத்தேவர்களை, ததீசிதவமுனி சபித்தான்-ததீசி என்னும் பெயர்வாய்ந்த தவத்தையுடைய முனிவர் சபித்தனர்.

மூன்றனுருபு நிற்குமிடத்து இரண்டனுருபுவந்தது உருபு மயக்கம். (௧௨)

இருதிறத்தவர்க்குஞ்சாபம்பழுத்தவாறியம்புகின்றாங்
கருவியாழ்முனிவன்சீறிக்கழறியபின்னர்த்தக்கன்
றெருமருமயலின்மூழ்கிச்செருக்கினாற்புரமூன்றட்ட
வொருவனையன்றிவேள்வியுஞற்றுவான்றொடங்கினானால்.

(இ-ள்.) இருதிறத்தவர்க்கும் சாபம் பழுத்த ஆறு இயம்புகின்றாம் - தக்கன் தேவர்களென்னும் இருதிறத்தவர்க்கும் இட்டசாப முதிர்ந்து பயன்பட்ட விதத்தை இனிக்கூறுவாம், கருவியாழ்முனிவன் சீறிகழறிய பின்னர் - ஆயிரம் நரம்புகள் வாய்ந்த பேரியாழையுடைய நாரதமுனிவன் கோபித்துச் சபித்தபின், தக்கன் தெருமருமயலின்மூழ்கி செருக்கினால் - தக்கனனவன் சுழலும் மயக்கத்தில் மூழ்கி அகங்காரத்தால், புரம்மூன்று அட்ட ஒருவனை அன்றி வேள்வி உஞற்றுவான் தொடங்கினான் - திரிபுரங்களை நகைத்தெரித்த சிவபெருமானை அழையாது யாகஞ்செய்யத் தொடங்கினான். (௧௩)

மருத்துவர்முனிவர்சித்தர்வசுக்களாதித்தர்மற்றை
யுருத்திராயன்மாலேனோர்யாவருமுடங்குசேரத்
திருத்தகவிளித்துவேள்விசெய்யுழித்ததீசிமேலோ
னுருத்தனனவையைநோக்கித்தக்கனுக்குரைக்கலுற்றான்.

(இ-ள்.) மருத்துவர் முனிவர்சித்தர் வசுக்கள் ஆதித்தர் மற்றை உருத்திரர் அயன்மால் ஏனோர் யாவரும் உடங்குசேர - மருத்துவர்களும் முனிவர்களும் சித்தர்களும் வசுக்களும் சூரியர்களும் மற்றை உருத்திரர்களும் பிரமனும் விஷ்ணுவும் அவரொழிந்தோர் எல்லோரும் ஒருங்குசேர, திருதகவிளித்து வேள்வி செய்யுழி-சிறப்புவாய்ப்ப அழைத்து வேள்விசெய்யு மிடத்து, ததீசிமேலோன் உருத்தனன் அவையைநோக்கி தக்கனுக்கு உரைக்கலுற்றான் - ததீசியென்னு முனிவர்கோபித்துச் சபையிலுள்ளோரை நோக்கித் தக்கனுக்குச் சொல்லத் தொடங்கினா.

இங்குக் கூறிய வுருத்திரர்கள் இந்திரன் பிரமன்முதலியோ ரண்டங்களில் அவர்களைக் காத்தற்கு நின்ற உருத்திரர்களை. உடம்படுமெய்யல்லாத வகரத்தோற்றம் செய்யுள் விகாரம். (௧௪)

அளித்தருள்பயக்கும்வேள்விக்கரசனாஞ்சிவனையீண்டு
விளித்திலையெவன்கொலென்றுவினாதலுந்தக்கன்சொல்லு
மிளிப்பறுமெச்சந்தன்னையெச்சத்தாற்றொழுகவென்னத்
தெளித்திடுஞ்சுருதியெச்சன்மாயவனெனவுஞ்செப்பும்.

(இ-ள்.) அளித்து அருள் பயக்கும் வேள்விக்கு அரசன் ஆம் சிவனை-பாதுகாத்து அருள்சுரக்கும் வேள்விக்குத் தலைவனாகிய சிவபெருமானை, ஈண்டு விளித்திலை எவன்கொல் என்று வினாதலும் தக்கன்சொல்லும்-இவ்விடத்துஅழைக்கவில்லை அது யாதுகாரணமென்று வினவத்தக்கன் கூறுவான், இளிப்பு அறும் எச்சம்தன்னை எச்சத்தால் தொழுக என்ன சுருதிதெளித்திடும்-இழிவிலலாத எக்ஞத்தை எக்ஞத்தால் வணங்கக் கடவாயென்று வேதந் தெளியக்கூறும், எச்சன் மாயவன் எனவும் செப்பும் - அந்த எக்ஞவடிவாயுள்ளவன் திருமாலே யெனவுங்கூறுநிற்கும்.

வேதமானது எக்ஞத்தை எக்ஞத்தால் பூசியென்று கூறுநின்றது என்பான் எச்சந்தன்னை யெச்சத்தாற் றொழுகவென்னத் தெளித்திடுஞ் சுருதியெனவும், முன்னுள்ள எச்சம் திருமாலை யுணர்த்தியதன்றி உருத்திரமூர்த்தியைக் கூறவில்லையே யென்பான் எச்சன் மாயவனென்று செப்பும் எனவுங்கூறினான்.

திருமாலுக்கு எச்சனெனப் பெயருள்ளதை
"தக்கனையுமெச்சனையுந் தலையறுத்து" எனத் திருவாசகத்தில் வருதல்காண்க.
வடமொழியிலுள்ள காஞ்சிமான்மியத்தில்

யஜ்ஞ:ஸாக்ஷாந்மஹாவிஷ்ணு: யஜ்ஞோ விஷ்ணு: ப்ரகீர்த்தித: । யஜ்ஞோ வை ஸாக்ஷாத்யஜ்ஞேயஜ்ஞஸாக்ஷாஜதி ॥ என வருதல்காண்க. (௧௫)

ஆதலினெச்சமூர்த்தியச்சுதனவனேயன்றிப்
போதருந்தமோகுணத்தினுருத்திரனீண்டுப்போதற்
கேதுவொன்றில்லைகாண்டியென்றலுமுனிவனாக்கு
நோதருமவையினுள்ளார்யாரையுநோக்கிச்சொல்வான்.

(இ-ள்.) ஆதலின் - ஆதலால், எச்சமூர்த்தி அச்சுதன் - எக்ஞமூர்த்தியாயுள்ளவன் திருமால், அவனே அன்றி-அத்திருமாலே வருதற்குரிய னல்லாமல், போ

தரும் தமோகுணத்தின் உருத்திரன் - அமைந்த தமோகுணத்தையுடைய உருத்திர மூர்த்தி, ஈண்டு போதற்கு ஏது ஒன்று இல்லைகாண்டி என்றலும் - இவ்விடத்திற்கு வருதற்குக்காரணம் ஒன்றில்லை காணென்று தக்கனகூற, முனிவன் நக்குநோதகும் அவையின் உள்ளார் யாரையும்நோக்கி சொல்வான் - ததீசிமுனிவர் நகைசெய்து வருந்தும் அவைக்களத்திலுள்ள யாரையும் பார்த்துச் சொல்லுவான்.

எக்ஞசொரூபி திருமால் ஆதலால், அவன் இங்கு வருதற்குரியனேயன்றித் தமோகுணத்தையுடைய உருத்திரமூர்த்தியிங்கு வருதற்குக் காரணம் என்னவென்பான் தமோகுணத்தி னுருத்திர னிங்குப்போதற் கேதுவொன்றில்லை காண்டியென்றலும் என்றான். தக்க னவைக்களத்திலுள்ளவர் பின்னர்த் தீராத்துன்ப முறுதலால நோதகுமவையினுள்ளார் என்றார். (௧௬)

எச்சத்நாலெச்சமென்னுமறைப்பொருளிதுவோகூறீர்
எச்சத்தின்வேறாமேனைக்கருமங்கட்கெச்சம்போல
வெச்சத்திற்குயர்ந்தோன்வெள்ளையேற்றினனெனுங்கருத்தா
லெச்சச்சொல்லதனான்முக்கட்பகவனையியம்புமங்கண்.

(இ-ள்.) எச்சத்நால் எச்சம் என்னும் மறைப்பொருள் இதுவோகூறீர் - எக்யத்தா லெக்யம் நடத்துகவென்னும் வேதப்பொருள் இதுவா நீங்கள்சொல்லுங்கள், எச்சத்தின் வேறாம் ஏனைக்கருமங்கட்கு - எக்யத்திற்கு வேறாகிய மற்றைச் சற்கருமங்கட்கு, எச்சம்போல - எக்யமுயர்ந்ததுபோல, எச்சத்திற்கு உயர்ந்தோன் - ஆராதிக்கப்படு பொருள்களுள் அதிகனுயுள்ளவன், வெள்ளை எற்றினன் என்னும் கருத்தால் - வெள்ளிய இடபவாகனத்தையுடைய உருத்திரமூர்த்தியே என்னுங் கருத்தினால், எச்சச் சொல் அதனால் - ஆராதிக்கப்பட்டதென்னும் பொருள்மேனின்ற எக்ஞச் சொல்லால், முக்கண்பகவனை அங்கண் இயம்பும் - திரிநேத்திரத்தையுடைய உருத்திரமூர்த்தியையே அவ்விடத்தில் இறைவன் என வேதங்கூறாநிற்கும்.

திருமாலால் எக்ய நடத்துகவென்று கூறுவதா வேதத்தின் கருத்தென்பார் எச்சத்தா லெச்சமென்னு மறைப்பொருளிதுவோகூறீர் எனவும், அதன் கருத்து எக்யங்களுக்கு வேறாகியதான முதலிய சற்கருமங்களுள் எக்ஞமுயர்ந்ததுபோல எக்ஞத்துக்கு அதிகனுயுள்ளவன் உருத்திரனேயென்பது என்பார் எச்சத்தின் வேறாமேனைக் கருமங்கட் கெச்சம்போல - எச்சத்திற் குயர்ந்தோன் வெள்ளையேற்றினனெனுங் கருத்தால் எனவும், முன்னுள்ள எச்சம் என்னுஞ் சொல்லுக்கு ஆராதிக்கப்படுவது என்னும் பொருளுண்மையால எக்ஞத்தால் ஆராதிக்கப் படுபவனென உருத்திரனையே வாதிப்பதென்பார் எச்சச்சொ லதனான் முக்கட்பகவனை யியம்புமங்கண் எனவுங்கூறினர். தானமுதலிய சற்கருமங்களாவன தானம், தீர்த்தம், ஆச்சிரமம், தவம், சாந்தி, விரதம், கன்மயோகங்கள் முதலியன.

[illegible]

[illegible] எனவருதல் காண்க. (௧௭)

ஆதலினெச்சந்தன்னாலணங்கொருபாகன்றன்னை
மாதவன்முதலாம்விண்ணோர்வணங்கினர்வழிபட்டுய்யப்
போதுவரென்பதன்றேயம்மறைப்பொருளாமன்றி
யேதமிலெச்சந்தன்னாற்றனைத்தொழுமென்பதாமோ.

(இ-ள்.) ஆதலின் எச்சம் தன்னால்- ஆதலின் எக்ஞத்தினால், அணங்கு ஒரு பாகன் தன்னை மாதவன்முதலாம் விண்ணோர் வணங்கினா - உமையை ஒருபாகத்தி லுடைய உருத்திரமூர்த்தியைத் திருமால் முதலிய தேவர்கள் வணங்கி, வழிபட்டு ய்ய போதுவர் என்பது அன்றே அம்மறை பொருளாம் - வழிபாடுசெய்ய வருவதல் லவா அந்த வேதத்தின் பொருளாம், அன்றி - அல்லாமல், ஏதம் இல் எச்சம்தன்னால் தன்னை தொழும் என்பது ஆம் ஓ - குற்றமில்லாத எக்யமானது தன்னால் தன்னைவ ணங்குமென்பது பொருளாமோ.

ஆராதிக்கப்படுகின்றவன் உருத்திரனேயென்பது தோன்ற ஆதலின் எனவும், திருமால்முதலிய தேவர்கள் எக்ஞம்செய்யுங் காலையில் அவிப்பாகம்பெறப் பிரமன்முதலியோரை யழைக்குங்கால் நமஸ்கார முன்னர்க்கூறுது வாளா கூறியதுபோலக்கூறுது, உருத்திரமூர்த்தியை யழைக்குங்கால் நமஸ்கார முன்னர்க்கூறி யழைப்பதே கரியாதலால் அவனே யாராதிக்கப் படுவான் என்பார் அணங்கொரு பாகன்றன்னை மாதவன்முதலாம் விண்ணோர் வணங்கினர் வழிபட்டுய்யப் போதுவரென்பதன்றே யம்மறைப்பொருளாம் எனவும், திருமால் எக்யஞ்செய்யுங்கால் உருத்திரமூர்த்திக்கு நமஸ்காரங்கூறி யழைக்கவேண்டிய தில்லையென வேதம் விதிக்காமையால் அத்திருமாலாலும் ஆராதிக்கப்படுவா னவனேயன்றி, எக்யமானது தன்னால் தன்னைவணங்கும் என்பது பொருளன்று என்பார், அன்றி ஏதமிலெச்சந்தன்னாற் றனைத் தொழுமென்பதாமோ எனவுங்கூறினார்.

[illegible] எனவருதல் காண்க.

சகந்தனிலெவருந்தம்மிலுயர்ந்தவர்தமைப்பூசிப்ப
ருகந்தவர்க்கன்றித்தம்மோடொத்தவரிழிந்தோர்தம்மை
யகந்தெறப்பூசைசெப்வாராருளார்விதியுமற்றே
மகந்தனக்கரசன்முக்கண்வள்ளலேயென்னும்வேதம்.

(இ-ள்.) சகந்தனில் எவரும் தம்மில் உயர்ந்தவர் தம்மைப் பூசிப்பர் - உலகத்தில்யாரும் தம்மிலுமுயர்ந்தோரைப் பூசிப்பர், அன்றி- அல்லாமல், உகந்தவர்க்கு-தம்மால் விரும்பப்பட்டவர்க்கும், தம்மோடு ஒத்தவர் இழிந்தோர் தம்மை - தமக்குச் சமமானவர்க்கும் இழிந்தவர்க்கும், அகம் தெறபூசை செய்வார் ஆருளார் - பாவமொழியப் பூசிப்பவர் எவருளர், விதியும் அற்றே - வேதவிதியும் அத்தன்மைத்தே, மகம்தனக்கு அரசன் முக்கண் வள்ளலே என்னும் வேதம் - எக்ஞத்திற்கு இறைவன் திரிநேத்திரத்தையுடைய உருத்திரனே என்று வேதங்கூறுநிற்கும்.

உலகியல்பு தம்மிலும் உயர்ந்தோரைப் பூசிப்பது வழக்கன்றித் தம்மோடொத்தவரையாயினு மிழிந்தோரையாயினும் பூசித்தல் வழக்கின்மையால் அகந்தெறப் பூசைசெய்வா ராருளார் எனவும், அதுவே வேதவிதியாதலால் வேள்விக் கரசன் உரு

த்திரனென்பது தோன்ற விதியுமற்றே - மகந்தனக் கரசன்முக்கண் வள்ளலேயென்னும் வேதம்எனவுங்கூறினார்.

நவஸீவெ-ஞஜ ரூதெஷீநொ நஸீஷாரொாஸீஷீயஷாம | ஸுவரா ணஸீதொாாஜா ஜொகூஷாபரீவெதிர்ஷாா: | எனவருதல் காண்க. (கக)

மலர்தலையுலகமெல்லாம்வழிபடுகடவுளென்று
மலைகட லுயிர்த்தநஞ்சமமுதுசெய்தருளும்மருச்
சிலையுடைமுதலேயென்றியாரிதுதெளியாரென்னப்
பலர்புகழ்ததீசிமேலோன்பகர்ந்தனன்பகரக்கேட்டு.

(இ-ள்.) மலர்தலை உலகம் எல்லாம் வழிபடு கடவுள் - பரந்த உலகத்திலுள்ளவர்களெல்லாம் வழிபட்டு வணங்குங்கடவுள், என்றும் அலைகடல் உயிர்த்த நஞ்சம் அமுது செய்தருளும் மேருசிலையுடைய முதலே என்று- எக்காலத்தும் அலைகளலைக்கும் கடல்தந்த நஞ்சினையமுது செய்தருளிய மேருவை வில்லாகவுடைய உருத்திரமூர்த்தியே என்று, இதுதெளியார் யார் என்ன - இதனைத் தெளிந்துணராதார் யாவரென்று, பலர்புகழ் ததீசிமேலோன் பகர்ந்தனன் - பலரும்புகழும் ததீசிமுனி சிரேஷ்டர் கூறினார், பகரக்கேட்டு - அவர் கூறக்கேட்டு.

தான்முதல்வனென்பதை யுணர்த்தற்கு நஞ்சத்தை ஸ்ரீகண்டத்தில் வைத்ததும் உலகை நிலைபெறச்செய்த மேருவை வில்லாககொண்டருளியதுமே சான்றாக அதனை யுணராதார் யாரென்பார் யாரிதுதெளியார் என்றார். தான்முதல்வனென்பது தெரிதற்கு நஞ்சுண்டு ஸ்ரீகண்டத்திலடக்கியதை முன்னர்ச் சூதசங்கிதையிற் காட்டியதையும், உள்ளே செல்லாது ஸ்ரீகண்டத்தில் நிறுத்தியதை மணிகண்டேசுரப் படலத்திலுங் காண்க.

ஶம்ஹாஷவணவயஜெ நஸவெ-ஹொவ ஷஜொவ்ருதெ || யெ ஜெநயஜஸீத ரூதாயஜும்ஶம்ஹாமஜமதாதிம | எனவருதல்காண்க

அவைக்களத்துறையும்பார்ப்பார்தருபொருட்காசைகூர்ந்து
கவர்த்தபுல்லறிவின்மான்றுகடுந்தொழிற்றக்கன்கூற்றே
சிவபுறப்புகலலோடுநெடுந்தகைமறுவில்காட்சித்
தவத்திறற்றதீசிசீறிவிப்பிரர்தம்மைநோக்கி.

(இ-ள்.) அவைக்களத்து உறையும் பார்ப்பார் - அவைக்களத்தில் வசிக்கும் முனிவர்கள், தருபொருட்கு ஆசை கூர்ந்து - தக்கன்தரும் பொருளுக்கு ஆசைகூர்ந்து - கவர்த்தபுல்லறிவின் மான்று - பிளவுபட்ட புல்லிய அறிவால் மயங்கி, கடுந்தொழில் தக்கன்கூற்றே சிவப்புற புகலலோடும்-கொடியதொழில்பூண்ட தக்கனது வார்த்தையையே வாய்மையென்று நடுநிலைமை யிகந்துகூற, நெடுந்தகை மறுவில்காட்சி தவம்திறல ததீசிசீறி - குற்றமற்ற தோற்றமே தவத்தின்வன்மையாக வமைந்த ததீசிமுனிவர் கோபித்து, விப்பிரர் தம்மைநோக்கி - அந்தணராகிய முனிவர்களைப் பார்த்து.

அதனைக்கேட்ட முனிவர் தக்கன்தரும் தானப்பொருளால் தமதுவறுமை நீங்க வந்தவர்களாதலால கவர்த்தபுல்லறிவின் மான்று கடுந்தொழிற் றக்கன்கூற்றே சிவப் புறப்புகலலோடும் எனவும், அவர்கள் நடுநிலைமையினின்று பிறழ்ந்து கூறினாராதலால் ததீசி சீறியெனவுங் கூறினார். (உக)

படுபொருள்வெஃகுநீராற்பார்ப்பனக்கடையர்காணீர்
நடுவிகந்துரைத்தவாற்றானடலைகூரொழுக்கம்பூண்டு
கெடுநெறிபற்றிச்சைவநிந்தையிற்கிளர்ச்சிகொண்டு
கொடுமுகக்கலியிற்றோன்றிக்கலாய்த்தனீரிடும்பைகூர்ந்து.

(இ-ள்.) படுபொருள் வெஃகும் நீரால் - அவன்கொடுக்கும் பொருளை நீங்கள்பொருளாக விரும்பிய தன்மையால், பார்ப்பனக்கடையர் - அந்தணர் சாதியுட் கடைப்பட்டவராய், நடு இகந்து உரைத்த ஆற்றால் - நடுநிலைமையினறு நீங்கிய தன்மையால, காணீர் - அனுபவத்திற் காணீர், நடலைகூர் ஒழுக்கம் பூண்டு - வஞ்சமிக்க ஒழுக்கினைமேற் கொண்டு, கெடுநெறிபற்றி - எரிவாய்நரகத்திற் செலுத்தும் தீநெறியைக் கைக்கொண்டு, சைவநிந்தையில் கிளர்ச்சிகொண்டு - சைவநெறியை நிந்தைசெய்யுந்தொழிலில் ஊக்கங்கொண்டு, கொடுமுகக்கலியிற் றோன்றி இடும்பைகூர்ந்து கலாய்த்தனீர் - கொடுமைவாய்ந்த கலியுகத்திற் றோன்றி நீங்கள் துன்பங்கூர்ந்து தத்தமக்குள் கலகஞ்செய்தவராய்.

சைவத்திற்கு வேதம் உடல்போல் நிற்கும் ஒற்றுமை நயங்கருதிச் சைவநிந்தையில் எனக்கூறினு ரேனும் உபலக்கணத்தால் வேதநிந்தையி லெனவுங் கொள்க. (௨௨)

வைதிகப்புறத்தராகிச்சைவநூல்வழியைக்கைவிட்
டுய்தியில்புறநூல்பற்றியுலப்பருமறையினிந்தை
யைதெனப்புகன்றுவேற்றுமொழியினையாதரித்துப்
பொய்திகழ்நரகினுய்க்கும்புண்டரம்பொலியக்கொண்டு.

(இ-ள்.) வைதிகப்புறத்தர் ஆகி - வைதிகநெறிக்குப் புறம்புபட்டவராகி, சைவநூல்வழியைக் கைவிட்டு - வைதிகநெறியோடியைபுடைய சைவநூல் நெறியைக்கைவிட்டு, உய்தி இல் புறநூல்பற்றி - நீங்கள் உய்தற் கேதுவில்லாத புறநூலைக் கைக்கொண்டு, உலப்பு அருமறையின் நிந்தை ஐது எனப்புகன்று - அழிதலில்லாத வேதநிந்தையை அழகிதாகக்கூறி, வேறுமொழியினை ஆதரித்து - பாஞ்சராத்திர முதலிய ஆகமவாக்கியங்களைக் கைக்கொண்டு, பொய்திகழ் நரகின் உய்க்கும் புண்டரம் பொலியகொண்டு - பொய்யொழுக்கால் வரும்நரகிற் செலுத்தும் மேலநோக்கிய புண்டரங்கள் விளங்கப்பூண்டு.

நசம்பந்தமாகிய நூலைக் கைவிட்டவர் சைவநூலைக் கைக
பேயென்பது தோன்ற வைதிகப் புறத்தராகியெனவும், அதனைக் கைவிடுவோர் புறச்சமயிகளென்பதுதோன்றப்புறநூல் பற்றியெனவும், புறநூலொழுக்கம்பூண்டோர்க்கு உய்வில்லை யென்பதுதோன்ற உய்தியில் எனவும், அப்புறநூலின் மயக்கினுல் வேதமொழியாகிய ஆப்தவாக்கியத்தைப் பொய்யெனக் கூறுவரென்பது தோன்ற மறையினிந்தை ஐதெனப்புகன்று எனவும், அதனைப் பொய்யென்று கூறுதற்குச் சாதனமாயுள்ளநூல் அது என்பது தோன்ற வேற்றுமொழியினை யாதரித்து எனவும், அதனுல் நரகிற்செலுத்தும் சாதனங்களைக் கைக்கொள்வ ரொன்பதுதோன்றப் புண்டரம் பொலியக்கொண்டு எனவுங் கூறினர். (௨௩)

எண்டிகழ்மறையீறெல்லாமியம்பும்வெண்ணீற்றுமும்மைப்
புண்டரமக்கமாலைசிவலிங்கபூசைதம்மின்
விண்டிடாவயிரங்கொண்டுநிகிரியான்வெந்தபுண்ணைத்
தண்டுசெங்காழிகஞ்சக்குறிகளைத்தனுவிற்றாங்கி.

(இ-ள்) எண் திகழ் மறையீறு எல்லாம் இயம்பும் வெள்று மும்மைப்புண்டரம் - யாவருடைய எண்ணத்திலும் விளங்கும் வேதசிரசுகளெல்லாங் கூறும் வெள்ளிய விபூதியாலமைந்த திரிபுண்டரமும், அக்கமாலை சிவலிங்கபூசை தம்மின் விண்டிடா வயிரம்கொண்டு - உருத்திராக்கக் கண்டிகையும் சிவலிங்கபூசையுமாகிய இவற்றில் நீங்காத வயிரங்கொண்டு, திகிரியான் வெந்தபுண்ணை- திருமாலது சங்கு சக்கரக் குறிகளால் வெந்தபுண்ணினையும், தண்டு சங்கு ஆழி கஞ்சம் குறிகளை தனுவில்தாங்கி- கதையும் சங்கும் சக்கரமும் தாமரையும் ஆகிய குறிகளையும் தமது சரீர

வேதசிரசுகளால் எடுத்துக்கூறு மான்மியத்தை யுடையதென்பார் மறையீறெல்லா மியம்பும் வெண்ணீறெனவும், அந்தணருள் ஒருவருக்குப்பின ரணியப்படுவது வேதத்தாற் கூறப்படாததென்பார். திகிரியான்வெந்தபுண்ணைத் - தண்டுசங்காழிகஞ்சக் குறிகளைத்தனுவிற்றாங்கி யெனவுங்கூறினர்.

வேதசிரசுகளாற் கூறப்படுவதென்பதை.

"மந்திரத்தொடுதரிப்பினுமந்திரமுணரார்
தந்திரத்தொடுதரிப்பினுமீங்கிவர்தம்மை
முந்தைதமுவரொன்றேத்தலாமென்பதுமுறையாம்
புந்திதந்துசாபாலிதேருபநிடம்புகலும்.
மற்றியாமினிப்புலப்படவுரைப்பதென்மறைநூல்
சொற்றதன்றியென்செருக்கொடுசொற்றதோசுருதி
முற்றுமிப்படிமுறையிடும்". என உபதேசகாண்டத்தில் வருதல் காண்க"

அந்தணர்தமக்குத்தேவாமரனடிதழாதுதோளின்
வந்தவர்தமக்குத்தேவாமாயனைத்தழுவிப்பேணி
நிந்தனைக்குரியராகிநிலமிசைத்திரிகவாளா
நொந்துநீர்தழுவுமாலுநுங்களுக்கருள்செய்யானல்.

(இ-ள்.) அந்தணர் தமக்குதே ஆம் அரன் அடி தழாது - மறையவர்க்குக் கடவுளாகிய உருத்திர மூர்த்தியின் திருவடிகளைத் தழுவிவழிபடாது, தோளின் வந்தவர் தமக்கு தே ஆம் மாயனை தழுவி பேணி-பிரமனது தோளில் வந்த க்ஷத்திரியருக்குக் கடவுளாகிய திருமாலைத் தழுவிவழிபட்டு, நிந்தனைக்கு உரியர் ஆகி நிலம் மிசை திரிக - நிந்தைக் குரியவராகி நிலவுலகின் மேல் திரியகடவீர், வாளா நொந்து நீர் தழுவும் மாலும் நுங்களுக்கு அருள்செய்யான் - பயனின்றி நீங்கள் தழுவி வழிபடுந்திருமாலும் உங்களுக்குக் கருணைசெய்யான்.

அந்தணர்கள் தமக்குரிய கடவுளை வணங்கில் முத்தியிற் றலைப்படுவர் என்பதையும், சத்திரியர்க்குக் கடவுளாகிய திருமாலை வழிபடுவோர் முத்தியிற்றலைப்படார் என்பதையும்.

"அந்தணர்க்காதியீசனேனையோர்க்கரியேவேதா
விந்திரனென்றுவேதமியம்பியமறையோர்தங்கண்
முந்தையின் முதலைநீத்துமுறையகன்றொழுகல்பெற்ற
தந்தையைவிலக்கிவேறுதேடுவார்தன்மையன்றே"எனக் கந்தபுராணம் ததீசிப்படலத்தில் வருவது காண்க. (௨௫)

என்னவெங்கொடியசாபமியம்பினன்சிதம்புத்தக்கன்
றன்னைமுன்செயிர்த்துநோக்கிச்சாற்றுவானசசமின்றிப்
பொன்னவிர்சடிலத்தேவையிகழ்ந்தனைபொறியிலாதாய்
நின்னுடைக்குலத்துக்கின்னேமுடிபெனநினைவிற்கோடி.

(இ-ள்.) என்ன வெம கொடிய சாபம இயம்பினன் - என்று கொடிய சாபத்தைக்கூறி, சிதம்பு தக்கன் தன்னை முன்செயிர்த்து நோக்கி சாற்றுவான் - இழிமையையுடைய தக்கனைமுன்பு எதிரே கோபித்துப் பார்த்துக் கூறுந் ததீசிமுனிவர், அச்சம் இன்றி பொன் அவிர் சடிலம் தேவை இகழ்ந்தனை - சிறிதும் அச்சமில்லாமல் பொன்போல விளங்குஞ் சடாமகுடத்தையுடைய இறைவனை இகழ்ந்தாய், பொறிஇல்லாதாய் - அறிவில்லாதவனே, நின் உடைய குலத்துக்கு இன்னே முடிவு என நினைவில்கோடி - உன்னுடைய குலத்திற்கு இப்பொழுதே இறுதி வந்ததென்று கருத்திற்கொள்வாய். (உசு)

வழிபடற்குரியார்தம்மைவழிபடன்மறுத்துமற்றை
வழிபடற்குரியரல்லார்தமைவழிபடுவோராகி
வழீஇனார்தமக்குத்தெய்வம்வகுத்திடுங்கொடியதண்டம்
வழியினாலின்னேயெய்துமென்பதுவழக்காமன்றே.

(இ-ள்.) வழிபடற்கு உரியார் தம்மை வழிபடன்மறுத்து - தாம் வழிபாடுசெய்து பூசித்தற்குரியவரை வழிபட்டொழுகுதலை மறந்து, வழிபடற்கு உரியர் அல்லார் தம்மை வழிபடுவோர் ஆகி வழீஇனார் தமக்கு - வழிபட்டுப் பூசித்தற்கு உரியவரல்லாரை வழிபட்டுப் பூசித்து வழுவினர்க்கு, தெய்வம் வகுத்திடும் கொடிய தண்டம் - தெய்வமே வகுக்குங் கொடிய தண்டமானது, வழியினால் இன்னே எய்தும் என்பது வழக்காம் - முறையாலிம்மையிலே வருமென்பது வழக்காம்.

நீ அந்தணனாயிருந்தும் நீ வழிபடுதற்குரிய சிவபெருமானை வழிபடாது சத்திரியர் வழிபடுதற்குரிய திருமாலை வழிபடுதலால் நீயும் உன்னைத் தழுவிநின்றவர்களும் இன்றே யொறுக்கப் படுவீரென்பது தோன்ற உலகியன் மேல்வைத்துக் கூறினமையால் இது பிறிது நவிற்சியணி. (உஎ)

என்றனன்றதீசிச்செம்மலெழுந்துதன்னிருக்கைபுக்கா
னன்றதுநோக்கிப்பூமேலாண்டகையச்சமெய்திக்
துன்றியகுழுவினீங்கிச்சுடர்மழுப்படையான்பாங்கர்ச்
சென்றனன்சென்றபின்னர்ச்சிறுவிதியெழுந்துநின்று.

(இ-ள்.) என்றனன் ததீசிசெம்மல் - என்று ததீசி முனிவர்கூறி, எழுந்து தன் இருக்கைபுக்கான் - அங்குநின்று மெழுந்து தமதுறையுளைச் சென்றடைந்தார், பூமேல் ஆண்டகை அன்று அதுநோக்கி - தாமரைமேல் வசிக்கும் பிரமன் அக்காலத்தில் அதனைப்பார்த்து, அச்சம் எய்தி துன்றிய குழுவின் நீங்கி சுடர்மழுப்படையான் பாங்கர்சென்றனன் - அச்சங்கூர்ந்து அங்குநெருங்கிய கூட்டத்தினின்று நீங்கி விளங்கும் மழுவாயுதத்தையுடைய சிவபெருமான் பக்கலில் சேர்ந்தான், சென்றபின்னர் சிறுவிதி எழுந்து நின்று - சென்றபின் தக்கன் எழுந்துநின்று.

தானே யிறைவனெனச் செருக்கித் தலையிழந்தவனாதலாலும், ததீசிமுனிவர் கூறியது சத்தியவசனமாதலாலும், தக்கன் செருக்கால் இனிவிளைவது பெருந்தீங்காதலாலும் அஞ்சினான் என்பார் அச்சமெய்தியெனவுங் கூறினார். (உஅ)

எச்சனாந்துளவிஞனையடைக்கலமென்றுபோற்றி
யச்சுதனருளால்வேள்விதொடங்கலுமனையதெல்லா
மூச்சகம்புகழுநல்யாழ்முனிவரன்மொழியக்கேளாப்
பச்சிளங்கொடியினன்னாள்பரம்பொருட்கிதனைக்கூறும்.

(இ-ள்) எச்சன் ஆம் துளவிஞனை அடைக்கலம் என்றுபோற்றி - வேள்விவடிவமாகிய திருமாலை அடைக்கலமென்று துதித்து, அச்சுதன் அருளால் வேள்விதொடங்கலும் - அத்திருமாலது கருணையால் வேள்விசெய்யத் தொடங்க, அனையது எல்லாம் மூச்சகம்புகழும் நல்யாழ் முனிவரன்மொழிய - அச்செய்தியை யெல்லாம் மூன்றுலகமும் புகழும் நல்ல மகதியாழையுடைய நாரதமுனிவர்கூற, பச்சிளங்கொடியின் அன்னாள் கேளா - பசிய இளங்கொடியையொத்த உமையம்மை கேட்டருளி, பரம்பொருட்கு இதனைகூறும் - சிவபெருமானுக்கிதனைக் கூறுவார். (உகூ)

இறைவனே யெனக்குமுன்னர்த்தாதையென்றிருந்ததக்கப்
பொறியிலிநமக்குத்தீங்கேநாடொறும்புரியுந்தீயோன்
மறைநெறிவேள்விச்செந்தீவளர்க்குமாலதனை யின்னே
குறைபடச்சிதைத்திநின்பாற்கொளத்தகுவரமீதென்றாள்.

(இ-ள்.) இறைவனே எனக்குமுன்னர் தாதை என்று இருந்த தக்கன்பொறியிலி - இறைவனே எனக்குமுன்னே தந்தையென்று பெயர்வாய்ந்திருந்த தக்கனென்னு மறிவிலான், நமக்கு நாள்தொறும் தீங்கேபுரியும் தீயோன் - நமக்குநாள் தோறும் தீங்கையே செய்யும் கொடுமையை யுடையான், மறைநெறிவேள்வி செந்தீ வளர்க்கும் - வேதநெறியிற்கூறும் வேள்வித்தீயை வளர்க்கின்றான், அதனைஇன்னே குறைபடசிதைத்தி - அதனை இப்பொழுதே குறைபட அழிப்பாய், நின்பால் கொளத்தகும் வரம் ஈது என்றாள் - உன்னிடத்தில் யான் பெறத்தகும் வரம் இதுதானென்று கூறினார்.

கொடியோனாதலால் எமக்குத் தந்தையெனத் தக்கன் நின்றது கொடிது என்பார் தந்தையென்றிருந்த தக்கப் பொறியிலியெனவும், அறிவிலனாதலால் அவன் நம்மைத் தன்கீழ்ப்பட்டவரொன்று கருதினான் என்பார் தீங்கே நாடொறும் புரியுந் தீயோன் எனவும், அறியாமையாலெழுந்த இறுமாப்பால் முறைபிறழ்ந்தனன் அதற்குத்தக்க தண்டம் இயற்றுக என்பார் வேள் விச்செந்தீ வளர்க்குமா லதனை யின்னே குறைபடச் சிதைத்தியெனவுங் கூறினார். (௩௦)

இருள்குடியிருந்தகூந்தலிறைவிதன்மாற்றங்கேளாத்
தெருள்குடியிருந்தசிந்தைதைவரச்செவந்தநோன்றா
ளருள்குடியிருந்தபெம்மானழிதகைத்தக்கனெஞ்சின்
வெருள்குடியிருத்துமொய்ம்பின்வீரபத்திரனைத்தந்தான்.

(இ-ள்.) இருள்குடி இருந்த கூந்தல் இறைவிதன் மாற்றம்கேளா - இருள் குடியிருந்தா லொத்த கூந்தலையுடைய உமையம்மையின் திருவார்த்தையைக் கேட்டருளி, தெருள் குடிஇருந்த சிந்தை - தெருட்சியே குடியிருந்த திருமனத்தில், செவந்த நோன்தாள் தைவர - கோபங்கூறும் வலிய முயற்சிபரிசிக்க, அருள்குடிஇருந்த பெம்மான் - திருவருளே ஒருருக் கொண்டவிறைவன், அழிதகை தக்கன் நெஞ்சின் வெருள் குடிஇருத்தும் மொய்ம்பின் வீரபத்திரனை தந்தான் - அழியுந் தன்மையையுடைய தக்கனது மனத்தில் அச்சங் குடியேறச் செய்யும் வலிமை யினை யுடைய வீரபத்திரக் கடவுளைத் தந்தருளினார்.

ஆன்மாக்களிடத்து அருளே குடிகொண்டிருத்தலால் தெருள் குடியிருந்த சிந்தையெனவும், ஒறுத்தலும் அருளாதலால் செவந்தனோன்றாள் தைவர அருள் குடியிருந்த பெம்மான் எனவுங்கூறினார். (௯௧)

எண்ணருமுலகமீன்றசிற்றகட்டெம்பிராட்டி
வண்ணவார்புருவமீப்போயநெரிப்பவாய்துடிப்பப்பொங்கிக்
கண்ணறுசினமீககொண்டுபத்திரகாளியென்னும்
பெண்ணணங்கரசையீன்றாள்பிறங்கெரிசிதறுங்கண்ணாள்.

(இ-ள்.) எண்ணரும் உலகம் ஈன்றசிறு அகடு எம்பிராட்டி - அளவிறந்த வுலகங்களைத் தந்தருளிய சிறுகிய திருவயிற்றையுடைய அன்னையாகிய எமது பெருமாட்டி, வண்ணம் வார் புருவம் மீப்போய் நெரிப்ப வாய் துடிப்ப பொங்கி - அழகிய நீண்ட புருவம் நெற்றிமேல் நெரிக்கவும் திருவாய்துடிக்கவும் கோபம்கூர்ந்து, கண் அறு சினம் மீக்கொண்டு- தாட்சணியம் இகந்து கோபம் மீக்கூர்ந்து, பத்திரகாளிஎன்னும் பெண் அணங்கு அரசை பிறங்கு எரிசிதறும் கண்ணாள் ஈன்றாள் - பத்திரகாளியென்னும் தெய்வப் பெண்களுக் கரசை விளங்குந் தீப்பொறிசிந்தும் திருக்கண்களையுடையவராய்த் தந்தருளினார். (௯௨)

பத்திரகாளிவீரபத்திரனிருவர்தாமு
மத்தனையுமையைபபோற்றிப்பணியெமக்கருளிரொன்ன
முத்தலைச்சூலத்தண்ணன்மொய்ம்பனையருளினோக்கி
யித்திருமடந்தையோடுமிறைப்பொழுதின்கட்போந்து.

(இ-ள்.) பத்திரகாளி வீரபத்திரன் இருவர் தாமும் அத்தனை உமையைபோற்றி பணி எமக்கு அருளிர் என்ன-பத்திரகாளியும் வீரபத்திரக்கடவுளுமாகிய இருவரும் இறைவனையும் உமையம்மையையும் வணங்கி யாங்கள் செய்யும்பணியை எமக்கு அருளுவீரென்று வினவ, முத்தலைச்சூலத்து அண்ணல் மொய்ம்பனை அருளின் நோக்கி-மூன்று கவராயுள்ள சூலத்தையேந்திய விறைவன் வீரபத்திரக்கடவுளைத் திருவருட் பார்வையால்பார்த்தருளி, இதிருமடந்தையோடும் இறைபொழுதின் கண்போந்து - இந்த வெற்றிக்குரிய பத்திரகாளியோடும் இறையளவு பொழுதிற்சென்று.

பத்திரகாளி விஜயலக்ஷிமியாதலால் திருமடந்தை யென்றார். (௯௩)

பழித்தொழிற்றக்கன்வேள்விபாழ்படுத்துமையாள்சீற்ற
மொழித்தியென்றருளிச்செய்தானொள்ளிழையுமையுமவ்வா
றழித்துநீர்வருதிரென்றுவிடைகொடுத்தருளப்பெற்றுத்
தெழித்தனரெழுந்தார்சென்றாரிருவருஞ்சீற்றம்பொங்க.

(இ-ள்.) பழித்தொழில் தக்கன் வேள்விபாழ்படுத்து-தீத்தொழிலையுடைய தக்கனது யாகத்தைப் பாழ்செய்து, உமையாள் சீற்றம் ஒழித்தி என்றருளிச் செய்தான்-உமையம்மையினது கோபத்தை ஒழிப்பாயென்றருளினான், ஒள்ளிழை உமையும் அவ்வாறு நீர் அழித்து வருதிர் என்று விடைகொடுத்தருளப்பெற்று - ஒளிவீசும் ஆபரணங்களையணிந்த உமையம்மையும் அவ்வாறே நீங்கள் தக்கன்வேள்வியையழித்துவருவீர்களென்று விடைகொடுத்தருள அத்திருப்பணியைமேற்கொண்டு, இருவரும் சீற்றம்பொங்க - வீரபத்திரக்கடவுளும் பத்திரகாளியும் கோபம் மீதூர, தெழித்தனர் எழுந்தார் சென்றார் - அதட்டியெழுந்து சென்றனர்.

தக்கன் பழித்தொழிலை யுடையோனாதலால் அவன்செய்யும் வேள்வியும் பழிப்பமைந்த தென்பதுதோன்றப் பழித்தொழிற் றக்கன்வேள்வி பாழ்படுத்து என

வும், இது தன்பொருட்டன்றென்பதுதோன்ற உமையாள் சீற்றம் ஒழித்தியென் றருளிச்செய்தானெனவும் கூறினார். (௬௪)

எழுசீர்க்கழிநெடி விருத்தம்.

சண்டவாயுமந்தமாகவடவையங்கிதண்ணெனச்
சண்டபானுமதியமொப்பமொய்தயங்குதென்றிசைச்
சண்டன்வீறுசாந்தமெய்தவெஞ்சினந்தலைக்கொளீஇச்
சண்டிகைத்தலைவியோடுதலைவனங்கணெய்தினான்.

(இ - ள்.) சண்டவாயும் மந்தம் ஆக-சண்டமாருதக்காற்றுந்தென்றற்காற்றாக வும், வடவை அங்கி தண்ணென-வடவாக்கினியும் தண்ணென்று குளிரவும், சண்ட பானு மதியம் ஒப்ப - ஊழிகாலத்திற்றோன்றும் சூரியனும் சந்திரனையொப்பத் தண் ணென்ற கதிர்வழங்கவும், மொய்தயங்கு தென்றிசை சண்டன் வீறுசாந்தம் எய்த- வலிமை யோடுவிளங்கும் தென்றிசைக்கிறைவனாகிய இயமனும் மிக்க சாந்தகுண த்தையடையவும், வெஞ்சினம் தலைக்கொளுவி - கொடிய கோபமேற்கொண்டு, சண் டிகைத் தலைவியோடு தலைவன் அங்கண் எய்தினான் - பத்திரகாளியோடு வீரபத்திரக் கடவுள் அவ்வேள்விச்சாலையையடைந்தார்கள்.

சண்டமாருதக்காற்றும் வடவாக்கினியும் ஊழிக்காலத்திற்றோன்றுஞ் சூரிய னும் உலகினையழிக்க மிக்க உக்கிரமுடைமையாலும் இயமன், என்று முறுகிய கோப முடைமையாலும் அவை இவர்கள்கொண்டகோபத்திற்குக் கீழ்பட்டவையென்பார்- சண்டவாயு மந்தமாக வடவையங்கி தண்ணெனச சண்டபானு மதியமொப்ப மொய் தயங்கு தென்றிசைச் சண்டன்வீறு சாந்தமெய்த எனவுங்கூறினார். (௬௫)

தன்னைநேருரோமசப்பெயர்க்கணந்தவப்படைத்
தன்னவெங்கணங்கடம்மைவேள்வியாற்றுசாலையின்
வெங்நெருப்புவைப்பவேவியுட்புகுந்துமேவலாப்
புன்னெறிச்செலீறக்கனாவிபொன்றுமாதுணித்தனன்.

(இ - ள்.) தன்னைநேர் உரோமசப்பெயர்க்கணம் - தன்னையொத்த உரோமச னென்னும்பெயரையுடைய கணநிபர், தவப்படை தன்னம்வெம்கணங்கள் தம்மை- தமது பெரியசேனைகளிலுள்ள சிறிய கொடிய கணங்களை, வேள்விஆற்று சாலையில் வெங்நெருப்பு வைப்ப ஏவி - தக்கன் யாகசாலையில் கொடிய தீவைக்க ஏவி, உள் புகுந்து மேவலாத புல்நெறிச்செல் தக்கன் ஆவி பொன்றும் ஆறு துணித்தனன் - அடைதல் கூடாத புல்லிய நெறியில்சென்ற தக்கனுடைய உயிர் அழியும் வண்ணம் அவன் தலையைச் சேதித்தனன். (௬௬)

உழையுருக்கொடோடும்வேள்வியுயிர்செகுத்தருக்கர்தம்
விழிகண்மற்றைமுப்பதிற்றிரண்டுபல்லும்வீழ்த்தினான்
வழுவுமிந்துவைச்சினந்துதேய்த்துவன்னிநாவினோ
டெழுகரந்துணித்துமற்றுமேற்றதண்டமாற்றுவான்.

(இ - ள்.) உழை உருக்கொடு ஓடும் வேள்வி உயிர் செகுத்து-மானுருக்கொண் டோடிய யாக புருடன் உயிர்வாங்கி, அருக்கர்தம் விழிகள் மற்றை முப்பதிற்றிர ண்டுபல்லும் வீழ்த்தினான்-சூரியனுடைய கண்களை யகழ்ந்து முப்பத்திரண்டு பல்லை யும் தகர்த்தான், வழுவும் இந்துவை சினந்து தேய்த்து - பின்வாங்குஞ் சந்திரனைக் கோபித்துத்தேய்த்து, வன்னி எழுநாவினோடு கரந்துணித்து மற்றும் ஏற்ற தண்டம்

ஆற்றுவான் - தீக்கடவுளது எழு நாவோடு அவனது கையையும் துண்டுசெய்து ஏனையோர்க்கு அவர்கள்செய்த அபராதத்திற்கேற்ற தண்டங்களையும் செய்வானு யினன்.

சூரியர் பன்னிருவராதலால் பன்மையீறுதந்து அருக்கா எனவும், அவர்களுள் பகன்கண்ணை அகழ்ந்து சேட்டாவின் பல்லைத் தகர்த்தலால் விழிகண்மற்றை மூப்ப திற்றிரண்டுபல்லும் வீழ்த்தினுன் எனவும், உயிர்போக்காத ஒறுப்பு தண்டமாதலால் ஏனையோர்க்குச் செய்ததுபோல மற்றைத்தேவர்களுக்கும் அவரவர்கள் அபராதத் திற்குத் தக்கதண்டஞ் செய்யப்புகுந்தமையால் மற்றுமேற்ற தண்டம் ஆற்றுவான் எனவும் கூறினுர். (௬௭)

குலவுவாணிதன்னிடத்துவீங்குகொங்கைமூக்கரிந்
துலகமீன்றவன்னையும்பர்பெண்டிருக்குமுதுபுரிந்
திலகுமேனைவிண்ணவர்க்குமுனிவருக்குமெண்டிசைத்
தலைவருக்கும்வீரனன்றுதக்கதண்டமாற்றினுன்.

(இ-ள்.) குலவுவாணிதன் இடத்துவீங்கு கொங்கைமூக்கு அரிந்து - விளங் குங் கலைமகளது இடப்பாலுள்ள பருத்ததனத்தின் சூசுகத்தையும் மூக்கினையுமரிந்து, உலகம் ஈன்றஅன்னை - உலகத்தைப்பயந்த வுமாதேவியின் ஆணையால், உம்பர் பெ ண்டிருக்கும் உதுபுரிந்து - இந்திராணிமுதலிய பெண்களுக்கும் அத்தண்டத்தைச் செய்து, இலகும் ஏனை விண்ணவர்க்கும் முனிவருக்கும் எண்திசை தலைவருக்கும் - விளங்காநின்ற மற்றைத்தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் திக்குப்பாலர்களாகிய இந்திரன்முதலிய எண்மருக்கும், வீரன் அன்று தக்கதண்டம் ஆற்றினுன் - வீரபத் திரக்கடவுள் அவரவர்களுக்குத்தக்க தண்டஞ் செய்தருளினுர்.

கலைமகள் வலப்பாலுள்ள தனம் சாரீரமென்பதும், இடப்பாலுள்ளதனம் சங் கீதமென்பதுந் தோன்ற இடத்து வீங்குகொங்கை எனவும் அக்கலைமகளன்றி ஏனைத் தெய்வப்பெண்களுக்கும் அத்தண்டஞ் செய்தது தன்னுடுவந்த பத்திரகாளியால் என்பது தோன்ற உலகமீன்றவன்னை யும்பர் பெண்டிருக்கு முதுபுரிந்து என வுங்கூறினுர். (௬௮)

தடங்கொள்சாலைமுற்றும்வெந்தழற்களித்தியூபமும்
பிடுங்கிவேள்வியாற்றினோர்பெருங்கழுத்தைநாணினுன்
மடங்கயாத்துவேள்வியங்கமற்றவுமெடுத்தெடுத்
திடங்கொள்கங்கையூடழுத்தியிட்டவன்கணங்களே.

(இ - ள்.) வன்கணங்கள் - வலிய உரோமசன்முதலிய கணதிபர்களின் படைக்கணங்கள், தடம்கொள்சாலை முற்றும் வெம்தழற்கு அளித்து - பரந்தவேள் விச்சாலை முழுமையையும் கொடிய தீக்கடவுளுக்கு உண்பித்து, யூபமும்பிடுங்கி - வேள்வித் தம்பத்தையும் பிடுங்கி, வேள்வி ஆற்றினோர் பெருங்கழுத்தை - வேள்வி செய்யும் இருத்துவிக்குகளது பெரியகழுத்தினை, நாணினுல் மடங்கயாத்து - அங் குள்ள கயிறுகளால் மடங்கக்கட்டி, வேள்வி அங்கம் மற்றவும் எடுத்து எடுத்து இட ம்கொள் கங்கை ஊடு அழுத்தி இட்ட- வேள்விக்கு அங்கமாகிய ஆகவனீயமுதலிய வற்றையும் சமித்துமுதலிய மற்றவுபகரணங்களையும் வாரிவாரிப்பரந்த கங்கையி னடுவி லழுத்தின.

வேள்விக்குச் சாங்கமாயுள்ள ஆகவனீயமுதலிய மூன்றக்கினிகளும், உபாங்கமாயுள்ள சமித்து முதலியனவும் அடங்க வேள்வியங்க மற்றவுமெடுத்தெடுத்து என்றார். (ருக)

இன்னவண்ணம்வேள்விமுற்றுமிற்றவாறுகாண்டலும
பொன்னுடைத்துழாயினன்பொருதுளம்புழுங்கினன்
முன்னர்வெள்கிமானமுந்தமொய்பறப்பையேறெனப
பன்னுமூர்திமேலிவர்ந்துபடையெடுத்தெதிர்ந்தனன்.

(இ-ள்.) இன்னவண்ணம் வேள்விமுற்றும் இற்றஆறு காண்டலும்- இவ்வாறு யாகமுற்றும் அழிந்தவகையைக்கண்டஅன்றே, பொன்உடையதுழாயினன்பொருது உளம்புழுங்கினன்- இலக்குமியைத் திருமார்பிலுடைய துளபமாலையை யணிந்த திருமால்மனம்பொருது புழுங்கி, முன்னர்வெள்கி-முனனிற்கநாணி, மானம் உந்த- மானம் பிடர்பிடித்துந்த, மொய்பறப்பை ஏறு எனன பனனும் ஊர்திமேல் இவர்ந்து-நெருங்கியபறவைகளுக்குள் சிங்கமெனச் சொல்லப்படும் கருடஊர்தி மேலேறி, படை எடுத்து எதிர்ந்தனன் - சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை யெடுத்துப் போர்க்கெழுந்தான்.

தக்கன் செய்யும் வேள்விக்குத் தான் இயமானனாயிருந்து அத்தக்கன் முதலியோர்க்குக் கேடுசூழ்ந்தமையால் முன்னர் வெள்கி எனவும், அந்நாணத்தால் மானம்மீதூர்ந்தமையால் மானமுந்த எனவும், அவ் வீரபத்திரக்கடவுளோடு போர்செய்யவலியிலனாயினும் அம்மானத்தாற் போர்க்கெழுந்தமையால் மொய்பறப்பை யேறெனப் பன்னுமூர்திமேலிவர்ந்து படையெடுத் தெதிர்ந்தனன எனவுங்கூறினார். (சഠ)

ஆயகாலையண்ணலாணையாற்றினான்முகப்பிரான்
மேயவையமுன்னருய்ப்பவேறிவீரவள்ளலு
மாயனோடெதிர்த்துவெம்படைக்கலம்வழங்கினு
னேயவங்கண்மூண்டபூசல்யாவர்சொல்லவல்லரே.

(இ-ள்.) ஆயகாலை - அவ்வாறான காலத்தில, அண்ணல் ஆணை ஆற்றில்-சிவபெருமானது ஆஞைவழியால், நான்முகப்பிரான் மேய வையம்முன்னர் உய்ப்ப - நான்கு திருமுகங்களையுடைய பிரமன்பொருந்திய தேரை முன்னே கொண்டுவர, வீரவள்ளலும் ஏறி - வீரபத்திரக்கடவுளும் ஏறி. மாயனோடு எதிர்த்து வெம்படைக் கலம் வழங்கினன் - திருமாலோ டெதிர்த்துக் கொடிய ஆயுதங்களை வீசினன், அங்கண் ஏயபூசல் மூண்ட - அவ்விடத்தில் பொருந்திய போர்மூண்டன, யாவர்சொல்லவல்லர் - (அதனை) யார்தான் எடுத்துச் சொல்லவல்லவர்.

திருமால் ஊர்திமேல் நின்று போர்செய்து நிறறலாலும் வீரபத்திரக்கடவுளுக்கும் ஊர்திவேண்டுதலாலும் சிவபிரானனுஞையால் பிரமன் தேர்கொண்டுவந்தனனதலால் அண்ணலாணை யாற்றில் நான் முகப்பிரான் மேயவைய முன்னருய்ப்ப வேறி என்றார். (சக)

வெற்றிதோல்வியின்றிநின்றுவெஞ்செருப்புரிவுழிச்
செற்றமிக்குமாயன்வெய்யதிகிரியைச்செலுத்தினன்
மற்றுவீரபத்திரன்றன்மார்பின்முண்டமாலையு
ளொற்றைவெண்கபாலமப்படைக்கலத்தையுண்டதால்.

(இ-ள்.) வெற்றிதோல் வி இன்றி நின்று வெஞ்செருபுரிவுழி-வெற்றியும் தோல்வியும் இல்லாமல் இருவரும் நின்று கொடிய போர்த்தொழில்செய்யுமிடத்து, மாயன் செற்றம் மிக்கு வெய்ய திகிரியை செலுத்தினன் - திருமால் கோபம்கூர்ந்து கொடியசுதரிசனமென்னுஞ்சக்கரத்தைச்செலுத்தினன், வீரபத்திரன் தன்மார்பின் மூண்டமாலை உள் ஒற்றை வெண்கபாலம் - வீரபத்திரக்கடவுளது மார்பிலணிந்த தலைமாலையுள் ஒரு வெள்ளிய கபாலமானது, படைக்கலத்தை உண்டது - அச்சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை உண்டது. (௬௨)

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

உணங்கரும்வலத்தவாழியுணங்கியதோர்ந்துமாற்றார்க்
கணங்குசூழ்கணங்களண்டம்வெடிபடமுழங்கியார்த்துத்
துணங்கையாட்டயருமோதைதுஞ்சினரொழியநின்ற
கணங்கெழுசுரர்கள்கேளாக்கலங்கியோட்டெடுக்குமெல்லை.

(இ-ள்.) உணங்கு அரும்வலத்த ஆழி உணங்கியது ஓர்ந்து - கெடுதலில்லாத வெற்றியையுடைய சுதரிசனமென்னுஞ் சக்கரமானது நிலையழிந்ததை யாராய்ந்து, மாற்றார்க்கு அணங்கு சூழ்கணங்கள் - பகைவர்க்கு வருத்தஞ்செய்யும் சிவகணங்கள், அண்டம்வெடிபட முழங்கி ஆர்த்து - பலவண்டங்கள் வெடிபடக் கோஷித்து முழங்கி, துணங்கை ஆட்டு அயரும் ஓதை- துணங்கை யாடலைச்செய்யும் இடத்துண்டாகிய சத்தத்தை, துஞ்சினர் ஒழியநின்ற கணம் கெழுசுரர்கள் கேளாக்கலங்கி ஓட்டெடுக்கும் எல்லை - இறந்தவர் ஒழியநின்ற கணங்களாகிய தேவர்கள்கேட்டுக் கலங்கியோடுஞ் சமையத்தில்.

சிவபெருமானருளியதாதலால் உணங்கரும்வலத்தவாழி எனவும், தேவகணங்கள் பதினெண்வகைப்பட்டிருத்தலால் கணங்கெழுசுரர்கள்எனவுங்கூறினர். துணங்கை இருகையையுமுடக்கிப் பழுப்புடை யொற்றியாடல் "முடக்கியிருகை பழுப்புடை யொற்றித் - தொடக்கிய நடையது துணங்கையாகும்" என்பதனாலும், கணங்கெழுசுரர்கள் என்றதை—

"கின்னரர்கிம்புருடர்விச்சாதரர்கருடர்
பொன்னமர்பூதர்புகழியக்கர்-மன்னும்
உரகர்சுரர்சாரணர்முனிவர்மேலாம்
பரகதியோர்சித்தர்பாலர்.

காந்தருவர்தாரகைகள்காணுப்பசாசுகள்
எந்துபுகழ்மேயவிராக்கதரோ - டாய்ந்ததிறல்
போகாவியல்புடையபோகபூமியாருடனே
ஆகாயவாசிகளாவார்" எனவருதலாலும் உணர்க. (௬௩)

காண்டகுவீரச்செம்மல்கணங்களான்வளைத்துத்தாளின்
மாண்டகுநிகளயாப்புவலித்தலும்புரவிமான்றேர்
தூண்டியவெகினப்பாகன்றுணையடிதொழுதிரந்து
வேண்டினனடிகேள்சீற்றம்விடுத்தருளினியென்றேத்தி.

(இ-ள்.) காண்தகுவீரச் செம்மல்கணங்களான் வளைத்து-காணத்தக்க வீரபத்திரக்கடவுளினுடைய கணங்களால் வளைக்கப்பட்டு, தாளின்மாண்டகு நிகளயாப்புவலித்தலும்-காலில் சிமிழ்த்த கொடியதளையாகிய விலங்கினையவர்கள் பூட்டலும், புரவி

மான் தேர் தூண்டிய எகினப்பாகன்-குதிரைபூட்டிய தேரைச்செலுத்திவந்த அன்னப் பாகனாகியபிரமன், துணைஅடிதொழுது இரந்துவேண்டினன் அடிகேள் இனிசீற்றம் விடுத்தருள் என்று எத்தி-அவ்வீரபத்திரக்கடவுளது இரண்டு திருவடிகளையும்தொழுது குறையிரந்து வேண்டி அடிகளே இனிக் கோபத்தை விட்டருளாய் என்றுதுதித்து.

தத்தம் ஊர்தியை நடத்துவோர் அவ்வவ் ஊர்திகளுக்குப் பாகராதலால் அன்னத்தையூரும் பிரமனை - எகினப்பாகன் என்றார். (௪௪)

மாதர்வெண்கமலத்தோன்றல்விண்ணப்பஞ்செவிமடுத்து
மேதகைக்கணங்களோடும்வெகுளியைவிடுத்துநம்மான்
பாததாமரைக்கீழ்ச்சிந்தைபதித்தனன்பதித்தலோடும்
பூதரமகளுந்தானுமாயிடைப்போந்தானண்ணல்.

(இ-ள்) மாதர்வெண் கமலத்தோன்றல் விண்ணப்பம் செவிமடுத்து - அழகிய வெண்டாமரையில் வசிக்கும் பிரமன்கூறிய விண்ணப்பத்தைத் திருச்செவி சாத்தி, மேதகைகணங்களோடும் வெகுளியைவிடுத்து - மேன்மைவாய்ந்த கணங்களோடும் மீதூர்ந்த கோபத்தை விடுத்து, நம்மான் பாததாமரைகீழ் சிந்தைபதித்தனன் - இறைவனது திருவடித்தாமரையின்கீழ்த் தனதுமனத்தையிருத்தினன், பதித்தலோடும் - அவ்வாறுபதிக்க, அண்ணல் பூதரமகளும் தானும்ஆயிடை போந்தான்- சிவபெருமான் மலைமகளுந்தானும் அவ்விடத்தில் எழுந்தருளினன்.

பால்விரவிச் சிறந்துநிற்றலால் போந்தான் என ஆண்பால் முடிபுதந்து கூறினர்.

குடமுழாபதலைதக்கைகொக்கரைபணவங்கோதை
படகமாகுளிதடாரிதகுணிச்சம்பம்பைமொந்தை
துடிபணைதிமிலைகண்டைதொண்டகம்பேரிகல்ல
வடமுதலியங்களெல்லாம்வயின்றொறுமியம்பிமல்க.

(இ-ள்) குடமுழா பதலை தக்கை கொக்கரை பணவம் கோதை - குடமுழாவும் பதலையும் தக்கையும் பணவமும் கோதையும், படகம் ஆகுளி தடாரி தகுணிச் சம்பம்பை மொந்தை - படகமும் ஆகுளியும் தடாரியும் தகுணிச்சமும் பம்பையும் மொந்தையும், துடிபணை திமிலை கண்டை தொண்டகம் பேரி கல்லவடம்முதல் இயங்கள் எல்லாம் வயின்தொறும் இயம்பிமல்க - துடியும்பணையும் திமிலையும் கண்டையும் தொண்டகமுங் பேரியும் கல்லவடமும் முதலிய வாச்சியங்களெல்லாம் இடங்கள்தோறுங் கோஷித்து ஒருபால் முழங்கவும்.

பதலை - வாயகன்றபறை. தக்கை - பம்பைவாச்சியம். கொக்கரை, கோதை ஒருவகை வாச்சியங்கள். பணவம் - தம்பட்டம். படகம் - ஒருகட்பறை. ஆகுளி - சிறுபறை. தடாரி-மத்தளம். தகுணிச்சம், மொந்தை, திமிலை, கண்டை, கல்லவடம் ஒருவகைப்பறைகள், பணை - மருதநிலத்துப்பறை. தொண்டகம் - குறிஞ்சிநிலப்பறை. பம்பை, பேரி வெளி. (௪௫)

வளைவயிர்பணிலஞ்சின்னம்வங்கியந்தாரைகாளங்
கிளைபடுநரம்புவீணைதீங்குழன்மிடற்றுக்கீத
முளைமலைப்பிறவுங்காலுநதுவைபமபாலயுநதுவமமய
யளவிலுலகமெல்லாமிசைமயமாகித்தேங்க.

(இ-ள்.) வளை வயிர் பணிலம் சின்னம் வங்கியம் தாரைகாளம்- வளைந்தகொம்பும் சங்கமும் சின்னமும் இசைக்குழலும் தாரையும் காளமும், கிளைபடு நரம்புவீணை

தீங்குழல் மிடறுகீதம் உள எனை பிறவும் காலும் துவைப்பு ஒலி - கிளைநரம்பையைத் தவிலையும் இனிய வேய்ங்குழலும் சாரீரகீதமுமாயுள்ள மற்றைப் பிறஇசைவாச்சியங்களும் புலப்படுத்தும் ஓசையின் முழக்கங்கள், உறந்துவிய்மி அளவலின் - அதிகரித்துப் பொருமி எங்குங்கலத்தலால், உலகம் எல்லாம் இசைமயமாகி தேங்க-உலகமெல்லாம் இசைமயமாய் ஓர்பால் நிரம்பவும்.

வங்கியம் - இசைக்குழல், வீணைநரம்புகள் இணை, கிளை, பகை, நட்பு என நான்குவகைப்படும். அவற்றுள் கிளை என்றது ஐந்தாம்நரம்பினை. அவற்றை விரிக்கிற் பெருகும். எனை எனை குறுக்கல் விகாரம். (ருஎ)

வாலொளிக்கவிகைபிச்சஞ்சாமரைமணிப்பூண்டொங்க
லாலவட்டங்கண்மற்றும்விடைக்கொடியருகுசெல்லச்
காலனைச்செகுத்தவாறுமுப்புரங்காய்ந்தவாறும்
போல்வனவுலகந்தேறப்பூதர்கள்விருதுபாட.

(இ-ள்.) வால் ஒளிகவிகை - வெள்ளிய ஒளியையுடைய குடையும், பிச்சம்-பீலிக்குடையும், சாமரை மணிப்பூண் தொங்கல் - கவரியும் இரத்தினங்களால் பூண் கட்டிய மயிற்றோகையும், ஆலவட்டங்கள் மற்றும் விடைக்கொடி அருகுசெல்ல - ஆலவட்டங்களும் அது ஒழிந்தனவும் இடபக்கொடியருகே செல்லவும், காலனைசெகுத்த ஆறும் முப்புரம் காய்ந்த ஆறும் - இயமனை உயிர்பருகிய வரலாறும் திரிபுரங்களை நகைத்தெரித்த வரலாறும், போல்வன- இவைபோல்வனவுமாகிய வரலாறுகளை, உலகம் தேற பூதர்கள் விருதுபாட - உலகிலுள்ளோர் தெளிந்துய்யப் பூதர்கள் ஓர்பால் விருதுகள்பாடவும்.

தன்னை யடைக்கலம் அடைந்தவர்களைக் காத்தருள்வோன் என்பதுணர்ந்து ஆன்மகோடிகள் சரணடைந்துய்யப் பாடினர் என்பதுதோன்றக் காலனைச் செகுத்தவாறு முப்புரங்காய்ந்தவாறும் போல்வன வுலகந்தேற என்றார். (ருஅ)

ஏற்றுருக்கொண்டுதன்போலிணையடிதாங்கப்பெற்று
மாற்றலனுகித்தன்னேர்தருக்கியமாயோன்செய்ய
காற்றலைப்பிணிப்புக்காணுங்களிப்பினுன்மேல்கொண்டுய்க்கு
மாற்றல்சாலறவெள்ளேறுபரந்துசெண்டாடிச்செல்ல.

(இ-ள்.) தன்போல் ஏறு உருக்கொண்டு இணையடி தாங்கப்பெற்று-தன்னைப்போல் இடபவடிவங்கொண்டு சிவபெருமானது இரண்டு திருவடிகளையும் சுமக்க அடைந்து, மாற்றலனுகி தன்நேர் தருக்கிய மாயோன்செய்ய கால்தலைப் பிணிப்பு காணும் களிப்பினுல் - தனக்குப் பகைவனுய்த் தன்னெதிரே இறுமாப்படைந்த திருமாலது செவந்த காலிற்பூட்டிய விலங்கின் சிமிழ்ப்பினைக் காணும் மகிழ்ச்சியால், மேல்கொண்டு உய்க்கும் ஆற்றல்சால் அறம் வெள்ளேறுபரந்து செண்டாடி செல்ல - மேல்கொண்டு செலுத்தும் வலிமைமிக்க தருமமென்னும் வெள்ளியவிடை எங்கும் பரவிச் செண்டாடி ஓர்பாற்செல்லவும்.

திருமால் விடையாகத்தாங்கியது தருமதேவதை விடையுருக்கொண்டு தாங்கியதற்குப் பின்னர் ஆதலால் அது தன்னுள் அழுக்காறடைந்தது என்பார் பிணிப்புக்காணும் களிப்பினுன் மேல்கொண்டுய்க்கும் - ஆற்றல் சாலறவெள்ளேறு பரந்து செண்டாடிச்செல்ல என்றார். (ருகூ)

வெள்ளநீர்க்கிடையோன்வைத்தவிழியவனெவ்வங்காண
வெள்கியாங்கடியிற்சாத்தும்விரைமலர்க்குவையுண்மூழ்க
வெள்ளெலும்பணிகடங்களினத்தவர்மெலிவுநோக்கி
யுள்ளுடைந்தழுவதேய்ப்பவொன்றொடொன்றலம்பியாட.

(இ-ள்.) வெள்ளம்நீர்க் கிடையோன் வைத்தவிழி - பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் திருமால் மலராகச்சாத்திய கண், அவன் எவ்வம்காண - அத்திருமால் தலைபூண்டு வருந்தும் வருத்தத்தைக்காண, வெள்கியது ஆங்கு அடியில் சாத்தும் விரைமலர்க்குவை உள் மூழ்க - நாணங் கூர்ந்ததுபோலச் சிவபெருமான் திருவடியிற் சாத்தும் வாசமிக்க மலர்க்குப்பையுள் ஓர்பால் மூழ்கவும், வெள்ளெலும்பு அணிகள் தங்கள் இனத்தவர் மெலிவுநோக்கி - வெள்ளிய எலும்பாகிய ஆபரணங்கள் தங்களினத்தவராகிய திருமால்முதலியோரது மெலிவினைப்பார்த்து, உள் உடைந்து அழுவது ஏய்ப்ப - மனமுடைந்து அழுதலையொப்ப, ஒன்றோடொன்று அலம்பியாட - ஒன்றோடொன்றுரிஞ்சி முழங்கி ஓர்பாலாடவும்.

சலந்தரனை மாய்த்த சக்கரம் பெறுதற்பொருட்டுத் திருமால் தனது விழிமலரைச் சாத்தினமையால் அக்கண்மலர் அடியவர்சாத்திய மலர்க்குப்பையுள் மூழ்கிக்கிடத்தலை, அத்திருமால் இன்று இறுமாந்தமையால் தலைபூண்டு வருந்துதலைக்காண வருத்தங்கூர்ந்து கரந்தது எனக்கவியத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்றவுவமையணி திருமால்முதலியோர் எலும்பினைத்தான் நித்தியன் எனப்புலப்படுத்தற்கு அணியாகத் தாங்கிநிற்றலால் அது ஒன்றோடொன்றுரிஞ்சியொலித்தலை அவர் கண்மெலிவு நோக்கியழுதலை யொத்ததெனக் கூறுதலால் இதுவும் அவ்வணி. சக்கரம் பெறத் திருமால் பூசித்ததை முன்னர்க்காண்க. (௫௨)

புன்னெறித்தலைநின்றெங்கோன்றனையிகழ்ந்திடும்பைபூண்ட
வின்னரையெனக்கூணாகவளித்திடுமிறைவனென்று
மன்னுபேருவகைபொங்கிமலர்ந்தெனநளினச்செங்கை
தன்னிடைவயங்குசெங்கேழிணரெரித்தழல்கூத்தாட.

(இ-ள்) புல் நெறித்தலை நின்று எங்கோன்தனை இகழ்ந்து இடும்பை பூண்ட இன்னரை - புல்லிய தீவழியில் நின்று எமது பெருமானையிகழ்ந்து துன்பம்பூண்ட இத்தன்மையரை, இறைவன் எனக்கு ஊண் ஆக அளித்திடும் என்று-சிவபெருமான் எனக்கு உணவாகத் தந்தருள்வான் என்று, மன்னுபேர் உவகை பொங்கி மலர்ந்தாலென்ன - நிலைபெற்ற பெரியமகிழ்ச்சி மீக்கூர்ந்து மலர்ந்தாற்போல, நளினம்செங்கை தன் இடைவயங்கு செங்கேழ் இணர் எரிதழல் கூத்தாட-தாமரைமலரையொத்த செவந்த தன்கையினிடத்து விளங்கும் செந்நிறம் வாய்ந்த தீப்பிழம்பு ஓர்பாற் கூத்தாடவும்.

தக்கன்செய்த பழித்தொழிலுக்கு ஏனையோர் உடன்பட்டு நிற்றலால் புன்னெறித்தலைநின்று என்றார். சிவபெருமான் திருக்கரத்திலேந்திய வேள்வித்தீ ஒருபால் விளங்குதலை, தன்னை யிகழ்ந்தவரை யெனக்கு உணவாகத் தந்தருள்வனென்று விளக்கஞ்செய்ததை யொக்குமெனக் கவிஅத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. தேவதாருவனமுனிவர் வேள்வியிற்றந்த மான்முதலியவற்றை யேவியுஞ் சிவபெருமானுக்கோ ரிடையூறு மவை செய்யாமையால் முடிவில் வேள்வித்தீயினை யேவ அதனையுந் தனது திருக்கரத்திலேந்தினர்என்பது கந்தபுராணம் ததீசியுத்தரப் படலத்தில் வருதல்காண்க, மலர்ந்தென தொகுத்தல் விகாரம். (௫௩)

உய்திறனுணராமற்றையும்பர்போற்பழிப்புணூமே
செய்திறன்முன்னர்த்தேறிக்கொடிஞ்சித்தேர்செலுத்தியுய்ந்த
மைதபுதன்னேன்சீலமறிந்துளமகிழ்ச்சிபூத்தாங்
கைதெனவயன்கபாலமற்புதமுறுவல்காட்ட.

(இ-ள்.) உய்திறன் உணராதமற்றை உம்பர்போல் - நாம் உய்யும் வகையைச் சிறிதும் உணராத மற்றைத்தேவர்கள்போல, பழிப்புணூமே செய்திறன்முன்னர்தேறி - தானும் பழிப்படையாமல் செய்யும்வகையை முன்பேதெளிந்து, கொடிஞ்சிதேர் செலுத்தி உய்ந்த மைதபுதன்னேன்சீலம் அறிந்து உளம் மகிழ்ச்சி பூத்தால் ஆங்கு - மொட்டையுடைய தேரைச்செலுத்திப் பிழைத்த குற்றத்தினின்று நீங்கிய தனக் குரியவனதுசீலத்தைத்தெரிந்து மனமகிழ்ச்சி கூர்ந்ததுபோல, ஐதென அயன் கபாலம் அற்புதம் முறுவல் காட்ட - அழகாகப் பிரமகபாலமானது அதிசயம் விளைக்கும் புன்சிரிப்பு ஓர்பால் காட்டவும்.

பூத்தாங்கு தொகுத்தல் - இதுவும் அவ்வணி. (ருஉ)

மாறடுமதுகைத்தன்னை வள்ளலுக்கியம்பிக்கொல்வித்
தூறுகாணமரரிந்நாளுலந்தவாநோக்கியோகை
யேறுதன்முடியசைத்துத்தகுந்தகுமென்பதேபோ
லாறணிசடிலமோலிக்கொக்கிறகசைவுற்றாட.

(இ-ள்.) மாறு அடுமதுகை தன்னை-பகைவரைக்கொல்லும் வலிமையையுடைய தனது செயலை, வள்ளலுக்கு இயம்பி கொல்வித்து - சிவபெருமானுக்குக்கூறிக் கொலைசெய்வித்து, ஊறுகாண் அமரர் - நமக்குநேருந் துன்பத்தைக் கண்டு மகிழ்கூரும் தேவர்கள், இந்நாள் உலந்த ஆறுநோக்கி - இந்நாளில் அழிந்தவகையைப் பார்த்து, ஓகை ஏறுதன் முடிஅசைத்து தகும்தகும் என்பதேபோல் - மகிழ்ச்சிமிக்க தனது தலையைக் கம்பித்துத் தகுந்தகும் என்றுகூறுவதுபோல,ஆறு அணிசடிலமோலி கொக்கு இறகு அசைவுற்றாட - கங்கையையணிந்த சடாமகுடத்திற் செருகிய பகன் என்னும் அசுரனது இறகு ஒருபால் அசைந்தாடவும்.

தேவர்கள் வேண்டுகோளால் சிவபெருமான் தனது உயிர்பருகினமையால் தனக்கு இடையூறுதேடிய வத்தேவர்களின்று உயிரிழந்துகிடத்தலைக் கண்டுமகிழ் கூர்தல்போல அசைந்தாடியதெனச் சிவபிரான் சடாமவுலியி லணிந்த பகாசுரன் இறகினைக் கவி அத்தியவசயித்துக் கூறுதலால் இதுவும் அவ்வணி. இரண்டனுருபும் பயனிலையுந் தொகுமிடத்து வருமொழி வல்லெழுத்துமிகுதல் பொதுவிதியால் வருமென்பதுணராது, இயல்பாம் எனக்கருதி மதுகைத்தன்னை யென்னும்பாடத்தை மதுகைதன்னையெனத் திருத்தினர், அவர் போலியிலக்கணம் இதுமட்டோ? "தழுவினர் தழீஇனர்" என அளபெடையின்கண் வருதலை நோக்காது "வழீஇனர் என்னும்பாடத்தை வழிஇனர்"எனத்திருத்தினர்,இவர் திருத்தம் இலக்கணநூல் கற்றுணரார் வியக்கத்தக்கதுபோலும். (ருங)

மறைமுதலேவலாற்றின்வயமகனியற்றுந்தண்டக்
குறையினைநிரப்பவெண்ணிக்கொடுவிடமிறைப்பதேபோற்
கறையணற்றுத்திப்பாந்தட்கலன்கள்வாய்பூட்டுவிட்டு
முறைமுறைக்கவைநாநீட்டிமூசெனவுயிர்த்துநோக்க.

(இ-ள்.) மறைமுதல் ஏவல் ஆற்றின் - வேதங்களுக்கு முதல்வனாகிய இறைவனது ஏவலின் வழியே, வயமகன் இயற்றும் தண்டக்குறையினை நிரப்பஎண்ணி -

வீரபத்திரக்கடவுள் தேவர்களைத் தண்டஞ்செய்யும் குறைபாட்டினை நிரப்பக்கருதி, கறை அணல் துத்திபாந்தள் கலன்கள்-விஷம்வாய்ந்த மேல்வாயையும் படப்பொறியையுமுடைய சர்ப்பாபரணங்கள், கொடுவிடம் இறைப்பதேபோல் - கொடியவிஷத்தை யிறைத்தல்போல, வாய்பூட்டுவிட்டு முறைமுறை சுவைநாநீட்டி மூசுஎன உயிர்த்து நோக்க-வாய்திறந்து முறைமுறையாகப் பிளவுபட்ட நாக்குகளைநீட்டி மூசென்றுபெருமூச்செறிந்து ஓர்பால் பார்க்கவும்.

தேவர்கள் தமக்கு ஓர்வகையால் பகைவராதலால் வீரபத்திரக்கடவுளாலொறுக்கப்பட்டுக் குற்றுயிராய்க் கிடந்த தேவர்களுயிர் முற்றுங்கழிய விடத்தினைச் சிவபிரானணிந்த சர்ப்பாபரணங்கள் கான்றதெனக் கவிஅத்திய வசயித்துக் கூறுதலால் இதுவும் அவ்வணி. (ருச)

கணங்கெழுபாற்றுப்பந்தர்ப்பறந்தலைக்களத்துளாங்க
ருணங்குறுமிமையோராவியுள்ளதோவிலதோவென்னப்
பிணங்களைத்தொட்டுப்பார்ப்பான்பிணைக்கரநீட்டியாங்கு
வணங்குடன்மதியம்வெண்கேழ்வளங்கதிர்பரப்பாநிற்ப.

(இ-ள்.) கணம்கெழுபாறு பந்தர் பறந்தலை களத்துளாங்கர் - கூட்டமாகத் திரண்ட பருந்தின்பந்தலையுடைய போர்க்களத்தின் பக்கத்தில், உணங்குறும் இமையோர் ஆவி உள்ளதோ இல்லதோ என்ன - வெட்டுண்டு வருந்தும் தேவர்களுக்கு உயிருள்ளதோ இல்லையோவென்று, பிணங்களை தொட்டுப்பார்ப்பான் பிணைகரம் நீட்டினால் ஆங்கு - பிணங்களைத் தொட்டுப்பார்க்கப் பின்னியகரங்களை நீட்டிப் பரிசித்தால்போல, வணங்கு உடல் மதியம் வெண்கேழ் வளம் கதிர் பரப்பாநிற்ப - வளைந்த சரீரத்தையுடைய சந்திரன் வெள்ளிய நிறத்தையுடைய வளம்வாய்ந்த கிரணத்தை ஓர்பால் பரப்பவும்.

சிவபிரான் அணிந்த இளஞ்சந்திரன் நிலவு வீசுதலைத் தன்னினத்தவராகிய தேவர்கள் உயிரிழந்தனரோ இலரோவென்று தொட்டுப் பரிசித்தல்போலக் கிரணம் வீசியதென்று கவிஅத்திய வசயித்துக் கூறுதலால் இதுவும் அவ்வணி. (ருரு)

இகழ்ந்தவர்தமக்கேபின்னுமின்னருள்புரியவேண்டிப்
புகுந்திறனோக்கியுள்ளம்பொருதுவேர்த்தூடிப்பொங்கி
யகந்தளர்ந்தெழுந்துவீழ்ந்துபுரண்டுகையெறிந்தாலன்ன
நெருஞ்சடைக்கங்கைமாதுநிரந்தரந்ததும்பியாட.

(இ-ள்.) இகழ்ந்தவர் தமக்கேபின்னும் இன் அருள் புரியவேண்டி புகும்திறன் நெருஞ்சடை கங்கைமாது நோக்கி-தன்னையிகழ்ந்த திருமால்முதலிய தேவர்களுக்குப் பின்னும் அருள்செய்ய விரும்பி இறைவன் செல்லும் வகையைப் பரந்தசடையிலுள்ள கங்காதேவி பார்த்து, உள்ளம் பொருது வேர்த்து ஊடிபொங்கி-மனம் பொருது வேர்த்துப் பிணங்கிச் சினங்கூர்ந்து, அகம்தளர்ந்து எழுந்து வீழ்ந்து புரண்டு கை எறிந்தால் அன்ன - மனந்தளர்ந்து எழுந்து விழுந்து புரண்டு கையைமோதினாற்போல, நிரந்தரம் ததும்பியாட - நெருங்கிய அலைகள்ததும்பி ஒருபாலாடவும்.

சடையிலணிந்த கங்கை சிவபெருமானுக்கு வந்த இகழ்ச்சி தனக்கும் உளதாதலில் மீட்டும் இகழ்ந்த அவர்க்கு அருள்செய்யச் சென்றமைக்கு இணங்காது ஊடிப் புரண்டு கைகளைமோதியதுபோல இருந்ததெனக் கவிஅத்தியவசயித்துக் கூறுதலால் இதுவும் அவ்வணி. (ருசா)

தாதையென்றிருந்துதீங்கேதாங்கினுற்காக்கநல்கப்
போதரோன்யானெனன்றூடும்பூவையைத்தழீஇக்கொண்டேகு
மாதரங்கடுப்பவன்னவணங்கினையிடப்பாற்கையாற்
காதலித்திறுகப்புல்லியணைத்திடுங்காட்சிதோன்ற.

(இ-ள்.) தாதை என்று இருந்து தீங்கே தாங்கினுற்கு-எனக்குத் தந்தையென்று பேர்பூண்டிருந்து என்றுந் தீங்கே செய்துவந்த தக்கனுக்கு, ஆக்கம் நல்கயான் போதரோன் என்று ஊடும் பூவையை தழுவிக்கொண்டு ஏகும் ஆதரம் கடுப்ப - வாழ்நாள் கொடுத்தருள நான்வாரேன என்று பிணங்கும் உமையம்மையை ஒருபால் தழுவிச்செல்லும் விருப்பினையொப்ப, அன்ன அணங்கினை-அந்த உமையம்மையை, இடப்பால் கையால் காதலித்து இறுகப்புல்லி அணைத்திடும் காட்சிதோன்ற - தனது இடப்பாகத்தில் திருக்கரத்தால் இறுகத்தழுவி அணைத்தருளுங் காட்சி ஒருபால் தோன்றவும்.

தன்னு லொறுக்கப்பட்டவனைப் பரிக்கிரகித்தல்தனது அருட்சத்தியாலாதலால் ஆக்கநல்கப்போதரோன் யானென்றூடும் என்றார். உமையம்மையை யொருபாலணைத்துச்செல்லுதலே, எனக்குத் தந்தையென்று பெயர்பூண்டிருந்தும் எனக்கு என்றுந் தீங்கேசெய்து வந்த தக்கனுக்கு இன்று ஆக்கந்தரவாரேன் என்று ஊடிய உமையம்மையினூடலை யொழிக்கத் தழுவினர் எனக் கவியத்திய வசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்றவணி.

தனது சத்தியால் அருளுதலே—

"இடப்பாகமாதராளோடியைந்துயிர்க்கின்பமென்றும்
அடைப்பானும்" எனவரும் சிவஞானசித்தியாரால் உணர்க. (ருஎ)

குருதியென்பிரத்தமூளைகுடருடற்குறைகடுன்றும்
பொருகளந்திருக்கண்சாத்தாப்பொருட்டவண்மறைப்பார்போலத்
தருமலர்மாரிதூவியுருத்திரகணங்கள்சாரக்
கருணைகூர்ந்தருளித்தோன்றுங்கடவுளையெவருங்கண்டார்.

(இ-ள்.) குருதி என்பு இரத்தம் மூளை குடல் உடல் குறைகள் துன்றும் பொருகளம் - உதிரமும் எலும்பும் தசையும் மூளையும் குடலுங் கவந்தங்களும் நெருங்கிய போர்க்களத்தை, திருக்கண் சாத்தாப்பொருட்டு அவண் மறைப்பார்போல - இறைவன் தனது திருக்கண்களைச் சாத்தாவண்ணம் அவ்விடத்தில் மறைப்பவர்போல, உருத்திரகணங்கள் தருமலர்மாரி தூவிசார - உருத்திரகணங்கள் வாசம் வீசும் மலர் மழைசிந்தி ஒருபாற்சாரவும், கருணைகூர்ந்தருளித்தோன்றும் கடவுளை எவரும் கண்டார் - கிருபைகூர்ந்தருளிக் காட்சிதந்தருளுஞ் சிவபெருமானைத் திருமால்முதலிய யாவரும் தரிசித்தார்கள்.

இரத்தம் செந்நிறம் அது தசைமேல் நிற்றலால் பண்பாகுபெயர். (ருஅ)

கொடுங்கனுக்கண்டுவேர்த்துக்குழறிவாய்வெருஉங்காலன்னை
யடுங்கனுவொழித்துவல்லேயணைத்திடப்பெறுஞ்சிறூர்போ
னடுங்குறுமிமையோரெல்லாநாதனைக்காண்டலோடு
நெடுங்களிதுளும்பியோகைநீடினார்வணங்கிநின்றார்.

(இ-ள்). கொடுங்கனுக்கண்டுவேர்த்து குழறிவாய் வெருவுங்கால்-கொடிய கனவு கண்டு வேர்த்து வாய்குழறிப் புலருங்காலத்தில், அன்னை - தாயானவள், அடுங்கனு

ஒழித்து வல்லே அணைத்திடபெறும் சிறாபோல - அம்மக்களை வருத்துங் கனவினை யொழித்து விரைந்து அணைக்கப்பெற்ற பிள்ளைகளைப்போல, நடுங்குறும் இமையோர் எல்லாம் நாதனைகாண்டலோடும் - நடுங்குந் தேவர்களெல்லாம் சிவபெருமானைக்கண்ட அன்றே, நெடுங்களி துளும்பி ஓகை நீடினர் வணங்கிநின்றார் - மிக்க களிமீதூர மகிழ்கூர்ந்து வணங்கி நின்றார்கள்.

ஆண்பாலுக்குப் பெண்பாலை யுவமைகூறினாராயினும் மக்கள்பாற் செய்யுங் கருணைக்கு அன்னை மேம்பட்டவளாதலால் கருணையின் மிகுதிதோன்றச் சிவபிரானை அன்னையாகவும், தேவர்களை மக்களாகவும் ஒப்புமைக் கூட்ட வுவமையணியாகப் பான்மாறுபடுதலில் வந்தவுவமையணி வழுவமைதிபடக் கூறினார். (௬௯)

இன்னரைநோக்கியெங்கோன்முறுவலித்தெமக்குவேள்வி
நன்னிடைப்பாகமென்னேதந்திலீரஃதுநிற்க
மன்னுபோரடுபேராண்மைவலியினீர்பலருமென்னே
பன்னுமோர்வீரற்காற்றாதுடைந்தனிர்பகர்மினென்றான்.

(இ-ள்.) எங்கோன் இன்னரைநோக்கி முறுவலித்து -எமது பெருமான் இத்தன்மையையுடைய தேவர்களைப் பார்த்துப் புன்னகைசெய்தருளி, எமக்கு வேள்வி இடைபாகம் என்னேதந்திலீா - எமக்கு வேள்வியில் அவிப்பாகத்தை யாதுகாரணம் கொடுக்கலீர், அஃதுநிற்க-அது நிற்க, பலரும் மன்னுபோர் அடுபேர் ஆண்மை வலியினீர்-நீங்கள்பலரும்நிலைபெற்ற போர்க்களத்தில் எதிர்ந்தோரைக் கொல்லும் பெரிய ஆண்மையில் வலியீர், பன்னும் ஓர் வீரற்கு ஆற்றாது உடைந்தனிர் என்னே பகர்மின் என்றான் - இப்போது பலரும் புகழும் ஒருவீரனுக்குச் சிறிதும் ஆற்றாது தோற்றீர் அது யாது காரணம் கூறுங்களென்று வினவியருளினான்.

இகழ்ச்சிதோன்றத் திருமால்முதலிய தேவர்களைப் புகழ்ந்து கூறுதலால் இது வஞ்சப்புகழ்ச்சியணி. (௭௦)

அடியிணைதொழுதுமாயோன்முதலியவமரர்சொல்வா
ரடிபடுமெங்களாண்மைதுரும்பொன்றிலன்றேகண்டா
யடியராமெம்மைப்பல்காற்குரங்குபோலாட்டுவிப்ப
தடிகளுக்கழகோவெந்தாயாற்றிலேமுய்யக்கொள்ளாய்.

(இ-ள்.) அடியிணை தொழுது மாயோன் முதலிய அமரர்சொல்வார் - இரண்டு திருவடிகளையும் தொழுது திருமாலமுதலிய தேவர்கள் கூறுவார்கள், அடிபடும் எங்கள் ஆண்மை துரும்பு ஒன்றில் அன்றே கண்டாய் - உன் திருவடிக்கீழ்ப்பட்ட எங்கள் ஆண்தன்மையை நீ நட்ட ஒருதுரும்பினிடத்து அக்காலத்தில் பார்த்தருளினாய், அடியர் ஆம் எம்மை பல்கால் குரங்குபோல் ஆட்டுவிப்பது - உமது அடியார்களாகிய எங்களைப பலகாலும் குரங்குபோல் ஆட்டுவித்தல், அடிகளுக்கு அழகோ - தேவரீருக்கழகோ, எந்தாய் ஆற்றிலேம் உய்யக்கொள்ளாய் - என்றந்தையே நாங்கள் பொறுத்திலேம உய்ய எங்களை ஆட்கொண்டருளாய்.

சலந்தராசுரனாலும், அந்தகாசுரனாலும், திரிபுராதியர்களாலும், பிரமனுந்திருமாலுங்கொண்ட அகந்தையையொழிக்க வவர்க்கிடையே யெழுந்த சோதிமலையின் தோற்றத்தாலும், வயிரவமூர்த்தியாலும், மூத்தபிள்ளையாராலும், இளையபிள்ளையாராலும், ஐயனாராலும், கடலிற்றோன்றிய நஞ்சினாலும் இன்னும் பலவேதுவினாலும் அறிவுறுத்து ஒறுத்தமையால் பல்காற் குரங்குபோலாட்டுவிப்ப-தடிகளுக்கழகோ வெந்தாயாற்றிலே முய்யக்கொள்ளாய் எனக்குறையிரந்தனர் என்றார். (௭௧)

அத்தனேபல்காலிவ்வாறுணர்த்தியுமாடைமாசின்
மைத்துறுபேதைநீரார்ப்பின்பினுமயங்குகின்றேங்
கைத்தனையாடியோச்சிக்காதியுமாள்வரல்லா
லெத்தனைபிழைசெய்தாலுமிகப்பரோவடிமைபெற்றோர்.

(இ-ள்.) அத்தனே-இறைவனே, பல்கால் இ ஆறு உணர்த்தியும் - பலகாலும் இவ்வகையாக ஒறுத்து அறிவுறுத்தியும், ஆடைமாசின் மைத்துறுபேதைநீரால் பின் பின்னும் மயங்குகின்றேம்-ஆடையிற்படிந்த அழுக்குபபோலக்கறுத்தமைந்த அறியாமையின் தன்மையால் பின்னும் பின்னும் மயங்கியே யிருக்கின்றோம், அடிமைபெற்றோர் எத்தனை பிழைசெய்தாலும்- அடிமைகொண்டவர்கள் அவ்வடிமைகள் எத்தனை தவறுகள் செய்தாலும், கைதளை ஆடி ஓச்சிகாதியும் ஆள்வர் அல்லாமல்-சிறியவிலங்குபூட்டி அடித்து ஒறுத்துப் பின்னும் ஆள்வாரேயல்லாமல், இகப்பரோ - கைவிடுவோர் உலகிலுண்டா (இல்லையென்றபடி)

கைக்குடை, கைவாய்க்கால் என்பன சிறுமையையுணர்த்தி நின்றாற்போலக் கைதளையென்பதில் கை சிறுமைமேல் நின்றது. (௬௨)

கறுத்தநின்மிடறுநோக்கேங்கையணிகபாலநோக்கேம்
வெறுத்தவெள்ளென்புநோக்கேம்விழியடிகிடத்தனோக்கேம்
குறுத்தமோட்டாமையோடும்பன்றியின்கோடுநோக்கே
மிறுத்திடும்விதியினூறேமதியெனலெம்பாற்கண்டேம்.

(இ-ள்.) கறுத்தநின்மிடறுநோக்கேம் - விஷத்தாற்கறுத்த உனது ஸ்ரீ கண்டத்தையும் பார்க்கேம், கை அணி கபாலம்நோக்கேம் - திருக்கரத்தி லணிந்த கபாலத்தையும் பார்க்கேம், வெறுத்தவெள் என்புநோக்கேம் - உவர்க்கத்தக்க வெள்ளிய எலும்புமாலைகளையும் பார்க்கேம், விழி அடிகிடத்தல் நோக்கேம் - கண்கள் திருவடியின்கீழ்க் கிடத்தலையும் பார்க்கேம், குறுத்தமோடு ஆமையோடும் பன்றியின்கோடும் நோக்கேம்-அவையவங்களை உள்ளடக்கிய பெரிய ஆமையின் ஓட்டையும் பன்றியின் கொம்பையும் பார்க்கேம், இறுத்திடும் விதியின் ஆறே மதி எனல் எம்பால்கண்டேம் - இறுதிசெய்யும் விதியின்வழியே மதிசெல்லுமென்பதை எம்மிடத்தே அறிந்தேம்.

எங்களகந்தையை யொழித்தருளுதற்பொருட்டே தேவரீர் இவைகளை யடையாளங்களாகக் கொண்டருளியும், மலச்சிமிழ்ப்பாலவற்றை நோக்காது எங்களிலொருவனாக வுன்னைக்கருதி யிவ்வாறாயினேம் என்பார் இறுத்திடும் விதியினாறே மதியென லெம்பாற்கண்டேம் என்றார். (௬௩)

பொங்கருட்பரமானந்தபூரணமுதலேயிங்கு
நங்களையாளத்தோன்றியைந்தொழினடாத்தலோரே
மங்கையைமணந்தாயென்றுமக்களையுயிர்த்தாயென்று
மெங்களிலொருவனாகவெண்ணியேயிகழ்ந்துகெட்டேம்.

(இ-ள்.) பொங்கு அருள் பரமானந்த பூரணமுதலே - மிக்க திருவருளால் பேரின்ப நிறைவாய் எங்கும் நிறைந்த முதல்வனே, இங்கு நங்களை ஆளத்தோன்றி ஐந்தொழில் நடாத்தல் ஓரேம்- இவ்விடத்தில் எங்களை அடிமைகொள்ளத் திருவுருக்கொண்டு படைப்புமுதலிய ஐந்தொழில்களையும் நடத்துவதைச் சிறிதும் அறியேம், மங்கையை மணந்தாய் என்றும் (எங்களைப்போல்) ஒரு பெண்ணைக் கலந்தாயென்

றும், மக்களை உயிர்த்தாய் என்றும் - பிள்ளைகளைப் பெற்றாயென்றும், எங்களில் ஒருவ னாக எண்ணியே இகழ்ந்து கெட்டேம்-எங்களுள் ஒருவனாக உன்னை இதுகாறுங் கரு தியே அந்தோ அவமதித்துக் கேடுற்றேம்.

உமையம்மையைத் தேவரீர் ஒருபால் மணந்தது எங்களுக்குப் பாசம்வாய்க் கப் படைப்புமுதலிய ஐந்தொழில் நடத்துதற்பொருட்டென்பது ணர்ந்திலேம் என் பார் நங்களை யாளத்தோன்றி யைந்தொழி னடாத்தலோம் எனவும், மூத்தபிள்ளை யார் முதலியோரைத் தந்தது எங்களகந்தையா லிடையில் அசுரர்களால் வந்த துன்ப த்தை யொழித்தற் பொருட்டென்ப துணராது எங்களைப்போல நீயும் ஒருபெண்ணை யுடையாய் பிள்ளைகளை யுடையாயெனக் கருதிக் கேட்டோம் என்பார் மங்கையை மணந்தாயென்று மக்களையுயிர்த்தாயென்றும் - எங்களிலொருவனாக வெண்ணியேயி கழ்ந்துகெட்டேம் எனவுங்கூறினர்.

"சாவமுன்னாட்டக்கன்வேள்வித்தகர்தின்றுநஞ்சமஞ்சி
ஆவவெந்தாயென்றவிர்தாவிடேம்மவரவரோ
மூவரென்றேயெம்பிரானொடுமெண்ணிவிணாணுமெண்மேற்
றேவரொன்றேயிறுமாந்தென்னபாவந்திரிதவரோ" எனவரும் உண்மைத் திருவாக்கால் உணர். (சுச)

கடவுள்யாஞ்செருக்காவண்ணங்கண்டனமுய்யுமாற்றால்
விடமுதலடையாளங்கணின்றிருமேனிவைத்தா
யடலுறுமவையுந்தேறாச்செருக்கறிந்திந்நாளெங்க
ளுடலினுமடையாளங்களுறுத்தினைபோலுமுய்ந்தேம்.

(இ-ள்.) கடவுள் - கடவுளே, யாம் செருக்காதவண்ணம் கண்டனம் உய்யும் ஆறால் - யாங்கள் இறுமாப்படையாத வண்ணம் கண்டு பிழைக்கும் வகையால், விட முதல் அடையாளங்கள் நின்திருமேனிவைத்தாய்-விஷமுதலிய அறிகுறிகளை நின் தி ருமேனியில் வைத்தருளினாய், அடல் உறும் அவையும் தேறாத செருக்கு அறிந்து - வருத்தும் அவைகளையுந் தெளிந்துய்யாத எங்கள் இறுமாப்பினை யுணர்ந்து, இந்நாள் எங்கள் உடலினும் அடையாளங்கள் உறுத்தினை போலும்-இந்நாளில் எங்களுடைய உடம்பிலும் அறிகுறிகளைச் செய்தாய்போலும், உய்ந்தேம் - இனிமேலாகிலும் நாங் களுணர்ந்து பிழைப்போம்,

விடத்தை ஸ்ரீகண்டத்தில் வைத்ததும் சிங்கவுரிதரித்தது முதலிய அறிகு றிகளையும் தேவரீர் திருமேனியிற் கொண்டருளியது எங்களகந்தையை யொழித் தற்பொருட்டே என்பார் விடமுதலடையாளங்கணின் திருமேனிவைத் தாயெனவும், அவற்றையுந் தேறாது மீளவும் அகந்தையுற்றேம் என்பார் அடலுறு மவையுந்தேறாச் செருக்கறிந்தெனவும், இனியேனும் யாங்கள் மறவாதுணர்ந்துய்தற் பொருட்டே தலைதுணித்தல் முதலிய சின்னங்களை யெங்களுடலிற் செய்தனையென்பார் எங்களு டலினு மடையாளங்க ளுறுத்தினைபோலு முய்ந்தேமெனவுங் கூறினர். (சுரு)

இன்றெமையொறுப்பவீரன்போந்ததுன்னேவலாக
வன்றெமையொறுப்பப்போந்தவிடமுமுன்னருளேயென்று
மன்றயாந்தெளிந்தேமிந்நாளிடித்தெமைவாைறுத்த
லென்றுநின்கடனேயன்றேவீறிலாக்கருணைவாழ்வே.

(இ-ள்.) இன்று எமை ஒறுப்ப வீரன் போந்தது உன் ஏவலாக - இன்று எங் களைத் தண்டிக்க வீரபத்திரக்கடவுள் வந்தது உனது ஏவல் வழிபோல,அன்று எமை

ஒறுப்பபோந்த விடமும்- அக்காலத்தில் எங்களை ஒறுக்கவந்த விடமும், உன் அருளே என்று -உனது திருவருளேயென்று, இந்நாள் மன்றயாம் தெளிந்தேம் -இக்காலையில் துணிவாகத் தெளிந்துய்ந்தேம், ஈறு இல்லாத கருணைவாழ்வே - முடிவில்லாத திருவருள் வாழ்க்கைக் கிடமாயுள்ளவனே, எம்மை இடித்துவரைநிறுத்தல் என்றும் நின்கடன் அன்றோ-எங்களை இடித்தறிவுறுத்தி உன்னாணை எல்லையில்நிறுத்தல் எக்காலத்தும் உனது கடமை அல்லவா.

ஆக உவமை யுருபிடைச்சொல் வடியாகவந்த வினையெச்சம் ஆதலால், போல எனப் பொருள் கொண்டாம். "ஆள்வாரிலி மாடாவேனோ" எனவருதல் காண்க. ()

அன்றுனைமதியாதாழிகடைந்தது உமன்றியெம்மேற்
சென்றடர்வதனுக்கஞ்சிச்செல்வநீயமுதுசெய்யக்
கொன்றிடுநஞ்சங்காட்டிக்குற்றமேற்குற்றஞ்செய்தே
மின்றுனையிகழ்ந்ததொன்றோடொழிதலினுய்ந்தேமெந்தாய்.

(இ-ள்.) அன்று உனைமதியாது ஆழிகடைந்ததும் - அக்காலத்தில் உன்னைமதியாது திருப்பாற்கடலை யாங்கள் கடைந்ததும், அன்றி - அக்குற்றமன்றி, எம்மேல் சென்று அடர்வு அதனுக்கு அஞ்சி - எங்கள் மேற்சென்று கொல்லும் அந்நஞ்சினுக்கு அஞ்சி, செல்வ - செல்வனே, நீ அமுது செய்ய - நீ திருவமுதுசெய்ய, கொன்றிடுநஞ்சம்காட்டி குற்றம்மேல் குற்றம்செய்தேம் - எங்களைக் கொல்லவெழுந்த நஞ்சினை நீ பருகக்காட்டிக் குற்றத்தின்மேல் குற்றஞ்செய்தேம் அக்குற்றம், இன்று உன்னை இகழ்ந்தது ஒன்றோடு ஒழிதலின் எந்தாய் உய்ந்தேம்-இக்காலத்தில் உன்னை அவமதித்தலால் வந்த ஒறுப்பினுல் ஒழிந்துபோதலின் என்றந்தையே இனிப்பிழைத்தேம்.

உன் அனுஞையன்றி நாங்கள் கடலை கடையச்சென்றது குற்றமென்பதுதோன்ற அன்றுனை மதியாதாழி கடைந்தது உம் எனவும், அமுதுபருகத் தேவரீர் ஆஞையின் வழிநில்லாத எங்கள் உயிர்பருக எழுந்த நஞ்சினையுண்டருள முன்புசெய்த அபராதத்தின்மேல் அபராதஞ்செய்தமையால் அது என்றுந்தீர்வில்லாத பெருங்குற்றம் என்பது தோன்ற அமுதுசெய்யக் கொன்றிடு நஞ்சங்காட்டிக் குற்றமேற் குற்றஞ்செய்தேம் எனவும். அக்குற்றங்களுக்குத் தீர்வு தேவரீரை யவமதித்த தக்கன்வேள்விக்குச் சென்றது என்பதுதோன்ற இன்றுனை யிகழ்ந்த தொன்றோ டொழிதலினெனவும், எங்களுக்குச்செய்த வடுவே இனித் திநெறியிற் புகுத்தாதென்பது தோன்ற உய்ந்தே மெந்தாயெனவுங் கூறினூர். (சுஎ)

அளவறுகாலந்தீவாயள்ளலிற்குளித்துந்தீரா
வளருமிச்சிவத்துரோகம்வயப்புகழ்வீரன்றன்னு
லெளிதினிற்றவிர்த்தாயன்றேயிப்பெருங்கருணைக்கெந்தாய்
தெளிவிலாச்சிறுமையேங்கள்செய்குறியெதிர்ப்பையென்னே.

(இ-ள்.) அளவறுகாலம் - பலகாலும், தீவாய் அள்ளலில் குளித்தும் தீராது வளரும் இச்சிவத்துரோகம் -எரிவாய் நரகத்தில் மூழ்கியும் தீராது வளரும் இச்சிவ அபராதத்தை, புகழ் வயம் வீரன் தன்னுல் எளிதினில் தவிர்த்தாய் அன்றே- புகழ்ச்சியையுடைய வீரபத்திரக் கடவுளால் எளிதாகத் தவிர்த்தாயல்லவா, எந்தாய இப்பெருங்கருணைக்கு தெளிவிலாத சிறுமையேங்கள் செய்குறி யெதிர்ப்பை என்னே-எங்கள் தந்தையே நீசுரந்த இந்தப் பெரியகருணைக்கு என்றும்மயங்கிய சிறுமையையுடைய யாங்கள்செய்யும் கைம்மாறு யாதுளது. (ஒன்றுமில்லை என்றபடி) (சுஅ)

நாங்கள் தேவரீருக்குச் செய்த அபராதம் எரிவாய்நரகிற் புகினும் தீராது என்பது புலப்பட அளவறுகாலந் தீவாயள்ளலிற் குளித்துந் தீராவளருமிச்சிவத் துரோகம் எனவும், நரகிற் புகுத்தி வருத்தாமல் வீரபத்திரக்கடவுளால் எங்களுடலில் வடுப்படுத்தி யெளிதிற் றவிர்த்தனை யென்பது புலப்பட வீரன்றன்னாலெளிதினிற் றவிர்த்தாயெனவும், இம்மாறிலாத கருணைக்கு யாங்கள்செய்யுங் குறியெதிர்ப்பை வேறிலை என்பது புலப்படச் செய்குறி யெதிர்ப்பை யென்னேயெனவுங் கூறினர். குறியெதிர்ப்பை யெனபதற்கு அளவுகுறித்துவாங்கி அவ்வாங்கியவாறே யெதிர்கொடுப்பது எனத்திருக்குறளில் பரிமேலழகர் எழுதிய வுரையாற்பொருள் கொள்க. (௬௯)

இனையனபலவும்பன்னியிரந்திரந்தலந்துகண்டங்
கனையவாய்குழறக்கண்ணீர்வார்ந்திடக்கரங்களுச்சி
புனையநின்றிமையோரெல்லாம்போற்றுழிமுட்டாட்கஞ்ச
மனையவனெம்பிரானைவணங்கிவிண்ணப்பஞ்செய்வான்.

(இ-ள்.) இனையனபலவும்பன்னி இரந்து இரந்து கண்டம் அலந்து - இவைபோல்வன பலவற்றையுஞ் சொல்லித்தாழ்ந்து நின்று குறையிரந்து தமதுகண்டங்கள் புலர்ந்து, கனையவாய் குழறகண்ணீர் வார்ந்திட கரங்கள் உச்சி புனையநின்று இமையோர் எல்லாம் போற்றுழி - மிகவும் வாய்குழறவும் கண்ணீர்சிந்தவுங்கைகளுச்சிமேல் ஏறவும் நின்று தேவர்களெல்லாம் வணங்குமிடத்து, முள்தாள் கஞ்சமனையவன் எம்பிரானை வணங்கி விண்ணப்பஞ் செய்வான் - முள்ளமைந்த தண்டையுடைய தாமரைமலரைத் தனக்கோ ரில்லமாகவுடைய பிரமன் எமது பெருமானை வணங்கி ஓர் விண்ணப்பம் செய்துகொள்ளுவான். (௭௦)

வேள்வியிற்பாகநல்காமருண்மனவிண்ணோரெல்லாந்
தாழ்நெறித்தக்கனோடுங்குறைவறுதண்டம்பெற்றார்
வாழியவினிநீயெச்சம்வரமுறவருளிச்செய்து
பாழ்படச்சிதைந்தவிண்ணோர்பண்டுபோலுய்யச்செய்யாய்.

(இ-ள்.) வேள்வியில் பாகம் நல்காத மருள் மனம்விண்ணோர் எல்லாம் - வேள்வியில் உனக்குப் பாகத்தைத் தாராத மருண்ட மனத்தையுடைய தேவர்களெல்லாம், தாழ்நெறி தக்கனோடும் குறைவறு தண்டம்பெற்றார் - இழிந்த நெறியில் நின்ற தக்கனோடும் நிரம்பத் தண்டம்பெற்றார்கள், இனி நீ எச்சம் வாழிய - இனியாகிலும் நீ வேள்விவாழ, வரம் உற அருளிச்செய்து - வரத்தைத் தந்தருளி, பாழ்பட சிதைந்த விண்ணோர் பண்டுபோல் உய்யசெய்யாய் - பாழ்பட வேள்விச்சாலையில் அழிந்த தேவர்கள் முன்போலுய்யச் செய்தருளாய். (௭௧)

கடுந்தளைப்பிணிப்புண்டார்க்குங்கட்டறுத்தருளாயென்ன
வடுங்கரியுரித்தபெம்மானம்முறைகடைக்கண்சாத்த
விடும்பைதீர்ந்துய்ந்தாரன்னோர்யாரையுநோக்கிப்பின்னுங்
கொடும்பிழைமுழுதுநீங்கும்வழியினைக்கூறலுற்றான்.

(இ-ள்.) கடுந்தளை பிணிப்புண்டு ஆர்க்குங்கட்டு அறுத்தருளாய் என்ன - கொடிய விலங்கால் சிமிழ்ப்புண்டு பந்தப்பட்டு நிற்கும் கட்டினை அறுத்தருளாய் என்று குறையிரக்க, அடுங்கரி உரித்தபெம்மான் அம்முறை கடைக்கண்சாத்த - தேவர்களை வருத்திய கயாசுரனை யுரித்துப் போர்த்தருளிய விறைவன் பிரமன் குறையிரந்தமுறையே கடைக்கண் சாத்தியருளுதலால், இடும்பை தீர்ந்து உய்ந்தார் - துன்பத்தி

னின்று நீங்கிப் பிழைத்தனர், அன்னோர் யாரையும் நோக்கி - அந்த திருமால் முதலிய எல்லோரையும் பார்த்து, பின்னுங் கொடும்பிழை முழுதுநீங்கும் வழியினை கூறலுற்றான் - மீளவும் அவர்கள் செய்த கொடிய தவறுகள் முழுமையும் நீங்கும் வழியையும் சொல்லத்தொடங்கினான்.

தக்கனகர்ந்தைக் குடன்பட்டுத் திருமால்முதலிய தேவர்கள், அவன் செய்யும் வேள்வியை முடிக்கநின்ற தவறு பெரிதாகலான் கொடும்பிழை முழுதும் எனவும், நன்னை யிகழ்ந்தொழுகியதைப் பொறுத்ததுமன்றி அத்தவறுகள் நீங்கு வகைகளுய்யும் வண்ணம் அருளும் பெருங்கருணையாளனாதலால் நீங்கும் வழியினைக் கூறலுற்றான் எனவுங் கூறினார். கயாசுரனென்பவன் தேவர்முதலியோரை வருத்தி நிலவுலகிலுள்ள மக்களுயிரையும் பருகித் திரிதலைமுனிவர்கள் கண்டுபயந்து காசியையடைந்து மணிகர்ணிகையென்னும் திருக்கோயிலில் புகுந்து சிவபெருமான் றிருவடிக்கீழ்ச் சரண்புக, அவர்களைத் துரந்துசென்ற அவ்வசுரன் அவர்களைக் கண்டு அத்திருக்கோயிலின் வாயலுட் செல்லுகையில் சிவபெருமானுக்கிரவடிவங்கொண்டு அவனது தொடையில் ஒரு திருத்தாளை யூன்றித் தனது திருக்கரங்களிலுள்ள நகங்களால் அவனைப் பிளந்து, தனது திருமேனி ஒளியால் கண்ணொளியிழந்த மக்களுயிர்க்குக் கண்ணொளி தருதற்பொருட்டு அவ்வசுரனது தோலைப் பார்த்தருளினானென்பது புராணவரலாறு.

ஆளுநாயகனஃதறிந்துயிர்த்தொகையனைத்தும்
வாளிலாதுகண்ணயர்வதுமாற்றுதன்மதித்து
நீளிருங்கரியுரித்திடுமெதளினைநிமலன்
றோளின்மேற்கொடுபோர்த்தனனருள்புரிதொடர்பால்.

எனக் கந்தபுராணத்தில் ததீசியுத்தரப்படலத்தில் வருதல்காண்க. (௭௧)

எமக்குநீர்பெரிதுங்குற்றமிழைத்தனிரவைதீர்ந்துய்ய
நமக்குமிக்கினியகாஞ்சிநகர்வயினண்ணீரங்க
ணிமைத்தொளிர்கயிலாயப்பானாரதனியம்புங்கூற்றி
னமர்த்தவேற்றக்கனீன்றவரியச்சுவப்பேர்மைந்தர்.

(இ-ள்.) எமக்குநீர் பெரிதும் குற்றம் இழைத்தனிர் - எமக்கு நீங்கள் மிகவும் பிழைசெய்தீர்கள், அவைதீர்ந்து உய்ய நமக்கு மிக்கு இனியகாஞ்சி நகர்வயின நண்ணீர் - அக்குற்றங்களினின்று நீங்கி உய்தற்பொருட்டு நமக்கு மிகவு மினியகாஞ்சித் திருப்பதியை அடைவீர், அங்கண் இமைத்து ஒளிர் கயிலாயப்பால் - அப்பதியில்விளங்கி ஒளிவீசும் திருக்கயிலாயமென்னுந் திருத்தலத்தின் பக்கத்தில், நாரதன் இயம்பும்கூற்றின் - நாரதமுனிவர் உபதேசித்த மொழியால், அமர்த்தவேல் தக்கன் ஈன்ற அரியச்சுவப்பேர் மைந்தர் - போர்செய்யும் வேலையுடைய தக்கன்பெற்ற அரியச்சுவன் முதலிய புத்திரர்கள். (௭௨)

பொதுவறநம்பிநம்மைப்போற்றுமாயிடைக்கட்சென்று
கதுமெனவிலிங்கந்தாபித்தருச்சிமின்கரிசுநீங்க
விதியுளித்தக்கன்றானுமிம்முறைவிழைகபூசை
யிதுபுரிகாறுநுங்கட்கிடும்பையேபுரிவர்மாற்றார்.

(இ-ள்.) பொது அற நம்மைநம்பி போற்றும் ஆயிடை கண்சென்று - உரிமையாக நம்மைத்துதிக்குமவ்விடத்திற் சென்று, கதுமென இலிங்கம் தாபித்து

அருச்சிமின் - விரைந்து சிவலிங்கந்தாபித்து அருச்சியுங்கள், கரிசுநீங்க விதியின் தக்கன்றானும் இம்முறை பூசை விழைக - தான்செய்த குற்றத்தினின்று நீங்க ஆகமவழியிலே தக்கனும் இவ்வழியில் நின்று பூசைசெய்யக் கடவன், இதுபுரி காறும் நுங்கட்கு இடும்பையே யாற்றார் புரிவர் - இச் சிவபூசையைச் செய்துமுடிக்கத் தொடங்கு மளவும் உங்களுக்குப் பகைவராகிய அசுரர்கள் துன்பமே செய்யாநிற்பர்.

நமக்குத் தீங்குசெய்த அபராதம் தீர்தற்பொருட்டு நம்மை வழிபட்டுப் பூசித்தபின் அசுரர்களால் வரும் இடையூறொழியுமென்பதும், நம்மை வழிபடுங்காலத்தினிடையிலுள்ள காலங்களில் அவ்வசுரர்கள் துன்பமே செய்வாரென்பதுந் தோன்ற இது புரிகாறு நுங்கட் கிடும்பையே புரிவர் மாற்றா எனவும், பல கடவுளரையுங் கடவுளராகக் கருதி வழிபட்டது போலாது அவர்களைக் கழித்துச் சிவபெருமானையே பற்றுக்கோடாகப் பற்றினரென்பது தோன்றப் பொதுவற நம்பி நம்மை எனவுங் கூறினார். (௭௩)

கலிநிலைத்துறை.

அனையர்தாரகன்சூரபன்மாமுதலாகு
மினையதானவரென்றறிமின்களென்றருளிக்
கனைபொலங்கழல்வீரனுங்கணங்களுஞ்சூழத்
தனைநிகர்த்தவன்கயிலையைச்சார்ந்தனனிப்பால்.

(இ-ள்.) அனையர் - உங்களுக்குப் பகைவராயுள்ளவர், தாரகன் சூரபன்மாமுதலாகும் இனையதானவர் என்று அறிமின்கள் என்றருளி - தாரகாசுரன் சூரபன்மா முதலிய இவ்வசுரர்கள் என்றறியுங்களென்று கூறியருளி, கனைபொலங்கழல் வீரனும் கணங்களும் சூழ தனைநிகர்த்தவன் கயிலையை சார்ந்தனன் - ஒலிக்கும் பொன்னாலமைந்த வீரகண்டை கட்டிய வீரபத்திரக்கடவுளும் சிவகணங்களும் புடைசூழ்ந்துவர (தன்னிலும் உயர்வில் ஒப்பில் ஒருவரு மின்மையால்) தனக்குத்தானே ஒத்த இறைவன் திருக்கயிலாயத்தை யடைந்தருளினன், இப்பால் - இப்புறம்.

நமக்குத் தீங்குசெய்த அபராதம் சிவபூசனையால் தீருங்காறும் உங்களுக்குப் பகைவராயுள்ளவர் தாரகன்முதலிய அசுரர்கள் என்பார். தாரகன சூரபன்மா முதலாகு மினைய தானவரென் றறிமின்கள் என்றார். (௭௪)

புள்ளினத்தரசுயர்த்தவனுதிப்புத்தேளிர
வள்ளலாணையின்கிளவிபொச்சாத்தலின்மதுகை
கள்ளுசூரபன்மாமுதறயித்தியர்நலிய
விள்ளருந்துயர்ப்பெருங்கடலாழ்ந்தனர்மெலிந்து.

(இ-ள்.) புள் இனத்து அரசு உயர்த்தவன் ஆதி புத்தேளிர்-பறவைகளுக் கரசான கருடனைத் துவசத்திலுயர்த்திய திருமால் முதலியதேவர்கள், வள்ளல் ஆணையின் கிளவிபொச் சாத்தலின் - சிவபெருமானாணைவழிநின்ற உய்திமொழியை மறந்தலால், மதுகை கள்ளுசூரபன்மா முதல் தயித்தியர் நலிய - வலிமைமிக்க சூரபன்மா முதலிய அசுரர்கள் வருத்த, மெலிந்து விள்ளருந்துயர் பெருங்கடல்ஆழ்ந்தனர் - உடல் மெலிந்து துன்பமென்னும் பெரியகடலி லழுந்தினர்.

ஊழ்வசத்தின ரென்பார் பொச்சாத்தலின் என்றார். (௭௫)

மெலிந்தபின்மறைக்கிழவனையுசாவுபுவிடையோன்
வலிந்தவாய்மொழிநினைந்துபோய்க்கச்சியைமருவி




மெபபாரி கோட்டப்படலம்.

இரணியன். இரணீசப்படலம். இரணியாக்ஷன்.

யிலிங்கமாயிடைநிறீஇத்தொழூஉதிடும்மைதீர்ந்துய்ந்தார்
பொலிந்தவிண்ணவர்தம்மொடுதக்கனும்போகி.

(இ-ள்.) மெலிந்தபின் - சூரபன்மன் முதலிய அசுரர்களால் உலர்ந்த பின்பு, மையாக்கிழவனை உசாவுபு-தங்களுக்கு நேர்ந்த துன்பத்திற்கு (காரணம்யாதென்று) பிரமனைநோக்கி வினவி, விடையோன் வலித்த வாய்மொழி நினைந்துபோய் - இடப ஊர்தியையுடைய இறைவன் பணித்தருளிய திருமொழியை நினைந்து சென்று, கச்சியைமருவி - கச்சித் திருப்பதியை யடைந்து, இலிங்கம் ஆயிடை நிறுவி தொழூஉது இடும்மை தீர்ந்து உய்ந்தார் - சிவலிங்கப் பெருமானை அத்திருப்பதியிற் றாபித்துப் பூசித்துத் திருமால் முதலிய தேவர்கள் துன்பத்தினின்று நீங்கிப் பிழைத்தார்கள், பொலிந்த விண்ணவர் தம்மொடு தக்கனும்போகி - அவமொழிந்த தேவர்களோடு தக்

உய்திமொழியாதலால் - மொழியென வாளாகூறாது வாய்மொழி யெனவும், திருமால் முதலியோர் பொருட்டுப் பிரமன் குறையிரந்தமையால் அபராதத்தின் தீர்வு சிவபிரானருளியதை உணர்த்தினானென்பது தோன்ற விடையோன் வலித்த வாய்மொழிநினைந்து போய் எனவுங்கூறினார். (எசு)

மக்கள்பூசனைவிளைத்தவச்சூழலைமருவி
நெக்கவன்பினாற்றானொருசிவலிங்கநிறுவித்
தக்கவாய்மையிற்றொழுதனன்வெவ்வினைதணந்தான்
மிக்கசீர்க்கணநாதனாம்வீறுபெற்றிருந்தான்.

(இ-ள்.) மக்கள் பூசனை விளைத்த அச்சூழலை மருவி - தனது மக்கள் பூசித்த அத்திருப்பதியையடைந்து, நெக்க அன்பினால்தான் ஒரு சிவலிங்கம் நிறுவி-கசிந்த அன்பினால் தானொரு சிவலிங்கத்தைத்தாபித்து, தக்க வாய்மையில் தொழுதனன் வெவ்வினை தணந்தான் - ஆகமவழியால் பூசித்துக் கொடிய வினையினின்று நீங்கி, மிக்க சீர்கணநாதன் ஆம் வீறுபெற்று இருந்தான் - மேம்பட்ட புகழையுடைய சிவ கணங்களுக்குத் தலைவனாகிய நிகரில் பெருமையை யடைந்திருந்தனன்.

காரணத்திற்கும் காரியத்திற்கும் ஒற்றுமை உண்மையால் காரணத்தைக் காரியமாக மிக்கவன்பினால் என உபசரித்தார் வெவ்வினையாவது - சிவபிரானை யிகழ்ந்தமையால்வந்த ஈறில்லாத அபராதத்தை. தொழுதனன், தணந்தான் முற்றெச்சங்கள். (எஎ)

தக்கீசபடலம் முற்றிற்று.

தம் - ௪உ௭௦.

# முப்புராரிகோட்டப்படலம்.

சிறுவதீர்த்தநீயஞ்சலென்றியமனைச்சீறி
மறுவதீர்த்தவன்மேயதக்கீச்சரமவகுத்தாஞ்
சறுவதீர்த்தமேல்பாங்கரிற்றாழ்ந்தவர்க்கவமா
யுறுவதீர்த்தருண்முப்புராரீச்சரமுரைப்பாம்.

இ-ள். சிறுவ-சிறுவனே, தீர்த்த-புனிதமுடையவனே, நீ அஞ்சல் என்று யமனைச்சீறி - நீ அஞ்சாதே என்று இயமனைக்கோபித்து, மறு அது ஈர்த்தவன்

மேய தக்கீச்சரம் வகுத்தாம் - தனது அடியனாகிய மார்க்கண்டேயனுக்கு அவன் செய்த குற்றத்தின்பொருட்டு உதைத்தருளிய இறைவன் எழுந்தருளிய தக்கீச்சரத்தை எடுத்துக்கூறினும், சறுவதீர்த்த மேல்பாங்கரில் - சறுவதீர்த்தத்தின் மேற்றிசையில், தாழ்ந்தவர்க்கு அவம் ஆய் உறுவதீர்த்தருள் முப்புராரீச்சரம் உரைப்பாம்-வணங்கினவர்க்கு அவமாய் வந்தடையும் தீங்குகளைத் தீர்த்தருளிய முப்புராரீச்சரத்தை யெடுத்துக் கூறுவாம்.

மார்க்கண்டேயர் பாலபருவ முடையவராதலால் சிறுவ எனவும், அன்றே சிவஞான முடைமையால் தீரத்த எனவும், சிலகேடுகள் காலமின்றி வருதலுடைமையால் அவமாயுறுவ எனவும் கூறினார். (௧)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

முப்புரங்களின் மூவர் புத்தன்மொழித்திறத்துமயங்கிடா
தப்பணிந்தவர் தாள்பணிந் தருளாற்றினின்றனராதலாற்
பொய்ப்புரந்தபுகாலைநீற்றறைநாவின்மன்னவர்போலெரி
தப்பிவாழ்ந்தனரீசனாணையினிற்பவர்க்கிடர்சாருமோ.

இ-ள். முப்புரங்களின் மூவர்-திரிபுரங்களுக்குத் தலைவராகிய சுதன்மன்முதலிய மூவரும், புத்தன் மொழித்திறத்து மயங்கிடாது-திருமால் கூறுகிய புத்தன் கூறிய வழியில் மயங்காது, அப்பு அணிந்தவர் தாள் பணிந்து அருளாற்றின்நின்றனர் ஆதலால்-கங்கையை யணிந்த சடாபாரத்தையுடைய இறைவனது திருவடியைவணங்கித் திருவருளின்வழி நின்றனராதலால், பொய்ப்புரம்தபுகாலை-அழிவதாகிய திரிபுரம் அழிந்தகாலையில், நீற்றுஅறை நாவின் மன்னவர்போல்-நீற்றறையில் சமணர்களால் வைக்கப்பட்ட திருநாவுக்கரசுகள் உயிர்பிழைத்திருந்ததுபோல, எரிதப்பி வாழ்ந்தனர்-முப்புரத்தில் பற்றிய தீயினின்றும் உயிர்வாழ்ந்திருந்தார்கள், ஈசன் ஆணையில் நிற்பவர்க்கு இடர் சாருமோ - சிவபெருமானது ஆணைவழியில் நிற்போர்க்கு ஒருபோதுந் துன்பஞ் சாருமா (சாராதென்றபடி)

சார்பிலாத பத்தியுடையோரென்பது தோன்றப் புத்தன் மொழித்திறத்து மயங்கிடாதெனவும், அப்பத்தியால் சத்திநிபாத முடையோரென்பதுதோன்ற அருளாற்றி னின்றனரெனவும், அச்சத்திநிபாதத்தால திருநாவுக் கரசர்க்கு நீற்றறை கழுநீர்ப் பொய்கைபோ லிருந்ததுபோல இவர்களுக்குத் தீப்பற்றிய முப்புரமும் அவ்வாறிருந்தன வென்பதுதோன்ற எரிதப்பி வாழ்ந்தனர் எனவுங் கூறினார்.

திருநாவுக்கரசுகளுக்கு நீற்றறை கழுநீர்ப் பொய்கைபோலிருந்ததை-

"வெய்யநீற்றறையதுதான்வீங்கிளவேனிற்பருவந்
தைவருதண்டென்றலணை தண்கழுநீர்த்தடம்போன்று
மொய்யொளிவெண்ணிலவலர்ந்துமுரன்றயாழொலியினதாய்
ஐயர்திருவடிநீழலருளாகிக்குளிர்ந்ததே." எனத்

திருத்தொண்டர் புராணத்தில் வருதல் காண்க.

முன்னர்த் தொடங்கியதை முடித்தற்கு ஈசனாணையில் நிற்பவர்க்கு இடர் சாருமோ எனப் பின்னுமொரு காரணம்வைத்துக் கூறினமையால் இது வேற்றுப்பொருள் வைப்பணி. (௨)

சுதன்மனென்றுசுசீலனென்றுசுபுத்தியென்றுசொலப்படு
மதன்மனீததவம்மூவருக்குமருள்சுரந்துமைபாகனு

ரிதம்விளங்கவரங்கள்வேட்டவிளம்புமின்னெனவங்கவர்
பதம்வணங்குபுநின்றிருப்பணிவாயில்காப்பருளென்றனர்.

(இ-ள்.) சுதன்மன என்று சுசீலன் என்று சுபுத்தியென்று சொல்லப்படும் அதன் மயம் நீத்த அம்மூவருக்கும் - சுதன்மனென்றும் சுசீலனென்றும் சுபுத்தியென்றும் சொல்லப்பட்ட பாபத்தினின்று நீங்கிய அந்தத் திரிபுராதிபராகிய அம்மூவர்க்கும், உமை பாகனார் அருள்சுரந்து - உமையை இடப்பாகத்திலுடைய இறைவர் கருணைசுரந்து, வேட்ட வரங்கள் - நீங்கள் விரும்பிய வரங்களை, இதம் விளங்க விளம்புமின் என - நன்மை தோன்ற வினவுங்களென்றருள, அங்கு அவர் பதம் வணங்குபு நின் திருப்பணி வாயில் காப்பருள் என்றனர் - அவ்விடத்து அம்மூவரும் இறைவன் திருவடியை வணங்கி யுனது திருப்பணியாகத் திருவாயிலைக் காத்துநிற்க அருள்செய்யாயென்று குறையிரந்தனர். (௩)

கச்சிமாநகரெய்திநங்குறிகண்டுபூசனை செய்மினோ
டிச்சையாற்றினுமக்குநந்தனிவாயில்காவலுமீதுமென்
றச்சனாருள்செய்துநீங்கலுமங்கணைந்துவரம்பல
நிச்சலுந்தருமுப்புராரியிலிங்கமொன்றுநிறீஇனர்.

(இ-ள்.) கச்சிமாநகர் எய்தி நங்குறி கண்டு பூசனை செய்மின் - கச்சியென்னும் பெரிய நகரினையடைந்து நமது அருட்குறியைத் தரிசித்துப் பூசைசெய்யுங்கள், இச்சையாற்றின் உமக்கு நம் தனிவாயில் காவலும் ஈதும் என்று - உமது இச்சை வழியே உங்களுக்கு நமது கோயிலின் திருவாயிற் காப்புங் கொடுப்போமென்று, அச்சனார் அருள்செய்து நீங்கலும் - இறைவர் திருவருள்செய்து நீங்கியருள, அங்கு அணைந்து - அத்திருநகரையடைந்து, பல வரம் நிச்சலும் தரும் முப்புராரி இலிங்கம் ஒன்று நிறீஇனர் - பலவரங்களும் நிதமுமடியவர்களுக்கருளும் முப்புராரியென்னும் திருப்பெயர் வாய்ந்த சிவலிங்கமொன்று தாபனஞ் செய்தார்கள்.

அச்சனார், நிச்சல் - திசைச்சொற்கள். (௪)

பூசையாற்றியுளத்திலெண்ணியபேறுபூண்டனர்முப்புரா
ரீசமேன்மையளக்கவல்லுநரேவரப்பெயர்வண்மையான்
மாசிலகாஞ்சிவயங்குகோட்டமெனப்படும்மெனவாய்திறந்
தோசையாலுயர்சூதனோதமுனிகணத்தர்வினவுவார்.

(இ-ள்.) பூசையாற்றி உளத்தில் எண்ணியபேறு பூண்டனர் - சிவபூசை செய்து மனத்திலெண்ணிய பேறு பெற்றார்கள், முப்புராரீசமேன்மை அளக்க வல்லுநர் ஏவர் - முப்புராரீசமென்னும் திருப்பதியின் மேன்மையை வரையறுத்துச் சொல்லவல்லவர் எவர், அப்பெயர் வண்மையால் - அந்தப் பெயரின் சீரால், மாசில்காஞ்சிவயங்கு கோட்டமெனப்படும் என - குற்றமில்லாத திருக்காஞ்சி கோட்டமென்று வழங்கப்படுமென்று, வாய்திறந்து ஓசையால் உயர் சூதன் ஓத - திருவாய் மலர்ந்து புகழாலுயர்ந்த சூதமுனிவர் கூற, முனிக்கணத்தர் வினவுவார் - கண்ணுவமுனிவர் முதலிய முனிக்கூட்டத்தவர் வினவுவார்.

காஞ்சிக்குக் கோட்டம் எனப் பெயர்வந்த காரணம் அத் திருத்தளிகளின் கூட்டத்தாலென்னும் பொருண்மை மேல்நிற்றலால் என்பார் மாசில காஞ்சிவயங்கு கோட்டம் எனப்படும் என்றார். (௫)

முப்புரத்துறைவோருளிங்கிவர்மூவருந்திருநாயகன்
செப்புமாயமயக்கினுக்குளகப்படாதுசெழுந்தமிழ்
கைப்பரம்பொருள்பத்திவாய்மைகடைப்பிடித்துநிலைத்தவா
றெப்படித்திதுவற்புதச்செயலெங்களுக்குரையென்றலும்.

(இ-ள்.) முப்புரத்து உறைவோர் உள் இங்குஇவர் மூவரும் - திரிபுரத்தில் வசிக்கும் அசுரருள் திருவாயில் காவல்பூண்ட சுதன்மன் முதலிய மூவரும், திருநாயகன் செப்பும்மாய மயக்கினுக்கு உள் அகப்படாது - திருமால் கூறிய மாயமயக்கிற் சிமிழ்ப்புறாது,செழும்தழல்கை பரம்பொருள் பத்திவாய்மை கடைப்பிடித்து நிலைத்த ஆறு எப்படித்து - கொழுவிய தழலைத் திருக்கரத்திலேந்திய விறைவனபால் மெய்ப்பத்தியைப் பற்றுக்கோடாகப் பற்றிநிலைத்த வகை யெத்தன் மைத்து, இது அற்புதச்செயல்- இது ஓர் வியப்புச் செய்தி, எங்களுக்கு உரைஎன்றலும் - எங்களுக் கருளாய் என்று வினவ,

தீப்பற்றிய புரத்துள் அவர்கள் மட்டும் இறவாதிருந்த செய்தி ஓர் பெருவியப்பாதலால் இது அற்புதச்செய லென்றனர். (சு)

தத்துவெண்டிரைவேலைநஞ்சமிடற்றடக்கியதம்பிரான்
பத்திமார்க்கமிரண்டுகூற்றதுபற்றறுத்துயரந்தணீர்
புத்திநல்குவதொன்றிரண்டறுபூரணப்பொருளோடுலா
முத்திநல்குவதொன்றிரண்டனுண்முன்னியம்பியபத்திதான்.

(இ-ள்.) பற்று அறுத்து-இருவகைப் பற்றினையு மொழித்து, உயர் அந்தணீர் உயர்ந்த அந்தணர்களே, வெள்திரைதத்து வேலை நஞ்சம் மிடறு அடக்கிய தம்பிரான் பத்திமார்க்கம் இரண்டு கூற்றது - வெள்ளிய அலைகள் தாவும் கடலிற் றோன்றிய நஞ்சினை ஸ்ரீகண்டத்தி லடக்கிய இறைவனது பத்திமார்க்க மிரண்டு வகையாயுள்ளது, ஒன்று புத்தி நல்குவது - அவற்றில் முன்னுள்ள தொன்று சுவர்க்காதி போகங்களைத் தருவது, ஒன்று - பின்னுள்ள ஒன்று, இரண்டு அறு பூரணப் பொருளோடு உலாம் முத்தி நல்குவது - ஆண்டான் அடிமையென்னும் பகுப்பொழிந்து சிவத்தோடு அந்நியமாய் நிற்கும் பரமுத்தியைத் தருவது,இரண்டனுள் முன் இயம்பிய பத்திதான் - இவ்விரண்டனுள் முன்னர்க்கூறிய பத்தியானது. (எ)

சார்புபற்றியுதிக்குமற்றையதொன்றுசத்திபதிந்தமெய்ச்
சார்பினெய்துமிரண்டுமுத்திதழைக்குமாயினும்வெவ்வினைச்
சார்பினோர்பெறுசார்புபற்றியபத்திதானிடைவிள்ளுமச்
சார்பிலாதெழுமுண்மையன்புதணப்புறாதெவர்கட்குமே.

(இ-ள்.) சார்புபற்றிஉதிக்கும்-ஒருசார்புபற்றித் தோன்றும், மற்றையது ஒன்று-ஏனையொன்று, சத்திபதிந்த மெய்ச்சார்பின் எய்தும்-திருவருட்பதிவின் சார்பால்வரும்,இரண்டும் முத்திதழைக்கும்ஆயினும் - இவ்விரண்டு பத்திமையும் பரமுத்தி அபரமுத்திகளைத் தருமாயினும், வெவ்வினை சார்பினோர் பெறுசார்பு பற்றிய பத்திதான் இடைவிள்ளும்-கொடிய இருவினையின் சார்பையுடையோர் பெற்ற சார்புபற்றிய பத்திமையானது இடையே நீங்கும், அச்சார்பிலாது எழும் உண்மை அன்பு எவர்கட்கும் தணப்புறாது - அந்தச் சார்பில்லாது தோன்றும் மெய்யன்பு எவர்களுக்கும் ஓர்போதும் குறைபடாது.

காமியபத்தி யென்பார் - சார்புபற்றி யுதிக்குமெனவும், நிஷ்காமிய பத்தி யென்பார் - சத்திபதிந்த மெய்ச்சார்பி னெய்து மெனவும், நல்வினை பொன்விலங்கை யொத்தலின் பிறப்பை விளைக்கு மென்பார் வெவ்வினையெனவும், தாங்கள் கொண்ட காமியபத்தி சேர்ந்தகுறையால் தாங்கள் விரும்பினவற்றைத் தாராதொழியினு மொழியும். அதனால் தாங்கள் கொண்டபத்தியி லவர்க்கு உவர்ப்புத் தோன்றுமென்பார் சார்புபற்றிய பத்திதானிடை விள்ளும் எனவும், போகம்வேண்டாத

அன்பு தூகாலும் ஈசிப்பதிலதென்பார். சார்பிலாதெழு மூண்மை யன்பு தணப்புறு தேவர்கட்கும் என்றார். (அ)

செய்தசெய்வனவாயதீவினையாவுமிச்சிவபத்தர்பா
லெய்திடாகமலத்திலைக்கமலத்தினென்றறிமின்களோ
வைதுகாமம்விழைந்தபத்தியுநல்லறத்துறையார்பெறி
னைதராதிதுபத்திபேதமுணர்ந்துளோர்நவில்கிற்பதே.

(இ-ள்.) செய்த செய்வன ஆயதீவினை யாவும் - முன்புசெய்து கழிந்தனவும் இனிச்செய்வனவுமாகிய தீவினைப் பயன்கள் யாவும், கமலத்து இலை கமலத்தின்- தாமரையிலையிலுள்ள நீர்த்துளிபோல, இச்சிவபத்தர்பால் எய்திடாது என்றறிமின்கள் - இந்தச் சிவனடியாரிடத்தில் அடையாவென்று அறியுங்கள், ஐதுகாமம் விழைந்த பத்தியும் - அழகிதாகக் காமத்தை விரும்பிச் செய்யும் பத்திமையையும், நல் அறத்துறையார் பெறின் ஐ தராது - நல்ல சிவபுண்ணிய வழிநின்றோர் பெற்றால் ஒருபோதும் கெடாது, இது பத்திபேதம் - இதுதா னப்பத்திமையின் பேதமென, உணர்ந்துளோர் நவில்கிற்பது . ஐயந்திரிபற யாவுமுணர்ந்தவர்கள் கூறுவது.

சஞ்சித வினையென்பார் - செய்த எனவும், ஆகாமிய வினையென்பார் செய்வன எனவும் ஞானசிரியன் திருவருள் நோக்கத்தால் சஞ்சிதமொழிதலும் சிவபூசனைப் பேற்றால் - ஆகாமியமொழிதலும் உள என்பார்—தீவினையாவும் இச்சிவபத்தர் பாலெய்திடா தெனவும், தாமரையிலையில் வீழ்ந்த நீர்த்துளி அவ்விலையோ டியைபில்லா திருத்தல்போல அவ் வினைப்பயன்கள் இவர்களோடியைபில்லா திருக்குமென்பார் கமலத்திலை கமலத்தி னெனவும், பசுபுண்ணிய முடையோர்க்கு இடையிற் காமியபத்தி விள்ளுமேயன்றிச் சிவபுண்ணியமுடையோர்க்கு இடையே விள்ளாதென்பார் ஐதுகாமம் விழைந்தபத்தியும் நல்லறத்துறையார்பெறினைதராதெனவும்கூறினார்.

திரிபுரத்தவர்சார்புபற்றியபத்தியோர்நனிதீமையே
புரிமனத்தினராதலால்வருபுத்தநாரதரான்மயன்
மருவியிற்றனரின்னமூவரும்வள்ளல்சத்திபதிந்தெழும்
பெரியபத்தியராதலாலவர்பேசுமையல்கடந்தனர்.

(இ-ள்.) திரிபுரத்தவர் - திரிபுரங்களில் வசிப்பவர்,சார்புபற்றிய பத்தியோர் ஆதலால் - சார்புபற்றிய பத்திமையுடையோ ராதலாலும், நனிதீமையே புரிமனத்தினர் ஆதலால் - அதனால் மிகவும் பிறருக்குத் தீமையேசெய்யும் மனத்தினராதலாலும், வருபுத்தன் நாரதன் மயல்மருவிஇற்றனர் - தம்மை மயக்கவந்த புத்தனாலும் நாரதனாலும் மயக்கம் பூண்டழிந்தனர், இன்னமூவரும் வள்ளல் சத்திபதிந்து எழும் பெரிய பத்தியராதலால் - சுதன்மன் முதலிய இந்த மூவரும் இறைவரது திருவருட்பதிவின் பத்திமையுடையோராதலால், அவர் பேசும் மையல் கடந்தனர் - அப்புத்தனும் நாரதனுங் கூறிய மயக்கவுரையினின்றும் தப்பியுய்ந்தார்கள். (கo)

கலிவிருத்தம்.

பேறுமெய்தினுமொன்றுபேதுறு
வாறுமேதருசூதன்மாதவர்
கூறுகூற்றினுக்கிறைகொடுத்தனன்
வேறுமாக்கதைமேல்விளம்புவான்.

(இ-ள்.) பேறும் எய்தினர் என்று - துவாரபாலகராகிய பெரும்பயனைய டைந்தாரென்று, பேது உறாத ஆறு - மயங்காதவண்ணம், மேதகு சூதன் மாதவர் கூறும் கூற்றினுக்கு இறைகொடுத்தனன் - மேன்மை வாய்ந்த சூதமுனிவன் சவுனகர் முதலிய முனிசிரேஷ்டர்கள் வினவுஞ் சொற்களுக்கு விடைகொடுத்தருளினன், வேறுமாகதைமேல் விளம்புவான் - வேறொருபெரிய வரலாற்றினையினியெடுத்துக் கூறுவான். (௩௩)

முப்புராரிகோட்டப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௨அ௯.

---

# ரணியீசப்படலம்.

அரணியின்கனலையாகூற்றடு
சரணிமுப்புராரீசஞ்சாற்றினு
முரணியங்கதன்குணக்கண்முன்றொழு
மிரணியீச்சரத்தியல்புரைத்துமால்.

(இ-ள்.) அரணியின் கனல் ஐயர் - தீக்கடை கோலாலெழுந்த வேள்வித் தீயையுடைய முனிவர்களே, கூற்றுஅடு சரணி முப்புராரீசஞ் சாற்றினும் - இயமனை துயிரைப்பருகிய திருவடியையுடைய இறைவனது முப்புராரீசமென்னும் திருப்பதியை யெடுத்துக் கூறினும், முரணி - தேவர்களோடு பகைத்து, அங்கு அதன் குணக்கண் - அம்முப்புராரீசத்தின கீழ்பால், முன்தொழும் இரணியீசசரத்தியல்பு உரைத்தும் - இரணியகசிபு முன்பு வணங்கிய இரணியீச்சரத்தின் இயல்பினை எடுத்துக் கூறுவாம்.

தீக்கடை கோலால் தீயமைத்து வேள்விசெய்தல் முனிவர்க்கியல்பாதலால் அரணியின்கனலையரென்றார். ஐயர் அண்மைவிளி.

(௧)

இரணியப்பெயரசுரரேறனான்
குரவனாய்நலங்கொளுத்துவெள்ளியைச்
சரணமேத்துவான்றனியிடத்தினில
வரவழைத்தனன்வணங்கிவிண்டனன்.

(இ-ள்.) இரணியப்பெயர் அசுரர் ஏறு அன்னான் - இரணியகசிபென்னும் பெயருடையவனும் அசுரர்களாகிய யானைகட்கு ஓர் சிங்கம்போல்பவன், குரவனாய் நலங் கொளுத்து வெள்ளியை - தனக்காசிரியனாய் வேண்டிய நன்மைகளைத் தரும் சுக்கிரனை, சரணம் ஏத்துவான் தனி இடத்தினில் வர அழைத்தனன் வணங்கி விண்டனன்- திருவடியை வணங்கி ஏகாந்தஸ்தானத்தில் வரவழைத்து வணங்கிக்கூறினன்.

இரணியகசிபு என்பது பின்மொழிகெட்டு முன்மொழி யப்பொருள் தந்து நிற்றலால பின்மொழிகெட்ட முன்மொழி நிலையல். இதனை வடநூலார் நாமைகதேசநாமக் கிரகணம் என்பர். ஏறு என்றுகூறி அசுரரென வாளாகூறியது ஏகதேச உருவகவணி. கொளுத்து என்ற சொல்லாற்றலால் வேண்டியவென உபசரித்தாம். (௨)

அரும்பெறற்றிருவரசுநான்பெற
தரும்படித்தொருவிரதஞ்சாற்றெனா

விரும்புமந்திரக்கிழவன்வீங்குதோ
ளிரும்பினன்னவற்கிறைவழங்குவான்

(இ-ள்) அரும் பெறல திருஅரசு நான்பெற தரும்படி தகு ஒருவிரதம் சாற்று என-பிறரால் பெறுதற்கரிய பெரிய அரசியலை நான்பெறத் தரும் அளவினதாகிய ஒர் விரதம் கூறாய் என்று வினவ, விரும்புமந்திரக் கிழவன- விரும்பு மந்திராலோசனைக்குரியவனாகிய சுக்கிரன், வீங்குதோள் இரும்பின அன்னவற்கு இறை வழங்குவான்-இருப்பினையொத்த பருத்த தோளையுடைய இரணிய கசிபுக்கு விடை கூறுவானாயினன.

பல்லாயிரம் அண்டங்களையுந் தனதடிக்கீழ்ப்படுத்து மரசியலென்பது தோன்ற அருப்பெறற் றிருவரசெனவும், அசுரமந்திரிகளில் வெள்ளிமுதல் மந்திரியென்பது தோன்ற மந்திரக்கிழவன் எனவுங்கூறினர். (௩)

வேட்டவாறிதுவாயின்மேவரக்
கேட்டியிவ்வுரைகேடிலாற்றலோய்
நாட்டமூன்றுடைநாதன்சேவடிக்
கீட்டுமன்பினாற்றவமிழைத்தினீ.

(இ-ள்.) கேடு இல் ஆற்றலோய் - கெடுதலில்லாத வன்மையை யுடையோய், வேட்ட ஆறு இது வாயின்-நீவிரும்பியவகையிதுவானால், இவ்வுரை மேவரக்கேட்டி-யான்கூறும் இம்மெய்மொழியைக்கேளாய், நீ நாட்டமூன்றுடைய நாதன்சேவடிக்கு ஈட்டும் அன்பினால் தவமிழைத்தி-நீ மூன்று கணகளையுடைய இறைவனது செவ்விய திருவடிக்கீழ்ப் பொன்போலீட்டும் அன்போடு தவஞ்செய்வாய்

உலகிலரியது பொன்னாதலால் அப்பொருளாற்றல் தோன்ற ஈட்டுமன்பினாலென்றார். (௪)

பதுமவாழ்க்கையான்படைக்குமாற்றலு
மதுவைமாட்டினானளிப்பும்வான்மிசை
யதுலனாதியோராசையாட்சியும்
பொதுநடிப்பவன்பூசைப்பேறரோ.

(இ-ள்.) பதுமவாழ்க்கையான் படைக்கும் ஆற்றலும் - தாமரையையிடமாகவுடைய பிரமன் சிருட்டிக்கும் வன்மையும், மதுவைமாட்டினான் அளிப்பும் - மது வென்னு மசுரனுயிர் பருகிய திருமால் காத்தலும், வான்மிசை அதுலன் ஆதியோர் ஆசை ஆட்சியும் - விண்ணுலகிலுள்ள இந்திரன் முதலியோர் தமதடிக் கீழ்ப்படுத்தி யென்டிசையையும் ஆளுதலும், பொதுநடிப்பவன் பூசைபேறு - பொன்னம்பலத்தில் நடிக்கும் இறைவனது பூசையில்வரும் பேறாம். (௫)

செல்வமாண்மையேர்சீர்த்திவாழ்வருள்
கல்விகட்டெழின்மகளிர்காழிலாச்
சொல்வலித்திறஞ்சூழ்ச்சியேனவு
மல்வெரூஉங்களனருச்சனைப்பயன்.

(இ-ள்.) செல்வம் ஆண்மை ஏர் சீர்த்திவாழ்வு அருள் கல்விகட்டெழில் மகளிர் - செல்வமும் ஆண்மையும் பொலிவுங்கீர்த்தியும் வாழ்வும் அருளும் கல்வியும் பேரழகும் நல்லமனைவி வாய்த்தலும், காழ் இல்லாத சொலவலிதிறம் சூழ்ச்சி ஏனவும்-இளகிய சொல்வலியின்றிறமும் ஆலோசனையும் இஃதொழிந்த மற்றுள்ளனவும்,

அல்லுருவங்களான் அருச்சனைப்பயன் - இருளஞ்சும் ஸ்ரீகண்டத்தையுடைய இறைவனது அர்ச்சனையால் வரும்பயனும்.

சட்டெழில் எனறதனால் எர் என்பதற்குப் பொலிவெனவும், சொல்லவொத் திறம் என்றமையால் காழிலென்பதற்கு இளகியவெனவும் பொருள்கூறினும்

பூசனையும் அருச்சனையும் ஒரு பொருளாதலால் இதனால் வரும்பயனை.—

''சாற்றிடுமுறுப்பியாவுஞ் சலக்குமேலுயராபாவந
காற்றிடுநதிகள்யாவுங்கங்கைமேலுயராவாண
மாற்றிடுபலவைப்போறறும்பலமெலாமுத்தோர்சன்மம
பாற்றிடுஞ்சிவனைப்போற்றும்பலத்தின்மேலுயராவன்றே.

மலர்ந்தயன்புரக்கவேண்டின்வானகங்காக்கவேண்டி
னலர்ந்தபூவிருக்கைவேண்டினயிர்கடற்கிடக்கைவேண்டி
னலந்தருமின்பமுத்திநண்ணிடவேண்டிற்கூற்றின்
வலந்தருமுயிர்குடித்தமலரடிப்பூசைசெய்வார்.

திருவமிக்கடையவேண்டிற்செம்மகப்பேறுவேண்டின்
மருவலாச்செருக்கவேண்டிமாண்பொருள்கல்விவேண்டின்
வருபெரும்புகழ்ச்சிவேண்டின்மான்முதலெவ்விடத்தும்
பொருவில்பூசையன்றிமற்றெவைற்றானும்பூவா.

வானவரியக்கர்சித்தர்கருடர்கின்னரர்மாநாகர்
தானவர்நிருதர்விச்சாதரர்முனிவரர்சன்மறைற
மானவரிவருள்யாரோமதிமுடிப்பெருமான்பாதத
தானவர்ச்சனைசெயாதாரச்சிறப்புறைப்பினீளும்.''

எனச் சூதசங்கிதையில் சிவபூசாவிதியும் செய்தோர் பெருமையும் உரைத்த அத்தியாயத்தில் வருதல் காண்க. (௬)

மெய்த்தவிண்ணவரிருக்கைவேண்டினு
நத்துமாலயனகரம்வேண்டினு
முத்திவேண்டினுமூவருஞ்சிவ
பத்தியொன்றனாலெய்தற்பாலவே.

(இ-ள்.) மெய்த்த விண்ணவர் இருக்கை வேண்டினும் - உண்மை யமைந்த தேவர்களது இருக்கையை விரும்பினாலும், நத்துமால் அயன்நகரம் வேண்டினும் - பாஞ்சசன்னியமென்னும் சங்கினை ஏந்திய திருமால் பிரமன்முதலியோர் இருக்கையை அடைய விரும்பினாலும், முத்திவேண்டினும் - மோட்சத்தை யடையவிரும்பினாலும், மூவரும் சிவபத்தி ஒன்றனால் எய்தல்பால - அவைகெடுதலில்லாத சிவபத்தி யொன்றனால் வரும் தன்மையனவாம்.

சிவபத்தி பலவகைப்படும் அதனை யொன்றென்றது சாதி யொருமைபற்றி யென்க. பலவகைப் படுமென்றதை.—

'' தேர்சிரவணமுதற்செப்புமென்றுட
னோர்சிவஞானத்திலவிர்வேதாந்தத்திற்
பூரணவிபூதிமுப்புண்டரத்தினி
லார்தரவெழுசிரத்தையுமப்பத்தியே.

அக்கமாமணிவடமன்பிற்பூணுதன்
மிக்கபஞ்சாக்கரம்விரும்பியெண்ணுதல்

தொக்கமிலசிவலிங்கபூசையாற்றுதல
தக்கவப்பூசையைத்தரிசித்திடல்.
புலனமைசிவபிரான்பூசைக்காகிய
நலனமையுபகரணங்களீகுதல்
வலனமைபூசையின்மகிழ்ச்சிபூத்திடல்
பலனமையிவையும்பத்தியாகுமே
சிவன்விழாத்தரிசிக்குமிச்சைசேவையாம்
பவனவிழாத்தரிசிக்கப்படாந்தனல்லவாக்
குவமையிலன்னடானுதியோகையி
னவமுறநலசஞ்ஞுனயக்கும்பத்தியே." எனவும்,

சிவபத்தியால் வரும்பயனை,

"போகமுள்ளனவெலாம்புணர்க்கவல்லது
மோகமுள்ளனவெலாமுருக்கத்தக்கது
யோகயார்முத்தியையுதவுநீரது
பாகமாதருசிவபத்தியொன்றரோ." எனவும்,

சூதசங்கிதையில் சிவபத்தி விசாரமுரைத்த அத்தியாயத்தில் வருதல் காண்க. (எ)

ஒன்னலார்பிணியுரகமண்ணேகோ
ளென்னவுமவர்க்கிடரிழைத்திடா
வன்னவாகலானரனடித்தொழின்
முன்னினார்க்கெவனரிதுமொய்ம்பினோய்.

(இ-ள்) மொய்ம்பினோய்-வலிமையையுடைய இரணியகசிபே, ஒன்னலார் பிணி உரகம் மண்ணேகோள் என்னவும் - பகைவரும் நோயும் பாம்பும் பைசாசமும் நவக்கிரகங்களும் இவை போல்வனவும், அவர்க்கு இடர் இழைத்திடா-அச்சிவபத்தியுடையோர்க்குத் துன்பஞ்செய்யா, அன்ன ஆகலான் - அத்தன்மை யுடையனவாகலான், அரன் அடிதொழின்-சிவபெருமானது திருவடியை வணங்கின், முன்னினார்க்கு அரிது எவன் - கருதிவழிபட்டவர்க்குக் கைகூடுதற் கரியபொருள்யாது (யாவுங் கைகூடுமென்றபடி)

தொழினென்னும் வினையெச்சத்தினின்று தொழுதலென்னும் தொழிற்பெயரைப் பிரித்துத் தொழிலில் முற்பட்டவர்க்கு எனப் பொருள் கொள்ளுதலுமொன்று. ஆதியாத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபவுதிகம் என்னுந் தாபத்திரயத்தால் வரும் இடர் பலவாகலால் ஒன்னலார் பிணியுரக மண்ணேகோளென்று கூறியமையாது என்னவுமென்றார் (அ)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

சிவன்றன்றிருவுருவைக்காணுதகண்ணேகுருடாஞ்சீர்சால்
சிவன்றன்றிருவுருவையெண்ணுதசிந்தையேபித்தாமென்றாஞ்
சிவன்றன்றிருப்புகழைக்கேளாச்செவியேசெவிடாமன்பிற்
சிவன்றன்றிருப்புகழையோதாதவாயேதிணிந்தமூங்கை.

(இ-ள்) சிவன்தன் திருவுருவைக் காணுதகண்ணே குருடேஆம்- சிவபெருமானது திருவுருவைக் கண்டு தெரிசிக்காத கண்ணே குருடாகும், சீர்சால் சிவன்தன் திருவுருவை எண்ணுத சிந்தையே பித்தாம் - சிறப்பமைந்த சிவபெருமானது திரு

வுருவைச் சிந்தியாத மனம் பித்துடையதாம், என்றும் சிவன்தன் திருப்புகழைக்கேளாத செவியே செவிடாம் - எக்காலத்தும் சிவனது திருப்புகழைக் கேட்காத காதே செவிடாகும், அன்பில் சிவன்தன் திருப்புகழை ஓதாதவாயே திணிந்த மூங்கை - அன்போடு சிவபெருமானது திருப்புகழை யெடுத்துக் கூறாதவாயே சிறிதும் குழறுதலில்லாத ஊமையாம்.

சிவபெருமான் திருவுருவைத் தரிசித்தற்கும் சிந்தித்தற்கும் - அவனது திருப்புகழைக் கேட்டற்கும் அதனை ஓதுதற்குமே கண்களும் சிந்தையும் காதும் வாயும் பெற்றிருந்தும் அது செய்யாத இடத்து இவையாமென்பார் - குருடாம் பித்தாம் செவிடாம் மூங்கையாம் என்றார்.

அவ்வவயவங்களாலாய பயன்களைப் பெறுதலை—

"தலையேநீ வணங்காய் தலை-மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந் தலைவனைத், தலையேநீவணங்காய்.
கண்காள்காண்மின்களோ கடல்-நஞ்சுண்டகண்டன்றன்னை
யெண்டோள்வீசிநின்றாடும்பிரான்றனைக்-கண்காள்காண்மின்களோ.
செவிகாள்கேண்மின்களோ சிவ-னெம்மிறைசெம்பவள
வெரிபோல்மேனிப்பிரான்றிறமெப்போதும்-செவிகாள்கேண்மின்களோ,
வாயேவாழ்த்துகண்டாய் மத-யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை, வாயேவாழ்த்துகண்டாய்.
நெஞ்சேநீநினையாய் நிமிர்-புன்சடைநின்மலனை
மஞ்சாடும்மலைமங்கைமணாளனை,-நெஞ்சேநீநினையாய்"

என்னுந் திருநாவுக்கரசுகளருளிய திருப்பதிகத்தாலுணர்க. (௬)

நில்லாதிளமையும்யாக்கையுமின்னினியேநீங்குமன்றிப்
பொல்லாதநோயுமடர்ந்துபெரும்பையுள்புகுத்துநீரா
லெல்லாநரைத்துடலமேகாமுனன்னெறிக்கேசெல்வோமென்று
வல்லானுமைத்தானையர்ச்சிப்பாரிவ்விடும்பைவாழ்க்கைவெல்வார்.

(இ-ள்.) இளமையும் நில்லாது-இளமையும் நிலைநில்லாது, யாக்கையும் இன்னினியே நீங்கும் - சரீரமும் இப்பொழுதே கழியும், அன்றி - இதுவுமன்றி, பொல்லாதநோயும் அடர்ந்து பெரும்பையுள் புகுத்து நீரால் - கொடியநோயும் இடையே நெருங்கிப் பெரியதுன்பத்திற் செலுத்துமுண்மையால், எல்லாம் நரைத்துஉடலம் ஏகாமுன்-சரீரமெல்லாம் நரைத்துக் கழிதற்கு முன்னமே, நல்நெறிக்கே செல்வோமென்று-நல்லவழியின் கண்ணே செலுவோமென்று, வல்லான் உமைத்தானை அர்ச்சிப்பார் இஇடும்பைவாழ்க்கை வெல்வார்-வலிய இடபவூர்தியைச் செலுத்துமிறைவனை அருச்சித்து வழிபடுவோர் என்றும்இத்துன்பத்தையே விளைக்கும் இவ்வுடல் வாழ்க்கையை வெல்லுவார்கள்.

இளமை நீரிற்றோன்றிய குமிழிபோலக் கணப்பொழுது நின்று நீங்குவது என்னும் பொருள்தோன்ற நில்லாது எனவும், சரீரம் நீரிலெழுதிய எழுத்தைப்போலன்றே யழியுமென்பது தோன்ற இன்னினியே நீங்குமெனவும், இச்சிறுபொழுதிற்கிடையே என்னும் பொருள்தோன்ற அன்றியெனவும், ஒன்றல்ல பலவென்னும் பொருள்தோன்ற அடர்ந்தெனவும், வருவது சிறிதல்லவென்பது தோன்றப் பெரும்பையுள் எனவும், கணப்பொழுது நிற்குமுடல் நிற்குமளவும் இத்துன்பத்தையே செய்யுமென்னும் பொருள்தோன்றப் புகுத்துநீரால் எனவும், அப்புல்லிய யாக்கை கழி

அங்கவர்க்குச்செய்பூசையண்டருக்குமூவருக்குமாகுங்கணடா
யங்கவர்க்கேதானமளிப்பரவர்தம்பாலேற்பர்நல்லோர்.

(இ - ள்.) அங்கவனை காணப்பெறுகிற்பில் கங்கைநீராடல் பேறும - அங்கு அச்சிவபத்தனைத் தரிசிக்கப்பெற்றால் கங்கைநதியில் நீராடுதலால் வரும்பயன்போலாம், அங்கு அவர்பால் பேசப்பெறின் - அங்கு அப்பத்தரிடத்தில் பேசப்பெற்றால், அகிலதீர்த்தமும் தோய்ந்தோராவர் - அதுவொழிந்த எல்லாப் புண்ணியதீர்த்தங்களிலும் நீராடிய பயனைப்பெற்றோராவர், அங்கு அவர்க்கு செய்பூசை - அவ்விடத்து அப்பத்தர்களுக்குச் செய்யும்பூசை, அண்டருக்கும் மூவருக்கும் ஆகும் - தேவர்களுக்கும் பிரமன் முதலிய மூவருக்கும் செய்யும்பூசனையை யொக்கும், நல்லோர் - ஆதலால் நல்லொழுக்கமுடையோர், அவர்க்கே தானம்அளிப்பர் அவர்தம்பால் ஏற்பர்- அப்பத்தருக்கே தானங்கொடுப்பார் அவரிடத்தே ஒருபொருளை யேற்பார்.

நல்லொழுக்கமுடையோர் ஒருபொருளைப் பெறவேண்டில தம்மைப்போல் நல்லொழுக்கமுடையோரிடத்தே பெறவேண்டுதலால் அவர் தம்பாலேற்பரெனவுங் கூறினார். ஆகும் என்றது உவமை இடைச்சொல்லடியாகப்பிறந்த வினைமுற்று, "ஆள்வாரிலிமாடாவேனோ" எனவருதல் காண்க. (கஉ)

மாயனயன்விண்ணுடர்வாழ்வுந்துரும்பாமதிக்குமிந்தத்
தூயசிவனடியார்மேம்பாடியானேயோசொல்லவல்லேன்
பாயபெருங்கீர்த்தித்தோன்றால்பலசொல்லியென்னையிந்நா
ளாயபிறவெல்லாங்கழித்துச்சிவனடியேயர்ச்சித்துய்வாய்.

(இ-ள்.) பாயபெருங்கீர்த்தி தோன்றால் - எங்கும்பரவிய பெருங்கீர்த்தியையுடைய இரணியகசிபே, மாயன் அயன் விண்ணுடர் வாழ்வும்- திருமால்வாழ்வும் பிரமன்வாழ்வும் இந்திரன்முதலிய தேவர்கள் வாழ்வுமாகிய இவற்றை, துரும்பாகமதிக்கும் இந்த தூயசிவனடியார் மேம்பாடு - ஓர் துரும்பாகக் கருதும் இந்தப்பரிசுத்தமுடைய சிவனடியாரது மேம்பாட்டை, யானேயோ சொல்லவல்லேன் - நானோ எடுத்துச்சொல்லும் வன்மையுடையேன் (அல்லேனென்றபடி) பலசொல்லி என்னை - நான் பலபல எடுத்துக்கூறிப் பயனென்ன, இந்நாள் ஆயபிறவெல்லாம் கழித்து சிவனடியே அர்ச்சித்து உய்வாய், இப்பொழுது நீ கைக்கொண்ட பிறகடவுளரை யெல்லாங்கழித்துச் சிவபெருமானையே பூசித்து நீயெண்ணிய எண்ணத்தை முடிப்பாய்.

துரும்பா மதிக்குமென்னுந் தொடரை துரும்பு ஆம் எரித்துத் துரும்பு போல எனப்பொருள்கொள்ளுவது மொன்று. (கங)

என்னுங்குரவனிணைத்தாடொழுதோகையெய்தியெந்தாய்
பன்னும்பரம்பொருளையெத்தானத்தெவ்வாற்றாற்பண்புகூரப்
பொன்னங்கழலிணைகள்பூசித்திடுவதெனும்பொன்னேன்கேட்ப
மன்னும்பிருகுதரவந்தமைந்தன்வகுப்பான்மன்னே.

(இ-ள்.) என்னுங்குரவன் இணைத்தாள் தொழுது ஓகை எய்தி-என்றுகூறிய ஆசிரியனது இரண்டு திருவடிகளையும் வணங்கி மகிழ்கூர்ந்து, எந்தாய் - என்றந்தையே, பன்னும் பரம்பொருளை எத்தானத்து எ ஆறால் - யாருங்கூறப்படும் இறைவனை எந்தத்திருப்பதியில் எந்தவகையால், பண்புகூர பொன்னங்கழலிணைகள் பூசித்திடுவது என்னும் பொன்னேன் கேட்ப - விதிவழிப் பொன்போலு மரிய அழகிய அவனது திருவடிகளைப் பூசனை செய்வதென்று வினவிய இரணியகசிபு கேட்டு

மகிழ்கூர, மன்னும் பிருகு தரவந்த மைந்தன் வகுப்பான் - நிலைபெற்ற பிருகுமுனி வன் பெறவந்த சுக்கிரன் கூறுவான்.

இரணியகசிபு பொன்மயமாயுள்ளோன் என்னும் பொருள்மேல் நிற்குங் காரணப்பெயராதலால் பொன்னோன் என்றார். (கசு)

கலிநிலைத்துறை.

எங்கணுநிறைந்துநிற்குமெம்பிராற்கினியவாய
பங்கமில்வளைப்புமண்மேற்பலவுளவவற்றுட்காசி
யங்கதிற்காஞ்சிமேலாங்காஞ்சியினதிகமில்லை
செங்கதிர்மதியஞ்செந்தீமணடிலமடியருள்ளம்.

(இ-ள்) எங்கணும் நிறைந்து நிற்கும் எம்பிராற்கு - எவ்விடத்தும் நிறைந்திருக்கும் எமது பெருமானுக்கு, இனிய ஆய பங்கம் இல் வளைப்பு மண்மேல் பலவுள இனியனவாகிய குற்றமில்லாத திருப்பதிகள் பலவுண்டு, அவற்றுள் காசிஅதிகம்-அத்திருப்பதிகளில் காசியென்னுந் திருப்பதி அதிகமாம், அங்கு அதில் காஞ்சிமேலாம்-அத திருப்பதியினும் காஞ்சித்திருப்பதி மேம்பட்டதாம், காஞ்சியின் அதிகம்இல்லை-அதனுல் காஞ்சித்திருப்பதியினும் மேம்பட்ட திருப்பதி யொன்றுமில்லை, செங்கதிர்மதியம் செந்தீமண்டிலம் அடியர்உள்ளம் - சூரியமண்டிலமும் சந்திரமண்டிலமும் அக்கினிமண்டிலமும் அடியவர்மனமும்.

சந்திரன்மண்டிலத்திற்கு மேம்பட்டதென்பது சூரியமண்டில மேம்பட்டதென்பதுதோன்ற அதனை முன்வைத்தும், அக்கினிமண்டிலத்திற்குச் சந்திரமண்டலம் மேம்பட்டதென்பதுதோன்ற அதனை முன்வைத்தும், இம்மூன்றினுக்கும் மேம்பட்ட தென்பதுதோன்ற அடியருள்ளமெனவும் முறைபடவைத்தோதினர்.

இது பின்வருஞ்செய்யுளொடு முடிதலால் இது குளகம். (சஎ)

மந்தரங்கயிலைதம்மின்மேம்படவயங்கித்தோன்றும்
அந்தமாநகரினெங்கோன்வல்விரைந்தருள்சுரக்கும்
மந்திரவெழுத்தஞ்சோதிப்பச்சிலைமலரேதேனும்
சிந்தைகூரன்பிற்சாத்தித்தொழுவதேசிவனுக்கின்பம்.

(இ - ள்.) மந்தரம் கயிலை தம் இல் மேம்பட வயங்கி தோன்றும் அந்தமாநகரின் - மந்தரகிரியும் திருக்கயிலையுமாகிய இவற்றுள் மேம்பாடமைய விளங்கித்தோன்றுகின்ற அந்தப்பெருமைவாய்ந்த காஞ்சித்திருப்பதியின்கண், எம்கோன் வல் விரைந்து அருள்சுரக்கும் -எழுந்தருளிய வெமது பெருமான்மிகவும்விரைந்து அருள் செய்வான், மந்திரம் அஞ்செழுத்து ஓதி - திருமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுச்சரித்து, பச்சிலைமலர் ஏதேனும் - பசிய இலையையாயினு மலரினையாயினும், சிந்தை கூர் அன்பில் சாத்தி தொழுவதே சிவனுக்கு இன்பம் - மனத்தில் முறுகியெழுந்த அன்பினாற் சாத்தி வணங்குதலே அச்சிவபெருமானுக்கு மிக்க மகிழ்ச்சியாம்.

அடியவர்மனத்தினு மந்தரமலை மேம்பட்டதென்பது தோன்ற மந்தரம் பின்னும், செங்கதிர் மண்டிலமுதலிய வெல்லாவற்றிற்கு மேம்பட்டதென்பது தோன்றத் திருக்கயிலையை யிறுதியில்வைத்துங் கூறியதனுல் மேன்மே லுயர்ச்சி நவிற்சியணி. எல்லாமந்திரங்களினும் ஸ்ரீபஞ்சாக்கர மேம்பட்டதாதலால் மந்திரமஞ்செழுத்தெனவும், பச்சிலை மலர்களுள் யாதாயினும் ஒன்றுகொண்டு மீதூர்ந்த பத்திமையால் வழிபட்டுச் சாத்துதலே சிவபெருமானுக்கு ஆராமகிழ்ச்சி யாதலால் ஓதிச் சிந்தைகூரன்பிற் சாத்தித் தொழுவதே சிவனுக் கின்பம் எனவுங் கூறினர்.

எல்லா மந்திரங்களுள்ளும் ஸ்ரீபஞ்சாக்கரம் மேம்பட்டது என்றதை.

" ஓதுமந்திரங்கட்கெல்லா முயர்ந்திடு முயர்ந்துநின்ற
நீதில்நான்மறையின்சாரமாதலாற்சிவனென்றனன்பர்
ஏதமின்முத்திவீட்டையெய்திடக்கொடுக்குமென்றும்
ஆதியாயுறையுமீசனுருவமாயமருமன்றே" எனவரும் வாயு சங்கிதையி
னாலும்,

பச்சிலைமலர்களுள் ஒன்றுகொண்டு சாத்தி வழிபடுதற்குப் பத்தி காரணம் என்றதை.

" பத்திவலையிற் படுவோன்காண்க" என்ற உண்மைத் திருவாக்கானும்,

" பத்தியாருயிருளப்பங்கயத்திடைத்
தித்தியாநின்றசொற்செய்யவாய்ப்பரா
சத்தியோடிறையவனங்குவான"எனச் சூதசங்கிதையிற் சிவபத்தி விசாரமுரைத்த அத்தியாயத்தில் வருதலும் உணர்க. (௬௬)

கண்டிகைநீறுமெய்யிற்கவின்றிடவிவ்வாறங்கண்
அண்டனைத்தொழுதுமெய்ப்பேறடைகெனுங்குரவன்பாத
புண்டரீகங்கள்போற்றியெழுந்தனன்பொறிவண்டூதுந்
தண்டலைக்காஞ்சிநோக்கிநடந்தனன்றறுகண்ணுளன்.

(இ-ள்.) கண்டிகை நீறுமெய்யில் கவின்றிட - உருத்திராக்கக் கண்டிகையும் விபூதியு முடம்பிற் பொலிந்து விளங்க, இவ்வாறு அங்கண அண்டனை தொழுதுமெய்ப்பேறு அடைக என்னும் குரவன் பாதபுண்டரீகங்கள்-இவ்வகையாக அந்தக் காஞ்சித்திருப்பதிக்கணெழுந்தருளிய சிவபிரானைப் பூசித்து என்றுமழியாத பெரும்பயனையடையக் கடவாயென்று கூறிய தனது ஆசிரியன் பாததாமரைகளை, தறுகணுளன் போற்றி எழுந்தனன் - வன் கண்மையை யுடைய இரணியன் வணங்கியெழுந்து, பொறிவண்டு ஊதும் தண்டலை காஞ்சிநோக்கி நடந்தனன் - புள்ளியமைந்த வண்டுகள் மூக்காலூழு மலர்களையுடைய சோலைசூழ்ந்த காஞ்சித் திருப்பதியை நோக்கி நடந்தான்.

சிவனடியார்க் குரிய புறத்திலக்கணம் பத்துள் உருத்திராக்கவடமும் விபூதியுஞ் சிறந்தன வாதலால் கண்டிகை நீறுமெய்யிற் கவின்றிட எனவும், சிவனருளாற் போந்த பயனுதலால் மெய்ப்பயனெனவுங் கூறினார்.

புறத்திலக்கணம் பத்தாவன,—

"வாசப்பூதியுருத்திரமாமணி - பூசிப்பூணல்குரவனைப்பூசித்தல்
ஆசைப்பாட்டினரனைப்புகழுதல் - ஈசற்குள்ளனநாமமியம்புதல்.

எந்தையீசனருச்சனையோம்புதல் - தந்திரச்சிவதன்மம்புரிகுதல் [தல்.
முந்தையோன்கதைகேட்டன்முறைமையாற்-புந்திகூர்ந்தரனுலயம்போற்று

ஒத்தபந்தரிடத்தலதோரிடங்-துய்த்தனீத்தலச்தொண்டரிற்றொண்டராய்ச்
சித்தமன்புறவீதன்முன்செப்பிய - பத்துமிங்கிவைகாணப்படுதிரால்" என
உபதேச காண்டத்தில் வருதல் காண்க.

இடத்திற்கும் இடத்தினிகழ் பொருளுக்கும் ஒற்றுமை யுண்மையால் இடத்தினிகழ் பொருளை இடத்தின்மே லேற்றிப் பொறிவண்டூதுந் - தண்டலைக் காஞ்சியென்றார். (௬௭)

தன்னுடன்பிறந்தகேண்மைத்தானவனிரணியாக்கன்
அன்னவன்றனையனந்தகாசுரன்பிரகலாதன்

முன்னூறுபுதல்வரன்னோர்வழிவருமுதலியோரும்
மின்னுமாவலியைவாணன் விரோசனன் முதலியோரும்.

(இ-ள்.) தன் உடன் பிறந்த கேண்மை தானவன் இரணியாக்கன் - தன்னொடு பிறந்த இளையோனாகிய இரணியாக்கனும், அன்னவன் தனையன் அந்தகாசுரன் - அவ்விரணியாக்கன் புத்திரனாகிய அந்தகாசுரனும், பிரகலாதன் முன்னூறு புதல்வர் - அவ்விரணியன் புதல்வனாகிய பிரகலாதன் முற்பட்ட புத்திரர்களும், அன்னோர் வழி வரும் உரியதேசில் மின்னும் விரோசனன் மாவலி வாணன் முதலியோரும் - (அப்பிரகலாதன் அந்தகாசுரன் என்னும்) பெயருடையோர் வழியில் வந்த உரிய ஒளியால் விளங்கிய விரோசனனும் மாவலியும் வாணனு முதலானவர்களும்.

செய்யுளாதலால் முன்பின்னாகக் கூறினார். இரணியன் புத்திரன் பிரகலாதன். இரணியாக்கன் புத்திரன் அந்தகாசுரன். இரணியனும் இரணியாக்கனும் திருமாலால் உயிரிழந்தபின் பிரகலாதன் அரசுபுரிந்து தவத்தின்மேற் சென்றபின்னர், அந்தகாசுரன் அரசுபுரிந்து வயிரவக்கடவுளால் வலிகுன்றிச் சிவகணநாதனாகிய காலத்தில், அப்பிரகலாதன் புத்திரனாகிய விரோசனன் அரசுபுரிந்து சனற்குமார முனிவரால் சிவஞானம் பெற்றுச் சீவன்முத்தனாயினன், பின்பு அவன் புத்திரனாகிய மாவலியென்பவன் அரசுபுரிந்து திருமாலால் பொலிவிழந்தனனபின் அவன் புத்திரன் வாணாசுரன் அரசுபுரிந்தனன், என்பது கூர்மபுராணத்திற் கூறியிருத்தலால் அன்னவன் றனையனந்தகாசுரன் முதலாக விரோசனன் எனவும், மாவலிகுவாணன் முதலிய புத்திரர் நூற்றுவராதலால், அவர்கள் புதல்வரும் அடங்க முதலியோரும் எனவுங் கூறினர். (௧௫)

பற்றுகாயாதிவாதிமனைவியர்பலருமேனைச்
சுற்றமுமொருங்குகாஞ்சித்தொன்னகரெய்தித்தாந்தாம்
பெற்றிடும்பெயரான்முக்கட்பிரான்குறிநிறுவிப்போற்றக்
கொற்றமார்முப்புராரிகோட்டத்தின்குணபாலெய்தி.

(இ-ள்.) பற்றுகாயாதி ஆதி மனைவியர் பலரும் - தன்னைப் பற்றுக்கோடாகப் பற்றிய காயாதி என்பவளும் அவள்முதலிய ஏனையோர் மனைவியர் பலரும், ஏனை சுற்றமும் ஒருங்குகாஞ்சி தொல்நகர் எய்தி - மற்றை யுறவினரும் ஒருசேரக் காஞ்சியென்னுந் தொன்றுதொட்டுள்ள திருநகரையடைந்து, தாம்தாம் பெற்றிடும் பெயரால் முக்கண்பிரான் குறிநிறுவி போற்ற - தன்னொடுவந்த அவரவர் தத்தம் பெயர்களால் சிவலிங்கப் பெருமானைத் தாபித்து வணங்க, கொற்றம் ஆர் முப்புராரி கோட்டத்தின் குணபால் எய்தி - வெற்றிநிறைந்த முப்புராரி கோட்டத்தின் கிழக்குத்திசையில் தானடைந்து. (௧௬)

தன்பெயரிலிங்கமொன்றுதாபித்துக்குரவன்கூறு
மன்புடைமுறைமையாறேயருச்சனையாற்றியுண்டி
யின்பமும்வெறுத்துப்பன்னாண்மெய்த்தவமியற்றுமேல்லைப்
பொன்பொதிசடிலப்புத்தேளெதிரெழுந்தருளப்போற்றி.

(இ-ள்.) தன்பெயர் இலிங்கம் ஒன்று தாபித்து - தனதுபெயரால் சிவலிங்கமொன்று தாபனஞ்செய்து, குரவன் கூறும் அன்புஉடைமுறைமை ஆறே அருச்சனை ஆற்றி - ஆசிரியன் உபதேசித்த அன்புவாய்ந்த ஆகமமுறையே சிவபூசனைசெய்து, பல்நாள் உண்டி இன்பமும் வெறுத்து மெய்த்தவம் இயற்றும் எல்லை - பலநாளும்

உணவையும் இன்பத்தையும் வெறுத்து உண்மைவாய்ந்த தவத்தைச் செய்யுங்காலையில், பொன்பொதி சடிலப்புத்தேள் எதிர் எழுந்தருளப்போற்றி - பொன்போலும் நிறம்பொதிந்த சடாமகுடத்தையுடைய சிவபெருமான்நேரே காட்சிதந்தருளத் துதித்து.

இன்பமென்றது இளமரக்காவும், மண்டபமும், புட்பசயனமும், மகளிர்போகமும் முதலியவை. மெய்த்தவமென்றது - இயம நியமாதிகள் வழியினின்று ஐம்பொறியடக்கி மனநிறுத்தல் முதலியவை. (உ௦)

மக்களின்விலங்கின்மற்றையோனியின்மண்ணில்விண்ணில்
உக்கதீப்படைகடம்மினுணங்கலினீரமென்னத்
தக்கதிற்புறம்பினுள்ளிற்பகலினிலிரவிற்சாவாப்
பொக்கமில்வரமுமும்மைப்புவனமும்புரக்கும்பேறும்.

(இ-ள்.) மக்களில் விலங்கில் மற்றையயோனியில் மண்ணில் விண்ணில் உக்க தீப்படைகள் தம்மில் - மக்களாலும் விலங்குகளாலும் ஏனையோனிகளாலும் பிருதிவியாலும் அப்புவாலும் தேயுவாலும் வாயுவாலும் ஆகாயத்தாலும் தீச்சிந்தும் ஆயுதங்களாலும், உணங்கல் ஈரம் என்னதக்கதில் புறம்பில் உள்ளில் பகலினில் இரவில் - இவையொழிந்த உலர்ந்ததும் ஈரமும் என்று சொல்லத்தக்க பொருள்களாலும் புறம்பிலும் உள்ளிலும் பகற்பொழுதிலும் இரவிலும், சாவாதபொக்கம் இல்வரமும் மும்மை புவனமும் புரக்கும்பேறும் - சாகாத குற்றமில்லாத வரமும் பூமி அந்தர சுவர்க்கமென்னும் திரிபுவனங்களையுங் காக்கும் பயன்களுமாகிய இவைகளை.

"அயனுயர் சதாசிவம்"என்றாற்போல மண்ணில் விண்ணில் எனக்கூறியதில் இடையிலுள்ள ஏனைப் பூதங்களை வருவித்துப் பொருள் கொள்ளுதல் "இடையிலுள்ளனவெல்லா மறைதலால்" என்னும் ஏதுவாற் கொள்க.

உணங்கல் ஈரமென்பன மக்கள் முதலாகிய மேற்கூறிய பொருள்களுளடங்குமாயினும் அவையொழிந்த பொருள்களும் உளவாயின் அவற்றையுங் கொள்க என்பான் உணங்கலினீரமென்னத்தக்கதில் எனவும், மக்களும் விலங்குகளும் தீப்படைகளுமாகிய இவற்றால் புறம்பிலிறுதி ஓரிடத்து நேரிடுமென்பான் புறம்பிலெனவும்,மற்றையோனியில் மண்ணில் விண்ணில் என்னும் இவைகளால் இறுதி ஓரிடத்து நேரிடுமென்பான் உள்ளிலெனவும், மேற்கூறிய அவைகளால் சாதல் பகற்பொழுதிலும் இராப்பொழுதிலும் என்பான் பகலினில் இரவில் சாவா எனவுங்கூறினான். மற்றையோனிக ளென்றது - தேவரும், புள்ளும், நீர்வாழ்வனவும், பறவையும் தாபரமுமாம். (உ௧)

எம்பிரானருளக்கொண்டானிரணியகசிபுமாசை
யம்பகன்முதலியோருமவரவர்க்கினியபெற்றார்
வம்பலர்மலரிட்டன்னோர்வழுத்தியதலங்களோடு
மும்பர்சூழிரணியீசமுத்தமச்சிறப்பினோங்கும்.

(இ-ள்.) இரணியகசிபும் எம்பிரான் அருளக்கொண்டான் - இரணியகசிபென்பவனும் எமது சிவபெருமான் அருள்செய்ய வேற்றனன், ஆசை அம்பகன் முதலியோரும் அவரவர்க்கு இனிய பெற்றார் - இரணியாக்கன் முதலிய ஏனையோரும் தத்தமக்கினிய பயன்களைப்பெற்றார்கள், அன்னோர் வம்பு அலர் மலர் இட்டு வழுத்திய தலங்களோடும் - அவ்விரணியாக்கன் முதலியோர் வாசனையோடலர்ந்த மலர்

சொண் டருச்சித்து வணங்கிய தலங்களோடும், உம்பர் சூழ் இரணியீசம் உத்தமச் சிறப்பின் ஓங்கும் - தேவர்கள் சூழ்ந்து வணங்கும் இரணியீசமானது மேம்பட்ட சிறப்பொடு அத்தலங்களில் உயர்ந்து விளங்காநிற்கும்.

இரணியன் பெற்ற அரிய வரங்களைத் தாமும் பெறக்கருதின ரென்பதுதோன்ற உம்பர்சூழ் என்றார். (உஉ)

இரணியீசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கருOரு.

# நாரசிங்கீசப்படலம்.

---

தாரணிமேற்புகழ்தாங்கியகாஞ்சியி
னிரணியீச்சரமேன்மையியம்பினு
மரணிலைத்தவதன்குடபாங்கரின்
முரணினாரசிங்கீசமொழிகுவாம்.

(இ-ள்.) தாரணிமேல் புகழ் தாங்கிய காஞ்சியின் இரணியீச்சரம் மேன்மை இயம்பினும் - நிலவுலகின்மேல் புகழ்பொறுத்த காஞ்சித் திருப்பதியிலுள்ள இரணியீச்சரத்தின் மேன்மையை முன்னர் எடுத்துக் கூறினும், அரண்நிலைத்த அதன் குடபாங்கரில் முரணின் நாரசிங்கீசம் மொழிகுவாம்-(பிறவிவெப்பொழியக் கருதினோர்க்கு) அரணாக நிலைத்த அத்திருப்பதியின் மேற்றிசைப் பக்கலில் உள்ள பகைவரொடு மாறுபடுதலையுடைய நாரசிங்கமென்னும் திருப்பதியை இனியெடுத்துக் கூறுவாம்.

அரண் என்ற சொல்லாற்றலால் பிறவி வெப்பொழியக் கருதினோர்க்கு எனவும், நாரசிங்கமென்ற சொல்லாற்றலால் முரணின் என்றதற்குப்பகைவரோடு மாறுபடுதலையுடைய எனவும் பொருள்கொண்டாம். (க)

தக்கன்வேள்வியஞ்சாலையவியுணப்
புக்கதேவர்புரளச்சவட்டிய
முக்கணன்னருள்பெற்றபின்மூவுல
கொக்கவாடகன்றாட்படுத்தோங்கலால்.

(இ-ள்.) தக்கன் வேள்வி அம்சாலை அவி உண்ணப் புக்கதேவர் - தக்கனது அழகிய வேள்விச்சாலையில் அவிப்பாகம் உண்ணச்சென்ற திருமால்முதலிய தேவர்கள், புரள சவட்டிய முக்கணன் அருள் பெற்றபின் - நிலைகெடக் கொன்றருளிய சிவபெருமானது திருவருளை யடைந்தபின், ஆடகன் மூவுலகு ஒக்க தாள்படுத்து ஓங்கலால்- இரணியன் மூன்றுலகங்களையும் ஒருசேரத் தனது அடிக்கீழ்ப் படுத்தி அரசுசெய்து யாரினும் மேம்பட்டிருத்தலால். (உ)

வண்ணவண்டிமிராமலர்க்கற்பகக்
கண்ணிவிண்ணவர்யாருங்கவன்றுபோய்த்
தண்ணறுந்துளவோனடிதாழ்ந்தெழூஉக்
கண்ணிலாக்கனகன்செயல்கூறலும்.

(இ-ள்.) வண்ணம் வண்டு இமிராத கற்பகம் மலர் கண்ணிவிண்ணவர் யாருங் கவன்றுபோய் - நிறம்வாய்ந்த வண்டுகள் மதுவுண்ண மூசியொலியாத கற்பகமலர் மாலையணிந்த தேவர்கள் யாவருங் கவலைகூர்ந்து சென்று, தண்நறுந் துளவோன் அடிதாழ்ந்து எழுந்து கண்ணில்லாத கனகன்செயல் கூறலும் - தண்ணிய நறுமணங் கமழும் துளபமாலையை யணிந்த திருமாலினது திருவடியை வணங்கி யெழுந்து கண்ணோட்டமில்லாத இரணியனது தீச்செயலை யெடுத்துக் கூறவும்.

ஆன்மாக்கள் தத்தங் குறைபாடொழியக் குறையிரப்பது காப்புடைக் கடவுளிடத்தாதலால் தண்ணறுந் துளவோனடி தாழ்ந்தெழூஉ என்றார். (௧)

ஏம்படைத் திறலாண்டகை காஞ்சிபுக்
கெம்பிரான் றனிணையடி யேத்துபு
வெம்புதெவ் வினைவெல லுமுபாயமவ்
வும்பர்கோ னருள்செய்ய வுணர்ந்தரோ.

(இ-ள்.) ஏம்படைதிறல் ஆண்டகை காஞ்சிபுக்கு எம்பிரான்தன் இணை அடி ஏத்துபு - சுதரிசனமுதலிய பஞ்சாயுதங்களை யேந்திய வெற்றிவாய்ந்த காஞ்சித் திருப்பதியை யடைந்து எமது சிவபெருமானது திருவடியைவணங்கி, வெம்புதெவ் வினை வெல்லும் உபாயம் - கோபித்துப் போர்க்கெழும் பகைவனாகிய இரணியனை வெல்லும் உபாயத்தை, அ உம்பர்கோன் அருள்செய்ய உணர்ந்து - அத்தேவர்களுக் கிறைவனாகிய சிவபெருமான் திருவருள்செய்யத் தெரிந்து,

சங்கு, சக்கரம், கதை, கட்கம், கோதண்டமெனத் திருமாலேந்திய படை ஐந்துவகைப்படுதலாலேம்படை யெனவும், புருடோத்தமனென்னுந் திருப்பெயருடைமையால் ஆண்டகை எனவும், மக்கள்முதல் பகலினில் இரவில் சாவாவரமுடையவனாதலால் அவனைவெல்லுதற்கு எத்துபு உபாயம் உணர்ந்து எனவுங்கூறினார். (௨)

உந்துதன் னொருகூற்றை யுவன்பெறு
மைந்தன் மாடுறவைத்துத் தருக்குழி
யெந்துநீ யினியுய் திறனீங்கெனச்
சுந்தரப் பொலந் தூணங் கிழித்தெழீஇ.

(இ-ள்.) உந்துதன ஒருகூற்றை- எவ்விடத்தும் இடையூறின்றிச் செல்லுந்தன்னொரு அம்சத்தை, உவன்பெறும்மைந்தன் மாடுஉறவைத்து-அவ்விரணியன் பெற்ற பிரகலாதனிடத்துப் பொருந்தவைத்து, தருக்கு உழி - அவ்விரணியன் யானே இறைவனென்று அகங்கரிக்குமிடத்து, எங்கு நீ இனி உய்திறன் எந்து என்று - நீ இவ்விடத்து இனிப்பிழைக்கும் வகை என்னவென்று, சுந்தரம்பொலம் தூணம்கிழித்து எழுந்து-அழகிய பொன்னிறம்வாய்ந்த தூணைக்கிழித்தெழுந்து.

எந்து திசைச்சொல். பாம்பாற் கடிப்பித்தலும் யானையால் மிதிப்பித்தலும் ஆகிய தீத்தொழில்களால் பிரகலாதனுயிர்வாங்க ஏவலாளரால் இரணியன் செய்வித்தும் உயிர்போகாமை தோன்ற உந்துதன்னொரு கூற்றை எனவும், தன்பேரே திருமந்திரமாக யாரும் உச்சரிக்கச் செய்தனனென்பது தோன்றத் தருக்குழி எனவும், அவன் கேட்ட வரங்களுள உணங்கல் ஈரமென்னும் பொருள்களால் சாவாமை ஒருவரம் ஆதலால் அவ்வுணங்கலும் ஈரமுமில்லாத தூண் என்பது தோன்றத் தூணங்கிழித்தெழீஇ எனவுங் கூறினார். (௩)

கொட்குமானிடக்கோளரியாகியவ்
வட்கிலானைக்கவான்மிசைவைத்திரு
ணட்குமந்தியின்வாய்தலினள்ளிருந்
துட்குகூருகிர்கொண்டுரங்கீறியே.

(இ-ள்.) கொட்கும் மானிடக்கோளரி ஆகி - கண்டோர் யாவரும் மனஞ்சுழலும் நரசிம்ம மூர்த்தமாகி, அவ்வட்கிலானை கவான்மிசைவைத்து - அவ்வுக்கிரவடிவிற்கு அஞ்சாது போர்க்கெழுந்த அவ்விரணியனைத் தனதுதொடையின் மேல் வைத்து, இருள் நட்கும் அந்தியின் வாய்தலின் நள் இருந்து - இருளபின் கலக்கும் அந்திப்பொழுதில் வாய்தலி னடுவேயிருந்து, உட்குகூர் உகிர்கொண்டு உரம்கீறி - கண்டோர்கள் கூசும் கூரியநகத்தால் அவன்மார்பைப்பிளந்து.

மக்கள் விலங்கில் சாவாவரம் பெற்றமையால் இவ்விரண்டுமல்லாத திருவுருவென்பது புலப்படக் கொட்குமானிடக் கோளரியாகி எனவும், மண்ணில் விண்ணில சாவா வரமுடைமையால் அவையின்மை புலப்படக் கவான்மிசை வைத்தெனவும், பகலில் இரவில் சாவா வரமுடைமையால் அவையிரண்டுமின்மைபுலப்பட இருணட்கும் அந்தியிலெனவும், புறம்பில்உள்ளில் சாவாவரமுடைமையால் அவையின்மை புலப்பட வாய்தலில் நள்ளிருந்தெனவும், ஆயுதங்களிற் சாவா வரமுடைமையால் அது இன்மைப்புலப்படக் கூருகிர் கொண்டுரங்கீறி எனவுங்கூறினார். (சு)

வன்கணனுயிர்வவ்வியிரத்தநீ
ரென்கணாகெனவாய்மடுத்திம்மெனத்
தன்கணெய்துந்தருக்கின்மயங்கினன்
புன்கண்மும்மைப்பொழிற்கும் விளைத்தனன்.

(இ-ள்.) வன்கணன் உயிர்வவ்வி இரத்தநீர் என்கண் ஆக என்ன வாய்மடுத்து - தறுகண்மையையுடைய இரணியனது உயிரைவாங்கி அவனது உதிரநீர் என்னிடத்தே அமைகவென வாய்மடுத்துத் தேக்கி, இம்மென தன்கண் எய்தும் தருக்கில் மயங்கினன் - அதனால் விரைந்து தன்னிடத்துப் பொருந்திய களிப்பால் மயங்கி, புன்கண்மும்மை பொழிற்கும் விளைத்தனன் - துன்பத்தைச் சுவர்க்கமுதலிய மூன்றுலகத்துக்குஞ் செய்தனன்.

மயங்கினன் முற்றெச்சம். (எ)

பிரகலாதன்பிறங்கெழிற்செய்யவள்
சுரருமேத்தித்துதிசெயுநன்னய
வுரையுங்கேட்கலனுன்மத்தமேவிடிற்
கரையுமென்மொழிகாதினிலேறுமோ.

(இ-ள்.) பிரகலாதன் பிறங்கு எழில் செய்ய வள் சுரரும் ஏத்தி - பிரகலாதனும் விளங்கும் அழகினையுடைய இலக்குமிதேவியும் தேவர்களும் வணங்கி, துதிசெய்யும் நல்நய உரையும்கேட்கலன் - வாழ்த்தும் இனியவசனங்களையும் கேளாதவனாயினன், உன்மத்தம் மேவிடில் கரையுமெல்மொழி காதினில் ஏறுமோ - ஒருவனுக்குப் பித்தேறினால் பிறர்கூறும் மெல்லிய சொற்கள் அவன்காதிற் செல்லுமா (செல்லாதென்றபடி.)

முன்னர்க் கூறியதை முடித்தற்குப் பின்னொருகாரணம் வைத்துக் கூறியயதுவேற்றுப்பொருள் வைப்பணி. (அ)

உய்தியில்லவன்சோரியொன்றித்துணை
வெய்யவாயசெருக்குவிளைக்குமேற்
பையுள்சூழப்பதகன்கொடுமையை
யையயாவரளவிடற்பாலரே.

(இ-ள்.) உய்தி இல்லவன் சோரி ஒன்று - தான் உய்யும் வகையறியாத இரணியனது உதிரமொன்றே, இத்துணை வெய்ய ஆய செருக்கு விளைக்குமேல் - இவ்வளவு கொடிய செருக்கினைத் திருமாலுக்கே விளைக்குமானால், பையுள்சூழ் அப்பதகன் கொடுமையையாவர் அளவிடற்பாலர்-ஆன்மாக்களுக்குத் துன்பமே கருதும் அவ்விரணியனது கொடுமையை வரையறுத்துக் கூறுந் தன்மையையுடையோர் யார் (ஒருவருமில்லை யென்றபடி)

ஐய - இரக்கக்குறிப்புப் பொருளில்வந்த விடைச்சொல் - இதுகவிகூற்றுத்துறை. (௯)

அனையகாலையயன்முதல்விண்ணவ
ரினையுநெஞ்சினரஞ்சினரெம்பிரான்
றனையடைந்துசரணமென்றேத்தினர்
வினையிகந்துயர்மந்தரவெற்பின்மேல்.

(இ-ள்.) அனைய காலை அயன்முதல் விண்ணவர் இனையும் நெஞ்சினர் அஞ்சினர் - அக்காலத்தில் பிரமன் முதலிய தேவர்கள் வருந்துமனமுடையரா யஞ்சி, உயர் மந்தரவெற்பின்மேல் எம்பிரான்தனை அடைந்து சரணம் என்று வினை இகந்து எத்தினர் - உயர்ந்த மந்தரகிரியின்மேல் சிவபெருமானையடைந்து யாங்கள் அடைக்கலமென்று தங்களுக்கு நேர்ந்த தீவினையினின்று நீங்கித் துதித்தார்கள்.

திருக்கயிலைபோல மந்தரகிரியும் ஓர்தானமாதலால் மந்தரவெற்பின்மேல் எம்பிரான்றனைச் சரணடைந்து என்றார். (௧௦)

வாய்புலர்ந்துநடுக்குறவந்தவ
ரேயவார்த்தைதிருச்செவியேற்றனன்
பாயபல்கணமேத்தப்பனிவரை
யாயிளேடினிதாடல்செயாண்டகை

(இ-ள்.) பாய பல்கணம் ஏத்த - பரவிய பல சிவகணங்களுந் துதிக்க, பனிவரை ஆயிளேடு இனிது ஆடல் செய் ஆண்டகை - உமையம்மையோடு இனிதாகக் கலந்தருளிய இறைவன், வாய்புலர்ந்து நடுக்குற வந்தவர் ஏயவார்த்தை திருச்செவி ஏற்றனன் - வாய்புலர்ந்து நடுக்குற்று வந்தடைந்த பிரமன்முதலிய தேவர்களது இரப்புரையைத் திருச்செவியிலேற்று.

ஏற்றனன் முற்றெச்சம். (௧௧)

அஞ்சலீரென்றளித்தனன்சிம்புளாய்
வஞ்சமானிடவாளரியாயுளைத்
துஞ்சுவித்துரிகொண்டொளிதோற்றினன்
றஞ்சமுண்டவர்தஞ்சரணாயினன்.

(இ-ள்.) அஞ்சலீர் என்று அளித்தனன் - அஞ்சுதலொழிமினென்று அபயந்தந்து, சிம்புள் ஆய் வஞ்சம் மானிடவாளரி ஆயுளை துஞ்சுவித்து உரிகொண்டு-சரபவடிவாய் வஞ்சம்வாய்ந்த நரசிம்மத்தின் வாழ்நாளைப்போக்கி அதன் தோலை ஆடையா

கக்கொண்டு, தஞ்சம் உண்டவர்தஞ் சரண் ஆயினன் ஒளிதோற்றினன்-அடைக்கலம் புகுந்தோர்க்கு அடைக்கலத் தானமாயுள்ள இறைவன் புகழொடு விளங்கினன்.

ஒளி பலரும் அறிய நிற்றல்போலப் புகழும் பலருங்கேட்க நிற்றலால் உவமையாகுபெயராய்ப் புகழ்மேனின்றது. சிங்கம் எல்லாமிருகங்களிலும் மேம்பட்ட தாதலால் வாளரியென்றார். வாள் ஒளி. (௧௨)

நரமடங்கலினாரணனுந்திருக்காஞ்சியை
விரவிநாரசிங்கீச்சரவேந்தைநிறீஇயினன்
பரவியேத்தினன்வெவ்வினைநீத்தருள்பற்றின
னுரவுநீருடையத்தலமுத்தமமாகுமால்.

(இ-ள்.) நரமடங்கலின் நாரணனும் திருக்காஞ்சியை விரவி - நரசிம்மமூர்த்தங்கொண்ட திருமாலுங் காஞ்சித் திருப்பதியையடைந்து, நாரசிங்கீச்சரவேந்தை நிறீஇயினன் - நாரசிங்கீச்சர மென்னுந் திருப்பதியில் சிவலிங்கப் பெருமானைத் தாபனஞ்செய்து, பரவி ஏத்தினன் வெவ்வினை நீத்து அருள்பற்றினன் - வணங்கி வாழ்த்திக் கொடிய அம்மயக்க வினையினின்று நீங்கிச் சிவபெருமான் திருவருளை யடைந்தனன், உரவுநீர் உடைய அத்தலம் உத்தமம் ஆகும் - பெரிய நீர்வளம் வாய்ந்த அத்திருத்தம் எல்லாத் திருத்தலங்களிலும் மேம்பட்டு விளங்கும். (௧௩)

வாரகீச்சரமன்னதன்றெற்கதுமன்னுபொற்
பேரான்றன்னொடுதோன்றியபொன்விழிப்பேரினன்
பார்தான்வெளவினன்பாதலத்தேகலும்பைந்துழாய்த்
தாரான்சூகரமாயவன்றன்னைச்சவட்டியே,

(இ-ள்.) வாரகீச்சரம் அன்னதன் தெற்கது - வராகீச்சரமென்னும் அத்திருத்தலத்திற்குத் தெற்குளது, மன்னுபொன்பேரான் தன்னொடுதோன்றிய பொன்விழிபேரினன் - இரணியனோடு பிறந்த இரணியாக்க னென்னும் பெயரையுடையவன், பார்தான் வெளவினன் பாதலத்து ஏகலும் - நிலவுலகைக் கவர்ந்து பாதலத்திற் செல்ல, பைந்துழாய் தாரான் சூகரம் ஆய் அவன் தன்னை சவட்டி- பசிய துளபமாலையை யணியந்த திருமால் வராகமூர்த்தங்கொண்டு அவ்விரணியாக்க னுயிரைவாங்கி.(௧௪)

முன்போற்பாரைக்கொணர்ந்துநிறீஇமதமூண்டுழிக்
கொன்பாயேற்றவன்வேடுருக்கொண்டுயிருண்டொரு
வன்பார்கோடுபிடுங்கியணிந்தபின்மற்றவ
னன்பாலீசனையர்ச்சனைசெய்தருள்பெற்றதே.

(இ-ள்.) முன்போல் பாரைகொணர்ந்து நிறுவி- முன்போல அந்நிலவுலகைக் கொண்டுவந்து நிலைநிறுத்தி, மதம்மூண்ட உழி - இறுமாந்து அட்டகுல பர்வதங்கள் முதலியவற்றைத் தனது வக்கிரதந்தங்களால் கோதது வீசியவழி, கொன்பாய் ஏற்றவன் வேடஉருக்கொண்டு உயிர் உண்டு - நிகரின்றிப் பாய்ந்து செல்லும் இடபவூர்தியையுடைய சிவபெருமான் தேவர்கள் வேண்டுகோளால் வேடுவவடிவங் கொண்டு அவ் வராகத்தின் உயிர் பருகி, ஒருவன்பு ஆர் கோடுபிடுங்கி அணிந்தபின்- அவ்வராக மூர்த்தத்தின் வலிமைவாய்ந்த வக்கிரதந்தத்தைப் பிடுங்கி அத்திருமால் செருக்காத வண்ணம் திருமார்பி லணிந்தபின், அவன் அன்பால் ஈசனை அர்ச்சனைசெய்து அரு

ள்பெற்றது - அத்திருமால் அன்போடு சிவபெருமானை அருச்சித்துத் திருவருள் பெற்ற திருத்தலமாம்.

முருகக்கடவுள் கொண்டவேடுவத் திருவுருவம் சிவபெருமானது அனுஞை யாலாதலால் அதனைச் சிவபெருமான்மேலேற்றி வேடுருக்கொண்டெனக் கூறினர். மதமூன்றுபிழியென்னுஞ் சொல்லாற்றலால் இறுமாந்து வக்கிரதந்தத்தால் அட்டகுல பர்வதங்களைக் கோத்தெறிதல் முதலிய வென்றும். முன்னர்க் கூறிய செய்யுளில் தெற்கது வென்பது - அர்ச்சனைசெய் தருள்பெற்ற தென்பதனோடு முடிதலால் ஒரு தொடர். (௧௫)

நாரசிங்கீசப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௩௧௮.

---

# அந்தகேசப்படலம்.

தாரார்கொன்றையனாரசிங்கீச்சரந்தன்னொடு
வாராகீச்சரமேன்மைதெரிந்துவழங்கினம்
ஏரார்கின்றவிதன்குணபாங்கரெறூழ்வலிப்
போரானேற்றவரந்தகவீச்சரம்போற்றுவாம்.

(இ-ள்.) தார் ஆர் கொன்றையன் நாரசிங்கீச்சரம் தன்னொடு வாராகீச்சரம் மேன்மைதெரிந்து வழங்கினம் - கொன்றைமாலையை யணிந்த சிவபெருமானது நாரசிங்கீச்சரத்தோடு வாராகீச்சரத்தின் மேன்மையையும் முன்னர்த் தெரிந்து கூறினம், ஏர் ஆர்கின்ற இதன் குணபாங்கர் - பொலிவு நிறைந்த இவ்வாராகீச்சரத்தின் கீழ்பக்கலில், எறூழ்வலிபோர் ஆன் ஏற்றவர் அந்தகவீச்சரம் போற்றுவாம் - மிக்கவலிமையையும் போர்த்தொழிலையு முடைய இடபவூர்தியையுடைய பெருமானரது அந்தகவீச்சரத்தின் மேன்மையை இனியெடுத்துக் கூறுவாம். (௧)

இரணியாக்கனளித்திடுமந்தகனென்பவன்
மரபினெந்தையையாயிடையேத்திவரம்பெறூஉ
முரனையட்டபிரான்முதல்விண்ணவர்யாரையு
முரணில்வென்றுபுறக்கொடைகண்டுலகாண்டனன்.

(இ-ள்.) இரணியாக்கன் அளித்திடும் அந்தகன் என்பவன் - இரணியாக்கன் பெற்ற அந்தகனென்னும் அசுரன், மரபின் எந்தையை ஆயிடை ஏத்திவரம்பெற்று - ஆகமமுறையாற் சிவபெருமானை அவ்விடத்துப் பூசித்து வரம்பெற்று, முரனை அட்டபிரான் முதல் விண்ணவர்யாரையும் - முராசுரனுயிர் வாங்கிய திருமால்முதலிய தேவர்கள் யாரையும், உரன்இல் வென்று புறக்கொடை கண்டு உலகு ஆண்டனன்- தனது வலிமையால் வென்று அவர்கள் புறங்கொடுத்தலை நோக்கி உலகினையாண்டனன்.

நரகாசுரன் அரண்களைக் காப்போன் முரனாதலால் அவனைக் கண்ணமூர்த்தத்தின் முன்கொன்றமையால் முரனை யட்டபிரான் என்றார். இக்காரணம்பற்றி முராரி என்பது அவர்க்கோர் திருநாமம். (௨)

அன்னதானவனுக்கழிவெய்தியச்சத்தினாற்
பொன்னவாமருமத்தவனுதிப்புத்தேளிர்தா
மின்னிடைக்குருடுக்கம்விளைத்திறுமாந்தணி
மன்னுபூண்முலையார்வடிவத்தைதயெடுத்தரோ.

(இ-ள்.) அன்னதானவனுக்கு அழிவு எய்தி - அந்த அசுரனுக்குப் புறங்கொடுத்து, அச்சத்தினால் பொன்அவாம் மருமத்தவன் ஆதிபுத்தேளிர்தாம், தமது உயிர் போற்றுதற்கு இலக்குமி விரும்பிய திருமார்பையுடைய திருமால்முதலிய தேவர்கள், மின் இடைக்கு நடுக்கம் விளைத்து இறுமாந்து அணிமன்னு பூண்முலையார் வடிவத்தை எடுத்து - மின்னல்போன்ற இடைக்கு நடுக்கஞ்செய்திறுமாந்து பொலிவமைந்த ஆபரணங்களை யணிந்த தனங்களையுடைய பெண்கள் வடிவத்தையெடுத்து. (௩)

கொள்ளிவட்டமெனச்சகமெங்கணுங்கொட்புறீஇ
வெள்ளியங்கயிலைக்கிரிமேவினர்முத்தலை
யள்ளிலைப்படையங்கணனாருள்பெற்றவண்
வள்ளிமாமிகணங்களினோடும்வதிந்தனர்.

(இ-ள்.) கொள்ளிவட்டம் என்ன சகம் எங்கணும் கொட்புற்று - கொள்ளிவட்டம் என்னுந் தீப்பொறிபோல உலகெங்குஞ் சுழன்று, வெள்ளியங் கயிலைக் கிரிமேவினர் - வெள்ளியாகிய அழகிய கயிலையங்கிரியை யடைந்து, முத்தலை அள் இலை படை அங்கணனார் அருள்பெற்று-மூன்றுகவராயுள்ள கூரிய தகட்டுவடிவாகிய சூலத்தையேந்திய சிவபெருமானாரது திருவருளைப்பெற்று, அவண் வள்ளிமாமி கணங்களினோடும் வதிந்தனர்- அவ்விடத்து உமையம்மை கணங்களோடும் கயிலையிற்

அங்கணனார் உயர்வுகுறித்தற்கண் பலர்பாலில் வந்த ஆர்என்னும் இடைச்சொல் அங்கணனென்னும் இயற்பெயர் முன்வந்தது. மேவினர் முற்றெச்சம். (௪)

இன்னவாறுபல்காலமகல்வுழியெம்பிரான்
மன்னுதாருவனத்துறைமாதவர்தங்களைத்
துன்னிமையல்கொளீஇயவருண்மைசோதித்திடு
மன்னசெய்கைநினைந்தவணெய்தினனவ்விடை.

(இ-ள்.) இன்ன ஆறு பல்காலம் அகல்வுழி -இவ்வாறுபலகாலஞ்சென்றபின், எம்பிரான் மன்னு தாருவனத்து உறைமாதவர் தங்களை - எமதுபெருமான் நிலைபெற்ற தேவதாருவனத்திற்றங்கிய பிருகுமுதலிய முனிவர்களை, துன்னிமையல் கொளுவி அவர் உண்மை சோதித்திடும் அன்ன செய்கை நினைந்து அவண் எய்தினன் - அவர்களையடைந்து காமத்தைமூட்டி அவருண்மை நிலையை யாராய்ந்தறியும் அச்செய்தியைக்கருதி அவ்விடத்தடைந்தான், அ இடை - அச்சமையத்தில்.

கௌதமமுனிவர்சாபத்தால்தேவதாருவனத்தினின்று வந்தமுனிவர்கள்வேதவொழுக்கமும்சிவபத்தியு நீங்கிநரகில்வீழ்ந்தீவினையிற் சிமிழ்ப்புண்டுகருமத்தையே பொருளெனமதித்துஇறுமாந்திருக்க, அவர்களையுய்வித்தற்பொருட்டுப்பிட்சாடனத்திருவுருவங்கொண்டனர்என்பதுபுராணவரலாறுதலால் எம்பிரான் மன்னு தாருவனத்துறை மாதவர் தங்களைத் துன்னி மையல்கொளீஇ என்றார்.

"நெற்றித்தழற்கட்பெரியோனு நேமியோனுமீங்கிவர்க
ளுற்றதீமைநிரயத்திற்பன்னாளுழப்பினல்லாது
முற்றாதென்றுளத்தெண்ணித்தீமைபயக்குமுன்னூல்கள்
சொற்றாரவைமதிமருட்ட முனிவரவற்றிற்றுவக்குண்டார்.
அன்னநூலின்வழிநூல்கள்முனிவரோதியருளொய்தி
யின்னற்கடலுள்வீழ்ந்திடலுமெம்மானதனுக்குளமிரங்கிப்

பன்னுமறையோர்துயர்தீர்ப்பான்பலியேற்றுண்டல்தலைக்கீடாய்
மன்னுமுயர்தாருகவனத்தினன்னோர்சாலைமருங்கடைந்தான்.''
எனக் கூர்மபுராணத்தில்வருதல் காண்க. (ங)

அந்தகாசுரன்விண்ணவர்வெள்ளியடுக்கலின்
வந்துபெண்மையராகிமறைந்துறைசெய்திகேட்
டுந்துசீற்றமிகுத்தவனெய்தியுடற்றுழி
முந்துமம்பிகைதன்னருள்பெற்றுமுகுந்தனார்.

(இ-ள்.) அந்தகாசுரன் - அந்தகாசுரனென்பவன், விண்ணவர் வெள்ளி அடுக்கலின் வந்து பெண்மையர் ஆகி மறைந்து உறை செய்தி கேட்டு - தோற்ற திருமால் முதலியதேவர்கள்கைலையங்கிரியில்வந்து பெண்மைவடிவுடையவராய்க்கரந்து வசிக்குஞ் செய்தியைக்கேட்டு, உந்து சீற்றம் மிகுத்து அவன் எய்தி உடற்று உழி - போர்க்குவந்து கோபங்கூர்ந்து அவ்விடத்தடைந்து போர்செய்யுமிடத்து, முகுந்தனார் முந்தும் அம்பிகை தன் அருள்பெற்று - திருமால் யாவருக்கு முற்பட்டவுமையம்மையின் திருவருள்பெற்று. (சூ)

எண்ணில்பெண்டிர்தமைப்படைத்தேயினரத்தடங்
கண்ணினார்க்கிடைகண்டகனோடினனாகமற்
றண்ணலாருறுவோரமர்தாருவனத்திடை
நண்ணியங்கணடாத்தியசெய்கைநவிற்றுவாம்.

(இ-ள்.) எண் இல் பெண்டிர் தம்மைப் படைத்து எயினர் - அளவில்லாதசத்திகளைப்படைத்து எவினார்கள், அ தடகண்ணினார்க்கு இடைகண்டகன ஓடினனாக - அந்தப்பரந்தகண்களையுடைய விண்டு சத்திகளுக்குத்தோற்ற அந்தகாசுரன் புறங்கொடுத்தோட, அண்ணலார்-சிவபெருமானார் (பிட்சாடனமூர்த்தங்கொண்டு) உறுவோர் அமர் தாருவனத்து இடை நண்ணி - பிருகுமுனிவர் முதலிய முனிவர்கள் தங்கிய தேவதாருவனத்திற் சேர்ந்து, அங்கண் நடாத்திய செய்கை நவிற்றுவாம் - அவ்வனத்தில் நடத்திய திருவிளையாடலை யினிக் கூறுவாம்.

அந்தகாசுரனுக்குத்தோற்றுப்பெண்வடிவமாய்உமையம்மையின்கணங்களாயேவல்செய்துநின்ற திருமால்முதலியதேவர்களோடும்போர்செய்ய அந்தகாசுரன்போர்செய்யவேற்றவழி, நந்திதேவர் கண்டாகன்னன்முதலியகணாதிபரோடு அவனோடு போர்செய்துபுறங்கொடுத்தகாலையில் திருமால் நூறுசத்திகளையமைத்துப் போர்க்கேவ, அச்சத்திகள்அவனைவென்றுவாகைபுனைந்தனர் என்பது புராணவரலாறு.

''கணங்களுடைந்துபுறங்கொடுப்பக்காயாமேனித்திருநெடுமா
லணங்குநோய்செயரிநெடுங்கட்சத்தியொருநூறமைத்துவிட
நிணங்கொள்வடிவேலந்தகப்பேரவுணன்றன்னைநிகர்வோரைத்
துணங்கையயர்ந்துபேய்க்கணங்கடுள்ளமலைதொனவிடுத்தான்.

விடுத்தவோராயிரமவுணர்விளியநந்திமுதற்கணங்க
ளடுத்தவிண்டுசத்திகள்வந்தடர்த்துவாகைபுனைந்திடலுங்
கடுத்தாழ்மிடற்றெங்கண்ணுதலோன்கணங்கட்காற்றாதுடைந்துபுறங்
கொடுத்தானுலகமொருமூன்றுங்கொலைசூழந்தகாசுரனே.''

எனக் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (எ)

ஒருபோகுகொச்சகம்.

கழல்கறங்கப்பலிக்கலனுங்கரத்தேந்திப்பலபரிதி
மழகதிரின்வரும்பெருமான்றுடிமுழக்கஞ்செவிமடுத்துக்
குழலிசைகேட்டருகணையுமசுணமெனக்குளிர்தூங்கிப்
பழிதபுதாபதமடவார்பலிகொண்டுமருங்கணைந்தார்.

(இ-ள்) கழல்கறங்க பலிகலனும் கரத்து ஏந்தி - வீரகண்டையொலிக்கப்ப லிபாத்திரத்தைத் திருக்கரத்திலேந்தி, பலமழ பரிதிகதிரின் வரும்பெருமான் துடி முழக்கம் செவிமடுத்து - பலஇளஞ்சூரியர் ஒளிபோலத்தோன்றியருளிய சிவபெரு மானது உடுக்கையின் முழக்கத்தைத் தமதுசெவியிற்றேக்கி, குழல் இசைகேட்டு கு ளிர்தூங்கி அருகு அணையும் அசுணம் என்ன-வேய்ங்குழலின்இசையைக்கேட்டுமகி ழ்கூர்ந்துஅருகணையும்அசுணப்புள்போல, பழிதபு தாபதமடவார் பலிகொண்டு மரு ங்கு அணைந்தார் - கற்புவாய்ந்தபிருகுமுனிவர்முதலியோர்பன்னிமார்கள்பிச்சைகொ ண்டு வீதியில் வந்தார்கள்.

உவமைக்கும் பொருளுக்கும் ஒற்றுமையுண்மையாற்குளிர்தூங்கியென்னும் பொருளின்றொழிலை உவமைக்குங்கொள்க. பிட்சாடன மூர்த்தமாதலால் பலிக்கல னுங் கரத்தேந்தி என்றார். பிட்சாடனம் பிட்சையேற்கச்சஞ்சரித்தல். (அ)

நிலவலர்ந்தநகைமுகிழ்க்குமணிவாய்க்குநெடுஞ்சூலந்
தலைகிடந்ததிண்டோட்குநடமார்பினழகினுக்கு
மலைமடந்தைகரஞ்சேப்பவருமிருகுறங்கினுக்குங்
கலைநுடங்கவருமடவார்கண்மலரிட்டிறைஞ்சினார்.

(இ-ள்.) நிலவு அலர்ந்த நகைமுகிழ்க்கும் மணிவாய்க்கும் - சந்திரனது வெ ள்ளிய நிலவைப்போல விளங்கியபுன்னகை யரும்பும்அழகிய திருவாய்க்கும், நெடும் சூலம் தலைகிடந்த திண்தோட்கும் தடமார்பின் அழகினுக்கும் - முதன்மைவாய்ந்த நெடிய சூலங்கிடந்ததிண்ணியதோள்களுக்கும்பரந்ததிருமார்பி னழகினுக்கும், மலை மடந்தை கரம்சேப்ப வரும் இருகுறங்கினுக்கும் - உமையம்மை திருக்கரஞ்செவக் கத் தைவரும் இரண்டு திருத்தொடைகளுக்கும், கலைநுடங்கவருமடவார் கண்மலர் இட்டு இறைஞ்சினார்-மேகலை சோரப் பலிகொண்டுவரும் தேவதாருவனமுனிவர்பன் னிமார் தமது கண்களாகியமலர்களைச் சாத்தி வணங்கினார்கள்.

பிரமன் திருமால்உருத்திரன்என்போர் மூன்றுருவமும் தன்னுருவென்பது புலப் படுத்தற்குத் தாங்கினானென்பார்சூலத்தலைகிடந்ததிண்டோட்கும் எனவும், தெரிசிட போர் மலரிட்டுவணங்குதல் முறையென்பார் கண்மலரிட்டிறைஞ்சினார் எனவும்கூறி னார். கண்மலர் கண்ணாகிய மலர், கள்ளையுடைய மலர் எனப்பொருள்கொள்ள நிற்ற லால்செம்மொழிச் சிலேடையணி. தோளும்,மார்பும், தொடையும் கலவியின்பந்தரு ம் இடங்களாதலால் அவற்றை வணங்கினார் என்பார். இறைஞ்சினாரெனவுங்கூறினார்.

சூலம் பிரமன்முதலிய மூவர்வடிவு என்றதை "ஒருதாளீரயின் மூவிலைச்சூல மேந்தினை" எனவருந் திருவெழுகூற்றிருக்கையில்வருதல்காண்க. (கூ)

கண்மலரையெம்மானார்திருமேனிகவரவவர்
பண்மலரும்வாய்மலரும்பனிமலருமுகமலருந்
தண்மலரும்விழிமலருந்தாண்மலருங்கைமலரும்
விண்மலருமின்னனையவிளங்கிழையாரெதிர்கவர்ந்தார்.

(இ-ள்.) கண்மலரை எம்மானார் திருமேனி கவர-தமது கண்ணாகிய மலரை எமது பெருமானார் திருமேனிகொள்ளைகொள்ள, அவர் பண்மலரும் வாய்மலரும் பணிமலரும் முகமலரும்-அவ்விறைவரது சாமகானம்பாடும்கிண்கிணிவாயலர்ந்த குளிர்ந்த திருவாய்மலரும் திருமுகமலரும், தணமலரும் விழிமலரும் தாள்மலரும் கைமலரும்-தண்ணளியோடுமலர்ந்த திருக்கண்மலரும் திருவடிமலரும் திருக்கரமலரும் ஆகியஇவற்றை, விண்மலரும் மின் அனைய விளங்கிழையார் எதிர்கவர்ந்தார்-வானிற்றோன்றிய மின்னலையொத்தபெண்கள் அதற்கெதிராகக்கொள்ளைகொண்டனர்.

கிண்கிணிவாய்கொள்ளுமலர் போதாகுதலால்வாய்மலரும்பணிமலரும்என்றார். முனிவர் பன்னியர்தமதுகண்மலராகிய இழிந்தபொருளைத்தந்து, இறைவனது திருவாய்மலர்முதலியஉயர்ந்தபொருளைவற்றமையைச்சொல்லுதலால், இது பரிவிர்த்தியணி. (௧௦)

எம்பிரான் றிருமேனியுள முழுதுமிடங்கொள்ள
நம்பியநாண்முதனான் குந்துச்சிலர்போற்புறநடப்பக்
கொம்பனையார்களுண்டுகளித்தோரினிருமருங்கும்
பம்பினராடினர்பாடினரென்செய்வார்.

(இ-ள்.) எம்பிரான் திருமேனி உளம் முழுதும் இடங்கொள்ள-எமது பெருமானார் திருமேனியானதுஅம்முனிவர்பன்னியரதுமனமுற்றும்தமக்குப் புக்கிலாகக் கவர்ந்துகொள்ளுதலால், நம்பிய நாண்முதல் நான்கும் துச்சிலர்போல் புறம்நடப்ப-அதற்குமுன் புக்கிலாகக் குடியிருந்த நாண்முதலியநான்கு குணமும் ஒதுக்குக் குடியிருந்தவர்போற் புறத்தில் நடக்க, கொம்பு அனையார்கள் உண்டுகளித்தோரின் இருமருங்கும் பம்பினர் ஆடினர் பாடினர் என்செய்வார்-பூங்கொம்பையொத்தஅம்முனிவர்பன்னியர்கள்உண்டுகளித்தோரைப்போலஇரண்டுபக்கங்களிலும்நெருங்கி ஆடினர்கள்பாடினர்கள்இதுவொழிந்து என்செய்வார்கள்.

புக்கில் உரியவீடு. துச்சில் பிறர்வீடு. நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் இந்நான்கு குணங்களின் வன்மையே கற்பாதலால் நாண்முதல் நான்குமென்றார். அக்குணங்களுள் நாண் முற்படக் கூறியது "உயிரினுஞ்சிறந்தன்று நாணே நாணினும் செயிர்தீர்காட்சிக்கற்புச்சிறந்தன்று" எனவருதலில் உயிரினும்நாண்சிறந்ததாகலால் நாணுக்குப்புக்கிலாகியஅவர்கள் மனத்தைத்தனக்குப்புக்கிலாகச்சிவபெருமான் திருமேனிகவர்ந்ததால், உடையவன்வெகுண்டபோது குடிபோகும்ஒதுக்கிடமுடையார்போற் குடிபோதலால் துச்சிலர்போல் புறநடப்பஎன்றார். நாண்பிறரைக் காண நாணுதல், மடம் அவர்குணத்தைக் கனவிலும் அறியாமை, அச்சம் அவரைக் காணில் அஞ்சியொளித்தல், பயிர்ப்பு அவரின்பத்தை யருவருத்தல். பம்பினர்முற்றெச்சம். (௧௧)

தண்ணறுஞ்சந்தனந்தீயத்தரளவடநீறாகக்
கண்ணெகிழ்பூந்தொடைமுகுங்களிவண்டினெடுங்கருக
வெண்ணரியகாமத்தீயிடைக்குளித்தார்புரம்பொடித்த
வண்ணலிளநகைபோலுமடிகளிவாநகையென்பார்.

(இ-ள்.) தண் நறும் சந்தனம் தீய தரளவடம் நீறு ஆக-தண்ணிய நறுமணங்கமழும்சந்தனம்ஒருபால்தீயவும், முத்துவடம்ஒருபால்நீறாகவும், கண்நெகிழ்பூ

சுதொடை மூசும்களிவண்டினெனும் கருக - கள்ளொடுமலர்ந்தமலராற்றொடுத்த மலர் மாலைதம்பால்மொய்த்த மதுக்களிப்பினையுடைய வண்டுகளோடு ஒருபால் கருகவும், எண் அரிய காமம் தீயிடை குளித்தார் - நினைத்தற்கரியகாமமென்னுந்தீயில் மூழ்கிய முனிவர் பன்னியர், அடிகள் இவர்நகை - அழகில்முதலவராகிய இவரது புன்னகை, புரம்பொடித்த அண்ணல் இளநகைபோலும் என்பார். திரிபுரங்களைநீறுபடுத்திய இறைவரது புன்னகையையொக்கும் என்பார்கள்.

ஊரிற்பற்றிய தீக்கோட்பட்டவர் அது தப்பி நீருட்குளித்தால்அத்தீவெம்மை தீரும், காமத்தீக்கோட்பட்டார் அந்நீருட்குளிப்பினும்மலைமுழையினெளிப்பினும தீராதாதலால்எண்ணரியகாமமெனவும், அதுதம்மால் விரும்பப்பட்டகாதலார்தோளன்றித் தீராதாதலால் புரம்பொடித்த அண்ணலிளநகைபோலுமடிகளிளநகையென்பார் எனவும் கூறினர். அடிகள் முதல்வர். இங்கு அழகின்மேனிற்றலால் அழகின்முதலாமொன்றும், "காதலாமார்பன்றிக் காயக்குமருந்துமையாய்" எனவருதல்காணக. (௧௨)

வழுவுமுடைகரத்திடுக்கிக்கொணர்ந்தபலியிடமாட்டார்
தொழுதகையார்பனந்தாளினணிந்தருளத்தொடையேந்தி
யெழுமவளின்மறுகுவாரெம்பிரான்கடைக்கணிப்ப
முழுதருள்பெற்றுய்ந்தேமென்றகமலரமுகமலர்வார்.

(இ - ள்.) வழுவும் உடைகரத்து இடுக்கிகொணர்ந்தபலி இடமாட்டார் - இடையினின்றும்வழுவிய ஆடையைமுழங்கையாலிடுக்கிக்கொண்டுவந்து பலியையிடமாட்டாத முனிவர்பன்னியர், தொழுதகையார் பனந்தாளின் அணிந்தருள -யாவராலுந்தொழப்பட்ட இறைவர் திருப்பனந்தாளின்கீழ்அணிந்தருள, தொடைவந்தி எழும்அவளின்மறுகுவார் - மாலையேந்தி யெழுந்தாடகைபோலச் சுழன்று, எம்பிரான் கடைக்கணிப்ப முழுதுஅருள்பெற்று உய்ந்தேம் என்று அகம்மலர முகம்மலர்வார்-எமதுபெருமான்கடைக்கணித்தருளமுற்றும்அவரது திருவருளைப்பெற்று மனமலர முகமலர்ந்தவராயினர்.

திருப்பனந்தாளில் தாடகையென்னும்ஓர் அரக்கிபெருமானுரை வழிபட்டுப் பூசித்துவருங்கால், ஓர்நாள் திருப்பள்ளித்தாமஞ்சாத்தக் கைகளைத்தூக்கியகாலையில் இடையில்கலைநழுவ, எவ்வகையாலிடுக்கமுயலினும்அக்கலைசோர்தலை நோக்கிக்கவலையுறும்போது அப்பெருமானுர் தாழ்ந்துபூசனையேற்றனர் என்பது புராணவரலாறுதலால்தொழுதகையார்பனந்தாளினணிந்தருளத்தொடையேந்தியெழுமவளின்எனவும், அத்தாடகைக்கருளியதுபோலஇவர்களுக்கும்அருளினராதலில்நமதுகருத்துமுற்றியதென்று, உவகைகூர்ந்தனராதலால் மறுகுவாரெம்பிரான்கடைக்கணிப்ப முழுதருள் பெற்றுய்ந்தேமென்றகமலரமுகமலர்வார் எனவுங்கூறினர். (௧௩)

தக்கபலிகொளவந்தீர்தனப்பிச்சைதருகின்றேந்
கைக்கொடுபோமிதோவெனமுன்னுரநெளிப்பார்கழிகாம
மிக்கயாங்களுநீரும்வெற்றரையேமாயினமா
லிக்கிடந்ததுகினுமதோவெமதோசொற்றிடுமென்பார்.

(இ-ள்.) தக்க பலிகொள வந்தீர் தனம்பிச்சை தருகின்றேம் - தக்கபலியினையெங்கள்மாட்டுப் பெறவந்தீர் (ஆதலால்) தனப்பிச்சை தாராநின்றேம், இதோ கைக்கொடுபோம் என்ன முன் உரம் நெளிப்பார் - இதோ கைக்கொண்டுபோமென்று

அவர் மூன்னின் றுமூரிபோக்குவார், மிக்க கழிகாமம் யாங்களும் நீரும்-மிக்ககழிகாம நெறியிற் சென்ற யாங்களும் நீரும், வெறுஅரையேம் ஆயினம் - திகம்பரமாயினேம், இக்கிடந்ததுகில் நுமதோ எமதோசொற்றிடும் எனபார் - இக்குக்கிடந்தஆடை உம் முடையதோ எம்முடையதோ சொல்லும் என்று வினவுவார.

கவர்பொருள்படச் செம்மொழிச் சிலேடையாக முன்னர்க்கூறிப்பின்னர் அதன்பொருள்புலப்படுத்துவார்சைக்கொடுபோமிதோவெனமுன்னூரனெளிப்பார்என வும், யாம் புணர்ச்சிவிரும்பினமெனப் புலபபடுத்துவார் கழிகாமமிக்க யாங்களும் நீ ரும் வெற்றரையேமாயினம்எனவும், எமமைப்போல நீரும் மிக்க கழிகாமமுடையீர் ஆதலால், எம்மைப்புணரவாரீர்எனப் புலப்படுத்துவார் இக்கிடந்தகுகில் நுமதோ எ மதோ சொற்றிடுமெனவும் கூறினர். தகக டலிகொளவந்தீர் என்பது முதல் மூன் னூரனெளிப்பாரென்பது காறும் அவர்கருதலையறிந்து தமதுகருததோடுகூடிய செய் கையாகக்கூறுதலால் நுட்பவணியும், யாங்களும் நீரும் வெற்றரையேயாயினமால் து கில் நுமதோ எமதோஎன்பது காறும் அவாது சாந்தசெய்கையைத்தாமறிந்தகருத்தொ டுகூடியசெய்கையால்வெளிப்படுத்தலால் கரவவெளிப்படுப்பணியுங்கலந்துவருதலால் கலவையணி. (கச)

எமமல்குற்கும்மல்குலிணையொக்கும்போலுமது
செம்மலீருடன்சேர்த்திதெரிதுமெனவருகணைவார்
வெம்முலேவாரணமெங்களிடைக்கீறுவிளேயாமே
நும்முகிர்த்தோட்டியினடக்கினறனுண்டுநுமக்கென்பார்.

(இ-ள்) எம் அல்குற்கு உம் அல்குல் இணை ஒக்கும் போலும்-எமதல்குற்பர ப்புக்கும் உமதல்குற்பரப்புக்குந்தம்முள் இணையொத்துத்தோன்றும்போலும், செம்ம லீர்-பெருமையிற்சிறந்தவரே, அது உடன்சேர்த்தி தெரிதும் என அருகு அணைவார்- அதனை இணைபடச்சேர்த்து தெரிவோமென்று முனிவர்பன்னியர் இறைவன்அருகு செல்லுவார்கள், வெம்முலே வாரணம் எங்கள் இடைக்கு ஈறுவிளேயாமே - விருப்பந் தரும்எமதுமுலேயாகியயானைகளெங்களிடைக்கு இறுதிவிளேக்காமல், நும் உகிர்தோ ட்டியின் அடக்கின் நுமக்கு அறன் உண்டு என்பார் - நுமது நகமாகிய அங்குசத்தி னுல் அவ்வானைகளேயடக்கினுல்நுமக்குத்தருமம் தலேப்படுமென்று கூறுவார்.

புறக்கரணத்தை விரும்பினேமென்று புலப்படுத்துவார் நும்முகிர்த்தோட்டி யினடக்கின்எனவும், எமது கருத்தைமுடிப்பின்உமக்கு அறனுண்டென்று புலப்படு த்துவார்நுமக்கு அறனுண்டெனவுங் கூறினர். புறக்கரணம் ஆவது கலவியில்நகத் தால் தனத்தைக்கிள்ளுதல். இதுவும் நுட்பவணி. (கரு)

மன்றநீரிரந்தபலியாமளித்தேமற்றியாங்க
ளொன்றிரந்தளியாக்காலிகழன்றேயுமக்கென்பா
ரின்றெனினும்விடுவோமோவீர்ங்கணைவேள்பறந்தலேக்கட்
சென்றுபெரும்போர்விளேத்தும்வளேயினெனத்தெழித்தெழுவார்.

(இ-ள்.) நீர் இரந்தபலி மன்ற யாம் அளித்தேம் - நீரிரந்தபலியையாம்தே ற்றமாகத்தந்தோம், யாங்கள் ஒன்று இரந்தது அளியாக்கால் உமக்கு இகழ் அன்றே என்பார் - யாங்களிரந்ததொன்றைநீர்கொடாதொழிந்தால்உமக்கு இகழ்ச்சியல்லவா என்றுகூறுவார், இன்று எனினும் விடுவோமோ - நீ ரில்லையென்றாலும் யாங்க ளும்மை விடுவேமா, ஈர்ங்கணை வேள்பறந் தலேக்கண்சென்று பெரும்போர் விளேத்

தும்-மன்மதனோடுபோர்க்களத்திற்சென்றுபெரியபோர்க்கலாஞ்செய்யவல்லேம், வளை மின் என செழித்து எழுவார் - நீர் எங்களுக்குத் தஞ்சமாக நின்று முற்றுகைசெய்யுமென்றுஅதட்டி எழுவார்கள்.

நீர் இரந்ததையாம்கொடுத்தோம், நாங்களிரந்தொன்றைக்கொடுப்பதனைம் மாறன்றோ? அது கொடாதொழியில் நுமக்குப்பழியன்றோ? எனக்கூறி யதின்பொருளை, ஈங்கணைவேள்புறந் தலைக்கட்சென்று பெரும்போர் விளைத்தும்வளைமினென்று செழித்தெழுவார் என்பதனால் விளக்கினமையால் நுட்பவணி. மன்மதனாடுபோரொன்றது புணர்ச்சியை. (௧௬)

> யாங்கொணர்ந்தபலியோடுமெம்முடையவளையாழி
> பூங்கடிகைஉறக்கொண்டீர்புனிதரேயவையளித்தால்
> ஆங்கிரந்தமாலார்க்குவளையாழிமீட்டளித்த
> வீங்குநீர்க்கலிக்கச்சிவிநாயகரொப்பீரென்பார்.

(இ-ள்.) புனிதரே யாம்கொணர்ந்த பலியோடும் எம்முடைய வளை ஆழி பூ கடிகை உறகொண்டீர் - சீலமுடையீர் நாங்கள்கொண்டுவந்தபலியோடும் எங்களுடைய வளையலையும்ஆழியையும் பொலிவமைந்தபலிபாத்திரத்தில்பொருந்தக் கவர்ந்தீர், அவை அளித்தால - அவற்றைத் தந்தால், ஆங்கு இரந்த மாலார்க்கு வளை ஆழி மீட்டு அளித்த - அவ்விடத்துக் குறையிரந்த திருமாலுக்குவளையையும்ஆழியையும் திரும்பத்தந்த, வீங்குநீர் கலிகச்சி விநாயகர் ஒப்பீர எனபார - எங்கும் பரவிய நீர்ப்பெருக்கின்ஒலிமிக்ககாஞ்சித்திருப்பதியிலெழுந்தருளியவிநாயகக்கடவுளையொப்பாவீரென்றுகூறுவார்.

முன்னர்க்கூறிய வளை ஆழி வளையலும், மோதிரமும். பின்னர்க்கூறிய வளை ஆழி, சங்குஞ், சக்கரமு மாதலால்செம்மொழிச் சிலேடையணி. ஆங்கென்றது கச்சித்திருப்பதி, சங்கு சக்கரங்கள் திருமாலுக்கருளியதை வலம்புரி விநாயகப்படலத்திலும், விடுவச்சேனீசப்படலத்திலுஙகாண்க. (௧௭)

> பாம்பலதிங்கிஃதல்குல்பகடல்லவிவைகொங்கை
> கோம்பியலதிதுநாசிகோளரியன்றிதுமருங்கு
> லேம்பலிக்குமிவைதம்மைக்கோளிழைப்பவெனவெருவிப்
> போம்பரிசுநினையாதீர்புல்லுமினென்றடிதொழுவார்.

(இ-ள்.) இங்கு இஃது பாம்பு அலது அல்குல் - இவ்விடத்து இதுபாம்பல்ல அல்குலாம், இவை பகடு அல்ல கொங்கை - இவைகள்யானைகளல்லகொங்கைகளாம், இது கோம்பி அலது நாசி-இது பச்சோந்தியல்ல நாசியாம், இது கோள் அரி அன்று மருங்குல் - இது வலிய சிங்கமன்று இடையாம், எம்பலிக்கும் இவை தம்மை கோள் இழைப்பது எனவெருவி- வருத்தும்இவைகளைநமக்குத் தீங்குசெய்வனவென்றவற்றிற்கஞ்சி, போம்பரிசு நினையாதீர் - எம்மை விட்டுப்போந் தன்மையைநினைத்தலொழிவீர், புல்லுமின் என்று அடிதொழுவார்-எம்மைத் தழுவுமென்று திருவடிகளை வணங்குவார்.

இங்கு ஒருபொருளையொழித்துமற்றொருபொருள் இங்குண்டெனலால் ஒழிப்புச்சொல் விரிந்துவந்த ஒழிப்புக் காட்டணி. (௧௮)

> இவ்வாறுதம்பிரான்திருமேனியெழினோக்கிச்
> செவ்வாய்மைக்கற்பிழந்தார்திறங்கண்டுவெகுண்டெழுந்த

வவ்வாழ்க்கைமுனிவரிடுசாபங்களடிகள்பாற்
றுவ்வாமையுறநோக்கிக்கொடுவேள்விதொடங்குதலும்.

(இ-ள்.) இ ஆறு தம்பிரான் திருமேனி எழில்நோக்கி-இவ்வகையாக இறைவரது திருமேனியின்பொலிவைப்பார்த்து, செவ்வாய்மைகற்புஇழந்தாதிறங்கண்டுவெகுண்டு எழுந்த அ வாழ்க்கை முனிவர் இடு சாபங்கள் - நடுநிலைமையின் வாய்மையையுடைய கற்பின்நிலைமையை யிழந்த தங்கள்பத்தினிகளின திறத்தைக்கண்டுகோபித்தெழுந்தஅந்தவாழ்க்கையையுடையபிருகுமுதலியமுனிவர்கள் இட்ட சாபமானது, அடிகள்பால் துவ்வாமை உறநோக்கி கொடுவேள்வி தொடங்குதலும் - சிவபெருமானிடத்துப் பொருந்தாமையைப்பார்த்துக்கொடியயாகத்தைச் செய்யத்தொடங்குதலும்.

நடுவுநிலைமையின் வாய்மையாவது கற்பில் பிறழாது நிற்றலே. இயல்பாகவே வினையினின்றுநீங்கி விளங்கும்இறைவனுக்குஅவனால்வினையினின்றுநீங்கிவிளக்கப்படும் அறிவினையுடையவுயிர்களிடுஞ்சாபம் எறாதென்பார் அடிகள்பாற்றுவ்வாமையுறநோக்கினவும், சாபத்தால்அழியாமைநோக்கி உயிர்வாங்கஆபிசாரவேள்விசெய்தனரென்பார் கொடுவேள்வி தொடங்குதலுமெனவுங்கூறினார். (கக)

எழுந்தமுயலகன்புலிபாம்புழைபூதமெரிமழுவுந்
தொழுந்தகையார்கைக்கொண்டுதொடங்குதிருநடங்காணூஉ
விழுந்தயர்ந்துசோர்ந்துள்ளம்வெரீஇனார்தமக்குமதிக்
கொழுந்தணிவாரறிவளிப்பக்குறைதீரத்தொழுதெழுந்தார்.

(இ-ள்.) எழுந்த முயலகன் புலி பாம்பு உழை பூதம் எரிமழுவும்-அவ்வேள்வியினின்றுமெழுந்த முயலகனும்புலியும்பாம்பும்மானும் பூதமும்வேள்வியினழலும்பரசுமாகிய இவைகளையேவ, தொழும் தகையார் கைக்கொண்டு-யாவரும்வணங்குந் தன்மையையுடைய இறைவர் அவற்றைக் கைக்கொண்டு, தொடங்கு திருநடங்காணூஉ-தொடங்கியதிருநடனத்தைத்தரிசித்து, விழுந்து அயர்ந்து சோர்ந்துஉள்ளம் வெருவினார்தமக்கு - தண்டாகாரமாய் வீழ்ந்து மெய்மறந்துமனம்சோர்ந்துஅஞ்சினவர்க்கு, மதிகொழுந்து அணிவார் அறிவு அளிப்பகுறை தீரதொழுது எழுந்தார் - இளஞ்சந்திரனையணிந்த இறைவர்உணர்ச்சிதந்தருளத் தாம்செய்த அபராதந்தீர வணங்கியெழுந்தனர்.

முயலகன்மேல் திருவடியூன்றியும், புலியினதளை உரித்துடுத்தும், பாம்பையணி கலனாகப்பூண்டும், மானையும் வேள்வித்தீயையும் பரசையும் திருக்கரங்களிலேந்தியும், பூதங்களைப்படைகளாகவும் கொண்டமையால் கைக்கொண்டெனவும், அதன்மேல் முனிவர்செய்யும்செயல்வேறின்மையால்திருநடங்காணூஉ எனவும், கௌதமமுனிவனுக்குச்செய்தஅபராதத்தால் இடருழந்தமுனிவர்களுக்கு அருள்கூர்ந்தனராதலால்மதிக்கொழுந்தணிவாரறி வளிப்பக்குறை தீரத்தொழுதெழுந்தார் எனவுங்கூறினார். கவுதமமுனிவருக்குச்செய்த அபராதமாவது,—

அந்தகாசுரன்கொடுங்கோல்நடாத்துங்குறைபாட்டால்பன்னிரண்டு வருடம் மழைவறங்கூறத் தேவதாருவனத்திலுள்ளபிருகுமுதலிய முனிவர்கள் தமதுஅழிபசிநீங்கக்கவுதமர் மனையில்வந்துஅப்பசிநீங்கிவசிக்குங்கால், பன்னிரண்டுவருடந்தீர்ந்து வற்கடம் நீங்க அம்முனிவர்தத்தம்ஆச்சிரமங்களில்செல்லநினைவுகூர்ந்துதமதுமாயையால்நரம்பெழுந்துஉடல்மெலிந்தஓர்பசுவினையமைத்துவிட, அதனை அக்கவுதம

முனிவர்நோக்கிஇப்பசுவைக்காப்போமென்றுஅதனுடலைத் தைவர அப்பசு கீழேவிழு ந்து இறந்தது. அதனைநோக்கியபிருகுவாதிமுதலியமுனிவர்களெல்லோரும் பசுவைக்கொன்றோன் வீட்டில் நாம் இரோம்என்றுசொல்லித்தேவதாருவனத்திலுள்ள தத்தம்ஆச்சிரமத்தைச்சார்ந்தனர்கள், அதனை அக்கவுதமமுனிவர்ஞானதிருஷ்டியாற் பார்த்துநம்மினின்றுநீங்குதற்கு இம்முனிவர்கள்செய்த சூழ்ச்சியென்றறிந்து இவர்கள் வேதநூல்ஒழுக்கினைக்கைவிடடுச் சிவபெருமானிடத்துக்கொண்டபத்திமைகுன்றி நரகில்வீழக்கடவரெனச்சபித்தனர், அவர்களும் அவ்வாறாயினர் என்பது புராணவரலாறு.

"கோதமன்ஞானக்கண்ணாற்குறித்தினிதுணர்ந்துநோக்கி
மாதவரிழைத்ததீதென்றறிந்துநான்மறைவல்லோர்கள்
வேதநூலொழுக்கமாறிவிடையவனன்பிற்றீர்ந்து
தீதுறுநரகின்வீழ்கவென்றுவெஞ்சினத்தினவைதான்.
வைதவெஞ்சாபந்தன்னால்மறைபயில்முனிவர்யாரும்
ஐதுணர்விழந்துவேதமுதலியவனைத்துநீக்கிச்
செய்தவவொழுக்கமாறிததீவினைச்சிமிழ்ப்புண்டியாரு
மெய்துதற்கரிதாம்வெய்யவிடர்க்கடலதனில்வீழ்ந்தார்"

எனக் கூர்மபுராணத்தில் வருதல் காண்க (உ0)

சென்னிமிசைக்கரங்கூப்பித்தெய்வசிகாமணிபோற்றி
யின்னருளாலெமைப்புரக்கவெழுந்தருளுஞ்செயல்போற்றி
பொன்னிதழித்தொடையாயெம்பிழையனைத்தும் பொறுத்தருளிப்
பன்னரியமுத்திநிலைபரபோகமருளென்றார்.

(இ-ள்.) சென்னிமிசை கரம் கூப்பி தெய்வசிகாமணி போற்றி - தமதுசிரங்களின்மேல கைகளைக்குவித்துத் தேவர்சிகாமணியேவந்தனம், இன் அருளால் எமை புரக்க எழுந்தருளும் செயல்போற்றி - இனியதிருவருளால்எங்களைப்பாதுகாக்க வெழுந்தருளியசெயலுக்குவந்தனம், பொன் இதழி தொடையாய் எம்பிழை அனைத்தும் பொறுத்தருளி - பொன்போலமலர்ந்த கொன்றைமலராற்றொடுத்த மாலையையணிந்தவனே யாங்கள்செய்த குற்றமுழுற்றும் திருவுளஞ்செய்துபொறுத்து, பன் அரிய முத்திநிலை பரபோகம் அருள் என்றார் - சொல்லுதற்கரிதாகிய மோட்சநிலையாகிய சிவபோகத்தை எங்களுக்கருளாயென்று குறையிரந்தார்கள்.

தேவரீரையோர்பொருளாகக்கருதாதுயாங்களவமதித்த தீங்கினைச்சற்றுந்திருவுளத்திற் கொள்ளாது எங்களைப்பாதுகாக்கவந்தசெயலால் பேரருளுடையாயென்பார் இன்னருளாலெமைப்புரக்கவெழுந்தருளுஞ்செயல்பொற்றிஎனவும், பிரணவப்பொருளாய்த்தான்நிற்றலையாவருமுணர்ந்துய்தற்கோ ரறிகுறியாய்க் கொன்றைமாலையையணிந்தாயென்பார் பொன்னிதழித்தொடையாயெனவும், மக்கள்செய் பிழையைத்தந்தை பொறுத்தருளுதல்போலப்பொறுத்தருளினையென்பார்.- எம்பிழையனைத்தும் பொறுத்தருளிஎனவும், சிவத்தோடிரண்டறக்கலந்தே யின்புறுதல் முத்திநிலைஎன்பார் பன்னரிய முத்திநிலைப் பரபோகம் எனவுங்கூறினர். (உக)

அவ்வண்ணந்தொழுதிரந்தவருண்முனிவர்க்கருள்கூர்ந்து
செவ்வண்ணத்திருமேனிச்சிவபிரானிதுகூறு
மிவ்வண்ணம்வேண்டுதிரேலெழிற்காஞ்சிநகர்வயிற்போய்
மெய்வண்ணநாற்குலத்துந்தோன்றியவண்மேவுதிரால்.

(இ-ள்.) அவ்வண்ணம் தொழுது இரந்த அருள் முனிவர்க்கு - அவ்வகையாக வணங்கிக்குறையிரந்த தனது அருள்வழிநின்ற முனிவர்களுக்கு, செவ்வண்ணத்திரு மேனிசிவபிரான் அருள்கூர்ந்துஇதுகூறும் - செந்நிறம்வாய்ந்த திருமேனியையுடைய சிவபெருமான் திருவருள்கூர்ந்து இதனைக்கூறுவான், இவ்வண்ணம் வேண்டுதிரேல் - இவ்வகையைவிரும்புவீராகில், எழில்காஞ்சிநகர்வயின்போய் - அழகிய காஞ்சியென்னும்திருப்பதியிற்சென்று, மெய்வண்ணம் நால்குலத்தும் தோன்றி அவண் மேவுதிர் - மெய்ந்நெறியையுடைய அந்தணர் முதலிய நான்குவகைவருணத்திலும்பிறந்து அவ்விடத்தில் வசிப்பீர்.

அனுலோமர்முதலியோர் மரபின்றோற்றத்துக்குக் காரணராயிருத்தலால்மெய்வண்ணநாற்குலத்தும் என்றார். (௨௨)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

பற்றறத்துறந்தோர்பற்றுட்பட்டவரோனும்ஞானம்
பெற்றவர்மடவரோனும்பெரும்பன்றிகழுதைஞாளி
புற்றராப்புல்லுப்பூடுபுழுமரமேனுங்காஞ்சி
நற்றலத்திறுதிகூடினம்மடிகலப்பதுண்மை.

(இ-ள்.) பற்று அற துறந்தோரேனும் - இருவகைப் பற்றும் துறந்தவராயினும், பற்று உட்பட்டவரோனும்-இருவகைப் பற்றுக் கோட்பட்டவராயினும், ஞானம் பெற்றவரோனும் மடவரோனும் - அறிவுடையவராயினும்அறிவில்லாராயினும், பெரும் பன்றிகழுதை ஞாளி புற்று அரா புல்லு பூடு புழு மரமேனும்-பெரிய பன்றியாயினும் கழுதையாயினும் நாயாயினும் புற்றில்வசிக்கும்பாம்பாயினும் புலலாயினும்பூடாயினும் புழுவாயினும் மரமாயினும், காஞ்சிநல் தலத்து இறுதி கூடின் நம்அடி கலப்பது உண்மை -காஞ்சியென்னுந் திருத்தலத்தில் உயிர் விட்டால் நமது திருவடியிற்கலத்தல்சத்தியமாம். (௨௩)

ஆதலினங்கணில்லாற்றொழுகிவீடடைமினென்னக்
காதலின்வணங்கிப்போற்றிக்கடும்பொடும்பிருகுவாதி
யேதமினாற்பத்தெண்ணாயிரவருங்காஞ்சிநண்ணிக்
கோதறுமரபினான்றநாலவகைக்குலத்துந்தோன்றி.

(இ-ள்.) ஆதலின் அங் கண் இல்லாறு ஒழுகி வீடு அடைமின என்ன - ஆதலால் அத்திருப்பதியில்இல்லறவழியில்நின்றுஇறுதியில்முத்தியையடையுங்களென்றருள, பிருகு ஆதி ஏதம் இல் நாற்பத் தெண்ணாயிரவரும் காதலின் வணங்கிபோற்றி கடும்பு ஒடும் - பிருகுமுதலாகியகுற்றமில்லாதநாற்பத்தெண்ணாயிர முனிவரும் விருப்பத்தோடுவணங்கித்துதித்துத் தமது சுற்றத்தோடும், காஞ்சி நண்ணி கோது அறு மரபின் ஆன்ற நால்வகை குலத்தும் தோன்றி - காஞ்சித்திருப்பதியை யடைந்துகுற்றமற்ற மரபாயமைந்த நால்வகைக்குலத்திலும் பிறந்து.

கடும்பென்றது மனைவிமக்கள் முதலாயினோை. துறவறநிலையினும் இல்லறநிலைசிறந்ததாதலால்இல்லாற்றொழுகி வீடடைமினென்றார். துறவறத்தினும் இல்லறம் சிறந்தது என்பதை—"அறத்தாற்றினில்வாழ்க்கையாற்றிற்புறத்தாற்றிற் - போஒய்ப் பெறுவதெவன்" எனத்திருக்குறளில் வருதல் காண்க. (௨௪)

மெல்லிதழ்நறுமென்போதால்விதியுளிவெவ்வேறன்பி
னல்லுறழ்மிடற்றுப்புத்தேளருட்குறியருச்சித்தேத்தி

நல்லனவரங்கள்பெற்றுநாயகனருளாலங்க
ணில்லறநெறியின்மன்னிவாழ்ந்தனரினையநீரால்.

(இ - ள்.) மெல் இதழ் நறுமென் போதால் - மெல்லியஇதழ்வாய்ந்த நறுமணங்கமழும் மெல்லிய மலரால், விதியுளி-ஆகமவிதியால், வெவ்வேறு அன்பின்அல்உறழ் மிடறு புத்தேள் அருட்குறி அருச்சித்து எத்தி - தனித்தனியாக அன்போடு இருளையொத்த ஸ்ரீ கண்டத்தையுடைய சிவலிங்கப் பெருமானைத் தாபித்து அருச்சனை செய்துவணங்கி, நல்லன வரங்கள்பெற்று - நல்ல வரங்களைப்பெற்று, நாயகன் அருளால் அங்கண் இல்லறநெறியின் மன்னி வாழ்ந்தனர் - சிவபெருமான் திருவருளால் அவ்விடத்தில் இல்லறநெறியினிலைபெற்று வாழ்ந்தார்கள், இனையநீரால்-இந்தன்மையால். (உரு)

எல்லைதீர்காஞ்சியுள்ளார்யாவருமுனிவரங்கட்
கல்லெலாமிலிங்கஞ்சீதப்புனலெலாங்கங்கைசொல்லும்
சொல்லெலாமனுக்கள்கைகாற்றொழிலெலாம்விடையோனேவல்
செல்லலாந்தகைத்தன்றம்மதென்றிசைக்கிழவற்கவ்வூர்.

(இ-ள்.) எல்லைதீர் காஞ்சி உள்ளார் யாவரும் முனிவர் - அளவிறந்த மான்மியத்தையுடைய திருக்காஞ்சியில்வசிக்கிறவர்களெல்லோரும்முனிவர்களே, அங்கண் கல் எல்லாம் இலிங்கம் - அவ்விடத்திலுள்ளகற்களெலலாம்சிவலிங்கங்களாம் சீதம் புனல் எல்லாம் கங்கை - குளிர்ந்த நீரெல்லாம் கங்கையாம், சொல்லும் சொல் எல்லாம் மனுக்கள் - அங்குள்ளோர்சொல்லுஞ்சொற்களெல்லாந்திருமந்திரங்களாம், கைகால் தொழில் எல்லாம் விடையோன் ஏவல் - கையாலும் காலாலும்செய்யும் தொழில்களெல்லாம் இடபவூர்தியையுடையோன் திருப்பணிகளாம், (ஆதலால்) அவ்வூர்- அக்காஞ்சித் திருநகரானது, தென்றிசைக் கிழவற்குசெல்லல்ஆம் தகைத்து அன்று- தென்றிசைக்குரிய இயமன் தன்தொழிலைநடத்தற்குச்செல்லுந்தன்மையை யுடையதல்ல.

பிருகுவாதி நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும் காஞ்சித்திருநகரிற் பிறந்தலால் எல்லைதீர் காஞ்சியுள்ளார்யாவரும்முனிவர்எனவும், அவர்கள் ஒருசேரச் சிவலிங்கந்தாபித்துப்பூசித்தலால் அங்கட் கல்லெல்லா மிலிங்கமெனவும், அவர்கள் அங்குச் சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாட்டக் கண்ட நீரெல்லாம் கங்கையாதலால் சீதப் புனலெலாங் கங்கையெனவும், அவர்க ளுச்சரிப்பது ஸ்ரீ பஞ்சாக்கர முதலிய திருமந்திரங்க ளாதலால் சொல்லுஞ் சொல்லெலா மனுக்களெனவும், தனது திருக்கரங்களா லருச்சித்தலும் காலால் திருக்கோயிலை வலம்வருதலு முடைமையால் கைகாற் றொழிலெலாம் விடையோனேவல்எனவும், இவர்களிருக்குந்திசையையும் இயமன் மறந்தாயினும் திரும்பிப்பாரானுகையால் செல்லலாந்தகைத்தன்று எனவும்கூறினார். அம்ம உரையசை யிடைச்சொல்.

சிவனடியாரிருக்குந் திசையை இயமன் திரும்பிப் பாரானென்பதை.

"நண்ணருங்கதிபெறுநமதுதொண்டரா
மண்ணுலகத்தவர்மனிதரோயென
வெண்ணலையவர்தமையாமென்றெண்ணுதி
கண்ணுறினன்னவர்கழலின்வீழ்தியால்."

எனக்கந்தபுராணத்தில் வருதல்காண்க. (உசா)

அருந்தவக்கிழவர்தங்கள்செயலதுவாகவிப்பாற்
பெருந்தகைகயிலைநண்ணிப்பிராட்டியோடமர்ந்தானங்கட்
டிருந்திழைமகளிர்கோலங்கொண்டுறைதிருமாலாதி
யிருந்திறற்சுரரும்போற்றிமருங்குறவிருக்குமெல்லை.

(இ-ள்.) அருந்தவம் கிழவர்தங்கள் செயல்அதுவாக - அரியதவத்துக்குரிய முனிவரது செயலற்றாக, இப்பால் பெருந்தகை கயிலை நண்ணி பிராட்டியோடு அமர்ந்தான்-இப்பாற் பெருந்தன்மையயுடைய சிவபெருமான் திருக்கயிலையையடைந்து உமையம்மையோ டெழுந்தருளி யிருந்தனன், அங்கண் திருந்திழை மகளிர் கோலங் கொண்டு உறை திருமால் ஆதி இருந்திறல் சுரரும்போற்றி மருங்கு உறஇருக்கும் எல்லை - அவ்விடத்தில் திருந்திய ஆபரணங்களை யணிந்த பெண்கள் கோலங் கொண்டு வசிக்கும் திருமால் முதலிய பெரியவன்மைவாய்ந்ததேவர்களும் வாழ்த்திப்புடைசூழ்ந் திருக்குஞ்சமையத்தில். (உ௭)

தனைப்புறங்கண்டமின்னார்தமைப்பற்றிவருதுமென்னு
மனத்தருக்குய்ப்பமீட்டுமந்தகன்வருதல்காணூஉப்
புனத்துழாய்ப்புத்தேண்முன்னர்ப்போற்றிவிண்ணப்பஞ்செய்ய
வினைத்தொடக்கறுக்குமெங்கோன்வயிரவன்றனைவிடுத்தான்.

(இ-ள்.) தனைப் புறம்கண்ட மின்னார் தம்மைப்பற்றி வருதும் என்னும் மனத் தருக்கு உய்ப்ப - தன்னை முன்புபுறங்கண்ட பெண்களைப்பற்றிவருவோமென்னுமனச்செருக்குப் பிடர்பிடித்து முந்திச்செலுத்த, மீட்டும் அந்தகன் வருதல்காணூஉ புனத்துழாய் புத்தேள் முன்னர் போற்றி விணணப்பம்செய்ய-மீளவும்அந்தகாசுரன்வருதலைக்கண்டு முல்லைநிலத்திலுள்ளதுழாய்மாலையையணிந்த திருமால் சிவபெருமான் திருமுன்வணங்கி அவன்வருகையைவிண்ணப்பஞ் செய்துகொள்ள, வினை தொடக்கு அறுக்கும் எங்கோன் வயிரவன் தன்னை விடுத்தான் - தன்னை யடைந்தோர்க்குக் கன்மமலச்சிமிழ்ப்பினைவேரோடறுக்கும்எமதுபெருமான்வயிரவக்கடவுளையேவினான்.

திருமால் தனது மாயையாற்புணர்த்தநூறுசத்திகளாலோடிய அந்தகாசுரன் பெண்களுக்குப் புறங்கொடுத்தோமே யென்னு மானமிக்கூர்தலால் அவர்களைப் பற்றிக் கொடுவருவோமென்றுமீட்டும்போர்க்கெழுந்தா னென்பார் தனைப் புறங்கண்ட மின்னார் தமைப்பற்றிவருதுமென்னுமனத்தருக்குய்ப்பமீட்டுமந்தகன் வருதல் காணூஉ எனவும், அவ்வருகையைக்கண்டு திருமால்விண்ணப்பஞ்செய்ய அத்திருமால் முதலியோரோடு வைரவக்கடவுளை ஏவினானென்பார் போற்றி விண்ணப்பஞ்செய்ய எங்கோன்வயிரவன்றன்னைவிடுத்தான் எனவும், கன்மமலம் பிறவிக்குவித்தாதலால் பிறப்பொழிக்கத் தன்னைவந்தடைந்த அடியவர்க்குஅப்பிறவிக் கேதுவை யொழிப்பானென்பார். வினைத்தொடக் கறுக்கு மெங்கோன் எனவுங்கூறினார்.

திருமால் முதலியோரோடு வயிரவக்கடவுளை யேவினானென்பதை.—
"ஆலவிடநிகர்வெஞ்சினத்திறலந்தகாசுரனடுசமங்
கோலிவருவதையொற்றர்கூறவெகுண்டுகுன்றவிலந்தணன்
காலவயிரவனந்தியாதிகணங்கள்சூழ்வரவண்டுழாய்
மாலினோடுமிகலவுணர்வெருவாமலைதியென்றுவழங்கினான்"-
எனக் கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (உ௮)

வயிரவன்படையோன்மூன்னும்வானவர்க்கிடுக்கண்செய்வான்
வயிரவன்றுடியன்சேனைவலத்தவனாகிப்போந்த
வயிரவன்மனத்தான்றன்னைப்பொருதுவண்சூலத்தேந்தி
வயிரவன்களிப்புமிக்குவாகையினடனஞ்செய்தான்.

(இ-ள்.) வயிரம் வன்படையோன் முன் ஆம் வானவர்க்கு இடுக்கண்செய்வான் - வலியவச்சிராயுதத்தையேந்திய இந்திரன்முதலிய தேவர்களுக்குத் துன்பஞ்செய்ய, வயிரம் வன்துடியன்சேனை வலத்தவன் ஆகிப்போந்த - சேகமைந்தவலியஉடுக்கைவாச்சியமுடையவனும்சேனையைவலப்பக்கத்திலுடையவனுமாய்ப்போர்க்குவந்த, வயிரம் வல் மனத்தான் தன்னை பொருது-வயிரம்பற்றிய மனத்தையுடைய அந்தகா சுரனைப்போர்செய்து, வண்சூலத்து ஏந்தி - கூரிய சூலத்தால் கோத்தேந்தி, வயிரவன் களிப்பு மிக்கு வாகையின் நடனஞ்செய்தான்-வயிரவக் கடவுள் களிப்புமீக்கூர்ந்துவெற்றியால்நடனஞ்செய்தருளினன்.

தேவர்களோடு வழிவழிப் பகைமையை யுடையோனாதலால் வயிர வன் மனத்தான் என்றார். (உகூ)

அந்தகற்கருளாலுண்மையறிவுவந்துதிப்பவன்னோன்
கொந்துமுத்தலைச்சூலத்திற்கோப்புண்டுகிடந்தவாறே
கந்தமென்மலர்த்தாள்போற்றித்துதித்தலுங்காரிப்புத்தேள்
மைந்தயாமகிழ்ந்தாம்வேட்டவரமினிப்புகறியென்ன.

(இ-ள்.) அந்தகற்கு அருளால் உண்மை அறிவுவந்து உதிப்ப - அந்தகாசுரனுக்குச்சிவபெருமானருளால்மெய்ஞ்ஞானம்வந்து முளைக்க, அன்னோன் கொந்துமுத்தலை சூலத்தில் கோப்புண்டு கிடந்த ஆறே - தன்னைக்கோத்தமூன்று கவராயுள்ள சூலத்திற் கோப்புண்டபடியே, கந்தம்மென் மலர்த்தாள் போற்றி துதித்தலும்-வாசம் வாய்ந்த மெல்லியதாமரைபோன்றதிருவடிகளைப் போற்றித்துதிக்க, காரிப்புத்தேள் மைந்த யாம்மகிழ்ந்தாம் வேட்டவரம் இனி கழறி என்ன-வைரவக்கடவுள்மைந்தனே யாம் மகிழ்கூர்ந்தனம் நீவிரும்பியவரம்யாது இனிக்கூறுவாயென்றுவினவியருள.

திருவருளால் மெய்ஞ்ஞானம்வந்து முளைக்க வயிரவக்கடவுளைச் சிவபெருமானாகத் துதித்தானென்பார் - கந்தமென் மலர்த்தாள்போற்றித் துதித்தலும் என்றார்.

சிவபெருமானாகக்கருதித்துதித்தலை,

பொருப்புறழ்சூலவேலின்வைநுதிபுதையக்குத்தி
யருக்கன்மண்டிலமட்டேந்தியந்தகாசுரன்றன்மேனி
கருக்கலும்பாவநீங்கிக்கண்ணுதற்கடவுடன்னை

எனக் கூர்மபுராணத்தில் வருதல்காண்க.

தானவன்முத்தியொன்றேதந்தருளென்றானற்றேல்
கோனருள்பெற்றுக்காஞ்சிகுறுகுவாமென்றுநண்ணி
யானுடையூர்தியண்ணலருளினாற்றனதுகாப்பா
மாநகரெய்திச்சூலவைத்தலைக்கிடந்தான்றன்னை.

(இ-ள்.) தானவன் முத்தி ஒன்றே தந்தருள் என்றான் - அந்தகாசான்முத்தியொன்றையே தந்தருளாயென்று குறையிரந்தான், அற்றேல் - அத்தன்மைத்தாகில், கோன் அருள்பெற்று காஞ்சி குறுகுவாம் என்று நண்ணி - சிவபெருமான்திருவரு

ளைப்பெறக்காஞ்சியையடைவோமென்றுஅடைந்து, ஆன்உடைஊர்தி அண்ணல் அருளினால்-இடபவூர்தியையுடைய சிவபெருமான் திருவருளால், தனது காப்பாம் மாநகர் எய்தி சூலம்வைதலை கிடந்தான் தன்னை-தனது காவலாகிய காஞ்சித்திருநகரத்தையடைந்துசூலத்தினுனியில்கோப்புண்டுகிடந்தஅந்தகாசுரனை.

பெற்று-செயவெனெச்சத்திரிபு. (௩௧)

தெறும்புரமெரித்தார்கம்பந்திகழ்சிவகங்கைத்தீர்த்த
நறும்புனன்மூழ்குவித்துத்திருவருணல்கிப்பாசக்
குறும்பறுத்தளித்தான்றண்டக்குரிசிலந்தகனுந்தன்பே
ருறும்பழவிலிங்கத்துள்ளாற்கரந்தனனொருமைபெற்றான்.

(இ-ள்.) தெறும்புரம் எரித்தார் கம்பம் திகழ் சிவகங்கை தீர்த்தம் நறும்புனல் மூழ்குவித்து - தேவர்களைவருத்தும்திரிபுரங்களைநகைத்தெரித்தபெருமானது கம்பதீர்த்தமும் விளங்குஞ் சிவகங்கைதீர்த்தமுமாகிய நறுமணங்கமழும்நீரில் மூழ்கச்செய்து, திருவருள்நல்கி பாசம் குறும்பு அறுத்து தண்டக்குரிசில் அளித்தான்-திருவருட்பதிவுசெய்து பாசமாகிய குறும்பினைக்களைவேரோடறுத்து நந்திகணங்களுக்குக்கணாதிபத்தியமும் தந்தருளினான், அந்தகனும் தன்பேர் உறும்பழவிலிங்கத்துஉள் கரந்தனன் ஒருமைபெற்றான் -அந்தகாசுரனும் தனது பேராலமைந்த தொன்றுதொட்டுள்ள சிவலிங்கத்துள்ளேமறைந்து கலந்தான்.

வடமொழியில் கணாதிபத்தியம் முன்புதந்தானென்றிருத்தலுமன்றிக் கூர்மபுராணத்திலும்,

"எனுமறைத்துதிகள்கேளாவெம்பிரான்மகிழ்ச்சிகூர்ந்து
மூனைபடுசூலவைவேல்முகட்டினின்றிறக்கியேத்து
மனையவன்மேனிதவந்தருட்கடைக்கண்ணினோக்கித்
தனதுபேருருவம்யார்க்குந்தலைமையும்வழங்கினானே.

அந்தகாசுரன்வெற்பீன்றவுமையொடுமரனைப்போற்றி
யெந்தையான்செய்ததீங்கையாவையும்பொறுத்தியென்ன
மைந்துடைவடிவேற்காலவயிரவனளித்தவண்ணா
நந்தியின்கணங்கட்கெல்லாம்நாதனாயிருத்தியென்றான்."

எனவும் வருதலால் தண்டக்குரிசில் என்றதற்குக் கணாதிபத்தியம் என்றாம். (௩௨)

அந்தகேசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௬௫௦.

# வாணீசப்படலம்.

கலிவிருத்தம்.

அறம்பயில்காஞ்சியினந்தகீச்சரத்
திறஞ்சிறிதறிந்தவாசெப்பினுமினிப்
பிறங்குசீரத்தளிக்குணதுபேதுறூப்
பறம்புவில்லுழவர்வாணீசம்பன்னுவாம்.

(இ-ள்.) அறம்பயில் காஞ்சியின் அந்தகீச்சரத்திறம் சிறிது அறிந்த ஆறு செப்பினும் - முப்பத்திரண்டறங்களும் இடைவிடாது நிலைபெறும் காஞ்சியென்னும்

திருப்பதியிலுள்ள அந்தகீச்சரத்தின் வரலாற்றைச்சிறிது தெரிந்தவண்ணங்கூறினும், இனி பிறங்குசீர் அத்தளிகுணதூ - இனிவிளங்கும் புகழ்வாய்ந்தவத்திருப்பதியின் கீழ்பக்கலில், பேது உறாத பறம்புவில்உழவர் வாணீசம் பன்னுவாம் - நிலைகலங்காத மேருமலையாகிய வில்லென்னும்ஏரால்பகைநிலத்தையுழுமிறைவர் திருத்தளியாகிய வாணீசத்தையினிக்கூறுவாம்.

அம்மை முப்பத்திரண்டறங்களையும் வளர்த்தமையால் அறம்பயிலெனவும், உலகுநிலைகலங்காதுநிற்றலால்பேதுறாப்பறம்பு வில்லெனவும் கூறினர். வில்லேருழவர்என்றதுவில்லுழவர்என்றது சிறப்புவமையணியில்வந்தஏகதேசவுருவகவணி.()

எறுழுடைவாணனென்றியம்புதானவன்
றெறுவினைக்காஞ்சியினருட்சிவக்குறி
நிறுவினனருச்சனைநிரப்பிமாதவ
முறுவரினுஞற்றினுலப்பில்காலமே.

(இ-ள்.) எறுழ் உடையவாணன் என்று இயம்பு தானவன்-வலிமையுடைய வாணனென்று சொல்லப்படுமசுரன்-தெறுவினை காஞ்சியின் அருள்சிவகுறி நிறுவினன்-அடைந்தோர்கன்மமலத்தைப்போக்குங்காஞ்சியென்னுந்திருப்பதியில் சிவபெருமானைத்தாபித்து, அருச்சனை நிரப்பி-சிவபூசனையைச்செய்துமுடித்து, மாதவம் உறுவரின் உலப்பு இல் காலம் உஞற்றினன்-பெரியதவத்தைமுனிவர்களைப்போலஅளவில்லாத காலம் செய்தான்.

நிறுவினன் முற்றெச்சம் - பிராரத்தநுகரும்போது இடையேயேறும் ஆகாமியமென்னுங்கன்மமலத்தைச்சிவபெருமான்திருவருள்தலைப்படில் அதுஒழிக்குமாதலால் தெறுவினைக் காஞ்சியின் என்றார். "ஏன்றவினை யுடலோடேகுமிடையேறும் வினை-தோன்றி லருளேசுடும்"எனவரும் திருவருட் பயனுலுணர்க. (உ)

அன்பினுக்கெளிவருமழகனாங்கவன்
முன்புறத்திருநடமுயலக்கண்டன
னென்புநெக்குருகநின்றேத்தினனந்தி
தன்பெருங்கணத்தொடுமுழவுதாக்கினன்.

(இ-ள்.) அன்பினுக்கு எளிவரும் அழகன் - அடியார் அன்பிற்கு எளிவந்தருளும் பேரழகையுடைய சிவபெருமான், ஆங்கு அவன் முன்பு உற திரு நடனம்முயல கண்டனன்-அவ்விடத்து அவ்வாணசுரன்முன்பேபொருந்தத்திருநடனஞ் செய்தருள நோக்கி, என்புநெக்குஉருக நின்று ஏத்தினன்-எலும்புகட்டுவிட்டுருகநின்றுதுதித்து, நந்திதன் பெருங்கணத்தொடு முழவுதாக்கினன்-நந்திதேவரதுமிக்ககணத்தோடுநின்று குடமுழாதாக்கினன்.

யானெனதென்னுந்தங்கள்சுதந்தரவீனத்தை யுணர்ந்துவழிபட்டுநிற்குமடியாரன்பினுக்கு எளிதாய் வந்தருள்வோனாதலால் அன்பினுக்கெளிவருமழகன் என்றார். அடியார்க் கெளியனாதலை.

" புற்றுமாய்மரமாய்ப்புனல்காலேயுண்டியாயயண்டவாணரும்பிறரும், வற்றியாருநின்மலரடிகாணுமன்னவென்னையோர்வார்த்தையுட்படுத்திப்-பற்றினாய்" என வரும் திருவாக்காலுணர்க. (௩)

குடமுழவிருகரங்குலுங்கத்தாக்குதோ
றடர்பெருங்கருணைகூர்ந்தடிகளாயிரங்

தடநெடுங்கரம்பெறநல்கித்தானவ
விடலைநீவேட்டதுவிளம்புகென்றனும்.

(இ-ள்.) குடமுழவு இருகரம்குலுங்க தாக்குதோறு - குடமுழாவைத் தனது இரண்டுகைகளுங்குலுங்கமோதுந்தோறும், அடிகள் அடர் பெரும்கருணைகூர்ந்து - சிவபெருமான்மிக்கபெரியகருணைசெய்து, ஆயிரம் தட நெடுங்கரம்பெறநல்கி-பெரியநெடியஆயிரங்கரங்களைப்பெறத்தந்தருளி, தானவ விடலை நீவேட்டது விளம்புக என்றலும் - அசுரருட்சிறந்தோய் நீவிரும்பியதைவினவுகஎன் றருள.

பெண்களுக்குப் பேதைமுதலிய ஏழ்பருவம்போலப் புருடருக்கும் "பாலன், மீளி, மறலோன், திறலோன், காளை, விடலை, முதுமகன்" எனப்பருவம் ஏழாகலால் தானவ விடலையென்றார். (ச)

ஆயிரமுளரிநீண்டலர்ந்தநீனிற
மாயிருங்குன்றுறழ்வாணன்றாழ்ந்தெழூஉத்
தீயழற்புரிசையுந்திறலுமாக்கமும்
பாயமூவுலகமும்பரிக்குங்கொற்றமும்.

(இ-ள்.) ஆயிரம் முளரி நீண்டு அலர்ந்த நீலநிறம் மாயிரும் குன்றுஉறழ் வாணன் தாழ்ந்தெழூஉ - ஆயிரந்தாமரைகள் நீண்டுமலர்ந்தநீலநிறத்தையுடைய பெரிய மலையையொத்த வாணாசுரன் வணங்கி எழுந்து, தீ அழல் புரிசையும் திறலும் ஆக்கமும் பாய மூவுலகமும் பரிக்குங் கொற்றமும-தீமதிலையும் வலிமையையுஞ் செல்வத்தையும் பரவிய மூன்றுலகங்களையுங் காக்கும் வெற்றியையும். (ரு)

ஓவருநிலைமையுமுன்னடித்துணை
மேவருபத்தியும்வேண்டினேனொரு
மாவடிமுளைத்தெழுவள்ளலேயெனக்
காவணியுடுத்தொளிர்கம்பவாணனும்.

(இ-ள்.) ஓவருநிலைமையும் உன்அடித்துணை மேவரு பத்தியும் வேண்டினேன்-ஒருவராலும் ஒழிதலில்லாததிண்மைநிலைமையும்உனது திருவடியின்கீழ்அமைதற்கரிய பத்திமையையும் வேண்டினேன், ஒருமா அடிமுளைத்து எழுவள்ளலே என்ன- ஒப்பில்லாத மாமரத்தின்கீழ் முளைத்தெழுந்தஅருட்கொடையையுடையாய் என்று குறையிரக்க, கா அணிஉடுத்துஒளிர் கம்பவாணனும் - சோலைகள் நிரைநிரையாகப்புடைசூழ்ந்துவிளங்கும் திருவேகம்பவாணனாகிய சிவபெருமானும். (சா)

அனையவைமுழுவதுமளித்துநீங்கினன்
புனைபுகழசுரர்கோன்புவனம்யாவையுந்
தனதடிப்படுத்தினன்றருக்கிவாழுநாண்
முனைவனைத்தொழுதெழக்கயிலைமுன்னினான்.

(இ-ள்.) அனையவை முழுவதும்அளித்து நீங்கினன் - அவ்வரங்கள்முற்றுந்தந்து நீங்கியருளினன், புனைபுகழ் அசுரர்கோன் புவனம்யாவையும் தனதுஅடிப்படுத்தினன் தருக்கி வாழும்நாள்-புகழ்சூடிய வாணாசுரன் மூன்றுலகங்களையும் தனதடிக்கீழ்ப்படுத்தி இறுமாந்து வாழுங்காலத்தில், முனைவனைதொழுது எழ கயிலைமுன்னினான் - சிவபெருமானைவணங்கி யின்பங்கூரத் திருக்கயிலாயத்தை யடைந்தான்.

சிவபெருமானையடைந்த ஆக்கத்தால் பெரும்புகழ்சூடினன் என்பார் புனைபுகழசுரர்கோன் என்றார். (எ)

நம்மையாளுடையவனடனவேலையிற்
செம்மலாயிரமணிக்கடகச்செங்கையாற்
றொம்மெனக்குடமுழாவெழுப்பச்சூர்த்தகட்
கொம்மைவெள்விடையினன்கருணைகூர்ந்தரோ.

(இ-ள்) நம்மை யாளுடையவன் நடனவேலையில் - நம்மை யடிமையாகவுடைய சிவபெருமான் திருநடனஞ் செய்தருளுஞ்சமயத்தில், செம்மல்-வாணாசுரன், மணிக்கடகம் ஆயிரம் செங்கையால் - இரத்தினகடகங்களணிந்தசெவ்வந்தஆயிரங்கைகளால், தொம்மென குடமுழா எழுப்ப - தொம்மென்று குடமுழாவொலியெழுப்ப, சூர்த்தகண் கொம்மை வெள்விடையினன் கருணைகூர்ந்து - அச்சந்தருங்கண்களையும் இளமையுமவாய்ந்த இடபவூர்தியையுடையசிவபெருமான கருணைகூர்ந்து. (௮)

எவ்வரமவிழைந்தனையெனினுநல்குது
மவ்வரம்புகலெனவசுரன்கூறுவான்
செவ்வநின்றிருவடிச்சேவைநித்தலுஞ்
செய்வதுவிழைந்துளேன்கருணைசெய்துநீ.

(இ-ள்) எவ்வரம் விழைந்தனை எனினும் நல்குதும் - எம்பால் எந்தவரத்தை விரும்பினையானாலும் அதனைத்தருவோம், அவ்வரம்புகல் என்ன-அந்தவரத்தைக் கூறுயென்றருள, அசுரன் கூறுவான்-வாணாசுரன் சொல்லுவான், செவ்வநின் திருவடிசேவை நித்தலும் செய்வது விழைந்துளேன் - ஆகமமுறையே நின்திருவடித்தரிசனத்தைத்தினமுஞ்செய்தலை நானவிரும்பினேன், நீ கருணைசெய்து-நீதிருவருள் செய்து. (௯)

பீடுயர்முருகவேள்வரைப்பிராட்டியோர்
கோட்டிளங்களிற்றொருகோட்கணங்களி
னீட்டமொடெய்தியென்னிருக்கைவாய்தலின்
மாட்டிருந்தெனக்கருளென்னவணங்கினன்.

(இ-ள்.) பீடு உயர் முருகவேள்(ஒடு) வரைப்பிராட்டி (ஒடு)-பெருமையாலுயர்ந்த இளையபிள்ளையாரோடும் உமையம்மையோடும், ஓர் கோடு இளங்களிற்றொடு கோள்கணங்களின் ஈட்டமொடு எய்தி - ஒற்றைக்கொம்பினையுடையமூத்தபிள்ளையாரோடும் வலிமையமைந்த கணங்களின்கூட்டங்களோடுமெழுந்தருளி, என் இருக்கைவாய்தலின் மாடு இருந்து எனக்கு அருள் என்ன வணங்கினன்-என் கோயில்வாய்தலின்பக்கலிலிருந்து எனக்கருளாயென்று வணங்கினன். (௧௦)

கணங்களாவார் - ஏவியபணியைச் செய்வோர்.

எண்ணியவெண்ணியாங்களிக்குமெந்தையவ்
வண்ணமேயாயிடைமருவினைகினன்
கண்ணுறுமசுரனுங்காலந்தோறுமங்
கண்ணலையடிதொழுதன்பின்வைகுநாள்.

(இ-ள்,) எண்ணிய எண்ணியாங்கு அளிக்கும் எந்தை - எண்ணியவற்றையெண்ணியபடியே தந்தருளும் எமதுபெருமான், அவ்வண்ணமே ஆயிடை மருவி வைகினன் - அவன்கருதியபடியேகோயிலின்வாய்தலிற் பொருந்தியெழுந்தருளினன் கண்ணுறும் அசுரனும் காலம்தோறும் - கருதிவழிபடும் அவ்வாணாசுரனும் மூன்றுகாலங்கள்தோறும், அங்கு அண்ணலை அடிதொழுது அன்பின்வைகுநாள் - அவ்விடத்துச்சிவபெருமானைத்திருவடிவணங்கி யன்போடுவாழுங்காலத்தில் (௧௧)

வாசவனெடியவன்மற்றையாரையும்
பூசலிற்புறங்கொடுத்திரியப்போக்கினன்
காசணிமிடறுடைக்கடவுண்முன்னுறீஇ
யேசறுசெருக்கினலிதுவிளம்புவான.

(இ-ள்.) வாசவன் நெடியவன் மற்றை யாரையும் - இந்திரனையும் திருமாலையும்அவரொழிந்த பிரமன்முதலியோரையும், பூசலில் புறங்கொடுத்து இரியப்போக்கினன் - போர்க்களத்தில் புறங்கொடுத்தோடப்போக்கி, காசு அணி மிடறு உடை கடவுள்முன் உறீஇ - நீலமணிபோலுங் கருநிறம்வாய்ந்த ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமான்முன்புசென்று, ஏசு அறு செருக்கினல இது விளம்புவான் - பழிப்பற்றஇறுமாப்பாலிதனைக்கூறுவான். (௧௨)

என்னெடுபோரொதிர்ந்திரியல்போயினு
ரெல்லருமினிமற்றென்புயக்கண்டுதிநைய
யென்னுடைப்பிராணிடைத்தீர்ப்பவெய்தினே
னென்னைநின்றிருவுளமியம்புவாயென.

(இ-ள்.) என்னரும் - திருமால்முதலிய எத்தன்மையோரும், என்னெடுபோர் எதிர்ந்து இரியல்போயினர் - என்னோடுபோரில்புறங்கொடுத்தோடினார்கள், இனி என்புயம் கண்டூதியை - இனிஎன்புயத்தைத்தின்னும்தினவை, என்உடைப் பிரான்இடைத் தீர்ப்ப எய்தினேன் - என்னையாளாகவுடையபெருமானாகியஉன்பால்தீர்க்கவந்தேன், நின் திருவுளம் என்னை இயம்புவாய்என்ன-உன் திருவுளம்யாதுகூறுயென்று வாணசுரன்வினவ. (௧௩)

வெருவலனெதிர்நின்றுவிளம்பக்கேட்டலுந்
திருவடிவிரலுகிர்விழிசிரிப்பினன்
மருவலர்க்கடந்தருண்மதுகையெம்பிரான்
குருநிலாநகைமுகிழ்த்திதனைக்கூறுமால்.

(இ-ள்.) வெருவலன் எதிர்நின்று விளம்ப கேட்டலும் - சிறிதும்அஞ்சாது எதிரேநின்று கூறக்கேட்டருளி, திருவடி விரல்உகிர் விழி சிரிப்பினல் - திருவடியாலும்விரலாலும்நகத்தாலும்கண்ணாலும்புன்சிரிப்பாலும், மருவலர் கடந்தருள் மதுகை எம்பிரான் -பகைவரைக்கடந்தவலிமைவாய்ந்த எமதுபெருமான், குருநிலா நகை முகிழ்த்து இதனைக் கூறும்-வெள்ளியசந்திரகிரணத்தையொத்தபுன்னகையரும்பியிதனைக்கூறியருளுவான்.

திருவடியால்இயமனையும், விரலால்இராவணனையும், நகத்தால்பிரமனையும், கண்ணால்மன்மதனையும், புன்னகையால்திரிபுரங்களையும்வென்றருளினமையால் திருவடிவிரலுகிர் விழிசிரிப்பினல்மருவலர்க்கடந்தருள எனவும், ஏனைதேவர்கள் தமதுஉபாங்கங்களால்வெல்லுதற்கரிய இவர்களைத்தனதுசாங்கங்களால்எளிதாய்வென்றமையால் மதுகையெம்பிரானெனவும், அவ்வாணனைவெல்லுதல் தனக்கோர்அரிதன்மையால் குறுநிலாநகைமுகிழ்த்துஎனவுங்கூறினர். (௧௪)

முதுதவப்பிருகுவின்சாபமொய்ம்பின
லெதுகுலத்துதித்தெனக்கினியனாகிய
புதுமலர்த்துளவனின்புயக்கண்டூதியைக்
கதுமெனப்போக்குவான்வருவன்காணென.

(இ-ள்.) முதுதவம் பிருகுவின் சாபம் மொய்ம்பினல்-தொன்றுதொட்டுத்தவம்வாய்ந்தபிருகுமுனிவன் தந்தசாபத்தின்வலிமையால், எதுகுலத்து உதித்துளனக்கு இனியன் ஆகிய புதுமலர் துளவன் - எதுகுலத்திற்றோன்றிஎனக்குஇனியனுயுள்ள அன்றலர்ந்ததுளபமாலையணிந்ததிருமால், நின் புயம்கண் டுன்னை கதுமெனப் போக்குவான் வருவன்காண் என்று - உனதுபுயத்தைத்தின்னும்தினவையொழித்துபோக்க வருவான் நீகாணுயென்று. (கடு)

> தற்றொழுவான்றனைத்தான்செருப்பது
> நற்றிறமன்றெனநாடியிவ்வணம்
> சொற்றனன்றிருவுளஞ்சுளித்தியாவையு
> மற்றமில்வனவளதுகொண்டாட்டுவான்.

(இ-ள்.) யாவையும் அற்றம்இல் அவன்அவள் அதுகொண்டூட்டுவான்-சேதனுசேதனமென்று சொல்லப்பட்டஎல்லாப்பொருள்களையும் குற்றமில்லாதஅவன்அவள்அதுவெனச்சுட்டுணர்வாய்நிற்கும்பிரபஞ்சமாக்கொண்டுசிருட்டிமுதலியமுத்தொழில்வழிப்படுத்துமிறைவன், தன்தொழுவான் தன்னை தான்செருப்பது நல்திறம் அன்றுஎன திருவுளம் நாடிச் சுளித்து- தன்னை வணங்குவானுசுரனைத் தான்கொல்லுதல்நல்லதல்லவென்று திருவுளத்திற்கருதிக்கோபித்து, இவ்வண்ணம் சொற்றனன்- இவ்வகையாகக் கூறியருளினன்.

உலகு சேதனம்அசேதனமென்னஇருவகைப்படுதலால் அதனையாவையுமெனவும், அது அவனவளதுவென முத்திறப்பட்டுச்சுட்டுணர்வாய்நின்ற பிரபஞ்சமாய்ச் சுதந்தரமின்றிநிற்றலால், அற்றமிலவனவளதுகொண்டெனவும், அது தன்பால் சிருட்டிதிதிநாசங்களை அமைந்துகிடத்தலின் அதனை அத்தொழில் வழிப்படுத்தும் சுதந்தரமுடையோனுதலால் ஆட்டுவான்எனவுங்கூறினுர். (கசு)

> இருள்குடியிருந்தபுன்மனத்திவனீங்கிவன்
> முரணினையடக்கவேபோலுமுந்தைநாட்
> செருவகத்தெம்மினுந்திறல்கொள்வாயென
> வரமரிக்கெம்பிரான்வழங்குஞ்சூழ்ச்சியே.

(இ-ள்.) முந்தைநாள் - முந்நாளில், செருஅகத்து - போக்களத்தில், எம்மினும் திறல்கொள்வாய்என்ன-எம்மைப்பார்க்கிலும்வெற்றிகொள்வாயென்று, வரம்அரிக்கு எம்பிரான் வழங்கும் சூழ்ச்சி- ஒருவரத்தைத் திருமாலுக்குஎம்பெருமான்தந்தருளியவாலோசனை, இருள்குடி இருந்தபுல் மனத்தின் ஈங்குஇவன்முரணினைஅடக்கவே போலும் - இருள்குடியேறியபுல்லியமனத்தையுடைய இவனதுவலிமையையடக்கவேபோலும்.

திருமால்பதினுயிரந்தேவவருடம் மைநாகபர்வதத்தில் அரியதவஞ்செய்தமையால் சிவபெருமானெழுந்தருளிஉனக்கு யாதுவரம்வேண்டும்அதனைக்கேளென, தேவரீர்திருவருளைக்கொடிய அசுரர்கள்தவஞ்செய்துபெற்றுமானுடமுதலியபிறப்புகளிற்பிறந்து, தேவர்கள்முதலியோர்க்கு இடுக்கண்ணைசெய்துவருதலால், அவர்களுயிர்பருகஎமக்குவலிமைதந்தருளவேண்டுமென்றுகுறையிரப்ப, சிவபெருமான்கருணைகூர்ந்து எம்மொடுபோர்செய்யினுமிக்கவன்மையையுனக்குத்தந்தனம். என்றருளினுனெனக் கண்ணன் தருமனுக்குக் கூறியருளினனென முன்னர்க்கூறியிருக்கின்றுமங்குக்காண்க. (கஎ)

நம்பனீதுரைத்தலுநக்குநகையெறிந்
தெம்பிரான்முப்பதாமுறையினென்னொடேற்
றும்பரார்கணத்தொடுமோடியுய்ந்துளா
னம்பகமுளரியானமருக்காற்றலான்.

(இ-ள்.) நம்பன் ஈதுஉரைத்தலும் நக்குநகைஎறிந்து -இறைவன்இதனைக்கூற ச்சிரித்துக்கைகொட்டி, எம்பிரான்-எமது பெருமானே, அம்பகம் முளரியான் முப்பது முறையில் என்னொடு ஏற்று - தாமரைபோன்றகண்களையுடையஅத்திருமால் முப்பதுதரம் என்னோடுபோருக்கேற்று, உம்பரார் கணத்தொடு ஓடிஉய்ந்துளான் - தேவர் கூட்டத்தோடும்புறங்கொடுத்தோடிப்பிழைத்தான், அமருக்கு ஆற்றலான் - அவனுஎன்னொடு போர்செய்தற்கு வன்மையுடையவன். (௧௮)

அவனையோராண்டகைமீளியாகவைத்
தெவனிதுகிளந்தனையெந்தைநீயெனக்
கவர்மனக்கொடுங்கொழிற்றறுகட்காய்சினத்
தவலுடையூழினானிகழ்ந்துசாற்றலும்.

(இ-ள்.) அவனை ஓர்ஆண்டகை மீளியாகவைத்து எவன்இது எந்தைநீ கிளந்தனைஎன்ன-அத்திருமாலை ஓராண்மைத்தன்மையுடையோனாகவெண்ணி என்றந்தையேயென்னஇதனைக்கூறினாயென்று, கவர்மனக் கொடுந்தொழில் தறுகண்காய்சினம் தவல் உடைஊழினான் இகழ்ந்து சாற்றலும்-பிளவுபட்டமனத்தாலும்கொடியதொழிலாலும் அஞ்சாமையாலும் முறுகியெழுந்தகோபத்தாலும் தனதுஆக்கமழிதற்குரிய போகூழையுடைய வாணாசுரன் இகழ்ந்துகூற.

இவற்றுள் ஒன்றேஒருவனுக்குக்கேட்டிற்குக்காரணமாக இவைமுற்றுமொருசேரவுடையான் அன்றேகெடுவேன் என்பதுதோன்றற்குத் தவலுடையூழினான்எனக்கூறினார். (௧௯)

அவனமர்க்கிடைந்தவன்றனைக்கொண்டேயவன்
கவர்மதமடக்கியநினைந்தகண்ணுதற்
சிவபிரான்குறுநகைமுகிழ்த்துச்செப்புவான்
றவலருமாற்றலோய்சாற்றக்கேண்மதி.

(இ-ள்.) அவன் அமர்க்கு இடைந்தவன் தன்னைக் கொண்டே-அவனதுபோர்த்தொழிலுக்குப்புறங்கொடுத்ததிருமாலைக்கொண்டே, அவன் கவர் மதம்அடக்கிய நினைந்த கண்ணுதல் சிவபிரான்-அவனதுமாறுபட்ட கொள்கையையடக்கக்கருதிய நெற்றிக்கண்ணையுடையசிவபெருமான், குறுநகை முகிழ்த்து செப்புவான் - புன்னகையரும்பிக்கூறுவான், தவலரும் ஆற்றலோய் சாற்ற கேள்-தேவர்களாலுங்கெடுதலில்லாதவன்மையையுடையோய் நான்சொல்வதைக்கேளாய்.

மதி - முன்னிலையசை. (௨௦)

நின்னமர்க்குடைந்தபின்னினையடக்குவான்
றுன்னுசீருபமனியனுக்குத்தொண்டுபூண்
டென்னருட்குரியனாயெறும்படைத்தன
னன்னவன்முன்னவனாகவெண்ணலை.

(இ-ள்.) நின் அமர்க்கு உடைந்தபின் நின்னை அடக்குவான் - உனதுபோர்த்தொழிலுக்குத்தோற்றபின்உன்னையடக்க, துன்னுசீர் உபமனியனுக்கு தொண்டுபூ

ண்டு - நிலைபெற்றபுகழையுடைய உபமன்னியருக்கு அடிமைபூண்டு, என் அருட்கு உரியனாய் எறும்படைத்தனன்-எனது திருவருட்குரியவனுன வலிமைபெற்றனன், அன்னவன் முன்னவன் ஆக எண்ணலை-அத்திருமாலேமுன்னுள்ளதிருமாலாகக்கருது தலொழிக.

எண்ணலை-எதிர்மறைவியங்கோள் வினைமுற்று. சண்முகமூர்த்தி உபமன்னிய முனிவரால் திருவடித்தீக்கைபெற்றுச், சிவபூசைக்குரியவனுய்ப்பெரும்பேறுபெற்ற மையை.

"அடுத்தடுத்தன்பினேடும்வணங்குமாய்துளவினேனை
யெடுத்திருகையானீவிவிழைந்ததென்னியம்புகென்னுக்
கடுத்திகழ்மிடற்றேன்கூறக்கண்ணனன்வாய்புதைத்துநின்மேல்
விடற்கருமன்புமற்றோர்சிறுவனும்வேண்டுமென்றான்.

மழகதிர்ப்பரிதியேய்க்குங்கவுத்துவங்கிடந்தமார்ப
விழைவினீகேட்டவெல்லாம்விருப்பொடுமளித்தோமென்னுக்
குழவிவெண்டிங்கட்கண்ணிமிலைச்சியகூத்தன்கூறக்
கழையிசைவடித்தகண்ணன்கவுரிதாண்மலரிற்றாழ்ந்தான்.

வணங்கியகண்ணன்றன்னையெழுகெனவாழ்த்திவண்ணச்
சுணங்கணிதுணைமென்கொங்கைதொலைவிலாவரங்கணல்க
வணங்கரவசைத்தவண்ணலாய்பிழிதுளவோனேடுங்
கணங்கடாள்போற்றிச்செல்லக்கயிலைமால்வரையிற்சென்றான்."

எனக்கூர்மபுராணத்தில் வருதல்காண்க. (௨௧)

என்னநாளவன்வருமென்றியேலொரு
நின்மகட்கோர்பழிநிகழநின்னகர்
நன்னெடுங்கொடியுளொன்றொடியுநாள்வரு
மென்னலுமசுரர்கோனிருக்கையெய்தினன்

(இ-ள்) என்னநாள்அவன் வரும்என்றியேல் - எந்தநாளில்அவன்வருவானென றுவினவுவாயாகில், ஒருநின்மகட்கு ஓர்பழிநிகழ - ஒப்பில்லாதஉனதுபுத்திரிக்குஒருப ழிச்சொல்நிகழ, நின்நகர் நல்நெடுங்கொடியுள் ஒன்று ஒடியும் நாள்வரும் என்ன லும் - உனதுநகரில்கட்டியநெடியதுவசங்களிலொருதுவசம் ஒடியுங்காலத்தில்வரு வானென்றுகூற, அசுரர்கோன் இருக்கை யெய்தினன் - அசுரர்களுக்குஅரசனுகிய வாணுசுரன்தன்கோயிலுள்போயினன்.

என்ன, எ - என்னும் வினாவிடைச்சொற்றிரிபு. தன்மகட்குப்பழிவிளைதலும் துவசங்களுளொன்றொடிதலுமுளவா தலைநோக்காதுபோர்வருதலையே, ஓர்பொரு ளாகக்கருதிமகிழ்ந்தனனுதலால்அசுரர்கோனிருக்கையெய்தினன் என்றார்.

போர்கைகூடுமென்றுமனமகிழ்ந்ததை,—

"என்றலுஞ்செருநமக்கெய்துமென்றுளமகிழ்ந்
தன்னவனென்னுழையடர்வதெந்நாளென
வுன்னுடைத்துவசம்வீழ்போதெனுவுரைசெயத்
தன்னுடைநகர்வயின்வந்துசார்ந்தனனரோ."

எனக்கூர்மபுராணத்தில்வருதல்காண்க. (௨௨)

அங்கொருநாளவன்பயந்தவாயிழை
கங்குலிற்கனவினிற்கண்ணன்சேயபெறும்
பொங்கெழிலனுருத்தன்புல்லப்புல்லினுள்
வெங்களிப்பெயதினாள்விழிப்பக்கண்டிலாள்.

(இ-ள்.) அங்கு ஒருநாள் அவன்பயந்த ஆயிழை - அவ்விடத்துஒருநாள் அவ்வாணாசுரன்பெற்றபுத்திரியாகிய உஷையென்பவள், கங்குலில் கனவினில் கண்ணன்சேய்பெறும் பொங்கு எழில் அநிருத்தன் புல்லபுல்லினுள் - இராப்போதில்சொப்பனத்தில் கண்ணன்புத்திரனாகியஉருக்குமணிபெற்றபிரத்தும்மனன்சாருமதியென்பவளோடுகலந்துபெற்ற மிகஅழகையுடைய அநிருத்தன்தழுவத்தானுந்தழுவி, வெங்களிப்பு எய்தினள் விழிப்ப கண்டிலாள் - மிககளிகூர்ந்துவிழிப்பக்காணாது.
புல்லினுள், எய்தினள், கண்டிலாள் முற்றெச்சங்கள். (௨௩)

கையெறிந்தழுதுகண்கலுழ்ந்துசோர்ந்தனள்
மெய்யணிசிதைந்துமெய்வெறுவிதாதலைகண்
டைதெனத்தன்மலரனங்கன்சூட்டினான்
றையறன்மருகியாச்சார்வதோர்ந்தென.

(இ-ள்.) கைஎறிந்து அழுது கண்கலுழ்ந்து சோர்ந்தனள் - இழந்தோமேயென்றுகையையோதியழுதுகண்களில்நீர்பெருக்கிச்சோர்ந்து, மெய் அணி சிதைந்து மெய்வெறுவிதாதல் அனங்கன்கண்டு - இளைத்தலால்அவயவங்களிலணிந்தஆபரணங்கள்கழன்று உடம்புபொலிவிழந்திருந்தநிலைமன்மதன்கண்டு, தையல்தன் மருகிஆசார்வது ஓர்ந்தனன் என்ன ஐ என தன் மலர்சூட்டினான்-அவ்வுஷையானவள்தனதுமருகியாகவருவதைஅறிந்தான்போலப் பொலிவிழந்தவுடம்பிற்குப் பொலிவுசெய்யத்தனதுஅம்பாகியமலரைச்சூட்டினான்.

உருக்குமணிபெற்ற பிரத்துய்ம்னன்முதலிய பதின்மருள் மன்மதனொருவனுதலால் தன்மருகியாகச்சார்வதோர்ந்தென என்றார். மனத்திற்காமமுளைதோன்றியதுணர்ந்துமன்மதன் அம்பெய்யுஞ்செய்தியை, தனக்குமருகியாகப்பின்வருதலையுணர்ந்துபொலிவிழந்தஉஷையினுடம்புபொலிவுபெறுதற்குத் தனதம்பாகியமலர்கொண்டலங்கரித்தனனெனக, கவிஅத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. (௨௪)

களங்கனிக்கூந்தலிற்கவற்றித்தற்றெறத்
துளங்குறுபழம்பகைத்தொடர்பின்வேள்கரி
விளங்கிழைமுந்துதன்வீறுகாட்டலா
லிளங்கொடிமுதலரிந்தென்னச்சாம்பினாள்.

(இ-ள்) களம் கனி கூந்தலின் கவற்றிதன்தெற-களங்கனியைப்போலக்கறுத்தகூந்தலால்வருத்தித்தன்னைமுன்புபுறங்காண்டலால், துளங்கு உறு பழம்பகைதொடர்பின் - நடுக்கமுறும்பழையபகையின்றொடர்ச்சியால், வேள்கரி - மன்மதனுடையயானையாகிய இருட்போதானது, விளங்கிழை முந்து தன் வீறுகாட்டலால் - அவ்வுஷையென்பவளுக்குமுற்படத் தனதுவலியின் பெருக்கினைக்காட்டுதலால், இளங்கொடிமுதல் அரிந்தென்ன சாம்பினாள்-முதிராதபசுங்கொடியை வேரோடரிந்தாற்போலவாடிவிழுந்தாள்.

அரிந்தென்ன தொகுத்தல்விகாரம். உவமைக்கும்பொருளுக்கும் ஒற்றுமையுண்மையால் பொருளின்றொழிலாகியவாடுதலை உவமைக்குங்கொள்க. தனதுகூந்த

லால் வருத்துதலில்முதுகுகாட்டிய விருட்போதானதுஇதுதான் அமையமென்று காமத்தால்வெப்பியஉசையை இன்றுவருத்தியதென்று கூறுதலால் மாற்றுநிலையணி. ()

பழிவருமென்றசொற்பழுதுறாவகை
யுழைவிழிக்கிறந்துபாடொழிப்பவல்விரைந்
தெழுபவன்போலிருள்கிழித்துவெய்யவன்
சுழிபுனற்கருங்கடன்முகட்டுத்தோன்றினன்.

(இ-ள்.) பழிவரும் என்றசொல் பழுது உறாவகை - உன்மகளுக்குப்பழிவருமென்று சிவபெருமானருளியசொல்பழுதடையாதவண்ணம், உழைவிழிக்கு இறந்துபாடொழிப்ப-மான்போன்றகண்களையுடைய உசைக்குஇருளால இறத்தலையொழிக்க, வெய்யவன் வல்விரைந்து எழுபவன்போல் இருள்கிழித்து சுழிபுனல் கருங்கடல் முகட்டுதோன்றினன்-சூரியன்மிகவும்விரைந்து உதயஞ்செய்பவன்போலவ்விருளைக்கிழித்துச்சுழிக்கும்நீர்மயமாகியகரியகடலின் முகட்டிலுதயஞ்செய்தான்.

சிவபெருமான் நின்மகட்கோர்பழிநிகழுமென முன்னர்க்கூறியருளினமையால் பழிவருமென்றசொல்எனவும், அவ்விருளோநீடித்துநிற்பின் அவளுயிர்விடுவாள்அதனாலச்சொல்பழுதுபடுமேயென்று சூரியனிருள்கிழித்தெழுந்தானென்பார் இறந்துபாடொழிப்ப விருள்கிழித்து வெய்யவன்தோன்றினன் எனவுங்கூறினார்.

போல்என உவமையிடைச்சொல்தந்து கூறுதலால் தற்குறிப்பேற்ற உவமையணி. (௨௬)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்,

அத்திறங்கேட்டதோழியாய்ந்துருப்படத்திற்றீட்டி
யித்தனிக்குமரனேயோவென்றுளமகிழ்ச்சிநோக்கித்
தத்துநீர்த்துவரைநண்ணித்தவிசொடுந்துயில்கின்றானைச்
சித்திரமெனக்கொண்டெய்தித்திருந்திழைமுன்னருய்த்தாள்.

(இ-ள்,) அத்திறம் கேட்ட தோழி-அந்தவரலாற்றைக்கேட்ட தோழியானவள், ஆய்ந்து உரு படத்தில்தீட்டி - அவள்கனவிற்கண்டஅநிருத்தனைஆராய்ந்து அவனது உருவைப்படத்திலெழுதி, இ தனிகுமரனேயோஎன்று உளம் மகிழ்ச்சிநோக்கி- இந்தஒப்பில்லாதகுமரனோவென்றுகூறிஅவள்மனமகிழ்தலைப்பார்த்து, தத்துநீர்துவரை நண்ணி-தாவும்நீர்மயமாகிய துவாரகாபதியையடைந்து, தவிசொடும்துயில்கின்றானை- கண்டுயிலுமணையோடும்அவ்வநிருத்தனை, சித்திரம் என்னகொண்டு எய்தி திருந்திழைமுன்னர் உய்த்தாள் - சித்திரம்போலஅசையாதுகொண்டுவந்து அவ்வுசையென்

இவளால்காமங்கொள்ளப்பட்டவன் இன்னானென்றுணர்த்தற்பொருட்டு எல்லாஅரசர்களையும்படத்திலெழுதிப்பின்னர்அநிருத்தனுருவையெழுதிக்காட்ட, அதுகண்டுஅவள்மகிழ்கூர்தலால் தத்துநீர்த்துவரைஎன்றார்.

"கொழுதியிளவினவண்டுகூட்டுண்ணுஞ்சில்லோதிக்கொம்பர்காணப்
பழுதின்மதிமுகத்தோழியரோவியர்போலத்தூரிகையாற்படத்தின்மீது
முழுதுலகின்மன்னரையுமுன்னெழுதியநிருத்தன்முழவுத்திண்டோ
ளெழிலெழுதிக்காட்டுதலுங்காமவிடர்தலைக்கொண்டாங்கினைந்துவீழ்ந்தாள்."

எனக் கூர்மபுராணத்தில் வருதல்காண்க. (௨௭)

கண்டனனசுரனீன்றகனங்குழையமிழ்தமள்ளி
யுண்டனளென்னவோகைதுளும்பினளுவனைப்புல்லிக்
கொண்டனள்காளைமேனிவனப்பெலாங்குறித்துநோக்கி
விண்டனள்கவலையன்னான்விழித்தனன்விளைந்தகாமம்.

(இ-ள்.) அசுரன் ஈன்ற-வாணசுரன்பெற்ற, கனங் குழை கண்டனள்-பொன்னாலமைந்தகுண்டலத்தையுடைய உசையென்பவள்கண்டு, அமிழ்தம் அள்ளி உண்டனள் என்ன ஓகை துளும்பினள் - அமிழ்தத்தைக்கையால் அள்ளியுண்டவளைப்போல்உள்ளமகிழ்தூங்கி, உவனை புல்லிக்கொண்டனள் - அவ்வனுருத்தனைத்தழுவி, காளை மேனி வனப்பு எல்லாம் குறித்து நோக்கி கவலைவிண்டனள் - அவ்வனுருத்தனது மேனியின்பொலிவையெல்லாங் குறித்துப்பார்த்துக் கவலைதீர்ந்தாள், அன்னான்விழித்தனன்-அவ்வனுருத்தன்விழித்தான், காமம்விளைந்தது-காமமவனுக்கு மூண்டது.

விளைந்ததென்னும் ஒன்றன்பாற்படர்க்கை யீறுதொக்கது. கனகம்கனம் என வந்தது இடைக்குறை. கண்டனள், துளும்பினள், கொண்டனள் முற்றெச்சங்கள்.

இளமுலைவருடிமோந்துமுத்தமுண்டிதழ்த்தேன்மாந்தி
விளரிவண்டிமிருந்தாரான்மேகலைநெகிழ்த்துநீவித்
தளைவிடுத்தகலயாணரல்குலந்தடத்துண்மூழ்கி
விளைபெருங்கலவிப்போகவெள்ளத்தினழுந்தினானல்.

(இ-ள்.) விளரிவண்டுஇமிரும்தாரான் இளமுலை வருடிமோந்து-விளரியென்னுமோரிராகத்தைப்பாடும் வண்டுகள் மொய்க்கும்மாலையையுடையஅனுருத்தன் இளமைவாய்ந்ததனத்தைநெருடிக் கூந்தலின் மணத்தைமோந்து, முத்தம் உண்டு இதழ்த்தேன்மாந்தி-முத்தந்தந்து அதரபானம்பருகி, மேகலை நெகிழ்த்து நீவி தளைவிடுத்து அகல-மேகலையைநெகிழ்ந்து ஆடையாகிய பந்தம்விட்டகல, யாணர் அல்குல் அம்தடத்துள் மூழ்கி-அல்குலாகியஅழகியதடாகத்துள்மூழ்கி, பெருங்கலவி விளைபோகம் வெள்ளத்தில் அழுந்தினன்-பெரியகலவியால் விளையும்போகவெள்ளத்தில்அழுந்தினன்.

துணைவிழிசேப்பச்செவ்வாய்துடிப்பவேர்வரும்பப்பூக
மணிமிடறொலிப்பவார்ப்பவால்வளைதடந்தோள்வெற்பிற்
பணைமுலைக்களிநல்யானைபாய்ந்துபாய்ந்துழக்கமெல்கு
மணைமிசைக்கலவிப்பூசன்மடந்தையுமாடினாளே.

இ-ள்.) துணைவிழி சேப்பச் செவ்வாய் துடிப்பவேர்வு அரும்ப - இரண்டுகண்களுஞ்செவக்கவும்செவ்வாய்துடிக்கவும் வேர்வையரும்பவும், பூகம் அணிமிடறு ஒலிப்ப - கமுகுபோன்றஅழகியகண்டமொலிக்கவும், வால்வளை ஆர்ப்ப - வெள்ளியவளையல்களொலிக்கவும், தடதோள்வெற்பில் பணைமுலை களிநல்யானை பாய்ந்துபாய்ந்து உழக்க - பெரியதோளாகியமலையில் பருத்தமுலையாகிய நல்லயானைகள்பாய்ந்துபாய்ந்துகலக்கவும், மெல்கும் அணைமிசை கலவி பூசல்மடந்தையும் ஆடினாள்-மெல்லிய மெத்தையின்பேரில் கலவிப்போரைஉசையென்பவளும் ஆடினாள். (௬௦)

புணர்ச்சியின்மருங்குநிற்றல்புரையெனவிலகுமேலோர்
குணத்தையுற்றுடையநாணும்புறஞ்செலத்தூர்த்தர்மான
விணர்க்குழல்கட்டுவிட்டுமெருங்கெலாங்கொட்டநோக்கி
யிணைச்சிலம்பார்ப்பத்தண்டாதின்னலநுகர்ந்துவாழ்நாள்.

(இ-ள்.) புணர்ச்சியின் மருங்குநிற்றல் புரைமெயன விலகும் மேலோர் குணத்தை உற்று - ஒருவர்புறஞ்செய்யுங்கலவியின்பக்கல்நிற்பது குற்றமென்றுசெல்லும்மேலோரதுகுணத்தையொத்து, உடையும் நாணும் புறம்செல்ல-ஆடையும்தப்மொழியிற்றுறக்கவளர்ந்தநாணமும்புறத்திற்செல்லவும், தூர்த்தா — ன-அதனைக்கண்டகாமுகனையொப்ப, வணர் குழல் கட்டு விட்டு மருங்கு எல்லாம்கொட்ப - வளர்ந்தகூந்தல் கட்டுவிட்டவிழ்ந்து பக்கங்களிலெல்லாஞ்சுழலவும், நோக்கி இனை சிலம்பு ஆர்ப்ப - அவற்றைநோக்கிஇரண்டுகால்களிலுமணிந்தசிலம்புகளொலிக்கவும், தண்டாது இன்நலம் நுகர்ந்து வாழ்நாள்-நீங்காமல்இனியஇன்பத்தைநுகர்ந்து இருவரும்வாழுங்காலையில்.

நாணிகர்த்துபுல்லினமொன்பதுதோன்ற,மேலோர்குணத்தையுற்றுஉடையும்நாணும்புறஞ்செலவெனவும்,விடர்கள்ரம்பிசந்துபற்பலவிடங்களிலும்அதனைக்காணச்சுழன்றுதிரிவதுபோல்கூந்தலும் கலவியால்கட்டவிழ்ந்துகுலைந்துகிடந்ததென்பதுதோன்றவணர்க்குழல்கட்டுவிட்டுமருங்கெலாங்கொட்பவெனவும், இவற்றைநோக்கி இஃதோர்பெருவியப்பென்றுவியந்துகோஷித்ததுஎன்பதுதோன்றநோக்கியிணைச்சிலம்பார்ப்பவெனவும், இவைபுணர்ச்சிக்காலத்துநிகழ்வனஎன்பதுதோன்றத் தண்டாதின்னலநுகர்ந்துவாழ்நாளெனவுங்கூறினார். (௬௧)

தளிரியனிறம்வேறுகித்தையலாள்கருப்பமெய்த
வளமனைகாப்போர்நோக்கிவாணனுக்குணர்த்தவன்று
னிளவலையரிநிற்பற்றியிருஞ்சிறைப்படுத்தான்காணூஉ
வளமருமயிலிற்றேம்பிப்பெண்கொடியரற்றிவீழ்ந்தாள்.

(இ-ள்.) தளிரியல் தையலாள் - தளிர்போலும்சாயலையுடையஉசையென்பவள், நிறம் வேறுகி கருப்பம் எய்த - நிறம்பசந்துகருப்பமடைய, வளம் மனைகாப்போர் நோக்கி - மணிபொன்வளம்வாய்ந்தகோயிலுள்காவல்பூண்டோர் அதனைநோக்கி, வாணனுக்கு உணர்த்த - வாணாசுரனுக்குத்தெரிவிக்க, அன்னோன் இளவலை அரிநில் பற்றி இரும்சிறை படுத்தான் - அவ்வசுரன்அவ்வனுருத்தனைவலிந்துபற்றிப்பெரியசிறைப்படுத்தினன், காணூஉ அளமரு மயில்போல் பெண்கொடி தேம்பி - அதனைக்கண்டுசுழலுமயில்போலப் பெண்களுள்பூங்கொடிபோல்வாள்வருந்தி, அரற்றி வீழ்ந்தாள் - கதறிவீழ்ந்தனள்.

அனுருத்தனோடுபோர்செய்துபற்றினனென்பதுதோன்ற அரிநிற்பற்றியென்றார்.

வாணன்போர்செய்துபற்றினனென்பதை,—

"உலம்பொருதுயர்ந்ததிண்டோள்வாணனங்கதனையோரா
வலங்கெழுமைந்தனோடும்வாளமரழுவத்தேற்றுப்
பொலங்கொடிபுலம்பிநையப்பொருப்புறழ்தடந்தோள்வீக்கி
யலங்கலங்குன்றன்னானையருஞ்சிறைப்படுத்தினனே";

எனவருங்கூர்மபுராணத்தாலுணர்க. (௬௨)

வீழ்ந்தயர்பொலங்கொடிக்குத்துணையெனவிசும்புநக்க
வீழ்ந்துயர்கொடியுமங்நாள்வெய்யகாலுதைப்பவிற்று
வீழ்ந்ததுவாணன்கொண்டவிழுத்தவப்பேறுமொக்க
வீழ்ந்ததுநிகழ்ந்தசெய்கைவீணைமாமுனிவனோர்ந்தான்.

(இ-ள்.) வீழ்ந்து அயர் பொலம் கொடிக்கு துணையென - வீழ்ந்து அயரும் பொற்கொடிபோல்வாளுக்குஒப்பாக, விசும்பு நக்க வீழ்ந்து உயர்கொடியும் அந்நாள் வெய்யகாலுதைப்ப இற்று வீழ்ந்தது - விண்ணினைநாவால்நக்கவிண்ணிலோங்கியது வசமும்அக்காலையில்கொடியகாற்றடிக்கமுறிந்துவீழ்ந்தது, வாணன் கொண்ட விழுந் தவப் பேறும் ஒக்கவீழ்ந்தது-வாணசுரன்பெற்றுக்கொண்டமேன்மைவாய்ந்ததவப்பயனும் ஒருசேரவீழ்ந்தது, நிகழ்ந்த செய்கை வீணை மாமுனிவன் ஓர்ந்தான் - நடந்தசெய்தி யைநாரதமகாமுனிவருணர்ந்தார். (௯௩)

சிலைத்தொழின்மாண்டதன்சேய்சிறுவனைக்காணதெங்கு
மிலைப்புணர்கிளைத்துவாடுந்துவாரகைக்கிறைபாலெய்தி
புலப்படப்புகலக்கேட்டுப்பொருபடையெழுகவென்று
வுலப்புயத்துளவத்தாரானொலிமுரசறைவித்தானும்.

(இ-ள்.) சிலைத்தொழில் மாண்ட தன் சேய் சிறுவனை - விற்றொழிலில் மேம்பட்டதனதுபுத்திரனாகியபிரத்தியும்மனதுபுத்திரனை, காணாது எங்கும் இலை புணர் கிளைத்து வாடும் துவாரகைக்கு இறைபால் எய்தி - காணமல்எவ்விடத்தும் இலைபோலப்புனைபுனையாதுழைந்துவாடிக்தேடாநின்ற துவாரகாபுரிக்கிறைவனாகிய கண்ணனிடத்துச்சென்று, புலப்பட புகல-விளங்கக்கூற, கேட்டு- அதனைக்கேட்டு, பொரு படை எழுக என்று - வாணனோடுபோர்செய்தற்குச்சேனையெழுகவென்று, உலம்புயம் துளவம் தாரான் ஒலிமுரசு அறைவித்தான் - திரண்டகல்லையொத்தபுயத்தில்துளபமாலையணிந்தகண்ணமூர்த்திஒலிக்கும்முரசறைவித்தான். (௯௪)

வியவரினுணர்ந்தார்சாற்றும்விசிமுரசோதைகேட்டுச்
செயிரறத்தொருவவங்கட்சேனையேயல்லமாறாச்
சயமுடையிமையோர்தங்கள்சிதறுநல்வினைகடாமு
முயர்முரசோதைகேட்டவ்வும்பர்பாற்றெருகுவமாதோ.

(இ-ள்.) வியவரின் உணர்ந்தார் சாற்றும் விசிமுரசு ஓதைகேட்டு - ஏவலா ளராலுணர்ந்துயானைமேல்பறையறைவோர்சாற்றும்போர்க்கட்டமைந்தமுரசொலியைக் கேட்டு, செயிர் அற தொகுவ அங்கண் சேனையே அல்ல-குற்றமறப்போர்க்குநெருங் குவனஅவன்சேனையேயல்ல, மாறாத சயமுடை இமையோர் தங்கள் - நீங்காதவெற் றியையுடையதேவர்களது, சிதறு நல்வினைகள் தாமும் உயர்முரசு ஓதைகேட்டு உம் பர்பால் தொகுவ-அவரினின்றுநீங்கியஆகூழ்களும்உயர்ந்தஅம்முரசொலியைக்கேட்டு அத்தேவரிடத்தும்நெருங்குவன.

வாணசுரனால்இந்திரன்முதலியோர்இடர்ப்படுதல்இன்று,கண்ணமூர்த்திபோர் க்கெழுதலால் அது ஒழிந்ததென்பார், சிதறுநல்வினைகடாமுமுயர்முரசோதைகேட் டவ்வும்பர்பாற்றெருகுவமாதோஎன்றார். (௯௫)

கடுந்தொழிலசுரர்தம்பாற்றெறப்படுங்காலதூதர்
கெடுந்தொழிலனையார்ப்பற்றக்கிளர்ந்துவேற்றுருவுகொண்டு
கொடுந்தொழின்முற்றக்கற்றலனையகூர்ங்கோட்டுநால்வா
யடுந்தொழிற்றறுகண்வேழமளப்பிலபண்ணினார்கள்.

(இ-ள்.) கடுந்தொழில் அசுரர் தம்பால் தெறப்படுங் காலதூதர் - கொடுந் தொழிலையுடையஅசுரர்களால்வருத்தப்படும்யமதூதர்கள், கெடுந்தொழில் அனையார் பற்ற கிளர்ந்து வேற்றுருவுகொண்டு-கெடுந்தொழிலையுடையஅவ்வசுரரைப்பற்றியுயிர்

கடைபோயெழுந்துமுன்னருருவமாறிவேற்றுருவங்கொண்டு, கொம்பொழில் முற்று சுற்றால் அனைய கூர்ங் கோட்டு நால்வாய் அமர் தொழில் சுருகளை வேழம் அளப்பில பண்ணினார்கள்-கொடியபொழிலை ஒருசேரக்கற்றுவிலாத்த கூரியகொம்பையும் தொங்கிபசையும்வாயையும் கொல்லுந்தொழிலையும்அஞ்சாமையையுமுடைய அளவில்லாத யானைகளை அலங்கரித்தார்கள்.

அசுரர்களுயிர்கவரவன்மையின்மையால் அவர்களால் வருந்தப் பட்டொளித்து நின்றயமதூதர்கள் இன்று அவர்களுயிர்களை அமையப்பார்த்தமையால், தங்களுருக்கரந்து யானையுருக்கொண்டு வந்தனபோலுமென்ன, யானைகளைக் கவி அதிசயமுறச்செய்து கூறுதலால் இதுதற்குறிப்பேற்றவணி. (௧௬)

குவைமணிமோலிவிண்ணோர்மனமெலாங்குழூஉ நம்மைக்
கவலுறவருத்தினானை வெலற்கிதுகாலமென்று
வவயவங்கொண்டுவெவ்வேறணைந்தெனவினைசெல்காட்சி
யிவறுசீர்க்கவினப்பாய்மாவெண்ணிலபண்ணினாரால்.

(இ-ள்.) மணி குவை மோலி விண்ணோர் மனம் எல்லாம் குழூஉ-இரத்தினக் கூட்டங்களமைந்தகிரீடத்தையணிந்ததேவர்கள்மனமெல்லாம்ஒருசேரத்திரண்டு, நம்மை கவலுற வருத்தினானை வெலற்கு இது காலம் என்று-நம்மைவருத்தினோனைவெல்லுதற்குஇதுதானமையமென்று, அவயவம்கொண்டு வெவ்வேறு அணைந்து என்ன-குதிரைவடிவங்கொண்டுவெவ்வேறுவகைப்பட்டுவந்தாற்போல், வினைசெல்காட்சி-விரைந்துசெல்லுந்தோற்றத்தையுடைய, இவறு சீர் கவினம் பாய்மா எண் இலபண்ணினார்-யாவரும்விரும்புமிலக்கணம்வாய்ந்தகடிவாளம்பூண்ட அளவில்லாதகுதிரைகளைஅலங்கரித்தார்கள்.

மனவேகம்போல்குதிரையின்வேகத்தைக்கூறுதல்வழக்காதலாலங்குள்ளகுதிரைகளை, அசுரர்களால் வருத்தப்பட்டதேவர்களுடைய மனங்கள், அவர்களைவெல்லச்செல்லுங்கண்ணமூர்த்திபற்றுக்கோடாக அவ்வசுரர்களைவெலலுதற்குக்காலம்வாய்த்ததென்று குதிரைகளாக அமைந்தனபோலுமென, கவி அத்தியவசயித்துக்கூறுதலால் இதுவுமவ்வணி. (௧௭)

வரைமகள்கிரீசனோங்கற்குறிஞ்சிமன்மதக்கைவெற்பென்
றுரைபெறுகிழமையோரையொருங்குதன்வாய்தல்வைத்த
புரையினன்றன்மேற்சிறிவரையெலாம்புறப்பட்டாங்கு
வினைசெலற்கொடிஞ்சித்திண்டேர்பண்ணினர்கோடிமேலும்.

(இ-ள்) வரைமகள் கிரீசன் ஓங்கல் குறிஞ்சி மன் மதம் கை வெற்பு என்று உரை பெறு கிழமையோரை - இமயபர்வதத்திற்றோன்றியஉமையம்மையும் வெள்ளியங்கிரியிலெழுந்தருளியசிவபெருமானும் மலைநெருங்கியகுறிஞ்சிநிலத்திற்குஇறைவனாகியமுருகக்கடவுளும் மதஞ்சிந்தும்துதிக்கையையுடையமலையாகியவிநாயகக்கடவுளுமென்றுசொல்லப்படும்தமக்குரியவர்களாகியஇவர்களை, ஒருங்கு தன்வாய்தல் வைத்த புரையினன் தன்மேல் வரை எல்லாம் சீறி புறப்பட்டால் ஆங்கு-ஒருசேரத்தனது வாய்தலில்காவலாகவைத்தகுற்றமுடையவாணன் மேல்மேருமுதலியமலைகளெல்லாங்கோபித்துப்புறப்பட்டாற்போல, வினை செலல் கொடிஞ்சி திண் தேர் கோடிமேலும் பண்ணினார்-விரைந்துசெல்லுமொட்டையுடைய திண்ணிய தேர்கள் கோடியென்னுமிலக்கத்தின்மேலும்அலங்கரித்தார்கள்.

உமையுஞ்சிவபிரானும்முருகக்கடவுளும் விநாயகக்கடவுளுஞ்சம்மொடுசெய்பர்த முடைமையால், இவர்கள் தன்மையைச்சிறிதுமோராது சனது வாயிலுக்குக்காவலாக வைத்தபேரபராதியினுதலால் இவனுயிர்வாங்குதற்கு இதுதான் அமையமென்றுமே ருமுதலியமலைகளெல்லாம் அவன்மேற்சோபித்துப்போர்க்கெழுதல்போலுள்ளனவென, கவி அத்தியவசித்துக்கூறுதலாலிதுவுமவ்வணி. (௫௮)

தடமதிலெரியாற்கோலப்பெற்றவன் றன்னையேவ
விடவரம்பெறவும்வல்லுமெனத்துணிந்தனையானுவி
கொடுசெலக்குறித்துப்பல்வேறுருவுகொண்டணைந்தகாட்சி
வடவைநேர்சீற்றத்துப்பின்மள்ளருமொய்த்தார்பல்லோர்.

(இ-ள்.) தடமதில் எரியால் கோல பெற்றவன் - பெரியமதிலைநெருப்பால் கோலவரம்பெற்றவாணன், தன்னை ஏவலிட வரம்பெறவும் வல்லும் என வடவைதுணிந்து - தன்னையுமேவவரம்பெறவும் வல்லானென்றுவடவாமுகாக்கினிதுணிந்து, அனையான் ஆவி கொடு செல குறித்து-அவ்வாணாசுரனுடையவுயிரைவாங்கிவரக்கருதி, பல் வேறு உருவுகொண்டு அணைந்த காட்சி-பலவேறுவகைப்பட்ட உருவங்கொண்டுவந்தாலொத்ததோற்றத்தையுடைய, நேர்சீற்றம் துப்பின் மள்ளரும் பல்லோர் மொய்த்தார் - தமக்குத்தாமேயொத்தகோபவன்மையுடைய காலாட்களுநெருங்கினார்கள்.

நம்மினத்தவனைமதிலாகக்கோலவரம்பெற்றவன் நம்மையுமோர்காலவரம் பெற்றுமதிலாகக்கோலுவான், அதற்குமுன்னமேநான் அவனுயிர்பருகவேண்டுமென்று வீரர்தோற்றங்கொண்டணைந்த தோற்றம்போலுமென, கோபவன்மையையுடைய காலாட்களை, கவி அத்தியவசயித்துக்கூறுதலாலிதுவும்அவ்வணி.

நெருப்பைத்தனக்குமதிலாகக்கோலவாணன்வரம்பெற்றமையை,—

"குணிப்பரும்பெருநிதிக்குவையுந்தெவ்வாற்
கணிப்பறநிவந்தெழுகனலிக்கோட்டையுந்
தணிப்பருபெருவலித்தகையுந்தெய்வமா
மணிப்படிவங்களும்வழங்கவேண்டுமால்."

எனஉபதேசகாண்டத்தில் வாணாசுரன்பூசனைச்சருக்கத்தில்வருதல்காண்க. (௫௯)

பண்ணுநாற்படையின்வீக்கம்பார்த்துமண்ணடுங்காவண்ணம்
வண்ணவெண்கவிகைபிச்சங்கொடிகண்மேன்மறைப்பத்தீம்பால்
வெண்ணிறப்புணரிநள்ளுமேயதன்றோற்றங்காட்டிக்
கண்ணனுந்தானைநாப்பட்கடகளிறுகைத்துச்சென்றான்.

(இ-ள்.) பண்ணும் நாற்படையின் வீக்கம்பார்த்து மண்நடுங்காத வண்ணம்- அலங்கரிக்கும்யானைமுதலிய சேனையின்பெருக்கைப்பார்த்துமண்ணுலகம்நடுங்காத வண்ணம், வெள் கவிகை பிச்சம் கொடிகள் மேல் மறைப்ப - வெள்ளியநிறத்தையுடையகுடையும்பீலிக்குடையும்துவசங்களும் தன்மேலேமறைக்க, தீம்பால்வெள் நிறம்புணரி நள்ளு மேய தன் தோற்றம்காட்டி - இனியபால்நிரம்பியவெள்ளியநிறத்தையுடைய பாற்கடலின்மத்தியிலெழுந்தனதுகாட்சியைக்காட்டி, கண்ணனும் தானைநாப்பண்கடகளிறு உகைத்துசென்றான்-கண்ணமூர்த்தியுஞ்சேனையினடுவில்மதத்தையுடையயானையைச்செலுத்திச்சென்றனன்.

கொடிகள் நிலவுலகைமறைத்தலை, மண்ணுலகுசேனையின்மிகுதியைப் பார்த்து இவைகளைநாம்சுமப்போமோவென்று நடுங்காதபடிமறைத்தலையொக்குமென,

கவி அத்தியவசயித்துக்கூறுதலால், இதுவுமவ்வணியும், வெள்ளியகுடைமுதலியவற்றைத திருப்பாற்கடலாகவும், கண்ணமூர்த்தியைப் பயதனிடையெழுந்தருளிய திருமாலாக வுங்கூறுதலால் ஒப்புமைகூட்டவுவமையணியுங்கலந்துவருதலால் கலவையணி. (௬௰)

கொழுநனுடமர்க்குச்செல்லக்குலமனையகத்துவாளாக்
கெழுவுறுதகையஞாலக்கிழத்தியுந்திருவைகுந்தப
பழமனையியற்கைவல்லேபார்த்தனண்மீளவிண்மேல்
லெழுவதுகடுக்குஞ்சேனைச்செலவிடையெழுந்ததூளி.

(இ - ள்.) சேனை செலவு இடை எழுந்த தூளி - சேனைகள்சோணிதபுரத்திற்குப்போர்க்குச்செல்லுதலாலிடையேயெழுந்ததூளியானது, கொழுநன் ஆடு அமர்க்குச்செல்ல-தனதுகணவனாகிய திருமால்பொரும்போர்க்குச்செல்ல, குலமனை அகத்து வாளா கெழுவுறு தகைய ஞாலக்கிழத்தியும்- (சகக்கணவனைப்பிரிதலால்) நன்மை வாய்ந்ததனதில்லகத்தில்வாளாவசிக்குந்நிலமகளும், திருவைகுந்தப்பழமனை இயற்கை வல்லை பார்த்தனள் மீள விண்மேல் எழுவது கடுக்கும் - (தான்முன்னிருந்த) ஸ்ரீவைகுந்தமாகியபழையவீட்டினியல்பைவிரைந்துபார்த்துத்திரும்பவிண்ணுலகின்மீது பரந்துசெல்லுதலையொக்கும்.

சேனைநெருக்கால் நிலவுலகிலெழுந்ததூளி ஆகாயத்தின்மேற்செல்லுதலை, பூதேவியானவள் தனதுநாயகன்போர்க்குச்சென்றுதலால் தான்வாளாவிங்கிருத்தலினும் நாம்முன்புவசித்தபழையவீடாகிய ஸ்ரீவைகுந்தத்தைப்பார்த்துத் திரும்பிவாலாமென் றுபோதலையொக்குமென, கவி அத்தியவசயித்துக்கூறுதலாலிதுவுமவ்வணி. (௬௧)

இன்னணமளக்கரேழுமெழுந்தனபரந்தசேனை
துன்னலரணுகல்செல்லாச்சோணிதபுரத்தைமுற்ற
வன்னதுதெரிந்தவாணனழலெழவிழித்துநக்குத்
தன்னிகரடுபோர்ச்சேனைத்தலைவரைவிளிக்குஞ்.

(இ-ள்.) இன்னணம் அளக்கர் ஏழும் எழுந்தது அன்ன பரந்த சேனை-இவ்வகையாகவெழுகடலும் எழுந்தாற்போலப்பரவியசேனையானது, துன்னலர் அணுகல்செல்லாசோணிதபுரத்தை முற்ற-பகைவர்அடைதற்கரியசோணிதபுரத்தைச்சூழ, அன்னது தெரிந்த வாணன் அழல் எழ விழித்து நக்கு-அதனைத்தெரிந்தவாணாசுரன் தீயெழவிழித்துச்சிரித்து, தன்நிகர் அடுபோர் சேனை தலைவரை விளிஞன்-தன்னையொத்தகொல்லுதற்றொழிலமைந்தபோர்த்தொழிலில்வல்லசேனாபதிகளைப் போர்த்தொழிற்கு விளிஞன். (௬௨)

எழுந்தனபடைகணான்குமியம்பினவியங்களெங்கும்
வழிந்தனவிலாழிமண்ணும்வானமுஞ்செறியத்துன்னி
யொழுங்கினதூளிசேய்த்திற்கண்டவருகுமண்மாரி
பொழிந்திடும்போலும்வாணன்புரத்தெனமருட்கைகொள்ள.

(இ-ள்.) படைகள் நான்கும் எழுந்தன இயங்கள் எங்கும் இயம்பின-யானைமுதலியநான்குபடைகளும்போர்க்கெழுந்தனவாச்சியங்களெங்கும் ஒலித்தன, விலாழி வழிந்தன-குதிரைவாய்நுரையும் யானைத்துதிக்கைநீரும்வழிந்தன, சேய்த்திற் கண்டவர்-தூரத்திற்பார்த்தவர்கள், வாணன புரத்து உகும்மண்மாரிபொழிந்திடும்போலும் என்ன மருட்கை கொள்ள - வாணாசுரனதுசோணிதபுரத்தில்சிந்துதற்கெல்லையாகிய மண்மாரிபொழிதல்போலுமெனமயங்க, தூளி மண்ணும் வானமும் செறிய துன்னி ஒழுங்கின-தூளி மண்ணுலகினும்விண்ணுலகினும்படியநெருங்கவொழுங்குபட்டன.()

தன்னுயிர்க்கணவன்மேற்செல்றானையுள்ளழுங்கக்கண்கள்
பொன்னுருப்புவனிமாதுபுழுதியாற்புதைப்பச்சீறி
யன்னவள்மருமநோவவடிபெயர்த்ததிர்த்துச்சென்று
மின்னிலைப்படையசேனைவியனகர்வெளிக்கொண்டன்றே.

(இ-ள்.) தன் உயிர் கணவன் மேல் செல் தானை கண்கள் உள் அழுங்க-தனதுயிரையொத்தநாயகன்மேற்செல்லுஞ்சேனையின்கணைகளுள்ளேயுறுத்த, பொன் உரு புவனி மாது புழுதியால் புதைப்ப - பொன்னையொத்தநிறம்வாய்ந்தநிலமாதானவள் புழுதியாற்புதைக்கவும், மின் இலை படைய சேனை-மின்னையிலையொத்தகட்டுவடிவாகிய ஆயுதத்தையேந்தியசேனையானது, சீறி அன்னவள் மருமம்நோவ அடிபெயர்த்து அதிர்த்துசென்று வியன் நகர் வெளிக்கொண்டன்று-அதனைக்கண்டு கோபித்துஅப்பூதேவியின் மார்பம்நோவக்கால்பெயர்த்துக்கோஷித்துச்சென்று பரந்தநகரினின்றும் வெளிப்பட்டது.

சேனையினெருக்காலெழுந்தபுழுதி எங்கும்பரவியெழுதலை, பூதேவியானவள் தன்கணவன்மேற் போர்க்குச்செல்லுதலறிந்து அசுரர்கண்களைப் புதைத்தனளெனவும், அவ்வசுரச்சேனைகள் பூமி அதிரச்செல்வதை, அதுநோக்கி அப்பூதேவிமார்பு நோவ அடிவைத்து அதிர்த்துச்சென்றனர் எனக்கூறுதலால் மாற்றுநிலையணி. (௪௪)

விதிர்படைமின்னுக்காட்டவிலாழிநீர்தாரைகாட்ட
வதிரொலியுருமுக்காட்டவந்நாட்படலைமேக
மெதிரெதிருடன்றாலென்னவிருபெருங்கருவிச்சேனை
கதிர்முலைச்சயமான்மெச்சக்கைகலந்தமரின்மூண்ட.

(இ-ள்.) விதிர் படை மின்னு காட்ட-சேனைகள்விதிர்க்கும்வாளாயுதம்மின்னலைக்காட்டுதலாலும், விலாழி நீர் தாரைகாட்ட - யானைத்துதிக்கைநீரும் குதிரைவாய்நுரையும் மழைத்தாரையைக்காட்டுதலாலும், அதிர் ஒலி உருமு காட்ட-சேனை ஒலிக்குமொலிஇடியைக்காட்டுதலாலும், அந்நாள் - அக்காலத்தில், படலைமேகம் - திரண்டமேகமானது, எதிர் எதிர் உடன்றால் என்ன - எதிரெதிரே தம்முட்போர்க்கெழுதல்போல, இரு பெருங் கருவி சேனை - கண்ணமூர்த்தியின்சேனையும் வாணன் சேனையும், கதிர் முலை சயமான் மெச்ச கைகலந்து அமரின்மூண்ட - விளங்கும் தனத்தையுடைய சயலட்சுமிவியக்கக்கைகலந்து போர்த்தொழிலில்மூண்டன.

கருவிச்சேனை - கருவியென்னும்பொதுப்பெயர் சேனையென்னும் சிறப்புப் பெயரை விசேடித்துவந்த இருபெயரொட்டுப்பண்புத்தொகை. (௪௫)

ஒருபோகு கொச்சகம்.

செங்களத்துடல்கிடப்பவருதிண்டிறலரை
யங்குநின்றெதிர்கொளப்புகுநரொப்பவழல்சால்
வெங்களத்துறுசெருத்திறமைநோக்கவியல்வா
னெங்குமொய்த்தனர்களீர்ந்தொடையன்மோலியிமையோர்.

(இ-ள்.) செங்களத்து உடல் கிடப்ப-போர்க்களத்தில்தமதுஉடல்கிடக்க, வரு திண் திறலரை-வீரசுவர்க்கபோகநுகரவருந்திண்ணியவீரரை, ஈர்ந்தொடையல் மோலி இமையோர் - குளிர்ந்தகற்பகமலர்மாலையணிந்த மகுடத்தையுடையதேவர்கள், அங்கு நின்று எதிர்கொள புகுநர் ஒப்ப-விண்ணுலகினின்று எதிர்கொள்ளவருவோரையொப்பவும், அழல்சால் வெங் களத்து உறு செருத்திறமை நோக்க - கொடியபோர்க்களத்திலிரண்டுபடைவீரர்களுஞ்செய்யும்போரின் திறமையைநோக்கவும், இயல் வான் எங்கும் மொய்த்தனர்கள்-பரந்தவிண்ணுலகெங்கும் நெருங்கினார்கள். (௪௬)

கல்லியற் பொருகளத் திருவரங்க மகனில
மெல்லியற் சயமடக் கொடிநடிப்ப மிடையும்
பல்லியத் தொகைமுழக் கெனவெழுப்பு படகஞ்
சல்லிகைத் தக்கைமுத லெண்ணில தழங்குவனவால்.

(இ-ள்.) கல் இயல் பொருகளம் திரு அரங்கம் அகனில - வீரர் புகழ்வரைந்த கல் நாட்டியபோர்க்களமாகிய நாடகசாலையில், மெல்லியல் சய மடக்கொடி நடிப்ப - மெல்லிய இயல்வாய்த்த விசயமாது நடனஞ்செய்ய, மிடையும் பல இயம் தொகை முழக்கு என - நெருங்கிய பலவாச்சியத் திரள் முழக்கம்போல, எழுப்பு படகம் சல்லி தக்கை முதல் எணில தழங்குவன - ஒலியெழும்பும் ஒருகட்பறையும் சல்லிகையென்னு மொருவகைவாச்சியமும் தம்பையுமுதலாக அளவில்லாத வாச்சியங்கள் ஒலிக்கின்றன. (௬௭)

பொருதொழிற் றிறனில்வல்ல பகவன் புரமடு
மொருவனே யெனவுணர்ந்தன ரெனச் சிவன்முடிச்
செருகுதும்பையை மிலைச்சினர் தெழித்து மிடலா
லிருதிறத்தரு முடற்றுசமர் யாவர்மொழிவார்.

(இ-ள்.) பொரு தொழில் திறனில் வல்ல பகவன் - போர்த்தொழிற்றிறத்தில் வல்லவிறைவன், புரம் அடும் ஒருவனே எனல் உணர்ந்தனர் என்ன - திரிபுரத்தைநகைத்தழித்த உருத்திரனொருவனே யென்றுணர்ந்தார்போல, சிவன் முடி செருகு தும்பையை மிலைச்சினர் - அச்சிவபெருமான் சடாமகுடத்தில்செருகிய தும்பைமாலையைத் தமது முடியிற்சூடி, மிடலான் இருதிறத்தரும் தெழித்து உடற்று சமர் யாவர் மொழிவார் - தமது வன்மையால் இருபகுதிப்பட்ட சேனைகளும் அதட்டிச்செய்யும்போர்த்தொழில் யாரெடுத்துக்கூறவல்லவர்.

போர்த்தொழிலில்வல்லகடவுள் தானொருவனேயென்றுயிர்களுக்கு உணர்த்தற்குத் தும்பைமாலையைச்சடையிற்சூடினனென்பது வீரருணர்ந்தாரென்பார், பொருதொழிற்றிறனில் வல்லபகவன் புரமடுமொருவனேயெனவும், தாமும்போரில் வல்லோரென்பதுணர்த்தற்குத் தும்பையைச் சூடினாரென்பார் சிவன்முடிச்செருகுதும்பையை மிலைச்சினர் எனவுங்கூறினார்,

போர்த்தொழில்தொடங்கற்குத் தும்பைமாலைசூடுதலை,—

“கார்கருதிநின்றதிருக் கௌவை விழுப்பணையான்
சோர்குருதிசூழாநிலநினைப்பப்-போர்கருதித்
துப்புடைத்தும்பைமலைந்தான் றுகளறுசீர்
வெப்புடைத்தானையெம்வேந்து”

எனவரும்புறப்பொருள் வெண்பாமாலையாலுணர்க. (௬௮)

கரிகளூருநரொடுங் கரிகளூருநர்களும்
புரவியூருநரொடும் புரவியூருநர்களும்
இரதமூருநர்களோடிரதமூருநர்களு
மரபின்மன்னரொடுமன்னருமெதிர்ந்துபொருவார்.

(இ-ள்.) கரிகள் ஊருநர் ஒடும் கரிகள் ஊருநர்களும் - யானைநடத்தும் வீரரோடு யானைநடத்தும்வீரரும், புரவிஊருநர் ஒடும் புரவிஊருநர்களும்-குதிரைநடத்தும்வீரரோடுகுதிரைநடத்தும்வீரரும், இரதம் ஊருநர்கள் ஒடு இரதம் ஊருநர்களும்-

தேர்நடத்தும் வீரர்களோடு தேர்நடத்தும்வீரர்களும், மரபின் மன்னரொடும் மன்னரும் எதிர்ந்து பொருவார்-முறையால்அரசர்களோடு அரசர்களும்எதிர்ந்துபோர்செய்வார்கள்.

யானைவீரர்களும் குதிரைவீரர்களும் தேர்வீரர்களும்அரசர்களும்தம்முள் மாறிப்போர்த்தொழில் விளைக்காது தத்தமக்குள்போர்விளைத்தனரென்பார் இவ்வாறுகூறினார். (ருகூ)

தண்டமென்பெயர்வழிக்குதவுதானவயவே
தண்டமோச்சிபெறிதண்டமவையொன்னலர்கள்கைத்
தண்டமோடுபுயதண்டமுநிலத்தினுருளத்
தண்டமாற்றுவசமர்க்கணினமென்பதுளதோ.

(இ-ள்.) தண்டம் என் பெயர்வழிக்கு உதவு தானம் வயம் வேதண்டம் - தண்டமென்னும் பெயரைத்தான் செல்லும்வழிக்குத்தந்த மதத்தையும்வெற்றியையுமுடைய மலைபோன்றயானைகள், எறிதண்டம அவை ஓச்சி- வீசுந்தண்டங்களையோச்சி, ஒன்னலர்கள்கைதண்டமோடுபுயம் தண்டமும்நிலத்தில் உருள தண்டம்ஆற்றுவ-பகைவர்களாகிய அவ்வியானைவீரர்கள் கையிலேந்திய அந்தண்டாயுதங்களோடு அவர்களது புயங்களாகிய தண்டங்களும் நிலத்தின்மேலுருளத்தண்டஞ்செய்யாநின்றன, சமர்க்கண் இனம் என்பதும் உளதோ-போரில்தமக்கினமெனக்கருதிப்போர்செய்தலுமுண்டோ (இல்லையென்றபடி)

யானைசெல்லும்வழிக்குத்தண்டமெனவோர் பரியாயநாமம்வந்தது யானைதான் செல்லும்வழியில் நேர்படும்பொருளைத்தண்டித்துச்செல்லுங்காரணத்தால்தண்டமென்பெயர் வழிக்குதவு என்றார்.

வேதண்டம்-மலை. அதனையானையாக உருவகஞ்செய்தற்குத் தானமென்னுஞ் சாதியடைதந்து கூறினமையால்சிறப்புருவகஉவமையணி. (ருo)

ஏறுதேர்வயவரேற்றெதிர்விடுத்ததிகிரி
மாறுதேரிடைநுழைந்திடுவவானெழுவரைக்
கூறுகொண்டமுழைநின்றெழுகுலப்பறவைகள்
வேறுகுன்றமுழையிற்குடிபுகல்விழையவே.

(இ-ள்.) வான் எழுவரை கூறுகொண்ட - ஆகாயத்தை யளாவியமலையின் பகுதியிலமைந்த, முழை நின்று எழுகுலப்பறவைகள் - முழையினின்றுமேலெழும்பறவைக்கூட்டங்கள், வேறு குன்றம் முழையில் குடி புகல் விழைய-வேறுமலைக்குகையில்குடிபுகுதலையொப்ப, தேர் ஏறு வயவர் எற்று எதிர் விடுத்த திகிரி-தேரின்மேலேறியவீரர்கள் தம்முள்ளெதிர்ந்து ஒருவர்க்கொருவரெதிரே யெறிந்தசக்கரமானது, மாறு தேர் இடை நுழைந்திடுவ - இடசாரிவலசாரியாகமாறிஓடும்தேரினிடத்தில் நுழையாநின்றன. (ருக)

ஒருபோகுகொச்சகம்.

ஆடுபரிசாரிகைதொடங்குதொறடங்கார்
சேடுடைமுடித்தலைகள்வீழ்ந்துதமர்தேரி
ஞேடுருடப்பவொருநீயிருமெமைப்போ
லீடழியவேகலிரொனத்தடைசெய்தென்ன.

(இ-ள்.) ஆடு பரிசாரிகை தொடங்கு தொறு - வெற்றிவாய்ந்த குதிரைகள்இட சாரிவலசாரியாகச்செல்லுந்தோறும், அடங்கார்சேடு உடை முடித்தலைகள் வீழ்ந்து-பகைவரதுபெருமைவாய்ந்தமகுடமணிந்த தலைகளற்றுவீழ்ந்து, ஒரு நீயிரு ம் எம்மைப்போல் சடு அழிய ஏகலிர் என்ன தடை செய்தாலென்ன-ஒப்பில்லாதநீங்களும் எங்களைப்போல்பெருமைகெடப்போர்க்குச்செலுதல்தவிர்வீரென்றுதடை செய்தாற்போல,தமர் தேரின் உருள் தடுப்ப-போர்க்குச்செல்லும்தமதுஉறவினரதுதேரின்உருளையைத்தடுக்கா நின்றன.

குதிரையினதுவேகத்தால் பகைவரதுதலைகளற்றுவீழ்ந்து இனிப்போர்க்குச்செல்வோர்தேரினதுஉருளையைத்தடுத்தலை, அத்தலைகள் பெருமைகெடப்போர்க்குச்செல்லும்தமதுஉறவினரைநோக்கி, நீங்களும்எம்மைப்போலதலைகள்அறுபடச்செல்லன்மின்களென்று, கவி அந்நியவசயித்துக்கூறுதலால் தற்குறிப்பேற்றவுவமையணி. (௫௨)

வண்டுமுரல்வாவியுறைகஞ்சமனையாளைக்
கொண்டுதனிருக்கைசெல்சுடர்க்கொழுநனொப்பத்
திண்டிறலடங்கலர்சிரந்திருகியேந்தி
யண்டவெளியிற்சுழல்வசுற்றிவிடுமாழி,

(இ-ள்.) வண்டுமுரல் வாவி உறை கஞ்சம் மனையாளை-வண்டுகள்தேனுண்டுபாடும்தடாகத்தில்மலர்ந்ததாமரையாகிய தனதுமனைவியை, கொண்டு தன் இருக்கை செல் சுடர் கொழுநன் ஒப்ப-கைக்கொண்டுதன்னிருக்கையிற் செல்லும்சூரியனையொப்ப, சுற்றிவிடும் ஆழி-வீரர்களசுரர்கள்மேலவீசியசக்கரம், திண்திறல் அடங்கலர் சிரம் திருகி ஏந்தி-வலிமைவாய்ந்தபகைவர்களதுதலைகளைத்திருகியேந்தி, அண்டம் வெளியில் சுழல்வ - வான்வழியிற்சுழலாநின்றன.

சூரியனை-சக்கரமாகவும், பகைவர்தலைகளைத் தாமரையாகவுங்கூட்டி ஒப்புமை கூறுதலால் ஒப்புமைகூட்டவுவமையணி. (௫௩)

மீச்செலவயவெங்கரிகளொன்றன்மிசையொன்றங்
கோச்சுகதைமாற்றுகதையொளிழைமடச்செவ்
வாயச்சியர்கோலாட்டநிகர்வண்மையினைநோக்கி
யேச்சறுவிசும்பினிமையாதவர்வியப்பார்.

(இ-ள்.) மீ செல் வயம் வெங்கரிகள்-போரின்மேற்செல்லும்வெற்றிவாய்ந்த யானைகள், ஒன்றன் மிசைஒன்று அங்கு ஓச்சு கதை மாற்று கதை-தம்முள்ஒன்றின்மேலொன்று அவ்விடத்துஓச்சியதண்டாயுதங்களும் ஒவ்வொருயானைகளுமவற்றைமாற்றுந்தண்டாயுதங்களும், ஒள் இழை மடமை செவ்வாய்ச்சியர் கோலாட்டம் நிகர் வண்மையினை நோக்கி - ஒளிரியவாபரணத்தையணிந்தஇளமைவாய்ந்தசெவந்தவாயையுடையபெண்கள்போடும் கோலாட்டத்தையொக்குந்திறமையைப்பார்த்து, ஏச்சு அறு விசும்பின் இமையாதவர் வியப்பார்-பழிப்பில்லாதவிண்ணில்இமைகொட்டாதுபார்த்ததேவர்கள் அதிசயிப்பார்கள்.

போர்க்கெழுந்தயானைகள்ஒன்றன்மேலொன்றுதண்டாயுதத்தையோச்சுதலும், ஒன்றுதண்டாயுதத்தாலதனைமாற்றுதலும்,பெண்கள்கோலாட்டமாடுங்காலையில்ஓர்பெண்போடுங்கோலைமற்றோர்பெண்மாற்றுதல்போலுமென்பார் ஒன்றங்கோச்சுகதைமாற்றுகதை யொள்ளிழைமடச்செவ்வாய்ச்சியர் கோலாட்டநிகர் என்றார். (௫௪)

விழித்தவெகுளிக்கணிடனாடுதொறுமேவா
ரழித்திமையெனக்கருதியார்ப்பரொனவெள்கி
யொழித்துவலனோக்கினழல்சீற்றநனிகாட்டித்
தெழித்துவிறல்சாற்றியமரேற்பர்திதிபெற்றார்.

(இ-ள்.) திதிபெற்றார் - திதியென்பவள்பெற்றஅசுரர்கள், விழித்த வெகுளிகண் இடன் ஆடுதொறும்-இமைகொட்டாதுவிழித்தகோபத்தீச்சிந்தும் தமதுகண்களுளிடக்கண்களாடுந்தோறும், மேவார் அழித்து இமையென கருதி ஆர்ப்பர் என்ன வெள்கி - நமக்குப்பகைவராகியதேவர்கள்நமக்குஅஞ்சியிமைகொட்டினரொன்றுகருதிக்கோஷிப்பாரேயென்றுநாணங்கூர்ந்து, ஒழித்து வலன்நோக்கின் அழல் சீற்றம் நனிகாட்டி தெழித்து-அவ்விடக்கண்களாடுதலைமறைத்துவலக்கண்ணால் அழலுங்கோபக்குறிப்பையுமிகவுங்காட்டியதட்டி, விறல் சாற்றி அமர் எற்பர்-நெடுமொழிகூறிப்போருக்கெதிர்வாராயினர்.

புருடர்க்குஇடக்கண்ணாடுதல்பின்வருந்தீங்கினைமுன்குறிக்குஞ் ஓர்நிமித்தமாதலால் இடனாடுதொறும் எனவும், போரில்இமைகொட்டுதல் அஞ்சுதலில்நிகழ்வதாதலால்தமக்குஉற்பாதநிகழ்தலை, நாமஞ்சிஇமைகொட்டினமெனத்தேவர்கள்கருதுவரேயென்று நாணங்கூர்ந்தனராதலால் மேவாரழித்திமையெனக்கருதி யார்ப்பரொனவெள்கியெனவும், வலக்கண்ணால் கோபமிகுதியைக்காட்டிஅதனைமறைத்தனராதலால் ஒழித்து வலனோக்கினழல்சீற்றநனிகாட்டிஎனவும், தமதுஆண்மையையெடுத்துக்கூறுதலால் விறல்சாற்றி எனவுங்கூறினர்.

தமதாண்மையெடுத்துக்கூறுதல் நெடுமொழிவஞ்சியென்றதை,—

"இன்னரொனல்வேண்டாவென்னோடெதிர்சீறி
முன்னர்வருகமுரண்கனலு - மன்னர்
பருந்தார்படையமருட்பலலார்புகழ
விருந்தாயடைகுறுவார்விண்."

எனப்புறப்பொருள் வெண்பாமாலையில் வருதல்காண்க. (௫௫)

இதுவுமது.

வெங்கட்கரிகடிதூந்திடவிண்ணத்தெழுமவுண
ரங்கைப்பிடியெஃகத்துடனணைகின்றமைகாணூ
நங்கட்கிடர்புரிவானிவணணுகுற்றனரொன்னூ
வுங்கட்செறிவிண்ணோரிரிவுற்றாருளமஞ்சி.

(இ-ள்.) வெங்கண் கரி கடிது உந்திட விண்ணத்து எழும் அவுணர்-கொடியகண்களையுடையயானைகள்விரைந்துசெலுத்திவானிற் போர்க்கெழும்அசுரர்கள், அங்கை பிடி எஃகத்துடன் அணைகின்றமை காணூ- அழகியகையிற்பிடித்தவேலோடுவருதலைக்கண்டு, நங்கட்கு இடர்புரிவான் இவண் நணுகுற்றனர் என்னூ - நமக்குத்துன்பஞ்செய்ய இவ்விடத்துவந்தனரொனக்கருதி, உங்கண் செறிவிண்ணோர் உளம்அஞ்சி இரிவுற்றார் - அவ்வானில்நெருங்கியதேவர்கள்மனநடுங்கிஅங்குநின்று நீங்கினர்.

உந்திடசெய்தெனெச்சத்திரிபு. (௫௬)

தெவ்வட்டழல்படைவெய்யவர்விண்ணிற்செலவுந்துங்
கௌவைக்கரிபிளிறிக்கடமொழுகப்புவிவீழ்வ

வெவ்வப்படவலனைத்தெறுமிறைபேவலின்எழிலி
வெவ்விற்படைமாயற்கொருதுணையாய்வரல்வீழும்.

(இ-ள்.) தெவ் அட்டு அழல் படைவெய்யவர் விண்ணில் செலல உந்தும் களை கரி - பகைவரைக்கொன்று கோபிக்குமாயுதங்களையேந்திய அசுரர்கள் வானிற்செல்லநடத்தும் ஆரவாரத்தையுடைய யானை, பிளிகடம் ஒழுக புவி வீழ்வ - இளைத்து மதஞ்சிந்தநிலவுலகின்மேல் வீழ்தல், வலனை எவ்வப்பட தெறும் இறை ஏவலின் - வாலாசுரனைத் துன்பப்பட உயிர்வாங்கிய இந்திரனுடையவேவலால், எழிலி வெவ்விற்படை மாயற்கு ஒருதுணையாய வரல்வீழும்-மேகமானதுகொடியவிற்சேனையையுடைய திருமாலுக்கு ஒருதுணையாயவருதலையொக்கும்.

உவமைக்கும்பொருளுக்கும் ஒற்றுமைஉண்மையால் முழங்குதலும் ஒலித்தலும் மேகத்திற்குக்கொண்டு ஒப்புமைகூட்ட வுவமையணியாகக்கொள்க. (௫௭)

ஒருவன்றிறலவுணன்கதமுடனூக்கியபரிமா
பெருவிண்மிசையெய்திசுழல்காற்பட்டுழல்பெற்றி
வருவெங்கதிர்மான்றேர்விசையிற்றப்பியவாசி
தெருமந்தினங்காணுதவணுழிதந்தெனத்திகழும்.

(இ-ள்.) ஒருவன் திறல் அவுணன் கதம் உடன் ஊக்கியபரிமா-ஒப்பில்லாதவலிமைவாய்ந்த ஓரவுணன்கோபத்தொடுசெலுத்தியகுதிரையானது, பெருவிண்மிசை எய்தி சுழல்கால் பட்டு உழல் பெற்றி - இடம்பரந்தஆகாயத்தின்மேலடைந்துஅங்குள்ளசுழல்காற்றிலகப்பட்டுழலுந்தன்மை, வரு வெங்கதிர் மான் தேர் விசையில் தப்பியவாசி-உதித்தசூரியனதுகுதிரைபூட்டியதேரின்விசையால் அத்தேரினின்றும்பூட்டுவிட்டகுதிரை, தெருமந்து இனம் காணுது அவண உழிதந்தால் என்ன திகழும்-வருந்தித்தனதினத்தைக்காணது அவ்விடத்திற்சுழன்றாற்போலவிளங்காநிற்கும்.

சூரியன்தேரிற்பூட்டிய குதிரைகளேழாதலால் தேர்விசையிற்பூட்டுவிட்டகுதிரை ஏனைக்குதிரைகளைககாணுதவிடத்துச் சுழலுமாதலால் தேர்விசையிற்றப்பியவாசி தெருமந்தினங்காணுதவணுழிதந்தெனத்திகழும் என்றார். தந்தெனதொகுத்தல் விகாரம். (௫௮)

இதுமவுது.

துன்னுகுருதித்தசைவழுக்கிவிழுசூரர்
வெந்நிடைமதக்களிறுகுத்துவெண்மருப்பு
முன்னுறவுரீஇநிமிரவமைந்தார்முலைபெற்ற
தென்னெனவரம்பையர்மருட்கையினிசைப்பார்

(இ-ள்.) துன்னு குருதித் தசை வழுக்கி விழு சூரர் வெந் இடை-நிலத்திற்செறிந்தஉதிரம்படிந்ததசையால்வழுக்கிவீழ்ந்த அவுணவீரர்களினதுமுதுகினிடத்து, மதம களிறு குத்து வெள் மருப்பு முன் உரீஇ நிமிர்வ-மதத்தையுடையயானைகள்குத்திய வெள்ளிய கொம்புகள்மாரிபிற்பொருந்த வருவிமேலேவிளங்குதலை, மைந்தர் முலைபெற்றது என்என அரம்பையர் மருட்கையின் இசைப்பார்-புருடர்கள்நம்மைப்போலமுலைகளைப்பெற்றது யாதுகாரணமென்றுவானில்நெருங்கிய அரம்பையர்கள்மயங்கிக்கூறுவார்கள்.

வெந் எனக்கூறிப் பின்னர் முன்னென்றமையால்மார்பமென்றும், முதுகிற்குப்பின்னெனவழங்கும்வழக்கால். முதுகிற்பட்டு மார்பிலுருவியயானைக்கொம்பினையரம்பையர்முலையெனக்கருதிமயங்கினமையால் மயக்கவணி. (௫௯)

அட்டகல்கழன்மறவராகமிசையெஃகம்
பட்டபுழைநின்றிழிவபாய்குருதிவெள்ள
மொட்டலரையானுயிர்குடிப்பலெனவொல்லை
யுட்டிகழ்மறக்கனலவெளிப்படுவதொக்கும்.

(இ-ள்) அட்டு அழல் கழல் மறவர் ஆகம் மிசை-பகைவரைக்கொன்றுகோபிக்கும் வீரகண்டைகட்டியவீரர்துமார்பினைமேல், எஃகம் பட்ட புழை நின்று பாய்குருதி வெள்ளம்இழிவ - வேல்பட்டுருவியதொளையினின்றுபரவிய உதிரம்வெள்ளமவழிதல, உள் திகழ் மறம் கனல்-அவர்கள்மனத்தில்விளங்கும்வீரமெனனுமக்கினி, ஒட்டலரையான் உயிர் குடிப்பல் என ஒல்லை வெளிப்படுவது ஒக்கும்-பகைவர்களையானே உயிர்பருகுவனென்றுவிரைந்து வெளிப்படுதலையொக்கும்.

வீரம்செந்நிறமுடைமையால் மார்பினின்ற உதிரமொழுகுதலைவீரம்வெளிப்படுவதொக்கும் என்றார். இது பண்புபற்றிய உவமையணி. (௬௰).

கடுங்களிறுகைக்கதைசுழற்றியெறிகாற்றேர்க்
கொடிஞ்சியினிரைத்தகுருமாமணிகளுக்க
வடும்படைவலத்தினர்தெழித்தெழுமதிர்ப்பி
னெடுங்ககனமீனிரைநிலத்துகுவமானும்.

(இ-ள்.) கடும்களிறு கைக்கதைசுழற்றி எறி - கண்டோர்க்குஅச்சமுறுத்தும் யானைகள்துதிக்கையிலேந்திய தண்டாயுதத்தைச்சுழற்றியெறிதலால், கால்தேர் கொடிஞ்சியின் நிரைத்த குருமாமணிகள் உக்க-உருளமைந்ததேர்மொட்டில்நிரைபடப்பதித்த நிறந்தங்கியபெரிய இரத்தினங்கள்சிந்துதல், அடும்படை வலத்தினர் தெழித்து எழும் அதிர்ப்பின் நெடும் ககனம் மீன் நிரை நிலத்து உகுவ மானும் - கொல்லும்படைக்கலத்தின் வெற்றிவாய்ந்தோர் உரப்பியெழும் அதிர்ச்சியால்பரந்த ஆகாயத்திலுள்ளநக்ஷத்திரவரிசைகள்நிலவுலகிற் சிந்துதலையொக்கும்.

உக்க உகுவ என்னும்பலவின்பாற் படர்க்கைவினைமுற்றுகள் பெயராய்த்தொழில்மேனின்றது. (௬௧)

நீள்கொடிமிசைத்துகிலனைத்தினுநெடுங்கோல்
வாளிகள்பொதிந்தவைசிதர்ந்துவியல்வானின்
மீளிகளதிர்ப்பினுயர்விண்மிசையதாருத
தாளதிரவுக்கதழைபோன்றனபறப்ப.

(இ-ள்.) நீள் கொடி மிசை துகில் அனைத்தினும் நெடும் கோல் வாளிகள் பொதிந்து-நீண்டகொடியிலுள்ளஆடைகள்முற்றிலும் நெடியஅம்புகள்பொதிதலால், அவைசிதர்ந்து பறப்ப-அக்கொடிச்சீலைகள்கிழிபட்டுப்பறத்தல், வியல் வானின் மீளிகள் அதிர்ப்பின்-பரந்தமேகம்போலவீரர்கள்முழங்கும்முழக்கால்,உயர் விண்மிசைய தாரு தாள் அதிர உக்க தழைபோன்றன - விண்ணுலகிலுள்ளகற்பகவிருக்ஷத்தின்தூரதிரச்சிந்தியதழைகளையொத்தன.

பறப்பதொழின்மேனிற்றலால் வினைமுற்றுப்பெயர். (௬௨)

கைப்படையிழந்தவரெதிர்ந்தவர்கடாவு
மெய்ப்படுபெருமபடைபறித்தெதிர்விடுப்பா
ரெப்பொருளுமற்றழியுமேதிலர்கணல்கு
மப்பொருள்கொளேங்களெனுமானமுடையார்போல்.

(இ-ள்.) எப்பொருளும் அற்ற உழியும் - எல்லாப்பொருளுந்தீர்ந்தவிடத்தும், ஏதிலர்கள் நல்கும் அப்பொருள் கோளேங்கள் என்னும் மானம் உடையார்போல் - அயலார்கொடுக்கும் அந்தப்பொருளைநாங்கள் கொள்ளோமென்னும் மானத்தையுடையவரைப்போல, கைப்படை இழந்தவர் (தம்மோடெதிர்ந்தார்மேல்) கையிலுள்ள ஆயுதங்களைவீசி இனிவருவோர்மேலெறிதற்கு ஆயுதமில்லாதவீரர்கள், எதிர்ந்தவர்கடாவும் மெய்படு பெரும்படை பறித்து எதிர்கொடுப்பார் - முன்னெதிர்ந்தோர்வீசிய தமது தேகத்திற்றைத்தபெரியவேற்படையைப்பறித்து எதிரேவீசுவார்கள்.

எதிர்ந்த பகைவர்மேல் தமது கையிலுள்ள ஆயுதங்களைப் போக்கி இனிவரும் பகைவர்மேல் எய்தற்குஆயுதமின்மையால், இதற்குமுன் தன்தேகத்தில் தைத்து நுழைந்த ஆயுதத்தைநோக்கிப் பறித்தெறிந்தனனெனக் கூறுதலால். இது தும்பைத்திணையுள்வந்த நூழிலாட்டுத்துறை. இதனை, —

"மொய்யகத்துமன்னர்முரணினியென்னுங்கொல்
கையகத்துக்கொண்டான்கழல்விடலை—வெய்ய
விடுசுடர்சிந்திவிளையகலம்போழ்ந்த
படுசுடரெஃகம்பறித்து"

எனவரும் புறப்பொருள்வெண்பாமாலையாலுணர்க. (சுங)

வீடினர்வயப்பொருநர்வீடினவிபங்கள்
மூடினநிலங்குருதிமூடினபிணங்கள்
கூடினகருங்கொடிகள்கூடினபருந்து
மாடினமகிழ்ந்தலகையாடினகவந்தம்.

(இ-ள்.) வயம்பொருநர் வீடினர் - வெற்றியையுடையபோர்வீரர்கள் இறந்தார்கள், இபங்கள் வீடின - போர்க்கெதிர்ந்தயானைகளும்இறந்தன, நிலம்குருதிமூடின - நிலவுலகை அவற்றினின்றுமிழிந்தவுதிரவெள்ளமூடின, பிணங்கள்மூடின - பிணங்களுமூடின, கரும்கொடிகள் கூடின - (அவற்றின் றசையையுண்ண) கரியகாக்கைகளும்நெருங்கின, பருந்தும்கூடின-பருந்துகளும்நெருங்கின, மகிழ்ந்து அலகை ஆடின-மகிழ்கூர்ந்துபேய்க்கூட்டங்களும் துணங்கையாடின, கவந்தம் உம் ஆடின - குறைத்தலைகளும்ஆடின.

இபங்கள், பிணங்கள், கொடிகள், பருந்துகள், அலகைகள் இவற்றினிறுதியில் எண்ணும்பொருளில்வந்த இறந்ததுதழீஇய எச்சவும்மைகள்தொக்குநின்றன. (சுச)

எங்கணுநிணங்குடரிறைச்சிகொழுமூளை
யெங்கணுமுரிந்தசிலைவாள்பலகையெஃக
மெங்கணுமிறுத்தகிடுகச்சுருள்கொடிஞ்சி
யெங்கணுமுடித்தலைநிமிர்ந்தனவிடங்கள்.

(இ-ள்.) எங்கணும் நிணம்குடர் இறைச்சி கொழுமூளை - எவ்விடத்தும் நிணமும்குடரும்இறைச்சியும்கொழுவும்மூளையும், எங்கணும் முரிந்தசிலை வாள் பலகை எஃகம் - எவ்விடத்தும் முறிபட்டவில்லும்வாளும்கேடகமும்வேலும், எங்கணும் இறுத்த கிடுகு அச்சு உருள் கொடிஞ்சி-எவ்விடத்தும்முறிபட்ட தேர்மரச்சுற்றும்மொட்டும், எங்கணும் முடித்தலை - எவ்விடத்தும்மகுடமணிந்ததலைகளும், இடங்கள் நிமிர்ந்தன - இடங்கள்தோறும் இவ்வாறுநிறைந்தன.

கொழு என்பது தசையில் ஒருவகை. "குடருங்கொழுவுங்குருதியுமென்பும்" எனவருதலாலுணர்க. (சுஇ)

பிணங்களொடயர்ந்துவிழுபெற்றியரும்வீழ்தோட்
கணங்களொடுதண்டமுமவிசித்ததடிவள்வார்
குணங்களொடுபுல்லியகொழுங்குடருமங்கேழ்
நிணங்களொடுபன்மணியுநீத்தறியலாகா.

(இ - ள்) பிணங்களொடு அயர்ந்துவிழு பெற்றியரும் - பிணங்களோடுஅவை ற்றைக்கண்டுசோர்ந்து ஒருசேரவீழுந்தன்மையரையும், வீழ் தோள் கணங்களொடு தண்டமும் - அறுபட்டதோள்கூட்டங்களோடும்வீழுந்தண்டாயுதங்களையும், தடிவி சித்த வள்வார் குணங்களொடு - வில்லிற்கட்டியநெருங்கியவாரும் நாணுமாகியஇ வைகளோடு, புல்லியகொழுங்குடர் உம்-தழுவிய கொழுவியகுடர்களையும் அம்கேழ் நிணங்க ளொடுபல் மணியும்-அழகிய நிறம்வாய்ந்த நிணங்களோடுபலமணியையும், நீத்து அறியல் ஆகா - வேறுபிரித்துஅறியமுடியா.

இவைகள்தம்முள் ஒத்திருத்தலால் நீத்தறியலாகா என்றார். (சுசு)

மண்ணிடமெலிந்ததுபிணக்குவையின்வாளோ
னண்ணிடமெலிந்ததுடல்விட்டுறுநர்போழ்ந்து
விண்ணிடமெலிந்ததவர்துன்னிமிடைவோரை
யெண்ணிடமெலிந்தனர்விசும்பினிமையாதார்.

(இ - ள்,) பிணக்குவையின் - பிணக்குப்பல்களால், மண் இடம் மெலிந் தது - நிலவுலகமானதுசுமக்கலாற்றாது வலிகுன்றியது, உடல்விட்டு உறுநர் போழ் ந்து - தமதுசரீரத்தை இங்குவிட்டுவீரசுவர்க்கம்புகும்வீரர் தன்னைப் பிளந்துசெ ல்லுதலால், வாளோன் நண் இடம் மெலிந்தது- சூரியன்பொருந்தியமண்டிலம்வலி குன்றியது, அவர் துன்னி - சூரியமண்டிலம்பிளந்துசென்ற அவ்வீரர்கள்நெருங்குத லால், விண் இடம் மெலிந்தது-வீரசுவர்க்கமிடமின்றியொழிந்தது, மிடைவோரை - அங்கு அடைந்தவரை,விசும்பின் இமையாதார் எண் இடம்மெலிந்தனர் - அவ்வீர சுவர்க்கத்தில்வசிக்கும்தேவர்கள்அளவறுத்துக்கூறவன்மையில்லாதவராயினர்.

வீரசுவர்க்கம்புகும்வீரர் சூரியமண்டிலத்தைக்கிழித்து ஒளிவாய்ந்து செல்லுத லால் வாளோனண்ணிட மெலிந்துடல்விட்டுறுநர்போழ்ந்து என்றார். போழ்ந்து, துன்னி, காரண காரியப்பொருளில்வந்த இறந்தகாலவினையெச்சங்கள். (சுஎ)

மிடைந்துசமரின்னணம்விளைத்துழியிசைத்தேன்
குடைந்ததொடைவல்லவுணவீரர்வலிகுன்றி
யுடைந்தனர்நடுங்கினரொடுங்கினர்சிதர்ந்தா
ரிடைந்தனர்பெயர்ந்தனரிரிந்தனர்களெங்கும்.

(இ-ள்.) மிடைந்துசமர் இன்னணம் விளைத்தஉழி- இருவகைச்சேனைகளும் போர்த்தொழிலில் இவ்வாறுபொருதவிடத்து, இசை தேன் குடைந்த தொடைவல் அவுணர் வீரர் வலி குன்றி-இசைபாடும்வண்டுகள்மூழ்காநின்ற்கிளரும்மலராற்றொடுத்தமாலை யையணிந்த அசுரவீரர்களும்தமதுவலிமைகுன்றி,எங்கும் உடைந்தனர் நடுங்கினர் ஒடு ங்கினர் சிதர்ந்தார்,எங்கும்சிலர்புறங்கொடுத்தார்கள், சிலர்நடுங்கினார்கள்,சிலர்ஒடுங்கி னார்கள்,சிலர்சிதறியோடினார்கள், இடைந்தனர் பெயர்ந்தனர் இரிந்தனர்கள் -சிலர்பி ன்னிட்டார்கள், சிலர்போர்க்களத்தினின்றுபெயர்ந்தார்கள், சிலர்போர்த்தொழிலைக் கைவிட்டார்கள். (சுஅ)

தரவுகொச்சகக்கலிப்பா.

கள்ளவிழுமலர்வாவித்துவரைக்கோன்கடற்சேனை
மள்ளர்படைக்கல்லெறியான்வலலாண்மைக்குடமுடைய
வுள்ளிருந்தஞண்டெனனிற்றனித்தனியேயிரிந்தோடி
நள்ளலான்பெருஞ்சேனைநகர்நோக்கிநடந்தனவால்.

(இ-ள்.) கள் அவிழும்மலர் வாவி துவரை கோன்கடல் சேனை மள்ளர் படைகல் எறியான் - தேனொழுகுமலர்ந்த தாமரைமலர்செறிந்ததடாகஞ்சூழ்ந்த துவரைப்பதிக்கிறைவனுகியகண்ணனது கடல்போன்றசேனாவீரர்கள்எறிந்தஆயுதமாகியகல்லெறியால், வல் ஆண்மை குடம் உடைய - வன்மைவாய்ந்தவீரமென்னுங்குடம்உடைபட உள் இருந்த ஞண்டுகளின் - அக்குடத்திலிருந்தநண்டுகளைப்போல, நள்ளலான் பெருஞ் சேனை-வாணாசுரனதுபெரியசேனை, தனித்தனியே இரிந்துஓடி நகர்நோக்கி நடந்தன-தனித்தனியே போர்த்தொழிலைகைவிட்டுப்புறங்காட்டியோடிச்சோணிதபுரத்தை நோக்கிநடந்தன.

கண்ணன்சேனாவீரர்ஆயுதத்தைககல்லாகவும், வாணாசுரனதுசேனாவீரர்கள்நண்டுகளாகவும்,அவர்களாண்மையைககுடமாகவும், அக்குடமுடைந்தவழிஅதனுளிருந்தநண்டுசிதறித்தனித்தனியோடுதலபோல அசுரனபெருஞ்சேனாவீரர்கள் தமது ஆண்மை கெடச்சிதறிப்புறஙகாட்டியோடுதலாகவும் ஒப்புமைகூறுதலால்ஒப்புமைக்கூட்டவுவமையணி. (௬௯)

போர்தாங்குமறவீரர்பின்முடுக்கிப்போதராலுந்
தார்தாங்கிமுதலவாய்நற்கடைமன்னுதவளமதிக்
கூர்தாங்குமொருகோட்டுகுஞ்சரப்புத்தேள்காணூஉச்
சூர்தாங்கிவருபடையைத்தொலைத்துழக்கிச்சவட்டினான்.

(இ - ள்.) போர்தாங்கும் மறவீரர் பின் முடுக்கி போதராலும் - போர்த்தொழிலைத்தாங்கும்வெற்றிவாய்ந்தகண்ணனசேனாவீரர்களவாணாசுரன்சேனாவீரர்களைப்புறங்கண்டுதுரத்திச்செல்ல, தார் தாங்கி முதல் வாய் நல் கடை மன்னும்தவளம் மதிகூர்தாங்கும் ஒருகோடுகுஞ்சரபுத்தேள்காணூஉ-வெற்றிமாலைதாங்கிமுதல்வாய்தலில் நிலைபெற்றவெள்ளிய இளஞ்சந்திரனையொத்த கூர்மைவாய்ந்தஒருகொம்பினையுடைய விநாயகக்கடவுளதனைநோக்கி,சூர்தாங்கி வருபடையைதொலைத்து உழக்கிச வட்டினான்-கண்டோரஞ்சுதலைமேற்கொண்டுபோர்க்குவரும்கண்ணன் சேனாவீரர்களைப்புறங்கண்டுகலக்கிஉயிர்வாங்கினான். (௭0)

கண்ணனுமற்றினியென்னேசெயலென்றுகடுகச்சென்
றுண்ணமைமந்தபாலடிசில்கனிவருக்கமுறுசுவைய
பண்ணியங்களனைப்பலவுமமுதுசெயப்படைத்திறைஞ்ச
வண்ணல்வயப்பகட்டேந்தலத்தொழிலின் மகிழ்ந்திருந்தான்.

(இ-ள்,) கண்ணனும் மற்று இனி என்னே செயல் என்று கடுக சென்று- கண்ணமூர்த்தியும்வேறேஇனிநாம்செய்யுஞ்செயலென்னவென்று முதல்வாய்தலில்விரைந்துசென்று, உண் அமைந்தபால் அடிசில் கனிவருக்கம் உறுசுவைய பண்ணியங்கள் எனைபலவும் அமுதுசெய படைத்து இறைஞ்ச - உண்ணவமைந்தபாற்சோறும்கனிவருக்கங்களும் மிக்கசுவையமைந்த பண்ணியங்களுமுதலியமற்றைச் சிற்றுண்டிகளையும் திருவமுதுசெய்யப்படைத்து வணங்க, அண்ணல் வயம் பகடு எந்தல் அத்தொ

றிலில் மகிழ்ந்திருந்தான் - பெருமைவாய்ந்த வெற்றியையுடைய யானைமுகக்கடவுள் அதைத்திருவமுதுசெய்யும் அத்தொழிலில் களிகூர்ந்தனர்.

இதனால் மூத்தபிள்ளையார் அடியவர்செய்யும் நைவேத்தியத்தால் மகிழ்கூர்ந்து வேண்டியாங்குவரம் அருள்வனென்பது போதரப்பட்டது. (௭௧)

இதுகண்டுமற்றிரண்டாங்கடைவைகுமிளந்தோன்ற
லெதுமைந்தன்வருகென்றுசிலைவாங்கியேற்றெழலு
மதுவொன்றுமலர்த்துளவோன்பூசனையான்மகிழ்விப்ப
வதுகண்டுமகிழ்ந்திருந்தானறுமுகப்பண்ணவனும்.

(இ-ள்.) இதுகண்டு மற்று இரண்டாம் கடைவைகும் இளந்தோன்றல் எது மைந்தன் வருக என்று சிலைவாங்கி ஏற்று எழலும்-கண்ணன்சேனைவருதலைக்கண்டுமுதல்வாயிலொழிய இரண்டாம்வாயிலிலெழுந்தருளிய இளையபிள்ளையார் எதுகுலத்திற் றோன்றிய கண்ணனே போர்க்குவருக என்றுவில்லினைவளைத்து எதிர்த்துப்போர்க்கெழ, மது ஒன்று மலர் துளவோன் - தேன்சிந்தும் துளபமலர்மாலையையணிந்த கண்ணன், பூசனையால் மகிழ்விப்ப - பூசித்தலால்மகிழ்கூரச்செய்ய, ஆறுமுகப்பண்ணவனும் அதுகண்டு மகிழ்ந்திருந்தான்-ஆறுதிருமுகங்களையுடைய முருகக்கடவுளும் அக்கண்ணன்பூசித்தலைக்கண்டுமகிழ்கூர்ந்திருந்தனன்.

இதனால் முருகக்கடவுள் அடியர்செய்யும்பூசனையையுவந்து வேண்டியாங்கருள்வனென்பதுபோதரல்காண்க. (௭௨)

இருவர்களும்விடையளிப்பவெழின்மூன்றாங்கடைநண்ணி
மருமலர்த்தாரக்கருங்கூந்தன்மலைமகளைக்கண்டிறைஞ்சித்
திருவருள்பெற்றினிதேகத்திகழ்நாலாங்கடைமேவு
முருசெழுவெஞ்சினவெள்ளேறுயர்த்தபிரான்கண்டனனால்.

(இ-ள்.) இருவர்களும் விடைஅளிப்ப எழில் மூன்றாம் கடைநண்ணி-மூத்த பிள்ளையாரும்இளையபிள்ளையாருமவாணனோடுபோர்செய்யவிடைதந்தருளஅழகியமூன்றாம்வாயிலையடைந்து, மரு மலர் தார் கருங் கூந்தல் மலைமகளை கண்டு இறைஞ்சி - வாசனைவீசும் மலர்மாலையையணிந்த கரியகூந்தலையுடைய உமையம்மையைக்கண்டு வணங்கி, திருவருள்பெற்று இனிது ஏக-உமையம்மையின்திருவருள்பெற்று அவ்வாயிலைக்கடந்து தடையின்றிச்செல்ல, திகழ் நாலாம் கடை மேவும் - விளங்கும்நாலாம் வாயிலிலெழுந்தருளிய, உரு செழு வெம் சினம் வெள்ஏறு உயர்த்தபிரான் கண்டனன் கண்டோர்க்கு அச்சமுறுத்தும்கொடியகோபத்தையுடைய இடபத்தைக்கொடியிலுயர்த்தருளியசிவபெருமான்கண்டருளினன்.

உமையம்மைஅனைத்துயிர்க்கும்அன்னையாதலால்தன்னைவணங்கும்அடியவர்க்குஅருள்செய்வாளென்பார் மலைமகளைக் கண்டிறைஞ்சித்திருவருள்பெற்று எனக் கூறினார். (௭௩)

முந்தைநாண்மைநாகமுதுநாகத்தருந்தவஞ்செ
யிந்தநாரணற்கெம்மான்யானேவந்துடன்றூலு
மைந்துமிகுளுநாட்பின்னண்வாகைகீபெறுகென்னத்
தந்தவரம்பொய்யாமைபாதுகாத்தற்பொருட்டு.

(இ-ள்.) முந்தை நாள் மைநாகம் முது நாகத்து அருந்தவம் செய் இந்த நாரணற்கு - முன்னாளில் மைநாகமென்னும்பெயர்வாய்ந்தமலையில் செய்தற்கரிய தவத்தைச்செய்த இந்தத்திருமாலாகிய கண்ணமூர்த்திக்கு, எம்மான் - எமதிறைவனாகிய

சிவபெருமான், யானேவர்து உடன்றாலும்—யானேநின்னொடுவந்துபோர்செய்தாலும், மைந்து மிகும் ஞாட்பின் கண் வாகைபெறுக நீ என்ன—வலிமைமிக்க போரின் கண்நீயேவெற்றிமாலைபெறக் கடவாயென்று, தந்தவரம் பொய்யாமை பாதுகாத்தற் பொருட்டு—அன்றுதந்தருளியவரம் பொய்க்காமல் இன்றுபாதுகாத்தற்கு.

பதினாயிரந்தேவவருடம் மைநாகபருவதத்தில்திருமாலிருந்துதவஞ்செய்தகாலை யில்சிவபெருமான்காட்சிதந்துவேண்டியாங்கருளினனென்பதுமுன்னர்க்காண்க. இது பின்வருஞ்செய்யுளோடு முடிதலிற் குளகம். (எச)

பினாகநெடுஞ்சிலையேந்தியெதிர்நிற்பப்பெருந்திருமா
லனாதியாயனந்தமாயானந்தமாயொளியாய்
மனாதிகளுக்கெட்டாதவான்கருணைப்பரம்பொருளைத்
தனாதுவிழிகளிகூரக்கண்டெய்தித்தாழ்ந்தெழுந்தான்.

(இ-ள்.) பினாகம் நெடுஞ் சிலை ஏந்தி எதிர் நிற்ப—பினாகமென்னும் பெயர்வாய்ந்தநெடியவில்லினையேந்திச்சிவபெருமானெதிரேநிற்க, பெருந் திருமால்—பெரியதிருமாலாகியகண்ணமூர்த்தி, அனாதியாய்—தனக்கோர்முதலில்லாதவனாய், அனந்தமாய்—இறுதியில்லாதவனாய், ஆனந்தமாய் — அடியவர்க்குப்பேரின்பந்தரும் இன்பவடிவாய், ஒளியாய்—ஒளியுள்ள பொருள்களுக்குஒளிதருவோனாய், மனாதிகளுக்குஎட்டாதவான் கருணை பரம் பொருளை—ஏனையோர்மனவாக்குக் காயங்களுக்கு அதீதமாகிய பெரியகருணைவடிவாயுள்ள சிவபெருமானை, தனாது விழி களி கூர கண்டு எய்தி தாழ்ந்து எழுந் தான்—தனது கண்களிகூரத்தரிசித்து அருகணைந்து வணங்கி எழுந்தனன்.

திருமாலுக்குத்தந்தவரத்துள்நான்வந்துநின்னொடுபோர்செய்யினும் நீயேவெல் வாயென்று அன்றருளியவரம்பொய்க்காமல்இன்றுபலர்க்கும் உணர்த்தினனென்பது தோன்ற யானேவந்துடன்றாலும் ஞாட்பின்கண் வாகை நீ பெறுகென்னத்தந்தவரம் பொய்யாமைப்பாதுகாத்தற்பொருட்டுப்-பினாகநெடுஞ் சிலையேந்தி யெதிர்நிற்பஎன்றார். யாவருக்கும் முன்னோனென்பார் அனாதியாயெனவும், ஏனையோர்க்குஇறுதிசெய்யுந னக்குஓர் இறுதிசெய்வோன்இன்மையால்அனந்தமாய்எனவும், அடியவர்க்குஎன்றும் இன்பமேவிளைத்து நிற்றலால் ஆனந்தமாய்எனவும், சூரியன்முதலியஒளியுள்ளபொருள் களுக்கு ஒளிதந்துநிற்கும் ஒளிவடிவாய்நிற்றலூால்ஒளியாயெனவும், மனமுதலியதத்து வங்களைக் கடந்துநிற்போனாதலால் மனாதிகளுக்கெட்டாத எனவும், அதீதப்பட்டு நிற்பி னும் ஆன்மாக்களிடத்துப்பெருங்கருணை யாளனாதலால்வான்கருணைப் பரம்பொருளை எனவுங் கூறினார். (எடு)

நாத்தழும்பப்புகழ்பாடிநளினமலர்க்கைகூப்பிச்
சோத்தெந்தாயெனச்சொல்லியிமையவர்க்கேயருள்சுரந்து
காத்தருளுங்கடனுடையாய்கண்ணோடாவவுணர்குலத்
தீத்தொழிலான்றனைவெல்லத்திருவருள்செயெனக்கென்றான்.

(இ-ள்.) நா தழும்ப புகழ் பாடி நளினம் மலர் கை கூப்பி—நாத்தழும்பேறப் புகழ்ந்துபாடித்தாமரைமலர்போன்றகைகளைச்சிரமேற்குவித்து, எந்தாய் சோத்தம் என்ன சொல்லி-என்றந்தாய்சோத்தமெனவாழ்த்தி, இமையவர்க்கே அருள்சுரந்துகாத் தருளும் கடன் உடையாய்—தேவர்களுக்கே அருள்சுரந்து காத்தருளும்கடனையுடையாய், கண்ணோடாத அவுணர் குலம் தீ-தொழிலான் தன்னைவெல்ல—(அத்தேவர் களிடத்து) கண்ணோட்டஞ்செய்யாதஅசுரர்குலத்திற்றோன்றியகொடுந் தொழிலையு

டைய வாணனைவெல்ல, எனக்கு திருவருள் செய் என்றான்—எனக்குத்திருவருள் செய் யாயென்று குறையிரந்தான்.

சோத்தம் இழிந்தோர்செய்யும்வந்தனம். அதுசோத்து எனக்கடைக்குறையாய் நின்றது. (எசு)

என்றிரந் துநனிவேண்டுநெடியோனை
குன்றநெடுஞ்சிலைவல்லான்குறுமூரல்காட்டியெமை
வென்றன்றேவாணனைநீவிறல்கொள்வதெம்மோடு

(இ-ள்.) என்று இரந்து நனி வேண்டும் நெடியோனை—என்றுகுறையிரந்து மிகவும்வேண்டும் திருமாலை, குன்றம் நெடும் சிலை வல்லான் எதிர்நோக்கி குறுமூரல் காட்டி—மேருவைநெடியவில்லாக வளைத்தபெருமான் எதிரேகடைக் கணித்துப்புன் முறுவல்செய்து, எம்மை வென்று அன்றே வாணனை நீ விறல் கொள்வது—எம்மை வென்றல்லவா வாணாசுரனைப் பின்புநீ வெற்றிகொள்வது, எம்மோடு மன்ற போர்க்கு எழுக என்ன—எம்மோடு போர்செய்தற்குத்தேற்றமாக வருகவென்றருள, மணிவண் ணன் உளம் நடுங்கி—நீலமணிபோலும் நிறமுடைய கண்ணன் மனநடுங்கி. (எஎ)

என்னருளிச்செய்தவாறெவ்வுயிர்க்குமெளியேற்கு
மன்னவனீநாயனொடுமாறிழைப்பதெனக்கழகோ
உன்னடிக்கீழ்மெய்த்தொண்டுபூண்டுரிமைப்பணிசெய்வேன்
றன்னிடத்திலிவ்வாறோசாமீநின்றிருவருளே.

(இ-ள்.) அருளி செய்த ஆறு என்—தேவரீரருளியவகையாது, எ உயிர்க்கும் எளியேற்கும் நீ மன்னவன்—பிரமன்முதல்புல்லீறாகவுள்ள அனைத்துயிர்களுக்கும் எளி யேனாகிய எனக்கும் நீதலைவன், நாயனொடு மாறு இழைப்பது எனக்கு அழகோ—தலைவனாகிய தேவரீரோடுமாறுபட்டுப் போர்செய்வது எனக்கழகா, உன் அடிக்கீழ் மெய் தொண்டு பூண்டு உரிமை பணி செய்வேன் தன் இடத்தில்—உனது திருவடிக் கீழ்உண்மைத்தொண்டுபூண்டுஉரிமைப்பணிசெய்யாநிற்பேனிடத்தில், சாமீநின் திரு வருள் இவ்வாறோ—இறைவனேஉனதுதிருவருள்இவ்வண்ணமாயிருந்ததோ.

பிரமன்முதலியவுயிர்களுக்குள்தான்தனுவனாதலில்தன்னைப்பிரிப்பான்எவ்வுயிர்க்கு மெனவும், தனக்குநீதலைவனாயுள்ளாயெனென்பான்எளியேற்குமெனவும், யாங்கள் பசு நீ பதி என்பான் மன்னவனீ எனவும், நீபதியாதலால் நின்னோடு பசுவாகிய யான்போர் செய்தல்அழகோஎன்பான்நாயனொடுமாறிழைப்பதெனக்கழகோஎனவும், ஏனையோர்நின் திருவடிக்குப் புறத்தொண்டுசெய்வோர்யானொருவனகத்தொண்டுசெய்வோன்என்பான் உரிமைப்பணிசெய்வேனெனவும், திருவடிக் கீழ்ப்பட்டதொண்டனிடத்துஇசமானன்மா றுபடுதல்வழக்கோஎன்பான்சாமீநின்திருவருளிவ்வாறோஎனக் கண்ணமூர்த்தி குறையி ரந்தான்எனவுங்கூறினார். (எஅ)

எவவுயிர்க்குந்தான் தலைவனென்றதையுந்தனக்குஇறைவன்தலைவனென்றதையும்.

“ இருமிடைப்பதங்கன்கிளக்குமிவற்றிற்பசுக்குழாம்
மருவுமிவற்றின்மனிதர்களிவவாறேதாரதம்மியத்தா
னொருவர்க்கொருவர்விவேகாதிக்யமுள்ளோராயிருக்கின்றார்
சருவக்கியனாகியசிவனேசாற்றெலார்க்குமதிகனென்பா,”

எனவருஞ்சூதசங்கிதையானும்,
யாங்கள்பசுவென்பதையும் நீ பதியென்பதையும்—
" மறையவன்முதலாநிற்பதீறநாமெவையுமன்னி
யுறைதருபசுக்களாகுமுற்றிடுபசுக்கட்கெல்லா
நிறைதருபதியாயென்றுநிலவியேயுறைதலாலே
யிறைவனைவேதநான்கும்பசுபதியென்றுகூறும்"
எனவரும்வாயுசங்கிதையானுமுணர்க. (எஅ)

எந்தையடியருச்சனையாலெதிர்ந்தாரைப்புறங்காண
மைந்துபெறும்யானின்னோடமரேற்கவல்லுவலோ
பந்தமுறுமுலகனைத்துந்தொழிற்படுத்துநின்னெதிர்நின்
றுய்ந்தவருமுளரேயோவுபநிடதத்தனிமுதலே.

(இ-ள்.) எந்தை அடி அருச்சனையால் எதிர்ந்தாரை புறம் காண மைந்து பெறும் யான்—என்றந்தையேதேவரீர் திருவடியருச்சனையால் என்னொடுபோர்க்கெதிர்த்தவரை முதுகுகாணவலிமைபெறும் யான், நின்னோடு அமர் ஏற்க வல்லுவலோ—உன்னோடு போர்செய்யவன்மையை உடையேனோ, உபநிடதம் தனிமுதலே—வேதசிரசினுள்ள ஒப்பற்றமுதல்வனே, பந்தம் உறும் உலகு அனைத்தும் தொழில் படுத்தும் நின் எதிர் நின்று உய்ந்தவரும் உளரோயோ—பந்தப்பட்ட வுயிர்களனைத்தையுஞ்சிருட்டிமுதலிய தொழிற்படுத்தும் உன்னெதிர்போர்க்குநின்றுபிழைத்தவருமுண்டோ.

மைநாகபர்வதத்திற்பதினாயிரந்தேவவருடந்தவஞ்செய்துபோரிலெதிர்த்தவரைப்புறங்காணச்சிவபெருமானிடத்துவரம்பெற்றோனாதலால்எந்தைஅடியருச்சனையாலெதிர்ந்தாரைப்புறங்காணமைந்துபெறும்யானெனவும், குறைவிரந்தோர்க்கு ஆற்றலளிக்கும்பேராற்றலுடையவனீயாதலால்நின்னோடமரேற்கவல்லுவலோஎனவும், ஆன்மாக்கள் அனாதியேமலச்சிமிழ்ப்புண்டவராதலால்பந்தமுறுமுலகனைத்துமெனவும், அப்பாசப்பிணிப்பினைப்போக்கச்சிருட்டிமுதலியதொழிலினைக்கொண்டருளினையாதலால். தொழிறபடுத்துநின்எனவும், அவ்வளவிலாற்றலுடையநின்வழிநிற்பதன்றி நின்எதிர்நிற்பதொன்றுமின்மையால்எதிர்நின்றுய்ந்தவருமுளரேயோ எனவுங்கூறினான். உலகென்றது உயர்ந்தோர்மேனிற்றலால் ஆன்மாக்களென்றாம்.

ஆன்மாக்கள்அனாதியேமலச்சிமிழ்புண்ட தென்பதையும், அதனைப்போக்கச்சிருட்டியமுதலிய தொழிற்படுத்தியதென்பதையும்.

" நிலவும்பரமவான்மாவைநின்றசீவனறிகலான்
மலரோன்முதற்றுவரமீறுய்மன்னுமெவையும்பசுவாகு
மலகின்மாயாபாசத்தாற்பிணித்தங்கவற்றைநரகிடையும்
விலகியொளிகால்கதியிடையும்வைத்துவிளையாடுவன்சிவனே.
எனவரும்வாயுசங்கிதையானுணர்க. (எகூ)

எண்ணிகந்தவண்டமுழுதொருநொடியிலெரிக்குதவுங்
கண்ணமைந்தநுதலாய்க்குக்கடையேனோரிலக்கன்றே
வண்ணமெலாம்பாங்காணநீநகைத்தமாத்திரையே
யண்ணலார்புரமூன்றுங்கூட்டோடேயழிந்தனவால்.

(இ-ள்.) எண் இகந்த அண்டம் முழுதும் ஒரு நொடியில் எரிக்கு உதவும் கண் அமைந்த நுதலாய்க்கு — அளவிறந்தஅண்டமுற்றையும் ஒருநொடிப்பொழுதில்தீக்

கூட்டிய தீக்கண்வாய்ந்த நெற்றியையுடையவனுக்கு, வண்ணம் எல்லாம் யாம் காண—நிகழ்ந்தசெய்திகளெல்லாம் நான்கண்டுதெளிய, நீ நகைத்த மாத்திரையே—நீ நகைத்தவளவே, அண்ணல் ஆர் புரம் மூன்றும் கூட்டோடே அழிந்தன—பெருமையமைந்ததிரிபுரமூன்றுங்கூட்டோடுசிதைந்தன (ஆதலால்) கடையேன் ஓர்இலக்குஅன்று கடைப்பட்ட யான் ஓர்குறியாவனு.

எல்லாவுயிர்களுக்குமயல்பூட்டும்மன்மதனுடலைநீருக்கிய நுதற்கண்ணுக்கு அண்டமுழுதும் ஓரிலக்கல்லவென்பான் எண்ணிகந்த அண்டமுழுதொருநொடியிலெரிக்குதவும், கண்ணமைந்தநுதலாய்க்கு எனவும், நீறுபட்டமன்மதன் தனதுபுத்திரனுகவிருக்கவும் அவனுக்குஉடல்தரும்வன்மைதனக்கில்லைஎன்பான் கடையேனேரிலக்கன்றே எனவும், திரிபுரம்எரித்தகாலையில்நான்அம்பாகவும், ஊர்தியாகவும்நின்றேனென்பான் வண்ணமெலாம்யாங்காணஎனவும், நின் நுதற்கண்ணன்றிப்புன்முறுவலும் எரிக்குதவுமென்பான்நீநகைத்தமாத்திரையே யாங்காண வண்ணலார்புரமூன்றுங் கூட்டோடேயழிந்தன எனவுங் கூறினர். (அ0)

துரும்பொன்றிற்புத்தேளிர்தருக்கெல்லாந்தொலைவித்தாய்
கரும்பொன்றுசிலையானைநுதல்விழியாற்கனற்றினுய்
சுரும்பொன்றுமலர்ப்பாதப்பெருவிரலாற்சுடரிலங்கை
யிரும்பொன்றுமனத்தானையிடருழப்பக்கண்டனையால்.

(இ-ள்.) துரும்பு ஒன்றில் புத்தேளிர் தருக்கு எல்லாம் தொலைவித்தாய்—நட்டவொருதுரும்பினுல் பிரமன்முதலிய தேவர்களதுஇறுமாப்பையெல்லாம் அழித்தாய், கரும்பு ஒன்று சிலையானை நுதல்விழியால் கனற்றினுய் — கரும்பாகவமைந்தவில்லையுடைய மன்மதனை நெற்றிக்கண்ணுலெரித்தாய், சுரும்பு ஒன்று மலர்பாதம்பெருவிரலால் சுடர்இலங்கை இரும்பு ஒன்று மனத்தானை இடர் உழப்ப கண்டனை—வண்டுகள்படிந்த தாமரைமலரையொத்த திருவடியிலுள்ள பெருவிரலினுல் விளங்கும் இலங்கைக்கிறைவனுகிய இரும்புபோலும வலியமனத்தையுடைய இராவணனைத் துன்பங்கூரக்கண்டருளினுய்.

சிவபெருமான் விசயமெடுத்துக்கூறுவான் இச்செய்யுள்முதல் "நெடுஞ்சடையாய்" என்பதுகாறும் செய்தற்கரியசெய்கையை எடுத்துக்கூறினனெனவுணர்க. இச்செய்யுள்முதலியவற்ருல்வந்தவரலாறுமுன்னரமைந்துகிடைந்தமையை அங்கங்குக்காண்க. இதுசெய்தால்நாம் உயிரிழப்போம்என்பது சிறிதுங்கருதாது ஊழிதோறுங் கும்கயிலையைப்பேர்க்கமுயன்றனனுதலால் சுடரிலங்கை—யிரும்பொன்றுமனத்தானை என்ருர். (அக)

நோனுதகூற்றுவனைநோன்ருளாலுயிருண்டாய்
தேனுடுமலரானைநகநுதியாற்சிரங்கொய்தாய்
மீனுமைபன்றிநரவெறிமடங்கலுலகளந்தான்
ருனுமென்பிறவிகளுந்தண்டிக்கப்பட்டனவே.

(இ-ள்.) நோனுத கூற்றுவனை நோன்தாளால் உயிர்உண்டாய்—திருவடிபரிசிக்கவலியில்லாதஇயமனைத்தவமுயன்றடைதற்கரியதிருவடியினுல்உயிர்பருகினுய், தேன் ஆடுமலரானைநகம்நுதியால்சிரம்கொய்தாய் — வண்டுகள்தேன்பருகச்சுழன்றுதிரியும் தாமரைமலரிலுள்ளபிரமனைநகத்தின் நுனியினுல்தலையரிந்தாய், மீன் ஆமை பன்றி வெறி நரமடங்கல் உலகு அளந்தான் ஆம் என் பிறவிகளும்தண்டிக்க பட்டன—சூர்ம

மும்வராகமும் வெறிவாய்ந்தநரசிங்கமும்உலகினையளந்ததிரிவிக்கிரமமூர்த்தமும் ஆகிய எனதுபிறவிகளும்ஒறுத்தருள்செய்யப்பட்டனவல்லவா.

தக்கன்றன்வேள்வியைநீதரவந்ததனிவீரன்
புக்கன்றியழித்தநாளென்னோடும்புத்தேளிர்
நொக்கன்றுபட்டபாடெடுத்தியம்பிற்சொல்லளவின்
மிக்கன்றுனக்கிவையும்விளையாடற்செய்கையே.

(இ-ள்.) நீ தரவந்த தனி வீரன்—நீ தரவந்தவொப்பிலலாதவீரபத்திரக்கடவுள், தக்கன் தன்வேள்வியை புக்கு அன்று அழித்தநாள்—தக்கனதுவேள்விச்சாலையையடைந்து மனவைரங்கொண்டு அழித்தகாலையில், என்னோடும் புத்தேளிர் நொ கன்று பட்டபாடு எடுத்து இயம்பின் சொல் அளவின் மிக்கன்று—அடியேனாகிய என்னோடும் தேவர்கள்மனம்வருந்திக்கன்றிப் படுந்துன்பத்தை யெடுத்துச்சொல்லின்அச்சொல்லளவின் மேற்பட்டது, உனக்கு இவையும் விளையாடல் செய்கையே—இவையாவும்தேவரீர்செய்யும் சிறுவிளையாட்டாம்.

புக்குக்கன்றி புக்கன்றி எனவந்ததுதொகுத்தல்விகாரம் நொ என்னுமுதனிலைத்தனிவினை எச்சத்தின்மேனின்றது.

அற்றமுறவெகுண்டுவருமடற்கங்கைவீறடக்குங்
கற்றைநெடுஞ்சடையாய்மற்றெனைமுனியக்கருதினையேற்
சற்றுநீமுகநிமிர்த்துநோக்கினதுசாலாதோ
வெற்றிமலர்த்திருக்கரத்துப்படைக்கலமும்வேண்டுமோ.

(இ-ள்.) அற்றம்உறவெகுண்டுவரும் அடல்கங்கைவீறு அடக்குங்கற்றை நெடுஞ்சடையாய்—உலகுநடுக்கமடையக்கோபித்துவரும் வலிய கங்கையின் செருக்கையடக்கும்நெருங்கிய நெடியசடையையுடையாய், என்னைமுனியகருதினையேல்—என்னைக்கோபிக்கத்திருவுளங்கொள்வாயானால், சற்று நீ முகம் நிமிர்த்து நோக்கின் அது சாலாதோ—சிறிது நீமுகநிமிர்த்துப்பார்த்தால் அதுஅமையாதோ, வெற்றி மலர் திருக்கரத்து படைக்கலமும் வேண்டுமோ — வெற்றிவாய்ந்த தாமரைமலரையொத்ததிருக்காத்தில் ஆயுதமும் எடுக்கவேண்டுமா.

தனதுசாங்கங்களாலும், துரும்பாலும்பிறரிறுமாப்பைமாய்த்தருளியவுனக்கு உபாங்கமும்வேண்டுமோஎன்பான் நீமுகநிமிர்த்துநோக்கினது சாலாதோ எனவும், திருக்கரத்துப்படைக்கலமும்வேண்டுமோ எனவுங்கூறினான். (அச)

வடிவாளிவிடையேறுமனைவியெனநின்க்குறுப்பா
மடியேனையெதிர்ப்பதுநின்னருட்பெருமைக்கொல்லுவதோ
குடியோடுமெனையடிமைகொண்டாயின்றெனக்கிரங்காய்
கடியாழிவிடமயின்றகண்டாநின்னடிபோற்றி.

(இ-ள்.) வடி வாளி விடை ஏறும் மனைவிஎன்ன நினக்கு உறுப்பு ஆம் அடியேனை—வடித்தவாளியும் இடபமும் மனைவியுமென நினக்கு உபாங்கமாயமைந்த அடியேனாகியஎன்னை, எதிர்ப்பது நின் அருள்பெருமைக்கு ஒல்லுவதோ—ஒருபொருளாகக்கருதிப்போருக்கெதிர்ப்பது உனதுதிருவருட்பெருமைக்கியையுமா, குடியோடும்என்னை அடிமை கொண்டாய்—என்குடியோடும் என்னையடிமைகொண்டவனே, இன்று எனக்குஇரங்காய்—இக்காலையில் எனக்கு இரங்கியருளாய், கடிஆழி விடம் அயின்ற

கண்டா நின் அடி போற்றி—அச்சமுறுத்தும் கடலிற்றோன்றியவிடத்தை நுகர்ந்தரு ளியகண்டத்தையுடையவனே நின்திருவடிக்குவந்தனம்.

திரிபுரம் எரித்தகாலையில் அம்பாகவும், ஊர்தியாகவும், திருமாலிருந்தானென்ப தும், அந்தகாசுரனுக்கு அஞ்சியதிருமால் பெண்வடிவாய் உமையம்மைபாலிருந்தவழி ச்சிவபெருமான் அத்திருமாலை வலப்பாகங் கொண்டனன் என்பதும் புராணவரலாறு.

அம்பாகக்கொண்டதை ?—

" பொன்னங்குமிமேமிவரைசிலையாய்ச்சேடன்புரிநாணுப்
கன்னித்துளவத்திருநெடுமால்கணையாய்" எனவும்,
திருமாலைவலப்பாலிற்கொண்டருளினமையை,—

" வலப்புறமதனின்மேயவண்டுகண்படுக்குங்கூந்தல்
உலப்பருங்காலாதீதவுருவமாயொளியாயொன்றாய்க்
கலப்பிலவ்வியத்தந்தோன்றுங்காரணமாகியாறு
நலத்தகுகுணக்குன்றாகுநாரணனுகுமன்றே"

எனவும் கூர்மபுராணத்திலும்,

ஊர்தியாகக்கொன்டருளினமையை,—

" சாற்றுமவவிடைக்கேதனைத்தாங்குபேர் - ஆற்றலீந்தசெயலறிந்தல்லவோ - மாற்றலார்புரஞ்செற்றுழிமாயவன் - ஏற்றின்மேனிகொண்டெந்தையைத்தாங்கினன்" எனக் கந்தபுராணத்திலும் வருதல்காண்க. (அ௬)

என்றென்றுபலமுறையுமிரந்திரந் துதொழுதிறைஞ்சுங்
குன்றெடுத்தகுடையானுக்கெங்கோமானிதுகூறு
மன்றநீவெருவலைநின்மனக்கவலையொழிகண்டா
யன்றுனக்குமைநாகத்தளித்தவரமறந்தனையே.

(இ-ள்.) என்று என்று பலமுறையும் இரந்து இரந்து தொழுது இறைஞ்சும் குன்று எடுத்த குடையானுக்கு—என்று என்றுபலதடவையுங்குறையிரந்துகுறையிரந்து தொழுதுவணங்குங் கோவர்த்தனகிரியைக்குடையாகவெடுத்த கண்ணனுக்கு, எம்கோ மான் இது கூறும்—எமதிறைவன் இது கூறியருளுவான், மன்ற நீ வெருவலை—தேற் றமாக நீ அஞ்சுதலொழிக, நின் மனக்கவலை ஒழி—உன் மனத்திலுள்ளதுன்பத்தை யொழியாய், அன்று உனக்கு மைநாகத்து அளித்த வரம் மறந்தனையோ—அக்கா லத்தில் மைநாகபர்வதத்தில் உனக்கு நான்றந்தவரத்தை மறந்தாயோ.

எண்ணிகந்த வண்டமுதலெனக்கூறிய சிவபிரான் விசயந்தோறும் குறையிரத் தலும் வணங்கலுமுடைமையால் என்றென்றுபலமுறையுமிரந்திரந்துதொழுதிறைஞ் சும் எனப்பன்மைப் பொருள்பட அடுக்கிக் கூறினர். (அஎ)

நின்வரவுவாணனுக்குமுன்னரோநிகழ்த்தினம்யா
மன்னவனையினிநீவென்றடல்வாகைபுனைகிற்பாய்
மின்னிமைக்குமணிமார்பவிசையனெடுபுரிவெம்போர்
முன்னெமக்குமுருகவேள்விளையாட்டிற்சிறந்ததால்.

(இ-ள்.) யாம் நின்வரவு வாணனுக்கு முன்னரோ நிகழ்த்தினம்—யாம்நினது வருகையை வாணாசுரனுக்கு முன்னரோ கூறியிருக்கின்றனம், மின் இமைக்கு மணிமார் பஅன்னவனை இனி நீ வென்று அடல்வாகை புனைகிற்பாய்—மின்னல்போல விளங்கு ங்கவுத்துவமணிந்த மார்பையுடையவனே அவ்வாணாசுரனை இனி நீ வென்றுவெற்றி

மாலை புனைவாய், விசையனொடு முன் புரி வெம் போர் எமக்கு முருகவேள் விளையாட்டின் சிறந்தது—அருச்சுனனோடு நாம் முன்புசெய்தகொடிய போர்த்தொழில்முன்பு எமக்கு முருகக்கடவுள்செய்த விளையாடல்போலும் களிசெய்வதாம்.

கைலையின்சாரலில்சிவபெருமானிடத்துப்பாசுபதாஸ்திரம்பெறத்தவஞ் செய்யுங் காலையில், துரியோதனனேவிய மூகனென்னும் அசுரன் வராகவடிவாய்த்தவஞ்செய்யும்அருச்சுனனுயிர்வாங்கச்சென்றகாலையில், சிவபெருமான் திருவுளமிரங்கிவேடுருக்கொண்டுஅவ்வராகத்தின் பின்றொடர்ந்து ஓரம்பினை யேவியகாலையில், தவநிலையிலிருந்த அருச்சுனன்நோக்கி நமது தவத்தினை இது அழிக்குமேயென்று அஞ்சி அவனும் ஓரம்பினையேவ, இவ்வம்புகளால்அவ்வராகம் உயிர்விட்டமையால்இதன்பொருட்டுவேடுருவாய்வந்த சிவபெருமானுக்கும் அவ்வருச்சுனனுக்கும்போர்விளைந்ததென்பதுபாரதலரவாறுதலால்விசயனொடு முன்புரி வெம்போர் எனவும், அவன் தன்பால் பேரன்புடையவனாதலால் அவனொடுசெய்த போர்விளையாட்டுஎனக்கு இன்பந் தந்தமையால் எமக்கு முருகவேள் விளையாட்டிற் சிறந்தது எனவுங் கூறினன். ()

அம்முறையேகணப்பொழுதுநின்னோடமர்புரிகே
மிம்முறைகண்டுலகும்பர்மகிழ்வுறுகவிதுவன்றித்
தெம்மரபிற்செய்கில்லேமஞ்சாதியெனத்தேற்றிக்
கைமுகத்திற்பிடித்திருந்தகார்முகத்தைவணக்கினன்.

(இ-ள்.) அ முறையேகணப்பொழுதுநின்னோடும்அமர்புரிகேம்—அவ்வாறே கணப்பொழுதில்நின்னோடு போர்செய்வேம், இ முறை கண்டு உலகு உம்பர் மகிழ்வுறுக—இப்போர்த்தொழில் முறையைக்கண்டு மண்ணுலகமும் விண்ணுலகமும்மகிழ்ச்சியடையக்கடவன, இதுஅன்றி தெம் மரபில் செய்கிலேம்—இவ்வாறன்றிப்பகைவர் செய்யும் முறையினின்று போர்செய்யேம், அஞ்சாதி என தேற்றி—நீ அஞ்சுதலொழிகஎனஅவன் மனத்தைத் தேற்றுவித்து, கைமுகத்தில் பிடித்திருந்த கார்முகத்தை வணக்கினன்—தனது திருக்கரத்தில் பிடித்திருந்தபினாகமென்னும்வில்லைவளைத்தருளி

நீஎன்னோடு செய்யும்போர்பார்த்தனொடு போர்புரிதல்போலன்றி, பகைவரிடத்துப் புரியும்போர் போலன்றென்பார்அம்முறையே கணப்பொழுது நின்னோடமர் புரிகேம், தெம்மரபிற் செய்கில்லேம் எனவும், எம்பால் நீ தலையன்புடைமையால் அஞ்சாதியெனத் தேற்றி எனவுங் கூறினர்.

அஞ்சாதி இகர விகுதி பெற்றுவந்த வியங்கோள் வினைமுற்று. (அஅ)

உய்ந்தேனெம்பெருமானேயருளாயென்றுரைத்துரைத்து
மந்தாரமணங்கமழுமலரடிகடொழுதிசைந்து
பைந்தாமநறுந்துளவப்பண்ணவனும்பகைமுருக்குஞ்

(இ-ள்.) எம்பெருமானே உய்ந்தேன் அருளாய் என்று உரைத்து உரைத்து— எமது பெருமானே பிழைத்தேன் அருளாயென்று கூறிக்குறையிரந்து, மந்தாரமணம் கமழும் மலர்அடிகள் தொழுது — மந்தாரமணங்கமழும் தாமரைமலரையொத்த திருவடிகளை வணங்கி, இசைந்து—போர்த்தொழிற் கிசைந்து, நறும் துளவம் பைந்தாமம் பண்ணவனும்—நறுமணங் கமழும் துளபமலரானறொடுத்த பசியமாலையை யணிந்ததிருமாலும், பகை முருக்கும் சிந்தாத விறல் சார்ங்கம் சிலைவாங்கி நாண் எறிந்தான்—பகை

வர் உயிர்பருகும் வெற்றி குன்றாத தானேந்திய சார்ங்கமென்னும் வில்லினை வளைத்து க்குணத்தொனி செய்தான். (அகூ)

பவளவெற்பொடுநீலவெற்பெதிர்ந்தெனப்பரூஉக்கை
கவளமால்களிறட்டவரிருவருங்கடுகித்
துவளவார்சிலைவாங்கினர்நாணெறிசும்மை
திவளலுற்றமூவுலகமுஞ்செவிடுறப்பொதிந்த.

(இ-ள்.) பவளம் வெற்பொடு நீலம் வெற்பு எதிர்ந்தால் என்ன—பவளமலையோடு நீலமலைபோர்செய்ய எதிர்ந்தாற்போல, பரூஉ கை கவளம் மால் களிறு அட்டவர் இருவரும் கடுகி—பருத்த துதிக்கையால்கவளங்கவர்ந்துண்ணும் மதமயக்கத்தையுடைய யானையை உயிர்வாங்கிய இருவரும் விரைந்து, வார்சிலை துவள வாங்கினர்—நீண்ட தமது வில்வளைய வளைத்து, நாண் எறி சும்மை—நாணினைத்தொட்டெறிதலால் விளையுமுழக்கம், திவளல் உற்ற மூவுலகமும் பொதிந்த—நடுக்கமுற்ற சுவர்க்கமுதலிய மூன்றுலகமுஞ் செவிடுபடப் பொதிந்தன.

கண்ணன் கஞ்சனேவிய குவலயாபீடமென்னும் யானையினுயிர்பருகினமையாலும், தேவர்முனிவர் வேண்டுகளால்சிவபிரான் கயாசுரன் உயிர்பருகினமையாலும்சவளமால் கரியட்டவரிருவரு மென்றார். (கூ0)

மண்டுமோதையின்மற்றவர்சினக்கனல்புறநீர்
கொண்டவிப்பவான்வழிதிறந்தாலெனக்குலையா
வண்டம்விண்டதுபுடவியும்விண்டதப்பெருநீ
ருண்டல்வேட்கையினுணங்கிவாய்பிளந்தமையொப்ப.

(இ-ள்.) மண்டும் ஓதையின்—எங்கும் பொதிந்த குணத்தொனிகளால், அவர் சினம் கனல்—அவர் கோபாக்கினியை, புறம்நீர்கொண்டு அவிப்ப வான் வழிதிறந்தால் என்ன—புறத்திலுள்ள நீரைக்கொண்டவிக்கவிண்ணுலகமும்மண்ணுலகமும்வழிதிறந தாற்போலவும், உணங்கி—அக்கோபக்கனலால் உடல்கருகி, அ பெருநீர் உண்டல் வேட்கையின்வாய் பிளந்தமை ஒப்ப—அப்பெரியநீரைஉண்ணும் விருப்பால்வாய் திறந்தமையை யொப்பவும், குலையா அண்டம் விண்டது புடவியும் விண்டது—நிலைகுலைந்து விண்ணுலகமும் வாய்திறந்தது மண்ணுலகமும் வாய்திறந்தது.

வானென்றமையால் மண்ணுலகெனக்கொண்டது உபலக்கணம். குணத்தொனிகளால்விண்ணும்மண்ணும்விண்டது அவர்களுக்கெழுந்தகோபக்கனலை நீர்கொண்டவிக்க அவைவாய்விண்டனஎனவும், அக்கோபக்கனலால்கருகியவழித்திறந்தவிண்ணுமண்ணும் அவ்வாட்டந்தீர நீர்பருகுதற்கு வாய்பிளந்ததை யொக்குமெனவும், பலவுவமைதோறும் பலவுவமைச் சொல் தந்து புணர்த்தினமையின் பலவயிற்போலி உவமையணி.

சிலையினாணொலிக்கிளர்ச்சியாற்றிண்புவியதிர்வுற்
றலையுமூதையினுழிமானுடமரம்பறவை
பலவுந்தத்தமுண்மோதுபுதெளிதரப்பயிற்றுந்
தலைவவொப்படியப்படியுலகெனுந்தகுதி.

(இ-ள்.) சிலையின்நாண் ஒலி கிளர்ச்சியால்—வில்லிலெழுந்த குணத்தொனியின் மிகுதியாலும், திண்புவி அதிர்வுற்று அலையும் ஊதையின்—திண்ணிய நிலவுலகு

அதிர்ந்துஅலையுங்காற்றினல், ஆழி மானுடம் மரம் பறவை பலவும்—கடலும் மானுடமும் மரமும் பறவைகளும்ஆகிய பலபொருள்களும், தலைவர் எப்படி அப்படி உலகு என்னும் தகுதி—தம்மையாட்டுந்தலைவர்கள் எவ்வாறே அவ்வாறேஎன்னுஞ்செய்தியை, தத்தம் உள் மோதுபு தெளிதர பயிற்றும்—தம்முள்ளே ஒன்ருெடொன்றுமோதி யாவரும் தெரிந்துய்ய உணர்த்தும்.

விசுவனும் விசுவாதிகனுமாயுள்ள திருமாலும் சிவபெருமானுந் தம்முள்மோதுதலின் குணத்தொனியிலெழுந்த காற்ருல் அவவடிவமாகிய இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளும் தம்முள் மோதுதல் "அவனன்றியோரணுவுமசையாது" என்னு முதுமொழிப்பொருளை விளக்கிய தென்பார்தலைவரெப்படி யப்படி யுலகெனுந் தகுதிபலவுந் தத்தமுள் மோதுபு தெளிதரப்பயிற்று மென்ருர். இது எடுத்துக் காட்டுவமையணி.

மூள்சினத் துடனடுத் துழிமுதல்வனென்றறிந் து
மீளநோக்கியாங்கெம்பிரான்சரணமுன்வீழ
நீள்பெருந்தடங்குனிவரிச்சிலையிடைநெடியோன்
வாளியொன்றுதொட்டேயினனருச்சனைமாண்பின்.

(இ-ள்.) முதல்வன் என்று அறிந்தும் மூள் சினத்துஉடன் அடுத்த உழி—தனக்கு முதல்வனென்று தெரிந்தும்மூண்டகோபத்தோடுபோர்செய்யநெருங்கிய விடத்து, மீளநோக்கி ஆங்கு—மீளவும் முதல்வனென்றுதிருமால்தெரிந்துணர்ந்தாற்போல, எம்பிரான் சரணம்முன் வீழ—எமது பெருமான் றிருவடிமுன்னேவிழ, நெடியோன் நீள் பெரும் தட குனி வரி சிலை இடை—திருமால் நீண்ட பெரிய வளைந்த கட்டமைந்த வில்லினிடத்து, வாளி ஒன்று தொட்டு அருச்சனை மாண்பின் ஏயினன்—அம்பொன்று தொடுத்து அருச்சனைபுரியும் மாட்சிமைபோல ஏவினன்.

திருமால்தனக்குச்சிவபெருமான்முதல்வனென்று தெரிந்திருந்தும்அவனனுறையாற் போர்க்குத்தொடங்கிய காலையில்அப்போர்க்குரிய குணநிகழுமென்பது தோன்ற மூள்சினத்துடனடுத்துழி எனவும், சினமூண்ட வழியும்வழிபாடு அத்திருமால்குன்றிலனென்பதுதோன்ற 'நீளநோக்கியாங்குநெடியோன் வாளியொன்றுதொட்டருச்சனை மாண்பின்ஏயினன் எனவுங் கூறினர். (கூ௩)

சத்திசத்திமானுகியவிருதிறத்தவரும்
தொத்தழற்கணைதூண்டினர்மூண்டதுபெரும்போர்
பைத்தமாநிலமயிர்த்ததுபனிவிசும்பிறுத்தார்
சித்தர்சாரணரிமையவரியக்கர்கந்தருவர்.

(இ-ள்.) சத்தி சத்திமான் ஆகிய இருதிறத்தவரும் அழல்தொத்து கணைதூண்டினர் பெரும்போர் மூண்டது—சத்தியும் சத்திமானும ஆகிய இரு பகுதிப்பட்ட இருவரும் தீத்திரளைச் சிந்தும் அம்பினைச் சிந்தினர்கள் பெரிய போர்த்தொழில் மூண்டது, பைத்தமாநிலம் அயிர்த்தது—பரந்த நிலவுலகிலுள்ளோர் ஐயங்கொண்டனர், பனி விசும்பு இறுத்தார் சித்தர் சாரணர் இமையவர் இயக்கர் கந்தருவர் அயிர்த்தனர்—குளிர்ந்த விண்ணில் நிலைபெற்ற சித்தரும் சாரணரும் தேவர்களும் இயக்கர்களும் கந்தருவர்களும் ஐயங்கூர்ந்தனர்கள்.

திருமால் சத்திவடிவாகவும், சிவபெருமான் அச்சத்திக்குத் தலைவனாகவுமிருத்தலால் சத்திசத்திமானாகிய இருதிறத்தவருமென்றார். சத்தியாதலை முன்னர்விதந்த கூர்மபுராணச்செய்யுளானுணர்க. இறுத்தாரென்னும் வினைமுற்றுப் பெயரெச்சத்தில் வந்தது. அயிர்த்தது என்றமையால் அயிர்த்தனனென்னும் வினைமுற்றுச் சொல்லெச்சமாய் நின்றது. (௯௪)

புட்டில்வீக்கியகரத்திடைப்பொருசிலைகுழையத்
தொட்டவாளிகளிறுதிநாண்முகிலெனச்சொரிவா
ரட்டதிக்கையுமடைப்பர்கள்கணத்தவைமாற்றி
முட்டவெங்கணைமீளவுமுடுக்குவர்தொலைப்பார்.

(இ-ள்.) புட்டில் வீக்கிய கரத்திடை பொரு சிலை குழைய தொட்ட வாளிகள்— கையுறைகட்டிய கையிலேந்திய பொருதற்குரிய வில்வளைய ஏறிட்டவம்புகளை, இறுதி நாள் முகில் என்ன சொரிவார்—ஊழிகாலத்தின் மேகம்போலச் சொரிந்து, அட்ட திக்கையும் அடைப்பர்கள்—எட்டுத்திக்கையும் அடைப்பார்கள், கணத்து அவை மாற்றி—கணப்பொழுதில் அவ்வம்பினைமாற்றி, முட்ட வெங் கணை மீளவும் முடுக்குவர் தொலைப்பார்—நெருங்கும்படி கொடியபாணங்களை மீளவுங் கடிது விடுவார் அவற்றை மாற்றுவார். (௯௫)

கடவுள்வான்படையெண்ணிலவழங்குவர்கடுநோய்
படரும்வெப்பொடுகுளிர்பிணிபடைத்தெதிர்விடுப்பா
ருடலுமற்றவையொன்றினொன்றழிவுறக்காண்பா
ரடைவினின்னணம்விளைத்தனரற்புதப்பூசல்.

(இ-ள்.) வான் கடவுள் படை எண்ணில வழங்குவர்—பெரியதெய்வத்தன்மையையுடைய ஆயுதங்களைஅளவிலவாக ஒருவர்மேலொருவர் வீசுவார்கள், கடு நோய் படரும் வெப்பு குளிர் பிணி படைத்து எதிர் விடுப்பார்—கொடிய நோயாகப்பரவிய உஷ்ணசுரமும் சீதசுரமும் ஆகிய நோய்களையுண்டாக்கி ஒருவர்க்கொருவரெதிரேவிடுப்பார்கள், உடலும் அவை ஒன்றின் ஒன்றுஅழிவுற காண்பார்—வருத்தும் அந்நோய்களை ஒன்றாலொன்று அழிவுபெறக்காண்பார்கள், அடைவின் இன்னணம் அற்புதம் பூசல் விளைத்தனர்—முறைமையாக அற்புதந்தரும்போரினைஇவ்வாறுவிளைத்தார்கள்.

தேவாஸ்திரங்களைத் தொட்டபின் சைவசுரம், வைணவசுரமென்னுமிரண்டு நோய்களைப்படைத்து ஒருவர்மேலொருவர் வீசினர் ஆதலால் வெப்பொடு குளிர்பிணிபடைத்தெதிர் விடுப்பார் எனவும், சைவசுரம் உஷ்ணரூபமாயிருத்தலால் வெப்புஎனவும், வைணவசுரம் சீதரூபமாயிருத்தலால் குளிர்எனவும், அன்று உஷ்ணசுரத்தால் சீதசுரம் அழிதலால் ஒன்றினொன்றழிவுறக் கான்பாரெனவுங் கூறினார். இவற்றைச்சுரதேவர் என்பர். (௯௬)

மூவருந்தொழுமுதல்வனேமுனைந்தனனினியென்
னாவதோவெனமுனிவரரஞ்சினரகில
தேவரஞ்சினர்பூதங்களஞ்சினதேவர்
கோவுமஞ்சினன்றிருவுளக்குறிப்பினையுணரார்.

(இ-ள்) திருவுளம் குறிப்பினை உணரார் — சிவபெருமான்றிருவுள்ளக்குறிப்பினை உணராராகி, மூவரும் தொழும் முதல்வனே முனைந்தனன் —பிரமன்முதலிய மூவரும் வணங்கும் இறைவனேபோர்செய்தான், இனி என் ஆவதோ என்ன முனிவ

ரர் அஞ்சினர்—இனிஎன்னவதோ வென்று முனிவரரஞ்சினார்கள், அகில தேவர் அஞ்சினர்—எல்லாத் தேவர்களும் அஞ்சினார்கள், பூதங்கள் அஞ்சின—பிருதிவிமுதலியபஞ்சபூதங்களுமஞ்சின, தேவர்கோவும் அஞ்சினன்—தேவர்களுக்கரசனாகிய இந்திரனும் அஞ்சினான்.

அகிலதேவரென்றதுயக்ஷகந்தருவர்முதலியோரை. (௬௭)

இளிவில்வெஞ்சமரின்னணநெடும்பொழுதாற்று
மளவின்மற்றினியாற்றிலேனடியனேனென்று
முளரிநோக்கினன்வணங்கலுமுறுவல்செய்தடியார்க்
கெளியனென்பதுவிளக்கினனென்னையாளுடையான்.

(இ-ள்) இளிவு இல் வெம் சமர் இன்னணம் நெடும் பொழுது ஆற்றும் அளவில்—குறைவில்லாத போர்த்தொழிலை இவ்வாறுநெடுங்காலஞ்செய்யும் அமையத்தில், அடியனேன் இனி ஆற்றிலேன் என்று முளரி நோக்கினன் வணங்கலும்—அடியேனாகிய யான் இனித்தேவரீரோடு போர்செய்தற்கு ஆற்றலில்லேனென்று தாமரைபோலுங் கண்களையுடைய திருமால்வணங்க, என்னை ஆளுடையான்முறுவல் செய்து அடியார்க்கு எளியன் என்பது விளக்கினன்—என்னையாளாகவுடைய சிவபெருமான் புன்னகைசெய்து அடியவர்களுக்குத்தான்எளியனென்பதைக்கண்ணனிடத்துப்புலப்படுத்தருளினான்.

போர்த்தொழிலைவிட்டு நின்றனனென்பான் அடியார்க்கெளியனென்பது விளக்கினனென்றார். (௬௮)

அடிகணோவச்சென்றாளெனவிறகுமண்சுமந்து
மடிபொறுத்துமோரரிவைதூதாற்றியும்வெள்கா
தடியரெண்ணமேமுடிப்பதுவிரதமாக்கொண்ட
வடிகள்வாகையிக்கண்ணனுக்களித்ததோர்வியப்போ.

(இ-ள்.) அடிகள் நோவ சென்று ஆள் என விறகு மண் சுமந்தும் அடிபொறுத்தும் — திருவடிகள்வருந்தச்சென்றுபாணனுக்கும் வந்திக்கும்ஆளென்றுவிறகினையும் மண்ணினையும்சுமந்தும் பாண்டியன் கைப்பிரம்படிபட்டும், ஓர் அரிவை தூது ஆற்றியும்—ஓர் பெண்பொருட்டு நள்ளிரவில் தூதுசென்றும், வெள்காது அடியர் எண்ணமே முடிப்பது விரதம் ஆக கொண்ட அடிகள்—சற்றும்நாணாது அடியவர்வேண்டுகோளேமுடிப்பது விரதமாகக்கொண்டஇறைவன், வாகை இ கண்ணனுக்கு அளித்தது ஓர்வியப்போ—வெற்றியை இந்தக்கண்ணனுக்குத்தந்தது ஓர் அதிசயமோ.

வடதிசையிலிருந்துவந்தஇசையில்வல்லஏமநாத னென்பவன், பாண்டியனவைக்களத்துச்சென்றுதானபாடும்இசைவன்மையைக்காட்டித் தன்னிலும் இசைவல்லோர் இல்லையெனஇறுமாந்து அரசன்செய்யும்வரிசைகளைப்பெற்று அவன்விட்டவிடுதியிற்சென்றிருந்தகாலையில், பாண்டியன் அவன்கொண்ட இறுமாப்பினை யொழிக்க இசைப்பாணரைவிளித்து இவனொடுபாடவல்லையோவெனவினவ, உமதருளும் இறைவனதருளும் இருந்தால்பாடவல்லேன் என்றுகூறிச்சோமசுந்தரக்கடவுள் திருக்கோயிலிற்சென்று குறையிரந்து தமதில்லிற்சென்றனர். சிவபெருமான் கருணைகூர்ந்து நரம்பெழுந்துநல்கூர்ந்த ஓர்முதியராய் விறகாளென விறகுசுமந்து மதுரையின்வீதிசென்று இசையாவிலைகூறிவாங்குவோரின்மையின், மாலைப்பொழுதில் அவ்வேமநாதன் இல்லி

ற்குஅண்மையில் தான் சுமந்துவந்தவிறகினைச்சாத்தித்தாம்கொண்ட திருவுருவத்துக்கேற்பவமைந்த வீணையைக்கொண்டுபாடத்தொடங்கினர், அதனைச்செவிப்படுத்திய அவ்வேமநாதன்பாற்கற்றோரங்கணுகி, நீயாரையென்றுவினவ, இங்குள்ள இசைப்பாணரிடத்தில் இசைகற்றோருள்யானொருவன், நீதசையொடுங்க மூத்தமுதியோன் ஆதலால் இனிநீஇசைபாடற்காகாய்என்று என்னைத்தள்ளிவிட்டனன் அன்றுமுதல்விறகுசுமந்து உயிர்பிழைக்கின்றேனெனக்கூற, அதனைத்தன்மாணாக்கராற்கேள்வியுற்ற ஏமநாதன், அன்றிராத்திரியே அவனாற்றள்ளுண்ட இம்முதியோன் இவ்வாறுபாடுவானாயின் அப்பாணன்எவ்வாறுபாடுவானோ வென்றஞ்சித் தனபரிசனத்தோடு மறைந்துசென்றனனென்பதும்,

வாதவூரடிகள் குதிரைகோடற்குக்கொடுத்த பொருளைஅவர்பாற்பெறப் பாண்டியனேவலால், நீர்வறந்து கால்சுடும் வைகைநதியில்நிறுத்தியொறுக்குங்கடும்பகலில் அவ்வடிகள்சிவபெருமானைச்சிந்தித்துவருந்த, அப்பெருமானருளால் ஊழிவெள்ளம்போல வெள்ளம்உவட்டெடுத்துமதுரையைக்கவரவருதலைக்கண்டு பாண்டியனஞ்சி, அம்மதுரைநகரிலுள்ளயாவர்க்கும்கரைகோல அளந்துவிட்டு ஏவலாளரால் வேலைவாங்குங்காலையில், பிட்டுவிற்கும்முதியவளாகிய வந்தியென்பவளுக்கு ஆளின்மையால்நமக்களந்தகரையைக்கோலாவிடின் அரசன்ஒறுப்பானேயெனறஞ்சிச்சிவபெருமானிடத்துமுறையிட்டனள், அப்பெருமான்கருணைகூர்ந்துகூலியாள்வடிவங்கொண்டு அவ்வந்திபால்வந்து நீவிற்கும்பிட்டுகளுள் உதிர்ந்தபிட்டுகளைக்கூலியாகக்கொடுக்கில் உன்னாளாய் உனக்களந்ததைக்கட்டிமுடிக்கின்றேனென்று கூலிபேசிமண்சுமந்தனரென்பதும்,

வந்திக்குஆளெனவந்த இறைவன்ஏனையோர்கரைகோலியதுபோல வந்திக்களந்தகரையைக்கோலாது வாளாவிருத்தலைஅரசன்கண்டுசினந்து பிரம்பாலடிக்க அடிசுமந்தனரென்பதும், ஆளுடையநம்பிகள் தொண்டைநாட்டில் சங்கிலிநாய்ச்சியாரைத்திருமணமுடித்து, தம்மைத்தடுத்தாட்கொண்ட வீதிவிடங்கப்பெருமானைத்தரிசிக்கத் திருவாரூருக்கு எழுந்தருளுதலைக்கேள்வியுற்ற அங்குள்ளபரவைநாய்ச்சியார் பெருங்கலாங்கொண்டிருந்தனர், அங்கெழுந்தருளிய ஆளுடையநம்பிகள்அதனையுணர்ந்து, அத்துனிநீக்கவும் நீங்காதுவளர்தலைநோக்கிச் சிவபெருமானிடத்துக்குறையிரக்கச் சிவபெருமான் சென்று ஊடல்தீர்த்தனரென்பதும் புராணவரலாறுகள்.

பாணபத்திரராளாய் வந்தருளினமையை—
“ சிந்தைதோயுமைம்பொறிகளுஞ்செவிகளாய்ப்புலன்க
ளைந்துமோசையாவிசைவலானிருந்தனனாகப்
பந்தநான்மறைநாவினாற்பத்திரனாளாய்
வந்துபாடினாரிந்தனச்சுமையொடுமறைந்தார்” எனவும்,

வந்திக்குக்கூலியாளாய்வந்தருளினமையை—
“ பிட்டிடுவேனுனக்கென்றாளதற்கிசைந்துபெரும்பசியாற்
சுட்டிடநான்மிகமெலிந்தேன்சுவைப்பிட்டிலுதிர்ந்தவெல்லா
மிட்டிடுவாயதுமுந்தத்தின்றுநானிளைப்பாறிக்
கட்டிடுவேனின்னுடையகரையென்றான்கரையில்லான்” எனவும்,

பாண்டியனாற்பிரம்படிபட்டருளினமையை—
“ கண்டனன்கனன்றுவேந்தன்கையிற்பொற்பிரம்புவாங்கி
யண்டமுமளவிலாதவுயிர்களுமாகமாகக்
கொண்டவன்முதுகில்வீசிப்புடைத்தனன்கூடையோடு
மண்டனையுடைப்பிற்கொட்டிமறைந்தனனிறைந்தசோதி” எனவும்,

வரும் திருவிளையாடற்புராணத்திலும்,

பரவைநாய்ச்சியாரிடத்துச் சிவபெருமான்சென்று ஊடல்தீர்த்தனரென்பதை,—

" அன்புவேண்டுந்தம்பெருமானடியார்வேண்டிற்றேவேண்டி
முன்புநின்றுவிண்ணப்பஞ்செய்தநம்பிமுகநோக்கித்
துன்பமொழிநீயாமுனக்கோர்தூதனாகியிப்பொழுதே
பொன்செய்மணிப்பூண்பரவைபாற்போகின்றோமென்றருள்செய்தார்"

எனவரும் பெரியபுராணத்திலுங்காண்க. (௯௯)

தம்பிரான்பெருங்கருணையின்சால்பினைநோக்கி
யும்பரார்த்தனருவணவேற்றிறைவனுமாவா
வெம்பிரானருளென்னிடையிருந்தவாறென்னென்
றம்பிகாபதியடிதொழுதானந்தமுற்றான்.

(இ-ள்) தம்பிரான் பெருங் கருணையின் சால்பினை நோக்கி உம்பர் ஆர்த்தனர்—சிவபெருமான் பெரியதிருவருளின்மிகுதியைப்பார்த்துத் தேவர்கள் கோஷித்தார்கள், உவணம் ஏறு இறைவனும்—கருடவூர்தியையுடையகண்ணனும், ஆவா எம்பிரான் அருள் என் இடை இருந்த ஆறு என் என்று—அந்தோஎன்னிடத்து எம்பெருமான்திருவருள்எளிதாயிருந்தவண்ணம்யாதோவென்று, அம்பிகாபதி அடி தொழுது ஆனந்தம் உற்றான்—அவவிறைவனது திருவடியைவணங்கியின்பங்கூர்ந்தான்.

அரியோனாதலால்பெறுதற்கரியஅவன்றிருவருள்எனக்குக்கிடைத்தது ஓர்பெருவியப்பென்பான்இருந்தவாறென்னென்றான். (௧௦௦)

துண்டவெண்பிறைக்கண்ணியோன்போர்வினைதுறப்பக்
கண்டுவெஞ்சினந்தலைக்கொளீஇக்கனைகழலவுண
னண்டம்விண்டெனவார்த்தனன்மாயனையடுத்தான்
மண்டுதீச்சிலைவளைத்தனர்விளைத்தனர்பூசல்.

(இ-ள்.) வெண் பிறை துண்டம் கண்ணியோன்—இளஞ்சந்திரனைமாலையாகத்தரித்தசிவபெருமான், போர் வினை துறப்ப—போர்த்தொழிலைக்கைவிட்டுநிற்ப, கனைகழல் அவுணன் கண்டு வெம் சினம் தலை கொளீஇ—ஒலிக்கும்வீரகண்டைகட்டிய வாணாசுரன்பார்த்துக்கோபமீதூர்ந்து, அண்டம் விண்டால்என்ன ஆர்த்தனன் மாயனை அடுத்தான் — அண்டகடாகம்வெடித்தாற்போலக்கோஷித்துக் கண்ணனையடுத்தான், தீமண்டு சிலை வளைத்தனர் பூசல் விளைத்தனர்—கோபாக்கினிமிக்க வில்லினைவளைத்துப் போர்விளைத்தார்கள்.

ஆர்த்தனர், வளைத்தனர் முற்றெச்சங்கள். ஊழிதோறும் சந்திரன்ஒவ்வோரிடையூற்றால்சிவபிரான்திருவடியிற்சரணடைதலால்வெண்பிறைக்கண்ணியான் எனவும், உடையவனுக்கும் உடைமைக்கும் ஒற்றுமையுண்மையால் உடையவன்றொழிலைஉடைமைமேலேற்றிமண்டுதீச்சிலை எனவுங்கூறினார். தக்கன்சாபத்தால்ஓர்கால் கலைகுறைந்தனனென்பதும், வீரபத்திரக்கடவுள் திருவடியால்ஓர்கால் தேய்ப்புண்டுமெலிந்தனனென்முன்னர்க்காண்க. (௧௦௧)

நூழில்வன்படையிருவருநெடுமொழிநுவல்வார்
பாழிவன்புயம்புடைத்தெழூஉவஞ்சினம்பகர்வா

ரூழியீற்றனல்விழியுகச்சீறுவருலகைப்
பூழியாக்குவர்சாரிகைசுற்றுவர்பொருவார்.

(இ-ள்.) நூழில் வன்படை இருவரும் நெடுமொழி நுவல்வார் — கொலைத்தொழிலமைந்தவலியசேனையையுடையஇருவருந்தம்முள்நெடுமொழிகூறி, பாழிவன்புயம் புடைத்து எழூஉ வஞ்சினம் பகர்வார்—திரண்டவலியபுயத்தைக் கொட்டி ஒருவருக்கொருவர்சபதங்கூறி, ஊழி ஈறு அனல் விழி உக சீறுவர்—இறுதிக்காலத்துவடவாமுகாக்கினியைக்கண்கள்சிந்தக்கோபித்து, உலகை பூழி ஆக்குவர் சாரிகை சுற்றுவர் பொருவார் — உலகினைப்புழுதியாக்கிஇடசாரிவலசாரியாகச்சூழ்ந்துதம்முட்போர்செய்வார்கள்.

நெடுமொழிஎன்பதைமுன்னர்விளக்கினும். நுவல்வார், பகர்வார், சீறுவார், ஆக்குவர், சுற்றுவர்முற்றெச்சங்கள். (௧0௨)

இனையர்மண்டமர்ஞாட்பிடையெம்பிரானருள்சேர்
வனைமலர்த்துழாய்வானவன்மதுகைமீக்கொண்டு
முனைவரிச்சிலைவாளிதேர்முடிகளையிறுத்துத்
தனியனாக்கினன்சலம்புரியவுணருக்கிறையை.

(இ-ள்) இனைய அமர் மண்டு ஞாட்பு இடை—இத்தன்மை வாய்ந்த போர்நெருங்கிய போர்க்களத்தில், எம்பிரான் அருள் சேர் வனைமலர்த்துழாய் வானவன்—எமதுபெருமான்திருவருள்பெற்றதுழாய்மலர்மாலையையணிந்தகண்ணன், மதுகை மீ கொண்டு முனை வரி சிலை வாளி தேர் முடிகளை இறுத்து—வலிமைமீக்கூர்ந்துபோரில்முனையும் கட்டமைந்தவில்லிலேறிட்டஅம்பால் தேர்மொட்டுகளையறுத்துத்தள்ளி, சலம்புரி அவுணருக்குஇறையை தனியன் ஆக்கினன்—மனவயிரங்கொண்டஅசுரர்களுக்குத்தலைவனாகிய வாணாசுரனைத்தனியனாகச்செய்தான்.

பலதேர்களிலேறிப் போர்புரிந்தமையால் முடிகளெனப்பன்மையீறுதந்து கூறினர். (௧0௩)

கருப்புத்துண்டெனநூற்றுப்பத்தடுக்கியகனகப்
பொருப்புத்தோள்களையரிவுழிமதனுடல்பொடித்த
நெருப்புக்கண்ணினனெதிரெழுந்தருளிநீள்கருணை
மருப்புக்குஞ்சரங்காத்தவன்மேற்செலவழங்கி.

(இ-ள்.) கனகம்பொருப்பு நூற்றுப் பத்து அடுக்கிய தோள்களை கரும்பு துண்டு என்ன அரிவு உழி—பொன்மலையையொத்த ஆயிரந்தோள்களைக்கரும்பைத்துண்டுபடுத்தியதுபோலத் துணித்தவிடத்து, மதன்உடல்பொடித்தநெருப்பு கண்ணினன் எதிர் எழுந்தருளி — மன்மதனுடைய உடலை நீறுபடுத்தியதிருக்கண்ணையுடைய சிவபெருமான்எதிரே காட்சிதந்தருளி, நீள் மருப்பு குஞ்சரம் காத்தவன்மேல்கருணை செலவழங்கி—நீண்டகொம்பினையுடைய கஜேந்திரனென்னும் யானையை முதலைவாயினின்றுங்காத்த கண்ணன்மேல்தனது அளவில்லாததிருவருள்செல்லவழங்கி. (௧0௪)

கண்ணனேயுதுகேட்டியிக்கனைகழலவுண
னண்ணல்வாய்மையுன்போலெமக்கன்புமிக்குடையா
னெண்ணம்வாய்ப்பநம்பூசையினமைந்ததோளிரண்டும்
வண்ணவாண்மலர்வதனமுமரிதலோம்பென்றான்.

(இ-ள்) கண்ணனே இது கேட்டி—கண்ணனே இதுகேளாய், இகலை கழல் அவுணன்—இந்தவொலிக்கும் வீரகண்டையைக் கட்டிய வாணாசுரன், அண்ணல் வாய்மை உன்போல் எமக்கு அன்பு மிக்கு உடையான்—பெருமையையும்உண்மையையும் உடைய உன்னைப்போல என்பால் மிக்கஅன்பினையுடையான், எண்ணம் வாய்ப்ப—அவனது கருத்துமுற்ற, நம்பூசையின் அமைந்த தோள் இரண்டும்—நம்மைப் பூசிக்கும் பூசனையில் அமைந்த அவனது தோளிரண்டையும், வண்ணம் வாள்மலர்வதனமும் அரிதல் ஓம்பு என்றான்—நிறம்வாய்ந்த ஒள்ளிய தாமரைமலர்போன்றமுகத்தையும்அரிதலொழிக என்றருளினான்.

அன்பில் அளவுபடாமையையும், தலைமையையுங் குறித்தற்கு அண்ணல் வாய்மையுன்போலென்றான். (௧0௫)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

என்றவாய்மொழிகேட்டலுந்தொழுதெழுந்தியாதவர்குலத்தோன்றல்
மன்றமாமறைமுழுவதுமுழுவதுமுருத்திரனெனுமாற்றா
லொன்றுமன்பொடுமுன்னடியருச்சனையுஞற்றினேனெமையெல்லா
நன்றுபூசனையியற்றியோனாதலினாற்கரம்விடுத்தேனால்.

(இ-ள்.) என்ற வாய் மொழி யாதவர்குலம் தோன்றல் கேட்டலும் தொழுது எழுந்து—என்றருளிய வாய்மொழியை யாதவர் குலத்திற் றோன்றியகண்ணன்கேட்டு நிலத்தின்மேல் வீழ்ந்து வணங்கி எழுந்து, மன்ற மாமறை முழுவதும் முழுவதும் உருத்திரன் என்னும் ஆற்றால்—தேற்றமாகப் பெருமை யமைந்தவேதம் இயங்கியற்பொருள்யாவும்நிலையியற்பொருள்யாவும்உருத்திரனே என்று கூறும்வகையால், ஒன்றும் அன்பொடும் உன் அடி அருச்சனை உஞற்றினேன்—பொருந்திய அன்போடும் உனது திருவடிக்கீழ்வழிபட்டு அருச்சனைசெய்த இவ்வாணன், எம்மைஎல்லாம் நன்று பூசனை இயற்றியோன் ஆதலின்—எம்மை யெல்லாம் பெரிதும் பூசனைசெய்தோனாதலால், நால் கரம் விடுத்தேன் — அடியேன்நான்குகரங்களைஅரியாதொழிந்தேன்.

சிவபிரான்அருளியமொழிஅருண்மொழியாதலால் வாயெனவேண்டாகூறினர். யசுர்வேதத்தில் ஸ்ரீருத்திரத்தில்யாவும் உருத்திரமூர்த்தியேஎன்று கூறுதலால்முழுவதும், முழுவதும் என்றதற்கு இயங்கியற் பொருளும் நிலையியற்பொருளுமென்றாம். யாவும் உருத்திரமூர்த்தியே என்றுஸ்ரீருருத்திரங்கூறுதலால்பிரமன்முதல்பிபீலிகாபரியந்தம்தன்னுளேப்படுத்திஎமையெல்லாமெனவும், அவ்வாற்றால்உன்னைப்பூசித்தவன் எம்மையெல்லாம்பூசித்தவனாய் முடிதலால் நன்றுபூசனையியற்றியோனாதலின் எனவும், தேவரீரருளியது இரண்டுகை, அடியேன் விட்டது நான்குகை யெனத்தனதுகீழ்மையைவெளிப்படுத்தினானாதலால் நாற்கரம்விடுத்தேனெனவுங்கூறினான்.

நான்குகரம் அரியாதொழிந்தமையை—

"காயெரிகவிழ்க்கும்வெம்போர்க்கணிச்சியெம்பெருமானெய்தி
மாயிருஞாலமுண்டோய்செருக்கினான்மலையும்வாண
னாயிரம்புயத்தினான்குபுயமொழித்தறுத்தியென்னப்
பாயொளிப்பரிதிதூண்டிப்பகர்ந்தவாறரிந்திட்டானே"

எனவருங் கூர்மபுராணத்தாலுணர்க. (௧0௬)

அடியனேன்பிழையாவையும்பொறுத்தருளையனேயெனத்தாழ்ந்து
கொடியின்மேல்விடையுயர்த்தவனுணையிற்குடவளைக்குடங்கையான்

மடிவில்வாணனைக்கேண்மைகொண்டாங்கவன்மகளைத்தன்மகனீன்ற
விடலைசேர்வுறமணம்புணர்த்துடன்கொண்டுமீண்டனன்றன்மூதூர்.

(இ-ள்.) ஐயனே அடியனேன் பிழையாவையும் பொறுத்தருள் என்னதாழ்ந்து—ஐயனே அடியேன் செய்த பிழை முற்றும் பொறுத்தருளாயென்று குறையிரந்து வணங்கி, கொடியின்மேல் விடை உயர்த்தவன் ஆணையால்—துவசத்தின்மேல் இடபத்தை உயர்த்திய சிவபெருமானுணையால், குடம் வளை குடம் கையான் மடிவில் வாணனை கேண்மை கொண்டு—குடம் போலத்திரண்டபாஞ்சசன்னிய மென்னுஞ் சங்கினையேந்தியஉள்ளங்கையையுடையகண்ணன்பகைவரால்அழிதலில்லாதவாணுசுரனையுறவுகொண்டு, அவன் மகளை தன்மகன் ஈன்ற விடலை சேர்வுற மணம்புணர்த்து தன் மூது ஊர் உடன் கொண்டு மீண்டனன்—அவ்வசுரன்புத்திரியாகிய உஷையென் பவளைத்தனது புத்திரனாகிய பிரத்தும்மனன் பெற்றஅநிருத்தன் கலப்பமணஞ் செய்து தனது தொன்று தொட்டுள்ள துவாரகாபுரிக்கு உடன் கொண்டு திரும்பினுன்.

ஆங்குஅசைநிலை. (கOஎ)

ஐயிரண்டினிலுறழ்தருமும்முறையமரகத்துடைந்தெள்ள
லெய்தினனெனப்பட்டவன்றனைக்கொண்டேயிவன்செருக்கறக்கண்டான்
செய்யச்செய்திடாதொழியவேறென்றனைச்செய்யவும்வல்லோனும்
பையராவணிபண்ணவன்பெருமையையாவரேபகர்கிற்பார்.

(இ-ள்.) ஐயிரண்டினில் உறழ்தரும் மும்முறை—முப்பதுதரம், அமர்அகத்து உடைந்து எள்ளல் எய்தினன் என்ன பட்டவன் தனைகொண்டே—போர்க்களத்தில் புறங் கொடுத்தலால் அவனால் இகழப்பட்ட திருமாலைக்கொண்டே, இவன் செருக்கு அற கொண்டான்—இவ்வாணுசுரனது இறுமாப்பறக் கண்ணனால்அவன் புறங்காணச்செய்தருளினுன், செய்ய—ஒன்றனைச் செய்யவும், செய்திடாது ஒழிய—அதனைச்செய்யா தொழியவும், வேறு ஒன்றனை செய்யவும்—அது வொழிய மற்றொன்றினைச் செய்யவும், வல்லோன் ஆம் பை அராவணி பண்ணவன் பெருமையை யாவர் பகர்கிற்பார்—வல்லவனாகிய சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபெருமானது பெருமையை எடுத்துக் கூறவல்லவர் எவர்..

பத்தொடுபெருக்கிய மூன்று முப்பதாதலால் ஐயிரண்டினிலுறழ்தரு மும்முறை எனவும், முப்பது தரம் போர்க்களத்தில் வாணுசுரனுக்குப் புறங் கொடுத்து அவனுலிகழப்பட்ட திருமாலைக் கொண்டே அவ்வசுரன் புறங்காணச் செய்தோன் அளவிலாற்றனுடையவனுதலால் அமரகத்துடைந்தெள்ள, லெய்தினனெனப்பட்டவன்றனைக் கொண்டேயிவன் செருக்கறக் கண்டானெனவும், இவனுக்கு இஃதோர் அரிதல்ல வென்னும்பொருள்தோன்றச்செய்யச்செய்திடா தொழியவேறொன்றனைச்செய்யும் என்னும் பொருளால் முன்னர்க் கூறியவர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்பட்ட வேற்றுப்பொருள் வைப்பணியால் பையராவணிபண்ணவன்செய்கையையாவரோபகர்கிற்பார் எனவுங் கூறினர்.

ஈஸ்வரன் பிரபுத்துவ சாமர்த்திய குணங்கள்மூன்றனுள் ஒன்றனைச் செய்தல் கர்த்தத்துவமும், செய்யா தொழிதல் அகர்த்தத்துவமும், வேறொன்று செய்தல் அன்யதாகர்த்தத்துவமும் ஆதலால் செய்யச் செய்திடா தொழிய வேறொன்றனைச்செய்வும் வல்லோன் என்றார். இது உயிர்களிடத்தென்பதுதோன்ற "ஒன்றைநினைக்கிலதுவொழிந்திட்டொன்றாகு, மன்றிய துவரினும் வந்தெய்தும்—ஒன்றைநினையாதமுன்வந்து நிற்பினுநிற்கு, மெனையாளுமீசன் செயல்"என ஔவையார் கூறியதிருவாக்காலறிக.

கருவிமாமுகின்மேனியோனகன்றபின்கனங்குழையுமைபாக
மருவுநாயகன்வாணனைநோக்கிநின்மணிப்புயக்கண்டேதி
யொருவிஞய்கொலாமெனக்குறுநகைமுகிழ்த்துரைத்தலுமுடிசாய்த்துப்
பெருமமற்றினிவீடுபேறளித்தியென்றிரந்தனன்பெருநேசன்.

(இ-ள்) கருவிமாமுகில் மேனியோன் அகன்றபின் — திரண்டகரியமேகம்போலத்திருமேனியையுடையகண்ணன் துவரைப்பதிக்குச்சென்றபின், கனகம்குழைஉமைபாகம்மருவும் நாயகன் வாணனைநோக்கி — பாகம் பெண்ணோடாயின இறைவன் வாணுசுரனைப்பார்த்தருளி, நின் மணிபுயம்கண்டேதி ஒருவினுய்கொல்என்னகுறுநகைமுகிழ்த்து உரைத்தலும் — இரத்தினாபரணங்களையணிந்த உனது புயங்களில் எழுந்த தினவினைநீக்கினுயோவென்று புன்னகைசெய்து வினவ, பெருநேசன் முடிசாய்த்து பெரும இனி வீடுபேறு அளித்தி என்று இரந்தனன் — முழுவலன்புடையவாணுசுரன் தலையிறக்கிப்பெருமானே இனி முத்தியைத் தந்தருளாயென்று குறையிரந்தான்.

போகம்வேண்டிச்சிவபெருமானையருச்சித்துப்பெற்றபின்னர்அப்போகத்தால் வருங்கெடுதியைநன்குணர்ந்தாஞதலால்இனிவீடுபேறளித்தியென்றிரந்தனனென்றார்.

முத்திவேண்டுமேற்காஞ்சியினெய்திநீமுன்னெமைநிறீஇப்போற்று
மத்தலத்திடைப்பெறுதியென்றருள்புரிந்தகன்றனனெங்கோமான்
பத்திமேதகுவாணனுங்காஞ்சியிற்படர்ந்துதான்றொழுதேத்து
நித்தனாருளாற்கணத்தலைமைபெற்றானந்தநிலைபெற்றான்.

(இ-ள்.) முத்தி வேண்டுமேல் நீகாஞ்சியின் எய்தி — முத்தியினை விரும்புவாயானல் நீகாஞ்சித்திருப்பதியையடைந்து, முன் எம்மை நிறுவி போற்றும் அதலத்திடை பெறுதி என்றுஅருள் புரிந்து எங்கோமான் அகன்றனன் — முன்பு எம்மைத்தாபித்து நீவழிபட்ட அந்தத்திருத்தளியில் பெறுவாயென்று திருவருள் செய்துஎமதிறைவன் நீங்கியருளினன், பத்தி மேதகும் வாணனும் காஞ்சியில் படர்ந்து தான்தொழுது ஏத்தும் நித்தனர் அருளால் — சிவபத்தியில் மேம்பட்ட வாணுசுரனும் காஞ்சித்திருப்பதியிற் சென்றுதான்முன்பு தாபித்து வழிபட்ட இறைவர்திருவருளால், கணத்தலைமைபெற்று ஆனந்தநிலை பெற்றான் — சிவகணங்களுக்குத்தலைமை பெற்றுச்சீவன்முத்திநிலையை யடைந்தனன். (௧௧௦)

வரிச்சிறைச்சுரும்புளர்தரக்குவிமுகைமுறுக்குடைந்தலர்வாசம்
விரித்தநெட்டிதழ்ப்பங்கயப்பொய்கைசூழ்வியத்தகுவாணீச
மருச்சனைக்குரிமரபினிற்போற்றிசெயடியவர்கருத்தீமை
நரிச்சுநீங்கமெய்ப்பெருநலக்கிழமைவீடெய்துவர்நமரங்காள்.

(இ-ள்.) நமரங்காள் — நம்முடையவர்களே, வரிசிறை சுரும்பு உளர்தர — வரியமைந்தசிறகினையுடையவண்டுகள்மூக்கால் கிளர, குவிமுகை முறுக்கு உடைந்துஅலர்வாசம் விரிந்த நெட்டுஇதழ் பங்கயம் பொய்கை சூழ் வியத்தகும் வாணீசம் — குவிந்தஅரும்பின் முறுக்கவிழ்ந்து அலர்ந்து வாசம்பரந்த நெடிய இதழையுடைய தாமரைகள் நிறைந்ததடாகஞ்சூழ்ந்த கண்டோர்வியக்கும்வாணீச மென்னும் திருத்தளியில், அருச்சனைக்கு உரி மரபினில் போற்றி செய்அடியவர் — அருச்சனைசெய்தற்குரிய ஆகமவழியால் வழிபடும்அடியவர்கள், கரு தீமை நரிச்சு நீங்க — பிறவித்துன்பத்தால் வரும் பழிப்புநீங்க, மெய்பெரு நலம் கிழமைவீடு எய்துவர் — உண்மையும்அறிவும் இன்பமுமாகிய இவற்றைத்தனக்குரிமையாகவுடைய முத்தியையடைவார்.

சூதமுனிவர் கூறுதலால் கண்ணுவமுனிவர்முதலியோரைத்தம்மோடுளப்படுத்திமரங் காளெனவும், சிவத்தோடிரண்டறக்கலத்தலேவீடுபேருதலால் அச்சிவம்சத்துச்சித்தானந்தங்களேயேதிருவுருவாகவுடைமையில் மெய்ப்பெருநலக்கிழைவீடெனவுங் கூறினர். தீமை என்றது ஆதியாத்மீகமுதலிய தாபத்திரயஙகளே. நரிச்சு பழிப்பு. "நரிப்பாய் நாயேனிருப்பேனே நம்பியினித்தானல்காயே" எனவருந்திருவாசகத்தாலுணர்க. விரித்தஎனவந்ததுவிரித்தல்விகாரம். அருச்சனேக்குரி நான்கனுருபுவருமிடத்துஓர்வினையையிடையிற்பெய்து பொருள்கோடல்துமர்த்த மெனக் கொள்க. வழக்கினும் "அரிசிக்குப் போனன்" "பூவிற்குப் போனன்" எனவருதலுணர்க. (கககக)

வாணீசப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசுடுக.

## திருவோணகாந்தன்றளிப் படலம்.

### கலிவிருத்தம்.

பேணவல்லார்பிறவிதீர்த்தருள்
வாணநாதமரபுசொற்றனம்
யாணர்வண்மைபெறுமிதன்குணக்
கோணகாந்தன்றளியுரைத்துமால்.

(இ-ள்.) பேண வல்லார் பிறவிதீர்த்தருள் வாணநாதன் மரபுசொற்றனம்—விரும்பி வழிபடவல்லவர் பிறவித்தொடக்கை நீக்கியருளும்வாணீசத்தின்வரலாற்றை முன்னர்க்கூறினும், யாணர் வண்மை பெறும் இதன் குணக்கு ஓணகாந்தன் தளி உரைத்தும் - புதுமையையும் வளமையையும்இடையருதுபொருந்திய இவவாணீசத்தின்கீழ்பாலுள்ள திருவோணகாந்தன்றளியைக் கூறுவாம்.

காணபோர்க்குஎன்றும்புதுமையைவிளைத்தலில யாணாஎனவும, புதுமையை விளப்பது மணியும், பொன்னும், நெல்லுமாதலால் இவையென்றும் இடைவிடாது நிலை பெறுதலில் பெறுமெனவுங் கூறினர். (க)

மருவலார்தாழ்வாணன்றன்னுடைப்
பொருவில்சேனைத்தலைமைபூண்டவர்
தருமவாற்றினின்றொழுகுதானவ
ரிருவரோணன்காந்தனென்றுளார்.

(இ-ள்.) மருவலார் தாழ் வாணன் தன் உடைய பொருவு இல் சேனை தலைமை பூண்டவர்—பகைவர்கள்வணங்கும்வாணசுரனுடைய ஒப்பில்லாதசேனைகளுக்குத்தலைமைபூண்டாராகிய, தருமஆறின்நின்றுஒழுகுதானவர்இருவர்—சிவதருமவழியினின்றொழுகும்அசுரரிருவர்கள், ஓணன் காந்தன் என்று உள்ளார்—அவர்கள் ஓணனென்றுங்காந்தனென்றும் பேருடையவர்கள்.

சிவதருமம் இன்னவெனமுன்னரெடுத்துக்காட்டியசிவதருமோத்தரச் செய்யுளாலுணர்க. (உ)

வன்புபூண்டமனவகப்படா
வென்புபூண்டவிறைவர்தம்மடிக்
கன்புபூண்டவறிவின்மேலவர்
துன்புபூண்டதொடர்புநீக்குவார்.

(ஞ-ள்.) வன்பு பூண்ட மனம் அகப்படாத என்பு பூண்ட இறைவர் தம்அடிக்கு—அன்பாலிளகாதமனத்துக் கப்பாற்பட்ட எலும்பினைஆபரணமாகப்பூண்ட இறைவரது திருவடிக்கீழ், அன்பு பூண்ட அறிவின் மேலவர்—முழுவலன்பு பூண்டசிவஞானத்தின்மேலீட்டையுடையவராய், துன்புபூண்ட தொடர்பு நீக்குவார்—துன்பமமைந்தபிறவியை நீக்குவாராகி.

இதுபின்னர்ச் செய்யுளைக்கொண்டுமுடிதலால் குளகம். நெக்குவிட்டுக் கசியுமனத்தையுடையவடியார்க்கன்றிக்கசியாதமனத்திறகுஅப்பாலுள்ளவனாதலால்வன்புபூண்டமனவகப்படாஎனவும், சர்வசங்காரகாலத்தில்தானொருவனேநித்தியனென்று புலப்படுத்தற்குத்திருமால் முதலியோரென்பினை ஆரமாகத்தாங்கினோனாதலால்என்புபூண்டவிறைவர்எனவும்,அவன்றிருவடிக்கீழ்க்கொள்ளும்தலையன்பேசிவஞானமாதலால்அன்புபூண்டவறிவின் மேலவர்எனவும், அதனால்பவத்தொழில் ஒழிவாராதலால்துன்புபூண்டதொடர்பு நீக்குவார் எனவுங்கூறினார்,

நெக்கு விட்டுருகும்அன்பினர்மனத்துட்படுவோனென்பதை,—"பத்திவலையிற் படுவோன்காண்க" எனவும், கசியாதமனத்திலகப்படானென்பதை,—"சித்தமுஞ்செல்லாச் சேட்சியன்காண்க" எனவும் வருந்திருவாசகத்தாலும்.

தான்நித்தியனென்பதுணர்த்தற்குஎலும்பினை யாபரணமாகப்பூண்டன னென்பதை,—

> "ஆதலாற்றனைவியப்பதற்கன்றவையணித
> லீதலாதொருதிறமுளதியாவாக்குமெவர்க்கு
> நாதனேயிவனென்றுதன்பாங்கரோநண்ணித்
> தீதெலாமொரீஇமுத்திபெற்றுய்ந்திடுஞ்செயலே"

எனவரும் காந்தத்தாலும்.

அன்பேசிவஞானமென்றதை,—"வித்துமதனங்குரமும்போன்றிருக்கு மெய்ஞ்ஞானம்" எனவும்,

அதனாற் பிறப்பொழிதலை,— "வல்லபடி — வாதனையை மாற்றும்வகையிதுவே" எனவும்வரும் திருக்களிற்றுப்படியாராலும் உணர்க. (௩)

> ஓங்குகாஞ்சியூரைநண்ணினார்
> தேங்குதெண்ணீர்த்தீர்த்தந்தொட்டனர்
> பாங்கிலிங்கம்பதிட்டைசெய்தன
> ராங்கணன்பிற்பூசையாற்றினார்.

(இ-ள்.) ஓங்கு காஞ்சி ஊரை நண்ணினார்—வளத்தாலோங்கிய காஞ்சியென்னுந்திருப்பதியை யடைந்து, தெள் நீர் தேங்கு தீர்த்தம் தொட்டனர்—தெள்ளியநீர்நிறைந்ததீர்த்தங்கண்டு, பாங்கு இலிங்கம் பதிட்டை செய்தனர்—அதனயலில்சிவலிங்கப்பிரதிட்டைசெய்து, ஆங்கண் அன்பின் பூசை ஆற்றினார்—அவ்விடத்தில் அன்பாற்பூசை செய்தனர்.

நண்ணினார், தொட்டனர், செய்தனர் முற்றெச்சங்கள். (௪)

> ஆற்றுமிருவரன்புநோக்கிய
> நீற்றுமேனிநிமலனம்மையோ
> டேற்றின்மேலாற்காட்சியீதலும்
> போற்றியின்பப்புணரிமூழ்கினார்.

(இ-ள்.) ஆற்றும் இருவர் அன்பு நோக்கிய நீற்று மேனி நிமலன்—தன்னைப் பூசையாற்றிய இருவரது மெய்யன்பினைக் கடைக்கணித்தருளிய திருநீறுசண்ணித்த திருமேனியையுடையஇறைவன், அம்மையோடு ஏற்றின்மேல் காட்சி ஈதலும்—உமையம்மையோடு இடபவூர்தி மேலாரோகணித்துக்காட்சிதந்தருள, போற்றி இன்பம் புணரி மூழ்கினர்—வணங்கிப் பேரின்பமாகிய கடலிலழுந்தினர்கள். (௫)

கரையில்காதல்கைமிகத்தொழூம்
புரையிலார்க்குப்பொங்குவெள்ளிமால்
வரையினாரின்னருள்வழங்கிநீ
ருரைமின்வேட்டவரமென்றோதினார்.

(இ-ள்.) கரை இல் காதல் கை மிக தொழும் புரையிலார்க்கு—அளவிறந்தவாசைதம்மைவிழுங்கக் கைகுவித்துவணங்கிய குற்றமில்லாத அவ்விருவருக்கும், பொங்கு வெள்ளி மால் வரையினார் இன் அருள் வழங்கி—விளங்கும் வெள்ளிமலையிலெழுந்தருளிய இறைவர்இனியதிருவருள் செய்து, நீர் வேட்ட வரம் உரைமின் என்று ஓதினார்—நீங்கள்விரும்பிய வரத்தைக்கூறுங்களெனறு திருவாய்மலர்ந்தார். (௬)

கைகள்கூப்பிக்கண்கள்நீருகச்
செய்யபாதந்தொழுதுசெப்புவா
ரையனேமெய்யறிவுதந்தெமை
யுய்யக்கோடியுனக்கடைக்கலம்.

(இ-ள்.) கை கள் கூப்பி கண்கள் நீர் உக செய்ய பாதம் தொழுது செப்புவார்—கைகளைச்சிரத்தின் மேற்கூப்பிக் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சிந்தச்செவந்ததிருவடிகளைவணங்கிக் கூறுவார், ஐயனே மெய்அறிவு தந்து—யாவர்க்குமேலானவனே எங்களுக்குச்சிவஞானந்தந்து, எம்மை உய்ய கோடி—எங்களைஉய்யஆட்கொண்டருளாய், உனக்கு அடைக்கலம்—உனக்கு நாஙகளடைக்கலம். (௭)

இனையதீர்த்தமாடியெம்பெயர்
புனையிலிங்கம்போற்றப்பெற்றவர்
நினைவுமுற்றுநிரப்பியீண்டுநீ
யெனையநாளுமினிதுவைகுவாய்.

(இ-ள்.) இனைய தீர்த்தம் ஆடி—யாங்கள்கண்டஇந்தத்தீர்த்தத்தில்நீராடி, எம் பெயர் புனை இலிங்கம்போற்றபெற்றவர்—எமது பெயர்புனைந்தஇந்தச்சிவலிங்கத்தைவணங்கப் பெற்றவர், நினைவுமுற்றும்நிரப்பி—எண்ணிய எண்ணமுற்றும்முடித்து, ஈண்டு நீஎனைய நாளும் இனிதுவைகுவாய்—இச்சிவலிங்கத்தினிடத்து நீஎந்நாளும் இனிதாக எழுந்தருளாய். (௮)

என்றுபோற்றுமிருவர்க்கன்னவை
மன்றலொற்றைமாவினீழலா
னன்றுமங்கணல்கிவைகினான்
னன்றுதொட்டஃதற்புதத்தலம்.

(இ-ள்.) என்று போற்றும் இருவர்க்கு—என்றுவழிபட்டு வணங்கும்அவ்விருவர்க்கும், மன்றல் ஒற்றைமாவின் நீழலான்—வாசம்வீசும் ஒப்பில்லாத மாமரத்தின் நிழலில் எழுந்தருளியஇறைவன், அன்னவை நன்றும் அங்கண் நல்கி வைகினான்

அவ்வரங்களைப்பெரிதும் அவ்விடத்துத்தந்திருந்தருளினன், அன்றுதொட்டு அஃது அற்புதம்தலம்—அக்காலந்தொட்டு அத்தலம்சிவஞானம் விளைக்குந்தலமாம். (கூ)

திருவோணகாந்தன்றளிப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசசுo.

## சலந்தரீசப்படலம்.

### ஒருபோது கோச்சகம்.

ஓணனுர்க்கரியவரோணகாந்தன்றளி
நீணகர்மேன்மையைத்தெரிந்தவாநிகழ்த்தினு
மாணமர்காட்சிசான்மற்றதன்வடதிசைப்
பேணியசலந்தரீசத்தியல்பேசுவாம்.

(இ-ள்.) ஓணனுர்க்கு அரியவர் - திருவோணநாளிற்குரியதிருமால்அறிதற்கரிய முறைவரொழுந்தருளிய, ஓணகாந்தன்தளி நீள் நகர் மேன்மையை தெரிந்த ஆறு நிகழ்த்தினும்—திருவோணகாந்தன்றளியென்னும் பெரியதிருநகரத்தின்பெருமையைத்தெரிந்தவண்ணமெடுத்துக்கூறினும், மாண் அமர்காட்சி சால் அதன் வடதிசை—பெருமைமிக்க தோற்றம்வாய்ந்த திருவோணகாந்தன்றளியின் வடபக்கலில், பேணிய சலந்தரீசத்து இயல் பேசுவாம்—யாவரும் விரும்பிவழிபட்டசலந்தரீசத்தின் வரலாற்றினை யெடுத்துக்கூறுவாம். (க)

சலத்திடைத்தோன்றியோன்சலந்தரப்பெயரிய
குலப்புகழ்த்தானவன்கோநகர்க்காஞ்சியி
னலச்சிவலிங்கமொன்றமைத்துநாளுந்தொழு
துலப்பருமெய்த்தவமுஞற்றினனவ்வுழி.

(இ-ள்.) சலத்து இடை தோன்றியோன் சலந்தரப்பெயரிய குலப்புகழ் தானவன் - நீர்ப்பெருக்கினிடத்துப்பிறந்தவனாகியசலந்தரனென்னும்பெயரினையுடையமேன்மைவாய்ந்த புகழையுடைய ஓரசுரன், கோநகர் காஞ்சியின்—எல்லாநகரங்களுக்கும் அரசத்தன்மைவாய்ந்த நகரமாகிய காஞ்சித்திருப்பதியில், நலம்சிவலிங்கம் ஒன்று அமைத்து—நலமமைந்த ஓர் சிவலிங்கத்தைத்தாபனஞ்செய்து, நாளும் தொழுது—எந்நாளும் வழிபட்டுவணங்கி, உலப்பு அரும் மெய்தவம் உஞற்றினன்—கெடுதலில்லாத உண்மைவாய்ந்த தவத்தைச்செய்தான், அவவுழி—அவவிடத்தில்.

நீர்ப்பெருக்கில்தோன்றியகாரணத்தால்சலந்தரனென்னும்பெயருடையானுதலால்சலத்திடைத்தோன்றியோன் சலந்தரப்பெயரிய எனவும், அயோத்தி, மதுரை காசி, அவந்திகை, துவரை, மாயை, காஞ்சியெனப்படும் நகரங்களேழுள்ளும்காஞ்சிமேம்பட்டதாதலால் கோநகர்க்காஞ்சி யெனவும், மனமிந்திரியங்களின்வழிசசெல்லாதுநிற்றற்பொருட்டுவிரதங்களாலுண்டிசுருக்கிக்கோடையிலும், வெயிலிலும், மாரிக்காலத்தும்பனிக்காலத்தும் நீரிலும்நின்று உடற்குவருந் துன்பத்தைநோக்காது தனதுநிலையி

சலத்திடைத்தோன்றினேனென்பதை,—

"சீர்கெழுமண்டமுற்றுந் தெண்புனற்பெருக்கினூடு, நீரிடைவெய்தாத்தோன்று நெருப்பெனவினிது தோன்றி" எனவருங் கூர்மபுராணத்தாலும்.

ஏழுநகரங்களுள்ளும் காஞ்சிமேம்பட்டதென்பதை,—

" நிலத்திடைச்சிறந்தநகரொணப்படுவனீள்புகழயோத்திமாமதுரை
மலர்ப்பொழிற்காசியவந்திகைதுவரைமாயைவண்காஞ்சியென்றுரைப்ப
மலக்குறும்பறுக்குநகரமேழுள்ளுமேம்படுகாஞ்சி"

என இந்நூலின் இரண்டாங்காண்டத்திலும்வருதல்காண்க. (௨)

காட்சிதந்தருளியகண்ணகன்மாநிழ
லாட்சியார்த்தொழுதெழுந்தாண்மையுமதுகையு
மாட்சிசாலிறைமையுமாற்றலர்த்தெறுதலு
மீட்சியின்றருளெனவேண்டினான்பின்னரும.

(இ-ள்.) காட்சி தந்தருளிய கண் அகன் மா நிழல் ஆட்சியார் தொழுது எழுந்து—தனக்குக்காட்சிதந்தருளிய இடம்பரந்தமாமரத்தினதுநிழலை ஆட்சியாகவுடைய இறைவனைவணங்கியெழுந்து, ஆண்மையும் மதுகையும் ஆட்சி சால் இறைமையும்—ஆண்தன்மையையும் வன்மையையும் பெருமையமைந்ததலைமைத்தன்மையையும், மாற்றலர் தெறுதலும்—பகைவருயிர வாங்குதலையும், மீட்சி இன்று அருள் எனவேண்டினான்—மீளாதருளாயென்று குறையிரந்தான், பின்னரும்—மீளவும்.

எல்லாஅண்டங்களுக்குந்தலைவனுதலைவிரும்பினானுதலால் மாட்சிசாலிறைமையுமெனவும், திருமால்முதலியோராலிவ்வரங்கள் அழியாதுநிலைபெறவேண்டினானாதலால் மீட்சியின்றருளெனவெனவுங்கூறினார். (௩)

நின்னலாலென்னுயிர்நீப்பவரின்மையுந்
துன்னருமுத்தியிச்சூழலிற்பெறுவதும்
பின்னல்வார்சடையினாயருளெனப்பெற்றுமீண்
டன்னவாறுலகுதன்னடிப்படுத்தாளுநாள்.

(இ-ள்) நின் அலால் என்உயிர் நீப்பவர் இன்மையும்—நின்னையன்றி என்னுயிரை வாங்குவோரில்லாமையும், துன்அரும் முத்திஇசூழலில் பெறுவதும்—அடைதற்கரியமுத்தியை இத்திருத்தளியிலடைதலுமாகிய இவ்வரங்களை, பின்னல் வார்சடையினாய் அருளெனபெற்றுமீண்டு—பின்னியநீண்ட சடையையுடையாய் இவ்வரங்களையருளாயென்று பெற்றுத் திரும்பி, அன்ன ஆறு உலகுதன அடிப்படுத்து ஆளுநாள்—அவ்வாறே உலகங்களைத்தன்னடிக்கீழ்ப்படுத்தியாளுங்காலையில். (௪)

இந்திரன்முதலியவெண்டிசைக்கிறைவரைக்
கந்தமென்மலர்மிசைக்கடவுளைவென்றுபின்
பைந்துழாய்க்குரிசிலைப்பன்னகப்பகையொடும்
வெந்திறனாகபாசத்தினால்வீக்கினான்.

(இ-ள்.) இந்திரன் முதலியஎண்டிசைக்குஇறைவரை- இந்திரன்முதலாக எட்டுத்திக்குகளுக்கும் தலைவராயுள்ளவரையும், கந்தம் மெல்மலர்மிசைகடவுளை வென்று—வாசம்வீசும் மெல்லியதாமரைமலர்மேல் வசிக்கும்பிரமனையும்வென்று, பின் பைந்துழாய் குரிசிலை—பின்புபசியதுழாய்மாலையையணிந்த திருமாலை, பன்னகம் பகையொடும் வெந்திறல் நாகபாசத்தினால் வீக்கினான் — கருடனோடும்கொடிய வன்மைவாய்ந்தநாகபாசத்தினாற்கட்டினான். (௫)

சிறையிடைமாட்டினன்சிற்சிலநாட்செல
வறைகழல்வானவர்வணங்கிநின்றவுணனைக்

குறையிரந்தனேயனேக்கொண்டுமீண்டேகினுர்
பிறையெயிற்றவுணனும்பெருமிதத்துறையுநாள்.

(இ-ள்) சிறை இடை மாட்டினன்—சிறையில்வைத்தான், சிற்சிலநாள்செல்ல—சிலநாள்கழிய, அறைகழல்வானவர்அவுணனேவணங்கின்று-ஒலிக்கும்வீரகண்டையையணிந்த தேவர்கள் வணங்கித் தாழ்ந்து, குறைஇரந்து அனேயனேக்கொண்டுமீண்டுஏகினுர் — குறைகூறி அத்திருமாலேச்சிறையினின்றுமீட்டுமீளத்திரும்பினுர்கள், பிறை எயிறு அவுணனும் பெருமிதத்து உறையுநாள் — இளஞ்சந்திரனேயொத்த வக்கிரதந்தத்தையுடையசலந்தராசுரன் இறுமாப்போடு அரசுசெய்துவசிக்குங்காலேயில்.

மீண்டு-செயவெனெச்சத்திரிபு. (௬)

இறுதிநாளடுத்தலினெறுழ்விடைப்பாகனேத்
தெறுவலென்றெழுந்துபர்கயிலேயைச்சேறலு
முறுதுயர்ச்சிறையிடையுறையுநாளன்னவன்
பெறுமனேக்கிழத்தியைக்காமுறும்பின்னேகோன்.

(இ-ள்.) இறுதிநாள்அடுத்தலின்— தனக்குஅழிவுநாளடுத்தலால், எறுழ்விடைபாகனே தெறுவல்என்று எழுந்து உயர் கயிலேயைசேறலும் — வலியஇடபவூர்தியையுடையஉருத்திரமூர்த்தியைக்கொல்வேனென்றுபோர்க்கெழுந்துஊழிதோறுேங்குந்திருக்கயிலேயயடைய, உறுதுயர்சிறைஇடைஉறையுநாள்—மிக்கதுன்பம்வாய்ந்தசிறைக்களத்தில்வசிக்குங்காலேயில், அன்னவன்பெருமனேக்கிழத்தியைகாமுறும்பின்னேகோன்—அச்சலந்தராசுரன் இல்வாழ்க்கைக்குரியபிருந்தையைவிரும்பியதிருமால். (௭)

அற்றமீதென்றறிந்தம்மனேப்புறமுறத்
துற்றபூம்பொழிலிடைத்தூத்தவவடிவுகொண்
டுற்றிடக்கண்டனளொசியிடைப்பணேமுலே
முற்றிழைதாழ்ந்துமுன்னின்றிதுவினவுவாள்.

(இ-ள்.) ஈது அற்றம் என்று அறிந்து—இதுசமயமென்றறிந்து, அமனேபுறம் உறதுற்ற பூம்பொழில் இடை தூ தவவடிவுகொண்டு உற்றிட—அந்தச்சலந்தராசுரன் கோயிலின்புறத்துப் பொருந்தநெருங்கியமலர்களேயுடைய சோலேயினிடத்தில் புனிதமாகியதவவேடங்கொண்டுவர, ஒசிஇடைபணேமுலேமுற்றிழைகண்டனள்—துவளும்இடையையும்பெருத்தமுலேயையும்தொழில்முற்றிய ஆபரணத்தையுமுடையபிருந்தைகண்டு, தாழ்ந்து முன்நின்று இது வினவுவாள் — வணங்கி முன்னேநின்று இதனே வினவாநின்ருள். (அ)

நற்றவத்தடிகளீர்நதிமுடிக்கடவுளேச்
செற்றுமீள்வேனெனச்சென்றவெங்கொழுநர்பால்
வெற்றியோதோல்வியோவிளேவதொன்றறிகிலே
னெற்றிதுமொழிமினீரென்னமால்கூறுவான்.

(இ-ள்) நல் தவத்து அடிகளீர்—நல்லதவத்தால்மேம்பட்டீர், நதிமுடிக்கடவுளே செற்று மீள்வேன்எனசென்ற எம் கொழுநர் பால்—கங்கையையணிந்தசடாமுடியையுடையசிவபெருமானேவென்றுதிரும்புவேனென்று போர்க்குச்சென்றவெமதுகணவரிடத்து, வெற்றியோ தோல்வியோ விளேவது—வெற்றியோதோற்போவிளேவது, ஒன்று அறிகிலேன்—சிறிதுமறியேன், இதுஎற்றுமொழிமின்நீரென்ன — இதுஎத்தன்மைத் தாம்நீர்கூறுமின்என்றுபிருந்தைவினவ (திருமால்கூறுவான்.) (௯)

அஞ்சுபூதங்களும்வற்றிடைப்பொருள்களும்
பஞ்சுதீபட்டதுபடவிழிதிறந்தருள்
செஞ்சடைப்பகவன்முன்சென்றெவருய்ந்துளார்
புஞ்சவெள்வளைபினையறிந்திலைபோலுநீ.

(இ-ள்) புஞ்சம் வெள்வளையினாய்—திரண்ட வெள்ளியவளையலையுடைய பிருந்தையே, அஞ்சுபூதங்களும் அவற்றுஇடைப் பொருள்களும் — பஞ்சபூதங்களும் அவற்றினிடத்துள்ளபொருள்களும், பஞ்சுதீப்பட்டதுபட விழிதிறந்தருள் செஞ்சடைபகவன்முன் —தீயில்பஞ்சுபட்டபாடுபட, இறைவன்முன்சென்றுஉயந்துஉளார்எவர்—போர்க்குச்சென்று உயிர்வாழ்ந்தோர்எவர், நீஅறிந்திலைபோலும்—நீஅறியாய்போலும்.

பிருதிவிமுதலிய அஞ்சுபூதங்களும் மண்டிலங்களாதலால்அவற்றிலுள்ள இயங்கியற்பொருள்களும்நிலையியற்பொருள்களும் என்பார்அவற்றிடைப்பொருள்களுமெனவும், காமன்பட்டது கண்கூடாதலால் அப்பொருள்களெல்லாம் நீறுபடுமென்பார் அவற்றிடைப்பொருள்களும் பஞ்சுதீப்பட்டது படவிழிதிறந்தருள் பகவனெனவும், இன்பம்விளைக்கும் புன்னகையால் திரிபுரம்பட்டபாடு கண்கூடாதலால்யாவைவுஞ்சுட்டெரிக்குந் தீக்கண்ணாற்படும்பாடு கூறவேண்டுமோவென்பார் முன்சென்றெவருய்ந்துளாரெவரொனவுங்கூறினர். (௧௦)

அன்னபேராளனோடமரினுக்கேகலாற்
பன்னகப்படமெனப்பரந்தகலல்குலா
யுன்னுடைக்கேள்வனும்பொன்றுவானுண்மைகா
ணென்னவாய்விண்டனன்வளைகரந்தெய்தினான்.

(இ-ள்) பன்னகம் படம்என்னப்பரந்த அகல்அல்குலாய் — பாம்பின்படத்தையொத்துப்பரந்தஅல்குலையுடையாய், அன்னபேராளன்ஓடு அமரினுக்குஏகலால்—அப்பேராற்றலுடையோனிடத்துப்போர்க்குச்செல்லுதலால், உன்உடையகேள்வனும் பொன்றுவான்உண்மைகாண்என்ன—உன்னுடையபுருடனும்இறப்பானிதுசத்தியமென்று, வளைகரந்துஎய்தினான் வாய்விண்டனன்—பாஞ்சசன்னியத்தைமறைத்துத்தவவேடங்கொண்டுவந்ததிருமால்திருவாய்மலர்ந்தனன்.

பன்னகப்படமெனப்பரந் தகலல்குலாய் என்றது அவளிசையாமையால்மீண்டு தன்னுருக்கரந்து சலந்தரன்வடிவாய்த் திருமால்வந்து அவளின்பத்தை நுகர்ந்திருந்தனன்என்பது தோன்றுதல்காண்க. (௧௧)

கலிநிலைத்துறை.

அந்தவெல்லையோர்தானவன்பங்கிசோர்ந்தலையச்
சந்தமென்புயத்துகிலுடைசழங்கவேரொழுக
வுந்துநெட்டுயிர்ப்பெறியமெய்நடுங்குறவோடி
வந்துதோன்றிவாய்புலரநின்றின்னதுவகுப்பான்.

(இ-ள்) அந்த எல்லை ஓர் தானவன்பங்கிசோர்ந்து அலைய—அந்தஅமையத்தில்ஓரசுரன்சிகைகுலைந்தசையவும், சந்தம்மென்புயம்துகில்உடைசழங்க வேர் ஒழுக— சந்தனக்குழம்பணிந்தபுயத்திலணிந்தஉத்தரீயஞ்சரியவும்வேர்வைசிந்தவும், உந்து நெட்டுயிர்ப்புஎறிய மெய் நடுக்குற ஓடிவந்துதோன்றி—விடும்பெருமூச்செறியவுந்தேகம்நடு

ங்கவுமோடிவந்துமுன்னேபுலப்பட்டு, வாய்புலர நின்று இன்னது வகுப்பான்—வாய்நீர் வறப்பநின்றிதனைக்கூறுவான். (கஉ)

இறைவிநின்றனிக்கொழுநனீள்கயிலையினிளவண்
டறைகடுக்கையான்றனையறைகூவுமவ்வளவி
னறைமலர்க்கரங்கணிச்சியனோக்கினனமது
நிறைகடற்பெரும்படையெலாநீற்றினனதன்பின்.

(இ-ள்.) இறைவி—தலைவியே, நின் தனி கொழுநன் நீள்கயிலையின் இளவண்டு அறை கடுக்கையான் தன்னை அறைகூவும் அவ்வளவில்—உனதுகணவனாகிய சலந்தரன் ஓங்கியகயிலையின்கண் இளமைவாய்ந்தவண்டுகள் தேனுண்டிசைபாடும்கொன்றை மலர்மாலையையணிந்த சிவபெருமானைப் போர்க்கழைக்குமவ்வமையத்தில், நறை மலர் கரம் கணிச்சியான் நோக்கினன் — வாசங்கமழுந்தாமரைமலரையொத்ததிருக்கரத்தில் பரசினையேந்தியபெருமான்நெற்றிக்கண்ணால்நோக்கி, நமது நிறைகடல் பெரும் படை எல்லாம் நீற்றினன்—நமது கடல்போலநிறைந்த ஆயிரங்கோடிசேனைவெள்ளங்களையும் நீறுபடுத்தினன், அதன்பின்—அதற்குப்பின்னர்.

நெற்றிக்கண்ணால்நீறுபடுத்தினனென்பதையும், ஆயிரங்கோடிசேனைவெள்ளமென்பதனையும்,—

"திங்களங்கண்ணிப்புத்தேணுதல்விழிதிறப்பவாங்க
ணங்கியம்பொறியொன்றெய்தியாயிரகோடிவெள்ளம்
வெங்கண்வாளவுணர்தம்மைச்சாம்பராய்விளியநூறப்
பொங்குவெஞ்சீற்றத்துப்பினவுணர்கோன்போரினேற்றான்"

எனவருங் கூர்மபுராணத்தாலுணர்க. (கங)

பரிதிமண்டிலமாயிரமெனக்கதிர்பரப்பு
முருவவாழியொன்றாக்கினனொளிருமப்படையாற்
பொருவலித்திறற்சலந்தரன்பொன்றினனதனை
வெருவிநீளிடைக்கண்டுமீண்டித்தலைப்போந்தேன்.

(இ-ள்.) ஆயிரம் பரிதி மண்டிலம் என்ன கதிர்பரப்பும் உருவஆழி ஒன்றுஆக்கினன்—ஆயிரஞ்சூரியமண்டிலம் ஒருசேரக்கூடினாற்போலக்கிரணத்தைப்பரப்பு முருவமைந்த ஓர்சக்கரத்தைத் தனது திருவடிவிரலாற்சமைத்தனன், ஒளிரும் அ படையால் பொரு வலிதிறல் சலந்தரன் பொன்றினன்—(எனது அம்புக்குநீயிலக்காகா யிதனையெடுத்து உனதுதலைமேல்வைக்கில் உன்னொடுபோர்செய்வேனென்றவளவில் தானெடுத்துவைத்த) விளங்குஞ்சக்கரத்தால் போர்செய்யுஞ்சலந்தராசுரன் இறந்தனன், அதனை நீள் இடை கண்டு வெருவிமீண்டு இத்தலைபோந்தேன்—அதனைச்செய்மையினின்று கண்டஞ்சித்திரும்பி யிவ்விடத்தில்வந்தேன்.

திருவடிவிரலாற் சக்கரஞ்சமைத்தமையும், என்னம்புக்கிலக்காகாய் இதனையெடுத்தானின்னொடு போர்செய்வேன என்பதனையும்.

"ஏற்றிகலவுணன்றன்னையெம்பிரானகைத்துநோக்கி
யாற்றலையெனதுவாளிக்கெனவுனாத்தலங்குசெம்பொற்
காற்றலைவிரலாற்கீறிக்கடுப்பினோர்நேமிபண்ணித்
தோற்றுமீதெடுக்கினுன்னோடமர்செயத்துணிவலென்றான்.
என்றலுமவுணர்கோமானிலங்குவாளெயிறுதின்று

பொன்றவழ்திகிரிக்கூற்றைறவருந்தொடுமெடுத்துப்பொங்கித்
தன்றலைமீதுவைப்பத்தலைமுதலடியீறாகக்
குன்றிருகூறுசெய்தாலெனவுடல்குறைத்ததன்றே"
எனவருங் கூர்மபுராணத்தாலுணர்க. (கச)

என்றவாய்மொழிகேட்டலுங்கொம்பரையிழந்த
மன்றலங்கொடிபோற்கிடந்தலமருமயிலை
வென்றிவேள்படைதொளைத்திடமெலிவுறுநெடியோன்
சென்றுபற்றினன்றிருந்திழைகுறித்திதுசெப்பும்.

(இ-ள்.) என்ற வாய் மொழி கேட்டலும்—என்றுகூறிய வார்த்தையைக்கேட்டு, கொம்பரை இழந்த மன்றல்அம் கொடிபோல் கிடந்து அலமரும்மயிலை-தான்படர்தற்குப்பற்றுக்கோடாயிருந்த கொம்பினையிழந்த வாசமமைந்தகொடிபோலக்கிடந்துவருந்தும்மயில்போல்பவளை, வென்றி வேள்படை தொளைத்திட மெலிவுறு நெடியோன் சென்றுபற்றினன்—வெற்றியமைந்தமன்மதனம்புசென்றுதொளைக்கமனமெலியுந்திருமால் சென்றுகைப்பற்றினன், திருந்திழை குறித்து இது செப்பும் — பிருந்தையானவள் திருமால்கருத்தையுணர்ந்து இதனைக்கூறுவாள்.

அவன் வாய்மொழியைக்கேட்டு நம்மைத்திருமால் வஞ்சித்துப்புணர்ந்தானெனச்சினந்து உன்னவதாரங்களுள் உன்மனைவியை யரக்கனிடத்துப் பறிகொடுத்துவருந்துவையென்று அத்திருமாலைச்சபித்தனளென்றதை, "என்றவாய்மொழிகேட்டலும்" என்றஅதிகாரத்தாற் கொள்க. (கரு)

மன்னுகேள்வனையிழந்துளேன்வைகன்மூன்றகல்ற
பின்னைநின்மனைக்கிழத்தியேயாகுவல்பெரும
வென்னவஞ்சித்துநீங்கினண்மனையகத்தெய்தி
வன்னிபுக்குயிர்விடுத்தனள்கற்பினில்வழாதாள்.

(இ-ள்.) பெரும—பெருமானே, மன்னு கேள்வனை இழந்துள்ளேன்—நிலைபெற்ற எனதுகணவனையிழந்தேன், வைகல் மூன்று அகன்ற பின்னை—இன்றுமுதல் மூனறுநாள்கழிந்தபின், நின் மனைக் கிழத்தியே ஆகுவல் என்ன—உனதுமனைவியாகினறேனென்று, கற்பினில் வழாதாள் வஞ்சித்து நீங்கினள் மனை அகத்து எய்தி வன்னி புக்கு உயிர்விடுத்தனள் — சிறிதுங்கற்பினின்றும்வழாதபிருந்தை திருமாலைவஞ்சித்து அவனகையினின்றுநீங்கித் தனதுகோயிலையடைந்து தீயிற்பாய்ந்து உயிர்விட்டாள். (கசு)

**அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.**

ஏம்பலோடுறையுமாயனித்திறமுணர்ந்தானந்தச்
சாம்பரிற்புரண்டுபேய்க்கோட்பட்டவர்தம்மின்மாழ்கித்
தேம்பினனனையாள்செல்வத்திருவுருவுளத்திற்றீட்டி
யோம்பினனென்செய்வானங்குழிதந்தானெடுநாளிப்பால்.

(இ-ள்.) ஏம்பலோடு உறையும் மாயன் இத்திறம் உணர்ந்தான்—காமத்துன்பத்தால்நாளெண்ணி உயிர்சுமந்திருக்குந்திருமால்பிருந்தையிறந்தஇச்செய்தியைக்கேள்வியுற்று, அந்த சாம்பரில் புரண்டு - அவள்நீறாகிய சாம்பரிடத்தில் விழுந்துபுரண்டு, பேய் கோட்பட்டவர் தம்மின் மாழ்கி தேம்பினன்—பேயால்கொள்ளப்பட்டவரைப்போல மதிமயங்கிவருந்தினன், அனையாள் செல்வம் திருவுரு உளத்தில் தீட்டி ஓம்பினன்—அப்பிருந்தையினது பொலிவமைந்த திருவுருவத்தை மனமாகியபடத்திலெழுதியிடைவி

டாது பாதுகாத்தான், என் செய்வான்—இதுவன்றியென்னசெய்வான், அங்குநெடுநாள் உழி தந்தான்—அவ்விடத்தில்நெடுநாள் சுழன்றுதிரிந்தான், இப்பால்—இப்புறம். உணர்ந்தான் முற்றெச்சம். (௧௭)

இமையவர்பலருமாலையெங்கணுந்தேடிககாணார்
சிமையநீள்கயிலைநண்ணித்திருவடிவணங்கிக்கூற
வமையெனத்திரண்டுநீண்டுபசந்தணியிலங்குபொற்றோ
ளுமையொருபாகத்தெங்கோனவன்றிறமுணர்ந்துசொல்லும்.

(இ-ள்.) இமையவர் பலரும்மாலை எங்கணும் தேடி காணார்—தேவர்கள் பலரும் திருமாலைத்தேடிக்காணாமல், சிமையம் நீள் கயிலை நண்ணி திருவடி வணங்கி கூற—சிகரங்களாலுயர்ந்தோங்கிய திருக்கயிலையையடைந்து சிவபெருமான் திருவடியைவணங்கிக் கூற, அமை என திரண்டு நீண்டு பசந்து அணி இலங்கு பொன் தோள் உமை ஒரு பாகத்து எங்கோன்—மூங்கில்போலத்திரண்டுநீண்டுபசந்து ஆபரணத்தால்விளங்கும் பொன்னிறம் வாய்ந்த திருத்தோள்களையுடைய உமையம்மையை யொருபாகத்திலுடைய எமதிறைவன், அவன் திறம் உணர்ந்து சொல்லும்—அவனது வரலாற்றையுணர்ந்து திருவாய்மலர்ந்தருளுவன். (௧௮)

சொற்பயில்கமலைகேள்வன்சலந்தரன்றுணைவியாய
கற்பினிற்சிறந்தகாமர்விருந்தையைக்காமுற்றன்னாள்
பொற்புருவிழந்தவீமப்பொடியிடைக்கிடக்கின்றானால்
விற்பொலிவிசும்பின்வாழ்க்கைவிண்ணவர்கேண்மினென்றான்.

(இ-ள்.) சொல் பயில் கமலை கேள்வன்—புகழமைந்தஇலக்குமிகணவனாகியதிருமால், சலந்தரன் துணைவிஆய கற்பினில் சிறந்த காமர் விருந்தையை காமுற்று—சலந்தரன்மனைவியாகிய கற்பிற்சிறந்தவிருப்பஞ்செய்யும் பிருந்தையைவிரும்பி, அன்னாள் பொற்பு உருவு இழந்த ஈமம் பொடி இடை கிடக்கின்றான்—அப்பிருந்தையின் பொலிவுவாய்ந்த வடிவுநீறுபட்டசுடுகாட்டின் சாம்பரில்மயங்கிக்கிடக்கின்றான், வில் பொலி விசும்பின்வாழ்க்கை விண்ணவர் கேண்மின் என்றான்—கிரணம்விளங்கும் விண்ணுலகவாழ்க்கையையுடையதேவர்களே கேளுங்களென்று.

காமமருவு காமர்தொகுத்தல்விகாரம். (௧௯)

பாயபல்லுலகுமீன்றபனிவரைப்பிராட்டிமேனிச்
சேயொளிக்கலவைச்சாந்தினழுக்கினைத்திரட்டிநல்கி
நீயிரிங்கிதனையந்தநீற்றிடைவித்துவீரேல்
மாயவன்மயக்கந்தீர்க்குமரங்கண்மூன்றுளவாமென்றான்.

(இ-ள்.) பாய பல் உலகும் ஈன்ற பனி வரைபிராட்டிமேனி—பரந்தபலவண்டங்களையுமீன்றுங்கன்னியாயுள்ள உமையம்மையின் திருமேனியிலுள்ள, சேய் ஒளி கலவை சாந்தின் அழுக்கினை திரட்டி நல்கி—செந்நிறம்வாய்ந்த கலவைச்சந்தனமாகிய வழுக்கைத்திரட்டித்தந்து, நீயிர் இதனை இங்கு அந்த நீறிடைவித்து வீரேல்—நீங்கள் இவ்வழுக்கினைஇவ்விடத்தில் அந்தச்சாம்பரில்விதைப்பீரேயானால், மாயவன் மயக்கம் தீர்க்கும் மரங்கள் மூன்று உளஆம் என்றான்—திருமாலதுகாமமயக்கத்தை யொழிக்கும் மூன்றுமரங்கள் முளைக்குமென்று கூறியருளினான். (௨0)

வாணாவரதனைமயமாறுவிடைகொடுவணங்கிப்போந்து
தண்ணகைவிருந்தைவீந்தசாம்பரின்வித்தலோடு

மண்ணலந்துளவமங்கேழ்நெல்லிநீளகத்திமூன்றுங்
கண்ணெதிர்தோன்றக்கண்டான்கரியவன்மகிழ்ச்சிகொண்டான்.

(இ-ள்.) விண்ணவர் அதனை ஏற்று விடைகொடு வணங்கி போந்து—தேவர்கள் அவ்வழுக்கினைக் கையிலேந்திவிடைபெற்றுத் தொழுது சென்று, தண் நகை விருந்தை வீந்த சாய்பரில் வித்தலோடும்—குளிர்ந்தபுன்னகையுடையபிருந்தைநீறாகியசாம்பரில் விதைக்க, அண்ணல் அம் துளவம் அம் கேழ் நெல்லி நீள் அகத்தி மூன்றும்—பெருமைவாய்ந்த அழகியதுளபமும்அழகியநிறம்வாய்ந்தநெல்லியும் ஓங்கிய அகத்தியும் ஆகியமூன்றுமரங்களும், கண் எதிர் தோன்ற கரியவன் கண்டான் மகிழ்ச்சி கொண்டான்—தனதுகண்களுக்கெதிரே முளைக்கத்திருமால்கண்டு மகிழ்கூர்ந்தான். (௨௧)

மென்றுணர்த்துளவந்தன்னைவிருந்தையாத்துணிந்துபுல்லிக்
குன்றருங்கழுமனீங்கிக்குலவுதன்னிருக்கைசார்ந்தான்
றுன்றுபூந்துழாய்முன்மூன்றுந்துவாதசிவழுத்தப்பெற்றோர்க்
கன்றினர்க்கடந்தமாயோனாருள்சுரக்குமன்றே.

(இ-ள்.) மெல் துணர் துளவம் தன்னை விருந்தை ஆக துணிந்து புல்லி - மெல்லியபூங்கொத்தையுடைய துளவினைஅப்பிருந்தையாகத் துணிந்துதழுவி, குன்றரும் கழுமல் நீங்கி குலவு தன் இருக்கை சார்ந்தான்—குறைதவில்லாத அத்துன்பத்தினின்றுநீங்கிவிளங்கும்தனதுவைகுந்தத்தை யடைந்தான், துன்று பூம்துழாய் முன் மூன்றும் துவாதசி வழுத்த பெற்றோர்க்கு—மலர்நெருங்கிய துழாய் முதலிய வம்மூன்றுமரங்களையும் துவாதசிதிதியில்வணங்கப்பெற்றவர்க்கு, அன்றினர் கடந்தமாயோன் ஆர் அருள்சுரக்கும்—பகைவரைவென்றதிருமால் நிறைந்த அருளினைஅவர்களுக்குச்சுரந்து அருளுவான்.

துவாதசி அவர்க்குரியதினமாதலால் துவாதசிவழுத்தப்பெற்றோர் எனக்கூறினும்துழாயணிதலும் ஏனையவற்றையுட்கொள்ளுதலு மெனப்பொருள் கொள்க. (௨௨)

தடவரையிகந்ததிண்டோட்சலந்தரன்கயிலைவெற்பில்
விடமிடற்றிறையால்வீந்துவியனகர்க்காஞ்சிவைப்பிற்
படரொளிப்பிழம்பாய்த்தோன்றிப்பரசுதன்னிலிங்கமூர்த்தத்
துடனுறக்கலந்தானன்னோன்பெருமையாருரைக்கவல்லார்.

(இ-ள்.) தடவரை இகந்த திண் தோள் சலந்தரன்—பெரியமேருமலையைவென்ற திண்ணிய தோளையுடைய சலந்தராசுரன், கயிலை வெற்பில் விடம் மிடறு இறையால்வீந்து—கயிலையங்கிரியிலெழுந்தருளிய விடத்தையடக்கிய ஸ்ரீகண்டத்தையுடைய இறைவனால் உயிரிழந்து, வியன் நகர் காஞ்சி வைப்பில் படர் ஒளி பிழம்பாய் தோன்றி-பரந்தநகரமாகியகாஞ்சித்திருப்பதியில்பரவிய ஒளித்திரட்சியாய் எழுந்தருளி, பரசு தன் இலிங்க மூர்த்தத்து உடன் உற கலந்தான்—தன்னால்வழிபட்டு வணங்கப்படும் சிவலிங்கமூர்த்தத்தில் இரண்டறக்கலந்தான், அன்னோன் பெருமை யார் உரைக்கவல்லார்—அச்சலந்தரன் பெருமையை யார்தானெடுத்துக் கூறவல்லவர்.

சிவபெருமானால் தனக்குஇறுதிவந்தவிடத்துத்தன்னாற்பூசிக்கப்பட்டஇலிங்கத்தில் கலத்தலை முன்னேகுறையிரந்துபெற்றனனாதலால்இலிங்கமூர்த்தத்துடனுறக்கலந்தான் என்றார். (௨௩)

சலந்தரீசப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௪௯௩.

# திருமாற்பேற்றுப் படலம்.

## அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

வணங்குநர்க்கிருமைப்பேறுமேன்மையின்வழங்கியெங்கோ
னிணங்கியசலந்தரீசவரவினையெடுத்துச்சொற்று
மணங்கனாராடல்பாடலமுழக்கறுவணிநீள்வீதிக்
கணக்கெழுதிருமாற்பேற்றுக்கடிநகர்ப்பெருமைசொல்வாம்.

(இ-ள்) வணங்குநர்க்கு இருமை பேறு மேன்மையின் வழங்கி—தம்மைவணங்குவோர்க்கு இம்மை மறுமைப்பயன்களை மகிழ்ச்சியோடுதந்து, எங்கோன் இணங்கிய சலந்தரீசம் வரவினை எடுத்து சொற்றும்—எமதுபெருமானெழுந்தருளிய சலந்தரீசத்தின்வரலாற்றையெடுத்துக் கூறினும், அணங்கு அன்னார் ஆடல் பாடல் முழக்கு அறாத அணி நீள் வீதி கணம் கெழு திருமாற்பேறு—தெய்வப்பெண்களையொத்தநாடகப்பெண்களது ஆடல் பாடல் முழக்கம்நீங்காத அழகியநீண்டவீதியின்கூட்டங்கள்நெருங்கியதிருமாற்பேறென்னும், கடி நகர் பெருமை சொல்வாம்—காவல்பூண்டநகரத்தின பெருமையை எடுத்துக்கூறுவாம். (க)

குவலையங்காவல்பூண்டகுபனெனுமரசற்காகச்
சிவநெறித்ததீசியோடுஞ்செருச்செய்நாள்விடுத்தவாழி
தவமுனிவயிரயாக்கைதாக்கிவாய்மடிதலோடுங்
கவலுறுமனத்தனாகிக்கடுஞ்சமர்துறந்தமாயோன்.

(இ-ள்.) குவலையம் காவல் பூண்ட குபன் எனும் அரசற்கு ஆக—நிலவுலகுகாவல்பூண்டகுபனென்னும்அரசன் நிமித்தமாக, சிவம் நெறி ததீசி ஓடும் செரு செய் நாள்—சிவஞானநெறியினின்ற ததீசிமுனிவனோடும் போர்செய்யுங்காலையில், விடுத்த ஆழி தவ முனி வயிரம் யாக்கை தாக்கி வாய் மடிதலோடும்—அம்முனிவன்மேல் தானெறிந்தசக்கரமானது தவத்தையுடைய அத்ததீசிமுனிவர் வச்சிரதேகத்தின்மேல்தாக்கி வாய்மடிய, கவல் உறு மனத்தன் ஆகி கடுஞ் சமர் துறந்த மாயோன்—வருந்துமனத்தையுடையவனாய்க் கொடியபோர்த்தொழிலைக்கைவிட்டதிருமால்.

குபனென்னும்அரசனோடு ததீசிமுனிவர்நட்பாயிருந்தகாலையில் ஓர்நாளிருவருக்கும்பெருங்கலாம்விளைய, அவ்வரசன்வச்சிராயுதத்தால்துண்டுபட்டஅத்ததீசிமுனிவன் சுக்கிரனாலுயிர்பெற்று, இட்டசித்தீச்சரஞ்சென்று சிவபெருமானைவழிபட்டு வச்சிரதேகம்பெற்று, மீண்டுஅக்குபனுடையசிரசையிடக்காலால்உதைத்துருட்ட, அக்குபன்பொருட்டாகத்திருமால் சக்கரத்தையேவி அச்சக்கரம் வாய்மடிதலால்அத்திருமால்புறங்கொடுத்தனன் என்பது முன்னர்க்கூறிய இட்டசித்தீச்சரப்படலத்தின் வாலாறுதலால்வயிரயாக்கைதாக்கி வாய்மடிதலோடும் என்றார். (உ)

இனிப்படைபெறுவதெவ்வாறென்றுவாளவுணர்க்காற்றுப்
பனிப்புடையிமையோர்தம்மையுசாவினன்படைகட்கெல்லாந்
தனிப்பெருங்குருவாமீசன்சலந்தரனமடியக்கண்ட
சினப்பொறிசிதறுந்தீவாய்த்திகிரியொன்றுளதென்றோர்ந்தான்.

(இ-ள்.) இனிப்படை பெறுவது எவ்வாறு என்று வாள் அவுணர்க்கு ஆற்றாத பனிப்புஉடை இமையோர் தம்மை உசாவினன்—அவுணருயிர்வாங்க இனிவேறுசக்கரம் பெறுவதெவ்வாறென்று வாளேந்திய அசுரருக்குப்புறங் கொடுத்தநடுக்கத்தையுடைய

தேவர்களைவினவி, படைகட்கு எல்லாம் தனி பெருங் குருவாய்—ஆயுதங்களுக்கெல்லாம் ஒப்பில்லாதபெரியகுருமூர்த்தமாய், ஈசன் சலந்தரன் மடிய கண்ட சினம் பொறி சிதறும் தீவாய் திகிரி ஒன்று உளது என்று ஓர்ந்தான்—சிவபெருமான் சலந்தராசுரன் மடியத் திருவிரல்நுதியாற் கண்டகோபமாகிய புலிங்கஞ்சிந்தும்தீயைவாயிலுடையசுதரிசனமென்னுஞ் சக்கரமொன்றுண்டென்று தானுணர்ந்தான்.

புலிங்கம் தீப்பொறி, திருவிரல்நுதியால் சக்கரங்கண்டமையை முன்னர்ப்படலத்திற்காண்க. சலந்தரன்மடிந்தபின் அவ்வசுரனுக்கு உறவினராயுள்ள அசுரர்கள் நமது குலத்தைத்தேவர்கள் வேரோடு கெடுக்கின்றனரோ அவர்களைநாம் வேரறக்களைவோமென்று இந்திரன்முதலியோரோடு போர்செய்ய, அவ்விந்திரன்முதலியோர் போர்க்காற்றாதுதிருமாலிடத்துக்கூற, அவர்கள் குறைதவிர்க்கக்கருதியதிருமால் தனதுசக்கரம்வாய் மடிந்தமையைக்கருதினனாதலால் இனிப்படைபெறுவதெவ்வாறு எனவும், அதனைத் தேவர்களோடுசூழ்ந்தனனாதலால் அவுணர்க்காற்றாப்பணிப்புடையிமையோர் தம்மை யுசாவினன் எனவும், எல்லாப்படைகளுக்குந்தலைமைபூண்டுளதாதலால் படைகட்கெல்லாந்தனிப்பெருங்குருவாயெனவுங் கூறினார்.

தனதுசக்கரம் வாய்மடிந்ததைத்திருமால் கருதினமையை,—

“ சலந்தரன்கிளைகளாயவவுணருந்தறுகட்பேழ்வாய்
வலங்கெழுவயிரத்திண்டோளரக்கரும்வந்துநந்தங்
குலங்கெடமுருக்குகின்றவமரரைக்கொன்றுநாமென்
றிலங்கொளிவிரிக்குமாடத்திந்திரனகரிற்சேர்ந்தார்.
கூற்றெனவுரறியார்த்துக்கொல்சினத்தவுணர்வெம்போ
ரேற்றமர்புரியுமேல்வையிந்திரன்முதலதேவ
ராற்றலராகிநெஞ்சமழிந்துவென்கொடுத்துப்போகி
மாறறலர்தானைமுற்றாவைகுந்தநகரிற்சேர்ந்தார்.
பாவடிப்பருமயானைப்பரவமுன்வந்துகாத்த
தேவர்கடேவவெய்யதீத்தொழிலவுணர்தம்மா
லோவறுதுயரமுற்றேமுய்திறங்காணேமென்னத்
தாவருந்துதிகள்கூறிவருந்தொடுஞ்சாற்றலுற்றார்” எனவும்,

அதனைத்தேவர்களொடு வினவிச்சிவபெருமானிடத்துச் சக்கரமொன்றுளதெ

“ இலங்குவெண்டிங்கட்கண்ணியெம்பிரான்வெகுண்டுமுன்னஞ்
சலந்தரனுடலம்போழ்ந்தசக்கரம்பெற்றாயென்னில்
வலங்கெழுமவுணர்தம்மைமாட்டுதலெளிதாமென்னாப்
புலன்களுமனனும்வேறாய்விண்ணவர்புகன்றாரன்றே”
எனவும் கூர்மபுராணத்தில் வருதல்காண்க. (ச)

உவகைமீதூரவிண்ணோர்க்கோதினனிதனைவேண்டிச்
சிவனடிபரசினின்னேதிருவருள்சுரக்குமென்னா
வவரொடும்போந்துகாஞ்சியணிநகர்வடமேல்பாங்கர்த்
துவரிதழுமையாள்போற்றுஞ்சுடரொளியிலிங்கங்கண்டான்.

(இ-ள்) உவகை மீதூர விண்ணோர்க்கு ஓதினன்—மகிழ்ச்சிமீதூரத் தேவர்களுக்குக்கூறி, இதனை வேண்டி சிவன் அடி பரசின் இன்னே திருவருள் சுரக்கும் என்னா—இ

ச்சக்கரத்தை வேண்டிச்சிவபெருமான் திருவடியை வணங்கில் இப்பொழுதே திருவருள் செய்வானென்று, அவரொடும் போந்து—அத்தேவர்களோடுஞ் சென்று, காஞ்சிஅணி நகர் வடமேல் பாங்கர்—காஞ்சியென்னும்அழகியதிருநகரின் வடமேற்றிசையில், துவர் இதழ் உமையாள் போற்றும் சுடர் ஒளி இலிங்கம் கண்டான—பவளம்போன்றஇதழை யுடைய உமையம்மை வழிபட்டுவணங்கும் சோதியிலிங்கத்தைத் தரிசித்தான்.

சிவபெருமான்திருவடியை யருச்சிக்கின்சக்கரம் எளிதிற்பெறலாமென்றதை,—

" இமையாக்கருங்கண்முலைதாங்கியிடுகுமருங்குலயிராணி
யமையார்தடந்தோணலதுகருமண்ணன்முதலாநமரங்கா
ளுமையாள்கணவன்றாள்போற்றிநேமியடைந்திங்குடற்றவுணர்
தமைவேரொடுந்தடிந்திடுவனெனரோவென்னவிடையளிந்தான்"
எனக் கூர்மபுராணத்தில் வருதல்காண்க. (௪)

சேயிழைக்கவுரிசெங்கைதைவரச்செவந்துதோன்றிப்
பாயொளிப்பவளக்குன்றரெனப்பெயர்படைத்துநான்கா
மாயிரமுகங்களங்கணருந்தவர்வழுத்தவைகு
நாயனார்தமைக்காண்டோறுநாரணனிறும்பூதுற்றான்.

(இ-ள்.) சேய் இழை கவுரி செங்கை தைவர செவந்து தோன்றி—மாணிக்கங் களிழைத்தஆபரணத்தையணிந்த வுமையம்மை செவந்ததிருக்கரத்தாற்றடவச்செந்நிற ம்வாய்ந்துகாட்சிதந்து,பாய் ஒளி பவளம்குன்றர் என்னபெயர்படைத்து-பரந்தஒளியை யுடைய பவளமலையானெனத்திருநாமம் வாய்ந்து, ஆயிரம் நான்குஆம் முகங்கள்—அள விறந்தநான்குமுகங்கள் தோறும், அங்கண்அருந்தவர் வழுத்த வைகும் நாயனார் தமை காண்தோறும்-அவ்விடத்துச் செய்தற்கரிய தவத்தைச்செய்யும் முனிவர்கள்வணங்கும் இறைவனைத்தரிசிக்குந் தோறும், நாரணன் இறும்பூது உற்றான்—திருமாலதிசய மு ற்றான்.

தரிசிக்குந்தோறுந்திருமாலுக்குநவநவமாய்ப்புலப்படுதலால்நாரணன் காண்டொ று மிறும்பூதுற்றான் என்றார். (௫)

நிறைபெருங்காதல்கூரவாயிடைநியமம்பூண்டு
மிறைவழியிகந்துபாசுபதத்தனிவிரதமாற்றி
முறைபெறுவெண்ணீறங்கமுழுவதும்பொதிந்துபாசப்
பொறைதவிர்த்தருளும்மைப்புண்டரநுதலிற்றீட்டி.

(இ-ள்.) நிறை பெருங் காதல் கூர ஆயிடை நியமம் பூண்டு—நிறைந்த பேரன்பு மீதூர அவவிடத்தில்ஆகமநெறியிற்கூறிய விரதங்களைமேற்கொண்டு, மிறைவழி இக ந்து பசுபதம்தனி விரதம் ஆற்றி-பொய்ந்நெறியினின்றுநீங்கிஒப்பில்லாதபாசுபதவிரத ம்பூண்டு, முறை பெறு வெள்நீறு அங்கம்முழுவதும் பொதிந்து — சிவாக்கினியிலு ண்டாகிய வெள்ளியதிருநீற்றினைச்சரீரமுற்றும் உத்தூளனஞ் செய்து, பாசம் பொறை தவிர்த்து அருளும் மும்மை புண்டரம் நுதலில் தீட்டி — பாசமாகியசுமையைப் போ க்கியருளுந்திரிபுண்டரங்களைநெற்றியிலிட்டு.

தான்செய்யுங்கடன்களை ஆகமவழியாற் கொண்டானென்பார் ஆயிடை நியமம் பூண்டெனவும், ஆகமவிலக்குகளை யொழிந்தானென்பார் மிறைவழியிகந்தெனவும், பசுபதிசம்பந்தமானவிரதங் கொண்டானென்பார் பாசுபதத்தனிவிரதமாற்றி எனவும், அந்தணர்முதலியமூவர்க்கும் சிவாக்கினியில் விளைந்ததிருநீறு உரிமையதென்பார் முறை

பெறுவெண்ணீறெனவும், சிரசுமுதல்பாதபரியந்தம் உத்தூளனஞ் செய்வது அவ்விர தத்துக்குரிய தென்பார் அங்கமுழுவதும் பொதிந்தெனவும், பசிதம், பசுமம், க்ஷாரமெனத்திருநீற்றுக்குவந்தபெயர்க் காரணங்களுள் க்ஷாரமென்பது உயிர்களுக்குமலத்தைக்கழுவுங்காரணத்தால்வந்தகாரணப் பெயராதலின்அதனாலமைந்ததிரிபுண்டரங்கள் மும்மலங்களையும் போக்குவதென்பார் பாசப் பொறை தவிர்த்தருளும் மும்மைப்புண்டரமெனவுங் கூறினர். பசிதமென்பது சிவத்துவத்தைவிளக்குவது, பசுமம் என்பது பாவங்களைநீறாக்குவது. க்ஷாரமென்பது உயிர்களது மலத்தைக்கழுவுவது.

திரிபுண்டரங்கள்ஆணவங் காமிய மாயைஎன்னு மும்மலங்களையும் போக்குங்குறியென்பதனை "நீற்றுக்கோடிதிமிர்ந்து காட்டியும்" எனவரும் வாதவூரடிகள் திருவாக்காலறிக. ஆசைக்குஅன்புகாரணமாதலால் காரியத்தைக்காரணமாகவுபசரித்தார். ()

கண்டிகைமாலைபூண்டுகதிரொளிபரப்புமாழித்
திண்படைபெறுதல்வேண்டிச்சங்கற்பஞ்செய்துகொண்டு
விண்டலத்திமையோரங்கண்வேண்டுவவெடுத்துநல்க
மண்டுபேரன்பாற்பூசைவிதியுளிவழாதுசெய்வான்.

(இ-ள்.) கண்டிகை மாலை பூண்டு கதிர் ஒளி பரப்பும் ஆழி திண் படை பெறுதல்வேண்டி—உருத்திராக்கமாலைபூண்டு விளங்கும் ஒளியை வீசும் சுதரிசனமென்னும் திண்ணியசக்கராயுதத்தைப்பெறவிரும்பி, சங்கற்பம் செய்து கொண்டு—முன்னர்ச்சங்கற்பம் செய்து, விண் தலத்து இமையோர்அங்கண் வேண்டுவ எடுத்து நல்க—விண்ணுலகிலுள்ளதேவர்கள் அவ்விடத்தில்வேண்டும் உபகரணங்களைமுறையேயெடுத்துக் கொடுக்க, மண்டுபேர் அன்பால் பூசை விதி உளி வழாது செய்வான்—நெருங்கிய பேரன்பால் சிவபூசனையை ஆகமவிதியால்வழுவாமற் செய்வானாயினன். (எ)

மாயிருங்கமலப்போதுகைக்கொண்டுமாட்சிசான்ற
வாயிரந்திருநாமத்தானித்தலுமருச்சித்தேத்தி
மேயினன்றிருமாலன்னோன்பத்தியின்விளைவுகாண்பான்
பாயிரமறைகடேறாபபரம்பொருளொருநாளங்கண்.

(இ-ள்.) திருமால் மாயிருங் கமலம் போது கைக்கொண்டு—திருமால் பெருமைவாய்ந்த தாமரைமலரைத்தனதுகையால்,மாட்சிசான்ற ஆயிரம் திருநாமத்தால் நித்தலும் அருச்சித்து ஏத்தி மேயினன்—பெருமையமைந்த பவன்முதலிய ஆயிரந்திருநாமங்களால்நாள்தோறும் அருச்சனைசெய்து வணங்கி வழிபட்டு வந்தான், அன்னோன் பத்தியின் விளைவுகாண்பான் — அத்திருமாலது பத்தியின்முதிர்ச்சியினைக்காண, பாயிரம்மறைகள் தேறாத பரம்பொருள் அங்கண் ஒருநாள் — பாயிரமமைந்த வேதங்களால் அறிதற்கரிய சிவபெருமான் அவ்விடத்தில் ஒருநாள்.

மறைகள் விந்து தத்துவத்தின்காரியப்பாடுகளாகிய சொற்பிரபஞ்சங்களாதலால்அவற்றாலுணர்தற்கரியானென்பார் பாயிரமறைகடேறாப்பரம்பொருள் என்றார். (அ)

ஷை

நறைவாருமிதழ்துறுத்தசெழும்பொகுட்டுநளினமாயிரத்திலொன்று
மறைவாகத்திருவுள்ளம்வைத்தருளக்கருவிமுகில்வாட்டுமேனி
யிறையோனும்பண்டுபோற்பவன்முதலாமாயிரம்பேரெடுத்துக்கூறிக்
குறையாதபேரன்பிற்பதுமமலர்கொடுபூசைபுரியுமேல்வை.

(இ-ள்.) நறை வாரும் இதழ் துறுத்த செழும்பொகுட்டு நளினம் ஆயிரத்தில் ஒன்று மறைவாக திருவுள்ளம்வைத்தருள — தேனிருக்கும் இதழ்கள் நெருங்கிய

வளம்வாய்ந்த ஆயிரந்தாமரைகளுள் ஒன்று குறையத்திருவுள்ளங் கொண்டருள, கருவி முகில் வாட்டும் மேனி இறையோனும்—திரண்டமேகத்தினைநிறத்தால் வென்ற திருமாலும், பண்டுபோல் பவன்முதலாம் ஆயிரம்பேர் எடுத்து கூறி—முன்பு போலப்பவன்முதலாகிய ஆயிரந்திருநாமங்களையெடுத்துக் கூறி, குறையாத பேர் அன்பின் பதுமம்மலர் கொண்டு பூசை புரியும் எல்லை—குன்றுதலில்லாத பேரன்பால் தாமரைமலரைக்கொண்டுபூசனைபுரியுங் காலையில். (கூ)

பன்னுமொருதிருப்பெயர்க்குநறுங்கமலங்காணமைப்பதைத்துநோக்கி
யின்னினிமேற்செயலென்றுதெரிந்துணர்ந்துதனதுவிழியிடந்துபெம்மான்
கொன்மலர்த்தாண்மிசைச்சாத்திக்களிகூர்ந்தானுறுப்பினையுங்கொடுப்பதல்லா
மென்மையுறத்தாங்கொண்டவிரதத்தைவிடுவர்களோகொள்கைமேலோர். [ன்

(இ-ள்.) பன்னும் ஒரு திருப் பெயர்க்கு நறும் கமலம் காணமை பதைத்து நோக்கி—கூறும்ஆயிரந்திருநாமங்களுள் ஒருநாமத்திற்கு நறுமணங்கமழுந் தாமரைமலரைக்காணமையால் மனம்பதைத்துப்பார்த்து, இனிமேல் செயல் என் என்றுதெரிந்து உணர்ந்து—அம்மலரின்மையால் இனிமேல்அடியேன் செயல் என்னுகுமென்று தெரிந்துஆராய்ந்து, தனது விழி இடந்து பெம்மான் கொன் மலர் தாள் மிசை சாத்தி களிகூர்ந்தான்—தனது கண்ணைப் பெயர்த்துச்சிவபெருமானது பெருமைவாய்ந்ததிருவடித்தாமரைமலர்மேல் சாத்திக்களிப்புற்முன், கொள்கை மேலோர் உறுப்பினையும் கொடுப்பது அல்லால்—ஓர் விரதத்தைக் கைக்கொண்டஅறிவின்மேலோர் தாம்கொண்ட விரதத்துக்கோர் குறைபாடுவரில் தமதவயவங்களையும் அரிந்து கொடுத்து நிலை நிறுத்துவரேயன்றி, மென்மைஉற தாம் கொண்ட விரதத்தைவிடுவர்களோ—குறைபடத் தாம் கொண்டவிரதத்தைக் கைவிடுவார்களோ (விடாரென்றபடி.)

தனது பூசனைக்குக் குறைபாடுவாராவண்ணம் அம்மலர்க்குமாருகத்தமதுறுப்புகளுள் சிறந்த வுறுப்பொன்றினைக் கொண்டுபூசிக்கக்கருதினுதலால் தெரிந்துணர்ந்தென்ருர். தாங்கொண்ட விரதங்கள் பிழையாவண்ணம் தலையேறிய சிபியிடத்தும், தேவர்கள்வேண்டுகோளால் தனது முதுகந்தண்டுகொடுத்த ததீசியிடத்தும் நிகழ்ந்ததைக் காண்க. அதனுல்கொள்கைமேலோர் உறுப்பினையுங்கொடுப்பதல்லால் மென்மையுறத்தாங்கொண்டவிரதத்தை விடுவர்களோ எனக்கூறினுர். பின்னடியிற் சொல்லப்பட்டசிறப்புப் பொருளால் முதன்மூன்றடியிற் கூறப்பட்டவர்ணியமாகிய பொதுப்பொருள்களைச்சாதிக்கப்படுதலால் வேற்றுப் பொருள்வைப்பணி.

திருமால்கொண்ட முழுவலன்பினையுணர அருச்சிக்குந் தாமரைகளில் ஒன்றனைச்சிவபெருமான் மறைத்தருள, அதுகண்டுமனந்தளர்ந்துதனது கண்ணைப்பறித்து அருச்சித்தானென்பதனை.

"மோட்டானைந்தினிநிதாட்டித்தீபமுருகார்ப்புகையடிசில்
வேட்டாதரவிலுடனேந்திவினைகொப்புளிக்குந்துழாய்மார்பன்
சூட்டாடரவகங்கணத்தோன்பெயராயிரநாடொறுந்துதித்துத்
தாட்டாமரையாயிரஞ்சாத்தித்தயாவின்வழிபட்டிடுநாளின்.
வையமளந்தசேவடியுங்கண்ணுமுகமும்வாய்மலருஞ்
செய்யகரியதிருநெடுமாலன்புநோக்கத்தெறுசினத்த
வெய்யமதவெங்களிறுரித்தோன்வினைகொப்பளிக்குநறவுயிர்க்கு
மையகமலமாயிரத்திலொருபோதறியாதகற்றினன்.

அடு

வெண்ணெய்கமழுஞ்செங்கனிவாய்விமலனிமிலேறுயர்த்தருளு
மண்ணல்பேராயிரமோதிப்பொற்றுளிணையிலருச்சிக்கும்
தண்ணங்கமலமாயிரத்திற்றென்றுகாணான்றளர்வெய்திக்
கண்ணென்றுரைக்குஞ்செய்யமலர்க்கமலம்பறித்துச்சாத்தினான்"

எனக் கூர்மபுராணத்தில் வருதல்காண்க.

பாறிலகுமழுப்படையோன்மாயவன்றனன்பினொருப்பாடுநோக்கி
மாறிலாப்பெருங்கருணையூற்றெடுப்பச்செழுஞ்சோதிமலரப்பாங்கர்
நூறியோசனையளவுமெரிகொளுந்தநோக்கரும்பேருருவுதாங்கி
யீறிலாக்கதிரிரவிமண்டிலநின்றிழிந்தெதிரோகாட்சியீந்தான்.

(இ-ள்) பாறு இலகும் மழு படையோன்—பருந்துகள் புடைசூழ்ந்துவிளங்கும் பரசாயுதத்தை யேந்தியசிவபெருமான், மாயவன் தன் அன்பின் ஒருப்பாடு நோக்கி—திருமாலினுடைய அன்பினொருமையை நோக்கி, மாறு இல்லாத பெருங் கருணை ஊற்று எடுப்ப செழும் சோதி மலர—மாறுதலில்லாத பெரியதிருவருள் சுரக்கவும் நிறைந்த வொளி எங்கும் பரவவும், பாங்கர் நூறுயோசனை அளவும் எரி கொளுந்த நோக்கு அரும் பேர் உருவு தாங்கி—பக்கங்களிலே நூறுயோசனையளவும் தீப்பற்றவும் அளவிடற்கரிய பெரியதிருவுருவுதாங்கி, ஈறு இல்லாத கதிர் இரவி மண்டிலம் நின்று இழிந்து எதிரோ காட்சி ஈந்தான்—அளவிடற்கரிய கிரணத்தையுடைய சூரியமண்டிலத்தினின்றிழிந்து எதிரோ காட்சிதந்தருளினன்.

இயல்பாகவேஉயிர்களிடத்துப் பேரருளுடைமையால் - மாறிலாப் பெருங்கருணை என்றார். "மாறிலாப்பெருங்கருணை வெள்ளமே" எனவாதவூரடிகள் திருவாக்காலுமுணர்க. (௧௧)

இறைவரவுகண்டஞ்சிப்புடைமருவுமிமையவரோட்டெடுப்பநோக்கி
நிறையுவகைதலைசிறப்பத்திருநெடுமாலிருநிலத்தின்வீழ்ந்துதாழ்ந்து
முறைமையினலட்டாங்கபஞ்சாங்கமுறவணங்கிமுடிகையேற
மறைமொழியிற்றுதித்தாடியானந்தவிழிமாரிவெள்ளத்தாழ்ந்தான்.

(இ-ள்.) இறை வரவு கண்டுஅஞ்சி புடை மருவும் இமையவர் ஓட்டெடுப்ப திருநெடுமால் நோக்கி—சிவபெருமான்வருதலைக் கண்டுஅச்சங்கூர்ந்து பக்கவில் மருவிய தேவர்கள் ஓட்டெடுக்க நெடியதிருமால் பார்த்து, நிறை உவகை தலை சிறப்ப—நிறைந்த மகிழ்ச்சிமீக்கூர, இரு நிலத்தின் வீழ்ந்து தாழ்ந்து—பெரியநிலவுலகின்மேல் தண்டாகாரமாகவீழ்ந்துகுழைந்து, அட்டாங்க பஞ்சாங்க முறைமையினால் உறவணங்கி முடி கை ஏற—அட்டாங்க பஞ்சாங்க முறைமையினால் பொருந்த வணங்கித் தனது கைதலைமேலேற, மறை மொழியில் துதித்து ஆடி விழிஆனந்த மாரி வெள்ளத்து ஆழ்ந்தான்—வேதவாக்கியங்களால் துதித்துக் கண்கள் பொழியும் ஆனந்தபாஷ்ப வெள்ளத்தில் அழுந்தினன்.

அட்டாங்கம் எட்டுறுப்புக்கள் நிலத்தில் தோயப்பணிதல். எட்டுறுப்புக்கள் தலை, இரண்டுகை, இரண்டுசெவி, மோவாய், இரண்டுதோள், இதனைச்சாஷ்டாங்க மெனவுங் கூறுவர். பஞ்சாங்கம் - ஐந்துறுப்புக்கள் நிலத்தில் தோயப்பணிதல். ஐந்துறுப்புக்கள் தலை, இரண்டுகை, இரண்டு முழந்தாள்.

சிவதருமோத்தரம் சிவஞானதானவியலில்,—

"வலஞ்செய்து தண்டதனைமான விதிவழிதழுவத்
தலந்தன்னிற்பணிந்தெழுகதலைகரமற்றிருகன்னந்
துலங்கு மோவாய்ப்புயங்களெனு மெட்டுந் தோயமயி
ரிலங்குசிரங்கரமுழந்தாளெனு மைந்துமிசைந்திடவே"

எனவருஞ் செய்யுளாலுணர்க. (௧௨)

ஆங்கவனையெதிர்நோக்கிநின்பூசைக்ககமகிழ்ந்தேமுனக்கிஞ்ஞான்று
தேங்கமலவிழியளித்தேம்பதுமாக்கனெனும்பெயரிற்றிகழ்வாயிவ்வூர்
பாங்குபெறுதிருமாற்பேறெனப்பொலிகவென்றருளிப்பானுகோடி
தாங்குகதிர்ச்சுதரிசனப்பெயராழித்தனிப்படையுமுதவியெங்கோன்.

(இ-ள்.) ஆங்கு அவனை எதிர் நோக்கி நின் பூசைக்கு அகம்மகிழ்ந்தேம் — அவ்விடத்து அத்திருமாலை எதிரேகடைக் கணித்தருளி உனதுபூசனைக்கு மனங்களி கூர்ந்தேன், உனக்கு இ ஞான்று தேம் கமல விழிஅளித்தேம்—உனக்கு இந்நாளில் தேன் சிந்துந் தாமரைக்கண் தந்தோம், பது மாக்கன் என்னும் பெயரில் திகழ்வாய்— அதனாற் பதுமாக்கனென்னும்நாமத்தால் விளங்கக்கடவாய், இ ஊர் பாங்கு பெறும் திருமாற் பேறு என பொலிக என்றருளி — இந்தவூர் பொலிவுபெற்றதிருமாற்பே றென்று திருநாமம் வாய்ந்து விளங்கக்கடவ தென்றருளி, பானுகோடி தாங்கு கதிர் சுதரிசனம் பெயர் ஆழி தனி படையும் எங்கோன் உதவி — கோடிசூரியர்களொரு சேரவுதயஞ்செய்தாற்போலவொளிவீசும்சுதரிசன மென்னுஞ்சக்கராயுதத்தையும் எமது பெருமான்றந்தருளி.

கமலக்கண்ணனென்னும் பெயர்திருமாலுக்குச்சிவபெருமான்றந்தருளின னென்பதை,—

"வையம்பொதிந்தசெங்கனிவாய்மாயோனன்புக்குண்மகிழ்வுற்
றையன்கையாற்புறநீவியடியிற்புனைந்தமலர்கண்ணு
மெய்தநல்கிச்சுதரிசனமென்னுஞ்சுடராழியுமீந்து
செய்யகமலக்கண்ணனெனும்பெயருஞ்சிறப்பினொடுமளித்தான்"

எனவருங் கூர்மபுராணத்தாலுணர்க. (௧௩)

வெல்லரியசெறுநரையுமிப்படையால்வெல்வாயாலீண்டுநின்னாற்
சொல்லியபேராயிரங்கொண்டெமைப்பூசைபுரிவார்க்குத்துகடீர்த்தென்று
மெல்லையிலாவீடளிப்பேமிங்கிவையன்றியுந்தீண்டச்செவந்தாராதிப்
பல்குபெயர்க்கொண்டெம்மைத்தொழுவோருமுத்தியினிற்படர்வாருண்மை.

(இ-ள்.) வெல் அரிய செறு நரையும் இ படையால் வெல் வாய்—ஏனைப்படையால் வெல்லுதற்கரிய பகைவரையும் இச்சக்கரத்தால் வெல்லுவாய், நின்னால் ஈண்டு சொல்லிய பேர் ஆயிரம் கொண்டு எம்மைபூசைபுரிவார்க்கு—உன்னாலிவ்விடத்து வழிபட்ட ஆயிரந்திருநாமங்களைக் கொண்டுபூசனை செய்வார்க்கு, துகள் தீர்த்து என்றும் எல்லை இல்லாத வீடுஅளிப்பேம்—அவர்களதுமலக்குற்றத்தைப்போக்கி எக்காலத்தும் அழிவில் லாதமுத்தியைத்தருவோம், இங்கு இவை அன்றியும்—இவ்விடத்தருளிய இவ்வரங்களை ல்லாமலும்; தீண்ட செவந்தார் ஆதி பல்கு பெயர் கொண்டு எம்மை தொழுவோரும் முத்தியினில் படர்வார்—பவன்முதலிய ஆயிரந்திருநாமங்களையும் ஒப்பத் தீண்டச் செவந்தார் முதலாக எமக்கு அமைந்த திருநாமங்களால் எம்மை வணங்குவோரும் முத்தியை யடைவார், உண்மை—இது சத்தியம். (௧௪)

தணிவொன்றுமனமுடையார்புகழ்நீண்டச்செவந்தபிரான்சாதரூபர்
மணிகண்டர்தயாநிதியார்பவளமலையார்வாட்டந்தவிர்த்தார்பாசப்
பிணிவிண்டசாகிசனர்திருமாற்குப்பேறளித்தாரெனும்பேரெட்டு
மணிகொண்டவாயிரம்பேர்க்கொப்பனவாமறிமதியென்றருளிச்செய்தான்.

(இ-ள்.) தணிவு ஒன்று மனம் உடையார் புகழ்நீண்ட செவந்த பிரான் சாத ரூபர் மணி கண்டர் தயாநிதியார் பவளமலையார் வாட்டந்தவிர்த்தார்—ஒடுங்கிய மன முடைய சிவயோகிகள் புகழும் நீண்டச் செவந்தபிரான் சாதரூபர் மணிகண்டர் தயா நிதியார் பவளமலையார் வாட்டந்தவிர்த்தார், பாசம் பிணி விண்ட சாகிசனர் திருமாற் குப் பேறுஅளித்தார் என்னும் பேர் எட்டும்—இயல்பாகவே பாசந்தளினின்றுநீங்கிய சாகிசனர் திருமாலுக்குப்பேறளித்தார் என்னுந் திருநாமங்களெட்டும், அணி கொண்ட ஆயிரம்பேர்க்கு ஒப்பனவாம் அறிமதி என்றுஅருளிச்செய்தான்—பொலிவமைந்த ஆயி ரந்திருநாமங்களுக்கு ஒப்பனவாமென்று தெரிவாய் என்று திருவாய் மலர்ந்தனன்.

நீண்டச்செவந்தாராதிப் பல்குபெயரொனத் தொகுத்துக் கூறியதை இங்குவ குத்து வரையறைசெய்வார் பெயரொட்டு மெனவும், அவவெட்டுத் திருநாமங்களும் பவ ன்முதலிய ஆயிரந்திருநாமங்கள் தரும் பயன்றருமென்றும் ஆயிரம்பேர்க்கொப்பென வுங்கூறினார். மதிமுன்னிலையசை. காகிசனர் வேதசாகைகளுத்தலைவர். (௧௫)

நம்பிரான்வாய்மலர்ந்தமொழிகேட்டுப்புண்டரிகநயனத்தோன்றல்
செம்பதுமத்தாளிறைஞ்சிச்சென்னிமிசைக்கரங்கூப்பிச்செங்நின்றேத்தி
யெம்பிரானிந்நகருட்கணப்பொழுதுவதிந்தவர்க்குமிறவாவாழ்க்கை
யும்பர்வீடளித்தருளாயின்னுமொருவரமடியேற்குதவாயென்று.

(இ-ள்.) நம்பிரான் வாய்மலர்ந்த மொழி புண்டரிகம் நயனம் தோன்றல் கேட்டு—நமதுபெருமான் திருவாய்மலர்ந்த அனுஞையைத்தாமரைபோலுங் கண்களையுடை ய திருமால் கேட்டு, செம் பதுமம் தாள் இறைஞ்சி செங்நின்று சென்னி மிசை கரம் கூப்பி ஏத்தி—செந்தாமரைமலர்போன்ற திருவடியை வணங்கி நேரேநின்று தலைமேல் க்கைகூப்பி வாழ்த்தி, எம்பிரான்—எமது பெருமானே, இந்நகருள் கணப்பொழுது வதிந்தவர்க்கும்—இந்தத்திருநகருள் கணப்பொழுது தங்கினவர்க்கும், இறவாத வாழ்க் கை உம்பர் வீடு அளித்தருளாய்—அழியாத வாழ்க்கையாகிய முத்தியின்பத்தைத்தந்தரு ளாய், இன்னும் ஒருவரம் அடியேற்கு உதவாய் என்று—இன்னமுமொருவரமெனக் குத்தந்தருளாயென்று குறையிரந்து.

தண்டாகாரமாய்த் திருவடிமேல்வீழ்ந்து வணங்கினனென்பதுதோன்றப் பதும த்தாளிறைஞ்சியெனவும்,அதன்மேல் தன்குறையிரந்தனனென்பது தோன்றச்செங்நின் று சென்னிமிசைக்கரங்கூப்பி யேத்தியெனவும், இந்திரன் முதலியோர் வாழ்க்கையழி தல்போல முத்திவாழ்க்கையழியாதென்பது தோன்ற இறவாவாழ்க்கையும்பர்வீடளித் தருளாய்எனவுங் கூறினன். (௧௬)

வள்ளலேயென்பூசைகொண்டருளுமிவ்விலிங்கம்வணங்கப்பெற்றோர்
பள்ளநீர்வரைப்பினுளசிவலிங்கமெவ்வெவைையும்பணிந்தபேறு
கொள்ளவருளெனவேண்டவேண்டுவார்வேண்டியதேகொடுக்குமெங்கோ
னௌ்ளருஞ்சீர்நெடியோனுக்கவைபனைத்துமருள்செய்தவ்விலிங்கத்துற்றான்.

(இ-ள்.) வள்ளலே—பெருங்கொடையாளனே, என்பூசை கொண்டருளும் இ இலிங்கம் வணங்க பெற்றோர்—எனது பூசனையைக்கொண்டருளிய இச்சிவலிங்கப்

பெருமானை வணங்கினவர்கள்,பள்ளம்நீர் வளைப்பின் உள்ள சிவலிங்கம் எவ்வெவையும் பணிந்த பேறு கொள்ள அருள்என்னவேண்ட—கடல்சூழ்ந்த நிலவுலகினுள்ள எல்லாச் சிவலிங்கங்களையும் வணங்கிய பெரும்பயனையருளாயென்று குறையிரக்க, வேண்டுவார் வேண்டியதே கொடுக்கும் எங்கோன்—தம்பாற் குறையிரந்தவர் குறையிரந்தபொருள் யாவுங் கொடுக்கும்எமது பெருமான், எள்ளரும்சீர் நெடியோனுக்கு அவையனைத்தும் அருள்செய்து அ இலிங்கத்து உற்றான்—இகழ்வில்லாத புகழ்வாய்ந்த திருமாலுக்கு அவன்வேண்டியவரமுற்றுந்தந்தருளி அச்சிவலிங்கத்துள் மறைந்தருளினன்.

இயல்பாகவே எப்பொருளினும் பற்றில்லோன் வேண்டினோர்க்குவேண்டிய படி தந்தருள்வோனாதலால் வள்ளலேனவும், ஏனையோர் பாதந்தரர் தான்சுதந்த ரனாதலால் வேண்டுவார் வேண்டியதையே கொடுக்குமெங்கோனெனவும், வீரத்தால் ஏனையோர்க்குவந்தபுகழ் பொய்ப்புகழ் இவனுக்குவந்தபுகழ் மெய்ப்புகழாதலால் எள் ளருஞ்சீர் நெடியோனுக்கு எனவுங்கூறினார். வள்ளலே என்றமையான் அநாதிபோத மாகிய இயல்பாகவே பாசங்களை நீங்கிநிற்றலும், வேண்டுவார் வேண்டியதையே கொடு க்கும் எங்கோன் என்றமையால் சுதந்தரனாகிய தன்வயத்தனாதலும் காண்க. (கஎ)

கொழிக்குமணித்தடந்திரைநீரிலஞ்சிதொறுமினவாளைகுதித்துப்பாயச்
செழிக்கும்வளம்பொழிற்காஞ்சிப்பலதளியுண்மேதகையதிருமாற்பேற்றின்
வழிச்செலவிலொருபோதுவதிந்தவருமாறுதபிறவிப்பாச
மொழிப்பவெனிலெஞ்ஞான்றுமங்குறைவோர்தமக்கினியென்னுரைக்குமாறே.

(இ-ள்.) மணிகொழிக்கும் தட திரை நீர் இலஞ்சி தொறும் வாளையினம் குதி த்து பாய செழிக்கும் வளம் பொழில் காஞ்சி பல தளியுள்—முத்துகளைக் கொழிக்கும் பெரியஅலையையுடைய நீர்மயமாகிய தடாகங்கள் தோறும் வாளையின் கூட்டங்கள் குதித்துத்தாவ நீர்வளஞ்செழித்த சோலைசூழ்ந்த காஞ்சியின் பலதிருப்பதிகளுள், மேத கைய திருமாற்பேற்றின் வழி செலவில் ஒருபோது வதிந்தவரும்—மேன்மைவாய்ந்த திருமாற்பேறென்னும்திருப்பதியின் வழியில்ஓர் ஊர்க்குச்செல்வோர் இடையில்ஓர்நாள் வசிப்பவர்களும், மாறுதபிறவிப்பாசம் ஒழிப்பர்என்னில்—இடைவிடாத பிறவியைவிளை க்கும் பாசத்தையொழிப்பரென மேலோர்கூறுவரானால், எஞ்ஞான்றும் அங்கு உறை வோர் தமக்கு இனி என் உரைக்கும ஆறு—எந்நாளுமங்கு வசிப்பவர்க்கு வரும்பயன் இனியான் எடுத்துக்கூறும் வகையாதுளது.

ஓர் ஊர்க்குத் திருமாற்பேற்றின் வழிச்செல்வோர் அன்றிரவிலங்குத் தங்கின ராயின் அவர்கள் பெறும்பேறு அநாதியேதொடங்கிவரும் பாசப்பிணிப்பு நீங்குவராயி ன்,என்றுமங்குறைவோர் பெறும்பயன்தம்மாலளவறுத்துச் சொல்லுதலரிதாதலால் தி ருமாற்பேற்றின்-வழிச்செலவிலொருபோது வதிந்தவருமாறுத பிறவிப்பாச-மொழிப்ப ரெனிலெஞ்ஞான்று மங்குறைவோர் தமக்கினியென்னுரைக்குமாறே எனக்கூறினார்.

திருமாற்பேற்றுப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கருகக.

——:0:——

## பரசிராமீச்சரப் படலம்.

——:o:——

### அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

சுழிபாடுபடுமுந்திமலைமகளும்யோகியருந்துழாயினுனும்
வழிபாடுசெயவைகுமணிகண்டர்மாற்பேறுவகுத்தாம்பண்கள்
கொழிபாடற்சுரும்பினஞ்சூழ்மருப்பொதும்பர்மாற்பேற்றின்குணபால்வேந்தர்
பழிபாடிக்கொலைசெய்தோன்பரசிராமீச்சரத்தின்பான்மைசொல்வாம்.

(இ-ள்.) சுழிபாடுபடும் உந்தி மலைமகளும் யோகியரும் துழாயினுனும் வழிபாடுசெய வைகும் மணிகண்டர் மாற்பேறு வகுத்தாம்—நீர்ச்சுழிபுறங்கொடுத்து வருந்துதற்கெல்லையாகிய திருவுந்தியையுடைய உமையம்மையும் சிவயோகியரும் துழாய்மாலையை யணிந்த திருமாலும் வழிபட்டுவணங்க வெழுந்தருளிய மணிகண்டரது திருமாற்பேற்றையெடுத்துக்கூறினும், பண்கள் கொழி பாடல் சுரும்புஇனம் சூழ் மருபொதும்பர் மால்பேற்றின் குணபால்—பண்களைக் கொழிக்கும் பாடலையுடைய வண்டின் கூட்டங்கள்சூழ்ந்த வாசமிக்க சோலைசூழ்ந்த திருமாற்பேற்றின் கீழ்பாலில், வேந்தர் பழி பாடி கொலைசெய்தோன் பரசிராமீச்சரத்தின் பான்மைசொல்வாம்—அரசர்குலத்திற்றோன்றியபழியை யெடுத்துக்கூறி அக்குலம் வேரோடறக்கொலைசெய்தவனுகிய பரசிராமன் பூசித்த பரசிராமீச்சரத்தின் தன்மையையினியெடுத்துக் கூறுவாம்.

பண்பலவகைப்படுதலால் பன்மைவிகுதந்து பண்களெனவும், பருந்தொடுநிழல் சென்றாற்போல பாடலோடுபண் அணைதலால் கொழிபாடலெனவுங் கூறினர். ()

சிவம்பழுத்தபிருகுமுனியிடுஞ்சாபத்தொடர்ச்சியினுற்றிருமான்முன்னுட்
டவம்பழுத்தாலனையசமதக்கினியோடிரோணுகைக்குத்தநயனாகி
யவம்பழுத்தகுறும்பெறியுமிராமனெனவைகுறுநாளன்னபாலோர்
நவம்பழுத்ததீங்குணர்ந்துதன்றாதைதனையேவநாடித்தேறி.

(இ-ள்.) சிவம்பழுத்த பிருகுமுனி இடும்சாபம் தொடர்ச்சியினால் - சிவநேசங் கனிந்த பிருகுமுனிவன் தனக்கிட்ட சாபத்தொடர்ச்சியினால், திருமால் முன்னாள் தவம் பழுத்தால் அனைய சமதக்கினியோடு இரோணுகைக்கு தநயன் ஆகி—திருமால் முன்னாளில் தவமே கனிந்தாலொத்த திருவருளையுடைய சமதக்கினி முனிவருக்கும் அவன்பன்னியாகிய இரோணுகைக்கும் புத்திரனாகி, அவம்பழுத்த குறும்பு எறியும் இராமன் என வைகுறும் நாள்—தீங்குகனிந்த சீற்றங்காமம் மயக்கமென்னும் பகைவர்களை வேரோடரிந்தபரசிராமனெனப் பெயர்கொண்டு தங்குங் காலையில், அன்னபால் ஓர் நவம்பழுத்த தீங்கு உணர்ந்து தன்தாதை தன்னை ஏவ தேறி நாடி—தனது தாயாகிய இரோணுகையிடத்துப்புதிதாகமுளைத்த ஓர் தீங்கினைத்தனது நிட்டையால் தாமுணர்ந்து தனது பிதாவாகிய சமதக்கினிமுனிவர் தன்னையேவ அதனைத் தெளிந்து ஆராய்ந்து.

அசுரர்க்குப்புகலிடந்தந்த சமதக்கினியினதுமனைவியும்தனதுமாமியுமாகியகியாதினுயிரைத்திருமால்பருகினதைஅம்முனிவருணர்ந்துசினந்துபத்துப்பிறவியடைகவெனச் சாபந்தந்தமையால்—பிருகுமுனியிடுஞ் சாபத்டொர்ச்சினுல் தநயனாகி எனவும், சமதக்கினிசிவபூசைக்கு நாள்தோறும் கங்கைநீர்திரட்டிவரும்பணியில்நின்ற இரோணுகையென்பவள், ஓர்நாள் நீர்திரட்டச்சென்றவள் ஆகாயத்திற்செல்லும்ஓர் கந்தருவனிழல்அக்கங்கைநீரில் பிரதிபிம்பிக்க, அதனைக்கண்டு சிறிதுதன் மனநிலைகலங்கத்தனது கற்பின்நிலையால் கையாற்றிரட்டத்திரண்டநீர் அன்றுதிரளாமையால், தனதுமனமஞ்சி வருந்




ங். பரசுராமேச்சரப்படலம்.

தியிதுயாதாம் முடியுமோவெனக் கைநெரித்து நடுங்கிவருதற்குக் காலந்தாழ்க்க, அதனைத் தனது நிட்டையாலுணர்ந்தனனாதலால் அன்னைபாலோர் நவம்பழுத்த தீங்குணர்ந்தெனவும், தனது சொல்லைக் கடவாதொழுகுதலையே தமது புத்திரன் விரதமாகக் கொண்டோனாதலின் அவன்தனது அன்னையைக்கொல்லத்தன்னை ஏவினனாதலால் தன்றாதைதனையேவி எனவும், அவ்விரதத்தைக் கடைப்பிடித்தமையால் தேறிநாடியெனவுங்கூறினர்.

நவம்பழுத்த தீங்குணர்ந்தென்றதை,—

அப்புறழ்சடிலவேணிக்கருச்சனைதொகுக்குங்காலை
கப்பிளமுலையிரேணுகையெனுங்கற்பினிற்பா
ளப்பெடுத்துருட்டியென்றுமாங்கவற்கருளாநிப்பாள்.
இற்படுகற்பினேனைழக்கெழுதியதிலகமன்று
ளற்படுகூந்தலோர்நாளறலெடுத்துருட்டவென்று
நிற்புழிக்ககனமீக்கந்தருவனோர்நிழலைக்கண்டாள்
கற்படுமனத்தளந்நாட்சிறிதுளங்கவல்வதானாள்.
வளைத்தளிர்ச்செங்கைமாட்டிவாரநீர்திரண்டுவாராக்
கிளைத்துளிச்சிதறியோடவெருவினள்கிளிமென்சொல்லா
டளிர்க்கையான்மறுத்தும்வாரத்திரண்டிலதளிநீரன்று
ளிளைத்தனளுசுப்பையொத்தாளேங்கினளுருவமெல்லாம்.
கரநெரித்துதரம்வைக்குங்கண்ணிணைசுழலாநிற்கும்
வரனுடைத்தெய்வநோக்குமில்லறமாட்சிபார்க்கும்
விரதமாதவனையெண்ணுவெள்குறும்வெதும்பும்விம்மு
மரவுநீக்கிடந்தாலென்னவாக்கைவெந்தழலாநிற்கும்.
கழிவதுகாலமென்னுக்கண்டனன்கடவுட்கங்கை
வழிபுனற்சென்னியோன்றனருச்சனைவைகிற்றென்று
வொழுகுமென்சடையோனேக்கியென்கொலென்றுணர்தலுற்றா
னழிதகவிவட்குவந்ததோர்ந்தனனிகந்தானுள்ளம்''
எனவரும் செய்யுள்களாலும்,

தனதுபுத்திரன் தனதுசொல்லைக் கடவானென்பதை,—

ஐயநீயுரைக்கற்பாலயாவையுமளியேன்கேட்கச்
செய்தவமுளதால்யாதுசிதையுமோசிதையாதென்ன
எய்திறமெனக்கீதன்றியுண்டுகொலுரைத்தியென்றான்
மொய்தருசடையோன்மைந்தற்கின்னணமொழிவதானான்.
எனவருஞ் செய்யுளாலும் உபதேசகாண்டத்தில் வருதல்காண்க. (௨)

தாதைமொழிகடவாமைதருமமெனத்தனையீன்றுவளர்த்ததாயை
யேதமுறக்கொலைசெய்துமுனியருளான்மீண்டுய்யவெழுப்பிநின்றான்
மேதகையமுனிமகிழ்ந்துவெகுளிதனையறவிடுத்துச்சமாதிமேவும்
போதவனைவெகுண்டெய்திக்காத்தவீரியன்கோறல்புரிந்தான்மன்னோ.

(இ-ள்.) தாதை மொழி கடவாமை தருமம் என—தனதுதந்தையின்சொல்லைக் கடவாமையே தருமமென்று, தன்னை ஈன்று வளர்த்த தாயை ஏதம் உற கொலைசெய்து - தன்னைப்பெற்றுவளர்த்த தாயைக்குற்றமுறக்கொலைசெய்து; முனி அருளால்மீண்டு

உய்ய எழுப்பி நின்றான்—தனது பிதாவினருளால் மீளவும் தனதன்னை யுயிர் பிழைக்க வெழுப்பிநின்ற பரசிராமன், மேதகைய முனி மகிழ்ந்து வெகுளிதனை அற விடுத்து—மேன்மைவாய்ந்த வச்சமதக்கினிமுனிவரும் தனது புத்திரன்பால் மகிழ்கூர்ந்து எழுந்தகோபத்தை பற்றறவிடுத்து, சமாதி மேவும் போது—சமாதிகூடிநின்ற காலையில், அவனை எய்தி வெகுண்டு—அம்முனிவனையடைந்து கோபித்து, கார்த்தவீரியன் கோறல் புரிந்தான்—கார்த்தவீரியார்ச்சுனன்கொலைசெய்தான்.

தனதுதாயைக்கொன்று மீண்டபின் தனதுதாதையால்மூன்றுவரம்பெற்றதுஒரு வரத்தால் தாயைப்பிழைப்பித்தும், ஒருவரத்தால் தனது பிதாகோபத்தைப்பற்றறவிடச்செய்தும், மற்றொருவரத்தால் சிவபெருமான்றிருவடிக் கன்பும்பெற்றனனாதலால் முனியருளான் மீண்டுய்ய வெழுப்பிநின்றான் எனவும், மேதகையமுனி மகிழ்ந்து வெகுளிதனை யறவிடுத்து எனவும், கார்த்தவீரியார்ச்சுனன் அரசுபுரியுங்கால் நிலவுலகின் பரப்பைப்பார்த்தற்கு அளவில்லாத சேனைகளோடுபோந்து எட்டுத்திக்கு முலாவிவருங்கால்,சமதக்கினிமுனிவர் பன்னகசாலையையடைந்து அவரைவணங்கிநிற்ப,அம்முனிவர் நோக்கி நீமிகவும் உடல்வெயர்த்து இளைத்துவந்தனை ஆகையால் நாம்தரும்கனிகிழங்குகளையருந்தி யிளைப்பாறிச் செல்வாய்என்று முனிவர்கூற, அரசன் என்னொடுவந்தசேனை வெள்ளமளவில்லை அவர்களை விட்டுத்தனியேனுகரேன் ஆதலால் நான்போதற்குவிடை தந்தருளவேண்டுமென விரந்தனன், அதனைக்கேட்டவம் முனிவர்காமதேனுவால் அவ்வரசனுக்கும்அவன்சேனைக்கும் நல்விருந்தமைக்க,அதனை நுகர்ந்துகளிகூர்ந்த அவ்வரசன் அம்முனிவரைநோக்கி இக்காமதேனுவை அடியேனுக்கருளவேண்டுமென்று குறையிரப்ப, அம்முனிவர் புன்னகைசெய்து இசையாது தமது தவச்சாலைக்குட்சென்றனர். அஃதுணர்ந்த அவ்வரசன் அக்காமதேனுவைப்பற்றித்தன்னகருக்குக்கொடுபோகத்தனதுசேனையோடு முற்றுகைசெய்தகாலையில்,அக்காமதேனு சினந்து தனதுமயிரைச் சிலிர்க்க அம்மயிர்க்கால்தோறும் கோடாகோடிவெள்ளம்தோன்றி அவன்சேனைமுற்றுமழித்தமையை அரசன்நோக்கி எஞ்சினசேனையோடு தன்னகருட்போயினன். அதுகண்டஅவன்மைந்தர் நால்வரும் தமதுதாதையைவணங்கி இத்தீங்குவிளைத்தது முனிவராதலால்இரவிற்சென்றுஅவன் தலையைச்சிதைத்து வருகின்றோமென்று அனுஞைபெற்றுச்சென்றுநிட்டையிலிருந்தமுனிவர்தலையைச்சேதித்தனர்என்பதுபுராணவரலாறு.

முனிவர்பால் மூன்றுவரம் பெற்றமையை.

“ ஒருவரம்வெகுளிநீவிட்டொழித்தியென்றுரைத்தான்மற்றைத்
தருவரமென்னையீன்றாளுய்ந்திடத்தருதியென்றா
னிருவரமொழியமற்றொன்றீசனதிருதாட்போதி
லுருகுமன்பெனக்குவேண்டுந்தருதியென்றுரைத்துநின்றான்” எனவும்.

முனிவர்பால் காமதேனுவைத்தரவேண்டுமென்று குறையிரப்ப அவரிசையாது சென்றமையை.

“ காயெரிகதுவுங்கானக்காயிலைகிழங்கேயன்றி
நீயிதுவிரும்பற்பாலையல்லையிச்சுரபிநின்பான்
மேயினதுணர்ந்தால்யாரும்விரும்பினர்கவர்ந்துகொள்வ
ரேயவிச்சுரபிபோமுன்னெமக்குநீயளித்தியென்றான்
வேந்தனீதுரைத்தலோடும்விரதமாதவத்தின்மிக்கோன்
சேந்தனனிருகணோக்குச்சிரித்தனன்சிறியோர்க்கென்ன
வேய்ந்தநன்கிழைப்பத்தீமையெய்துதறிண்ணமென்னு
வோர்ந்தனனுள்ளமீதற்கிசையந்திலது

எனவும் உபதேசகாண்டத்தில் வருதலோடுஇந்நூலில் காத்தவீரியனேதன்னையிரேணுகைநோக்கமேலெழுந்தானெனவும், அதன்பொருட்டுமுனிவரன் சினந்திராமனால் இரேணுகையின் சிரத்தைச்சேதிப்பித்தனனெனவும், அதனைக்காத்தவீரியனுணர்ந்து முனிவனைக்கொன்றனனெனவுங்கூறியதுகற்பபேதமெனக்கொள்க. அதனையிரேணுகேச்சரப்படலத்திற்காண்க.

மிடல்படைத்ததிரடிண்டோளிராமனதுநோக்கிநெடுவெகுளிமீக்கொண்
டடல்படைத்தவயவேந்தர்குலமுழுதுமிறுப்பேனென்றார்த்துப்பொங்கிக்
கடல்படைத்தவிடமயின்றோனருள்வேண்டிவிரைந்தெய்திக்கலந்தார்தங்க
ளுடல்படைத்தபேறெய்துங்காஞ்சியினோரிலிங்கமமைத்தருச்சித்தேத்தி.

(இ-ள்) மிடல் படைத்த திரள் திண் தோள் இராமன் அதுநோக்கி நெடு வெகுளி மீக்கொண்டு —வலிமைபடைத்த திரண்ட திண்ணியதோளையுடையஇராமன் தனது தந்தைகொலையுண்டதைப்பார்த்துப்பெருங்கோபம்மீதூர, அடல்படைத்த வயம் வேந்தர் குலமுழுதும் இறுப்பேன் என்று ஆர்த்து பொங்கி—பகைவருயிர்பருகுதலால்வந்த வெற்றிவாய்ந்த அரசர்குலம்முற்றும் வேரோடழிப்பேனென்று கோபித்துக்கிளர்ந்து, கடல் படைத்த விடம் அயின்றோன் அருள் வேண்டி விரைந்து எய்தி—கடலிற்றோன்றிய விஷத்தையுண்ட சிவபெருமான் திருவருள்வேண்டி விரைந்துசென்று, கலந்தார் தங்கள் உடல் படைத்த பேறு எய்தும் காஞ்சியின் ஓர்இலிங்கம் அமைத்து அருச்சித்து ஏத்தி—விரும்பிஅடைந்தோர் தமது சரீரம்பெறுதற்குரிய பயனையடைதற்கெல்லையாகிய காஞ்சித்திருப்பதியில் ஓர் சிவலிங்கந்தாபித்து அருச்சனை செய்து வணங்கி.

ஆன்மாக்கள்சரீரம்பெற்றது இறைவனைவணங்கிப் பிறவிவெப்பொழித்தற்பொருட்டேயாதலின்அப்பேறடைதற்கு எல்லையாயுள்ளது காஞ்சிஎன்பார் கலந்தார்தங்களுடல்படைத்த பேறெய்துங் காஞ்சியின் எனக்கூறினார். (௪)

ஆற்றரியதவமாற்றியைம்புலனுமகத்தடக்கியமர்ந்தானாகக்
கீற்றிளவெண்பிறைக்குழவிதவழுநெடுஞ்சடிலமுடிக்கிழவோனந்நாண்
மாற்றரும்பேரருட்கருணைகூர்ந்தருளியவனன்பின்வாய்மைகாண்பான்
றோற்றமுறுமறைதேறாத்திருவடிகணிலந்தோயவருகின்றானால்.

(இ-ள்) ஆற்றரிய தவம் ஆற்றி ஐம்புலனும் அகத்துஅடக்கி அமர்ந்தான் ஆக—செய்தற்கரிய தவத்தைச்செய்து ஐந்துபுலன்களும் தனது மனத்தின்வழியடங்கிநிற்க, கீறு இள வெண் பிறை குழவி தவழும் நெடும் சடிலம் முடி கிழவோன்—இளமைவாய்ந்தசந்திரன்றவழ்ந்தூரும் நெடிய சடாமகுடத்தையுடைய இறைவன், அந்நாள்—அக்காலையில், மாற்றரும் பேர் அருள் கருணை கூர்ந்தருளி—மாற்றுதற்கரிய பெரியதிருவருள் கூர்ந்து, அவன்அன்பின் வாய்மை காண்பான்—அவ்விராமன் உண்மையைக்கண்டருள, தோற்றம் உறும் மறை தேறாத திருவடிகள் நிலம் தோய வருகின்றான்—தன்னால் தோன்றிய வேதங்கள் தெளிதற்கரிய திருவடிகள் நிலவுலகிற்றோய வந்தருளுகின்றான்.

புலன்வழிமனஞ்செல்லாது நிறுத்தினனென்பது தோன்ற ஐம்புலனுமகத்தடக்கி எனவும், அம்மனத்தை இறைவன் பால்நிறுத்தினனென்பது தோன்ற அமர்ந்தானெனவும், தனது ஆணைவழிப்பட்ட பரதந்தரராகிய அயன்முதலியோரால் போக்குதற்கரியதென்பது தோன்ற மாற்றரும் பேரருட்கருணை எனவும், குருபரம்பரைவிளங்க

வேதங்களைத்தந்தருளினனென்பது தோன்றத்தோற்றமுறு மறை எனவும், தன்னாற் றோன்றினவேனும் தன்பெருமையை அறியாவென்பதுதோன்றத் தேருத்திருவடிக ளெனவுங் கூறினர். ஆக என்னும் இடைச்சொல் அமர்ந்தானென்னும் வினைமுற்றொடு புணர்ந்துவினையெச்சப் பொருள் தந்தது காண்க. தன்னிடத்திற்றோன்றியவையும் தன்னையுணராவென்றதை "தம்பெருமைதானறியாத் தன்மையன்காண் சாழலோ" எனவரும் உண்மைத் திருவாக்காலுணர்க. (ரு)

கலிவிருத்தம்.

மால்வரையீன்றவயங்கிழைமாது
நூல்வரைமார்புடைநோன்றகைமாவும்
வேல்வலனேந்தியவித்தகனுந்தன்
போல்வடிவந்தழுவிப்புடைநண்ண.

(இ-ள்.) மால் வரை ஈன்ற வயங்கிழை மாதும் — பெரிய இமயமலை பெற்ற வுமையம்மையும், நூல் வரை மார்பு உடையநோன் தகைமாவும்—உபவீதந்தங்கிய திருமார்பினையுடைய வலியின்றன்மைவாய்ந்த யானைமுகக்கடவுளும், வேல் வலன் ஏந்திய வித்தகனும்—வேலைவலத்திருக்கரத்திலேந்திய முருகக்கடவுளும், தன்போல் வடிவம் தழுவி புடை நண்ண—தன்னைப்போலத்திருவுருவந்தாங்கிப் பக்கலில் வரவும். (சா)

நான்மறைவள்ளுகிர்நாய்புறஞ்சூழக்
கான்மலர்சேர்த்தசெருப்பெழில்காட்ட
ஊன்மலிகாழகமீதிலுறுத்த
தோன்மலிகச்சணிதோன்றிவிளங்க.

(இ-ள்.) நால் மறை வள் உகிர் நாய் புறம் சூழ—நான்கு வேதங்களும் கூரிய நகத்தையுடைய நாய்களாகப் புறத்திற்சூழவும், கால் மலர் சேர்த்த செருப்பு எழில காட்ட—திருவடித்தாமரையிற் சேர்த்ததொடுதோல் ஒருபால் விளங்கவும், ஊன் மலி காழகம் மீதில் உறுத்த — இடையிற்றொடுத்த சல்லடத்தின்மேல்வலிந்து கட்டிய, தோல் மலி கச்சு அணி தோன்றிவிளங்க—தோலாலமைந்த கச்சின் பொலிவு ஒருபால் தோன்றி விளங்கவும்.

ஊன் முதலாகுபெயராய்ச் சினைமேனின்றது. (எ)

ஏரியல்கொண்டசுவன்மிசையிட்ட
வாரினனுட்கும்நடையினன்மாணுச்
சீரியல்கோக்கொலைசெய்புலையன்போ
லாரிருண்மைத்தனமேனியனாகி.

(இ-ள்.) ஏர் இயல் கொண்ட சுவல் மிசை இட்ட வாரினன்—அழகமைந்த பிடரின் மேல்இட்ட தோல்வாரையுடையவனும், உட்கும் நடையினன்—பிறர்கண்டஞ்சும் நடையையுடையவனும், சீர் இயல் கோ கொலை செய் மாணாத புலையன்போல்—சிறப்பமைந்த பசுக்கொலை செய்யும்மாட்சிமைப்படாதபுலையன்போல், ஆர் இருள் மைத்தால் அன்னமேனியன் ஆகி—நிறைந்த இருள்கறுத்தாலொத்த மேனியையுடையவனாகி.

மைத்தன்னதொகுத்தல்விகாரம்.

வெங்கதிருச்சியின்மேவியகாலை
யங்கலுழ்பூம்புனலாற்றிடையெய்திப்

பங்கமில்செய்வினைபான்மைதொடங்கும்
புங்கவமாதவன்றன்னெதிர்போந்தான்.

(இ-ள்) வெம் கதிர் உச்சியின் மேவிய காலை- சூரியன்உச்சியில்வந்தடைந்தகால த்தில், அம் கலுழ் பூம் புனல் ஆற்றிடை எய்தி—பொலிவுமிக்க அழகியநீர்மயமாகியபா லியாற்றையடைந்து, பங்கம் இல் செய்வினை பான்மை தொடங்கும்—குற்றமில்லாமற் செய்யுங்கடன்களின்றன்மையை அவ்வுச்சிப்போதில்தொடங்கிய, புங்கவ மாதவன் தன் எதிர் போந்தான் — உயர்ச்சிவாய்ந்தபெரியதவத்தையுடைய அவ்விராமனுக்கெதிரே

அங்கலுழ்பூம்புனலாற்றிடை என்றதனால்பாலிஎன்றும். பிரமசாரியநிலையுடை யோர்திரிகாலசந்திக்கடன்களையும் செய்தொழுகல்மரபாதலால் வெங்கதிருச்சியின்மே வியகாலை, செய்வினைதொடங்கும் என்றார். (கூ)

கொட்குமனத்தையொருக்கியகொள்கை
வட்குறவைம்பொறிவாட்டுமிராமன்
கட்கமழ்கின்றகளிப்பினனாகித்
துட்கெனநேர்வருசோதியைநோக்கா.

(இ-ள்.) கொட்கு மனத்தை ஒருக்கிய கொள்கை-விடயங்களிற்சென்றுழலும் மனத்தையடக்கியகொள்கையால், ஐம்பொறி வட்குற வாட்டும் இராமன்—மெய்முத லியஐம்பொறிகளுந்தத்தஞ் செயலிற்குன்றவாட்டிய இராமன், கள் கமழ் கின்ற களிப்பி னன் ஆகி — கள்ளுண்டகளிப்பையுடையவனாகி, துட்கென நேர்வரு சோதியை நோ க்கா—நடுக்கமுறத்தனக்குநேரேவந்தசிவபெருமானைநோக்கி.

தன்மனத்தையடக்கியசெயலால்மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும்ஐம் பொறிகளும்பரிசமுதலியஐம்புலன்களிற் செல்லாதொழிந்தனவாதலில் மனத்தையொ ருக்கியகொள்கைவட்குறவைம்பொறிவாட்டுமிராமன்எனவும், கள்ளுண்டவன்வாயில்க ள்கமழுமாதலால்கட்கமழ்கின்றகளிப்பினனாகிஎனவுங்கூறினார். (கo)

வாய்திறவாதுமலர்க்கையசைபபிற்
சேயிடையேகெனச்செப்பலுமுக்க
ணாயகனண்மையினண்ணினன்போபோ
நீயெனவிள்ளவுநீங்கலனாகி.

(இ-ள்.) வாய் திறவாது மலர் கை அசைப்பின்—வாய்திறவாமல்தாமரைமலர் போன்றகையசைப்பினால், சேயிடை ஏகு என்ன செப்பலும் - தூரத்திற்செல்லக்கடவா யென்று கூற, முக்கண் நாயகன் அண்மையின் நண்ணினன் - திரிநேத்திரங்களையுடைய இறைவன்சமீபத்தில்வர, நீ போபோ என்னவிள்ளவும்—நீ தூரத்திற்போபோஎன் றுகூறவும், நீங்கலனாகி—செல்லாதவனாய்.

உச்சிப்போதிற்முன்செய்யுங்கடன்களைச்செய்யுங்கால்மௌனவிரதத்தினாலேவாய்திறத் தல்மரபன்மையால் மலர்க்கையசைப்பிற்சேயிடையேகெனச் செப்பலுமென்றார். போ போவிரைவுப்பொருளில்வந்தஅடுக்குத்தொடர். (கக)

வேறு

மாயனொடுநான்முகன்மனக்குநனிசேயோ
னாயவிறைசாலவணிமைக்கணுறலோடுங்

தூயமுனிசீற்றமொடுசொல்லுமறவாய்மை
போயபசுவூனுகரிழிந்தபுலையாநீ.

**(இ-ள்.)** மாயனொடு நான்முகன் மனக்கு நனி சேயோன் ஆய இறை-திருமாலும் பிரமனுமாகிய இவர்கள் மனத்துக்கு மிகவுந் தூரமாயுள்ள இறைவன், சால அணிமைக் கண் உறலோடும்—மிகவும் அண்மையில்வர, தூய முனிசீற்றமோடு சொல்லும்—களங்கமில்லாத அவ்விராமன் கோபத்தோடு கூறுவான், அறம் வாய்மைபோய பசு ஊன் நுகர் இழிந்த புலையா நீ—தரும நெறியைக் கைவிட்ட பசுவின் றசையைநுகரும் இழிந்த புலையனே நீ.

திருமால் பிரமன் முதலியோர் மனத்துக் கெட்டாத இறைவன் இவனண்மையிற் சென்றது அவனது முழுவலன் பின்பொருட்டாதலால் சேயோன்அணிமைக்கணுறலோடும் எனவும், தனது அகக்கண்ணால் நோக்காது புறக்கண்ணால் அவ்விராமன்நோக்கினனாதலின்அறம்வாய்மை போய பசுஊன் நுகர்இழிந்த புலையா நீஎனக்கூறினான் எனவும். கூறினான் தருமம் என்றும் நிலை பேறுடைமையின் அறவாய்மை என்றனர். (கஉ)

தருக்குறுவதென்னையிதுதண்டமதுசெய்வா
ரொருத்தரிவணில்லையெனவுன்னினைகொலென்றான்
மருத்துணர்நெடுஞ்சடைமறைத்துவருபெம்மா
னருத்தமறைநாய்கடமையேயினனவன்பால்.

**(இ-ள்.)** தருக்குஉறுவது இது என்னை—நீ இறுமாக்கும்இச்செய்கையாது, தண்டமது செய்வார் ஒருத்தர் இவண் இல்லை என உன்னினை கொல் என்றான்—உன்னைத் தண்டஞ் செய்வோர் இங்கு ஒருவருமில்லை யென நீ கருதினையோ என்று கூறினான், மரு துணர் நெடும் சடை மறைத்து வரு பெம்மான்—வாசங்க மழும் பூங்கொன்றையணிந்த நீண்ட சடாமகுடத்தை மறைத்து வந்தருளிய இறைவன், அருத்தம் மறை நாய்கள் தம்மை அவன்பால் ஏயினன்—பொருளமைந்த வேதங்களாகிய நாய்களை அவ்விராமனிடத்து ஏவினான். (கங)

கொற்றவடிவேற்கடவுள்கோளிபமுகத்தோ
னுற்றெழுவெகுட்சியரினோடியிருகையும்
பற்றினர்கணாய்புடைவளைப்பவிருபாலர்
வெற்றியுறுகைப்படுவிழுத்தவனைநோக்கி.

**(இ-ள்.)** கொற்றம் வடி வேல் கடவுள்—வெற்றிவாய்ந்த கூரிய வேலேந்திய முருகக்கடவுளும், கோள் இபம் முகத்தோன்—வலியயானைமுகக்கடவுளும், உற்று எழு வெகுட்சியரின் ஓடி—மீதெழுந்த கோபமுடையோனைப்போல விரைந்தோடி, நாய் புடை வளைப்ப இருகையும் பற்றினர்கள்—வேதங்களாகிய நாய்கள் பக்கத்திற் சூழ அம்முனிவனது இரண்டு கையையும் பிடித்தார்கள், இருபாலர் வெற்றி உறு கைப் படு விழுத்தவனை நோக்கி—தனது இரண்டு புத்திரர்களது வெற்றியமைந்த திருக்கரங்களிலகப்பட்ட மேன்மை யமைந்த அவ்விராமனைப்பார்த்து.

இருபாலரென்றதற்கு இராமனிரண்டுபக்கலும் நின்ற இருவரெனப் பொருள் கொள்ளினும் அமையும். (கச)

**கலிநிலைத்துறை.**

அந்தோபாவமையமிரக்கும்பார்ப்பானீ
நொந்தாய்போலுமென்றுநுவன்றங்கிமவெற்புத்

தந்தாள்வெவ்வாய்நாயைவிலக்கத்தவநோன்பி
னந்தாவாய்மையிராமனுநம்மான்முகநோக்கி.

(இ-ள்.) அந்தோ பாவம்—ஐயோ இவைபாவம், நீஐயம் இரக்கும் பார்ப்பான் னொந்தாய் போலும் என்று நுவன்று - நீபிச்சையெடுக்கும் பார்ப்பான் அதனால்வருந்தி னாய்போலு மென்று கூறவும், அங்கு இம வெற்பு தந்தாள் வெவ்வாய் நாயை விலக்க—அவ்விடத்துப் பர்வத அரசன்புத்திரியாகிய உமையம்மை கொடிய வாயையுடைய நா யைவிலக்கவும்,தவம் நோன்பின் நந்தாத வாய்மை இராமனும் நம்மான் முகம் நோக்கி—தவமாகிய விரதத்தில் நிலை பெயராதுநின்ற உண்மைச் செயலையுடைய இராமனும் நமது பெருமானது திருமுகத்தைப் பார்த்து.

பிரமன் முதலிய எவ்வுயிர்க்கும் அன்னை யாதலால் இரக்கங்கூர்ந்தனளென்பது தோன்ற இமவெற்புத் தந்தாள் வெவவாய் நாயை விலக்க எனவும், அந்தணர்க்குவீரமி ல்லையென்பது தோன்ற ஐயமிரக்கும்பார்ப்பானீயெனவுங்கூறினார். நுவன்றுசெயவெ னெச்சத்திரிபு. (௬௫)

வேறு

எனைப்புடையுற்றாய்தீண்டுவதென்னீதறனன்றா
லுனக்கிதுபாவமகாவெனவெங்கோ னுறுபாவ
நினக்குளதோசொலெனக்குளதோநீதான்யாரே
யெனக்கொருகேள்போற்றோன்றிடுகின்றாயெனவன்னோன்.

(இ-ள்.) புடையுற்றாய்என்னை—என்பக்கலில் வந்தாய் அதுயாது, தீண்டுவது என்—அதுவுமன்றி யென்னைத் தீண்டுவதுயாது, ஈது அறன் அன்று—இச்செய்கை தருமமல்ல, இது உனக்கு பாவம் என்ன—இச்செய்கை உனக்கு பாவமென்று அவவி ராமன் கூற, எங்கோன் உறுபாவம் நினக்குஉளதோ எனக்குஉளதோ சொல்—எமது பெருமான் பரிசித்தலால் வரும்பாவம் உனக்குண்டோ எனக்குண்டோ கூறாய், நீ தான் யார்—நீ யார், எனக்கு ஒரு கேள்போல் தோன்றிடுகின்றாய் என்ன—எனக்கோ ருறவினன்போலப் புலப்படுகின்றாய் என்று கூறியருள, அன்னோன்—அவவிராமன்.

நீயும் என்போல் இருக்கின்றாய் என்பார் நீதான் யாரெனவும், என்னைப்போலி ருத்தலால் நீ யெனக்கு உறவினன் ஆகவேண்டுமென்பார் எனக்கொரு கேள் போற் றோன்றிடுகின்றாய் எனவும், அதனால் உன்னைப்பரிசித்தலால் பாவம் என்றனை, அது நினக்கோ எனக்கோ எனபார் உறு பாவம் நினக்குளதோ எனக்குளதோசொல் என வுங்கூறினார். (௬௬)

என்னிதுசொற்றனையான்சமதசகினியென்பான்ற
னன்மகனாகுவனீபுலையோனெனைநானுமே
யுன்னுறவாகவுரைத்ததுநன்றெனவொப்பில்லான்
மன்னியசீர்ச்சமதக்கினிதன்மகனீயேயோ.

(இ-ள்.) இது சொற்றனை என்—நீ இதுகூறினையாது, யான் சமதக்கினி என்பான்றன் நன்மகன் ஆகுவன்—யான் சமதக்கினி முனிவனுடைய நல்ல புத்திரனா வேன், நீ புலையோன்—நீ புலையன், நானுமே என்னை உன் உறவாக உரைத்தது நன்று என்ன—நானுமெ லென்னை உனதுறவாகக் கூறியது நல்லதென்று அவ்விராமன் கூற, ஒப்பில்லான்—தனக்கோரொப்பில்லாதவிறைவன், மன்னிய சீர் சமதக்கினி தன் மகன் நீயேயோ—நிலைபெற்ற சிறப்பினையுடைய சமதக்கினி முனிவனுடைய புத் திரன் நீதானா. (௬௭)

கழியவெனக்குறவாயினையையமிலைக்கண்டா
யிழிவறநின்னையளித்தவிரேணுகையென்பாளென்
பழுதறுசீர்மனையாட்கினியாளாம்பரிசாலே
விழுமியநீயுமெனக்கினியாய்காணெனவிண்டான்.

(இ-ள்) எனக்கு கழிய உறவு ஆயினை—எனக்கு மிகவும் உறவானாய், ஐயம்இல்லை—உறவாவதற்குச் சந்தேகமில்லை, இழிவு அறநின்னை அளித்த இரேணுகை என்பாள்—குறையற வுன்னைப் பெற்ற இரேணுகை யென்பவள், பழுது அறு சீர் என்மனையாட்கு இனியாள்ஆம் பரிசால்—குற்றமற்ற கற்புவாய்ந்த என்மனைவிக்கு மனத்துக்கினியவளாகுந் தன்மையால், விழுமிய நீயும் எனக்கு இனியாய்காண் எனவிண்டான்—மேம்பட்ட நீயும் எனக்கினியவனும் அதனை அறியாய் என்று இறைவன் திருவாய் மல

உமையம்மை திருவடிக்கீழ் வழிபடுந்தன்மை யளாதலால் இரேணுகை யென்பாளென்பழுதறு சீர் மனையாட்கினியாள் எனவும், அம்முறையாலெனக்கும் நீ இனியானுதலால்விழுமிய நீயு மெனக்கினியாய் எனவும் அருளினர். (கஅ)

இராமனெருப்பெழநோக்கிவெகுண்டனனெல்லாரும்
பராவுறுவேதியனென்னெதிர்பார்த்திதுசொற்றாய்க்கு
விராவியதண்டமுனக்கரிவிக்குமதேயன்றித்
தாரதலமேற்பிறிதில்லெனலோடுந்தலைவன்றான்.

(இ-ள்.) இராமன் நெருப்பு எழ நோக்கி வெகுண்டனன்—அவ்விராமன் கோபாக்கினி யெழப்பார்த்துச் சினந்து, எல்லாரும் பராவுறு வேதியன்—யான் யாவரும் வணங்கும் அந்தணன், என் எதிர்பார்த்து இது சொற்றாய்க்கு—என்னெதிரே நின்று என்னைப்பார்த்து இதனைச் சொன்ன உனக்கு, விராவிய தண்டம் உன் நாக்கு அரிவிக்கும்அதேஅன்றி, செய்தற்குரிய தண்டம் உன் நாக்கையரியும் தண்டமே அல்லாமல், தராதலம் மேல் பிறிது இல் எனலோடும்—நிலவுலகின்மேல் வேறு தண்டமில்லை யென்று கூற, தலைவன் தான்—இறைவன். (கக)

யாவருமச்சுறுதாய்கொலையென்றுசெய்மாபாவி
யோவிலருட்குணமொன்றிலையென்புடைவல்லாயே
னுவரிவாய்சிரமும்மரிவாயினிநாணுய்கே
ளோவறுகேளிர்தமைததழுவாதவராருள்ளார்.

(இ-ள்.) யாவரும் அச்சுறும் தாய்கொலைஎன்று செய்மா பாவி—யாரும் அஞ்சும் தாயைக் கொலைசெய்தலை மேற்கொண்டு செய்யும் பெரும்பாவி நீ, ஓவில் அருள் குணம் ஒன்று இல்லை—ஆதலால் நீங்குதலில்லாத கருணைக் குணம் சிறிது மில்லாய், என்புடை வல்லாயேல்—என்னிடத்தில் நீவன்மை யுடையாயானுல், நா அரிவாய் சிரமும் அரிவாய்—நீ நாக்கு மரிவாய் தலையுமரிவாய், இனி நாணுய் கேள்—நீ இத்தொழிற்குச் சிறிதும் நாணுய் நான் சொல்வதைக்கேள், ஓவறு கேளிர் தம்மைத் தழுவாதவர் ஆர் உள்ளார்—இடைவிடாது சூழ்ந்த உறவினரைத்தழுவாது நடப்பவர் உலகில் யாருள்ளார் (யாவரும் தழுவுவ ரென்றபடி)

நீ யென்னிலும் வன்மையையுடையாயானுல் நாவு மரிதல் கூடும், சிரமு மரிதல் கூடும். அஃதில்லா மையால்சிறிதும்உன்னாலியலாதென்பார்நாவரிவாய் சிரமும்மரிவாய் என இழிவு சிறப்பும்மை தந்து கூறினர். (உ0)

பாம்புடனேனும்பழமைவிலக்கார்தமராஞோர்
வேம்பினையொப்பக்கைப்பினும்விள்ளாருலகத்தோர்
தோம்பலபேசிச்சுற்றம்வெறுக்குங்கொடியோனைத்
தேம்பிடும்வண்ணஞ்செற்றிடல்வேண்டும்மெனவெம்பி.

(இ-ள்.) தமராஞோர்—உறவினராயுள்ளவர்கள், பாம்புடனேனும் உலகத்தோர் பழமை விலக்கார்—பாம்புக்கொப்பானவராயிருப்பினும் உலகினர்தமரிடத்துப்பழமை பாராட்டுவார், வேம்பினையொப்பக் கைப்பினும் விள்ளார்—வேம்பை யொப்ப அத்தமராஞோர்கசந்து நிற்பினும் அவரை விட்டுப் பிரியார்,பல தோம் பேசி சுற்றம் வெறுக்கும் கொடியோனை—(குற்றஞ் சிறிது மில்லாதிருக்கவும்) பலகுறறங்களை யெடுத்துப்பேசிஉறவினரை அருவருக்குங் கொடிய வுன்னை, தேம்பிடும் வண்ணம் செற்றிடல் வேண்டும் என்ன வெம்பி—வருந்தும் வண்ணம் ஒறுக்கவேண்டுமென்னக் கோபித்து.

பழமை செல்வமுள்ளகாலத்துத்தமராஞோர்நமக்குச்செய்தவுபாகாரம். தமராயினோர் வறுமைவந்தவழிக்குணம்வேறுபடினும் அந்நன்றியைக் கருதியவரைத்தழுவுவர் என்பார்பாம்புடனேனும்பழமைவிலக்கார்தமராஞோர் எனவும், குணவேறுபாட்டால் தமக்கு ஓர்கால்தீங்குசெய்யினும் அத்தீங்கினைநோக்காதுதமக்குள்ளதொடரைநோக்குவர் என்பார்வேம்பினையொப்பக்கைப்பினும்எனவுங்கூறினுர். (உக)

சுணங்கனையெல்லாமேற்செலவேவித்துரிசோதிக்
கணங்கெழுகல்லுமோடுமெடுத்துக்கடிதோச்சி
யணங்கொருபாலானெறிவுழியம்மாமுனிவெந்தீ
யிணங்கவெகுண்டான்றண்டமெடுத்தான்புடைவீசி.

(இ-ள்) அணங்கு ஒருபாலான் சுணங்கனை எல்லாம் மேற்செல்ல ஏவி—உமையம்மையை யோர்பாலுடைய இறைவன்நாய்களை யெல்லாம் முனிவன்மேற் செல்ல ஏவி, துரிசுஓதி—அவன் குற்றங்களை யெடுத்துககூறி, கணம் கெழுகல்லும் ஓடும் எடுத்துகடிது ஓச்சி எறிவுழி—திரண்ட கல்லையும் ஓட்டையும் எடுத்து விரைந்து ஓச்சி யெறியுமிடத்து, அ மா முனி வெந்தீ இணங்க வெகுண்டான் தண்டம் எடுத்தான் புடைவீசி—அந்தப் பெரிய அவ்விராமன் கொடிய தீப்பறக்கச் சினந்து தண்டத்தை யெடுத்துப்

வெகுண்டான். எடுத்தான். முற்றெச்சங்கள். (உஉ)

ஞாளிகடம்மையதுக்கினனள்ளலரூர்செற்ற
மீளியின்மேற்செலவிட்டனன்வேழமுகக்கோனக்
கோளுறுதண்டமுரித்திருகூறுபடுத்திட்டான்
காளியொடாடியகண்ணுதல்வெய்யகதங்காட்டி.

(இ-ள்) ஞாளிகள் தம்மை அதுக்கினன்—தம்மேல் வந்த நாய்களை அதுக்கி, நள்ளலர் ஊர் செற்ற மீளியின்மேல் செல தண்டம்விட்டனன்-பகைவரது திரிபுரங்களை நகைத்தெரித்த இறைவன்மேல் தண்டத்தைஎறிந்தனன், வேழ முகக்கோன் அ கோள் உறு தண்டம்முரித்து இருகூறுபடுத்திட்டான் — யானை முகத்தையுடைய விநாயாகக்கடவுள் அத்தவலிமை யமைந்த தண்டாயுதத்தை முரித்து இரண்டு கூறு படச் செய்தான், காளியொடுஆடிய கண்ணுதல் வெய்ய கதம்காட்டி—காளியோடு நடனஞ் செய்தருளிய இறைவன் கொடிய கோபக்குறிப்பைக் காட்டி.

அதுக்கினன்மூற்றெச்சம். (உங)

வன்மொழிகூறிப்புலையர்தொழுத்தைமகனுநீ
யென்மகனோவத்தண்டமெறிந்தாய்தெய்வத்தா
லன்னதுபக்கதுதாய்கொலையஞ்சாயருளில்லாய்
நின்னையினிக்கொல்வேனெனநேர்ந்தான்கரமோச்சி.

(இ-ள்.) வன்மொழி கூறி—கடுஞ்சொற் கூறி, புலையர் தொழுத்தை மகனும் நீ என் மகன் நோவதண்டம் எறிந்தாய் — புலையரடியாள் மகனாகிய நீ என்னுடைய புத்திரன் வருந்தத் தண்டாயுதத்தை யெறிந்தாய், தெய்வத்தால் அன்னது பக்கது—ஊழால் அத்தண்டாயுதம் முறிந்தது, தாய்கொலை அஞ்சாய் அருளில்லாய்—தாய்கொலைக்குச்சிறிது மஞ்சாய் கருணையுமில்லாய், நின்னை இனி கொல்வேன் என்ன கரம் ஓச்சி நேர்ந்தான்—உன்னை இனி நான் கொலைசெய்வேனென்று கையை மேலோச்சி வன் எதிர்ந்தருளினான்.

இரேணுகைபுலையர்க்குத்தெய்வமாய்நிற்றலால் தன்னையுபசரிப்போரைத்தானும் உபசரித்துநிற்பாளாதலால் புலையர்தொழுத்தைமகனும்நீஎன்றார். புலையர்தொழுத்தை என்றதற்குப்புலையராற்றொழப்பட்டவளெனினும்அமையும். (உச)

நேர்ந்திடுகாலையினீண்மறைஞாளிகண்முன்னாகச்
சார்ந்துதுரந்துமுடுக்கலுமத்தகையானச்சங்
கூர்ந்துபதைப்புடனோடினன்வெண்சிறுகூன்றிங்கள்
வார்ந்தசடைப்பெருமானும்விரைந்துதொடர்ந்துற்றான்.

(இ-ள்) நேர்ந்திடு காலையில் நீள்மறை ஞாளிகள் — எதிர்ந்த காலத்தில் வரம்பில்லாத வேதங்களாகிய நாய்கள், முன்ஆகசார்ந்து துரந்து முடுக்கலும், அவவிறைவனுக்கு முன்னாகச் சென்று துரத்தவும், அத்தகையான் அச்சம் கூர்ந்து பதைப்புடன் ஓடினன்—அவ்விராமன் அச்சங்கூர்ந்து பதைத்து ஓடினான், வெண் சிறு கூன் திங்கள் வார்ந்த சடைப்பெருமானும் விரைந்து தொடர்ந்து உற்றான்—வெள்ளிய சிறிய இளஞ் சந்திரனை யணிந்த நீண்ட சடையையுடைய இறைவனும்விரைந்து பின்சென்றான்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஒற்றையங்கரத்தாற்பற்றிக்கோடலுமுடையான்றீண்டப்
பெற்றுமெய்ப்புளகம்போர்ப்பப்பெரிதுளமகிழ்ந்தானிச்சீர்ப்
பற்றியுமிழிஞன்றீண்டப்படுபெருஞ்சங்கைகொண்டு
முற்றவெந்துயரின்மூழ்கிவெருண்டனன்மொழிதலுற்றான்.

(இ-ள்.) ஒற்றை அம் கரத்தால் பற்றிக் கோடலும்—அழகியஒருதிருக்கரத்தால்பிடித்துக்கொள்ளவும், உடையான் தீண்டப்பெற்று மெய் புளகம் போர்ப்ப பெரிது உளம்மகிழ்ந்தான்—தன்னையாளாகவுடைய இறைவன் தீண்டப்பெறுதலால்தனதுசரீரமுற்றும்புளகரும்பமிகவுமனமகிழ்ந்த அவ்விராமன், இ சீர் பற்றியும் — சிவபெருமான் பரிசித்தவிச்சிறப்புவாய்ந்தும், இழிஞன் தீண்டப்படு பெரும் சங்கைகொண்டு — இழிஞனாற்றீண்டப்பட்டோமேஎன்னும் ஓர்பெரிய ஆலோசனைசெய்து, முற்ற வெம் துயரில் மூழ்கி வெருண்டனன் மொழிதலுற்றான்—முழுதுங்கொடியதுன்பத்தில் மூழ்கிச்சினந்துகூறத்தொடங்கினான்.

சிவபெருமான்திருக்கரப்பரிசயப்படுத்தலால் அவனையறியாதுமகிழ்ச்சி மீதூர்ந்ததுஎன்பார்மெய்ப்புளகம்போர்ப்பப்பெரிதுளமகிழ்ந்தான் எனவும், கண்கூடாகப்புலையனாகத்தோன்றுதலின்ஆலோசித்தனன்என்பார் இச்சீர்ப்பற்றியுமிழிஞன்றீண்டப்படுபெருஞ்சங்கைகொண்டு எனவுங்கூறினார். (௨௬)

மறிகடல்வரைப்பின்யாங்கணாயினுமறையோன்றன்னைப்
பொறியிலியிழிந்தவாழ்க்கைப்புலைமகன்வெருவராமே
செறியழுக்கடைந்தகையாற்றீண்டுமேயவ்வச்சாதி
பிறிவினிற்பிறழாவண்ணம்பின்னுநடாத்துங்காலே.

(இ-ள்) பொறி இலி—அறிவில்லாதபுலையனே, அவ்வச் சாதி பிறிவினில்—அந்தந்தச்சாதிகள்தத்தம்நிலையினின்று, பிறழாத வண்ணம் பின்னுகண நடாததுங்காலே—கடந்துநடவாதவண்ணம் இறைவன் நடத்துங்காலையில், மறி கடல் வரைப்பினயாங்கண் ஆயினும்—அலைகள் மடங்கும் கடல்சூழ்ந்தவுலகத்தில் எவ்விடத்திலாயினும், மறையோன் தன்னை இழிந்தவாழ்க்கை புலை மகன்—அந்தணனை யிழிந்தவாழ்க்கையையுடையபுலையன், வெருவராமே செறி அழுக்கு அடைந்த கையால் தீண்டுமே — சிறிதுமஞ்சாதுநெருங்கியவழுக்கடைந்தகையால் தீண்டுவானோ (தீண்டான்என்றபடி)

உலகில்வருணங்கள்தத்தமக்கு நூல்கள்வகுத்தநிலையினின்று, முறைபிறழ்ந்தொழுகுதல் இறைவன்செயலாதலால் அவ்வச்சாதிபிறிவினிற்பிறழாவண்ணம் பின்னுநடாத்துங்காலையெனவும், உயர்ந்தவாழ்க்கையையுடைய அந்தணரை இழிந்தவாழ்க்கையையுடையபுலையன்தீண்டுதல் என்றுமில்லையாதலால் மறையோன்றன்னையிழிந்தவாழ்க்கைப்புலைமகன்வெருவராமேசெறியழுக்கடைந்தகையாற்றீண்டுமேஎனவுங்கூறினார்.

இன்னினியுனதுசென்னியிறுவதுதேற்றங்காண்டி
புன்னெறிக்குலத்தோயென்னப்புகன்றுதன்னுளத்தேவெம்பிப்
பன்னரும்புலையன்றன்பாற்பட்டேனந்தோசீசீ
யென்னுடைத்தவமுமியானுமழிந்தவாறெனப்புழுங்க.

(இ-ள்,) புல் நெறி குலத்தோய்—தாழ்ந்தநெறியில்நின்றகுலத்திற்பிறந்தோய், இன்னினி உனது சென்னிஇறுவதுதேற்றமகாண்டி என்ன புகன்று—இப்பொழுதே உனதுதலைதகர்தல்நிச்சயம் அதுகாணாய் என்றுகூறி, தன்உள்ளத்தே வெம்பி — தனமனத்தேபுழுங்கி, பன்னரும் புலையன் தன்பால்பட்டேன் - சொல்லுதற்கரியபுலைத்தொழிலையுடையோன்கைப்பட்டேன், அந்தோ—ஐயோ, சீசீ என்னுடைய தவமும் யானும்—சீசீஎன்னுடையதவமும்நானும், அழிந்த ஆறுஎன்னபுழுங்க — நிலையழிந்தவகைநன்றாயிருந்ததென்றுமனம்புழுங்கிநிற்க.

சிவபெருமான்சுதந்தரனாதலில் தலைதகர்கவெனஅவ்விராமன்தந்தசாபம் பயன்படாமையால், அந்தோசீசீயென்னுடைத்தவமும்யானும் அழிந்தவாறெனப்புழுங்கினன்றா. இனிஇனிஎன்றது இன்னினிஎனவந்ததுகடைக்குறைவிகாரம். (௨௭)

விழிபயினுதலுமுந்நீர் விடம்பொதிமிடறுங்கூர்வாய்
மழுமறிக்கரமுஞ்செங்கேழ்வாய் வழுங்கரந்துசாலக்
கழிபுலைவேடந்தாங்கியெழுந்தருள்கருணைத்தோன்றல்
லிழிவறுமிராமன்கூற்றைச்செவிமடுத்தினையசொல்வான்.

(இ-ள்.) விழி பயில் நுதலும் முந்நீர்விடம் பொதி மிடறும்—தீக்கண்ணமைந்த திருநெற்றியும் கடலிற்றோன்றிய விடம் நெருங்கிய ஸ்ரீகண்டமும், கூர் வாய் மழு

மறிக்கரமும் செம்கேழ்வடிவமும் கரந்து—கூர்மையமைந்த மழுவையுமானையுமேந்திய திருக்கரங்களும் செந்நிறம் வாய்ந்த திருவுருவமு மாகிய இவைகளை மறைத்து, சால கழி புலைவேடம் தாங்கி-மிகவுங்கழிந்த புலையன்வேடத்தைத்தாங்கி,எழுந்தருள் கருணைதோன்றல்—எழுந்தருளிய கிருபாநிதியாகிய இறைவன், இழிவறும்இராமன் கூற்று செவிமடுத்து இனைய சொல்வான்—இழிவில்லாத இராமன் வார்த்தைக்குத் திருச்செவிகொடுத்து இச்சொற்களைச் சொல்வான். (உகூ)

வடுவறுமறைவலாளர்மரபினையெனில்யான்றீண்டப்
படுகுவையல்லைநீதான்பார்ப்பனக்கடையனுவை
யடுதொழிற்புலையன்யானவ்வொழுக்கினிற்சிறந்தவாற்று
லிடுகிடைத்தாயைக்கொன்றேயென்னினுங்கடையனீகாண்.

(இ-ள்.) வடுஅறு மறைவலாளர் மரபினைஎன்னில்—குற்றமற்ற அந்தணர் குலத்தில்நீ தோன்றினையானால், யான் தீண்டநீ படுகுவைஅல்லை—என்னால்நீ தீண்டப் படுவாயல்லை, பார்ப்பனக்கடையன் - நோக்கில்நீ அந்தணர்குலத்தில் கடைப்பட்டவன், யான் ஆவை அடுதொழில் புலையன்—நானே பசுவைக்கொல்லும் புலைத்தொழிலையுடையவன், இடுகு இடை தாயை கொன்றேய் — துவளும் இடையையுடைய தாயைக்கொலை செய்தவன்நீ, அ ஒழுக்கில் சிறந்த ஆற்றல்—அப்புலைகுலத்திற்குரிய ஒழுக்கத்தில்சிறந்துநின்ற வகையால், நீ என்னினும் கடையன்—நீ என்னினும் கடைப்பட்டவன்.

புலைக்குலத்திற்றோன்றினோர் பசு வைக்கொலை செய்தல் தொழிலேயன்றித்தாயைக் கொலை செய்தல் இயற்கையன்றென்பார் யான்ஆவையடு தொழிற்புலையன்—நீ தாயைக்கொன்றேய் எனவும், நான் புலையர்க்குரிய தருமத்தில் வழுவாதுநிற்கின்றேனநீஅக்குலத்துக்குச் சிறிது மியலாதகொலைத்தொழிலையுடையா யென்பார் அவவொழுக்கினிற் சிறந்தவாற்றால்நீஎன்னினுங் கடையன் எனவுங்கூறினார். (கூ0)

இழிஞருக்கிழிஞனையெனக்குநீய டிமையெய்திக்
கழிபெருமகிழ்ச்சிகூர்வாயுனக்கியாங்களைகணுவேன்
மொழிவதுசரதமென்றானவ்வுரைமுனிவன்கேளாப்
பழியுறுகதையிற்றாக்கப்படுமரவென்னப்பொங்கி.

(இ-ள்.) இழிஞருக்கு இழிஞன் ஆனாய்—கடைப்பட்டவர்க்குக் கடைப்பட்டவனனாய், எனக்கு நீஅடிமை எய்தி கழி பெரு மகிழ்ச்சி கூர்வாய்—ஆதலால் எனக்கு நஅடிமைப்பட்டு மிக்கமகிழ்கூர்வாய், உனக்கு யான் களைகண் ஆவேன்—உனக்குயான் ஓர்பற்றுக் கோடாயிருப்பேன், மொழிவது சரதம் என்றான்—நான் கூறுவதுசத்தியமென்று இறைவன் சொன்னான், அ உரை முனிவன் கேளா — அந்தவார்த்தையைப் பரசிராமன்கேட்டு, பழி உறு கதையில் தாக்கப்படும் அரவு என்ன பொங்கி—கொல்லுதலமைந்த தண்டத்தால்அடிக்கப்படும் பாம்பைப்போலக்கோபமீதூர்ந்து.

இறைவரது கடுஞ்சொல்தண்டத்தாலடித்தல்போலஇருத்தலால் பழியுறுகதையிற்றாக்கப்படுமரவென்ன என்றார். (கூக)

அண்ணலைமலர்க்கையோச்சியடித்தளைமரர்தேறு
புண்ணியமுதல்வன்றுழும்பொருகெமுனிவன்றனைத்
திண்ணியவிரண்டுகையுஞ்சிக்கெனவொருசைபற்றிக
கண்ணறக்கொடிறுவீங்கப்புடைத்தனன்கமலக்கையால்.

(இ-ள்.) அண்ணலை மலர்க்கை ஓச்சி அடித்தனன்—சிவபெருமானைத்தனது மலர்போன்றகையாலோச்சி அவ்விராமனடித்தான், அமரர்தேருதபுண்ணிய முதல்வன் தானும்—தேவர்களுணர்தற்கரியபுண்ணியவடிவாகியஇறைவனும்,பொருக்கென முனிவன்தன்னை திண்ணிய இரண்டுகையும் சிக்கென ஒருகைபற்றி—விரைந்து அம்முனிவனைத்திண்ணிய அவனது இரண்டுகைகளையும் சிக்கென்றுதனது ஒருதிருக்கரத்தால்பற்றி, கமலக்கையால் கண் அறகொடிறு வீங்க புடைத்தனன்—தாமரைமலர்போன்றதனதுமற்றொருதிருக்கரத்தால்தாட்சிணியமற அவனதுகபோலம்வீங்க அடித்தருளினன்.

சிக்கென என்றது - வழுவாது பிடித்தல். (௩௨)

முறைமுறையதிரத்தாக்கியிருவருமுனைந்துவெம்போர்
மிறையுறப்புரிதலோடுமெல்லியற்பிராட்டிநோக்கி
யிறைவனின்னடிக்கீழன்பினினியவன்வருந்தாவண்ணம்
பொறைசொளப்புடைத்தியென்றாள்புனிதனுமெலிதிற்றாக்க.

(இ-ள்.) இருவரும் முறை முறை அதிரதாக்கி முனைந்து வெம்போர் மிறைஉற புரிதலோடும்—இறைவனும் முனிவனும் முறை முறையேயதிர மோதிப்பின்னிடாமல் கொடிய போர்த்தொழிலைக் கண்டோரஞ்சச்செய்ய, மெல்லியல் பிராட்டி நோக்கி—மென்மைத்தன்மைவாய்ந்த உமையம்மை பார்த்தருளி, இறைவன்—இறைவனே, நின் அடிக்கீழ் அன்பின் இனியவன்—உன்திருவடிக்கீழன்புமிக்கோன், வருந்தாவண்ணம் பொறை கொள புடைத்தி என்றாள்—அவன் வருந்தாதவகைசகிக்கும்வண்ணம்மோதுவாயென்றுமையம்மையருளினர், புனிதனும் மெலிதில் தாக்க — இறைவனும் வருந்தாதுமோத. (௩௩)

கடனறிமுனிவன்வாகைதனதெனக்கருதிவாங்கும்
வடவரைச்சிலையோன்மார்பிற்கரங்கொடுவலிதிற்றாக்கி
மிடலுறத்தெழித்தானாகவிண்ணவர்கரியகோமான்
கெடலருஞ்சினமீக்கொண்டான்போன்மறைக்கிழவன்றன்னை.

(இ-ள்.) கடன் அறி முனிவன் வாகை தனது என்ன கருதி—போர்செய்புந்திறனறிந்த அவ்விராமன் வெற்றிதன்னதென்று கருதி, வாங்கும் வட வரை சிலையோன் மார்பில்—வளைக்க வளைந்த மேருமலையைவில்லாகவுடையவன் திருமார்பில்,கரம் கொடுவலிதில் தாக்கி—முட்டியாகப்பிடித்ததனதுகையால் விரைந்துதாக்கி, மிடல் உற தெழித்தானாக—மிகவும் கோஷித்தானாக, விண்ணவர்க்கு அரிய கோமான் கெடலரும் சினம் மீக்கொண்டான்போல்—தேவர்களுக்கரியனாகியஇறைவன் அழிதலில்லாத கோபமீதூர்ந்தவனைப்போல, மறை கிழவன் தன்னை—அந்தணனாகிய முனிவனை.

இறைவன் கருணையால் வலியில்லான்போலமோதுதலால்நாம்இனிவெற்றிகொள்வோமெனக் கருதினனாதலில் கடனறிமுனிவன் வாகைதனதெனக்கருதி என்றார்.

கன்றிடக்கரங்கள்காலிற்பிணிப்புறக்கட்டிநோன்றா
ளொன்றினாலுருட்டிச்சேணினுந்தினனவனைவேத
வன்றிறன்றாளிசூற்றிவளைந்தனமருங்குநின்ற
வென்றிகொண்மைந்தர்நோக்கிவிலாவிறச்சிரித்திட்டாரால்.

(இ-ள்.) அவனை கன்றிட கரங்கள் காலில் பிணிப்பு உற கட்டி—அம்முனிவனை வருந்தஅவனதுகைகள் இரண்டுகாலில் பிணிப்பமையப்பிணித்து, நோன்தாளின் ஒன்றினால் உருட்டி சேணின் உந்தினன் — தனதுவலியதிருவடி யொன்றால் தலை

கீழாகஉருட்டி விண்ணிற்செல்ல எறிந்தான், வேதம் வன்திறல் ஞாளிசுற்றி வளைந்தன—வேதமாகிய வலியநாய்கள் சூழ்ந்துவளைந்தன, பருங்கு நின்ற வென்றி கொள் மைந்தர்நோக்கி விலாஇற சிரித்திட்டார்—பக்கத்தில் நின்றவிநாயக்கடவுளும் முருகக்கடவுளும்பார்த்து அவனது விலாவெலும்புமுறிய மோதினர்கள்.

சிரித்திட்டாரெனவந்தது குறுக்கல்விகாரம். விலாவிறச்சிரித்திட்டாரெனப் பாடமோதி விலாவெலும்புகட்டுவிடச்சிரித்தாரெனப் பொருள் கொள்ளுதலுமொன்று.

திருவிளையாட்டாலண்ணல்சேவடிக்கமலத்துந்தப்
பருவருமுளத்தனாகிப்பசும்புதல்செறியநீண்ட
தருவடித்தலத்தினாவிசாம்பினனொத்துவீழ்ந்தான்
மருமலர்க்கருமென்கூந்தல்ரேணுகைமைந்தனம்மா.

(இ-ள்.) அண்ணல் திருவிளையாட்டான சேஅடி கமலத்து உந்த—இறைவன் தனது திருவிளையாட்டால் செவந்ததிருவடித்தாமரையால் மேலேசெல்ல எறிய, மருமலர் கருமென் கூந்தல் இரேணுகைமைந்தன்—வாசங்கமழும் மலரையணிந்த கரிய மெல்லியகூந்தலையுடைய இரேணுகையின்புத்திரனாகிய அவ்விராமன், பருவரும் உளத்தன் ஆகி—வருந்தும் மனத்தையுடையவனாகி, பசும் புதல் செறிய நீண்ட தரு அடி தலத்தின்—பசியபுதல்கள் புடைநெருங்க ஓங்கிய மரத்தின்கீழ், ஆவி சாம்பினன் ஒத்து வீழ்ந்தான்—உயிர்போனவனையொத்து வீழ்ந்தனன். (௧௬)

அடங்கருந்துயரத்தாழுமவ்வுழிவேரிக்கஞ்சத்
தடம்புனல்குடைந்துவாசந்தாங்கிமென்மலர்ப்பூஞ்சோலை
யிடந்தொறும்வதிந்துவீழ்ந்தாரினனுயிர்தளிர்ப்பச்செல்லு
மடந்தையரென்னமெல்லப்படர்ந்ததுமலயத்தென்றல்.

(இ-ள்.) அடக்கரும் துயரத்து ஆழும் அ உழி—அடங்குதற்கரியதுன்பத்தில் அழுந்தியஅச்சமையத்தில், மலயம் தென்றல்—பொதியமலையிலுள்ள தென்றற்காற்று வேரி கஞ்சம் தடம் புனல் குடைந்து—வாசமமைந்ததாமரைகள் நிறைந்ததடாகத்திலுள்ளநீரிற் படிந்து, வாசம் தாங்கி மெல் மலர் பூம் சோலை இடம் தொறும் வதிந்து—வாசஞ்சுமந்து மெல்லியமலரையுடைய பொலிவமைந்தசோலையினிடந் தோறுந்தங்கி, வீழ்ந்தார் இன் உயிர் தளிர்ப்ப செல்லும் மடந்தையர் என்ன மெல்லப்படர்ந்தது—தம்மைவிரும்பியதலைவரதுவாடிய இனிய உயிர்தளிர்க்கசெல்லும் பெண்களைப்போல மெல்லச்சென்றது.

தாம் கூறியகுறியிடத்துவந்ததலைவர்பால் அக்குறியிடத்து வந்ததலைவியரால் காமத்தால் உணங்கிய அத்தலைவரது உயிர்அவரெப் பொழிந்துதண்ணிதாதலால் வீழ்ந்தாரின்னுயிர்தளிர்ப்பச்செல்லுமடந்தையரென்னஎன்றார். குடைந்து, தாங்கி, வதிந்து என்னும் வினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொண்டுதென்றலென்னும் வினைமுதலின் பயனாகிய படர்ந்ததென்னும் பயனிலையின் முதனிலையைக் கொண்டன. (௧௭)

தேம்பொதியிளங்கால்மேனிதைவரத்தெளிவுதோன்றி
மேம்படுமயர்ச்சிநீங்கவிழித்துணைவிடுத்துநோக்கித்
தேமபினனிடும்பைக்கெல்லையாயினன்றிரியாச்சிந்தை
யேம்பலின்மறையோனெஞ்சத்திவையிவையெண்ணலுற்றான்.

(இ-ள்.) தேம் பொதி இளம் கால்மேனிதைவர—வாசம் பொதிந்ததென்றற்காற்றுத்தனது மேனியிற்படிய, திரியாத சிந்தை ஏம்பல் இல் மறையோன் — மாறுபடா

தமனத்திற்சிறிதும் வருந்துதலில்லாத அவ்விராமன், தெளிவு தோன்றி மேம்படும் அயர்ச்சிநீங்க—தெளிவுபிறந்து தன்னைவிழுங்கிய சோர்வுநிறிது நீங்க, விழித்துணை விடுத்துநோக்கி தேம்பினன் இடும்பைக்கு எல்லை ஆயினான்—இரண்டுகண்களையுந்திறந்து பார்த்துவருந்தித்துன்பத்துக் கோருறைவுளாய், நெஞ்சத்து இவை இவை எண்ணல் உற்றான்—மனத்தில் இவ்விச்செயல்களைக் கருதத்தொடங்கினன். (௩௮)

**கலிவிருத்தம்.**

மறையொழுக்கம்வழாநெறிவாய்மையோர்க்
கிறைவனாமுனிவன்குலத்தெய்தினேன்
னிறையவேதமுமங்கநியாயமு
முறையினோதினன்மூவறுகல்வியும்.

(இ-ள்.) மறை ஒழுக்கம் வழாத நெறிவாய்மையோர்க்கு இறைவன் ஆம் முனிவன் குலத்து எய்தினேன்—வேதவொழுக்கினின்றும் வழுவாத நெறியின் மெய்மையினின்ற முனிவர்களுக்குத்தலைவனாகிய சமதக்கினி மரபிற்பிறந்தேன், நிறைய—நிறைந்த, வேதமும் அங்கமும் நியாயமும் மூவறு கல்வியும்—வேதங்களையும் ஆறங்கங்களையும்நியாயங்களையும் பதினெண்பாடைகளையும், முறையின் ஓதினேன்—முறையாகக்கற்றுளேன்.

ஆறங்கம், நியாயம் என்றதை முன்னர்க்காண்க, பதினெண்பாடையாவன அங்கம், அருணம், கலிங்கம், கவுசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திரவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம். (௩௯)

பன்னெடும்படையாவும்பயின்றுளே
னின்னனாயவெனக்கிதுகாலையின்
முன்னைவல்வினைமூட்டிவிளைந்தவா
றென்னபாவமெவரிதுதாங்குவார்.

(இ-ள்.) நெடும் பல் படையாவும் பயின்றுளேன்—நெடியஆயுதப்பயிற்சிகள் எல்லாம் கற்றுள்ளேன், இன்னன் ஆய எனக்கு இது காலையில்—இத்தன்மையையுடையவனாகிய எனக்கு இக்காலத்தில், முன்னை வல்வினை மூட்டி விளைந்த ஆறுஎன்ன பாவம்-பழவினைவந்து மூளுகையால் நமக்குவிளைந்ததீப்பயன் என்னபோகூழோ, இது தாங்குவார் எவர்—இதனை யாற்றுவோரெவர்.

போகூழைவல்வினையெனவும், அப்போகூழிற்கொடியதை என்னபாவமெனவுங் கூறினர். (௪௦)

என்னையீன்றவள் வெம்பழியெய்துறீஇக்
கொன்னுமென்றாற் சிரங்குறைபட்டனள்
பின்னரெந்தையும் பேதையரசனாற்
சென்னியிற்றுச் சிதைந்தனனம்மவோ.

(இ-ள்.) என்னை ஈன்றவள் வெம்பழி எய்துறீஇ—என்னைப்பெற்றதோணுகையென்பவள் கொடியபழிவாய்ந்து, கொன்னும் என்றால் சிரம் குறைபட்டனள்—பிறர் கண்டுஅஞ்சும் என்றால்தலையறுபட்டனள், பின்னர் எந்தையும் பேதை அரசனால்—மீளவும்என் தந்தையும் பேதைமையையுடையகாத்தவீரியார்ச்சுனனால், அம்மவோசென்னி இற்று சிதைந்தனன்—ஐயோதலைதுமிக்கப் பட்டுஅழிந்தான்.

வெம்பழியெய்துநீஇனென்றது நீரில்பிரதிபிம்பித்த ஓர்சாயலைவிரும்பிநோக்கியதை.

ஈண்டுமேற்று மிழிஞன்புலைக்கரந்
தீண்டியென்னை யவமதிசெய்திட
மூண்டவெம்பழிமூழ்கியுமையவோ
மாண்டிலேனுயிர் வல்வினையேனரோ.

(இ-ள்.) மற்றும் ஈண்டு இழிஞன் புலை கரம் தீண்டி என்னை அவமதி செய்திட—மீளவும் இவ்விடத்து ஓர் புலையன்புலால் மணங்கமழும்தனது கையாற்றீண்டி என்னையவமதிக்க, வல் வினையேன் மூண்ட வெம்பழிமூழ்கியும்—கொடியதீவினையையுடைய யான்மேற்கொண்டெழுந்த கொடியபழியில் மூழ்கியும், ஐயவோ உயிர் மாண்டிலேன்—ஐயோ உயிரிழந்திலேன். (சஉ.)

கவளமாகக்கடல்விடமுண்டருள்
சிவனையேத்துநர்செல்லலுறார்களாற்
பவனடித்துணைபற்றியுமென்னிடர்க்
கவதிகண்டிலனற்புதமற்புதம.

(இ-ள்.) கடல் விடம் கவளம் ஆக உண்டருள் சிவனை ஏத்துநர் செல்லல் உறார்கள்—கடலிற்றோன்றிய விடத்தைக்கவளமாக வுண்டருளிய சிவபிரானை வணங்குவோர் சிறிதுந் துன்பமடையார்கள், பவன் அடி துணை பற்றியும் என் இடர்க்கு அவதி கண்டிலன்—அப்பெருமான் இரண்டுதிருவடிகளையும் புணையாய்ப்பற்றியும் எனதுதுன்பத்துக்கு ஓர்எல்லை கண்டிலேன், அற்புதம் அற்புதம்—இது ஓர்ஆச்சரியம் ஆச்சரியம்.

இறைவனுக்குச் சிவன், பவன் எனவந்த திருநாமங்கள்,—

ஆன்மாக்களுக்கு மங்களஞ்செய்வோனென்னும் பொருள்மேல்நின்றசிவனென்னுங் காரணப்பெயரை, அப்பொருள்தோன்றக் கவளமாகக்கடல்விடமுண்டவன்என விசேடந்தந்து சிவனைஎனவும், தியானிக்கப்படுவோன் என்னும் பொருள்மேனின்றபவன்என்னுங் காரணப்பெயரை அப்பொருள்தோன்ற அடித்துணைபற்றியும் என்னிடர்க்கவதி கண்டிலனென விசேடந்தந்துபவன்எனவுங் கூறினர்.

விடமுண்டமெங்களந் தந்தமையை,—

"செற்றாலமுயிரனைத்து முண்டிடவேகிமிர்ந்தெழலுஞ் சிந்தைமேற்கொள்
பற்றாலந்ததுநுகர்ந்து நான்முகனேமுதலோர்தம் பாவைமார்க்குப்
பொற்றாலிதனையளித்தோன்,, எனக்காந்தத்திலும்,

தியானிப்போர்க்கு நன்மையருளுவோ னென்பதை,—

"பவனெம்பிரான்பனிமாமதிக் கண்ணிவிண்ணோர் பெருமான்
சிவனெம்பிரானென்னை யாண்டுகொண்டானென்சிறுமைகண்டும்" எனவும்,

"அவனென்றுநானுன்னையஞ் சாதேனையல்லலறுப்பானே யென்றேனானே
சிவனென்றுநானுன்னையெல்லாஞ்சொல்லச்செல்வந்தருவானேயென்றேனானே
பவனாகியென்னுள்ளத்துள்ளேநின்றுபண்டைவினையறுப்பாயென்றேனானே
யவனென்றேயாதியேயை யாறனேயென்பெறன்றேனானரற்றிநைகின்றேனே"

எனவருந்திருவாக்குகளாலுமுணர்க. (சங.)

இன்பஞ்செய்தலிற்சங்கரனெம்பிரா
னின்பமாக்கலிற்சம்புவிடும்பைபோ

யெம்பதோட்டுமியல்பினுருத்திர
னென்பராலவையென்னிடைபொய்த்தவே.

(இ-ள்.) எம்பிரான் இன்பம் செய்தலில் சங்கரன்—எமதிறைவன் அடியவர்க்கு இன்பஞ் செய்தலால் சங்கரனென்னுந் திருநாமமும், இன்பம் ஆக்கலில் சம்பு— இன்பம் உண்டாக்குதலால் சம்பு வென்னுந் திருநாமமும், இடும்பை நோய்என்பது ஓட்டும் இயல்பின் உருத்திரன்என்பர்—குடும்பதுன்பத்தையும் பிறவிநோயையும்போக்குதலால் உருத்திரனென்றுகூறுவார்கள், அவைஎன் இடைபொய்த்த — அத்திருநாமங்களின்பொருள் என்னிடத்துப் பொய்யாயின.

சங்கரனென்னும் திருநாமம் இன்பங்கொடுப்பவனென்னும் பொருண்மேல் நிற்றலால் அடியவர்வேண்டுகோளை அருள்வோனென்னும் பொருண் மேல்நின்றதென்பார் எம்பிரான் இன்பஞ்செய்தலிற் சங்கரனெனவும், சம்பு என்னுந்திருநாமம்-ஆன்மாக்களுக்கு இளைப்பொழித்தலால் இயல்பாகவே இன்பம் உண்டாக்குவோனென்னும் பொருண்மேனின்றதென்பார் இன்பமாக்கலிற் சம்பு வெனவும், உருத்திரனென்னுந்திருநாமம்—ருத்என்னுந்தாது குடும்பதுக்கத்தை யுணர்த்தலில் அதனை யொழிக்கும் பொருண்மேனின்றதெனவும், அதனுள் ருக்என்னுந்தாது நோயையுணர்த்தலில் அந்நோயை யொழிக்கும் பொருண்மேனின்றதெனவும் கூறுவார்இடும்பைநோயென்ப தோட்டுமியல்பினுருத்திரனென்பராலெனவும், சிவன், பவன், சங்கரன், சம்பு, உருத்திரன்என்னுந்திருநாமங்கள் முன்னோர் காரணப்பெயரெனக்கூறுவனொன அவர்மேலேற்றிக் கூறுவார் என்பரால் எனவுங்கூறினார். (௪௪)

பேதைநீரிற்பெரும்பிழைசெய்துளே
னாதலாலிவ்வருந்துயரெய்தினேன்
பூதநாதனைப்போதப்பழிச்சியென்
னேதந்தீர்வலெனத்துணிந்தேத்துவான்.

(இ-ள்.) பேதை நீரில் பெரும் பிழைசெய்துளேன் ஆதலால்—அறியாமையின் தன்மையால் தாய் கொலையாகிய பெருங்குறையினைச்செய்தோனாதலால், இ அருந்துயர் எய்தினேன்-அடைதற்கரிய இத்துன்பத்தையடைந்தேன், பூதநாதனை போதபழிச்சி- பூதங்களுக்குத் தலைவனாகிய இறைவனைப பொருந்தவணங்கி, என் ஏதம்தீர்வல் என்ன துணிந்து ஏத்துவான்—எனதுகுற்றம தீர்வேனென்று வணங்குவான்.

தனது பிதாவின் அனுஞையால்தாய்கொலைசெய்தமையால் பேதைநீரிற்பெரும்பிழைசெய்துளேன் எனவும், அதனால் இப்புலையனால் யான்கடைப்பட்டபுலையனெனக் கூறப்பட்டேனாதலால் இவவருந்துய ரெய்தினேனெனவும், தேவதாருவனமுனிவர் தன்னைக்கொல்ல ஏவிய பூதங்களுக்குத் திருவருள்செய்துஅவற்றைப்படைகளாகக் கொண்டருளினமையால் அவனை வணங்கில் என்புலைத்தொழில்தீருமாதலால் பூதநாதனைப்போதப்பழிச்சியென்—னேதந்தீர்வலெனத்துணிந்துஎனவுங்கூறினன்.

தாருகாவனமுனிவரேவப்பட்டுக்கொல்லவந்தபூதங்களைப்படைகளாகக் கொண்டருளினமையை,—

"ஆரிடரேவல் போற்றியண்டமுந் துளங்கவார்த்துச்
சாரதர்வருதலோடுஞ்சங்கரனவரைநோக்கி
நீரொருமையகன்றிடாது நிதநலுந்தானையாகிச்

சேருதிரென்றுனுற்சேர்தீவினைதீர்க்கவல்லான்"
எனக்கந்தபுராணத்தில்வருதல்காண்க. (சரு)

வேறு.

மூவாதபடைப்புமுதற்றொழிலைந்
தோவாமையியற்றியுயிர்த்தொகைக
டாவாமலேமூன்றுமறத்தருவா
யாவாவடியேனுனடைக்கலமே.

**(இ-ள்.)** மூவாதபடைப்பு முதல் தொழில் ஐந்தும்-அழியாதசிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களையும், ஓவாமல் இயற்றி—ஒழியாமற்செய்து, உயிர்த்தொகைகள் தாவாமல்—ஆன்மகோடிகள் பிறப்பிறப்புகளிற் பட்டுவருந்தாமல், மூன்றும் அறதரு வாய்—மும்மலங்களும் நீங்க அவற்றிற்குமுத்தி தந்தருளும் இறைவனே, ஆவா அடியேன உன் அடைக்கலம்—ஐயோவுன் திருவடிக்கடைக்கலம்.

படைப்பால் கன்மம்நீங்குமுகத்தால் மலபாகம் வரச்செய்தலும், திதியால் கன்மங்கழியும் வண்ணம் அதனை நுகரச்செய்தலும், சங்காரத்தால் இளைப்பாற்றலும், திரோததத்தால் கன்மவொப்பு வருவித்து மலங்களை முதிரவைத்தலும், அனுக்கிரகத்தால் பந்தம் விடுவித்தலும் ஆகிய ஐந்தொழில்களும் தனக்கென வொன்றின்றிஆன்மாக்களுக்கு உறுதிபயக்குந்தொழிலாகவுடையா னாதலால் மூவாதபடைப்பு முதற்றொழிலைந்—தோவாமையியற்றி யுயிர்த்தொகைக—டாவாமலே மூன்றுமறத்தருவாய்,எனவும், அவ்வான்மகோடிகளுள் யானொருவனாதலில் என்னையுங் காவாயெனறனனாதலால் ஆவாவடியேனுன் னடைக்கலமெனவுங் கூறினான்.

படைப்பு முதலியஐந்தொழிலும் ஆன்மாக்களுக்கு உறுதிபயப்பனவென்பதை,—

" அழிப்பிளைப்பாற்றலாக்கமவ்வவர்கன்மமெல்லாங்
கழித்திடனுகரச்செய்தல்காப்பதுகன்மவொப்பிற்,
றெழித்திடல்மலங்களெல்லாமறைப்பருள்செய்திதானும்
பழிப்பொழி பந்தம்வீடுபார்த்திடினருளேயெல்லாம்"

எனவருஞ்சிவஞானசித்தியாரா லுணர்க. (சகூ)

படியாதியபற்பலதத்துவமாய்க்
குடிலாந்தமகன்றகுரூஉச்சுடரோ
முடியாமுடிவேமுதலாமுதலே
யடிகேளடியேனுன்னடைக்கலமே,

**(இ-ள்.)** படி ஆதிய பற்பல தத்துவம் ஆய்—பிருதிவிமுதலிய பலவகைப்பட்ட தத்துவங்களுந்தானாகியும், அந்தம் குடிலை அகன்ற — அவற்றினிறுதியினுள்ள மகாமாயையுங்கடந்த, குரூஉ சுடரோ—நிறங்கொண்ட வொளியே, முடியா முடிவே—மகாப்பிரளயத்தினும்அழியாத முடிவாயுள்ளவனே, முதலாம் முதலே—திருமால்முதலியஎல்லுயிர்க்கும் முதலாயுள்ளவனே, அடிகேள் அடியேன் உன் அடைக்கலம—அடிகளே அடியேன் உனக்குஅடைக்கலம.

பிருதிவிமுதல் நாததத்துவமீறாகவுள்ள முப்பத்தாறுதத்துவமென்பார்படியாதியபற்பலதத்துவமாய் எனவும், அம்முப்பத்தாறுதத்துவங்களுந்தோற்றுதற்கு மகாமாயைகாரணமாதலால் அதனையுங்கடந்து நின்றவனென்பார் குடிலாந்தமகன்ற எனவும்,

ஒன்றினுங்கலத்தலின்றித்தானே சுயம்பிரகாசமாய் நிற்பவனென்பார் குரூஉச்சுடரோ எனவும், இறுதிக்காலமுந்தானாய் நிற்பவனென்பார் முடியாமுடிவே எனவும், அக்காலத்தில் தானொருவனே அழியாது நிற்பவனென்பார் முதலாமுதலே எனவுங்கூறினார்.

பிரபஞ்சமுற்றுந்தானேயாய்நிற்பது படியாதிய பற்பலதத்துவமாய் என்பதனாலும், அவற்றிற்குவேறாய்நின்று உடம்பொடுநிலை பெற்றவினைப்பயன்களை அவ்வவ்வுயிர்களுக்குத் தனதாணையால் கூட்டுவனென்பது குடிலாந்தமகன்ற என்பதனாலும்,ஒன்றாய் வேறாய் நிற்குஞ்சிவமென்பது குரூஉச்சுடரென்பதனாலும், அவ்வுயிர்கள் ஐந்தொழிலிற்பட்டுச்செல்லுங்கால் அவ்வைந்தொழில் நடாத்தும் பதிரூபமாய்த்தான்நிற்பனென்பதுமுடியாமுடிவே முதலாமுதலே என்பதனாலுந் தோன்றக்கூறினார். (சஎ)

உமையாளொருபாலுடையாய்முறையோ
விமையாசலவில்லிறைவாமுறையோ
வமையாவிடமுண்டமைவாய்முறையோ
தமைநாடினர்தந்தலைவாமுறையோ.

(இ-ள்.) உமையாள் ஒருபால் உடையாய் முறையோ—உமையம்மையை யொருபாகத்திலுடையவனே நானிவவாறுவருந்துவது முறையா, இமையாசல வில் இறைவா முறையோ—மகமேருவை வில்லாகவுடைய இறைவனே இது முறையா, அமையாத விடம் உண்டு அமைவாய் முறையோ — பிறருண்டற்கமையாதவிடத்தையுண்டு நித்தியமாயுள்ளவனே இதுமுறையா, தமை நாடினர் தம் தலைவா முறையோ—தம்மைக்கருதினர்க்குத்தலைவனுயுள்ளவனே இதுமுறையா.

உயிர்களிடத்து என்றும்மாறாத கருணையையுடையாயென்பான் உமையாளொருபாலுடையாய் என்றும், திருமால்முதலிய எல்லாத்தேவரினும் மேம்பட்டபராக்கிரமமுடையாயென்பான் இமையாசலவில்லிறைவாஎனவும், தேவர்கள் வேண்டுகோளுக்கிரங்கிவிடமுண்டு நித்தியத்தன்மை காட்டினாயென்பான் அமையாவிடமுண்டமைவாயெனவும், பசுவின் உடல்முற்றும் பால்விரவிநிற்பினும்அதன் மடியிற்பால் சுரந்துநிற்றல்போல், எல்லாப்பசுக்களுக்கும்பதியாயினும் அடியவரிடத்துப்பதித்தன்மை நிறைந்துநிற்பாயென்பான் தமைநாடினர்தந்தலைவா எனவும், என்னையிப்புலையன்கையில்நீக்கி என்வேண்டுகோளுக் கிரங்கிக்காத்தருள்வாயென்பான் முறையோ எனவுங்கூறினான்.

கச்சிப்பதியெய்துபுநின்கழல்க
ணச்சிப்பணிசீர்நரர்வானவரு
ளிச்சித்தபெறாதவரோயெனினும்
பொச்சத்தொடுபோயினர்தாமுளரோ.

(இ-ள்) கச்சி பதி எய்துபு—கச்சியென்னுந்திருப்பதியை யடைந்து, நின் கழல்கள் நச்சி பணிசீர் நரர்வானவருள் இச்சித்த பெறாதவர்—உனதுதிருவடியை விரும்பிப்பணிந்த சிறப்புவாய்ந்த நரருள்ளுந்தேவருள்ளுந் தாம் இச்சித்தவரங்களைப்பெறாதவராய், ஏ எனினும் பொச்சத்தொடு போயினர்தாம் உளரோ—ஏ என்னும்அளவினும் பொய்த்துப்போனவர் எங்கேனுமுண்டா (இல்லையென்றபடி.)

ஏ என்னும் நெட்டெழுத்து இரண்டுமாத்திரையளவாதலால் அவ்வளவாயினுந் தாமதியாதுஉடனே பெறுவரென்பதுதோன்ற, பெறாதவரோயெனினும் பொச்சத்தொடுபோயினர்தாமுளரோ என்றான்.

உடனே பெறுவரென்றதை,—

" சாத்திரம்பலபேசுஞ்சழக்கர்காள்
கோத்திரமுங்குலமுங்கொண்டென்செய்வீர்
பாத்திரஞ்சிவமென்றுபணிதிரேல்
மாத்திரைக்குளருளுமாற்பேறரே"

எனவரும் ஆளுடையஅரசுகள் திருவாக்கானுணர்க. (சுகூ)

உளையுஞ்சிறியேனிடருன்னலையோ
களைகண்பிறகண்டிலனெம்பெருமா
னிளையாதினியேனுமிரங்கிடுவாய்
முளைவான்மதிவேய்ந்தமுடிச்சடையோய்.

(இ-ள்.) எம் பெருமான்—எமதிறைவனே, உளையும் சிறியேன் இடர் உன்னலையோ—வருந்துஞ்சிறியேனது துன்பத்தைத்திருவுள்ளத்தில் கொண்டிலையோ, பிற கண் கண்டிலன்—உன்னையன்றிவேறு பற்றுக்கோடுசிறிதுங்காணேன், வான மதி வேய்ந்த சடைமுடியோய்—வானில்முளைத்த இளஞ்சந்திரனை யணிந்தசடாமுடியையுடையவனே, இனி யேனும் இளையாது இரங்கிடுவாய்—இனியேனும்பராமுகஞ்செய்யாது அடியேன்பால் இரக்கங் கூர்ந்தருள்வாய்.

முளைவான் மதிவேய்ந்தஎன்னும் விசேடணம் குறையிரப்போர் குறையினின்றும் நீக்கி அவர்க்குவேண்டியாங் கருள்வரென்னுங் கருத்தை யுட்கொண்டிருத்தலால் கருத்துடையணி தோன்ற இளையாதினியேனு மிரங்கிடுவா யெனவுங் கூறினன். மற்றத்தேவர்கள் குறையிரப்போர் துன்பத்தைத்தாமே நீக்குதற்கு வலியில ரென்பது தோன்ற உயர்திணைச்சொல்லாற் கூறாது அஃறிணைப்பன்மை யிடைச்சொல்லாற் பிறஎன

தக்கன்சாபத்தால் சந்திரன் கலையிழந்து பின்னர்ச் சிவபெருமானால் கலைநிரம்பினன் என்னும் வரலாற்றை முன்னர்க்காண்க. (ருய)

என்றின்னபழிச்சியிரந்தயர்கின்றமேருக்
குன்றன்னதவத்தவனன்பினளாயகொள்கை
துன்றுந்துதிவார்த்தைசெவித்துணையேற்றுநின்று
நன்றும்பெரிதுள்ளமகிழ்ந்தருணங்கைபாகன்.

(இ-ள்.) என்று இன்ன பழிச்சி இரந்து அயர்கின்ற மேரு குன்று அன்னதவத்தவன்—என்று இவ்வாறு துதித்துக் குறையிரந்து சோர்கின்ற மேருமலையை யொத்த தவத்தையுடைய அவ்விராமன் கூறிய, அன்பின்அளாயகொள்கைதுன்றும் துதிவார்த்தை—அன்போடுகலந்த கொள்கை நெருங்கிய துதிகளை, செவிதுணை ஏற்று நின்று—இரண்டுதிருச்செவிகளிலும் அமையக்கேட்டு, நன்றும் பெரிது உள்ளம் மகிழ்ந்தருள் நங்கைபாகன்—மிகவுந்திருவுள்ள மகிழ்ந்தருளிய பாகம் பெண்ணோடாயினஇறைவன்.

அன்போடெழுந்த துதியாதலால்அன்பினளாய துதிவார்த்தையென்றார். (ருக)

அன்னானெதிரவ்வுருமுன்னுருவாகத்தோற்றித்
தன்னேர்வடிவங்கொடிருந்திழைத்தையலோடு
மின்னார்வடிவேற்படைவிண்ணவன்வேழப்புத்தே
ளென்னுவருமைந்தரொடுந்திருக்காட்சியீந்தான்.

(இ-ள்.) அன்னான் எதிர்—அவ்விராமனுக்கெதிரே, அ உரு முன் உருஆக தோற்றி—அப்புலையுருவத்தைமுன்னுள்ள திருவுருவமாகத்தோற்றி, தன்னேர்வடிவங் கொள் திருந்திழையையலோடும்—தனக்குத்தானே யொத்த திருவுருவத்தையுடைய திருந்திய ஆபரணத்தையணிந்த வுமையம்மையோடும், மின் ஆர் வடி வேல் படை விண்ணவன் வேழம் புத்தேள் என்று வரும் மைந்தரொடும்—மின்னலை யொத்தவேலேந்தி யமுருகக்கடவுள் விநாயகக்கடவுள் எனவரும் புத்திரர்களோடும், திருக்காட்சிதந் தான்—அழகியகாட்சி தந்தருளினான்.

முன்னர்க் கொண்ட புலையுருவத்தை மாற்றியருளின ரென்பது தோன்ற அவ் வுரு முன்னுருவாகத் தோற்றித்—தன்னேர் வடிவங்கொள் எனக்கூறினார். தன்னேர் வடிவங்களென்றதை உமையம்மைக்கும் விநாயகக்கடவுளுக்கும் கூட்டிப்பொருள் கொள்க. (௫௨)

கண்டான்முனிவன்கழிகாதனடுக்கமச்சங்
கொண்டானெழுந்தான்றுனிகூருமிடுக்கண்முற்றும்
விண்டானுவகைக்கடன்மூழ்கிமருட்கைமேவித்
தண்டாதவன்பிற்பெருமானிருதாள்பணிந்தான்.

(இ-ள்.) முனிவன் கண்டான்—இராமன் தெரிசித்து, கழிகாதல் நடுக்கம் அச்சம்கொண்டான் எழுந்தான்—மிக்கவிருப்பத்தையும்நடுக்கத்தையும் அச்சத்தையுங்கொண்டெழுந்து, துனிகூரும்இடுக்கண்முற்றும் விண்டான்—துன்பமிக்கவருத்தமுற்றும் நீங்கி, உவகை கடல்மூழ்கி மருட்கைமேவி—மகிழ்ச்சியென்னுங் கடலுளழுந்தி மயக் கங்கூர்ந்து, தண்டாதஅன்பில் பெருமான் இருதாள்பணிந்தான்—நீங்காத அன்பினால் ...ம் வண...

சிவபெருமானைத் தரிசித்தமையால் கழிகாதலெனவும், முன்னர்க்கொண்டுவந்த வுருவத்தை இழிவுபட இகழ்ந்துகூறினமையால் நடுக்கமும், அதனால் யாதுதீங்குவிளையு மோவெனக்கருதலால் அச்சமுங்கொண்டானாதலால்கொண்டானெனவும், தனதுவேண் டுகோளுக்கிரங்கினமையால் துனிகூரு மிடுக்கண்முற்றும் விண்டானெனவும், துன்பமீ தூர்ந்தவழியின்பந்தோன்றுதலால் உவகைக்கடன்மூழ்கினெவும், அம்மகிழ்ச்சியால்மய ங்கினனாதலால் மருட்கை மேவினெவும், அம்மயக்கால் அன்பினிலை திரியாது நின்றன னாதலால் தண்டாதவன்பின் எனவுங்கூறினார். (௫௩)

பணிந்தான்றனையொல்லையெடுத்தணைத்துப்பனிக்கோ
டணிந்தானருள்கூர்ந்துநம்பக்கமிருத்துமன்பிற்
றுணிந்தாயுளம்வேட்டதுசொல்லுதியென்னவுள்ளம்
தணிந்தார்வமுறக்கரமஞ்சலிசார்த்திநின்று.

(இ-ள்.) பணிந்தான் தன்னை—அன்பிற்பிறழாது வணங்கிய இராமனை, பனிகோடு அணிந்தான் ஒல்லைஎடுத்து அணைத்து அருள்கூர்ந்து—இளஞ்சந்திரனை யணிந்தஇறைவன்விரைந்தெடுத்தணைத்துக்கருணைகூர்ந்து, நம்பக்கம்இருத்தும் அன்பில்துணிந்தாய்—நமதுபக்கலில் இருத்தும் அன்பிற்றுணிந்து நின்றோய், உளம் வேட்டது சொல்லுதிஎன்ன—உன்மனத்தில் விரும்பியதைச் சொல்லாயென்று திருவாய்மலர்ந்தருள, உள்ளம் தணிந்து ஆர்வம் உறகரம் அஞ்சலி சார்த்திநின்று—தனதுமனம் அடங்கி அன்பு மீதா ரக்கைகளைக்கூப்பிநின்று.

* மனம் அன்பின்வடிவாய் நின்றனனென்பது தோன்ற உள்ளந்தணிந்து என

வும், காரியத்தைக்காரணமாகவுபசரித்தமைதோன்றஆர்வமுற எனவுங்கூறினர்.

பின்றாழ்சடிலத்திறையோய்பிழையொன்றுமில்லா
வென்றாதையாகுஞ்சமதக்கினியென்னுமஞ்சும்
வென்றான்றனையேகயவேந்தனருச்சுனன்றான்
கொன்றானவனைக்குலத்தோடறக்கொன்றழித்து.

(இ-ள்.) பின் தாழ் சடிலத்து இறையோய்—பின்னேதாழ்ந்த சடிலத்தையுடையஇறைவனே, பிழைஒன்றும் இல்லாத என் தாதை ஆகும் சமதக்கினிஎன்னும் ஐஞ்சும் வென்றான் தனை–பிழைசிறிதுமில்லாத என்தாதையாகியசமதக்கினி யென்னும் ஐம்புலன்களையும் வென்றமுனிவனை, ஏகயவேந்தன் அருச்சுனன்றான் கொன்றான் — ஏகயனென்னு அரசன் மரபிற்றோன்றிய காத்த வீரியார்ச்சுனன் கொன்றான், அவனை குலத்தோடு அற கொன்று அழித்து—அக்காத்த வீரியார்ச்சுனனைச் சந்திரகுலத்தோடு

ஏகயன்புத்திரன் தருமன், தருமன்புத்திரன் தருமநேத்திரன், அவன்புத்திரன் கீர்த்தி, அவன்புத்திரன் சஞ்ஞக்கியன், அவன்புத்திரன் மயிட்டுமான், அவன்புத்திரன் துத்தமன், அவன்புத்திரன் கிருதவீரியன், அவன்புத்திரன் காத்தவீரியன், ஆதலால் ஏகயவரசன் மரபிற்றோன்றிய காத்தவீரியார்ச்சுனன் என்றும். (ருரு)

எந்தைக்கவர்தங்குருதிப்புனலங்கையேந்தி
நிந்திப்பறுதர்ப்பணமாற்றியசிந்தைநேர்ந்தே
னந்தத்திறலுன்னடியேற்கருளென்னவையன்
வந்திக்குமழுப்படைமீதுகடைக்கண்வைத்தான்.

(இ-ள்.) எந்தைக்கு—என்பிதாவுக்கு, அவர்தம் குருதிப்புனல்அங்கை ஏந்தி—அவ்வரசர்களது உதிரநீரை அழகியகையிலேந்தி, நிந்திப்பு அறுதர்ப்பணம் ஆற்றியசிந்தை நேர்ந்தேன்—இகழ்ச்சியொழிந்த பிதுர்த்தர்ப்பணத்தைச் செய்யஉடன்பட்டிருக்கின்றேன், அந்த திறல் உன் அடியேற்கு அருள் என்ன—அந்த வலிமையைஉன்னடிமையாகிய எனக்கருளாயென்றுகுறையிரக்க, ஐயன் வந்திக்கும் மழுப்படைமீது கடைக்கண் வைத்தான்—சிவபெருமான்யாவரும்வணங்கும் பரசாயுதத்தின்மேல் திருக்கடைக்கண் சாத்தினன்.

பிரமவேள்வி, தேவவேள்வி, மானுடவேள்வி, பிதுர்வேள்வி, பூதவேள்விஆகிய ஐவகையுள் பிதுர்வேள்வியின்றியமையாததாகையால் நிந்திப்பறுஎனவும், அவ்வேள்வி அவ்வவர்களுக்குத்திருப்தி செய்வதாதலால் அப்பொருள்தோன்றத் தர்ப்பணமெனவுங் கூறினன். (ருசு)

திருவுள்ளமுணர்ந்துகணிச்சிதிருந்துதன்கூற்
றொருதிண்படையாக்கவுவற்கதுநல்கியெங்கோன்
பெருவெண்கரிறாளிதடுப்பினும்பேணலாரைச்
செருவின்கண்விடாதுசெகுத்தனைவெற்றிகொள்வாய்.

(இ-ள்.) கணிச்சி திருவுள்ளம் உணர்ந்து—தான் திருக்கரத்திலேந்திய பரசாயுதம்தனது திருவுள்ளத்தைஉணர்ந்து, திருந்து தன்கூறு ஒரு திண் படை ஆக்க—திருந்திய தனது அம்சத்தினின்று ஒருதிண்ணிய ஆயுதத்தைத்தர, எங்கோன் உவற்கு அது நல்கி—எமதிறைவன் அவ்விராமனுக்குஅப்படையைத் தந்தருளி, பெருவெண்களிறாளி தடுப்பினும்—பெரிய வெள்ளையானையையுடைய இந்திரன் போர்த்துணையாய்வந்து தடு

ப்பினும், பேணலாகா செருவின்கண் விடாது செருத்தனை வெற்றி கொள்வாய்-பகைவனைப் போரில் விடாதுகொன்று நீயேவெற்றி கொள்வாய். (ருஎ)

பரசுப்படைபெற்றனையப்பெயர்பற்றிவாழ்கென்
றரவச்சடையங்கணனின்னருள்செய்யவன்னோன்
மரபிற்றொழுதிவ்விலிங்கத்துமகிழ்ந்துவாழ்வாய்
புரமட்டருள்புண்ணியவிப்புனல் யாறுமூழ்கி.

(இ-ள்.) பரசு படை பெற்றனை-என்னிடத்துப்பரசாயுதம் பெற்றாய், அப்பெயர் பற்றி வாழ்க என்று—அப்பெயரை உனக்குவாய்ந்த பெயருக்குமுன்பற்றி வாழக்கடவாயென்று, அரவம் சடை அங்கணன் இன்அருள் செய்ய—சர்ப்பத்தையணிந்த சடாபாரத்தையுடைய இறைவன்இனிய வருளைச்செய்ய, அன்னோன்மரபில் தொழுது—அப்பரசிராமன்ஆகம முறையால் வணங்கி, புரம்அட்டருள் புண்ணிய இ இலிங்கத்து மகிழ்ந்துவாழ்வாய்—திரிபுரங்களைநகைத் தருளியபுண்ணியவடிவாயுள்ள இறைவனேஇவவருட்குறியில் மகிழ்கூர்ந்து வாழ்ந்தருளாய், இ புனல் யாறு மூழ்கி—இந்த நீர்மயமாகிய பாலிநதியில் மூழ்கி,

முன்னே இயற்பெயர்இராமனுதலால் இப்போதுபரசுபெற்ற காரணத்தால் பரசிராமனென்றுபெயர்பூண்டு வாழ்கவென அருள்செய்தனன் என்பதுதோன்றப் பரசுப்படைபெற்றனையப்பெயர் பற்றிவாழ்கென் றின்னருள்செய்ய எனவும், அட்டாங்கபஞ்சாங்க முறையால்வணங்கினன் என்பதுதோன்ற அன்னோன்மரபிற்றொழுது எனவுங் கூறினர். (ருஅ)

கற்றைக்கதிர்வெள்ளொளிகான்றிருட்கட்டறுக்குங்
கொற்றச்சசிநாண்முதனாள்களிற்கொள்ளுமென்பேர்
பற்றிப்பயிலிவ்விலிங்கம்பணிந்தன்பர்க்கேன்ற
தற்றைப்பகனல்குநரெய்துகவாக்கம்வீடு.

(இ-ள்.) கற்றை கதிர் வெள் ஒளி கான்று இருள் கட்டறுக்கும் கொற்றம் சசி நாள் முதல் நாள்களில்—நெருங்கியவெள்ளிய நிலவைவீசி இருளாகியசிமிழ்ப்பை யறுக்கும் வெற்றிவாய்ந்த திங்கட்கிழமை முதலியகிழமைகளில், கொள்ளும் என் பேர் பற்றி பயில் இ இலிங்கம்பணிந்து—பூண்டஎனதுபெயரால்வாய்ந்த இச்சிவலிங்கத்தை வணங்கி, அன்பர்க்கு ஏன்றது—அடியவாக்குத் தம்மால்இயன்றதை, அற்றை பகல் நல்குநர் ஆக்கம் வீடு எய்துக—அந்நாளிற்றருவோர் இம்மையிற் செல்வத்தையும் மறுமையில் முத்தியையும் அடையக்கடவர்.

கொற்றமென்றஅடையால் அமாவாசைஅட்டமிமுதலிய புண்ணியகாலங்கூடியதிங்கட்கிழமைமுதலிய கிழமைகளென்பார்கொற்றச்சசி நாண்முதனாள்களில் என்றார்.

எனவேண்டிவணங்கிவணங்கியெழுந்தகாலை
முனிவன்றனக்கவ்வரமுற்றும்வழங்கிமூரிப்
பனிமால்வரைநல்கியபைந்தொடிமைந்தரோடு
மனலங்கைகொளண்ணல்கரந்தபினங்கணீங்கி.

(இ-ள்.) எனவேண்டி வணங்கி வணங்கி எழுந்தகாலை—என்று குறையிரந்து வணங்கிவணங்கி எழுந்தகாலத்தில், அனல்அங்கை கொள் அண்ணல்—தீயைத்திருக்கரத்தில் ஏந்திய இறைவன், முனிவன் தனக்கு அவ்வரம் முற்றும்வழங்கி—பரசிராமனுக்கு அவன்குறையிரந்த வரமுற்றுந்தந்து, மூரி பனி மால் வரை நல்கிய பைந்தொடிமைந்

தரோடும் கரந்தபின்—பெரிய இமபர்வதஅரசன்பெற்ற உமையம்மையோடும் மூத்த பிள்ளையார் இளையபிள்ளையாரோடு மறைந்தருளியபின், அங்கண்நீங்கி—அவ்விடத்து நின்று நீங்கி. (சு0)

முனிவன்முனிவன்மழுவான்மணிமோலிவாய்ந்த
சினவெம்படைவேந்தர்தமைச்செருவிற்படுத்துக்
கனலன்னசெழுங்குருதிக்கயநீரிறைத்திட்
டினமன்னுபிதிர்க்கடனாற்றிமெய்யின்பமுற்றான்.

(இ-ள்.) முனிவன் முனிவல் மழுவால்—அப்பரசிராமன்கோபத்தோடு வலிய மழுவாயுதத்தால், மணிமோலிவாய்ந்த சினம்வெம்படைவேந்தர் தம்மை செருவில் படுத்து—மகுடத்தையணிந்தகோபம் வாய்ந்தகொடியஆயுதங்களையேந்திய காத்தவீரியன் முதலிய அரசர்களைப் போரிற்கொன்று, கனல்அன்ன செழுங்குருதி கயநீர் இறைத்திட்டு—தீயையொத்த செந்நிறம்வாய்ந்த கொழுவிய இரத்தம்நிரப்பியகுளத்தில் உதிர நீரை இறைத்து, மன்னு இனம்பிதிர்க்கடன் ஆற்றி மெய் இன்பம் உற்றான்—தொன்று தொட்டுநிலைபெற்ற பிதிர்க்கடன்கள்செய்து பொய்த்தலில்லாத இன்பங் கூர்ந்தான்.

ஐந்துகுளந்தோண்டிஅக்குளங்களில் பகைவர்களுதிர நீரைநிறைத்தனனாதலால் செழுங்குருதிக்கயமெனவும், பகைவருதிரநீரால் நீர்க்கடன்செய்ய வேண்டுமெனநோற்றபடியேசெய்து முடித்தனனாதலால் மெய்யின்பமுற்றான் எனவுங்கூறினார்.

ஐந்துகுளந்தொட்டு உதிரநீர் நிரப்பினமையை—

"அன்னவன்மரபினோர்க்குமடுதழற்புலியேறன்ன
மன்னரையொருக்குபற்றிவளர்குருக்கேத்திரத்தின்
றன்னிலைகொண்டுசென்றனகுட்டமோரைந்துதொட்டு
நெய்ந்நிலைக்குருதிவேலோர்செம்புனனிரப்பினானால்"

என உபதேசகாண்டத்தில் வருதல் காண்க. (சுக)

அப்பொற்பினருட்சிவலிங்கமெய்யன்பினங்க
ணெப்பெற்றியரோனுமிறைஞ்சினிறைஞ்சுமுன்னர்க்
கைப்பட்டதோராமலகக்கனிபோலவீடுஞ்
செப்பற்கரிதாகியசெல்வமுமெய்திவாழ்வார்.

(இ-ள்.) அப்பொற்பின்—அத்தன்மையால், அருள் சிவலிங்கம்—பரசிராமன் தாபித்த அருட்குறியாகிய சிவலிங்கப்பெருமானை, மெய்அன்பின் அங்கண் எப்பெற்றியரேனும் இறைஞ்சின்—மெய்யன்போடு அவ்விடத்து எத்தன்மையராயிருப்பினும்அவர் இறைஞ்சினால், இறைஞ்சுமுன்னர்—அவர்கள் வணங்குதற்கு முன்னமே, கைபட்ட ஓர் ஆமலகம்கனிபோல—உள்ளங்கையிலேந்தியவோர் நெல்லிக்கனிபோல, வீடும்செப்பற்கு அரிதாகிய செல்வமும் எய்திவாழ்வார்—மறுமையில் முத்திநிலையையும்இம்மையில் அளவறுத்தற்கரிய செல்வத்தையு மடைந்துவாழ்வார்கள்.

உள்ளங்கையிற்பட்ட நெல்லிக்கனியின் புறத்திலுள்ளவரைகள் அகத்துங்காணப்படுதல்போல, கைப்பட்டதோ ராமலகக்கனிபோல எனவும், அதுஐயமொழித்தல் போல மறுமையில் வீடும் இம்மையிற் செல்வத்தையும் அடைந்து வாழ்தல் ஐயமின்மையால் இறைஞ்சுமுன்னர் எனவுங்கூறினார். (சுஉ)

பரசிராமீச்சரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉ௲ளகூ

கலிவிருத்தம்.

கொங்கவிழ்நறுமலர்கொன்றைவேணியன்
றங்கியபரசிராமீசஞ்சாற்றினும்
மங்கதன்றென்புடையலைநதிக்கரைப்
பொங்கர்சூழிரேணுகீச்சரத்தைப்போற்றுவாம்.

(இ-ள்.) கொங்குஅவிழ் நறுமலர் கொன்றைவேணியன்—மகரந்தத்தோடவிழ்ந்தகொன்றையினது நறுமணங்கமழும் மலர்மாலையை யணிந்த சடாமுடியையுடைய இறைவன், தங்கிய பரசிராமீச்சரம் சாற்றினும்—எழுந்தருளிய பரசிராமத்தை யெடுத்துக்கூறினும், அங்கு அதன் தென்புடை — அத்தளியின் றென்பாலில், அலைநதிகரை பொங்கர்சூழ் இரேணுகீச்சரத்தைப் போற்றுவாம்—அலையையுடைய பாலிநதியின் கரையில் சோலைசூழ்ந்த இரேணுகீச்சரத்தை யெடுத்துக்கூறுவாம். (க)

கரேணுகதிப்பரைகணவனன்பர்பா

னரேணுகவெல்பரசிராமனம்புதா
யிரேணுகையென்பவளழகினெல்லையாள்.

(இ-ள்.) கரேணுகதிபரை கணவன் அன்பர் பாதரேணு — பெண்யானைபோலும் நடையையுடைய உமையம்மையின் மணாளனாகிய இறைவனது அடியவர்பாததூளியே, கவசம் உடல்தாங்கி—கவசமாகத் தனதுடலில் தரித்து, நேர்ந்தமன்னர் ஏண் உக வெல்பரசிராமன் — எதிர்ந்த அரசரது வலிகெட வென்ற பரசிராமமுனிவன், நம்புதாய்இரேணுகை என்பவள்—விரும்பியதாயாகிய இரேணுகையென்று சொல்லப்படுவாள், அழகின் எல்லையாள்—அழகிற்கோர் எல்லையாக உள்ளவள். (உ)

விச்சைதேர்பெற்றியவருமவேந்தனூர்
மெச்சியவரத்தினிற்றோன்றுமெல்லிய
லச்சமதக்கினிமனைவியாயினள்
பொச்சமில்கற்பினிற்பொலியுமேன்மையாள்.

(இ-ள்.) விச்சைதேர் பெற்றிய வருமவேந்தனூர்—பலகல்விகளையும் தெரிந்துணர்ந்த தன்மையையுடைய அபேத்தியவருமனென்னும் அரசனது, மெச்சியவரத்தினில் தோன்றுமெல்லியல்—யாவரும் மெச்சும்வரத்தாற் பிறந்த பெண்ணானவள், அ சமதக்கினி மனைவியாயினள்—அந்தச்சமதக்கினிமுனிவன்பன்னியாயினாள், பொச்சம் இல் கற்பினில்பொலியும் மேன்மையாள்—குற்றமில்லாத கற்பால் விளங்கும்மேம்பாடுடையாள்.

அபேத்தியவருமனென்பது,, இந்திரகோபமென்பது" கோபமென முன்மொழி கெட்டுப் பின்மொழி அப்பொருளேதந்து நிற்றல்போல, அபேத்தியவென்னு முனமொழிகெட்டு வருமனென்பது அப்பொருளேதந்து நிற்றலால் நாமைகதேச நாமக்கிரகணம். அபேத்தியவருமனென்பது பகைவராற் பேதிக்கப்படாத கவசத்தையுடையோனென்னும் பொருள்மேல் நிறறலால் சாரணப்பெயர். (௩)

மனையறக்கிழமையினெழுகுமாணிழை
நனைமலர்க்குழலியோர்ஞான்றுபொய்கையிற்
கனைதிரைத்தடம்புனல்கவரப்போந்துழி
வினைவழிக்கண்டனன்காத்தவீரியன்.

(இ-ள்.) மனை அறக்கிழமையில் ஒழுகும் மாண் இழை நனை மலர்குழலி—அச் சமதக்கினியின் இல்லறக்கிழமையில் வழுவா தொழுகும் சிறந்த ஆபரணத்தை யணிந் ததேன்சிந்தும் மலரையணிந்த கூந்தலையுடைய இரேணுகை, ஓர் ஞான்று பொய்கை யில்—ஒருநாள் தடாகத்தில், கனைதிரை தடம் புனல் கவர போந்தஉழி—ஒலிக்குமலை யையுடைய நீரை முகக்கப்போனவிடத்தில், காத்தவீரியன் வினைவழிகண்டனன்—காத்தவீரிய னென்போன் தீவினையின் வழியே பார்த்தான்.

இரேணுகையின் காட்சியால் தனதுகுலம் வேரோடறப் பெருங்கலாம் பின்னர் விளைவதால் வினைவழிக்கண்டனன் என்றார். (௪)

கிருதவீரியன்புத்திரன் காத்தவீரியன் இது தத்திதாந்தபதம்.

காண்டலுங்காமவேள்கணைக்கிலக்கமா
யாண்டகையவளெதிரணுகிநின்றனன்
மாண்டதன்புறவடிநோக்குமாதரா
ளீண்டுபேரழகுடையிறையைநோக்கலள்.

(இ-ள்) காண்டலும்—அவனைக்கண்ட அப்பொழுதே, காமவேள் கணைக்கு இலக்கமாய்—மன்மதபாணத்திற்கு ஓர் அறிகுறியாய், ஆண்டகை அவள் எதிர் அணுகி நின்றனன்—ஆண்தன்மையையுடைய அக்காத்தவீரியன் அவ்விரேணுகைக்கெதிரே அடைந்து நின்றான், மாண்டதன் புறவடிநோக்கும் மாதராள்—மாட்சிமைப்பட்டதமது புறங்காலைநோக்கிநின்ற அவ்விரேணுகை, ஈண்டுபேர்அழகுஉடைய இறையை நோக்கலள்—அவள்நெருங்கியகட்டழகையுடைய அக்காத்தவீரியனைச் சிறிதும தலையெடுத்து நோக்காதுநின்றனள்.

அவளது கறபின் ஙிலைதோன்றத்தன் புறவடிநோக்குமாதராள் என்றார். (௫)

இனிச்செயலெவனெனவெணணிவேந்தர்கோன்
புனற்குமேல்விசும்பிடைப்பொலிந்துதோன்றினன்
பனித்தநீர்ப்பரப்பினப்பதகனீழலை
முனிக்குரிமரபினள்முந்திநோக்கினள்.

(இ-ள்.) வேந்தர்கோன் இனி செயல் எவன் என எண்ணி—அரசர்க்கரசனாகிய காத்தவீரியன் இனிச்செய்வது யாதென்றுகருதி, புனற்குமேல் விசும்பு இடை பொலிந்து தோன்றினன்—அவள்திரட்டுநீரிற்குமேல் ஓர்பனையளவு ஆகாயத்தில்விளங்கித் தோன்றினன், பனித்த நீர்பரப்பின் அப்பதகன் நீழலை—குளிர்ந்த நீரப்பரப்பில அப் பாதகனாகியகாத்தவீரியனிழலை, முனிக்குஉரியமரபினள் முந்திநோக்கினள் — சமதக்கினிமுனிவனில்வாழ்க்கையில் நின்ற இரேணுகை முந்திப்பார்த்தனள்.

இவள் தன்னைநோக்காமையால் அவள் முகக்கு நீர்க்குமேல் ஓர்பனையளவு விண்ணிலுயர்ந்து தோன்றினமையால் புனற்குமேல் விசும்பிடைப்பொலிந்துதோன்றினன் என்றார். (௬)

காமனுஞ்சிறிதுதன் மதுகைகாட்டினன்
பூமலர்க்கூந்தலா ளுளத்தைப்பொள்ளென
வாய்மையிற்றன்வழிப் படுத்துமான்குடத்
தாமுகந்தெடுத்து மீண்டகத்தைநண்ணினள்.

(இ-ள்) காமனும் சிறிது தன் மதுகை காட்டினன்—மன்மதனும் சிறிதுதன்னுடைய வண்மையைக்காட்டினனாக, பூமலர் கூந்தலாள் உளத்தை—மலரையணிந்து

விளங்குங்கூந்தலையுடைய இரேணுகை பிரதிபிம்பத்திற்சென்றதனது மனத்தை, பொள்ளெனவாய்மையில் தன்வழிப்படுத்து—விரைந்துதனது கற்பின்உண்மையால தன்வழிப்படுத்தி, மாண் குடத்து ஆம்முகந்து எடுத்துமீண்டு அகத்தை நண்ணினாள்—மாட்சிமைப்பட்ட குடத்தால் தண்ணீரைமுகந்தெடுத்து மீளத் தனதுவீட்டையடைந்தாள்.

நீரிற்பிரிதிபிம்பித்தபிம்பத்தை இவள்நோக்குங்கால், மன்மதனிவளுளத்தில் சிறிது காமஞ்சோன்றியதென்று உணர்ந்தனன் என்பார் காமனுஞ்சிறிதுதன்மதுகை காட்டினன் எனவும், சீச்சீஎன்னசெய்தோம் எனச், சென்ற தன்னுளத்தைத் திருப்பினள் என்பார் உளத்தைப்பொள்ளெனவாய்மையிற் றன்வழிப்படுத்து எனவும், முன்போலநீர்திரளாமையால் கையில்வந்தநீரில்அவன்பிரிதிபலித்தமையால் அந்நீரை அருவருத்துவிட்டுக் குடத்தில் முகந்தனள் என்பார்மாண் குடத்தாமுகந்தெடுத்து எனவுங் கூறினர்.

சிவபூசைமுதல் பருகுதல் ஈறும்உள்ளநீரில் ஒருவன்முகம் பிரதி பிம்பிக்குமாகில் அந்நீர்பிரேதத்தின்மேற் பட்டநீரைப்போல விலக்காதலால் அருவருத்துவிட்டென்றும். மீண்டு—செயவெனெச்சத்திரிபு (எ)

எதிருறப்போந்துழிமுனிவரேறனான்
மதிமுகமனைவிபாணித்தவாற்றினைக்
கதுமெனவறிவினிற்கருதித்தேர்ந்தனன்
முதுநெறிகோடியமூர்க்கன்செய்கையே.

(இ-ள்.) எதிர் உற போந்த உழி—முனிவனுக்கெதிரேசென்றவிடத்து, முனிவர் ஏறு அன்னான்—முனிவர்களுக்குள் ஆண்சிங்கம்போன்றசமதக்கினி முனிவன், மதிமுகம் மனைவிபாணித்த ஆற்றினை கதுமென அறிவினில் கருதி—சந்திரனையொத்தமுகத்தையுடையதனதுபன்னிநீர்க்குச்சென்றவள் தாமதித்தவகையை விரைந்துஞானதிருட்டியால் நோக்கி, முதுநெறிகோடிய மூர்க்கன் செய்கைதேர்ந்தனன்—மனுநீதியினின்றுந் தவறிய காத்தவீரியன் செய்கையைஉணர்ந்தனன், (அ)

வடவையின்வெகுண்டுதன்மகனைநோக்கினான்
படர்புகழிராமநிற்பயந்தபூங்குழல்
கடல்புரையெழினலங்காமுற்றண்மினான்
விடமெனத்தோன்றியகாத்தவீரியன்.

(இ-ள்.) வடவையின் வெகுண்டு தன்மகனை நோக்கினான்—வடவாமுகாக்கினிபோலக் கோபித்துத்தன் மகனைப்பார்த்து, படர் புகழ் இராம—பரவியபுகழையுடையஇராமனே, நின் பயந்த பூங்குழல் கடல் புரைஎழில் நலம்—உன்னைப்பெற்ற இரேணுகையின் கடலையொத்த அழகின்பொலிவை, விடம்என்னதோன்றியகாத்தவீரியன் காமுற்று அண்மினான்—விடம்போலவந்த காத்தவீரியன் விரும்பியடைந்தான். (௯)

ஆங்கவனிளமையுமரசுமாற்றலு
நீங்கருமடமையுநிறைந்தநீர்மையா
லீங்கிவட்பற்றுவனெம்மையெண்ணலா
னோங்குயர்குணத்தினேயுனைப்பக்கேட்டியால்.

(இ-ள்-) ஆங்குஅவன் இளமையும் அரசும் ஆற்றலும் நீங்கரும் மடமையும் நிறைந்த நீர்மையால்—அக்காத்தவீரியன் இள்மையும் அரசியலும் வன்மையும நீங்குதலில்

லாத அறியாமையும் ஒருசேரநிறைந்துள்ள தன்மையால்,ஈங்கு இவள்பற்றுவன்எம்மை எண்ணலான்—இவ்விடத்து இவளை வலிந்திழுப்பான் எம்மையோர்பொருளாகக் கருதான், ஓங்கு உயர் குணத்தினேய்—ஓங்கி உயர்ந்த குணத்தையுடைய பரசிராமனே, உரைப்பகேட்டி—யானென்று சொல்லக்கேளாய்.

பிதாவின் வழிநிற்றற்குரியோன்நீயொருவனேயென்பான்ஓங்குயர்குணத்தினேயென்றான். (க0)

என்னுடையாணையினிற்றியேலிவள்
சென்னியைத்தடிமதிவிரைந்துசெல்கெனத்
தன்னுடைக்குருமொழிசிரத்திற்றாங்கின
னன்னையைக்கொடுபுறத்தணுகினனரோ.

(இ-ள்.) என் உடைய ஆணையில் நிற்றியேல்—என்னுடைய ஆணையின்வழிநீ நிற்பாயானால், இவள்சென்னியைத்தடி—இவளுடைய தலையைத் துணிப்பாய்,விரைந்துசெல்கஎன்ன—நீவிரைந்து செல்லக்கடவாய்என்றனுஞைசெய்ய, தன்உடைய குருமொழி சிரத்தில்தாங்கினன்—தனக்கோர் குருவுருவமாயுள்ள பிதாவின்மொழியைத் தலையிற்றாங்கி, அன்னையைகொடு புறத்து அணுகினன்—தனது தாயைக்கொண்டு கொலைக்களத்தை யடைந்தான்.

தாங்கினன் முற்றெச்சம். மதிமுன்னிலையசையிடைச்சொல். (கக)

அல்லலேபெண்ணெனப்பிறத்தலாங்கதி
னல்லலேயிளமையிற்சிறத்தலாங்கதி
னல்லலேகட்டழகுடைமையாங்கதி
னல்லலேயிரவலர்சார்பினாகுதல்.

(இ-ள்.) பெண் எனபிறத்தல் அல்லலே—உலகில் பெண்ணாகப்பிறத்தல்பெருந்துன்பமே, ஆங்கதின் இளமையில் சிறத்தல் அல்லலே—அதினும் இளமைப்பருவதில் சிறந்திருத்தல் பெருந்துன்பமே, ஆங்கதில் கட்டழகுடைமை அல்லலே—அதினும் பேரழகுடைமை பெருந்துன்பமே, ஆங்கதின்இரவலர்சார்பின் ஆகுதல்அல்லலே—அதினும் வறியர்மனைவியாகுதல் பெருந்துன்பமே.

காமுகர்பலரும்விரும்பப்படுவதால் அல்லலே பெண்ணெனப் பிறத்தலெனவும், அப்பிறப்பில்இளமைப்பருவம்வாய்ந்தகாலையில் காமுகர்பலரும் பின்தொடரநிற்றலால் அல்லலே இளமையிற்சிறத்தல் எனவும், அப்பருவத்தில் கட்டழகுடைத்தா யிருப்பில் சோர்வுபார்த்துப்பிறராற்கவரப்படுதலால் ஆங்கதினல்லலே கட்டழகுடைமையெனவும், இளமையும் கட்டழகுமுடைமையுமுடைய ஓர்பெண்செல்வமுதலிய வலியார்க்கன்றி எளியார்க்குமனைவியாகின் அதனால்தன்கணவனுக்குமின்றித்தனக்கும்பலதுன்பம்விளைதலால் ஆங்கதின் அல்லலே யிரவலர் சார்பினாகுதல்எனவுங்கூறினர்.

இதுகவிகூற்றுத் துறை. ஆங்குஅசைநிலையிடைச்சொல். (கஉ)

அரங்குறைபடுத்தவாளங்கையேந்திநல்
லுரங்குறைபடுத்திடாவுறுவனன்னைதன்
சிரங்குறைபடுத்துமீண்டெய்தித்தேசிகன்
வரங்குறைபடுத்திடாவடிவணங்கலும்.

(இ-ள்.) அரங்குறை படுத்த வாள்அங்கைஏந்தி—அரத்தாலராவப் பட்டவாளினையழகிய கையிலேந்தி, நல் உரம் குறைபடுத்திடாத உறுவன்—மிக்கவன்மைகுறைப

டாத பரசிராமன், அன்னைதன் சிரம் குறைபடுத்து மீண்டெய்தி — தனது தாயினது சிரத்தைச்சேதித்துக் கொலைக்களத்தினின்றும் திரும்பியடைந்து, தேசிகன் வரம் குறைபடுத்திடாத அடிவணங்கலும்— தனது பிதாவினது வேண்டியவரங்குறைபடாது கொடுக்குந்திருவடியை வணங்கிநிற்க. (கங)

துன்பமுற்றருந்தவனிரங்கிச்சொல்லுவான்
வன்பெருமன்னவன்மகட்குமைந்தனீ
யென்பதுமென்னிடத்தன்புமின்றியா
னின்புடைக்கண்டனனறிவினீடியோய்.

(இ-ள்) அருந்தவன் துன்பம்உற்று இரங்கி சொல்லுவான்—செய்தற்கரியதவத்தையுடையவன் துன்பங்கூர்ந்துமனமிரங்கிக்கூறுவான், நீவன்பெருமன்னவன்மகட்குமைந்தன் என்பதும் — நீவன்மையின் பெருமைவாய்ந்தஅபேத்தியவருமனதுபுத்திரிக்குப் பிள்ளையென்பதையும், என்னிடத்து அன்பும் — என்னிடத்திற் கொண்டவன்பையும், அறிவின் நீடியோய்—அறிவில்மிக்க பரசிராமனே, இன்றுயான் நின்புடைக் கண்டனன்—இப்பொழுது நான் உன்னிடத்துக் கண்கூடாகப் பார்த்தேன்,

சத்திரியன்மரபிற் றோன்றினவள் உன் தாயாதலால் நீ கொலைக்குச் சிறிதும் அஞ்சாமையும், முனிவர்மரபிற்றோன்றினமையால்பிதாவின் சொற்பிறழாமையும்ஆகிய இருவகைக்குணத்தையும் உன்னிடத்தில் கண்டேன்என்பான்இன்றியானின்புடைக்கண்டனன்என்றான். (கச)

என்னுரைநிறுவினையேனுந்தாய்கொலை
நன்மையன்றுலகமும்பழிநவிற்றுமென்
றன்னுரைப்படியவணேகித்தாழ்குழல்
சென்னியைப்பொருந்துறச்சேர்த்தெழுப்பியே.

(இ-ள்.) என் உரைநிறுவினை ஏனும்—என்னுடைய சொல்லை உலகில் நிலைபெறச் செய்தாயாயினும், தாய்கொலை நன்மைஅன்று—தாயைக்கொலைசெய்தல் நல்லசெய்கையன்று, உலகமும்பழி நவிற்றும்—உலகமும்பழிகூறும், என்தன்உரைப்படி அவண்ஏகி—என்னுடைய சொற்படிஅக்கொலைக்களத்திற் சென்று, தாழ்குழல் சென்னியை பொருந்துற சேர்த்து எழுப்பி—இரேணுகையின் துணிக்கப்பட்டதலையைக்கழுத்தொடு பொருந்தச்சேர்த்து எழுப்பி, (கரு)

பொன்னடிவணங்கியஞ்சலித்துப்போற்றியெ
னன்னைநின்கருத்தினுக்கடுத்தவாறுசெல்

தன்னுடைத்திருமகற்கியம்பித்தாபதன்.

(இ-ள்) பொன் அடி வணங்கி அஞ்சலித்து போற்றி—பொன்னிறம்வாய்ந்த அவள்பாதத்தை வணங்கிக் கைகூப்பித்துதித்து, என் அன்னை நின்கருத்தினுக்கு அடுத்தஆறு செல்கஎன்ன அங்குஅகற்றி—என் அன்னையே உன்கருத்துக்குஇயன்றபடிசெல்லுமிடத்திற் செல்லக்கடவாயென்றுஅவ்விடத்து விடுத்து, ஈண்டெய்துவாய் என்ன— இவ்விடத்துவரக்கடவாய் என்று, தாபதன் தன்உடைய திருமகற்கு இயம்பி—சமதக்கினி தன்னுடைய புத்திரனுக்குக்கூறி, (கசு)

வெகுளியேயுயிர்களெலாம்விளைக்குந்தீவினை
வெகுளியேகுணந்தவம்விரதமாய்கருமால்

வெகுளியேயறிவினைச்சிதைக்கும்வெம்மைசால்
வெகுளியிற்கொடும்பகைவேறொன்றில்லையால்.

(இ-ள்) வெகுளியே உயிர்க்குஎல்லாம்தீவினை விளைக்கும்—கோபமே உயிர்களுக்கெல்லாம் தீங்கினைவிளைக்கும், வெகுளியே குணம் தவம் விரதம் மாய்க்கும்—அக்கோபமே குணத்தையும் தவத்தையும் விரதத்தையும் கெடுக்கும், வெகுளியே அறிவினைசிதைக்கும் — கோபமேமெய்யறிவினையழிக்குமாதலால், வெம்மை சால் வெகுளியில் கொடும்பகை வேறுஒன்றுஇல்லை—தீமையமைந்த கோபத்திலும் கொடிய பகை ஒருவனுக்கு வேறொன்றில்லை.

தம்மின்வலியார், ஒப்பார், எளியார், என்னுமிவரிடத்திற்சினத்தைத்தவமுடையோர்கொள்ளில் அவ்வலியாரால்தான் வாதிக்கப்படுதலும், ஒப்பாரிடத்துக்கொளளின தான் செய்வன அவர்செய்தலும், தம்மின்மெலியாரிடத்தில் கோபங்கொள்ளில் இம்மையிற் பழியும்மறுமையிற்பாவமும் விளைதலால்வெகுளியேயுயிர்க்கெலாம் விளைக்குந் தீவினைஎனவும், துறந்தார்க்கு என்றுமுகத்திலுள்ளனவாகிய புன்னகையும் உயிர்களிடத்தி லுண்டாகிய மகிழ்ச்சியும்ஆகியஅருட்குணத்தையும், யாவுந்தருதற்கேதுவாகிய தவத்தையும் விரதத்தையும்அழித்துப்பிறவித்துன்பத்தைஅத்தவமுடையார்க்கு விளைக்குமாதலால் வெகுளியே குணந்தவம் விரதமாய்க்கும் எனவும்,தவஞானங்களிற் பெரியராய்த் தம்மையடுத்தோர்க்கு உறுதிமொழிஇளக்குமவரனுபூதியையுமகோபங்கெடுக்கு மாதலால் வெகுளியேயறிவினைச்சிதைக்கும் எனவும், இவற்றைஎல்லாம் அக்கோபமேதருதலால் வெம்மைசால் வெகுளியிற் கொடும்பகை வேறொன்றில்லையால் எனவும் கூறினர். (௧௪)

என்றிவைதன்மனத்தெண்ணிவெஞ்சின
மொன்றறத்துறந்தினிதுறையுங்காலையப்
புன்றொழில்வேந்தனஃதுணர்ந்துபொள்ளென
வென்றிமாதவன்சிரந்துணித்துமீண்டனன்.

(இ-ள்.) என்று இவைதன்மனத்து எண்ணி—என்றுசொல்லப்பட்டஇவற்றைத் தம்மனத்திற்கருதி, வெம்சினம் ஒன்றுஅறதுறந்து இனிது உறையும காலை—கொடிய கோபத்தைவேரறவிட்டுத் தானினிதாகத்தவத்திலிருக்குங்காலையில், அப்புனதொழில் வேந்தன் அஃதுஉணர்ந்து-அந்தப்புல்லியதொழிலையுடைய கார்த்தவீரியன் அதனையுணர்ந்து, பொள்ளென வென்றி மாதவன் சிரம்துணித்து மீண்டனன்—விரைந்துவெற்றி வாய்ந்தஅம்முனிவனுடைய தலையைச்சேதித்துத் திரும்பினான்.

கார்த்தவீரியன் தனக்கொருதீங்கினை முனிவன் கருதாதிருக்கவும், அவன்தலையைச் சேதித்தற்குக்காரணம்யாதென்னில், மீளவும்அம்முனிவன் தவமேற் சென்றமையின் எங்கேநம்மைக் கொல்வதற்குத்தவமேற்சென்றானோ எனத்தன்னறியாமையினாற் கருதினானதலில் சிரந்துணித்து மீண்டனன்என்றார். அஃதென்றது தவநிலையை.

மதலையினுயிர்பெற்றகன்றமாணிழை
யிதமுறுகணவனையிழந்ததுன்பினா
னுதலருமகன்வரப்பேறுநோக்கியப்
புதல்வனதிசைவுபெற்றாங்குப்போயினாள்.

(இ-ள்.) மதலையின் ஆவிபெற்று அகன்ற மாண் இழை—தனதுபுத்திரனாலுயிர் பெற்றுஇறப்புநீங்கிய அவ்விரேணுகை—இதம்உறுகணவனைஇழந்ததுன்பினால்—இன்ப

மிக்க தனது கொழுனனாகிய முனிவனை இழந்த துன்பமிகுதியால், நுதலரும் மகன் வரம்பெறுநோக்கி—சொல்லுதற்கரிய புகழ்வாய்ந்த தனதுபுத்திரனாகியபரசிராமன்காஞ்சித்திருப்பதியிற் பெற்றவரத்தின் பயனைப்பார்த்து, அப்புதல்வனது இசைவுபெற்று ஆங்குபோயினள்—அப்புத்திரனதுடன்பாடு பெற்று அத்திருப்பதிக்குச் சென்றாள். ()

இளங்களிவண்டினமிமிரும்பூம்பொழில்
வளங்கமழ்காஞ்சியைமருவிமைந்தனு
ருளங்கொளவழிபடுகரினூங்குற
விளங்கொளிச்சிவக்குறிவிதியிற்றாபித்தாள்.

(இ-ள்.) இளங்களிவண்டுஇனம் இமிரும் பூம்பொழில்வளம் கமழ் காஞ்சியை மருவி—இளமைவாய்ந்த மது மயக்கையுடைய வண்டின் கூட்டங்கள் ஒலிக்கும்மலரையுடைய சோலையிலுள்ள வாசவளங்கமழும் காஞ்சித்திருப்பதியையடைந்து—மைந்தனுர்உளம்கொள வழிபடுகரின்—தனதுபுத்திரன் மனமொருப்பட வழிப்பட்டுப் பூசித்ததிருத்தளியின் பக்கலில், ஊங்குஉற விளங்கு ஒளிசிவக்குறி விதியில் தாபித்தாள்—மிகவும்விளங்கு மொளியையுடைய சிவலிங்கப்பெருமானை ஆகமவிதியாற்றாபித்து,(உ0)

தாபித்தாள்—முற்றெச்சம்,

மகவிடத்திருத்து பேரன்பின்மாட்சிமை
தகவுறப்பூசனை தவாதுபல்பக
லகமுறப்புரிவுழி யருளியாங்கெதிர்
நகமடைப்பிடி யொடுநம்பன் றோன்றினன்.

(இ-ள்.) மகவுஇடத்து இருத்துபேர்அன்பின்—தாய்பிள்ளையிடத்து இருத்தும் பெரியவன்பு போல, மாட்சிமைதகவுஉற பூசனை—அன்பின்பெருமை மிகவும் பொருந்தச் சிவபூசனையை, தவாது பல்பகல் அகம்உறபுரிவுழி—நீங்காது பலநாளும்மனமொருப்படச்செய்யுமிடத்து, அருளி-அவளுக்குஅருள்கூர்ந்து, ஆங்கு எதிர்நகமடப்பிடியொடு நம்பன் தோன்றினன்—அவ்விடத்து அவளுக்கெதிரே இமபருவதத்திற்றோன்றிய உமையம்மையோடு இறைவன்காட்சிதந்து அருளினன், (உ௧)

நுண்ணிடையிரேணுகை மடந்தைநோக்கினு
ளுண்ணிகழ்காதலி னுருகிக்கைதொழூஉ
வண்ணமென்குயிலினஞ் சமழ்ப்பவாய்திறந்
தண்ணலைப்பழிச்சிநின் றறைதன்மேயினள்.

(இ-ள்.) நுண்இடை இரேணுகைமடந்தைநோக்கினள்—நுண்ணியஇடையையுடைய இரேணுகையென்பவள் தரிசித்து, உள்நிகழ் காதலின் உருகிகைதொழூஉ—உள்ளத்தில்நிகழும் அன்பால்அவளுள்ளமுருகிக்கை கூப்பி, வண்ணம் மென்குயில் இனம் சமழ்ப்ப—நிறம்வாய்ந்த மெல்லியகுயிலின்கூட்டம்நாணங்கூர, வாய்திறந்து அண்ணலைபழிச்சிநின்று அறைதல்மேயினள்—வாய்திறந்து இறைவனைத்துதித்துநின்று தன்குறைகூறத்தொடங்கினள். (உஉ)

ஏதமிலுயிர்த்தொகை யெவற்றினுக்குநீ
தாதைதாயிமவனாத் தையலாகுமாற்
கோதறுமிருமுது குரவர்மாட்டெவர்
மேதகுமானம்விட் டியம்பிடாதவர்.

(இ-ள்.) ஏதம் இல் உயிர்த்தொகை எவற்றினுக்கும் நீ தாதை—குற்றமில்லா தசீவராசிகளெவைகளுக்கும் நீபிதா, தாய்—அவற்றிற்குத்தாயாயுள்ளவள், இமவரை தையல் ஆகும்—உமையம்மையாவாள், கோதுஅறும் இருமுதுகுரவர் மாடு—குற்ற மில்லாததமது தாய்தந்தையரிடத்து, மேதகுமானம் விட்டு இயம்பிடாதவர்எவர்—மேன்மைவாய்ந்த தமதுமானத்தை விட்டுக் குறைகூறாதவர்யாருளர். (இலொன்றபடி)

மானம் தமதுகுறைகூறுதற்கு நாணுதல். (உ௩)

அடியனேன்பலதிறத்தினும்பரிபவமடைந்தேன்
பொடிகொள்மேனியாயிங்குனைப்பூசனைபுரியும்
படியிலாப்பெருவாழ்வுபெற்றெய்தினேன்படியோர்
கடிதராதருள்வைத்தெனைக்காப்பதுன்கடனால்.

(இ-ள்.) அடியனேன்பலதிறத்தினும் பரிபவம்அடைந்தேன்—அடியேன்பலவ கையினும் துன்பமுற்றேன், பொடிகொள்மேனியாய் இங்கு உன்னை பூசனைபுரியும் படிஇல்லாத பெருவாழ்வு பெற்று எய்தினேன்—விபூதிசண்ணித்த திருமேனியையு டையாய் இங்குஉன்னைப் பூசிக்குமளவில்லாத பெருஞ்செல்வத்தைப் பெற்றேன், படி யோர் கடிதராது அருள்வைத்து என்னைகாப்பது உன்கடன்—உலகிலுள்ளோர் என் னைஇகழ்ந்து நீக்காது கருணைவைத்து என்னைக் காத்தலுன்கடனாம்.

நான்கருதாதிருக்கவும் என்னைக்காத்தவீரியன் கருதி என்னைவஞ்சித்ததுவும், அதனால் என்கற்புநிலை திரிந்து நீர்திரளாமையும், அதனை எனது கணவனுணர்ந்துஎன் னையவமதித்தமையும், அதனால் நிகழ்ந்தசெய்தியையும், பலவாதலால் பலதிறத்தினும் பரிபவமடைந்தேன் எனவும், அப்பழிநீங்கத் தேவரீரைப்பூசிக்கப்பேறுபெற்றமையில் என்னைக்கற்பினிலைதிரிதலால் ஒதுக்கப்பட்டவளென்று உலகிலுள்ளோரிகழாவண்ண மருள்வையென்னக்குறையிருந்தமையால் கடிதராதருள்வைத்து எனவுங்கூறினாள். ()

புகழுமாக்கமுமுத்தியுமுயிர்க்கருள்புராண
னிகழுமின்னலுந்தவிர்ப்பவனிருண்மலக்கிழங்கை
யகழுநாயகன்யாங்கணுநிறைந்தவனடியார்
திகழுமன்பினுக்கெளியவன்சிவபிரானென்றும்.

(இ-ள்.) புகழும் ஆக்கமும் முத்தியும்—இம்மையிற்புகழையும் போகத்தையும் மறுமையில் முத்தியையும், உயிர்க்கு அருள்புராணன்—ஆன்மாக்களுக்கு அருள்செய்யும் புராணனும், இகழும் இன்னலும் தவிர்ப்பவன்—பெரியோரா லிகழப்படும் பிறவித்துன் பங்களை ஓட்டுகின்றவனும், இருள்மலக்கிழங்கை அகழும்நாயகன்—பிறவிக்குவித்தாகி யகிழங்கினை வேரோடுகல்லி யெறியுந்தலைவனும், யாங்கணும் நிறைந்தவன்—எவ்விட த்தும் நிறைந்துள்ளவனும், அடியார்திகழும் அன்பினுக்கு எளியவன்—அடியவரதுமு றுகிய அன்பினுக்கு எளியவனும், என்றும்சிவபிரான்—எக்காலத்துஞ்சிவபெருமானே (அன்றிவேறில்லை.) (உ௫)

கொழுநன்யாரினுமினியவனென்றுகூறுவரக்
கொழுநனிவ்வுடற்குரியவன்குறிக்கிலாருயிர்க்குக்
கொழுநன்றந்தைதாய்செல்வமுமேனவுங்கொன்றைக்
கொழுநனேத்தொடைக்குளிர்சடைச்சிவபிரானென்றும்.

(இ-ள்.) கொழுநன்யாரினும் இனியவனென்று கூறுவர்—நாயகனே மக்கள் முதலிய எல்லாரிலும் மனத்துக்கினியவனென்று சான்றோர்கூறுவார், குறிக்கில் அ கொழுநன் இவ்வுடம்பிற்கு உரியவன்—ஆராயில் அந்நாயகன் இவவுடலுக்கேயின்பஞ் செய்தற்குரியவன், ஆர் உயிர்க்கு கொழுநன் தந்தை தாய் செல்வமும்ஏனவும்—அரிய வுயிர்களுக்குக் கணவனும் பிதாவும் தாயும் பொருளும் மற்றுள்ளனவும், கொன்றை கொழுநனைதொடைகுளிர்சடைசிவபிரான் என்றும்—கொன்றையினதுகொழுவிய அரும்பாற்றொடுத்த மாலையையணிந்தகுளிர்ந்தசடையை யுடையசிவபெருமானேஎன்றுமாம்.

இவ்விரண்டு செய்யுளிடத்திலும் ஏனைத்தேவர்களினின்றும் சிவபெருமானைப் பிரித்தமையால் அதனிறுதியில் பிரிநிலை ஏகாரந்தொக்கது, ஆன்மாக்களுக்கு இன்பம் செய்யும் இறைவன் ஆகலின். (உசு)

இனையவாயினபெருமகளெடுத்தெடுத்தெனக்கு
வினையினீங்குமென்கணவனுடொறும்விரித்துரைக்கு
மனையநிற்றொழுதுய்ந்துளாரளவிலாரடியேன்
றனையனுக்குமீண்டரும்பெறற்பேறுதந்தளித்தாய்.

(இ-ள்.) இனைய ஆயின—இத்தன்மையவாகிய செய்கைகளை, பெருமகள்—பெருமைவாய்ந்த ரேணுகையே கேளாயென்று, எடுத்து எடுத்து எனக்கு வினையில் நீங்கும் என் கணவன் நாள்தொறும் விரித்து உரைக்கும்—விதந்து விதந்து எனக்கு இருவினையினின்றுநீங்கிய எனது கணவன் நாள்தோறும் நின துவரலாற்றைவிரித்துக்கூறுவான், அனைய நின் தொழுதுஉய்ந்துளார்அளவிலார்—அத்தன்மையையுடைய உன் னைவணங்கிச் சீவித்தவர்கள்அளவில்லாதவர்கள், அடியேன்தனையனுக்கும் ஈண்டுஅரும் பெறல்பேறு தந்துஅளித்தாய—அடியேன் பெற்ற புத்திரனாகிய பரசிராமனுக்கும் இவ் விடத்தும் பெறுதற்கரிய பயனைத்தந்தருளினாய். (உஎ)

ஐயனேயடியேனையுங்காத்தருள்சலத்
தையலேசகமுழுவதுமளித்திடுந்தாயே
யுய்யுமாறெனைக்காத்தருளுமைச்சரணடைந்தேன்
பொய்யர்சிந்தையினகப்படீர்போற்றியென்றிரந்தாள்.

(இ-ள்.) ஐயனே அடியேனையும் காத்தருள்—ஐயனே நீ இத்தன்மையனாதலால் அடியேனையுங் காத்தருளாய், அசலம் தையலே சகம்முழுவதும் அளித்திடும் தாயே—இமமலையிற்றோன்றியஉமையம்மையே உலகமுற்றுந்தந்தருளிய தாயே, உய்யும ஆறு என்னைகாத்தருள்—அடியேன் உய்யும்வண்ணம் என்னைக்காத்தருளாய், பொய்யர் சிந்தையில் அகப்படீர் உம்மைசரண் அடைந்தேன் போற்றி என்ன இரந்தாள்—பொய்யொழுக்கினின்றோர் மனத்திலகப்படாத தன்மையையுடையீர் உங்களைச் சரணாகவடைந்தேன் வந்தனம்என்று குறையிரந்தாள்.

பொய்யமொன்றது கடவுளில்லையெனக்கூறும் நாத்திகரை. (உஅ)

அம்மையப்பராயகிலமும்புரந்தருள்கருணைச்
செம்மலார்நகைமுகிழ்த்தெழத்திருவுளமகிழ்ந்தே
யெம்மைவேட்டவைவிளம்புதியிமயமீன்றளித்த
கொம்மைமென்முலையுனக்கவைதருமெனக்கூற.

(இ-ள்) அம்மை அப்பர்ஆய் அகிலமும் புரந்தருள் கருணை செம்மலார்—தாயுந்தந்தையுந்தாமேயாகியாவுங்காத்தருளுங்கருணாநிதியாகியஇறைவர், நகைமுகிழ்த்து எழ—திருவுள்ளங்களிகூர்ந்து, எம்மை வேட்டவை விளம்புதி — எங்களைவிரும்பிக் குறையிரந்தனவற்றைக் கூறாய், இமயம் ஈன்றுஅளித்த கொம்மைமெல்முலை உனக்கு அவைதரும் என்கூற—இமமலைபெற்றதிரண்டமெல்லியதனத்தையுடையஉமையம்மை உனக்கு அவற்றைத்தந்தருள்வாயென்றருள,

பராசத்தியினிடமாகவிருந்து ஆன்மாக்களுக்கு அருளுதலால் அம்மையப்பராயகிலமும்புரந்தருள்கருணைச்செம்மலார் இமயமீன்றளித்தகொம்மைமென்முலையுனக்கவைதரும் என்றார். (உ௯)

அன்பினேத்திநின்றிரேணுகையணியிழைவேண்டு
மென்பணிக்கினியாய்நணிவிழுத்தகவெய்தித்
துன்பமெண்ணிலபட்டயான்றூயநின்னருளான்
மன்பதைக்கெலாம்வழிபடுதெய்வமாய்வயங்கி.

(இ-ள்.) இரேணுகை அணி இழைஅன்பின் ஏத்திநின்றுவேண்டும்—இரேணுகையென்பவள் அன்பின்வழி நின்று துதித்துக் குறையிரப்பாள், என்பணிக்குஇனியாய்—எனதுகுற்றேவலுக் கருள்செய்வோய், எண்ணில துன்பம்பட்டயான்—அளவிகந்ததுன்பத்துட்பட்டயான், தூயநின் அருளால் நணிவிழுத்தகவுஎய்தி—களங்கமில்லாத உனது திருவருளால் மிகவும்மேன்மையை யடைந்து, மன்பதைக்கு எல்லாம்வழிபடுதெய்வம் ஆய்வயங்கி—மக்கட்பரப்புக்கெல்லாம் யான்வழிபடுந் தெய்வமாய் விளங்கி. (௩0)

போகமவ்வவர்வேண்டியபுணர்ப்பெலாங்கண்கூ
டாகநல்குபேறெனக்கருளிவ்விலிங்கத்தி
னேகநாயகவினிதமர்ந்திருமையுமெவர்க்கு
நீகனிந்தருள்புரிமதியெனநிகழ்த்துதலும்.

(இ-ள்.) ஏகநாயக—ஒப்பில்லாத விறைவனே, அவ்வவர் வேண்டிய போகம் புணர்ப்பு எல்லாம் கண்கூடாக நல்கு பேறு எனக்குஅருள்—அவரவர்வேண்டும் போகமுஞ் சித்தியுமாகிய யாவும்பிரத்தியக்ஷமாக அவ்வவர்களுக்கு அருளும்பேறுஎனக்கு அருளாய், இனிது இ இலிங்கத்து அமர்ந்து—இவ்விலிங்கத்தினிடமாக நீஇனிதாகஎழுந்தருளியிருந்து, எவர்க்கும்இருமையும் நீ கனிந்து அருள்புரிஎனநிகழ்த்துதலும்—யாவர்க்கும் இம்மையில்போகத்தையும்மறுமையில்முத்தியையும்நீமகிழ்கூர்ந்தருளாய் என்றுகூறிக்குறையிரக்க. (௩க)

அண்ணலாருமைகூற்றினாலவட்கவையுதவி
மண்ணின்மேற்கலியுகத்துறுமானிடர்கருது
மெண்ணமெண்ணியாங்கியாவையுமிழிகுலத்துள்ளார்
நண்ணிவேட்டனசாலமிக்களிப்பவுநல்கி.

(இ-ள்.) அண்ணலார்—சிவபெருமானார், உமைகூற்றினால் அவட்கு அவைஉதவி—உமையம்மை திறத்தினால் அவ்விரேணுகைக்குஅவ்வரங்களைத்தந்து, மண்ணின்மேல்கலியுகத்து உறு மானிடர்கருதும்எண்ணம் எண்ணியாங்குயாவையும்—நிலவுலகில்கலியுகத்தில்மிக்கமானிடப் பிறப்புவாய்ந்தோர்கருதிய வெண்ணங்களை எண்ணியபடிமுற்றுந்தரவும், இழிகுலத்துஉள்ளார் நண்ணிவேட்டனமிக்கு அளிப்பவும்-இழிகுலத்தோரடைந்து விரும்பிக்குறையிரந்தனவற்றை அவர்க்குமிகவுங் கொடுக்கவும், நல்கி—வரந்தந்தருளி.

உலகில் உள்ளமக்கள் எக்கடவுளரையாயினும்வழிபட்டுஅக்கடவுளரால் ஒன்றுபெறுதல், சிவபெருமான்அவர்கள் முன்னிலையாகநின்று அருளுதலேயாதலால் அண்ணலாருமை கூற்றினலவை யவட்கருளி யென்றார்.

எக்கடவுளரைவணங்கினும் அவவழிபாட்டுக் கிரங்கிச்சிவபெருமானேவந்தருளுவனென்றதை,—

"இங்குநாஞ்சிலர்க்குப்பூசையியற்றினலிவர்களேயவர்
தங்குவான்றருவரன்றேலத்தெய்வமத்தனைக்கா
ணெங்கும்வாழ்தெய்வமெல்லாமிறைவனுணையினிற்ப
தங்குநாஞ்செய்யுஞ்செய்திக்காணைவைப்பாலளிப்பான்"

எனவருஞ் சித்தியாராலுணர்க. (கஉ)

கொம்பனாள்பெறத்தெய்வதத்திருவுருக்கொடுத்துக்
கம்பனார்மலைமகளொடுங்கரந்தருள்செய்தார்
வமபுவார்குழலிரேணுகைமடந்தையப்பொழுதே
யம்புவிக்கொருதெய்வதமாயினளம்மா.

(இ-ள்.) கொம்பனாள்பெற—பூங்கொம்பையொத்த இரேணுகைபெற, தெய்வதத்திருவுருகொடுத்து—அழகியதெய்வ வுருவங்கொடுத்து, கம்பனார்மலைமகளொடும்கரந்தருள்செய்தார்—இறைவன் உமையம்மையொடுமே மறைந்தருளினர், வம்புவார்குழல் இரேணுகைமடந்தை—வாசமிக்கநீண்ட கூந்தலையுடைய ரேணுகையென்பவள், அப்பொழுதே அம்புவிக்கு ஒருதெய்வதம் ஆயினள்—அன்றே மானிடவுருவொழிந்து நிலவுலகிற்கோர் தெய்வவடிவானாள். (கங)

## கலிவிருத்தம்.

காதராவணியினள்பலகைவாட்கையினள்
போதராசன்முதற்பலகணமபுடையுற
வேதராசிகள்பயில்விரிபொழிற்காஞ்சியின்
மாதராளாயிடைத்தெய்வமாய்வைகினள்.

(இ-ள்.) காதுஅரா அணியினள்—(இரேணுகைதெய்வவடிவாகியகாலத்துக்) காதில் சர்ப்பகுண்டலத்தையுடையவளும், பலகைவாள்கையினள்—கேடகத்தையும்வாளையுமேந்தியகையையுடையவளுமாய்,போதராசன்முதல்பலகணம்புடையுற—போதராசன் முதலியசிறுதெய்வகணங்கள் புடைசூழ, வேதராசிகள் பயில்விரிபொழில்காஞ்சியில்—இருக்குமுதலிய வேதங்கள் இடைவிடாது பயிலும்மலர்விரிந்த சோலைசூழ்ந்த காஞ்சித்திருப்பதியில், மாதராள் ஆயிடைதெய்வம்ஆய் வைகினள்—அவவிரேணுகை அவவிடத்துத்தெய்வமாக வசித்தனள்.

அந்தணர்கள் வேதமோதுதலாலும், வேள்விகள் தொடங்குதலாலும்என்றும்நிலைபேறுடைமையல் வேதராசிகள் பயில்என்றார். (கச)

எண்ணியாங்குதவிசெய்திரேணுகையீச்சரத்
தண்ணலார்பெருமையாரளவிடற்பாலரோ
கண்ணுமிக்காதையைக்கற்றுரைப்போரையவ்
வொண்ணுதற்றெய்வதமூறுசெய்யாதரோ.

(இ-ள்.) எண்ணியதுஆங்கு உதவிசெய்து இரேணுகை ஈச்சரத்து அண்ணலார் பெருமை யார் அளவிடற்பாலர்—அடியாரெண்ணிய வெண்ணங்கொடுத்தருளும்ரே

னுகேச்சரத்திலெழுந்தருளிய இறைவர்பெருமையையளாயறுத்துக் கூறும்பகுதியுடையோர்யார், கண்ணும் இக்காதையைகற்றுஉணப்போரை—கருதும் இவவரலாற்றைக்கற்றுப்படனஞ்செய்பவர்களே, அஒண்ணுதல் தெய்வதம் ஊறுசெய்யாது—அவ்வொள்ளியநெற்றியையுடைய தெய்வமானது சிறிதுமிடையூறுசெய்யாள்.

தன்புகழையோதுவோர்க்கு வேறுசிறுதெய்வங்களால்வரும் இடையூற்றையொழித்து நன்மைசெய்வாளென்பார் கற்றுரைப்போரை யவ்வொண்ணுதற்றெய்வமூறுசெய்யாதென்றார். தெய்வதம்பொருளால் உயர்திணையேனும் சொல்லால் அஃறிணையாதலால் செய்யாதுஎன அஃறிணைமுடிபுதந்தார். (௬௫)

இரேணுகீச்சரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௬0௮.

## யோகாசாரியர்தளிப் படலம்.

### ஒருபோது கோச்சகம்.

உரவுநீர்ச்சடைமுடிப்பகவனாருமையொடும்
விரவிவாழிரேணுகையீச்சரம்விளம்பினும்
பரசிராமீச்சரத்தெனுதுபாலியோகமாக்
குரவர்சூழ்பஃறளித்திறனினிக்கூறுவாம்.

(இ-ள்) உரவு நீர் சடைமுடி பகவனார்—கங்கையையணிந்தசடாமகுடத்தையுடைய விறைவர். உமையொடும் விரவிவாழ் இரேணுகையீச்சரம் விளம்பினும்—உமையம்மையோடுங் கலந்துவாழும் இரேணுகீச்சரத்தை முன்னரெடுத்துக்கூறினும், பரசிராமீச்சரம்தெனுதுபால்—பரசிராமீச்சரத்தின் தென்பாலில், யோகமாக்குரவர் சூழ் பல்தளித்திறன் இனிகூறுவாம்—யோகாசாரியர்கள்பூசித்த பலதளிகளின்வரலாற்றை இனிஎடுத்துக் கூறுவாம்.

உமையம்மையை இடப்பாகத்திலுடைமையால் உமையொடும் விரவிவாழ் என்றார். (௧)

சுவேதனேசுவேதகேதுக்கருத்தொடர்பிலாச்
சுவேதசிகன்சுவேதாச்சுவன்றூயசீர்க்
சுவேதலோகிதனெடுஞ்சுதாரனேசாதனஞ்
சுவேதநீற்றணியொளிர்துந்துமிமுதலியோர்.

(இ-ள்.) சுவேதன் சுவேதகேது கருதொடர்பு இல்லாத சுவேதசிகன் சுவேதாச்சுவன்—சுவேதனும் சுவேத கேதுவும் பிறவிப்பற்றுச் சிறிதுமில்லாத சுவேத சிகனும் சுவேதாச்சுவனும், தூயசீர் சுவேதலோகிதன் நெடுஞ் சுதாரன்—களங்கமில்லாத புகழ்வாய்ந்த சுவேதலோகிதனும் மேம்பட்டசுதாரனும், சாதனம் சுவேதநீற்றணி ஒளிர் துந்துமி முதலியோர்—சாதனமாகக்கொண்ட வெள்ளியதிருநீற்றின் பொலிவால் விளங்கும்துந்துமி முதலானவர் முதலாக.

ஏகாரமும் ஓடுவும் எண்ணிடைச் சொற்கள். (௨)

ஏயுமெய்த்தவமறுவிலகுளீசன்முடி
வாயினோர்மற்றுமெண்ணில்லவரகிலமும்
பாயசீர்யோகமாக்குரவர்கள்படைமழுத்
தூயவன்கூற்றினிற்றோன்றியோரிவர்கடாம்.

(இ-ள்.) ஏயும் மெய்தவம் அறாத இலகுளீசன் முடிவாயினோர்—பொருந்த உண்மைத்தவத்தினின்று நீங்காத இலகுளீசன் இறுதியாயுள்ளவரும், மற்றும் எண்ணில்லவர்—இவரொழிந்த அளவில்லாதவர்களுமாயுள்ளவிவர்கள், அகிலமும்பாயசீர்யோகமாக்குரவர்கள்—எங்கும்பரந்த புகழ்வாய்ந்த யோகாசாரியர்கள், இவர்கள்தாம்மழுப்படை தூயவன் கூற்றினில் தோன்றியோர்—இவர்கள் பரசாயுதத்தையேந்திய உருத்திரமூர்த்தியின் அம்சத்தினின்றுந் தோன்றினவர்கள்.

துந்துமிமுதலாக இலகுளீசன் ஈறாகஇடையிலுள்ளோர்பலராதலால் துந்துமி முதலியோர் என்றதற்குத் துந்துமிமுதலானவர் முதலாகஎனப் பொருளுரைத்தாம். இவர்கள் வேள்வித்துறைகளிலுள்ளமகருஷிகள்எனவேதங்களெடுத்துக் கூறப்படுதலால் அகிலமும்பாயசீர் எனவிசேடந்தந்து கூறினார். (௩)

யோகமாக்குரவர்தம்முயர்பதத்தெய்தவு
மோகவல்வினையுறாமுத்தியின்வைகவும்
போகுவெண்கயிலையின்மெய்த்தவம்புரிவுழி
யேகநாயகனவர்க்கெதிரெழுந்தருளியே.

(இ-ள்.) யோகமாக் குரவர்தம் உயர்பதத்து எய்தவும்—யோகாசாரியர்களது உயர்ந்த பதவியையடையவும், மோகவல்வினை உறாத முத்தியில்வைகவும்—விருப்பத்தால் வினையும் ஆகாமியவினைவந்தடையாமல் முத்தியில் நிலைபெறவும், போகுவெண் கயிலையில் மெய்த்தவம் புரிவுழி—அண்டமுகடளாவிய வெள்ளியகயிலையின் சாரலில் உண்மைவாய்ந்த தவத்தைச்செய்யுமிடத்து, ஏகநாயகன் அவர்க்கு எதிர் எழுந்தருளி—இறைவன் அவர்களுக்கெதிரே காட்சிதந்தருளி.

இந்திரபதம் துருவபதம் முதலியதுபோல யோகாசாரியர் பதமொன்றிருத்தலால் அப்பதத்தையடையவும், அப்பதத்தினின்று நீங்கியபின் சிவபிரான் திருவடியிற் கலத்தலும் வேண்டிதவம் புரிந்தனராதலால் மெய்த்தவம் புரிவுழிஎனவும், ஆகாமியம் பிறவிக்கேதுவாதலால் மோகவல்வினையெனவும், தவம்செய்தற்கு உரியபூமி கருமபூமிலால் வெண்கயிலையிலெனவுங் கூறினார். (௪)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

அம்மநீர்கச்சிமூதூரணுகிமாநீழல்வைகு
மெம்மடிவழுத்திவெவ்வேறிலிங்கமங்கிருத்திப்போற்றி
மம்மர்தீர்தவங்களாற்றிவைகுமினுண்டுநுங்க
டம்மனக்கருத்துமுற்றத்தருதுமென்றருளிச்செய்தான்.

(இ-ள்.) நீர் கச்சி மூதூர் அணுகி—நீர்வளஞ்செறிந்த கச்சியென்னும் தொன்றுதொட்டுள்ள திருப்பதியையடைந்து, மா நீழல் வைகும் எம் அடிவழுத்தி—மாமரத்தின் கீழெழுந்தருளிய எமது திருவடிகளைவணங்கி, வேறு வேறு இலிங்கம் அங்கு இருத்தி போற்றி—தனித் தனி சிவலிங்கப்பெருமானை அத்திருப்பதியில் தாபித்துவணங்கி, மம்மர்தீர் தவங்கள் ஆற்றிவைகுமின்—குற்றத்தினின்று நீங்கிய தவத்தைச்செய்து இருங்கள், ஆண்டு நுங்கள் தம்மனக்கருத்து முற்ற தருதும் என்று அருளிச்செய்தான்—அவ்விடத்திலுங்கள் மனக்கருத்து முடியும்வண்ணம் அருள்வோமென்றுஇறைவன் கூறினன்.

கச்சியின் பெருமையைக்கூறுவோர்க்கு அவரறியாவண்ணம்வியப்புத்தோன்றுமென்பது தோன்றஅம்மவென விசேடந்தந்துகூறினார். அம்மவியப் பிடைச்சொல், ()

மற்றவர்தொழுதுபோற்றிவள்ளலைவிடைகொண்டேகி
முற்றிழைமகளிர்நல்லாரூடலினுகுத்தமுத்தங்
கற்றைவெண்ணிலவுகான்றுகனையிருள்பருகுநீண்ட
பொற்றடநெடுங்தேர்வீதிபொலிதிருக்காஞ்சிநண்ணி.

(இ-ள்.) அவர் தொழுது போற்றி—அந்த யோகாசாரியர்கள் தொழுது வாழ்த்தி, வள்ளலை விடைகொண்டு ஏகி—இறைவனிடத்து விடைபெற்றுச்சென்று, முற்றிழைமகளிர் நல்லார் ஊடலின் உகுத்த முத்தம்—தொழில்முற்றிய ஆபரணத்தையணிந்தபெண்கள் தத்தம் கணவரிடத்துவிளைந்த ஊடலால் களைந்துவீசிய முத்துவடம், கற்றைவெள்நிலவு கான்று கனை இருள் பருகும்—நெருங்கியவெள்ளியநிலவைவீசி மிக்கஇருளைப்பருகுவதற்கு எல்லையாகிய, நீண்டபொன் தடநெடுந்தேர்வீதிபொலி திருகாஞ்சி நண்ணி—உயர்ந்தபொன்னாலமைந்த பெரியநெடியநிலைதேர்களமைந்த வீதி விளங்கும் காஞ்சித்திருப்பதியையடைந்து.

கற்புடைமகளிர் என்பதுதோன்ற மகளிர்நல்லார் எனவும், பரத்தையர்வாயில் சென்று மீண்டதலைவனொடு கலாம்விளைத்தனர் என்பதுதோன்ற ஊடலினுகுத்த முத்தம் எனவுங்கூறினர். (சு)

முழங்கிசைஞிமிறுபாயமுகைமுறுக்குடைந்துதீந்தேன்
வழங்குபூங்கமலத்தெண்ணீர்மணிச்சிவகங்கைதோய்ந்து
பழங்கணோயறுக்குமாவிற்பகவனைவழிபாடாற்றித்
தழங்கொலிமறையினூற்றூற்றனித்தனியிலிங்கஞ்செய்தார்.

(இ-ள்.) இசை முழங்கு ஞிமிறுபாய—இசைபாடும் வண்டுகள்வந்து வீழ, முகை முறுக்கு உடைந்து தீம்தேன் வழங்கு பூங்கமலம் தெள் நீர் மணி சிவகங்கை தோய்ந்து—அரும்பின் முறுக்கவிழ்ந்து இனியதேனைஊட்டும் தாமரைமலர்களையுடையதெள்ளிய நீர்வற்றாதசிவகங்கையில் படிந்து,பழங்கண் நோய்அறுக்கும் மாவின் பகவனைவழி பாடுஆற்றி—துன்பத்தைவிளைக்கும் பிறவிநோயையறுக்கும் மாவினிழலிலெழுந்தருளிய இறைவனைவழிபட்டு, தழங்கு ஒலி மறையின் ஆற்றால் தனி தனி இலிங்கம் செய்தார்—முழங்கும் ஒலிவாய்ந்த வேதாகமவழியால் வேறு வேறாகச் சிவலிங்கப்பெருமானைத் தாபனஞ்செய்தார்கள்.

வண்டுகள் இசைபாடுதலால் அவ்விசைக்கு உருகித் தேன்தருமென்பார்முழங்கிசைஞிமிறுபாய முகைமுறுக்கு எனவும், மணியுள்ள அளவும் ஒளியுள்ளதுபோலச் சிவகங்கை உள்ளஅளவும் நீருள்ளதென்பார் தெண்ணீர் மணிச்சிவகங்கையெனவும், உதாத்தம், அனுதாத்தம், சொரிதம்என்னுமொலியின் பேதங்களைவேதமுடையதென்பார்தழங்கொலிமறையெனவும், உடலைக்கூறியவழிஉயிருமடங்குதல்போலவேதத்தைக்கூறியவழிஆகமமும் அடங்குமென்பார் மறையினூற்றால்எனவுங்கூறினர். "மணிநீரும் மண்ணுமலையும்" என்னுந் திருக்குறளில் மணிநீர்என்றதற்கு வற்றாதநீரொனப்பரிமேலழகா எழுதிய உரையானுணர்க. (எ)

முன்பொருகாலத்தங்கண்முதல்வனைத்தொழுதுமுந்நூற்
றைம்பதிற்றைவர்யோகாசாரியராகிமுத்தி
தம்பதமாகக்கொண்டாரவரொலத்தாமுமன்பி
னெம்பனைத்தத்தம்பேராலலத்தகநிறுவிப்போற்றி.

(இ-ள்.) மூந்நூற்றைம்பதிற்றைவர் முன்பு ஒருகாலத்துஅங்கண் முதல்வனை தொழுது—மூந்நூற்றைம்பத்தைந்துபேர் முன்பொருகாலத்தில் அத்தலத்தில் இறைவனைத்தாபித்து வணங்கி, யோகாசாரியர் ஆகி—யோகாசாரியர்களாகி, முத்திதம்பதம்ஆக்கொண்டார்—தமதுபதம்போல முத்தியைக் கைக்கொண்டார்கள், அவரென்ன—அவர்களைப்போல, தாமும் அன்பின்—சுவேதன் முதல் இலகுளீசன் ஈறாகஉள்ளவரும் முறுகிய அன்பால், நம்பனை தம்தம்பேரால் நலம் தக நிறுவி போற்றி—இறைவனைத் தத்தமக்குள்ள நாமங்களால் விளக்கம் வாய்ப்பத்தாபித்து வணங்கி.

இவர்கட்குமுன் மூந்நூற்றைம்பதிற்றைவர் இறைவனையங்குப்பூசித்து யோகாசாரியர்களானாராதலால் அவரை இங்குக்கூறினர். (அ)

கறையணிமிடற்றுப்புத்தேள்கருணையாலுகங்கடோறு
நிறைபுகழ்படைத்தயோகாசாரியநிலைமையெய்திக்
குறைவிலாமுத்திபெற்றாராங்கவர்குலவிப்போற்று
மிறையவன்றளிகள்யார்க்கும்வீடுபேறெளிதினல்கும்.

(இ-ள்.) கறையணி மிடற்று புத்தேள் கருணையால் — விடத்தையடக்கிய ஸ்ரீகண்டத்தையுடைய இறைவர்திருவருளால், உகங்கள்தோறும் நிறை புகழ் படைத்த யோகாசாரியர் நிலைமைஎய்தி—உகங்கள்தோறும் நிறைந்தபுகழ்வாய்ந்த யோகாசாரிய நிலைமையடைந்து, குறைவில்லாத முத்திபெற்றார்—என்றும் அழிவில்லாதமுத்தியின் பதத்தைப் பெற்றார்கள், ஆங்குஅவர் குலவி போற்றும் இறையவன் தளிகள்—அத்திருப்பதியிலவர்கள் வசித்துவழிபட்ட சிவபெருமான்திருத்தளிகள், யாவர்க்கும் வீடுபேறு எளிதில் நல்கும்—எவ்வகையோர்க்கும் முத்திப்பயனையெளிதாகத் தந்தருளும்.

யோகாசாரியர் பதம்பெற்றோர் மனுவந்தரம் எழுபத்தெட்டியுகங்களில் இருபத்தெட்டாங்கலியுகங்காறும் அப்பதத்திலிருந்து நிலவுலகில் மகான்களாயவதரித்து பல மான்மியங்களுஞ்செய்து முத்தி பெறுவதுவழக்காதலால் யுகங்கள்தோறும் யோகாசாரிய நிலைமையெய்திக் குறைவிலா முத்திபெற்றார் என்றார். மகான்களாவார் திருஞானசம்பந்தமூர்த்தி முதலியோர் (கூ)

வென்றிகொளினையவெல்லாம்பரசிராமீச்சரத்தின்
தென்றிசைதொடங்கிச்சார்வதீர்த்தத்தின்வடபால்காறும்
ஒன்றருஞ்சுவேதலிங்கமுதலிலகுளீசமீறாத்
துன்றிடுமவற்றுண்மேலாச்சொலப்படுமிலகுளீசம்.

(இ-ள்.) வென்றி கொள் இனைய எல்லாம்—வெற்றியமைந்த இத்திருத்தளிகளெல்லாம், பரசிராமீச்சரத்தின் தென்திசை தொடங்கி—பரசிராமீச்சர மென்னுந் திருத்தளியின் றென்பால்தொடங்கி, சார்வதீர்த்தத்தின் வடபால் காறும்—சறுவதீர்த்தத்தின் வடபாலளவும், ஒன்று அருஞ்சுவேதலிங்கம் முதல் இலகுளீசம் ஈறு ஆக—அடைதற்கரிய சுவேதலிங்கமுதல் இலகுளீசமிறுதியாக, துன்றிடும்—செறிந்துவிளங்கும், இவற்று உள்—இவைகளுள், இலகுளீசம்மேலாக சொலப்படும்—இலகுளீசமென்னுந் திருத்தளிமேலாகச் சொல்லப்படும்.

சர்வம் என்னும் வடமொழியில் உள்ளஎரகரம் தமிழில் றகரமாக வருதலால் லகரத்திற்கும் ளகரத்திற்கும் பேதமின்மைபோலப் பேதமின்மையுணர்க. (௪0)

யோகாசாரியர் தளிப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௬௧அ.

## சறுவதீர்த்தப் படலம்.

### அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

இருட்கொடும்பிறவிமாற்றுமிலகுளீச்சரமீறுகத்
தருக்கறுகாட்சியோகாசாரியர்தளிகள்சொற்று
மருத்துறைதமலர்மேற்பூத்தவளம்புனல்குடைவோர்தங்கள்
கருத்தவிர்சறுவதீர்த்தக்கரைபொலிதலங்கள்சொல்வாம்.

(இ-ள்.) இருள் கொடும் பிறவி மாற்றும் இலகுளீச்சரம் ஈறு ஆக—அஞ்ஞானத்தால் விளையுங் கொடிய பிறப்பினையொழிக்கும் இலகுளீச்சரம் இறுதியாக, தருக்கு அறுகாட்சி யோகாசாரியர் தளிகள் சொற்றும்—மலச்செருக்கொழிந்தபேற்றினையுடைய யோகாசாரியர்கள் பூசித்த திருத்தளிகளை யெடுத்துக்கூறினும், மருதுறைமலர் மேல்பூத்த வளம்புனல் குடைவோர்—வாசஞ்செறிந்தமலர்கள் மேலேமலர்ந்தவளம் வாய்ந்ததன்பாலுள்ள நீரில்படிந்தோர், தங்கள் கருதவிர்சறுவதீர்த்தக்கரைபொலிதலங்கள் சொல்வாம்—தமதுபிறப்பறுதற்கெல்லையாகிய சறுவதீர்த்தத்தின்கரையில் விளங்கும் திருத்தளிகளை யெடுத்துக்கூறுவாம்.

பிறவிக்கு ஏது அஞ்ஞானமாதலால் இருள் எனவும், காரணகாரியங்களுக்கு ஒற்றுமையுண்மையால் காரணத்தின் தன்மையைக் காரியத்தின்மேலேற்றிக்கொடும் பிறவியெனவும், தானல்லாத வுடம்பினையானென்றும், தன்னோடியைபில்லாத பொருளைத்தனதென்றுங்கருதிட்பற்றுமிடத்தெழுமிறுமாப்பாதலால் அதனைத்தருக்கெனவும், அது ஒழிதற்கு மெய்யறிவு ஏதுவாதலால் அறுங்காட்சி யெனவுங்கூறினர். (க)

குடவளையலறியீன்றகுருஉமணித்தரளக்குப்பை
படலைவெண்ணிலவுகான்றுபடரிருளிரிப்பஞாங்க
ருடைதிரையொதுக்குந்தெண்ணீரொலிபுனற்சறுவதீர்த்தத்
தடநெடுங்கரையிற்காமீச்சரமெனுந்தலமொன்றுண்டால்.

(இ-ள்.) குடம் வளை அலறி ஈன்ற குருமணி தரளம் குப்பை—குடம்போலத் திரண்ட சங்குகள்சூலுளைந்து கதறியுயிர்த்த வெண்ணிறம்வாய்ந்த முத்தின்றிரட்சிகள், படலை வெள் நிலவு கான்று படர் இருள் இரிப்ப—திரண்டவெள்ளிய நிலவை வீசிப்பரவிய இருளையோட்டும்படி, ஞாங்கர் உடை திரை ஒதுக்கும்ஒலிதெள் நீர்புனல் சறுவதீர்த்தம் தடம் நெடுங்கரையில்—கரையின் பக்கங்களில் உடைந்தஅலைகள் கொழிக்கும் முழங்குந் தெள்ளியநீர்மயமாகிய நெடிய சறுவதீர்த்தத் திருக்குளக்கரையில், காமீச்சரம் என்னும் தலம் ஒன்று உண்டு—காமீச்சரமென்னுந் திருத்தளியொன்றுள்ளது.

குரூஉ இயற்கையளபெடை. (உ)

கருப்புவிற்குழையவாங்கிக்கடிமலர்ப்பகழிதூண்டு
மருப்பிளங்கொங்கைச்சேனையடல்வலிக்காமன்முன்னாண்
மருப்பொதியிதழிக்கோமான்மனத்திடைப்பிறந்தானையன்
திருப்பதமிறைஞ்சிப்போற்றிசெய்துமற்றிதனைவேண்டும்.

(இ-ள்.) கரும்பு வில் குழைய வாங்கி கடிமலர் பகழி தூண்டும்—கரும்பாகிய வில்வளைய வளைத்து வாசமிக்க மலரம்புகளைச் செலுத்தும், அரும்பு இளங்கொங்கை சேனை அடல்வலி காமன்—அரும்பினையொத்தமுதிராத தனத்தையுடைய பெண்களாகிய சேனைகளால் வெற்றிவாய்ந்த வன்மையையுடைய மன்மதன், முன் நாள்மரு

பொதி இதழி கோமான் மனத்து இடை பிறந்தான்—முன்னொருகாலத்தில் மணம் பொதிந்த கொன்றைமலராற்றொடுத்த மாலையையணிந்த இறைவனது மனத்தினிட த்துப்பிறந்து, ஐயன் திருபதம் இறைஞ்சி போற்றி செய்து—அவ்விறைவனது திரு வடிகளை வணங்கித் துதித்து, இதனை வேண்டும்—இதனைக் குறையிரப்பான்.

பிறந்தான் முற்றெச்சம். தேவர்கள் வேண்டுகோளால் சிவபெருமான்யோக நிலையைக் கெடுத்தற்பொருட்டுஅப்பெருமான்திருமுன் சென்றுஅம்புதூண்டியகாலை யில் அவ்விறைவன்தீக் கண்ணால் நீறுபட,அதனையுணர்ந்து மனங்கவன்ற அவன்மனை வியாகியஇரதிஅப்பெருமான்பால்குறையிரக்கையில்உமையைத் திருமணமுடிக்குங்கால் உன் கணவனுக்கு உயிரளிப்போமென்றருளித் திருமணமுடிந்தபின் அந்தஇரதி திரு முன்வந்து குறையிரப்பத்தனது திருவுளத்திற்குறிக்கச்சாம்பராயினஅம்மன்மதன்வந்து தோன்றினனாதலால் முன்னாள் மனத்திடைப்பிறந்தான் என்றார்.

சிவபெருமான் மனத்தில்அன்று தோன்றினமையை—,

"சீருறுகணவனில்லாள்செப்பியமாற்றங்கேளா
வாருயிர்முழுதுநின்றேயனைத்தையுமுணர்ந்துகூட்டும்
பேரருளுடையநாதன்பேதுறன்மடந்தையென்னா
மாரன்வந்துதிக்கும்வண்ணமனத்திடைநினைந்தானன்றே.
நினைதருமெல்லைதன்னினெடியமான்முதலாவுள்ள
வனைவருமருட்கையெய்தவழுங்கியவிரதிநோக்கி
மனமகிழ்சிறந்துகார்காண்மஞ்ஞையிற்களிப்பவங்கட்
குனிசிலைகொண்டமாரன்கொம்மெனத்தோன்றினானே.

எனவரும் கந்தபுராணத்தாலுணர்க. (௩)

மகப்பயில்பிறவிக்கேதுவாகிவண்புணர்ப்புநல்கி
யிகப்பில்சீரிரதிக்கென்றுமினியனாய்க்கொடுப்போர்கொள்வோ
ரகத்திருந்தினையசெய்கையாற்றியென்னாணைமூன்று
சகத்தினுஞ்செலுத்தும்பேறுதந்தருளென்னக்கேட்டு.

(இ-ள்.) மக பயில் பிறவிக்கு ஏதுவாகுபுணர்ப்பு இவண்நல்கி — உலகில்மக் கட்பேறு தோன்றும் பிறவிக்குக் காரணமாகிய புணர்ச்சியை இங்குக்கூட்டி, இகப்பு இல் சீர் இரதிக்கு என்றும் இனியன் ஆய்—நீங்குதலில்லாத அழகின் பொலிவுவாய்ந்த இரதிக்கு எக்காலத்தும் மனத்துக்கினியவனாய், கொடுப்போர் கொள்வோர் அகத்து இருந்து இனையசெய்கை ஆற்றி—கொடுப்போரும்ஏற்போருமாகிய இவர்கள்மனத்தில் குடியிருந்து கொடுத்தலு மேற்றலுமாகிய இச்செய்கையை நடத்தி, என் ஆணைமூன்று சகத்தினும் செலுத்தும் பேறுதந்தருள் என்னகேட்டு—எனது ஆக்ஞைசுவர்க்கமத் தியபாதல மென்னு மூன்றுலோகத்திலும்நடத்தும் பயனைத்தந்தருளாயென்று கு

ஆடவர்மகளிர் களுக்குப்போகங்கூட்டத்தான் போகியாயிருக்கவேண்டுமென் றருகுறையிரந்தா னாதலால் இகப்பில் சீரிரதிக்கென்று மினியனாய் என்றான். (௪)

மற்றெமக்கினியமூதூர்வளம்பயில்காஞ்சியங்க
ணுற்றெமைவழிபட்டேத்தியூங்குவைபெறுகென்றெங்கோன்
சொற்றலும்விரைந்துகாஞ்சித்தொன்னகரெய்திக்காம
னற்றமில்சறுவதீர்த்தத்தடந்தினையலைக்குங்கோட்டின்.

(இ-ள்.) எமக்கு இனிய மூதூர் வளம்பயில்காஞ்சி—எமக்கு என்று மினிய தொன்று தொட்டுள்ள திருநகரம் வளமிக்க காஞ்சியாம், அங்கண்உற்று எம்மைவழி பட்டு ஏத்தி—அவ்விடத்தடைந்து எம்மைப்பூசித்து வணங்கி, ஊங்கு உவை பெறு கென்று எங்கோன் சொற்றலும்—மிகவுமிவற்றைப் பெறக்கடவையென்று எமதிறை வன் கூறியருளலும், காமன் விரைந்து காஞ்சி தொல்நகர் எய்தி — மன்மதன் விரைந் துகாஞ்சியென்னும் தொன்று தொட்டுள்ள திருநகரையடைந்து, அற்றம் இல் சறுவ தீர்த்தம் தடதிரை அலைக்குங்கோட்டின்—குற்றமில்லாத சறுவதீர்த்தத்தின பெரியஅ

தவாதபேரனபிற்காமீச்சரன்றனையிருத்திப்போற்றி
யுவாமதிமுகத்துமென்றோளொள்ளிழையுமையாடன்னைக்
கவான்மிசைக்கொண்டபெம்மான்கண்ணருள்கிடைத்துநெஞ்சத்
தவாவியபேறுமுற்றுமங்ஙிலையெய்தினான்.

மற்று—அசைநிலை

(இ-ள்.) தாவாத பேர் அன்பின் காமீச்சரன் தன்னை இருத்தி போற்றி—கெ டாதபெரிய அன்போடு காமீச்சரனென்னும் திருநாமத்தையுடையசிவலிங்கப்பெருமா னைத் தாபித்து வணங்கி, உவாமதிமுகத்து மெல்தோள் ஒள் இழை உமையாள் தன் னை— பூரணசந்திரனையொத்த திருமுகத்தையும் மெல்லிய தோளையுமுடைய உமை யம்மையை, கவான்மிசைகொண்ட பெம்மான் கண் அருள்கிடைத்து—தனது தொ டைமேற் கொண்டருளிய இறைவனது திருவருட்பார்வையைப் பெற்று, நெஞ்சத்து அவாவிய பேறுமுற்றும் அங்நிலைஎய்தினான்—தன்மனத்தில் விழைந்தபேறு முழுமை யும் ஒரு சேரவப்பொழுதே பெற்றனன்.

தவாதகுறுக்கல்விகாரம். உயிர்களுக்குப்போகம்புணர்க்கப்பூசித்தோனாதலால் அதற்கேற்ற திருவுருவங்கொண்டானென்பார். உமையாடன்னைக்கவான்மிசைக்கொண் ட பெம்மானென்றார். (௬)

ஏதமிலுயிர்களெல்லாந்தோற்றுதற்கேதுவாகிக்
கோதறத்தானமீவோன்கொள்பவன்றானுந்தானாய்
மேதகுமிறைமைபெற்றுவிளங்கினான்மறையோரேற்கும்
போதுளத்தவனையெண்ணிற்புரைதவிர்ந்துய்வாரன்றே.

(இ-ள்) ஏதம் இல் உயிர்கள் எல்லாம் தோற்றுதற்கு ஏது ஆகி—கேடில்லாத வுயிர்களியாவும் பிறத்தற்குத்தான் காரணமாகி, கோது அறதானம் ஈவோன்தானும்— குற்றமறத்தானங் கொடுப்போனும், கொள்பவன்தானும் தான் ஆய்—ஏற்போனுந்தா னாகி, மேதகும் இறைமைபெற்று விளங்கினான்—மேன்மைவாய்ந்த தலைமைபெற்று மன்மதன் விளங்கினான், மறையோர் ஏற்கும்போது—அந்தணர் தானமேற்குங்காலை யில், அவனைஉளத்துஎண்ணில் புரைதவிர்ந்துஉய்வார்—அம்மன்மதனை மனத்திற்கரு தினால் தானபலத்தால் தமக்கு வருங்குற்றத்தி னின்று நீங்கி யுயிர்பிழைப்பார்கள்.

உடலுக்குக்கேடன்றி யுயிர்கட்குக் கேடில்லாமையால் ஏதமிலுயிர்களெல்லாம் எனவும், உடலோடொங்கியமாய்நிற்றலில் உடலின்தோற்றமே யுயிரின்தோற்றமாதலால் தோற்றுதற் கேதுவாகியெனவும், தாம்தேடிய பொருள்களுளொன்றை யீவோர்தாம றிமையாலியற்றிய தீங்குகளைக் கழித்தற்கே யாதலால்கோதறத்தானமீவோன் என வும், தானமீதலால் வரும் நற்பயனில் ஏற்றலால் வருந் தீயபயன் கழிதலில் கொள்ப

வன்றானுந் தானுய் எனவும், இவ்விருவருந்தானுய் நிற்றலில் உடல்வளர்த்தற் பொருட்டுத் தானம் ஏற்கும் அந்தணர் தீங்கினைத் தன்னைக் கருதில் ஒழிப்பான் ஆதலால் அவனையெண்ணிற் புரைதவிர்ந்து எனவும், அவரவால்வினையுந் தீங்கொழியில் உய்தல் எளிதலால் உய்வார் எனவும், கொடுப்போன் கொள்வோன் றானுமாயென்றது- ஒரு பொருளைக் கொடுப்போன் மறுமையில்போகநுகர்தற்காதலானும், வாங்குவோன் இம்மையில்போகநு கர்தற்கேயாதலானும் இப்போகம் ஊட்டுதற்கு இறைவன் தானுதலாலும் கொடுப்போன் கொள்வோன் தானுயெனவுங்கூறினுர். முன்னர்ச் செய்யுளில் காமீச்சரனைத் தாபித்து வழிபட்டானெனக்கூறியது - பிரமன் முதல் மகேசுரனீருக நால்வரும் நான்குகால்களாகவும், சதாசிவம்பரப்பாகவும் அமைந்திருக்குமஞ்சத்தின்மேல் மகா திரிபுர சுந்தரியைத்திருத்தொடைமேல் சிவபெருமான்கொண்டருளின அவசரத்திற்குக்காமீச்சரனெனத் திருநாமமாதாலல்அவ்விறைவனைக் கூறினுனெனக்கொள்க - இது தேவியாகமத்திற் கூறப்பட்டது.

பரவினோர்விழைந்தகாமப்பயனளித்தருளுங்காமீச்
சரநகர்வந்தவாறுசாற்றினமிதன்பாலாகப்
பரிதிமான்றடந்தேரீர்க்கும்பரிக்குளம்பிடறிப்போய
திருமணிச்சிகரக்கோயில்வயங்குதீர்த்தீசமுண்டால்.

(இ - ள்.) பரவினோர் விழைந்தகாமம் பயன் அளித்தருளும் காமீச்சரம் நகர்வந்த ஆறு சாற்றினம்—தன்னைவணங்கினோர் விரும்பியகாமப்பயனைத் தந்தருளுங் காமீச்சரமென்னுந் திருத்தளிவந்த வரலாற்றினைக் கூறினும், இதன்பால் ஆக—இச் சறுவதீர்த்தக்கரையிடமாக, பரிதிமான்தடதேர் ஈர்க்கும்பரி குளம்பு இடறிபோய- சூரியனது குதிரைபூட்டிய பெரியதேரினையி ழுத்துச்செல்லும் குதிரையின் காற் குளம்பிடறவுயர்ந்த, திருமணிசிகரம் கோயில் வயங்கு தீர்த்தீசம்உண்டு—அழகிய இரத்தினங்களிழைத்த சிகரத்தையுடைய திருக்கோயில் விளங்குந் தீர்த்தீசமென்னும் ஒரு திருத்தளியுண்டு.

காமப்பயன் என்றது அறம்பொருளின்பங்களை, காமன்விரும்பியதும் அதுவாகலின். இடறி செயவெனெச் சத்திரிபு. (அ)

குழையுதைநெடுங்கட்செவ்வாய்க்கோமளச்சயிலப்பாவை
விழைதகத்தழுவுமாற்றால்விரிசினைத்தனிமாநீழல்
மழைதவழ்மிடற்றுப்புத்தேள்வருகெனவிளித்தஞான்று
தழைபுனற்றலைவனோடுந்தடநதிவடிவந்தாங்கி-

(இ-ள்.) குழை உதை நெடும்கண் செவ்வாய் கோமளம் சயிலப்பாவை—குண்டலத்தின்மேற் பாயும்நெடிய கண்களையுஞ் செவந்தவாயினையுமுடைய இளமைவாய்ந்த வுமையம்மையை, விழைத கதழுவும் ஆறுஆல்-விருப்பங்கூரத்தழுவும் வகையால், விரிசினைதனி மாநீழல்—பரந்தகிளைகளையுடைய ஒப்பில்லாத மாமரத்தினிழற் கீழெழுந்தருளிய, மழைதவழ்மிடறு . புத்தேள்—மேகம்போலக் கருநிறம்வாய்ந்த ஸ்ரீ கண்டத்தையுடைய இறைவன், வருக என விளித்தஞான்று—வரக்கடவாயென்று அழைத்தகாலையில், தழைபுனல் - அண்டங்களி னகத்தும் புறத்துந் தழைத்த தீர்த்தங்கள், தலைவன் ஓடும் தடநதிவடிவம்தாங்கி—வருணனோடும் பெரியநதியுருக்கொண்டு.

இலக்குமி முதலியோரினும் உமையம்மையழகுடைமையில் அவர்களினு மிளமையுடையளாதலால் கோமளச்சயிலப்பாவையெனவும், ஆன்மாக்கள் தத்தம் போகநுகர்தற்கு உமையம்மையைத் தழுவினனாதலால் விழைதகத்தழுவுமாற்றால்எனவும், மேகம் உணங்கியயாவும் தழைக்கக் கருநிறம்வாய்ந்துதோன்றுவதுபோல, விடத்தாலுணங்கிய திருமால்முதலிய தேவர்கள் தழைக்கக் கண்டங்கறுத்தமையால் மழைதவழ்மிடற்றுப் புத்தேளெனவும், நீர்க்குத்தலைவன் வருணனாதலால் தலைவனோடுமெனவுங்கூறினர். (௯)

விழுமியவண்டத்துள்ளும்புறத்தினும் விரவுந்தீர்த்த
முழுவதுந்திரண்டுகாஞ்சிமூதுநகர்க்குடபாலெய்திக்
கொழுமலர்த்தனிமாநீழற்குழகனையுமையாள்வல்லைத்
தழுவலுமெழுந்தவேகந்தணிந்துமீட்டல்கியங்கண்.

(இ-ள்.) விழுமிய அண்டத்து உள்ளும் புறத்தினும் விரவும் தீர்த்தம் முழுவதும்திரண்டு—பெரிய அண்டங்களி னுள்ளும்புறத்தும் கலந்துநிறைந்த தீர்த்த முற்றும் ஒரு சேரத்திரண்டு, காஞ்சிமூதுநகர்குடபால் எய்தி—காஞ்சியென்னுந் திருப்பதியின் மேல் பாலடைந்து, கொழுமலர்தனிமா நீழல்குழகனை—அன்றலர்ந்த மலரையுடைய ஒப்பில்லாத மாமரத்தினிழலி லெழுந்தருளிய பேரழகையுடைய இறைவனை, உமையாள் வல்லை தழுவலும்-(அதற்கஞ்சி) உமையம்மைதழுவ, எழுந்த வேகம்தணிந்து மீட்டு அங்கண் அல்கி—தான் ஓட்டெடுத்து வந்தவேகந்தணிந்து மீள அவ்விடத்தில் சுருங்கி.

அழகில் திருமால் முதலியோர்க்கு இளையோனாதலில் குழகனெனவும், இறைவன் றிருக்கருத்து முற்றியபின் வேகந்தணிந்து சுருங்கினமையால் வேகந்தணிந்து அங்கணல்கி எனவுங்கூறினர். மீட்டு செயவெனெச்சத்திரிபு. (௧௦)

கலைமதிக்குழவிமோலிக்கடவுளைத்தீர்த்தராசத்
தலைவனென்றிருத்திவீங்குந்தடம்புனலருவிக்குன்றச்
சிலைநுதற்பிடியினோடுமருச்சனைதிருந்தச்செய்ய
மலையினைக்குழைத்ததிண்டோள்வள்ளலுமெதிரேநின்று.

(இ-ள்.) கலை மதி குழவிமோலி கடவுளை—இளஞ்சந்திரனை யணிந்த சடாமுடியையுடைய இறைவனை, தீர்த்த ராசத்தலைவன் என்று இருத்தி—தீர்த்தராசன் என்று திருநாமமிட்டுச் சிவலிங்கப்பெருமானைத்தாபித்து, அருவிகுன்றம் சிலைநுதல் பிடியினோடும் அருச்சனை திருந்த செய்ய - அருவிபாயும் இமமலையிற் றோன்றிய வில்லையொத்த நெற்றியையுடைய உமையம்மையோடும் பூசனையை ஆகமவிதிப்படி செய்ய, மலையினைகுழைத்ததிண் தோள்வள்ளலும் எதிரேநின்று—மேருவை வில்லாகவளைத்த திண்ணியதோளையுடைய இறைவனும் காட்சிதந்தருளி.

குன்றப்பிடியென்று, அதனோடு சிலை நுதலெனவிசேடந்தந்து கூறினமையால் சிறப்புருவகவணி. (௧௧)

இற்றைநான்றுதொட்டியாகநும்மிடத்தெய்திமூழ்கிச்
செற்றமின்முனிவர்விண்ணோர்தென்புலவாணர்தங்கட்
குற்றநீர்க்கடன்கணல்கியுறுபொருளுறுநர்க்கீந்து
மற்றெனமையீண்டுக்காண்போர்முத்தியின்மருவச்செய்கேம்.

(இ-ள்.) இற்றை ஞான்று ஆதியாக, இந்நாள்முதலாக நம் இடத்து எய்தி மூழ்கி-உங்களிடத்தடைந்துபடிந்து, செற்றம்இல்முனிவர் விண்ணோர்-கோபந்தீர்ந்த முனிவர்களுக்கும் தேவர்களுக்கும், தென்புலவாணர் தங்கட்கு உற்ற நீர்க்கடனகள் நல்கி-பிதுரர்களுக்கும் நீர்க்கடன்களைச்செய்து, உறுபொருள் உறுநர்க்கு ஈந்து-தம்மிடத்து உள்ளபொருளை முனிசிரேஷ்டர்களுக்குக் கொடுத்து, எம்மை ஏண்டு காண்போர்முத்தியில் மருவசெய்கேம் - எம்மை யிவ்விடத்தில் கண்டு தரிசிப்போர் மோட்சத்தையடையச் செய்வேம்.

சினமொழிதல் முனிவர்க்குரிய கடனாதலில் செற்றமில்முனிவரெனவும், நீராடியபின்முனிவர் தேவர் பிதிரர்கடன்செய்வது முறையாதலால் முனிவர் விண்ணோர் தென்புலவாணர் தங்கட்குற்ற நீர்க்கடன்கணல்கி யெனவுங்கூறினார். (கஉ)

இன்னமும்புகலக்கேண்மினெனப்பெருங்கருணை கூர்ந்து
தன்னிகர்பிராட்டியாரத்தழீஇக்கொளச்செயதவாற்று
லன்னதற்கியையக்கைமாறளிப்பவனென்னவங்கேழ்ப்
பொன்னவிர்சடையோன்றீர்த்தப்புனல்களுக்கிதனைநாட்டும்.

(இ - ள்.) இன்னமும் புகலகேண்மின் என பெரும் கருணை கூர்ந்து - இன்னமுங் கூறக்கேளுங்களென்று மிக்கவருள்கூர்ந்து, தன் நிகர் பிராட்டி ஆரதழீஇ கொள செய்த ஆற்றால் - தனக்குப்பிறர் நிகரில்லாத உமையம்மை நிரம்பத்தழுவச்செய்த தன்மையால், அன்னதற்கு இயைய கைம்மாறு அளிப்பவன் என்ன - அதற்கமையச்செய்நன்றி யறிந்து செய்தருளுவோன்போல, அம்கேழ்பொன் அவிர்சடையோன் தீர்த்தபுனல்களுக்கு இதனை நாட்டும்-அழகிய நிறம் வாய்ந்தபொன்போல விளங்கும் சடாமுடியையுடைய இறைவன் தீர்த்தங்களுக்கு இவ்வரத்தை தந்தருளுவர்.

உமையம்மை வலியத் தழுவிக்கொள்ளச் செய்தமையால் ஆரத்தழீஇக்கொளச் செய்தவாற்றுலெனவும், காலத்தாற் செய்த நன்றியாதலால் அதற்கியையக் கைம்மாறு செய்யத் திருவுளத்திற் கருதினன் போலு மாதலால் அன்ன தற்கியையக்கைம் மாறளிப்பவனெனவும் கூறினார். (கங)

கொலைகளிற்கொடுமைசான்றபார்ப்பனக்கொலைவல்வீரக்
கொலைகருக்கொலைதாய்தந்தைகொலைகவைக்கோட்டுநல்லான்
கொலைமுதற்பிறவுநீங்குங்கொடுவினைப்பாசத்தெவ்வைக்
கொலைபுரிமரபினும்பாற்குடைந்தெமைத்தொழப்பெற்றோர்க்கே.

(இ - ள்.) கொலைகளில் கொடுமை சான்ற பார்ப்பனக்கொலை - கொலைகளுள் கொடுமைமிக்க அந்தணர் கொலையும், வல்வீரக்கொலை கருக்கொலை - வலிய வீரனைக் களவிற்கொல்லுதலும் கருவைக் கொல்லுதலும், தாய்தந்தை கொலை கவைகோடு நல் ஆன்கொலைமுதல் பிறவும்-தாய்தந்தையைக் கொல்லுதலும் பிளவு பட்ட நல்ல கொம்பினையுடைய பசுவைக்கொல்லுதலும் ஆகிய இக்கொலை முதலிய மற்றைக் கொலைமுதலியவைகளும், கொடுவினை பாசம் தெவ்வை கொலைபுரி மரபின் நும்பால் குடைந்து எம்மை தொழபெற்றோர்க்கு நீங்கும்-கருமமலமாகிய பாசப்பகையினை ஒழிக்கும் மரபினையுடைய உம்மிடத்து மூழ்கியெம்மை வணங்கப்பெற்றவர்க்கு நீங்கும்.

அந்தணர் கொலைசெய்வோரோடு நட்புக்கொண்டவரும் மாபாதகராதலால் கொலைகளிற் கொடுமை சான்ற பார்ப்பனக் கொலை எனவும், வீரனைப்போரிலேற்று அறநெறியாற் கொல்லாது வஞ்சத்தால் கொல்லுதல் கொடுங்கொலையாதலால் வல்

வீரக்கொலை எனவும், கருக்கொலையும் தாய் தந்தையர் கொலையும், பசுக்கொலையும் அதனினுங்கொடியனவாதலால் கருக்கொலை தாய்தந்தை கொலைகளைகோட்டு நல்லான் கொலை எனவும், ஆசிரியனைக்கொல்லுதல் முதலிய கொடுங்கொலை யடக்கிமுதற்பிறவுமெனவுங் கூறினர். (கச)

முரிதிரைசுருட்டுதெண்ணீர் நும்மிடத்தொருகான்மூழ்கி
விரிபுகழ்த்திருவேகம்பம்விழைதகக்காணப்பெற்றோ
ருரிமையினுன்றநாற்கூற்றுறுதியும்பெறுவர்மீள
வரிவையரகட்டுளெய்தாதெம்மருளகட்டின்வாழ்வார்.

(இ - ள்.) முரிதிரை சுருட்டு தெள்நீர்நும் இடத்து ஒருகால் மூழ்கி - கரைகளோடு மோதுதலால் முரிந்த அலைகள் மடங்கிவரும் தெள்ளிய நீர் மயமாகிய உம்மித்து ஓர் தரம்படிந்து, விரிபுகழ் திரு ஏகம்பம் விழைதக காணபெற்றோர் - பரந்த புகழையுடைய திருவேகம்பத்தை அன்பு மீதூரத்தரிசிக்கப்பெற்றவர், உரிமையின் ஆன்ற நால்கூற்று உறுதியும் பெறுவர்-மக்களுயிர்க்கு உரிமையாக வமைந்தநான்கு பகுதியவாகிய அறம் பொருளின்பம் வீடென்னும் நான்கு பயனையும் பெறுவார்கள், மீள அரிவையர் அகட்டுள் எய்தாது, அவற்றைப் பெறுதலால் மீளவும் பெண்கள் கருவுளடையாமல், எம் அருள் அகட்டின் வாழ்வார்-எமது திருவருட் கருப்பத்தில் வாழ்வார்கள்.

மக்களுடம் பெடுத்தோர் அவ்வுடம்பாற் பெறுதற்குரியபயன் அறமுதலிய நான்குமே யாதலால் உரிமையினுன்ற நாற்கூற்றுறுதியும் பெறுவரென்றார், உம்மிடத்தில் மூழ்கி எம்மை வணங்கப் பெறுதலால் அறமுதலிய பயன்களைப்பெறுவரெனவும், பிறவாரெனவும், திருவருள் பெறுவாரெனவும் கூறுதலால் காரணமாலையணி. (கரு)

என்றிதுநிறுவித்தீர்த்தநாயகனிலிங்கத்துற்றா
னன்றுதொட்டங்கண்மேவுமலங்கொளிச்சறுவதீர்த்தத்
தின்றடம்புனலின்மூழ்கியெழில்வளர்திருவேகம்பஞ்
சென்றுகண்டிறைஞ்சப்பெற்றோர்செய்கொலைத்தீமைதீர்வார்.

(இ - ள்.) என்று இதுநிறுவிதீர்த்தநாயகன் இலிங்கத்து உற்றான் - என்று இப்பலனை அத்தீர்த்தங்களுக்குத் தந்தருளித்தீர்த்த நாயகனென்னுந் திருநாமம் வாய்ந்த இறைவன் அச்சிவலிங்கத்துட் கரந்தருளினன், அன்று தொட்டு அங்கண் மேவும் அலங்கு ஒளிசறுவதீர்த்தத்து இனிமை தடபுனலின்மூழ்கி - அக்காலந்தொட்டு அவ்விடத்தமைந்த விளங்கும் ஒளிவாய்ந்த சறுவதீர்த்தத்தின் இனிய பரந்த நீரில் மூழ்கி, எழில் வளர் திரு ஏகமபம் சென்று கண்டுஇறைஞ்ச பெற்றோர் - தோற்ற மிக்கதிருவேகம்பத்தைத் தரிசித்து வணங்கப்பெற்றவர்கள், செய் கொலை தீமைதீர்வார் - தாம் செய்த கொடுங் கொலையால்வரும் தீயபயனினின்றும் நீங்குவார்.

தடபுனல் உரிச்சொற்றொடராதலால் பொதுவிதியையேலாது மெல்லெழுத்து மிக்கது. (கசு)

தந்தையைச்செகுத்தபாவந்தணந்தனன்பிரகலாதன்
முந்தையோர்ச்செகுத்தபாவம்வீடணன்முழுதுந்தீர்ந்தான்
மைந்துடைப்பரசிராமன்வீரரைவதைத்தபாவஞ்
சிந்தினன்சறுவதீர்த்தச்செழும்புனல்குடைந்தபேற்றால்.

(இ - ள்.) சறுவதீர்த்தம் செழும்புனல் குடைந்த பேற்றால்-சறுவதீர்த்தத்தில் நிறைந்தபுனலில்மூழ்கியபயனால், பிரகலாதன்தந்தையை செகுத்தபாவம்தணந்தனன்-பிரகலாதன் தனது பிதாவாகிய இரணியனைத் திருமாலாற் கொல்வித்தபாவத்தினின் றும் நீங்கினான், வீடணன்மூத்தையோர் செகுத்தபாவம் முழுதும் தீர்ந்தான்-விபீடணன் தனது மூத்தோராகிய இராவணன் முதலியோரை இராமமூர்த்தியால் கொல் வித்த பாவமுற்றும் நீங்கினான், மைந்துஉடைய பரசிராமன் வீரரைவதைத்த பாவம் சிந்தினன் - வலிமையையுடைய பரசிராமன் தன்னோடுபோர் செய்யக்கருதாத வீரர் களைக் கொன்ற பாவத்தினின்றும் நீங்கினான்.

பரசிராமன் தன்னொடு போர்செய்யக் கருதாத வீரரைவதைத் தமையால் பர சிராமன் வீரரைவதைத்தபாவஞ் சிந்தினனென்றார். (௧௭)

அருச்சுனன்றுரோணமேலோனாதியர்ச்செகுத்தபாவம்
பிரித்தனனசுவத்தாமன்பெறுங்கருச்சிதைத்தபாவ
மிரித்தனனுலகிலின்னுமெண்ணிலர்சறுவதீர்த்தத்
திருப்புனல்குடைந்துதீராக்கொலைவினைத்தீமைதீர்ந்தார்.

(இ-ள்.) அருச்சுனன் துரோணமேலோன் ஆதியர் செகுத்தபாவம் பிரித்தனன்-அருச்சுனனானவன் துரோணாசாரியன்முதலிய ஆசிரியரைக்கொன்றபாவத்தினின்று நீங்கினான், அசுவத்தாமன் பெறும் கருசிதைத்தபாவம் இரித்தனன்-துரோணன் புத்திரனாகிய அசுவத்தாமனென்பவன் (இனி உத்தரை) பெறுங்கருவை அழித்தபாவத் தினின்று நீங்கினான், உலகில் இன்னும் எண்ணிலர்-உலகத்தில் இன்னும் அளவில் லோர், சறுவதீர்த்தம் திருப்புனல் குடைந்து தீராத கொலைவினை தீமை தீர்ந்தார்-சறுவதீர்த்தத்தின் அழகிய நீரில்மூழ்கித்தீர்வில்லாத கொலைத் தொழிலால் வந்ததீய பயனின்றும் நீங்கினார்கள்.

துரோணமேலோன் ஆதியரென்றது கிருபாசாரியனுள்ளிட்டாரை. (௧அ)

சிலைநுதன்மகளிர்மைந்தரின்னுமத்தெண்ணீர்மூழ்கிற்
கொலைவினைப்பாவந்தீர்வார்குரைகடற்பரப்பென்றெண்ணித்
தலைவருமுகிலின்கூட்டந்தனித்தனிவாய்மடுக்கு
மலைபுனற்சறுவதீர்த்தப்பெருமையாரளக்கற்பாலார்.

(இ-ள்.) சிலை நுதல் மகளிர் மைந்தர் இன்றும் அத்தெள்நீர் மூழ்கில் கொலைவினை பாவம்தீர்வார் - வில்லையொத்த நெற்றியையுடைய பெண்களும் புருடரும் இப் போதும் அந்தச்சறுவதீர்த்தத்தில் நீராடில் கொடுங்கொலைத்தொழிலால் விளைந்தபாவ த்தினின்றும் நீங்குவார், தலைவருமுகிலின் கூட்டம் குரைகடல்பரப்பு என்றுஎண்ணி தனிதனிவாய் மடுக்கும் - செறிந்துவரு மேகத்தின்கூட்டங்கள் இது ஒலிக்குங்கட ற்பரப்பென்று கருதித் தனித்தனி நீர்பருகும், அலைபுனல் சறுவதீர்த்தம்பெருமை-அலைக்கும் நீர்மயமாகிய சறுவதீர்த்தத்தின் பெருமையை, அளக்கற்பாலார்யார்-அளவறுத்துக் கூறும் பகுதியையுடையோர் எவர்:

யார் என்னும் வினாவினைக் குறிப்புமுற்று இங்கு இன்மை மேல்நின்றது. (௧௯)

மற்றதன்கரையின்கீழ்பால்வருணனெம்பெருமான்றன்னை
முற்றிழைக்கங்கையாளோடிருத்திமுன்றொழுதுநீரு
ளுற்றுறையுமாக்குநீர்க்குமொருதனித்தலைவனாகப்
பெற்றனனதன்பேர்கங்காவரமெனப்பிறங்குமாலோ;

(இ - ள்.) அதன் கரையின்கீழ்பால்- அத்தீர்த்தக்கரையின் கீழ்பாலில், வருணன் முற்றிழைகங்கையாளோடு முன் இருத்தி தொழுது-தொழில்முற்றிய ஆபரணமணிந்த கங்கையோடு எமதுபெருமானைத்தாபித்து முன்னர் வணங்கி, நீருள் உற்று உறைஉயிர்க்கும் நீர்க்கும்ஒருதனிதலைவன் ஆக பெற்றனன் - நீரிற்பொருந்துவசிக்கும் உயிர்களுக்கும் நீருக்கும் ஒப்பில்லாத தலைவனாகப்பேறுபெற்றான், அதன்பேர் கங்காவரம் என்ன பிறங்கும் - அத்திருத்தளியின் பெயர் கங்காவரமென்னப் பெயர்பெற்று விளங்கும். (உ0)

பாற்றினமிடைந்தகூர்வாய்ப்படைமழுக்குடங்கைப்புத்தேண்
மாற்றருங்கருணை முந்நீர்வாரியினிறைந்துதேங்கு
நாற்றிசையணவுஞ்சீர்த்திநளிபுனற்சறுவதீர்த்த
மேற்றிசைக்கரைக்கண்மேவும்விச்சுவநாதத்தானம்.

(இ-ள்.) பாறு இனம்மிடைந்த கூர்வாய் படைமழுகுடங்கை புத்தேள்மாற்றரும் கருணை முந்நீர்வாரியின் - பருந்தின் கூட்டங்கள் நெருங்கிய கூரியவாய் வாய்ந்த மழுவாயுதத்தை யேந்திய உள்ளங்கையையுடைய இறைவனது மாறுதலில்லாத கிருபைக்கடல்போல, நிறைந்துதேங்கும் - நிறைந்துதேங்கிய, நால்திசை அணவுஞ் சீர்த்தி நளிபுனல் சறுவதீர்த்தம் மேல்திசை கரைக்கண் விசுவநாதத்தானம் மேவும் - நான்குதிசைகளிலும் அளாவிய கீர்த்தியையுடைய பெரிய நீர்மயமாகிய சறுவதீர்த்தத்தின் மேற்றிசையில் விச்சுவநாதருடைய திருத்தளியமைந்து விளங்கும். (உக)

மலர்தலையுலகின் முக்கண்வானவனினிதுவைகுந்
தலமெலாமருவுங்காஞ்சிவிச்சுவநாதன்றன்பாற்
கலிபுகழ்விசுவநாதமுதல்வனுங்காசிதன்னில்
இலகொளிமாடக்காஞ்சிநகரெமக்கினிதெனவெண்ணி.

(இ - ள்.) மலர்தலை உலகின் முக்கண்வானவன் - பரந்த இடத்தையுடைய உலகின்கண் திரிநேத்திரங்களையுடைய இறைவன், இனிதுவைகும் தலம் எலாம் காஞ்சிவிச்சுவநாதன் தன்பால் மருவும்-இனிதாக எழுந்தருளியதலங்கள் யாவும் காஞ்சியில் விச்சுவநாத இறையவன் சந்நிதானத்தில் ஒருசேர அமைந்திருக்கும், புகழ்கலி விசுவநாதமுதல்வனும் - புகழ்மிக்க விசுவநாத இறைவனும், காசிதன்னில் இலகு ஒளி மாடம் காஞ்சிநகர் இனிது என்று எண்ணி - தானெழுந்தருளிய காசியென்னுந் திருப்பதியினும் விளங்கு மொளிவாய்ந்த மாடங்கள் நெருங்கிய காஞ்சி என்னும் திருநகரம் தமக்கினிதென்று கருதி.

விச்சுவாநாதன் என்னும் பாடம் அச்சின்பிழையெனக் கற்போர் யாவரும் எளிதிற்றெரிந்து விச்சுவநாதனெனக்கொண்டே பாடம் ஓதுவர், அஃதோர்பிழையாகக் கருதித்திருத்தினவர் பொருண்மயக்கதரும் காசி என்னும் பாடம்பெருவழுவன்றோ எனவுணர்ந்து காஞ்சியெனத்திருத்தாது விட்டது சரியென்று விட்டனர்போலும்.

வெள்ளிவெண்கயிலையாதியிடங்களின்மேன்மைசான்ற
வள்ளலம்பழனக்காஞ்சியணிநகர்ச்சறுவதீர்த்தப்
பள்ளநீர்க்கரைக்கணெய்திவைகினன்பரிவாலங்கண்
வள்ளலைத்தொழுதுமுத்திமண்டபங்காண்போர்முத்தர்.

(இ - ள்.) வெள்ளி வெண்கயிலை ஆதி இடங்களில்—வெள்ளியாகிய வெள்ளிய திருக்கயிலைமுதலிய திருப்பதிகளினும், மேன்மைசான்ற அளளல் அம் பழனம் காஞ்சிஅணிநகர் - மேன்மைமிக்க சேறுவாய்ந்த அழகிய வயல்சூழ்ந்த காஞ்சியென்னும் அழகியதிருநகரில், சருவதீர்த்தம் பள்ளம் நீர் கரைக்கண் எய்தினைகினன்-சருவதீர்த்தமாகிய நீர்மயமாகிய தடாகத்தின் கரையிலெழுந்தருளினன், பரிவால் அங்கண் வள்ளலைதொழுது முத்திமண்டபம்காண் போர்முத்தர் - அன்போடு அவ்விடத்து இறைவனை வணங்கி முத்திமண்டபத்தைத் தரிசிப்போர் சீவன் முத்தராவார்கள். (௨௩)

மண்டபவருநாள்செல்லாக்காஞ்சிமாநகரின்மூன்று
மண்டபந்திகழுமுத்தீச்சரத்தெதிர்வயங்குமுத்தி
மண்டபமொன்றுசாற்வதீர்த்தத்தின்மருங்குமுத்தி
மண்டபமொன்றுகண்டோர்தமக்கெலாம்வழங்குமுத்தி.

(இ - ள்.) மண்தப வருநாள் செல்லாத காஞ்சிமாநகரில் மூன்றுமண்டபம்திகழும் - நிலவுலகு அழியவரும் ஊழிகாலத்தும் அழியாத காஞ்சியென்னும் பெரிய திருநகரத்தின் கண் மூன்றுமண்டபங்கள் விளங்கும், முத்தீச்சரத்து எதிர்வயங்கும் முத்திமண்டபம் ஒன்று - முத்தீச்சரத்தின் எதிரேவிளங்கும் முத்திமண்டபம் ஒன்றுளது, சாற்வதீர்த்தத்தின் மருங்கு முத்திமண்டபம் ஒன்று - சருவதீர்த்தத்தின் பக்கத்தில் முத்திமண்டபம் ஒன்றுளது, கண்டோர்தமக்கு எல்லாம் முத்திவழங்கும்-தரிசித்தோர்க் கெல்லாம் அவ்விரண்டு முத்தியைத்தரும். (௨௪)

உருவமென்கமலம்பூத்தவுயர்சிவகங்கைத்தென்பாற்
றிருவிராமீச்சரத்துச்சிவபிரான்றிருமுன்னுக
விருவினைப்பிறவிக்கஞ்சியெய்தினோர்க்குறுபேரின்ப
மருவுறும்பரமானந்தமண்டபமொன்றுமாதோ.

(இ - ள்.) உருவம் மென்கமலம் பூத்த உயர்சிவகங்கைதென்பால் திருஇராமீச்சரத்து சிவபிரான்திருமுன்னுக - உருவமைந்த மெல்லிய தாமரைகள்பூத்த உயர்ந்த சிவகங்கையின் தென்பக்கத்தில் திருவிரா மீச்சரத்தில் எழுந்தருளிய சிவபிரான் திருமுன்னுக, இருவினைபிறவிக்கு அஞ்சி எய்தினோர்க்கு - நல்வினை தீவினையென்னும் இருவினையால் வரும் பிறவியையஞ்சியடைந்தோர்க்கு, உறுபேரின்பம் மருவுறும் பரமானந்த மண்டபம் ஒன்று - மிக்க பேரின்பத்தை விளைக்கும் பரமானந்தமண்டபம் ஒன்றுளது. (௨௫)

மண்டபமினையமூன்றும்வைகறையெழுந்துநேசங்
கொண்டுளநினையப்பெற்றோருணர்வெலாங்கொள்ளைகொண்ட
பண்டைவல்வினையின்வீறும்பற்றியமலங்கள்மூன்றும்
விண்டுபேரின்ப வெள்ளவேலையிற்றிளைத்துவாழ்வார்.

(இ - ள்.) மண்டபம் இனையமூன்றும் - இந்தத்திருமண்டப மூன்றையும், வைகறைஎழுந்து நேசம்கொண்டு உளம் நினையபெற்றோர் - விடியற்காலையிலெழுந்து அன்புபூண்டு மனத்தில் நினைப் போர், உணர்வு எல்லாம்கொள்ளைகொண்ட பண்டை வல்வினையின் வீறும் - தமது அறிவையெல்லாங் கொள்ளைகொண்ட சஞ்சிதவினையின் பெருக்கமும், பற்றியமலங்கள் மூன்றும் விண்டு - மூலைதவிடுஉ மிபோல ஆன்

மாவைவிடாது பற்றிய ஆணவமாயை காமியமென்னு மூன்றுமலங்களும் நீங்கி, பேரின்பம் வெள்ளம் வேலையில் திளைத்துவாழ்வார் - பேரின்பமென்னுங் கடலுள் அழுந்திவாழ்வார்கள்.

சஞ்சிதவினை பிறவிக்குவித்தாகலின் உணர்வெலாங் கொள்ளைகொண்ட பண்டைவல்வினையின்வீறு எனவும், அது நினைதலால்வரும் சிவபுண்ணிய முதிர்ச்சியால் அது வொழியுமாதலால் விண்டெனவுங் கூறினர். (உகூ)

சறுவதீர்த்தப் படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஙூசச.

---

# நவக்கிரகேசப்படலம்.

---

கலிநிலைத்துறை.

தழங்குபெரும்புனற்பரவைச்சறுவதீர்த்தத்தடங்கோட்டின்
முழங்குமறித்திருக்கரத்துமுதல்வனிடங்களெடுத்துரைத்தாம்
வழங்குவளிக்கடவுளுமொன்பதிற்றுக்கோளும்வழிப்பட்ட
குழங்கனறுந்தொடைக்கொன்றைக்குழகன்றளிகளினிப்புகல்வாம்.

(இ - ள்.) தழங்குபெரும் புனல்பரவை சறுவதீர்த்தம் தடகோட்டில்-ஒலிக்கும் பெரிய நீர்மயமாகிய பரந்த சறுவதீர்த்தமென்னும் பரந்த திருக்குளக்கரையில், முழங்கும் மறி திருக்கரத்து முதல்வன் இடங்கள் எடுத்து உரைத்தாம்-அண்டங்கள்வெடிபடஒலிக்கும் மானையேந்திய திருக்கரத்தையுடைய இறைவனது இடங்களையெடுத்துக்கூறினோம், வழங்கு வளிகடவுளும் ஒன்பதிற்றுக்கோளும்வழிபட்ட - வீசும்வாயுதேவனும் நவக்கிரகங்களும் வழிப்பட்டுப்பூசித்த, குழங்கன் நறும்தொடைகொன்றை குழகன் தளிகள் இனிபுகல்வாம் - அழகிய நறுமணங்கமழுங் கொன்றைமாலையையணிந்த பேரழகையுடைய இறைவனது தளிகளை இனியெடுத்துக் கூறுவாம்.

பைத்தலைப்பூண்வயிரவனுர்பணைத்தடந்தோளந்தகனை
முத்தலைச்சூலத்தலைநின்றிழித்தஞான்றுமுழங்கழல்வா
யத்தகைத்திண்சூலத்தாலகழ்ந்தசூலத்தடந்தீர்த்த
மித்தரைக்கட்சிறப்பெய்துமுவாவிலங்கீரினிதாடி.

(இ - ள்) பைதலை பூண் வயிரவனுர் பணைதடம் தோள் அந்தகனை - படத்தைத் தலையில்வாய்ந்த சர்ப்பாபரணத்தை யணிந்த வயிரவர்க்கடவுள் பருத்ததோளையுடைய அந்தகாசுரனை, முத்தலை சூலத்தலை நின்று இழித்த ஞான்று - மூன்று கவராயுள்ள சூலத்தின்றலை நின்று இறக்கியகாலையில், முழங்கு அழல்வாய் அத்தகை திண் சூலத்தால் அகழ்ந்த சூலத்தடம் தீர்த்தம் - முழங்கும் தீயைவாயிலுடைய அத்தன்மையையுடைய தன் திணணிய சூலத்தினுல் தோண்டிய பெரிய சூலத்தீர்த்தம், இதரைக்கண்சிறப்பு எய்தும்-இந்நிலவுலகில் சிறப்புடையும், உவாவில் அங்கீர் இனிதாடி-அமாவாசையில் அத்தீர்த்தத்தினினிதாக மூழ்கி.

அந்தகாசுரனை வயிரவக்கடவுள் சூலத்தாற் கோத்தமையும், அச்சூலத்திலிருந்திறக்கி அவனுக் கருளினமையும் அந்தகேசப்படலத்திற்காண்க. அமாவாசை, பூரணை, சினிவாலிஇம் மூன்றும் உவா ஆதலால் அவாவாசை யென்றும்.

தென்புலத்தோர்கடன்செலுத்திலனையர்துறக்கஞ்சென்றெய்தி
யின்புறுவாரதன்கரைக்கணிலிங்கமமைத்துமருத்திறைவன்
மென்பனிநீர்செவ்வந்திவேரிச்செழும்பூப்பலகொண்டு
வன்பகலவழிபட்டுக்கந்தவாகனெனப்பெற்றான்.

(இ-ள்.) தென்புலத்தோர் கடன்செலுத்தில் - பிதிரர் நீர்க்கடன்களைச் செலுத்தில், அனையார் துறக்கம் சென்று இன்புறுவார்-அப்பிதிரர்கள் விண்ணுலகிற் சென்றடைந்து இன்பத்தையடைவார், அதன்கரைக்கண் மருத்துஇறைவன் இலிங்கம் அமைத்து, அத்தீர்த்தக்கரையில் வாயுதேவன் சிவலிங்கதாபனஞ்செய்து, மென்பனி நீர் செவ்வந்திவேரி செழும்பூபலகொண்டு - மெல்லிய பனிநீரையும் வாசமிக்க அன்றலர்ந்த செவ்வந்திமலர்பலவற்றையுங் கொண்டு, வன்புஅகலவழிபட்டு கந்தவாகன் என பெற்றான் - தீமைநீங்க வழிபாடுசெய்து கந்தவாகனனென ஓர் பெயரும் பெற்ற

ர-கந்தம் வகிக்கிறவன். (௩)

மருத்தேத்துஞ்செவ்வந்தீச்சரமால்வரைப்பின்வடகுடக்காந்
திருத்தேத்துக்கதிர்ப்பரிதிச்செல்வன்பரிதிக்குளந்தொட்டுக்
கருத்தேய்த்துவீடளிக்குமந்நீராட்டிக்கருதாரூ
ருருத்தேத்துஞ்சுரார்க்கருளுமொளியைத்தொழுதுவரம்பெற்றான்

(இ-ள்.) மருத்து ஏத்தும் செவ்வந்தீச்சரம்மால் வரைப்பில்வடகுடக்கு ஆம் திருதேத்து - வாயுதேவன் வழிபட்டு வணங்கும் செவ்வந்தீச்சரமென்னும் எல்லையின் கண்வடமேற்காகிய அழகிய எல்லையில், கதிர்ப்பரிதி செல்வன் பரிதிக்குளம்தொட்டு - ஒளிவாய்ந்த சூரியன் தன்பெயரால் ஒரு திருக்குளந்தோண்டி, கருதேய்த்து வீடு அளிக்கும் அந்நீர் ஆட்டி - பிறவியையொழித்து முத்தியைத்தரும் அந்நீரைக்கொண்டு அபிடேகஞ்செய்து, கருதார் ஊர் உருத்து ஏத்தும் சுரர்க்கு அருளும் ஒளியைதொழுது வரம்பெற்றான் - பகைவரது திரிபுரத்தைப்புன்னகையா லெரித்துத்தன்னைவணங்கிய தேவர்களுக்கருளிய சிவபெருமானை வணங்கி வழிபட்டனன்.

திரிபுரத்தையெரித் தருளியது தேவர்கள் இடுக்கண்தீர்த்தற் பொருட்டாதலில் தனதுஇடுக்கண்தீர்த்து அருளுதற் பொருட்டுக் கருதாரூர் உருத்தேத்துஞ்சுரார்க்கருளும் ஒளியைத்தொழுது என விசேடணத்தை வாக்கியரூபமாகக் கூறுதலால் கருத்துடையடையணி. (௪)

வீங்கிருள்சீத்தொளிபரப்பிப்பைங்கூழ்புரக்கும்வெண்கதிரோன்
றேங்கமலமுகையவிழ்க்குஞ்சறுவதீர்த்தத்தென்றிசையி
னுங்கணறுஞ்சுவைத்தெள்ளாரமுதத்தடந்தொட்டதன்கோட்டிற்
பாங்குபெறப்பிஞ்ஞகன்றாளருச்சித்தேதத்திப்பயன்பெற்றான்.

(இ-ள்.) வீங்கு இருள்சீத்து ஒளிபரப்பிபைங் கூழ்புரக்கும் வெண்கதிரோன்-பரந்த இருளை யோட்டி யொளியை வீசிப் பசியபயிரையோம்புஞ் சந்திரன், தேம்கமலமுகை அவிழ்க்கும் சறுவதீர்த்தத்தென்திசையின் ஆங்கண் - வாசம்வீசும் தாமரை

அரும்புடைந்து தேன் சிந்தும் சறுவதீர்த்தத்தின் தென்பாலில் அவ்விடத்து, நறும் சுவை தெள் ஆர்அமுதம் தடம்தொட்டு-நறிய சுவைவாய்ந்த தெள்ளிய அமுததீர்த்த மெடுத்து, அதன்கோட்டில் - அத்தீர்த்தக்கரையில், பிஞ்ஞகன்தாள் பாங்குபெற அருச்சித்து எத்திபயன் பெற்றான் - இறைவனது திருவடியை ஆகமவிதிவழியரு ச்சனைசெய்து வணங்கிப்பயன் பெற்றனன். (௬)

நலமொன்றுசெவ்வந்தீச்சரக்கீழ்ஞாங்கரேழிலிங்க
நிலமைந்தன்மதிமைந்தன்வியாழம்வெள்ளிநீடுசனி
யலமந்தவிருபாந்தளருச்சித்தருங்கோணிலைபெற்றார்
வலம்வந்தங்கவைதொழுவோர்தம்மைக்கோள்கள்வருத்தாவால்.

(இ-ள்.) நலம் ஒன்று செவ்வந்தீச்சரக்கீழ் ஞாங்கர் ஏழ் இலிங்கம் - நன்மைய மைந்த செவ்வந்தீச்சரக்கீழ்ப் பாலில் ஏழு சிவலிங்கங்களை, நிலமைந்தன் மதிமைந் தன் வியாழம் வெள்ளி நீடு சனி அலமந்த இருபாந்தள் அருச்சித்து, செவ்வாயும் புத னும் வியாழமும் வெள்ளியும் புகழ்மிக்கசனியும் சுழன்று திரியும் இராகுகேதுக்க ளும் அருச்சனை செய்து, அருங்கோள் நிலைபெற்றார் - தமக்குரிய கிரகபதங்களைப் பெற்றார்கள், அங்கு அவை தொழுவோர் தம்மைகோள்கள் வருத்தா - அவ்விடத்தில் பிரதக்ஷிணம்வந்து வணங்குவோர்கள் அந்நவக்கிரகங்களை வருத்தமாட்டா. (௭)

நவக்கிரகீச்சரப் படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசுது௦

---

# பிறவாத்தானப்படலம்.

---

கலி விருத்தம்.

பவனனொடொன்பதிற்றுக்
மிவறிப்போற்றுமிடங்கள்கூ
சிவனைச்செவ்வாய்முதலியோர்தொழும
புவியிற்பிறவாத்தானம்போற்றுவாம்,

(இ-ள்.) பவனனொடு ஒன்பதிற்றுக் கோள்களும், வாயுதேவனோடு நவக்கிரகங் களும், இவறிபோற்றும் இடங்கள் கூறினும் - விரும்பித்துதிக்கும் தளிகளையெடுத் துச்சொன்னும், சிவனை செவ்வாய் முதலியோர் தொழும் புவியில் - சிவபெருமா னைச் செவ்வாய் முதலிய கிரகங்கள் வணங்கும் நிலவுலகில், பிறவாத்தானம் போற் றுவாம் - பிறவாத்தான மென்னுந் திருத்தளியை எடுத்துக்கூறுவாம். (௧)

வாமதேவனென்னுமாமுனி
காமரன்னை கருவின்வைகுநாட்
பேமுறுத்தும்பிறவியஞ்சின
னேழுமுமையிதுநினைக்குமால்

(இ-ள்) வாமதேவனென்னு மாமுனி-வாமதேவனெனப் பெயர்வாய்ந்த மகரி ஷி, காமர் அன்னைகருவில் வைகும் நாள் - அழகிய தன் தாய்க்கருப்பத்தில் தங்கிய நாளில், பேம் உறுத்தும் பிறவி அஞ்சினன் - அச்சத்தைத்தரும் பிறவியை அஞ்சி, எழுமுமை இது நினைக்கும் - சிறிதும் மயங்காமல் இதனை நினைப்பான். (௨)

பொதியுமாயப்புவியிற்றோன்றிநான்
மதிமயங்கிமற்றுமின்னணங்
கொதிபிறப்பிற்கொட்புறாதெனக்
கதிபனேயிங்கருளிச்செய்யென.

(இ - ள்.) மாயம்பொதியும் புவியில்தோன்றி - மாயையாலமைந்தநிலவுலகிற்பிறந்து, நான் மதிமயங்கிமற்றும் இன்னணம் கொதிபிறப்பில் கொட்புறாது, நான் அறிவுமயங்கி மீளவும் இவ்வாறுவருத்தும் பிறப்பிற்பட்டுச் சுழலாது, எனக்கு அதிபனே இங்கு அருளிச்செய் என - எனக்கு இறைவனே இவ்விடத்து அருளிச்செய்யாயென்று குறையிரக்க.

மற்று பிறிது பொருளில்வந்த இடைச்சொல். (௩)

தோற்றமீறில்லாதசோதிவெள்
ளேற்றினானையிதயத்தன்பினாற்
போற்றுகாலைபுனிதனாண்டுறீஇச்
சாற்றலுற்றான்றவமுனிக்கரோ.

(இ - ள்.) தோற்றம் ஈறு இல்லாதசோதி வெள் ஏற்றினானை - தனக்கோர்பிறப்பு இறப்புமில்லாதவொளிவாய்ந்த வெள்ளிய இடபவூர்தியையுடைய இறைவனை, இதயத்து அன்பினால் போற்றுகாலை - தன்மனத்தில் அன்போடுதியானிக்குங்காலையில், புனிதன் ஆண்டு உற்று தவமுனிக்கு சாற்றலுற்றான் - சிவபெருமான் அவ்விடத்தெழுந்தருளித் தவம்வாய்ந்த வாமதேவமுனிக்குக் கூறத்தொடங்கினான். (௪)

மண்ணின்மீதுதோன்றிமற்றெமை
நண்ணிகாஞ்சிநகரிற்பூசனை
பண்ணுமோவெம்பவத்தொடக்குனை
யண்ணுறாதென்றருளிச்செய்தனன்.

(இ - ள்.) மண்ணின்மீதுதோன்றி காஞ்சிநகரில் எம்மை நண்ணி பூசனைபண்ணு - நிலவுலகிற்றோன்றிக் காஞ்சித்திருநகரத்தில் அடைந்து எம்மைப் பூசனைசெய், வெம்பவத்தொடக்கு உன்னை அண்ணுறாது என்று அருளிச்செய்தனன் - கொடிய பிறவித்தொடக்கு உன்னையடையாதென்று அருள்செய்தனன்.

மோ - முன்னிலையசை. (௫)

வள்ளல்புகலுமாற்றங்கேட்டன

பள்ளமுந்நீர்ப்படிமிசைப்பிறந்
தெள்ளருஞ்சீர்க்காஞ்சியெய்தி

(இ - ள்.) வள்ளல்புகலும் மாற்றம் கேட்டனன் - இறைவனருளிய திருவார்த்தையைக்கேட்டு, உள்ளம் மேன்மேல் உவகைபூத்தனன் - தனது உளத்தில் மேலுமேலும் மகிழ்கூர்ந்து, பள்ளம் முந்நீர்ப்படி மிசைபிறந்து - கடல்சூழ்ந்த நிலவுலகிற்பிறந்து, எள்ளரும் சீர்காஞ்சி எய்தினன் - இகழ்ச்சி இல்லாத சிறப்புவாய்ந்தகாஞ்சித்திரு நகரையடைந்து.

கேட்டனன், பூத்தனன், எய்தினன் முற்றெச்சங்கள். (௬

இலிங்கமங்கணினிதிருத்திநூற்
புலங்கொண்முறையிற்பூசையாற்றுபு
கலங்குபிறவிக்கரிசினீங்கினன்
மலங்கருஞ்சீர்வாமதேவனே.

(இ - ள்.) மலங்கரும்சீர் வாமதேவன் - கெடுதலில்லாத சிறப்புவாய்ந்த வாம தேவனென்னு முனிவன், இலிங்கம் அங்கண் இனிது இருத்தி-சிவலிங்கப்பெருமானைஅவ்விடத்து இனிதாகத்தாபித்து, நூல்புலங்கொள்முறையின் பூசை ஆற்றுபு - ஆகமநூலிற்கூறிய முறையே பூசனைசெய்து, கலங்குபிறவிகரிசின்நீங்கினன்-கலங்குதற்கெல்லையாகிய பிறவியாகிய குற்றத்தினின்று நீங்கினன். (எ)

அன்னவாற்றாற்பிறவாத்தானமாயதா
லின்னதானம்வழிபட்டேத்தப்பெற்றவர்
பின்னர்மாதர்கருவினெய்திப்பேதுறார்
கன்னிபாகன்கருணைவெள்ளங்காண்பரே.

(இ - ள்.) அன்ன ஆற்றால் பிறவாத்தானம் ஆயது - அத்தன்மையால் அத்தானம் பிறவாத்தானமெனப்பெயர்பெற்றது, இன்னதானம் வழிபட்டு ஏத்தபெற்றவர்- இத்தானத்தைவழிபட்டு வணங்கப்பெற்றவர்கள், பின்னர் மாதர் கருவின் எய்திப் பேதுறார் - பின்பு தாய்மார் கருப்பத்தையடைந்துமயங்காது, கன்னிபாகன் கருணை வெள்ளங்காண்பர்-உமையை இடப்பாகத்திலுடைய இறைவனது அருள்வெள்ளத்

இத்திருத்தளியையடைந்து வழிபட்டு வணங்கினோர் திருவருளடைந்து பிறவாரென்பார் - பின்னர் மாதர்கருவினெய்திப் பேதுறார் கன்னிபாகன் கருணைவெள்ளங்காண்பர் என்றார். (அ)

அங்கட்போற்றிவாமதேகனருளினாற்
றுங்கக்கயிலையெய்திநோன்றாடொழுதெழூஉக்
கங்கைச்சடையானுதவிலிங்கங்கைக்கொடு
பங்கப்பழனக்காஞ்சிப்பதியின்மீண்டரோ.

(இ - ள்.) வாமதேகன் அங்கண்போற்றி - வாமதேகனென்னும் ஓர் சிவகணத்தலைவன் அப்பிறவாத்தானத்தைவணங்கி, அருளினால் துங்கம் கயிலை எய்தி - அவ்விறைவனருளால் பெருமை வாய்ந்ததிருக்கயிலையையடைந்து, நோன்தாள் தொழுது எழூஉ - அவ்விறைவனது வலியதிருவடியையடைந்து, கங்கைச்சடையான் உதவு ...ங்கம் கைக்கொடு, கங்கையையணிந்த சடாபாரத்தையுடைய இறைவன் தந்தருளிய சிவலிங்கத்தைக் கையிற்கொண்டு, பங்கம் பழனம் காஞ்சிபதியில் மீண்டு - சேறமைந்தவயல்சூழ்ந்த காஞ்சித்திருப்பதியில்திரும்பி.

அடியவர் பிறவிநோயை நீக்கும்வன்மையுடைமை தோன்றநோன்றாள் எனவும், என்றும் நீர்வளம் அறாததென்பது தோன்றப் பங்கப்பழனமெனவுங்கூறினார். வாமதேவனென்னும் பாடம் தவறுதலால் வாமதேகனெனப் பாடங்கொள்க. வாமதேகன் சுந்தரமான சரீரமுடையவன். (கூ)

மேன்மைசான்றபிறவாத்தானமேற்றிசை
ஞானவாவிஞாங்கர்முத்தீச்சரனென
மானமுத்தித்தளியினிறுவிவாழ்த்தின
னேனவெண்கோட்டணியார்க்கினிதாமன்னதே.

(இ - ள்.) மேன்மைசான்ற பிறவாத்தானம் மேல்திசை - மேன்மைமிக்க பிறவாத்தானத்துக்கு மேல்பாலில், ஞானவாவிஞாங்கர் - ஞானகூபத்தின் பக்கத்தில், முத்தீச்சரன் என்னமானம் முத்தித்தளியில் நிறுவிவாழ்த்தினன் - முத்தீச்சரனென்னச்சிவலிங்கப்பெருமானை பெருமையமைந்த முத்தித்தளியில் தாபித்து வணங்கினன், அன்னது ஏனம் வெண்கோடு அணியார்க்கு இனிது ஆம் - அத்திருத்தளிபன்றியின் வெள்ளிய கொம்பினை அணியாகவணிந்த இறைவர்க்கு இனியது.

பிறவாத்தானப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் கககூ0.

---

# இறவாத்தானப்படலம்.

கலிநிலைத்துறை.

புள்ளிவண்டுபெடையோடாடிப்பொங்கரிற்
பள்ளிகொள்ளும் பிறவாத்தானம் பன்னினும்
துள்ளிவாளைபாயுநீர்சூழிதனயல்
வெள்ளிவரையாரிறவாத்தானம்விள்ளுவாம்.

(இ - ள்.) புள்ளிவண்டு பெடையொடு ஆடி - புள்ளியமைந்த ஆண்வண்டுகள் பெண்வண்டுகளோடுகலந்து, பொங்கரில் பள்ளிகொள்ளும் பிறவாத்தானம் பன்னினும்-சோலையிலுறங்கும் பிறவாத்தானத்தையெடுத்துக்கூறினும், வாளைதுள்ளிபாயும் நீர்சூழ் இதன் அயல் - வாளைதுள்ளிப்பாயும் நீர்சூழ்ந்த இப்பிறவாத்தானத்தின் பக்கலில், வெள்ளிவரையார் இறவாத்தானம் விள்ளுவாம் - வெள்ளியங்கிரியையுடைய இறைவரது இறவாத்தானத்தையெடுத்துக்கூறுவாம். (க)

இறவிக்கஞ்சிச்சில்தாபதர்கண்மாதவ
முறையிற்செய்தார்முன்னாளந்நாண்முன்னுற
நறவிற்றிகழுமுளரிமேலோனண்ணிநின்
றறவர்க்கென்னேவேட்டதென்றானங்கவர்.

(இ - ள்.) சில்தாபதர்கள் இறவிக்கு அஞ்சி - சில முனிவர் இறப்புக்கஞ்சி, முன்நாள் மாதவம் முறையிற்செய்தார்-முன்னாளில் பெரியதவத்தை முறையாகச்செய்தார்கள், நறவில் திகழும்முளரி மேலோன் அந்நாள் முன்னுற நண்ணிநின்று - தேன்மிகுதியால் விளங்குந்தாமரைமலரில்வசிக்கும் பிரமன் அக்காலத்தில் அவர்கள் முன்னடைந்து நின்று, அறவர்க்குவேட்டது என்னே என்றான் - முனிவர்களை நோக்கி நீங்கள் விரும்பியது யாதென்று வினவினன், ஆங்கு அவர் - அவ்விடத்து அம்முனிவர்கள்.

அறவர்க்கு நான்கனுருபுவந்தது உருபு மயக்கம். (உ)

உலகமுழுதுமுதவுமெந்தாயுன்னடித்
தலமேயன்றிச்சரணமில்லேஞ்சாவதற்
கலகிலச்சமுற்றேமதனைவெல்லுமா
றிலகவெங்கட்குரையாயென்றங்கேத்தினர்

(இ - ள்) உலகம் முழுதும் உதவும் எந்தாய் - உலகமுழுதும் ஒரு சேரத்தந்த என்தந்தையே, உன் அடித்தலமே அன்றிவேறு சரணம் இல்லேம் - உனது திருவடித் துணையன்றி வேறுசரணமில்லே, சாவதற்கு அலகில் அச்சம்உற்றேம் - இறத்தற்கு அளவில்லாத அச்சமடைந்தேம், அதனைவெல்லும் ஆறு இலக - அப்பிறப்பினைவெல்லும் உபாயம்விளங்க, எங்கட்கு உரையாய் என்று அங்கு ஏத்தினர் - எங்களுக்குக்கூறியருளாயென்று அவ்விடத்துத் துதித்தார்கள். (௩)

செங்காலன்னப்பாகன்கேளாத்தேத்துணர்க்
கொங்கார்பொங்கர்க்காஞ்சிநண்ணிக்கோமளை
பங்காராதிபகவன்பாதம்வழிபடி
னங்கேயிதனைப்பெறலாமென்றனவர்களும்.

(இ - ள்) செங்கால் அன்னப்பாகன் கேளா-செவந்தகாலையுடைய அன்னவூர்தியையுடைய பிரமன்கேட்டு, தேம்துணர் கொங்கு ஆர் பொங்கர் காஞ்சிநண்ணி - தேன்சிந்தும் பூங்கொத்துகளில் மகரந்தங்கள் நிறைந்த சோலைசூழ்ந்த காஞ்சித்திருப்பதியை யடைந்து, கோமளைபங்கு ஆர் ஆதிபகவன் பாதம் வழிபடின் - உமையம்மையை இடப்பாகத்திலுடைய இறைவன் திருவடிக்கு வழிபடில், அங்கே இதனை பெறலாம் என்றான் - அவ்விடத்தே இவ்வரத்தைப் பெறலாமென்று கூறினான், அவர்களும் அம்முனிவர்களும். (௪)

அன்னத்தோன்றலடிகள்போற்றிவிடைகொடு
நன்னர்க்காஞ்சிநகரநண்ணிநாயகன்
றன்னைத்தாபித்தேத்திச்சாவாமாட்சியின்
மன்னப்பெம்மானுதவப்பெற்றுவாழ்ந்தனர்.

(இ - ள்) அன்னத்தோன்றல் அடிகள்போற்றி விடைகொடு - அன்னவூர்தியையுடைய இறைவனது திருவடிகளை வணங்கி விடைபெற்று, நன்னர் காஞ்சிநகரம் நண்ணி - நன்மைவாய்ந்த காஞ்சித்திருநகரத்தையடைந்து, நாயகன் தன்னைதாபித்து ஏத்தி - இறைவனைத் தாபனஞ்செய்து வணங்கி, சாவாதமாட்சியின் மன்னபெம்மான் உதவபெற்றனன்-இறவாதநிலைமையில் நிலைபெற இறைவனருளப்பெற்று வாழ்ந்தார்கள். (௫)

சுவேதனென்பான்வாழ்நாட்கழிவுதுன்னுநாட்
சுவேதந்தீற்றுமாடச்சூழலதனிடைச்
சுவேதநல்லானூர்திநோன்றாடொழுதனன்
சுவேதனீற்றுனீத்தானிறவித்துன்பமே.

(இ-ள்) சுவேதன் என்பான் வாழ்நாட்கு அழிவுதுன்னும் நாள் - சுவேதனென்பவன் தனது ஆயுள் நாளுக்கு அழிவுநேர்ந்த காலையில், சுவேதம் தீற்று மாடச்சூழல் அதனிடை-சாந்து தீற்றியமாடங்கள் சூழ்தலையுடைய அத்திருத்தளியினிடத்து, சுவேதநல்ஆன் ஊர்திநோன்தாள் தொழுதனன் - வெள்ளியநல்ல இடபவூர்தியையுடையஇறைவனது பிறவிநோய்நீக்கும் வளமைவாய்ந்த திருவடியைவணங்கி,சுவேத

நீற்றன் இறவி துன்பம் நீத்தான் - வெள்ளிய திருநீற்றையணிந்த அச்சுவேதனென்ப வன் இறப்பின் துன்பத்தினின்று நீங்கினன்.

நீத்தான் முற்றெச்சம். பிறக்கும்போது நேருந்துன்பத்தினும் இறக்கும்போது நேருந்துன்பம் பெரிதாதலால் இறவித்துன்பமென்றார்.

"மரணவேதனையறிகுநர் யாவரே
கடவுளேயறிகிற்பார்." எனவருஞ்செய்யுளாலுணர்க. (௬)

மார்க்கண்டேயனங்கட்போற்றிமறலியைத்
தாக்கிநிலைமைபெற்றான்சாலங்காயின
னாக்கமைந்தன்மகனுமங்கணேத்துபு
சாக்காடற்றான்கணநாதச்சீர்தழுவினன்.

(இ-ள்.) மார்க்கண்டேயன் அங்கண்போற்றி - மார்க்கண்டேய முனிவர் அத் திருத்தளியிற் சிவபெருமானை வழிபட்டு, மறலியைதாக்கி நிலைமைபெற்றான் இயமனைவென்று சாவாநிலைமையைப் பெற்றனன், சாலங்காயினன் ஆக்கமைந்தன் மகனும் அங்கண் ஏத்துபு - சாலங்காயின முனிவனது செல்வம்போன்ற பவுத்திர னும் அச்சிவபிரானை வழிபட்டு - சாக்காடு அற்றான் கணநாதச் சீர்தழுவினன். இறப்பொழிந்து சிவகணங்களுக்குத் தலைமையாதற் சிறப்பையடைந்தான்.

சாலங்காயின முனிவன் வழிவந்த பவுத்திரனென்பார் ஆக்கமைந்தன் மகனு மென்றார் - அற்றான் முற்றெச்சம் (அ)

ஆயுண்மாய்வினின்னுமங்கணெண்ணிலர்
தூயவன்பிற்றொழுதுநிலைமைபெற்றன
ரேயவாற்றலாயுள்வேட்டோர்யாவரும்
பாயசீர்த்தியிறவாத்தானம்பணிகவே.

(இ-ள்.) ஆயுள்மாய்வின் - சிரணஆயுள் முடிவில், இன்னும் எண்ணிலர் அங் கண் - இன்னும் அளவில்லாதார் அத்திருத்தளியில், தூயஅன்பில் தொழுது நிலை மைபெற்றனர் - முறுகிய அன்பால் வழிபட்டு வணங்கி இறவாதநிலைமையைப்பெற் றார்,ஆயுள்வேட்டோர் யாவரும் - நீடித்த ஆயுளைவிரும்பிய சிரஞ்யுளையுடையவரும், ஏய ஆற்றல் - தங்களுக்குக் கூடிய வகையால், பாயசீரத்தி இறவாத்தானம் பணிக பரந்த கீர்த்திவாய்ந்தஇறவாத்தான மென்னுந் திருத்தளியை வழிபட்டு வணங்கக் கடவர்.

வல்வினை மெல்வினை என்னும் பத்திநெறியில் ஒருவகையா லென்பார் ஏய வாற்றலென்றார். வல்வினைப்பத்தி பிள்ளையையறுத்துக் கறிசமைத்து ஊட்டல் முத லியன-மெல்வினைப்பத்திஆகமவிதிப்படி சரியைகிரியைகளால்வழிபடல்முதலியன.

மெல்வினைப்பத்தியென்றதை,—

"ஆதியையர்ச்சித்தற் கங்கமுமங்கங்கே
தீதில்திறம்பலவுஞ் செய்வனவும் - வேதியனே
நல்வினையா மென்றோமக்கு மெளிதானவற்றை
மெல்வினையே யென்றது நாம் வேறு" எனவும்,

வல்வினைப்பத்தியென்றதை,—

வரங்கள்தருஞ் செய்யவயிரவர்க்குத் தங்கள்
கரங்களினாலன்று கறியாக்க-விரங்காதே

கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானவற்றை
வல்வினையே யென்றது நாமற்று'' எனவும்,

திருக்களிற்றுப் படியாரில் வருந்திருப்பா சுரங்களாலுணர்க.

இறவாத்தானப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௬௬௮.

# மகாலிங்கப்படலம்.

கலிநிலைத்துறை.

வெள்ளைத்திங்கட்பிள்ளைக்கீற்றுமிளிர்சடை
வள்ளற்கோமானிறவாத்தானம்வாழ்த்தினுங்
கிள்ளைச்சொல்லார்பயிலுமதனின்கீழ்த்திசை
விள்ளற்கருமாலிங்கத்தானம்விள்ளுவாம்.

(இ-ள்.) வெள்ளைக்கீறு பிள்ளைதிங்கள் மிளிர்சடை வள்ளல்கோமான் - வெள்ளிய இளஞ்சந்திரன் விளங்கும் சடாமுடியையுடைய இறைவனது, இறவாத்தானம் வாழ்த்தினும்-இறவாத்தானத்தின் பெருமையை யெடுத்துக்கூறினும், கிள்ளைசொல்லார் பயிலும் அதனின் கீழ்த்திசை-கிளிபோலுஞ் சொல்லையுடைய பெண்கள் இடைவிடாது சஞ்சரிக்கும் அவ்விறவாத்தானத்தின் கீழைத்திசையிலுள்ள, விள்ளற்கு அருமால் இலிங்கத்தானம் விள்ளுவாம், சொல்லுதற்கரிய மகாலிங்கத்திருத்தளியை யெடுத்துக் கூறுவாம்.

ஆன்மாக்களுக்கு அருளுவோன் என்பது தோன்றத்திங் கட்பிள்ளை மிளிர்சடை வள்ளல் என்றார். (௧)

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

வையமுழுதுமடியவருமோரூழிமுடிவின்
வெய்யவிருள்வந்தடரவிரிநீர்ச்சலதிவேகஞ்
செய்துநிமிர்ந்துபொங்கித்தேங்கிக்கிடந்தகாலைப்
பையவுறக்கநீத்துமீளப்படைக்கவுன்னி.

(இ - ள்.) வையம் முழுதும் மடியவரும் ஓரூழி முடிவில் - உலகமுற்றும் அழியவரும் ஒரூழியிறுதியில், வெய்ய இருள்வந்து அடர - கொடிய இருள்வந்துமூட, விரிநீர் சலதி வேகம் செய்து நிமிர்ந்து பொங்கி தேங்கி கிடந்தகாலை-பெரிய நீர்மயமாகிய கடல் தனது நிலைகடந்து எங்கும்பரவி விழுங்கிய காலையில், பைய உறக்கம் நீத்து மீளப்படைக்க உன்னி - மெள்ள யோக நித்திரையினின்று நீங்கிமீளவும் உலகினைப்படைக்கக் கருதி. (௨)

துங்கத்தனதுகரிற்சுடருமறையின்கிழவ
னெங்குமலைகள்புரளவேகப்புணரிவெள்ளந்
தங்குசெயலைநோக்கித்தடவுக்கருவிமுகில்போ
லங்கணரவிற்றுயிலுமையன்றனையுங்கண்டான்.

(இ - ள்.) அங்கம்நகரில்சுடரும் மறையின் கிழவன் - விளங்கும் வேதங் கட்குரிய பிரமன், எங்கும் மலைகள்புரள வேகம் புணரிவெள்ளம்தங்குசெயலை நோக்கி - உயர்ந்த தனதுசத்திய வுலகில் எவ்விடத்தும் மலைகள்புரள வேகத்தையுடைய கடல்நிலைபெற்ற செயலைப்பார்த்து, தடவுகருவி முகில்போல்-பெரிய திரண்டமேகம் போல, அங்கண் அரவில் துயிலும் ஐயன்தனையும் கண்டான் - திருவைகுந்தத்தில் சர்ப்பசயனத்தில் அறிதுயில் கொள்ளுந் திருமாலையும் பார்த்தான். (க)

கண்டுபுடையினணுகிக்கடுகவெழுப்பிமையல்
கொண்டுநீயாரெனறுவினவக்கொண்டலனையா
னண்டமுழுதுங்காக்குமகிலமுதல்வன்யானே
மிண்டுநீயாரென்பால்வேட்டதென்கொலென்றான்.

(இ - ள்.) கண்டுபுடையின் அணுகி கடுக எழுப்பி - பக்கலிலடைந்து கண்டு விரையவெழுப்பி, மையல்கொண்டு நீயார் என்று வினவ - மயக்கங்கொண்டு நீ யாரெ ன்றுபிரமன்வினவ, கொண்டல் அனையான் அண்டமுழுதும் காக்கும் அகிலமுதல் வன்யானே-மேகத்தையொத்த திருமால் எல்லாவண்டங்களையுங் காக்குஞ் செயலால் அவ்வண்டங்கள் முழுமைக்கும் முதல்வனாயுள்ளவன் யானொருவனே, மிண்டுநீயார் என்பால் வேட்டது என்கொல் என்றான் - இங்குவந்த நீயார் என்னிடத்து விரும் பியதுயாதுஎன்று வினவினன்.

தனது செருக்கால் திருமாலைத் தனக்கு முதல்வனென்றுணராமையால் மையல் கொண்டென்றார். (உ)

நறவமொழுகுமலரோன்கேட்டுநகையுட்கொண்டு
பிறருமல்லர்நீயுமல்லைபேணியுலக
நிறுவுமுதல்வன்யானேயென்னுமினையநெறியின்
மறலிக்கூறித்தம்முளூடல்வளர்த்துநின்றார்;

(இ - ள்.) நறவம் ஒழுகுமலரோன் கேட்டு நகை உட்கொண்டு - தேன்சிந்துந் தாமரையில் வசிக்கும் பிரமன் புன்னகையை யுட்கொண்டு, பிறரும் அல்லர் நீயும் அல்லை - உன்னையன்றிப் பிறருமுதல்வரல்லர் நீயும் முதல்வனல்ல, பேணி உலகம் நிறுவும் முதல்வன்யானே என்னும் இனையநெறியின் - விரும்பி உலகங்க ளைப்படைத்து நிறுவுதலால் யானொருவனே முதல்வன் என்று கூறும் இந்நெறியா ல், மறலிகூறி - ஒருவரோடொருவர் மாறுபட்டுக்கூறி, தம்முள் ஊடல்வளர்த்துநின் றார் - தம்முள் பெருங்கலாம் விளைத்து நின்றார்கள்.

பிரமன் உலகினைப்படைத்தலால்யான் முதல்வனெனவும், திருமாலவ்வுலகி னைக் காத்தலால் யான் முதல்வனெனவும் ஒருவர்க்கொருவர் கூறுதலால் இனைய நெறியின் மறலிக்கூறித் தம்முளூடல் வளர்த்து நின்றார் என்றார். (ங)

நாணுககழலசிலையினாணுபபூடடி
முந்தைக்கணைகளேர்த்தார்மூரிக்கனலிவருணன்
இந்துவிரவிப்படையுமேவியவைகள்மடியப்
பந்தவினையின்மருள்வார்தத்தம்படைவிட்டார்த்தார்.

(இ - ள்.) சிந்தை நாணுக்கழல - தமது மனத்திலுள்ள மானமாகிய நாண்கழல சிலையில் நாணுபூட்டி - வில்லில் நாண்பூட்டி, முந்துகணைகள் தூர்த்தார்-முற்பட்ட பாணங்களை யொருவர்மே லொருவரெய்தார்கள், மூரிகனலிவருணன் இந்து இரவி

படையும் ஏவி அவைகள் மடிய - பெரிய தேயு அஸ்திரத்தையும் வருணாஸ்திரத்தையும் சந்திராஸ்திரத்தையும் சூரியாஸ்திரத்தையும் ஒருவர்மேலொருவரேவி அவ்வஸ்திரங்கள் மடிய, பந்தவினையின்மருள்வார் தத் தம்படைவிட்டு ஆர்த்தார் - மலபந்தச் சிமிழ்ப் பால்மயங்கும் அவ்விருவரும் தத தமக்குரிய ஆயுதங்களை யொருவர்மேலொருவர்வீசிக்கோஷித்தார்கள்.

இவர்கள் செய்யும் போரால் தாங்கள் முதல்வரெனக் கொண்டமானம் பின்னரிழத்தலில் சிந்தைநாணுக்கழலச்சிலையைப் பூட்டினவும், வருணாஸ்திரத்தாலக்கினியஸ்திரமும், சூரியாஸ்திரத்தால சந்திராஸ்திரமும் அழிதலால் அவைகள் மடிய எனவுங் கூறினார். நாணுக்கழல நாணுப்பூட்டியென்றது பொருண் முரணணி. (௬)

மும்மைப்புவனமீன்றோன்படையுமுகுந்தன்படையுந்
தம்முட்பொருதுமாய்ந்தபின்னர்க்கமலத்தவிசோன்
வெம்மைப்பாசுபதமாப்படையைவிடுப்பமாயோன்
செம்மலுருத்திரத்திண்படையைச்செலுத்திநின்றான்.

(இ - ள்.) மும்மைபுவனம் ஈன்றோன் படையும் - மூன்றுலகங்களையும் தந்த பிரமன் விட்ட தண்டும், முகுந்தன்படையும்-திருமால் எறிந்த சக்கரமும், தம்முள் பொருதுமாய்ந்தபின்னர் - தம்முள் போர்செய்து அழிந்தபின், கமலத்தவிசோன் வெம்மை பாசுபதமாபடையை விடுப்ப - தாமரையை யாசனமாகவுடைய பிரமன் கொடிய பாசுபதாத்திரத்தைத் தொடுக்க, மாயோன் செம்மல் உருத்திரன் திண்படையை செலுத்தி நின்றான்-திருமால் பெருமைவாய்ந்த உருத்திராஸ்திரத்தைத் தொடுத்துநின்றனன். (எ)

அம்மவிரண்டுபடையுமயுதவருடநேர்ந்து
தம்முளுடலுங்காலைத்தழங்குமெரியின்பொறிக
டும்மவெழுந்துதோன்றிச்சோதியிலிங்கவடிவாய்
நம்மையுடையபெருமானவற்றினடுவுநின்றான்.

(இ - ள்.) இரண்டு படையும் அயுதவருடம் நேர்ந்து தம்முள் உடலுங்காலை - தண்டும் சக்கரமும் பதினாயிரவருடம் தம்முளெதிர்ந்து போர்செய்யுங்காலையில், தழங்கும் எரியின் பொறிகள் தும்ம எழுந்து தோன்றி - அவ்வாயுதங்கள் முழங்குந்தீப் பொறிகளைச்சிந்த அப்பொறிகளெழுந்து புலப்பட்டு, சோதிஇலிங்கவடிவாய்-அதனொளியே சிவலிங்கவடிவமாய், நம்மையுடைய பெருமான் அவற்றின் நடுவுநின்றான் - நம்மையாளாகவுடைய பெருமான் அவ்வாயுதங்களினடுவேநின்றருளினான்.

அவ்வஸ்திரங்கள் செய்யும் போர்த்தொழிலை வியந்து கூறுதால் அம்மவியப்புப்பொருள்மேல் நின்ற இடைச்சொல் தந்து கூறினார். (அ)

நின்றசோதியுருவினேர்ந்தவிரண்டுபடையும்
சென்றுகரப்பநோக்கித்தெருமந்தரியுமயனு
மின்றுதோன்றுமிதுவென்னென்றுதம்முளெண்ணிக்
கன்றுமிதன்றனடியுமுடியுங்காண்டுமென்னா.

(இ - ள்.) நின்ற சோதி உருவின் - எழுந்தருளிய ஒளிவடிவாகிய சிவலிங்கத்தில், நேர்ந்த இரண்டு படையும் சென்று கரப்பநோக்கி - தம்முள் போர்செய்ய வெதிர்ந்தபாசுபதாஸ்திரமும் உருத்திராஸ்திரமும் சென்றொளிக்கப்பார்த்து, அரியும் அயனுந் தெருமந்து - திருமாலும் பிரமனும் மனஞ்சுழன்று, இன்றுதோன்றும் இது

என்னென்று தம்முள் எண்ணி - இப்பொழுது இங்குத்தோன்றிய இச்சிவலிங்கம்யா தென்று தம்முட்கருதி,கன்றும் இதன்தன அடியு முடியும் காண்டும் என்னு-அடைந் தோர் பிறவியையொழிக்கும் இச்சிவலிங்கத்தின் அடியையு முடியையுங் காண்போ மென்று. (௯)

கேழலெகினமாகிக்கீழுமேலுந்துருவி
யூழினிரண்டைஞ்ஞூறுவருடமுழிதந்துற்றார்
வாழிமுடியைக்காணான்வண்டுமுரலுமலரோன்
பாழிச்சிறகர்முறியாப்பையுளெய்திவீழ.

(இ - ள்.) கேழல் எகினம் ஆகி கீழுமேலும் துருவி - வராகமும் அன்னமுமா கிப் பாதலத்தின்கீழும் அண்டத்தின் மேலும் திருவடியையும்திருமுடியையுந்தேடிச் சென்று,ஊழின்-முறையாக,இரண்டு ஐஞ்ஞூறு வருடம் உழிதந்துற்றார்-ஆயிரந்தே வவருடம் சுழன்று திரிந்தார்கள், வண்டுமுரலும் மலரோன் முடியைக்காணான் - வ ண்டுகள் தேனுண்டிசை பாடுந் தாமரைமலரில் வசிக்கும் பிரமன் திருமுடியைக்கா ணாது, பாழிசிறகர் முறியாபையுள் எய்திவீழ - பெருமையமைந்த சிறகுமுறிபட்டு த்துன்பமுற்று நிலத்தில்வீழ.

காணுமுற்றெச்சம். (௧0)

நாறுந்துளவத்தவனுநாடிச்சரணங்காணான்
வீறும்வலியுங்குன்றியெய்ப்புமிளைப்பும்விரவ
வேறும்பரவைப்பெருநீரிடையுளெழுந்தங்குற்று
மாறுமிருவர்களுமாலெய்திமருட்கைகொண்டார்.

(இ - ள்.) நாறும் துளவத்தவனும் நாடி சரணம் காணான் - நறுமணங்கமழும் துழாய் மாலையையணிந்த திருமாலுந் திவருடியைத் தேடிக்காணாது, வீறும் வலியும் குன்றி எய்ப்பும் இளைப்பும் விரவ - இறுமாப்பும் வலிமையுங்குறைந்து சோர்வும் இளைப்புமீதூர, ஏறும்பரவை பெருநீர் இடையுள் எழுந்து அங்குற்று - கரையொடுதா க்கும் கடலின் பெருவெள்ளத்தின் மீதெழுந்து பிரமன் நின்றவிடத்துத் தானும்வந்த டைந்து, மாறும் இருவர்களும் மால் எய்தி - தம்முள் மாறுபட்டெழுந்த திருமாலும் பிரமனும் தம்முள்மயக்கமெய்தி, மருட்கைகொண்டார் - மருட்கையடைந்தார்கள்.

தமக்குநேர்ந்ததுன்பங்களை யொருவர்க்கொருவர் உசாவிவருத்தமுற்றதால் மா லெய்தி எனவும், தாம்கொண்ட இறுமாப் பொழிந்தமையால் மருட்கைகொண்டாரெ னவுங் கூறினர். (௧௧)

## எழு சீரடியாசிரிய விருத்தம்.

எமுறுபொழுதவணொலிவடிவினாதமதெழுபுமுனிருதிறனு
யோமெனவுமையெனமருவியிருக்கோடுயர்நெறியருள்புரியெசுவுஞ்
சாமமுமெனநிலைபெறவிரிவுற்றங்கவைதம்வலிமிகுமவர்முற்
காமுறுதகையநல்வடிவொடுநின்றினையனகருணையினுரைசெயுமால்.

(இ - ள்.) எம் உறுபொழுது - இவ்வாறு இருவருமயங்குங் காலையில், அவண் ஒலிவடிவின் நாதம் எழுபு-அவ்விடத்துச் சத்தவடிவனதாயோர் நாதந்தோன்றி, ஓம் என்ன உமை என்ன இருதிறனாய் மருவி - அந்நாதம் ஓம் எனவும் உமா எனவும் இருகூறுவகைப்பட்டு அவர் முன்தோன்றி,இருக்கு ஓடு உயர்நெறி அருள்புரி எசுவும் சாமமும் என நிலைபெற அங்கு அவைவிரிவுற்று - ருக்கு வேதத்தோடு உயர்ந்த சன்

மார்க்மகத்தை ஆன்மாக்களுக்கருளும் யசுர்வேதமும் சாமவேதமுமென அவ்விடத்து அவைகள் நிலைபெறவிரிந்து, தம்வலிமிகும் அவர்முன் காமுறுதகைய நல்வடிவொடு நின்று - தத்தமக்குரிய ஆணவவலியில்மிக்க அப்பிரமன் திருமாலுக்கு முன்னர்விரும்பும் பொலிவினையுடைய வுருவத்தோடு நின்று, இனையன கருணையின் உரைசெய்யும் - இத்தன்மையுள்ளவற்றைக் கருணையோடு கூறுநிற்கும்.

பிரணவமொன்றே பரப் பிரணவமென்றும்அபரப்பிரணவ மென்றும் இருதிறப்பட்டுப் பரப்பிரணவம் வாச்சிய ரூபமாகவும்,அபரப்பிரணவம் வாசகரூபமாகவும் நிற்றலில் பரப்பிரணவம் ஒலிவடிவினதென்பதூம், அபரப்பிரணவம் நாதவடிவினதென்பதுந் தோன்ற ஒலிவடிவினுதமதெழுபு முனிருதிறனுமெனவும், அப்பரப்பிரணவம் சிவமாதலால் ஓமெனவும், அபரப்பிரணவம் உமையாதலால் உமாவெனவும் அந்நாதமெழுந்ததால் ஓமெனவுமைமென மருவி எனவும், இவரும் மயக்குடையராதலில் அந்நாதத்தின் பொருளுணராமையால் அந்நாதம் இருக்கு, யசுர்,சாமமென மூத்திறப்பட்டு வேதபுருடன்வடிவாய் இவர்களுக்கு முன்னின்று கூறுதலில் இருக்கோடு எசுவுஞ்சரமமுமென அவை நிலைபெற விரிவுற்று வடிவொடு வுரைசெயும் எனவுங் கூறினர். ஒலிவடிவு அர்த்தமுடையது - நாதவடிவு அர்த்தமில்லாதது. (௧௨)

எவனடிமறையவர்மகவினையாலிருவினைவலிகெடவழிபடுவா
னெவனரியயனெனுநுமையொருதனிடவலவடிவினில்வரவருள்வோ
னெவனுமைநும்பதமுறநிறுவுமிறையவனுமதிருள்கழியவரு
மவனதுகுறியிதுவறிமினெனவருள்வழிவருமறையவைபுகல.

(இ - ள்.) அடிமறையவர் மகவினையால் - நான்குவருணங்களுள் முதல் வருணமாகிய அந்தணர்கள் தாம் செய்யும் வேள்வித் தொழிலால், இருவினை வலிகெட வழிபடுவான் எவன் - தத்தம் நல்வினை தீவினையின் வலிமைகெட வழிபடநிற்பவன் எவன், அரிஅயன் என்னும் நும்மை - திருமாலும் பிரமனும் என்று சொல்லப்பட்ட வுங்களை, ஒருதன்இடம் வலம் வடிவினில்வரஅருள்வோன் எவன்-ஒப்பில்லாத தனதுருவின் இடப்பாலிலும் வலப்பாலிலுந் தோன்ற அருள்செய்வோன் எவன், உம்மை நும்பதம் உற நிறுவும் இறையவன் எவன்-உங்களை உமது வைகுந்தம் சத்திய லோகமென்னும் பதங்களில் அதிகாரபோகங்களோடு பொருந்திநிற்க நிலைபெறச் செய்யும் இறைவனெவன், உமது இருள்கழியவரும் அவனதுகுறி - உமது அஞ்ஞான இருள்கழியவரும் அவனே அச்சிவலிங்கம், இது அறிமின் என்று - இதனையறிந்துய்மின்களென்று, அருள்வழிவரும் மறை அவைபுகல-அவனருள்வழியே வந்தவேதங்கள் அவற்றை யெடுத்துக்கூற.

இருக்கோடியர் சாமம் எசுவென முன்னர்க்கூறினமையால் எவனடிமறையவர் மகவினையாலிருவினைவலிகெட வழிபடுவான் என்பது இருக்குவேத வாக்கியமெனவும், எவனரியயனெனு நுமையொரு தனிடவல வடிவினில்வர வருள்வோன் என்பது யசுர்வேத வாக்கியமெனவும்,எவனுமைநும்பத முறநிறுவுமிறையவனும திருள்கழியவரும் என்பது சாமவேதவாக்கியமெனவும், நிரனிறையாகக்கொள்க. உலகத்தோற்றத்திற்குந் திதிக்குந் திருமாலை யிடப்பாலிலும் பிரமனைவலப்பாலிலும் தருதலால் அரியயனெனு நுமையொருதனிட வலமருள்வோன் என்றார். (௧௫)

நறைகமழ்துளவணிதொடையவனுநகைமலரணைமிசைமறையவனு
மறைமொழிசெவியுறமயல்கழிவுற்றலைகடல்வரும்விடமமுதுசெயு

மிறைவனை முறைமுறைபரசினராலெனையுடைமுதல்வனுமவரெதிர்நின்
றுறைபெருமயலினையினிவிடுமோவுதவுதும்விழைவனவுரைமினென.

(இ - ள்.) நறைகமழ் துளவு அணி தொடையனும் - தேங்கமழுந்துளவ மாலை
யையணிந்த திருமாலும், நகைமலர் அணைமிசை மறையவனும் - விளங்கும் தாமரை
மலராகிய ஆசனத்தின்மேலுள்ள பிரமனும், மறைமொழிசெவி உறமயல்கழிவுற்று-வே
தபுருடன் கூறியவார்த்தை தமது செவியிற் புலப்பட மயக்க நீங்கி, அலைகடல்வ
ரும்விடம் அமுதுசெயும் இறைவனைமுறை முறைபரசினர்-அலைக்குங் கடலிற்றோ
ன்றிய விடத்தினையமுது செய்தருளிய இறைவனை முறைமுறையாக நின்றுவணங்
கினார்கள், என்னைஉடைய முதல்வன் உம் அவர் எதிர்நின்று-என்னையாளாகவுடைய
இறைவனும் அவர்களுக்குக் காட்சிதந்து, உறைபெரும் மயலினை இனிவிடும் - உங்
களினின்று நீங்காத பெரிய மயக்கினையினிவிடுங்கள், விழைவன உரைமின்உதவுதும்
என்ன - நீங்கள் விரும்பினவற்றைக் கொடுப்போம் அவற்றைக் கூறுங்களென்றருள.

பங்கயனிருகரமுச்சிமிசைப்பயில்வுறவடிதொழுதுளமுருகி
யெங்குறையின்றுபொறுத்தருளியெளிவருநாயகவுனையுணரா
துங்குறுமயலினியெனையணுகாதுன்புடைநிலைபெறுமன்புதவி
மங்கலிலூழிதொறென்வடிவில்வந்தருளெனமொழிவிண்டனனே.

(இ - ள்.) பங்கயன் இருகரம் உச்சிமிசைபயில்வுற - தாமரைமலரில் வசிக்கும்
பிரமன் தனது இரண்டுகைகளும் உச்சிமேலேற, அடிதொழுது உளம் உருகி - திரு
வடியை வணங்கி மனங்கசிந்துருகி, எம் குறை இன்று பொறுத்தருளி எளியவருநா
யக-எமது பிழைபாட்டை இன்று பொறுத்துஎளிதாகவந்தருளிய நாயகனே, உன்னை
உணராது உங்கு உறு மயல் இனி என்னைஅணுகாது-உன்னை யறியாது இவ்விடத்து
என்னை விழுங்கிய மயக்கம் இனி யென்னை வந்தடையாமல், உன்புடை நிலைபெறும்
அன்பு உதவி - உன்னிடத்தில் நிலைபெற்ற தலையன்பினையடியேற்குத்தந்து, மங்க
லில் ஊழிதொறும் - நிலைகெடாத ஊழிகாலந்தோறும், என் வடிவில் வந்தருள் என
மொழிவிண்டனன் - என்னுருவிற்றோன்றி அடைந்தமயக்கினை யொழித்தருளா யெ
ன்று குறையிரந்தனன்.

முன்னொருகற்பத்தில் பிரமனுனவன் மூன்றுலகங்களையுஞ்சிருட்டித்துத்தானே
பரமென்றகங்காரங்கொண்டு சிவபெருமானை மறந்து சராசரங்களைச் சிருட்டிக்க,
அவை பெருகாமையால் வருந்திநிற்கும்போது திருமால்வந்து எமது முதல்
வனாகிய சிவபெருமானை மறந்தமையால் அவை பெருகவொழிந்தன, ஆதலின் இனி
யேனும் அவனது திருவருளைப் பெறத் தவம் புரிக என்றனன், அவ்வாறு தவம்
புரிந்தும் சிவபெருமான் வெளிப்படாமையால் வருந்தி அழும்போது கண்ணீர்த்துளி
கள் பசாசுகளாய் நெருங்க, அதனைக்கண்டுஇறந்தவன்போல்மூர்ச்சித்தபோது, அச்சிவ
பெருமான்கனவில்வந்தருளி உன்னைப்பரமென்று மதித்தமையால் சிருட்டித்தொழில்
உனக்குக் கைகூடமற்போயிற்று, அது கைகூடும்வண்ணம் நமது பதத்திலுள்ள உரு
த்திர கணத்தை அனுப்புவோம் என்றருளி மறைந்தனன், அக்கனவுணர்ந் தெழுந்த
பிரமன் நல்லொழுக்கம்பூண்டு மனந்தெளிந்து அச்சிவபெருமானை நிட்டைகூடிச்சிந்
திக்க அச்சிவபெருமான் திருவருளால் பதினொரு உருத்திரர்கள் அவனெற்றியினி
ன்றும் வெளிப்பட்டுவந்து தோன்றி அவன் மயக்கொழித்தல் ஊழிதோறுமாத
லால், ஊழிதோறென் வடிவில்வந்தருளென்றான். (௧௫)

திருமகள் விழைதருதிகழ் மருமச்செம்மலுமடியிணைதொழுதினியிம்
மருளெனையொருபொழுதினுமடா லுன்னடிவழிபடுசெயல்பிறழல்
கருமுகிலுறழ்மிடறுடையவநின்கருணையென்னிடைநிலைபெறநிறுவி
லொருகுறையுளதுகொலடியடியேற்கென்றுளமகிழ்வுடனோதினனால்.

(இ - ள்.) திருமகள் விழைதருதிகழ் மருமம்செம்மலும் - திருமகள் விரும்பும் திருமார்பையுடைய திருமாலும், அடி இணைதொழுது-இரண்டு திருவடிகளையும் வணங்கி, கருமுகில் உறழ்மிடறு உடையவ-சூற்கொண்ட மேகம்போன்ற ஸ்ரீகண்டத்தையுடையவனே, நின்கருணை என் இடைநிலை பெறநிறுவில் - உனது திருவருளை என்னிடத்தில் நிலைபெற நிறுத்தில், மருள் என்னை ஒருபொழுதினில் அடரல் - இனி மயக்கம் என்னை யொருபொழுதேனும் வந்தடைதலும், உன் அடிவழிபடு செயல்பிறழல்-உன் திருவடிக்கு வழிபாடுசெய்யும் செயலினின்று பிறழ்தலுமாகிய, ஒருகுறை அடியேற்கு உளது கொல் என்று உளமகிழ்வுடன் ஓதினன்-ஒரு குறையடியேற்குமுண்டோவென்று மனமகிழ்ச்சியோடு கூறினன்.

மருள் அடைதலும், செயல் பிறழ்தலும் ஆகிய செயல் இருதிறப்படினும்அது மக்களுயிர்க்குக்குறைபாடாதலால் "சிவிகைபொறுத்தான்" என்றாற்போல ஈறுதோன்றிய சாதியொருமையாக ஒருகுறையுளது கொலென்றார். (கசு)

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

இவ்வண்ணமிருவர்களுமிரந்தேத்திவிண்ணப்பஞ்செய்யக்கேளா
வவ்வண்ணமாகவெனப்பெருங்கருணைகூர்ந்தருளியகிலமீன்ற
மைவண்ணக்கருங்கூந்தன்முலைச்சுவடும்வளைததழும்புமாறுமேனிச்
செவ்வண்ணப்பரமேட்டிபின்னருமங்கவர்க்கிதனைத்தெரிததுக்கூறும்.

(இ - ள்.) இவ்வண்ணம் இருவர்களும் இரந்து ஏத்தி விண்ணப்பம்செய்ய கேளா - இவ்வாறு பிரமனுந் திருமாலுந் தமது குறையிரந்து வணங்கி விண்ணப்பஞ் செய்யக்கேட்டு, அவ்வண்ணம் ஆக என பெருங்கருணைகூர்ந்தருளி - அவ்வாறே யாக வெனப் பேரருள்செய்து, அகிலம் ஈன்ற மை வண்ணம் கரும் கூந்தல் முலைச்சுவடும் வளைத்தழும்பும் மாறுதமேனி செவ்வண்ணம் பரமேட்டி-மை போலுங் கருநிறம்வாய்ந்த கூந்தலையுடை உமையம்மையின் தனபாரச்சுவடும் வளையற்றழும்பு மாறாத செந்நிறம்வாய்ந்த இறைவன், பின்னரும் அங்கு அவர்க்கு இதனைதெரித்து கூறும்-மீளவும் அவ்விடத்து அவர்களுக்கு இதனை விளங்கக்கூறியருள்வான். (கஎ)

இற்றைநாணீர்காணுமிவ்விலிங்கப்பெருவடிவமிறுதிக்கால
முற்றுநாளணுகாதுகொற்றங்கொடிருக்காஞ்சிமூதூர்மாடே
பற்றுபெருங்காதலினாற்றாபித்துவழிபட்டுப்பரசியானுப்
பெற்றியுறுவியனுலகம்படைத்தளிக்கும்பெருமதுகைபெற்றுவாழ்மின்.

(இ - ள்.) இற்றைநாள் நீர்காணும் இவ்விலிங்கப் பெருவடிவம் - இந்நாளில் நீங்கள் தரிசித்த இந்த மாகாலிங்கத்தின் பெருமையை, இறுதிக்காலம் மூற்று நாள்அணுகாது - உலகினையழிக்கும் ஊழிகாலந் தன்பாலணுகாமல், கொற்றம்கொள் திருக்காஞ்சி மூதூர்மாடு - வெற்றியமைந்த திருக்காஞ்சி யென்னுந் தொன்றுதொட்டுள்ள திருநகரில், பற்றுபெரும் காதலினால் தாபித்து வழிபட்டுபரசி - மூறுகியபேரன்பால்தாபனஞ்செய்து வழிபட்டு வணங்கி, ஆனுதபெற்றி உறுவியன் உலகம்படை

த்து அளிக்கும் பெருமதுகை பெற்று வாழ்மின்-இனி நீங்காத தன்மைமிக்க பரந்த வுலகத்தைப்படைத்துக் காக்கும் பெரியவலிமையைப்பெற்று வாழுங்கள்.

ஆனாப்பெற்றியுறு என்ற விசேடணத்தைப் படைத்தளிக்கும் மதுகை என் பதனோடு கூட்டுக. பிரமனும் திருமாலும் ஓர் கால் தாம் கொண்ட படைப்பையும் காப்பையும் மறத்தலில் இப்பூசனைப் பேற்றால் என்றுங் கைவிடாமைதோன்ற ஆனாப் பெற்றியுறு பெருமதுகை யென்றார். (௧௮)

வெண்டிரைநீரகல்வரைப்பினும்முதலோர்விண்ணவர்களவுணர்சித்தர்
பண்டைவினைக்குறும்பெறியுமுனிவரர்மானிடர்யாரும்பாசக்கூட்டம்
விண்டகலும்படியின்றுதொட்டெம்மையிலிங்கத்தின்மீளாநேசங்
கொண்டுபூசனைபுரிகபுரிவோர்க்குமயலென்றுங்குறுகலோம்பல்.

(இ - ள்.) வெண்டிரை நீர் அகல்வரைப்பின் - கடல்சூழ்ந்த நிலவுலகில், நும் முதலோர் விண்ணவர்கள் அவுணர் சித்தர்பண்டை வினைக்குறும்பு எறியும் முனிவரர் மானிடர் யாரும் - நீங்கள் முதலியோரும் ஏனைத்தேவர்களும் அசுரர்களும் சித்தரும் பழவினையாகிய சஞ்சிதமென்னுங் குறும்பினை யோட்டிய முனிசிரேட்டர்களும் மக்களும் ஆகியயாவரும், பாசக்கூட்டம் விண்டு அகலும்படி இன்றுதொட்டு - ஆணவமாயை காமிய மென்னும் மலங்களும் தம்மினின்று நீங்கும்வண்ணம் இக்காலந் தொட்டு, எம்மை இலிங்கத்தில் மீளாநேசங்கொண்டுபூசனைபுரிக - எம்மை இச்சிவலிங் கத்தில் தலையன்புபூண்டு பூசனைசெய்யக்கடவர், புரிவோர்க்கு மயல் என்றும் குறுகல் ஓம்பல் - பூசனைசெய்வோர்க்கு மயக்கம் எக்காலத்தும் வருதலை யான் ஒழிக்கக்கட வன்.

ஓம்பல் உடன்பாட்டு வியங்கோள்வினை முற்று. (௧௯)

கடப்பாடுவறுமைபயமனக்கவலைபசிபாவங்கடுநோய்மற்று
முடற்றாமையாங்கவர்க்குமீளவினைப்பிறவியுறலுறினுமின்பங்
கிடைத்தானாப்பெருமகிழ்ச்சிதலைசிறப்பநனிவாழிகிளருஞ்சீற்ற
நடைக்காலன்மற்றவர்பானணுகற்கநம்மாணைவலியான்மன்னோ.

(இ - ள்.) நம் ஆணைவலியால் கடப்பாடு - நமது ஆணைவலியால் முறையாக, வறுமை பயம் மனக்கவலை பசியாவம் கடுநோய் மற்றும் உடற்றாமை - வறுமையும் அச்சமும் மனக்கவலையும் பசியும் பாவமும் கொடிய நோயும் மற்றுள்ளவும் அணுகி வருத்தாமலும், ஆங்கு அவர்க்கு மீள வினைப்பிறவி உறல் உறினும் - அவ்விடத்தவர்க்கு இருவினையால் பிறவி வந்தடையினும், இன்பங் கிடைத்து ஆனா பெருமகிழ்ச்சி தலை சிறப்ப - அப்பிறவியிலென்றும் இன்பமே நுகர்ந்து இடையில் நீங்காத பெருமகிழ்ச்சி மீதூரவும், நனிவாழி - மிகவும் வாழக்கடவர், கிளரும் சீற்றம் நடைக்காலன் அவர்பால் நணுகற்க - விளங்கும் கோபத்தையே ஒழுக்கமாகவுடைய இயமன் அவ ரிடத் தடையாதிருக்க.

நம்மை இச்சிவலிங்கத்தில் வழிபட்டோர்க்குப் பிறவியில்லை யென்பார் பிறவியுற லுறினுமெனவும், உற்றாலும் என்றும் இன்பமேநுகர்வ ரென்பார் இன்பங் கிடைத் தெனவும், சிறிதுந் துன்பமேயில்லை யென்பார் ஆனாப் பெருமகிழ்ச்சி தலை சிறப்ப எனவும், இயமன்கொண்ட வொழுக்கங் கோபமே என்பார் கிளருஞ் சீற்றநடைக் காலனெனவுங் கூறினார். (௨௦)

வேதியர்மன்னவர்வணிகர்வேளாளர்சங்கரத்தின்மேயோராக
மூதிமையோருரகர்தயித்தியராக்கர்கந்தருவர்முனிவராகப்
பூதிதருமிலிங்கபூசனையில்லார்பூதிசாதனங்கள்பேணு
ரேதிலராமிழிஞரினுமிழிஞரேயவரொடுபேச்சியம்பினோரும்.

(இ - ள்.) வேதியர் மன்னவர் வணிகர் வேளாளர் சங்கரத்தில்மேயோர் ஆக- அந்தணரும் அரசரும் வணிகரும் வேளாளரும் இவர்கள்கூட்டத்தால் வந்த சங்கர மரபினராயினுமாக, மூதுஇமையோர் உரகர் தயித்தியர் அரக்கர் கந்தருவர் முனிவர் ஆக-பிரமன் சிருட்டியிற் பட்டதேவர்களும் நாகரும் அசுரரும் அரக்கரும் கந்திருவரு முனிவருமாயினுமாக, பூதிதரும் இலிங்கபூசனை இல்லார் பூதிசாதனங்கள் பேணார் ஏதிலர் ஆம் - பூசிப்போர்க்கு ஐசுவரியந்தருஞ் சிவலிங்க பூசனையில்லாதவர்களும் விபூதியணிதலையும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைப் பயிலாதவர்களும் நமக்கு அயலாராம், அவர் ஒடு பேச்சு இயம்பினோரும் (நமக்கு அயலாராகிய) அவர்களோடு பேசுகின்ற வரும், இழிஞரினும் இழிஞர் - கடைப்பட்ட இழிகுலத்தோரினு மிழிகுலத்தின ராவார்.

அந்தணர் முதலியநான்குவருணத்தாருள் உயர்குலத்தானும் தாழ்ந்தகுலப்பெண் ணுங் கூடிப்பிறந்தவன் அநுலோமனும், உயர்குலப்பெண்ணும் தாழ்ந்தகுலத்தானுங் கூடிப்பிறந்தவன் பிரதிலோமனு மாதலால் சங்கரத்தின் மேயோர் எனவும், சிவலிங்க பூசனையில்லாதவரும் பூதிசாதனங்களில்லாதவரும் நமக்கு அயலவராக அவரோடு பரிசயஞ்செய்வோர் சிவலிங்க பூசனையும் பூதிசாதனங்களுடையவருமா யினும் இழிஞரினு மிழிஞராதலால் அவரோடு பேச்சியம்பினோரு மிழிஞரினுமிழி ஞர் எனவுங்கூறினர். (உக)

நியதிமகந்தவந்தானம்விரதநிலைபிறவற்றினிகழ்த்தும்பூசைப்
பயனெவையுமிலிங்கபூசனைக்கோடிகூற்றினொருபயனுக்கொவ்வா
வியனுலகமுய்யுமுறையிவ்வாறுநமதாணைவிதித்தேம்போற்றி
யுயலுறுவீரென்றருளிச்சிவபெருமானடியருளக்கோயில்புக்கான்.

(இ - ள்.) நியதி - தாம் செய்யுங்கடனாக, மகம் தவம் தானம் விரதநிலைபிறவ ற்றின் - வேள்வியும் தவமும் தானமும் விரதநிலையும் மற்றுள்ளனவுமாகிய இவைக ளால், நிகழ்த்தும்-பூசைபயன் எவையும் - ஏனைத்தேவர்களை வழிபட்டுச்செய்யும் பூச னையால் வரும் பயன்கள் எல்லாம், இலிங்கபூசனை கோடிகூற்றின் ஒருபயனுக்கு ஒவ்வா - சிவலிங்கபூசையால் வருங்கோடிபயன்களுள் ஒருபயனுக்கும் ஒப்பாகா, வியன் உலகம் உய்யும்வகைஇ ஆறு - பரவிய ஆன்மாக்களுய்யும் வண்ணமிவ்வகை யாக, நமது ஆணை விதித்தேம்- நமதாணையாக இச்சிவலிங்க பூசனையை யான்மா க்களின் பொருட்டுவிதித்தேம், போற்றி உய்யல் உறுவீர் என்றருளி - இச்சிவலிங்க த்தைப் பூசித்து உய்யுங்களென்றருளி, சிவபெருமான் அடியர் உளம்கோயில்கொண் டான் - இறைவன் தனது அடியவரிதயமாகிய திருக்கோயிலில் எழுந்தருளினன்.

வேள்விமுதலியன பலரையும் வழிபட்டுச்செய்யும் பூசனைகளென்பார் நிகழ்த் தும் பூசைப் - பயனெவையு மிலிங்கபூசனைக்கோடி கூற்றினொரு பயனுக்கொவ்வா வெனவும், ஆன்மாக்களுய்தற் பொருட்டே இச்சிவபூசனையை விதிப்போம் என்பார் வியனுலக முய்யுமுறை யிவ்வாறு நமதாணை விதித்தேம் எனவுங் கூறினர்.

வேள்விமுதலிய பலபூசனைகளுள்ளும் சிவபூசையேற்றம் என்றதை,—

"மருக்கிளர் மலர்களுட்டா மரைமலருயர்ந்தாற் போலும்
விருக்கமுள்ளவற்றுட் டெய்வமிஎிர் தருவுயர்ந்தாற் போலும்
உருக்கொள் பன்மனுக்களுள்ளுமைந் தெழுத்துயர்ந்தாற் போலும்
தருக்குபல் பூசையுள்ளுந் தம்பிரான் பூசையேற்றம்" எனவும்,

சிவபூசனையாற் பெரும்பயன் என்றதை,—

"சாற்றிடு முறப்பியாவுந் தலைக்கு மேலுயராபாவங்
காற்றிடு நதிகள்யாவுங் கங்கைமேலுயராவானம்
ஆற்றிடும் பலரைப் போற்றும் பலமெலாமடுத்தோர் சன்மம்
பாற்றிடுஞ் சிவனைப்போற்றும் பலத்தின் மேலுயராவன்றே" எனவும்,

சூத சங்கிதையில் வருதல் காண்க. (உஉ)

டாப்பணையிற்றுயில்வோனும்பனிமலரிற்பயில்வோனும்பணிந்துநீங்கி
யாப்பமைநீர்த்தடம்பொய்கைத்திருக்காஞ்சிவளநகரமெய்தியாங்கண்
மீப்பொலியுமகாலிங்கநிறீஇத்தொழுதுபயன்பெற்றார்விரிநீர்வைப்பி
னீப்பரியசிவலிங்கவழிபாட்டின்பேறெவரேநிகழ்த்தவல்லார்.

(இ - ள்.) பாம்பு அணையில் துயில்வோனும் பனிமலரில் பயில்வோனும் பணிந்து நீங்கி - சர்ப்பசயனத்திலறி துயில்கொள்ளுந் திருமாலும் குளிர்ந்ததாமரை மலர் மேல் வசிக்கும் பிரமனும் வணங்கி யங்குநின்று நீங்கி, யாப்பு அமை நீர் தடபொய்கை திருகாஞ்சி வளநகரம் எய்தி - கட்டமைந்த நீர்மயமாகிய பெரியபொய்கைகள் சூழ்ந்த காஞ்சியென்னும் வளம்வாய்ந்த திருநகரத்தையடைந்து, ஆங்கண்மீ பொலியும் மகாலிங்கம் நிறுவி தொழுது பயன்பெற்றார் - அவ்விடத்து மேம்பட்டு விளங்கும் மகாலிங்கத்தினைத் தாபித்து வணங்கிப் பேறுபெற்றார்கள், விரிநீர்வைப்பின் - கடல் சூழ்ந்த நிலவுலகில், நீப்பு அரிய சிவலிங்கம் வழிபாட்டின்பேறு (அடியருள்ளத்தினின்று) நீங்குதலில்லாத அச்சிவலிங்கத்தினை வழிபட்டு அடையும்பயனை, நிகழ்த்தவல்லார் எவர் - எடுத்துச் சொல்லவல்லாரெவர்.

முதற் கடவுளராகிய திருமாலும் பிரமனும் வழிபட்டுப் பேறுபெற்ற மகாலிங்கமாதலில் ஏனைக்கடவுளர் முதலியோர் வழிபட்டுப் பேறடைந்தமைய ளக்கலரி தென்பார் வழிபாட்டின் பேறெவரே நிகழ்த்தவல்லார் எனக் கூறினார். (உ௩)

மகாலிங்கப்படலம் முற்றிற்று.

ஆ- திருவிருத்தம் கசுகக.

---

# வீராட்டகாசப்படலம்.

---

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

தண்காமர்புனல்குடையுந்தையலார்திமிர்ந்தநறுந்தகராறாழ

விண்காவலுடையார்முன்னிளநகைபூத்திவ்வாலமவிடுக்காவன்றி
யுண்காவென்றருள்செய்தான்வீராட்டகாசநகருறைத்துமாலோ.

கச

(இ - ள்) தண்காமம் மருவு புனல் குடையும் தையலார் திமிர்ந்த நறும் தகரம் ஞாழல் - தண்ணிய விருப்பஞ்செய்யும் நீரில் மூழ்கும் பெண்கள் தமது தனத்திலப்பிய நறுமணங் கமழும் தகரமும்ஞாழலும் விரவிச்சமைந்த சாந்து, எண்காதம்கமழ் இலஞ்சி மகாலிங்கம் தளிபுகன்றும் - எட்டுக்காததூரம் மணம் வீசும் குளம்நிறைந்த மகாலிங்கத் திருத்தளியை யெடுத்துக்கூறினும், இதன் வடாது - இதன்வடபாலில், விண்காவல் உடையார் முன் - விண்ணைக்காவலாகவுடைய திருமால் முதலிய தேவர்கள் முன், இளநகைபூத்து இ ஆலம் விடேக்கஆ அன்றி உண்கஆ என்றருள் செய்தான்-புன்னகையரும்பி இங்குவந்த விஷத்தினை விடுக்கக்கடவேனு உண்ணக்கடவேனுவென்று சாவியவிறைவனது, வீரட்டகாசநகர் உரைத்தும்-வீராட்டகாசமென்னுந் திருத்தளியின் பெருமையையெடுத்துக் கூறுவாம்.

தகரம் - வாசனைத்திரவியம், ஞாழல் - குங்குமப்பூ. இவை யிரண்டும் விரவிச்சமைந்த சாந்தின்மேல் நிற்றலால் தகரஞாழல் உம்மைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. திருமால் முதலியோர் விஷத்தாலுணங்கித் திருக்கையிலையடைந்து சிவபிரானிடத்தில் முறையிட்டகாலத்தில் நீங்களஞ்சலீரென்று அருளிச் சிவபெருமான் திருவுளத்தில் கருதித் திருக்கரம் நீட்ட, உலகமுற்றும் கவரவெழுந்த நஞ்சு ஓர் வண்டளவுகுறுகி அத்திருக்கரத்தில் வந்திருக்க, அத்தேவர்களைநோக்கி இவ்விடத்தை யுண்பேமா தூரத்திலெறிவோமா என்றுவினவியதால் விண்காவலுடையார் முன்னிளநகைபூத் திவ்வாலம் விடுக்காவன்றியுண்காவென்றருள் செய்தான் என்றார்.

"செறியு நஞ்சினை யுண்குமே சேயிடைச்செல்ல-வெறிகுமோ புகன்மின்களென்றருள் செய" என மணிகண்டீச்சரப்படலத்தில் வருதல் காண்க. விடுக்க, உண்க என்னும் வியங்கோள் வினை முற்று ஈறு தொக்கது. (௧)

வள்ளவாய்நறைக்கமலவெண்பீடத்தரசிருக்குமாதரன்னப்
புள்ளவாநடைநல்லாண்முலைமுகட்டிற்கோட்டியபூங்களபந்தோய்ந்த
கள்ளவாந்தொடைத்திண்டோண்மறைக்கிழவனொருவனுக்குக்கடையேனு
துள்ளவாமிறைவகுத்தபராத்தங்களோரிரண்டுமொழிந்தகாலை. [ள்ளத்

(இ - ள்.) வள்ளம் வாய் நறை கமலம் வெண்பீடத்து அரசு இருக்கும் மாதர் அன்னப்புள் அவாம் நடை நல்லாள் - கிண்ணம்போலும் வாயையுடைய தேன்சிந்தும் வெண்டாமரையில் அரசியல் செய்திருக்கும் அழகிய அன்னப்பேடு விரும்பும் கலைமகளது, முலைமுகட்டில் கோட்டிய பூங்களபம் தோய்ந்த - தனச்சிகரத்தில் திமிர்ந்த அழகிய சாந்துபடிந்த, கள்அவாவும் தொடைதிண் தோள் மறைக்கிழவன் ஒருவனுக்கு - மதுவிரும்பும் மாலையையணிந்த வேதத்திற்குரியவனுகிய பிரமனுக்கு, கடையேன் உள்ளத்துள் அவாம் இறைவகுத்த பராத்தங்கள் ஓரிரண்டும் ஒழிந்தகாலை-நாயினுங் கடைப்பட்ட எனது மனத்துள்ளே விரும்பிக் குடிபுகுந்த சிவபெருமான் வகுத்த இரண்டு பராத்தங்களும் நீங்கின காலத்தில்.

தேவவருடம் பனிரண்டாயிரம் ஒரு சதுரயுகம், அச்சதுரயுகம் எழுபத்தொன்று கடந்தால் ஒருமனுவந்தரம், அவ்வாறு பதினன்கு மனுக்கள் கழிந்தால் அக்காலத்தளவு பிரமனுக்கு ஓர் பகற்பொழுது, அவ்வாறே இரவிற்கு மளவை அப்பகற்பொழுதினைப் பிரமகற்பமென்பர், அப்பிரமகற்பம் முந்நூற்றறுபது சென்றால் பிரமனுக்கு ஓர் வருடம், அவ்வாறு நூறுவருடங் கழிந்தால் ஒரு பரம் அதுபோல இரவுமாகலில் பராத்தங்களோ ரிரண்டென்றார்.

"கற்ப மூந்நூற்றறுபது செல்காலமறைக்கடவுளுக்கோர் வருடமாகுஞ் சொற் றயாண்டொரு நூறுகழித்தல்பரம்" எனக் கூர்ம புராணத்தில்வருதல் காண்க. (உ)

ஐவண்ணநிறம்படைத்ததிருமுகமைந்துடையபிரானருளாலந்திச்
செவ்வண்ணக்காலத்தீயுருத்திரப்புத்தேணுதற்கட்செந்தீப்பொங்கி
மொய்வண்ணவண்டமெலாமுழங்கிநிமிர்ந்தெழுந்துருக்கியுண்டுதேக்கி
மெய்வண்ணமனத்தன்பர்வினைப்பறம்பினீறாக்கிவிட்டதாக.

(இ - ள்.) ஐவண்ணம் நிறம்படைத்ததிருமுகம் ஐந்துடையபிரான் அருளால்- வெண்மைமுதலியநிறங்களைப்படைத்த ஐந்து திருமுகங்களையுடைய இறைவனது அருளால், அந்திசெவ்வண்ணம் காலத்தீயுருத்திரப்புத்தேள் நுதல்கண் செந்தீபொங்கி - அந்திப்போது ஒத்த செந்நிறம்வாய்ந்த காலாக்கினியுருத்திரக்கடவுளது நெற்றிக்கண்ணிலுள்ள செந்தீ வெளிப்பட்டு, மொய்வண்ணம் அண்டம் எல்லாம் முழங்கி நிமிர்ந்து எழுந்து உருக்கி உண்டு தேக்கி - நெருங்கிய வண்டங்கள் யாவிலுமுழங்கிப்பரவியெழுந்து அவற்றினிலை கெடுத்தழித்து அத்தீபருகிவயிறுநிரம்பி, மெய்வண்ணம்மனத்து அன்பர்வினைப் பறம்பில் நீறு ஆக்கிவிட்டது-உண்மைவாய்ந்த மனத்தையுடையஅடியவரது இருவினையாகிய மலைநீறுகுதல்போல யாவையும் நீறாக்கியது.

ஆயநாளிரவில்லைபகலில்லையயனில்லையரியுமில்லை
மேயவான்முதற்பூதமில்லையேனைப்பவுதிகத்தைவிளம்புமாறென்
பாயபேரண்டமெல்லாமிவ்வாறுபடநீற்றிப்புரமூன்றட்ட
காய்கணையோனானந்தமேலீட்டிற்றன்னியல்புகருத்துட்கொள்ளா.

(இ - ள்.) ஆயநாள் இரவு இல்லை பகல் இல்லை - அவ்வாறழிந்தகாலையில் சந்திரனுமில்லை சூரியனுமில்லை, அயன் இல்லை அரியும் இல்லை - பிரமனுமில்லை திருமாலுமில்லை, மேய வான் முதல் பூதம் இல்லை - பொருந்திய பிருதிவிமுதலியபஞ்சபூதங்களுமில்லை, ஏனை பவுதிகத்தை விளம்பும் ஆறு என்-(பிருதிவிமுதலியபஞ்சபூதங்களுமில்லையாக) அவற்றின் காரியப்பாடாகிய மற்றைச்சராசரங்களினிலையையெடுத்துக்கூற என்னவிருந்தது, பாயபேர் அண்டம் எல்லாம் இவ்வாறு பட நீற்றி - பரந்த பெரிய அண்டங்களையெல்லாமிவ்வகையழிய நீறுபடுத்தி, புரமூன்றும் அட்டகாய்கணையோன் ஆனந்தமேலீட்டில் தன் இயல்புகருத்து உட்கொள்ளா - திரிபுரங்களையெரித்துச்சுட்டெருத்தும் திருமாலாகிய அம்பினையுடைய உருத்திரமூர்த்தி ஆனந்தமேலிடுதலால் தான் எவைக்கும் இறைவனாய் நிற்குமியல்பினைத் தன்றிருவுளத்தமைத்து,

பிரமன் இருவகைப் பராத்தமுஞ் சென்றகாலையில் பிரமன்முதலிய எவ்வகையுயிரும் பிரகிருதியிலுள்ளடங்கும்,அப்பிரகிருதிக்குப் பிரகிருதப்பிரளயமெனக்கூறப்படும்,அக்காலையில் திருமால்முதலியவெத்தேவரும்அப்பிரகிருதப்பிரளயத்திலடங்குதலால் ஆயநாளிரவில்லை பகலில்லை யயனில்லை யரியுமில்லை-மேயவான்முதற்பூதமில்லையேனைப்பவுதிகத்தைவிளம்புமாறென் எனவும், படைப்பிலும் காப்பிலும் இளைப்படைந்த ஆன்மாக்களின் இளைப்பொழித்தற்குக்காலமதுவாதலின் தான் ஆனந்தங்கொண்டனனாதலால் ஆனந்தமேலீட்டில் எனவும், அக்காலமேதானாய் அக்காலவரையறையுட்படாது சாதல்பிறத்தலொழிந்து தானொருவனே நிற்றலால் தன்னியல்புகருத்துட்கொள்ளாவெனவுங்கூறினார்.

திருமால்முதலிய உயிர்யாவும் பிரகிருதியிலொடுங்குமெனவும், அக்காலம பிரகிருதப்பிரளயமெனவும், அக்காலத்தில் தானொருவனே எஞ்சி நிற்பவனெனவுங் கூறுதலை,—

"கற்பமுந் நூற்றறுபது செல்காலமறைக்கடவுளுக்கோர்வருடமாகுஞ்
சொற்றயாண்டொருநூறுகழிதல்பரம்பரமற்குத்தொகுத்தவாயுள்
மற்றிவ்வாறொருநூறுவருடமுநான்மறையோற்குச்சென்றகாலை
யுற்றசராசரமனைத்தும்பிரகிருதியதனிடைப்போயொடுங்குமன்றே.

யதனைப்பிரகிருதபட
போதுறைபுத்தேள்முதலாமெத்தேவுமிறந்துபிறந்துழல்வர்போற்று
மேதகுகாலத்துருவாய்க்காலவரைகடந்துவெறுவெளியாயென்றுஞ்
சாதல்பிறப்பில்லாததனைப்பிரமமகேச்சுரனென்றுரைப்பர்தக்கோர்."

எனக்கூர்மபுராணத்தில் வருதல் காண்க. (சு)

கடைநாளுமழியாதுதன்னொருபாற்பெருமாட்டிகாப்பவைகு
நடைமாறாத்திருக்காஞ்சிநகர்மன்னியுலகீன்றநங்கைகாண
விடையாமவிரவெல்லாந்திருக்கூத்துநவின்றருளியெறுழ்சால்வெள்ளை
விடையாளுந்தனிப்பாகனார்த்தார்த்துவீரநகைவிளைத்தான்மேன்மேல்.

(இ - ள்.) கடைநாளும் அழியாது - அப்பிரளயத்தினுமழியாமல், தன் ஒருபால் பெருமாட்டிகாப்பவைகும் - தனதொருபாகத்துள்ள இறைவிபாதுகாக்க நிலைபெற்ற, நடைமாறாததிருக்காஞ்சிநகர் மன்னி - அந்தணர்முதலியோர் நல்லொழுக்கமாறாத காஞ்சியென்னுந் திருநகரிலெழுந்தருளி, உலகு ஈன்ற நங்கைகாண - அண்டங்களையெல்லாமீன்ற கன்னியாகிய உமையம்மை கண்டு களிக்க, இரவு இடையாமம் எல்லாம் திருக்கூத்து நவின்றருளி - அவ்விராப்பொழுதின் நள்ளிருள்முற்றும் திருக்கூத்துச்செய்தருளி, எறுழ்சால வெள்ளைவிடையாளும் தனிப்பாகன் ஆர்த்து ஆர்த்து மேல் மேல் வீரநகைவிளைத்தான் - வலிமைமிக்கவெள்ளிய இடபவூர்தியை நடத்தியருளும் பாகனாகிய இறைவன் கொக்கரித்து மேலுமேலும் வீரநகையைச் செய்தருளினன்.

இருவகைப் பரார்த்தத்துள் இரவுமொரு பரார்த்தமாகலில் அவ்விரவினிறுதியில் யாவுமழிதலில் அன்று உமையம்மை காணத்திருக்கூத்துச்செய்தருளுதல் இயல்பாதலால் உலகீன்றநங்கைகாணவிடையாமவிரவெல்லாந் திருக்கூத்து நவின்றருளி எனவும், யானைமுதலிய வூர்தியை நடத்துவோர் பாகரெனக்கூறப்படுதல் மரபாதலால் விடையாளுந்தனிப்பாகன் எனவும், வீரநகை விளைக்கும்போது எழுமொலிகொக்கரையாதலால் ஆர்த்தார்த்து வீரநகைவிளைத்தான் மேன்மேல்எனவுங்கூறினர்.

ஆர்த்தார்த்து என்பது உவகைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (எ)

அவ்விரவுபுலர்காலைத்திருநடனநீத்திலிங்கவடிவமாகி
யவ்வரைப்பின்விளங்கினுதலினால்வீராட்டகாசத்தேவா
மவ்விலிங்கம்வழிபட்டுச்சிலர்சித்தரற்புதமாஞ்சித்திபெற்றா
ரவ்வியல்புதனைக்கேட்டுக்கொங்கணமாமுனிச்செல்வனங்கணெய்தி.

(இ - ள்.) அ இரவுபுலர்காலை திருநடனம்நீத்து இலிங்கவடிவம் ஆகி-அவ்விராப் புலருங்கால் திருநடனத்தினின்று நீங்கி இலிங்கவடிவாய், அவ்வரைப்பின் விளங்கினுன் ஆதலினால் - அக்காஞ்சித்திருநகரில் விளங்கினுன் ஆதலால், வீராட்டகாசத்தே

வாம் அ இலிங்கம்-அவ்வீராட்டகாசத்திருத்தளியிலெழுந்தருளிய இறையாகிய அச் சிவலிங்கத்தை, சிலர் சித்தர்வழிபட்டு அற்புதமாம் சித்திபெற்றார் - சித்தருட்சிலர் வழிபாடுசெய்து அற்புதமாகிய சித்தியைப்பெற்றார்கள், கொங்கணமா முனிச்செல்வன் - பெருமையமைந்த கொங்கணமுனிவன், அவ்வியல்புதனைகேட்டு அங்கண் எய்தி - அவ்வரலாற்றைக்கேட்டு அத்திருத்தளியையடைந்து.

யாவுமொடுங்கியபின் பண்டுபோல் தன் சந்நிதியிற்றோன்ற இலிங்கவடிவாயினானுதலால் அவ்விரவு புலர்காலைத் திருநடன நீத்திலிங்கவடிவமாகி - யவ்வுரைப்பின் விளங்கினான் என்றார். (௬)

அவ்விலிங்கமேன்மையினையளந்தறிவானுங்கதன்றன்சென்னிமீது
செவ்வனேதன்குளிகையீந்திட்டான்மற்றெவற்றின்சிரமேல்வைப்பி
னெவ்வமுறநீறாக்குமனையதையக்கணமேயவ்விலிங்கமுள்ளால்
வெளவியதுதனைக்கண்டான்வியப்பெய்தியவ்வலிங்கமுன்னர்வைகி.

(இ - ள்.) அ இலிங்கம் மேன்மையினை அளந்தறிவான் - அச்சிவலிங்கத்தின் மேன்மையினை அளந்தறிதற்பொருட்டு, ஆங்கு அதன் தன் சென்னிமீது செவ்வனே தன்குளிகை ஈந்திட்டான் - அச்சிவலிங்கத்தின் திருமுடிமேல் தனது குளிகையை வைத்தான், மற்று எவற்றின் சிரமேல்வைப்பின் - அதுவொழிந்த எப்பொருள்களின் சிரத்தின்மேல்வைத்தாலும், எவ்வம் உற நீறாக்கும்-அப்பொருள்கள் அழிவுபட அப்பொழுதே அக்குளிகை நீறுபடுத்தும், அ இலிங்கம் அனையதை அக்கணமே உள் வெளவியதுதனைக் கண்டான் - அச்சிவலிங்கம் அக்குளிகையை அந்தக்ஷணமே தன்னுள்ளே கவர்ந்ததைக்கண்டு, வியப்பு எய்தி அ இலிங்கம் முன்னர்வைகி-தானதிசயங்கூர்ந்து அச்சிவலிங்கத்தின் திருமுன்னர்க்கொங்கணமுனிவர் இருந்து.

மற்று வினைமாற்றுப் பொருளில்வந்த இடைச்சொல். கண்டான் முற்றெச்சம்.

மெய்த்தவங்களினிதாற்றிப்பேறுற்றானின்னுமவண்மேவிச்சீர்சால்
சித்திகளையுழவாதுபெறுகின்றோரெல்லையிலர்செந்நீர்தேக்கு
முத்தலைவேல்வீராட்டகாசீசன்மேன்மையெவர்மொழிவார்மாய
னத்தலத்தேவழிபட்டுப்பவளநிறம்பெற்றானவ்வகையுஞ்சொல்வாம்.

(இ - ள்.) மெய்த்தவங்கள் இனிது ஆற்றிபேறுஉற்றான் - உண்மைவாய்ந் தவங்களைவழுவின்றிச்செய்து தான்விரும்பியபயன்களை ஒருசேரவடைந்தான், இன்னும் எல்லையிலர் அவண்மேவி-இன்னும் அத்திருத்தளியை யளவில்லாத முனிவர்களவ்விடத்தடைந்து, சீர்சால்சித்திகளை உழவாது பெறுகின்றோர்-சிறப்புமிக்க அஷ்டமாசித்திகளை வருந்தாமல் எளிதிற் பெறுகின்றார்கள், செந்நீர் தேக்குமுத்தலைவேல் வீராட்டகாசீசன்மேன்மை எவர்மொழிவார்-பிரமன்முதலியோர்உதிரத்தைநிரம்பமடுக்கும் மூன்றுகவராயுள்ள சூலாயுதத்தையேந்திய வீராட்டகாசீசத் திருத்தளியிலெழுந்தருளிய இறைவன் மகிமையை யார்தான் எடுத்துக்கூறுவார், மாயன் அத்தலத்தேவழிபட்டு பவளநிறம் பெற்றான் - திருமால்அந்தத்தளியிலேவழிபட்டுப்பவளநிறம்பெற்றனன், அவ்வகையும் சொல்வாம் - அவ்வரலாற்றையுமெடுத்துக்கூறுவாம்.

புலன்வழிமனத்தைச்செலுத்தாது வெயில் மழை பனிமுதலிய துன்பினைப்பொறுத்துத் தான்கருதியநிலையில் நின்றானுதலால் மெய்த்தவங்களினிதாற்றியெனவும், திருமால் மாயையில் வல்லோனாதலால் தான்வேண்டிய நிறத்தைப்பெறாது அரிய

தவஞ்செய்து பவளநிறம் பெற்றானாதலால் மாயனத்தலத்தே வழிபட்டுப் பவளநிறம் பெற்றான் எனவுங் கூறினார். (அ)

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

விரிதிரைசுருட்டிக்கரைமிசையெறியும்வெள்ளிவெண்பாற்கடல்வரைப்பி
னெரிமணிமாடப்போகமாபுரத்தினெய்தருந்தனியிடத்திருந்து
புரிமுறுக்குடைந்துநறவுகொப்புளிக்கும்பூந்தவிசணங்கினோடிணங்கி
வரிவளைக்குடங்கைவானவன்விளையாட்டியற்கையின்மகிழ்வுறுமொருநாள்.

(இ - ள்.) விரிதிரை சுருட்டி கரைமிசை எறியும் - பரந்த அலைகள் சுருண்டு கரையின்மேல் முத்துகளைவீசும், வெள்ளி வெண்பால் கடல்வரைப்பின் - வெள்ளி போலும் வெள்ளிய பாற்கடலெல்லையில், எரிமணிமாடப்போக மாபுரத்தின் எய்தருந்தனியிடத்திருந்து - தீப்போலுஞ் செந்நிறம்வாய்ந்த மாணிக்கங்களழுத்திய மாடமமைந்த போகமாபுரத்திலடைதற்கரிய ஏகாந்தவிடத்திலிருந்து, புரிமுறுக்கு உடைந்து நறவுகொப்புளிக்கும் பூந்தவிசு அணங்கினோடு இணங்கி - அரும்பின் முறுக்கவிழ்ந்து தேனைக்கொப்புளிக்கும் தாமரைமலரை யாசனமாகவுடைய திருமகளோடு கலந்து, வரிவளை குடங்கை வானவன் விளையாட்டு இயற்கையின் மகிழ்வுறும் ஒருநாள் - வரிகளமைந்த பாஞ்சசன்னிய மென்னும் சங்கினையேந்திய உள்ளங்கையையுடைய திருமால் தனது திருவிளையாட்டியல்பால் மகிழ்கூரும் ஓர் காலத்து.

மாயிருஞாலமுழுதுமீன்றளித்துமனைவியுமணாளனுமாயோ
ராயிடைப்பொழுதுகழிப்பியதம்முட்கதைசிலவறைகுவானமைந்தார்
பாயபாப்பணையிலறிதுயிலமர்வோன்பனிமலர்க்கிழத்தியைநோக்கித்
தேயுநுண்ணுசுப்பினகன்றபேரல்குலொருகதைகேளெனச்செப்பும்.

(இ - ள்.) மா இரு ஞாலம் முழுதும் ஈன்று அளித்து மனைவியும் மணாளனும் ஆயோர் - பெரிய நிலவுலகைப்படைத்துங்காத்தும் தம்முள் மனைவியும் மணாளருமாயிருந்த திருமகளுந் திருமாலும், ஆயிடைபொழுது கழிப்பிய - அப்போகமாபுரத்து நாள்கழிக்க, தம்முள் சிலகதை அறைகுவான் அமைந்தார்-தம்முள் சில கதைகளைப் பேச வமைந்தார்கள், பாயபாம்புஅணையில் அறிதுயில் அமர்வோன் - பரந்த சர்ப்பசயனத்தில் யோகநித்திரைகூரும் திருமால், பனிமலர்க்கிழத்தியை நோக்கி-குளிர்ந்த தாமரை மலரில்வசிக்கும் திருமகளைப்பார்த்து, தேயும் நுண்நுசுப்பின் அகன்ற பேர் அல்குல் - இளைத்த நுண்ணிய இடையையும் பரந்த அல்குலையுமுடையாய், ஒருகதை கேள் என செப்பும் - ஒருகதை கேளாயெனக் கூறுவான்.

திருமாலுக்குப்படைத்தலுங் காத்தலுமுடைமையால் அவ்விரண்டுதொழிலுக்கு முதற்கடவுளாயிருந்த அன்னோன் போகநுகர்தற் பொருட்டுச் சத்தியுந்தானுமாயிருநிறப்பட்டு நின்றானாதலால் மாயிருஞாலமுழுது மீன்றளித்து மனைவியும் மணாளனும் ஆயோரெனவும், ஆதிசேடன் மூன்றுலட்சயோசனை அளவு அகலமுடையனாதலால் பாயபாப்பணையில் அறிதுயிலமர்வோ னெனவுங் கூறினார். (௧0)

நன்னிறம்படைத்தநாமநீர்ப்பரவைநளிதிரைப்பாற்கடன்மாமை
புன்னிறந்தோற்றவொள்ளொளிவிரிக்கும்புகரறுகயிலையெம்பெருமான்
மின்னிடைமருங்குலுமையுடனொருநாட்கறங்குவெள்ளருவியஞ்சாரற்
றன்னிறமாண்டமந்தரப்பறம்பிற்றனியிடத்தினிதுறுமேல்வை

(இ - ள்.) நல் நிறம்படைத்த நாமம் நீர்பரவை நளிதிரை பால்கடல் மாமை-நல்ல நிறம்வாய்ந்த அச்சத்தைத்தரும் நீர்ப்பரப்பையுடைய பெரிய அலையமைந்த பாற்கடலின் பொலிவு, புல்நிறம்தோற்ற வெள் ஒளிவிரிக்கும்புகர் அறுகயிலை எம் பெருமான் - புற்கென்று தோன்ற வெள்ளிய ஒளிவீசும் குற்றமற்ற திருக்கயிலையி லெழுந்தருளிய எமது பெருமான், மின் இடை மருங்குல் உமையுடன் ஒருநாள்-மின்னலையொத்த இடையையுடைய உமையம்மையோடு ஒருநாள், வெள்ளருவி அம்சாரல் தன் நிறம்மாண்ட மந்தரப்பறம்பில் - வெள்ளிய அருவி ஆறு ஒழுகும் அழகிய சாரலிற்றனதுஒளிமிக்க மந்தரகிரியிலுள்ள போகமாபுரத்தில், தனிஇடத்து இனிதுறும் எல்லை - ஏகாந்தத்தானத்தில் இனிதாக எழுந்தருளி யிருக்குமமையத்தில்.

சிவபெருமானுக்குப் போகமாபுரம் மந்திரகிரியிலுள்ள தாதலால் மந்தரப்பறம் பிற்றனியிடத்து என்றார். (௧௧)

எழான்மிடற்றளிகள்கொள்ளை கூட்டுண்ணவீர்ந்தொடைநறுவிரியைம்பாற்
கழாமணிமேனிப்பிராட்டியைநோக்கிக்காளியென்றெம்பிரானழைப்ப
வழாநிலைக்கற்பினுள்ளகம்வெதும்பிவரிவிழிநித்திலமுகுத்துக்
குழாமுடையிமையோரேத்தெடுத்திறைஞ்சுங்கோமளையின்னதுகூறும.

(இ - ள்.) எழான் மிடறு அளிகள் கொள்ளை கூட்டுண்ண ஈர்ந்தொடை நறுவிரிஐம்பால்-கண்டத்தொனியோடு வண்டுகள் கொள்ளைகொண்டுண்ணக்குளிர்ந்தமலர்மாலை தேனையொழுக்கும் கூந்தலையுடைய, கழாத மணிமேனிப் பிராட்டியைநோக்கி-சாணைபிடியாத நீலமணியை யொத்த திருமேனியையுடைய எமதிறைவியை நோக்கி, காளி என்று எம்பிரான் அழைப்ப-காளியே என்று எமதுபெருமான் அழைக்க, வழாத நிலைகற்பினுள்ளம் வெதும்பி வரிவிழிநித்திலம் உகுத்து-கற்பினிலையின் வழுவாத திருவுள்ளம் வெம்பி வரிவாய்ந்த கண்களினின்றும் நீர் சிந்தி, குழாம் உடை இமையோர் ஏத்து எடுத்திறைஞ்சும் கோமளை இன்னதுகூறும்-தேவர்குழாம் வாழ்த்திவணங்கும் உமையம்மை யிதுகூறுவாள்.

முதல் சினைக்கொற்றுமை உண்மையால் சினையின் குணத்தை முதல் மேலேற்றி ஈர்ந்தொடையெனவும், கூந்தல், முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என ஐவகையாக முடிக்கப்படுதலால் ஐம்பால் எனவும், காளநிறமுடைமையில் காளியெனவும் கூறினார். காளம் கருமை. முடி மயிரைஉச்சியில் முடித்தல், கொண்டை பக்கலில் முடித்தலில், சுருள் - பின்னே செருகுதல், குழல் - சுருட்டிமுடித்தல், பனிச்சை பின்னிமுடித்தல். (௧௨)

விடுந்தகைக்காளநிறம்படைத்துளன்யான்வெண்ணிறம்படைத்துளைநீயே
நெடுந்தகாய்நமக்குப்புணர்ச்சியெவ்வாறுநிகழுமற்றிங்கிதுகாறும்
கடுந்தகையென்மாட்டருளினுலின்பக்கலவியிற்றிளைத்தனையினிநா [தாள்
ணடுந்தகைப்படை யோய்கவுரியாம் வண்ணம்பெறு முறையருடியென்றிரந்

(இ - ள்.) யான்விடும் தகைகாள நிறம்படைத்துளன் - யானோ தேவரீர்வெறுக்கும் கருநிறமுடையேன், நீயே வெண்ணிறம் படைத்துளை - நீயோ வெள்ளிய நிறம் படைத்துள்ளாய், நெடுந்தகாய்-இவ்வாறு உண்மையால் அளவிறந்த பொலிவினையுடையாய், எவ்வாறு நமக்குப் புணர்ச்சி நிகழும் - எவ்வாறு நம்மிருவர்க்குங் கலப்புக்கூடும், இதுகாறும் கடுந்தகை என்மாடு - இந்நாள்காறும் வெறுக்குந்தன்மை

யுடைய வென்னிடத்து, அருளினல் இன்பக்கலவியில் திளைத்தனை-தேவரீர் திருவ ருளால் கலவியில் என்பால் இன்பநுகர்ந்தாய், அடும் தகைபடையோய் - கொல்லுந் தகைமைவாய்ந்த சூலப்படையை யுடையோய், இனிநான் கவுரியாம் வண்ணம் பெறுமுறை அருடி என்று இரந்தாள்-இனி நான் கவுரியாம்வகையைப் பெறும் வண்ணம் அருளாய் என்று குறையிரந்தனள்.

கவுரி - பொன்னிற முடையவள். (கரு)

பொலங்குவட்டிமயப்பனிவரைப்பிராட்டிபுகன்றனதிருச்செவிசாத்தி
யிலங்குவெண்ணீற்றுச்சுந்தரக்கடவுளியம்புவான்வரிவிழிகேட்டி
கலங்கலுறெய்தேல்கடவுளர்கருமப்பொருட்டுனையிம்முறையழைத்தே
நலங்கொளவுலகநாடொறும்புரத்தனங்கடனுதலிற்கண்டாய்.

(இ - ள்.) பொலம் குவடு இமயம்பனிவரை பிராட்டிபுகன்றன திருச்செவிசாத்தி - பொற்குவையமைந்த சிகரத்தையுடைய இமமலையிற்றோன்றிய வுமையம்மை, குறையிரந்தனவற்றைத் திருச்செவியிற்சாத்தி, இலங்குவெண்ணீறு சுந்தரக்கடவுள் இயம்புவான் - விளங்கும் வெள்ளிய திருநீறணிந்த அழகிய இறைவன் கூறுவான், வரிவிழிகேட்டி - வரியமைந்தகண்களையுடைய வுமையேகேளாய், நலம்கொள உலகம் நாள்தொறும்புரத்தல் - நன்மைமிகவுலகினை நாள்தோறும் பாதுகாத்தல், நம் கடன் ஆதலில் - நமது கடனுதலால், கடவுளர் கருமப்பொருட்டு உன்னை இம்முறை அழைத்தேன் - தேவர்கள் குறையிரந்த கருமத்தை முடித்தற்பொருட்டு உன்னை யிவ்வாறழைத்தேம், கலங்கு அனுர் எய்தேல் - ஆதலால் நீ கலங்குந் துன்பமுறாதே.

நிசும்பன் சும்பன் என்னும அசுரர்களால இந்திரன்முதலியோர் தமது செல்வத்தை யிழந்து உமாதேவியார் திருவடிகளைச் சரணடைந்து தமது துன்பத்தை யெடுத்துக்கூறக் கருணைகூர்ந்திரங்கியஞ்சற்கவென்றருளி, கயிலையங்கிரியின் சாரலில் அம்மைதனியே வந்தெழுந்தருளியிருக்கும்போது அவ்வசுரர்களின் பரிசனங்களாகிய சண்டன் முண்டனென்னு மிருவர் அங்கு வந்துநீ யார் தனித்திருத்தற்குக் காரணம் யாது,சும்பன் என்னுமசுரேந்திரன் மூவுலகிற்கும் அதிபன் அவனிடம் வருகவென்று கூற, நாம் இங்குத் தவம்செய்து கொண்டிருக்கின்றேம் ஆடவரோடுனையாடில மென்று உமாதேவியார் மறுத்தருளினர், அதுகேட்ட அவ்வசுரரிருவரும் சும்பனென்னு மசுரேந்திரனுக்குக்கூற, அவன் கேட்டு இனியொருதரம் சென்றழையுங்கள் வாராராயின் வலிந்துபற்றி வருகவென்றேவ, அவர்கள் சென்று நெருங்கும்போது உமையார் கோபித்த அளவில் திருத்தோளினின்று ஓர் பெண் தோன்றி யவர்களைக்கொன்று அவ்வுமையாரால் சாமுண்டியெனப் பெயர்பெற்று விளங்கினள், அவ்வசுரர்களோடுவந்த வீரர்களுள் எஞ்சிய சிலர் சென்று அவ்வசுரேந்திரனுக்குரைப்ப அவன் தூமக்கண்ணன்முதலிய அசுரவீரர்களை யேவ, அவர்கள் நெருங்கியபோது அபிராமிமுதலிய சத்தமாதர்களைத் தந்து அவர்களைப் போரில் வதைத்ததைக் கேள்வியுற்று நிசும்பனென்னு மசுரேந்திரன் சேனைகளோடு போர்க்கு வந்து அவனுமிறந்தபின் அவன் மூத்தோனுகிய சும்பனும் போரில் வந்து மடிந்தனன்.

அது கேட்ட அவர்கள் மருகனுகிய இரத்தவீசனென்னும் அசுரன் போர்க்கு வந்தகாலையில் சத்தமாதர்களாயுதத்தால் தொளைப்புண்ட அவனுடல் சிந்தும் ஒவ்வோரிரத்தத்துளியிலும் அசுரவீரர்கள் பலர்தோன்றி எங்கும் போர்செய்தலை அச்சத்தமாதர்கள் கண்டதிசயித்து உமாதேவியார்க்குக்கூற, உமாதேவியார் மாயையானது அவ்வுமாதேவியார் கோபமுற்றுந்திரண்டு ஒருவடி வெடுத்தாற்போலக் காளியென்னும்

பெயர்கொண்டு தோன்ற அக்காளியை நோக்கியருளி நாம் அவனோடுபோர் செய்யும் போது சிந்துமுதிரத்தையும் தசையையும் வீழாது கபாலத்திலேந்தி யருந்துகவென்று கூறியப்பணியில் நிறுத்தியவனையும் வதைத்துக் காளியைநோக்கி நீ தேவர்களை யவருலகிற் குடியேற்றிஞய் நீ யவர்க்கும் வேண்டி யாங்குவரங்களைக்தந்து வடாரணியமாகிய திருவாலங்காட்டிற்குச்சென்றுஅங்குப் பெருமானுரோடு நடனஞ்செய்க என ஏவினர் என்பது வரலாறுதலால்கடவுளர் கருமப்பொருட்டுனை யிம்முறை யழைத்தேன் என்றார். (கச)

ீகவுரநிறமபெறுமாறுனக்குரைபபல்
வெற்றிடமின்றியெங்கணுநிறைந்துபரவெளிப்பரப்பிடைமேவும்
பெற்றியன்யானேயாயினுந்தகைசால்பீடுயர்தலங்களின்மாட்டு
மற்றமின்மறையோரகத்தினுமுலவாவருள்சுரந்தினிதுவீற்றிருப்பேன்.

(இ - ள்.) அது பின்னர் தெளிதி - அதனைப் பின்னர் நீ யுணர்வாய், கவுரம் நிறம்பெறும் ஆறு உனக்கு உரைப்பல் - நீ கவுர நிறம்பெறும் வண்ணமுனக்குக் கூறுவன், வெற்றிடம் இன்றி - இடையீடில்லாமல், எங்கணும் நிறைந்து பரவெளி பரப்பு இடைமேவும் பெற்றியன் யான்-எங்கும் நிறைந்து சிதாகாசப்பரப்பிலமரும் தன்மையன் யான், ஆயினும் - யான் இத்தன்மையனுனாலும், தகைசால் பீடு உயர் தலங்களின் மாடு உம் - பொலிவுமிக்க பெருமையாலுயர்ந்த தலங்களிடத்தும், அற்றம் இல் மறையோர் அகத்தினும் - குற்றமில்லாத வேதங்களையுணர்ந்த அந்தணர்கள் மனத்திலும், உலவாத அருள் சுரந்து இனிது வீற்றிருப்பேன் - அழிவில்லாத கருணைசுரந்து இனிதாக நிகரற்றமர்வேன்.

பின்னர் நிகழ்தல் யான் விளித்த காரணத்தால் நீயேயுணர்வாய் என்பார் அது பின்னர்த் தெளிதி யெனவும், யான் சர்வஞ்ஞத்துவன் என்பார் வெற்றிட மின்றி யெங்கணு நிறைந்து எனவும்,யான் ஞானவடிவினன் என்பார் பரவெளிப்பரப்பிடை மேவும்பெற்றியன் எனவும், யான் இத்தன்மையனுயினும் ஆன்மாக்களுணர்ந் துய் தற்பொருட்டுத் திருமேனிகொண்டு திருத்தலங்களிலும் வேதாகமங்களையுணர்ந்து என்னை வழிபட்டுப் பூசிக்கு மறையவர் மனத்திலும் நீங்காதிருப்பேனென்பார் தகைசால் பீடுயர் தலங்களின் மாட்டும் அற்றமின் மறையோரகத்தினுமுலவாவருள் சுரந்தினிது வீற்றிருப்பேன் எனவுங் கூறியருளினரெனக் கூறினர். கவுர நிறம் கருமையும் வெண்மைங் கலந்த நிறம் எனவுங் கூறுவர். (கரு)

மேம்படுமவற்றினுத்தமத்தளிகள்விதியுளிமறைநெறியொழுக்க
மோம்பிமிக்குயர்ந்தோருள்ளமுமெனக்குச்சிறந்தனவவற்றினுமேலாய்த்
தேம்பொழில்வேலிக்காசிமாநகரும்யோகிகள்சிந்தையுஞ்சிறந்த
வாம்பகரவற்றிற்காஞ்சியுமுண்மையடியவருள்ளமுஞ்சிறந்த.

(இ - ள்.) மேம்படும் அவற்றினும் - மேம்பட்ட அத்திருத்தலங்களிலும், உத்தமம்தளிகள் - மேம்பட்ட தலங்களும், விதி உளி மறை நெறி ஒழுக்கம் ஓம்பி மிக்கு உயர்ந்தோர் உள்ளமும் எனக்கு சிறந்தன - முறையால் வேதாகமங்களின் நெறியில் வழுவாமல் நின்று மிகவும் உயர்ந்தவரது மனமும் மேம்பட்டன, அவற்றினும் மேல் ஆய் - அவைகளினு மேம்பட்டதாய், தேம்பொழில் வேலிகாசிமாநகரும் யோகிகள் சிந்தையும் சிறந்த ஆம் - தேன்சிந்துஞ் சோலைகளை வேலியாகவுடைய காசியென்னுந் திருநகரும் சிவயோகிகளிதயமு மேம்பட்டனவாம், பகர் அவற்றில் காஞ்சியும்

உண்மை அடியவர் உள்ளமும் சிறந்த - அவைகளிலுங் காஞ்சியென்னுந் திருநகரும் மெய்யடியவரிதயமும் மேம்பட்டன.

முன்னர் எல்லாத்தலங்களையும் அந்தணரையும் எடுத்துக்கூறி, அவற்றிலும் காசியும் வேதாகம வொழுக்கங்களினின்றுயர்ந்தோரிதயமு மேம்பட்டனவெனவும், அவற்றிலும் காஞ்சித்திருநகரும் அடியவருள்ளமுஞ்சிறந்தன வெனவும் ஒன்றற்கொன்றுயர்ச்சி கூறுதலால் மேன்மேலுயர்ச்சிநவிற்சியணி. (கசு)

தகைபெறுமவற்றின்வேறெனக்கினியதானமற்றெங்கணுமில்லை
நகைமலர்க்கொடியேயங்கரெய்திநயந்தெனையருச்சனையாற்றி
மிகையறுதவத்தான்வேட்டவாபெறுதியென்றலும்விளங்கிழையுமையாள்
பகைவினைதுரக்குங்காஞ்சியினெய்திப்பஞ்சதீர்த்தக்கரைஞாங்கர்.

(இ - ள்.) நகைமலர் கொடியே - விளங்கும் பூங்கொடிபோல்வாய், தகை பெறும் அவற்றின் வேறு எனக்கு இனியதானம் எங்கண்ணும் இல்லை - பொலிவுவாய்ந்த அவைகளிலும் வேறேயெனக்கு மகிழ்ச்சி தருமிடமெவ்விடத்திலுமில்லை, அந்நகர் எய்தி என்னை நயந்து அருச்சனை ஆற்றி - அத்திருநகரையடைந்து என்னையருச்சித்து, மிகை அறுதவத்து ஆன்வேட்ட ஆறுபெறுதி என்றலும் - தனக்கு மற்றொன்று மேம்பட்டதொழிந்த தவத்தினால் நீவிரும்பியவண்ணம் அடைவாயென்றருள, விளங்கு இழை உமையாள் - விளங்கும் ஆபரணத்தையணிந்த உமையம்மை, வினை பகைதுர்க்கும் காஞ்சியின் எய்தி - இருவினையென்னும் பகையைத் தன்னையடைந்தவர்களுக்கு ஓட்டுங் காஞ்சியென்னுந் திருநகரையடைந்து, பஞ்சதீர்த்தம் கரை ஞாங்கர் - பஞ்சதீர்த்தக் கரையினருகில். (கஎ)

மெய்யடியருள்ளம் போலக் காஞ்சித் திருநகரிருப்பதால் அவற்றின் வேறெனக்கினியதான மற்றெங்கணு மில்லையெனவும், என்னையருச்சித்தல் முதலிய தவத்தினும் மேம்பட்ட தவம் வேறின்மையால் மிகையறுதவத்தான் எனவும், அத்தவத்தால் எண்ணிய எண்ணியாங்கடைதல் கூடுமாதலால் வேட்டவா பெறுதியெனவும், இருவினையும் பிறவிக்குவித்தாதலால் பகைவினையெனவும் கூறினர்.

மாதவமியற்றிப்பொன்னுருப்பெற்றுக்கவுரியாய்வயங்கினளினைய
மேதகுமிறும்பூதென்னெனப்புகல்வேன்வெறிமலர்ப்பங்கயத்தவிசின்
மாதர்வாணகையாயென்றெடுத்துரைத்தான்மந்தரமலமரச்சுழற்றி
ஓதநீரளக்கரமுதெடுத்திமையோர்க்கூட்டியபெருந்திறற்குரிசில்.

(இ - ள்.) மந்தரம் அலமரசுழற்றி - மந்தரகிரி மத்தாகச்சுழலத் திருப்பி, ஓதம் நீர் அளக்கர் அமுது எடுத்து இமையோர்க்கு ஊட்டிய பெருந்திறல குரிசில் - வெள்ளமயமாகிய கடலைக்கடைந்து அமுதினையெடுத்துத்தேவர்களுக்கு ஊட்டிய பெருமைவாய்ந்திருமால், வெறிபங்கயம் மலர் தவிசின் மாதர்வாள் நகையாய் - வாசம் வாய்ந்த தாமரைமலராகிய ஆசனத்தில் வசிக்கும் அழகிய ஒள்ளிய நகையையுடைய திருமகளே, மாதவம் இயற்றி பொன்உருபெற்று கவுரியாய் வயங்கினள் - பெரிய தவத்தைச்செய்து பொன்னுருவாய்ந்து உமையம்மை கவுரியெனத் திருநாமம் பெற்று விளங்கினர், மேதகும்இறும் பூது என் என்ன புகல்வேன் - மேன்மைவாய்ந்த வியப்பினை யென்னவென்று எடுத்துக்கூறும் வன்மையேன் (அல்லனென்றபடி),

தன்னு லெடுத்துக்கூற வலியிலனென்பான் என்னெனப்புகல்வேன் என்றுன். எவன் என்னும் வினுவினைக்குறிப்பு வினைமுற்று இன்மைமேல் நின்றது. பொன்னுருப் பெற்றுமாகத நிறத்தால் வந்த காரணப்பெயரோயாகுக எனக் கூறுதலுமுண்டு.()

செய்யவள்கேட்டுவியப்புமீக்கூர்ந்துசெப்புவாளென்னையாளுடையாய்
ஐயவிச்செயலைக்கேட்டொறுமுலவாவற்புதம்பயக்குமான்மன்ற
மெய்யுணர்வின்பச்சத்தியுஞ்சிவமும்விளைக்குமிவ்விளைவுகளெல்லா
மையறத்தெளிந்தோர்திருவிளையாட்டின்வண்மையென்றியம்புவர்மன்னே.

(இ - ள்.) செய்யவள் கேட்டு வியப்புமீக்கூர்ந்து செப்புவாள் - திருமகள்கேட்டு அதிசயமிகுந்து கூறுகின்றுள், என்னை ஆள்உடையாய்-என்னையாளாக வுடைய இறைவனே, இச்செயலை கேள்தொறும் ஐய உலவாத அற்புதம்பயக்கும் - இச்செயலினைக் கேட்குந்தோறும் ஐயனேகெடாத அற்புதத்தினை விளைக்காநிற்கும், மன்றமெய் உணர்வு இன்பம் சத்தியும் சிவமும் விளைக்கும் இவிளைவுகள் எல்லாம்-தேற்றமாகச் சத்துச்சித்தானந்தமே திருவுருவாகவுடைய பராசத்தியும் சிவமும் ஆன்மாக்களுய் தற்பொருட்டுக்கருணை கூர்ந்து செய்யுமிச்செயல்களை யெல்லாம், மையறதெளிந்தோர் திருவிளையாட்டின் வண்மை என்று இயம்புவர் - ஐயந்திரிபறத்தெளிந்த மேலோர் இது திருவிளையாட்டின்றிற மென்று கூறுவர்.

தெளிந்தோர்போக திருவுருவின் செயலை இவ்வாறு கூறுவர் என்றமையால் தெளிவில்லோர் ஏனையோர் போலத் தமக்கெனக் கொண்டதிருவுருவெனக் கூற நிற்றலால் உபலக்கணம், அதனைப்பின்னர்க் காண்க. (கக)

இற்றலாற்காமற்காய்ந்துமுற்றுணர்ந்துவரம்பிலின்புடையவீசனுக்கு
மற்றெவனுளதோவவ்விளையாட்டுமுலகெலாமுய்யுமாறன்றே
அற்றெனவுணராக்கயவர்கள்காமத்திறமெனக்கருதுவரனையர்
பெற்றியையாரேதெளிதரற்பாலார்பிறங்கொளிமணிநிறக்குரிசில்.

(இ - ள்.) பிறங்கு ஒளி மணி நிறம் குரிசில் - விளங்கு மொளிவாய்ந்த நீலமணிபோல நிறம்வாய்ந்த இறைவனே, இற்று அல்லாமல் - இதுவல்லாமல், காமன் காய்ந்து முற்று உணர்ந்து வரம்பு இல் இன்பு உடைய ஈசனுக்கு - மன்மதனைச் சினந்தெரித்து முழுதொருங்குணர்ந்து அளவிறந்த இன்பத்தையுடைய இறைவனுக்கு, மற்று எவன்உளதோ - தனக்கெனவொன்றுளதா, அவிளையாட்டும் உலகுஎல்லாம் உய்யும் ஆறு அன்றே - அத்திருவிளையாடலும் ஆன்மாக்களெல்லா முய்யும் பொருட்டல்லவா, அற்றுஎன உணராத கயவர்கள் - ஆன்மாக்களின் பொருட்டென வுணராத கீழ்மக்கள், காமம் திறம் என்ன கருதுவர் - இதுகாமப்பகுதியெனக் கருதுவர், அனையர் பெற்றியை தெளிதரல் பாலார் யார் - அச்சிவஞ்சத்தியின் செயலைத் தெளிந்து கூறும் பகுதியையுடையவரெவர்.

அநாதிபோதமுடைமையும், சர்வஞ்ஞத்துவ முடைமையும், திருப்தியுடைமை முடைய இறைவனென்பாள் காமற்காய்ந்து முற்றுணர்ந்து வரம்பிலின்புடைய வீசனுக்குஎனவும், இறைவனுக்குஇஃதோர் திருவிளையாட்டன்றியியல் பாகவேபாசங்களில் னின்று நீங்கினேனுக்கு வேறுண்டோஎன்பாள் இற்றலால் மற்றெவனுளதோ வெனவும், நிர்விகாரமாயுள்ளவிவர்கள் பால் இதுநிகழ்ந்தது ஆன்மாக்களுய்தற்பொருட்டென்பாள்அவ்விளையாட்டுமுலகெலா முய்யுமாறன்றே யெனவும், இதனையுணரார் ஏனைத்தேவர் செயல்போலக் காமத்திறனெனக் கூறுவர் என்பாள், அற்றெனவு

காமத்திறமெனக் கருதுவர் எனவும், அவ்வாறுணர்வோர் அரியர் என்பாள் அனையர் பெற்றியையாரேதெளிதரற்பாலார் எனவுங்கூறினாள்.

இவ்வாறு கூறுதலை,

" போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்
யோகியா யோகமுத்தியுதவுதலதுவு மோரார்
வேகியானாற்போற் செய்தவினையினை வீட்டயோரலார்
ஊகியா மூடரெல்லாமும் பரினொருவனென்பர்" எனவருஞ்சிவஞான சித்தியாரால்உணர்க. (௨0)

நிலையியற்பொருளுமியங்கியற்பொருளுநிலைபெறத்தொழிற்படுத்துடைய
தலைவனங்கவனேபனிவரைப்பிராட்டிதன்னைநின்னையுமிடப்பான்
மலரணைப்புத்தேடன்னையுமெனையும்வலப்புடைக்காலருத்திரனைக்
கலைமகடனையுமுளத்திடைத்தந்தான்காத்துயிர்த்தழிப்பதுகருதி.

(இ - ள்.) நிலை இயற் பொருளும் இயங்கியற்பொருளும் நிலைபெறதொழிற்படுத்து உடைய தலைவன் அவனே - அசரப்பொருளும் சரப்பொருளும் தத் தம் நிலையினிற்க அங்கவற்றின் வினைக்கீடாகத் தொழிற்படுத்தும் இறைவன் அச்சிவபெருமானே, பனிவரைபிராட்டி தன்னையும் நின்னையும் இடப்பால் - இமமலையிற்றோன்றிய உமையம்மையையும் உன்னையும் இடப்பாலிலும், மலர் அணைப்புத்தேள் தன்னையும்என்னையும் வலப்புடை-தாமரை மலரை ஆசனமாகவுடைய பிரமனையும் என்னையும் வலப்பாலிலும், காலருத்திரனை கலைமகள்தனையும் உளத்து இடை-காலருத்திரமூர்த்தியையும் நாமகளையும் தனது திருவுளத்திலும், காத்து உயிர்த்து அழிப்பது கருதி தந்தான் - ஆன்மாக்களைக் காத்துப்படைத்து அழித்தலைக் கருதிப் படைத்தனன்.

ஆன்மாக்களிருவினைகளுக்கீடாக நிலையியற்பொருளும் இயங்கியற்பொருளுமாகியசராசரங்களைத்தொழிற்படுத்தும்இறைவன்அச்சிவபெருமானேயாதலால்நிலையியற்பொருளுமியங்கியற்பொருளு நிலைபெறத்தொழிற்படுத்துடைய தலைவனங்கவனே எனவும்,அவ்வாறுதொழிற்படுத்தற்கீடாகஅவ்வான்மாக்களுக்குத் தத் தம் போகநுகர்விக்கும் காத்தற்றொழிலையுடைய உன்னை யிடப்பாலிலும், அப்போகம்,நுகர்தற்குரிய உடம்பைத்தரும் படைப்புத்தொழிலையுடையபிரமனை வலப்பாலிலும்,காத்தல படைத்தலென்னுந் தொழிலிற்பட்ட ஆன்மாக்களின் இளைப்பொழித்தற்றொழிலாகிய அழித்தலையுடைய உருத்திரமூர்த்தியைத் திருவுளத்திலும் படைத்தானாதலால் இடப்பால் வலப்புடை உளத்திடை காத்துயிர்த் தழிப்பது கருதித்தந்தனன் எனவுங்கூறினாள்.

அகிலமுந்தானேயருட்டொழினடாத்துமாங்கவற்கெவற்றினுஞ்சால
மிகுபெருங்காதலுமையவளிடத்தும்விரவுநின்னிடத்தினுமன்றே
முகிலுறழ்கூந்தலவளெனநீயுமுதல்வனேயுன்னடியேற்கு
மகிழ்வுமீக்கிளைப்பவவ்வுருப்பெறுதியென்றனண்மலரணைக்கிழத்தி.

(இ - ள்.) அகிலமும் தானே அருள்தொழில் நடாத்தும் ஆங்கு அவற்கு-யாவுந் தானாய்த் தனது திருவருளால் அம்முத்தொழில நடாத்தும் அவ்விறைவனுக்கு, எவற்றினும் சாலமிகுபெருங் காதல் உமையவளிடத்தும் விரவுநின் இடத்தினும் அன்றே - தானுயுள்ள எப்பொருளினும் மிகவும் பெரியவிருப்பம் உமையம்மையிடத்

திலும் அவனிடப் பாகத்திற்கலந்த வுன்னிடத்தினு மல்லவா, (ஆதலால்) முகில் உறழ் கூந்தல் அவளென நீயும்முதல்வனே - மேகத்தையொத்த கூந்தலையுடைய அம்முதல்வியைப்போல நீயும் முதல்வனல்லவா, உன் அடியேற்கு மகிழ்வுமீக்கிளைப்ப-உனது அடியேனாகிய எனக்கு மகிழ்ச்சிமீதூர, மலரணைக் கிழத்தி அ உருபெறுதி என்றனள் - தாமரைமலரை யிருக்கையாகவுடைய திருமகள் அத்திருவுருவைப் பெறுவாயென்றனள்.

யாவுந் தானாய் நிற்றலால் எவற்றினுமெனவும், எப்பொருளினும் விருப்பமுடையோனென்பாள் எவற்றினு மெனவும், அப்பொருள்களினும் உமையம் மையிடத்தும் உன்னிடத்தும் மிக்கவிருப்பினன் என்பாள் சாலமிகுபெருங்காதலுமையவளிடத்தும் விரவுநின்னிடத்தினு மன்றே எனவும், அவ்விறைவன்விருப்பிற்குக் கொள்கலனாய் உமையம்மை நிற்றலால் முதல்வியானாற்போல நீயும் ஒருசேரநிற்றலால் முதல்வனுவாயென்பாள் முகிலுறழ் கூந்தலவளென நீயுமுதல்வனே எனவும், அம்முதல்வியேட்ட நிறம் தந்ததுபோல நீயும் முதல்வனாதலால் உன்காளநிறம் நீங்கச் செந்நிறம் உனக்குந்தருவா னென்பாள் பெறுதியெனவும், நீஅவ்விறைவன் இடப்பாலிற்றோன்றியது போல நானும் அவன் வலப்பாலிற்றோன்றுதலால் நான்வேட்டவரந்தருவா யென்பாள் உன்னடியேற்கு மகிழ்வுமீக்கிளைப்பஎனவும், பொன்னிறமும் செந்நிறத்துளடங்கு மென்பாள் அவ்வுருப் பெறுதிஎனவுங் கூறினள். (உஉ)

விளங்கிழைமாற்றமச்சுதன்கேளாவெகுண்டுநின்மனக்கருத்திதுவேற்
களங்கனியனையேன்றன்னுடனிந்நாள்காறுநீபொலஞ்சுடர்நிறத்தாய்
வளங்கெழுமின்பமென்னணநுகர்ந்தாய்மற்றினிச்செக்கர்வானுருவ
முளங்கொளப்பெறுகேனென்றவட்கியம்பிக்கதுமெனக்கரந்தனனாங்கு.

(இ - ள்.) விளங்கிழைமாற்றம் அச்சுதன் கேளா வெகுண்டு-விளங்கும்ஆபரணத்தையணிந்த திருமகள்கூறிய வார்த்தையைத் திருமால் கேட்டுச்சினந்து, நின்மனக் கருத்து இதுவேல் - உன் எண்ணம் இதுவானால், களங்கனி அனையேன் தன்னுடன் இந்நாள்காறும் - களாக்கனியையொத்த கரிய நிறத்தையுடைய உன்னோடு இந்நாள் காறும், பொலம் சுடர்நிறத்தாய் நீ - பொன்போலவிளங்கும் செந்நிறமுடைய நீ, வளம் கெழும் இன்பம் என்னணம் நுகர்ந்தாய் - வளமிக்க போகவின்பத்தை எவ்வாறு திளைத்தாய், இனி செக்கர்வான் உருவம் உளம்கொளப் பெறுகேன் என்று - இனிச் செக்கர்வானத்தையொத்ததிருவுருவத்தை உன மனத்துக்கியையப் பெறுவேனென்று அத்திருமகட்குக்கூறி, ஆங்கு கதுமென கரந்தனன் - அவ்விடத்து விரைந்து மறைந்தான். (உ௩)

கச்சிமாநகரமெய்திவீராட்டகாசநல்வரைப்பினுக்கெதிரா
வச்சிவன்வீரநகைதிரண்டனையசக்கரதீர்த்தமுண்டாக்கி
முச்சகமேத்துங்கங்கையிற்சிறந்தவத்தடமூழ்கிமோன்பியற்றிப்
பச்சைமால்வதிந்தான்வதிந்திடம்பச்சைவண்ணனாலயமெனப்படுமால்.

(இ - ள்) கச்சிமாநகரம் எய்தி வீராட்டகாசவரைப்பினுக்கு எதிராக - காஞ்சியென்னும்பெரிய திருநகரையடைந்து வீராட்டகாசமென்னுந் திருத்தளிக்கெதிராக, அசிவன் வீரநகை திரண்டால் அனையசக்கரதீர்த்தம் உண்டாக்கி - அச்சிவபெருமான் வீரநகைதிரண்டாலொத்த சக்கரதீர்த்தமொன்றமைத்து, முச்சகம் ஏத்தும்

பங்கையில் சிறந்த அத்தடமூழ்கி - மூன்றுலகமும் வணங்கும் உமையம்மையாற் சிறந்த அத்தீர்த்தத்திற்படிந்து தவஞ்செய்து, பச்சைமால் வதிந்தான் - பசியநிறம்வாய்ந்த திருமால் வசித்தனன், வதிந்த இடம் பச்சைவண்ணன் ஆலயம் என்னப்படும்-பச்சைவண்ணன் ஆலயமென வழங்கப்படும். (உச)

ஆங்ஙனம்வைகிநாடொறுமீரேழாயிரமளிகெழுபொகுட்டுத்
தேங்கமழ்கமலங்கொண்டுவீராட்டகாசமாதேவனையருச்சித்
தோங்குபேரன்பிற்றொழுதெழுந்திரப்பவுலப்பருங்கருணைமீக்கூர்ந்து
மாங்குயில்பாகனெதிரெழுந்தருளிவழங்கினன்பவளநேர்வடிவம்.

(இ - ள்.) ஆங்ஙனம் வைகி-அவ்விடத்தில் வசித்து, நாள்தோறும் அளிகெழுபொகுட்டு தெங்கமழ் ஈரேழாயிரம் கமலம்கொண்டு - நாள்தோறும் வண்டுகள் சூழ்ந்த பொகுட்டமைந்து தேன்கமழும் பதினாலாயிரந் தாமரைகளைக்கொண்டு, வீராட்டகாசமாதேவனை அருச்சித்து - வீராட்டகாசத்திலெழுந்தருளிய இறைவனை யருச்சனை செய்து, ஓங்குபேர் அன்பில் தொழுது எழுந்து இரப்ப - முறுகிய பேரன்பாற்றொழுது வாழ்த்தியெழுந்துகுறையிரக்க, உலப்பு அறும் கருணை மீக்கூர்ந்து-அளத்தற்கரிய திருவருள் மீதூர்ந்து, மாங்குயில் பாகன் எதிர் எழுந்தருளி - மாங்குயிலிசையையொத்த சொல்லையுடைய உமையம்மையை யிடப்பாகத்திலுடைய இறைவன் அத்திருமாலுக்கெதிரே காட்சி தந்தருளி, பவளம் நேர்வடிவம் வழங்கினன்-பவளத்தையொத்த திருவுருவத்தைத் தந்தருளினன்.

உமையம்மை அருட்சத்தியாதலால் கருணைமீக் கூர்ந்து என்றார். (உ௫)

பொரியரைக்காயாம்போதுறழ்வண்ணங்கழீஇத்துகிர்புரைநிறமெய்திப்
பெரிதுளமகிழ்ந்தானாயிடைச்சிலநாள்வைகிமீண்டரவணைப்பெருமான்
விரிதிரைத்தீம்பாற்கடலகத்தணுகிவிரைமலர்க்கிழத்தியோடிணங்கித்
தெரியிழைத்திருவேகாண்டிநீபவளச்சேயொளிதழைக்குமிவ்வடிவம்.

(இ - ள்.) பொரி அரைகாயாம்போது உறழ்வண்ணம் கழீஇ துகிர் புரைநிறம் எய்தி - பொருக்குப்பொருந்திய அரையுடைய காயாமலரை யொத்த நிறத்தினின்றும் நீங்கிப் பவளத்தையொத்த நிறம்வாய்ந்து, அரவு அணை புத்தேள் பெரிது உளம் மகிழ்ந்தான் - சர்ப்பசயனத்தையுடைய திருமால் மிகவும் மனமகிழ்ந்து, ஆயிடை சிலநாள் வைகிமீண்டு - அவ்விடத்துச் சிலநாள் வசித்து அங்கு நின்றுந்திரும்பி, திரைவிரிதீம்பால் கடல் அகத்து அணுகி - அலைவிரிந்த இனியபாற்கடலிடத்துள்ள போகமாபுரத்தை அடைந்து, விரையலர்கிழத்தியோடு இணங்கி-வாசமிக்க தாமரை மலரில்வசிக்கும் திருமகளோடு கலந்து, தெரிஇழைதிருவே - சிறந்த ஆபரணத்தை யணிந்த திருமகளே, பவளம்சேய் ஒளிதழைக்கும் இவடிவம் நீகாண்டி-பவளம் போலச் செந்நிறங்கனிந்த இவ்வுருவத்தை நீபாராய். (உ௬)

கச்சறப்பணைத்துபபுடைபரந்தெழுந்தகதிர்மணிமுலையினுயிதுமெவன
னிச்சையாற்பெற்றேன்விழைந்தவாறென்மாட்டினனலறுகவொனக்கேட்டுப்
பச்சிளந்தோகையிந்நிறமடிகளிச்சையாற்படைத்ததேன்மாய
விச்சையேபோலுநிலைமையன்றெனக்கீதென்பயன்விளைதருமென்றாள்.

(இ - ள்.) கச்சு அறப்பணைத்து புடைபரந்து எழுந்த கதிர் மணிமுலையினாய்-கச்சுக்கிழியப் பருத்து அயலிற் பரந்து ஓங்கி விளங்கும் முத்துமாலையை யணிந்தமுலையி

ளுய், இது என் இச்சையாற்பெற்றேன்-இது எனது இச்சையாற்பெற்றேன், விழை ந்த ஆறு என்மாடுடுஇன்நலம் நுகர் என-நீ விரும்பிய வண்ணம் என்னிடத்து இனியபோகம் நுகராயென்றருள, பச்சிளம் தோகைகேட்டு - பசிய இளமைவாய்ந்த மயிலையொத்த திருமகள் கேட்டு, அடிகள் இச்சையால் இந்நிறம் படைத்ததேல் - தேவ நீர இச்சாசத்தியால் இந்நிறத்தைப் பெற்றதாயின், மாயவிசசையே போலும்-மாய வித்தைபோலும், எனக்கு ஈது நிலைமை அன்று - எனக்கு இது நிலையையல்ல, என்பயம் விளைத்திடும், என்றாள் - எனக்கு யாது இன்பந்தருமென்றனள்.

திருமால் போகத்தையே கருதினவனுதலால்அப்போககுறிப்புத்தோன்றக் கச்சறப்பணைத்துப் புடைபரந் தெழுந்தகதிர் மணிமுலையினுய் எனவும், நீ விரும்பியது செந்நிறமாதலால் அவ்விருப்பம் கைகூட இந்நிறம் என்னிச்சையாற் பெற்றேனென்பது தோன்ற என்னிச்சையாற்பெற்றேன் எனவும், நீ விரும் பியது செந்நிற மாதலால் இனி என்னோடு போகநுர்தற்குத் தடையின் றென்பது தோன்ற விழைந்தவாறென்மாடெனவும், யான் முன்னர்க் கருநிறமுடைமையால் என்னொடு நுகர்ந்தபோகம் உனக்கு மகிழ்ச்சிவிளைக்காதென்பது தோன்ற இன்னல நுகரென எனவும், இத்திருமால் வஞ்சத்தில் வல்லோனுகலால் இவன் பெற்றஇந்நிறம் உண்மையன்றென்பதுதோன்றஅடிகேளிச்சையாற் பெற்றதுமாய விச்சையே போலும் எனவும், இச்சையால் வந்த இந்நிறம் என்றும் உள்ளதல்ல தென்பது தோன்ற நிலையன்றெனவும், இச்சையாலென்றமையால் இந்நிறம் மெய்யன்றென்பது எனக்கு விளைந்தமைதோன்ற என் பயன் விளைத்திடுமெனவுங் கூறினாள். (௨௭)

பாய்சிறைக்கலுழப்புள்ளரசுகைக்கும்பஃறலைச்சேக்கையன்வெகுளா
நீயினியிருந்தைவண்ணமாகென்னச்சபித்தலுநேரிழைமேனிச்
சேயொளிகருகக்கண்டுளம்பதைத்தாள்சிறியனேன்செய்பிழைபொறுத்திங்
கேயுமிச்சாபந்தவிர்த்தருள்பொறையாள்கொண்கனேயென்றடிபணிந்தாள்.

(இ - ள்.) பாய்சிறை கலுழப்புள் அரசு உகைக்கும் பஃறலைசேக்கையன் வெகுளா - பரவிய சிறகையுடைய கருடனை ஊர்தியாக நடத்தும் ஆதிசேடனைச் சயனமாக வுடைய திருமால் கேட்டுக்கோபித்து, நீ இனி இருந்தை வணணம் ஆக என்ன சபித்தலும் - நீ இனி கரியின் வண்ணம் ஆகக்கடவாயென்று சபிக்க, நேரிழை மேனிசேய் ஒளிகருககண்டு உளம் பதைத்தாள்-திருமகள் தனது மேனிசெந்நிறம் கருநிறம் வாய்ப்பக்கண்டு மனம் பதைத்தனள், சிறியனேன் செய்பிழை பொறுத்து இங்கு எயும் இச்சாபம் தவிர்த்தருள் - சிறியேன் செய்யும் பிழையைப் பொறுத்து இவ்விடத்தமைந்தஇச்சாபத்தைத் தவிர்த்தருளாய், பொறை ஆள்கொண்கனே என்று அடிபணிந்தாள்-பொறுமைவாய்ந்த எனது தலைவனே என்று திருமாலைவணங்கினாள்.

கருடன் பறவைவடிவாயினும் வேதவடி வினனென்பது தோன்றக் கருடப் புள்ளரசு எனவும்,தன்னைப்போலுலகினைத் தாங்குந் தொழிலுடைமை தோன்றப்பஃறலைச்சேக்கையன் எனவும், இவ்வாற்றலுடையோன் சாபம் தன்னையொததோர் மாட்டுஞ் செல்லு மென்பது தோன்ற நீ இருந்தை வண்ணமாகெனச் சபித்தலு நேரிழைமேனி சேயொளிகருகக் கண்டுளம் பதைத்தாள் எனவும், நீ அனைத்துயிரையுந்தாங்கும் அருண்முதல்வ னென்பது தோன்றப் பொறையாள் கொண்கனே எனவும், அவ்வுயிருள் யானுமோருயிராதலால் என்னையுந்தாங்காய் என்பது தோன்ற அடிபணிந்தாள் எனவுங் கூறினாள். (௨௮)

தெமமுனைகடந்ததிகிரியோனிரங்கிச்சீற்றத்தால்விரைந்துனைச்சபித்தே
னம்முறையாற்றாற்கரிநிறம்பெற்றாயாயினுமுன்னையின்விழைய
வெம்முலைப்போகமெனக்குளதாகவெருவலையெனத்தழீஇக்கொள்ளச்
செம்மலர்த்திருவுமடியிணையிறைஞ்சித்திருந்துதன்னிருக்கையுட்புக்காள்.

(இ - ள்) தெவ்முனைகடந்த திகிரியோன் இரங்கி - போர்முனையைக்கட ந்த சுதரிசனமென்னுஞ் சக்கரத்தையேந்திய திருமால் திருவுளம் இரங்கி, சீற்ற லத்தால் விரைந்து உனை சபித்தேன் - கோபத்தால் விரைந்து உன்னைச்சபித்தனன் அம்முறை ஆற்றால் கரிநிறம் பெற்றாய் ஆயினும் - அச்சாபவழியால் கரிபோலக்கரு நிறம்வாய்ந்தாயாயினும், முன்னையில் விழைய - முனனையிலும் மேம்பட, வெம முலைபோகம்எனக்குஉளதாக-விருப்பந்தரும் தனபோகம்எனக்குஉண்டாக்கக்கடவது, வெருவரேல் என தழீஇக்கொள்ள-இச்சாபத்திற்குச் சிறிதும் அஞ்சுதலொழிகவெனத் திருமால தழுவிக்கொள்ள, செம்மலர திருவும் அடியிணை இறைஞ்சிதிருந்து தன்இரு க்கையுள்புக்காள் - செந்தாமரையில் வசிக்கும் திருமகளும் அத்திருமாலது இரண்டு திருவடிகளையும் வணங்கித் திருந்தியதனது கோயிலுட்புகுந்தாள்.

காத்தற்றொழிலுக்குத் தேவர்மக்கள்முதலியோருக்குஅசுரர்முதலியோரால் வரு ந்தீங்கினை யொழித்தல் கடனுதலால் தெம்முனைகடந்த எனவும், காத்தற்குக் கட்க முதலிய பஞ்சாயுதஙகளிருப்பினும் அவற்றுட்சிறந்தது சிவபெருமானிடத்துப் பெ ற்றசக்கரம் சிறந்ததாதலால் திகிரியோனெனவும், என்றுந்தோலாத வீரமுடையனுயி னுங் கருணையுடைமை காத்தற்றொழிலாலாதலால் இரங்கிஎனவும்,தாமென்றுங்கோப முடைமையால் செற்றத்தாலெனவும், உன்கருத்து இக்கருநிறத்தால் போகஞ்சுருங் குமே என்றதாதலால் முன்னையின்விழைய வெம்முலைப்போகம் எனக்குளதாக என வும், உன்கருத்து முற்றப்பெற அருள்செய்தமையால் வெருவலைஎனவுங் கூறினன்.

புக்கபினங்கட்பாங்கியர்தம்மோடுசாவினள்புதுநறாக்கான்று
நக்கபூஞ்சோலைக்காஞ்சிமாநகரைநண்ணியாங்கிணைவிழிகளிப்பத்
திக்கொலம்பரசத்திகழுலகாணித்தீர்த்தநீர்த்தடங்கரைமாடே [ள்.
மைக்குழலுமையாளினிதமர்ந்தருளித்தவஞ்செயும்வரைப்பினைக்கண்டா

(இ - ள்.) புக்கபின் - தன்திருக்கோயிலுட் சென்றபின், அங்கண்பாங்கியர் தம்மோடு உசாவினள் - அவ்விடத்துத் தனதுபாங்கியரோடு வினவி, புதுநறாகான்று நக்கபூம் சோலை காஞ்சிமாநகரைநண்ணி - புதியதேனைச்சிந்தி விளங்கிய மலர்கள்செ றிந்த சோலைகள்சூழ்ந்த காஞ்சியென்னுந் திருநகரையடைந்து, ஆங்கு இணைவிழிக ளிப்ப - அத்திருநகரில் தனது இரண்டுகண்களுங் களிகூர, திக்குஎல்லாம் பரசதி கழ் உலகாணித்தீர்த்தம் தடகரைமாடு-எட்டுத்திக்குகளும் வணங்கவிளங்கும் உல காணித்தீர்த்தத்தின் பெரியகரையின் அயலில, மைகுழல் உமையாள் இனிதுஅமர் ந்தருளி தவம்செயும் வரைப்பினைகண்டாள் - மேகம்போலுங் கரியகூந்தலையுடைய உமையம்மை இனிதாகவெழுந்தருளித் தவஞ்செய்யும் எல்லையினைத் திருமகள்கண் டாள்.

தனதுகோயிலுட்சென்று ஆன்மாக்கள் வேண்டியாங்கருள்செய்யுந் தலம்யா தென்று பாங்கியரொடு வினவினளென்பார் பாங்கியர் தம்மோடுசாவினள் எனவும், காசிமுதலிய தலங்களினும் காஞ்சிமேம்பட்டதென அவர்கள்கூறக்கேட்டனள் என் பார் காஞ்சிமாநகரைநண்ணி எனவும், அக்காஞ்சித் திருநகர்என்றும் மலர்கள்மலர்

ந்து அவ்வப்பருவத்திற்செறிந்துள தென்பார் ந்க்க் பூஞ்சோலை எனவும், அந்நகர்வூ ய் உமைதவஞ்செய்யும் பேறுளதென்பார், திக்கெலாம் பரசத்திகழும் எனவும் கூறி ஞர்.

அனையநல்வரைப்புநுண்பிலமாகியருட்பரவெளியதாய்த்திகழுங்
கனைகடலுடுக்கைநிலமகட்குந்தித்தானமாங்கமழ்நறுங்கடுக்கைத்
தனிமுதற்பிரமந்தனக்கொருவடிவாந்தாழ்குழலுமையவட்கடியா
வினைதபுமூலத்திருவுருவதுவேவிளங்கொளிக்காஞ்சியம்பதியுள்.

(இ - ள்.) விளங்கு ஒளி காஞ்சி அம்பதியுள் - விளங்கும் பிரகாசத்தையுடைய காஞ்சிநகரத்தில், அனைய நல் வரைப்பு - அந்தநல்ல இடம், நுண்பிலம் ஆகி அருள் பரவெளியதாய் திகழும் - நுட்பமாகிய பிலமாகி அருள்தரும் பரமாகாசமாய் விளங்கும், கனைகடல் உடுக்கை நிலமகட்கு உந்தித்தானம் ஆம் - சத்திக்கின்றகடலை ஆடையாகவுடுத்த பூமிதேவிக்குக்கொப்பூழாகிய இடமாம், கமழ் நறுங் கடுக்கை தனி முதல் பிரமம் தனக்கு ஒரு வடிவு ஆம் - நறுமணங்கமழும் கொன்றைமாலையையணிந்த தனிமுதலாகிய இறைவனுக்கு ஒப்பற்றவடிவமாகும், அடியார் வினை தபும் தாழ் குழல் உமையவட்கு மூலத்திருவுரு அதுவே - அடியாருடைய வினைகளைக்கெடுக்கும் நீண்டகூந்தலையுடைய உமாதேவியாருக்கும் அதுவே காரணத்திருவுருவமாம். (எ-று.)

காஞ்சித்திருப்பதியுள் அந்த நல்ல இடம் பிலவடிவமாய் பரமாகாசமாய்த்தோன்றும். பூமிதேவிக்கு உந்தித்தானமாகும். சிவபெருமானுக்கு ஒப்பற்ற திருவுருவமாகும். உமாதேவியாருக்குக் காரணமாகிய திருவுருவமதுவே யாகுமென்றதென்க.

சிவயோகிகள் சிவஞானத்தாற்காணும் பரவெளியேயன்றி ஏனையோர் ஊனக்கண்ணாற் காணுந்தரத்ததன்றாகலான் நுண்பிலமாகி எனவும், அதுவே அருளாகிய பராசத்தியின் சொரூபமாய் விளங்கலான் அருட்பரவெளியதாய்த்திகழும் எனவும், அகோசரவடிவாகிய பராசக்தியினருளாலே கோசரப்பொருளாகிய சகலதத்துவங்களும் தோன்றுதற்குக் குடிலா ரூபமாயிருப்பதால் நிலமகட் குந்தித்தானமெனவும், நிஷ்களசிவம் சதாசிவாதி ரூபங்களெடுப்பதற்கு அக்குடிலாசத்தியே யிடமாயிருத்தலால் தனி முதற் பிரமந்தனக்கொருவடிவாம் எனவும், அன்பர்பொருட்டு இறைவனிச்சையாற் கொள்ளுந்திருமேனிக்கிசைந்தவாறே சிவசத்தி கிரியாவடிவங்கொள்வதற்கும் அக்குடிலாசத்தியே யிடமாயிருத்தலால் அடியார்வினைதபு மூலத்திருவுருவதுவே எனவும் கூறினார். (௯௧)

குறைவிலாநிறைவாயுண்மையாயறிவாய்க்கொட்புறுமனமடங்கிடமாய்
மறைமுடிப்பொருளாயின்பமாய்ச்சிவமாய்மாசறவயங்குபேரொளியை
நிறைதவயோகத்தலைவரிவ்வாறுநெஞ்சகத்தேவழிபடுவார்
அறைகடற்பரப்பிற்காஞ்சிமாநகரினுயிடைவழிபடுவாரால்.

(இ - ள்.) குறைவு இல்லா நிறைவாய் - குறைவற்றநிறைவாய், உண்மையாய் அறிவாய் கொட்புறுமனம் அடங்கு இடமாய் - சத்தாய்ச் சித்தாய் சுழல்கின்ற மனமடங்குதற் கிடமாய், மறைமுதல் பொருளாய் - வேதசிரசாகிய உபநிடதப்பொருளாய், இன்பமாய் சிவமாய் மாசு அற வயங்கு பேரொளியை-சுகவடிவாய் சிவமாய் குற்றமற

விளங்கும் பெரியபிரகாசத்தை, நிறை தவயோகத் தலைவர் - நிறைந்த தவயோகத்தினை யுடையதலைவர், இவ்வாறு நெஞ்சகத்தே வழிபடுவோர் - இவ்வகையாக மனத்தின் கண்ணே வழிபடுவோர், அறைகடல் பரப்பில் காஞ்சி மாநகரில் ஆயிடை வழிபடுவார் - சத்திக்கும் கடல்சூழ்ந்த உலகத்தில் சிறந்த காஞ்சிநகரமாகிய அவ்விடத்தில் வழி படுவார்கள்.

குறைவற்ற நிறைவாயும் சத்தாயும் சித்தாயும் மனமடங்கிடமாயும் உபநிடதப் பொருளாயும் ஆனந்தமாயும் சிவமாயும் விளங்கும் பரஞ்சோதியைத் தவத்திற்சிறந்த சிவயோகிகள் இவ்வகையாக இதயகமலத்தின்கண் வழிபடுவார்கள். அன்றியும் காஞ்சி மாநகரத்தினும் வழிபடுவார்கள் என்றதென்க.

சிவயோகமே அழியாததவமும் யோகமுமாதலால் நிறைதவயோக மெனவும், அச்சிவயோக மியற்றுவோரே யாவரினுஞ் சிறந்தவராதலால் தலைவரெனவும், அவர்கள் வழிபடும் சிவசொரூபம் சோதிவடிவாதலால் பேரொளியெனவும், அச்சிவசொரூபத்தினிலக்கணம் குறைவிலாநிறைவாகவென்பது முதலாகக் கூறியனவேயாதலால் குறைவிலாநிறைவாயுண்மையா யறிவாய்க்கொட்புறு மனமடங்கிடமாய், மறைமுதற் பொருளாயின்பமாய் மாசறவயங்கு பேரொளியெனவும், அவ்விலக்கணமுடையு சிவ சொரூபத்தை யகத்தேவழிபடுவதன்றிப் புறத்தேயும் வழிபடும் அன்புடையராதலால் நெஞ்சகத்தே வழிபடுவார் காஞ்சிமாநகரினுயிடைவழிபடுவா ரெனவுங்கூறினார்.

பேரொளியை நெஞ்சகத்தே வழிபடுவார் காஞ்சிமாநகரினுயிடை வழிபடுவார் என்றதனால் காஞ்சிமாநகரம் ஞானிகளாலேயே வழிபடுஞ்சிறப்பினையுடைய தென் றலுமாம.

குறைவிலாநிறைவென்றது சிவமன்றி ஒருபொருளு மின்மையையுணர்த்தலால் தன்வயத்தனுதலையும், உண்மையென்றது அழிதலைக்காட்டும் மாயாவடிவத்தை யொழித்து நித்தியத்தைக்காட்டும அருளுடைமையை யுணர்த்தலால் தூயவுடம்பினனுதலையும், அறிவாயென்றது மறந்துமறந்தறியும் அறிவை யொழித்து அறிந்தாங்கறியும் அறிவையுணாததலால் இயற்கை யுணர்வினனுதலையும், கொட்புறுமனம் அடங்கிடமாயென்றது - எண்ணியவாறெய்தப் பெறுதுழலும் ஆன்மவறிவைச சிவமன்றென் றொழித்து அவ்வான்மவறிவை விளக்கும் அறிவையுணர்த்தலால் முற்றுமுணர்தலையும், மறை முடிப்பொருளென்றது பாசவறிவுககெட்டாதென்றொழித்து பதிஞானத்தையணர்த்தலால் இயல்பாகவே பாசங்களினீங்கிநிற்றலையும், இன்பமாயென்றது தான் பாசமொழிந்திருத்தலன்றித் தன்னையடைந்தோர்க்கும் அவரை அநாதியே தொடர்ந்த பாசத்தை மோசனஞ்செய்து முத்தியின்பத்தை யருளுவனென்பதுணர்த்தலால் பேரருளுடையனுதலையும், சிவமாய் என்றது அமங்கலத்தையொழித்து நித்திய கல்யாணகுணத்தையுணர்த்தலால் முடிவிலாற்றலுடைமையையும், வயங்கு பேரொளி யென்றது பிறிதொன்றால் எவருமெவையும் ஆனந்தத்தையடைவதொழிந்து தனது ஆனந்தலேசத்தால் எவரையும் எவற்றையும் ஆனந்திக்கச்செய்கின்றனன் என்றுணர்த்தலால் வரம்பிலின்பமுடைமையையும விளக்கிய தெனவுமாமெனக.

மேலைச்செய்யுளில் பரவெளியதாய்த்திகழுமென்றதை இச்செய்யுளில் அதன் விளக்கம் இத்தன்மைத் தெனவும் அவ்வொளியைக் காண்போரினையரெனவும் விதந் தமைகாண்க.

மாநகரினுயிடை என்பதில் இன் அல்வழிச்சாரியை. அகரச்சுட்டு நீண்டுநின்றது. ஆல் அசை. (ஙஉ)

ஒருமுறையங்கடகாமமாந்தருமமுஞற்றுநர்தமக்குமத்தருமந்
தருபயன்கோடியாதலிற்கரடத்தடத்திழிகடாமபடுகலுழிப்
பெருவரைவதனப்பிள்ளையைக்குகனைப்பெற்றவளமர்பிலமதுதான்
கருதருகாமக்கோடியென்றுலகிற்காரணப்பெயரினுல்வயங்கும.

(இ - ள்.) ஒருமுறை அங்கண் காமம் ஆம் தருமம் உஞற்றுநர் தமக்கும் - (பலமுறையன்றி) ஒருமுறை அவ்விடத்தில் காமியார்த்தமாகிய தருமத்தைச் செய்பவர்களுக்கும், அத்தருமம் தருபயன் கோடியாதலின் - அத்தருமங்கொடுக்கும்பயன் கோடியாகையால், கரடம் தடத்து இழி கடாம் படு கலுழி பெருவரை வதனப் பிள்ளையை குகனைபெற்றவள்-மதச்சுவட்டினின்று மிழிகின்ற மதவெள்ளத்தையுடைய பெரியமலைபோன்றயானைமுகத்து விநாயகப்பிரானையும் குமரநாயகனையும் ஈன்ற அம்பிகையும், அமர்பிலம் அது - விரும்பியெழுந்தருளும் பிலமானது, கருதரு காமக்கோடி என்று உலகில் காரணப்பெயரினுல் வயங்கும் - நினைதற்கரிய காமகோடியென்று உலகில் காரணப்பெயரால் விளங்கும்.

ஓர்முறை அவ்விடத்தில் சுவர்க்காதிபோகங்களை விரும்பித்தருமத்தைச்செய்பவர்களுக்கும் அத்தருமம் தரும்பயன் கோடியாகையால் அக்காரணம்பற்றி உமாதேவியார் வீற்றிருக்கும் அப்பிலமானது காமக்கோடியென்றும் பெயர்பெறுமென்றதென்க.

இச்செய்யுளால் நிலமகட் குந்தித்தானமென்றதை விநாயகப்பிரானையும் முருகக்கடவுளையுமீன்றவளென்று காட்டி விதந்தமைகாண்க. (ஙஙு)

அன்றியுங்காமக்கிறையவாதனதரனையவர்கோடியாத்தரலால்
என்றுமோரியல்பினெங்கணுமவிரவியெவற்றினுங்கடந்தபேரொளியைக்
குன்றுறழ்கொம்மைக்குவிமுலைத்தடத்தாற்குழைத்தருள்கருணையெம்பிராட்டி
நன்றுவீற்றிருக்கும்பேரொளிப்பிலத்திற்கப்பெயர்நாட்டலுமாமால்.

(இ - ள்.) அன்றியும் காமக்கிறையவர் தனதரனையவர்கோடியர் தரலால்-அல்லாமலும்செல்வத்திற்கிறைவராகிய குபேரனைப்போல்வார் கோடிபேரைத் தருதலால், என்றும் ஓரியல்பின் எங்கணும் விரவி-எக்காலத்தும் ஓரியல்பினையுடையதாகி எங்குங்கலந்து, எவற்றினும் கடந்த பேரொளியை - எப்பொருளினுக்கும் அப்பாற்பட்ட பெரிய சோதியை, குன்று உறழ் கொம்மை குவிமுலை தடத்தால் - மலையை யொத்த வட்டமாகிக் குவிந்த முலையாகியதடத்தால், குழைத்தருள் கருணை எம்பிராட்டி - குழைத்த அருள்வடிவினையுடைய எமதிறைவி, நன்று வீற்றிருக்கும் பேரொளிப் பிலத்திற்கு - நன்றாக வீற்றிருக்கும் பேரொளியையுடைய பிலாகாசத்திற்கு, அப்பெயர் நாட்டலும் ஆம் - அக்காரணத்தாலும் அந்தப் பெயரை நாட்டுதலுமாகும்.

அல்லாமலும் செல்வத்திற்கிறைவராகிய குபேரனைப்போல்பவர் கோடி பேரைத் தருதலால் எந்நாளும் ஓரியல்பினையுடையதாய் எங்குங் கலந்து எப்பொருளுக்கு மப்பாற்பட்டு நிற்கும் ஒளிப்பிழம்பாகிய சிவபெருமானை முலைத்தடத்தாற் குழைத்தருளிய எமது பெருமாட்டி வீற்றிருக்கும் காரணத்தாலும் அப்பிலத்திற்குக் காமக்கோடியென்று அப்பெயர் கூறலு மொன்றாகு மென்றதென்க.

செல்வத்திற் குபேரனைப்போல்பவரைத்தருதலான் காமக்கிறையவர் கோடியர்த் தரலால் எனவும் அப்பாலைக்கப்பாலாகிய இறைவனை இமயவல்லி மூலைச்சுவட்டாற் குழைத்தமையான் எவற்றினுங் கடந்தபேரொளியைக் குவிமுலைத்தடத்தாற் குழைத்தருளெம்பிராட்டி எனவுங்கூறியதென்க. இச்செய்யுளால் நறுங்கடுக்கைத் தனிமுதற்பிரமந் தனக்கொருவடிவாந் தாழ்குழலுமையவட்கு மூலத்திருவுருவதுவே என்றதை எவற்றினுங்கடந்த பேரொளியை, குவிமுலைத்தடத்தாற் குழைத்தருள் கருணையெம் பிராட்டி, நன்று வீற்றிருக்கும் பேரொளிப்பிலம் என்று விதந்தமைகாண்க. (கூச)

இன்னுமிப்புவனப்பரப்பினிற்காமமென்பனமனைவியர்மக்கள்
பொன்னணியிருக்கைப்பூண்முதற்பலவாம்பூந்தளிரணிநலங்கவற்றும்
தன்னடிவணங்கியிரந்தவர்தமக்குத்தடங்கிரிபயந்தபேராட்டி
அன்னவைகோடியளித்திடலானுமப்பெயரெய்துமங்கதுவே.

(இ - ள்.) இன்னும் இப்புவனப் பரப்பினில் காமம் என்பன - இன்னும் இவ்வுலகமாகிய பரந்தவிடத்தில் காம மென்று சொல்லப்படுவன, மனைவியர் மக்கள் பொன் அணி இருக்கை பூண் முதல் பலவாம் - மனைவியரும் மக்களும் பொன்னும் அழகிய இருப்பிடமும் ஆபரணமுமுதலாகிய பலவாம், பூ தளிர் அணி நலம் கவற்றும் தன் அடி வணங்கி இரந்தவர் தமக்கு - பொலிவு பெற்ற தளிரினுடைய பேரழகைக் கவலைப்படுத்தும் தனது சீபாதங்களைப் பணிந்து இரந்தவர்க்கு, தடவு கிரி பயந்த பேராட்டி - மலையரையன் பெற்ற இறைவி, அன்னவை கோடி அளித்திடலானும் - அவைகோடி தருவதனாலும், அது அங்கு அப்பெயர் எய்தும் - அது அவ்விடத்தில் அப்பெயரையடையும். (எ - று.)

இன்னும் இவ்வுலகில் விரும்பப்படும் பொருள்களாகிய மனைவி மக்கள் பொன் இருகைை பூண் முதலிய பலவற்றையும் அப்பிலத்தின் கண் வீற்றிருக்கும் உமாதேவியார் தன்னடி வணங்கி யிரப்போர்க்குக் கோடியாகத் தருதலினானும் காமகோடிப் பெயரெய்து மென்ற தென்க.

காமமென்றது இன்பத்திற்குவிடயமாகிய பொன்னணியிருக்கை பூண்முதற்பல வாமென்பதுநோக்கி அங்ஙனங்கூறியதென்க. (கூரு)

அல்லதூஉங்கவைத்தாட்கரும்பகட்டூர்தியடுதொழிற்கூற்றினைக்குமைத்த
கொல்லையேற்றண்ணனுதலவிழிச்செந்தீக்கோட்படுமொருதனிக்கருப்பு
வில்லியைவிளையாட்டியற்கையிற்கோடிகாமராவிழித்துணைக்கடையால்
அல்லியங்கோதையாங்களித்திடலாலப்பெயர்பூண்டதுமாமால்.

(இ - ள்) அல்லதூஉம் - அன்றியும், கவைதாள் கரு பகடு ஊர்தி அடுதொழில் கூற்றினை - பிளவுபட்டகாலையுடைய கரிய எருமைக்கடாவூர்தியையுடைய கொலைத் தொழில் செய்யும் யமனை, குமைத்த கொலை ஏற்று அண்ணல் நுதல்விழி செந்தீ கோள்படும் ஒரு தனி கருப்பு வில்லியை - வருத்திய கொலைத்தொழிலையுடைய பெருமையமைந்த விடையை யுகைக்கும் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணில் தோன்று நெருப்பில் கொள்ளப்பட்டொழிந்த ஒப்பற்ற கரும்பினை வில்லாகவுடைய மன்மதனை, விளையாட்டு இயற்கையில் கோடி காமராக - விளையாட்டியற்கையாற் கோடி மன்மதர்போல, விழித்துணை கடையால் - இருகண்ணின் கடையாலும், அல்லியம்

கோதை ஆங்கு அளித்திடலால் அப்பெயர் பூண்டதும் ஆம் - அகவிதழையுடைய அழகிய மலர்மாலை யணிந்த உமையம்மை அவ்விடத்திலளிப்பதனால் அப்பெயரை யடைந்ததுமாம். (எ - று.)

அன்றியும் இயமனை வருத்திய இறைவன் நுதல்விழித்தீயாலெரிந்த மன்மதனை ஓர்விளையாட்டாகக் கோடி மன்மதராய்த் தனது கடைக்கண்ணினின்றும்வர அம்மை யருளியதாலும் காமகோடி யென்று பெயர் பெற்ற தென்ற தென்க.

பகடு என்றது இடபமுதலியனகுறிக்குமேனும் கவைத்தாட்கருமை என விசேடித்தமையான் எருமையென விளக்கிநின்றது. ஆக என்னும் ஆக்கச்சொல் உவமைப்பொருள்குறித்து நின்றது ஆள்வாரிலிமாடாவேனோ என்புழிபோல. (௬௬)

மற்றுமாருயிர்சேர் நாற்பொருட்பயனில்வகுத்தமூன்றுவதுகாமம்
பற்றுகாமத்திற்கோடியாமுடிவிற்பயில்வதுவீடுபேறுரும்
உற்றவர்தமக்குவீடுபேறளிக்குமுண்மையினுலுமப்பெயராற்
சொற்றிடப்படுமாலுலகெலாமீன்றாளமர்ந்தருள்சுடரொளிவிமானம்.

(இ - ள்.) மற்றும் ஆருயிர் சேர் நாற்பொருள் பயனில் - பின்னும் மக்கட் பிறப்பினரடையும் நான்காகிய உறுதிப்பொருளில், வகுத்த மூன்றுவது காமம் பற்று காமத்தில் கோடியாம்-வகுக்கக்கப்பட்ட மூன்றுவதாகிய காமப்பகுதி பற்றுகின்றகாமத்தினது கோடியாகிய, முடிவில்-முடிவின்கண், பயில்வது வீடுபேறு ஆகும்-சொல்லப்படுவது முத்தியாகும், உற்றவர் தமக்கு வீடு பேறு அளிக்கும் உண்மையினுலும் - தன்னையடைந்தவர்க்கு அம்முத்திப்பயனைக்கொடுக்கும் உண்மையினுலும், உலகு எல்லாம் ஈன்றாள் அமர்ந்தருள் சுடர் ஒளி விமானம் அப்பெயரால் சொற்றிடப்படும் - எல்லா வுலகங்களையு மீன்ற இறைவியினுடைய மிக்க பிரகாசமுள்ள விமானம் அந்தக் காமகோடி என்கின்ற பெயரினுல் சொல்லப்படும். (எ - று.)

மக்கட்பிறப்பினர் அடையும் பொருள்களாகிய அறம் பொரு ளின்பம் வீடு என்னும் நான்கினில் மூன்றுவதாகிய காமப் பகுதியின் கோடியாகிய முடிவில் சொல்லப்படுவது வீடு பேறுரும். அப்பேற்றைத் தம்மை யடைந்தோர்க்கெல்லா மளிக்கு முண்மையினுலும் அவ்வுமாதேவியாருடைய விமானம் காமகோடியென்று பெயர் பெறுமென்ற தென்க.

இந்திரன் முதலிய இறையவர்பதங்களும், அந்தமிலின்பத்தழிவில் வீடும் நெறியறிந்து எய்தற்குரிய மாந்தர்க்குறுதியென உயர்ந்தோரானெடுக்கப்பட்ட அறம்பொருளின்பம் வீடென்னு நான்கனுள் மூன்றுவது காமமாதலான் மற்றுமாருயிர்சேர் நாற்பொருட்பயனில் வகுத்த மூன்றுவது காமம் எனவும், அது துய்த்துக்கழிந்த பின்னெய்துவது அந்தமிலின்பத்தழிவில் வீடாகலான் பற்று காமத்தின் கோடியா முடிவிற்பயில்வது வீடு பேறுருமெனவும், அக்காமத்தின் கோடியாகிய வீடுபேறளிப்பதனுல் உமையம்மை வீற்றிருக்கும் பிலம் காமகோடியெனப்படுதலான் உற்றவர்தமக்கும் வீடுபேறளிக்குமுண்மையினுனும் அப்பெயராற் சொற்றிடப்படுமெனவுங் கூறினர். (௬எ)

பின்னருமொன்றுககரமேயகரமகரமாப்பிரிதருமூன்றும்
அன்னவேறுமைக்குமயனரிமீசனும்பமுந்தேவனைப்பகரும

இன்னவா தம்மையுகந்தொறுங்கோடிமுறையெழில்விழிகளிற்படைத்தாள்
மின்னிடைப்பிராட்டியென்பதனுனுமப்பெயர்விளங்குமென்பதுவே.

(இ - ள்.) பின்னரும் ஒன்று - மற்றும் ஒன்று, ககரம் - ககரமும், அகரம் - அகரமும், மகரமும் ஆக-மகரமுமாக, பிரிதருமூன்றும் - பிரியும் மூன்று வன்னமும், அன்னம் ஏறு உகைக்கும் அயன் அரி ஈசன் ஆய முததேவரை பகரும்-அன்னத்தை யூரும் பிரமனும் திருமாலும் உருத்திரனும் ஆகிய மும்மைப்பெருந்தேவரைக் குறிக்கும், இன்னவர் தம்மை - இவர்களை, மின்னிடைப் பிராட்டி - மின்போலு மிடையையுடைய உமாதேவி, உகந்தொறும் கோடி முறை விழிகளில் படைத்தாள் என்பதனுலும்-உகங்டோறும் கோடி முறையாகத் தனது கண்களிற் படைத்தாளென்று சொல்லப்படுவதனுலும், அப்பெயர் விளங்கும் என்பது - அப்பெயர் தோன்றுமென்று உரைக்கப்படுவது. (எ - று.)

மற்றுமொன்று ககரம் அகரம் மகரமு மாகப் பிரிந்திருக்கும் மூன்று வன்னமும் அயன் அரி அரன் என்னும் மும்மைத்தேவரைக்குறிக்கும். இம்மும்மைத்தேவரையும் உமா தேவியார் யுகங்கள்தோறும் கோடி முறையாகப் படைத்தாராதலினுனும் அக்காமகோடிப் பெயரைப் பெறுமென்றதென்க.

யுகமென்றதீண்டுகற்பாந்தத்தினை, மும்மைப்பெருந்தேவருக்கு முரியவன்னங் ககரமும் அகரமும் மகரமுமாகலின் 'பின்னருமொன்றுககரமேயகரமகரமுமாகப் பிரிதரு மூன்றும் எனவும், அன்னவற்றிற்குரிய மும்மைப்பெருந்தேவரும் அயனு மாலு முருத்திரனுமாகலின், அன்னவேறுகைக்குமயனரியீசனுயமுதத்தேவரைப்பகரும் எனவும், இன்னோரன்னோரை உமையம்மை தன்விழிக்கடையானல்கலான் அப்பெயரை யெய்துதலின் உகந்தொறுங் கோடிமுறை விழிகளிற்படைத்தாளென்பதனுனு மப்பெயர்விளங்கும் எனவுங்கூறினர்.

(௲அ)

வேறுமொன்றுங்கட்காவெனப்படுவாள்வெண்மலராட்டிமாவென்பாள்
ஊறுதேங்கமலப்பொகுட்டணையணங்காமுங்குவரிருவருமுகிலை
மாறுகொளைம்பாலுமைவிழிக்கோடிதன்னிடைவருமுறையானும்
ஏறுமத்திருப்பேரெம்பெருமாட்டிக்கென்றெடுத்தியம்புவருணர்ந்தோர்.

(இ - ள்.) வேறும் ஒன்று ஆங்கண் - பின்னருமொன்று அவ்விடத்து, கா எனப்படுவாள் - கா வென்று சொல்லப்படுவாள், வெண்மலராட்டி - வெண்டாமரையில் வசிக்கும் நாமகள், மா என்பாள் தேம் ஊறு கமலப் பொகுட்டு அணை அணங்கு ஆம் - மா வென்று சொல்லப்படுவாள் தேன் சுரக்கும் செந்தாமரையில் வசிக்கும் தெய்வப் பெண்ணுகிய பூமகளாம், ஊங்குவர் இருவரும் முகிலை மாறுகொள் - அவ்விருவரும் மேகத்தை மாறுகொண்ட, ஐம்பால் உமை விழிகோடி தன்னிடை - கூந்தலையுடைய உமாதேவியினுடைய கட்கடையின் கண், வருமுறையானும், தோன்றிவருகின்ற முறைமையானும், எம்பெருமாட்டிக்கு-எமது தலைவிக்கு, அத்திருப்பெயர் ஏறும் என்று - அந்தககாமாக்ஷி யென்னும் திருப்பெயர் வழங்குமென்று-உணர்ந்தோர் எடுத்து இயம்புவர் - மேலோர்களெடுத்துக் கூறுவார்கள். (எ - று.)

பின்னருமொன்று காவென்று சொல்லப்படுவாள் சரஸ்வதி யெனவும், மா வென்று சொல்லப்படுவாள் இலக்குமி யெனவும் ஆகிய இவ்விருவரும் உமாதேவியாரது

கடைநோக்கின் கண் தோன்றிவருகின்ற முறைமையினாலும், எம்பெருமாட்டி காமாக்ஷியென்னுந் திருப்பெயரெய்துவாரொன்று பெரியோரெடுத்துக் கூறுவார்கள் என்றதென்க.

கல்வியையும் செல்வத்தையுங்கடைக்கண்ணே யுதவலான் அவற்றிற்கதிதேவதைகளாகிய நாமகளையும் பூமகளையுமிறைவிக்கண்ணென்றொன்பது மொன்று. (நகூ)

விந்துவின்வயங்கியம்மைவீற்றிருக்கும்வியன்றிருச்சக்கரவடிவாம
அந்தவான்பிலந்தானியம்பியகாமமனைத்திற்குமாதரமாகிப்
பந்தமில்காமக்கோட்டமென்றொருபேர்பரித்திடுமற்றெவற்றினுக்கும
முந்தியபீடமாதலினாதிபீடமுமொழிந்திடப்படுமால்.

(இ - ள்.) விந்துவின் வயங்கி அம்மை வீற்றிருக்கும் வியன் திருச்சக்கரவடிவாம் - வட்டாகாரமாகிய சுழியைப்போல் விளங்கி அம்பிகை யெழுந்தருளி யிருக்கும் சிறந்த சக்கரவடிவாகிய, அந்த வான் பிலந்தான் இயம்பிய காமம் அனைத்திற்கும் - அந்த சிறந்த பிலாகாசமானது சொல்லப்படும் காமங்களனைத்திற்கும், ஆதரமாகி-ஆதரவாய், பந்தம் இல் காமகோட்டம் என்று ஓர் பேர் பரித்திடும் - பந்தமில்லாத காமகோடிபீட மென்றொருபெயரைத்தாங்கும், எவற்றினுக்கும் முந்திய பீடம் ஆதலின் - எல்லாப் பீடங்களினும் முற்பட்ட பீடமாகையால், ஆதி பீடமும் மொழிந்திடப்படும் - அது ஆதி பீட மென்றுஞ் சொல்லப்படும். (எ - று.)

சுழியைப்போல் விளங்கி உமாதேவியார் வீற்றிருக்கும் பெரிய சக்கர வடிவாகிய அந்தப்பெரிய பிலமானது காமங்களுக்கெல்லாம் ஆதரவாகி மாயாசம்பந்த மில்லாத காமக்கோட்ட மென்று ஓர் பெயரைப் பெறும், அன்றியும் சத்தி பீடங்களாயுள்ள எல்லாப் பீடங்களுக்கும் முதற் பீடமாதலினால் ஆதி பீட மென்றும் சொல்லப் படுமென்றதென்க.

பிரகிருதி மாயையாற்றோன்றும் பிரமன்முன் னும் தேவர் முதலியோர் தோன்றுதற்கிடமாகலின் விந்துவின் வயங்கி அம்மைவீற்றிற்கும் என்றார். சத்திபீடம் அறுபத்துநான்காதலால் அவற்றுள் இப்பீடம் தலைமையென்பது தோன்ற ஆதிபீடமென்றார்.

அறுபத்துநான்காவன. க. காமகோடிபீடமும். உ. அன்னபூரணிபீடமும். ஸ்ரீ காஞ்சியிலுள்ளது. ந. இலக்ஷ்மிபீடம் கோலாபுரத்திலுள்ளது. ச. ரேணுகாபீடமும் ரு. துளஜாபுரபீடமும் சு. சப்தசிருங்கபீடமும் மாதுபுரத்திலுள்ளது. எ. ஜ்வாலாமுகிபீடம் இங்குலையிலுள்ளது. அ. பிராமரிபீடம் சாகம்பரியிலுள்ளது. கூ. துர்க்கைபீடமும் கo. விந்தியாசலபீடமும் ஸ்ரீரக்த்ததந்திகையிலுள்ளது. கக. பீமாதேவிபீடம் விமலையிலுள்ளது. கஉ. கௌசிகிபீடம் ஸ்ரீசந்திரலையிலுள்ளது. கந. நீலாம்பரிபீடம் நீலபருவதத்திலுள்ளது. கச. சாம்புநதேஸ்வரிபீடம் ஸ்ரீநகரத்திலுள்ளது. கரு. இரகசியகாளிபீடம் நேபாளத்திலுள்ளது. கசு. மீனாக்ஷிபீடம். மதுரையிலுள்ளது. கஎ. சுந்தரிபீடம் வேதாரணியத்திலுள்ளது. கஅ. யோகேஸ்வரிபீடம் மகாலசத்திலுள்ளது, ககூ. நீலசரஸ்வதிபீடம் சீனாவிலுள்ளது. உo. வகலைபீடம் வைத்தியநாதத்திலுள்ளது. உக. புவனேஸ்வரிபீடமும் உஉ. திரிபுரபைரவிபீடமும் மணித்தீபத்திலுள்ளது. உந.காயத்திரிபீடம் புஷ்கரத்திலுள்ளது. உச.சண்டிகைபீடம் அம

,ரோசத்திலுள்ளது. உ௫. புஷ்கரோக்ஷணிபீடம் பிரபாசத்திலுள்ளது. உ௬. தேவிபீடம் நைமிசத்திலுள்ளது. உ௭. புருகூதபீடம் புஷ்கராக்ஷத்திலுள்ளது. உ௮. இரதிபீடம் ஆஷாடத்திலுள்ளது. உ௯. தண்டினிபீடம் சண்டமுண்டியிலுள்ளது. ௩0. பூதிபீடம் பாரபூதியிலுள்ளது. ௩௧. நகுலேஸ்வரிபீடம் நாகுலத்திலுள்ளது. ௩௨. சந்திரிகைபீடம் அரிச்சந்திரத்திலுள்ளது. ௩௩. சாரதாபீடம் ஸ்ரீகிரியிலுள்ளது. ௩௪. திரிசூலபீடம் பஞ்சநதத்திலுள்ளது. ௩௫. சூக்ஷமபீடம் ஆம்பிராதகேஸ்வரத்திலுள்ளது. ௩௬ சாங்கரிபீடம் மகாகாளத்திலுள்ளது. ௩௭. சர்வாணிபீடம் மத்தியமாபிதத்திலுள்ளது. ௩௮. மார்க்கதாயினிபீடம் கேதாரத்திலுள்ளது. ௩௯. பைரவிபீடம் பைரவத்திலுள்ளது. ௪0. மங்களபீடம் கயையிலுள்ளது. ௪௧. ஸ்தாணுப்பிரியைபீடம் குருக்ஷேத்திரத்திலுள்ளது. ௪௨. ஸ்வாயம்புபீடம் வியபிநாகுலதித்லுள்ளது. ௪௩. உக்கிரபீடம் கனகலத்திலுள்ளது. ௪௪. விஸ்வேசைபீடம் வீமலேஸ்வரத்திலுள்ளது. ௪௫. மஹானந்தபீடம் அட்டகாசத்திலுள்ளது. ௪௬ மகாந்தகைபீடம் மகேந்தரத்திலுள்ளது. ௪௭. பீமபீடம் பீமத்திலுள்ளது. ௪௮. பவானிபீடம் வஸ்திராப்தத்திலுள்ளது. ௪௯. உருத்திராணிபீடம் அர்த்தகோடிகையிலுள்ளது. ௫0. விசாலாக்ஷிபீடம் அவிமுத்தத்திலுள்ளது. ௫௧. மகாபாகைபீடம் மகாலயத்திலுள்ளது. ௫௨. பத்திரகாளிபீடம் கோகர்ணத்திலுள்ளது. ௫௩. பத்திரைபீடம் பத்திரகர்ணிகத்திலுள்ளது. ௫௪. உற்பலாக்ஷிபீடம் சுவர்ணாக்ஷத்திலுள்ளது. ௫௫. ஸ்தாண்வீசைபீடம் ஸ்தாணுவிலுள்ளது. ௫௬. கமலைபீடம் கமலாலயத்திலுள்ளது. ௫௭. பிரசண்டைபீடம் சகலண்டத்திலுள்ளது. ௫௮. திரிசந்திரிகைபீடம் குரண்டலத்திலுள்ளது. ௫௯. மகுடேஸ்வரிபீடம் மாகோடத்திலுள்ளது. ௬0. சாண்டகைபீடம் மண்டலேசத்திலுள்ளது. ௬௧. காளிபீடம் காலஞ்சரத்திலுள்ளது. ௬௨. தொனிபீடம் சங்குகர்னத்திலுள்ளது. ௬௩. தூலபீடம் தூலகேஸ்வரத்திலுள்ளது. ௬௪. பரமேஸ்வரிபீடம் ஞானிகளிதயகமலத்திலுள்ளது. இவற்றைத் தேவிபாகவதத்திற்காண்க. (௪0)

இனையதாகிய திருப்பிலமதனையெழான்மிடற்றிளஞ்சுருப்பினமுரலுமநனைகலுழ்ந்தலர்மலர்த்தவிசிருக்கைநகைமலர்க்கொடிகண்டுகைதொழுதே
அனையசூழலினிடப்புறம்வைகியடங்கலார்புரமழலெழச்சிரித்த
முனைவனூர்க்கொருசத்தியாயின்பாய்முழுதுமாகியவகிலகாரணியை.

(இ - ள்.) இனையதாகிய திருப்பிலம் அதனை - இத்தன்மையதாகிய பிலத்தை, எழால் மிடற்று இளமை சுருப்பினம் முரலும்-எழுச்சியையுடைய கண்டதொனியையுடைய வண்டினம் பாடும், நனை கலுழ்ந்து அலர் மலர்த்தவிசு இருக்கை நகை மலர் கொடி கண்டு - தேன் சிந்தியலரும் தாமரைப்பூந் தவிசிருக்கையிலிருக்குந் திருமகள் தெரிசித்து, கை தொழுது அனைய சூழலின் இடப்புறம் வைகி - கை தொழுது அந்த விடத்தி னிடப்புறந்தங்கி, அடங்கலார் புரம் அழல் எழ சிரித்த முனைவனூர்க்கு - பகைவரது புரந்தீயெழ நகைத்த முதல்வனுக்கு, ஒரு சத்தியாய் இன்பாய் முழுதும் ஆகிய அகிலகாரணியை - ஒப்பற்ற சத்தியாகி இன்பவடிவாய் அவர் வேண்டும்வடிவங்களுமாகிய அகிலத்துக்குக் காரணமாயிருப்பவளை. (எ - று)

இத்தன்மையதாகிய பிலாகாசத்தை இலக்குமி கண்டு கை தொழுது அப்பிலத்தின் இடப்புறத்திற்றங்கி இறைவனுக்கு ஒரு சத்தியாகிய உலக காரணியையென்றதென்க. (௯௧)

பாதமொன்ருெடுநிவிர்த்தியாற்றனைக்கட்பதமிரண்டொடுபதிட்டை யாற்புனற்கண், பாதநான்கொடுவித்தையாற்கனற்கட்பதங்களெட்டொடுசா ந்தியால்வளிக்கட், பாதமொன்பதனொடுவெளிபபரபபிற்பகருஞ்சாந்தியின தீதமாங்கலையாற், பாதமாயிரத்தொடுபரவெளிககட்பயிலுமக்கரத்தனிமு தற்பனையை.

(இ - ள்.) பாதம் ஒன்ருெடு நிவிர்த்தியால் தனைக்கண் - பிருதிவியில் பாத மொன்ருெடு நிவிர்த்திகலையானும், பதம் இரண்டொடு பதிட்டையால் புனல்கண் நீரி னிற் பதமிரண்டொடு பிரதிட்டாகலையானும், பாத நான் கொடு வித்தையாற் கனற் கண் - நெருப்பில் பாத நான் கொடு வித்தியாகலையானும், வளிக்கண்பதங்க ளெட் டொடு சாந்தியால் - காற்றில்பதங்க ளெட்டனொடு சாந்திகலையானும், பாதமொன்ப தனொடு வெளிப்பரப்பில் பகருஞ் சாத்தியினதீதமாம் கலையால் - வானில் சொல்லப் படும் பாதமொன்பதனொடு சாந்தியதீத கலையானும், பாதமாயிரத்தொடுபர வெளி க்கண் பயிலும் - பரவெளியில் ஆயிரம் பாதத்தினொடு விளங்கும், அக்கரம் தனி மூதற் பனையை - வன்ன வடிவாகிவிளங்கும் தனி முதலாகிய பனையை. (எ - று)

பிருதிவியில் நிவிர்த்திகலையால் ஏகபாதத்தோடும், அப்புவில் பிரிதிட்டாகலையா ல் இரண்டுபாதத்தோடும், அக்கினியில் வித்தையால் நான்குபாதத்தோடும், வாயுவில் சாந்திகலையால் எட்டுபாதத்தோடும், ஆகாயத்தில் சாந்தியதீதகலையால் ஒன்பது பா தத்தோடும், பரவெளியின்கண் ஆயிரங்கலையோடும் விளங்கும் அக்கர சொரூபியாகிய பராசத்தியை என்றதென்க. (சஉ)

கருமைசெம்மைவெண்ணிறமுடையாளைக்காமக்கோடிவான்பிலவடிவாளை யருவிதாழ்குவட்டணிமலைமகளைமாயையோடுலகனைத்துமீன்ருளை [திந்து யுருகிநெக்குநெக்குளப்பெருங்கோயிலுள்ளுறுத்தியென்னுடம்பினைப்பொ மருவுமிக்கருநிறஞ்செதிளெடுப்பான்கருணைசெய்கெனவழிபடலுற்ருள்.

(இ - ள்.) கருமை செம்மை வெண்ணிறம் உடையாளை-கருமைநிறமும் செம்மை நிறமும் வெண்மை நிறமுமுடையவளை, காமக்கோடி வான் பிலவடிவாளை - சிறந்த காமகோடியாகிய பிலவடிவமாயிருப்பவளை, அருவி தாழ் குவடு அணிமலை மகளை-அ ருவி பாய்கின்ற சிகரங்களையுடைய அழகிய மலையரையன் புத்திரியை, மாயையோடு உலகு அனைத்தும் ஈன்ருளை-மாயையையும் அதன் காரியமாகிய உலகத்தையும் பெற்ற வளை, நெக்கு நெக்குருகி-மிகநெகிழ்ந்துருகி, உள்ளம் பெரு கோயில் உள்ளுறுத்தி - உள்ளமாகிய பெருங்கோயிலின் கண் அமைத்து, என் உடம்பினை பொதிந்து - என் னுடலிற் சேர்ந்து, மருவும் இக்கருநிறம் செதிள் எடுப்பான் கருணை செய்க என்ன - பொருந்துமிந்தக் கருநிறத்தின் சட்டையை யெடுக்கும்படி கிருபை புரிவாயென்று, வழிபடல் உற்ருள் - வழிபாடு செய்யத்தொடங்கினுள். (எ - று.)

கருமை செம்மை வெண்மை என்னும் மூன்று நிறங்களையுடையவளை, காம கோடியென்னும் பிலவுருவமாயிருக்கின்றவளை, மலையரையன்புத்திரியை, உலகமீன றவளை, உள்ளத்திலெண்ணி என்னுடம்பினிற் பொதிந்திருக்கின்ற கருநிறச்சட்டை யை நீக்கும்வண்ணம் கருணைசெய்வாயென்று வழிபாடுசெய்யதொடங்கினுள் என றதென்க.

தானே பிரமனாதி மும்மைப்பெருந்தேவருக்குஞ் சத்தியாய் நின்று மும்மைத் தொழினடத்தலில் இறைவியைக் கருமை செம்மை வெண்ணிறமுடையாள் என்றும் கூறினர். கருமை செம்மை வெண்ணிறமுடையாளை என்றதற்கு "மூவருக்கு முதற் பிறப்பு நின்முக்குணக்கடல்" எனப் பிறருங்கூறியதனானுமுணர்க. (௬௩)

வருணனாருனைவாருணியென்னப்பிருகுமாதவற்கருளியவாற்றாற்
பிருகுவாரநாளுனைவழிபடுவார்பெருவளத்தொடுவாழ்வரென்றுரைப்ப
வருவினைப்புலக்குறும்பெறிந்துயர்ந்தபிருகுமாமுனிமகளடியேற்கும்
நப்புவில்லியைக்காய்ந்தவர்க்கினியாய்.

(இ - ள்.) வருணனார் உன்னை வாருணி என்ன-வருணன் உன்னைவாருணியென்று, பிருகுமாதவற்கு அருளியவாற்றால் - பிருகுவென்னும் மேம்பட்ட தவத்தினனுக்கு அருளியவகையால், பிருகுவாரநாள் உன்னை வழிபடுவார் பெரு வளத்தொடு வாழ்வர்- சுக்கிரவாரமாகிய நாளில் உன்னைவழிபடுவோர் பெருஞ்செல்வத்துடன் வாழ்வார்கள், என்று உரைப்ப - என்றுசொல்ல, வருவினை புலக்குறும்பு எறிந்து உயர்ந்த பிருகுமா முனிமகள் - ஆகாமியமாகிய புலத்தின் குறும்பினையகழ்ந்து தவத்திலுயர்ந்த பிருகு வென்னும் முனிசிரேஷ்டன் மகளாகிய குருமகள், அடியேற்கும் கருணைசெய்வது உனக்கு கடன்- என்றுஅடியேனுக்கும் கிருபைசெய்வது உனக்குக்கடனாகுமென்று, கரும்பு வில்லியைக் காய்ந்தவர்க்கு இனியாய்-கரும்புவில்லையுடைய மன்மதனைக்காய்ந்த சிவபெருமானுக்கினியாளே. (எ - று.)

பிருகுமுனிவருக்கு வருணன் உன்னைவாருணி என்று கூறியிருக்கின்றபடியால் அவரது வாரமாகிய சுக்கிரவாரத்தில் உன்னை வழிபடுவோர் பெருஞ்செல்வத்தோடும் வாழ்வார்களென்றுசொல்ல, அப்பிருகுமுனிவருக்கு யானுமோர் மகள் ஆகையால் அடியேனுக்கும் கருணைசெய்வது கடனல்லவா என்றதென்க. (௬௪)

காவெனப்பெயரியகலைமகளைமுந்தைஞான்றுநின்கண்ணெனப்புரந்தாய்
மாவெனப்பெயருடையமற்றெனையுமலர்ந்தநின்விழிபோற்புரந்தருளி
ஏவெனப்பிறழ்தடங்கணாய்காமக்கண்ணியாமபெயரெய்துவையென்னாப்
பூவெனப்பயிலணைமிசைக்கிழத்திபோற்றிசைத்தலுமெதிரெழுந்தருளி.

(இ - ள்.) கா என்னப் பெயரியகலைமகளை - காவென்னும் பெயரையுடைய நாமகளை, முந்தை ஞான்று நின்கண் என்ன புரந்தாய்-முன்னாளில் நின்கண்போலக்காத்தாய், மா எனப்பெயருடைய என்னையும் மலர்ந்த விழிபோல் புரந்தருளி-மாவென்னும் பெயருடைய திருமகளாகிய என்னையும் மலர்ந்த நின்கண்போலக்காத்தருளி, ஏ என பிறழ் தடவு கண்ணாய் - அம்பென்னும்படிப்பிறழும் விசாலமாகிய கண்களையுடையாளே, காமக்கண்ணியாம் பெயர் எய்துவை என்னா - காமாட்சியென்னும் பெயரடைவையென்று, பூ என்னப் பயில் அணைமிசை கிழத்தி போற்றிசைத்தலும்-பூவென்று சொல்லப்படும் அணைமேலிருக்கும் திருமகள் துதிசெய்தலும், எதிர் எழுந்தருளி - எதிரேதோன்றி நின்று. (எ - று.)

காவென்னும் பெயரையுடைய வாணியை முன்னாளில் உன்கண்போலுங்காத்தனை, அதுபோலும் மா என்னும் பெயருடைய என்னையும் காத்து காமாக்ஷியென்னும்

பெயனைப்பெற்றருள்வாயென்று இலக்குமி போற்றிவணங்கவும் அக்காமாக்ஷிதேவி யெதிரேயெழுந்தருளி என்றதென்க. (சுடு)

எம்பிராட்டிவான்கருணைகூர்ந்தருளியேடவிழ்ந்தபூந்தவிசுறையணங்கே
கம்பியாதிமற்றுன்னுடற்கருமைகரியசாந்தமாக்கழிகமுன்னையினும்
நம்புநல்லுருப்பெறுதியிப்பொழுதேநாரணற்குமிக்குரியவளாவாய்
வம்பறுத்தெழுந்தோங்கியண்ணூந்துமதர்த்துவீங்கியவனமுலைத்தோகாய்.

(இ - ள்.) எம்பிராட்டி வான் கருணை கூர்ந்தருளி-எமதிறைவியாகிய உமாதேவி சிறந்த கிருபைமிகுந்து, ஏடு அவிழ்ந்த பூ தவிசு உறை அணங்கே - இதழ்விரிந்ததாமரை மலராகிய ஆசனத்திலிருக்கும் இலக்குமியே, கம்பியாதி - நடுங்காதிரு, உன்உடல் கருமை கரியசாந்தம் ஆக கழிக - உன்னுடலிற்பொருந்திய கருமைநிறம் அணியும் கரியசாந்தமாக வொழியக்கடவது, முன்னையினும் நம்பும் நல்லுரு இப்பொழுதே பெறுதி-முன்னைநாளினும் மதிக்கின்ற நல்லவடிவத்தை இப்பொழுதேயடைவாய், நாரணற்கு மிக்கு உரியவள் ஆவாய்-திருமாலுக்குமிக்கவுரிமையுடையவளாவாய், வம்பு அறுத்து எழுந்து ஓங்கி அண்ணூந்து - கச்சைக்கிழித்து எழுந்து ஓங்கியுயர்ந்து, மதர்த்து வீங்கிய வனமுலை தோகாய்-பருத்துவிம்மிய முலையையுடைய மயில்போல்வாளே. எ-று.

எமது பெருமாட்டியாகிய உமாதேவியார் மிகவும் கருணைகூர்ந்து கமலாசனத்தில் வீற்றிருக்கு மழகினையுடையாளே நீயஞ்சற்க, உன்னுடற்கருமை கரிய சத்தமாகக் கழியக்கடவது, அதுவேயுமன்றி உன்னுடைய மேனி முன்னைநாளிலும் பொலிவு பெற்றோங்கப்பெறுவாய், இலக்குமியே உன் நாயகனுக்கும் உரியவளாவாய் என்றதென்க. (சுசு)

அழகுவாய்ந்தநின்வடிவினிற்கழியுமனையசாந்தணிநுதலினர்தமக்கு
விழவுமின்பமுஞ்செல்வமும்புகழுமேகலின்மையுமிகழுமற்றொழிக
பழையவேதமுற்றுணர்ந்துயர்சிறப்பிற்பனுவலாட்டியுமிவணமர்செயலாற்
கழிவிலன்பினீவேட்டவாறெனக்குக்காமக்கண்ணியாம்பெயருறுகென்ன.

(இ - ள்.) அழகுவாய்ந்த நின்வடிவினின்றுங் கழியும் அனையசாந்து-அழகமைந்த நின்வடிவத்தினின்றுங் கழியும் அந்தச்சாந்து, அணி நுதலினர் தமக்கு - அணிகின்ற நெற்றியினையுடைய மாதர்களுக்கு, விழவும் இன்பமும் செல்வமும் புகழும் மேகல்-விழாவு மின்பமும் திருவுங் கீர்த்தியும் மேவக்கடவது, இன்மையும் இகழும் ஒழிக-வறுமையும் தாழ்வுமொழியக்கடவது, பழைய வேதம் முற்றுணர்ந்து உயர் சிறப்பின் பனுவலாட்டியும் - பழமையான வேதங்களை முழுதுமறிந்துயர்ந்த சிறப்பினையுடைய நாமகளும், இவண் அமர் செயலால் - இவ்விடத்தி லமருஞ்செய்கையால், கழிவில் அன்பின் நீ வேட்டவாறு எனக்கு காமக்கண்ணியாம் பெயர் உறுக என்ன-நீங்குதலில்லாத அன்பினையுடைய நீவிரும்பியவண்ணமே எனக்கு காமாட்சி யென்னும் பெயரெய்தக்கடவதென்றுசொல்ல. (எ - று.)

அழகுபெற்ற உனது வடிவத்தினின்றுங்கழிந்த சாந்தையிடுகின்றவர்களுக்கு விழவு இன்பம் செல்வம் புகழ் பொருந்துக, வறுமை தாழ்வு இவையெல்லா மொழியக்கடவன, நீ அன்பினால் வேண்டியவண்ணமே இவ்விடத்தில் கலைமகளும் வீற்றிருத்தலால் காமாக்ஷியென்னும் பெயரையும் யான் பெறுகின்றேன் என்றதென்க.

மற்று என்றது துர்க்கையை அவகீர்த்தியுமாம். இவை வடநூலிற் கண்டது.

இனையவாறிவணிகழ்வுழிச்சுரும்பரிமிருந்தாமரையுந்தியங்கடவுண்
மனையகத்துமாமடந்தையைக்காணான்மனமழுங்கினன்பிரிவுநோய்வருத்தக்
கனைகடற்பரப்பெங்கணுந்தேடிக்காஞ்சிமாநகராவயிற்கண்டான்
அனையதாரமுமிறைவியுந்தம்முளுறைவகேட்டவணொளித்துநின்றனனால்.

(இ - ள்.) இனையவாறு இவண் நிகழ்வுழி - இவ்வாறு இப்பிலத்தின்கண் இறைவிபால் இலக்குமிவரமேற்றிருக்க, சுரும்பர் இமிரும் தாமரை உந்தி அம் கடவுள் - வண்டுகளொலிக்கும் நாபிக்கமலத்தையுடைய அழகிய திருமால், மனையகத்து மா மடந்தையை காணான் - தனதுவாழ்க்கையாகிய வைகுந்தத்தில் இலக்குமியைக்காண்கிலனாகி, மனம் அழுங்கினன்-மனவருத்தமடைந்தான், பிரிவுநோய் வருத்த-தலைவிதனைப்பிரிந்தநோய் தன்னைவருந்தச்செய்ய, கனைகடல்பரப்பு எங்கணும்தேடி - ஒலிக்கும் கடல்சூழ்ந்த பூவுலகமுற்றுந் துருவி, காஞ்சி மாநகர் ஆவயின் கண்டான் - காஞ்சிமாநகரமென்னும் திருப்பதியின்கண் பார்த்தனன், அனைய தாரமும் இறைவியும் - அந்தவிலக்குமியும் உமாதேவியும், தம்முள் உறைவகேட்டு - அவ்விருவரும் தமமுளொத்து அவ்விடத்திலிருத்தலைக்கேட்டு, அவண் ஒளித்து நின்றனன் - அவ்விடத்தில் மறைந்து நின்றனன். (எ - று.)

இவ்வகையாகப் பிலத்தின்கண் காமாக்ஷியினிடத்தில் வரம்பெற்றுக்கொண்டிருக்குஞ் சமயத்தில் திருமால் தனது நாயகியாகிய இலக்குமியை வைகுந்தத்திற் காணாது எங்குற்றனளோ வென்று மனமாழ்கி எங்கணுந் தேடுங்கால் காஞ்சிப்பதியின்கண் கண்டு அங்குதனதுதேவி வரங்கேட்கு முறைமையும் உமாதேவிவேண்டியாங்கருளுந் பெருந்தகையையும்கேட்டுத் தன்வருகையையுணர்த்தாது அவ்விடத்தில் ஒளிந்து நின்றனன் என்றதென்க. (௩௮)

ஒள்வளைக்கரத்திருவருமவனையுணர்ந்துநோக்கினரென்னையாளுடையாள்
கள்வனொத்திவணிற்பவன்யாரோயெனக்கடாயினள்கடிமலரணங்கும [ங்கி
வெள்கலுற்றுமுன்னிறைஞ்சினண்மாயோன்வினாவினமபிகைதிருவடிவண
உள்ளகம்பெருமகிழ்ச்சியிற்றிளைப்பவொருமருங்குறவொடுங்கிநின்றனனே.

(இ - ள்.) ஒள் வளை கரத்து இருவரும்-ஒள்ளிய வளையலையணிந்தகையையுடைய இருவரும், அவனை உணர்ந்து நோக்கினர் - அத்திருமாலை அறிந்து நோக்கினர், என்னை ஆளுடையாள் கள்வன் ஒத்து இவண் நிற்பவன் யாரே என கடாயினள் - இருவருள் என்னை யாளுடைய முதல்வி கள்வனைப்போலு மிங்கு நிற்பவன் யார் என்று வினவினர், கடிமலர் திருவும் வெள்கலுற்று முன் இறைஞ்சினள் - வாசனையுடைய தாமரைமலரிலிருக்கும் திருமகளும் நாணங்கொண்டு முன்னின்று வணங்கினள், மாயோன் வினாவின் அம்பிகை திருவடிவணங்கி - மாயவன் வினாவாக உமையம்மை திருவடிகளைவணங்கி, உள்ளம் பெரு மகிழ்ச்சியின் திளைப்ப - உள்ளம் பெரிய மகிழ்வெய்த, ஒரு மருங்குற ஒடுங்கி நின்றனன் - ஒரு புறத்திற் பொருந்த வொடுங்கி நின்றான். (எ - று)

ஒளித்து நின்ற திருமாலை உமாதேவியும் திருமகளும் திருமாலென்றுணர்ந்தனர், அவ்விருவருள் உமாதேவியார் அத்திருமாலைப்பார்த்து கள்வனைப்போலும் இங்கு நிற்கும் நீ யாவன் என்று வினவினர். அப்பொழுது இலக்குமி நாணமுற்று முன்னே தனதுநாயகனை வணங்கிநின்றனள். திருமாலும் விரைந்து காமாக்ஷி யம்மையை வணங்கி உள்ளத்தில் மகிழ்ச்சி மீதூர ஓர் புறத்தில் நின்றனன் என்றதென்க.

கற்புடைமகளிர்க்கு நாணமுடைமையும் தெய்வந்தொழாது கொழுநனையே தொழுதலும் இலக்கணமாகலான் வெள்கலுற்று முன்னிறைஞ்சினள் என்றார். (சகூ)

நங்கைநாகணைக்குரிசிலைநோக்கிநன் றுவந்தனையோவெனவினவி
அங்கண்முச்சகநீபுரந்தளிக்குமாருயிர்த்தொகையினிதுவாழ்ந்தனவே
பங்கயக்கணுயென்றலுங்கலுழப்பாகனின்னருட்கருணைபெற்றுடையேம்
எங்கள்வாழ்விஞக்கென்குறையானுமிவளுமுய்ந்தனமெனத்தொழுதுரைத்தான்

(இ - ள்.) நங்கை நாகணை குரிசிலை நோக்கி - உமையம்மை சர்ப்பசயனத்தையுடைய திருமாலைப்பார்த்து, நன்று வந்தனையோ என வினவி - நன்றாகவந்தனையோ என்று வினவி, அங்கண் நீ புரந்தளிக்கும் முச்சகம் ஆருயிர்த்தொகை இனிது வாழ்ந்தனவே - நீ காக்கும் இடமகன்ற மூவுலகமும் அருமையாகிய உயிர்த்தொகைகளும் இனிமையாக வாழ்ந்திருக்கின்றனவா, பங்கயம் கண்ணாய் என்றலும் - தாமரை மலர்போன்ற கண்களையுடையாளே யென்று சொல்லுதலும், கலுழப்பாகன் நின் அருள் பெற்றுடையேம் எங்கள் வாழ்விஞக்கு என்குறை - கருடவாகனத்தையுடைய திருமால் நின்னருட் கருணைபெற்றுள்ளேமாகிய எங்கள் வாழ்விற்கு யாதுகுறை, யானும் இவளும் உய்ந்தனம் என்ன தொழுது உரைத்தான் - யானு மிவளும் பிழைத்தோமென்று தொழுது நின்று கூறினன். (எ - று.)

(இறைஞ்சி ஓர் புறத்தில்,நின்ற) திருமாலைப்பார்த்து நன்றாகவந்தனையோ வென்றும் உன்னால் காக்கப்படும் உலகமும் உயிர்களும் வாழ்ந்திருக்கின்றனவோ வென்றும் வினவ, அத்திருமால் உனது கருணைபெற்றுடையேமாகிய எங்களுக்கு யாதுகுறையுளது யானும் இலக்ஷிமியும் பிழைத்தோம் என்று தொழுது கூறினனென்றதென்க.

நன்றுவந்தனையோ என்றது நீ சுகமா என்று வினவியதாகும். நன்று வந்தனையோ எனவும்,நீ புரந்தளிக்கும் ஆருயிர்த்தொகையினிது வாழ்ந்தனவே எனவும்,இறைவராயுள்ளோர் தன்னுணையை மேற்கொண்டொழுகுவோர் தம்மாட்டுவந்துழி வினவுங் கூற்றுக்களாமெனவும், நின்னருட்கருணை பெற்றுடையேம், எங்கள்வாழ்வினுக்கு என்குறை, உய்ந்தனம் எனவும் விடைகூறுதல் இறைவராணையைக் கடவாதொழுகுவோரது கூற்றுக்களாமெனவுங் கொள்ளற்பாற்றென்க. (ருo)

இறைவிபின்னருமொன்றவற்கியம்புமீண்டுமுப்பதிற்றிரண்டறம்வளர்க்கும்
முறையினென்னறச்சாலையீதிங்கோர்மூரிப்பாரிடமிதற்கிடையூறுய்க்
குறைவிலாற்றவினுழிதருமதனைக்குறும்படக்குதிநீயெனவேவ
நறைமலர்த்துழாய்மோலியுமிறைஞ்சிநயந்துபஞ்சதீர்த்தத்தடங்கரைப்பால்

(இ - ள்.) இறைவி பின்னரும் அவற்கு ஒன்று இயம்பும் - இறைவி பின்னும் அவனுக்கு ஒன்று கூறுவாள், ஈண்டு முப்பதிற் றிரண்டறம் வளர்க்கும் முறையின்

என் அறச்சாலை ஈது - இவ்விடத்தில் முப்பத்திரண்டு தருமங்களை வளர்க்கும் முறைமையையுடைய எனது தருமச்சாலை யிது, இங்கு ஓர் பூரி பாரிடம் - இவ்விடத்தில் ஒரு வலிமையுள்ள பூதம், இதற்கு இடையூறுய் குறைவில் ஆற்றலின் உழிதரும்- இதனுக் கிடையூருக குறைவற்றவன்மையால் சுழலாநிற்கும், நீ அதனை குறும்பு அடக்குதி என்ன ஏவ - நீ அப்பூதத்தின் குறும்படக்க வேண்டுமென்று சொல்லிச் செலுத்த, நறை மலர்த்துழாய் மோலியும் இறைஞ்சி நயந்து - தேன் தங்கிய துழாய் மலர்மாலையணிந்த கிரீடமுடைய மாயோனும் வணங்கிப் பணியைவிரும்பி, பஞ்ச தீர்த்த தடவு கரைப்பால்-பஞ்சதீர்த்தமென்னுந் தீர்த்தத்தின் கரையின்பால். (எ-று.)

(பிழைத்தோமென்று கூறிய திருமாலை) உமாதேவியார் பின்னரும்பார்த்து இவ்விடம் யான் முப்பத்திரண்டு அறங்களையுஞ்செய்யும் அறச்சாலையாகும் அவ்வறத்திற் கிடையூருக ஓர் பூதம் மிக்க வன்மையோடு திரிகின்றது, அதனை அடக்குவாயென்று ஏவ அத்திருமாலும் அப்பணியை யேற்று வணங்கி பஞ்சதீர்த்தக்கரையின்கண் என்றூ தென்க.

தம்மாற்றந்த காவற்றொழில் தட்டரைக் கடிதலும் அறத்தைக் காத்தலும் ஆதலால் அத்தொழிலில் வல்லனுயிருத்தலைக்கண்ணுறுதற்கு ஏவிய ஏவலாகுமென்று கொள்ளலுமொன்று. (௫க)

அன்றுபாரிடம்பாரிடைவீழ்த்தியாற்றலான்மிதித்ததன்மிசைநின்றான்
நின்றவன்றனையுந்திமேலெழும்பநெரித்திருந்தனனிருந்தவன்றனையும்
வென்றிசால்விறற்பூதமேலுந்தநீண்டுமற்றதன்மிசைப்படக்கிடந்தான்
கன்றுபூதமும்வலிமுழுதிழந்துகமலக்கண்ணனைவணங்கியொன்றிரக்கும்.

(இ - ள்.) அன்று பாரிடம் பாரிடை வீழ்த்தி ஆற்றலான் மிதித்து அதன் மிசை நின்றான் - அந்நாளில் பூதத்தைப் பூமியில் விழச்செய்து தனது வன்மையான் மிதித்து அதன்மேல் நின்றான், நின்றவன் தனை உந்தி மேலெழும்ப-(அவ்வண்ணம்) நின்ற திருமாலைத்தள்ளி (பூதம்) மேலெழும்ப, நெரித்திருந்தனன் - திருமால் எழுந்த பூதத்தை பூமியில் நெரித்து அதன் மேல் உட்கார்ந்திருந்தான்,இருந்தவன் தனையும் வென்றி சால் விறல் பூதம்உந்த - அவ்வாறு தன் மேலிருந்தவனையும் வெற்றி நிரம்பியவலியுள்ள பூதம் தள்ள, நீண்டு மற்று அதன் மிசை படக்கிடந்தான் - (பூதத்தால் தள்ளப்பட்ட திருமால் அப்பூதத்தினும்) நீண்ட வடிவங்கொண்டு மேற்பொருந்தப்பள்ளிகொண்டனன்,கன்று பூதமும் வலி முழுது இழந்து கமலக்கண்ணனை வணங்கி ஒன்று இரக்கும் - வருத்துகின்ற பூதமும் வலிமை யெல்லாமிழந்து தாமரை மலர் போன்ற கண்ண பிரானை வணங்கி யொன்றை யிரக்கும். (எ - று.)

(பஞ்ச தீர்த்தக் கரையின் கண்) நின்ற திருமால் அறத்துக் கிடையூறியற்றிய பூதத்தைப் பூமியிற்றள்ளி தனது வன்மையால் மிதித்து அப்பூதத்தின்மேல் நின்றனன், நின்ற அத்திருமாலை அப்பூதந் தள்ளிப் போர்க்கு மேலெழ, அதனைத் திருமால் பூமியிலிருத்தித் தான் அதன்மேல் வீற்றிருந்தனன். தன்மேல் உட்கார்ந்த திருமாலை அப்பூதம் மீளவுந்தள்ள, தள்ளுண்ட அத்திருமால் மீளவும் நீண்ட வுருவமெடுத்து அப்பூதத்தைப் பூமியில் தண்டாகாரமாகவீழ்த்திச்சயனித்துக்கிடந்தனன்.பின்பு அப்பூதம் அத்திருமாலை முன்போல் தள்ளுதற்கியலாது தன் வலி குன்றி அத்திருமாலை வணங்கி ஓர் வரத்தைக் கேட்கத் தொடங்கிய தென்ற தென்க. (௫உ)

வள்ளலேமலர்த்திருவிளையாடுமார்பனேபெரும்பசியெனைவருத்த
வுள்ளுடைந்துளேனாண்டுதோறடியேற்கொருமகன்றனையுயிரொடுமுதவின
கொள்ளுமப்பலியேற்றுளமகிழ்வேன்கொடுத்தியிவ்வரமெனக்கெனவரவப்
பள்ளியோனுமற்றுகெனவிளம்பிப்பத்தர்போற்றவத்தலத்தினிதிருந்தான்.

(இ - ள்) வள்ளலே மலர்த்திரு விளையாடும் மார்பனே - வள்ளற்றன்மையுடையானே தாமரை மலர்மேலெழுந்தருளிய திருமகள் விளையாடுகின்ற மார்பினை யுடையானே, பெருபசி எனைவருத்த உள்ளுடைந்துளேன் - பெரும்பசி யென்னை வருத்தலினால் உள்ளங் கலங்குகின்றேன், ஆண்டு தோறும் அடியேற்கு - வருடந்தோறு மடியேனுக்கு, ஒரு மகன்றனை உயிரொடு முதவின் - ஒரு பிள்ளையை உயிரோடு முதவி செய்தால், கொள்ளும் அப்பலியேற்று உள்ளம் மகிழ்வேன் - கொள்ளுகின்ற அந்தப் பலியையேற்று மனமகிழ்வேன், இவ்வரம் எனக்கு கொடுத்தி என்ன - இவ்வரத்தை எனக்குத்தருவாயென்றுகேட்க, அரவப்பள்ளியோனும் ஆக என விளம்பி - சர்ப்பசயனத்தையுடைய திருமாலும் அவ்வாறளிப்போ மென்று சொல்லி, பத்தர்போற்ற அத்தலத்து இனிதிருந்தான் - தன் அடியவர்கள் துதிசெய்ய அத்தலத்தில் இனிமையாக வீற்றிருந்தான். (எ - று.)

(வணங்கி நின்றிரந்த பூதம் திருமாலை) வள்ளலே என்று வாழ்த்தி என்னைப் பெரும்பசி வருத்த அதனால் யான் மனங்கலங்கியுள்ளேனாகையால், தேவரீர் எனக்கு வருடந்தோறும் ஓர் மகனை உயிரோடு கொடுப்பீராயின் அதனை யானுண்ணும் பலியாகக்கொண்டு மனமகிழ்வேன் இதுவே யான் வேண்டும் வரமாகும். அவ்வரத்தைக் கொடுமென்றுகேட்க அத்திருமால் அப்பூதத்திற்கு அவ்வாறே ஆகுகவென்று கூறி தன்னடியார்கள்போற்ற அத்தலத்தில் வீற்றிருந்தனன் என்றதென்க. (ருங)

கள்வனின்றவனிருந்தவன்கிடந்தோனென்னுநால்வகைக்கரிசறுவடிவால்
வெள்வளைக்கரக்கடவுளங்கமர்ந்தான்விமலநாயகியாணையினாற்றான்
முள்ளெயிற்றராப்பணம்புரையல்குன்முளரிமாதுமப்பிலத்தயலிருந்தாள்
புள்ளுயர்த்தவற்கினியவாமங்கட்போற்றப்பெற்றவர்வைகுந்தம்புகுவார்.

(இ - ள்.) கள்வன் நின்றவன் இருந்தவன் கிடந்தோன் - கள்வன் நின்றான் இருந்தான் கிடந்தான், என்னும் நால்வகை கரிசு அறு வடிவால் - என்று சொல்லப்படும் நால்வகையான குற்றமற்ற வடிவத்தால், வெள்வளை கரம் கடவுள் - வெண்மையாகிய சங்கமேந்திய கையையுடைய திருமால், விமல நாயகி ஆணையின் ஆற்றால் - அனுதியே மல நீங்கிய இறைவியினுடைய ஆணையின்வழியால், அங்கு அமர்ந்தான் - அங்கெழுந்தருளினன், முள் எயிறு அரா பணம் புரை அல்குல் முளரி மாதும் - முள்ளைப் போன்ற பல்லையுடைய பாம்பின் படம்போன்ற அல்குலையுடைய தாமரையாளும், அ பிலத்து அயல் இருந்தாள் - அப்பிலாகாசத்தின் அருகிலிருந்தாள், புள்ளுயர்த்தவற்கு இனியவாம் அங்கண் போற்ற பெற்றவர் - கருடக்கொடியையுடைய திருமாலுக்கினியவாகிய அவ்விடத்தில் துதிக்கப்பெற்றவர், வைகுந்தம் பெறுவார் - வைகுந்தத்தையடைவார்கள். (எ - று.)

அப்பஞ்சதீர்த்தக்கரையில் வீற்றிருக்குந் திருமால் கள்வனெனவும் நின்றவனெனவும் இருந்தவனெனவும் கிடந்தவனெனவும் கூறும் நால்வகை வடிவங்களோடு

உமாதேவியின் ஆணையின் வலியால் அங்கு பொருந்தி வாழ்ந்திருந்தனன், அவன் மனைவியாகிய இலக்குமியும் பிலாகாசத்தினருகில் அமர்ந்திருந்தனள், திருமாலுக் கினிமையாகிய அவ்விடத்தில் அவனைப்போற்று மவனடியார்கள் வைகுந்தபதத்தை யடைவார்களென்றதென்க.

இறைவன் தலைவியாகிய உமையம்மை வசிக்கும் இடமாகிய அவ்வறச்சாலையில் ஏனைய தேவர்கள் வசித்தற்கியலாதாகலான் விமலநாயகியாணையினுற்றான் முளரிமாதும் புள்ளூர்த்தவற்கு இனியவாம் என்றார். (ருச)

கறைமிடற்றிறைவைகும்வீராட்டகாசமேன்மையின்றொடர்ச்சியாலிங்கே
அறைகழற்றிருநாயகன்வரலாறனைத் தூங்கூறினுமத்திருநகரை
நிறைவிருப்பினுல்வழிபடப்பெறுவோர்நிலமிசைப்பெருவாழ்வினராகிப்
பிறைமுடிப்பிரானறிருவடிக்கலப்பிற்பெறலருமபரபோகமுற்றிருப்பார்.

(இ - ள்) கறை மிடற்று இறை வைகும் - நீலகண்டத்தையுடைய இறைவன் வசிக்கும், வீராட்டகாச மேன்மையின் தொடர்ச்சியான் - வீராட்டகாசத்தினது மேன்மையின்றொடர்பினுல், இங்கே அறைகழல் திருநாயகன் வரலாறனைத்தும் கூறினும் - இவ்விடத்தில் சததிககின்ற வீரக்கழலையுடைய திருமகள் கேள்வனுடைய வரலாறனைத்துஞ் சொல்லிமுடித்தாம், அத்திரு நகரை நிறை விருப்பினுல் வழிபடப் பெறுவார் - அந்தத் திருநகரத்தை நிறைந்த விருப்பினுல் வழிபாடுசெய்வோர், நிலமிசை பெரு வாழ்வினராகி - பூமியின்மேல் பெரிய வாழ்வினையுடையவராய், பிறைமுடிபிரான் திருவடிக்கலப்பின் பெறலரும் பரபோகம் உற்றிருப்பார் - சந்திரனை முடியிலணிந்த இறைவனுடைய திருவடிக்கலப்பினுல் பெறுதற்கரிய பரபோகந் துய்த்திருப்பார்கள். (எ - று.)

திருமாலடியார்க்கு வைகுந்தம் அளிக்கும் அத்திருப்பதியின் வரலாற்றை இறைவன் வீற்றிருக்கும் வீராட்டகாசமேன்மையின் றொடர்ச்சியினு லிதுகாறு மெடுத்துக் கூறினும். ஆகையால் அவ்வீராட்டகாசத்தை நிறைந்த அன்பினுல் வழிபடப்பெறுவோர்கள் இவ்வுலகின்கண் பொருளாலடையும் வாழ்வினையும் அம்மையில் அருளாலடையும் சிவபோகத்தையும் அடைந்து வாழ்ந்திருப்ப ரென்றதென்க.

காஞ்சித்திருப்பதியில் பேரவாவுடன் அன்போடு வழிபடுவோர்க்கே வாழ்வெல்லாம் உண்டாகுமென்பதுதோன்ற நிறைவிருப்பினுல் வழிபடப்பெறுவோர் பெறலரும் பரபோகமுற்றிருப்பாரென்றார். (ருரு)

வீராட்டகாசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். கஎசரு.

# பாண்டவீசப்படலம்.



பேரின்பச்சாக்கியனார்கல்லெறிக்கும்பேறுதவு
வார்தங்கும்வீராட்டகாசவரவிதுவாற்
சீர்தங்குதென்பாற்றிருப்பாண்டவீச்சரமாம்
கார்தங்குமிஞ்சிக்கடிநகரங்கட்டுரைப்பாம்.

(இ - ள்.) பேரின்பச் சாக்கியனார் கல் எறிக்கும் - முத்தியின்பத்தையுடைய சாக்கிய நாயனார் மலரன்றிக் கல்லை யெறிந்ததற்கும், பேறு உதவு வார்தங்கும் வீராட்டகாசம் வரவு இது - முத்தியின்பத்தையளிக்கும் இறைவன் வீற்றிருக்கும், வீராட்டகாசத்தின் வரலாறிதுவாகும், தென்பால் சீர்தங்கும் திருப்பாண்ட வீச்சரம் ஆம் - (வீராட்டகாசத்திற்கு) தென்பாகத்திலுள்ள சிறப்புப்பொருந்திய பாண்டவீச்சரமாகிய, கார் தங்கும் இஞ்சி கடி நகரம் கட்டுரைப்பாம் - மேகந்தவழும் மதில்சூழ்ந்த காவலையுடைய திருத்தளியை இனி யெடுத்துச்சொல்வாம். (எ - று.)

இதுகாறுஞ் சாக்கியநாயனார் கல்லாலெறிய அதற்குப் பேறளித்த வீராட்டகாசத்தின் வரலாற்றைச் சொன்னோம். இனி அதன் தென்பாலுள்ள பாண்டவீச்சரத்தின் வரலாற்றைச்சொல்லுகின்றோம் என்றதென்க.

உம்மை உயர்வு சிறப்பு. ஆல் - அசை.

சிற்றின்பத்தைத் துன்பமெனக்கருதி வீட்டின்பத்தைத்தரும் சிவ நியமத்தை இன்பமெனக் கருதினவரென்பது தோன்றப் பேரின்பச் சாக்கியனார் எனவும், விதியிற் கூறும் மலர்களா லருச்சிப்போர்க்கும் கொடுத்தற்கரிய சிவப்பேற்றைக் கல்லாலெறிந்ததற்குத் தந்த கருணையுடையானென்பது தோன்றக் கல்லெறிக்குப் பேறுதவுவார் எனவும் கூறினார்.

சங்க மங்கை யென்னுந் தலத்தில் வேளாண் குலத்தில் அவதரித்த சாக்கிய நாயனார் எத்தவத்துள்ளும் அருளுடைமையே பெரிதென்றெண்ணி எல்லா வுயிர்களிடத்தும் மிக்க அருளுடையராய் வாழும் நாளில் காஞ்சிப்பதியை யடைந்து உண்மைத் தெய்வம் எச்சமயத்துள்ளதோ அதனைத் தெரிந்துணரச் சமயங்களை யாராய்ந்துழிப் புறப்புறச் சமயங்களுளொன்றிய புத்தசமயத்தை அங்கு கண்ணுற்றனர். அச்சமயம் தாம் நியதமாகக் கொண்டிருக்கும் ஜீவகாருண்ணியத்தை மேற்கொண்டிருத்தலால் இச்சமயமே உண்மைத் தெய்வத்தை நன்குணர்த்தும் என்றாராயத் தொடங்கியவழி, அச்சமயத்தில் பொய்த்தெய்வம் கூத்தாடுதலை யுணர்ந்து, இதுவென்னோ நம்கொடுமையிருந்தவா றென்றெண்ணி, உள்ளமாழாந்து ஈசனருள் கூட்டும் அழிவில்லாத சைவ நெறியே உண்மைப்பொருளை யுணர்த்துஞ் சமயமென்றும், அச்சமயத் தெய்வமே ஆன்மாக்களை உய்விக்கு மென்றும், தெளிந்து சிவலிங்க மூர்த்தியை வழிபட எண்ணினார். எண்ணிய அவ்வளவே வீராட்டகாசமாகிய அத்திருத்தலத்தில் ஓர் சிவலிங்கம் கட்புலனுக்குத்தோன்ற அக்கணமே அன்பு மீதூர்ந்து பெருமானை யர்ச்சிக்கத் தொடங்கினர். தொடங்கிய தொண்

பூவது கல்லாலெறிந்துவந்ததாம், அது இறைவனுக்கு அன்பானபடி காண்ின் கண்ணப்பதேவர் செருடியும், உவப்பானவகையேபோல் இச்செயலுமாயிற்று. ஒருநாள் மறந்து உண்ணத்தொடங்க கல்லெறியும் ஞாபகம்வர யான் இன்றயர்த்தேனென்றெழுந்து காதலோடு விரைந்து புறப்பட்டுக் கல்லெடுத்துக் குறி கூடும் வகையெறிந்தனர். கண்ணுதற்பெருமானும் வெள்விடையிவர்ந்து தோன்றிச் சிவலோகத்திற் பழவடிமைப் பாங்கருளி யெழுந்தருளினர். (க)

தருமம்பயந்ததநயன்முதலோர்
உருகெழுவெங்காட்டினுரோமசனேயாதித்
திருமுனிவர்தம்மோடுந்தீர்த்தமெலாமாடக்
கருதிநடந்தார்கழியாதகாதலார்.

(இ - ள்.) தருமம் பயந்த தநயன் முதலோர் - அறக்கடவுள்பெற்ற தருமராசன் முதலிய ஐவர், உருகெழு வெங்காட்டில் - அச்சத்தை விளைவிக்கும் கொடிய ஆரணியத்தின்கண், உரோமசனே ஆதி திருமுனிவர் தம்மோடும்-உரோமச முனிவர் முதலியமுனிவர் கூட்டங்களோடும், தீர்த்தம் எல்லாம் ஆட கருதி - எல்லாத்தீர்த்தங்களிலும் மூழ்கிவர நினைத்து, கழியாத காதலார் நடந்தார்-மிக்கவாசையையுடையவராய் நடந்தார்கள். (எ - று.)

தருமன் முதலாகக் கூறும் பாண்டவரைவரும் ஆரணிய வாசஞ்செய்யுங்காலத்து உரோமச முனிவர் முதலிய முனிவர்களோடு தீர்த்தயாத்திரை செய்யக் கருதிச் சென்றன ரென்றதென்க.

தீர்த்த மாடுதல் சிவ புண்ணியத் தொன்றாதலின் கழியாத காதலார் எனவும், பிறர் சென்றெய்தற் கருமையாகலின் உருகெழுவெங்காடு எனவுங்கூறினர்.

துரியோதனாதியர்க ளியற்றிய அதர்ம வழியால் தமக்குடைய பெருஞ்செல்வங் கழியவந்தும் அக்கழிவை நோக்கி தமது அறநெறியில் அணுவளவேனும் தவறாதிருந்தன ரென்பார் தருமம் பயந்த தநயன்முதலோர் என்றனு மொன்று.

தருமம் காதலார் முற்றெச்சம். (உ)

அங்கங்கிலிங்கநிறுவியருச்சித்துப்
பங்கந்துமிக்கும்பரம்பொருளைப்போற்றிசைத்துச்
சிங்கம்படுக்குந்திறலார்வருநெறியார்
தெங்கம்பொழில்சூழ்திருக்காஞ்சிநண்ணினர்.

(இ - ள்.) அங்கு அங்கு இலிங்கம் நிறுவி அருச்சித்து - (பாண்டவர்கள் சிவ தீர்த்தமாடச் சென்ற) அந்தந்தத்தலங்கள்தோறும் சிவலிங்கஸ்தாபனஞ் செய்து அருச்சனையியற்றி, பங்கம் துமிக்கும் பரம்பொருளை போற்றிசைத்து - இருவினையாகிய அளற்றைவற்றச்செய்யும் மேலாகிய இறைவனைத்துதிசெய்து, திறல் ஆர் சிங்கம் படுக்கும்வரும் நெறியார் - வெற்றிவாய்ந்த சிங்கங்கள் கண்ணுறங்கும் ஆரணியத்தின் வழியே வருகின்றவர்களாகிய ஐவரும், தெங்கம் பொழில்சூழ் திருக்காஞ்சி

நண்ணினர் - தென்னஞ் சோலைகள் சூழ்ந்த அழகிய காஞ்சி நகரத்தை யடைந்தா ர்கள். (எ - று.)

தீர்த்த யாத்திரை செய்யத்தொடங்கிய பாண்டவர்கள் அந்தந்தத் தீர்த்தங்க ளில் மூழ்குவதேயன்றி அங்கங்கே சிவலிங்க மூர்த்தியையுந் தாபித்து அருச்சனை முதலியன இயற்றி சிங்கங்கள் கண்ணுறங்கும் காட்டின் வழியே வருகின்றவர் கா ஞ்சித்திருப்பதியை யடைந்தார்களென்றதென்க.

சேற்றிலாழ்ந்தினோர் அடிபெயர்த்தலரிதாதல்போல் இருவினைகளையும் ஆன் மாக்கள் கடத்தலரிதாகலின் வினையைப் பங்கமெனவும், அவ்வினை இறைவனாலன்றி நீங்காதாகலான் பங்கம் தூமிக்கும் பரம்பொருளெனவுங் கூறினர். (ந)

அங்கட்பலதளியுநோக்கியகமகிழ்ச்சி
பொங்கித்திருக்கம்பமாதியாப்புண்ணியநீர்க்
கங்கைச்சடிலக்கடவுளிடமெல்லாந்
துங்கப்பேரன்பிற்றொழுதுதொழுதேகினர்.

(இ - ள்.) அங்கண் பல தளியும் நோக்கி அகமகிழ்ச்சி பொங்கி - அக்காஞ்சித் திருநகரத்திலுள்ள பல தளிகளையுங் கண்ணுற்று மனத்தின் கண் ஆனந்த மீதூர் ந்து, திருக்கம்பம் ஆதியாக புண்ணிய நீர் கங்கை சடிலம் கடவுள் இடம் எல்லா ம் - திருவேகம்ப முதலாகக் கூறப்பட்ட புண்ணியத்தைத்தரும் நீர் மயமாகிய கங் கையை யணிந்த சடா முடியையுடைய இறைவன் வீற்றிருக்கும் தெய்வத்தலங்க ளை யெல்லாம், துங்கம் பேரன்பின் தொழுது தொழுது ஏகினர் - புனிதமாகிய பேரன்பினால் தளிகள் தோறும் பணிந்து பணிந்து சென்றனர். (எ - று.)

காஞ்சித் திருப்பதியை யடைந்த பாண்டவர்கள் அங்கங்குள்ள வற்புதத்த ளிகளை யெல்லாம் கண்ணுற்றவளவிலே மிக்க மகிழ்ச்சி யடைந்து பின்னர் திரு வேகம்ப முதலிய தலைமைத் தலங்களையும் தலையன்போடு வணங்கிச் சென்றனர் என்றதென்க.

எங்கும் காண்டற்கரிய பலவற்புதங்களைக் காஞ்சித்திருப்பதியில் எங்குங்க ண்டனரென்பார் அங்கண் பல தளியும் நோக்கி அகமகிழ்ச்சி பொங்கி யெனவும், அதிசயத்தோடும் கண்ட தளிகளில் தலைமை பெற்று விளங்குவது ஏகம்ப வாண ன்வாழும் திருவேகம்ப முதலிய தளிகளென்பார் - திருக்கம்பமாதி கடவுளிட மெ ல்லா மெனவும், அத்தலங்களிற் சென்று பெருமானைக் கண்டகாலத்து இவர்களுக் குண்டாகியது தலையன் பென்பார் துங்கப் பேரன் பெனவுங் கூறினர்.

திருக்கம்பம் என்றது திருவேகம்பத்தை. ஆதியாக என்றது கள்ளக் கம்பம் நல்ல கம்பம், வெள்ளைக் கம்பம், கச்சி மயானம், திருவோணகாந்தன்றளி, கச்சபே சம், காயா ரோகணம் முதலாயின. (சு)

வீராட்டகாசங்கடைக்கால்வியன்மலர்கொண்
டாராப்பேரன்பினருச்சித்ததன்றென்பால்

ஏராரத்தத்தம்பெயாசாத்தியெல்லாருந்
தாரார்த்தகொன்றைச்சிவலிங்கந்தாபிக்கார்.

(இ-ள்.) எல்லாரும் - பாண்டவரைவரும், கடைக்கால் வீராட்டகாசம் வியன் மலர்கொண்டு ஆராத பேர் அன்பின் அருச்சித்து-(திருவேகம்ப முதலிய தலங்களைத் தெரிசித்துக்கொண்டு) இறுதியில் வீராட்டகாச மென்னுந் திருத்தளியை யடைந்து (அங்கெழுந்தருளி யிருக்கும் இறைவனை) சிறந்த மலர்களைக்கொண்டு அடங்காத பேரன்பினால் அருச்சனைசெய்து, அதன் தென்பால் ஏர் ஆர தம் தம் பெயர் சாத்தி- அவ்வீராட்டகாசத்திற்குத் தென்பால் பொலிவு பெறத் தங்கள்தங்களுடைய பெயர்களை அவ்விலிங்கங்களின் பெயர்களாக நிறுவி, கொன்றைதார் ஆர்த்த சிவலிங்கம் தாபித்தார் - கொன்றைமாலையை யணிந்த சிவலிங்கப் பெருமானை பிரதிஷ்டை செய்தார்கள். (எ-று.)

திருவேகம்ப முதலிய தலங்களை முன்னந் தெரிசித்து இறுதியில் வீராட்டகாசத்தை யடைந்து அங்கெழுந்தருளியிருக்கும் பெருமானை மலர்களாலருச்சித்து அத்தலத்திற்குத் தென்பால் பாண்டவரைவரும் தங்கள் தங்கள் பெயர்களால் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார்களென்றதென்க. (ரு)

அறமைந்தன்வீமன்விசயனலர்பூந்தா
நறவிண்டதிண்டோணகுலசகாதேவா
மறனின்றியின்னோர்மனைக்கிழமைபூண்ட
முறையொன்றுகற்பிற்றுரோபதைமுன்னோர்.

(இ-ள்) அறம் மைந்தன் வீமன் விசயன் நறவு விண்ட அலர் பூந்தார் திண் தோள் நகுல சகாதேவர் - தருமபுத்திரன் வீமசேனன் அருச்சுனன் தேனொழுகும் அழகிய மலர்மாலையை யணிந்த திண்ணிய தோளையுடைய நகுலன் சகாதேவன், மறன் இன்றி இன்னோர் மனைக் கிழமை பூண்ட முறை ஒன்று கற்பின் துரோபதை முன்னோர்-கொடுமையில்லாமல் தருமன் முதலிய ஐவருக்கும் மனைவியாயிருந்த முறைதவறாத கற்பிலக்கணம் வாய்ந்த துரோபதை முதலாயினோரும். (எ-று.)

தருமன் வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் இவர்கள் மனைவியாகிய துரோபதை முதலாயினோரு மென்றதென்க.

ஐவருக்கும் மனைவியாயிருந்த துரோபதை ஐவருக்குள் ஒருவனை ஓர் கால் விழைந்து ஒருவனை வெறுத்தும், வெறுத்தவனை ஓர் கால் விழைந்துமுன் விழைந்தவனை ஓர் கால் வெறுத்தும் இல்லறததைப் புரியாது ஐவரிடத்தும் ஒத்த மனத்தளாய் அவ்வறத்தைப்புரிந்தனளென்பார் மறனின்றியின்னோர் மனைக்கிழமை பூண்ட என்றார்.

மறம் என்பதற்கு பாபமெனப் பொருள்கொண்டு ஐவரோடு புணர்ந்தும் அதனால் பாபத்தை யடைந்து பழிப்பேர் பூணாது கற்பிற் சிறந்தாளென்று புகழப்பட்டாளாதலால் பாபமில்லாளெனகூறலு மொன்று. நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்கும் கற்பிலக்கணத்திற்கு முறையாகக் கூறுங்குணங்க ளென்பார் - முறையொன்று கற்பென்றார். (சா)

ரமனனசிகண்டிமறறு
யேரார்கழற்கால்யதுமரபின்மன்னருடன்
ஊரானுற்கன்பினுரோமசர்முற்கலனூர்
பாரார்வியாதர்முதலாயபன்முனிவர்.

(இ - ள்.) சீர் ஆர் திருட்டத் துமனன் சிகண்டி - பெருமை வாய்ந்த திருட்டத்தும்னன் சிகண்டி, ஏர் ஆர் கழல் கால் யதுமரபின் மன்னருடன் - அழகு பொருந்திய வீரகண்டையை யணிந்த கால்களையுடைய யதுமரபிற் றோன்றிய அரசர்கள் (ஆகிய) இவர்களுடன், ஊர் ஆறற்கு அன்பின் உரோமசர் முற்கலனூர் - இடபவூர்தியையுடைய இறைவனுக் கன்பு பூண்ட உரோமச முனிவர் முற்கல முனிவர், பார் ஆர் வியாதர் முதலாய பன் முனிவர் - உலகம் புகழும் வியாச முனிவர் முதலாகக் கூறும் பல முனிவர்களும். (எ - று.)

திருட்டதும் னன் சிகண்டி யதுகுலவேந்தர் உரோமசர் முற்கலர் வியாசர் முதலிய பல முனிவர்களு மென்றதென்க.

வியாச முனிவர், யாவரும் எடுத்துக் கூறும் புகழ்போயவராதலால் பாரார் வியாதர் எனவும், வியாச முனிவர் முதலாகக் கூறிய முனிவர்க ளெல்லாம் சிவ பெருமானுக்கன்பு பூண்டவரென்பார் ஊரானுற் கன்பினுரோமசர் முதலா யபன்முனிவர் எனவுங் கூறினூர்.

பன் முனிவராவார் கவுசியன், பஞ்சசூபர், சிகி, கிக்ஷிபர், உக்கிரர், கௌசிகனூர், வீதகவ்யர், திரைதகசிபு, பௌரிகுச்சரர், நாகர், மௌத்கில்லியர், என்று வடநூலிற் கூறியாங்குணர்க. (எ)

என்றினையரெல்லாமிலிங்கந்தனித்தனியே
நன்றிருத்தியேத்திநயப்பாடுபெற்றூரால்
அன்றவர்கள்போற்றுமிலிங்கமவைகண்டோர்
மன்றினடமாடும்வள்ளலருள்பெறுவார்.

(இ - ள்.) என்று இனையர் எல்லாம் தனித்தனியே இலிங்கம் நன்று இருத்தி ஏத்தி நயப்பாடு பெற்றூர் - தருமன் முதலாகக் கூறிய அவர்களெல்லாம் தனித்தனியே சிவலிங்கப் பெருமானை அழகு பெறத்தாபனஞ் செய்து போற்றி தாம்தாம் வேண்டியவற்றை யெளிதிற் பெற்றூர்கள், அன்று அவர்கள் போற்றும் இலிங்கம் அவை கண்டோர் - அந்நாளில் அவர்கள் வழிபட்ட சிவலிங்கமூர்த்தங்களை (இன்றும்) தரிசிக்கப் பெற்றவர்கள். மன்றில் நடமாடும் வள்ளல் அருள் பெறுவார் - சிற்சபையில் ஆனந்த நடனஞ் செய்யும் இறைவன்றிருவருளைப் பெறுவார்கள் (எ - று.)

தருமன் முதலாக மேற்கூறியவர்களெல்லாம் தத்தம் பெயரால் சிவலிங்க மூர்த்தியைத்தாபித்து வேண்டிய வரங்களைப் பெற்றூர்கள். அவ்விலிங்க மூர்த்தங்களை இன்றுங்காணப் பெற்றோர் இறைவன்றிருவருளைப் பெறுவார் என்றதென்க. (அ)

அன்னவற்றின்றென்பாற்கயிலாயமவ்வரைப்பில்
நன்னர்கயிலாயநாதன்றனைநிறுவி

மன்னுந்திசைக்கிறைமைபெற்றான்மருவலார்க்
கின்னல்புரிமுத்தலைவேலீசானனென்பவே.

(இ-ள்.) மருவலார்க்கு இன்னல்புரி முத்தலைவேல் ஈசானன்-பகைவர்களுக்குத் துன்பஞ் செய்யும் முத்தலைவேலேந்திய ஈசானதேவர், அன்னவற்றின் தென்பால் கயிலாயம் - அப்பாண்டவீச்சரத்தின் தென்திசையில் கயிலாய மென்னுந் திருத்தளி யொன்றுண்டு, அவ்வரைப்பின் நன்னர் கயிலாய நாதன்றனை நிறுவி - அத்திருத் தளியில் நன்மை பயக்கும் கயிலாய நாதனைத் தாபித்து, மன்னுத்திசைக்கு இறை மைபெற்றான்-நிலைபெற்ற ஈசான திசைக்கு நாதன் என்னுந் தலைமையைப்பெற்ற னன். (எ - று.)

ஈசானமூர்த்தி பாண்டவீச்சரத்திற்குத் தென்பாலுள்ள கயிலாயமென்னுந் திருப்பதியில் கயிலாயநாதனென்னு நாமத்தால் சிவலிங்கமூர்த்தியைப்போற்றி ஈசான திசைக்குத் தலைமையாய்வாழும் பேற்றைப்பெற்றனன் என்றதென்க.

அன்னவற்றின் தென்பால் கைலாயமெனவும் அவ்வரைப்பில் கயிலாயநாதன் றனை நிறுவியெனவுங் கூறியதால் காஞ்சித்திருப்பதியில் ஒவ்வொருவரும் பூசித்த லிங்கங்கள் அவ்வவர்களாற் றாபிக்கப்பட்டன அல்லனவென்றும் அவைமுன்னரோ யுள்ளனவென்றும், உள்ள அவ்விலிங்கங்களை அவ்வவர்கள் கண்டு தந்தம்பெயரால் இறைவனைத் தியானரூபத்தால் ஆவாகித்து வழிபட்டனவென்றுங் கொள்ளக்கிடந்தன.

பாண்டவீச்சரப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௯௫௫.

---

## மச்சீசப்படலம்.

பார்த்தராதியோர்வழிபடும்புகழ்
ஆர்த்தசூழல்கள்விளம்பினுமருள்
கூர்த்தவப்புலக்குடக்கணிப்பிநீர்த்
தீர்த்தஞாங்கர்மச்சீசங்கூறுவாம்.

(இ - ள்.) பார்த்தர் ஆதியோர் வழிபடும்புகழ் ஆர்த்த சூழல்கள் விளம்பினும்-அருச்சுனன் முதலியோர் வழிபட்ட புகழ்வாய்ந்த திருத்தளிகளின் வரலாற்றை யெடுத்துக்கூறினும், அருள்கூர்த்த அப்புலம் குடக்கண் - இனி அருள்மிக்க அத்திருத்தளிகளுக்கு மேற்றிசைக்கண், இப்பிநீர் தீர்த்தம் ஞாங்கர் - நீர் மயமாகிய இப்பிதீர்த்தத் தினருகிலுள்ள, மச்சீசம்கூறுவாம் - மச்சீசத்தின் வரலாற்றை இனியெடுத்துக் கூறுவாம். (எ - று.)

அருச்சுனன் முதலியோர் பூசித்த பாண்டவீச்சரத்தின் வரலாற்றைக்கூறினோம். அதன்மேற்றிசையில் இப்பிதீர்த்தத்தினருகிலுள்ள மச்சீசமென்னுந் திருப்பதியின் வரலாற்றை இனிக்கூறுவாம் என்றதென்க. (க)

ஒப்பிலற்புதமுணர்த்தவெம்பிரான்
இப்பிமுத்தமங்கெடுத்தளித்தலால்
செப்பரும்புகழிப்பிதீர்த்தமென்
றப்பெரும்பெயரதனுக்காயதே.

(இ - ள்.) எம்பிரான் ஒப்பில் அற்புதம் உணர்த்த - எமதிறைவனாகிய சிவபெருமான் உவமை கூறுதற்கரிய அற்புதத்தை (இத்திருக்காஞ்சியின்கண் யாவர்க்கும்) உணர்த்த, சிப்பிமுத்தம் அங்கு எடுத்து அளித்தலால் - இப்பியிற்றோன்று முத்தங்களை யவ்விடத்து யெடுத்துக்கொடுத்தலால், செப்பு அரும் புகழ் இப்பிதீர்த்தம் என்று- சொல்லுதற்கரிய புகழ்வாய்ந்த இப்பிதீர்த்தமென்று, அப்பெரும் பெயர் அதனுக்கு ஆயது-அந்தப் பெரியபெயர் அத்தீர்த்தத்திற் காகியது. (எ - று.)

இறைவன் எங்குங்காணுதற்கரிய அற்புதவதிசயங்கள் இக்காஞ்சித் திருப்பதியின்கண்ணுள்ளனவென்று உலகினர்க்குணர்த்த இப்பியிற்றோன்று முத்தங்களை யவ்விடத்து எடுத்துக்கொடுத்தலால் இப்பிதீர்த்தமென்னும் பெரும் பெயரதனுக்குண்டாகியதென்றதென்க.

இராதந்திரகற்பத்தில் காஞ்சித்திருப்பதியில் வித்தியாதரனென்னும் வேதியர் ஒருவர் இளம்பருவமும் பேரழகுமுடையவராய் வாழ்ந்திருந்தனர். அவர் வேதமுதலிய கலைகளை முன்னருணர்ந்து, பின்சிவதீக்ஷையையடைந்து சிவாகமநெறியுணர்ந்து, ஷடத்துவாசோதனைசெய்து, சிவசாதனத்தை மேற்கொண்டு, சிவயோகநெறியிற்சிறந்து, சிவயோகியெனப்பெயர் பெற்றிருந்தனர். ஓர்நாள் யோகநிலையிலிருந்து ரேசகபூரககும்பகஞ்செய்து, வான்வழியே அளகாபுரிக்குச்சென்று அங்குள்ள மந்தாகினியையடைந்திருந்துழி அங்குநீராடவந்த இளம்பருவத்து மின்னற்கொடிபோன்ற மாதர்பலரிருத்தலைச்கண்டனர். அவருள் அழகிற்சிறந்த ஓர் மங்கையைக்காமுற்று அம்மங்கை தன்வயமாக குபேரனையருச்சிக்க அக்குபேரன் அவர்முன்தோன்றி நீர் கருதியது யாதென்ன, தன்கருத்தை யவனுக்கு வெளியிட அச்சிவயோகிகருதியவாறே ரோகாவதி யென்னும் மாதை மணஞ்செய்வித்தனன். பின்னர் அச்சிவயோகி அம்மாதோடு காஞ்சிப்பதியிலிப்பிதீர்த்தக் கரையைநண்ணி இல்லறவொழுக்கம் பூண்டிருந்தனன். இச்சிவயோகி தனக்குப் புத்திரப்பேறின்மையைநாடி மாழாந்து கற்புடைமனைவியும் சற்புத்திரனும் சிவபக்தியும் முத்தியும் சிவார்ச்சனையானன்றியமையப்பெருதென்று வேதங்களிற் கூறக்கேட்டிருக்கின்றோமாதலால் புத்திரப்பேற்றை நாடி இனி சிவார்ச்சனைசெய்வதே துணிவென்றெண்ணி அவ்வாறியற்ற ஓர் சற்புத்திரன் பிறந்தான். அப்புத்திரப்பேறடைந்த சிவயோகியினது மனையாட்டியாகிய ரோகாவதி அவரினுஞ்சிறந்த சிவபக்தியை மேற்கொண்டு காலையிலெழுந்து நீராடி சிவசாதனமுடையளாய் ஆயிரம் முத்தங்கொண்ட ஒவ்வோர் முத்தாரத்தை இறைவன் ஆயிரந் திருநாமங்களில் ஒவ்வோர் திருநாமங்களைக்கூறிச்சாத்தும் நியதியைக்கடைப்பிடித்து அர்ச்சித்து வந்தனள். ஓர்நாள் சிவபூஜார்த்தம் முத்தாரமுதலிய சகலதிரவியங்களையும் நியமித்துவைத்து தன்னைவிட்டு நீங்கப்பெறாதிரங்கும் மகவையும் ஆங்கிருத்தித் தான் அகத்தில் வழிபடுவதாகிய அந்தர்யாகமியற்றி யவசமுற்றிருந்தகாலத்து அவளது தவத்திற்சிறந்த புத்திரன் பூஜாத்திரவியங்களிற் சிறந்து விளங்கும் முத்தாரங்க

னிலொன்றை தூபத்திற்கமைந்துள்ள தூபாக்னியிலிட,அம்மாலை கரிந்துபொரிந்தது பின்பு ரோகாவதி அந்தர்யாகத்தை முடித்து புறம்பே சிவபெருமானை அர்ச்சிக்கத்தொடங்குங்கால் அர்ச்சனைக்குரிய முத்தாரமொன்றுகுறைய, இவ்வாரம் குறைதற்குக் காரணம் யாதென்று துணுக்குற்று, நாம் கடைப்பிடித்த நியமம் இன்றொழிந்ததே என்று அம்முத்தாரத்தையாராயுங்கால் அவளது புத்திரன் அம்ம என்று தூபாக்கினியைக் காட்டவும் முத்தாரத்தை யக்கினியிலிட்டது நமது புத்திரந்தானென்றுணர்ந்து இப்புத்திரன் சிவபூஜைக்குரிய திரவியத்தை அக்கினியிலிட்டதால் சிவத்திரவியத்தை யபகரித்ததாலடையும் பாதகத்துக் குரியனாயினன். நாமும் சிவநியமத்தை யிழந்தோரடையும் பாதகத்துக்குரிமையானோம். ஆகையால் அம்மகவையும் வீட்டி நாமும் இறந்து படுவதே தீர்வென்றெண்ணி குழந்தையை தரையில்மோதி வாளால் கழுத்தைச்சேதிக்குங்கால் அம்மையப்ப ராண்டெழுந்தருளி அப்பனாகிய இறைவன் நிற்க நிற்க வென்றருளி அவள் கைப்பற்றியிருந்த வாளை தாம் கைப்பற்றினர். அம்மையாகிய இறைவி அக்குழந்தையை யெடுத்து கண்டத்தினின்றும் பெருகிய உதிரவெள்ளத்தை தமதாடையாற்றுடைத்து இப்படியுஞ் செய்வாருண்டோ வென்றிரங்கி உயிரோடெழச்செய்தனர். பின்னர் இறைவன் ரோகாவதியைநோக்கி அன்புடையாளே! நீ என் மாட்டுவைத்திருக்கும் அன்பினை உலகினரெல்லாமறிந்துய்யுமாறு இயற்றிய திருவிளையாடலிதுவாகும். ஆகலான் உன்புத்திரனும் சிவத் திரவியத்தை யபகரித்த பாதகத்தை யனுபவித்தற்குரியனுமல்லன் நீயும் சிவநியமத்தையிடையே யிழந்தோரடையும் பாதகத்துக்குரியவளுமல்லை என்றருளி நீ யெம்மை முத்தாரத்தாலெம்மையென்றுங்குன்றாவண்ணம் யருச்சனைபுரிய அற்புதமாகிய முத்தங்களை இவ்விப்பிதீர்த்தத்தில் இப்பொழுதே யுண்டாக்கியிருக்கின்றோம். அவைகளால் எம்மையருச்சித்தின்புறுவாய் நீயும் அதனையணிவாய். இஃதன்றி நீயெப்பொருளை விழையினும் அப்பொருளைத் தருகின்றோமென்றின்னருள்புரிய, ரோகாவதி பெருமானே யான்வேண்டுவதொன்றுள என்னால் பூசிக்கப்பட்டுள்ள இவ்விலிங்கத்தின் கண் நீயமர்ந்து தெரிசிக்கப்பெற்றோர்க்கு வேண்டி யாங்கருள்புரிவதும், இத்தீர்த்தத்தின் மூழ்குவோர் எல்லாப்பாதகங்களினின்று நீங்கவும் வேண்டுமென்றனள்; அவ்வாறே ஆகுகவென்று அவ்விலிங்கத்தின்கண் திருவுருக்கரந்தனர். பின்னர் அச்சிவயோகியும் ரோகாவதியும் அச்சிவலிங்க மூர்த்தியை வழிபட்டு இறுதியில் இறைவன்றிருவருளால் யாவரும் அதிசயிக்குமாறு அச்சிவலிங்கப் பெருமானோடு கலந்து கரந்தனர். இவ்வரலாறு இந்நூலின் வடமொழியிற்கண்டது. (உ)

மற்றதன்கரை மச்சலிங்கமொன்
றற்றமில்லரியருச்சித்துள்ளது
துற்றபாதகச்சோமகாசுரன்
கற்குமாமறைகவர்ந்தொளித்தநாள்.

(இ - ள்) அதன்கரை மச்சலிங்கம் ஒன்று சுற்றம் இல் அரி அருச்சித்து உள்ளது - அந்த இப்பிதீர்த்தக்கரையில் மச்சலிங்கமென்றாறு அஞ்சுதலில்லாத திருமால்பூசித்துவழிபட்டது, துற்றபாதகம் சோமகாசுரன் - பாபக்குழிசிலாகிய சோமகாசுரனென்னும் ஓரசுரன், கற்கும் மாமறைகவர்ந்து ஒளித்தநாள் - வேதியர்களால் கற்கப்படும் பெருமையையுடைய வேதங்களைக் களவாற்கவர்ந்து கடலில் ஒளித்தநாளில்.

இப்பிதீர்த்தக்கரையில் மச்சலிங்கமென்று ஓர் சிவலிங்கமொன்றுளது, அது திருமால் மச்சாவதாரங்கொண்டகாலத்தில் பூசிக்கப்பெற்றது. காரணம், சோமகாசுரன் வேதங்களைக் கவர்ந்து கடலில் ஒளித்தநாளில் என்க. (௯)

ஒத்தொழிந்தனவுலகமயாவையும்
நீத்தவேள்வியநிலைமைகுன்றலால்
தீத்தெறுமபசித்தேவர்மாயனைச்
சோத்துநீசரணெனத்துதித்தனர்.

(இ-ள்.) ஒத்து ஒழிந்தன உலகம் யாவையும் நீத்த—வேதங்களில்லாமற்போயின, உயிர்கள் எல்லாவறங்களையுந்துறந்தன, (இவ்விரண்டுமொழியவே) வேள்வியநிலைமை குன்றலால்—யாகமுறைகளும் நிலைபெறாதின (அதனால்) தீத்தெறும பசித்தேவர் மாயனை சோத்து நீசரண் என்னத் துதித்தனர்—தீயுற்பினும் மிடுமாறு உக்ராக்கினிதேவாகளாகிய (அந்தேவர்கள்) திருமாலைச் சோந்து என்றடைந்து நீயே எங்களுக்கு அடைக்கலப பொருளென்று தோத்திரஞ்செயதார்கள் (எ-று.)

வேதம் அசுரன் கைப்பட்டதனால் ஒன்றேயொன்று மாறுபட்டு உலகத்திலே அச்சியோதல் நீங்கி எல்லாவறங்களுங் குறைந்தன. யாகமுறைகளுந் தொன்றின. அதனால் தேவர்களுந் தீயினுங்கொடிய பசிநோயுடையாராய் திருமால்பாற் சென்று நீயேயடைக்கலமென்று துதித்தனர். வேதம்உலகர்க்கோதியொடுதலால்லால் அறநெலொழியவே அந்நூலுட்கூறும்அறங்களும் அவர்களுணர்வதின்றி யொழிந்தனவென்பார் ஒத்தொழிந்தன உலகம்யாவையும்நீத்த எனவும், அங்ஙனமே அவ்வறநூலிட்டும் பொருளுங்குன்றி வேள்விகளியற்றுதலொழிந்தனவென்பார் வேள்வியநிலைமை குன்றலாலெனவும், வேள்விகுன்றவே அவ்வேள்வியால் இன்புறுதலையடையுந் தேவர்களுந் துன்புற்றனரென்பார் தீத்தெறும்பசித்தேவரெனவும், அசுரர்களோமாயையால்வெல்வோன் திருமாலேயாதலால் மாயனைச்சோந்து நீசரணெனத்துதித்தன ரெனவுங் கூறினர். (௪)

சோந்தும் இழிந்தோர் செய்யும அஞ்சலி.

அஞ்சலீரெனவருளியச்சுதன்
நெஞ்சகத்துறநினைவினாடினான்
எஞ்சுறுமறையாவுங்கைக்கொடு
வஞ்சனாழியுண்மறைந்தவண்ணமே.

(இ-ள்.) அச்சுதன் அஞ்சலீர் என்னஅருளி—திருமால்(தன்னைத் துதித்த தேவர்களை நோக்கி) அஞ்சாதீர்களென்று அபயந்தந்து, வஞ்சன் எஞ்சஉறு மறையாவும் கைகொடு ஆழியுள் மறைந்தவண்ணம்—வஞ்சனாகிய அசுரன் சிறிதும் விடாது வேதமுழுதுமாக்கிரமித்துக்கொண்டு கடலிலொளித்த சூழ்ச்சியை, நெஞ்சகத்து உற நினைவின் நாடினான்—தன்னுள்ளத்திற் பொருந்த ஆலோசித்தனன் (எ-று)

திருமால் தன்னைத் துதித்த தேவர்களை யஞ்சலீரென்று அருள்செய்து தமதுள்ளத்தில் வேதத்தைக் கவர்ந்த சோமகாசுரனை வெல்லும் முறையெல்லாம் முற்பட்நாடினானென்க.

பகைவனை வெல்லத்துணிவோனொருவன் தன்பகைவனது காலத்திடம் வலிமை முதலியவைகளை யெல்லாம் வரைபறச் சூழ்ந்தமைதாறுபின அவனை வெற்றியடைதல் அரிதாகலின் வஞ்சனாழியுண்மறைந்த வண்ணம் நெஞ்சகத்துற நினைவினாடினானென்றார். (௫)

பிருகுமாமுனிசபித்தபெற்றியால்
ஒருவருங்கயலுருவுதாங்குபு
மருமலர்ப்பொழிற்காஞ்சிவைப்பிடைப்
பொருவிலிப்பிநீர்ப்புடையினண்ணினன்.

(இ-ள்.) பிருகுமாமுனி சபித்த பெற்றியால்—(முன்னொருகாலத்தில் தன்னைத்) தவத்திற்சிறந்த பிருகுமுனிவர் சபித்திருக்கின்ற சாபத்தினுரிமையால், ஒருவரும் கயல் உருவுதாங்குபு—ஒப்பிகந்த மச்சவடிவங் கொண்டு, மருமலர் பொழில் காஞ்சி வைப்பிடை—நறுமணங்கமழும் மலர்ச்சோலைசூழ்ந்த காஞ்சித்திருப்பதியின்கண், பொருவு இல் இப்பி நீர்ப்புடையில் நண்ணினன்—ஒப்பிகந்த இப்பிதீர்த்தக் கரையில் வந்து சேர்ந்தான் (எ-று)

பிருகுமுனிவர் சபித்தபடியே மச்சவடிவங்கொண்டு காஞ்சித் திருப்பதியிலிப்பி தீர்த்தக்கரையில் வந்து சேர்ந்தனரென்க.

மேலைச்செய்யுளில் நினைவில் நாடினனென்று கூறியதால் பிருகுமுனிவர் தன்னைச் சபித்த பத்துப் பிறப்பினுள் ஓர்பிறப்பு மச்சமாதலால் அப்பிறப்பை இப்பொழுதெடுத்து வேதங்களைக் கவர்ந்து கடலுட்சென்ற சோமகாசுரனை வெல்வோமென்றெண்ணின னென்பார் பிருகுமாமுனி சபித்த பெற்றியால் ஒருவருங்கயலுருவு தாங்குபு என்றார்.

பிருகுமுனிவர் திருமாலைச்சபித்த வரலாற்றை முன்னர் அரிசாபபயந்தீர்த்த படலத்திற்காண்க. (சு)

சலங்கொண்மீனுருத்தன்பெயர்நாட்டியங்
கிலிங்கமன்பினிருத்தியருச்சனை
துலங்கச்செய்தருள்பெற்றுத்தொகுநிதிக்
கலங்கண்மல்குகடலகத்தெய்தினன்.

(இ-ள்.) அங்கு சலம் கொள் மீன் உரு தன்பெயர் நாட்டி இலிங்கம் அன்பின் இருத்தி—அத்தீர்த்தக்கரையில் நீர்வாழ்வனவாகிய மச்சவடிவந்தாங்கித் தன்பெயரே பெயராகவைத்து ஓர்சிவலிங்கப்பெருமானை யன்போடு தாபனஞ்செய்து, அருச்சனை துலங்க செய்து அருள் பெற்று—அருச்சனையை விதிப்படிசெய்து (அப்பெருமானால்)தானெண்ணியவாறே திருவருட்பெற்று, நிதி தொகு கலங்கள் மல்கு கடல் அகத்து எய்தினன்—நல்லநிதிகள் தொக்கிருக்கும் கப்பல்கள் நெருங்கிய கடலினுட்சென்றனன்.

அவ்விப்பிதீர்த்தக்கரையில் மச்சவடிவந்தாங்கித் தன் பெயரால் சிவலிங்கத்தைத் தாபித்தருச்சித்து, திருவருள்பெற்றுக் கடலிற் சென்றன னென்க. (எ)

சோமகன்றனையட்டுச்சுருதிகண்
மாமறைக்குலத்தார்க்குவழங்கினன்
நாமநீர்க்கடனாகணைப்பள்ளிமேல்
தாமரைக்கண்வளருந்தகைமையான்.

(இ-ள்.) நாம நீர் கடல் நாக அணை பள்ளிமேல் தாமரைக்கண் வளரும் தகைமையான்—(கண்டோர்க்கு) அச்சந்தரும் நீரையுடையகடலில் சேஷசயனத்தின்மேல் தாமரைமலர்போன்ற கண்ணுறங்கும் தகுதியையுடையதிருமால், சோமகன்றனை அட்டு—சோமகாசுரனைக்கொன்று, சுருதிகள் மாமறைக்குலத்தார்க்கு வழங்கினன்—(அவ்வசுரனால் கவரப்பட்டிருந்த) வேதங்களை வேதியர்களுக்குத் தந்தனன்.

கடலிற் சேஷசயனத்திற் கண்வளருந்திருமால் கடலிலொளிந்திருந்த சோமகாசுரனைக் கொன்று வேதங்களை வேதியர்களுக்குத் தந்தனனென்க. (அ)

சங்கநேருருப்பஞ்சசனப்பெயர்
வெங்கணானையுமாயிடைவீட்டியே
துங்கவோசைவலம்புரித்தோற்றமாம்
அங்கவன்றனெலும்பையணிந்தனன்.

(இ-ள்.) ஆயிடை சங்க நேர் உரு பஞ்சசனப்பெயர் வெம் கண்ணனையும் வீட்டி—(சோமகாசுரனைக்கொன்ற) அவ்விடத்தில் சங்கினைப் போலும் வடிவினையுடைய பஞ்சசனனென்னும் பெயருடைய கொடுங்கண்ணனாகிய அசுரனையுங்கொன்று, துங்க ஓசை வலம்புரித் தோற்றமாம் அங்கவன்றன் எலும்பை—இனிய ஓசைமிக்க வலம்புரிவடிவமாகிய அவனெலும்பை, அணிந்தனன்—தன் திருக்கரத்திற்றாங்கினன். (எ-று)

சோமகாசுரனைக் கொன்ற அக்கடற்கரையின்கண் சங்கின்வடிவுடையனாகிய பஞ்சசனனென்னும் பெயர்பூண்ட வசுரனைக் கொன்று பின்னர் ஓசைமிக்க வலம்புரிச் சங்கமாகத் தோன்றும் அவன எலும்பை தன் திருக்கரத்திலேற்றனனென்க.

இதனால் திருமால் திருக்கரத்திற்றாங்கியிருக்கும் சங்கம் பாஞ்சசன்னியம் என்னும் பெயர்பெற்றதற்குக் காரணமும் அது அசுரனுடைய வடிவென்றும் அவ்வசுரனைக்கொன்றது சோமகாசுரனுக்குத் தோழனாதலின் என்றும் கொள்ளக்கிடந்தன. சங்கங்களிற்சிறந்தது பாஞ்சசன்னியமாதலால் அதனோசை முப்பது யோசனைதூரம் கேட்கப்படுமென்டார் துங்கவோசை யென்றார். "சோமகனென்னுமசுரன் முன்னஞ்சுருதியனைத்துங் கவர்ந்துகொண்டு, டாமநெடுங்கடல் புக்ககாலைப் பார்ப்பனமாக்கள் வெரீஇயிரப்ப, நாமமழுப்படையெம்பிரான் செய்நல்லருள்பெற்று நறுந்துழாய்ப்பைந், தாமமுகிலொரு மீனமாகித் தாழ்திரைமோதுஞ் சலதிபுக்கான்." "புக்குத்தகுவனுயிர் சவட்டிப் போற்றிடுவேதமனைத்துங்கொண்டு, நெக்குக்கசிவுளத்தார் கரத்தேநீட்டுபு." எனவரும் மாயூரபுராணம் திருமாலவதாரமூர்த்திகள் பூசித்த படலத்திற்காண்க. ஆயிடையென்புழிச் சுட்டு நீண்டது. நாமமேனென்புழி நாமமென்னும் உரிச்சொல் ஈறு திரிந்துநின்றது. (௯)

கச்சிமாநகர்வைப்பிற்கருந்துழாய்
மச்சமர்ச்சித்தமச்சலிங்கத்தினை
நச்சியேத்துநர்தாம்பெறுநன்னலம்
இச்சகத்தெவரிற்றென்றளப்பரே.

(இ-ள்.) கச்சிமாநகர் வைப்பில் கருந்துழாய் மச்சம் அர்ச்சித்த மச்சலிங்கத்தினை—காஞ்சித்திருப்பதியின்கண் கரிய துளபமாலையணிந்த திருமால் மச்சவடிவங்கொண்டு அர்ச்சித்த மச்சலிங்கத்தை, நச்சி ஏத்துநர் தாம் பெறும் நல் நலம்—விரும்பி வழிபடுவோர் பெறும் முத்தியின்பத்தை, இச்சகத்து எவர் இற்று என்று அளப்பர்—இவ்வுலகின்கண் யாவர் இவ்வளவினதென்று அளந்துகூறவல்லவர். (இல்லையென்றபடி).

காஞ்சித்திருப்பதியில் திருமால் மச்சாவதாரங் கொண்டு அர்ச்சித்த சிவலிங்கப்பெருமானை விரும்பி வழிபடுவோரடையும் முத்தியின்பத்தை ஒருவரும் இவ்வளவிற்றென்று கூறாரென்க. (௧௦)

மச்சேசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௯௭௬.

# அபிராமீச்சுரப்படலம்.

காவுசூழக்கஞலிச்சுரும்பினம்
மேவுமச்சலிங்கேசமவிளம்பினும்
வாவிமல்குமதன்வடமேற்றிசைத்
தாவில்சீரபிராமீச்சரஞ்சொல்வாம்.

(இ-ள்.) காவு சூழ கஞலி சுரும்பு இனம் மேவும் மச்சலிங்கேசம் விளம்பினும்—சோலை சுற்றிலும் வண்டினங்கள் பொருந்தி இடைவிடாதொலிக்கும் மச்சலிங்கேசமென்னும் திருப்பதியின் வரலாற்றை யெடுத்துக்கூறினும், வாவி மல்கும் அதன் வடமேல்திசை தாவில்சீர் அபிராமீச்சரம் சொல்வாம்—தடாகங்கள் சூழ்ந்த மச்சேசத்தின் வடமேற்றிசையில் கெடுதலில்லாத சிறப்பினைவாய்ந்த அபிராமீச்சரமென்னுந் திருப்பதியின் வரலாற்றை இனியெடுத்துக் கூறுவாம். (எ-று.)

இதுகாறும் மச்சலிங்கேசத்தின் வரலாற்றை யெடுத்துக்கூறினும். இனியதன்வடமேற்றிசையிலுள்ள அபிராமீச்சரத்தின் வரலாற்றை யெடுத்துக் கூறுவாம் என்க. (க)

மாவலியெனப்பெயர்மரீஇயதானவர்
காவலனுலகெலாங்காத்தளிக்குநாள்
தேவர்கட்கிறையவனரசுதேய்தலின்
யாவதுசெயலெனக்கினியென்றெண்ணுழி.

(இ-ள்) மாவலி என்ன பெயர் மருவிய தானவர் காவலன்—மாவலியென்னும் பெயரையுடைய அசுரவேந்தன், உலகு எல்லாம் காத்து அளிக்கும் நாள்—மூன்றுலோகங்களையும் தன் செங்கோலால பாதுகாத்துவருநாளில், தேவர்கட்கு இறையவன் அரசு தேய்தலின்—தேவர்கள் தலைவனாகிய இந்திரனது ஆணைசெல்லுதலின்றிக் குறைந்துவருதலால, எனக்கு இனி யவது செயல் என்று எண்ணுழி—எனக்கு இனி செய்யத்தகுஞ் செயல் யாது என்று எண்ணுங்காலத்தில் (எ-று.)

மாவலி என்னுமசுரன் எல்லாவுலகங்களையும் காத்தளிக்கும் நாளில் இந்திரனுடைய அரசச்செல்வம் குன்றிவர அதனைநோக்கி எனக்கு இனிச்செய்யத்தகுஞ் செயல் யாதென்று அவசமுற்றெண்ணுங் காலத்தில் என்க.

மாவலிச் சக்கரவர்த்தியினுடைய மூன்று லோகங்களினுஞ் சென்று வருவதென்பார் தானவர் காவலன் உலகெலாங் காத்தளிக்கு மெனவும், அசுரராணை மேலிட்டகாலத்துத் தேவர்கள் வாழ்வு குன்றியதென்பார் தேவர்கட்கிறையவனரசுதேய்தலினெனவுங்கூறினர். (உ)

செந்தளிர்மலரடித்திருவினாயகன்
இந்திரற்கிளையவனென்னக்காசிபன்
மைந்தனாய்க்குறளுருத்தாங்கிமன்னினான்
முந்தையோர்க்கரசியலுதவமுன்னியே.

(இ-ள்.) செந்தளிர் மலரடி திருவின் நாயகன்—செம்மையாகிய தளிர்போன்ற பாதங்களையுடைய இலக்குமி நாயகனாகிய திருமால், இந்திரற்கு இளையவன் என்ன—தேவேந்திரனுக்குஇளையவனென்று யாவருங்கூற, காசிபன் மைந்தனாய் குறள் உருதாங்கி—காசிபமுனிவருடையபுத்திரனாய் வாமனவடிவங்கொண்டு, முந்தையோர்க்கு அரசியல் உதவ முன்னியே மன்னினான்—முற்பட்டவர்களாகிய தேவர்களுக்கு அரசியலைக் கொடுக்க நினைத்து (காஞ்சிப்பதிக்கு) வந்தனன். (எ-று)

திருமால் உபேந்திர னென்றுகூறக் காசிப முனிவருடைய புத்திரராய வாமன வடிவங்கொண்டு இந்திரனுக் கரசியலையளிக்கக் காஞ்சித்திருப்பதிக்கு வந்தனனென்க.

அலங்கொளிக்காஞ்சியினபிராமீச்சர
இலிங்கமங்கியபுளிவழிபட்டேத்தினான்
வலம்பெறச்சில்பகல்வைகிக்கங்கைநீர்
சிலம்புவேணியனருள்செய்யப்போந்தனன்

(இ-ள்.) அலங்கு ஒளி காஞ்சியில் அபிராமீச்சர இலிங்கம் இயல்புளி வழிபட்டு ஏத்தினான—ஒளி விளங்குங் காஞ்சித் திருப்பதியின்கண் எழுந்தருளியிருக்கும் அபிராமீச்சர இலிங்கத்தை ஆகமவிதியாற் பூசித்துத்தோத்திரஞ் செய்து, வலம்பெற அங்கு சில பகல்வைகி (மாவலியை வெல்லும்) வன்மையைப்பெற அத்தளியிற்றானே சிலநாள் தங்கி, கங்கை நீர் சிலம்பு வேணியன் அருள்செய்ய போந்தனன்—கங்கை யொலிக்குஞ் சடைமுடியையுடைய இறைவன் (வேண்டியவாறே) அருள்செய்ய மாவலிபாற் சென்றனன் (எ-று)

அக்காஞ்சித்திருப்பதியில் அபிராமீச்சரமென்னு மிலிங்கத்தை யருச்சித்துத் தான் மாவலியை வெல்லும் வன்மையைப்பெற அங்கு சில நாள்தங்கி அவ்வபிராமீச்சுரரால் அவ்வசுரனை வெல்லும் வன்மையை யருளப்பெற்று மாவலிபாற் சென்றனன் என்க.

எல்லா நகரங்களினும் மேம்பட்டு விளங்கும் நகரம் காஞ்சியென்பார் அலங்கொளிக்காஞ்சி என்றார். (௪)

வெய்யவாளவுணர்கோன்வேள்விச்சாலையில்
எய்திமூவடிநிலமிரந்துவேண்டினான்
கைதவமுணர்ந்தெதிர்தடுத்தகாழ்படு
மையறுவெள்ளியைவிழியைமாற்றினான்.

(இ-ள்.) வெய்யவாள் அவுணர்கோன் வேள்விச்சாலையில் எய்தி—(கயவரைக் கொல்லும்) கொடுமை வாய்ந்த வாளேந்திய மாவலி யியற்றும் யாகசாலையிற் சென்று, மூவடி நிலம் இரந்து வேண்டினான்—(தன்னடியாலளக்கும்) மூன்றடிநிலத்தை யாசித்தனன், கைதவம் உணர்ந்து எதிர் தடுத்த காழ்படும் மையறு வெள்ளியை—திருமால் வஞ்சத்தை யுணர்ந்து மாவலிக்கெதிரே நின்று தடைசெய்த வன்மையிற் சிறந்த குற்றமற்ற சுக்கிரனுடைய, விழியை மாற்றினான்—கண்ணைப் பறித்தனன். (எ-று.)

திருமால் மாவலி யாகசாலையிற் சென்று மூன்றடி நிலம் யாசித்தனன். அவ்வஞ்சத்தையுணர்ந்த சுக்கிரன் மாவலியைத் தடுக்க அத்திருமால் அவனது கண்ணொன்றைப் பறித்தனனென்க.

அசுரகுரு, வாமனனுயவந்தவன் மாவலியை வஞ்சிக்க வந்த திருமாலென்றேயுண ர்ந்தனனென்பார் கைதவமுணர்ந்தெனவும், அத்திருமால்கேட்ட மூவடி உலகங்களோடு மாவலியையும்கொள்ளக் கருதினுனென் றுணர்ந்தனனென்பார் எதிர் தடுத்தெனவும், அசுரர்களுக்குத் தீங்குவருங்கால் அவர்களுக்குக் குருவாயுள்ளான் தடுத்தலறமென்பார் மையுறுவெள்ளியெனவும், அசுரர்களைக்காத்தல் அவன்கடனுதல்போல் சுரர்களைக் காத் தல் திருமால் கடனென்பார் வெள்ளியை விழியை மாற்றினுனெனவுங்கூறினர். வெள் ளியை உருபுமயக்கம். (௫)

தன்னடி மும்மையினளவைசாலிடம்
அந்நிலையவுணர்கோனளிப்பவேன்றனன்
கொன்னுறவளர்ந்தனனண்டகூடமேல்
சென்னிபோயுரிஞுறத்திகழ்ந்துதோன்றினுன்.

(இ-ள்) தன்னடி மும்மையின் அளவை சால் இடம்-தன்னடியாலளக்கும் மூன் றடியளவாகியபெரியஉலகை, அ நிலை அவுணர்கோன் அளிப்ப ஏன்றனன்-அப்பொழுதே தானவர் வேந்தனுகிய மாவலிதத்தஞ் செய்யவேற்று, கொன் உற வளர்ந்து-(யாவரும்) அச்சுற வளர்ந்தோங்கி, சென்னி அண்டகூடமேல் போய் உரிஞுற திகழ்ந்து தோன் றினுன் - சிரம் மேலண்டங்களையெல்லாங் கடந்து உராய்ந்து சென்று (அவ்வண்டமு கட்டில்) விளங்கி யாவருங் காணத்தோன்றினுன். (எ-று.)

திருமால் வேண்டிய மூனறடி நிலத்தை அப்பொழுதே அவுணர்கோன் தத்தஞ் செய்ய அங்கையில் நீரேற்று அண்டகூடத்தின்மேல் தனது சிரம் யாவருங்காண விள ங்கி திருவிக்கிரமனுக நீண்டுவளர்ந்தன னென்க. (௬)

ஈரடிப்படுத்தனனுலகம்யாவுமற்
றோரடிக்கிடம்பெருனுதவினுன்றனை
ஆரிடைப்பாதலச்சிறையிஞக்கினுன்
ஏருடைப்புரந்தரற்கிறைமைநல்கினுன்.

(இ-ள்.) உலகம் யாவும் ஈரடி படுத்தனன் - திரிவிக்கிரம வடிவங்கொண்ட திரு மால் எல்லா வுலகங்களையும் இரண்டடியாக அளந்து, மற்று ஓர் அடிக்கு இடம் பெரு து-மற்றோரடிக்கு வேறிடமில்லாமல், உதவினுன் தனை - தனக்குத் தத்தஞ்செய்த மாவ லியை, ஆரிடை பாதலம் சிறையில் ஆக்கினுன் - கீழுலகமாகிய பாதலத்தில் சிறைப்படு த்தி, ஏர் உடைய புரந்தரர்க்கு இறைமை நல்கினுன் - சிறப்பினை வாய்ந்த தேவேந்திர னுக்கு அரசியலைத் தந்தனன். (எ-று.)

திரிவிக்கிரம வடிவங்கொண்ட திருமால் எல்லா உலகங்களையும் தன்னிரண்டடி யால் அளந்து மற்றோரடிக் கிடமில்லாமல் தத்தஞ்செய்த மாவலிபாற் சென்று மூன்று வதடிக்கு இடமங்கேயென்றுவினவ அவன் தன் முடியைக்காட்ட திருமால் அக்கண மே தன்னடியை அவன்முடியில வைத்துப் பாதலத்தில் சிறைப்படுத்தி அவ்வசுரன்பாற் பட்ட திரிலோகங்களும் இந்திரனுணையின் வழியே செல்ல அவ் விந்திரனுக்கு அரசிய லைத் தந்தனனென்க. (எ)

மறுவறுங்காஞ்சிமாவனைப்பினண்ணுபு
நறுமலர்ச்சடையபிராமநாயகன்

பிறைமுடிக்காட்டுவான்வாமனப்பெயர்
நிறைபுனற்குண்டமொன்றகழ்ந்துநீடியே.

**(இ-ள்.)** மறு அறும் மா காஞ்சி வரைப்பில் நண்ணுபு - குற்றமற்ற பெருமை பொருந்திய காஞ்சித் திருப்பதியில் திருமால் சேர்ந்து, நறுமலர் சடை அபிராம நாயகன் பிறை முடிக்கு ஆட்டுவான் - நல்ல கொன்றை மலர்.மாலையையணிந்த சடைமுடியையுடைய அபிராமீச்சுரரது பிறைதங்கிய திருமுடிக்கு அபிடேகஞ் செய்ய, நிறைபுனல் குண்டம் ஒன்று அகழ்ந்து வாமனப்பெயர் நீடி, நிறைந்த நீர்மயமாகிய தடாகமொன்றையகழ்ந்து வாமனதீர்த்தமென்று பெயர்வைத்து. (எ-று)

திருவிக்கிரம மூர்த்தி இந்திரனுக்கரசியலளித்த பின்னர் காஞ்சித் திருப்பதியில் தான் முன்னர் வழிபட்ட அபிராமீச்சுரரை யபிடேகஞ்செய்யத் தன்பெயரால் வாமனதீர்த்தமென்று ஓர் தடாகத்தைக் கண்டனன் என்க. (அ)

புண்ணியப்பூம்புனலாட்டிப்போர்விடை
அண்ணலைத்தொழுதுலகளந்தபேருரு
கண்ணுதன்மகிழ்வுறக்காட்டிப்பூந்துழாய்ப்
பண்ணவனுயிடைப்பணியின்மேயினன்.

**(இ-ள்.)** புண்ணியம் பூம் புனல் ஆட்டி-புண்ணியத்தைத்தரும் சிறப்பினை வாய்ந்த அந்தீர்த்தத்தினால் இறைவனை யபிடேகஞ்செய்து, போர்விடை அண்ணலை தொழுது - போர்புரியவல்ல விடைமேலழகனை வணங்கி, உலகு அளந்த பேர் உரு கண்ணுதல் மகிழ்வுற காட்டி-தான் திருவிக்கிரம வடிவங்கொண் டுலகங்களையெல்லாம் இரண்டடியாக அளந்த பெரிய வடிவத்தை நெற்றி நாட்டத்தையுடைய இறைவன் மகிழக் காண்பித்து, ஆயிடை பூ துழாய் பண்ணவன் பணியில் மேயினன் - அவ்விடத்தில் துளபமலர் மாலையையணிந்த திருமால் அவ்விறைபணியிற் றலைப்பட்டனன். (எ-று.)

தன்பெயராற்சமைக்கப்பட்ட தீர்த்தத்தால் இறைவனையபிடேகித்து வழிபட்டுத் தான்கொண்ட திரிவிக்கிரம வடிவத்தைக் கண்ணுதல்மகிழக்காட்டி அவ்விறைபணியிற் றலைப்பட்டன னென்க. (கூ)

அபிராமேச்சுரப்படல முற்றிற்று.

ஆம் கஎஎச.

—

# கண்ணீசப்படலம்.

வாமனப்பெயர்மாணிதொழுமபி
ராமநாதவளைப்புவிளம்பினும்
நாமநீர்த்தடங்காஞ்சிநகர்வயின்
ஏமமாண்டகண்ணீசமியம்புவாம்.

**(இ-ள்.)** வாமனப்பெயர் மாணிதொழும் அபிராம நாதவளைப்பு விளம்பினும் - வாமனனெனப் பெயர்பெற்ற பிரமசாரி வணங்கும் அபிராமநாதேசுவரர்வீற்றிருக்குந் திருத்தளியின் வரலாற்றைக் கூறினோம், நாமம் நீர் தடம் காஞ்சி நகர்வயின் - நீர்வளமிக்க

ரிய கா..................., ஏம மாண்ட கண்ணீசம் இயம்புவாம்- காவல்மிக்க கண்ணீசமென்னும் திருப்பதியின் வரலாற்றை யினி யெடுத்துக் கூறுவாம். (எ-று.)

இதுகாறும் வாமனர்பூசித்த அபிராமீச்சுரத்தின்வரலாற்றை யெடுத்துக்கூறினும், இனிக் கண்ணீசமென்னும் திருத்தளியின் வரலாற்றை எடுத்துக் கூறுதுமென்க. (க)

கடலுயிர்த்தகடுவிடந்தாக்கிமுன்
உடலெலாங்கரிவுற்றுவெதும்பலால்
படவராவணைப்பண்ணவன்மாழ்கியவ்
விடமயின்றவிமலனைப்போற்றுவான்.

**(இ-ள்.)** முன் கடல் உயிர்த்த கடுவிடம் தாக்கி உடல் எல்லாம் கரி உற்று வெதும்பலால் - முன்னொருகாலத்தில் பாற்கடலிற்றோன்றிய கொடிய விடச்சுவாலை தாங்குவதனால் சரீரமுற்றும் கருகி வெதும்பிய கொடுமையால் - படம் அரா அணைபண்ணவன் மாழ்கி - படம்வாய்ந்த சர்ப்பசயனத்தையுடையதிருமால் வருந்தமுற்று, அவ் விடம் அயின்ற விமலனை போற்றுவான் - அவ்விடத்தை யுண்டருளிய நீலகண்டமூர்த்தியை வழிபடவெண்ணி. (எ-று.)

முன்னொருகாலத்தில் பாற்கடலில்தோன்றிய விடம் தேவர்களைத்தாக்கிப் பல நிறங்களையுடைய அவர்களுடைய சரீரத்தின் பொலிவுகளைப்போக்கி யாவரும் கருநிறமொன்றினையேபெற்று வருந்த வெதுப்பியதனால் அவ்விடந் தோன்றுதற்குத் தலைவராயிருந்த திருமால் மிகவும்மாழ்கித் தம்முதல்வனாகிய இறைவனைப்போற்ற வெண்ணினனென்க.

தேவர்கள் யாவரும் அசுரர்களால் போர்முகத்தில் இறந்து படாதுவாழக் கருதித் திருமாலிடத்துச் சென்று கூற, அத்திருமால் தேவர்களை நோக்கி அஞ்சலிரென்று அபயந்தந்து தன் பக்கலுள்ள பாற்கடலின்கண் யாவரையுங்கொண்டு சென்று அங்கு அமிழ்தமீந்து வாழ்விக்க எண்ணி அவர்களை வாழ்விக்க வறியாது பாற்கடலில் விடந் தோன்ற அத் தேவரோடு தானும் இறந்து படவந்த மானத்தை மேற்கொண்டு மாழ்கினனாதலால் அமரரெல்லாம் மாழ்கினரென்று பொதுமையிற் கூறாது அவருள் வேறுபட விதந்து படவராவணைப் பண்ணவன் மாழ்கி யென்றார். (உ)

திருமால்முதலிய தேவர்கள் விடத்தால கரியநிறம் பெற்றமையை முன்னர் மணிகண்டேசப் படலத்திற் காண்க.

கச்சியெய்தினன்கண்ணலிங்கத்தினை
நச்சியன்பினிறீஇநயந்தேத்தினன்
பச்சைமென்கொடிப்பாகன்கருணைகூர்ந்
திச்சையாதுவிளம்புதியென்றலும்.

**(இ-ள்.)** கச்சி யெய்தினன்-(இறைவனை யர்ச்சித்து வழிபடவெண்ணிய திருமால்) காஞ்சிப்பதியை யடைந்து, கண்ண லிங்கத்தினை நச்சி - கண்ணலிங்கேசனை விரும்பி, அன்பின் நிறுவி நயந்து ஏத்தினன் - அன்பினால் தாபனஞ்செய்து ஆர்வத்தோடு வழிபட்டனன், பச்சை மென்கொடி பாகன் கருணைகூர்ந்து - (அத்திருமால் வழிபாட்டிற்கிரங்கி) பசிய மெல்லிய கொடிபோன்ற உமாதேவியை வாமபாகத்திலுடைய இறைவன் கருணைமிகுந்து, யாது இச்சை விளம்புதி என்றலும் - உன் வேண்டுகோள் யாது அதனைக்கூறுக வென்றருள் செய்யவும், (எ-று.)

விடந்தோன்ற மயங்கியதிருமால் காஞ்சித்திருப்பதியையடைந்து கண்ணீசப்பெருமானை வழிபட அவ்வழிபாட்டிற்கு உமைபாகன் கருணைகூர்ந்து உன் வேண்டுகோள் யாதென்று கேட்டருளினனென்க. (கூ)

குமுதவாய்ப்பசுங்கோமளைகூறநீ
இமிழ்திரைக்கடல்வெவ்விடமென்பொருட்
டமுதுசெய்தனையங்கதன்முன்னமத்
திமிரநஞ்சஞ்சிறிதெனைத்தாக்கலால்.

(இ-ள்.) குமுதம் வாய் பசு கோமளை கூற - ஆம்பல்மலர்போன்ற திருவாயையும் மிக்க இளமைச் செவ்வியையுமுடைய உமைபாகனே, நீ என் பொருட்டு இமிழ் திரை கடல் வெவ்விடம் அமுது செய்தனை - தேவரீர் அடியேன் பொருட்டு ஒலிக்கும் அலையையுடைய கடலிற் றோன்றிய கொடியவிடத்தைத்திருவமுது செய்தருளினீர், அதன் முன்னம்அங்கு அ திமிரம் நஞ்சம் என்னைச் சிறிது தாக்கலால் - (தேவரீர்) உண்டருளுவதற்குமுன்னர் அக் கடலிற் றோன்றிய அக்கொடிய விடம் அடியேனைச் சிறிதளவு தாக்கியதனால். (எ-று)

உமைபாகனாகிய தேவரீர் அடியேன் பொருட்டு விடபானஞ் செய்வதற்கு முன் அவ்விடத்தின் சுவாலை சிறிது என்னைத் தாக்கியதென்க.

இறைவனே முடிவிலாற்றலுடைய பதியென்பது தோன்ற நீ வெவ்விடம் அமுது செய்தனை யெனவும், திருமால் பசுவர்க்கத்து ளொருவனென்பது தோன்ற என்பொருட்டு அமுது செய்தனை யெனவுங் கூறினார். (சு)

மேனிமுற்றுங்கருகிவெதும்பினேன்
யானினிப்படும்வெப்பிதுவாற்றலேன்
கானிலாயகடுக்கைத்தொடையொடு
தூநிலாப்பிறைசூற்றியமோலியாய்.

(இ-ள்.) மேனி முற்றுங் கருகி வெதும்பினேன்—என் உடல்முழுவதும் கருகி வெதும்பிப்போயினேன், யான் படும் வெப்பு இது—(இறைவனே) யான் துன்பப்படுகின்ற வெப்பமிதுவாகும், (ஆதலால்) கான் நிலாய கடுக்கை தொடை ஒடு—நறுமணங்கமழும் கொன்றைமாலையோடு, தூ நிலா பிறை சூற்றிய மோலியாய்—வெள்ளியகிரணத்தை வீசும் பிறையையணிந்த மகுடத்தை யுடையவனே, இனி ஆற்றலேன்—இனி அவ் வெப்பத்தைத் தாங்கும் வன்மையுடையே னல்லேன். (எ-று.)

விடத்தின் சுவாலை தாக்கியவுடனே மேனிமுற்றுங் கருகி வெதும்பினேன்; இவ்வெப்பமே யானிப்போ தடைந்திருக்கும் வெப்பமாகும். ஆகையால் இறைவனே அவ்வெப்பத்தை இனி ஆற்றகில்லே னென்க.

யா னினிப்படும் வெப்பு இது என்றலால், இவ்வெப்பு என்னுடலைக் கருகச்செய்ததேயல்லாமல் யா னினி யிறக்கமூட்டிய தீயும் இதுவேயாகுமெனப் பொருள்கொள்ளலுமொன்று. கடுக்கைத்தொடை - இறைமைத்தன்மையையும், நிலாப்பிறை அருட்டன்மையையுங் காட்டும் அடையாளங்களாதலால், கடுக்கைத் தொடையொடு தூநிலாப்பிறை சூற்றிய மோலியாய் என்றார். இவ்விரண் டடையாளங்களையும் எடுத்துத் திருமால் எடுத்துக் கூறியது தன்கீழ் வாழுந் தேவர்களுக்குத் தான் தலைவனாதல்போல் தனக்குத் தலைவன் இவனென்பார் கடுக்கைத் தொடையொடு எனவும், திருமால் சங்கரிக்கப்படு

தல் இறைவனுலன்றி ஏனையோராலும் ஏனையவற்றாலும் அன்றென்பார் தாகிலாப்பி றை சுற்றிய மோலியாய் எனவுங் கூறினர். (ரு)

பங்கநீக்கிநலந்தருபான்மையால்
சங்கரன்சிவன்சம்புவுருத்திரப்
புங்கவன்னெனநாமங்கள்பூண்டனை
அங்கணுவடியேனுன்னடைக்கலம்.

(இ-ள்.) பங்கம் நீக்கி நலம் தரும் பான்மையால்—துன்பத்தையொழித்து இன்பத்தைத் தந்தருளுந் தன்மையால், சங்கரன் சம்பு உருத்திரப் புங்கவன் என்ன நாமங்கள் பூண்டனை—சங்கரனெனவும் சிவனெனவும் சம்பு எனவும் உருத்திரனெனவும் திருநாமங்களை வகித்தனை, அங்கணு அடியேன் உன் அடைக்கலம்—(அதனுல்) அருள் செய்யுங் கண்களையுடையவனே அடியேன் உன் அடைக்கலப்பொருளாகும். (எ-று.)

ஆன்மாக்களுக்குண்டாகும் துன்பத்தை யொழித்து இன்பத்தை நீ யருளுதலால் சங்கரன்முதலிய நாமங்களைப் பூண்டனை, ஆதலால் அங்கணனே யானுன் னடைக்கலமென்க.

சங்கரனெனவே இன்பஞ்செய்கின்றவனெனவும், சிவனெனவே வரம்பிலின்பமுடையவனெனவும், சம்பு எனவே இன்பமாக்குவோனெனவும், உருத்திரனெனவே துன்பத்தை யோட்டுவோனெனவுங் கொள்க. ஈண்டுத் திருமால் தானிறந்து படுவதாக விடஞ்சுட்டு வருத்தலால் அத்துன்பத்தை முன்னரொழித்து இன்பஞ்செய்யவேண்டுமென்பார் இன்பஞ்செய்யும் சங்கரநாமத்தையும், அச்சங்கரன் சரணடைந்தோர்க்கருளும் இன்பம் பேரின்பமாதலால் எனக்கின்பஞ்செய்வதேயல்லாமல் என்னைப்போலுந் துன்புறும் ஏனைய தேவர்களுக்கும் இன்பஞ்செய்யவேண்டுமென்பார் - வரம்பி லின்பமுடைய சிவநாமத்தையும், எங்கள் சரீரவெப்பை யொழித்து இன்பஞ்செய்வதே யல்லாமல் யாங்கள் வேண்டிய அமிர்தத்தையும் அருளால் தரவேண்டுமென்பார் இன்பமாக்கும் சம்புநாமத்தையும், யாங்களெல்லாம் அமிர்தபானர்களாய் வாழுங்கால் இடையிடையே அசுரர்களால் வருந் துன்பத்தை யொழித்தருளவேண்டுமென்பார் துன்பத்தை யோட்டும் உருத்திர நாமத்தையும் முறையே கூறினர்.

அங்கணு அடியேன் உன் அடைக்கலமென்றதனுல் யாங்கள் தேவரீரை மதியாதிய ற்றிய இக்குற்றத்தை நாடித்துட்டரைக் காய்ந்தொழிக்கும் நெற்றிநாட்டத்தாலும், சிட்டரைத் தண்டம்புரியும் வலக்கண்ணாலும், எங்களை நோக்காது அன்பர்க்கருளுங் கடைக்கண்ணாகிய இடக்கண்ணுல் நோக்கியருளவேண்டுமென்று குறிப்பாற் கூறியதெனக் கொள்ளலு மொன்று. (சு)

என்றுமாயனிரந்திதுவேண்டலும்
கொன்றைமாலைக்குழகனிரங்கினன்
மன்றலந்துணர்வாசத்துளவினோய்
ஒன்றுகேட்டியுனக்கிதுவேண்டுமேல்.

(இ-ள்.) என்று மாயன் இது இரந்து வேண்டலும்—(அடைக்கலம்) என்று திருமால் இதனை இரக்கத்தோடு வேண்டிக்கொள்ளவும், கொன்றை மாலை குழகன் இரங்கினன்—கொன்றைமாலையையணிந்த பேரழகன் கருணைகூர்ந்து, மன்றல் அம்

துணர் வாசம் துளவினேய்—நறுமணங்கமழும் அழகியகொத்துகளாலமைந்த மாறுது மணம்வீசும் துளபமாலையையுடைய திருமாலே, உனக்கு இது வேண்டுமேல் ஒன்று கேட்டி—உனக்கு இவ் வெப்பம் நீங்கவேண்டுமோனால் (யாம் கூறுவதொன்றை) கேட்கக்கடவை. (எ-று.)

திருமால் சங்கரன்முதலிய திருநாமங்களால் இறைவனைத் தோத்திரஞ்செய்து தனது வேண்டுகோளை யிரந்துகேட்கவும், அவ்விறைவன் அத்திருமாலைநோக்கி உனக்கிவ் வெப்பொழியவேண்டின் யாம் கூறுவதொன்றைக் கேட்கக்கடவாய் என்க.

> என்றும்யாமகிழேகம்பலிங்கமுன்
> சென்றுநம்முடித்திங்கணிலாத்தயல்
> நின்றுகச்சிநிலாத்துண்டமாலென
> ஒன்றுநாமம்பெறுதியென்றும்பர்கோன்.

(இ-ள்.) உம்பர்கோன் யாம் என்றும் மகிழ் ஏகம்ப இலிங்கம் முன் சென்று—தேவர்கள் தலைவனாகிய மகாதேவர் எந்நாளும் யாம் மகிழ்ச்சியோடு வாழும் ஏகம்பமென்னும் இலிங்கமூர்த்தியின் முன்னே போய், நம் முடி திங்கள் நிலாத்து அயல் நின்று—நமது முடியில் விளங்கும் சந்திரனது கிரணம் வீசுமிடத்தருகில், நீ நின்று கச்சி நிலாத் துண்டமால் என்ன ஒன்றும் நாமம் பெறுதி என்று—கச்சி நிலாத்துண்டப்பெருமாள் என்று பொருந்திய நாமத்தைப் பெறக்கடவாயென்று. (எ-று)

இறைவன் திருமாலைநோக்கி நாமெந்நாளும் மகிழ்ந்துவாழும் திருவேகம்பத்தின் முன் நீ சென்று நமது முடியிலுள்ள சந்திரனது கிரணம் வீசுமிடத்தருகில் நின்று கச்சி நிலாத்துண்டப்பெருமாளென்று நாமம் பெறக்கடவா யென்க.

"முன்னம் தூநிலாப்பிறைசுற்றிய மோலியா" யென் றிறைவனைத் துதித்தனராதலால்இறைவனும் அப்பிறையின கிரணத்தினால் அவனதுடல் வெப்பொழிக்கத் திருவுளங்கொண்டருளினனென்பார் நம்முடித் திங்கணிலாத்தயனின்று கச்சி நிலாத்துண்டமாலென வொன்று நாமம் பெறுதி என்றார். (அ)

> நாமவெந்துயர்தீர்திறநல்குபு
> வாமமேகலையோடுமறைந்தனன்
> தூமலர்த்துளவோனுந்தொழுதெழூஉத்
> தீமைதீரத்திருமுன்னர்வைகினான்.

(இ-ள்.) நாம வெம் துயர் தீர் திறம் நல்குபு—(திருமாலுக்கு நாமிறந்துபடுவோமோ) என்னும் அச்சத்தைவிளைவித்த கொடியவெப்பு தீரும்வகையை அருளி, வாமம் மேகலைஒடு மறைந்தனன்—அழகிய மேகலையையணிந்த உமாதேவியாரோடுந் திருவுருக்கரந்தனர், தூ மலர் துளவோனும் தொழுது எழுந்து—புனிதமாகிய துளவமலர்மாலையையுடைய திருமாலும் பணிந்தெழுந்து, தீமை தீர திரு முன்னர் வைகினான்—தமக்குண்டாகியவெப்பின் கொடுமை தீர்ந்தொழிய (இறைவனருளியவாறே) ஏகாம்பரநாதர் சந்நிதியின் முன்னர் நின்றனர். (எ-று.)

திருமாலடைந்த தீயவெப்பொழியுமாறு இறைவ னனுக்கிரகஞ்செய்து உமாதேவியோடுந் திருவுருக்கரந்தனர். திருமாலும் இறைவனருளியவாறே ஏகாம்பரநாதர் சந்நிதியின்முன் நின்றனரென்க. (கூ)

கரியவன்பணிகண்ணலிங்கீசனை
உரியவன்பின்வழிபடுவோருமபர்
மருவிவாழ்குவர்மற்றுங்கவுசிகீச்
சரமொன்றுள்ளதுசங்கரன்றானமே.

(இ-ள்.) கரியவன் பணி கண்ணலிங்கீசனை—(விடவெடபால) கருகிய திருமால் வழிபட்ட கண்ணீசனை, உரிய அன்பின் வழி படுவோர்—அன்புடைமையோடு ஆச்சிப்போர், உம்பர் மருவி வாழ்குவர் - தேவலோகத்தையடைந்து வாழ்வார்கள், மற்றும்சங்கரன் தானம் கவுசிகீச்சரம் ஒன்று உளது—(கணணீசம்) நீங்கலாக இறைவனுக்குத் தானமாயுள்ள கவுசிகீச்சரம் என்னும் தளியொன்றுளது. (எ-று.)

கண்ணன் வழிபட்ட அக்கண்ணீசனை வழிபடுவோர் தேவருலகிற்சென்று வாழ்வார்கள். அத்திருத்தளி நீங்கலாக கவுசிகீச்சர மென்னுந் திருத்தளியொன் றுண்டென்க. (௯௦)

வரையணங்குவடிவிற்கழிந்தகார்
உரிவைகோசத்துதித்தகவுசிகி
இருமையன்பினிருத்தியருச்சனை
புரியும்பொற்பதுமற்றும்புகலுவாம்.

(இ-ள்.) வரை அணங்கு வடிவில் கழிந்த கார் உரிவை கோசத்து உதித்த கவுசிகி—மலையரையன் புத்திரியாகிய இமயவல்லியின் திருவுருவத்தினின்று நீங்கிய கரியசட்டையாகிய கோசத்தினின்றுந் தோன்றிய கவுசிகி என்னும் துர்க்கை, இருமை அன்பின் இருத்தி அருச்சனைபுரியும் பொற்பு—பேரன்பால் தாபித்து அருச்சனைசெய்த திருந்தளியாகும், மற்றும் புகலுவாம்—வேறு சில தளிகளையும் எடுத்துக் கூறுவாம். (எ-று)

மலையரையன் மகளாகிய உமாதேவியின் திருவுருவத்தினின்றும் கழித்த கரிய சட்டையினின்றுந் தோன்றிய கவுசிகி என்னுந் துர்க்கை யருச்சித்த திருத்தளியாகும். மற்றுமுள்ள திருத்தளிகளின் வரலாற்றை யெடுத்துக் கூறுவாமென்க.

கவுசிகலிங்கத்தை யர்ச்சித்த கவுசிகியென்னுந் துர்க்கையின் வரலாற்றைத்தழுவக்குழைந்த படலத்தில் (௪௧௮) பாடலிற் காண்க. (௯௧)

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

உலகாணித்தடமருங்குமாகாளீசமொன்றுளதுமாகாளனெனும்பேரன்பின், விலகாதபாப்பரசுவீடுபேறுவிழைந்தேதென்றிசைக்கயிலைவேணித்திங்கட், கலையானைத்தொழுதுறைநாளாணையாற்றுற்காஞ்சியிற்போந்தவ்விலிங்கநிறுவிப்போற்றி, நிலவீடுதென்கயிலைமீளநண்ணிநீப்பரியபெருவாழ்வுநிலையதன்றே.

(இ-ள்.) உலகாணி தடம் மருங்கு மாகாளீசம் ஒன்று உள்ளது—உலகாணித் தீர்த்தத்தின் பக்கலில் மாகாளீசமென்னும் ஓர் தளியுள்ளது, (அத் தளியில்) மாகாளன் என்னும் பேர் அன்பின் விலகாத பாம்பு அரசு வீடு பேறு விழைந்து—மாகாளனென்

னும் பெயருடைய அன்பினின்றும் நீங்காத சர்ப்பராஜன் முத்தியின்பத்தை விரும்பி, தென் திசை கயிலை வேணி திங்கள் கலையானை தொழுது உறை நாள்—தென்திசையி லுள்ள தக்ஷிணகைலாயமென்னுந் திருக்காளத்தி மலையின்கண் சடையிலணிந்திருக்கும் ஓர் கலையையுடைய சந்திரசேகரனை வணங்கிவரும்நாளில், ஆணையாற்றால் காஞ்சியில் போந்து—அவ்விறைவ னாணைவழியால் காஞ்சிப்பதியை யடைந்து, அ இலிங்கம்நிறுவி போற்றி—அந்த மாகாளீசலிங்கத்தைத் தாபனஞ்செய்தருச்சித்து, மீள நிலம் நீடு தென் கயிலை நண்ணி நீப்பு அரிய பெரு வாழ்வு நிலாயது—மீளவும் நிலவுலகில் மேம்பட்ட தக்ஷிணகயிலாயத்தை யடைந்து என்றும் நீங்குதற்கரிய பெரிய சிவலோகவாழ்வை நிலையாகப்பெற்றது. (எ-று.)

உலகாணித் தீர்த்தக்கரையில் மாகாளீசமென்னுந் திருத்தளியொன்றுளது. அத்த ளியில் மாகாளனென்னும் பாம்பரசு மோட்சத்தை விரும்பி திருக்காளத்தியி லிறை வனை வழிபடும்நாளில் அவ்விறைவ னனுஞையால் காஞ்சியையடைந்து மாகாளீசனைத் தாபித்தருச்சித்து மீளவும் காளத்திக்குச் சென்று நிலையாகிய வீடுபேற்றை யடைந்த

கைலாயத்தில் சிவபெருமான் ஓர்கால் ஆதிசேடன முதலிய சர்ப்பங்களை ஆபரண மாக அணியுமிடத்து அவ்வரவக்கூட்டங்களில காளனென்பவன் காணுதொழிய அவ னெங்குற்றனனென்று திருவுள்ளத்தெண்ண அக்காளன் காமுகனாய் மகளிரோடுகூடி வாழ்தலை யுணர்ந்து அவனைக் கூவி நீ எமக்கு அணிகலனாகும் இன்பத்தை விரும்பாது மகளிரின்பத்தை விரும்பினை யாதலால் நீ மண்ணுலகத்திலூரும் பாம்பாகக் கடவை யென்றருள, அக்காளன், இறைவன் அடிபணிந்து அடியேன் பிழையைப் பொறுத்தரு ளவேண்டுமெனப் பிரார்த்தித்தினன். இறைவன் கருணைகூர்ந்து நீ தக்ஷிண கைலாய த்திலும் காஞ்சியிலும் எம்மை யர்ச்சிக்கும் நலத்தால் இங்கடைவை என்றருளினர். இதனை பின்வருஞ் சீகாளத்தி புராணச்செய்யுளானுணர்க,

"ஆயிரமணிமுடி யனந்தனேமுதன், மாயிரும்பணி பணியாகவைகிடக்
காய்பெருங்காமநோய் கனற்றக்காளனே, ராயணிமகளிர்பா லடைந்துவைகினான்"

"வாளணியாவையும்வனைந்துவள்ளலும், காளனைக்காண்கிலன்கருதும்வேலையி
னீள்பெருங்காமநோய்நெஞ்சிற்கொண்டுபோ, யாளணிமகளிர்பாலடைந்தநன்மையை"

"உயிர்த்தொகையனைத்துமுற்றவொருவனுமுணர்ந்தழைத்துச்
செயிர்த்திலன்காமநோயாற்சிந்தனைகலங்கிச்சென்றாய்
கயப்பெயரடவிமேவிக்காளநீபாம்பாகென்று
பெயர்த்துமாரருளினாலேபிறையணிக்கடவுள்கூறும்."

கண்ணீசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கஎஅ௬.

# குமரகோட்டப் படலம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

*கடப்பரும்பிறவிவேலைசுவற்றுங்கண்ணலிங்கமொடுகவுசிகலிங்க, மடப்பிடிக்கிடமளித்தபிரான்மாகாளலிங்கமெனுமூன்றுமொழிந்தா, மடற்படைச்செறுநர்சேனையனைத்துமழித்துழக்கிநிணமுண்டுதிளைத்துக், குடர்க்கொழூந்தொடைமிலைச்சியசெவ்வேற்குரிசில்வாழ்குமரகோட்டமுரைப்பாம்.*

(இ-ள்.) கடப்பரும் பிறவி வேலை சுவற்றும்—தாண்டுதற்கரிய பிறவிக்கடலைச்சுவறச்செய்யும், கண்ண லிங்கம் ஓடு கவுசிக லிங்கம் மடப்பிடிக்கு இடம் அளித்த பிரான் மாகாள லிங்கம் என்னும் மூன்றும் மொழிந்தாம்—கண்ணலிங் கேசமென்னுந் திருத்தளியோடு கவுசிகலிங்கம் பெண்யானையையொத்த உமாதேவியார்க்கு இடப்பாகம் தந்தருளியஇறைவன் வீற்றிருக்கும் மாகாளலிங்கம் இவ்விரண்டிலிங்கங்களின் திருத்தளிகளும்ஆகிய மூன்றுதளிகளின் வரலாற்றை யெடுத்துக் கூறினும், அடல் படை செருநர் சேனை அனைத்தும் அழித்து உழக்கி நிணம் உண்டு திளைத்து குடர்கொழூந் தொடை மிலைச்சிய செவ்வேல் குரிசில் வாழ்—வலிமைமிக்கதெய்வப் படைகளையுடைய பகைவராகிய சூரபன்மன் முதலியோர் சேனைகளை யெல்லாம் நாசஞ்செய்து கலக்கி அவரது நிணங்களை யுண்டு தேக்கிட்டு கொழுவிய குடர்மாலைகளை மாலைகளாகச்சூடிய செவ்வேலேந்திய முருகக்கடவுள் வாழ்கின்ற,குமரகோட்டம் உரைப்பாம்—குமரகோட்டமென்னுந் திருப்பதியின் வரலாற்றை யெடுத்துக் கூறுவாம். (எ-று.)

கண்ணலிங்கம், கவுசிகலிங்கம், மாகாளலிங்கம் என்னும் மூன்றுலிங்கங்கள்வீற்றிருக்கும் திருப்பதிகளின் வரலாற்றைக் கூறினோம், இனி வேலேந்திய குமாரக்கடவுள் வாழ்கின்ற குமரகோட்டத்தின் வரலாற்றை யெடுத்துக்கூறுவாம் என்க.

வேலாயுதத்தால் வென்ற சேனைகளின் பெருமைதோன்ற அடற்படை செருநர சேனை எனவும், அவ்வேலின் பெருமைதோன்ற அனைத்தும் அழித்து உழக்கி நிணம் உண்டு திளைத்து குடர்கொழூந்தொடை மிலைச்சிவேல் எனவும், அவ்வேல் தன்னாற் கூறுபட்ட சூரபன்மனை நரகத்துட் புகுத்தாது இறைவனடிக்கீழ்ப்படுத்தும் செவ்விய நெறியையுடையது என்பது தோன்ற செவ்வேலெனவும், அச்செந்நெறி யளிப்போன் முருகனென்பதுதோன்ற செவ்வேற்குரிசி லெனவுங் கூறினார். (க)

*தருக்குமிக்குடையதாருகனென்னுந்தானவர்க்கிறையைவெய்யகளத்தின், முருக்கியாருயிர்செகுத்துவிசும்பின்முதல்வனுக்கிறைமைநல்கியபின்னர்ச், செருக்கடந்தவடிவேல்வலனேந்துஞ்செம்மல்வெண்கயிலைமால்வரையெய்தி, மருக்கடுக்கைமுடிவள்ளலையோர்பான்மலைமடந்தையைவணங்கிமகிழ்ந்து.*

(இ-ள்.) தருக்கு மிக்கு உடைய தாருகன் என்னும் தானவர்க்கு இறையை—செருக்கு மிகுதியாகவுடைய தாருகனென்னும் அசுரர்கள் தலைவனை, வெய்ய களத்தில் முருக்கி ஆருயிர் செகுத்து—கொடிய களத்தில் பெருஞ்சினங் கொண்டு உயிரைக் கொன்று, விசும்பின் முதல்வனுக்கு இறைமை நலகிய பின்னர்—விண்ணுலகிறைகுத்

தலைவனாகிய இந்திரனுக்கு அரசுரிமையைத் தந்தபின்பு, செரு கடந்த வடிவேல் வலன் ஏந்தும் செம்மல் வெண் கயிலை மால்வரை யெய்தி—அசுரரது போரை வென்ற வடித்தவேலை வலப்பக்கத்திலேந்தும் முருகக்கடவுள் வெள்ளியங்கிரியை யடைந்து, மரு கடுக்கை முடி வள்ளலை ஓர் பால் மலை மடந்தையை வணங்கி மகிழ்ந்து—நறுமணங்கமழும் கொன்றைமாலைசூடிய சடாமுடியையுடைய இறைவனாகிய அப்பனையும் அவ்விறைவ னிடப்பா லமர்ந்தருளும் அம்மையையும் பணிந்து மகிழ்வடைந்து (எ-று

முருகக்கடவுள் செருக்கிற் சிறந்த தாருகாசுரனைக் கொன்று இந்திரனுக் கரசுரிமையைத்தந்து போரை நீருக்கி வடிவேலையேந்தி கைலையங்கிரியிற்சென்று அம்மையப்பரை வணங்கி மகிழ்வடைந்தென்க.

அலகிலண்டமுமளித்துவளர்க்குமம்மையப்பர்தமடித்தலமேறி
நிலவரும்புகனிவாயெழில்காட்டிநெடிதுபோதுவிளையாடியடுக்கற்
குலமடப்பிடிகலன்பலபூட்டிவிடுப்பமீண்டுகொடிநீள்கடைவாயில்
வலமிகுத்தகயமாமுகனுவிமாட்டுமுன்னிளவல்வைகுழியுற்றான்.

(இ-ள்.) அலகில் அண்டமும் அளித்து வளர்க்கும் அம்மை அப்பர்தம் மடித்தலத்து ஏறி—எண்ணிறந்த அண்டங்களையும் ஈன்று வளர்க்கும் தாய் தந்தையரது மடித்தலத்தின்மேலேறி, நிலவு அரும்பு கனிவாய் எழில் காட்டி—தண்ணிய கிரணத்தைக் காட்டும் திருவாக்கினழகை மிகுதியாகக் காண்பித்து, நெடிது போது விளையாடி—நெடும்பொழுது (இனிய இன்பம்பயக்கும் அரிய) திருவிளையாடலைச்செய்து, அடுக்கல் குலமடப்பிடி பல கலன் பூட்டி விடுப்ப—பின்னர் மலையரையன் புத்திரியாகிய அம்மையார் பல ஆபரணங்களையணிந்து மடித்தலத்தினின்றுங் கீழேவிட, மீண்டு—அங்குநின்றும் வெளியேவந்து, நீள் கடைவாயில் வலம் மிகுத்த கயமாமுகன் ஆவிமாட்டு முன் இளவல் வை குழி உற்றான்—நீண்ட கொடிகட்டிய முதல்வாயிலின்கண் வன்மையிற்சிறந்த கயமுகாசுரனைக் கொன்றருளிய (தமக்கு) முற்றோன்றிய மூத்தபிள்ளையார் வீற்றிருக்கும் ஆலயத்தையடைந்து. (எ-று.)

முன்னர் அம்மையப்பரை வணங்கி மகிழ்ந்த இளையபிள்ளையார் அவரதுமடித்தலத்திலேறி புன்னகையரும்பி வாயினழகைக் காட்ட - அவ்வழகுக்குப் பரிசாக அம்மையார் ஆபரணங்களைப் பூட்டிவிடுப்பக் கடைவாயிலுள்ள மூத்தபிள்ளையார் வைகும் கோயிலைச் சேர்ந்தென்க.

எந்நாளும் அம்மையப்பர் மடித்தலத்தில் வீற்றிருந்துஅவ்விருவரது திருமேனி முற்றுமலர்போற் பொருந்தி பொலிவொடு விளங்கி மெத்தென விருந்த்திருவடி, சூரபன்மனோடு போர்புரியுங்கால் இந்திரனும் போரொழிந்த பின்னர் சூரபன்மனும் மயூரமாக வர அவற்றின்மேலேறி மெல்லிய சிறடி கன்றியதால் அக்கன்றுதலொழிந்து இன்புறுமாறெண்ணிஏறினரென்பார் அம்மையப்பர்தம்மடித்தலத்தேறி யெனவும், இந்திரன்மேலேறி அவ்விந்திரனுக்குத்தான் சூரபன்மனோடு போர்புரியும் போர்த்திறத்தைக்காட்டி அவனை மகிழ்வித்ததுபோலும் சூரபன்மன் மேலேறி அவன்வேண்டியவாறே திருவடியைக்காட்டி அவனை மகிழ்வித்ததுபோலும் அம்மையப்பர் மடித்தலத்தேறி அவர்வேண்டிய மழலைச்சொல்லைக் குழறிக்கூறி திருவாக்கினழகைக்காட்டி மகிழ்வித்தன ரென்பார் நிலவரும்பு கனிவா யெழில்காட்டி யெனவும், அம்மையப்ப ராணைமேற்கொண்டு கைலையைவிட்டது ஆதியாகமீட்டு மவ்வம்மையப்பர்பா லடைந்தது இறுதியாகக்கூறக்

காலம் நீட்டித்ததென்பார் நெடிதுபோது விளையாடி யெனவும், சூரபன்மன் மகிழ்ந்து தன்னை ஊர்தியும் துவசமுமாகத் தந்ததுபோலும் இந்திரன் மகிழ்ந்துதன்மகளைத் தந்ததுபோலும் அம்மையார் மகிழ்ந்து உயிர்களுக்கருள்செய்யும் அருட்குணங்களையெல்லாம் அணியாகப் பூட்டினனென்பார் அடுக்கற்குலமடப்பிடி கலன்பலபூட்டி யெனவும் அசுரர்களை நிக்கிரகஞ்செய்ததுபோலும் இனி யன்பர்களுக் கனுக்கிரகஞ்செய்ய முன்னர் விநாயகரை முன்னிட்டன ரென்பார் முன்னிளவல்வை குழியுற்று னெனவுங் கூறினர்.

**ஊங்குவன் மடிமிசைக்கொடுபல்கா லுச்சிமோந்துகவுண்முத்தமுமுண்டு, வீங்குமன்பொடுதழீஇக்களிகூர்ந்துவிடையளிப்பமுகமாறுடையெங்கோன், யாங்கும்வைகுகணநாதரிடந்தோறெய்தியாடலுறுவானதுகாலை, ஆங்கணான்முகனும்பர்குழாத்தோடம்மையப்பனை வணங்கவணைந்தான்.**

(இ-ள்) ஊங்குவன் மடி மிசை கொண்டு—மூத்தபிள்ளையார் (தம்மைநோக்கி ஆவலோடுவந்த) தம்பியை மடித்தலத்தின் மேல்வைத்துக்கொண்டு, பல் கால் உச்சி மோந்து—பலமுறையும் உச்சியை மோந்து, கவுள்முத்தமும் உண்டு—கபோலத்தை முத்தமிட்டு இன்பநுகர்ந்து, வீங்கும் அன்பொடும் தழுவி களிகூர்ந்து—அடங்கப்பெறாத அன்புடனே தழுவி மிக்க களிப் படைந்து, விடைஅளிப்ப—விடைகொடுக்க, முகம் ஆறுடைய எங்கோன்-(விநாயகக்கடவுள் பால்விடைபெற்ற) ஆறுமுகங்களையுடைய எம்பெருமான், யாங்கும்வைகும் கணநாசரிடந்தோறும் எய்தி ஆடலுறுவன் அதுகாலை-எவ்விடத்தும் வசிக்கும் ஒவ்வோர்கணநாத ரிடத்திலுஞ்சென்று திருவிளையாடல் செய்யுங்காலத்தில், ஆங்கண் நான்முகவன் உம்பர் குழாத்தோடு அம்மையப்பரை வணங்க அணைந்தான்—அவ்வமையத்தில பிரமன் தேவகணங்களோடும் இறைவனையும் இறைவியையும் பணியவந்தனன். (எ று.)

விநாயகக்கடவுள் தம்மை நோக்கிவந்த முருகக் கடவுளை மடியினமேலேற்றிக்கொண்டு பலமுறை யுச்சிமோந்து முத்தமிட்டு அன்பொடு தழுவி மகிழ்ந்து விடைதர, அறுமுகக்கடவுள் விடைபெற்று கணநாதர்களிருககு மிடங்கள்தோறுஞ் சென்று திருவிளையாடல் புரியுங்காலத்து அம்மையப்பரைப் பணியுமாறு பிரமன் கைலைக்குவந்தனனென்க.

விநாயகக்கடவுளும் முருகக்கடவுளும் பிரணவமும் பிரணவார்த்தமுமாதலால் சொல்லும் பொருளும்போல வேறுபடாது கலந்திருந்தனரென்பார் அன்பொடு தழீஇக் களிகூர்ந்து எனவும், சூரசங்காரணிமித்தம் சென்று இளையபிள்ளையாரது திருவிளையாடலை யெணணி யெண்ணிக் காணப்பெறாது கவலைகூர்ந்திருந்த சிவகணங்களது கவலைதீர அங்கங்குஞ் சென்று பல அற்புதத்திருவிளையாடல்களைப் புரிந்தனரென்பார் யாங்கும் வைகும் கணநாதரிடந்தோறெய்தியாட லுறுவானெனவுங் கூறினர்.

**அங்கணின்றுவிளையாட்டயர்செவ்வேலண்ணலைச்சிறிதுநோக்கலனணணி, மங்கைபாகனைவணங்கிவழுத்திவாழ்வுபெற்றுவிடைகொண்டுதணுது, பொங்குசீருலகமெய்தியமீண்டான்மீளுமப்பொழுதுமாவயினுடுங், துங்கவேலிறையைநோக்கலனெகதோகைமஞ்ஞையுடையானதுகண்டான்.**

(இ-ள்.) அங்கண் நின்று விளையாட்டு அயர் செவ்வேல் அண்ணலை—சிவகணநாதர்களிடங்கள்தோறுநின்று விளையாடலைச் செய்கின்ற முருகக்கடவுளை, சிறிதும் நோக்கலன் நண்ணி—ஒருசற்றும்பாராதவனாகி உள்ளே சென்றடைந்து, மங்கைபாகனை வணங்கி வழுத்தி வாழ்வுபெற்று விடைகொண்டு—உமாதேவியை இடப்பாகத்திலுடைய இறைவனைப் பணிந்து துதித்து (தனக்குரிய சிருட்டித்தொழில்) தானியற்றும் வாழ்வைப்பெற்றுக்கொண்டு விடைபெற்று, தனதுபொங்கு சீர் உலகம் எய்தியமீண்டான்—தனது மிக்கவொளியினையுடைய சத்தியலோகத்தையடையத் திரும்பினன், மீளும் அப்பொழுது—விடைபெற்றுத்திரும்பு மக்காலத்தில், ஆவயின் ஆடும்துங்கவேல் இறையை நோக்கலன் ஏக—அக்கோபுரவாயலிலாடல்புரியும் புனிதமாகிய வேலேந்திய அறுமுகக் கடவுளைப் பாராதவனாகிச்செல்ல, அது தோகைமஞ்ஞையுடையான் கண்டான்—(தன்னைப் பாராதேகும்) அதனை மயிலூர்தியையுடைய முருகக்கடவுள் கண்டனர். (எ-று.)

கைலாயவாயலின்கண் சிவகணத்தலைவரோடு விளையாடல் புரியும் முருகக்கடவுள், முன்னர் பிரமன் அம்மையப்பரை வணங்கச்சென்ற காலத்துத் தம்மை வணங்கிச்செல்லாமையையும், பின்னர் இறைவனைவணங்கித் தந்தொழில் கிடைக்கப்பெற்று தனது உலகடைய மீளுங்காலத்துத் தான்பெற்றவாழ்வை விண்ணப்பஞ்செய்யாது செல்கின்றமையையும் கண்டனரென்க. (இ)

செழுமலர்க்கமலம்வைகியசெம்மலிகழ்ந்துசெல்லுமறிவின்மைகுறித்து
விழிசெவந்துகுறுமூரலரும்பிவருகவீண்டெனவிளித்தலுமன்னோன்
கழிசெருக்கினன்வணங்கியடங்கிக்கைகள்கூப்பிநணுகிப்புடையுற்றான் [ம்.
கொழிமறைப்பனுவலான்முகநோக்கிக்குன்றெறிந்தசுடர்வேலிறைவிள்ளு

(இ-ள்.) செழுமலர்க் கமலம்வைகிய செம்மல் இகழ்ந்து செல்லும் அறிவின்மை குறித்து—வளமிக்க செந்தாமரை மலரில்வசிக்கும் பிரமன் அவமதித்துச்செல்லு மறியாமையை முருகக்கடவுள்நாடி, விழி சிவந்து குறுமூரல் அரும்பி ஈண்டுவருக என்ன விளித்தலும்—கோபித்துப் புன்னகையரும்பி அப்பிரமனை யிங்கு வரக்கடவாயென்றழைக்கவும், கழி செருக்கினன் அன்னோன்—மிக்க செருக்கினனாகிய அப்பிரமன், வணங்கி அடங்கி கைகள்கூப்பி நணுகி புடையுற்றான் - (அழைத்த அக்கணமே தண்டாகாரமாக வணங்கி சரீரமொடுங்கி கரங்களை யஞ்சலியாகக்குவித்து சமீபமாக வந்து ஓர் புறமாக நின்றனன், கொழி மறைப்பனுவலான் முகநோக்கி குன்று எறிந்த சுடர்வேல் இறைவிள்ளும் - உண்மைப்பொருளெல்லாம் மிக்குவிளங்கும் வேதநூலுணர்ந்த பிரமனது முகத்தைப்பார்த்துக் கிரௌஞ்சகிரியைத் துகள்படுத்திய வொளிவீசும் வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள் கூறும். (எ-று.)

பிரமன் தம்மையிகழ்ந்து சென்ற அறியாமையை நோக்கிக் கண்செவந்து புன்னகையரும்பி யீண்டுவருவாயென்றழைக்க, அப்பிரமன் செருக்கடங்கிக் கைகூப்பி ஓர் புறமாய் நின்றனன், அவனது முகத்தைப்பார்த்து முருகக்கடவுள் கூறும் என்க.

பிரமனது மலதிமிரத்தை நோக்கின னென்பார் அறிவின்மை குறித்தெனவும், அவ்வாணவத்தை யொழிக்கத் தண்டஞ் செய்யக் கருதினனென்பார் - விழிசெவந்து குறுமூரலரும்பி எனவும், முடிவிலாற்றலுடையா னிவனென்ப துணர்ந்தானென்பார் வருகவென விளித்தலும் கழி செருக்கினன் வணங்கி யடங்கி கைகள்கூப்பினனென வுங் கூறினர்.

கண்செவத்தல் என காரணத்தைக் காரியமாக வுபசரித்தார்.

**யாவனீயுறைவதெவ்விடமன்னும்யாதுசெய்தொழிலுமெக்கலைவல்லாய்**
**நீவிளம்புகெனயான்பிரமன்சீர்நிறையருட்கருணை நுந்தையெனக்கன்**
**றோவறுங்கலைகண்முற்றும்விளங்கவோதுவித்துலகநன்குபடைப்பான்**
**ஏவவைகுறுவல்சத்தியலோகததென்றுபன்முறைவணங்கியுரைத்து.**

(இ-ள்.) நீ யாவன் எவ்விடம் உறைவது மன்னும் செய்தொழிலும் யாது எக்கலை வல்லாய் நீ விளம்புக எனை—உன் பெயரென்ன நீ எங்குள்ளாய் நீ நிலையாகச் செய்கின்ற தொழிலும்யாது எந்நூலுணர்ந்திருக்கின்றனை இவற்றை நீகூறுவாயென்று வினவ, யான் பிரமன்—யான் பிரமனென்னும் பெயருடையேன், எனக்கு அன்று சீர் நிறை அருட்கருணை நுந்தை—எனக்கு அந்நாளில் பெருமை நிறைந்த மிக்க கருணையை யுடைய உமது தந்தை, ஓவரும் கலைகள் முற்றும் விளங்க ஓதுவித்து—எந்நாளுமழி யாத வேதங்கள் முற்றும் நாறுதும்படி விளங்கச் சொல்வித்து, உலகம் நன்குபடைப் பான் ஏவ—உலகத்தை நன்றாகச் சிருட்டிக்கும்படி என்னையனுப்ப, சத்தியலோகத்து வைகுறுவல் - சத்தியலோகத்தி லிருக்கின்றேன், என்று பன்முறை வணங்கி உரை த்து - என்று பலமுறை வணங்கிக் கூறி. (எ-று.)

உன் பெயரென்ன, நீ இருக்குமிடம் யாது, நீ செய்யுந் தொழில்யாது, நீ எக்கலை படித்தாய் என்று முருகக்க -வுள் வினவ, அதற் கப்பிரமன் அடியேன் பெயர் பிரமன், இருப்பது சத்தியலோகம், செய்தொழில் உலகைப்படைத்தல், படித்தது வேதம், ஓதுவித்தவர் உம துதந்தை என்றுவிடைகூறுங் காலத்துப்பலமுறையும் வணங்கிக் கூறி னனென்க.

சூரபன் மனாதியரால் பேரும் ஊருஞ் செயலும் கல்வியறிவும் இவ்வண்ண மென் று தோன்றாது ஒளித்திருந்த கள்வர்களில் ஒருவனாயிருந்த இவன் தம்மாலுய்யப் பெற்று வெளிவந்த கருணையை மறந்து செருக்குற்றன னாகலின் அச்செருக் கொழிக்க நீ முன் னைய பிரமனல்லவோ புதிதாய் வந்த பிரமனோ நீ செருக்குற்றது யாங்ஙனமென் றுணர்த்த யாவனீ யுறைவ தெவ்விட மன்னும் யாது செய்தொழிலு மெக்கலை வல் லாய் நீ விளம்புக எனவும், இறைவன் வினாவிய வினாக்குறிப்பை யுணராது தனது வர லாற்றைக் கூறிய அறிவிலி என்றுணர்த்த யான் பிரமன் நுந்தை யெனக்கன் றோவறுங் கலைக ளோதுவித்து உலகு நன்குபடைப்பான் ஏவவைகுறுவல் சத்தியலோகத் தென் றுரைத்து எனவுங் கூறினர்.

அல்லதூஉம் இறைவன் தன் மாட்டுக்கருணை யுடையா னென்பது தோன்ற சீர் நிறையருட்கருணை நுந்தை யெனவும், அவ்விறைவனால் படைக்கப்பட்டவர்களில் யான் மிக்க உரிமை யுடையே னென்பது தோன்ற எனக்கன்று ஓவறுங் கலைகண் முற்றும் விளங்க வோதுவித்து எனவும், சிருட்டிதிதிசங்காரம் என்னு முத்தொழிலில் முதற்றொழிலில் வல்லவன் தானென்பதுதோன்ற உலகுநன்குபடைப்பானேவ எனவும், உள்ளவற்றை யுள்ளவாறே யெடுத்துக் கூறும் உண்மை யுடையே னென்பது தோன்ற சத்தியலோகத்து வைகுறுவல் எனவும், உண்மையி லொழுகும் என்பால் தேவரீர் விழிசெவந்த ு சிவகு.ாரராகிய உமக்கு அழகன்றென்பதுதோன்ற பன்முறை வணங்கி யெனவும் கூறினனெனக் கொள்ளலு மொன்று.

பன்முறை வணங்கியுரைத்தானென்பது - முருகக்கடவுள் யாவனீ என்றது முத லாக வினாவிய வினாக்களுக்கு யான் பிரமனென்பது முதலாகக் கூறத்தொடங்கிய

விடைகளொவ்வொன்றுக்கும், ஏகாங்க திரியாங்க பஞ்சாங்க அஷ்டாங்க முறையாகப் பணிந்து கூறினனென்க. (௭)

**இமவரைத்தலைவியோடுபிரானையேத்தவேண்டியிவணெய்தினனன்னோர்**
**தமதுகட்கருணைபெற்றனன்மீண்டேன்றாழ்விலாதுசெய்தவத்திறனாலுன்**
**கமலநோக்கருளுமின்றுகிடைத்தேன்காதலுனடியேனினியென்னூர்க்**
**கமலநாயகசெலகின்றனனென்றானறுமுகக்கடவுளன்னதுகேளா.**

(இ-ள்.) இமவரை தலைவியோடு பிரானை ஏத்தவேண்டி இவண் எய்தினன் - மலையரையன் மகளாகிய உமாதேவியாரோடு இறைவனை வணங்கவிரும்பி இக்கயிலைக்கு வந்தேன், அன்னோர் தமது கண் கருணை பெற்றனன் மீண்டேன் - (யானெண்ணியபடியே) அவ்விருவருடைய கிருபாநோக்கத்தைப்பெற்றுத் திரும்பினேன், தாழ்விலாது செய் தவத்திறனால் உன்கமலநோக்கு அருளும் இன்று கிடைத்தேன் - நடுவே நீங்காது செய்ததவத்தின் வன்மையால் உம்முடைய தாமரைமலர்போன்ற திருநோக்கத்தின் பொலிவையும் இன்று கிடைக்கப்பெற்றேன், காதல் உன் அடியேன் - (ஆகையால்) யான் உம்மிடத்தில் அன்புள்ள அடியேனாகும், அமல நாயக இனி என் ஊர்க்கு செல்கின்றனன் என்றான் - நின்மலசொரூபியாகிய இறைவனே இனி அடியேன் சத்தியலோகத்துக்குப்போகின்றேனென்று கூறினான், அன்னது அறுமுகக்கடவுள் கேளா-அதை சண்முகக்கடவுள் கேட்டு. (எ-று.)

உமாதேவியோடு இறைவனை வணங்க இவ்விடத்திற்குவந்தேன், அம்மையப்பர் திருவருளும்பெற்றேன், என்னூருக்குச்செல்ல விடையும்பெற்றுத் திரும்பினேன். விடாது செய்ததவத்தினால் உமது திருநோக்கத்தையும் பெற்றேன், ஆகையால் நின்மலசொரூபியாகிய உம்மிடத்தில் அன்புள்ள அடியனுமாயினேன் இனி என்னுடைய ஊர்க்குச்செல்கின்றேன் என்று கூறினான். அவன் கூறியவார்த்தைகளை அறுமுகக்கடவுள் கேட்டு என்க.

இப்பொழுது யான் வந்தது அம்மையப்பரிருவரையுமே தெரிசிக்கவந்தேனென்பது தோன்ற இமவரைத் தலைவியோடு பிரானை யேத்தவேண்டி யிவணெய்தினன் எனவும், அங்ஙனந் திருவருள்பெற்றுத் திருமபுமடியேனைக் கணங்களோடு திருவிளையாடல்புரியும் இச்சமயத்தும் என்மேற் கருணைகூர்ந்து அருளோக்கம்பாலித்து வாவென்றழைத்தது யான் விடாதுசெய்த தவமேயென்றுணர்ந்தேனென்பது தோன்ற தாழ்விலாதுசெய் தவத்திறனாலுன் கமலநோக்கருளு மின்றுகிடைத்தேன் எனவும், உன்னை நினைக்கும் மெய்யடியாரை வாவென்றழைப்பதுபோல் என்னையும் வாவென்றழைத்தனால் இனி என்னை வேறாக எண்ணாது அடியானென்றே எண்ணவேண்டுமென்பது தோன்றக் காதலுன்னடியேன் எனவும், இவ்வாறு கருணை சுரக்கும் இனியமொழிகளைக் கூறக்கூறக் கருணைபிறவாது அறுமுகக்கடவுளுக்குச் சினமே மீதூர்ந்து வருங்குறிப்பைத் திருமுகத்திற் கண்டனனாகலான் இக்கோபக்கனலுக்கு நாம் எதிர்நின்றோம் நாம் செல்வதே நலமென்றெண்ணினனென்பது தோன்ற என்னூர்க் கமலநாயக செல்கின்றனன் எனவுங் கூறினார். (அ)

**நன்றுசொற்றனையுணர்ச்சியின்மிக்காய்ஞாலமுற்றுதவுநான்முகனீகேரல்**
**குன்றவில்லியருளாற்கலையெல்லாங்கோதறத்தெளிதலுற்றனையன்றே**

யொன்றுமக்கலைகண்முன்னுறவென்னேயோதுமக்கரமதன்பொருள்யா
வின்றெனக்கிதுவிளம்புதியென்முனேடவிழ்க்குமலராளியிறைஞ்சி. [தோ

(இ-ள்.) உணர்ச்சியில் மிக்காய் - அறிவிற் சிறந்தவனே, நன்று சொற்றனை - நன்றாகச்சொன்னாய், ஞாலம் முற்றும் உதவும் நான்முகன் நீகொல் - எல்லாவுலகங்களையும் சிருட்டிக்கும் பிரமன் நீதானா, குன்றவில்லி அருளால் கலை எல்லாம் கோது அற தெளிதலுற்றனை அன்றே - பொன்மலையை வில்லாகவுடைய இறைவனருளினால் எல்லாக்கலைகளையும் ஐயந்திரிவறத் தெளிந்தனையல்லவா, தூன்றும் அக்கலைகள்முன்னுற ஓதும் அக்கரம் என் அதன்பொருள் யாது எனக்கு இது இன்று விளம்புதி என்றான் (உனது நாவில்) தங்கிய வேதங்கள் முன்னே எடுத்துக்கூறும் எழுத்தேது அவ்வெழுத்தின்பொருளேது எனக்கு இப்பொழுதே சொல்லக்கடவாய் (என்றுகூற), ஏடு அவிழ்க்கும் மலராளி இறைஞ்சி - இதழ்விரிந்த கமலாசனத்தில் வாழும் பிரமன் வணங்கி (எ-று.)

உலகங்களைப்படைக்கும் பிரமன் நீதானோ, நீ இறைவன்பால் வேதங்களெல்லாங் கசடறத்தெளிந்தனையல்லவா, வேதங்கூறுங்கால் முன்னே சொல்லப்பட்ட வெழுத்தேது அதன்பொருளென்ன இப்பொழுதே சொல் என்னவும் பிரமன் வணங்கினனென்க.

மேலைச்செய்யுளில் தவத்தால் உன்னருள் பெற்றேன், உன்னடியனுமானேனென்ற சொற்கள் மிக்க அன்புடைமை காட்டின, அவ்வன்புடைய அச்சொல்லுக்கு இனியும்மைவிட்டு நீங்கேனென்று கூறுவனாயின் அவ்வன்புடைமை யுண்மையாகும். அங்ஙனங்கூறாது யான் செல்கின்றனன் என்றதனால் அவனெண்ணம் அன்பின்மையைக் காட்டியது. ஆகலான் உன்னுரையும் உன்னெண்ணமும் நன்றாயிருந்தன வல்லவென்பார் உணர்ச்சியின்மிக்காய் நன்றுசொற்றனை எனவும், முன்கூறியசொல், நடைபெறப் பின்கூறும் சொல்லைச்சொல்லவறியாத நீதானா ஆன்மவர்க்கங்கள்நன்னடைபெறச் சிருட்டிக்கும் அறிவுடையவனென்பார் ஞாலமுற்றுதவு நான்முகனீகொலெனவும், இவ்வளவு சிற்றறிவினனாகிய உன்னிடத்துப் பேரறிவாளனாகிய இறைவன்கூறிய வேதவுண்மை அமையப்பெறுதல் அரிதென்பார் கோதறத்தெளிதலுற்றனை யன்றே எனவும், நீ வேதவுண்மையை யுணர்ந்தவேதாவல்லன் என்பது யாவருமெளிதிலுணரச் சிலவினாக்களை வினவுகின்றேனென்பார் முன்னேயோதுமக்கரத்தின் பொருள் யாதெனவும், நீ இனி என்னூர்க்குச் செல்கின்றேனென்று விரைந்து கேட்டனையாதலால் யானும் அதிக விரைவில் உன்னைச் சிறைக்கண் செல்லவிடும்படி எண்ணியிருக்கின்றேனென்பார் இன்றெனக்கிது விளம்புதி எனவுங்கூறினர். (௬)

நன்று சொற்றனை என்பது நன்றாகச் சொல்லவில்லையெனப் பொருள்படசிற்றல் ஒருவகைக் குறிப்பு

ஐயநுந்தையருளின்றியெமக்கோரறிவுமுள்ளதுகொலாதியிலோது [லே
மெய்யெழுத்தையறிகின்றிலனங்கண்விளங்குமப்பொருளுமியானறிகில்
னுய்யுமாகருணைவைத்தெனையாளென்றுரைத்திரந்துகடிதேகமுயன்றான்
பொய்யடங்கவனுமாதியெழுத்தின்பொருளுரைத்தலதுபோகலையென்று.

(இ-ள்.) ஐய—தலைவனே, நுந்தை அருள் இன்றி எமக்கு ஓர் அறிவும் உள்ளது கொல்—உம்முடையதந்தையாகிய இறைவனருளன்றி எனக்கும் ஓரறிவுமுண்டாகுமா, (ஆகையால்) யான் ஆதியில் ஓதும் மெய் எழுத்தை அறிகின்றிலன்—யான் முதலில்

ஓதும் பிரணவாக்கரத்தை யறிந்தவனல்லன், அங்கண் விளம்பும் முப்பொருளும் அறி கில்லேன்—அவ்வெழுத்தில் சொல்லப்படும் மூன்று பொருள்களையு மறிந்தவனல்லன், (இவ்வுண்மையால்), உய்யுமா கருணைவைத்து என்னை ஆள் என்று இரந்து உரைத்து கடிது ஏகமுயன்றான்—யான் பிழைக்கும்படி கிருபைசெய்து என்னையடிமைகொள்வா யென்று இரந்துகூறி (தனதுசுகரத்திற்கு) விரைந்துசெல்லமுயன்றனன், பொய்கடந்த வனும் ஆதிஎழுத்தின் பொருளுரைத்து அல்லது போகலைஎன்று—உண்மையாகிய முரு கக்கடவுளும் பிரணவத்தின்பொருளை நீ (இப்பொழுது) சொல்லியல்லது(உன்னூர்க்குச்) செல்லாதை யென்று. (எ-று)

பிரமன் உமது தந்தையாரருளன்றி எமக்கென்றறிவேது, என்னறிவாலறியும் எழுத்துமல்ல பொருளுமல்ல ஆகையால் தேவரீரே யருள்செய்யவேண்டுமென்று பல இனிய மொழிகளைக்கூறி அவரைவிட்டுப் போவதற்குத்தரவு வாங்கிக்கொள்ள முயன் றனன். முருகக்கடவுள் முதலெழுத்தின் பொருளைச்சொல்லி யல்லது செல்லுதலொ ழிக என்றாரென்க.

இதனால் முதலெழுத்தாகிய பிரணவமும் அதன்பொருளும் உயிரறிவால் அறியப்ப ட்டனவல்ல இறைவனருளாலறியக்கூடுமெனவும், இறைவ னருள்செய்தற்கு உனது கருணைவேண்டுமெனவும், அக்கருணை எனக்கமையுமானால் கிடைக்குமெனவும் கூறிய தாகும். கடிதேகமுயன்றான் என்றது பலவாறுகவிரந்துகூறியும் சினமேமீதூர்தலால் என்னதண்டஞ் செய்வாரோ வென்றஞ்சிக் கூறியமொழியாகும். (௧௦)

**சென்னியைந்துடையவெந்தைபிரான்றன்றிருவடிக்கண்விரையாக்க லிவைப்பேன், பன்னுகிற்றிகடிதென்றலுமன்றோன்பகவனீன்றதனிமாமக னீயே, யென்னபல்கலையுமுன்னிடைவைகுமெம்பிரானடியிலாணைதரேல் யா, னுன்னரும்பொருளினுண்மையெனக்குத்தெரிந்தவண்ணமுரைசெய் குவலென்று.**

(இ-ள்.) விரையா - விரைந்து, சென்னி ஐந்து உடைய எந்தைபிரான் தன் திரு வடிக்கண் கலிவைப்பேன் - சதாசிவமூர்த்தியாய விளங்கும் எமது தந்தையினது திரு வடியின்கண் ஆணையிடுவேன் (ஆகையால்), கடிது பன்னுகிற்றி என்றலும் - விரைந்து கூறுவாயெனறுசொல்லவும், அன்னோன்—பிரமன், பகவன் ஈன்ற தனிமாமகன் நீயே என்ன—பகவனாகிய பரமேசுவரன் பெற்றருளிய வொப்பற்ற செல்வப்புத்திரன் நீயே யாகும், பலகலையும் உன்னிவைகும் - எவ்வகைப்பட்ட நூல்களெல்லாம் தேவரீரிடத்தி லேயேயுள்ளன (இங்ஙனமிருக்க), எம்பிரான் அடியில் ஆணைதரேல்—எமது பெருமா னுடைய திருவடியில் ஆணையிடவேண்டாம், யான் உன்னரும்பொருளின் உண்மை எனக்குத் தெரிந்தவண்ணம் உரைசெய்குவல் என்று—என்னாலறிவதற்கரிய பொருளி னிச்சயத்தை அடியேனுக்குத் தெரிந்தவளவில் விண்ணப்பஞ் செய்கின்றேனென்று (எ-று.)

பொருள்சொல்லியல்லது உன்னூர்க்கு நீ செல்லக்கூடாதென்று யான் சொல்லி யும் போவதற்கே விரைவுகாட்டுகின்றபடியால் இனி எனது தந்தைமேல் ஆணைவைப் பேன் ஆகையால் சீக்கிரமாகப் பொருள் சொல் என்று முருகக்கடவுள் கூறவும், பிர மன் எனக்கு வேதங்களையருளிய பகவான் உமக்குப்பிதா, அப்பகவானிடத்துள்ள கலை களெல்லாம், உம்மிடத்துமுள்ளன, உம்முடைய ஆணையைக்கடந்தாலன்றோ எமது

ஆண்டவனுடைய திருவடியில் ஆணையிடவேண்டும். இனிச்சினங்கொள்ளவேண்டாம், தேவரீர்கேட்ட பிரணவப்பொருளென்னாலறியத்தக்கதன்று, ஆயினும் அடியேனுக்குத் தெரிந்தவளவில் கூறுகின்றேன் என்க.

பகவனீன்ற தனிமாமகன் நீயே என்ன, பல்கலையும் உன்னிடைவைகும் - எனக் கொள்ளலுமொன்று. (௧௧)

## அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

பல்கலைக்குமுதலாகப்புகன்றிடுவதோமென்னும்பதமாமந்தச், சொல் விளக்கும்பொருளயன்மாலீசனெனுமூவரெனச்சொல்வர்மேலோர், மல்கு மறையுட்பொருளாய்ச்சுடரொளியாயோ குடையார்மனத்தேதோன்றும், அல்கியசீர்ப்பிரணவத்தையுணர்ந்தவரேவீட்டின்பமடையவல்லார்.

(இ-ள்) ஓம் என்னும் பதம் பல்கலைக்கும் முதலாகப் புகன்றிடுவது ஆம்—ஓமென்று சொல்லப்படும் பிரணவ மெல்லாக்கலைகளுக்கும் முன்னே எடுத்துக்கூறும்மொழியாகும், மேலோர் அந்த சொல்விளக்கும் பொருள் அயன்மால் ஈசன் என்னும் மூவர் எனச்சொல்வர்—பெரியோர்கள் அந்த ஓங்காரமொழி விளவிக்கும்பொருள் பிரமன் திருமால் உருத்திரனென்று சொல்லப்பட்ட மூவரென்று சொல்லுவார்கள், யோகுடையார் மனத்தே மல்குமறையுட்பொருளாய் சுடரொளியாய் தோன்றும்—யோகிகளுடைய இதயத்தில் இலக்கணமமைந்த வேதத்தின்பொருளாய் பிரகாசிக்கின்றசோதி வடிவமாய்ப் பிரகாசிக்கும், அல்கியசீர் பிரணவத்தை உணர்ந்தவரே வீட்டின்பம் அடையவல்லார்—நிலைபெறுகத்தங்கிய சிறப்பினையுடையபிரணவப்பொருளை யறிந்தவரே முத்தியின்பத்தை யடையவல்லவராவர். (எ-று.)

சகல கலைகளுக்கும் முதலாகச் சொல்லப்படுவது பிரணவம். அதன்பொருள் அயனரியீசராகும். அப்பிரணவப் பொருளை யுணர்ந்தவரே முத்தியின்பத்தை யடைவாரென்க.

பிரணவம் அகர உகர மகரங்களை யுறுப்பாகவுடையது. இம்மூன்றெழுத்துஞ் சேர்ந்தபோது ஓம் என்னு மொலியுண்டாம். அங்காத்தல் மாத்திரத்தானே அகரந் தோன்றும் - அவ்வாறு திறந்தவாய்குவிந்து நிலைபெறுனபோது உகரந்தோன்றும்-அங்ஙனங்குவிந்தவாய் மூடியபோது-ம் - என்னும் மகரந்தோன்றும், இவற்றுள், அங்காத்தல் சிருட்டியாம், அது அப்படியேயிருத்தல் திதியாம், வாயை மூடிக்கொள்ளுதல். சங்காரமாம். இதனை நோக்குழி அகரம் சிருட்டிக்கும், உகரம் திதிக்கும், மகரம் சங்காரத்துக்கும் இடங்களாய் நின்றமை வெளியாகிய துணர்க. இதனால் சிருட்டி கருத்தா அகரத்துகக்கும், திதிக்கருத்தா உகரத்துக்கும், சங்காரகருத்தா மகரத்துக்குங் கர்த்தர்களாயினமை மேலோர்சம்மதமாமென்றறிக. இதனையே "**அந்தச்சொல் விளக்கும் பொருளயன் மாலீசனெனுமூவரெனச் சொல்வர்மேலோர்**" என்று விளக்கியவாறறிக. பின்னர், "**மல்கு மறையுட்பொருளாய்**" என்றது வேதத்தின்றுணிவுமதுவேயாதல்கண்டு கூறியபடியாம், எங்ஙனமெனின், பிரஹ்மோபநிஷத்தில், "**அகாரம் ப்ரஹமாணம் நாபௌ**" என்று தொடங்கியவசனம் இவ்வுண்மையை நன்கு விளக்கிய தென்க. அநந்தரம், "**சுடரொளியா யோகுடையார் மனத்தேதோன்றும்**" என்றுகூறியது "**ஆத்மஜ்யோதிஸ்ஸந்நதாவர்த்ததஏவ**" என்ற சுருதிப்பிரமாணங் கொண்டெனவறிக. இந்தச்சுருதியில், ஆத்மஜ்யோதியை

யாவர்த்திப்பிக்கின்றமையாலும், உச்சாரண மாத்திரத்தால் பாசத்தினின்றுந் தாண்டி யுயரச்செய்கின்றமையாலும் ஓங்காரமாகுமென்றும், பரமாத்மாவினிடத்தில நமஸ்க ரிப்பிக்கின்றமையாலும், சேர்ப்பிக்கின்றமையாலும் பிரணவமாகுமென்றுஞ் சொல் லப்படுகின்றமையால் "அல்கியசீர்ப்பிரணவம்" என்றதனுக்கப்பாடும் வெளிப்பட்ட மைகாண்க. விரிக்கிற்பெருகும். (௬௨)

**முன்னெழுத்துமதன்பொருளுமிவ்வளவேயானறிந்தேன்முதல்வாபோற்றி**
**யென்னையினிவிடுத்தருளாயெனலோடுங்கணங்கண்முகநோக்கியின்னோன்**
**புன்னிலையன்சிறிதேனுமுணர்ந்திலான்றருக்குமிகப்பூண்டான்கண்டீர்**
**துன்னரியசிறையின்கண்மற்றிவனைப்புகுத்துமெனவெகுண்டுசொல்லி.**

(இ-ள்.) முன் எழுத்தும் அதன்பொருளும் இவ்வளவே யான் அறிந்தேன் முதல் வாபோற்றி—முதலெழுத்தையும் அவ்வெழுத்தின் பொருளையும் அடியேனிவ்வளவுதா னறிந்ததாகும் முதல்வனே போற்றி, இனி என்னைவிடுத்து அருளாய் என்னலோடும்— இனி என்னை விட்டுவிடுவீரென்று சொல்லவும், கணங்கள் முகநோக்கி—தமது கணங் களின் முகத்தைப்பார்த்து, இன்னோன்புல் நிலையன் சிறிதேனும் உணர்ந்திலான் தரு க்குமிகப்பூண்டான்—இப்பிரமன் அற்பன் சிறிதும் உணர்வில்லாதவன் செருக்குமிகவு முடையவன் (ஆகையால்), இவனை துன்னரிய சிறையின்கண் புகுத்தும் என்னவெகு ண்டு சொல்லி—இப்பிரமனைப் பொருந்துதற்கரிய சிறையின்கணிடுங்கள் என்று சின ந்துகூறி (எ-று.)

முதல்வனே நமஸ்காரம், பிரணவமென்கிற எழுத்தையும் அதன்பொருளையும் யா னறிந்ததிவ்வளவே தேவரீர் அடியேனை எவ்வளவு சினந்துகேட்கினும் இதனமேல் சொல்லவறியேன், ஆகையால் இனி அடியேனை விட்டுவிடுவீர் என்றுசொல்லவும் முரு கக்கடவுள் தமது கணங்களைத் திரும்பிப்பார்த்து இங்கே "யான் போகின்றேன் போகி கின்றேன் என்னை விட்டுவிடும்" என்று ஒருமுறையன்றிப் பலமுறையுங்கூறும் இப் பிரமன் அற்பஸ்திதியுடையவன் அறிவிலும் அற்பன் இவனை விட்டுவிடுவோமென் றெண்ணுதற்கோ அகங்காரத்தின்மிகுந்திருக்கின்றான். ஆகையால் யாவராலும் பொரு த்தற்கரிய சிறையின்கண் செலுத்துங்கள் என்று அடங்காதகோபத்தோடும் கூறினார் என்க.

இந்தச் செய்யுளில் "**முன்னெழுத்துமதன்பொருளும்**" என்றுகூறியிருக்கின்றது இதற்கு முன் செய்யுளில் "**ஓமென்னும் பதம் அந்தச் சொல்விளக்கும் பொ ருள்**" என்று கூறியிருக்கின்றது. இதனை விளக்குவாம். ஓம் என்றது சமஷ்டிப்பிரண வமாகிய ஏகாக்ஷரம். இதுவியஷ்டியாகிறபோது அ-உ-ம். என்னும் அக்ஷரத்திரையங் களாம். இதனால், சொல்லென்றும், எழுத்தென்றும்பிரணவத்தை விதந்தமை வுடை த்தேயாம். வியஷ்டிப்பிரணவம் அம்மூவரையுங்கடந்த சிவபரஞ் சுடரையும் பொரு ளாக வுடைமையை மேற்சுட்டிய பிரஹ்மோபநிஷத்துக் கூறுகின்றது. இதில், "**ஓங் காரம்துவாதசாந்தம்**" என்றுபக்கிரமித்து, அதனை "**ஈஸ்வரச்சேதீ**" என்றுமுடித் து ஓங்காரப்பொருள் ஈசுவரன் என்று விசிதப்படுத்தியது. அன்றியும் "**யத்வேதா தௌ**" என்னுஞ் சுருதி பிரணவப்பொருள் "**யஃபரஸ்ஸமஹேசுவரஃ** என்னும்வச னத்தால் மஹேசுவரர் என்று விளக்கியது. அன்றியுங் காசிப்பதியில் பிரணவதாரகமா

கிய தமது திருமந்திரத்தைச் சிவபெருமா னுபதேசித்தருளி யெல்லா வுயிர்களுக்குந் தமது சாரூப்பியத்தைக் கொடுத்தருளுகின்றாரென்பது சுருதி நிச்சயம். பிரணவோப தேசம் பெறு முயிர்கள் சிவசாரூப்பியமடைதல் வைதிக சித்தாந்த முடிவு.

இதனால் பிரணவ தாரகப்பொருள் சிவபரஞ் சுடரென்பதே சத்தியம். இவ்வா றுதெளிந்து கூறாமல் வியஷ்டிப் பிரணவ ரூபிகளாகிய திரிமூர்த்திகளையே பிரமன் பிர ஸ்த்தாபித்தானமையால், "**புன்னிலையன் சிறிதேனு முணர்ந்திலான்**" என் றிச்செய் யுளிற் பிரமனைக் குமாரக்கடவுள்சினந்து கூறியது சால்புடைத்தாயதென்க. பிரமன் தி ரிமூர்த்திகள் பிரணவப் பொருளென்றா னாயினும், அவருள் தானு மொருவனென்னும் பெருமைபேணி யிருந்தானாகலானும், தன்பெருமையைக் கீழாயுள்ளவன் றன்னின் மிக்காரிடமெடுத்துக் கூறுதல் கூடாத முறைமையென்றுதேராது தருக்குமீதூரவச்ச மின்றி அகர வாச்சியன் தானென்று கூறினானாகலானும் உள்ளபடியே பார்க்குமிடத்து அகாரவாச்சியனாகிய தன்னையும், உகாரவாச்சியனாகிய விஷ்ணுவையும், மகாரவா ச்சியனாகிய உருத்திரனையும் அதிட்டித்துக் கிருத்யங்களையியக்குகின்றவர் சிவபரஞ்சுட ரென்றும், தனக்கும் ஏனையிருவர்க்கு மவ்வாதிக்கம் போதர பிரஸாதித்தவர் தங்களைப் படைத்தருளிய வப்பெருந்தகையேயென்றும், அவரருளாதபோது தாம் வியஷ்டிப் பிர ணவ வாச்சியர்களாதலும், முத்தொழினடத்து முதல்வர்களாதலுங் கூடாதென்னு மு றைமை தெளிந்தடங்காமல் தலைவன் சந்நிதியில் தனது போலித்தலைமையைப் புகன்ற மையானும் "**தருக்குமிகப் பூண்டான் கண்டீர்**" என்றதமை வுடைத்தாதலறிக. கண் டீர் முன்னிலை யசைச்சொல். (கங)

**தன்வரைப்பிலலரோனைச்சிறைப்படுப்பித்துலகமெலாந்தானேதோற்று**
**மிந்நிலைமைத்தலைநின்றானறுமுகவேளுடனெய்துமுனிவர்தேவ**
**ரன்னவனைக்கொடுபோதப்பின்சென்றாரவ்வரைப்பினளவுமப்பாற்**
**கன்னவிறோட்கணநாதர்பிடித்துந்தமீண்டமுங்கிக்கயிலைபுக்கார்.**

(**இ-ள்.**) அலரோனை தன்வரைப்பில் சிறைப்படுப்பித்து—பிரமனைத் தனக்கிட மாகிய ஸ்கந்தபர்வதத்தில் சிறையிலிம்படி கட்டளையிட்டு, அறுமுகவேள் உலகம் எல்லாம் தானே தோற்றும் இந்நிலைமை தலைநின்றான்—அறுமுகக்கடவுள் எல்லா வுலகங்களையும் தானே சிருட்டிசெய்யும் இந்த அதிகாரத்தில் தலைப்பட்டு நின்றனர், உடன் எய்தும் முனிவர் தேவர் அன்னவனைக்கொடுபோத அவ்வரைப்பினளவும் பின் சென்றார்—பிரமனோடுவந்த முனிவரும் தேவரும் (தங்கள் தலைவனாகிய) பிரமனைச்சி றையிலிடக் கொண்டுபோக அந்தஸ்கந்த பர்வதமளவும் தாங்களும் பின்சென்றார் கள், அப்பால்—பின்னர், கல் நவில் தோள் கணநாதர் பிடித்து உந்த மீண்டு அழுங்கி கயிலைபுக்கார்—மலையென்று சொல்லத்தக்க தோளையுடைய ஸ்கந்தர் கணங்கள் (அவர் களைக் கைப்பிடியாகப்) பிடித்தோடும்படித் துறத்தத் திரும்பிவருந்தி கயிலையையடைந் தார்கள். (எ-று.)

பிரமனைத் தனக்கு வாழிடமாகிய ஸ்கந்தபர்வதத்தில் சிறைவைக்கும்படி தமது கணங்களுக்குக் கட்டளையிட்டுத் தாம் சிருட்டிசெய்தருளத்தலைப்பட்டனர், முருகக்கட வுள் ஆணையைப்பெற்ற கணங்கள் பிரமனைச்சிறையிலிடச் செல்லுங்காலத்து அப்பிரம னோடுவந்த முனிவர்களும் தேவர்களும் பிரமனுக்குவந்த இடுக்கணுக்குவருந்தித் தாங்கள் தங்களிடத்துக்குச் செல்லத்துணியாது அப்பிரமன்பின்னேசென்று கணங்களை நோக்கி

கணங்களே இப்பிரமதேவனைச் சிறையிலிடவேண்டாம் விட்டுவிடுங்கள் என்று பலவித மான உபசாரங்களுடன் சொல்லிக்கொண்டே ஸ்கந்தபர்வதமட்டுஞ்செல்ல, அக்கணநா தர்கள்தேவர்களை நீங்கள் ஒன்றுஞ் சொல்லவேண்டாம் போங்களென்று சொல்வது மரி யாதையன்று இவர்களுக்குத்தக்கவாறு மரியாதை செய்தனுப்புவோமென்று அவர்களைக் கைப்பிடியாகப் பிடித்திறுக்கி இதேவழியாகச் செல்லுங்களென்று பிடரைப் பிடித் துத்துறத்த அத்தேவர்கள் அக்கணங்களையுந் திரும்பிப்பாராது சரீரமெல்லாம் நோவ டைந்துகயிலை யைவந்தணுகினர் என்க. (௧௪)

புக்கிறைவன் றனை வணங்கிநிகழ்ந்தவெலாம்விண்ணப்பஞ்செய்யப்பூந்தே
னக்கநறுந்தொடையிதழிக்கடவுளவர்தமைநோக்கிநவில்வானென்னே
யக்கமலன்விளம்பியவாநம்மையுநம்புதல்வனையுமன்றேமான
மிக்கபுகழ்ச்சுருதியெலாம்பிரணவத்தின்பொருளாகவிளம்புமாறே.

(இ-ள்.) புக்கு இறைவன்தனை வணங்கி நிகழ்ந்தவெல்லாம் விண்ணப்பஞ்செ ய்ய—(தேவர்கள் கயிலையை) யடைந்து இறைவனை வணங்கி நடந்த செய்திகளெல் லாம் சொல்ல, தேன் நக்கநறும் பூம்தொடை இதழிக்கடவுள் அவர் தமைநோக்கி நவில்வான் - தேனொழுகும் நல்ல மலராற் றொடுக்கபட்ட கொன்றை மாலையணிந்த இறைவன் அந்த தேவர்களைப்பார்த்துக் கூறுவான், அ கமலன் விளம்பிய ஆறு என்னே- அந்தப் பிரமன் சொல்லிய பொருளென்ன, மானமிகக புகழ் சுருதி எல்லாம் - பெரு மை மிகுந்த புகழினையுடைய வேதங்களெல்லாம், பிரணவத்தின் பொருளாக விளம்பும் ஆறு - பிரணவப்பொருளாககூறும் வகை, நம்மையு நம்புதல்வனையு மன்றே - பிரம மாகிய நம்மையும் நமது குமாரனாகிய ஷண்முகனையு மல்லவா. (எ-று.)

(தேவாகள் ஸ்ரீ கயிலாயத்துட்) சென்று சிவபெருமானை வணங்கி பிரமனை முரு கக்கடவுள் பிரணவார்த்தம் வினவினர் அதற்கப்பிரமன் தேவரீர் உபதேசித்தவாறே கூறினர். அதற்கு உமது குமாரர் சிறைக்கண்படுத்தினர் என்று பரிதபித்துக்கூற, அம்மொழியைக்கேட்ட இறைவன் தேவர்களைப்பார்த்து எம்மையும் எம்முடைய புதல் வனையுமே பிரணவப்பொருளாக வேதங்கூற, அதனைக்கூற வறியாது இவனையும், இவன்றந்தையையும் பிரணவபபொருளாக வேதங்கூறிய தென்றும், அதுவேயுமன்றி யானுங் கூறினேனென்றுங் கூறியதென்ன மடமை என்க.

மேற்செய்யுள்களில் விளக்கியவாறு பிரணவஸ்வரூபராயுள்ளவர்தாமேயென்பதை "நம்மையு நம்புதல்வனையு மன்றேமான, மிக்கபுகழ்ச் சுருதியெலாம் பிரணவ த்தின்பொருளாக விளம்பும்" என்று சிவபெருமான் தேவர்களுக்கு எடுத்தோதிய வாய்மை யிதுவாம், இதில், சிவபரஞ்சுடரே பிரணவ வடிவினரென்பதை யொருகார ணங்காட்டி விளக்கியிருக்கிறது. யாது காரணமெனின், தேவர்கள் சென்று சிவசந் நிதியின் முறையிட்டபோது, அவர்களை நோக்கிச் சிவபெருமான் பிரதியுத்தரஞ் சொல் லப்புகு மவசரத்தில், அச்சிவ பரமாத்மாவை "பூந்தேன்-நக்கநறுந் தொடையிதழிக் கடவுளவர் தமைநோக்கி நவில்வான்" என்று பிரஸ்தாபித்திருக்கிறது. இதில் யாது விசேடமெனின், "இதழித்தொடைக் கடவுள்" என்றதே விசேடமாம். இத ழித்தொடை - கொன்றைமாலை. கொன்றைப்பூமாலை யணிந்தவரென்றதனால், அத னைத்தரித்தவரைப் பிரணவஸ்வரூபரென்றறிந்துவேர் வேதவித்துக்களென்க, கொன்றை மலரினுள்ளே பார்த்தால் பிரணவவடிவமாகிய ஓங்காரம் அல்லது திருவாசியினது

ஆகாரம் நன்குபுலப்படும். தாம் பிரணவஸ்வரூபரென்பது போதரவே கொன்றைமாலையைச் சிவபெருமான் தரித்துள்ளாரென்பதைப் பின்செய்யுளாலுமறிக. "பிரணவத்தினுரிய பொருள் பிறவொன்று பேசிடுவார் - பூரணவித்தற்காக்கமங்கள் முதலாய வேண்டுபவோ - காணவிகற்பங்கடப்பாய் காவதமென்ணிலகமழநீ-திரன்மிகுத்த செழுங்கொன்றைமாலிகை சேர்தரக்கண்டும்" என்னுமிச்செய்யுள் திருநாகைக்காரோணப்புராணம் - புண்டரீசமுனிவர் முதற்காட்சியுரைத்த படலத்திற்போந்தவாறறிக. சிவபெருமான் பிரணவஸ்வரூபரென்பதோடு, அவரது திருக்குமாரரும் பிரணவஸ்வரூபரென்பது யாங்ஙனமெனின், சிவபெருமான் பஞ்சப்பிரஹ்மம் என்று (அவரது பஞ்சவக்த்ரஸ்வருப விசேஷத்தால் வேதங்களில்) படிக்கப்பட்டதுபோல, அப்பரமேசுவரர் தமதுஷடானனஸ்வரூப விசேஷத்தால் சுப்ரஹ்மமணம் என்றுபடிக்கப்பட்டிருக்கின்றனர். ஐந்து திருமுகங்களோடுகூடிய சதாசிவந்தானே முன்மறைந்திருந்த முகத்தையும் வெளித்தோன்றக் காட்சிப்படுத்தி ஆறுமுகத்தோடிருந்த அவசரமே சுப்பிரமணிய மாயினதறிக. முன்மறைந்த முகமும் வெளிப்பட்ட அவசரத்தால் பிரம்ஹம் பூர்ணப்பிரகாசமா யொளிவிட்டுத் தேஜோராசியாயிலங்கிய சத்தியம் வெளிப்பட்டதனல், பஞ்சப் பிரஹ்மத்தினும் பிரமமானது சுப்ரஹ்மணியம் என்று தெளிவது மரபாயதென்க. இதனல், சிவபரஞ்சுடரும், சுப்பிரமணியக்கடவுளும் பிரணவஸ்வரூபர்களென்பது சித்தாந்தமாயிற்றென்க. விரிக்கிற்பெருகும்.

விளம்பியவா என்புழி று ஈறுதொகுக்கப்பட்டது. ஆ கற்றவா கடவானென்புழிப்போல. என்னென்னும் வினுவினைக் குறிப்பு முற்று என் என்றாகி ஈண்டின்மை குறித்து நின்றது. ஏ இரக்கப்பொருட்டு. (கஞ)

எக்கலைக்கும்பூதங்களெவற்றினுக்கும்பிரமனுக்குமீசனென்னத்
தக்கமுதல்பரப்பிரமஞ்சதாசிவனேமெனவேதஞ்சாற்றுமல்லான்
முக்கனல்சூழ்வேள்வியிற்சுப்பிரமணியனேமெனவுமுக்காற்கூறு
மிக்கருத்தையறியானையெவ்வாறு விடுவிப்பதியம்புமின்னே.

(இ-ள்.) எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும் பிரமனுக்கும் ஈசன் என்னத்தக்க முதல் - எல்லாச்சாத்திரங்களுக்கும் எல்லாப் பூதங்களுக்கும் பிரமதேவனுக்கும் தலைவனென்று சொல்லத்தகுந்த முதல்வன், பரப்பிரமம் சதாசிவன் ஓமெனவேதம் சாற்றுமல்லான் - மேலாகிய பிரமப்பொருள் சதாசிவனே மென்று வேதங்கள்கூறி நிற்குமல்லாமல், முக்கனல்சூழ் வேள்வியில் சுப்பிரமணியனே மெனவு முக்காற் கூறும் - மூன்று அக்கினியினல் சூழப்பெற்ற யாகத்தில் சுப்பிரமணியனேம் என்று மூன்றுதரம் சொல்லும், இக்கருத்தை அறியானை எவ்வாறு விடுவிப்பது - இவ்வுண்மைப்பொருளுணராதவனை எவ்வகையாக மீட்டுவிப்பது சொல்லுங்கள். (எ-று.)

எல்லாக்கலைகளுக்கும், எல்லாப் பூதங்களுக்கும் பிரமனுக்கும் ஈசனென்னத்தக்க முதல்வன் பரப்பிரமமாகிய சதாசிவன் ஓமென்று வேதங்கூறும். முக்கனல் சூழ் வேள்வியில் சுப்பிரமணியனேமெனவும் மூன்றுதரம் சொல்லும். இக்கருத்தை யறியாத பிரமனை எவ்வாறு விடுவிப்பது என்க.

இச்செய்யுளில் "எக்கலைக்கும் பூதங்களெவற்றினுக்கும் பிரமனுக்கு மீசனென்னத்தக்க முதல்" என்று பிரஸ்தாபித்து, அதனை "பரப்பிரமம் ஸதாசிவனேம்"

என்று கூறியது அவ்வாறு வேதம் சுடர்விட்டொளிர்தலாலெண்க. அச்சுருதி "ஈசா நஸ்ஸர்வவித்யாநாம் ஈச்வரஸ்ஸர்வபூதாநாம் ப்ரஹ்மாதிபதி ர்ப்ரஹ்மணோதிபதி ர்ப்ரஹ்மாசிவோமே அஸ்துஸதாசிவோம்" என்பதேயாம். இப்பாடலும், இந்தச் சுருதியும் முறையே மொழிபெயர்ப்பும், அதன் மூலமுமா யிருந்தல்காண்க. அன்றியும், அந்தப்பாடலில் "சுப்பிரமணியனோமெனவு மூக்காற்கூறும்" என்றிருப்பதை "சுப்ரஹமண்யோம் - சுப்ரஹமண்யோம் - சுப்ரஹமண்யோம்" என்ற சுருதி ஸாட்சிப்படுத்தியது, இவ்வாறு சுருதிஸாட்சி பலங்கொண்டு விளங்கும் பிரணவ நிச்சயமுணராதவனைத் தண்டிப்பது ஆவசியகமாகையால், அவ்வாறு தண்டித்தருளிய குமாரக்கடவுளது செயலைச் சிவபெருமான் மகிழ்ந்து (அப்பிரமனை) "எவ்வாறு விடுவிப்பது" என்று கூறியது ஸாமஞ்சசமேயாம். அவனைத் தெளிவியாது அப்படியே விடுவித்தால் அவன் வெளிப்பட்டுத் தனது மூடநிச்சயத்தைப் பின்னு முலகிற்பரப்புவானாகையா லவனைப் யப்போது விடுவியாத நல மினைத்தென்று வெளிப்பட்டது, பின்னரவனை விடுவித்தது அவன் பிரணவத்தினுண்மை தெளிந்தபிறகேயாம். "அருள்வலியா லாங்கவனை விடுவித்தும்" என்ற பின்கவியால் தேவர்களை நோக்கிச் சிவபெருமான் சொல்லியருளியது குமாரக்கடவுளால் பின்னருபதேசவுண்மை முதலியன நிகழுமென்பதைத் தமது திருவுள்ளத்திற் கொண்டே யாமென்றறிக. அபராதிகளிடத்தும், நிரபராதிகளிடத்தும் சிவ பரஞ்சுடரினது கருணை ஸமமேயாம். அக்கருணை அபராதிகளிடத்தில் மறக்கருணையெனவும், நிரபராதிகளிடத்தில் அறக்கருணையெனவும் பெயர்பெறும். விரிக்கிற்பெருகும். நிற்க.

மேல் கஉ-வது செய்யுளில், பிரஹ்ம் விஷ்ணு ருத்ரர்கள் பிரணவஸ்வரூபர்களென்று பிரமன் சொன்னதை மறுத்து. அவர்கள் வியஷ்டிப்பிரணவ வாச்சியர்களென்றும், அவரவ்வாறுனகாலத்தும் அவர்களை யதிஷ்டித்துக் கிருத்தியங்களைச்செய்பவர் சிவபரஞ்சுடரோயென்றும் விசதப்படுத்தியிருப்பதால் ஈண்டு விசாரிப்பதொன்றுளது. பத்து மரஞ்செறிந்த வொரு தோப்பில் மரம் தனித்தனியே யெண்ணப்படும்போது வியஷ்டியும், தோப்பாயெண்ணப்படும்போது ஸமஷ்டியுமாயிருத்தல் மரபன்றோ? மரமெல்லாஞ் சேர்ந்து தோப்பானபோது மரமுந்தோப்பும் அபேதமாயிடுதலும் மரபன்றோ; இப்படியே அகார உகார மகாரங்கள் சேர்ந்து ஓங்காரமாயினவாறு பிரமவிஷ்ணு ருத்ரர்கள் சேர்ந்தே சிவம் அல்லது பிரமமாயிடுதல் மரபன்றோ? அங்ஙனமாகுங்கால் பிரமவிஷ்ணு ருத்ரர்கள் பிரமத்தின் கூறுயிடுதல் சித்தமாகவும், பிரமவிஷ்ணு ருத்ரர்களைக் கேவலம் ஸாமாந்யராகவும், பிரமஸ்வரூபரல்லவாகவும் பிரசங்கித்தல் யாங்ஙனமெனின், நன்று கடாயினுய். ஒரு வீட்டில் மூன்றறைகளில் தனித்தனிக் குடியிருப்பவர்களை அவ்வீட்டிற்குச் சொந்தக்காரர்களென்றிடல் மரபாமோ; பிரமவிஷ்ணு ருத்ரர்கள் மாயாகுணமூர்த்திகளும், துரீயசிவம் ஞானமூர்த்தியுமாயிடுதல் சுருதிஸித்தமான அநுபவதஷ்டமாய்க் காணப்படுதலால் மாயாகுணமூர்த்திகளும், ஞானமூர்த்தியு மபேதமாயிடுதல் கூடாது. இதனுல், திரிமூர்த்திகளும் பிரமஸ்வரூபமென்று வாதிடும் ஸ்மார்த்தமதம் நசித்ததெனவறிக பிரமனைச் சிறைப்படுத்தியலக்கணுறச்செய்த வாதத்திலவனோடொரு சேர்த்தெண்ணபபடும் விஷ்ணுவாதிக்யஞ் சிதைந்தமையால், அவ்விஷ்ணுவை மூலமாகக்கொண்ட பாஞ்சராத்திரிவாதம் முதலிலே தானே நசித்ததெனவறிக. எல்லா மதங்களையுங் கீழ்ப்படுத்தித் தலையாய சைவசித்தாந்தத்தைத் தாபித்தமையே வேதத்தின் முடிவாயினதறிக. விரிக்கிற்பெருகும்.

மூக்கனலென்றது - ஆகவனீயம், காருகபத்தியம் தக்ஷிணாக்கினி என்பன. (கசு)

அருள்வலியாலாங்கவனை விடுவித்துமஞ்சேன்மினென்றுகூறித்
திருநந்திநாயகனையெதிர்நோக்கியறுமுகன்பாற்சென்றுமுற்றுந் [ய்
தருகின்றான்றனைவிடுமோவெகுளேலெனெம்முரையாற்சாற்றித்தேன்பா
மருவொன்றுமலரோனைவிடுவித்துநம்மாட்டுக்கொணர்தியென்றான்.

உளஎ (இ-ள்.) அருள்வலியால் ஆங்கு அவனை விடுவித்தும் அஞ்சேன்மின் என்றுகூறி - நமதுகருணைமேலீட்டால் அப்பிரமனை விடுவிப்போம் நீங்களஞ்சாதிருங்களென்று சொல்லி, திருநந்திநாயகனை எதிர்நோக்கி - (தம்முன்வீற்றிருக்கும்) திருநந்திதேவரை யெதிர் நோக்கியருளி, அறுமுகவன்பாற்சென்று முற்றும் தருகின்றான்தனைவிடுமோ வெகுளேல் என்று எம் உரையால்சாற்றி - ஆறுமுகங்களையுடைய நமதுகுமாரனாகிய முருகனிடஞ்சென்று உலகமுழுதும் படைக்கும் பிரமனை விட்டுவிடு சோபியாதையென்று எமது கட்டளையாற்கூறி, தேன்பாய் மருவொன்றும் மலரோனை விடுவித்து நம்மாட்டு கொணர்தி என்றான் - தேன்சொரியு மணங்கமழுந் தாமரைமலரிலிருக்கும் பிரமனை யச்சிறைக்களத்தினின்றும் விடுவித்து நம்மிடத்து அழைத்துக்கொண்டுவாவென்று திருவாய்மலர்ந்தருளினன். (எ-று.)

ஆயினும் நமது கருணைமேலீட்டினால் சிறையினின்றும் விடுவிக்கின்றோம். நீங்களஞ்சவேண்டாம் என்றருளி திருநந்திதேவரைப் பார்த்து, நீ நமது குமரன்பாற் சென்று நாம் கட்டளையிட்டதாக பிரமனைக் கோபியாது விட்டுவிடச் சொல்லி விடுவித்து அப்பிரமனை இக்கைலைக்குக் கொண்டுவா வென்றருளினனென்க.

மோ - முன்னிலை யசைச்சொல். உம்மை முற்று. (கஎ)

வேத்திரத்திண்படையாளிவிடைகொண்டுவேற்படையோனுலகநண்ணி
மாத்தடிந்தபெருமானைத்தொழுதிறைஞ்சியெங்கோவேமழுவாளெம்மான்
பூத்தவிசிற்புத்தேளைநீவிடுமாறருள்செய்தானென்றுபோற்றி
யேத்தும்வழியறுமுகவேளிதழதுக்கிவெகுளுதலும்வெருவிமீண்டான்.

(இ-ள்.) வேத்திரம் திண்படையாளி - பிரம்பாகிய திண்ணியபடையையுடைய நந்தி பெருமான், விடைகொண்டு வேற்படையோன் உலகம் நண்ணி - இறைவன் பால் விடைபெற்று, வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளிருக்கும் கந்தலோகத்தையடைந்து, மாதடிந்த பெருமானை தொழுது இறைஞ்சி - மாமரவடிவங்கொண்ட சூரபன்மனைக் கொன்ற முருகனை வீழ்ந்து வணங்கி, எம்கோவே - எம்மிறைவனே, மழுவாள் எம்மான் பூ தவிசின்புத்தேளை நீவிடுமாறு அருள் செய்தான் என்று போற்றி ஏத்தும் வழி - மழுப்படையையுடைய சிவபெருமான் தாமரைமலரை யாதனமாகவுடைய பிரமனை தேவரீர் சிறையினின்றும் விடும்படி கட்டளையிட்டனர் என்று வணங்கித் துதித்து நிற்க, அறுமுகவேள் இதழ் அதுக்கி வெகுளுதலும் வெருவி மீண்டான் - ஆறுமுகங்கொண்ட முருகன் உதட்டைக்கடித்து கோபித்தலும் பயந்து மீண்டனன். (எ-று)

இறைவன்பால் விடைபெற்ற நந்தி தேவர் முருகக்கடவுள் பாற்சென்று வணங்கி எம்மிறைவன் பிரமனைச்சிறையினின்றும் விடும்படிக் கட்டளையிட்டனன் என்று விண்ணப்பஞ்செய்து போற்றி நிற்க, இம்மொழியைக் கேட்ட முருகக்கடவுளிதழதுக்கிக் கொடுங் கோபங்கொள்ள அதனைக் கண்ணுற்று அஞ்சித் திரும்பினனென்க, (கஅ)

பிஞ்ஞகநின்றிருவாணை விண்ணப்பஞ்செய்ச்சிறிதுப் பேஞணுகி
மஞ்ஞைப்பரன்சினவுதலின்வெரீஇப்பெயர்ந்தேனெனாநந்திவள்ளலகூற
மொய்ஞ்ஞிமிறுமுரல்பூந்தார்க்கடவுளருமுனிவருங்கேட்டுத்தம்முட்[தார்
கைஞ்ஞெரித்தார்வெருக்கொண்டாரிறையவனேகாவாயென்றடியில்வீழ்ந்

(இ-ள்.) பிஞ்ஞக நின் திருவாணை விண்ணப்பஞ்செய சிறிதும் பேஞணுகி - பிஞ்ஞக னென்னுந் திருப்பேருடையானே நினது கட்டளையை விண்ணப்பிக்கச் சிறிதாயினு மிரங்காது, மஞ்ஞையான் சினவுதலும் வெரீஇ பெயர்ந்தேன் என்ன - மயிற்பரி நடத்தும் முருகன் கோபித்தலும் பயந்து அவ்விடத்தினின் றகன்றே னென்று, நந்தி வள்ளல்கூற மொய் ஞிமிறு முரல்பூந்தார் கடவுளரும் முனிவரும் கேட்டு - நந்தி யெம்பெருமான் சொல்ல தேனொடு மொய்த்த வண்டுக ளிசைபாடும் கற்பகமலர் மாலையை யணிந்த தேவர்களும் முனிவர்களுங் கேட்டு, தம்முள் கைஞெரித்தார் வெருக்கொண்டார் இறைவனே காவாய் என்று அடியில் வீழ்ந்தார் - தம்மிற் கைநெரித்து பயங்கொண்டு இறைவனே காத்தருளாயென் றவனடியில் வீழ்ந்தனர். (எ று)

முருகக்கடவு ளிடமிருந்து பயந்து திரும்பிய நந்தி யெம்பெருமான் இறைவன் பால்வந்து தேவரீர் கட்டளையைத் திருமகனார் பால் தெரிவிக்க அக்கட்டளையை யங்கீகரியாது சினங்கொண்டனர். அக்குறிப்புணர்ந்த அடியேன் நிற்பதற்கஞ்சி இங்கேவந் தனன் என்றுகூற அச்சமயத்தில் பிரமன் வரவை யெதிர்நோக்கிய தேவர்களும் முனிவர்களுங் கேட்டு இறைவன் கட்டளையைக் கேட்டும்விடாது கோபிப்பாராயின் இவர்கோபந்தணிவது என்று, பிரமன் சிறையினின்றும்வருவது என்று, என்று அடங்காத துன்பத்தில்மூழ்கித் தம்முள் தாங்களே கைநெரித்துக்கொண்டு திருவடியில் வீழ்ந்தவர்களா யெங்களைப் பாதுகாத்தருள வேண்டுமென் றனரென்க.

கைஞ்ஞெரித்தார் வெருக்கொண்டார் முற்றெச்சம். முனிவர் - மோனநெறி யுடையார், அந்நெறி ஞானத்துக்கு வரம்பாகலின். கடவுளர் கற்பகநறுமாலை யணிதலியல்பாதலின் பூந்தார் என்றதற்குக் கற்பகமாலை யென்றும் இறைவன் சந்நிதியில் தேவரும் முனிவரும் கேட்டு வெருக்கொண்டார் கைஞ்ஞெரித்தார் எனக் குறிப்பித், தமை அவர் வருத்தநோக்கி என்க. (கக)

சயிலாதிவாய்மொழியுஞ்சுரர்முனிவர்மனத்துயருந்தரைசால்வெள்ளிக்
கயிலாயத்தெம்பிரான்றிருவுளத்திற்கொண்டருளிக்கருணைகூர்ந்து
மயிலாலுமலைமகளோடெழுந்தங்கண்மகவிருப்பாலெய்தநோக்கி [ன்.
யயிலாளுந்திருக்கரத்தான்விரைந்தெதிர்சென்றடிவணங்கிப்போற்றிநின்று

(இ-ள்.) சயிலாதி வாய்மொழியும் - திருநந்திதேவர் திருவாயிற்பிறந்த சொல்லையும், சுரர்முனிவர் மனத்துயரும் - தேவர்களும் முனிவர்களும் தங்களது மனதிற் கொண்ட வருத்தத்தையும், தரைசால்வெள்ளி கயிலாயத்து எம்பிரான் - பூமியில் நிரம்பிய வெண்மையுருக்கொண்ட கைலாயமலையிலுள்ள எமது சிவபெருமான், திருவுளத்தில் கொண்டருளி கருணைகூர்ந்து - தமது மனத்தகத்திலடக்கி அருள் மிகுந்து, மயிலாலு மலைமகளோடெழுந்து அங்கண் மகவிருப்பால் எய்த - மயில்களிருக்கும் மலையரசனாகிய இமயபுத்திரியோடு அக்கந்தலோகத்தில் பிள்ளையின் மேலிருக்கும் அன்பினாலெழுந்தருள, அயிலாளும் திருக்கரத்தான் நோக்கி - வேற்

படையையாளும் திருக்கரமுடைய முருகன்பார்த்து, விரைந்து எதிர்சென்று அடிவண ங்கி போற்றிநின்றான் - விரைந்து எதிரே ஓடி திருவடியை வணங்கித் துதித்து நின்ற னன் (எ-று.)

ஸ்ரீகயிலாயநாதர் தமது மகனுரிடத்துச் சென்று திரும்பிய நந்திதேவர் வாய் மொழியையும் ஏனைய தேவர்முனிவர் முதலியோருடைய துன்பத்தையும் திருவுள்ள த்திலெண்ணித் தமது தேவியாரோடு மகனுரிடத்து ஆசையோடு செல்ல, தந்தைவரு வதைப் பார்த்த முருகக்கடவுள் விரைந்துசென்று திருவடியை வணங்கித் துதித்து நின்றனர்.

மகன் பால் தந்தை ஆசையோடு செல்வதும் தந்தைபால் மகன் ஆசையோடு விரைந்து எதிரோபோவதும் இருவரிடத்துமியல்பாய் நிகழ்வதோர் அன்பின் விசேடண மென்க.

நோக்கி என்பது நோக்க என்பதின்றிரிபு. சயிலாதி என்றது சிலாதரனென்னும் முனிவன் மகவாசையாற் றிருவையாற்றிற் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து பெற்ற மையின் என்க. தீயசொல் பயிலாமை நோக்கி வாய் எனவேண்டாது கூறினர். இதனை "வாய்ச்சொல்" என்புழிப் பரிமேலழகர் கூறுநலுங்காண்க. தகைசால் வெள்ளிக் கயி லாயமென்றும் பாடம். (உ0)

அனையானையிருவர்களுமடித்தலமீதிருத்திமகிழ்ந்தன்புகூரக்
கனிவாயின்முத்தங்கொண்டுச்சிமோந்தகங்கனியத்தழீஇயபின்ன
ரெனையாளுஞ்சிவபெருமான்குறுமூரலெழில்காட்டிமேனிதைவந்
துனையோராவேதியனைச்சிறைவிடுத்திமைந்தாவென்றுரைத்துபின்னும்.

(இ - ள்.) அனையானை (அடிவணங்கி நின்ற) திருமகனுரை, இருவர்களும் மடித் தலமீது இருத்தி - அம்மையப்பரிருவரும் (தமது) மடியின்மேல வைத்துக்கொண்டு, மகிழ்ந்து அன்புகூர கனிவாயின் முத்தம்கொண்டு உச்சிமோந்து அகங்கனிய தழுவிய பின்னர் - களிப்படைந்து மிக்க ஆசையோடு கோவைக்கனிபோன்ற திருவாக்கினை முத்தமிட்டு உச்சிமோந்து மார்போடிறுகத் தழுவியபின், எனை ஆளும் சிவபெரு மான் - என்னை யடிமையாகவுடைய இறைவன், எழில் குறுமூரல் காட்டி - அழகிய புன்னகையரும்பி, மேனிதைவந்து - திருமேனியைத்தடவி, மைந்தா - குமாரனே, உனை ஓராவேதியனை சிறைவிடுத்தி என்று உரைத்து - உன் நிலைமையையுணராத பிரம னைச் சிறையின்கணின்றும் விடுவிப்பாயென்றருளி, பின்னும் - பின்னரும். (எ-று.)

இறைவனும் இறைவியும் தம்மகன்பாலுள்ள ஆசையெல்லாங் காட்டியபின் தாம் வந்தசெய்தியைக் குறிப்பிப்பவர்போல் புன்னகையரும்பி குமாரனே உன்னருமையறி யாத அச்சிறியனை சிறைவிடுவிப்பாயென்று பின்னும் (ஒன்று கூறத்தொடங்கின னென்க.

தன்னடிவணங்கப் பெற்றோரெல்லாம் தாம்தாம்வேண்டியவற்றைத் தம்மிடத்துப் பெற்றார்கள் தம்மகனர் தம்மைவணங்கியபோது தம்பொருளெல்லாம் அவர்பொருளே யாக, தமக்கு வேறுருபொருளில்லையாகலான் தம்பொருளாயிருந்த மகனுரையே மடித் தலத்திருத்தியும் மகிழ்ந்தும் அன்புகூர்ந்தும் முத்தங்கொண்டும் உச்சிமோந்தும் தழு விக்கொண்டும் ஆசையை நிறப்பிக்கொண்டாரென்க. இப்பொழுது தன்மகனுலடை ந்த ஆனந்தத்திற்குக்காரணன் பிரமனுகலால் அவனைச் சிறைவிடுவித்தல் முறையா மென்றெண்ணி, மைந்த அயனைச்சிறைவிடுத்தி என்றிரந்தானென்றலுமொன்று. (உக)

நம்மாணைகடந்தனையாலன்னதற்குக்கழுவாய்நீயத்தல்வேண்டும்
வெம்மாயமணுகரியதிருக்காஞ்சிநகர்வரைப்பின்மேவியன்பி
னம்மாடேசேனுபதீச்சரமென்றோரிலிங்கமருச்சித்தேத்திக்
கைம்மாணத்தவம்புரிதியென்றருளக்கேட்டெழுந்தான்கடப்பந்தாரான்.

(இ-ள்.) நம் ஆணை கடந்தனையால் அன்னதற்குக்கழுவாய் நீயத்தல்வேண்டும்- நமது கட்டளையை மறுத்தனையாகையால் அதற்குப் பிராயச்சித்தம் நீவிரும்பிச்செய்ய வேண்டும், வெம்மாயம் அணுகரிய திருக்காஞ்சி நகர்வரைப்பில் மேவி - கொடிய வஞ்சமடைதற்கரிய காஞ்சிநகரத்தை யடைந்து, அன்பின் அம்மாடு சேனுபதீச்சரம் என்று ஓர் இலிங்கம் அருச்சித்து ஏத்தி - அன்பினால் அவ்விடத்துச் சேனுபதீச்சரமென்று சொல்லப்படுமிலிங்கமூர்த்தியை யருச்சித்து வணங்கி, கைம்மாணத் தவம் புரிதி என்று அருள - ஒழுக்கம்வாய்ந்த மாட்சிமைபட்ட தவம்செய்வாயென்று கட்டளையிட, கடப்பந்தாரான் கேட்டு எழுந்தான் - கடப்ப மலர்மாலையணிந்த முருகன கேட்டெழுந்து. (எ-று.)

இறைவன் தமது மகனுரைப்பார்த்து நீநமது ஆணையைக் கடந்தபடியினால் அதற்குப் பரிகாரமாகக் காஞ்சிப்பதியில் சென்று நீசேனுபதியாகையால் சேனுபதீச்சரமென்றோரிலிங்கமமைத்து அருச்சனை புரிவாயென்றருளக் கேட்டெழுந்தனனென்க.

எவ்வகைத் துன்பங்களும் காஞ்சியையடைந்து வழிபட வொழிதலின் வெம்மாயமணுகரிய திருக்காஞ்சிநகர் என்றார். கழுவாய் தொழிற்பெயர். (உஉ)

திசைமுகனைக்கணங்களாற்சிவபெருமான்றிருமுன்னர்ச்செலுத்தியுள்ளப்
பசையினிருமுதுகுரவரடிவணங்கிவிடைகொண்டுபழனக்காஞ்சி
வசைகடந்தநகரெய்தியுலகாணித்தடமேல்சார்மாகாளப்பா
லிசைவிளங்குதேவசேனுபதீச்சரவிலிங்கமிருத்திப்போற்றி.

(இ-ள். திசைமுகனைகணங்களால்சிவபெருமான் திருமுன்னர்செலுத்தி-நான்கு முகங்களையுடையபிரமனைத் தனதுகணங்களினால் சிவபெருமான் சந்நிதியிற்செலுத்தி, உள்ளப்பசையின் இருமுது குரவரடிவணங்கி விடைகொண்டு-உள்ளன்பால் இருமுதுகுரவராகிய சிவபிரானையும் உமையம்மையையும் திருவடியில் வணங்கிவிடைபெற்று, பழனக்காஞ்சி வசைகடந்த நகர் எய்தி உலகாணித்தடம் மேல்சார் மாகாளப்பால் - வயல்களையுடைய காஞ்சியாகிய குற்றந்தீர்ந்த நகரத்தையடைந்து உலகாணித் தீர்த்தத்தின்மேற்பால் உள்ள மாகாளம் என்னும் திருத்தளியின்பக்கத்தில், இசைவிளங்கு தேவசேனுபதீச்சரவிலிங்கம் இருத்தி போற்றி - கீர்த்திவிளங்கும் தேவசேனுபதீச மென்னு மிலிங்கத்தைத் தாபித்துத் துதித்து. (எ-று.)

தந்தை தம்மைக் காஞ்சிப்பதியின்கண் அர்ச்சிக்கச்சொன்ன ஆசையால் பிரமனிடத்துத் தமக்குண்டாகிய கோபந்தணியப்பெற்று உடனே தம்முடைய கணங்களால் சிறையிலிருக்கும் நான்குசிரசுடையவனைக் கொண்டுவரச் சொல்லி தந்தை பால் விடுத்துவிட்டு காஞ்சிநகரத்தை யடைந்து உலகாணித் தீர்த்தத்துக்குமேற் பால் வீற்றிருக்கும் மாகாளீசர ரருகிலுள்ள சேனுபதீச்சர விலிங்கத்தைத் தாபித்துத் துதித்தனரென்க.

உலகாணித் தீர்த்தம் - காமாக்ஷி சந்நிதியிலிருக்கும் தீர்த்தம். (உ௩)

புள்ளிமான்றோ லுடுக்கைமுஞ்சிநாணரைப்பொலியவக்கமாலை
தெள்ளுநீர்க்குண்டிகையுங்கரத்தொளிரத்திருக்குமரகோட்டமென்னு
முள்ளியோர்பிறப்பறுக்குமாச்சிரமத்தினிதிருந்தானுறுவர்போற்ற
வள்ளியாரிணைக்களபமணிக்கலசமுலைதிளைக்கும்வாகைத்தோளான்.

(இ - ள்.) புள்ளிமான் தோல் உடுக்கை முஞ்சிநாண் அரைப்பொலிய - அரைப் புள்ளிகளையுடைய மான்றோலாடையும் தருப்பைக்கயிறும் அரையினிடத்து விளங்க, அக்கமாலை தெள்ளுநீர்க்குண்டிகையும் கரத்தொளிர - கண்மணி (ருத்ராக்ஷம்) மாலையுந் தெளிந்த நீரையுமுடைய கமண்டலமுங்கையில்விளங்க, திருக்குமரகோட்டம் என்னும் உள்ளியோர் பிறப்பறுக்கும் ஆச்சிரமத்து உறுவர்போற்ற - திருக்குமரகோட்டமென்று சொல்லப்படும் தம்மை நினைப்போர் பிறவியைக்கெடுக்கு மாச்சிரமத்தில் துறவறநிலையுடையோர் துதிக்க, வள்ளியாரிணைக்களபமணிக் கலசமுலைதிளைக்கும் வாகைத்தோளான்-வள்ளிநாயகியாரது இரண்டாகிய களபப்பூச்சணிந்த மணிக்கலசம் போன்ற முலையிலமுந்தும் மாலையணிந்த தோளையுடைய முருகன், இனிது இருந்தான் - இனிமையாக வீற்றிருந்தான். (எ-று.)

முருகக்கடவுள் சேனாபதீச்சர லிங்கத்தைப்பூசித்த பின்னர் இடையில் மான்றோலும் முஞ்சிநாணும்பொலியவும், திருக்கரங்களில் உருத்திராக்கமாலையும் கமண்டலமும் பிரகாசிக்கவும் உள்ளியோர் பிறப்பறுக்கும் ஆச்சிரமமாகிய குமரகோட்டத்தில் வீற்றிருந்தனர்.

வாகைமாலை - வெற்றிமாலை, அதனை "சூடினன் வாகைச்சுடர்த்தெரியல் சூடுதலும், பாடினர் வெல்புகழ்பல்கவிஞர் - கூடார்-உடல்போலழுவத் தொளிதிகழும் பைம்பூண், அடல் வேந்தனட்டார்த்தரசு" என்ற வெண்பாமாலையானுமறிக. (உ௪)

குருமணிகள்வெயிலெறிப்பக்குயிற்றுநீண்மதிற்குமரகோட்டமோர்கா
லிருவிழியிற்காண்டல்பெறிற்கடையோருமெழுபிறப்பின்மறையோராவர்
திருமறையோர்முதலானோர்தொழுதிறைஞ்சப்பெறுகிற்பிறதேவர்தேறுப்
பொருணிலைமைதெளிந்தின்பப்பெருவீட்டிற்பரபோகந்திளைத்துவாழ்வார்.

(இ - ள்.) குருமணிகள் வெயில் எறிப்ப குயிற்றுநீண்மதில் குமரகோட்டம் - நிறம்விளங்கிய மணிகளொளிவீசப் பதித்த நீண்டமதிலையுடைய குமரகோட்டத்தை, ஓர்கால் இருவிழியில் காண்டல்பெறில் கடையோரும் எழுபிறப்பில் மறையோராவர் - ஒருபொழுதில் இருவிழியால் காணப்பெற்றால் கடைப்பட்டநீசரும் எழுவகைப்பிறப்பினும் வேதியராகப் பிறப்பார்கள், திருமறையோர் முதலானோர் தொழுதிறைஞ்சப் பெறுகில்-சிறந்த வேதியர் முதலிய நான்குவருணத்தவர்களும் தொழுதுவணங்கப் பெறுவார்களானால், பின்தேவர் - மறுபிறப்பில் தேவராகப்பிறப்பார்கள், தேறுதபொருள் நிலைமைதெளிந்து இன்பப் பெருவீட்டில் - தேவர்கள் பெறுவாராயின் தேறுதற்கரிய மெய்ப்பொருளையுணர்ந்து பேரின்பவீட்டில், பரபோகந் திளைத்துவாழ்வார் - சிவபோகத்தை யனுபவிக்கப்பெற்று வாழ்வார்கள். (எ-று.)

குமாரக்கடவுள் வீற்றிருக்கும் குமரகோட்டத்தைப் பஞ்சமராயினும் ஓர்கால் காணப்பெறுவாராயின் மறுபிறப்பில் வேதியராகப்பிறப்பார்கள். வேதியர்முதலிய நான்குவருணத்தார்கள் காணப்பெற்றால் தேவராவார்கள் தேவர்கள் காணப்பெறின் இனிப்பிறவாத முத்தியின்பத்தைப் பெறுவார்களென்க. உ௫)

எழுபிறப்பில் மறையோராவர் என்றதை இப்பிறப்பொழிந்த எழுபிறப்பினும் அந்தணராகப்பிறந்து ஒவ்வோர் பிறப்பிலும் சமஸ்காரத்தையடைந்து அந்தணர் தன்மையையடைவாரெனக்கொள்ளலுமொன்று. பின் தேவர் தேருப்பொருணிலமை தெளிந்து இன்பப்பெருவீட்டில் பரபோகம் திளைத்துவாழ்வார் என்று ஓர் முடிபாக்கி மறுபிறப்பில் தேவர்களுந் தேறுதற்கரிய மெய்ப்பொருளை யுணர்ந்து பேரின்பவீட்டில் சிவபோகத்தை யனுபவித்து வாழ்வார்கள் எனப்பொருள்கொள்ளலுமொன்று. கடையோரும் இழிவுசிறப்பு.

கறங்கருவிப்பொலங்குடுமிவரைகிழித்தநெட்டிலைவேற்கடவுள்போற்றப்
பிறங்கியவித்தேவசேனுபதீச்சரமுதலைப்பெட்பினேத்தி
மறங்குலவுஞ்சுடராழிவலனேந்துமாலுருகுமுள்ளத்தானென்       [வாம்.
றறங்கரைவாரெடுத்துரைக்குமொருதிருப்பேர்பெற்றுனம்முறையுஞ்சொல்

(இ-ள்.) கறங்கு அருவி பொலம் குடுமிவரைகிழித்த நெட்டிலைவேல் கடவுள் போற்ற—ஒலிக்கின்ற அருவியையுடைய அழகிய சிகரத்தையுடைய கிரௌஞ்சகிரியைக்கிழித்த வேற்படையையுடைய முருகக்கடவுள் துதிக்க, பிறங்கிய இத்தேவசேனுபதீச்சரமுதலை பெட்பின்ஏத்தி—விளங்கிய இத்தேவசேனுபதீசத்து இறைவனை அன்பினால் வணங்கி, மறம் குலவும் சுடர் ஆழி வலன் ஏந்துமால்—கொடுமைமிகுந்த சுடரினையுடைய சக்கரத்தை வலக்கையிலேந்தும் மாயோன், உருகும் உள்ளத்தான் என்று அறங்கரைவார் எடுத்துரைக்கும் ஒரு திருப்பேர் பெற்றுன்—உருகுகின்ற மனத்தையுடையானென்று தருமத்தைக்கூறுவோர் எடுத்துச்சொல்லும் ஒப்பற்ற சிறந்தபெயரைப் பெற்றனன், அம்முறையும் சொல்வாம்—அந்த முறையையு மினியெடுத்துச் சொல்வாம். (எ-று.)

குமரகோட்டப் பெருமானால் பூசிக்கவிளங்குகின்ற சேனுபதீசப் பெருமானைத் திருமால் பூசிக்கப்பெற்று உருகுமுள்ளத்தானென்று ஓரரிய திருப்பெயர்பெற்ற சரித்திரத்தை இனியெடுத்துரைப்பாமென்க.

வரை-ஆகுபெயர்; வரைகிழித்த நெட்டிலைவேற்கடவுள் என்பதனை "புள்ளியற்பொருப்பு கெடுங்கடற்கிடங்கு மொருங்குடன் பருகிய மணிவேற்குமரன்" என்னுங் கல்லாடத்தானுமுணர்க. பொலங்குடுமி என்பதை பொன்னென்கிளவி என்பதனுன் முடிக்க.                                                  (உசு)

முள்ளரைச்செழுந்தாண்மலர்முளரி
வள்ளல்கற்பமொன்றிறுதலும்யாவையுமலங்கப்
பொள்ளெனப்பரந்துலகெலாம்விழுங்கியபுணரி
வெள்ளநீர்மிசைமிதந்தனன்மார்க்கண்டமேலோன்.

(இ-ள்.) முள்ளரை செழும்தாள்மலர் முளரிவீற்றிருக்கும்—முள்ளரையையுடைய செழுமையாகிய தாளையுடைய தாமரை மலரிலெழுந்தருளியிருக்கும், வள்ளல் கற்பம் ஒன்று இறுதலும் யாவையும் மலங்க—வள்ளலாகிய பிரமனுடைய கற்பமொழியுங் காலம் வரவும் எல்லாப்பொருள்களுமழிய, பொள் எனபரந்து உலகு எல்லாம் விழுங்கிய புணரி வெள்ளநீர்மிசை—வேகமாகப்பரவி உலகமுழுதும் போர்த்துக்கொண்ட

சமுத்திர வெள்ளத்தின்மேல், மார்க்கண்டி மேலோன்மிதந்தனன்—மார்க்கண்டேய முனிவர் மிதந்தனர். (எ-று.)

தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவன் இறக்குங்கற்பம் (பிரமகற்பம்) வர, அப்பொழுது பெரும்புறக்கடல் பெருவெள்ளங்கொண்டெழ அவ்வெள்ளத்தின்மேல் மார்க்கண்டேயமுனிவர் மிதந்தனரென்க.

பிரமகற்பங்கள் பலவாகலின் அவற்றுளிக்கற்பமொன்றென்பார் முளரி வீற்றிருக்கும் வள்ளல் கற்பமொன்றிறுதலும் என்றார். (உஎ)

தனியனாகிவெஞ்சலதியினுழிதருந்தகைசால்
புனிதமாதவனாயிடைப்பொறியராத்தவிசி
னினிதுகண்வளர்மாயனைக்கண்டுசென்றிறைஞ்சி
நனிமகிழ்ச்சிமீக்கிளர்ந்தெழுமனத்தொடுநவில்வான்.

(இ-ள்.) தனியனாகி வெம் சலதியின் உழிதரும்—ஒருவனாகி கொடிய சமுத்திரத்தின்கண் மிதக்கும், புனிதமாதவன் ஆயிடை பொறியராத் தவிசின் இனிது கண்வளர் மாயனைக்கண்டு—பரிசுத்தமாகிய பெருந்தவமுடைய மார்க்கண்டேயமுனிவர் அவ்விடத்துப் புள்ளிகளையுடைய பாம்பாகியபடுக்கையில் இனிமையாகத் துயில்கின்ற விஷ்ணுமூர்த்தியைபபார்த்து, சென்று இறைஞ்சி நனிமகிழ்ச்சி மீ கிளர்ந்தெழும் மனத்தொடு நவில்வான்—போய் அஞ்சலிசெய்து மிக்கமகிழ்வு மிகுந்தெழுகின்றமனமுடையராய்ச்சொல்லுகின்றார். (எ-று.)

மேற்கூறிய அப்பெருவெள்ளத்தில் வேறொருவருமின்றித் தனியே மிதந்துவருகின்ற மார்க்கண்டேயமுனிவர் திருமாலைக்கண்டு அஞ்சலிசெய்து மகிழ்ச்சியோடு ஒன்று சொல்லத்தொடங்கினாரென்க.

ஆயிடை எனச் சுட்டுநீண்டது. (உஅ)

நகைமலர்த்துழாய்நாயகஞாலமற்றெவையும்
பகல்செய்வெங்கதிர்ச்சண்டமாப்பரிதிநின்றெரிப்பத்
துகள்படுஞ்செயல்கண்டயானத்துணைப்பொழுதி
னிகழருந்திறலறிவுபோயெய்தினன்மயக்கம்.

(இ-ள்.) நகைமலர்த்துழாய் நாயக—விளக்கமாகிய துழாய்மாலையணிந்த இறைவனே, ஞாலமற்றெவையும் பகல்செய் வெம்கதிர் சண்டமாப்பரிதிநின்று எரிப்ப—உலகமும் பிறவுமாகிய வனைத்தையும் பகலைச்செய்கின்ற வெம்மையாகிய சண்டவேகத்தையுடைய சூரியனின்றெரிக்க, துகள்படுஞ் செயலகண்ட யான் அத்துணை பொழுதின்—துகளாகின்ற செய்கையைப்பார்த்த யான் அவ்வளவு காலத்தில், இகழருந்திறல் அறிவு போய்மயக்கம் எய்தினன்—இகழ்ச்சிநீங்கிய அரியவன்மையையுடைய என்னறிவுபோய் மயக்கத்தையடைந்தேன். (எ-று)

திருமாலே, சண்டவேகத்தையுடைய சூரியன் நிலைபெற்று நின்றெரிக்க (அப்பொழுது) உலகமும் உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் துகளாய்ப்போதலைக்கண்ட யான் அக்காலத்தில் எமனைக்கண்டும் அஞ்சாத அறிவுகலங்கி மயக்கத்தையடைந்தேனென்க. (உக)

ஏய்ந்தமையறீர்ந்திதுபொழுதுணர்ச்சிவந்தெழுந்தேன்
காந்துவெம்புனற்கடுந்திரைப்பரப்பிடைமிதந்து

நீந்திநீந்தியென்னெடியகால்கரங்களுமெலிந்தே
யோய்ந்தநல்வினையிருந்தவாறுனையிவட்கண்டேன்.

(இ-ள்.) ஏய்ந்தமையல் தீர்ந்து இதுபொழுது உணர்ச்சிவந்து எழுந்தேன்—பொருந்திய மயக்கம் நீங்கி இச்சமயத்தில் உணர்ச்சிபெற்றெழுந்தேன், காந்து வெம்புனல் கடுந்திரை பரப்பிடை—காந்துகின்ற வெம்மையாகிய நீரையுடைய கடிய அலைகளையுடைய சமுத்திரத்தில், மிதந்து நீந்தி நீந்தி என் நெடிய கால் கரங்களுமெலிந்து ஓய்ந்துபோயின—மிதந்து இடைவிடாமல் நீந்தி என்னுடைய நீண்டகால்களும் கைகளும் வருந்தி ஓய்ந்துபோயின, நல்வினை இருந்த ஆறு—நல்வினை கூட்டியவழி, உனை இவண் கண்டேன்—உன்னை யிங்கே கண்டேன். (எ-று.)

மயக்கமடைந்த நான் இப்பொழுது மயக்கநீங்கி உணர்ச்சிபெற்றெழுந்து அக்னிமயமாயிருக்கின்ற இந்த பிரளயத்தில் மிதந்து நீந்தி நீந்தி என்னுடைய கைகால்கள் ஓய்ந்துபோயின, (இச்சமயத்தில்) நல்வினைவசத்தால் உன்னை யிங்கு கண்டேனென்க.

இறைவனருளால் பிறவிப்பெருங்கடலைக் கடந்த முனிவருக்கு இவ்வெள்ளத்தைக்கடந்தலரிதன்றாயினும் வெள்ளத்தின் பெருமை தோன்ற கால்கரங்களுமெலிந்தே ஓய்ந்த எனவும், நீந்துகின்ற தனக்கோர் துணையாகத் திருமாலைக்கண்ட மகிழ்ச்சி தோன்ற நல்வினையிருந்தவாறுனை யிவட்கண்டேனெனவுங்கூறினார். அடுக்கு இடைவிடாமைப்பொருளது. (௩௰)

நிலமடக்கொடிவனமுலைதிளைக்குநீண்மார்ப
வுலகமெங்கணுங்கருகிருண்மூடியதுரவோ
யிலகுபேரொளியிருசுடர்யாங்ஙனம்போய
குலவுமேனையகோளொடுநாள்களெங்கிறந்த.

(இ-ள்) நிலமடக்கொடி வனமுலைதிளைக்கு நீண்மார்ப—பூமிதேவியாகிய இளங்கொடிபோல்வாளுடைய அழகிய முலைகளழுந்தும் நீண்ட மார்பினையுடையானே, உலகம் எங்கணும் கருகு இருள்மூடியது—உலகெல்லாம் கருகிய இருள்மூடிக்கொண்டது, உரவோய்—அறிவையுடையானே, இலகு பேரொளி இருசுடர் யாங்ஙனம்போய—பிரகாசிக்கும் பேரொளியையுடைய சூரியசந்திரரென்னு மிருசுடரும் எவ்விடம்போயின, குலவும் ஏனையகோளொடு நாள்கள் எங்கிறந்த—பொருந்துகின்ற ஏனைய கிரகங்களுடன் நட்சத்திரங்கள் எங்கொழிந்தன. (எ-று.)

திருமாலே, (இப்பொழுது) உலகமெங்கும் இருள்மூடிக்கொண்டது, சூரியசந்திரர்கள் ஏனையகிரகங்கள் நட்சத்திரங்கள் எங்கேயழிந்தொழிந்தன என்க.

சூரியசந்திரர் முதலாயினோரிருப்பாராயின் இருள்நிலைபெற்றிராதாகலான் எங்கிறந்தன என்றார். (௩௧)

சகமிசைப்பயில்பொருளெலாமெவ்வுழிச்சார்ந்த
திகழநீயெனக்கிவையெலாந்தெரித்தியென்றிரப்ப
நிகழுமாதவன்மாதவன்றன்னைநேர்நோக்கி
யகவிடத்துளபொருளெலாமென்னகட்டுளவால்.

(இ-ள்.) சகமிசை பயில் பொருள் எல்லாம் எவ்வுழி சார்ந்த—உலகத்துப்பயிலும் சராசரங்களாகிய எல்லாப்பொருளும் எவ்விடத்துச் சார்ந்தன, நீ எனக்கு இவை எல்லாம் திகழ தெரித்தி—நீர் எனக்கிவற்றையெல்லாம் விளங்க அறிவியும், என்று இரப்ப—

என்றிரக்கமாகக்கேட்க, நிகழுமாதவன் மாதவன்தன்னை நேர்நோக்கி-அவ்வெள்ளத்தில் தவழ்கின்ற திருமால் பெருந்தவத்தையுடைய மார்க்கண்டேய முனிவரை நேராகப் பார்த்து, அகலிடத்து உள்ள பொருள் எல்லாம் என் அகட்டு உள—அகன்ற உலகத்துள்ள வெல்லாப்பொருள்களும் என்வயிற்றிலுள்ளன. (எ-று.)

சூரியசந்திராதியர்கள் நீங்கலாக இவ்வுலகிலுள்ள இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளும் எங்குபோயின. ஆகிய இவையெல்லாம் எனக்கு நன்றாகக்கூறுவாயென்று மாதவனாகிய திருமாலைக்கேட்க அத்திருமால் மார்க்கண்டேய முனிவரைப் பார்த்து எல்லாம் என் வயிற்றிலே இருக்கின்றன என்றானென்க. சகமிசைப்பயில் பொருளெலாமென்றது இயங்கு திணை நிலைத்திணைப்பொருள்களை. தோன்றி நின்றழிவதாகலின் சகமென்றார். (௯௨)

புகுந்துநோக்குதியென்றலுமுனிவரன்புகல்வான்
முகுந்தமுன்னொருகற்பத்திம்மொழியினாலன்றே
மிகுந்தவஞ்சனைப்படுத்தனை விளைமதுப்பிலிற்றி
நகுந்தடம்பொகுட்டம்புயவாழ்க்கைநான்முகனை.

(இ-ள்.) புகுந்து நோக்குதி என்றலும் முனிவரன்புகல்வான் - புகுந்துபாரென்னலும் மார்க்கண்டேயமுனிவர் சொல்வார், முகுந்த - மாயவனே, முன் ஒரு கற்பத்து இம்மொழியினால் அன்றே - முன்னையொருகற்பத்தி லிச்சொல்லினாலல்லவா, விளைமது பிலிற்றி நகுதடம்பொகுட்டு அம்புயவாழ்க்கை நான்முகனை - விளைகின்ற தேனைச் சிந்திவிளங்கும் பெரிதாகிய கொட்டையையுடைய தாமரைமலர் வாழ்க்கையையுடைய பிரமனை, மிகுந்த வஞ்சனை படுத்தனை - மிக்கவஞ்சனை செய்தனை. (எ-று.)

என்வயிற்றுக்குள் நீபுகுந்து எல்லாவற்றையும் பார்ப்பாயென்று திருமால் சொல்லவும், மார்க்கண்டேயமுனிவர் சொல்லுவார். முகுந்தனே எனக்கு இப்பொழுது சொல்லியதுபோலும் முன்னொரு கற்பத்தில் பிரமனுக்குக்கூறி அவனை வஞ்சித்தனையல்லவா என்றனரென்க.

பிரமன் ஒருகற்பத்தில்நீரில்மிதந்துழி திருமாலைக்கண்டு மார்க்கண்டேயமுனிவர் கேட்டதுபோலும் கேட்கத் திருமாலவனை வஞ்சித்துத் தன்வாய்வழிகொள்ள அப்பிரமன் தான் வெளிப்படுவதற்கு வேறுவழிகாணாது திருமால் வஞ்சத்தையுணர்ந்து நாபியின் வழியே வெளிவந்தனனாதலின் நான்முகனை மிகுந்த வஞ்சனைப்படுத்தனைஎன்றார். பிரமனைத் திருமால் விழுங்கியது,

"அழியாயோகத் துயில்புரியு மவனோடடைந்த வலர்மலரோன், மொழிவானென்னை நீவிழுங்கி முன்னாட்படைத்தல் செய்தாய்" எனவாயு சங்கிதை உருத்திரோற்பத்தியத்தியாயத்தில் வருதல்காண்க. (௯௩)

முனைகடந்தவேன்மணிமுடியம்பரீடன்றன்
மனையினாரதப்பருப்பதமுனிவரைவஞ்சித்
தனையமன்னவன்புதல்வியைக்கவர்ந்துகொண்டகன்று
வினையமாவலிதனக்குமுன்வஞ்சனையிழைத்தாய்.

(இ-ள்.) முனைகடந்து வேல் மணிமுடி அம்பரீடன்றன்மனையில் - போரைக் கடந்த வேலையும் இரத்தினகிரீடத்தையுமுடைய அம்பரீட மகாராசனுடைய மாளிகையில், நாரதபருப்பதமுனிவரை வஞ்சித்து அனைய மன்னவன் புதல்வியைக் கவர்ந்து

கொண்டு அகன்றாய் - நாரதரோடு தும்புருவையும் வஞ்சனைசெய்து அவ்வரசன் மகளைக் கைக்கொண்டுபோயினாய், இனைய மாவலி தனக்கு முன் வஞ்சனையிழைத்தாய் வருந்தும்படி மாவலியையும் முன்வஞ்சித்தாய். (எ-று.)

அப்பிரமதேவனை யன்றி அம்பரீஷனென்னும் அரசனுடைய மனையில் தும்புரு நாரதரென்னும் மஹரிஷிகளை வஞ்சித்து அவ்வரசன் மகளைக் கொள்ளைகொண்டு போனாய், மாவலியையும் வஞ்சனைசெய்திருக்கின்றாய் என்க.

அம்பரீஷனென்னு மரசன் மகளை நாரதர் பருப்பதருமாகிய இருவரும் ஒருவரை யொருவரறியாமல் வஞ்சித்துககொள்ள வெண்ணி திருமால்பால் இவ்விருவருந் தனித் தனியேசென்று நாரதர் பருப்பதருக்கு குரங்குமுகமும் பருபபதர் நாரதருக்குக் கிழ முகமும் ஆகவேண்டுமென்றுவேண்ட அவரது வஞ்சத்தையுணர்ந்த திருமால் அவ்விரு வர் வஞ்சத்தையும் ஒழித்து அவர்களுக்கு நல்லுணர்ச்சியைப்போதிக்காது அவ்விருவர் வஞ்சமும் தன்வஞ்சத்துக்கு மிக்க நலமென்றெண்ணி அவ்விருவருக்கும் அவ்வாறேயா குக என்று விடைகொடுத்தனர். அவ்விருவரும் அம்மரீஷன் சபாமண்டபத்தில் சென் றிருக்க அவ்வரசன் மகள் மாலையிடவந்தபோது அவ்விருவர் முகத்தையும் பார்த்து மாலையிடுவதற்கு நாணிநிற்குந்தருணத்தில் திருமால் அவ்விருவரிடைதோன்ற அவருக்கு மாலையிட்டனள் என்பது வரலாறு.

இதனால் தன்னடியவராகிய அவ்விருவருடைய வஞ்சத்தை யொழிக்காமல் அவ் விருவரால் விரும்பிய அரசன் மகளைத் தான்விரும்பி அவ்விருவரையும் வஞ்சித்துத் தான் மாலைசூடிக்கொண்டமையால அம்பரீடன்றன்மனையி னாரதபருப்பதமுனிவரை வஞ்சித் தனைய மன்னவன் புதல்வியைக் கவர்ந்துகொண்டகன்றாய் என்றார். (௩௪)

**இன்னவாறுனைநம்புநரடியவரிடத்துந்**
**துன்னுமாயமேசெய்வதுன்றொழிலெனக்கண்டே**
**னின்னையஞ்சுகேனெறிக்கொடுசெல்வனென்றியம்பி**
**யன்னநீரினைக்கரங்கொடுநீந்தியங்ககன்றான்.**

(**இ-ள்.**) இன்ன ஆறு உனை நம்புநர் - இன்னவகையுன்னை நம்புவோர்பக்கலிலும், அடியவரிடத்தும்-அடியார் பக்கலிலும், துன்னுமாயமே செய்வது உன்தொழில் எனக் கண்டேன் - பொருந்திய மாயையே விளைப்பது உன்செய்கையென்று தெரிந்தேன், நின்னை அஞ்சுகேன் நெறிக்கொடு செல்வன் என்று இயம்பி-உனக்கஞ்சுகின்றேன் வழி யுணர்ந்துபோவேனென்று சொல்லி, அன்னநீரினை கரங்கொண்டு நீந்தி - அச்சமுத்திர நீரைக்கையானீந்தி, அங்கு அகன்றான் - அவ்விடத்தினின்று நீங்கினார். (எ-று.)

இவ்வகையாக- உன்னை நம்பின பிரமனிடத்தும் மாவலியிடத்தும் உன்னுடைய அடியார்களாகிய தும்புரு நாரதரிடத்தும் மாயத்தையேசெய்வது உன்னுடைய தொழி லென்று நன்றாகக்கண்டேன். ஆகையால் நீ உண்மையானவனல்லன், உனக்கு நானஞ்சு கின்றேன் என்று அவ்வெள்ளத்தைத் தன்னுடைய கைகளால் நீந்திக்கொண்டு அவ் விடம்விட்டுச் சென்றனனென்க.

பிரமதேவனும் தும்புரு பருப்பதர்களும் மாவலியும் இவர்களெல்லாம் அடியவர் களும் நம்பினவர்களுமாயிருக்க, திருமால் அவர்களிடத்து அன்புபாராட்டி அவர்களைக் காவாது வஞ்சனையையே செய்தனராகலின் இன்னவாறுனை நம்புநரடியவரிடத்துந் துன்னுமாயமே செய்வதுன் றொழிலெனக்கண்டே னென்றார். (௩௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செல்லுமெல்லைநீர்மிசைத்தோன்றும்வேதமாஞ்சினைப்
பல்லவங்கள்கண்டவைபற்றியுள்ளிழிந்தன
னெல்லையங்கணேக்கிணுனெளிப்பிழம்பினீடிய
மல்லலம்பொனிஞ்சிசூழ்மாடக்காஞ்சிமாநகர்.

(இ-ள்.) செல்லும் எல்லை நீர்மிசைதோன்றும் வேதமாஞ்சினை பல்லவங்கள் கண்டு - நீந்திச்செல்கின்ற அந்தச்சமயத்தில நீரிற்றோன்றுகின்ற வேதமாகிய மாமரக் கிளைகளையும் தளிர்களையும் பார்த்து, அவைபற்றி உள் இழிந்தனன் - அவற்றைப் பற்றி யுள்ளேயிறங்கினன், ஒல்லை அங்கண் ஒளிப்பிழம்பில் நீடிய மல்லல் அம்பொன் இஞ்சிசூழ் - விரைவாக அங்கே மிக்க வொளிவீசுகின்ற வளப்பம்பொருந்திய அழகிய பொன்னாலாகிய மதில்சூழ்ந்த, மாடக் காஞ்சிமாநகர்நோக்கினன் - மாடங்களையுடைய காஞ்சிமாநகரைப் பார்த்தார். (எ-று.)

மார்க்கண்டேயமுனிவர் அவ்வெள்ளத்தில் செல்கின்றபொழுது அவ்வெள்ளத்தின்மேல் தோன்றுகின்ற வேதவிருக்ஷத்தின் தளிரைகண்டு அதைப்பற்றிக் கொண்டு விரைவாக உள்ளே சென்று காஞ்சிநகரத்தைக் கண்ணுற்றனரென்க.

பிரளயம்வந்தபோது பிரளயசித்தாகிய காஞ்சியையழிக்காதுசூழ்ந்திருக்க அப்பொழுது இறைவனுக்கு நிழல்செய்யும் மாவிருக்ஷமானது மேலோங்கித்தளிர்த்து அவ்வெள்ளத்தி லசைந்துகொண்டிருந்ததென்றுணர்த்த நீர்மிசைந்தோன்றும் வேதமாஞ்சினைப் பல்லவங்களென்றார். (௩௯)

எற்றுதெண்டிரைப்புனலிஞ்சியின்வளைப்பவெண்
புற்புதத்தினுள்வெளிப்பொற்பெனத்திகழ்ந்துநீ
ளொற்றைமாவினாருளொளிதுளும்பமன்னுமூ
ரற்புதத்தைநோக்குதோறற்புதத்தனாயினான்.

(இ-ள்.) எற்று தெள்திரை புனல் இஞ்சியின் வளைப்ப - மோதுகின்ற தெளிந்த அலைநீர் மதிலை வளைப்ப, வெண்புற்புதத்தின் உள்வெளி - வெண்மையாகிய நீர்க்குமிழியின் உள்வெளியானது, பொற்பெனத்திகழ்ந்துநீள் ஒற்றைமாவினார் அருள் ஒளி துளும்ப-அழகாகவிளங்கி நீண்ட ஒற்றையாகிய மாமரத்தினிழலிலுள்ள ஏகாம்பரநாதர் அருளாகிய பிரகாசம் ததும்ப, மன்னும் ஊர் அற்புதத்தை நோக்குதோறும் - நிலைபெற்றவூரினற்புதத்தைப் பார்க்குந்தோறும், அற்புதத்தனாயினான் - அதிசயமுடையாராயினார். (எ-று.)

பிரளயவெள்ளமானது காஞ்சியைவளைக்க அவ்வெள்ளத்துக்குள்ளிருக்கும் காஞ்சிநகரமானது ஓர் நீர்க்குமிழியினுள்வெளியைப்போல விளக்குங்காட்சியையும் ஏகம்பவாணருடைய திருவருட்பிரகாசத்தையும் கண்ணுற்று அற்புதத்தையடைந்தனரென்க.

அங்கணெய்ப்புநீத்தபினண்ணல்கம்பவாணனைப்
யுங்கணெய்தியர்ச்சனையுஞற்றியவ்விராவெலாந்
துங்கமாவினீழல்வாழ்சோதிமுன்னர்வைகினான்
சங்கமாழியேந்தியோன்றானுந்தொடரநண்ணினான்.

(இ-ள்.) அங்கண் எய்ப்புநீத்தபின் - (மார்க்கண்டேயமுனிவர்) அங்கேதன்வருத்தநீங்கியபின், அண்ணல் கம்பவாணனை உங்கண் எய்தி - இறைவராகிய ஏகாம்பர நா

தனை அத்தலத்தடைந்து, அருச்சனை உஞற்றி - அருச்சனைசெய்து, அ இரவெல்லாம் தூங்கமாவின்நீழல்வாழ் சோதிமுன்னர்வைகினன் - அந்த இராவெல்லாம் பரிசுத்த மாகிய மாமரத்தி னிழலில்வாழ்கின்ற சோதிசொரூபராகிய ஏகாம்பரநாதர் சந்நிதியின் முன்னே வீற்றிருந்தனர் (இவரிங்ஙனமிருக்க) சங்கம் ஆழியேந்தியோன் தானும்-சங் குசக்கரத்தையேந்தியதிருமாலும், தொடரநண்ணினன் (மார்க்கண்டேயமுனிவன் செ ன்றநெறியேதானுந்) தொடர்ந்துவந்தான். (எ-று.)

மார்க்கண்டேயமுனிவர் காஞ்சிநகரத்தையடைந்து தானீந்திவந்த இளைப்புநீங் கியபின்னர் ஏகம்பவாணர் வாழ்கின்ற இடத்தையடைந்து அர்ச்சித்து அந்தராத்திரி யெல்லாம் அவ்விடத்திலேயே யிருந்தனர். திருமால் தம்மை நிந்தித்துப்போன மார்க் கண்டேயர் எப்படிசென்றாரோ அந்த மார்க்கத்தைத்தானும் காணவேண்டுமெனச் செ ல்லத் தொடங்கினனென்க. (௩௮)

நண்ணுநெறியிற்காஞ்சிமாநகரமெய்தியந்நகர்
வண்ணமுற்றுமற்புதமருவநோக்கிமாநிழ
லண்ணலாரையேத்தியம்முனிவன்சொன்னயாவையு
மெண்ணியெண்ணிநெஞ்சுளைந்தென்னினைந்தவாறெனு.

(இ-ள்.) நண்ணுநெறியில் காஞ்சிமாநகரம் எய்தி - பொருந்தும் வழியில் காஞ் சிமாநகரத்தையடைந்து, அந்நகர் வண்ணமுற்றும் அற்புதம் மருவநோக்கி - அந்நகர த்தின் சிறப்புமுழுவதும் அதிசயம் பொருந்தப்பார்த்து, மாநிழல் அண்ணலாரை ஏத்தி - மாமரநிழலிலமர்ந்த ஏகாம்பரநாதனைவணங்கி, அம்முனிவன் சொன்னயாவை யும் எண்ணி எண்ணி - அந்த மார்க்கண்டேய முனிவர் தன்னைச் சொன்னயாவையு மிடைவிடாமலெண்ணி, நெஞ்சு உளைந்து என் நினைந்தவாறெனு - மனம்வருந்தி யாது நினைந்தவாறென்று. (எ-று.)

மார்க்கண்டேய முனிவர் சென்றவழியேதானுஞ் சென்றபொழுது அம்மார்க்கம் காஞ்சிநகரத்தில் கொண்டுபோய்ச்சேர்க்க அந்நகரத்தையடைந்து, அங்குள்ள அற்பு தங்களெல்லாங் கண்டதிசயித்து ஏகம்பவாணனைத் தோத்திரஞ்செய்து தன்னை மார்க்கண்டேயமுனிவர் சொல்லிய சொற்களையெல்லாம் எண்ணி எண்ணி மனம்வரு ந்தி நம்மை யிந்தமுனிவர் நிந்தித்தவகை என்னென்று எண்ணினனென்க.

எனுவென்னும் செய்யா என்னும் வினையெச்சம் நண்ணினனென்னும் பின்வருஞ் செய்யுளின் வினைமுற்றுக்கொண்டு முடிந்தது, குளகமாகலின். (௩௯)

சேர்ந்தவர்க்குவஞ்சமேநாடொறுஞ்செய்கின்றனேன்
வார்ந்தகூந்தலம்பிகைமாயையின்மயங்கினே
னேர்ந்தமாயநீக்குமாநீள்வரைப்பிராட்டிதாள்
சார்ந்துபோற்றுவேனெனத்தனிப்பிலத்தைநண்ணினன்.

(இ-ள்.) சேர்ந்தவர்க்கு வஞ்சமே நாள்தோறும் செய்கின்றனேன் - என்னைத் தஞ்சமென்றடைந்தவர்க்கு வஞ்சனையையே எந்நாளுஞ்செய்கின்றேன், வார்ந்த கூந்தல் அம்பிகைமாயையின் மயங்கினேன் - வகிர்ந்தகூந்தலையுடைய இறைவியின் மாயையி னால் மயங்கினேன், நேர்ந்தமாயைநீக்குமாறு நீள்வரைபிராட்டிதாள் சார்ந்துபோற்று வேன் என்ன - (எனக்கு நேர்ந்த மாயையை நீக்கிக்கொள்ளுமாறு பர்வதராஜன் புத் திரியாகிய உமாதேவி பாதங்களையடைந்து வழிபடுவேனென்று, தனி பிலத்தைநண்ணி னன் - ஒப்பற்றபிலாகாசத்தை யடைந்தான். (எ-று)

(மார்க்கண்டேயமுனிவர் நம்மைநிந்தித்துக் கூறியபடியே) நம்மைச்சேர்ந்தவர்க்கு நாள்தோறும் வஞ்சனையையே செய்கின்றவனாயிருக்கின்றோம் நாம் செய்கின்ற வஞ்சத்தில் நம்மைச்சார்ந்தவர் எவ்வாறு மயங்குகின்றனரோ அதுபோலும் மகாதேவியின் மாயையினால் நாமும் மயங்கினோம் இம்மாயையை மகாதேவியைவழிபட்டு நீக்கிக்கொள்வோமென்று அத்தேவி வீற்றிருக்கும் பிலாகாசத்தையணுகினனென்க.

தான்மயங்கிச் செய்ததொழில் திரோதான சத்தியினாலென்றுணர்ந்தானென்பார் வார்ந்தகூந்தலம்பிகைமாயையின் மயங்கினே னெனவும், அத்திரோதானசத்தி அநுக்கிரகசத்தியினாலன்றி நீக்கிக்கொள்ளக்கூடா தென்றுணர்ந்தானென்பார் நேர்ந்தமாயைநீக்குமா றீள்வரைப்பிராட்டிதாள் சார்ந்துபோற்றுவே னெனவுங்கூறினார். (சுய)

ஆயிடைப்பிராட்டியையருச்சித்தேத்தியருளினான்
மாயநீங்கிமெய்யுணர்வெய்திப்பஞ்சவாவிநீ
ரேயமூழ்கித்தேவசேனாபதீசத்தேகியந்
நாயனாரைவிதியுளிநயந்துபூசையாற்றினான்.

(இ-ள்.) ஆயிடை பிராட்டியை அருச்சித்து ஏத்தி - அப்பிலாகாசத்தில் இறைவியை யருச்சனைசெய்து வழிபட்டு, அருளினால் மாயநீங்கி மெய் உணர்வு எய்தி-அவள் கருணையால் மாயையையொழிந்து மெய்யுணர்ச்சிதலைசிறந்து, பஞ்சவாவிநீர் ஏயமூழ்கி தேவசேனாபதீசத்து ஏகி - உலகாணித் தீர்த்தத்திற் பொருந்தநீராடி தேவசேனாபதீசத்திற் சென்று, அந்நாயனாரை விதியுளிநயந்து பூசையாற்றினான் - அக்கடவுளை யாகமவிதியால் விரும்பிப் பூசனைசெய்தான். (எ-று.)

அப்பிலத்தைச்சேர்ந்து அங்கெழுந்தருளியிருக்கின்ற அனுக்கிரகரூபியாகிய பராசத்தியை வழிபட்டேத்தி அவளருளினால் தன்னைச்சூழ்ந்திருந்த திரோதம் நீங்கப்பெற்று மெய்யுணர்ச்சியடைந்து உலகாணித்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தேவசேனாபதீசத்தையடைந்து அங்குவீற்றிருக்கும் இறைவனை ஆகமவிதிப்படி யன்போடு பூசித்தனனென்க.

அநுக்கிரகத்தினால் திரோத நீக்கமும் ஞானோதயமும் உண்டாவது இயல்பாகலான் அருளினான் மாயநீங்கி மெய்யுணர்வெய்தி எனவும், ஞானோதயமான பின்னரே சிவனையடைதலும் வழிபடுதலு முண்டாமாகலின் சேனாபதீசத்தேகி யந்நாயனாரை விதியுளிநயந்து பூசையாற்றினானெனவுங் கூறினார். உளி என்பது மூன்றுருவதன் பொருள்படுவதோ ரிடைச்சொல்; "இயல்புளிக்கோலோச்சும்" என்புழிப்பரிமேலழகர் கூறலானுமறிக. (சுக)

கருணைகூர்ந்துநமபர
பரசியேத்திநின்னடிப்பத்திமாறிலாவர
மருளவேண்டுமெய்த்தவரடியர்மாட்டுவஞ்சனை
யொருகணத்துமெண்ணிடாவுளமெனக்குவேண்டுமால்.

(இ-ள்.) கருணைகூர்ந்து நம்பனார் காட்சிதக்கு அளித்தலும் - (திருமால்வழிபட) அருள்மிகுந்து இறைவன் தரிசனந் தந்தருளலும், பரசி ஏத்தி - துதித்துவணங்கி, நின் அடிபத்தி மாறிலாவரம் அருளவேண்டும் - உன்னுடைய திருவடியில் பத்திமை என்றும் வேறுபடாதவரம் தந்தருளல்வேண்டும் (அன்றியும்), மெய்த்தவர் அடியார் மாட்டு ஒருகணத்தும் வஞ்சனை எண்ணிடாத உளம் எனக்குவேண்டும் - உண்மை

யாகிய தவமுடைய சிவனடியாரிடத்து ஒரு கணப்போதேனும் வஞ்சனையையெண்ணுதமனமெனக்கருளலவேண்டும் (எ-று)

திருமால் அன்போடு தேவசேனாபதீஸ்வரரைப் பூசிக்க இறைவன் சருணைகூர்ந்து இடபாரூடராய்க் காட்சிதந்தருளலும் வணங்கிப்போற்றி என்னையனே உன்னுடைய திருவடியின்கண் எக்காலத்தும் மாறுபடுதலில்லாத பத்திமையும் உன்னடித்தொண்டே மெய்த்தவமென்றுகொண்ட உன்னடியாரிடத்து ஒருகணத்தும் வஞ்சித்தலையறியாத மனமுமெனக்குப் பிரசாதித்தருளல் வேண்டுமென்றனனென்க.

இறைவனை வழிபடுதல் சிவப்பேற்றையும் அவனடியாரை வழிபடுதல் சிவானந்தத்தையும் விளைவிப்பனவாகலான நின்னடிப்பத்தி மாறிலாவரம், அடியர்மாட்டு வஞ்சனை யெண்ணிடா வுளம் எனக்கு வேண்டும் என்றார். நின்னை யஞ்சுகேனெனவும் உன்னை நம்பும் அடியவரிடத்து மாயமே செய்வது உன்தொழிலெனக் கண்டேனென வும் மெய்த்தவத்தையுடைய மார்க்கண்டேய முனிவராகிய சிவனடியாரால் மிகவும் நிந்திக்கப்பட்டதனு லன்றோ என்னறிவை மறைத்திருந்த திரோதான சத்தி யீதென்றுணரப்பெற்றேன், அதுபெறவே திருவருளை நாடினேன், அவ்வருளை நாடவே அத்திரோதனம் நீங்கப்பெற்று உன்னடிகூடினேன், உன்னடிகூடவே என்றுங்காணுத திருவுருவை யீண்டேகண்டேன், இனியான் பெறுவது உன்னையும் உன்னடியாரிடத்து அன்பையுமேயன்றிப் பெறுவதொன்றில்லை யாகலின் இறைவனே நின்னடிப்பத்தி அடியார் மாட்டு உருகும் உள்ளம் எனக்கு வேண்டுமென்றிரந்தார் என்று கொள்ளலுமொன்று. (௪௨)

ஈண்டுநின்புதல்வனோடெந்தைதிருமுன்வைகவும்
வேண்டுமென்றிரந்துவிண்ணப்பஞ்செய்யவெண்பிறை
நீண்டசெஞ்சடைப்பொதிநிருமலப்பரம்பொரு
ளாண்டகைப்பிரான்மகிழ்ந்தன்னவாகவென்றுபின்.

(இ-ள்.) ஈண்டு நின் புதல்வனோடு எந்தை திருமுன்வைகவும் வேண்டும் - இங்கு உமது குமாரரோடு எம்பெருமானாகிய உன்சந்நிதியின் முன் வசித்திருக்கவும் வேண்டும், என்று இரந்து விண்ணப்பம்செய்ய - என்று (மனங்) குழைந்து விண்ணப்பிக்க, நீண்டசெஞ்சடை வெண்பிறைபொதி நிருமலப் பரம்பொருள் ஆண்டகைப் பிரான்-நீண்ட செம்மையாகிய சடையில் வெள்ளியசந்திரன்தங்கிய அநாதிமலமுத்த சித்துருவாகிய இறைவன், மகிழ்ந்து அன்னவாக என்று-மகிழ்ச்சியடைந்து நீகேட்டவாறுகுக வென்றருளி, பின் - பின்னர், (எ-று.)

(திருமால், நின் அடிப்பத்திமையும் அடியார்பத்திமையும் வேண்டியது மல்லாமல்) இவ்விடத்தில் இளையபிள்ளையாரோடு உன்னுடைய சந்நிதானத்திற்கு முன்னே நானுமொருவனுக நிற்கவேண்டும் என்று உருகியமனத்தோடு விண்ணப்பஞ்செய்ய அத்திருமாலது அன்பை நாடி சந்திரசேகரனாகிய இறைவன் நீ எண்ணியாங்கருள்செய்தோமென்று மீளவும் அனுக்கிரகஞ்செய்யத் திருவுள்ளத்தி லெண்ணினனென்க

இதுகாறும் மலத்தின் முன்னின்று அம்மலத்தையே நோக்கியன்றோ அன்பிழந்து பிறப்பிறப்பிலுழன்றேன் இனிச் சிவத்தின் முன்னின்று சிவத்தையே நோக்கி அன்பைப்பெற்று உள்ளம் உருகுதலாகிய முத்திநிலையிலேயே நிற்க விரும்பினேனாகலின் எந்தை திருமுன்வைகவும்வேண்டும் எனவும், பெத்தானுபவத்தில் கைப்புற்று சிவானுப

லத்தில் விருப்புற்று பேரின்பநிலையையெய்த இன்பந்தரும் தம்புதல்வனோடு ஒருங்கு நிற்க இரந்து விண்ணப்பஞ்செய்தானாகலான் ஆண்டகைப்பிரான் மகிழ்ந்தனனென வுங் கூறினர்.

ஆன்மா அதுவது வாகுந் தன்மையுண்மையால் ஆன்மாக்களில் ஒருவனாகிய யான் நின்மலனாகிய உன்சந்நிதியின் முன்னின்றால் என்னுள்ள முருகுமேயன்றி உன்சந்நிதி யினின்று நீங்குவேனாகில் என்னையனாதிமலம் மறைக்க நான்வேம்பினைத்தின்ற புழுப் போல் அம்மலத்தையே தின்னவிரும்புவேன், ஆகலின் அதற்கஞ்சுகின்றேன் இறைவ னே உன்சந்நிதியிலே நிற்கவேண்டினேனெனக் கூறினரென்க் கொள்ளலு மொன்று.

> என்றுமன்பினேகிநீயுருகுமுள்ளக்கோயிலா
> னென்றுநாமமெய்துகென்றருளியிறைவனீங்கினான்
> குன்றெடுத்துமுந்துகோநிரைகள்காத்தகுரிசிலு
> மன்றல்வெட்சிமாலையானருளினங்கண் வைகினான்.

(இ - ள்.) என்றும் நீ அன்பின் ஏகி உருகுமுள்ளக்கோயிலான் என்று நாமம் எய்துக என்று அருளி - எக்காலத்தும் நீயன்பிற்சென்று உள்ள முருகும்பெருமாளெ ன்னும் பெயரடைகவென்று வரங்கொடுத்து, இறைவன் நீங்கினான் - சிவபெருமான் மறைந்தருளினான், குன்று எடுத்து முந்து கோநிரைகள்காத்த குரிசிலும் - முன்னை (கோவர்த்தன) மலையைக் குடையாகப்பிடித்துப் பசுக்கூட்டங்களைக்காத்த விஷ்ணு மூர்த்தியும், மன்றல் வெட்சிமாலையான் அருளின் அங்கண் வைகினான் - மணங்கமழ் கின்ற வெட்சிமாலையையுடைய குமரநாயகனருளால் அங்கமர்ந்தனன். (எ-று)

(இறைவன் திருவுள்ளத்தி லெண்ணியபடியே,) திருமாலே! நீ அன்பிற் றலைப்ப ட்டிருக்கின்றனையாகலின் எக்காலத்தும் அன்பினெறியிலேசென்று அந்நெறியிலே மன முருகி உன்னுள்ளம் அவ்வன்பிற்கே இடமாகி இருக்க நாமனுக்கிரகஞ்செய்தோ மாகலின் உலகினரெல்லாம் உருகுமுள்ளக் கோயிலான் என்று அழைக்கக் கடவர் என்று ஓரரிய திருநாமமிட்டுத் திருவுருக்கரந்தனர்- பின்னர் திருமால் குமரநாயகன ருள்பெற்று சேனாபதீச்சுரர் சந்நிதியில் நின்றனனென்க.

இறைவனருள் பெற்றதுபோலும் அங்கிருக்கக் குமாரனருளும் பெறவேண்டு மாகலின் மன்றல் வெட்சிமாலையா னருளினங்கண் வைகினனென்றார். (சச)

> கூறுமினையமேன்மைசால்குமரகோட்டவைப்பினிற்
> பாறுநச்சுவேலினான்பாதமங்கியநிலநாள்
> வேறுநாற்றினங்களில்விரும்பிச்சென்றிறைஞ்சினோர்
> பேறுமுற்றும்யாவரோபேசவல்லசீர்மையார்.

(இ - ள்) கூறும் இனைய மேன்மை சால் குமரகோட்ட வைப்பினில் - சொல்லு மிந்த மேன்மை நிரம்பிய குமரகோட்டப் பதியில், பாறு நச்சு வேலினான் பாதம் - பரு ந்துகள் விரும்பும் வேலினையுடைய முருகக்கடவுளின் பாதங்களை, அங்கி அநிலநாள் வேறுநாற்றினங்களில் - கிருத்திகை விசாகநாளினு மிவையொழிந்த வேறு நான்கு நாள்களிலும், விரும்பி சென்று இறைஞ்சினோர் - விரும்பிப்போய் வழிபட்டோர், பேறுமுற்றும்யாவரே பேசவல்ல சீர்மையார் - பேற்றினை முழுதும் எவர் சொல்ல வல்ல குணமுடையார். (எ - று.)

சொல்லப்பட்ட இந்த குமரகோட்டப்பதியில் குமாரக்கடவுள் பாதங்களை, கிருத்திகை விசாகநாள்களிலும், அஃதொழிந்த சஷ்டி, பூசம், மங்கலவாரம் சுக்கிரவாரமுதலிய தினங்களிலும் அன்போடு வணங்கப் பெறுவாராயின் அவருடையும் பேற்றையெல்லாம் சொல்லவல்லவர் யாவரென்க. (௬௫)

குமரகோட்டப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧அ௩௧.

# மாசாத்தன்றளிப்படலம்.

நறைகொப்புளிக்குநறும்பொகுட்டுநளினவாழ்க்கைப்புத்தேளைச்
சிறையிற்புகுத்தும்பெருமானார்குமரகோட்டச்சிறப்புரைத்தா
நிறையப்பூத்தமலர்ப்பொதும்பர்நீடுமதற்குத்தென்றிசைக்கண்
முறையிற்றிகழுமாசாத்தமுதல்வன்றானமெடுத்துரைப்பாம்.

(இ-ள்.) நறைகொப்புளிக்கு நறும்பொகுட்டு நளினவாழ்க்கைப் புத்தேளை - தேன்கொப்புளிக்கும் வாசனையுள்ள அடைகொட்டையையுடைய தாமரைமலர் வாழ்க்கையையுடைய பிரமனை, சிறையில் புகுத்தும் பெருமானார் குமரகோட்ட சிறப்பு உரைத்தாம் - சிறையிலிட்ட பிள்ளையாருடைய குமரகோட்டமேன்மையைச் சொன்னோம், நிறைய பூத்த மலர் பொதும்பர் நீடும் அதற்கு தென்திசைக்கண்-நிறையமலர்ந்த மலர்ச்சோலை அதிகப்பட்டிருக்கின்ற அத்தலத்திற்குத் தென்றிசையில், முறையில் திகழும் மாசாத்தமுதல்வன் தானம் எடுத்து உரைப்பாம்-முறைமையில் விளங்கும் மாசாத்தன்றளியென்னும் பதியை இனி எடுத்துச்சொல்வாம். (எ-று.)

தாமரைமலர் வாழ்க்கையையுடைய பிரமனைச் சிறைக்களத்தில் வாழச்செய்த குமரன்வாழ்கின்ற குமரகோட்டத்தை எடுத்துச்சொன்னோம், இனி மாசாத்தன்றளியை யெடுத்துச் சொல்வாமென்க. (௧)

வைவாளெயிற்றுத்தானவரும்வானாட்டவருமந்தரத்திற்
பைவாய்த்தாம்புபிணித்தீர்த்துக்கடைந்தஞான்றுபரவையெழும்
வெவ்வாய்நஞ்சுமிடற்றடக்கிவெருவாதளித்தபெருங்கருணை
யைவாய்ப்பணிப்பூட்பெருமானாருளான்மீளக்கடைந்தவழி.

(இ-ள்.) வைவாள் எயிற்று தானவரும் வானாட்டவரும் - கூரிய ஒளியுள்ள பற்களையுடைய அரக்கரும் வானுலகத்துள்ள தேவரும், மந்தரத்தில் பைவாய் தாம்பு பிணித்து ஈர்த்து கடைந்தஞான்று - மந்தரமலையில் படத்தைவாய்ந்த வாசுகியாகிய பாம்பைத் தாம்பாகக்கட்டியிழுத்துக் கடைந்தகாலத்தில், பரவையெழும் வெவ்வாய் நஞ்சு மிடற்றுஅடக்கி - கடலிற்றோன்றிய கொடுமைவாய்ந்த விடத்தைக் கண்டத்திலடக்கி, வெருவாது அளித்த பெருங்கருணை - தேவர்கள் பயங்கொள்ளாது காத்தபேரருளையுடைய, ஐவாய் பணிபூண் பெருமானார் அருளான் மீள கடைந்தவழி - ஐந்துவாயையுடைய பாம்பினையணியாகப் பூண்ட இறைவரது அருளினால் பின்னருங்கடைய (எ-று.)

அசுரரும் சுரரும் பாற்கடலில் மந்தரகிரியைநாட்டி வாசுகியாகிய பாம்பைக் கயிறுகக்கட்டியிழுத்து கடைந்த காலத்திலெழுந்த விடத்தைக் கண்டத்திலடக்கித் தேவர்கள் பயத்தையொழித்த இறைவனருளால் மீளவுங்கடைய என்க.

தேவாசுரர்களை யெல்லாம் நடுங்கச்செய்த கொடியவிடத்தைத் தன் கண்டத்திலடக்கிய கருணையே யல்லாமல் மீளவுமவர்கள் விரும்பிய அமிர்தத்தைப்பெற பாற்கடல்கடையக் கருணைசெய்தனனாகலின் பெருங்கருணைப் பெருமான் எனஞர். (உ)

சேட்டையணங்குதிருமணியான்றெய்வமகளிர்மருத்துவர்நாற்
கோட்டுமதமாமுதற்பலவுங்குரைநீர்க்கடலுட்டோன்றியபின்
வாட்டுமிறவிப்பெரும்பிணிக்குமருந்தாவமிழ்தந்தோன்றுதலும்
வேட்டவிண்ணோரவுணர்களுந்தம்முட்கலாங்கள்விளைத்தனரால்.

(இ - ள்.) சேட்டை அணங்கு திரு மணி ஆன் தெய்வ மகளிர்-மூத்தாளும் திருமகளும் கவுத்துவமணியும் காமதேனுவும் அரம்பையரும், மருத்துவர் நாற்கோட்டு மதமாமுதல் பலவும் குரைநீர் கடலுள் தோன்றிய பின்-மருத்துவரும் நாற்கோட்டையுடைய ஐராவதமென்னும் யானையு மிவையுள்ளிட்ட பிறபொருளும் ஒலிக்கின்ற நீர்மயமாகிய கடலில் தோன்றிய பின்னர், வாட்டும் இறவி பெரும்பிணிக்கு மருந்தாக அமிழ்தம் தோன்றுதலும்-வருத்துகின்ற சாதலென்னும் பெருநோய் தீர்க்கு மருந்தாக அமிர்த முண்டாகலும், வேட்டவிண்ணோர் அவுணர்களும் தம்முள்கலாங்கள் விளைத்தனர் - (அதனை) விரும்பிய தேவரும் அசுரரும் தம்மிற் கலகஞ் செய்தனர். (எ-று.)

இறைவனருளாற் கடைந்தபொழுது முன்னே மூதேவியும் இலக்குமியும் கௌத்துவமணியும் காமதேனுவும் அரம்பையரும் மருத்துவரும் வெள்ளையானையும் இவை முதலிய பலவும் தோன்றிய பின்னர் அமிர்தம் தோன்றவும் சுராசுரர்களுக்குள் கலகம் விளைந்தனவென்க.

வெள்ளைக்குதிரை - சந்திரன் - வாருணி முதலாயினவும் அக்கடலிற் றோன்றிற்றென்பார் மதமாமுதற் பலவுங் குரை நீர்க்கடலுட் றோன்றி என்றார்.

முன்கடைந்தபொழுது விடமும் பின்கடைந்த பொழுது மூதேவி முன்னரும் ஏனையமங்கலபதார்த்தங்களெல்லாம் பின்னருந் தோன்றியதற்குக் காரணம் என்னையெனின் தேவர்கள் அமிர்தத்தை விரும்பியது நாசரகிதராயிருக்க, அது செய்யவல்ல அமிர்தந்தோன்றாது நாசஞ்செய்யவல்ல விடந்தோன்றிச் சுரர்களை நாசஞ்செய்து சுராதிபனாகிய இறைவனை நாசரகிதனென்று காட்டியதெனவும், அதுபோலும் மூதேவி தோன்றி இறைவனுணையைப் பெற்று வந்தவர்களுடைய பாவ நிவிர்த்தியைக் காட்டியதெனவும், அமிர்த முதலாகிய மங்கலபதார்த்தங்கள் இறைவன் தன்னைச் சரணடைந்தோர்க்கு வேண்டிய தொன்றே யன்றிப் பலவுந்தருவானென்னும் பெருமிதத்தைக் காட்டியதெனவும் கொள்ளற்பாற்றென்க. (ஙு)

ஆற்றன்மிகையாற்சுதைக்குடத்தையடல்வாளவுணர்கைப்பற்றத்
தோற்றுமறுகிப்புத்தேளிரலமந்தேங்குந்துயர்நோக்கிக்
காற்றும்பிரசநறுந்துளவக்கமஞ்சூற்கொண்டலிணைவிழிக்குக்
கூற்றம்பதைக்குமோகினியாம்வடிவமாங்குக்கொண்டனனால்.

(இ-ள்.) ஆற்றன்மிகையால் சுதை குடத்தை அடல்வாள் அவுணர் கை பற்ற-வலிமைமிகுதியால் அமிர்தகலசத்தைப் பகைமையுடைய வாட்படையேந்திய அரக்கர் கைக்

கொள்ள, புத்தேளிர் தோற்று மறுகி அலமந்து ஏங்குந் துயர்நோக்கி-தேவர்கள் தோ ல்வியடைந்து கலங்கி அங்குமிங்குமாகச் சுழன்று ஏங்குகின்ற துயரத்தைப்பார்த்து, காற்றும் பிரசநறுந்துளவம் கமஞ்சூல் கொண்டல் - சிந்துகின்ற தேனையும் மிக்க வாசனையையுமுடைய துளவமாலையையணிந்த நிறைவினையுடைய சூல்கொண்ட மே கம்போல்வாருகிய மாயோன், இணைவிழிக்கு, இரண்டு கண்களுக்கு-கூற்றம்பனைநக்கும் இயமன் வருந்தும, மோகினியாம் வடிவம் - மோகினியாகிய வடிவத்தை, ஆங்குகொ ண்டனன் - அங்கே கொண்டான். (எ-று)

கலகப்பட்ட சுராசுரர்களுள் அசுரர்கள் தங்களுடைய வன்மையிருல் அமிர்தகல சத்தைக் கைப்பற்றவும், தேவர்கள் ஏங்குந் துன்பத்தைப்பார்த்துத் திருமால மோகினி வடிவங் கொண்டனரென்க.

மோகினி கண் இயமனையும் அச்சுறுத்துமாகலின் இணைவிழிக்குக் கூற்றமஞ்சு மென்ருர். (௪)

இரண்டறப்பெண்மையுமெழிலும்வஞ்சமுந்
திரண்டுருக்கொண்டெனத்திகழ்ந்துதோன்றிமான்
முரண்டகுமவுணர்கைக்கொண்டமூரிநீர்
வரண்டுமாமணிக்கடலமிழ்கம்வாங்கினன்.

(இ - ள்.) மால-மாயோன், இரண்டு அற பெண்மையும் எழிலும் வஞ்சமும்-இர ண்டுபாலு நீங்கப் பெண்தன்மையும் அழகும் வஞ்சனையும், திரண்டு உருகொண்டென திகழ்ந்து தோன்றி - சேர்ந்து ஒருவடிவங் கொண்டாற்போல விளங்கித் தோன்றி, முரண்தகும் அவுணர் கை கொண்ட - வலிமை மிகுந்த அரக்கர் கைப்பற்றிய, மூரிநீர் வரண்டு மாமணிக்கடல் அமிழ்தம் வாங்கினன் - கடல் நீர்வரண்டு பெருமை பொருந் திய அழகிய கடலிற்றேன்றிய வமிர்தத்தை வாங்கிக்கொண்டான். (எ - று.)

இருவர் போரும் நீங்கத் திருமால் பெண்தன்மை முதலிய யாவுந்திரண்டுருக்கொ ண்டதுபோல மோகினியாகத் தோன்றி அவுணர்கள் கைக்கொண்ட அமிர்தகலசத்தைத் தன் முலைக்கலசத்தைக்காட்டி வாங்கினரென்க.

கொண்டாலென்ன என்பது கொண்டெனத் திரிந்துநின்றது.

இரண்டற என்றது தேவர்களுக்குண்டாகிய துன்பமும் அசுரர்களுக்குண்டாகிய இன்பமும் நீங்க மோகினியாகத் தோன்றினராகலின் இரண்டறத்தோன்றிமால் என்றாரென்றலுமொன்று. (௫)

வாங்கிநின்றசுரருஞ்சுரரும்வல்லையே
யாங்கநீர்நிரைநிரையாகவைகுமி
னீங்குநல்லமிழ்தமெல்லீர்க்கும்வேட்டவா
பாங்குறத்தனித்தனிப்பகுத்துநல்குகேன்.

(இ- ள்) வாங்கி நின்று அசுரரும சுரரும் - (திருமால் தன்கையில்) வாங்கிக்கொ ண்டு அவுணர்களும் அமரர்களும், வல்லை நீர் நிரை நிரையாக வைகுமின் - விரைவாக நீங்கள் வரிசை வரிசையாகத் தங்கியிருங்கோள், ஈங்கு நல் அமிழ்தம் எல்லீர்க்கும் வேட்டவாறு பாங்குற தனித்தனி பகுத்து நல்குகேன் - இவ்விடத்தே நன்மையாகிய அமுதம் யார்க்கும் விரும்பியவண்ணம் பாங்குபெறத் தனித்தனியே பகிர்ந்து கொடுப் பேன். (எ - று.)

திருமால் அசுரரிடத்திருந்த அமிர்த கலசத்தை வாங்கி அவ்விடத்திலேயே நின்று சுராசுரர்களே நீங்களெல்லோரும் வரிசை வரிசையாக இருங்கோள் நீங்களனைவரும் விரும்பியபடியே உங்களுக்குத் திருப்தியாகும்படியாகத் தனித்தனிப் பங்கிட்டுக்கொடுக்கின்றேனென்று றென்க

ஆங்க அசைச்சொல். அடுக்கிரண்டில் முன்னது பன்மைப் பொருளது, பின்னது மிகுதிப்பொருளது. (௬)

வேல்விழிமாதர்யான்வீழ்ந்துளார்பெறச்
சாலநல்குவலெனச்சலதிச்சேக்கைவாழ்
வால்வளைக்குடங்கையான்மகிழக்கூறலுங்
கோல்வளைத்திதிமைந்தர்குறித்துநோக்கினார்.

(இ-ள்.) சலதி சேக்கைவாழ் வாலவளை குடங்கையான் - கடலாகிய படுக்கையிற் றங்குகின்ற வெண்மையாகிய சங்கைக் குடங்கையிலேந்திய மாயோன், வேல்விழி மாதர்யான்-வேல்போலுங் கண்ணையுடைய மாதுநான் (ஆசையால்) வீழ்ந்துளார் பெற சால நல்குவல் என - (என்பால்) காமுற்றவர்கள் பெறும்படி மிகத்தருவேனென்று, மகிழக்கூறலும் - அவர்கள் மகிழ்ச்சியடையச் சொல்லுதலும், கோல்வளை திதிமைந்தர்-அழகியவளையலையணிந்த திதிமக்களாகிய அசுரர்கள், குறித்து நோக்கினர் - ஆராய்ந்து பார்த்தனர். (எ - று.)

பாற்கடலில் வாழ்கின்ற திருமால் யான்பெண் பாலாகையால் என்னை யாரொருவர் விரும்புகின்றார்களோ அவர்களுக்கு அமிழ்தத்தைப் பெறும்படி மிக்க விருப்போடு கொடுப்பேன் என்று கூறவும் திதிமைந்தர்களாகிய அசுரர்கள் அம்மோகினியின் எண்ணத்தை யறிந்தவர்களாய் அவளது திருவுருவத்தை நோக்கினார்கள். (எ)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கலிதிரைமுகந்தசூன்முகில்விளர்ப்பக்கடைகுழன்றிருண்டுநெய்த்தொழுகிப்
பொலிவுறமகரம்வலம்புரிதிருத்தியெஃகிடைதொட்டபூங்குழலைக்
குலிகநீரளவிமழவிளம்பரிதிக்குருஉச்சுடருரிஞ்சியகாட்சி
யிலகொளித்தேய்வையரும்பெறற்றிலகமிட்டகீற்றிளம்பிறைநுதலை.

(இ-ள்.) கலிதிரை முகந்த சூன்முகில் விளர்ப்ப - ஓசையுடைய கடல்நீரையுண்ட சூல்கொண்ட மேகம்நாண, கடைகுழன்று இருண்டு நெய்த்து ஒழுகி - கடையில் குழன்று இருண்டு நெய்ப்பசையடைந்தொழுகி, பொலிவுற மகரம் வலம்புரி திருத்தி-பொலிவுபெற மகரமீன் வடிவாகச்செய்த ஆபரணத்தையுந்திருத்தி, எஃகிடைதொட்ட பூங்குழலை - எஃகினையிடையேதொட்ட பூவைமுடித்த கூந்தலையும், குலிகநீரளவி-இங்குலிக நீரைச்சேர்த்து, மழவு இளம்பரிதி குரு சுடர் உரிஞ்சியகாட்சி - மிக்க இளஞ் சூரியனுடைய அழகிய பிரகாசந் தங்கிய தோற்றமாக, இலகு ஒளி தேய்வை - விளங்கும் ஒளியையுடைய சந்தனத்தேய்வையினுலாகிய, அரும்பெறல் திலகமிட்ட கீற்று இளமை பிறைநுதலை - பெறுதற்கருமையான திலகமணிந்த கீற்றுகிய இளம்பிறை போலும் நெற்றியையும். (எ-று.)

இது கூந்தலையும் நெற்றியையும் வியந்தது.

இவற்றுள் கூந்தலானது மேகத்தினும் கறுத்து நெய்ப்பசைமுதலியவற்றோடு விளங்குமெனவும், நெற்றியானது சூரியனைப்போல் ஒளிவிட்டுத் திலதமணிந்து பிறைபோல் விளங்குமெனவும் கூறியதென்க.

எஃகிடை தொட்ட என்பது - சக்கரப்பணி அது - வட்ட வடிவினையுடைய் தலையணி. இது முதல்வரும் பத்துச்செய்யுளும் குளகமென்க. "குளகம் பலபாட்டொ ருவினை கொள்ளும்," என்பதனாலறிக. இவை கஎ-ம் பாட்டில் குறித்துரை யுவமைக்கெ ன்பதனோடு முடிந்தன. வலம்புரிவயின் வைத்து" என்ற திருமுருகாற்றுப் படையில் நச்சினார்க்கினியாரும் சீதேவி யென்னுந் தலைக்கோலமெனக் கூறுதல்காண்க. மழவிள ம்பருதி ஒருபொருட் பன்மொழி. (அ)

மாற்றருமதுகையைங்கணைக்கிழவன்வாங்கியநறுஞ்சுவைத்தேறல்
காற்றுவெஞ்சிலைக்குச்சிலைத்தொழில்பயிற்றுங்கட்டெழிற்புருவமென்கொடியைச்
சீற்றவல்விடமுமமிழ்தமும்விரவிச்சிதரரிபரந்துமைதோய்ந்து
கூற்றரசிருக்குமிணைவிழிகளவுகொள்ளநோக்கிடுஞ்சிறுநோக்கை.

(இ-ள்) மாற்றருமதுகை ஐங்கணைக்கிழவன் - மாற்றுதற்கரிய வெற்றியையுடைய மன்மதன்; வாங்கிய நறும்சுவை தேறல் - வளைந்த நறுஞ்சுவையுள்ள இரசத்தை, காற்று வெஞ்சிலைக்கு - சிந்துகின்ற கொடியவில்லினுக்கு, சிலை தொழில் பயிற்றும்- விற்றொழில் பழக்கும், கட்டெழிற் புருவமென்கொடியை - மிக்க அழகுள்ள புருவ மாகிய மென்மையாகிய கொடியை, சீற்றவல்விடமும் அமிழ்தமும் விரவி - கோப மிக்க வன்மையாகிய விடத்தையும் அமுதத்தையுங்கலந்து, சிதர் அரி பரந்து மைதோ ய்ந்து - சிதறிய செவ்வரிபரந்து மையிட்டு, கூற்று அரசு இருக்கும் இணைவழி - எமன் அரசுவீற்றிருக்கும் இரண்டுகண்களாலும், களவுகொள்ள நோக்கிடும் சிறுநோக்கை - களவுத்தொழில செய்யப்பார்க்குஞ் சிறுபார்வையினையும், (எ-று.)

இது புருவத்தையும் கண்ணையும் வியந்தது.

புருவமானது மன்மதன் கரும்புக்கு விற்றொழில் பழிக்கு மெனவும், கண்கள் தன்னைக் கண்டார்க்கு விடத்தையும் தன் கணவனுக்கு அமுதத்தையு மொத்திருத்தல் கற்புடை மகளிர் கண்ணுக்கு இயல்பாதல்போல் சுராசுரர்களிடத்துவிடமு மமிர்த மும் போன்று வேறு இயமன் வேண்டாமெனக் கழித்ததெனவுங் கூறியதென்க.

தாமரை முல்லை - அசோகு-மா-நெய்தல என்னுமைந்து மலர்களை யுடையானுகை யால் மன்மதனை ஐங்கணைக்கிழவனென்றார். (கூ)

செயிறாந்தரளவெண்மணிநாலத்திருந்தெழில்படைத்தெதிர்கண்டோ
ருயிரினைப்பருகிக்குமிழெனத்திகழ்ந்தவொள்ளொளிநாசியின்வனப்பை
வெயில்விடுமணிப்பூட்காளையர்மனங்களாடுபொன்னூசலின்விளங்கி

(இ - ள்.) செயிர் அறும் தரள வெண்மணிநால - குற்றமற்ற முத்தமென்னும் வெண்மணிதொங்க, திருந்து எழில்படைத்து எதிர் கண்டோர் உயிரினை பருகி - திருந் திய வழகமைந்து நேரே கண்டவருயிரையுண்டு, குமிழ் என திகழ்ந்த ஒள் ஒளி நாசியின் வனப்பை - குமிழ மலரென விளங்கிய மிக்க ஒளியுள்ள மூக்கினழகையும், வெயில்விடு மணி பூண் காளையர் மனங்கள் - கிரணம் விளங்குகின்ற இரத்தினுபர ணமணிந்த காளைபோல்வார்மனங்கள், ஆடுபொன்னூசலின் விளங்கி - ஆடுகின்ற பொ ன்னூசலினைப்போல் தோன்றி, மயிர்எறி கருவி முதல் என கவின்று - மயிரெறிகின்ற

கருவியின் முதலாக விளங்கி, மணிகுழை வயங்கு இருசெவியை - இரத்தினக்குழை யணிந்த இருகாதினையும், (எ - று.)

இது நாசியையும் செவியையும்வியந்தது.

இவற்றுள் நாசிகண்டோருயிரினைப் பருகுமெனவும், செவிகள் மங்கையைக் கண்டு உளசலைப்போலாடுகின்ற காளையர் மனத்தையொத்திருக்கின்றதெனவுங் கூறியதென்க.

குயிலினஞ்சமழ்ப்பக்குழலிசைபழகுஞ்சின்மொழிக்குறுநகைமொக்குட்
கயிரவமலர்ந்தசெய்யவாயமிழ்தமூற்றெழுங்கனியிதழொளியைப்
பயிலிருளொதுக்கிப்பானிலாக்கான்றுபடரொளிபரப்புவெண்மதிய
முயலறுத்தெழுந்தாலனையபேரழகின் முண்டகவாண்முகமலரை.

(இ - ள்) குயில் இனம் சமழ்ப்ப - குயிற்கூட்டம் வருந்த, குழலிசை பழகும சின்மொழி குறுநகை-குழலினது ஓசையைப் பழகும் மென்மையாகிய மொழியையும் குறுநகையையுமுடைய, மொக்குள் கயிரவமலர்ந்த செய்யவாய் அமிழ்தம்-மலரும்பருவத்தையுடைய ஆம்பற்பூவைப்போல மலர்ந்த செவ்வாயமுதம், ஊற்று எழும் கனி இதழ்ஒளியை ஊற்றுநீர்போலு மெழுகின்ற தொண்டைககனிபோலு மிதழினொளியையும், பயில் இருள் ஒதுக்கி - பழகுகின்ற இருளை யொதுக்கச்செய்து, பால்நிலாகான்று - பால்போலும் நிலாக்கதிரைச்சொரிந்து, படர் ஒளி பரப்பும் வெண்மதியம் - படர்ந்த ஒளியைப் பரப்புகின்ற வெண்மையாகிய சந்திரன், முயல் அறுத்து எழுந்தால் அனைய- முயற்களங்க நீங்கி யெழுந்தாலொத்த, பேரழகின் முண்டக வாள் முகமலரை - பேரழகினையுடைய தாமரையாகிய ஒள்ளியமுகமாகிய மலரை. (எ-று)

இது அதரத்தையும், முகத்தையும் வியந்தது.

இவற்றுள், இதழானது குயிலினங்கள்வருந்த குழலினிசைபழகும் மெல்லிய சொற்களையும் புன்னகையையுமுடைய வாயமுதம் ஊறுதலையுமுடையதாகு மெனவும், முகமானது வெள்ளிய சந்திரன் களங்க மொழிந்து எழுந்ததுபோலாகு மெனவுங் கூறியதென்க. (கக)

மடலவிழ்பாளைப்பசியபூங்கமுகோவயிறுநொந்தலறிமுத்துயிர்க்குங், குடவ
ளைப்பொலிவோவெனமருளுறப்பக்கவின்குடியிருந்தகந்தரத்தைக், கடிகம
ழ்கொழுஞ்சாறொழுகமென்கரும்பைக்கண்ணறத்தகர்த்திளம்பணையைத்,
தடவரைப்புகுத்தித்தொடையலைவாட்டித்தகையமையணிகெழுபுயத்தை.

(இ-ள்.) மடல் அவிழ் பாளை பசிய பூங்கமுகோ - மடலினின்று மவிழ்ந்தபாளையையுடைய பசிய அழகியகமுகோ - வயிறுநொந்து அலறி முத்து உயிர்க்கும் குடவளை பொலிவோ - வயிறுவருந்தி கூக்குரலிட்டு முத்தீனும் குடம்போன்ற சங்கினது அழகோ, என மருளுறப்ப - என்றுமயக்கமடைய, கவின் குடி இருந்த கந்தரத்தை - அழகுகுடியிருந்த கழுத்தையும், கடிகமழ் கொழுஞ்சாறு ஒழுகு மென்கரும்பை - வாசனை வீசும் கொழுமையாகிய சாறொழுகும் மெல்லியகரும்பினை, கண் அற தகர்த்து - கணுக்களறத்தகர்த்து, இளம்பணையை தடவரைபுகுத்தி - இளமையாகிய மூங்கிலை விசாலமாகிய மலையிற்புகச்செய்து, தொடையலைவாட்டி தகையமை அணிகெழுபுயத்தை - மாலையைவாட்டி குணமமைந்த அழகுவாய்ந்த தோளினையும். (எ - று)

இது கண்டத்தையும், புயத்தையும் வியந்தது.

இவற்றுள் கண்டமானது, கமுகோ, சங்கோ வென்று மயங்கச்செய்யுமெனவும், புயமானது, கரும்பினைக் கணுக்களறவெட்டியும், மூங்கிலை மலையிறபோக்கியும், மாலையி னொழுங்கை வாட்டியும் அழகிய குணத்தோடும் விளங்குமெனவுங்கூறியதென்க. (௧௨)

மடிதிரைப்பரவையமுதுறழிசையமகரயாழ்புறங்கொடுத்திரியத்
தொடிகளும்வயிரக்கடகமுஞ்செறித்துத்தூநலம்படைத்தகூர்ப்பரத்தை
நொடிபயில்கிள்ளைப்பவளவாய்கடுக்குநுதியுடைக்கூருகிர்வனப்பிற்
படியறுவிரல்வாய்ந்தொள்ளொளிதுளும்பும்பனிமலர்க்காந்தளங்கரத்தை.

(இ-ள்.) மடிதிரை பரவை அமுது உறழ் இசைய-மடங்குகின்ற அலைகளையுடைய கடலிற்றோன்றிய அமுதினையொத்த இசையினையுடைத்தாகிய, மகரயாழ்புறங்கொடுத்து இரிய - மகரவீணை புறங்கொடுத்தோட, தொடிகளும் வயிரக்கடகமும் செறித்து - வளையல்களும் வயிரத்தினாலாகிய கடகமும் பொருந்தி, தூநலப்படைத்த கூர்பரத்தை - பரிசுத்தமாகிய நன்மையைப்படைத்த முழங்கையினையும், நொடிபயில் கிள்ளை பவளவாய் கடுக்கும் - சொற்களைப்பழகும் கிளியினது பவளம்போன்ற வாயினையொக்கும், நுதியுடைய கூர் உகிர் வனப்பின் - நுனியையுடைய கூரியநகத்தின் அழகினையுடைய, படியறு விரல்வாய்ந்து - ஒப்பற்ற விரலைப்பெற்று, ஒள்ளொளிதுளும்பும்-மிக்கவொளிபெற்றுள்ள, பனிமலர் காந்தளங்கரத்தை - குளிர்ச்சியுள்ள காந்தள் மலரைப்போன்ற அழகியகையினையும். (எ - று.)

இது முழங்கைகளையும், கைகளையும் வியந்தது.

இவற்றுள் முழங்கையானது மகரயாழ்புறங் கொடுத்தோடவளையல்முதலியவையோடு விளங்குமெனவும், கைகள் கிளியின்மூக்கைப்போலும் கூரியநகம்வாய்ந்து விரலோடுங்கூடி காந்தள்மலரபோல் விளங்குமெனவுங்கூறியதென்க. (௧௩)

சுணங்குடைவனப்புமாரமுமெழுதுந்தொய்யிலுஞ்சந்தனக்களியு
மிணங்கியண்ணாந்துபாதிகாண்டகமேற்படாம்பொதியிளமுலைப்பொருப்பை
யணங்குறுத்திளையோர்மதியினைப்படுக்கும்படுகுழியனையவுந்தியின்மே
னுணங்குவண்டொழுக்கிற்கருமயிரொழிகிநோக்கமைசிறுவயிற்றழகை.

(இ-ள்.) சுணங்குடைவனப்பும் ஆரமும் எழுதும் தொய்யிலும் சந்தனக்களியும் இணங்கி - தேமலினழகும் முத்துமாலையும் எழுதுகின்ற தொய்யிலும் சந்தனச்சேரும் பொருந்தி, அண்ணாந்து பாதிகாண்டக மேற்படாம் பொதி இளமுலை பொருப்பை-மேலெழுந்து பாதிகாணும்படி மேலாடைபொதிந்த இளமுலையாகிய மலையையும், அணங்குறுத்து இளையோர் மதி யினைப் படுக்கும் படுகுழியனைய உந்தியின்மேல் - அச்சமுண்டாக்கிக் காளையர் அறிவினைச் சூறையாடும் படுகுழிபோன்ற உந்தியின்மேல், நுணங்குவண்டொழுக்கில் கருமயிர் ஒழுகி நோக்கமை சிறுவயிற்றழகை - நுண்ணியவண்டொழுக்கினைப்போன்ற கருமயிரொழுகி நோக்கமைந்த சிறுவயிற்றினழகையும். (எ-று)

இது தனத்தையும் வயிற்றையும் வியந்தது.

இவற்றுள், தனமானது தேமல் முதலியவற்றால் அழகுபெற்றுத் தன்னழகைமுழுதுங்காட்டாது பாதிஆடையால் மறையப்பெற்று மலையெனவிளங்குமெனவும், வயிறானது, காளையர் அறிவைவழுக்கி வீழச்செய்யும் உந்தியினின்றும், அவளைக்கரையேற்றுதற்கமைந்த மயிரொழுக்கத்தோடு விளங்குமெனவுங்கூறியதென்க. (௧௪)

**கொடியெனநுடங்கிவேளெனக்கரந்துகுவிமுலைக்கிடைந்துசெந்தளிர்க்கைப்**
**பிடியினுளடங்கித்துடியெனச்சுருங்கிமின்னெனப்பிறங்குநுண்ணுசுப்பைப்**
**படிமையர்சீலக்குறும்பெலாமடக்கிநடுவுயர்ந்தகன்றெழில்படைத்து**
**வடிமலர்ப்பகழிவேந்தரசிருப்பவயங்கியவல்குலின்பரப்பை.**

(இ - ள்.) கொடி என நுடங்கி - கொடிபோலத் துவண்டு, வேள் என கரந்து- மன்மதன்போல் மறைந்து, குவிமுலைக்கு இடைந்து-குவிந்த முலைக்குத்தோற்று, செம் தளிர் கை பிடியினுள் அடங்கி—செம்மையாகிய தளிர்போன்ற கைப்பிடியி லடங்கி, துடி என சுருங்கி—உடுக்கைபோல் சுருங்கி, மின் என பிறங்கு நுண் நுசுப்பை—மின்னல்போல் விளங்கும் நுட்பமாகிய இடையையும், படிமையர் சீலக் குறும்பெலாம் அடக்கி - தவமுடையார் ஒழுக்க நடையினை யெல்லாம் அடங்கச்செய்து, நடுவுயர்ந்து அகன்று எழில் படைத்து - நடுவேயுயர்ந்து அகன்று அழகெய்தி, வடிமலர்ப்பகழி வேந்தரசு இருப்ப - வடித்த பூங்கணையையுடைய மன்மதனரசிருக்க, வயங்கிய அல்குலின் பரப்பை. விளங்குகின்ற அல்குற் பரப்பினை. (எ-று.)

இது இடையையும் அல்குலையும் வியந்தது.

இவற்றுளிடையானது துவண்டும் மறைந்தும் தோற்றும் அடங்கியும் சுருங்கியும் விளங்குமெனவும், அல்குலானது தவத்தையடக்கி நடுவே யுயர்ந்து அவத்தை விளைக்கு மன்மதனுக்கு அரசிருக்கையாக விளங்குமெனவுங் கூறியதென்க. (கரு)

**நெட்டிலைக்கதலித்தண்டெனச்சேர்ந்துசெறிந்துநீள்விலைவரம்பிகந்த**
**வட்டொளியாத்தநுழையிழைக்கலிங்கமணிகெழுவளம்பயில்குறங்கைக்**
**கட்டெழின்மதவேளூதுகாளமுங்கணைபொதியாவநாழிகையும்**
**பெட்டவர்மருளவீற்றிருந்தனையபிதிரொளிப்போற்கணைக்காலை.**

(இ-ள்.) நெடுஇலை கதலி தண்டு என சேர்ந்து செறிந்து நீள்விலை வரம்பு இகந்த- நீண்ட இலையினையுடைய வாழைத்தண்டுபோன் மிகப்பொருந்தி நீண்ட விலையினெல்லையைக்கடந்த, வட்டொளி அரத்த நுழை இழை கலிங்க மணிகெழு வளம்பயில் குறங்கை - திரண்டவொளியினையுடைய செந்நிறம்வாய்ந்த நூலிழையினால் விளங்கப்பெற்ற ஆடையணிந்த மணி நிறம்பொருந்திய தொடையினையும், கட்டு எழில் மதவேள் ஊது காளமும்-கட்டழகுபடைத்த மன்மதனூதுகின்றகாளமும், கணைபொதி ஆவ நாழிகையும்-கணைகள்வைத்துள்ள அம்புக்கூடும், பெட்டவர் மருளவீற்றிருந்தாலனைய பிதிர் ஒளிபோல் கணைக்காலை - விரும்பினோர் மயங்க வீற்றிருந்தா லொத்த பிதிர்ந்த ஒளிபோலும் கணைக்காலினையும். (எ-று.)

இதுதொடையையும் கணைக்காலையும் வியந்தது.

இவற்றுள் தொடையானது வாழைத்தண்டை யொத்து செம்பட்டாடை யுடுத்து விளங்குமெனவும், கணைக்காலானது குயிலையும் அம்பறாத்தூணியையுமொத்து ஒளியோடு விளங்குமெனவுங்கூறியதென்க. (கசு)

**கறுத்தவாண்முகனைவெரீஇப்பதம்பணியுங்கலைமதிவெள்ளுகிர்மதனூல்**
**பொறித்தபுத்தகமாம்புறவடியன்னமென்னடைப்பூந்தளிரடியைக்**
**குறித்துவமைக்கிடம்பெறாதள்ளிக்கொளத்தகும்பேரழகமைந்த**
**மறுத்தபூமேனியிளநலங்கனிந்துமணிநிறம்வயங்குகோமளத்தை.**

(இ-ள்.) கறுத்தவாண்முகனை - கோபித்த ஒளியுள்ள முகத்தை, வெருவி பதம் பணியும்—பயந்து தன்பதம் வணங்கும், கலைமதி வெள் உகிர் - சந்திரன்போலும் வெண்மையான நகத்தையும், மதனூல் பொறித்த புத்தகமாம் புறவடி - காம நூலெழுதிய புத்தகம்போன்ற புறவடியினையும், அன்ன மெல் நடை பூந்தளிர் அடியை—அன்னம் போன்ற மெல்லிய நடையும் அழகிய தளிர்போன்ற அடியினையும், குறித்து உவா உவமைக்கு இடம் பெருது - உவமைச் சொல்லா லெண்ணியிடம் பெறமாட்டாது, அள்ளிக்கொளத்தகும் பெரு அழகு அமைந்த - அள்ளிக்கொள்ளத்தகுந்த பேரழகினை வாய்ந்த, மறுத்த பூமேனி இளநலம் கனிந்து - மறுத்த பூவின் வண்ணம்போலு மிள நலம் பொருந்தி, மணி நிறம் வயங்கு கோமளத்தை - மணி நிறம் விளங்குங் கோமளவடிவினை. (எ-று.)

இது அடியையும் மேனியையும் வியந்தது.

இவற்றுள் பாதமானது ஒளியுள்ள முகத்தையஞ்சி வணங்கும் சந்திரன்போலும் நகமும் மதனநூல்போலும் புறவடியும் அன்ன நடையும் வாய்ந்து தளிர்போலும் விளங்குமெனவும், மேனியானது உவமைக்கடங்காத அள்ளிக்கொளும் பேரழகோடும் 6

கலிதிரை யென்னுஞ் செய்யுள் முதல், கறுத்தவாண் முகனையென்னுஞ் செய்யுள் காறும் மோகினியாய் வந்த திருமால கேசமுதல் பாதவரையுள்ள அழகெல்லாம் அசுரர்கள் கண்ணுற்று மயங்கி வியந்து கூறியாவாறு. (கஎ)

காண்டலும்மாரவேள்கணைக்கிலக்கமாய
மாண்டனரெனவறிவழிந்துமையலனோய்
பூண்டனர்தானவர்மடந்தைபோல்வரு
மாண்டகைமாயையாலவரைவஞ்சித்து.

(இ-ள்.) காண்டலும் மாரவேள் கணைக்கு இலக்கமாய் - (பாதாதிகேசமளவும் அழகோடுகூடிவந்த மோகினியை) பார்த்தலும் மன்மதன்பாணத்திற்கிலக்காய், மாண்டனர் என அறிவு அழிந்து - செத்தவர்போலறிவுகெட்டு, மையல் நோய் பூண்டனர் - மயக்கமாகிய பிணிகொண்டனர், தானவர் மடந்தைபோல் வரும் ஆண்டகைமாயையால் அவரை வஞ்சித்து - (இவ்வாறு திருமால்) அரக்கர்பெண்போல்வரும் மாட்சிமையிற் சிறந்த மாயையினாலவரை வஞ்சனைசெய்து (எ - று.)

அசுரர்கள் மோகினியைப்பார்க்கவும் மன்மதபாணத்துக்கிலக்காய் தங்களறிவுமயங்கிக் காமமயக்கத்தில் மூழ்கினார்கள். அப்பொழுது மாயோன் தனது மாயையால் அவ்வசுரர்களெல்லாந் தன்னழகைக்கண்டு அப்படியே மயங்கிசிற்கும்படி வஞ்சித்தனனென்க.

அசுரமாதர்கள் அநேகவஞ்ச வடிவங்கொண்டு வஞ்சித்தல்போல் கேசமுதல் அடிகாறுங்கூறிய ஒவ்வொரு அங்கங்களுடைய அழகுகளால் ஒவ்வொருவரையும் மயக்கினரெனவும், தனித்தனி ஒவ்வோர் மோகினிகளாகத்தானே காட்டி மயக்கினரெனவுங்கொள்ளவேண்டு மென்பார் "மடந்தைபோல்வருமாண்டகை மாயையாலவரை வஞ்சித்து" எனக்கூறினர்.

திருமால் சுராசுரர்களுக்கிடையே மோகினியாகத் திருவுருக்கொண்டபோது அவ்விருவரையும்பார்த்து நானொருத்தியும் என்கையிலமுதமொன்று மாயிருக்கின்றபடியால்

அசுரர்களே உங்களுக்குநான்வேண்டுமோ; அமுதம்வேண்டுமோஎன்றார் அப்பொழுது அவ்வசுரர்கள் எங்களுக்கு நீவேண்டுமென்றார்கள் இதோவந்துவிட்டேனென்று சுரர்களைப் பார்த்து உங்களுக்குயாது வேண்டியதென்றார் எங்களுக்கு அமுதம்வேண்டுமென்றார்கள் அப்பொழுது அவர்களுக்கு அமுதத்தைப்பகுத்துக் கொடுத்து விட்டு அசுரர்கள் பால்வந்து தன் இன்பநலத்தையுங் கொடுக்காமல் வஞ்சித்தனராகலின் மாயையால் அவரை வஞ்சித்து என்றுரொன்றலுமொன்று. இதனை, காந்தப்புராணம் மாசாத்தப் படலத்திற்காண்க. (௧௮)

கடவுளர்க்கமுதெலாங்கடுகவீந்தவர்
வடிவெடுத்துடனுறவதியிராகுவைத்
தடநெடுமுழையானரிந்துதானுமக்
கடலமிழ்தருந்துபுகளிப்பினீடினன்.

(இ-ள்.) கடவுளர்க்கு அமுது எல்லாம் கடுக ஈந்து - தேவர்கட் கமுதத்தையெல்லாம் விரைவாகக்கொடுத்து, அவர் வடிவெடுத்து உடனுற வதி இராகுவை - அத்தேவர் வடிவங்கொண்டுஉடன்வசிக்கும் இராகுவினை, தட நெடுமுழையான் அரிந்து-விசாலமான நீண்டசட்டுவத்தால் அறுத்து, தானும் அக்கடல் அமிழ்து அருந்துபு களிப்பில் நீடினன் - தானுமக்கட லமுதத்தையுண்டு மகிழ்ச்சியின் மிகுந்திருந்தான்.

(திருமால் தன்னுடையமாயையால் அசுரர்கள் மயங்கிக்கிடக்கின்ற அப்பொழுது) தேவர்களுக்கு அமுர்தத்தை அகப்பையால் பங்கிட்டுக்கொடுத்து (பின்னர்) இராகு கேது வென்னுமிரண்டு அசுரர்கள் தேவவடிவங்கொண்டு தேவர்களோடுநிற்க அதனையுணர்ந்து அவர்கள் சிரத்தை அகப்பையினாலறிந்தொழித்துப் பங்கிட்டதுபோக மிகுதியாக விருந்தவமிழ்தினைத்தானுமுண்டு மகிழ்ச்சி மீதூர்ந்தனனென்க.

தலையறுபட்டது இராகுவேயன்று கேதுவுமாகும் இவ்விருவரும் அரக்கர்கள். இவர்கள் பின்னரிறைவனருளால் கோள்நிலையைப்பெற்றார்கள். இவற்றை "ஈயும்பொழுதினிமையோர்க ளினத்தினூடு, போயங்கிருந்தகள்வரும்" எனவும், "புன்னுகநாக மணிவானடிபோற்றி நோற்றுச், செங்நாகமோடு கருநாகத்தின் செய்கைபெற்று" எனவும், "கெழியராகுவுங் கேதுவுமேயென மொழிய நின்றமுதற் பெயர்தாங்கியே, விழுமிராகிய வெய்யவனுதியா, மெழுவர்தம்மோடிருவருமீண்டினர்" எனவும் காந்தபுராணம் மாசாத்தாப்படலத்தில் வருதல்காண்க. (௧௯)

வேறுகொளவுணரைஞாட்பின்வென்றுபோய்
மாறடுமாழியானிருக்கைமன்னினன்
ஏறணிநெடுங்கொடியெரியினீள்சடை
யாறணியடிகளவ்வனைத்துங்கேட்டரோ.

(இ-ள்.) வேறுகொள் அவுணரை ஞாட்பின்வென்றுபோய் - வேறுபட்ட அரக்கர்களைப்போரில் வெற்றிகொண்டுசென்று,மாறுஅடும் ஆழியான் இருக்கை மன்னினன் - பகைவரைவெல்லுகின்ற சக்கரப்படையினையுடைய மாயோன் தன்னிருக்கையாகிய வைகுண்டமடைந்தான், ஏறு அணி நெடுங்கொடி எரியின் நீள்சடை - இடபக்குறியையுடைய நெடுங்கொடியினையுயர்த்தி தீயைப்போலும் நிறம்விளங்கிய நீண்டசடையில், ஆறு அணிஅடிகள் இவ்வனைத்தும்கேட்டு - ஆற்றினையணிந்த இறைவன் இவைகளையெல்லாங்கேட்டு. (எ - று.)

(அசுரர்கள் திருமால் தங்களுக்குக் கடலமுதம்பகிராமலும் வாயமுதங்கொடாமலும் வஞ்சித்துப்போக மயக்கந்தெளிந்தவர்களாய்) தேவர்களோடு பகைகொண்டு போர்செய்ய அவ்வசுரர்களைத் திருமால்போரில்வென்று வைகுண்டத்தையடைந்தான். இச்செய்திகளை தேவர்கள்வழியால் இறைவன் கேட்டருளினனென்க. (உ0)

தன்னடிவழிபடச்சார்ந்தமாயனை
யன்னவையென்னெனக்கடாவியவ்வுரு
வென்னெதிர்காட்டுகென்றியம்பச்சார்ங்கனு
மன்னியமலைமகள்வதனநோக்கியே.

(இ-ள்.) தன் அடிவழிபட சார்ந்தமாயனை - தன்பாதங்களை வழிபாடுசெய்ய அடைந்தமாயோனை, அன்னவை என் என கடாவி-அவையாவையென்று வினவி,அ உரு என்எதிர் காட்டு என்று இயம்ப - அந்தவுருவத்தை என்னெதிரே காட்டுகவென்றுசொல்ல, சார்ங்கனும் மன்னிய மலைமகள்வதனநோக்கி-சார்ங்கமென்னும் வில்லினையுடைய மாயோனும் நிலைபெற்ற மலைமகளின் முகத்தைப்பார்த்து. (எ - று.)

ஓர்கால் மாயோன் (இறைவனடிகளை வழிபடவெண்ணி ஸ்ரீ கயிலாயத்தையடைய சிவபெருமான்) தன்னடி வழிபடவந்தமாயவனைப்பார்த்து நீ தேவர்களுக்கு அமுதம்பகிர்ந்து கொடுத்தனையாம். அப்பொழுது அசுரர்களை வஞ்சிப்பதற்கு ஓர் பெண்ணுருவெடுத்தனையாம்அச்செய்தியை என்க்கு விளங்கச்சொல்வாய்,அன்றியும் அந்தவுருவத்தை என்னெதிரேயும் காட்டுவாயென்ன திருமால்நாணித்தேவியின் திருமுகத்தைப்பார்த்து என்க.

பெண்ணியலெல்லாம் இயல்பாகவேயமைந்து ஆன்மக்களுக்கு மயக்கத்தைப்போக்கும் தேவிமுன்னே ஆண்வடிவாயிருக்கின்ற தான் மயக்கும் பெண்ணுருக்கொள்வதற்கு நாணினனென்பார் மலைமகள்வதனநோக்கி என்றார். (உக)

மையல்செய்மோகினிவடிவங்காட்டுபு
வெய்தெனநடந்தனன்வேளைவென்றகோ
னொய்யெனவெழுந்துசென்றுற்றுப்புல்லவுங்
கையகன்றோடினன்கரியமேனியான்.

(இ-ள்.) மையல்செய் மோகினிவடிவங்காட்டுபு - மயக்கஞ்செய்கின்ற மோகினிவடிவத்தைக்காட்ட, வெய்தெனநடந்தனன் - விரைவாகநடந்தனன், வேளைவென்றகோன் ஒய்யென எழுந்து சென்று உற்றுபுல்லவும் - மன்மதனை வெற்றிகொண்ட இறைவன்விரைவாக எழுந்துபோய்ப் பொருந்தி அணையவும், கை அகன்றுகரியமேனியான் ஓடினன் - இடம்பெயர்ந்து கரியநிறம்படைத்த மாயோன் ஓடிப்போனான். (எ - று.)

(தேவியார் முன்னே தனது பெண்ணுருவத்தைக் காட்டநாணி) அவ்விடம்விட்டுவிரைந்து சென்று மயக்கவல்ல மோகினிவடிவத்தைக்காட்ட காமதகனனாகிய இறைவன்விரைந்துசென்று மோகினியை யணுகிப்புல்லவும் ஆற்றாதோடினனென்க.

இறைவன் மோகினியைக் காமுற்றது காமத்தினாலன்று ஓர் விளையாட்டென்றுணர்த்த வேளைவென்றகோனெனவும், விடச்சுவாலையால் தனது பவளநிறம் முன் கருகியதுபோல் இப்பொழுது இறைவனுடைய தழல்வண்ணத்தின் சுவாலையான் மேனி குலையுமென்றெண்ணி ஓடத்தலைப்பட்டனனென்றுணர்த்த கையகன்றோடினன் கரிய மேனியான் எனக்கூறினார். (உஉ)

மறுவலுமெம்பிரான்வலிந்துபற்றியாங
கிறுகுறத்தழீஇயினனினையகாலையி
னுறுபுகழ்சாத்தனாங்குவர்க்குத்தோன்றினு
னிறுமுறையுலகெலாநிறுத்துங்கோலினான்.

**(இ-ள்.)** மறுவலும் எம்பிரான் வலிந்துபற்றி - (திருமால்) பிணங்கலும் எம்மிறைவன் வலியிற்பிடித்து, ஆங் கிறுகுறத் தழீஇயினன் - அங்கிறுகப் பிடித்துத் தழுவிக்கொண்டான், இளைய காலையில் நிறுமுறை உலகு எல்லாம் நிறுத்துங்கோலினான் - இக்காலத்தில் நிறுத்தும் முறையாக எல்லாவுலகங்களையும் நிறுத்துங் கோலினையுடையவனாகிய, உறுபுகழ் சாத்தன் - மிக்க புகழ்ச்சியினையுடைய மாசாத்தன் - ஊங்குவர்க்குத் தோன்றினான் - அவ்விடத்தில் அவ்விருவர்களுக்குப் பிறந்தனன். (எ-று.)

இறைவன் திருமாலைச் சேரவருங்காலத்தில் அத்திருமால் நாணத்தால் பிணக்குற்றவர்போல் செல்ல அப்பொழுது அவரை இறைவன் வலிந்துபற்றி இறுகத் தழுவினன். அக்காலத்தில் வேதநெறியின் உலகை நிறுத்த வல்ல கோலோடுகூடி மாசாத்தா பிறந்தானென்க.

அரிகர புத்திரராகிய சாத்தா வென்பவர் எல்லாப்புவனங்களும் தன்னாணையின் வழி நிற்கச்செய்யவல்ல ஆற்றலையும் வேதாகம மார்க்கத்தைக் கடந்து நடப்போரைப்புடைத்தொறுக்க வல்ல கோலினையுமுடைய ராதலால் உறுபுகழ் சாத்தனெனவும் நிறுமுறை யுலகெலா நிறுத்துங் கோலினான் எனவுங் கூறினார். இதனை, காந்தபுராணம் மாசாத்தாப் படலத்திற் காண்க. (உகூ)

ஆயபின்கேசவன்வெள்கியண்டர்கோன்

பாய்புகழ்சாத்தனும்பகவன்றாளிணை
வாயினாற்றுதிசெய்துவணங்கிவேண்டுவான்.

**(இ-ள்.)** ஆயபின் கேசவன் வெள்கி - அதன்பின் மாயோன் வெட்கமடைந்து, அண்டர்கோன் சேயதாள்தொழுது தன் உலகஞ் சேர்ந்தனன் - தேவர் நாயகனாகிய இறைவன்பாதங்களை வணங்கித் தன்னுலகமாகிய வைகுண்டத்தை யடைந்தான், பாய் புகழ் சாத்தனும் பகவன்தாளிணை வாயினால் துதிசெய்து வணங்கி வேண்டுவான் - பரந்த புகழினையுடையமாசாத்தனும் பகவனாகிய இறைவனிரண்டு பாதங்களையும் வாயாற்றுதித்து வணங்கி வேண்டுகின்றான். (எ-று.)

இறைவன் சாத்தனைத் தந்த பின்னர் திருமாலங்கிருப்பதற்கு மிகவும் நாணமுற்று இறைவனடிதொழுது தனதிருக்கையை யடைந்தனன்-சாத்தா இறைவனைத் தொழுது சில வேண்டுவாராயினர்.

திருமால் பெண்ணுருக்கொண்டது அசுரரை மயக்கவேயல்லது அவர் பெண்ணாகாரென்பதை இறைவன் பிள்ளையைத்தந்து ஒழித்தனனாகையால் ஆயபின் கேசவன் வெள்கி என்றார் - எனவே திருமால் பெண்ணுருக்கொண்டது தோற்றன் மாத்திரமேயாயின் புத்திரன் பிறப்பதற்கு எங்ஙன மியலுமென்க. இத்திருவிளையாட்டால் இறைவன் தான் ஆண்தன்மையை யுடையவனென்பதையும் திருமால் பெண்தன்மையை யுடையனென்பதையும் இரகசியமாயல்லாமல் மாசாத்தாவைத்தந்து அவருக்கு அரிகரபுத்திரரென்கிற நாமமிட்டு உலகெல்லாம் அவராணையின்வழி நிற்கச் செய்தனருமாமெ

ன்க. இதனால் திருமால் இறைவனுக்கோர் சத்தியென்பது நன்கு விளங்கினமையால் இச்செய்யுளில் சிவபெருமானைப் பகவனென்றார். (உ௯)

அரிலறச்செய்பணியருளிநின்னருட்
குரியபேரிறைமையுமுதவவேண்டுமாற்
கருவிடம்பருகியகளகணெந்தைநின்
றிருவடிச்சார்புடைச்சிறியனேற்கென.

(இ-ள்.) கருவிடம் பருகிய களகண் எந்தை-கருமையாகி விடமுண்ட களகணுகிய எந்தாய், நின் திருவடி சார்பு உடையசிறியனேற்கு - உன்றிருவடிச் சார்பினையுடைய சிறியேனுக்கு - அரிலறசெய்பணி அருளி - குற்றமறச் செய்யத்தக்கபணிகளைக் கட்டளையிட்டு, நின் அருட்குரிய பேர் இறைமையும் உதவவேண்டும் - நின்கிருபைக்குச் சுதந்தரமாகிய பெரிய இறைமைத் தன்மையையும் அருளவேண்டும் என்று கேட்க. (எ-று.)

(மாசாந்தாவானவர் இறைவனை நோக்கி) எந்தயே அடியேனுக்கு உன்னடிமைத் தொண்டருளி உன்னருளுக்குரிய இறைமைத் தன்மையும் அருள் செய்யவேமெனறிரந்தனரென்க.

கற்றைவார் சடையெம் மண்ணல் கண்ணுதல் பாதநண்ணி, மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென மதித்தலாகிய குற்றம் பரிகாரத்துக்கடங்காத குற்றமாகலின் அக்குற்றத்துக்கு யானுளாகாவாறு அருள்செய்யவேண்டுமென்பார் அரிலறச் செய்பணியருளி எனவும், திருமால் முதலிய தேவரெல்லாம் இறைமைத் தன்மையை யடைந்து இறைவன்றிருவருளை மறந்து பிறப்பிறப்பிலுழன்றனராகலின் அவ்விறைமைத்தன்மையை எனக்களிக்காது நின்திருவருளே மேன் மேனிணைக்கும் அன்பில் தலைமைத்தன்மையளிக்கவேண்டுமென்பார் நின்னருட்குரிய பேரிறைமையு முதவவேண்டுமெனவும், இவ்விரண்டும் வேறோர் சார்பிகந்து திருவடிச்சார்பே சார்பாகவுடையவருக்கே இறைவனனுக்கிரகஞ் செய்வா னென்பார் எந்தை நின்றிருவடிச் சார்புடைச் சிறியனே னெனவுங் கூறினர். (௩0)

மறைமிடற்றெம்பிரானியம்புமைந்தகே
ளிறைமைநம்மருளினாலெய்தற்பாலதா
மறைதருமருளுமெய்யன்பினாவதப்
பொறைகெழுபத்தியும்பூசைப்பேறரோ.

(இ-ள்.) மறைமிடறு எம்பிரான் இயம்பும் - விடமறைந்த கண்டத்தினையுடைய இறைவன் கூறுவான், மைந்தகேள் - மகனேகேள், இறைமை நம் அருளினால் எய்தற்பாலதாம் - இறைமைத் தன்மை நம்மருளாலடைதற் பான்மையதாம், அறைதரும் அருளும் மெய் அன்பின் ஆவது-சொல்லத்தகும் அருளும் மெய்யன்பினாலாவது, அப்பொறை கெழு பத்தி யும்பூசைபேறு-அப்பொறை மிகுந்த பத்திமையாவது பூசனைப் பேறேயாம். (எ-று.)

விடமறைந்த கண்டத்தையுடைய எமது பெருமான் மாசாத்தாவைப்பார்த்து, மைந்தனே! யாம் ஒருண்மை கூறுகின்றோம் கேட்பாயாக, நீகேட்ட இறைமைத்தன்மை நமது அருளினாலாவதாகும், அவ்வருளோ மெய்யன்பினாலாவதாகும் அவ்வன்போ பூசையினாலுண்டாவதாகும் என்க.

உலகின்கண் ஒருவன தனனினுயர்ந்தவனால் ஓர்பயனை விரும்புவானாயின் அவனை வழிபட்டாலன்றி ஆவதுண்டோ; ஆகலான் அவ்வழிபாட்டையே ஈண்டுப் பூசையெ ன்று குறித்தவாறு. (எ-று.) (உசு)

பூசையாவதுசிவலிங்கபூசையத்
தேசமையருச்சனைக்கிடனுஞ்சீர்த்திசா
லாசறுதலங்களாமங்கவற்றினுங்
காசிமற்றதனினுங்காஞ்சிமாநகர்.

(இ-ள்.) பூசையாவது சிவலிங்கபூசை - பூசனையென்று சொலலப்படுவது சிவ லிங்க பூசனையாம், அ தேசு அமை அருச்சனைக்கு இடனும் சீர்த்திசால் ஆசு அறு தலங் களாம் - அக்கீர்த்தியமைந்த அருச்சனைக்கிடமும் சிறப்பமைந்த குற்றமற்றதலங்களாம், அங்கு அவற்றிலும் காசி - அத்தலங்களினும காசிசிறந்தது, அதனினுஞ் காஞ்சிமாநகர்- அதனினுங் காஞ்சிநகர் சிறந்தது. (எ-று.)

முன்பூசை யென்று கூறியது சிவலிங்க பூசையாகும் அப்பூசைக்குரிய விடங்க ளோ தலங்களாகும், (அத்தலங்களோ பல) அவற்றுள்ளும் காசி சிறந்தது அதனினுஞ் சிறந்தது காஞ்சிமாநகரமாமென்க.

பூசையாவது சிவலிங்கபூசை என்றதனால் பூசைகள் பல எனவும், அவற்றுள் சிறந்தது சிவலிங்கபூசை எனவும் போந்தது, போதரவே ஏனைய பூசைகளுக்குப் பயனளிக்குங் கடவுள் யாவர் என ஆசங்கை நிகழும். இவ்வாசங்கையால் கடவுளர் பலரென வரும், வருமாயின் "யாதொரு தெய்வங்கண்டீரத்தெய்வமாகி யெங்கள் மா தொருபாகனார் தாம் வருவர்'' என்ற சித்தாந்த வாக்கியத்திற்கு முரணாகும். ஆகலின் தெய்வம் பலவன்று ஒன்றே, அவ்வொரு தெய்வமோ மாதொருபாகமாயுள்ளது, அத் தெய்வமே புண்ணியத்தினளவாகவும் அறிவின் விசாலத்திற்கேற்பவும் வழிபடும் படி வங்களினின்று அவ்வவ்வான்மாக்களுக்கு வேண்டியாங்கருள் செய்யுமெனவிளங்கிற்று. இவ்விளக்கத்தால் அவ்வப்படிவங்களினின்று நிகழும் அனுக்கிரகங்க ளெல்லாம் மா தொருபாகனுருடைய தெனவும், அவ்வடிவங்கள் அவ்விறைவனுடைய வடிவங்களன் றெனவும் அறியக்கிடந்தன. இதனால் அனுக்கிரகஞ் செய்யும் கடவுட்குரிய வடிவத்தை புணர்ந்து வழிபடுவதே மேலான வழிபாடாகும், ஆகலான் பூசையாவது சிவலிங்க பூசையென்றார். லிங்கமென்ற குறி ஏனையகடவுளரைக் குறிக்காது இறைவனையே குறி த்தலான் சிவலிங்கமென்றதென்க. லிங் என்பது லயத்தையும் கம் என்பது தோற்ற த்தையும் காட்டுவதாகும். எனவே இலிங்கமே சர்வான்மாக்களும் ஒடுங்குமிடமாயும், மீளவுந் தோன்றுமிடமாயு முள்ளதென்றாயிற்று. ஆகவே இவ்விலிங்கப்பொருள் லிங் காதிஷ்டிதமாகிய சிவத்துக்காகு மென்றுணரற்பாற்று. இதனால் சிவத்தினிடத்தே யாவுந்தோற்ற நாசத்தையடையுமே யல்லது சிவந்தோற்ற நாசத்தை யடையாதெனக் கொள்ளக் கிடந்தது. கிடக்கவே தோற்றநாசத்தோடுங் கூடிய பசுக்கள் தோற்றநாச மில்லாத பதியைப் பூசிப்பதே பூசையாகலின் பூசையாவது சிவலிங்கபூசை என்று ரெனக் கொள்ளலுமாம். (உஎ)

கண்ணகன்புரிசைசூழ்காஞ்சிவைப்பிடைப்
புண்ணியச்சிவக்குறிநிறிவிப்பூசித்து
விண்ணவர்தவமுனிவேந்தர்யாவரு
மெண்ணரும்பேறுபெற்றின்பஈடினார்.

(இ - ள்.) விண்ணவர் தவமுனிவேந்தர் யாவரும் - தேவர்கள் தவத்தையுடைய முனிவர்கள் அரசர்கள் முதலிய யாவரும், கண்ணகன் புரிசைசூழ் காஞ்சிவைப்பினிடை - இடமகன்ற மதில்சூழ்ந்த காஞ்சிப்பதியில், புண்ணியம் சிவக்குறிநிறுவி பூசித்து - புண்ணிய சொரூபமாகிய சிவலிங்க தாபனஞ்செய்து வழிபட்டு, எண்ணரும் பேறுபெற்று இன்பம் நீடினர் - நினைத்தற்கரிய பேறுகளையடைந்து இன்பத்தில் நீங்காதிருந்தார்கள்.

விண்ணவர்முதலிய யாவரும் காஞ்சிப்பதியில் சிவலிங்கபூசைசெய்து இம்மை மறுமைப் பயனையடைந்து இன்புற்றிருந்தார்களென்க.

தம்மை வழிபடுவோர்க்குப் புண்ணியத்தை விளைவித்தலால் புண்ணியச் சிவக்குறி எனவும், இறைவன் வழிபாட்டாலன்றி ஏனையோர் வழிபாட்டால்வரும் இன்பம் இடையே கெடுமாதலால் பேறுபெற்றின்ப நீடினர் எனவும் கூறினர். (உ௮)

ஆயிடைநீயெமையருச்சித்தேத்துதி
மாயிருந்தலைமைநாம்வழங்குகேமெனச்
சேயிழைபங்கினனருளிச்செய்தலுங்
காயிலைப்படையவன்காஞ்சிநண்ணினான்.

(இ - ள்.) ஆயிடை நீ எமை அருச்சித்து ஏத்துதி - அவ்விடத்தில் நீ யெம்மை யருச்சனைசெய்து வணங்கு, நாம் மாயிருந்தலைமை வழங்குகேம் என - நாம் மிகப் பெருமையாகிய தலைமையினை யளிப்போமென்று, சேயிழைபங்கினன் அருளிச் செய்தலும் - செம்பொன்னாலாகிய அணிகளையணிந்த உமையம்மையைப் பாகத்திலுடைய இறைவன் கட்டளையிடலும், காய் இலைப்படையவன் - கோபிக்கின்ற இலைபோலும் படையினையுடைய மாசாத்தன், காஞ்சி நண்ணினான் - காஞ்சிநகரத்தை யடைந்தான். (எ-று.)

அக்காஞ்சித்திருப்பதியில மாசாத்தனே நீ எம்மை யருச்சனைசெய், நாம் உனக்கு இறைமைத்தன்மையைக் கொடுக்கின்றோம் என்றனுக்கிரகஞ்செய்யவும் அவ்வாறே மாசாத்தர் காஞ்சிநகரத்தை யடைந்தனரென்க.

ஈண்டு காயிலைப் படை என்றது வளை. (உ௯)

உருகெழுபனிவரைப்பிராட்டியொண்மலர்த்
திருவடிச்சுவடுதோய்செல்வக்காஞ்சியின்
மருவிவேற்கடவுளைவழுத்தியாங்கவ
னருளினாற்சிவக்குறிநிறுவியர்ச்சித்தான்.

(இ - ள்.) உருகெழு பனிவரை பிராட்டி - தோற்றம்விளங்கிய மலையரையன்பயந்த உமையம்மையினுடைய, ஒள் மலர் திருவடி சுவடு தோய் - ஒள்ளியமலர்போன்ற திருவடிச்சுவடு தோயப்பெற்ற, செல்வம் காஞ்சியின் மருவி வேல்கடவுளை வழுத்தி - செல்வம்வாய்ந்த காஞ்சிநகரத்தை யடைந்து வேற்படையினையுடைய குமார கோட்டத்தடிகளைத் துதித்து, ஆங்கு அவன் அருளினால் சிவகுறி நிறுவி அர்ச்சித்தான் - அவ்விடத்து அக்கடவுளருளால் மாசாத்தன்றளிப்பிரானென்னும் பெருமானைத் தாபித்து அருச்சனைசெய்தான். (எ-று.)

மாசாத்தாவானவர் உமையம்மை திருவடி தோயப்பெற்ற காஞ்சிமாநகரத்தையடைந்து குமாரக்கடவுளைப்போற்றி அவரது அருளைப்பெற்று சிவலிங்கார்ச்சனை செய்தனரென்க.

'ஆற்ருதகாஞ்சீ நிலயாம்'' [illegible]னவும் ''காஞ்சீரத்நவிபூஷணாம்'' எனவும், ''கம்பா தீரசாலினீம்'' எனவும், ஆம்ரதருமூலவஸதே எனவும், தூர்வாசமுனிவர் மூகடஞ்சா [illegible]வியைக் காஞ்சியில நிலைபெற்றிருக்கின்றவராகவும், அப்பதியில இரத்ந [illegible] விளங்குகின்றவராகவும், கம்பாநதியில் உலாவும்பாதங்களை யுடையவரா [illegible]திலை [illegible] வராகவும் கூறியிருக்கின்றமையால் ''[illegible]னிவனாயிரா [illegible]வடுதே [illegible]லவகசாஞ்சி'' எனவும், மாசாத்தர் பூசிககககண்ட சிவ [illegible] குமாரகோட்டவெல்லைகருட் பட்டதாகலின் வேறகடவுளைவழுத்தி யாங்கவ னருளினும் சிவக்குறிநிறுவி யர்ச்சித்தான் எனவுங்கூறினா.

'அளககலாகாவளவும்' என்னுஞ் சூத்திரத் து மலைக்குத்தோற்றச் சிறப்புக்கூறலின் உருவளர் பனிவரையென்றார். வரை ஆகுபெயர். (கூ0)

மறைமுதல்விடைமிசைத்தோன்றிமற்றவற்
கறைகழலிமையவரருகுசூழ்தர
முறைகெழுபூதங்கண்முழுதுங்காப்புற
மிறைமையினமணிமுடியினிதுசூட்டினான்.

(இ - ள்) அறைகழல இமையவா அருகுசூழ்தர மறைமுதல விடையமிசை தோன்றி - சத்திக்கின்ற வீரகண்டையணிந்த தேவர்களருகிற் சூழ வேதமுதலவனாகி ய சிவபெருமான் இடபத்தின்மேல் விளங்கி, முறைகெழு பூதங்கள் முழுதும் காப்புறும் - முறைவிளங்கிய பூதங்கள் முழுதும் காககும், இறைமையின மணிமுடி அவற்கு இனிதுசூட்டினான்-இறைமைத்தன்மைக்காக மணியினலாகிய முடியினை மாசாத்தருக்கு இனிமையாகத் தரித்தனன் (எ - று.)

மாசாத்தர் அருச்சனைககிரங்கி தேவர்களெல்லாம் புடைசூழ வேதமுதல்வராகிய இறைவன் இடபாரூடராய்த் தோன்றி அவருக்குத் தம்முடைய பூதகணங்களையெல் லாம் காக்கும இறைமைத்தன்மையைத் தந்து மணிமுடி சூட்டினனென்க. (கூக)

பல்கரிவீரர்தேர்பரிகடம்முட
னல்கியதலைமைபெற்றனையசாத்தனு
மொல்கிடைமலைமகளுவகைமீக்கொள
மலகுசீர்பபிலத்தயன்மகிழ்ந்துவைகினான்.

(இ - ள்) அனைய சாத்தனும் - அச்சாத்தனும், பலகரி வீரர் தேர் பரிகள் தம் முடன் - பலயானை வீரர் தேர் குதிரை ஆகிய இவைகளுடன், அல்கியதலைமைபெற்று - நிலைபெற்ற தலைமைபெற்று ஒலகு இடைமலைமகள் உவகைமீக்கொள - சுருங்கிய இடையினையுடைய மலைபளாயன் மகளாகிய உமையமமை மிகக மகிழ்ச்சியடைய, மல்குசீர் பிலத்து அயன் மகிழ்ந்து வைகினான் - நிரம்பிய சிறப்பினையுடைய பிலா காசத்தயலில் மகிழ்ந்து தங்கினான் (எ - று.)

மணிமுடி சூட்டப்பெற்ற மாசாத்தா வானவர் எண்ணிறந்த ரதகசதுரகபதாதிக ளாகிய சதுரங்க சேனைகளோடும் எக்காலத்தும் அழியாத இறைமைத்தன்மையையும் பெற்று அக்காஞ்சியின் பிலாகாசமூலத்தில் வாழ்கின்ற உமையம்மை மகிழ அப்பிலத் தருகே நாமும் மகிழ்ந்து காவலாக விருந்தனரென்க.

இறைவனால் நாம்பெற்ற பெருநலத்திற்குத் தக்க பெரும்பயன் இறைவிகொண்ட தவபிலகு நாம் காவலாகயிருப்பதேயாமெனறெண்ணி அங்கிருந்தனரென்பார் மலை மகளுவகைமீக்கொளப் பிலத்தயன் மகிழ்ந்து வைகினனென்றார். (கூஉ)

கடாகிரைபேழுயர்கரிகண்மேல்கொடு
நடாயுளங்களித்திறுமாந்துநாடொறும்
வடாதுபாற்செண்டணைவெளியின்மாறடு
மடாவலிபடைத்தவனுடல்பேணுமால்.

(இ - ள்) மாறுஅடும் அடாவலி படைத்தவன் - பகைவரை வெற்றிகொள்ளும் கெடாத வலிபடைத்த மாசாத்தன், கடாகிரை எழு உயர்கரிகள் மேல் கொடு நடாய்- மதச்சுவடு நிறைந்த ஏழுறுப்புயர்ந்த களிற்றின்மேற்கொண்டு நடத்தி, உளங்களித்து இறுமாந்து - மனங்களித்து இறுமாப்படைந்து, நாள்தொறும் வடாதுபால செண்டு அணை வெளியில் - எந்நாளும் வடதிசையில் செண்டணை வெளியினிடத்தில், ஆடல்பேணும் - ஆடலையே விரும்பியிருப்பான். (எ - று.)

பகைவரை வெற்றிகொள்ளும் ஆற்றலையுடைய மாசாத்தர் மதயானைமேற் கொண்டு களித்திறுமாந்து நாள்தோறும் காஞ்சிப்பதிக்கு வடதிசையிலுள்ள செண்டணை வெளியில் ஆடலையே விரும்பியிருப்பாரென்க.

காஞ்சித்திருப்பதியில் மாசாத்தர் காவல்கொண்டு செண்டைக்கையிலேந்தி விளையாடுமிடம் 'வடதிசையாதலாலும் அக்காரணத்தாலவ்விடத்துக்கு செண்டணை வெளிஎன்று பெயராதலாலும் அடாவலிபடைத்தவன் கரிகண்மேல்கொடு நாடொறும் வடாதுபாற் செண்டணை வெளியின் ஆடல்பேணும் என்றார். இதனை "செண்டு கையேந்தி, வித்தகக்கரிமேல்கொளுங்காரிமேவுசெண்டணை வெளியுமொன் றுளதால்" எனப்பெரியபுராணத்து திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில்வருதல்காண்க. நடாய் இறந்தகாலப் பிறவினையெச்சம், (௫௫)

வலம்படர்சிறப்பின்மாசாத்தனேத்திய
நலம்படர்கருணைமாசாத்தநாதனைப்
புலம்படர்சிந்தையாற்போற்றப்பெற்றவ
ரிலம்படாரிருமையுமின்பமெய்துவார்.

(இ - ள்) வலம்படர் சிறப்பின் மாசாத்தன் ஏத்திய - வன்மைமிகுந்த சிறப்பினையுடைய மாசாத்தன்வழிபட்ட, நலம்படர் கருணை மாசாத்த நாதனை - நன்மை மிகுந்த கருணையினையுடைய மாசாத்தன் றளிப்பிரானை, புலம்படர் சிந்தையால்-அறிவுமிகுந்த சிந்தையினால், போற்றப்பெற்றவர் இலம்படார் - வணங்கப்பெற்றவர் வறுமையையடையார், இருமையும் இன்பம் எய்துவார் - இம்மை மறுமை யென்னு மிரண்டினும் இன்பத்தை யடைவார். (எ - று.)

மாசாத்தர் வழிபட்ட மாசாத்தநாதனைப் போற்றப்பெற்றவர் துன்பமடையார் இருமையுமின்பம் பெறுவாரென்க.

அறிவிற்சிறந்த பெரியோர் வெறுப்பது வறுமையும், விரும்புவது இன்பமுமாதலால் புலம்படர் சிந்தையிற் போற்றப்பெற்றவ ரிலம்படா ரிருமையு மின்பமெய்துவார் என்றார். "வடிவுந்தனமு மனமுங்குணமுங், குடியுங்குலமுங் குடிபோகியவா, வடியந்தமிலாவயில்வேலரசே, மிடியென்றொருபாவி வெளிப்படினே" எனப்பெரியோர் மிடியை வெறுத்து இன்பம் வேண்டினமை காண்க. (௫௬)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மற்றதன்வடபான்மலைமகளிகுளை மங்கைமன் [illegible] பழுத்து
வெற்றிமண்டபத்தின்பிறகுறமங்களீசனைவிதியுளிநிறவி

ஊற்றமில்சிறப்பின்மங்களதீர்த்தமகழ்ந்துநீராட்டுபுதொழுதாள்
பற்றுமங்களநாளத்தடம்படிந்துபணிபவரிருமையும்பெறுவார்.

(இ - ள்) அதன் வடபால் மலைமகள் இகுளை மங்களை - அம்மாசாத்தன் றளிக்கு வடதிசையில் மலையரையன்மகளாகிய உமாதேவி சேடியர்களாகிய இகுளை மங்களை என்பவர்கள், மண்டபம் இழைத்து வெற்றிமண்டபத்தின் பிறகு உற - மண்டபமுண்டாக்கி அவ்வெற்றிமண்டபத்தின்பிறகே பொருந்த, மங்களீசனை விதியுளி நிறுவி - மங்களீசனை விதிமுறையிற் ருபித்து, ஊற்றமில் சிறப்பின் மங்கள தீர்த்தம் அகழ்ந்து - நீங்குதலில்லாத சிறப்பினையுடைய மங்களதீர்த்தத்தைத் தோண்டி, நீர் ஆட்டுபு தொழுதாள்-அந்நீரால் அபிஷேகஞ்செய்து வழிபட்டாள், பற்றும் மங்களநாள் அத்தடம்படிந்து பணிபவர் இருமையும் பெறுவார் - பொருந்திய மங்களவாரத்தில் அவ் வாவிநீராடி வணங்குவோர் இம்மை மறுமைப்பயனையடைவார். (எ-று.)

மேற்கூறிய, மாசாத்தன்றளிக்கு வடதிசையில் உமாதேவி சேடியர்களாகிய இகுளைமங்களை என்பவர்கள் ஓர் மண்டபஞ்சமைத்து அம்மண்டபத்தின்பின்னர் மங்களீசப்பெருமானை விதிப்படி தாபித்து மங்களதீர்த்தமென் றோர் தீர்த்தமுண்டாக்கி அத்தீர்த்தத்தால் அபிஷேகஞ்செய்து ஆராதித்தார்கள், அம்மங்களதீர்த்தத்தில் மங்களவாரத்தில்மூழ்கி அச்சிவலிங்கப்பெருமானை வணங்கப்பெற்றோர் இம்மைமறுமைப் பயனை யடைவார்களென்க. (௩௫)

உரைத்ததன்குடபாற்றசரதன்மதலையரக்கனையடுபழியொழிப்பா
னருட்குறியிருத்திச்சேதுவிற்றொழுதங்கண்ணலாரேவலிற்காஞ்சி
வரைப்பினுற்றிராமநாதனைநிறுவிவழிபடூஉக்கொடுவினைமாற்றித்
திரைப்புனலயோத்திப்புகுந்தரசளித்தான்சேதுவிற்சிறந்ததத்தலமே.

(இ - ள்.) உரைத்த அதன்குடபால் - சொல்லிய அதன் மேற்றிசையில், தசரதன் மதலை அரக்கனை அடுபழி ஒழிப்பான் - தசரதமகாராசனுடைய புத்திரனாகிய ராமன் இராவணனைக்கொன்ற வீரப்பழியை ஒழிக்கும்பொருட்டு, சேதுவில் அருள்குறி இருத்தித்தொழுது அங்கு அண்ணலார் ஏவலில் - சேதுவில் சிவலிங்கமூர்த்தியை நிறுவிவழிபட்டு அவ்விடத்தே இராமநாதர் கட்டளையால், காஞ்சிவரைப்பில் உற்று இராமநாதனைநிறுவி வழிபட்டு - காஞ்சி நகரையடைந்து இராமநாதனைத் தாபித்துத்தொழுது, கொடுவினை மாற்றி - கொடுந்தொழி லொழிந்து, திரைபுனல் அயோத்திபுகுந்து அரசு அளித்தான் - நீர்வளமிக்க அயோத்தி நகரையடைந்து அரசாட்சிசெய்தான், (அதனால்) அத்தலம் சேதுவிற் சிறந்தது - அத்தலமானது சேதுவினுஞ் சிறந்தது. (எ - று.)

இராமன் இராவணனைக்கொன்ற பழிநீங்குமாறு சேதுவில் சிவலிங்கக்குறி நிறுவிப்போற்றியபின்னர் அந்த இராமநாதனுடைய ஆணையால் இராமன் காஞ்சிநகரத்தையடைந்து மேற்கூறிய மங்களதீர்த்தத்திற்கு மேற்றிசையில் தன்பெயரால் சிவலிங்கப் பெருமானை வழிபட்டுச் சேடித்துநின்ற பாவமொழியப்பெற்று அயோத்தியையடைந்து அரசியல் புரிந்தனன். ஆகலின் அத்தலம் சேதுவினுஞ் சிறந்ததென்க.

இராமநாதனே காஞ்சிக்குச் செல்ல ஏவினுராகலிற் சேதுவிற்சிறந்த தத்தலம் என்றார். (௩௬)

இனையதன்வடபான்மாதவியென்பானிராகவனிலங்கையர்கோமான்
றனையடுஞான்றுவாசவன்விடுப்பத்தடங்குதேர்செலுத்துவோனுகி




அனநதபதமநாபீசபபடலம

நணைமலர்வாகைமுடித்தபினிராமன்றன்னொடுகாஞ்சியைநண்ணிப்
புனைபுகழ்மாதலீச்சரந்தொழுதுபுரந்தரற்கினியவனானான்.

(இ - ள்.) இனையதன்வடபால் மாதலி என்பான் - இவ்விராமேச்சுரத்தின் வடபுறத்தில் மாதலியென்று சொல்லப்படுபவன், இராகவன் இலங்கையர் கோமான் தன்னை அடுநான்று - இராமன் இலங்காதிபனாகிய இராவணனைக் கொன்றானாகத்து; வாசவன்விடுப்ப - இந்திரன்விடுக்க, தயங்கு தேர் செலுத்துவோனாகி - விளங்குகின்ற இரதத்தைச் செலுத்துவோனாய், நணைமலர் வாகைமுடித்த பின் - அரும்புகின்ற வாகைமாலை (இராமன்) சூடியபிறகு, இராமன் தன்னொடும் காஞ்சியை நண்ணி - இராமனோடும் காஞ்சித் தலமடைந்து, புனைபுகழ் மாதலீச்சரம் தொழுது புரந்தரற்கு இனியவன் ஆனான் - புனைந்த புகழினையுடைய மாதலீசந்தை வணங்கி இந்திரனுக்கு இனியவனாயினான். (எ-று)

இராகவன் இராவணனோடு போர்புரிகின்றகாலத்து இந்திரன் மாதலியென்பவனை இரதசாரதியாகவிடுப்ப அம்மாதலி இந்திரனாணையின்படியே இராமனுக்குச் சாரதியாகவிருந்து அவ்விராமன் வெற்றிகொண்டு காஞ்சியையடைந்தபோது தானுமடைந்து இராமேச்சுரத்திற்கு வடபுறத்தில் தன்பெயரால் சிவலிங்கப் பெருமானை வழிபட்டு இந்திரன்பாற்சென்று அவனுக் கினிமையானானெனக. (கஎ)

மாசாத்தன்றளிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஅகூஅ.

# அனந்தபற்பநாபப்படலம்.

வருவினைதெறுமாசாத்தன்றளியொளிமங்களீசந்
திருவிராமீசமாதலீச்சரந்தெளியச்சொற்றாந்
தருவலர்நிரந்தமுன்றின்மாதலீச்சரத்தின்மேல்பா
லொருவில்சீரனந்தபற்பநாபத்தினுண்மைசொல்வாம்.

(இ - ள்.) வரும்வினை தெறும் மாசாத்தன்றளி ஒளி மங்களீசம் திருவிராமீசம் மாதலீச்சரம் தெளிய சொற்றாம் - ஆகாமியத்தை யொழிக்கும் மாசாத்தன்றளியும் கீர்த்திபெற்ற மங்களீசமும் திருவிராமீசமும் மாதலீச்சரமும் யாவரும் அறியும்படி சொன்னோம், தரு அலர் நிரந்தமுன்றில் மாதலீச்சரத்தின் மேல் பால் - கற்பகவிருட்சத்தின் மலர்கள் நிறைந்த முற்றத்தையுடைய மாதலீச்சரத்தின் மேற்றிசையில், ஒருவில்சீர் அனந்தபற்ப நாபத்தின் உண்மை சொல்வாம் - நீங்குதலில்லாத சிறப்பினையுடைய அனந்த பற்பநாபத்தினுடைய சரித்திரத்தைச் சொல்வோம். (எ - று.)

இது காறும் மாசாத்தன்றளிமுதலிய நான்குதிருப்பதிகளைச் சொன்னோம் இனி மேற்கூறிய தளிகளுக்குள் மாதலீச்சரத்துக்கு மேல்பாலுள்ள அனந்த பற்பநாபத்தினுடைய சரித்திரத்தை இனி யெடுத்துச் சொல்லுவாமென்க. (க)

எண்ணருமுயிர்களீன்றவிருமுதுகுரவராஞே
ரண்ணலங்கயிலைவெற்பினமர்வுழியொருநாளங்க
ணுண்ணிறைகளிப்பினீடியொள்ளொளிமணிச்சூதாடக்
கண்ணினரகிலமுய்யக்கண்ணிஞரனையகாலை.

(இ - ள்.) எண்ணரும் உயிர்கள் ஈன்ற இருமுதுகுரவர் ஆஞேர் - கணக்கில்லாத உயிர்களைப்பெற்ற அம்மையப்பராகிய இறைவியும் இறைவனும், அண்ணல் அம் கயிலை வெற்பின் அமர் உழி - பெருமையமைந்த அழகிய கைலைமலையில் வீற்றிருந்தருளிய காலத்தில், ஒருநாள் அங்கண் உள் நிறை களிப்பில்நீடி-ஒருநாள் அவ்விடத்தில் உள்ளத்தில் நிறைந்த மகிழ்ச்சியின் மிகுந்து, அகிலம் உய்யகண்ணிஞர் - உலகமுய்யக் கிருபா நோக்கத்தினையுடையவர்களாகி, ஒள் ஒளிமணி சூது ஆட கண்ணிஞர் - மிக்கவொளியுள்ள மணியிஞற்செய்யப்பட்ட சூதாடுகருவியிஞ லாடநினைந்தருளினர், அனைய காலை - அக்காலத்தில், (எ - று)

இறைவனும் இறைவியும் கயிலையில் வீற்றிருக்குநாளில் ஓர்நாள் களிப்பின்மிகுந்து சூதாடுதலைத் திருவுள்ளத்திலெண்ணிஞர்கள் அக்காலத்திலென்க.

எண்ணிலா வுயிர்களுக்கு ஆங்காங்கு அம்மையப்பராயிருந் துபகரித்தலும், உபகரிக்கு மிருவரையும் கண்டு களிக்குமாறு கயிலையில் சகளவடிவங்கொண் டிருந்தலும், அங்ஙனம் சகளவடிவங்கொண்டிருந்து ஆன்மாக்கள் வினையைநாடியோ, பரிபாகம் நோக்கியோ, பேரின்பவீடுதவவோ ஒவ்வோர் காலங்களில் ஒவ்வோர் திருவிளையாடலைச் செய்வதுபோலும் சூதாடநினைந்ததும் உயிர்களுய்யும் அனுக்கிரகநோக்கமே என்றுணர்த்துவார் அகிலமுய்யக் கண்ணிஞரென்ருர். (உ)

மாலையந்துளவோனெய்திவணங்கிச்சாந்தாற்றிக்கோடன்
மாலையனுகிநின்றுமெய்வெயர்மாற்றநோக்கி
மாலைவெண்பிறைதாழ்வேணிவள்ளலுமுமையுமாங்கண்
மாலையவ்வினைக்குச்சான்றுவைத்தனராடிஞர்கள்.

(இ - ள்.) மாலை அம் துளவோன் எய்தி வணங்கி - துளவமாலையணிந்த விஷ்ணுவடைந்து துதித்து, சாந்தாற்றி கோடல் மாலையனுகி நின்று மெய் வெயர் மாற்ற - விசிறி பணிமாறலாகிய தொழிலை மேற்கொள்ளுதலில் அவாவுடையவனுகி திருமேனியின் வியர்வினையொழிக்க, மாலை வெண்பிறைதாழ் வேணிவள்ளலும் உமையும் நோக்கி - அந்திக்காலத்திற் ருேன்றும் வெண்பிறை வந்தடைகின்ற சடாமகுடத்தினையுடைய இறைவனும் இறைவியும் கண்டு, ஆங்கண் மாலை அவ்வினைக்கு சான்றுவைத்தனர் ஆடிஞர்கள் - அவ்விடத்தே திருமாலை அவ்வாடலுக்குச் சாட்சியாக வைத்தாடிஞர்கள். (எ-று.)

(அம்மையப்பரிருவரும் சூதாடுதலை விரும்பி விளையாடிக்கொண்டிருக்கின்ற சமயத்தில்) திருமாலங்குவந்து பணிந்துநிற்க, அவ்விருவர்மேலும் வெயர் வரும்ப அதனை நோக்கி மனங்கசிந்து விசிறிப்பணிமாறலாகிய தொழிலை மேற்கொண்டு அவ்வியர்வினையொழிக்க அப்பொழுது இறைவனும் இறைவியும் இவ்வியர்வினை யொழித்தவர் யாவரென்று நோக்க, அங்ஙனந் திருமால் அப்பணியினிற்கக் கண்டு திருமாலே நீ இப்பொழுது நாங்களாடும் இவ்வாட்டத்துக்கு சாட்சியாக விருப்பாயென்று கூறி அத்திருமாலைச் சாட்சியாக்கி முன்போ லாடிஞர்களென்க. (ந)

பிடித்தெறிகவறாட்டத்திற்பிஞ்ஞகன்றோற்பச்செங்கே
ழடித்தளிர்ப்பிராட்டிநோக்கியடிகளைவென்றேனென்றாள்
விடைக்கொடிப்பெருமான்யாமேவென்றனமென்றான்பாச
முடைத்தவர்தங்கட்கிவ்வாறுற்றனகலாங்கண்மேன்மேல்.

(இ - ள்.) பிடித்து எறி கவறு ஆட்டத்தில் பிஞ்ஞகன்தோற்ப - பிடித்தெறிந் தாடாநிற்கும் சூதாட்டத்தில் சிவபெருமான் றோல்வியடைய, செங்கேழ் அடித்தளிர் பிராட்டி நோக்கி அடிகளைவென்றேன் என்றாள் - செந்நிறமுள்ள பாதமாகிய தளிரை யுடைய அம்மையார் தாம் வெற்றிகொண்டதைப பார்த்து இறைவனை வெற்றிகொண் டேனென்றாள், விடைகொடி பெருமான் யாமே வென்றனம் என்றான் - இடபக்கொ டியையுடைய இறைவன் யாமே வெற்றிகொண்டோ மென்றனன், இவ்வாறு பாசம் உடைத்தவர் தங்கட்கு கலாங்கள்மேல் மேல் உற்றன - இவ்வகையாகப் பாசமகாதியி லேநீங்கிய அம்மைக்கும் அப்பருக்கும் கலகங்கள் மேன்மேலு நேர்ந்தன. (எ-று.)

(திருமாலைச் சான்றாகவைத்து அம்மையப்பரிருவரும்) சூதாடு கருவியைப் பிடித் தெறிந்து ஆடுகிறபோது நமதப்பன்றோற்றனன். அதனைக்கண்ட நமதன்னை நான் வென்றேனென்றார். அப்பன் யாமே வென்றனம் என்றான். இவ்வாறு அம்மையப்ப ரிருவர்க்கும் மேன்மேற் கலகங்கள் விளைந்தன என்க.

நான் வென்றேன் நீ தோல்வியடைந்தா யென்பதும், அது காரணமாகக் குரோ தமேற்கொண்டு சாட்சிவேண்டலும் பாசமுடையார் செயலேயன்றி பாசமற்றவராகிய இவர்களது செயலன்றாகலான் பாசமுடைத்தவர் தங்கட் கிவ்வாறுற்றன கலாங்க ளென்றார். (௪)

யாமினிக்கலாய்த்தல்வேண்டலொழிகெனவிருவர்தாமு
மாதணிமார்பன்றன்னைவினாதலுமாயோனையன்
றாமரைவதனநோக்கித்தலைவனும்வென்றானென்றான்
கோமளங்கவின்றமேனிக்கோற்றொடிசீற்றங்கொண்டாள்.

இ - ள். யாம் இனி கலாய்த்தல் வேண்டல் ஒழிக என - யாமினிக்கலகங்கள் வேண்டற்பால தொழிகவென்று, இருவர்தாமும் மாது அணி மார்பன் தன்னைவினாத லும் - அம்மை யப்பரிருவரும் இலக்குமியை யணிந்த மார்பையுடைய திருமாலை நோக்கி யார்வென்றதென்று கேட்டலும், மாயோன் ஐயன் தாமரை வதனம்நோ க்கி தலைவனும் வென்றானென்றான் - திருமால் இறைவனது தாமரைபோன்ற திருமு கத்தைப்பார்த்து இறைவனும் வெற்றிகொண்டனனென்றான், கோமளம் கவின்ற மேனி கோற்றொடி சீற்றம்கொண்டாள் - அழகுததும்பும் திருமேனியையும் அழகிய வளையலையுமுடைய பராபரை கோபங்கொண்டனள். (எ-று.)

(யான் வென்றேன்யான் வென்றேனென்று கலகங்கள் மேன்மேல் விளைந்த போது) நாம் இருவரும் போராவானேன் நம்மிருவருக்கும் சாக்ஷியாக திருமாலிருக் கின்றான் அவனைக்கேட்போம் என்றிருவரும் கேட்டனர். திருமாலிறைவன் திருமுக த்தைப்பார்த்து இறைவன் குறிப்புணர்ந்து இறைவனும் வென்றனனென்றான். அப்பொ ய்மொழியைக்கேட்ட தேவி கோபங்கொண்டனளென்க.

ஆட்டத்தில் நிகழ்ந்தவண்ணம் கூறத்தொடங்கிய திருமால் இறைவனைநோக்க வும் அந்நோக்கத்தில் அம்மை பக்கல் யாம் கூறுவோமாயின் இறைவனுக்குக் கோபம் பிறக்குமென்றஞ்சிக் கூறினனாகலின் தலைவனும் வென்றானென்றார். (௫)

கண்டது கண்டவண்ணங் கழறிலை வாரம்பற்றித்
தண்டுணர்த் துவைத்தாரோய் கைதவச்சான்று சொற்று
யண்டரும்பிறரும் மேசக்கட்செவியாதி யென்னு
வொண்டொடிச்சபிப்ப மாயோனுளம்பதைத் திரங்குபோற்றி.

(இ - ள்) தண் துணர் துளவந்தாரோய்-தண்ணிய பூங்கொத்துகளையுடைய துளவமாலையணிந்தவனே, கண்டது கண்டவண்ணம் கழறிலை - பார்த்தது பார்த்த வகையாகவே சொல்லவில்லை, வாரம்பற்றி கைதவம் சான்றுசொற்றாய் - ஒருபக்கமன்புடையோனாகிப் பொய்ச்சான்று கூறினாய், அண்டரும் பிறரும்மேச கட்செவி ஆதி என்னு - (ஆதலால்) தேவர்களும் மற்றவர்களும் உனனை நிந்திக்கப் பாம்புருவமாகென்று, ஒண்தொடி சபிப்ப மாயோன உளம்பதைத்து இரங்குபோற்றி - ஒள்ளியவளையலையணிந்த அம்மை சபிக்கத் திருமாலும் மனந்திடுக்கிட்டிரங்கு துதியாநின்று, (எ-று.)

திருமாலே இருவர்க்குஞ் சான்றாகவிருக்கின்ற நீ, பார்த்ததைப் பார்த்தபடியே கூறாது ஒருவா டக்கலாக விருந்து பொய்ச்சான்று கூறினு யாகையாலயாவரும் இகழும்படியாகப் பாம்பாகப் பிறக்கக்கடவாயென்று அம்மைசபிக்கத் திருமால் திடுக்கிட்டுத் துதிந்துநின்று என்க.

அம்மையப்பர் செயலெல்லாம் யாவர்க்குந் துன்பத்தைப் போக்கி இன்பத்தை விளைவிப்பது இயற்கையாக, இங்ஙனந் திருமாலுக்குத் தீமையை விளைவித்தது யாங்ஙனமெனின் திருமால் காவற்கடவுளாதலால் அவற்கு அக்காவற்குரிய செங்கோலை வாய்மையின்வழிகோடாது செலுத்துவாயெனக்காட்டிய கருணையாமென்க எனவேதிருமால்தன்னின்பத்தை வேண்டியும் தன்னைச்சார்ந்தவக்குரிய இன்பத்தை வேண்டியும் வாய்மையினின்றுந் தவறிப் பலவஞ்சனையின்வழிச்சென்று ஓர்பக்கமாகத்தானின்று தன் காரியத்தை முடித்துக்கோடல் அத்திருமாலுக்கியல்பாதலால் அவ்வஞ்சத்தை யீண்டு வெளிப்படுத்தி அதற்குரிய தண்டத்தைச் செய்தனரென்க. திருமால் வஞ்சனை வழியில் செல்லுகின்றவரென்பதை குமரகோட்டப் படலத்தில் மார்க்கண்டேயமுனிவர் திருமாலைக்கண்டகாலத்து இருவருக்கும் நிகழ்ந்த சபவாதத்தில் நன்கு காட்டப்பட்டது. ஈண்டு விரிக்கின் பெருகும இடம் வந்துழிவிரிப்பாம்.

திருமாலிறைவனுக்கஞ்சி பொய்ச்சான்று கூறியதேயன்றித்தன்னின்ப முதலியவற்றையெண்ணிக் கூறியதன்றே இதற்கு இக்காரணங்கூறுதலடாதெனின் அற்றன்று ஈண்டிறைவனுக்கஞ்சியதும் தன்னின்பத்தையே நாடி என்க. எங்ஙனமெனின் இறைவனுக்கஞ்சியதன்று இறைவன் என்செய்வானோவென்று அவர் செய்யுந்தண்டத்துக்கும் அங்ஙனம் தண்டம்புரியின் நம்முடைய இன்பவாழ்க்கை முதலியயாவும் இழக்கவருமேயென்றும் எண்ணிக் கூறியதாகலின இதுவுந் தன்னின்பத்தையே நாடியதாமென்க,

இறைவனுணைக்கஞ்சிய திருமாலை இறைவிசபித்தது முறையாமோவெனின் இறைவனுணைக்கேயஞ்சியிருப்பானுயின் சபியார் - தன்னலத்தின் கேட்டையெண்ணி யஞ்சினுனாகலின் அஃது முறையேயாமென்க. அன்றியும் அம்மையப்பர் செயலை வெவ்வேறாகக் கூறுவோர் மருளுடையார், அருளுடையார் அங்ஙனங் கூறாரெனவு மொழிக்கற்பாற்று இதனாற் போந்தபொருள் திருமால் காவற்கடவுளாதலால் சமன்செய்து சீர்தூக்குங் கோல்போலமைந்தொருபாற் கோடாது வாய்மைவழியே செலுத்துவாயென்றவருக் கறிவுறுத்தியதென்றும் எவ்வளவு பெருஞ்சிறப்பினை யுடையராயினும் வாய்மைகடப்பா

ராயின் தீமையே பெறுவாரென்றும் உலகினர்க்குப் பொய்மையின் கொடுமையை யறி வித்தவாறாம். (௬)

அடியனேன் மடமைநீரா லறைந்ததுபொறுத்து சாப
முடிவளித் தருளாயென்றெனேக்கறமுதல்வி நோக்கி
நெடிதருள்சுரந்து மாயோயஞ்சலை நிலை நீக்கா நுஞ்சிக்
கடிநகர் வரைப்பினேகிக் கடிதெமைப்புரிதி பூசை.

(இ - ள்.) அடியனேன் மடமை நீரால் அறைந்தது பொறுத்து - யானறியாமையால் கூறியதைப் பொறுத்து, சாபமுடிவு அளித்து அருளாய் என்று ஏக்கற - சாபந்தீர்வை யளிப்பாயென்றேங்கி நிற்ப, முதல்வி நெடிது அருள் சுரந்து நோக்கி மாயோய் அஞ்சலை - இறைவி பெருங்கருணை சுரந்து பார்த்து மாயனே நீ அஞ்சாதை, நீர் நிலை காஞ்சி கடிநகர் வரைப்பின் கடிது ஏகி எமை பூசைபுரிதி - நீர்வளம் நிலைத்த காவலையுடைய காஞ்சிநகரத் தெல்லையில் விரைந்து சென்று எம்மைப் பூசனைசெய் (எ - று)

(திருமால் தேவியைப்பார்த்து) அறியாமையாற் கூறிய வன்றுரையைப்பொறுத்துச் சாபத்தீர்வளித் தருளாயென்றிரக்க, இறைவிகருணையோடு பார்த்து நீ அஞ்சாதை காஞ்சிப்பதிக்குச்சென்று எம்மைப் பூசைசெய்வாயென்க.

திருமாலுக்கு இச்சாபம் இறைவனால் நேரிட்டிருக்க அவ்விறைவனை நோக்கி உம்மால் நேர்ந்த இச்சாபத்துக்கென்செய்வேன் இச்சாபமொழியுமாறெங்ஙன மென வினவவேண்டியதிருக்கத் தேவியை யிரந்ததென்னெனின் முன் செய்யுளில் இருவர் செயலு மொன்றென்று குறிப்பித்திருக்கின்றதனையே யீண்டும் விளக்கியதென்க. எங்ஙனமெனின் சத்தியன்றிச் சிவந்தனக்கோர் செயலு முளதாயினன்றோ சத்தியினால் நேர்ந்த சாபம் இனிச் சிவத்தினாலடையவேண்டியது அனுக்கிரகமென்று கேட்க வரும். அங்ஙனமின்மைகலான் செயலெல்லாம் சத்தியினுடையதே யென்றுணர்த்தச் சாபமுடிவளித்தருளா யென்றெனேக்கற எனவும், சிவத்தையன்றித் தான் வேறில்லை என்பது நன்குணர்ந்த நீ காஞ்சிக்குச்சென்று சிவலிங்கபூசை செய்யென்றது காஞ்சிக் கடிநகர்வரைப்பினேகிக் கடிதெமைப்புரிதி பூசை எனவுங்கூறினர். இதனைப் பின் வருஞ் செய்யுளில் நன்குகாணலாம்.

இதனால் சிவன் செயலெல்லாம் சத்தியினாலேயே என்று கொள்ளக்கிடந்தன. இதனை "நங்கையினாலுமனைத்துஞ் செய்நாற்போ னடனைத்து, நங்கையினுஞ் செய்த ளிக்கு நாயகன்" என மெய்கண்ட நூலிலவருதல் காண்க. (எ)

இகழறுமிலிங்கவேதியென்னுருவிலிங்கமூர்த்தி
நிகழ்மதிச்சடிலமோலிச்சிவபிரான்வடிவுகண்டாய்
புகழ்தருமிலிங்கவேதிப்பொற்பினாலென்னைநின்போர்
நிகழ்வுறநிறுவிப்போற்றிநீக்குதிசாபத்தீமை.

இ - ள். இகழ் அறும் இலிங்கவேதி என் உரு - குற்றமற்ற இலிங்கபீடம் என்னுருவமாகும், இலிங்கமூர்த்தி நிகழ்மதி சடிலமோலி சிவபிரான் வடிவுகண்டாய் - இலிங்கமூர்த்தி விளங்குகின்ற சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய இறைவன் வடிவமாம், புகழ்தரும் இலிங்கவேதி என்னை பொற்பினால் நின்போர் நிகழ்வுற நிறுவி போற்றி சாபத்தீமை நீக்குதி - புகழப்படுகின்ற விலிங்கபீடமாகிய என்னை அழகால் உன்பேர் நிகழ நிறுத்திவணங்கி சாபத்தின் கொடுமையை நீக்கிக் கொள் (எ - று)

(எம்மைப் புரிதிபூசையென்ற இறைவி,) இலிங்கபீடம் என்னுருவம் இலிங்க மூர்த்தி சிவபெருமான் வடிவம் (ஆகையால்) உன்பேரால் சிவலிங்கபெருமானைப் பூசித்து உன்சாபத்தை நீக்கிக்கொள்வாயென்க.

"இயக்கர் கின்னரர்யமனொடு வருணரியங்கு தீவளி ஞாயிறு திங்கள் மயக்கமில் புலிவானர நாகம்வசுக்கள் வானவர்தானவரெல்லாம்" தங்கள் தங்கள் இகழ்ச்சி நீங்கப் பூசித்தகுறியாமென்றுணர்த்த இகழறுமிலிங்கம் எனவும், அச்சிவக்குறிக்குத் தானிடமாய் நிற்றலின் இலிங்கமென்னுது" இலிங்கவேதி யென்னுரு எனவும், இலிங்க வேதி வடிவர்தானுகவே தன்னைப்பூசித்தால் அச்சாபம் நீங்குமென்பது துணிபாகலின் இலிங்கவேதிப் பொற்பினுல் என்னை நின்போ நிகழ்வுற நிறுவிப்போற்றி நீக்குதி சாபத் தீமை எனவுங் கூறினுர். (அ)

நலம்புரியனந்தபற்பநாபனென்றோங்குவாயால
வலம்புரிக்கரத்தோயென்றுவழுங்கினுள்குவவுத்திண்டோ
ளுலம்புரியனந்தபற்பநாபனுமுமையாடன்னைப
பொலம்புரிசடிலத்தேவைத்தொழுதுபோய்க்காஞ்சிபுக்கான்.

(இ - ள்) நலம்புரி அனந்தபற்பநாபன் என்று ஓங்குவாய் - (அவ்வாறுபூசித்துச் சாபநீங்கப்பெற்ருல்) நீ நன்மையைச் செய்கின்ற அனந்த பற்பநாபனென்று விளங்குவை, வலம்புரி கரத்தோய் என்று வழங்கினுள் - சங்கேந்திய கையையுடையானே யென்றுகழுவாய் கூறியனுப்பினுள், உலம்புரி குவவுதிண் தோள் அனந்த பற்பநாபனும்- திரண்டகல்லும் விரும்பும் குவிதலையுடைய திண்ணியபுயத்தையுடைய அனந்த பற்ப நாபனென்னு நாமத்தையுடைய மாயவனும், உமையாள் தன்னை பொலம்புரி சடிலம் தேவை தொழுதுபோய் காஞ்சிபுக்கான் - உமையாளையும் பொன்னும் விரும்பும் சடையையுடைய இறைவனையும் வணங்கிச்சென்று காஞ்சிநகரத்தை யடைந்தான். (எ-று.)

(யான் சொல்லியபடி காஞ்சியில் நீ எம்மைப் பூசிப்பதனுல சாபம் நீங்கப்பெற்று) அநந்த பற்மநாபனென்கின்ற நாமத்தோடு விளங்குவாயென் றனுக்கிரகஞ் செய்யத் திருமால் அம்மையப்பனை வணங்கிக் காஞ்சிநகரத்தை யடைந்தானென்க,

திருமாலுக்கு நேர்ந்த சாபத்தை எண்ணுவோர் பொய்ச்சான்றுகூறத் துணியா ராகலான் "நலம்புரி" என்முர். பதுமநாபனென்றது திரிந்து நின்றது. (கூ)

வணங்கினன்றிருவேகம்பமற்றதனயலேவேதி
யிணங்குறுமனந்தபற்பநாபமாவிலிங்கம்பூசித்
தணங்கருள்பெற்றுப்பாந்தண்மூதுரியகற்றியாங்குப
பிணங்கியசாபநீத்துப்பேரருட்குரியனுனுன்.

(இ - ள்) திருவேகம்பம் வணங்கினன - திருவேகம்பத்தை வணங்கிநின்றனன், மற்றதன் அயல் வேதி இணங்குறும் அனந்த பற்பநாபமாவிலிங்கம் பூசித்து-அவ்வேகம்பத்தின் சார்பில் பீடத்தோடுகூடிய வனந்த பற்பநாபமாகிய இலிங்கத்தை அர்ச்சித்து, அணங்கு அருள்பெற்று பாந்தள்மூதுரி அகற்றி-உமாதேவியாரருள்பெற்று பாம்பின் வடிவொழித்து, ஆங்குபிணங்கிய சாபநீத்து பேரருட்கு உரியன் ஆனுன்-அவ் விடத்தில் மாறுபட்ட சாபம் நீங்கப்பெற்று பெருங்கருணைக் குரியவனுனுன். (எ - று.)

(திருமால் காஞ்சியையடைந்து) ஏகம்பவாணரை வணங்கி, அவர் சமீபத்தில் வேதியோடு கூடியிருக்கின்ற சிவலிங்கப்பெருமானைத் தனபெயர் நிறுவிப்பூசித்துச் சாபம் நீங்கப்பெற்றுத் திருவருளுககுரிய னாயினுனென்க.

வேதியில்லாத இலிங்கங்களும் உளவாகலின் வேதியினைக்குறும் இலிங்கம் பூசித்து எனவும், நீங்கிய பின்னர் முன்பெற்றவாறே காவற்றொழிலைப்பெற்றுச் சென்றனனாகலின் சாபநீக்குப் பொருட்குரிய ஞானெனவுங் கூறினர். (௫0)

அனந்தபற்பநாபேசப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௲௭௭.

---

# கச்சிமயானப்படலம்.

### கொச்சகக்கலிப்பா.

சிற்பநிகழ்மணிமாடநெடும்புரிசைத்திருவனந்த
பற்பநாபேசத்தின்பரிசறிந்தவாறுரைத்தாம்
நிற்பனவுஞ்சரிப்பவுமாய்நிறைந்தபிரானினிதுறையு
மற்புதமாந்திருக்கச்சிமயானத்தினடைவுரைப்பாம்.

(இ - ள்.) சிற்பநிகழ் மணிமாட நெடும்புரிசை - சிற்பவேலை நிகழ்ந்த மணிகளாற் புனையப்பட்ட மாடங்களையும் நீண்டமதிலையுமுடைய, திருவனந்த பற்பநாபேசத்தின் பரிசு அறிந்தவாறு உரைத்தாம் - திருவனந்த பற்பநாபேசத்தினது வரலாற்றை யறிந்த அளவுகூறினோம், நிற்பனவும் சரிப்பவுமாய் நிறைந்தபிரான் இனிது உறையும் - நிலைத்திணைப்பொருளும் இயங்குதிணைப் பொருளுமாய் நிறைந்த இறைவன் இனிதாக வீற்றிருக்கும், அற்புதமாம் திருக்கச்சி மயானத்தின் அடைவு உரைப்பாம் - அற்புதமான திருக்கச்சிமயானமென்னும் திருத்தளியின் வரலாற்றினைச் சொல்லுவாம்.

இதுகாறும் அனந்த பற்பநாபத்தின் வரலாற்றைக் கூறினம், இனி எங்கணும் நிறைந்துள்ள இறைவன் வீற்றிருக்கும் கச்சிமயானத்தின் வரலாற்றைக் கூறுவாமென்க. (௧)

முன்னொருநான்முகன்புருடப்பெயர்க்கற்பமுடிவெய்தி
பின்னுறுசீரகோரமாங்கற்பத்துப்பிறங்குலகின்
மன்னுயிர்கள்வளர்ந்தோங்கிவைகுநாள்விறறபண்ட
னென்னுமொருவல்லவுணனிப்புவனத்துளனானன்.

(இ - ள்) முன் ஒரு நான்முகன் புருடப்பெயர் கற்பம் முடிவெய்தி - முன்னொரு பிரமன் தற்புருடனென்னும் பெயரினையுடைய கற்பகாலமுடிவுற்று, பின் உறு சீர அகோரமாம் கற்பத்து - பின்னே யடைகின்ற அகோரமென்னுங் கற்பகாலத்தில், பிறங்கு உலகின் மன்னுயிர்கள் வளர்ந்தோங்கி வைகுநாள் - விளங்கா நிற்கும் உலகத்தின் மன்னும் உயிர்கள் வளர்ந்தோங்கித் தங்குநாளில், விறல் பண்டன் என்னும் ஒரு வல் அவுணன் இப்புவனத்து உளன் ஆனன் - வெற்றியினையுடைய பண்டனெனனும் ஒரு வலிய அரக்கன் இவ்வுலகத்தின்கண் சஞ்சரிப்பானாயினன். (எ-று.)

முன்னர் தற்புருட கற்பமுடிந்து அகோரகற்பம் நிகழுங்காலத்து பிரமனொருவன் உலகம் வளர்ந்தோங்கி வைகுநாளில் பண்டாசுரனென்னும் ஓரசுரனுளனானனென்க.

கற்பங்கள் பிரமனாதியர் பெயரால்வழங்கி வருதல்போல் ஈசானாதி பஞ்ச மூர்த்திகள் பெயராலும் கற்பங்கள் நிகழ்வதுண்மையால் ஈண்டு தற்புருஷகற்பாந்தத்தையும், அகோரகற்பவாதியையும் குறித்ததென்க. (௨)

அங்கவன்செய் மாதவத்தாலகமகிழ்ந்துகாட்சிதரும்
பங்கயனையடிவணங்கிப்பண்ணுசுராசுரர்முதலோர்
தங்களுடம்பிடைவிரவித்தகைபெறுவீரியமனைத்து
நுங்கவரமருளென்றான்முண்டகனுநுனித்தெண்ணி.

(இ - ள்.) அங்கவன்செய் மாதவத்தால்-அப்பண்டாசுரன் செய்கின்ற பெரியதவத்தால், அகம்மகிழ்ந்து காட்சிதரும் பங்கயனை அடிவணங்கி-மனமகிழ்ந்து காட்சியையளிக்கும் தாமரைப்பூவில் வாசஞ்செய்யும் பிரமனைப் பாதத்தில் வணங்கி, பண்ணுசுராசுரர் முதலோர் தங்கள் உடம்பிடை விரவி - சொல்லப்படுகின்ற தேவரும் அசுரரு முதலானோருடைய தேகத்தின்பொருந்தி, தகைபெறு வீரியம் அனைத்தும் நுங்க வரம் அருள் என்றான் - மேன்மைபொருந்திய வீரியமெல்லாம் உண்ண வரந்தருளென்று கூறினான், முண்டகனும் நுனித்து எண்ணி - அதற்குத் பிரமனுமாராய்ந்து நினைத்து.

அப்பண்டாசுரன் பிரமனைநோக்கித் தவஞ்செய்ய அப்பிரமன் மனமகிழ்ந்து காட்சிகொடுக்க அவனடிவணங்கி சுராசுரர் முதலிய யாவருடைய உடம்புள்ளுங்கலந்து அவர்களுடைய வீரியமெல்லாம் உண்ணை எனக்கு அருள்செய்வாயென்று கேட்டனன் அதற்குப் பிரமனும் ஆராய்ந்தெண்ணினனென்க.

பண்டாசுரனால் இனிவிளையும் தீங்குகளெல்லாம் இறைவனுணையென்று ஞான நோக்கினை லுணர்ந்தானென்பார் முண்டகனு நுனித்தெண்ணி என்றார். (௩)

அற்றாகென்றகலுதலுமவுணர்கோனுடம்புதொறு
முற்றாவியுடன்விரவிவீரியங்களுண்டிருப்பப்
பற்றாயவீரியம்போயாருயிர்கள்பருவந்து
வற்றாதவொளிமாழ்கிவளர்வின்றியஃகினவால்.

(இ - ள்,) அற்றாகு என்று அகலுதலும் - அத்தன்மையாகுகவென்று வரங் கொடுத்து நீங்குதலும், அவுணர்கோன் உடம்புதொறும் உற்று ஆவியுடன் விரவி - அரக்கருக்கிறைவனாகிய பண்டாசுரன் உடம்புகளிலெல்லாம் பொருந்தி உயிருட்கலந்து, வீரியங்கள் உண்டிருப்ப - வீரியங்களை யருந்தியிருக்க, பற்றாய வீரியம்போய் ஆருயிர்கள் பருவந்து - பற்றாயிருக்கின்ற வீரியமழிந்து அரிய உயிர்கள் வருத்தமடைந்து, வற்றாத ஒளிமாழ்கி வளர்வின்றி அஃகின-கெடாத ஒளிமழுங்கி வளர்ச்சியில்லாமல் குறைந்தன. (எ-று)

(பிரமன் அசுரனுடைய வினையமைந்தடிய வினையெல்லாம் எண்ணி) நீகேட்டவாறே ஆகுகவென்றுகூற அக்கணமே உடம்புதோறும் பொருந்தி அவ்வவ்வுடம்பிலுள்ள உயிர்கட்குப் பற்றுக்கோடாயிருந்து வன்மைசெய்யும் வீரியங்களை உண்டுவாழ்ந்திருந்தனன். அதனால் உயிர்களெல்லாம் வருந்திப் பொலிவிழந்து மேல்வளர்வின்றிக் குறைந்தன என்க. (௪)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருத்துவரியக்கர்வானவரவுணர்பாரிடர்சித்தர்கந்தருவ
ருருத்திரர்வசுக்களிராக்கதருக்கநரகர்சாத்தியர்மருத்துக்க

வருத்திகூர் விரிஞ்சனச்சுதன்பிறருமவ்விடராற்றலர்குழீஇத்
திருத்தகுகயிலைப்பருப்பதம்புக்குச்சிவபிரானடிதொழுதுரைப்பார்.

(இ - ள்) மருத்துவர் இயக்கர் வானவர் அவுணர் மனிதர் சித்தர் கந்தருவர் உருத்திரர் வசுக்கள் இராக்கதர் அருக்கர் உரகர் சாரணர் திருத்திகூர் விரிஞ்சன் அச்சுதன் பிறரும் - மருத்துவரும் இயக்கரும் தேவரும் அவுணரும் மனிதரும் சித்தரும் கந்தருவரும் உருத்திரரும் வசுக்களும் இராக்கதரும் சூரியரும் நாகரும் சாரணரும் மருத்துவர்களும், ஆருத்திகூர் விரிஞ்சன் அச்சுதன் பிறரும் - அன்புமிகுந்த பிரமனும் விஷ்ணுவும் மற்றவர்களும், அ இடர் ஆற்றலர் குழீஇ - அத்துன்பத்தைச் சகிக்கமாட்டாமல் கூடி, திருத்தகு கயிலைப்பருப்பதம் புக்கு சிவபிரான் அடிதொழுது உரைப்பார் - ஆம் செல்வமிகுந்த கைலயங்கிரியையடைந்து சிவபெருமானுடைய பாதங்களை வணங்கிக் கூறுவார் (எ - று.)

மருத்துவர் முதல் திருமால் இறுதியாகக்கூறியவரும் ஏனையோரும், வீரியம் நாளுக்குநாள் குறைந்துவருகின்ற துன்பம் பொறுக்காது கயிலயங்கிரியையடைந்து இறைவனடிவணங்கிக் கூறுகின்றனரென்க.

மருத்துவர் வயித்தியஞ் செய்வோர், மருந்துகள் அசுவனிதேவர்கள் மருத்துவரை முதலிலும், திருமாலையிறுதியிலும் கூறியது ஏனையோர்க்கு வரும் வியாதிகளையும் இதுவொழிந்த பல துன்பங்களையும் போக்கி இன்பமருளுஞ் சிறப்புடையராகலான் இவரும் வீரியமிழக்கவரும் துன்பத்தையறியாதொழிந்தாரென்பதும், அவ்வசுரன் வன்மையையுங் குறிப்பானுணர்த்தியதென்க. (௫)

வீரியமின்றிவலிகுறைந்தடியேம்வெற்றுடம்பெனத்திரிகின்றேம்
காரணங்காணேமன்னதுதவிர்க்குமுபாயமுங்கண்டிலேமென்று
நாரணன்முதலோருலைந்துநின்றிரப்பநாயகனகைமுகிழ்த்துரைக்குஞ்
சீரியநுமதுவீரியமுழுதுந்திருந்துபண்டாசுரன் கவர்ந்தான்.

(இ - ள்.) வீரியம் இன்றி வலிகுறைந்து அடியேம் வெற்று உடம்பு என திரிகின்றேம் - வீரியமில்லாமல் வலிகுன்றி நாங்கள் பயனில்லாத உடம்பென்று திரிகின்றேம், காரணம் காணேம் அன்னது தவிர்க்கும் உபாயமும் கண்டிலேம் என்று - அதற்குக் காரணமும் அறியமாட்டோம் அதையொழிக்கு முபாயமும் பார்த்தறியோமென்று, நாரணன்முதலோர் உலைந்துநின்று இரப்ப - திருமால் முதலியதேவர்கள் வருந்திநின்றுயாசிக்க, நாயகன் நகைமுகிழ்த்து உரைக்கும் - இறைவன் நகைசெய்தருளிச்செய்யும், சீரிய நுமது வீரியமுழுதும் திருந்து பண்டாசுரன் கவர்ந்தான் - சிறந்த உமது வீரியமெல்லாம் வரந்திருந்தப்பெற்ற பண்டாசுரன் கைக்கொண்டனன்.

(இறைவனே) அடியேங்கள் வீரியமிழந்துவலிகுன்றி உயிரிழந்த வுடம்புபோலத் திரிகின்றேம் இவ்வாறு வீரியமிழப்பதற்குக் காரணமும் எங்களுக்குத்தோன்றவில்லை அவ்வீரியம் இழக்காமலிருப்பதற்கு உபாயமுந்தோன்றவில்லை என்றிவ்வாறு திருமால் முதலியயாவரும் வருந்தமுற்று விண்ணப்பஞ்செய்ய இறைவன் உங்கள் வீரியங்களெல்லாம் பண்டாசுரனென்பவன் கொள்ளைகொண்டானென்றனனென்க.

நாயகன் நகைமுகிழ்த்ததற்குக்காரணம் மருத்துவர் முதலாயினோரேயன்றி அவரோடு திருமாலும் இரங்கிநின்றுரைத்ததேயாம் எனவே திருமால் காவற்கடவுள், காவலாவது உடம்போடுகூடியிருக்கின்ற உயிர்களைக்காத்தல், ஆகவே அங்ஙனம் ஏனையோர்க்கேயன்றி தமக்கும் பிணிவந்தமையை யுணர்ந்து அதனைப்போக்க வறியாது ஏனையரோடு தானுமொன்றாகி "வெற்றுடம்பெனத் திரிகின்றேம்" "காரணம் காணேம், உபாயமுங் கண்டிலேம்" என்றாராகலின் அதுவே காரணமாயிற்றென்க. (௬)

ஆங்கவனெல்லாவுடம்பினும்விரவியாவியோடுறைதலினெவ்வா
றீங்கினிவெல்லப்படுவனென் றருளவிமையவர்யாவருவெருவி
மாங்குயிற்கிளவிமலைமகள்கொழுநாமறிதிரைவளைகடலுயிர்த்த
பூங்கடுமிடற்றுப்புனிதனேயெம்மைப்புரப்பதுன்கடனெனத்துதிப்பார்.

(இ - ள்) ஆங்கவன் எல்லா வுடம்பினும் விரவி ஆவியோடு உறைதலின் - அங்கவனெல்லா ருடம்பினிடத்துங்கலந்து உயிரோடு வசித்தலால், எவ்வாறு ஈங்கு இனி வெல்லப்படுவன் என்று அருள - எவ்வகையாக இவ்விடத்தில் இனி அவன் வெல்லப்படுவான் என்று திருவாய்மலர்ந்தருள, இமையவர் யாவரும் வெருவி - தேவரெல்லாரு மஞ்சி, மாகுயில்கிளவி மலைமகள் கொழுநா-மாமரத்திலிருக்கும் குயில்போலுஞ்சொல்லையுடைய பார்வதி தலைவனே, மறி திரை வளை கடல் உயிர்த்த பூங் கருமிடற்று புனிதனே - மறிக்கின்ற அலைகளாற் சூழப்பட்ட பாற்கடல்தந்த அழகிய நீலகண்டத்தை யுடைய பரிசுத்தமானவனே, எம்மை புரப்பது உன் கடன எனதுதிப்பார் - அடியேங்களைக்காப்பது உமது கடமையென்று துதிசெய்தார்கள். (எ-று.)

அந்த பண்டாசுரன் எல்லாவுடம்போடு கலந்து உயிரோடிருந்தலால எவ்வாறு வெல்லப்படுவானென்று இறைவன் கூறத் திருமால்முதலிய யாவரும் பயந்து எங்களைக் காப்பது உமது கடனென்று துதிக்கத் தொடங்கினார்களெனக.

மானிடர் முதலியோர், துன்பமொழியவும் இன்பம்பெறவும் திருமால் முதலிய தேவர்களை வாழ்த்தி வணங்கவேண்டுமெனவும், வணங்குவோமாயின அவர்களவ்வாறே செய்வாரெனவும் கூறுவோரது வாயை யடக்கவே எவ்வா றீங்கினி வெல்லப்படுவ னென்றருள விமையவர் யாவரும் வெருவி எனவும், கருணையுருபியும் அவ்வுருவத்தால் யாவர்க்கும் துன்பமொழிப்போனும் அதுவொழித்து இன்பமளிப்போனும் சிவபெருமானென் றுணர்த்தவே மலைமகள் கொழுநா எனவும், பூங்கருமிடற்றுப் புனிதனே எனவும், புரப்பதுன் கடனெனவும் கூறினர்.

இதனல் திருமால்முதலிய யாவரும் ஒருவருக்குந் துன்பத்தைப் போக்கினவருமல்லர் வேண்டியாங் கருள்புரிபவரு மல்லரென விளக்கியதென்க. இவர்களன்றாகவே இவற்றைப்புரிவோன் இவனென்று காட்டப் பின்வருஞ் செய்யுள்களெழுந்தன. (எ)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முடிவிலாற்றலைதன்வயத்தினைமுற்றுணர்ச்சியைபேரருள்
மடிவிலாட்சியைதூயமேனியைமற்றியற்கையுணர்ச்சியை
படியிலாவியல்பாகநீங்கியபாசநோயைவரம்பிலின்
புடையையுனடியேங்களென்றுமுனக்கடைக்கலமையனே.

(இ - ள்) முடிவு இல் ஆற்றலை தன்வயத்தினை முற்றுணர்ச்சியை - முடிவில்லாத ஆற்றலையுடையாய் எப்பொருளும் தன்வசமாகவுடையாய் முற்றறிவுடையாய், பேரருள் மடிவிலாட்சியை தூயமேனியை - பெருங்கருணையால் கெடுதியில்லாத ஆளுகையை யுடையாய் பரிசுத்தமாகிய மேனியையுடையாய், இயற்கை உணர்ச்சியை படியிலாத பாசநோயை இயல்பாக நீக்கி - இயற்கையுணர்வையுடையாய் ஒப்பில்லாத பாசநோயை இயல்பாகவே நீங்குதலையுடையாய், வரம்பிலினபுடையை - அளவுபடாத விண்டத்தை யுடையாய், ஐயனே உன் அடியேங்கள் என்றும் உனக்கு அடைக்கலம் - ஐயனே உன் அடியேங்களாகிய நாங்கள் எக்காலத்து முனக்கடைக்கலம். (எ - று.)

முடிவிலாற்றல் முதலிய எண்குணங்களையுடைய ஐயன் நீ, நாங்களுனக் கடியோங்களென்க.

அசுரனைக்கொல்ல முடிவிலாற்றலை முனனும் நாங்கள் இன்பம்பெற வரம்பி லின்பமுடைமையைப் பின்னுங்கூறினர். இதனால் எண்குணமுடைய இறைவன் சிவ பெருமானெனவும், திருமால் முதலியோர்க்கு அக்குணங்களின்மையின் அவர்கள் அடி மைகளெனவும் விளக்கியதென்க. எனவே எண்குணமுடைமை பதியிலக்கணமெ, அக் குணமின்மை பசுவிலக்கணம். ஆகவே சிவபெருமானொருவனே பதி. ஏனையோர் பசுக் கள் என்றுணர்த்தியதென்க.

அல்லதூஉம் இறைவன் திருமால்முதலிய தேவர்களை நோக்கி "எவ்வாறிங்கிவ் வெல்லப்படுவன்" என்றதனால் அத்தேவர்கள் இறைவனை நோக்கி அவனது எண் குணங்களையுமே எண்மெடுத்துக் கூறினர்களென்க. என்னையெனின், முடிவிலாற்றலை யும் தன் வயத்தனாதலையு முடைய நீ அவனைக்கொல்வதும் அவனை வசப்படுத்து வதும் அருமையன்றே அங்ஙனமாக எவ்வாறென்று கூறியது என்னையோ எனவும், முற்றுணர்ச்சியையுடைய நீ எல்லாவுடம்பினும் வியாவியாபியோடுறைதலின் என்று அவனை விசேடித்துக் கூறியது அதிசயமெனவும், பேரருளுடைமையும் தூய வுடம்பினனாதலையும் உடைய நீ இங்கினி வெல்லப்படுவனெ என்று கூறியது விசித்திர மெனவும், இயற்கையுணர்ச்சியையும் இயல்பாகவே பாசங்களினீங்கி நிற்றலையும் வரம் பிலின்பமுடைமையும் உடைய நீ நாங்கள் உலர்ந்து நின்றிரப்ப நகை முகிழ்த்து இவ் வாறு கூறியது அழகாயிருந்த தெனவும் கூறியதாமென்க.

இயல்பாகவே நீங்கிய பாசநோயை என்றது முன்பின்னாக மாற்றி யுரைக்கப் பட்டது. கொடிச்சேவலனென்றாற்போல.படி ஒப்பு, படியிலா என்றது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (அ)

அண்டமோரணுவாம்வளர்ச்சியையணுவினுண்ணியையண்டமார்
பிண்டமெங்கணுநின்றசைக்குநிமித்தனாய்நிறைபெற்றியை
கண்டயோகியர்சிந்தைதமேயினைகரணமுற்றுமகன்றனை
யொண்டொடிக்கொருபங்கயாங்களுனக்கடைக்கலமையனே.

(இ - ள்) அண்டமோர் அணுவாம் வளர்ச்சியை - அண்டமோரணுவாகிய வளர் ச்சியினையுடையாய், அணுவின் நுண்ணியை - அணுவைப்பார்க்கிலும் நுண்ணியவடி வமுடையாய், அண்டம் ஆர்பிண்டம் எங்கணும் நின்று அசைக்கும் நிமித்தனாய் நிறை பெற்றியை - அண்டங்கள் அவற்றிற்பொருந்திய பிண்டமெங்கு நின்றசைக்கு நிமித்த காரணனாய் நிறைந்த தன்மையையுடையாய், கண்டயோகியர் சிந்தைமேயினை - நின் னைக்கண்டயோகிகள் மனத்தில் அவர் நினைந்தவடிவோடுஞ் சென்றனை, கரணமுற்று மகன்றனை - கரணங்களெல்லாங் கடந்துநின்றனை, ஒண்டொடிக்கு ஒருபங்க - ஒள்ளிய வளையலணிந்த உமாதேவிக் கொருபாகத்திலுள்ளாய், ஐயனே யாங்கள் உனக்கு அடைக்கலம் - ஐயனே நாங்களுன்னடைக்கலப் பொருளாவோம். (எ-று.)

(இறைவனேநீ) வளர்ந்தோங்கியிருக்கின்ற அண்டங்களெல்லாம் அணுவென்று சொல்லும்படி வளர்ச்சியையுடையவன் அணுவைப்பார்க்கிலும் நுண்ணியவடிவத்தை யுடையவன் எல்லாவுயிர்களி னின்றசைக்கும் நிமித்தகாரணன் யோகிகளிதயத்தில் அவர் நினைத்தவடிவோடுஞ் செல்கின்றவன், காரணங்கடந்தவன், உமாதேவியோடு கூடினவன் (ஆகையால்) யாங்களுனக் கடைக்கலமென்றதென்க.

சங்காரகாலத்தில் பேருருக்கொண்டிருக்கின்ற வுலகங்களெல்லாம் நிலைகுலைந்து அணுமாத்திரமாகி இறைவனிடத்திலொடுங்குதலால அண்டமோரணுவாம் எனவும், இவ்வாறு ஒருமுறையன்றிப் பலமுறை அண்டங்களெல்லாம் சங்காரப்பட இறைவன் சங்காரப்படாது என்றுமிருத்தலல் வளர்ச்சியை எனவும், புனருற்பவத்தில் அணு மாத்திரமாயொடுங்கிய உலகங்களெல்லாம் அண்டங்களாகச்செய்து தான் ஒரு சற்றுந் தோன்றாதிருத்தலால் அணுவிலுமணியை எனவும், அங்ஙனந்தோன்றிய அண்டங்கள் ஓர் படித்தாயன்றிப் பலபலவாய்விரியவும், ஆன்மாக்கள் தானே யொன்றை அறிந்து அனுபவிக்கவும் இறைவனேயன்றி யமையாதாகலான் அண்டமாம் பிண்டமெங்கணும் நின்றசைக்குந் எனவும், இறைவன் தன்னிச்சைவழியன்றி ஆன்மாவினிச்சை வழியே செய்கின்றவனாகலான் நிமித்தனேயெனவும், ஆன்மாக்களின் வேறாகாது உடனாய நின்று இருவினைப்பயன்களை நுகர்வித்தலான் நின்றபெற்றியை யெனவும், இவ்வுண்மையையுணர்ந்த ஞானிகளுள்ளமே கோயிலாகக் கொண்டவனாகலான் கண்ட யோகியர் சிந்தைமேயினை எனவும், வளர்தற்கும் நுண்ணியனாயிருத்தற்கும், அசைக்கும் நிமித்தனாதற்கும், நிறைந்தபெற்றியனாய் வசிப்பதற்கும் சிந்தையைக்கொள்வதற்கும் காரணமாக ஓர் உபகாரணமு முடையனன்றாகலான் காரணமுற்று மகன்றனை யெனவும். வேறோருபகரணமொன்றும் வேண்டாது யாவுந்தன் னருளாலே செய்தனனாகலான் ஒவ்வொடிக் கொருடங்க எனவுங்கூறினர்.

இதனால் மேலைச் செய்யுளிற்கூறிய இலக்கணங்களோடு கூடியபதி ஆன்மாக்களுக் குபகரிக்கின்ற முறைமையை இச்செய்யுளிற் கூறியதென்க.

அண்டங்களெல்லாம் அணுவாகப் பெரிதாகவிருக்கின்ற தன்மையும் அணுக்களெல்லாம் அண்டங்களாகச் சிறிதாகவிருக்கின்ற தன்மையும் உடையனாய் நின்றசைக்கும் நிமித்தகாரணன் நீயாதலால் அணுப்பிரமாணமாயிருக்கின்ற இவ்வசுரன் எல்லாவுயிருள்ளும் வியாபித்துப் பேராற்றலோடுங்கூடி எங்களைவருத்துவது உன்னையன்றியாவதில்லையென்றுணர்ந்தோ மென்பார் பிண்டமெங்கணு நின்றசைக்கு நிமித்தனாய் நிறை பெற்றியையென்றார். (௯)

பிரமமென்மருமீசனென் மருஞ்சீவனென் மருமபேதுறுங்
கருமமென்மருமவேறுமவ்வகடவுளென் மருமாகியே
முரணியவ்வவர்பேசநின்றருண்முதல்வனேமுதலீறிலா
வொருவனேயடியேங்களென்றுமுனக்கடைக்கலமையனே.

(இ - ள்.) பிரமம் என்மரும் ஈசன் என்மரும் - பிரமமே பொருளென்பாரும் ஈஸ்வரனே பொருளென்பாரும், சீவன் என்மரும் பேதுறும் கருமம் என்மரும் - சீவனேபொருளென்று சொல்வாரும், வெவ்வேறுவகைப்பட்ட கருமங்களேபொருளென்பாரும், வேறும் அவ்வகடவுள் என்மரும் ஆகி-வேறும் (சிலர்) அவ்வகடவுளே பொருளென்பாருமாய், முரணி அவ்வவர் பேச நின்று அருள் முதல்வனே - இவ்வாறுமாறுபட்டு அவ்வச்சமயிகள் பேச அவ்வவர் கூறும் பொருளாகி நிற்குமுதல்வனே, முதல் ஈறு இல்லாத ஒருவனே - முதலுமீறுமில்லாத தனிப்பொருளே, ஐயனே அடியேங்கள் என்றும் உனக்கு அடைக்கலம் - ஐயனே உமதடியோமாகிய யாங்களெக்காலத்து முனக்கடைக்கலப்பொருளாம். (எ-று)

பரம்பொருளாயுள்ளது பிரமமென்று கூறுவார் முதல் அவ்வவ கடவுளென்பார் இறுதியாகக்கூறும் பொருள்களெல்லாமாகி அவரவர்க்கருள்செய்கின்ற முதல்வனே, ஆதியந்தங் கடந்தவனே அடியேங்கள் என்றும் உன்னடைக்கலமென்க.

பரசிவத்தின் அருளுருவையுணராத மருளர் ஈஸ்வரவடிவங் கற்பனையென்றொழித்து பிரமமே யுளதென்பார்க்கு அந்தப் பிரமமேயாகியும், வேதாந்தத்திற்கூறும் பிரம நாமத்தைப்பரசிவநாமங்களி லொன்றென் றுணராத சிலர்க்கு அவர்கூறும் ஈஸ்வரவடிமே வடிவாகியும், பிரமம் வேறன்று ஆன்மாவே யாமென்று கூறுமவர்க்கு அவ்வான்மாவே யாகியும், யக்ஞாதிகர்மங்களே அவரவர்க்குப் பயனளிக்கு மென்பார்க்கு அவ்வெக்ஞ சொரூபமே யாகியும், இவரொழிந்த திருமால்முதலிய தேவர்களையே பொருளாகக் கூறுவார்க்கு அவ்வத்தேவர்களே யாகியும்நின்றருள், செய்வானென்றார். இதனை "ஒருநாம மோருருவ மொன்றுமிலாற் காயிரந், திருநாமம்பாடி நாந்தெள்ளேணங் கொட்டாமோ" என்றருளிய திருவாசகத்தா லுணர்க. எங்ஙனமெனின், இறைவன் ஒருநாமமும் ஒருருவமுமில்லாதவனெனச் சொரூபவிலக்கண மொன்றே கூறின் ஒரு பொருளுண்டென்பதின்றாய்ச் சூனியமாய் முடியுமாகலின் அதனை யொழிப்பதற்குக் கூறுவார் கூறும்நாமமெல்லா முடையானென்ப துணர்த்த ஆயிரந் திருநாமம்பாடி எனவுங் கூறினாரெனப்பொருள்படுதலினென்க.

மேலைச்செய்யுளில் பதிவுபகரிக்கிற முறைமையை யுணராத புறச்சமயிகள் கூறும் பெயரும் பொருளுமாகியும் உபகரிக்கின்ற முறைமையை இச்செய்யுளிற் கூறியதென்க.

முடிவிலாற்றல் என்றசெய்யுள் முதல் மூன்றுசெய்யுளும் முறையேபதியின் குண விசேடங்களையும் அருளின் குணவிசேடங்களையும் அவ்வருள் பரிபாகத்தினளவே ஆன்மாக்களிடத்துப் பதியும் குணவிசேடங்களையும் கூறியதாமென்று பொருள்கொள்ளலு மொன்று. (௪0)

வேறு.

இனையவாறுளங்களிவரப்பழிச்சுறுமிமையவர்தமைநோக்கிக்
கனைகழற்பிரான்வீரியம்பெறுவதேகருத்துமக்கெனிலேற்கும்
வினைமுடித்தவற்கொல்லுதுமல்லதுவிரவியெங்கணுநிற்கு
மனையகள்வனைச்செகுத்திடலரிதுமக்கிசைவுகொலதுவென்றான்.

(இ - ள்.) இனைய ஆறு உளம் களிவர பழிச்சுறும் இமையவர்தமை நோக்கி- இவ்வகையாக உள்ளங்களிப்படையத் துதிக்குந் தேவர்களைப்பார்த்து, கனைகழல் பிரான் உமக்கு வீரியம் பெறுவதே கருத்து எனில் - சத்திக்கின்ற வீரக்கழலையுடைய இறைவன் உங்களுக்கு வீரியத்தை யடைவதே எண்ணமென்றால், ஏற்கும் வினைமுடித்து அவன் கொல்லுதும் - தகுந்தகாரியத்தைச்செய்து அவனைச்சங்கரிப்போம், அல்லது விரவி எங்கணும் நிற்கும் அனையகள்வனை செகுத்திடல் அரிது - நாமெண்ணிய படியல்லது உடலுயிரிற்கலந்து சரவசரமென்னும் எவ்விடத்துநிற்கின்ற அவ்வஞ்சகனைக் கொல்வதரிது, அது உமக்கு இசைவுகொல் என்றான் - அது உங்களுக்குச் சம்மதந்தானோவென்று வினவினான். (எ-று.)

இறைவன், தன்னுள்ளங்களிப்படையுமாறு தன்னை ஐயனென்றும் தங்களை அடிமைகளென்றும் துதிக்கின்ற தேவர்களை நோக்கி உயிரிற்கலந்திருக்கின்ற அக்கள்வனைக் கொல்வதரிது உங்களுக்கு வீரியம்பெறுவதொன்றே எண்ணமாயின் அவனைக் கொல்லும் விதத்தாற் கொல்லுகிறோம் உங்களுக்குச் சம்மதமா என்க.

உயிருட்கலந்திருக்கும் அசுரன் உங்களுயிரொழிந்தாலன்றி அவனிறவானென் றுணர்த்த விரவியெங்கணு நிற்கும் அனையகள்வனைச் செகுத்திடலரிது எனவும், அசுரனுலிழந்த வீரியத்தை எம்மாற் பெறவிரும்பியபடியால் அதற்குத்தக்கநோருபாயத்தை

நாம் எண்ணியிருக்கின்றோமென்றுணர்ந்த வீரியப்பெறுவதே கருத்துமங்கெனிலேற்கும் வினைமுடித்தவற்கொல்லுதும் எனவும், அசுரனுயிரிழத்தற்கு, முன் உங்களுயிரிழந்தாலல்லது ஆகாதென்றுணர்ந்த உமக்கிசைவுகொ லதுவென்றான் எனவுங்கூறினர்.

ஐயன்வாய்மொழிகேட்டலுங்கடவுளரவ்வினைதாழாமே
செய்யவேண்டுமெற்றுலகெலாம்புரப்பதெம்மிசைவுபெற்றோசெந்தீக்
கையனேயெனத்தலைவனுமன்னதேற்காஞ்சியினுமதாக்கை
வெய்யசெந்தழற்குறியிடையவியெனவிரவுகென்றருள்செய்தான்.

(இ - ள்.) ஐயன் வாய்மொழிகேட்டலும் கடவுளர் அவ்வினை தாழாமே செய்ய வேண்டும் - இறைவனது வாய்மொழியைக்கேட்டலும் தேவர்கள் அச்செய்கையிற் காலநீட்டியாமே செய்துமுடிப்பது தகுதி, உலகு எல்லாம்புரப்பது எம் இசைவு பெற்றோ - எல்லாவுலகங்களையும் காப்பது எங்கள் சார்வுபெற்றேயோ, செந்தீகையனே என - செந்தீயைக் கையிலேயுடைய இறைவனே என்ன, தலைவனும் அன்னதேல்-இறைவனும் அத்தன்மையாயின், காஞ்சியின் உமது ஆக்கை வெய்ய செம் தழல் குறியிடை அவி என - காஞ்சியின்கண் உமது சரீரம் கொடியசெந்தீவடிவாகிய இலிங்கத்தினிடத்தவியாக, விரவுக என்று அருள்செய்தான் - பொருந்துகவென்று கருணைசெய்தான். (எ-று.)

இறைவன் வாய்மொழியைக்கேட்டலும், தேவர்களெல்லாம் அவ்விறைவனை நோக்கி உலகமெல்லாம் காப்பது எங்களுடைய அனுமதிபெற்றுத் தானோ அன்றே ஆதலால் தேவரீ ரெண்ணியபடியே விரைவில் செய்தருளவேண்டுமென் றிரந்துகூற, எமதெண்ணப்படி நடப்பதே உங்கள் துணிவாகில் காஞ்சியில் செந்தழல் வடிவாயிருக்கும் சிவலிங்கத்தினிடத்திற் சென்று யாக உணவாக விருங்களென்று கூறினனென்க.

செந்தழல் வடிவாகி நங்களையெல்லாம் உணவாக்கிக்கொள்ள எண்ணிய கருணையைக் குறிப்பானுணர்ந்து செந்தீக்கையனே" எனத் துதித்தா ரென்றலுமொன்று. (கஉ)

யாங்களிங்கிருந்தென்பயனின்சுடர்க்குறியிடைக்கரந்தேமே
லோங்குமின்பமேதலைப்படப்பெறுதுமென்றுரைத்தடிதொழுதேத்து
மாங்கவர்க்கெலாம்விடையளித்தருவரையணங்கொடுந்திருக்காஞ்சி
ஞாங்கரெம்பிரான்செழுந்தழற்பிழம்பொளிநலந்திகழுருக்கொண்டான்.

(இ - ள்.) யாங்கள் இங்கு இருந்து என்ன பயன் - நாங்கள் இவ்விடத்திலிருந்து யாதுபயன், நின சுடர் குறியிடை கரந்தேமேல் - நின்னுடைய அக்கினிவடிவாகிய சிவலிங்கப்பெருமானிடத்து மறைவோமாயின், ஓங்கும் இன்பமே தலைப்படபெறுதும் - பேரின்பத்தையே தலைக்கூடப்பெறுவோம், என்று உரைத்து அடிதொழுது ஏத்தும் ஆங்கவர்க்கு எல்லாம் விடையளித்து-என்றுசொல்லி யடிதொழுது வணங்கும் அவ்விடத்துவந்த தேவர்கட்கெல்லாம் போகும்படி கட்டளையிட்டருளி, அருவரை அணங்கொடும்-பருவதராசபுத்திரியாகிய உமையம்மையோடும், திருக்காஞ்சி ஞாங்கர் எம்பிரான் செந்தழற் பிழம்பு ஒளி நலம் திகழ் உரு கொண்டான் - திருக்காஞ்சியினிடத்து அக்கினிமயமான நன்மைமிகுந்த திருவுருவங் கொண்டனன். (எ - று.)

(தேவர்கள் இறைவனைநோக்கி உம்முடைய கட்டளைப்படி காஞ்சிக்குச் செல்லாது)நாங்களிங்கிருப்பதனால் என்னபயன், உம்முடையகுறியாகிய அக்கினிமயமாகிய இலிங்கத்தில் மறைந்திருப்போமானால் நாங்களென்நாளும் பெறுதபேரின்பத்தை யெளிதாகவடைவோம் என்றுவணங்குகின்ற தேவர்களுக்கெல்லாம் இறைவன் விடைகொடு

த்து உமாதேவியோடும் காஞ்சித்திருப்பதியில் செந்தழலுருவாகிய இலிங்கவடிவமா யெழுந்தருளியிருந்தனனென்க.

அசுரனால் இப்பொழுது உயிரிழக்கவிருக்கின்ற எங்களைநோக்கி சிவலிங்கப்பெருமானுக்குணவாகுகவென்று இறைவனேநீ கூற அதுபோல் உணவாகாது இங்கிருப்போமாயின் பயன்பெறுவோமோ என்பார் யாங்களிங்கிருக்கின்றனமென்றும், அசுரன் எங்களோடு கூடியதனால் உயிரிழக்கப்பெற்றேம். நாங்களுன்னோடு கூடுவதனால் உயிர் வாழப்பெறுவே மென்பார் நின்சுடர்க் குறியிடைக் கரந்தோயேல், ஓங்குமின்பமே தலைப்படப்பெறுது மெனவுங்கூறினர். (கங)

அளப்பருஞ்சிகைப்படலைமீக்கவைத்தெழுந்தெங்கணுமழல்வீசக்
கிளைத்துநின்றுதன்வலப்புடையுகிரினற்குண்டமுங்கெழுவித்து
வளைத்தகுண்டத்துவாமதேவத்திருவடிவினெய்பூரித்து
விளக்குதத்துவத்தருப்பைமுக்குணப்பெரும்பரிதிமேவாக்கொண்டு.

(இ - ள்.) அளப்பருஞ் - அளத்தற்கருமையாகிய, சிகைப்படலை மீக்கவைத்தெழுந்து - சுவாலைத்திரள் மேலே பிளவுபட்டெழுந்து, எங்கணும் அழல்வீச - எங்குந் தீயெழுப்ப, கிளைத்துநின்று - கிளைக்காநின்று, தன்வலப்புடையுகிரினல்-தனது வலக்கை நகத்தால், குண்டமுங்கெழுவித்து-குண்டமுந்தோற்றுவித்து வளைத்த குண்டத்து-வளைக்கப்பட்ட குண்டத்தில், வாமதேவத்திருவடிவில் நெய் பூரித்து - வாமதேவமூர்த்தியை நெய்யாற்பூரித்து, விளக்குதத்துவத் தருப்பை - விளக்குகின்ற தத்துவமாகிய தருப்பையையும், முக்குணம் பெரும்பருதி-முக்குணமாகியபெரிய சமித்தையும், மேவாக் கொண்டு-பொருந்தக்கொண்டு. (எ - று.)

(கைலாயத்தினின்றும் இறைவன் அம்மையாரோடு காஞ்சியில் அக்னியே ஓர் பிழப்பெனத்தோன்றினற்போலத் தோன்றி) எவ்விடத்தும் அழல்வீச நின்று தனது வலதுபக்கத்தில் தனது விரல்நகத்தால் ஓர்குண்டமொன்றுண்டாக்கி அக்குண்டத்தில் வாமதேவமூர்த்தியை நெய்வடிமாக நிறைந்திருக்கச் செய்து தத்துவங்களைத் தருப்பையாகவும், முக்குணங்களைச் சமித்தாகவும் கொண்டு என்க.

இருளிடத்துள்ள பொருளை அவ்விருளைச் சற்றொதுக்கி காட்டுவது விளக்காதல்போல ஆணவத்துளிருக்கும் ஆன்மாக்களுக்கு அவ்வாணவத்தைச் சிறிதகற்றி விடயங்களை விளக்குவது தத்துவங்களாதலால் விளக்கு தத்துவமெனவும், தூலசூக்குமமாய் விளங்கும் தத்துவங்களும் குணங்களும் தோற்ற, ஆன்மாக்கள் தோன்றுதலும் அவையொடுங்க ஆன்மாக்கள் வொடுங்குதலு மாதலால் பிரமன் முதலிய சர்வான்மாக்களையும் தாமியற்றும் யாகத்தில் ஒடுக்கவேண்டியிருப்பதால் முன்னர் தத்துவத் தருப்பை முக்குணப் பிரிதி மேவாக்கொண்டு எனவுங் கூறினர். (கச)

வேறு

வேள்வியுந்தானேவேள்விப்பொருள்களுந்தானேவெய்ய
வேள்விவேட்பவனுந்தானேவேள்விகொளிறையுந்தானே
வேள்வியின்பயனுந்தானேயென்பதுவிளக்கியெம்மான்
வேள்விசெய்தீக்கையுற்றான்விளங்கருட்சத்தியோடும்.

(இ - ள்) வேள்வியும் தானே வேள்வி பொருள்களும் தானே - யாகமும் தானே அந்த யாகத்துக்குரிய பொருள்களுந்தானே, வெய்ய வேள்வி வேட்பவனும் தானே -

வெம்மையாகிய அந்த யாகத்தைச் செய்பவனுந் தானே, வேள்விகொள் இறையுந் தானே - அந்த யாகத்தினை யேற்றுக்கொள்ளுந் தலைவனுந் தானே, வேள்வியின் பயனும் தானே என்பது விளக்கி - அந்தயாகத்தினா லுண்டாகும் பயனும் தானே என்று சொல்லப்படுவதை விளங்கச்செய்து, எம்மான் விளங்கு அருள்சத்தி ஓடும் வேள்வி செய் தீக்கையுற்றான் - எம்முடைய இறைவன் அருட்சத்தியாகிய உமாதேவியாரோடும் யாகஞ்செய்தற்குத் தீக்கையினையடைந்தனன். (எ - று.)

யாகமும் யாகப்பொருள்களும் யாகஞ்செய்பவனும் யாகத்தையேற்குந் தெய்வமும் யாகத்திற்குரிய பயனும் தானே என்று கூறும் வாக்கியத்தை விளக்கி உலகினருய்யும்படி செய்ய உமாதேவியுடன் யாகத்துக்குரிய தீக்ஷையோடு வீற்றிருந்தனனென்க.

வேள்வி முதலாகக்கூறிய யாவும், செய்தொழிலும் செய்யப்படு பொருள்களுமாயிருந்தலான் இவையெல்லாஞ் செய்வோனை யின்றியமைதல் யாங்ஙனம், அதனால் யாவுந்தானே எனவும், இவ்வுண்மையை எடுத்துக்கூறும் வேதவாக்கியத்தை இச்சமயத்தில் விளக்கக் கருதினானாகலால் என்பது விளக்கி எனவுங் கூறினார். (௧௫)

வண்டுற்றமலரோனாதிவலிகெழுதருக்களீறா
வண்டத்தினகத்தபூதமனைத்தையும்பெருங்கால்வேகச்
சண்டத்தின்வாங்கிவாங்கியாச்சியந்தயங்குமங்கேழ்க்
குண்டத்திற்றூய்மைசெய்துகொழுந்தழன்மடுத்திட்டானால்.

(இ - ள்.) வண்டு உற்ற மலரோன் ஆதி வலிகெழு தருக்கள் ஈறாக - வண்டுகள் பொருந்திய தாமரைமலரில் வசிக்கும் பிரமன்முதல் வலியமைந்த தருக்களிறுதியாக, அண்டத்தின் அகத்தபூதம் அனைத்தையும் - அண்டத்திலுள்ள உயிர்களையெல்லாம், பெருங்கால்வேக சண்டத்தின் வாங்கி வாங்கி - வேகத்தையுடைய பிரசண்ட வாயுவினால் மிக ஏற்று, ஆச்சியம் தயங்கும் அங்கேழ்க்குண்டத்தில் - நெய்சொரிந்து செய்யப்பட்ட வேள்விக்குண்டத்தில், தூய்மைசெய்து கொழுந்தழல் மடுத்திட்டான் - சுத்தமாக்கி தழலிலிட்டான். (எ-று.)

பிரமன் முதல் தருக்களீறாக அண்டங்களிலுள்ள எல்லாவுயிர்களையும் பிரசண்ட வாயுவினால் வாங்கி வாங்கி சம்ஸ்காரஞ்செய்து யாககுண்டத்தி லிட்டனனென்க.

அண்டங்களிலுள்ள சரவசரங்களே யாகத் திரவியங்களாகவும், அத்திரவியங்களை ஏற்பதற்கு வாயுவே ஏற்குங் கருவியாகவும் கொண்டுஅக்கருவியாலேற்ற திரவியங்கள் சிவசம்ஸ்காரமில்லாத தாகலான் அவற்றை மந்திரோச்சாரணத்தால் சுத்தமான பொருளாக்கி சிவாக்கினியிலிட்டன னெனக் கொள்க. (௧௬)

வேறு

மடுப்பமடுப்பமீதெழுந்துவயங்கிச்சுடருந்தழற்பிழம்பி
லடுப்பநனைக்கும்புறத்தெண்ணீரண்டமுதடுவேவாமைத்
தடுத்ததாகுமன்றுயின்மன்றநிறையுஞ்சராசரங்ந
ளுடுத்தமேலைச்சுவர்த்தலமுமுருகிக்கவிழுமுலகன்றே,

(இ - ள்.) மடுப்ப மடுப்ப மீது எழுந்து வயங்கி சுடரும் தழற்பிழம்பில் - பிரமன்முதலியோரை சமித்துகளாக இடுந்தோறும் மேலெழுந்து மிகப்பிரகாசிக்கும் தீபபிழம்பில், அடுப்பநனைக்கும் புறத்தெண்ணீர் அண்டமுகடு வேவாமைதடுத்ததாகும் - பொருந்த பெரும்புறக் கடனீரானது நனைக்கின்ற அண்டப்பித்திகை வெந்து போகாமல்

தடுத்ததுபோலும், அன்றாயின் - அல்லதானால், மன்றநிறையுஞ் சராசரங்கள் உடுத்த மேலைச்சுவர்த்தலமும் உருகி உலகம்கவிழும் - நெளிவாக நிறைந்திருக்கும் சரமுமசர முமாகிய பொருள்களைச் சூழ்ந்த மேலுள்ள சுவரிடமும் உருகி உலகங்கவிழ்ந்துவிடும்.

சமித்து முதலிய யாகத்திரவியங்களை யிடுந்தோறும் அச்சிவாக்கினியானது மேலெழுந்தோங்க அச்சுவாலையினால் இனி அண்டமுகடுவேம் என்றெண்ணிப் பெரும் புறக்கடல் தடுத்ததுபோலாகும் அங்ஙனம் தடுக்காமற்போமாயின் மேலுள்ளசுவரி டமும் உருகி உலகமெல்லாங் கவிழ்ந்துவிடுமென்க. (கஎ)

வேறு.

இவ்வகைவடிவுமுற்றுமிணரெரிப்பிழம்புளாக்கிக்
கௌவையில்காலச்செந்தீப்பிரான்முதற்கணங்கடாமு
மெவ்வமின்றொளிருந்தன்னோடேகமாய்ச்சேர்த்துப்பின்ன
ரவ்விடைவிரவும்பண்டாசுரனையுமழலிற்பெய்தான்.

(இ - ள்,) இ வகை வடிவு முற்றும் இணர் எரி பிழம்புளாக்கி - இவ்வாறாகச் சரீரமுழுதும் பலசுடரையுடைத்தாகிய பேரெரிப் பிழம்புளாக்கப்பட்டு, கௌவையில் காலச்செந்தீப் பிரான்முதல் கணங்கள்தாமும் - துன்பமில்லாத காலாக்கினிருத்திரன் முதலாகிய கணங்களையெல்லாம், எவ்வமின்று ஒளிரும் தன்னோடு ஏகமாய் சேர்த்து - குற்றமமற்றுவிளங்கும் தன்னுடன் ஏகமாகக்கூட்டி, பின்னர் அவ்விடை விரவும் - பின்பு அங்கே கூடியிருக்கும், பண்டாசுரனையும் அழலில் பெய்தான் - பண்டாசுரனை யும் நெருப்பிற்சேர்த்தான். (எ - று)

இவ்வகையாகப் பலவகைப்பட்ட சரீரங்களோடுங் கூடியிருக்கின்ற பிரமன் முத லியயாவரையும் அக்னிப்பிழம்பா யொளிவிடும் யாகாக்னிக்குள்ளாக்கி அவரொழிந்த காலாக்னி ருத்திரர்முதலிய உருத்திரகணங்களைத் தன்னுளொடுக்கிப் பின்பண்டா சுரனையும் அவ்வக்னியி லிட்டனனென்க.

பிரமன் முதலியோர் சரீரங்களும் ஏனையசரீரங்களும் பிரகிருதிமாயா சம் பந்தமுடையதாகலால் அவரை எரிப்பிழம்பு ளாக்கினானெனவும், காலாக்னி உருத்திரர் முதலிய உருத்திர சரீரங்களெல்லாம் சுத்தமாயா சம்பந்தங்களாதலால் அவர்களைத் தன்னுளேகமாய்ச் சேர்த்தானெனவும், பண்டசுரன் வசித்திருந்த பிரகிருதிமாயா சரீரங்களெல்லாம் அக்னிக்குள்ளாகவே தான்வசிப்பதற்கிடமின்றி வெளிப்பட்டுத் தன்னுருக்கொண்டுநிற்ப அவனையும் அவ்வழலிலிட்டுக் கொன்றனனாதலால் பின்ன ரவ்விடைவிரவும் பண்டாசுரனையும் அழலிற்பெய்தானெனவுங் கூறினர்.

பிரமன்முதலிய தேவர்களை அக்னியிலும் உருத்திரகணங்களைத்தன்னிலும் ஒடுக்கி னானெனக் கூறியதனால் இவ்விருவருக்குள் உயர்வு தாழ்வுகளுண்டெனவும், அவ்வுயர்வு தாழ்வுகள்சிவசம்ஸ்காரம், முடைமை இன்மையாலெனவும் விளக்கியதாமென்க. (கஅ)

எண்ணருமுயிர்களெல்லாமெரியகத்தொடுங்கிநாளுங்
கண்வளர்காலத்தெய்துமின்பத்திற்களித்துவாழ்ந்த
வண்ணுதற்கரியவத்தீயன்றுதொட்டிலிங்கமாகிப்
புண்ணியமயானலிங்கமெனப்பெயர்பொலிவுற்றன்றே,

(இ - ள்.) எண் அரும் உயிர்களெல்லாம் எரி யகத்து ஒடுங்கி - கணக்கில்லாத உயிர்களெல்லாம் நெருப்பிலொடுங்கி, நாளும் கண்வளர் காலத்து எய்தும் இன்பத்

தில் களித்து வாழ்ந்த - எக்காலும் துயில்கின்ற இரவிலெய்து மின்பத்தைப் போல் மகிழ்ந்து வாழ்ந்தன, அண்ணுதற்கு அரிய அத்தீ அன்றுதொட்டு இலிங்கம் ஆகி- நெருங்குதற்கரிய அந்நெருப்பு அன்றுமுதல் சிவக்குறியாகி, புண்ணிய மயானலிங்கம் என பெயர் பொலிவுற் றன்று - புண்ணிய சொரூபமாகிய மயானலிங்கமென்று பெயர் பொலிவுற்று.

(இறைவன் வளர்த்த அக்னியில்) எண்ணிறந்த வுயிர்களெல்லா மொடுங்கிச் சுழுத்தியிலின்புற்றிருக்குந் தன்மைபோல் இன்புற்றிருந்தன. அந்த யாகாக்கினி சிவலிங்காகாரமாய் மயானலிங்கமெனப் பெயர்பெற்று விளங்கிற்று.

இதனால் திருவேகம்பத்தில் யாவரையும் நீறாக்கியதால் அதுகச்சி மயானமெனவும் அம்மயானத்தில அவ்வக்கினி இலிங்க வடிவமானதால் மயானலிங்கமெனவும் பெயராயிற்றென்க. இறைவன் எண்ணிறந்த வுயிர்களையும் பண்டாசுரனையும் ஓரக்கினியிலேயேயிட அவர்களுள் உயிர்களெல்லாம் இன்பத்திற்களித்து வாழ்ந்த எனப்பிரித்துக் கூறினமையால் அசுரனிறந்தானென்பது குறிப்பு, ஆகவே இருவருள் எண்ணிறந்த வுயிர்களிழந்தது உடம்பு அசுர னொருவனிழந்தது உடம்போடு உயிருமெனக் கொள்ளக் கிடந்தன,

அத்தகையிலிங்கந்தன்னிலளபபருங்கருணைபூத்துப்
பைத்தபாப்பல்குற்செவ்வாய்ப்பனிவரையணங்கினோடுந்
தத்துநீர்வேணிப்பெமமான்றன்னடியிணைக்கீழ்ச்சிந்தை
வைத்தவர்க்கிருமைப்பேறும்வழங்கிவீற்றிருக்குமன்றே.

(இ - ள்.) அத்தகை இலிங்கம் தன்னில் அளப்பருங் கருணைபூத்து - அவ்வகைப்பட்ட இலிங்கத்தின்கண் அளத்தற்கருமையாகிய கிருபை விளங்கி, பைத்தபாப் பல்குல் செவ்வாய் பனிவரை அணங்கினோடு தத்துநீர் வேணி பெம்மான் தன் அடி இணைக்கீழ் - படத்தையுடைய பாம்பையொத்த அல்குலையும் செவந்த வாயினையுமுடைய இமராச புத்திரியாகிய உமாதேவியோடும் ததும்புகின்ற கங்கைநீரை முடித்த சடையையுடைய இறைவனது இரண்டாகிய சீபாதங்களின்கீழ், சிந்தைவைத்தவர்க்கு இருமைப்பேறும் வழங்கி வீற்றிருக்கும் - சிந்தையை வைத்தவர்க்கு இம்மை மறுமைப் பயன்களையும் அளித்து எழுந்தருளியிருக்கும். (எ - று)

அந்தமயானலிங்க மூர்த்தியினிடத்தில் அளவிறந்த கருணையோடு வீற்றிருக்கின்ற இறைவனை வணங்கப்பெற்றவர்களுக்கு அவ்விறைவன் இருமைப்பயனையும் வழங்கி நிற்பனெனக்கொள்க. (உ0)

நிகழ்பெருவேள்விமுற்றிநிறைந்தநெய்க்குண்டந்தன்னைத்
திகழ்சிவகங்கைப்பேராற்றீர்த்தநாயகமாச்செய்து
புகழ்பவிரதனனீராடினன்புரமூன்றட்ட
விகழறுசீற்றத்துப்பினீர்ந்துழாய்ப்பகழிவல்லான்.

(இ - ள்.) நிகழ் பெருவேள்வி முற்றிநிறைந்த நெய்க்குண்டம் தன்னை - விளங்கும் பெரியயாகத்தைச் செய்துமுடித்து நிறைந்த நெய்க்குண்டத்தை, திகழ்சிவகங்கை பேரால் தீர்த்த நாயகமாச்செய்து - விளங்கும் சிவகங்கையென்னும் பெயரினால் தீர்த்தங்களிற் சிறந்ததாகச்செய்து, புரமூன்று அட்ட இகழ் அறு சீற்றத்துப்பின் ஈர்ந்துழாய் பகழிவல்லான் - முப்புரமெரித்த குற்றமற்ற கோபம்விளையும் வாய்ப்பவனத்தையுடைய குளிர்ச்சியமைந்த துளவமாலையணிந்த விஷ்ணுவாகிய பாணத்தையுடைய சிவ

பிரான், புகழ் அபவிரத நன்னீர் ஆடினான் - யாவராலும் புகழப்பட்ட அபவிரத ஸ்நானம் செய்தான். (எ - று.)

இறைவன் மேற்கூறியபடி யாகஞ்செய்து முடிந்தபின் யாகத்திற் சமைந்திருந்த நெய்க்குண்டத்தை சிவகங்கையென்னும் பெயரால் விளங்கச்செய்து அந்தீர்த்தத்தில் அபவிரத ஸ்நானஞ் செய்தானென்க

இறைவனே யாகஞ் செய்கின்றவனாகவும் சராசரங்களாகிய எல்லாவுயிர்களுமே யாகத் திரவியங்களாகவும் பெற்ற யாகம் இதுவொன்றே யாகலான் பெருவேள்வி என்றார். அபவிரதநீர் - வேள்வி முடிந்தவுடன் செய்யும் ஸ்நானம். (உக)

மறக்களிற் றடியினேனையடியெலா மடங்குமாறு
முறக்குமால்வித்தினுள்ளாலொடுங்கியவாறும்போலத்
திறப்படச்சிவபிரான்செய்சிவகங்கைத்தடத்தினண்டப
புறத்தனவகத்ததீர்த்தமியாவையும்பொலியவைகும்.

(இ - ள்.) மறக்களிற்று அடியின் ஏனையடியெலாம் அடங்குமாறும்-வீரத்தன்மையுடைய யானையின் காலில் வேறு அடிகளெல்லாம் அடங்கும்வகையும், உறக்கும் ஆல் வித்தினுள் ஆல் ஒடுங்கியவாறும்போல - கையாற் களைந்தெறியும் ஆலம்விதையில் ஆலமர மடங்கியிருக்கும் வகையும்போல, திறப்பட சிவபிரான்செய் சிவகங்கைத்தடத்தில் வகைப்படச் சிவபிரான்செய்த சிவகங்கைத்தீர்த்தத்தில், அண்டப்புறத்தன அகத்த தீர்த்தம் யாவையும் பொலியவைகும் - அண்டத்தின் புறத்து மகத்துமுள்ள தீர்த்தங்களெல்லாம் விளங்கப் பொருந்தியிருக்கும், (எ-று.) (உஉ)

யானையின் காலடியில் ஏனைய விலங்கினடியெல்லாம் அடங்குவதுபோலும், ஓர் சிறிய ஆலம்விதையில் பெரிய ஆலமரம் அடங்கியிருப்பதுபோலும் நெய்க்குண்டமாகிய சிவகங்கைத் தீர்த்தத்தில் அண்டங்களினுள்ளும் புறம்புமுள்ள எல்லாந் தீர்த்தங்களும் அடங்கினவென்க.

அத்தடம்படிந்துமேனாளருந்தவமுனிவர்சில்லோர்
வித்தகமயானத்தெம்மானருளினால்வினையினீங்கி
முத்தியிற்கலந்தாரன்னமுளரிநீரிலஞ்சிமேன்மை
சித்தமாசகன்றீர்யாரோயிற்றெனத்தெரியவல்லார்.

(இ - ள்.) மேனாள் அருந்தவமுனிவர் சில்லோர் அத்தடம்படிந்து - முன்னாளில் அருமையாகிய தவத்தையுடைய சிலமுனிவர் அந்தீர்த்தத்தில் நீராடி, வித்தகமயானத்து எம்மான் அருளினால் - பேரறிவே வடிவாகவுடைய மயானப்பெருமான் கருணையால், வினையினீங்கி முத்தியிற்கலந்தார் - வினையினின்றும்நீங்கி முத்தியையடைந்தார், அன்னமுளரிநீர் இலஞ்சிமேன்மை - அந்தத்தாமரை மலர்பூத்த தடாகப்பெருமையை, சித்தமாசு அகன்றீர்யாரே இற்று எனத் தெரியவல்லார்-மனத்தில் குற்றநீங்கிய முனிவரே எவர்கள் இத்தன்மையதென்றறிய வல்லவர். (எ-று)

முன்னாளில் தவத்திற் சிறந்த முனிவரிற் சிலர் அச்சிவகங்கையில் நீராடி இறைவனருளினால் முத்தியையடைந்தார்கள். அத்தீர்த்தத்தின் பெருமையை எடுத்துரைக்க வல்லவர்யாவரென்க. (உங)

முனிவர் சில்லோர்-என்றது ஆங்கிரச முனிவனையும் அவர் மாணாக்கரையுமென்க.

கச்சிமயானப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅ௦க.

உ

# திருவேகம்பப்படலம்.

கலிநிலைத்துறை.

கல்வித்தமிழோர்புகழ்கச்சிமயானமீதாற்
றொல்லைத்தவத்தீரினித்தோமறுசீர்த்திசான்ற
மல்லற்றலங்கட்கரசாமணித்தெய்வக்கோயிற்
செல்வத்திருவேகம்பஞ்சிந்தையுட்கொண்டுசொல்வாம்.

(இ - ள்.) கல்வித் தமிழோர் புகழ்கச்சி மயானம் ஈது - தமிழ்க்கல்வியிற் சிறந்தார் புகழ்கின்ற கச்சிமயானமென்னுந் தலமிது; தொல்லை தவத்தீர் - பழமையாகிய தவத்தையுடையாரே, இனி தோம் அறு சீர்த்தி சான்ற மல்லல் தலங்கட்கு அரசு ஆம் - இனிக்குற்றமற்ற சிறப்புநிரம்பிய வளப்பம்பொருந்திய தலங்கட்கரசாகிய, மணி தெய்வம் கோயில் - அழகிய தெய்வத் தன்மைவாய்ந்த கோயிலாகிய, செல்வம் திருவேகம்பம் சிந்தையுட்கொண்டு சொல்வாம் - செல்வம்பொருந்திய திருவேகம்பத்தை மனத்திற்கொண்டு சொல்வோம். (எ - று.)

முனிவர்களே! கல்வியிற்சிறந்த தமிழில்வல்ல கவிஞரால் புகழப்பெற்ற திருக்கச்சிமயானமிது, இனி தலங்கட்கெல்லாம் அரசாகிய திருவேகம்பத்தைச் சிந்தித்துச்சொல்வாமென்க.

"தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்ததுமுதலை, யுண்டபாலனை யழைத்ததுமெலும்பு பெண்ணுருவாய்க், கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததுங் கன்னித், தண்டமிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்" என்று சிறந்தெடுத்தோதப்பெற்றது தமிழ்ப்பாஷையேயன்றி ஏனையபாஷைகளன்றாகலான் ஏனையபாஷைப்புலமையோரால் புகழப்படுமென்றது கல்வித்தமிழோர் புகழ்கச்சி எனவும், "தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சி" என்று மணிவாசகத்தாலருளப் பெற்றது இத்திருக்காஞ்சி யாகலான் தலங்கட்கரசாம் எனவும், இக்காஞ்சியிலுள்ள பலதளிகளில் சிறந்து விளங்கப்பெற்றது ஏகம்பமாகலான் செல்வத் திருவேகம்பமெனவும், "ஒருடம்பினை யீருருவாகவே யுன்பொருட்டிற மீருருவாகவே, யாருமெய்தற்கரிது பெரிதுமே" என்று ஞானமுண்ட பிள்ளையாரா லருமை பாராட்டப்பெற்றது திருவேகம்பநாதன் பொருளாகலான் சிந்தையுட்கொண்டு சொல்வாம். எனவும் கூறினர். (க)

மயானச்சுடரின்வடிவான்மணிவண்ணன்றேறுத்
தியானப்பொருளாக்கைகளோடும்விராயசிந்தைத்
தயாவற்றபண்டன்றனையட்டபினுவியெல்லா
முயாவற்றுடலோடிசையத்திருவுள்ளஞ்செய்து,

(இ - ள்.) மணிவண்ணன் தேறு தியானப்பொருள் மயானச்சுடரின் வடிவால் - நீலமணிபோன்றநிறமுடையா னறியாததியேயப்பொருள் மயானத்திற் சுடர்வடிவினால், ஆக்கைகளோடும் விராய சிந்தை தயாவற்றபண்டன் தன்னை அட்டபின்-உடம்புகள் தோறுங்கலந்த சிந்தையின்கண் கருணையில்லாத பண்டாசுரனைக் கொன்றபின், ஆவி எல்லாம் உயாவற்று உடலோடிசைய திருவுள்ளம் செய்து-உயிர்களெல்லாம் ஆயாசம்நீங்கி உடம்பினோடு பொருந்த மனங்கொண்டு (எ-று.)


வெளளககமபம
களளககமபம
கசசியடாலை ம
நலலகமபம
வாலீசம்
உருததிரா.
ரிஷிபேசம்

திருமாலறியாததியானப் பொருளாகிய இறைவன் கச்சிமயானத்தின்கண் அக்கினிப்பிழம்பாகத் தோன்றி, சிறிதுஞ் சித்தத்திற் கருணையில்லாது உடம்புகளோடுசேலந்து வருத்திய பண்டாசுரனைக்கொன்று பின் அவ்வுயிர்களெல்லாம் உடம்போடுகூடத் திருவுள்ளங்கொண்டனனென்க.

திருமாலைத் தியானிக்கப்படுபொருளாகக் கூறுவாருமுளராதலான் மணிவண்ணன் தேறுத்தியானப்பொருளென்றார். எனவே தியானிக்கப்படுவது தியேயப்பொருளெனவும், அப்பொருளைத் தியானிப்பவர் தியாதாக்களெனவும், சுருதிகள் கூறுதலுண்மை, ஆகவே மணிவண்ணன் தேறு என்றதனால் திருமால் தியாதா எனவும், மயானச்சுடரின் வடிவானவனைத் தியானப் பொருளென்றதனால் சிவபெருமானைத் தியேயனெனவும் கொள்ளற்பாற்று. (௧)

பகுப்பின்றிமன்னும்பழமாமறைதன்னைநோக்கி
வகுக்கும்படைப்பின்பொருட்டுத்தனிமாவதாகிச்
செகுக்குந்திறல்வல்லமயானத்தின்மேற்றிசைக்கட்
டொகுக்குந்தளிர்பூகனிதுன்றவயங்குகென்றான்.

(இ - ள்,) வகுக்கும் படைப்பின் பொருட்டு - (இறைவன்) வகைப்பட்ட சிருட்டியினிமித்தம், பகுப்பின்றி மன்னும் பழமாமறைதன்னை நோக்கி-பகுப்பில்லாமல் நிலைபெற்ற பழைய பெருமையாகியவேதத்தைப்பார்த்து, செகுக்கும் திறல்வல்ல மயானத்தின்மேற்றிசைக்கண்-அழிக்கும் ஆற்றலில் வன்மையுள்ள மயானத்தின்மேற்குத்திசையில், தனிமாவதாகி - நீ ஒரு மாமரமாகி, தொகுக்கும் தளிர் பூ கனி துன்றவயங்குக என்றான் - கூடி நின்ற தளிரும் பூவும் பழமும் பொருந்த விளங்குக என்றான். (எ-று)

(உயிர்கள் உடம்போடுகூடத் திருவுள்ளஞ்செய்த இறைவன்) அந்தணர் முதலாக நால்வகைப்பட்ட சிருட்டியினிமித்தம் ஒன்றாய் நிலைபெற்றிருக்கும் அநாதியாகிய வேதத்தைப்பார்த்து நீ இங்குக் கச்சிமயானத்தின் மேற்றிசையில் தளிர் முதலியவை நெருங்க ஒரு மாமரமாகி விளங்குக என்றனனென்க.

இறைவன் திருமாலைநோக்கி நீ வியாசனாகி வேதங்களை நான்காக வகுப்பாயென்றதற்கு முன் வேதம் ஒன்றேயாதலான் பகுப்பின்றி மன்னும் பழமாமறையென்றார். (௨)

தாவரும்பழமாமறைதம்பிரானருளான்
மேவருந்தனிச்சூதமாய்மயானத்தின்மேல்பாற்
பூவரும்பிமென்றளிர்கனிபுதுமலர்துறுமி
யோவருங்குளிர்நிழல்குலாயோங்கியதன்றே.

(இ - ள்.) தாவரும் பழமாமறை தம்பிரான் அருளால் - கெடுதலில்லாதபழைய வேதம் இறைவனருளால் - மேவரும் தனி சூதமாய் - விரும்புகின்ற ஒப்பற்ற மாமரமாகி, மயானத்தின் மேல்பால் பூ அரும்பி மெல் தளிர் கனி புதுமலர் துறுமி - கச்சி மயானத்தின் மேற்றிசையில் பூத்து மெல்லியதளிரும் பழமும் புதுமலரு நிரம்பி, ஓவருங் குளிர் நிழல்குலாய் ஓங்கியது - நீங்குதலருமை யாகிய குளிர்ந்தநிழல் குலவி யோங்கிற்று- (எ-று)

இறைவனருளால் கச்சி மயானத்தின் மேற்றிசையில் அநாதி நித்தியமாகிய வேதம் மாமரமாகி மலர்தளிர் முதலியவற்றால் நெருங்கி ஓங்கி நின்றதென்க. (௩)

கொன்றைமாலிகைச்சடைமுடிக்குழகனங்கதன்கீழ்த்
துன்றுமானந்தப்பேரொளியிலிங்கமாத்தோன்றி
வென்றநல்லெழில்விரிந்ததன்மெய்யிடப்புறத்து
மன்றல்வார்குழலிலளிதைமாதினையுயிர்த்தான்.

(இ - ள்.) அங்கு அதன்கீழ் - அவ்விருக்கத்தின்கீழ், கொன்றைமாலிகை சடைமுடி குழகன் - கொன்றைமாலையை யணிந்த சடைமுடியையுடைய இறைவன், துன்றும் ஆனந்தம் பேரொளி இலிங்கமாக தோன்றி - நிறைந்த இன்பவடிவினை யுடைய பெரிய ஒளியுள்ள இலிங்கமாகவிளங்கி, வென்ற நல்லெழில் விரிந்த - வெற்றிகொண்ட நல்லவழகு விரிந்த, தன்மெய் இடப் புறத்து - தன் திருமேனியி னிடப்பாகத்தில், மன்றல் வார்குழல் - இயற்கை மணந்தங்கிய நீண்ட கூந்தலையுடைய, இலளிதை மாதினை யுயிர்த்தான் - இலளிதை யென்னுந் தேவியைத் தோன்றச் செய்தான். (எ-று.)

அம் மாவடியின்கீழ் இறைவன் சோதிலிங்க வடிவாய்த் தோன்றி தனது இடப்பாகத்தில் இலளிதாதேவியைத் தோன்றச்செய்தன னென்க.

வடிவங்களெல்லாம் அஞ்ஞானரூபமும் துக்கோதயமுமாதலால் அதுபோலு மன்று இறைவன் வடிவென்பார் துன்று மானந்தப் பேரொளி இலிங்கமாய்த் தோன்றி எனவும், மூச்சுடராலும் போக்கற்கரிய ஆணவவிருளைப் போக்கும் மெய்யொளியுடையா னெனபார் வென்ற நல்லெழில் விரிந்த தன்மெய் எனவும், இறைவன் வாமபாகம் சத்திபாகமென்பார் இடப்புறத்து இலளிதையாதினை யுயிர்த்தானெனவுங் கூறினார்.

இலளிதை மனோகரத்தைச் செய்கின்றவள். (ரு)

வணங்குநுண்ணிடைக்கிடர்செயமதர்த்துமேலெழுந்த
விணங்குபூண்முலையிலளிதைப்பிராட்டியுமெழுந்தங்
கணங்குவெம்பவக்கடலினின்றருட்கரைவிடுக்கு
நிணங்கொள்சூற்படைநெடுந்தகைதிருவடியிறைஞ்சி.

(இ - ள்.) வணங்குநுண் இடைக்கு இடர்செய - வளைந்த நுண்ணிய இடைக்குத் துன்பஞ்செய்ய, மதர்த்துமேல் எழுந்த இணங்கு பூண்முலை இலளிதை பிராட்டியும் அங்கு எழுந்து - மதர்த்துமேலெழுந்த இணங்கிய ஆபரணமணிந்த தனத்தை யுடைய இலளிதைப் பிராட்டியும் அவ்விடத்தினின்று மெழுந்து, அணங்கு வெம்பவக் கடலினின்று அருள்கரை விடுக்கும் - வருத்துகின்ற கொடியபிறவியாகிய கடலிலிருந்து கருணையாகிய கரையிற்சேர்க்கும், நிணங்கொள் சூல்படை - மாமிசந்தங்கிய சூலப்படையையுடைய, நெடுந்தகை திருவடி இறைஞ்சி - இறைவனுடைய பாதங்களை வணங்கி. (எ - று.)

தோன்றிய இலளிதாதேவியும் எழுந்து இறைவனடி வணங்கி என்க.

கட்புலனுக்குத் தோனறாதது இடையாதலால் நுண்ணிடை எனவும், தோன்றுவது தனமாதலால் மேலெழுந்து எனவும், அத்தோற்றத்துக்கிசைய ஆபரணங்கள் அழகுசெய்தலால் இணங்கு பூண் எனவுங்கூறினார். (சு)

விளங்குமேகம்பமேவியவிமலவிண்ணவர்க
ளுளங்கவார்கலிமுகட்டுவந்தெழுசுடிவிடத்தைக்

களங்குலாவவுண்டமைத்தருள்களகணேயெனக்கு
வளங்குலாவியவருட்பணிவகுத்தருளெனலும்.

(இ - ள்.) விளங்கும் ஏகம்பமேவிய விமல - விளங்குகின்ற திருவேகம்பத்திலெழுந்தருளிய மலரகிதனே, விண்ணவர்கள் துளங்க ஆர்கலி முகடுவந்து எழும் சுடுவிடத்தை - தேவர்கள் வருந்தக் கடலின் முகட்டில்வந்து தோன்றிய ஆலவிடத்தை, களம் குலாவ உண்டு அமைத்தருள் களைகணே - கண்டத்திற்பொருந்த வுண்டமைத்து புகலிடமே, எனக்கு வளங்குலாவிய அருட்பணி வகுத்தருள் எனலும் - எனக்கு வளம் பொருந்திய அருட்பணியைச் சொல்லியருளென்னலும், (எ - று.)

இறைவி இறைவனடிபணிந்து ஏகாம்பரநாதனே, மலரகிதனே, விடத்தை யுண்டு அமரருக்குப் புகலிடமானவனே, அடியேனுக்குக் கட்டளையிட வெண்ணிய அருட்பணியை வகுத்துக் கூறுவாயென்றனரென்க.

விடத்தையுண் டமைத்தருள் என்றதனால் உண்டது தேவர்களைக் காத்தற்கும் அமைத்தது அடியார்களுக்குமாமென்க. இதனை, "யாம் செய்தவமின்று தடுத்ததென்னத் தகைந்து தான்றரித்தது" என்ற திருவாக்கானுணர்க. (எ)

நிரந்தநீருலகுக்குபாதானநீநிமித்த
மரந்தைதீர்த்தருள்செய்யும்யாமாதலினணங்கே
கரந்தவையகம்பண்டுபோற்காண்டகுமாறுன்
சுரந்தபேரெழில்வடிவினிற்றோற்றெனப்பணித்தான்.

(இ - ள்.) நிரந்தநீள் உலகுக்கு உபாதானம் நீ - பரந்த நீண்டவுலகத்துக்கு உபாதான காரணம் நீ, அரந்தை தீர்த்தருள் செய்யும் யாம் நிமித்தம் - துன்பத்தை நீக்கியருள் செய்யும் யாம் நிமித்தகாரணம், ஆதலின் அணங்கே - ஆகையால் இறைவியே, கரந்தவையகம் பண்டுபோல் காண்டகுமாறு-மறைந்த உலகம் முன்போல் காணும்படி, உன் சுரந்த பெரு எழில் வடிவினில் தோற்று என பணித்தான் - உனது சுரந்த பேரழகையுடைய மேனியில் படைக்கவெனக் கட்டளையிட்டான். (எ - று)

(அருட்பணி கூறுவாயென்ற தேவியை நோக்கி) உலகுக்குபாதானகாரணமாயிருப்பவள் நீ, நிமித்தகாரணனாயிருப்பவன்யான், ஆகையால் இறைவியே (பண்டாசுரனைச் சங்கரிக்கு நிமித்தம் யாம் செய்தயாகத்தில்) மறைந்திருக்கின்ற சராசரங்களையெல்லாம் முன்போல் காணும்படி உனது வடிவத்தில் படைக்கக் கடவாயென்று கட்டளையிட்டனனென்க.

இறைவன் தனதுசத்தி, மாயைக்காதாரமாய் நிற்றலால் உலகுக்குபாதானம் நீ எனவும், அச்சத்தியினாலே மாயையிலொடுங்கிய உலகைத் தோற்றுவித்தலேயன்றித் தானன்றாதலால் நிமித்தம்யாமெனவும், அங்ஙனம் நிமித்தனாயிருந்து உலகைத் தோற்றுவித்தல் ஆன்மாக்களைப்பற்றிய ஆணவத்துன்பத்தை யொழித்தற்காதலால், நிமித்தம்யாமென்று வாளாகூறாது அரந்தை தீர்த்தருள் செய்யும் யாமெனவும் கூறினர்.

இதனால் உலகுக் குபாதானம் சத்தியென்றதன்று உலகுக்குபாதானமாகிய மாயைக்கு ஆதாரமாய்நிற்றலால் கிழங்கினின்றுந்தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதுபோல் உலகுக்குபாதான நீ என்றாளெனக் கொள்ளற்பாற்று. (அ)

அரவுமம்புலிக்குழவியுமலையெறிநதியும்
விரவுசெஞ்சடைப்பெருந்[illegible]கைபணித்தமெய்யருடன்

சிரமிசைக்கொடுசெறிந்தபல்லுயிர்களுமுறையாற்
பரவைநித்திலமுறுவலாள்படைப்பவளானாள்.

(இ - ள்.) அரவும் அம்புலிக்குழவியும் அலை எறி நதியும் விரவு செஞ்சடை பெருந்தகை - சர்ப்பமும் இளஞ்சந்திரனும் அலைவீசுங் கங்கையும் கலந்த செஞ்சடையையுடைய பெருந்தகை, பணித்த மெய் அருள் தன் சிரமிசைகொடு - கட்டளைசெய்த உண்மையாகிய அருளை தன் தலைமேற்கொண்டு, செறிந்த பல உயிர்களும் முறையால் - பொருந்திய பல வுயிர்களும் முறைமையாக, பரவை நித்தில முறுவலாள் படைப்பவளானாள் - கடலிற்றோன்றிய முத்தம்போலும் நகையையுடைய இறைவி சிருட்டிக்கத் தொடங்கினாள் (எ-று)

(இலளிதாதேவி) சர்ப்பமுதலியவை கலந்து வாழும் சடைமுடி யையுடைய இறைவன் கட்டளை யிட்ட பணியைச் சிரமேற்கொண்டு உயிர்களைமுறையாற் படைக்கத் தொடங்கினாளென்க.

பாம்புமுதலியவற்றை யணிந்து அவற்றின் பகைமையை யொழிந்த கருணாசாலியாகலான் பெருந்தகை யென்றார். இதனை, பங்கமொன்றில்லாத படர் சடையினாய் பாம்பொடு திங்கள் பகை தீர்த்தாண்டாய் "என்று தேவாரத்தருளினமை காண்க. (௯)

எண்கணாளனை யெழில்வலக்கண்ணினுமபதும
வண்கணாளனை மற்றிடக்கண்ணினு நுதன்மே
லொண்கணாளனைநள்ளுடைக்கண்ணினுமுலவாப்
பெண்களுநாயகியீன்றனண்முததொழிலபிறங்க.

(இ - ள்.) உலவா பெண்கள் நாயகி - கெடாத பெண்களுநாயகமாவாள், முத்தொழில் பிறங்க - மூன்று தொழில்களும் விளங்க, எண்கணாளனை எழில்வலம் கண்ணினும் - எட்டுக்கண்களையுடைய பிரமனை அழகினையுடைய வலக்கண்ணினிடத்தும், பதும வண்கணாளனை இடம்கண்ணினும் - தாமரைக்கண்ணையுடைய விஷ்ணுவை இடக்கண்ணினிடத்தும், நுதன்மேல் ஒண்கணாளனை நள்ளுடைக்கண்ணினும் - நெற்றியின்மேல் ஒள்ளியகண்ணையுடைய உருத்திரனை நடுககண்ணினிடத்தும், ஈன்றனள்- பெற்றனள். (எ - று.)

உமாதேவியானவர் சிருட்டி முதலிய முத்தொழிலும் விளங்க வலம் இடம் நடு என்னும் தன் முக்கண்ணினின்றும் பிரமன் முதலிய மூவரையுஞ் சிருட்டித்தனளென்க.

"வேதாரஞ்சகன்மால புரந்தரன் வேகசண்ட குபேரனோ, டாதியெண்டிசைபாலர்பொன்றவு மாதியந்தமிலாதபேரர், காதர்பொன்றிலரோ துன்மங்கலநாணுறுந்திறம்" என்றாராகலின் வேதன் முதலியவர்களை யிழந்து மங்கலநாணற்று நாயகி என்ற பெயரொழியப்பெற்ற மங்கையர் போலன்றி அறுதமங்கல நாணுடையராய் நாயகனோடுகூடி நாயகி என என்றும் வாழ்ந்திருத்தலால் உலவாப் பெண்களுநாயகி எனவும், திரிமூர்த்திகளும் மயானச்சோதிலிங்கத்தில் நீறாய்விட்டமையால் அவர்களை முன்னர் தோற்றுவித்தாலன்றி சிருட்டி திதிசங்காரமாகிய முத்தொழிலும் நிகழாதாகலான் முத்தொழில் பிறங்கஎணகணாளனை பதுமவண்கணாளனை ஒண்கணாளனை முறையே வலக்கண்ணினும் இடக்கண்ணினும் நள்ளுடைக்கண்ணினு மீன்றனளெனவுங் கூறினார். (௧௦)

தழங்குமங்கியங்கடவுள்காயத்திரிச்சந்த
முழங்குசீரிரதந்தரசாமமுத்தோமம

பழங்கணின்மறையோருடனயத்தினைப்பரிவின்
வழங்குபேரருட்கருணைகூர்மதிமுகத்தளித்தாள்.

(இ - ள்) தழங்கும் அங்கி அம் கடவுள் - (இலளிதாதேவி) சத்திக்கின்ற அக்னியும், காயத்திரிசந்தம் - காயத்திரிசந்தமும், முழங்குசீர் இரதந்தர சாமம் - ஒலிக்கின்ற இரதந்திரமென்கிற சாமமும், முத்தோமம் - திரியஸ்தோமமும், (ஆகிய இவற்றோடு), பழங்கண் இல் மறையோருடன் - துன்பமில்லாத வேதியருடன், நயத்தினை பரிவின் வழங்கு - நன்மையினை யன்பாயுதவும், பெரு அருள் கருணைகூர் மதிமுகத்து-பேரருளாகிய கருணை மிகுந்த மதிபோலு முகத்தினிடத்து, அளித்தாள் - படைத்தனள், (எ - று.)

இலளிதா தேவியார் தனது முகத்தில் அக்கினிதேவனையும், காயத்திரிசந்தஸையும், இரதந்திரமென்கிற சாமத்தையும், திரியஸ்தோமத்தையும் வேதியனையும் படைத்தனளென்க. (கக)

காமரிந்திரன்றிரையிட்டுப்பெனக்கரைசந்தந்
தோமிலைந்துமூன்றுறழ்ந்ததோமம்பெருஞ்சாமந்
தாமநீண்முடிமன்னவரவியினைத்தகைசான்
மாமணிக்கலன்வயங்குமென்புயத்திடைத்தந்தாள்.

(இ - ள்.) காமர் இந்திரன்-அழகிய இந்திரனும், திரையிட்டுப் பெனகரைசந்தம்-திரயிஷ்டுப்பென்கிற சந்தசும், தோமில் ஐந்து மூன்றுறழ்ந்ததோமம் - குற்றமற்ற பஞ்சதசஸ்தோமத்தையும், பெருஞ்சாமம் - புருஹத்தென்கிறசாமமும், தாமநீண்முடிமன்னவர் - மாலையணிந்த நீண்ட முடியினையுடைய வரசனையும், அவியினை - அவியினையும், தகைசால் மாமணிக்கல்ன்வயங்கு மென்புயத்திடை தந்தாள் - மேன்மையமைந்த பெருமைவாய்ந்த இரத்னாபரணம் பிரகாசிக்கும் மெல்லிய தோளின்கண் படைத்தாள். (எ - று.)

தேவி தோளில் இந்திரனையும் திரயிஷ்டுப் சந்தஸையும் புருஹத்தென்கிற சாமத்தையும் பஞ்சதசஸ்தோமத்தையும், க்ஷத்திரியனையும் அவிகளையும் படைத்தனளென்க.

தக்கவிச்சுவதேவர்கள்சாகதச்சந்தம்
பொக்கமில்வயிரூபமாம்புகலருஞ்சாமந்
தொக்கமேன்மையிற்பதினெழுதோமமான்வணிக
ரிக்கிளந்தவைமுழுவதுங்கவானிடத்தீன்றாள்.

(இ - ள்.) தக்க விச்சுவதேவர்கள் சாகதச்சந்தம் - தகுந்த விசுவதேவர்கள் சாகதச்சந்தசும், பொக்கமில் வயிரூபமாம் புகலருஞ் சாமம் - பொய்யில்லாத வயிரூபமென்கிற சொல்லுதற்கரிய சாமமும், மேன்மையில்தொக்க பதினெழுதோமம் - மேன்மையிற் கூடிய சப்தத சஸ்தோமமும், ஆன் வணிகர் - பசுக்காத்தோம்பும் வணிகரும்' இக் கிளந்தவை முழுவதும் - இங்கே கூறியவை முழுதும், கவானிடத்து ஈன்றாள்-தொடையில் தந்தாள். (எ - று.)

தேவி தனது தொடையில் விசுவதேவர்களையும் சாதகச்சந்தசையும், வயிரூபமென்கிற சாமத்தையும், சப்ததசஸ்தோமத்தையும் வைசியனையும் படைத்தனளென்க.

சந்தமாமனுட்டுப்புவைராசமென்சாமம்
வந்தமூவெழுதோமம்வாம்புரவிபின்னவனைச்

செந்தளிர்ப்பதத்தீன்றனளிவர்க்கொருதெய்வந்
தந்திலாமையின்முன்னவரிவர்தொழுந்தலைவர்.

(இ - ள்.) சந்தமாம் அனுட்டுப்பு வைராச மென்சாமம்-அனுஷ்டுப்புச் சந்தசும் வைராச மென்கின்ற சாமமும், வந்த மூவெழுதோமம்-ஏகவிம்சதிஸ்தோமமும், வாம் புரவி - தாவிச் செல்லுங்குதிரையையும், பின்னவரை - சூத்திரரையும், செந்தளிர் பதத்து ஈன்றனள் - சிவந்ததளிர்போன்ற பாதத்தில் தந்தனள், இவர்க்கு ஒரு தெய்வம் தந்திலாமையின் - இவருக்கொரு தெய்வந்தரப்பெறாமையின், முன்னவர் இவர் தொழும் தலைவர் - முதன் மூன்று குலத்தார் இவர் வணங்குங் கடவுள். (எ - று.)

தேவி தனது பாதத்தில் அனுஷ்டுப்புசந்தசையும், வைராசமென்கிற சாமத்தையும் ஏகவிம்சதிஸ்தோமத்தையும் குதிரையையும் சூத்திரரையும் படைத்தனளென்க.

ஏனைப்புன்மரமுதலியபூதகாரியமு
மேனிப்பாலுரோமங்களினுயிர்த்துமெய்யன்பி
னானப்பூங்குழனாயகிமாந்தருநீழல்
வானக்கங்கைதோய்முடிச்சடைவள்ளலைத்தொழுதாள்.

(இ - ள்.) ஏனை புன்மரமுதலிய பூதகாரியமும் - ஏனைய புன்மரமுதலாகிய பூதகாரியப் பொருளையும், மேனிப்பால் உரோமங்களின் உயிர்த்து - தன்சரீரத்திலுள்ள மயிர்களிற் றோன்றச்செய்து, மெய் அன்பின்-உண்மை யன்பினால், நானம் பூங்குழல் நாயகி - மயிர்ச் சாந்தணிந்த பூவைமுடிந்த கூந்தலையுடைய இலளிதை, மா தருநீழல்-மாவிருக்க நீழலில் வீற்றிருக்கும், வானம்கங்கை தோய் முடிச்சடை வள்ளலைத் தொழுதாள் - ஆகாய கங்கையையணிந்த சடைமுடியினையுடைய வள்ளற்றன்மையுடைய இறைவனை வணங்கி நின்றனள், (எ - று.)

தேவிதனது உரோமத்தில் ஏனைய புன்மரமுதலிய பூதகாரியப் பொருள்களைப் படைத்து மாந்தருநிழற்கீழ் வாழ்கின்ற இறைவனை வணங்கி நின்றனளென்க.

உன்வடிவினிற் றோற்றெனப்பணித்தான் எனவும், முறையாற் படைப்பவளானாள் எனவும் (அ-கூ) செய்யுள்களில் கூறியபடியே என்க ஞானனை என்னுஞ் செய்யுள்முதல் வள்ளலைத்தொழுதாள் என்னுஞ் செய்யுள் காறும் யாவையும் யாவரையும் முகந்தோள் தொடை பாதங்களிலும் உரோமங்களிலும் முறையேபடைத்தமையை வகுத்துணர்த்திய தென்க. (கரு)

தொழுதகங்கையைத்தூமடித்தலமிசைக்கொண்டு
முழுதுமாகியமுன்னவன்மாந்தருநிழற்கீழ்
விழுமணித்தவிசும்பரின்விளங்கிவீற்றிருந்தான்
கழுமனீங்கியெவ்வுயிர்களுங்களிப்பொடுவளர்ந்த.

(இ - ள்.) தொழுத நங்கையை தூ மடித்தலமிசைகொண்டு - வணங்கிய உமையம்மையை பரிசுத்தமாகிய மடித்தலத்திலிருத்தி, முழுதுமாகிய முன்னவன் மாந்தரு நிழற்கீழ் - எல்லாமாகிய முன்னோன் மாவிருக்கத்தினிழலின்கீழ், விழுமணி தவிசு உம்பரின் விளங்கி வீற்றிருந்தான் - சிறந்த இரத்தின தனத்தின்மேல் விளங்கி எழுந்தருளியிருந்தான், கழுமல் நீங்கி எவ்வுயிர்களும் களிப்பொடு வளர்ந்த - துன்பநீங்கி எல்லாவுயிர்களும் மகிழ்ச்சியாய் வளர்ந்தன. (எ - று.)

இறைவன் தன்னடிபணிந்த இறைவியை மடித்தலத்தின்மேல் வைத்துக்கொண்டு அந்த மாமரத்தினிழற் கீழ் இரத்தின கசிதமாயிருக்கின்ற சிங்காதனத்தில் வீற்றிருந்தனன். எல்லா வுயிர்களுந் துன்ப நீங்கி வளர்ந்தோங்கின என்க.

தன்னிடத்தொடுங்கிய வுயிர்கள் மீளவும் உடம்போடு கூடிவாழ அபின்னசத்தியாகிய இலளிதையைப் பின்னசத்தியாக்கிப் படைப்பாயென்றதேயன்றி அத்தேவி பின்னசத்தியாகவே யிருப்பவரன்றுகூறான் தொழுதங்கையைத் தூயடித்தல மிசைக்கொண்டு என்றார். இருவரும் யாவடித்தலி லயர்ச்சுருளினமையைப் பின்வருஞ் செய்யுள்களால் விளக்குவாம். (௧௬)

அந்தணனன்முன் மூவருமிலளிதையவள்பால்
வந்தமாத்திரையே துயின்றெழுந்தவர்மான
முந்தைவாலறிவெய்தினார் முதல்விதன்பதமு
மெந்தைபாதமுந்தொழுதெழுந்திறைஞ்சியேத்தெடுப்பார்.

(இ - ள்.) அந்தணனன் முன்மூவரு மிலளிதையவள்பால் வந்த மாத்திரையே - பிரமன்முதலிய மும்மைப் பெருந்தேவரும் உமையம்மையிடத்து வந்தவளவிலே, துயின்று எழுந்தவர்மான - தூங்கியெழுந்தவர்போல, முந்தை வாலறிவெய்தினார் - முன்னைத் தூயவுணர்ச்சியடைந்து, முதல்விதன்பதமும் எந்தைபாதமும் தொழுது எழுந்து இறைஞ்சி ஏத்தெடுப்பார் - இறைவியினுடைய பாதங்களும் இறைவனுடைய பாதங்களும் தொழுதெழுந்து வணங்கி ஏத்துவாராயினர். (எ-று.)

பிரமன் முதலிய மூவரும் இலளிதாதேவியிடத்து வந்தவளவிலே உறங்கிவிழித்தவர்போல முன்னறிவு தோன்றப்பெற்று அம்மையப்பரிருவரையும் வணங்கித்துதிக்கத் தொடங்கினார்களென்க.

முன் பண்டாசுரனால் மயங்கிய அறிவுதெளியப் பெற்றாரென்பார் முந்தைவாலறிவெய்தினார் என்றார். (௧எ)

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

தரங்கவெண்புணரிகான்றதழல்விடம்பருகியெம்மை
யிரங்கியன்றளித்தாய்மற்றுமின்றொருபண்டன்றன்னா
லுரங்கெழுமடியேமாவிமுழுவதுமுய்யக்கொண்டு
வரங்கிளர்கருணைகூர்ந்தவள்ளலேபோற்றிபோற்றி.

(இ - ள்.) அன்று தரங்க வெண் புணரி கான்ற - அக்காலத்தில் அலைகளையுடைய கடலளித்த, தழல் விடம் பருகி - நெருப்பினையொத்த ஆலவிடமுண்டு, எம்மை இரங்கி அளித்தாய் - எமக்கிரங்கிக் காத்தாய், மற்றும் இன்று ஒருபண்டன் தன்னால் - பின்னுமிக்காலத்தில் ஒருபண்டாசுரனால், உரங்கெழும் அடியேம் ஆவி முழுவதும் உய்யகொண்டு - வன்மையையுடைய அடியேங்களுயிர் முழுவதும் பிழைக்கக்கொண்டு, வரங்கிளர் - வரம்பொருந்திய, கருணைகூர்ந்த வள்ளலே போற்றி போற்றி — கிருபைமிகுந்த வள்ளற்றன்மையுடையானே உனக்குத் துதிபுரிவதாக, (எ - று.)

அந்நாளில் கடலிற்றோன்றிய விடமுண்டு காத்தனை, பின்னும் இன்று ஒருபண்டாசுரனால் எங்களுயிரை யுண்டுபெருங் கருணைசெய்த வள்ளலே உன்னைத் துதிக்கின்றோமென்றாரென்க.

இது இறைவன் வணக்கம்.

இதனால் அன்று எங்களைக் கருதிறபாக்கிய விடத்தையுண்டு கண்டங் கரியனாயினாய் இன்று எங்களை வெற்றயிராக்கிய பண்டாசுரனை எங்களோடுண்டு செந்தழல் வடிவாயினாய். உன் கருணை இருந்தவாறென்னையோ வென்று வியந்ததாமென்க.

அல்லதூஉம் நாங்களுனக்குத் தந்தது விடமும் அசுரனுமாகும். நீ எங்களுக்குத் தந்தது உடம்பும் உயிருமாகும். எனவே நாங்கள்செய்தது குற்றம் நீசெய்தது குணம். அதனால் வள்ளல் என்றது மாமென்க. (கஅ)

சைவச்செந்தழலின்யாங்களாகுதிச்சமிதையாகச்
செய்வித்துவேள்வியாற்றுஞ்சிவபிரானருளினாலே
யுய்வித்துமீளவெம்மையுதவியகருணைநாட்டத்
தெய்வப்பூங்கொம்பரன்னசெல்விநின் சரணம்போற்றி.

(இ - ள்.) சைவச் செந்தழலின் யாங்கள் ஆகுதி சமிதையாக செய்வித்து - சிவாக்கினியில் நாங்கள் ஆகுதிச் சமிதைப்போலாகப் பண்ணி, வேள்வியாற்றும் சிவபிரான் அருளினாலே உய்வித்து - யாகஞ்செய்யும் சிவபெருமானருளால் பிழைப்பித்து, மீள எம்மை உதவிய-மீட்டு மெங்களை யளித்த, கருணைநாட்டம் தெய்வம் பூங்கொம்பர் அன்னசெல்வி - கருணைநோக்கும் தெய்வத்தன்மையும்வாய்ந்த பூங்கொம்பன்ன முதல்வி, நின்சரணம் போற்றி-உன்பாதங்களை யான் துதிப்பதாக. (எ - று)

சிவாக்னியில் நாங்களெல்லாம் ஆகுதிக்குரிய சமித்துக்களாகச் செய்வித்து அச்சைவ யாகத்தைச் செய்கின்ற இறைவனால் பிழைப்பித்து முன்போல் எங்களைச் சிருட்டித்த இறைவியே உன்னைத் துதிக்கின்றோ மென்றாரென்க.

இது இறைவி வணக்கம்.

யாகஞ்செய்தவனும் யாவரையும் சமித்தாகக் கொண்டவனும் இறைவனாதலால் இறைவியைச் செய்வித்தவளாகவும், உய்வித்தவளாகவும் கூறினார். எனவே இறைவன் கருணையாலன்றிச் செய்த தின்றாகலானும் அக்கருணையே சத்தியாதலானும் அங்ஙனங் கூறியதென்க.

மீள என்பது மீட்டென்றதன்திரிபு ஆகவென்றது ஆக்கப்பொருளைத்தராது உவமைப் பொருளைக் குறித்துநின்றது. (கக)

அம்மையாயப்பனாகிக்குருவுமாய்த்தெய்வமாகிச்
சும்மைநீர்க்காஞ்சிவைப்பினிருவகையுருவுதோற்றி
யெம்மையுமாண்டுகொண்டவிருமுதுகுரவீரன்பர்
வெம்மனச்சுரும்புவீழும்விரைமலர்ப்பாதம்போற்றி.

(இ - ள்.) அம்மையாய் அப்பனாய்-தாயுந் தந்தையுமாய், குருவுமாய் தெய்வமாகி ஆசிரியனுந் தெய்வமுமாய், சும்மை நீர்க்காஞ்சி வைப்பில் - ஒலியையுடைய நீர்வளமுள்ள காஞ்சித்தலத்தில், இருவகை உருவு தோற்றி - சத்திசிவமென்னும் இருபகுதிப் பட்டவடிவங்கள் தோன்றச்செய்து, எம்மையும் ஆண்டுகொண்ட - எங்களையும் அடிமைகொண்ட, இருமுதுகுரவீர் - (அநாதியாயுள்ள) இருமுதுகுரவர்களே, அன்பர் வெம்மனம் சுரும்புவீழும் - அன்பருடைய விருப்பமமைந்த மனமாகிய வண்டுவிரும்பியடையும், விரைமலர் பாதம்போற்றி - வாசனையுள்ள தாமரைமலர்போன்ற பாதங்களைத்துதிப்பதாக. (எ - று.)

அம்மையாகியும் அப்பனாகியும் குருவாகியும் தெய்வமாகியும் சிவசத்தியாகியும் தோன்றி யடிமைகொண்ட எங்கள் தாய்தந்தையர்களே உங்கள் திருவடிகளைப் போற்றுகின்றோமென்றார்களென்க. இது இருவர் வணக்கமுங் கூறியது.

உம்மை யிரண்டனுள் முன்னையது முன்னுள்ளது நோக்க இறந்தது தழீஇயதும், பின்னதுநோக்க எதிரது தழீ இயதுமாம் - பின்னுள்ள உம்மை முற்று. பாதங்களை மலராக வுருவகஞ் செய்ததற்கேற்ப மனத்தை அரும்பாகவுருவகஞ் செய்தார்.

வேட்டதென் உரைமின் என்றான் - நீங்கள் விரும்பியதுயாது சொல்லுங்களென்றான். (எ - று)

அன்பு மீதூர்ந்து கூத்தாடிய திரிமூர்த்திகளையும் நீலகண்டனாகிய இறைவன்பார்த்து நீங்கள் விரும்பியதென்னென்று கேட்டருளினனென்க.

அடுக்கு மிகுதிப்பொருள். குடர்தம்படல் கூத்தாடல். குடந்தப்பட்ட என்னும் பெயரெச்சம் இறையையென்னுஞ் செய்பவனைக்கொண்டது. மூவுலகு மென்ற வும்மை முற்று. (உஉ)

அவ்வண்ணமருளிச்செய்யக்கேட்டவரறைதலுற்றார்
கவ்வெனுங்கமலத்தோனுமவ்வெனுங்கரியமாலு
மவ்வெனுமரனுமாயமற்றெமைவிழியினீன்ற
விவ்வனை காமக்கண்ணியெனப்பெயர்பெறுகமன்றோ.

(இ - ள்.) அவ்வண்ணம் அருளிச்செய்ய - அவ்வகை யருளிச்செய்ய, கேட்டவர் அறைதலுற்றார் - கேட்டவர் சொல்லலுற்றார், கவ்வெனும் கமலத்தோனும் - கவ்வென்னுங் கிளவிக்குப் பொருளாகிய பிரமனும், அவ்வெனுங் கரியமாலும் - அவ்வென்னுங் கிளவிக்குப் பொருளாகிய மாயவனும், மவ்வெனும் அரனும் ஆய, மவ்வென்னுங் கிளவிக்குப் பொருளாகிய உருத்திர மூர்த்தியும் இறந்துபட்டொழிய, எமை விழியின் ஈன்ற - எங்களைக் கண்களாற்பெற்ற, இவ்வனை காமக்கண்ணி எனப் பெயர்பெறுக - இத்தாய் காமாட்சி என்று சொல்லப்பட்ட பெயரைப் பெறுக. (எ - று)

யாது வேண்டுமென்ற இறைவனை நோக்கி ககார அகார மகார வாச்சியர்களாகிய நாங்கள் கச்சிமயானத்திலிறக்க எங்களைக் கண்ணிலீன்ற இவ்வன்னைக்குக் காமாட்சியெனப் பெயர் வழங்கவேண்டுமென்று பிரார்த்தித்தன ரென்க.

உடம்பை யாக்குதலே சிருட்டியாதலால் ககாரவாச்சியன் பிரமனெனவும், அவ்வுடம்பை யியக்குதலே காத்தலாதலால் அகாரவாச்சியன் திருமாலெனவும், அத்தனுவினியக்கத்தை யொழித்தல் அழித்தலாதலால் மகாரவாச்சியன் உருத்திரனெனவுங் கூறினார்.

இதனால் மும்மைத்தேவராகிய எங்களைப் படைத்து மும்மைத் தொழிலளித்தது ஏனையவுயிர்கள் அறமுதலிய மும்மைப்பயனை யடைதற்கன்றோ அம்மும்மைப்பயனும் இறைவிநோக்கத்தாலன்றி எங்களாலாகுமோ ஆகலான் ஆன்மாக்களுக்கு எங்களன்னை யருளுக்குண்டாகுமாறு இவ்வன்னைகாமக்கண்ணியெனப் பெயர்பெறுக என்றாரொன்றலு மொன்று. இதனை "தேவெனப் புகழுவதினிமிர்ந்து நிகர் செப்புவாரபயவரதமாம், பாவகத்தினயத்தொடுற்றகைபரப்பியென்பய மொறுக்குமே, யாவருக்குமஃதரிது நின்பதமிரப்பயாவையு மளிக்குமான, மூவருக்குமொரு தாவரப்பொருளின் மூலமே தழையுஞாலமே" எனவருஞ் செய்யுளினுமுணர்க. (உங)

சேந்தமென்றளிர்கள்கோதித்தீங்குயிலினிதுகூவு
மேந்திணர்ச்சாகைதோறுமிளநறாவொழுக்கிவாசப்
பூந்துகளுகுத்துச்சீதப்புதுநிழல்விரிக்குந்தெய்வ
மாந்தருவடியினீவிர்வைகலும்வதிகவென்றார்.

(இ - ள்.) சேந்தமென் தளிர்கள் கோதி - சிவந்த மென்மையாகிய தளிரைக் கோதி, தீங்குயில் இனிது கூவும் - இனிமையாகிய குயில் இனிமையாகக்கூவும், ஏந்து

இணர் சாகைதோறும் - ஏந்துகின்ற பூங்கொத்துகளையுடைய கிளைகளிலெல்லாம், இளநறு வொழுக்கி வாசப்பூந்துகள் உகுத்து சீதப் புது நிழல் விரிக்கும்-இளந்தேனொழுக்கி வாசனையுள்ள பூவின் பராகஞ் சிந்தி குளிர்ச்சியையுடைய புதிய நிழலைப்பரப்பும், தெய்வ மா தரு அடியில் நீவிர் வைகலும் வதிக என்றார்-தெய்வத்தன்மை பொருந்திய மாவடியில் நீவிர் எந்நாளும் வீற்றிருக்க வேண்டுமென்றார். (ங - று.)

எங்களைப்படைத்த காமாக்ஷியும் படைக்கச்செய்த நீயும் இந்த மாந்தருவடியில் எந்நாளும் வதிந்திருக்க வேண்டுமென்றிரந்தன ரென்க.

மாவடியில் நீ சோதிலிங்க வடிவாயிருப்பது ஞானிகளே யறிவர், ஏனையோரறியார். ஆகலான் யாவருங்காண இலளிதையுடன் வீற்றிருக்கும் இத்திருக்கோலந்தோடு என்றும் மாறாதிருக்க வேண்டுமென்று பிரார்த்தித்தன ரெனக்கொள்க.

இத்திருவுருவத்தை மூலட்டானத்தில் இன்றுங் காணலாம். (உச)

தவளவெண்ணீற்றுமேனித்தலைவனவ்வரங்கணல்கி
யிவறிமற்றவர்கண்மீட்டுமிணைக்கரங்குவித்துவேண்டப்
புவனமோர்மூன்றுமுய்யப்புதுநிழன்மாவின்மூலத்
தவிரொளிமயமாய்த்தோன்றுமருட்குறிமேன்மைவிள்ளும்.

(இ - ள்.) தவள வெண்ணீற்றுமேனித் தலைவன் - மிக்கவெள்ளிய நீறுபுனையு மேனியையுடைய இறைவன், அவ்வரங்கள் நல்கி அவர்கள் இவறி மீட்டும் இணைக் கரங்குவித்து வேண்ட - அவ்வரங்களைக் கொடுத்து அவர்கள் விரும்பி மீளவும் இரு கைகளையும் தலைமேற்கூப்பி வேண்டலால், புவனம் ஓர் மூன்றும் உய்ய - மூவுலகமு முய்யும்படி, புதுநிழல் மாவின் மூலத்து அவிரொளிமயமாய் தோன்றும் அருட்குறி-புதுமையாகிய நிழலைப் பரப்புகின்ற மாவடியில் மிளிர்கின்ற ஒளிமயமாய் விளங்கும் அருட்குறியாகிய சிவலிங்கப் பெருமானுடைய, மேன்மை விள்ளும் - மேன்மையை யெடுத்துக்கூறும். (எ - று.)

(திரிமூர்த்திகள் வேண்டியபடியே) திருநீறுசண்ணித்த மேனியையுடைய இறைவன் ஆருகவென்றருளி, மீளவும் அவர்கள் கைகுவித்து மாவின்மூலத்தில் ஒளிமயமாய்த்தோன்றும் இச்சோதி லிங்கத்தின பெருமையை எங்களுக் கனுக்கிரகஞ்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யலால் இறைவன் மூன்றுலகமுமுய்யத் திருவாய் மலர்ந்தருளுமென்க.

"பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிராங்கவர்கோன் மாமன்னு சோதி மணிமார்பன், நாமன்னும் - வேதம் வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடனாதநாதாந்த நடுவேதம், போதத்தா - லாமளவுந்தேடவளவிறந்தவப்பாலைச், சேமவொளி" என்றருளிய யாதொரு சேமவொளியோ அவ்வொளியே இம்மா நிழலிற்றோன்றும் ஒளியாகலான் ஒளிமயமாய்த்தோன்றும் அருட்குறி எனவும், இவ்வருட் குறியை யுணர்ந்தவரோ வீடுபெறுவார்க ளாகலான் புவனமோர் மூன்று முய்ய எனவுங் கூறினார்.

தலைவனிவ் வரங்கணல்கி யிவறிவேண்ட தோன்று மருட்குறி மேன்மைவிள்ளும் என வினைமுடிக்க. அம்மூவரு மொருங்கு வேண்டிய வரமாதலால் அவவரங்களென்றார். தவள வெண்ணீற்று - ஒருபொருட் பன்மொழி. (உரு)

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இன்னிசைச்சுரும்புளர் மலர்த்தொடையணங்குதோட்டுணைமைந்தர் காள்கேண்மின், மன்னுருத்திரனொருவனேபிரமமொன்றுமற்றிலையென்பது துணிபாற்,பன்னுமெய்ப்பொருட்பிரமமாம்வேதமொற்றைமாவெனப்பணைத்ததுகண்டீ, ரன்னதற்கிறையாகியயாமேயிலிங்கமாயதனடித்தலத்துறை கேம்.

(இ - ள்) இன் இசை சுரும்பு உளர் மலர்த் தொடையல் இணங்கு தோள் துணை மைந்தர்காள் - இனிமையாகிய இசைபாடும் வண்டுகளூது மலர்மாலைதங்கிய இருதோளையுமுடைய மக்களே, கேண்மின் - கேளுங்கள், மன்னும் உருத்திரன் ஒருவனே பிரமம் - நிலைபெற்ற உருத்திரனொருவனே பிரமப் பொருளாவான், மற்றும் ஒன்றில்லை என்பது துணிபு - வேறொன்று மில்லையென்று சொல்லப்படுவதே துணிபு, மெய்ப்பொருள் பன்னு பிரமமாம் வேதம் - மெய்ப்பொருளைச் சொல்லுகின்ற பிரமமாகிய வேதமானது, ஒற்றைமா என பணைத்தது - ஒற்றை மாமரமெனக் கிளைத்தது, அன்னதற்கு இறையாகிய யாமே - அவ்வேதப்பொருளாகிய நாமே, இலிங்கமாய் அதன் அடித்தலத்து உறைகேம் - அதனடியிடத்து இலிங்கவடிவமாய் வசிப்போம். (எ - று)

(திரிமூர்த்திகளும் சோதிலிங்கத்தின் பெருமையைக் கூறவேண்டுமென்று கேட்க, இறைவன், மைந்தர்களே, கேளுங்கள். உருத்திரனொருவனே பிரமம் வேறொன்றைப்பிரமமென்பதில்லை என்றுகூறியது நிச்சயம். (இடப்பொருள் விளங்கவே) வேதம் ஓர் மாமரமாகத் தளிர்த்தது; நாமதனடியில் இலிங்கரூபமாக வீற்றிருக்கின்றோம் என்றனெனக.

வேதம் மெய்ப்பொருளையே கூறுவதாகலான் மன்னுமெய்ப் பொருள் எனவும், அம்மெய்ப்பொருள் பிரமமன்றி வேறில்லையென்று மூலமறைகளாகிய எவ்விடத்தும் பிரமத்தையே கூறுவதனால் வேதமென்றது பிரமாம் வேதமெனவுங் கூறினர்.

இதனால் வேதம் பிரமசொரூபமெனவும், அங்ஙனம் வேதத்தைப் பிரமசொரூபமாகக்கூறியது முற்றும் பிரமத்தையே கூறுவதனாலெனவும், வேதம் மெய்ப்பொருளையைக் கூறியதென்க. இனி அவ்வேதம் பிரமமென்றுகூறிய பொருளையுணர்த்துவார். எங்ஙனமெனின்; பிரமப்பொருளாவான் இவனென்றுணர்த்த உருத்திரனொருவனே பிரமம் எனவும், பிரமமாவான் உருத்திரனொருவனேயாதலின் ஏனையோர்க்கு அவையாகாவென றுணர்த்த உருத்திரனென்றொழிபாது மனைவரும் பிரமமெனவும், ஏனையவற்றை மற்றில்லையெனவுங் கூறி

இதனால், உருத்திரனொருவனே நிலைபெற்றவன் அவனொருவனே பிரமம் எனவும், ஏனையவையெல்லாம் பிரமமாகா எனவும் கொள்ளபடாதமெனக.

இப்பெற்றிநோக்கியே வேதம் ஒருமாவிருக்கமாகவும், வேதத்திற் கூறும் பிரமம் ஓரிலிங்க வடிவாகவும் விளங்குவதென் றுணர்த்த வேதமொற்றைமாவெனப் பணைத்தது கண்டீர் எனவும்,அன்னதற் கிறையாகியயாமே யிலிங்கமா யதனடித்தலத் துறைகேம் - எனவுங் கூறினரெனக.

அன்றியும் மன்னுருத்திரனொருவனே பிரமம். என்றதனால் உருத்திரனு டத் தோடு விளங்கும் முதல்வன் யாவனோ அவனே பிரமமா மெனவும், ஒன்று மற் றில்லை என்றதனால் சேதனர்களாகிய திருமால் மூவிசியாரும் அசேதனமாகிய பிரபஞ்ச மும் பிரமன்றெனவும், கூறினுமெனக்கொள்க. இது கிடக்க பரசிவனொருவனே பதி ஏனையபாசமும் பாசத்தோடு கூடியபசுக்களுமாமென்க. இப்பொருள் “ஒன்றென்றதொன்றே காண் ஒன்றேபதி பசுவாம் ஒன்றெனற நீ பாசத்தோடுளேகாண்” என்று கூறிய மெய் கண்ட நூலிற் காண்க. அஃதால் மற்றில்லை யெனறுது மற்றில்லை யென்பது துணிபு என்றுமொன்க. வேதத்தில் ஏனையோரைப் பிரமமென்று கூறுவதில்லையா லோவெனின் கூறுவதுண்டு எங்ஙனமெனின் யோகமாமத்தால், ரூடியாகவன்று. ரூடியாகக்கூறுவது பரசிவனொருவனையேயாமென்க. இதனை “முராரிமுன்னுள மூர்த் திகளந்த மூர்த்தியோ டொப்புறுமென்றும், பராவமுன்னுளைத்த பரமுதலாகப் பகர் பரதத்துவப் பெயர்கள், புராதனமான உருத்திரன் றனக்குப பொருந்திய ரூடிவாசக மாம், அராவணையவன் முற்சுரர்க்கவிர் பரதத்துவ யோகத்தாற் பெயராகும்” எனச்சூ தசங்கிதையில் கூறுதல்காண்க. (உகூ)

ஏதநீக்குசொல்வடிவினுந்தனிமாவெனப்படுந்தருவடிவினுமதற்கு
நாதர்யாமெனத்தெளிமினிங்கெமதுநாமமேகம்பநாதனென்றுரைப்ப
வாதிமந்திரமஞ்செழுத்திதுவேயைமபெருங்கொடும்பாதகமறுக்கு
மோதுமைவகைப்பிரமமந்திரத்துமஞ்செழுத்தினுமுயர்ந்ததிம்மனுவால்.

(இ - ள்.) ஏதம் நீக்கு சொல் வடிவினும் - குற்றநீக்குஞ் சொல் வடிவத்தினும், தனிமா எனபபடும் தருவடிவினும் - ஒப்பற்றமா வெனப்படுந் தருவடித்தினும், அதற்கு நாதா யாம் எனத் தெளிமின் - அவ்வேதத்திற்கு இறைவர் யாமென்று தெளியுங்கள், இங்கு எமது நாமம் ஏகம்பநாதன் என்று உரைப்ப - இங்கெம்பெய ரேகம்பநாத னென்று கூறுவர், ஆதிமந்திரம் அஞ்செழுத்து இதுவே - ஆதியாகிய பஞ்சாக்கர மிதுவேயாகும், ஐம்பெருங்கொடும்பாதகம்அறுக்கும்-ஐந்தாகிய பெருங்கொடிய பாதக மொழிக்கும், ஓதும் ஐவகைப் பிரம மந்திரத்தும் - சொல்லுகின்ற பஞ்சப் பிரமமந் திரத்தினும், அஞ்செழுத்தினும் - சீ பஞ்சாக்கரத்தினும், உயர்ந்தது இம்மனு - சிறப் புடையது இம்மந்திரமாகும், (எ - று.)

சொல்வடிவமாயும் விருககவடிவமாயும் இருக்கின்ற வேதத்துக்குயாமே நாதனெ னறு அறியுங்கள் (அதனால்) எமது நாமத்தை ஏகாம்பரநாதனெனறு கூறுவர், இந்நா மமே பஞ்சாக்கரமாகும், இதுவே பஞ்சப்பிரமம மந்திரத்தினும் பஞ்சாக்கரத்தினும் மேலானமந்திரமாகும் என்க.

வேதம் சொல்வடிவாதலால் சொல்வடிவினும் எனவும், அச்சொல் அஞ்ஞானத் தைப்போக்கலால் ஏதநீக்குசொல் லெனவும், இநத வேதத்துக்கு நாதன் சிவபெருமா னென்பதைவிளக்க அவ்வேதம் ஆம்பரவிருக்கமாகவும், அதற்குநாதனுகிய இறைவன் இலிங்கவடிவாகவும், உருக்கொண்டதால் ஏகம்ப நாதனென்றுரைபப எனவும், இவ் விரண்டின் பொருளொருமையை யுணராது விருக்ஷத்தை விருக்ஷமாகவும், இலிங் கத்தை இலிங்கமாகவும் காணுவோர்க்கு ஒருபயனு மின்றாதலால் தருவடிவினு மதறகு நாதர்யாமெனத் தெளிமின்எனவும், மேற்கூறிப் போந்தமுறையானே ஏகாம்பரநாத

னென்றால்வேதநாயகன் என்று பொருளாயிற்று எனவே, வேதநாதனே உருத்திரன் அவனே பிரமம் என்பதாம். ஆகவே, அப்பிரமம் அனாதி முத்தசித்துருவாயுள்ளது. அது, அனாதி பெத்த சித்துருவாகிய ஆன்மாக்களை முத்தியிற்கூட்டு நிமித்தம் விடயங்களை ருசிப்பித்தொழிக்கும் திரோதானசத்திக நிசையக் கொள்ளும் வடிவங்கள் ஈசனாதி பஞ்சப்பிரம வடிவங்களாதலால் ஓது மைவகைப் பிரம மந்திரத்தும் எனவும், திரோதானவொழிவி லுண்டாகும் ஞானஞேயத்துகளுக்குச் சாதனமாகக்கொள்ளும் மந்திரம் பஞ்சாக்கரமாதலால் அஞ்செழுத்தினும் எனவும், அச்சாதனமுடிவில் அடைவது வேத நாயகமாகிய பிரமமாதலால் உயர்ந்ததிம்மனு எனவும் இம்முறையால் முதன்மை பெற்ற இம்மந்திரமும் ஐந்தெழுந்தாதலால் ஆதிமந்திர மஞ்செழுத்திது எனவுங் கூறினார்.

இதனால், பஞ்சப்பிரம மந்திரத்தால் இருவினையொப்பும், மலபரிபாகமும், ஸ்ரீ பஞ்சாக்கர மந்திரத்தால் சத்திபதிவு உண்டாமெனவும், அச் சத்திபதிநதவர்கள் தியானிக்குந் தியேயப்பொருளை ஏ-காம்-பர-நா-த என்கிற பஞ்சாக்கரத்தால் அடையலாமெனவும் கூறிப்போந்தவாறென்க.

அல்லதூஉம், பஞ்சப்பிரமமும், பஞ்சாக்கரமும் சிவபேதங்களையும் முப்பொருளையும காட்டுவனவாம், ஏகாம்பரநாத என்கிற நாமம் பிரமசொரூபமாகிய பரசிவமொன்றையே காட்டுவதாமென் றயித்துணை நற்பாற்று. விரிக்கிற்பெருகும். (உஎ)

விதிவழாதபல்லுறுப்புடைமறையின்மிக்கதாகுங்காயத்திரியதனி, னதிக
மஞ்சமாமந்திரமதனிஞறிரண்டெழுத்ததனினெட்டெழுத்தாம், பதியுமேன்
மையெட்டெழுத்தினஞ்செழுத்துக்கோடிகோடி மேம்பட்டதஞ்செழுத்தி,
னுதலுமேகம்பநாமமாமனுத்தானூறுகோடியின்மிக்கதென் றுணர்வீர்.

(இ - ள்.) விதி வழாத பல்உறுப்புடை மறையின் காயத்திரிமிக்கதாகும் - விதி கூறுதலில் வழுவாத பலசாகைகளையுடைய வேதத்தினும் காயத்திரிமனு சிறந்ததாகும். அதனின் அதிகம் அஞ்சமா மந்திரம்-அக்காயத்திரி மனுவினும் பெருமை பொருந்திய அம்சமந்திரம் சிறந்ததாகும், அதனின் ஆறிரண்டு எழுத்து - அந்த அம்சமந்திரத்தினும் துவாதசமந்திரஞ் சிறந்ததாகும், அதனின் எட்டெழுத்தாம் - அதனினும் அட்டாக்கரஞ் சிறந்ததாகும், பதியு மேன்மை எட்டெழுத்தின் அஞ்செழுத்து - பதிகின்ற சிறப்பினையுடைய எட்டககரத்தினும் பஞ்சாக்கரமே, கோடிகோடி மேம்பட்டது- பலகோடி மேன்மையுடையதாம், அஞ்செழுத்தின் நுதலும் ஏகம்பநாதமா மனுத்தான் - அந்த சீபஞ்சாக்கரத்தினும் சொல்லுகின்ற ஏகாம்பரநாத னென்னுமந்திரமே, நூறுகோடியின் மிக்கது என்று உணர்வீர்-நூறுகோடியின் மிகுந்ததென்றறிவீர். (எ-று)

வேத வாக்கியங்களாகிய மந்திரங்களிற் சிறந்தது காயத்திரி மந்திரம், அதனினுஞ் சிறந்தது அம்சமந்திரம், அதனினுஞ் சிறந்தது பன்னிரண் டெழுத்தோடுகூடிய வாசுதேவமந்திரம், அதனினுஞ் சிறந்தது அஷ்டாக்ஷரமந்திரம், அதனினுஞ் சிறந்தது ஸ்ரீ பஞ்சாக்ஷரம், அதனினுஞ் சிறந்தது ஏகாம்பரநாதனென்கிறநாமமாம் என்க.

மறையோர் முதலிய மூவராலும் போற்றப்பட்டது வேதமும் காயத்திரியுமெனவும், அவ்வேதவொழுக்கத்தொழுகும் துறவிகளால் போற்றப்பட்டது துவாதசாக்ஷரியும்

அஷ்டாக்ஷரியுமெனவும், அவருட்சிறந்த வைதிகசைவரால் போற்றப்பட்டது சீ பஞ்சாக்கரமெனவும், சீ பஞ்சாக்கர உச்சாரணையினுல் சிறப்பெறும் பிரமமந்திரம் ஏகாம்பரநாதமென்கிற மந்திரமெனவுங் கொள்ளக்கிடந்தன. வேதம் காயத்திரி வாசுதேவமந்ரம் அஷ்டாக்ஷரிமந்திரம் இவைகளை ஒன்றுக்கொன் றதிகமெனவும், சீ பஞ்சாக்கரத்தையும் ஏகாம்பரநாத மந்திரத்தையும் கோடிகோடியாமெனவும் விசேஷித்துக் கூறினமையால் வேதமுதலிய மந்திரங்கள் போககாமிகளாலும் சிவஞானமில்லாத் துறவிகளாலும்போற்றப்பெற்ற தாகலான் ஒன்றுக்கொன் றதிகங்கூறியும், சிவமந்திரங்களாகிய விரண்டும் சிவஞானத்திற் சிறந்த முத்திகாமிகளால் போற்றப்பெற்ற தாகலான் கோடிகோடியா மென்றும் அவற்றினுற்றலைக் குறித்தநாமென்க. (௧அ)

அன்னதன்மையின்மனுவெவற்றினுக்குமதிகமாகியவேகம்பநாத
னென்னுமந்திரமியம்புநாவுடையாற்கிப்பிறப்புறும்பெரும்பயனெய்தும்
பன்னரும்பெருங்கீர்த்தியூக்கப்பாடுமாக்கமுமாயுளும்வளரு
மன்னுகல்வியுங்கேள்வியுமொழுக்கும்வழுக்கிலானவனேயெனத்துணிவீர்.

(இ - ள்.) அன்ன தன்மையின் மனு எவற்றினுக்கும் அதிகமாகிய - அத்தன்மையினையுடைய மந்திரமெவற்றினுக்கும் அதிகப்பட்ட, ஏகம்பநாதன் என்னும் மந்திரம் இயம்பு நாவுடையாற்கு - ஏகம்பநாதனென்கின்ற மந்திரஞ் சொல்லுகின்ற நாவினையுடையானுக்கு, இப்பிறப்புறு பெரும்பயன் எய்தும் - இப்பிறப்பெடுத்ததனுலாகிய பயனவந்தடையும் பன்னரும் பெரும் கீர்த்தியும் - சொல்லுதற்கருமையாகிய பெரும்புகழும், ஊக்கப்பாடும் ஆக்கமும் ஆயுளும் வளரும் - உள்ளக்கிளர்ச்சியும் செல்வமும் வாழ்நாளும் உண்டாகும், மன்னுகல்வியும் ஒழுக்கும் வழுக்கிலான் அவனே என துணிவீர் - நிலைபெற்றகல்வியுங் கேள்வியு மொழுக்கமும் வழுவாதவன் அவனென்றே துணிவீர். (எ - று.)

முன்னர்கூறிய முறையால் எல்லாமந்திரங்களினுஞ் சிறந்தது ஏகம்பநாதனென்கிற மந்திரமெனவும், அதனை உச்சரிப்போனுக்கு பிறவி யெடுத்ததனு லடையவேண்டிய சிவப்பேறடையு மெனவும், அதுவேயுமன்றி அவனே ஒழுக்கமுதலியவற்றிலும் வழுக்காதவ னென்று துணியவேண்டு மெனவுங் கூறியதென்க.

ஒருவ னடையவேண்டிய செல்வம் இம்மைச்செல்வம் மறுமைச் செல்வங்களாம் இவை இரண்டுள் மறுமைச்செல்வம் பிறப்பறுத்தலாகிய சிவப்பேறுன்றே ஆகலான், இப்பிறப்புறு பெரும்பயனெய்தும் எனவும், இம்மைச்செல்வம் பெருங்கீர்த்தி முதலியன. எனவே உலகத்தில் முன்னர் விரும்பவேண்டியது பெருங்கீர்த்தி அதனைக்குன்றச் செய்யாதது ஊக்கப்பாடு, அதனை வளர்ப்பது ஆக்கம், அதனையீட்டற்கு, இன்றியமையாத துணைக்கருவியாயுள்ளது ஆயுள் ஆகலான் இம்முறையுணர்த்த பன்னருங் கீர்த்தியூக்கப்பாடு மாக்கமுமாயுளும் வளருமெனவும், இவை வளர்ந்தோங்கப்பெறினும் அறிவின்றுயின் இவை நிலைபெறு, எங்ஙனமெனின் "அறிவுடையா ரெல்லாமுடையா ரறிவிலா, ரென்னுடைய ரேனுமிலர்" என்றூராகலின் கல்வியையும், அக்கல்வியை வலியுறுத்துவது கேள்வியுமாகலான் கல்வியுங் கேள்வியுமெனவும், இவையெல்லாம் வாய்க்கப்பெறினும் ஒழுக்கம்வருவது அரிதாகலான் ஒழுக்கம் வழுக்கிலான் எனவுங்கூறினர்.

இதனால் மறுமைப்பயன் சிவப்பேறு எனவும், இம்மை பயன்பெருங் கீர்த்தியும் அக்கீர்த்திக்கியன்ற ஒழுககமுமென்று அறியவேண்டுமென்க. (உகூ)

கன்னிதந்தைதாய்வேதியர்ச் செகுத்தோர்கள்ளுமாந்துநர்கள்ளுநர்குரவன், பன்னிமாணலம்விழைந்தவர்மற்றைத்தீர்வுகாணரும்பழிவினைவிளைத்தோர், றென்னராயினுமேகம்பநாதனென்னுமந்திரமொருமுறைகணிப்பிற்றுன்னுவெங்கொடும்பாதகமனைத்துந்துணைவினங்கவர்தம்மைவிட்டோடும்.

(இ - ள்.) கன்னி தந்தைதாய் வேதியர் செகுத்தோர் - பெண்ணையும் பிதாவையும் தாயையும் பிராமணரையும் கொன்றோரும், கள்ளுமாந்துநர் கள்ளுநர் குரவன் பன்னி மாணலம் விழைந்தவர் - கட்குடியரும் திருடுவோரும் ஆசிரியன் மனைவியை விழைந்தோரும், மற்றைத் தீர்வுகாணரும் பழிவினைவிளைத்தோர் வேறு கழுவாய் காண்பதற்கரிய பழித்தொழிலைச் செய்வோர், என்னராயினும் ஏகம்பநாதன என்னும் மந்திரம் ஒருமுறை கணிப்பில் - எவ்வகைப்பட்டோராயினும் ஏகம்பநாதனென்கின்ற மந்திரத்தை யொருமுறை தியானிப்பரேயாயின், துன்னுவெங்கொடும் பாதகம் அனைத்தும் - பொருந்திய மிக்க கொடியபாதகமெல்லாம், துணைவின் அங்கவர்தம்மை விட்டோடும் - விரைவாக அங்கவர்களை விட்டோடிவிடும். (எ - று.)

ஏகாம்பரநாதனென்னும் மந்திரத்தை ஒருமுறை உச்சரிப்பாராயின் பாதகங்களெல்லாம் அவரைவிட்டு விரைந்தோடிப்போ மென்க.

உருத்திரனொருவனே பிரமமென்றுகாட்டும் மந்திரம் இம்மந்திரமாமென இப்பொருளுணர்ந் துச்சரிப்போர் அரியராகலின் ஒருமுறைகணிப்பின் என்றாரென்க. ()

அறப்பயன்பொருளின்பம்வீடென்றுவனைத்துமோதுனர்க்களிக்குமிம்மனுவை, யிறப்பவந்துமுற்றிரும்பசிப்பிணியினீண்டியாருயிர்கவற்றும்வல்விடரின், மறப்பினுயினுங்கிளக்கவல்லுநரோமற்றெமக்குமிககினியவர்கண்டீர், சிறப்பவிம்முறைமனுவி தன்பெருமைதெரிந்துகூறினர்க்கின்பவீடளிப்பேம்.

(இ - ள்.) அறப்பயன் பொருள் இன்பம் வீடு என்ற அனைத்தும் இம்மனுவை ஓதுநர்க்கு அளிக்கும்-அறப்பயனும் பொருளும் இன்பமும் வீடுமென்று சொல்லப்படுமெல்லாவற்றையும் தியானிப்போருக்குதவு மிம்மந்திரத்தை, இறப்பவந்து முற்றிரும்ப சிப்பிணியின்-மிகவும்வந்து முற்றுகின்ற பெரும்பசியால், ஈண்டி ஆருயிர் கவற்றும் வல்லிடரின் - நெருங்கி அருமையாகிய உயிரை வருத்தும் வன்மையாகிய துயரத்தால், மறப்பினுயினும் கிளக்கவல்லுநரோ - மறதியினுயினும் சொல்லவல்லவரோ, எமக்கு மிக்கு இனியவர்-மெச்சு மிகவு மினிமையானவர், சிறப்ப இம்முறை மனு இதன்பெருமை - சிறப்புடைய இம்முறைமையுடைய மந்திரமாகிய இதன்மேன்மையை, தெரிந்து கூறினர்க்கு இன்பவீடு அளிப்பேம்-அறிந்து சொல்வோர்க்கு வீடு பேறாகிய இன்பத்தையுதவுவோம். எ-று.)

ஓதுகின்றவர்களுக்கு அறமுதலிய நான்கையும் கொடுக்கும் இம்மந்திரத்தை பசியினால் வருந்தும் அவ்விடரில் மறந்தேனும் கூறுவாராயின் எமக்கு மிகவும் இனியவராவர். இம்மந்திரத்தின் பெருமை யறிந்து உச்சரிப்போர்க்குப் பேரின்ப வீட்டைக் கொடுப்போம் என்க. என்று என்னிடைச்சொல். (௬௧)

என்றுமாவடி மூலத்தெழுந்தருளுமிலிங்கமேன்மையையெடுத்துரைத்தருள, வொன்றுமானந்தவுததியின் மூழ்கியொன்னலார்குடர்குழம்பியுள்வெதும்ப, வென்றகூர்ம்படைத்தாணுமாலயனுவிளம்புமூவரும்விரைத்தபூத்தொடையற், கொன்றைவார்சடைமுதல்வனுர்கமலக்கொழுமலர்ப்பதந்தொழுதுபோற்றிசைத்து.

(இ - ள்.) என்று மாவடி மூலத்தெழுந்தருளும் இலிங்க மேன்மையை எடுத்து உரைத்தருள - என்று மாவடியில் மூலத்தருளும் சிவலிங்கத்தின் சிறப்பை யெடுத்துச்சொல்ல, ஒன்றும் ஆனந்த உததியின் மூழ்கி - பொருந்துகின்ற ஆனந்தக்கடலின் மூழ்கி, ஒன்னலார் குடர் குழம்பி உள்வெதும்ப - பகைவர்குடல்குழம்பி யுள்ளம் வருந்த, வென்ற கூர்ம்படை தாணு மால் அயனும் விளம்புமூவரும்-வெற்றிகொண்ட கூர்மையான படையையுடைய வுருத்திரனும் மாயோனும் பிரமனுமாகிய சொல்லப்படுகின்ற மூவரும், விரைத்தபூந் தொடையல் கொன்றை வார்சடை முதல்வனுர் - வாசனையுள்ள கொன்றைமாலையணிந்த சடையையுடைய முதல்வனது, கமலம் கொழுமலர் பதம் தொழுது போற்றிசைத்து - கொழுமையான தாமரைமலர்போன்ற பாதத்தை வணங்கித் துதித்து. (எ - று.)

இறைவன், மாவடியின்கண் நீங்காது தோன்றுகின்ற சோதிலிங்கத்தின் பெருமையை யெடுத்துக்கூற அதனைக்கேட்ட பிரமன் முதலிய மூவரும் ஆனந்தக்கடலில் மூழ்கித் தோத்திரஞ்செய்து என்க. (௬௨)

காட்டிஞுடகங்குயின்றருளிறைவகம்பமேவியகருணையங்கடலே, மோட்டுநீர்ப்புவிவியத்தகுமினையமுதுநகர்ப்பெருந்தன்மையுந்தனிமா, வீட்டுமேன்மையுமெமக்குரைத்தருளாயென்றுவேண்டலுமீரந்துணரிதழித், தோட்டுமாலிகைச்சடை முடிக்குழகன்றொன்னகர்த்திறங்கேண்மினென்றியம்பும்.

(இ - ள்.) காட்டில் நாடகம் குயின்றருள் இறைவ - சுடுகாட்டில் நடஞ்செய்யுமிறைவனே, கம்பமேவிய கருணையங் கடலே - திருவேகம்பத்திலெழுந்தருளிய கருணையங்கடலே, மோட்டுநீர் புவி வியத்தகும் இனைய முது நகர்பெருந் தன்மையும் - கடல்சூழ்ந்த வுலகம் வியக்கத்தகும் இப்பழமையாகிய நகரத்தின் பெருந்தன்மையும், தனிமா ஈட்டு மேன்மையும் எமக்கு உரைத்தருளாய் என்று வேண்டலும் - ஒப்பற்ற பெரிய மாவிருக்கத்தின் பெருமையும் எமக்குச் சொல்லியருளவேண்டுமென்று வேண்டிக்கொள்ளலும், ஈரம் துணர் இதழி தோட்டு மாலிகை சடைமுடிகுழகன் - குளிர்ச்சிபொருந்திய கொத்தாகிய கொன்றை மலர்மாலையையணிந்த சடைமுடியையுடைய இறைவன், தொல்நகர் திறம் கேண்மின் என்று இயம்பும் - பழமையாகிய நகர்ச்சிறப்பைக் கேளுங்களென்று சொல்வான். (எ - று.)

(தோத்திரஞ் செய்த மூவரும்) இறைவனைநோக்கி இக்காஞ்சி நகரத்தின்பெருமையும், இம்மாமரத்தின் பெருமையும் எங்களுக்குரைக்க வேண்டுமென்று வேண்டவும் வேண்டியவாறே முன்னர் நகரத்தின் பெருமையை இறைவன் கூறத்தொடங்கினனென்க.

யாவரும் இறிதியுற்ற அம்மயானத்தில் தன்னந்தனியனாய் ஆனந்த நடம்புரியும் இறைவன் யாவருங் காணமாவடியில் தோன்றியருளியது பெருங்கருணையானாகலான் காட்டினுடகங் குயின்றருளிறைவகம்பமேவிய கருணையங்கடலே என்றார். (௬௩)

ஈட்டுமேன்மை - ஒருபொருட்பன்மொழி.

இக்காஞ்சியில் முத்தியைக்கூடும் வாழ்க்கையையடையவர் நிறை[illegible] தேவபுரமெனவும், யாவரானும் போர்புரிவதற்குக் கூடாமையினால் [illegible]வும், அயோத்தியென்று சொல்லப்படும் நகரம் அரசர் வாழும் இடமே[illegible] முத்தர்கள் வாழுமிடமன்றெனவுங் கூறியதென்க.

வீடுபேற்றினர் தேவரென்றுரைப்ப விழையும் இந்நகரம் என்றதனால் [illegible] தத்தன்மையை யடைந்த சிவ ஞானிகள் சிவத்தன்மையினின்று மாறாதிருக்[illegible] ரத்தை விரும்புவார்களெனவும், வீடுகூடும் வாழ்க்கையர் நிறைதலில் என்[illegible] சிவன் முசதிந்நிசையை அடையவிரும்புவோர் நிறைந்திருத்தலினாலெனவும், இவ் வாறு சிவன் முத்தியை யடைந்தவராலும் விரும்பப்பட்டிருத்தலால் தேவபுரமெனப் படும் எனவும் கூறினர். அயோத்தி போரினால் வெற்றிக்கொள்ளப்படாத நகரம். (௬எ)

சுவர்க்கமெய்தினர்தேவரென்றோதுஞ்சுருதியாலதுநாகநாடன்று
நவிற்றுருத்திரலோகமேசுவர்க்கமாகுமாதலினலங்கெழுஞ்சோதி
நிவக்குமென்றிடுமயோத்திநீள்பிரமலோகநீடொளித்தேவமாபுரமும
புவிக்குண்மேதகுகாஞ்சியேயன்றிப்புவனமூன்றினும்வேறிலேகண்டீர்.

(இ - ள்.) சுவர்க்கம் எய்தினர் தேவர் என்று ஓதும் சுருதியால் - சுவர்க்கலோக மடைந்தவர் தேவர்களென்று சொல்லப்படுஞ்சுருதிமொழியால், அது நாகநாடு அன்று நவிற்று உருத்திரலோகமே சுவர்க்கமாகும்-அதுநாகநாடல்லவாகும் சொல்லப்படுகின்ற உருத்திரலோகமே சுவர்க்கத்தலமாம், ஆதலின் நலங்கெழும்சோதி நிவக்கும் என்றிடும் அயோத்தி - ஆகையால் நன்மைமிக்க சோதியோங்கு மெனப்படு மயோத்திநகரமும், நீள்பிரமலோகம் நீடு ஒளி தேவமாபுரமும் - நீண்டபிரமலோகமும் மிக்க ஒளி யுள்ள தேவமாபுரமும், புவிக்குள்மேதகு காஞ்சியேயன்றி புவனமூன்றினும் வேறில்லை - பூமியிலமேன்மையமைந்த காஞ்சிநகரமே யல்லது சுவர்க்கமத்திய பாதலமென்னு மூன்றுலகத்திலும் வேறொன்றில்லை. (எ - று.)

வேதத்தில், சுவர்க்கலோகத்தை யடைந்தவர் தேவரென்று கூறுவதனால் அது தேவருலகன்று சிவலோகமென்பதுபோல அயோத்தி, பிரமலோகம், தேவமாபுரம் என்பன காஞ்சியேயன்றி மூன்றுலகத்தினும் வேறில்லை என்றதென்க.

இதனால், சுவர்க்கம் என்பது உருத்திரலோகமெனப் பொருள்கொள்ளல்போல் அயோத்திமுதலிய மூன்று நகரத்தையும் காஞ்சியென்றே கொள்ளவேண்டு மென்ற தென்க. (௬அ)

இத்திருப்பெருங்காஞ்சியினெம்மை மறலிக்கஞ்சுநரிகபரம்விழைந் தோர், நித்தமன்பொடுவழிபடவேட்பழிச்ச நிறைந்தபேரருட்கருணைபூத்து றைகேம், மெய்த்தமாமறைமுழுதுமிவ்வாறு விளம்புமாதலின்மற்றெமக் கினிய, வுத்தமப்பதியிதுவெனத் தெளிமினேங்குமாந்தருப்பெருமையுமு ரைப்பாம்.

(இ - ள்.) மறலிக்கு அஞ்சுநர் இகபரம் விழைந்தோர் -யமவாதைக்கஞ்சுவோரும் இம்மை மறுமையின்பம் விரும்பினோரும், எம்மை நித்தம் அன்பொடு வழிபடவேட்பழிச்ச இத்திருப்பெருங்காஞ்சியில் நிறைந்த பேரருட்கருணைபூத்து உறைகேம் - எம்மையென் றும் அன்பாய் வழிபாடுசெய்துவணங்க இப்பெருமைவாய்ந்த காஞ்சிநகரத்தில் நிறைந்த பெருங்கருணை மிகுந்து வசிப்போம், மெய்த்தமாமறைமுழுதும் இவ்வாறு விளம்பும் -

[illegible] - மெய்மை கூறும் விரகமுடைய மாமறைகளெல்லாம் இவ்வகை கூறுமா கையால், எமக்கு இனிய உத்தமப்பதி இது எனதெளியின் - எமக்கினிதாகிய சிறந்த தலமிதுவென்று தேறுங்கள், ஓங்குமாந்தரு பெருமையும் உரைப்பாம் - பண்களோ ங்கிய மாவிருக்ஷத்தின் பெருமையையும் சொலவாம். (எ - று)

எமவாதனைக் கஞ்சுவோரும் இம்மை மறுமை யின்பங்களை விரும்புவோரும் எம்மைவழிபட இக்காஞ்சியில் யாம் வீற்றிருக்கின்றோம். வேதங்களும இவ்வாறே கூறும். ஆகையால் எமக்கினிய உத்தமமாகிய பதி இக்காஞ்சியென்றே தெளியுங்கள். இனி மாவிருக்கத்தின் பெருமையைக் கூறுவாமென்றதென்க.

துன்பத்தைப்போக்கவும், இன்பத்தையடையவும் இறைவன் வழிபாடுடையார்க்கே எளிதிற் கூடுமென்பார மறலிகக்குஞ்சுநரிகபரம் விழைந்தோர் வழிபடவே டீடு ந்த என்றார். (௯௯)

மீதுமன்னியமூலமுங்கிழக்குநோக்குசாகையுமாய்விரைகமழும்
பாதவந்தனையுணர்ந்தவன்வீடுபற்றுமாங்கதுபலகனிபடைத்துச்
சீதவார்புனலொழுக்கறுக்கம்பைத்திருநதிக்கரைமருங்கொலிவேதச
சூதமாமரமெனத்திகழ்ந்தொளிருந்தொல்லைவையகம்பெருமபயன்படை[illegible]

((இ - ள்.) மீதுமன்னிய மூலமுங்கிழக்கு நோக்கு சாகையுமாய்-மேல்நிலை [illegible] கிழங்கும் கிழக்கே நோக்கிய கிளைகளுமாய், விரைகமழும் பாதவந்தனை உணர்ந்தவன் வீடுபற்றும்-வாசனைவீசும் இந்தமாவிருக்கத்தை யறிந்தவன் முத்தியையடைவன் ஆங்கு அது பலகனிபடைத்து - அவ்விடத்தில் அது பலபழங்களைப் படைத்து, சீதவார்புனல ஒழுக்கறாத கம்பைத் திருநதிக்கரை மருங்கு-குளிர்ச்சியையுடைய நீண்ட புனலொழுக்க நீங்காத கம்பாநதிக்கரையின் பக்கத்தில், தொல்லை வையகம் பெரும்பயன் படைப்ப - அநாதியாயுள்ள இவ்வுலகம்பெரியபயனையடைய, ஒலி வேத சூதமாமரம் எனத்திகழ்ந் தொளிரும் - ஒலியினையுடைய வேதம் மாமரமென்று மிகவும் விளங்கும். (எ - று)

இந்தமாவிருக்கத்தை மேலே மூலமும் கீழ்நோக்கிய சாகைகளுமாக யுணர்ந்தவன் முத்தியையடைவான். முத்தியைகொடுக்கும் அவ்வேதம் கம்பாநதிக்கரையில உலகெலலாம் பெரிய யோட்சத்தையடைய மாமரமெனவிளங்கும் என்றதென்க.

இதனால் தன்னுடையதேகத்தை வடதருரூபமாகவறிந்த ஒருயோகி எப்படி முத்தியைக்கூடுவானோ அதுபோலும் மாவிருக்கத்தின் பெருமையை யுலகெல்லாம் அறியின் முத்தியையடையுமென்று குறித்ததென்க. (௱)

ஏழிரட்டியகல்வியுமதன்மேன்மல்லிகைக்கொடியெனப்படர்ந்தமரும்
பாழிவிச்சைகட்கிறைவியாங்காமக்கண்ணியத்தகுபசுங்கொடிக்கினியா
ளூழியீற்றினுமுலபபருந்தகைசான்றோங்குமாவினுக்குரிமையம்யாமே
யாழியேந்தியநாரணனவிரிஞ்சனாமெனப்படுமன்புடைப்புதல்வீர்.

(இ - ள்.) ஏழிரட்டிய கல்வியும் - பதினான்கு வித்தைகளும், அதன்மேல் மல்லிகைக்கொடி எனபடர்ந்து அமரும் - அவ்வேத மாமரத்தின்மேல் மல்லிகைக்கொடியாக வுருவங்கொண்டுபடர்ந்து விளங்கும், பாழிவிச்சைகட்கு இறைவியாம் காமக்கண்ணி-பெருமையமைந்த வித்தைகட் கிறைவியாகிய காமாக்ஷி, அத்தகும் பசுங்கொடிக்கு இனியாள்-அத்தன்மையாகிய பசுங்கொடிக் கினியவளாயிருப்பவள்; ஊழி ஈற்றினும் உலப்டரும் தகை சான்றோங்கும் மாவினுக்கு உரிமையம் யாமே-ஊழி முடிவினும் கெடு

னேபணைத்து, யதர்த்துவீங்கி முகிழ்த்த மென்முலை அம்பிகைதன்னை [illegible] முகி
ழ்ந்து - மதர்த்துத் நடித்தரும்பிய மென்மையாகிய முலையையுடைய [illegible]
பார்த்து மகிழ்ச்சியடைந்து, மைந்தர்கள் கேண்மின் என்று அது சா[illegible]
னேகேளுங்கோளென்று அதைச்சொல்லத் தொடங்கினன. (எ - று)

இறைவனே, கம்பாநதியொன் றிவ்விடத்திலுள்ளதென்று அருள்[illegible]
காரணம் எங்களுக்குத்தோன்றவில்லை என்றுகூற, இறைவன் இன்ற[illegible]
மகிழ்ந்துமைந்தர்காள் கேளுங்கோளென்று கூறத்தொடங்கினனென்க.

வடிவமெட்டுநமக்கமைந்தனமறையுரைக்குமவற்றுளோர்
வடிவமாம்புனலுலகெலாமுறுதூய்மைசெய்யும்வனப்பது
வடிவமுற்றவருயிர்தளிர்ப்பவழங்குமற்றிதுமாநதி
வடிவுகொண்டிவணொழுகுகின்றதுமன்னுயிர்த்தொகையுய்யவே.

(இ - ள்.) வடிவம் எட்டும் நமக்கு அமைந்தன மறை உரைக்கும் - எட்டுருவம் நமக்குப்பொருந்திகிடப்பன என்று வேதங்கள் கூறும், அவற்றுள் ஓர்வடிவமாய புனல உலகு எல்லாம் உறுதூய்மைசெய்யும் வனப்பது - அவற்றுளொரு வடிவமாகிய நீர் உலகமுழுதும்பொருந்திய தூய்மையைச்செய்யும் அழகுடையது, வடிவமுற்றவர் உயிர் தளிர்ப்ப - வடிவமடைந்தவருயிர் தழைக்க, வழங்கும்-நடைபெற்றியலும், இது மாநதி வடிவுகொண்டு - இதுபெரிய ஆற்றினுருவமெடுத்து, மன் உயிர் தொகை உய்ய - நிலைபேருடைய ஆன்மவருக்கம் பிழைக்க, இவண் ஒழுகுகின்றது - இங்கொழுகா நிற்கின்றது. (எ - று.)

வேதம், நமக்கு எட்டுருவம் அமைந்துகிடப்பனவென்று கூறும். அவற்றுளோர வடிவம் நீர், அந்நீர் உலகைச்சுத்தமாக்கும் அழகினையுடையது, (அன்றியும்) வடிவத்தோடுகூடியிருக்கின்ற மக்களுயிரைவளர்க்கும் நடையினையுடையது, இந்நீர் உயிரகளெல்லாம் பிழைக்க ஓர் நதி வடிவமாக இங்கு செல்கின்றதென்க.

எண்வடிவங்களன்றி உலகும் உயிரும் இன்றாகலானும் அவ்வுலகுயிர்களை இயக்குவான் இறைவனன்றி வேறின்றாகலானும் இறைவனை அட்டமூர்த்தி என்று வேதங்கள் கூறுவதென்றார். நீரே உலகைப்புனித மாக்குவதெனவும் உயிரைத்தளிர்க்கச் செய்வதெனவும், கூறுவதை "நீரின்றமையாதுலகு" எனவும், துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாயதூஉம் எனவும் திருக்குறளிற்கூறுதல் காண்க. எண்வடிவாய்நின்று உயிர்களுக்குபகரிக்கின்றனென்றதை "எட்டுருவிரவியென்னை யாண்டவன்" என்ற திருவாக்கானுணர்க. (சசு)

இந்நதிப்புனலெம்மைநேர்வரயார்விழிக்குமகப்படா
துன்னருஞ்சிவயோகசிந்தையுள்யாமுறைந்திடுமாறுபோல்
வன்னிலத்தினகத்துவார்ந்துவழங்குகின்றதுகாண்மினோ
கன்னியாறிதுகம்பையென்றொருகாரணப்பெயர்பெற்றதே.

(இ - ள்.) இந்நதிப்புனல் எம்மை நேர்வர யார் விழிக்கும் அகப்படாது - இவ்வாற்று நீர் எம்மைப்போலவேயாவர் கண்களுக்கும் அகப்படாது, உன்னருஞ் சிவயோகசிந்தையுள் - நினைத்தற்கரிய சிவயோகமுடைய மனத்தினிடத்து, யாமுறைந்திடுமாறுபோல் - யாம்வசிக்கும் வண்ணம்போல, வன் நிலத்தில் அகத்துவார்ந்து வழங்குகின்றது - வலிய நிலத்தினிடத்து நீண்டுசெல்லுகின்றது, கன்னியாறு இது கம்பை

யென்று ஒரு காரணப் பெயர்பெற்றது - கன்னியாறு இது கம்பையென்று சொல்ல ப்படுகின்ற ஒரு காரணப்பெயரையடைந்தது, காண்மின் - பாருங்கள்.

யாவர்கண்ணுக்குந் தோன்றாது சிவபோகியருள்ளந்து மறைந்துவசிக்கும் எம்மை ப்போல இந்நதியும் பூமியில் கரந்து செல்லுகின்றது. இந்த அழிவில்லாத நதி கம்பை யென்று ஓர் காரணப்பெயர் பெற்றுள்ளது. (சஎ)

வேறு.

பன்னுபாவென்றறூய்மைபருகுதல்காப்புங்கூறும்
கன்னிவான்கங்கையாதிகம்மெனும்புனல்கடம்மாற்
றுன்னிமூழ்குநர்வெம்பாவத்தொகுதிமெய்யழுக்குந்தீரத்
தன்னிடைமூழுகித்தூய்மைதாங்கலாற்கம்பையென்ப.

(இ - ள்.) பன்னுபாவென்றல் - சொல்லுகின்ற பாவென்று சொல்லுதல், தூய்மை பருகுதல் காப்பும் கூறும் - பரிசுத்தம் உண்ணுதல் காவலுமாகக் கொள்ளப்படும், கன்னிவான் கங்கையாதி கம் எனும் புனல்கள் தம்பால் - கன்னியாகிய உயர்ந்த கங்கை நதிமுதலிய கம்மென்னும் நீரினிடத்து, துன்னி மூழ்குநர் வெம்பாவத்தொகுதி மெய் அழுக்குந்தீர - பொருந்தியாடுவோர் கொடியபாவக் கூட்டமும் உடம்பினழுக்கு நீங்க, தன்னிடைமூழ்கி தூய்மை தாங்கலால் கம்பை என்ப - தன்பாலாடிப் பரிசுத்தமமைத லால் கம்பை யென்று சொல்லுவர். (எ - று.)

கம்பா என்னும் பதத்தில் பா என்னுஞ் சொற்குப்பொருள் பரிசுத்தம், உண்ணு தல், காத்தலென்பன. கம் என்னுஞ் சொற்குப்பொருள் சலம் (ஆகவே) நீர்மயமாகிய கங்கைமுதலிய தீர்த்தங்களெல்லாம் தம்மிடத்தில் மூழ்குவோர்க்கு பாவத்தைப்போக் கித் தூய்மையைச் செய்தல்போல அத்தீர்த்தங்கள் தம்மைப் புனிதமாக்கிக்கொள்வ தற்கு இந்நதியில் மூழ்குகின்றதெனக. எனவே எல்லாரையும் புனிதமாக்கும் கங்கை முதலிய தீர்த்தங்கள் கம்பாநதியில்மூழ்கிப் புனிதமாகுமென்பதாம். (சஅ)

கம்மெனுஞ்சிரமேற்றீண்டிற்றூய்மைசேர்கவினுலுண்டோர்
கம்மெனுமாவிதம்மைக்காத்தலான்மூழ்கினோரைக்
கம்மெனும்பெருவீட்டின்பநுகர்விக்குங்காட்சியானுங்
கன்மநோயறுக்குமிந்தத்தடநதிகம்பையாமால்.

(இ - ள்.) கம் எனும் சிரமேல் தீண்டில் தூய்மைசேர் கவினுல - கம்மென்று சொல்லப்படுந் தலைமேல் தீண்டினால் பரிசுத்தஞ் செய்யுமழகாலும், உண்டோர்கம் மெனும் ஆவி தம்மை காத்தலால் - உண்டவருடைய கம்மென்னும் உயிரைக்காத்த லாலும், மூழ்கினோரை கம்மெனும் பெருவீட்டின்பம் நுகர்விக்குங் காட்சியானும் - தன்பால் ஆடினோரைக் கம்மென்கின்றபெரிய முத்திசுகத்தையனுபவிக்கச் செய்யுந் தோற்றத்தாலும், கன்மநோயறுக்கும் இந்ததடநதி கம்பையாம் - கன்மநோயை யொ ழிக்குமிப்பெரியநதி கம்பாநதி யென்று சொல்லப்படும். (எ - று.)

கம் என்பது தலைக்கோர் பெயராகையான் தலையில் புரோக்ஷித்துக்கொண்டால் பரிசுத்தம் செய்யுமெனவும், கம் என்பது உயிருக்கோர் பெயராகையான் உண்டவுயிர் களைக் காக்குமெனவும், கம் என்பது முத்திக்கோர் பெயராகையான் மூழ்கினவர்களை மோக்ஷ சுகத்தை அனுபவிக்கச்செய்யு மெனவும், (இக்காரணங்களால்) இந்நதி கம் பாநதி என்று பெயர் பெறுமென்றதெனக.

இதனுலகம் என்பது தலை, உயிர் மோட்சம் எனப்பொருள்படலால் இக்கம்பா நதி தீர்த்தத்தை புரோக்ஷித்துக் கொண்டவர்களுக்குத் தூய்மையையும், உண்டவர்களுக்குப் பாதுகாப்பையும், மூழ்கினவர்களுக்கு மோக்ஷசுகத்தையும் செய்வதெனக் கொள்க. (சகூ)

வேறு.

கங்கைமாநதியமுனைவாணிமுதற்கவின்பெறுநதியெலாம்
பொங்குவெண்டிரையெற்றுகம்பைநறும்புனற்கிணையெய்துரு
மங்கலந்தருகம்பைமென்புனறோய்ந்தகாற்றுவழங்கிடத்
தங்கண்மேவியபுன்மரங்களுமின்பமுத்தியையண்ணுமால்.

(இ - ள்) கங்கைமாநதி யமுனை வாணிமுதல் கவின்பெறுநதி எல்லாம் - கங்கை யமுனை சரஸ்வதி முதலாகிய அழகமைந்த ஆறுகளெல்லாம், பொங்கு வெண்திரை எற்று கம்பை நறும் புனற்கு இணை எய்துரு - மிக்க வெண்மையாகிய அலைகளாவீசுகின்ற கம்பையாகிய நல்லநதிக்கொப்பாகாது, மங்கலம் தரு கம்பை மென் புனல்தோய்ந்த காற்றுவழங்கு இடத்து - நன்மையைத் தருகின்ற கம்பையாகிய மெல்லிய நீரில் தோய்ந்தகாற்று வீசுமிடமாகிய, அங்கண்மேவிய புன் மரங்களும் இனபமுத்தியை அண்ணும் - அங்கே தோன்றிய புல்லும் மரமும் இன்பந்தரு முத்தியையடையும்.

கங்கைமுதலிய சிறந்த தீர்த்தங்களெல்லாம் கம்பைத் தீர்த்தற்கு ஒப்பாகாது. அக்கம்பையில் படிந்துவருகின்ற காற்றனது தவழுமிடத்திற்பொருந்திய புல்மரங்களும் பேரின்ப முத்தியை யடையுமென்றதென்க.

கங்கைமுதலிய தீர்த்தங்களினுஞ் சிறந்தது இக்கம்பை என்பார் கம்பை மென்புனல் தோய்ந்த காற்றுவழங்கிடத்து, மேவிய புன்மரங்களு மின்பமுத்தியை யண்ணுமென்றார். (௫௰)

யோகநன்னிலைபிற்றவத்தின்வழீஇயினருயர்கம்பையின்
மோகமில்கயலாதியாகியுயிர்த்துமுத்தியினண்ணுவார்
போகுமக்கரையிற்கிளைத்தபுதன்மரங்களுருத்திர
லோகநின்றுவழூஉமுருத்திராகுமுண்மையுணர்ந்திடீர்.

(இ - ள்.) யோக நல்நிலையில் தவத்தில் வழுவினர்-யோகமாகிய நல்லநிலையினும் தவத்தினும் வழுவினவர், உயர்கம்பையின் மோகமில் கயலாதியாகி உயிர்த்து முத்தியில் நண்ணுவார் - உயர்வாகிய கம்பாநதியில் இச்சைநீங்கிய கயல்முதலியவாகித் தோன்றி மோக்ஷத்தையடைவார், போகும் அக்கரையில் கிளைந்த புதன் மரங்கள்-யாவருங்கடக்கு மக்கரையில் தோன்றிய புதர்களும் மரங்களும், உருத்திரலோக நின்றுவழூஉம் உருத்திராகும் - உருத்திரலோகத்திலிருந்து தவறும் உருத்திரர்களாகும், உணமை உணர்ந்திடீர் - இந்த மெய்யை அறியுங்கள். (எ-று)

கம்பைநதியிலுள்ள கயல் முதலிய நீர்வாழுயிர்களெல்லாம், யோகநிலையினின்றும் தவநிலையினின்றும் வழுவினர்களாகிய யோகிகளும் தவசிகளும் அந்நிலைகூட அவ்வுருக் கொண்டு வாழ்கின்றனெனவும், அக்கம்பாநதிக்கரையில் முளைத்திருக்கும் புல்முதலிய அசரவுயிர்களெல்லாம் உருத்திர லோகத்தினின்றுந் தவறிய உருத்திர கணங்களெனவுங் கூறியதென்க.

மோகமில்கயலாதி என்றதனால் உருவத்தால் வேறுபட்டவரே யன்றி அறிவால் வேறுபட்டவரன்றென்று உணர்த்தியதாகும். ஞானத்துக்குக் கருவியாகலின் யோக நன்னிலையென்றார். (௬௧)

யாண்டிறப்பவர்கட்குமிப்புனலிறுதிவேலையினுச்சியிற்
றீண்டுமேலவர்முத்தியெய்துவர்தீஞ்சுவையமிழ்துண்பவ
ரேண்டகுந்திறலமரராகுவரினையபூம்புனலுண்பவ
ராண்டநம்முடனுவராதலினமிழ்தின்மிக்கதுகம்பைநீர்.

(இ - ள்.) யாண்டு இறப்பவர்கட்கும் இப்புனல் இறுதிவேலையில் உச்சியில் தீண்டுமேல் - அவ்விடத்தே யிறப்பவர்களுக்கும் இத்தீர்த்தநீர் உயிர்விடுந் தருணத்தில் சிரசிற்படுமானால், அவர் முத்தி எய்துவர் - அவர் மோக்ஷமடைவார், தீஞ்சுவை அமிழ்து உண்பவர் - இனிமையாகிய சுவையினையுடைய அமுதுடனுண்பவர்கள், ஏண் தகும் திறல் அமரர் ஆகுவர் - எண்ணத்தக்க திறலையுடைய தேவராவர், இனைய பூம்புனல் உண்பவர் - இவ்வழகிய நீரையுண்பவர், ஆண்ட நம்முடனுவர் - ஆளுடைய பெருமானாகிய நம்மை யடையப்பெறுவர், ஆதலின் அமிழ்தின்மிக்கது கம்பைநீர் - ஆகையினாலே அமுதத்தினுஞ் சிறந்தது கம்பாதீர்த்தம். (எ-று.)

இக்கம்பாதீர்த்தம் தலையில் படுமானால் முத்தியையடைவர். அக்கம்பைக்கரையில் அன்னம் உண்பவர் அவ்வன்னத்தை அந்நீரோடு கலந்துண்பார்களானால் தேவராவர். அந்நீரொன்றே அருந்துவாரானால் சாயுச்சியத்தையடைவர். ஆகையினால் அமிர்தத்தினுஞ் சிறந்ததென்று கூறியதென்க.

அன்றியும் - இப்புனல் தீண்டுமேல் முத்தியை எய்துவர் என்றதனால் - இனி இவ்வுலகில் பிறந்திறந்துழலும் துன்பத்தை யடையாரெனவும், தீஞ்சுவை யமிழ்துண்பவர் திறலமரராகுவர் என்றதனால்-சிவசாரூபத்தையடைவாரெனவுங் கொள்ளலுமாமென்க. எனவே கம்பைநீரை பரிசிக்கப்பெற்றோரும் உண்ணப்பெற்றோரும் சாலோகமுதலிய முத்திபதங்களைப்பெற்று இறுதியில் சிவசாயுச்சியத்தை யடைவரென்பதாம். ஆகவே அமிழ்தினமிக்கது கம்பைநீர் என்றார். எனவே - அமிர்தமானது நரைதிரைமூப்பென்கிற மூன்றையும் போக்கிச் சிற்றின்பத்தைக் கொடுக்குமேயன்றி பிறவித் துன்பத்தையொழித்து சிவ லோகவாழ்வைத் தந்து சிவனடியைக்கூட்டிப் பேரின்பந்தருவதன்றாகலான் கம்பை நீரை அமிழ்தினுஞ் சிறந்ததென்றாரெனக்கொள்க யாண்டிறப்பவர்கட்குமிப்புன லிறுதிவேலையினுச்சியிற் றீண்டுமேல் என்றதை - இக்காஞ்சியேயன்றி மற்றெந்தவிடத்திலிறப்பவர்களுக்கும் இக்கம்பைநீர் படுமானால் எனப் பொருள்கொள்ளலுமொன்று.

அமிழ்து சாவாமருந்து, அது உடலைச்சாவாமை நிலைபெறுத்தல்போல உணவுமதனையுண்டாரை வுடம்பினிலைபெறுத்துகையாலமிழ்தென்றார். இப்பெற்றி நோக்கியே "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாய தூஉமழை" என்றதூஉமென்க. (௬௨)

காட்சியெய்தருமேன்மைசான்றுயர்கம்பைவார்புனலாற்றினு
லாட்சியெய்தியபதியெவற்றினுமதிகமாயதுகாஞ்சியூர்
மீட்சியில்புகழிவ்விரண்டினும்வேறெமக்குளவேணவா
மாட்சிபெற்றுறுகங்கைகாசியின்வைத்திலேமிதுமெய்மையே.

(இ - ள்.) காட்சி எய்தரு மேன்மை சான்று உயர்கம்பை வார்புனல் ஆற்றினுல்- காட்சியடைதற்கரிய மேன்மை நிரம்பியோங்கிய கம்பையாகிய நீண்டநீரையுடைய நதியினுல், ஆட்சி எய்திய பதி எவற்றினும் அதிகமாயது காஞ்சியூர்-ஆட்சியடைந்த எல்லாத்தலங்களினும் மேன்மைதங்கியது காஞ்சிநகரம், மீட்சியில் புகழ் இவ்விரண்டினும் எமக்கு வேணவா உள-மீள்வில்லாத புகழினையுடைய இவ்விரண்டிலும் எமக்கு அளவில்லாத ஆசையுள்ளன, வேறு மாட்சிபெற்றுறு கங்கைகாசியின்வைத்திலேம்-இவை நீங்கலாகவேறு பெருமைபெற்ற கங்காநதியினும் காசிப்பதியினும் வைக்கமாட்டோம், இது மெய்மையே - இது வுண்மையேயாம். (எ-று)

இக்காஞ்சிமா நகரமானது எல்லாத் தலங்களினும் அதிகமானதென்றற்குக் காரணம் கம்பாநதியிணு லாளப்பட்டதாலெனவும், இறைவனுக்குக் காஞ்சி கம்பை என்னும இவ்விரண்டிணுமுள்ள வாசை, காசி கங்கை என்னுமிரண்டினும் கிடையாதெனவும் இதுசத்திய மெனவுங் கூறியதென்க.

காசி கங்கைநதியாற் சிறப்பினும் கம்பைநதியாற் சூழப்பட்ட காஞ்சி சிறத்தலின் மாட்சிபெற்றுறு கங்கை காசியில் வைத்திலேமென்றூர், (ருங)

வேறு.

புவனசாரமும்மூர்த்திவாசம்விண்டுபுரங்காஞ்சி
தவமார்கலிசித்திலயசித்துசகலசித்திதபோமயவூர்
கவினூர் பிரமபுரமாதிபீடங்கன்னிகாப்புவினைப்
பவநோயறுக்குஞ்சிவபுரமாம்பகர்பன்னிரண்டுதிருப்பெயர்த்தால்.

(இ - ள்.) புவனசாரம் மும்மூர்த்திவாசம் விண்டுபுரம் காஞ்சி - புவனசாரமென்றும் திரிமூர்த்தி வாசமென்றும் விஷ்ணுபுரமென்றும் காஞ்சிப்புரமென்றும், தவம் ஆர் கலிசித்து இலயசித்து சகலசித்தி - தவம்நிரம்பிய கலிசித்தென்றும் இலயசித்தென்றும் சகலசித்திபுரமென்றும், தபோமயவூர் கவினூர் பிரமபுரம் ஆதிபீடம் கன்னிகாப்பு - தபோமயபுரமென்றும் அழகமைந்த பிரமபுரமென்றும் ஆதிபீடமென்றும் கன்னிகாப்பென்றும், வினைப்பவநோய் அறுக்கும் சிவபுரமாம் - பிறவி நோயறுக்கும் சிவபுரமென்றுமாகிய, பன்னிரண்டு திருப்பெயர்த்து - பன்னிரண்டு திருப்பெயரையுடையது. (எ-று.)

இக்காஞ்சி நகரம் புவனசாரமுதல் சிவபுரமீருயுள்ள பன்னிரண்டு திருப்பெயரையுடையதென்க. (ருச)

புவனமூன்றன்பயனுகிப்பொலிவுபெறலாற்புகழ்தகைய
புவனசாரமெனத்திகழும்புனல்காலுயிர்தீயிருசுடர்வான்
புவனவடிவாநந்தமைநீர்மும்மூர்த்திகளும்பூசித்துப்
புவனமேத்தவைகலின்மும்மூர்த்திவாசபுரமால்.

(இ - ள்.) புவனமூன்றன் பயனுகி பொலிவு பெறலால் - மூவுலகத்தின் பயனுகி அழகுபெறலால், புகழ்தகைய புவனசாரம் என திகழும் - புகழ்மேம்பட்ட புவனசாரக்ஷேத்திரமென்று விளங்கும், புனல் கால் உயிர் தீ இருசுடர் வான் புவனம்வடிவால் நந்தமை நீர் மும்மூர்த்திகளும்பூசித்து - நீரும்காற்றும் ஆத்மாவும் நெருப்பும் சூரியனும் சந்திரனும் ஆகாயமும் மண்ணுமாகிய எட்டுவடிவினையுடைய நம்மை திரிமூர்த்திகளாகிய நீங்களருச்சித்து, புவனம் ஏத்தவைகலின் மும்மூர்த்திவாசபுரமாம் - உலகமேத்தத் தங்குதலின் திரிமூர்த்தி வாசபுரமாகும். (எ-று.)

மூவுலகின் பயனாகி விளங்குதலால் புவனசாரமெனவும், அட்டமூர்த்தமாயிருக்கின்ற இறைவனைத் திருமூர்த்திகளும் பூசித்து அவ்விடத்திலேயே வசித்திருத்தலால் மும்மூர்த்திவாசமெனவுங் கூறியதென்க.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் - புலனாயமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்" என்றாராகலின் புனல்காலுயிர் தீயிருசுடர்வான், புவனவடிவாகந் தம்மை என்றார்.

இச்செய்யுள் முதல் நான்கு செய்யுளும் பன்னிருதிருப்பெயர்க்குக் காரணங் கூறுவதாகும். (௩௪)

பரவுமேகவாகனமாங்கற்பத்தெம்மைப்பங்கயக்கண்
வரதராஜன்வழிபடலால்விண்டுபுரமாம்வளர்காஞ்சி
புரமாயதுமுன்வகுத்துரைத்தாம்பொல்லாக்கலிநோய்கலியுகத்தும்
விரவாவண்ணநல்குதலால்விளங்குங்கலிசித்தெனப்படுமால்.

(இ - ள்.) பரவும் மேகவாகனமாம் கற்பத்து (திருமால் மேகமாகி எம்மைச்சுமந்து) துதிக்கும் மேகவாகன கற்பத்தில், எம்மை பங்கயக்கண் வரதராசன் வழிபடலால் விண்டுபுரமாம் - எம்மைத் தாமரைக்கண்ணனாகிய வரதராசன் வழிபாடு செய்ததால் விண்டுபுரமெனப்படும், வளர்காஞ்சி புரமாயது முன்வகுத்து உரைத்தாம் - ஓங்கிய காஞ்சிபுரமான சிறப்பை முன்னே வகுத்துக கூறினோம், பொல்லாத கலிநோய்கலியுகத்தும் விரவாவண்ணம் நல்குதலால் - மிகக்கொடியநோய்வருமை கலிகாலத்தும் இந்நகரத் துயிர்களைப் பொருந்தாதவகை விரந்தமையால் விளங்கும் கலிசித்து எனப்படும் - பிரகாசிக்கும் கலிசித்தென்று சொல்லப்படும். ( )

மேகவாகன கற்பத்தில் திருமால் பூசித்ததால் விண்டுபுரமெனவும், கலிகாலத்தும் கலியின்கொடுமை பொருந்தாமையினால் கலிசித்தெனவும், காஞ்சியென்னுஞ்சொற்பொருளை முன்னர்க்கூறியிருக்கின்ற தெனவுங் கூறியதென்க.

திருமால் மேகமாகிப் பூசித்ததைப் புண்ணியகோடீசப் படலத்திற்காண்க. (௩௫)

கடைநாளெமக்கீதாடரங்காங்கவினாலிலயசித்தாகுந்
தடைதீர்சகலசித்திகளுந்தரலாற்சகலசித்திபுரம்
படையாவாய்மைத்தவமியற்றிப்பனிமால்வரையின்வருமன்ன
நடையாள்வழுத்தும்பரம்பிரமமயமாநகரந்தபோமயமாம்,

(இ - ள்,) கடைநாள் எமக்கு ஈது ஆடரங்காம் கவினால் - சர்வசங்காரகாலத்து எமக்கு இந்நகரம் நடனஞ்செய்யும் சபையாகும் அழகால், இலயசித்தாகும் - இலயசித்தென்று பேர்பெறும், தடைதீர் சகலசித்திகளும் தரலால் சகலசித்திபுரம் - மலத்தடைநீக்கும் சகலசித்திகளையும் கொடுத்தலால் சகலசித்திபுரமெனப்படும், பனிமால் வரையின்வரும் அன்னநடையாள் படையா வாய்மைத்தவம் இயற்றிவழுத்தும் - இமயவரையில்தோன்றும் அன்னம் போலு நடையையுடைய பார்வதிதேவியார் விதியிலடங்காத மெய்ம்மையாகிய தவத்தைச்செய்து துதிக்கும், பரம்பிரமமயமாம் நகரம் தபோமயமாம் - பரப்பிரம சொரூபமாகிய இந்நகரம் தபோமய புரமென்று சொல்லப்படும். (எ - று.)

சர்வசங்காரகாலத்தில் இக்காஞ்சி இறைவனுக்கு நடனசாலையாகவிருத்தலால் இலயசித் தெனவும், எல்லாச்சித்திகளையும் தருதலால் சகல சித்திபுரமெனவும், உமாதேவியார் தவஞ் செய்த தாதலால் தபோமய புரமெனவும் கூறியதென்க. (௫எ)

வேதனெமக்குத்தகுஞ்சோமவேள்விசெயலாற்பிரமபுர
மாதிபீடமுதற்பீடமாயசிறப்பாற்கன்னியெனுங்
காதலணங்குபுரந்திடலாற்கன்னிகாப்பிங்கெமைக்கண்டோர்
பேதமின்றிச்சிவனுண்மைபெறலாலாகுஞ்சிவபுரமே.

(இ - ள்.) வேதன் எமக்கு தகும் சோமவேள்வி செயலால் பிரமபுரம்-பிரமன் எமக்கு உவந்த சோமயாகஞ் செய்தலால் பிரமபுரமெனப்படும், முதற்பீடமாய சிறப்பால் ஆதிபீடம் - அறுபத்துநான்கு பீடங்களுக்கும் முதற்பீடமாகிய மேன்மையால் ஆதிபீடமெனப்படும், கன்னி என்னும் காதல் அணங்கு புரந்திடலால் கன்னிகாப்பு - கன்னியென்கின்ற காதலையுடைய பெண் காத்தலினால் கன்னிகாப்பெனப்படும், இங்கு எமை கண்டோர் பேதம் இன்றி சிவன் உண்மை பெறலால் சிவபுரம் ஆகும் - இவ்விடத்து எம்மைத் தரிசித்தோர் பேதமில்லாமல் சிவபெருமானுடைய உண்மையை யடைதலால் சிவபுரமெனப்படும். (எ - று.)

பிரமன் சோமயாகஞ் செய்தலால் பிரமபுரமெனவும், பீடங்களுக்கு முதலாதலால் ஆதிபீடமெனவும், கன்னியின் காவலையுடைய தாதலால் கன்னிகாப்பெனவும், தெரிசிப்பவர் சிவனுண்மையை யடைதலால் சிவபுரமெனவுங் கூறியதென்க.

பிரமன் சோமயாகஞ் செய்தது சிவாத்தானப்படலத்திற்காண்க. (௫அ)

வேறு.

எடுத்தியம்புமிப்பன்னிருநாமமும்வைகறைவெழுந்தோதி
லடுத்ததீக்கனுக்காட்டியவிடும்பைநோய்வறுமைதீர்ந்தருள்வாரி
மடுத்துவான்கதியெய்துமாறுமக்கிவைவகுத்தனமருளாலென்
றுடுத்ததிக்குடைநாயகன்விளம்பலுமுவகையங்கடலாழ்ந்து.

(இ - ள்) எடுத்து இயம்பும் இப்பன்னிருநாமமும் - எடுத்துக்கூறும் இப்பன்னிரண்டு திருநாமங்களையும், வைகறை எழுந்தோதில் - காலையிலெழுந்து கூறினால், அடுத்த தீக்கனு காட்டிய விடும்பை நோய் வறுமை தீர்ந்து - சேர்ந்த கொடியகனுக் காட்டப்பட்ட துன்பம்நோய் வறுமை (ஆகிய இவை) நீங்கி, அருள்வாரி மடுத்து வான கதி எய்தும் ஆறு - கிருபாசமுத்திரத்தை யுண்டு சிறந்த கதியையடையும்படி, உமக்கு இவை அருளால் வகுத்தனம் என்று - உங்களுக்கு இவற்றை கருணையால் சொன்னோம், என்று திக்கு உடை உடுத்த நாயகன் விளம்பலும் உவகையங்கடல் ஆழ்ந்து - திக்கை ஆடையாகவுடுத்த இறைவன் கூறலும் மகிழ்ச்சியாகிய கடலில் மூழ்கி. எ-று.)

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பன்னிரு திருநாமத்தையும் காலையில் உச்சரித்தால் தீக்கனு, அக்கனு காட்டியதுன்பம், நோய் வறுமை ஆகிய இவை நீங்கப்பெற்று முத்தியையடையுமாறு கூறியதென்று இறைவன் சொல்லத் திரிமூர்த்திகளும் மகிழ்ச்சியடைந்தனரென்றதென்க, (௫௯)

உலம்படைத்ததோட்பண்டனுமவுணனுமொளியிழந்துலைந்தேமை
நலம்படைத்தவான்சோதியுளொடுக்கிமீட்டிறைவிதன்னடுவாமம்
வலப்படைத்தமூவிழியினும்வருவித்தவள்ளலேயடியேங்கள்
புலம்படைத்தினிச்செய்பணியருளெனப்போற்றினர்முதன்மூவர்.

(இ - ள்.) உலப்படைத்த தோள் - திரட்டகல்போலுந் தோளையுடைய, பண்டனும் அவுணனால் - பண்டனென்னு மசுரனால், புகழ் மெழிந்து உலக்குறுமை - புகழொழிந்து வருந்தினவெங்களை, நலம்படைத்த வானோர்தொகுதியுள் நிறுத்தி - நன்மை மிகுந்த சிவாகினியிலொடுங்கச்செய்து, இறைவி தன் மேவரும் நலம்படைத்த மூவிழியினும் மீட்டுவெருவித்த-உமாதேவியாருடைய நடுபாகம் இடப்பாகம் வலப்பாகம் என்னு மூன்றிடங்களிலுமுள்ள மூன்று கண்களின் வழியாக மீட்பித்து (வெளியாகு செய்த) வள்ளலே - வள்ளற்றன்மையுடையானே, அடியோங்கள் புரப்படைந்து இனி செய்பணி அருள் என்ன - யாங்கள் பிழைத்து இனிச்செய்யும் பணியை அருளுமென்று, முதன் மூவர் போற்றினர்-மும்மைப் பெருந்தேவர் துதித்தனர், (எ - று,)

பண்டாசுரனால் புகழொழிந்த வெங்களைச் சிவாக்கினியிலொடுக்கி, தேவியினுடைய மூன்று கண்களிலும் மீட்பித்து வரச்செய்த இறைவனே இனியாங்கள் செய்பணி யென்னென்று திருமூர்த்திகளும் போற்றினார்களென்க.

பண்டாசுரனால் ஒளியிழந்தமையும் இறைவன் சோதியிலொடுக்கி இறைவி கண்களினின்று மீட்பித்தமையும் முன்னர்க்காண்க. (ரு0)

ஓதுமவ்வுரைதிருச்செவிசாத்தியெம்முளங்களிவரச்செய்யுங்
காதன்மைந்தர்நீராகலினுமக்கருள்காட்டுதுமெனவோர்பால்
போதளாங்குழன்முகிழ்முலைப்பொலந்தொடிப்பூங்கணைமதர்வேற்கண்
மாதர்வாணுதல்பசுங்கொடிமணந்தவன்வாய்மலர்ந்தருள்செய்யும்.

(இ - ள்.) ஓதும் அவ்வுரை திருச்செவிசாத்தி - சொல்லிய அச்சொற்களை அழகிய செவியிலேற்று, எம் உளம் களிவர செய்யும் காதன்மைந்தர் நீர் ஆகலின் - எம்மனங் களிப்புறச்செய்யும் ஆசைமிகுந்த மக்கள் நீங்களாதலால், உமக்கு அருள்காட்டுதும் என - உங்களுக் கருள்செய்வோமென்று, ஓர்பால் போது அளாங்குழல் முகிழ் முலை - ஓர்பாகத்தில் மலர் நிரம்பிய கூந்தலையும் அரும்புபோலு முலையினையும், பொலந்தொடி பூங்கணை மதர்வேல்கண் மாதர்வாணுதல் பசுங்கொடி - அழகிய வளையினையும் கூர்மையாகிய கணைபோலும் மதர்த்த வேல்போலும் பார்வையினையும் விருப்ப மிகுந்த ஒள்ளிய நெற்றியையுமுடைய பசிய கொடிபோல்பவளாகிய உமாதேவியை, மணந்தவன் வாய்மலர்ந்தருள் செய்யும் - மணந்த இறைவன் திருவாய்மலர்ந்தருளுவானாயினன். (எ - று)

இவ்வாறு திரிமூர்த்திகளும் கூறிய புகழுரையை இறைவன் திருச்செவியிலேற்று நீங்கள் எமக்கினிய புத்திரர்களாகையினால் நீங்கள் செய்யும்பணியைக் கூறுகின்றோம் என்று திருவாய்மலர்ந்தருளத் தொடங்கினானென்க, (சுக)

பிள்ளைவண்டினமுரன்றுபண்பயிற்றிவார்ந்திழிநறும்பெருவெள்ளங்
கொள்ளைகூட்டுணுமலர்த்தடம்பொதும்பரிற்கொழிதமிழ்மறைப்பாடற்
கிள்ளைபாடுசீர்க்காஞ்சியிலின்றுமிக்கிளரொளியிலிங்கத்தே
வெள்ளைவாணகைத்துவரிதழுமையொடுமினிதுவீற்றிருக்கின்றேம.

(இ - ள்) பிள்ளை வண்டினம் முரன்று பண்பயிற்றி - இளமையாகிய வண்டின் கூட்டங்கள் ஒலித்து இசைபாடி, வார்ந்துஇழி நறு பெருவெள்ளம் - மிகுந்திழிகின்ற தேனின் பெருக்கை, கொள்ளை கூட்டுணும் - கொள்ளைகொண்டு சாப்பிடும், மலர்த் தடம் பொதும்பரில் - மலரையுடைய வாவியினும் சோலையினும், கொழிதமிழ் மறை

பாட்ல் - கொழிக்கின்ற தமிழ் வேதப்பனுவலை, கிள்ளைபாடு சீர்காஞ்சியினின்றும் - கிளிகள் பாடுகின்ற சிறப்பினையுடைய காஞ்சியிலிருந்தும், இக்கிளர் ஒளி இலிங்கத்து வெள்ளைவாள்நகை துவர் இதழ் உமையொடும் இனிது வீற்றிருக்கின்றேம்-இந்த விளங்குகின்ற பிரகாசத்தையுடைய லிலிங்கத்திடத்து வெள்ளொளியினையுடைய நகையினையும் பவளம்போலு மிதழினையுமுடைய உமாதேவியோடு மினிதாகச் சிறப்புடனிருக்கின்றோம். (எ - று.)

கிளிகள், தமிழ் வேதங்களைப்பாடுகின்ற சிறப்பினைவாய்ந்த காஞ்சிப்பதியில் இந்த லிலிங்கத்தில் உமாதேவியோடு யாம் வீற்றிருக்கின்றோமென்றானென்க.

தமிழ்மறை என்றது தேவாரம். காஞ்சிப்பதியிலுள்ளார் யாவரும் ஓதுஞ் சிறப்புத்தோன்ற கிள்ளைபாடு சீர்காஞ்சி என்றார். (௬௨)

எம்மையாவருங்காணலரொருபொழுதியோகியர்க்கெதிர்காண்பே
மம்மநீரிவணெம்மடிப்பூசனையருமறைவிதியாற்றான்
மும்மையாகியவுலகமும்படைத்தளித்தழிக்குமாமுயல்கிற்பீர்
நம்மிடத்துறுபத்தியுமருச்சனைநலத்தினாற்பெறுவீரால்.

(இ - ள்.) எம்மை யாவரும் காணலர் - எங்களை யாருங்காணார், ஒரு பொழுது யோகியர்க்கு எதிர்காண்பேம் - ஒருக்கால் யோகமுடையாருக் செ[illegible]ல காணப்படுவோம், நீர் இவண் எம் அடிபூசனை அருமறைவிதியாற்றான்-நீங்கள் இவ்விடத்து எம்முடைய திருவடிப்பூசனையை அருமறையாகிய வேதவிதிப்படி, மும்மையாகிய உலகமும் படைத்து அளித்துஅழிக்கு'மா முயல்கிற்பீர்-மூன்றுலகத்தையும் சிருட்டித்துக் காத்தழிக்கும் வண்ணம் முயல்வீர், அருச்சனை நலத்தினால் நம்மிடத்து உறுபத்தியும் பெறுவீர் - அருச்சனையாகிய நன்மையால் நம்பால் பொருந்திய பத்தியையும் அடைவீர். (எ - று.)

இங்ஙனம் இருவரும் வீற்றிருக்கின்றதை ஒருவரும் அறியார் - ஒருக்கால் யோகிகளறிவர் (ஆகையால்) நீங்கள் மூவரும், மூன்றுலகத்தையும் படைத்தளித்தழிக்கும் படி எம்மை இவ்விடத்தில் வேதவிதிப்படி அர்ச்சிக்க முயற்சிசெய்யுங்கள். அதுவேயுமன்றி நம்பால் பொருந்திய பத்தியை அருச்சனையியற்றி அப்புண்ணியத்தாலடைவீர்களென்றதென்க.

தாம் வாக்குமனாதீதமாகிய பரம்பொருளாகலின் எம்மை யாவருங்காணலர் எனவும், வாக்குமனாதீதமாகிய தம்மைப் பத்தியினான் மறவாதேத்தும் மெய்யன்புடையார் வழிபட்டுய்ய கோசரப்பொருளாகக்கொள்ளு மும்மைக் கோலங்களில் இலிங்க வடிவு மொன்றாகலின் யோகியர்க் கெதிர்காண்பேமெனவும், அந்த யோகியர் தமது அறிவிச்சை செயல்களை இறைவன்பாற்படுத்தி பத்தியை யடையச்செய்வது அர்ச்சனையாகலின் நம்மிடத்துறுபத்தியு மருச்சனை நலத்தினாற் பெறுவீரெனவுங் கூறினார்.

இதனால்-இறைவனை வாக்குமனாதீதனெனவும், வாக்குமனாதீத கோசரனெனவும் உணரவேண்டுமென்பார் எம்மை யாவருங்காணலார்-யோகியர்க் கெதிர்காண்பேம் என்றாரென்க. காணலரென்பது இறைமைத்தன்மை விளங்கவும், காண்பேம் என்றது அருட்டன்மை விளங்கவுமாமென்றலு மொன்று. (௬௩)

படைத்திபங்கயனளித்திமாலுருத்திரன்பற்றறவுலகெல்லாந்
துடைத்தியென்றருள்வழங்கிச்சுரிகுழற்றேவியுமெமையீண்டே
கிடைத்தபேரன்பினூடொறும்பூசனையாற்றுகவெனக்கேட்டோ
ரடைத்தநல்விதிபுகன்மறையாததுவந்தவாறெவனென்றார்.

(இ - ள்.) பங்கயன்படைத்தி - தாமரைமலரிலிருக்கும் பிரமனே சிருட்டிசெய், மால்அளித்தி - விஷ்ணுமூர்த்தியே காத்தல்செய், உருத்திரன் பற்றறவுலகெல்லாம்துடைத்தி - உருத்திரமூர்த்தியே ஒருபற்றுமற எல்லாவுலகங்களையும் அழித்தல் செய், என்று அருள் வழங்கி - என்றுகருணையளித்து, இச்சுரிகுழல் தேவியும் - இந்தச்சுரிந்தகூந்தலையுடைய இறைவியும், எமைஈண்டு கிடைத்த பேரன்பின் - எம்மை இவ்விடத்திலடைந்தபேரன்பினால், நாள்தொறும் பூசனையாற்றுக எனகேட்டோர்-எந்நாளும் வழிபாடு செய்கவென்று, (இறைவன்கூற) கேட்டவர்களாகிய திரிமூர்த்திகளும், அடைத்தநல்விதிபுகல் - முன்னர்க்கூறிய நல்லவிதியைக்கூறும், மறையாது - வேதம் ஏது, அதுவந்தவாறு எவன் என்றார் - அதுவந்தவகையாதென்றனர் (எ - று.)

இறைவன், பிரமன் திருமால் உருத்திரனென்கிற மூவரையும் பார்த்து நீங்கள் மூவரும் படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழிலைச் செய்யுங்களென்றவர்க்குக் கூறியதேயுமன்றி உமாதேவியைப்பார்த்து இப்பொழுது நீயடைந்த பேரன்பினால் எம்மை எந்நாளும் பூசித்துவருவாயாகவென்று கூறினர். இவ்வாறு தங்களுக்கும் தேவிக்குங் கட்டளையிட்டதைக் கேட்ட மூவரும் இறைவனே நீ முன்னர் "எம்மடிப் பூசனையருமறை விதியாற்றுன் முயல்கிற்பீர்" என்றனை ஆகையால அவ்வேதத்திற் கூறும் விதியாது அவ்வேதம் எப்படி தோன்றியது என்றதென்க.

இதனால் முத்தொழிலியற்ற மூவரையும் தம்மைப் பூசிக்கக் கட்டளையிட்டாரெனவும், உமாதேவியை அன்பினால் வழிபடக் கட்டளையிட்டாரெனவும் கொள்க. அன்றியும் வழிபடத்தொடங்கிய மூவரும் இறைவனை, வழிபடும் விதியைக் கூறும் வேதமெது எனவும், அவ்வேதம் பசுவாக்கியமோ அன்றிப் பதிவாக்கியமோ என்று வினவினாரெனவுங் கொள்ளக் கிடந்தன. (கூச)

என்றமூவருக்கிளநிலாநகைமுகிழ்த்தெம்பிரானுரைசெய்யு
நன்றுகேண்மினெம்மிரவிடைத்திருநடனவின்றிருள்புலர்காலை
மன்றவெம்மிடையொடுங்கியவுலகுயிர்முழுவதுமவழுவாமே
தொன்றுபோற்படைத்திடுவதுகருதினேமுத்தொழில்புரிவீர்காள்,

(இ - ள்.) என்றமூவருக்கு-என்றுகேட்டமும்மைப் பெருந்தேவருக்கும், இளநிலா நகைமுகிழ்த்து எம்பிரான் உரைசெய்யும்-புன்னகைசெய்தருளி எம்மிறைவன்கூறுகின்றுன், முத்தொழில்புரிவீர்காள்-சிருட்டி முதலிய முத்தொழிலையுஞ்செய்வோரே, நன்று கேண்மின் - நன்றாகக்கேளுங்கள், எம்ம இரவிடை திருநடநவின்று-எமதிராவில் திருநடனஞ் செய்தருளி, இருள் புலர்காலை - வைகறைக்காலத்தில், மன்ற எம்மிடையொடுங்கிய உலகு உயிர் முழுவதும்-நிச்சயமாகவே எம்பாலொடுங்குதல்பெற்ற உலகிலுள்ளவுயிர்களெல்லாம், வழுவாமே - மாறுபடாமலே, தொன்றுபோல் படைத்திடுவதுகருதினேம் - பழமைபோலச் சிருட்டிசெய்வதை எண்ணினேம்' (எ - று.)

'(வேதம்வந்தவாறெவனென்ற) மும்மூர்த்திகளையும் பார்த்து இறைவன் புன்னகையரும்பிக்கூறுவான். நமக்கு இரவென்று குறித்திருக்கும் சங்காரகாலத்தில நாம்

நடனஞ்செய்து, பின் வைகறைப்பொழுதில் எம்பாலொடுங்கியுள்ள சராசரங்களை யெல்லாம் ஒடுங்கியமுறையே வழுவாமல் முன்போல் சிருட்டிக்க எண்ணினேமெ ன்ற தென்க.

இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாகிய எல்லாம் ஒடுங்குவருங்காலம் சங் காரகால மாதலானும் அக்காலம் இராக்காலமாதலானும் அவ்விரவில் இறவாதிருப்ப வன் தானாதலானும் எம்மிரவிடை எனவும், அவ்விரவில், ஆயிரங்கிரணம் விடோது பதினாறுபத்ததிகாரம் வந்திறந்தால், அப்போருசத்திலுறை பிரமனுக்கோர்பகலெனுமவ ன்கோடி யழியில், மாயனுக்கோர்பகல்நூறுநூறாயிரமாலிறந்தாலெமக்கோர், மாத்திரை ப்போதேனு மில்லையெனவே யுளமகிழ்ந்து சற்றேநகைத்துத், தூயநகையெரிபாற் பிரபஞ்சமெல்லாத்தையும் சுட்டு வெண்சாம்பராக்கிச், சுட்ட சாம்பலையெடுத்துத்தரி த்துச் சர்வசூனியமயானத்திலோர்,சேயிழையுடனிருந்தானந்த நிர்த்தமிடுவோனொரு தலால் திருநடநவின்று எனவும், சங்காரகாலம் இராக்காலமாகவே புனருற்பவகாலம் வைகறைக்காலமாமாதலால் இருள்புலர்காலையெனவும், இரவில் உறங்குவோரெல்லாம் விடியற்காலத்தில் விழித்தல்போல அப்புனருற்பவகாலத்தில் சராசரங்களெல்லாஞ்சிரு ட்டிப்பட்டு வரவேண்டுமாதலால் எம்மிடையொடுங்கியவுலகுயிர்முழுவதும் படைத்திடு வதுகருதினேம் எனவும் கூறினர்.

சர்வசங்காரகாலத்தில் யாவருமழிவாரென்பதையும் இறைவனொருவனே யிருப்பா னென்பதையும் "நூறுகோடிபிரமர்களொருங்கினால் ஆறுகோடி நாராயணரங்ஙனே, யேறுகங்கைமணலெண்ணிலிந்திரர், ஈறிலாத நல்லீசனொருவனே, எனவரும் தேவார த்தானுமுணர்க.

உலகுயிர்முழுவதும் வழுவாமே தோன்றுபோற் படைத்திடுவது கருதினேம் என் றதை "இலயித்தவாறுளதாவேண்டும்" என்றுசிவஞானபோதத்தில்வருதல்காண்க.(சு0)

படரொளிப்பிழம்பாகுமிவ்விலிங்கமேபற்றிநின்றுலகெல்லா
முடையநம்மிடைநிலைபெறுமறைகளைமுன்னுறவுயிர்ப்பித்தேம்
தொடையிணங்குமப்பழமறை முழுவதுமெம்மடிதொழுதேத்திக்
கடையிலாதபேரன்பினாற்பழிச்சினசிரமிசைக்கரங்கூப்பி.

**(இ-ள்.)** படர் ஒளி பிழம்பாகும் - ஒளித்திரள் பரந்ததாகும், இவ்விலிங்கமே பற்றிநின்று - இவ்விலிங்கமே யிடமாகக்கொண்டு, உலகெல்லாம் உடைய நம்மிடை - எல்லாவுலகையுமுடைய நம்மிடத்து, நிலைபெறு மறைகளை - நிலைபெற்ற வேதங்களை, முன்னுற உயிர்ப்பித்தேம் - முன்னே பொருந்தத் தோன்றும்படிச்செய்தோம், தொ டையிணங்கும் அப்பழமறை முழுவதும் – தொடுக்கப்படுதலமைந்த அப்பழமையா கிய வேதங்களெல்லாம், எம்மடி தொழுது ஏத்தி - எமது சீபாதங்களைத்தொழுது வணங்கி, கடையிலாத பேரன்பினால் - முடிவில்லாத பெரியவன்பினால், சிரமிசை கரம் கூப்பி பழிச்சின - தலைமேற் கைகுவித்துத்துதித்தன. (எ – று.)

(யாவையும்படைக்கக்கருதியயாம்) பேரொளிப்பிழம்பாய் விளங்கும் இச்சிவலிங்க த்தையே யதிட்டித்து நின்று உலகெல்லாமுடைய நம்மிடத்தில் நிலைபெற்ற வேத ங்களை முன்னே தோற்றுவித்தோம். தோன்றிய அவ்வேதங்கள் எம்மடிவணங்கி இரு கரங்களையுஞ் சிரமேற்குவித்துத் துதிக்கத்தொடங்கினவென்க.

இதனால் சர்வசங்காரகாலத்தில் எல்லாம் இறைவனிடத்தில் ஒடுங்குவதுபோல் வேதமும் அவனிடத்தில் ஒடுங்குமெனவும், புனருற்பவமாகுங்கால் வேதந்தோன்று

மெனவுங் கூறியதாமென்க. அன்றியும் இறைவன் வேதத்தைத் தோற்றுவிட்டானெனறதனல் இறைவன்போல் வேதம் ஓர் முதலென்றுகூறுவார் கொள்கையை மறுத்துப் பதிவாக்கியமென் றறிவித்ததாகுமென்க. (௬௬)

பாரின்மேயினைபாரொருவடிவினைபாரினுக்கறிவொண்ணாய்
பாருமற்றையப்பாரிடைப்பொருளுநின்னாணையிற்பயில்வித்தாய்
நீரின்மேயினைநீரொருவடிவினைநீரினுக்கறிவொண்ணாய்
நீருமற்றையந்நீரிடைப்பொருளுநின்னாணையினிலைப்பித்தாய்.

(இ - ள்.) பாரின்மேயினை பாரொருவடிவினை - மண்ணிற்பொருந்தினை மண்ணேயொருவடிவாகவுடையை, பாரினுக்கு அறிவொண்ணாய்-மண்ணாலுமறிய மாட்டாதாய் பாருமற்றை அப்பாரிடைப்பொருளும் - மண்ணும் வேறாகிய அம்மண்ணிலுள்ளபொருளும், நின் ஆணையில் பயில்வித்தாய் - உன் ஆக்ஞையிலியங்கவைத்தாய், நீரின்மேயினை நீர் ஒருவடிவினை - நீரிலபொருந்தினை நீரேயொருவடிவமாகவுடையை, நீரினுக்கு அறிவொண்ணாய் - நீரினாலு மறியமாட்டாதாய், நீரும்மற்றை அந்நீரிடைப்பொருளும் - நீரும்வேறாகிய நீரிலுள்ளபொருளும், நின்னாணையின் நிலைப்பித்தாய் - உன்னாக்ஞையின் வழி நிலைபெறச்செய்தாய். (எ - று)

பிரிதிவியில் சத்தபரிசரூபரசகந்தமென்னும் ஐந்துகுணங்களாய்ப் பொருந்தியிருக்கின்றனை, பிரிதிவிவடிவாயிருக்கின்றனை, பிரிதிவியினாலறியப்படாதிருக்கின்றாய், பிரிதிவியும் அப்பிரிதிவியில வாழத்தக்க வேறுபொருள்களும் உனதுஆணையினால் இயங்கவைத்தாய், நீரில் சத்தபரிசரூபரசமென்னும் நான்குகுணங்களாய்ப் பொருந்தியிருக்கின்றனை, நீர் வடிவமாயிருக்கின்றனை, அந்நீரால் அறியப்படாதவனாயிருக்கின்றாய், நீரும் நீரில வாழத்தக்க வேறு பொருள்களும் உனது ஆணையினால் நிலைபெறச்செய்தாயென்றதென்க.

பாருமற்றை யப்பாரிடைப்பொருளு நின்னாணையி னிறுவித்தாயென்றதனல் பிரிதிவிக்குரிய கடினத்தொழிலை மேலிடச்செய்யாமலும் அப்பிரிதிவியிலுள்ள பொருள்களை மண்ணாகவே போகச்செய்யாது நந்தம்பலன்களைக கொடுக்கச்செய்தலுமாம். இது பிரிதிவி வடிவமாயிருக்கின்றாயென்று இறைவனை வணங்கியதாம்.

நீருமற்றையந் நீரிடைப்பொருளு நின்னாணையி னிறுவித்தாயென்றதனல் நீருக்குரிய குளிர்ச்சியை மேலிடச்செய்யாமலும் அந்நீரிலுள்ள பொருள்களை அழிந்துபோம்படிச்செய்யாது நிலைபெற்று வாழச்செய்தலுமாம்

இது அப்புவடிவமா யிருக்கின்றாயென்று இறைவனை வணங்கியதாம். (௬௭)

நெருப்பின்மேயினைநெருப்பொருவடிவினைநெருப்பினுக்கறிவொண்ணாய்
நெருப்புமற்றையநெருப்பிடைபொருளுநின்னாணையினிறுவித்தாய்
மருத்தின்மேயினைமருத்தொருவடிவினைமருத்தினுக்கறிவொண்ணாய்
மருத்துமற்றையம்மருத்திடைப்பொருளுநின்னாணையின்வதிவித்தாய்.

(இ - ள்.) நெருப்பின்மேயினை நெருப்பொருவடிவனை - நெருப்பிற்பொருந்தினை நெருப்பே யொருவடிவமாகவுடையை, நெருப்பினுக்கு அறியொண்ணாய் - நெருப்பினாலுமறியமாட்டாதாய், நெருப்பும்மற்றை அந்நெருப்பிடைபொருளும் - நெருப்பும் வேறாகிய நெருப்பிலுள்ளபொருளும், நின் ஆணையில் நிறுவித்தாய் - நின் ஆக்ஞையில் நிலைக்கச்செய்தாய், மருத்தின்மேயினை மருத்தொருவடிவினை - காற்றிற்பொருந்தினை காற்

ஒருருவடிவமாகவுடையை, மருத்தினுக்கு அறிவொண்ணுய்-காற்ருலு மறியமாட்டாதா ய், மருத்தும் மற்றை அம்மருத்திடைப்பொருளும்- காற்றும் வேருகிய அக்காற்றிலுள் ளபொருளும், நின் ஆணையில் வருவித்தாய் - நின் ஆக்ஞையில் தோன்றச்செய்தாய்.

நெருப்பில் சத்தபரிச ரூபமென்னு மூன்றுகுணமாய்ப் பொருந்தியிருக்கின்றனே, நெருப்புவடிவமாயிருக்கின்றனே, நெருப்பினுல் அறியப்படாதிருக்கின்ருய், நெருப்பும் அந்நெருப்பிடை வாழத்தக்க வேறுபொருள்களையும் உனது ஆணையினுல் நிற்கச்செய் தாய். வாயுவில் சத்தபரிசமென்னும் இரண்டுகுணமாய்ப் பொருந்தியிருக்கின்றனே, வாயு வடிவமாயிருக்கின்றனே, வாயுவினுல் அறியப்படாதிருக்கின்ருய், வாயுவும் அவ்வாயுவி னிடத்தில்வாழத்தக்க வேறுபொருள்களும் உனது ஆணையினுல் வசித்திருக்கச்செய்தா யென்றதென்க.

நெருப்புமற்றையந் நெருப்பிடைப் பொருளு நின்னுணையி னிறுவித்தாயென்றத ஞல் நெருப்புக்குரிய சுடுந்தொழிலை அந்நெருப்பினிடத்தில் மேலிடச் செய்யாமல் நிறுத்தியும், அந்நெருப்பிலுள்ள பொருள்களை நாசமாகச்செய்யாது விளங்கச்செய்தும் வருதலாம்.

இது நெருப்பு வடிவாயிருக்கின்ருயென்று இறைவனைவணங்கியதாகும்.

மருத்துமற்றையம் மருத்திடைப்பொருளு நின்னுணையின் வதிவித்தாயென்றத ஞல் வாயுவுக்குரிய பரந்து சலித்துத் திரட்டுதலாகிய தொழிலை அவ்வாயுவில் மேலிட ச்செய்யாமல் வதிந்திருக்கச்செய்தும், அவ்வாயுவிலுள்ள பொருள்களை சிதறிப்போம் படி செய்யாது வசித்திருக்கச்செய்தும் வருதலாம்.

இது வாயுவடிவாயிருக்கின்ருயென்று இறைவனை வணங்கியதாமென்க. அக்கினி அழித்தலும் வாயு அலைந்தலுமாதலால் நிறுவித்தாய், வதிவித்தாயென்ருர். (கூஅ)

**விண்ணின்மேயினைவிண்ணெருருவடிவினை விண்ணினுக்கறிவெண்ணுய்**
**விண்ணுமற்றையவ்விண்ணிடைப்பொருளுநின்னுணையினிறுவித்தாய்**
**கண்ணுமாருயிரிருசுடரெவற்றினுமிம்முறைகலந்தோங்கி**
**யெண்ணினுலறிவரும்பெருமுதல்வநின்னிணையடிமலர்போற்றி.**

(இ - ள்.) விண்ணின்மேயினை விண்ணெருருவடிவினை - ஆகாயத்திற் பொருந்தினை ஆகாயமே ஓருருவடிவமாகவுடையை, விண்ணினுக்கறிவொண்ணுய் - ஆகாயத்தாலுமறிய மாட்டாதாய், விண்ணும்மற்றை அவ்விண்ணிடைப்பொருளும் - ஆகாயமும் வேருகிய அவ்வாகாயத்திலுள்ள பொருளும், நின் ஆணையில் நிறுவித்தாய் - நின் ஆக்ஞையில் நிலைக்கச்செய்தாய், ஆருயிர்கண்ணும் இருசுடர் எவற்றினும் - அருமையாகிய வுயிரிட த்திலும் இருசுடரிலும் மற்றெப்பொருளிலும், இம்முறைகலந்து ஓங்கி - இவ்வாறு வியாபித்துயர்ந்து, எண்ணினுல் அறிவரும் - அறிவினுல் அறிவதற்கரிய, பெருமுதல்வ நின் இணை அடிமலர்போற்றி - நின்னுடைய இரண்டாகிய தாமரைமலரைத்துதிப்பது.

ஆகாயத்தில் சத்தகுணமாத்திரமாய்ப் பொருந்தியிருக்கின்றனே, ஆகாயவடிவா யிருக்கின்றனே, ஆகாயத்தால் அறியப்படாதிருக்கின்ருய், ஆகாயமும் அவ்வாகாயத் திடை வாழத்தக்க வேறுபொருள்களும் உனது ஆணையினுல் நிற்கச்செய்தாய், இம் முறையாக உயிர்களிடத்தும் சூரியசந்திரரிடத்தும் கலந்து இவைகளுக்கு மேற்பட்டு அறிவதற்கருமையாயிருக்கின்ற பெருந்தெய்வமே உன்னடிபோற்றினென்றதென்க.

விண்ணும் மற்றையவ்விண்ணிடைப் பொருளுநின்னுணையி னிறுவித்தாயென்றத ஞல் ஆகாயத்திற்குரிய வெளியாயிருத்தலைச்செய்யாமல் இடங்கொடுக்கச்செய்தும்

அவ்வாகாயத்தில் வசிக்கும்பொருள்கள் அவ்வாகாயத்திலே நிலைபெற்றிருக்கச்செய்த்லாம்.

இது ஆகாயவடிவாயிருக்கின்றாயென்று இறைவனை வணங்கியதாமென்க. பாரின்மேயினை என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் அட்டமூர்த்தங்களைக் கூறியதாகும் ஆகாயம் வெளியாதலால் நிறுவித்தாயென்றார்.

இதனால் பஞ்சபூதங்களில் குணமாயும் வடிவாயும் (அங்கமாயும்) அவைகளால் அறியப்படாதாயும் (அறியப்படாமலே) அவைகளையும் அவற்றினிடைப்பொருள்களையும் ஆணையால் தத்தம் தொழில்களைச் செய்வித்தும் வருதல்போல் ஏனைய இருசுடரிடத்தும் ஆன்மாக்களிடத்தும் உள்ளானென்பதை விளக்கியதாகும்.

விண்ணின்மேயினை விண்ணொருவடிவினை என்றதனால் இறைவன் உயிர்களிடத்து உடலுயிர், கண்ணருக்கன், அறிவொளிபோல் பிரிவரும் அத்துவிதமாய் அவ்வவ்வுயிர்களின் வழிநிற்பதாகிய சத்தித்தன்மையை விளக்கியதெனவும், விண்ணுமற்றையவ்விண்ணிடைப் பொருளு நின்னாணையின்நிறுவிந்தாய் என்றதனால் இறைவன் தனதாணையின்வழிவரும் இருவினைக்கேற்ப உயிர்கள் ஐந்தொழிற்பட்டுச் செல்லுங்கால் அவ்வைந்தொழினடத்துவநாகிய பதித்தன்மையை விளக்கியதெனவும், விண்ணனுக்கறிவொண்ணாய் என்றதனால் அத்தன்மைகளின்வேறாய் நிற்குந்தன்மையை விளக்கியதெனவும், ஓங்கி என்றதனால் எவ்விடத்துந்தானே சுயம்பிரகாசரூபமாமியல்புடையனாய் நிற்குந்தன்மையை விளக்கியதெனவுமா மென்க. இக்கருத்தையே மேலைச்செய்யுள்களுக்குங் கொள்க.

இதனை "உலகெலாமாகிவேறாயுடனுமா யொளியாயோங்கி, யலகிலாவுயிர்கள் கன்மத்தாணையினமர்ந்துசெல்லத், தலைவனாயிவற்றின் றன்மைதனக்கெய்த லின்றித்தானே, நிலவு சீரமலனாகி நின்றனன் னீங்காதெங்கும்" எனவருஞ் சிவஞான சித்தியில் காண்க. (சுக)

வேறு.

இன்னவண்ணம்பழிச்சியெமைத்தொழு
மன்னுமன்பின்மறைகளைநோக்கிநீர்
நன்னர்வேட்டனநல்குதும்வேதங்காள்
சொன்மினென்றலுஞ்சொல்லுதலுற்றன.

(இ - ள்.) இன்னவண்ணம் பழிச்சி - இந்தவகை துதித்து, எம்மைதொழும் எம்மைவணங்கும், மன்னும் அன்பின் மறைகளை நோக்கி - நிலைபெற்ற அன்பினையுடைய வேதங்களைப்பார்த்து, வேதங்காள் நீர் நன்னர் வேட்டன - வேதங்களே நீங்கள் நன்மையாக விரும்பப்படுவனவற்றை, நல்குதும் சொன்மின் - கருணை செய்வோம் சொல்லுங்கள், என்றலும் சொல்லுதலுற்றன - என்று சொல்லுதலும் சொல்லத்தொடங்கின (எ - று.)

இவ்வகையாகத் துதித்து எம்மை வணங்கிய வேதங்களை நோக்கி நீங்கள் விரும்பினவற்றைக் கேளுங்கள் கருணை செய்வோம் என்று சொல்லவும் வேதங்கள் சொல்லத்தொடங்கின வென்க. (௭0)

எந்தைநின்முகத்தெங்களையீன்றனை
யந்தமெய்ப்பெரும்பேறுடையெங்களைச்
சிந்தைசெய்துதிருவருள்வைத்துநின்
சந்தமேனியணியெனத்தாங்குவாய்,

" (இ - ள்.) எந்தை - எந்தாய், நின்முகத்து எங்களை ஈன்றனை - நின்முகத்தினிடமாக எங்களைப் பெற்றனை, அந்த மெய் பெரும்பேறுடைய-அந்த மெய்மையாகிய பேற்றினையுடைய, எங்களை சிந்தை செய்து திருவருள் வைத்து - எம்மை மனத்தினிடத்து வைத்து திருவருள் செய்து, நின்சந்தமேனி அணி என - உன்னுடைய திருமேனியிலுள்ள ஆபரணமென, தாங்குவாய் - தாங்கிக்கொள்வாய். (எ - று.)

வேதங்கள் இறைவனை நோக்கி எந்தையே எங்களை உன்முகத்திற் பெற்றனை, ஆகையால் அந்தப் பெரும்பேறுடைய எங்களைச் சிந்தித்துத் திருவருள் செய்து உன் திருமேனியில் அணியாகவணிந்து கொள்வாயென்றதென்க. (எக)

நயக்குமாறினிநாங்களுலகிடைச்
செயத்தகும்பணிசெப்புதிமற்றெமை
வியப்பவேதங்களென்று விளித்தனை
யுயர்த்தவப்பெயர்காரணமோர்கிலேம்.

(இ - ள்.) நயக்குமாறு நாங்கள் இனி உலகிடை செயத்தகும் பணிசெப்புதி - விரும்பும் வகையாக யாங்கள் மேல்வரும் காலத்தில் உலகின்கண் செய்யத்தகுந்த குற்றேவலைச் சொல்வாய், எம்மை வியப்பவேதங்கள் என்று விளித்தனை - எங்களைவியக்கும்படி வேதங்களென்று கூப்பிட்டனை, உயர்த்த அப்பெயர் காரணம் - ஓங்கிய அப்பெயரினது ஏதுவை, ஓர்கிலேம் - அறியுமாற்றலில்லோம். (எ-று.)

(வேதங்கள்) இனி நாங்கள் உலகின்கண் செய்யத்தகும் பணியைக் கட்டளையிடுவாய், (அன்றியும்) எங்களைவேதங்களென்று அழைத்தாய் அப்பெயர்க்காரணம் எங்களுக்குத்தோன்ற வில்லை என்றதென்க. (எஉ)

என்றமாமறைதம்மையியல்பினு
லன்றுகோவணநூபுரமாதியா
மன்றமெய்யணியாக்கிமகிழ்ந்துபி
ஞென்றுகூறினமுங்கிவைகேட்பவே.

(இ - ள்.) என்ற மாமறை தம்மை - என்று சொல்லிய பெருமையாகிய வேதங்களை, இயல்பினுல் அன்றுகோவணம் நூபுரம் ஆதியாக - இயல்பால் அந்நாளில் கோவணம் சிலம்புமுதலாக, மன்ற மெய் அணியாக்கி மகிழ்ந்து - நிச்சயமாக உடம்பிலணியும் அணிகளாக்கி மகிழ்ச்சியடைந்து, பின் ஒன்றுகூறினம்-பின்பு ஒன்றுசொல்லினம், ஊங்கு இவைகேட்ப - அவ்விடத்து இவைகள்கேட்ப, (எ-று.)

என்று கூறியவேதங்களைக் கோவணம் நூபுரமுதலாகிய ஆபரணங்களாக்கி இயல்பாகவணிந்து மகிழ்ந்து அவ்வேதங்களைப் பார்த்து ஒன்று சொலத் தொடங்கினுமென்றதென்க. (எங)

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**அறம்பாவமென்றிரண்டினெம்முண்மைத்தன்மையினுமகிலலோகந்**
**திறம்பாமற்பிரமாணமாவீர்வித்தெனும்பகுதிஞானஞ்செப்பும்**
**புறம்பாயாமனப்பெரியோர்நும்மொழியானெமையுணரும்பொலிவான்வெள்ளிப்**
**பறம்பாருமெமக்கினியபான்மையீர்வேதமெனப்பெயர்பெற்றீரால்.**

**(இ-ள்.)** அறம் பாவம் என்றிரண்டின்-அறமும் பாவமுமென்ற இரண்டினுலாகிய, எம்முண்மைத் தன்மையினும் - எமதுண்மைத் தன்மையினின்றும், அகிலலோகம் - எவ்வகை யுலகமும், திறம்பாமல் - வேறுபடாமல், பிரமாணமாயினீர் - பிரமாணமாக நிற்பீர், வித்தெனும் பகுதி - வித்தென்று சொல்லப்படும் முதனிலை, ஞானம் செப்பும் - ஞானத்தையுணர்த்தும், புறம்பாயா மனம் பெரியோர் - ஐம்புலவிடயங்களிற் செல்லுத லில்லாத மேலோர், நும்மொழியான் - உமதுசொல்லால், எமையுமுறும் மெய்யினான் - எம்மை யறிந்துகொள்ளும் மேன்மையான், வெள்ளி பொருப்பு ஆலயம் - எமது கயிலாயத்தையடையச் சோபானமாகும், எமக்கு இனியபான்மையீர் - எமக்கினிய தன்மையுடையீர், வேதமெனப் பெயர்பெற்றீர் - வேதமெனப்படும் பெயரையடைந்தீர், (எ-று.)

அறம் பாவமென்கின்ற இரண்டில் உலகமெல்லாம் வேறுபடாமனின்று (அது எமதுண்மைத்தன்மை யினிலைபெற்றிருக்க பிரமாணமாக நிற்பீர், எங்ஙனமெனின் வித்தென்று சொல்லப்படும் முதனிலை ஞானமென்று பொருள்படும், [illegible] ஐம்புலன்களையுமிக்கடிந்த பெரியோர் உங்களுடையசொல்லால் எம்முண்மை ஞானத்தையுணர்ந்து அதனுல் எமது சிவலோகத்தை அவரடைதற்குச் சோபானமாகின்றீர்கள். ஆகையால் வேதமெனப் பெயர்பெற்றீர் என்றதென்க.

இதனுல் அறம்பாவங்களை யறிதற்கும் சிவனுண்மையையறிதற்கும் வேதம் அறிவுநூலெனவும், இந்நூலுணர்ச்சியால் பாவத்தைக்கடிந்து அறத்தினைப்புரிகின்று சிவஞானத்தையுணர்ந்தோரால் அடையும் சிவலோகத்திற்குச் சோபானமாயுள்ளதென்றும் கொள்ளக்கிடந்தன.

'அறம் பாவமென்றிரண்டி னருஞ்சயிற்றுக்கட்டு' என்பவாகலின் 'அறம் பாவமென்றிரண்டி னெம்முண்மைத் தன்மையினும் என்றும்' பெரியோர் வேதவிதியினெழுகுபவராகலின் அகிலலோகம் திறம்பாமற் பிரமாணமாயினீரென்றும், அவர் மனம் ஐம்புலவிடயத்திற் செல்லுதலொழியாமையான் புறம்பாயா மனப்பெரியோரென்றும் கூறினர், அகிலலோக மென்புழி முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. (எசு)

வேதியர்கண் முதன் மூவருமையோதி வீடுபேறடைகமுற்று
மோதுமறையிரண்டானுமொன்றானுமோதாதுபுறநூல்கற்கு
மேதிலிருபிறப்பாளரிருட்குழிவீழ்ந்திடர்ப்படுவாராகநீயிர்
பேதியாமெய்யன்பினெமையீண்டுவழிபாடுபேணிவாழ்மின்.

**(இ - ள்.)** வேதியர்கண் முதல் மூவர் - வேதியர் முதலாகிய மூவரும், உமை யோதி வீடுபேறடைக - உம்மையோதி வீடுபேறெய்துக, முற்றும் ஓதும் - முழுதுமோதப்படும், மறையிரண்டானும் ஒன்றானும் ஓதாது - இரண்டுவேதங்களாயினும் ஒருவேதமாயினும் கற்றுணராமல், புறநூல் கற்கும் ஏதில் இருபிறப்பாளர் - வேறு நூல்பயிலும் அயலாகாத இருபிறப்பாளர், இருட்குழிவீழ்ந்து இடர்ப்படுவாராக - இருளென்னு நரகத்தேயழுந்தித் துன்பமெய்துவாராக, நீயிர் பேதியா மெய் அன்பின் - நீவிர் வேறுபடாத மெய்யன்பான், எமை ஈண்டு வழிபாடு பேணி வாழ்மின் - எம்மை இத்தலத்து விரும்பி வழிபட்டு வாழுங்கள், (எ-று.)

பிரம்ம க்ஷத்திரிய வைசியரென்னு மூவரும் உங்களையோதி முத்தியை யடையக்கடவர். இவ்வேதங்களுள் இரண்டாயினும் ஒன்றாயினும் ஓதவறியாது புறச்சமய நூல்களைக் கற்கும் வேதியர் நரகத்தில் வீழ்ந்து துன்பப்படுவாராக. நீங்கள் எம்மை அவ்வேத விதிப்படியே வழிபட்டு வாழுங்கள் என்றதென்க.

சிவமே பதியெனக்கூறும் பதிநூலை யோதாது பசுக்களைப் பதியெனக்கூறும் பசு நூல்களைக் கற்கும் அறிவிலிகள் அருநரகில் வீழ்வாரென்பார் ஓதுமறை யிரண்டானு மொன்றானு மோதாது புறநூல் கற்கும், ஏதிலிருபிறப்பாள ரிருட்குழி வீழ்ந்திடர்ப் படுவாராக என்றார் அன்றியும் வேதநதுக்குரியாராக விதித்த மூவருள் வேதியரே புறச் சமய நூல்களைகற்று முன்னிற்பவரென்பார் ஏனையரை யொழித்து புறநூல் கற்கும் இருபிறப்பாளர் என்றார்.

"அசிக்கவாரியங்களோடு மாதரைப்பேசவாதப் பிசுக்கரை" எனவும், அம்பலவற்கல் லாக்கச்சரைக்கல்லாப் பொலலாக்கயவரைப் பசுநூல்கறகும் பிச்சரை எனவும் வருதல் காண்க.

நீயிர்பேறியா மெய்யன்பி னைமையீண்டு வழிபாடு பேணிவாழ்மின் என்றதனால்- வேதத்தில் எம்மையே வழிபடும்படிக் கூறியிருக்க அவ்வாறு வழிபடுஞ் சீலமறியாது எம்மிடத்திலு பேறபுரிந்தியை யுடையராய் அன்பிழந்து வன்னெஞ்சுடையராய் வேத பாஷ்யராகின்றார்க ளாகையால் நீங்களவ்வாறாகாது வேதம் எம்மை எவ்வாற்றானும் பேதிக்காமல் துரியப்பொருளாகவே எம்மைவாழ்த்தி வழிபடுகின்றதோ அதுபோல் நீங்கள் எம்மையே வழிபடுவீர்க ளென்றதாமென்க. இருபிறப்பாளரென்றது - உப நயனத்தின் ஒருபிறப்பும், பின்னரொருபிறப்பு முடையாரென்க. வேதங்கள் இருக்கு எசுர் சாமம் என்பனவே யாகலானும் அவைகளே திரயி எனப்படு மாகலானும் மறை யிரண்டானு மொன்றானு மென்றதென்க. இருட்குழிஎன்றது நகரவிசேடத் தொன்று. (எரு)

உலகுய்தற்பொருட்டுநாமெவ்விடத்தினெவ்வுருவொடுப்போமங்க
ணலமெய்தாதற்கியைந்தவடிவாநீர்கொள்கென்றுநயபபமுன்னா
ளலர்தலைமாநிலம்பரசுமிந்நகரின்வரமளித்தோமடையாருட்கும்
வலமன்னுந்திரடிண்டோண்மைந்தர்கள - தலினனம்மறைகளெல்லாம்.

(இ - ள்) உலகு உய்தற்பொருட்டு நாம் எவ்விடத்தில் எவ்வுருவம் எடுப்போம் - உலகமுய்யும் வண்ணமாக இயாம் எந்தவிடத்தில் யாதுவடிவமெடுப்போம், அங்கண் நலமெய்துதற்கு அதற்கு - அவ்விடத்து நன்மையடையு மதற்கு, இயைந்தவடிவம் நயப்ப நீர்கொள்க என்று - ஏற்கவடிவத்தை விரும்ப நீரடைகவென்று, முன்னாள் முற்கால த்தில்-அலர்தலை மாநிலம் பரசும் - பரந்த இடத்தையுடைய பெருமையாகிய நிலவுலகம் துதிக்கும், இந்நகரின் வரமளித்தோம் - இந்நகரத்தினிடத்து வரத்தையளித்தோம், அடையார் உட்கும் வலமன்னும் திரள்திண்தோள் - பகைவர்வருந்தும் வன்மைநிலை பெற்ற திரண்ட திண்ணிய தோளையுடைய, மைந்தர்கள் - மக்களே, ஆதலினான் அம் மறைகளெல்லாம் - ஆகையினாலே அந்த வேதங்களெல்லாம் (எ - று.)

மைந்தர்களே, உலகெலாம்புகழும் இக்காஞ்சித் திருநகரத்தில் முன்னொருநாளில் (வேதங்களைநோக்கி) உலகமுய்தற்பொருட்டு நாம் எவ்விடத்தில் எவ்வுருவத்தை யெடுக் கின்றோமோ அவ்விடத்தில் அவ்வுருவத்துக்கியல நாம் விரும்பும்படி உருவங்கொண்டு நீங்கள் வருவீர்களென்று வரங்கொடுத்திருக்கின்றோம், ஆகையினால் அவ்வேதங்களெல்லாம் என்றதென்க.

இறைவன் திருமேனிகொள்வதும் உயிர்களெடுக்கும் கருமேனி கழித்தற்பொருட் டாகலின் உலகுய்தற்பொருட்டு நாமெவ்விடத்தி னெவ்வுருவ மெடுப்போமென்றும், திருமேனிகொண்ட நம்மைவழிபடக் கூறுவதுவேதமாகலின் அங்கணலமெய்துமதற் கியைந்தவடிவநீர்கொள்க என்றுங் கூறினர். (எசு)

எங்குநாம்பரஞ்சோதியிலிங்கவடிவாயமர்ந்தேமாகவீண்டைத்
தேங்கவிழ்க்குங்கவிழிணர்ப்பூங்கனிதுவன்றுமொருமாவாய்த்திகழ்ந்துநின்ற
வீங்குதிறற்புரமூன்றுமிறுத்தநாட்போர்க்கோலமேயினேம்யா
மாங்கவையுங்கொய்யுளைவெங்கலினவாம்பரிவடிவாயமைந்தகாண்மின்.

(இ - ள்.) எங்கு நாம் பரஞ்சோதி இலிங்கவடிவாய் அமர்ந்தேமாக - இத்தலத்து யாம் பரஞ்சோதி இலிங்கவுருவமாக விரும்பி யெழுந்தருளினேமாக, ஈண்டை - இவ்விடத்து, தேன்கவிழ்க்கும் கவிழிணர் பூங்கனி - தேனைச்சொரியும் கவிழ்ந்த பூங்கொத்துகளும் கனிகளும், துவன்றும் ஒருமாவாய் - நிரம்பிய ஒருமாவிருக்கமாய், திகழ்ந்துநின்ற - விளங்கி நின்றன, வீங்கு திறல் புரமூன்றும் இறுத்தநாள் - மிக்க ஆற்றலையுடைய முப்புரங்களையுமழித்தகாலத்து, யாம் போர்க்கோல மேயினேம் - யாம் போர்க்கோலங்கொண்டோம், ஆங்கவையும் கொய்யுளை வெங்கலினவாம் பரிவடிவாய் அமைந்த-அவ்விடத்தவைகளும் கொய்த பிடர் மயிரினையும் கொடியகலினமுமுடைய தாவிச்செல்லுங் குதிரைவடிவமாகப் பொருந்தின, காண்மின் - நீங்களறியுங்கள். (எ - று)

(நாம் வரங்கொடுத்தபடியே அவ்வேதங்கள் நாம் இககாஞ்சிப்பதியில் சோதிலிங்கமாய் உருவமெடுத்தோம் அதற்கியல வேதங்கள் பத்திரபுட்பபலாதிகளோடு ஒருமாமரமாகி நிழலைச்செய்கின்றன, நாம் திரிபுரத்தையெரிக்க அந்நாளில் போர்க்கோலங்கொண்டோம் அதற்கியல வேதங்கள் இரதத்திற்பூட்டும் குதிரைகளாய் வந்தன என்றதென்க. (எ௭)

மற்றைவேடுருவாதிவடிவநாங்கொண்டுழிமாமறையுமாங்கட்
பற்றமைகூருகிர்ஞாளிமுதலியவாய்ப்போந்தனவிப்பதியுளோர்பால்
வெற்றிநடம்புரிகாலைநூபுரமாய்ப்பொலிந்தனவவ்விரிநீர்ச்சூழ
லற்றைநாண்முதல்வேதநூபுரப்பேர்பெற்றுவினையறக்குமாலோ.

(இ - ள்.) மற்றைவேடுருவாதி வடிவம் நாங்கொண்டுழி - மற்றை வேடவுருவமுதலிய வடிவத்தை நாம் கொண்டகாலத்தில், மாமறையும் - பெருமையமைந்த மறைகளும், ஆங்கண்பற்றமைகூர் உகிர்ஞாளி முதலியவாய் போந்தன - அவ்விடத்தில் பற்றுக்கோடமைந்த கூர்மையாகிய நகங்களையுடைய நாய்முதலிய வாகிவந்தன, இப்பதியுள் ஓர்பால் - இந்நகரத்தின் ஓரிடத்தில், வெற்றிநடம் புரிகாலை - வெற்றியைத்தரு நடனஞ்செய்கையில், நூபுரமாய் பொலிந்தன - சிலம்பாக விளங்கின, அவ்விரிநீர் சூழல்-அந்த விரிந்த நீரையுடைய இடம், அற்றை நாள்முதல் - அன்று முதற்கொண்டு, வேதநூபுரம் பேர்பெற்று - வேதநூபுரமென்னும் பெயரைப்பெற்று, வினையறுக்கும் - வினையையொழிக்கும், (எ - று.)

நாம் வேடவுருவமுதலியவை யெடுத்தபோது வேதங்கள் அவ்வுருவங்களுக்கியல நாய் முதலிய வுருக்கொண்டு வந்தன, நாம் இக்காஞ்சி நகரத்து ஓரிடத்தில் நடனஞ்செய்தபோது அந்நடனத்துக்கியலசிலம்பாகி வந்தன, அவ்விடம் அன்றுமுதல் வேதநூபுரமெனப் பெயர்பெற்று விளங்குகின்றதென்க. (எ௮)

மாண்டபெருவளம்படைத்ததாருகாவனத்திடைநாம்பரிக்கவேடம்
பூண்டவழிக்கோவணமாய்ப்பொலிந்தனவால்வ்வாறுபுரைதீர்நம்பால்
வேண்டும்வரம்பெற்றோருங்கும்வேதநூலுணராதாரொம்மைத்தேறு
ராண்டகைமைவேதியர்க்குமேம்பாடுவேதமேயாகுமன்றே.

(இ - ள்.) மாண்ட பெருவளம்படைத்த - மிகமாட்சிமை படைத்த வளமமைந்த, தாருகாவனத்திடை - தாருகா வனத்தின்கண், நாம்பயிக்க வேடம் பூண்டவழி - நாம் பிக்ஷாடன கோலங்கொண்டவிடத்து, கோவணமாய் பொலிந்த - கோவணமாக விளங்கின. இவ்வாறுபுரைதீர் நம்பால் - குற்றமையாகக் குற்றந்தீர்ந்த நம்மிடத்து, வேண்டு வரம்பெற்றோங்கும் - அவற்றுக்க வரங்களைப்பெற்றுச் சிறக்கும், வேத நூல்உணராதார் - வேத நூலையறியாதார், எம்மை யுணரார் - எம்மைத்தெரியார் ஆண்டகைமை மேவியர்க்கும் ஆண்டகைமையுடைய அந்தணர்க்கும், மேம்பாடுவேதமே யாகும் - மேன்மையைத் தருவது வேதங்களேயாகும் எ - று.

நாம் பெருவளம் படைத்த தாருகாவனத்தில் பிக்ஷாடன கோலங்கொண்டோம் அவ்வேடத்துக்கியல வேதங்கள் கோவணமாகிவந்தன, இவ்வாறு நம்மிடத்து வரம்பெற்றுயர்ந்த வேதவுண்மையை யுணராதவர் எம்மைத்தெளியார், வேதியர்களுக்கு மேம்பாட்டைத்தருவதும் இவ்வேதமேயா மென்க.

இறைவனால வேதத்துக்கு மேம்பாடும் வேதத்தால வேதியர்க்கு மேம்பாடும் வந்த தாமென்று குறிப்பித்தமை காண்க. (எக)

இத்தகையமாமறைநூன்முன்னாளித்திருக்காஞ்சிவளைப்பிறதென்சார்
தத்துநீரலைபுரட்டுஞ்சேயாற்றின்றடங்கரைகணிமையோர்கட்கு
மெய்த்தவர்க்குமோதுவிததோமாதலினுமேவுதிருவோத்தூரென்னு
மத்தலத்தினமைதந்தாழ்வோரருமறைநூன்முழுதுணர்ந்துவீடுசேர்வர்

(இ - ள்.) இத்தகைய மாமறைநூல் முன்னாள் இத்திருக்காஞ்சி வளைப்பின் தென்சார்- இத்தன்மையவாகிய பெருமையினையுடைய வேதநூலை முற்காலத்தில் இக் காஞ்சிநகரத்தின தென்புறத்தில, தத்துநீர் அலை புரட்டுஞ் சேயாற்றின் தடங்கரைக் கண் - ததும்புகின்ற நீரையுடைய அலைபுரட்டுகின்ற சேயாற்றின் பெருங்கரையில், இமையோர்கட்கும் மெய்த்தவர்க்கும் ஓதுவித்தோம் - தேவர்களுக்கும் மெய்மை யாகிய தவமுடையவர்களுக்கும் ஓதுவித்தனம், ஆதலினும் - ஆகையால், மேவுதிரு வோத்தூர் என்னும் அத்தலத்தின் எமை தொழுவோர் - யாவராலும் விரும்பப்படும் திருவோத்தூரென்று சொல்லப்படும் அத்தலத்திலெம்மை வணங்குவோர், அருமறை நூல் முழுதுணர்ந்து வீடுசேர்வர் - அருமையாகிய வேதநூல் முழுதுமறிந்து வீடு பெறுவர். எ - று.)

எமக்குபாவிருக்கமாகவும், குதிரையாகவும், நாயாகவும், நூபுரமாகவும், கோவண மாகவும் உருக்கொண்டு வந்து மேன்மைபெற்றதாயும் தன்னையறிவோர்க்கு மேன்மையைத் தருவதாயுமுள்ள வேதநூலை முன்னாளில் இத்திருக்காஞ்சியின் தென்பக்கத்தில் சேயாற்றங்கரையில தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் ஓதுவித்தோம், அதனால் அப் பதிக்கு திருவோத்தூரென்று பெயர். அவ்வோத்தூரில் எம்மை வணங்குவோர் வேத நூல்முழுதுணர்ந்து முத்தியையடைவாரென்க. (அ0)

இன்னமறைவிழியாலிவ்வேகம்பத்தெமைப்பூசையியற்றிரொன்னப்
பன்னகப்பூண்ணிமார்பிற்பரமேட்டிபணித்தமொழிபேணியன்னோர்
சென்னிமிசைக்கரங்கூப்பியானந்தப்பெருங்கடலிற்றிளைத்துவாழ்ந்து
பொன்னிமயப்பிடிமணந்தமணவாளநம்பிகழல்பூசிப்பரால்.

(இ - ள்.) இன்னமறை விதியால் - இப்படிப்பட்ட வேதவிதியால், இவ்வேகம்பத்து எமை பூசை இயற்றீர் என்ன - இத்திருவேகம்பத்தி ஸ்தானத்தில் எம்மைப்பூசனை செய்வீரென்று, பன்னகப்பூண் அணிமார்பின் - பாம்பையாபரணமாக அணிந்த மார்பினையுடைய, பரமேட்டி பணித்தமொழி பேணி-பரமசிவன் கட்டளையிட்ட சொல்லை விரும்பி, அன்னோர் சென்னிமிசை கரம்கூப்பி - அவர்கள் தலைமேற் கைகுவித்து, ஆனந்தம் பெருங்கடலில் திளைத்துவாழ்ந்து - பெருஞ்சுகமாகிய கடலில் முழுகிவாழ்ந்து, பொன் இமயம் பிடிமணந்த மணவாளனடி - அழகியமலைமகளை மணஞ்செய்துகொண்ட மணவாளக் கோலமுடைய இறைவனுடைய, கழல் பூசிப்பார் - பாதங்களைப் பூசை செய்வராயினர். (எ - று.)

முத்தியைத் தருவதாகிய இந்த வேதவிதியால் இந்த ஏகம்பத்தின்கண் எம்மைப் பூசைசெய்யுங்களென்று சொல்ல அப்பரமேட்டி சொல்லை இலலிதாதேவியும் பிரமன் முதலியோரும் அன்புடன் கேட்டுச் சிரமேற்கைகுவித்து ஆனந்தக்கடலினமூழ்கி உமாகாந்தனைப் பூசிக்கத் தொடங்கினார்களென்க. (அசு)

**கலிவிருத்தம்.**

சயமுறுகாரணத்தலைவர் மூவரை
கயலவிழித்தோற்றிய காமக்கண்ணியாம்
பெயரியவிலளிதைப்பிராட்டிவானளா
யுயரியமா முதலொளியைப்பூசித்தாள்.

(இ - ள்) சயமுறுகாரணத் தலைவர் மூவரை - உலகத்துக்குக் காரணமாகிய வெற்றியுள்ள தலைவர் மூவரையும், கயல் விழிதோற்றிய காமக்கண்ணியாம் பெயரிய - சேல்மீன்போன்ற கண்ணினிடம் தோன்றச்செய்த காமாக்ஷி என்னும் பெயரையுடைய, இலலிதைப்பிராட்டி - இலலிதாதேவி, வான் அளாய் உயரிய-வானை யளாவியோங்கிய, மாமுதலொளியை பூசித்தாள்-மாவடியிலமர்ந்த திருவேகம்பநாதனைவழிபாடுசெய்தார்.

என்றும்மாறுது சிருட்டி முதலிய முத்தொழிலைச் செய்யும் பிரமன்முதலிய மூவரையும் முக்கண்ணிற் றோன்றச்செய்த காமாக்ஷியம்மை மாமூலத்தில் ஒளிவிட்டோங்கும் சோதிலிங்கத்தைப் பூசைசெய்தாளென்க. (அஉ)

மற்றதற்கணியதென்மருங்கினப்பெயர்
பற்றியசிவக்குறிநிறுவிபடாயிதழ்
பொற்றசெந்தாமரைப்புனிதன்பூசனை
தெறறெனச்செய்தனன்றெளிந்தசிந்தையான்.

(இ - ள்.) மற்று அதற்கு அணிய - மற்றத்தளிக்கு நெருங்கிய, தென்மருங்கின் அப்பெயர்பற்றிய சிவக்குறி நிறுவி - தென்பால் அடபெயர்சேர்ந்த சிவலிங்கத்தைத்தாபித்து, பாயிதழ் பொற்ற செந்தாமரைப் புனிதன் தெளிந்த சிந்தையால் பூசனை தெற்றென செய்தனன் - பரந்த இதழையுடைய பொன்னிறத்தாமரையிலிருக்கும் பிரமன் தெளிந்த சிந்தையையுடையவனாய் விரைவாகப் பூசனைசெய்தான். (எ - று.)

காமாக்ஷியம்மை பூசித்த திருவேகம்பத்துக்குச் சமீபமாகக் கம்பமென்கிற பெயர் புனைந்த சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து கமலாசனனாகிய பிரமன், தெளிந்த சித்தமுடையவனாய் விரைந்து பூசித்தனனென்க.

இதனால் திருவேகம்பத்துக்குத் தென்பக்கத்திலுள்ள சிவலிங்கம் பிரமனால் பூசிக்கப்பட்டதெனவும், அதனால் அவ்விலிங்கத்திற்கு வெள்ளக் கம்பமெனப் பெயர்வழங்கு மெனவுங்கொள்க. (அஙூ)

பன்னருமா முதல்வாமபாகத்தி
னன்னண மணியணியகன்றமார்பினுன்
மன்னிய வுலகெலாமயக்குமாசையிற
பொன்னவிர்மலர்கொடுபூசையாற்றினுள்.

(இ - ள்) பன்னரு மாமுதல் வாமபாகத்தில் - சொல்லற்கரிய மாவடியில் வீற் றிருக்கும் இறைவனது இடப்பாகத்தில், அன்னணம் மணி அணி அகன்றமார்பினுன் - அவ்வாறே கவுத்துவமணியணிந்த விசாலமான மார்பினையுடைய மாயோன், மன்னிய உலகு எல்லாம் மயக்கும் ஆசையின் - நிலைபெற்ற வுலகமெல்லா மயக்காநின்ற ஆசையான், பொன் அவிர் மலர்கொடுபூசை ஆற்றினுன்- பொன்மயமாகிய மலரைக்கொண்டு பூசித்தான், எ - று.)

திருவேகம்பத்திற்கு இடப்பாகத்தில், பிரமன் பூசித்தபடியே திருமால் உலகை யெல்லாம் மயக்கவேண்டுமென்கிற ஆசையினுல் பொன்மயமாகிய தாமரைமலர்கொ ண்டு பூசைசெய்தனனென்க. (அசு)

பேதமில்பாவனை பிறங்கத்தாணுவுங்
காதலிற்பூசைமுன்னியற்றிக்கணனுதன்
மேதகையடிகளோடொருமைமேயினு
னுதலினிருவர்க்குமில்லைவேற்றுமை.

(இ- ள்.) பேதம் இல் பாவனை பிறங்க தாணுவும் காதலில பூசைமுன் இயற்றி - அபேதபாவனை தோன்ற உருத்திரமூர்த்தியும் காதலாய் முன்பூசைபுரிந்து, கண்ணு தல் மேதகை அடிகளோடு ஒருமைமேயினுன் - கண்ணை நெற்றியிலுடைய மேன்மை பொருந்திய இறைவனேடொருமைப்பாட்டை யடைந்தான், ஆதலின் இருவர்க்கும் வேற்றுமை இல்லை - ஆகையாலிருவருக்கும் வேறுபாடில்லை. (எ - று.)

உருத்திரமூர்த்தி, தனக்கும் பரமசிவத்துக்கும் பேதமில்லாத அபேதபாவனை யாவர்க்கும் விளங்க திருவேகம்பத்துக்கு முன்னே சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்து திரியம்பகனுகிய இறைவனேடொன்ருயினன். ஆகையினுல் உருத்திரமூர்த்திக் கும் சிவத்துக்கும் வேற்றுமையில்லை யென்றதென்க.

எனவே பரசிவத்துக்கு மகாசங்காரக் கடவுளென்று வழங்கும் பெயரொற் றுமையானும், மகாசங்காரக்கடவுள் சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம், என்னும் சுத்ததத்துவங்களைந்தையும் சுதந்தர அதிட்டானங்களாகக் கொண்டு இலய போக அதிகாரங்களியற்றுகின்ருனெனக் கூறுதல் சித்தாந்த மாதலின் இவற்றுள் சுத்த வித்தையை யதிட்டித்து லயத்தைச் செய்யும் உருத்திரமூர்த்தி அம்மகா சங்காரக்கட வுள் சொரூபமேயாகலானும் தாணுவும் கண்ணுதன் மேதகை யடிகளோடொருமை மேயினுன் என்ருர்.

இதனுல் தாதான்மிய சத்தியாகிய சிவசத்தியேதனித்து ஏகம்பத்தைப் பூசித்து அவ் வேகாம்பரநாதனே டொன்ருயிருத்தல்போல சிவசொரூபமாகிய இலய சிவனென்னும் உருத்திரமூர்த்தியும் கல்லகப்பனைப பூசித்து அவனேடொன்ருயினுனென்க.

''மற்றதற்கணிய'' என்னுஞ்செய்யுள் முதல்—''பேதமில்பாவனை'' என்னுஞ் செய்யுள்காறும் பிரமன் முதலிய மூவரும் கப்பனைப்பூசித்த முறையைக்கூறியதாகும்.

இம்மூவருள் பிரமன் வினைந்து செய்தவனும், திருமால் உலகெலா மயக்கு மா சையிற் செய்தவனும் ஆகலான் அவ்விருவருக்கும் வேறுவிசேடணங் கூருதொழிந்

தனர். உருத்திரமூர்த்தி அன்பினாற் பூசித்தவராதலின் மெய்யாசையடிகளேயொருமை மேயினரெனவும், இருவர்க்கும் வேற்றுமையில்லை எனவுங்கூறினார். இனி மூன்று செய்யுளால் மூவர் பூசித்த சிவலிங்கங்களைப் பூசித்தோர் பெறும்பயன் கூறுகின்றார்.

வாலியசிந்தையான் மலர்ப்பொகுட்டணை
மேலவன் வழிபடும் வெள்ளக்கம்பனை
யாலியவன்பினு ளருச்சித்தேத்துவார்
தோலுடற்பொறைகழீஇத் தூயராகுவார்.

(இ - ள்.) வாலியசிந்தையான - தூயசிந்தையையுடையனாகி, மலர்ப்பொகுட்டணை மேலவன் - தாமரையலரில் வீற்றிருக்கும் நான்முகன், வழிபடும் வெள்ளக்கம்பனை - வழிபடுகின்ற வெள்ளக்கம்பனை, ஆலிய அன்பினுள் அருச்சித்து ஏத்துவார் - மிகுகின்ற அன்பினோடு அருச்சனைசெய்து வழிபடுவோர், தோலுடற்பொறைகழீஇ - தோலாலியன்ற உடம்பின் பாரங் கழிந்து, தூயராகுவார் - தூயராவர். (எ - று.)

சித்தசுத்தியோடும் பிரமன் பூசித்த வெள்ளக்கம்பனை அருச்சனைசெய்வோர் தேகபாரங்கழியப்பெற்றுப் புனிதராவரென்க. (௮௬)

மருள்புரிகருத்தினன் மாயனேத்தலிற
கருதுமப்பெயரிய கள்ளக்கம்பனை
திருவடிவழிபடப்பெற்றசீரியோ
ருருகெழுகொடுவினைமையலுட்படார்.

(இ - ள்.) மருள்புரி கருத்தினன் மாயன் ஏத்தலில் - பிறர்க்கு மயக்கத்தை விளைவிக்குங் கருத்தினால் மாயோன் வழிபடலால், கருதும் அப்பெரிய கள்ளக்கம்பனை - எண்ணப்படும் அப்பெயரினையுடைய கள்ளக்கம்பனை, திருவடிவழிபடப்பெற்ற சீரியோர் - அழகிய பாதங்களை வழிபாடு செய்யவடைந்த பெரியோர், உருகெழுகொடுவினைமையலுட்படார் - தோன்றுகின்ற கொடுமையாகிய வினைமயக்கத்திற் சேரார். (எ - று.)

பிறர்க்கு மயக்கத்தை விளைவிக்கும் கருத்தோடு திருமால்பூசித்த கள்ளக்கம்பனை வழிபட்டோர் கொடிய வினைமயக்கி லகப்படாரெனக. (௮௭)

உருத்திரனலத்தகுமொருமைபூண்டுயர்
கருத்தொடும்வழிபடும்நல்லகம்பனை
யருத்தியின்வழிபடுமடியரெமபிரான்
மருத்தபூந்திருவடிக்கலப்பின்மன்னுவார்.

(இ - ள்.) உருத்திரன நலத்தகும் ஒருமைபூண்டு - உருத்திரமூர்த்தி நலமாகிய வொருமை மேற்கொண்டு, உயர்கருத்தொடும வழிபடு நல்லகம்பனை - உயர்வாகிய சிந்தையான் வழிபட்ட நல்லகம்பனை, அருத்தியின் வழிபடும் அடியர் - அன்பினால வழிபட்ட வடியவர், எம்பிரான்மருத்த பூந்திருவடிக்கலப்பின் மன்னுவார் - எமமிறைவனது மணங்கமழுந் தாமரைமலர்போன்ற திருவடிக்கலப்பிற் பொருந்துவார், (எ - று.)

உருத்திரமூர்த்தி, நன்மையாகிய சிவசாயுச்சியத்தை விரும்பி அனபோடும வழிபட்ட நல்லகம்பனை அன்பினால்வழிபடும் அடியவர் இறைவனுடைய திருவடிக்கலப்பில் கலந்து வாழ்வரென்க.

பிரமன் உயிர்களுக்குத் தனுவாதிகளைக்கொடுக்க இறைவனைப் பூசித்தவனுகையால் அச்சிவலிங்கமூர்த்தியையே அத்தனுவாதிகளொழியப் பூசிப்பராயின் உடற்சுமை நீங்கு

மென்பார். தோலுடற்பொறை கழீஇத் துயராகுவரெனவும், திருமால் உயிர்களை வினையினின்றும் நீக்கவொட்டாது அவ்வினையிலேயே ஆழ்ந்து மயங்கியிருக்கப் பூசித்த வனுகையால் அச்சிவலிங்க மூர்த்தியையே அவ்வினை கழியுமாறு பூசிப்பாராயின் அவ்வினை யொழியுமென்பார் உருகெழுமொடுவினை மையலுட்படார் எனவும், உருத்திரமூர்த்தி சிவசாயுச்சியத்தையே விரும்பி அன்போடு பூசித்தவராகையால் அச்சிவ லிங்கமூர்த்தியை வழிபட்டோரும் திருவடிநிழலில் வாழ்வாரென்பார் எம்பிரான் மருத்த பூந்திருவடிக்கலப்பின் வைகுவார் எனவுங் கூறினர்.

இதனால் மூன்றி இலிங்கங்களையும் பூசித்தோரடையும் பயனையுங் காரணங்களையுங் கூறியதாமென்று கொள்ளற்பாற்று. (அஅ)

கருதருநல்லனே கள்ளன் வெள்ளனேர்
தருதிருவேகம்பனென்றுதன்னொடு
மருமலர்க்கவிழிணர்மாவினீழலவா
ழொருவனேநால்வகையுருவமேயினன்.

(இ - ள்.) மருமலா கவிழ் இணர்மாவின் நீழல்வாழ் ஒருவனே - மணம் வீசும் மலர்க்கொத்துகளையுடைய மாவடிநீழலில் வீற்றிருக்கும் ஒப்பற்ற ஏகாம்பரநாதனே, கருதரு நல்லன் கள்ளன் வெள்ளன் ஏர்தரு திருவேகம்பன் என்று - சிந்திதற்கரிய நல்லகம்பன் கள்ளக்கம்பன் வெள்ளைக்கம்பன் அழகினைத்தரும் திருவேகம்பனென்று, தன்னோடு நால்வகை உருவமேயினன் - தன்னுடன் நான்குவகைப்பட்ட சிவலிங்க வடிவங்களைப் பொருந்தி வீற்றிருந்தான். (எ - று.)

மாமரத்தினிழலில் வாழ்கின்ற இறைவனே, நல்லன் கள்ளன் வெள்ளன் ஏகம்பன் என்கிற நாமங்களோடு கூடிய சிவலிங்க வடிவங்களாய்ப் பொருந்தின னென்க. (அகூ)

தென்னுயர்கச்சியினகிலசித்தியு
மன்னுயிர்க்குதவியமகிழ்ந்துநம்பிரா
னன்னணம்பூசைகொண்டருளிமூவர்க்கு
முன்னியவரங்களுமுறையினல்கினன்.

(இ - ள்.) தென் உயர்கச்சியில் - அழகுயருங் காஞ்சிப்பதியினிடத்து, அகிலசித்தியும் மன்னுயிர்க்கு உதவிய மகிழ்ந்து, எல்லாச்சித்திகளையும் நிலைபேறுடைய உயிர்கட்குதவ விரும்பி, நம்பிரான் அன்னணம் பூசைகொண்டு அருளி - நமதிறைவன் அவ்வண்ணம் பூசனைகொண்டருளி, மூவர்க்கும் முன்னியவரங்களும் முறையில் நல்கினன் - திரிமூர்த்திகளுக்கும் எண்ணியவரங்களையும் முறைமையிற் றந்தருளினன். (எ-று)

மேன்மேல் அழகுவளருங் காஞ்சியில் சகல சித்திகளையும் ஆன்மாக்களுக்குதவும் பொருட்டு நமதிறைவன் அவ்வகையாகப் பூசனையைக் கொண்டருளி மும்மைப்பெருந் தேவர்க்கும் வேண்டிய வரங்களைத் தந்தருளினனென்க. (கூ0)

இறைவியிம்மாநிழலினிதுவைகிய
மறைமுதலடியிணைவழிபட்டேத்துபு
நிறைபெருமகிழ்ச்சியினீடுகாதலாற்
குறைவறுவரம்பலகுறித்துவேண்டுவாள்.

(இ - ள்.) இறைவி - இலளிதாதேவி, இம்மாநிழல் இனிது வைகிய மறை முதல் அடி இணைவழிபட்டு ஏத்துபு - இந்த மாமரத்தின் நிழலில் இனிமையா யெழுந்தருளிய வேதநாயகனது இரண்டு திருவடிகளையும் வழிபாடு செய்து வணங்கி, நிறை பெரு மகிழ்ச்சியில் நீடுகாதலால் - நிறைந்த பெருமகிழ்வால் விளைந்த அன்பினால், குறைவறு வரம்பல குறிந்து வேண்டுவாள் - குறைவில்லாத பலவரங்களையும் எண்ணிக் கேட்கத்தொடங்கினாள். (எ - று)

இலளிதாதேவியானவள், மாநிழலிலெழுந்தருளிய இறைவனை வணங்கி மகிழ்ந்து அன்புமேலிட்டு குறைவற்ற பலவரங்களை நினைந்து கேட்கத் தொடங்கினளென்க.

அடியிணையை யர்ச்சிப்பதால் வருவது மகிழ்ச்சியும் அம்மகிழ்ச்சியால விளைவது அன்புமாதலால் அடியிணை வழிபட்டேத்துபு நிறைபெரு மகிழ்ச்சியி னீடுகாதலால எனவும், ஆன்மாக்களுய்யும் வகையெல்லாம் எண்ணினளாதலால் குறைவறு வரம்பல குறித்து எனவுங்கூறினர். (௬௰)

வேறு.

வேதக்கோவணவேதப்புரவிய
வேதப்பூணவவேதமுதல்வனே
வேதத்தானுமுணர்வருமேதகாய்
வேதச்செல்வவென்விண்ணப்பங்கேண்மதி.

(இ - ள்,) வேதக்கோவண - வேதமாகிய கோவணமுடையானே, வேதப்புரவிய - வேதமாகிய குதிரையையுடையவனே, வேதப்பூண - வேதமாகிய ஆபரணமுடையவனே, அவேதமுதல்வனே - அந்த வேதங்களுக்கு இறைவனே, வேதத்தானும் உணர்வருமேதகாய் - அவ்வேதங்களாலும் அறிதற்கரிய மேன்மையையுடையானே, வேதசெல்வ - வேதமாகிய செல்வமுடையானே, என்விண்ணப்பம் கேள் - அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருள். (எ - று.)

வேதத்தையே உடுக்குங் கோவணமாகவும், ஊரும் குதிரையாகவும், அணியும் ஆபரணமாகவும், உடையவனே, அவ்வேதத்திற்கு நீயே தலைவனாக உள்ளவனே, அவ் வேதத்தாலும் உணர்வதற்கரிய பொருளாயுள்ளவனே, அவ்வேதத்தையே செல்வமாக வுடையவனே என் விண்ணப்பத்தைக் கேட்டருள்வா யென்றனளென்க.

இறைவனுக்கேவேதமுடைமை என்பது தோன்ற வேதக்கோவண வேதப்புரவிய வேதப்பூண எனவும், வேதத்திற்குத் தலைவர் பிறதேவராகார் என்பது தோன்ற வேதமுதல்வனே எனவும், ஏனைய தேவரெல்லாம் வேதத்தாலளந்தறியப் பட்டவர் சிவபெருமானொருவனே யளந்தறியப்படாதவ னெனபது தோன்ற வேதத்தானு முணர் வருமேதகாய் எனவும், அவ்வேதத்தால் புகழ்ந்து கூறும் புகழுரைக்கெல்லாம் பொருளாயுள்ளவன் அவ்விறைவனே யென்பது தோன்ற வேதச்செல்வ எனவுங் கூறினர். மதிமுன்னிலை யசைச்சொல்.

மன்றலார்மறைமாவினடித்தலத்
தென்றுமேவுதியேனுமியோகியர்க்
கன்றித்தோன்றிலையாயினேயீண்டினி
மன்றயாவர்க்குங்காட்சிவழங்குவாய.

(இ - ள்.) மன்றல் ஆர் மறை மாவின் அடிதலத்து என்றும் மேவுதியேனும் - நறுமணங்கமழ்கின்ற வேத மாவிருக்கத்தினடியில் எக்காலத்தும் வீற்றிருந்தனை யாயி

னாய், இயோகியர்க்கு அன்றி தோன்றிலை ஆயினை - யோகிகளுக்கல்லாமல் (ஏனையோர்க்கு) புலப்படாதிருக்கின்றனை, இனி ஈண்டு மன்றயாவர்க்கும் காட்சி வழங்குவாய் - இனிநீ இவ்விடத்து எளிதில் எல்லோர்க்கும் தரிசனந்தந்தருள்வாய். (எ - று.)

(இலளிதாதேவி இறைவனைத் தோத்திரஞ் செய்து விண்ணப்பஞ் செய்த வரமாவது) இறைவனே நீ எக்காலும் இந்த சகவினடித்தலத்தில் எழுந்தருளி யிருப்பவனாயினும் யோகிகளுக்கன்றி ஏனையோர்க்குத் தோன்றுகிறதில்லை ஆகையால் இனி இவ்விடத்தில் யாவர்க்குங் காட்சிதந்தருள்வா யென்றதென்க.

எனவே யோகிகள் உன்னைக்கண்டு தரிசித்தல்போல் யோகநெறியில் நிற்கப் பெறாத ஏனையோரும் கண்டு களிக்கும்படி வெளிப்பட்டிருத்தல் வேண்டுமென்று வேண்டியதென்க.

உம்மை இரண்டின் முன்னது உயர்வு சிறப்பு, பின்னது முற்று. (௬௩)

தெள்ளுநீம்புனலித்திருக்கம்பையும்
வள்ளலோரிடைக்காண்டகமன்னுகென்
றொள்ளிழைக்கிரியுத்தமிவேண்டலும்
பிள்ளைவெண்பிறைக்கண்ணியன்பேசுமால்.

(இ - ள்.) வள்ளல் - வேண்டுவார் வேண்டும் வண்ணம் அளிப்பவனே, தெள்ளுநீம்புனல் இத்திருக்கம்பையும் - தெளிந்த இனிமையான நீரையுடைய இச்சிறந்த கம்பாநதியும், ஓரிடைகாண்டக மன்னுக என்று - ஓரிடத்தில் (எல்லாரும்) காணத்தக நிலைபெற வேண்டுமென்று, ஒள்ளிழைக்கிரி உத்தமி வேண்டலும்-விளக்குமாபரணமணிந்த உமாதேவி வேண்டுதலும், பிள்ளை வெண்பிறை கண்ணியன் பேசும் - ஒற்றைக் கலைச் சந்திரனையணிந்த இறைவன் சொல்லுவான். (எ - று)

இறைவனே நீ யாவருங்காண விளங்குவதன்றி இந்தக்கம்பாநதியும் யாவருங் காண ஓரிடத்தில் நிலைபெற்றிருக்க வேண்டுமென்று உமாதேவியார் வேண்டவும் இறைவன் கூறுவான் என்றதென்க.

இறைவன் யாவருக்குந் தோன்றுநிருந்ததுபோல் கம்பாநதியுந் தோன்றுநிருந்ததாகலான் அதுவுந் தோன்றுமாறு வேண்டினரென்பார் இத்திருக்கம்பையும் ஓரிடைக் காண்டக மன்னுகென் றொள்ளிழைக்கிரி யுத்தமி வேண்டலும் என்றார். (௬௪)

வேறு.

மன்னுயிர்முழுதும்பயந்தமாணிழாய்
யன்னவையுய்யுமாகருதியன்பினு
லின்னவைபுகன்றனை மகிழ்ச்சியெய்தினேம்
பன்னுதுமனக்கொளப்பரிந்துகேண்மதி.

(இ - ள்.) மன் உயிர் முழுதும் பயந்த மாணிழாய் - நிலைபெறுன உயிர்களையெல்லாம் பெற்றெடுத்த மாட்சிமைதங்கிய ஆபரணமணிந்தவளே, அன்னவை உய்யுமாறு கருதி அன்பினுல் இன்னவை புகன்றனை - அவ்வுயிர்களுய்யும்வகை நினைத்து அன்பினு லிந்த வரங்களைக் கேட்டனை, மகிழ்ச்சி எய்தினேம்-மகிழ்வடைந்தோம், பன்னுதும் மனம் கொளப்பரிந்து கேள் - சொலகின்றேம் (அவற்றை) மனத்தில் பொருந்த அன்புவைத்துங் கேட்பாயாக. (எ - று.)

இலளிதாதேவியைப் பார்த்து உயிர்களையெல்லாம் பெற்றவளே, நீ கேட்டவரங்களைச் சிந்திக்குங்கால் நீ பெற்றெடுத்த வுயிர்களெல்லாம்பிழைக்கும் வகையை நாடி

என்னை வேண்டியதாகும் (ஆகையால்) நாமும் மகிழ்ந்தோம். (இனிநாம்) சொல்லுகின்றோம் கேட்பாயாக என்றதென்க.

· உயர்தமக்களை உய்யும்வகை நாடிக் காத்தல் தாய்க்கேயன்றி- தந்தைக்குங் கடனாதலின் இன்னவை புகன்றனை மகிழ்ச்சி எய்தினேம் என்றார்.

பன்னுதும் தம்மீற்றுத் தன்மைப் பன்மை. அது ஈண்டொருவரைக் கூறும் பன்மை. (௯௫)

மேதகுசிற்பரவியோமரூபநீ
யோதியசிற்பரவியோமரூபியா
மாதர்வாணுதலியப்பரமவானமும்
பேதுறவொழிக்குமிப்பிலத்துவாரமே.

(இ - ள்.) மாதர் வாள் நுதலி - விருப்பந்தரும் ஒள்ளிய நெற்றியையுடையாளே, மேதகு சிற்பரவியோமரூபம்நீ - மேன்மையமைந்த ஞானமாகிய பரவியோமரூபம் நீ ஓதிய சிற்பரவியோமரூபியாம் - சொல்லப்பட்ட சிற்பரவியோமரூபி நாம், அப்பரம வானமும் பேதுற ஒழிக்கும் இப்பிலத்துவாரம் - அந்தப்பரமாகாசமும் பேதமையைப் போக்கும் இந்தப்பிலத்துவாரமே யாம். (எ - று.)

தேவியே, ஞானமயமாகிய சிதாகாசசரூபம்நீ, அச்சிதாகாச ரூபிநாம், அந்தச்சிதாகாசமும் இந்த பிலாகாசமாம் என்றதென்க.

இறைவன் இறைவியைநோக்கி நம்மிருவருக்கும் சொரூபம் ஆகாசம் அவ்வாகாசம் இப்பூதாகாச மன்று ஞானகாசம் அந்த ஞானகாச வடிவம் நீ, அந்த வடிவத்தையுடையவன்நான் என்பார் சிற்பரவியோமரூபியாம் ரூபநீ எனவும், அங்ஙனம் ஞானமயமாகிய நம்மை இங்குக்காணப் பெற்றதுபோல் நமது வடிவமாயிருக்கின்ற இச்சிதாகாசத்தையும் இங்குக்காணலா மென்பார் அப்பரம வானமும் - இப்பிலத்து வாரமே எனவும் கூறினார். (௯௬)

மற்றிருவேரங்கட்கும்வடிவமாகுமப்
பொற்றனிப்பிலத்தினைப்புண்ணியஞ்செய்து
பற்றறத்துறந்தவர்காண்பர்பற்றமை
சிற்றறிவுடையவர்தமக்குச்சேயதே.

(இ - ள்.) இருவோங்கட்கும் வடிவமாகும் அப்பொற்றனிப் பிலத்தினை - நம்மிருவோருக்கும் சொருபமாகும் அவ்வழகிய ஒப்பில்லாதபிலாகாசத்தை, புண்ணியஞ்செய்து பற்று அற துறந்தவர்காண்பர்- புண்ணியத்தைச்செய்து அகப்பற்று புறப்பற்றென்னும் இருவகைப்பற்றும் நீங்கத்துறந்த ஞானிகளே காண்பார்கள், பற்று அமை சிற்றறிவுடையவர் தமக்குச்சேயது - அப்பற்றமைந்த சிற்றறிவுடையவர்க்கு இப்பிலாகாசம் தூரமானது, (எ - று.)

நம்மிருவருக்கும் வடிவமாயிருக்கின்ற இந்த பிலாகாசத்தை சிவபுண்ணியத்தைச் செய்து இருவகைப்பற்றுக்களையும் துறந்தவர்களேகாண்பார். பற்றைத்துறவாத சிற்றறிவுடையவர் காணுரொன்றதென்க.

இதனால் - சத்திசிவங்களுக்குச் சொரூபமாயுள்ளது சிதாகாசமென்வும், அச்சிதாகாசம் இந்த பிலமெனவும்,இப்பிலத்தின்சிறப்பைச் சிவபுண்ணியத்தால் சிவஞானம் பெற்றோரே காண்பரெனவும், சிவஞானம்பெறாத சிற்றறிவுடையார் காணுரென்வும் கொள்ளக்கிடந்தன, அன்றியும் - புண்ணியஞ்செய்து பற்றறத்துறந்தவர் காண்பர் என்றத

ளால் பற்றறுதி புண்ணியத்தாலன்றி ஆகாதெனவும், அப்புண்ணியம் பசுபுண்ணிய மன்று பதிபுண்ணியமெனவும், அப்பதிபுண்ணியமே ஞானத்தைக் கொடுக்குமெனவும், அந்த ஞானத்தால் காணலாமெனவும், அப்பிலத்தின் பெருமையை விளக்கியதாமென்க.

ஆயிடை மகிழ்ந்தினி துறைது மாய்தொடி
மேயவப் பிலத்தினு மிக்க காதலின்
ணேயுமிச் சுடரொளி யிலிங்கத் துன்னொடு
மாயிரும் புவிதொழ மன்னி வைகுதேம்.

(இ - ள்) ஆய்தொடி - ஆய்ந்த தொடியையணிந்த உமையவளே, ஆயிடை மகிழ்ந்து இனிது உறைதும் - அவ்விடத்து மகிழ்ந்து இனிமையாக வசிப்போம், மேய அப்பிலத்தினும் மிக்க காதலின் ஏயும் இச்சுடர் ஒளி இலிங்கத்து - விரும்பப்பட்ட அப்பிலாகாசத்தினும் மிகுந்த அன்பினால் பொருந்துகின்ற இந்தச் சுடர் விட்டெழும்சோதிலிங்கத்தின்கண், உன்னொடு மா இரும்புவி தொழ மன்னி வைகுதேம் - உன்னொடு மிகப்பெரிய உலகம் வழிபடப் பொருந்தி வசிப்போம். (எ - று)

உமாதேவியே, நாம அந்தப்பிலாகாசத்தில் இனிமையாகவசிப்போம். அப்பிலாகாசத்தினும் இச்சோதிலிங்கத்தில் உன்னோடும்மிக்க அன்பினால் வசிப்போம் (அங்ஙனம் வாழ்வது) உலகமெல்லாம் வழிபட என்றதென்க.

ஆன்மாக்கள் சிவரூபத்தையும் சிவரூபியாகிய தன்னையும் தனதருளையும் காண்டல் தன்னாலன்றி அமையாவாகலான் மாயிரும்புவிதொழ மன்னிவைகுதேம் என்றார். பிலத்தை சித்சொரூபமாகவும், சிவலிங்கப்பெருமானை சிவரூபியாகவும், அச்சிவலிங்கப்பெருமானைவிட்டு நீங்காத சிற்சத்தியை அருளாகவுங்கொள்க

பிலத்தினும் இலிங்கத்துன்னொடும் மன்னிவைகுதேம் என்றதனால் சிவபெருமான் பிலரூபமாயும் இலிங்கரூபமாயும் தேவிரூபமாயும் காஞ்சியில் விளங்குகின்றானென்க

ஆய்தொடி அன்மொழித்தொகை. ஆயிடை அகரச் சுட்டுநீண்டது. சுடரொளி ஒருபொருட் பன்மொழி. (௬௮)

இதற்குமுன் னெண்டெமையெவருங் காண்கில
ரிதற்குமேனீபெறுமெழில்வரத்தினா
லதித்திட யாவருங் கண்டுபோற்றுக
கதிர்ந்தவான்பிலத்திடையுனையுங்காண்கவே.

(இ - ள்) இதற்குமுன் எண்டு எமை எவரும் காண்கிலர் - இதற்குமுன்பு இவ்விடத்திலெம்மை யாரும் காணவில்லை, இதற்குமேல் நீ பெறும் எழில்வரத்தினால் - இதற்குமேல் நீ பெற்ற நலவரத்தினால், அதித்திட யாவரும் கண்டுபோற்றுக - ஓங்க யாவரும் தரிசித்துத்துதிக்கக்கடவர், கதிர்ந்த வான்பிலத்திடை உனையும் காண்க - விளங்கிய பரமாகாசமாகிய பிலத்தினிடத் துன்னையுந் தரிசிக்கக்கடவர். (எ - று.)

உன்னோடு நாம் பிலத்தினிடத்தும் இலிங்கத்தினிடத்தும் வசித்திருந்தும் ஒருவருங் கண்டதில்லை. எம்மையாவருங் காட்டி வழங்குவாயென்று நீவேண்டியபடியினால் நாம் வெளிப்பட்டிருப்போம் இனிமேல் நம்மைத்தெரிசித்து மேன்மையையடையயாவரும் போற்றக்கடவர். நம்மையிங்குக் காண்பதுபோல் உன்னையும் இப்பிலத்தில யாவருங் காணக் கடவரென்றதென்க.

இப்பிலாகாசத்தில் யாவருக்குந் தோன்றாதிருக்கும் நாமிருவரும் இனியாவருங் காண பிலாகாசத்தினிரண்டு கோடியிலும் வெளிப்பட்டிருப்போமென்று இறைவன் கூறினானென்க.

இறைவனைக்கண்டவர் அருளைக்கருதாராயின் பயனுண்டோ வென்பார் உனையுங் காண்க என்றார். எனவே என்னைக்காண்பதெல்லாம் அருள்பெறுவதற்கேயன்றி வேறின்றாகலான் என்பதாம். (௯௯)

எற்றுநீர்க்காஞ்சியேயெமக்குமேனியாந்
தெற்றெனத்தெளிமதியிணையசீர்மையான்
முற்றொளிவானவர்முனிவர்தாமெலா
மற்றிவண்விளங்கியுமறைந்துவைகுவார்.

(இ - ள்.) எற்றுநீர் காஞ்சியே எமக்கு மேனியாம் - மோதுகின்ற நீரையுடைய காஞ்சித் திருப்பதியே எமக்குத் திருமேனியாகும், தெற்றென தெளி - (இதை) தெளிவாகத் தெளிந்துகொள், இணைய சீர்மையான் முற்றொளிவானவர் முனிவர் தாம் எல்லாம் - இச்சிறப்பினால் முற்றுகின்ற ஒளியையுடைய தேவர் முனிவரெல்லாம், இவண் விளங்கியும் மறைந்தும் வைகுவார் - இங்கே தோன்றியும் மறைந்தும் வசிப்பார்கள். (எ-று.)

(முன்னர்க் கூறியமுறையால்) காஞ்சிநகரமே எமக்குத்திருமேனியாகும், இதனை நன்றாயறிவாய் இச்சிறப்பினால் தேவர்முனிவரெல்லாம் தெரிந்தும் மறைந்தும் வைகுவரென்க. (௪00)

உலகமிக்கோயிலினுறுப்புமுற்றுமாய்க்
குலவியீங்கெனைத்தொழுதுறையுங்கோற்றொடிப்
புலவுவேலிணைவிழிப்புளகப்பூண்முலை
யிலவிதழ்மதிநுதலிமயமாதராய்

(இ - ள்.) கோற்றொடி - அழகிய வளையலையும், புலவுவேல் இணை விழி - ஊன் தங்கிய வேல்போன்ற இரண்டுகண்களையும், புளகம் பூண்முலை - புளகரும்பும் தனங்களையும், இலவு இதழ்மதிநுதல் - இலவமலர்போலுஞ் செவந்திருக்கும் இதழினையும் பிறைபோலும் நெற்றியையுமுடைய, இமயமாதராய் இமராசபுத்திரியே, உலகம் இக் கோயிலின் உறுப்புமுற்றுமாய் குலவி - உலகமானது இவ்வாலயத் துறுப்புமுழுதுமாய்ப் பொருந்தி, ஈங்கு எனை தொழுது உறையும் - இவ்விடத்திலெம்மை வணங்கி வசிக்கும்; (எ - று.)

இமராசபுத்திரியே (இக்காஞ்சி எமக்குத் திருமேனியாகலான் ஏனைய உலகமெல்லாம் கோயிலுக் குறுப்பாகப்பொருந்தி எம்மைத்தொழுது வாழுமென்க. (௪0௧)

### அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

விரவுசீர்நல்லகம்பம்விளங்கொளிவெள்ளக்கம்பம்
வரமருள்கள்ளக்கம்பம்வண்டிருமயானம்வாலீச்
சரமெனுமிலிங்கமைந்திற்றகுபஞ்சபிரமமாகி
யிரவுசெய்குழலாய்நின்றேடினிதுவீற்றிருப்பங்கண்டாய்

(இ - ள்.) இரவு செய்குழலாய் - இருள்செய்கின்ற கூந்தலையுடையாளே, விரவுசீர் நல்ல கம்பம் விளங்கொளி வெள்ளக்கம்பம் வரம் அருள் கள்ளக்கம்பம் - பொருந்துகின்ற சிறப்பினையுடைய நல்லகம்பமும், விளங்குகின்ற சோதியினையுடைய வெள்ளக் கம்பமும் வரத்தையுதவும் கள்ளக்கம்பமும், வண்திருமயானம் வாலீச்சுரம் என்னும் இலிங்கம் ஐந்தில் - வளப்பம் பொருந்திய கச்சிமயானமும் வாலீச்சரமும் என்றுசொல்

லப்படும் பஞ்சலிங்கங்களிலும், தகு பஞ்சப்பிரமம் ஆகி - தகுதியமைந்த பஞ்சப்பிரம சொரூபமாகி, நின்னோடு இனிதுவீற்றிருப்பம் - உன்னோடினிமையாக எழுந்தருளி யிருப்போம். (எ - று.)

நல்லகம்பம், வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், கச்சிமயானம், வாலீச்சரம் என்று சொல்லப்பட்ட பஞ்சலிங்கங்களில் பஞ்சப்பிரம சொரூபமாகி (நாம்) உன்னோடு வீற்றிருப்போ மென்றதென்க.

இதனால் ஈசானம் தற்புருஷம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதம் என்னும் பஞ்சமூர்த்தங்களையும் சிவசொரூபமாகக் கொள்ளல்போல் நல்லகம்பமுதலிய பஞ்சலிங்கங்களையும் வேற்றுமையாகக்கொள்ளாது சோதிலிங்க சொரூபமாகவே கொள்ளவேண்டு மெனபதாம். (௪0௨)

என்னலுமிறைஞ்சிநல்வாலீச்சரம்யாங்கணெந்தா
யன்னதுகண்டோர்யாவரதன்றிறம்யாதோவென்னப்
பொன்னவிர்சுணங்குபூத்தபொமமல்வெம்முலையாள்கேட்பக்
கன்னல்வேளெரியநோக்குங்கண்ணுதலருளிச்செய்யும்.

(இ - ள்.) என்னலும் இறைஞ்சி எந்தாய் - என்று சொல்லுதலும் (அம்மையார்) வணங்கி எம்மிறைவனே, நல்வாலீச்சரம் யாங்கண் - நன்மையாகிய வாலீச்சரம் எவ்விடத்தது, அன்னது கண்டோர் யாவர் அதன் திறம் யாது என்னம்-அதைப்பிரதிஷ்டை செய்தவர்கள் யாவர் அதன் மகிமையாது என்று, பொன் அவிர் சுணங்கு பூத்த பொம்மல் வெம்முலையாள் கேட்ப - பொன்போலும் விளங்குகின்ற தேமல்படர்ந்து பூரித்த விருப்பைத்தருகின்ற தனங்களையுடைய உமையம்மை கேட்க, கன்னல்வேள் எரியநோக்கும் கண்ணுதல் அருளிச்செய்யும் - கரும்பு வில்லையுடைய மன்மதனைச் சாம்பராகப் பார்த்தருளிய கண்ணுதற்பெருமான கருணை செய்வான். (எ- று.)

(நல்லகம்பமுதலிய பஞ்சலிங்கங்களில் பஞ்சப்பிரம சொரூபமாயிருப்போ) மென்று சொல்லவும் உமாதேவியார் வணங்கி எம்மிறைவனே (நீகூறிய பஞ்சலிங்கங்களில் வாலீச்சரமென்னும் இலிங்கம் எவ்விடத்துள்ளது, அதனைப் பூசித்தவர் யாவர் அதன் மகிமையாது என்று கேட்க மன்மதனையெரிய நோக்கிய கண்ணுதல்கூறுவான் என்றதென்க. (௪0௩)

கண்ணுதல் அன்மொழித்தொகை.

வாலிமாவிலிங்கமேன்மைகேண்மதிமயானக்கீழ்சார்
சீலமார்சித்தர்பல்லோர்சித்திகள்வேண்டிப்போற்ற
மூலமாயொளியாயின்பாய்முகிழ்த்ததுவாயுலிங்க
மேலவார்குழலாயென்றுமகிழ்ந்தினிதிருப்பேமங்கண்.

(இ - ள்.) ஏலவார்குழலாய் - தகரச்சாந்தணிந்த நீண்ட கூந்தலையும் ஒருவ. வாலிமா இலிங்கமேன்மைகேள்-வாலியான் வழிபடப்பட்ட பெரிய இலிங்கமகத்துவத்தின் சிறப்பை யாம் சொல்லக்கேளாய், மயானக் கீழ்சார் சீலம் ஆர் சித்தர்பல்லோர் சித்திகள் வேண்டி போற்ற - திருக்கச்சிமயானத்தின் கீழ்ப்பக்கம் ஒழுக்கம் நிறம்பிய நிறைந்தபலசித்தர்கள் பல சித்திகளைநாடி வழிபட, மூலமாய் ஒளியாய் இன்பாய் வாயுலிங்கம் முகிழ்த்தது-எப்பொருட்கும் காரணமாயும் சோதிசொரூபமாயும் இன்பவுருவமாயும் வாயுலிங்கந்தோன்றியது, அங்கண் என்றும் மகிழ்ந்து இனிது இருப்பேம்-அவ்விடத்தில் எந்நாளும் யாம்மகிழ்ந்து இனிதாகவீற்றிருப்போம் (எ - று.)

ஏலவார்குழலி, வாலீச்சர லிலிங்கத்தின் சிறப்பைக்கேள் கச்சிமயானத்திற்குக் கீழ்பால் சித்தர்களப்பலர் சித்திகளை வேண்டிப்போற்ற அவ்விடத்தில் வாயுலிங்கந்தோன்றியது. அவ்விலிங்கத்தில் நாம் எக்காளும் மகிழ்ந்திருப்போம் என்றுமென்க.

இதனால் வாலீச்சரலிங்கம் கச்சிமயானத்தின் கீழ்பாலுள்ளதென இடத்தையும், சித்தர்களால் பூசிக்கப்பெற்றதெனக் கண்டோரையும் கூறியதாமென்க.

ஏலவார்குழலாளென்றது ஏகாம்பரநாதரது சத்தியின்றிருப்பெயர் இதனை "ஏலவார்குழலாளுமைநங்கை யென்றுமேத்திவழிபடப்பெற்ற காலகாலனை" என நம்பிகளருளிச் செய்தமையானுமறிக. சுயம்புவென்றுதோன்ற முகிழ்த்ததென்றார். (சு0௪)

வாலிமுன்றொழுதுநேர்ந்தார் வலத்தினிற்பாதியாண்டுந்
தோல்வியில்வாகையோடும்பெற்றனனென்றேநூகாவென்றான்
கோல்வளைவாலியென்பான்யாரெவன்குமரன்மற்றுன்
பால்வரம்பெற்றதெவ்வாறென்றலுமபகரலுற்றான்

(இ - ள்.) தோகாய் - மயில்போலுஞ் சாயலையுடையாளே, முன் வாலிதொழுது - முன்பு வாலி என்பவன்வணங்கி, நேர்ந்தார் வலத்தினில் பாதி யாண்டும் தோல்வியில் வாகையோடும் பெற்றனன் - தன்னை எதிர்த்தவர் வலத்தினிற்பாதி எப்பொழுதுந் தோல்வியில்லாத வெற்றியோடும் அடைந்தனன், என்றான் - என்று கூறினன், கோல்வளை - அழகியவளையையணிந்த உமையம்மை, வாலி என்பான் யார் எவன் குமாரன் - வாலி என்று சொல்லப்படுபவன் யார் எவன் மகன், உன்பால் வரம்பெற்றது எவ்வாறு என்றலும்பகரலுற்றான் உன்னிடத்து வரம்பெற்றமையெவ்வகை என்று வினவுதலும் இறைவன் சொல்லத்தொடங்கினன் எ-று)

உமாதேவியே, முன் வாலியென்றொருவனுள்ளன் அவன் தன்னை யாராயினும் எதிர்ப்பாராயின் அவர் வலத்தில்பாதி தனக்குவரவும், எக்காளும் தோல்வியில்லாதவெற்றியும் பெற்றனன் என்று இறைவன்கூறினன். உமாதேவியார் வாலியென்பவன் யாவன் யார் மகன் உன்பால் வரம்பெற்றது எப்படி என்றுகேட்கவும் மீட்டும் இறைவன் கூறத்தொடங்கினனென்க.

வாலீச்சரமெனப்பெயர்வந்தகாரணம் கூறுவான் வாலிமுன்தொழுதனனெனவும், அவன் பெற்றவரத்தை விளக்குவான நேர்ந்தார் வலத்தினிற்பாதி யாண்டுந்தோல்வியில் வாகையோடும் பெற்றனன் எனவுங்கூறினர். இவ்விரண்டுங் கூறவே இறைவி அவன் வரலாற்றைக்கேட்க விரும்பினளென்பார் வாலியென்பான் யார், எவன்குமாரன், உன்பால்வரம்பெற்றது எவ்வாறு என்றாளென்க.

வாகை - வெற்றிமாலை தும்பைவேய்ந்து போர்பொருதவன் வெற்றிபெற்ற வழி புனையு மலர்மாலை. கோல்வளை என்றது அன்மொழித்தொகை. தோகை-ஆகுபெயர். விளியுருபு பெற்றுத் தோகாயென ஈறுதிரிந்தது. (சுOடு)

பண்ணவர்முனிவரான்றோர்பாங்குறமிடைந்துவைக
விண்ணவர்க்கிறைவன்புத்தேள்வேத்தவைத்தவிசின்மேனாு
ளுண்ணிடையணங்குநல்லார்மின்கொடிநுடக்கமானக்
கண்ணெதிராடமாடல்கண்டுவீற்றிருந்தானாக.

(இ - ள்.) மேனாள் - முன்னோர் காலத்தில், பண்ணவர் முனிவர் ஆன்றோர் பாங்குறமிடைந்து வைகவிண்ணவர்க்கு இறைவன் - தேவர்களும் முனிவர்களும் (கல்வி கேள்விகளில்) முதிர்ந்தவர்களும் இருபக்கங்களில் நெருங்கிச் சூழ்ந்திருக்கத் தேவர்

களுக்குத் தலைவனாகிய இந்திரன், புத்தேள் வேந்தவை தவிசின் - இந்திரசபையில் தன் சிங்காதனத்தின்மேல் (வீற்றிருந்து), நுண்ணிடை அணங்கு நல்லார் - சிற்றிடையையுடைய அரமகளிர், மின்கொடி நுடக்கம் மான - மின்னற்கொடி துவளல்போல, கண் எதிர் ஆடும் ஆடல் கண்டு வீற்றிருந்தான் - தன்விழியெதிரில் ஆடுகின்ற நடனத்தைப் பார்த்துச் சிறப்புடனிருந்தானாக. (எ - று.)

முன்னாளில் தேவர்முதலிய யாவரும் இருபக்கமுஞ் சூழ்ந்திருக்க இந்திரசபையில இந்திரன் சிங்காதனத்திருந்து அரம்பையராடும் ஆடலைக் கண்ணுற்றிருந்தனனென்க.

இதனால் இறைவன் வாலியின் பிறப்பைக்கூறத் தொடங்கினனென்க.

வேந்தவை என்றது வலிந்துநின்றது. இந்திரசபை என்றது - சுதர்மையை. புத்தேள் வேந்து-இந்திரன். (௧0௬)

அங்கவ்ரா டல்கா ணுமா சையாலிருள்கால்சீக்குஞ்
செங்கதிர்க்கடவுண்மானமேர்செலுத்துறுமருணனுங்கண்
வெங்கதிர்விடைபெற்றேகியரமபையர்விண்ணோரெல்லாம
மெங்கணுநிறைந்தவாற்றாலிடம்பெறாதிதனைச்செய்வான்.

(இ - ள்.) அங்கு அவர் ஆடல்காணும் ஆசையால் - அவ்விடத்தில் அவ்வரம்பயருடைய ஆட்டத்தைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்தால், இருள் கால்சீக்குஞ் செங்கதிர்க்கடவுள் மான்தேர் செலுத்துறும் அருணன் - இருட்டொழுதை நீக்கும் செங்கிரணமுடைய சூரியனது குதிரைகட்டிய தேரையோட்டும் அருணனானவன், ஆங்கண் வெங்கதிர் விடைபெற்று ஏகி - அந்தேவேந்திரசபைக்கு கொடியகிரணங்களையுடைய சூரியனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சென்று, அரம்பையர் விண்ணோர் எல்லாம் எங்கணும் நிறைந்த ஆற்றால் - தெய்வப்பெண்களும் தேவர்களும் எங்குநிறைந்திருப்பதினால், இடம்பெறாது இதனைசெய்வான்-இடமகப்படாமல் இந்த உபாயத்தைச் செய்யத்தொடங்கினான். (எ - று.)

தேவசபையில் அரம்பையராடலைககாணும் ஆசையால் சூரியன் தேர்ப்பாகனாகிய அருணன் சூரியனிடத்தில் விடைபெற்று விண்ணுலகிற்சென்று அச்சபையைப்பார்க்கு மளவில் உள்ளே செல்வதற்கிடமில்லாமையால் ஒருபாயஞ்செய்யத் தொடங்கினனெ ன்க.

வெப்பமாகிய கிரணமுடைமையால் வெங்கதிர் என்றும், செம்மையாகிய கிரண முடைமையால் செங்கதிரென்றுங் கூறினர். (௧0௭)

அற்புதவனப்பின்வாய்ந்தவரம்பையரெவர்க்குமுன்னர்
நிற்பதுநோக்கித்தானுநேரிழைவடிவுகொண்டு
பொற்புறுமாடல்பார்த்துநிற்றலும்புல்லாருட்கு
மறபொலிகுலிசப்புத்தேளத்தகைவடிவைக்கண்டான்,

(இ - ள்) அற்புதவனப்பின் வாய்ந்த அரம்பையர் எவர்க்கு முன்னர் நிற்பது நோக்கி - அற்புதமான அழகுவாய்ந்திருக்கும் அரம்பையர் அச்சபையிலுள்ள யாவருக்கும் முன்னதாக நிற்பதைப்பார்த்து, தானும் நேரிழை வடிவுகொண்டு - தானுமொரு பெண்வடிவமெடுத்து, பொற்புறும்ஆடல் பார்த்து நிற்றலும் - அழகுபொருந்திய ஆட்டத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கையில், புல்லார் உட்கும் மறபொலி குலிசப்புத்தேள் - பகைவர்நாணும் வலியமைந்த வச்சிராயுதத்தையுடைய இந்திரன், அத்தகை வடிவைக்கண்டான் - அந்த வடிவத்தைப் பார்த்தான். (எ - று.)

(அந்த அருணன் செய்தவபாயம்) எல்லாரையும் அந்தேவசபையில் அழகிற் சிறந்த அரம்பையர்கள் எவர்களுக்கும் முன்னே நிற்பதைக்கண்டு நாமும் அவர்போலும் பெண்ணுருக்கொண்டு அவ்வரம்பையரைப்பார்த்து நிற்குமளவில் இவளழகை இந்திரன் கண்டனனென்க.

இதனால் தேவசபையிலுள்ளாரெல்லாம் நிற்பாரில்லாமல் நெருக்குண்டிருந்தனரெனவும், அரம்பையர்கள் நெருக்குறாது நின்றனரெனவும், இதனை யறிந்து அருணன் நாமும் பெண்வடிவங் கொள்வோமாயின் இவ்விடமே சுகமாகக்காண்போமென்று ஒரு பெண்வடிவங்கொண்டு நின்றனனெனவும், இவ்வருணன் அவ்வரம்பையரினும் அழகிற் சிறந்திருந்தானாதலால் இவனை இந்திரன்பார்த்து மோகித்தனனெனவுங் கூறியதாகும். (௧௦௮)

காண்டலுங்குழைத்தவில்வேள்கடுங்கணைக்கிலக்கமாகி
மூண்டவெங்காமமூழ்கிமுரணினால்வலிந்துபற்றி
யாண்டொருபாங்கரெய்தியணிமுலைபொதிப்பப்புல்லிப்
பூண்டபேரின்பவெள்ளம்புதுநலமருகலோடும்.

(இ - ள்.) காண்டலும் குழைத்த வில்வேள் கடுங்கணைக்கு இலக்கமாகி - அவ்வாறு பார்த்தலும் வளைத்தவில்லேந்திய மன்மதனுடைய வேகமாகிய பாணத்திற்கிலக்காகி, மூண்டவெங்காமம் மூழ்கி முரணினால் வலிந்துபற்றி - மூண்டுகொண்ட கொடிய காமக்கடலில் முழுகித் தன்வலிமையினால வலிந்துபிடித்து, ஆண்டு ஒருபாங்கர் எய்தி - அவ்விடத்தில் ஒருபக்கத்தையடைந்து, அணிமுலை பொதிப்பப் புல்லி - அழகிய தனங்கள் அழுந்தத் தழுவியணைந்து, பூண்ட பேரின்பவெள்ளம் புதுநலம் பருகலோடும் - மேற்கொண்ட பெரியசுகவெள்ளமாகிய புதுநல மநுபவித்தலும். (எ - று.)

இந்திரன் பார்த்தவளவில் மன்மதனுடைய வேகமாகிய பாணத்திற்கிலக்காகி காமவெள்ளத்தில்மூழ்கி அவ்விடத்திலின்றும் எழுந்து பெண்வடிவங்கொண்டுநின்ற அருணனை வலிந்திழுத்துக்கொண்டு அவ்விடத்திலுள்ள ஓர்தனியிடத்திற்சென்று தனமழுந்தத் தழுவி இன்பத்தை யநுபவித்தலும் என்றதென்க. (௧௦௯)

அரக்கர்கோனகைப்பநந்திவெகுண்டுனையழிப்பவல்வா
னரக்குலந்தாமேயென்னச்சபித்தவாநயந்துவிண்ணோர்
குரக்கினமானார்தேயினையவன்குரக்குவேந்தாய்ச்
சுரர்க்கிறைகூற்றாலப்போதாயிடைத்தோன்றினானால்.

(இ - ள்.) அரக்கர்கோன் நகைப்ப நந்தி வெகுண்டு - அரக்கருக் கரசனாகிய இராவணன் (நந்திகேஸ்வரரைப்பார்த்து) சிரிக்க நந்தி தேவர்கோபித்து, உன்னை அழிப்ப-உன்னைக் கெடுப்பன, வல் வானரக்குலம் தாமே என்னச் சபித்தவா நயந்து - வலியவானரசேனைகளே என்று சபித்த வகையையெண்ணி, விண்ணோர் குரக்கினமானார்- தேவர்கள் குரங்கின் கூட்டமாயினர், இனையவன் குரக்குவேந்தாய் சுரர்க்கு இறைகூற்றால் அப்போது ஆயிடைதோன்றினான் - இவ்வாலி குரங்குகளுக்கு அரசனாகி இந்திரனுடைய அம்சத்தால் அப்போது அவ்விடத்தில் பிறந்தான். (எ - று.)

(இந்திரன் பெண்ணுருக்கொண்டுவந்த அருணனோடு புணர்ந்தகாலத்தில்) முன்னாளில் இராவணன் கைலைக்குவந்தபோது நந்திமுகத்தைபார்த்து இந்த குரங்குமுகத்தனைவேண்டியோ வுட்புகுவது என்று சிரிக்க நந்தி அவ்வரக்கனைப்பார்த்துக் கொடுங்கோபங்கொண்டு என்னைப்பார்த்து உன்பல்லை இளித்துக்காட்டியபடியினால் உன்னை

முழ்வுநாளில யழிப்பன டல்லே யிளித்துக்காட்டும் குரங்கின் கூட்டங்களே யாகுமெ ன்று சபித்தனன். அச்சாபத்தையெண்ணி தேவர்கள் இராவணனை யழிக்கும்பொருட் டுக் குரங்காகுர்களலவா. ஆகையினூல் இந்த வாலி தேவேந்திரனுடைய அம்சத்தால் அவ்விடத்தில் தோன்றினனென்ற தென்க.

இதனுல் இந்திரன அருணனைப் புணர்ந்தகாலத்து வாலிபிறந்தானென்றும், அவன் குரங்கென்றும் தேவேந்திர அம்சம் உடையவனென்றும், தேவாம்சக் குரங் குக்குவந்தது தேவர்கள் இராவணனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணமுடையவ ராதலால் குரங்குக்குவந்ததென்றும், குரங்கால் இராவணனழியவந்தது நந்திப்பெரு மான் சாபமெனவும் கூறியதாமென்க. (சுகo)

ஆயபின்கூத்துநோக்கியாவயினின்றுபோந்து
சேயொளிபரிதித்தேர்மேற்றிகழ்ந்தனன்வலவனுகக்
காய்கதிர்க்கடவுளங்கணிகழ்ந்தவைகடாவிமுற்றும
வாய்மையிற்புகலக்கேட்டவ்வடிவிவட்காட்டுகென்ன.

(இ - ள்.) ஆயபின் கூத்து நோக்கி ஆவயின்நின்று போந்து - அதன்பின்பு நடன த்தைப்பார்த்து அவ்விடத்தினின்று மீண்டு, சே ஒளி பரிதி தேர்மேல வலவனுக திகழ் ந்தனன்- செவந்த ஒளியையுடைய சூரியனது தேரில் சாரதிபாக விளங்கினன், காய்கதி ர்கடவுள் அங்கண் நிகழ்ந்தவை கடாவி - காய்கின்ற கதிரையுடைய சூரியன் தேவேந்தி ரசபையில் நடந்தவைகளை வினவி, முற்றும் வாய்மையிற் புகலக்கேட்டு - முழுமையும் மெய்மையிற் சொல்லக்கேட்டு, அவ்வடிவு இவண் காட்டுக என்ன - அந்தப் பெண்வடிவ த்தை இவ்விடத்துக் காண்பிப்பாயென்று (எ - று.)

அருணன் இந்திரனைக்கூடி வாலியைப்பெற்ற பிறகு அரம்பைய ராடலைப்பார்த்து அங்கு நின்றுந்திரும்பி சூரியனுடைய ரதத்தின்மேல் முன்போலவே தேர்ப்பாகனுக வந்திருந்தனன். சூரியன் அருணனைப்பார்த்து தேவசபையில் நிகழ்ந்தவைகளைக்கேட்ட னன். கேட்கவே நடந்தபடி சொல்ல, சூரியன்கேட்டு நீ அங்கெடுத்த பெண்வடிவத்தை இங்குநான் காணக்காட்டுவா யென்றதென்க. (சுசக)

உவகைமீதூரமேன்மேல்வேண்டலுமூருவில்லான்
பவளவாய்கரியகூந்தல்பானமொழிதிதலைபூத்த
குவிமுலைபரந்தவல்குலகோலவளைத்தளிகைகைதோற்றிக்
கவினுருக்கொண்டாலென்னகாட்டினன்றனதுபெண்மை.

(இ - ள்) உவகைமீதூர மேன்மேல் வேண்டலும் - மகிழ்ச்சிமீதூர மேன்மே லும் வேண்டுதலும், ஊரு இல்லான் - தொடையில்லாத அருணன், பவளவாய் கரிய கூந்தல் பான்மொழி திதலைப்பூத்த குவிமுலை பரந்த அல்குல் - பவளம்போலும் வாயையும் கரியகூந்தலையும் பாலபோலும் மொழியையும் தேமல்படர்ந்த குவிந்ததனங் களையும் அகன்ற அல்குலையும், கோலவளை தளிர்கை தோற்றி கவின் உருகொண்டால் என்னதனது பெண்மை காட்டினன் - அழகிய வளையணிந்ததளிர் போன்ற கையை யும் தோன்றச்செய்து அழகே ஒருருவமெடுத்தாற் போலத் தன் பெண்வடிவத்தைக் காண்பித்தான். (எ - று)

சூரியன் ஆசைமிகுதியினுல் அருணனை மேன்மேல் வேண்டுதலும், அவ்வருணன் இந்திரசபையில் காட்டிய அழகிய பெண்ணுருவத்தைக் காட்டினுனென்க.

சூரியன் பெண்ணுருவத்தைக் காட்டென்று சொல்ல, தேர்ப்பாகனுகிய அருணன் இசையாதிருந்தனனுதலால் உவகைமீதூர மேன்மேல் வேண்டலும் என்றூர். (சுசஉ)

காண்டலுங்கதிரோன்றானுங்காமுற்றுக்கலவிசெய்ய
வாண்டகைச்சுக்கிரீபனுயிடைப்பிறந்தானிப்பால்
மாண்டகுமகவானீன்றவாலியைக்கமலக்கையாற்
றீண்டினனுச்சிமோந்துசெவியறிவுறுத்தல்செய்வான்.

(இ-ள்.) காண்டலும்-அவ்வடிவத்தைப் பார்த்தலும், கதிரோன் தானும் கா முற்று கலவிசெய்ய-சூரியனும் விருப்பங்கொண்டு புணர, ஆயிடை ஆண்டகை சுக் கிரீபன் பிறந்தான்-அப்பொழுது ஆண்டகைமையை யுடையனாகிய சுக்கிரீபன் பிற ந்தான், இப்பால் மாண் தகு மகவான் ஈன்ற வாலியை-இப்பால் மாட்சிமைப்பட்ட இந்திரனே தான்பெற்ற வாலியை, கமலக்கையால் தீண்டினன் உச்சிமோர் து-தன் தாமரைபோன்ற கைகளால் பரிசித்து உச்சியை மோந்து, செவி அறிவுறுத்தல் செய்வான் - சொல்லத்தொடங்கினான். (எ-று.)

(அருணன் பெண்ணுருவத்தை யெடுக்க) அவ்வுருவத்தைப் பார்த்த சூரியனுங் காமங்கொண்டு அந்த அருணனைப் புணர்ந்தனன். அப்பொழுது சுக்கிரீவன் பிறந் தான். (இச்செய்தி யிங்ஙனமிருக்க) தேவருலகில் இவ்வருணன் பெற்ற வாலியை இந்திரன் தனது கைகளாலெடுத்துச்சிமோந்து அவ்வாலிக் கொன்று சொல்லு வான் என்க.

சுக்கிரீவன் - அழகிய கழுத்துடையான். ஆண்டகை சுக்கிரீவன் இருபெய ரொட்டுப் பண்புத்தொகை. (கசகூ)

பண்ணவர்முனிவர்யாரும்பரவினர்பேறுபெற்ற
புண்ணியநகரங்காஞ்சியாயிடைப்போந்துமுக்க
ணண்ணலைத்தொழுதுமைந்தாகவிகளுக்கரசாம்பேறு
நண்ணுகென்றுரைப்பவாலிநளிர்புனற்காஞ்சிபுக்கான்.

(இ-ள்.) மைந்தா - மகனே, பண்ணவர் முனிவர் யாரும் பரவினர் - தேவர் களும் முனிவர்களுமாகிய எல்லோரும் பூசித்து, பேறுபெற்ற புண்ணியநகரம் கா ஞ்சி - துதித்துப்பேறடைந்த புண்ணிய நகரம் காஞ்சியாம், ஆயிடை போந்து - (ஆகையால்) நீ அவ்விடத்திற்சென்று, முக்கண் அண்ணலை தொழுது - திரியம்பக னாகிய சிவபெருமானை வணங்கி, கவிகளுக்கு அரசாம் பேறு நண்ணுக என்று உரை ப்ப - வானரங்களுக்கெல்லாம் தலைவனாகும் பேற்றை அடைகவென்று சொல்ல, வாலி நளிர் புனல் காஞ்சிபுக்கான்-வாலி குளிர்ந்த புனலையுடைய காஞ்சிநகரத்தை யடைந்தான். (எ-று.)

(இந்திரன் வாலியைப்பார்த்து) மைந்தனே தேவர் முதலிய யாவரும் துதி த்துப் பேறுபெற்ற நகரம் காஞ்சிநகரமாதலால் நீயும் அக்காஞ்சிநகரத்தையடைந்து இறைவனை வணங்கி, குரக்கினங்களுக் கரசாகும் பேற்றைப் பெறக்கடவாயென்று கூற அவ்வாறே வாலி காஞ்சிநகரத்தை யடைந்தனனென்க. (கசஎ)

நடலைவெம்பிறவிமாற்றுஞ்சிவகங்கைநன்னீராடிச்
சுடரொளித்திருவேகம்பர்தொழுதுபோய்மயானக்கீழ்பான்
மடனறச்சித்தர்பல்லோர்வழிபடும்பெருமைசான்ற
கடனுடைவாயுலிங்கங்கண்களிபயப்பக்கண்டான்.

(இ-ள்.) நடலை வெம் பிறவி மாற்றும் சிவகங்கை நன்னீர் ஆடி-பொய்யாகிய கொடிய பிறவியைப் போக்குஞ் சிவகங்கையாகிய நல்ல நீரில் மூழ்கி, சுடர் ஒளி

திருவேகம்பம் தொழுதுபோய் மயானச்சீழ்பால் - சோதிசொருபமாய் விளங்குந் திருவேகம்பத்தைத்தொழுது சென்று கச்சிமயானத்தின் கீழ்த்திசையில், மடன் அற சித்தர் பல்லோர் வழிபடும் பெருமை சான்ற - அறியாமை நீங்க அநேக சித்தர்கள் பூசிக்கும் பெருமை நிரம்பிய, கடன் உடை வாயு லிங்கம் கண்களி பயப்ப கண்டான் - கடமைப்பாட்டையுடைய வாயுலிங்கத்தை தன் கண் மகிழக்கண்டனன். (எ-று.)

(வாலி காஞ்சிநகரத்தையடைந்து) பிறவித்துன்பத்தை யொழிக்கும் சிவகங்கையில் மூழ்கி ஏகாம்பரநாதனை வணங்கி அப்புறஞ்சென்று கச்சிமயானத்தின் கீழ்பால் எழுந்தருளியிருக்கும் வாயுலிங்கம் தன் கண்கள் மகிழ்ச்சியடைய அவ் கண்டனனென்க. (௧௪௫)

மடல்பெறுவேட்கையாளன்வாயுவின்மிடலென்றெண்ணிக்
கடல்புரையன்பினங்கட்கைதொழுஉத்தவங்களாற்றி
மடலவிழ்கடுக்கைநம்பால்வரம்பலகொண்டுநேர்ந்தா
ரடல்வலிபாதியோடுகுரக்கினத்தரசும்பெற்றான்.

(இ-ள்.) மடல்பெறு வேட்கையாளன் - மடல் எழுதுவதற்குரிய அழகிற் சிறந்த வாலி, வாயுவின் மிடல் என்று எண்ணி - வாயுவினால் பூசிக்கப்பட்ட வன்மைமிக்க தலமென்று நினைத்து, கடல் புரை அன்பின் - கடலையொத்த அன்பினால், கைதொழுது - வணங்கி, அங்கண் தவங்கள் ஆற்றி - அவ்விடத்தில் தவங்களைச்செய்து, மடல் அவிழ் கடுக்கை நம்பால்-இதழலர்ந்த கொன்றைமாலையையணிந்த நம்மிடத்து, வரம்பல கொண்டு - பலவரங்களைப்பெற்று, நேர்ந்தார் அடல் வலி பாதியோடு - எதிர்ப்பட்டவருடைய மிக்க வன்மையிற்பாதியும், குரக்கினத்து அரசும் பெற்றான் - குரக்கினங்களுக்குத் தான் அரசனாயிருக்கும் தலைமைத்தன்மையையும் பெற்றனன். (எ-று.)

(கண்டு) அழகிற்சிறந்த வாலி வாயுதேவனாற் பூசிக்கப்பட்ட வாயுலிங்கமென்றெண்ணி கரையிகந்த அன்பினால் வணங்கி அவ்விடத்திலேயே அரிய தவங்களைச் செய்து நம்மிடத்தில்வேண்டிய வரங்களைபெற்று தன்னைப் பகைவர் எதிர்ப்பாராயின் அவர் பலத்தில் பாதியும் அரசத்தன்மையும் பெற்றானென்க. (௧௪௬)

பெற்றபினிலிங்கந்தன்னைப் பிறங்குதன்னிருக்கையுய்ப்பான்
பற்றினன்வலியாற்காஞ்சிப் பதிநமக்கினியவாற்றான்
மற்றவன்பெயர்க்கலாற்றான் மிடலெலாம்வைத்துவாலிற்
சுற்றியீர்த்தணிவாலிற்றுத் தூரத்தேயலறிவீழ்ந்தான்.

(இ-ள்.) பெற்ற பின் - (மேற்கூறிய வரங்களை) பெற்றபின், இலிங்கம் தன்னை-(தான் பூசித்த அந்த) வாயுலிங்கத்தை, பிறங்கு தன் இருக்கை உய்ப்பான்-விளங்குகின்ற தனனிடத்தில் கொண்டுவைக்க, வலியால் பற்றினன்-தன் வலிமையாற் பிடித்தனன், நமக்கு காஞ்சிப்பதி இனிய ஆற்றால்-நமக்குக் காஞ்சிநகரம் இன்பமாயிருக்கின்ற காரணத்தால், அவன் பெயர்க்கல் ஆற்றான் - அவ்வாலி பெயர்ப்பதற்கு வலியற்றவனாகி, மிடல் எல்லாம் வைத்து - தன் வன்மையெல்லா மிருத்தி, வாலில் சுற்றி ஈர்த்து - வாலினாலே அவ்விலிங்கமூர்த்தியைச் சுற்றியிழுத்து, அணிவால் இற்று தூரத்தே அலறிவீழ்ந்தான் - அழகிய வாலறுபட்டு நெடுந்தூரத்தில் அலறி வீழ்ந்தனன். (எ-று.)

(வாலிவேண்டிய வரங்களைப்) பெற்றபிறகு அவ்விலிங்கமூர்த்தியை என்றும் தான்பூசிக்கவிரும்பி தன்விடத்திற்குக் கொண்டுபோகத் தனதிருகரங்களாலும் பற்றி யிழுத்தனன். நமக்குக் காஞ்சிப்பதி இனியதாகலான் நாம் பெயரவில்லை. மீளவும் வாலிதன்வலியெல்லாம் வாலில் வைத்து அவ்வாலாலெம்மைச் சுற்றியிழுத்தனன் அப்பொழுதும் நாம் பெயர்ந்தோமில்லை, அதனால் அவ்வாலி வாலற்று நெடுந்தூரஞ்சென்று அலறிவிழுந்தனனென்க. (௧௧௭)

> வீழ்ந்தவனெழுந்துவந்து மென்மலரடிகள்போற்றித்
> தாழ்ந்தெழுந்தடியேனில்லந் தனிலெழுந்தருளிச்சூடும்
> போழ்ந்தவெண்மதியாய்செய்யும் பூசைகொண்டருளாயென்று
> சூழ்ந்துநின்றிரந்துவேண்டத் தோன்றிமுன்னிதனைச்சொன்னோம்.

(இ-ள்.) வீழ்ந்தவன் எழுந்து வந்து மென்மலர் அடிகள்போற்றி தாழ்ந்து எழுந்து - விழுந்த வாலி எழுந்துவந்து மென்மையாகிய மலர்போன்ற (நமது) திருவடிகளைத் துதித்து வணங்கி எழுந்து, அடியேன் இல்லந்தனில் எழுந்தருளி-அடியேனுடைய வீட்டிலெழுந்தருளி, சூடும் போழ்ந்த வெண்மதியாய்-தரித்த பிளந்த வெண்மையாகிய சந்திரனையுடையானே,செய்யும் பூசைகொண்டருளாய் என்று சூழ்ந்து நின்று இரந்துவேண்ட - (யான்) செய்யும் பூசனையை யேற்றருளா யென்று நெருங்கிநின்றிரந்து வேண்ட, முன் தோன்றி இதனை சொன்னோம் - (அவ்வாலி) முனனேதோன்றி இதைச்சொன்னோம். (எ-று.)

(அலறிவீழ்ந்தவாலி) எழுந்து சிவலிங்கப்பெருமான் முன்வந்து அடிபணிந்து அடியேன் வீட்டிலெழுந்தருளி யான்செய்யும் பூசனையைக்கொண்டருளாயென்று வேண்ட யாம் அவ்வாலிமுன்னே தோன்றி இதனைச் சொன்னோமென்க. (௧௧௮)

> கச்சிமூதூரினீங்காக்காதல மெம்மையீண்டே
> யர்ச்சனைபுரிதிநின்வாலமுழ்ந்திய தழும்புபூண்டு
> சச்சைவெண்ணீற்றுவாலீச் சரனென விளங்கித்தோன்றி
> முச்சகம்பரசவாழ்துமென மொழிந்திலிங்கத்துற்றேம்.

(இ-ள்.) கச்சிமூதூரில் நீங்காத காதலம் பெரிய காஞ்சிப்பதியில (நாம்) நீங்காத ஆசையையுடையேம் (ஆகலின்) எம்மையீண்டே அருச்சனைபுரிதி-எம்மை இககாஞ்சிப்பதியிலேயே வழிபடுவாய், நினவால் அழுந்திய தழும்பு பூண்டு - உனனுடைய வாலாலழுந்திய தழும்பினை (என்றும் நமது திருமேனியில) கொண்டு, சச்சை வெண்ணீறறு வாலீச்சரன் என விளங்கி தோன்றி முச்சகம் பரசவாழ்தும என - திருநீறுசண்ணித்த மேனியனும் வாலீச்சரமென்று கூற நன்றாய் வெளிப்பட்டு மூன்றுலகமும் ஏத்தெடுப்ப வாழ்வோமென்று, மொழிந்து - திருவாய்மலர்ந்து, இலிங்கத்து உற்றேம் - இலிங்கத்தில் மறைந்தோம். (எ-று.)

நாம் காஞ்சிப்பதியில் நீங்காத ஆசையோடு வீற்றிருக்கின்றோமாகையால் இதனைவிட்டுப்பெயரோம். ஆகையால் இவிடத்திலேயே வழிபடு (உனபெயர் விளங்க) நீயெம்மைப்பற்றி யிழுத்ததனாலுண்டாகிய குறியோடு வாலீச்சரமென்று மூன்றுலகத்தாரும் வாழ்த்த வாழ்ந்திருப்போமென்று அவ்விலிங்கத்திலேயே மறைந்தோமென்க. சச்சை என்பது செச்சை எனபதின்றிரிபு. செச்சை விபூதி. ()

அன்றுதொட்டனையசூழ லற்புதத்திருவாலீச
மென்றொருபெயரினோங்கு மேரிழாய்பஞ்சதீர்த்த
மன்றநீர்வாவிமூழ்கி வகுத்தவிப்பஞ்சலிங்க
நன்றுகண்டேத்தப்பெற்றோர் நலிவினைப்பிறவிதீர்வார்.

(இ-ள்.) ஏரிழாய் - அழகிய வாபரணமணிந்தவளே, அன்று தொட்டு அனைய சூழல் அற்புதத்திருவாலீசம் என்று ஒரு பெயரின் ஓங்கும் - அந்நாள் தொடங்கி அந்தவிடம் அற்புதத்தையுடைய வாலீசம் என்று சொல்லப்படுகின்ற ஒரு நாமத்தினால் விளங்கும், பஞ்சதீர்த்த நீர் வாவிமூழ்கி வகுத்த இப்பஞ்ச லிங்கம் நன்று கண்டு ஏத்தப்பெற்றோர் - பஞ்சதீர்த்தமாகிய நீரையுடைய தடாகத்தில் மூழ்கி யாம்வகுத்துச் சொல்லப்பட்ட இந்த நல்லகம்பம் வெள்ளக்கம்பம் கள்ளக் கம்பம் கச்சிமயானம் வாலீசம் என்னும் இந்தபஞ்சப் பிரமலிங்கங்களையும் நன்றாகக்கண்டு வணங்கப்பெற்றவர், மன்ற நலிவினை பிறவி தீர்வார் - நிச்சயமாகவே தம்மை வருத்துகின்ற வினையாலாகிய பிறப்பினை நீங்குவர். (எ-று.)

இறைவன் இவ்விலிங்கத்தை வாலீசமென்று மூவுலகும் ஏத்துமென்று சொன்ன) அந்நாள்முதல் உமையே அவ்விடம் வாலீசமென்கிற பெயரினால் விளங்கும் (ஆகையால்)பஞ்சதீர்த்தத்தில் மூழ்கி நல்லகம்பமுதலிய பஞ்சலிங்கங்களையுங்கண்டு வணங்கப்பெற்றவர் பிறப்பை ஒழிவரென்க. (கஉ0)

இன்னணமருளிச்செய்து பொலங்குவட்டிமயம்பூத்த
மின்னொடுமூவரோடும் விளங்கொளித்திருவேகம்பந்
தன்னிடைக்கரந்துநின்றான் சதாசிவப்புத்தேளந்த
நன்னகர்ப்பெருமைமுற்றும் யாவரோநவிலவல்லார்.

(இ-ள்.) இன்னணம் அருளிச்செய்து-இறைவன் இவ்வகையாகத் திருவாய மலர்ந்தருளி, பொலம்குவடு இமயம்பூத்த மின்னொடும் - அழகிய செம்பொற்சிகரங்களையுடைய இமயமலைபெற்ற மின்போன்ற உமையோடும், மூவரோடும் விளங்கொளி திருவேகம்பம் தன்னிடை சதாசிவப்புத்தேள் கரந்து நின்றான் - திரிமூர்த்திகளோடும் விளங்குகின்ற ஒளியையுடைய திருவேகம்பத்தில் சதாசிவமூர்த்தி மறைந்தருளினர், அந்த நன்னகர்ப்பெருமை முற்றும் யாவரே நவிலவல்லார்- அந்த நன்மையாகிய நகரத்தின் பெருமையை முழுதும் யாவரோ சொல்லும் தகுதியையுடையவர். (எ-று.)

இறைவன் இவ்வாறு வாலீசத்தின் பெருமையை இலளிதா தேவிக்கும் திருமூர்த்திகளுக்கு நகரத்தின் பெருமையும் மாவிருக்கத்தின் பெருமையும் எடுத்துக்கூறி, பின்னர் உமாதேவியோடும் திருமூர்த்திகளோடும் திருவேகம்பத்தில் திருவுருக்கரந்தனன் ஆகையால் அந்த காஞ்சிநகரத்தின் பெருமையைக் கூறவல்லவர் யாவரென்க. (கஉக)

திருவேகம்பப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ0உ௩.

௨

# தழுவக்குழைந்தபடலம்.

கம்பமால்கரியுரித்தவர்சிரமேற்கம்பதித்தவர்பசும்பொழிற்றலத்துக்
கம்பலம்விரித்தெனமலர்பரப்புங்கம்பமேவியதொருசிறிதுரைத்தாங்
கம்பலைத்ததிர்த்தெழுந்துமீக்கடுகுங்கம்பைமாநதிப்பெருக்கினைக்காணூஉக்
கம்பமுற்றுமைதழுவமெய்குழைந்தகருணைமேன்மையுங்கட்டுரைத்திடுவாம்.

(இ-ள்.) கம்பமால் கரி உரித்தவர் - கம்பத்திற் கட்டப்பட்ட மதமயக்கங் கொண்ட யானையையுரித்தவரும், சிரமேல் கம்பதித்தவர்-முடிமேற் கங்கைநீரைத் தரித்தவருமாகிய ஏகம்பவாணர், பசும் பொழில் தலத்து - பசுமையாகிய சோலையிடத்து, கம்பலம் விரித்தால் என மலர் பரப்பும் கம்ப மேவியது ஒருசிறிது உரைத்தாம் - கம்பலம் விரித்தாலொத்த மலரைப்பரப்பும் திருவேகம்பத்தில் வீற்றிருந்தமையை மிகச் சிறிது கூறினும், கம்பலைத்து அதிர்த்து எழுந்துமீ கடுகும் கம்பைமாநதி பெருக்கினை காணூஉ - சங்குகளை வருத்தி அதிர்த்து எழுந்து மிகக் கடுகி வரும் கம்பாநதிப் பெருக்கைக்கண்டு, கம்பமுற்று உமை தழுவ மெய் குழைந்த கருணை மேன்மையும் கட்டுரைத்திடுவாம் - பயத்தையடைந்து உமாதேவியார் தழுவத் திருமேனிகுழைந்த கருணையாகிய சிறப்பினை உறுதியாகக்கூறுவாம். (எ-று.)

யானையை யுரித்தவரும் கங்கையைத் தரித்தவருமாகிய இறைவன், திருவேகம்பத்தில் வீற்றிருந்தமையை ஒருவாறு எடுத்துச்சொன்னோம். இனி கம்பாநதி பெருக்கெடுத்துவர அதனைக்கண்டு கம்பமுற்று உமைதழுவக்குழைந்த கருணையின் மேன்மையை எடுத்துச் சொல்லுவாமென்க.

பொழிலிடத்துமலர்கள் சிந்திக்கிடப்பன நோக்குங்கால் சுத்தமாயுள்ளவோரிடத்தில் பலநிறங்களோடுகூடிய ஓர் கம்பலத்தை விரித்தாலெப்படியோ அதுபோன்றிருந்தனவென்பார் பசும்பொழிற்றலத்துக்கம்பலம்விரித் தெனமலர்பரப்பும் என்றார். தம்மை வழிபடும் தேவரைக்காக்க யானையை யுரித்துடுத்தமையால் கம்பமால் கரியுரித்தவர் என்றும், அவரையேயன்றி மக்கட்பிறப்பினை யுடையாரையுங் காக்க கங்கையைச் சடையிலேற்றமையால் சிரமேற்கம்பதித்தவர் என்றும், அவர் கம்பமேவியதை யென்னால் முற்றுங்கூற வமையாமையால் கம்பமேவியதொருசிறிதுரைத்தாம் என்றும், இறைவி இறைவனை வழிபட அதனைச் சோதிப்பான் கம்பையையேவ, அதனைக்கண்டு அம்மை தழுவத் தன்திருமேனிகுழையக் கருணைசெய்ததேயன்றி அங்ஙனங் குழைந்த வழித் தாம்பெற்ற முலைத்தழும்பும் வளைத்தழும்புமயாவருங் காணச்செய்தமையால் கம்பமுற்றுமைதழுவ மெய்குழைந்த கருணைமேன்மையுங் கட்டுரைத்திடுவாம் என்றுங் கூறினார். (க)

பொற்றதாமரைப்பொகுட்டணைக்கிழவன்புகுதலுற்றதற்புருடகற்பத்திற், பற்றும்வைகறைத்துயிலொழிந்திமயப்பாவைபாகனடிதொழுதெழுந்தான், முற்றும்வெள்ளநீர்ப்பரப்பிடையவனிமுழுதுமாழ்ந்ததுகண்டுளங்கவன்று, மற்றினிச்சகவகிலமும்படைக்கும்வண்ணம்யாதெனமயங்குறும்பொழுது.

(இ-ள்.) பொற்ற தாமரைப் பொகுட்டணை கிழவன் புகுதல் உற்றதற்புருடகற்பத்தில் - பொற்றாமரை யடைகொட்டையை யணையாகவுடைய பிரமன் புகுகின்ற தற்புருடகற்பத்தில், பற்றும் வைகறை துயில் ஒழிந்து-பொருந்துகின்ற விடியற்காலத்தில் துயினீங்கி, இமயப் பாவை பாகனார் அடி தொழுது எழுந்தான்-இமா

சலபுத்திரியாகிய உமையம்மையை யொருபாகத்திலுடைய இறைவன் பாதத்தைத் தொழாநின்றெழுந்தானாகி, முற்றும் வெள்ள நீர் பரப்பிடை - முழுதும் வெள்ள மாகப்போர்த்த நீர்ப்பரப்பில், அவனி முழுதும் ஆழ்ந்தது கண்டு உளம் கவன்று- உலகமுழுது மழுந்தினமை பார்த்து மனங் கவலைகொண்டு, இனி சக அகிலமும் படைக்கும் வண்ணம் யாது என - இனிச் சகமாகிய வகிலத்தைச் சிருட்டிக்கும் வகையாதென்று, மயங்குறும் பொழுது - மயங்குங்காலத்தில். (எ-று.)

தற்புருடகற்பப்பிரவேசத்தில் பொருந்தும் விடியற்காலத்தில் பிரமன் நித்தி ரையினின்று நீங்கி உமைபங்கனை வணங்கி எழாநின்று எங்கும் நீர்வெள்ளமாயும் அவ்வெள்ளத்தில் உலகமுற்றும் ஆழ்ந்திருத்தலையுங்கண்டு இனி இவ்வுலகங்களை யெல்லாம் நாம் படைக்கும் வகை யெப்படியென்று மயங்கி யிருக்கும்பொழுது (எனவே, பிரமன் சிருஷ்டிசெய்யும் விதத்தை மறந்து முன் நாம் எவவாறு சிருஷ் டித்தோமென்றெண்ணினனென்க.)

பாவை உவமையாகுபெயர். பாகனர் என்பதில் ஆர் விகுதிபெற்றமை "இயற்பெ யர்முன்ன ராரைக்கிளவி பலர்க்குரியெழுத்தின் வினையொடுமுடிமே" என்பதனான் முடிக்க. உலகம் தோன்றிநின்றழியு மாலையதாகலின் சகமென்றும் அகிலமுமென் றும் ஒருபொருட் பன்மொழியாய் நின்றது. தொழுது தொழாநின்றென்பதின் றிரிபு. இதனை 'விளைவளநீறெழ' என்னுந் திருக்கோவையாருள் தொழுதெழுவா னென்புழியும், 'தெய்வந்தொழாஅள்' என்னுந் திருக்குறளில் தொழுதெழுவாளென் புழியும் முறையே பேராசிரியரும் பரிமேலழகருங் கூறுதல் காண்க. (உ)

பூதிமேனியார் திருவருள்கூடிப்புரிந்தமுன்னிகழுணர்ச்சிவந்தெய்த
வாதிகற்பத்திலெதிரெழுந்தருளியண்ணலார்கற்பந்தொறுந்தொறுநின்பாற்
சோதிசேரெழிற்குமாரநல்வடிவாற்றோன்றிநாமுனக்கருளுதுமென்னாப்
பேதியாவகைதனக்குமுன்னளித்தபெருவரத்தினைத்தெளிந்தனன்பிரமன்.

(இ-ள்.) பூதிமேனியார் திருவருள் கூடி புரிந்த முன்னிகழ் உணர்ச்சி வந்து எய்த -(இவ்வாறு மயங்கியிருக்கும்பொழுது) வெண்ணீறு சண்ணித்த திருமேனியை யுடையார் திருவருள் கூட (அதனால், இறைவன் தனக்கு) விரும்பிச்செய்த முன் னிகழ்ந்த வறிவுவந்து சேர, ஆதிகற்பத்தில் எதிர் எழுந்தருளி - முன் கற்பத்தில் எதிரே வந்து, அண்ணலார் கற்பந்தொறுந் தொறும் நின்பால் சோதி சேர் எழில குமார நல் வடிவால் தோன்றி - இறைவன் கற்பங்களிலெல்லாம் உன்னிடத்தில் பிரகாசமமைந்த அழகிய நல்ல குமார வடிவமாகித் தோன்றி, நாம் உனக்கு அரு ளுதும் என்னா - நாமுனக் கருள்செய்வோமென்று, பேதியாவகை தனக்கு முன் அளி த்த பெருவரத்தினை பிரமன் தெளிந்தனன் - வேறுபடாதவண்ணம் தனக்கு முன் கொடுத்த பெருவரத்தைப் பிரமன் தெளிந்தான். (எ-று.)

(பிரமன் சிருஷ்டிசெய்யவறியாது மயங்கியிருக்கும்பொழுது) இறைவன் திருவருளே துணையாகி தனக்கு முன்றந்த வரம் அறிவின்கண் தோன்ற(எனவே)ஆ திகற்பத்தில் இறைவன் தன் முன்னெழுந்தருளி பிரமனே யாம் கற்பங்கள்தோறும் உன்னிடத்து நல்ல குமாரவடிவத்தோடு வந்து உனக்கு சிருஷ்டிக்கும் வகையை யனுக்கிரகிப்போமென்று மாமுதளித்த பெரிய வரத்தினை எண்ணினனென்க.

பிரமன் நாம் முன் எவ்வாறு சிருஷ்டித்தோமென்று ஆலோசித்தகாலத்து அ வனுக்குப் பிரதமத்தில் இறைவன் கொடுத்த வரம் திருவருளால் தோன்றியதென்க.

பிரமன் மயக்கினமையைத் தெளிவித்தது இறைவன் திருவருளே என்பார் திருவருள் கூடிப்புரிந்த முன்னிகழுணர்ச்சி வந்தெய்த என்றார். சற்பமென்றது வடமொழிச்சிதைவு. தொறுந்தொறும் அடுக்குப்பன்மை. பூதி - இரட்சை - நீறு முதலியன ஒருபொருட்கிளவி. (௩)

அன்னதன்மையினின்றுமங்கவரோயருள்செய்வாரெனத்துணிபுடைம னத்தாற், றன்னுதற்றலத்தடியிணை கருதித்தவங்கள்பல்பகலாற்றுழித்திக ழுஞ், சென்னியாற்றினருருத்திரகாயத்திரியினோடெழிற்குமாரநல்வடிவா ய், முன்னரெய்திட நோக்கியம்மனுவான் முதல்வனார்தமையுணர்ந்துகை தொழுது.

(இ-ள்.) அன்ன தன்மையினின்றும் அங்கவரோ யருள் செய்வாரெனத் துணிபுடைய மனத்தால் - அத்தன்மையினின்று மவ்விடத் தச்சிவபெருமானே யருள் செய்வாரெனத் துணிபினையுடைய மனத்தால், தன் நுதல் தலத்து அடியிணை கருதி - தனதுநெற்றியின்கண் சீபாதங்களையெண்ணி, தவங்கள் பற்பகல் ஆற்றுழி - தவங்க ளைப் பலநாளு மியற்றியவிடத்து, திகழுஞ் சென்னி யாற்றினர்-விளங்குகின்ற முடி யின் கண் கங்கையையுடைய இறைவன், உருத்திரகாயத்திரியினோடு எழில் குமார நல்வடிவாய் முன்னர் எய்திட நோக்கி-உருத்திரகாயத்திரி தேவியோடு பிரகாசம் பொருந்திய குமாரனாகிய நல்ல வடிவமாய் முன்வந்தணையப்பார்த்து, அம்மனு வால் முதல்வனார் தமை உணர்ந்து கைதொழுது - அம்மந்திரத்தால் முதல்வராகிய ஏகம்பவாணரை வணங்கி. (எ-று.)

(மயங்கியிருந்த பிரமன் திருவருளால் தெளியப்பெற்றனனாதலால்) அத்தெ ளிவில் நிலைபெற்று பிரதமத்தில் நமக்கனுக்கிரகஞ்செய்த இறைவனே இப்பொழு தும் சிருஷ்டிசெய்யும் விதத்தை யருள்செய்வானென்று துணிந்த மனத்தையுடை யவனாய்த் தன் புருவமத்தியில் இறைவன் திருவடியைத்தியானித்து அநேககா லந் தவஞ்செய்யுங்கால் கங்காதரனாகிய இறைவன் உருத்திரகாயத்திரி தேவியோடு குமாரவடிவங்கொண்டுவந்து காட்சிதந்தனன். அங்ஙனந்தந்த இறைவனைநோக்கி அந்த உருத்திரகாயத்திரி மந்திரத்தினால் காட்சிதந்த இறைவன் சிவபெருமானே யென்றுணர்ந்து வணங்கினனென்க.

திருவருளால் இறைவன் தனக்குத்தந்த வரந்தோன்றவே மனந்தெளிந்தவ னாய் அப்பொழுது வரந்தந்தபடியே இந்தத் தற்புருடகற்பத்திலும் நாம் சிருஷ்டிசெ ய்யும்படி அனுக்கிரகஞ் செய்வானென்று துணிந்து உருத்திரகாயத்திரியைப் பல நாள் ஏகாக்கிரசித்தத்தோடும் செபித்துவர அக்காயத்திரிக்கிறைவனாகிய இறைவன் காட்சி கொடுத்தனன். பிரமன் நானிப்போது தியானிக்கும் கங்காதரன்தானோ அல்லனோவென்று அச்சிவகாயத்திரியை மீளவும் செபித்தனன். அச்செபவிசேடத் தால் சிவபெருமானேயென்றுணர்ந்து வணங்கினனென்க. (௪)

ஏற்றதற்புடற்குறநினைதுமெமக்குருத்திரனருளுகவென்னு, மாற்றல் சான்றகாயத்திரிமனுவையனைத்துமாக்குவான்முறையுளிக்கணித்துப், போ ற்றவார்ந்திழி யருவியங்குவட்டுப் பொருப்புவில்லவர்கருணைகூர்ந்துலகந், தோற்றுமாறருள் கொடுத்தெழுந்தருளத் தோட்டுவெண்மலர்க் கலைமக டுணைவன்.

(இ-ள்.) ஏற்ற தற்புருடற்குற நினைதும் எமக்கு உருத்திரன் அருளுக என்னும்-நமதெண்ணத்துக்குத்தக்க தற்புருடனைப் பொருந்த நினைப்போம் எமக்கு உருத்திரப்பெருமானருளுகவென்கின்ற, ஆற்றல் சான்ற காயத்திரி மனுவை-வன்மைமிகுந்த காயத்திரிமந்திரத்தை, அனைத்தும் ஆக்குவான் - யாவையும் படைக்கும் பிரமன், முறையுளி கணித்து போற்ற-முறையாற் செபித்து வணங்க, வார்ந்திழி யருவியங் குவட்டுப்பொருப்பு வில்லவர்-ஒழுகியிழிகின்ற அருவியையுடைய சிகரங்களையுடைய மேருமலையை வில்லாகவுடைய இறைவர், கருணைகூர்ந்து உலகந்தோற்றும்அருள் கொடுத்து எழுந்தருள - கருணைமிகுந் துலகம் படைக்கு மருமையாகிய வருளைக்கொடுத் தெழுந்தருள, தோட்டு வெண் மலர் கலைமகள் துணைவன் - இதழ்களையுடைய வெண்மையாகிய தாமரையில் வசிக்கும் நாமகளுக்குக் கணவனாகிய பிரமன். (எ-று.)

(இறைவனென்றறிந்து வணங்கியபின் பிரமன்) நாம் இப்பொழுது சிருட்டி செய்ய எண்ணியிருக்கின்றோம். அச்சிருட்டியை அருள்வோன் உருத்திரனாகையால் அந்தப் புருடனையே நினைவோம் என்று வன்மைமிக்க உருத்திரகாயத்திரியை முறைப்படி யோதிவணங்க இறைவன் கருணைகூர்ந்து அவனெண்ணியவாறே யனுக்கிரகஞ்செய்து திருவுருக்கரந்தனன். இறைவன் கரந்தபின்னர் பிரமன் என்க.

ஏற்ற தற்புருடற்குற நினைது மெமக்குருத்திரனருளுக என்றதுகாறும் பிரமன் செபித்த உருத்திரகாயத்திரியின் பொருள். காயத்திரி குருமுகமாய் அறியவேண்டியதாகலான் ஈண்டு வரையாதொழிந்ததென்க.

கலைமகடுணைவன் என்புழி 'அதுவென்வேற்றுமை யுயர்திணைத்தொகை வயினதுவெனுருபுகெடக்குகரம்வருமே' என்பதனாற் குவ்வுருபு விரிக்கப்பட்டது. ஆக்குவானென இயல்பினா னிகழ்கால மெதிர்காலமாகக் கூறப்பட்டது. முறையுளி என்புழி உளிமூன்றுருவதன் பொருள்படுவதோரிடைச்சொல். இதனை 'இயல்புளிக்கோலோச்சும்' என்புழிப் பரிமேலழகரும் கூறுவதனானுமறிக. (ரு)

ஒருமையன்பினப்புருடனை நினைந்தாங் குலகமாக்குழியாண்மையே
தோன்ற, முருகுலாங்குழற்பெண்மையும்படைப்பான்முயன்றுமெய்தில
ன்புந்தியிற்றேர்ந்து, புருடனுக்கெனத்தற்பொருட்டெய்தும்பொருண்மை
நீத்தனன்சகத்திரநயனப், புருடன்றன்னுடைப்பேருணினைகேமுருத்திர
ப்பிரானெமக்கருள்புரிக.

(இ-ள்.) ஒருமை அன்பின் அப்புருடனை நினைந்து ஆங்கு உலகம் ஆக்குழி ஆண்மையே தோன்ற - ஒருப்பாட்டினையுடைய அன்பினன் அத்தற்புருட மனுவையுறக்கணித்தோதி அவ்விடத் துலகம்படைக்க ஆண் வடிவமே தோன்ற,முருகு உலாம் குழல் பெண்மையும் படைப்பான் முயன்றும்-மணந்தங்கிய கூந்தலையுடைய பெண்ணுருவையும் படைக்கும்படி யெத்தனித்தும், எய்திலன்-பெறாதவனாயினன், புந்தியில் தேர்ந்து புருடனுக்கெனத் தற்பொருட்டெய்தும் பொருண்மை நீத்தனன் - சிந்தையினாய்ந்து புருடனுக்கென்னும் பொருள் பயக்கும் சொல்லை நீக்கினன், சகத்திர நயனப் புருடன் தன்னுடைய பேர் அருள் நினைகேம்-ஆயிரங்கண்களையுடைய புருடனுடைய பெருங்கருணையை யெண்ணுவேம்,உருத்திரப்பிரான் எமக்கு அருள் புரிக - உருத்திரப்பெருமா னெமக்கருள் செய்க. (எ-று.)

(இறைவனருள்பெற்ற பிரமன்) சிருட்டிக்கத் தொடங்கியபோது தனக்குக் காட்சிகொடுத்த புருடரூபத்தையே தியானித்துச் சிருட்டிக்கத் தொடங்கினன். அங்ஙனம் சிருட்டியான உருவங்களெல்லாம் ஆணுருவங்களாகவே தோன்றின. (அது கண்டு) பெண்ணுருவங்களையும் படைக்க முயன்றனன். முயன்றும் பெண்ணுருவங்கள் தோன்றவில்லை (அங்ஙனந் தோன்றாதகாரணத்தை ஆராய்ந்தனன். எனவே நாம் சிவபெருமானைப் புருடரூபமாகவே தியானித்தோமேயன்றி அச்சிவபராஞ்சுடரைச் சக்தியுக்தமாகத் தியானித்தோமில்லை, ஆகலான் ஆணுருவமொன்றேபடைக்குமாற்றலை யடைந்தோமென் றெண்ணினனென்க.) அங்ஙனம் எண்ணியபின்னர் "புருடரூபியாகிய உருத்திரன் என்னைச் சிருட்டியிற் பிரேரிக்க" என்னும் பொருளோடுகூடிய காயத்திரியை விட்டு "சகஸ்திரநேத்திரத்தோடுங் கூடியிருக்கின்ற பரசிவத்தினுடைய பராசத்தியைத் தியானிக்கின்றேன். அப்பராசத்தி அநுக்கிரகஞ் செய்யுமாறு உருத்திரமூர்த்தி திருவருள் செய்யவேண்டும்" என்னும் பொருளமைந்த காயத்திரியைச் செபித்தனனெனக. (௯)

என்னும்வேறுகாயத்திரிமனுவை யெழிற்புணர்ச்சியினுலகமுண்டாக்க, மன்னுசீர்க்கிழமைப்பொருள்வாய்ப்பக் கணித்துமாதவம்புரிவுழிவகிர்நாப்,பன்னகம்புனைசடைமுடிப்பிரானார்பாதிபெண்ணுருத்திகழ்தருவடிவான்,முன்னரெய்தியிம்மனுவினைக்கணித்தாய்முளரிவாழ்க்கைநீவேட்டதுதெளிந்தேம்.

(இ-ள்.) என்னும் வேறு காயத்திரி மனுவை எழிற் புணர்ச்சியின் உலகம் உண்டாக்க-என்கிற வேறுகாயத்திரி மந்திரத்தை அழகையுடைய புணர்ச்சியா னுலகத்தைப்படைக்க,மன்னு சீர் கிழமைப்பொருள் வாய்ப்ப கணித்து-நிலைபெற்ற சிறப்பினையுடைய கிழமைப்பொருள் பொருந்தச்செபித்து,மாதவம் புரிவுழி-பெருந்தவஞ் செய்கையில், வகிர் நா பன்னகம் புனை சடைமுடி பிரானார் பாதி பெண்ணுரு திகழ் தரு வடிவால் - பிளந்த நாவையுடைய பாம்பினையணிந்த சடைமுடியையுடைய இறைவர் பாதி பெண்வடிவம் விளங்குகின்ற வடிவுடன், முன்னர் எய்தி இம்மனுவினைக் கணித்தாய்-முன்னே யடைந்து இம்மந்திரத்தைச் செபித்தனை, முளரிவாழ்க்கை நீ வேட்டது தெளிந்தேம் - தாமரைமலரில் வாழ்தலையுடைய நீ விரும்பியதைத் தெளிந்தோம். (எ-று.)

"சகத்திரநயனப்புருடன்றன் னுடைப்பேரருணினைகேம் உருத்திரப்பிரானெமக்கருள்புரிக" என்னும் காயத்திரிமனுவைப் பெண்களினுடைய புணர்ச்சியினாலே உலகத்தை மேன்மேலும் படைக்கவேண்டும் என்கிற பொருளமையச்செபித்து அரியதவத்தைச் செய்யுங்கால் இறைவன் தனது திருமேனியிற் பாதிபெண்வடிவமாய் விளங்கக் காட்சிகொடுத்து அப்பிரமனைநோக்கி நாம் சக்தியுக்தமாய் வரும் மந்திரத்தை நீ கணித்தனை, உன்னுடைய வேண்டுகோளையும் அறிந்தோம் என்று இறைவன் கூறினனென்க.

பிரமன் இரண்டாவது முறைகணித்த காயத்திரி, முன் இறைவன் தான்மாத்திரம் வந்து காட்சி கொடுத்ததுபோலாகாது சத்தியோடுவந்து அநுக்கிரகஞ்செய்தமையால் சடைமுடிப்பிரானார் பாதிபெண்ணுருத் திகழ்தருவடிவான் முன்னரெய்தினனென்றும், முன் நாமநுக்கிரகஞ்செய்த ஆற்றலால் ஆண்வடிவங்களைப் படைக்கப் பெற்றனையே யன்றிப் பெண்வடிவங்களைப் படைக்கும் ஆற்றலைப் பெ

ற்றிலை, அவ்வாற்றலையும்பெற இம்மனுவினைக் கணித்தனையாதலால் முளரிவாழ்க் கை நீ வேட்டது தெளிந்தோயென்றுங் கூறினர்.

ஆண் பெண்ணோடுகூடுவதும் பெண் ஆணோடு கூடுவதுமே அழகும், அவ்வ ழகுக்குப் பயன் சந்ததிப்பெருக்கமுமே யாதலால் எழிற்புணர்ச்சியி னுலகமுண்டா க்க என்றார்.

முன் செபித்த காயத்திரி "புருடர்குற நினைதும் எமக்கு உருத்திரப்பிரானரு ளுக" என்னும் காயத்திரி. பின் செபித்த காயத்திரி "சகத்திரநயனப்புருடன் றன்னு டைப் பேரருணினைகே முருத்திரப்பிரானெமக்கருள்புரிக" என்னுங் காயத்திரி. இவ விரண்டனுள் முன்னையது புருடரூபமாகிய உருத்திரனையே நினைக்கின்றோம் அவ் வுருத்திரனே எமக்கருள்செய்க என்னும் பொருளுடையதாகலான் புருடரூபமே தோன்றியதெனவும், பின்னையது சகத்திரநயனப புருடனுடைய பேரருளை (பரா சத்தியை) நினைக்கின்றோம் உருத்திரப்பிரான் எமக்கு (அவ்வாறே அருள்செய்ய வேண்டும்) என்னும் பொருளுடையதாகலான் புருடரூபத்தோடு பெண்ரூபத்தை யுஞ் சிருட்டிசெய்யும் ஆற்றலையும் பெறுதற்குரியனுயினனென்க. (எ)

நினக்குநாயகிபிவளெ மதிடப்பாலினின்றுநீங்குபுதன்னொருகூற்று, னுன க்குப்பெண்ணுருப்படைத்திடுமாற்றலுதவுமென்றுரைத்தருளவக்கணமே, தனக்குநேர்வரும்பிராட்டியுமாங்குத் தணநதுதோன்றுபுதன்னொருகூற்றி ன், வனப்புமிக்கவேறணங்கினைப்படைத்து மலர்பபொகுட்டணையவற்கிது வகுப்பாள்.

(இ-ள்.) நினக்கு நாயகி இவள் எமது இடப்பால் நின்று நீங்குபு - உனக்கு இறைவியாகிய இவள் எம் இடப்பாகத்தினின்று நீங்கி, தன் ஒருகூற்றால் உனக்குப் பெண்ணுருப் படைத்திடும் ஆற்றல் உதவும்-தன்னொரு அமிசத்தினுல் உனக்குப் பெ ண்ணுருவத்தைப் படைக்கும வன்மையைததரும், என்று உரைத்து அருள அக்க ணமே தனக்கு நேவரும் பிராட்டியும் ஆங்கு தணந்து தோன்றுபு - என்று சொல் லியருள அவ்வளவிலேயே தனக்கு எதிதோன்றும் இறைவியு மாங்கு நீங்கித்தோ ன்றி, தன் ஒருகூற்றின் வனப்புமிக்க வேறு அணங்கினைப்படைத்து மலர்ப்பொகு ட்டணைய வற்கு இது வகுப்பாள - தன்னொரு அமிசத்தின் அழகுமிகுந்த வேறு பெ ண்ணைப்படைத்துத் தாமரைமலர்ப் பொகுட்டணையையுடைய பிரமனுக்கிது வகுத் துச் சொல்வாள். (எ-று.)

(பிரமனே, நீ வணங்கும்) நாயகியாகிய நமது தேவி எமதிடப்பாகத்தினி ன்று நீங்கி தன்னொரு அம்சத்தினுல் உனக்குப் பெண்ணுருவத்தைப் படைக்கும் ஆற்றலுதவும் என்று கூற, அக்கணமே இறைவியார் தன்னம்சத்தில் ஓர் சத்தியைப் படைத்து பிரமனைநோக்கி இவற்றைக் கூறுகின்றார். (அ)

இவளைநாடொறுநீவழிபட்டுப்பெண்கள்யாரையும்படைத்தியென்றி யம்பி, யவளைநோக்கிநின்கூற்றினிறபெண்களனைத்துநீபகுத்திடுகெனவரு ளித், தவளமுண்டகக்கிழத்திதன்கொழுநன்றனக்குநல்கித்தன்றலைவனைம ணந்தாள், கவளவெங்கரியுரித்தவர்தாமுங்கருணைசெய்துபோய்க்கயிலையை ப்புக்கார்.

(இ-ள்.) இவளை நாள் தொறும் நீ வழிபட்டு பெண்கள் யாரையும் படைத்தி என்று இயம்பி - இவளை என்றும் நீ வழிபாடுசெய்து பெண்கள் யாரையும் படைப்

பாயென்று கூறி, அவளைநோக்கி நின் கூற்றினில் பெண்கள் அனைத்தும் நீ படைத்தி டுக என அருளி-அவ்வணங்கைநோக்கி நின்னம்சத்தால் பெண்கள் யாரையும் (பிர மன்படைக்குமாறு) வகுக்கவென்றருள்செய்து,கவள முண்டகம் கிழத்தி தன் கொழுநன் தனக்கு நல்கி - வெண்டாமரையாளெனப்படும் நாமகளுடைய தலைவனாகிய பிரமனுக்கு அருள்செய்து, தன் தலைவரை மணந்தாள்-தன்றலைவரைச் சேர்ந்தாள், கவளம் வெங் கரியுரித்தவர் தாமும் கருணை செய்து போய் கயிலையைப் புக்கார்-கவளங்கொள்ளும் கொடுமையாகிய யானையை யுரித்தவரும் கருணைசெய்து சென்று கயிலைவரையை யடைந்தார். (எ-று.)

(பிரமனே நீ) இந்தச்சத்தியை நாடோறும் வழிபட்டு பெண்களைப் படைப்பாயென்றும், சத்தியைநோக்கி உன் அம்சத்தினால் பெண்கள் யாரையும் (பிரமன் படைக்கும்படி)வகுப்பா யென்றும் அருள்செய்து இறைவி தன் தலைவர்பாற் சென்றனர். இறைவரும் பிரமனுக்குச் கருணைநோக்கம் பாலித்து கைலைக்கேகினரென்க.()

புக்கபின் றனைத்தொழுதுபோற்றிசைக்கும்போதினனையவ்வளைக்கை யாய்நோக்கி,நெக்கசிந்தையோய்நினக்கியான்புரியுநிகழ்ச்சியாதெனமலரவ ன்வணங்கித்,தொக்கபேரருளெந்தையாரிடத்துத்தோன்றுமன்னைநீபெண் ணுருமுழுதுந், தக்கவாறுபடைத்தருள்கவில்லன்றேற்படைக்குமாற்றலெ ன்றனக்கருள்புரியாய்.

(இ-ள்.) புக்க பின் தன்னைத் தொழுது போற்றிசைக்கும் போதினனை - போனபிறகு தன்னை வணங்கித் துதிக்கும் பிரமனை, அவ்வளைக்கை ஆய் நோக்கி - அவ்வளையலையணிந்த தாயனையாள் பார்த்து, நெக்க சிந்தை யோய் - நெகிழ்ந்த சிந்தையையுடையானே, நினக்கு யான் புரியு நிகழ்ச்சி யாதென - உனக் கியான் செய்யுங் காரியம் யாதென்று கேட்க, மலரவன் வணங்கி-பிரமன் வணங்கி, தொக்க பேரருள் எந்தையாரிடத்துத் தோன்றும் அன்னை நீ - பெருங்கருணை மிகுந்த எம் பெருமானிடத்துத் தோன்றுகின்ற தாயாகிய நீ, பெண்ணுரு முழுதும் தக்கவாறு படைத்தருள்க - பெண்ணுரு முழுதுந் தக்கவண்ணமாகப் படைத்தருள்க, அன் றேல் படைக்கும் ஆற்றல் என்றனக்கு அருள்புரியாய் - அல்லாக்கால் சிருட்டிக்கும் வன்மையை எனக் கருள்செய்வாய். (எ-று.)

(இறைவியும் இறைவனும்)ஏகியபின் தன்னை வணங்கும் பிரமனைநோக்கி என்னால் உனக்காக வேண்டிய காரியம் யாதென்று வினவ, பிரமன் வணங்கிப் பெண் வடிவங்களையெல்லாம் நீயே படைப்பாய்,இல்லையாயின் படைக்கும் ஆற்றலை எனக் கருள்செய்வா யென்றனனென்க. இல் - அசைச்சொல். (௬0)

உம்பர்போற்றுநின்றிருவடிப்பொடியையுச்சிமேல்கொண்டுநான்படைக்கின்றேற, னம்மையின்னமோர்விண்ணப்பமுளதாலடியனேன்பெறுதக்கன்றன்மகளா, யிம்பர்நீயவதரித்திடல்வேண்டுமென்றுவேண்டலுமுலகமீன்றளித்த, கொம்பர்துண்ணிடையெம்பெருமாட்டிகூர்த்தபேரருட்கருணையினுணர்த்தும்.

(இ-ள்.) உம்பர் போற்று நின் திருவடி பொடியை உச்சிமேல் கொண்டு நான் படைக்கின்றேன்-தேவர் வணங்கு நின் பாததுளியை உச்சிமேல் வைத்துக் கொண்டு நான் சிருட்டிக்கின்றேன், அம்மை இன்னம் ஓர் விண்ணப்பம் உளது - அம்மையே இன்னமுமொரு விண்ணப்பமுண்டு, அடியனேன் பெறு தக்கன் தன்

மகளாய் இம்பர் நீ அவதரித்திடல் வேண்டும் - யான் பெற்ற தக்கனுக்குத் திருமக ளாக இவ்வுலகில் நீர் அவதாரஞ்செய்யவேண்டும், என்று வேண்டலும்-என்று வே ண்டிக்கொள்ளலும், உலகம் ஈன்றளித்த கொம்பர் நுண்ணிடை எம்பெருமாட்டி - உலகைப் பெற்றெடுத்த பூங்கொம்புபோலு நுணிய இடையையுடைய எம்மிறைவி, கூர்த்த பேரருள் கருணையின் உணர்த்தும் - மிக்க பெருங்கருணையினாலறிவியா நிற்பாள். (எ-று.)

(பிரமன்-தேவியே, எனக்குப் படைக்கும் ஆற்றலளிப்பையாயின்) உனது பாதங்களைச் சிரமேற்கொண்டு படைப்பேன். (அன்றியும்) இன்னம் ஓர் விண்ணப்ப முளது, யாதெனின்; என் மகனாகிய தக்கனுக்குப் புத்திரியாக வரவேண்டும் என்ற னன். பெருமாட்டி கருணையாற் கூறுகின்றாளென்க. (கக)

முழுதுமாயுயிர்க்குயிரெனத்திகழுமுதலுருத்திரனென்றிடுஞ்சுருதி
தழுவியாங்கவனிடப்புறமேவுஞ்சத்தியானவன்சத்தியனதனாற்
றொழுதகுந்திறலவன்றிருவடிவாந்தொல்சகங்களினிடப்புறமெனதாம்
பழுதிலாளநின்வடிவினைப்பகுத்துப்பாதிபெண்மையாண்பாதியிற்றிகழ்தி.

(இ-ள்.) சுருதி முழுதுமாய் உயிர்க்குயிரெனத் திகழும் முதல் உருத்திரன் என் றிடும் - வேதம், யாவுமா யுயிருக்குயிரென விளங்கு முதல்வன் உருத்திரனென்று கூறும், அவன் இடப்புறம் தழுவி மேவும் சத்தி யான் - அவனிடப்பாகத்தில் தழுவி யுறையுஞ் சத்தியானும், அவன் சத்தியன் அதனால் - அவன் சத்தனுமாகலான், தொ ழுதகும் திறல் அவன் திருவடிவாம் தொல் சகங்களின் இடப்புறம் எனதாம் - தொ ழத்தக்க திறலையுடைய அவன் திருவடிவாகிய பழமையாயுள்ள உலகங்களினிடப் புற மென்னுடையதாகும், பழுதிலாள நின் வடிவினைப் பகுத்து - (ஆகையால்) பழு தில்லாதவனே நின்வடிவத்தைப் பகுத்து, பாதி பெண்மை-பாதிபெண்மையாகவும், ஆண் பாதியில் திகழ்தி - ஆண்மை பாதியாகவும் விளங்கக்கடவாய். (எ-று.)

(பிரமனைநோக்கிப் பெருமாட்டி கூறுவது என்னையெனின்) வேதம் யாவு மா யுயிர்க்குயிராய் விளங்கும் முதல் உருத்திரனேயென்று வேதங்கள் கூறுகின் றன. யான், அவனிடப்புறத்திலிருக்குஞ் சத்தியாகும், அவன் சத்தியன், அன்றி யும்-இவ்வுலகெல்லாம் அவன் வடிவே அவ்வடிவங்களினிடப்புறம் என்னுடையது, (ஆகையால்) உன் வடிவத்தைப் பாதி யாணாகவும், பாதி பெண்ணாகவும் சோகம் பாவனையாலெண்ணி விளங்கக்கடவாயென்க. ஆங்கசைச்சொல்.

இடப்புறமேவுஞ்சத்தியான் அவன் சத்தியன் என்றது இறைவனிடத்துச் சத் தி மரமுங் காழ்ப்பும்போலிருத்தலை விளக்கற்கும், அவன் வடிவாம் தொல்சகங்கள் என்றது அவ்விறைவன் அனனியத்தால் உலகந்தானேயாயிருத்தலை யுணர்த்தற்கும், நின் வடிவினைப் பகுத்து பாதிபெண்மை ஆண்மை பாதியிற்றிகழ்தி என்றது "முழுதுமாய் உயிர்க்குயிரெனத் திகழும் முதல் உருத்திரன் என்றிடுஞ் சுருதி" என் று கூறிய மேற்கோளை வலியுறுத்த அம்முதல்வனைச் சோகம் பாவனையால் வழிப டும் வழிபாட்டை அநுபவமுறையாற் காட்டற்குமாமென்க. அல்லதூஉம் பிரமன் ஆணையும் பெண்ணையும் படைத்தற்கு வேண்டினனாதலால் அது முற்றுப்பெறப் பாதிபெண்மை ஆண்பாதியிற்றிகழ்தி என்றாளென்றலுமொன்று. ஈண்டுப் பிரமனுக் குக் கூறியது ஆதியான்மீசபாவனை; அப்பாவனை, "ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்,

ஆதியான்மிகம்" என மூவகைப்படும். இவற்றுள் வழிபடுவோதற்சென்னுந் தெய்வ வடிவம் ஆதிபௌதிகம், அதற்கு அதிதெய்வமாகிய மந்திரம் அதிதெய்விகம், அம் மந்திரமிடமாக நின்று பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆதியான்மிகம். ஆக லான் ஈண்டு உருத்திரனிடப்புறமேவும் சத்தியான் அவன் சத்தியன் சசங்களிடப்பு றமெனதாம் நின்வடிவினைப் பகுத்து பாதிபெண்மை யாணமைபாதியிற் நிகழ்தி என்றதனுல் ஆதியான்மீகமாயிற்றென்க. (௧௨)

அண்ணலாரருட்சத்தியுஞ்சிவனுமாயதன்மையின்றுதொட்டுலகம், பெண்மையாண்மையென்றிருவகைப்புணர்ப்பாற் பெண்ணுமாணுமாய்ப்பி றங்குமென்றியம்பிப், பண்ணைமாமறைக்கடவுளுக்கருளிப்பாவையம்பிகை யாயிடைக்கரந்து, மண்ணெலாமுய்யச்சதியெனும்பெயரால்வயங்குதக்கனு க்கொருமகளானாள்.

(இ-ள்.) அண்ணலார் அருட்சத்தியுஞ் சிவனும் ஆய தன்மையின்-இறைவன், அருட்சத்தியும் சிவனுமாகிய தன்மையால், அன்று தொட்டு உலகம் பெண்மை ஆண்மை என்று இருவகைப்புணர்ப்பால் - அன்றுமுதல் உலகம் பெண் ஆணென்னு மிருவகைப் புணர்ப்பினுல், பெண்ணும் ஆணும் ஆய் பிறங்கும் என்று - பெண்வடிவ மாகவும் ஆண்வடிவமாகவும் விளங்குமென்று, பண்ணைமாமறை கடவுளுக்கியம்பி யருளி - கூட்டமாகிய பெருமையமைந்த மறையோனுகிய பிரமனுக்குச் சொல்லி யருளி, பாவை அம்பிகை ஆயிடை கரந்து - பாவைபோல்வாளாகிய அம்பிகை அங் கே யுருக்கரந்து, மண் எல்லாம் உய்ய மண்ணுலகமெல்லாம் பிழைக்க, சதி என்னும் பேரால் வயங்கு தக்கனுக்கு ஒருமகளானுள் - சதி என்னும் பெயரினுல் விளங்கு கின்ற தக்கனுக் கொருமகளாகத் தோன்றினுள். (எ-று.)

இறைவனுர், சத்தி சிவம் என்கின்ற இரண்டுவடிவமா யிருக்கின்றபடியினுல் அக்காலந்தொடங்கி உலகம் பெண்தன்மை ஆண்தன்மை என்று மிருவகைப் பண்பி னையுடையதாகி பெண்வடிமாகவும் ஆண்வடிவமாகவும் விளங்கும் என்று பிரமனுக் குக்கூறி யனுக்கிரகஞ்செய்து அங்கு தேவி திருவுருக்கரந்து சதி என்கிற பெயரால் தக்கனுக்குத் திருமகளாக வந்தனளென்க.

ஆண் பெண்ணென்று சுட்டி யறியக்கூடாது அசிந்திதனுய் நிற்கு மிறைவன் உயிர்கட்குப் போகம் புரிதற்பொருட்டும் வினையினை வீட்டுதற்பொருட்டும், யோக முத்தியை யுதவுதற்பொருட்டும் அம்மையப்பராய் விளங்கினனென்பார் "அண்ண லார் அருட்சத்தியும் சிவமும் ஆயதன்மை எனவும், இறைவன் அம்மையப்பனுகத் திருவுருக்கொண்டகாலம் இன்னகாலமென்றறியப்படாதென்பார் அன்று எனவும், இறைவன் சத்திசிவங்களாகவே அவ்விரண்டுக்கு மியல ஆண்மைக்குணத்தையும் பெண்மைக்குணத்தையும் உயிர்களடைந்து அவ்விரண்டுக்கு முரிய வடிவங்களையும் உடையனவென்பார் உலகம் பெண்மை ஆண்மையென றிருவகைப்புணர்ப்பாற் பெ ண்ணுமாணுமாய் பிறங்குமெனவுங்கூறினுர். (௧௩)

ஆயநங்கையைவிதியுளியரனுர்க்களித்துநான்முகனன்னணந்திகழ
மாயிருஞ்சகமாஞெடுபெண்ணுய்வயக்கமுற்றனவகிலநாயகிமும
பாயும்வெள்விடைப்பாகனைமணந்துபழித்ததக்கனைவெறுத்தவன்மகண்மை
மேயமேனியைநீத்திமகிரிக்குமேனைபான்மகளாயவதரித்து.

(இ-ள்.) ஆயநங்கையை விதியுளி அரனுர்க்கு அளித்து நான்முகன் அன்ன ணம்திகழ - அவ்விறைவியை வேதவிதியாற் சிவபெருமானுக்குத் திருமணஞ்செ

ய்துகொடுத்து பிரமன் முன் தேவிகூறியவாறு விளங்க, மாயிரும் சகம் ஆணொடு பெண்ணாய் வயக்க முற்றன- பெருமைபொருந்திய உலகம் ஆணொடு பெண்ணாக விளங்கின, அகிலநாயகியும் பாயும் வெள்விடைபாகனை மணந்து - உலகமீன்ற முதல்வியும் பாய்ந்துசெல்லும் வெள்ளை இடபவூர்தியானைத் திருமணஞ் செய்துகொண்டு, பழித்த தக்கனை வெறுத்து - இறைவனைத் தூற்றிய தக்கனைச் சிந்தையால் வெறுத்து, அவன் மகன்மை மேய மேனியை நீத்து அவன் மகளாகத்தோன்றிய திருவுருவத்தை நீக்கி, இமகிரிக்கு மேனைபால் மகளாய் அவதரித்து - மலையரையனுக்கு மேனையிடத்துத் திருமகளாய்த்தோன்றி. (எ-று)

(சதியென்றபெயரோடு தக்கன் மகளாயிருந்த) தேவியை விதிப்படி இறைவனுக்கு மணஞ்செய்வித்துத் தனக்குத் தேவி விதித்தபடியே தன் வமமிடங்களில் சிவசத்திகளைத் தியானித்து சிவசத்திசொரூபமாகவே நிற்க(அதனால்) சராசரங்களெல்லாம் ஆண்பெண்ணென்கின்ற இரண்டு வடிவங்களாகச் சிருட்டிக்கப்பட்டு வந்தன., (பிரமன் செய்தி இங்ஙனமிருக்க) தேவி இறைவனை மணந்து இறைவனைப்பழித்த தக்கனைச்சபித்து அவன் மகளெனக்கொண்டு பாராட்டிய திருமேனியைக்கழித்து மலையரையன் மகளா யவதாரஞ் செய்தனளென்க.

பிரமன் தன்சீவ பாவனைமறந்து சிவபாவனையில் இலயித்திருந்தனனாதலால் நான்முகனண்ணந்திகழ எனவும், தன்னைச் சிவனுக்குக் கொடுத்து சிவனைக்கொண்டார்க்கு யாவும் சித்தியாமாதலால் சகம் ஆணொடுபெண்ணாய் வயக்கமுற்றன எனவுங் கூறினர். (௧௪)

அங்கண்மேவியபிஞ்ஞகனேவற்பணியின்மேவினளாகமற்றந்நாட், பங்கயத்தவனல்கியவரத்தா றாருகாசுரனெனப்பயில்கொடியோன், பொங்குமாண்மையி னுலகெலாம்வருத்தப் பொன்னகர்க்கிறைகுரவனை முதலோர், தங்குழாத்தொடு முசாவிநான்முகத்தோன்ற ன்னையெய்தியக்கொடுந்தொழிலியம்பி.

(இ-ள்.) அங்கண் மேவிய பிஞ்ஞகன் ஏவற்பணியின் மேவினளாக - அங்கெழுந்தருளிய இறைவனது குற்றேவல் செய்ய விருப்பமுடையாளா யிருந்தனளாக, அந்நாள் பங்கயத்தவன் நல்கியவரத்தால் - அக்காலத்தில் பிரமன் கொடுத்த வரத்தினால், தாருகாசுரன் எனப்பயில்கொடியோன் - தாருகாசுரனெனப்படுகின்ற கொடியோன், பொங்கும் ஆண்மையின் உலகெலாம் வருத்த-மிக்க ஆண்மையினால் உலகமுழுதும்வருத்த, பொன்னகர்க்கிறை தங்குரவன முதலோர் குழாத்தொடும் உசாவி - பொன்னகர்க்கரசனாகிய இந்திரன் தம் குருமுதலோராகிய பரிவாரத்தோடும் வினவி, நான்முகத்தோன் தன்னை எய்தி அக்கொடுந்தொழில் இயம்பி - நான்கு முகங்களையுடைய பிரமனையடைந்து அக்கொடுமையாகிய தொழிலைக்கூறி. (எ-று.)

இமயமலையில் மணங்கருதி எழுந்தருளிய இறைவன் கட்டளையிட்டபடியே தேவிதவத்திலிருக்க,பிரமனிடம் வரம்பெற்ற தாருகன் உலகெல்லாம் தன்னாண்மை செலுத்திவருத்த அவ்வருத்தத்துக்காற்றாது இந்திரன் தன் ஆசிரியராகிய பிரகஸ்பதிபகவானிடத்தும் ஏனையதேவர் முதலிய பரிசனங்களிடத்தும் ஆலோசித்துப் பிரமனிடஞ்சென்று அவ்வசுரன் கொடுந்தொழிலெல்லாம் எடுத்துக் கூறினனென்க. குரவனை என்புழி ஐ சாரியை.

எந்தைநீயிதுதீர்திறம்புகலென் றிறைஞ்சிவேண்டலுந்திசைமுகப்புத்தேளந்தவெந்திறற்றாருகன்செருக்கையடக்குமாண்மையன்முருகவேளன்றிக்

கந்தமென்றொடைக்கடவுளரேனோர்வல்லரல்லரக்கந்தனைத்தருவா
னிந்துசேகரனுமையினைமணக்குமுபாயநீபுரிகெனவிடைகொடுத்தான்.

(இ-ள்.) எந்தை நீ இது தீர் திறம் புகல் என்று இறைஞ்சி வேண்டலும் - எந்தையே நீ இது நீங்கும் வகையைச் சொல்லென்று புகழ்ந்து வேண்டலும், திசைமுகப் புத்தேள் அந்த வெந்திறல் தாருகன் செருக்கை யடக்கும் ஆண்மையன் முருகவேள - பிரமன் அக்கொடிய ஆற்றலையுடைய தாருகனது கர்வத்தை யடக்குமாண்மையையுடையான் முருகனே, அன்றி கந்த மென்தொடை கடவுளர் ஏனோர் வல்லரல்லர் - அல்லாமல் வாசனை மிகுந்த மென்மையாகிய மலர்மாலை யணிந்த தேவரும் பிறரும் வல்லமையுடையரல்லர், அக்கந்தனைத் தருவான் - அக்கந்தனைத் தரும்படி, இந்து சேகரன் உமையினை மணக்கும் உபாயம் நீ புரிகென விடைகொடுத்தான் - சந்திரசேகரனாகிய இறைவன் உமையம்மையை மணஞ்செய்து கொள்ளுமுபாயத்தை நீ செய்கவென விடையளித்தான். (எ-று.)

(இந்திரன் பிரமனை நோக்கி) எந்தையே இவ்வசுரனால் நேர்ந்த துன்பம் நீரும் வகையைப் புகல்வாயென்று கேட்கவும், பிரமன் அவ்வசுரனாண்மையை யொழித்தற்கு முருகனேயன்றி வேறொரு தேவரின்று. ஆகையால் சிவபெருமான் உமாதேவியை மணஞ்செய்தற்குரிய உபாயத்தை நீ செய்வாயென்று விடைகொடுத்தனனென்க.

பிரிநிலை யேகாரம் விகாரத்தாற் றொக்கது. வேள்-விருப்பத்தைத்தருபவன், இது காரியவாகுபெயராய்ப் பலபொருள் குறிக்குமொரு சொல்லேனும் முருகனென்ற பிறிதினியைபு நீக்கிய விசேடணமாகிய சொல்லா யிருபெயரொட்டுப் பண்புத்தொகையாய்ப் புணர்ந்தது. வேள் என்றது ஈண்டுக்கந்தப்பிரானை. (கசு)

மீண்டுவாசவன்மாரனைநினைப்பவேனில்வேள்சிலைபகழிகைக்கொண்டு
காண்டருங்கவினிரதியுமதுவுமருங்குமேவரக்கடுகிவந்திறைஞ்சி
யீண்டுநின்னருளாணையின்வலியால்யாதுமாற்றுவல்செய்பணியருளாய்
மாண்டமுப்புரமபொடித்தவர்தமையும்வெல்லவல்லுநன்மற்றுளாயெவனோ.

(இ-ள்.) மீண்டு வாசவன் மாரனை நினைப்ப - அங்கு மீண்டு இந்திரன் மன்மதனை எண்ண, வேனில்வேள் சிலை பகழி கை கொண்டு - மன்மதன் வில்லும் அம்பும் கையிற்கொண்டு, காண் தரும் கவின் இரதியு மதுவும் மருங்குமே வர - காணத்தக்க அழகையுடைய இரதியும் மதுவும் பக்கத்தில் வர, கடுகி வந்திறைஞ்சி - விரைந்துவந்துவணங்கி, ஈண்டுநின் அருள்ஆணையின் வலியால் யாதும் ஆற்றுவல் - இங்கே நின்னாணையினருளினால் செயற்கரிய யாவுஞ் செயவல்லேன், செய் பணி அருளாய் - செய்யத்தக்க குற்றேவலை யருளிச்செய், மாண்டமுப்புரம் பொடித்தவர் தமையும் வெல்லவல்லு நன் - மாட்சிமைப்பட்ட முப்புரமட்ட இறைவனையும் வெல்லவன்மையையுடையேன், மற்றுளா எவனோ - வேறுளாயாதோ. (எ-று.)

பிரமனிடத்து விடைபெற்றுத் திரும்பி, பிரமன் குறி (யிட்டபடியே) காமன் தன்னிடம்வர நினைத்தனன். நினைத்தபடியே மன்மதன்வந்து வணங்கி உன்னருளால் யாவும் செய்யவல்லவனுவேன (ஆகையால்) இப்போது செய்யத்தகும் பணியைக் கட்டளையிடுவாய், யானோ திரிபுரதகனனாகிய இறைவனையும் வெல்ல வல்லவன் இதனினும் வேறு உறுதி உனக்குச் சொல்லவேண்டுமோ (எனவே மன்மதன் தன்னாண்மையைக் கூறியதாமென்க.)

வேனில் வசந்தகாலம், அது அவனுக்குரிய காலமாகலின் வேனில்வேளென்றார். வேள் ஈண்டு மன்மதனே. சிலை கரும்பு. பகழி - ஐவகையாகிய மலரம்பு.(கஎ)

ஈதியம்புழியிந்திரனுவகையெய்திவிண்ணவரிடும்பையுமவுண, னீதியில்லனபுரிவதுமலரோனிகழ்த்துமாற்றமும்வகுத்துரைசெய்து, பேதியாவகைப்பெருந்தகையின்னே பிஞ்ஞகன்றனையுமையொடுஞ்சேர்த்தி, போதியென்றலுமைங்கணைக்கிழவன்பொன்னகர்க்கிறைவிடைகொடுமீண்டான்.

(இ-ள்) ஈது இயம்புழி - இதனைக்கூறலும், இந்திரன் உவகை எய்தி - இந்திரன் மகிழ்ச்சியடைந்து, விண்ணவர் இடும்பையும் - தேவர்களுடைய துன்பத்தையும், அவுணன் நீதியில்லனபுரிவதும் - தாருகாசுரன் நீதியில்லாத காரியங்களைச்செய்வதும், மலரோன் நிகழ்த்துமாற்றமும் - பிரமன் கூறிய சொல்லும், வகுத்துரைசெய்து - வகைப்படக்கூறி, பெருந்தகை பேதியாவகை இன்னே பிஞ்ஞகன்றன்னை உமையோடுஞ் சேர்த்தி - பெருந்தகைமையை யுடையானே மனம்பேதியாவண்ணம் இப்பொழுதே சிவபெருமானைப் பிராட்டியாரோடும் சேர்த்துவிடு,போதி என்றலும்-போவாயென்று கூறலும், ஐங்கணைக்கிழவன் பொன்னகர்க்கு இறை விடைகொடுமீண்டான் - ஐங்கணைக்குரியவனாகிய மன்மதன் பொன்னகர்க்கரசனாகியஇந்திரனிடத்து விடைகொண்டு மீண்டான். (எ-று)

(மன்மதன்) இவ்வண்ணங்கூறவும் இந்திரன் மகிழ்ந்து சுரர்களுடைய துன்பத்தையும் அசுரன் செய்யும் துன்பத்தையும் இத்துன்பம் ஒழியுமாறு பிரமன் கூறிய உபாயத்தையும் விரித்துச்சொல்லி மன்மதனே நீ சொல்லிய சொல்லில் மாறுபடாது சிவபெருமானை உமாதேவியோடுஞ் சேர்த்துவிடு என்று சொல்லவும் காமன் இந்திரனிடத்து விடைபெற்றுத் திரும்பினனென்க.

இறை சொல்லாலஃறிணை. விண்ணவரிடும்பை என்றது விண்ணவர் துறக்கநாட்டைத் தீக்கொளுவல், அவுணன் நீதியில்லனபுரிவது என்றது. அவன்தேவரைச் செய்யத்தக்கிலாப்பணியை செய்கவென்றேவல். மலரோனிகழ்த்து மாற்றமென்றது - கந்தனைத்தருவான் இறைவனுமையை மணப்பதற்குபாயம்.

ஆண் தன்மையை எடுத்துக்கூறல் யாவர்க்கும் எளிது,செய்தல் அரிதாகலின் அதனைக்குறித்தற்கு "பேதியாவகை பிஞ்ஞகன்றனை யுமையோடுஞ் சேர்த்தி" எனவும்,செய்தற்கரிய செயலைச் செய்யத்துணிந்தோனை யாவரினுஞ் சிறந்தெடுத்தோதல் இயல்பென்றற்கு "பெருந்தகை" எனவுங்கூறினார். (கஅ)

மீண்டுசெம்மலாரிருந்துழியணுகி மெல்லவெஞ்சிலைவாங்கலுமவனை, மாண்டகுந்திரு நுதல்விழிநெருப்பின் மடுத்துவார்குழ லிரதிநின்றிரப்பக், காண்டகாவகையுருவிலியாக்கிக்கடுந்தவம்புரிமலைமகண்மணந்து, தூண்டுவேற்படைக்குரிசிலையுதவித்தாருகன்றனைத்தொலைத்தருள்செய்தார்.

(இ-ள்.) மீண்டு செம்மலார் இருந்துழி அணுகி மெல்ல வெஞ்சிலை வாங்கலு(ம்) (விடைகொண்டு) மீண்டு இறைவனிருந்தவிடத்தை நெருங்கி மெல்லக் கொடுஞ்சி(லை) வளைத்தலும், அவனை மாண் தகும் திருநுதல் விழி நெருப்பின் மடுத்து - அவனை மாட்சிமைப்பட்ட அழகிய நெற்றிவிழி நெருப்பினாலழித்து, வார் குழல் இரதி நின்று இரப்ப-நீண்ட கூந்தலையுடைய இரதிநின்றிரத்தலினால், காண் தகாவகை உருவிலியாக்கி - பிறரால் காணக்கூடாதபடி அனங்கனாக்கி, கடுந்தவம்புரி மலைமகள் மணந்து - அருந்தவஞ்செய்கின்ற பார்வதியாரை மணஞ்செய்துகொண்டு, தூண்டு

வேற்படைக் குரிசிலை யுதவி தாருகன் றனை தொலைத்து அருள் செய்தார் - தாங்கு கின்ற வேற்படையையுடையமுருகனை யளித்துத் தாருகாசுரனைத் தொலைப்பித்துக் கருணைசெய்தனர். (எ-று.)

மன்மதன் பிரமனிடத்து விடைபெற்றுத் திரும்பி இறைவனிருக்குமிடத்தை யடைந்து மெல்லத் தனது கரும்புவில்லை வளைக்கவும் (அவ்வில்லாளனை) இறைவன் தனது நெற்றிக்கண்ணா லெரித்தனன். எரிக்கவும் அவன் மனைவியாகிய இரதி புலம் பிக் கணவனை வேண்ட (அவட்கு) அம்மன்மதனைத் தந்து தாம்செய்தற்கரிய தவஞ் செய்யும் மலைமகளைத திருமணம்புணர்ந்து வேற்படையாளியாகிய முருகனைத்தந்து தாருகனைச் சங்கரித்து தேவர்களுக் கருள்செய்தாரென்க.

மன்மதன் இரதிக்கு உருவமாய்த் தோன்றச்செய்தாலும் பிறர்க்குருவமாகத் தோன்றுவாறு செய்தனனாதலால் காண்டகாவகையுருவிலியாக்கி என்றார். மலைம கள் மணந்து என்புழி உயர்திணையில் இரண்டாவது விகாரத்தாற்றொக்கது. இர ப்ப-என்றது காரணப்பொருட்டாகிய செயவெனெச்சம். (௧௯)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆங்கதன்பின்னர்ச்செங்கேழலங்கொளிவடி வினஞ்சந்
தூங்கியமிடற்றினுருஞ்சுரிகுழலிமயமாது
மோங்குயர்பலவுஞ்சந்தும்வேரொடுமொடியத்தள்ளி
வீங்கொலியருவிதாழு மந்தரவெற்பின்மேலால்.

(இ-ள்.) ஆங்கு அதன் பின்னர் - அவ்விடத்ததன்பிறகு, செங்கேழ் அலங் கொளி வடிவின் - மிக்க செவ்வண்ணத் திருமேனியில், நஞ்சம் தூங்கிய மிடற்றினு ரும் - விடந்தங்கிய கண்டத்தையுடைய சிவபெருமானும், சுரிகுழல் இமயமாதும்- சுரிந்த கூந்தலையுடைய மலைமகளும், ஓங்குயர் பலவும் சந்தும் வேரொடும் ஒடிய த்தள்ளி - மிகவுயர்ந்த பலாமரத்தையும் சந்தனமரத்தையும் வேருட னொடியும்படி தள்ளி, வீங்கொலி யருவி தாழு மந்தர வெற்பின்மேல் - மிகுந்த ஓலிதங்கிய மந்தர மலையின்மேல்பால். (எ-று.)

முருகக்கடவுளால் தாருகனைத் தொலைவித்தபின்னர், நீலகண்டனாகிய இறை வனும், மலையரையன்மகளும் மந்தரமலையின்மேலென்க.

ஓங்குயர்-ஒருபொருட்பன்மொழி. பலாஎன்றது குறுகிநின்றது. ஆல்-அசை. (௨0)

உலகெலாமுய்யுமாற்றாலுவளகத்தைந்துமூன்றாச்
சிலதியரடுக்கியிட்டசெழுந்தவிசணையின்மன்னி
விலகருமகிழ்ச்சிமீதூர்திருவிளையாடற்செய்கைக்
கலவியினயந்துதம்முட்களித்தினிதிருக்குமேல்வை.

(இ-ள்.) உலகு எல்லாம் உய்யுமாற்றால் - உலகங்களெல்லாம் பிழைக்குமவ கையாக, உவளகத்து - அவ்விடத்து (அந்தப்புரத்தில்) சிலதியர் ஐந்து மூன்றாக அ டுக்கியிட்ட செழும் தவிசு அணையில்மன்னி - சேடியர்கள் ஐந்தடுக்காகவும் மூன்றடு க்காகவும் அமைத்துள்ள செழுமையாகிய பூவணையின்மேல் (இறைவனும் இறைவி யும்) வீற்றிருந்து, விலகரும் மகிழ்ச்சி மீதூர் திருவிளையாடல்செய்கை-இடையறாத ஆனந்தம் மேன்மேலதிகப்படும் திருவிளையாடற்றொழிலை, கலவியின் நயந்து - சிற் றின்பத்துறையில் விரும்பி, தம்முள்களித்து இனிதிருக்கும் எல் வை-தங்களுக்குள் மகிழ்ந்து இன்புற்றிருக்கும் பொழுது. (எ-று.)

முன்கூறிய மந்தரமலையில் அமைந்துள்ள அந்தப்புரத்தில்பூவணையின்மேல் அம்மையப்பரிருவரும் வீற்றிருந்து உலகெல்லாமுய்யுமாறு கலவியின்பத்தை நுகர்ந்து எழுந்தருளியிருக்கும்போது என்க.

சிற்றுயிர்க்குரிய சிற்றின்பவிளையாடலை அம்மையப்பரிருவருஞ் செய்தது உயிர்கள் அவ்வின்பத்தை நுகரவாகலான் உலகெலாமுய்யுமாற்றாலெனவும், உயிர்கள்பொருட்டு அவ்விளையாடலைச் செய்யினும் இருவர்மாட்டும் நிகழ்ந்த அவ்வின்பம் சிறறின்பமன்றாகலான் விலகருமகிழ்ச்சி மீதூர்திருவிளையாடற் செய்கைக்கலவியினயர்ந்து எனவுங்கூறினார். உவளகம்-இடம். (உக)

மும்மைப்புவனங்களுஞ்செய்தவப்பேறுமுற்றச்
சும்மைத்திரைநீருடைமேதினிதோற்றமெய்தச்
செம்மைத்திசையெட்டினுந்தென்றிசைமிக்குவெல்ல
மம்மர்த்தொகைநூறியவண்டமிழ்நாடுவாழ.

(இ-ள்.) மும்மைப்புவனங்களும் - மூன்றுலகங்களும், செய் தவப்பேறு முற்ற - விடாதுசெய்த தவப்பயன்முடிவுபெறவும், சும்மை திரை நீருடைய மேதினி தோற்றம் எய்த - ஒலிக்கின்ற அலையையுடையகடலை ஆடையாகவுடுத்த நிலவுலகமானது சிறப்புற்றோங்கவும், செம்மை திசை எட்டினும் தென்திசை மிக்கு வெல்ல- செம்மைவாய்ந்த எண்திக்குகளில் தென்திசையானது செருக்கடைந்து வெற்றிபெறவும், மம்மர்தொகை நூறியவண் டமிழ் நாடுவாழ - அஞ்ஞானத்தொகுதியைத்துகள்படச்செய்த செவ்வியதமிழ்நாடானது வாழவும். (எ-று.)

மூன்றுலகங்களுந் தவப்பேறடையவும், (அவற்றுள்) நிலவுலகு மேம்பட்டோங்கவும், அதனுள் தென்றிசையானது ஏனையதிசைகளை வெற்றிகொள்ளவும், (அதனுள்) தமிழ்நாடுவாழவும் என்க.

தவமியற்றினும் அத்தவத்தாற் பெறும்பேறு முற்றுவதரிதென்பதுதோன்ற செய்தவப்பேறுமுற்ற எனவும், ஏனையவுலகங்களிற் சேரற்குரியவினைகளியற்றுதற்கிடமாயுள்ளது மண்ணுலகமாதலால் அச்சிறப்புத்தோன்ற மேதினிதோற்றமெய்த எனவும், அம்மண்ணுலகில் பரதகண்டஞ்சிறந்ததென்பது தோன்ற தென்றிசைமிக்குவெல்ல எனவும், அக்கண்டத்திலும் அஞ்ஞானத்தை யெளிதிற்போக்கி முத்தியின்பத்தைக்கொடுக்குந் தமிழ்வழங்குநிலம் மேம்பாடென்பது தோன்ற மம்மர்த்தொகைநூறியவண்டமிழ்நாடுவாழ எனவுங்கூறினார். (உஉ)

நலமன்னியதண்டகநாடுசெழித்துமல்கப்
பலரும்புகழ்காஞ்சிவளம்பதிமேன்மைசாலக்
குலவுஞ்சமயங்களோராறுமகிழ்ச்சிகூர
வுலகெங்கணும்வைதிகசைவமுயர்ந்துமன்ன.

(இ-ள்.) நலம்மன்னிய தண்டகநாடு செழித்துமல்க - நன்மைபொருந்திய தண்டகநாடு பலவளப்பங்களால் செழித்தோங்கவும், பலரும் புகழ் காஞ்சிவளம்பதி- யாவராலும் புகழப்பட்ட செல்வமமைந்தகாஞ்சிப்பதி, மேன்மைசால - மிக்கமேன்மைபெறவும், குலவும் ஓர் ஆறுசமயங்கள் மகிழ்ச்சிகூர - அழியாது விளங்குகின்ற சைவமுதலிய ஆறுசமயங்களும் நீங்காத ஆனந்தத்தையடையவும், உலகு எங்கணும் வைதிகசைவம் உயர்ந்துமன்ன - உலகமெங்கும் வைதிகசைவம் குன்றாதுநிலைபெறவும். (எ-று.)

தமிழ்நாட்டுள் தண்டகநாடுசெழிக்கவும், அந்நாட்டில் காஞ்சிநகரம் மேன்மைபெறவும், சைவமுதலிய வுட்சமயங்களாறும் மகிழ்கூரவும், எவ்வுலகத்தும்வைதிகசைவமே நிலைபெறவும் என்க.

ஏனைய நாடுகளிற்சிறந்தது தண்டகநாடென்பார் தண்டகநாடுசெழித்து மல்களனவும், ஏனைய நகரங்களிற்புகழ்பெற்றது காஞ்சிஎன்பார் காஞ்சிவளம்பதிமேன்மைசால எனவும், ஏனைய சமயங்கள் வேதபாஹ்யமாகி நிற்ப, சைவமுதலிய அகச்சமயங்களாறுமே விளங்குமென்பார் குலவுஞ்சமயங்களோராறு மெனவும், புறச்சமய்நெறிநின்றோர் இவ்வகச்சமயப் பிரவேசம்பெறுவாராயின் அவர்க்கு முன்னில்லாத ஆனந்தம் விளையுமென்பார் மகிழ்ச்சிகூர எனவும், சைவமே வேதாகமசம்மதமென்பார் வைதிகசைவமுயர்ந்து மன்னஎனவும் கூறினர். (உகூ)

எவ்வெத்தவத்துஞ்சிவபூசனையேற்றமென்னப்
பௌவப்புனல்சூழ்படிமேலவர்தேறியுய்யத்
தெவ்வுத்தொழில்பூணுமறக்கடைதேயநல்கூ
ரெவ்வத்திறநீங்கியுயிர்ப்பயிரெங்குமோங்க.

(இ-ள்.) எவ்வெத்தவத்தும் - எவ்வகையான அரியதவங்களிலேயும், சிவபூசனை ஏற்றம் என்ன - இறைவனைப்பூசித்தலாகிய தவமே உயர்ந்த தவமென்று, பௌவப்புனல்சூழ் படிமேலவர் தேறி உய்ய-கடலால் சூழப்பட்ட இந்நிலவுலகிலுள்ள மேலோர்கள்தெளிந்து உய்யுநெறிதேடவும்,தெவ்வுத் தொழில் பூணும் அறக்கடைதேய - பகைவரைப்போல் (எந்நாளும்) பகைசெய்யும்பாவங்கள்தேயவும், நல்கூர் எவ்வத்திறம் நீங்கி - வறுமையென்கின்ற துன்பத்தின்வன்மை நீங்கி, உயிர்ப்பயிர் எங்கும் ஓங்க - உயிர்களென்கின்றபயிர்களெவ்விடத்தும் ஓங்கவும். (எ-று.)

எத்தவங்களினுஞ் சிறந்தது சிவபூசையென்று மேலோர்கள் தெளிந்துய்யவும் பாவந்தேயவும் வறுமைநீங்கி உயிர்கள்வாழவும் என்க.

சிவபெருமானை அர்ச்சித்தலே பெருந்தவமாதலால் சிவபூசையேற்றமெனவும், அத்தவத்தில் தலைப்படமுயல்வோர் அறிஞராதலால் மேலவர்தேறியுய்ய எனவும், அதுவேயேற்றமெனத் தெளியச்செய்யாதது பாவமாதலால் அறக்கடைதேய எனவும், அப்பாவத்தை வளர்ப்பது வறுமையாதலால் நல்கூரெவ்வத்திறநீங்கி எனவும், காரணகாரியமாகிய பாவமும் நல்குரவும்ஒழியவே சிவபூசையிற் றலைப்படுவராதலால் உயிர்ப்பயிரெங்குமோங்க எனவுங்கூறினர். (௨௭)

முப்பான்முதலிட்டவிரண்டறமுந்தழைப்ப
வெப்பாலுலகத்தொளியாவையுமெம்பிரானார்
தப்பாவிழியின்னொளிச்சால்பெனயாருங்காண
வப்பார்சடையாரடித்தொண்டரகங்களிப்ப.

(இ-ள்.) முப்பான்முதலிட்ட இரண்டறமும் தழைப்ப - முப்பத்திரண்டுதருமங்களும் தழைந்துவளரவும், எப்பால் உலகத்து ஒளியாவையும் - எவ்வகைப்பட்டவுலகங்களிலுமுள்ள ஒளிகளெல்லாம், எம்பிரானார் தப்பாவிழியின் ஒளிசால்புஎன யாரும்காண - எமதிறைவனுடைய அழியாதநேத்திரத்தின் ஒளிப்பெருக்கமென்று யாவருமறியவும், அப்பார்சடையார் அடித்தொண்டர் அகம்களிப்ப-கங்கையையணிந்தசடையினையுடைய இறைவனது திருவடித்தொண்டர்கள் மனமகிழவும்.(எ-று.)

அறங்களெல்லாம் வளரவும் எவ்வொளியும் இறைவன் கண்ணொளியென்று யாவருமுணரவும் தொண்டரகமகிழவும் என்க. முப்பான்முதலிட்ட விரண்டற முமென்றது முப்பத்திரண்டெனப்படுதற்கென்க. இவ்வாறே மூன்றுதலையிட்டமுப் பதிற்றெழுத்துமெனப் பிறருங்கூறுதல்காண்க.

மக்களுயிர்க்குறுதிபயப்பன அறங்களாதலால் அறந்தழைப்பனவும், சிவப் பிரகாசித்தால் யாவும்பிரகாசிப்பதென்பது யாவரும் உணர்தல் அரிதாகலான் எம்பி ரானார் விழியினொளிச்சால்பென யாருங்காணவும், இறைவனுண்மையை யாவ ரும் உணர்தலே அடியார்வேண்டுகோளாதலான் தொண்டரகங்களிப்ப எனவுங் கூ றினர். ஆர்விகுதி உயர்வின்கண்வந்தது. (உ௫)

கைம்மிக்கெழுகாதல்விருப்புமீதூர்குறிப்பின்
விம்மிப்பணைத்துப்புடைவீங்கியெழுந்தகொங்கைப்
பொம்மற்பெருமாட்டிவெரிந்புறத்தெய்திவல்லே
செம்மற்பிறைவேணியனார்திருக்கண்புதைத்தாள்.

(இ-ள்.) கைமிக்கு எழுகாதல் விருப்பு மீதூர் குறிப்பின் - மிகுந்தெழுகின்ற ஆசையும் அன்பும் மேன்மேல்வளருமுள்ளக்குறிப்பினால், விம்மி பணைத்து புடை வீங்கி எழுந்த கொங்கை பொம்மல் பெருமாட்டி - விம்மிப்பருத்துப் பக்கங்களிற்ற டித்து எழுந்த தனங்களின் பொலிவினையுடைய எம்பெருமாட்டியார், வெரிந் புற த்து எய்தி-முதுகின்புறத்தில்வந்து, வல்லே செம்மல் பிறை வேணியனார் திருக்கண் புதைத்தாள் - விரைவில் பிறையணிந்த சடையினையுடைய இறைவனது திருக்கண் ணை மறைத்தல் செய்தனர். (எ-று.)

பிராட்டியார் தன்னுள்ளத்திலெழுந்த அன்பின்மிகுதியால் இறைவன்பின்பு றத்திற்சென்று அவ்விறைவனுடைய திருக்கண்களை விரைவில் தன் திருக்கரத்தால் மூடினாளென்க.

உவளகத்து செழுந்தவிசணையின் தம்முட்களித் தினிதிருக்குமேல்வை, எ ய்த, வெல்ல, வாழ, மல்க, சால, கூர, மன்ன, என்ன, உய்ய, ஓங்க, தழைப்ப, கா ண, களிப்ப, எய்தி கண்புதைத்தாள் எனவினைமுடிக்க. (உ௬)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

இருண்டபூங்குழலாள்செங்கையிறுகுறப்புதைத்தலோடு
மிருண்டகந்தரத்தார்நோக்கினிருசுடர்மறைந்தவாற்றா
லிருண்டதுபுவனிமுற்றுமிருண்டவெண்டிசையுமென்று
மிருண்டறியாதவிண்ணோரிருக்கையுமிருண்டதந்நாள்.

(இ-ள்.) இருண்ட பூங்குழலாள் செங்கை இறுகுறபுதைத்தலோடும் - மல ரணிந்தகரியகூந்தலையுடைய உமாதேவியார் தமது அழகிய திருக்கரங்களால் (இறை வர்) திருக்கண்களை அழுந்தப்புதைத்தலும்(அவ்வளவில்)இருண்ட கந்தரத்தார் இரு நோக்கின் சுடர்மறைந்த ஆற்றால்-நீலகண்டத்தையுடைய பெருமானாரது இரண் டுகண்களினொளி மறைந்துபோயது அக்காரணத்தால், புவனிமுற்றும் இருண்டது- உலகமுழுமையும் இருண்டுபோயிற்று, எண்டிசையும் இருண்ட - எட்டுத்திசை களும் இருளையடைந்தன, என்றும் இருண்டு அறியாத விண்ணோர் இருக்கையும் இருண்டது - எந்நாளும் இருளையடைந்து (அதனால் தன்னொளிகுன்றுதல்) அறியா ததேவருலகமும் இருளடைந்தது, அந்நாள் அப்பொழுது. (எ-று.)

உமாதேவியார் இறைவருடைய திருக்கண்களை இறுகப்புதைத்த வளவில் அக்கண்களிெ ஒளிமறைய அதனால் எல்லாவுலகங்களும் எண்டிக்குகளும் விண்ணோருலகமும் இருளடைந்தன அந்நாளில் என்க.

புதைத்தலோடு மென்புழி ஓடு இசைநிறை.

ஏனையவுலகங்களிலும் திசைகளிலும் விண்ணோருலகு எப்பொழுதும் ஒளிமயமாகவே விளங்குஞ் சிறப்புடையதாகலான் என்றுமிருண்டறியாத விண்ணோரிருக்கையென விதந்தோதினார். (உஎ)

அழுங்கவேதன்னை நாளுங்காய்ந்துலாமருக்கர்தம்மோ
டொழுங்குறத்திரட்டிநீட்டிசெருகிவைத்திட்டாலொக்குஞ்
செழுங்கதிர்மதியஞ்செந்தீயுடுமணித்திரளையெல்லாம்
விழுங்கித்தன்வீறுகாட்டிப்படர்ந்தது திமிரவீக்கம்.

(இ-ள்.) திமிரவீக்கம் - இருட்கூட்டம், தன்னை அழுங்க நாளும் காய்ந்து உலாவும் அருக்கர் தம்மோடு - தன்னை வருந்தும்படி எந்நாளும்பகைத்து ஆகாயத்திலுலவும் சூரியர்களோடு, செழும் கதிர் மதியம் செந்தீ உடு மணித்திரளை எல்லாம் விழுங்கி - தண்ணிய கிரணங்களைப்பரப்பும் சந்திரனையும் அக்கினியையும் இரத்தினக்கூட்டங்களை யொத்த நக்ஷத்திரங்களையும் விடாது விழுங்கி, தன்வீறுகாட்டி படர்ந்தது - தன் பெருமிதத்தை (நன்கு) வெளிப்படுத்திப் பரந்தது, (இவ்விருட்குக் காரணம் பெருமாட்டியாரது திருக்கரமாதலால் அக்கரத்தைநோக்கு மிடத்து) ஒழுங்குற திரட்டிநீட்டி செருகிவைத்திட்டால் ஒக்கும்- ஒழுங்காகத் திரட்டி நீட்டி செருகி வைத்திருப்பதை யொத்திருக்கும். (எ-று.)

தனக்கு சூரியர் சந்திரன் அக்னி நக்ஷத்திரமுதலிய ஒளியுடையபொருள்களெல்லாம் பகையாதலால் இருள்,அப்பகையைப்போக்குவதற்கு இதுதான் அமையமென்றெண்ணி அவைகளையெல்லாம் விழுங்கிப்பரந்தது, இவ்விருள் வெற்றிகொள்வதற்குப்படைக்கலமாயிருந்தது பிராட்டி திருக்கரமெனக.

உமாதேவியார் மரகதநிறமுடையவராதலால் அவர்கரம் இருளுக்குவமையாயிற்றென்க. திமிரவீக்கம் ஒளியுடைய பொருளையெல்லாம் தன்வயத்ததாக்கினதாகக் கற்பித்தமையால் வீறுகோளணி. (உஅ)

சிறைபடுகூகையாதிகருங்கொடித்திரள்களொத்த
மறமலிபுலிகளாதிவானரக்குலங்களொத்த
நறைகமழ்குமுதப்போதுநளினமுந்தம்முளொத்த
வுறுதுயர்நேமிப்புள்ளுஞ்சகோரமுமொருங்கேயொத்த.

(இ-ள்.) கூகையாதி சிறைபடும் கரும் கொடி திரள்கள் ஒத்த - கோட்டான் முதலிய பறவைகள் கூட்டில் கண்ணுறங்கும் காக்கை முதலியவைகளை யொத்திருந்தன, மறமலி புலிகள் ஆதி வானரக்குலங்கள் ஒத்த-கோபமிக்க புலி முதலானவைகள் குரங்கினங்களை யொத்திருந்தன, நறை கமழ் குமுதப்போதும் நளினமும் தம்முள்ஒத்த - தேன்மணம் வீசும் செவ்வல்லியும் தாமரையும் வேற்றுமை யின்றி மலராமலொத்திருந்தன, நேமிப்புள்ளும் சகோரமும் உறுதுயர் ஒருங்கு ஒத்த - சக்கரவாகப் பறவையும் சகோரப்பறவையும் மிக்க துன்பத்தை வேறுபாடின்றி ஒத்தனுபவித்தன. (எ-று.)

கோட்டானும் காக்கையும், புலியும் வானரமும், அல்லியும் தாமரையும், சக்கிரவாகப்பறவையும் சகோரப்பறவையும் தம்முள் வேற்றுமையின்றி யொத்திருந்தன வென்க.

இரவில் கண்தெரியுங் கோட்டான் அக்காலத்துக் கண்தெரியாத காக்கைபோல் தெரியாதிருந்தன வென்பார் கூகை கொடித் திரள்களொத்த எனவும்,இரவிலே உலாவும் புலிமுதலிய விலங்குகள் இரவிலே உலவாத குரங்கினங்களைப்போல உலவாதிருந்தன வென்பார் புலிகளாதி வானரக்குரங்கமொத்த எனவும், இரவிலே மலரும் அல்லிமுதலியவை இரவிலே மலராத தாமரை முதலியவைபோல் மலராதிருந்தன வென்பார் குமுதப்போதும் நளினமுந் தம்முளொத்த எனவும், இரவில் சந்திரகிரணத்தைப்பருகும் சக்கிரவாகப்பறவை அக்கிரணத்தை யுண்ணாத சகோரப்பறவைபோல விருந்தனவென்பார் நேமிப்புள்ளும்சகோரமும் ஒருங்கேயொத்த எனவுங் கூறினார். மயக்கவணி. (உகூ)

அலர்தலையுலகங்காணாரதற்படுபொருள்கள்காணார்
நிலைபெறுதத்தம்யாக்கைநீர்மையுங்காணார்முந்நீர்க்
கலிதிரைவளைப்பினோருங்கண்டறியாதவானத்
தலைவருந்திமிரமொன்றேதணப்பறக்காண்டல்பெற்றார்.

(இ-ள்.) கலிதிரை முந்நீர் வளைப்பினோரும் - ஒலிக்கும் அலையையுடைய கடல்சூழ்ந்த நிலவுலகத்துள்ளவரும், அலர்தலை உலகம் காணார் அதற்படு பொருள்கள் காணார் - பரந்தவிடத்தையுடைய பூமியைக்காணாதவராயினர் அதிலுள்ள பொருள்களையுங் காணாதவராயினர், நிலைபெறு தத்தம் யாக்கை நீர்மையும் காணார் - அழியாது சரித்தலையுடைய தத்தமது சரீரத்தின் குணங்களையும் காணாதவராயினர், வானத்தலைவரும் - (நிலவுலகினரிவ்வாறாக) தேவர்கள் தலைவனாகிய இந்திரன்முதலியோரும், கண்டு அறியாத திமிரம் ஒன்றே தணப்பறக்காண்டல் பெற்றார்—(தாமென்றும்) பார்த்தறியாத இருளொன்றையே நீக்கமின்றிக்கண்டார்கள். (எ-று.)

நிலவுலகினர் பூமியையும் அதிலுள்ள பொருள்களையும் தங்கடங்கள் சரீரவேற்றுமைகளையும் காணாராயினர். இந்திரன்முதலிய தேவர்கள் இருளைக்கண்டார்களென்க.

இம்மண்ணுலகத்தார் தாமெந்நாளும் காணத்தகுவனவாயிருப்பன பூமியும் அதிலுள்ளபொருள்களும் சரீரவேற்றுமைகளுமாதலால் அவையெல்லாந் தோன்றாவாறு அவ்விருள் மறைத்ததென்பார் முந்நீர்க்கலிதிரை வளைப்பினோரும் அலர்தலை உலகம், அதற்படுபொருள்கள், தத்தம் யாக்கை நீர்மையுங்காணா ரெனவும், காணத்தகும் பொருளைக்காணத்தக்காரைக் காணுமற்செய்து, தன்னையென்றுங் காணாதாராகிய அமரரை அமர்ந்து காணச்செய்தன வென்பார் கண்டறியாத வானத்தலைவரும் திமிரமொன்றே தணப்பறக்காண்டல் பெற்றார் எனவும் கூறினார்.

அன்றியும், உலகங்காணார் அதற் படுபொருள்கள்காணார் யாக்கைநீர்மையுங் காணார் என்றதனால் இருள், உலகம் இத்தன்மையா யிருக்கின்றதென்றும் அதிலுள்ளபொருள்களிவை யிவையென்றுந் தெரியவொட்டாமலும், சரீரத்தினளவுகளும் நிறங்களும் இன்னவெனத் தெரியவொட்டாமலும் மறைத்து, தன்னையும் தந்நிறத்தையுமே காணச்செய்ததென்க. முந்நீர் என்றது ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலுடைமை நோக்கி ; இவ்வாறே முந்நீர் என்பதற்குச் சிந்தாமணியிற் கூறுவர் நச்சினார்க்கினியார். (கூ0)

இறந்ததுபடைப்பினுக்கமிகந்தனவேள்விச்செய்கை
பறந்தனதவந்தானங்கள்பறைந்தனகடவுட்பூசை
துறந்தனகலவியின்பந்தொலைந்தனவறிவின்றேர்ச்சி
மறந்தனமறைநூற்கேள்விமயங்கினவுலகமெல்லாம்.

(இ-ள்.) படைப்பின் ஆக்கம் இறந்தது - சிருட்டியின் விருத்தியின்றிக்குறைந்தது, வேள்வி செய்கை இகந்தன - யாகத்தொழில்கள் இல்லாதொழிந்தன, தவம் தானங்கள் பறந்தன - தவங்களும்தானங்களும் பறந்துபோயின, கடவுள் பூசை பறைந்தன - தெய்வபூசைகள் செய்யாதொழிந்தன, கலவியின்பம் துறந்தன - இணைவிழைச்சுகள் எண்ணுதொழிந்தன, அறிவின்தேர்ச்சி தொலைந்தன - அறிவின்தேட்டம் கலங்கின, மறைநூல்கேள்வி மறந்தன - வேதநூலாராய்ச்சி மறந்துபோயின, உலகம் எல்லாம் மயங்கின - (அதனால்) உயிர்களெல்லாம் அறிவின்றிமயங்கின. (எ-று.)

பிரமனியற்றும் படைப்பின் மிகுதியும் ஏனையோரியற்றும் யாகங்களும் தவங்களும் தானங்களும், தெய்வவழிபாடும் புணர்ச்சியின்பமும், அறிவினிச்சயமும், வேதநூற்கேள்வியும் ஆகிய இவைகளொன்றுமின்றி மயங்கின என்க. (௩௧)

கடவுளர்முனிவர்மக்கள்யாவருங்கவன்றுங்காங்குப்
படலைவல்லிருளின்மூழ்கிப்பதைபதைத்தாவாவென்னக்
கடலொலிக்கிளர்ச்சிநாணமுறையிடுங்காலைவெற்பின்
மடவரல்கரங்கணீப்பமலர்விழிதிறந்தாரையர்.

(இ-ள்.) ஆங்கு ஆங்கு-அந்தந்தவிடங்களில், கடவுளர் முனிவர் மக்கள் யாவரும் கவன்று - தேவர்களும் முனிவர்களும் மக்கட்பிறப்பினரும் (ஆகிய) யாவரும் கவலையுற்று, படலை வல் இருளில் மூழ்கி-பரவியமிக்க விருளில் மூழ்கி, பதை பதைத்து ஆவா என்ன-பதைப்புற்று அந்தோ அந்தோ வென்று, கடல் ஒலி கிளர்ச்சிநாண-கடலின் பேரொலி நாணத்தையடைய, முறை இடும் காலை - முறையிடுகின்றகாலத்தில், வெற்பின் மடவரல் கரங்கள் நீப்ப-மலையரையன் மகளாகிய பார்வதியார் (இறைவர் கண்களைப்புதைத்த) கைகளை யெடுக்க, ஐயர் மலர்விழி திறந்தார்-எம்பெருமானார் தாமரை மலரையொத்த கண்களை விழித்தார். (எ-று.)

தேவர்கள் முதலியயாவரும் தத்தமிடங்களில் ஒன்றுந்தோன்றாது வருந்தி இருள் வயப்பட்டு அந்தோவென்று பெருங்குரலிட, அவ்வொலியைக் கேட்ட அம்மையார் தமது திருக்கரத்தை நீக்க அத்தனார் தமது கண்ணைத்திறந்தனர் என்க. ()

அல்கினவொளிகளெங்கு மஃகியதிருளின்வீக்க
மல்கினபடைப்புங்காப்பும் வயங்கினவறத்தினீட்டம்
பல்கினவேள்வியெங்கும் பரந்தனவிறைவர்சீர்த்தி
புல்கினவேதவாய்மை பொலிந்தனவுயிர்களெல்லாம்.

(இ-ள்.) ஒளிகள் எங்கும் அல்கின-ஒளியுடைப்பொருள்களெவ்விடத்தும் ஒளிவிட்டு விளங்கின, இருளின்வீக்கம் அஃகிய-இருளின் பெருக்கம் குன்றியது, படைப்பும் காப்பும் மல்கின - சிருட்டித்தொழிலும் திதித்தொழிலும் நிறைந்தன, அறத்தின் ஈட்டம் வயங்கின - தருமத்தின் கூட்டம் நடந்தன, எங்கும்வேள்வி பல்கின-எவ்விடத்தும் யாகங்கள் நீங்கா திருந்தன, இறைவர் சீர்த்தி பரந்தன - தேவர்களு

டைய புகழ்பரவின, வேதவாய்மை புல்கின - வேதத்தினுண்மை நிரம்பின, உயிர்கள் எல்லாம் பொலிந்தன - ஆன்மவர்க்கங்கள்யாவும் பொலிவுபெற்றன. (எ-று.)

(இறைவனார் கண் மலர்ந்தருளவும்) ஓரிடத்தும் ஒரு சிறிதும் தோன்றாதிருந்த சூரியசந்திர நக்ஷத்திரங்களெல்லாம் எவ்விடத்தும் விளக்கமாய் விளங்கின. அவைவிளங்கவே அவ்வொளிகளிடத்துத் தன்பகைமையைக்காட்டிய இருள் புறங்கொடுத்தோடின, அது ஓடவே படைத்தல்காத்தலாகிய அரசியல் நடந்தன். அது நடக்கவே அறங்கள் நிலைபெற்றன. அவைநிலைபெறவே வேள்விகள் நிகழ்ந்தன. அவை நிகழவே தேவர்களுடைய புகழ்பறந்தன. அது பரவவே வேதத்தினுட்பொருளாகிய அறமுதலிய நான்கும் நிறைந்தன. அவை நிறையவே உயிர்களெல்லாம் புத்திமுத்திப்பயனைப் பெற்றோங்கின வென்க.

இருளால் மறைந்தவை கதிர் மதிசெந்தீ உடுக்களாதலால் ஒளிகளெனவும், அறம் முப்பத்திரண்டாதலால் அறத்தினீட்டம் எனவும், அவியுணவை விரும்புவோர் இந்திரன் முதலிய தேவர் பலராதலால் இறைவர் எனவும், அறமுதலியநான்கும் செய்தற்கு உரியார் வேதியர் முதலிய நால்வருணத்தவராதலால் உயிர்கள் எனவுங் கூறினார். காரணமாலையென்னுமணி. (நக)

வெறிமலர்த்தளவமூரல் விழியிணைமறைத்துநீக்குஞ்
சிறுபொழுதுலகுக்கெல்லா மெண்ணில்பல்லூழிசென்று
மறைநெறிபடைப்புச்செய்கை யாதியமறுத்தவாற்றா
லிறைவிதன்வதனநோக்கி யெந்தலாரருளிச்செய்வார்.

(இ-ள்.) வெறி மலர் தளவமூரல்-நறுமணங்கமழும் முல்லையரும்பினையொத்த மூரலையுடைய பெருமாட்டி (தனது திருக்கரத்தால்,) விழியிணை மறைத்து நீக்கும் சிறுபொழுது - இறைவருடைய கண்களைப் புதைத்து நீக்கிய அவ்விறையளவு காலம், உலகுக்கு எல்லாம் எண்ணில் பல ஊழிசென்று-உலகங்களுக்கெல்லாம்எண்ணிறந்த பல ஊழிக்காலங்களாகக கழிந்து, மறைநெறி படைப்பு ஆதிய செய்கை மறுத்த ஆற்றால்-வேதவிதிப்படி செய்வதாகிய ஆக்கல் காத்தலாகிய தொழில்களில்லையாம் வண்ணம் தகைந்தகாரணத்தால், எந்தலார் இறைவிதன் வதன நோக்கி அருளிச்செய்வார் - சிவபெருமானார் தேவியின்முகத்தைப் பார்த்து ஓர் திருவாக்கருளுவார். (எ-று.)

இறைவரது திருக்கண்களை இறைவியார் மூடித்திறந்த அச்சிறுபொழுது உலகங்களுக்கு எண்ணிறந்த காலங்களாய்ச்சென்று படைப்பாதி தொழில்களைச்செய்யவொட்டாதொழித்தது, அதனால் அப்பனார் இரக்கமுற்று அம்மையார் முகத்தைப் பார்த்து ஒன்று கூறுவார் என்க.

மறைத்து நீக்குஞ் சிறுபொழுது உலகுக்கெல்லாம் எண்ணில் பல்லூழிசென்று என்றதனால் அம்மையப்பர்க்கு ஓர் கணமாயுள்ளது ஏனையோர்க்குப்பல்லூழினெவும், படைப்புச்செய்கையாதி மறுத்த என்றதனால் அக்காலம் பிரமனாதியோரறிவை மயக்கி நமக்கிறுதிக்காலம் வந்ததோவென்று அவரை வருந்தச்செய்து தங்கள் தங்கள் தொழிலையும் எண்ணாது திகைத்திருக்கச்செய்ததெனவும், இறைவிதன் வதன நோக்கி என்றதனால் அதற்குக் காரணம் தேவி யென்றுணர்த்தற்கெனவும், எந்தலார் அருளிச்செய்வார் என்றதனால் துக்கத்தை யொழித்துச் சுகத்தைக்கொடுப்பவர் இறைவரெனவும் கொள்ளக்கிடந்தது. (கூஉ)

இருசுடர்தமக்காதாரமாகிய வெமதுகஞ்சத்
திருவிழிபுதைத்தவாற்றாற் படைப்பாதிச்செய்கைமாறி
யுருகெழுதீமைநின்னை யுற்றதாலதற்குத்தீர்வு
மருமலர்க்குழலினாய்நீமரபுளியியற்றல்வேண்டும்.

(இ-ள்.) மருமலர் குழலினாய் நீ - நறுமணங்கமழும் மலரணிந்த கூந்தலையுடைய தேவியே நீ, இருசுடர் தமக்கு ஆதாரமாகிய-சூரியசந்திரர்களுக்கு ஆதாரமாயிருக்கின்ற, எமது கஞ்சத் திருவிழிபுதைத்த ஆற்றால்-எம்முடைய தாமரை மலரையொத்த திருமுகத்திலுள்ள கண்களைப்பொத்திய காரணத்தால், படைப்பாதி செய்கைமாறி-சிருஷ்டிமுதலிய தொழில்கள் மாறுபட்டு, உருகெழுதீமை நின்னை உற்றது-உருவங்கொண்டெழுந்தபாவம் உன்னை வந்தடைந்தது, (அதனால்)அதற்கு தீர்வு மரபுளி இயற்றல் வேண்டும்-அதற்குப்பரிகாரம விதிப்படிசெய்ய வேண்டும்.(எ-று)

இறைவர் தேவியைப்பார்த்து எமது திருக்கண்களைப்புதைத்தமையால் படைப்பின்றிப்பாவம் வளர்ந்தது, அப்பாவம் உன்பாலது ஆகையாலதற்குத் தீர்வு நீயே செய்யவேண்டு மென்க.

காரணங்கெட்டவழிக் காரியம் நிகழாதாகலான் ஒளிகளுக்காதாரமாகிய கண்மறைபடவே சூரியசந்திரர்கள் ஒளியிழந்தன ரெனவும், ஒளியில்லாதொழியவேவிதித்த அவ்வக்காலங்களிலியற்றும் புண்ணியங்கள் தேய்ந்த எனவும், அவை தேய்ந்தவிடத்துப் பாவம் வெளிப்பட்டதெனவும், அது "பல்லாவுளுய்த்துவிடினும் குழக்கன்று வல்லதாந்தாய் நாடிக்கோடல்" போல் செய்தோரைப்பற்றுமெனவும், பற்றுமப்பாவத்தைப் பற்றறத்துடைப்பது பற்றறுனைப் பற்றுதலேயாகலின் அவனது பணியைப் பரிகாரங்களெனவும் கூறியதென்க.

பற்றற்றவனது பணி இது வென்பதைப் பின்வருவனவற்றாற்காண்க.(௩௫)

இகப்பருங்கருணைபூண்ட வெமக்குநின்றனக்குநந்த
மகத்தடியவர்க்கும்பாவ மணுகுவதில்லையேனும்
வகுத்தவாபுரிதியெல்லாக் கருமமுமரபினால்யா
நிகழ்த்தியவாறேபற்றி நிகழ்த்திடுமுலகங்கண்டாய்.

(இ-ள்.) இகப்பரும் கருணைபூண்ட எமக்கும் நின்றனக்கும் - மாறாதகருணையையுடைய எனக்கும் உனக்கும், நந்தம் அகத்து அடியவர்க்கும் பாவம் அணுகுவதில்லையேனும் - நம்மிடத்து அன்புள்ள அடியவர்க்கும் பாவம் வந்தடைவதில்லையாயினும்,வகுத்தவாறுபுரிதி (இதற்குத்தீர்வு மரபுளி நீயியற்றவேண்டுமென்று) வகுத்துக்கூறியபடியே செய்யக்கடவாய், மரபினால் எல்லாக்கருமமும் யாம் நிகழ்த்தியவாறு-விதித்தவிதிப்படி எல்லாக்கருமங்களையும் நாம் செய்கின்றபடியே,உலகம்பற்றி நிகழ்த்திடும் - உலகினர் அதனை உண்மையாகப்பற்றிச் செய்தொழுகுவர். (எ-று.)

எனக்கும் உனக்கும் நம்மடியவர்க்கும் பாவம் வந்தணுகுவதில்லையாயினும் நான் சொன்னபடியே நீ செய்யக்கடவாய் (ஏனெனின்) நாம் எதனைச்செய்கின்றோமோ அதனையே நாடி உலகஞ்செய்யு மென்க.

இறைவன் அருளுருவுடையானும் இறைவி அவனுருவமாகிய அருளும் அடியார் அவனருள்பெற்றோரும் ஆகையால் பாவமணுகுவதில்லை என்றார். எனவே

பாவமென்றது தீவினை அது கன்மமலத்தின் காரியம். அக்காரியம் மாயாமலகாரியத்தோடு (தனுகரணுதிகளோடு) கூடியுள்ளது. (இவ்விருமலமும் அனுதியே இல்லாத வுடம்பினர், சிவமும் சத்தியுமாகலான்) பாவமானது இயல்பாகவே பாசமற்றவனைப் பற்ருது, அன்றிப் பாசமற்ருேரைப்பற்றினவரையும்பற்ருது, ஆகவே எமக்கும், நின்றனக்கும், அடியவர்க்கும் பாவமணுகுவதில்லை எனவும், இறைவனுல் விதித்தவற்றை நடத்திக்காட்ட வேண்டுவது ஆக்ஞாரூபமா யிருக்கின்ற அருளாதலால் வகுத்தவாபுரிதி எனவும், உலகிலுள்ளோர் உயர்ந்தோர் நிகழ்த்தியவைகளையே மரபாகக்கொண்டு நடப்பதுஇயல்பாதலால் யாம் நிகழ்த்தியவாறே பற்றி நிகழ்த்திடு முலகம் எனவும் கூறினுர்.

இதனுல் சிவபெருமானுர் உலகிற்கு விதிகளை விதிக்குங்கடவுளெனவும், அவரது சத்தி ஆச்ஞாரூபமாய் நின்று நடத்துமியல்புடைய தெனவும், உலகினர் அவ் விதியின்வழி நடக்கின்றவரெனவுங் குறித்ததென்க. நந்தம் அகத்தடியவர் என்றது தம்மாட் டுள்ளன்புடையாரிடத்துத் தாமும் உள்ளன்புடையா ரென்பது குறித்தற்கென்க. இதனை, "தீர்ந்தவன்பாய வன்பர்க்கவரினுமன்ப" என்ற திருவாக்கானு மறிக,

அடியவர்க்கும் பாவமணுகுவதில்லை என்றது தாம் அவராய்நிற்கும் நிலையைக்குறித்தற்கென்க. இதனை "தன்னுணரும் நேசத்தர்தம்பால் நிகழுந்ததிநெய் போல்" என்ற சுருதியாலுணர்க. (௩௬)

என்றருள்செய்யக்கேட்டு நடுக்கமுற்றிறைஞ்சிநின்று
மன்றலங்குழலாள்கூறும் வள்ளலேகழுவாய்ச்செய்கை
யென்றதியாதுசெய்யுங் காலமேதிடமேதெல்லா
நன்றெனக்கருளாயென்ன நம்பனுர்வகுத்துச்சொல்வார்.

(இ-ள்.) மன்றலம் குழலாள் - இயற்கை மணங்கமழும் கூந்தலையுடைய உமாதேவியார், என்று அருள் செய்யக்கேட்டு ("வகுத்தவாபுரிதி") என்று இறைவனுர் ஆக்ஞை செய்ததைக்கேட்டு, நடுக்கம் உற்று இறைஞ்சி நின்று கூறும் - நடுக்க மடைந்து நிலமிசைப்பணிந்து எழுந்து நின்று விண்ணப்பஞ்செய்வார், வள்ளலே - வரையாது கொடுப்பவரே, கழுவாய் செய்கை என்றது யாது - பரிகாரச்செய்கை யென்றருளியது எது, செய்யும் காலம் ஏது - அப்பரிகாரத்தைச்செய்யும் காலம் ஏது, இடம் ஏது - அது செய்தற்குரிய தானம் ஏது, எல்லாம் நன்று எனக்கு அருளாய் என்ன-(ஆகிய) இவைபனைத்தும் விளங்க அடியேனுக்கு அருள்செய்வா யென்றுகேட்க, நம்பனுர் வகுத்து சொல்வார்-இறைவனுர்வகுத்தருள் செய்வார். (எ-று.)

பரிகாரஞ் செய்யவேண்டு மென்று இறைவனுர் சொல்லக்கேட்ட தேவியார் பணிந்து கழுவாயென்றதுயாது காலமெது இடமெது இவற்றையெல்லாம் நன்ருகச் சொல்லவேண்டுமென்று கேட்க, அவ்விறைவர் ஒவ்வொன்றையும் வகுத்துக் கூறுவாராயினுரென்க.

இறைவரைப்பிரிதற் கஞ்சி நடுங்கினுரெனவும், பிரியினும் அவர்மாட்டு அன்புபிரியாதிருத்தல் வேண்டி வணங்கியெனவும், அன்புதருதல் அரிதென நாடி வள்ளலெனவும், கூறும்பரிகாரமும் காலமும் இடமும் இறைவனுக்கு விருப்பமோ அன்ருே என்பது தெரியக் கழுவாய்ச்செய்கை காலம் இடம் எல்லாம் நன்றெனக்கருளாயெனவும் கூறினுர். (௩௭)

கலிநிலைத்துறை.

வில்லிழைபூண்டிறுமாந் தெழுகொங்கைவிளாக்கோதா
யல்லனசெய்துபினஞ்சுபவர்க் குறுகழுவாய்தாம
நல்லறநூல்களின்மாதவர் நாட்டினரவையெல்லாஞ்
சொல்லியதீர்வுமிகச் சிறுமைத்திதுதுணிவாயால்.

(இ-ள்.) வில் இழை பூண்டு இறுமாந்து எழுகொங்கை விளாகோதாய் - ஒளிவீசும் ஆபரணங்களை யணிந்து செருக்குற்று எழும் தனங்களையுடைய நறுமண ங்கமழுங் கூந்தலையுடையவளே, அல்லனசெய்து-பாவங்களைச்செய்து, பின் அஞ்சு பவர்க்கு-பின்னர் அச்சங்கொள்வோர்க்கு, உறு கழுவாய்தாம் - பொருந்திய பிரா யச்சித்தங்கள், நல் அறம் நூல்களில் மாதவர் நாட்டினர் - நல்லதருமநூல்களில் பெரியோர்கள் விதித்திருக்கின்றனர், அவையெல்லாம் சொல்லிய தீர்வு - அந் நூல்களில் விதித்திருக்கின்ற விதிகளெல்லாம், மிக சிறுமைத்து இது துணிவாய்- மிகவுமற்பமானது இதனை நிச்சயமென்று நினைவாய். (எ-று.)

உமையே, முன்பாவத்தைச்செய்து பின் அஞ்சுபவர்களுக்குப் பிராயச்சித் தங்களைப் பெரியோர்கள் அற நூல்களில் விதித்திருக்கின்றனர், அவைகளெல்லாம் மிகவுஞ் சிறியது இதனைத் துணிவா யென்க.

பின்னஞ்சுபவர்க்குக் கழுவாயென்றதனால் பின் அஞ்சாதவர்க்குக் கழு வாயில்லையென்ற தென்க.

அவையெல்லாஞ் சொல்லியதீர்வு மிகச்சிறுமைத்து என்றது அம்மை செய்த குற்றத்திற்கு அவை மிகச்சிறியனவென்றுரைப்பினும் அமையும். அன்றிவினைவயப் பட்ட உயிர்களுக்கு விதித்தனவற்றை உனக்கு விதிப்பது மிகச் சிறுமைத் தெனி னும், அன்றி மாதவர்விதித்தவற்றையே நானும் எடுத்துரைத்தல் மிகச்சிறுமைத்து எனினும், அன்றி அவையெல்லாம் நீ ஓர் பரிகாரமாக வெண்ணத்தக்கதன்று மிகச் சிறுமையாகவே நினைக்கத்தக்க தெனினுமமையுமென்க. இதுவேயுமன்றி பெரி யோரால் உயிர்களுக்கென்று அறநூலகளிலே முன்னே விதிக்கப்பட்டவற்றுள் உனக்குப்பிராயச்சித்தம் உண்டென்று விதிக்கப்பட்டிருக்கின்றனவோ இன்று, ஆக லான் நான் அவைகளை உனக்குவிதிப்பது மிகச்சிறுமைத்து எனினும் அமையும்.()

எத்துணைவன்மையறக் கடைமுற்றுமிறச்செய்யு
மத்தகுசீர்க்கழுவா யெமையன்பினருச்சித்தல்
சித்தமொருக்கிநினைத்தல் பழிச்சுதல்பேர்செப்பல்
பத்தியினெம்மடியார் வழிபாடெனுமிவையாமால்.

(இ-ள்.) எத்துணைவன்மை அறக்கடைமுற்றும் - எவ்வளவு வன்மையாகிய மகாபாதகங்களை யெல்லாம், இறச்செய்யும் - ஒழிக்கவல்ல, அத்தகுசீர் கழுவாய்- அத்தன்மையவாகிய சிறப்புவாய்ந்த பிராயச்சித்தங்கள், (உண்டு அவை எவை யெ னின்) எமை அன்பின் அருச்சித்தல்-எனனையன்புடனே யருச்சனைசெய்தல், சித்தம் ஒருக்கி நினைத்தல் - சித்தத்தை இலயப்படுத்தித் தியானித்தல், பழிச்சுதல்-தோத்தி ரஞ்செய்தல், பேர்செப்பல் - மந்திரங்களையுச்சரித்தல், பத்தியின் எம்மடியார் வழி பாடு - அன்பினால் எம்முடைய அடியார்களை வழிபடுதல், எனும் இவையாம் - என் றுசொல்லப்பட்ட இவைகளேயாம். (எ-று.)

(இனிநம்மாற் கூறப்படுவது) எவ்வகையாகிய மகாபாவங்களையும் எவ்வளவும் இல்லையாம் வண்ணம் ஒழிக்கவல்ல பிராயச்சித்தங்களாம். (அவையெவையெனின்) எம்மை யருச்சித்தல் - நாமங்களையுச்சரித்தல் அடியாரை வழிபடுதல் என்று சொல்லப்பட்டவைகளாம் என்க.

அறநூல்களின் விதிக்கப்பட்டவை யெல்லாம் மிகச்சிறுமைத்து என்றுமுன்னும் எம்மையருச்சித்தலாதியாகக் கூறியவை எத்துணைவன்மையறக் கடைமுற்றும் இறச்செய்யுமென்று பின்னுங் கூறியதனால் வேதங்களில் விதித்தவை அன்பிலார்க்கெனவும், அருச்சனை முதலியவை யெல்லாம் தம்மாட்டன்புடையார்க்குச் சிறப்பாக ஆகமங்களிற்கூறிய பிராயச்சித்தங்களெனவும் பகுத்தறிய வேண்டுமென்க. ஆகலான் அம்மையாருக்கு மேன்மேலும் அன்பு தன்மேல் வளரும் பொருட்டே எம்மை யருச்சித்தல் என்றெடுத்து எம்மடியார் வழிபாடு எனுமிவையே யென்று இறுதியில் முடித்தமைகாண்க. (கூகூ)

முற்றியசீரிருமுப்ப ருவங்களுமுறையானே
யற்றமில்காலமெனப்படும் யாம்பெரிதானந்த
முற்றுறைகின்றவிடங்களிடங்களெம்முறுமன்பர்
பற்றியதானமுமத்தகை மைத்தெனவறிபாவாய்.

(இ-ள்.) பாவாய் - பெண்ணே, சீர்முற்றிய இருமுப்பருவங்களும் - மிக்க சிறப்பினை வாய்ந்த உஷத்காலமுதலாகச் சொல்லப்பட்ட ஆறுகாலங்களும், முறையால் அற்றம் இல் காலம் எனப்படும்-முறைமையினால் (எம்மைவழிபடுவதற்குரிய) சோர்வில்லாத காலங்களென்று சொல்லப்படும், இடங்கள் - தானங்களென்று சொல்லப்படும் இடங்களோ, யாம்பெரிது ஆனந்தம் உற்று உறைகின்ற விடங்கள்- யாம் பேரானந்தத்தைப் பொருந்தி வசிக்கின்ற இடங்களேயாம், எம்உறும் அன்பர்பற்றிய தானமும் - (அவ்விடங்களேயன்றி) எம்மிடத்துப்பொருந்திய அன்புடையவர் விரும்பியிருக்கப்பட்டதானங்களும், அத்தகைமைத்து எனஅறி பாவாய் - நம்மால் விரும்பியிருக்கப்பட்ட அத்தலங்களைப்போற் சிறப்பினையுடையதுஎன்றறிந்து கொள்வாய். (எ-று.)

பெண்ணே (நீ பிராய்ச்சித்த முதலாகக்கேட்ட மூன்றில் முன்னே பிராயச்சித்தத்தைக்கூறினோம் இனி காலமும் இடமும் கூறுகின்றோம்) காலம் உஷத்காலம் காலசந்தி உச்சிக்காலம் மாலைக்காலம் முதலியவாம். இடம் நாம் சிவலிங்கமூர்த்தமாயெழுந்தருளி யிருக்கும் புண்ணியத்தலங்களும் எம்முடைய அன்பர்கள் வசிக்குமிடங்களுமாம் என்று இம்மூன்றையு மறிவாயென்றதென்க. (கூ0)

ஆதலினுமுறைவைப்பிடை யாயினுமெம்மன்பர்
மேதகவைகும்வளைப்பிடை யாயினுமீப்பொங்குங்
காதலினலெமையர்ச்சனையாற்றுதியிதுகாணாஉப்
பாதலமண்ணகம்விண்ணகமுய்வதுபண்பென்றார்.

(இ-ள்.) ஆதலின்-ஆகையினால், நாம் உறைவைப்பிடையாயினும் - நாம் வசிக்கும் புண்ணியக்ஷேத்திரங்களிலாயினும், எம் அன்பர் மேதக வைகும் வளைப்பிடையாயினும் - எம்முடைய அன்பர்கள் சிறப்புடனே வீற்றிருக்கும் இடங்களிலாயினும், எமை மீப்பொங்கும் காதலினால் அர்ச்சனை ஆற்றுதி - என்னை உள்ளத்தி

லடங்கப்பெருது வெளிப்பட்டுவரும் ஆசையினுல் அருச்சனை செய்வாய், பாத லம் மண்ணகம் விண்ணகம் உய்வது பண்பு இதுகாணூஉ - என்ருர் - பாதலத்த வரும் மண்ணுலகத்தவரும் வானுலகத்தவரும் உய்வதற்குரிய குணமாயுள்ளது இது கண்டு என்றருளினுர். (எ-று.)

எம்முடைய இடமுதலியவைகளை நீ தெரிந்துகொண்டமையால் நம்முடைய புண்ணியக்ஷேத்திரங்களிலேனும் அன்பர் மகிழ்ந்திருக்கு மிடங்களிலேனு மிக்க ஆசையோடு என்னை யர்ச்சனைசெய். இஃதொன்றே மூன்றுலகத்தவரும் பவக் கடல் கடந்து உய்ந்துபோவதற்குரிய குணமாயுள்ளது என்றுசொன்க.

முன் "யாம் நிகழ்த்தியவாறேபற்றி நிகழ்த்திடுமுலகு என்றதனையே ஈண்டும் வலியுறுத்தியதாம். என்னையெனின், இது காணூஉப்பாதலம் மண்ணகம் விண்ண கம் உய்வது பண்பு என்றதேயாம், எனவே உமையே எவ்வுயிர்களையும் பெருது பெற்ற அம்மையாதலான் அவ்வுயிர்களுய்யும்வகையுங் கற்பிக்கவேண்டியவரும் அம்மையேயாகும், அதற்கு இதனினுஞ் சிறந்தது வேறின்றென்றதேயாம். (௬௧)

என்றலுமங்கணர்பங்கயபாதமிறைஞ்சித்தாழ்ந்
தொன்றியசிந்தையினுளுடைநாயகியுரைசெய்வா
ளன்றியநெஞ்சுரைசெல்லருநீயவரவர்தத்தம்
பொன்றுமுணர்ச்சியினர்ச்சனைபூணவுமெளிவந்தாய்.

(இ-ள்.) என்றலும் - (உயிர்களுய்யும்வகை இதுவே) என்று கூறவும், ஆளு டையநாயகி-யாவரையு மாளாகவுடைய நாயகி, அங்கணர் பங்கய பாதம் தாழ்ந்து இறைஞ்சி - அழகிய தண்ணளிபொழிகின்ற திருக்கண்களையுடைய இறைவரது திரு வடித்தாமரைகளைப் பணிந்து வணங்கி, ஒன்றிய சிந்தையின் - ஒருமைப்பட்ட மன த்தினுல், உரைசெய்வாள்-கூறுவார், அன்றிய நெஞ்சு உரை செல்லரும் நீ - வேறு பட்ட மனத்தினுலும் வாக்காலும் எட்டுதற்கரிய நீ, அவரவர் தத்தம் பொன்றும் உணர்ச்சியின்-அவரவர்கள் தங்கள் தங்களுடைய சிற்றறிவினுல், அர்ச்சனை பூண வும் எளிவந்தாய் - அர்ச்சனை செய்யவும் எளிமையாகவந்தனை. (எ-று.)

உனக்குக்கூறும் பரிகாரமும் உயிர்களுய்யும் வகையும் இதுவென்று எம்பெ ருமானுர் கூறவும் உமையம்மை பணிந்து கூறுவார். (என்னையெனின்) மனவாக்குக ளுக்கெட்டாத நீ எத்திறத்தவரும் தங்கள் சிற்றறிவுக்கேற்ப அர்ச்சனை வழிபாட்டை ச்செய்யச் சகளவடிவமுங்கொண் டிங்கெழுந்தருளி யிருக்கின்றனை யென்க.

ஒன்றிய சிந்தையாவது - பகிர்முகப்படாது (பொறிகளின் வசப்படாது) அகமுகப்பட்ட நெஞ்சத்தை. அன்றிய நெஞ்சுஆவது அகமுகப்படாது பொறி களின்வழி பகிர்முகப்பட்ட நெஞ்சத்தை.நெஞ்சம் ஒன்றியகாலத்து சொல்லடங்க லால் ஒன்றிய சிந்தையெனவும், வெளிப்பட்ட காலத்து சொல்லும் வெளிப்படுமா தலால் நெஞ்சொடு அன்றிய நெஞ்சுரை எனவும், மனமுஞ் சொல்லும் வெளிவந்த பின்னர் உள்ளேயிருக்கின்ற உன்னைக் காண்பதரிதாகலான் நெஞ்சுரை செல்லரும் நீ எனவும், அரிய நீ புண்ணியத்தலங்களினும் அன்பரிடங்களினும் இருப்போமென் றது சிற்றறிவினையுடைய வுயிர்களிடத்து வைத்த கருணையாகலான் அவரவர் பொ ன்று முணர்ச்சியி னர்ச்சனை பூணவு மெளிவந்தாய் எனவுங்கூறினுர். அல்லதூஉம் நெஞ்சுரை செல்லரும் நீ எனவும் எளிவந்தா யெனவுங் கூறியதனுல் ஆன்மபோதத் தால் காண்டற் கருமையையு ம் அவனருளாற் காண்டற் கெளிமையையும் வாக்கு மனுதீதமென்பதையும், கோசரமாமென்பதையும் விளக்கியதென்க. (௬௨)

நானுமகிழ்ந்துனையர்ச்சனைசெய்யுநலம்பெற்றேன்
தேனமர்கொன்றைமிலைச்சியசெஞ்சடைவள்ளானின்
ஊனமில்பூசனைசெய்திறமெத்திறமுரையென்ன
வானுடையூர்தியருட்கடலன்னவர்புகல்கிற்பார்.

(இ-ள்.) நானும் மகிழ்ந்து உனை அர்ச்சனைசெய்யும் நலம் பெற்றேன் - யானும் உம்மை அர்ச்சனை செய்யும் பாக்கியத்தைப் பெற்றேன், தேன் அமர் கொன்றை மிலைச்சிய செம் சடை வள்ளால் - தேனிறைந்த கொன்றைமாலையைச் சூடிய வள்ளலே, நின் ஊனம் இல் பூசனை செய்திறம் எத்திறம் - உனது பழுதில்லாத பூசனையைச்செய்யும் முறைமை எவ்வகை, உரை என்ன - சொல்வாயென்று கேட்க, ஆன் ஊர்தி உடைய அருட்கடல் அன்னவர் புகல்கிற்பார் - இடபத்தை வாகனமாக வுடைய கடல்போன்ற கருணைநிறைந்த இறைவனுர் விடைதந்தருளுவார். (எ-று.)

உயிர்களேயன்றியானும் அருச்சனைபுரியும் பாக்கியத்தைப் பெற்றேன். வள்ளலே உம்மைப்பூசிக்கும் திறம் எத்தன்மைத்து அதனை யடியேனுக்கருளல் வேண்டுமென்ன அருளாளன் கூறுவானென்க.

"அருச்சனை இதுகாண் பாதல மண்ணகம் விண்ணகம் உய்வது பண்பு" என்று இறைவரும், "அவரவர் தத்தம் பொன்று முணர்ச்சியினர்ச்சனை பூணவு மெளிவந்தாய்" என்று தானும் பிறருக்குக் கூறியிருக்க, ஈண்டு நானும் மகிழ்ந்துனை செய்யு நலம்பெற்றேன் என்றது முறையாமோவெனின், அம்மையா ரர்ச்சனை செய்வதனுல் வரும் போகமோக்ஷங்களாகிய பலன்களை யடைவோர் உயிர்களேயன்றி அம்மையாரன்றாகலான் முன் அங்ஙனம் கூறியது முறையே எனவும், பெருமானைப் பரிசித்து அர்ச்சித்தலால் வரும் சுகம் அம்மையாருக்கேயன்றி ஏனையோர்க்கன்றாகலான் அருச்சனைப் பலன் பெற்றேன் என்னுது அருச்சனைசெய்யும் நலம் பெற்றேனெனவுங்கூறினுர். ஆகலான் பின் அங்ஙனங்கூறியதூஉம் முறையே யாமெனவுங்கொள்க. (௪௩)

கரிசறுநித்தநைமித்திககாமியமெனமூன்று
முரிமையினெம்மடியர்ச்சனையேனையவுலகத்துப்
புரிதருபூசனைநித்தியபூசனையாமன்றித்
தெரிதரிலன்னவைகாமியநைமித்திகமாகா.

(இ-ள்.) கரிசு அறும் உரிமையின் எம் அடி அர்ச்சனை - குற்றமற்ற அன்பினுலே எம்முடைய அடியைப் பூசித்தலாகிய அர்ச்சனை, நித்தம் நைமித்திகம் காமியம் என மூன்று ஆம் - நித்தியபூசை என்றும் நைமித்திக பூசையென்றும் காமிய பூசையென்றும் மூன்றுவிதமாகும், ஏனைய வுலகத்துப் புரிதரு பூசனை தெரிதரில் நித்திய பூசனையாம் அன்றி - (அவற்றுள்) ஏனைய வுலகங்களிற் செய்கின்ற பூசனையை ஆராயுங்கால் நித்திய பூசனையாகுமேயல்லாமல், அன்னவை காமியம் நைமித்திகம் ஆகா - அப்பூசனைகள் காமியபூசனையும் நைமித்திகபூசனையும் ஆகாவாம். (எ-று.)

(பூசனை செய்திறத்தை இறைவர் கூறத்தொடங்கினுராகலின்) அப்பூசனை யாவது நித்தியம் நைமித்திகம் காமியமென முத்திறப்படுமெனவும், அவற்றுள் நிலவுலகொழிந்து ஏனைய வுலகங்களில் நிகழும் பூசனை நித்தியமாகுமேயன்றி நைமித்திகமும் காமியமு மாகாவென்றதென்க.

இதனுல் பூசனையின் திறத்தைக் கூறியவாறென்க.

இவ்வுலகேயன்றி எவ்வுலகத்துள்ளாரும் சிவபூசனை யுள்ளாரென்பார் ஏனைய வுலகத்தும் புரிதருபூசனை எனவும், அப்பூசனை யெல்லாம் நித்திய பூசனையு ளடங்குமேயன்றி ஏனையவை யாகாவென்பார் நித்திய பூசனையாமன்றித் தெரிதரிலன் னவை காமிய நைமித்திகமாகா எனவும் கூறினார்.

நித்தியபூசனையாவது விதிப்படி ஸ்நானாதி கர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு அக்னிகாரியத்தோடு சிவபூசனையைச் செய்தலாம். நைமித்திக பூசனையாவது - பிரதிஷ்டைகள், உற்சவாதிகள், சாந்திகள், நவகலசஸ்தாபனம், அஷ்டோத்தரகலசஸ்தாபனம், சகஸ்ஸிரகலசஸ்தாபனம் முதலியன செய்தலாம். காமியமாவது - வேண்டிய யோகசித்திகளை விரும்பிப் புண்ணியகாலங்களில் விசேஷ பூசனைகளும் மந்திரசெபங்களும் அபீஷ்டத்துக்குத்தக்கவாறு செய்தலாம்.

இங்ஙனங்கூறிய மூவகைப் பூசனைகளுள் நித்திய பூசனையொன்றேயாகும் ஏனையவுலகங்களில் நடக்கப்பட்ட பூசனைகளெல்லாம் என்றது என்னையெனின், நைமித்திகமாகிய பிரதிஷ்டைமுதலியவைகளும் காமியமாகிய புண்ணியகாலபூசனைகளும் இந்நிலவுலகன்றி ஏனையுலகங்களி லின்றாகலானென்க. அதனானன்றே தேவர் முதலிய யாவருடைய பிரதிஷ்டைகளும் அவர்கள் பூசித்த புண்ணியகாலங்களும் இந்நிலவுலகின் கண்ணே காணப்பட்டு வருகின்றன. (௬௪)

பொருவறுமூன்றுமுறுங்கருமம்புரிநிலமீதே
கருமநிலந்திகழ்பாரதமாம்வருடங்கண்டாய்
திரைகெழுகீழ்க்கடன்மேல்கடல்சேதுவொடிமயத்துண்
மருவியமேதினிபாரதமால்வருடம்மாமால்.

(இ - ள்.) கருமம்புரி நிலமீது - இருவினையு நீங்காதியற்று நிலவுலகத்தில், பொருவு அறும் மூன்றும் உறும் - ஒப்பிகந்த நித்தியமுதலிய மூன்றும் செய்தற்கமையும், கரும நிலம் - கருமபூமியாவது (எதுவெனின்), திகழ் பாரத வருடமாம் கண்டாய் - விளங்கும் பாரதவருடமென்று சொல்லப்பட்ட பரதகண்டமென்றறிவாய், திரை கெழு கீழ்கடல் மேற்கடல் (அப்பரதகண்டத்துக்கு எல்லையைக்கூறுங்கால்) அலைகள் நெருங்கிய கீழ்க்கடலும் மேற்றிசைக்கடலும், சேதுவொடு இமயத்துள் - சேதுவும் இமயபர்வதமும், (என்று சொல்லப்பட்ட நான்கு எல்லைக்குள்) மருவிய மேதினி - பொருந்தியிருக்கின்ற பூமி, பாரதமால்வருடம் ஆம் - பெரியபாரதவருடமாகும். (எ - று.)

நித்திய முதலாகச்சொல்லிய மூன்றும் செய்தற்குரிய இடம் மண்ணுலகில் வகுக்கப்பட்ட பரதகண்டமாம். அப்பரதகண்டமாவது கீழ்த்திசைக்கடலுக்கும் மேற்றிசைக்கடலுக்கும் சேது இமாசலங்களுக்கும் இடையேயுள்ள இடமாம் என்க.

மூன்றுலோகங்களிலும் கருமபூமியாகிய மண்ணுலகமே சிறந்தது என்பார கருமம்புரி நிலம் எனவும், கருமபூமியிலுள்ள மக்கட்பிறப்பினரே நித்திய முதலிய மூன்றையுஞ் செய்தற்குரியாரென்பார் நிலமீதே பொருவறு மூன்றுமுறும் எனவும், அம்மூன்றுஞ்செய்தற்குரிய இடம் நிலமுற்றுமன்று இந்நிலமென்பார் கருமநிலந்திகழ்பாரதமால் வருடம் எனவும், அப்பரதகண்டம் இவ்வெல்லைக்குட்பட்டதென்பார் கீழ்க்கடல் மேற்கடல் சேதுவொடிமயத்துள் மருவிய மேதினி எனவுங் கூறினார்.

அல்லதூஉம் கருமம் புரி நிலம் என்றது இம்மண்ணுலகம் இருவினை யியற்றுதற்கும் அவ்வினையின் பயனாகிய சுகதுக்க சேடத்தை அனுபவித்தற்கும் வினையொ

ழித்தற்குரிய முத்திசாதனத்திற்கும் இடமாயும் ஏனைய வுலகங்கள் இங்கியற்றிய வினைப்பயனாகிய சுகதுக்கங்களை மிகுதியாக அனுபவித்தற்கிடமாயும் வினையொழித் தற்கும் முத்திசாதனத்திற்கும் இடமன்றாயும் இருத்தலான் ஏனைய வுலகங்களை வித ந்தோதாது இக்கருமபூமியையே விதந்தோதினாரென்க. (௩௫)

> இத்தகுபாரதமாம்வருடத்துமெனமக்கான
> வுத்தமவைப்பின்விதிப்படியெம்மையிலிங்கத்தின்
> முத்துறழ்வெண்ணகைமுற்றிழைமூதுலகெல்லாமெய்ச்
> சித்திபெறும்படிவல்லையருச்சனைசெய்கிற்பாய்.

(இ-ள்.) முத்து உறழ் வெள் நகை முற்றிழை-முத்தினையொத்த வெள்ளிய பற்களையும் பணிதியமைந்த அணிகளையுமுடைய பெண்ணே!, மூது உலகு எல்லாம் மெய் சித்தி பெறும்படி-பெரிய உலகங்களெல்லாம் ஞானசித்தி யடையும்படி, இத் தகு பாரதமாம் வருடத்தில் - இத்தன்மையாகிய சிறப்பினை வாய்ந்த பரதகண்டத் தில், எமக்கு ஆன உத்தமவைப்பில் - எனக்குப் பிரியமாகிய உத்தமத்தலத்தில், எம் மை இலிங்கத்தில் விதிப்படி வல்லை அருச்சனை செய்கிற்பாய் - என்னை யிலிங்கவடி வத்தில் ஆகமசாத்திரபபடி விரைந்து அர்ச்சனை செய்யக்கடவாய். (எ-று.)

பெண்ணே! உலகத்தாரெல்லாம் ஞானசித்தியை யடையும்பொருட்டு (நாம் கூறிய)பரதகண்டத்தில் எமக்குரிமையான க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் சிவலிங்க வடிவத்தில் விதிப்படி யர்ச்சனை செய்வாயென்க.

மெய்ச்சித்தி பெறும்படி வல்லை யருச்சனை செய்கிற்பாய் என்றது அம்மை யார் ஞானசொரூபமாகிய கண்களை மறைத்து உயிர்களுக்கு அஞ்ஞானத்தை விளை வித்தனராதலான் அவ்வுயிர்களுக்கு அவ்வஞ்ஞானமொழிந்து ஞானோதயமாம்படி இப்பொழுதும் அவரே விரைந்து அர்ச்சனை செய்யவேண்டுமாகலான் இறைவனார் அங்ஙனங் கட்டளையிட்டதாமென்க. (௩௬)

> என்றலுமாவயினெண்ணிறலங்களுளெம்மானீ
> நன்றுமகிழ்ந்துறைமிக்குயர்நற்றலம்யாதென்னக்
> குன்றுகுழைத்துவடிக்கணைபூட்டினர்கோல்கோடி
> யன்றினரிஞ்சியழித்தருளங்கணர்தாஞ்சொல்வார்.

(இ-ள்.) என்றலும் - (விரைந்து எமக்கான உத்தமவைப்பில் யருச்சனை செ ய்வாய்) என்று சொல்லவும், ஆவயின்-அப்பரதகண்டத்தில், எண்ணில் தலங்களுள்- அளவிறந்த தலங்களிருக்கின்றன அவைகளுள், எம்மான் நீ நன்று மகிழ்ந்து உறை மிக்கு உயர் நல தலம் யாது என்ன எம்பெருமானே நீ நன்றாக மிகவும் மகிழ்ந்து வாழும் மேன்மையாகிய நல்ல தலம் எதுவென்று கேட்க, கோல் கோடி அன்றினர் இஞ்சி குன்று குழைத்து வடிக்கணை பூட்டினர் அழித்தருள் அங்கணர் தாம் - செங் க்கோல் முறைதவறிய திரிபுரத்தவரது மதிலை பொன்மலையை வளைத்து வடித்த பா ணத்தைத் தொடுத்து எரித்தருளிய அழகிய கண்ணுளராகிய இறைவர், சொல் வார் - திருவாய்மலர்ந்தருள்வார். (எ-று)

இறைவர் அருச்சனை செய்வாயென்று கூறவும், அம்மையார் நீர் கூறிய பரத கண்டத்தில் அநேகந் திருத்தலிகளிருக்கின்றன, அவற்றுள் உமக்கு விருப்பமாகிய தலம் எதுவென்று கேட்க இறைவர் கூறுவாரென்க. (௩௭)

ஆயிடைநாமகிழ்ந்துறையுந்திருப்பதிகள்பலகோடியவற்றுண்மேலா
மாயிரத்தெட்டவற்றதிகமொருநூற்றெட்டவற்றதிகமறுபத்தெட்டா
மாயினவற்றுயர்காசிகாஞ்சியெனுமிரண்டதிகமறிவான்மிக்கோ
ராயினவையிரண்டுள்ளுஞ்சாலநமக்கினியநகரணிநீர்க்காஞ்சி.

(இ-ள்.) ஆயிடை நாம் மகிழ்ந்து உறையும் திருப்பதிகள் பலகோடி - அப்பரதகண்டத்தில் நாம் மகிழ்ந்து வசிக்கும் திருத்தளிகள் ஒன்றல்ல பலகோடியாம் அவற்றுள் ஆயிரத்தெட்டு மேலாம் - அவைகளுக்குள் ஆயிரத்தெட்டு தளிகள் மேன்மையாம், அவற்று ஒருநூறறெட்டு அதிகம் - அவைகளினும் நூற்றெட்டுத் தளிகள் மேன்மையாம், அவற்று அறுபத்தெட்டு அதிகமாம், அவைகளினும் அறுபத்தெட்டுத்தளிகள் மேன்மையாம் - ஆயின் (இங்ஙனங் கூறியவாறு) இத்தளிகள் ஒன்றுக்கொன் றுயர்ந்ததாயினும், அவற்று உயர் காசி காஞ்சி எனும் இரண்டு அதிகம் - அவைகளுக்குள் யாவரும் புகழ்கின்ற காசி காஞ்சியென்றுசொல்லப்பட்ட இரண்டு தலங்களும் மேன்மையாம், அவை இரண்டுள்ளும் - அவ்விரண்டினுள்ளும் அறிவான் மிக்கோர் ஆயின் - அறிவிலே சிறந்தவர்கள் ஆராய்வாராயின், நமக்கு சால இனிய நகர் - நமக்கு மிகவும் இனிமையான நகரம், அணி நீர் காஞ்சி - அழகிய நீர்வளநிறைந்த காஞ்சியாகும். (எ-று.)

எந்நிலங்களினுஞ் சிறந்தெடுத்தோதிய (பரதவருடத்தில்)நமக்கினிய தளிகள் பலகோடி, அவற்றுள சிறந்தன ஆயிரத்தெட்டு, அவற்றுள் சிறந்தன நூற்றெட்டு, அவற்றுள் சிறந்தன அறுபத்தெட்டு,சொல்லிய இவைகளுக்குள் சிறந்தன காசிகாஞ்சி, இவ்விரண்டில் நமக்கினிமையாயிருப்பது எதுவென்குராயின் காஞ்சியாம் என்க.

அம்மையார் "எண்ணில் தலங்களுள் நீ நன்று மகிழ்ந்துறை மிக்குயர்நற்றலம்" யாதென்றுவினவிஞராகலின்-எண்ணில்தலங்களஎன்றதனுல் திருப்பதிகள்பல கோடி எனத் தொகுத்தும், தலங்களுள் என்றதனுல் அவைகளுள் இவை இவை சிறந்தனஎன வகுத்தும், நன்று மகிழ்ந்துறைநற்றலம் எனறதனுல் ஆயினவற்றுயர் காசி காஞ்சி எனும் இரண்டதிகம் எனவுணர்த்தியும், மிக்குயர் நற்றலம் யாது என்றதனுல் அறிவான்மிக்கோர் ஆயின அவை யிரண்டுள்ளுஞ் சாலநமக்கினிய நகரணி நீர்க் காஞ்சி என இடமணித்துக்காட்டியும் முறையே இறைவர் விடையளித்தவாறுகாண்க. எனவே உலகினர்க்கு ஞானசித்தி யுண்டாக்கும் அம்மையார்க்குத்தம்மை யாச்சிக்கு மிடத்தை எடுத்துக்கூறியவாறென்க. (சஅ)

இவ்வண்ணந்தானங்கள்பலவகுத்ததெற்றுக்கெலியம்பக்கேளாய்
மைவண்ணவிருண்மலத்தினிருவினையாற்பிணிப்புண்டுமருளின்மூழ்கி
யுய்வண்ணமறியாதபசுக்கடமையம்மலத்தினுறாதநாமே
மெய்வண்ணப்பெருங்கருணைத்தன்மையினுல்விடுவிக்கவேண்டுமாற்றான்.

(இ-ள்.) இவ்வண்ணம் தானங்கள் பல வகுத்தது எற்றுக்கேல் -இவ்வகையாக (நாம் வீற்றிருக்கும்) தலங்களைப்பலதளிகளாக வகுத்திருப்பது யாதுகாரணமென்று கேட்பையாயின், இயம்பக்கேளாய் - அக்காரணத்தைச் சொல்லக்கேள், மைவண்ண இருள் மலத்தில் இருவினையாற் பிணிப்புண்டு-கரிய இருள்போன்ற ஆணவமலத்தில் இருவினைகளாற் கட்டுண்டு, மருளின் மூழ்கி - மயக்கில் மூழ்கி, உய்வண்ணம் அறியாத பசுக்கள் தமை - உய்ந்துபோம் நெறி ஈதென்றறியாத உயிர்களை,அ மலத்தில் உறாத நாமே - அவ்வாணவமலத்தில் பொருந்தாத நாமே, மெய்

வண்ணம் பெரு கருணைத்தன்மையினால் - நமக்கியற்கையாயுள்ளமாறாத பேரருளால், விடுவிக்க வேண்டும் ஆற்றால் - (பிணிப்புண்டு கிடக்கும் ஆன்மாக்களை) விடுவிக்கும் வகையினால். (எ-று.)

பலதளிகளை வகுத்தற்குக் காரணங்கூறுங்கால் ஆணவமலத்தில் இருவினையிற் கட்டுண்டு மாயாமலத்தின் மூழ்கி அதனாலுய்யும் நெறியையறியாத பசுக்களை அம்மலசம்பந்தியல்லாத நாம் அருளால் அப்பாசத்தளையை விடுவிக்கும் வகையை எண்ணியென்க.

இதனால் ஆன்மாக்கள் மலத்திரயங்களாற் பிணிக்கப்பட்டிருத்தலால் முத்திநெறி யறியாதெனவும், அப்பிணி யவிழ்த்து அந்நெறியைக் காட்டுவோர் இறைவனெனவுங் கூறியதென்க.

ஆன்மாக்கள் அநாதியே ஆணவமலத்திலிருத்தலும் அம்மலத்தினின்றும் நீங்காது கன்மமலத்தால் கட்டுண்டிருத்தலும், இஙஙனம் பிணித்திருத்தல் தோன்றாது மாயாமலத்தால் மயங்கிநிற்றலும் உண்மையாதலால் மைவண்ண விருண்மலத்தி னிருவினையாற் பிணிப்புண்டு மருளில் மூழ்கி எனவும், இவ்வாறு மூவகைப்பட்ட பாசத்தோடுங் கூடியிருத்தலால் பசுக்கடமையெனவும், பாசமுடைய பொருட்கு முத்தி கூடாதென்பது துணிபாதலால் உய்வண்ணமறியாத எனவும், பாசததாற் றளைப்புண்டிருக்கும் பசுக்களுக்கு அப்பிணியவிழ்ப்போன் அவைபோலும் பிணிப்புண்டிருப்பவ னன்றென்பது கண்கூடாதலால் அம்மலத்திலுறாத நாமே எனவும், பசுககளை விடுவிப்போனொருவன் அத்தளையைப் பரிவாலகற்றல் அநுபவ மாதலால் கருணைத்தன்மையினால் எனவும், இக்கருணையுடையார் பாசத்தை யொழிக்காராயின் ஒழிவிப்பார் மற்றொருவரின்றாதலால் விடுவிக்கவேண்டும் எனவும் கூறினார். (௫௯)

மருவாரும்பூங்குழலாயைவகையசத்திகளைவகுத்துப்பின்ன
ரருநான்குமுருநான்குமருவுருவந்தாமொன்றுமாகவொன்பான்
திருமேனிதோற்றுவித்துத்தோற்றமுதலைந்தொழிலுஞ்செய்வானுன்னி
யிருவேறுமாயைகளினுடல்கருவியிடமனைத்துமுயிர்கட்கீந்து.

(இ-ள்.) மருவாரும் பூகுழலாய் - நறுமணங்கமழும் மலரணிந்த கூநதலையுடையாய், ஐவகைய சத்திகளை வகுத்து - (முன்னர்) பராசத்திமுதலிய பஞ்சசத்திகளை வகுத்து, பின்னர் அரு நான்கும் உரு நான்கும அருவுருவம் ஒன்றும் ஆக ஒன்பான் திருமேனி தோற்றுவித்து - பின்னர் சிவமுதலிய அருவத திருமேனி நான்கும் மகேசமூர்த்த முதலிய உருவததிருமேனி நான்கும் சதாசிவமூர்த்தமாகிய அருவுருவத்திருமேனியொன்றும் ஆக ஒன்பதுவகைபபட்ட திருமேனிகளைத் தோற்றுவித்து, தோற்ற முதல் ஐந்தொழிலும் செய்வான் உன்னி - சிருட்டிமுதலிய பஞ்சகிருத்தியங்களையுஞ் செய்யவெண்ணி, இருவேறு மாயைகளின் உடல கருவி இடம் அனைத்தும் உயிர்கட்கு ஈந்து - இருவகைப்பட்ட மாயைகளினால் தனுகரண புவனபோகமென்னும் நான்கையும் ஆன்மாக்களுக்குக்கொடுத்து. (எ-று.)

உமையே! நாம் முன்னர் பஞ்சசத்திகளை வகுத்துப் பின்னர் அருவம் உருவம் அருவுருவமாகிய ஒன்பது திருமேனிகளைத் தோற்றிப் பஞ்சகிருத்தியங்களைச் செய்யக்கருதி இருவகை மாயைகளினின்றுந் தனுமுதலியவற்றை உயிர்கட்குக் கொடுத்து என்க. (௬0)

உள்ளமுதல்விகாரத்தினெய்துமிருவினைக்குரியபிறவிகாட்டிப்
பள்ளநீர்நடுக்கீழ்மேலூசலெனக்கொட்புறுத்துப்பருவநோக்கி
மெள்ளவினைப்பயனூட்டிநஞ்சோடுசுவையமிழ்தும்விரவித்தீற்றித்
தெள்ளுதவமறிந்தறியாதுபாயத்துமுண்மையினுஞ்சேரச்செய்வேம்.

(இ-ள்.) உள்ளமுதல் விகாரத்தின் எய்தும்-உள்ளமுதலிய அந்தக்கரணவி ருத்தி வேறுபாட்டான்வரும், இரு வினைக்குரிய பிறவிகாட்டி-இருவினைக்கீடான பிறவியைக்கொடுத்து, பள்ளநீர் நடு கீழ் மேல் ஊசல் எனகொட்புறுத்து - ஆழ்ந்தக டல்சூழ்ந்த மண்ணுலகத்திலும் கீழுலகத்திலும் மேலுலகத்திலும் ஊசலைப்போலப் போதல்வருதலைச்செய்து, பருவம்நோக்கி - அமயம்பார்த்து, மெள்ளவினைப்பயன் ஊட்டி - மெல்லவினைப்போகத்தை யுண்பித்து, நஞ்சோடு சுவையமிழ்தும் விரவித் தீற்றித் - துன்பத்தோடு இன்பத்தையுங் கலந்தனுபவிக்கச்செய்து, தெள்ளு தவம் அறிந்து அறியாது-தெளிந்ததவநிலையை அறிந்தாவது அறியாதாவது, உபாயத்தும் உண்மையினும் சேர செய்வேம்-மெலிந்தநடையினாலேனும் வலிந்தநடையினாலே னும் (எம்முடைய) தன்மமாகியதவத்தைக்கூடச்செய்வோம். (எ-று.)

கரணவேறுபாட்டான்வரும் இருவினைக்கீடாகத்தனுவைக் கொடுத்துச்சுவர் க்க மத்திய பாதலமென்கின்றமூன்றுலகங்களினும் மாறிமாறிப்பிறந்திறக்கச்செய்து அவ்வவ்விடங்களுக்கும் அவ்வக்காலங்களுக்குந் தக்கபருவத்தைநோக்கி மெல்லமெ ல்லவினைப்போகத்தையூட்டி அதனிடையே சுகதுக்கங்களைக்கலந்தனுபவிக்கச்செய் து இவற்றைத்தெரிவிக்கவல்ல தவநெறிகளை இதுஇதுவென்று நான்முகமாயுணரு முணர்வினாலாவது இயற்கையுணர்வினாலாவது சிவதன்மநெறியைக் கூடச்செய் வோம் என்க. (ருக)

சரியையெனக்கிரியையெனயோகமெனஞானமெனச்சாற்றுநான்கா
மிரியமலத்துகளறுத்துநமைக்காட்டுமருந்தவங்களிவற்றிற்சேரற்
குரிமைதருமுயர்தீக்கைசமயமுதன்மூன்றவைதாமுத்தவுமுத்தி
யரிலகன்றவெம்முலகத்துறலாதிநான்கென்னவறையுநூல்கள்.

(இ-ள்.) மலத்துகள் இரிய அறுத்து - ஆணவாதிமலக்குற்றங்கள்நீங்க (அத ன்காரியங்களை)யொழித்து, நம்மைக்காட்டும் அரு தவங்கள் - நம்மையறிவிக்கும் அ ரியதவங்கள், சரியையென கிரியையென யோகம் என ஞானம் என - சரியையெ ன்றும் கிரியையென்றும் யோகமென்றும் ஞானமென்றும், சாற்றும் நான்காம்-சொ ல்லப்பட்டநான்காகும், இவற்றில் சேரற்கு உரிமைதரும் உயர்தீக்கை-சரியைமுத லியநான்கினுஞ் சேர்வதற்கு அதிகாரத்தைக்கொடுப்பதாகிய சிறந்ததீக்கைகள், சம யமுதல் மூன்று - சமயதீக்கைமுதலிய மூன்றாகும், முத்தி உதவும் - முத்தியைக் கொடுக்கும், அவைதாம் அரில் அகன்ற எம் உலகத்து உறல் ஆதி நான்கு என்ன நூ ல்கள் அறையும் - அம்முத்திகள் குற்றமற்ற எம்முடைய உலகத்தையடைதல் முத லாகிய பதங்கள் நான்கென்று வேதாகமங்கள்கூறும். (எ-று.)

ஆணவாதிகுற்றங்கள் நீங்க,அவற்றின் காரியங்களை முற்றுமொழித்து அம்ம லமறைப்பால் தோன்றாதிருந்தநம்மை அறியச்செய்யும் அரியதவங்கள் சரியைமுத லிய நான்காகும். அச்சரியைமுதலிய நான்கினையுஞ்செய்தற்குரிமையைத் தருவதா கிய தீக்கைகள் சமயமுதலியமூன்றாகும். இத்தீக்கைகளைப்பெற்றுச் செய்வதாகிய முன்னர்க்கூறிய அச்சரியையாதிகளே முத்தியைக்கொடுக்கும். அம்முத்திசாலோக முதலிய நான்காகுமென்று நூல்கள்கூறுமென்க. (ருஉ)

தேக்கூறுதேமொழியாய்மலஞ்சீக்குந்தீக்கைபலவிதமாமங்க
ணேக்கூறுமொழியெண்ணநூல்யோகமவுத்திரியாநுவலுமேழுண்
மீக்கூறுமவுத்திரிதான்வியன்கிரியைஞானமெனவிருபாலாய்முப்
பாற்கூறுபடுஞ்சமயவிசேடநிருவாணமெனும்பகுப்பினுலே.

(இ-ள்.) தேன் கூறு தேன்மொழியாய்-சுவைமிக்கஇனியமொழியையுடையஉமையே, மலம் சீக்கும் தீக்கை பலவிதமாம் - மலத்தையொழிக்கும் தீக்கைகள் பலவகையாம், அம்கண்ணேர்க்கு ஊறு மொழி எண்ணம் நூல் யோகம் அவுத்திரி ஆகநுவலும் ஏழுள் - ஞானதிருட்டியாற் பார்த்தல் திருக்கரத்தாலபரிசித்தல் மந்திரத்தையுபதேசித்தல் ஆன்மாவைச் சிவமாகப்பாவித்தல் ஞான நூல்களைப்போதித்தல் சிவனிடத்தில் யோசிப்பித்து நிறுத்தல் குண்டமண்டலாதிகளிட்டு யாகமுறையாற்செய்தல் ஆகச்சொல்லப்பட்டஎழுவகையுள், மீ கூறும் அவுத்திரிதான் - விசேடித்துக்கூறும் அவுத்திரியானது, வியன் கிரியை ஞானம் என இருபால் ஆய் - ஞானவதிகிரியாவதியென்றிரண்டுவகையாகி, சமயம் விசேடம்நிருவாணம் என்னும் பகுப்பினுல் முப்பாற்கூறுபடும் - சமயதீக்கை விசேடதீக்கை நிருவாணதீக்கை என்னும் பகுதியினுல் மூன்றுவகைப்படும். (எ-று.)

உமையேதீக்கைகள்பலவிதமாம். (அவற்றுள்) கண்ணேக்கம்-பரிசம் - வாசகம்-எண்ணம்-நூல்-யோகம் - அவுத்திரி - என்றிவ்வகையாக ஏழுண்டு. (அவற்றுள்) அவுத்திரி-கிரியை ஞானம் என இரண்டுவகையாகி சமயம்விசேடம் நிர்வாணம்என்னும் மூன்றுவகைப்பட்ட கிரியாபேதத்தால் மூவகைப்படும் என்க. (ருஉ)

மருவுபுறமகமென்னுமதத்துழன்றுவருணநிலைவழாதுநின்று
மிருதிமறைநெறிவேள்விபலபுரிந்துவேதாந்தப்பொருண்மைதேறி
வருமுறையானிவையனைத்துமுற்றியபின்மேனேக்குமதியான்மிக்கோர்
தெருளுதவுசைவநெறிப்படுஞ்சமயதீக்கைதனக்குரியராவர்.

(இ-ள்.) புறம் அகம் என்னும் மருவும் மதத்து உழன்று-புறச்சமயமென்றும் அகச்சமயமென்றும் வழங்கிவருகின்ற மதங்களிலேயுழன்று, வருணநிலை வழாது நின்று - குலவொழுக்கத்தில் தவருது நிலைபெற்று, மிருதி மறை நெறி வேள்வி பலபுரிந்து - மிருதிமார்க்கத்தில் வேதநெறியாயுள்ள பலயாகங்களைச்செய்து, வேதாந்தப் பொருண்மைதேறி - வேதாந்தப்பொருளைத்தெளிந்து, வருமுறையான் - (இவ்வாறு) சோபானமுறையாக, இவையனைத்தும் முற்றியபின் - இவைகளெல்லா முற்றியபின்னர், மேல் நோக்கு மதியால் மிக்கோர் - மேலுண்மைநெறியை யாராயும் அறிவிற்சிறந்தபெரியோர், தெருள் உதவும் சைவநெறிப்படும் சமயதீக்கைதனக்கு - ஞானத்தைக்கொடுக்கும் சைவசமயநெறியிற்பொருந்திய சமயதீக்கைக்கு, உரியர் ஆவர் - அதிகாரிகளாவார்கள். (எ-று.)

புறம் அகம் என்னும் சமயங்களிலுழன்று, குலவொழுக்கங்களில் நிலைபெற்று, மிருதிகளிற்கூறியவழியே வேதத்தில் விதிக்கப்பட்டயாகங்களைச்செய்து, வேதாந்தப்பொருளை ஐயந்திரிபறத்தெளிந்து, இங்ஙனமான சோபானமுறையால் யாவையுந்தெளிந்து முற்றியபின்னர் உண்மைநெறியையறிய நின்றபெரியோர் சிவஞானந்தரவல்ல சைவநெறியிற்கூறும் சமயதீக்கையை அடைதற்குரியவராவாரென்க. மிருதியென்பது வடமொழிச்சிதைவு. (ருா)

அவ்வாற்ருன்யாமருவுந்திருக்கோயிலலகிடுதன்மெழுகலன்பின்
செவ்வாற்ருன்மலர்கொய்துதார்மாலைதொடுத்தணிதறீபமேற்றன்
மெய்வாய்ப்பச்சிவனடியார்பணித்தபணிதலைநின்றுமேவலாதி
யிவ்வாற்றிற்ருதநெறிச்சரியையினைப்புரிவோரெம்முலகின்வாழ்வார்.

(இ-ள்.) அவ்வாற்ருன் - அச்சமயதீக்கையிஞல், யாம் மருவும் திருக்கோயில் - நாமெழுந்தருளியிருக்குந்தலத்தில், அலகிடுதல் மெழுகல்-(புலர்வதற்குமுன் அலகிஞல்) அலகிடுதலும் கோமயத்தால் மெழுகலும், அன்பின்செவ்வாற்ருல்-அன்பிஞற்பெற்ற செந்நெறியால், மலர்கொய்து தார்மாலை தொடுத்து அணிதல்-மலர்களைப்பறித்து நீண்டமாலையாகத் தொடுத்தணிதலும், தீபம் ஏற்றல் - விளக்கிடுதலும், மெய்வாய்ப்ப சிவனடியார் பணித்த பணி தலைநின்றுமேவல் - உண்மைநிலை கைகூடச்சிவனடியார் ஏவிய ஏவலிற்றலைப்பட்டு நிலைபெற்று நிற்றலும், ஆதி - இவை போல்வனவாகிய, இவ்வாற்றில் - இவ்வழியில், தாதநெறிசரியையினைப் புரிவோர்-தாதமார்க்கமாகிய சரியையைச் செய்தொழுகுபவர், எம் உலகில்வாழ்வார் - எம்முடைய உலகத்தில்வாழ்வார்கள். (எ-று.)

முன்னர்க்கூறிய முறையேசமயதீக்கையைப்பெற்றுப் பிராதக்காலத்தில் துயிலொழிந்தெழுந்து நெறியுடன் கோயிலுக்குட்சென்று அலகிடல், மெழுகல், பின் மலர்களைக்கொய்து மாலைகளாகத் தொடுத்தல், தீபமேற்றல், சிவனடியாரைக்காணப்பெற்றுச் சிவஞானம் சித்தியாமாறு அவர்பணியில் தலைப்பட்டுநிற்றல் முதலாகிய இந்நெறியில் தாதமார்க்கமெனப்படும் சரியையைச் செய்தொழுகுவோர் சிவசாலோகத்தை யடைவாரென்க.

இதனுல் தாதமார்க்கத்தைக் கூறியதென்க. (௫0)

ஈதியற்றிமுற்றியபின்மகநெறிக்காம்விசேடத்தையெய்திப்பூசைக்
கோதியகொண்டாதாரசத்திமுதற்சத்தியீருேங்குகஞ்சத்
தாதனமேமூர்த்திமுதல்பாவித்தாவாகித்தாவரணபூசை
யாதியசெய்தழலோம்புமிக்கிரியைவழாதாரெம்மருகுவாழ்வார்.

(இ-ள்.) ஈது இயற்றி முற்றியபின் - இச்சரியாபாதஞ்செய்து முற்றிய பின்னர், மகநெறிக்கு ஆம் விசேடத்தை எய்தி - சிவார்ச்சனையாகிய யாகநெறிக்குரிமையாகிய விசேடதீக்கையைப்பெற்று, பூசைக்கு ஓதியகொண்டு - சிவபூசைக்குவிதித்த திரவியங்களைக்கொண்டு, ஆதாரசத்திமுதல் சத்தியீறுஓங்கும் கஞ்சத்து-ஆதாரசத்தி மந்திரமுதல் சத்திமந்திரமீருகவுயர்ந்திருக்கின்ற தாமரைமலரில், ஆதனம் மூர்த்திமுதல் - சிவாசனம் சிவமூர்த்திமுதலிய மூர்த்திகளை, பாவித்து ஆவாகித்து - பாவனைசெய்து அவ்வவ்விடங்களில் ஆவாகனஞ்செய்து, ஆவரணபூசை ஆதியசெய்து - ஆவரணபூசைமுதலியவற்றைச்செய்து, அழல் ஓம்பும் - (பின்) அக்னிகாரியத்தைச் செய்யும், இ கிரியை வழாதார் - (புத்திரமார்க்கமாகிய) இக்கிரியையினின்றும் தவருதவர், எம்அருகுவாழ்வார்-எமது சமீபத்தில்வாழ்வார்கள். (எ-று.)

சமயதீக்கைபெற்றுச் சரியையைச்செய்து முற்றியபின் அந்தர்யாகம் பகிர்யாகமென்னும் உட்பூசை புறப்பூசையைச் செய்வதற்கு விசேடதீக்கைபெற்று, விதிப்படி பூசாத்திரவியங்களைக்கொண்டு ஆதாரசத்திமுதல் சத்தியீருகக்கற்பிக்கப்பட்ட உயர்ந்த பதுமாசனத்தில் ஆசனம் மூர்த்திமுதலிய மந்திரங்களால் அந்தந்த மூர்த்திகளை முறையேபாவித்து, ஆவாகனுதி அஷ்டசம்ஸ்காரங்களைச்செய்து பின் ஆவரண

பூசைமுதலியனவும் செய்து அக்னிகாரியமு மியற்றுதலாகிய கிரியையினின்றும் வழுவாதவர் சிவசாமீப்பியத்தை யடைவாரென்க மகநெறி என்றது புத்திரமார்க்கத்தை.

இதனால் புத்திரமார்க்கத்தைக் கூறியதென்க. (௫௬)

இக்கிரியைமுற்றியபினியமாதியெட்டுறுப்பினியல்புவாய்ந்து
பக்கவளிதனையடக்கிநடுநாடியுறப்பயிற்றியாறுதாரந்
தொக்கபொருளுணர்ந்தேகிமதிவளைப்பினமுதுண்டுசோதியுள்ளாற்
புக்கழுந்துஞ்சகமார்க்கயோகுழப்போரெம்முருவம்பொருந்திவாழ்வார்.

(இ-ள்.) இ கிரியை முற்றிய பின் - இந்தக்கிரியை முடிந்தபின்னர், இயமாதி எட்டு உறுப்பின் இயல்பு வாய்ந்து - இயமமுதலிய அட்டாங்கயோகங்களின் இலக்கணம் வாய்க்கப்பெற்று, பக்கவளி தனை அடக்கி - இரண்டுநாசியின் வழியாகச்செல்லும் வாயுவைச் செல்லவொட்டாதடக்கி, நடுநாடி உறப்பயிற்றி - அவ்வாயுவைக் கும்பகத்தில் அசையாமல் நிலைபெறச் சாதனஞ்செய்து, ஆறுதாரம் தொக்க பொருள் உணர்ந்து-மூலாதாரந்தொடங்கி ஆக்கினைவரையிலும் கூடிய பொருள்களை யுணர்ந்து, ஏகி - அப்புறஞ்சென்று, மதிவளைப்பின் அமுது உண்டு - சந்திரமண்டில எல்லையினின்றும் பெருகாநின்ற அமுதத்தைப்பருகி, சோதி உள் - (பின்னர் வெளிப்படும்) சோதி சொரூபத்துள், புக்கழுந்தும் சகமார்க்க யோகுழப்போர் - புகுந்தது வாயிருக்கும் சகமார்க்கமாகிய யோகத்திலே சரிப்பவர், எம் உருவம் பொருந்தி வாழ்வார் - எம்முடைய வடிவத்தைப்பெற்று வாழ்வார்கள். (எ-று.)

இந்தக்கிரியை முடிந்தபின்னர் அஷ்டாங்க யோகாப்பியாசம் வாய்க்கப்பெற்று இரேசகபூரகஞ்செய்து கும்பகத்தில் நின்று ஆறுதாரப் பொருளை யுணர்ந்து அப்புறஞ்சென்று சந்திரமண்டிலத்திற் பெருகும் அமிர்தத்தைப்பருகி சொரூபப்பிரகாசத்தி லடங்கியிருத்தலாகிய யோகத்தைச்செய்து வருவோர் சிவசாரூபத்தைப் பெறுவார்களென்க.

இதனால் சகமார்க்கங் கூறியதென்க. (௫௭)

முறையானேயிம்மூன்றுமுற்றியருள்பதிந்துவினையொப்புவாய்ந்து
நிறைவாயபருவத்திலுயிர்க்குயிராய்நின்றருளும்யாமேதோன்றி
மறைவாய்மைநிருவாணவிதியாற்றால்வழியாறுந்தூய்மைசெய்து
குறையாதபேரருளினறிவுறுக்குமஞ்செழுத்தின்கொள்கைதேற்றி.

(இ-ள்.) முறையானே இம்மூன்று முற்றி - (மேற்கூறிய) முறையினாலே சரியை கிரியை யோகமென்னு மூன்றையும் முடித்து, வினை யொப்பு வாய்ந்து - இருவினையொப்புவந்து, அருள் பதிந்து - சத்தி பதிந்து, நிறைவாய பருவத்தில்-நிறைந்த பருவத்தில், உயிர்க்குயிராய் நின்றருளும் யாமே தோன்றி-உயிர்க்குயிராய் நிலைபெற்றிருக்கும் நாமே ஆசாரியமூர்த்தியாய்த்தோன்றி, மறைவாய்மை நிருவாணம் விதியாற்றால் - வேதவுண்மையாகிய நிருவாண தீக்ஷாவிதியினால், வழியாறும் தூய்மைசெய்து - அத்துவாக்களாறையுஞ் சுத்திசெய்து, குறையாத பேரருளின்-நிறைந்தகருணையினால், அறிவுறுக்கும் அஞ்செழுத்தின் கொள்கை தேற்றி-ஞானத்தையுணர்த்தும் ஸ்ரீபஞ்சாக்கரத்தின் பொருளைத் தெளிவித்து. (எ-று.)

"மருவுபுறம்" என்னுஞ் செய்யுளிற்கூறிய முறையானே சைவசமயஞ் சார்ந்து அச்சமயநெறியிற் சரியை முதலிய மூன்றையுஞ்செய்து முடித்து அதனால் வினையொப்பும் சத்திபதிவும் முற்றிய பருவமுணர்ந்து சிவமே குருமூர்த்தமாய் வந்

ஆ நிருவாணதீக்ஷாவிதியினால் அத்துவா சோதனைசெய்து பேரருளால் பஞ்சாக்கரப்பொருளைத் தெரிவித்தென்க. (௫௮)

அருவுருவங்குறிகுணங்கண்முதலீறுகட்டுவீடனைத்துமின்றிப்
பெருமையதாய்நுண்ணியதாய்ப்பேருணர்வாயானந்தப்பிழம்பாயெங்கு
மொருமுதலாயழிவின்றியோங்கொளியாய்நிறைந்துளதாயுயிர்கடோறும்
விரவியுடன்றொழிற்படுத்துப்புலங்கொளுத்திவீடுய்க்கும்பதியாமெம்மை.

(இ-ள்.) அருவுருவம் குறி குணங்கள்-அருவமு முருவமும் குறியும் குணங்களும் முதல் ஈறு கட்டு வீடு அனைத்தும் இன்றி-ஆதியும் அந்தமும் பந்தமும் மோக்ஷமும் (ஆகியஇவையனைத்து) மில்லாமல், பெருமையதாய்- மகத்தாகியும், நுண்ணியதாய்-அணுவாகியும், பேருணர்வாய்-பேரறிவாகியும், ஆனந்தப் பிழம்பாய்-பேரானந்தமாகியும்,எங்கும் ஒருமுதலாய்-எவ்விடத்தும் ஓர்முதலாகியும்,அழிவின்றி ஓங்கு ஒளியாய் - கெடாதபேரொளியாகியும், நிறைந்துளதாய் - பரிபூரணமாகியும், உயிர்கள் தோறும் விரவி - ஆன்மாக்கள்தோறுங்கலந்து, உடன்தொழிற்படுத்து - உடனிருந்து (அவ்வவ்வான்மாக்களுக்குரிய) தொழிலைச்செய்வித்து, புலங்கொளுத்தி-அறிவைவிளக்கி, வீடு உய்க்கும் பதியாம் எம்மை -முத்தியை யடைவிக்கும்பதியாகிய எம்மை. (எ-று.)

அருவுருவம் - குறிகுணம் - பிறப்பிறப்பு - பந்தம்வீடு - ஆகிய யாவுமில்லதாய், மகத்துக்குமகத்தாய், அணுவுக்கணுவாய், அறிவிறந்த பேரறிவாய், பேரானந்தமாய், எவ்விடத்துந் தன்னையன்றி வேறொரு முதலில்லதாய், மேன்மேலோங்கும் ஞானசொரூபமாய், எவ்விடத்தும் உள்ளதாய்நின்று எவ்வுயிர்களிடத்துங்கலந்து அவ்வுயிர்களைத்தொழிற்படுத்தி அவரவரறிவைவிளக்கி முத்தியிற்செலுத்தும் பதிப்பொருளாகிய நம்மை என்க.

இதனால் சன்மார்க்கம் கூறத்தொடங்கி அவற்றுள் பதியிலக்கணங் கூறியதென்க. (௫௯)

எண்ணிலவாய்வகைமூன்றாய் வெண்சிலைபோற்பற்றியவைதாமாயென்று
முண்மையவாய்ச்சத்தசத்தும் பகுத்துணர்சத்தாயிருளுமொளியுமல்லாக்
கண்ணியல்பாய்வசிப்பவருநிறைவாயெம்மருளாற்கட்டறுத்துவீடு
நண்ணுபவாயுணர்த்தவுணர் சிற்றறிவிற்பலவாநற்பசுக்கடம்மை.

(இ-ள்.) எண் இலவாய் - அளவிறந்தனவாய், மூன்றுவகையாய் - முத்திறப்பட்டனவாய், வெண்சிலைபோல் பற்றியவை தாமாய் - பளிங்கேபோல் அடுத்த பொருளின் வண்ணம் தாம் ஆவனவாய், என்றும் உண்மையவாய் - எப்பொழுதுமுள்ளபொருளாய், சத்தும் அசத்தும் பகுத்து உணர் சத்தாய் - சத்தும்அசத்துமாயிருக்கிற பொருளைப்பகுத்தறியவல்ல சத்தாய், இருளும் ஒளியும் அல்லாதகண் இயல்பாய் - இருட்டன்மையையும் ஒளித்தன்மையையும் அடையாதகண்ணிலக்கணமுடையனவாய், வசிப்பவரும் நிறைவாய் - அது அதுவாய்வசிப்புண்ணும் வியாபகமுடையனவாய், எம் அருளால் - எம்முடைய கருணையினால், கட்டு அறுத்து-பந்தமற்று, வீடுநண்ணுபவாய் - முத்தியைப்பொருந்துவனவாய்,உணர்த்த உணர் சிற்றறிவின் பலவாம் நல் பசுக்கள்தம்மை - அறிவிக்க அறிகின்ற சிற்றறிவினை யுடையனவாய் (விளங்கும்) பலவகைப்பட்ட நல்ல ஆன்மாக்களை. (எ-று.)

இவ்வளவென்று எண்ணும் இயல்புடையவல்லாதனவாய், சகலர் முதலாக எண்ணப்பட்ட மூன்று பிரிவினையுடையனவாய், பற்றியவை தாமாகும் பளிங்கின் தன்மையையுடையனவாய், நித்தியமாய், சத்தசத்தைப்பகுத்துணரும் சதசத்தாய், இருளுமாகாது ஒளியுமாகாது விளங்கும் கண்ணியல்பையுடையனவாய், அதிசூக்கும சித்தாதலின்றி அதுவதுவாய் வசிப்புண்ணும் வியாபகமுடையனவாய், எமது அருட்சத்தியால் பந்தமொழிந்து முத்தியையடைவனவாய், உணர்த்த வுணர்கின்ற அறிவினையுடையனவா யுள்ளபசுக்களை என்க. (௯௦)

ஒன்றாகியழிவின்றிப்பலவாற்றலுடைத்தாய்ச் செம்புறுமாசென்னத்
தொன்றாகியருள்விளைவினீங்கு மிருண்மலத்துடனத்தொடக்குநீப்ப
மின்றாவுமுடலாதிநல்கு மிருமாயையிருவினைகட்கேது
வென்றோதுகருமமிவைநிகழ்த்துதிரோ தமுமெனுமைவகைப்பாசத்தை.

(இ-ள்.) ஒன்றாகி-ஒன்றாய், அழிவின்றி - அழிவில்லாததாய், பல ஆற்றல் உடைத்தாய்-பலசத்திகளையுடையதாய், செம்பு உறு மாசு என்ன தொன்றாகி-செம்பைப்பொருந்திய களிம்பைப்போ லநாதியாய், அருள்விளைவில் நீங்கும் இருள்மலத்துடன் - அருள்விளையுங்காலத்து நீங்கும் ஆணவமலமொன்றனோடு, அத்தொடக்கு நீப்ப - அவ்வாணவமலத்தொடக்கொழிய, மின்தாவும் உடலாதி நல்கும் இருமாயை-மின்னலைப்போல் தோன்றிமறையும் தனுமுதலியனகொடுக்கும் சுத்தம் அசுத்தமென்னு மிருவகைப்பட்ட மாயையிரண்டும், இருவினைகட்கு ஏது என்று ஓதுகருமம் - நல்வினை தீவினைகளென்னு மிருவினைகளுக்கு ஏதுவென்று சொல்லப்படும் கருமமலமொன்றும், இவைநிகழ்த்துதிரோதமும் - இம்மலமாயா கன்மங்களை நிகழச்செய்யுந் திரோதமலமொன்றும், எனும் ஐவகைப்பாசத்தை-என்று சொலலப் படும் ஐந்துவகைப்பட்டபாசங்களை. (எ-று.)

இருள்போன்று ஆன்மாவின் ஞானக்கிரியைகளை மறைக்கும் ஆணவமல மொன்று, அவ்விருளில் மின்போற்றோன்றிமறையும் தனுவாதிகளைக் கொடுக்கு மாயையிரண்டு, இருவினைக்கேதுவாகிய கன்மமலமொன்று, இவற்றை நிகழச்செய்யுந் திரோதமலமொன்று, ஆக ஐவகைப்பட்ட பாசத்தை என்க. (௯௧)

திரிபுணர்வுபொதுமாற்றிச்சிறப்பியல்பானுணர்ந்தெண்ணித்தெளிந்துதே
றரியபெறற்சன்மார்க்கஞானநிலையிதுகிடைத்தவறிவான்மிக்கோர் [று
பெரியமலப்பிணியவிழ்த்துச்சிவானந்தப்பெரும்பேறுமருவிப்பாச
மிரிவதூஉம்புகுவதூஉமின்றியொருநிலையாமவ்வியல்புதன்னில்.

(இ-ள்.) திரிபு உணர்வு பொதுமாற்றி - ஒன்றை மற்றொன்றாக வறியும் அறிவையும் பொதுவாக நிற்குநிலையையும் மாற்றி, சிறப்பியல்பான் உணர்ந்து-சிறப்பிலக்கணத்தினா லவற்றினுண்மையைக்கேட்டு, எண்ணி - சிந்தித்து, தெளிந்து தேறும் - பின்தெளிந்து நிட்டைகூடும், பெறல் அரியசன்மார்க்கஞானநிலை - பெறுதற் கரிய சன்மார்க்கமாகிய ஞானநிலை (இதுவாகும்), இது கிடைத்த அறிவால்மிக்கோர்- இச்சன்மார்க்கநிலை கிடைக்கப்பெற்ற அறிவினாலே மேம்பட்டவர், பெரியமலப்பிணி அவிழ்த்து - மிக்கஆணவமலச்சிமிழ்ப்பு அவிழச்செய்து, சிவானந்தப் பெரும் பேறுமருவி-சிவானந்தமாகிய பெரியபேற்றைப்பொருந்தி, பாசம் இரிவதும் புகுவதும் இன்றி-பாசந்தன்னை விட்டுப்போதலும் அடைதலும் இல்லாமல், ஒருநிலையாம் அவ்வியல்புதன்னில்-ஒருநிலையாயுள்ள அத்தன்மையில். (எ-று.)

திரிபுணர்ச்சியும் பொது நோக்கமும் இன்றிச்சிறப்பிலக்கணத்தாற் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடுதலாகிய சன்மார்க்கநிலை யிதுவாகும். இந்நிலை கிடைக்கப்பெற்ற அறிவினால் மிக்கோர் ஆணவமல நீங்கிச் சிவானந்தப்பேற்றை யடைந்து பாசம்போவதும் அடைவதுமின்றி ஒருநிலையாயுள்ள அவ்வியல் பில் என்க. (சுஉ)

உணர்பொருளுமுணர்வானு முணர்வுமெனும்பகுப்பொழியா தொழிந்து
புணர்விழியுநீர்நிழலுந் தீயிரும்பும்புனலுவரும்பரிதிமீனுந்            [பானுப்
துணையவிரண்டறுகலபிபினெம்முடனாய்ப்பேரின்பந்துய்த்துவாழ்வா
ரிணர்விரைத்தமலர்க்கோதாயவர்வடிவே யெமக்கினியகோயிலாமால்.

(இ-ள்) இணர் விரைத்த மலர்க்கோதாய் - கொத்தாயுள்ள நறுமணங்கமழும் மலரணிந்த கூந்தலையுடையாளே, உணர்பொருளும் - அறியப்படுபொருளும், உணர்வானும் - அறிகின்றவனும், உணர்வும் - அறிவும், எனும்பகுப்பு ஒழியாது ஒழிந்து-என்று சொல்லப்படுகின்ற ஞாதுருஞானஞேய மூன்றும் தத்தம் பகுப்புகளொழியாது ஒழிந்து, பானு புணர்விழியும் - சூரியனும் ஒளிபுணர்ந்தகண்களும், நீர்நிழலும் - நீரும்நிழலும், தீ இரும்பும் - நெருப்பும் இரும்பும், புனல் உவரும் - தண்ணீரும் உவர்ப்பும், பரிதிமீனும் - சூரியனும் நக்ஷத்திரமும், துணைய இரண்டு அறுகலப்பில் - (ஆகிய இவைகள்) இரண்டாயும் இரண்டல்லவாயுமுள்ள அநந்யத்தினால், எம் உடனாய் பேரின்பம் துய்த்துவாழ்வார் - எம்மோடத்துவிதமாய் அழியாத இன்பத்தை யழியாதனுபவித்து வாழ்வார்கள், அவர்வடிவே எமக்கு இனியகோயிலாம் - அவருடைய வடிவங்களே எமக்கு இனிய ஆலயமாகும். (எ-று.)

(மேற்கூறிய அவ்வியல்பில்) ஞேயமாகிய சிவமும், ஞாதுருவாகிய ஆன்மாவும், ஞானமாகிய அறிவும்ஆகிய மூன்றுபகுப்பும் கெடாது இம்மூன்றையுஞ் சுட்டியறிகின்ற சுட்டறிவுகெட்டு, பானுப்புணர் விழியுமென்பதுமுதலாகக் கூறிய உவமம் போல் இறைவனோடுடனாய்ப் பேரின்பத்தையனுபவிப்பர், அவர்வடிவே இறைவனுக்கு ஆலயமா மென்க. (சுக)

முத்திமுடிபிதுகண்டாய்முன்னியம்புமூன்றுமுத்திப்பதங்களாகு
மித்தகையமுத்திகளையிம்முறையான்முயன்றவரோவெய்தற்பாலா
ரத்தகையவலியில்லோரெளிதாகவீடுபேறடைவானெண்ணி
வைத்தபெருங்கருணையினான்மேதினிமேற்பலதானம்வயங்கச்செய்தேம்.

(இ-ள்) முத்திமுடிபு இதுகண்டாய் - முத்திமுடிவு இதுவாகும், முன் இயம்பு மூன்றும் - முன்சொல்லிய சாலோக சாமீப சாரூபங்களாகியமூன்றும், முத்திப் பதங்களாகும்-அம்முத்திமுடிவடைதற்கேதுவாகியபதங்களேயாம்,(ஆகலான்) இத்தகைய முத்திகளை - இத்தன்மையவாகிய முத்திநெறிகளை, இம்முறையான் முயன்றவரோ - இங்ஙனங்கூறிவந்த முறைமையினால் முயன்றவர்களே, எய்தற்பாலார் - (முத்திமுடிபாகிய சாயுச்சியத்தை) அடைதற்குரியவராவர், அத்தகைய வலியில்லோர்-அச்சரியையாதிகளைச் சாதிக்கவலியில்லாதவர், எளிதாக வீடு பேறு அடைவான் எண்ணி-எளிமையாக முத்திப்பேற்றையடையக்கருதி, வைத்தபெருங் கருணையினால்-நாம் வைத்தபேரருளால், மேதினிமேல் பலதானம் வயங்கச்செய்தேம்-உலகின்கண் பல தளிகள் விளங்கச்செய்தோம். (எ-று.)

அருவுருவம் "என்னுஞ் செய்யுள்முதல் "உணர்வானும்" என்னுஞ் செய்யுள் காறும் கூறிவந்த முத்திமுடிவு இன்னதாம். இதற்கு முன் தாதமார்க்க முதலியவைகளிற் கூறியவை முத்திமுடிவை யடைதற்குரிய பதங்களாகும் (ஆகலான்) முத்தி

முடிவையும் முத்திப்பதங்களையும் (அடைதற்குரியார்யாவரெனின்) ("தெருளுதவு சைவநெறிப்படுஞ்சமய தீக்கைதனக்குரியராய்") சரியையாதிகளில் முறையாகமுயன்றவரோ உரியராவார். (இவற்றைச்சாதித்தல் யாவர்க்குங்கூடாதாகலான்) அவ்வழியில்லாரும்எளிதாக அடைய யாம் கருணையினால் இவ்வுலகில் பலதளிகளை விளங்கச்செய்தோமென்க. (கூ௪)

அங்கவற்றின்வதிவோர்கண்முயலாதெம்முலகாதிபதங்கள்சேர்வர்
கொங்குயிர்த்தமலர்க்குழலாயவற்றுள்ளுங்குருமாடக்காசிவைப்பிற்
றங்குபவரெம்முருவந்தனைப்பெறுவர்திருக்காஞ்சித்தலத்தின்வாழ்வார்
மங்கரியமலந்துமித்துநம்முடனும்பேரின்பவாழ்வுசேர்வார்.

(இ-ள்) கொங்கு உயிர்த்த மலர் குழலாய் - நறுமணங்கமழும் மலரணிந்த கூந்தலையுடையாளே, அங்கு அவற்றின் வதிவோர்கள் முயலாது எம் உலகாதி பதங்கள் சேர்வர் - அத்தலங்களில் வசிக்கப்பெற்றவர்கள் சரியையாதிகளி லீடுபடாது எம்முடைய வுலகமுதலிய பதங்களையடைவார்கள், அவற்றுள்ளும் குருமாடம் காசிவைப்பில் தங்குபவர்-அந்தத்தலங்களுள்ளும் அழகியமாளிகைகள் சூழ்ந்த அவிமுத்தத்தில் வசிப்பவர்கள், எம் உருவந்தனை பெறுவர் - எம்முடைய வுருவத்தைப்பெறுவார்கள், திருக்காஞ்சித்தலத்தின் வாழ்வார் - காஞ்சித்திருப்பதியில் வாழ்வோர்கள், மங்கரிய மலந்துமித்து - குன்றுரமல சத்தியைக்குன்றச்செய்து, நம்முடனும் பேரின்பவாழ்வுசேர்வார்-நம்முடன் அத்துவிதமாயிருக்கும் பேரானந்தவாழ்வை யடைவார்கள். (எ-று.)

உமையே ("மேதினியில் வயங்கச்செய்தோம் என்ற பலதானங்களில் வசிக்கட்பெற்றவர்கள் சாலோக சாமீபமென்னும் இருபதங்களையடைதற்குரிய (சரியை கிரியைகளைச் செய்யாமலே) அப்பதங்களையடைவார்கள். காசிப்பதியில் வசிப்பவர்கள் (யோகத்தைச்செய்யாமலே) சாரூபத்தை யடைவார்கள். காஞ்சிப்பதியில்வாழ்வார்கள் (ஞானநிலையுணராமலே) சாயுச்சியத்தை யடைவார்களென்க.

அங்கவற்றின் வதிவோர்கள் முயலாது எம்முலகாதிபதங்கள் சேர்வர் என்றதனால் பசுக்களைப்பாசத்தினின்றும் விடுவிக்க "ஆயிடைநாமகிழ்ந்துறையுந் திருப்பதிகள்பல"என்றதை வலியுறுத்தியதெனவும், "குருமாடக்காசிவைப்பில்தங்குபவர் எம்முருவந்தனைப்பெறுவரென்றும், காஞ்சித்தலத்தில் வாழ்வார்எம்முடனும்பேரின்பமருவிவாழ்வார்"என்றும் விதந்ததனால் "ஆயிரத்தெட்டதிகம் அவற்றதிகம் நூற்றெட்டு, அவற்றதிகம் அறுபத்தெட்டு, அவற்றதிகம் காசிகாஞ்சியாதலால் அத்தலங்களில் வசிக்கப்பெற்ருல்வரும் புண்ணியவிசேடமிவை என்பதையும், அவையிரண்டுள்ளும் சாலநமக்கினிய நகர்காஞ்சி" என்ற சிறப்பின் மிகுதியையும் வலியுறுத்திய தெனவுங்கொள்க.

காசியில் வசிப்போர் உருவந்தனைப்பெறுவரென்றும், காஞ்சியில்வசிப்போர் நம்முடனும் பேரின்பவாழ்வு சேர்வாரென்றும் வகைப்படுத்திக்கூறினமையால்"அங்கவற்றின் வதிவோர்கள் எம்முலகாதிபதங்கள்சேர்வர்"என்றதற்கு சாலோகசாமீபமென்னுமிரண்டுபதங்களைப்பெறுவாரென்று பொருட்படுத்தியதென்க.

இதனால் சிவக்ஷேத்திரத்தில் வசித்தலொன்றே சாலோக முதலியநான்கனையுந்தருமென்றதை வலியுறுத்தியதென்க. (கூரு)

எம்முலகத்துறைவதனிலெம்மணிமைக்கண்ணமர்தலேற்றமாகு
மெம்முருவந்தனைப்பெறுதலதற்கதிகமதற்கதிகமிறவாவின்பத்
தெம்முடனுயொற்றித்தலிம்முறையான்வதிவோர்களெவர்க்குமாறு
தெம்முடனும்பேறளிக்குங்காஞ்சியெவற்றினுமதிகமென்னத்தேருய்.

(இ-ள்.) எம் உலகத்து உறைவதனில் - எம்முடையவுலகத்தில் வசித்தலைப் பார்க்கிலும், எம் அணிமைக்கண் அமர்தல் - எம்முடைய சமீபத்திலிருத்தல், ஏற்றமாகும் - சிறந்ததாகும், அதற்கு அதிகம் எம் உருவந்தனைப் பெறுதல் - அதனினுஞ் சிறப்பு எம்முடைய உருவததைப்பெறுதலாம், அதற்கு அதிகம் இறவாத இன்பத்து எம் உடனாய் ஒற்றித்தல்-அதனினுஞ்சிறப்பு கெடாத இன்பத்தினால் எம்மோடு பொருந்தியிருத்தலாம், இமுறையான் வதிவோர்கள்எவர்க்கும்-இந்தமுறைமையால் வாசஞ்செய்கின்ற யாவர்க்கும், மாறாது - வேறுபடாது,எம்முடனாம்பேறு அளிக்கும் காஞ்சி - எம்மோடொத்தவிதமாயிருக்கும் பேற்றைத்தரும் காஞ்சிப்பதி, எவற்றினும் அதிகம் என்ன - எல்லாத்தலங்களினுமேம்பட்டதென்று,தேறாய்-தெளிவாய். எ-று.

இறைவன் உலகத்தில் வசிப்பதிலும் ஏற்றம் சமீபத்திலிருக்கப்பெறுதல், அதனினும் ஏற்றம் அவ்விறைவனோடுடனாயொற்றித்து நிற்றல் இம்முறைமையான் எம்முடனாயிருக்கும் சாயுச்சியத்தைக் கொடுத்தலாகிய காஞ்சிப்பதியே எப்பதிகளினும்ஏற்றமென்க.

சாலோகாதி நான்குபதங்களில்சாயுச்சியபதம் சிறப்புடைமையாதல் போல் எப்பதிகளிலும் காஞ்சிப்பதியே சிறப்புடைத்தென்க. (௯௯)

மறைமுடிவுமிவ்வாறேவீடுதவும்வளநகரங்காஞ்சியென்ன
வறைதருமாலன்னதூஉம்வகுத்துரைப்பக்கேட்டியெனவருளிச்செய்வார்
மிறைபுரியுந்தக்கனார்வேள்வியகத்திமையவர்தம்மேனிமுற்றுங் [ர்.
குறைபடுத்துத்துகைத்துழக்கிச்சவட்டியபினிரங்கியருள்கொடுக்கவல்லா

(இ-ள்) மறைமுடிவும் இவ்வாறே வீடுதவும் வளநகரம் காஞ்சிஎன்னஅறைதருமால் - வேதமுடிவும் நாம் கூறியபடியே முத்தியைக்கொடுக்கும் வளமைபொருந்திய நகரம் காஞ்சிப்பதி என்று சொல்லும், அன்னதும் வகுத்து உரைப்பகேட்டி என்ன - அதையும் வகுத்துச்சொல்லக்கேட்பாயாகவென்று, மிறைபுரியும் தக்கனார் வேள்வியகத்து - சிவநிந்தையை விடாது செய்யுந் தக்கனது வேளவிச்சாலையில், இமையவர்தம் மேனிமுற்றும்-தேவர்களுடைய சரீரமுழுதும், குறைபடுத்து துகைத்து உழக்கி சவட்டியபின் - வாளாற்குறைத்து காலால துவைத்துக்கலக்கியழித்த பின், இரங்கி அருள்கொடுக்கவல்லார் - இரக்கமுற்று அருள்செய்யவல்லார், அருளிச்செய்வார் - திருவாய்மலர்ந்தருளுவார். (எ-று.)

யாம் கூறியதுபோலவே வேதமுடிவும் சாயுச்சியத்தைக்கொடுக்கு நகாம் காஞ்சிஎன்று சொல்லும் அதனையும்வகுத்துக் கூறுகின்றோம் கேட்பாயாகவென்று தக்கன்வேள்வியையழித்துப் பின் கருணைகூர்ந்தஇறைவனாருள்செய்வாரென்க. ()

தன்னிகரில்கேசாந்தமுறுமாவிதன்சிரத்துக்கபாலங்கீறி
வன்னியினிற்பூவெனப்போய்வாயுவினிற்புவ்வெனப்போயிரவிமாட்டுப்
பின்னமறுசுவ்வெனப்போய்விண்ணாசின்மகவெனப்போய்ப்பிரமந்தொரன்
மன்னிடுமிக்கேசாந்தமுத்தியினையெவ்வுயிர்க்கும்வழங்குங்காஞ்சி [றாய்

(இ-ள்.) தன் நிகரில கேசாந்தம் உறும்ஆவி-தனக்கு ஒப்பில்லாத கேசாந்த முத்தியை அடைதற்குரியஉயிர், தன்சிரத்துக் கபாலம்கீறி - தன்தலையிற்பொருந்திய கபாலத்தைக்கிழித்து, வன்னியினில் பூ எனபோய் - அக்னிமண்டிலத்தில் பூ என்றுசென்றும், வாயுவினில் பு எனபோய் - வாயுமண்டிலத்தில் பு என்றுசென்றும், இரவிமாட்டுபின்னம்அறு சு எனபோய் - சூரியமண்டிலத்தில் குற்றமற்ற சு என்று சென்றும், விண் அரசின்மக எனபோய் - இந்திரலோகத்தில் மக என்றுசென்றும்,

பிரமத்தானன்றாய்-(பின்) பரமசிவத்தோடொன்றாகி, மன்னிடும்-நிலைபெற்றிருக்கும் இக்கேசாந்தமுத்தியினை - இந்தக் கேசாந்தமுத்தியை, எவ்வுயிர்க்கும் - எல்லா வுயிர்களுக்கும், காஞ்சிவழங்கும் - காஞ்சிநகரங்கொடுக்கும். (எ-று.)

ஒப்பிலாத கேசாந்தமுத்தியை யடைதற்குரிய சுத்தான்மா கபாலத்தின் வழியே வெளிப்பட்டு அக்னி-வாயு சூரியன்முதலியமண்டிலங்களிலும், இந்திரனுலகத்திலும் முறையே பூ:-புவ:-சுவ:-மஹ:-எனச்சென்று பின்பரமசிவத்தோடொன்றாய் நிலைபெற்றிருக்கும் இக்கேசாந்தமுத்தியைக்காஞ்சிநகரமானது எல்லாவுயிர்களுக்கும் எளிதாகத்தருமென்க. (௬௮)

கவ்வெனச்சொல்விதிக்கீசனாயவெமைக்கேசனெனக்கழறும்வேத
மெவ்விடத்திலாருயிர்களெம்பாலேயந்தத்தையெய்தாநிற்கு
மவ்விடத்திலதுமுத்திகேசாந்தமுத்தியெனப்படுமாலந்தச்
செவ்விடமுநமக்கென்றுமரசிருக்கையெனத்திகழுங்காஞ்சிமூதூர்.

(இ ள்.) கவ்வெனசொல்விதிக்கு ஈசன் ஆய எம்மை-க என்னுஞ்சொல்லுக்குப்பொருளாயிருக்கின்ற பிரமனுக்கு அதிபதியாகிய எம்மை, கேசன் என்ன வேதம் கழறும்-கேசனென்று வேதம்சொல்லும், (ஆகையால்) ஆருயிர்கள் எவ்விடத்தில் எம்பாலே அந்தத்தை எய்தாநிற்கும் - அருமையாகிய உயிர்கள் எந்தவிடத்தில் எம்மிடத்து அந்தத்தையடையாநிற்கும், அவ்விடத்தில் அதுமுத்தி-அந்தவிடத்தில் அடைவதாகிய அந்தமுத்தி, கேசாந்தமுத்தி எனப்படும்-கேசாந்தமுத்தி என்றுசொல்லப்படும், அந்தச்செவ்விடமும்-அந்தமுத்தியிடமும், நமக்கு என்றும் அரசிருக்கைஎன-நமக்கு எக்காலத்தும் அரசிருக்கை என்றுசொல்ல, காஞ்சி மூதூர் திகழும்-பெரியகாஞ்சிநகரம்விளங்காநிற்கும். (எ-று.)

வேதம் எம்மைக்கேசன்என்றுகூறும் அச்சொற்குப்பொருள் என்னையெனின் விதிக்கு ஈசன் என்பதாம். ஆதலின்கேசனாகிய எம்மிடத்தில் உயிர்களெல்லாம்அந்தத்தையடையும், அங்ஙனமுயிர்கள் அந்தத்தையடைய நின்றவிடம் எவ்விடமோ அவ்விடமேகாஞ்சியாம். அவ்விடத்தைக் கேசனாகியநாம் அரசிருக்கையாகக் கொண்டிருத்தலின் அக்காஞ்சியில் நம்மையடைதலே கேசாந்தமுத்திஎன்றுசொல்லப்படும்.

இதனால் க - என்றால் பிரமன் அப்பிரமனுக்கு இறைவன் ஈசன் அதனால் கேசன் என்றுபெயர். எனவேபிரமாதிபதி என்பதாம். பதி பரசிவனாகவே எல்லாவுயிர்களும் அப்பதியாகிய சிவனிடத்திலேயே அந்தத்தை யடையுமென்றதென்க. எனவே கேசன்-சிவன், சிவனை யடைதலேமுத்தி ஆதலின் இம்முத்தியைக்கேசாந்தமுத்தி யென்றாரெனவும், ஆன்மாக்களுக்குச் சாயுச்சியத்தைக் கொடுக்கும் பரசிவமிருக்குமிடம் குறியிறந்த இடமாகலின் அதனையெவ்விடத்திலாருயிர்கள் எம்பாலேயந்தத்தை யெய்தாநிற்குமென்றானெனவும் (அங்ஙனமாயினும்) அந்தவிடம் காஞ்சி எனவும், அவ்விடத்திருக்கும் பரசிவசொரூபம் இக்காஞ்சியி லிருக்கும் சோதிலிங்கரூபமெனவும், அச்சிவசொருபத்தை யடைதலாகிய கேசாந்தமுத்தி இக்காஞ்சியை யடைதலாமெனவும் விளக்குவார் அந்தச் செவ்விடமும் நமக்கென்று மரசிருக்கை யெனத்திகழும் காஞ்சிமூதூர் என்றானெனவுங் கூறியவாறு. (௬௯)

இன்னுமொருவாறியம்பக்கேண்மதிநீகம்மென்றல்சிரமாமந்தச்
சென்னிமிசைச்சயனமுறுவதாகேசமதுதனையஞ்சித்தல்காஞ்சி
யன்னதனாற்காஞ்சியொடுகேசமொருபொருட்கிளவியாகுந்தேம்பு
மின்னிடையாய்கேசாந்தமாவதுமேதகுகாஞ்சியந்தமாமால்.

(இ-ள்.) மின் தேம்பு இடையாய் - மின்னல் வருந்தும் சிறிய இடையையுடைய உமையே, இன்னும் ஒருவாறு இயம்ப நீகேள் - மற்றொரு வகையாக்ச் சொல்லுகின்றோம் நீ கேட்பாயாக, கம் என்றல் சிரமாம் - கம்மென்னும்பதம் சிரமென்னும் பொருளுடையதாம், அந்தசென்னிமிசை - அச்சிரத்தின்மேல், சயனம் உறுவதுகேசம் - சயனித்திருப்பது கேசமாம், அதுதனை அஞ்சித்தல் காஞ்சி - அச்சிரத்தானத்தை யடைந்திருத்தல் காஞ்சியாம், அன்னதனால்-அக்காரணத்தால், காஞ்சியொடுகேசம் ஒரு பொருட்கிளவியாகும்-காஞ்சி யென்றாலும் கேச மென்றாலும் ஒருபொருளையுணர்த்தும் மொழிகளாம், கேசாந்தமாவது - கேசாந்த முத்தியென்று சொல்லப்படுவது, மேதகுகாஞ்சிஅந்தமாம்-விரும்பத்தக்ககாஞ்சியந்தமேயாம். (எ-று.)

உமையே! இன்னும் ஒருவகையாகக் கூறுகின்றோம் நீ கேட்பாயாக என்னையெனின், கம்மென்றுசொன்னால் தலையென்றுபொருள் அத்தலையின்மேற்பொருந்தியிருப்பதுகேசம்(சிவம்) ஆகலின் அச்சிவத்தைஅடைந்திருத்தல் காஞ்சியாம். அக்காரணத்தால் காஞ்சி என்றாலும் கேசம் என்றாலும் ஒருபொருளேயாம், ஆகவேகேசாந்தமாவது காஞ்சியந்தமாம். எனவே கேசாந்த முத்தியாவது காஞ்சியை யடைதலாம் என்க.

முன்னர் சன்மார்க்கமாகிய ஞானமார்க்கத்தா லடையும் முத்தியே முடிந்த முத்தியென்றும், ஏனையதாதமார்க்க முதலிய மூன்றினாலும் அடைவதாகிய முத்திகள் முத்திப்பதங்களென்றும், இவற்றை யடையவிரும்புவோர் அவ்வவற்றிற்குரிய மார்க்கங்களில் முயல்வாராயின் அடைவார்களென்றும், அங்ஙனம்முயறல் மலவசத்தாராகிய உயிர்களுக்குக்கூடாதாகலான் அம்முத்திகளையடைதற்கு இவ்வுலகின்கண் பலதிருப்பதிகளை வைத்திருக்கின்றோமென்றும், அத்தலங்களிற் சாலோக முதலிய மூன்றுபதங்களை இன்னோரன்ன தலங்கள் கொடுக்குமென்றும், காஞ்சிப்பதிசாயுச்சியநனைக் கொடுக்குமென்றும், இவ்வாறே வேதங்களும் காஞ்சிப்பதியே சாயுச்சியத்தைக் கொடுக்குமென்று புகலும் அவ்வகையைக் கூறுகின்றோமென்றும் இறைவர் திருவாய்மலர்ந்தருளினரென்க. அவ்வகையாவது "தன்னிகரில்" என்னுஞ் செய்யுள்காறும்கூறியவைகளேயாம்.

என்னையெனின் "தன்னிகரில்" என்னுஞ்செய்யுளில் ஆன்மாத்தான்வசித்தற்கிடமாயிருக்கின்ற உடம்பைவிட்டுப்பிரமப்பொருளாகிய பரசிவத்தோடொன்றுதல் எதுவோ அது முத்திகளில் முடிந்தசாயுச்சியமுத்தி (கேசாந்த முத்தி) என்றும், அதனைக்காஞ்சிவழங்குமென்பதையாராயின்அங்கத்திற்சிறந்தது சிரம் அச்சிரத்தின் வழியாக முத்தியிற் சிறந்த சிவசாயுச்சியத்தை முறையே யடைதல் கேசாந்தமுத்தி. எனவே, சரீரத்தில் அந்தமாய் (முடிவாய்) உள்ளதுதலை, முத்தியில் அந்தமாயுள்ளது சாயுச்சியம், அந்தமாயுள்ள சாயுச்சியத்தைக் கேசனாகியசிவனைத்தன்னிடத்திலேயே யுடையதாகிய காஞ்சி முதலாதலாலென்க. இதனை, இனிவருஞ் செய்யுள்களாற் காண்க.

இக்கேசாந்த முத்தியைக்காஞ்சிப்பதி வழங்கல் எங்ஙனங்கூடுமென ஆசங்கையுண்டாமாகலின் அதனைப்பரிகரித்தற்கு "கவ்வெனச்சொல்" என்னுஞ்செய்யுளெழுந்ததென்க. எங்ஙனமெனின், சாயுச்சிய முத்தியைத்தருவோன் ஈசன் அவ்வீசன் தனக்கிடமாகக் கொண்டிருக்குமிடம் காஞ்சி ஆகலான் காஞ்சி வழங்குமென்றொன்க. அல்லது உம் ஈசன்தான் முத்தியைக்கொடுப்பானென்பதற்குப் பிரமாணம் உண்டோ என்பார்க்குக்கேசனெனக்கழறும் வேதம் என்றார். இதனை ஆராயின் சிவபெருமானே முத்தியைக் கொடுப்பவனென்றாயிற்று. ஏனெனின்- அச்சிவபெருமான் மகாசங்காரத்தைச் செய்யுஞ் சங்காரக் கடவுளாகலானும், அவ்விறைவன் சங்

கரிக்குங்கால் எல்லாவுயிர்களும் அச்சங்காரக் கடவுளிடத்தே அந்தத்தையடையும் ஆகலானும்அச்சங்காரகாலத்தில்முத்தான்மாக்களுக்குப்புனருற்பவத்துக் கிடனின்றி அத்துவிதமாய்ப்போதலாகிய சாயுச்சியமாகிய கேசாந்தமுத்தியைக் கொடுத்தலானு மென்க. இதனால் கேசாந்தமுத்தியைக்கொடுப்போன் காஞ்சியில்வீற்றிருத்தலால்கா ஞ்சிவழங்குமென்றும் வலியுறுத்தியவாறு. இதனைச் சொல்வகையானும்வலியுறுத்த வருஞ்செய்யுளெழுந்ததென்க. (எ0)

என்றுநமக்கினியதனுன்முதன்மையாற்றானங்கட்கெல்லாஞ்சென்னி
யென்றியம்பப்படுங்காஞ்சியித்திறத்துக்கேசாந்தப்பெயர்சால்வைப்பி
னொன்றுணராமடவோர்கள்விலங்குமரமுதலனைத்துமுயிர்போங்காலை
மன்றமிசைத்தலையோடுகீறியுடல்விடுத்தேகுமலர்ப்பூங்கோதாய்.

(இ-ள்.) மலர் பூ கோதாய்-மலரணிந்த கூந்தலையுடைய உமையே, காஞ்சி என்றும் நமக்குஇனியதனால் - காஞ்சிநகரம் (நமக்கு) எந்நாளும் இன்பமாதலானும், முதன்மையான் - முதன்மையாதலானும், தானங்கட்கெல்லாம்-தலங்கட்கெல்லாம், சென்னி என்று இயம்பப்படும்-சிரசென்று சொல்லப்படும், இ திறத்து கேசாந்தம் பெயர்சால்வைப்பில் - இத்திறத்தினால் கேசாந்தமென்னும் பெயர்பெற்ற காஞ்சிப் பதியில், ஒன்றும் உணரா மடவோர்கள் விலங்கு மரம்முதல் அனைத்தும்-ஒன்றையு முணரப் பெறாத அறிவிலிகள் மிருகங்கள் விருக்கங்கள் முதலாக வெண்ணப்ப ட்ட எல்லாவுயிர்களும், உயிர்போம்காலை - உயிர் நீங்கும்பொழுது,மன்ற - நிச்சய மாக, தலைமிசையோடுகீறி உடல்விடுத்து ஏகும் - கபாலத்தைக்கிழித்துச்சரீரத்தை விட்டுப்போம். (எ - று)

உமையே சென்னி என்றுசொல்லப்படும் காஞ்சிநகரம் எக்காலத்தும் நமக் கினிமையாதலினானும் எல்லாத்தலங்களுக்கும் மேம்பட்டிருக்கும் முதன்மையினா னும் கேசாந்தமென்கின்ற பெயர்பெற்ற திறத்தினானும் இப்பதியில் வாழப்பெற்ற அறிவிலிகள் மிருகமரமுதலியவனைத்தும் உயிர்நீங்கிப்போகும்போது கபாலத்தைக் கீறி உடல்விட்டுப்போம் என்க.

கேசாந்தமுத்தியீதென்பது தோன்ற கபாலங்கீறி யுடல்விடுத்தேகுமெனவும் இக்கேசாந்தமுத்தியைத்தருதல் காஞ்சியொன்றே என்பது தோன்றக்காஞ்சியித்திற த்துக் கேசாந்தப்பெயர் சால்வைப்பு எனவும், அவ்வைப்பு கேசாந்தமுத்தியையெளி தாகக்கொடுக்கும் ஆற்றலுடைய தென்பது நிச்சய மென்பது தோன்ற ஒன்றுணரா மடவோர்கள் விலங்கு மரமுதலனைத்து முயிர்போங்காலை மன்ற எனவுங்கூறினார்.

ஆதலினங்கிறந்தவர்கட் குடல்வேங்காற்சிரமனலின் வெடியாதின்றும்
வேதமெலாமெடுத்தியம்புமந்நகரின்பெருமையெவர்விளம்பற்பாலா
ரேதமறவங்கெய்திக்கழுவாய்நீயியற்றுதிமுன்னிடபவேறுங்
கோதகலக்கழுவாயங்காற்றியதுகோதாயென்றருளிச்செய்தார்.

(இ-ள்.) ஆதலின் இன்றும் அங்கு இறந்தவர்கட்கு உடல்வேங்கால்-ஆகை யினால் இப்பொழுதும் அக்காஞ்சிப்பதியில் மரண மடைந்தவர்களுக்கு உடல் காஷ் டத்தில் வேகின்றகாலத்தில், சிரம் அனலில் வெடியாது-தலை நெருப்பினால் வெடிப டாது (என்று), வேதம்எல்லாம் எடுத்தியம்பும் - வேதங்களெல்லா மெடுத்துச்சொ ல்லும், அந்நகரின் பெருமை-அக்காஞ்சிநகரத்தின் சிறப்பை, எவர் விளம்பற்பாலார் யாவரெடுத்துச் சொல்லவல்லவர், கோதாய்-உமையே, ஏதம் அற - உனக்கிப்போ துண்டாகியபழிநீங்க, அங்கு எய்தி-அக்காஞ்சியையடைந்து, நீகழுவாய் இயற்றுதி-

நீபரிகாரஞ்செய்து கொள்ளக்கடவாய்,முன்இடபவேறும்-முன்தருமவிடையும்,கோது அகல - குற்றம்நீங்க,கழுவாய் அங்கு இயற்றியது-பரிகாரம் அப்பதியில்செய்தது, என்று அருளிச்செய்தார் - என்று திருவாய்மலர்ந்தருளினார். (எ-று.)

(காஞ்சிப்பதியாவர்க்கும் கேசாந்த முத்தியைத்தருவதுநிச்சயமென்று யாம் கூறினோமாதலின் அதற்குச்சான்றாக) இன்றும் அங்கிருக்கின்றவர் இறந்து உடல் வேங்கால் கபாலம் அக்கினியால் வெடிபடாமல் தானேவெடிபட்டிருக்கும். வேதங்களும் அப்படியேகூறும், ஆகையால் அப்பதியின் பெருமை விளம்ப வல்லுநரொயர். இங்ஙனமான சிறப்புவாய்ந்தகாஞ்சியை நீயடைந்து உனக்குவந்தபழியைப் போக்கிக்கொள்வாய். முன்னொருகாலத்தில் நமதுதருமவிடையும் தனக்குவந்த குற்றத்தைப் போக்கடித்துக்கொள்ள அங்கடைந்து கழுவாயியற்றியது என்றருள்செய்தனர் என்க. (௪௦)

கலிநிலைத்துறை.

அருளுந்திருவாய்மொழிகேட்டலுமங்கைகூப்பிப்
பெருவெள்விடையாததுசெய்பிழையென்னைதீரப்
புரியுங்கழுவாயெவனோபுகல்கிற்றியென்றாட்
கிருள்கண்டனைவல்விடமேந்தியகண்டர்சொல்வார்.

(இ-ள்.) அருளும் திருவாய்மொழி கேட்டலும் - (இறைவன்) கூறியவாய்மொழியைக்கேட்டலும்; அங்கை கூப்பி - (அம்மையார்) அழகியகைகளைக் குவித்து அஞ்சலிசெய்து, பெருவெள்விடையாது அது செய்பிழை என்னை - பெரிய வெண்ணிறத்தையுடைய இடபமென்பது எது அவ்விடைசெய்த குற்றமெது, தீரபுரியும் கழுவாய் எவன் புகல்கிற்றி என்றாட்கு - அக்குற்றம் நீங்கச்செய்த பரிகாரம் எது சொல்வாயென்று விண்ணப்பஞ்செய்த தேவிக்கு, இருள்கண்டு அன்னவல்விடம் ஏந்தியகண்டர் - இருளைக்கண்டாலொத்த வலியவிடத்தை வைத்த கண்டத்தையுடைய நீலகண்டர், சொல்வார்-அருள்செய்வார். (எ-று.)

அம்மையார் இறைவரருளிய வாய்மொழியைக் கேட்டலும் அஞ்சலிசெய்து இடபமேது அதுசெய்தபிழை எது அப்பிழைநீங்கச் செய்தபரிகாரம் எது கூறுவாயென்றுகேட்க நீலகண்டர் கூறுவார் என்க.

இடபத்தின் செய்தியைத்தமக்குக்காட்டாகக் காட்டினாராகலின் அவ்விடபத்தின் செய்தியை முறையாகக்கேட்கத் தொடங்கினார் அம்மையாரென்க. (௪௧)

முன்னோர்கடைநாண்முளரிக்கண்முகிழ்த்தபுத்தேள்
முன்னுஞ்சகமுற்றுநம்மான்முடிவுற்றதாகப்
பொன்னேர்சுணங்கிற்பொலம்பூண்முலைப்பூவையன்னா
யந்நாளறத்தெய்வதமத்திறமுற்றுநோக்கி.

(இ-ள்.) பொன் ஏர் சுணங்கின் - பொன்போன்ற தேமலால், பொலம்பூண் முலைபூவை அன்னாய்-அழகுபெற்ற ஆபரணமணிந்த தனங்களையுடைய பூவைபோல்வாய், முன் ஓர்கடைநாள் - முன்னொரு ஊழிகாலத்தில், முளரிக்கண் முகிழ்த்தபுத்தேள்-(திருமாலினுடைய)நாபிக்கமலத்திற்றோன்றிய பிரமன், முன்னுஞ்சகமுற்றும்-சங்கற்பித்துப்படைத்த உலகமுழுமையும், நம்மால் முடிவுற்றதாக-நம்மால் சங்காரத்தை யடைந்ததாக, அந்நாள்-அந்நாளில், அறத்தெய்வதம்-அறக்கடவுள், அத்திறம் முற்றுநோக்கி-அச்சங்காரத்தின்வன்மையெல்லாம்பார்த்து (எ-று.)

உமையே! முன்னொரு ஊழிகாலத்தில் பிரமன்சிருட்டிக்கப்பட்ட எல்லா வுலகங்களும் நம்மால் சங்காரத்தையடைய அக்காலத்தில் அறக்கடவுள் அச்சங்கா ரத்தொழிலைப் பார்த்து என்க.

கடைநாள்வருதல் பலமுறையாதலால் முன்னோர்கடைநாள் எனவும், அக் கடைநாளில் சங்காரமியற்றல் தானேயாதலின் நம்மால் முடிவுற்றதெனவும், அக் காலத்தில் அறக்கடவுள் நீங்கலாக ஏனையவெல்லாந் தோன்றி நின்று முறையே அழிந்து வருதலால் அறத்தெய்வதமத்திற முற்றுநோக்கி எனவுங்கூறினர். (எச)

நில்லாவுலகத்துளவாயசரிப்பநிற்ப
வெல்லாமழிவுற்றனயானுமிறப்பலோவென்
றல்லாந்தினிச்செய்வகையாதென்றிறைஞ்சிநம்பாற்
கொலலேறுருவங்கொடுவந்ததுபோற்றியென்ன.

(இ-ள்.) நில்லா உலகத்து உளவாய - நிலைபெறுதலில்லாத உலகின் கண் உள்ளனவாகிய, சரிப்பநிற்ப எல்லாம் - சரித்தலு நிற்றலுமாகிய இயங்கியற் பொ ருளும் நிலையியற்பொருளுமாகிய யாவும், அழிவுற்றன - அழிந்துபோயின, யானும் இறப்பலோ என்று - நானுமிறந்துபடுவேனோவென்று, அல்லாந்து - அலமந்து, இனி செய்வகையாது என்று-நாமினிச்செய்யும்வகை என்ன விருக்கின்றதென்று,நம்பால் கொல் ஏறு உருவம்கொடு இறைஞ்சி-நம்மிடத்து கொலைத்தொழில்செய்யும் இடப வடிவங்கொண்டுவணங்கி, போற்றிஎன்ன-காப்பாயென்று அடைக்கலம்புக. (எ-று.)

அறக்கடவுள், நிலையில்லாத உலகின்கணுள்ள சராசரங்களெல்லாம் அழிந்து போயின, இவைகளோடுநாமும் அழிவதோவென்று மனமழுங்கி இனிச்செய்வகை யாதென்றெண்ணி இடபவடிவங்கொண்டு நம்மிடத்துவந்து வணங்கி அடைக்கல மென்றுசொலல என்க. (எரு)

கண்டாமதனைக்கவலாதியென்றூர்தியாக்கிக்
கொண்டாங்கொளப்பெற்றுலவாக்களிகூர்ந்ததாக
வண்டாரளகக்கொடியவ்விருண்மாண்டகாலைத்
தண்டாவருளாலதற்கின்னதுசாற்றலுற்றேம்.

(இ-ள்.) அதனைகண்டாம் - இடபவடிவாய்வந்த அறக்கடவுளைப்பார்த்தோம், கவலாதி என்று - கவலையுறாதேயென்று, ஊர்தியாக்கி கொண்டாம் - ஊர்தியாக் கிக்கொண்டோம்,கொளப்பெற்று-(அவ்வறக்கடவுளை) நாம் ஊர்தியாக்கிக்கொள்ளும் அப்பேற்றைப் பெற்று, உலவாதகளிகூர்ந்தது - கெடாத ஆனந்தத்தைப் பெற்றது, வண்டு ஆர் அளகக்கொடி-வண்டுகளொலிக்கும் கூந்தலையுடைய பூங்கொடிபோன்ற உமையே, அ இருள்மாண்டகாலை - அந்த இறுதிக்காலமாகிய இராக்காலங்கழிந்த பின்னர், தண்டா அருளால் - கெடாத அருளால், அதற்கு இன்னது சாற்றல் உற் றேம் - அத்தருமவிடைக்கு இது சொல்லத்தொடங்கினோம். (எ-று.)

இடபரூபமாய்வந்த அறக்கடவுளையாம் பார்த்து நீகவலையுறாதை உன்னையூர் தியாகக்கொண்டோம் என்றருள்செய்ய, அறக்கடவுள் அவ்வரத்தைப் பெற்றுக்களி கூர்ந்தது. உமையே, சங்கார காலமும் முடிந்து புனருற்பவமாகுங் காலம் வந்த அப்பொழுது அக்கடவுளைநோக்கிஅருளாலொன்று சொல்லத்தொடங்கினோமென்க.

தரிப்பித்தலனீ தருமந்தரிப்பித்திடாமை
தெரிப்பிக்குமதன்மமெனப்பெயர்செப்புமாலெம்

பொருட்டுப்புரிபாவமும்புண்ணியமாக்கியெம்பால்
விருப்பற்றவர்செய்யறமும்மறமாக்குவிப்பாய்.

(இ-ள்.) நீ தருமம் தரிப்பித்தலின்-நீதருமத்தைத் தரிப்பிக்கச்செய்தலினால், அதன்மம் தரிபித்திடாமை தெரிப்பிக்கும் - அதன்மத்தைத் தரிப்பித்திடாமையைத் தெரிவிக்கும் (ஆகலின்) என பெயர்செப்பும் - (உலகம் உன்னை) தன்மம் என்கின்ற பெயரானேயழைக்கும், எம்பொருட்டு புரிபாவமும் புண்ணியமாக்கி - அன்பர்கள் என் பொருட்டாகச் செய்யும் பாவங்களையும் புண்ணியமாகவேயாக்கி, எம்பால் விருப்பு அற்றவர் - என்னிடத்தி லன்பில்லாதவர்கள், செய் அறமும் - செய்யுந் தருமத்தையும், மறம் ஆக்குவிப்பாய் - பாவமாக்குவாய். (எ-று.)

அறக்கடவுளே நீ - தன்மத்தைத்தரிப்பித்தலினால், அதன்மத்தைத்தரிப்பித்திடாமையைத்தெரிவிக்கும். ஆகலின் உன்னை உலகம் அறக்கடவுளென்றபெயரானழைக்கும். நாம் உனக்கொன்று கூறுகின்றோம், (அஃதென்னையெனின்) எம்மாட்டன்புடையமெய்யன்பர் செய்யும்பாவத்தைப் புண்ணியமாக அவரிடத்துத் தரிப்பித்தும், எம்மாட்டன்பில்லாதார் செய்யும் புண்ணியத்தைப் பாவமாக்கி அவரிடத்துத் தரிப்பித்திடாமையும் ஆகியசெயல்களைச்செய்து வருவாயென்க.

இதனால் அன்பர் பாவம்புரியினும் அதுபாவமாகாது புண்ணியமாய் அவரிடத்து என்றும் புண்ணியமே யுள்ளதெனவும், அன்பரல்லார் புண்ணியம் புரியினும் அது புண்ணியமாகாது அதுபாவமாய் அவரிடத்து என்றும்பாவமேயுள்ளதெனவும் விளக்கியதென்க. எனவே அன்பரிடத்துப்பாவமில்லை, அன்பிலாதாரிடத்துப் புண்ணியமில்லை என்றதென்க. இச்செயலை அறக்கடவுளை நோக்கிக்கூறிய தென்னையெனின் அறக்கடவுள் ஒருவர்பாவபுண்ணியங்களைச்செய்யின்பாவத்தையொழித்துப் புண்ணியத்தையூட்டல் இயற்கையாகலான் அப்பொதுவிதி யுலகினர்க்கியற்றுவாய், யாம்கூறிய சிறப்புவிதி யன்பர்க்கென்று அறிவுறுத்தக்கூறியதாகும். என்னையெனின் அன்புடையாரிடத்து சீவச்செயலொழிந்து சிவச்செயலே முனைத்து நிற்றலும், அன்பில்லாதாரிடத்து சிவச்செயலொழிந்து சீவச்செயல் முனைத்து நிற்றலு முண்மையாகலினென்க. இதனை "யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியானென் னு மிக்கோணை ஞானவெரியால் வெதுப்பிநிமிர்த்துத், தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்றானேநோதனையளித்து முன்னிற்கும் வினையொளித் திட்டோடும், நான் செய்தேனெனுமவர்க்குத் தானங்கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம்" என்னுந்திருவாக்கானு முணர்க. (எஎ)

இவ்வேற்றிடபப்படிவத்துடனெங்குமெம்முன்
செவ்வேவதிகென்றருள்செய்திடுநல்வரம்பெற்
றவ்வாறுநமக்கெதிர்நித்தலும்வைகுமங்கேழ்ச்
செவ்வாய்க்கருமென்குழல்வெண்ணகைச்செம்பொற்பூணாய்.

(இ-ள்.) எங்கும் எம்முன்-எத்தலத்திலு மெம்முடைய சந்நிதியின்முன்னே, இவ்வேற்று இடபப்படிவத்துடன் செவ்வே வதிக என்று-இந்த விடபவடிவத்துடன் செவ்வனே வசித்திருப்பாயென்று, அருள்செய்திடும் நல்வரம்பெற்று-அநுக்கிரகஞ் செய்யும் நல்லவரத்தைப்பெற்று, அம் கேழ் செவ்வாய் - அழகிய செந்நிறமிக்கவாயையும், கரு மென் குழல் - கறுத்தமெல்லிய கூந்தலையும், வெள் நகை - வெள்ளிய மூரலையுமுடைய, செம் பொன் பூணாய் - செம் பொன்னாற்செய்த ஆபரணமணிந்தவளே, அவ்வாறு நமக்கு எதிர் நித்தலும் வைகும்-நாமனுக்கிரகஞ் செய்தபடியே நம்முடையசந்நிதிக்கெதிரில் எப்பொழுது மமர்ந்திருக்கும். (எ-று.)

இறைவனார், அறக்கடவுளைநோக்கி நீ இந்த இடபவடிவத்தோடு எவ்விடத் தும் என்னுடைய சந்நிதி முன்னே எப்பொழுது மிருப்பாயென்றருள அவ்வாறே அறக்கடவுளிருந்தனரென்க. (எஅ)

வீறார்தருமக்கடவுட்சினவெள்விடைக்கோர்
கூறாதலின்மாயனுமுப்புரங்கொன்றவஞ்ஞான்
றேறாயெமைத்தேரொடுதாங்கினனேறுவந்த
வாறாமிதுமேலதுசெய்பிழைமற்றுஞ்சொல்வாம்.

(இ-ள்.) வீறு ஆர் தருமக்கடவுள்-வீரத்திற்சிறந்த தருமக்கடவுளாகிய, சின வெள்விடைக்கு மாயனும் ஓர் கூறு ஆதலின்-சினமிக்கவெள்ளிய விடபத்துக்குத்திருமாலும் ஓர் அமிசமாதலின், முப்புரம் கொன்ற அஞ்ஞான்று-திரிபுரத்தையெரித்த அந்நாளில், ஏறாய் எம்மை தேரொடு தாங்கினன் - இடபவடிவமாய் எம்மை வைதிகத் தேரோடு சுமந்தனன், ஏறு வந்த ஆறு இது ஆம் - இடபம் வந்தவகையிதுவாகும், மேல் -இனிமேல், அது செய்பிழை-அவ்விடபஞ்செய்த அபராதத்தையும், மற்றும்- அதற்கு யாம்பரிகாரங்கூறியதையும், சொல்வாம் - உரைப்பாம். (எ-று.)

(அறக்கடவுள்கொண்ட இந்த இடபவடிவத்தை) அக்கடவுளின் அமிசமாகிய மாயனும் நாம்திரிபுரத்தை எரித்தநாளில் எடுத்துநம்மைத்தாங்கினன். இடபம்வந்த வரலாறு இதுவாகும். இனி அது செய்தகுற்றத்தையும் அதற்குக்கூறிய கழுவாயை யும் கூறுவாமென்க.

இதனால் அம்மையார் கேட்ட மூன்றுவினாவில் விடைவந்த வரலாற்றைக் கூறியவாறு.

திருமாலும் அறத்தின்வழி திதித் தொழில்செய்யுங் கடவுளாதலால் ''மாய னும் வெள்விடைக்கோர் கூறாதலின்'' என்றார். (எகூ)

கலிவிருத்தம்.

பின்னொருகாலத்துப்பிறங்குமாற்றல்சால்
பன்னகப்பகைமைகொள்பறவைநாயகம்
பொன்னமர்மார்பனைப்பொறுத்துவல்லையே
யந்நிலையுலகெலாமணுகிமீண்டதால்.

(இ-ள்.) பின் ஒருகாலத்து பிறங்கும் ஆற்றல்சால் - பின்னரொருகாலத்தில் விளங்கும் வலிமைமிக்க, பன்னகப் பகைமைகொள் பறவைநாயகம் - சர்ப்பவைரி யாய் புட்களுக்கு நாயகனாகியகருடன், பொன் அமர் மார்பனை பொறுத்து - இலக் குமிவசிக்கும் மார்பையுடைய திருமாலைத்தாங்கி, வல்லை - விரைவாக, அந்நிலை உல கெலாம் அணுகிமீண்டது-அப்பொழுதே உலகங்கடோறுஞ் சென்று தனதிடத்திற்கு மீண்டது. (எ-று.)

பின்னொருகாலத்தில் கருடன் திருமாலைத்தாங்கி உலகமெங்கணுஞ் சென்று திரும்பியதென்க. (அ௦)

மீண்டபின்றருக்குமீக்கொண்டுவீறுட
னாண்டகைமாயனைநோக்கியண்ணலே
காண்டகுமாற்றலிற்கதழ்வினென்னிகர்
மாண்டவருளர்கொலோவையமூன்றினும்.

(இ-ள்.) மீண்ட பின் - திரும்பியபின், தருக்குமீக்கொண்டு - செருக்கு மிக வடைந்து, வீறுடன்- பராக்கிரமத்தோடு, ஆண்டகை மாயனைநோக்கி அண்ணலே- புருஷோத்தமனாகிய திருமாலைப்பார்த்து எம்மரசே, வையமூன்றினும் - மூன்று

லகத்திலும், காண் தகும் ஆற்றலில் - அறியத்தக்கவன்மையில், என்னிகர் சதழ்வில் மாண்டவர் உளர்கொல் - எனக்கொப்பாகச்சிறப்பின்மிகுந்தவர்கள் ஒருவருண்டோ (நீகூறுவாய்) (எ-று.)

(கருடன்) உலகெல்லாஞ் சென்று மீண்ட பின்னர் மிகவுஞ் செருக்குற்றுத் திருமாலைநோக்கி அண்ணலே இம்மூன்றுலகத்தினும் என்னைப்போலுஞ் சிறப்பின் மிகுந்தவர்கள் ஒருவருண்டாவென்று கேட்டனனென்க.

மூன்றுலகத்திற்குந் திருமால்கர்த்தாவாதலால் அண்ணலென்றார். (அக)

நிற்பனசரிப்பனயாவுமாய்நிறை
நிற்பொறுத்தளைக்கணப்பொழுதினீடியோய்
பொற்பமூவுலகினும்போந்துமீளுமிவ்
வற்புதமெனக்கலாதார்க்குண்டாகுமோ.

(இ-ள்.) நீடியோய்-திரிவிக்கிரம சொருபியே, நிற்பன சரிப்பன யாவுமாய் நிறை நிற் பொறுத்து - அசையாப்பொருளும் அசையும்பொருளுமாகிய எல்லாப் பொருளுமாய் நிறைந்த உம்மைச்சுமந்து, அளைக்கணப்பொழுதில் - அளைக்கண மாகிய நேரத்தில், பொற்ப மூவுலகினும் போந்துமீளும்- (வருத்தமின்றிச்)சுகமாக மூன்றுலகத்திலுஞ்சென்றுமீளும், இவ்வற்புதம் எனக்கு அல்லாது - இவ்வதிசயம் எனக்கல்லாமல், ஆர்க்கு உண்டாகும் - எவர்க்குள்ளதாகும். (எ-று.)

திரிவிக்கிரம சொரூபியே சராசரப்பொருளா யிருக்கின்ற உன்னை யான் சுமந்து அளைக்கணத்தில் மூன்றுலகத்தினுஞ் சென்று மீளுமிவ்வதிசயம் எனக்கல் லாது யார்க்குண்டு (இல்லையென்றபடி.)

நீ திரிவிக்கிரம அவதாரத்தில் மூன்றுலகங்களையுங் கண்டிருத்தலான் அம்மூன் றுலகங்களிலும் நீண்டு மீண்ட அப்போதாயினும் எனக் கொப்பானவரைக் கண்ட துண்டோ உளதாயின் கூறுவாயென்று குறித்தற்கு நீடியோய் என்றதென்க. (அஉ)

என்றிதுபுள்ளரசியம்பக்கேட்டலு
நன்றெனக்குறுநிலாநகைமுகிழ்த்தரோ
வின்றிதன்செருக்கெலாமிடபநாயக
மொன்றறக்களையுமென்றுளத்திலெண்ணினன்.

(இ - ள்.) என்று இது புள்ளரசு இயம்ப கேட்டலும் - (உண்டாகுமோ) என்று இவ்விளுவை பட்சிராசன் கேட்கவும், நன்று என்ன குறுநிலா நகைமுகிழ்த்து - (நீ கூறியது) நன்றாயிருந்தது என்று புன்னகைசெய்து, இன்று இதன் செருக்கு எல்லாம் இடபநாயகம் ஒன்று அற களையும் - இன்றைப்பொழுது இப்ப றவையின் செருக்கையெல்லாம் இடபேச்சுரம் சிறிதுமொழியாது களைதல்செய்யும், என்று உளத்தில் எண்ணினன் - என்றுமனத்தில்ஆலோசித்தனன். (எ-று.)

உலகங்களிற் சென்று மீளுந்தன்மை எனக்கன்றி யாருக்குண் டென்று கருடன்சொல்ல திருமால் நகைத்து இதன் செருக்கையெல்லாம் இடபேஸ்வரர் சிறிது மில்லா தின்றே யொழிப்பரென்று ஆலோசித்தனன் என்க.

திருமால், இடபநாயக மொன்றறக்களையும் என்று உளத்தில் எண்ணினன் என்றது நிற்பனசரிப்பனவாகிய எல்லாவற்றுள்ளும் பரிபூரணமாயிருப்பவன்நம் பெருமானாகிய சிவபெருமான் அப்பெருமானைத் தாங்கப்பெற்றதோ தருமசொரூப மாகியவிடபம், இங்ஙனமாக ஒன்றினும் பற்றாத இப்பறவை எல்லாவற்றுள்ளும் நிறைந்தவன் நீஎன்றும் உன்னைத்தாங்கி அளைக்கணத்தில் மூவுலகும்போந்துமீண்

ளன் நான் என்றும், ஆகையால் என்னிலும் வலியாருண்டோ என்றும் செருக்குற்
றுக்கூறியதென்னோ இதன்செருக்கை இடபரூபமாயிருக்கின்றஅறக்கடவுளாலேயே
அகற்றவேண்டுமென்றெண்ணிய தாமென்க. (அ௩)

மெய்யுரைவிளம்பினையுலகமீமிசை
யையநிற்கிணையெவராருமில்லெனக்
குய்யம்வைத்தணிமுடி துளக்கிக்கூறினான்
செய்யவள்வனமுலைதிளைக்குமார்பனே.

(இ-ள்.) செய்யவள் வனமுலை திளைக்கும் மார்பன் - இலக்குமியினுடைய அழகியதனங்கள் திளைக்கப்பெற்ற மார்பனாகியதிருமால், மெய் உரைவிளம்பினை - (கருடனே) நீ மெய்ம்மையையேயெடுத்துக் கூறினை, உலகம் மீமிசை - (ஆகை யால்) இவ்வுலகின்கண், ஐய நிற்கு இணை எவர் யாரும் இல் என - ஐயனே உனக் கொப்பானவர்கள் யாவரிருக்கின்றார்கள், ஒருவருமில்லையென்று, குய்யம்வைத்து அணிமுடி துளக்கிக் கூறினான் - வஞ்சம் வைத்து அழகியமுடியணிந்த தன் தலையையசைத்துச் சொன்னான். (எ-று.)

திருமறுமார்பனாகிய திருமால் புள்ளரசைப்பார்த்து நீ கூறியது உண்மை யே உனக்கொப்பானவர்கள் இவ்வுலகின்கணுண்டோ இல்லையே (அது நானறிந் ததே) என்றுதலையசைத்து வஞ்சமொழி கூறினானென்க.

இடபதேவரைக்கொண்டு செருக்கடக்கநினைத்தவர் நீமெய்யுரைவிளம்பினை என்றது வஞ்சனை யாதலால் குய்யம்வைத்து எனவும், அப்பறவைபால் தான் கொண்ட கோபம் அடங்கப்பெற்றதில்லை யாதலால் முடி துளக்கிக்கூறினானெனவுங் கூறினார். (அச)

வார்சடைப்பிரானடிவணங்குவாமெனப்
போர்வலிப்புள்ளொடுங்கயிலைபுக்கன
னேர்கெழுபோகமாபுரத்தினெல்லையவ்
வூர்தியினிழிந்துசென்றங்கணெய்தினான்.

(இ-ள்.) வார்சடை பிரான் அடிவணங்குவாம் என்ன - நீண்ட சடையையு டையபெருமானது திருவடிகளை நாம்வணங்குவோமென்று, போர்வலி புள்ளொடும் கயிலை புக்கனன் - போர்முகத்தில்சிறந்த வலியுள்ள கருடனோடும் கயிலைவரையின் கண்சென்றனன், ஏர்கெழு போகமாபுரத்தின் எல்லை-(அங்குள்ள) அழகுமிக்கபோக மாபுரத்தினெல்லையில், அவ்வூர்தியின் இழிந்துசென்று - அக்கருட வாகனத்தினின் றும் இறங்கிப்போய், அங்கண் எய்தினான் - அக்கைலைக்குச்சென்றனன். (எ-று.)

(திருமால் அக்கருடனைநோக்கி) நாம் சிவபெருமானை வணங்க வேண்டும் என்றுகூறி அவன்மேல் ஆரோகணித்துக் கொண்டுசென்று கைலைக்கேகி போகமா புரத்தி னெல்லையில் அவ்வூர்தியைவிட்டிறங்கி அங்கிருந்து உள்ளே சென்றன னென்க. (அ௫)

ஐந்ததாமாவரணத்தினெம்மெதி
ரைந்துகோமாதர்சூழ்ந்தணுகிவைகவாழ்
மைந்துடைவிடையவண்மாயனோடுறும்
வெந்திறற்புட்குலவேந்தைக்கண்டதால்.

(இ-ள்.) ஐந்ததாம் ஆவரணத்தில் - ஐந்தாம்பிராகாரத்தில், எம் எதிர் - எம் மெதிரில், ஐந்துகோமாதர் சூழ்ந்து அணுகி வைகவாழ் - நந்தை முதலிய ஐந்துபசுக்

கள் சூழ்ந்து சமீபத்திலிருக்க வாழ்கின்ற, மைந்துடைவிடை - வன்மைமிக்க விடபதேவர், அவண் மாயனோடு உறும்-அவ்விடத்துத் திருமாலோடும் வந்த, வெம்திறல் புட்குல வேந்தைக் கண்டது - சிற்றமிக்க கருடனைப் பார்த்தனர். (எ-று.)

கைலையைநோக்கிச்சென்ற திருமால் சிவபெருமான் வீற்றிருக்கின்ற கோயிலுக்குட்சென்ற பொழுது அங்கு ஐந்தாமாவரணத்தில் நந்தை, சுபத்திரை, சுரபி, சுசிலை, சுமனை முதலிய பஞ்சகோமாதர்சூழ்ந்திருக்க நடுவேயிருக்கும் இடபதேவர் அத்திருமாலோடு வந்த கருடன் செருக்குற்றிருத்தலைக்கண்டனரென்க. (அசு)

தன்னெதிரிகழ்ச்சியாற்றருக்குமாங்கதன்
புன்னிலைநோக்குபுபொருக்கெனச்சிரந்
தன்னிடக்குறங்கினிற்சார்த்தித்துஞ்சுவ
தென்னநெட்டுயிர்ப்பினிற்சிமிழ்த்ததேந்திழாய்.

(இ-ள்.) ஏந்திழாய் - ஆபரணங்களாற் பொலிவுபெற்று விளங்கும் உமையே, தன் எதிர் இகழ்ச்சியால் தருக்கும் - தம்மெதிரே அவமதிப்பாற் கொண்டசெருக்கையும், ஆங்கதன் புன்னிலைநோக்குபு - அதனுடைய அற்பநிலையையும் பார்த்து, தன் இடக் குறங்கினில் பொருக்கென சிரம் சார்த்தி-தன் இடதுதொடையில் விரைவாகத்தலையைச்சார்த்தி, துஞ்சுவது என்ன நெட்டுயிர்ப்பினில் சிமிழ்த்தது-உறங்குவதைப்போல பெருமூச்செறிந்தது. (எ-று.)

உமையே (இடபதேவர்) தன்னெதிரஞ்சாது இகழ்ச்சியினால் செருக்குற்றிருக்கும் அக்கருடனுடைய அற்பநிலையைப்பார்த்து அப்பொழுதே அதன் செருக்கடக்கத்தனது இடது தொடையில் தலையைச்சார்த்தி ஓர் பெருமூச்செறிந்ததென்க.

மாயவனெம்மடிவணங்கியன்பிற
னாயிடைநெடும்பொழுதமர்ந்துவைகினன்
பாய்விடையூர்திநெட்டுயிப்பிற்பட்டுழல்

(இ-ள்.) மாயவன் எம் அடி வணங்கி-திருமால் எமது பாதத்தைப்பணிந்து, அன்பினால் நெடும்பொழுது ஆயிடை அமர்ந்து வைகினன் - அன்பினால் காலம் நீட்டிக்க அவ்விடத்தில் தங்கியிருந்தனன், (திருமாலிங்ஙனமிருக்க) காய் சினம் கலுழனும் - காய்கின்ற கோபத்தையுடைய கருடனும், பாய்விடை ஊர்தி நெட்டுயிர்ப்பில் பட்டு உழல்-பாய்ந்து செல்லுதலையுடைய விடபதேவருடைய பெருமூச்சில்சிமிழ்ப்புண்டு மேலுங்கீழுமாக உழன்று, கழிய நொந்தது - மிகவும் நொந்தது. (எ-று.)

(திருமால் தனதூர்தியினின்றுமிழிந்து சிவபெருமான் சந்நிதியிற் சென்று இறைவனடி பணிந்து மீளாவன்புடையனாய் சந்நிதானத்திலேயே நெடும்பொழுதிருந்தனன். இங்ஙனந்திருமால் ஆனந்தத்துடனிருக்க, ஊர்தியாகிய கருடன் ஐந்தாமாவரணத்தில் இடபதேவர் பெருமூச்சில் சிமிழ்ப்புண்டு மேலே போவதும் மீளக்கீழேவருவதுமாக வுழன்று மிகவும் நொந்தனனென்க. (அஅ)

விட்டுவிட்டடக்குதோறுயிர்ப்பின்வேகத்தா
லட்டதூறியோசனையவதிபோந்துபின்
கட்டெழிறசியினுனிக்கட்சார்தரக்
கொட்புறுத்தலைத்ததுபறவைக்கோவினை.

(இ-ள்.) விட்டு விட்டு அடக்கு தோறும் உயிர்ப்பின் வேகத்தால் - சுவாசத்தை விட்டு விட்டு அடக்குந்தோறும் அப்பெருமூச்சின் வேகத்தினால், அட்டநூறு

யோசனை அவதிபோந்து - எண்ணூறுயோசனை யளவு சென்று, பின் கட்டு எழில் நாசியின் நுனிக்கண் சார்தர - பின்னர் கெடாத அழகினையுடைய நாசிநுனிக் கண்வர, கொட்புறுத்து அலைத்தது - (இடபம்) இவ்வாறு சுழலும்படி செய்தது, பறவை கோவினை - புட்களுக்குள்ளரசாகிய கருடனை (எ-று.)

(இடபதேவர்) உசுவாசநிசுவாசரூபமாக விடும் அச்சுவாச வேகத்தால் பறவை நாயகனாகிய கருடனை எண்ணூறுயோசனை யளவுஞ்சென்று மீண்டும் மூக்கு நுனியின்கண் வந்தடையச்செய்தனர், இவ்வாறு சுழன்று அலைந்தது கருடனென்க.

கருடனை இடபதேவர் மூக்கினின்றும் வெளிப்படும் சுவாசத்தால் எண்ணூறு யோசனை யளவுகொண்டு போதலும் மீளவும் அடங்கும்பொழுதுநாசியைப் பொருந்தச்செய்தலுமா யிருந்தனராதலால் கொட் புறுத்தலைத்தது பறவைக்கோவினை என்றார்.

எனவே கருடன் இடபதேவருடைய சுவாசத்தைக்கடந்து அப்புறம்போவதற்குக்கூடாமல் அச்சுவாசத்திலேயே அலைப்புண்டிருந்தன னென்க. (அகூ)

ஒய்யெனநெட்டுயிர்ப்புதைந்துமீடொறு
மெய்வயிற்சுஃஃறெனவிரிந்துகூம்பிடுஞ்
செய்யபொற்சிறைகளின்சிதைந்துபுன்மயிர்
துய்யெனவெளியிடைச்சுழன்றயாங்கணும்.

(இ-ள்.) ஒய் என நெட்டுயிர்ப்பு உதைந்து மீள் தொறும் - ஒய்யென்னும் ஒலிக்குறிப்புடனே பெருமூச்செறிந்து மீளுந்தோறும், மெய் வயின் சுஃஃறென விரிந்து கூப்பிடும் - உடம்பில் சுஃஃறென்னும் ஒலியோடுசுட (அதனால்) இறகுவிரிந்து மீளவும் குவிந்துவிடும், செய்ய பொன்சிறைகளில் புன்மயிர் சிதைந்து - செவ்வதபொன்போன்ற இறகுகளிற் பொருந்திய புல்லியவுரோமங்கள் சிதைவுபட்டு, யாங்கணும்-எவ்விடத்தும், துய்யென வெளியிடை சுழன்ற-துய்யென்னும் ஒலியோடு வெளியிடமெல்லாஞ் சுழன்று திரிந்தன. (எ-று.)

இடபதேவர் நெட்டுயிர்ப் பிற்றலைப்பட்ட கருடன் அவர் சுவாசத்திற் றலைப்பட்டதொன்றே அச்சுவாசம் அக்கருடனை மேலே செலுத்தும்போது இறகைச் சுஃறென்று சுட இறகுவிரியும் மீளும்பொழுது குவியும், (அதுவுமன்றி அவ்வெப்பத்தால்) இறகிற்பொருந்திய புல்லியமயிர்களெல்லாம் அணுவணுவாக வெளியிடமெங்கும் பறந்துசுழன்றன என்க. (கூ0)

அர்ந்தனவிண்ணெலாமயாந்ததிக்கய
முதிர்ந்தனதருத்தழையுக்கமீன்கணம்
பிதிர்ந்தனவரைக்குலம்பெயர்ந்தகோள்களு
முதிர்ந்தெழுஞ்சினவிடையுயிர்ப்பின்மொய்ம்பினால்.

(இ - ள்.) முதிர்ந்துஎழும் சினவிடை உயிர்ப்பின் மொய்ம்பினால் - அடங்காதெழுகின்ற கோபத்தையுடைய விடபதேவருடைய சுவாசத்தின் வன்மையினால் விண் எல்லாம் அதிர்ந்தன - மேலுலகமெல்லாம் தத்தம் நிலைகுலைந்ததிர்ந்தன, திக்கயம் அயர்ந்தன - அட்டதிக்கஜங்கள் சோர்வடைந்தன, தருதழைஉதிர்ந்தன - கற்பகவிருக்கத்தழைகள் உதிர்ந்தன, மீன் கணம் உக்க - நக்ஷத்திரக்கூட்டங்கள் சிந்தின, வரைக்குலம் பிதிர்ந்தன - அட்டகுலபர்வதங்கள் பொடிப்பொடியாய்ப் போயின, கோள்களும் பெயர்ந்த - நவகோள்களும் மாறுபட்டன. (எ-று.)

இடபதேவருக்குக் கருடனிடத்துண்டாகின்ற கோபமிகுதியினால் விடுகின்ற சுவாசம் மேனோக்கிப் போதலால் விண்ணுலகும் கற்பகத்தருக்களும் நக்ஷத்திரங்களும் கோள்களும் நிலைகுலைந்து உதிர்ந்தும் சிந்தியும் பெயர்ந்தும் போயின, மேனோக்கிய அச்சுவாசம் எண்டிக்கிலும் பரவுதலால் திக்கயங்களும் மலைகளும் அதிர்ந்தும் பிதிர்ந்தும் போயினஎன்க. (கக)

எதிருறவிலங்கியவரையுமேனவு
மதலையிற்பற்றுவான்மனத்தினெண்ணுமுன்
கதழ்வினூறியோசனைகடத்திமீட்குமான்
மதனுடைக்கலுழனையுயிர்ப்பின்வாயுவே.

(இ-ள்.) எதிர் உற இலங்கிய வரையும் ஏனவும் - (கருடன்) எதிரில் காணப்பட்ட மலைகளையும் விருக்கமுதலானவைகளையும், மதலையில் பற்றுவான் மனத்தின் எண்ணுமுன் - ஓர் பற்றுக்கோடாகப்பற்றிக்கொள்ளமனத்திலெண்ணுவதற்கு முன்னே, உயிர்ப்பின் வாயு - சுவாசமாகிய காற்று, மதனுடைக்கலுழனை - செருக்குடையகருடனை, கதழ்வின் நூறுயோசனை கடத்தி மீட்கும் - அதிகவேகமாக நூறு யோசனையளவுங்கொண்டு போய் மீளச்செய்யும். (எ-று.)

(கருடன் யாதொரு பற்றுக்கோடின்றி யலமரும்பொழுது) எதிரில் காணப்படும் மலைகளையும் மரமுதலியவைகளையும் பற்ற நினைப்பான் அங்ஙனம் நினைப்பதற்கு முன் இடபதேவருடைய சுவாசக்காற்று அதிக வேகத்தோடு அவைகளைப்பற்றுதற்கு இடங்கொடாமல் நூறுயோசனைதூரம் கொண்டுபோய் மீளச்செய்யுமென்க.

இதனால் கருடன் இடபதேவருடைய நெட்டுயிர்ப்பைக் கடத்தற்குக் கூடாமலும் வேறொருபற்றுக்கோடாயினும் பற்றுதற்கியலாமலும் வருந்தினனென்க. (கஉ)

சரிந்ததுதருக்குடல்சழுங்கலுற்றதா
விரிந்ததுமிடலிறுமாப்புமிற்றது
முரிந்தனபொலஞ்சிறைமுதிர்ந்ததின்னனோய்
கரிந்ததுமாமையுங்கருடற்கென்பவே.

(இ-ள்.) கருடற்கு - கருடனுக்கு, தருக்குசரிந்தது - செருக்குச்சரிந்து போயது, உடல் சழுங்கலுற்றது - சரீரம் தளரப்பெற்றது, மிடல் இரிந்தது - வன்மை போயது, இறுமாப்பும் இற்றது - இறுமாப்பும்போயது, பொலம் சிறை முரிந்தது- பொன்போன்ற சிறகுகள் முறிந்துபோயின. இன்னல் நோய் முதிர்ந்தது - வருத்துகின்றநோய் அதிகரித்தன, மாமையும் கரிந்தது- நிறமும் கரிந்துபோயது. (எ-று.)

(இடபதேவருடைய சுவாசத்தால் நூறுயோசனைதூரம் சென்று மீண்ட) கருடனுக்கு தருக்கொழிந்து உடல்தளர்ந்து வன்மையற்று இறுமாப்பிற்று சிறைமுறிந்து இன்னல் முதிர்ந்து நிறங்கரிந்து போயிற்றென்க.

இடபதேவர் தனதுயிர்ப்பான் தனக்குநிகரில்லையென்ற கருடன்தருக்கையொழித்தமையான் சரிந்ததுதருக்கெனவும், அத்தருக்கொழியவேஉடல்தளருமாகலான் உடல் சழுங்கலுற்றதெனவும், உடல்தளரவே வன்மையின்றாயொழியுமாகலான் இரிந்தது மிடலெனவும், வன்மையின்றாகவே இறுமாப்புங் குன்றுமாகலான் இறுமாப்புமிற்றதெனவும், தருக்கும் மிடலும் இறுமாப்புமொழியவே இறகு முறியுமாகலான் முறிந்தன பொலஞ்சிறையெனவும், இவையாவுமொழியவே அதிகப்பெறுவது துன்பமொன்றேயாகலான் முதிர்ந்த இன்னல்நோயெனவும், இம்முறையான் அழகுகுன்றியதாகலான் கரிந்தது மாமையெனவுங் கூறினர். (கங)

பருவரும்புடையினிற்கழியப்பார்க்குமீ
தொருவருந்தகைத்தெனுமூக்கமின்மையிற்
றெருமருமுணங்குறுந்திகைக்குந்தேம்பிடும்
வெருவருமாயனைவிளிக்குமென்செயும்.

(இ-ள்.) பருவரும் - துன்பப்படும், புடையினில் கழியப்பார்க்கும் - பக்கங்களில் செல்லப்பார்க்கும், ஈது ஒருவரும் தகைத்து என்னும் - இது கடக்குந்தன்மைத்தன்று என்று எண்ணும், ஊக்கம் இன்மையில் - மனவெழுச்சியில்லாமையினால், தெருமரும் உணங்குறும் - மயங்கும் வாடும், திகைக்கும் தேம்பிடும் - திகைப்புற்று நிற்கும் அழும், வெருவரும் மாயனைவிளிக்கும் - பயப்படும் திருமாலை அழைக்கும், என் செயும் - வேறென்செய்யவல்லும். (எ-று.)

கருடன் தனக்குத்தருக்கு முதலியயாவுமொழிந்தமையான் துன்பப்படும். அத்துன்பமொழிய நெட்டுயிர்ப்பைக்கடந்து செல்லப்பக்கங்களைப்பார்க்கும். அங்ஙனஞ் செல்லக்கூடாமையின் இது நம்மாற்கடக்குந்தரத்ததன்றெண்ணும், அவ்வெண்ணமிகுதியான் ஊக்கமின்றாகும், அதனால் அறிவுமயங்கும். சரீரம்வாடும். மனந்திகைக்கும் கண்கலுழும். இனி என்செய்வோமென்று அஞ்சும். இனிவேறு துணையில்லையென்று மாயனையழைக்கும்; அந்தோ இக்கருடன் வேறென்செய்வனென்க. (கூசு)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஐயவோவுலகங்காக்குமடிகளோகாயாம்பூவின்
மெய்யவோவென்னையாண்டவிமலவோதிகிரியேந்துங்
கையவோவெய்ப்பின்வைப்பாங்கனகனேகலந்தார்க்கென்று
மெய்யவோகலவாதார்க்குவெய்யவோவேந்தனேயோ.

(இ-ள்.) ஐயவோ - ஐயனே, உலகங்காக்கும் அடிகளோ-உலகத்தைக்காக்கும் இறைவனே, காயாம்பூவின் மெய்யவோ-காயாம்பூவைப்போலுந் திருமேனியையுடையவனே, என்னை ஆண்டவிமலவோ - என்னையடிமைகொண்ட பரிசுத்தனே, திகிரியேந்தும்கையவோ - சுதரிசனமென்னும் சக்கராயுதத்தையேந்தியகையையுடையவனே, எய்ப்பில் வைப்பாம் கனகனே - வறுமையுற்றார்க்குதவும் நிதியைப்போலும் ஆதரவாயுள்ளவனே, கலந்தார்க்கு என்றும் மெய்யவோ - சார்ந்தவர்களுக்கு என்றும் மெய்யாயிருக்கின்றவனே, கலவாதார்க்கு வெய்யவோ-சாராதவர்களுக்குக் கொடுமையாயிருக்கின்றவனே, வேந்தனேயோ - அரசனே. (எ-று.)

கருடன், துன்ப நீங்கும்வகையறியாது தன்தலைவனாகிய திருமாலை, ஐயனென்றும், அடிகளென்றும், விமலனென்றும், திகிரியேந்துங்கரனென்றும், கனகனென்றும், மெய்யனென்றும், வெய்யனென்றும், வேந்தனென்றும், ஓலமிட்டழைத்தனனென்க. (கூரு)

விடையரசுயிர்ப்பிற்பட்டு மெலிகின்றேனோலமிந்தத்
தடைவிடுத்தடியனேனைத்தாங்குவா யோலமன்றேற்
கடையனேனாவியின்றேகழிந்திடுமோலமென்னை
யுடையவாவோலமென்றென்றோலமிட்டழைத்ததாலோ.

(இ-ள்.) விடையரசு உயிர்ப்பிற்பட்டு மெலிகின்றேன் ஓலம் - இடபதேவருடைய சுவாசத்தில் சிமிழ்ப்புண்டு மெலிந்து போகின்றேன் ஓலம், இந்தத்தடைவிடுத்து அடியனேனைத்தாங்குவாய் ஓலம் - (இடபதேவருடைய நெட்டுயிர்ப்பால்) தனைபட்டிருக்கு மித்தடையை விடுவித்து அடியேனைக்காப்பாயோலம், அன்றேல் கடையனேன் ஆவி இன்றே கழிந்திடும் ஓலம்-நீ காவாதொழியின் நாயினுங்கடை

ப்பட்ட என்னுயிரிபபொழுதே இறந்துபடும் ஓலம், என்னை உடையவா ஓலம் என்று என்று ஓலமிட்டு அழைத்தது -என்னையூர்தியாக வுடையவனே ஓலம் என்று இம்முறையாக வோலமிட்டுத் திருமாலையழைத்தது. (எ-று.)

இடபதேவருடைய வுயிரப்பிலகப்பட்டு மெலிகின்றே னாகையால் இந்தத் தடையையொழித்து அடியேனைக் காவாய் நீகாவாக்கால் என்னுயிரின்றே இறந்துவிடும் என்னையுடையானே ஓலம் ஓலம் என்று திருமாலையழைத்ததுகருடனென்க.

சீறுவெம்பணிவாய்பபட்டதேரையின்மறுகியோசை
வேறுபாடெய்திமாலை விளிப்பதெஞ்செவியிற்கேட்டே
மாறடுதிகிரியோயீதென்னெனவட்கார்தமமை
நூறியசீற்றத்துப்பிஞேன்றகைநெடியோன்சொல்வான்.

(இ-ள்.) சீறு வெம்பணிவாய்ப்பட்ட தேரையின் மறுகி - சீறுகின்றகொடிய பாம்பின் வாயிலகப்பட்ட தேரையைப்போலவருந்து, ஓசைவேறுபாடு எய்தி - ஒலி வேறுபாடடைந்து, மாலை விளிப்பது - கருடன்றிருமாலை யழைப்பதை, எம் செவியில்கேட்டேம் - எமது செவிப்புலத்திற்கேட்டனம், மாறு அடு திகிரி யோய்-பகைவரைகொல்லுகின்ற சக்கிரத்தையுடையவனே, ஈது என் என - இவ்வோசையாதென்றுகேட்க, வட்கார்தம்மை நூறியசீற்றத்துப்பின்-பகைவரையழிக்கவல்ல கோபமிக்க, நோன்றகை நெடியோன் சொலவான - வன்மை மிக்க திருமால் சொல்வான். (எ-று.)

கருடன் ஓலமோலமென்று திருமாலையழைக்கும் ஓசையானது இறைவனுடைய திருச்செவியில் பாம்பின் வாய்ப்பட்ட தேரையின் ஓசையைப் போலக்கேட்டது. கேட்கவும் திருமாலை நோக்கி ஈதென்னவோசையென்று கேட்கத் திருமால் கூறுவானென்க.

கருடனுடையஓசைபோய் பாம்பின்வாய்ப்பட்ட தேரையின் ஓசைபோல் வெளிப்படலால் இவ்வோசை இம்மலையின்கணுள்ளதன்றே, எனவே பாம்பு தவளையைப்பிடித்த விடமுமதத செயலன்றே ஆகலான் இவ்வோசை யாதென்று வினவினனெனபார் - சீறுவெம்பணி யீதென்னென வென்றார். (கூ௭)

இன்றுநின்னடிகள்போற்றுமிச்சையினென்னோடிங்கு
வன்றிறற்கலுழன்போந்தான்வாய்தலிற்றுயிலுமவெள்ளிக்
குன்றுறழிமிலேற்றண்ணலுயிர்ப்பினிற்கோட்பட்டாவி
பொன்றுவானென்னநொந்துவிளிக்கின்றான்புனிதவென்றான்.

(இ-ள்.) இன்று நின் அடிகள் போற்றும் இச்சையின்-இன்று உம்முடைய திருவடிகளைத் துதிக்குமிச்சையினால், என்னோடு இங்கு வன் திறல்கலுழன போந்தான-என்னுடன் இவ்விடத்தில் வன்மை மிக்ககருடன் வந்தனன், வாய்தலில் துயிலும் வெள்ளிக்குன்று உறழ் இமிலேற்று அண்ணல-(அவன்உமது) வாய்தலில்கண்ணுறங்கும் வெள்ளி மலையை யொத்த முசுபபுவாய்ந்த இடபதேவருடைய, உயிர்ப்பினிற்கோட்பட்டு-சுவாசத்திலகப்பட்டு, ஆவி பொன்றுவான் என்ன-உயிரிழப்பவனைப்போல, நொந்து விளிக்கின்றான் - மனநொந்து அழைக்கின்றான், புனித என்றான் - பரிசுத்தனே என்று கூறினான். (எ-று.)

மலமுத்தனாகிய இறைவனே இன்று தேவரீருடைய திருவடிகளை வணங்கும் ஆசையினால் என்னுடன் கருடன இவ்விடம் வந்தான் அவன் அங்கு வாய்தலில் உறங்கும் இடபதேவருடைய பெருமூச்சிலகப்பட்டு மரணவேதனைக்குள்ளாகி நொந்து அழைக்கின்றானென்க. (கூ௮)

மாதவன்விளம்பக்கேளா மற்றிதுநிகழ்தற்கேது
வேதுநீயறிந்ததுண்டேலியம்புதிவிடுத்துமென்ன
நாதனேகலுழன்சாலத்தருக்கினன்றனைப்போக்குங்
காதலாலீங்குவந்தேன்காரணமிதுவாலென்றான்.

(இ-ள்.) மாதவன் விளம்பக்கேளா - திருமால் சொல்லக்கேட்டு, இது நிகழ்தற்கு ஏது வேது நீ அறிந்தது உண்டேல் இயம்புதி விடுத்தும் என்ன - இவ்வாறு இடபதேவன் உன்னூர்தியைத் தன் துயிர்ப்பினால் வருத்துவதற்கு என்னகாரணம் நீயறிந்ததுண்டாயின் சொல்லுவாய், (சொல்லுவையாயின் நாம்) நமது இடபதேவன் சுவாசத்தினின்றும் விடுவிக்கின்றோம் என்று கூற, நாதனே - எம்மிறைவனே, கலுழன் சாலத்தருக்கினன்-கருடன் மிகவுஞ்செருக்குற்றனன், அதனை போக்கும் காதலால் ஈங்குவந்தேன் - அவ்வகந்தை நீக்குமாசையால் இக்கைலயங்கிரியிடத்துவந்தேன், காரணம் இது என்றான்-காரணம் இது தான் என்று சொன்னான் (எ-று)

திருமால் கருடன் இடபதேவருடைய உயிர்ப்பினால் வருந்துகின்றானென்று சொல்லக்கேட்ட இறைவன் திருமாலைநோக்கி உன்னூர்தியை எம்முடைய விடை இவ்வாறு துன்பப்படுத்துவதற்குக்காரணம் என்னை நீ அறிந்திருந்தால் சொல் நாம் நெட்டுயிர்ப்பிற்றலைப்பட்டுழலும் கருடனை விடுவிக்கின்றோமென்ன, திருமால் கருடன் தனக்கு நிகராவாரகளொருவருமில்லையென்று தருக்குற்றான் அதனைப்போக்குதற்கு இங்கு வந்தேன் இது தான் காரணம் எனக் (கூகூ)

உள்ளதுபுகன்றாயென்னநந்தியையாங்குநோக்கிக்
கள்ளவிழ்தொடையாய்நம்மைவழிபடுங்கருத்தானெய்தும்
புள்ளரசினையாவண்ணம்பொருக்கெனப்போந்துசீற்ற
வெள்விடையுயிர்ப்பினின்றும்விடுவித்துக்கொணாதியென்றும்.

(இ-ள்) உள்ளது புகன்றாய் என்ன - நடந்த செய்தியை உள்ளபடியே கூறினாயென்று, நந்தியை ஆங்கு நோக்கி-நந்திதேவனை யக்கணமேபார்த்து, கள் அவிழ் தொடையாய் - தேனொழுகுமலர்மாலையை யணிந்தவனே, நம்மை வழிபடும் கருத்தான் - நம்மை வணங்குமெண்ணத்தினால், எய்தும் புள் அரசு - வந்தகருடன், இனையாவண்ணம் பொருக்கெனப்போந்து வருந்தாவண்ணம் விரைந்துபோய், சீற்ற வெள்விடை உயிர்ப்பினின்றும் விடுவித்து - கோபமிக்க விடையின் சுவாசத்தினின்றும் விடுதலைசெய்து, கொணாதி என்றும் - கொண்டுவரக்கடவாயென்று சொன்னோம் (எ-று.)

இறைவன் திருமாலைநோக்கி நீ உள்ளது புகன்றாயென்று மகிழ்ந்து, உடனே நந்தியைநோக்கி நீ இப்பொழுதே விரைந்து சென்று கருடன் வருந்தாவண்ணம் விடையின் சுவாசத்தினின்றும் விடுவித்து நம்முன்கொண்டு வருவாயெனக்

திருமால் உண்மை கூறுதல் அறிந்தேனென்பது தோன்ற உள்ளது புகன்றாயெனவும், உண்மையைக்கூறுவோர்க்கு எண்ணியவற்றை முடித்தல் உண்மையாளர்க்கியல்பென்பது தோன்ற நந்தியை நோக்கிப் புள்ளரசினை விடையுயிர்ப்பினின்றும் விடுவித்துக்கொணாதி எனவும், நந்திதேவரும் இறைவனை வழிபடாதவரை யொறுத்தல் அவரது செய்கையாகலான் நீயும் இக்கருடனை உயிர்போம்படி செய்யாதே என்பது தோன்ற நம்மை வழிபடுங்கருத்தானெய்தும் புள்ளரசினையாவண்ணம் கொணாதி எனவுங் கூறினார். (௪00)

இத்தகுமாணை தாங்கியாவயினெய்திநந்தி
பொய்த்துயில்கொள்ளுமேற்றைப்புடைத்தனனெழுப்பலோடு

மெய்த்துயிலுணர்ந்தானமானவலவினைநதெழுந்துகண்க
ளத்துறுகலக்கங்காட்டியாஙஙனைநினறகாலே.

(இ-ள்.) நநதி இத்தகும் ஆணை தாங்கி - நநதிதேவன் இத்தன்மையாகிய ஆக்ஞையை மேற்கொணடு, ஆவயின் எய்தி - அவ்விடபதேவனிடத்திற் சென்று, பொய்துயில் கொள்ளும் ஏறறை புடைதது-பொய்யுறககங்கொணடிருக்கும் அத்தருமவிடையைத் தமது வேத்திரத்தாலடித்து,எழுப்பலோடும் - எழுநதிருககச்செய்யவும்,மெய் துயில் உணாநதான்மான-மெய்யாயுறங்குவோன் அறிநதெழுகின்றவனைப்போல, வல்விரைந்து எழுநது-அதிக விரைவாகத்துயிலொழிந்தெழுநது, கண்கள் அத்துறு கலக்கம் காட்டி-கண்கள் உறக்கமிகுதியினால் சிவநதிருக்கும் கலக்கத்தைக் காட்டி, ஆஙஙனம் நினற காலே - அவவிடததிலெழுந்து நினற பொழுது. (எ-று.)

இறைவன் ("புள்ளரசைவிடை யுயிர்ப்பினின்றும் விடுவித்துக்கொணர்தி" என்ற) ஆணையைநநதிதேவர் மேற்கொண்டு இடபதேவர்பாற்சென்று அவரைத் தட்டியெழுப்பப பொயத்துயில்கொளளும் அவ்விடபதேவர் மெய்த்துயில் கொண்டவரைப்போல் கண்கள் சிவந்திருக்கக்காட்டி அங்கு எழுந்தபொழுது என்க. (கoக)

போற்றுசீர நநதிப்புத்தேள்புண்ணுறுமுடம்பிற்புள்ளி
னேற்றொடுவிடையினேற்றையெமமெதிருய்த்தானுக
சீற்றமுஞ்செருக்குமாண்மைத்திட்பமுமவீறுங்குன்றி
மாற்றருமதுகைபபுள்ளேறெமமடிவணஙகிப்போற்றி.

(இ-ள்.) போறறு சீர நநதி புததேள (யாவராலும்)புகழப்படும் சிறப்புள்ள நந்திதேவன, உடம்பில புண்ணுறும புள்ளின ஏறறொடு விடையின் ஏற்றை-சரீரமெல்லாம் புண்பட்டிருக்கினற கலுழனோடு இடபதேவனை, எம் எதிர உய்ததான் - எம்முன்கொண்டுவந்துவிட்டான்,மாறறரும் மதுகைப்புள ஏறு-யாவராலும் மாற்றுதற்கரிய வனமையையுடைய கருடன், சீறறமும் செருக்கும் ஆண்மையும் திட்பமும் வீறும் குனறி-கோபமும கர்வமும் ஆணதன்மையும புருஷத்துவமும் பெருமையுமகுறைந்து, எம் அடி வணங்கி போறறி-எம்முடைய அடிகளைததுதித்து, (எ-று.)

(இடபதேவர் பொய்த்துயிலொழிந்து எழுந்திருநதபோது) நந்திதேவர்புண்பட்டு வருந்திய கருடனையும் இடபதேவரையும் இறைவனிடத்துக்கொண்டு வநதுவிட, கருடன் தான முனனடைந்திருந்த செருக்குமுதலியயாவும் இடபதேவருயிர்ப்பினுலொழியப்பெற்று இனி நமக்குத்தஞ்சம் வேறில்லையென்றுணர்நது இறைவனடியைவணஙகிபபோற்றியதென்க.

. புட்களிற்சிறந்தது கருடனும், இடபங்களிற் சிறந்ததுதருமவிடையு மென்பார் புளளினேற்றொடு விடையினேறறை எனவும், உயிரப்பினின்று மீட்பித்து நம்முயிரைக்காக்க அழைததது திருமாலே, இங்கு நம்முயிரைக் காததழைததநோ சிவபெருமான் ஆகலின் இவரேகாககும உண்மையையுடையவ ரொனறுணாநததென்பார் புள்ளேறெம்மடிவணஙகிப போறறி எனவுங்கூறினா. அல்லதூஉம், கருடனழைததகுமாலைக் கொண்டே உயிரபபினின்று மீட்கசசெய்தல் இயல்பாயிருக்க அச்செயலை நந்திதேவராவியற்றிய தெனனை யெனஞராயின் திருமால் இடபதேவரைப்புடைக்கும ஆறறலுடையானன்றெனவும், ஒருக்கால் புடைப்பானுயின் கருடனுறற தீங்கை இவனும் அடைவனெனவும, இடபதேவரைப் புடைக்காமலே சுவாசத்தா லலமறும் தன்னூர்தியை வேறொரு மாயாவிசேடத்தால் மீட்பிக்கக் கூடாதவனெனவுங் கொள்ளக்கிடந்தன. (கoஉ)

ஒடுங்கியுள்ளுடைந்துதண்டாதுயிர்ப்பெறிந்திரங்கிமேனி
நடுங்கிடக்கண்ணீர்வாரமுரிசிறைமருங்குநால
நெடுங்கைதன்சிரமேற்கூப்பிமால்புடைநிற்பநோக்கிக்
கொடுங்கொலைப்பகழிக்கண்ணாய்விடைக்கிதுகூறலுற்றாம.

(இ-ள்.) கொடும் கொலை பகழி கண்ணாய்-கொடிய கொலைத்தொழிலமைந்த அம்பினையொத்த கண்களையுடையாய், ஒடுங்கி உள்ளுடைந்து - கருடன் தேகமொடுங்கி மனங்கலங்கி, தண்டாது உயிர்ப்பெறிந்து இரங்கி- நீங்காதுபெருமூச்சுவிட்டு வருந்தி, மேனி நடுங்கிட கண்ணீர்வார - சரீரம் நடுங்கக் கண்களினின்றும் நீர்பெருக, முரி சிறை மருங்கு நால-ஒடிந்த இறகுகள் இரண்டுபக்கத்திலுந்தொங்க, நெடுங்கை தன் சிரமேல் கூப்பி - நீண்டகைகளைததலைமேற்குவித்து,மால் புடைநிற்ப- திருமால்பக்கத்திலேநிற்க, நோக்கி-நாம்பார்த்து, விடைக்கு இது கூறலுற்றாம்-தருமவிடைக்கு இதனைச்சொல்லத்தொடங்கினோம். (எ-று.)

(இறைவனைப்பணிந்துபோற்றிய கருடன் பின்) அங்கமொடுங்கி மனம்நெக்குவிட்டுப் பெருமூச்செறிந்து நொந்து மேனிநடுங்கி கண்ணீர் சொரிந்து இறகுகள் தொங்கியசைய சிரமேற்கைகளைக்குவித்து தனது தலைவனாகிய திருமால்பக்கல் நிற்க இறைவன் அதன் வருத்தத்தை நோக்கி இடபத்துக்கு இதனைக்கூறத்தொடங்கினனென்க.

இடபத்தால் தன்செருக்கைப் போக்கியதேயல்லாமல் இறைவன்முன் தான் நிற்குமுறையையும் திருமால் காட்டினனாதலால மால்புடைநிற்ப என்றார் எனவே திருமால்சரீர மொடுங்கி, உள்ளுடைந்து, உயிர்ப்பெறிந்து, இரங்கி, மேனிநடுங்கி, கண்ணீர்வார,சங்குசக்கரமேந்திய இரண்டுகைகளும் அவவாயுதங்களோடு தொங்க, ஏனையவிரண்டுகைகளும் சிரமேறகுவிநதிருக்கக் கண்டனனென்க. இவ்வாறு நிற்றல் அன்பரிலக்கணம். இவ்வன்பரிலககணத்தோடு திருமால் நின்றானென்பது "மாயவனெம்மடி வணங்கியன்பினாலிடை நெடும்பொழு தமர்ந்து வைகினான்" என முன்னர்வநத செய்யுளாலறிக. (க௦ரு)

எம்முடையாணையின்றியெம்மெதிர்நீயேயிந்நாண்
மம்மரினிதனைச்செய்தாய்மானிடவடிவநதாங்கிச்
சும்மைநீர்வரைப்பிற்காஞ்சித்தொானகரெய்தியங்க
ணம்மைநீபுரிதிபூசைநவையிதுகழியுமாறே.

(இ-ள்.) எம்முடை ஆணையின்றி-எம்முடையகட்டளையில்லாமல், எம் எதிர் நீயே இந்நாண் மம்மரின் இதனை செய்தாய்-எமக்கு முன் நீயே இவ்வளவுகாலம் அறிவின்மையால் கருடனுக்கு இத்துன்பத்தைச்செய்தாய், இது நவை-இது குற்றமாம், கழியுமாறு - இக்குற்றமொழியும்படி, மானிடவடிவம் தாங்கி - நீ மக்கட்பிறப்பையடைந்து ; சும்மை நீர்வரைபபில் - ஒலிமிக்க கடலசூழ்ந்தவுலகத்தில், காஞ்சி தொல் நகா எய்தி - காஞ்சி யென்று சொலலப்படும் அநாதியாயுள்ள நகரத்தை யடைந்து, அங்கண் நம்மை நீ பூசை புரிதி - அத்தளியில் நம்மை நீ பூசை செய்வாய். (எ-று.)

இறைவன் இடபதேவரைப்பார்த்து நீ எம்முடைய ஆணையையிகந்துஇதுவரையில் இக்கருடனுக்கு இததீங்குசெய்தனை யாதலான் இது குற்றமாம். இக்குற்றம் நீங்குமாறு மானிடவடிவங்கொண்டு காஞ்சிநகரத்தையடைந்து அங்கு எம்மை [illegible] செய்வாயென்று கட்டளையிட்டனனென்க.

அறமாயினும் இறைவனுணையின்றியியற்றின அது பாவமென்பது இதனுல பெற்றும். இநநாள என்பது திருமால இறைவனிடததில நெடுமபொழு தமாநது வைகுமளவும வருததியகாலததைககுறிததாம். (௧௦௪)

எனவிடையளிபபபோறறிபபுடைபரநதெழுநதுவஞசி
யனவிடைதுவளவீஙகுமலர்முலைககொமபரனைய
சினவிடையரசுவல்லேநரவுருததிகழகககொணடு
மனவிடையிழைததசெமபொனமாளிகைககாஞசிநணணி.

(இ-ள்.) புடைபரநது எழுநது - பககஙகளிறபரவி மேலெழுநது, வஞசி அனன இடை துவள வீஙகும அலா முலை கொமபா அனைய-வஞ்சிககொடிபோன்ற இடை துவணடசையப பருததிருககும் பரநத தனஙகளையுடைய பூமகொமபு போனற உமையே, என விடை அளிபபபோறறி நாம் காஞசிககுசசெல்லென்று விடபநாயகததிறகு விடைகொடுகக எமமைததுதிதது, சினவிடையரசு கோபததிறசிறந்த இடபநாயகமானது, வலலே நரவுரு திகழக கொணடு - விரைநது மானிடவடிவஙகொணடு, மனவு இடை இழைததசெம்பொன மாளிகை காஞசி நணணி-இரததினஙகளிடையிடையே இழைககபபடடுளள செமபொனமயமாகிய மாளிகைகள சூழ்நத காஞ்சிநகரததையடைநது. (எ-று)

இறைவன உமாதேவியாரை நோககி நாம் விடைககு காஞ்சியிற்சென்று பூசை செய்வாயென்று விடைகொடுகக நமமைபபோறறி மானிடவடிவஙகொணடு காஞ்சிநகரததையடைநததெனக. (௧௦௫)

கவிழிணாததனிமாமூலததெமமெதிாகமலபபூநதோ
டவிழசிவகஙகைக்கோட்டிஞஙகதுவைகுமவைபபிற
குவிவருமபெருமைசானறகுடதிசைமுகமாததனபோ
புவிபுகழிலிஙகநதாபிததருசசனைபுரிநதுபோறறி

(இ-ள) கவிழ இணா தனி மா மூலநது எம் எதிா - பூஙகொததுகள நிறைநததனி மா எனபபெயாபெறற மாவடியினகண எமமெதிரில, கமலம் பூ தோடு அவிழ சிவகஙகை கோடடில - தாமரைமலாகளலாநத சிவகஙகைககரையில, அது வைகும வைபபில-அவ்விடபம் தஙகுதறகுரியவிடததில, குவிவரும பெருமைசானற குடதிசைமுகமாக-எககாலததுங குறைவுபடாத பெருமைமிகக மேறகுமுகமாக, தனபோ புவிபுகழ இலிஙகம தாபிதது அருசசனை புரிநது போறறி - தன்னுடைய (இடபேஸவரா எனகிற) பெயரால உலகம புகழும இலிஙகமூாததியைப் பிரதிஷ்டைசெய்து அருசசிததுததுதிதது. (எ-று)

இடபதேவா காஞசிநகரததையடைநது ஏகாமபரம எனனுமபெயருடைய மாவடியில வீறறிருககும இறைவன முன விளஙகும சிவகஙகைககரையினசண் இடபதேவராகிய தாம தஙகுதறகுரிய அவ்விடததில மேறகுமுகமாக இடபேஸவரா மென்று தனபெயரால சிவலிஙகப பிரதிஷடைசெயது ஆாசிததுபபோறறி னைக

இடபதேவா இருககுமிடம சிவசநநிதிமுனனே யாகலான ஆஙகதுவைகும வைபபிலென்றா. (௧௦௬)

காடசியீநதருளுநமபால வரமபலகருதிபபொறறு
மாட்சியினுலகமெலலா மனுமுறைவழாதுபனனு
வாடசிசாலரசுசெய்து கடைமுறையாணேறறணணன
மீடசியினருளபெற்றிஙகு மேவிவீற்றிருநததனறே.

(இ-ள்.) ஆனேறு அண்ணல்-இடபநாயகம், காட்சி ஈந்த அருளும்நம்பால்- (அது பூசித்த சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு காட்சிதந்தருளிய நம்மிடத்தில், வரம்பலகருதிப் பெற்று - பலவரங்களையெண்ணியடைந்து, மாட்சியின் உலகமெல்லாம் மனுமுறைவழாது - பெருமையால் உலகமுற்றும் மனுநீதிதவறாது, பல் நாள் ஆட்சிசால அரசுசெய்து - அநேககாலம் ஆண்மைமிக்க அரசியலைநடத்தி, கடைமுறை - இறுதியில், மீட்சியில் அருள்பெற்று - எக்காலத்தும் மாறுபடாததிருவருளைப்பெற்று, இங்குமேவி வீற்றிருந்தது - இக்கைலையங்கிரியில் நிலைபெற்று வாழ்ந்திருந்தது. (எ-று.)

இடபதேவர் தாம் பூசித்த சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டுக் காட்சிதந்தருளிய இறைவன்பால் பலவரங்களைப்பெற்று உலகமுழுவதும் மனுநீதிதவறாது அரசியல் நடாத்தி பின் மாறாததிருவருளைப்பெற்று இக்கைலையின்கண் வாழ்ந்திருந்தனர் என்க. (கOஎ)

ஆதலினீயுமங்கணகிலமுமுய்யவாறெம்மை
மேதகுகழுவாய்நீரினவிதியுளிபபூசைசெய்யப
போதாரயென்றுநலகபபுரிகுழலணங்குதாழ்ந்து
நாதனுரிசைவுபெறறுநயந்தெழுந்தருளலுற்றாள்.

(இ-ள்) ஆதலின் - ஆகையினால், நீயும் அங்கண் - நீயும்அவ்விடத்தில்,அகிலமும உயவான-எல்லாவுலகமும் முய்யுமாறு, எம்மை மேதகு கழுவாய நீரின்-எம்மை மேம்பட்ட பரிகாரவியலால், விதி யுளிபூசைசெய்ய - விதிப்படி யருச்சனைசெய்ய, போதராய் என்று நல்க-போவாயென்று கட்டளையிட, புரிகுழல் அணங்குதாழ்ந்து-பின்னிய கூந்தலையுடைய உமாதேவியார வணங்கி, நாதனார் இசைவு பெற்று-இறைவனார் திருவுளத்திசைவுபெற்று,நயந்து எழுந்தருள லுற்றாள் - விரும்பிஅங்கிருந்து மெழுதத்தொடங்கினார். (எ-று.)

உமையே விடபநாயகம எம்மைப்பூசித்தருள்பெற்ற செய்தியிது, ஆகலான் நீயுமக்காஞ்சிநகரத்தையடைந்து உலகுய்யுமாறு எம்மைப்பரிகாரவியலிற கூறியபடி பூசித்து நீ செல்லக்கடவாயென்றருள உமாதேவியார் வணங்கி மாவடியின்கண் வீற்றிருக்கும் சிவலிங்கப்பெருமானையர்ச்சிக்கும விருப்பத்தினாலெழுந்திருந்தனரென்க.

நயந்தெழுந்து-திருவேகம்பமுடையானை அருச்சிக்கவேண்டு மென்னுமவாவினாலெழுந்தவிருப்பம். (கOஅ)

நமபனாதமமையினபநகையிடைத்தணக்குநோயுங
கமபனாபபூசைசெய்யுங்காத லுமிருபாலீர்பப
வெமபிரானருளாயென்றுதாழ்ந்துதாழ்ந்தெழுந்துநின்று
கொமபரினொலகிபபல்காற்புறவிடைகொண்டுபோற்றி.

(இ-ள்.) நம்பனார் தமமை-இறைவரை,இன்ப நகையிடை தணக்கு நோயும்- இன்பத்தை விளைவிக்கும ஆனந்தசமயத்தில நீங்கப்பெற்ற துன்பமும், கம்பனைப் பூசைசெய்யுங் காதலும் - ஏகம்பநாதனைப்பூசை செய்யும் ஆசையும், இருபால் ஈர்ப்ப - இருபக்கமுமிழுப்ப, எமபிரான அருளாய்என்று-எமதிறைவனே கருணைசெய்வாயென்று, தாழ்ந்து தாழ்ந்து எழுந்துநின்று - பணிந்து பணிந்து எழுந்துநின்று, கொம்பரின் ஒல்கி-பூங்கொம்பைப்போலுமொசிந்து, பல்கால் புறவிடைகொண்டு போற்றி-பலமுறை வெளியேவர விடைபெற்றுத் துதித்து. (எ-று.)

இறைவனுரை, இன்பந்தரும் புன்னகையிடையில் பிரிவுறவந்த பிரிவாற்றுமையானுண்டாகிய நோயும் அந்நோய்சிறிது நீங்க ஏகம்பவாணனைப் பூசை செய்ய வேண்டுமென்றெழுந்த வின்பமுமாகிய இவ்விரண்டும முனனும பின்னுமீர்ப்ப (எனவே கைலையங்கிரியும் காஞ்சிநகரமும் ஈர்ப்ப) எம்பெருமானே (இதற்கு என் செய்வேன்) அருளாயென்று பன்முறை தாழ்ந்தெழுநது நின்று (நிற்கப்பெறாது) பூங்கொம்பர்போலுமசைநது பலமுறையும் நான்போய் வருகின்றேன் போய வருகின்றேனென்று விடைகொண்டு திதிததென்க.

எம்பிரானருளா யென்றது - நான உன்னைப்பிரியுந் துன்பம் நீஙகுமாறு காஞ்சியில் விரைவில் காட்சிகொடுத்தருளவாயென்று வேண்டியவாறுமாம். (கம்)

மின்கொண்டன்மிடற்றார்காட்சிவிழிக்கெதிர் மறையுங்காறும
பின்கொண்டுநடந்துசென்றுபெருமுதல்வாய்தனீங்கி
முன்கொணடுநடவாநின்றாண்முக்குறுமபடக்கிஐவர
வன்கொண்டிகடநதமேலோர்காண்டகவயங்குமம்மை

(இ-ள்.) முக்குறும்பு அடக்கி ஐவர் வன்கொண்டி கடந்த மேலோர் காண்டக வயங்கும் அம்மை-காமம் வெகுளி மயக்கமென்னும் முக்குற்றங்களு மௌவகை யடக்கிப் பஞ்சேந்திரியக்கொடுமைகளை யடககும் வனமையையடைந்து சுட்டியறியும்அறிவொழிநத மேலோர்கள் காணும்படி விளங்கும் அம்மையார், மின் கொண்டல் மிடற்றார்காட்சி - மின்னலிடுகின்ற மேகம்போலும் கண்டத்தையுடைய இறைவனாரது திருமேனிததோற்றம், விழிக்கு எதிர் மறையுமகாறும் - தன்கண்களுக்கெதிரே மறையுமளவும்,பின்கொண்டு நடநதுசென்று-பினனாக நடநது போய், பெரு முதலவாய்தல நீஙகி- பெரிய முதற்கோபுரததைககடந்து, முனகொண்டு நடவாநின்றாள் - முனனாக நடவாநின்றனர். (எ-று.)

யோகிகள் காணவிளஙகும் உமாதேவியாா நீலகண்டனாகிய தம்மிறைவன் திருமேனி கண்களுக்குத் தோன்றாது மறையுங்காறும் பின்னாகநடநது முதறகோபுர வாயிலைக்கடநதபின் முனனாக நடவாநின்றனர் எனக.

பின்கொண்டு நடநதெனறது - இறைவன் சந்நிதியினினறு நீஙகுங்கால இறைவனைப்பார்த்துக்கொண்டே பினனாகநடநது வருதல். (ககூ)

ஆயிடையகிதினீஙகியங்கணாருளாலஙகட
பாயபல்கணஙகளுய்த்தபடரொளியெறிக்குமங்கேழ்
மாயிருவிமானத்துமபர்மனனுயிர்த்தோழிமார்தம
மாயமுநதானுமேறிவழிக்கொண்டாளனையகாலை.

(இ-ள்.) ஆயிடை அகிதின் நீஙகி - அக்கோபுரவாயிலினின்றுங் கடக்கக் கூடாமற் கடநது, அங்கணா அருளால-இறைவனருளால, அஙகண பாய பலகணங்கள் உய்த்த - அவ்விடத்தில் கூடிய பலகணங்கள் கொண்டுவநத, படர் ஒளி எறிக்கும் அம்கேழ் மா இரு விமானதது உமபர் - படர்ந்து ஒளி விட்டெறிக்கும் அழகிய சோதிமயமான மிக்க பெரிய விமானத்தின்மேல், மன்னுயிர தோழிமார்தம் ஆயமும் தானும் ஏறி - நிலைபெற்ற தன்னின்னுயிர்க்கினிய ஆயத்தாரோடு தாமும் ஏறி, வழிக்கொண்டாள் - வழிநடந்தனர், அனையகாலை - அப்பொழுது. (எ-று.)

அக்கோபுரவாயிலைக்கடந்து இறைவனாணையால் சிவகணங்கள்கொண்டுவந்த சோதிமயமாய் விளங்கும் விமானத்தின்மேல் தமது பாங்கியரோடு ஏறி நடந்தனர் அப்பொழுது என்க.

அம்மையார் இறைவரிடத்து விடைபெற்று மீண்டாராயினும் அவர்பால் தாம் வைத்த அன்பு இடை இடையே தோன்ற அதனால் மனஞ்சோர்ந்து நடை தளர்வுறலால் ஆயிடையே நிதினிங்கி என்றார். (ககக)

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

உலகெலாமீன்றவெமபெருமாட்டியோங்குயர்விழுப்புகழ்க்கம்பத்
தலைவனாவிதியானருச்சனைசெய்யச்சார்கின்றாளென்றுபேரோகை
மலியெடுத்தியமபுமஙகளங்கேளாவுருத்திரமடநதையர்முதலோ
ரலகிலாமகிழ்ச்சிமீக்கொளுங்களிப்பினொருங்கெழுந்தொருங்குவந்திறுத்தார்.

(இ-ள்.) உலகு எலலாம் ஈன்ற எம்பெருமாட்டி - எல்லாவுயிர்களையும் பெற்று பெற்றெடுத்த எமது பெருமாட்டி, ஓங்கு உயர் விழுப்புகழ் கம்பத்தலைவனை - சிறப்பு மிக்க பெருமையுடைய ஏகம்பவாணனை, விதியால் அருச்சனை செய்ய சார்கின்றாள் என்று - ஆகம விதிப்படி அருச்சனை செய்யச்செல்கின்றாளென்று, பேரோகை மலி எடுத்து இயமபு மங்களம்கேளா - பேரானந்தத்தால் மிகவும்எடுத்துக் கூறும் மங்கல மொழியைக்கேட்டு, உருத்திர மடநதையர் முதலோர் - உருத்திர மாதர் முதலிய பலர், அலகிலாமகிழ்ச்சி மீக்கொளும் களிப்பின் - அளவுபடாத மகிழ்ச்சி மிகுரும் களிப்பினால், ஆரதது ஒருங்கு எழுந்து வந்து இறுத்தார் - ஆரவாரஞ்செய்து ஒருசேர எழுந்துவந்து தங்கினார்கள். (எ-று.)

அம்மையார் ஏகம்பவாணனை விதிப்படி அருச்சனைசெய்யச் செல்கின்றாரென்று பேரானந்தங்கொண்டு எடுத்துக்கூறும மங்கலவோசையைக்கேட்டு உருத்திரமங்கையர் முதலாயினோர் அளவிறந்த மகிழ்ச்சியடைந்தவர்களாய் ஒருங்கேஎழுந்து வந்து கூடினார்களென்க. (ககஉ)

தாமரைமடவார்புடைபரந்தணுகத்தாமரைமடவரலவந்தா
ணாமிசைக்கிழத்திபற்பலவெள்ளநாரியர்புடைவரவந்தாள்
கோமளவனப்பினும்பன்மெல்லியலார்குழாத்துடனுயர்சசிவந்தாள்
காமருமாதரெழுவருஞ்சங்கக்கன்னியர்சூழ்தரவந்தார்.

(இ-ள்) தாமரை மடவார் - தாமரைமலர்போலும் அழகுவாய்ந்த மங்கையர், புடைபரந்து அணுக - பக்கத்திற பரவிசசூழ்ந்துவர, தாமரை மடவரல் வந்தாள் - தாமரை மலரில வீற்றிருக்கும் இலக்குமிவந்தாள், பறபல வெள்ள நாரியர் புடைவர - பல திறப்பட்ட அநேகம பெணகள் புடைசூழ்ந்து வர, நாமிசைக் கிழத்தி வந்தாள் - கலைமகள் வந்தனள், கோமளவனப்பின் ஆம்பல மெல இயலார் குழாத்துடன் - இளமையாகிய அழகினையுடைய அல்லிமலர் போன்ற மென்மை வாய்ந்த மங்கையர் கூட்டங்களோடு, உயர்சசி வந்தாள் - பெருமையிற்சிறந்த இந்திராணி வந்தனள், சங்கக் கன்னியர் சூழ்தர - அநேககோடி கன்னியர்கள் புடைசூழ காமரு மாதர் எழுவரும் வந்தார் - அழகுமிக்க சப்தகன்னியர்களும் வந்தார்கள்.

இலக்குமியும் கலைமகளும் இந்திராணியும் சப்தமாதரும் வந்தார்களென்க.

சப்தமாதர்களாவார்-பிராமி-மகேஸ்வரி கௌமாரி-நாராயணி-வராகி இந்திராணி-காளி. சங்கம்-ஓர் எண். (ககூ)

வான்மடமகளிர்வேறுபலவகுப்பின்மங்கையர்பற்பலாயிரவ
ரூன்மலிசூலத்திடாகினிகாளியோகினித்திரத்தவரனேகர்
நீன்முகிற்கூந்தன்முனிவர்பன்னியருகிராந்தரமிடைந்தனருவகைப
பான்மையினிறைஞ்சியவரவர்க்கடுத்தபணிதலைநின்றுடன்போத.

(இ-ள்) வான் மடமகளிர் - தேவலோகப்பெண்களும், வேறு பல் வகுப்பின் மங்கையர் - அத்தேவகணங்களில் வெவ்வேறு வகைப்பட்ட பலபிரிவினராகிய மங்கையர்களும் (ஆகிய இவர்கள்), பறபல ஆயிரவர்-பல்லாயிரம் பேர்களும், ஊன் மலி சூலத்து இடாகினி காளி யோகினி திறததவர் அநேகர்-பகைவ ருடைடர்ந்தசூல மேர்தியடாகினிகளும் காளிகளும் யோகினிகளும் ஆகிய இவ்வகைப்பட்டவர்எண்ணிறந்தவர்களும், நீலம முகில் கூந்தல் முனிவா பன்னியரும்-கரியமேகம்போன்ற அளகத்தையுடைய முனிவா பத்னிகளும், நிரந்தரமிடைந்தனர்-எவ்விடத்தும் நெருங்கி, உவகைப்பான்மையின் இறைஞ்சி-ஆனந்தத்தினுல வணங்கி, அவரவர்க்கடுத்த பணி தலை நின்று - அவ்வவர்க்குரிய பணியில் தலைப்பட்டு, உடன்போத - உடன்சேர்ந்து வர. (எ-று.)

தெய்வமகளிரும் அவருள் பல் வருப்புடைய மகளிரும் இடாகினி காளி யோகினி முதலாயினேரும் முனிபத்தினிகளும் ஆகிய இவர்களெவ்விடத்தும் நெருங்கி ஆனந்தமுடையவராய்ப்பணிந்து அவரவா செய்தற்குரிய பணிவிடைகளிலே தலைப்பட்டு அம்மையாரோடு சென்றனரொனக.

தேவர் பதினெண் வகையினராதலால் வேறுபல்வகுப்பின் மங்கையரொன்றார். நீலம் - கடைகுறைந்து நின்றது.　　　　(கககச)

உரகர்கந்தருவரிராக்கதரியக்கருருத்திரர்மருத்துவர்வசுக்கள்
கருடர்கிம்புருடர்சாரணர்சித்தர்கடவுளரயனரிமுனிவர்
மருவுபல்சமயதேவர்கள்முதலோர்வந்தனாடிதொழுதிறைஞ்சிப்
பொருவருங்களிப்பாற்சயசயபோற்றிபோற்றியென்றேத்திமுன்செல்ல.

(இ-ள்.) உரகர் கந்தருவா இராக்கதர் இயக்கர் உருத்திரர் மருததுவர் வசுக்கள் கருடர் கிம்புருடர் சாரணர் சித்தர் கடவுளர் அயன் அரி முனிவர்-உரகர்முதல்,—முனிவரீறுகக்கூறிய இவர்களும், மருவு பல் சமயதேவாகள் முதலோர் வந்தனர் - பொருந்தியசமயிகளால் தொழப்பட்ட தேவர்கள் முதலாயினேரும் வந்து, அடி தொழுது இறைஞ்சி - திருவடிகளில் வீழ்ந்துவணங்கி, பொருவருங் களிப்பால்-ஒப்புரைத்தற்கியலாத களிப்பினுல், சயசய போற்றி போற்றி என்று ஏத்தி முன் செல்ல - சயசய போற்றிபோற்றி என்று தோத்திரஞ்செய்து முன்னேசெல்ல. (எ-று.)

உரகர்முதல பல்சமய தேவர்களீறுகக்கூறிய யாவரும் வந்து அம்மையாரடி வணங்கி களிப்பின்மிகுதியினுல் சயசய போறறி என்று தோத்திரஞ் சொல்லிக் கொண்டே முன்சென்றார்களென்க.

மருவுபல் சமயதேவரொன்றது வேதங்களில் அவரவர் பரிபாகநோக்கியே வகுக்கப்பட்டதெய்வங்களாம்.　　　　(ககரு)

தண்ணுமைமுருடு குடமுழாமொந்தைதகுணிச்சம்பேரிகைதக்கை
யண்ணலம்பதலையதிர்குரன்முரசமாதியவெழுப்புவபிறவும்
பண்ணமைசின்னங்காகளங்கோடு பணிலமேதீங்குழன்முதலா
வெண்ணருந்திறத்தினு துவபலவுமெழுகடன்முழக்கினையடக்க.

(இ-ள்.) தண்ணுமை முருடு குடமுழா மொந்தை தகுணிச்சம் பேரிகை தக்கை அண்ணல் அம் பதலை அதிர் குரல் முரசம் ஆதிய எழுப்புவ-தண்ணுமை,—முதலாகக்கூறிய பல வாச்சியங்களினுல் எழுவனவாகிய பலவோசைகளும், பிறவும் - (இவை நீங்கலாக) மற்றுமுள்ளனவாகிய- பணணமை சின்னம் காகளம் கோடுபணி

லம் தீம்குழல் முதலாக எண்ணரும் திறத்தின் ஊதுவ பலவும்-இசையமைந்த திருச்சின்னம் எக்காளம் கொம்பு சங்கம் இனனிசைதரும் புள்ளாங்குழல் முதலாகிய எண்ணுதற்கரியனவாகிய ஊதும் வாத்தியங்கள் பலவும், எழுகடன் முழக்கினையடக்க - ஏழுசமுத்திரத்தி ெனாலியையடக்க. (எ-று.)

மத்தளமுதல் பேரிகை யீருகக்கூறிய கொட்டுவாத்தியங்களும், திருச்சின்னமுதல் புள்ளாங்குழ லீருகக்கூறிய ஊதுவாத்தியங்களும் ஆகிய வாத்தியங்களெல்லாம் ஏழுகடலொலியையும் அடக்கி மேலெழுந்தனவென்க. (ககசா)

பயின்மணிக்கவரிகவிகைசாந்தாற்றிபடரொளியாலவட்டங்கள்
வயின்வயின்வயங்கக்கற்பகத்தாருமலர்மழைபெங்கணுமிறைப்பக்
குயின்மொழிமடவார்குழாங்குழாமாகிக்குலவுபலலாண்டெடுத்திசைப்ப
கயின்மணிக்குழையாராணுடைதாங்கிக்கதிர்த்தவாளேந்தினரேக.

(இ-ள்,) மணி பயின் கவரி கவிகை சாந்நாற்றி படர் ஒளி ஆலவட்டங்கள் வயின் வயின் வயங்க - இரத்தினங்களாலிழைக்கப்பட்டுள்ள சாமரைகள் குடைகள் விசிறிகள் ஒளிவீசும் ஆலவட்டங்கள் (ஆகிய இவைகள்) ஆங்காங்கு விளங்கவும், கற்பகத்தாரு எங்கணும் மலர்மழை இறைப்ப-கற்பகவிருக்கம் எவ்விடத்தும்பூமழையைப்பொழியவும், குயின்மொழி மடவார் குழாம் குழா மாகி குலவு பல்லாண்டு எடுத்து இசைப்ப-குயில்போலும் இன் சொல்லையுடைய மகளிர் கூட்டங் கூட்டமாய்ப் புகழப்படும் பல்லாண்டுகளையெடுத்துக்கூறவும், கயின் மணிக் குழையார் ஆணுடை தாங்கி-பிடரியிற்படும் குழையையணிந்த மங்கையர் ஆணுடையையணிந்து, கதிர்த்தவாளேந்தினர் ஏக-ஒளிவிட்டு விளங்கும் வாளாயுதத்தைத் தாங்கிச்செல்லவும். (எ-று.)

சாமரைகள் குடைகள் விசிறிகள் ஆலவட்டங்கள் ஆகிய இவைகள் [illegible]தோறும் அணியணியாய்ப்பொலிவுபெற்று விளங்கவும், கற்பகவிருக்ஷம் [illegible] மழை பொழியவும், மகளிர்குழாங்கள் பல்லாண்டு கூறவும், ஆண்மக்களைப்போல் [illegible] ஆணுடைதாங்கியவீரமங்கையர் வாளேந்திச்செல்லவு மென்க.

வாளேந்துதல் வீரராகிய ஆண்மக்க ளியற்கையாதலால் [illegible] லும் வீரமுடையார் இம்மங்கையரென்பது தோன்ற ஆணுடைதாங்கிக் கதிர்த்த வாளேந்தினர் என்றார். (கககு)

வேதகம்பயக்குஞ்சிலைமுதலானவிம்மிதத்திறத்தனபலவும்
பூதிமிக்களிக்குங்கடவுளர்தருக்கள்புண்ணியதீர்த்தங்கணதிக
ளேதமில்சிறப்பினிணையனபிறவுமுடன்செலச்சிறுதொடுகுறள்கள்
காதலின்முன்னேகையிணைவீசிக்கதுமெனக்குறுகுறுநடப்ப.

(இ-ள்.) வேதகம் பயக்கும் சிலை முதலான விம்மிதத்திறத்தன பலவும்-(தன்மையை வேறுபடுத்தி வேதனைசெய்யவல்ல விஷசெந்துக்களை) வேதிக்கவல்ல கற்கள் பஞ்சலோகங்களையும் வேறுபடுத்தும் குளிகைகள் முதலாகிய அதிசயிக்கத் தக்கனவாகிய பலபொருள்களும், பூதிமிக்கு அளிக்கும் கடவுளர் தருக்கள் புண்ணிய தீர்த்தங்கள் நதிகள் ஏதமில் சிறப்பின் இணையனபிறவும் - செல்வத்தை மிகவும் கொடுக்கும் தெய்வத்தன்மை வாய்ந்த பஞ்சதருக்களும் புண்ணிய தீர்த்தங்களும் நதிகளும் ஆகிய சிறப்பினையுடைய இவைபோல்வனபிறவும், உடன் செல - (நீங்காது) உடன் செல்லவும், சிறுதொடு குறள்கள் காதலின் முன்னே கையிணைவீசி- சிறியகுறட்பூதங்கள் ஆசையினால் முன்னே சென்று இரண்டுகைகளையும்

மேலே வீசிக்கொண்டு, குறு குறு கதுமென நடப்ப - குறுகுறுவென்று மொசை யோடு விரைந்து செல்லவும். (எ-று.)

வேதனைப்படுக்கும் கற்கள் குளிகைகள் பஞ்சதருக்கள் புண்ணியதீர்த்தங்கள் நதிகள் ஆகிய இவைகள் பின்னே தொடாநதுவரவும் பிறகுறட்பூதங்கள் எவர்க்கும் எவைகட்கும் முன்னே தமது கைகளை வீசிக்கொண்டு செல்லவுமென்க.

வேதகம் பயக்கும் கல்லென்றது - விடசெந்துக்களைத் துன்பஞ்செய்ய வல்ல கற்களை. (௧௧௮)

கலகலமுழக்குங்களகளமுழக்குங்கலின்கலின்முழக்கமுங்கருவிச்
சலசலமுழக்குஞ்சளசளமுழக்குஞ்சட சடமுழக்கமுமேனைச்
சிலசிலமுழக்குமரகரமுழக்குஞ்சயசயமுழக்குமெண்டிசைவாய்ப்
பலபலமுழக்குமடைத்துமேலோங்கிப்படியொடுவானமுநிறைப்ப.

(இ-ள்) கலகலமுழக்கும் - கலகலவெனவொலிக்குமோசையும், களகளமுழக்கும் - களகளவென்று ஒலிக்கும் ஓசையும், கலின்கலின் முழக்கமும் -கலின்கலின் என்றொலிக்கும் ஓசையும், கருவிச்சலசலமுழக்கும் - ஆயுதங்கள் சலசலவென்றொலிக்குமோசையும், சளசளமுழக்கும் - சளசளவென்றெழுகின்ற ஓசையும், சடசடமுழக்கமும்-சடசடவென்றெழுகின்ற ஓசையும், ஏனை சிலசில முழக்கும் - இவையொழிந்தமறறுஞ் சிலசிலவோசைகளும், அரகரமுழக்கும் - அரகரவென்றெழுகின்றவோசையும், சய சய முழக்கும் - சய சயவென்று எழுகின்ற வோசையும், எண் திசை வாய் பலபலமுழக்கும் அடைத்து-ஆகியஇவ்வோசைகளெல்லாம் எண்டிக்குகளினு மெழுகின்ற பலபலவோசைகளையடக்கி, மேலோங்கி படியொடு வானமும் நிறைப்ப - மேறபட்டெழுந்து இந்நிலவுலகோடு பொன்னுலகத்திலும் நிறையவும். (எ-று.)

கலகலமுழக்கமுதல் சயசயமுழக்க மீறுகக்கூறிய வொலிகளெல்லாமெண்டிக்குகளினு மொலிக்கும் ஏனையவொலிகளையடக்கி மேலோங்கி இம்மண்ணுலகையும் விண்ணுலகையும் நிறையச்செய்யுமென்க. (௧௧௯)

மறைமுதலொருபான் மணந்தவள்வந்தாள்வானவர்க்கரியவள்வந்தா
ணிறைபெருங்கருணைநாயகிவந்தாணிருமலப்பேரொளிவந்தா
ளறைபுனற்காஞ்சிக்கம்பனைவணங்கவகிலமுமாதிநாட்பயந்த
விறைவியேவந்தாளென்றுபல்சின்னத்தெழுமொலியாங்கணும்விம்ம.

(இ-ள்.) மறைமுதல் ஒருபால் மணந்தவள் வந்தாள்- வேதமுதல்வனாகிய சிவபெருமானை ஒருபாகத்திற்கலந்தவள் வந்தாளென்றும்,வானவர்க்கு அரியவள்வந்தாள் - தேவர்களறிதற்கருமையானவள வநதாளென்றும், நிறை பெரு கருணைநாயகிவந்தாள் - நிறைந்தபெரியகருணைப்பிராட்டி வந்தாளெனறும், நிருமலப்பேரொளிவந்தாள் - மலரகிதமாகிய ஞானசொரூபிவந்தாளென்றும், அறை புனல் காஞ்சி கம்பனைவணங்க-ஒலிக்கின்ற நீர்வளமிக்க காஞ்சிநகரிலெழுந்தருளியிருக்கும் ஏகம்பவாணனைப்பணிய, ஆதிநாள் அகிலமும் பயநத இறைவியே வந்தாள்என்று-முன்னாளில் எல்லாவுலகங்களையும்படைத்த தலைவியே வந்தாளென்றும், பலசின்னத்து எழும் ஒலி யாங்கணும் விம்ம - பலதிருச்சின்னங்களிலிருந்து இவ்வாறு எழுகின்ற வோசை எவ்விடத்தும் பரவவும். (எ-று.)

பல திருச்சின்னங்கள் அம்மையாரது பெருமையையும் திருவேகம்பவாணை பூசிக்கவரும் அருமையையு மெடுத்துக் கூறியதாமென்க. (௧௨0)

அளவிலாக்கருணைப்பெருங்கடலென்னவடர்ந்தவலவிருளுடை நதோடுங்
கிளைவழிதுருவித்தூரந்துகொண்டெய்துங்கேழ்கிளரொளிக்குழாமென்ன
வளமலிதென்பாற்செய்தவந்திரண்டுவருவதேயென்னவுமுலவாக்
களிவருசிறப்பின்வானெறிபடர்ந்தாள் கணவனாருள்வழிநின்றாள்.

(இ-ள்.) கணவனார் அருள்வழி நின்றாள் - தமது நாயகராகிய சிவபெருமானருள்வழி நின்றவராகிய பிராட்டியார், அளவு இல்லாத கருணை பெருங்கடல் என்னவும்-அளவிறந்த கருணாசாகரமென்று சொல்லவும், அடர்ந்த வல இருள் உடைந்து ஓடும் கிளைவழி-எங்கும் நிறைந்தவலிய இருள சிதைந்து ஓடுங்கிளைவழியே, துருவி தூரந்துகொண்டு எய்தும் - தேடித்துரத்திக்கொண்டு செல்லும், கேழ்கிளர்ஒளி குழாம் என்னவும்- ஒளிவீசும்சோதிக் கூட்டமென்றுசொல்லவும், வளமலி தென்பால் செய்தவம் திரண்டுவருவதே என்னவும்- வளமிக்கதென்திசைசெய்த தவமானது திரண்டுவருவதைப்போலவும், உலவாத களி வருசிறப்பின் - கெடாத ஆனந்தத்தை விளைவிக்கும் அலங்காரச்சிறப்புடன், வான் நெறி படர்ந்தாள் - ஆகாயமார்க்கமாகச் சென்றனர். (எ-று.)

இறைவனார் நீ காஞ்சிக்குச்செல்வா யென்றருளிய அருள்வழியே நின்றவராகிய பிராட்டியார் கருணாசமுத்திரம்போலவும் இருளையெவ்விடத்துமில்லா தோட்டும் சோதிக்கூட்டம்போலவும் தென்றிசைசெய்ததவம் திரண்டு வருவதுபோலவும் அளவிறந்த அலங்காரச்சிறப்புடன் ஆகாயவழியேவந்தாரென்க.

பெண்ணினல்லராகிய அம்மையாரோடு உருத்திர மடந்தையர் முதலாகச் சொல்லப்பட்ட பெண்ணினங்களெல்லாந் திரண்டுவருதலால் அக்கூட்டத்தைக்கடலாகவும், கடலிடை தோன்றுகின்றவன் சூரியனாதலால் பெண்கள் கூட்டதினடுவேதோன்றும் அம்மையாரை அருணனாகவும், சூரியனுதயமாதலே புண்ணியமீட்டுதற்கிடனாதலால் அம்மையார் புண்ணியஞ்செய்தற்குரிய சில கருவிகளோடு தென்றிசைநோக்கிவருதலை புண்ணியந் திரண்டு வருவதாகவுங்கூறினார். போத, செல்ல, அடக்க, ஏக, நடப்ப, நிறைப்ப, விம்ம, படர்ந்தாளென வினைமுடிக்க. (கஉக)

வேறு.

எண்ணிலார்மிடைந்துவிண்பரப்படைத்தியங்கலா
லண்ணனஞாயிறுதிவாண்மறைந்திருளடர்ந்திடக்
கண்ணுறுத்தயிர்க்குமுன் கடுப்பினெய்துவோரொளி
வண்ணமவ்விருள்கிழிப்பநோக்கிஞாலமாந்தர்தாம்.

(இ-ள்.) எண்ணிலார் மிடைந்து - அளவிறந்தவர்கள் நெருங்கி, விண்பரப்பு அடைத்து - ஆகாயப்பரப்பையடைத்து, இயங்கலால் - செல்கின்றமையால், அண்ணல் ஞாயிறுதி வாள் மறைந்து-ஒளிகட்கெல்லாந் தலைமைபெற்ற சூரியன் முதலாயினருடைய ஒளிகளெல்லாம் மறைபட்டு, இருள அடர்ந்திட - எவ்விடத்துமிருள் நெருங்க, கண் உறுத்து அயிர்க்குமுன் - (அநநல்) கண்ணொளிமழுங்கி இவ்விருள் வந்தவழி என்னென்று சந்தேகிப்பதற்குமுன், கடுப்பின் எய்துவோர் ஒளி வண்ணம் - விரைந்து வருகின்றவர்களுடைய சரீரகாந்தியானது, அவ்விருள் கிழிப்ப நோக்கி - முன்மறைத்த இருளைநீக்கப்பார்த்து, ஞாலமாந்தர் தாம் - இவ்வுலகின்கணுள்ள மானிடர்கள் (எ-று.)

அம்மையார் பரிவாரங்கள் முற்றும் பரவி ஆகாயத்தை மறைத்துவருதலால் சூரியன் முதலாயினருடைய ஒளிவிளங்குவதின்றி இருள்பரவ அவ்விருளால் கண்மூடப்பெற்று இவ்விருள் வந்தவழி என்னென்று ஆராயுங்கால் அப்பரிவாரங்க

ளின் தேகவொளியே அவ்விருளைப்போக்க இவ்வதிசயத்தைப்பார்த்து உலகினரெல்லாம் என்க.

இதனால் அம்மையாரது பரிவாரங்களே ஞாயிறுமுதலியவைகளின் ஒளியைப் போக்கி இருளைப்பரப்பித் தமதுதிருமேனியின் ஒளியால்யாவும் விளங்கச்செய்தன வென்பதாம். அல்லதூஉம் அருணனைமறைத்து அந்தகாரத்தையுண்டாக்கி அங்கத்தொளியால் ஒளிகாட்டியது மந்தரமலையில் அம்மையாருக்கும் அப்பனாகிய சங்கரனுக்கும் நடந்தசெய்தியை இத்திறமென்று தெரிவித்ததுமாம். (௧௨௨)

மாலுறுக்குநீர்மையோடுதோன்றியிங்குமாய்ந்தது
நீலமின்னல்போலுமென்பரென்னுமுன்னர்நீளிடைச்
சாலமிக்கவோதைகேட்டுமின்பயந்ததண்முகில்
காலுமோதையாங்கொலென்றுகாதினோர்த்துநிற்பரே.

(இ-ள்.) மால் உறுக்கும் நீர்மையோடு இங்கு தோன்றி மாய்ந்தது - நம்மை மயக்குந் தன்மையோடு இவ்விடத்தில் தோன்றிமறைந்தது, நீலமின்னல் போலும் என்பர்-நீலநிறமுள்ள மின்னலோ என்பார்கள், என்னும் முன்னர் நீள் இடைசால மிக்க ஓதை கேட்டு - மின்னலோ வென்று சொல்வதற்குமுன் ஆகாயத்தில் முழங்கும்மிக்க வோசையைக்கேட்டு, மின்பயந்த தண் முகில் காலும் ஓதையாங்கொல்- இந்தவோசை மின்னலைத்தந்த தண்ணியமேகமிடிக்கும் இடியோசையோ, என்று காதின் ஓர்த்துநிற்பர்-என்று செவிகொடுத்துக்கேட்டு ஆராய்ந்து நிற்பார்கள்.(எ-று.)

இந்நிலவுலகினர் நம்முடைய கண்களுக்கு ஒளிதோன்றாமல் இருள் செய்தும் இவ்விருளேதென்று நினைப்பதற்குமுன் ஒளி செய்தும் மயக்கிய அதுமின்னல்போல் தோன்றி மறைந்தமையால் மின்னல்தா னென்பார்கள், அங்ஙனஞ் சொல்வதற்குமுன் ஆகாயத்தில் இடிக்கும் இடியொலியைக்கேட்டார்கள், இவ்வொலியேது முன்மின்னிய மின்னலைத்தந்த மேககர்ச்சனையோவென்று செவிகொடுத்துக் கேளாநிற்பார்கள் என்க.

உலகினர் அம்மையார் பரிவாரங்களின் தேகவொளி விட்டு விட்டொளிவிடுந்தோறும் மேகத்திலே மின்னும் மின்னலென்றும், பேரிகைமுதலிய வாச்சியங்களின் பேரொலிகேட்குந்தோறும் மேககர்ச்சனையென்றும் எண்ணுவார்களென்க.

செல்லுவோர்நெருக்கிடைத்தெறித்திடும்பொலஞ்சுடர்ப
பல்லணிக்கலன்களுக்கபன்மணித்திரள்களை
யொல்லைநோக்கியார்த்தமேகமொன்பதிற்றுமாமணிக்
கல்லின்மாரிபெய்வதென்றுகாண்டொறும்வியப்பரே.

(இ-ள்.) செல்லுவோர் நெருக்கிடை - (ஆகாயமார்க்கமாகச்) செல்லுகின்ற பரிவாரங்களுடைய நெருக்கத்தினால், பொலம் சுடர் தெறித்திடும் பல் அணிகலன்கள் - பசும்பொன்னொளி விட்டெறிக்கும் பல ஆபரணங்கள், உக்க பல்மணி திரள்களை - (ஒருவரோடொருவர்தாக்கச்) சிந்தியபலமணிக்கூட்டங்களை, ஒல்லை நோக்கி, விரைந்துபார்த்து, ஆர்த்தமேகம் - முன் ஆரவாரஞ்செய்தமேகம், ஒன்பதிற்று மாமணிகல்லின் மாரிபெய்வது என்று-ஒன்பது வகைப்பட்ட மாணிக்கக் கன்மழையைப் பொழிகின்றதென்று, காண்தொறும் வியப்பர் - பார்க்குந்தோறும் அதிசயிப்பார்கள். (எ-று.)

ஆகாயவழியிற் செல்கின்றவர்கள் நெருக்கத்தினால் சிந்துகின்ற பலமணிக ளைப்பார்த்து இவைகள் முன் இடித்தமேகங்கள் மாணிக்கமழையைப் பொழிகின்றன வென்று காணுந்தோறும் அதிசயிப்பார்களென்க. (௧௨௪)

முறையினாலடுக்கநண்ணுமொய்குழாத்தைநோக்குவா
ரிறைவியென்றுசின்னமெங்குமேங்குமோசைகேட்குவார்
நிறைமகிழ்ச்சியிற்கிளர்ந்துநீடுமின்பவெள்ளநீர்த்
துறைபடிந்துகண்கணீர்துளிப்பநின்றுபோற்றுவார்.

(இ-ள்.) முறையினால் அடுக்க நண்ணும் மொய்குழாத்தை நோக்குவார்-(வருகின்றபரிவாரங்கள்)முன்பின்னாகவரும்முறைமையோடுஅணியணியாகவரும்நெருங்கியகூட்டங்களைப் பார்க்கின்றவர்களும், இறைவி என்று சின்னம் எங்கும் ஏங்கும் ஓசைகேட்குவார் - உலகநாயகி என்று திருச்சின்னங்கள் எவ்விடத்து மூதுகின்ற பேரோசையைக் கேட்கின்றவர்களும், நிறை மகிழ்ச்சியிற் கிளர்ந்து -பெருமகிழ்ச்சியினால் சரீரம்பூரித்து, நீடும் இன்பவெள்ள நீர் துறைபடிந்து - பேரின்பவெள்ளத்திற்படிந்து, கண்கள் நீர்துளிப்பநின்று போற்றுவார் - (ஆனந்தத்தால்) கண்களில் நீர்த் துளிதுளிக்க நின்று தோத்திரஞ்செய்வார்கள். (எ-று.)

(மாமணிக் கன்மாரியைக் கண்டவர்களே யல்லாமல்) அணியணியாக வரும் திருக்கூட்டங்களைப் பார்க்கின்றவர்களும் அம்மையார்வருகின்றாரென்று ஊதுகின்ற திருச்சின்னங்களின் ஓசையைக்கேட்கின்றவர்களும் பேரானந்தத்தில்மூழ்கி ஆனந்த பாஷ்பம்பொழிய நின்றுபோற்றுவார்களென்க. (௧௨௫)

எம்பிரான்றனிப்பவம்மையிங்குவந்ததென்னெனக்
கம்பவாணர்பூசைசெய்கருத்தின்வந்ததாமென
நம்பினோங்கள்வீடுபேறுநண்ணுகாலமீதென
விம்பர்ஞாலமெத்தவம்படைத்ததென்னவிள்ளுவார்.

(இ-ள்.) எம்பிரான் தனிப்ப அம்மை இங்குவந்தது என் என்ன - (சிலர்) நமது பெருமான்தனித்திருக்க அம்மையார் இந்நிலவுலகைநோக்கி வந்தது என்னென்றுகேட்க, (அதற்குச்சிலர்) கம்பவாணர்பூசை செய்கருத்தின் வந்ததாம் என்ன - ஏகம்பவாணரை அர்ச்சனைசெய்யு மெண்ணத்தினால் இங்குவந்ததாகும் என்றுகூற; (அதுகேட்டு) நம்பினோங்கள் வீடுபேறு நண்ணு காலம் ஈது என்ன - நம்பினவர்களாகியயாங்கள் முத்திப்பயனை யடையுங்காலம் இதுவென்றுசொல்ல (சிலர்) இம்பர் ஞாலம் எத்தவம்படைத்தது என்ன விள்ளுவார்-இம்மண்ணுலகம் என்ன தவத்தைச் செய்தது என்றுசொல்லுவார்கள். (எ-று.)

சிவபெருமான் தனித்திருக்க அம்மையார்வந்தகாரணம் என்னவென்று சிலர் கேட்பார்கள், அதற்கு அம்மையார் வந்தகாரணம் ஏகம்பவாணரைப் பூசிக்கவென்று சிலர்விடைகூறுவார்கள். அதுகேட்ட சிலர் நாங்கள் முத்திப்பயனறியாது ஏங்கியிருந்தோம் அப்பயனடையுங்காலம் இதுவென்றே இப்போதெண்ணுகின்றோம் என்பார்கள். அதுகேட்டசிலர் அம்முத்திக்கால மிதுவென்றுகாட்ட இம்மண்ணுலகு என்னதவஞ்செய்தது என்பார்களென்க. (௧௨௬)

மண்ணகத்துவைகுமாந்தரின்னராகமாணிழைப்
பெண்ணினல்லவள்விமானநின்றுமிப்பெரும்புவிப்
புண்ணியத்தலங்கடோறிழிந்திழிந்துபோர்விடை
யண்ணலாரிலிங்கபூசைசெய்துகாசியண்மினாள்.

(இ-ள்.) மண்ணகத்துறைவகும் மாந்தர் இன்னராக - மண்ணுலகில் வாழும் மனிதர்கள் இத்தன்மையராக, மாண் இழை பெண்ணின் நல்லவள் - (இப்பால்) சிறந்த ஆபரணங்களணிந்த உமாதேவியார், இப் பெரு புவி புண்ணியத்தலங்கள் தோறு விமான நின்றும் இழிந்து இழிந்து - இந்தப்பெரிய நிலவுலகிலுள்ள புண்ணியக்ஷேத்திரங்கடோறும் விமானத்தினின்று மிறங்கியிறங்கி, போர்விடை அண்ணலார் இலிங்கபூசை செய்து காசி அண்மினாள் - (கொலைத்தொழிலையுடைய) இடபத்தை யூர்தியாகவுடைய சிவபெருமான் திருவுருவமாகிய இலிங்கபூசையைச் செய்து காசித்தலத்தை வந்து சேர்ந்தனர். (எ-று.)

இந்நிலவுலகினரெல்லாம் முன்னர்க்கூறியவாறு மகிழ்ந்திருக்க அம்மையார் பூவுலகிலுள்ள க்ஷேத்திரங்களைக் காணுந்தோறும் ஆகாயமார்க்கமாகச் செல்லுகின்ற தன் விமானத்தினின்றும் இறிந்திழிந்து ஆங்காங்குச் சிவலிங்கமூர்த்தியைப் பூசித்து காசித்தலத்தை வந்தடைந்தாரென்க.

அம்மையார் இறைவனிடத்தினின்றும் விடைபெற்றகாலத்து அவ்வம்மையை இறைவன்நோக்கி பதகாரிச்சிரமத்தில் காத்யாயன முனிவனென்பவன் உன்னைப்புத்திரியாகக்கொண்டு வழிபட வெண்ணியிருக்கின்றானாகையால் அவனபீஷ்டப்படியே நீ அவ்வாச்சிரமத்திற்சென்று பாலவடிவமாக இருப்பாயாக அங்ஙனமிருக்குங்கால் அம்முனிவன் உன்னைக்கண்டு ஆனந்தபரவசனாய் வழிபட்டுவருவான் அவனது வழிபாடேற்று எட்டுவருடம் காஞ்சிநகரத்தையடைதற்குரிய தவமியற்றிவருவாய் அந்நாள் கழிந்தபின்னர் காசியையடைந்து அங்குண்டாவதாகிய பன்னிரண்டுவருடக்ஷாமத்தை அன்னதானத்தாற்போக்கி அங்கிருந்தும் காஞ்சியையடைவாய், அன்றியும் பதரிகாச்சிரமத்தில் சில உபகரணங்கள் தோன்றுமாறுசெய்கின்றோம், அவைகளை அங்கு தவமியற்றற்கும், காசியில் அன்னதானஞ் செய்வதற்கும் காஞ்சியில் அறஞ்செய்வதற்கு முரியவைகளாகக் கொள்ளக் கடவாய் என்றனர். அவையாவன -.யோகதண்டம், அக்ஷமாலை, தீபம், இரண்டுகுடம், விசிறி, இரண்டு சாமரை, வித்யாபீடம், புஸ்தகம், வியாக்ராசனம், வறுத்த பயறு, கங்கைமணல், கங்காதீர்த்தம், குடை ஆகப் பதின்மூன்று. இவைதவத்திற்கும் அருச்சனைக்கு முரியன, அன்றியும் வற்றாதபாத்திரம் இருநாழிநெல் இவ்விரண்டும் அறத்திற்கும் தானத்திற்குமுரியன. முன்னர்க்கூறிய பதின்மூன்றனுள் பதரிகாச்சிரமத்தில் அம்மையார் தவக்கோலங்கொண்டகாலத்தும் வித்தியாபீடம் ஊசியாக அதைக்கைக்கொண்டு உருத்திராக்ஷ மாலையையணிந்து யோகதண்டத்தை நாட்டி ஊசிமுனையில் நின்று தவமியற்றினார். காசியில் வற்றாதபாத்திரத்தினால் அன்னதானஞ்செய்து அன்னபூரணியென்று பெயர் பெற்றனர். காஞ்சியை யடைந்தகாலத்து மேற்கூறிய பதின்மூன்றும் முறையே திரிசூலமும் வில்வமாலையும், தீபஸ்தம்பமும், சோமசூத்திரமும், கிளியும், இரண்டு பெண்களும், பீடமும், காமதேனுவும், சோமவிருத்தமும், முளைத்த பயறும், இலிங்கமும், பாலும், நாகாபரணமுமாயின. இவைகளைக்கொண்டு அருச்சனையும் இருநாழிநெல்லைக்கொண்டு முப்பத்திரண்டறங்களுஞ் செய்தனர். இது வடமொழியிற் கண்டது. (௧௨௭)

முச்சகம்புகழ்ந்துபோற்றுமொய்கொள்காசிமாநகர்
விச்சுவேசர்பூசையாற்றிவேறிலிங்கமொன்றமைத்
தர்ச்சனைத்திறத்தினேத்திவைகியங்ககன்றுசீர்க்
கச்சியம்பதிக்கண்வைத்தகாதலுய்ப்பவேகினாள்.

(இ-ள்.) முச்சகம்புகழ்ந்து போற்றும் - மூன்றுலகமும் புகழ்ந்து துதிக்கும், மொய்கொள் காசி மாநகர் - பெருமைமிக்க காசிமாநகரத்தில், விச்சுவேசர் பூசை

ஆற்று - விசுவநாதர் பூசையைச்செய்து, வேறு இலிங்கம் ஒன்று அமைத்து - மற்றொரு இலிங்கத்தைப் பிரதிட்டை செய்து, அர்ச்சனை திறத்தின் ஏத்தி வைகி - அருச்சனை வகையான் வழிபட்டுத்தங்கி, அங்கு அகன்று - அக்காசியைவிட்டு, சீர் கச்சியம் பதிக்கண் வைத்த காதல் உய்ப்ப ஏகினாள் - சிறந்த காஞ்சிப்பதியில் தாம் வைத்த ஆசை உந்தச்சென்றனர். (எ று.)

காசித்தலத்தில் விஸ்வநாதனைப் பூசித்துப் பின் தாம் வேறோரிலிங்கப் பிரதிட்டைசெய்து வழிபட்டுக் காஞ்சிப்பதியில் தாம்வைத்த ஆசைதூண்ட அத்தலத்தை விட்டுச்செல்லத் தொடங்கினாரென்க.

ஏனையதலங்களினும் காசிப்பதி அம்மையாருக்குமிக்க இன்பத்தைத்தரும் சாலநமக்கினியநகர் அணிநீர்க்காஞ்சி என்று இறைவர் அருளினாராதலின் நாயகருக்கினிமையானதே தமக்கு மினிமையாய் மிகுந் தீர்த்ததென்பார் கச்சியம்பதிக் கண் வைத்த காதலுய்ப்பவேகினாளென்றார்.

அன்றியும் முன் விளக்கிய சரித்திரத்தால் காசியில் துவாதச க்ஷாமநிவர்த்தியின்பொருட்டுத் தங்கினாரென்று வெளிப்படலால் அங்கு வைகி என்றார். (௧௨௮)

அங்கணங்கணெந்தையாரமர்ந்துவாழிடந்தொறும்
பொங்குகின்றகாதலோடுபூசைசெய்துசெய்துபோய்
மங்கலத்தமிழ்ப்புவிக்குவாண்முகமெனத்தகுந்
துங்கமிக்கசீர்த்திபெற்றதொண்டைநாட்டைநண்ணினாள்.

(இ-ள்) அங்கண் அங்கண் எந்தையார் அமர்ந்து வாழ் இடந்தொறும்-(காசித்தலத்தைவிட்டபின்) ஒவ்வோர்நகரங்கடோறும் எமது பெருமான்கோயில் கொண்டு வாழும் இடங்கள்தோறும், பொங்குகின்ற காதலோடு பூசைசெய்துசெய்துபோய்- மேற்பட்டுவருகின்ற ஆசையோடு அர்ச்சித்துச்சென்று, மங்கலம் தமிழ்ப்புவிக்கு - மங்களகரமாகிய தமிழ்நாட்டுக்கு, வாள் முகம் எனத்தகும் - ஒளிபொருந்திய முகமென்று சொல்லப்படும், துங்கம் மிக்க சீர்த்தி பெற்ற தொண்டை நாட்டைநண்ணினாள் - சீலமிக்கபுகழையுடைய தொண்டைநாட்டையடைந்தார். (எ-று.)

காசித்தலத்தைவிட்டபின் ஆங்காங்கு தாம் கண்டதலங்கள்தோறும் மிக்க அன்போடு சிவலிங்கப்பெருமானை யர்ச்சித்துத்தலங்களெல்லாங்கடந்து தமிழ் நாட்டுக்கு முகமெனத்தகுந் திருத்தொண்டைநாட்டில் வந்து சேர்ந்தாரென்க. (௧௨௯)

அண்ணலந்துலைசேரென்றாழைப்பசித்திங்கட்பூரம்
வெண்மதியாட்சிமூன்றும்பின்பக்கநந்தைமேய
புண்ணியத்திருநாளெல்லாப்புவனமும்பெருவாழ்வெய்த
விண்ணவர்பிராட்டிகாஞ்சிவியனகரெல்லைசேர்ந்தாள்.

(இ-ள்.) அம் துலை-அழகிய துலாராசியில், அண்ணல் என்றாழ்-நவக்கிரகங்களிற்சிறந்த சூரியன், சேர் ஐப்பசி திங்கள் - சேருகின்றதுலாமாசத்தில், பூரம்-பூரநக்ஷத்திரமும், வெண் மதி ஆட்சி மூன்றும் பின்பக்கம் நந்தைமேய-சோமவாரமும் அவ்வாரத்திற்குரிய சந்திரனாட்சிபெற்றிக்குரும் மூன்றும்பின்பக்கமாகிய அஷ்டமியும்கூடிய,புண்ணியம் திருநாள்-புண்ணியகரமாகிய அச்சுபதினத்தல், எல்லாப்புவனமும் பெருவாழ்வு எய்த-எல்லாப்புவனங்களும் பெரியவாழ்வையடைய, விண்ணவர் பிராட்டி-தேவர்கள் முதல்வியாகிய அம்மையார், காஞ்சி வியன் நகர் எல்லை சேர்ந்தாள் - காஞ்சியாகிய பெரிய நகரத்தின் எல்லையை வந்தடைந்தனர். (எ-று.)

துலாமாசம் பூரநக்ஷத்திரம் சோமவாரம் அஷ்டமிதிதிகூடிய சுபதினத்தில் அம்மையார் காஞ்சிநகரத்தை வந்தடைந்தாரென்க.

சுக்லபக்ஷம் பிரதமைமுதல் தசமிவரையில் முதற்பாகம், அந்த ஏகாதசி முதல் கிருஷ்ணபக்ஷம் பஞ்சமிவரையில் இரண்டாம்பாகம்; அந்த ஷஷ்டிமுதல் அமாவாசைவரையில்மூன்றும்பாகம். இவ்வகையாக சாந்திரமான ரீதியாய் மூன்று பாகமாக திதிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் சூரியனுக்குப்பிற்பட்டராசிகளில் சந்திரன்வந்திருப்பதால் கிருஷ்ணபக்ஷமாம். அதில் அஷ்டமிமுதற் பாதிவரையில் சந்திரன் முற்பக்கமாதலால் மூன்றும் பின்பக்கமாந்தையமேய எனவும், சூரியனுடைய ஆயிரங்கிரணத்தில் ஓர்கிரணம் சந்திரனுதலாலும் சந்திரனுக்குச் சூரியன் நட்பாதலாலும் சூரியனோடு சந்திரன் சேருங்காலத்தில் சூரியனுடையராசியாகிய சிங்கமும் தனக்குராசியாதலாலும் வெண்மதியாட்சியெனவும் கூறினர்.

ஶ்லோ ॥ [illegible]

ஆஸ்வயுஜமென்கிற - மாதத்தில், சூரியன் - துலாராசியை யடைந்திருக்க, சந்திரன் - பூரநக்ஷத்திரத்தை, ப்ரவேசித்திருக்க - சோமவாரத்தில், மங்களகரமான-அஷ்டமியில், வெண்மைக்குவேறுன - (கிருஷ்ண) பக்ஷத்தில் பர்வதபுத்திரியான-அம்பிகையானவள், மூவுலகிற்கும் - குசலவிருத்தியின்பொருட்டு, சுவர்ணமயமான தோரணங்களையுடையதாயும் - கலியின்கொடுமையைத்தீர்ப்பதாயும், பிராசீனமாயுமுள்ள - காஞ்சியென்னும் (நகரத்தை) அடைந்தனள். (கூ௰)

பார்த்தனள்கடைநாள்செல்லாப்பழம்பதிமகிழ்ச்சிமேன்மேற்
கூர்த்தனள்சிரமேற்செங்கைகுவித்தனள்புளகமேனி
போர்த்தனள்விழிநீர்மாரிபொழிந்தனளங்கோர்வாவித்
தீர்த்தநீர்குடைந்துமூழ்கிச்சங்கற்பஞ்செய்துமுற்றி.

(இ-ள்.) கடை நாள் செல்லா பழம்பதி பார்த்தனள் - ஊழிகாலத்தினு மழியாத அநாதியாயுள்ள காஞ்சிப்பதியைக்கண்டு, மேன்மேல் மகிழ்ச்சி கூர்த்தனள் - மேன்மேலும் பேரானந்தத்தையடைந்து, சிரமேல் செங்கை குவித்தனள்-சிரசின் மேல் செவந்தகைகளை அஞ்சலியாகக்கூப்பி,புளகமேனி போர்த்தனள்-சரீரம்மயிர்க்குச்செறிய, விழிநீர்மாரி பொழிந்தனள் - கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம்பொழிந்தாள், அங்கு ஓர்வாவி தீர்த்தநீர் குடைந்து மூழ்கி - அவ்விடத்திலுள்ள ஓர் புண்ணியதீர்த்தத்தில் நீராடி, சங்கற்பம் செய்து முற்றி - சங்கற்பஞ்செய்து முடித்து. (எ-று.)

எல்லாவுலகங்களும் அழியுங்காலத்தும் அழியாது நிலைபெற்றுள்ள காஞ்சிப்பதியை (அம்மையார்) கண்டு அடங்காத மகிழ்ச்சியையடைந்து கைகளைச்சிரமேற்கூப்பிப்புளகரும்ப, அங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கி ஏகம்பவாணரைப் பூசிப்பதற்குச் சங்கற்பஞ்செய்துகொண்டனரென்க.

* பார்த்தனள்என்றது கைலையில் இறைவனருளியவாறு யோகதண்டமுதலியவைதிரிசூலமுதலியனவாக மாறினமையைக்கண்டாளெனவும்அதனுல் மகிழ்ச்சிகூர்ந்து சிரமேற்செங்கைகுவித்து புளகமேனிபோர்த்து விழிநீர்மாரிபொழிந்தனளென

இரட்டுறமொழித லென்பதனாற்கொள்க. இதனைகலத்தைமுன்வந்த ''மண்கைத்து'' என்னுஞ்செய்யுளுரையிற் காணக. (கூக)

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இவை இறைவன் கொடுத்தவை.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இவைகாஞ்சியில் மாறினவை.

அலங்கொளிக்கரத்துச்செம்பொற்காப்புநாணணிந்துமூவா
விலிங்கமாண்டிருவிப்பூசையியற்றினளனையதீர்த்த
நலங்கெழுகாப்புத்தீர்த்தமெனப்பெயர்நவில்வர்சேர்ந்தார்
குலங்களோடுய்யச்செய்யுமிலிங்கமுங்கொள்ளுமப்பேர்.

(இ-ள்.) ஒளி அலங்கு கரத்து செம்பொன் காப்புநாண் அணிந்து- ஒளிவீசும் திருக்கரத்தில் பசும்பொன்னாற்செய்த காப்பாகிய கயிற்றையணிந்து, மூவா இலிங்கம் ஆண்டு இருவி பூசை இயற்றினள்-கெடாத இலிங்கமூர்த்தியை அவ்விடத்தில் பிரதிட்டைசெய்து அர்ச்சித்து வழிபட்டனள், அனையதீர்த்தம்-(அதனால்)அந்ததீர்த்தத்தை, நலம் கெழு காப்பு தீர்த்தம் என பெயர் நவில்வர்-நன்மைமிருந்த காப்புத்தீர்த்தமென்று நாமங்கூறுவார்கள், சேர்ந்தார் குலங்களோடு உய்யச்செய்யும் இலிங்கமும் - தம்மையடைந்தோரை அவர்குலங்களோடு உய்ந்துபோகச்செய்யும் அந்த லிங்கமும், அப்பேர் கொள்ளும் - அந்தப்பெயரையே கொண்டிருக்கும். (எ-று.)

(அம்மையார் தீராடிச்சங்கற்பஞ்செய்துமுற்றியபின்) கங்கணமணிந்துகொண்டதனால் அத்தீர்த்தத்திற்குக் கங்கணதீர்த்தமென்றும், கங்கணமணிந்து பூசித்த அச்சிவலிங்கமூர்த்திக்கு கங்கணேஸ்வரரென்றும் பெயராமென்க. (கூஉ)

நவமணிக்கடகம்பூணுஞான்கருங்கடகேசானச்
சிவபரஞ்சுடரைப்பூசைசெய்துதன்கரத்திற்பூண்டா
ளவிர்மணிநகையாள்போற்றுமக்குறியிரண்டுங்கண்டோர்
தவலருமலநோய்மாற்றிமுத்தியிற்றவிர்ந்துவாழ்வார்.

(இ-ள்.) நவமணிகடகம் பூணு ஞான்கரும் - (செம்பொற்காப்பு நாணணிந்த பின்னர்) நவரத்தினங்களா லிழைக்கப்பட்டுள்ள கடகத்தை யணியத் தொடங்கிய அவ்விடத்திலும், கடகேசானச் சிவபரஞ்சுடரைப் பூசைசெய்து-கடகேஸ்வரராகிய சிவலிங்கமூர்த்தியை வழிபட்டு,தன் கரத்திற் பூண்டாள்-தனது திருக்கரத்தில் அக்கடகத்தையணிந்தனர்,அவிர் மணி நகையாள்போற்றும்அக்குறியிரண்டும் விளங்கும் முத்துப்போன்று நகையினையுடைய அம்மையார்வழிபட்ட அச்சிவலிங்க மூர்த்தங்களிரண்டையும், கண்டோர் தவலரு மலநோய் மாற்றி-தரிசித்தவர்கள் நீக்குதற்கரிய ஆணவநோயை யொழித்து, தவிர்ந்து முத்தியில் வாழ்வார்-தற்போதங்கெட்டு முத்திநிலையில் வாழ்வாரகள். (எ-று.)

அம்மையார் காப்புநாணையன்றிக் கடகமணியுங்காலத்தும் கடகேஸ்வரரை வழிபட்டுத்தன்கரத்திற்பூண்டனர்,இக்கடகேஸ்வரரையும் முன் வழிபட்டகங்கணேஸ்வரரையும் காணப்பெற்றவர்கள் எவற்றாலும் நீக்கற்கரிய மலநோயை நீக்கித் தற்போதந்தோன்றாது முத்திநிலையில் வாழ்வார்களென்க.

தவலருமலநோய் என்றது கன்மமலத்தானும் மாயாமலத்தானும் வருந்துன்பம். தவிர்ந்து என்றது ஆணவமலத்தாலெழும் தற்போதத்தைப்போக்கல். இம்மும்மலங்களையுங் கண்டோர் ஒழியப்பெறுவரென்பார் மலநோய்மாற்றி முத்தியிற்றவிர்ந்துவாழ்வார் என்றார். பிராரத்தமனுபவிக்குந்திசையில் கன்ம மலமாயாமலங்களின் துன்பம் மாற்றிக்கோடல் அரிதாகலின் தவலருமலநோய் மாற்றியெனவும், முத்தித்திசையிற் போதந் தோன்றாது சிவமேயாய் நிற்ற லரிதாகலின் முத்தியிற்றவிர்ந்துவாழ்வாரெனவும் கூறினாரெனக் கொள்ளலுமொன்று. அல்லதூஉம் குறியிரண்டும்கண்டோர் தவலருமலநோய்மாற்றி முத்தியிற்றவிர்ந்து வாழ்வார் என்றதனால் அம்மையார்காப்பு நாணும்கடகமுமணிந்துவழிபட்டது ஆன்மாக்களின்பொருட்டேயாகலான் ஆன்மாக்களுக்குரிய மும்மலங்களுள் மாயா கன்மங்களை யொழித்தற்குக் காப்பும் கடகத்தையும் கட்டினாரெனவும், ஆணவமலத்தை யொழித்தற்கு அருச்சனை செய்தாரெனவுங் கொள்ளலுமொன்று. (௧௩௩)

அன்னணமருச்சித்தேத்தியாளுடை யெம்பிராட்டி
யுன்னுவோர்பிறவிமாய்க்குமுள்ளகர்வரைப்பின்முற்ற
மன்னியவளங்களெல்லாமனங்களிபயப்பநோக்கிப்
பன்னரும்பெருமைசான்றபரவெளிப்பிலத்தையுற்றாள்.

(இ-ள்.) ஆளுடை எம்பிராட்டி-என்னை யாளாகவுடைய பெருமாட்டி, அன்னணம் அருச்சித்து ஏத்தி-அவ்வகையாக அருச்சித்துவழிபட்டு, உன்னுவோர் பிறவி மாய்க்கும் உள் நகர் வரைப்பில் - நினைக்கின்றவர்களுடைய பிறவியை யொழிக்கும் உள் நகரவெல்லையில், முற்ற மன்னிய வளங்கள் எல்லாம் - முழுவதும் நிலைபெற்றுள்ள வளப்பங்களெல்லாம்,மனம் களி பயப்ப நோக்கி-மனங்களிக்கப்பார்த்து, பன்னரும் பெருமைசான்ற - சொல்லுதற்கரிய பெருமையிற்சிறந்த, பரவெளிப்பிலத்தைஉற்றாள் - சிதாகாசசொரூபமாய் விளங்கும் பிலத்தையடைந்தார். (எ-று.)

உமாதேவியார் கங்கணேஸ்வரனையும் கடகேஸ்வரனையும் வழிபட்டு நகருக்குள்சென்று அங்குள்ளவளப்பங்களெல்லாங் கண்களிக்கப்பார்த்துப்பிலாகாசத்தையடைந்தாரென்க. (கூகூச)

ஐம்பெரும்பூதமுன்னாளாயிடைமலர்ப்பூம்பொய்கை
தம்பெயர்நிறுவித்தொட்டுத்தடந்திரைகொழிக்குந்தூநீர்ப்
பைம்புனல்படிந்துபன்னாண்மெய்த்தவம்பரிக்குங்காலைக்
கம்பனார்கருணைகூர்ந்துகாட்சிதந்தருளப்போற்றி.

(இ-ள்.) முன்னாள் - முன்னொருகாலத்தில், ஐம்பெரும்பூதம் - பஞ்ச மகா பூதங்கள், ஆயிடை - அப்பிலத்தருகில், மலர் பூம்பொய்கை தம்பெயர் நிறுவி தொட்டு - மலர்கள்நிறைந்த ஓர்தடாகத்தை தங்கள் பெயர்வைத்துண்டாக்கி, தடம் திரை கொழிக்கும் தூநீர் பைம்புனல் படிந்து-பெரிய அலைகள்வீசும் பரிசுத்தமாகிய அத்தீர்த்தத்தில் மூழ்கி, பல் நாள் மெய்த்தவம் பரிக்குங்காலை-அநேககாலம் மெய்ம்மையாகிய தவத்தில் நிலைபெற்றிருக்கும்பொழுது, கம்பனார் கருணைகூர்ந்து-ஏகம்பவாணர் கருணைமிகுந்து, காட்சி தந்தருள போற்றி-தரிசனந்தந்தருளத் தோத்திரஞ்செய்து. (எ-று.)

முன்னொருகாலத்தில் பஞ்சபூதங்கள் அப்பிலத்தருகில் தங்கள்பெயரால் ஓர் தீர்த்தமுண்டாக்கி அத்தீர்த்தத்தில் மூழ்கி நெடுங்காலம் மெய்த் தவத்தைச் செய்ய ஏகம்பவாணர் கருணைகூர்ந்து காட்சிகொடுக்க அப்பூதங்கள் கண்டு தோத்திரஞ்செய்தென்க. (கூகூரு)

மூவருந்தம்முட்கூடன்முதலியவேறுபாட்டான்
மேவருங்கரணம்யாக்கைவிடயமாதாரமெல்லா
மாவகைவரங்கள்பெற்றவத்திறத்துலகமுற்றும்
பாவுதன்வடிவாயோங்குமுலகாணிக்கரையின்பாங்கர்.

(இ-ள்.) மூவரும்-முக்குணங்களும், தம்முள்கூடல்முதலியவேறுபாட்டால்-தம்முள்ளேகூடுதல்முதலிய பஞ்சீகரணத்தினால், மேவருங்கரணம் யாக்கைவிடயம் ஆதாரம் எல்லாம் ஆவகை-பொருந்தும்மனமுதலியகரணங்களும் மானிடசரீரமுதலிய சரீரங்களும் சத்தமுதலிய விடயங்களும் எவையிற்றுக்கும் ஆதாரமாகிய புவனங்களும் ஆகிய இவைகளெல்லாம் தங்களால் ஆகும்வகையாக, வரங்கள்பெற்ற-வரங்களைப்பெற்றன, அத்திறத்து உலகமுற்றும் பாவுதன் வடிவாய் ஓங்கும்-அக்காரணத்தால் உலகமுழுவதும் பரவியதனது உருவமாய் சிறப்புற்றோங்கும், உலகாணிக் கரையின்பாங்கா - உலகாணித்தீர்த்தக்கரையில். (எ-று.)

ஐம்பூதங்களும் சாத்துவிகம் - இராசதம் - தாமதம் என்று சொல்லப்பட்ட முக்குணங்களும் பஞ்சீகரணப்படுவதால் ஆகும் தனுகரணபுவனபோகங்களெல்லாம் தம்மால் ஆகும் வகையைப்பெற்றன அக்காரணத்தால் உலகெல்லாமாயிருக்கின்ற உலகாணித் தீர்த்தக்கரையில் வந்தனர் அம்மையாரென்க.

தம்முட்கூடலென்றது சத்துவத்தில் இரசோதமோகுணங்களும், அப்படியே இராசத்தில் சாத்துவிததாமதங்களும், தாமதத்தில் சாத்துவித இராசதங்களும் கூடுதலாம் உலகெல்லாமாயிருக்கும் ஆற்றலைப்பூதங்கள் பெற்றது இத்தீர்த்தவிசேடத்தாலாதலால் இத்தீர்த்தத்தின்சத்தே உலகமுற்றும்பரவியிருப்பதென்பார் உலகமுற்றும் பாவுதன்வடிவாயோங்கு முலகாணியென்றார். மூவரென்றது முக்குணங்களை ஐவர்கொண்டிங்காட்டவாடி என்புழிப்போல. (கூகூசு)

ஆங்கினிதமர்ந்துவைகித்தவம்புரிகருத்தளாகி
யூங்குடனணைந்தவிண்ணோர்க்கருள்விடையுதவியங்குத்
தேங்குநீருலகமுய்யத்திருவறச்சாலையாக்கி
மாங்குயிற்கிளவிநங்கையறமெலாம்வளர்க்கலுற்றாள்.

(இ-ள்.) மாங்குயில் கிளவி நங்கை - மாமரத்திலுள்ள கிளிப்பிள்ளைபோலும் இன்சொல்லையுடைய உமாதேவியார், ஆங்கு இனிது அமர்ந்து வைகி - அவ்விடத்தில் மகிழ்ந்துவசித்திருந்து, தவம் புரி கருத்தளாகி-தவஞ்செய்யும் எண்ணமுடையவராய், ஊங்குடன் அணைந்த விண்ணோர்க்கு அருள்விடையுதவி - தன் பின்னோடு வந்து சேர்ந்ததேவர்களுக்குக்கருணையோடு விடைதந்து, அங்கு தேங்கு நீர் உலகம் உய்ய - அவ்விடத்தில் கடல்சூழ்ந்த நிலவுலகமுய்ய, திரு அறச்சாலை ஆக்கி-செல்வந்தரும் தருமச்சாலையையமைத்து, அறம் எல்லாம் வளர்க்கல் உற்றாள் - எல்லாத்தருமங்களையும் வளர்க்கத்தொடங்கினார். (எ-று.)

அம்மையார் அவ்வுலகாணித் தீர்த்தக்கரையின்கண்ணே தங்கியிருந்து தவஞ்செய்யக்கருதி தேவர்களுக்கு விடைகொடுத்து உலகுய்யுமாறு அங்கு அறச்சாலையையமைத்து முப்பத்திரண்டறங்களையும் வளர்க்கத்தொடங்கினொன்க. (௧௩௭)

தெய்வந்தென்புலத்தார்பூதமானிடம்பிரமமென்றோ
ரைவகையெச்சஞ்சூக்தந்துறந்தவர்மடங்களன்பு
செய்யுமில்வாழ்வார்க்கில்லமனைக்குபகரணந்தேம்பூப்
பெய்தமைதண்ணீர்ப்பந்தரெங்கணும்பிறங்குசோலை.

(இ-ள்.) தெய்வம்தென்புலத்தார் பூதம்மானிடம் பிரமம் என்று ஓர் ஐவகை எச்சம்-தேவயாகம் பிதுர்யாகம் பூதயாகம் மானுடயாகம் பிரமயாகம் என்று சொல்லப்பட்ட ஐவகையாகங்களியற்றியும், சூக்தம்-மந்யுசூக்தமென்னும்பெயருடைய மந்திரங்களையோதியும் துறந்தவர்மடங்கள் அன்பு செய்யும் இலவாழ்வார்கரு இல்லம்-துறவறத்தார் வாசஞ்செய்யும் மடங்களும் அன்புசெய்கின்ற இல்லறத்தார்வசிக்கும் இடங்களும், மனைக்குஉபகரணம் - அவ்வில்லத்துக்குரிய உபகரணத் திரவியங்களும்,தேம்பூபெய்துஅமைதண்ணீர்ப்பந்தா- நறுமணங்கமழும் மலர்மாலையாலமைக்கப்பட்டுள்ள தண்ணீர்ப்பந்தரும், எங்கணும்பிறங்குசோலை - எவ்விடத்தும் பொலிவுபெற்று விளங்கும் சோலைகளும் (ஆகியஇவைகளையமைத்தும்). (எ-று.)

தெய்வயாகமுதலிய ஐவகையாகங்கள் மந்யுசூக்தமென்னுமந்திரங்கள் ஆகிய இவற்றைச்செய்தும் ஓதியும் முனிவரிருப்பிடங்களும் வீடுகளும் வீட்டுக்குரியசெல்வங்களும் தண்ணீர்ப்பந்தர்களும் சோலைகளும் ஆகிய இவற்றை எங்குமுண்டாகச்செய்துமென்க.

தெய்வயாகம் - ஔபாசனாதி அக்னிஹோத்ரம், பிதுர்யாகம் - ஸாநாநகாலத்தில் தர்ப்பிக்குந்தர்ப்பணம், பூதயாகம் - வைஸ்வதேவம் ஸ்வாநவாயசாதிபலி, மானிடயாகம் - அதிதிபூசை, பிரமயாகம் - ரிஷிதர்ப்பணம், சூக்தம் - வேதத்தினோர்பாகம். (௧௩௮)

இரப்பவர்குருடரெவ்வமுற்றவர்புரத்தல்வெங்கோய்
தூரக்குநன்மருந்துதூவாய்மகவினையோம்பல்சுண்ணம்
பரித்தபாகடையேயெண்ணெய்பைம்புனல்குளிப்பவேண்டு
மருக்கிளர்துவர்களாதிமலரணைநிலனுன்கன்னி.

(இ-ள்.) இரப்பவர் குருடர் எவ்வமுற்றவர் புரத்தல் - யாசிப்பவர் கண்ணில்லாதவர் (ஓர் துணையுமின்றி) தனிமையாயிருப்பவர் ஆகிய இவர்களைக்காத்தலும், வெந்நோய் அரக்குநன்மருந்து - கொடியநோயைப் போக்கும் நல்ல அவுடதங்களைக்கொடுத்தலும் தூவாய்மகவினை ஓம்பல்-பரிசுத்தமானவாயையுடைய குழந்தையைப்பால்கொடுத்துப் பாதுகாத்தலும், சுண்ணம்பரித்த பாகடை-சுண்ணந்தீட்டியதாம்பூலமும், எண்ணெய் பைம்புனல்-எண்ணெயும் குளிர்ந்ததண்ணீரும், குளிப்பவேண்டும் மருகிளர்துவர்கள் ஆதி - ஸ்நானஞ்செய்வதற்கு வேண்டும் மணங்கமழும் வாசனைப்பொடிமுதலிய வைகளும், மலரணை - புஷ்பசயனமும், நிலன்-பூமியும், ஆன் - பசுவும், கன்னி - பெண்ணும். (எ-று.)

முயற்சியின்றி வறுமையால் யாசிப்பவர்க்குப்பொருளைக்கொடுத்தலும், அந்தகர்க்குக்கண்கொடுத்தலும், சுகம் வரப்பெற .. வருந்துவோரைக்காத்தலும், அவுடதமின்றி வெந்நோயால் வருந்துவோர்க்கு நன்மருந்து கொடுத்தலும், மகவுக்கு ஆவின்பால் கொடுத்துவளர்த்தலும், பாகடை விரும்புவோர்க்கு சுண்ணந்தீட்டிய தாம்பூலங்கொடுத்தலும், பரிமளப்பொடிமுதலிய சுகந்த நீரோடு ஸ்நானஞ்செய்ய விரும்புவோர்க்கு எண்ணெய் மருக்கிளர்துவர்கள் தண்ணிய புனல்கள் முதலியன கொடுத்தலும், பெண்ணலம் விரும்புவோர்க்கு மலரணைகொடுத்தலும், நிலம் பசு கன்னிகைவிரும்புவோர்க்கு அவ்வவற்றைக் கொடுத்தலுமென்க. (கூ௯)

கடிமணம்விளக்குமாறாக்கடனொழித்திடுதலீச
னடியவர்விழைவவீகையக்கமாமணிவெண்ணீறு
படியிலாக்கடவுட்பூசையுபகரணங்கள்பாசந்
தடிதருவேதவாய்மைச்சைவநூல்புராணநல்கல்.

(இ-ள்.) கடிமணம் விளக்கு மாறாக் கடன் ஒழித்திடுதல் - கல்யாணஞ்செய்தலும் தீபங்கொடுத்தலும் நீங்காத கடனை யொழித்திடுதலும், ஈசன் அடியவர் விழைவ ஈகை - சிவனடியார்கள் வேண்டுவனவற்றை யில்லையெனாது தளித்தலும்; அக்கமாமணி வெண்ணீறு-உருத்திராக்ஷமாலிகை வெள்ளிய திருநீறு ஆகிய இவைகளைக்கொடுத்தலும், படியிலா கடவுள் பூசை உபகரணங்கள் - ஒப்பில்லாத இறைவனுடைய பூசைக்கு வேண்டும் உபகரணமாயுள்ள கருவிகளைக்கொடுத்தலும், பாசம் தடிதருவேதவாய்மை சைவநூல் புராணம் நல்கல் - பாசத்தைப்போக்கவல்ல வேதவுண்மைகளையெடுத்துக்கூறும் ஆகமசாஸ்திரங்களையும் புராணங்களையுங் கொடுத்தலும் (எ-று.)

மணம்விரும்புவோர்க்குத் திருமணஞ்செய்தலும், தீபங்கொடுத்தலும், என்றுந் தீராக்கடனுடையோர்க்கு கடனைத்தீர்த்தலும், சிவனடியார்கள் விரும்புவன எவையேனும் அவை அவர்பொருளென்று கொடுத்தலும், சிவசின்னமெங்கும் பொலிவுபெற விபூதிருத்திராக்கங்களைக்கொடுத்தலும், இப்படியன் என்றுஅளவிடப்படாப்பெருமான் பூசைக்குரிய உபகரணங்களைக்கொடுத்து வழிபடச்செய்தலும், பாசத்தைப்போகக வல்ல சிவஞானந்தோன்ற சிவாகமபுராணங்களைக்கொடுத்தலுமெனக. (கசு௦)

சிவபிரானடிக்கீழ்ப்பத்திசெவியறிவுறுத்தலோடு
முவகையினபயம்யார்க்கும்வழங்குதலுள்ளிட்டோது
நவையிரியறமெண்ணான்குநாடொறுநிகழ்ச்சிமாணப்
பவநெறிதுரக்குஞானப்பைந்தொடிநிறுவிப்பின்னர்.

(இ-ள்.) சிவபிரான் அடிக்கீழ் பத்தி செவி யறி வுறுத்தல் - சிவபெருமான் திருவடியின் கீழ் வளர்வதாகிய பத்தியைக்கேட்கச்செய்தலும், யார்க்கும் உவகை யின் அபயம் வழங்குதல் - எத்தகையோர்க்கும் மனக்களிப்புடன் அபயங்கொடுத்த லும், உள்ளிட்டோதும் நவை இரி அறம் எண்ணான்கும் - ஆகிய இவைமுதலாகச் சொல்லப்பட்ட குற்றமற்ற முப்பத்திரண்டறங்களும், நாடொறும் நிகழ்ச்சிமாண - எந்நாளும் நிலைபெற்றோங்க, பவ நெறி துரக்கும் ஞானப்பைந்தொடி - பிறக்கும் நெறியைத்துறக்க வல்ல ஞானசொரூபியாகிய அம்மையார், நிறுவி - நிலைநிறுத்தி, பின்னர் - பின்பு. (எ-று.)

சிவபெருமான் திருவடியில் வரக்கடவனவாகிய பக்திநெறியைச் செவியறி வுறுத்தியும், அப்பத்திநெறியில் நின்று சரியை கிரியா யோகஞான முதலிய நான்கு பணிகளையுஞ் செய்வோர் யாவரும் அடைதற்குரிய அவ்வம்முத்திகள் கைகூடுமாறு அபயந்தருதலும் ஆகிய முப்பத்திரண்டறங்களும் என்றும் இவ்வுலகின்கண் நிலை பெற்றோங்க அம்மையார் நிலைபெறச்செய்து பின்னர் என்க.

தெய்வந்தென்புலத்தார் என்னுஞ் செய்யுள் முதல் சிவபிரானடிக்கீழ்ப்பத்தி என்னுஞ் செய்யுள்காறும் அம்மையார் செய்தருளிய அறங்களைக் கூறியதாமென்க. இவற்றுள் தெய்வமுதல் மாறுக்கடனொழித்திடுதல் என்பதீறாகக்கூறிய வறங்கள் உலகினரியற்றற்குரிய அறங்க ளிவையென் றுணர்தற்கும் ஈசனடியவர் விழைவ ஈகை என்பது முதல் அபயம் யார்க்கும் வழங்குதல் என்பதீறாகக்கூறிய வறங்கள் சத்திநிபாதரியற்றற்குரிய அறங்களிவையென் றுணர்தற்கும் அம்மையாரியற்றிய) அறங்களாமென்க.

அபயம் யார்க்கும் வழங்குதல் என்றதை இங்ஙனங்கூறிய உலகினர்க்கும், சத்திநிபாதர்க்கும் என்றுரைப்பினுமமையும். (௧௬௪௧

வீங்குநீர்க்கம்பையாற்றின்கரைமிசைவிரிமாநீழ
லோங்கொளிப்பொருளைக்காணுமுறுபெருங்காதலீர்ப்ப
வாங்குநுண்மருங்குல்நோவவளரிளங்குவவுக்கொங்கைப்
பாங்கியர்முதலோர்சூழப்படரொளிமறுகிற்போந்தாள்.

(இ-ள்.) வீங்குநீர் கம்பையாற்றின் கரைமிசை - மிகுந்த நீர்மயமாகிய கம் பாநதிக்கரையின்கண், விரிமாநிழல் ஓங்கு ஒளிப்பொருளை - பரந்திருக்கின்றமாநிழ லின்கண்சோதிமயமாய் விளங்கும் சிவலிங்கமூர்த்தியை, காணும் உறுபெரும்காதல் ஈர்ப்ப - பார்க்கும் பேராசை முன்னின்றிழுக்க, வாங்கு நுண் மருங்குல்நோவ - ஒசிந்த நுண்ணிய இடைவருந்த, வளர் இளம்குலவு கொங்கை பாங்கியர் முதலோர் சூழ - வளர்கின்ற மெல்லிய திரண்ட தனங்களையுடைய பாங்கியர் முதலாகிய மங் கையர்களெல்லாம் சூழ்ந்துவர, ஒளி படர் மருங்கில்போந்தாள் - ஒளி வீசும் வீதி யிற் சென்றனர். (எ-று.)

கம்பாநதிக்கரையின்கண் செழுமையோடு படர்ந்திருக்கும் ஆம்பரவிருக்க நீழலில் வீற்றிருக்கும் சோதிலிங்கமூர்த்தியாய் விளங்கும்ஏகம்பவாணனைக் காணும் பெருங்காதல் முன்னின்றீர்ப்ப அம்மையார் பாங்கியர் முதலாகிய மங்கையரெல்லாம் சூழ்ந்துவர நவரத்ன ஒளிவீசும் வீதியினிடையே சென்றாரென்க.

பாங்கியர் முதலோரென்றது அம்மையார் திருக்கயிலாயத்தின்கணின்று போந்தகாலத்து உடன்வந்த உருத்திரமடந்தையர் முதலாகக்கூறிய மங்கையர்க ளென்க. (௧௬௪௨)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மலையான்மட மகண்மறுகூடணை தலும்வளமாநகரவர்தொழுதாடி
யுலவாநசையொடுபணிவார்மனமகிழுறுவார்வயின்வயினணிசெய்வார்
குலைநீள்கதலிகள்கமுகநதுகில்விரிகொடிவேறிணையனநடுவார்கண்
மலர்மாலிகைநவமணிமாலிகையெழின்மலிதோரணநிரைநிறைவிப்பார்.

(இ-ள்.) மலையான் மடமகள் - மலையரையன்மகளாகிய அம்மையார், மறுகூடு அணைதலும் - வீதியில் வருதலும், வள்மாநகரவர் - வளப்பம்பொருந்தியகாஞ்சிநகரவாசிகள், தொழுது ஆடி உலவாநசையொடு பணிவார் - வணங்கி ஆனந்தக்கூத்தாடி கெடாத அன்போடு மீளவும் வணங்குவார்கள், மனமகிழுறுவார்-மகிழ்ச்சியடைவார்கள், வயின் வயின் அணி செய்வார்-தங்கடங்களிடங்கள்தோறும் அலங்காரஞ்செய்வார்கள், நீள்குலை கதலிகள் கமுகம் - நீண்ட குலைகளையுடைய வாழைகள் பாக்குமரங்கள், துகில்விரிகொடி - விரிந்ததுகிற்கொடிகள், வேறு இணையனநடுவார்கள் - இவைபோன்ற பலதுவசங்களை நாட்டுவார்கள், மலர்மாலிகை நவமணி மாலிகை எழில்மலிதோரணம் - (இதுவேயுமன்றி) பூமாலைகளும் நவரத்னமாலைகளும் அழகுமிக்க தோரணங்களும், (ஆகியஇவைகளை) நிரை நிறைவிப்பார்-வரிசையாக இடைவெளியின்றி நிறைத்து வைப்பார்கள். (எ-று.)

அம்மையார் வீதிவழியேவரவும் அந்நகரவாசிகள் தொழுதும் ஆடியும்ஆசையோடு பணிந்தும் மனமகிழ்வார்கள். அம்மகிழ்ச்சி மீதூர்தலால் தங்கள் தங்களிடங்கள்தோறும் அலங்காரஞ்செய்வார்கள். (என்னையெனின்) வாழைகமுகுகள் நடுவார்கள். துகிற்கொடிகள்மகரதோரணமுதலியன கட்டுவார்கள், இதுவுமன்றி பூமாலை இரத்தினமாலை முதலிய மாலைகளை இடைவெளியில்லாமல் எங்கும் வரிசையாக நிறைவிப்பார்களென்க. (கரு௯)

மறுகெங்கணும்விரைகமழும்படிகுளிர்பனிநீர்விடுவர்கண்மறையோதி
நிறுவுந்தவநிலைமுனிவோர்கரமிசைநிறைபொற்குடமுடனெதிர்கொள்வார்
சிறுநுண்ணிடைமறைமடவார் வாழ்த்திசைதிகழ்மங்கலமொழியுரை செய்
வார், நறவம்பயில்குழலரமங்கையரொடுநரமங்கையர்நடமிடுவாரால்.

(இ-ள்.) மறுகு எங்கணும் விரைகமழும்படி - வீதியெங்கும் நறுமணங்கமழும்படி, குளிர்பனிநீர் விடுவர்கள்-குளிர்ந்த பனிநீரைப் பெருக விடுவார்கள், மறையோதி நிறுவும் தவநிலை முனிவோர் - வேதநெறிகளை யெடுத்துக்கூறி அந்நெறியில் யாவரையும் நிலைநிறுத்தும் தவநிலையையுடைய முனிவர்கள், கரமிசை - கைகளில், நிறை பொற்குடமுடன - நீர்நிறைந்த பொற்குடத்தோடு, எதிர் கொள்வார் - எதிர்கொண்டு வருவார்கள், சிறு நுண் இடை மறைமடவார் - சிறிய நுண்ணிய இடையையுடைய வேதியர் மங்கையர், வாழ்த்து - வாழ்த்தொலிகளையும், இசைதிகழ் மங்கலமொழி - இசைவிளங்கும் மங்கலமொழிகளையும், உரைசெய்வார் - எடுத்துப் பாடுவார்கள், நறவம் பயில் குழல் அரமங்கையரொடு - நறுமணங்கமழும் கூந்தலையுடைய தேவமங்கையர்களோடு, நரமங்கையர் நடமிடுவார் - மானிடமங்கையரும் நடனஞ் செய்வார்கள். (எ-று.)

(தோரணங்களை வரிசையாக நிறுத்தியதேயல்லாமல்) பனிநீரை வீதிகளெங்கும் நறுமணங்கமழும்படி தெளிப்பார்கள், முனிவர்கள் பூரணகும்பங்களை யெடுத்துக்கொண்டு எதிரே வருவார்கள், பிராமணமங்கையர்கள் வாழ்த்திசைகளையும் மங்

கலப்பாட்டுகளையும் பாடுவார்கள். தேவஸ்திரீகளும் மானிடஸ்திரீகளும் கலந்துநடனஞ்செய்வார்களென்க. (௧௬௪)

பொங்கும்பெருகெழில்புனையுந்திருநகர்புரிவின்வலம்வருமுறையானே
தங்குங்கலைமகண்மலர்மாதிமையவர் மடவார்காளிகள்சாத்தன்சீ
ரெங்கும்பரவியதிறல்யோகினிகளையெழுமாதர்களையிடந்தோறு
மங்கங்கிருவினளென்னெஞ்சிருவியவம்பொற்றிருவடிபிறர்காணாள்.

(இ-ள்) என் நெஞ்சு இருவிய - என்னெஞ்சத்தில் நிலைபெறுவித்த, அம்பொன்திருவடி - அழகியபொன்போன்ற திருவடியை, பிறர்காணாள் (யானன்றி) ஏனையோரால் காண்டற்கரிய அம்மையார், பொங்கும் பெருகு எழில் புனையுந் திருநகர் - ஒன்றுக்கொன்று விசேடித்திருக்கும் பெரிய அணிகளால் அலங்கரிக்கப்பெற்றிருக்கும் காஞ்சி நகரத்தை, புரிவின் வலம்வரும் முறையான் - விருப்பத்தோடுபிரதக்ஷிணமாகவரும் முறைமையில், தங்கும் கலைமகள் - தன்னுடனிருக்கும் சரஸ்வதியையும், மலர்மாது - இலக்குமியையும், இமையவர்மடவார் - அரம்பையர்களையும், காளிகள் - காளிக்கூட்டங்களையும், சாத்தன் - அரிகரபுத்திரனையும், எங்கும் பரவியசீர் திறல்யோகினிகளை - எவ்விடத்தும் பரவிய பெருஞ்சிறப்பினையுடைய வலியயோகினிகளையும், எழுமாதர்களை - சப்தமாதர்களையும், இடம்தோறும் - (அவரவர்கள் தங்குதற்குரிய இடங்கள்தோறும், அங்கு அங்கு இருவினள் - (அவரவர்களைக்காவலாக) அவ்வவ்விடங்களில் தங்கும்படிச்செய்தனர். (எ-று.)

அணிஅணியாக அலங்காரம் பெற்றிருக்கும் காஞ்சிநகரத்தை அம்மையார் பிரதக்ஷிணமாக வரும்போது தன்னுடன்வந்த கலைமகள் திருமகள் இமையவர்மகளிர்கள் காளிகள் சாஸ்தா யோகினிகள் சப்தமாதர்கள் ஆகிய இவர்களை அவரவர்களுக்குரிய விடங்கள்தோறுங் காவலாகத் தங்கியிருக்கும்படிச் செய்தனரென்க.

ஒருவர் நெஞ்சத்துள்ள பொருளை மற்றொருவரறிதற்குக் கூடாமைபோல் என்னுள்ளத்தகப்பட்ட அரியபொன்னடி எவர்காணப்பெறுவார் என்று தன் மெய்யன்புதோன்ற என்னெஞ்சிருவிய வம்பொற்றிருவடி பிறர்காணாள் எனவும், அஷ்டதிக்குகளிலும் திக்பாலகர் எவ்வாறு பரிபாலகர்களாக விருக்கின்றார்களோ அவர்போலும் திக்குகள்தோறும் யோகினிகள் கூட்டங்கூட்டமாக விருப்பவராதலால் எங்கும் பரவிய திறல் யோகினிகள் எனவுங்கூறினர்.

ஈண்டுக்கூறிய கலைமகள் முதலானவர்களேயன்றி நவசத்தி, மகேஸ்வரி, என்பவர்களோடு ஈசானதிக்குமுதல் குபேரதிக்கீறாக யோகினிகள், இலக்குமிமுதலியோர், இமையவர்மடவார்; நவசத்திகள், சத்தமாதர்கள், காளி, சாஸ்தா, மகேஸ்வரி என்னுமிவர்களை முறையே பிரதிட்டை செய்தனரென்று வடநூலிற்கண்டிருத்தலின் அங்கங்கிருவினளென்றார். (௧௬௫)

సంస్థాప్యయోగినీస్సర్వాః కమలాదీశ్చకన్యకాః । సుమనోఽప్సరసోబృన్దాన్నవసఙ్ఖ్యాశ్చ శక్తికాః ॥ మాతౄశ్చకాళిసహితాస్సహశాస్త్రామహేశ్వరీ । క్రమేణసర్వాణ్యేతానిస్థానాని సుసమాహితా ॥ తత్రతత్రచసమ్పూజ్యపూర్వామారభ్యసాదరం । என வருதல்காண்க.

குணபான்முதனிமுடியாரினிதமர் கோயின்முழுவதுமுறையிற்சென்
றிணரார்மலர்கொடு வழிபட்டருளொடுமெனையாளுடையவளெய்துற்று
ணாதரியயன்முதலோரலமரு மொருபேரொளிமருமலர்தூவு
மணமாநிழலிடைவெளியேயெளிவரமாகம்புவிதொழுமேகம்பம்.

(இ-ள்.) அருளொடும் என்னை ஆளுடையவள் - சருணையுடனே என்னையாளாகவுடைய அம்மையார், குணபால் முதல் ஈறிமுடியார் இனிது அமர்கோயில் முழுவதும் - கீழ்த்திசைமுதல் கங்கையையணிந்த சடைமுடியையுடைய இறைவர் இனிமையாக வீற்றிருக்கும் திருத்தளிகளெல்லாம், முறையிற் சென்று - முறைமையாகச்சென்று, இணர் ஆர் மலர்கொடு வழிபட்டு - நெருங்கிய மலர்க்களைக்கொண்டு அருச்சனைசெய்து, அரி அயன் முதலோர்-திருமால் பிரமன்முதலிய யாவரும், உணராது அலமரும் - இத்தன்மையனென்றறிதற்கின்றி அங்குமிங்குமாகச்சுழலும், ஒரு பேரொளி-ஒருபெருஞ்சோதி,மருமலர்தூவும்மணம் மா நிழலிடை-நறுமணங்கமழும் மலர்களைச்சிந்தும் மணமிக்க மாநிழலின்கண், வெளியே எளிவர-வெளிப்பட்டு எளிமையாக எழுந்தருளிவர, மாகம் புவி தொழும் ஏகம்பம்-விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் வணங்கும் திருவேகம்பத்தை, எய்தற்றுள - அடைந்தனர். (எ-று.)

அம்மையார் கீழ்த்திசைமுதல் இறைவன் வீற்றிருக்கின்ற ஆலயங்கள் தோறும்முறைமையாகச்சென்று நெருங்கியமலர்களாலருச்சித்து வணங்கிப் பின்னர் மாநிழலின்கண் சோதிலிங்கரூபமாய் எழுந்தருளியிருக்கும் திருவேகம்பத்தை வந்தடைந்தனரென்க. (கஏ௯)

ஏணிற்பொலிமலையரசன்றருமயிலுள்ளங்களிவரவெம்மானு
ராணைப்படிமனநினைவிற்கடவுளர்யவனன்புரியுமருட்கோயின்
மாணப்பலமணிமுயலுந்தமனியவடிவிற் புரிசையினோக்கத்தைக்
காணப்பெறுகழிகாதற்கடலிடைமூழ்கித்துளைபவள்கரைகாணாள்.

(இ ள்.) எம்மானார் ஆணைப்படி - எமது இறைவன் ஆணையின்படி, கடவுளர் யவனன்- தேவர்கம்மியனாகியமயன், மன நினைவில் புரியும் - மனோசங்கற்பத்தாற்செய்யும், அருட்கோயில்-அருட்கோயிலின், மாணப் பல மணி முயலும்-சிறப்பாகப் பலநவமணிகளா லிழைக்கப்பட்டுள்ள, தமனிய வடிவின் - பொன் மயமாய் விளங்கும் அழகினையுடைய, புரிசையின் நோக்கத்தை - மதிலின் உயர்வை, ஏணிற் பொலி - சிறந்து விளங்கும், மலையரசன் தருமயில் -மலையரையன்மகளாகிய மயில் போலுஞ் சாயலையுடைய அம்மையார், உள்ளம் களிவர - மனதில் ஆனந்தம் மேன்மேற் பொங்கியெழ, காணப்பெறு கழிகாதல் கடலிடை - பார்க்கப்பெற்ற மிகுதியாகிய ஆசைக்கடலில், மூழ்கி துளைபவள் கரைகாணாள்- மூழ்கியமுழுந்தி அதன் கரையைக்காணுதவராயினர். (எ-று.)

இறைவனாணையால் தேவகம்மியன் மனத்தினால் சங்கற்பித்து நிர்மாணஞ் செய்யப்பட்ட திருக்கோயிலில் இரத்தினங்களாலிழைக்கப்பட்டுப் பொன்மயமாய் விளங்கும் மதிலழகை அம்மையார் காணப்பெற்று (இதனைப்பெற்றோமென்கிற) களிப்பினாலெழுந்த ஆசைக்கடலில் மூழ்கித் திளைத்து அவ்வாசைக்கடலின் கரையைக்காணாதவராயினர் என்க.

எம்பெருமானைப்பிரியா நங்கையாகிய அம்மையார் கயிலையினின்றும் பிரிவுற்ற அக்காலத்தில் "தணக்குநோயொருபாலீர்ப்ப,கம்பனைப்பூசைசெய்யும் காதலொருபாலீர்ப்ப எம்பிரானருளாயென்று வேண்டினராதலின்" இங்கு திருக்கோயிலின் புரிசையின்பேரழகைக்கண்ட வளவிலேயே அம்மதிலினுயர்வைநோக்கிக் கைலையங்கிரியைக்கண்டது போலும் சண்டு, இக்கிரியைக்காணப்பெற்றோமாகையால் இனி எம்பெருமானையும் காணப்பெறுவோமென் றெண்ணிய வெண்ணமும், எண்ணியபடியே காணப்பெற்றால் தழுவப்பெறலாமன்றோ என்கின்ற மகிழ்வும், ஒருப்பட்டீர்ப்ப

இதனால் மதில் ஆசையைவெளிப்படுத்திய தெனவும், கோபுரம் சிவசொரூபதைக்காட்டி அன்பினுடையாளங்களையெல்லாம் வெளிப்படுத்தியதெனவும்கொள்க. கோபுரம் சிவசொரூபத்தைக்காட்டிய தென்னை யெனின் கோபுரத்தின் ஒன்பது நிலை-உருவம் அருவம் அருவுருவமாகிய நவந்தருபேதங்களென்றும் இந்நவபேதங்களையும் உடையவனாய் நடிப்பவன் ஏகம்பநாதனென்றும் காட்டியதனாலென்க. இவ்வுண்மை விளங்கவே நவபேதங்களைக்காட்டுவதனால் கோபுரந்தூலலிங்கமெனவும் எனவே இந்நவவடிவங்களும் சிவபெருமானுக்குத் தூலமாதலாலெனவும். இக்கோபுரத்தையுடைய ஆலயத்துள் வீற்றிருக்கும் சிவலிங்கமூர்த்தியைநவபேதங்களைக்கொண்டு அனுக்கிரகஞ்செய்யும் நாதனெனவும் பெரியோர் கூறுவர். (கச௮)

அங்கட்சகமுழுதடையப்பொலிவுறுமைந்தாமாவரணந்தன்னிற்
றங்கித்திகழ்சிவமறையோர்முதலிய சைவர்க்கருள்செய்துவலம்வந்து
செங்கட்கதிரவர்காலத்தீயிறையவர்மாலயனொடுசெறிநான்கி
னெங்கட்கிறையவளெய்தித் தென்புடைவிண்டுத்தளியெதிர்கண்டுற்றாள்.

(இ-ள்.) அங்கண் சகமுழுதும் அடைய பொலிவுறும்- அவ்விடத்துஉலகினைவெல்லாம் நெருங்கியிருக்கப்பொலிவுபெற்றிருக்கும், ஐந்தாம் ஆவரணந்தன்னில்- பஞ்சமாவரணத்தில், தங்கி- சற்றெழுந்தருளியிருந்து, திகழ் சிவமறையோர் முதலியசைவர்க்கு அருள்செய்து - சைவசீலத்தோடு பிரகாசிக்கும் ஆதிசைவர்முதலிய சைவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்து, வலம்வந்து - (அந்த ஐந்தாமாவரணத்தை) பிரதக்கிணமாகவந்து, செம் கண் கதிரவர் - செவந்தகண்களையுடைய சூரியர்கள், காலத்தீ இறையவர்-காலாக்கினி உருத்திரர், மால் அயனொடு செறிநான்கில் - திருமால் பிரமன் ஆகிய இவர்களோடு நெருங்கியிருக்கின்ற நான்காம் ஆவரணத்தில், எங்கட்கு இறையவள் எய்தி - எங்கள் தலைவியாகிய பெருமாட்டிசென்று, தென்புடை விண்டுத்தளி எதிர்கண்டு உற்றாள் - தென்பக்கத்தில் விண்டுபூசித்த திருத்தளியை எதிரே பார்த்து அங்கு நின்றனள். (எ-று.)

(கோபுரத்தைக்கண்டு தொழுது உள்ளே சென்ற அம்மையார்)உலகினைவெல்லாம் வந்தடைதற்கு இடமாயுள்ள ஐந்தாமாவரணத்தில் தங்கி சிவவேதியர்முதலிய சைவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்து அப்படி பிரதக்கிணமாக வந்து சூரியர் முதலாயினோர் சூழ்ந்திருக்கும் நான்காமாவரணத்திற்சென்று அங்கு தென்பக்கத்திலுள்ள விண்டுத்தளியைக்கண்ணுற்று அங்குநின்றனளென்க.

ஐந்தாமாவரணந்தன்னில் சிவமறையோர் முதலியசைவர்என்றதனால்-காஞ்சிநகரம் சப்தாவரணத்தோடு கூடியிருப்பதெனவும், அவற்றுள் ஏழாவதுஆறாவது ஆவரணங்கள் மறையோர் முதலாகக்கூறப்பட்ட நால்வகை வருணத்தோர் வசிப்பதற்குரிய இடங்களாயிருக்குமெனவும், அவ்விரண்டாவரணமும் நீங்கலாகஐந்தாமாவரணத்தில் அந்நான்கு வருணத்தாருக்கும் மேம்பட்டவாகிய சைவவேதியரும் சைவரும் வசிப்பதற்குரிய விடங்களாயிருக்குமெனவும், ஏனைய நான்கு மூன்று இரண்டு ஒன்று என்றெண்ணப்பட்ட ஆவரணங்களில் முறையே இறைவனாணையால் உலகபரிபாலகராகிய துவாதசாதித்தர் முதலியோர் வசித்தற்கும் அவர்கள் பூசித்த சிவலிங்கங்கள் கோயில்கொண்டிருத்தற்கும், சிவகணங்களும் சத்திகணங்களும் வீற்றிருப்பதற்கும், சதாசிவாதிமூர்த்தங்கள் வீற்றிருப்பதற்கும், இறைவன் வீற்றிருப்பதற்கும் இடமாயுள்ளனவென்று கொள்ளற்பாற்று, (கசகூ)

கலிநிலைத்துறை.

என்றுகூறியசூதனையிருந்தவத்தலைவர்
நன்றுபோற்றினர்நலிதருமைம்புலக்குறும்பு
வென்றமேதகாய்விண்டுவீச்சரமென்றதென்னை
யின்றுநீவிரித்துரையெனக்கடாவலுமிறுப்பான்.

(இ-ள்.) என்று கூறியசூதனை— (விண்டுப்பூளியை அம்மையார்சண்டார்) என்றுகூறிய சூதமுனிவனை, இருந்தவத்தலைவர் - பெரியதவத்திற்சிறந்த நைமிசாரணியமுனிவர்கள், நன்றுபோற்றினர் - நன்றாகத்துதித்து, நலிதரும் ஐம்புலக்குறும்பு வென்ற மேதகாய் - நலியச்செய்யும் ஐம்புலத்தீங்குகளை வெற்றிகொண்ட அறிவிற்சிறந்த பெரியோய், விண்டு வீச்சரம் என்றது என்னை - விண்டு வீச்சரமென்று தேவரீர்சொன்னதுயாது, இன்று நீவிரித்து உரை என கடாவலும் - இப்பொழுது (அதனை) விரித்துக் கூறுவாயென்றுகேட்கவும், இறுப்பான் - சூதமுனிவர்கூறுவார். (எ-று.)

விண்டுவீச்சரத்தைக்கண்டார் அம்மையாரென்று கூறிய சூதமுனிவனை நைமிசாரண்யமுனிவர்கள் போற்றி தேவரீர் விண்டு வீச்சரமென்றீரே அதன் வரலாறென்னை அதனை விரித்துச்சொல்லவேண்டுமென்று கேட்கவும் கூறுவாரென்க.

நைமிசாரண்யமுனிவர்கள் செய்தற்கரிய தவங்களெல்லாஞ்செய்து முடித்த பேராற்றலுடையவராதலின் இருந்தவத்தலைவரெனவும், அத்தவமுடையவர்க்குச் சூதமுனிவர் சிவபெருமானிடத்துப் பேரன்புபெருக இவ்வரிய புராணத்தை ஆனந்தத்தோடுங் கூறினாராதலால் நன்று போற்றினரெனவும், சிவானந்தம்பெருகத் தங்களுக்குக் கூறுவதுபோல் சொல்லளவேயன்றி தாமும் வெலற்கரிய ஐம்புலன்களை வென்று சீவபோதமொழிந்து சிவபோதமுடையவராய் விளங்கினாராதலின் ஐம்புலக் குறும்புவென்ற மேதகாயெனவும் கூறினர். (கரு0)

அள்ளிலைப்படைக்கடவுளர்க்காரமுதளிக்கும்
வெள்ளிவெண்டிரைவிரிகடல்வளைப்பினின்மாயோன்
முள்ளெயிற்றராவணைமிசைநாடகமுயலும்
வள்ளலாரடிமனத்திடைத்தழீஇயினன்றுயில்வான்.

(இ-ள்.) அள் இலை படைக்கடவுளர்க்கு - கூரிய இலைபோலும் அச்சவடிவினையுடைய ஆயுதபாணிகளாகிய தேவர்களுக்கு, ஆர்அமுது அளிக்கும்மாயோன் அரிய அமுதத்தைக் கொடுக்கும் திருமால், வெள்ளி வெண் திரை விரிகடல் வளைப்பினில் - வெள்ளியைப்போலும் வெண்மையாகிய அலைகளையுடைய பெரியபாற்கடலில், முள் எயிற்று அரா அணைமிசை - கூரிய பற்களையுடைய சர்ப்பசயனத்தின்மேல், நாடகமுயலும் வள்ளலார் அடி - நடனஞ்செய்யும் இறைவனுடைய திருவடியை, மனத்திடை தழீஇயினன் துயில்வான் - மனத்தின்கண்தழுவி யோகநித்திரைசெய்துவந்தனன். (எ-று.)

அமரர்களுக்கு அரிய அமுதத்தைக் கொடுத்த திருமால் திருப்பாற்கடலில் சர்ப்பசயனத்தின்மேல், சிவபெருமான் திருவடியைத்தியானித்து அறிதுயில்கொண்டிருந்தனனென்க,

தேவர்களுக்கு இன்சுவையையுடைய அமுதத்தைக் கொடுத்து இன்புறச்செய்த திருமால் அவ்வமுதத்தினுஞ்சிறந்த இன் சுவையையுடையது இறைவனது

கடனமென்றுணர்ந்து அத்திருவடியைத் தேவர்களுக்குக் காட்டாது தன்னுள்ளே யடக்கிப் பருகினனென்பது தோன்ற கடவுளர்க் காரமுதளிக்குமாயோன் நாடக முயலும் வள்ளலாரடிமனத்திடைத்தழீஇயினன் என்றார். (கரு௯)

அனையதன்மையினறிதுயிலமர்பவனொருநாட்
கனைவிளங்கொளியிதயமென்கவிழ்நனைக்கமலந்
தனைமலர்ந்துமேனோக்குறச்செய்தனன்றணவா
வினையிகந்துயர்யோகினல்வளிமிசையெழுப்பி.

(இ-ள்.) அனைய தன்மையில்-நடனபாதத்தைத் தழுவிய மனத்தோடு, அறிதுயில் அமர்பவன் - யோகநித்திரையிலிருக்குந் திருமால், ஒருநாள் கனைவிளங்கொளி இதயமென் கவிழ் நனை கமலந்தனை-ஒருநாள் மிக்க பிரகாசத்தோடு விளங்கும் ஒளிமயமாகிய இதயமென்கின்ற தேனொழுகுந் தாமரையை, தணவா வினை இகந்து உயர்யோகினால் வளி மிசை எழுப்பி மலர்ந்து மேல்நோக்குறச்செய்தனன்-நீங்காத விடயததோற்றமொழிந்து சிறந்த சிவயோகத்தினால் பிராணவாயுவைமேலே யெழுப்பி (அதனால்), மலர்ந்து மேலேநோக்கியிருக்கச்செய்தனன். (எ-று.)

திருமால் தன் மனத்தைச் சிவபெருமான்திருவடியில் வைத்திருக்குந்தன்மையில் சிறந்து அறிதுயிலமர்ந்து இருக்கும்நாளில் ஓர்நாள் தனது இதயகமலத்தைப் பிராணவாயுவைக்கொண்டு மேனோக்குற மலரச்செய்தன னென்க.

சிவசுத்தியானத்திற்குச் சகலசாக்கிரம் விரோதமாகையால் அறிதுயிலமர்பவன் எனவும், அத்துயில் கேவல சுழுத்தியன்றாகையால் அறிதுயிலெனவும், அச்சுழுத்தி கேவலசுழுத்தியன்றாகவே கேவல சுழுத்தியிலந்கரித்துக் கீழ்நோக்கிவரும் பிராணவாயுவை வெளிவிடாது யடைத்தலாகிய பிராணயாமஞ்செய்தனனாகையால் வளிமிசை யெழுப்பியெனவும், அச்செயல் யோகமுறையாதலால் யோகினாலெனவும்-அந்தயோகம் காயசித்தியின்பொருட்டன்றிச் சிவானந்தசித்தியின் பொருட்டாகையால உயர் யோகினாலெனவும், அச்சிவயோகம் பகிர்முகத்தில் தோன்றும்விடய கோசரத்தால்வரும் விருப்பு வெறுப்புகள்மாறாது வருமாயின் அது கூடாதாகையால் தணவா வினையிகந்து எனவும், வெளிமுகங்கொட்டு விருப்பு வெறுப்பற்று சிவயோகமுற்று பிராணவாயுவையுள்ளடக்கி உன்முகப்பட்டு இதயகமலத்தை அப்பிராணவாயுவால் மலர்த்தினனாகையால் இதயமென்கவிழ் நனைக்கமலந்தனைமலர்ந்து மேனோக்குறச் செய்தனன் எனவுங் கூறினார். (கரு௭)

பகருமுந்தியின்மேலிடத்தலமரும்பதுமம்
திகழுருந்திறத்திலங்குநுண்குகையதனிடத்து
நுகருமுண்பகுத்தமருநோன்றழலதன்றலையிற்
றிகழுமேவருநுணங்குபூஞ்சிகையதனடுவண்.

(இ-ள்.) பகரும் பதுமம் - சொல்லப்படு மவ்விதயகமலம், உந்தியின் மேலிடத்து அலமரும் - நாபியின் மேலிடத்தில் அசைந்துகொண்டிருக்கும், அதனிடத்து - அவ்விதயகமலத்தில், நுண்குகை-ஒரு நுண்ணிய துவாரம், திகழுரும் திறத்து இலங்கும் - கட்புலனாற் காண்டற்கரிய திறத்தோடு விளங்கும், அதன் தலையில் - அவ்வுட்டுளையின் அக்கிரத்தில், திகழுமேவரும் நோன்றழல் நுணங்கு பூஞ்சிகை நுகரும் ஊண் பகுத்து அமரும்- விளக்கமாகப் பொருந்தியிருக்கும் யாவையும் நீறாக்க வல்லதுவண்டசைகின்ற அக்கினிச் சுவாலையானது உண்ணுகின்ற உணவுகளைப் பகுத்துப் பொருந்தியிருக்கும், அதன் நடுவண்-அவ்வக்கினியின் மத்தியில். (எ-று.)

(பிராணவாயுவால் மலரச்செய்த)இதயகமலம் நாபியின்மேலுள்ளது. அக்கமலத்தில் நுண்ணிய உட்டுளையொன்றுளது. அத்துவாரத்தில் அக்கினியொன்றுள்ளது அவ்வக்னியின் நடுவில் என்க.

உந்தித்தானத்தில் சுவாலித்துக்கொண்டிருப்பது உதாரக்கினி. அவ்வுந்தித்தானத்தில் சம்பந்தமாயிருப்பது இதயகமலத்தினுடைய நாளமாதலால் அவ்வுதராக்கினியானது அந்நாளத்தின் வழியாகச்சென்று அவ்விதயகமலநடுவிலிருக்கும் பொகுட்டுவழியில் பிரகாசித்துக்கொண்டிருக்குமென்பார் பதுமமுந்தியின் மேலிடத்தலருமெனவும், அதனிடத்து நுண்குகையிலங்குமெனவும், அதன் நடுவிலமருநோன் றழலெனவும், அச்சோதிக்குள் சோதியாய் பிரகாசிக்கும் இறைவனைத் திருமால் கண்டனனென்பார் நுணங்கு பூஞ்சிகை யதனடுவெண் எனவுங் கூறினர். கண்டது வருஞ்செய்யுளிற் காண்க. (கரு௩)

சாற்றுமெய்ப்பரப்பிரமமாஞ்சதாசிவப்புத்தேள்
வீற்றிருப்பதியோகத்திற்கண்டனன்விளைத்தே
னூற்றுபூந்துழாய்ப்பண்ணவனுவகையின்வல்லே
போற்றிபோற்றியென்றிறைஞ்சினனன்புமீப்பொங்க.

(இ-ள்.) சாற்றும் மெய்ப்பரப்பிரமமாம் சதாசிவப்புத்தேள் - சொல்லப்பட்ட மெய்ம்மையாகிய பரப்பிரமசொருபியாகிய சதாசிவமூர்த்தி, வீற்றிருப்பது இயோகத்திற் கண்டனன்-எழுந்தருளியிருத்தலைச் சிவயோகத்தினால் பார்த்தனன், விளைத்தேன் ஊற்றுபூந்துழாய் பண்ணவன் - நறுமணங்கமழும்பூந்தேனைச் சிந்துகின்றதுளவமாலை யணிந்ததிருமால், உவகையின் வல்லே அன்பு மீ பொங்க போற்றி போற்றி என்று இறைஞ்சினன். (கண்ட) மகிழ்ச்சியால் விரைவாக அன்புமேலெழப் போற்றி போற்றி யென்று துதித்து வணங்கினன். (எ-று.)

(திருமால் மேற்கூறிய அவ்விடத்தில்) சதாசிவமூர்த்தியைக் கண்டு மகிழ்ந்து அம்மகிழ்ச்சியினால் அன்புமீதூர்ந்து துதித்தனனெனக.

வேதங்கள் உண்மையில் சதாசிவமூர்த்தியையே பிரமமென்று வகுத்துக்கூறுவதாதலால் சாற்றும் மெய்ப்பரப்பிரமமாஞ் சதாசிவப்புத்தேள் என்றார். சதாசிவமூர்த்தியை உண்மையில் பிரமமென்று வேதம் கூறுமென்றதனால் ஏனையோரைப் பிரமமென்று கூறுவது உபசாரமென்க. இதனை ஈசானாதி பஞ்சமந்திரங்களைப் பஞ்சமப் பிரமமந்திரமென்று கூறும் வழக்கானுமறிக. (கருச)

அன்பினுக்கெளியார்பெருங்கருணைகூர்ந்தருளி
யின்பவானந்தத்திருநடமாயிடையியற்ற
வன்பழம்பகைமலவிருள்கடிந்ததுகாணூஉ
வென்புநெக்குநெக்குருகினன்முரனையன்றிறுத்தோன்.

(இ-ள்.) அன்பினுக்கு எளியார் பெருங்கருணைகூர்ந்தருளி - அன்பினுக்கெளிவந்தருளும் இறைவன் மிக்க கருணையுடையவனாய், இன்ப ஆனந்த திருநடம் ஆயிடை இயற்ற - பேரின்பத்தை விளைவிக்கும் ஆனந்தத் திருநடனத்தை அவ்விதயகமலத்தின்கண்ணே நடித்தருள, முரனை அன்று இறுத்தோன்-முரனென்னு மரக்கனை அன்று கொன்ற திருமால், வன் பழம்பகை மல விருள் கடிந்தது காணூஉ- (அந்நடனம்) அனாதியாய்ப் பெரும்பகையாயுள்ள ஆணவமல இருள் (ஒருசற்றும்) இல்லாதொழிந்ததைப் பார்த்து, என்பு நெக்குநெக்கு உருகினன் - எலும்பு மிகவு நெக்குவிட்டு நெஞ்சமுருகினன். (எ-று.)

(திருமால் தன்னிதயகமலத்தில் சதாசிவமூர்த்தியைக் கண்டு அன்புமீதூரவும்) அவ்வன்புக்கெளிய இறைவன் கருணைகூர்ந்து ஆனந்தநடனஞ்செய்ய, அந்நடனத்தால் மலவிருளொழிந்து ஞானஞேயமானதைக் கண்டு என்புநெக்குவிட வுருகி

அசிந்திதனுகிய இறைவன் சிந்திதனுதல் அன்பினன்றி ஏனையவாற்ருலன்ருதலான அன்பினுக்கெளியானெனவும், அன்பானினைவாரது உள்ளக் கமலத்தின் கண் அவர்நினைத்த வடிவத்தோடு விரைந்துசேறல் அவனியற்கையாகலான் பெருங்கருணைகூர்ந்தருளி ஆனந்தத்திருநடமியற்ற எனவும், அவ்வானந்தநடனம் ஆன்மாக்களுக்கு மலத்தையொழித்து முத்தியிற்சேர்க்கும் ஞானநடனமாதலான் ஆயிடையியற்ற மலவிருள் கடிந்ததுகாணூஉ எனவும், பாசமோசனகாலத்து அன்பு மீதூருமாதலான் என்புநெக்கு நெக்குருகினுன் எனவுங் கூறினர்.

ஆனந்தத் திருநடனமென்றது இன்பவானந்தத் திருநடனமென்றது-இறைவனடனத்துக்கு ஆனந்தமியல்பாயுள்ளதென்பதும், அந்நடனவின்பம் காண்போர்க்குண்டாதல் அரிதாகலான் அது திருமாலிடத்துத் தோன்றியதென்ப துணர்த்தவும், நடங்காணூஉ என்றது வன்பழம்பகை மலவிருள்கடிந்தது காணூஉ என்றது திருமால் இன்பநடனத்தாற் பெற்றபயன் தன்னுல் மாற்றுதற்கியலாது அனுதியாய்ப் பகைத்திருந்த ஆணவப்பகையை வென்றதேயாமென் றுணர்த்தவும், முரனையன்றிறுகதோன் எனறது என்பு நெக்கு நெக்குருகினுன் என்றது ஆணவப் பகைக்குப் பகையாயுள்ளது உருகுதலென் றறிந்தானெனறுணத்தவுமாம். (௧௰௫)

> புளகமெங்கணும்போர்த்துமெய்பனித்துவாய்குழறி
> யிளகியின்பநீர்விழியுகக்கம்பனமெய்தித்
> தளாவிலார்வத்தாற்றனைமறந்தறிதுயில்மேவு
> மளவிலாங்கபலிருந்தவரன்னதுகண்டார்.

(இ ள்.) எங்கணும் புளகம்போர்த்து - சரீரமுற்றும் மயிர்க்குச்செறிந்து, மெய் பனித்து வாய்குழறி - மெய்நடுக்குற்றுசொல்முறைகுளறி, இளகி இனபநீர் விழி உக - மனமிளகி ஆனந்தநீரைக் கண்கள்சிந்த, கம்பனம எய்தி-பயத்தையடைந்து, தளர்வில ஆர்வத்தால் - சோர்வில்லாத அன்பினுல், தனைமறந்து அறிதுயில் மேவும் அளவில் - தன்தேகநிலை தோன்ருது யோகநித்திரையடைந்திருக்கு மச்சமயத்தில், ஆங்கு அயல் இருந்தவர் - அவ்விடத்தருகிலிருந்தவர்கள், அன்னது கண்டார் - அந்நிலையைக் கண்டார்கள். (எ று.)

(திருமால் என்பு நெக்கு நெக்குருகுவதனுல்) மயிர்ப்புளகங்கொண்டு மெய் நடுக்குற்று வாயகுழறி மனமிளகிக் கண்ணீர்பெருக்கிக் கம்பமடைந்து (பரவசமடைந்து) துயில்கொண்டிருந்தனன். இவ்வதிசயத்தை அங்கிருந்தவர்கள் கண்டனர் எனக.

புளக முதலியகுணங்கள் மேலிட்டு மனவாக்குக் காயங்கள் அன்பின்வழிப் பட்டு நிற்குங்காலத்து ஆன்மா அவ்வழியே வயப்பட்டிருப்பதன்றிச் சரீரதர்மங்களிற் றலைப்பட்டுச் சரிப்பதின்ருகலின் ஆர்வத்தாற் றனைமறந்து அறிதுயில்மேவுமளவிலென்ருர்.

புளகரும்பல் மெய்பனித்தல் காயதர்மம்,குழறல்,வாசகதர்மம், இளகல் இன்பநீர் விழிபுகுத்தல் கம்பனமெய்தல் மானசிகதர்மம். இவ்வாறு மனவாக்குக் காயங்கள் அன்பினவசப்படவே அவை சார்பாக நிகழ்ந்த செயலெல்லாந் தோன்ருதிருந்தனனென்பார் தளர்விலார்வத்தாற் றனைமறந்து என்ருர். (௧௰௬)

கண்டுநெஞ்சகமபதைத்தனர் திகைத்தனர் கவலை
கொண்டழுங்கின ரஞ்சின ரிரங்கினர் குறிப்பின்
வண்டலர்த்திருமுதலியோர மற்றிதுநிகழ
வண்டர்நாயகற்கடுத்தவா றென்னெனத் தெரிவார்.

(இ-ள்.) கண்டு நெஞ்சகம் பதைத்தனர் - பார்த்து மனம் பதைபதைத்து, திகைத்தனர் கவலைகொண்டு அழுங்கினா அஞ்சினர் இரங்கினர் - திகைத்து கவலை கொண்டுநைந்து அஞ்சி இரங்கினாகள், வண்டு அலர் திருமுதலியோர் குறிப்பின் - வண்டுகள்மொய்க்கும் தாமரைமலரில் வீற்றிருக்கும் இலக்குமி முதலியோர்கள் (திருமாலிடத்துநிகழ்ந்த) தீயகுறிப்பினால், இதுநிகழ அண்டர் நாயகற்கு அடுத்த வாறு என் எனதெரிவார் - இவ்வதிசயம் நிகழ்வதற்குத் தேவர்நாயகராகிய இவரு க்கு அடுத்தவகையென்னை யென்று ஆராய்வார்கள். (எ-று.)

(திருமால்தன்னை மறந்திருந்ததலைப்) பார்தது நெஞ்சம்பதைத்துத் திகைத் துக்கவலைகொண்டு அழுதிரங்கி அத்திருமால் தேகக்குறிப்பினால் இலக்குமிமுதலாயி னோர் இவருக்கு வந்ததென்னென்று எண்ணத்தொடங்கினார்களென்க.

திருமாலுள்ளத்தின்கணிகழ்ந்த செய்தியைத திருமகள் முதலாயினோர் அறி யாதவராகையின் பதைத்து திகைத்து கவலைகொண்டு அழுங்கி அஞ்சி இரங்கின ரெனவும், அவர்க்குண்டாகிய நற்குறிகளெல்லாம் தீக்குறிகளாகவே இவர்களுக்குத் தோன்றினமையான் குறிப்பின் இதுநிகழ வண்டா நாயகற்கடுத்தவாறென்னெனத தெரிவாரெனவுங் கூறினார். (கறுஎ)

மென்றளிர்ச்செழுங்கோமளத்திருவடிவினையேன்
வன்றனிக்கரமவருடலான்வருந்தினகொல்லோ
வன்றியென்மடித்தலமிசையசைந்துநொந்தனவோ
வென்றுதன்னுளமயிர்த்தனளிலங்கெழின்மலராள்.

(இ-ள்.) இலங்கு எழில்மலராள் - பொலிவுபெற்று விளங்கும் அழகிய இல க்குமி, மெல்தளிர் செழுங்கோமளத்திருவடி-மெல்லியதளிர்போலும் செவ்விய அழ குவாய்ந்த திருவடியை, வினையேன வல் தனிகரம்வருடலான் வருந்தினகொலலோ- வினையேனாகிய என்னுடைய கொடியகையினால் தடவுவதனால் வருத்தத்தையடைந் தனவோ, அன்றி என்மடித்தலமிசை அசைந்து நொந்தனவோ என்று - அல்லாமல் என்னுடைய மடியின்மேலிருக்க அதனால் அசைந்து நொந்தனவோ என்று, தன் உளம் அயிர்த்தனள் - தன் உள்ளத்தில் சந்தேகம் அடைந்தாள். (எ-று.)

(இலக்குமி நமதுநாயகன துன்பத்தையடைகின்றான் அதற்குக் காரணம் நாமே யாகவேண்டும் என்னையெனின்) நாம நமது முரட்டுக்கையினால் கோமளத் திருவடியை வருடினோம், அன்றியும் மடித்தலத்தின்மேல் திருமேனிபொருந்தவைத் திருந்தோம் இவற்றால் இத்துன்பம்வந்தது என்றெண்ணிச் சோர்ந்தனளென்க.

மடித்தலத்தில் திருமேனியைக்கிடத்தி யசைந்ததலும், கிடத்திய பின்னா கையால்வருடலும் இன்பம்விளைத்தற்குத செயலென்றெண்ணியன்றோ இப்பணி செய்தோம், இப்பணி பெருந்துன்பத்தைத விளைவித்தனவே இப்படியுமுண்டோ வெ னவெண்ணினாளென்பார் வருடலானவருந்தின கொலலோமடித்தல மிசை யசைந

து நொந்தனவோ என்றார். அருகிருந்த இலக்குமி - அனந்தன்-கருடன் என்னுமூவருள் இது இலக்குமி கூறியகூற்று. (கஙஅ)

மெல்லனிச்சமுங்குழைக்குமெம்பிரான்றிருமேனி
கல்லெனக்கடுந்திட்பமுந்தட்பமுங்கதுவும்
புல்லியேனுடல்வைகலானுளேந்ததுபோலு
மல்லதொன்றறியேனெனவெரீஇயினனனந்தன்.

(இ-ள்) அனந்தன் - ஆதிசேடன், மெல் அனிச்சமும் குழைக்கும் எம்பிரான் திருமேனி - மெல்லிய அனிச்சமலரையும் குழையச்செய்யவல்ல எமதுபெருமானுடைய திருமேனி, கல் என கடுந்திட்பமும் தட்பமும்கதுவும் - இப்பொழுதுகல்லென்னும்படி மிக்கவன்மையும் குளிர்ச்சியையும் ஒத்திருக்கின்றது, புல்லியேன் உடல்வைகலான் - அற்பனாகிய என்னுடைய உடலில் எப்பொழுதும் தங்குவதனால், உளேந்ததுபோலும் - நொந்ததுபோலும், அல்லது ஒன்று அறியேன் - இதுவல்லாமல் வேறொன்றறியேன், எனவெருவினன் - என்றுபயந்தனன் (எ-று.)

(திருமாலுக்குச் சேக்கையாயிருக்கின்ற) அனந்தன் அனிச்சமலரையும் குழையச்செய்யவல்ல இவர்திருமேனி (இன்று) கல்லைப்போல் வன்மையையும் அதனோடு குளிர்ச்சியையும் அடைந்திருக்கின்றதே இதுவென்னநம்முடைய உடம்பின்மேல் எப்பொழுதும் சயனித்திருப்பதனாலுண்டாகிய தீங்கோவென்று பயந்தனனென்க.

நம்மிடத்தில் சயனித்திருப்பதால் மென்மையும் வெம்மையும் உண்டாமென்றெண்ணியிருக்க அதற்குமாறாக வன்மையும் தண்மையும் விளைந்தவாறு இதுஎன்னையோ வென்றஞ்சினனென்பார் அறியேனெனவெரீஇயினனனந்தன் என்றார்.

இது ஆதிசேடன்கூறிய கூற்று. (கஙக)

எருத்தமீதுகொண்டுலகெலாங்கொட்புறுமென்னான்
மருத்துழாய்முடிமாமறுமார்பினான்மேனி
வருத்தமுள்ளதேயாங்கொலென்றெண்ணினன்வலியா
லுருத்துமாற்றலர்முனைகெடப்பொருதிறலுவணன்.

இ-ள், வலியால் உருத்துமாற்றலர் முனைகெட-தனது வல்லமையினால் கோபித்துப் பகைவர்களது போர்கெடும்படி பொருதிறல் உவணன்-போர்செய்யும் வன்மையையுடைய கருடன், எருத்தமீதுகொண்டு - பிடரின்மேற்கொண்டு, உலகு எல்லாம் கொட்புறும் என்னால் - உலகமுழுவதும் சுழன்றுவரும் என்னால், மருத்துழாய் முடி மா மறுமார்பினான்மேனி-நறுமணங்கமழும் துளவமாலை சூடிய முடியையும் திருமறு மார்பையுமுடையவன்றிருமேனி, வருத்தமுள்ளதே ஆம்கொல்-துன்பமடைந்ததோ, என்று எண்ணினன் - என்றுநினைந்தனன். (எ-று.)

(திருமாலுக்கூர்தியாகிய) கருடன் (இன்று இவர்கம்பமுற்றது) இவரைநாம் பிடரிற்சுமந்து உலகமுற்றுஞ் சுழன்று வந்தோம் அதனால் வருத்தமுற்றனரோ வென்றெண்ணினனென்க.

திருமால் நடுக்கமுற்றதைக் கருடன் தான்சுழன்றுவந்த வேகத்தாலுண்டாகிய தீங்கென்றுணர்ந்தனனென்பார் கொட்புறுமென்னான் வருத்தமுற்ற தாங்கொலென்றார்.

இது கருடன் கூறியகூற்று.

கண்டுநெஞ்சகம் பதைத்தனர் என்னுஞ்செய்யுள் முதல் எருத்தமீது கொண்டென்னுஞ் செய்யுள்காறும் இலக்குமியும் ஆதிசேடனும் கருடனும் முறையே பணி செய்ததனுலும் படுக்கையிட மாயிருந்ததனுலும், ஊர்தியாக விருந்ததனுலும் வந்ததீங்கென்று ஆராய்ந்து கூறினூர்களென்றுணர்த்தியதாமென்க. (கசுO)

இன்னவாறிவர்யாவரும்வேறுவேறெண்ணிப்
பன்னருஞ்பெருங்கவலைகூர்வுழிவரையயந்த
கன்னிபாகனூர்திருநடக்கருணையிற்றிளைத்த
பின்னைநாயகன்யோகமாத்துயில்பிரிந்தெழுந்தான்.

(இ-ள்.) இன்னவாறு இவர்யாவரும் - இவ்வகையாக இவர்கள் மூவரும், வேறுவேறுஎண்ணி - வெவ்வேறுவகையாகவெண்ணி, பன்ன அரும் பெருங்கவலை கூர்வுழி - சொல்லற்கரிய பெருங்கவலையை அடைந்திருக்குங்காலத்தில், வரையயந்தகன்னிபாகனூர் - மலையரையன் மகளைப்பாகத்திலுடைய இறைவன், திருநடக்கருணையில் - திருநடனமாகிய கருணை வெள்ளத்தில், திளைத்தபின்னைநாயகன் - மூழ்கியிருந்த இலக்குமிநாயகனுகிய மாயோன், யோகமாத்துயில் பிரிந்து எழுந்தான்- யோகநித்திரையைவிட்டு எழுந்திருந்தனன். (எ-று.)

இவ்வாறு இலக்குமிமுதலிய மூவரும்வெவ்வேறு வகைப்பட வெண்ணிப் பெருந்துன்பத்தில் மூழ்கியிருக்கையில் இறைவன் ஆனந்த நடனத்தில் மூழ்கியிருந்த திருமால்யோகநித்திரையை விட்டெழுந்தனனென்க. (கசுக)

கண்டபேரின்பவனுபவக்கருத்தினூடெழுந்து
மண்டுவெள்ளநீரருவிகண்பொழியமன்றுடையார்
தொண்டனேற்கெளிவந்தவாறெனக்களிதுளும்பிக்
கொண்டகாதலாலஞ்சலிசென்னிமேற்குவித்து.

(இ-ள்.) கண்டபேரின்ப அனுபவக்கருத்தினூடு எழுந்து - திருமால் தன்னுள்ளே கண்ட சிவானந்த வெள்ளத்திற்றிளைத்த வெண்ணத்தோடுயோகத்தை விட்டெழுந்து, கண்மண்டு வெள்ளநீர் அருவிபொழிய - கண்கள்பெரிய வெள்ளநீர்போலும் நீரைத்தாரைதாரையாகப்பொழிய, மன்றுடையார்-சபாநாயகர், தொண்டனேற்கு எளிவந்தவாறு அடியேனுக்கு வெளிவந்தவகை (என்னேயோ), என களிதுளும்பி-என்று ஆனந்தம்பொங்கி, கொண்டகாதலால் - மேலிட்ட ஆசையினுல், சென்னிமேல் அஞ்சலிகுவித்து - தலையின்மேல் அஞ்சலியாகக் கைகளைக்குவித்து. (எ-று.)

மாயோன் தன்னுடைய இதயகமலத்தில் சதாசிவமூர்த்தி காட்டிய நடனகோலத்தில் ஒருப்பட்டிருக்கும் நின்மலவிருத்தியோடு யோக நிலையினின்றும் நீங்கி ஞானதீதமாகிய அன்பினிலையிற்றலைப்பட்டுக் கண்களினின்றும் நீர்பெருகிவர ஆனந்தத்தாண்டவ நடராசன் எனக்கும் எளிவந்தனனே என்றுகளிகூர்ந்து தலைமேல் கைகளைக் குவித்தென்க.

இறைவனை யுள்ளே காணுவதற்குக் கூடியநிலையே யோகமாதலால் அதனை யோகநிலையாகவும் அந்நிலையான் வெளிப்பட்ட இறைவனைக்கண்ட அனுபவஞானமே ஞானமாதலால் அதனைஞானநிலையாகவும், அந்தஞானமுதிர்ச்சியான் வெளிப்பட்ட கண்ணீர் முதலியவைகளே அன்பாதலால் அவையிற்றை யன்புநிலையாகவும் எண்ணுவதற்குக் கண்டபேரின்பவனுபவக் கருத்தினூடெழுந்து மண்டுவெள்ள நீரருவிகண்பொழிய என்றூர். (கசுஉ)

ஐயனேயருள் புரிகவாரழற்சிகையேந்துங்
கையனேயருள்புரிகபல்கதிரொளிபரப்பு
மெய்யனேயருள்புரிகமெய்க்கூத்தெனைக்காட்டுஞ்
செய்யனேயருள்புரிகெனச்செப்பினன்பலகால்.

(இ-ள்.) ஐயனே அருள்புரிக - என்னையனே நீ அருள்செய்வாயாக, ஆரழல்சிகை ஏந்தும்கையனே அருள்புரிக - கொழுந்துவிட்டெழும் அக்கினியை யேந்தும் திருக்கரத்தை யுடையவனே அருள்செய்வாயாக, பல்கதிர் ஒளிபரப்பும் மெய்யனே அருள்புரிக - பலகோடி சூரியரைப்போலும் ஒளிபரப்பும் திருமேனியை யுடையானே அருள்செய்வாயாக, மெய்கூத்து எனை காட்டுஞ்செய்யனே அருள் புரிக - உண்மைக்கூத்தை எனக்குக்காட்டும் செவ்விய திருமேனியையுடையானே அருள்புரிவாயாக, எனபலகால் செப்பினன் - என்று பலமுறை தோத்திரஞ்செய்தனன். (எ-று.)

மாயோன் ஐயனென்றும் அக்னியேந்துங் கையனென்றும் கோடி சூரியப்பிரகாசம்போல் பிரகாசிக்குந்திருமேனியனென்றும் ஆனந்தத்தாண்டவத்தைஎனக்குக் காட்டினவனென்று புகழ்ந்துபாடி யருள்செய்வாயென்று பன்முறைவேண்டினனென்க.

திருமால் தனக்கு நாயகனென்பது விளக்க ஐயனே என்றும், அவ்விறைவனிவனென்று யாவருக்கும் விளக்க அழற்சிகை யேந்துங்கையனென்றும், அவ்வழலேந்தியே பரப்பிரமசொரூபமென்பது விளக்க பல்கதிரொளி பரப்பு மெய்யனென்றும், அப்பரப்பிரமசொரூபமாகிய சதாசிவத்தின் சிச்விலாசமே பஞ்சகிருத்திய தாண்டவமென்பது விளக்க மெய்க்கூத்தெனைக்காட்டுஞ் செய்யனென்றுங் கூறினார். ()

அன்னபெற்றிகண்டியாவருமதிசயமெய்தி
யென்னையென்னமற்றிதுவெனக்குதுகுதுப்போடும்
பொன்னடித்தலமபோற்றினர்விழைதலுநெடியோன்
மன்னுறும்பெருமகிழ்ச்சியானவர்க்கிதுவழங்கும்.

(இ-ள்.) அன்னபெற்றிகண்டு - அத்தன்மையைக்கண்டு, யாவரும் அதிசயமெய்தி - இலக்குமி முதலியயாவரும் அதிசயமடைந்து, இது என்னை என்னை என - (எம்பெருமான்) நீர் இப்படி கூறுவதென்னை என்னையென்று, குதுகுதுப்போடும் பொன்னடித்தலம்போற்றினர் விழைதலும் - குதுகுதுப்புடனே பொன்போலுமரிய திருவடியைத்துதித்துக்கேட்க, நெடியோன் - மாயோன், மன்உறும் பெருமகிழ்ச்சியான் - நிலைபெற்றபேரானந்தத்தால், அவர்க்கு இது வழங்கும்-அவர்களுக்கு இதனைக்கூறுவார். (எ-று.)

மாயோன் கைகளைச்சிரமேற்குவித்துக்கொண்டு ஐயனே கையனே மெய்யனே செய்யனே என்று தோத்திரஞ்செய்தலைக்கண்டு இலக்குமி ஆதிசேடன் கருடன் ஆகிய இம்மூவருமதிசயமுற்று இது என்னையென்னை யென்று நடுக்கத்தோடும் பாதங்களைத் துதித்துக் கேட்க மாயோன தனக்குண்டாகிய பெருமகிழ்ச்சியினால் அவர்களுக்குத் தன்னநுபவவானந்தத்தை யெடுத்துக் கூறுவானாயினனென்க.

திருமாலுக்கு அன்றுண்டாகிய பேரானந்தக்குறிகளை இலக்குமி முதலாயினோர் என்றுங்கண்டறியாராதலான் அதிசயமெய்தி எனவும், அக்குறிகள் ஆனந்தத்

தால் விளையும் குறிகளென்றுணரர்மையான் இது என்னை யென்னை யெனவும் இவர்க்குண்டாகிய இத்தீக்குறி என்ன தீமையைப்பயக்குமோ இதற்கு நாம் யாது செய்ய வல்லோமென்றெண்ணினமையான் குதுகுதுப்போடும் பொன்னடித்தலம் போற்றினர் எனவும், ஆயினும் இவர்தமக்கடுத்த தீங்கை இன்னவகையென்று கூறு வாராயின் அதற்குத்தக்க பரிகாரமியற்றலாமென்றுங்கித்தமையான் வினுதலுமெ னவும், இவ்வாறு இவர்கள் துக்கத்தோடு வினவும் வினுவான் துக்கங்கள் தன்னி டத்து ஒரு சற்றும் இல்லாமையான் மன்னுறும் பெருமகிழ்ச்சியான வர்க்கிது வழங்கும் எனவுங்கூறினர்.

இதனால் திருமாலிடத்து இலக்குமி முதலானவர்கள் கொண்டதுன்பம். அவரடைந்திருந்தது பேரானந்த சுகமென்றுமயிற்று. (கசுச)

செறியுநான்மறைச்சிரமிசைப்பரம்பொருளிந்நா
ளறிஞர்காண்கிலாவற்புதத்திருநடமெனக்குப்
பிறிவரும்பெருங்கருணையாற்காட்டிடப்பெற்றேன்
மறியுமிவ்வுடல்வருபயன்கிடைத்ததென்றனக்கே.

(இ-ள்.) செறியும் நான்மறை சிரமிசை பரம்பொருள் - பொருள் செறிந்த நான்கு வேதங்களின் உச்சியில் வீற்றிருக்கும் பரம்பொருள், இந்நாள் அறிஞர் காண் கிலா அற்புதத்திருநடம் - இந்நாள்வரையும் ஞானிகளாற் காணக்கூடாததா யிருக் கின்ற அற்புதமாகிய திருநடனத்தை, பிறிவரும்பெருங்கருணையால் - நீங்காத பெ ருங்கருணையால், காட்டிடபெற்றேன் - எனக்குக்காட்டக் காணப்பெற்றனன், (அத னால்) என்றனக்கு மறியும் இவ்வுடல் வருபயன் கிடைத்தது-எனக்கு அழியுமிவ்வுட லால் வரும்பயன் கிடைத்தது. (எ-று.)

வேதாந்தப்பொருளாயுள்ள இறைவன் ஞானிகளாலுங் காண்டற்கரிய அற் புத நடனத்தை என் மாட்டுவைத்த பெருங்கருணையாற் காட்டத் தரிசிக்கப்பெற் றேன் (அதனால்) அழியுமிவ்வுடலானடைவதாகிய அழியாப்பயன் எனக்குக் கிடை ரக.

ஆனந்த நடனத்தைத் தன்னுள்ளே காணப்பெற்றோர் மீளவும் உடலுள்ளே புகாமையானும் உடலுள்ளே புக்கபயன் தன்னுள்ளே புக்கிருக்குமிறைவனைக்காண் டலேயாமாகலானும் மறியுமிவ்வுடல் வருபயன் கிடைத்ததென் றனக்கேஎன் றார்.()

அவ்வருட்டிருக்கூத்தினைக்கண்டவார்வத்தா
லிவ்வுறுப்பெலாம்விதிர்விதிர்ப்பெய்தினகண்டீர்
செவ்வனோர்மினென்றியம்புசொற்செவித்துளைநிறைப்பக்
கொவ்வைவாய்த்திருமுதலியோராதரங்கொண்டார்.

(இ-ள்.) அ அருள்திருக்கூத்தினை-அந்தத் திருவருள் நடனத்தை,கண்ட ஆர் வத்தால் - தரிசனஞ்செய்த அன்பின்மிகுதியால், இ உறுப்பெலாம் விதிர்விதிர்ப்பு எய்தின-இந்தக்கைகால் முதலிய அங்கங்களெல்லாம் நடுக்கத்தை யடைந்தன, செவ் வனோர்மின் என்று இயம்புசொல் - (இதனை) நன்றாயாராயுங்கள் என்று சொல்லியசு சொற்கள், செவித்துளைநிறைப்ப - அவர்கள் செவித்துளையை நிறைக்க கொ

வாய் திரு முதலியோர் - கோவைக்கனிபோலும் வாயையுடைய இலக்குமி முதலானவர்கள், ஆதரம்கொண்டார் - அன்புகொண்டார்கள். (எ-று.)

மாயோன் தன்னிடத்தன்புடைமையான் தன்னுள்ளக்குறிப்புணராமற் பரிபவப்படுமிலச்குமி முதலானவர்களைப்பார்த்து இப்பொழுது எனக்கு இந்த விதிர் விதிர்ப்பு ஆனந்தநடனத்தைக்கண்ட ஆனந்தத்தாலுண்டாகிய தென்றறியுங்களென்று கூறினன். அவ்வுண்மையைக்கேட்ட இலக்குமிமுதலானவர்களும்அந்நடனத்தைத் தாங்களுங்காண ஆதரங்கொண்டனர்களென்க.

திருமால் இலக்குமி முதலானவர்களைப்பார்த்து எனக்குண்டாகிய இக்குறிகளெல்லாம் நீங்கள் மரணக்குறியாக நினைத்தீர்கள் போலும், நன்றாயிருந்தது; அந்தோ அற்புதக்கூத்தால் விளைந்த ஆனந்தக்குறிகளன்றோ இதனையறியீரோ என்று தான் கண்டவாறு கூறவே, அவர்களும் அத்துன்பமொழிந்து அவ்வானந்தவெள்ளத்தில் மூழ்கினாகளென்பார் திருமுதலியோராதரங்கொண்டாரென்றார். (௧௬௬)

கேட்டவப்பொழுதேயெதிர்கண்டெனக்கிளர்ந்து
காட்டும்வேணவாமீமிசையெழக்கழல்வணங்கி
நாட்டுமத்திருக்கூத்தினைநாங்களுங்காண
வேட்டனங்கண்மற்றதுபெறுநெறிவிளாந்தருளாய்.

(இ-ள்.) கேட்ட அப்பொழுதே- திருமால் சொல்லக்கேட்டஅப்பொழுதே, எதிர்கண்டு என்ன - இவர்களும் அவ்வானந்த நடனத்தை எதிரேகண்டார்போல, கிளர்ந்து காட்டும் வேணவாமீமிசை எழ - வெளிப்பட்டுக்காட்டும் மிக்க வாசை மேன்மேற் பொங்கியெழ, கழல்வணங்கி - திருவடியைவணங்கி, நாட்டும் அத்திருக்கூத்தினை-நிலைபெறச்செய்த அந்த ஆனந்தக்கூத்தை, நாஙகளும் காண வேட்டனங்கள்-யாங்களும் தெரிசிக்க விரும்பியிருக்கின்ற எங்கள்பால்,அது பெறுநெறிவிளைந்தருளாய் - அதனைப் பெறும் வகையை விரைவாகச்சொல்லியருளாய். (எ-று.)

இலச்குமி முதலானவர்கள் திருமால் சொல்லக்கேட்ட அப்பொழுதே தாங்களும் எதிரே கண்டவர்களைப்போல ஆசைமேலிடத் திருமாலைத்தொழுது அவ்வானந்தக்கூத்தை நாங்களுங்காண ஆசைகொண்டிருக்கின்றோம் அது பெறும் நெறியைவிளைந்து சொல்லவேண்டுமென்றனரென்க.

திருமால் தாம்கண்ட ஆனந்தக்கூத்தைக்கண்டவண்ணங் கூற இவர்களும் மற்றோர்வண்ணமாகாது கேட்ட அவ்வண்ணத்திலேயே மனமொருப்பட்டவர்களாய் நின்றார்களாதலால் கேட்டவப்பொழுதே யெதிர்கண்டென எனவும், திருமால் உள்ளத்தில் கண்ட ஆனந்தம் உள்ளத்திலேயே யடங்கப்பெறாது புளகரும்பல் முதலிய குணங்களாக எவ்வாறு வெளிப்பட்டதோ அவ்வாறே இவர்களுக்கு அக்குணங்களெல்லாம் வெளிப்பட்டு அதிலாழ்ந்திருந்தார்களாதலால்,கிளர்ந்துகாட்டும்வேணவாமீமிசையெழ எனவும், திருமாலுக்குரியனயாவும் இவர்களுக்கு முரியனவேயாகலான் நாட்டுமித்திருக்கூத்தினை நாங்களுங்காணவேட்டனமெனவும், இவர்கள்கேட்டு மகிழ்ந்தவரேயன்றி திருமாலைப்போற் கண்டுமகிழ்ந்தவரன்றாகலான் அது பெறும் நெறிவிளைந்தருளாயெனவுங் கூறினர்.

—த்தும் பொதிந்து பெயராதிருக்கின்றமைநோக்கி என்றலுமாம்; அன்றி உம்மால் —ரை —லைப்பட்ட அத்திருக்கூத்தென்றலுமாமென்க. (௧௬௭)

என்றுபன்முறைவேண்டலுமீர்ந்தொடைத்துளவோ
னன்றுநுங்கருத்தெனமிகநகைமுகமலர்ந்து
குன்றவில்லியார்சேவடிசிந்தையிற்கொண்டாற்
கன்றுநம்பர்தம்மருளினாலறிவுவந்துதிப்ப.

(இ-ள்.) என்று பன்முறை வேண்டலும் -(விரைந்தருளாய்விரைந்தருளாய்) என்று பலமுறைவேண்ட, ஈர்ந்தொடைதுளவோன - தண்ணியதுளவமாலையை யணிந்த திருமால், நும்கருத்து நன்று என - உங்களுடைய எண்ணம் நன்மையான தே என்று, மிகநகை முகமலர்ந்து - மிகவு முகமலர்ச்சியையடைந்து, குன்றவில்லி யார் சேவடிசிந்தையிற் கொண்டாற்கு - மலைவில்லையுடையனாகிய இறைவனுடைய திருவடியைச் சிந்தையின்கண்ணே கொண்ட திருமாலுக்கு, அன்று நம்பர்தம் அருளினால் அறிவுவந்துதிப்ப-அப்பொழுது இறைவனுடைய திருவருள் ஞானம் வந்து தோன்ற (எ-று.)

இலக்குமிமுதலாயினோர் தாங்களும் ஆனந்தநடனத்தைக் காணவேண்டுமென்று திருமாலைப்பிரார்த்திக்கவும் அத்திருமால் நீங்களெண்ணியவெண்ணம்நன்றாயிருந்ததென்று முகமலர்ச்சியடைந்து பின் இறைவனுடைய திருவடியைச்சிந்தையிற் கொண்டனன் கொள்ளவுமிறைவனருளால் ஞானோதயமாயிற்றென்க.

இலக்குமிமுதலாயினோர்க்குத் தான் சிவயோகத்தால் உள்ளக்கமலத்திற்கண்ட ஆனந்தக்கூத்தை நாமெவ்வாறு கூறுவது அன்றிக்கூறுவோமாயின் இவர்கள்காணுந் தரத்ததோ ஆகலானென்செய்வது என்று இறைவனருளைச்சிந்திக்குமளவில் அந் நடனம் வெளியிலேயும் காணுமிடந்தோன்றினமையாற் சேவடி சிந்தையிற்கொண் டாற் கன்றுநம்பா தம்மருளினாலறிவு வந்துதிப்ப என்றார். (கசுஅ)

மல்லற்றெண்டிரைமறிகடன்மணிகள்கொண்டொதுக்குந்
தில்லைக்கானுடைச்சிதம்பரவரைப்பிலெஞ்ஞான்றுஞ்
செல்வத்தாண்டவநவிற்றுமெம்பிரானெனத்தெளிந்தா
னல்லிப்பூமகண்முதலியோர்க்கன்னதுசெப்பி.

(இ-ள்.) எம்பிரான் - எம்மிறைவன், மல்லல் தெண்திரை மறிகடல்மணிகள் கொண்டு ஒதுக்கும் - வளப்பம்பொருந்திய தெள்ளிய அலைகள் மடங்குகின்ற கடல் (அத்திரைக்கரங்களால் கரையில்) பலமணிகளைக்கொண்டொதுக்குகின்ற, தில்லை கானுடை சிதம்பரவரைப்பில் - தில்லைக்காடுடைய சிதம்பரவெல்லையில், எஞ்ஞான்றும் செல்வத்தாண்டவம் நவிற்றும்-எந்நாளும் செல்வமாகிய ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுவன், என தெளிந்தான் - என்று தெளிந்தவனாய், அல்லிபூமகள் முதலி யோர்க்கு - அகவிதழ்களையுடைய தாமரைமலரில் வீற்றிருக்கும் இலக்குமிமுதலா யினோர்களுக்கு, அன்னதுசெப்பி - அதைச்சொல்லி. (எ-று.)

(திருமால் தனக்குத்தோன்றிய அறிவால்) இறைவன் அனவரதமுமானந்தத் தாண்டவஞ் செய்யுமிடம் தில்லைக்காடு சூழ்ந்த சிதம்பரக்ஷேத்திரமென்றுணர்ந்து அதைத்திருமகள் முதலினோர்க்கெடுத்துக்கூறி என்க.

இறைவன் தாண்டவம்புரிதல் ஆன்மாக்களுக்குப் புத்திமுத்திகளைப் பயக் பிக்கும்பொருட்டாகலான் செல்வத்தாண்டவ நவிற்றுமென்றார்.

அங்கணெய்திநாமாளுடைநாயகன்றிருமுன்
பொங்குகாதலானடைக்கலம்புகுந்துபோற்றிசைத்துத்
தங்கிமெய்த்தவமியற்றிடிற்றண்ணருள்சுரந்து
நங்களுக்கெதிர்காட்டுவனானந்தநடனம்.

(இ-ள்.) நாம் அங்கண் எய்தி - நாம் அத்தில்லைவனத்தையடைந்து, ஆளுடையநாயகன் திருமுன்-நம்மையாளாகவுடைய இறைவன் சந்நிதியின்முன், பொங்குகாதலால் அடைக்கலம் புகுந்து-மிக்க ஆசையினால் சரணமடைந்து, போற்றிசைத்து - துதிசெய்து, தங்கிமெய்தவம் இயற்றிடில் - அத்தில்லையிற்றங்கி மெய்த்தவத்தைச்செய்வோமானால், தண் அருள்சுரந்து - தண்ணியகருணை சுரந்து, ஆனந்த நடனம் - ஆனந்தத்தாண்டவத்தை, நங்களுக்கு எதிர்காட்டுவன் - நமக்கெதிரே தரிசனங்கொடுத்தருளுவன. (எ-று.)

திருமகளே நாமெல்லோரும் அத்தில்லையைச்சேர்ந்து நடராஜவள்ளலுடைய குஞ்சிதபாதத்தில் சரண்புகுந்துதுதித்து அங்ஙனமேயிருந்து தவமியற்றுவோமாயின் தண்ணளிசுரந்து ஆனந்தநடனத்தை நமக்கெதிரே காட்டியருளுவன் என்க.

ஆனந்த நடனத்தைவிரும்புவோர் இறைவன் சந்நிதானத்திற் சென்றும் அவனடைக்கலம் புகுந்தும் துதித்தும் மெய்த்தவமாகிய சரியையாதிகளைச்செய்தும் வழிபடுவோர்க்கே காணக்கூடுமாகலான் திருமுன் பொங்குகாதலானடைக்கலம் புகுந்து போற்றிசைத்துத் தங்கி மெய்த்தவமியற்றிடில் ஆனந்தநடனம் காட்டுவன் என்றார். சரியையாதிகளொழிந்த ஏனைய தவங்களாற் காணக்கூடாதென்பார் மெய்த்தவமியற்றிடில் நங்களுக்கெதிர்காட்டுவனென்றாரொன்றனுமொன்று. (சஎo)

யோகியோர்களுமெய்தருந்திருநடமுரிமை
யாகுமன்புடையடியவர்க்கெளியதுகண்டே
ரேகுவாமினிவம்மினென்றவருடனெழுந்து
மாகவாற்றினல்வயங்கொளித்தில்லைவந்தடைந்தான்.

(இ-ள்.) யோகியோர்களும் எய்தரும் திருநடம் - யோகிகளும் அடைதற்கரிய ஆனந்த நடனம், உரிமையாகும் அன்புடைஅடியவர்க்கு எளியது - உரிமையாகிய அன்புடைய அடியார்களுக்கு எளிமையாகும், இனி ஏகுவாம் (ஆகலான)இனி அவ்விடஞ்செல்வோம், வம்மின் என்று - வாருங்களென்று, அவருடன் எழுந்து - அவர்களுடன் தானுமெழுந்து, மாக ஆற்றினால் ஒளிவயங்கு தில்லை வந்து அடைந்தான்-ஆகாயவழியால் ஒளி விளங்கும் தில்லைவனத்தை வந்து சேர்ந்தனன். (எ-று.)

யோகிகளாலும் காண்டற்கரிய ஆனந்த நடனம் அவ்விறைவனுக்குரிமையாகும் அன்புடையடியார்க்கெளிமையாகும் ஆகலான் நாம் செல்வோமென்று அவருடன் திருமால் தில்லையையடைந்தனனென்க.

நடனத்தினருமைதோன்ற யோகியர்களுமெய்தருந்திருநடம் எனவும் அன்பினருமை தோன்ற அன்புடையடியார்க்கெளியதெனவும் திருமால்தானும் அனபினிலைமையையுணர்ந் தானென்பது தோன்ற ஏகுவாமினியெனவும் கூறினார். கண்டீர் என்பது முன்னிலை யசைச்சொல். (சஎக)

கலிவிருத்தம்.

சேர்ந்ததிருமூலட்டானதொழுதுபோற்றிச்சிங்கைகனி
கூர்ந்ததிருப்பாட்பாககலுழ்ன்முநமேலாருடன்குழும
நேர்ந்ததவயோகத்தினொடுநான்முயன்றுனைக்காலை
ஞை வார்ந்தசடைப்பிரானருட்கிழ்ந்துகாட்சிகொடுத்தருளி.

(இ-ள்) சேர்ந்து திருமூலட்டம்தொழுதுபோற்றி சிந்தைகளிகூர்ந்து-தில்லைவன த்தை வந்தடைந்து திருமூலட்டானேஸ்வரனைவணங்கித் தோத்திரஞ்செய்து மன க்களிப்படைந்து, திரு பாம்பரசு கலுழன் முதலோர் உடன் சூழும-இலக்குமி ஆதிசே டன் கருடன் ஆகிய இவர்கள் தன்னுடன் சூழ்ந்திருக்க, நேர்ந்த தவயோகத்தில்-தனக் கமைந்த தவயோகத்தில், நெடுநாள் முயன்றான் -அநேகநாள்முயற்சித் திருந்தனன், அக்காலை-அந்நாளில், வார்ந்தசடைப் பிரானும் மகிழ்ந்து-நீண்ட சடையையுடைய இறைவனும் மகிழ்ச்சியடைந்து-காட்சிகொடுத்தருளி-தெரிசனந்தந்து (எ-று.)

மாயோன் தில்லையையடைந்து திருமூலட்டானனைத் தொழுதுபோற்றிதிரு மகள்முதலாயினார் தன்னைச்சூழ்ந்திருக்க நெடுநாள் தவயோகத்தில் முயன்றனன் அக்காலையில் இறைவன்மகிழ்ந்து காட்சிகொடுத்தன னென்க.

உண்டிமுதலானவற்றை யொழித்திருத்தல் தவமும் மனதைத்தியானத்திரு த்தல் யோகமுமாதலால் தவயோகத்திலென்றார். (கஎ௨)

ஒன்னுதாருயிர்பருகியொளிருநதிகிரித்தனிப்படையோ
யென்னிமற்றிவரோடுமெம்பால்விழைந்ததியம்புகெனப்
பொன்னுடையுடைத்தோன்றல்புவியின்வீழ்ந்துபணிந்தெழுந்து
நன்னாமமெடுத்தோதிப்புகழ்ந்துபோற்றிநவில்கின்றான்.

(இ-ள்) ஒன்னுதார் உயிர்பருகி - பகைவருடைய உயிரையுண்டு, ஒளிரும் தி கிரி தனிப்படைபோய்-ஒளிவீசுஞ் சுதரிசனமென்னு மொப்பற்ற சக்கரத்தையுடை யவனே, நீ இவரோடும் எம்பால் விழைந்தது என் இயம்புக என-நீ இலக்குமிமுத லிய இவர்களோடு எம்மிடத்தில் விரும்பியது என்னை சொல்லக்கடவாயென்று கேட்க,பொன்னுடை உடையதோன்றல்-பீதாம்பரத்தையுடைய திருமால்; புவியில் வீழ்ந்துபணிந்து எழுந்து-பூமியில் தண்டாகாரமாக வீழ்ந்துபணிந்து எழுந்துநின்று, நல் நாமம் எடுத்து ஓதி-நல்ல திருநாமங்களை யெடுத்துப் பாடி, புகழ்ந்து போற்றி நவில்கின்றான்-புகழ்ந்துதோத்திரஞ்செய்து விண்ணப்பஞ் செய்கின்றான். (எ-று.)

(திருமால் தவத்துக்கிரங்கி காட்சிகொடுத்தருளிய இறைவன்) அத்திருமாலை நோக்கி உனக்குரிமையாளராகிய இலக்குமிமுதலானவர்களோடு எம்மிடத்து நீவி ரும்பியதுயாதென்றுகேட்க திருமால் திருவடியில்வீழ்ந்து வணங்கிநின்று தன்வே ண்டுகோளை விண்ணப்பஞ் செய்தனனென்க.

இறைவன்றிருநாமம் பிறவித்துன்பத்தையொழித்து முத்தியின்பத்தை யளி க்குமாற்றலுடைமையான் நன்னாம மெனவும், அந்நாமமே இறைவன் நடனகோலத் தில் விளங்கலான் அதனையுலகினர்கறிவிக்குமாறு எடுத்தோதிப்புகழ்ந்து போற்றி யெனவுங்கூறினார். (கஎரு)

அண்ணலேயானந்தத்தெள்ளாரமுதேயடியேங்கள்
புண்ணியநின்றிருக்கூத்தினமுதம்பருகிப்பொலிவெய்த
வுண்ணிறைந்தபெருங்காதலுடையேய்கருணைசெய்தருளா
யெண்ணியாரெண்ணமெல்லாமுடிக்கவல்லவெம்மானே.

(இ-ள்) அண்ணலே - என்னிறைவனே, ஆனந்தம் தெள் ஆர் அமுதே-ஆனந் தமாகிய தெள்ளிய அரிய அமுதமே, எண்ணியார் எண்ணம் எல்லாம் முடிக்கவல்ல எம்மானே - எண்ணுகின்றவர்கள் எண்ணும் எண்ணங்களெல்லாம் முடித்தருளு ம்ஆற்றலுடைய எமது பெருமானே, அடியேங்கள்-அடியோமாகிய நாங்கள், புண் ணிய நின் திருக்கூத்தின் அமுதம் பருகிப் பொலிவு எய்த - புண்ணியமாகிய உனது

நடனாமிர்தத்தைப்பருகிப்பொலிவடைய, உள் நிறைந்த பெருங்காதலுடையேம் - உள்ளத்தில் நிறைந்த பேராசையை யுடையோமாயிருக்கின்றோம், கருணைசெய்தருளாய் - கிருபைபாலிப்பாய். (எ-று.)

(விண்ணப்பஞ்செய்யத்தொடங்கிய திருமால்) இறைவனை அண்ணலே ஆரமுதே எம்மானே என்றுபுகழ்ந்துபாடி திருமகள் முதலாகியநாங்கள் யாவரும் உன்னுடைய நடனாமிர்தத்தைப்பருகிப் பொலிவுபெற்றிருக்க மிக்க ஆசையை யுடையவராயிருக்கின்றோம் அனுக்கிரகஞ்செய்வாயென்க.

எல்லாவானந்தங்களையுங்கடந்து பிரமானந்தமாய் விளங்கும் சிவானந்தத்தையளித்தலாலண்ணலே எனவும், அவ்வானந்தமடையப்பெற்ற அடியருள்ளத்துப் பாலில்நெய்போலாது தயிரினெய்போல் தெளிந்து நிறைந்திருத்தலால் ஆனந்தத் தெள்ளாரமுதே எனவும், அவ்வானந்தம் நடனத்தில் காணப் பெற்றிருத்தலால் நின்றிருக்கூத்தினமுதம் பருகெனவுங்கூறினார். (சஎச)

குறளுருவாயுலகளந்தானியம்புங்கூற்றுக்கேட் டருளி
யறவானெதிர்மொழிவாராழிப்படையோயெவ்வெவரும்
பெறலரியநடங்காணப்பெட்டாயாகிலெம்மிலிங்க
மறனணுகாத்திருக்காஞ்சிவளாப்பினெய்தித்தாபித்து.

(இ-ள்) குறளுருவாய் உலகளந்தான் இயம்பும் கூற்று கேட்டருளி - வாமனவடிவமாய்வந்து மூன்றுலகங்களையு மளந்ததிருமால்சொல்லிய விண்ணப்பத்தைக் கேட்டு, அறவனர் எதிர்மொழிவார்-அறக்கடவுளாகிய இறைவனர் விடைகூறுவார், ஆழிப்படையோய்-சக்கிராயுதத்தையுடையவனே,எவ்வெவரும் பெறல் அரிய நடம் காண பெட்டாயாகில்-எவ்வளவு பெருஞ்சிறப்பினையுடையாரும் காண்டற்கரிய நடனத்தை (இவர்களோடு நீ) காணவிரும்புவையாயின், மறன் அணுகா திருக்காஞ்சி வளைப்பில் எய்தி- தீங்கடையாத திருக்காஞ்சிப்பதியிற்சென்று, எம் இலிங்கம்-எம்முடைய வடிவமாகிய சிவலிங்கத்தை, தாபித்து - பிரதிட்டைசெய்து. (எ-று.)

அனுக்கிரகஞ்செய்வாயென்றுகேட்ட திருமாலை இறைவனேக்கி எத்தன்மையரானுங்காண்டற்கரிய ஆனந்தநடனத்தை உன்னினத்தவரோடுங்காண விரும்புவையாயின் காஞ்சியிற்சென்று சிவலிங்கப்பிரதிட்டை செய்து என்க.

மாவலிபால் வாமனவடிவாய்வந்து எனக்கு மூன்றுலகையுந் தருவாயென்று கேளாது எம்மடியான்மூன்றடிமண் தருவாயென்று கேட்டுப் பின்னர் மூன்றுலகத்தையுங் கொண்ட[illegible]ல் ஞானத்திற்குக் கீழ்ப்பட்டசிறியயோக நிலையிலிருந்து எத்தகைய மெய்ஞ்[illegible]ரும் காண்டற்கரிய ஆனந்தநடனத்தை விரும்பினனென்பதுதோன்ற குறளுருவாயுலகளந்தானியம்புங் கூற்றுக்கேட்டருளி - ஆழிப்படையோயெவ்வெவரும் பெறலரிய நடங்காணப்பெட்டா யென்றார்.

இதனல் சிறியபணிசெய்து பெரியபயனை விரும்பினனென்பது பெற்றாம்.

அல்லதூஉம் சிறியதொழில்செய்து பெரியபொருளைக்கேட்பது என்றுந்திருமாலுக்கு இயல்பென்பது தோன்ற குறளுருவாயுலகளந்தானியம்புங் கூற்றுக் கேட்டருளியெனவும்,எத்தகையோர் எத்தகையசிறுதொழிலியற்றிப்பெரும்பயனைக்கேட்பினும் அப்பயனையளிப்பது தருமமுணர்ந்தோரது தகுதி என்பதுதோன்ற அறவனர் நின்கருத்தைமுடிக்கின்றோ மெனவுங்கூறினார். (சஎரு)

நறுமலர்கொண்டருச்சித்துவல்லையீண்டுநண்ணுதிநின்
னுறுகருத்தைமுடிக்கின்றேமென்றுங்கருணுமுளாகேளா
மறுவிகந்தமனந்தன்பின்மாயோனங்கண்யாவரையு
நிறுவிவளவயற்காஞ்சிநெடுநீர்நகரங்கடிதடைந்தான்.

(இ-ள்) நறுமலர்கொண்டு அருச்சித்து - நறுமணங்கமழும் பூக்களைக்கொண்டருச்சனைசெய்து, ஈண்டு வல்லை நண்ணுதி - இவ்விடம் விரைந்துவந்து சேர்வாய், நின் உறு கருத்தை முடிக்கின்றேம் - நீ எண்ணியவெண்ணத்தை முடிக்கின்றோம், என்று ஆங்கு அருளும் உரைகேளா - என்றருளிய திருவாக்கைக்கேட்டு, மறு இகந்த மனத்து அன்பின் - குற்றமற்ற மனத்தினிகழ்ந்த அன்பினால், மாயோன் - திருமால், அங்கண் யாவரையும் நிறுவி - அத்தில்லையின்கண் இலக்குமிமுதலாயினரைநிறுத்தி, நெடுநீர் வளவயல்காஞ்சி நகரம் கடிது அடைந்தான - நீர்வளமிகுந்தவயல் சூழ்ந்தகாஞ்சிநகரத்தை விரைந்துவந்து சேர்ந்தான். (எ-று.)

(சிவலிங்கந்தாபித்தபின்னர்) மலரானருச்சனைசெய்து மீண்டுமிங்குவருவையாயின் உனதுகருத்தை முடிக்கின்றோமென் றருளிய அருளுரையைக்கேட்டு அன்புடையனாய்த் திருமால் தன்னவரைத்தில்லைக்கணிறுவிக் காஞ்சியை வந்தடைந்தனனென்க. ஆங்கு-அசை. (கஎசு)

ஏகம்பத்தொளிமணியையின்பத்தொழும்பர்செய்தவங்க
ளேகம்பத்தெனக்கொள்ளுமிறையைக்குறளாய்மாவலிமுன்
னேகம்பத்தாற்புரிசையொருமூன்றிறுத்ததனிமுதலை
யேகம்பத்தொடும்புளகமெய்தவணங்கித்தொழுதெழுந்து.

(இ-ள்) ஏகம்பத்தொளிமணியை - திருவேகம்பத்தினெழுந்தருளியிருக்கின்ற சோதிலிங்கத்தை, இன்பத் தொழும்பர் செய்தவங்கள் ஏகம் பத்து எனக்கொள்ளும் இறையை-இன்பத்தையுடைய மெய்யடியார்கள் செய்கின்ற தவங்களி லொன்றைப் பத்தென்றுகொள்ளும் தலைவனை, குறளாய் மாவலி முன் ஏகு அம்பு அத்தால் புரிசை ஒருமூன்று இறுத்த தனிமுதலையே - வாமனவடிவமாய் மாவலிமுன்னேசென்ற திருமாலாகிய அம்பினால் முப்பரங்களையு மழித்த ஒப்பற்றமுதல்வனையே, கம்பத்தொடும் புளகம் எய்த வணங்கி தொழுது-சரீரமுற்றும் ஒரோகம்பமாகப் புளகத்தையடைய வணங்கிப்பணிந்து, எழுந்து - எழுந்துநின்று. (எ-று.)

ஏகம்பத்தொளிமணியாயிருக்கின்றவனை அடியார்கள் செய்யும் ஒருதவத்தைப் பத்தாகக்கொள்கின்றவனை திருமாலாகிய அம்பால்முப்புரங்களையு மழித்தவனைவணங்கி யெழுந்துநின்றுளனென்க.

ஏகம்பத்தாலென்புழி அம்புஅதால் என்பது அத்தாலெனநின்றது. "இத்தை மெய்யெனககருதி" என்புழிப்போல. ஒருமூன்றிறுத்த என்புழி முற்றும்மைவிகாரத்தாற்றொக்கது. (கஎஎ)

அக்கம்பமுடையார்க்குத்தென்பாலங்கட்சிவலிங்க
மிக்கன்புதழைத்தோங்கவிண்டுவீசனெனவிருவிப்
பொக்கங்கண்முழுதகலப்போற்றிவேண்டியருள்பெற்றுத்
திக்கெங்கும்புகழ்பரப்புந்தில்லைவனத்தைமீண்டணைந்தான்.

(இ-ள்) அ கம்பமுடையார்க்குத் தென்பால் அங்கண் - அந்தத் திருவேகம்பமுடையாருக்குத்தென்பக்கமாகிய அவ்விடத்தில், சிவலிங்கம் மிக்க அன்பு தழைத்து ஓங்க விண்டுவீசன் என இருவி - சிவலிங்கமூர்த்தியை மிகுந்தஅன்பு மேன்மேலெழ விண்டுவீசனென்னுநாமத்தால் பிரதிட்டைசெய்து, பொக்கங்கள் முழுது அகல போற்றி - பொய்மையெல்லாம் நீங்கத்துதித்து, வேண்டியருள்பெற்று - தானெண்ணியபடியேவேண்டியவருள்பெற்று, திக்கு எங்கும் புகழ் பரப்பும் தில்லை வனத்தை- திசைகளெங்கும் புகழ்பரவச்செய்யும் சிதம்பரக்ஷேத்திரத்தை, மீண்டு அணைந்தான் - மீளவும் வந்துசேர்ந்தான். (எ-று)

அத்திருவேகம்பமுடையார்க்குத் தென்பக்கத்தில் விண்டுவீசமென்னு நாமத்தோடு ஓர்சிவலிங்கப்பிரதிட்டைசெய்து தொழுது வணங்கித் திருவருளுக்குரியனாய் தில்லைவனத்தைவந்து சேர்ந்தனனென்க. (கள அ)

ஆண்டணைந்ததிருமாலுக்கருளாரமிழ்தமனையாருந்
தூண்டரும்பேரொளிப்பிழம்பாய்ச்சுடருந்திருச்சிற்றம்பலத்துட்
காண்டகையவானந்தநிருத்தங்காட்டக்கழியன்பு
பூண்டதிருப்பாப்பரசுபுள்ளேற்றண்ணலொடுங்கண்டான்.

(இ-ள்.) ஆண்டணைந்த திருமாலுக்கு - தில்லையைவந்தடைந்ததிருமாலுக்கு அருளார் அமிழ்தம் அனையாரும்-கருணைநிறைந்த அமிர்தத்தை யொத்தஇறைவரும், தூண்டரும் பேரொளிப்பிழம்பாய் - தூண்டாத பேரொளிக்கூட்டமாய், சுடரும் திருச்சிற்றம்பலத்துள் - ஒளிவிடும் சிற்சபையில், காண்டகைய ஆனந்த நிருத்தங் காட்ட - காணத்தக்க ஆனந்தநடனத்தைக்காட்ட, கழி அன்பு பூண்ட திரு பாப்பரசு புள்ளேறு அண்ணலொடும் கண்டான் - அம்மாயோன் மிக்க அன்பு பூண்ட இலக்குமி ஆதிசேடன் கருடன் ஆகிய இவர்களோடும் தரிசித்தனன். (எ-று.)

தில்லையை வந்தடைந்த திருமாலுக்கு இறைவன் சிற்சபையின்கண் ஆனந்த நடனத்தைக்காட்ட இலக்குமிமுதலானவர்களோடு தரிசித்தனனென்க.

அமிர்தம் இன்சுவையுடையதுபோல்இறைவன் அருளுடையானாதலால்அருளாரமுதமனையாருமெனவும்,எக்காலத்துமழிவின்றி சுயஞ்சோதியாய் ஒளிவிட்டெரிவது பொன்னம்பலமாதலால் தூண்டரும் பேரொளிப்பிழம்பாயெனவுங் கூறினார். ()

கண்டளவில்பெருங்காதலின்பவெள்ளங்கரையிகப்பக்
கொண்டநிறைமகிழ்ச்சியினாலாடிப்பாடிக்கும்பிட்டுப்
பண்டைநிலைமறந்துமதுப்பருகுஞ்சுரும்பிற்பரவசனாய்
மண்டியபேரார்வத்தால்வணங்கித்தொழுதுகளிசிறந்தான்.

(இ-ள்.) கண்ட அளவில் பெருங்காதல் இன்பவெள்ளம் கரை இகப்ப கொண்ட - தரிசித்த அவ்வளவிலே பெரிய ஆசையாகிய இன்பப்பெருக்கம் கரையிகந்து மேலெழக்கொண்ட, நிறை மகிழ்ச்சியினால் ஆடி பாடி கும்பிட்டு - நிறைந்த மகிழ்ச்சியினால் ஆனந்தக்கூத்தாடித்தோத்திரஞ்செய்து வணங்கி, பண்டை நிலைமறந்து- முன்னிலைமையைமறந்து, மது பருகும் சுரும்பின் பரவசனாய் - தேனுண்ணும் வண்டைப்போலப் பரவசமடைந்து,மண்டிய பேர் ஆர்வத்தால்-மிக்கபேரன்பினால், வணங்கி தொழுது களிசிறந்தான் - தண்டாகாரமாகப்பணிந்து மகிழ்ச்சியடைந்தான். (எ-று.)

தரிசித்தபொழுதே உண்டாகிய ஆனந்தப்பெருக்கால்மகிழ்ச்சியடைந்து அம்மகிழ்ச்சியினால் ஆடியும் பாடியும் கும்பிட்டும் பரவசமடைந்தும் பணிந்தும் மகிழ்ச்சியடைந்தனனென்க.

ஆடிப்பாடிக்கும்பிட்டுப் பரவசனாய் வணங்கித்தொழுது என்றது இன்பவெள்ளம் கரையிகந்தகாலத்துண்டாகும் குணங்களாதலால் அக்குணங்களெல்லாம் திருமால் தன்னிடத்து நிகழப்பெற்றனனாதலின் களிசிறந்தானென்றார். (க அ௦)

இறைவனார்திருக்கூத்துக்கிசையக்கணங்களியமுழக்கு
முறைபுணர்ந்துபெருங்களிப்பாற்றானும்படகமுழக்குதலு
மறைமுதல்வரதுநோக்கிமகிழ்ந்துபடகப்பணிதனக்கே
நிறைவிருப்பினருள்செய்யப்பெற்றுவாழ்ந்தானெடியோனே.

(இ-ள்.) இறைவனார் திருக்கூத்தற்கு இசைய-நடராசமூர்த்தியின் திருநடனத்திற்கிணங்க, கணங்கள் இயம் முழக்கும் முறை உணர்ந்து-சிவகணங்கள்பலவாத்தியங்களை முழக்கும் முறைமையையறிந்து, பெருங்களிப்பால் தானும் படக முழக்குதலும்-பேரானந்தத்தால் தானும் மத்தளத்தை முழக்கவும், மறை முதல்வர் அது நோக்கி மகிழ்ந்து - வேதமுதல்வனாகிய இறைவன் அதனைப்பார்த்து மகிழ்ச்சியடைந்து, படகப்பணித்தனக்கே நிறைவிருப்பின் அருள்செய்யப்பெற்று - அம்மத்தள முழக்கும்பணியைத்தனக்கே மிக்க அன்போடு கட்டளையிடப்பெற்று, நெடியோன் வாழ்ந்தான் - திருமால் அங்குவாழ்ந்திருந்தனன். (எ-று)

(மகிழ்ச்சியடைந்த திருமால்) இறைவன் திருக்கூத்துக்கிணங்கச்சிவகணங்களெல்லாம் பலவாத்தியங்களை முழக்கும் முறைப்பாட்டையுணர்ந்து அவர்களில் தானும் ஒருவனாக மத்தளத்தை முழக்கவும், அதனைநோக்கி அம்மத்தளப்பணியை அத்திருமாலே செய்துவர நடராசன் கட்டளையிட்டருளினன். அவ்வண்ணமே அப்பணிசெய்து திருமால் வாழ்ந்திருந்தனன் என்க. (கஅக)

விதுவொன்றுஞ்சடைமுடியார்விண்டுவீசம்வந்தவா
றிதுகண்டீர்முனிவீர்காளீண்டுத்தொழுதுவழிபட்டுத்
துதிசெய்துகணநாதர்திருமாளிகைசூழ்தருமுன்றின்
மதுவிள்ளுமலர்க்கூந்தன்மலையான்மடந்தையெய்தினாள்.

(இ-ள்,) முனிவீர்காள் - முனிவர்களே, விது ஒன்றும் சடைமுடியார் - சந்திரன் தவழும் சடைமுடியையுடைய இறைவனார் வீற்றிருக்கும், விண்டுவீசம் வந்தவாறு இது - விண்டு வீச்சரம் வந்தவரலாறு இதுவாகும், மதுவிள்ளும் மலர்க்கூந்தல் மலையான் மடந்தை - தேன்சிந்தும் மலரணிந்த கூந்தலையுடைய மலையரையன்மகளாகிய அம்மையார், ஈண்டு தொழுது வழிபட்டு துதிசெய்து - இவ்விடத்து இவ்விண்டுத்தளியை வணங்கிப்பூசித்துத்தோத்திரஞ்செய்து, கணநாதர் திருமாளிகை சூழ்தரு முன்றில் - சிவகணநாதர்கள் வீற்றிருக்கும் திருத்தளிகள் சூழ்ந்திருக்கின்ற முன்றிலில், எய்தினாள் - சேர்ந்தனர். (எ-று.)

முனிவர்களே விண்டுவீச்சரத்தின்வரலாறு இதுவாகும். அவ்விண்டு வீச்சரத்தை அம்மையார் வழிபட்டு கணநாதர்களிருக்கும் இடத்தையடைந்தனரென்க.

பண்ணிசைந்தவரிச்சுரும்பர்பாடலபயிலுமலரிலஞ்சித்
தண்ணிசைந்தசிவகங்கைத்தழங்குந்திரைநீர்குடைந்தாடிப்
பெண்ணிசைந்தபெருவனப்பிற்பிராட்டியாங்குப்பிறங்கொளியாற்
கண்ணிசைந்தகளிசிறப்பவகத்தியீசங்கண்டணைந்தாள்.

(இ-ள்.) பெண் இசைந்த பெருவனப்பின் பிராட்டி-பெண்ணுக்குரிய மிக்க அழகினையுடைய அம்மையார், பண் இசைந்த வரி சுரும்பர் - இசையமைந்த கீற்றுகள் பொருந்தியவண்டுகள், பாடல்பயிலும் மலர் இலஞ்சி - பாடுகின்ற மலர்கள் நிறைந்த மடுப்போலும் விளங்குகின்ற, தண் இசைந்த தழங்கும் திரைநீர் சிவகங்கை குடைந்தாடி- குளிர்ச்சிபொருந்திய ஒலிக்கின்ற அலைகளையுடைய சிவகங்கைத்தீர்த்தத்தில் மூழ்கி, ஆங்கு பிறங்கு ஒளியால் -அவ்விடத்துப்பிரகாசிக்கும் மிக்கவொளியினால், கண் இசைந்த களி சிறப்ப - கண்ணுக்கியைந்த ஆனந்தமிக, அகத்தி ஈசம் கண்டு அணைந்தாள்- அகத்தீசத்தைப்பார்த்துச்சமீபித்தனர். (எ-று.)

(கணநாதர்கள் தங்கியிருக்குமிடத்திலிருந்து) சிவகங்கைக்கு வந்து அத்தீர்த்தத்தில் மூழ்கியெழுந்து அகத்தீசத்தைக்கண்டனரென்க.

வண்டுகளுக்குப்பண்ணும் கங்கைக்குத் தண்மையும் வனப்பிற்குப்பெண்ணும் களிப்பிற்குக்கண்ணும் இனமாதலால் பண்ணிசைந்த வரிச்சுரும்பரெனவும்,தண்ணி

சைந்த சிவகங்கையெனவும், பெண்ணிசைந்த பெருவளப்பெனவும், கண்ணிசைந்த கஜியெனவுங்கூறினர். வரிச்சுரும்பர் பாட்டைப்பாடும்வண்டென்பதுமொன்று.

இலஞ்சி என்பது மடு இதனை "கடுமுரண்முதலைய நெடுநீரிலஞ்சி" என்னும் புறப்பாட்டானுணர்க. (கஅ௩)

கலிநிலைத்துறை.

என்றசூதனைமாதவர்யாவருமேத்தியே
பன்றிகாணருஞ்சேவடிப்பற்றியசிந்தையோய்
துன்றுசீர்மையகத்தியீசத்தியல்சொல்கென
நன்றுமுள்ளமகிழ்ந்துவிளங்கநவிற்றுவான்.

(இ-ள்) என்ற சூதனை - என்று கூறிய சூதமுனிவனை, மாதவர் யாவரும் ஏத்தி - பெரியதவத்தையுடைய முனிவர்களெல்லாந்தோத்திரஞ்செய்து, பன்றி காணரும் சேவடி பற்றியசிந்தையோய் - திருமால் வராகவடிவங்கொண்டுங் காண்டற்கரிய சிவந்த திருவடியைப் பற்றுக்கோடாகப்பற்றி யிருக்கின்றசித்தத்தையுடையவனே, துன்று சீர்மை அகத்தியீசத்து இயல் சொல்க என - மிக்கபெருமையையுடைய அகத்தியீசத்தின் வரலாற்றைச்சொல்வாயென் றுகேட்க, நன்றும் உள்ளம் மகிழ்ந்து விளங்க நவிற்றுவான் - மிகவும் மனமகிழ்ந்து விளங்கும்படி நன்றாகச் சொல்லுவான். (எ-று.)

(அம்மையார் அகத்தியீசத்தைக்கண்டார்) என்றுகூறிய சூதமுனிவனை முனிவர்களெல்லாம் வணங்கி இறைவன்றிருவடியைப்பற்றிய சித்தத்தையுடையோய் அகத்தியீசமென்று கூறிய அவ்விலிங்கத்தின் வரலாற்றைச்சொல்வாயென் றுகேட்க உள்ளமகிழ்ந்து விளங்கச்சொல்வாராயினர் என்க.

சூதமுனிவர் இறைவன் திருவடியொன்றையே பற்றியிருக்கும் அன்புடைமை தோன்ற பன்றி காணருஞ்சேவடி பற்றிய சிந்தையோயெனவும், தாம் விரும்பியிருக்கும் அவ்விறைவன் புகழையே அம்முனிவரும் விரும்பிக்கேட்டனராதலின நன்று முள்ளமகிழ்ந்து விளங்கநவிற்றுவானெனவுங்கூறினர். (கஅ௪)

கடவுண்மாமுனிநாரதன்முன்னொருகாலையி
னிடனுடைத்திருக்காஞ்சியினேகம்பநாதனைச்
சுடருமாடகயாழிசையாற்றொழுதேத்துவான்
றடவுவெள்ளிப்பருப்பதநின்றுந்தணந்தனன்.

(இ-ள்.) கடவுள் மாமுனி நாரதன் - தெய்வத்தன்மையுடைய நாரதமுனிவர், முன் ஒருகாலையில் - முன்னொருகாலத்தில், இடன் உடை திருக்காஞ்சியின் ஏகம்பநாதனை - பரந்தவிடத்தையுடைய காஞ்சியில் ஏகாம்பரநாதனை, சுடரும் ஆடகயாழிசையால் - பிரகாசிக்கும் பொன்னாற்செய்த யாழினிசையால், தொழுது ஏத்துவான் - வணங்கிததோத்திரஞ்செய்ய, தடவு வெள்ளிப் பருப்பதம் நின்றும் தணந்தனன் - பெருமைபொருந்திய வெள்ளியங்கிரியினின்றும் நீங்கினன். (எ-று)

நாரதமுனிவர முன்னொருகாலத்தில் காஞ்சியில் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதனை வணங்கக் கைலயங்கிரியினின்றும் போந்தனனென்க. ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் எனப்பொன்னின் விசேடங்கூறலானுமறிக. (கஅ௫)

அண்ணலார்தம்மடியிணைதைவருசிந்தையா
னண்ணுகின்றநரப்புக்கருவித்தலைவனை
விண்ணினீனுக்குபுவெய்தெனவிந்தநெடுங்கிரி
யெண்ணமவாய்ப்பவியங்குமுருக்கொடுமுன்னுறூ.

(இ-ள்.) அண்ணலார்தம் அடியிணை தைவரு சிந்தையால்- இறைவனுடைய இரண்டு திருவடிகளைப்பற்றிய சித்தத்தினாலே, நண்ணுகின்ற நரப்புக்கருவித் தலைவனை - வருகின்றவீணைக்குத் தலைவராகிய நாரதமுனிவரை, விந்தநெடுங்கிரி-பெரியவிந்தபருப்பதம், வெய்தெனவிண்ணில் நோக்குபு - விரைந்து ஆகாயத்திலேபார்த்து, எண்ணம் வாய்ப்ப இயங்கும் உருக்கொடு முன்னுறு - தானெண்ணிய வெண்ணம் முடிவுபெறச்சலிக்கும் சரவுருவத்தோடு முன்னேசென்று. (எ-று.)

விந்தமலை நாரதமுனிவர்ஆகாயமார்க்கமாக வருதலைப்பார்த்து மானிடவடிவங்கொண்டு முன்னே சென்றதென்க.

விரல் யாழைத் தைவருதல்போலும் இறைவன் திருவடியை மனம்தைவருமென்பார் நரம்புக்கருவித்தலைவன் அண்ணலார்தம் மடியிணைதைவருசிந்தையால் என்றார். (கஅ௬)

அருக்கியம்முதலாயினகொண்டுவழிபடூஉப்
பெருத்தகாதலிற்பேணித்தொழுதுவணங்கலுங்
கருக்கடிந்துயர்காழறுமாதவனோகையான்
மருத்தபூஞ்சுனைவிந்தவரைக்கிதுபேசுவான்.

(இ-ள்) அருக்கிய முதலாயின கொண்டு வழிபடு-அருக்கிய முதலானவைகளைக்கொண்டு வழிபட்டு, பெருத்தகாதலின் பேணி தொழுது வணங்கலும் - மிக்க ஆசையினால் விரும்பி தண்டாகாரமாக வணங்கவும், கருக்கடிந்து உயர்காழ் அறுமாதவன்-பிறவித்துன்பமொழிந்து மேன்மைபெற்ற நாரதமுனிவர், ஓகையால்-மகிழ்ச்சியினால், மருத்தபூஞ்சுனை விந்தவரைக்கு இது பேசுவான்-நறுமணங்கமழும் பூக்கள் நிறைந்த சுனைகளையுடைய விந்தமலைக்கு இதனைச் சொல்லுவார். (எ-று.)

(முன்னேசென்ற விந்தமலை) அர்க்கிய முதலானவற்றால் வழிபட்டுவணங்கவும் அந்நாரத முனிவர் மனமகிழ்ந்து அவ்விந்தமலைக்கு இதனைக்கூறுவார் என்க.

அர்க்கியமுதலியன என்பது அருக்கியம் பாத்தியம் ஆசமனம் கொடுத்தலும் ஆசனமளித்து இன்சொல்வழங்கலுமாம். (கஅஎ)

மன்னும்மெய்த்தவர்பாற்புரியும்வழிபாட்டினி
னின்னையொப்பவர்கண்டிலனித்தகுநின்னையும்
பொன்னினாட்டவர்போதவிகழ்ந்தனரன்னதை
யுன்னியுன்னிவருந்திடுகின்றதென்னுள்ளமே.

(இ-ள்.) மன்னும் மெய்த்தவர்பால் புரியும் வழிபாட்டினில் - நிலைபெற்ற மெய்ம்மையாகிய தவசிகளிடத்தில் விரும்பிச்செய்யும் வழிபாட்டில், நின்னையொப்பவர் கண்டிலன்-உன்னை யொத்தவர்களை யான் கண்டதில்லை, இத்தகு நின்னையும்- இத்தகுதியையுடைய உன்னையும், பொன்னி நாட்டவர் போத இகழ்ந்தனர்-பொன்னுலகத்திலுள்ள தேவர்கள் மிகவும் இகழ்ச்சிசெய்தார்கள், அன்னதை-அவ்விகழ்ச்சியை, என் உள்ளம் உன்னி உன்னி வருந்திடுகின்றது - என்மனம் நினைந்து நினைந்து வருத்தமடைகின்றது. (எ-று.)

மெய்த்தவர்களிடத்துச்செய்யும் வழிபாட்டில் உன்னை யொப்பவரையான் கண்டதில்லை இத்தகைய நின்னையும் அமரர்கள் அவமதித்தார்கள் அதனை என்னுள்ளம் எண்ணி எண்ணி வருந்துகின்றது என்க. (கஅஅ)

என்றதாபதவேந்தனைமீளவிறைஞ்சிமுன்
நின்றுதேவருள்யாவரிகழ்ச்சிநிகழ்த்தினா
ரென்றனக்கிகழ்யாதுகொல்கூறினையேலது
மன்றமாற்றுவன்யானெனவிந்தம்வகுத்ததால்.

(இ-ள்) என்றதாபதவேந்தனை - என்றுகூறியதவசிரேஷ்டராகிய நாரதமுனிவரை, மீள இறைஞ்சி - மீளவும்வணங்கி, முன் நின்று - அம்முனிவர்முன்னேநின்று, தேவருள் யாவர்இகழ்ச்சி நிகழ்த்தினர் - தேவருக்குள் எவர்கள் என்னிடத்திலிகழ்ச்சியைக்கூறினார்கள், என்றனக்கு இகழ்யாது - (அவர் கூறியதுபோலும்) எனக்கு இகழ்ச்சியாது இருக்கின்றது, கூறினையேல் - சொல்வீராயின், யான் அது மன்ற மாற்றுவன் என - நான் அவ்விகழ்ச்சியைநிச்சயமாக இப்பொழுதே மாற்றுவனென்று, விந்தம்வகுத்தது - விந்தமலைகூறியது. (எ-று.)

(தேவர்கள் உன்னை இகழ்ந்ததை என்னுள்ளம் நினைந்து வருந்துகின்றது) என்றுகூறியநாரதமுனிவரை மீளவும்வணங்கி யார் என்னை இகழ்ச்சியாகக் கூறினவர்கள் என்னிடத்துள்ள இகழ்ச்சியாவது எது அவற்றைக்கூறுவீராயின் அதனை இப்பொழுதே நிச்சயமாக மாற்றுகின்றேன் என்று விந்தமலைகூறியதென்க.

விந்தமலை தன்னிடத்திலிகழ்வும் தன்னையிகழ்வாகக்கூறுவாரும் இல்லை யென்றெண்ணியிருந்ததாகலின் யாவரிகழ்ச்சி நிகழ்த்தினர் என்றனக்கு இகழ்யாது என்றிருமாந்து கூறியதென்க. (கஅக)

முனிவனவ்வுரைகேட்டுமொழிதருமேன்மையிற்
புனிதநின்னொடுபொன்வரைநேரொனுநூலெலாம்
பனிமதிச்சடைப்பண்ணவர்தேவர்குழாத்தொடு
நனிமகிழ்ந்தவண்வைகுவர்நாடொறுமாதலால்.

(இ-ள்.) முனிவன் அவ்வுரைகேட்டு - நாரதமுனிவர் அந்த விந்தமலை கூறியதைக்கேட்டு, நூல் எல்லாம் மொழிதருமேன்மையில் - நூல்களெல்லாம் சொல்லப்படுஞ்சிறப்பில், புனிதநின்னொடுபொன்வரைநேர் எனும் - பரிசுத்தமாகிய உன்னொடுபொன்மலையொப்பென்றுசொல்லும், பனிமதிச் சடை பண்ணவர் - குளிர்ந்தசந்திரனையணிந்த சடைமுடியையுடைய இறைவர், தேவர்குழாத்தொடு நனிமகிழ்ந்து - தேவகூட்டங்களோடும் மிகவும்மகிழ்ந்து, நாடொறும் அவண்வைகுவர் - நாடோறும்அம்மேருமலையில் வசிப்பர், ஆதலால் - ஆகையினால். (எ-று.)

நாரதமுனிவர் விந்தமலைகூறியதைக்கேட்டுநூல்களெல்லாம்சொல்லப்படுமேன்மையில் உன்னோடுபொன்மலை யொப்பென்றுசொல்லும்(அங்ஙனமிருக்க) சந்திரசேகரனாகிய இறைவன் தேவர்குழாங்களோடு அம்மேருமலையில் நாடோறும் மிகவும் மகிழ்ந்துவசிப்பன் ஆகையினாலென்க.

ஈண்டு நின்னோடு பொன்மலையொப்பாக, இறைவனுன்னிடத்து வீற்றிராது அம்மேருமலையின்கண் வீற்றிருத்தல் இகழ்ச்சியன்றோவென்று அவ்விந்தமலைக்கெடுத்துக்காட்டியதாகும். அல்லதூஉம் நூலெலாம் மொழிதருமேன்மையில் புனிதநின்னொடுபொன்வரைநேரொனும் என்றதனால் விந்தமலையை உயர்த்திக்கூறியதெனவும் பனிமதிச்சடை பண்ணவர் தேவர்குழாத்தொடு நனிமகிழ்ந்தவண்வைகுவர்நாடொறுமென்றதனால் பொன்மலையையுயர்த்திக்கூறியதெனவுங்கொள்க. இவற்றுள்விந்தமலையை யுயர்த்திக்கூறியது முகமனும் பொன்மலையையுயர்த்திக்கூறியதுஉண்மையுமாமென்க. (ககூo)

இயங்குகோள்களுடுக்களிராசியெவற்றொடும்
வயங்குசந்திரசூரியர்தாம்வடமேருவை
நயந்துசுற்றுவர்நாடொறுமத்திறம்நோக்கியே
யுயங்குகின்றனன்யானெனப்பின்னருமோதுவான்.

(இ-ள்) இயங்கு கோள்கள் உடுக்கள் இராசி எவற்றொடும் வயங்கு சந்திரர் சூரியர் தாம் - சரிக்கின்ற அங்காரகன் முதலிய கிரகங்களும் அசுவனிமுதலிய நக்ஷத்

திரங்களும் மேடமுதலாகிய இராசிகளும் எவை யிற்றிலும் விளக்குஞ் சந்திர சூரியர்களும், வடமேருவை - பொன் மலையை, நாடொறும் நயந்து சுற்றுவர் - நாடோறும் விரும்பிப் பிரதக்ஷிணம் வருவார்கள், அதநிறம் நோக்கி-அச்சிறப்பை நோக்கி, உயங்குகின்றனன் என - நான் வருந்துகின்றேனென்று, பின்னரும் ஓதுவான் - பின்னுஞ் சொல்வான் (எ-று).

சரிக்கின்றசூரியன்முதலிய கிரகங்கள்-நக்ஷத்திரங்கள்-இராசிகள்-சந்திரர்-சூரியர் என்றுசொல்லப்பட்ட இவர்களெல்லாம் மேருமலையை நாடோறும் விரும்பிச் சுற்றுகின்றனர். யான் அச்சிறப்பைநோக்கி வருந்துகின்றேனென்று நாரதமுனிவா பின்னுஞ்சொல்லுவார் என்க.

நாரதமுனிவர் விந்தமலைக்குப பொன்மலைச் சிறப்பையெடுத்துக் கூறவந்தவராதலால் மேலைச்செய்யுளில் அப்பொன்மலையி லிறைவன் வீற்றிருக்கின்ற சிறப்பையும், அச்சிறப்பால் கோள்கள் முதலிய யாவும் அம்மலையை வலம் வருகின்றன என்னு மேன்மையையு மெடுத்துக்கூறுவார்போனறு இவ்விந்தமலைக்குச் சிறப்பின்மையை நன்கு விளக்கியவாறுரும். எனவே இறைவன் உன்னை இடமாகக்கொள்ளவில்லையென்றும், அதனால் ஏனையோரும் உன்னை யொருபொருளாக மதிக்கவுமில்லையென்றும் அதனிகழ்ச்சியைவிளக்கியதாமென்க. இது வீறுகோளணி. (கக௯)

தனக்குநேர்வரியாய்பலசாற்றுவதென்கொலோ
வெனக்குநீநனிநண்பினையாதலினித்திற
முனக்கியம்பினனின்னினியேகுவலொய்யென
மனக்குவேண்டியசெய்கெனமாதவனீங்கினன்.

(இ-ள்.) தனக்கு நேர்வு அரியாய்-உன்றனக்கு ஒப்பானதொன்றை அறியாத விந்தமே,பலசாற்றுவது என்கொல்-இதனை மிகைபடக் கூறுவதனாற் பயனென்னை, (ஆயினும்) எனக்கு நீ நனி நண்பினை ஆதலின் - எனக்கு நீ மிகவும் நட்பினனாயிருக்கின்றனையாதலின், இத்திறம் உனக்கு இயம்பினன் - இவ்வகையெல்லா முனக்குநன்றாகக்கூறினேன், இன் இனி ஏகுவல் - யானிப்பொழுதேசெல்கின்றேன், ஒய்யென மனக்கு வேண்டிய செய்க என்ன - (இனி நீ) விரைந்துமனத்துக்கு வேண்டியபடியே செய்யக்கடவாயென்று, மாதவன் நீங்கினன் - நாரதமுனிவர் சென்றனர். (எ-று.)

விந்தமலையே உனக்குப் பலவாறு எடுத்துக்கூறுவதனாற் பயனென்னை? ஆயினும் நீ எனக்கு நட்பினனாகையால் சிலவற்றை யெடுத்துக்கூறினேன். இனி யான் செல்கின்றேன், இனி நீ (யான் கூறினவற்றையெண்ணி) மிகவும் விரைந்து உன்மனத்தில் தோன்றியவாறெல்லாம் செய்யக்கடவாயென்று முனிவர் சென்றனரென்க.

இறைவன் இருத்தலானும் கோள்கள் முதலிய யாவும் வலம் வருதலானும் சிறப்புடையதாக அப்பொன்மலை தான் எண்ணினாலும் உனக்கொப்பாகாதென்பார் தனக்கு நேர்வரியாயெனவும்,இவ்வருஞ் சிறப்பையுடைய உன்னருமையையுணராது அமரர்களிகழ்ந்துரைத்தனவாகிய அப்புன்மொழிகளை யானெவ்வளவென்று எடுத்துச் சொல்லுவேனென்பார் பலசாற்றுவதென்கொலெனவும்,அத்தேவசணங்களுள் யானுமொருவனாயினும் நீ என்பாலுள்ள நட்பினால் அவ்வொற்றுமைகருதிச் சில கூறினேனென்பார் எனக்கு நீ நனிநண்பினையாதலின் இத்திற முனக்கியம்பினனெனவும், இனி இங்ஙனம் தாழ்ந்திருப்பேனாயின் உன்னை யிகழ்ந்த இழிப்புரையெல்லாம்கூறவருமென்பார் இன்னினியேகுவலெனவும், தேவர்களெல்லாரும் உன்னை

மிகப்பலவாக இழித்துச்கூற மேருமலை மிகவுஞ் செருக்குற்றிருத்தலால் இனித் தா ழாது அச்சன் செருக்கடங்குமாறு அம்மலையினும் நீ மேலோங்க வேண்டுமென்பார் ஓய்யென மனக்குவேண்டிய செய்கென எனவுங்கூறினார்.

மனக்கு என்புழி சாரியையுள்வழி சாரியை தவிர்ந்தது, மாட்டுக்குச்சித்திர மென் றாற்போல. (கக௨)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பத்தர்மெய்ச்கிளைமகதியாழ்பயில்படிமவுண்டியனீங்கலு
மெய்த்தவெஞ்சினமீக்கொண்மாலவரைவீயுமெல்லைவிளக்கினைச்
செத்திறப்பவளர்ந்தெழுந்துவிசும்புசென்றுநிவந்ததான்
மைத்தவல்லிருள்கீறிவாள்களவயங்குமாறுதடுத்ததரோ.

(இ-ள்.) பத்தர் மெய்க்கிளை மகதியாழ் பயில் படிமவுண்டியன் பத்தரா்ய் மெய்மையாகியநரம்புகளையுமுடைய மகதியாழ்வல்ல தவவுண்டியையுடைய நா ரதமுனிவர், நீங்கலும் செல்லவும், மெய்த்த வெஞ்சினம் மீக்கொள் மாலவரை உண் மையாகவே கொடுங்கோபம் மேன்மேற்கொண்ட விந்தமலை, மைத்தவல் இருள் கீறி மிகவும்கரிய இருளைக்கிழித்து, வாள்கள் வயங்குமாறு தடுத்து ஒளிவிளங்கும் சந்திரசூரியர்கள் செல்லும்வழியைத்தடைசெய்து, வீயும்எல்லைவிளக்கினைச் செத் திறப்பவளர்ந்து எழுந்து விசும்பு சென்று நிவந்தது-இறக்குந் தருணத்து விளக் கொளியைச்சார்ந்து விட்டிற்பறவை மரணமடைதல்போல அடிபரந்துமேலோங்கி விண்ணளவுஞ் சென்று நிமிர்ந்தது, (எ-று)

நாரதமுனிவர் சென்றபின் விந்தமலை அடங்காதச்சினங்கொண்டு ஆகாய முகட்டைக் கடந்தோங்கி இருளையோட்டிச்செல்லும் சூரியசந்திரர்கள் கதியைத் தடுத்ததெனக.

நாரதமுனிவர்-உன்னை இகழ்ந்துகூறியன பல, யான் உன்னிடங்கூறியன சில என்பது முதலாகச்கூறிய சொல்லெல்லாம் விந்தமலைக்குக் கோபத்தையே விளைவித்தனவாகலான் மெய்த்த வெஞ்சினமீக்கொண்மாலவரை எனவும், அக்கோ பத்தான் மேலெழுந்தோங்கிய ஓக்கம் விளக்கினைக்கண்டெழுகின்ற பறவையினூ க்கம்போலாம்,ஆகலான் வீயுமெல்லை விளக்கினைச்செத்திறப்ப வளர்ந்தெழுந்து விசு ம்புசென்று நிவந்தது எனவும், அங்ஙனமாயினும் அவ்வோக்கத்தின்பெருமை ஈண் டு விளக்கவேண்டுமாதலால் மைத்தவல்லிருள்கீறி வாள்கள் வயங்குமாறு தடுத்து எனவுங்கூறினார். (கக௩)

துருவமண்டலவெல்லைகீழ்பட்டமேக்கெழுஞ்சுடர்வெற்பினைத்
தருநிலத்தவர்நோக்கிமுந்துதழற்படைக்குலிசக்கொடுங்
கருவியிற்சிறகரிவலாரியுடனெசெருச்செய்கருத்தினால்
வருவதாங்கொலெனத்திகைத்தருமருண்டுதம்முள்வெரீஇயினர்.

(இ-ள்) துருவமண்டல எல்லை கீழ்பட்ட மேக்கெழும்-துருவமண்டலத்தின் அளவுகீழாக மேலோங்கி வளரும், சுடர் வெற்பினை பிரகாசிக்கின்ற விந்தமலையை, தருநிலத்தவர் நோக்கி - கற்பகச்சோலை சூழ்ந்த விண்ணாட்டவர் பார்த்து, முந்து தழல் படை குலிசம் கொடுங்கருவியின் சிறகு அரிவலாரியுடன் - முன்னே நெருப் பைச் சிந்தும் படையாகிய வச்சிராயுதமென்கின்றகொடிய கருவியினாலே மலைகளின் சிறகையரிந்த இந்திரனுடன், செரு செய கருத்தினால் வருவதாங்கொல் என-போர்

செய்யும் எண்ணத்தினால் வருகின்றதோ வென்று, திகைத்து மருண்டு தம்முள் வெருவினார்- திகைப்புற்று மயங்கி தங்களுக்குள் தாங்களே பயமுற்றனர்-(எ-று.)

எல்லாமண்டலங்கட்கும் மேலாயுள்ள துருவமண்டலமும் கீழாக மேலோங்கிய விந்தமலையை விண்ணுலகத்தவர் பார்த்து இம்மலை இவ்வாறு வளர்ந்தோங்கி வருதற்குக்காரணம் முன் வச்சிராயுதத்தினால் தன்னினமாகிய மலைகளின் சிறகை இந்திரனரிந்தானாகையால் அப்பகைமையையெண்ணி அவனோடு போர்செய்ய வருவதுபோலுமென்று மயங்கித் தங்களுக்குளெண்ணிப் பயமுற்றனரென்க. (௧௬௪)

தங்களொப்புமைகொண்டுநண்ணுதருக்குணர்ந்துவெகுட்சியாற்
பொங்கிவிம்மிமதர்த்தெழுந்தெதிர்போர்செயப்புகுதன்மையிற்
கொங்கைவம்புசழுங்கமார்பமலைத்துவீறுகொளக்கதழ்ந்
தங்கண்மங்கையர்வெற்பினோக்கமுன்னோக்கவிண்மிசையண்மினார்.

(இ-ள்.) தங்கள் ஒப்புமைகொண்டு - தங்களுக்கொப்பாகக்கூறுஞ் சொல்லைக்கொண்டு, நண்ணும் தருக்கு உணர்ந்து-பொருந்திவரும் இறுமாப்புணர்ந்து, வெகுட்சியால் பொங்கி விம்மி மதர்த்து எழுந்து - கோபத்தினால் பொங்கிப்பருத்துச்செருக்குற்றெழுந்து, எதிர் போர்செய புகுதன்மையில் - எதிர்த்துப்போர்செய்ய வருகின்ற தன்மையைப்போல, கொங்கை வம்பு சழுங்க - கொங்கையிலணிந்த கச்சுகிழிபட-மார்பம் அலைத்து வீறுகொள - மார்பத்தை யலையச்செய்து பெருமையையடைய, கதழ்ந்து அங்கண் மங்கையர் வெற்பின் ஒக்கம் - விரைந்து அவ்விடத்தில் மங்கையர்கள் அவ்விந்தமலையினுயர்வை, முன் நோக்க விண்மிசை அண்மினார் - முன்னே பார்க்க ஆகாயத்தில் நெருங்கினர், (எ-று.)

தனத்துக்கு மலையையொப்பாகப் புலவர்கள் கூறுஞ் சொல்லைக்கொண்டுஇந்த விந்தமலை செருக்குற்று மேலோங்கியதென்றெண்ணிக் கோபங்கொண்டு பொங்கி விம்மி மதர்த்தெழுந்து எதிர்ந்து போர்செய்யப்புகுவதுபோற் கச்சினைக்கிழித்து மார்பிடம் போதாதென்று அவ்விந்தமலையை வெற்றிகொள்ள முன்னே வந்தவர்கள்போல் ஆகாயத்தில் வந்து சேர்ந்தனரென்க.

வானுலகிலுள்ள மங்கையர் விந்தமலை வளர்ந்தோங்குவதைப்பார்த்து இம்மலை வளர்வதற்குக் காரணம் என்னை? நம்முடைய தனங்களை மலைகளுக்கொப்பாகக்கூறும் வழக்குண்மையான் அதனை மறுத்தற்கு நம தனங்களினும் மேலோங்கி அவைகளைத் தாழ்க்கவெண்ணியதுபோலு மென்றுணர்ந்தனரென்பார் தங்களொப்புமைகொண்டு நண்ணுதருக்குணர்ந்து எனவும், இனி நமது தனங்களினு மேலோங்க வெண்ணியவிந்தமலைநாணும்படி நம்முடைய தனங்களை மேலோங்கச் செய்ய வேண்டுமென்றெண்ணிக் கோபங்கொண்டு அம்முயற்சியிற் றலைப்பட்டனரென்பார் வெகுட்சியாற் பொங்கி விம்மி மதர்த்தெழுந் தெதிர்போர்செயப் புகுதன்மையிற் கொங்கை வம்பு சழுங்க மார்பமலைத்து வீறுகொளக் கதழ்ந்து எனவும், மலையினோக்க மறிந்தாலன்றி முலையினோக்கத்தைச் செய்யவொண்ணாதென்றெண்ணிச் சென்றனரென்பார் அங்கண்மங்கையர் வெற்பினோக்க முன்னோக்க விண்மிசையண்மினாரெனவுங் கூறினார்.

விந்தமலை தான் பரவுவதற்குப் பூமி இடங்கொடுத்ததுபோல்தனங்கள் பரந்துவளர்வதற்கு மார்பமிடங்கொடாத காரணத்தால் கொங்கைவம்பு சழுங்கமார்பமலைத்து என்றானெனக்கொள்க. (௧௬௫)

சிட்டிநாண்முதலோய்விலாதுதினம்பொலங்கிரிசூழ்வர
வட்டமிட்டகறங்கினோலெனச்சுழன்றலமந்துநைந்
திட்டகோள்களிராசிநாள்களுமன்றுதன்னமிளைப்பொழிந்
துட்டதும்புகளிப்பின்வைகினவோங்குமால்வரையாலரோ.

(இ-ள்.) ஓங்கு மால்வரை - உயர்ந்துவளர்ந்த விந்தமலையினால், சிட்டிநாள் முதல் - பிரவஞ்ச சிருட்டிகாலந்தொட்டு, ஓய்விலாது - ஒழிவில்லாது, தினம் - நாடோறும், பொலம் கிரி சூழ்வர - பொன்மலையை வலம்வர, வட்டமிட்ட கறங்கின் ஓலை என - வட்டாகாரமாயுள்ள காற்றாடியைப்போல, சுழன்று அலமந்து நைந்திட்ட - சுழலமிட்டு அலைந்து நைந்திருந்த, கோள்கள் இராசிநாள்களும் - கிரகங்கள் இராசிகள் நாள்கள் முதலிய யாவும், அன்று தன்னம் இளைப்பொழிந்து - அன்று சிறுமை நீங்கி இளைப்பொழிந்து, உள்ததும்பு களிப்பின் வைகின-உள்ளத்திற் பொங்கிய மகிழ்ச்சியால் ஓய்ந்திருந்தன. (எ-று.)

விந்தமலையோங்கிய அந்தநாளில் சிருட்டிகாலந்தொடங்கி ஓய்வில்லாமல் நாடோறும் மேருமலையைப் பிரதக்கிணம்வரக் காற்றாடியைப்போலச் சுழன்று சுழன்று அலைந்து நைந்திருந்த கோள்கள் முதலிய யாவும் ஓய்ந்து இளைப்பொழிந்து மனமகிழ்ச்சியோடிருந்தனவென்க.

எனவே விந்தமலை வளர்ந்ததால் சூரியன் முதலானவர்கள் செல்லு மார்க்கந் தடைபட்டன. அவைகள் செல்லாதொழியவே நாள்கள் மாறுதலின்றி ஒருநாளாகவேயிருந்தன வென்றவாறும். கறங்குஓலையாற்செய்யப்படுவதென்பதனை "கறங்கோலை போல்வதோர் காயத்" தென்னுந் திருவாசகத்தானுமறிக. பொலங்கிரி என்றது பொன்னென் கிளவி என்னுஞ்சூத்திரத்தானமைக்க. வட்டமென்றது விருத்தம் என்னும் வடமொழிச்சிதைவு. (கக௬௬)

மாயிருங்கனகமாமலைத்தலையின்மன்னிவன்குயவனேமியின்
ஞாயிறாதிகளையிடையறாதுகடுகச்சுழற்றிநனிதளர்வுகூர்
பாயசீர்த்திமிகுதுருவனுஞ்சிறிதுபணியொழிந்துறைநலம்பெற
மீயுகந்தமணியருவிதாழ்நெடியவிந்தவெற்புதவிசெய்ததால்.

(இ-ள்.) மா இரும் கனகமாமலை தலையில் மன்னி-பெரிய மேருமலையினுச்சியிற்பொருந்தி, குயவன் வன் நேமியின்-குலாலனுடைய வலியசக்கரம்போல, ஞாயிறாதிகளை இடைஅறாது கடுகச்சுழற்றி-சூரியன்முதலானகிரகங்களை நீக்கமின்றி விரைவாகச்சுழற்றி, நனி தளர்வு கூர் பாய சீர்த்தி மிகுதுருவனும்- மிகவுஞ் சோர்வடைகின்ற எங்கும்பரவிய பெருமை மிக்கதுருவனும், பணிசிறிது ஒழிந்து உறை நலம்பெற - (சூரியன்முதலானவைகளைச்) சுழற்றும் வேலை சற்றொழிந்து ஓய்ந்திருக்கும் சுகத்தையடைய, மீ உகந்த மணி அருவி தாழ்-மிகவும்விரும்பத்தக்க இரத்தினங்களைக் கொழிக்கும் அருவிகளையுடைய, நெடிய விந்தவெற்பு உதவிசெய்தது - வளர்ந்துநீண்ட விந்தமலை உபகாரஞ்செய்தது, (எ-று.)

மேருமலையின் சிகரத்திற்றங்கி குலாலன்சக்கரம்போலும் சூரியன் முதலானவைகளைச் சுழற்றிவரும் துருவனும் அத்தொழிலொழிந்து ஓய்ந்திருக்குஞ் சுகத்தைப் பெற விந்தமலை ஒருதவியைச் செய்ததென்க. (கக௬எ)

அருவிதாழ்சயிலமொளிவழங்குநெறிதனையடைத்துமிசையணவலா [டு
லொருபுடைத்திமிரமொய்ப்பமற்றையொருபுடையுறக்கதிர்கண்மொய்த்தி
மிருதிறத்தினொடுமருவுபெற்றினமயிலைசந்தமன்னுலகமற்றைநாண்
மருமலர்க்குழலிபாகமாகவளர்மறைமுதற்பொருணிகர்த்ததால்.

(இ-ள்.) அருவி தாழ் சயிலம்-அருவியையுடைய விந்தமலை, ஒளிவழங்கு யாநி தனை - சூரியன்செல்லும் மார்க்கத்தை, அடைத்து மிசை அணவலால் - அடைத்து மேலே சென்றிருத்தலால், ஒருபுடை திமிரம் மொய்ப்ப- ஒருபக்கத்தில் இருளடர்ந் திருக்க, மற்றையொருபுடையுற கதிர்கள்மொய்த்திடும் - மற்றொருபக்கத்தில் ஒளி களெல்லாம் கூடியிருக்கும், அற்றைநாள் - (இவ்வாறு) அன்றைத்தினம், இருதிற த்தினொடு மருவு பெற்றிமை இசைந்த மன் உலகம் - இரண்டுபக்கங்களிலும் ஒளியு மிருளுமாகப் பொருந்தியிருக்கும் தன்மை வாய்ந்த நிலைபெற்ற வுலகம், மருமலர் குழ லிபாகமாக வளர் - நறுமணங்கமழும் மலரணிந்த கூந்தலையுடைய உமாதேவி பாக த்திலிருக்க வளர்கின்ற, மறைமுதல் பொருள் நிகர்த்தது - வேதமுதற்பொருளாகிய இறைவனை யொத்திருந்தது. (எ-று.)

விந்தமலை ஒளியுள்ள சூரியன் முதலானவர்கள்செல்லும் மார்க்கத்தைத் தடை செய்து மேலோங்கிநிற்றலால் அன்று இவ்வுலகம் ஓர்புடைஇருளும் ஓர்புடையொளி யுமாக விளங்கியது, (அவ்விளக்கம் எப்பொருளை யொத்திருந்ததென்றாராயின், உமை யோடுகூடி விளங்கும் வேதப்பொருளை யொத்திருந்ததென்க.

எனவே அம்மையார் பசுமைநிறமும், இறைவனார் செந்நிறமுமுடையவராத லானும் அதுவேயுமன்றி இருவருந் தனித்தனியேயிராது கலந்துகருமையுஞ் செம்மை யுமாகவே காட்சிகொடுத்தலானு அத்தோற்றத்தை யொத்திருந்தது அற்றைநாளிவ் வுலகமென்றார். இது புகழுவமையணி. (ககூஅ)

இகழ்ந்தநீரினிநடப்பதெங்கணெனவெள்ளிவாள்களைநகைப்பதூஉந்
திகழ்ந்தமேருவொடுசெருவிளைப்பவறைகூவிவீரநகைசெய்வதூஉ
முகந்தெழுந்தனதுசீர்த்திபல்குவதுமொப்பவெங்கணுமடித்தல
மகழ்ந்துகல்லெனவிரைத்துவெள்ளெனவிளர்த்துவீங்குபுனலருவியே.

(இ-ள்.) எங்கணும் அடித்தலம் அகழ்ந்து - எவ்விடத்தும் பூமியைப்பிளந்து, கல் என இரைத்து - கல்லென்றொலித்து, வெள்என விளர்த்து - வெண்மையென்று சொல்லவெளுத்து, வீங்குபுனல் அருவி - பெருக்கெடுத்துவரும் அருவியானது, இக ழ்ந்த நீர்-என்னையிகழ்ச்சிசெய்த நீங்கள், இனிநடப்பது எங்கண்என-இனிச்செல்வது எவ்வழிஎன, எள்ளி - இகழ்ந்து, வாள்களை நகைப்பதும் - சூரியன் முதலானவர் களைப்பார்த்து புன்னகைசெய்வதும், திகழ்ந்தமேருவொடு - பொலிவுபெற்று விளங் கும் மேருமலையோடு, செருவிளைப்ப-போர்செய்ய, அறைகூவி வீரநகைசெய்வதும்- போருக்கழைத்து வீரநகைசெய்வதும்,உகந்து எழும் தனது சீர்த்திபல்குவதும்ஒப்ப- ஊக்கங்கொண்டெழும் தன்னுடைய பெருமைமிகுவதும்போல இருக்கும் (எ-று.)

விந்தமலையிலுள்ள அருவி-ஒலிக்கும் ஓசையானது எத்தன்மையாயிருந்ததெ னின்-அவ்விந்தமலையானது ஓ சூரியசந்திராதியர்களே நீங்களெல்லாமென்னை யிக ழ்ந்தீர்களேஇப்பொழுது நீங்கள் செல்லுங்கதி யறிந்து செல்லுங்கள் பார்ப்போம் என் றிகழ்ந்து நகைசெய்வதுபோலும், ஓமேருமலையே நீ என்னிலும் உயர்ந்தவனென்றெ ண்ணியிருந்தனையே உயர்ந்தவனாயின் என்னோடு போர்செய்யவாவென்று போருக் கழைப்பதுபோலும் தன்பெருமையெல்லாம் கோள்முதலியனவும் அம்மேருமலையும அறியுமாறு எடுத்துச்சொல்வதுபோலு மிருந்ததென்க.

எள்ளிநகைப்பதும் அறைகூவிவீர நகைசெய்வதும் தனது சீர்த்திபல்குவதும் வீரரிலக்கணமாதலால் மேருமலையோடு பகைகொண்டெழுந்த விந்தமலைக்கு அவ் வீரத்தினிலக்கணத்தைக் கூறியதாமென்க. இது ஏதுத்தற்குறிப்பேற்றம். (கககூ)

இறவுளர்க்குமிசையுலக வாழ்க்கையர் விருந்தளித்துவகையெய்தினர்
குறமடந்தையரு மரமடந்தையருமளவளா யுறவுகொண்டனர்
முறைநிறுத்துசுரமுனிவர் வெற்புறையுமுனிவர் நல்வரவெதிர்ந்தனர்
மறைமுழைப்பணிகள் வானுலாம்பணிபுலம்பு தீர்ந்திடமணந்தன.

(இ-ள்) இறவுளர்க்கு - குறிஞ்சிநிலமாக்களுக்கு, மிசை உலக வாழ்க்கையர் - மேலுலக வாழ்க்கையையுடைய தேவர்கள், விருந்தளித்து உவகை எய்தினர் - விருந்திட்டு மகிழ்ந்தார்கள், குறமடந்தையரும் - அந்நிலத்துக் குறப்பெண்களும், அரமடந்தையரும் - அரம்பாஸ்திரீகளும், அளவளாய் உறவு கொண்டனர் - கலந்து நட்பாடினர், முறைநிறுத்து சுரமுனிவர் - வேதநீதிகளை நிலை நிறுத்தும் தேவரிஷிகளும், வெற்புறையும் முனிவர் - மலைமுழையில் வசிக்கும் முனிவர்களும், நல்வரவு எதிர்ந்தனர் - ஒருவர்க்கொருவர் காணப்பெறும் நல்வரவு கிடைக்கப் பெற்று எதிர்ந்தனர், முழை மறை பணிகள் - மலை முழையில் மறைந்திருக்குஞ் சர்ப்பங்கள், வான் உலாம்பணி புலம்பு தீர்ந்திட மணந்தன - ஆகாயத்திலுலாவும் இராகு கேதுக்களுடைய துன்பம் நீங்க ஒன்றோடொன்று கலந்தன (எ-று).

மலையில்வாழுங் குறவர்களுக்கு வானில்வாழுந்தேவர்கள் விருந்திட்டு மகிழ்ந்தனர். குறமடந்தையரும் அரமடந்தையரும் உறவு கொண்டாடினர். மலைமுனிவரும் சுரமுனிவரும் கலந்துவரவேற்றனர். மலையிலுள்ள பாம்பும் ஆகாயத்திலுள்ள பாம்பும் கலந்தன என்க.

இதனால் விந்தமலைமேலோங்கி வளர்ந்ததனால் அம்மலையிலுள்ள குறவர் முதலானவர்களுக்கும் விண்ணுலகிலுள்ள தேவர்முதலானவர்களுக்கும் கலப்புண்டாயினவென்று குறித்ததென்க. அல்லதூஉம் தங்களைப் போலும் செல்வத்திற் சிறந்தவர்களாய்க் குறிஞ்சிநிலமாக்களிருத்தலால் அமரர்கள் விருந்தளித்து வகையெய்தினரெனவும், அரமடந்தையர் தங்களிலும் அழகிற்சிறந்து குறமடந்தையர் ஒளிபெற்றிருத்தலால் அளவளாயுறவுகொண்டனரெனவும், சுரமுனிவர் தங்களிலும் தவத்திற்சிறந்து இகலோக பரலோக வைராக்கியமுடையரா யிருத்தலால் வெற்புறைமுனிவர்நல்வரவெதிர்ந்தனரெனவும், வானுலாம்பணிகள் தங்களைப்போல வசிப்பதற்கோர் முழையுமின்றி அங்குமிங்கு முழலாத்தலைப்பட்டிருத்தலால் மறைமுழைப்பணிகள் புலம்புதீர்ந்திடமணந்தன எனவுங்கூறினரெனக் கொள்ளலுமொன்று. (௨௦௦)

வேறு.

மிளைபடுசாரற் குன்றமேக்குற நிவந்தலோடு
மொளிவழங்காமைக் காலவேறுபாடொழிந்த வாற்றான்
வளமலிதவந்தானங்கள் முதலியமறுத்துப் பைங்கூழ்
விளைவுகளஃகிஞாலம் வெறுவியதாயிற் றன்றே.

(இ-ள்.) மிளைபடு சாரல் குன்றம் - காவறகாடோங்கிய விந்தமலை, மேக்குற நிவந்தலோடும் - மேலாகவோங்கவும், ஒளிவழங்காமை - சூரியசந்திரர்கள் ஒளிதோன்றாமை காரணமாக, காலவேறுபாடொழிந்த ஆற்றால் - காலவேற்றுமைகள் தோன்றாமையினால், வளமலி தவம் தானங்கள் முதலியமறுத்து - வளமிக்க தவந்தானங்கள் யாவும் நடவாதொழிந்து, பைங்கூழ்விளைவுகள் அஃகி - பயிர்கள் விளையாதொழிந்து, ஞாலம்வெறுவியதாயிற்று - உலகம் ஒரு பொருளையும் தன்னிடத்தில்லாதொழிந்தது.

விந்தமலை வளர்ந்தோங்கவும் சூரியசந்திரர்கள் செல்லு நெறியின்றிப் பிரகாசங்குன்ற அதுகாரணமாக காலம் வேறுபாடின்றி ஒரே காலமாயிருந்தது, காலம்

ஒன்றாகவே தவமுந்தானமும் போயின, அவைபோகவே, விளைவுகள் குன்றின, அவைகுன்றவே உலகம் வெற்றுலகமாயிற் றென்க.

சூரியசந்திராதியர்களாற் காலவேற்றுமைகளும், அக்கால வேற்றுமைகளாற் றவந்தானங்களும் அத்தவதானங்களால் பைங்கூழ் விளைவும், அவ்விளைவால் இவ்வுல குளல்லாமுடைமையாயிருத்தல் இயல்பாதலால் அவ்வியல்பு மாறும் வண்ணம் சூரிய சந்திரர்கள் செல்லாவண்ணம் விந்தமலைதடுத்ததனுல் ஞாலம் வெறுவியதாயிற் றென்றார். இதுதொழிலதிசயம். (உOக)

அங்கதுநோக்கிவல்லை புரந்தரனுதிவிண்ணேர்
தங்குலக்குரவனேடுஞ் சதுமுகனிருக்கைசார்ந்தார்
பங்கயக்கிழவனேன்றாள் பணிந்தனர்பரசிப்போற்றி
யெங்களைவெருவாவண்ணம் புரத்தியென் றிதனைச்சொற்றார்.

(இ-ள்.) அங்கதுநோக்கி - உலகததிலொருபொருளு மில்லாமையைப்பார்த் து, வல்லை புரந்தரனுதிவிண்ணேர் - விரைவாக இந்திரன் முதலிய தேவர்கள், தங் குலக்குரவனேடும் - தங்கள் குலகுருவாகிய வியாழபகவானேடும், சதுமுகன் இரு க்கை சார்ந்தார் - பிரமன் வீற்றிருக்கும் சத்தியலோகத்தை யடைந்து, பங்கயக்கிழ வன் நோன்றாள் பணிந்தனர் - தாமரை மலரில் வசிக்கும் பிரமனுடைய பெருமை பொருந்திய திருவடியை வணங்கி, பரசி போற்றி - புகழ்ந்துபாடி, எங்களை வெரு வாவண்ணம் புரத்தி என்று - அடியேங்களை யஞ்சாவண்ணம் காத்தருள்வாயென்று, இதனை சொற்றார் - இதனைச்சொன்னார்கள். (எ-று.)

(விந்தமலை மேலோங்கி வளர்ந்ததனுல் உலகில் தவந்தானங்கள் குன்றி) விளைவுகளில்லாதிருப்பதைப்பார்த்து இந்திரன் முதலியதேவர்கள் தங்கள் குலகுரு வோடு சத்தியலோகத்தை யடைந்து பிரமன் திருவடியை வணங்கிப் புகழ்ந்துபோ ற்றி எங்களை அஞ்சாவண்ணம் பாதுகாப்பாயென்று இதனைச் சொல்லத் தொடங்கி னரென்க.

தவந்தானங்கள் முதலியன வளர்தற்பொருட்டேஎவ்வுயிரும் படைக்குமாற் றலையுடைய தேவரீர் அத்தவந்தான முதலியன இன்று கெடுமாறு இவ்விந்தமலை யைப் படைத்தது என்னபடைப்போ, இவ்விந்தமலையால் எங்களைத் துன்பப்படுத்து வது முறையோ என்பார் எங்களைவெருவாவண்ணம் புரத்தியென்றார். (உOஉ)

இருசுடர்வழங்குமாற்றை யிறும்புசூழ் சோலைவிந்தப்
பருவரைதடுத்தவாற்றாற் பகலிராத்தொடக்க மின்றித்
திருநெறிவேள்விமாறித் தெருமந்ததுலக மன்னே
மருமலர்க்கமலவாழ்க்கை வயங்கெழுகடவுளேறே.

(இ-ள்.) மருமலர் கமலவாழ்க்கை வயங்கெழு கடவுள் ஏறே - நறுமணங்கம ழுந் தாமரைமலரில் வாழும் வாழ்க்கையையுடையராய் விளங்குகின்ற தேவர்கள் தலைவரே, இருசுடர் வழங்கும் ஆற்றை - சூரியசந்திரர்கள் உலாவிவரும் வழியை, இறும்பு சூழ்சோலை விந்தப்பருவரை தடுத்த ஆற்றால் - காடுகள் சோலைபோலும் சூழ்ந்திருக்கின்ற விந்தமலை தடுத்தகாரணத்தால், பகல் இரா தொடக்கம் இன்றி - பகலிரவென்று கூறும் காலபேதமில்லாமல், உலகம் திருநெறி வேள்விமாறி தெரு மந்தது - உலகம் நன்னெறியைக்காட்டும் யாகங்களொழிந்து மயங்கிக்கிடக்கின் றது. (எ-று.)

பிரமதேவனே! சூரியசந்திரர்கள் செல்லும் நெறியை விந்தமலை மேலோங் கித்தடுத்ததனுல் இது பகல் இது இரவென்னும் சொற்றொடக்கமின்றி யாகமுதலிய வை குன்றி உலகம் மயங்கிக்கிடக்கின்றதென்க.

உலகம் செல்வம் பெற்றோங்குமாறு செய்வது வேள்வியாதலால் திருநெறி வேள்வி என்றார். (௨௦௩)

இனியெமக்குறுதியென்னே யென்றலுமிளவண்டேதும்
பனிமலர்க்கதுப்பினைம்பாற் பாரதிகொழுநன்கேளாத்
தனிமிடல்படைத்தவிந்தத் தருக்கினைப்பௌவமுண்ட
முனிவனேயடக்கவல்லு மென்றுளமுன்னிச்சொல்வான்.

(இ-ள்.) இனி எமக்கு உறுதி என்னே என்றலும் - இனி எங்களுக்கு உறுதி எப்படியென்று கேட்கவும், இளவண்டேதும் பனிமலர் கதுப்பின் ஐம்பால் பாரதி கொழுநன்கேளா - இளவண்டுகளிசைபாடும் குளிர்ந்தமலர்கள் பொதிந்த கூந்தலையுடைய கலைமகள் கொழுநனாகிய பிரமன்கேட்டு, தனிமிடல் படைத்த விந்தத்தருக்கினை - ஒப்பற்ற வலிபடைத்தோங்கும் விந்த மலையின் செருக்கை, பௌவமுண்ட முனிவனே யடக்கவல்லும் என்று-கடல் நீரையுண்ட அகத்தியமுனிவனே இதனை யடக்கவல்லுநனென்று, உளம் முன்னிச்சொல்வான்-தன்னுள்ளத்திலெண்ணிக் கூறுவான். (எ-று.)

தேவர்கள் இனி எங்களுக்குறுதியாதென்று கேட்க நான்முகன் (இது நம்மாலாகத்தக்கதன்று இதனை யடக்கவல்லுநன் கருங்கடலுண்ட குறுமுனியே என்று தன்னுள் ளெண்ணி அதனைக்கூறத் தொடங்கினனென்க.

பிரமன் தனக்குப்படைக்கு மாற்றலேயன்றி செருக்குற்றோரை யடக்குமாற்றலின்மையான் அவ்வடக்கு மாற்றல் அரனுக்கும் அவனருள் பெற்றோர்க்குமே என்றெண்ணினனென்பார் பௌவமுண்ட முனிவனே யடக்கவல்லுமென்றுள முன்னி என்றார். (௨௦௪)

நடலையின்றுயர்ந்தோய் கேட்டிகாசிமாநகரம்வைகுங்
குடமுனிதன்னைவிண்ணோர் குழாத்தொடுநணுகிவிந்தத்
தடவரைத்தருக்குநீப்பான் வேண்டுதிதவத்தான்மிக்கோன்
கடலெலாங்குடங்கை யேற்றுப்பருகினான் முன்னங்கண்டாய்.

(இ-ள்.) நடலையின்று உயர்ந்தோய் கேட்டி-பொய்ப்பிரபஞ்ச வாழ்க்கையினின்றும் நீங்கியமேலோய் கேட்பாயாக, காசிமாநகரம் வைகும் குடமுனி தன்னை விண்ணோர் குழாத்தோடும் நணுகி - பெரிய காசி நகரத்தில் வசித்திருக்கும் கும்பமுனிவனைத் தேவர் கூட்டத்தோடுஞ் சென்று,விந்ததடவரை தருக்கு நீப்பான் வேண்டுதி - விந்தமலையின் செருக்கை நீக்கும்படி வேண்டிக்கொள்வாய், தவத்தான்மிக்கோன் - (அக்கும்பமுனிவன்) தவத்திலே சிறந்தவன், முன்னம் கடலெலாம்குடங்கை ஏற்று பருகினான் - முன்னொருகாலத்தில் கடனீரெல்லாம் ஒருளுந்தளவாக உள்ளங்கையிலேற்று ஆசமித்தனன் (எ-று).

பிரகஸ்பதியே-காசியில் அகத்தியமுனிவன் வசித்துக்கொண்டிருக்கின்றானாதலால் அவன்பால் நீ தேவர்களோடுஞ்சென்று இந்த விந்தமலையின் செருக்கையடக்க வேண்டிக்கொள்வாயாக; அம்முனிவனோ தவத்திலுயர்ந்தவன் முன்னங்கடனீரைப் பருகினவனென்க.

நடலையின்றுயர்ந்தோய் என்றதுவியாழபகவானை. பிரமன் தானெடுத்துக் கூறும் அகத்தியமுனிவர் பெருமைதோன்ற தவத்தான்மிக்கோனெனவுங் கடலெலாம் குடங்கை யேற்றுப்பருகினான் முன்னமெனவுங் கூறினார். தவத்தின் பெருமை

"ஒன்னார்த்தெறலு மூவந்தாரையாக்கலு, மெண்ணிற்றவத்தான்வரும், என வருங் குறட்பாவானுணர்க. நீண்ட மலையை யடக்கற்குக கடலைப்பருகியதைக் கூறிய தென்னையெனின் விந்தமலை மேலோங்கியதுபோலும் கடல் கீழாழ்ந்தும், விந்தமலை பரவியிருத்தல்போலும் இக்கடல் பரவியிருத்தலுமுண்மையால், கடலை உளுந்தளவாகக்கொண்டகரத்தைமீண்டு மறித்து மலையை யடக்குவாரென்பது குறித்தற்கென்க.

என்றிதுவியாழப்புத்தேட்கியம்பிஞனியம்பிப்பின்னுந்
தன்றிருவுளத்திலெண்ணிச்சயிலவீறடக்கயானே
மன்றலம்பொழில்சூழ்காசிவளாப்பினைக்குறுகியந்த
மின்றிகழ்சடையாற்கோதிவிடுப்பலென்றெழுந்துசென்றான்.

(இ-ள்) என்று இது வியாழப்புத்தேட்கு இயம்பினன் - என்றிதனை வியாழபகவானுக்குப் (பிரமன்) கூறினன், இயம்பி பின்னும் - சொல்லிப் பின்னரும், தன் திருவுளத்தில் எண்ணி தன தெண்ணத்தி லொன்றை யெண்ணி, சயிலவீறு அடக்க- இந்த விந்த மலையின் செருக்கையடைக்க, யானே மன்றல் அம் பொழில் சூழ்காசி வளைப்பினை குறுகி—நானே நறுமணங்கமழும் அழகிய சோலை சூழ்ந்த காசிஎல்லையை யடைந்து, அந்த மின் திகழ்சடையாற்கு-அந்த மின்னலைப்போலும் விளங்கும் சடையையுடைய அகத்திய முனிவருக்கு, ஓதி விடுப்பல் என்று-சொல்லியனுப்புவேனென்று, எழுந்து சென்றான் - அங்குநின்றும் எழுந்து சென்றனன் (எ-று).

வியாழபகவானே நீ அகத்திய முனிவர்பாற் சென்று வேண்டிக் கொள்வாயாக என்று கூறிய பின்னர் தன்னுளத்தில் ஓராலோசனையைக் கருதி (அவ்வியாழபகவானை நோக்கி) யானே அம்முனிவர்பாற் சென்று இவ்விந்த மலையின் செருக்கடக்க விண்ணப்பஞ் செய்து அவரையனுப்புவே னென்று எழுந்து சென்றனனென்க.

அகத்தியமுனிவர் முற்றுமுணர்ந்தவராதலான் தான்வியாழபகவானையேவி நாம் செல்லாதிருப்போமாயின் இதுவுஞ் செருக்கென்றுணர்ந்து அவ்விந்த மலையின் செருக்கடக்கத்தொடங்கும்பொழுது நமதுசெருக்கையும் அடக்குவாரென்றெண்ணினனென்பது தோன்றப் பின்னுந் தன்றிருவுளத்திலெண்ணியென்றார். (உ0௬)

பொன்னவனாதிதேவர்புடையுறப்போந்துசெங்கா
லன்னமுங்கருமென்கூந்தலன்னமுமறலியாடும்
கன்னிவெண்டரங்கத்தெண்ணீர்க்கங்கையாறுடுத்தகாசி
நன்னெடுநகரம்புக்கானகைமலர்க்கமலத்தோன்றல்.

(இ-ள்.) நகைமலர்க் கமலத் தோன்றல்-விளங்குந் தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமன், பொன்னவன் ஆதி தேவர் புடையுற போந்து - வியாழபகவான்முதலிய தேவர்கள் புடைசூழ்ந்துவரச்சென்று, செங்கால் அன்னமும் கருமென்கூந்தல் அன்னமும் அறலியாடும் - செவந்தகாலையுடைய அன்னப்பறவைகளும் கரியமெல்லியகூந்தலையுடைய மங்கையரும் அரித்துவிளையாடும், கன்னி வெண் தரங்கம் தெள் நீர் கங்கையாறு உடுத்த - அழியாதவெள்ளிய அலைகளையுடைய தெளிந்தநீர்மயமாகிய கங்காநதிசூழ்ந்த, காசி நல் நெடு நகரம் புக்கான் - காசியாகிய நல்லபெரியநகரத்தை யடைந்தான் (எ-று).

பிரமன் வியாழபகவான்முதலிய தேவர்களோடு கங்காநதிசூழ்ந்த காசிநகரத்தை வந்து சேர்ந்தனனென்க.                (உ0௭)

அவ்வயினகிலநாதரடியிணை தொழுதுபோற்றித்
தெவ்வலியடுபோராண்மைத்தேவர்தங்குழாத்தினோடு
மெவ்வமில்கேள்விசான்றகுறுமுனியிருக்கைநண்ணிப்
பௌவநீர்பருகினானைக்கண்டிதுபகரலுற்றான்.

(இ-ள்) அவ்வயின் அகிலநாதர் அடி இணை தொழுதுபோற்றி அக்காசியில்விஸ்வநாதர் திருவடிகளைவணங்கித் தோத்திரஞ்செய்து, தெவ்வலி அடுபோராண்மை தேவர்தம் குழாத்தினோடும் - பகைவர்வலிமையை யழிக்கவல்லபோரிலாற்றலையுடைய தேவர்கூட்டங்களோடும், எவ்வம் இல் கேள்வி சான்றகுறுமுனி இருக்கை நண்ணி, குற்றமில்லாத கேள்வியிற்சிறந்த அகத்தியமுனிவருடைய ஆச்சிரமத்தையடைந்து, பௌவ நீர்பருகினானைக் கண்டு - அவ்விடத்தில் கடனீரையுண்ட அகத்தியமுனிவரைத்தரிசித்து, இது பகரல உற்றான் - இதனை விண்ணப்பஞ்செய்யத் தொடங்கினான். (எ-று).

பிரமன் அக்காசியில் விச்சுவநாதரடிவணங்கி தேவர்கூட்டத்தோடும் அகஸ்தியமுனிவர் ஆச்சிரமத்தையடைந்து அவரைக்கண்டு தான்வந்தசெயதியைச் கூறத்தொடங்கினனென்க.

பிரணவப்பொருளைவினவிப் பிரமனைச் சிறைப்படுத்திய சாமிநாதன்பால் அப்பிரணவப்பொருளும் சிவதர்மமுதலியனவுங் கேளவியுற்றசான்றோராகலின எவ்வமில் கேள்விசான்ற குறுமுனி என்றார். (உOஅ)

முக்குறும்பெறிந்தகாட்சிமுனிவரேறனையாய்சால
மிக்குயர்விந்தநாகந்தருக்குமீக்கொண்டுநாளும்
போக்கமிலிரவிதிங்கள்புகுநெறிதடைசெய்தன்றா
லக்கிரியிறுமாப்பெல்லாமகற்றுவானீயேவல்லை.

(இ-ள்) முக்குறும்பு எறிந்த காட்சி முனிவர் ஏறு அனையாய்-முக்குற்றங்களைக் கடிந்த அறிவிற்சிறந்த முனிவர்கோமானே, சாலமிக்கு உயர்விந்த நாகம்தருக்கு மீக்கொண்டு-மிகவு முயர்ந்தோங்கிய விந்தமலை செருக்குமிகவுங்கொண்டு,நாளும் பொக்கம் இல் இரவி திங்கள் புகுநெறிதடைசெய்தன்று-நாடோறும் பொய்யாமல் சூரியசந்திரர்கள் செல்லும்நெறியைத் தடைசெய்தது, அக்கிரி இறுமாப்பு எல்லாம் அகற்றுவான் நீயே வல்லை -அவ்விந்த பருப்பதத்தின் செருக்கெல்லா மடக்க நீரே வல்லமையுடையை (எ-று).

பிரமன் அகத்திய முனிவரை நோக்கி முனிவர் சிங்கமே விந்த பருப்பதம் மிகவுஞ் செருக்குற்று விண்ணளவுஞ் சென்று சூரிய சந்திரர்கள செல்லும் நெறியை தடைப்படுத்தியது. அதன் செருக்கடக்கவல்லுநர் நீரேயாகு மெனக.

முனிவரெல்லாம் தங்கள்மாட் டுண்டாகும் காமம் வெகுளி மயக்க மென்னும் முக்குற்றங்களைக்கடிவதற்கேதவ முயல்பவர். இவ்வகத்திய முனிவர் அக்குற்றங்கள தம்மிடத்தென்று மிலராகி அக்குற்றங்களுடையோரைக்கடிவதே தவமுடையராய விளங்குஞ்சிறப்பினரென்பார் முனிவரேறனையாய அக்கிரியிறுமாப்பெல்லாம் அகற்றுவான் நீயேவல்லைஎன்றார். ஆல்-அசை. (உOகூ)

இன்னினிவிரைகவல்லைதாழ்க்கலையென்றுவேண்டு
மன்னவேறுயர்த்தபுத்தேட்கருந்தவக்கிழவன்கூறு
மென்னிதுபுகன்றனையாவெமபிராற்கினியகாசி
தன்னைவிட்டகலேனாவிடுதருவதித்தலங்காணென்னா.

(இ-ள்) இன்னினி விரைக வல்லே தாழ்க்கலே என்று வேண்டும்-இப்பொழுதே செல்வதற்கு துரிதப்படுவாயாக தாமதிக்கவேண்டாம் என்றுவேண்டுகின்ற, அன்ன ஏறு உயர்த்த புத்தேட்கு - அன்னவூர்தியையுடைய பிரமனுக்கு, அருந்தவக் கிழவன் கூறும்,அரியதவத்தில் முதிர்ந்த அகத்தியமுனிவர் கூறுவார், ஐயா என் இதுபுகன்றாய்-ஐயனே என்ன கூறினாய், எம்பிராற்கு இனியகாசிதன்னைவிட்டு அகலேன் - எமது பெருமானுக்கு இனிமையாகிய காசிநகரத்தைவிட்டு யான் நீங்கேன், வீடுதருவது இத்தலங்காண் (அன்றியும்) மோக்ஷத்தைக்கொடுப்பது இத்தலமேயாகும், என்ன-என்றுகூற. (எ-று)

பிரமன் நீயேவல்லை ஆகலான்இப்பொழுதே விரைந்துசெல்லாய் தாமதஞ்செய்யாதை என்று வேண்டவும் அகத்தியமுனிவர் அப்பிரமனைநோக்கி நீ என்னகூறினாய் எம்மிறைவனுக்குரிய காசிநகரத்தைவிட்டகல்வேனோ அகலேன் அன்றியும் மோக்ஷத்தைக்கொடுப்பது இந்தக்ஷேத்திரமன்றோ என்று கூறினரென்க. (உகo)

வண்டொடுஞிமிறுந்தேனும்வரிச்சிறைச்சுரும்புமார்ப்பத்
தண்டுளிநறவமூற்றுந்தடமலர்ப்பொகுட்டுத்தெய்வப்
புண்டரீகத்தின்மேயபுண்ணியன்கேட்டுமுந்நீ
ருண்டுயர்முனிவர்கோமானுளங்கொளவுணர்த்துகின்றான்.

(இ-ள்) வண்டு ஒடு ஞிறும் தேனும் வரிச் சிறை சுரும்பும் ஆர்ப்ப-வண்டுகளோடு பொன்வண்டுகளும் தேன்வண்டுகளும் வரிகள்பொருந்திய சிறகுகளையுடைய கரிவண்டுகளும் மொய்த்தொலிக்க,தண் துளி நறவம் ஊற்றும்தடமலர்ப்பொகுட்டு - தண்ணிய தேன்துளிகளைச்சிந்தி ஊற்றெடுக்கும் பெரியமலர்ப்பொகுட்டையுடைய,தெய்வபுண்டரீகத்தின் மேய புண்ணியன்கேட்டு-தெய்வத்தாமரையில் வீற்றிருக்கின்றபிரமன் கேட்டு, முந்நீர் உண்டு உயர்முனிவர் கோமான்-கடனீரைப்பருகிச்சிறந்த முனிவர்கள் தலைவராகிய அகத்தியமுனிவர், உளம் கொள்ள உணர்த்துகின்றான்-மனத்திற்கொள்ளும்படி சொல்லுகின்றான். (எ-று)

வண்டினங்களெல்லாம் மொய்த்தொலிக்கும் தாமரைமலர்வாசனாகிய பிரமன் அகத்தியர்கூறியதைக்கேட்டு அம்முனிவர் திருவுள்ளத்திலங்கீகரிக்குமாறு மீளவுங் கூறுகின்றானென்க.

வண்டு நால்வகையென்பதற்கு "மங்கைநல்லவர் கண்ணுமனமும்போன்,றெங்குமோடியிடறுஞ் சுரும்புகாள், வண்டுகாள்மகிழ் தேனினங்காள்மது, வுண்டு தேக்கிடுமொன்றுமி ழீட்டங்காள்' என்னுஞ் சிந்தாமணியானுமுணர்க. முந்நீர் என்பதற்கு ஆற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடைமையானுமென்றும், நிலத்தைப் படைத்தலுங் காத்தலுமழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையானுமென்றுங் கூறுவர். (உகக)

வெறுப்பொடுவிருப்பொன்றில்லாய்விண்ணவரிடுக்கண்டீர்க்குந்
திறத்தினையெவ்வாற்றானுமுடிப்பதேசிறிதன்றி
மறுப்பதுதகாதாள்மற்றுவயங்கொளியுலகமூன்றும்
பெறத்தகுகருமமென்றாலென்னினிப்பேசுமாறே.

(இ ள்) வெறுப்பொடு விருப்பு ஒன்றில்லாய் - வேண்டாமையும் வேண்டுதலுமில்லாத முனிவரே, விண்ணவர் இடுக்கண் தீர்க்கும் திறத்தினை-(நீர்)தேவர்களுடைய துன்பத்தையொழிக்கும் ஆற்றலை யுடையை, எவ்வாற்றானும் முடிப்பதே சீர்-(ஆகலின்) எவ்வழியானும் முடிப்பதே சிறப்பாகும், இதன்றி - இதுவல்லாமல், மறுப்பது

தகாதால்-மறுத்துச்சொல்வது தகுதியற்றதாம், உலசமூன்றும் வயங்கு ஒளி பெறத் தகும் கருமம்என்றால் -மூன்றுலகத்திலும் விளங்கும் புகழ்பெறத்தக்க கருமம் என்று சொன்னால், இனிப்பேசுமாறு என்-இனிச்சொல்லத்தக்கதுவேறென்னையுள (எ-று).

வேண்டுதலும் வேண்டாமையுமில்லாத அகத்தியரோ நீர்தேவர்களுடைய துன்பத்தை எவ்வகையினாலாவது ஒழிப்பதேசிறப்பு. இதுவன்றிமறுப்பது சிறப்பன்று, அன்றியும் இந்த மூன்றுலகத்திலும் பெரிய புகழைப்பெறும் பெரியதருமமாயு மிருக்கின்றது என்றால் இனிவேறென்னசொல்வது என்க.

இறைவனுக்குரிய குணங்களெல்லாம் உம்மிடத்துளதன்றோ வென்றுயர்த்திக் கூறுவார் வெறுப்பொடு விரும்பொன்றில்லாய் எனவும், இறைவன்தேவர்களுக்குவரும் இடுக்கணெல்லாம் தீர்க்குந்திறமுடையவனேயன்றி மறுக்குந்தன்மையுடையவனன்றே அவ்விறைவனாயிருக்கின்ற நீர் என்னிதுபுகன்றாயென்று வினாதல் சிறப்பாமோ வென்று கூறுவார் விண்ணவரிடுக்கண்டீர்க்குந் திறத்தினையெவ்வாற்றானு முடிப்பதே சீரிதன்றி மறுப்பது தகாதால் எனவும், அன்றியும் எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டு அவ்வுயிர்களெல்லாம் ஒளிபெற்றோங்கச்செய்வது முனிவர்களுக்குப் பெரியகருமமாக விருக்க முனிவர்கோமானாகிய நீர் அத்தொழிலைக்கைவிடுதல் அழகாமோ வென்று கூறுவார் மற்றுவயங்கொளியுலகமூன்றும் பெறத்தகுகருமமென்றால் என்னினிப் பேசுமாறே எனவுங்கூறினார்.

அகத்தியமுனிவர் காசித்தலத்தைவிட்டேகுமாறு கூறுவதைவெறுத்தலும் முத்தியைவிரும்பி அத்தலத்தில்வாசஞ்செய்திருத்தலை விரும்புதலும் தவசீலத்துக்குரிய சிறப்பேயாயினும் பிரமன்வேண்டுகோளுக்கு முரணுகலின்பொதுமையான் வெறுப்பொடுவிருப்பொன்றில்லாயென்றானென்றலுமொன்று.

அல்லதூஉம் இறைவன் யாங்கள் கூறும்விண்ணப்பத்தை மறுத்ததின்று, அவ்விறைமைக்குணங்களெல்லா முடைய வும்மிடத்து அவனிடத்தில்லாத இம்மறுத்தற குணம் எங்ஙனம்வந்ததோவென்று அதிசயித்துக்கூறினானெனக்கொள்ளலுமொன்று.

சீருடைத்ததீசிமுன்னோர்தேவர்தம்பொருட்டுத்தங்க
ளாருயிர்க்கிறுதிநோக்காதுடம்பையுமளித்தாரன்றே
காரியமிதுமற்றம்மசிறிதெனக்கருதல்கண்டா
யோரின்வேறுன்னையொப்பாருலகமூன்றிடத்துமில்லை.

(இ-ள்) சீர்உடைத்ததீசி முன்னோர் தேவர்தம்பொருட்டு-சிறப்பினையுடையததீசிமுனிவர்முதலாயினோர் தேவர்கள்பொருட்டாக, தங்கள் ஆருயிர்க்கு இறுதிநோக்காது உடம்பையும் அளித்தார் அன்றே-தங்களுடைய அரிய உயிர்க்குஅழிவுவருதலைப் பாராது தேகத்தையுங் கொடுத்தார்களல்லவா, இதுகாரியம் - இதுபெருங்காரியம், அம்ம சிறிது என கருதல்வேண்டாம்-அம்ம இதனைச்சிறிதாகக்கருதவேண்டாம், உலகமூன்றிடத்தும் - மூன்றுலகத்திலும், உன்னை ஒப்பார் ஓரின் - உமக்கொப்பானவர்களை யாராயின், வேறுஇல்லை-மற்றொருவருமில்லை (உமக்கு நீரேயொப்பானவரென்றபடி) (எ-று.)

அகத்தியமுனிவரோ ததீசிமுனிவர் முதலாயினாரும் தேவர்கள்பொருட்டுத்தம்முயிர்க்குவரும் இறுதியைநோக்காது உடம்பைக்கொடுத்தார் ஆகலின் அவற்றுள்ளும் இதுசிறியகருமமன்று பெரியகருமம் இப்பெருங்காரியத்தை முடிக்கவல்லார்மூன்றுலகத்திலு முண்டோ இல்லை. ஆகலான் நீரோ பெரியவரொன்று பிரமன்கூறினானென்க.

ஒருவரால் தமதுகருமத்தை முடித்துக்கொள்ள விரும்புவோர் அவர்க்குரிய ஆன்ரோராட்சியை யெடுத்துக்கூறுவது மரபாமென்பார் சீருடைத்ததீசிமுன்னோர் தங்களாருயிர்க்கிறுதி நோக்காதுடம்பையு மளித்தாரெனவும், அவர்களால் முடிவுபெற விரும்பியகாரியம் ஒவ்வொருவருக்கு நேர்ந்த துன்பம் ஒழித்தற்பொருட்டு, இஃதன்மைத்தன்று பலருக்கும் பொருந்திய பெருந்துன்பத்தைப் போக்கி நன்மையை விளைவிக்கின்றமையான் இதுவே பெருங்காரிய மெண்டார் காரியமிது மற்றம்மசிறிதெனக் கருதல்கண்டாய் எனவும், சிறியகாரியத்துக்கு அம்முனிவர் முதலாயினோர் உயிர்விட்டார்கள். ஏனெனின் - அவர்களுக்கு அக்காரியம் ஓர்மலையாயிருந்தது. உமக்கு இம்மலை ஓரணுவாகலின் நீரோ சிறந்தவ ரென்பார் ஓரின்வேறுன்னை யொப்பாருலகமூன்றிடத்துமில்லை எனவுங்கூறினர்.

இவ்விரண்டு செய்யுளாலும் அகத்தியமுனிவர் சிவோகம்பாவனையிற் சிறந்தவரென்றும் அப்பாவனமுதிர்ச்சியான் யாவுமெளிதாகச்செய்ய வல்லுனரென்றும் அவரதுபுகழைஎடுத்து விளக்கியதாமென்க. (உகஙு)

வேசறவொழிதிவெள்ளைவிடையவர்க்குவகைநல்கிக்
காசியின்மேன்மைசான்றகடிநகரங்களுண்டான்
மூசிளஞிமிறுபாயமுகையுடைந்தொழுகுந்தேறல்
வாசமென்மலர்ப்பூம்பொய்கைவளவயற்காஞ்சிமூதூர்.

(இ-ள்.) வெள்ளைவிடையவர்க்கு - வெள்ளிய விடபவூர்தியையுடைய இறைவனுக்கு, உவகைநல்கி - ஆனந்தத்தைக்கொடுத்து, காசியின்மேன்மை சான்ற கடிநகரங்கள் உண்டு - இக்காசித்தலத்தினும் மேன்மையிற் சிறந்தகாவலோடு கூடிய நகரங்கள் பலவுண்டு, (ஆகலின்) வேசறவு ஒழுதி-எக்கத்தை விட்டுவிடுவீர், மூசு இளஞிமிறுபாய முகை உடைந்துத் தேறல் ஒழுகும் வாசமெல மலர்ப்பூம் பொய்கை வளம்வயல் காஞ்சிமூதூர் - மொய்க்கும் இளவண்டுகள் கீண்ட முகையுடைபட்டு தேனொழுகும் நறுமணங்கமழும் மெல்லியதாமரை மலர்கள் நிறைந்த நீர்வள மிக்கவயல்கள் சூழ்ந்த பெரிய காஞ்சிநகரம் (ஒன்றுளது) (எ-று.)

இடபாரூடனாகிய இறைவனுக்கு இன்பத்தைக்கொடுத்து காசியினுஞ் சிறந்து விளங்குந்தலங்களுண்டு (அதனால் நீர்) கவலையொழிவீர் (காசியினுஞ்சிறந்த நகரம் யாதென்று கேழ்ப்பீராயின்) அது காஞ்சிநகரமென்க. (உகச)

மதுமலர்ப்பொழில்சூழ்காசியிறந்திடின்வழங்குமுத்தி
யதுவுநம்பெருமானார்தம்மருளுருப்பெறுவதாகும்
முதுநகர்க்காஞ்சிதன்னைநினைப்பவேமுத்திநல்குங்
கதுவருஞ்சிவபிரானார்திருவடிகலப்பதாமால்.

(இ-ள்.) மது மலர்ப்பொழில் சூழ் காசி-தேனிறைந்த மலர்ச்சோலைகள் சூழ்ந்த காசிநகரம், இறந்திடின் முத்திவழங்கும் - இறந்தால் முத்தியைக்கொடுக்கும்,அதுவும் நம்பெருமானார் தம் அருள் உருவு பெறுவதாகும் - அந்த முத்தியும் நம்மிறைவனுடைய சாரூபத்தைப்பெறும் முத்தியாகும், முதுநகர் காஞ்சிதன்னை நினைப்பவே - பெரியகாஞ்சி நகரத்தை நினைத்தவளவிலேயே, முத்திநல்கும் - முத்தியைக்கொடுக்கும், கது வரும் சிவபிரானார் திருவடி கலப்பதாம்-(அம்முத்தி) குற்றமற்ற (பாசமற்ற) இறைவனுடைய திருவடியிற் கலக்குமுத்தியாம் (சாயுச்சியபதவியாம்) (எ-று.)

• காசி நகரம் இறந்தால் முத்தியைக்கொடுக்கும் அம்முத்திசாரூபமுத்தி, காஞ்சிநகரம் நினைக்க முத்தியைக்கொடுக்கும் அம்முத்தி சாயுச்சியமுத்தியாமென்க.

பிரமன் காசியினுஞ் சிறந்தது காஞ்சியென்று கூறினுனகையால் இச்செய்யுளில் அதனை விளக்கியதென்க. எனவே காசி சாரூபத்தைக் கொடுப்பது. அதுவும் இறந்தபின்னர். காஞ்சி சாயுச்சியத்தைக்கொடுப்பது அது உடலோடு கூடியிருக்கும் பொழுதும் உடனீங்கியபொழுது மாமென்க, (உகரு)

அத்தலப்பெருமைமுற் றுமழலவிர்சடைமேற்கங்கை
வைத்தவ ரறிவதல்லான்மற்றெவரறியற்பலார்
சித்திகளனைத்துநல்குமாயிடைச்சென்றுயாகி
லுத்தமகுணத்தாய்மற்றுமபெருநலமுனக்குண்டாமால்

(இ ள்.) அத்தலப்பெருமைமுற்றும் - அக்காஞ்சித்தலத்தின் சிறப்பெல்லாம், அழல் அவிர் சடைமேல் கங்கை வைத்தவர் அறிவதல்லால் - நெருப்பைப்போலும் செவ்விய சடைமுடியின்மேல் கங்கையையணிந்த இறைவர் அறிவதேயல்லாமல், மற்று எவர் அறியற்பாலார் - வேறு யாவரறியவல்லவர், சித்திகள் அனைத்தும் நல்கும் ஆயிடை சென்றுயாகில் - அஷ்டமாசித்திகளையுங் கொடுக்கும் அவ்விடத்துப்போவையேயானல், உத்தமகுணத்தாய் - உத்தமகுணத்தையுடையவரோ, மற்றும் பெருநலம் உனக்கு உண்டாம் இன்னமும் பெறவேண்டிய பெருநலங்களுனக்குண்டாகும். (எ-று.)

(அகத்தியமுனிவரோ) அக்காஞ்சிநகரத்தின் பெருமையெல்லாம் இறைவனொருவனே யறிவனன்றி வேறு யாவரறியவல்லவர் ஆகையாலவ்விடம் நீர் போவீராயின் வேண்டிய நலங்களைப்பெறுவிரென்று பிரமன் கூறின னென்க. (உகசு)

சிமிழ்விடப்பாமபுசுற்றித்திரைகடல்கலக்கிப்பெற்ற
வமிழ்தினையிமையோர்க்கூட்டுமரியெனக்கம்பமேய
குமிழ்மறிவிழியாள்பாகருளினுற்கொழிக்குமின்பத்
தமிழ்மொழிப்பாடையொன்றுதரைமிசைவிளங்கச்செய்வாய்.

(இ-ள்.) சிமிழ் விடப்பாம்பு சுற்றி-பிணிக்கப்பட்ட விடத்தையுடைய வாசுகி என்னும் பாம்பைத் தாம்பாகச்சுற்றி, திரை கடல கலக்கி பெற்ற அமிழ்தினை - அலைவீசும் பாற்கடலைக்கடைந்தெடுத்த அமிர்தத்தை, இமையோர்க்கு ஊட்டும் அரிஎன்ன - தேவர்களுக்கு உண்பிக்கும் திருமாலைப்போல, கம்பமேய குமிழ்மறி விழியாள்பாகர் அருளினல் - திருவேகம்பத்தி லெழுந்தருளி யிருக்கின்ற மான்போலுங் கண்ணையுடைய உமைபாகர் திருவருளால், இன்பம் கொழிக்கும் தமிழ்மொழிப்பாடை ஒன்று - இன்பத்தை விளைவிக்கும் தமிழ்ப்பாடையொன்றை, தரைமிசை விளங்கச்செய்வாய் - உலகில் விளங்கும்படிச் செய்வாய் (எ-று.)

மாயோன் பாற்கடலைக்கடைந்து தேவர்களுண்ண அமுதைத் தந்ததுபோலும் இறைவனருளினல் இன்பம் பெருகும் தமிழ்ப்பாஷையை உலகில விளங்கச்செய்வாயென்று பிரமன் கூறினனென்க

திருமால் வசமாயுள்ளது பாற்கடல் போலும் இறைவன் வசமாயுள்ளது தமிழ்ப்பாஷை என்றுயிற்று, ஆகவே அத்திருமால் தேவர்கள் நரைதிரை மூப்பின்றி விண்ணுலகில் வாழ அப்பாற்கடலைக்கடைந்து அவ்வமரர்களுக்குந் தந்ததுபோல அகத்தியரே நீர் அன்பாகளெல்லாம் ஆணவாதி மும்மலங்களினின்று நீங்கி சிவலோகத்தில்வாழ அவ்வன்பர்களுக்கு அத்தமிழ்ப்பாடையை இறைவனருளால் ஆராய்ந்து இயல் இசை நாடகமாகத்தருவாயென்பார் திரைகடல்கலக்கிப்பெற்ற வமிழ்தினையிமையோர்க்கூட்டு மரியென மறிவிழியாள் பாகரருளினுற் கொழிக்குமின்பத் தமிழ்மொழிப்பாடையொன்று தரைமிசை விளங்கச்செய்வாயென்றார்.

'இதனால் அமரர்களுக்கு நரைதிரை மூப்பையொழித்து விண்ணுலகில் வாழச் செய்வது அமிர்தமென்றும் அன்பர்களுக்கு ஆணவம் காமியம் மாயை என்னுமும்மலங் களையுமொழித்து சிவலோகத்தில் வாழச்செய்வது தமிழென்றும் விளக்கியதென்க.

அல்லதூஉம் பாற்கடலில் நாட்டியதோ அசலமாகிய மந்திரகிரி தமிழ்க்கட லில் நாட்டியதோ சின்மயமாகிய கம்பம், மந்திரகிரியைச்சுற்றியதோ உயிரைக்கொ ல்லும் விடருபமாகிய பாம்பு ஏகம்பத்தைச் சுற்றியதோ உயிர்களையுய்யச்செய்யும் சத் திருபமாகிய அருள், அதிலெழுந்ததோ நாவிற்குச் சுவைதரும் அமிர்தம் இதிலெழுந் ததோ அறிவிற்குச் சுவைதரும் இனியமொழி, அமிர்தம் எழுந்தபோதோ கடல் கலங் கியது சொல்லெழுந்தபோதோ தமிழ் கலங்காதிருந்தது, அமிர்தத்தைக்கொடுத்தவ ரோ தசாவதாரமுடையவர். சொல்லைக்கொடுத்தவரோ ஓரவதாரமுமில்லாதவர். அமிர் தம் உண்டவர் வாழுமிடமோஊழிதோறும்அழிதன்மாலையவாகியஇந்திரபதம்தமிழை யுண்டவர்வாழுமிடமோ ஊழிதோறுமுறங்கும் சிவபதம், என இவ்விரண்டின் வேற் றுமையும், இவ்விரண்டுந்தோன்றிய இடவேற்றுமையும், இவற்றைத்தந்தோரது வேற் றுமையும், இவற்றால் வரும் பதவேற்றுமையும் அறியவேண்டியது மொன்று. (உகஎ)

பாணித்தலமையுமின்னேபடர்கெனும்பவளச்செவ்வாய்
வாணிக்குமணாளன்றன்னைவிடைகொண்டுமகிழ்ச்சிகூர
வாணிப்பொன்மாடக்கோயிலகிலநாயகனையன்பாற்
பேணித்தாழ்ந்தெழுந்துகாசிப்பெரும்பதிதணந்துபோந்தான்.

(இ-ள்.) பாணித்தலமையும் இன்னே படர்கெனும் - தாமதிக்கவேண்டாம் இப்பொழுதே செல்வீரென்னும், பவளச்செவ்வாய் வாணிக்கு மணாளன் தன்னை - பவ ளம்போலும் செவந்தவாயையுடைய கலைமகளுக்கு நாயகனை, விடைகொண்டு-விடை பெற்று, மகிழ்ச்சிகூர - ஆனந்தம் அதிகரிக்க, ஆணிப்பொன் மாடம் கோயில் அகில நாயகனை - ஆணிப்பொன்னாலமைந்த மாளிகைகள் சூழ்ந்த திருக்கோயிலில் வீற்றிருக் கும் விசுவநாதனை, அன்பால் பேணிதாழ்ந்து எழுந்து - அன்பினால் விரும்பிப்பணிந் தெழுந்து, பெரும்பதி காசிதணந்து போந்தான் - பெரிய நகரமாகிய காசியை நீங் கிச் சென்றனர். (எ-று).

அகத்தியமுனிவரோ இனி நீர் தாழ்க்கவேண்டாம் இப்பொழுதே செல்வீர் என்றுசொல்லிய பிரமனிடத்து விடைபெற்று விச்சுவநாதனைவணங்கிக் காசிப்பதி யைவிட்டு நீங்கினரென்க.

தான் காஞ்சிமகிமையையுணர்ந்து அங்குச் செல்லவந்தது விச்சுவநாதன் திரு வருளென்றே யுணர்ந்தாரென்பார் அகிலநாயகனையன்பாற் பேணித்தாழ்ந்தெழுந்து காசிப்பெரும் பதிதணந்து போந்தான் என்றார். (உகஅ)

கச்சிமாநகரங்காணுமாதரங்கைமிக்கீர்ப்ப
நச்சணிமிடற்றார்பாதநகைமலர்மனத்துட்கொண்டு
பொச்சமின்மனையாளோடும்வானெறிப்போதுகின்ற
விச்சைதேர்முனிவன்றன்னைக்கண்டனுவிந்தநாகம்.

(இ-ள்.) கச்சிமாநகரம்காணும் ஆதரம் கைமிக்கு ஈர்ப்ப - பெரியகாஞ்சி நக ரத்தைத்தரிசிக்கும் ஆசை அதிகரித்திழுக்க, நச்சு அணி மிடற்றார் பாத நகைமலர் - நீலகண்டராகிய இறைவனாருடைய ஒள்ளியபாதமலரை, மனத்துள் கொண்டு-மனத் துள்ளேவைத்து, பொச்சம் இல் மனையாளோடும் - கற்பு நெறியில் மறதியில்லாத

உலோபாமுத்திரையோடும், வான் நெறி போதுகின்ற-ஆகாயமார்க்கமாக வருகின்ற, விச்சைதேர் முனிவன்தன்னை - சகலகலாவல்லபராகிய அகத்தியமுனிவரை, விந்த நாகம் கண்டது - விந்த பருப்பதம்பார்த்தது (எ-று.)

கச்சிநகரத்தைக்காணவேண்டு மென்கிற ஆசையீர்ப்ப ஏகம்பவாணன் திருவடியை மனத்துட்கொண்டு உலோபாமுத்திரையென்கிற மனையாளோடும் ஆகாயமார்க்கமாக வருகின்ற அகத்தியமுனிவரை விந்தபருப்பதம் கண்டதென்க. (உகக)

ஊற்றெழும்பரவைத்தெண்ணீருழுந்தளவாக்கியுண்ணு
மாற்றலினெடியனாகியளவினிற்குறியனாய
நீற்றணிமுனிவர்கோனைக்காண்டலுநெஞ்சமாழ்கிப்
பாற்றரும்பயமீக்கொண்டுபதைபதைத்தொடுங்கிச்சோர்ந்து

(இ-ள்.) ஊற்று எழும் பரவை தெள்நீர் - சுரந்தெழுகின்ற தெள்ளிய கடனீரை, உழுந்து அளவாக்கி உண்ணும் - ஒருழுந்தளவு செய்துப்பருகும், ஆற்றலின் நெடியனாகி - வல்லமையில் பெரியவராகி, அளவினில் குறியன் ஆய - சரீரவளவில் சிறியவராகிய, நீறு அணி முனிவர் கோனை காண்டலும்-திருநீறணிந்த கோலத்தையுடைய முனிவர் தலைவரைப்பார்க்கவும், நெஞ்சம் மாழ்கி-மனம் வருந்தி, பாற்றரும் பயமீக்கொண்டு - நீக்குதற்கரிய அச்சம்மேலிட்டு, பதை பதைத்து ஒடுங்கி சோர்ந்து - மிகவும் நடுங்கிச்சரீரங்குன்றிச்சோர்வடைந்து (எ-று.)

வல்லமையிற் பெரியவரும் வடிவத்திற் சிறியவருமாய் வருகின்ற அகத்தியமுனிவரை விந்தமலைகண்டு மனம் நொந்து என்செய்வோமென்று பயந்துபதைபதைத்து ஒடுங்கிச்சோர்ந்ததென்க.

அகத்தியமுனிவர் வித்தைதேர்ந்த முனிவரென்று விந்தமலை முன்னமேயுணர்ந்திருக்கின்றமையின் இப்பொழுது சிறியவடிவங்கொண்டு தன்னைநோக்கி வருதலைக் காணவும், பெரிய வடிவங்கொண்ட உன்னைப்பாதலத்திற் புகுவிப்பேனென்று நமக்கு இவ்வடிவத்தாலறிவிக்கின்றனர் போலும் என்று விந்தமலை எண்ணினதென்பார் ஆற்றலினெடியனாகி யளவினிற்குறியனாய நீற்றணிமுனிவர்கோனைக்காண்டலு நெஞ்சமாழ்கிப்பாற்றரும் பயமீக்கொண்டு பதை பதைத்தொடுங்கிச்சோர்ந்து என்றார். (உஉo)

குறுகிமுன்குறுகித்தாழ்ந்துகோதறுவிதியினாற்று
னிறுவியவருக்கியாதியருச்சனைநிரப்பனோக்கி
யுறுவனுமகிழ்ந்துபத்திவினைவினையுயர்த்துக்கூற
மறுவலுந்தொழுதுபோற்றிமணிவரையிதனைவேண்டும்.

(இ-ள்.) முன் குறுகி - முன்சென்று, குறுகிதாழ்ந்து - ஒடுங்கிப்பணிந்து, கோதுஅறு விதியின் ஆற்றால் நிறுவிய - குற்றமற்றவிதியின் வழியினால் சொல்லிய, அருக்கியாதி அருச்சனை நிரப்பல் நோக்கி-அருக்கியமுதலியவை தந்து பூசனை முறையை முட்டின்றி முடிக்கும் முறைப்பாட்டைப்பார்த்து, உறுவனுமகிழ்ந்து-தவசீலராகிய அகத்தியமுனிவரும் மனங்களித்து, பத்திவினைவினை உயர்த்திக்கூற - விந்தமலையின் அன்பின்பெருக்கை மேன்மையாகச்சொல்ல, மறுவலும் தொழுதுபோற்றி - மீளவும் பணிந்து தோத்திரஞ்செய்து, மணிவரை இதனைவேண்டும் - அழகிய விந்தபருப்பதம் இவ்வரத்தை வேண்டுகின்றது (எ-று.)

விந்தமலை அகத்தியமுனிவரையணுகித்தாழ்ந்து விதிப்படி அருக்கிய முதலியவை தந்து பாதபூசைசெய்ய அதனைப்பார்த்து முனிவர் மகிழ்ந்து இப்படியார் செய்வாரென்று அதனை யுயர்த்திக்கூற விந்தமலை மீளவும் பணிந்து இதனை வேண்டியதென்க.

விந்தமலை தன்னைப் பாதுகாத்தற்பொருட்டு வழிபட்டதை அங்கீகரித்தமை தோன்ற உறுவனும் மகிழ்ந்து பத்தி விளைவினை வுயர்த்துக்கூற என்றார். (உ௨க)

ஐயனே யடியேன் மாட்டு மருட்பெருங் கருணை வைத்த
செய்யனே யணங்கு லோபா முத்திரை திளைக்குந் தூய
மெய்யனே யலைகள் வீசும் விரிகடன் முழுது மேற்ற
கையனே யினியான் செய்யக் கடவதென் னருளா யென்ன.

(இ - ள்.) ஐயனே - என்தெய்வமே, அடியேன்மாட்டும் அருட்பெருங்கருணை வைத்த செய்யனே - அடியேனிடத்தும் பெருங்கருணையோடு அருள்பாலித்த செம்மையாளனே, அணங்கு உலோபாமுத்திரை திளைக்கும் தூய மெய்யனே-அழகிற்சிறந்த உலோபாமுத்திரை அனுபவிக்கப்பெற்ற சுத்த மேனியையுடையவனே, அலைகள்வீசும் விரிகடல்முழுதும் ஏற்ற கையனே - கரைமேல் பொரும் அலைகளையுடைய பரந்த கடனீர்முழுவதும் உள்ளங்கையிலேந்திய திருக்கரத்தையுடையவனே, இனி யான் செய்யக்கடவது என் - இனியடியேன் செய்யக்கடவதாகிய பணியாது, அருளாய் என்ன-கட்டளையிட் டருளவேண்டுமென்றுகேட்க (எ-று.)

விந்தமலை அகத்தியமுனிவரைத் தோத்திரஞ்செய்து யான் செய்யக்கடவதைக் கட்டளையிட் டருளவேண்டுமென்று கேட்டதென்க.

தன்பால் மறக்கருணை செய்யாது அறக்கருணை செய்யவேண்டு மென்பது தோன்ற 'ஐயனே' என்றும், தான்செய் வழிபாட்டை அங்கீகரித்தமை தோன்ற 'அடியேன்மாட்டும் பெருங்கருணைவைத்த செய்யன்' என்றும், கற்புடை மங்கையரால் தழுவப்பெற்றாரது உடம்பு சுத்தமென்பது தோன்ற 'உலோபா முத்திரை திளைக்குந் தூய மெய்யன்' என்றும், அவரது வன்மையைத் தான் முன்னரே யுணர்ந்தமை தோன்றக் 'கடல்முழுதுமேற்ற கையன்' என்றும், தானடித் தொண்டியற்றும் அடிமையாளா யிருப்பவனென்பது தோன்ற 'யான் செய்யக் கடவதென் னருளாய்' என்றுங் கூறியதென்க. (உ௨௨)

பொன்னில மிருக்கை கொண்டார் பொருட்டிவட் டென்பா லாசை
தன்னையான் குறித்துப் போந்தேன் சயிலமே மீளுங் காறு
மிந்நிலை யிருத்தி யென்னக் கரத்தினு லிருவிக் காஞ்சி
நன்னெடு நகரநோக்கி நடந்தன னிகரொன் றில்லான்.

(இ - ள்.) யான் பொன் நிலம் இருக்கை கொண்டார் பொருட்டு - நான் பொன்னுலகத்தைத் தாமிருக்கு மிடமாகக் கொண்டிருக்கின்ற தேவர்கள் பொருட்டு, இவண் தென்பால் ஆசைதன்னை குறித்து போந்தேன் - இவ்வழியாகத் தென்றிசையைக் குறித்துவந்தேன், சயிலமே - விந்தமலையே, மீளும் காறும் இந்நிலை இருத்தி என்ன - யான் இவ்வழியாகத் திரும்புமளவு மிந்நிலையாக விருவென்று, கரத்தினுல் இருவி - வலக்கரத்தால் பாதலத்திலாழ விருத்தி, காஞ்சி நல் நெடும் நகரம் நோக்கி நிகர் ஒன்றில்லான் நடந்தனன் - காஞ்சியென்கின்ற நல்ல பெரியநகரத்தை நோக்கி ஒப்பில்லாதவராகிய குறுமுனிவர் அந்நெறியே நடந்தனர் (எ-று.)

விந்தமே தேவர்கள் பொருட்டுத் தென்றிசையை நோக்கி இந்நெறியாகவந்தேன். யான் மீளுமளவும் இந்நிலையி லிருவென்று கரத்தா லமிழ்த்திக் காஞ்சி நகரத்தை நோக்கி நடந்தன ரென்க.

யான் உன்பால் மறங்கொண்டு வந்தவனல்லேன் தேவர்கள் வேண்டுகோளின் பொருட்டு என்பார் 'பொன்னிலமிருக்கை கொண்டார் பொருட்டு' எனவும், அவர்

வேண்டுகோள் யான் தென்றிசைக்கேகுத லென்பார் 'தென்பாலாசைதன்னை யான்குறி த்துப்போந்தேன்' எனவும், போகும்யான் மீளும்விருப்பத்தோடு செல்கின்றே னென் பார் 'மீளுங்காறு மிந்நிலையிருத்தி' எனவும், இங்ஙனங் கூறியுங் குறுகுமெண்ணத் தை யடைந்திலதென்பார் 'காத்திஞலிருவி' எனவுங்கூறினர். ஒன்றும்என்புழி இழிவு சிறப்பும்மை தொக்குநின்றது. (உஉா)

வே று.

செந்நெறி நோக்கி யமைந்தாங் கொழுகா னளவறி கில்லான்
றன்னை வியந்தான் விரைந்து கெடுமெனல் சத்தியங் கண்டா
மன்னிய மேரு வரையோ டிகலி வளர்ந்தெழு விந்த
முன்னுள தோற்றமும் வீறு முழுது மிழந்தது மன்னோ.

(இ - ள்.) செந்நெறிநோக்கி அமைந்து ஆங்கு ஒழுகான் - நன்னெறியையாராய் ந்து அதனில் மனமடங்கப்பெற்று நடவாதானும், அளவறிகில்லான் - தன்னளவறியா தானும், தன்னை வியந்தான் - தன்செயல் முதலியவற்றை வியந்துகூறினனும், விரைந்துகெடும் எனல் சத்தியம் கண்டாம் - ஆகிய இவர்களெல்லாரும் விரைவில் கெ டுவார்களென்பதுண்மை அதைக்கண்டனம், மன்னிய மேருவரையோடு - நிலைபெற்ற பொன்மலையோடு, இகலிவளர்ந்து எழும் விந்தம்-பகைத்து வளர்ந்தெழுந்தவிந்தமலை, முன்னுளதோற்றமும் வீறும் - தனக்கு முன்னமைந்துள்ள உயர்ச்சியும் பெருமிதமும், முழுதும் இழந்தது - எல்லாவற்றையு மிழந்துவிட்டது (எ-று.)

நன்னெறியிற் செல்லாதவனும், தன் னளவின்சிறுமையை யெண்ணுதவனும், தனக்கமைந்துள்ளனவற்றையே பெரிதாகவியந்தவனு மென்றின்னோர் விரைந்துகெடு வரென்ன நூல்கள் கூறுவதுண்மை, இதனை மேருமலையோடு விந்தமலை பகைத்துத் தனக்குமுன்னமைந்த தோற்றத்தையும் பெருமிதத்தையு மிழந்த காரணத்தாற் கண் டனமென்க.

இதனுல் விந்தமலை சூரியசந்திரர்கள் தேவர்கள் முதலியயாவர்க்கும் இடுக்கண் செய்ய மேலோங்கியதாகலான் அது செந்நெறிநோக்கிய தன்மையன்றெனவும், மே லெழுந்தோங்கியதன்மையை என்றும் நிலைபெறச்செய்துகொள்ளும் வலியின்றிக் குறு கிவந்ததாகலான் அது அளவறிந்ததன்மை யன்றெனவும், குறுகும்இகழ்ச்சியை யுடை ய தான் "யாவரிகழ்ச்சிநிகழ்த்தினர்" என்றும் "என்றனக்கு இகழ் யாதுகொல்" என் றும் நாரதமுனிவர்பால் முன்னர் தன்னைவியந்து இப்பொழுது அகத்தியமுனிவர்பால் 'செய்யக்கடவதென் னருளா' யென்றிரந்து கூறியதாகலான் அதுவியக்குந்தன்மை யறிந்ததன்றெனவுங் கொள்ளக்கிடந்தன.

செந்நெறி-எத்திறத்தானும் பிறவுயிர்க்குத் தான் இடுக்கண் செய்யாது அருளு டையனுயிருத்தல். இதனை "மன்னுயிரோம்பி யருளாள்வாற்கில்லென்ப - தன்னுயி ரஞ்சும்வினை" என்றதனுனும், தன்னளவு - தன்வலியும் காலமு மறிந்து பகைமேற் செல்லுதலையும் செல்லாதிருத்தலையு முணர்தல். இதனை "தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்கமுற்று - மிடங்கண்டபின்னலல்லது" என்றதனுனும், தன்னைவியத்தல் - செந்நெறியினும் அளவினுங் கீழாயினர் நியமிப்பாரைமேற்கொண்டு எத்திறத்து மொ ழுகல்வேண்டும். அஃதின்றித் தம்மைத்தாமே மேலாகவெண்ணி நியமிப்பாரின்றி யொழுகல். இதனை "தேவரனையர் கயவ ரவருந்தா - மேவனசெய் தொழுகலான்" என்றதனுனுமறிக. கண்டாமென்றார்—துணிவுபற்றி. (உஉச)

சங்கர ஞெதிர் தோன்ற மறையுந் தடாதகை தன்னோர்
கொங்கை நிகர்த்தது செல்லுங் குறுமுனி நேருறு குன்ற
மங்கது கண்ட விமையோ ரனைவரு மத்திறங் கேட்ட
நங்கையை யீன்றபொன் மாலை யுவகையி னாற்றி யடைந்தார்.

(இ - ள்.) செல்லுங் குறுமுனி நேர் உறு குன்றம் - நெறியேசெல்லும் அகத்திய முனிவருக்குநேரில் எதிர்ப்பட்ட விந்தமலை, சங்கரனுர் எதிர்தோன்ற மறையுந் தடாதகைதன் ஓர் கொங்கைநிகர்த்தது - இறைவனுர் எதிரேவர மறைந்த தடாதகைப் பிராட்டியாருடைய ஒருதனத்தையொத்தது, அங்கது கண்ட இமையோர் அனைவரும்-மேலெழுந்தவிந்தமலை கட்புலனுக்குத்தோன்ருது மறைந்தமையைக்கண்ட தேவர்க ளெல்லாம், அத்திறங்கேட்ட நங்கையை ஈன்ற பொன்மாலை உவகையில் நாற்றி அடைந்தார் - தடாதகைப்பிராட்டியாருக்குத் தனம் மறைந்தமையைக்கேட்ட அவ்வம்மை யாரைப் பெற்றெடுத்த காஞ்சனமாலையார் மகிழ்ச்சியி லாழ்ந்தமைபோல ஆனந்தத்தி லழுந்தினுர்கள் (எ-று.)

தடாதகைப்பிராட்டிதனம் சங்கரனைக்கண்டகாலத்து மறைந்தமைபோல அகத்தியனைக்கண்ட விந்தமலை மறைந்தொளித்தது. மறைந்ததைக்கேட்டு மகிழ்ச்சி யடைந்த காஞ்சனமாலையார்போல விந்தமலை மறைந்தொளித்ததைக்கண்ட தேவர் கள் மகிழ்ச்சியடைந்தார்களென்க. (௨௨௫)

குன்றிடை முட்டி மறுகுங் குரீஇயிற் றடையுண் டழுங்கி
நின்ற வருக்கன் முதலோர் நெறிகொளச் செல்ல விடுத்துத்
தன்றுணைப் பாவையி னேடுஞ் சார்தரு தாபத வேந்து
மன்றலம் பூம்பொழிற் காஞ்சி வளநகர் தன்னைமுன் கண்டான்.

(இ - ள்.) குன்றிடைமுட்டி மறுகும் குருவியின் - மலையில் தாக்குண்டுவருந்தும் குருவிகளைப்போல, தடையுண்டு அழுங்கிநின்ற அருக்கன் முதலோர் - (செல்லுநெறி) தடைபட்டுவருந்திநின்ற சூரியன் முதலானவர்கள், நெறிகொள செல்ல விடுத்து - தாங்கள்போகும் நெறியே போகவிட்டு, தன் துணை பாவையினேடும் - தன் துணைவி யாகிய உலோபாமுத்திரையோடும், சார்தரு தாபதவேந்து - வருகின்ற முனிசிரேஷ்ட ராகிய அகத்தியமுனிவர், மன்றலம் பூம்பொழில் காஞ்சி வளநகர் தன்னை - நறுமணங் கமழும் மலர்கள்நிறைந்த சோலைசூழ்ந்த செல்வம் பொருந்திய காஞ்சிநகரத்தை, முன் கண்டார் - தனக்குமுன்னே தோன்றக்கண்டனர் (எ-று.)

ஆகாயத்திற்செல்லும் குருவிக்கூட்டங்கள் மலைகளில் தாக்குற்று வருந்துவது போல சூரியன்முதலோர் விந்தமலையிற்றாக்குண்டு நெறியறியாது வருந்த அவர்களை நெறியேசெல்லவிடுத்து அகத்தியமுனிவர் உலோபாமுத்திரையோடு காஞ்சியைக்கண் டனரென்க. (௨௨௬)

கண்டு தொழுது வணங்கிக் கையிணை யுச்சியிற் கூம்ப
மண்டிய காதலிற் புக்கு மரபுளிச் செய்கட னாற்றி
யண்டர் பிரானுர் தளிக ளனைத்து முறையா னிறைஞ்சிப்
பண்டை மறைகண் முழங்கும் படரொளி யேகம்பஞ் சேர்ந்தான்.

(இ - ள்.) கண்டு தொழுது வணங்கி - காஞ்சி நகரத்தைக் கண்டவுடனே தண் டாகாரமாகப் பணிந்து, கையிணை உச்சியில் கூம்ப - இரண்டு கைகளும் சிரமேல் குவிய, மண்டிய காதலிற் புக்கு - செறிந்த ஆசையோடு நகருள் புகுந்து, மரபுளி

செய்கடன் ஆற்றி - விதியாற் செய்யுங் கடன்களைச் செய்து, அண்டர்பிரானுர் தளிகள் அனைத்தும்-தேவர் பெருமானாகிய இறைவன் வீற்றிருக்குந் தளிகளெல்லாம், முறையால் இறைஞ்சி - முறைப்படிவணங்கி, பண்டைமறைகள் முழங்கும் - அநாதியாயுள்ள வேதங்கள் ஒலிக்கும், படர் ஒளி ஏகம்பஞ் சேர்ந்தான் - ஒளி வீசும் திருவேகம்பத்தை யடைந்தனர் (எ-று.)

காஞ்சிநகரத்தைக் கண்டவுடன் பணிந்து சிரமேல் கைகூப்பி நகருக்குள்ளே நுழைந்து செய்யும்விதிகளைச் செய்துமுடித்து திருத்தளிகளெல்லாங் கண்டுவணங்கித் திருவேகம்பத்தைச் சேர்ந்தனரென்க.

இறைவனு லநாதியே செய்யப்பட்டமையிற் பண்டைமறை என்றார். இதனைச் 'செய்யாமொழி' என்பதனுனறிக. உளி மூன்றுவதன் பொருள்படுவதோ ரிடைச்சொல்; இதனை "இயல்புளிக்கோலோச்சும்" என்ற குறட்குப் பரிமேலழகருரையானறிக.

கண்டவுடனே தொழுது வணங்கலும் உச்சியில் கைகளைக்குவித்தலும் காதலிற் செல்லுதலும் தலையன்பாதலால் அவ்வன்பை காஞ்சியின்மாட் டுடையாராயினு ரென்பார் கண்டு தொழுது வணங்கிக் கையிணை யுச்சியிற் கூம்ப என்றார். (உஉஎ)

செல்வ மணித்திரு வாய்தல் சென்று பணிந்து புகுந்தாங்
கல்வளர் கின்ற மிடற்று ராரரு ளென்ன நிறைந்த
சொல்வளர் சீர்ச்சிவ கங்கைத் தூநறு மென்புன லாடி
யெல்வளர் கண்டிகை வெண்ணீ றெங்கும் வயங்க வணிந்தான்.

(இ - ள்.) செல்வமணி திருவாய்தல் சென்று பணிந்து புகுந்து - சிறந்த இரத்தினமயமாய் விளங்கும் செல்வம்வாய்க்கப்பெற்ற முதற்கோபுரவாயிலை யடைந்து தண்டாகாரமாக வணங்கி உள்ளேசென்று, ஆங்கு அல் வளர்கின்ற மிடற்றார் ஆர் அருள் என்ன நிறைந்த - அவ்விடத்துக் கருமைவளர்கின்ற கண்டத்தையுடைய இறைவன் கருணையென்று சொல்லும்படி நீர்நிறைந்திருக்கும், சொல் வளர் சீர் தூநறு சிவகங்கை மென் புனல் ஆடி - புகழ்நீங்காதோங்கும் சிறப்புடைய பரிசுத்தமாகி நன்றாய்த் தெளிந்த சிவகங்கைத் தீர்த்தத்தில் மூழ்கி (எழுந்து), எல் வளர் கண்டிகை வெள் நீறு - ஒளிவீசும் உருத்திராக்கமணியையும் வெள்ளியதிருநீற்றையும், எங்கும் வயங்க அணிந்தான் - சரீரமுற்றும் விளங்க அணிந்தனர் (எ-று.)

அகத்தியமுனிவர் மணிமயமாய் விளங்கும் கோபுரத்தை யடைந்து வீழ்ந்து பணிந்து உள்ளேசென்று சிவகங்கைத் தீர்த்தத்தில் மூழ்கி யெழுந்து விபூதி உருத்திராக்கங்களைச் சரீரமுற்றும் விளங்க அணிந்தனர் என்க.

செல்வமணித் திருவாய்தல் என்றதனுல் கோபுரத்தின் சிறப்பும், அல்வளர்கின்ற மிடறு என்றதனுல் இறைவனாற்றல் மிகுதியும், ஆர் அருளென்ன நிறைந்து சொல்வளர்சீர் சிவகங்கை தூநறு மென்புனல் என்றதனுல் சிவகங்கைத் தீர்த்தத்தின் விசேடமும், எல்வளர் கண்டிகை வெண்ணீறு எங்கும் வயங்க அணிந்தான் என்றதனுல் முனிவருடைய சைவசீலமும் விளங்கியதென்க. (உஉஅ)

வாங்கு நுணங்கிடை பாகர் மாளிகை சூழ்மணி முன்றிற்
பாங்கு வலங்கொடு சென்று படரொளி யானந்த வெள்ளந்
தேங்குந் தனிமறைச் சூதத் தெய்வத் தருநிழன் மேய
வீங்குங் கருணைப் பிழம்பை விழியெதிரே கண்டு கொண்டான்.

(இ - ள்.) வாங்கு நுணங்கு இடைபாகர் - வளைந்து துவளும் இடையையுடைய உமைபங்கருடைய, மாளிகைசூழ் மணிமுன்றில் பாங்கு - திருமாளிகைகள் சூழ்ந்திருக்கின்ற அழகிய முற்றத்தின் பக்கமாக, வலம்கொடு சென்று - வலமாகச்சென்று, ஒளிபடர் ஆனந்த வெள்ளம் தேங்கும் - ஞானவொளிபடர்ந்த ஆனந்த வெள்ளந் ததும்பும், தெய்வம் தனி மறை சூதத்தரு நிழல்மேய வீங்கும் கருணைப்பிழம்பை - தெய்வத்தன்மை பொருந்திய ஒப்பற்ற வேதவடிவமாய் விளங்கும் மாவிருக்கத்தி னிழலில் எழுந்தருளியிருக்கின்ற மிக்ககருணைப்பிழம்பை, விழி எதிரோ கண்டுகொண்டான் - (தம்முடைய) கண்ணெதிரோ கண்டுகொண்டனர் (எ-று.)

(அகத்தியமுனிவர் சிவகங்கையில் நீராடி விபூதி ருத்திராக்கங்களை யணிந்த பின்னர்) இரட்டைத் திருமாளிகைஎன வழங்கும் முதற்பிராகாரத்தை வலம்வந்து மாவடி மூலத்தில் கருணைப்பிழம்பாய் விளங்கும் திருவேகம்பநாதனைத் தங் கட்புலனுக்குத் தோன்ற எதிரேகண்டனரென்க.

வேதம் ஆன்மாக்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைப் பிரகாசிக்கச்செய்து அவருள்ளத்தே சிவானந்த நிறையும்படிச் செய்யவல்ல ஒப்பற்றதன்மையுடைமையான் படரொளியானந்த வெள்ளந்தேங்கும் தனிமறை எனவும், அவ் வேதமே மாவிருக்கமா யிருத்தலால் சூதத்தெய்வத்தரு எனவும், அத்தரு நிழலின் கண் எழுந்தருளி யிருக்கும் இறைவன் தனது கருணையால் பஞ்சபூதவடிவங்களுளொன்றாகாது இவ்வண்ணமென் றறியக்கூடா ஓரொளிப் பிழம்பாகத் தோன்றுகின்றமையான் நிழன்மேய வீங்குங் கருணைப்பிழம்பை எனவும், ஒளிமயமாய் விளங்கும் அச்சோதிலிங்கம் யாவர்கண்ணுக்குந் தோன்றுமையான், அதனருமைநோக்கி விழியெதிரோ கண்டுகொண்டான் எனவுங் கூறினார். வாங்கு நுணங்கிடை - அன்மொழித்தொகை. (உஉக)

இணங்கு முறைமையி னங்க மெட்டினு மைந்தினுஞ் சால
வணங்கி மகிழ்ந்து திளைத்து வார்புனல் கண்கள் சொரியக்
குணங்குறி யின்றி யெழுந்த கோலத் திருவுருப் போற்றி
யணங்கரு மெய்யருள் பெற்று மீண்டன னார்கலி யுண்டான்.

(இ-ள்.) ஆர்கலி உண்டான் - கடனீரை ஆசமனஞ் செய்தவர், இணங்கு முறைமையின் - பொருந்திய முறைமையினாலே, அங்கம் எட்டினும் ஐந்தினும் சாலவணங்கி மகிழ்ந்து திளைத்து - அஷ்டாங்க பஞ்சாங்கமாகப் பலமுறையும் பணிந்து மனமகிழ்ந்து சிவானந்தம் அனுபவித்து, கண்கள் வார்புனல் சொரிய - கண்கள் விடாது நீரைச்சிந்த, குணம் குறி இன்றி எழுந்தகோலம் திருவுரு போற்றி - குணமுங் குறியுமில்லாமல் (ஓர்வடிவமாக) எழுந்த அழகிய திருமேனியை வாழ்த்தி, அணங்கரு மெய் அருள்பெற்று - துன்பமில்லாத உண்மைத் திருவருளைப்பெற்று, மீண்டனன் - திரும்பினார் (எ-று.)

அகத்தியமுனிவர் கருணைப்பிழம்பைக் கண்டபின்னர் அட்டாங்க பஞ்சாங்கமாக வணங்கிச் சிவானந்தப் பெருவாழ்வடைந்து மகிழ்ந்து குணங்குறி கடந்தொளிருங் கோலத்தைப்போற்றி மெய்யருளைப்பெற்றுத் திரும்பினர் என்க.

அகத்தியமுனிவர் காஞ்சி நகரத்தையும் அந்நகரிலுள்ள ஏனைய தலங்களிலுள்ள மூர்த்திகளையும் கண்டகாலத்து ஏகாங்கத் திரியாங்கமாகச் செய்து திருவேகம்பனைக் கண்டகாலத்து ஆங்காங் கெழுந்து வளர்ந்த அன்பின் பெருக்கிற்கு ஓரெல்லையாகக் கண்டமையால் அப்பெருக்கத்தைப் புறம்போக வொட்டாது வணக்கங்களிற் சிறந்த அட்டாங்க பஞ்சாங்கங்களாலே தடுத்தனர்போலுமென்பார் 'இணங்கு

முறைமையி னங்கமெட்டினு மைந்தினுஞ் சாலவணங்கி' எனவும், இனி நாம் கருதிய முத்தியின்பம் இம்மூர்த்தி பா லடையப்பெற்றோமென்று மகிழ்ந்து அச்சிவானந் தத்தை யனுபவித்தனனென்பார் 'மகிழ்ந்து திளைத்து' எனவும், சிற்றின்பத்தனுபவ முதிர்வில் தேகத்தில் நீர் அரும்புவதுபோற் சிவானுபவ முதிர்வில் இவர் கண்களில் அன்பினீர் வெளிப்பட்டன வென்பார் 'வார்புனல் கண்கள் சொரிய' எனவும், இவ் வாறு தம்மை இன்புருவாக்கிய அப்பொழுது தம்முடைய குணமுங் குறியும் அவன ருள்வசமாய்ப் போனதொழிந்து அவனது குணங்களை இத்திறத்தவெனக் கண்டில மென அவசமுற்றகாலத்து வணங்கும்படி திருவுருவைக் காட்டின னென்பார் 'குண ங்குறியின்றி யெழுந்த கோலத் திருவுருப்போற்றி' எனவும், இவ்வாறு உள்ளும் புறம் பும் தன்குணமும் குறியுங்கெட்டு ஈரிடத்தும் அவனருளே கண்ணுகக் காண்டலே குற்றமற்ற சிவானுக்கிரக மென்பார் 'அணங்கருமெய் யருள்' எனவுங் கூறினர்.(உகூ0)

வன்பழ வல்வினை மாற்றுங் கம்ப மகிழ்ந்தவர் தென்சார்
தன்பெய ராற்சிவ லிங்கந் தாபித் தருச்சனை யாற்றி
முன்பு வரம்பல பெற்று மீமிசை மூண்டெழு மன்பான்
மின்புரி செஞ்சடை யானை மீளப் பழிச்சுத லுற்றான்.

(இ - ள்.) வன் பழ வல்வினை மாற்றும் கம்பம் மகிழ்ந்து-மிக்கவன்மையையுடைய பழைய ஆணவத்தை மாற்றவல்ல திருவேகம்பரைக்(கண்டு)மகிழ்ந்து, அவர் தென்சார் தன்பெயரால் சிவலிங்கம் தாபித்து-அவரது தென்பக்கத்தில் தமது பெயரால் (அகத் தீஸ்வரரென) ஓர் சிவலிங்க மூர்த்தியைப் பிரதிட்டைசெய்து, அருச்சனை ஆற்றி- பூச னைஇயற்றி, முன்பு வரம் பலபெற்று- முன்னேநின்று பலவரங்களைப் பெற்று, மீமிசை மூண்டு எழும் அன்பான் - மேன்மேலதிகப்பட்டெழும் அன்பினால், மின் புரி செஞ் சடையானை - மின்போல்விளங்கும் செஞ்சடையையுடையானை, மீள பழிச்சுதல் உற் றான் - மீளவுந் துதிக்கத் தொடங்கினர் (எ - று.)

ஆணவவிருளை யெளிதிற்போக்கவல்ல திருவேகம்பரைக் கண்டுமகிழ்ந்து அத்திரு வேகம்பருக்குத் தென்பக்கத்தில் தமது வழிபாடுவிளங்கச் சிவலிங்கத்தைக் கண்டு அருச்சித்து வேண்டியபலவரங்களைப் பெற்று அன்பின் மிகுதியான் மீளவும் துதிக்கத் தொடங்கினரென்க.

வன்பழவல்வினை மாற்றுங் கம்பம் என்றது முத்திநகரங்களுட் சிறந்தது இந் நகரம் என்று குறித்தற்கு. எனவே முத்தியிற்சிறந்த கேசாந்தமுத்தியை எவ்வுயிர் களுக்கும் யாவருங்காண அங்கேதருதலானென்க. இதனை இப்படலத்தில் (கூச)-வது செய்யுள்முதல் (எஉ)- வது செய்யுள்வரையும் கூறியதனுற் காண்க. (உகூக)

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

இந்நா ளெனக்குப் பயப்பட்ட திப்பிறவி
யிந்நா ளெனக்குப் பயப்பட்ட தியான்செய்தவ
மிந்நா ளெனக்குப் பயப்பட்ட தென்னறிவு
மிந்நா ளுனைக்காணப் பெற்றமையி னெங்கோவே.

(இ - ள்.) எங்கோவே - என்னுடைய தலைவனே, இந்நாள் உனைக் காணப் பெற் றமையின் - இப்பொழுது காண்டற்கரிய உன்னுடைய திருக்கோலத்தை யூனக்கண் ணுற் றெரிசிக்கப் பெற்றமையான், எனக்கு இப்பிறவி இந்நாள் பயப்பட்டது - அடி யேனுக்கு (வாய்க்கப்பெற்ற) இச்சனனம் இப்பொழுதுதான் பயன்பெற்றது (அது வேயுமன்றி), யான் செய்தவம்-அடியேனியற்றிய தவமும், எனக்கு இந்நாள் பயப்பட்

டது - அடியேனுக்கு இப்பொழுதுதான் பயனடைந்தது (அதுமட்டோ), என் அறிவு எனக்கு இந்நாள் பயப்பட்டது - என்னுடைய ஞானமும் அடியேனுக்கு இப்பொழுது தான் வாய்க்கப்பெற்றது (எ - று.)

எம்மிறைவனே உன்னை இன்றுகாணப்பெற்றமையான் எடுத்த இப்பிறவியும் யான் செய்தவமும் என்னறிவும் பயன் பெற்றன வென்க.

பிறவியா னடைவது தவமும் தவத்தா னடைவது அறிவுமாதலான் அவையெல்லாம் ஒருங் கெய்தினே னென்றார். எனவே பிறவிப்பேதங்களும் தவத்திறங்களும் அறிவின் பேதங்களும் பலவாமன்றே, அவையெல்லாம் மெய்யருள்பெற்று நோக்குங்கால் அவலமாய்ப் போமன்றே, ஆகவே இயல்பாகவே பாசமில்லாதபதியை யடையப்பெற்ற பிறவியே பயப்பட்டபிறவி எனவும், அப்பதியை யுத்தேசித்துச் செய்யுந் தவமே பயப்பட்ட தவம் எனவும், அப்பதிஞானத்தாற் பசுவாகிய தன்னைப் பதியாகக் காணாது பதியைப்பதியாகக்காணுமறிவே பயப்பட்ட அறிவு எனவும், தாம்பெற்ற மெய்யருளால் யாவருக்கும் நன்குவிளக்கினானென் றுணர்க. அகத்தியர் மெய்யருள் பெற்றமை "இணங்கு முறைமை" யென்னுஞ் செய்யுளில் "அணங்கரு மெய்யருள் பெற்று மீண்டன னர்கலியுண்டான்" எனவருதலாற் காண்க.

அல்லதூஉம் இந்நா ளுனைக்காணப் பெற்றமையின் பிறவி தவம் அறிவு இவையெல்லாம் இந்நாள் பயப்பட்டது இந்நாள் பயப்பட்டது என்றடுக்கிக் கூறியதனால் திருவேகம்பமுடையாரை யூனக்கண்ணாற் காணப்பெற்ற அவ்வளவே வரும்பயனையும் அறிவுறுத்தியவாறு. அடுக்கு—அன்மொழி. (உ௯உ)

எண்ணமெலா மெய்தினே னெண்ணமெலா மெய்தினே
னெண்ணமெலா மெய்தினே னெங்கள் பெருமானே
கண்ணனொடு நான்முகனுங் காணாத் துணையடிகள்
கண்ணெதிரே யிற்றைநாள் யான்காணக் காட்டினையால்.

(இ-ள்.) எங்கள் பெருமானே - எங்களுடைய இறைவனே, கண்ணனொடு நான்முகனும் காணாததுணையடிகள் - திருமாலோடு பிரமனுங் காணப்பெறாத, உன்னடித் துணைகளை, யான் இற்றைநாள் கண் எதிரே காண காட்டினை - அடியேன் இன்று கண்ணால் நேரே காணும்படி காண்பித்தனை, (அதனால்) எண்ணம் எல்லாம் எய்தினேன் எண்ணம் எல்லாம் எய்தினேன் எண்ணம் எல்லாம் எய்தினேன் - யானெண்ணிய வெண்ணங்களெல்லாம் மிகவும் அடையப்பெற்றேன் (எ - று.)

எங்களிறைவனே அரியாலு மயனாலுங் காண்டற்கரிய பாதங்களை யான் காணக் காட்டினை யாகலான் எண்ணமெலா மெய்தினேனென்று சொன்க.

உருவிற்பெரிய அரிபிரமர்கள் மாறுபட்டவடிவெடுத்துக் காண்டற்கரிதாய் நின்ற அடியை உருவிற்சிறிய தம்மெதிர்காணக்காட்டியது அவர்தம்மருளேயாதலால் 'கண்ணனொடு நான்முகனுங் காணாத்துணையடிகள் கண்ணெதிரே யான் காணக்காட்டினை' எனவும், அருள்பெற்றோர் எண்ணிய வெண்ணியாங்கெய்தல் எளிதாதலால் 'எண்ணமெலா மெய்தினேன்' எனவும், அவ்வெண்ணங்கள்-இனிப் பிறவாநெறிக்கடுத்த பிறவிவாய்ப்பது எந்நாள்எனவும், அப்பிறவி வாய்க்கப்பெறினும் 'பசித்துண்டு பின்னும் பசிப்பானைப்' போன்ற இறக்குந்தவத்தைச் செய்யாது இறப்பில் தவத்தைச் செய்யவருவது எந்நாள் எனவும், அது செய்யப்பெறினும் 'சித்தமலமறுவித்துச் சிவமாக்கி' அடிமைகுலையாதா ளவல்ல திருவருள்வசப்படுவது எந்நாள் எனவும், எண்ணியவை மூன்றாகலால் மும்முறை எண்ணமெலா மெய்தினேன் எனவும், அவ்வெண்ணத்தால் ஏங்கியிருந்த அவ்

வேக்கமகலக் கருணைப்பிழம்பாகிய பெருமான் கண்டவளவே அவையெல்லாம் எய்தக்கடைக்கணித்தமையால் 'இற்றைநாள்' எனவுங் கூறினர். அடுக்கு மிகுதிப்பொருட்டு. (உ௬௩)

சங்கரா சம்புவே சங்கரா சம்புவே
சங்கரா சம்புவே சாம்பசிவ னேயென்
னங்கணு வென்றென்று மோலிட் டழைத்தாற்று
மிங்கெனக்கு வாழ்நாள்க ளிவ்வாறே போகியவே.

(இ-ள்.) இங்கு - இவ்விடத்து, சங்கரா சம்புவே சங்கரா சம்புவே சங்கரா சம்புவே சாம்பசிவனே - சங்கரா சங்கரா சங்கரா வென்றும், சம்புவே சம்புவே சம்புவே என்றும், சாம்பசிவனே என்றும், என் அங்கணு என்றும் - என்னுடைய அழகிய கண்ணுளனே என்றும், என்றும் ஓலிட்டு அழைத்து அரற்றும் - (இவ்வாறு) நீங்காது ஓலமிட்டு அழைத்துக் கதறும், எனக்கு - அடியேனுக்கு, வாழ் நாள்கள் - ஆயுள்நாள்கள், இவ்வாறே போகிய - இம்முறையே கழிந்தன (எ-று.)

இவ்விடத்துச் சங்கரா என்றும் சம்புவே என்றும் சாம்பசிவனே என்றும் அங்கணு என்றும் இடைவிடாது ஓலமிடும் எனக்கு வாழ்நாள்கள் இவ்வகையே சென்றன என்க.

தா மெண்ணியவாறே எய்தப்பெற்ற சிவமாந்தன்மைப்பெருவாழ்வு திறம்பாவென்னுந் துணிபான் எனக்கு வாழ்நாள்கள் இவ்வாறேபோகிய வென இறந்தகாலத்தாற் கூறினர். அடுக்கு—பன்மை.

திருவேகம்பமுடையாரைக் கண்டகாலத்துத் தமது தேகமும், வழிபட்டகாலத்து மனமும், வாழ்த்தியகாலத்து வாக்கும் சுககரத்தையும் சுகத்தையும் அடைந்தனவாகலான் அவ்வுண்மைதோன்ற மும்முறை 'சங்கரா சம்பு' என்றும், மன வாக்குக் காயங்கள் அங்ஙனமாகவே அவ்வழியுழலும் ஆன்மபோதம் அருள்வசப்பட்டுச் சொரூபமாகிய சிவமேயாய் நிற்கப்பெற்றமையான் அப்பெற்றிமைதோன்ற 'சாம்பசிவனே' என்றும், மூற்பெத்தத்திற் சீவனைச் சிவம் இடமாகக்கொண்டதுபோல் முத்தியிற் சீவன் சிவத்தையிடமாகக்கொள்ளும் என்னும் சித்தாந்தப்படித் தா னிறைவனையிடமாகக் கொண்டமையான் அந்நிலைதோன்ற 'என்னங்கணுஎன்றும்' கூறினரெனக் கொள்ளலுமொன்று. சாம்பசிவன்—உமையோடுகூடினவன். (உ௬௪)

குன்றாத வன்புனக்கே குன்றாத வன்புனக்கே
குன்றாத வன்புனக்கே மிக்கோங்கு கொள்கையது
வென்றுமெனக் குண்டாக வென்றுமெனக் குண்டாக
வென்றுமெனக் குண்டாக வென்றுமோர் பெற்றியனே.

(இ-ள்.) என்றும் ஓர் பெற்றியனே - எந்நாளும் (இயல்புதிரியாமல்) ஓரியல்பாய் நிற்குந் தன்மையாளனே, உனக்கே குன்றாத அன்பு உனக்கே குன்றாத அன்பு உனக்கே குன்றாத அன்பு - உன்றனக்கே யான் செய்யத்தகும் குறைவுபடாத அன்பும், மிக்கு ஓங்கு கொள்கை - மிகவும் வளரவேண்டுமென்னுங் கொள்கை, அது எனக்கு என்றும் உண்டாக எனக்கு என்றும் உண்டாக எனக்கு என்றும் உண்டாக-அவ்வன்பு அடியேனுக்கு எந்நாளும் உளதாகுக உளதாகுக உளதாகுக (எ-று.)

என்றும் ஓர்தன்மையானென்னுஞ் சீலமுடையானே உனக்கே செய்யத்தகும் அன்பு எனக்கு எப்பொழுதும் உண்டாகுகஎன்க.

முப்புறச்சமயத்தார்க்கும் அவரவர்கொள்ளும் முதற்பொருளாகியும், அவரினுவே ருகிய அகச்சமயத்தார்க்கு இலய போக வதிகாரமென்னு முத்தொழில்பற்றி சிவன சதாசிவன் மகேசன் என்னும்பெயருடைய அருவம் அருவுருவம் உருவம் என்னுந் தடத்தக்குறியாகியும், சித்தாந்தசைவர்க்கு வேதாகமங்களின் குறியிறந்தபொருளாகியும், ஆன்மவறிவில் அருளான் மன்னுபவனாகியும், உயிர்கட்கெல்லாம் அறிவைப்பிறப்பிக்கும் அம்மையப்பனாகியும், இவ்வாறு எவ்விடத்தும் தன்றன்மையிற் சிறிதுந்திரியாது நிற்கும் இறைவன நீயே என்பார் "என்றும் ஓர் பெற்றியனே" எனவும், அம்மையப்பனாகிய நின்னை யொழித்துப் பிறர்பால் அன்புசெலுத்தல் பெரும்பாவமாகலின அஃதெனக்கின்றுய் உன்பாலே அன்பு வளரவேண்டுமென்பார் "குன்றாத அன்புனக்கே மிக்கோங்குகொள்கை" எனவுங் கூறினர். அன்றியும் யாவரையும் யாவையு மொழித்து உன்னையே யப்பனாக வுண்மையிற்கண்டேனாதலால் காயத்தாற் செய்யக்கடவனவாகிய பணிகட்கும், வாக்காற் செய்யக்கடவனவாகிய பணிகட்கும், மனத்தாற் செய்யக்கடவனவாகிய பணிகட்கும், அன்புண்டாக வேண்டுமென்பார். "குன்றாதவன்புனக்கே" எனறும் "என்றுமெனக்குண்டாக" வேண்டுமென்றும் முக்காற்கூறியது எனவும், இவ்வன்பன்றி வேறுவேண்டிலேனென்பார் "அது மிக்கோங்குகொள்கை" எனவும், என்னளவேயன்றி என் மரபினருக்கெல்லா முண்டாகவேவேண்டுமென்பார் "என்று மெனக்குண்டாக வேண்டு" மெனவுங் கூறினர். அடிக்கு முணிவுப் பொருட்டு. (உகூரு)

> வையமிசைந் தோற்றமுதற் சாங்காறு மன்றவுனைத்
> தெய்வமெனப் பேணுத் திருவிலிக ளென்குலத்தி
> லெய்தி யொருஞான்றும் பிறவற்க வெய்துறினும்
> வெய்தெனமற் றாங்கே விளிந்தொழிக வெம்மானே.

(இ-ள்.) எம்மானே - எமது பெருமானே, வையமிசை - உலகின்கண், தோற்ற முதல் சாங்காறும் - பிறந்தநாள்முதல் சாமளவும், மன்ற - நிச்சயமாக, உன்னை தெய்வம் எனப் பேணாத திருவிலிகள் - (இறைவனே) உன்னைத் தெய்வமென் றெண்ணி வழிபடாத வறுமையாளர்கள், ஒருஞான்றும் என்குலத்தில் எய்தி பிறவற்க - ஒருநாளும் எனது குலத்தில்வந்து பிறவா தொழியக்கக்கடவர், எய்துறினும் - ஓர்காற் பிறந்தாலும், ஆங்கே வெய்தென விளிந்து ஒழிக - அப்பொழுதே வெச்சென இறந்துபோகக்கடவர். (எ-று.)

என்தெய்வமே இவ்வுலகின்கண் பிறந்திறக்கு மளவும் நிச்சயமாக உன்னைத் தெய்வமென் றெண்ணிவழிபடாத பாவிகள் என்குலத்தில் பிறவாதொழியக்கக்கடவர். அன்றி ஓர்காற் பிறப்பாராயின் அவர் வளராவண்ணம் அக்கணமே யிறக்கக் கடவர். இவையே எனது வேண்டுகோ ளென்க.

எல்லாமலங்களையும் பற்றறத்துடைத்து மெய்யுணர்ந்து நிட்டை கூடினார்க்கும் உடம்பு நிற்குமளவும் பிராரத்தவினை அவ்வுடம்பைப்பற்றியே நிற்கும் என்பது சித்தாந்தமாகலான் அப்பிராரத்தத்துக்கஞ்சி யாண்டு வேண்டியதென்க. எத்திறத்தனவாகிய பிராரத்தங்கள் எனக்கடுப்பினும் அடுக்க, அவைகட்கெல்லாம் யான் ஒரு சிறிதும் அஞ்சேன், யானஞ்சுவது உன்னைத் தெய்வமெனப் பேணாத்திருவிலிகள் என்குலத்தில் பிறக்கவரும் பிராரத்தம் உளதோ வென்பதற்கே. இதனை—"மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென மதித்தெம் பெம்மாற் கற்றிலாதவரைக் கண்டா லம்மநா மஞ்சுமாறே" எனவரும் திருவாக்கானுமுணர்க. மற்று-அசை. (உகூசு)

> ஆனே றுயர்த்தருளி யன்றினா ரூரெரித்த
> கோனே யெனக்குக் குலதெய்வ மாம்பேற்றால்

யானே பெருஞ்செல்வன் யானே பெருஞ்செல்வன்
யானே பெருஞ்செல்வ னெல்லா வுலகினுமே.

(இ-ள்.) ஆன் ஏறு உயர்த்தருளி - இடபக்கொடியை மேலேயுயர்த்தி, அன்றி ஞர் ஊர் எரித்தகோனே - பகைவரது முப்புரங்களை யெரித்த இறைவனே, எனக்கு குலதெய்வமாம் பேற்ருல் - அடியேனுக்குக் குலதெய்வமாகக் கிடைக்கப்பெற்ற பெரும்பேற்ருல், எல்லாவுலகினும் - எவ்வுலகங்களி லிருக்கின்றவர்களினும், யானே பெருஞ்செல்வன் யானே பெருஞ்செல்வன் யானே பெருஞ்செல்வன் - அடியேனே அழியாத செல்வ முடையேன். (எ-று.)

இடபக்கொடியையுயர்த்த இறைவனையே என்குலத்துக்குத் தெய்வமாகப்பெற்றேனுகையால் என்னினுஞ் செல்வமுடையார் எவ்வுலகினுமில்லையென்பது.

தன்செல்வம் மூன்றுலகத்தினு மில்லையென்னுந் துணிபான் யானே பெருஞ்செல்வன் செல்வனென்று மும்முறைகூறினர். அல்லதூஉம் "செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே" எனவேத்துதலையே தேற்றப்பொருளாகக் கூறியிருப்பின் அவ்விறைவனையே குலதெய்வமாகப் பெற்ருல் அச்செல்வம் இவ்வளவினவென அளக்கவொண்ணு தாகலான் எல்லாவுலகினுமே யானே பெருஞ்செல்வன் என மும்முறையும் தேற்றப்பொருள்படக் கூறினரெனக் கொள்ளலுமொன்று. (உ௲எ)

சிறந்துன்னைத் தெய்வமெனக் கொள்ளாத சீத்தை
பிறந்த குலம்பிறவா நின்றகுலம் பீளி
னுறந்த குலத்து முமையொருபான் மேயாய்
மறந்தும் பிறவாத வாழ்வெனக்கு வேண்டுமால.

(இ-ள்.) உமை ஒருபான் மேயாய் - உமாதேவியை யொருபாகத்திலுடையானே, உன்னை சிறந்த தெய்வம் என கொள்ளாத - உன்னைத் தேவரிற்சிறந்த கடவுளெனக் கொள்ளப்பெருத, சீத்தை பிறந்தகுலம் - உலோபிகளாகிய இழிஞர்கள்பிறந்த குலத்தினும், பிறவா நின்றகுலம் - பிறந்திருக்கின்ற இக்குலத்தினும், பீளின் உறந்தகுலத்துங் கருக்கொண்டு பின்னழிகின்ற குலத்தினும், எனக்கு மறந்தும் பிறவாத வாழ்வு வேண்டும் - அடியேனுக்கு மறந்தாயினும் பிறவாதபெருவாழ்வையே தரல்வேண்டும். (எ-று.)

உன்னைத் தெய்வமெனக்கொள்ளாத மூவகைக்குலத்திலும் மறந்தும் பிறவாத வாழ்வு எனக்குவேண்டுமென்க.

தெய்வங்களிற்சிறந்த சிவபெருமானைத் தெய்வமெனக்கொள்ளும் கல்வியறிவில்லாதவர் பிறந்தகுலம் எக்குலமாயினும் அது இழிந்த குலமாதலால் "உன்னைத் தெய்வமெனக்கொள்ளாத சீத்தைபிறந்தகுலம்" எனவும், சிவபெருமானைத் தெய்வமெனக் கொள்ளும் கல்வியுடையவராய் நற்குலத்திற்பிறந்தும் பிறதெய்வங்களைச் சிறந்த தெய்வமாகக்கொண்டு சிவபெருமானைத் தெய்வமாகக்கொள்ளுதற்கும் கூசுபவனையும் முன்னவரோடு எண்ணப்பட்டவராதலால் "பிறவாநின்ற குலம்" எனவும், கருவழிதல் பாதகமிகுதியாலாதலால் "பீளினுறந்தகுலத்தும்" எனவும், இம்மூவிடத்தும் பிறக்கவருமாயின் சிவபெருமானை நினைந்தற்கிடனின்ருய்ப் பாதகத்துக்காளா யழியவருமாதலால் "மறந்தும் பிறவாதவாழ்வெனக்கு வேண்டும்" எனவுங் கூறினர். ()

ஏழைக் குறும்பி னிமையோர் தமக்கிரங்கிப்
பீழைக் கொடுவிடத்தை யுண்டளித்த பேராளா
வாழிப் பெருங்கருணை யாரமுதே வெற்பீன்ற
மாழைப் பூங்கண்ணி மணாளா வடிபோற்றி.

**(இ-ள்.)** ஏழை குறும்பின் இமையோர் தமக்கு இரங்கி - ஏழைத் தன்மையை யுடைய தேவர்களுக்காக மனமிரங்கி, பீழை கொடுவிடத்தை உண்டு அளித்த பேராளா - வருத்தும் பொல்லாத விடத்தையுண்டு தேவர்களைக்காத்த பெருந்தகையே, பெருங்கருணை ஆர் அமுதே - பெரிய கருணைநிறைந்த அமுதப்பிரவாகமே, வாழி - நீ வாழக்கடவாய், வெற்பு ஈன்ற மாழை பூங் கண்ணி மணவாளா-மலையரையன்பெற்ற மாவடுபோலும் அழகிய கண்ணுளுக்கு மணவாளனு யிருப்பவனே, அடிபோற்றி - உன் திருவடிகளுக்கு வணக்கம். (எ-று.)

தேவர்கள்பொருட்டு விடமுண்டவனே, கருணாமிருதமே, உமாபதியே உன்னை வழுத்துவேனுக என்க

விடத்தையுண்டு சாவாது உமைக்கு மணவாளனு யிருந்தானென்பது தோன்ற விடத்தையுண்டபேராளா ஆரமுதே வெற்பீன்ற மாழைப்பூங்கண்ணி மணாளா எனக் கூறினர். போற்றி—தொழிற்பெயர். (உ௩௯)

என்றென்று பன்முறையுந் துதித்திறைஞ்சித் தாழ்ந்தெழுந்து
நின்றுகரஞ் சிரமுகிழ்ப்ப நிறைந்தபெரு மகிழ்ச்சியுடன்
குன்றனைய பெருந்தவத்தோ னிதுவொன்று கூற்றுதைத்த
மின்றிகழுஞ் சேவடிக்கீழ் விண்ணப்பஞ் செய்கின்றான்.

**(இ-ள்.)** குன்று அனைய பெருந்தவத்தோன்-மலையைநிகர்த்த பெரிய தவத்தை யுடைய அகத்தியமுனிவர், என்று என்று பன்முறையும் துதித்து இறைஞ்சி தாழ்ந்து எழுந்து - (குன்றாத அன்புனக்கே எனக்கு வேண்டும்) என் றிவ்வாறு பலவரங்களும் வேண்டும் வேண்டுமென்று பலமுறை தோத்திரஞ்செய்து வணங்கிப் பணிந்தெழுந்து, கரம்சிரம்முகிழ்ப்ப நின்று - கைகள் சிரமேல் அஞ்சலியாகநின்று, நிறைந்த பெரு மகிழ்ச்சியுடன்-உள்ளத்தில் நிறைந்த பேரானந்தத்தோடு, கூற்றுதைத்த மின் திகழும் சேவடிக்கீழ் - காலனைக் கீழேவீழ்த்திய ஒளிவீசுந் திருவடியின்கீழ், இது ஒன்று விண்ணப்பம் செய்கின்றான்-இஃதொன்று விஞ்ஞாபனஞ் செய்யத்தொடங்கினர். (எ-று.)

தவத்திற்சிறந்த அகத்தியமுனிவர் பலவரங்களையும் பலமுறையே வேண்டித் துதித்து சிரமேற் கைகளைக்குவித்துநின்று விஞ்ஞாபனமொன்று செய்யத்தொடங்கினுரென்க. (உ௪௰)

அடியனேன் வடகாசி நீத்தகன்று நினக்கினிய
கடிமதில்சூழ் கொடிமாடக் காஞ்சியினைத் தலைப்பட்டுப்
பொடியணிந்த திருமேனிப் புண்ணியமே யிமயவரைப்
பிடிமணந்த மதகளிறே பெரும்பேறு பெற்றுய்ந்தேன்.

**(இ-ள்.)** பொடி அணிந்த திருமேனி புண்ணியமே - திருநீறுசண்ணித்த திருமேனியை யுடைய புண்ணியசொரூபமே, இமயவரை பிடிமணந்த மதகளிறே - இமயமலையிற்பிறந்த பெண்யானையை மணந்தருளிய ஆண்யானையே, அடியனேன் வடகாசி நீத்து அகன்று - அடியேன் வாரணசியை விட்டுநீங்கி, நினக்கு இனிய கடிமதில்சூழ் கொடிமாட காஞ்சியினை தலைப்பட்டு - உன் மனத்துக்கினிய அரணுகச்சூழ்ந்திருக்கும் புரிசைகளும் கொடிகட்டிய மாளிகைகளுஞ் சூழ்ந்த காஞ்சிநகரத்தை வந்தடையப் பெற்று, பெரும்பேறு பெற்று உய்ந்தேன் - யானடையவிரும்பிப் பெரியபேற்றை யடையப்பெற்றுப் பிழைத்தேன். (எ-று.)

திருநீறுசண்ணித்த புண்ணியமே இமயவரைப்பிடிமணந்தகளிறே யான்காசியைநீத்து உனக்கினிய காஞ்சியையடைந்து பெரும்பேறுபெற்றுய்ந்தேனென்க. ()

இத்தகுபே றுடையேற்கு மற்றின்னு மொருகருத்து
மெய்த்தபெரு வேட்கையினு லொழியாது மேன்மேலுஞ்
சித்தமிசை மூண்டெழுமா லதுநிரம்பச் சிறியேன்பால்
வைத்தபெருங் கருணையினல் வழங்குவா யெனப்போற்றி.

(இ - ள்.) இதகு பேறு உடையேற்கு - இத்தன்மையவாகிய பயனையடையப் பெற்ற எனக்கு, மெய்த்த பெரு வேட்கையினுல் - உள்ளவாறு பெருகும் பெரிய ஆசையினுல், இன்னும் ஒருகருத்து - இன்னமும் ஓரெண்ணம், மேன்மேலும் ஒழியாது சித்தமிசை மூண்டு எழும் - (அடங்காது) மேன்மேலும் நீங்காது என் சித்தத்தில் மூண்டெழுகின்றது, அது நிரம்ப - அவ்வெண்ணம் முற்றுப்பெற, சிறியேன் பால் வைத்த பெருங்கருணையினுல் வழங்குவாய் என்ன - சிறியேனிடத்துவைத்த கருணை மிகுதியினுல் அனுக்கிரகஞ் செய்வாயென்று, போற்றி - துதிசெய்து. (எ-று.)

இக்காஞ்சியில் வசிக்கப்பெற்ற எனக்கு இன்னுமொருகருத்து ஆசையினுல் மூண்டெழுகின்றது அக்கருத்தை என்பால்வைத்த தண்ணளியால் முடிப்பாயென்க.

காஞ்சிநகரத்தில் வசிக்கப்பெறுதலே எல்லாப்பேற்றினும் சிறந்த தென்று குறித்தற்கு இத்தகுபேறு என்றார். மற்று - வினைமாற்றுப்பொருளது. (உசஉ)

எவ்வினையு மோப்புதலாற் றிராவிடமென் றியல்பாடை
யெவ்வமறப் புதிதாக யான்வகுப்ப நல்கியது
வெவ்வருணத் துள்ளார்க்கு மெளிதாகப் புத்தேளி
ரெவ்வெவர்க்குஞ் சுவையமிழ்தி னினிதாகச் செய்தருளாய்.

(இ - ள்.) எவ்வினையும் ஒப்புதலால் - எத்திறப்பாவங்களையும் போக்கிப் பாதுகாத்தலால், திரா விடம் என்ற இயல்பாடை - திராவிடமென்று வழங்குகிற பாஷையை, யான் எவ்வம் அற புதிதாக வகுப்ப நல்கி - அடியேன் குற்றமறப் புதிதாகச் சொல்ல அனுக்கிரகஞ்செய்து, அது எவ்வருணத்து உள்ளார்க்கும் - அப்பாடை எந்த வருணத் துள்ளவர்களுக்கும், புத்தேளிர் எவ்வெவர்க்கும் - எல்லாத்தேவர்களுக்கும், எளிதாக - மிகவெளிமையாகவும், சுவை அமிழ்தின் இனிதாக - சுவைமிக்க அமிழ்தினும் மிக்க சுவையுடையதாகவும், செய்தருளாய் - அருள்செய்வாய். (எ-று.)

வினைகளைப் போக்குந்திறத்தால் திராவிடமென்று வழங்குகின்ற பாடையை யான் குற்றமற உலகிற்புதிதாக வழங்கும்படிச் செய்யககற்பித்து அப்பாடை யாவாக்கும் எளிதாகவும் இனிமையாகவும் இருக்கச்செய்வா யென்க.

தமிழ்ப்பாடை தன்னைப்போற்றுவோர்க்கு எல்லா வினைகளையும் போக்குவதென்பார் "திராவிடம்" எனவும், அச்சிறப்புடைய பாடை ஏனையபாடைபோல் உலகிற் கண்வழங்காது மறைந்திருப்பதால் அதுவழங்க என்னுல் செப்பிடவேண்டு மென்பார் "எவ்வமறப் புதிதாக யான்வகுப்ப நல்கி" எனவும், இனி இப்பாடையைபோலும் இம்மைமறுமைப்பயனை யாவர்க்கு மெளிதிற்றரவல்ல இனியபாஷை தேவருலகினு மில்லையென்பார "எவ்வருணத் துள்ளார்க்கும் எளிதாகப் புத்தேளிர் எவ்வெவர்க்கும் சுவையமிழ்தினினிதாக" எனவும் கூறினர்.

வினைகளைப் போக்குவதென்பதற்கும் யாவாக்கு மெளிமையாய்த் தேவரமிழ்தினுஞ் சிறந்த இனிமையுடையதாய் வழங்குவதென்பதற்கும் அருண்மொழித் தேவார திருவாசகங்களே சான்றென்க. (உசங)

மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமா யுனக்கினிதாய்த்
தோன்றிமெத் தமிழ்ப்பாடைத் துதிகொண்டு மகிழ்ந்தருளி

யான்றவர மெல்லார்க்கு மிவ்வரைப்பி னளித்தருளா
யேன்றெடுத்த மொழிகல்வி யெவற்றினுக்கு மிறையோனே.

(இ-ள்.) ஏன் றெடுத்த மொழி கல்வி எவற்றினுக்கும் இறையோனே - சிறந்தெடுத் தோதப்பட்ட எல்லாப்பாடைகளுக்கும் எல்லாக்கலைகளுக்கும் தலைவனே, இவ்வரைப்பில் எல்லார்க்கும் - இத்தமிழ்நாட்டில் யாவர்க்கும், மூன்று உறழ்ந்த பதிற்று எழுத்தால் முழுவதுமாய் - முப்பதெழுத்தால் எல்லாநூல்களுமாய், உனக்கு இனிதாய் தோன்றிடும் அ தமிழ் பாடை துதிகொண்டு - உனக்கு இன்பந்தருவதாய் வெளிப்பட்ட அந்தமிழ்ப்பாடையாற் செய்யுந் தோத்திரங்களைத் திருச்செவியிலேற்று, மகிழ்ந்தருளி - திருவுள மகிழ்ந்து, ஆன்றவரம் அளித்தருளாய் - மேலான வரத்தைக் கொடுத்தருள்வாய். (எ-று.)

எல்லாப் பாடைகளுக்கும் எல்லாக் கல்விகளுக்கும் தலைவனே! முப்பதெழுத்தால் நூல்களெல்லாமாய் உனக்கினிமையாய்த் தோன்றும் அத்தமிழ்ப்பாடையாலியற்றும் தோத்திரங்களைத் திருச்செவியேற்று, அவரவர் வேண்டுஞ் சிறந்த வரத்தை இவ்வெல்லையில் யாவர்க்கும் அநுக்கிரகஞ் செய்வாயென்க.

ஏனையபாடைகள் எழுத்தால் மிகுந்திருப்பினும் அவை சிறப்பின்றென்பார் "மூன்றுறழ்ந்த பதிற்றெழுந்தால்"எனவும், அவையெல்லாம் எழுத்தால் மிகுதிப்பட்ட வெற்றுரையேயன்றி பொருளின்றென்பார் "முழுவதுமா"யெனவும், எல்லாப பாடைகளுக்குந் தலைவனுயினும் இத்தமிழ்ப்பாடைக்கே தான் தலைவனென வந்தனரென்பார் "உனக்கினிதாய்த் தோன்றியிடும் அந்தமிழ்ப்பாடை" எனவும், இவ் வருஞ்சிறப்பினை வாய்ந்த தமிழாலமைந்த அருண்மொழிகளைக் கோழையா யழைப்பினு மகிழ்ந்தருள்வா யென்பார்துதிகொண்டு மகிழ்ந்தருளி" எனவும், இவ்வுண்மை யுணர்ந்து எந்நிலத்தவரும் தமிழ்நிலத்தையடைந்து வேண்டுவாராயின் அவற்றை எளிதிற்பெறச் செய்வாரென்பார் "ஆன்றவர மெல்லார்க்கு மிவ்வரைப்பி னளித்தருளாய்" எனவுங் கூறினர். மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்து என்றது முதலெழுத்தினை. இதனை 'எழுத்தெனப்படுப, அகரமுதல னகரவிறுவாய் முப்பஃதென்ப சார்ந்துவரன் மரபின் மூன்றலங்கடையே' என்றதனுலறிக. (உ௬௪)

மன்னியவித் தமிழ்க்கிளவி மந்திரங்கள் கணித்தடியேன்
செந்நெறியின் வழுவாவித் திருக்காஞ்சி நகர்வரைப்பி
னுன்னணுக்க னாகியினி துறைந்திடவும் பெறவேண்டு
மின்னவர மெனக்கருளா யெம்பெருமாஅ னென்றிரந்தான்.

(இ-ள்.) எம்பெருமான்-எமது பெருமானே, அடியேன் - நான், செந் நெறியின் வழுவாத இ திருகாஞ்சி நகா வரைப்பில் - சன்மார்க்கநெறியி னின்றும் வழுக்கிலாத இந்தக் காஞ்சிநகரவெல்லையில், மன்னிய இ தமிழ்கிளவி மந்திரங்கள் கணித்து - நிலைபெற்ற இந்தத் தமிழ்ச்சொல்லா லமைந்த மந்திரங்களைக் கணித்து, உன் அணுக்கனாகி - உன்னைச் சமீபித்தவனாகி, இனிது உறைந்திடவும் பெறவேண்டும் - இனிமையாக வசித்திருக்கவும் பெறுதல் வேண்டும், இன்னவரம் எனக்கு அருளாய் என்று இரந்தான் - இன்னவாகியவரத்தை யெனக்களிப்பாயென்று யாசித்துவேண்டினர்.

எம்முடையபெருமானே அடியேன் இக்காஞ்சித்தலத்தில் தமிழ்ப்பாடையாலமைந்துள்ள மந்திரங்களையுச்சரித்து உன்னருகி லின்புடனிருந்திடவும் வேண்டும் இந்தவரத்தை யெனக்கருளாயென்க.

வேத ருக்குகள் மந்திரமாதல்போல் தமிழ்ச்செய்யுள்களும் மந்திரங்களே யாமென்பார் "தமிழ்க்கிளவி மந்திரங்கள்" எனவும், வேதங்கள் ஒவ்வோர் காலவிசேடத்தில்

அசுரரால் கவரப்பட்டன அஃதிம்மொழிக் கின்றென்பார் தமிழென்று வாளாகூறாது "மன்னிய தமிழ்" எனவும், வாசகத்தால் தோத்திரஞ் செய்வதேயன்றி மானதத்தால் ஜபிக்கவும் வேண்டுமென்பார் "கணித்து" எனவும், ஜபித்தலால் வரும்பயன் தலவி சேடத்தாலென்பார் "செந்நெறியின் வழுவா வித்திருக்காஞ்சி நகர்வரைப்பில்" எனவும், அப்பயனுவது சிவத்தோடுசேர்ந்து நீங்காதிருப்பதே யென்பார் "உன்னனுக்கனுகி யினிதுறைந்திடவும் பெறவேண்டும்" எனவும், இறைவனுக் கினியபாஷாமந்திரமும் அதுபோலு மினியதலமும் அவனோடொன்றுயிருத்தலு மொருங்கேயடையப் பெறுதலரிதென்பார் "இன்னவரமெனக் கருளாயென் றிரந்தான்" எனவுங் கூறினர்.

> கூம்பியகைத் தலமுடைய குறுமுனிக்குப் பிஞ்ஞகனுர்
> தாம்பரிந்து தமிழ்விளக்கு மாசிரியத் தலைமையொடு
> மேம்படுதென் றிசைக்கிறைமை நல்கிவேட் டனபிறவு
> மாம்பரிசி னளித்தருளி யவ்விலிங்கத் திடைக்கரந்தான்.

(இ-ள்.) பிஞ்ஞகனுர் - சிவபெருமானுர், தாம்பரிந்து - தாம்மிகவும் அன்புபாராட்டி, கூம்பிய கைத்தலமுடைய குறுமுனிக்கு - அஞ்சலியாகக் குவித்தகரதலமுடைய அகத்தியமுனிவருக்கு, தமிழ் விளக்கும் ஆசிரியத் தலைமையொடும் - தமிழ்ப்பாடையை விளக்கவல்ல நல்லாசிரியத் தன்மையோடும், மேம்படு தென்திசைக்கு இறைமை நல்கி - பெருமையிற்சிறந்த தென்திக்குக்குத் தலைமைத் தன்மையுங்கொடுத்து, வேட்டன பிறவும் ஆம்பரிசின் அளித்தருளி - (அவர்வேண்டிய) ஏனையவும் ஆகும்வகையாகக் கொடுத்து, அ இலிங்கத்திடை கரந்தான் - அவ்வகத்தியலிங்கத்தில் திருவுருக் கரந்தனர். (எ-று.)

இறைவர் அகத்தியமுனிவருக்குத் தமிழாசிரியத் தலைமையும் தென்றிசைத் தலைமையும் மற்றும் வேண்டியவற்றையும் அனுக்கிரகஞ்செய்து அம்முனிவர் வழிபட்ட விலிங்கத்தில் கரந்தனரென்க. இறைவர முனிவர்வேண்டியவற்றை மிகபடத்தந்தாரென்பார "தமிழாசிரியத் தலைமையோடு தென்றிசைக்கிறைமைநல்கி" எனவும், ஆன்றவரமெல்லார்க்கு மளித்தருளென்றதும், உன் னனுக்கனுகி யினிதுறைந்திடவும் வேண்டுமென்றதும ஏனையவு மாமென்பார "வேட்டனபிறவு" மெனவும் "ஆம் பரிசில்" எனவுங் கூறினர். (உசசு)

> இவ்வண்ண மருள்பெற்ற விருந்தவனு மகலிடத்தின்
> மெய்வண்ண வோத்துமுறைத் தீந்தமிழை விளக்குவித்துச்
> செவ்வண்ணத் திருமேனிப் பெருமானுர் திருவடிக
> ளவ்வண்ணந் தொழுதேத்தி நெடுங்கால மங்கிருந்தான்.

(இ - ள்.) இ வண்ணம் அருள்பெற்ற இருந்தவனும் - இவ்வகையாக வருள்செய்யப்பெற்ற பெருந்தவத்தையுடைய குறுமுனிவரும், அகலிடத்தில் - இப்பெரியவுலகில், தீந் தமிழை - இனிய தமிழ்ப்பாடையை, மெய்வண்ண ஓத்துமுறை விளக்குவித்து - இறைவர ஆக்ஞாரூபமா யிருக்கின்ற வேதம்போலவே சூத்திரரூபமாகப் பெரியோர்கொண்டு வழங்கச்செய்து, செவ்வண்ணம் திருமேனி பெருமானுர் திருவடிகள் - செம்பவளம்போன்ற திருமேனியையுடைய இறைவன் றிருவடிகளை, அவ்வண்ணம் தொழுது ஏத்தி - தாமெண்ணியவாறே வணங்கித்துதித்து, அங்கு நெடுங்காலம் இருந்தான் - அக்காஞ்சியி லெண்ணிறந்தகால மிருந்தனர். (எ-று.)

தாம்வேண்டியவாறு அருள்பெற்ற குறுமுனிவர் இவ்வுலகில் தமிழை வேதம்போல் விளங்கச்செய்து அம்மொழியானே வழிபாடியற்றி இவ்வகையாக அக்காஞ்சி நகரத்தில் நெடுங்கால மிருந்தனரென்க.

"எவ்வினையுமோப்புதலால்" என்னுஞ் செய்யுளாதியாக "மன்னிய வித்தமிழ்க் கிளவி" என்னுஞ் செய்யுளிறுதிகாறும் வேண்டியனவெல்லாம் நிரம்பப்பெற்றனனென் பார் "இவ்வண்ணமருள்பெற்ற விருந்தவர்" எனவும், தாம்பெற்றவரத்தை உலகறி யச்செய்து நிலைநிறுத்தினரென்பார் "ஓத்துமுறை தீ் தமிழைவிளக்குவித்தும் பெ ருமானார் திருவடிகள் அவ்வண்ணந் தொழுதேத்தி நெடுங்காலமங்கிருந்தான்" என

அல்லதூஉம் வேதம் அநாதியாயுள்ள அழியாக்கிளவி யாகலான் "மெய்வண்ண வோத்து" எனவும், வேதம் உண்டானவன்றே இந்தமிழும் இறைவனா லுண்டானதா கலான் "ஓத்துமுறைத் தீந்தமிழை விளக்குவித்து" எனவும், தமிழ்க்கிளவி மந்திரத் தானே பெருமானை வழிபடவேண்டுமென் றெண்ணியவாறே வழிபட்டுமகிழ்ந்து நீங் காதிருந்தன ராகலான் அவ்வண்ணந் தொழுதேத்தி நெடுங்கால மங்கிருந்தானென வுங் கூறியதூஉமென்க. (உசஎ)

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

(இ - ள்.) கொல் ஏற்று பாகர் - கொலைத்தொழிலமைந்த இடபவாகனத்தையு டைய இறைவர், பாணினிக்கு வடமொழியை வகுத்தருளி - பாணினிமுனிவருக்கு வட மொழியை வகுத்துச்சொல்லி, உலகம் எல்லாம் தொழுது ஏத்தும் குடமுனிக்கு-மூவு லகத்தாரும் வணங்கிப்போற்றும் அகத்தியமுனிவருக்கு, அதற்கு இணையாக தொடர் புடைய தென்மொழியை - அவ்வடமொழிக்கு ஒப்பாகச் சம்பந்தமுடைய தமிழ்ப் பாடையை, வலியுறுத்தார் எனில் - வலியுறுத்திக் கூறினாரென்றால், யாவர் இதன் பெருமை - எவர்கள் இத் தமிழின்பெருமையை, கடல்வரைப்பில் கணித்து அறிவார்- கடல்சூழ்ந்த இவ்வுலகில் அளவிட்டறியவல்லவர் (இல்லையென்றபடி). (எ-று.)

பாணினிமுனிவருக்கும் அகத்தியமுனிவருக்கும் இறைவரொருவரே முறையே வடமொழியையும் தென்மொழியையும் கூறியிருப்பாராயின் அத்தமிழின் பெருமை யை இவ்வுலகில் யாரே அளவிட்டுரைக்கவல்லவரென்க.

வடமொழியே சிறந்ததென்பாரை மறுத்தற்கு "அதற்கிணையாத் தொடர்புடைய தென்மொழியை" எனவும், தென்மொழியாசிரியர் சிறந்தவரென் றறிவுறுத்தற்கு "உலகமெலாந் தொழுதேத்தும் குடமுனி" எனவும், வேதம் வடமொழியாதலால் அதுவே இறைவன்வாக்கு தென்மொழி முனிவர்வாக்கு என்றிழித்துக் கூறுவோரை மறுத்தற்கு "கொல்லேற்றுப்பாகரே வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி தென்மொழியை குடமுனிக்கு வலியுறுத்தி" எனவும், இருமொழிக்கும் பேராசிரியரா யிருந்த ஒருவரே ஒருமொழியை வகுத்தாரென்றும், ஒருமொழியை வலியுறுத்திக் கூறினாரென்றுங் கூறியசொல்லாற்றலால் அம்மொழியின் பெருமையை வெளிப்ப டுத்தற்கு இருமொழிக்கும் பொதுமையாற் கூறுது "இதன்பெருமை யாவரே கணித் தறிவார்" எனவுங் கூறினார். (உசஅ)

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

(இ - ள்.) இருமொழிக்கும் - வடமொழி தென்மொழி யென்னு மிரண்டுமொழிக்கும், முதற்குரவர் கண்ணுதலார் - முதலாசிரியராவார் சிவபெருமானே, இயல்வாய்ப்ப இருமொழியும் வழிப்படுத்தார் - அவ்விருமொழியும் இலக்கண வரம்புடையனவாகச் செய்து வழிப்படுத்தினவர்கள், முனிவேந்தர் - முனிசிரேஷ்டர்களாகிய பாணினி முனிவரும் அகத்தியபகவானுமே, இசைபரப்பும் இருமொழியுந் தழீஇனார் ஆன்றவரோ என்றால் - புகழ்பரப்புகின்ற அவ்விரண்டு மொழிகளையும் ஆசாரத்திற் றழுவினவர் சான்றோர்களே என்று சொன்னால், இவ்விருமொழியும் நிகர் எனனும் இதற்கு - இந்த இரண்டுமொழியும் சமானமானது என்றெடுத்துக்கூறும் இப்புகழுரைக்கு, ஐயம் உளதேயோ - சந்தேகமுண்டோ. (எ-று.)

வடமொழி தென்மொழிகளுக்கு முதலாசிரியர் நெற்றிக்கண்ணையுடைய இறைவரே, அவற்றை வழிப்படுத்தினவர் முனிவேந்தர்கள், அவ்வழியைச் சார்ந்தவர் ஆன்றோர்கள் என்று சொன்னால் இவ்விரண்டுமொழியுஞ் சமானமென்பதற் கையமுமுளதேயோ என்க.

கண்டாரும், வழிப்படுத்தாரும், தழீஇயினாரும் முறையவனு மவனருள்வழிப்பட்டாரு மென்றாயிற்று. வடமொழிக்குந் தென்மொழிக்கும் இலக்கண மளித்தானிறைவனாதலால் "இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்" என்றும், அதனை வழிப்படுத்தார் முறையே பாணினியாரும் அகத்தியனாரு மாதலின் "இயல்வாய்ப்ப இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர்" என்றும், தழீஇனவர் வரருசியாரும் பதஞ்சலியாரும், தொல்காப்பியனாருள்ளிட்ட பன்னிருவரும், இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் முதலியோருமாதலின் "இசைபரப்பும் இருமொழியும் ஆன்றவரே தழீஇயினார்" என்றும் இவ்விரண்டுந் தம்மி லொப்புடைமையான் "இருமொழியு நிகரெனனுமிதற் கையமுளதேயோ" என்றுங்கூறினார்.

எவ்வினையுமோட்புதலா லென்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் தமிழ்ப்பாடை திராவிடமென வழங்குங் காரணத்தையும், அது இனிமையுடைய தென்பதையும், இவ்வள வெண்ணினையுடைய தென்பதையும், மந்திர வக்கரங்களாக்கொண்டு கணிக்கவேண்டு மென்பதையும், வேதமுறைமையை யுடைய தென்பதையும் இதைக்கண்டார் இறைவனென்பதையும், வழங்கச்செய்தவர் அகத்தியனா ரென்பதையும், ஆசரித்தவர் ஆன்றோர்க ளென்பதையும், வடமொழியோடு தென்மொழி சமானமாயுள்ள தென்பதையுஞ் சிறந்தெடுத் தோதியவாறு. (உ௯௪)

கலிவிருத்தம்

இத்தகு தமிழோதி யாங்கினி துறைநாளி
லத்தலை யரனார்தா மாயிழை யுமையாளைத்
புத்தணி திகழ்மன்றல் புரிநல முளதாக
வெத்தலை யுறைவோரு மீண்டின ரிமயத்தில்.

(இ - ள்.) இத்தகு தமிழ் ஓதி ஆங்கு இனிது உறைநாளில் - இத்தகு சிறப்பு வாய்ந்த தமிழ்ப்பாடையை நன்குவிளக்கி அக்காஞ்சியில் இன்போடு வாழ்ந்திருக்குநாளில், இமயத்தில் - இமயமலையில், அரனார்தாம் - சிவபெருமானார், ஆயிழை உமையாளை - அணிகல நிறைந்த உமாதேவியாரை, புத்து அணி திகழ் மன்றல் புரிநலம் உளதாக - புதியமங்கலநாண் ஒளிவிடும்படி திருமணஞ்செய்யும் நல்லநாளுண்டாக, அத்தலை - அப்பொழுது, எத்தலை உறைவோரும் ஈண்டினர் - எந்தெந்தவிடங்களிலும் வாழ்கின்றவர்களும் வந்து சேர்ந்தனர். (எ-று.)

காஞ்சிப்பதியில் அகத்தியமுனிவர் தமிழ்பரப்பியிருக்கும் அந்நாளில் இமயமலையில் இறைவன் திருமணங்கொள்ளும் நன்மை யொன்றுண்டாக அப்பொழுது எல்லாவுலகினரும் வந்து நெருங்கினாகளென்க.

கண்டமையும், வழிப்படுத்தமையும், தமிழினமையுஞ் சிறப்புடைய தென்பது தோன்ற இத்தகு தமிழ் என்றதென்க. ஏனைய வணிகளெல்லாம் யாவராலும் அணியத்தக்கதும், மங்கலநாணென்றே நாயகனால் நல்லோரையில் புதுமையாக வணியத்தக்கது மாகலான் புத்தணிதிகழ் எனவும், ஏனையவாபரணங்களை யணிகின்ற நாளை மணநாளென்று வழங்காது மங்கலநாணணியு நாளேயே மணநாளென வழங்கப்படுவதனுன் மன்றல்புரி நலமுளதாக எனவுங் கூறினா. (உருO)

முனிவொடு வரைதாழ்த்த முனிவனு மதுநோக்கிப்
பனிவரை தனையுற்றான் பலபல வுலகத்தி
னினிதுறை யுயிரெல்லாந் தொகுதலி னிருஞாலத்
தனிமக ளொருபக்கஞ் சாய்ந்தனள் பொறையாற்றாள்.

(இ - ள்.) முனிவொடு வரைதாழ்த்த முனிவனும் - கோபத்தோடு விந்தமலையை யடக்கிய அகத்தியனாரும், அதுநோக்கி - அம்மணத்தை ஞானநோக்கி னுணாந்து, பனிவரைதனை உற்றான் - இமயமலையை யடைந்தனா, பலபலவுலகத்தில் இனிது உறை உயிா எல்லாம் - பலபலவுலகங்களிலுஞ் செல்வத்தோடு வாழ்கின்ற வுயிாகளெல்லாம், தொகுதலின் - அம்மலையில் நெருங்குதலினால், இருஞாலம் தனிமகள் - ஒப்பற்ற பெரிய பூமிதேவியானவள், பொறை ஆற்றாள் - சுமைதாங்கலாற்றாது, ஒருபக்கம் சாய்ந்தனள் - ஓாபக்கம் தாழ்ந்தனள். (எ-று)

இமயமலையில் திருமணநிகழ்வதை அகத்தியனாரு முணாந்து அங்கடைந்தனா. ஏனையவுலகங்களிலுள்ள யாவரும் வந்து நெருங்கினா. அதனால் பூமிதேவி சுமக்கலாற்றாது ஓாபுறஞ்சாய்ந்தன ளென்க.

எததிறப்புவனவாசிகளும் உருத்திரபேதங்களும் உயிாகளென்பதுபட பலபல வுலகத்தி னினிதுறை யுயிரெல்லாமென்றா. இதனைச் சிவதருமோத்திரத்துக் கோபுரவியலானும், கந்தபுராணத்து அண்டகோசப் படலத்தானுமுணாக. (உருக)

தென்புவி மிசையோங்கித் திகழ்வட புவிதாழப்
பொன்பயி லுலகத்துப் புங்கவ ரதுகாணூஉத்
துன்பொடு பயமெய்தித் துணையடி தொழுதேத்தி
யென்பணி வரைமார்பற் கின்னது புகல்கிற்பார்.

(இ - ள்.) தென்புவி மிசை ஓங்கி - தெக்கணதிசையானது மேலுயாநது, திகழ் வடபுவி தாழ - விளங்கும் வடதிசை கீழடங்க, பொன்பயில் உலகதது புங்கவா அது காணு - பொன்னொளிவீசும் உலகத்துள்ள தேவாகள் அதைபபாாதது, துன்பொடும் பயம் எய்தி - துன்பமும் பயமுங்கொண்டு, துணை அடி தொழுது ஏத்தி - திருவடிகளை வணங்கித்துதித்து, என்பு அணி வரை மாாபற்கு இன்னது புகல்கிற்பாா - என்பாபரணமணிந்த பரந்தமாாபையுடைய இறைவருக் கிதனைச் சொல்லுவாாகள். (எ-று)

தென்திசையோங்கி வடதிசைதாழவும் அதனைத்தேவாகள் கண்டு துன்பமும் அச்சமுங்கொண்டு இறைவனடிவணங்கி இதனை விண்ணப்பஞ்செய்வார்க ளென்க.

மணவினை யிடர்ப்படுமாயின் குமாரக்கடவுள்வருவது யாங்ஙனமெனத் துன்ப மும், அஃதின்றாயின் சூரபன்மன்சங்கரிக்கப்படுதல் யாண்டையது எனப்பயமும் அடைந்தனராதலின் புங்கவரது காணூஉத் துன்பொடுபயமெய்தி என்றார். (உகூஉ)

தாழுறு புவிதன்னைச் சமனிலை பெறவைத்துக்
காழுறு தமியேமைக் காப்பது கடனெந்தா
யாழ்கடல் விடமுண்டோ யில்லெனி லடியேங்கள்
வாழல மிதுபோதே யவல்விழு வதுதிண்ணம்.

(இ - ள்.) எந்தாய் - எங்களன்னையே - தாழுறு புவிதன்னை - தாழும் வடதிசையை, சமன் நிலைபெற வைத்து - முன்போலச் சமனிலைபெற்றிருக்கச்செய்து, காழுறு தமியேமை காப்பது கடன் - வயிரம்பற்றிய வினைப்படுபிறவியையுடைய வெங்களைக் காத்தல் உமதுகடனாகும், ஆழ் கடல் விடம் உண்டோய் - ஆழ்ந்தகடலிற்றோன்றிய ஆலத்தை யுண்டவனே, இல்லெனின் - காததலில்லையாயின், அடியேங்கள் வாழலம் - உமக்கு அடியோங்களாகிய நாங்கள் உயிரோடு வாழமாட்டோம், இதுபோதே அவல் விழுவது திண்ணம் - இப்பொழுதே பள்ளத்தில் விழுந்துபோவது நிச்சயம். (எ-று)

இறைவனே இவ்வடபுலத்தை இக்கணமேசமனாக நிலைபெறச்செய்து காத்தல் கடன். ஏனெனில் அன்று ஆலமுண்டுகாத்தவன் நீயேயன்றோ. இன்றுகாப்பதில்லையாயின் வாழமாட்டோம் இக்கணமே தாமரணமடைவோம் இது நிச்சயம் என்க.

ஆக்கற்றொழிலொன்றே யுடைய படைப்புக் கடவுளுக்கு ஓர் கால விசேடத்தில் காவற்றொழிலையும் காவற்றொழி லொன்றேயுடைய திதிக கடவுளுக்கு ஆக்கற்றொழிலையும் அவரவர் வேண்டுகோளின்படி சமனாகத் தந்ததுபோல் பெயராக்காலத்துப் பெயர்ந்த இப்பூமியையும் சமன்செய்வான் நீயேயென்றுணர்ந்தோமென்பார் தாழுறுபுவி தன்னைச் சமனிலைபெறவைத்து எனவும், சமனாகச்செய்தலே எங்களைக் காத்தலாகு மென்பார் தமியேமைக்காப்பது எனவும், எங்களுக்குப் புகலிடம் நீயன்றிவேறில்லை யென்பார் கடனெந்தாய் எனவும், இதனை முன்னரே கண்டிருக்கின்றோமென்பார் ஆழ் கடல் விடமுண்டோய் எனவும், அக்கருணையின்று எங்கள் பாலின்றெனின் சூரபன்மனால் துன்புற்றுவாழ்வதினும் இறந்துபடுவதே மிகநன்றென்பார் இல்லெனி லடியேங்கள்வாழலமிதுபோதேயவல்விழுவதுதிண்ணம எனவுங்கூறினார். காழ் ஆகுபெயர்.()

வெருவரு செயலோராய் விண்ணவ ரிதுகூறத்
திருமுடி யசைவோடுஞ் சினவிடையவர் சொல்வார்
தருமலர்த் தொடையீர்காள் சனமிக நிறைவுற்று
மருவிய பாரத்தாற் றாழ்ந்தது வளர்ஞாலம்.

(இ - ள்.) விண்ணவர் - தேவர்கள், வெருவரு செயல் ஓராய் - (இறைவனே நாங்களேயன்றி உயிர்களெல்லாம்) அஞ்சநடுங்குறுஞ்செயலை நீயே பார்த்தறிவாய், இது கூற - (என்று) இதனைச்சொல்ல, சின விடையவர் திருமுடி யசைவோடும் சொல்வார் - சீறுஞ்செயலையுடைய விடபவூர்தியார் திருமுடியை யசைத்துக்கொண்டே கூறுவார், தருமலர் தொடையீர்காள் - கற்பக மலர்மாலையையணிந்த தேவர்களே, சனம் மிக நிறைவுற்று மருவிய பாரத்தால் - சனங்கள் மிகவும் நிறைந்து நெருங்கியபாரத்தினால், வளர் ஞாலம் தாழ்ந்தது - வளரு மியல்புடைய இப்பூமிதாழ்ந்தது. (எ-று)

யாங்கள்கூறுவது பொய்மையாயின் இங்குள்ளாராயாவரும் அஞ்சி நடுங்குமதனை யாயினு மறிவாயென்று தேவர்கள்கூற இறைவர் திருமுடி யசைத்துக்கொண்டே

கூறுவார். ஓ தேவர்களே! வடதிசை தாழ்ந்ததற்கு வேறு காரணமின்று இங்குவந்து நெருங்கியிருக்கும் சனங்களுடைய பாரத்திறுலென்க.

எங்கள்செருக்கையெண்ணி நீவாளாவிருப்பினும் யாங்கள் நீங்கலாக ஏனை ஏழை யுயிர்களும் அன்பர்களும் படும் பாட்டையாயினும் நோக்கிக் கருணைசெய்வாயென்பார் வெருவரு செயலோரா யெனவும், அன்பர்கள்போல் "நன்றேசெய்வாய் பிழைசெய் வாய் நானே விதற்குநாயகமே" என்று வாளாவிருக்கவறியாது இன்பம் வந்தகாலத்து அதுபுகலிடமாயும் துன்பம் வந்தகாலத்து என்னைப் புகலிடமாயும் கூறுவது உங்கள் வழக்காக விருக்கின்றன. இது நன்றாயிருந்ததென்பார் திருமுடியசைவோடுஞ் சொல் வாரெனவும், சனநெருக்கத்தா லுண்டானது இத்துன்பமென் றுணராத அறிவிலிகாள் என்பார தருமலர்த்தொடையீர்காள் சனமிக நிறைவுற்று பாரத்தாற் றாழ்ந்தது ஞால மெனவும் கூறினர். தென்திசைக்கு வடதிசையுயர்ச்சியாகலின் வளர்ஞாலமென்றார்.()

ஆதலி னியாமாத லெம்மொடு நிகராமோர்
மாதவ முனியாத றென்றிசை வயினின்னே
போதரி னுலையாமே புவிநிலை பெறுமென்னக்
காதர முறுவிண்ணோர் கேட்டனர் கவலுற்றார்.

(இ - ள்.) ஆதலின் யாமாதல் - ஆகையினுல் நாமாவது, எம்மொடு நிகராம் ஓர் மாதவமுனியாதல்-எம்மோடொத்த ஒருபெரிய தவமுனியாவது, தென் திசைவயின்- தென்திசையின்கண், இன்னே போதரின் - இப்பொழுதே போகப்பெற்றால், புவி உலை யாமே நிலைபெறும் என்ன - இப்பூமி உயர்வுதாழ்வின்றி சமனுகநிலைபெறும் என்றிறை வர்கூற, காதரம் உறுவிண்ணோ கேட்டனர் - அச்சமுற்றதேவர்கள் அவ்வருண்மொ ழியைக்கேட்டு, கவலுற்றார் - வருத்தங் கொண்டார்கள். (எ-று)

ஆகையால் தேவாகளே நாமாவது எம்மொடுநிகர்த்த ஓா முனிவனுவது தென் றிசைக்கு இப்பொழுதே சென்றால் இப்பூமி சமனுகுமென்றுகூற, தேவர்கள் கேட் டுக் கவலையுற்றனரென்க. (உ௫௫)

மணவினை நிகழ்காலை மதிமுடி யுடையானங்
கணைவது தகுமேவே றவனொடு நிகர்வார்யா
ரிணையிலி முழுதிற்கு மிறையவ னெவராலு
முணர்வரு முதலென்றே யோலிடு மறையெல்லாம்.

(இ - ள்.) மணவினை நிகழ் காலை - கலியாணஞ் செய்கின்ற இக்காலத்தில், மதி முடி உடையான் - சந்திரசேகரனுகிய இறைவர், அங்கு அணைவது தகுமே - தென் றிசைக்குச்செல்வது தகுமா, வேறு அவனொடு நிகர்வார யார் - (தக்கதன்றாயின்) வேறு அவ்விறைவரோடு ஒப்பானவர்யாவ ரிருக்கின்றனர், மறை எல்லாம் - (இது காமுணாப்பதன்றே) வேதங்களெல்லாம், இணையிலி-ஒன்றோடும் ஒருவரோடும் ஒப்பில் லாதவர், முழுதிற்கும் இறையவன்-சேதன சேதனங்களாகிய யாவைக்குந் தலைவர், எவராலும் உணர்வரு முதல் என்றே ஓலிடும் - யாவராலுஞ் சுட்டியறிதற்கரிய முதற் பொருளென்றே ஓலமிடும். (எ - று)

(இறைவன் நாமாவது நம்மோடொத்த ஓர் முனிவனுவது செல்லவேண்டுமென்ற போது தேவர்கள்) இறைவர்செல்வது இயலாது இவர்போன்றவருமில்லை இப்படி யே வேதங்களுங் கூறுகின்றன என்க.

அனந்தராதியரும் பிரகிருதிபுவனகர்த்தாக்களாகிய அரிபிரமரும் பாதந்திரரும் ஆதிமுத்தருமேயன்றி ஸ்வதந்தரத்தையும் அநாதிமுத்தத்தன்மையு முடையரன்றாக லான் அவ்விரண்டுமுடைய இறைவனை அவனொடு நிகர்வாராயார் இணையிலி எனவும், அவ்வனந்தாதியர்களெல்லாம் தூலசூக்குமசூன்யரூபமாகிய தேகேந்திரியாதிகளைப் படைத்தவரும் உலகிற்குப்பிரயோச்சிய கர்த்தாக்களெனப்படும் ஏவப்படுகிற கர்த் தாக்களுமேயன்றித் தேகேந்திரியாதி ரகிதமாகிய சுத்தசைதன்னிய சொரூபத்தை யும் பிரயோசகர்த்தா எனப்படும் ஏவுதற்கர்த்துருத்துவமும் உடையரன்றாக லான் அவ்விரண்டுமுடைய சிவபெருமானை முழுதிற்கு மிறை எனவும், ஏகதேசப்பட அறிகின்றவரும் இவருக்குமே லவர் அவருக்குமேல் அவரென மேலொரு முதலையு டையவருமேயன்றி ஒருங்கேயறியுந்தன்மையும் மேலொரு முதலில்லாமையும் உடைய ரன் றாகலான் அவ்விரண்டுமுடைய ஞானமுதலை உணர்வருமுதல் எனவுங்கூறினார். ()

என்றிவை பலவெண்ணி யிணையடி தொழுதேத்தி
யன்றினர் புரமூன்று நீற்றிய வடிகேளிம்
மன்றலி னீசேற லெவ்வண முனைநேரா
கின்றவ ருளரென்று கேட்டில மெங்கெங்கும்.

(இ-ள்.) என்றிவை பல எண்ணி - என் றிவ்வாறு பலவகையாகநினைத்து, இணை படி தொழுது ஏத்தி - இறைவன் திருவடிகளை வணங்கிப்போற்றி, அன்றினர் புர மூன்றும் நீற்றிய அடிகேள் - பகைவர் முப்புரங்களை யெரித்த எங்கள்சுவாமியே, இ மன்றலின் - இக்கலியாணசமயத்தில், நீ சேறல் எவ்வணம் - நீ இங்கிருந்து அங் குசெல்வது எவ்வாறு, உனை நேராகின்றவா உளர் என்று எங்கெங்கும் கேட்டிலம் - (அன்றி) உனக்கொப்பாகின்றவரிருக்கின்றனரென்று எவ்விடத்தும் கேட்டதில்லை.

என்று மேற்கூறியவையெல்லாம் எண்ணியெண்ணி இறைவனடி வணங்கி அடிக ளே இம்மணத்தில் நீபோவது எப்படி அன்றி உனக்கொப்பானவ ருளரென்று எந் நாலிடத்தும் எவ்விடத்தும் நாங்கள் கேட்டதில்லையே என்க.

ஒன்றல்லாத முப்புரத்தைப் போர்த்திறத்தானன்றி நகைத்திறத்தாலெரித்த இவர் இப்பூமி சமனாகத் தாம் செல்லாது இருந்தாங்கியற்ற வல்லரல்லரோவென்பார அன்றினர் புரமூன்று நீற்றிய வடிகேளென்றார். (உ௫ள)

என்னலு மனலங்கை யேற்றவ ரிமையீர்நீர்
சொன்னவை மெய்யேயித் தொல்லுல கினிலெம்மை
யன்னவ ரிலைகண்டீர் குறுமுனியல தென்னாப்
பன்னிய மொழிகேளாப் பண்ணவர் களிகூர்ந்து.

(இ-ள்.) என்னலும் - கேட்டிலமென்று தேவர்கள்கூறவும், அனல் அம் கை ஏற்றவா - அழலை யுள்ளங்கையிலேற்ற இறைவா, இமையீர் நீர் சொன்னவை மெய் யே - தேவர்களே நீங்கள் சொல்லியவை யுண்மையே, இ தொல் உலகினில் - அநாதி யாயுள்ள இவ்வுலகத்தில், குறுமுனி அலது - அகத்தியமுனிவனல்லாமல், எம்மை அன்னவா இல்லை என்னா - எம்மையொத்தவாக ளொருவரு மில்லையென்று, பன் னிய மொழி பண்ணவர் கேளா - சொல்லியவார்த்தையைத் தேவாகள் கேட்டு, களிகூர்ந்து - மிக்க களிப்படைந்து. (எ - று)

(உன்னை நேராகின்றவ ருளரென்று எங்கும் கேட்டிலம்)என்று கூறவும், இறைவர் அஃதுண்மையே இவ்வுலகில் அகத்தியன்றவிர எனக் கொப்பானவர்க ளொருவரு மில்லை என்றுகூறவும் தேவர்கள்கேட்டு மகிழ்ந்து என்க.

ஒருவரு மின்றென்றவர்க்கு ஒருவருண் டென்று வெளிப்பட்டதனுல் மகிழ்ந்தார் தென்றார். அல்லதூஉம் கடலிற்றோன்றிய பரந்தவிடத்தைக் கடுகளவாக்கியுண்டவா இறைவர், பரந்தகடனீரை உளுந்தளவாக்கி யுண்டவர் கும்பமுனிவர். இதனுல் இறைவன் என்னே டொத்தவன் அகத்திய ரென்றதற்கு மகிழ்ந்தார்களெனக் கொள்ளலு மொன்று. (உ௫அ)

மங்கல வினைசான்ற வதுவைசெ யமையத்தி
னெங்களை யுடையாய்நீ யேகுவ தமையாதே
யங்கினி யணைகிற்பான் றமிழ்தெரியற வோற்குச்
சங்கர விடைநல்கத் தகுமென வுரைசெய்தார்.

(இ-ள்.) சான்ற மங்கலவினை வதுவை செய் அமையத்தில் - சிறப்புமிக்க கலியாணஞ் செய்கின்ற இச்சமயத்தில், எங்களை உடையாய் - எங்களை யாளாகவுடையவனே, நீ ஏகுவது அமையாது - நீ இங்குநின் றெழுந்தருளுவ திசையாது, தமிழ் தெரி அறவோற்கு - (ஆகையால்) தமிழிலக்கணத்தை நனறாகவுணர்ந்த அகத்திய முனிவருக்கு, சங்கர - யாவர்க்குஞ் சுகத்தைச்செய்கின்றவனே, அங்கு இனி அணைகிற்பான் - அத்தென்றிசைக்கு இனிச்செல்லும்படி, விடைநல்க தகும் என - விடை கொடுக்கத்தகுமென்று, உரை செய்தார் - விண்ணப்பஞ்செய்தார்கள். (எ-று)

தேவர்கள், கலியாணத்தில் நீ எழுந்தருளுத லிசையாது ஆகையால் இனி அகத்திய முனிவர் அங்கு போம்படி விடைதரத் தகுமென்றுரைத்தார்களென்க.

இறைவன் அகத்தியனை யெடுத்துக்கூறியபின் அவரது ஆற்றலெல்லாம் நன்குணர்ந்தா ராகலான் அத்துணிபுநோக்கி விடைநல்கத் தகுமெனக்கூறினர். (உ௫௬)

கடல்விட மமுதாக்குங் கறைமிட றுடையாருங்
குடமுனி தனையங்கட் கூயின ரெதிர்நோக்கிப்
படரொளி யிளமூரல் பனிமுக மலர்காட்டித்
தொடர்புடை விழிகாட்டுங் கருணையி னிதுசொல்வார்.

(இ - ள்.) கடல் விடம் அமுது ஆக்கும் - கடலிற்றோன்றிய விடத்தை யமுதமாக்கும், கறை மிடறு உடையாரும் - நீலகண்டமுடைய இறைவரும்; குடமுனிதனை அங்கண் கூயினர் - கும்பமுனிவரை அவ்விடத்தி லழைத்து, எதிர்நோக்கி - நேரே பார்த்து, படர் ஒளி இளமூரல் பனிமுகமலர் காட்டி - ஒளிவீசும் புன்னகையரும்பிய தண்ணளியொழுகும் மலர்முகத்தைக் காட்டி, தொடர்புடை விழிகாட்டும் கருணையின் - அதனேடு சம்பந்தமுடைய திருக்கண்காட்டும் கருணையினுலே, இது சொல்வார் - இதனைக் கட்டளை யிடுவார். (எ - று)

இறைவன் அகத்தியமுனிவரை யழைத்து கருணையினுலே இதனைக் கட்டளையிடுவார் என்க.

எவ்விடத்தும் விடமாகக்கண்டவிடத்தை யமுதமாகக்கண்டது கண்டத்திலென்பது தோன்ற கடல்விட மமுதாக்குங் கறைமிடறு எனவும், அழைத்தற்குப் பிறரை யேவுவது அன்பின்மையும் தாமே யழைப்பது அன்புடைமையு மென்பதுதோன்ற இறைவனே குடமுனிதனை யங்கட்கூயினர் எனவும், முனிவருக்கு விடைகொடுக்குங்கால் அதனை யம்முனிவர் யாதாகவெண்ணுவாரோ வென்றுற்று தமது கருணையைப் பலதிறத்துங்காட்டினு ரென்பது தோன்ற எதிர்நோக்கிப் படரொளியிளமூரல் பனிமுகமலர்காட்டித் தொடர்புடைவிழிகாட்டுங் கருணையினெனவுங்கூறினர்.

இறைவனுடைய இளமூரல் முகமலர் விழி இம்மூன்றும் கோபப்பிரசாதம் அருட்பிரசாதமென்னும் இவ்விரண்டையும் விளக்குவது வழக்காதலால் மூன்றையுமொருங்கேகாட்டிக்கருணையினிது சொல்வார் எனஞா. (உகூo)

புத்தெழில் பெறுவிந்தம் புரிதரு மிடர்மாற்றி
முத்தமிழ் முனிவாமுன் முச்சக முழுதுய்ய
வைத்தனை யிதுபோதுஞ் சந்தனவரை நண்ணி
யித்தரை சமமாகப் புரிமதி கடிதென்றார்.

(இ-ள்.) முத் தமிழ் முனிவா - இயலிசைநாடகமென்னு முத்தமிழையும் நன்குணர்ந்தவனே, முன்புத்து எழில் பெறு விந்தம் புரிதரும் இடாமாற்றி - முன்னே யாவரும்வியக்கத்தகக பெரியவடிவத்தையெடுத்து விந்தமலை யிடாப்படுத்திய பெருந் துன்பத்தையொழித்து, முச்சகம் முழுதும் உய்ய வைத்தனை - மூன்றுலகமும் பிழைக்கச்செய்தனை, இது போதும் - அதுபோ லிப்பொழுதும், சந்தனவரை கடிது நண்ணி - சந்தனவிருககம்நிறைந்த பொதியமலையை விரைவாக வடைந்து, இ தரை சமமாகப் புரி - இப்பூமி சமமாயிருக்கச்செய்வாய். (எ-று)

இறைவன் அகத்தியமுனிவரைபபார்த்து முன் விந்தமலையையடக்கி உலக முழுமையு முய்யவைத்தனை, இப்பொழுதும் பொதியமலையையடைந்து பூமியைச் சமமாகச் செய்வாயென்க.

அகத்தியரோ செய்தற்கரியனவற்றை எளிதாகச்செய்யவல்லவா என்பது தோன்றப்புரிமதிகடி தென்றூா. (உகூக)

இருள்பொதி மணிகண்ட ரடிதொழு திருமுந்நீர்
பருகிய முனிவேந்தன் பையுளி னுரைசெய்வா
னருள்பெறு மடியார்கட் கவரினு மினியானே
கருணையி னிறைவேயான் கழிவது முறையேயோ.

(இ-ள்.) இரு முந்நீா பருகிய முனிவேந்தன் - பெரியகடனீரை ஆசமனமாகச்செய்த முனிவாகள்தலைவா, இருள் பொதி மணிகண்டா அடிதொழுது - இருள்செறிந்த கரியகண்டருடைய திருவடியைப் பணிந்து, பையுளின் உரைசெய்வான் - மெல்லென விண்ணப்பஞ் செய்வாா, அருள்பெறும் அடியாாகட்கு - உன்னருள்பெற்ற அடியார்களுக்கு, அவரினும் இனியானே - அவர்களுன்னிடத்தில் வைத்திருககும் அன்பினும் நீ அவர்களிடத்தில் மிக்க அன்புடையானே, கருணையின் நிறைவே - கிருபாசமுத்திரமே, யான்கழிவது முறையேயோ - அடியே னிங்குநின்றும் நீங்குவது முறையாமோ. (எ-று)

அகத்தியமுனிவர் இறைவனைவணங்கி அடியாாகட் கவரினுமினியானேயான் இச்சமயத்தில் இங்குநின்று நீங்குவது உன்கருணைக்கு முறையாமா என்க.

இறைவன் தம்மைம இனிதுநோக்கி முகத்தானமாந்து அகத்தானு மின்சொல்லைக் கருணையோடு வழங்கிய திறத்தைநாடி மறுக்கமுடியாது தம்மெண்ணத்தைக் கூறத் தொடங்கினுரென்பார் பையுளினுரைசெய்வானெனவும், அன்பர்க் கவரினு மன்பாயிருக் இன்ற நீ என்னைச் சேயனுக்கவெண்ணியதுதானே என்பால்வைத்த இனியவருளென் பார் அடியாாகட் கவரினுமினியானே கருணையினிறைவே யான்கழிவது முறையேயோ எனவுங் கூறினுர். (உகூஉ)

மருவினர் பிரியொண்ணுய் மற்றிவ ரெல்லாநின்
றிருமண நிறைகோலங் காண்டகு திறல்பெற்ருர்
பெருமண நடுவேநீ பிரிகென வெனைநீப்ப
விருளுறு கொடியேனிங் கெப்பிழை செய்தேனே.

(இ-ள்.) மருவினா பிரிவொண்ணுப் - உன்னைச்சோந்தவரை நீ பிரியமாட்டாய், இவா எல்லாம் நின் நிறை திரு மணக்கோலம் காண்டகு திறல்பெற்ருா - (அதுநிற்க) இங்கு வந்திருக்கின்றவாகளெல்லா முன்னுடைய நிறைந்த திருமணக் கோலத்தைக் காணத்தக்க தவத்தைப பெற்ருாகள், என்னை பெருமண நடுவே நீபிரிக என நீப்ப - என்ஞெருவனைநோக்கி இபபெரிய திருக்கல்யாணத்தினடுவில் நீபிரிந்துபோவாயெ ன்று விலக்க, இருளுறு கொடியேன் இங்கு எப்பிழை செய்தேனே-அறிவில்லாகொடி யேன் இவ்விடத்து என்னகுற்றத்தைச செய்தேனே (அதனைக்கூறுவாய்.) (எ-று)

மருவினரைப்பிரியாதநீ யாஞெருவஞெழிய இங்குள்ளாரெல்லாம் உன்திருமண த்தைக்காணுந் தவத்தைபபெற்ருாகள். எனனைப்போவென்று நீக்குவதற்கு என்ன பிழை இங்குசெய்துள்ளேன் கூறுவாயென்க.

யாவரிடத்தும் பிழைகருதிப்போவெனக் கூடாத விவ்வமயத்தில் என்னைப்போ வென்றதனுல் யான் உனனுள்ளத்திற்கொள்ளாத பெரும்பிழை செய்தவஞயினேன். அதனை எடுத்துக்கூறுதலே இப்பொழுது எனக்குச் செய்யுந் தண்ணளியாகும் என் பது தோன்ற எப்பிழைசெய்தேனென்ருா. பிரிகவென என்பது - ஈறு தொகுத்தல் பெற்றது. (௨௬௩)

துணைவிய ரொடுவானத் தொல்லுல குடையாரும்
பணமணி மணிநாகர் பாரிடர் முனிவோரு
மணவணி தொழுதுய்வா னின்னமும் வருகின்ரு
ரணைவுறு தமியேனைத் தள்ளுவ தழகேயோ.

(இ-ள்) துணைவியரொடு-தங்கள்தங்கள் பத்தினிகளோடு, வானம் தொல் உலகு உடையாரும் - மேலுலகத்துளளவரும், பண மணி மணிநாகர் - சிரோரத்நங்கள் பொருந்திய படங்களையுடைய நாகலோகத்தாரும், பாரிடா முனிவோரும் - பூதகணங் களும் முனிவாகளும, மணவணி தொழுது உய்வான் - மணக்கோலத்தைக் கண்டு பணிந்துய்யும்படி, இன்னமும் வருகின்ருா - இன்னமும் வந்தவாறே யிருக்கின்ருா கள், அணைவுறு தமியேனை தள்ளுவது அழகேயோ - வந்து சோந்த என்ஞெருவனை இககூட்டத்தினின்று நீக்குவது அழகுதானே. (எ-று)

புவலோகமுதலிய மேலுலகத்துள்ளவரும் நாகலோகமுதலிய கீழுலகத்துள்ள வரும் மண்ணுலகிலுள்ள முனிவாமுதலாயிஞரும் தங்கள் தங்கள் பததினிகளோடு திரு மணக்கோலத்தைக்கண்டு மகிழ்ந்துய்ய இன்னமும் வருகினருாகள். வந்தடைந்த அடியேனை இவ்விடத் திராவண்ணந் தள்ளுதல் அழகாமா அனறென்க.

மணவணிதொழுதுய்வா னின்னமும் வருகின்றவ ரெதிரே யான்செல்வஞயின் என்னை அவா மணவணி தொழுதுய்யப்பெருது எங்குசெல்கின்ருனென்று இகழமாட் டார்களோ வென்பாா தமியேனைத் தள்ளுதலழகேயோ என்ருா. (௨௬௪)

விரைசெலன் முனிவோர்கள் விரைகெழு சுனைதோய்வா
ரரசிலை குசைமற்று மன்புட னெதிருப்பார்
கரகமு மிழைசூழ்வா ரவரொடு களியாமே
தெருமற வடியேனைத் தள்ளுதல் சீரேயோ.

(இ - ள்.) முனிவோர்கள் விரைசெலன் - சில முனிவர்கள் விரைந்து செல்கின்றவர்களாயி, விரை கெழு சுனை தோய்வார் - நறுமணங்கமழும் சுனைகளில் மூழ்குவார்கள், அரசிலை குசை மற்றும் அன்புடன் எதிர் உய்ப்பார் - சிலமுனிவர்கள் அரசிலை தருப்பை மற்றுமுள்ள இலைவகைகளை அன்புடனே எதிரே கொண்டு வருவார்கள், கரகமும் இழை சூழ்வார் - சிலமுனிவர்கள் கரகங்களினும் நூலைச்சுற்றுவார்கள், அவரொடு களியாமே - அம்முனிவர்களோடுநானும் ஆனந்தத்தை யடையாமல், தெருமர அடியேனை தள்ளுதல் சீரேயோ - கலங்கும்படி என்னைப்போவென்றொழித்தல் சிறப்பாமோ. (எ-று)

யான் முனிவனுயிருந்தும் முனிவர்களோடு செய்யத்தகுஞ்செயலைச் செய்வதற்கில்லாமல் என்னை விலக்குவது சிறப்பாமோ அன்றென்க.

முனிவரெல்லாம் உன்பணியைநாடிவிரைந்துசெல்ல யான் உன்பிரிவை நாடாது விரைந்துசெல்லுதலோ சீரென்பது தோன்ற சீரேயோ என்றார். (உசுரு)

பாடுவர் சிலரன்பர் பரவுவர் சிலரன்ப
ராடுவர் சிலரன்ப ரழுகுவர் சிலரன்ப
ரோடுவர் சிலரன்ப ருவரொடு மகிழாமே
வாடுற வடியேனைத் தள்ளுதன் மரபேயோ.

(இ-ள்.) அன்டர் சிலர் பாடுவர் - சில அன்பர் (இறைவனைப்) புகழ்ந்து பாடுவார்கள், அன்பர் சிலா பரவுவர் - சில அன்பர் தோத்திரஞ் செய்வார்கள், அன்பர் சிலர் ஆடுவர் - சில அன்பர் கூத்தாடுவார்கள், அன்பர் சிலர் அழுகுவர் - சில அன்பர் தங்களுக் கன்பின்மையையெண்ணி அழுவார்கள், அன்பர் சிலர் ஓடுவர் - சில அன்பர் ஓடுவாகள், உவரொடும் மகிழாமே - இவ்வாறிருக்கின்ற அன்பர்களோடு பாடியும் பரவியும் ஆடியும் அழுதும் ஓடியும் மகிழ்ந்திராமல், வாடுற அடியேனை தள்ளுதல் மரபேயோ - வாடும்படி அடியேனைப் போவென்று தள்ளுதல் மரபாகுமோ. (எ-று)

' முன்னர் இறைவன்புகழைப் பாடுதலும் பின் தம்மைச்சீராட்டுதலைப் பரவுதலும் அச்சீராட்டால் ஆனந்தங்கொண்டு கூத்தாடுதலும் சென்றநாளை எண்ணித்துக்கித்தலும் இவ்வன்புநெறி யறியாதபாவிக ளணுகுவராயின் அவரைச் சேய்மைக்கண்ணே துறத்தவோடுதலும் உளராயிருத்தல் அன்பிற்சிறந்த பெரியோரியற்கையாகலான் யான் அன்பில்லாச் சிறியார்போல் இவ்வுழி விட்டு வாடுற அடியேனைத் தள்ளுதல் மரபேயோ என்றாரென்க. (உசுசு)

ஒளிமணி மழைதூர்ப்பா ரொண்மலர் மழைதூர்ப்பார்
புளகமு முடல்போர்ப்பார் புகழ்பல திசைபோர்ப்பா
ரளவறு மகிழ்கூர்ப்பா ரவரொடு கலவாமே
தளர்வுற வடியேனைத் தள்ளுவ தருளேயோ.

(இ-ள்.) ஒளி மணி மழை தூர்ப்பா - சிலர் ஒள்ளியமுத்தங்களை மழைபோலச் சிந்துவார்கள், ஒள் மலர் மழை தூர்ப்பார் - சிலர் சிறந்தமலரை மழைபோலப்பொழிவார்கள், புளகமும் உடல் போர்ப்பார் - சிலர் சரீரமுற்றும் புளகமடைவார்கள், புகழ் பலதிசைபோர்ப்பார்-சிலர் இறைவன் கீர்த்தியை யெத்திசைகளிலும் பரவச்செய்வார்கள், அளவறு மகிழ் கூர்ப்பார் - சிலர் இவ்வளவென்று அளவிடப்படாத ஆனந்தத்தை மேன்மேலும் அடைவார்கள், அவரொடு கலவாமே-இவ்வா றிருக்கின்றவன்ப

ரோடு' யான் கலந்திருக்காமல், தளர்வுற அடியேனை தள்ளுவது அருளேயோ - தளர்ச்சியடையும்படி யென்னைநீக்குதல் கருணையாமோ. (எ-று)

அன்பர்கள் எண்ணியவெல்லாமெய்தி மகிழ்ந்திருக்கு மிப்பெருமணத்தில் யானெண்ணியவா றெய்தப்பெறாது பெருந்தளர்ச்சியோடு போகத்தள்ளுவது அருளாகுமா அன்றென்க. (உகூஎ)

கண்டன மணவின்பங் காழுறு வினையெல்லாம்
விண்டன முலவாத மேதகு சிவபோகங்
கொண்டன மெனவார்ப்பா ரவரொடு குலவாமே
தொண்டற வடியேனைத் தள்ளுதல் சூழேயோ.

(இ-ள்.) மணம் இன்பம் கண்டனம்-(அன்பர்கள்) கலியாணவின்பத்தை இன்று கண்டோம், காழுறு வினை யெல்லாம் விண்டனம் - வயிரம்பொருந்திய வினைகளெல்லாம் விடப்பெற்றோம், உலவாத மேதகு சிவபோகம் கொண்டனம் என ஆர்ப்பார் - கெடாத மேலான சிவபோகத்தைக் கொள்ளப்பெற்றோம் என்று ஆரவாரஞ்செய்வார்கள், அவரொடு குலவாமே - அவ்வன்பரோடு யானுங் கூடிக் கலவாமல், தொண்டு அற அடியேனை தள்ளுதல் சூழேயோ - உன்னடித்தொண்டுநீங்க என்னைப்போக்குதல் என்ன ஆலோசனையோ. (எ-று)

அன்பாகளெல்லாம் மணவின்பங்கண்டனம், வினையெல்லாம் விண்டனம், சிவபோகங் கொண்டனம், என்றிவ்வாறு கண்டனம் கண்டனம், விண்டனம் விண்டனம், கொண்டனம் கொண்டனம் என்று ஆரவாரஞ்செய்ய, யானொருவன் மணவின்பங் கண்டேனில்லை, வினையெல்லாம் விண்டேனில்லை, சிவபோகங் கொண்டேனில்லை என்றிவ்வாறு இல்லை இல்லையென்று ஏங்கிக்கொண்டே போகத் தள்ளுதல் சூழ்ச்சியாமா அன்றென்க.

ஏனையோா மணவின்பம் துன்பத்தை விளைவித்தல் போலும் வினையை நிலைபெறச் செய்வதுபோலும் அழிதன்மாலையவாகிய போகத்தைக்கொடுத்தல் போலுமன்றி இன்பத்தை விளைவித்து வினையைப்போக்கி உலவாதமேதகு சிவபோகத்தைத் தருதலால் மணவின்பங் கண்டனம், வினையெல்லாம் விண்டனம் சிவபோகங்' கொண்டனம் என்றார். (உகூஅ)

குழலவிழ் வதுமோரார் குழைவிழு வதுமோரா
ரிழைசரி வதுமோரா ரெதிரெதிர் மடமாதர்
மொழியுமங் கலவோதை யிருசெவி முகவாமே
கழிவுற வடியேனைத் தள்ளுதல் கடனேயோ.

(இ-ள்.) குழல் அவிழ்வதும் ஓரார்-(சிலபெண்கள்) தங்கள் கூந்தலவிழ்ந்து போதலையு மறியமாட்டார்கள், குழை விழுவதும் ஓரார் - காதிலணிந்த குழைகள் வீழ்ந்து போதலையும் அறியமாட்டார்கள், இழைசரிவதும் ஓரார் - இடையிலுடுத்திருக்கின்ற கலைசரிந்து போதலையு மறியமாட்டார்கள், எதிர் எதிர் மடமாதர் மொழியும் மங்கல ஓதை - ஒருவர்க்கொருவர் எதிரேநின்று பெண்கள்சொல்வதாகிய சோபனவார்த்தைகளை, இருசெவி முகவாமே - என்னுடைய இரண்டுசெவியாலும் பருகாமல், கழிவுற அடியேனை தள்ளுதல் கடனேயோ - நீங்கும்படி என்னைப்போக்குதல் உமதுகடனாக விருக்கின்றதோ. (எ-று)

மணத்திற்கு வந்திருக்கின்ற மாதர்கள் குழல் குழை இழை அவிழ்வதும் விழுவதும் சரிவதும் ஓராது மங்கலம் மங்கலம் என்று பாட யான் அம்மங்கலப்பாட்டையேனும் செவியிற்கேளாமற் போகும்படி என்னைத் தள்ளுதல் கடனாகுமா என்க.

மாதரும் குழல்முதலியன அவிழ்ந்துபோதலோராது உன்வசமாகத்தானே யிருக்கப்பெற்றனராயின் யான் உன்வசப்பட்டிராது போகச்செய்தல் உமக்குக கடனன்றென்பது தோன்றக் கடனேயோ என்றார். (உ௬௬)

முனிவரர் கணநாத ரயனரி முதலானோர்
பணியறு கணிகாலைப் பேரிசை படமுன்பி
னெனவெழு நிறைபூசல் கண்டினி துவவாமே
மனமடி வுறவென்னைத் தள்ளுதன் மாண்பேயோ.

(இ-ள்.) முனிவரர் கணநாதர் அயன் அரி முதலானோர் - முனிகணங்களும் சிவகணநாதர்களும் அரிபிரம ராதியருமாகிய யாவரும், பணி அறுகு அணிகாலை-குளிர்ச்சி பொருந்திய அறுகையணியுங் காலத்தில், முன் பின என பேர இசைபட எழு நிறை பூசல் கண்டு இனிது உவவாமே - யான்முன் யான்பின் னென்று பேரிரைச்சலோடு எழுகின்ற பெரியபோரைப் பார்த்து இன்புற்றுமகிழாமல், மனமடிவுற என்னைதள்ளுதல் மாண்பேயோ - மனமடியும்படி என்னைததள்ளுதல் பெருமையோ. (எ-று)

அறுகிடுங்காலத்தில் முனிவர்முதலாயினோர் தங்கள்தங்கள்முறைகூறி யான்முன் யான்பின் னென்று ஒருவர்மேலொருவர் விழுந்து கால்மடியும்படி பூசலிடும் பேரோசையைக் கேட்டு மகிழாமற் போம்படி என்னைத்தள்ளுதல் மாண்பாகுமா அன்றென்க. அறுகணி என்றது அறுகில் எண்ணெய்தோய்த்து யாவருமிடும் முதற்சடங்கை.

மண்டில மணிவேதி குண்டமு மலிவித்திங்
கெண்டிசை புகைவிம்ம வெரியிடை யிழுதூற்றித்
தண்டிரள் பொரியட்டுந் தகவது காணமே
விண்டிட வடியேனைத் தள்ளுதல் விழைவேயோ.

(இ-ள்.) மண்டிலம் அணி வேதி குண்டமும் மலிவித்து - விருத்தாகாரமாக அழகிய வேதிகைகளையும் குண்டங்களையும் ஒன்றன்றிப் பலவாகவமைத்து, இங்கு எண் திசை புகை விம்ம எரி இடை இழுது ஊற்றி - இவ்விடத்தில் எண் திக்குகளிலும புகை பரவும்படி யாகாக்கினியில் நெய்சொரிந்து, தண் திரள் பொரி அட்டும் தகவது காணமே விண்டிட - செழுமையாகிய திரண்டநெற்பொரிகளையிடுந்தகுதியைக் காணமற் போக, அடியேனை தள்ளுதல் விழைவேயோ - என்னை நீக்குதல்விருப்பமாகுமோ.

என்னோடொத்த முனிவர்முதலாயினோர் நெய்சொரிந்து பொரியிறைத்திருக்க யான் கண்ணீர்சொரிந்து மனம்பொரிந்திருக்க என்னைத்தள்ளுதலோ உனக்கு என்பால் உள்ள விருப்பமென்க. (௬எ)

ஒழுகொளி மணிவேய்ந்த கரகம துறுபாலை
விழிமனை யவள்வார்ப்ப வெம்பிறை நினைதாள்கள்
கழுவினன் மலர்தூவி வழிபடல் காணமே
யழிவுற வடியேனைத் தள்ளுத லறனேயோ

(இ-ள்.) ஒழுகு ஒளி மணி வேய்ந்த கரகம் உறுபால் - வீசுகின்ற ஒளியையுடைய இரத்தினங்களிழைத்த கரகத்திற்பெய்தபாலை, மை விழி மனையவள் வா

ர்ப்ப - அஞ்சனந்தீட்டிய கண்களைப்படைத்த மேனையார்வார்க்க, வெற்பு இறை நின தாள்கள் கழுவி நன் மலர் தூவி வழிபடல் காணுமல் - மலையரையன் உன்னுடைய திருவடிகளைவிளக்கி நறுமணங்கமழும் மலர்களைச்சிந்தி வணங்குதலைக்காணுமல், அழிவுற அடியேனை தள்ளுதல் அறனேயோ-மனமழுங்கும்படி என்னைநீக்குதல் தருமமாகுமோ.

மேனையாரும் அவர்கணவனும் உன்திருவடிபூசித்தலை யான்காணு தொழிவது தருமமாகுமா என்க.

எனவே மலைவடிவான அவர் பூசிக்கப்பெற்றனர் மனிதவடிவாகியயான் பூசனையைக் காணவும் பெற்றிலன் இது அறனுமோவென்று ரென்க. (உஎஉ)

காரொடு நிகர்கூந்தற் கன்னியை மலைவேந்த
னீரொடு நின்கையி னுதவிடு நிறைகோல
மாரொடு மதிவேய்ந்த வங்கண காணுமே
பேரிட ருறவென்னைத் தள்ளுதல் பெட்பேயோ.

(இ-ள்.) மலைவேந்தன் காரொடு நிகர் கூந்தல் கன்னியை - பர்வதராசன் மேகத்தோடொத்த கூந்தலையுடைய உமாதேவியை, நின் கையில் நீரொடு உதவிடும் நிறைகோலம் - உன்திருக்கரத்தில் தண்ணீரோடு தத்தஞ்செய்யும் நிறைந்தகோலத்தை, ஆரொடு மதி வேய்ந்த அங்கண - ஆத்திமாலையோடு சந்திரனையணிந்த அழகியகண்ணனே, காணுமே போ இடர் உற என்னை தள்ளுதல் பெட்பேயோ - நான்பாராமல் பெருந்துன்பத்தையடையப் போக்குதல் பெருமையோ. (எ - று)

உன்னையன்றி யில்லாதவரும் என்றும் உன்னுடைமையாகவே யிருக்கின்றவருமாகிய என்னம்மையை இன்னொருவன் தன்னுடைமையாகக்கொண்டு உனக்குத் தத்தஞ்செய்ய அதற்குடம்பட்டு நீயும் ஏற்கின்றவனைப்போல் புதிதாயேற்பதாகிய இவ்வற்புதத்தைக் கண்டுகளிந்திருக்கவொட்டாது பெருந்துன்பத்தோடு செல்ல என்னைத் தள்ளுதல் பெருமையாமா அன்றென்க. (உஎங)

ஒருவர்மு னணிசாந்த மொருவர்தம் முதுகப்பப்
*பருவிலை மணியாரம் பட்டுடல் வடுவாக
நிரல்பட மிடைகுற்றுர் தொழுநிலை காணுமே
பருவர வடியேனைத் தள்ளுதல் பண்பேயோ.

(இ-ள்.) ஒருவர்முன் அணி சாந்தம் ஒருவர்தம் முதுகுஅப்ப - ஒருவர் முன்னே மார்பிலணிந்த சந்தனம் ஒருவர்முதுகிலே அப்பியிருக்கவும், பருவிலை மணி ஆரம் உடல்பட்டு வடுவாக - விலையுயர்ந்த முத்தாரங்கள் சரீரத்தின்மேல்பட்டு அழுந்தி வடுக்களாகவும், நிரல்பட மிடைகுற்று தொழும் நிலை காணுமே - வரிசைவரிசையாக நெருக்குற்று வணங்குமுறைமையைக்காணுமல், பருவர அடியேனை தள்ளுதல் பண்பேயோ - துன்பமடையும்படி என்னைப் போக்குதல் குணமாகுமோ. (எ-று.)

ஒருவர்மார்பிலணிந்த சந்தனம் மற்றொருவர் முதுகிற்படவும் அவர் முதுகிற்பட்ட சந்தனம் மற்றொருவர்மார்பிற்படவும் முத்தாரமுதலிய ஆரங்கள் ஒருவர்மீதொருவர் தாக்குதலால் உடல்வடுப்படவும் நெருங்கித் தொழுங்கோலத்தைக் காணுமற்போதல் குணமாமா அன்றென்க.

இப்பொழுது நீகொள்ளும் மணக்கோலம் முன்னுங் கொண்டதுமில்லை, பின்னுங் கொள்ளப்போவதுமில்லை யென்றெண்ணியன்றே அடியார்களெல்லாம் வடூட்

பட நெருங்குந் துன்பத்தையு மெண்ணாமல் வணங்குவார்கள். அந்நெருக்கத்தி லுன் றிருக்கோலத்தைக்காணும்பாக்கியமில்லாதொழியினும் அவ்வன்பர் கோலத்தையேனும் காண்பேனன்றே, அதுவுமின்றியான் துன்பப்படுதல்குணமன்றாகலான் அடியேனைத் தள்ளுதல் பண்பேயோ என்றார். (௨௭௪)

குடையொடு குடைதாக்கக் கொடியொடு கொடிதாக்கப்
படையொடு படைதாக்கப் பண்ணவர் குழுவோடும்
விடைமிசை வருகோலம் விழியெதிர் காணாமே
கடைபட வடியேனைத் தள்ளுதல் கவினேயோ.

(இ-ள்.) குடையொடு குடைதாக்க - குடைகளோடு குடைகள் தாக்கவும், கொடியொடு கொடிதாக்க - துவசங்களோடு துவசங்கள் தாக்கவும், படையொடு படைதாக்க - ஆயுதங்களோடு ஆயுதங்கள் தாக்கவும், பண்ணவர் குழுவோடும் விடைமிசை வருகோலம் - தேவா கூட்டங்களோடும் இடபவூர்தியின் மேல் வருங்கோலத்தை, விழி எதிர் காணாமே கடைபட அடியேனை தள்ளுதல் கவினேயோ - கண்ணெதிரே காணாமல் யாவரினுங் கடைப்பட்டவனாக என்னை விலக்குதல் அழகாமோ. (எ-று)

சத்திரங்களும் துவசங்களும் ஆயுதங்களும் ஒன்றோடொன்றுதாக்க தேவா கூட்டத்தோடும் விடபத்தின்மேல் வருங்கோலத்தைக் காணாமல் யான் போதல் உனக் கழகாமா அன்றென்க.

காணத்தவஞ்செய்வோரேயன்றி ஏனையோரும் எளிதாகக்காணவன்றோ நீ விடைமிசைவருவது, யான்அவர்களிலுங்கடைப்பட்டவனாயுனைக்காணாமற்போகச்செய்தல் அழகன்றென்பதுதோன்ற கடைபடவடியேனைத் தள்ளுதல் கடனேயோஎன்றா. ()

வாரண நிரைசூழ வாம்பரி நிரைசூழத்
தேரணி நிரைசூழத் தேவர்கள் புடைசூழ
வேரணி நகர்சூழ நினதெழில் காணாமே
யாரரு ளுறவென்னைத் தள்ளுத லமைவேயோ.

(இ - ள்.) வாரண நிரை சூழ - யானைக்கூட்டங்கள் அணியணியாக நெருங்கிச் சூழ்ந்து வரவும், வாம் பரிநிரை சூழ - தாவிச்செல்லும் குதிரைத்திரள்கள் வரிசை வரிசையாய்ச் சூழ்ந்துவரவும், தேரணி நிரை சூழ - தேர்த்தொகுதிகள் முறைமுறையாக மேலோங்கிச்சூழ்ந்து வரவும், தேவர்கள் புடைசூழ - தேவர்களெல்லாம் பக்கங்களிற் சூழ்ந்துவரவும், ஏர் அணி நகர் சூழ நின் எழில் காணாமே - அலங்காரமாக அலங்கரித்திருக்கும் நகரத்தை வலமாகவரும் உன்னுடைய பேரழகைப் பாராக்காமல், ஆர் அருள் உற என்னை தள்ளுதல் அமைவேயோ - பேரருள்பெற்ற யானுடைய வென்னை நீக்குதல் அமைந்ததன்மையோ. (எ-று)

இந்த ரதகஜ துரக பதாதிகளெல்லாஞ் செல்லுமுறைமையே செல்ல வீதியில் உலா வரும் பேரழகைக்காணாமல் துன்பமுறும்படி என்னைப் போகச்செய்தல் உன்னருளுக் குப் பொருந்தியதன்றென்க.

அஃறிணைப் பொருள்களாயுள்ள யானைமுதலியவைகளெல்லாம் உன்னைச் சூழ்ந்துவரும் பாக்கியத்தைப் பெற்றிருக்க உயர்திணைப் பொருளாயுள்ள யான் அப்பாக்கி

யத்தைப்பெறுது துன்பத்திலாழப்பெறுவது உன் னருளன்றென்பார் என்னைத்தள் ளுத லமைவேயோ வென்றார். (உஎ௬)

தொடிபல நிலம்வீழத் துணைமுலை நனிவிம்மக்
கடிபடு குழல்சோரக் கன்னியர் மயல்கூரும்
படிமறு கிடைநண்ணும் புத்தெழில் பாராமே
மிடியுற வடியேனைத் தள்ளுதல் விதியேயோ.

(இ-ள்.) பல தொடி நிலம் வீழ - பல வளையல்கள் நிலத்திலே வீழவும், துணை முலை நனி விம்ம - இரண்டு தனங்களு மிகப்பூரிக்கவும், கடி படு குழல் சோர - வாசம் நிறைந்த கூந்தல்சோரவும், கன்னியர் மயல் கூரும்படி மறுகிடை நண்ணும் புத்து எழில் பாராமே - இவ்வாறு பேதைமுதல் பேரிளம் பெண்ணீருகக்கூறும் பெண்கள் காமமீக்கொள்ள வீதியில்வரும் புதியகோலத்தைப் பாராமல், மிடியுற அடியேனை தள் ளுதல் விதியேயோ - வறுமையுற்றிருக்க என்னைப்போக்குதல் விதியாகுமோ. (எ-று)

மங்கையரெல்லாம் தொடிகள்வீழவும், முலைகள்விம்மவும், குழல்சோரவும் காமங்கொள்ளும்படி வீதியில்வரும் மணக்கோலத்தைக் காணுமல் யான்போகுதல் விதியாகுமா என்க.

உன்னழகைப் பேதைமுதல் பேரிளம்பெண்ணீருகக் கூறும் பெண்களெல்லாங் கண்டு தாங்கள் நிலைகெட்டு மயக்கங்கொண்டுநிற்க யான் என் போதநிலைகெட்டு அருள் வசப்பட்டு நிற்கப்பெறுது உன்னருள்பெறுத லறியார் விலகல்போல விலகல் விதியன் றென்பார் அடியேனைத் தள்ளுதல் விதியாமா என்றார். (உஎஎ)

மரகத வடிவாளு மழவிடை யனையாயு
மொருமணி யணையும்ப ரினிதுறை யுயர்கோல
மிருவிழி களிகூரப் பருகுவ தில்லாமே
பரிவுற வடியேனைத் தள்ளுதல் பாங்கேயோ.

(இ-ள்.) மரகதவடிவாளும் மழவிடை யனையாயும் - மரகதம்போன்ற திருமேனியையுடைய பார்வதியாரும் இளமையாகிய இடபம்போலும் வெண்ணிற முடைய நீயும், ஒருமணி அணை உம்பர் இனிது உறை உயர்கோலம் - ஒப்பற்ற மணிமயமாய் விளங்குஞ் சிங்காதனத்தின்மேல் இனிதாக வீற்றிருக்குஞ் சிறந்தகோலத்தை, இரு விழி களிகூர பருகுவது இல்லாமே பரிவுற அடியேனை தள்ளுதல் பாங்கேயோ - என் னிரண்டுகண்களும்களிகூர்ந்துபருகப்பெறுமல் வருந்தத்தள்ளிவிடுதல் பாங்காகுமோ.

அம்மையப்பராகிய நீங்க ளிருவரும் ஓர் சிங்காதனத்தில் வீற்றிருக்குங் கோலத் தைக் கண்களாற் பருகுவதின்றிப்போதல் பாங்காகுமா அன்றென்க.

ஒன்றிஞென்று பிரியாத (பண்ணும் இசையும் நீரும் தண்மையும், பாலுஞ் சுவையும் போன்று) சிவசத்திகள் பிரியாதொன்று யிருந்ததையும், அச் சிவமும் சத்தி யும் பிரிந்து வேருனதையும், இனி ஓராசனத்தில் உடனுயிருந்தலையும் ஊனக் கண் ணுற்காண்டல் அரிதாகலின் ஒருமணியணையும்பரினிதுறையுயர்கோலம்பருகுவதில்லா மே எனவும், இங்ஙனம் ஒன்றாய் வேறு யுடனுயிருக்கின்ற அத்துவிதக் கோலத்தை உள்ளே ஞானத்தாற்காணும் அறிவிலேனுயினும் அவ்விலக்கணத்தைக்காட்டவந்த சகளகோலத்தையேனும் இருவிழியுங்கண்டு களிகூரச்செய்யாமல் பரிவுறச்செய்தல் பாங்கன்றென்பது தோன்ற தள்ளுதல்பாங்கேயோ என்றார். (உஎஅ)

வந்தனர் மணஞாட்பின் மலரடி தொழுவார்க்குத்
தந்திடு மருணோக்கந் தமியனு முடனின்று
சிந்தையின் மகிழ்வெய்தப் பெறுவது செய்யாமே
நைந்திட வடியேனைத் தள்ளுத னலமேயோ.

(இ - ள்.) மணம் ஞாட்பில் வந்தனர் மலர் அடி தொழுவார்க்கு - மணஞ்செய்யு மிக்கூட்டத்தில்வந்து உன்னடிமலரைவணங்குகின்றவர்களுக்கு, தந்திடும் அருள் நோக்கம் தமியனும் உடன் நின்று சிந்தையில் மகிழ்வெய்தப் பெறுவது செய்யாமே - காட்டுங் கிருபாநோக்கத்தை யடியேனுமவர்களோடொருவனாக நின்று சிந்தையில் ஆனந்தம் அடையும்படிச் செய்யாமல், நைந்திட அடியேனைத் தள்ளுதல் நலமேயோ- நையும்படியாக வென்னைக் கழித்துவிடுதல் நன்மையாகுமோ. (எ-று)

இம் மணஞ் செய்யும் சுபதினத்திற் கூடி வணங்குகின்றவர்களுக்கு நீசெய்யும் அருணோக்கத்தை யானும் பெற்றுய்யுமாறின்றிப் போதல் நன்மையாமா அன்றென்க.

அடியாருடனிருந்து பெறுவதாகிய அருள்கிடைப்பது அரிதாகலின் அதை யெளி தாகப்பெற வல்ல இப்பொழுது பெறுதொழியச்செய்தல் நன்றன்றென்பது தோன்ற தமியனுமுடனின்று பெறுவது செய்யாமே தள்ளுதனலமேயோ என்றா. (உஎக)

அன்றியு முயர்காஞ்சிப் பதியினி லடியேற்கு
மன்றநி னணிமைக்கண் வைகிட வரமீந்தா
யின்றது தனைமாற்றி யெழில்வளர் பொதியத்திற்
சென்றினி துறைநீயென் றருளிய செயலென்னே.

(இ-ள்.) அன்றியும் உயர் காஞ்சி பதியினில் அடியேற்கு நின் அணிமைக்கண் வைகிட வரம் மன்ற ஈந்தாய் - அல்லாமலுஞ் சிறந்த காஞ்சித்தலத்தில் எனக்கு உன்னு டைய சமீபத்தில் எந்நாளும் வாழ்ந்திருக்கும் வரத்தை நிச்சயமாகத் தந்தனை, அது தனை இன்று மாற்றி - அவ்வரத்தை இன்று மாறுபடுத்தி, எழில் வளர் பொதியத்தில் நீ சென்று இனிது உறை என்று அருளிய செயல் என்னே - அழகோங்கும் பொதியம லையில் நீ போ யினிதாகவசித் திருப்பாயென்று கட்டளையிட்ட செயல்யாது. (எ-று)

என்னை இக்கலியாணத்திலிராவண்ணம் போகச் சொன்னது மல்லாமலும் எனக் குக்காஞ்சியில் நிச்சயமாகக்கொடுத்த வரத்தையுமறந்து பொதிகைக்குப் போகச்சொன் னது யாதோ அறிகிலேனென்க.

இம்மணக்கோலத்தில் யாவரு மகிழ்ந்திருக்கச்செய்து என்னொருவனை நோக் கிப் போவென்று கட்டளையிட்டது அழகன்று, நேரன்று, மரபன்று, அருளன்று, சூழ்ச் சியன்று, பெட்டன்று, பண்டன்று, கவினன்று, அமைவன்று, விதியன்று, பாங்கன்று, நலமன்றாயினும் "சத்தியசத்தியர் சத்தியசோதகர், சத்தியசங்கற்பர், சத்தியகாம ரிருத்தலின் னட்பதி சத்தியவிரதமதாம்" எனப்போய சத்தியவிரதக்ஷேத்திரமாகிய காஞ்சியி லெனக்குச்சத்தியமாகத்தந்தவரத்தையுமாற்றிப்பொதிகைக்குப் போவென்ற செயல் என்னையோ வென்பார் செயலென்னே என்றார். அல்லதூஉம் இப்பூமிநிலைதிரிந் ததும், இதனை நிலைபெறச்செய்வது மதிசயமன்று, தேவரீருடைய சொல்லுஞ்செயலு மாறுபட்டதே இது என்னையோவென்று குறித்ததுமாம். (உஎo)

என்னையு முடையாய்நின் றிருவரு ளிதுவோவென்
றின்னன பலபன்னி யிருவிழி புனல்வார

வங்கிலே நனியேங்கி யழுதழு தயர்வெய்தும்
தன்னிகர் தமிழ்வாய்மைத் தலைவனை யெதிர்நோக்கி.

(இ-ள்.) என்னையும் உடையாய் நின் திருவருள் இதுவோ - என்னையு மடிமை யாகவுடையாய் (என்பால்) உன்னுடைய திருவருளிதுதானோ, என்று இன்னன பல பன்னி - என் றிதுபோன்ற பல குறைமொழிகளைக்கூறி, இருவிழி புனல்வார அங்கிலே நனி ஏங்கி அழுது அழுது அயர்வு எய்தும் - இரண்டுகண்களிலேயும் நீர் மாறாதொழுக (அங்குநின்ற) அந்நிலையே மிகவேங்கி யோய்வெய்தா தழுது சோாவடையும், தன் நிகா தமிழ்வாய்மை தலைவனை எதிர்நோக்கி - தனக்கொப்பில்லாத தமிழினுண்மையை யுணர்ந்த அகத்தியமுனிவரை நேரேபாாத்து. (எ-று)

என்னையுமாளாகவுடையவனுயிருக்க என்பாலுன்றிருவருள் மாறுபட்டதுயாதோ வென்று கண்ணீர்விட்டழுதழு துயிர்சோரும் அகத்தியமுனிவரைப்பார்த்தென்க.

என்னை உன்னைப்போலும் பதியாகவாவது நானென்பதில்லை நீயே நானென்று வது, நீ என்றறிய வொரு பொருளில்லை நானே பொருளென்றுவது எண்ணினுமன்றே உன் னின்பத்தை யனுபவிக்கப்பெறு தொழிக்கவேண்டும். உனக்கென்றும் ஆளென் போனை யொழிக்கவெண்ணுதல் அருளன்றாகலான் என்னையுமுடையாய் நின்திருவரு ளிதுவோ எனவும், இறைவனே ! நின்கழற்கண்ணே அன்புண்டாய் அதனால் விளையும் புங்கமானபோகத்தை வேண்டினேனேயல்லது வேறுபோகத்தையாவது புரந்தராதி யின்பங்களையாவது உன்றிருவடிசான்றாக வேண்டியிருப்பேனோ, அன்றியும் யான் நின்னையே போற்றிப் பாடவேண்டும், பாடி நைந்துநைந்துருகி நெக்குநெக்காடவேண் டும், நின்கழற்போது கூடவேண்டும், இப்புழுக்கூடுநீக்கப் பொய்யெலாம் விடவேண் டும், விட்டபின் நீ வீடுதந்தருளவேண்டுமென்று வேண்டினேன். அவையெல்லாம் இங்கெய்தப்பெறாது போவேனுயினும் இவையெல்லாம் எந்நாளடையப் பெறுவே னென்று அழுதேங்கினராதலான் அங்கிலேநனியேங்கி யிருவிழிபுனல்வாரவழுதழுதயர் வெய்தி எனவுங்கூறினார். (உ௮௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுவலிற்றாழ் குதம்பைக் காதிற் சுந்தர ரருளிச் செய்வா
ரவலித்தல் வேண்டா கேட்டி யருந்தவக் கிழவ னாலும்
செவிலித்தா யென்ன வோம்பும் தீம்புனற் கன்னி நாட்டிற்
றவலிற்றீர் வேறு காஞ்சி சமைத்துமுன் பொருட்டு மாதோ.

(இ-ள்.) காதில் சுவலில் தாழ் குதம்பை சுந்தரர் அருளிச்செய்வார் - திருச்செ வியில் புயத்தளவுந்தாழ்ந்த குண்டலத்தையுடைய அழகர் கூறுவார், அருந்தவக்கிழவ அவலித்தல்வேண்டா கேட்டி - அரியதவத்தில் முதிர்ந்தவனே நீவீணுகத் துன்பப்பட வேண்டாம் யான் சொல்வதைக் கேட்பாய், உன்பொருட்டு ஞாலம் செவிலித்தாய் என்ன ஓம்பும் - உன்னையுத்தேசித்துஇவ்வுலகத்தைச் செவிலித்தாயைப்போலப் பாதுகாக்கவல்ல, தீம்புனல் கன்னி நாட்டில் தவலில் தீர வேறுகாஞ்சி சமைத்தும் - இனிய நீர்வளமிக்க பாண்டிநாட்டில் குற்றமற்ற வேறொரு காஞ்சிநகரத்தைப் படைக் கின்றோம். (எ-று)

இறைவன் அகத்திய முனிவரைப்பார்த்து நீதுயருறவேண்டாம். உன்பொருட்டுப் பாண்டிநாட்டில் மற்றொரு காஞ்சிநகரத்தை உண்டாக்கித் தருகின்றோமென்க. உ௮உ

(உ௮௦) வது செய்யுளில் அகத்தியா அடியேற்குக் காஞ்சிப்பதியினில் மனநிகி ணிமைக்கண் வைகிடவரமீந்து அதுமாற்றிய செயலென்னே என்றாராகலின், இறை வனர் அதுமாற்றினே மில்லையெம் பதூ தோன்றப் பின் உன்பொருட்டு காஞ்சிசமைத் தும் என்றா. அல்லதூஉம் அகத்தியா காஞ்சியில்நின்னணிமைக்கண் வைகிடவேண் டுமென்றாராகலான்இறைவரும் கன்னிநாட்டில் நின்னணிமைக்கண் நாம் வைகியிருக்க விருப்பமுள்ளோம் என்று கூறியதுமாம். (உ௮உ)

அத்தலைக் காஞ்சி யூரு மெமக்குமிக் கினிதா மங்க
ணித்தகு சிறப்பு வாய்ப்ப யாம்புனை வதுவைக் கோல
முத்தமக் கிழத்தி யோடு முனக்கெதிர் காட்டு கின்றா
மெய்த்தபே ருவகை பூப்ப விழியுறக் காண்டி மற்றும்.

(இ - ள்.) அ தலைகாஞ்சியூரும் எமக்குமிக்கு இனிதாம் - (உன்பொருட்டுண்டா க்கும்) அத்தென்காஞ்சியும் எமக்குமிகவுமினிமையாம், அங்கண் இ தகு சிறப்புவாய்ப்ப யாம்புனை வதுவை கோலம் - அக்காஞ்சிநகரததில் இந்தன்மையாகிய சிறப்புடன் நாம்கொள்ளும் மணக்கோலத்தை, உததம கிழததியோடும் உனக்கு எதிர்காட்டுகின் றும் - உத்தம விலக்கணமுடைய பிராட்டியோடும் உனக்கெதிரே காட்சிகொடுக்கின் றேம், மெய்த்தபோ உவகைப்பூப்ப விழியுற காண்டி - உள்ளன்போடு தோன்றும் பெருங்களிப்பு மேன்மேல்பொங்க உன் கண்ணிறையக்காண்பாய், மற்றும் - இதுவே யன்றி மேலும். (எ-று)

அத்தென்காஞ்சியும் எமக்கு மிகவினிமையாகவே யிருக்கும் அவ்விடத்தில் இம் மணக்கோலத்தைக் காட்டுகின்றேம் நீகண்ணாரக்காண்பாய, இதுவல்லாமலும் என்க.

அத்தலைக் காஞ்சிஎன்றது கன்னிநாட்டிலுள்ள வேறுகாஞ்சியை. உத்தமக்கிழத்தி என்றது உமையம்மையை எனவே - கூந்தல் - சிரம் - நுதல் - கண் - இமை - புருவம்- மூக்கு - செவி - கபோலம் - இதழ்-பல் - நாக்கு - மோவாய் - முகம் - கண்டம்- மாாபு- தோள்-கை-கைககம் - உள்ளங்கை - தனம் - வயறு - உந்தி - நிதம்பம்- துடை - புறங் கால் - கால்விரல் - நகம் - உள்ளங்கால் - சொல் - உடம்பு நிறம் ஆகிய முப்பத்திரண் டுக்கும் சொல்லியிருக்குமிலக்கணங்கள் நிரமபப்பெற்றவ ராகலானென்க.

இறைவனுக்கினிய காஞ்சிவாசம் நமக்கென்றுண்டாகும் என்னுமையமகல அத் தலைக்காஞ்சியூரு மெமக்கு மிக்கினிதாம் எனவும், இத்திருமணக்கோலம் என்று காண் பேனென்ற வேக்கமகல இத்தகு சிறப்புவாய்ப்ப உனக்கெதிகாட்டுகின்றும் எனவும் இவ்விரண்டுமுண்டாவது உண்மை என்பது தோன்ற விழியுறக்காண்டி எனவும், வதுவைக்கோலங்காண்பதினுங்கழிபேருவகை வேறின்றாகலான் மெய்த்தபேருவகை எனவுங்கூறினா. (உ௮௩)

கருதிநீ வரங்கள் பெற்ற வடநகர் காஞ்சி மாட்டும்
வருமுறை யாண்டு தோறும் பங்குனித் திருநாள் மல்கத்
திருவிழா முடிவின் மன்றற் செய்கையு மெமக்குண் டாக
வருள்புரிந் திடுதுங் கண்டா யறிவநீ மகிழ்ழ மாற்றால.

(இ-ள்.) நீ கருதிவரங்கள்பெற்ற வடநகா காஞ்சிமாட்டும் - நீ எண்ணிக்கேட்ட வரங்கள் கிடைக்கப்பெற்ற வடக்கிலுள்ள காஞ்சிநகரத்திலும், ஆண்டுதோறும் முறை வரும் பங்குனி திருநாண்மல்க திருவிழாமுடிவில்-வருடந்தோறும் முறையானேவரும்

இன்ற பங்குனிமாதத்தில்மங்கலசிரம்பவியற்றும்திருவிழாநாள்முடிவில், எமக்கு மன்றற் செய்கையும் உண்டாக - எங்களுக்குத் திருக்கலியாண மகோற்சவமும் நடத்தும்படி, அறிவ நீ மகிழும் ஆற்றால் அருள்புரிந்திடுதும் - அறிஞனாகிய நீ மகிழும்வண்ணம் அருள்செய்கின்றேம். (எ-று)

தென்காஞ்சியில் நீகாணுமாறு இம்மணக்கோலக்காட்சியைக்காட்டுவதுமல்லாமல் நீ வரம்பெற்ற வடகாஞ்சியிலும் பங்குனித்திருவிழாமுடிவில் திருக்கலியாண மகோற்சவமும் நீ மகிழுமாறு நடக்கச்செய்கின்றேமென்க.

சிற்றின்பப் புணர்ச்சியின்றி வருந்திய இந்திராதிதேவர்கள் மகிழும்பொருட்டு இம்மலையில் மணக்கோலங் கொண்டதென்பதும், பேரின்பப்புணர்ச்சியின்றிவருந்தும் யோகியர் மகிழும்பொருட்டு காஞ்சியில் மணக்கோலங் கொள்வதென்பதுந் தோன்ற யோகியருட்சிறந்தஅகத்தியனைநோக்கி அறிவனென்றும் நீ மகிழுமாற்றுலென்றும், அநாதியே பெத்தான்மாக்களாயுள்ளாரை இடையிடையே பாகம்வருத்திமுத்தான்மாக்களாகச் செய்தல் இறைவர் செயலாதலால் அது இக்காலத்தென்பது தோன்ற ஆண்டுதோறுமென்றுங் கூறினர். அன்றியும் அகத்தியரது அவாவடங்கற்கு ஆண்டுதோறுமென்று கூறினரென்றலுமொன்று. (உ௲சு)

என்றிவை யுலகமெல்லா முய்யுமா றியம்பிவேளை
வென்றவர் தழுவித்தேற்றி விடைகொடுத் தருளப்பெற்று
வன்றிறன் முனிவர்கோமான் மகிழ்ந்தடி வணங்கிப்போந்து
தன்றுணைக் கிழத்தியோடுஞ் சையமால் வரையைச்சார்ந்தான்.

(இ-ள்.) வேளைவென்றவர் - மன்மதனைவிழித்தெரித்த இறைவர், என்று இவை உலகம் எல்லாம் உய்யுமாறு இயம்பி - என்றுமேற் கூறியவைகளை யெல்லாம் எல்லாவுலகங்களும் பிழைக்கும் வண்ணந் திருவாய்மலர்ந்து, தழுவி தேற்றி விடைகொடுத்தருள பெற்று,மார்போடணைத்து சோர்வெல்லா நீங்கும்படித் தெளிவித்துச் செல்லும்படி விடைதரப்பெற்று, வன்திறல் முனிவர்கோமான் மகிழ்ந்து - மிக்கவலிமையையுடைய முனிவர் தலைவராகிய அகத்தியமுனிவர்மனமகிழ்ந்து, அடிவணங்கி போந்து-திருவடியில் தண்டாகாரமாகப் பணிந்துமீண்டு, தன் துணை கிழத்தியோடும்-தமது மனைவியுடன், சைய மால் வரையை சார்ந்தான் - பொதியமலையை வந்தடைந்தனர்.

இறைவன் அகத்தியமுனிவர் குறைநீங்கத் தென்காஞ்சியிலும் வடகாஞ்சியிலுந் திருமணக்கோலங் காட்டுகிறேமென்றுகூறித் தழுவிவிடைகொடுக்கப்பெற்றுத் தன் துணைவியோடு பொதியமலையை வந்தடைந்தனரென்க.

ஆண்டுதோறுங்காட்டுமணக்கோலம் அறிஞர்க்கே பேரின்பம்உண்டாக்குவதன்றி ஏனையோர்க்கும் விளைவித்தலால் உலகமெல்லா முய்யுமாறெனவும், மனமொழிமெய்கள் பிரிவைநாடிவருந்திய தாகலான் மெய்குளிரத்தழுவியும் மனமகிழத் தேற்றியும் வாக்கு மேலுங்குறைகூறாதடங்க விடைகொடுத்தும் அருளியதால் தழுவித் தேற்றி விடைகொடுத்தருளப்பெற்றெனவும், இறைவனேடொப்பத் தென்றிசையில் வீற்றிருக்குந் தவமுடையராதலால் வன்றிறல் முனிவர்கோமான் எனவுங் கூறினர்.(உ௲ரு)

காஞ்சிமாட்டும் என்றதில் உம்மை - இறந்தது தழீஇயது. ஆண்டுதோறும் என்றதில் உம்மை - முற்று. மன்றற்செய்கையும் என்றதில் உம்மை - உயர்வுசிறப்பு. கண்டாய் முன்னிலையசைச்சொல். மனைவி - லோபாமுத்திரை.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

சலம்ப டைத்த வா தாவியில் வலன்றனைச் சவட்டிய பெருநோன்பின்
வலம்ப டைத்தவ னவ்வனா யணுகலு மறிதிரைக் கடலாடை
நிலம்ப டைத்தது தொன்னிலை யாவரு நிறைபெருங் களிகூர்ந்தார்
நலம்ப டைத்தசீ ருறுவனு மாயிடை வதிந்துதென் மலைநண்ணி.

(இ-ள்.) சலம்படைத்த வாதாவியில் வலன்தனை சவட்டிய - நீங்காதகோபத்தை யுடைய வாதாவிவில்வல னென்னு மிரண்டசுரர்களைக்கொன்ற, பெருநோன்பின் வலம் படைத்தவன் அ வனா அணுகலும் - பெரியதவவலிமையையுடைய அகத்தியமுனிவர் அப்பொதியமலையைச் சமீபிக்கவும், மறிதிரை கடல் ஆடை நிலம் தொல் நிலைபடைத்தது - மடங்கும் அலைகளையுடையகடலை ஆடையாகவுடுத்த பூமி முன்போலச் சமனுக நிலைபெற்றது, யாவரும் நிறைபெரும் களிகூர்ந்தார் - இமயமலையில்வந்திருந்த எல்லோரும் நிறைந்த பெருமகிழ்ச்சியை யடைந்தார்கள், நலம்படைத்த சீர்உறுவனும் தென்மலை நண்ணி ஆயிடைவதிந்து - நன்மையையுடைய சிறந்ததவசீலரும் அப்பொதியமலையைச்சார்ந்து அவ்விடத்திலேயே வசித்து. (எ-று.)

அகத்தியமுனிவர் பொதியமலையை வந்தடையவும் பூமிமுன்போல் சமனுக நிலை பெற்றது அதுகண்டு யாவரும் மகிழ்ந்தார்கள் அம்முனிவரும் அம்மலையிலேயே வசித்

பெருநோன்பின் வலம்படைத்தவனென்றது - தவமுடையோனையே கொல்லும் தவவலிமையையுடைய வாதாவி வில்வலனை யெளிதாகக் கொன்றதவத்தைநோக்கி. நலம்படைத்த சீருறுவனென்றது—வடதிசை தாழ கலங்கிய எவ்வுயிர்களிடத்துஞ் செந்தண்மை பூண்டொழுகிய தண்ணளியைநோக்கி. (உ௮௬)

தெனுது காஞ்சியு முத்தர காஞ்சியு நித்தலுஞ் சென்றேத்திப்
பினுக பாணியார் திருமணங் கண்ணுறப் பெற்றுளங் களிப்பெய்தித்
தனுது பத்திபா லணிபெறத் தொடுத்திடுஞ் செந்தமிழ்ப் பாமாலை
மனுதி யாலுணர் வரியவ ரிணையடி மலர்மிசைப் பலசாத்தி.

(இ - ள்.) தெனுதுகாஞ்சியும் உத்தரகாஞ்சியும் நித்தலும் சென்று ஏத்தி- தென் றிசையிலுள்ள தென்காஞ்சியையும் வடதிசையிலுள்ள வடகாஞ்சியையும் நாள்தோறுஞ் சென்றுபணிந்து, பினுகபாணியார் திருமணங்கண்ணுற பெற்று உளம்களிப்பு எய்தி - இறைவருடைய திருமணக்கோலத்தைக் கண்ணாரக்காணப்பெற்று மனக்களிப் படைந்து, மனுதியால் உணர்வரியவா இணையடிமலர்மிசை - மனமுதலியவைகளா லுணர்தற்கரிய இறைவருடைய திருவடித்தாமரைமலர்மேல், தனுதுபத்தியால் அணி பெற தொடுத்திடும் செந்தமிழ் பாமாலை பலசாத்தி - தனதுபத்தியினு லழகுபெறப் பாடுகின்ற செந்தமிழாலாகிய பலசெய்யுள்மாலைகளைச்சாத்தி. (எ-று)

தென்காஞ்சியிலும் வடகாஞ்சியிலும் நாடோறுஞ் சென்றுபணிந்து வருடந்தோறும் இறைவர் திருமணக்கோலங்கண்டுகளித்து பாமாலைகளைச் சாத்தியென்க.

மனுதியென்றது - வேதம் அதற்கங்கமானபுராணவிதிகாசமிருதி மீமாஞ்சை தருக்கங்களை. இதனைச்சிவஞானசித்தியார் "மறையினுல்" என்னுஞ் செய்யுளுனாயிற் காண்க. பினுகமென்பது—இறைவன்வில், (உ௮எ)

தென்றற் பிள்ளையை வயிறுளைந் தீன்றுதீம் பொருனைநீர் குளிப்பாட்டி
மன்றற் சந்தனப் பொதும்பரிற் றமிழொடு வளர்த்துமென் மெலஞால
முன்றிற் பால்விளை யாடவிட் டமர்முது மலயவெற் பினுஞ்சையக்
குன்றத் தும்மகத் தீசத்து முறைமுறை குலவிவீற் றிருக்கின்றான்.

(இ-ள்.) தென்றல் பிள்ளையை வயிறு உளைந்து ஈன்று தீம் பொருனை நீர்குளிப்பாட்டி - தென்றற்காற்றென்னும் சிறுகுழவியை வயிறுநோகப்பெற்று இனியபொருனைத் தீர்த்தத்தினால் நீராட்டி, மன்றல் சந்தனம் பொதும்பரில் தமிழொடுவளர்த்து - நறுமணங்கமழும் சந்தனச்சோலையில் தமிழுடன்வளர்த்து, ஞாலம் முன்றில்பால் மென்மெல விளையாடவிட்டு - நிலவுலகென்னுமுற்றத்தில் பையப்பைய விளையாடவிடுத்து, அமர்முதுமலயவெற்பினும் சையக்குன்றத்தும் அகத்தீசத்தும் முறைமுறை குலவி வீற்றிருக்கின்றான் - நிலைபெற்ற பெரிய பொதியமலையினிடத்தும் சையமலையினிடத்தும் அகத்தீசத்தினிடத்தும் முறையாகப் பெருமையோடுவீற்றிருக்கின்றனர்.

தென்றலுதிக்கும்பொதியம் சைலங் காஞ்சி தாம் வழிபட்டஅகத்தீசம் என்னு மூன்றிடத்தும் முறையேவீற்றிருக்கின்றனரென்க.

தென்றலுக்கும் தமிழுக்கும் பிறப்பிடம் பொதியமலையாகலான் அதனைத்தாயாகவும், பெரியநிலப்பரப்பில் வகுத்த எல்லைக்குள் வழங்கிவருதலால் அதனை முற்றமாகவும், மக்கள்விளையாட்டு இன்பந்தருதல்போல் யாவர்க்கு மின்பந்தருதலால் அதனை விளையாடவிட்டெனவுங்கூறினர். ஆண்டுதோறும் தங்குதலால் முறைமுறை யிருக்கின்றானென்றார். சைலம் கொங்குநாட்டிலுள்ளது. இதுவாதாவி வில்வலனைக்கொன்றபிரமகத்தியைப்போக்கப்பூசித்தவிடம். அடுக்கிரண்டில் முன்னதுமிகுதி,பின்னதுபன்மை.

இன்ன தாமகத் தீச்சரம் வந்தவா றிவ்விடைப் பணிந்தேத்தி
யன்ன மன்னவள் மண்டப மாளிகை யங்கண மாங்காங்குத்
துன்னும் வந்திகர் கணுதிபர் வாயில்காப் புடையவர் தொழப்போந்து
மன்னு மாமுத லிடவயின் மத்தள மாதவீச் சரங்கண்டாள்.

(இ-ள்.) அகத்தீச்சரம் வந்தவாறு இன்னது ஆம் - (முனிவர்களே) அகத்தீச்சரமெனப் பெயர் வந்தகாரணமிதுவாகும், அன்னம் அன்னவள் இவ்விடை பணிந்து ஏத்தி - அன்னநடைவாய்ந்த அம்மையார் இந்தவகத்தீசத்தைப்பணிந்துபோற்றி, மண்டபம் மாளிகை அங்கணம் ஆங்காங்கு துன்னும் வந்திகர் கணுதிபர் வாயில் காப்புடையவர் தொழ போந்து - மண்டபம் மாளிகை முற்றமெனப் பெயர்பெற்ற அவ்வவ் விடங்களில் நெருங்கியிருக்கும் புகழ்வோர் கணத்தலைவர் வாயில் காப்பாளராகிய இவர்க ளடிபணிந்திருக்கவுள்ளேசென்று, மன்னுமாமுதல் இடவயின் மத்தளமாதவீச்சரம் கண்டாள் - நிலைபெற்ற ஆம்பராநாதருடைய இடப்பக்கத்தில் மத்தளமாதவீசத்தைத் தெரிசித்தனர். (எ-று)

முனிவர்களே அகத்தீசமெனப்பெயர்வந்தகாரணமிது (பின்னர்) அம்மையார் மண்டப முதலிய விடங்களிலிருக்கும் வந்திகர் முதலானவர்கள் பணிய உள்ளே சென்று திருவேகம்ப ரிடதுபக்கததில் வீற்றிருக்கும் மத்தளமாதவீசத்தைக் கண்டனரென்க.

கஅசு-வது செய்யுண்முதல் இச்செய்யுள்வரையில் அகத்தீசத்தைக்கூறியதென்க.

என்றி யம்பிய சூதனைப் பழிச்சின ரிறும்புசூழ் வடமேருக்
குன்ற வார்சிலை வாங்கிய மதனுடைக் குழகனு ரடிப்போதி
லொன்று சிந்தையோய் மத்தள மாதவீச் சரத்திய லுரையென்ன
வென்ற மாதவர் வினுதலு மாங்கவன் மேவர விரிக்கின்முன்.

(இ - ள்.) என்று இயம்பிய சூதனை பழிச்சினர் - என்றுசொல்லிய சூதமுனி வரை நைமிசவனமுனிவர்கள்தோத்திரஞ்செய்து, இறும்புசூழ்வடமேரு குன்ற வார் சிலைவாங்கிய மதனுடை குழகனுர் அடி போதில் ஒன்று சிந்தையோய்-மலைகளால்சூழப் பெற்ற மேருமலையைநாண்பூட்டி வில்லாகவளைத்த வன்மையையுடைய அழகர் திரு வடித்தாமரையில்பொருந்திய சித்தமுடையவரே, மத்தளமாதவீச் சரத்து இயல் உரை என்ன வென்ற மாதவர் வினுதலும் - மத்தளமாதவீசருடைய வரலாற்றைச் சொல்லியருளவேண்டுமென்று ஐம்புலன்களைவென்ற முனிவர்கள் கேட்கவும், ஆங்கு அவன் மேவர விரிக்கின்முன் - அப்பொழுது சூதமுனிவர் அவர்களுள்ளத்திலமைய விரித்துக்கூறுகின்முர். (எ-று)

அம்மையார் மத்தளமாதவீச்சரத்தைக் கண்டாரென்று கூறிய சூதமுனிவரைத் துதித்து அதன்வரலாற்றைக் கூறுவீரென்று கேட்க விரித்துக்கூறுகின்முரென்க.

மேருமலையின் நாற்பக்கத்திலும் நான்கு மலைகள் சூழவுளதென்பார் இறும்புசூழ் வடமேருவெனவும், இறைவன் திருவருள் வசப்பட்ட சித்தமுடையவரென்பார் குழக னுரடிப் போதிலொன்று சிந்தையோயெனவுங்கூறினுர். அம்மலைகளாவன கிழ்த்திசை யில் - மந்தரமலை, தென்திசையில் -கந்தமாதனமலை, மேற்றிசையில் - விபுலமலை, வட திசையில் - பாருசுவமலை. (உகூ0)

விரைப்ப சுந்துழாய் மணிமுடிப் புங்கவன் வீங்குநீர்க் கலிக்கச்சி.
வரைப்பின் விண்டுவீச்சரக்குறி நிறீஇத்தொழும்பேற்றினுன்மறைநான்கு
மிரைப்புவார்பொழிற் புலிநகர்ப் பொதியிலிலெடுத்ததாண்டவங்காணூஉ
வுரைப்பரும்பெறற்படகமங்கெழுப்பிடப்பெற்றபினுவப்பாலே.

(இ-ள்.) விரை பசும் துழாய் மணி முடி புங்கவன்-நறுமணங்கமழுந்துளபமாலை சூடிய மணிமுடியையுடைய திருமால், வீங்கு நீர்கலிக்கச்சிவரைப்பில் விண்டுவீச்ச ரக்குறி நிறுவி தொழும் பேற்றினுல் - நீர்வளமிக்க வலிமைபெற்ற கச்சித்தளியில் (தன்பெயரால்) விண்டுவீச்சரமென்றுவி லிங்கமூர்த்தியைக்கண்டுபூசித்தபேற்றினுல், வார்பொழில் புலிநகர் பொதியிலில் மறைநான்கும் இரைப்ப - பெரிய சோலைசூழ்ந்த புலியூரில் விளங்கும்பொதுவில் நான்குவேதங்களுமோலமிட, எடுத்த தாண்டவம் காணூஉ பெறல் உரைப்பரும் படகம் அங்கு எழுப்பிட பெற்றபின் உவப்பால்-ஆனந்த நடனகோலத்தைத் தரிசனஞ்செய்து பெறுதற்கருமையென்று சொல்லும்படகவாச்சி யத்தை அவ்விடத்தில் முழக்கப்பெற்ற பின்னர் மகிழ்ச்சியினுல். (எ-று)

திருமால் திருவேகம்பத்தில்விண்டுவீச்சரமென்று தன்பெயரால் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்தபேற்முல் சிதம்பரத்தில் திருநடனத்தைக்கண்டுபடகவாச் சியத்தை முழக்கப்பெற்றுப் பின்னர் மகிழ்ச்சியினுலென்க. (உகூக)

அடிய ளந்தவன் கறைமிடற் றடிகளை யானந்தக் கூத்தாடன்
முடிவி லேத்தெடுத் தடியனேன் மத்தள முழக்கவும் பெறவேண்டும்
படியி லாப்பெருங் கருணையஞ் சலதியே பணித்தரு ளெனப்போற்ற
வடிவெ டும்படைக் கழுக்கடை யேந்திய வள்ளலா ரருள்செய்வார்.

(இ-ள்.) அடி அளந்தவன் ஆனந்த கூத்தாடல் முடிவில் - நிலங்கடந்த திருமால் ஆனந்தத் தாண்டவஞ்செய்யும் நடனவிறுதியில், கறைமிடறு அடிகளை ஏத்தெடுத்து - நீலகண்டராகிய நடராசமூர்த்தியைத் தோத்திரஞ்செய்து, மத்தளம் அடியனேன் முழக்கவும் பெறவேண்டும் -(படகமுழக்கியதேயல்லாமல்) மத்தளத்தையும் அடியேன் முழக்கவும் பெறுதல்வேண்டும், படியிலாத பெருங்கருணையஞ் சலதியே பணித்தருள் என்ன போற்ற - ஒப்பிகந்த அழகிய பெரியகருணைக்கடலே அனுக்கிரகஞ்செய்வாயென்று வணங்க, வடிநெடும்படை கழுக்கடை ஏந்திய வள்ளலார் அருள்செய்வார் - வடித்த பெரியபடையாகிய பரசாயுதமேந்திய இறைவனார் பணித்தருள்வார். (எ-று)

திருமால் நடனமுடிவில் நடராசமூர்த்தியைப் பணிந்துபோற்றி அடியேன் முன் படகமுழக்கினேன், அதுபோ லிப்பொழுது மத்தளமுழக்கமுஞ் செய்யப் பணித்தருளவேண்டுமென்றிரக்க இறைவனாரருள் செய்வாரென்க.

திருமால் தானடியெடுத்ததுமாவலியைக் கீழடக்கற்கும் இறைவனடியெடுத்தது யாவருமேலோங்கற்குமாதலால் அடியளந்தவன் கறைமிடற்றடிகளை ஏத்தெடுத்தென்றார். "வேண்டுவார் வேண்டுவதே யீவான்கண்டாய்" என்பது நோக்கி வள்ளலார் என்றார். (உகூஉ)

இவ்வ ளைப்பிடை நித்தலும் படகநீ யெழுப்பிட வரம்பெற்றாய்
செவ்வி மத்தள முழக்கவும் விழைதியேற் செப்புது மிதுகேட்டி
யவ்வி யத்தொகை யறவெறிந் துயரிய வான்றவர் குழூப்போற்றுங்
கவ்வை யம்புனற் காஞ்சியை முன்புபோற் கதுமெனச் சென்றெய்தி.

(இ-ள்.) நித்தலும் நீ இவ்வரைப்பிடை படகம் எழுப்பிட வரம்பெற்றாய்-நாடோறும் நீ இப்பதியில் படகமுழக்க (காஞ்சியில்) வரம்பெற்றனை, செவ்வி மத்தளமுழக்கவும் விழைதியேல் இது செப்புதும் கேட்டி - அழகியமத்தளத்தைமுழக்கவும்விரும்புவையேயானால் இதனைச்சொல்லுகின்றோங்கேள், அவ்வியத்தொகை அற எறிந்து உயரிய வானவர் குழு போற்றும் - பொறாமை முதலிய தீக்குணங்கள் முழுவதுங் கடிந்து மேன்மைபெற்றபெரியோரெல்லாம் வணங்கும், கவ்வையம்புனல்காஞ்சியை முன்பு போல் கதும் என சென்று எய்தி - ஒலிக்கும் நீர்நிறைந்த காஞ்சியை விரைந்து முன் சென்றதுபோல் இப்பொழுதும் போய்ச்சேர்ந்து. (எ-று)

திருமாலே நீ முன்காஞ்சியில் பூசித்து இப்பொழுதில்படகமுழக்கப் பெற்றனை அதுபோல் இப்பொழுதுங் காஞ்சியையடைந்து என்க.

திருமால் காஞ்சியில் படகமுழக்கப்பெற்றதை இப்படலம் "என்றுகூறிய" என்னும் (கறுO)-வது செய்யுள் முதலாகக் கூறுமுறையில் "இறைவனார்" என்னும் (கஅக) வ்து செய்யுளிற்காண்க. ஆன்றவரென்றதற்கு வானவரெனினும் அமையும். (உகூங)

அங்கண் மத்தள மாதவீச் சரனென வருட்குறி நிறீஇப்போற்றிப்
பொங்கு மன்பினுல் விதியுளி யருச்சனை புரிகுதி மற்றாங்கே
துங்க நீடிய பரவெளிப் பிலத்தயற் சூழலி னெஞ்ஞான்றுந்
தங்கு காப்புடை நடமெனப் பெயரிய தாண்டவம் புரிகின்றேம்.

(இ-ள்.) அங்கண் மத்தள மாத வீச்சரன் என்ன - அவ்விடத்தில்மத்தள மாதவீச்சரமென்று, அருட்குறி நிறுவி போற்றி பொங்கும் அன்பினால் விதியுளி யருச்சனை புரிகுதி - சிவலிங்கப்பதிட்டைசெய்துபூசித்துமிக்கெழும் அன்பினால் விதி

முறையா லருச்சனைசெய்வாய், ஆங்கு துங்க நீடிய பரவெளிப்பிலத்து அயல்சூழலில்-அவ்விடத்தில்பரிசுத்தமிருந்தபரமாகாசரூபமாகிய பிலத்தருகில், எஞ்ஞான்றும் தங்கும் காப்புடைநடம் என பெயரிய தாண்டவம் புரிகின்றேம் - எந்நாளும் நீங்காதியற்றுங்காப்புடை நடனமென்றுபெயர்பெற்றதாண்டவத்தையாம்செய்கின்றோம். (எ-று)

அக்காஞ்சி நகரத்தில் மத்தளமாத வீச்சரமென்றிலிங்கமூர்த்தியைப் பதிட்டைசெய்து பூசிப்பாயானால் நாம் அங்குள்ள பரமாகாசரூபமாகிய பிலத்தருகில் எந்நாளும் நீங்காது காப்பு நடனமெனப்பெயர்பெற்றதாண்டவத்தைச்செய்கின்றோமென்க.

வடமொழியில் (சர்வரக்ஷா நிருத்தம்) எனக் கூறியிருத்தலால் காப்புநடனமென்றார். மற்று என்பது வினைமாற்றுப் பொருளது. ஆங்கென்பது மறுதலைத் தொழிலுவமத்தின்கண் வந்தது. (உகூச)

செல்வ மல்குமித் தில்லைநீள் வனத்திடைத் திருச்சிற்றம் பலமொன்றே
சொல்லி றந்தொளிர் பரவெளி யெனப்படுஞ் சுரிவளைக் குலமார்க்கு
மல்ல னீர்த்தடம் புறம்பணை வேலிசூழ் வளம்பொழிற் றிருக்காஞ்சி
யெல்லை யுட்படு வரைப்பக முழுவதும் பரவெளி யெனத்தேறாய்.

(இ-ள்.) செல்வம் மல்கு இ தில்லை நீள் வனத்திடை - செல்வநிறைந்தஇந்தத் தில்லையென்னும்பெரியகாட்டினுள், திருச்சிற்றம்பலம் ஒன்றே சொல்லிறந்து ஒளிர் பரவெளி எனப்படும் - திருச்சிற்றம்பலமாகிய இதுவொன்றே சொல்லிறந்துவிளங்கும் பரமாகாசமென்றுசொல்லப்படும், சுரிவளை குலம் ஆர்க்கும் மல்லல் நீர்தடம்புறம்பு அணைவேலிசூழ் வளம்பொழில் திருக்காஞ்சி - குவிந்த முகத்தையுடைய சங்கினங்களொலிக்கும் நீர் நிறைந்த தடாகங்கள்புறம்பே வேலிபோலச்சூழ்ந்த வளப்பம்பொருந்திய பொழிலையுடைய காஞ்சியில், எல்லையுட்படுவரைப்பு அகமுழுவதும் பரவெளி என தேறாய்-எல்லைக்குட்பட்ட இப்பரப்பெல்லாம்பரமாகாசமாமென்று தெளிவாய்.

திருமாலே இத்தில்லைவனத்தில் இத்திருச்சிற்றம்பலமொன்றே பரமாகாசமென்று சொல்லப்படும். காஞ்சி நகரத்துட்பட்ட இடமெல்லாம் பரவெளியென்று ஐயுறவின்றித் தெளியக்கடவா யென்க.

இதனால் சிற்றம்பலமும் காஞ்சியும் பரமாசாசமென்றும், இவ்விரண்டிடத்தும் அப்பரமாகாச வியாபகம் இவ்வெல்லையென்றும் விளக்கியதென்க. செல்வமல்கு மித்தெல்லை என்றதனை "செல்வநெடுமாடஞ் சென்று சேணோங்கும்" எனவருதலானறிக. (உகூரு)

ஆதி யந்தமு மில்லதோர் மெய்யறி வானந்த நிறை வாகுஞ்
சோதி நந்தமைத் தம்மனக் குகையினுந் தொழுபவர் கருத்தீமை
காது காஞ்சியாம் பரவெளித் தலத்தினுங் காண்டகப் பெறுவோரே
யோதி முற்றுண ருறுவரும் பெறலரும் வீட்டினை யுறுவாரால்.

(இ-ள்.) ஆதி அந்தமும் இல்லது ஓர் மெய் அறிவு ஆனந்தநிறைவாகும் சோதி நந்தமை - முதலுமுடிவுமில்லாத வொப்பிகந்தசச்சிதானந்தப் பிழம்பாகுஞ் சோதி வடிவமாகிய நம்மை, தம்மனக்குகையினும் தொழுபவர் கரு தீமைகாது காஞ்சியாம் பரவெளி தலத்தினும் - தம்முடைய இதயகுகையின்கண்ணும் வணங்குகின்றவருடைய பிறவியென்னுந் தீமையைக் கடியவல்ல காஞ்சியாகிய பரமாகாசத்தினிடத்தும், காண்டகபெறுவோரே ஓதி முற்றுணர் உறுவரும் பெறல் அரும்வீட்டினை உறுவார் -

அழகுபெறக் காணப்பெற்றவர்களே நூல்முழுவதுங் கற்றுணரவல்ல பெரியோரும் பெறுதற்கரிய முத்தியையடைவார்கள். (எ-று)

திருமாலே, சச்சிதானந்தவடிவமாகிய நம்மை இதயகுகையின்கண்ணும் காஞ்சியாகிய பரவெளியின்கண்ணும் காணப்பெற்றவர்களே முத்தியடைவார்களென்க.

அநித்தியத்துவத்தையும் சடத்துவத்தையும் உடைய பாசமும், இதன்சம்பந்தத்தால் துக்கானுபவத்தையுமுடைய பசுவும் தோற்றநாசமுடையதாகையால் இவ்விரண்டுமாகாதது பதிமுதுநிலை என்பதுதோன்ற ஆதியந்தமுமில்லதோர்மெய்யறிவானந்த நிறைவாகுஞ் சோதிநந்தமை எனவும், சிவயோகிகள், துவாதசாந்தாதீதமாகிய பரவெளியிலும், இதயபுண்டரீகவெளியிலும் பரசிவசொரூபத்தைக் காண்டலியல்பாதலால்சோதிநந்தமை தம்மனக்குகையினும், காஞ்சியாம்பரவெளித்தலத்தினும் காண்டக எனவும், துவாதசாந்தாதீதத்தில் வேறாகாது ஒன்றாயுடனாயிருத்தலும், இதயபுண்டரீகவெளியில் ஒன்றாகாது வேறாயுடனாயிருத்தலுமாகிய அத்வைதானுபவத்தையனுபவித்தலாகிய முத்திநிலையையுடையோர் அச்சிவயோகிகளேயாதலால் பெறுவோரே வீட்டினையுறுவரெனவுங்கூறினார்.

அன்றியும் இதயபுண்டரீகம் தில்லை எனவும், துவாதசாந்தாதீதங்காஞ்சி எனவும், தில்லையில் சகளவடிவமெனவும், காஞ்சியில் நிஷ்களவடிவமெனவும், சகளவடிவத்தில் முன்வழிபட்டவர்க்கே நிஷ்களசொரூபத்தோற்ற முண்டாமெனவும், சொரூபத்தோற்ற முடையார்க்கே பின்சகளசொரூபப்பிரயோசனமுண்டாமெனவுங் கொள்ளக்கிடந்தன. உறுவரும் என்றதில் உம்மை உயர்வுசிறப்பு. (உகூசு)

வன்னி யிற்படு பொருள்களக் கணந்தனில் வன்னியா மதுபோல
வென்ன ராயினும் பரவெளிக் காஞ்சியி னெய்தினெம் மியல்பாவா
ரன்ன தன்மையா னத்தலத் திறந்தவர்க் கழற்கடன் கழிப்போரைத்
துன்னு சூதகந் தொடக்குறு திழிஞரைத் தீண்டினுந் தொடக்கில்லை.

(இ - ள்.) வன்னியில் படுபொருள்கள் அக்கணந்தனில் வன்னியாம் அதுபோல- நெருப்பிலிட்டபொருள்கள் அக்கணமே அந்நெருப்பேயாவதுபோல, என்னர் ஆயினும் பரவெளிகாஞ்சியில் எய்தின் எம் இயல்பு ஆவார் - யாவரானாலும் பரமாகாசரூபமாகிய காஞ்சிப்பதியையடைந்தால் எம்முடைய தன்மையையுடையராவார், அன்னதன்மையால் அ தலத்து இறந்தவர்க்கு அழல் கடன்கழிப்போரை துன்னுசூதகம் தொடக்குறாது - அந்தக்காரணத்தால் அத்தலத்திலிறந்தவர்கட்கு தகனச்செயலைச் செய்கின்றவரை வந்தடைகின்ற சூதகம்தொடர்ந்துவராது, இழிஞரைதீண்டினும் தொடக்கில்லை, இழிந்தபிறப்பினரைத் தொடினும் அசுத்தத்தன்மை யுண்டாகமாட்டாது.

நெருப்பிற்பட்டபொருள் எப்பொருளாயினும் அந்நெருப்பின்வண்ணமேயாவது போலக் காஞ்சியையடைந்தார் யாவராயினும் நம்வண்ணமே யாவார்கள், அக்காரணத்தால் அங்கிறந்தவர்களைத் தகனஞ்செய்யுமவர்களை யாசூசமணுகாது, அதுவுமன்றி இழிசனரைத்தீண்டினாலும் அசுத்தமுண்டாகாதென்க.

முத்தியை விரைந்தளிக்கு மென்பது தோன்றவன்னியிற் படுபொருள்களக் கணந்தனில் வன்னியாமதுபோலென்றும், அதுபரிபாகம் நோக்கியன்றென்பதுதோன்ற என்னராயினுமென்றும், அதற்குச்சாதனமிகவெளிதென்பது தோன்றக் காஞ்சியினெய்தியென்றும், எளியவச்சாதனத்தாலடைவது அடைதற்கரிதாகிய சிவமாந்தன்மையென்பதுதோன்ற எம்மியல்பாவாரென்றும், அவ்வியல்புடையார் வினைவயத்தா

னிறத்தலின்றி அருளால் கேசாந்தமுத்தியையடைய வுடல்கழியப்பெற்றனரென்பது
அன்னதன்மையா லிறந்தவர்க்கென்றும், ஆன்மா
பின்னர் அவர்சரீரமும் அம்முத்திப்பதியிற் கலக்கச்செய்யுங்கிரியையாளரைப் பாச

கழிப்போரைத்துன்னு சூதகந்தொடக்குறாதென்றுங் கூறினர். எவ்வாற்றானும் ஆகு
சமனுகுவதில்லை யென்பதை வலியுறுத்த என்னராயினும் என்றதேயன்றி அனுவாத
முகந்தான் இழிஞரைத்தீண்டினுந் தொடக்கில்லை என்றார். என்னர் - எத்தன்மையர்.

பாப்புப் பாயலோ யித்தகைச் சிறப்புடைப் பதிவயி னெமைப்போற்றிற்
காப்புத் தாண்டவ மாயிடைக் காட்டுது மந்நடந் தனக்கேற்பக்
கோப்புச் சீரமை மத்தள முழக்குவா யாகெனக் கொடும்பாச
நீப்புச் செய்தெமை யாளுடை யண்ணலார் நிகழ்த்திய மொழிகேட்டு.

(இ - ள்.) பாப்பு பாயலோய் இ தகைசிறப்புடை பதிவயின் எமைபோற்றில் - சர்ப்பசயனத்தையுடையவனே இத்தகைய சிறப்புடைய தலத்தின்கண் எம்மைவழி படுவையாயின், காப்புத்தாண்டவம் ஆயிடைகாட்டுதும் - காப்புத்தாண்டவத்தை யவ்விடத்தில் நீகாணக்காட்டுகின்றோம், அ நடனந்தனக்கு ஏற்ப கோப்புசீர அமை மத்தளமுழக்குவாயாக என - அந்தநடனத்துக்குப் பொருந்த வாரால் கோப்புண்டு சிறப்பமைந்த மத்தளததை முழக்கக்கடவாயென்று, கொடும்பாசம் நீப்பு செய்து எமை ஆளுடை அண்ணலார் நிகழ்த்தியமொழிகேட்டு - நீங்காத ஆணவபாசத்தை மோசனஞ்செய்து என்னையாளாகவுடைய விறைவருரைத்தருளிய ஆணையைக்கேட்டு.

திருமாலே இந்தகையகாஞ்சியில் எம்மை வழிபடுவையாயின் காப்புத்தாண்டவத்தை நீகாணக்காட்டுகின்றோம் அப்பொழுது அந்நடனத்துக்கியல மத்தளத்தை முழக்குவாயென்றிறைவர் கூறக்கேட்டென்க.

முன் சூதகந் தொடக்குறாதென்றதையே வலியுறுத்த இத்தகைச் சிறப்புடைப் பதி என்றும் எய்தினெம் மியல்பாவாரென்றுங் கூறினா. முழக்குவாயாக வென்பது ஈறுதொகுத்தல் பெற்றது. (உகஅ)

வண்டி னம்புகுந் துழக்கிய பூந்துழாய் வானவன் பெரிதோகை
கொண்டு வல்விரைந் தணுகினன் காஞ்சியிற் கோழரைத் தனிமாக்கீ
ழண்டர் போற்றவா ழங்கணர்க் கணிமையி னாகம விதியாற்றாற்
கண்டு மத்தள மாதவீச் சரன்றனைப் பூசனைக் கடன்பூண்டான்.

(இ - ள்.) வண்டு இனம் புகுந்து உழக்கிய பூந்துழாய் வானவன் - வண்டினங்களுள்ளேநுழைந்து கிண்டுந் துளபமாலை சூடியதிருமால், பெரிது ஓகைகொண்டு வல் விரைந்து அணுகினன் - அடங்காத ஆனந்தங்கொண்டு மிகவிரைந்து சோந்து, காஞ்சியில் கோழ் அரை தனிமா கீழ் அண்டாபோற்ற வாழ் அங்கணாக்கு அணிமையின் - காஞ்சிநகரில் கொழுவிய தாரையுடைய ஒருமாமரத்தின் கீழ் தேவாகள் வணங்கவாழ்கின்ற திருவேகம்பனாக்கருகில், ஆகமவிதியாற்றால் கண்டு மத்தளமாதவீச்சரன் தன்னை பூசனை கடன்பூண்டான்-ஆகமவிதி வழியால் பிரதிட்டைசெய்து மத்தளமாதவீச்சரரைப் பூசைசெய்யும் நியதியைக்கொண்டனன். (எ-று)

திருமால் மிகமகிழ்வோடுங் காஞ்சியையடைந்து திருவேகம்பனார்க் கணிமைக்கண் மத்தளமாதவீச்சரரைக்கண்டு பூசிக்கத் தொடங்கினனென்க.

முன்னர்க்கூறியவையெல்லாம் ஏனையபதிகளிற் காண்டலருமையும் இங்கெளிமையுமாயிருத்தலைக் கேட்டனராதலால் பெரிதோகை கொண்டென்றார். (உகக)

போக்க ருந்தவம் பற்பகல் புரிந்துபே ரன்பு
தேக்கு சிந்தையான் மீச்செலத் திருவருள் வழங்கி
வாக்கு முள்ளமுந் தொடர்வரு வள்ளலார் முழுதுங்
காக்கு நாயகர் காட்டினார் காப்புநன் னடனம்.

(இ-ள்.) வாக்கும் உள்ளமும் தொடர்வு அரும் வள்ளலார் - மனவாசகங்கடந்த வள்ளலாராகிய, முழுதும் காக்குநாயகர் - யாவுங்காக்கு மிறைவனார், போக்கரும் தவம் பல் பகல் புரிந்து பேரன்பு தேக்கு சிந்தையான் - கெடாத நல்லதவத்தைப் பலநாள்செய்து அதனால் உள்ளத்தில் பேரன்புநிறையப்பெற்ற திருமால், மீ செல திருவருள்வழங்கி காப்பு நல் நடனம் காட்டினார் - உயர்வடையத் திருவருள்புரிந்து நல்லகாப்பு நடனத்தைக் காட்டியருளினர். (எ-று)

பூசைத்தொழிலைக் கைக்கொண்ட திருமால் மேன்மையடையத் திருவருள்பாலித்து காப்பு நடனத்தை யிறைவர் காட்டினாரென்க.

வாக்கும் உள்ளமுமென்றது - பாசபசுஞானங்களை, ' 'உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்'' என்றதூஉம் இப்பெற்றிநோக்கி. (௩00)

வீங்கி ருட்பிழம் பள்ளிவாய் மடுத்துவெங் கதிர்கா
ன்றோங்கு செங்கதி ராயிர மொருவழிக் குழுமி
யாங்கு வில்லுமி ழற்புதப் பொலஞ்சுடர்ப் பொதுவின்
பாங்க ரெங்கணும் படரொளி விரிகதிர் பரப்பி.

(இ-ள்.) வீங்கு இருள்பிழம்பு அள்ளிவாய்மடுத்து - பரந்தவிருட் கூட்டத்தை யள்ளிவாயான் மடுத்துண்டு, வெங்கதிர்கான்று ஓங்கு ஆயிரம் செங்கதிர் ஒருவழிகுழுமியாங்கு - வெவ்விய கிரணத்தைச்சிந்தி ஒளிமிக்கோங்கும் ஆயிரஞ் சூரியர்கள் ஒருங்கு கூடி ஓரிடத்துநித்தாற்போல, வில் உமிழ் அற்புதப்பொலம் சுடர் பொதுவின் பாங்கர் எங்கணும் - எங்கணுமொளிவீசும் அற்புதம்வாய்ந்த பொன்னாலாகியசபையின் பக்கமெங்கும், படர் ஒளி விரிகதிர் பரப்பி - பரவியஒளிபரந்த கிரணங்களைவீசி. (எ-று)

பரந்தவிருளையோட்டவல்ல சூரியர் ஆயிரவரொருங்குகூடி ஓரிடத்திற்றோன்றினாற்போற் பொன்னாலிழைக்கப்பட்டுள்ள சபையின்பக்கங்களெல்லாம் ஒளிவீசிஎன்க()

அனைய மன்றினுக் கரும்பெற லணியெனக் கவின்று
புனையு நீற்றொளி வயங்கிய திருவுருப் பொலிய
வினையி கந்தவர் விள்ளருஞ் சரண்மிசை வீக்குங்
கனைம ணிக்கழல் கலின்கலின் கலினெனக் கறங்க.

(இ - ள்.) அனையமன்றினுக்கு அரும்பெறல் அணி என - அத்தகையசபைக்கு பிறரால் பெறுதற்கரிய முறைமையினையுடைய அணிகலமென்றுசொல்ல, கவின்று புனையும் நீற்றொளிவயங்கிய திருவுருப்பொலிய - அழகுபெறப்பூசிய திருநீற்றொளி விளங்கிய திருவுருவமானது பொலிவுபெற்றுத்தோன்றவும், வினை இகந்தவர் விள்ளரும் சரண்மிசை - வினையினீங்கியபெரியோர் சொல்லுதற்கரிய திருவடியின்மேல், வீக்கும் கனைமணிக்கழல் கலின் கலின் கலின் எனகறங்க-கட்டிய ஒலிக்கின்ற வீரத்தினைத் தினாற்சமைத்தவீரகண்டை கலின் கலினென்றொலிக்கவும். (எ-று)

அச்சபைக் கணிகலமென்றுசொல்லத் திருநீற்றொளிவீசுந் திருமேனிபிரகாசிக்கவும் திருவடியில் வீரக்கழல் கலீகலீரென்றொலிசெய்யவு மென்க.

கலின் அனுகாரணவோசை. தன்னை யடையப் பெற்றோரது மனவாக்குகளைத் தன்னடிப்படுத்தும் ஆற்றலுடையதாகலான் விள்ளருஞ்சரனென்றார். (௩0௨)

வார்ந்த செஞ்சடை மாதிர மெட்டினுஞ் சுலவ
வார்ந்த தெய்வதக் கங்கையா றலம்பிநீர் துளிப்பக்
கூர்ந்த வின்னருட் குறுநகை யிளநிலா முகிழ்த்துச்
சார்ந்து போற்றெடுத் திசைப்பவர் தம்முயிர் பருக.

(இ - ள்.) வார்ந்த செஞ்சடை மாதிரம் எட்டினும் சுலவ - நீண்டசிவந்த சடை எண்டிசையிலுஞ் சுழலவும், வார்ந்த தெய்வதம் கங்கையாறு அலம்பி நீர் துளிப்ப - பெரியதெய்வத்தன்மைபொருந்திய கங்கைததும்பி நீரைச்சிந்தவும், கூர்ந்த இன் அருள் குறுநகை இளநிலாமுகிழ்த்து - மிகவு மினியவருள்தோன்றும் புன்னகை யிளநிலவரும்பவும், சார்ந்து போற்றெடுத்து இசைப்பவர் தம் உயிர்பருக - தம்மடியடைந்து துதிப்பவருடைய உயிரைப்பருகவும். (எ-று)

நீண்டசடை, எண்டிக்கிலுஞ் சுழலவும், அச்சடையிலுள்ள கங்கைநீர் துளிக்கவும், குறுநகை உயிர்பருகவுமென்க. (௩0௩)

கஞ்ச வாண்முக மலர்தரக் கட்கடைக் கருணைப்
பஞ்சி னேரடிப் பனிவரைப் பிராட்டிபா னடப்ப
வஞ்சு பூதமும் படைத்தளித் தழிக்கவும் வல்ல
துஞ்ச ரும்புகழ்க் குறட்கணந் துணங்கையாட் டயர.

(இ - ள்.) கஞ்சவாள் முகமலர்தர - ஒள்ளியதாமரைமலர்போன்ற திருமுகமலரவும், கருணை கடைக்கண் பஞ்சினேர் அடி பனிவரை பிராட்டிபால் நடப்ப - கருணையொழுகும் கடைக்கண் பஞ்சினையொத்த அடித்தலத்தையுடைய மலையரையன்மகளாகிய இறைவியினிடத்து நடக்கவும், அஞ்சுபூதமும் படைத்து அளித்து அழிக்கவும் வல்ல துஞ்சரும் புகழ் குறட்கணம் - பஞ்சபூதங்களையும் உண்டாக்கிக் காத்தழிக்க வல்ல கெடாதபுகழையுடைய குறட்பூதங்கள், துணங்கையாட்டு அயர - துணங்கையென்னுங் கூத்தாடவும். (எ - று)

திருமுகம்மலரவும் கடைநோக்கம் பிராட்டியாரிடத்துச் செல்லவும் பூதகணங்கள் துணங்கைக்கூத்தாடவு மென்க.

"பழுப்புடை யிருகை முடக்கி யடக்கத்
துடங்கிய நடையது துணங்கைய தாகும்" என்னும்

பிரமன்முதலியோராற் செய்யத்தக்க ஆக்கன்முதலியதொழில்களை இறைவனுடைய ஒவ்வொரு சிறியபூதங்கள் எளிதாகச் செய்யும் வன்மையுடையன வென்பது தோன்ற அஞ்சபூதமும் படைத்தளித்தழிக்கவும் வல்ல எனவும், அவர்கள் அத்தொழிலைச் சிறுபொழுதியற்றித் துஞ்சுநல்போலன்றி எப்பொழுதுமியற்றி எந்நாளுமுளராதலின் துஞ்சரும்புகழ்க் குறட்கணம் எனவுங் கூறினார். (௩0௪)

ஊன மில்பசுங் கொடியென வொல்கிநின் றொருபாற்
கான ளாங்குழன் மலைமகள் கண்டுகண் களிப்ப
வான நாட்டவர் கற்பக மலர்மழை பொழியத்
தான மெங்கணு மரகர சயவொலி தழைப்ப.

(இ-ள்.) ஒருபால் கான் அளாம் குழல் மலைமகள் - ஒருபக்கத்தில் நறுமணங்கமழுங் கூந்தலையுடைய அம்மையார், ஊனம்இல்பசுங்கொடி என ஒல்கிநின்று கண்டு கண்களிப்ப - கெடுதலில்லாத பசிய பூங்கொடிபோலத்துவண்டுநின்று பார்த்துக்கண் களிப்படையவும், வானநாட்டவர் கற்பகமலர்மழை பொழிய - தேவர்கள் கற்பகமலர் மாரிசொரியவும், தானம் எங்கணும் அரகர சய ஒலிதழைப்ப - இடமெல்லாம் அரகர வென்கிற வொலியும் சயசயவென்கிற வொலியும் நிறைந்து தழைக்கவும். (எ-று)

உமாதேவியார் இடப்பால் நின்று கண்ணுற்கண்டு களிப்படையவும் தேவர்கள் மலர்மாரியைப்பொழியவும் எவ்விடத்தும் அரஅர சயசயவென்கிற வொலிதழைக் கவுமென்க.

அம்மையார் பசுங்கொடியென ஒல்கிநின்றாராயினும் இறைவனது நடனத்தைக் கண்டு களித்தலில் ஒல்குதலின்றி நிற்றலால் ஊனமில்பசுங்கொடி என்றார். (௩௦ரு)

கட்டு வார்முர சாதிய பெருங்கணப் பூத
ரெட்டு நாகமு மாகமுஞ் செவிடுற வெழுப்ப
மட்டு வார்ந்தெனச் செவியெலா மண்ணிக்கு மதுரம்
பட்ட தீங்கிளை நரப்பியாழ் கின்னரர் பயில.

(இ - ள்.) பெருங்கணப் பூதர் கட்டுவார் முரசு ஆதிய - பெரியபூதகணங்கள் வாராற்பிணிக்கப்பட்ட பேரிகைமுதலிய வாச்சியங்களை, எட்டுநாகமும் மாகமும் செவிடு உற எழுப்ப - அஷ்டகசங்களும் ஆகாயமும் செவிடுபட வதிர்க்கவும், கின்னரர் மட்டுவார்ந்து என செவி எல்லாம் அண்ணிக்கும் மதுரம்பட்ட தீங்கிளை நரப்பியாழ் பயில - கின்னரர்கள் தேனொழுக்கியதுபோலும் செவியெல்லாம் நிறைந்து இன்பம் பயக்கும் இனியபல நரம்புகளையுடைய யாழினைப்பாடவும். (எ-று)

பூதகணங்கள் பேரிகைமுதலிய வாச்சியங்களைக்கொட்டவும் கின்னரர்கள் யாழைப்பாடவுமென்க.

எட்டுநாகமும் மாகமும் செவிடுற என்றதனால் நீக்கமின்றியசையும் முறம்போன்ற செவியசையாது நின்றமைதெனவும், சத்தமேவடிவாகிய ஆகாயம் கம்பித்ததெனவும், செவியெலா மண்ணிக்குமதுரம் என்றதனால் செவியின் வழியேசென்ற வின்னிசை வுள்ளிடமெல்லா நிறைந்து மீண்டுஞ்செவியளவும் தேக்கியதெனவுங்கொள்க. முரசாதி என்றது மத்தளம் முருடு குடமுழா மொந்தை தகுணிச்சம் பேரிகை தக்கை பதலை ஆகிய கொட்டுவாத்தியங்களை. (௩௦சு)

வேத மாயிர மொருவயின் வெண்குடப் பணில
நாத மாயிர மொருவயி னலங்கிளர் முழவப்
பேத மாயிர மொருவயிற் பெரும்புனற் பரவை
யோத மாயிர மார்த்தெனத் தழங்கொலி யோங்க.

(இ-ள்.) ஒருவயின் வேதம் ஆயிரம் - ஒருபக்கத்திலாயிரம் வேதங்களினோசையும், ஒருவயின் வெள் குடம் பணிலம் நாதம் ஆயிரம் - ஒருபக்கத்தில் வெள்ளியகுடம் போன்ற ஆயிரம் சங்கங்களினோசையும், ஒருவயின் நலங்கிளர் முழவு பேதம் ஆயிரம் - ஒருபக்கத்தில் அழகுமிக்க பலவகைப்பட்ட ஆயிரம் மத்தளங்களினோசையும், பெரும் புனல் பரவை ஓதம் ஆயிரம் ஆர்த்த என தழங்கு ஒலி ஓங்க - நீர்வளமிக்க ஆயிரங்கடல்கள் ஒன்றாய்ச்சேர்ந் தொலித்தல்போலத் தழைந்தவொலி மேலோங்கி ஒலிக்கவும்.

வேத முதலியவற்ருெலெழுந்த வோசை ஆயிரங்கடலொலிபோல மேலோங்கி வொலிக்கவுமென்க.

கடல்களொன்றின்மேலொன்றெழுந்து பேரொலிசெய்வதுபோல வேதமுதலிய வற்ருலெழும் ஓசைகள் ஒன்றுக்கொன்று மிக்கோங்கியதென்பது தோன்றவேதமாயிரம் பணிலநாதமாயிரம் முழவப்பேதமாயிரம் பரவையாயிரமார்த்தெனத் தழங் கொலியேங்க என்ருர். (கூoஎ)

நடிக்கு மற்புத நாடகங் காண்டலும் புளகம்
பொடிக்கு மேனியன் புனல்பொழி விழியினன் றுதிகள்
படிக்கு நாவின னஞ்சலி பற்றிய கரத்தன்
கடிக்கு றாந்துழாய்க் கண்ணியான் படிமிசை வீழ்ந்தான்.

(இ-ள்.) கடி குறாந்துழாய் கண்ணியான் - நறுமணங்கமழும் இளந்துளபமாலையணிந்த திருமால், நடிக்கும் அற்புதநாடகம் காண்டலும் - நடனஞ்செய்யும் அற்புதமாகியகாப்பு நடனத்தைக்காணவும், புளகம் பொடிக்கு மேனியன் - புளகாங்கிதங்கொள்ளுஞ் சரீரத்தையுடையவனாகியும், புனல் பொழி விழியினன் - நீர்பெருக்கெடுத்திழியும் கண்களையுடையவனாகியும், துதிகள் படிக்கு நாவினன் - தோத்திரங்களைப் பாடுகின்ற நாவினையுடையவனாகியும், அஞ்சலி பற்றிய கரத்தன் - அஞ்சலியாகக்குவித்த கரங்களையுடையவனாகியும், படிமிசை வீழ்ந்தான் - பூமியில் தண்டாகாரமாகப் பணிந்தான்.

திருமால் காப்புத்தாண்டவத்தைக் காண்டலும் மெய்ம்மயிர்பொடிப்ப விழி புனல்சோர நாத்துதிசெய்ய கைகளஞ்சலியாகப் படிமிசைப் பணிந்தனரென்க.

மேனிபொடித்ததும் கரம் அஞ்சலித்ததும் படிமிசைவீழ்ந்ததும் காயத்துளன்பும், விழி புனல் பொழிந்தது மனத்துளன்பும், நாத்துதித்தது வாக்குளன்பும் கலந்ததனைலென்க.

பரப்பி கவின்று பொலிய கறங்க சுலவ துளிப்ப பருக நடப்ப அயர களிப்ப பொழிய தழைப்ப எழுப்ப பயில ஓங்க நடிக்குமென்ருெட்டுக. நடிக்குமென்னும் பெயரெச்சம் நாடகமென்னுஞ் செயற்பெயரோடு முடிந்தது. இவ்வெட்டுச் செய்யுளுமொருதொடர். (கூoஅ)

வீழ்ந்தெ ழுந்துள மகிழ்ந்துபே ரின்பவெள் ளத்தி
னாழ்ந்து பன்முறை பணிந்துபோற் றிசைப்புழி யவற்கு
வாழ்ந்த பேரருட் கருணையான் மத்தள முழக்கப்
போழ்ந்த வெண்மதிக் கண்ணியார் திருவருள் புரிந்தார்.

(இ - ள்.) வீழ்ந்து எழுந்து உளமகிழ்ந்து பேரின்பவெள்ளத்தில் ஆழ்ந்து பன்முறை பணிந்து போற்றிசைப்புழி - பணிந்தெழுந்து மனமகிழ்ந்து பேரின்பவெள்ளத்தில் மூழ்கிப் பலமுறை வணங்கித் துதிசெய்யுங்காலத்தில், போழ்ந்த வெண்மதி கண்ணியார் - பிளவுபட்ட வெள்ளிய சந்திரனையணிந்த இறைவர், அவற்கு வாழ்ந்தபேர் அருட்கருணையால் - அத்திருமாலுக்குத் தம்மாட்டுள்ள அருளாகிய கருணைப்பெருக்கால், மத்தளமுழக்க திருவருள்புரிந்தார் - மத்தளத்தை முழக்கும்படித் திருவருள் செய்தனர். (எ-று)

இறைவர் தம்மைவணங்கித் தோத்திரஞ்செய்த திருமாலுக்கிரங்கி மத்தளமுழக்கும்பணியைத் தந்தனரென்க.

ஒற்றைக்கலையைத் தரித்தலின் வெண்மதிக் கண்ணியானென்றார். இதனால் திருமாலுக்கு மனுதிகளினிறைந்த அன்புமேலிட்ட தன்மையும், இறைவனுக்குக் கருணைமேலிட்ட தன்மையும், இவ்விரண்டுங்கூடவே பணி கிட்டினமையுங் காட்டியதென்க. ()

நீண்ட மேனியா னிறைபெரு மகிழ்ச்சியிற் றிளைத்துத்
தாண்ட வந்தனக் கிசையமத் தளவிய முழக்கி
மாண்ட குந்திறன் மத்தள மாதவ னானோன்
வேண்டு மெய்வர மவன்பெற வளித்தனர் விமலர்.

(இ-ள்.) நீண்டமேனியான் நிறைபெரு மகிழ்ச்சியில்திளைந்து - உலகளந்த திருமால் தன்னுள் நிறைந்த பெரியமகிழ்ச்சியின்மூழ்கி, தாண்டவம் தனக்கு இசைய மத்தள இயம் முழக்கி - காப்புத்தாண்டவத்துக்கிணங்கமத்தளவாச்சியத்தை முழக்கி, மாண் தகும் திறல் மத்தளமாதவன் ஆனோன் - பெருமை பொருந்திய வன்மையையுடைய மத்தளமாதவனென்னும் பெயருடையவனாயினன், விமலர் வேண்டும் மெய் வரம் அவன்பெற அளித்தனர் - இறைவர் அந்நெடியோன் வேண்டிய மெய்மையாகிய வரத்தை அவன் வேண்டியவாறேயடைய வருள்செய்தனர். (எ-று)

திருமால் நடனத்தைக்கண்ட மகிழ்ச்சியில்மூழ்கி அந்நடனத்துக்கியைய மத்தளத்தைமுழக்கி மத்தளமாதவனென்னும் பெயர்பெற்று மேலுந் தான்பெறவேண்டிய வரங்களையும் அவ்விறைவரோ தரப்பெற்றனனென்க.

என்று மழியாவரமாகலின் மெய்வரமென்றார். வேண்டும்வரமென்றது இங்குக் காப்புநடனத்துக்கும் தில்லையில் எடுத்ததாண்டவநடனத்துக்கு மத்தளமுழக்க. ()

அச்சு தன்பெறு வரத்தினா லன்றுதொட் டென்றுங்
கச்சி வைப்பினின் மத்தளங் கறங்குபே ரோதை
முச்ச கத்தையு நிறைத்திட முழுவதும் புரக்கும்
பச்சி ளங்கொடி பாகனார் திருநடம் பயில்வார்.

(இ-ள்.) அச்சுதன் பெறு வரத்தினால் - திருமாலன்றுபெற்றவரத்தினால், கச்சி வைப்பினில் அன்றுதொட்டு என்றும் மத்தளம் கறங்கு பேர்ஓதை மூச்சகத்தையும் நிறைந்திட - கச்சிப்பதியில் என்றும் மத்தளத்தைமுழக்கும் பெரியவோசை மூன்றுலகத்தையும் நிறைப்ப, முழுவதும்புரக்கும் பச்சிளங்கொடிபாகனார் திருநடம் பயில்வார் - உலகமுழுதுங்காக்கும் பசிய இளங்கொடிபோன்ற பார்வதிபாகனார் அக்காப்புநடனத்தைச்செய்வார். (எ-று)

திருமால்வரம்பெற்ற நாள்தொட்டு எந்நாளுங் கச்சிப்பதியில் மத்தளவோசை மூன்றுலகத்தும்நிறையச்செய்ய காப்புநடனத்தை யிறைவர்செய்வாரென்க.

"மத்தளவியமுழக்கி மாண்டகுந்திறன் மத்தளமாதவனானோன்" என்றதை "மத்தளங்கறங்குபேரோதை மூச்சகத்தையுநிறைத்திட" என்றெடுத்துக்கூறி வலியுறுத்தியவாறென்க. (௯கக)

காப்பு நன்னடங் கண்ணுறப் பெற்றவர் கரும
யாப்பு வீழ்த்துயர் வீடுபே றெய்துவர் பிறவி
யோப்பு மத்தள மாதவீச் சரமிது வுரைத்தாம்
வாய்ப்பு றுந்தவக் கொள்கையீர் மேலினி வகுப்பாம்.

(இ-ள்.) காப்பு நல் நடம் கண் உற பெற்றவர் - நல்லகாப்புநடனத்தைக்கண்களாற் காணப்பெற்றவர்கள், கரும யாப்புவீழ்த்து உயர் வீடுபேறு எய்துவர் - இருவினைக் கட்டவிழப்பெற்று சிறந்தமுத்திப்பயனை யடைவார்கள், பிறவி ஒப்பும் மத்தளமாதவீச்சரம் இது உரைத்தாம் - பிறவித்துன்பத்தை யொழிக்கவல்லமத்தளமாதவீச்சரருடையவரலாறாகிய விதனையெடுத்துச்சொன்னோம், தவம் வாய்ப்புறும் கொள்கையீர் மேல் இனி வகுப்பாம் - தவம்வாய்க்கப்பெற்ற முன்னைத்தவமுடைய முனிவர்களே அம்மையார் மேல்நடத்திய வருளிச்செயல்களை இனியெடுத்துச்சொல்வாம்.

காப்புநடனத்தைக் காணப்பெற்றோர் கருமக்கட்டவிழப்பெற்று வீடடைவர் இது மத்தளமாதவீச்சரத்தின் வரலாறாகும்; இனி அம்மையார்மேல்நடத்திய செயலைக்கூறுவாமென்க.

உயிர்களிருவினையா னிசுந்துபடாதுவீடுபேறெய்தலே பெறும்பயனாகலின் காப்புநன்னடங் கண்ணுறப்பெற்றவர் கருமயாப்புவீழ்த்துயர் வீடுபேறெய்துவரென்றார்.

கருமபாசம்உள்ளளவும் மாயாபாசம்நீங்காது, இவ்விரண்டு முள்ளளவும் ஆணவபாசம் நீங்காது; ஆகவே இரண்டிற்கும் இடையாயுள்ள கருமபாச நீங்குமாயின் ஏனையவிரண்டும் நீங்குமாகலின் கருமயாப்புவீழ்த்துயர் வீடுபேறெய்துவரென்றும், அறிவுமாற்றலுமுடையராய் முடிவுபோய தவமுடையவராகலின் வாய்ப்புறுந்தவமென்றுங் கூறினார்.

விரைப்பசுந்துழாய் மணிமுடிப்புங்கவர்என்னுஞ் செய்யுள்முதல் வன்னியிற் படுபொருள்கள்என்னுஞ் செய்யுள்காறுங் காஞ்சித்தலம் பரமாகாசமென்றும், சூதகமுதலியவை தொடராவென்றும் அதன்சிறப்பையும், பாப்புப் பாயலோயென்னுஞ் செய்யுளாலும் வண்டினம் புகுந்தென்னுஞ் செய்யுளாலும் திருமால் மத்தளமாதவீசனை வழிபட்டமையும், போக்கருந்தவமென்னுஞ் செய்யுள்முதல் வேதமாயிரமென்னுஞ் செய்யுள்வரை அத்திருமாலுக்குக் காப்பு நடனத்தைக்காட்டிய காட்சியின் சிறப்பையும், நடிக்குமற்புதமென்னுஞ் செய்யுள்முதல் காப்புநன்னடமென்னு மிச்செய்யுள்காறும் நடனத்தைக்கண்ட திருமாலடைந்த அன்பின் பெருக்கையும், அந்நடனத்துக்கியல மத்தளமுழக்கப் பெற்றமையும், அதனால் மத்தளமாதவனெனப்பெயர் பெற்றமையும், அன்றுதொட்டு மத்தளவோசை அந்நகரத்திலென்று நீங்காமையும், அம்மத்தளவோசையுகந்த வரைக்காணப்பெற்றோரடையும் பயனையும் எடுத்துக் கூறியவாறு. (௩௪௨)

எம்பி ராட்டியங் கிறைவனைத் தொழுதுபோற் றிசைத்து
நம்பு காதலிற் றோழியர் குழாத்தொடு நடந்து
கம்ப நாயகர் திருவருட் பெருமையே கருதிச்
செம்பொன் வேய்ந்தொளி பிறங்குமா மண்டபஞ் சேர்ந்தாள்.

(இ-ள்.) அங்கு இறைவனை எம்பிராட்டிதொழுது போற்றிசைத்து - மத்தளமாதவீசர் வீற்றிருக்கு மவ்விடத்தில் அவ்விறைவனை எமதுபெருமாட்டி வணங்கித்துதித்து, நம்புகாதலில் தோழியர் குழாத்தொடும் நடந்து-தம்மைவிரும்புகின்ற ஆசைமிக்கபாங்கியர் கூட்டத்தோடும் அப்புறஞ்சென்று, கம்பநாயகர் திருவருள்பெருமையேகருதி - திருவேகம்பநாதரது அருட்பெருக்கையே பலமுறையெண்ணி, செம்பொன் வேய்ந்து ஒளி பிறங்கும் மாமண்டபம் சேர்ந்தாள் - செம்பொன்னால் விழைக்கப்பட்டு ஒளிவீசும் மகாமண்டபத்தைச்சேர்ந்தனர். (எ-று)

பிராட்டியார் மத்தளமாதவீசனைத்தொழுது அவ்விடத்தினின்றுந் தோழியரோடுசென்று மகாமண்டபத்தை வந்தடைந்தனரென்க.

தம்மைக் கைலையங்கிரியினின்றுந் தென்றிசை யேகவிடுத்தகாலத்து எண்ணிய சிறுமைகளெல்லாம் ஈண்டுப்பெருமையாகவே முடிந்ததாகலின் கம்பநாயகர் திருவருட் டெருமையே கருதினன்றார். (௩௧௩)

எண்ணில் பன்மணி யாங்கணு மிளவெயி லெறிப்ப
வண்ண மாண்டபொற் றூண்பல நிரைநிரை வயங்கக்
கண்ணி றைந்தபே ரழகினுக் கணியெனக் கவின்று
விண்ண ளாங்கொடி மிடையுமம் மண்டப வரைப்பில்.

(இ-ள்.) எண்ணில் பல்மணி யாங்கணும் இளவெயில் எறிப்ப - எண்ணிறந்த பல ரத்னங்களெவ்விடத்து மிளங்கதிர்வீச, வண்ணம் மாண்ட பல பொன்தூண் நிரை நிரைவயங்க - அழகிற் சிறந்த பலபொற் றூண்கள் வரிசை வரிசையா யொளிசெய்ய, கண் நிறைந்த பேர் அழகினுக்கு அணி என கவின்று-கண்களினிறையப்பெற்ற பெரிய அழகினுக்கு அணிகலமெனவிளங்கி, விண் அளாம் கொடிமிடையும் அம்மண்டப வரைப்பில் - ஆகாயத்தைத்தீண்டும் துவசங்கள்நெருங்கிய அம்மகாமண்டபத்தில். (எ-று)

இது மண்டபத்தின் பேரழகினைக்கூறிய தென்க.

கண் அழகல்லவைவற்றைக்காண்டற் கிணங்காமையும் அழகிற்சிறந்தவைவற்றையே பலமுறையுங் காண்டற்கவாவுதலு மியல்பாதலான் அம்மண்டபம் அழகிற்சிறந்ததென்பதுதோன்ற கண்ணிறைந்தபேரழகினுக் கணியெனக்கவின்று எனவும், மணி செந்நிறத்ததாதலின் இளவெயிலெறிப்ப எனவுங்கூறினார். (௩௧௪)

சுற்று நீடிய தோழியர் கவரிசாந் தாற்றி
பற்றி நின்றிரு பாங்கரும் பணிநனி புரியச்
சற்றி ருந்திளைப் பாறினு ளெழுந்துமீத் தருக்கு
முற்றி லாமுலை யந்நலார்க் கின்னது மொழிவாள்.

(இ-ள்.) சுற்றும் நீடிய தோழியர் கவரி சாந்தாற்றி பற்றிநின்று இருபாங்கரும் பணி நனிபுரிய சற்று இருந்து இளைப்பு ஆறினள் - சூழ்ந்துநெருங்கிய பெருங்கூட்டத் தலைவராகிய பாங்கியர்கள் சாமரைகளையும் சிவிறிகளையும்கைப்பற்றிநின்று இருபக்கங்களிலும் அசைவித்தலாகிய குற்றேவலை நன்றாகச்செய்ய அம்மகாமண்டபத்தில் சிறிதுபொழுதிருந்திளைப்பாறி, எழுந்து மீ தருக்கும் முற்றிலாமுலை அ நலார்க்கு இன்னது மொழிவாள் - மேலெழுந்து தருக்குற்றிருக்கும் முதிராத இளமுலையையுடைய அத்தோழியர்க் கிதனையெடுத்துக் கூறுவார். (எ - று)

தோழிய ரிருபாங்கினுநின்று சாமரை முதலியவற்றை அசைத்தலாகிய பணிகளைச்செய்ய அம்மையார் அம்மகாமண்டபத்தில் சற்றிருந்தெழுந்து தோழியரை நோக்கி இது கூறுவதாயினர்.

கண்ணிறைந்தபேரழகினுக் கணியென்றதனன் ஆங்காங்குங்கண்டுநிற்க அடிநோவப்பெற்றமையின் சற்றிருந்திளைப்பாறினளெனவும், அவ்விடம் நிற்குமிடமேயன்றி இருக்குமிடமன்றாகலா னெழுந்தெனவுங் கூறினர்.

சாந்தாற்றி—சிற்றாலவட்டம், இளைப்பாறினள் முற்றெச்சம், உம்மைமுற்று. ().

மன்னு யிர்த்தொகை முழுவது மாயையின் மறைப்புண்
டின்னல் செய்யிரு வினைவலைப் படுங்களிவ் வினைதா
முன்னை யெம்மையெம் மடியரைப் பிணிப்பதொன் றில்லை
யன்ன தாயினு மகிலமுந் தெளிந்துய்தற் பொருட்டு.

(இ-ள்.) மன் உயிர்த்தொகை முழுவதும் மாயையில் மறைப்புண்டு இன்னல்செய் இருவினை வலைப்படுங்கள்-நிலைபெற்ற உயிர்வர்க்கங்கள் மாயையினால் மறைபட்டு துன்பஞ்செய்யும் இருவினையாகியவலையில் சிக்குண்டிருக்கும், உன்னை எம்மை எம் அடியரை அவ்வினைதாம் பிணிப்பது ஒன்று இல்லை - உன்னையும் எம்மையும் எம்முடைய அடியாரையும் அவ்வினைகள் தம்மால்கட்டுண்டிருக்கச்செய்வது சிறிதேனுமில்லை, அன்னதாயினும் அகிலமும் தெளிந்து உய்தற்பொருட்டு - அவ்வாறாயினு முலகமெல்லாம் நன்குணர்ந்து பிழைக்கும்பொருட்டு. (எ-று)

பாங்கியரே! உயிர்களெல்லாம் இருவினைவயப்பட்டுழலும், அவ்வினை உன்னை நம்மை நம்மடியாரைப் பிணிக்கமாட்டா.ஆயினும் உலகமெல்லாந் தெளிந்துய்தற்பொருட்டெனக.

ஆன்மா அணுவியன்றென்பாரை மறுத்தற்கு மன்னெனவும், ஒன்றென்பாரைமறுத்தற்கு உயிர்த்தொகை முழுவதுமெனவும், ஆன்மாவைக்காட்டாது தனுவாதிகளைக்காட்டல் மாயையின்காரியமே யாதலால் மாயையான் மறைப்புண்டெனவும், பிறப்பிறப்பாகிய துன்பத்தைக்காட்டாது விருப்புவெறுப்பைக்காட்டல் கன்மமலத்தின் காரியமாதலால் இன்னல் செயிருவினைஎனவும், அவ்வினை பலபிறப்பைக்காட்டலால் அவற்றை வலைஎனவும், இவ்விருமலமும் ஒன்றின்மேலொன்று தவிடுமிபோல் ஆணவமலத்தோ டொன்றாய்ப் பிணித்திருப்பதாதலால் மலங்களைப் பிணிப்பதுஎனவும், இம்மலங்கள் இறைவனுக்கும் இறைவிக்கும் இவராளானோர்க்கும் இன்றாகலான் ஒன்றில்லை எனவும், அம்மையார் உலகமாதாவாகலான் தம்மக்கட்குண்டாகிய இருவினைத் துன்பத்தை மாற்றுவதற்குக் கருவியாகிய சிவார்ச்சனையைத் தாமேயியற்றி அத்துன்பத்தைப் போக்கி மக்கட்குப் பிணிப்பிதுஎனவும், அப்பிணிப்பை யவிழ்க்குங் கருவியிதுவெனவுங் காட்டுவது கடனாகலான் அகிலமுந்தெளிந் துய்தற்பொருட்டெனவுங் கூறினார்.()

ஆட லான்விழி புதைத்தலி னாரிருட் படலம்
மூட யாவையு மிடர்க்கடன் மூழ்கிய வதனாற்
கூடும் வல்வினை கழுவுறக் காஞ்சியைக் குறுகி
நீட நீயெமை யருச்சனை யியற்றுதி நெறியால்.

(இ-ள்.) ஆடலான் விழி புதைத்தலின் ஆரிருட்படலம் யாவையும் மூட இடர்க்கடல் மூழ்கிய - திருவிளையாட்டால் நீகண்களைப்புதைத்தலினால் மிக்க இருட்படலம் எல்லாவற்றையு மறைத்தது (உயிர்கள்) துன்பக்கடலில் மூழ்கின, அதனால் கூடும் வல்வினை கழுவுற - அதனாற்சூழ்ந்த கொடியவினை கழுவாயெய்த, காஞ்சியை குறுகி நீ எம்மை அருச்சனைநெறியால் நீட இயற்றுதி - காஞ்சிப்பதியையடைந்து நீயெம்மை வழிபடும் அருச்சனையை ஆகமமுறையானீங்காது செய்துவருவாய். (எ-று)

நீவிளையாட்டாற் கண்களைப்புதைக்க விருள் உலகைமறைத்தது, உயிர்களெல்லா மறிவிழந்தன, அதனாலுன்னைச்சூழ்ந்த வினையொழிய நீகாஞ்சியையடைந்து ஆகமவிதியான் அருச்சனை செய்வாயெனக.

விழிபுதைத்ததனு லுண்டாய விடரோ கடல்போன்றது, அதனுலுண்டாயவினை யோ வல்வினை, ஆகலிற் கமூவாயாகக்கூறிய வருச்சனைவினை வலிந்திருக்கவேண்டுமென் பதுதோன்ற நீட நீயெமையருச்சனையியற்றுதி என்முர். (ருகஎ)

என்று மந்தரப் பறம்புறை யெம்பிரான் விடுப்ப
மன்ற விந்நகர்க் கெய்தினன் வளரிள முலையீ
ரின்று நான்புரி பூசனைக் கிசையவென் பணியி
னின்று வேண்டுவ தம்மினென் றுணர்த்தின ணிமலை.

(இ-ள்.) என்று மந்தரப்பறம்பு உறை எம்பிரான்விடுப்ப மன்ற இந்நகர்க்கு எய்தினன் - என்று மந்தரபருப்பதத்தில் வீற்றிருக்கு மிறைவ ரென்னைவிடுக்க உண்மையாக இந்நகரத்தை வந்தடைந்தேன், வளர் இள முலையீர் இன்று நான்புரிபூசனைக்கு இசைய - (ஆகையால்) வளர்கின்றஇளமுலையையுடைய பாங்கிமாரே! இந்நாள் நான் செய்யும் பூசனைக்குப்பொருந்த, என்பணியில் நின்று வேண்டுவதம்மின் என்று நிமலை உணர்த்தினள் - என்னுடைய ஏவலில்நின்று வேண்டுவனவற்றைக் கொண்டுவாருங்களென்று அம்மையாரறிவுறுத்தினர். (எ-று)

மந்தரபருப்பதத்திற் கமூவாயியற்றுதியென்றெமதிறைவர்விடுக்க யான் இங்கு வந்தனன் தோழிமாரோ நீயிர் மாறுபடாதுநின்று வேண்டுவனவற்றைத் தம்மினென்று கூறினுரென்க.

திருக்கண்புதைத்ததும், கமூவாயுரைத்ததும், காஞ்சிக்கு ஏவியதும் மந்தரபருப்பதத்தி லென்றுணர்த்த என்று மந்தரப்பறம்புறை யெம்பிரான் விடுப்ப எனவும், விழிபுதைத்தது விளையாட்டேனும் அதனுல் விளைந்த வினையும் கூறியகமூவாயும் அஃதியற்ற விங்குவந்ததும் விளையாட்டன்றென்றுணர்த்த மன்ற எனவும், கமூவாயாக வியற்றும் இதில் நானுதிகங்களுண்டாயின் இதற்குக் கமூவாயெங்ஙனந் தேடுவேனென்றுணர்த்த பூசனைக்கிசைய வென்பணியினின்று வேண்டுவதம்மின் எனவும், பூசனைக்குச்சென்றபின் உரையாடுதலிமூக் கென்பதுணர்த்த உணர்த்தினணிமலை எனவுங் கூறினுர். (ருகஅ)

உரைத்த வாய்மொழி கேட்டலு முளங்களி துளும்பி
விரைத்த கூந்தலார் மென்மல ரடிதொழு தெழுந்து
திரைத்த பாற்கட லமிழ்தனுய் செய்பணி வெவ்வே
றரத்த வாய்திறந் தெங்களுக் கருளென வருள்வாள்.

(இ-ள்.) விரைத்த கூந்தலார் உரைத்த வாய்மொழி கேட்டலும் - நறுமணங்கமழுங் கூந்தலையுடையதோழிமார் அம்மையார்கூறிய திருவாக்கைக்கேட்டலும், உளம் களிதுளும்பி மென்மலர் அடிதொழுது எழுந்து - மனமிகமகிழ்ந்து மெல்லியமலர் போன்ற பாதங்களைப்பணிந்தெழுந்து, திரைத்தபாற்கடல் அமிழ்து அன்னுய் - அலைகளையுடைய பாற்கடலிற் றேன்றிய அமிர்தத்துக் கொப்பானவரே, செய்பணி வெவ்வேறு எங்களுக்கு அரத்தவாய்திறந்து அருள் என்ன அருள்வாள் - யாங்கள்செய்யத் தகும்பணிகளை இதுவிதுவென்று அடியோங்களுக்குச் சிவந்ததிருவாய்மலர்திறந் தருள் செய்வாயென்றுகேட்க அம்மையார் கூறுவார். (எ-று)

* தோழிமார்கேட்டு யாங்கள் செயத்தகும்பணிகள் இதுவிது வென்று கூற வேண்டுமென்றுகேட்க அம்மையார் கூறுவாரென்க.

தோழிமார் பலராதலால் அவருள் இது இது செய்யத்தக்கார் இவரிவரென்று தெரியவேண்டலின் செய்பணி வெவ்வேறெங்களுக் கருளென்றார். (௯௧௯)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

சீலந் தாங்குவிண் ணவரும் விழைதகு தீம்புனற் கூவல்
காலந் தோறும்யா னுடிக் கருமமி யற்றுதற் கொன்று
மாலந் தாங்கிய கண்டத் தடிகளுக் காட்டுதற் கொன்று
மேலந் தோய்ந்திருள் கூரு மீர்ங்குழ லவர்சிலர் கழ்மின்.

(இ-ள்.) ஏலம்தோய்ந்து இருள்கூரும் ஈர்ம் குழலவர் சிலர் - நறுமணங்கமழ்ந்து மிக்ககருமையோடு செய்ப்பசைகூடிய கூந்தலையுடைய தோழிமார்களே உங்களிற்சிலர், காலந்தோறும் யான் ஆடி கருமம் இயற்றுதற்கு சீலம் தாங்கு விண்ணவரும் விழைதகு தீம்புனல் கூவல் ஒன்றும் - காலங்கடோறும்யான் நீராடி நித்தியகருமங்களை முடித்துக்கொள்வதற்குச் சுத்தமுடைய தேவர்களும் விரும்பத்தக்க இனிய நீர்சுரக்கும் ஒருகிணறும், ஆலம் தாங்கிய கண்டத்து அடிகளுக்கு ஆட்டுதற்கு ஒன்றும் - (அதுபோலும்) நீலகண்டத்தையுடைய இறைவருக்கபிடேகஞ் செய்தற்கோர்கிணறும், அகழ்மின் - தொடுங்கள். (எ - று)

(தோழிமார் வேண்டுகோளின்படி அம்மையார் அவருட் டலைவரைநோக்கி) நீங்கள் யானீராடுதற்குரிய கிணறொன்றும் இறைவரபிடேகத்திற்குரிய கிணறொன்றுந் தொடுங்களென்று கூறினளென்க. (௯௨௦)

அலைகள் வெண்மணி வீசி யதிர்புன னதிக்கரை யருகு
மலர்கள் பச்சிலை கனிகண் மல்கிய மயிலைவில் லந்தண்
பலவு மாதிய பலவும் பயில்வுறு நந்த வனங்க
ளிலைமு கப்பொலம் பூணி னெழுமுலை யவர்சிலர் புரிமின்.

(இ-ள்.) இலைமுகம் பொலம் பூணின் எழுமுலையவர் சிலர் - இலைமுகம்போலும் வடிவமைந்த பொன்னணிபூண்ட பெரியதனங்களையுடைய சில தோழிமாரை நோக்கி, அலைகள் வெள் மணிவீசி அதிர்புனல் நதி கரை அருகு - அலைகள் வெள்ளிய முத்துக்களை யெறிந்தொலிக்கின்ற நீர்மயமாகிய நதிக்கரையினருகே, மலர்கள் பச்சிலை கனிகள் மல்கிய மயிலை வில்லம் தண்பலவுமாதிய பலவும் பயில்வுறு நந்தவனங்கள் புரிமின் - மலர்களும் பசிய இலைகளும் கனிந்தகனிகளும் நிறைந்த இருவாட்சியும் வில்வமுந் தழைந்த பலாவுமாகிய பலவகை விருட்சங்களும் நிறைந்துள்ள நந்தனவனங்களை யுண்டாக்குங்கள். (எ-று.)

தோழிமார் சிலரைநோக்கி நதிக்கரையின் பக்கத்தில் மலர் இலை கனி இவைகளைத்தருகின்ற மயிலை வில்வம் பலா முதலியவை நிறைந்துள்ளனவாக நந்தவனங்களுண்டாக்குங்களென்க.

மலரை - மயிலை, இலையை - வில்வம்; கனியை - பலா தருவனவாகலான் நிரனிறையா மயிலை வில்வந் தண்பலா என்றார். ஆதி என்றதனால் தாமரை மல்லிகை முதலிய மலர்வகையும், பஞ்சவில்வமுதலிய பத்திரவகையும், வாழை மாமுதலிய கனிவகையுங் கொள்க. (௯௨௧)

நறிய சந்தன விழுது நாறிய மான்மதச் சாந்தும்
வெறிகு லாங்கருப் பூரம் விரைகெழு குங்குமம் பிறவுந்

செறிவு கொண்டபூங் கதிரின் றெய்வத மணியணி விலையிட்
டறிவ ரும்பரி வட்ட மாதிய சிற்சிலர் கொணர்மின்.

(இ-ள்.) சிற்சிலர் - சிற்சிலதோழிமாரைநோக்கி, நறிய சந்தனவிழுதும் நாறிய மான்மதச்சாந்தம் வெறிகுலாம் கருப்பூரம் விரைசெழு குங்குமம் பிறவும் - நல்ல சந்தனக்குழம்பும் நறுமணங்கமழும் மிருகமதத்தைதலமும் எங்கும் மணம்வீசும் பச்சைக் கருப்பூரமும் மணம்பொருந்திய குங்குமப்பூவும் இவைபோன்ற ஏனையவாசனைத்திரவியங்களும், செறிவுகொண்ட பூங்கதிரின் தெய்வதமணி அணி விலையிட்டு அறிவரும் பரிவட்டம் ஆதிய கொணர்மின் - செறிந்த அழகிய கிரணங்களைப்பரப்புந் தெய்வத்தன்மை பொருந்திய ரத்நாபரணங்களும் விலைவரம்பிகந்த பரிவட்ட முதலானவைகளுங் கொண்டுவாருங்கள். (எ-று)

தோழிமாரே சந்தனமுதலிய வாசனைத்திரவியவகைகளையும் ரத்நாபரணமுதலிய அணிவகைகளையும் பரிவட்டமுதலிய ஆடைவகைகளையுங் கொணருங்களென்க.

பிறவென்றது - பாத்தியத்துக்குரிய குங்குமமுதலிய வாறும், ஆசமனத்துக்குரிய ஏலமுதலாகிய வேழும், அர்க்கியத்துக்குரிய பால்முதலிய வெட்டுமாம். ஆறுவன— குங்குமம், சந்தனம், அறுகு, கடுகு, வெட்டிவேர், எள்ளு. ஏழாவன - வெட்டிவேர் ஏலம், இலவங்கம், பச்சைக்கற்பூரம், வராளம், திரிபலை (கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்) சந்தனம். எட்டாவன - சலம், பால், தர்ப்பைநுனி, கோதுமை, வெண்கடுகு, அரிசி, எள், நெல். ஆதி என்றது வஸ்திராபரணங்களின் பேதமாம். (௩௨௨)

ஆனி னைந்துட னைவே றமுதமுந் சிலர்சிலர் தம்மின்
றேன ளாந்திரு வமுது முதலிய சிலர்சிலர் தம்மின்
வான ளாவிய கோயின் மாளிகை யெங்கணு மணிகள்
கான ளாமலர் பட்டிற் கவினலஞ் சிலர்சிலர் புனைமின்.

(இ-ள்.) சிலர்சிலர் ஆனின் ஐந்துடன் ஐவேறு அமுதமும் தம்மின் - சிற்சிலதோழிமாரைநோக்கி பஞ்சகவியமும் பஞ்சாமிர்தமுங் கொண்டுவாருங்கள், சிலர்சிலர் தேன் அளாம் திருவமுது முதலியதம்மின் - சிற்சில பாங்கிமாரைநோக்கித் தேனொடுகலந்த அன்னவகைமுதலிய நிவேதனங்களைக் கொண்டுவாருங்கள், சிலர் சிலர் வான் அளாவிய கோயின் மாளிகை எங்கணும் மணிகள் கான் அளாமலர் பட்டில் கவின் நலம் புனைமின் - சிற்சில தோழிமாரைநோக்கி ஆகாயத்தை யளாவிய திருக்கோயிலைச் சூழ்ந்துள்ள மாளிகைமுதலிய எவ்விடங்களினும் இரத்தினங்களாலும் நறுமணங்கமழும் மலர்களாலும் பட்டுவஸ்திரங்களாலும் அழகிய வலங்காரங்களைச் செய்யுங்கள். (எ-று)

சிலரைப் பஞ்சகவ்வியமுதலிய அபிடேகத் திரவியங்களையும் சிலரை மத்வான்னமுதலிய நிவேதனங்களையும் கொண்டுவாருமென்றும், சிலரை ரத்னமாலை முதலியவற்றால் அலங்காரஞ்செய்யுமென்றுங் கட்டளையிட்டனளென்க.

பால் தயிர் நெய் கோமயம் கோசலம் என்பவைகளை விதிப்படிகூட்ட அவற்றைப் பஞ்சகவ்வியமெனவும், பால் தயிர் நெய் தேன் சர்க்கரை என்பவைகளை விதிப்படி கூட்ட அவற்றைப் பஞ்சாமிர்தமெனவும், இவற்றோடு முப்பழங்களைக் கூட்ட அவற்றைப் பலபஞ்சாமிர்தமெனவுங்கொள்க. நிவேதிக்கப்படு மன்னங்கள் மத்வன்னம் ததியன்னம், பாயசான்னம், கிருசரான்னம், குளான்னம், மூற்கான்னம், சுத்தான்னமென எழுவகைப் படுதலால் தேனளாந்திருவமுதுமுதலிய என்றார். (௩௨௩)

இன்ன வாறிம யத்தி னிளம்பிடி யேவுத லோடு
மன்ன தோழியர் பலரு மையென வடியிணை தொழுது
முன்னர் யாஞ்செய்து மென்றங் கொருவரி னொருவர்முன் முடுகித்
துன்னு காதலின் மூண்டு தொழிறலை நின்றனர் மன்னோ.

(இ-ள்.) இமயத்தின் இளம்பிடி இன்னவாறு ஏவுதலோடும் - பார்வதியா ரிவ்வாறு பாங்கிமாருக்குக் கட்டளையிடவும், அன்ன தோழியர் பலரும் ஐ என அடியிணை தொழுது - அப் பாங்கிமாரெல்லாம் (எங்கள்) தலைவியே என்று திருவடியைப்பணிந்து, யாம் முன்னர்செய்தும் என்று அங்கு ஒருவரின் ஒருவர் முன்முடுகி - (யாங்க ளிப்பணிகளை) முன்னர் செய்கின்றோம் முன்னர் செய்கின்றோமென்று அங்கு ஒருவர் செல்வதற்குமுன் மற்றொருவர் அவருக்கு முன்விரைந்து, துன்னு காதலின் மூண்டு தொழில் தலைநின்றனர் - நெருங்கியவாசையில் மிகுந்து தத்தமக்கு விதித்த தொழில்களில் தலைமையாக நின்றனர். (எ-று,)

இறைவி தோழிமாரைச்செய்யும்பணிகளிலேவ அவர்கள் அவ்வப்பணியிற் றலைப்

"பொருப்பில் வேந்தனும் விருப்பில் வந்தெய்தி மாதவம்புரிந்தருளுதற் கமைந்தவளத்தொடும் பரிசனங்களை விடுத்தான்" எனப் பெரியாரும் பணித்தலால் இன்னவாறிமயத்தினிளம்பிடியேவுதலோடுமென்றார். அன்னதோழிமாரென்றது முற்சிலர் சிலரொன வழைக்கப்பட்ட அம்மையாருடன்வந்த தோழிமார்கட்கெல்லாம் தலைமையாயுள்ள உமாபத்திரை, கீர்த்திமதி, அம்பிகை, பந்திரை, மங்களை, வேணு, குசலை, கமலாக்ஷி, கலாவதி என்னு மிவ்வொன்பதின்மரை. இவர்களும் இவர்களேவல்வழி நின்றவரும் அம்மையார் விதிந்தனவற்றைச்செய்து முடித்தவாகளெனக்கொள்க.

எம்பிராட்டி என்னுஞ் செய்யுள் முதல் இச்செய்யுள் வரையில் அம்மையார் மத்தளமாத வீசரைத்தரிசித்து மகாமண்டபஞ்சேர்ந்து தோழிமாரை நோக்கித் தாம் காஞ்சிநகரத்துக்குவந்த காரணத்தை யெடுத்துக்கூறியதூஉம், பின் அவர்கள் வேண்டுகோளின்படி பணிவகுத்ததூஉம், அவர்கள் ஆணைகடவாமல் அப்பணியிற் றலைப்பட்டு முன்னின்றதூஉங் கூறியவாறு. (௩௨௪)

தெவ்வடு வேற்க ணுமாபத் திரையொடு கீர்த்திம தியென்
றிவ்விரு மாதர்வ டக்குந் தெற்கும கழ்ந்திரு கூவல்
கௌவை நெடுந்திரைக் கங்கை காளிந்தி யங்கண் மடுத்தா
ரவ்விரு தீர்த்தங் குடைந்தோ ரல்லற் பவப்பிணி நீப்பார்.

(இ-ள்.) தெவ் அடு வேல்கண் உமாபத்திரையொடு கீர்த்திமதி என்று அ இரு மாதர் - பகைவரைக்கொல்லும் வேல்போன்ற கண்களைப்படைத்த உமாபத்திரை கீர்த்திமதியென்னு மிரண்டு மங்கைமாரும், இருகூவல் வடக்கும் தெற்கும் அகழ்ந்து கவ்வை நெடு திரை கங்கை காளிந்தி அங்கண் மடுத்தார் - இரண்டு கிணற்றை வடதிசையிலும் தென்றிசையிலும் தொட்டு ஒலிக்கும் பெரிய அலைகளையுடைய கங்கை காளிந்தியென்னு மிருநதிகளையும் அக்கூவல்களை இடமாகக்கொண்டிருக்கச் செய்தனர், அ இரு தீர்த்தம் குடைந்தோர் அல்லல் பவம் பிணி நீப்பார் - அவ்விரண்டுதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தார் அல்லலாகிய பிறவிநோயைநீங்குவார்கள். (எ-று)

உமாபத்திரை கீர்த்திமதி யென்பார் வடக்கிலுந் தெற்கிலுங் கிணறுகளெடுத்து அவற்றில் கங்கைகாளிந்தியென்னு நதிகளை நிரம்பச்செய்தனர். அதனால் அத்தீர்த்தத்தில் மூழ்கப்பெற்றோர் பிறவிநோய் நீப்பரென்க.

நீராடுந்தீர்த்தம் புண்ணியதீர்த்தமாயிருத்தல் வேண்டுமென்னும் விதிதோன்ற இருகூவல் கங்கைகாளிந்தியங்கண் மடுத்தாரென்றார். (௩௨௫)

வார்ந்த நெடுஞ்சடை மோலி யேகம்ப வாணர் தமக்கு
நேர்ந்த திருவமு தாக்க நீடு மனற்கிறை திக்கி
னீர்ந்தண் மணிப்புனற் கூவ லிடம்பெறத் தொட்டு வனப்பி
னார்ந்த திருமடைப் பள்ளி யமைத்தன ரானொரு சாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், வார்ந்த நெடுஞ்சடை மோலி ஏகம்ப வாணர்தமக்கு நேர்ந்த திருவமுதாக்க - நீண்ட பெரியசடைமுடியையுடைய திருவேகம்பனார்க்கு இனிய திருவமுது செய்ய, நீடும் அனற்கிறை திக்கில் ஈர்ந்தண் மணி புனல் கூவல் இடம்பெற தொட்டு - நீண்ட சுவாலையையுடைய அக்கிதேவனுக் கிடமாகிய தென்கீழ்த் திசையில் குளிர்ச்சிமிக்க அழகிய நீரையுடைய கிணறொன்று விசாலமாக வெடுத்து, வனப்பின் ஆர்ந்த திருமடைப்பள்ளி அமைத்தனர் - அழகிற் சிறந்த பொலிவினையுடைய மடைப்பள்ளி யமைத்தனர். (எ-று)

தோழியருட் சிலர் அக்கிதிசையில் பெரிய கிணறொன்றெடுத்துத் திருமடைப்பள்ளி யமைத்தனரென்க. (௩௨௬)

நிலவு மெருக்கு மணிந்த நீண்முடி சாத்திய மேல்பாற்
குலவு நதிக்கரை ஞாங்கர்க் கோதறு தூய வரைப்பிற்
பலருந் தொழத்தகு மேன்மை பயிலம்பி காவன மென்னு
மலர்நிறை நந்த வனங்க ளாக்கின ராங்கொரு சாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், நிலவும் எருக்கும் அணிந்த நீண்முடி சாத்திய - சந்திரனையும் எருக்கமலரையும் அணிந்த பெரியதிருமுடிமேல் சாத்துதற்கு, மேல்பால் குலவு நதிக்கரை ஞாங்கர் - மேற்றிசையில் விளங்கும் வேகவதியின் கரையருகில், கோதறு தூயவரைப்பில் - குற்றமற்ற சுத்தநிலத்தில், பலருந் தொழத்தகும் மேன்மைபயில் அம்பிகாவனம் என்னும் ஆங்கு அலர்நிறை நந்தவனங்கள் ஆக்கினர் - தேவர்முதலிய பலராலும் வணங்கத்தக்க மேம்பாட்டினையுடைய அம்பிகாவனமென அவ்விடத்தில் மலர்கணிறைந்த நந்தவனங்களை யுண்டாக்கினர். (எ-று)

தோழியருட்சிலர் வேகவதிக்கரையில் அம்பிகாவனமென நந்தவனங்களுண்டாக்கினரென்க. சாத்த எனனுஞ் செயவெனெச்சம் திரிந்துநின்றது.

நந்தவனம் - நதிக்கரையிலமைத்தல் உத்தமமேயன்றி நறுமணமுமுளதாகலான் நதிக்கரைஞாங்கர்க் கோதறுதூயவரைப்பிலெனவும், தன்பெயராலியற்றி அதில் மலரெடுத்தல் விதியாகலான் அம்பிகாவனமெனவும், அதில் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூமுதலிய நால்வகைமலரும் நிறைந்திருத்தலான் மலர்நிறை நந்தவனமெனவும், இம்மேம்பாடு எவ்வுலகத்து மிலதாகலான் பலருந்தொழத்தகு மேன்மைபயிலெனவும், இம்மலர்கள் இறைவன்முடியில் ஒற்றைக்கலைபோலும் நீங்காதுமணஞ்செய்தல் துணிபாகலான் நிலவுமெருக்குமணிந்த நீண்முடிசாத்திய எனவுங் கூறினர். (௩௨௭)

நெட்டிலை வாழைக் குலங்க ணெருப்புறழ் செம்பழம் பூக
மட்டு மதுக்கழை தூணத் தியாத்தவிர் காழ்வட நாற்றி
மட்டவிழ் பூந்தொடை தூக்கி வன்ன விதானம் விதானித்
திட்டு மணித்திருக் கோயிற் கெழில்புரிந் தாரொரு சாரார்.

(இ-ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், நெடு இலை வாழை குலங்கள் - நீண்ட இலைகளையுடைய வாழைமரங்களையும், நெருப்பு உறழ் செம்பழம்பூகம் - நெருப்பை யொத்துச் சிவந்தபழங்களையுடைய கமுகுகளையும், மட்டு மது கழை - இனிய சாற்றை யுடைய கரும்புகளையும், தூணத்து யாத்து - தம்பங்களிற்கட்டி, அவிர் காழ் வடம் நாற்றி - ஒளிவீசும் மணிவடங்களைத் தொங்கவிட்டு, மட்டு அவிழ் பூந்தொடை தூக்கி - நறுமணங்கமழும் பூமாலைகளை வரிசையாகவிட்டு, வன்னவிதானம் விதானித்திட்டு - பல நிறங்களையுடைய மேற்கட்டுகளை விரித்துக்கட்டி, மணி திருக்கோயிற்கு எழில் புரிந்தார் - ரத்நமயமாய் விளங்கும் அழகியகோயிலுக்கு அலங்காரஞ்செய்தார்கள்.

தோழிமாருட்சிலர் வாழை கமுகு கரும்பு முதலியவற்றை யொன்றாகச்சேர்த்துத் தூண்களிற்கட்டியும் மணிவடங்களையும் பூமாலைகளையும் பந்தர்களிற் றொங்கவிட்டும் சித்ரவிதானங்களை மேலேகட்டியும் கோயின்முழுவதும் அலங்காரஞ் செய்தனரென்க.

வாசக் கொழும்புழு கப்பி வண்ண மலர்த்துக ளட்டி
வீசிச் செழும்பனி நன்னீர் விரைகமழ் தீம்புகை யேற்றிக்
காசைத் தகர்த்துக் கரைத்துக் கவின்றிரு மாளிகைச் சுற்று
மாசைச் சுவர்த்தல முற்றுஞ் சித்திரித் தாரொரு சாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், கவின் திருமாளிகை சுற்றும் ஆசை சுவர்தலமுற்றும் - அழகுமிகுந்த திருமாளிகைச் சுற்றிலுமுள்ள பொன்மயமான சுவர் முழுவதிலும், வாசம் கொழும் புழுகு அப்பி - நறுமணங்கமழும் புனுகையப்பி, வண்ணமலர் துகள் அட்டி - (அதன்மேல்) அழகிய மலர்களிலுள்ள மகரந்தப்பொடிகளைச் சேர்த்து, செழும்பனி நல் நீர் வீசி - மிகவுமுயர்ந்த பனிநீரைத்தெளித்து, விரைகமழ் தீம்புகை ஏற்றி - வாசம்வீசம் நல்ல அகிற்புகையை யதிற்பொருந்தவூட்டி, காசை தகர்த்து கரைத்து சித்திரித்தார் - பொன்னைத்துகளாக்கிக் கரைத்து அதனாற் பல வகைச் சித்திரங்களை யெழுதினார்கள். (எ-று)

தோழிமாருட்சிலர்திருமாளிகைச்சுவரில் முன் புனுகப்பிமகரந்தங்களைப் பொதித்து பனிநீரைத் தெளித்து அகிற்புகையூட்டி அச்சுவர்த்தலத்தைத் தாம் சித்திரிப்பதற்குரியபதமாக்கிப் பொன்னைப்பொடியாக்கிக் கரைத்துப்பின்சித்திரித்தார்களென்க.

வீறும் விரைப்பா ளிதங்கள் வெறுவியவல் சியக்காரச்
சோறு புளிந்தயிர்ச் சொன்றி துப்புடை யேனைப் புழுக்க
ளூறு நறுங்குய்க் கருனை முதலிய நால்வகை யுண்டி
யாறு சுவைத்திறம் விம்ம வட்டன ராலொரு சாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், வீறும் விரைபாளிதங்கள் - வாசனை யான் மிக்குவிளங்கும் கலவைகள் கூட்டிச்சமைத்த அன்னங்களும், வெறுவிய வல்சி - கலவைகள்கலவாத சுத்தான்னமும், அக்காரச்சோறு - சருக்கரைப் பொங்கலும், புளிந்தயிர் சொன்றி - புளிப்புமிக்க தயிரன்னமும், துப்புடை ஏனைபுழுக்கல்

இவைபோலும் இன்சுவையைத்தரும் ஏனைய அன்னவகைகளும், நாறும் நறு குய் கருணைமுதலிய நால்வகையுண்டி - நறுமணங்கமழந் தாளித்த பொரிக்கறி முதலிய நால்வகையுணவுகளும், ஆறு சுவைதிறம் விம்ம அட்டனர் - அறுவகைச் சுவைமே லிடச் சமைத்தனர். (எ-று.)

தோழிமாருட்சிலர் பலவகைக் கலவையன்னங்கள் சுத்தான்னம் சருக்கரைப்பொங்கல் ததியோதனம் ஏனையவன்னங்கள் பொரியல்வகைகள் நால்வகையுண்டிகள் அறுசுவைக்கறிகள் சமைத்தனரென்க.

வீறு விரைப்பாளிதங்கள் - சரஷபான்னம், மாஷான்னம், ஆமிலான்னம், திலான்னம் முதலியன. துப்புடை ஏட்டப்புழுக்கல் - மத்வானனம், பாயசான்னம், முற்கான்ன முதலியன. நால்வகையுண்டி - குடிப்பன, நக்குவன, கடிப்பன, விழுங்குவன. அறுசுவை - கைப்பு, காப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, தித்திப்பு. (கூகூ0)

ஒட்டொழி யாநறுந் தேற லொண்மலர் குற்றனர் கொண்டு
சூட்டொடு கண்ணிக ளிண்டை தொங்கன் முதற்பல வாக்கி
யீட்டு நறும்புகை யேற்றி யீர்ம்பனி நீர்தெளித் தம்பொற்
சேட்டொளி மூழிய மைத்துச் சேர்த்தன ராலொரு சாரார்.

(இ-ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், ஒட்டு ஒழியா நறுந்தேறல் ஒள்மலர் குற்றனர் கொண்டு - ஒழுகுதலொழியாத நறுமணங்கமழும் தேனையுடைய ஒள்ளிய மலர்களை யாராய்ந்தெடுத்துக் கொணர்ந்து, சூட்டொடு கண்ணிகள் இண்டை தொங்கல் முதல் பலவாக்கி - நுதலணிமாலை தண்டமாலை சுருக்குமாலை தொடுத்தமாலை முதலிய பலமாலைகளாத்தொடுத்து, ஈட்டும் நறும்புகை ஏற்றி - கூட்டும் நல்ல புகைகளைக் கூட்டி, ஈர்ம் பனிநீர் தெளித்து - குளிர்ந்த பனிநீரைத்தூவி, சேடு ஒளி அம்பொன் மூழி அமைத்து சேர்த்தனர் - ஒளிமிக்க அழகிய பொன்னாற்சமைத்த குடலையில் நிறைத்துவைத்தார்கள். (எ-று.)

தோழிமாருட்சிலர் தேனுறுத நறுமலர்களைக் கொண்டுவந்து சூட்டு கண்ணி இண்டை தொங்கல் முதலாகச் சொல்லப்பட்ட மாலைகளாகத்தொடுத்து நறும்புகையேற்றி பனிநீர்தெளித்துக் குடலையில் நிறைத்துவைத்தார்களென்க. (கூகூக)

செம்பொ னிழைத்த தசும்பிற் றெய்வத மந்திர மோதி
யம்பொ னிழைந்துகில் வாய்ப்பெய் தலையெறி தீர்த்தம் வடித்துக்
கொம்பி னெசிந்தனர் கொண்டு குளிர்மணிக் கோயிலி னுள்ளாற்
பம்பு நிறைந் ணிறையப் பாய்த்தின ராலொரு சாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், செம்பொன் இழைத்த தசும்பில் - செம்பொன்னாற்செய்த குடங்களில், தெய்வதமந்திரம் ஓதி அம்பொன் இழை துகில் வாய் பெய்து அலை எறி தீர்த்தம் வடித்து - தெய்வத்தன்மை பொருந்திய மந்திரங்களையுச்சரித்து அழகிய பொன்னிழையாலாகிய வஸ்திரத்தை அக்குடங்களின் வாயைக்கட்டி அலைவீசும் நீரைவடித்து, கொம்பின் ஒசிந்தனர் கொண்டு - பூங்கொடிபோலும் அசைந்து நடந்து அந்நீர்க்குடத்தை யெடுத்துக்கொண்டு, குளிர்மணி கோயிலின் உள் - குளிர்ந்த ரத்னங்களாலமைக்கப்பட்டுள்ள திருக்கோயிலினுள், பம்புநிரைகள் நிறைய பாய்த்தினர் - பெரிய பாத்திரவரிசைகளில் நிறையப்பெய்தார்கள். (எ-று)

தோழிமாருட்சிலர் பொற்குடங்களில் மந்திரத்தை யுச்சரித்து நீரை வடித்தெடுத்துப்பெரிய அபிஷேகபாத்திரங்களில் நிறையப்பெய்தார்களென்க. ஆல்-அசை. ().

சுடர்விடு மாடகச் செம்பொற் றூமணி வட்டகை யோடு
படலிகை யாதிகள் சுத்தி பண்ணி யமைத்து நறும்பூ
வடைதளிர் யாவையு மாய்ந்தங் கார்த்தி மணத்தவே லாதிக்
கடிதிரு மஞ்சன மட்டிக் களிமிகுந் தாரொரு சாரார்.

(இ-ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், சுடர்விடும் ஆடகச்செம்பொன் தூமணி வட்டகையோடு படலிகையாதிகள் சுத்திபண்ணியமைத்து - ஒளிவீசுமாற்றுயர்ந்த செம்பொன்னாற் செய்யப்பட்டு குற்றமற்ற ரத்நங்கள்பதித்த வட்டகைகளோடு மணி முதலிய பூசாபாத்திரங்களைச் சுத்திசெய்தமைத்து, நறும்பூ அடைதளிர் யாவையும் ஆய்ந்து அங்கு ஆர்த்தி - நறுமணங்கமழு மலர்வகைகள் பத்திரவகைகள் முதலிய எல்லாவற்றையு மாராய்ந்து அவ்விடத்தில் வரிசையாகவைத்து, மணத்த ஏலாதி கடி திருமஞ்சனம் அட்டி களிமிகுந்தார் - வாசம்வீசும் ஏலமுதலிய வாசனைத்திரவியங்களைத் திருமஞ்சனதீர்த்தத்திற்கலந்து வைத்து மனமகிழ்ந்திருந்தனர். (எ-று)

தோழிமாருட்சிலர் வட்டகைமுதலிய பூசாபாத்திரங்களைச் சுத்திசெய்தமைத்தும் பத்திர புஷ்பங்களையாராய்ந்து வைத்தும் திருமஞ்சனதீர்த்தத்தை ஏலமுதலிய வாசனைத்திரவியங்களோடு கலந்து வைத்து மகிழ்ந்தனர்.

பாத்யாசமனார்க்கியங்களுக்குரிய வட்டகைகளையும் விக்கினமகற்றுதற்குரிய மணியையும் அபிஷேக வலங்கார நைவேத்தியங்களுக்குரிய பாத்திரங்களையும் விதிப்படி மந்திரமுறையாற் சுத்திசெய்தமைத்தலியல்பாகலான் வட்டகையோடு படலிகையாதிகள் சுத்திபண்ணியமைத்தெனவும், தாழம்பூ குறுக்கத்தி காட்டுமுல்லை வேங்கைமுதலியவும் வாசனையும் பரிசுத்தமுமில்லாதனவு மாகிய பத்திர புஷ்பங்கள் அருச்சனைக்குரியன வன்றாகலான் நறும்பூ வடைதளிரெனவும், மலர்களோடு பொன்னானும் மணிகளாலும் அருச்சித்தல் மலரினும் பதின்மடங்கு விசேடமாகலான் யாவையுமெனவும், இவைகளுள் ஒன்றுக்கொன்றுயர்ந்தவை, சமானமானவை, வெண்மை செம்மை கருமை பொன்மை நிறமுள்ளவை, காலைமுதலிய காலங்களிற் சாத்துமவையாகிய இவையிற்றை வகுத்து, கேசம் புழு முதலிய குற்றங்களின்றியாய்ந்து தனித்தனியே அமைத்தல் முறையாகலான் ஆய்ந்தங்கார்த்தியெனவும், ஏலம் வெட்டிவேர் (கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்) என்னு முப்பலங்கள் பச்சைக்கற்பூரம் குங்குமப்பூ சந்தனவகில்களின் பத்திரம் நறுமணமுள்ள புஷ்பம் ஆகிய இவைகள் திருமஞ்சனத்துக்குரியனவாகலான் ஏலாதிக் கடிதிருமஞ்சனமட்டியெனவும், இவைகளை அம்மையார் களிக்கும்வண்ணம் ஆகமவிதிப்படி அமைத்தனராகலான் களிமிகுந்தார் எனவுங் கூறினர்.

ஒன்றுக்கொன்றுயர்ந்தமலர்கள் - எருக்கு அலரி தாமரை வில்வம் கொக்குமந்தாரை பொன்னூமத்தை கண்டங்கத்திரி தும்பை நாயுருவி நாணல் வன்னி கருநெய்தல்; இவைமுறையே ஆயிரத்துக்கொன்றென ஒன்றுக்கொன்றுயர்ந்தவை. சமானமான மலர்கள் - சாதிமல்லியும் விஜயபாதிரியும் அலரிக்கும், புன்னையும் சண்பகமும் சுரபுன்னையும் பொன்னூமத்தைக்கும், வெள்ளைமந்தாரை தாமரைக்கும் சமானமானவை. வெண்மலர்கள் - புன்னை சங்கு நந்தியாவர்த்தம் ஐவணம் வில்வம் சாதிமல்லி மகிழ் வெள்ளெருக்கு முல்லை தும்பை இண்டை பத்திராக்ஷி சிறுகத்திரி அசோகு நாணல். சிவப்புமலர்கள் - முருக்கு செங்கழுநீர் பாதிரி இரத்தபுஷ்பம். மஞ்சள்மலர்கள் - கொன்றை பெருவாகை கோங்கு காட்டுவாழை கிரிமல்லி. கருமலர். கருநெய்தல். ஊமத்தை—கருமைநீங்கலாக மூன்றுநிறத்திலுள்ளது. தாமரை கண்டங்கத்திரி மந்தாரம் அலரி வெண்மை சிவப்புநிறங்களிலுள்ளவை. சண்பகம் வெண்மை மஞ்சள்

நிறங்களிலுள்ளவை. காலையிற் சாத்துமலர்கள்-அலரி நாயுருவி மல்லிகை எருக்கு வில்வம் வெண்மலர் நந்தியாவர்த்தம் தாமரை. உச்சியிற்சாத்துமலர்கள் - பொன்னூமத்தை புலிநகக்கொன்றை வெள்ளைப்பாதிரி வன்னி கத்திரி மந்தாரை கொன்றை தும்பை. மாலையிற் சாத்துமலர்கள் - மல்லிகை முல்லை சாதிமல்லி இரிமல்லி குருவிவேர் சண்பகம் சிறுசண்பகம் கொழுந்து. ஏனையகாலங்களிற் சாத்துமலர்கள் புன்னை வெள்ளெருக்கு சண்பகம் நந்தியாவர்த்தம் நீலோற்பலம் பாதிரி அலரி செந்தாமரை. பத்திரவகை - விதித்தமலர்களின் இலைகளும், நொச்சி விளா வில்வம் இருவை மாவிலிங்கமென்னும் பஞ்சவில்வங்களும், தர்ப்பை அறுகு துளவு நாவல் நாகமல்லி ஓரிதழ்த் தாமரை விஷ்ணுகிராந்தி கருந்துளவு சிவகரந்தை முதலிய பத்திரங்களுமாம். (ருருரு)

தூங்குபலாக் கனிதாற்றுத் தூத்திரள்வா ழைப்பழங்கண்
மாங்கனிக்குப் பைநரந்த மாதுளைநா றெலுமிச்சை
தேங்கமழ்தெங் கின்குடங்காய் நிம்படுபூ கப்பழுக்கா
யாங்கணிரப் பினர்கைக்கொண் டணுகினரா லொருசாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், தூங்கு பலாக்கனி - தொங்கிய பலாப்பழங்களும், தூ திரள்வாழைப் பழங்கள்தாறு - நன்றாய்த் திரண்டிருக்கும் வாழைப்பழங்களும், மாங்கனி குப்பை - மாங்கனிக் குவியல்களும், நரந்தம் மாதுளை நாறு எலிமிச்சை - நரந்தம்பழங்களும் மாதுளம்பழங்களும் வாசம்வீசும் எலிமிச்சம்பழங்களும், தேங்கமழ் தெங்கின்குடங்காய் - வாசம்வீசும் குடம்போன்ற தெங்கின்காய்களும், நிம்படுபூகப் பழுக்காய் - இனிமை பொருந்திய கமுகிற்பழுத்த காய்களும், கை கொண்டு அணுகி ஆங்கண் நிரப்பினர் - (ஆகிய இவைகளை) கையிலெடுத்துக்கொண்டு சமீபித்து அவ்விடத்தில் நிரப்பினர். (எ-று)

தோழிமாருட்சிலர் பலாக்கனி முதலியவற்றை மண்டபத்தினிறைத்தனரென்க.

பூகப்பழுக்காய்-பாக்கு. வாழைப்பழங்கள்-வாழையின்பேதங்கள். மாங்கனிக்குப்பை மாவின்பேதங்கள். இவையொன்றொன்றும் அளவிறந்தன வென்பார் நிரப்பின ரென்றார். (ருருச)

ஆனுடைப்பாற் குடங்கோடி யருஞ்சுவைநெய்க் குடங்கோடி
தேனுடைப்பொற் குடங்கோடி செழுங்கருப்பட் டதண்சாறு
தானிறைபொற் குடங்கோடி தயிருடைப்பொற் குடங்கோடி
வானமிழ்தக் குடங்கோடி வல்லையுய்த்தா ரொருசாரார்.

(இ-ள்.) ஒருசாரார்-தோழிமாருட்சிலர், ஆனுடைய பால் குடம் கோடி - பசுவின் பால்நிறைந்த குடங்கள் கோடியும், அருசுவை நெய்குடம் கோடி - நல்லசுவையையுடைய நெய்நிறைந்த குடங்கள் கோடியும், தேன்உடைய பொற் குடம்கோடி - தேனிறைந்த பொற்குடங்கள் கோடியும், செழு கரும்பு அட்ட தண்சாறு நிறைபொற்குடம் கோடி - சுவைமுதிர்ந்த கரும்பினை யாலையிலிட்டெடுத்த தண்ணியசாறு நிறைந்த பொற்குடங்கள் கோடியும், தயிருடைய பொன்குடம் கோடி - தயிர்நிறைந்த பொற்குடங்கள்கோடியும், வான் அமிழ்தம் குடம் கோடி வல்லையுய்த்தார் - தேவ ரமுதநிறைந்த குடங்கள்கோடியும் விரைவாகக் கொண்டுவந்து சேர்த்தனர். (எ-று)

தோழிமாருட் சிலர் பால் நெய் தேன் கருப்பஞ்சாறு தயிர் தேவரமுதம் இவைகணிறைந்தபொற்குடங்களைக் கோடிகோடியாகக் கொண்டுவந்து சேர்த்தனரென்க. உடைய என்னும் பெயரெச்சத் தகர மீறுதொக்கது. (ருருரு)

திருமலியோ வியப்பட்டுந் தீபத்தியன் றவெண்பட்டுங்
குருமலிபா சிலைப்பட்டுங் கோபநிகர்த் தசெம்பட்டு
முருவுடைமா ழையம்பட்டு மொளிர்தருநீ னிறப்பட்டுந்
தருவுதவும் பலபட்டுந் தந்தனரா லொருசாரார்.

(இ-ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், திருமலி ஓவியப்பட்டும் - அழகுமிகுந்த சித்திரப்பட்டாடைகளையும், தீபத்து இயன்ற வெண்பட்டும் - பலதீவுகளிலும் செய்யப்பட்ட வெள்ளியபட்டாடைகளையும், குருமலி பசு இலை பட்டும் - நிறமிகுந்த பசிய பட்டாடைகளையும், கோபநிகர்த்த செம்பட்டும் - இந்திரகோபத்தையொத்த சிவந்தபட்டாடைகளையும், உருவுடையமாழையம்பட்டும் - மாற்றுயர்ந்த அழகியபொன்னுடைகளையும், ஒளிர்தரு நீல நிறப்பட்டும் தருவு தரும் பலபட்டும் தந்தனர் - ஒளிவீசும் நீலநிறப் பட்டாடைகளையும் கற்பகந்தந்த பலபட்டாடைகளையுங் கொண்டுவந்து கொடுத்தனர். (எ - று)

தோழிமாருட் சிலர் பலவகைப் பட்டாடைகளையெல்லாந் தந்தனரென்க. (௩௩௩)

விற்படுமோ லிகுதம்பை மின்னுமிழ்பொன் னணிபட்ட
மற்பகைவிள் ளவிளங்கு மங்கதமா ழிகடகம்
பற்பலகண் டத்தணிகள் பாயொளியா ரமுதலாங்
கற்பகமுய்த் தனகொண்டு கடுகினரா லொருசாரார்.

(இ-ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், வில்படு மோலி குதம்பை மின் உமிழ் பொன் அணி பட்டம் - ஒளிவீசுங்கிரீடம் குதம்பை மின்னலிடும் பொன்னுபரணம் பட்டங்க ளாகிய தலையணிகளையும், அல் பகைவிள்ள விளங்கும் அங்கதம் ஆழி கடகம் - இருளின்பகையொழிய வொளிவீசும் அங்கதம் மோதிரம் கடகமுதலிய தோளணிகளையும், பாய் ஒளி ஆரம் முதலாம் பல்பல கண்டத்து அணிகள் - பரந்து ஒளி வீசும் முத்தார முதலிய பலவகைப்பட்ட கழுத்தணிகளையும், கற்பகம் உய்த்தன கொண்டு கடுகினர் - கற்பகவிருக்ஷங்கொடுக்கக் கொண்டுவிரைந்து சேர்ந்தனர். (எ-று)

தோழிமாருட்சிலர் சிரஞ் செவி முதலிய விடங்களிலணியு மாபரணங்களையும், தோள் மணிக்கட்டு விரல் முதலிய அங்கங்களிலணியு மாபரணங்களையும் கண்டத்திலணியு மாபரணங்களையுங் கற்பக விருக்ஷங்கொடுக்கக் கொண்டுவந்து சேர்ந்தனரென்க.

முழுதுலகுங் கமழ்கிற்கு முருகுடைச்சந் தனத்தேய்விற்
புழுகினைவாக் கிநுணங்கப் பொடித்திடுகப் புரமட்டிச்
செழுவியகுங் குமம்பெய்து செறிவுறமட் டித்தெடுத்து
விழுதமைபொற் குடமேந்தி விரைந்தனரா லொருசாரார்.

(இ-ள்.) ஒருசாரார்-தோழிமாருட்சிலர், முழுதுலகும் கமழ்கிற்கும் முருகுடைய சந்தனம் தேய்வில் - எல்லாவுலகங்களினுஞ் சென்று மணம்வீசும் வாசனையையுடைய சந்தனக்குழம்பில், புழுகினைவாக்கி நுணங்கப்பொடித்திடு கப்புரம் அட்டி செழுவிய குங்குமம் செறிவுறபெய்து மட்டித்து - மிருகமதத்தைப்பிழிந்து நுறுங்கப்பொடிபடுத்திய பச்சைக்கர்ப்பூரத்தைக்கலந்து நிறம்வாய்ந்த குங்குமப்பூவை சிவப்பேற மிகவுங்கலந்து, எடுத்த விழுது அமைந்த பொற்குடம் ஏந்திவிரைந்தனர் - தாமெடுத்துவந்த தளிர்களால் மூடப்பெற்ற பொற்குடங்களிலேந்திவிரைந்து வந்தனர். (எ-று)

தோழிமாருட்சிலர் சந்தனக்குழம்பில் புனுகு கர்ப்பூரம் குங்குமம் முதலியவாச னைத் திரவியங்களைக்கலந்து பொற்குடங்களிற் கொண்டுவந்தனரென்க.

பூசாதிரவியங்களுக்குரிய பாத்திரங்கள் கன்னடையிட்டிருப்பது முறையா கலான் விழுதமை பொற்குடமென்றார். (௩௩அ)

கண்ணடிசா மரைவெண்கேழ்க் கவிகைவளி யெறிவட்டம்
புண்ணியநீ றுபளிதம் புகைமலிகுங் கிலியங்கண்
வண்ணமணிக் குடந்தட்டோ டாராதனைக் குவகுத்த
வெண்ணிலுறுப் பிற்பிறவு மீட்டினரா லொருசாரார்.

(இ - ள்.) ஒருசாரார் கண்ணடி சாமரை வெண்கேழ்கவிகைவளி எறிவட்டம் புண்ணியநீறு பளிதம் புகைமலி குங்கிலியங்கள் - தோழிமாருட்சிலர் கண்ணடிசா மரை வெண்ணிறமுடையகுடை காற்றெறியும் விசிறி புண்ணியமாகிய திருநீற்றுமடல் கர்ப்பூரத்தட்டு புகைமிகுந்த குங்கிலியத்தூபக்கால், வண்ணமணிக்குடம் தட்டோடு ஆராதனைக்குவகுத்த எண்ணில் உறுப்பின் பிறவும் ஈட்டினர் - அழகியரத்னகும்பம் (ஈசானமுதலிய ஐந்து) தட்டுகளாகிய இவைகளன்றி இன்னமும் பூசைக்கேற்படுத் திய அளவிறந்த வடிவங்களாலமைந்துள்ள ஏனையவற்றையுங் கொண்டுவந்தனர்.

தோழிமாருட்சிலர் உபசாரங்களுக்குரியனவாகிய கண்ணடி முதலியனவற்றைச்

இச்செய்யுளில் உபசாரத்திற்குரிய உறுப்புகளைக் கூறுவதனுல் புண்ணிய நீறு பளிதம் புகைமலிகுங்கிலியங்கள் என்பதற்கு விபூதிமடக்கு கர்ப்பூரத்தட்டு குங்கிலி யத்தூபக்கால் என்று பொருள்கொள்க. எண்ணிலுறுப்பு - ரதம் நக்ஷத்திரம் நாகம் கசம் மயூரம் வியாக்கிரம் புருஷாமிருகம் விருஷபமுதலிய வடிவங்களாற் செய்த வைகள். (௩௩௬)

நெய்விரவம் புயநாள நீளிழைத்தீ பமனந்தம்
பைவிரிபாந் தளுயிர்த்த பரூஉமணித்தீ பமனந்தந்
தெய்வதத்தீ பமனந்தந் தீம்புகைவர்க் கமனந்தங்
கைவகுத்தெங் கணுமல்கக் கண்டனரா லொருசாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், நெய்விரவு அம்புயம் நாளம் நீள் இழைதீபம் அனந்தம் - நெய்கலந்த தாமரை நாளத்திலெடுத்த நீண்டநூலிழையில் ஒளிவிடுந்தீபம் பலவற்றையும், பைவிரிபாந்தள் உயிர்த்த பருமணித்தீபம் அனந் தம் - விரித்த படத்தையுடைய சர்ப்பங்களீன்ற பருத்தரத்னதீபங்கள் பலவற்றையும், தெய்வதத்தீபம் அனந்தம் - (இவையேயன்றி) அதிசயிக்கத்தக்க பலதீபங்களையும், தீம்புகைவர்க்கம் அனந்தம் எங்கணும் மல்க கைவகுத்து கண்டனர் - பலவகைப்பட்ட நறுமணங்கமழும் பலதூபங்களையு மெவ்விடத்துநிறையவரிசையாக வைத்தனர்.

தோழிமாருட்சிலர் தாமரைநூலிட்டு நெய்வார்த் தெரியும் தீபங்களும் நாகரத்ந தீபங்களும் தெய்வத்தன்மை பொருந்திய தீபங்களும் தூபங்களு மெவ்விடத்தும் ஒளிசெய்யவும் கமழவும் வரிசைபெற வைத்தனரென்க.

• செந்நிறமுதலிய பல நிறமுடைய பசுவினெய் உத்தமத்தில் மத்திமமெனவும், •ஆட்டுநெய் எருமைநெய் உத்தமத்தி லதமமெனவும், வெள்ளெள்ளி னெய் மத்தி

மத்தி னுத்தமமெனவும், மற்ற வெள்ளின் நெய் மத்திமத்தில் மத்திமமெனவும், மர க்கொட்டைகளினெய் அதமத்தி லதமமெனவும், இராசஸ தாமஸமெனவுங் கூறுத லான் இவையெல்லா மொழிந்த கபிலைநெய் உத்தமோத்தமமும் சாத்விகமு மாதலால் நெய்யெனவும், பருத்தி வெள்ளொருக்கு நூல்களொழிந்த தாமரைநூல் உத்தமமான தால் அம்புய நாளமெனவும், இரண்டங்குல வுயரமெரிவது ஏழிழையு மதமமும், மூன் றங்குல வுயரமெரிவது பதின்மூன்றிழையும் மத்திமமும் இவையொழிந்த நான் கங்குல வுயரமெரிவது பதினாறிழையு முத்தமமு மாதலால் நீளிழைத்தீபமெனவும், இதனி னுஞ் சிறந்தது நாகரத்ந தீபமாதலால் பாந்தளுயிர்த்த பருமணித் தீபமெனவும், நெய்யுந்திரியும் தகளியுந் தோன்றுதெரிவ நற்புதமாதலால் தெய்வதத் தீபமெனவும், இவ்வகைத் தீபங்க ளொவ்வொன்றும் ஒன்று பத்துநூறு ஆயிரம் என்னு மளவின்றிப் பதினாயிரமுதல் லக்ஷம் கோடி அற்புத முடிவாக வேற்றினர்களாதலாலனந்த மனந்த மெனவுங் கூறினர்.

தீம்புகைவர்க்கம் என்றது - குங்கிலியம் (௨) பாகம் அகிற்பொடி (௧) பாகம் சந் தனப்பொடி (௩) பாகம் சிறிது காப்பூரப்பொடி இவை கூட்டியிடுந் தூபமொன்று குங்கிலியத்தோடு நெய்யேனும் வில்வக்கட்டைப் பொடியேனும் சந்தனப்பொடியே னும் செங்கழுநீர்க் கோட்டப் பொடியேனும் கூட்டியிடுந் தூபவகையொன்று, இவை யெல்லா மொன்றாகக் கூட்டியிடுந் தூபமொன்று, எஃகுப்பொடி (௧) கூறும் குங்கிலி யம் (௨) கூறும் சந்தனப்பொடி (௩) கூறும் சிறிது கர்ப்பூரப்பொடியும் தேனுங் கூட்டியிடு முத்தமதூபமொன்று, இலாமிச்சை வேர்ப்பொடி (௧) கூறும் குங்கிலி யம் (௨) கூறும் சந்தனப்பொடி (௩) கூறும் நெய்யொடுதேனுங் கூட்டியிடும் மத்திம தூபமொன்று, குங்கிலியமும் நெய்யுங் கூட்டியிடு முத்தமதூபமொன்று மெனக்கூறு ம்வகைகளாம். (௩௪0)

மாடக வச்சிரப்பத்தர் வார்நரப்பின் னிசையாழும்
பாடுறுபா டலுமொன்றப் பண்ணினமை மின்களென்று
மீடறுபற் பல்லியங்க ளெழுப்புமின் னென்றுமிணங்க
வாடுமினென் றும்விண்ணோரைப் பணித்தனராங் கொருசாரார்.

(இ - ள்.) ஒருசாரார் - தோழிமாருட்சிலர், ஆங்கு மாடக வச்சிரப்பத்தர்வார் நரப்பின் இசையாழும் - அப்பொழுது முறுக்காணிகளுடன் வச்சிரத்தாலாகிய பத்த ரும் நீண்ட நரம்பினையுமுடைத்தாயினிய விசையைத்தரும் யாழும், பாடுறுபாடலு ம் பண்ணில் ஒன்ற அமைமின் என்றும் - நீங்கள் பாடுகின்ற பாடலும் பண்ணிற் பொருந்தியிருக்கச் செய்யுங்களென்றும், ஈடு அறு பற் பல்லியங்கள் எழுப்புமின் என் றும் - ஒப்பில்லாத பல வாச்சியங்களை வாசியுங்களென்றும், இணங்க ஆடுமின் என் றும் - இவ்வாச்சியங்களுக்குப் பொருந்த கூத்தாடுங்களென்றும், விண்ணோரைப் பணித்தனர் - தேவர்களைச் செய்யக் கட்டளையிட்டனர். (எ-று)

தோழிமாருட்சிலர் தேவர்களைநோக்கி யாழும் பாடும்பாட்டும் பண்ணிலமையப் பாடுங்களென்றும், இவ்விசைக்கிணங்கப் பலவாச்சியங்களை யெழுப்புங்களென்றும் இவ்விரண்டிற்கு மிணங்க நடனஞ்செய்யுங்களென்றுங் கட்டளையிட்டனரென்க. ()

வே று.

இன்னணம் பணியெலா மிகுளை மார்செய
மின்னவிர் மணிவடஞ் சுமந்த வெம்முலைக்

கன்னிமா மண்டப நின்றுங் காதலாற்
கொன்னுமா பத்திரக் கூவ னண்ணினாள்.

(இ - ள்.) இன்னணம்பணி எல்லாம் இருவோமார்செய்ய - இவ்வண்ணமாக எல்லாப்பணிகளையும் தோழிமார் செய்தமைக்க, மின் அவிர் மணிவடம்சுமந்த வெம்முலை - மின்போலு மொளிவீசு முத்தாரஞ் சுமக்கப்பெற்ற விருப்பந்தரும் தனங்களையுடைய அம்மையார், கன்னிமாமண்டபம் நின்றும் காதலால் கொன் உமாபத்திரம் கூவல் நண்ணினாள் - அழிவில்லாத மகாமண்டபத்தினின்றும் பூசிக்கவேண்டுமென்னு மாசையாற் பெருமைபொருந்திய உமாபத்திரையாற் கண்டகிணற்றை வந்தடைந்தனர். (எ - று)

அம்மையாரேவிய பணிகளெல்லாம் தோழிமார்செய்யத் தாம் மகாமண்டபத்தினின்று உமாபத்திரையாலுண்டாக்கிய கூவலைவந்தடைந்தனரென்க.

தெவ்வடு என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்வரையும் பணியிற்றலைப்பட்டடாங்கிமார் முறையே நீராடுதற்கும் அபிடேகத்திற்கும் இனைறு மடைப்பள்ளி நந்தவனம் மண்டபவலங்காரம் நிவேதனவகை பூமாலைவகை திருமஞ்சனதீர்த்தம் பூசாபாத்திரசுத்தி விதியிற்சிறந்த பத்ரபுஷ்பங்கள் கனிவகைகள் பால் முதலிய திரவியங்கள் வஸ்திராபரணங்கள் கண்ணாடிமுதலிய உபசாரவுறுப்புகள் தூபதீபங்களாகிய இவையிற்றை அமைத்துவைப்பதினும் பலவாச்சியங்களை முழங்கச்செய்வதிலும் தலைப்பட்டுநிற்கக் கண்ட அம்மையார் பூசிப்பதற்கெண்ணி நீராடச்சென்றமை கூறியவாறு. (௩௪௨)

நிறைபரஞ் சுடரடி நினைந்து கூவனீர்
மறைநெறி விதியுளி வழாமை யாடியே
யிறுநுசுப் பங்கலா ரெடுத்து நீட்டிய
வறுவையி னொற்றிமெய் யீர மாற்றினாள்.

(இ-ள்.) நிறைபரஞ்சுடர் அடிநினைந்து - பரிபூரணராகிய பரஞ்சுடரடிகளைச் சிந்தித்து, கூவல் நீர்மறைநெறிவிதியுளிவழாமை ஆடி - கூவனீரில் வேதத்தில் முறையாக விதித்த விதிதவறாது ஸ்நானஞ்செய்து, இறுநுசுப்பு அங்கலார் எடுத்து நீட்டிய அறுவையின் மெய் ஒற்றி ஈரமாற்றினாள் - துவளுமிடையையுடைய தோழிமாரெடுத்து நீட்டிய வஸ்திரத்தினாற் திருமேனிதுடைத்து ஈரத்தை மாற்றினர். (எ-று)

அம்மையாரிறைவனைச் சிந்தித்துவிதிமுறையாக நீராடிமெய்யீரமாற்றினாரென்க.

மாமூலத்தின்கண் விளங்கும் பிலாகாசத்தில் நிறைந்து சுடரொளிப்பிழம்பாய்த் தோன்றிய விறைவனை முன்னர் நினைக்கவேண்டு மாதலால் நிறைபரஞ்சுடரடி நினைந்தெனவும், ஸ்நானம் - வாருணம் ஆக்னேயம்(பஸ்மம்) மந்திரம் மானதம் வாயவ்யம் ஐந்திரமென ஆறுகவும் நித்ய நைமித்திகமாகவும் ராசோபசாரமாகவும் விதித்தது வேதாகமங்களாதலால் மறைநெறியெனவும், அவ்வவற்றைச் செய்யும் விதிமுறையறிந்து முன்கம்பையாற்றி னீராடி யிங்குக்கூவலில் ராசோபசாரமாக நீராடினராதலால் விதியுளிவழாமை யாடியெனவும், ஈரவஸ்திரத்தாலீரத்தை மாற்றுதல் நாயினுவினாற் றுடைத்தலை யொத்தலால் அறுவயினொற்றி மெய்யீரமாற்றினா ளெனவுங் கூறினர்.

மிருத்திகைகொண்டு நால்வகையாகச் செய்தல் வாருணம், அநுகற்பம் உபகற்பம் அகற்ப மென்பவற்றிற் சிறந்த கற்பத்தினுலாகிய பஸ்மத்தாற் செய்தல் ஆக்னேயம், மந்திரங்களை யுச்சரித்துக் கைகளைக் கும்பமுத்திரையாகப் பிடித்துச் செய்தல் மந்திரம், பிரணவ வுச்சரிப்போடு பிராணுயாமஞ்செய்தல் மானதம், இந்நான்கும் நித்யம். வெயிலொடு மழைபெய்ய அதில் நனைதல் ஐந்திரம். பசுக்கூட்டத்தி லெழுந்த தூளை உடம்பிற் படச்செய்து கொள்ளல் வாயவ்யம்; இவ்விரண்டும் நைமித்திகம். பொற்பீடத்திலிருந்து பேரிகைமுதலிய வாச்சியங்களொலிக்கப் பரிமளமிக்கநெல்லிக்காய்முதலிய திரவியங்களாலும் ஆயிரம் நூற்றெட்டு எட்டு ஐந்து ஒன்று என்றெண்ணுங் கலசநீராலும் நீராடுதல் ராஜோபசாரம். அறுவை - உலாந்தவந்திரம். ஈரமாற்றல் - மெல்லனத் துடைத்தல். (௩௪௩)

தேசிகப் பட்டிரண் டுடுத்துத் தீவினை
யாசிரித் தருளுநீ றாக மெங்கணும்
பூசிமுப் புண்டரம் பொறித்துக் கண்டிகை
நேசமுற் றணிந்துசெய் நியம முற்றியே.

(இ - ள்.) தேசிகப்பட்டு இரண்டு உடுத்து - ஆடைகளிற்சிறந்த அழகிய இரண்டுபட்டுவத்திரங்களைத்தரித்து, தீவினை ஆசு இரிந்து அருளும் நீறு ஆகம் எங்கணும் பூசி முப்புண்டரம் பொறித்து - தீவினையையும் மலத்தையு மொழித்தருளுந் திருநீற்றைத் தமதுதிருமேனிமுற்றும் உத்தூளனமாகப்பூசி அங்கங்களில் திரிபுண்டரமாகத்தரித்து, கண்டிகைநேசமுற்று அணிந்து செய்நியமம்முற்றி - உருத்திராக்கமாலையை விரும்பியணிந்து பின்செய்யத்தகுவனவாகிய அனுட்டான நியமங்களைக் குறைவறச்செய்து. (எ-று)

(மெய்யீரமாற்றியபின்) இரண்டாடையுடுத்துத் திருநீறுங் கண்டிகையும் புனைந்த னுட்டானத்தை முடித்தென்க.

ஆடை-ஈரமுடையதுங் கிழிபட்டதும் ஒற்றையும் குற்றத்தைவிளைவித்துச் செய்யும்பயனையு மொழிப்பதாகலான் தேசிகப்பட்டிரண்டுடுத்தெனவும், அறுவகை ஸ்நாநங்களுள் பஸ்மஸ்நாநஞ் சிறந்ததாகலான் ஆக மெங்கணும் பூசியெனவும், சைவகோலத்தை யழியாமற்காட்டுவது திருநீறும் அக்கமணியுமாதலால் முப்புண்டரம் பொறித்துக் கண்டிகைநேசமுற்றணிந்தெனவும், பின் ஆசமனம் கரநியாசம் அங்கநியாசம் பிராணுயாமம் சந்தியாவந்தனம் மார்ச்சனம் அகமர்ஷணம் சதாசிவத்தியானம் காயத்திரிஜபம் தர்ப்பணம் உடஸ்தானம் பஞ்சாக்ஷரஜெபம் முதலாகச்செய்யப்பட்ட அனுட்டானநியமங்களை முறையே முற்றுறச்செய்தனராகலாற் சீர்நியமமுற்றி எனவுங்கூறினர்.

மலத்தைக்கழுவுதலால் க்ஷாரமெனவும், பாவங்களை நீறுக்குதலால் பஸ்மமெனவும், சிவத்துவத்தை விளக்குதலால் பசிதமெனவுந் திருநீற்றைக் கூறியிருத்தலால் தீவினை ஆசு இரித்து அருளும் எனச் சொல்வகைசெய்து தீவினையாசிரித்து என்றதற்கு மலத்தைக்கழுவிப் பாவங்களைநீறுக்குவதெனவும் அருளும் என்றதற்குச் சிவத்துவத்தை விளக்குவதெனவுங் கொள்க. (௩௪௪)

காவலர் பூசனை புரியுங் காதலான்
மேவர வேண்டுவ கொண்டு மெல்லியற்

பாவையர் புடைவரப் படர்ந்தி ரண்டெனு
மாவர ணந்தனை யணுகி னுளரோ.

(இ - ள்.) காவலர் பூசனைபுரியும் காதலான் - காவலாளரைப் பூசனைசெய்ய வேண்டுமென்னு மாசையால், மேவரவேண்டுவகொண்டு - அதற்குப்பொருந்திய பூசாதிரவியங்களை வேண்டுமளவாக வெடுத்துக்கொண்டு, மெல் இயல் பாவையர் புடைவரபடர்ந்து - மெல்லிய தன்மையையுடைய தோழிமார் பக்கங்களிற் சூழ்ந்து வரச்சென்று, இரண்டெனும் ஆவரணந்தனை அணுகினுள் - இரண்டாமாவரணத்தை வந்தடைந்தனர். (எ-று)

(அநுட்டான முடிந்தபின்னர்) காவலரைப்பூசிக்கத் தோழிமாரதற்கு வேண்டு முபகரணங்களை யேந்திவர இரண்டாமாவரணத்திற் சென்றனளென்க.

காவலர் - துவாரபாலகர். சிவபூசைக்கு முன்செய்யவேண்டியது துவாரபூசை யாகையாற் காவலர் பூசனைபுரியுங் காதலாலெனவும், காவலரைப்பூசித்த சேடம் சிவ பூசைக்குரிந்தன்றாகலான் மேவரவேண்டுவகொண்டு எனவும், அவர்களிருப்பது இரண்டாவது பிராகாரமாதலால் இரண்டெனு மாவரணந்தனை யணுகினுளெனவுங் கூறினர். (௯சரு)

சங்கினம் வயிரொடு தாரை காகளம்
பொங்கொலிச் சின்னங்கள் வீணை பூங்குழல்
வங்கியம் பேரிவார் முரசந் திண்டிம
மெங்கணுங் கடலுடைந் தென்ன வார்ப்பவே.

(இ - ள்.) சங்கினம் வயிரொடு தாரை காகளம்- சங்குக்கூட்டங்களு மூதுகொம் புகளு மெக்காளங்களும், பொங்கொலி சின்னங்கள் வீணை பூங்குழல் - மிகுந்தொலிக் கின்ற திருச்சின்னங்களும் வீணைகளும் புள்ளாங்குழல்களும், வங்கியம் பேரிவார் முரசம் திண்டிமம் - இசைக்குழல்களும் பேரிகைகளும் வாரிறுக்கிய முரசங்களும் தம்பட்டங்களும், எங்கணும் கடல் உடைந்தென்ன ஆர்ப்ப - ஆகிய இவைகளெல்லா மெப்பக்கங்களினுஞ் சூழ்ந்து கடலுடைந்தாற்போலப் பேரொலிசெய்ய. (எ-று)

அம்மையார் செல்லத்தொடங்கிய காலத்தில் சங்குமுதலிய பலவாச்சியங்கள் கடலுடைந்தாற்போல எவ்விடத்தும் ஓசைமிகுந்தெழுந்தன வென்க.

கடல்புறங்கொடுத்த தென்பார் கடலுடைந்தென்றார். (௯சகூ)

கின்னரர் கருடர்கிம் புருடர் பாண்செயக்
கன்னிய ரெதிரெதிர் கலவி யாடிடத்
துன்னிய முனிவரர் துன்றும் வேதிய
ரென்னரு மறைமுழக் கெடுத்துச் சூழவே.

(இ - ள்.) கின்னரர் கருடர்கிம்புருடர் பாண்செய்ய - கின்னரர்களும் கருடர்க ளும் கிம்புருடர்களு மிசைபாடவும், கன்னியர் எதிர் எதிர்கலவி ஆடிட-நாடகப்பெண் களொருவருக்கொருவ ரெதிராக நின்று கலந்தாடவும், துன்னிய முனிவரர் துன்றும் வேதியர் என்னரும் - நெருங்கிய முனிவருமவரைச்சூழ்ந்த வந்தணரெவரும், மறை முழக்கு எடுத்துசூழ - வேதகோஷஞ்சிறந்தொலிக்கவோதிக்கொண்டுசூழ்ந்துவரவும்.

இசைபாடற்குரிய கின்னரர்முதலிய தேவகணங்களெல்லாங் கீதம்பாடவும் நாடகப்பெண்களெல்லாம் நடனஞ்செய்யவும் வேதமோதற்குரிய முனிவரும் அந்தணருஞ் சூழ்ந்து வேதமோதிக்கொண்டு வரவுமென்க.

வேதியருள் ருக்வேதியர் யசுர்வேதியர் சாமவேதியரென முத்திறப்படுதலால் வேதியரென்னருமென்றூர். இதனுனே முத்திறத்தவரும் மூன்றுவேதங்களையு மோதினரெனக் கொள்க. பாடகர் ஆடகர் முன்னும் வேதமோதுவோர் பின்னும் அணியணியாக வந்தனராகலான் முறைபடக் கூறினர். (ருசஎ)

ஐவகைப் பிரமமு மங்க மாறுமோர்
கைவளர் முகனுடைக் கடவுள் வேழமுங்
கொய்விரை கடம்பணி கோவு மோகையான்
வைகுமச் சூழலே வலங்கொண் டெய்துவாள்.

(இ - ள்.) ஐவகைப் பிரமமும் அங்கம் ஆறும் - ஈசானமுதலிய பஞ்சப்பிரம மந்திரங்களும் இதயமுதலிய ஷடங்கங்களும், ஓர் கை வளர்முகனுடை வேழக்கடவுளும் - ஓர் கையாகவளரப்பெற்ற முகத்தையுடைய விநாயகக்கடவுளும், கொய் விரை கடம்பு அணிகோவும் - பறித்துக்கட்டிய நறுமணங்கமழும் கடப்பமாலைசூடிய முருகக்கடவுளும், ஓகையான் வைகும் அச்சூழலே வலங்கொண்டு எய்துவாள் - திருவுள்ளக்களிப்போடு நீங்கா திருக்கு மவ்விடத்தைப் பிரதக்கணமாகவந்து நின்றனர்.(எ-று.)

விநாயகருங்கந்தரும்வீற்றிருக்குமிடத்தைப் பிரதக்கணமாகவந்து நின்றனரென்க.

விநாயகக் கடவுளுக்குரிய யானைமுகம் பிரணவமும் ஈசானமுதலிய பதினொரு மந்திரங்களு மாகலான் ஐவகைப் பிரமமு மங்கமாறுமோர் கைவளர் முகனுடைக் கடவுள் வேழமெனவும், முருகக்கடவுளுக்குக் கடப்பமாலை திருவடையாளமாலையாகலாற் கடம்பணி கோவெனவுங் கூறினர். (ருசஅ)

ஐங்கரப் பிள்ளையை நிருதி யாசையிற்
செங்கைவே ளிளவலை யுலவைத் திக்கினு
முங்குறு பூசையி னுவப்பச் செய்துபோய்
மங்கல நந்திவாழ் வாய்த னண்ணியே.

(இ - ள்.) நிருதியாசையில் ஐங்கரப்பிள்ளையையும் உலவைதிக்கில் செங்கை வேல் இளவலையும் - நைருதிதிக்கில் ஐந்துகரங்களையுடைய விநாயகக்கடவுளையும் வாயுதிக்கில் சிவந்த திருக்கரத்தில் வேலேந்திய முருகக்கடவுளையும், உங்குறுபூசனை உவப்பச்செய்துபோய் - அவரவர்க்குரிய பூசையினுன் மகிழும்படிச்செய் தவ்விடத்தை விட்டு, மங்கல நந்தி வாழ்வாய்தல் நண்ணி - அழகிற்சிறந்து விளங்கும் நந்திதேவர்வாழும் வாயிலை யடைந்து. (எ-று)

நிருதிதிக்கிலும், வாயுதிக்கிலும் வீற்றிருந்த விநாயகக்கடவுளையும் முருகக்கடவுளையும் மகிழப் பூசித்து நந்திதேவர்வாழு மிடத்தை அம்மையாரடைந்தனரென்க.

இறைவர்பால் மங்கலம் பெறவருவோர் முன்விடைபெற்றுச் செல்லுமதிகாரத்தையும் அழிவின்மையையும்பெற்றவராகலின்மங்கலநந்தி என்றூர். மங்கலம் - அழிவின்மை. (ருசக)

வாயிலோர் பூசனை மரபி னாற்றினன்
மாயிரு மறைத்தனி மாவி னீழல்வாழ்
நாயனார் தமைவிழி நயப்பக் கண்டலு
மீயுயர் காதலான் வீழ்ந்தெ ழுந்தனள்.

(இ - ள்.) வாயிலோர் பூசனைமரபின் ஆற்றினள் - துவாரபால கருடைய பூசையை விதியாகச்செய்து, மாஇருமறைதனி மாவின்நீழல்வாழ் நாயனார்தமை விழிநயப்பக்காண்டலும் - பெருமையிற்சிறந்த வேதவடிவமாகிய வொப்பற்ற மாநிழலில்வாழ்கின்ற இறைவரைக் கண்களிப்பக் காணவும், மீ உயர்காதலான் வீழ்ந்து எழுந்தனள் - மேலோங்கிய ஆசையினால் பூமியில்வீழ்ந் தெழுந்தனர். (எ-று)

துவாரபூசையை முடித்துப் பின் திருவேகம்பவாணனைக் கண்களிகூரக்காண அக்கணமே யெழுந்த வாசையான் வீழ்ந்தெழுந்தனரென்க.

தம் கண்ணகந்து நின்று நீங்காராகியும் இமையாணிமைப்பின் வருந்துவதுஞ் செய்யாராகியு மிருந்த காணப்படாத நுண்ணியரைக்கண்ணுறக்காண்டலும் பெற்றனராகலான் நாயனார்தமை விழிநயப்பக்காண்டலு மெனவும், காணுக்காலத்துத் துன்பமீதூர்தலால் வீழ்தலு மெழுதலு முளவாதல்போலக் காணப்பெற்றகாலத்துங் காதல் மீதூர்தலான் அவையுளவாதலும் பெண்ணினல்லார்க் கியல்பாகலான் மீயுயர்காதலான் வீழ்ந்தெழுந்தன ளெனவுங் கூறினர். (கூரு0)

ஒருங்கிய மனத்தினஞ் செழுத்து மோதியே
கருங்குழற் கற்றைமேற் குவித்த கையொடும்
பெருங்களி துளும்பியுட் புகுந்து பிஞ்ஞகர்
மருங்குற முறைமுறை வணங்கி யேத்தினள்.

(இ - ள்.) ஒருங்கிய மனத்தின் அஞ்செழுத்தும் ஓதி - அலைவற்ற மனத்தினால் ஸ்ரீபஞ்சாக்கரத்தைச்சொல்லி, கருங்குழல் கற்றைமேல் குவித்தகையொடும் பெருங்களிதுளும்பி உள்புகுந்து - கரியகூந்தற் கற்றைமேல் கூப்பிய கரங்களோடும் பேரானந்தம் பெருகி யுள்ளேநுழைந்து, பிஞ்ஞகர்மருங்கு உறமுறை முறைவணங்கி ஏத்தினள் - இறைவ ரணிமைக்கண்ணின்று பணியு முறையே பணிந்து வாழ்த்தினர். (எ-று)

இறைவனைக்கண்டபொழுதேஅவர் திருநாமந்தையுச்சரித்துச்சிரமேற்கைகுவித்து பேரானந்த மடைந்துள்ளே புகுந்து வணங்குமுறையே வணங்கித் துதித்தனரென்க.

அசிந்ததனாய் நின்றபதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடற்குச் சிறந்த சாதனம் திருவஞ்செழுத்தாகலான் அஞ்செழுத்துமோதி எனவும், மானதம் மந்தம் உனை என்னும் மூன்றினுஞ்சிறந்தது அறிவாற்கணித்தலாகிய மானத மாதலான் மனத்திலெனவும், அம்மனம் பிறப்பை விளைவிக்கும் மகாரமாகிய மலத்தினும் பிரபஞ்சத்தி லழுந்துவிக்கும் நகாரமாகிய திரோதத்தினும் பொருந்தாது வகாரமாகியஅருளி லொருப்பட்டதாகலானொருங்கிய மனத்திலெனவும், மனமொருப்படவே காயமும் அவ்வருள் வழிப்பட்டுநிற்கு மாதலால் குவித்தகையொடும் பெருங்களிதுளும்பி முறைமுறை வணங்கி எனவுங் கூறினர். (கூருக)

முருகலர் மாவடி முளைத்த தீஞ்சுவை
யருள்விளை யமுதினை யாரக் கண்களாற்

பருகினள் பன்முறை பழிச்சி யண்ணலார்
கருணையே நோக்கிவெங் களிப்பி னீடினாள்.

(இ - ள்.) முருகு அலாமாவடி முளைத்த தீஞ்சுவை அருள்விளை அமுதினை கண்களால் ஆரபருகினள் - வாசம்வீசும் மாவடிமூலத்தில் முளைத்துத் தோன்றிய இனிய சுவையோடு கூடிய அருட்கனியாகிய திருவுருவத்தில் விளைகின்ற அமுதத்தினைக்கண்ணாகிய வாயால் நிரம்பவுண்டு, பன்முறைபழிச்சி அண்ணலார் கருணையேநோக்கி வெம்களிப்பின் நீடினாள் - பலமுறையும் போற்றி நாயகருடைய கருணைத் திருவுருவையே கண்டு மேன்மேல் விருப்பந்தரும் சிவானந்த மயமாகவே யிருந்தனர். (எ-று)

மாவடியிற்றோன்றிய சிவக்கனியைக் கண்களாரப் பருகிப்பழிச்சிச் சிவானந்த மயமாகவே யிருந்தனரென்க.

மாமரத்தை வேதவடிவாகக் கூறியதா லதின்முளைத்த சிவத்தைத் தீங்கனியாகவும் அதிற்பெருகிய சுவையை யருள்விளையமுதாகவும் அதனைக்கண்ட கண்களை வாயாகவும் உருவகஞ்செய்தமைகாண்க. (௩௫௨)

விழிகளா னந்தநீர்த் தாரை மெய்யெலாம்
பொழியநெக் குருகினள் புளகம் போர்த்தனள்
மொழிதடு மாறின ளறிவின் முற்றிய
தொழிலமை பூசனை தொடங்கன் மேயினாள்

(இ - ள்.) விழிகள் ஆனந்தநீர்தாரை மெய்யெலாம்பொழிய - கண்களினின்றும் பெருகாநின்ற வானந்த நீர்த்தாரையானது திருமேனிமுற்றும் வழிந்தொழுகவும், நெக்குருகினள் புளகம்போர்த்தனள் மொழிதடுமாறினள் - என்புநெக்குருகவு முரோமம் புளகங் கொள்ளவுஞ் சொற்குளறவும், முற்றிய அறிவில் தொழிலமை பூசனைதொடங்கல் மேயினாள் - பேரறிவினா லியற்றுந் தொழிலமைந்த பூசனையைச் செய்யத்தொடங்கினர். (எ-று)

கண்ணீர் சரீரமுற்றும் நனைபடச்செய்ய என்புநெக்குருகப் புளகம்போர்ப்ப மொழிதடுமாற ஞானபூசையைச் செய்யத்தொடங்கினரென்க.

இறைவன் சிவத்துவத்தைக்காட்டு முபகாரத்தால் தம்முள்ளும் காணுமுபகாரத்தால் மாவடி மூலத்திலும் விளங்கினமையை நோக்குந்தோறும் பத்தியுங் காதலும் மீதூர்ந்து விளைந்தன வென்பதுதோன்ற விழிகளானந்த நீர்த்தாரை மெய்யெலாம் பொழிய நெக்குருகினள் புளகம்போர்த்தனள் மொழிதடுமாறின ளெனவும், அயரா வன்பினரன் கழலணைந்தோ ரவனடியணைய வொட்டாதயாத்தலை செய்வினைகுமியல் புடைய மும்மலவழுக்கை ஞானநீராற்கழுவி அறிவிச்சை செயல்களை யவ்வயராவன் பின்கண்ணே வைக்கத்தொடங்குந் தொழிலென்பது தோன்ற அறிவின்முற்றிய தொழிலமை பூசனையெனவும், இவ்வுண்மை யுணரப்பெறும் பாபசஞானிகளுக் குணரத் தவந்த தென்பது தோன்ற தொடங்கன்மேயினாளெனவுங் கூறினார்.

இன்னணம் பணிஎன்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள் வரையி லொருதொடர். கூவனண்ணி வழாமையாடி சரமாற்றி நியமமுற்றி ஆவரணர் தம்மையணுகி இண்டிமமாப்ப மறைமுழக்கெடுத்துச் சூழ்வலங்கொண்டெய்தி நந்திவாய்நண்ணி நாயகனார் தமைவிழிநயப்பக்கண்டு வீழ்ந்தெழுந்து அஞ்செழுத்தோதி குவித்தகையொடு உள்ளேபுகுந்து ஏத்தி கண்களாற்பருகிப் பழிச்சி நீடி நீர்த்தாரைபொழிய நெக்குருகிப் புளகம்போர்த்து மொழிதடுமாறிப் பூசனை தொடங்கன்மேயினாளென்முடிக்க.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

வழுவறு தோற்ற மாதி வழுக்கிய பாவத் தீமை
கழுவநின் பூசை யிந்நாட் கடைப்பிடித் தருளாற் செய்கேன்
முழுதருள் வழங்கி யூறு நீக்கிமுன் னின்று கோடி
செழுமதி முடியா யென்று சங்கற்பஞ் செய்து கொண்டாள்.

(இ-ள்.) வழுவறுதோற்றம் ஆதிவழுக்கிய பாவத்தீமைகழுவ - நீங்காத சிருட்டி முதலியவைகள் தவற அதனாலுண்டாகிய கொடும்பாவங்களைப் போக்க, நின்பூசை இந்நாள் கடைப்பிடித்து அருளால்செய்கேன் - உன்னுடைய பூசனையை இந்நாளுறுதியாகப்பற்றி யுன்னருளாற் செய்யத் தொடங்கினேன், செழுமதிமுடியாய் முழுது அருள்வழங்கி ஊறுநீக்கி முன்னின்று கோடிஎன்று - ஆகலாற் சந்திரசேகரனே பெருங்கருணைசெய்துவரு மிடையூற்றை யொழித்து முற்பட்டுநின்று யான்செய்யும் பூசனையை யேற்றுக்கொள்வாயென்று, சங்கற்பஞ்செய்து கொண்டாள் - சங்கற்பஞ் செய்து கொண்டனள். (எ-று)

சிருட்டியாதி தொழில் வழுக்கும் வண்ணஞ் செய்த பாவத்தால் விளைந்தபாவத் தீமைகள்கழுவ இந்நாளுன் பூசனையைக் கைக்கொண்டேனாதலால் இறைவனே இடையூறு நீக்கி முன்னின்று ஏற்றுக்கொள்வாயென்று சங்கற்பஞ்செய்தனளென்க.

இறைவனது ஐந்தொழிலு மென்று முளதென்பது தோன்ற வழுவறுதோற்றமெனவும், அது திருக்கண் புதைக்கத் தவறியதென்பதுதோன்ற வழுக்கிய எனவும், கண்புதைத்த அச்சிறுபொழுதுயிர்களுக்கெண்ணிறந்தகாலமாய்ப் பரிபாகமுண்டாதற்கிடனின்றி அஞ்ஞானமே மேலிட்டிருந்தனவென்பது தோன்ற பாவத்தீமை கழுவ எனவும், அங்ஙனம்வளர்ந்தோங்கிய வஞ்ஞானத்தை யோர்கணத்திற் போக்க வல்லது இதுவென்பது தோன்ற நின்பூசை எனவும், கண்மூடிய வச்சிறுபொழுதுயிர்களுக்கு உகாந்தமானதுபோல் தமக்கு மந்தரபருவதத்தினின்றுங் காஞ்சிக்கு வந்த விச்சிறுநாள் பலநாளாகத் தோன்றினமைதோன்ற இந்நாளெனவும், இனிப் பிரிந்த விறைவனைக்காண்டலும் கண்டவழிக் கழுவாயெய்தலும் திண்ணமென்பது தோன்றக் கடைப்பிடித்தெனவும், கடைப்பிடிக்கச்செய்தது இறைவனென்பது தோன்ற அருளாற்செய்கேனெனவும், இறைபணியினிற்பார்க்கு இங்குளி வாங்குங் கலம்போல் முன்னுள்ள பயிற்சிவயத்தான் ஒரோவழி மலமாயாகன்ம வாசனைகளிடையிடையே தலைப்பட்டு அப்பணியைமாற்றுத லியல்பாகலான் அம்மலமாயாகன்மங்களில்லையென்ற எனக்கிவ்விடையூறுக ளில்லையாம் வண்ணம் செய்தலே சான்றென்பது தோன்ற முழுதருள்வழங்கி யூறுநீக்கி எனவும், ஒன்றனையீவாரும் ஏற்பாரும் சிவார்ப்பணமெனக் கருதாவழி குற்றமாமென்று ஆகமங்கள் கூறுவதென்பது தோன்ற முன்னின்று கோடி எனவும், செய்த குற்றம் இதுவென்றும் அதற்குக் கழுவாயாகக்கொண்டது இதுவென்றும், தொடங்கியநாள் இந்நாளென்றும் இத்தொழில் ஈஸ்வரப்பிரீதியாகவென்றும் முன்னின்று காக்கவேண்டுமென்றுங் கூறுதலேசங்கற்ப முறையென்பது தோன்ற சங்கற்பஞ் செய்து கொண்டாளென்றுங்கூறினர். (கூ௫௪)

பூமுதற் பூத சுத்தி புரிந்தகப் பூசை யாற்றிக்
காமரு மலரும் வாச வருக்கமுங் கலந்த தெண்ணீர்த்
தோமில்பாத் தியமே யாச மனமருக் கியந்தூய் தாக்கி
மாமுர லிதழித் தாரார் முடிமிசை மலரை மாற்றி.

(இ - ள்.) பூமுதல்பூதசுத்திபுரிந்து அகப்பூசையாற்றி - பிருதிவி முதலாகச் சொல்லப்பட்ட பஞ்சபூதங்களைச் சுத்திசெய்து பின்னருட்பூசைசெய்து, காமருமலரும் வாசவருக்கமும் கலந்ததெள்நீர்தோம் இல் பாத்தியம் ஆசமனம் அருக்கியம் தூய்து ஆக்கி - நறுமணங்கமழும்மலர்களும் வாசனைத்திரவியங்களுங் கலந்த தெள்ளிய நீர்பெய்திருக்கும் குற்றமற்ற பாத்தியம் ஆசமனம் அருக்கியங்களை மந்திரங்களினும் புனிதமாக்கி, மாமுரல் இதழிதாரார் முடிமிசை மலரைமாற்றி - வண்டுகளொலிக்கும் கொன்றைமாலைசூடிய இறைவர் திருமுடிமேலுள்ள மலரைக்கழித்து.(எ-று)

பூதசுத்தி அந்தர்யாகம் பாத்யமுதலிய தீர்த்தசுத்தி இவைகளைச்செய்து சிவலிங்கமூர்த்தியின்மேல் முன்னுள்ள மலரைமாற்றி யென்க.

பூவென்பது பிருதிவி - இடம்-மலர்-(பிருதிவி பீஜமந்திரமாகிய) லம் - (பிருதிவி அக்கரமாகிய) அகரம் எனப்பொருள்படுதலால் முறையே பூதசுத்தி தானசுத்தி திரவியசுத்தி மந்தரசுத்தி லிங்கசுத்தி என்று மைவகைச்சுத்திகளுந்தோன்ற பூமுதல் பூதசுத்தி புரிந்தெனவும், இதயகமலத்தை யாச்சரயித்துக கட்டுண்டிருக்கும் ஆன்மாவை அவ்வான்மமந்திரவுச்சரிப்போடு துவாதசாந்தவாசியாகிய இறைவனிடத்திற் சேர்த்துப் பின்ஆண்டுப் பரசத்தியால் பெருகாநின்றவமிர்தஞ் சரீரவியாபகமாகக் கண்டலாகிய பூதசுத்திசெய்து ஆன்மாவை முன்போல் இதயகமலத்திற்கொண்டுவந்து அச்சரீரவாசியாக்கி அவ்வான்மாவில் சிவலிங்கசொரூபத்தைக்கண்டு தம்மனத்தாற் கற்பிக்கப்பட்ட மஞ்சனமுதலியவற்றால் பூசித்தலாகிய ஆன்மசுத்தியெனப்படும் அந்தர்யாகமியற்றினலன்றி பகிர்யாக மெனப்படும் புறப்பூசை பயனின்றாய் முடியு மென்பதுதோன்ற அகப்பூசையாற்றியெனவும், பாத்யாசமனார்க்கியங்கள் பூசாந்தமளவும் வேண்டுவனவாகலான் பத்தியமேயாசமனமருக்கியந்தூய்தாக்கி எனவும், நின்மாலிய மலரைச் சண்டேசருக்காக வீசானதிக்கில் வைப்பதுவிதி யென்பது தோன்ற முடிமிசைமலரைமாற்றி எனவுங்கூறினர்.

பூமுதல் என்றதனால் ஏனையபூதங்களையுடன்கொண்டு பூதசுத்தியெனப் பொருள்கொண்டமைபோல் ஓர் பீஜத்தோடேனைய பீஜங்களையும் ஓரக்கரத்தோடேனைய அக்கரங்களையு முடன்கொள்ளவேண்டுமென்க. எனவே பிருதிவிதத்வ பீஜம் சத்யோஜாத மந்திரத்தைக் காட்டலால் அதனைமுதலாகவுடைய பஞ்சப்பிரமமுதலிய மந்திரங்களை மூலாதாரமுதல் துவாதசாந்தமளவாக எடுத்தல் படுத்தல் நலிதலாக வுச்சரித்தலாகிய மந்திரசுத்தியையும், பிருதிவியக்கரம் பிரணவாக்கரத்துளொன்றாதலான் அதனை முதலாகவுடைய பலமந்திரங்களாற் செய்வதாகிய லிங்கசுத்தியையுங் குறித்தலாற் பூத தான திரவியசுத்தியோடு சொள்ளக்கிடந்தன.

புறப்பூசையுடையோ ரகப்பூசையில்லாதொழிதலும் அகப்பூசையுடையோர் புறப்பூசையில்லாதொழிதலு மிழுக்கப்படுதும் அகப்பூசை ஆணவத்தையடக்கி புறப்பூசை கன்மமாயாமலங்களை யொழிப்பதென்பதுமுணர்ந்து முன்னகப்பூசையியற்றிப் பின்புறப்பூசை தொடங்கினரெனவும் அப்புறப்பூசையில் தாவரருபமாகிய லிங்கபூசையோடு சங்கமபூசையு மொருங்குநிகழவேண்டுமென்பதுணர்ந்துச் சண்டேசனைக் குறித்து மலரைமாற்றினரெனவுங் கொள்க.

'ஒருமுழமுள்ள குட்டமொன்பது தொளையுடைத்தாய், யனைமுழுமதனைகலமதனில் வாழ் முதலையைந்து, பெருமுழைவாய்தல்பற்றிக் கிடந்து நான் பிதற்றுகின்றேன்' எனவும், 'முப்பது முப்பத்தாறு முப்பது மிடுகூரம்பை, யப்பர்போலைவர்வந்து விது தருவிது விடேன், ஒப்பவே நலியலுற்று லுய்யுமாறறியமாட்டேன்' எனவும் வருஞ்

திருவாக்குகளான் முன்னர்ப் பூதசுத்தி செய்யவேண்டு மென்பதற்கும், 'உடம்பெனு மனையகத்துளுள்ளமே தகளியாக, மடம்படு முணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி, யிடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கிற், கடம்படமாகளைநாதைகழலடிகாணலாமே' எனவும், 'காயமேகோயிலாகக்கடிமனமடிமையாக, வாய்மையேதூய்மையாக மனமணியிலிங்கமாக, நேயமேநெய்யும்பாலாநிறையநீரமையவாட்டிப், பூசனையீசனார்க்குப்போற்றவிக்காட்டினோமே' எனவும் வருந்திருவாக்குகளாற் பூதசுத்தியடையப் பெற்றபொழுதே யுட்பூசைசெய்யவேண்டு மென்பதற்குங் காட்டாகக்கொள்க. ()

மாதர்வண் சத்தி யாதி சத்தியீ றிலக வாய்ந்த
வாதன மதன்மேல் வைகுஞ் சதாசிவ வடிவி னன்ற
சோதியைத் திருவே கம்பச் சுடரினை நடுக்கீழ் பக்க
மீதற நிறைந்து விம்மு மானந்த நிமல வாழ்வை.

(இ - ள்.) வண் ஆதிசத்தி சத்திஈறு இலகவாய்ந்தமாதர் ஆதனம் அதன்மேல் வைகும் சதாசிவவடிவின் ஆன்றசோதியை - வலிய ஆதாரசத்திமுதல் குடிலாசத்தி முடிவாக விளக்கமாக வமைந்திருக்கின்ற சத்திரூபமாகிய ஆதனத்தின்மேல் வீற்றிருக்கும் சதாசிவரூபமாய் விளங்கும் மிகுந்தசோதிசொரூபனை, திருவேகம்பச்சுடரினை மீது கீழ் நடு பக்கம் அற நிறைந்து விம்மும் ஆனந்த நிமலவாழ்வை - ஆம்பரநாதராய்க்காணப்பெறும் பரஞ்சோதியை மேல்கீழ் நடுபக்கமென்பதின்றி எவ்விடத்து நிறைந்து ததும்புமானந்த சொருபமாகிய நின்மலவாழ்வை. (எ-று)

ஆதாரசத்திமுதல் குடிலாசத்தி யீறாகவமைந்துள்ள சிவாசனத்தில் வீற்றிருக்குஞ் சிவமாகிய நின்மலவாழ்வை யென்க.

சதாசிவமூர்த்தி வீற்றிருப்பது பூமிமுதல் குடிலைவரையிலாதாரசத்தி முதலிய சத்திகள் வியாபித்திருக்குஞ் சிவாதனத்தின் மேலென்பதுதோன்ற மாதர்வண்சத்தியாதி சத்தி யீறிலகவாய்ந்தவாதன மதன்மேல் வைகுஞ் சதாசிவமெனவும், அச்சதாசிவம் ஞானக்கிரியா சொருபமாகிய பராசத்தியுக்தமாகிய பரசிவத்தை யந்தர்யாமியாக வுடையதென்பதுதோன்ற வடிவினன்றசோதியையெனவும், அச்சிவபரஞ்சுடரே ஏகாம்பரநாதரெனப்பெயர்பூண்டு சோதிலிங்கரூபமாய் விளங்குவதென்பதுதோன்றத் திருவேகம்பச்சுடரினையெனவும், இவ்விலிங்கமூர்த்தி மேலுள்ள சுத்தாத்துவாவிலும் கீழுள்ள வசுத்தாத்துவாவிலும் நடுவிலுள்ள மிச்ராத்துவாவிலுமிருந்ததிகாரஞ் செலுத்தி மகந்தராதியரிடத்துத் தமது சத்திரூபகிரணமாயதிட்டித்து நிறைந்து தம்மைப் பிரகாசிப்பித்து கிருத்தியங்களைநடத்திச் சிவானந்தத்தையும் நின்மலவாழ்வையுந் தரும் சதாசிவநதி லந்தர்யாமியாய்விளங்கும் பரசிவமென்பது தோன்ற நடுக்கீழ் பக்க மீதறநிறைந்து விம்முமானந்த நிமலவாழ்வையெனவுங்கூறினார். ஆன்றசோதி ஒளிகட்கெல்லா முதலொளியாய்விளங்கும் பரசிவத்தை. (கூ௫கூ)

சீத்திரு ளறுக்கு நோக்காற் றெளிவுறக் கண்டு போற்றிப்
பாத்திய முதலா மூன்றும் பதமுக முடியி னீத்து
நாத்திகழ் மனுவின் மாண்ட நறுமது பருக்க நல்கி
யாத்தனூல் விதியி னாற்றான் மறித்துமா சமன மீந்தாள்.

(இ - ள்.) இருள்சீத்து அறுக்கும் நோக்கால் தெளிவுறகண்டுபோற்றி - அஞ்ஞானக்கண்ணிலைய மறக்கண்டுதுதித்து, பாத்தியம் முதலாமூன்றும் பதம்முகம் முடியில் ஈந்து - பாத்தியம் ஆசமனம் அருக்கியமென்னு முத்தீர்த்தங்களையும் முறையே பாதத்

திரும் முகத்திலும் முடியிலுங்கொடுத்து, நா திகழ் மனுவில் மாண்டகறு மதுபருக் கம் நல்கி - நாவிலுறையும் மந்திரத்தினற்சிறந்த நல்ல மதுபருக்கத்தைக்கொடுத்து, ஆத்தன் நூல்விதியின் ஆற்றல் மறித்தும் ஆசமனம் ஈந்தாள் - இறைவனுடைய வாக மவழியால் மீளவுமாசமனந் தந்தனர். (எ-று)

சிவபரஞ்சுடரை ஞானக்கண்ணாற்கண்டு போற்றிப் பதம் முகம் முடியிற் பாத்யா சமனார்க்கியங்களைக்கொடுத்து மதுபருக்கமூட்டி மீட்டு மாசமனந்தர் தனரென்க.

சிவபரஞ்சுடரே வேகம்பச்சுடரென்பதை வலியுறுத்தத் தெளிவுறக்கண்டென்றார்.

இணங்கிய நெய்பால் பெய்த வின்னமு திசைய நல்கி
மணங்கம ழெண்ணெய்க் காப்பு மாநெல்லி மஞ்சட் காப்பு
மணங்கருங் கபிலை யைந்தைந் தமுதுபல் குடத்துத் தீம்பால்
குணங்கெழு தயிர்நெய் செந்தேன் குளிரிள நீரு மாட்டி.

(இ - ள்.) நெய்பால் பெய்து இணங்கிய இன் அமுது இசைய நல்கி - நெய்யும் பாலும் வார்த்துக்கலந்த வினியவன்னத்தைத் திருவுளங்கொளக் கொடுத்து, மணங்க மழ் எண்ணெய் காப்பு மாநெல்லி மஞ்சள் காப்பு-நறுமணங்கமழு மெண்ணெய்க்காப் பாலும் மாக்காப்பாலும் நெல்லிக்காப்பாலும் மஞ்சட்காப்பாலும், அணங்கரும் கபிலை ஐந்தும் ஐந்தமுதும் - குற்றமற்ற கபிலைப் பசுவினிடத்துப்பெற்ற பஞ்சகவியத்தினு லும் பஞ்சாமிர்தத்தினுலும், பல்குடத்து தீம்பால் குணங்கெழு தயிர்நெய் செந்தேன் குளிர் இளநீரும் ஆட்டி - பலகுடங்களிலுள்ள இனியபாலாலும் கெடாததயிராலும் நெய்யாலுஞ் சிவந்ததேனுலுங் குளிர்ந்த இளநீராலு மபிடேகஞ்செய்து. (எ-று)

(ஆசமனந்தந்த பின்னர்) இனிய அன்னத்தை நிவேதித்து எண்ணெய் மா நெல்லி மஞ்சள் முதலிய காப்பிட்டுப் பஞ்சகவியம் பஞ்சாமிர்தம் பால்தயிர் நெய்தேன் இள நீர் ஆகிய விவைகளா லபிடேகஞ்செய்தென்க. (௩௫அ)

கருப்புமிழ் தேற லாட்டிப் பல்கனி வருக்க மாட்டி
யருத்திகூ ரன்பி னூன்ற சந்தனக் குழம்பு மாட்டி
மருக்கமழ்ந் தெடுத்த கீர்த்தி மதித்தடங் கூவற் றெண்ணீ
ருருத்திர மனுக்க ளோதி விதியுளி நிறைய வாட்டி.

(இ-ள்.) கரும்பு உமிழ் தேறல் ஆட்டி பல்கனிவருக்கம் ஆட்டி - (பின்) கருப்பஞ் சாற்றினு லபிடேகஞ்செய்து பலசனிவருக்கத்தினு லபிடேகஞ்செய்து, அருத்தி கூர் அன்பின் ஊன்ற சந்தனக்குழம்பும் ஆட்டி - ஆசைமிக்க வன்பினனிறைந்த சந்த னக்குழம்பினலு மபிடேகஞ்செய்து, கீர்த்திமதி தடங்கூவல் எடுத்த மருகமழ் தெள் நீர் - கீர்த்திமதியினுலுண்டாகிய பெரியகேணியில் முகந்தெடுத்த நறுமணங்கமழும் தெள்ளிய நீரினுலும், உருத்திர மனுக்கள் ஓதிவிதியுளிநிறைய ஆட்டி - உருத்திர மந் திரங்களைச்சொல்லி விதிவழி நிரம்ப வபிடேகஞ்செய்து. (எ - று)

கருப்பஞ்சாறு பல பழவர்க்கம் சந்தனம் சுத்தோதகமாகிய இவைகளை உருத் திரமனுக்களோதியபிடேகஞ்செய்தென்க.

ஏகாதசருத்ரம் பவாமானி பஞ்சப்பிரமம் துவரிதமுதலானருக்கு, ஸ்ரீருத்ரம் நீல ருத்ரம் மதுத்திரயம் சுபர்ணம் சதருத்ரம் வசோர்த்தாரா பவமானுதிபஞ்சசாந்தி, ஜேஷ்டா-ஆபோராஜா-தேவவ்ருதா-ததகோவர்க்கா என்னுமிவைகளை முதலாகவுடை

ய சர்மருக்குகள் ஆகமமர் திரங்கள் வ்யோமவ்யாபினி சம்ஹிதாமந்திரம் முதலிய மந்திரங்களையோதி சகஸ்ரதாரை கோஸ்ருங்கம் ரத்னம் சுவாணம் ஸ்னபநம் சகஸ்த்ரசங்கம் என்பவைகளாற் செய்தனரென்பார் உருத்திரமனுவோதி யென்றுருத்திரமனுக்களோதி விதியுளிநிறைய வாட்டி என்றார். (௩௫௯)

நுழையுநூற் கலிங்க மேந்தி நொய்தென மேனி யொற்றி
விழைதகு நறும்பட் டாடை விளங்கெழின் முந்நூல் சாத்தித்
தழையுமான் மதங்கற் பூரச் சந்தனக் கலவை சாத்தி
யிழையணி வருக்க மேனை யீர்ந்தொடை யலங்கல் சாத்தி.

(இ - ள்.) நொய்தெனநூல் நுழையும் கலிங்கம் ஏந்தி மேனி ஒற்றி - விரைந்து நூலாலமைந்த வத்திரத்தை யேந்தித் திருமேனிமுற்று மொற்றி, விழைதகுநறும்பட்டாடை விளங்கு எழில் முந்நூல் சாத்தி - விரும்பத்தக்க நல்லபட்டாடைகளையுமொளிவீசுமழகினையுடைய முப்புரிநூலையுஞ் சாத்தி, தழையும் மான்மதம் கற்பூரம் சந்தனக்கலவைசாத்தி - நல்ல கஸ்தூரியும் பச்சைகர்ப்பூரமுஞ்சேர்ந்த சந்தனக்கலவை பூசி, இழை அணி வருக்கம் ஏனை ஈரந்தொடையலங்கல் சாத்தி - ஆபரணவகைகளையும் ஏனையதேனிறைந்த மலர்மாலைகளையு மழகுபெறச்சாத்தி. (எ-று)

(அபிடேகமுடிந்தவுடன்) வத்திரத்தினற் திருமேனியொற்றிப் பட்டாடை முப்புரிநூல் சந்தனக்கலவை ஆபரணம் மலர்மாலை ஆகிய இவைகளை யலங்கரித்தென்க. (௩௬0)

நறுவிரைத் தூபந் தீபங் காட்டிநால் வகைவே றுண்டி
யறுசுவைத் திறத்தின் மாண வமுதுசெய் வித்துச் சீத
முறுபுன லுதவிக் கைவாய் பூசியொண் பழுக்காய் வாசம்
பெறுமிலை முகவா சங்கண் மந்திரம் பேசி நல்கி.

(இ - ள்.) நறுவிரைதூபம் தீபம் காட்டி - நறுமணங்கமழுந் தூபத்தையுந்தீபத்தையுங்காட்டி, நால்வகைவேறு உண்டி அறுசுவைதிறத்தின்மாண அமுதுசெய்வித்து - நான்குவகைப்பட்ட வுண்டிகளை யறுசுவையமைந்த கறிவகைகளான் சிறப்பாகவமுது கொள்ளும்படிச் செய்வித்து, சீதம் உறுபுனல் உதவிகைவாய்பூசி - குளிர்ந்த நீருதவி ஆசமனர்க்கியங்கொடுத்து, ஒண்பழுக்காய் வாசம் பெறும் இலை முகவாசங்கள் மந்திரம்பேசி நல்கி - ஒள்ளிய பழுக்காயும் வாசம்வீசும் வெற்றிலையும் தக்கோலமுதலிய முகவாசங்களுமாகிய இவைகளை அவ்வவற்றிற்குரிய மந்திரங்களைக் கூறிக்கொடுத்து.

(அலங்கரித்தபின்னர்) தூபதீபங்காட்டி நிவேதனமூட்டிவித்து ஆசமனர்க்கியங் கொடுத்துத்தாம்பூலமளித்துமுகவாசந் தந்தென்க.

முகவாசம் - இலவங்கம் ஏலம் கருப்பூரம் சாதிக்காய் தக்கோலம். (௩௬௧)

அகிற்புகை தீப மெல்லா மினிதளித் தரக்கு நன்னீர்
மகிழ்ச்சியிற் சுழற்றிப் பல்கால் வலஞ்செய்து வணங்கிப் போற்றி
யிகப்பிலஞ் செழுத்து மெண்ணி யின்னன பிறவு மாற்றி
முகிழ்த்தபே ரன்பி ஞன்ற பூசனை முற்றச் செய்தாள்.

(இ-ள்.) அகில்புகை தீபம் எல்லாம் இனிது அளித்து - அகிற்புகைத் தூபத்தையும் தீபவரிசைகளையு மினிதாகக்காட்டி, அரக்கு நல் நீர்மகிழ்ச்சியில் சுழற்றி - சிவந்த நீராலாகிய நல்ல ஆலாற்றியை முகமலர்ந்து சுற்றி, பல்கால் வலம்செய்து வணங்கி,

போற்றி - பன்முறை பிரதக்கணஞ்செய்து பணிந்துதுதித்து போற்றி, இகப்பில் அஞ்செழுத்தும் எண்ணி இன்னபிறவும் ஆற்றி - மாறுபடாத பஞ்சாக்கரத்தைக் கணித்து இவைபோல்வனவாகிய ஏனையவிதிகளையுஞ்செய்து, முகிழ்த்தபேர் அன்பில் ஆன்றபூசனை முற்ற செய்தாள் - மனமொழிமெய்களொத்த பேரன்பினால் தாஞ்செய்யத் தொடங்கிய சிறந்த பூசையை முற்றச்செய்தனர். (எ-று)

(முகவாசந்தந்தபின்னர்) மீளவும் தூபதீபாராதனை வகைகளையுங்காட்டி பிரதக்கண நமஸ்காரம் தோத்திரம் பஞ்சாக்கரஜெபம் இவைபோன்ற வேனையவற்றையுஞ் செய்து பூசைமுடித்தெனக.

பிறவென்றது - அக்கினிகாரியம் கபிலைபூசை முதலியன. (௩௬௨)

முற்றுவித் தெழுந்து மீண்டு மொய்யொளிப் பிலத்தின் பாங்க
ரற்றமி லறமெண் ணான்கு மருள்வழி வளர்ப்பா ளாகிப்
பற்றலார் புரஞ்செற் றாரை யிம்முறை யெண்ணில் பன்னாட்
சிற்றிடை யெம்பி ராட்டி பூசனை செய்து வாழ்நாள்.

(இ-ள்.) சிற்றிடை எம்பிராட்டி முற்றுவித்து எழுந்து மீண்டு - சிறியவிடையையுடைய வெமது பெருமாட்டிபூசையை முடித்தெழுந்து திரும்பி, மொய்யொளிபிலத்தின் பாங்கர் அற்றம் இல் அறம் எண்ணான்கும் அருள்விழிவளர்ப்பாள் ஆகி - சோதிமயமாய் விளங்கும் பிலத்தருகில் சோர்வில்லாத முப்பத்திரண்டு தருமங்களையும் கருணையுடன் செய்கின்றவராய், பற்றலர்புரம் செற்றாரை இம்முறை எண்ணில் பல்நாள் பூசனைசெய்து வாழ்நாள் - பகைவரது முப்புரமெரித்த விறைவரை யிதுகாறுங் கூறிவந்த முறைப்படி அளவிறந்தகாலம் பூசித்து வாழ்ந்துவருநாளில். (எ-று)

அம்மையார் சிவார்ச்சனைசெய்து முடித்துப் பிலத்தருகடைந்து முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்து இம்முறை எண்ணிறந்தகாலம் பூசித்து வருநாளிலென்க.

அறமேவீடு பேற்றையுந்துறக்க முதலிய செல்வத்தையுந் தருவதாகலான் அற்றமில்றமெனவும், அதுவே உயிர்க்குஆக்கமாகலின் அருள்வழி வளர்ப்பாளாகி எனவுங் கூறினர். இதனைச் 'சிறப்பீனுஞ் செல்வமுமீனு மறத்தினூஉங்காக்க மெவனோவுயிர்க்கு' என்பதனாற்காண்க. (௩௬௩)

அன்னண மளவில் காத லருச்சனைத் திறத்தி னோங்க
மன்னிய மறைநூல் வாய்மை யாகம வழியிற் பேணுந்
தன்னிக ரிமய மீன்ற மதரரித் தடங்கட் செவ்வாய்
மின்னிடைக் கொருநா ளங்க ணிகழ்ந்தது விளம்ப லுற்றேன்.

(இ-ள்.) அன்னணம் அளவில் காதல் அருச்சனை திறத்தில் ஓங்க - அவ்வகையாக அளவிறந்த ஆசை அருச்சனைசெய்யுந் திறத்தில் மேன்மேல்வளர, மன்னிய மறைநூல்வாய்மை ஆகமவழியிற்பேணும் - அவ்வருச்சனையை நிலைபெற்ற வேதவுண்மையாகிய ஆகமமார்க்கத்தில் செய்துவரும், தன்னிகர் இமயம் ஈன்ற மதர் அரிதடங்கண் செவ்வாய் மின்இடைக்கு - ஒப்பில்லாத இமயமலைபெற்ற மதர்த்த செவ்வரிபரந்த பெரியகண்ணையும் சிவந்தவாயையும் மின்போன்ற இடையையுமுடைய பார்வதியாருக்கு, ஒருநாள் அங்கண் நிகழ்ந்தது விளம்பல் உற்றேன் - ஒருநாளவ்விடத்து நடந்த திருவிளையாட்டை இனியெடுத்துச் சொல்கின்றேன். (எ-று)

அளவிறந்தகாலம் அருச்சனைசெய்யுந்தோறும் அவ்வருச்சனைத் திறத்திலேயே அளவிறந்த காதல்வளர அவ்வருச்சனையை யாகமவழியியற்றிவரும் அம்மையார்க் கொருநாணிகழ்ந்த செய்தியைச் சொல்கின்றேமென்க.

வேதம் பொதுவும் ஆகமம் உண்மையு மென்பது சித்தாந்தமென்பார் வாய்மை யாகம மெனவும், அவ்வுண்மை பொதுமாலாரிய வேதவுண்மையேயன்றி வேறன் றென்பார் மன்னியமறைநூல் வாய்மை ஆகமவழியெனவும், நாள்வளர அருச்சனையும் அருச்சனைவளர ஆசையும் மேன்மேல் வளர்ந்தனவென்பார் அன்னணமளவில் காத லருச்சனைத் திறத்தாளென்கவெனவுங் கூறினர். (நூசுச)

பண்டுபோற் கம்பை யாற்று மணிப்புனல் படிந்து மெய்யிற்
கண்டிகை நீறு தாங்கிக் கடப்படு நியம மாற்றித்
தொண்டினில் வழாது பூசைத் தொழிற்றலை நின்று காதன்
மண்டவே கம்ப னுரை மஞ்சன மாட்டுங் காலை.

(இ - ள்.) பண்டுபோல் கம்பையாற்று மணிப்புனல்படிந்து மெய்யில்நீறு கண்டிகைதாங்கி - முன்போல் கம்பாநதியின் சுத்தநீரில் ஸ்நானஞ்செய்து திருமேனியிற் றிருநீறு முருத்திராக்கமாலையுந் தரித்து, கடப்படுநியமம்ஆற்றி தொண்டினில் வழாது பூசைத்தொழில் தலைநின்று - உறுதியாகக் கைக்கொண்ட நித்தியகன்மத்தைச்செய் தடிமைத் திறத்தில் வழுவாது பூசிப்பதில் முற்பட்டுநின்று, காதல்மண்ட ஏகம்ப னுரை மஞ்சனம் ஆட்டுங்காலை - ஆசைமுதிர்ந்து செறிய ஏகம்பவாணனை யபிடேகஞ் செய்கின்ற காலத்தில். (எ-று)

முன்போல் கம்பாநதியில் ஸ்நானஞ்செய்து திருநீறுங் கண்டிகையும் புனைந்து நித்திய கன்மானுட்டானங்களை முடித்துப் பூசைசெய்யத் தலைப்பட் டிறைவனைத்திரு மஞ்சனமாட்டுங் காலத்திலென்க. (நூசுரு)

மருமலர்த் தனிமா நீழல் வள்ளலார் மேன்மே லன்பு
பெருகிய கருத்தி னுட்குப் பேரருட் கருணை கூர்ந்த
வொருதிரு விளையாட் டாலே பத்தியி னுறுதி நோக்கித்
திருவருள் புரிவா னெண்ணி யிதுதிரு வுள்ளஞ் செய்தார்.

(இ - ள்.) மருமலர்த்தனிமாநீழல் வள்ளலார் - வாசம்வீசும் மலர்நிறைந்த ஒப் பற்ற மாவின்நீழலில் வாழ்கின்ற இறைவர், மேன்மேல் அன்புபெருகிய கருத்தினுட்கு- மேலோங்கி யன்புவளரப்பெற்ற மனமுடைய அம்மையார்க்கு, பேரருள்கருணை கூர்ந் த ஒரு திருவிளையாட்டால் - கருணைமிகுந்த ஓர் அருள்விளையாட்டால், பத்தியின் உறு திநோக்கி திருவருள்புரிவான் எண்ணி - பத்தியினுறுதிப்பாட்டைக் கண்ணுற்றுத் திருவருள் செய்யவெண்ணி, இது திருவுள்ளஞ் செய்தார் - இதனைத் திருவுள்ளத்தி லடைத்தனர். (எ-று)

ஏகம்பவாணர் அம்மையார்க்கு அவரது பத்திநோக்கித் திருவருள் புரியத் திரு வுளஞ் செய்தனரென்க. (நூசுசு)

விழுமிய வண்டத் துள்ளும் புறத்தினும் விரவுந் தீர்த்த
முழுவது மொருங்கு நண்ண முன்னினர் முன்ன லோடு
மொழுகுநீர்க் கம்பை யாற்றி னுடன்விராய்க் கடைக்கால் வெள்ள
மெழுவது கடுப்ப வெல்லாப் புனலும்வந் திறுத்த வன்றே.

ஈ (இ - ள்.) விழுமிய அண்டத்துஉள்ளும் புறத்தினும் விரவும் தீர்த்தமுழுவதும் ஒருங்குஅன்னா முன்னினர் - பெருமை பொருந்திய அண்டத்தினுள்ளும் புறம்பும் ஓடுகின்ற தீர்த்தங்களெல்லாம் ஒன்றுசேர்ந்து அவ்விடத்தில்வரத் திருவுள்ளஞ் செய்தனர், முன்னலோடும் ஒழுகுநீர் கம்பையாற்றின் உடன்விராய் - திருவுள்ளஞ் செய்யவும் தண்ணீர் நீங்காதோடும் கம்பாநதியோடுகலந்து, கடைக்கால் வெள்ளம் எழுவதுகடுப்ப - உகாந்தத்தில் எழுங்கடல் வெள்ளத்தையொப்ப, எல்லாப்புனலும் வந்திறுத்த - எல்லாத்தீர்த்தங்களும் வந்து தங்கின. (எ-று)

அண்டங்களினுள்ளும் புறம்புமுள்ள தீர்த்தங்களெல்லாம் இக்காஞ்சியில் வரும்படி நினைக்கவும், அத்தீர்த்தங்களெல்லாம் கம்பாநதியிற்கலந்து தங்கிய தென்க. ()

கலிவிருத்தம்.

மிடைவானவர் திசைகாவலர் புவிமேலவர் காணாஉக்
கடைநாளணு கிற்றெனன வெருவிக்கலுழ் கண்ணீ
ரிடையாறென விரவக்கொடு வேகத்தொடு மெய்வெப்
புடைநீர்களு முடனுகிய கம்பைப்புனல் வருமால்.

(இ - ள்.) மிடைவானவர் திசைகாவலர் புவிமேலவர்காணா - நெருங்கியதேவர்களும் திக்குப்பாலகரும் மண்ணுலகி லுள்ளவருங்கண்டு, கடைநாளணுகிற்று என வெருவி - உலகமழியுநாள்வந்து கூடிற்றென்று அச்சமுற்று, கலுழ்கண்ணீர்இடை ஆறு எனவிரவ - சிந்துகின்ற கண்ணீரானது இடையழியிற் கூடுநதிபோற்கலக்க, எஎப்புடை நீர்களும் உடனுகிக் கொடுகம்பைப் புனல்வேகத்தொடுவரும் - எந்தவண்டங்களினுமுள்ள நீர்களெல்லாமுடனுகக்கொண்டுவருகின்றகம்பாநதிமிகுந்த வேகத்தோடும்வரும். (எ-று)

யாவருங் கண்டஞ்சிக் கண்ணீர்சோரக் கம்பாநதி பெருக்கெடுத்து வருகின்ற தென்க. (ருசுஅ)

படலைக்கரு முகிலும்மிடை யிடையேபட ரொளிசேர்
தொடலைக்கதி ருடுவுந்துவ ளுறுபாசடை விரவு
மிடையிற்றிகழ் மலரும்மென விலகக்கக னமுமுட்
படமிக்கெழு பரவைப்புனல் பயமுற்றிட வருமால்.

(இ - ள்.) படலைகருமுகிலும் - வரிசையாயுள்ள மேகக்கூட்டங்களும், இடையே மிடைபடர் ஒளிசேர் தொடலைகதிர் உடுவும் - மேகங்களினிடையே செறிந்துபடர்ந்து ஒளிமயமாகிய வரிசையாயுள்ள நட்சத்திரங்களும், துவளுறுபாசடைவிரவும் இடையில் திகழ்மலரும் என இலக - துவண்டசைகின்ற பசிய இலையினடுவில் விளங்கும் மலர்போன்று விளங்க, ககனமும் உட்படமிக்கெழு பரவைபுனல்பயம் உற்றிடவரும் - ஆகாயமுந் தன்னுள்ளாக மேலோங்கிவருங் கடல்போன்ற கம்பையாவருமஞ்சவரும்.

கரியமேகங்கள் பச்சிலையாகவும் அதனிடைதோன்றுகின்ற நட்சத்திரங்கள் அவ்விலைநடுவில் மலரும் மலர்களாகவுங்காண ஆகாயத்தைத் தன்னுட்கொண்டுகம்பாநதி வருமென்க. (ருசுக)

அடிநேடிய திருமாலென விருமாநில மகழு
முடிநேடிய மலரோனென விண்மேற்செல முடுகுங்

கடவாமுரா ணிருவோரொதிர் கனலாயெழு முருவ
முடையானென விரைசெல்புனல் கீழ்மேலுற நிலையும்.

(இ-ள்.) அடிதேடிய திருமாலென இருமாநிலம் அகழும் - திருவடியைத்தேடிய திருமாலைப்போல் பெரியபூமியின்கீழ்சென்று பெயர்க்கும், முடிதேடிய மலரோன் என விண்மேல் செலமுடுகும் - திருமுடியைத் தேடச்சென்ற பிரமனைப்போல் ஆகாயத்தின்மேற்செல்ல வேகங்கொள்ளும், முரண்கடவா இருவோர் எதிர் கனலாய்எழும் உருவம் உடையான்என - தங்கள் வாதத்தினின்றும் நீங்காத அயனரியாகிய இருவரெதிரினு மழல்வண்ணமா யெழுந்த வுருவத்தை யுடைய இறைவனைப்போல, விரைசெல்புனல் கீழ்மேல்உற நிலையும் - விரைந்து செல்கின்ற கம்பைகீழிடத்திலும் மேலிடத்திலும் நிலைபெற்றிருக்கும். (எ-று)

திருமால் அடிதேடத் தொடங்குங்கால் அகழ்ந்ததுபோல் நிலத்தை யகழ்ந்தும், பிரமன் முடிதேட மேல்விரைந்து சென்றதுபோல் விண்மேற் சென்றும் அவ்விருவரிடை அடிமுடி தோன்றாது அழல்வண்ணனாய் நின்ற இறைவர்போல் மண்ணும் விண்ணுந் தோன்றாது கம்பைவெள்ளம் எங்கும் நிறைந்து நிலைபெற்றிருந்த தென்க.()

வாழைக்கனி பலவின்கனி மாவின்கனி நெடிய
தாழைக்கனி யகில்குங்கும நிரைசந்தன மலர்தேன்
வேழத்துணி முதலின்னன கொடுமேவலி னுமையா
ளூழிற்புரி பூசைக்குரி யவையுய்ப்பவ ருறழும்.

(இ-ள்.) வாழைக்கனி பலவின்கனி மாவின்கனி நெடிய தாழைக்கனி அகில் குங்குமம் நிரைசந்தனம் மலர் தேன் வேழத்துணி முதல்இன்னன கொடுமேவலின் - வாழைப்பழம் பலாப்பழம் மாம்பழம் பெரியதெங்கின்பழம் ஆகிய இவைகளையும் அகிற்கட்டை குங்குமக்கட்டை சந்தனக்கட்டை ஆகிய இவைகளையும் மலர் தேன் கரும்புமுதலிய இவைகளையும் கொண்டுவருதலால், உமையாள் ஊழிற்புரி பூசைக்கு உரியவை உய்ப்பவர் உறழும் - உமாதேவியார் விதிப்படி செய்யும் பூசனைக்கு உரியனவாகிய பலபண்டங்களைக் கொண்டுவந்து கொடுக்கின்ற தோழிமாரை யொக்கும்.

கனிவகைகளையும் வாசனைக் கட்டைகளையும் மலர்முதலியவைகளையும் வெள்ளங் கொண்டு வருதலால் தோழிமாரை யொக்குமென்க.

ஊழிற்புரி பூசைக்கென்றது - நெடுநாள்புரியும் பூசைக்கெனினு மமையும். ()

இருபாலினு மணிதங்கிய விருகோடு படைத்து
வெருவார்களும் வெருவித்துயர் மேவத்தவ வுரறி
மருவார்குழ லுமையச்சுற வரலானுயர் கம்பை
பெருமானெதிர் பண்டெய்திய பெருவேழமு நிகரும்.

(இ-ள்.) உயர்கம்பை மருவார்குழல்உமை அச்சுறவரலான் - மேன்மைபொருந்திய கம்பாநதி நறுமணங்கமழும் நீண்ட கூந்தலையுடைய உமாதேவியா ரஞ்சவருதலால், இருபாலினும் மணிதங்கிய இருகோடுபடைத்து - இரண்டு பக்கங்களிலும் முத்துக்கள்பொருந்திய விரண்டு கொம்பினையுடைத்தாய், வெருவார்களும் வெருவித்துயர்மேவ - அஞ்சாதாரு மஞ்சித் துன்பமடைய, தவஉரறிபெருமான் எதிர்பண்டு எய்திய பெருவேழமும் நிகரும் - மிக்க கோபங்கொண்டு இறைவன் முன் முன்னாள் வந்த பெரிய யானையையுமொக்கும். (எ-று)

கம்பாநதி அம்மையாரஞ்ச வேகங்கொண்டு வருதலால் முன் இருகோடுபடைத்துப் பெருங்கோபங்கொண்டு இறைவன்முன்வந்த யானையை யொக்குமென்க.

பெருமானெதிர் பண்டெய்திய வேழம் - கயாசுரன். யானைக்கொம்பு முத்துப் பிறக்கு மிடங்களி லொன்றாதலான் மணிதங்கிய கோடென்றார். இருபாலினும் அணி தங்கிய இருகோடுபடைத்து - இருகரையினும் வரிசையாயுள்ள பெரிய மரக்கொம்புகளை வாரிக்கொண்டு எனப் பொருள்கொள்ளலுமொன்று. (௩௭௨)

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

மலைபடு வளங்கள் வாரி மணிபல வரன்றிப் பொங்கி
யலையெறிந் திரைத்து விம்மி விசும்பெலா மடைத்துப் பம்பித்
தலைவரு வெள்ளந் தன்னைத் தடவரை பயந்த திங்கட்
கலைநிறை வதனத் தேவி காண்டலும் வெரூஉக்கொண் டாளால்.

(இ - ள்.) மலைபடுவளங்கள்வாரி மணிபலவரன்றி - மலைபடு பொருள்களாகிய சிறந்த சந்தனமுதலிய விருக்கங்களையும் பலவகை மணிகளையும் வாரிக்கொண்டு, பொங்கி அலை எறிந்து இரைத்து விம்மி விசும்பு எல்லாம் அடைத்து பம்பி தலைவரும் வெள்ளந்தன்னை - மேலெழுந்து அலைவீசி ஒலித்துப்பெருகி ஆகாயப்பரப்பெல்லாமறைத்துச் செறிந்து மேற்பட்டுவரும் வெள்ளத்தை, தடவரை பயந்ததிங்கள் கலைநிறை வதனத்தேவி காண்டலும் வெரு கொண்டாள் - மலையரையன்பெற்ற கலைநிறைந்த சந்திரனைப்போன்ற திருமுகமுடைய பார்வதியார் காணவும் பயந்தனர்.

மலைபடு பொருளெல்லாம் வாரிக்கொண்டு ஆகாய முகட்டை யளாவிப் பொங்கி வருகின்ற வெள்ளத்தைப் பார்வதியார்கண்டச்சமுற்றனரென்க. (௩௭௩)

புடையுறு மிகுளை மாரும் பொள்ளென வச்சம் பூப்பத்
தடைபடா தணுகு நீத்தந் தனையெதிர் நோக்கி நோக்கிக்
கடல்கிளர்ந் தனைய வெள்ளங் காரண மின்றி யென்னோ
விடையவன் பூசை நாப்பண் மேவிய வாறென் றெண்ணி.

(இ - ள்.) புடையுறும் இகுளைமாரும் பொள் என அச்சம்பூப்ப - அம்மையார் பக்கங்களிற் சூழ்ந்திருக்குந் தோழிமார்களும் திடுக்கென்றச்சங்கொள்ள, தடைபடாது அணுகும் நீத்தம் தனை எதிர்நோக்கி நோக்கி - தடுப்பதற்கோ ரணையின்றி வரும் வெள்ளத்தைத் திரும்பிப் பலமுறையும் பார்த்து, கடல்கிளர்ந்தால் அனையவெள்ளம் - கடல்பொங்கி வருவதைப்போல வருகின்ற வெள்ளம், காரணமின்றி விடையவன்பூசை நாப்பண்மேவிய ஆறு என்னே என்று எண்ணி - காரணமில்லாமல் சிவபூசைசெய்யு மிவ்விடையில் வருகின்றவகை என்ன ஆச்சரியமென்றெண்ணி. (எ-று)

பாங்கியரஞ்சவரும் வெள்ளத்தை யம்மையார் பலமுறையும் பார்த்துக் காரணமின்றி இச்சிவபூசை நடுவில் வருவது என்னையென்றெண்ணினரென்க. (௩௭௪)

என்னுடைத் தீங்கு தன்னாற் பூசனைக் கிடையூ றுகத்
துன்னிய திதுவா மென்று சொல்லருங் கவலை கூர்ந்து
சென்னியின் மதியம் வைத்தார் திருவடி யிதயத் தென்னு
முன்னரப் பெருநீர் வெள்ள முடுகிவந் தடுத்த தாக.

(இ - ள்.) இது என்னுடை தீங்கு தன்னால் பூசனைக்கு இடையூறாக நண்ணி யது ஆம் என்று - இந்த வெள்ளமென்னுடைய கொடும்பாவத்தினால் பூசைக்கிடை யூறாக நெருங்கி வருவதாகுமென்று, சொல்லரும் கவலைகூர்ந்து சென்னியில் மதியம் வைத்தார் திருவடி இதயத்து எண்ணுமுன்னர் - சொல்லுக் கடங்காத மனக்கவலைமீ தூர்ந்து முடியிற் சந்திரனை வாழவைத்த இறைவருடைய திருவடியை யுள்ளத்தி னினைப்பதற்குமுன், அ பெருநீர்வெள்ளம் முடுகிவந்து அடுத்தது - அந்தப் பெரியவெள் ளம் வேகமாக வந்தணுகியது. (எ-று)

இவ்வெள்ளம் வருவதற்கு வேறுகாரணமில்லை என்னுடைய பாவமே; அதனு லென்பூசைக் கிடையூறாக வந்ததென் றெண்ணுவதற்கு முன்னரவ் வெள்ளம் விரைந் துவந்ததென்க.

வருகின்ற வெள்ளம் தன்பூசைக்கே இடையூறாக வருகின்றதெனத் துணிந்தா ராகையால் அவரவர்வினை அவரவர்க்கே வருமன்றி மாறிவராதென்பார் என்னுடைத் தீங்கு தன்னாற் பூசனைக் கிடையூறாகத் துன்னிய திதுவாமெனவும், கலைதேய்ந்த சந்தி ரனை முடியிலணிந்து வாழவைத்ததுபோல என்னையுந் தன்னருளில் வாழவைக்க வேண்டுமென்றெண்ணினரென்பார் சென்னியின் மதியம்வைத்தார் திருவடி யிதயத் தெண்ணு முன்னரெனவுங் கூறினார். (௩௭௫)

துன்புற நோக்கி நெஞ்சந் துண்ணெனத் துளங்கி யாவா
வும்பர்வா னடவிச் செல்லு மொப்பரும் பெருநீர் வெள்ள
மெம்பிரான் மிசையே நண்ணு மினிச்செய்வ தென்னோ வென்று
தம்பிரா னார்பா லன்பு தழைந்தெழு முள்ளத் தோடும்.

(இ - ள்.) துன்புறநோக்கித் துண்ணென நெஞ்சம் துளங்கி - வருத்தமுற்றுப் பார்த்துத் திடுக்கென்று நெஞ்சங்கலங்கி, உம்பர்வான் தடவிச்செல்லும் ஒப்பரும் பெருநீர்வெள்ளம் - விண்ணுலகத்தைக் கடந்து செல்லு மிந்த வொப்பில்லாத பெ ரிய நீர்ப்பெருக்கம், ஆவா எம்பிரான் மிசையேநண்ணும் - அந்தோ என்னுடைய நாயகர்மேல் வரும், இனிசெய்வது என்னோ என்று - இனியான் செயயத்தக்கது யா தோவென்று, தம்பிரானார்பால் அன்புதழைந்து எழும் உள்ளத்தோடும் - தமது பெரு மானார்பாலன்புநிறைந்தெழுகின்ற வுள்ளத்தோடும். (எ-று)

(வெள்ளம் முடுகிவரவும்) துன்பமடைந்து நோக்கி மனங்கலங்கி அந்தோ இந்த வெள்ளம் இனி நாயகர்மேல்வரும் நாம் செய்யத்தக்கது யாதோ வறிகிலேனென் றன்பா லெழுந்த வுள்ளத் துடனென்க. (௩௭௬)

அட்டொளிப் பசும்பொன் மேனி வடிவெலா மதிர்ப்புக் காட்டப்
பொட்டணி நுதலின் பாங்கர்க் குறுவெயர்த் திவலை பூப்ப
மொட்டிள முலையிற் றாங்கு முத்தொளி வடங்க ளாட
விட்டிடை வருந்திச் சால விறுமெனத் துவண்டு வாட.

(இ-ள்.) அட்டு ஒளி பசும்பொன்மேனி வடிவு எல்லாம் அதிர்ப்புகாட்ட - நெருப் பிலிட்ட பசும்பொன்போலு மொளிவீசு மழகிய திருமேனி முற்றுமதிரவும், பொ ட்டு அணிநுதலின் பாங்கர் குறுவெயர் திவலைபூப்ப - திலகமணியு நெற்றி முழுவ தும் மழைத்தூவல்போற் சிறிய வேர்வையரும்பவும், மொட்டு இளமுலையில் தாங்கு முத்தொளி வடங்களாட - தாமரையரும்புபோன்ற இளமுலையிற்றங்கிய வொளிவீசும் முத்துவடங்களசையவும், இட்டிடைவருந்தி சால இறும் என துவண்டுவாட - தோ

ன்றூக சிறிய இடையானது வருந்தமுற்றுத் துவண்ணென வொடிந்து விழுமென் றெண்ணத் துவண்டாடவும். (எ-று)

திருமேனி யதிரவும் நெற்றியில் வெயர்வரும்பவும் தனங்களில் முத்துவட மசை யவுமிடைதுவளவுமென்க. (ருஎஎ)

கூந்தலி னறவந் தோய்ந்த குருமலர்ச் சுரும்ப ரார்ப்ப
வேந்தக லல்குற் சூழ்ந்த வெரிமணிப் பருவ மார்ப்பச்
சேந்தொளி பிலிற்றுஞ் செம்பொற் கிண்கிணி சிலம்பொ டார்ப்பக்
காந்துபொற் கடகக் கையிற் கதிர்வளைக் குலங்க ளார்ப்ப.

(இ - ள்.) நறவம்தோய்ந்த கூந்தலில் குருமலர் சுரும்பர் ஆர்ப்ப - மயிர்ச்சாந்து தோய்ந்த கூந்தலிற் சூட்டிய நிறமுள்ள மலர்களில் மொய்த்திருக்கும் வண்டு கள்பறந்தொலிக்கவும், ஏந்து அகல் அல்குல் சூழ்ந்த எரிமணிபருமம் ஆர்ப்ப - அகன்ற நிதம்பத்தின்மேல் சூழ்ந்து விளங்குமொளிவீசு மிரத்தினமிழைத்த மேகலாபரண மசையவும், சேந்து ஒளிபிலிற்றும் செம்பொன் கிண்கிணி சிலம்பொடு ஆர்ப்ப - திரு வடியில் சிவந் தொளிவீசும் செம்பொன்னுலாகிய கிண்கிணியும் நூபுரமுங் கலந் தொலிக்கவும், கையில் காந்துபொன்கடகம் கதிர்வளை குலங்கள் ஆர்ப்ப - திருக்கரத் திலணிந்த வொளிவீசும் பொற்கடகமு மொள்ளிய வளையல்களுங் கலந்தொலிக்கவும்.

வண்டுகள் கூந்தலிலொலிக்க மேகலாபரண மிடையிலொலிக்க கிண்கிணி நூபு ரங்க ளடிகளி லொலிக்க கடகங்களும் வளையல்களும் கைகளிலொலிக்க வென்க. ()

ஒருகொடி யெழுந்து செம்பொ னுயர்வரைக் குவடு தன்னை
யிருகொழுந் திருபாற் போக்கித் தழீஇயென வெழுந்து வல்லே
முருகலர் வேதி யும்பர்த் தன்வல முழந்தா ளூன்றிக்
கருமணிப் பாவை யன்னாள் கணவனைத் தழுவிக் கொண்டாள்.

(இ - ள்.) செம்பொன் உயர்வரை குவடுதன்னை ஒருகொடி எழுந்து இருகொழுந்து இருபால்போக்கி தழீஇ என - செம்பொன்மயமாகிய மேருமலையின் சிகரத்தை ஒரு பூங்கொடியானது மேலெழுந்து இரண்டு கொழுந்துகளை யிரண்டுபக்கத்தி லுஞ் செலுத்தித் தழுவியதுபோலும், கருமணிபாவை அன்னாள்வல்லே எழுந்து - நீலமணியாற்செய்த பாவைபோலும் வடிவினைவாய்ந்த வம்மையார் விரைந்தெழுந்து, முருகு அலர்வேதி உம்பர் தன் வல முழந்தாள் ஊன்றி - நறுமணம்வீசு மலர்களான் மணமேறப்பெற்ற வேதிகையின்மேல் தனது வலக்கால் முழந்தாளையூன்றி, கணவனை தழுவிகொண்டாள் - தன்னாயகரைத் தழுவிக்கொண்டனர். (எ-று)

பொன்மலைச்சிகரத்தை யொருபூங்கொடியெழுந்திரண்டுகொழுந்துகளை யிருபக் கத்திலும் போக்கித் தழுவிக்கொண்டாற்போலச் சோதிசொரூபராகிய ஏகம்பவாண ரைக் கருமணிபோன்ற வம்மையார் தமது திருக்கரத்தாற் றழுவிக்கொண்டனரென்க.

மணிமுலைக் குவட்டி னோடு வளைக்கையா னெருக்கிப் புல்லித்
தணிவருங் காதல் விம்மக் காதலி தழுவ லோடும்
திணியிரு ளறுக்குஞ் சோதித் திருவுருக் குழைந்து காட்டி
யணிவளைத் தழும்பி னோடு முலைச்சுவ டணிந்தா னையர்.

(இ - ள்.) மணிமுலை குவட்டினோடு வளைக்கையால் நெருக்கிப்புல்லி - அழகிய முலை முகட்டோடு வளையலணிந்த கையா லிறுகக்கட்டி, தணிவரும் காதல்விம்ம காத

வித்ழுவலோடும் - தணியாதவாசைமீதூர அம்மையார் தழுவினவளவில், ஐயர்திணி இருள் அறுக்கும் சோதி திருவுருகுழைந்து காட்டி - வேதியராகிய தலைவர் திண்ணிய விருளைச்சீக்குஞ் சோதிமயமாகிய திருமேனியைக் குழைந்துக்காட்டி, அணிவளைத் தழும்பினோடு முலைச்சுவடு அணிந்தார் - அழகியவளைத் தழும்பினோடு முலைத்தழும்பையு மணியப்பெற்றனர். (எ-று)

அம்மையார் முலைக்குவட்டாலும் வளைக்கையாலும் நாயனாரை இறுகக்கட்டி ஆசைமீதூரத்தழுவ இறைவர் தமதுருவில் அத்தழும்புகளைக் கொண்டனரென்க. ()

கலிவிருத்தம்.

வற்றிநின் றருந்தவ முயன்று பன்மறை
கற்றவ ருணர்வையுங் கடந்த பேரொளி
சிற்றிடைத் திருந்திழைத் தேவி வால்வளைப்
பொற்றழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே.

(இ - ள்.) வற்றிநின்று அருந்தவம் முயன்று பன்மறைகற்றவர் உணர்வையுங் கடந்த பேரொளி - உண்டிமுதலியவை துறந்துநின்று செய்தற்கரிய தவத்தின் முயன்றுபல நூலையுங் கற்றுணர்ந்தவ ரறிவையுங் கடந்துநின்ற அகண்டசோதி, சிற்றிடை திருந்திழை தேவி வால்வளை பொன்தழும்பொடு முலைச்சுவடு பூண்டது-சிறியஇடையையும் பணிதியமைந்தவாபரணங்களையுமுடையவம்மையாரதுயர்ந்த பொன்னாலாகிய வளைத்தழும்போடு முலைத்தழும்பையுங் கொண்டது. (எ-று)

அருந்தவமுயன்று அருங்கலை யோதியுணர்ந்தவ ரறிவையுங் கடந்துநின்ற பேரொளி அம்மையாரது வளைத்தழும்பையும் முலைத்தழும்பையுங் கொண்டதென்க.

தவஞானங்களைக்கடந்த பேரொளி வளைத்தழும்புக்கும் முலைத்தழும்புக்கு முட்பட்ட தரிதென்பார் சுவடுபூண்டதே என்றார். (ரூஅக)

உருவரு வனுமலை யுண்மை யின்மைமற்
றிருளொளி யன்றிநின் றிலகு பேரொளி
மருமலர்க் கருங்குழன் மங்கை வால்வளைப்
பொருதழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே.

(இ - ள்.) உருவு அருவு அனுமலை உண்மை இன்மை இருள்ஒளி அன்றி நின்று இலகுபேரொளி - உருவுமருவு மனுவுமலையு முண்மையு மின்மையு மிருளுமொளியு மாகிய விவையெல்லா மல்லாதுநின்ற பெரியசோதி, மருமலர் கருங்குழல் மங்கைவால் வளைபொரு தழும்பொடு முலைச்சுவடு பூண்டது - நறுமணங்கமழும் மலரணிந்த கரிய கூந்தலையுடைய வம்மையாரது சிறந்தவளையினால் பொருதப்பெற்ற தழும்போடு முலைத்தழும்பையும் பூண்டது. (எ-று)

உருவப்பொருளும் அருவப்பொருளு மாகாமலும் சிறிதும் பெரிது மாகாமலு முள்ளதில்லதாகாமலு மல்லும்பகலு மாகாமலும் நின்றசோதி அம்மையாரது வளைத் தழும்பையும் முலைத்தழும்பையும் பெற்றதென்க.

உருவமுதலிய வொருபொருளுமாகாத சுயஞ்சோதி இவ்வடையாளங்களைப்பெற்ற ததிசயமென்பார் பேரொளி முலைச்சுவடுபூண்டதே என்றார். (ரூஅஉ)

பெருவிர லளவையி னுளத்திற் பேணிநின்
றுருவுயிர் முழுவது மாட்டு மொள்ளொளி

பருள்பொழி குறுநகை யணங்கு வால்வளைப்
புரிதழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே.

(இ - ள்.) பெருவிரல் அளவையின் உளத்தில்பேணிநின்று - அங்குட்ட வளவின தாகவுள்ளத்தின்கண் பொருந்திநின்று, உருஉயிர் முழுவதும் ஆட்டும் ஒள்ஒளி - உருவோடுகூடிய பலவுயிர்களையு மாட்டு மொள்ளியசோதி, அருள்பொழி குறுநகை அணங்குவால் வளைபுரிதழும்பொடு முலைச்சுவடுபூண்டது - கருணையரும்பும் புன்னகையையுடைய வம்மையாரது சிறந்தவளையினாற்செய்த தழும்போடு முலைத்தழும்பையுங் கொண்டது. (எ-று.)

ஓரங்குட்டவளவா யுள்ளிருந் துயிர்களை யாட்டுஞ் சோதிவளைத்தழுமபையும் பெரியமுலைத் தழும்பையுங் கொண்டதென்க.

அங்குட்டவளவாகிய வுருவில் பெரிய வடையாளங்களைத் தன்னுட்கொண்டது வியப்பென்பார் சுவடுபூண்டதே என்றார். (௩அ௩)

உயிர்ப்பினை யொடுக்கியே விழித்து றங்குவோ
ரயர்ச்சியி லகக்கணு ஞேக்கு மாரொளி
குயிற்பெடைச் சின்மொழி யிறைவி கோல்வளைப்
புயத்தழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே.

(இ - ள்.) உயிர்ப்பினை ஒடுக்கியே விழித்து உறங்குவோர் - வாயுவைக் கும்பகஞ்செய்து வெளியேகண்விழித் துள்ளேதூங்கும் யோகியருடைய, அயர்ச்சியில் அகக்கண்ணால் நோக்கும் ஆர் ஒளி - சோர்வில்லாத ஞானக்கண்ணால் காணும்பேரொளி, பெடைகுயில்சின் மொழி இறைவி - பெண்குயில்போல வினியமொழிகூறுந் தேவியாருடைய, புயம் கோல்வளை தழும்போடு முலைச்சுவடு பூண்டது - கையிலணிந்த வளைத்தழும்போடு முலைத்தழும்பையுங் கொண்டது. (எ - று)

இரேசக பூரகத்தாற் பிராணவாயுவைக் கும்பகஞ்செய்து கண்ணைத்திறந்து புலனையடக்கிக் கரணங்கள்சோர்வடையச் செய்யுங்கால் வெளிப்படும் ஞானக்கண்ணாற் காணுஞ் சுடர்ச்சோதி அம்மையாருடைய வளைத்தழும்பும் முலைத்தழும்புங் கொண்ட தென்க.

யோகியர்கள் கண்விழித்திருக்க வைப்பினும் கண்வழியுழலும்புலனை யுள்ளடக்கலின் விழித்துறங்குவோரெனவும், புலனடங்கவே அவ்வழியுழலும் கரணங்களோயுமாகலின் அயர்ச்சியிலெனவும், கரணவோய்வில் ஞானவொளி தோன்றுமாகலின் அகக்கண்ணால் நோக்கும் ஆரொளியெனவுங் கூறினார். அகநாட்டமுடையோர் காணும் பேரொளிபுறநாட்டமுடையோர் காணும் வளைத்தழும்பு முலைத்தழும்புங் கொண்டததிசயமென்பார் சுவடுபூண்டதே என்றார். (௩அ௪)

என்றுமோ ரியல்பினிற் பகலி ராவற
நின்றவ ரன்பினுக் கணிய நீளொளி
மென்றளிர்ச் சீறடி விமலை கைவளைக்
கொன்றமும் பொடுமுலைச் சுவடு கொண்டதே.

(இ - ள்.) என்றும் ஓரியல்பினில் - எந்நாளு மொருபெற்றித்தாக, பகல் இரவு அற நின்றவர் அன்பினுக்கு அணிய நீள்ஒளி - பகலிரவென்பதின்றி நிற்கின்றவர்களுடைய வன்பினுக் கெளிவரும் நீண்டசோதி, மெல்தளிர் சிறு அடிவிமலை கைவளை

கொன் தழும்பொடு முலை சுவடு கொண்டது - மெல்லிய தளிர்போன்ற சிற்றடியை யுடைய வம்மையாரது பெருமைபொருந்திய வளைத்தழும்போடு முலைத்தழும்பை யுங் கொண்டது. (எ-று.)

என்று மோர்படித்தாய் நிற்கும் அன்பர்களுக் கண்ணியதாக விளங்குஞ் சுயஞ் சோதி அம்மையாரது வளைத்தழும்பொடு முலைத்தழும்பையுங் கொண்டதென்க.

விருப்பு வெறுப்புக்களான்வரும் இன்பத்துன்பமற்றவனென்பார் என்று மோரி யல்பினிலெனவும், சகலகேவலங்களைக் கடந்து அருளவத்தையி னிற்பவனென்பார் பகலிராவறநின்றவனெனவும், அருள்வழிநின்று அன்பிற் றலைப்பட்டார்க்கே அண்ணிப் பவ னென்பார் அன்பினுக்கணிய சீரொளியெனவும், சகலகேவலாவத்தையைக் கடந் தார்க்குச் சமீபிக்கு ஞானச்சோதி சகலகேவலாவத்தை யுடையார்க்குச் சமீபிக்குந் தழும்புகளைப்பெற்றததிசயமென்பார் சுவடுகொண்டதே எனவுங்கூறினார். (௩அரு)

மனத்திடைத் தனதடி நினைந்த மாத்திரை
வினைப்பெரும் பிறவிவே ரகழு மெய்யொளி
யனைத்துல கீன்றரு ளமலை பல்வளை
யினத்தழும் பொடுமுலைச் சுவடு மேற்றதே.

(இ - ள்.) மனத்திடை தனதடி நினைந்தமாத்திரை வினை பெரும்பிறவி வேர் அகழும் மெய் ஒளி - மனத்தில் தன்சீபாத நினைத்த மாத்திரத்தில் இருவினையைப் பெருக்குஞ் சனனவேரை யகழ்ந் தொழிக்குஞ் சுயஞ்சோதி, அனைத்துலகு ஈன்ற ருள் அமலை பல் இனம் வளை தழும்பொடு முலை சுவடும் ஏற்றது - எல்லா வுலகங்களையு மீன்றருளியவம்மையாரது பலவினமாகிய வளைத்தழும்புகளோடு முலைத்தழும்பையு மேந்தியது. (எ-று)

திருவடியை நினைத்தமாத்திரத்தில் பிறவியை அறவே யொழிக்குஞ் சுயஞ்சோதி அம்மையாரது வளைத்தழும்பொடு முலைத்தழும்பையுமேற்ற தென்க.

நினைப்பவருடைய பிறவிக்குவித்தாகிய ஆசையை யொழிக்கவல்ல சுயஞ்சோதி ஆசையை மேன்மேல் விளைவிக்குந் தழும்புகளைக்கொண்டது அதிசயமென்பார் சுவடு மேற்றதே என்றார். (௩அசு)

வடவரை குழைத்ததோர் பவள மால்வரை
முடிவொடு முதலிலா மாவின் மூலத்து
மடநடை யிளங்கொடி வளைக்க ரத்தொடு
குடமுலைக் கம்மவோ குழைந்து மெல்கிற்றே.

(இ-ள்.) வடவரைகுழைத்தது ஓர் பவளமால்வரை - பொன்மலையை வில்லாகக் குழைத்த வொரு பெரியபவளமலை, முடிவொடு முதல் இல்லாத மாவின் மூலத்து - அழிந்து தோன்றுதலில்லாத மாவடியில், மடநடை இளங்கொடி வளை கரத்தொடு குடமுலைக்கு அம்ம குழைந்து மெல்கிற்று - மெல்லிய நடையையுடைய இளங்கொடி போன்ற வம்மையாரது திருக்கரத்திலணிந்த வளையலோடு குடம்போன்ற முலைக்கு மிகவுங்குழைந்து மெலிவடைந்தது. (எ-று)

பொன்மலையைக் குழையச்செய்த பவளமலை ஒரு மரத்தடியில் ஓர் மங்கையி னுடைய வளையொடு முலைக்குக் குழைந்த தென்க.

பொன்மலை வடக்கின் கண்ணதாகலின் வடமலையெனவும், அதனைக்குழையச் செய்தது இறைவனென்பார் பவளவரை யெனவும், கேமொக்கமுமின்றி என்று முள்ளது மாமரமென்பார் முடிவொடு முதலிலா மா எனவும், பூமிக் காதாரமாகிய மலையைக் குழையச்செய்த வொரு பெரியமலை ஓரிளங்கொடியை ஆதரவாகக் கொண்டவளைக்கும் முலைக்கு மெலிந்து குழைந்தமை எங்குமில்லாத வதிசயமென்பார் இளங்கொடி வளைக்கரத்தொடு குடமுலைக்கம்மவோ குழைந்து மெல்கிற்றே எனவுங்கூறினார்.

அல்லதூஉம் இறைவ ரழல்வண்ணமாதலால் பவளமலை என்றார். அழலிற்பட்ட பொன்னுருகுதலியல்பு. அழ லொரு பொருளாலுமுருகுவதின்று. ஆகவே அழலிடைப்பட்டாற் கரிந்து பொரிந்து போகத்தக்க பொருளாலுருகிக் குழைந்ததும் உருத்தோற்றாது போகத்தக்க அப்பொருளா லுருப்படுத்திய வடுவைத் தன்னுருவத்திற் றோன்றச்செய்ததும் சிறந்த வதிசயமென்பார் மெல்கிற்றே எனவும் அம்மவோ எனவுங்கூறினார்.

பவளமால்வரையென்றதை - "பவளமே மகுடம் பவளமே திருவாய் பவளமே திருவுடம்பு" என்னுந் திருவாக்கானறிக. (௬அ௭)

கலிநிலைத்துறை.

அம்பொன் வால்வளைத் தழும்பொடு முலைச்சுவ டணிந்து
கம்ப வைப்புடை வாழ்க்கையார் கருணைகூர்ந் தருளி
நம்பு மோகையிற் பெருங்களி சிறந்தலு நலமார்ந்
தும்ப ரிம்பரி னுயிரெலா முவகையிற் களித்த.

(இ - ள்.) கம்ப வைப்புடை வாழ்க்கையார் அம்பொன் வால்வளை தழும்பொடு முலைச்சுவடு அணிந்து - கம்பைத்தலத்தைத் தாம் வாழிடமாகக்கொண்ட விறைவர் அழகிய சிறந்தபொன்னாலமைந்த வளைத்தழும்போடு முலைச்சுவடும் புதையப்பெற்று, கருணைகூர்ந்தருளி நம்பும் ஓகையில் பெருங்களி சிறத்தலும் - அருள்சுரந்து பேரானந்தப் பெருக்கால் களிப்படங்காது மேன்மேற் சிறக்கவும், உம்பர் இம்பரின் உயிரெலாம் நலம் ஆர்ந்து உவகையில் களித்த - விண்ணுலகிலு மண்ணுலகிலுமுள்ள ஆன்மகோடிகளெல்லாஞ் சுகமடைந்தானந்தத்தில் மூழ்கின. (எ-று)

திருவேகம்பவாணர் அம்மையாரது சுவடழுந்தப்பெற்று களிசிறக்கிருக்க வுயிர்களெல்லாஞ் சுகமடைந் தின்புற்றிருந்தனவென்க.

அம்மையார் இறைவர் திருக்கண்களைப் புதைத்த அக்காலத்தி லுயிர்களெல்லாந் துன்பமடைந்ததுபோலும் அவ்விறைவரைத் தனமும் வளையுமழுந்தத் தழுவிய இக்காலத்தி லானந்தமடைந்தன வென்பார் கம்பவைப்புடைவாழ்க்கையர் வளைத்தழும்பொடு முலைச்சுவடணிந்துகளி சிறந்தலு முயிரெலா முவகையிற் களித்தனென்றார். ()

திக்கும் வானமு மாசறத் திகழ்ந்தொளி படைத்த
தக்க பல்லிய மெண்ணில தழங்கின விளங்கால்
புக்கு மெல்லெனப் புதுமணங் கொண்டெழுந் தசைந்த
விக்க டற்பெரும் புவியெலா மடங்கின துகள்கள்.

(இ-ள்.) திக்கும் வானமும் மாசு அற திகழ்ந்து ஒளிபடைத்த - எண்டிக்கொடு கூடிய மண்ணுலகமும் விண்ணுலகமும் குற்றமறவிளங்கிப் பிரகாசித்தன, தக்கபல்லியம் எண்ணில தழங்கின - சிறந்தபலவாச்சியங்க ளளவிறந்தனவாய் முழங்கின, இளை

ங்கால் மெல்லென புக்கு புதுமணங்கொண்டு எழுந்து அசைந்தது - இளந்தென்றற் காற்றானது மெல்லெனப்புகுந்து புதிய வாசனையைக்கொண்டு மேலெழுந்து வீசியது, இ கடல் பெரும்புவி எல்லாம் துகளகள் அடங்கின - இந்த கடல்சூழ்ந்த மண்ணுலக மெல்லாந் துகளடங்கின. (எ-று)

உலகெல்லா மொளிபடைத்தன வாச்சியங்களெல்லா மொலித்தன தென்றற்காற் றசைந்து எங்குந் தூசுகளடங்கின வென்க.

அசைந்தது என்புழி துவ்வீறு தொகுத்தல்பெற்றது. (௩௮௩)

மந்தி ரத்தழல் வலஞ்சுழித் தெழுந்தொளி திகழ்ந்த
சுந்த ரப்பொலம் பூமழை நிரந்தரஞ் சொரிந்த
சந்த மாமறைத் தனித்தனி மகிழ்ந்தெழுந் தார்த்த
வெந்த வையமு மயலிடை யின்றியோங் கினவால்.

(இ - ள்.) மந்திரத்து அழல் வலஞ்சுழித்து எழுந்து ஒளிதிகழ்ந்த - ஓமாக்கினி வலமாகச்சுழித்தெழுந்து ஒளிவிட்டோங்கியது, நிரந்தரம் சுந்தரப்பொலம் பூமழை சொரிந்த - நீங்காம லழகிய பொன்மலரைப் புட்கலாவர்த்தமென்னு மேகஞ்சொரிந்தது, சந்தமாமறை மகிழ்நது தனி தனி எழுந்து ஆர்த்த - இன்னிசையோடு கூடிய நான்குவேதங்களு மகிழ்ந்து தனித்தனியே பேரோசையோடொலித்தன, எந்த வையமும் அயலிடை இன்றி ஓங்கின - (இவ்வாறு) எந்தவுலகத்திலும் வேற்றிட மின்றி மங்கலம்பெற்றோங்கின. (எ-று)

மந்திராக்கினி வலஞ்சுழிந்தெழுந்தது நீங்காது பொன்மழை பொழிந்தது நான்குவேதங்களுங் கோஷித்தன உலகெல்லா மங்கலம்பெற்றோங்கின வென்க.

மணி நீர் பொன் பூ மண் கல் தீ என்னு மிவைகளை முறையே பொழிவன ஏழு மேகங்களாதலால் பொலம்பூமழை என்றதற்கு அம்மேகத்தைக் குறித்தாமென்க. (௩௮௪)

எங்கு மின்னண நிகழ்வுழி யிருமதக் கலுழித்
துங்க வெண்கரிக் கோமுதற் சுராசுர ரெல்லாந்
தங்க ளின்றுணைக் கிழத்தியர் தம்மொடும் வல்லே
யங்கணைந்தன ரகநிறை யுவகைமீக் கிளைப்ப.

(இ - ள்.) இன்னணம் எங்கும் நிகழ்வுழி அங்கு - இன்னவகையாக எவ்விடத்து மங்கலநிகழ்கின்றகாலத் தவ்விடத்தில், இருமதம் கலுழி துங்க வெண்கரி கோ முதல் சுரர் அசுரர் எல்லாம் - நீங்காது பெரிய மதநீரைப்பொழிகின்ற தெய்வத்தன்மையை யுடைய வெள்ளையானைக்குத் தலைவனாகிய இந்திரன் முதலிய தேவர்களும் அசுரர் களுமாகிய யாரும், தங்களின்துணை கிழத்தியர் தம்மொடும் அகம்நிறை உவகைப கிளைப்ப வல்லே அணைந்தனர் - தம் மனைவியரோடு முள்ளத்தினிறைந்த சந்தோட மேலெழ விரைந்தடைந்தனர். (எ - று)

திருவேகம்பத்தி லிவ்வாறு மங்கலம்நிகழ்கின்ற காலத்தில் சுராசுரரெல்லாந் தம் மனைவிமாரோடுவந்து சேர்ந்தனரென்க. (௩௮௫)

புண்ட ரீகமென் பொகுட்டணைக் கடவுளும் புதுப்பூந்
தண்டு ழாய்முடித் தனிப்பெருந் தலைவனு மிருகேழ்

முண்ட கத்துறை முதல்வியர் தமையுடன் கொண்டு
மண்டு பேரின்பங் கிடைத்ததின் றெமக்கென வந்தார்.

(இ - ள்.) மென் புண்டரீகம் பொகுட்டு அணைகடவுளும் புதுப்பூம் தண்துழாய் முடி தனி பெரும் தலைவனும் - மெல்லியதாமரைப் பொகுட்டிலிருக்கும் பிரமனும் புதியதேன்றுளிகரும் துளவமாலைசூடிய முடிபுனைந்த பெருமையிற் சிறந்த திருமாலும், இருகேழ் முண்டகத்து உறை முதல்வியர் தமை உடன்கொண்டு - வெண்டாமரை செந்தாமரைகளில் வசிக்குங்கலைமகளையும் அலைமகளையு மழைத்துக்கொண்டு, இன்று எமக்கு மண்டு பேரின்பம் கிடைத்தது என வந்தார் - இந்நாள் எங்களுக்கடங்காத பேரின்பங்கிடைத்ததென்று வந்துசேர்ந்தனர். (எ-று)

அரிபிரமர் பேரின்பங்கிடைத்ததென்று தம் பத்தினிகளோடுவந்தனரென்க. ()

சோதி நாரதன் முதற்சுரர் முனிவரும் வசிட்ட
னாதி யாயபல் பிரமநன் முனிவரு மளவில்
காதன் முந்துறு களிப்பொடுங் குழாங்கொடு கரத்தின்
மீது தண்டமும் வேணியும் விளங்கவந் தடைந்தார்.

(இ - ள்.) சோதி நாரதன்முதல் சுரர்முனிவரும் வசிட்டன் ஆதியாய பல்பிரம நல்முனிவரும் - விளக்கமுள்ள நாரதர்முதலிய தேவரிஷிகளும் வசிட்டர்முதலிய பல நல்லபிரமரிஷிகளும், அளவில்காதல் முந்துறுகளிப்பொடும் குழாங்கொடு கரத்தின்மீது தண்டமும் வேணியும் விளங்கவந்து அடைந்தார் - மட்டுப்படாதவாசையால் முற்பட்டுவரும் களிப்போடும் தம்மினத்தவராகிய முனிவர்கூட்டத்தோடு கரத்திலேந்திய தண்டமுஞ் சடைமுடியும் விளங்க வந்து கூடினர். (எ-று)

தேவரிஷிகளும் பிரமரிஷிகளுங் களிப்போடுந் தம்மினத்தவரைக் கூட்டிக்கொண்டு தண்டுகமண்டலமுஞ் சடைமுடியும் விளங்க வந்து கூடினரென்க. (௩கூ௩)

சத்தி மார்திதி யதிதிமற் றுறுதக்கன் மக்க
ளொத்த யோகினிப் பகுதிய ரருந்ததி யுலோபா
முத்தி ரைத்திருந் திழையன சூயையே முதலா
மித்தி றத்தவர் யாவரு மகிழ்ந்துவந் திறுத்தார்.

(இ - ள்.) சத்திமார் திதி அதிதி மற்று உறு தக்கன் மக்கள் ஒத்தயோகினி பகுதியர் - சப்தகன்னிகளும் திதி அதிதி முதலிய தக்கனுடைய பெண்கள்பலரும் தம்முளொத்த யோகினிகளும், அருந்ததி லோபாமுத்திரை திருந்திழை அனசூயை முதலாம் இத்திறத்தவர் யாவரும் மகிழ்ந்துவந்து இறுத்தார் - அருந்ததி லோபாமுத்திரை திருந்திய வாபரணமணிந்த அனசூயைமுதலாகவுள்ள இவ்வகையினராகிய பெண்கள் பலரும் மகிழ்ச்சியோடும் வந்து தங்கினர். (எ-று)

சப்தகன்னிகள் திதி அதிதி முதலாகவெண்ணப்பட்ட தக்கன் பெண்கள் யோகினிகள் அருந்ததி லோபமுத்திரை அனசூயைமுதலிய பெண்கள் பலரும் வந்தனரென்க. (௩கூச)

சனக னாதியர் தமிழ்முனி தவத்துரு வாசர்
முனிவர் சூழுப மன்னியன் முதுதிறற் பூதர்
நனியு ருத்திரர் கணாதிபர் நந்தியெம் பெருமா
னினையர் யாவரு மாயிடை யொருங்குவந் திறுத்தார்.

(இ - ள்.) சனகன் ஆதியர் தமிழ்முனி தவத்துருவாசா முனிவர் சூழ் உபமன்னி யர் - சனகாதியர்கள் அகத்தியர் தவத்தின்மிக்க துருவாசர் முனிவர்கள் சூழப்பெற்ற உபமன்னியர் முதலிய முனிவர்களும், முது திறல் பூதா நவி உருத்திரர் கணுதிபா நந்தி எம்பெருமான் - வன்மைமிக்க பூதாகளும் அங்க உருத்திரர்களும் கணுதிபர் களும் எமது நந்திபெருமானும், இனையர் யாவரும் ஆயிடை ஒருங்குவந்து இறுத்தார்- இவரனைவரு மவ்விடத்தி லொன்று சேர்ந்தனர். (எ - று)

சனகாதி முனிவர் பூதர் உருத்திரர் கணுதிபர் நந்திதேவா ஆகிய இவரெல்லாங் கூடினரென்க. (௩௬ரு)

நண்ணி யாவரு நாயகி தழுவிடக் குழைந்த
வண்ண லார்திருக் கோலநேர் கண்டுகண் டார்த்தார்
விண்ணி றைந்தபே ரானந்த வெள்ளத்தி னலேந்தார்
கண்ணி னற்பெறு பெரும்பயன் கைவரப் பெற்றார்.

(இ-ள்.) யாவரும் நண்ணி நாயகி தழுவிடகுழைந்த அண்ணலார் திருக்கோலம் நேர்கண்டு கண்டு ஆர்த்தார் - எல்லாரும்வந்து கூடி இறைவி தழுவக்குழைந்தவிறை வர் திருக்கோலத்தை நேரே பலமுறையுங்கண் டாரவாரஞ்செய்து, விண் நிறைந்த பேரானந்த வெள்ளத்தில் அலேந்தார் - அகண்டாகாரமாய் நிறைந்த பரமானந்தக் கடலில் மூழ்கித் தலைதடுமாறி, கண்ணினல் பெறு பெரும்பயன் கைவரப்பெற்றார் - கண்களாலடையத்தக்க பெரும்பயனை யெளிதாகப் பெற்றனர். (எ-று)

தழுவக்குழைந்த கோலத்தை யாவருங்கண்டு கண்ணினற் பெறும்பயனை யெளி தாகப் பெற்றன ரென்க. (௩௬௬)

அலர்ந்த வாள்விழி யின்பநீர் சொரியநின் றழுதார்
மலர்ந்த காதலின் வடிவெலாம் புளகங்கண் மலிந்தார்
கலந்த சிந்தையா ரருட்பெருங் கருணையே நோக்கிப்
புலந்த ழைத்திடச் சென்னிமே லஞ்சலி புனைந்தார்.

(இ - ள்.) கலந்தசிந்தையார் அருட்பெருங் கருணையே நோக்கி - அன்பர் சிந்தை கலந்த விறைவருடைய அருள்வடிவமாகிய திருமேனியையே கண்டு, அலர்ந்தவாள் விழி இன்ப நீர்சொரிய நின்று அழுதார் - வாள்போலும் பரந்த கண்களினின்று மானந்த நீர்பெருகச் (சிலர்) நின்றழுதனர், மலர்ந்த காதலின் வடிவெலாம் புளகங்கள் மலிந்தார் - (சிலர்) பெருகிய ஆசையினால் சரீரமெல்லாம் மயிர்ப்புளகங் கொண்டனர், புலம் தழைத்திட சென்னிமேல் அஞ்சலி புனைந்தார் - (சிலர்) அறிவுவிளங்க முடியின் மே லஞ்சலிசெய்தனர். (எ-று)

இறைவர் திருமேனியை நோக்கி சில ரானந்தநீர் பொழிந்தனர் சிலர் மயிர்ப் புளக மடைந்தனர் சிலர் முடிமேலஞ்சலி செய்தனரென்க.

அடியார் சிந்தையிற் பிரியாதிருக்கும் பெருமானுகலின் கலந்தசிந்தை யாரென் ருர். இதனை 'கலந்தபின் பிரிவதில்லை' என்னுந் திருவாக்கானறிக. (௩௬௭)

ஆயி ரங்கதி ராழியங் கடவுளு மயனு
மாயி ரம்விழி பெற்றிலே மென்றழுங் கினர்க
ளாயி ரம்விழி யுடன்முழு தாளியு மமையா
வாயி ரங்கணிவ் வற்புதங் காண்பதற் கென்ருன்.

(இ - ள்.) ஆயிரம் கதிர் ஆழியங் கடவுளும் அயனும் ஆயிரம்விழி பெற்றிலேம் என்று அழுங்கினார்கள் - ஆயிரங் கிரணங்களைவீசுஞ் சுதரிசன மென்னுஞ் சக்கரமேந்திய திருமாலும் பிரமனும் (இந்திரன்போல) ஆயிரங்கண்களைப் பெறுதொழிந்தோமே யென்று வருந்தினர், உடன்முழுதும் ஆயிரம் விழியாளியும் இவ்வற்புதம் காண்பதற்கு ஆயிரம் கண் அமையாது என்றான் - சரீரமுற்று மாயிரங்கண்களைப் பெற்ற விந்திரனு மிவ்வற்புதத்தைக் காண்பதற்கு யான் பெற்றிருக்கு மாயிரங்கண்களும் போதாதென்று கூறினன். (எ-று)

இவ்வற்புதக்கோலங்காண்டற்குத் திருமாலும் பிரமனும் ஆயிரங்கண் பெற்றிலேமென்றும் இந்திரன் தன்னாயிரங்கண் குறைவென்றும் எண்ணி வருந்தினரென்க. ()

இன்ன தன்மையின் யாவருந் தொழுதெழுந் தாடி
மன்னு மேழ்கடன் முழக்கெனப் பழிச்சினர் வாழ்ந்தா
ரன்ன வர்க்கவ ணிகழ்ந்தபே ரானந்த மிதழிச்
சென்னி யாரன்றி மற்றெவர் தெளிதரற் பாலார்.

(இ-ள்.) யாவரும் இன்னதன்மையில் தொழுது எழுந்து ஆடி - எல்லாரும் இந்தவ்வகையாகப் பணிந்தெழுந்து கூத்தாடி, மன்னும் ஏழ்கடல் முழக்கு என்ன பழிச்சினர் வாழ்ந்தார் - நிலைபெற்ற எழுகடலு மொன்றுகூடி யொலித்தாற்போலத் துதித்து வாழ்ந் திருந்தார்கள், அன்னவர்க்கு அவண் நிகழ்ந்த பேரானந்தம் - அவர்களுக் கவ்விடத்தில் விளைந்த பேரானந்தம், இதழிசென்னியார் அன்றி மற்று எவர் தெளிதரற்பாலார் - கொன்றைமாலைசூடிய விறைவரல்லாமல் வேறு யாவர் தெளியத்தக்கவர்.

யாவரு மிறைவனைப்பணிந்தும் கூத்தாடியும் மகிழ்ந்திருந்தனர் அவர்களடைந்த ஆனந்தத்தை இறைவரேயன்றி வேறு யாவரறிவாரென்க.

ஆனந்தத்தை விளைவித்தவ ரிறைவராகலின் இதழிச்சென்னியாரன்றி மற்றெவா தெளிதரற்பாலாரென்றார். (ருடுகக)

அந்த வேலையி னிறைவித னணிவளைத் தழும்பு
சந்த மென்முலைச் சுவடுதோய் தனியுருப் பொலியச்
சுந்த ரந்திகழ் சுடரொளி யிலிங்கத்தி னின்று
முந்து தோன்றினர் மூவருக் கறிவரு முதல்வர்.

(இ - ள்.) அந்தவேலையில் இறைவிதன் அணிவளை தழும்பும் சந்தமென்முலை சுவடு தோய் தனி உருபொலிய - அச்சமயத்திற் றேவியாருடைய வழகியவளைத் தழும்பும் சந்தனக்குழம் பப்பிய மெல்லிய முலைத்தழும்புந் தோய்ந்த வொப்பற்ற திருமேனி பொலிவுபெற, சுந்தரம் திகழ் சுடர் ஒளி இலிங்கத்தினின்று மூவருக்கு அறிவரும் முதல்வர் முந்துதோன்றினர் - சுந்தரமிகுந்த சோதிலிங்கத்தினின்று மும்மைத்தேவரு மறிதற்கரிய விறைவர் சகளவடிவங்கொண்டு வெளிப்பட்டனர். (எ-று)

சோதிலிங்கத்தினின்றும் அம்மையாரது வளைத்தழும்பும் முலைத்தழும்பும் பெற்ற திருவுருப்பொலிய வெளிப்பட்டன ரென்க.

சிவந் துரியப்பொருளாகலின் மூவருக்கறிவருமுதல்வரென்றார். இதனை, "மூவராலு மறியொணு முதலாய வானந்தமூர்த்தியான்" என்னுந் திருவாக்கானறிக. (ருoo)

தோன்றி வாணிலாக் குறுநகை தோற்றிமீக் கடுக
வேன்ற வெள்ளநீர் சறுவதீர்த் தப்பெய ரிசையான்

மான்று மேதக நிறுவினர் மாதினைத் தழீஇக்கொண்
டான்ற காதலாற் செய்யவாய் முத்தமுண் டளித்தார்.

(இ - ள்.) தோன்றி வாள் நிலா குறுநகைதோற்றி - வெளிப்பட்டு ஒள்ளியநிலவெறிக்கும் புன்னகைகாட்டி, மீ கடுக ஏன்ற வெள்ளநீர சறுவதீர்த்தப் பெயரிசையால் மான்று மேதக நிறுவினர் - இன்னமும் பெருக்கெடுத்து வர வருகின்ற வெள்ளநீரைச் சறுவதீர்த்தப்பெயரால் மேன்மையாக வழங்கச்செய்து, மாதினை தழுவிக்கொண்டு ஆன்றகாதலால் செய்யவாய் முத்தம் உண்டளித்தார - இறைவியைத் தழுவிக்கொண்டு மிகுந்தவாசையால் சிவந்த வாய் முத்தமுண்டருளினர். (எ - று)

வெளிப்பட்டுத் தோன்றிய இறைவர் கம்பையின் பெருக்கடக்கி அதனைச் சறுவதீர்த்தமென உலகில்வழங்கச்செய்து அம்மையைத்தழுவி வாயமுதங் கொண்டனரென்க.

கருணைசெய்வதுதோன்றக் குறுநகைகாட்டியதும் கம்பாநதியில் அண்டங்களிலுள்ள தீர்த்தங்களெல்லாம் கலந்தமைதோன்றச் சறுவதீர்த்தமெனப் பெயரிட்டதும், அருளுடைமையும் அநாதிமுத்தத் தன்மை யுடைமையுந்தோன்ற வாய்முத்தமுண்டளித்தது மென்க. (சo௧.)

தோகை மஞ்ஞையஞ் சாயலாய் துளங்கியுள் வெருவே
லோகை யுற்றனங் காண்டிநீ யென்றுரைத் தருள
வாகை யேற்றினர் தம்மண வாளநற் கோல
மேகநாயகி நோக்கின ளிணைவிழி களிப்ப.

(இ - ள்.) வாகை ஏற்றினர் தோகை மஞ்ஞையஞ் சாயலாய் ஓகை உற்றனம் - வெற்றியையுடைய இடபக்கொடியுயர்ந்த இறைவர் கலாபத்தையுடைய மயில்போலுஞ் சாயலையுடைய பெண்ணே நாம் மிகவும் மகிழ்ந்தோம், துளங்கி உள் வெருவேல் தம்மணவாள நல்கோலம் நீகாண்டி என்று உரைத்தருள - நடுங்கிமனங்கலங்காதை நாம்கொள்ளும் நல்ல மணவாளக்கோலத்தை நீகாண்பா யென்றருள்செய்ய, ஏகநாயகி இணைவிழிகளிப்ப நோக்கினள் - ஒப்பற்ற நாயகி இரண்டுகண்களுங் களிக்கக் கண்டனர். (எ-று)

இறைவ ரம்மையைநோக்கி நாயகியே நீமனங்கலங்கற்க நமது மணவாளக்கோலத்தை யுனக்குக்காட்டுகின்றேம் நீகாண்பாயென்ன அம்மையுங் கண்டு களித்தனரென்க. (சo௨)

தழீஇய கைகளை விடுத்தெழுந் தவனியிற் றாழ்ந்து
குழீஇய வன்பினு லஞ்சலி சென்னிமேற் குவித்தாள்
கழீஇய செம்மணி வடிவினைக்காண் டொறுமுலவாக்
கெழீஇய காதலாற் கிளர்ந்தெழு முவகையிற் றிளைத்தாள்.

(இ-ள்.) தழுவிய கைகளைவிடுத்து எழுந்து அவனியில் தாழ்ந்து - தம்மைத்தழுவிய இறைவர் கைகளைநீக்கி யெழுந்து பூமியில் தண்டாகாரமாகப்பணிந்து, குழுவிய அன்பினால் சென்னிமேல் அஞ்சலி குவித்தாள் - கூடியவன்பினால் தலைமேலஞ்சலியாகக் கைகளைக்குவித்து, கழுவிய செம்மணி வடிவினை காண்தொறும் - குற்றமற்ற பவளம்போன்ற திருமேனியைக் காணுந்தோறும், உலவாத கெழுவிய காதலால் கிளர்ந்து எழும் உவகையில் திளைத்தாள் - கெடாதநிறைந்த வாசையால் மேலெழுந்த வானந்தத்தில் மூழ்கினர். (எ-று)

தம்மைத்தழுவிய திருக்கரத்தைநீக்கிப் பணிந்தெழுந் தஞ்சலியாகநின்று திருமேனியைக்காணுந்தோறும் பொங்கியெழுமாசையா லானந்தத்திற் றிளைத்தனரென்க.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

நெடியவன் பிரமன் காணா நின்மலக் கொழுந்தே போற்றி
யடியனேற் கபய நல்கு மருட்பெருங் கடலே போற்றி
படிமுத லாறு றாகி வேறுமாம் பரனே போற்றி
கடிமலர்த் தனிமா நீழற் கடவுளே போற்றி போற்றி.

(இ - ள்.) நெடியவன் பிரமன்காணா நின்மலக் கொழுந்தேபோற்றி - அரிபிரமராற் காண்டற்கரிய நின்மல சொரூபனே வந்தனம், அடியனேற்கு அபயம் நல்கும் அருள் பெரு கடலேபோற்றி - அடியேனுக் கபயந்தந்த பெரிய அருட்கடலே வந்தனம், படிமுதல் ஆறுஆறு ஆகி வேறும் ஆம் பரனே போற்றி-பிருதிவிமுதல் நாதாந்தமீறான முப்பத்தாறு தத்துவங்களா யவற்றின் வேறுமாய் விளங்குநம் பரம்பொருளே வந்தனம், கடிமலர் தனிமா நீழல் கடவுளே போற்றி போற்றி - நறுமணங்கமழு மலர் நிறைந்த ஒப்பற்ற மாவினீழலில் வாழ்கின்ற என்தெய்வமே வந்தனம் வந்தனம். (எ-று)

அரிபிரமராற் காண்டற்கரிய நின்மலக் கொழுந்தாகியும் அடியேனுக் கபயந்தந்த அருட்கடலாகியும் எல்லாத் தத்துவங்களாகியு மல்லவாகிய பரம்பொருளாகியும் விளங்கும் ஏகாம்பரநாதரே வந்தனம் வந்தனமென்க.

முடிவிலாற்ற லுடைமையுந் தூயவுடம்புடைமையு முடையனென்பது தோன்ற நெடியவன் பிரமன்காணா நின்மலனெனவும், பேரருளுடைமை யுடையனென்பது தோன்ற அருட்பெருங் கடலெனவும், இயல்பாகவே பாசங்களினீங்கிநிற்கு மியல் புடைமை யுடையனென்பது தோன்ற ஆறுறாகி வேறுமாம்பர னெனவும், இவ்விறைமைக் குணங்களையுடைய விறைவரிவரே யென்பதுதோன்ற தனிமாநீழற் கடவுளெனவுங் கூறினர். (௨௦௪)

பெறலரும் பெரும்பே றின்று பெற்றன னடியேன் போற்றி
முறைமுறை யுலக மெல்லா முகிழ்த்தளித் தழிப்பாய் போற்றி
யறைகழல் கறங்க மன்றி லைந்தொழி னடித்தாய் போற்றி
நிறைமலர்த் தனிமா நீழ னித்தனே போற்றி போற்றி.

(இ - ள்.) இன்று அடியனேன் பெறல் அரு பெரு பேறு பெற்றனன் போற்றி இன்றடியேன் யாவராலும் பெறுதற்கரிய பெரியபேற்றைப் பெற்றனன் (உனக்கு) வந்தனம், உலகம் எல்லாம் முறைமுறை முகிழ்த்து அளித்து அழிப்பாய் போற்றி - எல்லாவுலகங்களையும் பலமுறையுந் தோற்றுவித்துக் காத்தொழிப்பாய் (உனக்கு) வந்தனம், அரைகழல் கறங்க மன்றில் ஐந்தொழில் நடித்தாய் போற்றி - ஒலிக்கின்ற வீரகண்டை பேரொலியிடச் சிற்சபையிற் பஞ்சகிருத்திய நடனஞ் செய்வாய் (உனக்கு) வந்தனம், நிறைமலர் தனிமா நீழல் நித்தனே போற்றி போற்றி - மலர்நிறைந்த ஒப்பற்ற மாவினீழலில் வாழ்கின்ற நித்தியனே (உனக்கு) வந்தனம் வந்தனம். (எ-று)

முத்தொழிலைச் செய்கின்றவனும் பஞ்சகிருத்திய நடனஞ் செய்கின்றவனும் விளங்கும் ஏகம்பவாணனே யானின்று பெறலரும் பேறு பெற்றேனாகலான் உனக்கு வந்தனமென்க.

சிவபரஞ்சுடர் சுட்டுணர்வினரும் அவாந்தர காரணரும் சுதந்தரவீனருமாகிய கடவுளரு ளொருவனன்று எல்லாத் தொழிற்கும் வினைமுதலாய் நிற்குமுதற் கடவு,

ளென்பது தோன்ற உலகமெல்லா முகிழ்த்தளித்தழிப்பாயெனவும், யாவுந் தன்வய ந் தனவா யுடைய னென்பதுதோன்ற ஐந்தொழி லடிந்தாயெனவும், அக்கடவுளாவா ரிவரோ யென்பதுதோன்ற மாநீழனிந்தனையெனவுங் கூறினர்.

முத்தொழிலால் திரோபவநீக்கமும் அநீக்கத்தின்க ணனுக்கிரகமுமாகலான் முறைமுறை முகிழ்த்தளித்தழிப்பா யெனவும், பின் னைந்தொழினடித்தாயெனவும் விதந்துகூறினர். (சoரு)

தரைபுன லிரவி யிந்து தழலுயிர் வளிவா னென்று
வுரைபெறு வடிவோ ரெட்டு முடையனே போற்றி போற்றி
வரையெழும் பரிதி செந்தீ மதியமை விழியாய் போற்றி
விரைமலர்த் தனிமா நீழல் வித்தகா போற்றி போற்றி.

(இ-ள்.) தரை புனல் தழல் வளி வான் இரவி இந்து உயிர் என்று உரைபெறும் வடிவு ஓர் எட்டும் உடையனே போற்றி போற்றி - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் ஆன்மா என்று சொல்லப்பட்ட எட்டுவடிவங்களையு முடையானே (உனக்கு) வந்தனம் வந்தனம், வரை எழும் பருதி செந்தீ மதி அமை விழியாய் போற்றி - உதயகிரியிலுதிக்குஞ் சூரியன் அக்னி சந்திரன் என்னு முச்சுடராயமைந்த மூன்று கண்களை யுடையானே (உனக்கு) வந்தனம், விரைமலர் தனி மா நீழல் வித்தகா போற்றி போற்றி - நறுமணைங்கமழு மொப்பற்ற மாவினீழலில் வாழ்கின்ற சதுர்ப்பா டுடையானே (உனக்கு) வந்தனம் வந்தனம். (எ-று)

எண்வடிவமுடையானுகியும் முச்சுடருக்கு முதலொளியாகிய கண்களை யுடையானுகியும் விளங்கும் ஆம்பரநாதனே உனக்கு வந்தனமென்க.

இயற்கையுணர்வின னென்பதுதோன்ற உலகத்துப்பொருளும் அப்பொருளை விளக்கும் பொருளுமாகியவடிவோரெட்டு முடையனென்றார். என்று - எண்ணிடைச்சொல். (சoசு)

கறைமணி மிடற்றாய் போற்றி கண்ணினுண் மணியே போற்றி
மறவியின் வழிபட் டோர்க்கும் வழங்குபே ரருளாய் போற்றி
நிறைபரஞ் சுடரோ போற்றி நெஞ்சக விளக்கே போற்றி
மறைமுதற் றனிமா நீழல் வள்ளலே போற்றி போற்றி.

(இ-ள்.) கறைமணி மிடற்றாய்போற்றி - அழகிய நீலகண்டனே (உனக்கு) வந்தனம், கண்ணினுள் மணியேபோற்றி - கண்ணினுள் விளங்குங் கருமணியே (உனக்கு) வந்தனம், மறவியின் வழிபட்டோர்க்கும் வழங்கு பேரருளாய் போற்றி - அறிவின்றி வழிபட்டவர்களுக்கும் பெருங்கருணை செய்கின்றவனே (உனக்கு) வந்தனம், நிறை பரஞ் சுடரோ போற்றி நெஞ்சக விளக்கேபோற்றி - எங்குநிறைந்த பரஞ்சோதியே (உனக்கு) வந்தனம் நெஞ்சத்தினுள்ளே யெரியுந் தீபமே (உனக்கு) வந்தனம், மறை முதல் தனிமா நீழல் வள்ளலே போற்றி போற்றி - வேதமுதலாகிய ஒப்பற்ற மாவினீழலில் வாழ்கின்ற வள்ளலே (உனக்கு) வந்தனம் வந்தனம். (எ-று)

நீலகண்டனாய் கண்ணினுண்மணியாய் வழிபடுவோர்க் கருள்வழங்குபவனாய் பரஞ்சுடராய் அறிவொளியாய் மாநீழலி லெழுந்தருளியிருக்கும்வள்ளலாய் விளங்குமிறைவனே யுனக்கு வந்தனமென்க.

இடர்களைவோ னிவனென்பது தோன்ற கறையணி மிடற்றாயெனவும், யாதுநீ நினைவ தெவனாயாமுடைய தெவர்களும் யாவையுந் தானாய்ப் பாதுகை மழலைச் சிலம்,

டோடு புகும்தென் பனிமலர்க் கன்னுணின் றகலான் என்பது தோன்ற கண்ணி னுண் மணியேயெனவும், யாரேனுந் தன்னடியார்க் கன்பனென்பது தோன்ற மறவி யின் வழியட்டோர்க்கும் வழங்கு பேரருளாயெனவும், செப்புதற்கரிய செழுஞ்சுட ரென்பது தோன்ற நிறைபரஞ் சோதியெனவும், அடியாரிடர்கெடுத் தாண்டுகொண் டவருள்ளத் திருட்பிழம்பற வெறிந்தெழுந்த சுடர்மணி விளக்கி னுள்ளொளிவிளங் குந் தூயநற்சோதியுட் சோதி என்பது தோன்ற நெஞ்சக விளக்கெனவும், அருமை யின் மறைநான்கோல மிட்டரற்றுமப்பன் திருவேகம்ப னென்பதுதோன்ற மறை முதற் றனிமாநீழல் வள்ளலெனவுங் கூறினார். (சㅇஎ)

முன்னுறு பொருள்கட் கெல்லா முற்படு பழையாய் போற்றி
பின்னுறு பொருள்கட் கெல்லாம் பிற்படு புதியாய் போற்றி
புன்மதி யாளர் தேறாப் பூரண முதலே போற்றி
சின்மயத் திருவேகம்ப சிவசிவ போற்றி போற்றி.

(இ - ள்.) முன் உறு பொருள்கட்கு எல்லாம் முற்படுபழையாய் போற்றி - முன் னேவந்தடையும் பொருள்களுக்கெல்லாம் முன்னாகவே யிருக்கின்ற பழையபொருளே (உனக்கு) வந்தனம், பின் உறு பொருள்கட்கு எல்லாம் பிற்படுபுதியாய் போற்றி - பின்னேதோன்றும் பொருள்கட்கெல்லாம் பின்னாகிநிற்கும் புதியபொருளே (உனக்கு) வந்தனம், புன்மதி யாளர் தேறாத பூரணப்பொருளே போற்றி - அற்பவறிவையுடை யார் தேர்ந்து தெளியாத பரிபூரணப் பொருளே (உனக்கு) வந்தனம், சின்மயத் திரு வேகம்ப சிவசிவ போற்றி போற்றி - சின்மயரூபமாகிய ஏகாம்பரநாதரே சிவசிவா (உனக்கு) வந்தனம் வந்தனம். (எ-று)

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்து மப்பெற்றியனாகியும் புல்லறிவாளர் தேறாத பூரணமுதலாகியும் விளங்குஞ் சின்மய ரூபியாகிய திருவேகம்ப னென்னுந் திருப்பெயர்புனைந்த சிவனே உனக்கு வந்தன மென்க.

சங்கார காலங்கடோறும் முடியும் பொருள்கட்கெல்லாம் முடிவிடமாய்த் தான் முடிவிலா முதலாயுள்ள பழம்பொருளென்பது தோன்ற முன்னுறு பொருள்கட்கெல் லா முற்படு பழையாயெனவும், புனருற்பவகாலத்துத் தோன்றும் பொருள்கட்கெல் லாந் தான்மூலமாய்ப் பிற்பட்டு என்றும் புதுமையாயிருக்கும் பொருளென்பது தோ ன்றப் பின்னுறு பொருள்கட்கெல்லாம் புதியாயெனவும், புல்லறிவுடைய புறச்சமயத் தவர் அந்தமாதியாய் விளங்கு மிறைவன் வினைமுதலாய் நின்று பூதமுதலியபொருள்க ளந்த மாதியையடையச் செய்வ தோராது அப்பூதமுதலியவற்றையே வினைமுதலாகக கூறுங்கால் அவருள்ளத் தொளிக்கும் பொருளென்பது தோன்ற புன்மதியாளர் தே ருத எனவும், வினைமுத லெல்லாதாரைவினைமுதலாகக் கொள்ளினும் தான் அவரவர் கொள்ளும் வினைமுதலாகியே நின்று வழிபாடேற்று அவரவர் வேண்டும் பயனைத் தரும் வியாபகப் பொருளாய் நிற்றலின் பூரணமுதலேயெனவும், முற்படு பழமை யாகியும் பிற்படு புதுமையாகியும் பூரணமாகியும் விளங்கும் பொருள் இன்னவுருவு டைய தென்பது தோன்ற சின்மய மெனவும், இன்னபெயருடையதென்பது தோன்ற திருவேகம்பனெனவும், அத்திருவேகம்ப னருளுவது திரோதமலங்களையடையாத தன் னருளென்பது தோன்ற சிவஎனவும், அவ்வருள் தன்னையடைந்தோர்க்குப் பசுத்து வத்தைவிளக்காது சிவத்துவத்தைவிளக்குமென்பது தோன்ற சிவஎனவும் கூறினார்.

முற்பட்டுநிற்றல் பழமையையும் பிற்பட்டு நிற்றல் புதுமையையுங் காட்டுதலான் முற்படு பழையாய் பிற்படுபுதியா யென்றார். முற்பட்டுநிற்றல் "அண்டமோரணுவாம் பெருமை கொண்டு" இது சங்காரகாலம், பிற்பட்டு நிற்றல் "அணுவோரண்டமாஞ் சிறுமைகொண்டு" இது புனருற்பவகாலம்.

நெடியவ னென்னுஞ் செய்யுள் முதலாகக் கூறிய வைந்து செய்யுளிற் பஞ்சாக்கரத்தின் பொருளமைந் திருத்தல் காண்க. முதற்செய்யுளில் நெடியவன் பிரமன் காணு நின்மலக்கொழுந்தெனவும், படிமுத லாருருகி வேறுமாம் பரனெனவும், போதரலான் ஒன்றினுந்தோய்வின்றித் தானே சொயம்பிரகாசமாய் விளங்குஞ் சிகாரமாகிய சிவத்தைக் கூறப்பட்ட தெனவும், இரண்டாவது செய்யுளின் முறைமுறையுலகமெல்லா முகிழ்த்தளித் தழிப்பாயெனவும், ஐந்தொழி னடித்தாயெனவும் போதரலான் அச்சிவம் வகாரமாகிய வருளோடுகூடி யுபகரிக்கு முறைமை கூறப்பட்டதெனவும், மூன்றாவது செய்யுளில் வடிவோரொட் டுடையாளெனப் போதரலான் யகாரமாகிய ஆன்மவர்க்கங்களோடுகூடி இயக்குமுறைமை கூறப்பட்டதெனவும், நான்காவது செய்யுளின் மறவியின் வழிபட்டோர்க்கும் வழங்குபேரருளா யெனப் போதரலான் நகாரமாகிய திரோதான சத்தியோடுகூடி இருவினைப்போகத்தை யூட்டுமுறைமை கூறப்பட்டதெனவும், ஐந்தாவது செய்யுளிற் புன்மதி யாளர்தேறுப் பூரண முதலெனப் போதரலான், மகாரமாகிய மலத்தோடுகூடி அதனைப் பரிபாகமாக்கு முறைமை கூறப்பட்டதெனவுங் குறிப்பாற் கொள்ளக்கிடந்தமைகாண்க.

அல்லதூஉம் இவ்வைந்து செய்யுட்களி னிறுதியினு முறையே கடவுள் நித்தன் வித்தகன் வள்ளல் சிவசிவ எனப் போதரலானும் ஐந்தெழுத்தருணிலைகாண்க. எனவே, சிகார முதற்பொருளாகலான் கடவுளெனவும், அச்சிகாரம் வகாரத்தோடுகூடித் தோற்ற நாசங்களையென்று மியற்றலான் நித்தனெனவும், அவ்விரண்டும் யகாரத்தோடுகூடி அவ்வவ்வியல்பிற் பிறழாம லியக்குதலான் வித்தகனெனவும், பின் நகரத்தோடுகூடித் தனு கரண புவனங்களுக்குத் தக்கவாறு போகம் வேண்டியாங் களித்தலான் வள்ளலெனவும், மகாரத்தோடுகூடி யவரவர் கொண்ட கடவுளாய்த் தானே நிற்றலான் சிவசிவ எனவும் கூறிப் போந்தமைகாண்க.　　　　(௬௦அ)

கலிவிருத்தம்.

என்றுள நெக்குருகி யெல்லையி லன்பினளாய்
மன்றன் மலர்த்தொடையல் வார்குழல் போற்றிசெயக்
கொன்றை முடிச்சடையார் பேரருள் கூர்ந்தருளித்
துன்றிய கேண்மையினுன் மற்றிது சொல்லினரால்.

(இ - ள்.) என்று உளம் நெக்குருகி எல்லையில் அன்பினளாய் மன்றல் மலர்த் தொடையல் வார்குழல் போற்றிசெய்ய - சிவசிவ என்று உள்ளம் நெக்குருகி அளவில்லாத வன்புடையவராய் நறுமணங்கமழும் மலர்மாலை யணிந்த நீண்ட கூந்தலையுடைய அம்மையார் துதிக்க, கொன்றை முடிச்சடையார் பெரு அருள் கூர்ந்தருளி-கொன்றைமாலையணிந்த சடைமுடியை யுடைய இறைவர் மிகவுங் கருணைகூர்ந்து, துன்றிய கேண்மையினுன் இது சொல்லினர் - பொருந்திய வுறவினு லிதனைச் சொல்லத்தொடங்கினர். (எ-று)

அம்மையார் அன்பே யுருவாய்ப் போற்றிசெய்ய இறைவர் கருணைகூர்ந்து இது சொல்லத் தொடங்கின ரென்க.　　　　(௬௦௧)

பொங்கி மணங்கமழப் பூசு நறுங்களப
மங்கல மென்முலையாய் காளி மகிழ்ந்திதுகே
ளங்கனை நின்னொடுநாம் வேறல மாரமுதத்
திங்களும் வெண்ணிலவும் போலு மெனத்திகழ்வேம்.

**(இ-ள்.)** நறும் களபம் பொங்கி மணங்கமழ பூசு மங்கல மென் முலையாய் காளி இது மகிழ்ந்து கேள் - நல்ல கஸ்தூரிமுதலியவற்றை எவ்விடத்தும் நறுமணம் வீசப் பூசிய அழகிய விளமுலையை யுடைய காளியே யான்சொல்லு மிதனை மகிழ்ந்து கேட்பாய், அங்கனை நின்னொடு நாம் வேறலம் - (நீ என்னுடைய வடிவமாயிருக்கின்றவளாகலாற்) பெண்ணே உனக்கு நாம் வேறாயிருப்போமல்லேம், ஆரமுதத் திங்களும் வெள் நிலவும்போலும் என திகழ்வேம் - அரிய அமிர்தமயமாகிய சந்திரனும் அவனுடைய கிரணமும் வேறல்லா திருத்தல்போல நாமிருவருங் கலந்து விளங்குவோம்.

காளியே! யாம் சொல்வதைக்கேட்பாய்; நீயும் நானும் வேறல்லோம், இருவரும் சந்திரனும் கிரணமும் போலப் பிரகாசிப்போமென்க.

அம்மை பரசிவத்தைவிட்டு நீங்காததன்மையாற் பராசத்தியெனவும் சிவம் பரையைவிட்டு நீங்காததன்மையாற் பரசிவமெனவும் வழங்கும் உண்மைதோன்ற நின்னொடு நாம் வேறலமெனவும், இவ்வொற்றுமையான் திங்கள் நிலவென் றிருபெயராகவழங்கினும் விருபெயர்க்கும் பொருளொன்றாதல் போல் நாமிருவரு மொரு பொருளென்பதுதோன்றத் திங்களும் வெண்ணிலவும் போலுமெனத்திகழ்வேம் எனவுங்கூறினர். எனவே நிலவையுடையது திங்கள் சத்தியையுடையது சிவம் என்றாயிற்று. (சகo)

இலளிதை யாம்பெயரான் முன்னிவ ணெம்முருவிற்
பலர்தொழ வந்துலகம் பங்கய னாதியெலா
மலர்தர நல்கினைபின் மற்றொரு கற்பமதிற்
சலமறு மெய்ஞ்ஞான சத்தியி னீங்கியரோ.

**(இ-ள்.)** இவண் முன் இலளிதையாம் பெயரால் பலர்தொழ எம் உருவில் வந்து - இந்த மாமரத்தடியில் முன்னாள் இலளிதாதேவி என்கின்ற பெயருடையவளாய் யாவரும் வணங்க எம்முடைய திருமேனியிற் றோன்றி, பங்கயனாதி உலகம் எல்லாம் மலர்தர நல்கினை - பிரமனாதி மும்மைத் தேவரையு மேனைய வுலகங்களையு முன்போல்விளக்கமுறத் திருக்கச் சிருட்டித்தனை, பின் மற்றொரு கற்பமதில் சலம் அறு மெய்ஞ்ஞான சத்தியில் நீங்கி - பின் வேறொரு கற்பத்தில் நிர்விகாரமாகிய ஞானசத்தியினின்றும் வெளிப்பட்டு. (எ-று)

(என்னில் வேறல்லாத தேவியேநீ)இவ்விடத்தில் முன் இலளிதையா யென் வாமபாகத்திற்றோன்றிப் பிரமனுதியரையு முலகங்களையும் படைத்து விளங்கச்செய்தனை மற்றொருகாலத்தின் மெய்ஞ்ஞான சத்தியினின்றும் நீங்கினென்க. (சகக)

அந்தண னுக்கருளி யாக்கிய துப்புதவிக்
கந்த மலர்க்கடவுள் கான்முளை தன்மகளாய்
நிந்தனை செய்தவனை நீத்து வரைக்கிறைபால்
வந்து மறித்துமெமை யன்பின் மணந்தனையால்.

**(இ - ள்.)** அந்தணனுக்கு அருளி ஆக்கிய துப்பு உதவி - பிரமனுக்கு மயக்கமொழித்துச் சிருட்டிக்கும் வலிமையையுதவி, கந்தமலர்க் கடவுள் கான்முளை தன்மகளாய்-

(பின்னர்) நறுமணங்கமழுங் கமலாசனத்தையுடைய அப்பிரமன் மகனாகிய தக்கனுக்கு மகளாகி, அவனை நிந்தனை செய்து நீத்து வரைக்கு இறைபால்வந்து - அத்தக்கனைப் பழித்தொழித்து மலையரையனுக்கு மகளாகப்பிறந்து, மறித்தும் எமை அன்பில் மணந்தனை - மீளவு மென்னை அன்பினாற் றிருமணஞ்செய்து கொண்டனை. (எ-று)

பிரமனுக்குப் படைக்குமாற்றலைத்தந்து பின் தக்கன்மகளாகியும் அப்பெயரொழியப் பின் மலைமகளாகியு மிருந் தெம்மைத் திருமணஞ்செய்து கொண்டனை என்க.

பிரமன் மயங்கினமையும் அம்மையா ரருளினமையும் இப்படலம் உ-வது செய்யுள் முதல் கூறியிருத்தலின் ஆண்டுக்காண்க. (சுகஉ)

இத்தகு நீயுலகம் யாவையு முய்யுமுறை
யத்தனி மந்தரமேல் யாமருளாற் றினிலைஇப்
பொய்த்திற னில்கழுவா யின்று புரிந்தனையாற்
கொத்தலர் மென்குழலாய் வேட்டது கூறுகென.

(இ - ள்.) இ தகு நீ உலகம் யாவையும் உய்யுமுறை - இத்தன்மையாகிய நீ உலகெல்லாம் பிழைக்கும் வகையாக, அ தனிமந்தரமேல் யாம் அருளாற்றின் நிலை பொய் திறனில் கழுவாய் இன்று புரிந்தனை - அந்த ஒப்பற்ற மந்தர பருப்பதத்தின்மேல் யாமருள் செய்த கட்டளைப்படியே பொய்த்த லில்லாம லப்பரிகாரத்தை யின்று செய்தனை, கொத்தலர் மென் குழலாய் வேட்டது கூறுக என - பூங்கொத்தணிந்த மெல்லிய கூந்தலை யுடையவளே நீ வேண்டியவற்றைக் கேட்பாயென்று சொல்ல. (எ-று)

அவரவர் வேண்டியாங்கு அவரவர் மகளாக வரு மிரக்கமுடைய நீ உலகமுய்யும் வகையாக யாமருளிய பரிகாரவியலை மறவாமற் செய்தனை யாகலின் நீ வேண்டியவற்றைக் கேட்பாயாகவென்று கூறவென்க. (சுகங)

வன்றனி மால்விடையாய் மந்தரம் வண்கயிலை
வென்ற வினைச்சிவலோ கத்தினு மேதகவுற்
றென்று நமக்கினிதா மிந்நக ராதலினிங்
கொன்றுநர் யாவர்களு முத்தி யுறப்பணியாய்.

(இ - ள்.) வன் தனிமால் விடையாய் - ஆற்றல்மிக்க சிறந்த இடபவூர்தியை யுடையவனே, மந்தரம் வண்கயிலை வினைவென்ற சிவலோகத்தினும் மேதகவுற்று - மந்தர பருப்பதம் பெருமைபொருந்திய ஸ்ரீகயிலாயம் புண்ணியரூபமாகிய சிவலோகம் ஆகிய இந்த விடங்களினுஞ் சிறந்து விளங்கி, இ நகரம் என்றும் நமக்கு இனி தாம் ஆதலின் - இக்காஞ்சிநகரம் எந்நாளும் நமக் கின்பமாயிருக்கின்ற தாகையால், இங்கு ஒன்றுநர் யாவர்களும் முத்தியுற பணியாய் - இங்குவந்து வாழ்கின்ற எத்திறத்தவரும் முத்தியின்ப மடையும்படி யருள்செய்வாய். (எ-று)

மந்தரபருப்பத முதலிய மூன்றினுஞ்சிறந்து நமக்கென்று மின்பந்தருவது இக் காஞ்சிநகர மாதலா னிங்குவாழ்கின்ற யாவர்க்கும் பேரின்ப முண்டாகச் செய்வாயென்க.

இந்நகர மென்று நமக்கினிதா மென்றதனாற் காஞ்சி பேரின்பத்தானமெனவும் ஏனையமந்தரமுதலிய மூன்றும் போகயோக ஞானத்தான மெனவுங் கொள்க.(சுகச)

மறந்துமறம் பிறழாக் காஞ்சி வளம்பதியி
னறிந்துசெய் தீவினையு மன்றி யெழுந்தனவும்

பிறிந்து தவப்பயனொன் றெண்ணில வாய்ப்பெருகி
யறம்பொரு ளின்பமெலா மாகவு நீயருளாய்.

(இ - ள்.) மறந்தும் அறம்பிறழாத காஞ்சிவளம்பதியில் - மறந்தேனும் அறத்தினின்றும் தவறாத சிறந்த காஞ்சிப்பதியில், அறிந்து செய் தீவினையும் அன்றி எழுந்தனவும் பிறிந்து - அறிந்து செய்கின்ற தீவினையும் அறியாது செய்கின்ற தீவினையு நீங்கி, தவப்பயன் ஒன்று எண்ணிலவாய் பெருகி அறம்பொருள் இன்பம் எல்லாம் ஆகவும் நீ அருளாய் - தவத்தான்வரும் பயனொன்று அளவில்லனவாக வளர்ந்து தருமம் அருத்தம் காமமாகிய மூன்று முண்டாகவும் நீ அருள்செய்யவேண்டும். (எ-று.)

காஞ்சிநகரத்தில் அறிந்து மறியாதுஞ் செய்கின்ற தீவினைகள் நீங்கித் தவப்பயனொன் றனந்தமா யோங்கி அறமுதலிய மூன்று முண்டாகவும் அனுக்கிரகஞ் செய்வாயென்க.

பாவமியற்றற் கிடங்கொடாதது காஞ்சிநகரமென்பது தோன்ற மறந்து மறம் பிறழாக் காஞ்சிவளம்பதி யெனவும், நூலுணர்ச்சி யுடையாரிடத்தும் அஃதில்லாரிடத்தும் பாவநிகழ்வ தியல்பாகலான் அது தொடராவண்ணம் அப்பிறவியிற்றானே பிறிக்கவேண்டுமென்பது தோன்ற அறிந்து செய்தீவினையும் அன்றி எழுந்தனவும் பிறிந்து எனவும், அறமுதலிய நான்கும் அவ்வத்தவமுடையார்க்கே வந்தணுகுவ தியல்பாகலான் அவ்வியல்பின்றி அறமுதலிய வொன்றை யடைதற்குரிய தவமியற்றினும் ஏனையவு மொருங்கே யடையச்செய்ய வேண்டுமென்பது தோன்றத் தவப்பயனொன் றெண்ணிலவாய்ப்பெருகி யறம்பொரு ளின்பமெலாமாகவு நீ யருளாயெனவுங் கூறினார்.

முத்திநகரமாகலான் மேலைச் செய்யுளிற் பேரின்பத்தை முன்னர்வேண்டிப் பின்னர் அறமுதலியவற்றை வேண்டினார். (சகரு)

இங்கிவை வேண்டுமெனக் கெம்பெருமா னெனமீப்
பொங்கு பெருங்கருணைப் பூரணி வேண்டுதலுஞ்
சங்கணி வெண்குழையார் தந்திரு வுள்ளமகிழ்ந்
தங்கலுழ் மேனியினுய் கேளிது வென்றருள்வார்.

(இ - ள்.) எம்பெருமான் இங்கு எனக்கு இவை வேண்டும் என்ன மீ பொங்கு பெருங்கருணை பூரணி வேண்டுதலும் - எமது பெருமானே இவ்விடத்திலெனக் கிவ்வரங்கள் தந்தருளவேண்டுமென்று மேலெழுந்தோங்கும் பெருங்கருணையையுடைய அம்மை வேண்டவும், சங்கு அணி வெண்குழையார் தம் திருவுள்ள மகிழ்ந்து - அழகிய சங்ககுண்டலமணிந்த விறைவர் தமது திருவுள்ளமகிழ்ந்தவராய், அங்கலுழ் மேனியினாய் இதுகேள் என்று அருள்வார் - அழகொழுகுந் திருமேனியை யுடையவளே இதனைக் கேட்பாயென்று கூறுவார். (எ-று)

இவ்விடத்தி லெனக்கு இவ்வரங்கள் வேண்டு மென்று அம்மையார் வினவ இறைவர் மகிழ்ந்து தேவியைநோக்கி இது கேளென்று சொன்க.

உயிர்களடையவேண்டிய போக மோக்கங்களைத் தாமே வேண்டினா ராகலின் மீப்பொங்கு பெருங்கருணைப் பூரணி என்றார். (சுகசு)

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

எய்சிலைநீள் புருவத் தேந்திள மென்முலையா யெம்முடை யெம்மடி யார் தம்மிடை யெய்தலுறச், செய்பிழை யன்றிவரும் தீவினை யேனையெ லாஞ் சீர்வளர் காஞ்சியினிற் றேய்ந்து தவம்பெருகி, மெய்திகழ் நாற்பய னு மேவ நிறீஇனமால் வேறு முனக்கினியென் வேண்டுவ தென்றிடலு, மொய்யொளி மேனியினுண் முன்றொழு தேத்தியிள மூரன் முகத்தல ரப் பேசுத லுற்றனளால்.

(இ-ள்.) எய்சிலை நீள்புருவத்து ஏந்திள மென்முலையாய் - பாணந்தொடுக்கப்பெற்ற விற்போலும் நீண்ட புருவத்தையும் முத்துவடமேந்திய இளங் கொங்கைகளையுமுடைய தேவியே, எம்மிடை எம்மடியார் தம்மிடை எய்தல் உற செய்பிழை அன்றி - என்னிடத்திலு மென்னடியா ரிடத்திலுஞ் சேரவரச் செய்கின்ற குற்றமேயல்லாமல், வரும் ஏனை தீவினை எல்லாம் - வருகின்ற எத்திறத்தனவாகிய தீவினைகளெல்லாம், சீர்வளர் காஞ்சியினில் தேய்ந்து தவம்பெருகி மெய் திகழ் நாற்பயனும் மேவ நிறீஇனம் - (நீவேண்டியபடியே) சிறப்புவளரும் காஞ்சிப்பதியிற் றேய்ந்து தவம்வளர்ந் துண்மையாகிய வறமுதலிய நாற் பயனையுமடைய வநுக்கிரகஞ் செய்தோம், உனக்கு இனிவேறும் என்வேண்டுவது என்றிடலும் - தேவியே உனக்கினி யிவையேயன்றி இன்னமும் வேண்டியவற்றையுங் கேட்பாயென்று சொல்லியருளவும், மொய் ஒளி மேனியினுள் முன்தொழுது ஏத்தி இளமூரல் முகத்து அலர பேசுதல் உற்றனள் - நிறைந்தொளிவீசுந் திருமேனியையுடைய வம்மையார் முன்னின்றுவணங்கித் துதித்து முகத்தின்கண் புன்னகையரும்ப விண்ணப்பஞ் செய்யத் தொடங்கினர். (எ-று)

தேவியே நீ கேட்டவைகளில் என்னிடத்திலு மென்னடியாரிடத்திலுஞ் செய்யுங் குற்றமேயன்றி ஏனையவையெல்லா நீ கேட்டவண்ணமே திருவுள்ளஞ் செய்தோம். இன்னமும் வேண்டுவன எவற்றையுங் கேட்பாயென்று கேட்க வம்மையார் கூறு கின்றனரென்க.

இறைவனும் அவனடியாருமே தீவினையெல்லா மொழிப்பவ ராகலான் அவர் மாட்டுப்பிழை நிகழுமாயின் அதனை யொழிப்பார் வேறொருவரின் றென்பார் எம்மி டை யெம்மடியார் தம்மிடையெய்தலுறச் செய்பிழையன்றி என்றார். இதனானே அடியார்க்குப் பிழைசெய்யின் இறைவன் பொறுத்தல் செய்யான் இறைவனுக்குப் பிழைசெய்யின் அடியார்கள் பொறுத்தல் செய்யாரென்றாயிற்று. ஆகவே இது தேயா தபெருந்தீவினை எனவும், அஃதியற்றுவோ ரொத்தவமுடைய ராயினும் அவர்க்கது குறையாதெனவும், அவ ரோர் பயனுமடையாரெனவும் வலியுறுத்தியவாறு. (சுகஎ)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

முதுகுடுமிப் பொலங்குவட்டு மந்தரத்தின் முன்னமெனைக் காளீ யென்று
புதுமையுற விளித்தனையா லதுகேட்ட துண்டிலைபோ லிருந்தே னந்நா
ளிதுபொழுது மிவ்வாறே விளித்தருளிச் செய்தாய் மற்றிதனை மாற்றி
விதுவணியுஞ் சடையானே கவுரநிறம் பெறவேண்டு மருளா யென்றாள்.

(இ-ள்.) முன்னர் முதுகுடுமி பொலம் குவட்டு மந்தரத்தில் - முன்னொரு காலத்திற் பொன்மயமாகிய பெரிய சிகரங்களையுடைய மந்தரமலையில், என்னை காளீ என்று புதுமை உற விளித்தனை - என்னைக்காளி என்று ஓர் புதுமையாக வழைத்தனை, அந்

நாள், அது கேட்டது உண்டு இலைபோல் இருந்தேன் - அப்பொழுதப்பெயரை யான் கேட்டு மொருவாறு கேட்டவளாயும் கேளாதவளாயு மிருந்தேன், இது பொழுதும் இவ்வாறே விளித்தருளிச்செய்தாய் - இப்பொழுது மிப்படியே காளியென் றழைத் தருளினை, விது வணியுஞ் சடையானே இதனை மாற்றி கவுர நிறம் பெறவேண்டும் அருளாய் என்றாள் - சந்திரசேகரனே இவ்வுருவத்தைப் போக்கிக் கவுரநிறத்தைப் பெறுதல்வேண்டும் அந்த வடிவெனக் கனுக்கிரகஞ்செய்வாயென்றுகேட்டனள்.(எ-று)

முன்னொருகாலத்தின் மந்தரமலையில் என்னைக் காளியென் றழைத்தீர் அப்பொழுது கேட்டதுங் கேளாததுமாயிருந்தேன் இப்பொழுது மதுபோலவே யழைத்தீராகலான் காளிமவடிவத்தை நீக்கிக் கௌர நிறம்பெற வருள்செய்ய வேண்டுமென்று கேட்டனளென்க.

காளி என் றழைத்தற்குக் காரணம் நிறமாயிருந்ததனுல் கருமை நிறத்தொடுங் கூடிய இவ்வடிவத்தை மாற்றிப் பொன்னிறத்தோடு கூடிய வடிவத்தைத் தரல்வேண்டு மென்பார் இதனைமாற்றி கவுரநிறம் பெறவேண்டு மருளாயென்று ளென்றார். ()

ஆண்டகையா ரதுகேளாக் குறுமூரன் முகத்தரும்ப வருளிச் செய்வார்
மாண்டவலித் தயித்தியரா லலைப்புண்ட திவ்வுலகம் வாழ்வா னெண்ணி
யீண்டுமுனை யவ்வாறு விளித்தேனிக் கருங்கோச மின்னே மாற்றி
வேண்டியவா கவுரநிறம் பெறுதி நீவிண்டிடு மக்கோசந் தன்னில்.

(இ-ள்.) ஆண்டகையார் அதுகேளா குறுமூரல் முகத்து அரும்ப அருளிச்செய்வார் - இறைவ ரதனைக்கேட்டுத் திருமுகத்தில் புன்னகைதோன்ற வருள்செய்வார், இ உலகம் மாண்டவலி தயித்தியரால் அலைப்புண்டது - இந்தவுலகம் வலிமையில்மிக்க அசுரராற் றுன்பமடைந்தது, வாழ்வான் எண்ணி உனை ஈண்டும் அவ்வாறு விளித்தேம்-அத்துன்ப மொழிந்து வாழ்ந்திருக்கவெண்ணி யுன்னை யிப்பொழுது மப்படியே யழைத்தோம், இ கரும் கோசம் இன்னேமாற்றி நீ வேண்டியவாறு கவுர நிறம் பெறுதி - இக்கரிய வுடம்பை யிப்பொழுதே மாற்றி நீ வேண்டியவாறே கவுர நிறத்தைப் பெறக்கடவாய், விண்டிடும் அ கோசம் தன்னில் - விடுகின்ற அந்தவுடம்பில். (எ-று)

அம்மையாரு கூறக்கேட்ட இறைவர் தேவி! இவ்வுலகம் அசுரரான் மிகவுந் துன்பமடைந்தது அது நீக்குதற் பொருட் டிவ்வா றழைத்தோமேயன்றி வேறின்று. இனி யிக் கரியவுடம்பைமாற்றிப் பொன்னிறத்தைப் பெறுவாயென்க.

கருமையுடையா யென்றெண்ணி யிகழ்ந்தழைத்த தன் றென்பார் உலகம் வாழ்வானெண்ணி யவ்வாறு விளித்தே மென்றார். (சுகக)

கூற்றமுறழ் சும்பனையு நிசும்பனையுங் கொலைசெய்யக் குறுகா ருட்கத், தோற்றுதிறற் கவுசிகியாந் துர்க்கையினித் தோன்றுமிதோ காண்டி யென்றார், கோற்றொடியு மக்கணமே வரியரவின் மூதுரிபோற் காளமேனி, மாற்றினுண் மணிக்கவுர வுருப்பெற்றாள் காதலனை வணங்கிச் சொல்வாள்.

(இ - ள்.) கூற்றம் உறழ் சும்பனையும் நிசும்பனையும் கொலைசெய்ய - இயமனையொத்த சும்பன் நிசும்பனென்னு மிரண்ட சுரரையுங்கொல்ல, குறுகார் உட்க தோற்று திறல் கௌசிகியாம் துர்க்கை - பகைவர் நடுங்கும் வன்மையுடைய கவுசிகி என்னும் பெயர்புனைந்த துர்க்காதேவி, இனி தோன்றும் இதோ காண்டி என்றார் - இனித்

தோன்றுவ ளிப்பொழுதே காண்பாயென்றார், சொல் தொடியும் அங்கணே பாம்பின் மூது உரிபோல் காளமேனி மாற்றினள் - அம்மையாரு மப்பொழுதே பாம்பின் பழைய சட்டைபோலக் கரியவுடம்பை மாற்றினார், பணி கவுர உருப் பெற்றாள் காதலனை வணங்கி சொல்வாள்-அழகிய கவுர வடிவத்தை யடைந்து நாயகனைப்பணிந்து கூறுவார்.

சும்பன் நிசும்பனென்னு மிரண்டசுரரையுங் கொல்லத் துர்க்கை தோன்றுவாள் நீயுங்காண்பாயென்று இறைவர்கூற அம்மையாரும் பாம்பு பழையசட்டையைக் கழிப்பதுபோல அவ்வடிவத்தை மாற்றி கவுரநிறத்தைப் பெற்றனரென்க.

அம்மையாருடைய கறுத்த திருமேனியே துர்க்காதேவியாய்த் திருவுருக் கொண்டதாகலான் கவுசிகியாந் துர்க்கை எனவும், இறந்தனரில்லை யாகலான் பாம்பின் மூதுரிபோற் காளமேனி மாற்றினளெனவுங் கூறினார். (௪௨௰)

நாதனே நின்னருளா லிப்பொழுதே நவைக்காள வடிவ மாற்றிக்
காதல்புரி கவுரியென வயங்குற்றே னுங்கணிக் காஞ்சிமாடே
மாதரொடு வானவர்தங் குழாநெருங்கப் பனிவரையி னிகழ்ந்த வண்ண
மேதகைய கடிமன்ற லெமக்கிநா ளுண்டாக விழைகின் றேனால்.

(இ - ள்) நாதனே நின் அருளால் இப்பொழுதே நவை காள வடிவம் மாற்றி- இறைவரே உம்முடைய கிருபையினாலிக்கணமே குற்றம்பொருந்திய கரியவடிவத்தை மாற்றி, காதல்புரி கவுரி என வயங்குற்றேன் - நீ விரும்பத்தக்க கவுரவடிவோடும் விளங்கப்பெற்றேன், ஆகலின் மாதரொடு வானவர்தங்குழா நெருங்க பனிவரையில் நிகழ்ந்தவண்ணம்-ஆகையினால் மங்கையரோடு தேவகணங்கள் நெருங்க இமயமலையில் நடந்தவண்ணம், மேதகைய கடிமன்றல் இந்நாள் இக்காஞ்சிமாடு எமக்கு உண்டாக விழைகின்றேன் - சிறந்த திருக்கலியாணம் இன்று இத்திருக்காஞ்சி நகரில் எனக்கு வேண்டுமென் றாசைப்படுகின்றேன். (எ - று)

என்னையனே உன்னருளால் கவுரநிறத்தை யடைந்தேன் ஆகையா லிமயமலையிலுண்டான கலியாணம்போ லிக்காஞ்சிநகரத்திலு நடக்கவேண்டுமென் றாசைப்படுகின்றே னென்க. திருமேனி வேறுவேண்டின ராகலான் மணமும் வேறுவேண்டினரென்க. (௪௨௧)

உருத்திரர்கள் கணநாதர் பலவேறு கடவுளர்க ளுவணவூர்தி
மருத்தமல ரணைப்புத்தே ளைந்தவித்த மாதவர்மற் றுள்ளோர் யாருங்
கருத்துவகை யுறத்தத்தம் பன்னிகளோ டிங்கெம்மைக் கண்ணிற் காணு
மருத்தியினு லிங்கணைந்தா ரண்ணலே யருளென்று பின்னுமவேண்டும்.

(இ - ள்.) உருத்திரர்கள் கணநாதர் பலவேறு கடவுளர்கள் - உருத்திர கோடிகளுஞ் சிவகணநாதர்களும் பதினெண்வகைப்பட்ட தேவர்களும், உவணவூர்தி மருத்தமலர் அணை புத்தேள் ஐந்தவித்த மாதவர் மற்றுள்ளோர் யாரும் - கருடவாகனனாகிய திருமாலும் நறுமணங்கமழும் கமலாசனனாகிய பிரமனும் ஐம்புலன்களைவென்ற பெரிய தவசிகளு மிவர்களொழிந்த பலரும், கருத்து உவகை உற தத்தம் பன்னிகளோடு இங்கு எம்மை கண்ணில் காணும் அருத்தியினால் அணைந்தார்-மனக்களிப்படையத் தங்கள் தங்கள் மனைவியர்களோடு இவ்விடத்திலென்னைக் கலியாணியாகக்காணும் விருப்ப மிகுதியினால் சேர்ந்தார்கள், அண்ணலே அருள் என்று பின்னும் வேண்டும் - அரசே யருள்செய்வாயென்று மீளவுஞ் சிலவரங்களை வேண்டுவர். (எ - று)

உருத்திரர் முதலிய யாவரு மென்னைக் கலியாணகோலமாகக் காணவேண்டு மென்றே தங்கள் தங்கள் மனைவிமாரோடும் வந்திருக்கின்றனர். ஆகையா லண்ணலே யருள்செய்வாயென்று மீளவுஞ் சிலவற்றை விரும்பினரென்க.

பத்தினிகளோடு கலியாணகாலத்தில் வருவது இன்றியமையாத செயலாகலான் தத்தம்பன்னிகளோ டொருங்கணைந்தாரெனவும். கவுர நிறத்தோடும் அம்மையார் மணக்கோலங் கொண்டது எவ்விடத்துங் கண்டிலராகலான் எம்மைமக் கண்ணிற் காணு மருத்தியினரெனவுங் கூறினர். (சஉஉ)

இவ்வருவை கவுரி திருக் கலியாண மென் றுலகின் வழங்க வேண்டுஞ்
செவ்வியுற வையாட்டைக் கன்னியென யானீங்குச் சிறந்த வாற்றாற்
பௌவநீ ரகல்வரைப்பிற் பைம்பாந்தண் மணியல்குற் பணைத்தோண் மாத
ரெவ்வெவரு மையாண்டிற் கன்னியர்கள் கவுரியரென் றுதல் வேண்டும்.

(இ - ள்.) இவ்வருவை கவுரி திருக்கலியாணம் என்று உலகில் வழங்கல்வேண்டும் - இக்கலியாணம் கவுரிகலியாணமென் றிம்மண்ணுலகில் வழங்கிவரவேண்டும், யான் ஈங்கு செவ்வியுற ஐ யாண்டைகன்னி என சிறந்த ஆற்றால் - யானிப்பொழுது அழகுபொருந்த ஐந்துவயதுள்ள கன்னிகையாகச் சிறந்திருக்கின்ற காரணத்தால், பௌவநீர் அகல் வரைப்பில் பாந்தள் பை மணி அல்குல் பணை தோள் மாதர் எவ்வெவரும்-பெரியகடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தில் பாம்பின்படம் போலுமழகிய அல்குலையும் மூங்கில்போலுந் தோள்களையு முடைய பெண்களெக்குலத்தவராயினும், கன்னியர்கள் ஐயாண்டில் கவுரியர் என்று ஆகல்வேண்டும் - பெண்களெல்லாம் ஐந்துவயதில் கவுரியரென்று பெயர் பெறுதல் வேண்டும். (எ - று)

இக்கலியாணம் கவுரிகலியாண மென்று வழங்கவேண்டும் யானிப்பொழுது ஐந்து வயதுள்ள கன்னிகையாகச் சிறந்திருக்கின்றபடியா லிவ்வுலகி லைந்து வயதுள்ள பெண்களுக்கு மிப்பெயரே வழங்கல் வேண்டுமென்று வேண்டினரென்க.

இமமலை முதலிய விடங்களிற் றிருமணக்கோலங் கொண்டது அவரவர் வேண்டுகோளுக்கு. ஈங்குத் திருமணக்கோலங்கொண்டது தம்முடைய வேண்டுகோளேயாகலின் அச்சிறப்புத் தோன்ற கவுரிதிருக் கலியாணமென் றுலகின் வழங்க வேண்டுமெனவும், கன்னியர்கள் கவுரியரென் றுதல்வேண்டு மெனவுங் கூறியதென்க.

ஏராளு மையாண்டிற் கன்னியரைச் சைவநெறி மறையோர்க் கீயுஞ்
சீராளர் குலமுதலோர் சிவலோகந் தனிற்சிவணப் பெறவும் வேண்டும்
காராளு மணிமிடற்றா யெனத்தொழுது வணங்குதலுங் காமற் காய்ந்த
பேராளர் திருவுள்ளஞ் செய்தருளிப் பெருங்கருணை கூர்ந்து சொல்வார்.

(இ - ள்.) கார் ஆளும் மணிமிடற்றாய் - கருமையையாளுகின்ற நீலகண்டனே, ஏர் ஆளும் ஐ ஆண்டில் கன்னியரை சைவ நெறி மறையோர்க்கு ஈயும் சீர் ஆளர்குல முதலோர்-அழகினையாளப் பெறு மைந்து வயதுடைய கன்னிகையை சைவநெறியிற் சிறந்த வேதியருக்குக் கொடுக்குஞ் சிறப்புடைய முதற்குலத்தவர்-சிவலோகம் தனில் சிவணப்பெறவும்வேண்டும் என தொழுதுவணங்குதலும், சிவலோகத்தி னிலைபெற்று வாழப்பெறுதல் வேண்டுமென்று தண்டாகாரமாகப்பணியவும், காமற்காய்ந்த பேராளர் திருவுள்ளம் செய்தருளி பெரு கருணைகூர்ந்து சொல்வார் - மன்மதனை யெரித்த பெரிய வாண்டகையார் திருவுள்ளத் தடைத்துப் பேரருள்கூர்ந்து கூறுவார். (எ - று)

ஐந்துவயதுள்ள கன்னியர்களைச் சைவவேதியர்க்குக் கன்னிகாதானமாகச் செய்வாராயின் அவர்கள் சிவலோகத்தையும் யடையவேண்டுமென்று வேண்டடுவோர் கருணை கூர்ந்து கூறுவாரென்க.

சைவநெறி மறையோரென்றது - ஆதிசைவரெனினு மொக்கும். விடத்தைக் கண்டத்தி லாளுதலுங் காமனைக் காய்தலும் பேராண்மை யென்பது தோன்றபேராளர் என்றார். (சஉச)

திருத்தகுவண் காஞ்சிதனிலாண்டுதொறும்பங்குனியுத்திரநாள்யார்க்கு
மருத்திபுரி திருவிழாநிகழ்ந்ததீற்றின்வதுவைநமக்கமைவதாகப்
பொருத்தமுறக்காண்டியெனத்தமிழ்முனிக்கனறருள்புரிந்தேநமதனாற்பா
கருத்துடைக்கும்பிலத்தயலேயாண்டுதொறுங்கடிநமக்குநிகழ்வதாக [வக்

(இ - ள்.) திருத்தகுவண் காஞ்சிதனில் ஆண்டுதொறும் பங்குனி உத்திரநாள் - அழகிற் சிறந்து விளங்குங் காஞ்சிநகரத்தில் வருடந்தோறும் பங்குனிமாதத்தில் வரு முத்திர நட்சத்திரத்தில, யார்க்கும் அருத்தி புரி திருவிழா நிகழ்ந்து ஈற்றில் - எவர்க்கு மாசையை விளைவிக்கின்ற திருவிழாச்சிறப்பு நடந்து அவ்விழா முடிவில், நமக்கு வதுவை அமைவதாக பொருத்தமுறக் காண்டிஎன - நமக்குக் கலியாணமகோற்சவ நடப்பதாக நீ பொருத்தமாகக் காண்பாயென்று, தமிழ்முனிக்கு அன்று அருள் புரிந்தோம் அதனால்-குறு முனிக்கு இம மலையி லருள்செய்தோ மக்காரணத்தால், பாவம் கருதுடைக்கும் பிலத்தயலே நமக்கு ஆண்டுதொறும் நிகழ்வதாக - பாவமாகிய பிறவியை யொழிக்கும் பிலத்தினருகில் நமக்கு வருடந்தோறுங் கலியாணம் நடந்துவருவதாகவே (எண்ணி.) (எ - று)

தேவியே! நாமும் முன்னம் அகத்திய முனிவருக்குக் காஞ்சியில் வருடந்தோறும் பங்குனி யுத்திரத்தில் நமக்குக் கலியாண நடக்கும் அதனை நீ மனமகிழக் காண்பாயென் றருள்செய் திருக்கின்றோ மாகலின் (நீ வாழ்கின்ற) பிலத்தயலில் நீ வேண்டியவாறே வருடந்தோறு நடக்குமென்க. (சஉரு)

கல்யாணமண்டபத்தினுனக்குரிமைத்தொழின்மறையோர்கன்னிசெய்ய
வெல்லாருமிதுகண்டுகளிப்புறுகவினுமுனக்காண்டுதோறு
நல்வாய்மையறம்வளர்க்கும்வித்தாநெல்லிருநாழிதருகேமந்த
நெல்லாலேயிகபரத்துமுயிர்ப்பைங்கூழ்தழைகவெனநிறுவல்செய்தார்.

(இ - ள்.) ஆண்டுதோறும் - வருடந்தோறும், கலியாண மண்டபத்தில் உனக்கு உரிமை தொழில்-அப்பிலத்தயலி லுள்ள கலியாணமண்டபத்தி லுனக்குச் செய்ய வேண்டிய மங்கள ஸ்நான முதலிய அலங்காரங்களை, மறையோர் கன்னி செய்ய-பிரமணப்பெண்கள செய்ய, எல்லாரும் இது கண்டு களிப்புறுக-இந்த வலங்காரத்தைக் கண்டு எல்லாரும் சந்தோஷிக்கக் கடவர்கள், இன்னும் உனக்கு, இதுவன்றி உனக்கு நல் வாய்மை அறம் வளர்க்கும் வித்தாம் நெல் இருநாழி தருகேம் - நிலைபெற்ற நல்ல தருமத்தைக் குன்றாமல் வளர்க்கவல்ல வித்தாக இருநாழி நெல்லைத் தருகின்றோம், அந்த நெல்லாலே - அந்தநெல்லினாலே, இகபரத்தும் உயிர் பைங்கூழ்தழைக என - இந்த உலகத்திலும் மேலுலகத்திலுமுள்ள உயிர்களாகிய பயிர்கள் தழையக்கடவன வென்று, நிறுவல் செய்தார் - அநுக்கிரகஞ்செய்தனர். (எ - று)

வருடந்தோறும் இந்தக்கலியாண மண்டபத்தில் உனக்குரிய அலங்காரங்கள் பிராமணப் பெண்கள் செய்ய யாவரும் சந்தோஷிக்கக் கடவர். இதுவேயு

மன்றி நீ செய்யும் தருமத்தை வளர்க்க இருநாழி நெல் தருகின்றோம் அதனால் உயிர்களாகிய பயிர்கள் தழைத்தோங்குகவென் றனுக்கிரகஞ்செய்தன ரென்க. (சஉசு)

அவ்வண்ணம்பெறலரியபெருவரங்களளித்தருளியகிலமீன்ற
மைவண்ணக்கருங்கூந்தன்மனக்கருத்துமுற்றநெடுமலயவாழ்க்கை
மெய்வண்ணக்குறுமுனிவன்றவப்பேறுநிரம்பவியனுலகம்வாழச்
செவ்வண்ணப்பெருமானார்மணவினையிற்றிருவுள்ளம்பற்றினரால்.

(இ - ள்) அவ்வண்ணம் பெறல் அரிய பெருவரங்கள் அளித்தருளி - அவ்வாறு கப்பெறுதற்கரிய வரங்களைத் தந்து, அகிலம் ஈன்ற மை வண்ணம் கருங்கூந்தல் மனக் கருத்து முற்ற - உலகமெல்லாம் பெற்றெடுத்த மேகம்போலுங் கரிய கூந்தலையுடைய அம்மையார் திருவுள்ளக்கருத்து முற்றுப்பெறவும், நெடு மலயவாழ்க்கை மெய் வண்ணம் குறுமுனிவன் தவப்பேறு நிரம்ப - பெரிய பொதியமலையில் வாழும் வாழ்க்கையையுடைய நன்னெறி வாய்ந்த அகத்திய முனிவரது தவப்பய னிரம்பவும், வியன் உலகம்வாழ-பெரிய இவ்வுலகம் வாழவும், செவ்வண்ணம் பெருமானார் - சிவந்த பவளம்போலுந் திருமேனியை யுடைய இறைவர், மணவினையில் திருவுள்ளம்பற்றினர்-திருக்கல்யாணஞ் செய்யும் மங்கலத் தொழிலில் திருவுள்ளம் வைத்தனர். (எ - று)

யாவராலும் பெறலரிய வரங்களைத் தந்து அம்மையார் திருவுள்ளக் கருத்து முற்றுப்பெறவும் அகத்தியமுனிவர் தவப்பேறு நிறையவும் உலகம் வாழவும் இறைவர் திருமணக்கோலங் கொள்வதற் குரிய தொழிலில் திருவுள்ளம் வைத்தனரென்க.

இப்படலம் ஏனைய படலங்கள்போல் அவ்வப் படலங்கட்குரிய சரித்திரங்களை வெளியாக்கியதுபோலன்றிப் பிரமனுடைய சிருட்டி முறையும், இடபேசர், காப்பீசர், கடகீசர், விஷ்ணுவீசர், அகத்தீசர், மத்தளமாதவீசர் என்னும் இவர்களது வரலாற்றையும் வெளியாக்கி அம்மையார் தழுவக் குழைந்ததாகிய இப்படல வரலாற்றையும் வெளியாக்கினமை காண்க. (சஉஎ)

தழுவக்குழைந்தபடலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - உசரு0.

உ

# திருமணப்படலம்

விண்டாழ் மாவின் மூலத்தெழுந்த விமல ஞர்தந் திருமேனி
தண்டா வன்பி னுமையம்மை தழுவக் குழைந்த வாறுரைத்தா
மண்டா ணவத்தின் றருக்கிரித்து மாறா வின்பப் பெருவாழ்வு
கண்டார் கதுவ வருள்கொழிக்குங் கவுரி மணத்தின் றிறம்புகல்வாம்.

(இ-ள்.) விண் தாழ் மாவின் மூலத்து எழுந்த விமலனார் தம்திருமேனி-ஆகாயமளாவிய மாவடியில்மூலத்துத் தோன்றிய தூயவுடம்பினராகிய இறைவர் திருமேனி, தண்டா அன்பின் உமையம்மை தழுவ குழைந்தவாறு உரைத்தாம்-கெடாதவன்பினால் உமாதேவியார் தழுவக்குழைந்த வரலாற்றை யெடுத்துக்கூறினோம், கண்டார் மண்டு ஆணவத்தின் தருக்கு இரித்து - தரிசனஞ்செய்வார் செறிந்திருக்கு மலதிமிரத்தைப்போக்கி, மாறாத இன்பப்பெருவாழ்வு கதுவ - நீங்காத பேரின்பவாழ்வடைய, அருள்கொழிக்கும் கவுரிமணத்தின் திறம் புகல்வாம்-அருள்விளங்கும் அம்மையாரது திருக்கலியாணச்சிறப்பை இனி யெடுத்துச்சொல்வாம். (எ-று.)

இதுவரையிலும் தழுவக்குழைந்ததிருமேனியின் வரலாற்றை யெடுத்துச் சொன்னோம். இனித் திருமணக்கோலங்கொள்ளு மற்புதத்தைக் கூறுகின்றோ மென்க.

வெள்ளங்கண்டு இளைத்துவிட நினையாது மனத்திட்பமுடையரா யிடும்பைக்கிடும்பைப் படுத்தினராகலின் தண்டாவன்பினென்றார். (க)

திருவேகம்பத்தமர்ந்தருளுந்தேவர்பிரானார்புடைநின்ற
மருவார்துளபத்தொடைமவுலிமாயோன்றன்னையெதிர்நோக்கிக்
கருவார்கூந்தற்றடங்காமக்கண்ணிதனக்குமற்றெமக்கும்
பெருவாய்மையினாற்கடிவிழாத்திருநாள்பிறங்கப்புரிகென்றார்.

(இ-ள்.) திருவேகம்பத்து அமர்ந்து அருளும் தேவர்பிரானார் - திருவேகம்பமென்னுந் திருத்தளியில் வீற்றிருக்குமகாதேவர், புடைநின்ற மருவார் துளபத்தொடைமவுலி மாயோன்றன்னை எதிர்நோக்கி - தம்மருகிலிருந்த நறுமணங்கமழுந் துளவமாலைசூடிய முடியையுடைய திருமாலைப்பார்த்து, கருவார்கூந்தல் தடவு காமக்கண்ணிதனக்கும் எமக்கும் - நீண்ட கரியகூந்தலையுடைய பெருமைபொருந்திய காமாக்ஷிக்கு மெனக்கும், பெருவாய்மையினால் கடிவிழா திருநாள் பிறங்க புரிக என்றார் - வேதாகமமுறையாற் றிருமணககோலத் திருவிழாச்சிறப்பை யெவ்விடத்தும் விளங்கச் செய்யக் கடவாயென்று கட்டளையிட்டனர். (எ-று.)

திருவேகம்பநாதர் திருமாலைநோக்கிக் காமாக்ஷிக்கு நமக்குந் திருமணக்கோலத் திருவிழாவைச் செய்யக்கடவாயென்றாரென்க.

தமக்குமேலொரு நூலும் உண்மையுமில்லாதது வேதகமமாகலாற் பெருவாய்மை என்றார். (உ)

பல்லார்நிற்பத்தனைநோக்கிப்பணித்தகருணைத்திறம்போற்றிப்
புல்லார்வெருவுந்தனித்திகிரிப்புத்தேளாகைதலைசிறப்பச்
சொல்லாற்றொழுகிமனவெழுச்சிதழொழிலின்மூண்டுவேண்டுவன
வெல்லாப்பொருளுங்கடிதீண்டுக்கொணர்கென்றிமையோர்தமைவிடுத்தான்.

(இ-ள்.) புல்லார் வெருவுந் தனி திகிரி புத்தேள் பல்லார் நிற்ப தனை நோக்கி பணித்த கருணை திறம்போற்றி-பகைவரஞ்சுஞ் சிறந்த சக்கரப்படையையுடைய திருமால் பலதேவர்கள் பணிநோக்கிப் புடைசூழ்ந்திருக்கத் தன்னைப்பார்த்துக் கட்டளையிட்ட திருவருட்செயலைப்புகழ்ந்து, ஓகை தலை சிறப்ப சொல்லாறு ஒழுகி மண எழுச்சி தொழிலின் மூண்டு-ஆனந்த மேன்மேற்பொங்க இறைவர் கட்டளையினின்று திருக்கலியாணஞ்செய்யுந் தொழிலின் முற்பட்டு, இமையோர் தம்மை ஈங்கு வேண்டுவன எல்லாப்பொருளும் கடிது கொணர்க என்று விடுத்தான் - தேவர்களைப்பார்த் திவ்விடத்து வேண்டுவனவாகிய வெல்லாப்பொருள்களையும் விரைவிற் கொண்டுவாருங்களென்றனுப்பினர். (எ-று.)

திருமா லிறைவர் தன்னை நோக்கிப்பணித்த வருட்டிறத்தை யெண்ணிப்புகழ்ந்து தேவர்களை நோக்கித் திருமணத்துக்கு வேண்டுவனவாகிய வெல்லாப்பொருளுங் கொண்டுவாருங்களென் றேவினரென்க. (௩)

தொடியார்தழும்பிற்பெருந்தகைக்குந்தோகைதனக்குங்கலியாணங்
கடிமாநகரமுழுதறியக்கறங்குமுரசமறைவித்துக்
கொடிநீண்மாடமாளிகைசூழ்கடிமண்டபமுன்கோடிப்ப
நெடுமால்விசும்பின்யவனரைக்கூய்ப்பணித்தானவருநிருமித்தார்.

(இ-ள்.) நெடுமால் தொடியார் தழும்பின் பெருந்தகைக்கும் தோகைதனக்கும் கலியாணம் - திருமால் வளைத்தழும்பினையுடைய பெருமானுக்கும் அத்தழும்பைத்தந்த பெருமாட்டிக்கும் நடக்குங் கலியாணமகோற்சவம், கடி மாநகரம் முழுதும் அறிய கறங்கு முரசம் அறைவித்து - சிறந்த காஞ்சிநகரத்துள்ளார் யாவருந் தெரிந்துகொள்ளப் பேரொலிகாட்டும் பேரிகையை (எவ்விடத்தும்) கொட்டச்செய்து, கொடி நீள் மாடம் மாளிகைசூழ் கடிமண்டபம் முன் கோடிப்ப-நீண்ட கொடிகளசையு மேன்மாடங்களையுடைய மாளிகைகள்சூழ்ந்த கலியாணமண்டபத்தை முன்னே வலங்காரஞ்செய்ய, விசும்பின் யவனரை கூய் பணித்தான் அவரும் நிருமித்தார் - தேவலோகத்திலுள்ள கம்மியரை யழைத்துக் கட்டளையிட்டனர் அவருமவ்வாறே கலியாணமண்டபத்தை யுண்டாக்கினர். (எ-று)

திருமால் பெருமானுக்கும் பெருமாட்டிக்குங் கலியாணமகோற்சவமென்று நகரிலுள்ளார்யாவருமறியப் பேரிகைமுழக்கிவித்துத் தேவகம்மியரை வரவழைத்துக் கலியாணமண்டபஞ் செய்யக் கட்டளையிட அவ்வாறேஅவருஞ்செய்து முடித்தனரென்க. முழுதும் என்புழி முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. (௪)

கலிவிருத்தம்.

அகனிலம்பசும்பொனினமைத்தொராயிரம்
பகலொளிமழுங்குசெம்பவளத்தூணிறீஇ
யுகுமொளிமரகதப்போதியும்பர்வைக்
திகலறவயிரவுத்திரமுமேய்வித்தார்.

(இ-ள்.) அகன் நிலம் பசும்பொனின் அமைத்து பகல் ஒளி மழுங்கு ஓராயிரம் செம்பவளத்தூண் நிறுவி-அகன்றவிடத்தைப் பசியபொன்னாற்செய்து சூரியகிரணமுமழுங்கத்தக்க ஆயிரஞ் சிவந்த பவளக்கால்களை நிறுத்தி, ஒளி உகும் மரகதம் போதி உம்பர்வைத்து இகல் அற வயிர உத்திரமும் மேய்வித்தார் - ஒளிவீசும் மரகதத்தினாற்செய்த போதிகையை மேலேவைத்து அதற்கிணங்க வயிரத்தினாற்செய்த வுத்திரத்தைப்பொருந்தச்சுமத்தினர். (எ-று)

கலியாணத்துக்கமைத்த மண்டபவிடத்தைப் பொன்னாலிழைத்து ஆயிரம்பவ ளக்கால்களை நிறுத்தி மரகதப்போதிகையை மேலேவைத்து வயிரவுத்திரத்தைப் பொருத்தினரென்க. (ரு)

உருக்கியசெழும்பொனின்மணிகளொன்பது
நெருக்குறப்பரப்பியோவியநிகழ்த்திய
திருக்கிளர்பலகைமேலிணக்கித்தெள்ளொளி
பெருக்கும்வெண்பளிங்கினாற்பித்தியாக்கினார்.

(இ-ள்.) உருக்கிய செழும்பொனின் மணிகள் ஒன்பதும் நெருக்குற பரப்பி- உருக்கிய செம்பொன்னில் நவரத்தினங்களை யொன்றோடொன்று பொருந்தப்பரப்பி ஓவிய நிகழ்த்திய திருக்கிளர் பலகைமேல் இணக்கி-சித்திரங்களாற் சித்திரித்த பலகையை மேலே பதித்துப்பொருத்தி, தெள் ஒளி பெருக்கும் வெண்பளிங்கினாற் பித்தியாக்கினர் - தெளிந்த வொளிவீசும் வெள்ளிய பளிங்குக்கற்களாற் சுவரெடுத்தனர்.

செம்பொன்னில் நவரத்னங்களைப்பரப்பிச் சித்திரந்தீட்டிய பலகையைமேலே இணைத்துப் பளிங்கினாற் சுவரெடுத்தனரென்க. (சு)

மேனிலைமாளிகைவேதிசூளிகை
யேனவும்பலபலவியற்றிமேவர
வானெழுமிருசுடர்மணிகளாதியா
லூனமில்சிகரமுமும்பர்சூட்டினார்.

(இ-ள்.) மேல் நிலை மாளிகை வேதி சூளிகை ஏனவும் பலபல இயற்றி - (அச் சுவரின்மேல்) மேல்வீடுகளுந் திண்ணைகளுஞ் சூளிகைகளு மின்னு மிவைபோல்வன பிறவும் பற்பலவகையாகச்செய்து, வான் எழும் இருசுடர் மணிகள் ஆதியால் ஊனம் இல் சிகரமும் மேவர உம்பர் சூட்டினார் - ஆகாயத்திற் படர்ந்துசெல்லுஞ் சூரிய சந்திரர்களைக் கண்டுருகு மிருவகைக்கற்களாலு மேனைய இரத்தினவகைகளாலும் குற்றமில்லாத சிகரங்களையும் மேலே பொருந்தவைத்தனர். (எ-று)

(அச்சுவரின்மேல்) மேனிலைமுதலியவற்றைப் பலபலவாகச் செய்து சூரியகாந்த சந்திரகாந்த முதலியகற்களாற் சிகரங்களமைத்தனரென்க. (எ)

காவியங்கண்ணியர்விழையுங்காமுக
ராவியுஞ்சிந்தையுமழியவேக்கற
வோவியத்தொகையெலாமும்பர்மாதர்போற்
பாவியல்பாடலிற்பயிலச்செய்தனர்.

(இ-ள்.) காவியங் கண்ணியர் விழையும் காமுகர் ஆவியும் சிந்தையும் ஏக்கற அழிய - நீலமலர்போலு மழகிய கண்களையுடைய மங்கையரை விரும்புங் காமுகருடைய வுயிரு மனமும்அவாவுற்றழிய, ஓவியம் தொகை எல்லாம் உம்பர் மாதர்போல் பாவியல் பாடலில் பயிலச்செய்தனர் - சித்திரித்த பாவைகளெல்லாம் தேவமங்கையரைப்போ லிசையமைந்த பாடல்களில் பழகச்செய்தனர். (எ-று)

மங்கையரை விரும்புங் காமுகர் சிந்தையழிந் தாவி சோரச் சித்திரப் பாவைகளெல்லாந் தேவமங்கையரைப்போற் பாடப் பாடலிற் பழகச்செய்தனரென்க.

சித்திரப்பாவைகள் பாடுகின்ற பாடலாற் காமுகர் அவற்றைச் சித்திரப்பாவையாகவெண்ணாது விண்ணரமங்கையராகவே யெண்ணி வேணவா வுறுவரென்பார் ஏக்கற என்றார். (அ)

வரையினின் றிழிதருமாலைவெள்ளநீ
ரருவியென றயிர்ப்புறவலங்குநித்திலக்
குருமணிவடமொளிகொழிக்குஞ்சுற்றெலா
நிரைநிரையாத்துமண்ணீவநாற்றினர்.

(இ-ள்.) வரையில் நின்று மாலை இழிதரும் வெள்ளநீர் அருவி என்று அயிர்ப்புற - மலையினின்று வரிசையாயொழுகுகின்ற வெள்ளமாகிய அருவி யென்று சந்தேகங்கொள்ள, அலங்கு நித்திலக் குருமணிவடம் ஒளி கொழிக்கும் சுற்றெலாம்-அசைந்தாடுகின்ற நிறமுள்ள முத்துமாலைகளை ஒளி வீசும் சுற்றுப்பக்கங்களெல்லாம், நிரை நிரை மண் நீவ யாத்து நாற்றினர்-வரிசைவரிசையாகப் பூமியிற்புரளக் கட்டித்தொங்க விட்டனர். (எ-று.)

மலையி னுற்புறங்களினின்று மொழுகாநின்ற அருவியோ வென்று சந்தேகங்கொள்ள நாற்புறங்களினு முத்துமாலைகளைத் தொங்கக்கட்டினரொன்க. (கூ)

மணிவடக் கிடையிடை மறுவில் கண்ணடி
தணிவற வொளிவிடுந் தவளச் சாமரை
பிணிமலர்த் தொத்துவண் பிரசப் பல்கனி
யணிபெறு முறைமையி னலங்கத் தூக்கினர்.

(இ-ள்.) மணிவடக்கு இடை இடை மறுவில் கண்ணடி தணிவற ஒளிவிடும் தவளச்சாமரை-(தொங்கவிட்டிருக்கும்) முத்துமாலைகளினிடைவெளியில் களங்கமில்லாத கண்ணடியும் நீங்காதொளிவீசும் வெள்ளிய சாமரைகளும், மலர்பிணி தொத்து வண்பிரசம் பல்கனி அணிபெறு முறைமையின் அலங்க தூக்கினர்-மலர்களாற் பிணிக்கப்பட்ட பூமாலைகளும் சுவை மிக்க தேனொழுகும் பல கனிவகைகளுமாகிய இவைகளை வரிசையாக அழகுபெற்று விளங்கத் தூக்கிக்கட்டினர். (எ-று)

முத்துமாலைகளினிடைவெளியில் கண்ணடி முதலியவற்றை யழகுபெறக் கட்டினரொன்க. (கய)

நெட்டிலைக்கதலியுநீலப்பூகமு
மட்டுமிழ்கன்னலும்வானிற்றருவும்
விட்டொளியெறித்திருள்விழுங்குதூண்டொறுங்
கட்டினர்மலர்கனிகாய்களீனவே.

(இ-ள்.) விட்டு ஒளி எறித்து இருள் விழுங்கும் தூண் தொறும் - விட்டுவிட்டொளிவீசி யிருளைப்பருகுந் தூண்கடோறும், நீலம் நெடு இலை கதலியும் பூகமும் மட்டு உமிழ்கன்னலும் வானில் தருவும் மலர் காய் கனிகள் ஈன கட்டினர்-நீலரத்தினத்தாற்செய்த நீண்டவிலைகளையுடைய வாழைமரங்களையுங் கமுகமரங்களையும் வாசம்வீசுங் கரும்புகளையுந் தேவருலகிலுள்ள கற்பகவிருக்கங்களையும் மலர் காய் கனிகளை முறையேதரக்கட்டினர். (எ-று)

இயற்கையாயுள்ள வாழை முதலியவைபோல் செயற்கையாயமைத்த வாழை முதலியவைகளும் மலர் முதலியவற்றைத்தரக்கட்டினரொன்க. (கக)

கொடிகளுந்தாருவுங்கோணைப்பொய்கையும்
வடிவுடைக்கிளிபுறுமஞ்ஞைமற்றவுஞ்
சுடர்பலநிறங்களுந்தொகுத்துமேலகித்த
விடுகதிர்ப்பட்டினல்விதானஞ்செய்தனர்.

(இ-ள்.) கொடிகளும் தாருவும் கோணை பொய்கையும் வடிவுடை கிளி புரு மஞ்ஞை மற்றவும் - பலபூங்கொடிகளும் விருக்ஷங்களும் வளைவினை யுடைய தடாகங்களுமாகிய (இவைகளும்) அழகினை யுடைய கிளி புரு மயில் முதலாகிய விவைகளும் இவை யொழிந்தனவும், சுடர்பல நிறங்களும் தொகுதது லேகித்த விடுகதிர்ப் பட்டினல் விதானஞ் செய்தனர் - விளங்கும் பல நிற வர்ணங்களாலுங் கூட்டிச் சித்திரித்த கிரணம் பரப்பும் பட்டினல் மேல்விதானத்தைக் கட்டினர். (எ-று.)

கொடிமுதலியவற்றை அவ்வவற்றிற்குரிய பல நிறங்களாற் சித்திரித்த பட்டினல் மேற்கட்டைக் கட்டினரென்க. (கஉ)

முத்தொளிமாலையுமூரிப்பன்மணிச்
சித்திரமாலையுஞ்செம்பொனற்செயுந்
தத்தொளிமாலையுந்ததைந்துவண்டுலாந்
தொத்தலர்மாலையுந்துவன்றத்தூக்கினர்.

(இ-ள்.) முத்து ஒளி மாலையும் மூரி பன்மணி சித்திரமாலையும் செம்பொனற் செயும் தத்து ஒளி மாலையும் - ஒளிபரப்பும் முத்துமாலைகளும் பெரிய பலவகை மணிகளாற்கோத்த சித்திரமாலைகளு மொளிவீசுஞ்செம்பொனற்செய்த மாலைகளும், ததைந்து வண்டு உலா தொத்து அலர்மாலையும் துவன்ற தூக்கினர் - வண்டுகள் செறிந்துசூழும் பூங்கொத்துகளலர்ந்த பூமாலைகளுங் கலந்து தொங்கவிட்டனர். (எ-று)

மேற்கட்டில் முத்துமாலை முதலியவற்றைத் தொங்கக்கட்டினரென்க. (க௩)

நாப்பணினெம்பிரானங்கையோடுறை
பூப்பொலிமணியணைபொருத்திப்பாங்கெலா
மூப்புடைவிண்ணவர்முனிவர்வைகிட
வேற்புடையணைகளுமிட்டுவைத்தனர்.

(இ-ள்.) நாப்பணின் எம்பிரான் நங்கையோடு உறை பூபொலி மணி யணைபொருத்தி - (இவ்வலங்காரத்தோடுங் கூடியமண்டப) நடுவிற் பெருமாட்டியோ டெமது பெருமான் வீற்றிருப்பதற்கு மலர்களால் விளங்கு மழகிய வாசனத்தையிட்டு, பாங்கு எல்லாம் மூப்புடைய விண்ணவர் முனிவர் வைகிட ஏற்புடைஅணைகளும் இட்டுவைத்தனர்-பக்கங்களினெல்லாம் பெரிய தேவர்களும் முனிவர்களுந் தங்கியிருப்பதற்கேற்றவாசனங்களையு மணியணியாகவமைத்து வைத்தனர். (எ-று)

அம்மண்டபநடுவில் இறைவனு மிறைவியும் வீற்றிருக்க மலர் பரப்பிய மணியாசனமும் அவ்வாசனத்தைச்சூழத் தேவர்களு முனிவர்களு மிருத்தற்குரியவாசனங்களு மமைத்தனரென்க. (கச)

குண்டமும்வேதியுங்கோலமார்தரு
மண்டிலவகைமையுமற்றுமேர்பெற
விண்டவர்புரமடும்விமலர்நூன்முறை
யண்டருமுனிவருமயிர்ப்பச்செய்தனர்.

(இ-ள்.) குண்டமும் வேதியும் கோலமார்தரு மண்டில வகைமையும் மற்றும்-குண்டங்களும் வேதிகைகளும் அழகுபொருந்திய மண்டிலவகைகளும் ஏனையவும், விண்டவர்புரம் அடும் விமலர் நூல் முறை அண்டரும் முனிவரும் அயிர்ப்ப ஏர்பெற செய்தனர் - பகைவரது முப்புரத்தையெரித்த இறைவர்சொன்ன ஆகமமுறையாகத் தேவர்களு முனிவர்களு மயிர்த் தேக்கங்கொள்ள அழகுபெறச்செய்தனர். (எ-று)

குண்டமுதலியவற்றைச் சிவாகமத்திற்கூறியவாறு தேவர்முதலியோர் சந்தேகங்கொள்ளச் செய்தனரென்க.

இவ்வலங்காரமும் இவ்விதியும் நாங்கண்டிலோமென்றையுறச்செய்தன ரென்பார் அண்டரு முனிவரு மயிர்ப்பவென்றார். (௧௫)

கொங்குயிர்சந்தனக்குறடுகாழகில்
குங்குமங்கற்புரங்குரவமான்மதம்
வெங்கடிகமழ்தரப்புகைத்துமேதக
வெங்கணுமையவிசிதறியேர்செய்தார்.

(இ-ள்.) கொங்குயிர சந்தனக் குறடு காழ் அகில் குங்குமம் கற்புரம் குரவம் மான் மதம் - நறுமணங்கமழுஞ் சந்தனக்கட்டை வயிரமேறிய அகிற்கட்டை குங்குமப்பூ பச்சைக்கற்பூரம் குராமலர் மிருகமதம், எங்கணும் வெம்கடி கமழ் தரபுகைத்து மேதக ஐயவி சிதறி ஏர்செய்தார்-(ஆகிய இவைகளெல்லாம்) எவ்விடத்தும் விருப்பந்தரும் நறுமணம் வீசப் புகைசெய்தூட்டி மேன்மைபெற வெண்கடுகைச்சிதறி யழகுபெறச் செய்தனர். (எ-று)

எவ்விடங்களிலு நறுமணமுண்டாகச் சந்தனக்கட்டை முதலியவற்றாற் புகையூட்டி வெண்கடுகைச்சிதறி யழகுசெய்தனரென்க. (௧௬)

பாங்கெலாம்பனிமலர்ப்பந்தர்கட்பொறி
வாங்கியவெழில்பெறவகுத்துமாமணம்
வீங்கியநானநீர்துவற்றிநித்தில
மாங்கவாலுகமெனவகம்பரப்பினர்.

(இ-ள்.) பாங்கு எல்லாம் பனிமலர் பந்தர் கட்பொறி வாங்கிய எழில்பெற வகுத்து-பக்கங்களிலெல்லாம் குளிர்ந்தபூப்பந்தரைக் கண்கவரத்தக்க அழகுவாய்ப்பச்செய்து, மாமணம் வீங்கிய நானம் நீர் துவற்றி நித்திலம் வால்உகம் என அகம் பரப்பினர்-நல்ல வாசமிகுந்த பனிநீரைத் தெளித்து வெள்ளிய முத்தங்களை அவை விளையு மிடமென்று சொல்லும்படி யுள்ளிடமெல்லாம் பரப்பிவைத்தனர். (எ-று)

கலியாணத்துக்கமைத்த ஆயிரக்கான்மண்டபத்தின் பக்கங்களிலெல்லாம் பூம்பந்தரமைத்து பனிநீர் தெளித்து உள்ளிடமெல்லாம் முத்துகள் பரப்பினரென்க.

ஆங்க - அசை: (௧௭)

பந்தரின்புடையெலாம்பங்கயப்புன
லந்தரராட்டயரலங்கற்பொய்கையுஞ்
சந்தனங்கற்பகந்தருக்கண்மல்கிய
சுந்தரப்பொழில்களுந்துவன்றச்செய்தனர்.

(இ-ள்.) பந்தரின் புடை எல்லாம் அந்தரர் புனல் ஆட்டயர பங்கயம் அலங்கல் பொய்கையும் - பந்தரின் பக்கங்களிலெல்லாந் தேவர்கள் நீராடுதற்குரிய தாமரை மலர்க ளசைந்தாடுந் தடாகங்களும், சந்தனம் கற்பகம் தருக்கண் மல்கிய சுந்தரப் பொழில்களும் துவன்ற செய்தனர் - அரிசந்தனம் கற்பகம் சந்தானம் பாரிசாதம் மந்தாரம் என்னும் பஞ்சதருக்கள் நிறைந்திருக்கு மழகிய சோலைகளும் நெருங்கியிருக்கச்செய்தனர். (எ-று)

பந்தரின் பக்கங்களிலெல்லாந் தடாகங்களுஞ் சோலைகளு நெருங்கியிருக்கச்செய்தனரென்க.

அகனிலமென்னுஞ் செய்யுள்முத. லிச்செய்யுள் வரையிலும் கலியாணமண்டபவலங்காரத்தைக் கூறியதென்க. (கஅ)

வேறு.

யவனர்தந்தொழிலித்திறமாகமற்
கவுரிமன்றலெனக்கறங்கும்பணைச்
சிவமலிந்தசெழுங்குரல்கேட்டலு
முவகைபூத்தனரொண்ணகர்மாக்களே.

(இ-ள்.) யவனர் தம் தொழில் இத்திறம் ஆக - கம்மியரியற்றிய அலங்காரத்தொழிலிவ்வகையாயமைந்திருக்க, கவுரி மன்றல் என பணை கறங்கும் சிவமலிந்த செழுங்குரல் - கவுரிகலியாணமென்று முரசறையும் மங்கலநிறைந்த பெரியவோசையை, ஒண் நகர் மாக்கள் கேட்டலும் உவகை பூத்தனர்-சிறந்த காஞ்சிநகரவாசிகள் கேட்கவு மகிழ்ச்சியடைந்தனர். (எ-று.)

கம்மியரலங்காரத்தொழிலின்னவகையாய்ச் சிறந்திருக்கத் திருக்கலியாணமென்று முரசறையக் கேட்ட நகரவாசிகள் அக்கணமே மனமகிழ்ந்தனரென்க. (கசு)

இயங்குமாந்தர்நெருக்கினிலிற்றுவீழ்
தயங்குகாழ்களுந்தாரும்புலவியின்
முயங்குமாதருகுத்தவுமொய்த்தொளி
வயங்குவீதியிற்குப்பைகண்மாற்றுவார்.

(இ-ள்.) இயங்கு மாந்தர் நெருக்கினில் இற்று வீழ் தயங்கு காழ்களும் - உலாவுகின்ற மாந்தர்களுடைய நெருக்கத்தினாலறுபட்டு வீழ்கின்ற வொளிதவழு மணிமாலைகளும், புலவியின் முயங்கு மாந்தர் உகுத்த தாரும் - ஊடலிற்றலைப்பட்ட பெண்களறுத்தெறிந்த முத்துமாலைகளும், மொய்த்து ஒளிவயங்கு வீதியில் குப்பைகள்மாற்றுவார் - நெருங்கிவொளிவீசும் வீதிகளில் குப்பையாகக்கிடக்க வதனை மாற்றுவர்கள்.

மாந்தர் நெருக்கத்திலற்று வீழ்கின்ற மாலைகளும் மாதர் ஊடலிலுகுத்த மாலைகளும் வீதியிற் குப்பைகளாகக்கிடக்க அதனை மாற்றுவரென்க. (இவையன்றி வேறு குப்பையில்லையென்றபடி.) (உ0)

சந்தமல்குதமனியச்சுண்ணமுஞ்
சுந்தரக்கருப்பூரத்திரள்களுங்
கந்தநீரிற்கரைத்துமறுகெலாம்
பந்தினூட்டிப்பனிப்பர்களென்பவே.

(இ-ள்.) சந்த மல்கு தமனியச் சுண்ணமும சுந்தரக் கருப்பூரத் துகள்களும - நிறம்வாய்ந்த பொற்சுண்ணமும் அழகிய பச்சைக்கருப்பூரத் துகள்களும், கந்த நீரில் கரைத்து பந்தின் ஊட்டி மறுகு எல்லாம் பனிப்பர்கள் - நீரிற் குழைததுப் பந்திற்றோய்த்து வீதிகளிலெல்லா மெழுகிக் குளிரச்செய்வர். (எ-று)

(மணி மாலைகளையே குப்பைகளாகப் போக்கிய வீதிகளிற்) பொற்சுண்ணமுங் கற்பூரத்துகளும் கூட்டிப் பனிநீரிற் கரைத்துமெழுகினரென்க. (உக)

வண்டுலாமலர்வார்மணிப்பந்தரும்
விண்டுழாவுபதாகையும்வின்மணி
கொண்டதோரணக்கூட்டமும்பாணரிற்
பண்டையுள்ளனபாற்றியியற்றுவார்.

(இ-ள்.) வண்டு உலாவும் மலர் வார் மணி பந்தரும் விண்தழாவு பதாகையும் - வண்டுகளுலாவுகின்ற மலரானமைந்த அழகிய பெரிய பந்தர்களும் ஆகாயத்தை யளாவிய கொடிகளும், வில்மணி கொண்ட தோரணக் கூட்டமும் - ஒளிவிடு மணிகளிழைத்த தோரண வரிசைகளுமாகிய இவைகளை, பண்டை உள்ளன பாற்றியாணரின் இயற்றுவார் - முன்னுள்ளனவற்றை நீக்கிப் புதுமையாக வலங்கரிப்பர். (எ-று)

பூம்பந்தரும் துவசமுந் தோரணமும் புதுமையாகச் செய்தனரென்க.

பண்டையுள்ளன பாற்றி என்றதனால் இவ்வணிகளெல்லா மென்று முள்ளன வென்று கொள்ளக்கிடந்தன. இதனை, "கொடிகள் செல்வ விழாக்குணலை யருக்கடிகொள் பூம்பொழிற் கச்சி" எனவருந் திருவாக்கானுணர்க. (உஉ)

தாமநாற்றித்தமனியவேதியிற்
பூமெனீர்நிறைபூரணகும்பமுங்
காமர்பாலிகையுங்கதிர்த்தீபமுந்
தூமமுந்தொகுப்பாரிடந்தோறுமே.

(இ-ள்.) தமனிய வேதியின் இடந்தொறும் தாமநாற்றி பூமெல் நீர்நிறை பூரண கும்பமும்-பொன்னலாகிய யாகவேதிகைகடோறும் பூமாலைகள் தொங்கவிட்ட மெல்லிய பூக்களாலும் நீராலும் நிறைந்த பூரணகும்பங்களையும், காமர் பாலிகையும் கதிர்த் தீபமும் தூபமும் தொகுப்பார் - அழகிய பாலிகைகளையும் சுடர்விடுந் தீபங்களையும் தூபவரிசைகளையுங் கொண்டுவந்து வைப்பர். (எ-று)

யாகவேதிகைகடோறும் பூரணகும்ப முதலியவற்றைக் கொண்டுவந்து வைப்பாரென்க. (உ௩)

நித்திலத்தினை நீற்றுபுவேதியிற்
சித்திரித்துச்செழும்பொனின்மாளிகை
பித்தியோவியம்பெட்பப்புதுக்குவார்
பத்திமாடம்பழுதொழித்தாக்குவார்

(இ-ள்.) நித்திலத்தினை நீற்றுபு வேதியில் சித்திரித்து-முத்தங்களைச் சுண்ணஞ்செய்து யாகவேதிகையின்மேல் கோலமிட்டு, செழும்பொனின் மாளிகை பித்தி ஓவியம் பெட்ப புதுக்குவார் - செம்பொன்னாற்செய்த மாளிகைச்சுவரி லமைந்துள்ள சிதிரங்களைக் கண்டோர் விரும்பப் புதுமையாகச்செய்து, பத்திமாடம் பழுது ஒழித்து ஆக்குவார் - வரிசையாயுள்ள மாளிகைகளைப் பழுதுபோக்கிப் புதுமையாகசசெய்வர்.

வேதிகையின்மேன் முத்துச்சுண்ணத்தாற் கோலமிட்டுப் பொற்சுவரிற் சித்திரந்தீட்டி மாளிகைகளைப் பழுதுபோக்குவரென்க. (உ௪)

இருகவுட்டுளையீர்ங்கலுழிக்கடக்
கரிகள்பண்ணுவர்கால்விசைத்தோடுவாம்
பரிகள்பண்ணுவர்பார்குழியாழியி
னிரதம்பண்ணுவரெங்குமெண்ணிலார்.

(இ-ள்.) எண்ணிலார் எங்கணும் இருகவுள் துளை ஈர்ங்கலுழி கடம் கரிகள் பண்ணுவர் - அளவில்லாதவ ரெவ்விடங்களிலு மிரண்டு கபோலக் கரடங்களினின்றும் வாக்காநின்ற குளிர்ந்த மதநீரையுடைய யானைகள்போலச் செய்துவைப்பார், கால்விசைத்து ஓடும் வாம்பரிகள் பண்ணுவர் பார் குழியாழியின் இரதம் பண்ணுவர்-

காற்றைப்போல் விரைந்து தாவிச்செல்லும் குதிரைகள்போலச் செய்துவைப்பர் பூமி பிளவுபடச்செல்லு முருளையையுடைய இரதங்கள்போலச் செய்துவைப்பர். (எ-று)

எண்ணிறந்தவ ரெவ்விடங்களிலும் இரதகசதுரகங்களைச் செய்துவைப்பாரென்க. இரதமுதலிய மூன்றையும் அலங்காரஞ் செய்வார்களெனினு மமையும். (உ௫)

நீண்ட பொன்னிலைத் தேர்க ணிறுத்துவார்
மாண்ட தூண்டொறும் வாருறை சேர்த்துவா
ரீண்டு வார்கட் கிடம்பல வாக்குவார்
வேண்டி யார்க்கும் விருந்து திருத்துவார்.

(இ-ள்.) நீண்ட பொன் நிலை தேர்கள் நிறுத்துவார்-பொன்னாற்செய்த பெரிய நிலைத்தேர்களை யங்கங்கும் நிறுத்துவார்கள், மாண்ட தூண் தொறும் வார் உறை சேர்த்துவார் - சிறந்த தூண்களதோறும் பெரிய வுறைகளைப் போடுவோர்கள், ஈண்டுவோர்கட்கு இடம்பல ஆக்குவார்-வந்து கூடுகின்றவர் தங்குவதற்குப் பலவிடங்களை யமைப்பார்கள், வேண்டி யார்க்கும் விருந்து திருத்துவார் - பலமுறையும் வேண்டி யாவர்க்கும் விருந்து செய்விப்பர். (எ-று)

நிலைத்தேரும் தூண்களுக்குறையும் வருவோர்க்கிடமும் யாவர்க்கும் விருந்தும் நிறுத்தியும் சேர்த்தும் ஆக்கியுந் திருத்தியு மிருப்பாரென்க.

விருந்தாக வருவோர் தீண்டிய வழியல்லது வாடாத அனிச்சப்பூவினு நோக்கிய வழியேவாடும் மெல்லியராகலான் செய்மைக்கட்கண்டுழி இன்முகமும், அதுகண்டு நண்ணியவழி இன்சொல்லும், அதுகொண்டு உடன்பட்டவழி நன்றாற்றலும் இன்றியமையாத செயலாகலான் விருந்துவேண்டி திருத்துவாரென்றார். இதனை—"மோப்பக் குழையுமனிச்சமுகந்திரிந்து, நோக்கக்குழையும்விருந்து" என்பதற்குக் கூறிய உரையாற்காண்க. (உசு)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

கச்சி மாநகர் முழுவது மின்னணங் கவின்பயில் சிறப்போங்க
முச்ச கத்தவர் குழாங்கொடு வயின்றொறு நிறைந்திட முடிவானோ
ரிச்சை யாற்றினின் மணவினைக் குரியவை யெங்கணுங் கொணர்ந்தீண்டப்
பொச்ச மில்பெரு மங்கலத் துழனியிற் பொலிவுறு மதுகாலை.

(இ-ள்.) கச்சிமாநகர் முழுவதும் இன்னணம் கவின் பயில் சிறப்பு ஓங்க - பெரிய காஞ்சிநகர முழுமையு மிவ்வகையாக அலங்காரத்தினாற் சிறப்புற்றோங்கவும், முச்சகத்தவர் குழாம் கொடு வயின்தொறும் நிறைந்திட - மூன்றுலகத்திலுமிருப்பவர் தங்களினத்தவரோடு இடங்கடோறு நிறைந்திருக்கவும், முடி வானோர் இச்சையாற்றினில் மணவினைக்கு உரியவை எங்கணும் கொணர்ந்து ஈண்ட - முடியுடைய தேவர்களாசை செல்லும் வழியிற் கலியாணத்துக்கு வேண்டிய திரவியங்களை யெவ்விடத்திலுங் கொண்டுவந்து சேர்க்கவும், பொச்சம் இல்பெரு மங்கலம் துழனியில் பொலிவுறும் அது காலை- இவற்றாற் பொய்மையில்லாத பெரியமங்கலவோசை பொலிவுபெற்றிருக்குமந்த வேளையில். (எ-று)

இவ்வகையாய்க் காஞ்சிநகரம் அலங்காரத்திற்சிறந்து மூவுலகத்தாரு நிறைந்து தேவரெல்லா மங்கலப்பொருளெல்லாங்கொண்டு நெருங்கி மங்கலகோஷஞ் செய்ய அப்பொழுதென்க.

யவனரொன்னுஞ் செய்யுள் முத லிச்செய்யுள்வரையிலும் கவுரிமன்றலெனக் கேட்ட நகரவாசிகள் வீதிகடோறும் அலகிட்டு மெழுகுமிட்டுத் துவசமுதலியவற்றா லலங்

கரித்து விருந்திட்டதும், தேவர்முதலிய யாவருங்கூடி மங்கலவோசை முழக்கியதும் கூறியவாறு (உஎ)

கம்ப நாயகன் றிருவருள் பெற்றுவெண் கதிர்வளைக் கரத்தோன்ற
லம்பு யத்தவன் முனிவரர் தம்மொடு மணிபெறு நன்னாளாற்
செம்பொன் மாமணிப் பாலிகை முளைவித்திச் சினவிடைக் கொடியேற்றி
யெம்பி ரான்மலை மாதுட னுலாத்தருந் திருவிழா வெழுவித்தான்.

(இ-ள்.) வெண் கதிர் வளைகரத் தோன்றல் கம்ப நாயகர் திருவருள் பெற்று - வெள்ளிய கிரணம் வீசும் சங்கேந்திய திருக்கரத்தையுடைய திருமால் திருவேகம்ப நாதருடைய திருவருளைப்பெற்று, அம்புயத்தவன் முனிவரர் தம்மொடும் அணிபெறும் நல் நாள் செம்பொன் மாமணி பாலிகை முளைவித்தி - பிரமன் முனிவர்களோடு அழகு பெற்ற நல்ல வோரையின் மணிகளிழைத்துச் செம்பொன்னாற்செய்த பாலிகைகளில் முளைகளைத் தோற்றுவித்து, சினவிடை கொடி ஏற்றி எம்பிரான் மலைமாதுடன் உலாத ரும் திருவிழா எழுவித்தான் - கோபமுடைய விடபக்கொடியை யுயர்த்தி எமது பெரு மான் பார்வதியாரோடு பவனிவருந் திருவிழாவை நடத்தத்தொடங்கினர். (எ-று)

திருமால் பிரமன்முதலியவரோடு நல்லவோரையில் பாலிகைமுளைவித்து விடைக் கொடியேற்றித் திருவிழாவைச் செய்யத்தொடங்கினரென்க.

பாலிகை முளைவித்தல்- அங்குரார்ப்பணம். விடைக்கொடியேற்றல் - துவசா ரோகணம். (உஅ)

ஒன்ப திற்றுநாள் விழாவணி நிகழ்ந்தபி னுற்றவீ ரைந்தாநா
ளின்ப மீக்கொளப் பங்குனி யுத்திரத் திமையவர் குழாத்தோடு
மன்ப தைத்திரண் மகிழ்ந்தெழுந் தார்ப்புற மணவினைக் கவின்கொள்வா
னென்ப ணிப்பிரான் மஞ்சனச் சாலையி னினிதெழுந் தருளுற்றான்.

(இ-ள்.) ஒன்பதிற்றுநாள் விழா அணி நிகழ்ந்தபின் உற்ற ஈரைந்தாம் நாள்-ஒன் பதுநாள் திருவிழாச்சிறப்பு நடந்தபின்ன ரடுத்த பத்தாவதுநாள், இன்பம் மீ கொள்ள பங்குனி உத்திரத்து இமையவர் குழாத்தோடும் மன்பதைத் திரள் மகிழ்ந்து எழுந்து ஆர்ப்புற- பேரின்பமுண்டாகப் பங்குனிமாதமுத்திரநக்ஷத்திரத்திற்றேவகணங்களோடு மக்கட்பிறப்பினரு மகிழ்ச்சியடைந்தெழுந் தாரவாரஞ்செய்ய, என்பு அணி பிரான் மண வினை கவின் கொள்வான் மஞ்சனம் சாலையின் இனிது எழுந்தருளுற்றான்- என்பாபர ணமணிந்தவராகிய விறைவர் திருமணத்துக்குரிய வழகிய திருக்கோலங்கொள்ளத் திருமஞ்சனச்சாலையி லினிமையாக வெழுந்தருளினர். (எ-று)

துவசாரோகணந்தொட் டொன்பதுநாட் டிருவிழா நடந்தபின்னர்ப் பத்தாநாள் யாவர்க்கும் பேரின்பமுண்டாகத் திருமணக்கோலங்கொள்ள இறைவனார் மஞ்சனச்சா லைக் கெழுந்தருளினரென்க.

பங்குனி என்பது - சாந்திரமானமாய்க்கொள்க. (உகூ)

வேறு.

திருத்துயி லகலப் புத்தேள் செய்தவப் பேறு வாய்த்து
மருத்தபூங் கடுக்கை வேணிப் பரஞ்சுடர் வடிவந் தீண்டிப்
பெருத்தபொற் குடத்துத் தெண்ணீர் மஞ்சனம் பிறவு மாட்டி
யருத்திகூ ரன்பி னுண்ணூ லறுவையொற் றுடை சாத்தி.

(இ-ள்.) திரு துயில் அகலப்புத்தேள் செய்தவப்பேறு வாய்ந்து-இலக்குமி வசிக்கும் மார்பையுடைய திருமால் தான்செய்த தவப்பயன் கிடைக்கப்பெற்று, மருத்த பூம் கடுக்கைவேணி பரஞ்சுடர் வடிவம் தீண்டி - நறுமணங்கமழுங் கொன்றைமாலை சூடிய சடைமுடியையுடைய சிவபரஞ்சுடரின் திருமேனியைக் கரத்தாற்றொட்டு, பெருத்த பொற்குடத்துத்தெண்ணீர் பிறவும் மஞ்சனம் ஆட்டி - பெரிய பொற்குடத்து நிறைந்துள்ள தெள்ளிய நீராலு மேனைய திரவியங்களாலும் திருமஞ்சனஞ்செய்து, அருத்திகூர் அன்பில் நுண்ணூல் அறுவை ஒற்றாடை சாத்தி - ஆசைமிகுந்த வன்பினால் மெல்லிய நூலாலமைந்த திருவொற்றாடையினாற் றிருமேனியையொற்றி. (எ-று)

திருமால் திருவேகம்பனைத் தெண்ணீர் முதலியவற்றாற் றிருமஞ்சனமாட்டித் ... ...யென்க.

திருமகளுக்குத் திருமால்திருமார்பே ஒடுங்குமிடமாகலின் திருத்துயி லகலப் புத்தேளெனவும், அத்திருமகளைத் தன்னகத்து வாழச்செய்த திருவருள் வடிவாகிய அம்மையாற் றழுவப்படுந் திருமேனியைத் தீண்டப்பெற்றனராகலான் செய்தவப்பேறெனவுங்கூறினார். (கூO)

கற்பக மளிப்ப வாய்ந்த கைபுனைந் தியற்றல் செல்லா
வெற்படு நுழைநூற் பட்டி னிலங்குவுள் ளாடை சாத்தி
யற்பக விமைக்குஞ் செம்பொ னாடைமற் றதன்மேற் காமர்
விற்படு புருவ மாதர் விழியிணை கவரச் சாத்தி.

(இ-ள்.) கைபுனைந்து இயற்றல் செல்லா கற்பகம் அளிப்பவாய்ந்த - யாவராலு மலங்கரித்துச் செய்தற்கிசையாத கற்பகவிருக்கந் தரக்கிடைக்கப்பெற்ற, எற்படு நுழை நூல் பட்டின் இலங்க உள் ஆடை சாத்தி - ஒளிவீசும் வெண்ணூலாலமைந்த வெண் பட்டினால் விளக்கமாக வுள்ளாடை யசைத்து, அதன்மேல் அல்பக இமைக்கும் செம்பொன் ஆடை காமர் வில்படு புருவமாதர் விழியிணை கவரசாத்தி - அவ்வுள்ளாடையின் மேலிருளையோட்டி யொளிவிடும் பொன்னாடையை அழகிய விற்போலும் புருவத்தை யுடைய மங்கையரது கண்ணிணைகள் கொள்ளைகொள்ளச்சாத்தி. (எ-று.)

கற்பகந்தந்த வெண்பட்டை வுள்ளாடையாகச்சாத்தி அதன்மேற் பொன்னாடையைச் சாத்தியென்க. (கூக)

தனிவிரைப் பனிநீர் வாக்கித் தேய்த்தசந் தனப்பூஞ் சேறு
நனிமணம் பயில்கற் பூரங் குங்கும நறுங்கத் தூரி
யினியமான் மதமே மற்று மட்டுத்த கலவை யெண்டோட்
கனிமொழி பாகன் மேனி கமழ்தர மெழுகிக் கீறி.

(இ-ள்.) தனிவிரை பனிநீர் வாக்கி தேய்த்த சந்தனம்பூஞ்சேறு - ஒப்பில்லாத வாசம் வீசும் பனிநீரை வார்த்துத்தேய்த்த நல்ல சந்தனக்குழம்பில், நனிமணம் பயில் கற்பூரம் குங்குமம் நறு கத்தூரி இனிய மான்மதம் மற்றும் அட்டித்த கலவை - மிக்க மணம் வீசும் பச்சைக்கற்பூரமும் குங்குமப்பூவும் நல்ல கத்தூரியு மினிய மிருகமதமு மிவைபோன்ற கூட்டுவர்க்கங்களுங் கூட்டியவச்சந்தனக்குழம்பை, கனிமொழி பாகன் எண்தோள் மேனி கமழ்தர மெழுகி கீறி - கனிபோலு மினிய சொல்வாய்ந்த உமைபங் கனுகிய வெண்டோளுடைய இறைவர் திருமேனி முற்றும் மணம் வீசப்பூசி விரலா லணிபெறக்கீறி. (எ-று)

பனிநீர் வார்த்துத் தேய்த்ததும், கற்பூரமுதலிய கூட்டுவர்க்கங்களாற் கலந்தது மாகிய சந்தனக்கலவையை இறைவர் திருமேனிமுற்றும்பூசி விரலாற்கீறியென்க. (௯௨)

சுடர்த்திரு மேரு வெற்பிற் சூன்றனர் நுண்ணி தாகப்
பொடித்தபொற் சுண்ணந் தெய்வப் பூந்தரு மலரின் வாங்குங்
கடித்திரட் சுண்ணத் தாதிற் கலந்துமே லட்டி வாச
மடுத்தெழுந் தூம மீரம் வறலுமா றன்பி னேற்றி.

(இ-ள்.) சுடர்த்திரு மேருவெற்பில் சூன்றனர் நுண்ணிதாக பொடித்த பொன் சுண்ணம் - ஒளிவீசுமழகிய மேருமலையிற்றோண்டி மிகவுந் துகளாகப்பொடிசெய்த பொற்பொடியை, தெய்வம் பூந்தரு மலரில்வாங்கும் தாதில் கடிதிரள் சுண்ணம்கலந்து- தெய்வமணங்கமழும் கற்பகமலரிலெடுத்த வாசம்வீசும் மகரந்தப்பொடியிற் கலந்து, மேல் அட்டி ஈரம் வறலுமாறு வாசம் மடுத்து எழு தூமம் அன்பின் ஏற்றி-(சந்தனப்)பூச்சின்மே லப்பி அச்சந்தனத்தி னீரம்புலருமாறு வாசமடுத்தெண்டு புகைக்கும் புகையை யன்புடனேற்றி. (எ-று)

மேருமலையிலெடுத்த பொற்பொடியைக் கற்பகமலரிலெடுத்த மகரந்தப்பொடியிற்கலந்து திருமேனியிலப்பி யீரம்புலரத் தூபங்காட்டியென்க. (௯௩)

அரிக்குரற் சிலம்பு போற்று மடியவர் மலங்கண் மூன்று
மிரிக்குஞ்செங் கமல பாதத் திணக்கிவல் லிருளை யெல்லாம்
பொரிக்கும்விற் பிழம்பு காலும் பொலங்கழ னரல வீக்கிப்
பரிக்கும்பட் டுடைமேலொண்கல் பதித்தபொன் னரைநாண்சாத்தி.

(இ-ள்.) போற்றும் அடியவர் மலங்கள் மூன்றும் இரிக்கும் செங்கமலபாதத்து அரிக்குரல் சிலம்பு இணக்கி - வணங்கு மடியவரது மும்மலங்களையு மோட்டும் செந்தாமரைமலர்போன்ற திருவடியில் ஒலிக்கின்ற சிலம்பையணிந்து, வல் இருளை எல்லாம் பொரிக்கும் வில் பிழம்புகாலும் பொலம் கழல் நரலவீக்கி-செறிந்தவிருட்கூட்டங்களைப் பொரித்தொழிக்குங் கிரணங்களைக் கக்கவல்ல பொன்மயமாகிய வீரகண்டையை அதனொலிசெய்யவணிந்து, பரிக்கும் பட்டு உடைமேல் ஒண்கல்பதித்த பொன் அரைநாண்சாத்தி - இடையிலணிந்திருக்கும் பட்டாடைமே லொள்ளிய மணிகள்பதித்திழைத்த பொன்னரை நாணைச்சாத்தி. (எ-று)

திருவடிமேற் சிலம்பும் வீரகண்டையும், இடையிலுடுத்த வாடைமேல் அரைநாணுஞ் சாத்தியென்க. (௯௪)

கதிருமிழ் பதும ராக வுதரபந் தனங்கால் யாத்துப்
புதியநித் திலப்பூங் கோவை பொன்னரி மாலை தண்டா
ரெதிரறு சன்ன வீர மிலைமுகப் பைம்பூண் முந்நூல்
முதலிய மார்பின் வார்ந்து முதிரொளி யெறிப்பச் சாத்தி.

(இ-ள்.) கதிர் உமிழ் பதுமராக உதரபந்தனம் கால்யாத்து - கிரணங்களைச் சிந்தும் பதுமராகத்தினாற்செய்த வுதரபந்தனத்தை யரையிலசைத்து, புதிய நித்திலம் பூங்கோவை - புதுமையாகிய முத்துமாலைகளும், தண் தார் பொன்னரிமாலை - தண்ணிய மாலைபோன்ற பொன்னரிமாலையென்னு மாபரணமும், எதிரறு சன்னவீரம் - நிகரற்ற சன்னவீரமென்னு மாபரணமும், இலைமுகம் பைம்பூண் - இலைமுகம்போலும் அச்சவடிவினையுடைய ஆபரணமும், முந்நூல் - முப்புரிநூலும், முதலிய மார்பின் வார்ந்து-முத

லாகிய மாலைகளெல்லாந் திருமார்பிற்றொங்கி, முதிர் ஒளி எறிப்ப சாத்தி -பெரிய வொளிவிட்டெறிக்கச்சாத்தி. (எ-று)

இடையினும் மார்பினும் உதரபந்தனமும் முத்துமாலை முதலிய மாலைகளையுஞ் சாத்தியென்க. (கூரு)

மணிவடங் கழுத்திற் சாத்தி வாள்கிடந் திமையா நிற்கும்
பணியுமிழ் மணியிற் செய்த வாழிபல் விரலுங் கோத்துத்
திணிவயி ரத்திற் செய்த கடகங்கூர்ப் பரத்துச் சேர்த்துத்
துணிகதிர் முத்திற் செய்த வங்கதந் தோளிற் பூட்டி.

(இ-ள்.) மணிவடம் கழுத்திற்சாத்தி - நவரத்தின மாலையைக் கண்டத்திலணிந்து, வாள்கிடந்து இமையாநிற்கும் பணியுமிழ் மணியின் செய்த ஆழி பல் விரலுங்கோத்து - கிரணங்கள் நீங்காதெறிக்கு நாகங்களுமிழ்ந்த மணியினாற்செய்த மோதிரங்களை விரல்கடோறுங்கோத்து, திணிவயிரத்திற் செய்த கடகம் கூர்ப்பரத்திற்சேர்த்து - திண்ணிய வயிரத்தினாற் செய்த கடகத்தை முன்னங்கையி லணிந்து, துணி கதிர்முத்தின் செய்த அங்கதம் தோளில் பூட்டி - விட்டுவிட்டெறிக்கும் கிரணங்களைப் பரப்பு முத்தினாற்செய்த தோளணியைப் புயத்திலணிந்து. (எ-று)

கண்டம் விரல் முன்கை தோள் முதலியவைகளில மணிவடம் ஆழி கடகம் அங்கதமுதலிய ஆபரணங்களை யணிந்தென்க. (கூசு)

மாதர்வண் குழையுந் தோடும் வார்ந்திரு புயத்து நீவக்
காதிடை யணிந்து செம்பொற் கதிர்மணிப் பட்ட நெற்றி
மீதுற விசித்துத் தெய்வ விற்குலா மணியின் மோலி
போதமர் வேணிச் சென்னி பொலிதரக் கவித்தான மன்றே.

(இ-ள்.) மாதர் வண்குழையும் தோடும் வார்ந்து இருபுயத்து நீவ காதிடை அணிந்து - அழகிற்சிறந்த சங்குண்டலமும் பொற்றோடும் இரண்டு புயங்களிலுந் தொங்கியசையத் திருச்செவியிலணிந்து, செம்பொன் கதிர்மணிப்பட்டம் நெற்றி மீதுர விசித்து - செம்பொன்னாற்செய்து ஒளிவீசும் மணிகளிழைத்த பட்டத்தை நெற்றியின் மேற் பொருந்த வசைத்தணிந்து, தெய்வ வில் குலாம் மணியின் மோலி போது அமர் வேணி சென்னி பொலிதர கவித்தான் - தெய்வத்தன்மைபொருந்திய கிரணங்களைப் பரப்பும் மணிகளாற்செய்த கிரீடத்தை மலர்பொருந்திய சடைமுடியின்மீது பொலிவு பெறச் சூட்டினர். (எ-று)

காது நெற்றி சென்னி முதலிய வுறுப்புகளில் குழை தோடு பட்டம் முடி முதலியவற்றை யணிந்தனரென்க. (கூஎ)

திருவணி யணிந்து போற்றச் சிவபிரா னெழுந்து கும்ப
மிருகயல் கவரி தோட்டி யிலங்குகண் ணடிப தாகை
முரசொளி விளக்கி னோடு முன்னிவண் மகளிர் போற்றப்
புரிமணி மண்ட பத்திற் புகுந்துபூந் தவிசி னேறி.

(இ-ள்.) திரு அணி அணிந்து போற்ற-அழகுபெற்ற வாபரணவகைகளை யவ்வவ் வங்கங்களி லணிந்துபணிய, சிவபிரான் எழுந்து - திருவேகம்பநாதர் திருமஞ்சனச் சாலையினின்று மெழுந்து, கும்பம் இருகயல் கவரி தோட்டி இலங்கு கண்ணடி பதாகை முரசு ஒளிவிளக்கினோடு வண்மகளிர் முன்னிபோற்ற - பூரணகும்பம் இரண்டு மீன் சாமரை அங்குசம் விளங்குங் கண்ணடி கொடி பேரிகை ஒளிசெய்யும் விளக்கு என்

னும் எண்வகை மங்கலங்களோடு அரம்பையர் முன்னே நின்று வாழ்த்தொலிசெய்ய, புரிமணி மண்டபத்திற் புகுந்து பூ தவிசில் ஏறி - அழகுசெய்யு மணிமயமாகிய கலியா ணமண்டபத்திற்சென்று மலர் பரப்பியிருக்கும் ஆசனத்தின்மேலிவர்ந்து. (எ-று)

திருமா லலங்கரிக்கும் பணிமுற்றியபின் இறைவனைப் பணிய இறைவனெழுந்து அட்டமங்கலங்களெதிர்வரக் கலியாணமண்டபத்திற்சென்று பூந்தவிசிலேறி என்க.

உருத்திரர் முதலோர் தத்த மொண்டவி சிருக்கு மாறு
திருத்தகு கடைக்க ணோக்கஞ் செய்துவீற் றிருந்த பின்னர்
விருந்துவண் டமிழ்தப் பாடல் விளரியாழ் முரன்று சேக்கு
மருத்துழாய்ப் படலைத் தண்டார் வயங்கிய மருமப் புத்தேள்.

(இ-ள்.) உருத்திரர் முதலோர் தம் தம் ஒண் தவிசு இருக்குமாறு திருத்தகு கடைக்கணோக்கம் செய்து வீற்றிருந்தபின்னர்-உருத்திரர்முதலிய தேவரெல்லாந் தங்க டங்களுக் கமைத்திருக்கும் விளக்க மிகுந்த ஆசனங்களிலிருக்கும்வண்ணம் அழகிய கடைநோக்கஞ் சாத்தி எழுந்தருளிய பின்னர், விருந்துவண்டு அமிழ்தம் பாடல் விளரி யாழ் முரன்று சேக்கும்-புதியவண்டுகள் சுவைதரும் பாடலை விளரியென்னும் இராகத்து டன் யாழொலியைப்போலும் பாடியுறங்கும்,மரு துழாய் படலை தண் தார் வயங்கிய மரு மம் புத்தேள்-நறுமணங்கமழும் துளவத்தாற் றொடுத்த தண்ணியமாலை விளங்கப்பெற்ற திருமார்பையுடைய திருமால். (எ-று)

உருத்திரர் முதலாயினோ யிருக்கக் கடைக்கண்சாத்தி இறைவர் வீற்றிருந்த பின்னர் திருமாலென்க. (௯௯)

மனைக்குரி மரபின் வாச மலர்மகள் வதன நோக்கிக்
கனைக்கும்வண் டுழக்கு மென்பூங் கருங்குழற் கவுரி மாதா
தனைக்கலன் றிருந்தப் பூட்டித் தம்மென வுரைத்த லோடுஞ்
சுனைக்கரு நீலக் கண்ணாள் பெருங்களி துளும்பச் சென்றாள்.

(இ-ள்.) மனைக்கு உரிய மரபின் வாசமலர்மகள் வதனம் நோக்கி - இல்வாழ்க் கைக்குரிய கற்பிற்சிறந்த நறுமணங்கமழுஞ் செந்தாமரையாளாகிய திருமகள் முகத் தைப்பார்த்து, கனைக்கும் வண்டு உழக்கும் மெல் பூம் கருங்குழல் மாதா கவுரி தன்னை-ஒலிக்கும் வண்டுகள் கிண்டும் மெல்லிய மலரணிந்த கரியகூந்தலையுடைய கவுரியன்னை யை, திருந்த கலன் பூட்டி தம்மென உரைத்தலோடும்- திருத்தமாக வாபரணங்களணிந்து இங்கெழுந்தருளச் செய்வயென்று கட்டளையிடவும், சுனை கரு நீலம் கண்ணாள் - சுனையில் மலரும் கரிய நீலமலர்போன்ற கண்ணளாகிய திருமகள்-பெரு களி துளும்ப சென்றாள் - பேரானந்தமோங்கச் சென்றனள். (எ-று)

(திருமால்) தன்னில்லக்கிழத்தியாகிய திருமகளை நோக்கி கவுரியம்மையை அலங்கரித்து ஈண்டழைத்து வருவாயென்று சொன்னவுடன் பெருங்களிப்போடு சென்றனளென்க. (௱)

உவளக வரைப்பி னெல்லா வுபகர ணமுங்கொண் டுற்றுப்
பவளநீள் பலகை மீது பகிரண்ட முழுது மீன்றுந்
துவளிடைக் கன்னியாகித் தூநலங் கனிந்த காம
ரவளைநன் கிருவிக் கூந்த லவிழ்த்துநெய் யள்ளிச் சாத்தி.

(இ-ள்.) உவளகவரைப்பில் எல்லா உபகரணமும் கொண்டு உற்று-உள்ளிடமாகிய திருமஞ்சனச்சாலையில் தைல முதலிய மஞ்சனத்திரவியங்களையுந் தலைக்கோலமுத

லிய வாபரணவகைகளையுங் கைக்கொண்டு சென்று, பகிரண்டமுழுதும் ஈன்று துவள் இடை கன்னியாகி தூநலம் கனிந்த காமரவளை-அண்டகோடிகளெல்லாம் பெற்றுந் துவண்டசைகின்ற சிற்றிடையையுடைய கன்னிகையாகி நல்லழகுபழுத்த அழகிய வம்மையாரை - பவளம் நீள் பலகைமீது நன்கு இருவி-பவளத்தினுற்செய்த பெரிய பீடத்தின் மேல் நன்றுயெழுந்தருளச்செய்து, கூந்தல் அவிழ்த்து நெய் அள்ளி சாத்தி-அளகத்தை யவிழ்த்துத் தைலமள்ளியிட்டு. (எ-று)

(களிப்புடன் சென்ற திருமகள்) திருமஞ்சனச்சாலையில் பவளத்தாற் செய்த பீடத்திற் காமாக்ஷியம்மையை வீற்றிருக்கச்செய்து கூந்தலவிழ்த்து தைலமிட்டனள்.

ஈசனெத்திறநின்றுனத்திற நிற்பவளா யிருவரும் புணர்ந்து இங்குலகுயிரெல்லா மீன்றும் பவன்பிரமசாரியாய்ப் பான்மொழிகன்னியா யிருப்பவராகலான் அம்மையைப் பகிரண்டமுழுது மீன்றுந் துவளிடைக்கன்னியாகி யெனவும், கவுரிதிருக்கோலம் ஒருவருக்கு மமைந்திலவாகலான் தூநலங்கனிந்த காமரவளையெனவுங் கூறினர். (௪௧)

நெல்லினுண் விழுது மஞ்சள் விழுதுமெய் நிரம்பப் பூசி
மல்குபே ரன்பு கூர வாசமுந் துவரு மற்று
நல்லவை நயப்பச் சேர்த்தி நறுவிரைத் தூநீ ராட்டி
யெல்லுமிழ் குழையாள் மேனி யீரம்புனல் வறள வொற்றி.

(இ-ள்.) மல்கு பேர் அன்புகூர-நிறைந்த பேரன்பு மேன்மேலெழ, நெல்லி நுண்விழுதும் மஞ்சள் விழுதும் மெய்நிரம்ப பூசி-நெல்லிக்காப்பு மஞ்சட்காப்புகளைத் திருமேனி முற்றும்பூசி, வாசமும் துவரும் மற்றும் நல்லவை நயப்ப சேர்த்தி நறுவிரைதூநீர் ஆட்டி-நல்லவாசனைப் பொடிகளையும் துவர்ப்பொடிகளையும் இவைபோன்ற ஏனைப் பொடிகளையுமினமாகச்சேர்த்து நல்ல வாசநீரால் திருமஞ்சனமாட்டி, எல் உமிழ் குழையாள் மேனி ஈரம் புனல் வறள ஒற்றி- ஒளிவீசுங் காதணியணிந்த அம்மையார் திருமேனியிலுள்ள தண்ணிய நீர்சுவற வொற்றுடையாலொற்றி. (எ-று)

(எண்ணெயிட்டபின்) நெல்லி விழுது முதலியவற்றாலும் நறுமணங்கலந்த நீராலுமாட்டி அவ்வீரம்புலர வொற்றுடையா லொற்றியென்க. (௪௨)

நனைமுறுக் கவிழ்பூங் கற்ப நல்குபட் டாடை சாத்திப்
புனைமணித் தவிசி னேற்றிப் பொருந்தலர் வெருவச் சீறு
முனைமதக் களிநல் யானை மூரிவெண் கோட்டிற் செய்த
தனைநிகர் சீப்புக் கொண்டு தாழ்குழ லொழுங்க நீவி.

(இ-ள்.) நனைமுறுக்கு அவிழ்பூம் கற்பகம் நல்கும் பட்டாடை சாத்தி-அரும்புகள் முறுக்குடைந்து மலர்ந்த பூக்கணிறைந்த கற்பக விருக்கந்தந்த பட்டாடையையணிந்து, புனை மணி தவிசின் ஏற்றி-இரத்தினங்களிழைத்துப் பொலிவு பெற்றிருக்கும் பீடத்தின்மே லெழுந்தருளியிருக்கச்செய்து, முனை பொருந்தலர் வெருவ சீறு மதம் களி நல் யானை மூரி வெண்கோட்டில் செய்த தனை நிகர் சீப்புக்கொண்டு - போர்முகத்துப் பகைவரஞ்சச்சீறு மதமிகுந்த நல்ல யானையின் பெரியவெள்ளிய தந்தத்தினுற் செய்த ஒப்பில்லாத சீப்பைக்கொண்டு, தாழ் குழல் ஒழுங்க நீவி - நீண்ட கூந்தலையொழுங்குபடச் சிக்கறுத்து. (எ-று)

(ஒற்றுடையா லொற்றியபின்) பட்டாடையுடுத்து இரத்னசிங்காதனத்திலேற்றித் தந்தச் சீப்பினுற் கூந்தலைச் சிக்கறுத்தென்க. (௪௩)

வம்பவிழ் நானம் பூசி மான்மத மகில் சந்தாதி
பம்புறப் புகைத்த தூமம் பரிமளங் கமழ வூட்டி
யம்பொன்வாய் மகரந்தாழ மண்ணுறுத் தளிந்த பெண்ணைப்
பைம்பழ மென்ன முச்சி பசும்பொன்வார் நாணிற் சேர்த்தி.

(இ-ள்.) வம்பு அவிழ் நானம்பூசி-நறுமணங்கமழுங் கஸ்தூரியைத் தடவி, மான்மதம் அகில் சந்து ஆதி பம்புறபுகைத்த தூமம் பரிமளங்கமழ ஊட்டி-மிருகமதம் அகிற்கட்டை சந்தனக்கட்டை முதலியவற்றை நிறையக்கூட்டிப் புகையைச்செய்த தூபத்தை வாசமுண்டாகவூட்டி, அம் பொன்வாய் மகரம் தாழ மண்ணுறுத்து-அழகிய பொன்னிறமுள்ள மகரமீன் நாண அழகுபெறத் திருத்தி, அளிந்தபெண்ணை பைம்பழம் என்ன முச்சி-கனிந்த பசிய பனையின் பழம்போலுமுள்ள வுச்சிக்கொண்டையை, பசும்பொன் வார் நாணில் சேர்த்தி-பசியபொன்னாற்செய்த நீண்ட கயிற்றிற் சேர்த்து. (எ-று)

(கூந்தலைச் சிக்கறுத்தபின்) கஸ்தூரிதடவி நறுமணங்கமழ நறும்புகையூட்டி மகரமீனினுஞ் சிறக்கச்செய்து உச்சிக்கொண்டையைக் கூந்தலோடுபிணித்த பொன்னாணிற்கோத்தென்க. (௬௪)

நகுசுடர் முத்த மாலைக் கொத்துநான் றெருத்தி னீவித்
திகழொளி விரிப்ப வங்கேழ் முச்சியிற் செருகி வாச
முகையவி ழலங்கல் சூழ்ந்து மொய்கதி ரீகை மாலை
தொகுமணி மாலை கூந்தற் பரப்பினிற் சுடரப் போக்கி.

(இ-ள்.) எருத்தில் நான்று நீவிதிகழ் ஒளிவிரிப்ப-பிடரியில் மிகவுநீண்டு விளங்குமொளி பரப்ப, அம்கேழ் முச்சியில்-பொன்னொளிவீசும் உச்சிக்கொண்டையில், நகுசுடர் முத்தமாலை கொத்து செருகி - சுடர்விட்டெறிக்கு முத்துமாலைக்கொத்தைச் செருகி, கூந்தல் பரப்பினில் சூழ்ந்து-அளகத்தின் பரப்பிடஞ்சூழ, வாச முகை அவிழ் அலங்கல் மொய்கதிர் ஈகைமாலை தொகும் மணிமாலை சுடரபோக்கி- நறுமணங்கமழ மலர்ந்த பூமாலை மிக்க வொளிவீசும் பொன்னரிமாலை நவரத்தினங்களாற் றொகுத்த மணிமாலை முதலிய மாலைகளை அணியணியாகச் சுற்றி. (எ-று)

பிடரியி னளவு மொளிபரப்ப வுச்சிக்கொண்டையில் முத்துமாலையைச் செருகிக் கூந்தற்பரப்பிற் பூமாலை முதலியவற்றைச் சூழச்சுற்றியென்க. (௬௫)

ஒழுகொளி பரப்புந் தெய்வ வுத்தியு மயினு மிக்க
வழகுற வணைந்து நாப்ப ணைதுறு கீற்றின் வெய்யோன்
மழகதிர் கிடந்த தென்ன வயங்குகுங் குமத்தா ளட்டிப்
பொழிகதிர் மாசைப் பட்ட்ம் பொலியவா ணுதலில் வீக்கி.

(இ-ள்.) ஒழுகு ஒளிபரப்பும் தெய்வ உத்தியும் - வீசுங் கிரணங்கள் பரப்பும் சூரியசந்திர வடிவாயுள்ள அணிகளும், மயினும் - மயிற்கண்போன்ற அணியும், மிக்க அழகுறவணைந்து - (ஆகிய இத்தலைக்கோலங்களைக் கூந்தலின் முற்பக்கத்தில்) மிகவும் பொலிவுபெற அலங்கரித்து, நாப்பண் ஐதுறு கீற்றில் - அளகபாரத்தினடுவில் வகிர்ந்தெடுத்த கீற்றில், வெய்யோன் மழகதிர் கிடந்தது என்ன-சூரியனுடைய இளங்கதிர் தங்கியிருத்தல்போல, வயங்கு குங்குமத்தாள் அட்டி-விளங்குங் குங்குமப்பொடி அணிந்து, வாள் நுதலில் பொழிகதிர் மாசைப்பட்டம் பொலிய வீக்கி-ஒளிபொருந்திய நெற்றியில் இளங்கதிர் வீசும் பொற்பட்டங்கட்டி. (எ-று)

தலைக்கோலங்களெல்லாம் அழகுபெற வணிந்தென்க. (௬௬)

சிந்தூரஞ் சேறு செய்த திருந்தெழிற் றிலக மிட்டுக்
கந்தமென் குவளை நோக்கி னஞ்சனங் கவினத் தீட்டிக்
கொந்தொளி முகத்தி னாசித் திருவணி கொளுவிக் காதி
னந்தழன் மணியின் றோடு மவிர்கதிர்க் குழையுஞ் சாத்தி.

(இ-ள்.) சிந்தூரம் சேறுசெய்த திருந்து எழில் திலகம் இட்டு - சிந்தூரத்தைச் சேறு செய்தமைத்த திலகத்தை அழகுவிளங்க நெற்றியிலிட்டு, கந்தமென்குவளை நோக்கின் அஞ்சனம் கவினதீட்டி - நறுங்கமணங்கமழு மெல்லிய நீலமலர்போன்ற கண்களில் அழகுபொருந்த மையெழுதி, நாசிகொந்து ஒளிமுகத்தின் திருவணிகொளுவி - நாசியில் பணிதியமைந்தொளி வீசுமுத்தினாற் செய்த மூக்கணியையிட்டு, காதில் அந்தழல் மணியின் தோடும் அவிர்கதிர் குழையும் சாத்தி - திருச்செவியில் அழகிய செவ்வொளி பரப்பு மணியினாற்செய்த தோடும் ஒளிவீசுங் குண்டலமும் பூட்டி. (எ-று.)

திருமுகத்துக்குச் செய்யுமலங்காரங்களெல்லாஞ் செய்தென்க. (சஎ)

விலகிவில் லுமிழுங் கட்டு வடத்தினை மிடற்றிற் சூழ்ந்து
நிலவுமிழ் மணியிற் செய்த வங்கத நெடுந்தோள் சாத்தி
யிலகொளி வாய்ந்த முன்கைக் கடகமுந் தொடியு மேற்றி
யலர்கதிர் மோதி ரங்கள் வார்விர லமையக் கோத்து.

(இ-ள்.) மிடற்றில் விலகி வில் உமிழும் கட்டுவடத்தினை சூழ்ந்து - கண்டத்தில் விட்டுவிட்டு ஒளிவீசும் கழுத்தணியைச் சூழச்சாத்தி, நெடுந்தோள் நிலவு உமிழ்மணியில் செய்த அங்கதம் சாத்தி - பெரியதோள்களில் நிலவைச்சிந்தும் இரத்தினத்தினாற் செய்த தோளணியை யணிந்து, முன்கை இலகு ஒளிவாய்ந்த கடகமும்தொடியும் ஏற்றி - முன்னங்கைகளில் ஒளிபொருந்திய கடகத்தையும் வளையலையும் நுழைத்து, வார்விரல் அலர்கதிர் மோதிரங்கள் அமையகோத்து - நீண்ட விரல்களில் கதிர்பரப்பும் மோதிரங்களைப் பொருந்தக்கோத்து. (எ - று.)

கண்டந் தோள் முன்கை இவைகளிற் கழுத்தணி அங்கதம் கடகந் தொடி முதலியவற்றை யணிந்தென்க. (சஅ)

மிகக்கடி கமழ்ந்த சாந்தால் வெரிந்புற மெழுகிக் கையி
னகத்தினு லெழுதிச் சால நறுவிரைக் களபச் சேறு
முகைத்தனம் புதையக் கொட்டி முருகுயிர் பூந்தா தப்பிப்
புகைத்துஞ்சாந் தாற்றிக் கொண்டு வீசியும் புலர்த்திப் பின்னர்.

(இ-ள்.) மிக கடிகமழ்ந்த சாந்தால்-மிக்கவாசனைவீசும் சந்தனக்குழம்பால், வெரிந்புறமெழுகி - முதுகை நிலம்போன்மெழுகி, கையின் நகத்தினுல் எழுதி - கைந்நகத்தினுல் (அந்நிலத்திலிடுங் கோலம்போற்) சித்திரித்து, சாலநறுவிரை களபம் சேறு முகைதனம்புதைய கொட்டி-மிகவும் நறுமணங்கமழும் கலவையைத் தாமரையரும்புபோன்ற தனத்தில் புதையவுகுத்து, முருகு உயிர் பூதாது அப்பி - வாசம் வீசும் மகரந்தத்தை யப்பி, புகைத்தும் சாந்தாற்றி கொண்டு வீசியும் புலர்த்தி - அகிற்புகை முதலியவற்றையூட்டியும் விசிறியைக்கொண்டு வீசியும் ஈரத்தைமாற்றி, பின்னர்-பின்பு. எ-று.

முதுகில் சந்தனக்குழம்பை மெழுகிச் சித்திரித்துத் தனத்திற் கலவைக்குழம்பைக் கொட்டி மகரந்தங்களையப்பி சாந்தாற்றியினு லீரம் புலர்த்திப் பின்னென்க. (சக)

நித்தில மாலை துப்பு நிரைத்தபூந் தொடைமா ணிக்கக்
கொத்துறு தாமம் பச்சைக் கோப்பமை தெரியல் வேரித்
தொத்தலர்ப் பிணையல் செம்பொற் சுடர்விரி தொடலை யேனைத்
தத்தொளி நீலக் கோதை தண்கதி ரெறிப்பச் சாத்தி.

(இ-ள்.) நித்திலமாலை - முத்தமாலை, துப்பு நிரைத்த பூ தொடை - பவளத்தாற்கோத்த வழகிய மாலை, மாணிக்கக் கொத்துறு தாமம் - மாணிக்கங்களாற்கோத்த மாலை, பச்சைகோப்பு அமை தெரியல் - பச்சைகளாற்கோத்த மாலை, ஏனைதத்து ஒளி நீலம் கோதை-இவையொழிந்த ஒளிததும்பும் நீலமணிமாலை,வேரி தொத்து அலர் பிணையல் - தேன்சிந்து மலராற்றொடுத்தமாலை, செம்பொன் சுடர்விரி தொடலை - ஒளி வீசுஞ் சிவந்த பொன்னரிமாலை, தண்கதிர் எறிப்ப சாத்தி - (ஆகிய மாலை வரிசைகளெல்லாம்) கிரணங்களை வீசச் சாத்தி. (எ-று.)

முத்து பவளம் மாணிக்கம் பச்சை இவையொழிந்த நீலமுதலியவற்றாற் றனித்தனியே கோத்தமாலைகளும் செம்பொன்மாலையும் பூமாலையும் ஆகிய மாலைகளை யழகுபெறச்சாத்தியென்க. (ருo)

எரிசிகை யெழுவ தென்ன விளங்கதிர் விரிக்கும் பைவா
யரிச்சிகை மணிக ளாதி யழகுறக் கோத்த காழின்
விரிச்சிகை கலாபங் காஞ்சி மேகலை பரும மைந்துங்
கரிச்சிகை மத்த கத்துக் கடிதடம் புலம்பச் சாத்தி.

(இ-ள்.) எரிசிகை எழுவது என்ன இளகதிர் விரிக்கும் பைவாய் அரிசிகைமணிகள் ஆதி அழகுறகோத்த - அக்கினி சுவாலை இட்டெழுவதுபோல விளங்கதிர் பரப்பும் படம்பொருந்திய நாகத்தின் சிரோரத்தின முதலியவற்றால் அழகுபட முறையாகக் கோத்த, காழின் விரிசிகை - வைரம்பொருந்திய எழுகோவையுள்ள விரிசிகையும், கலாபம் - எட்டுக்கோவையுள்ள கலாபமும், காஞ்சி-பதினாறுகோவையுள்ள காஞ்சியும், மேகலை-பதினெட்டுக்கோவையுள்ள மேகலையும், பருமம் - முப்பத்திரண்டு கோவையுள்ள பருமமும், ஐந்தும் - ஆகிய இவ்வைந்தினையும், கரிசிகை மத்தகத்து கடிதடம் புலம்ப சாத்தி - யானையினது தலையிலுள்ள மத்தகம் போன்ற நிதம்பத்திற் கலகலவென்றொலிக்கச்சாத்தி. (எ-று.)

இளங்கதிர் பரப்பும் நாகரத்தின முதலியவற்றாற் கோத்த விரிசிகை முதலிய ஐந்தினையும் கடிதடத்திற் கலகலவென்றொலிக்கச் சாத்தியென்க. (ருக)

அலம்புகிண் கிணிமின் காலு மவிர்பரி யாகஞ் செம்பொற்
சிலம்புபா டகமென் றின்ன புறவடி திகழச் சாத்தி
நலம்புனை செய்ய பஞ்சி னறுங்குழம் பலர்ந்த கஞ்ச
மிலம்படச் சிவந்த தாளி னூட்டின ளிறைஞ்சி நின்றாள்.

(இ-ள்.) அலம்பு கிண்கிணி - ஒலிக்கின்ற கிண்கிணியும், மின்காலும் அவிர் பரியாகம் - மின்னலிட்டு ஒளிபரப்பும் பரியாகமும், செம்பொன் சிலம்பு பாடகம் - செம்பொன்னாற்செய்த சிலம்பும் பாடகமும், என்ற இன்ன - என்று சொல்லப்பட்ட இக்காலணிகளை புறவடி திகழ சாத்தி - புறவடியில் விளங்கப்பூட்டி, நலம்புனை செய்ய பஞ்சின நறுகுழம்பு - அழகிய செம்பஞ்சினல்லை குழம்பை, அலர்ந்த கஞ்சம் இலம்பட சிவந்த தாளில் ஊட்டினள் - மலர்ந்த தாமரை துன்புறச் சிவந்த பாதத்திற் பூசி, இறைஞ்சி நின்றாள் - பணிந்து நின்றனள். (எ-று.)

நங்கையு நறைகமழ் நளினப் பாவைதன்
பங்கய மலர்க்கரம் பற்றி யாங்கெழூந்
தெங்கணு மலர்மழை யிறைப்ப வானவர்
மங்கல வாழ்த்தொலி மல்கப் போந்தனர்.

(இ-ள்.) நங்கையும் - காமாக்ஷியம்மையும், நறை கமழ் நளினப்பாவைதன் பங்கய மலர்க்கரம்பற்றி - வாசம் வீசுகின்ற தாமரைப் பூவில் வசிக்கின்ற பதுமைபோல்வாளாகிய திருமகளுடைய தாமரைமலர் போன்றகையைப் பற்றி, ஆங்கு எழுந்து - அங்ஙனநின்று மெழுந்து, எங்கணு மலர் மழை இறைப்ப - எவ்விடத்தும் பூமழைபொழிய, வானவர் மங்கல வாழ்த்தொலி மல்க போந்தனள் - தேவர்கள் பாடும் மங்கல வாழ்த்தொலி எவ்விடத்து நிறைய நடந்தருளினர். (எ-று.)

(சோபனம்பாட) அம்மையார் இலக்குமிதேவி திருக்கரத்தைப்பற்றி யெழுந்து மலர்மழைபொழிய வானவர் வாழ்த்தொலிசெய்ய அடிபெயர்ந்து சொல்லத் தொடங்கினரென்க. (ருரு)

நிழலுமிழ் மணிக்குடை நீண்ட கேதனந்
தழையொளிக் கவரிசாந் தாற்றி யாதிய
மழைமதர்க் கண்ணர மகளி ரேந்தியே
விழைதகு தொழின்முறை விளைத்து டன்செல.

(இ-ள்.) நிழல் உமிழ் மணிக்குடை - நிழலைப் பரப்புகின்ற முத்தினாற்செய்தகுடையும், நீண்ட கேதனம் - நீண்ட துவசங்களும், தழை ஒளி கவரி - தழைந்து வெள்ளொளி வீசுஞ் சாமரையும், சாந்தாற்றி ஆதிய - விசிறியுமாகிய இவைகளை, மழை மதர் கண் அரமகளிர் ஏந்தி - குளிர்ந்து மதர்த்த கண்களையுடைய அரம்பையர்கள் தாங்கி, தொழில் விழை தகுமுறை விளைத்து,அவ்வவற்றை அசைக்குந் தொழிலை யாவரும் விரும்பத்தக்கமுறை யாகச்செய்து, உடன்செல - அம்மையாரோடு நடந்துவர. (எ-று.)

(செல்லும் பொழுது) குடை துவசம் சாமரை விசிறி முதலியவற்றை அரமகளிர் பிடித்து அசைத்து அம்மையாருட னீங்காதுவரவென்க. (ருசு)

பாவிய வாடைமே னடந்து பைப்பைய
மாவணி மணவினை மண்ட பத்திடைப்
பூவணை மிசைப்பொலி புனிதன் பாங்கரி
னோவியக் கொழுந்தென வுற்று வைகினள்.

(இ-ள்.) பரவிய ஆடைமேல் பையபைய நடந்து - பரப்பியிருக்கின்ற நடைப்பாவாடையின்மேல் மெல்ல மெல்லநடந்து,மா அணி மணவினை மண்டபத்திடை-பலஅலங்காரங்களமைந்துள்ள கலியாணமண்டபத்தில், பூ அணைமிசை பொலி புனிதன்பாங்கரில் - புட்பாசனத்தின்மேன் மணக்கோலத்துடன் வீற்றிருக்கும் ஏகம்பவாணர் பக்கத்தில்,ஓவியக்கொழுந்து என்ன உற்றுவைகினள் - சித்திரித்த இளந்தளிர்போலப் பொருந்தி யிருந்தனர். (எ-று.)

பரப்பியபாவாடைமேல் மிகமெல்லநடந்து கலியாண மண்டபத்தில் பூவணையில் வீற்றிருக்கும் பெருமான் பங்கில் வைகியிருந்தனரென்க. அடுக்குமிகுதிப் பொருளது. ()

அறுசீர்க்கழி நெடில்விருத்தம்.

திருத்தகு மணைமே லண்ண லணங்குடன் றிகழநோக்கி
யுருத்திரர் முதலோர் யாருந் தொழுதெழுந்து வகைபூத்தார்
மருத்துழா யலங்கன் மார்பன் மலரடி விளக்கப் புக்கான்
பெருத்தபல் லண்ட மொன்றாய்ப் பிளந்தென வியங்க ளார்த்த.

(இ-ள். திருத்தகும் அணைமேல் - வியக்கத்தக்க பூவணைமேல், அண்ணல்அணங்குடன் திகழநோக்கி - எம்பெருமான் எமதுபெருமாட்டியுடன் விளங்குந் திருக்கோலத்தைப்பார்த்து,உருத்திரர் முதலோர்யாரும் - உருத்திர கணங்கள் முதலாகச்சொல்லப்பட்டார் யாரும், தொழுது எழுந்து உவகைபூத்தார் - பணிந்தெழுந்து ஆனந்தமடைந்தனர், மரு துழாய் அலங்கல் மார்பன்-நறுமணங்கமழும் துளவமாலை யணிந்ததிருமால், மலரடி விளக்க புக்கான் - ஏகம்பவாணர் திருவடியைப்பூசிக்கத் தொடங்கினர், பெருத்த பல் அண்டம் ஒன்றாய்ப் பிளந்தது என்ன - அக்காலத்திற்பெரியபல அண்டங்களெல்லா மொன்றாகப்பிளவு பட்டாற்போல, இயங்கள் ஆர்த்த - வாச்சியங்களொலித்தன. (எ - று.)

உருத்திரர் முதலியயாவரும் அம்மையும் அப்பனும் பூவணையில் வீற்றிருக்கக் கண்டு பெருங்களிப் படைந்தனர். திருவடியைத் திருமால்விளக்கத் தொடங்கினர். வாச்சியங்களெல்லா மொலித்தன என்க. (ருஅ)

அணியின் சிறப்பும் வடிவின் சிறப்புந்தோன்ற ஓவியக் கொழுந்தென்றார். நங்கையுமென்னுஞ் செய்யுள் முதலிச்செய்யுள் வரையுமொருதொடர்.

பொலம்புனை கரகத் தீம்பால் பூமகள் வணங்கி வார்ப்ப
வலம்புரி கரத்தோ னையன் மலரடி விளக்கிப் போற்றி
யிலங்கொளிப் பட்டா லீர மெல்லெனப் புலர்த்தி யேந்து
மலங்கொளிப் பாததீர்த்தம் பருகினு னார்வங் கூர.

(இ-ள்.) பூமகள் பொலம்புனை கரகத்தீம்பால் வணங்கிவார்ப்ப - இலக்குமிதேவி பொன்னாற் செய்தகரகத்தின் முகந்த இனியபாலைக் குனிந்து வார்க்க, வலம்புரி கரத்தோன் - வலம்புரிச்சங்கமேந்திய திருமால், ஐயன் மலரடி விளக்கி போற்றி-இறைவர்திருவடியை அபிடேகஞ்செய்து துதித்து, இலங்கு ஒளிபட்டால் - ஒளிவீசும் பட்டாடையினால், ஈரம் மெல்லென புலர்த்தி - ஈரத்தை மெல்ல மெல்ல ஒற்றித்துடைத்து, அலங்கு ஒளி ஏந்தும் பாததீர்த்தம் - ஒளிவிட்டெறிக்கின்ற சோதிமயமாகிய பாதத்திலாட்டிய தீர்த்தத்தை, ஆர்வம் கூர பருகினன் - அன்புமிகவுமுண்டாக வுண்டனர். (எ - று.)

திருமால் தன் தேவி பால் வார்க்கப் பெருமான்றிருவடி விளக்கி ஒற்றாடையாலொற்றிப் போற்றி அப்பாத தீர்த்தைப் பருகினனென்க. (ருகூ)

கன்னனெய் கனிபா லின்ன கமழ்மதுப் பருக்க நல்கி
யென்னையா ளுடைய கோமா னேடவிழ் கமலச் செங்கை
தன்மிசை யுலக மீன்ற தனிமுதற் பிராட்டி யான
கன்னிகை வைத்து நீர்பெய் தளித்தனன் கமலக் கண்ணன்.

(இ-ள்) கமலக்கண்ணன் - தாமரைக்கண்ணராகிய திருமால், கன்னல் நெய்கனி பால் இன்ன கமழ் மதுபருக்கநல்கி - சருக்கரை நெய் வாழைக்கனி பால் இவைகலந்து

சூழ்கின்ற மதுபருக்கத்தையுதவி,என்னை ஆளுடைய கோமான் எடு அவிழ் கமலம்செங் கைதன்மிசை - என்னை அடிமையாகவுடைய இறைவரது மலர்ந்த செந்தாமரை போன்ற திருக்கரத்தின்மேல்,உலகம் ஈன்றதனி முதல்பிராட்டியான கன்னி கைவைத்து - உயிர் களைப்பெற்றெடுத்த ஒப்பற்றமுதலாய் விளங்கும் பிராட்டியாகிய கன்னிகையின் திருக் கரத்தை வைத்து, நீர் பெய்து அளித்தனன் - தாரை நீர் வார்த்துத் தத்தஞ்செய்த னர். (எ - று.)

(திருமால் ஸ்ரீபாததீர்த்தம் பரிகியபின்) மதுபருக்கங்கொடுத்துப் பெருமான் கரத்தி ற் பிராட்டி திருக்கரத்தை வைத்து நீர்வார்த்துத் தத்தஞ் செய்தனரென்க. (௬0)

திருமால் இறைவனுக்கு வழியடிமை யென்பது தோன்றப் பாததீர்த்தம் பருகினு ஞர் வங்கூர என்முர். இதனை "அயனுந் திருமாலும், வானுடர்கோவும் வழியடியார் சாழ லோ," எனவருந் திருவாக் கானறிக.

கலி விருத்தம்.

ஆர்த்தன பணிலங்க ளார்த்த துந்துமி
யார்த்தன பல்லிய மார்த்த மங்கல
மார்த்தன நான்மறை யார்த்த வாகம
மார்த்தன பல்கலை யார்த்த வாழ்த்தொலி.

(இ-ள்.) பணிலங்கள் ஆர்த்தன - சங்கங்களொலித்தன, துந்துமி ஆர்த்த - தேவ வாச்சியங்களோசை பட்டன,பல் இயம் ஆர்த்தன - பலவாச்சியங்கள் ஆரவாரித்தன,மங் கலம் ஆர்த்த - மங்கலவாழ்த்துகள் எழுந்தன, நான்மறை ஆர்த்தன - நான்கு வேதங்க ளுங் கோஷித்தன, ஆகமம் ஆர்த்த - ஆகமங்கள் முழங்கின, பல்கலை ஆர்த்தன - பல கலைகளும் சத்தித்தன, வாழ்த்தொலி ஆர்த்த - வாழ்த்துகின்ற வொலிகள் மேலிட் டன. (எ - று,)

சங்கங்கள் துந்துமி பல்லியம் மங்கலம் நான்மறை ஆகமம் பலகலை வாழ்த்தொலி யாகிய யாவும் ஆர்த்தனவென்க. (௬க)

பொழிந்தனர் வானவர் கற்பப்பூமழை
வழிந்தன பாடலின் மதுரத் தேமழை
யிழிந்தன வடியவ ரிணைக்க ணீர்மழை
யழிந்தன வினையெலா மனைய காலையின்.

(இ-ள்.) வானவர் கற்பகப் பூமழை பொழிந்தனர் - தேவர்கள் கற்பகமலர்மாரி யைப் பொழிந்தனர், பாடலின் மதுரத்தே மழை வழிந்தன - இசைபாடுகின்றோர் பாட லில் மதுரமாகிய தேன்மழை வழிந்தன, அடியவர் இணைக்கண் நீர்மழை இழிந்தன - அடியவர் கண்களினின்றும் ஆனந்த நீ ரொழுகின, வினை எலாம் அழிந்தன-யாவர்வினை களும் அழிந்துபோயின, அனையகாலையில் - அந்தச்சமயத்தில். எ - று.

பூமழை தேன்மழை நீர்மழை பொழிந்தன வினையெல்லா மொழிந்தனவென்க. (

பங்கயக் கிழவனைப பகாந்த நானமுறை
செங்கனல் வளர்ப்பவங் கருளிச்சே வுடை
யங்கணன் மலைமகண் மிடற்யிலா ரருண்
மங்கல நாணிணை வயங்கச் சாத்தினுன்.

(இ-ள்.) சே உடை அங்கணன் - விடபவூர்தியையுடைய இறைவனுர், பங்கயக் கிழவனை - பிரமதேவனை, பகர்ந்த நான்முறை - வேதாகமங்களிற் சொல்லிய முறை

யாக, செங்கனல்வளர்ப்ப அருளி - யாகத்தீயை வளர்க்கும்படி அருள்செய்து, அங்கு மலைமகண் மிடற்றில் - அப்பொழுது காமாக்ஷியம்மையார் திருக்கழுத்தில், அருள் ஆர் மங்கலநாணினை - அருள் நிறைந்த மங்கல சூத்திரத்தை, வயங்கச்சாத்தினன் - விளங்கக்கட்டினார். (எ - று.)

இறைவனார் பிரமனை நோக்கி விதிப்படி மணத்தீ யெழக்கட்டளை யிட்டு இறைவி கண்டத்தில் திருமங்கல நாணணிந்தன ரென்க. (௬௬)

முண்டகக் கடவுளு முதல்வ னாணையுட்
கொண்டுவே தாகமக் குறிவ ழாவகை
மண்டிய கொழுங்கனல் வளர்த்து வாசநெய்
மொண்டு தூய்க் கடிவினை முற்றச் செய்தனன்.

(இ-ள்.) முண்டகக்கடவுளும் முதல்வன் ஆணை உட்கொண்டு - பிரமனும் இறைவனாணையைமேற் கொண்டு, வேதாகமக்குறிவழாவகை மண்டிய கொழுங்கனல் வளர்த்து - வேதாகமத்தில் விதித்த விதிதவறாமனெருங்கிய ஓமாக்கினியை வளர்த்து, வாசநெய் மொண்டு தூய்கடிவினை முற்ற செய்தனன் — வாசம் வீசும் நெய்யை முகந்து வார்த்து வார்த்துக் கலியாணச் சடங்கை முற்றுறச் செய்தனன். (எ - று)

(மங்கல நாணணிந்த பின்னர்) பிரமனிறைவ னாஞ்ஞையைக்கொண்டு விதிமுறை ஓமத்திரவியங்களால் ஓமாக்கினியைப் பெருக்கி நெய் பெய்து கலியாணத்தை முடித்தன ன் ...

சிருக்கு சுருவங்களான் முகந்து முகந்து பலமுறையும் வார்க்கும் விதிதோன்ற நெய் மொண்டு தூயென்றார். (௬௭)

மாண்டசெந் தமிழ்முனி மனக்க ருத்தொடு
காண்டகு கவுரிதன் கருத்து முற்றின
வேண்டிய வேண்டியாங் களிக்கு மெய்யரு
ளாண்டகை விளக்கினன் போலுமற் றைநாள்.

(இ-ள்) மாண்ட செந்தமிழ் முனிமனக் கருத்தொடு காண்டகுகவுரிதன் கருத்து முற்றின - சிறந்த தமிழாசிரியராகிய அகத்திய முனிவ ரெண்ணிய வெண்ணத்துடன் காணத்தகும் அம்மையா ரெண்ணிய வெண்ணமும் முற்றுப் பெற்றன, ஆண்டகை வேண்டிய வேண்டியாங்கு அளிக்குமெய் அருள் விளக்கினன் போலும்-இறைவன் வேண்டிய வற்றை வேண்டிய வாறு கொடுக்கும் அருட்டன்மையை வெளிப்படுத்தினார் போலும், அற்றைநாள் - அந்நாள். (எ - று.)

அகத்தியனாருங் கவுரியாரும் எண்ணியவை முற்றுப் பெற்றன. (இதனான்) இறைவன் வேண்டிய வேண்டியாங் களுள்வனென்னு மெய்யருளை விளக்கினன் போலும் அந்நாளி லென்க.

யார் யார் எவ்வக் காலத்து எவ்வ வற்றை வேண்டினரோ அவையிற்றை யோர்காலத் தோர் வினைக்கண் பிறழாது வேண்டிய வாறே அருள் புரியும் ஆற்றலுடையோ னிவ னொருவனே யென்பது தோன்ற வேண்டிய வேண்டியாங் களிக்கு மெய்யருளாண்டகை விளக்கினன் போலு மென்றார். (௬௮)

கலிநிலைத்துறை.

திரும ணத்திறங் கண்டவர் யாவருஞ் செழுந்தேன்
பருகு வண்டென வான்ந்த வெள்ளத்திற் படிந்தா

ருருகி யேத்தினர் கையிணை யுச்சியிற் குவித்தா
ரிருக ணீர்மழைத் தாரையின் மூழ்கியின் புற்றூர்.

(இ-ள்.) திருமணத்திறம் கண்டவர் யாவரும் - திருக்கலியாணச் சிறப்பைக் கண்டார் யாரும், செழு தேன் பருகு வண்டு என்ன - இனிய தேனை யுண்டவண்டைப் போல, உருகி ஏத்தி கையிணை உச்சியில் குவித்து இருகண் நீர் மழை தாரையின் மூழ்கி ஆனந்த வெள்ளத்தில் படிந்து இன் புற்றூர்-மனமுருகித் துதித்துக்கைகளைச் சிரமேற் குவித்து இரண்டுகண் களினின்று மழைபோலப் பெருகாநின்ற நீர்த்தாரையின் மூழ்கி ஆனந்தப் பெருக்கிலாழ்ந்து பேரின்பமடைந்தனர். (எ - று.)

திருமணத்தைக் கண்டாரெல்லாம் ஆனந்தக்கண்ணீரின் மூழ்கி இன்புற்றூரென்க.

வண்டுகள் மலரைக்கண்ட பொழுதேமனமுருகிச் சத்தித்து நெருங்கி இருசிறகையுங்குவித்து மலரினின்றும் பெருகாநின்றதேன்றூரையின் மூழ்கி அப்பெருக்காலாகிய வெள்ளத்திற்படிந்து மயங்கி யின்புற்றிருத்த லியல் பாதலால் செழுந்தேன் பருகுவண் டென வுருகியேத்தினர் கையிணையுச்சியிற்குவித்தாரிருகணீர் மழைத்தாரையின் மூழ்கியின் புற்றூனவும், திருமணக்கோலம் எல்லாருங் கண்டுகளிப்புறுக வெனக்கூறிய மொழி திறம்பாது சரியைகிரியா யோக ஞானங்களின் முதிர்ந்த அன்புடையார்க்கேயன்றி அம் முதிர்ச்சியில்லார்க்கும் அன்பும் ஆனந்தமு முண்டாக்கினராகலான் திருமணத்திறங் கண்டவர் யாவருமெனவுங் கூறினுர். (கூகூ)

மலைக்கொ டிக்குறு கவுரமெய் வடிவும்வள் ளலுக்கு
முலைச்சு வட்டொடு வளைத்தழும் பணியுமுன் னேக்கிச்
சிலைத்த டம்பனி வரைமிசைத்தி கழ்மணக் கோல
நிலைக்கு மற்றிது வேற்றமிங் கெனநெடிது வந்தார்.

(இ-ள்). மலைகொடிக்கு உறுகவுர மெய்வடிவும் - அம்மையாருக்குப் பொருந்திய கவுரவடிவத்தையும், வள்ளலுக்கு முலைசுவட்டொடு வளைத்தழும்பு அணியும் - இறைவருக்கு முலைச்சுவட்டோடு வளைத்தழும்புண்டாகிய பொலிவையும், முன்சிலைத்தடம்பனிவரை மிசைதிகழ்மணக்கோலம் நோக்கி - முன்னே பருப்பதங்களிற்சிறந்த இமையமலையில் விளங்கக்காட்டிய மணக்கோலத்தையும் பார்த்து, இங்கு இது ஏற்றம் நிலைக்கும் என நெடிது உவந்தார் - இவ்விடத்துக்கண்ட இக்கோலஞ் சிறந்தது (ஆகலின்) நிலைபெற்றிருக்குமென மிகவும் மகிழ்ந்தார்கள். (எ - று.)

பெருமாட்டிக்கும் பெருமானுக்கும் காஞ்சியிலுண்டாகிய மணக்கோலத்தையும் முன் இமயமலை யிலுண்டாகிய மணக்கோலத்தையும் பார்த்து இதுசிறந்திருத்தலி னிலைக்குமென மிகவுமகிழ்ந்தார்களென்க.

சிலைத்தடம்பனிவரை மிசைத்திகழ் மணக்கோல நிலைக்கு - மற்றிது வேற்றமெனச் சொல்வகைசெய்து மலைக்கொடி கவுரநிறம் பெற்றதும், வள்ளல் முலைச்சுவட்டொடு வளைத்தழும்பணிந்ததும் இமயமலையிற் கண்டிலமாகலி னிது வேற்றமெனக் கூறினுரெனக் கொள்ளலுமொன்று.

திருமணநிகழ்ந்தது முன் னிமய மலையினும் பின்காஞ்சியினு மாயினும் பின்றழுவுஞ் செயல் காஞ்சியில் முன்னிகழ்ந்த தென்னையோ வென் றையுற்றனரென்பார் நோக்கி எனவும், இங்ஙனமாறுபட்ட செயலிருவரிடை நிகழ்ந்து குறிபெறுதொழிந்து போதலின்றி இருவருங்கலந்தமை யாவருஞ் சான்றுகக்கண்டு தெளியக்குறிகள் விளங்கக்காட்டினுரென்பார் இங்கிது வேற்றமெனவும், இன்பம் விளைவித்த குறிகளை நீங்காது கொண்டிருத்தல் யாவருக்கும் இன்பநீங்காது நிலைபெற்றிருக்கு மென்பது விளக்க வென்பார்

நிலக்கு மெனவும் கெடிதுவந்தனரெனவுங் கூறினர்.

இதனாலே, இறைவன் கொள்ளுங் கோலமெல்லாம் உயிர்கள் போகமோக்ஷங்களை யடைதற்பொருட்டே யாகலானும், முத்திநகரமாகிய காஞ்சியில் முத்தியின்பத்தை நீங் காதுயிர்களுக்கு வழங்கவேண்டி நீங்காதின்பக் குறியைக் கொண்டனரெனக்கொள்ளக் கிடந்தன உயிர்கள் பொருட்டெனபதை "யோகியாயோகமுத்தியுதவுதலதுவுமோரார்- போகியாயிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்,எனவருந்திருவாக்கானறிக. (கள)

மற்று வினை மாற்றுப்பொருளது.

அலகிலோகையிற்றிளைப்பவிப்பேறெமக்களித்த
மலயமாமுனிவாழிய வாழியென்றுரைத்தார்
குலவுமங்கலம்பாடினராடினர்குழைந்தார்
தலைவிபாகனுமவரவர்தமக்கருள்வழங்கி.

(இ - ள்.) அலகில் ஓகையில் திளைப்ப-அளவில்லாத ஆனந்தத்திற்றிளைக்கும் வகை யாக, இ பேறு எமக்கு அளித்த - இப்பேற்றை யெங்களுக்குக்கொடுத்த, மலயமாமுனி வாழியவாழி என்று உரைத்தார் - அகத்திய முனிவர் நீடூழிகாலம் வாழவேண்டு மென்று வாழ்த்தினர், குலவு மஙகலம் பாடினர் ஆடினர் குழைந்தார் - விளங்கும் மங்கல வாழ்த்து களைப் பாடிக் கூத்தாடி மனங்குழைந்தனர், தலைவி பாகனும் அவரவர் தமக்கு அருள் வழங்கி - இறை விபாகனும் அவ்வவர்களுக்கு வேண்டியவாறு அருள்செய்து. (எ-று.)

(சிலர்) அகத்திய முனிவர் வாழ்கவென்று வாழ்த்தினர், சிற்சிலர் பாடி ஆடிக் குழைந்தனர், இறைவரும் அவரவருக் கனுக்கிரகஞ் செய்தன ரென்க. (கஅ)

எட்டுமாதிரக்கரிகளுமுடல்பனிப்பெய்த
நெட்டுயிர்ப்பெறிமதுகைவெள்விடைமிசைநீல
மட்டுலாங்குழன்மடவரலொடுமகிழ்ந்தேறிச்
சிட்டர்போற்றிடமறுகிடைத்திருவுலாப்போந்தான்.

(இ-ள்.) எட்டு மாதிரம் கரிகளும் உடல் பனிப்பு எய்த - அஷ்டதிக்கிலுமுள்ள யானைகளும் உடல் நடுங்க, நெட்டுயிர்ப்பு எறி மதுகை வெள் விடை மிசை, பெருமூச் செறியும பேராண்மையை யுடைய வெள்ளிய விடபவாகனத்தின்மேல், மட்டு உலாம் நீலம் குழல் மடவரலொடு மகிழ்ந்து ஏறி - நற்கைமணங் கமழும் கரிய கூந்தலையு டைய காமாக்ஷியம்மையாரோடு மகிழ்ச்சியுடனெழுந்தருளி, சிட்டர் போற்றிட மறு கிடை திருவுலா போந்தான் - அடியார்கள் தோத்திரஞ் செய்ய வீதியில் பவனிவந்த னர். (எ - று)

இடபவாகனத்தின்மேல் அம்மையாருடன் மகிழ்ந்தெழுந்தருளி திருவுலாப் போந்தனரென்க.

வெள்விடையின் பெருமிதமும் ஆற்றலுந்தோன்ற எட்டுமாதிரக்கரிகளும் உடல் பனிப்பெய்த நெட்டுயிர்ப் பெறிமதுகை என்றார். (கசு)

பிளிறுவெம்மதயானையின்வெரிந்தலைபிணித்த
குளிறுவார்மணிமுரசொடுகொக்கரைமுழவ
மொளிறுமாமுடிவானவரியங்களுமொருங்கே
களிறுதாங்குமெண்டிசைகளுஞ்செவிடுறக்கறங்க.

(இ - ள்) பிளிறு வெம்மதயானையின் வெரிந் தலை வார்பிணித்த-பிளிறுகின்ற கொடியமதயானையின் முதுகின்மேல் வாரினாற்கட்டிய, குளிறு மணிமுரசொடு கொக்கரை முழவம் ஒளிறு மாமுடி வானவர் இயங்களும் - ஒலிக்கின்ற அழகிய பேரிகையுடன் மத்தளமும் ஒளிசெய்யும் பெரியமுடியினையுடைய தேவர்களொலிக்கும் வாச்சியங்களும், ஒருங்கே களிறுதாங்கும் எண்திசைகளும் செவிடுற கறங்க - ஒன்றாகக்கூடி யானைகளால் சுமக்கப்பெற்ற எட்டுத்திசைகளும் செவிடுபடும்படி யொலிக்க. (எ - று)

முரசுமுதலிய இந்நகரவாச்சியங்களும் தேவவாச்சியங்களுமொன்று கூடி எண்டிசைகளுஞ் செவிடுபடும்படி யொலித்தனவென்க. (எ0)

வாணிகோன்பணிபாநுகம்பப்பெயர்வயவன்
வாணிலாவளையாயிரம்வாயில்வைத்தூத
வாணனாயிரங்கரங்கொடுமணிமுழாமுழக்க
மாணமத்தளமாதவன்மத்தளமெழுப்ப.

(இ - ள்.) வாணிகோன் பணி பானு கம்பப்பெயர்வயவன், கலைமகள் தலைவனாகிய பிரமன் பணிகின்ற பானுகம்பனென்னும் பெயருடையவீரன், வாள்நிலா ஆயிரம் வளை வாயில்வைத்தூத - தண்ணியகிரணம் பரப்பும் ஆயிரஞ் சங்கங்களைத் தன்வாயில் வைத்தூத, வாணன் ஆயிரங்கரங்கொடு மணிமுழா முழக்க - வாணாசுரன் ஆயிரங்கைகளைக் கொண்டு அழகியமத்தளத்தை முழக்கஞ்செய்ய, மாணமத்தள மாதவன் மத்தளமெழுப்ப- (வாணாசுரனேயல்லாமல்) மாட்சிமைதங்கிய மத்தளமாதவனென்னும் பெயர் புனைந்த திருமாலும் மத்தளமுழக்கஞ்செய்ய .(எ - று)

பானுகம்பன் சங்கத்தொனி செய்யவும் வாணாசுரனுந் திருமாலும் மத்தள முழக்கஞ்செய்யவு மென்க.

காமநோக்கியைமணம்புணர்காதலன்வந்தான்
பூமுலைசசுவடணிந்தருள்புண்ணியன்வந்தான்
யாமெலாமுய்யவந்தவன்வந்தனனென்றுத்
தாமநித்திலசசின்னமுங்காளமுந்தழங்க.

(இ - ள்.) காமநோக்கியை மணம் புணர்காதலன்வந்தான்-காமாக்ஷியை திருமணஞ் செய்துகொண்ட ஆசைநாயகன வந்தனன், பூமுலை சுவடு அணிந்தருள் புண்ணியன் வந்தான்-அழகிய முலைச்சுவடணிந்தருளியபுண்ணிசொரூபன்வந்தனன், யாம் எல்லாம் உய்ய வந்தவன் வந்தனன் என்று - நாமெல்லாவுய்யவந்தவனாகிய விறைவன் வந்தனன் வந்தனனென்று, தாமநித்திலச்சின்னமும் காளமும் தழங்க-ஒளிவீசும் முத்தினாற் செய்ததிருச சின்னமு மெக்காளமு மொலிக்க. (எ - று.)

திருச்சின்னமு மெக்காளமும் அன்று நிகழ்ந்தனவாகிய கலியாணத்தையும் தழும்பணிந்ததையும் எல்லாருமுய்யவந்தனனென்பதையுமெடுத்துக் கூறின வென்க. (எ௨)

கவேய்ங்குழல்யாழிசையெங்கணுங்கிளர
வேதவோசையுமாகமமுழக்கமும்விம்ம
மாதர்நாடகநான்முறைமடந்தையர்நடிப்பப்
போதவிண்ணவர்பூமழைவியனிலம்போர்ப்ப.

(இ-ள்) வேய்குழல் கீதம் யாழிசை எங்கணும் கிளர-புள்ளாங்குழலும் யாழினோசையு மெங்கெட்டும் விளங்க, வேதவோசையும் ஆகம முழக்கமும் விம்ம - வேதகோ

ஷமு மாகமமுழக்கமு மேலிட்டொலிக்க, மாதர்நாடகம் நூன்முறைமடந்தையர்நடிப்ப - அழகிய நடனத்தைப் பரத நூல் முறையே நாடகப்பெண்கள் நடனஞ்செய்ய, போதம் விண்ணவர் பூமழைவியன்நிலம் போர்ப்ப — அறிவிற்சிறந்த தேவர்கள் பூமாரிசொரிந்து பரந்த நிலமுற்றுமூட. (எ - று)

குழலொடுயாழினிசை வேதாகமங்களின் முழக்கம் நடனஞ்செய்யுமாதர்நடனம் தேவர்சொரியும் பூமழை யாகிய இவைகளெல்லாமுறையே கிளர்ந்து விம்ம நடித்துப் போர்த்தனவென்க. (எங)

> வீதிவாய்த்திருவிழாவணிதொழுதிடப்போந்த
> பேதில்பேரிளம்பெண்முடிவாயபல்பருவ
> மாதர்யாவருநாணொடுவளைகலைதோற்றுக்
> காதல்வேள்சிலைப்பூங்கணைமாரியிற்குளிப்ப.

(இ-ள்.) வீதிவாய் திருவிழா அணி தொழுதிட போந்த - வீதியின்கண்வரும் திருக்கலியாணகோலத்தைக்கண்டு தொழுவதற்கு வந்த, பேது இல் பேரிளம்பெண் முடிவாயபல்பருவ மாதர்யாவரும் - மாறுபடுதலில்லாத பேதைமுதல் பேரிளம் பெண்ணளவாக்கூறும் ஏழுபருவங்களையுடைய பெண்களெல்லாம், நாணொடு வளை கலை தோற்று காதல் வேள்சிலை பூ கணை மாரியில் குளிப்ப - நாணம் வளை ல் ஆடையாகிய மூன்றையுமிழந்து ஆசையை விளைவிக்கு மன்மதன் கரும்புவில்லிற் றொடுக்கும் மலராகிய சரவருடத்தில் மூழ்க. எ - று.)

வீதியில் திருமணக்கோலங் காணவந்த பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண் என்னு மெழுவகைப் பருவப் பெண்களெல்லாம்நாண முதலிய காவலைக்கடந்து மன்மத பாணத்தில் நைந்தனரென்க.

அவரவர்க்குக் கூறிய விலக்கணங்களிற் குறைவில்லவரென்பார் பேதில் பேரிளம் பெண்முடிவாய பருவமாதர் யாவருமென்றார்.

பேதமென்பது பேது என வீறு தொகுக்கப்பட்டது; 'பேதுசெய்து வாழ்செயத் திருவுள்ளமே' என்புழிப்போல (எச)

> புதியசாமரைவெண்குடைபூங்கொடிமிடைய
> வெதிரில்கொள்கையினகர்வலங்கொண்டெழுந்தருளி
> மதுரமென்மொழிமங்கலவாழ்த்தொலிமலியக்
> கதியிலார்க்கெலாமின்னருட்காட்சிதந்தளித்து.

(இ - ள்.) புதியசாமரை வெண்குடை பூங்கொடி மிடைய - புதுமையாகச் செய்தசாமரை சந்திரவட்டக்குடை அழகிய துவசம் ஆகிய இவைகளெல்லாஞ் செறிந்துவர, எதிரில் கொள்கையின் நகர்வலம் கொண்டு எழுந்தருளி - தனக்கெதிரில்லாத சிறப்பினையுடைய காஞ்சி நகரத்தைப் பிரதக்கணமாக வெழுந்தருளிவந்து, மதுரம் மெல்மொழி மங்கல வாழ்த்தொலி மலிய - இனிய சொல்லமைந்தமங்கலப் பாட்டோசை எங்கு நிரம்ப, கதியில்லார்க்கு எல்லாம் - அருள்பெறுங் கதியற்றவர்களுக்கெல்லாம், இன் அருள் காட்சிதந்து அளித்து - இனிய அருட்டரிசனங் கொடுத்து. (எ - று)

சாமரை முதலியவைகளெல்லாநெருங்கிவரக் காஞ்சிநகரை வலமாகவந்து தம்முடைய கோலத்தைக் காணவந்தயாவர்க்கும் நல்லகாட்சியைத் தந்தென்க. (எரு)

பிளிறு என்னுஞ் செய்யுண் முதல் இச்செய்யுள் வரையிலும் ஒருதொடர்.

மீண்டுகோயிலினுள்ளெழுந்தருளிமெல்லணைமேன்
மாண்டமெல்லியற்பனிவரையணங்கொடும்வைகி
யாண்டுநின்றமாலயன்முதல்யாரையுநோக்கி
யீண்டுநீர்வரம்வேண்டுவகொண்மினென்றிசைத்தான்.

(இ-ள்.) மீண்டுகோயிலினுள் எழுந்தருளி - மீளவும் கோயிலினுள்ளே எழுந்தருளி, மெல் அணைமேல் மாண்ட மெல்லியல் பனிவரை அணங்கொடும்வைகி-மெல்லிய மலரணைமேல் சிறந்த நல்லழகினையுடைய அம்மையாரோடும் வீற்றிருந்து, ஆண்டுநின்ற மால் அயன்முதல் யாரையுநோக்கி ஈண்டுநீர்வரம் வேண்டுவ கொண்மின் என்று இசைத்தான் - அவ்விடத்துச் சூழ்ந்து நின்றதிருமால் பிரமன் முதலியயாவரையும் திருக்கண் சாத்தியருளி இப்பொழுது நீங்கள் வேண்டியவரங்களைப் பெற்றுக்கொள்வீரென்று திருவாய்மலர்ந்தருளினர். (எ - று.)

மீண்டுங் கோயிலுக்குட்சென்று காமாக்ஷிசமேதரா யெழுந்தருளி யிருந்து திருமால் முதலிய தேவர்களைக் கண்ணுற்று உங்களுக்கு வேண்டிய வரங்களைக்கொண்மினென்றருளியென்க.

விரைவு தோன்றக்கேண்மினென்னது கொண்மினென்றார். (எசு)

அறு சீர்க்கழி நெடில்விருத்தம்.

இருமுதுகுரவர்பாதமிமையவர்வணங்கியிந்தத்
திருமணங்காண்டல்பெற்றேமுய்ந்தனநதிரைநீர்வைப்பின்
மருவினர்வதுவைசெய்யுமிடந்தொறுமன்னியாங்காங்
கிருநலமுதவவேண்டுமிவ்விருவீருமெனறார்.

(இ-ள்.) இமையவர் இருமுது குரவர் பாதம் வணங்கி இந்த திருமணங்காண்டல் பெற்றேம் உய்ந்தனம் - தேவர்கள்அம்மையப்பராகிய விருவர்பாததங்களையும் பணிந்து இந்தத் திருமணக்கோலத்தைக் காணப்பெற்றேம் அதனால் பிழைத்தோம், திரைநீர் வைப்பில் மருவினர் வதுவை செய்யும் இடந்தொறும் - கடல்சூழ்ந்த இவ்வுலகில் வாழ்கின்றவரெல்லாங் கலியாணஞ் செய்யுமிடங்கடோறும், இருவருமன்னி ஆங்கு ஆங்கு இருநலம் உதவ வேண்டும் என்றார் - நீங்களிருவருமிருந்து அவ்வவ்விடங்களிற் பெரிய மங்கலத்தைக் கொடுத்தருள வேண்டுமென்று வேண்டினர். (எ-று.)

தேவர்கள் அம்மையப்பரை வணங்கி யாங்கள் இத்திருமணத்தைக் காணப்பெற்ற இதனாலேயே பிறவிக்கடலைக் கடந்து பேரானந்தப் பெருங்கடலிற்றிளைத்தோம் ; இதன் மேல் யாங்கள் வேண்டுவதொன்றுண்டோ, இனி இவ்வுலகிலுள்ளார் செய்யுங் கலியாண மண்டபந் தோறும் நீங்களிருவரு மிருந்து அவர்கள் வேண்டிய மங்கலத்தைத்தருவீரென்று வேண்டினரென்க.

ஆன்மாக்கள் முத்தியிற் சேருமளவும் தநுகரணாதிகளைத் தந்தும் சேர்ந்தபின்னர் சிவானந்தத்தைத் தந்தும் காக்கின்ற பெருங்கடமை பூண்டவராகலி னிருமுது குரவரென்றார். இதனை " அம்மையப்பரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக." என வருதலாற் காண்க. (எஎ)

இவ்வரமளித்தேங்காஞ்சியிருநகர்காவல்பூண்டு
செவ்வனிங்குறைமினென்றுசிவபிரான்பணித்தலோடு
மவ்வருள்சென்னிமேற்கொண்டகமகிழ்ந்திமையோரெல்லாங்
கவ்வைநீர்க்காஞ்சிமூதூர்க்காவல்கொண்டிருந்தாரங்கண்.

(இ-ள்) இ வரம் அளித்தேம் காஞ்சி இருநகர் காவல்பூண்டு செவ்வன் இங்கு உறை மின் என்று சிவபிரான் பணித்தலோடும் - தேவர்களே நீவிர் வேண்டிய வரங்களைத் தந் தோம் நீவிரிக்காஞ்சிநகரைக் காக்குங் காவற்றொழிலின்மை மேற்கொண்டு சுகமாக வ்வி விடத்தில் வாழ்ந்திருமினென்று ஏகம்பவாணரருள் செய்யவும், அருள் சென்னி மேல் கொண்டு அகம்மகிழ்ந்து - அந்த ஆணையைத் தலைமேற்றாங்கி யுளங்களி கூர்ந்து, இ மையோர் எல்லாம் சவ்வை நீர்காஞ்சி மூதூர் காவல்கொண்டு இருந்தார் - தேவரெ ல்லா மொலிக்கின்ற நீர் சூழ்ந்த பெரிய காஞ்சியிற் காவற்றொழிலைக் கைக்கொண்டிருந் தனர், அங்கண் – அப்பொழுது. (எ-று.)

தேவர்காள் நீவிர் வேண்டியாங்கு இவ்வுலகில் நடக்குங் கலியாணம் நம்முடைய கலியாணமாகவே கொண்டு அநுக்கிரகஞ் செய்கின்றோம். நீவிருமிக்காஞ்சி நகரத்தை விட்டுச் செல்லாது இந்நகரத்திலேயே காவல் கொண்டிருமென்ன, அவ்வாணையாற்றானை ங்ஙனமே யிருந்தனரென்க.

ஏனைய விடங்களில் திருமணமுடிந்தவுடன் கயிலைக்குச் செல்வதுபோற் செல்லாது இக்காஞ்சிப்பதியிலேயே இறைவர் தங்கினராகலான் தமதாணையைச் செலுத்துந் திருமான் முதலியோரையு மங்ஙனமே இறை கொளச்செய்தான் என்பார் காஞ்சி யிரு நகர் காவல் பூண்டு செவ்வனிங் குறைமி னெனவும், தம்முலகினும் இக்காஞ்சிப்பதிமீ தூர்ந்த போகத்தைத் தருதலான் மனக்கோட்ட மின்றி மனமகிழ்ச்சியோடு தன் பதியை மறந்திருந்தன ரென்பார் அகமகிழ்ந்திமையோ ரெல்லாங் காஞ்சி மூதூர்க் காவல்கொ ண்டிருந்தா ரெனவுங் கூறினர். (எ௮)

அரந்தைதீர்கவுரிகூற்றிற்றோன்றியவணங்குமென்னை
வரைந்துகொண்டருண்மோவென்றுவணங்கிநின்றிரப்பவந்நாட்
கரந்தைவார்சடையோன்மன்றன்முடித்துநீகச்சிமூதூர்
புரந்திவணுறைதிதுர்க்காயென்றருள்புரியப்பெற்று.

(இ-ள்.) அரந்தை தீர்கவுரி கூற்றில் தோன்றிய அணங்கும் - மனக்கோட்டம் நீங் கிய அம்மையி னமிசத்திலுதித்த துர்க்காதேவியும், என்னை வரைந்துகொண்டு அரு ண்மோ என்று வணங்கி நின்று இரப்ப - என்னைக் கலியாணஞ் செய்துகொள் ளென்று பணிந்து நின்று கேட்க, அந்நாள் கரந்தை வார்சடையோன் மன்றல் முடித்து - அந்நாளே கரந்தை சூடிய நீண்ட சடை முடியையுடைய விறைவன் கலியாணஞ்செய்து கொண்டு, துர்க்காய் நீ கச்சி மூதூர்புரந்து இவண் உறைதி என்று அருள்புரியப்பெற்று- துர்க்கையே நீ இப்பெரிய காஞ்சிநகரத்தைக் காவல்பூண் டிவ்விடத்திலேயே இருப்பா யென்றருள் செய்யப்பெற்று. (எ-று.)

அம்மையார் கழித்த காளிமத்தில் வெளிப்பட்ட துர்க்கை இறைவனை நோக்கி என்னை மணம் புணரவேண்டு மென்றுகேட்க இறைவர் மணந்து அத்துர்க்கையை அக் காஞ்சியைக்காத்திருக்கச் செய்தன ரென்க.

காளியென் றிருகாலழைத்ததனா லுண்டாகிய மனக்கோட்டத்தை கவுரவ நிறத்தா னீக்கிக் கொண்டன ராதலால் அரந்தை தீர்கவுரி என்றார்.

துர்க்கை கவுரி கூற்றென்பது முன்னர்க்காண்க. (எகூ)

கன்னிகாப்பெனும்பேறெய்தக்கவுசிகிமடந்தைகாஞ்சிப்
பொன்னகர்க்காவல்பூண்டுபொங்கொளிகவுசிகேசன்

தன்னையங்கிருவிப்பூசைதழைத்தபேரன்பிளுற்றி
யின்னல்தீர்ந்துலகமுய்யவிருந்தனளிருக்குநாளில்.

(இ ள்.) கன்னி காப்பு என்னும் பேர் எய்த கவுசிகிமடந்தை காஞ்சி பொன்நகர் காவல்பூண்டு - அன்று தொட்டு காஞ்சிநகரமானது கன்னிகாப் பென்னும் பெயர வுடைய துர்க்காதேவி அழகிய காஞ்சி நகரந்தன்காவலுளிருக்கக்கொண்டு, பொங்கு ஒளி கௌசிகேசன்தன்னை அங்கு இருவி தழைத்தபெரு அன்பின்பூசை ஆற்றி - ஒளிமிகுந்த கௌசிகேசனை அவ்விடத்தில் பதிட்டை செய்து நீங்காத அன்பினால் நிறைந்தபூசையைச்செய்து, இன்னல் தீர்ந்து உலகமுய்ய இருந்தனள் - துன்பமொழிந்து உலகம்பிழைக்க வீற்றிருந்தனர், இருக்கு நாளில் - இவ்வாறிருக்கு நாளில். (எ-று)

காஞ்சி துர்க்கையால் காவல் கொண்டிருக்கப் பெற்றதனால் கன்னி காப்பெனப்பெயர் பெற்றது. அக்காஞ்சியில் துர்க்கை கவுசிகேசனைப் பூசித்து மகிழ்ந்திருக்குமந்நாளிலென்க. (அம)

சும்பனேநிசும்பனென்போருலகெலாந்துளக்கநோக்கி
அம்புயக்கடவுள்போந்தண்ணலுக்கியம்பிவேண்ட
வெம்பிரானருளாற்கன்னிவிந்தவெற்பெய்திவைகி
வெம்புவாளவுணர்தம்மைச்செகுத்துமீண்டினிதுவாழ்ந்தாள்.

(இ ள்.) சும்பன் நிசும்பன் என்போர் உலகு எல்லாம் துளக்க - சும்பன் நிசும்பனென்னு மிரண்டசுரருமுலகமுற்றுந் துன்புறச்செய்ய, அம்புயக் கடவுள் நோக்கி அங்கு போந்து அண்ணலுக்கு இயம்பி வேண்ட - பிரமன் பார்த்துக் காஞ்சிப்பதியையடைந்து ஏகம்பவாணருக்குக் கூறிக் குறையிரக்க, எம்பிரான் அருளால் கன்னி விந்த வெற்பு எய்திவைகி வெம்புவாள் அவுணர் தம்மை செகுத்து மீண்டு இனிது வாழ்ந்தாள்-
கொடியவாளேந்திய அசுரரைச்சங்கரித்துத்திரும்பிச்சுகமுற்று வாழ்ந்திருந்தனள். எ-று.

சும்பன் நிசும்பன் என்னும் அசுரர்கள் உலகந் துன்புறச்செய்ய அதனைப்பிரமன் கண்டிறைவருக்குக் கூற, அவரருளால் துர்க்காதேவிக்குக் கட்டளையிட, அத்தேவி விந்தமலைக்குச் சென்று அவ்வசுரரைக் கொன்று காஞ்சியில் வாழ்ந்திருந்தன ளென்க. (அக)

பகர்பெருவளஞ்சாலிந்தமன்றலைப்பண்புகூர
வகனமர்ந்தேத்தினர்கள்கண்டவரறையக்கேட்டோர்
தகவுறநினைந்தோரெல்லாந்தையலார்மன்றல்வாய்ந்து
புகலரும்பரமானந்தமன்றலும்பொருந்திவாழ்வார்.

(இ-ள்.) பகர் பெருவளம் சால் இந்த மன்றலை பண்பு கூர அகன் அமர்ந்து ஏத்தினோர்கள் - சொல்லப்பட்ட பெரிய வளமிக்க இத்திருக் கலியாணத்தைச் செல்வமுண்டாக மனமகிழ்ந்து துதித்தவரும், கண்டவர் அறையகேட்டோர் தகவுற நினைந்தோர் எல்லாம் - காணப்பெற்றவரும் சொல்லக் கேட்டவரும் சிறப்பாக நினைந்தவருமாகிய இவரெல்லாம், தையலார் மன்றல் வாய்ந்து புகல் அரும் பரமானந்த மன்றலும்பொருந்தி வாழ்வார் - கன்னியரைச் சேருங் கலியாணங் கூடப்பெற்று சொல்லுதற்கரிய சிவானந்தத்தை விளைவிக்கும் முத்திமங்கையைக் கூடும் கலியாணமும் வாய்க்கப்பெற்று நித்தியராய்வாழ்வர். (எ-று.)

இத்திருக்கலியாணத்தை எத்தினவருங் கண்டவருங் கேட்டவரு நினைந்தவரு மாகிய யாவரும் சிற்றின்பத்தையும் பேரின்பத்தையும் விளைவிக்கு மிருமங்கையரையு மணம் புணரப்பெற்று நித்தியமாய் வாழ்வரென்க.

பரமானந்த மன்ற லென்றதனால் தையலார் மன்றல் சிற்றின்பமென்று கொள்க.

திருமால் முதலிய தேவருக் கெல்லாம் வளர்தரு மிறைவர் மண மிது வாதலாற் பெருவளஞ் சாலிந்த மன்ற லெனவும், பேரின்பம் விரும்பும் பெருந்தகையாளர்க்குஞ் சிற்றின்பத்தையூட்டி யொழித்த லிறைவரது கருணைத்திற மாதலால் எத்திறத்தோர்கள் கண்டவ ரறையக்கேட்டோா தகவுற நினைந்தோரெல்லாந் தையலார் மன்றல் வாய்ந்து புகலரும் பரமானந்த மன்றலும் பொருந்தி வாழ்வாரென்றார். (௮௨.)

திருமணப்படலம் முற்றிற்று
ஆகதிருவிருத்தம் ௨௫௩௨

## விம்மிதப்படலம்

சாமகண்டர்தம்மாணையாலகிலமுந்தழைப்பக்
காமநோக்கியெண்ணான்கறங்காிசறவளர்க்கு
நாமநீர்வயற்கச்சிமாநகர்வயினளவில்
சேமவிம்மிதமுள்ளனசிலவெடுத்திசைப்பாம்.

(இ - ள்.) சாமகண்டர்தம் ஆணையால் அகிலமும் தழைப்ப - நீலகண்டத்தையுடைய இறைவராணையால் உலகமெல்லாஞ் செழித்தோங்க, எண்ணான்கு அறம் காிசு அறவளர்க்கும் நாம நீர் வயல் கச்சிமாநகர் வயின் - முப்பத்திரண்டு தருமங்களையுங் குறைவறச்செய்யும் அச்சுறுத்தும் நீர்மயமாகிய வயல் சூழ்ந்த காஞ்சிநகரத்தில், அளவில் சேமவிம்மிதம் உள்ளன சில எடுத்து இசைப்பாம் - அளவில்லாத வின்பந்தரு மற்புதங்களிருக்கின்றன; (அவற்றுள்) சிலவற்றை எடுத்துக் கூறுவாம் (எ - று)

இறைவராணையால் காமாக்ஷியம்மை அறம் வளர்க்குங் காஞ்சி நகரத்தில் அநேக வற்புதங்க ளிருக்கின்றன, அவற்றுட் சிலவற்றைச் சொல்லுவாமென்க. (௧)

தெள்ளவொளிக்கதிர்ப்பன்மணித்திரளெலாஞ்செறியப்
பள்ளநீக்கடலாகரமாகியபரிசின
வெள்ளவேணியரருளினலற்புதவிளைவென
றுள்ளவைக்கெலாமுறைவிடமாயதுகாஞ்சி.

(இ - ள்.) தெள் ஒளி கதிர் பன்மணி திரள் எல்லாம் செறிய - தெளிந்த வொளி பரப்புங் கிரணங்களையுடைய பலவகைப்பட்ட மணிக்கூட்டங்களெல்லாஞ் செறிந்திருக்க, பள்ளம் நீர் கடல் ஆகரம் ஆகிய பரிசின் - ஆழ்ந்த நீர்மயமாகிய கடல் இடமாகியதன்மையைப்போல், வெள்ள வேணியர் அருளினல் விளை அற்புதம் என்று உள்ளவைக்கு எல்லாம் - கங்கையணிந்த சடைமுடியுடைய இறைவன் கருணையினால் உண்டாகிய அதிசயங்களென்று எண்ணத்தகுவனவாய்) உள்ளவைகளுக்கெல்லாம், காஞ்சி உறைவிடம் ஆயது-காஞ்சிநகரம் தங்குமிடமாகப் பொலிவு பெற்றது (எ - று)

கடல் பல மணிகளுக்கு ஆகரமானது போல் காஞ்சி நகரம் பலவற்புதங்களுக்கு ஆகரமென்க.

தீண்டில்யாவையுஞ்செய்யபொன்னாக்குவதிறலின்
மாண்டசித்தர்களெண்ணிலர்வழிபடப்படுவ
வேண்டிலென்னவுமளிப்பனமெய்த்தவமுடையோர்
காண்டகும்பலவிலிங்கமச்கடிநகருளவால்.

(இ-ள்.) தீண்டில் யாவையும் செய்ய பொன் ஆக்குவ - தொட்டால் எவ்வகைப்படு பொருளையுஞ் செம்பொன்னாக்குவனவும், மாண்ட எண்ணில சித்தர்கள் வழிபடப்படுவ- சித்திகளிற் சிறந்த அளவிறந்த சித்தர்கள் பூசிக்கப்பட்டனவும், மெய்தவமுடையோர் என்னவும் வேண்டில் அளிப்பன - உண்மைத்தவமுடையவர் எப்பொருளை விரும்பினு லும் அளிக்கப்படுவனவும், காண்டகும் பலஇலிங்கம் அ கடிநகர் உள (ஆகிய) சிறப்புகளைக் காணத்தக்க பலவிலிங்கங்கள் சிறந்த அக்காஞ்சி நகரத்திலுள்ளன. (எ - று).

பொன்னாக்கும் இலிங்கங்களும் சித்தர்கள் வழிபட்டவிலிங்கங்களும் தவமுடையோர் வேண்டியவற்றைத்தரு மிலிங்கங்களும் காணத்தகுவனவாய்க் காஞ்சியிற் பலவி லிங்களுள்ளன வென்க

பொன்னை வேண்டினோர் தம்மாட்டுள்ள லோகமொன்றைக் கொண்டுதீண்டுவராயின் அது பொன்னாகுமென்பார் தீண்டில் யாவையுஞ்செய்ய பொன்னாக்குவ எனவும், சித்திகள் கைவரவிரும்பினோர் ஓர் கால்பூசனை செய்வராயின் சித்திகளை யடைவரென் பார் மாண்ட சித்தர்களெண்ணிலர் வழிபடப்படுவ எனவும், முன்னைத் தவஞ் செய்யா தார்க்கு இம்மை யின்பங் கைகூடாவென வெண்ணித் தவமியற்றுவராயின் அவர் அப் பிறப்பிற்றானே முன்னைத்தவமுடையார் போலவேண்டியாங் கெய்துவரெனபார் மெய்த் தவமுடையோர்வேண்டி லென்னவுமளிப்பன எனவுங் கூறினார்.

தவஞ்செய்யவேண்டு மென்பது "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டுமுயலப்படும்" என்பதற்குப் பரிமேலழகர் கூறிய வாற்றானறிக.

வியாசசாந்தீஸ்வரருக்கு மேற்குசித்தகூவத்துக்குத்தெற்கு இவ்விரண்டுநடுவிலுள்ள சுவர்ணலிங்கம், கைலாசநாதருக்குவடக்கிலுள்ள ஓங்காரநீங்கா தொலிக்கும் சர்வலோக மயமானவிங்கம், இவ்வோங்காரலிங்கத்துக்குக் கிழக்கு உலகளந்ததிருமாலுக்கு ஈசான யம் இவ்விடையில் சுவர்ணமுதலிய வற்றைப் பீடத்தின் கீழ்க்கொண்ட சிலாரூபமான லிங்கம் இவைபோன்ற பலவிலிங்கங்களும் பரிசவேதி என்னும் பெயருடையன வாகலா ன் தீண்டில்யாவையுஞ்செய்யபொன்னாக்குவஎனவும், இவ்விலிங்கங்களெல்லாம் துரோ ணரெண்ணிய சித்தர்முதலிய பல சித்தர்களாற் பூசிக்கப்பட்டன வாகலான் மாண்ட சித் தர்களெண்ணிலர் வழிபடப் படுவ எனவும், பரிதிகுண்டத்திற்குக் கிழக்கிலுள்ளலிங்கம் சத்திய விரத நாதருக்குக் கிழக்கிலுள்ள லிங்கம் வரதராசருக்குக் கிழக்கிலுள்ளலிங்கம் பத்மதீர்த்தக் கரையிலுள்ளலிங்கம்இவ்விலிங்கங்களெல்லாந் தவமுடையோர்க்கு வேண் டியவேண்டி யாங்களித் தனவாகலான் வேண்டிலென்னவுமளிப்பன மெய்த் தவமுடை யெனவுயோங் கூறினார்.

மெய்த்தவமுடையோர் காண்டகும் பல விலிங்கமெனக் கொண்டு ஏனையோராற் காண்டகாவெனக்கொள்ளலுமென்று.

ஒருதனிப்பொருளிருதிறனாகியவ்விரண்டு
மொருமையுற்றிடும்வியப்புமங்குள்ளதுவிரிக்கி
லொருபரம்பொருள்சிவனொடுசத்தியென்றிரண்டா
மொருமையுற்றிடுமுமையவள்கம்பனாத்தழுவி.

(இ - ள்.) ஒரு தனிபொருள் - ஒப்பிகந்த வொருபொருள், இருதிறன் ஆகி - இருவகைப்பொருளாகி, உ இரண்டும் ஒருமையுற்றிடும் வியப்பும் அங்கு உள்ளது-அவ் விருபொருளும் ஒரு பொருளாகவே பொருந்தும் அதிசயமும் அக்காஞ்சி நகரத்திலுள் ளது, விரிக்கில் - (அதனை) விரித்துச்சொல்லப் புகின், ஒரு பரம் பொருள் உற் பத்தி திதி நாசமில்லாத வொருசோதி, சிவனொடு சத்தியென்று இரண்டாம் - சகளா களமாகிய சிவசொரூபமாய்விளங்கும் ஏகாம்பரநாதரென்றும் பராசத்திமுதலிய சத்தி சொரூபமாய் விளங்கும் லளிதாதேவி என்றுஞ் சொல்லப்படும் இரண்டுருவமாகி, உமையவள் கம்பனை தழுவி ஒருமையுற்றிடும் - காமாக்ஷியம்மை ஏகம்பவாணனைத் தழுவி முன்போல் ஒரு பொருளாகவேயிருக்கும். (எ - று)

அக்காஞ்சி நகரத்தில் - ஒன்றிரண்டாகி இரண்டு மொன்றாகி விளங்கும் அதிசயமு முள்ளது அது விரிக்கின் ஒருசோதிலிங்கம் ஏகாம்பரம் லளிதை என்றி ரண் டுருவமாகிப் பின்றழுவி யொன்றாய அச்சோதி ரூபமேயாயிருந்த தென்க.

ஆதி முத்தர்களைப் போலன்றி அனாதிமுத்தத் தன்மையுள்ளதாய் தூலசூக் கும சூன்ய ரூபமாகிய தேகாந்திரியாதி ரகிதமாய் விளங்குஞ் சிற்ரூபியாய் உலகந் தோன்றி யொடுங்குதற்குத் தானே முதலீறுமாய் நித்தியப்பொருளாய்ச் சர்வ வியாபி யாய்ச் சர்வகர்த்தாவாய்நிற்கும் இலக்கணங்களையுடைய பதிப்பொரு ளொன்றென்பது தோன்ற ஒரு பரம்பொருளெனவும்,அவ்வொருபரம்பொருளே பராசத்திமுதலிய பஞ்ச சத்திகளுக்குள் ஞானசத்தி மூர்த்தியாய்ச் சத்தரென்னுந் திருநாமத்தையும் பஞ்சசத்தி களுடைய அம்சமாகிய சிவசாதாக்கியம் கர்மசாதாக்கியமென்னும் நிஷ்கள வடிவத்தை யும், ஈசானன் ஈஸ்வரன் பிரமன் சிவன் சதாசிவனென்னும் சகள வடிவத்தையுமுடை ய சகளாகளராகிய உத் யுக்தரென்னுந் திருநாமத்தையும், பஞ்சகிருத்திய மூர்த்தி யாய்ப் பிரவர்த்தரென்னுந் திருநாமத்தையும் உடைமையாற் சிவனென்றும், உயிர் கட்கு அனுக்கிரக மொன்றையே குறித்துப் பொதுவகையானறிந்தும் அறிவித்து நிற்பதுமாகிய தடையிலா ஞானமாய் (பாரசத்தியாய்) நின்று, பின்பரிபாக முண்டா மாறு தடை செய்யு ஞானமாய் (திரோதானமாய்) மலத்தை நீக்கிச் சிவத்தையளித்தற் கண்ணுளதாகிய இச்சையாய்,அதற்குச் செயக்கடவனவான உபாயங்களையெல்லாம் அறி யுமறிவாய் (ஞானமாய்) அவற்றை யவ்வாறே சங்கற்பித்துச் செய்யும் சங்கற்பமுமாய் (கிரியையாய்) நிற்றலாற் சத்தி என்றும் வழங்கு மிலக்கணங்களுடைய தென்பது தோன்ற சிவனொடு சத்தியென் றிரண்டாமெனவும், இம்முறையான் பேசரிய வுயிரை யெல்லாம் பெற்று நோக்கிப் பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித் திட்டுப் பின் அம்முத்தர்களாகிய அன்பருள்ளத்துச் சிவத்தொடுகலந்து அச்சிவமுந் தானும் அம்மையப்பனைப் பிரியாது நிற்குமியல்புடையதென்பது தோன்ற ஒருமை யுற்றிடு முமையவள் கம்பனைத் தழுவி எனவுங் கூறினார்.

இதனானே சுடரொளிப் பிழம்பாகிய பரசிவம் ஒரு கூற்றானே சத்தியுள் ளிருந்து சிவமாகியும்,ஒருகூற்றானே சிவத்துள்ளிருந்து சத்தியாகியும்,ஐந்தொழினடத் திப் பின் அடியவருள்ளத்து அச்சிவ சத்தி எனப் பிரிவுபடக் காட்டாது பிரிவற்ற பர சிவசொரூபமாகவே காட்டும் அற்புதக்கோலங்களையோண்டு விம்மிதமாகக் கூறியவா றென்க. இதனை "உடையாளுன்ற னடுவிருக்கு முடையாளடுவு ணீயிருத்தி, அடியே னடுவு ளிருவீரு மிருப்பது" எனவரும் உண்மைத் திருவாக்கானறிக. (ச)

இருமையோர்பொருளெண்ணிலவாதலுமெண்ணில்
பொருள்களோன்றெனத்திகழ்தலுமுடைத்ததுபுகலி

ஞெருசிவச்சுடர் பற்பலவடிவுகொண்டுறையு
மருவுபன்மறையொருதனிமாவெனவயங்கும்.

(இ - ள்) இருமை ஓர் பொருள் - பெருமை பொருந்திய ஒரு பொருள் எண்ணிலவாதலும் - அளவில்லனவாகப் பிரிதலும், எண்ணில் பொருள்கள் - அளவில்லாதனவாகிய பொருள்கள், ஒன்றென திகழ்தலும் உடைத்து - ஒருபொருளாக விளங்குதலுமுடையது, அதுபகலின் - அதனைவிரித்துக் கூறின், ஒருசிவச்சுடர் - சோதிவடிவாகிய சிவபெருமானொருவனே, பற்பல வடிவுகொண்டு உறையும் - பலபெயர் புனைந்த பல லிங்க வடிவங்களாகத் தோன்றும், மருவுபன்மறை - பல பொருள்கொண்டு பலவாக விரிந்திருக்கின்ற வேதம், ஒரு தனி மானை வயங்கும் - ஒப்பற்ற ஒரு மாமரமென விளங்கி நிற்கும். (எ - று)

ஒருபொருள் பலபொருளாதலும் பலபொருள் ஒரு பொருளாதலும் உடைத்தாய அற்புதத்தையும் காஞ்சிநகர முடைத்து, அதனை விரிக்கின் ஒரு சோதி லிங்கம் பலலிங்கவடிவமாகியும், பலவேதம் ஒரு மாமரமாகியும் விளங்கியதென்க. ஒருசிவச்சுடர் பற்பல வடிவுகொண்டுறையுமென்றதை "கச்சிப்பலதளியு மேகம்பத்துங் கயிலாய நாதனையே காணலாமே" எனவருந் திருவாக்கானறிக. (௫)

மற்றுமூன்றிடம்வேதிகைவயல்களு ற்றவிசு
பொற்றவைந்தருத்தடமறுபுட்களேழ்பொதியில்
பற்றுமெண்பொய்கையொன்பதுசிலைபொழில்பத்தாங்
கொற்றமன்றுபத்தோடொருகூவலுங்குலவும.

(இ - ள்.) மற்றும் மூன்றிடம் - மேற்கூறிய அற்புதங்களேயன்றி மூன்றிடமும், வேதிகை வயல்கள் நால் தவிசு பொற்ற ஐந்தரு தடம் அறுபுட்கள் ஏழ்பொதியில் பற்றும் எண்பொய்கை ஒன்பதுசிலை பொழில்பத்து ஆம் கொற்றமன்று பத்தொடு ஒருகூவலும் குலவும் - மூன்று திண்ணைகளும் மூன்று வயல்களும் நான்கு சிங்காதனங்களும் அழகிய ஐந்து விருக்கங்களும் ஐந்து தடாகங்களும் ஆறு பறவைகளும் ஏழு பொதுவிடங்களும் பொருந்திய எட்டுப் பொய்கைகளும் ஒன்பது கற்களும் ஒன்பது சோலைகளும் சிறந்த பத்து சபைகளும் பதினொரு கிணறுகளும் ஆகிய இவைகளெல்லாம் ஒவ்வோர் அற்புதங்களை யுடையனவாய் விளங்கும். (எ - று)

முன்னர்க் கூறிய அற்புதங்களே யன்றி மூன்றிட முதலாகத் தொகுத்துச் சொல்லப்பட்ட பன்னிரண்டு அற்புதங்களையு முடையது காஞ்சிநகரமென்க. (௬)

ஒன்றுபல்பவத்தாதையர்க்காட்டிடுமொளிசே
ரொன்றுபல்பவத்தாயரைவேண்டிறுகாட்டு
மொன்றுபல்பவகிளைஞரோடுரைபயில்விக்கு
மென்றுமூவகைத்தானமவ்விருநகருடைத்தால்.

(இ - ள்) ஒன்று பல்பவத் தாதையர் காட்டிடும் - (மேற்கூறிய மூன்றிடங்களில்) ஒன்று பலபிறவிகளிற் பெற்றெடுத்த தந்தையரைக்காண விரும்புவராயின் அவர்களைக்காட்டும், ஒளிசேர் ஒன்று - ஒளி பரப்பும் ஓரிடம், பல்பவத்தாயரை வேண்டுறின் காட்டும் - பல பிறவிகளிற் பெற்றெடுத்த தாயரைக் காண விரும்புவராயின் அவர்களைக் காட்டும், ஒன்று பல்பவக் கிளைஞரோடு உரை பயில்விக்கும் - மற்றோரிடம் பல பிறவிகளிற் கூடிய பந்துவர்க்கங்களோடு பேச விரும்புவாராயின் அவர்க

னோடு பேசவைக்கும், என்று மூவகைத்தானம் அவ்விருநகர் உடைத்து - என்று சொல்லப்பட்ட மூவகையிடங்களையும் அப்பெரிய காஞ்சி நகரமுடைத்து. (எ - று)

மேற்கூறிய மூன்றிடங்களில் ஓரிடம் தாதையையும் ஓரிடம் தாயையும் ஓரிடம் கிளைஞரையும் காண விரும்புவோர்க்கு அவ்வவரைக் காட்டுமென்க. இச் செய்யுள் இடம் மூன்றென்றதை வகுத்ததென்க (எ)

ஊங்கணைந்தவர்க்கமுதுநீருதவிடுமொன்று
பாங்கின்வேட்டனயாவையும்பயந்திடுமொன்று
மூங்கைபேசவும்பேசினேன்மூங்கமையுறவு
மாங்களிப்பதொன்றாகமுத்தெற்றியுமுளவால்.

(இ - ள்.) ஒன்று ஊங்கு அணைந்தவர்க்கு அமுதும் நீரும் உதவிடும் - (மேற் கூறிய வேதிகை மூன்றில்) ஒன்று தன்னை வந்தடைந்தவர்க்கு அன்னமும் நீருங்கொடுக்கும், ஒன்று பாங்கின் வேட்டனயாவையும் பயந்திடும்-ஒரு வேதிகை வேண்டுவனவாக விரும்பும் பல பொருளையுங் கொடுக்கும், ஒன்று மூங்கை பேசவும் பேசினோன் மூங்கமை உறவும் ஆங்கு அளிப்பது - ஒரு வேதிகை ஊமை பேசவும் பேசினவன் ஊமை யடையவுஞ் செய்யும், ஆக முத்தெற்றியும் உள - ஆகமூன்று தொழிலைச் செய்யத்தக்க மூன்று திண்ணைகள் அக்காஞ்சி நகரத்திலுள்ளன. (எ - று)

மேற்கூறிய மூன்று வேதிகைகளில் ஒன்று அமுதும் நீரும் உதவும், ஒன்று வேட்டனயாவையும் பயக்கும், ஒன்று பேசுதலையும் பேசாமையையுஞ் செய்யுமென்க. இச்செய்யுள் வேதிகை மூன்றென்றதை வகுத்ததென்க.

இவை முறையே தன்னை யடைந்தவரைப் புண்ணிய சொரூபிகளாக்கி அரம்பையர்களால் அவர் வேண்டுவனவாகிய ஆடை ஆபரணங்களாலும், அறுசுவையோடு கூடிய வுணவுகளாலும், நல்ல நீராலும் சயனாதி சுகங்களாலும் உபசரிக்கச் செய்யும்; அன்றியும் ஒன்று சித்தியையுடைய முத்தர்களைப்போல ஆகாயமார்க்கத்தில் உலாவ வேண்டுமென்றெண்ணினாலும் உலாவச்செய்யும், ஒன்று தன்னையடைந்தவரைக் காமரூபமுடையவராக்கி வேண்டியாங்குபோகங்களை யனுபவிக்கச்செய்து சிவானுக்கிரகம் பெற்ற முத்தர்களைப்போல் பற்றற்றவராகவே யுலாவச்செய்யும்,ஒன்று தன்னைக் கண்டமாத்திரத்தில் விருத்தை பாலையாவாள் பாலை விருத்தையாவாள், பாலன் விருத்தனாவான் விருத்தன் பாலனாவான். அன்றியும் அவ்வேதிகையொன்றிற் சிந்தாமணியினாற் செய்த பெண்பதுமை யொன்றுளது-அது அங்குநின் றெண்ணுவோரது எண்ணங்களையெல்லாம் எடுத்துக்கூறும். இவ்வாறுள்ள பலவற்புதங்களை அத்தெற்றிகளுடைத்தாகலான் அவற்றுட் சில காட்டாக அமுத நீ ருதவிடுமொன்று எனவும், மூங்கைபேசவும் பேசினோன் மூங்கமை யுறவு மளிப்பதொன் றெனவுங் கூறினார். (அ)

மீளமீளநெல்லரிதொறும்விளைவதோர்பழன
நாளின்வித்துமன்றேபயனல்குமோர்கழனி
தாளினேருழவின்றியேதகும்பயிர்விளைக்குங்
கோளதொன்றெனவயல்கண்மூன்றுள்ளனகுறிக்கில்.

(இ - ள்.) ஓர்பழனம் மீள மீள நெல் அரிதொறும் விளைவது - (மேற்கூறிய வயல்களில்) ஒருவயல் மறுத்து மறுத்துச் சாலிகை அறுக்குந்தோறும் விளைந்துகொண்டே இருக்கத்தக்கது, ஓர் கழனி வித்தும் நாளில் அன்றே பயன் நல்கும் - ஒருவயல் விதைத்த அந்நாளிலேயே பயனைக்கொடுக்கும், ஒன்று தாளின் ஏர் உழவின்றி தகும்

பயிர் விளைக்கும் கோளது என - ஒருவயல் உழுதல் முதலிய முயற்சியில்லாமலே தக்க பயிர்களை விளைவிக்குங் கொள்கையை யுடையது என்று, குறிக்கில் வயல்கள் மூன்றுள்ளன - கணிக்கில் (இவ்வாறு) மூன்று வயல்களுள்ளன. (எ - று)

மேற்கூறிய மூன்று வயல்களில் ஒன்றநெல்லறுக்குந் தோறும் விளைவதும், ஒன்று விதைத்தவன்றே பயன்றருவதும், ஒன்று உழவின்றியே விளைவது மாயிருக்கு மென்க. இச்செய்யுள் வயல்கள் மூன்றெனறதை வகுத்ததென்க.

வேதிகை மூன்றில் ஒன்று வீராட்டகாசமென்னுந் திருத்தளிக்குத் தெற்கி லுள்ளது. ஒன்று மேற்படி திருத்தளிக்குக் கிழக்கிலுள்ளது. ஒன்று காமாக்ஷி சந்நிதி யிலுள்ள பிலாகாசத்துக்குக் கிழக்கு, கைலாசநாதருக்கு மேற்கு, அபிராமீசருக்குத் தெற்கு, யக்ஷசரசுக்கு வடக்கு ஆகிய இந்நாற்பாங் கெல்லையிலுள்ளது. (கூ)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

தன்பகுப்பின்மூவரொடுமுனிவர்விண்ணோர்பழிச்சிடவாழ்சதுமுக னைக்காட்டுமொன்று, தன்பகுப்பின்மூவர்திருமுதலோர்சூழுந்திருமாலைச் சார்ந்தோர்க்குக்காட்டுமொன்று, தன்பகுப்பின்மூவரொடுகணங்கள்போ ற்றுந்தழற்காலருத்திரனைக்காட்டுமொன்று, தன்பகுப்பின்மூர்த்திகளோ டென்றாழ்காட்டுந்தவிசொன்றுமடங்கலணைநான்குமன்னும்.

(இ - ள்.) ஒன்று தன்பகுப்பின் மூவரொடு முனிவர் விண்ணோர் பழிச்சிட வாழ் சதுமுகனைக்காட்டும் - (சிங்காதன நான்கில்) ஒரு சிங்காதனந் (தன்னிடம் வந்தவர்களுக்குத்) தன் பகுப்பினராகிய மூவரோடு முனிவருந் தேவருந் துதிசெய்ய வீற் றிருக்கின்ற பிரமனைக்காட்டும், ஒன்று சார்ந்தோர்க்கு தன் பகுப்பில் மூவர் திருமுத லோர் சூழுந் திருமாலைக்காட்டும்-ஒரு சிங்காதனந் தன்னைச் சார்ந்தவர்க்குத் தன் பகுப் பினராகிய மூவரோடு இலக்குமி முதலானவர் சூழ்ந்திருக்குந் திருமாலைக்காட்டும்,ஒன்று தன் பகுப்பில் மூவரொடு கணங்கள் போற்றும் தழல் கால ருத்திரனை காட்டும் - ஒரு சிங்காதனந் தன்னைச் சார்ந்தவர்க்குத் தன் பகுப்பினராகிய மூவரோடு கணங்கள் வழி பட அக்னிச் சுவாலைவீசும் காலாக்கினி ருத்திரரைக்காட்டும், தவிசு ஒன்று தன்பகுப் பில் மூர்த்திகளோடு என்றாழ் காட்டும் - ஒரு சிங்காதனந் தன்னைச் சார்ந்தவர்க்குத் தன் பகுப்பினராகிய மூர்த்திகளோடு சூரிய மூர்த்தியைக்காட்டும், ஆக மடங்கல் அணை நான்கு மன்னும்-ஆக சிங்காதன நான்கும் (அக்காஞ்சியில்) நிலைபெற்றிருக்கும். (எ-று)

முன்னர்க்கூறிய நான்கு சிங்காதனங்களில் மூன்று மும்மைத் தேவரையும் ஒன்று சூரியமூர்த்தியையுங் காட்டுமென்க. இச்செய்யுள் சிங்காதன நான்கென்றதை வகுத்துக்கூறிய தென்க.

பிரமன் பகுப்பினர் மூவரென்றது - விராட்டு, காலன், புருஷன். திருமால் பகுப்பினர் மூவரென்றது - சங்கரிடணன், பிரத்யும்னன், அநிருத்தன். உருத்திரன் பகுப்பினர் மூவரென்றது-அரன், மிருடன், பவன். சூரியன் தன் பகுப்பின் மூர்த்திக ளென்றது - தண்டியாதிகள், தீப்திமுதலிய நவசத்திகள், அங்க மூர்த்திகளான நவக் கிரகாதிகள். பிரமன் முதலியவருக்குக் கூறிய பகுப்பினரெல்லாம் அவரவர்க்குரிய வியூகரென்றறிக. இவ்வியூகரெல்லாந் தத்தமக்குரிய தலைவரிடத்து ஆக்கல் காத்தல் அழித்தலாகிய அதிகாரம் பெற்றவரென்க. எனவே இறைவன் தன்றொழிலாகிய ஆக்கல் முதலியவற்றைப் பிரமன் முதலியோரிடம் தன்னாணை வைத்தியற்றல்போல அவரவ ரடிப்பட்டோரிடத்து அவரவ ராணைவைத்தியற்றல் வழக்கெனக்கொள்க.(கல)

ஓவாமையமிழ்தொழுக்கும்பொலம்பூச்சூதந்தன்னிழலைப்பிறர்க்கு
தவாக்காஞ்சியொன்று, பூவாதுகாயாதுகனிகளைக்குமபூம்புளிபல்வகைப்
போதுந்தருமதூகந், தாவாதசெம்பொன்மலரத்தியெனச்சாற்றியதெய்
வதமாந்தருக்களைந்துந், தேவாதிதேவரினிதமருங்காஞ்சிநகரினிலற்பு
தந்திகழவோங்கும்.

(இ - ள்) ஓவாமை அமிழ்து ஒழுக்கும் பொலம்பூச் சூதம் - நீங்காமல் அமிழ்தை வாக்கும் பொன்போல் மலர்ந்த மலர்களையுடைய மாவிருக்க (மொன்று,) தன் நிழலை பிறர்க்கு உதவாத காஞ்சி ஒன்று - தன்னிழலைப் பிறர்க்குச்செய்யாத காஞ்சி விருக்க (மொன்று,) பூவாது காயாது கனிகள் நல்கும் பூம்புளி - பூவாமலும் காய்க்காமலும் பழங் கொடுக்கும் அழகிய புளிய (மரமொன்று,) பல்வகை போதும் தரும மதூகம் - பலவகை மலர்களையுந்தரும் இலுப்ப (மரமொன்று,) தாவாத செம்பொன் மலர் அத்தி - கெடாத பொன்போல் மலர்ந்த மலர்களையுடைய அத்திமர (மொன்று,) என்று சாற்றிய தெய்வதமாம் தருக்கள் ஐந்தும் - என்று சொல்லுதற்கரிய தெய்வத்தன்மை பொருந்திய ஐந்து விருக்கங்களும், தேவாதி தேவர் இனிது அமரும் காஞ்சி நகரில் - தேவர்களுக்கெல்லாந் தேவாகிய இறைவர் இனிமையாக வீற்றிருக்குங் காஞ்சி நகரத்தில், அற்புதம் திகழ ஓங்கும் - கண்டோர்க்கு அதிசய முண்டாக வளர்ந்தோங்கும். (எ - று.)

முன்னர்க்கூறிய ஐந்தருக்களாவன - மா, காஞ்சி, புளி, இலுப்பை, அத்தி யாமென்க. இவை காஞ்சி நகரத்தில் கண்டோரதிசயிப்ப வளர்ந்திருக்குமென்க.

மா - தேன்மாரி நீங்காது பொழிவது. அத்தேனைப் பருகினோர் தேவத்துவத்தை யடைவார். காஞ்சி - தந்நிழலைத் தன்னுள்ளொடுக்கி நிற்பது. புளி-பூவாமலும் காயாமலும் எக்காலத்திலும் பழந்தருவது. இப்பழத்தை யுண்போர் காயசித்தியைப் பெறுவர். இலுப்பை - பலவகை மரங்களின் மலர்களெல்லாம் மலர்வது - அம்மலரை முகர்ந்தவர் காமரூபத்தையடைவர். அத்தி-பொன்மலரைத் தருவது. அம்மலர்த்தேனைப் பருகினோர் பொன்னிறத்தை யடைவர். என்று - எண்ணிடைச்சொல்.

இச்செய்யுள் தருக்களைந்தென்றதை வகுத்துக்கூறியதென்க. (௫௭)

எல்லியிடைப்பங்கயமும்பகற்காலத்திலிருஞ்செழுங்குமுதப்போது
மலர்ந்துதீந்தேன், பில்குவதொன்றொருகாம்பின்முளரிமூன்றாய்ப்பிறங்குபு
னற்றடமொன்றுகுளித்தோர்மெய்த்த, வல்லைவானரத்துருவமளிப்பதொன்
றாழ்கின்றோர்மாற்றார்க்குக்கொடியதீமை, நல்குவதொன்றடியுற்றோர்
க்கின்பநலந்தருவதொன்றெனவைந்தடாகமுண்டே.

(இ - ள்.) எல்லியிடை பங்கயமும் - இரவில் தாமரைமலரும், பகல் காலத்தில் இரும் செழும் குமுதப்போதும் - பகற்போதில் சிறந்த செழுமையாகிய நீலமலரும், மலர்ந்து தீம் தேன் பில்குவது ஒன்று - விகசித்து இனிய தேனைச் சிந்துவதாகிய தடாகமொன்று, ஒரு காம்பில் முளரி மூன்று பிறங்கு புனல் தடம் ஒன்று - ஒருநாளத்தில் மூன்று தாமரைமலர் மலர்ந்து விளங்குதலையுடைய தடாகமொன்று, குளித்தோர் வானரத்துருவம் வல்லை எய்த அளிப்பது ஒன்று - மூழ்கினவர் வானரவடிவத்தை அக்கணமே யடையத்தருவதாகிய தடாகமொன்று, ஆழ்கின்றோர் மாற்றார்க்கு கொடிய தீமை நல்குவது ஒன்று - நீராடினவருடைய பகைவர்களுக்குப் பெரிய தீமையைத் தருவதாகிய தடாகமொன்று, அடியுற்றோர் உற்றார்க்கு இன்பநலம் தருவது ஒன்று - ஸ்நானஞ்செ

செய்தவர்களுடைய சுற்றத்தாருக்கு இன்பசுகத்தைத் தருவதாகிய தடாகமொன்று, என்னலாம் தடாகம் ஐந்து-என்று சொல்லத் தக்கதாகிய தடாகம் ஐந்தாகும் (எ - று.)

முன்னர்க் கூறிய தடாகம் ஐந்தனுள் ஒன்றில் பகலில் மலரத்தக்க தாமரை இரவிலும் இரவில் மலரத்தக்க நீலோற்பலம் பகலிலும் மலரும். ஒன்றில் ஒருநாளத்தில் மூன்று தாமரை மலரும். ஒன்றில் நீராடினவர்கள் வானரவடிவத்தையடையவர் ஒன்றில் நீராடினவர்களின் பகைவர் துன்பத்தையடைவர், ஒன்றில் குளித்தவருடைய சுற்றத்தார் சுகத்தையடைவர். இவ்வற்புதங்களை யுடையனவாய் விளங்கு மென்க.

இவற்றுள் ஒருநாளத்தில் மூன்று தாமரை மலருமென்றது - காலைப்போதில் பொன்மயமான மலரும், நடுப்பகற் போதில் வெள்ளி மயமானமலரும், அந்திப்போதில் சிந்துர மயமான மலரும் மலரும் வியப்பிற்றென்க.

இச்செய்யுள் தடாகமைந்தென்றதை வகுத்துக்கூறியதென்க. (கஉ.)

பெய்யாதகாலத்தினகவிக்கொண்மூவருவிக்குமபெருமஞ்ஞையுமறை நூலெல்லா, மெய்யாமையின்றியுணர்கிள்ளையேனைக்கணித நூலனைத்து மெடுத்துரைக்குமாந்தை, நையாதுமுழுதுணர்ந்தகபோதம்பாடுநல்லிசை நூலவைவல்லநலஞ்சேர்பூவை, பொய்யாதுவெட்டவெலாம்விழுங்குநேமிப் புள்ளுமெனவறுபறவைபொருந்துமாங்கண்.

(இ - ள்.) பெய்யாதகாலத்தில் அகவி கொண்மூ வருவிக்கும் பெருமஞ்ஞை (ஆறுபறவைகளில்) மழைபெய்யாத காலத்தில் கலாபத்தை விரித்தாடி மேகங்களை வருவிக்கும் பெரிய மயூரமும், மறைநூலெல்லாம் எய்யாமையின்றி யுணர்கிள்ளை - வேதமுதலிய நூல்களெல்லா மறந்துபோதலின்றி யுணருங் கிளிப்பிள்ளையும், ஏனை கணிதநூல் எனைத்தும் எடுத்துரைக்கும் ஆந்தை - மற்றுள்ள கணிதநூல் முதலிய அங்கங்களையெல்லாம் விரிவாகச்சொல்லும் ஆந்தையும், நையாது முழுதுணர்ந்த பாடும் கபோதம்-சோதிடநூலைத்தவறாது சொல்லும் புறவும், நல்லிசை நூலவை வல்ல நலம் சேர் பூவை-நல்ல இசைநூல்களைப்பாடுதலில் வன்மையுள்ள அழகிய நாகணவாய்ப்புள்ளும், பொய்யாது வெட்ட எல்லாம் விழுங்கும் நேமிப்புள்ளும் என அறுபறவை - இல்லையென்றது வேண்டுவனவெல்லாங் கொடுக்குஞ் சக்கரவாகப்பறவையுமென்று சொல்லப்பட்ட அறுவகைப் பறவைகளும், ஆங்கண் பொருந்தும் - அக்காஞ்சி நகரத்தில் உலாவிக்கொண்டிருக்கும். (எ - று)

முன்னர்க்கூறிய பறவையாறனுள் மயில் மழையைப்பெய்யாக்காலத்தில் பெய்யச்செய்யும்,கிளி வேதமுதலிய நூல்களையோதும், ஆந்தை கணிதநூல் முதலியவற்றைச்சொல்லும், புறவு சோதிடநூலைச்சொல்லும். நாகணவாய்ப்பறவை நல்லிசைபாடும். சக்கரவாகம் வேண்டுவனவற்றைக் கொடுக்குமென்க.

சோதிடநூல் திதிவாரமுதலிய வற்றையும்,காலமுதலியவேற்றுமைகளையும் காட்டுவதாகலான் அதனை முழுதுணர்ந்த என்றார்.

இவற்றுள் கிளி கோவிந்தபாடி என்னுந்திருப்பதியில் தக்ஷிணாமூர்த்தியினிடத்தில் பாடங் கேட்பவராகிய முனிவருட னிருந்து கேட்பதாகலான் மறைநூலெல்லா மெய்யாமையின்றி யுணர்கிள்ளை என்றார். புறவும் நாகணவாய்ப் புள்ளும் ஏகம்பவாணர் வீற்றிருக்கு மாமரத்துக்கு வடபிடங்களில் உலாவிக்கொண்டிருக்கும். சக்கரவாகப்பறவை வீராட்டகாசப் இறைவாத்தானமுதலிய திருப்பதிகள் சூழ்ந்த சங்

கர தீர்த்தத்தில் உலாவிக்கொண்டிருக்கும். அந்தை மேசநாபுரம் (யாசரல்) என்னும் திருப்பதிக்கருகில் வசிக்கும்.

இச்செய்யுள் புட்களாறென்றதை வகுத்துக் கூறியதென்க. (கூ)

வானுடர்வார்த்தைசெவிப்புலனுமொன்றின்மதகரியைமுயலூக்கித்
தூரக்குமொன்றின், மேனுலகுவிழிப்புலனுமொன்றின்மேவினர்க்குத்தி
சைமயக்கமெய்துமொன்றிற், கானாரநெய்யின்றிவிளக்கெரியுமொன்றிற்
பாதலத்தோர்கழறுமொழிகேட்குமொன்றி, லானதுந்துபிகண்முழங்கு
மொன்றிலாகவேழ்பொதுத்தானம்வயங்குமாலோ.

(இ - ள்.) ஒன்றில் வானுடர் வார்த்தை செவிப்புலனும் - (பொதுத்தானம் ஏழென்றவற்றுள்) ஒருபொதுவில் தேவர்கள் வசனிக்கும் வார்த்தை செவிப்புலனுக்கறியவரும், ஒன்றில் மதகரியை முயல் ஊக்கி துரக்கும்-ஒருபொதுவில் மதத்த யானையை முயல் எதிர்த்துத் துரத்தும், ஒன்றில் மேல் நாகர் உலகு விழிப்புலனும் - ஒருபொதுவில் மேலுள்ள தேவலோகம் கட்புலனுக்குத் தெரியவரும், ஒன்றில் மேவினர்க்கு திசைமயக்கம் எய்தும் - ஒருபொதுவில் அடைந்தவர்களுக்குத் திசைமயக்கம் உண்டாகும், ஒன்றில் கான் ஆர் நெய் இன்றி விளக்கு எரியும் - ஒருபொதுவில் நறுமணங்கமழும் நெய்யில்லாமல் தீபமெரியும், ஒன்றில் பாதலத்தோர் கழறு மொழிகேட்கும் ஒருபொதுவில் பாதலத்திலுள்ளோர் பேசுஞ் சொற்கேட்கும், ஒன்றில் ஆனது துந்துபிகள் முழங்கும் - ஒருபொதுவில் ஒழிவின்றி தேவவாச்சியங்கள் முழங்கிக்கொண்டிருக்கும், ஆக ஏழ்பொதுத்தானம் வயங்கும் - இவ்வகையாக ஏழுபொதுத்தானம் காஞ்சியில் விளங்கிக் கொண்டிருக்கும். (எ - று.)

முன்னர்க் கூறிய பொதுத்தானம் ஏழில் சென்றால் தேவர் மொழிகேட்பதும், யானையை முயல் துரத்துவதும், தேவருலகைக் கட்புலனுக்கறியச் செய்வதும், அடைந்தோர்க்குத திசைமயக்கஞ் செய்வதும், நெய்யின்றி விளக்கெரிவதும், பாதலத்தோர் மொழிகேட்பதும் துந்துபிகள் முழக்குவதுமாக ஒவ்வொன்று விளங்குமென்க.

இச்செய்யுள் பொதுத்தானம் ஏழென்றதை வகுத்துக் கூறியதென்க. (௭௦)

மூழ்குநர்க்குப்பொன்னுருவமளிக்குமொன்றுமுழுமணியேர்தரு
மொன்றுவிண்ணோர்கோமான், வாழ்வளிக்குமொன்றுமனக்கினியவெல்
லாந்தருமொன்றுவேண்டியவைவழங்குமொன்று, வீழ்தகைத்தாமெய்ஞ்
ஞானமளிக்குமொன்றுவீடுதவுமொன்றுவினைப்பிணிநோய்முற்றும், பாழ்
படுத்துமொன்றென்னமலங்கண்மாற்றும்பணிமலர்ப்பூம் பொய்கையிரு
நான்குமேவும்.

(இ - ள்.) ஒன்று மூழ்குனர்க்கு பொன் உருவம் அளிக்கும் - (பொய்கை எட்டென்றவற்றுள்) ஒருபொய்கை மூழ்குவார்க்குப் பொன்னுருவத்தைக் கொடுக்கும், ஒன்று முழுமணி ஏர்தரும் - ஒருபொய்கை சிறந்த மாணிக்கமேனியைத் தரும், ஒன்று விண்ணோர் கோமான் வாழ்வளிக்கும் - ஒருபொய்கை இந்திரனுக்குரிய போகத்தைக் கொடுக்கும், ஒன்று மனக்கு இனியவை எல்லாந் தரும், ஒன்று மனதுக்கு இன்பமானவை யெல்லாம் கொடுக்கும், ஒன்று வேண்டியவை வழங்கும் - ஒருபொய்கை (மனோவாக்குக்காயங்களுக்கு) வேண்டியவைகளை யெல்லாந் தரும், ஒன்று வீழ்தகைத்தாம் மெய்ஞ்ஞானம் அளிக்கும் - ஒரு பொய்கை விரும்பத்தக்க மெய்ஞ்ஞானத்தைக் கொடுக்

குளிர், ஒன்று வீடு உதவும் - ஒரு பொய்கை முத்தியைக்கொடுக்கும்,ஒன்று வினை பிணி நோய் முற்றும் பாழ்படுத்தும் - ஒருபொய்கை வினைகளையும் பிணிகளையும் நோய்களையும் பாழ்படுத்தும், என்ன மலங்கள் மாற்றும் பனிமலர்ப்பூம்பொய்கை இருநான்கு மேவும் - என்று சொல்லப்பட்ட பாவங்களைப்போக்கும் குளிர்ச்சிபொருந்திய எட்டுத் தாமரைத் தடாகங்கள் பொருந்தியிருக்கும். (எ - று.)

மேற்கூறிய பொய்கை எட்டனுள் பொன்னுருவ மளிப்பதொன்று, மணியோனும் அழகளிப்பதொன்று, இந்திர போகந்தருவதொன்று, மனைக்கின்பமானவையெல்லாந் தருவதொன்று, வேண்டுவனவற்றைத் தருவதொன்று, மெய்ஞ்ஞானந் தருவதொன்று, முத்திகொடுப்பதொன்று, நோய் முதலியவற்றைப் போக்குவதொன்று மாகவிளங்குமென்க. இச்செய்யுள் பொய்கை எட்டென்றதனை வகுத்துக் கூறியதென்க.

ஏனைய வுருவங்களிற் சிறந்தது பொன்னுருவமும், அதனிற் சிறந்தது மணியுமாதலாற் பொன்னுருவம், முழுமணியோர் தருமெனவும், போகங்களிற்சிறந்தது இந்திர போகமாதலால்விண்ணோர்கோமான்வாழ்வெனவும், அப்போகங்களை மனவாக்குக்காயங்களாரவனுபவிக்கப்பெறுதல் சிறப்பாதலால் மனக்கினியவெலாம்வேண்டியதெனவும், இவைநுகர்ந்தொழிந்தவழி விரும்புவது மெய்ஞ்ஞானமேயாதலால் வீழ்தகைத்தா மெய்ஞ்ஞானமெனவும், அதன் பயன் முத்தியாதலால் வீடுதவுமெனவும், முறையே போகத்தையும் ஞானத்தையும் முத்தியையும் அடையப்பெற்றார்க்கு மும்மலமும் நீங்குமாகலான் வினைப்பிணி நோய்முற்றும் பாழ்படுத்தும் மலங்கண் மாற்றுமெனவுங் கூறினார். "வினை பிணி நோய்" எனக் காரணத்தை காரியமாகவுபசரித்தார். எனவே இம்மூன்றும் மும்மலங்களைக் குறித்ததாமென்க. உருவம், போகம் மற்றும் வேண்டுவன யாவும் முறையா னொருங்கே யனுபவித்தொழிந்தால் மும்மலமு நீங்குமாகலான் மலங்கண் மாற்று மொருகல்லென்று ஏனையவற்றைக் கூறியதுபோல் வேறு கூறாது வினைப்பிணிநோய் முற்றும் பாழ்படுத்து மொன்றென்ன மலங்கண் மாற்றுமென்றார். (௧௫)

தீண்டினனைத்தேவாக்குமொருகல்பாம்பின் கடிவிடந்தீர்த்திடுமொருகல்சித்தியெலா, மாண்டளிக்குமொருகலுயிருதவுமோர்கல்வழக்கனைத்துநடுவாய்நின்றறுக்குமோர்கல், மூண்டபிணித்தழும்புறுபுண்மாற்றுமோர்கன்மெய்யொளிமெய்த்துணியுறுப்பைப்பொருத்துமோர்க, லீண்டியதீவினையிரிக்குமோர்கன்ஞானந்தருமொருகலெனச் சிலைகளொன்பதோங்கும்.

(இ - ள்) ஒருகல் தீண்டினனைத் தேவாக்கும் - (சிலைஒன்பது என்றவற்றுள்) ஒருசிலை தன்னைத் தீண்டினவனைத் தேவர்களாக்கும், ஒருகல் பாம்பின் கடிவிடம் தீர்த்திடும் - ஒரு சிலை பாம்பினால் கடியுண்டவிடத்தை நீக்கும், ஒருகல் சித்தி எல்லாம் ஆண்டு அளிக்கும் - ஒருசிலை அட்டமாசித்திகளையும் அப்பொழுதே கொடுக்கும், ஓர் கல் உயிர் உதவும் - ஒருசிலை இறந்தவர்களுக்கு உயிரைக்கொடுக்கும், ஓர் கல்வழக்கு அனைத்தும் நடுவாய்நின்று அறுக்கும் - ஒருசிலை வழக்குகளையெல்லா நடுநிலையாய் நின்று சிககறுக்கும், ஓர்கல் மூண்டபிணி தழும்புறு புண்மாற்றும்-ஒருசிலை மேலிட்ட வியாதியாகிய தழும்புபொருந்திய குட்டரோக முதலிய கொடிய பிணிகளைப்போக்கும், ஓர்கல் மெய் ஒளி மெய்துணி உறுப்பை பொருத்தும் - ஒருசிலை நெருங்கிய ஒளியையுடைய உடலினின்ற மறுபட்ட உறுப்புக்களை முன்போல் பொருந்தச்செய்யும், ஓர்கல் ஈண்டிய தீவினை இரிக்கும் - ஒருசிலை பிறவிகடோறு மீட்டப்பட்டபாவங்களைப்போக்கும், ஒருகல் ஞானந்தரும் - ஒருசிலை ஞானத்தைக்கொடுக்கும், என

சிலைகள் ஒன்பது ஓங்கும் - என்று சொல்லப்பட்ட சிலைகள் ஒன்பதும் காஞ்சியில் சிறப்புற்றிருக்கும். (எ - று.)

மேற்கூறிய சிலையொன்பதில் தேவராக்குதலொன்றும், விடத்தைத் தீர்ப்பதொன்றும், சித்திகளைத் தருவதொன்றும், உயிரைக் கொடுப்பதொன்றும், மூப்பைத் தீர்ப்பதொன்றும், பிணியைத் தீர்ப்பதொன்றும், அறுபட்ட உறுப்புக்களைப் பொருத்துவதொன்றும், சஞ்சிதவினைகளைப் போக்குவதொன்றும், ஞானத்தைக் கொடுப்பதொன்றுமாக விளங்குமென்க. இச்செய்யுள் சிலை ஒன்பது என்றதை வகுத்துக்கூறியது.

பிணித்தழும்புறு புண்மாற்றுவதை விசல்யகரணி எனவும், மெய்த்துணிபுறுப்பைப் பொறுத்துவதை சந்தானகரணி எனவுங் கூறுவர். (கக)

ஒன்றினோர்பெறக்கனகமாரியொன்றிலிரசதமாமழையொன்றின்
முத்துமாரி, யொன்றிலொளிர்குருவிந்தமாரியொன்றில்வயிரமழையொன்
றில்வையிடூரியமாரி, யொன்றிலொளிவிடும்புருடராகமாரியொன்றிலடற்புள்
ளேற்றுப்பசசைமாரி, யொன்றினிலிந்திரநீலமாரியொன்றிற்பொழியுமல
ர்ப்பொழிலிவையோரொன்பதோங்கும்.

(இ - ள்.) ஒன்றில் ஒன்றினோர் பெற கனகமாரி - (பொழில்பத்தென்பவற்றுள்)ஒருபொழிலில் தன்னை அடைந்தவர்கள் பெறும்வகையாகப் பொன்மழையையும், ஒன்றில் இரசதமாமழை - ஒரு பொழிலில் வெள்ளிமழையையும், ஒன்றில் முத்து மாரி - ஒருபொழிலில் முத்துமழையையும், ஒன்றில் ஒளிர் குருவிந்த மாரி-ஒருபொழிலில் ஒளிவிடும் குருவிந்தமழையையும், ஒன்றில் வயிரமழை - ஒருபொழிலில் வயிரமழையையும், ஒன்றில் வைடூரியமாரி - ஒருபொழில் வைடூரியமழையும், ஒன்றில் ஒளிவிடும் புருடராகமாரி - ஒருபொழிலில் புருடராகமழையும்,ஒன்றில் அடற்புள்ளேறு பச்சைமாரி-ஒருபொழிலில் வன்மைமிக்க கருடப்பச்சைமழையையும், ஒன்றினில் இந்திர நீலமாரி-ஒருபொழிலில் இந்திரநீலமழையையும், ஒன்றில் பொழியும் மலர்ப்பொழில் - ஒருபொழில் பொழிகின்ற மலர்மழையையும், இவை ஓர் ஒன்பது ஓங்கும்-ஆகிய மழைகளைப் பெய்தலையுடைய இவ்வொன்பதுபொழில்களும் காஞ்சியில் சிறந்திருக்கும். (எ - று.)

மேற்கூறிய பொழிலொன்பதும் பொன் வெள்ளி முத்து குருவிந்தம் வயிரம் வைடூரியம் புருடராகம் பச்சை இந்திரநீலம் மலர் ஆகிய வொன்பதையுந் தன்னை யடைந்தவர்களுக்கு மழைபோலத் தருமென்க. இச்செய்யுள் பொழிலொன்பதென்றதை வகுத்துக்கூறியதென்க. (கஎ)

சொல்லருமாபாவியுறின்மூங்கையாக்குஞ்சோரர்களைமருளுறுத்து
ங்கல்விதேற்றும், பல்வகையவடிவுதவுஞ்சாவாமேன்மைபாலிக்குமபாதல
ஞ்சேர்பிலத்தைக்காட்டும், வல்லவர்க்குந்திசைமயக்கும்பொன்மாணிக்க
மழைபெய்யும்பகலிரவுமாறுக்காட்டுஞ், செல்லுநரைப்பிறர்காணுவியப்புச்
செய்யுமிவைமன்றமொருபதெனத்திகழுமாலோ.

(இ - ள்.) சொல்லரு (மாபாவியுறின்) - மன்று பத்தென்பவற்றுள் (ஒரு சபை) சொல்வதற்கியலாத மாபாதகன் வருவானாயின், மூங்கை ஆக்கும்-அவனை ஊமையாக்கும்,சோரர்களை மருள்உறுத்தும்-(ஒரு சபை) கள்ளர்களை மயங்கச்செய்யும், கல்வி தேற்றும் - (ஒரு சபை) நூல்களை விளக்கமாகத் தெளியச்செய்யும், பல்வகைய வடிவுதவும் - (ஒரு சபை) பலவகைப்பட்ட வடிவங்களைத்தரும், சாவாமேன்மை பாலிக்கும் - (ஒரு சபை) இறவாதிருக்கின்ற மேன்மையைக்கொடுக்கும், பாதலஞ்சேர் பிலத்தைக்

காட்டிடு - (ஒருசபை) பாதாளத்தைச்சேரும்படியான பிலத்துவாரத்தைக்காட்டும், எல்லவர்க்கும் திசைமயக்கும் - (ஒரு சபை) மயங்காத வன்மையாளர்க்கும் திசைமயக்கம் உண்டாக்கும், பொன்மாணிக்கமழை பொழியும் - (ஒரு சபை) பொன்மழையையும் மாணிக்கமழையையும் பெய்யும், பகல் இரவு மாறுக காட்டும்-ஒரு சபை பகலை இரவாகவும் இரவைப் பகலாகவும் மாறிக்காட்டும்,செல்லுநரைப் பிறர் காணாத வியப்புச்செய்யும் - (ஒரு சபை) நடக்கின்றவர்களைப் பிறரறியாத வியப்பினைச்செய்யும், இவை மன்றம் ஒருபத்து என திகழும் - இவ்வாறு செய்கின்ற சபை பத்தென்று சொல்லக் (காஞ்சியில்) விளங்கும். (எ - று.)

மேற்கூறிய மன்றம் பத்தில் ஒன்று ஊமையாக்கும், ஒன்று புத்தியை மயக்கும், ஒன்று கல்வி தெளிவிக்கும், ஒன்று நினைத்த பல்வடிவங்களைத்தரும், ஒன்று சாவாதமேன்மையைக்கொடுக்கும், ஒன்று பாதலத்துக்குச்செல்லும் வழியைக்காட்டும், ஒன்று திசைமயக்கும், ஒன்று பொன்மணிகளை மழையாகப்பொழியும், ஒன்று பகலிரவை மாறிக்காட்டும், ஒன்று நடக்கின்றவரை பிறரறியாவண்ணஞ் செய்யுமென்க.

இச்செய்யுள் மன்றம் பத்தென்பதை வகுத்துக்கூறியதென்க. (கஅ)

தயிர்க்கூவல்பாற்கூவனறுநெய்க்கூவன்மதுக்கூவல்செழுங்கருப்புச்
சாற்றுக்கூவன், மயக்கமறமுத்திநெறிதுறக்கமாரக்கமற்றுலகின்கதிகாட்
டும்மும்மைக்கூவல், வியப்பெய்தநிழல்பிணிக்குங்கூவல்பாரின்வித்தின்றிநா
றுசெயும்விரிநீர்க்கூவ, லயர்ப்பின்றியங்கணைந்தோர்மீளச்செய்யுமருங்கூவ
லொடுங்கூவல்பதினொன்றுமால்.

(இ - ள்.) தயிர்க்கூவல் - (மேற்கூறிய பதினொரு கூவலுள்) (ஒன்று) தயிர்க்கிணறு, பால்கூவல் - (ஒன்று) பாற்கிணறு, நறுநெய் கூவல்-(ஒன்று)நறுமணங்கமழும் நெய்க்கிணறு, மது கூவல்-(ஒன்று)தேன்கிணறு,செழுங் கருப்புச்சாறு கூவல்-(ஒன்று) செழுமையாகிய கருப்புச்சாற்றுக்கிணறு, மயக்கம் அற முத்திநெறி துறக்க மார்க்கம் மற்றுலகில் கதிகாட்டும் மும்மைக்கூவல் - மாயாமயக்கம் நீங்க முத்திநெறியைக் காட்டுவதும் சுவர்க்கநெறியைக் காட்டும் ஏனைய வுலகங்களிலுள்ள பதங்களைக் காட்டுவதுமாகிய கிணறு மூன்று,வியப்பெய்த நிழல் பிணிக்குங் கூவல் - ஒன்று யாவரும் அதிசயிக்கும்படி தன்னை எட்டிப்பார்த்தோர் நிழலை மறைக்குங் கிணறு, பாரில் வித்தின்றி நாறுசெயும் விரிநீர்க்கூவல்-ஒன்று விளைநிலத்தில் வித்தில்லாமல்விளைவுசெய்யும் விரிந்த நீரையுடையகிணறு, அயர்பபின்றி அங்கணைந்தோர் மீளச்செய்யும் அருங்கூவலொடும் பதினொன்றும் - ஒன்று விரைந்து வந்தவர்களை மீண்டு போகச்செய்யும் அருமையான கிணறுஆகப் பதினொன்றும். (எ - று)

மேற்கூறிய கூவல் பதினொன்றில் ஒன்று பால், ஒன்று தயிர், ஒன்று, நெய், ஒன்று தேன், ஒன்று கருப்பஞ்சாறு, ஒன்று முத்திநெறியைக்காட்டுவது, ஒன்று சுவர்க்கநெறியைக்காட்டுவது, ஒன்று ஏனைய பதங்களைக்காட்டுவது, ஒன்று கண்டோர்நிழலை மறைப்பது, ஒன்று அணைந்தோரை மீளச்செய்வதாகிய பதினொருகிணற்றை அக்காஞ்சிநகரமுடையதென்க.

இச்செய்யுள் கூவல் பதினொன்றென்பதை வகுத்துக்கூறியதென்க. (கக)

தன்னிடையெள்ளினைப்பெய்யின்மற்றோர்நூறாங்கர்த்தயிலமெழச்
செய்வதொருசெக்குமுண்டு, மன்னுயிர்செய்வினைப்பயனைத்தாமேநல்கு
ஞ்சிலையொன்றுசிலைப்பாவையொன்றுமன்னும், கன்னிமதிற்காஞ்சிநகர்க்கு.

வும், இதுவுஞ் சிவலோகம்போல் முத்திநகரமென்பார் மேலுலகின் வைத்தவண்ண மெனவும், இங்குள்ளாரு முத்தர்களேயாமென்பார் காஞ்சிவரைப்பின் வாழ்வாரகங் களிப்ப எனவும், இறைவனருள்பெற்ற முத்தர்கள் எல்லாப்போகங்களையுங் கண்டு கழித்தற்கும் அவையிற்றில் தாங்கற்றிருக்குந்தன்மை வெளிப்படுத்தற்குமேயாமென் பார் கண்ணுதலாரமைத்தவாகு மெனவுங் கூறினர். (உ௧)

இங்குரைத்தமேன்மையெலாங்கண்டுங்கேட்டுமிந்நகரிற்கொடுந்தீ மையிழைப்பாராயி, னங்கவரேகயவரெனப்படுவரந்தோவறிவின்றியறியா தும்செய்தபாவப், பங்கமெலாமொழிவெய்துமறிந்துசெய்யிற்பாற்றரிதா மாதலினாற்பயனும்வேண்டி, யுங்குறைவோர்தத்தமக்குவிதித்தவாற்றானொ ழுகியேகம்பரருட்குரியராவர்.

(இ - ள்.) இங்கு உரைத்த மேன்மை எல்லாம் கண்டும் கேட்டும் - இவ்விடத் திலுள்ளனவென்று சொல்லிய மகிமைகளெல்லாம் காண்டலைக்கண்டுங் காதாரக்கேட் டும், இந்நகரில் கொடுந்தீமை இழைப்பாராயின் - இந் நகரத்தினும் பாவஞ்செய்வார்க ளானால், அங்கவரே கயவர் எனப்படுவர் - அவர்களே கீழ்மக்கள் (மூடர்கள்) என்று சொல்லப்படுவார்கள், அறிவு இன்றி அறியா செய்த பாவ பங்கமெலாமும் ஒழிவு எய் தும் - அறியுமறிவென்பதின்றித் தெரியாதுசெய்த பாவமெல்லாமு நீங்கும், அறிந்து செய்யில் பாற்றரிதாம் - அறிந்து செய்வார்களாயின் நீக்குவதரிதாகும், ஆதலின்-ஆகை யால், நாற்பயனும் வேண்டி உங்கு உறைவோர் - அறம்பொருளின்பம் வீடாகிய நால் வகைப்பிரயோசனங்களை யடையவேண்டுமென்று அந்நகரில் வசிக்கின்றவர்கள், தத் தமக்கு விதித்தவ ஆற்றால் ஒழுகி ஏகம்பர் அருட்கு உரியராவர் - தங்கடங்கள் வருணாச் சிரம தருமங்களின் வழியே யொழுகி திருவேகம்பநாதருடைய திருவருளுக் குரிய ராகக் கடவர். (எ - று.)

இவ்விடத்துக் கூறியவைகளைக் கண்டும் கேட்டும் இந்நகரத்தில் தீமை செய்பவரையே மூடரென்று சொல்லப்படுவர்; அறிவின்றித் தெரியாது செய்த தீமை நீங்கும், தெரிந்து செய்தவை நீங்குவதரிதாகலின் நாற்பயனையும் வேண்டி யக் காஞ்சியில் வசிப்போர் தத்தமக்கு விதித்த வழியே நடந்து திருவேகம்பநாதர் திருவரு ளுக்குரியராவரென்க.

புண்ணியக்ஷேத்திரங்களில் இயல்பாகவே வசிக்கின்றவரும் வசிக்க விரும்பு வோரும் முன்னர் நூலாராய்ச்சியும் அவ்வாராய்ச்சியினளவே கேள்வியுமுடையரா யிருத்தல் வேண்டுமென்பார் கண்டுங் கேட்டுமெனவும், இவ்விரண்டுமுண்டாகப்பெற் றும் அவ்வழியில் நிற்கப்பெறாராயின் "தானடங்காப் பேதையின் பேதையாரில்" என்றவாறு அவரே பெரும் பேதையரென்பார் கொடுந்தீமை யிழைப்பாராயி னங்கவ ரே கயவரெனப்படுவரெனவும், இவர் நன்னெறியடைதல் மிகவரிதென்பார் அந்தோ எனவும், கற்கும் அறிவும் கேள்வியெய்தும் செல்வமு மிலாதவரியற்றும் பாவம் பொ றுத்தலறமென்பார் அறிவின்றி யறியாதுஞ்செய்த பாவப்பங்கமெலா மொழிவெய்து மெனவும், கல்வி கேள்விக ணிறம்பப்பெற்றவர் மறத்தைக்கடிந்து அறத்தைக் கொள் ளல்வேண்டும் அஃதின்றி அறத்தைக்கடிந்து மறத்தை (பாபத்தைக்) கொள்வராயின் அவரது செவியில் கல்விகேள்விகள் நுழைந்து பயன்பெறுமதென்பர் அறிந்து செய்யிற் பாற்றரிதாம் எனவும், ஆகலின் திருவருள் வேண்டுவார் தங்கள் போதவழிப்போதலை மாற்றி அருணூல் வழிச்செல்வது கடனென்பார் விதித்தவாற்றானொழுகி யேகம்ப ரருட்குரியராவார் எனவுங் கூறினர். (உ௨)

விம்மிதப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஉ௫௪.

# ஒழுக்கப்படலம்.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்

மாதரை யெல்லாம் வீழு மடவனு மீன்ற தாயைக்
காதல னாகா னச்சீர்க் கடியனுஞ் சிவன்வாழ் வைப்பிற்
பாதகம் புரியல் காஞ்சிப் பதியிடைச் சிறிதுஞ் செய்ய
லோதிய விதியி னாறே யொழுகுதன் முறைமைத் தாமால்.

(இ - ள்.) மாதரை எல்லாம் வீழும் மடவனும் - (விரும்பிக்கூடத்தக்க மனையாட்டியைவிட்டேனைய) பெண்ணென்றிருப்பவரை யெல்லாம் விரும்பும் அறிவில்லாதவனும், ஈன்றதாயை காதலன் ஆகான் அச்சீர்க்கடியனும் - தன்னைப் பெற்றெடுத்த தாயைப்போற்றுதல் செய்யாத நடையினையுடைய அங்கொடியவனும், சிவன் வாழ் வைப்பில் பாதகம்புரியல் - இறைவன் வீற்றிருக்கின்ற திருத்தளிகளில் பாதகங்களைச் செய்யாதிருத்தல் வேண்டும், காஞ்சிப்பதியிடை சிறிதும் செய்யல் (அத்தளிகளுள்ளும்) காஞ்சித்தளியில் அணுவளவுஞ் செய்யாதிருத்தல்வேண்டும், ஓதிய விதியின் ஆறே ஒழுகுதல் முறைமைத்தாம் - ஆதலின் (இப்பதியில்) வேதாகமங்களிற் கூறியிருக்கும் விதியின்வழியே நடத்தல் முறைமையாகும். (எ - று)

தன்னில்லாளைவிட்டு அயலில்லாளைத்தேடும் அறிவிலியும் அன்னைபால் அன்பில்லாத அருளிலியுமாகிய இருவர்களும் சிவத்தலங்களிலிருந்து பாவங்களைச் செய்யற்க, அவற்றினுங் காஞ்சித்தலத்தில் சிறிதுஞ்செய்யற்க ; அத்தலத்தில் விதிப்படி செய்வதே முறைமைதென்க.

காமத்தைச் செலுத்துமிடம் மனையாளாக அவள்பால் செலுத்தாது ஏனைய மங்கையர்பாற் செலுத்துதல் அறிவின்மை யென்பார் மாதரையெல்லாம் வீழுமடவனுமெனவும், அன்பைச்செலுத்துமிடம் தாயாயிருக்க அவள்பா லாக்காது ஏனையரிடத்துச் செலுத்துதல் அன்பன்றென்பார் தாயைக்காதலனாகானச்சீர்க் கடியனுமெனவும், பாதகங்களையொழித்துப் புண்ணியங்களைக்கொள்ளவேண்டியவிடத்தில், பாதகங்களையிட்டுதல் பெரும்பாவமெனபார் சிவன்வாழ்வைப்பில் பாதகம்புரியலெனவும், [illegible] மொன்று கோடியாக வளருமிடத்தில் கோடி ஒன்றாகக் [illegible] செய்தலை [illegible] ளல் செல்வம் வளரும் வகையன்றென்பார் காஞ்சிப்பதியிடைச் சிறிதுஞ் செய்யலெனவும், செய்யத்தகாதவற்றைக்கடிந்து செய்யத்தருவனவற்றைக் கைக்கொள்ளவிருப்புவோரொழுகும் முறைமை இது வென்பார் ஓதிய விதியின்ஆறே யொழுகுதல் முறைமைத்தெனவுங் கூறினர். காஞ்சியில் புரியலென்னாது காஞ்சிப்பதியிடைச் சிறிதுஞ் செய்யலென்றது ஏனைய தலங்களிற் செய்யும் புண்ணியம் செய்யுமளவே நிற்குமெனவுங் காஞ்சித்தலத்திற் செய்யுமவை அளவின்றி வளருஞ் சிறப்பை யுடையன எனவுங் கூறியதென்க.

அல்லதூஉம் பாதகங்களுக்குப் பரிகாரமுண்டாக இறைவன்,தலங்களைவகுத்திருக்க அதனைச்செய்யாது அப்பாதகங்களையே செய்வாராயின் அவருக்குப் பரிகாரமெங்ஙன முண்டாகுமெனவுங் கூறியதூஉமாமென்க. (௧)

செந்துவர் படருமாழிச் சிலைகளை யெழுமுன் கல்லை
யைந்தெழுத் தெனவொழுகு வெண்ணீறணிந்து பாடியின்மூட [illegible]

தெந்தையைக்காமநோக்கினிறைவியைநினைந்துபோற்றிப்
புந்தியினுறத்தான்செய்யும்பொருளறஞ்சிந்தைசெய்து.

(இ - ள்.) செந்துவர் படரும் தினகரன் ஆழிஎழுமுன் கன்னல் ஐந்து என எழுந்து-மிகச்சிவந்த கிரணங்களைப் பரப்பும் சூரியன் கடலிற் றோன்றுவதற்கு முன் ஐந்து நாழிகைக்கெழுந்து, வெண்ணீறு அணிந்து உயர்மாவின் மூலத்து எந்தையை காமநோக்கின் இறைவியை நினைந்துபோற்றி - வெள்ளிய திருநீற்றை யணிந்து பெருமை பொருந்திய மாவிருக்கத்தி னடியிலெழுந்தருளியிருக்கு மெமது பெருமானாகிய ஏகம்பவாணனையும் காமாக்ஷியம்மையையு முள்ளத்திற் சிந்தித்துப்போற்றி, தான் செய்யும் பொருள் அறம் புந்தியில் உற சிந்தைசெய்து - தான் முயலும் பொருளையும் அறத்தையும் மனத்திற்பொருந்தச் சிந்தனைசெய்து. (எ - று)

சூரியனுதயமாவதற்கு ஐந்துநாழிகைக்குமுன் துயிலொழிந்தெழுந்து திருநீறணிந்து சிவசத்திகளாகிய அம்மையப்பரை யெண்ணித் தோத்திரஞ்செய்து தான் தேடும் பொருளையும் அதனாற் செய்யும் அறத்தையு முன்னர் சிந்தித்தென்க.

பொருள்-வரும் வருவாயாலும், அறஞ்-செய்யுஞ் செயலாலும் பாவபுண்ணியங்கள் வருமாதலால் அவற்றை யோர்ந்து செய்யவேண்டுமென்பார் புந்தியினுறத் தான் செய்யும் பொருளறஞ் சிந்தைசெய்தென்றார். "எண்ணித் துணிக கருமந் துணிந்தபின் - எண்ணுவமென்ப திழுக்கு." என்றதனால் துயிலொழிந்து தெய்வத்தை வழிபட்டவுடன் இவற்றை எண்ணவேண்டுமென்க. (உ)

கரகமுந்தண்டுமேற்றுங்கரந்தழீஇக்காமரூர்க்கு
நிருதியிற்படர்ந்துகாதினீண்டமுப்புரிநூலேற்றிந்
தரணியிற்றிருணமிட்டுச்சந்திகள்பகல்வடக்கு
மிரவுதென்பாலுநோக்கியிருந்திரண்டியக்கநீத்து.

(இ - ள்.) தண்டும் கரகமும் மற்றும் கரந்தழுவி காமர் ஊர்க்கு நிருதியில் படர்ந்து - தண்டு கமண்டலங்களைக் கைக்கொண்டு அழகிய வூருக்கு நிருதிதிக்கிற்சென்று, நீண்ட முப்புரிநூல் காதில் ஏற்றி தரணியில் திருணம் இட்டு - மார்பில் நீண்டு புரளும் முப்புரிநூலைச் செவியிற் சுற்றிப் பூமியில் திருணத்தைப்போட்டு, சந்திகள் பகல் வடக்கு இரவு தென்பாலும் நோக்கி இருந்து இரண்டு இயக்கம் நீத்து - சந்தியாகாலங்களிலும் பகலிலும் வடதிசையையும் இரவில் தென்திசையையும் பார்த்திருந்து மலசலங்களாகிய விரண்டையுங் கழித்து. (எ - று)

தண்டு கமண்டலங் கைக்கொண்டு ஊருக்கு நிருதிதிசையிற் சென்று முப்புரிநூலைக் காதிற் சுற்றிப் பூமியில் திருணத்தையிட்டுச் சந்தியாகாலங்களிலும் பகலிலும் வடக்குமுகமாகவும் இரவில் தெற்குமுகமாகவுமிருந்து மலசல மோசனஞ்செய்ய வேண்டுமென்க. (௩)

குறியிடக்கரத்துப்பற்றிக்குறுகிநீர்முகந்திட்டோர்கால்
வெறிகமழ்புனலான்மண்ணாற்குறியினைவிழுமிதாக்கி
நிறையபன்முறைக்காலிட்டுக்குதந்தழீஇக்கழுவிநீள்கைக்
கிறுதியினீரைங்காலுமிருகைசேர்த்தேழுகாலும்.

(இ - ள்.) குறி இடக்கரத்து பற்றி நீர்குறுகி முகந்திட்டு - ஆண்குறியை இடக்கரத்தாற் பிடித்துக்கொண்டு நீர்க்கரையை யணுகி நீரை முகந்து, ஓர்கால் வெறிகமழ் புனலால் மண்ணால் குறியினை விழுமிதாக்கி - ஒருமுறை நல்ல நீராலும் மிருத்

திகையினும் பற்றியிருக்குங் குறியைச் சுத்திசெய்து, குதம் முக்கால் மண்ணினைய இட்டு கழுவி - குதத்தை மூன்றுதரம மிருத்திகையை நிறைய இட்டுச் சுத்திசெய்து, கழுவும் நீர்கைக்கு இறுதியில் ஏழாங்காலும் - (பின்னா) சுத்தஞ்செய்த நீண்ட இடக் கரத்துக்குப் பத்துத்தரமும், இருகை சேர்த்து எழுகாலும் - வலமிடமாகிய இருகையை யுஞ் சேர்த்து எழுதரமும். (எ - று)

குறியை யிடக்கரத்தாற்பற்றி நீரையடைந்து முதைந்து அந்நீரினும் மண்ணினும் குறியை ஓர்காலும் குதத்தை முக்காலுஞ் சுத்தஞ்செய்த இடக்கரத்தைப் பத்துக்காலும் இருகையையுஞ் சேர்த்து எழுகாலுமென்க. (௪)

அடியெழுகாலும் பூசியறவினாற் சுத்திசெய்க
விடனுடையில்லோர்க் கீதாமிரட்டி மும்மடங்கு நாற்றி
கடனறி பிரமசாரி காட்டகத் துறைவோன் மற்றைக்
கெடலருந்துறவி யின்னோர் கெழுதக வியற்றல் வேண்டும்.

(இ - ள்.) அறவினால் அடி எழுகாலும் பூசி சுத்திசெய்க - மண்ணினால் கால்களையும் எழுமுறை தடவிச் சுத்திசெய்யவேண்டும், ஈது இடன் உடை இல்லோர்க்கு ஆம் - இவ்விதி சிறப்புடைய இல்லறத்தார்க்காகும், கடன் அறி பிரமசாரி காட்டகத் துறைவோன் கெடல் அருந்துறவி இன்னோர் - செய்யத்தகுவனவற்றை யறிந்த பிரமசாரியும் வனத்தில் வாழ்கின்ற வானப்பிரத்தனும் ஞானவைராக்கியங்கள் கெடாத துறவியுமாகிய இவர்கள், இரட்டி மும்மடங்கு நாற்றி கெழுதக இயற்றல் வேண்டும் - (முறையே) இரண்டு மூன்று நான்குபங்காகத் தகுமுறை செய்யவேண்டும். (எ - று)

பாதத்தை எழுகாலும் சுத்திசெய்யவேண்டும். இவ்விதி இல்லறத்தோர்க்காகும்; பிரமசாரிமுதலிய மற்றைய மூவருக்கு இரட்டி மும்மடங்கு நாற்றியாகுமெனக.

பிரமசரிய முதலிய நான்கு நிலையினிற்கப்பெற்றவர் ஒருவருக்கொருவர் ஏற்றமாதல்போல் ஒழுக்கமும் முறையே ஏற்றமுடைத்தென்பார் இல்லோர்க்கீதாம் கடனறி பிரமசாரி காட்டகத்துறைவோன் மற்றைக்கெடலருந்துறவி யின்னோர் இரட்டிமும்மடங்கு நாற்றி கெழுதக வியற்றல் வேண்டுமென்றார்.

செந்துவர் என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்வரையில் ஒரு தொடர். இந்நான்கு செய்யுளும் துயிலொழிந்தெழுந்த பின்னர் நினைப்பதையும், நினைத்தபின்னர்ச் சிந்திப்பதையும் சிந்தித்தபின்னர் மலசலமோசனங் குறித்துச்செல்லுந் திசையையும் திக்கு நியமங்களும் பின்னர் கை கால் குதங் குறிமுதலியவற்றை மிருத்திகையினாலும் நீராலும் செய்பத்தகுவனவாகிய சௌசவிதிகளையுங் கூறியதாமென்க. (௫)

கொணர்வுறு நீர்வாய்ப்பெய்து கொப்புளித்திருகாற்றூய்மை
யணையநீர் குடித்துப்பின்னரணிவிர லுறுப்புத்தீண்ட
லிணைவிழைச் சுணவுமாற்றி னியக்கமுற்றிடு மெய்ச்சா
வினையிலியிரண்டு காலெனக் கொப்புளித்திடல் வேண்டும்.

(இ - ள்.) கொணர்வுறு நீர்வாய் பெய்து கொப்புளித்து - கரகத்தில் கொண்டு வந்த நீரைவாயிற்பெய்து கொப்புளித்துமிழ்ந்து, தூய்மை அணைய இருகால் நீர்குடித்து - சுத்தமுண்டாக இரண்டுதரம் ஆசமனஞ்செய்து, பின்னர் அணிவிரல் உறுப்புத்தீண்டல் - பின்னர் அனாமிகைவிரலால் அங்கங்களைத் தொடுதலாகிய உபாசனஞ்செய்தல் (விதியாகும்) இணைவிழைச்சும் உணவும் ஆற்றின் - மனைவியோடு புணர்ச்சியும் உணவுமுண்

டால, நாலஎண்கால் இணையில் ரெண்கால் - முப்பத்திரண்டுதரமும் ஒப்பில்லாத பதி ஞறுதரமும், இயக்கம் உற்றிடில் - மலசலமோசனஞ் செய்தால, எண்கால் கொப்புளித் திடுதல்வேண்டும் - எட்டுத்தரமும் கொப்புளித்தல்வேண்டும். (எ - று)

பின்பு கரகநீரை வாய்ப்பெய்து கொப்புளித்துமிழ்ந்து ஆசமனம் நியாசஞ் செய்க; மனைவியோடு புணர்ச்சித்தால் முப்பத்திரண்டுதரமும் உணவு உண்டால் பதி ஞறுதரமும்மலசலமோசனஞ்செய்தால்எட்டுத்தரமும்கொப்புளித்தல்வேண்டுமென்க.

இச்செய்யுளால் ஆசமன நியாசஞ் செய்யுங்காலமும் நீர்வாய்ப்பெய்து கொப் புளித்தல் இவ்வெண்களோடு இன்ன காலங்களிலெனவும் வகுத்தமைகாண்க. (சு)

சலமலம்விடுக்கும்போதுநங்கையலாகலவிப்போதுங்
குலவெரிவளாக்குமபோதுமவெண்பல்கோறின்னுமபோது
முலவுநீர்குடையும்போதுமுணவினுமபேசல்செய்யார்
மலவலிதுரக்குமெங்கோனவகுத்தநூன்முறையினிற்போர்.

(இ - ள்.) மலவலிதுரக்கும் எங்கோன் - ஆணவச்செருக்கொழிக்குமெமது பெருமான், வகுத்த நூல்முறையில் நிற்போர் - சொல்லியருளிய வேதாகமவழியினிற் பவர், மலம் சலம் விடுக்கும்போதும் நையலார் கலவிப்போதும் குலவு எரிவளர்க்கும் போதும் - மலசலமோசனஞ் செய்யுங்காலத்திலேயும் மங்கையரைக்கூடுகின்ற காலத் திலேயும் சிறந்த அக்கினியையுடைய ஓமாக்கினியை வளர்க்குங்காலத்திலேயும், வெண் பல் கோறின்னும்போதும் உலவு நீர்குடையும்போதும் உணவினும்பேசல் செய்யார், கோலால் வெள்ளிய பல்லைச் சுத்திசெய்கின்ற காலத்திலேயும் சலமும் நீரில் ஸ்நானஞ்செய் கின்ற காலத்திலேயும் உண்கின்ற காலத்திலேயும் பேசமாட்டார்கள். (எ - று)

வேதாகமவழி நிற்போர் மலசலங் கழிக்கும்போதும் கலவிப்போதும் ஓமாக் கினியை வளர்க்கும்போதும் தந்தசுத்தி செய்யும்போதும் ஸ்நானஞ்செய்யும்போதும் உண்ணும்போதும் பேசமாட்டாரென்க.

இச்செய்யுளால் பேசுதலொழிந்திருக்கும் காலங் குறித்ததென்க. (எ)

விதித்தகோறின்றுநாடொறுமென்புனல்படிந்துமேனி
கதிர்படநீற்றணிந்துசந்திகடமுற்றுபேரன்பின்
முதிர்ச்சியின்லிங்கபூசைமுட்டாதாற்றித்
துதித்தகாலந்தோறுமேகம்பனைத்தொழுதுபோற்றல்.

(இ - ள்.) நாள்தொறும் - நாடோறும் விதித்த கோல்தின்று - இது வாமென்று விதித்த தந்த காஷ்டத்தால் தந்தசுத்திசெய்து, மெய் மென்புனல் படிந்து - சுத்தமாகிய குளிர்ந்த நீரில் ஸ்நானஞ்செய்து, மேனிகதிர்ப்ப நீறு அணிந்து - சரீரமுற்றும விளங்க திருநீறுபூசி, சந்திகடன்புரிந்து - சந்தியாவந்தனையைச் செய்து, உறு பேர் அன்பின் முதிர்ச்சியின் - உள்ளத்திற் பொருந்திய பேரன்பின் முதிர்ச்சியால், இலிங்கபூசை முட் டாது ஆற்றி - சிவபூசையை விடாமற்செய்து, ஏகம்பம் காலந்தோறும் துதித்து தொ ழுதுபோற்றல் - திருவேகம்பனைக் காலந்தோறும் துதித்து வணங்கிப் புகழவேண் டும். (எ - று)

இதுவாமென்று விதித்ததந்த காஷ்டத்தால் சுத்திசெய்து சுத்தமாகிய நீரில் ஸ்நானஞ்செய்து நீறுபூசி சந்தியாவந்தனஞ்செய்து சிவலிங்கபூசையை விடாதுசெய்து காலந்தோறும் திருவேகம்பநாதனைத் துதித்து வணங்கிப் போற்றுதல் வேண்டுமென்க

விதித்தகோலென்றது கண்டகி-முட்களையுடைய வேல்முதலியன, பாலுள்ளதாகிய ஆல் முதலியன, மருச்சன-மூங்கில், பரிசினனி-சிதரா பல்லி, ஜம்பு-நாவல், வேம்பு, எருக்கு, அத்தி, மா, புன்னாகம் - சுரப்புன்னை, சிரிஷம் - காட்டுவாழை, அரிபேதம் - நாற்றமுள்ள கருங்காலி, வச்சிரம் - சதுரக்கள்ளி, அசனம் - வேங்கைமரம், சாதி - ஜாதி என்கிற சிறுசண்பகம், பிரியங்கு-ஞாழல்மரம், ககுப விருக்ஷம்-மருதைமரம், கரஞ்சம் - புங்கமரம், சர்ஜ - சர்ஜமரம், தாடிமம் - மாதுளை, வீரவிருக்ஷம் - சேராமரம், பிலக்ஷம் - கல்லெளரி, பதரி - இலந்தை, கதிரம் - வெள்ளைக்கருங்காலி, அத்தி, பந்நாகம் - பந்நாகவிருக்ஷம், பலாசம் - முண்முருக்கு, கதம்பம் - கடம்பமரம், ஆம்பரம் - மா, அபாமாாக்கம் - நாயுருவி, சிந்துவாரம்-நொச்சில், க்ஷுமல்லகம்-காசாஞ்செடி, கடகம் - பெருவாகை, கரமர்த்தம் - பெருங்களாச்செடி, கோங்குமரம், அரசு, பனசம் - (பலா) தீர்க்கசம்பு - கொடிநாவல், கர்ணிகாரம் - சாவந்தி, சதகுப்பிவேர், அசோகமரம், இலவங்கம் என்று கூறிய விருக்கங்களின் காஷ்டங்களாம். இவற்றினளவு பன்னிரண்டங்குலம், எட்டங்குலம், ஒரொட்டையென்னு மளவுள்ளனவா யிருத்தல்வேண்டும். அன்றியும்-அந்தணர்முதலிய மூவருக்குமமுறையே(௧௨) (௯) (௬) (௪) ஆகவும், மற்றோர்விதி-அந்தணருக்கு - (௧௦) வைசியருக்கு - (அ) சூத்திரருக்கு - (எ) பஞ்சமருக்கு (௪) ஆகவும் அங்குல அளவு சொல்லப்பட்டிருக்கின்றன. பருமனளவு மத்யாங்குலி (நடுவிரலளவு,) கனிஷ்டிகை - (சிறுவிரலளவு) இவ்வளவினதாயிருத்தல் வேண்டுமெ) குறியிட்ட காஷ்டங்களையாயினும் - துவர்ப்பும், ஈரமும், சுகந்தமும், உரப்பும் உடையனவாயிருத்தல் வேண்டும், தந்தம் - பருத்தும், சிறுத்தும், இவ்விரண்டுமெல்லாத அளவினையுடையதாயு மிருத்தலால், அவ்வததந்தங்களுக்குத் தகுந்தபடி தூலசூக்ஷுமமத்திமமாயிருத்தல்வேண்டும்.

குறித்த இவைகளுக்குள் - சர்ஜவிருக்ஷம் - தைரியத்தையும், வரவிருக்ஷம் - அர்த்த சம்பத்தையும், பதரி - மதுரமான த்வனியையும், கதிரம் - சுகந்தத்தையும், அத்தி - வாக்சுத்தியையும, பந்நாகம் - செவிச்சுவையையும், வச்சிரம் - கீர்த்தி சௌபாக்கியத்தையும், பலாசம் - உத்தமமான சித்தியையும், கதம்பம் - எப்பொழுதும் க்ஷிமீகரத்தையும், ஆம்பரம் - ஆரோக்யத்தையும், அபாமார்க்கம் - தைரியம், மேதை பிரஞ்ஞை, சக்தி, தேகாரோக்யம, ஆயுள், சீலம்,காந்தி,சௌபாக்கிய முதலியவற்றையுந் தருவனவாம்.

- அர்க்கம் தந்தரோகத்தையும், பீஜபூரம் துக்கத்தையும், ககுபம்-நரையையும்போக்கும். இங்ஙனம் விதித்தகோல் கொண்டு கிழக்குமுகமாய்க் குக்குடாசனமாயிருந்து தந்தசுத்தி செய்தல் விதியாதலால் விதித்தகோலின்று எனவும், நுரையும் குமிழியும் நுண்ணிய புழுக்களுமுள்ள நீரும் வடித்தெடாத நீரும் இழிகுலத்தார் தீண்டியநீரும் கலங்கியநீரும் பாசிநீரும் உவர்நீரும் வெந்நீரும் பழையயான நீரும் கூவனீரும் ஸ்நானசந்திகளுக்காகாவாகலான் தூயவென்புனல் படிந்தெனவும், சந்திக்கடன்முதலிய எல்லாக் கருமங்களும் திருநீறணியா தியற்றுவாராயின அக்கருமங்கள் பாபகருமங்களேயாமென்று விதியாகலான் மேனிகதிர்ப்பநீறணிந்து சந்திக்கடன் புரிந்து எனவும், அன்பே திருவுருவாகவுடையவன் இறைவனாகலான் அவனை வழிபடுவோர் அன்பில் முதிர்ச்சியுடையவராயின் அவனுருவங்காணக் கூடாதாகலின் உறுபோரன்பின் முதிர்ச்சியினிலிங்கபூசை யாற்றி எனவும், சிவார்ச்சனை ஒருநாளேனும் முட்டுப்படின் அது அன்பின்மையைக் காட்டுமாகலான் நாடொறு முட்டாதாற்றி எனவும், புறப்பூசைக்கு அகப்பூசை அங்கமாதல்போல் புறப்பூசை சிவாலயசேவைக்கு அங்கமாதலால், காலந்தோறு மேகம்பந்தொழுது போற்றலெனவுங் கூறினர்.

அல்லதூஉம் புறத்தும் அகத்தும் வழிபட்டவர்க்கே இறைவன் வெளிப்பட்டருளுவனென்பது துணிபாகலான் முன்னர் அகத்தும் புறத்தும் வழிபட்டு பின்னர் இறைவன் வெளிப்பட்டருளுவா னென்மனோர் ஆலயசேவை செய்தலாமென்னு முறைமையு மாமென்க. (அ)

இம்முறையொழுக்கின் மாறு நியங்குறும் பிரமசாரி
செம்மணிவடிவிறுகம்பர் திருவருள்கிடைத்தல்வேண்டி
மம்மரில்குரவன்மாடே மறையெலாமுறையினோதல்
மும்மறையிரண்டொன்றேனு முற்றறப்பயிறல்வேண்டும்.

(இ - ள்.) இம்முறை ஒழுக்கில் மாறாது - இவ்விதியாக ஒழுக்கத்தினின்றுந் தவறாமல், இயங்குறும் பிரமசாரி - நடக்கின்ற பிரமசாரியானவன், செம்மணிவடிவின் கம்பர்திருவருள் கிடைத்தல்வேண்டி - சிவந்த ரத்னம்போலும் வடிவினையுடைய ஏகம்பநாதர் திருவருள கிடைக்கவிருப்பி, மம்மர் இல் குரவன்மாடு - மயக்கமில்லாத நல்லாசிரியனிடத்து, மறையெலாம் முறையின் ஓதல் - நான்கு வேதங்களையும் முறையே ஓதிக்கொள்ளல்வேண்டும், மும்மறை இரண்டு ஒன்றேனும் முற்றறப் பயிறல்வேண்டும் - (அங்ஙனங்கூடாதாயின்) மூன்றுவேதங்களாயினும் இரண்டுவேதங்களாயினும் ஒருவேதமாயினும் முழுமையுங் கற்றுக்கொள்ளல்வேண்டும். (எ - று)

இங்ஙனங்கூறிய ஒழுக்கத்தினின்றுமாறுபடாதொழுகும் பிரமசாரி திருவேகம்பன் திருவருளை விரும்பி நல்லாசிரியனையடைந்து நான்குவேதங்களையுமோதிக்கொள்ளல்வேண்டும். கூடாதாயின் மூன்று இரண்டு ஒன்றாயினு மோதிக்கொள்ளல் வேண்டுமென்க.

கடவுளொருவருளனென்பார் ஒழுக்கங் குன்றாராகலான் ஒழுக்கின்மாறு நியங்குறும் பிரமசாரி எனவும், பாசஞான பசுஞானவிலக்கணங்களை வேதமுதலிய கலைஞானங்களானுணர்த்தி மேல் பதிஞானமிதுவென வெனக்காட்டித் திருவருள் நெறியிற் செலுத்துவான் சிவஞானம்பெற்ற நல்லாசிரியனே யாமென்பார் மம்மரில் குரவன்மாடே திருவருள் கிடைத்தல்வேண்டி மறையெலாமுறையினோதல் எனவும், கல்லாதார் ஞெட்பங்கூறப நன்றாயினும் அறிவுடையார் கொள்ளாராகலான் வேத முற்றும் உணரும் உணர்வும் ஆற்றலும் இலரேயினும் உணர்வுக்கேற்ப ஒன்றை முறையாகக் கற்றுக்கொள்ளல் இன்றியமையாத செயலென்பார் மும்மறை யிரண்டொன் றேனு முற்றறப்பயிறல்வேண்டுமெனவுங் கூறினர். (கூ)

மடங்கலிற்கன்னிதன்னின் மதிநிறைந்துறுநாளோதத்
தொடங்குக மகரத்தந்நாட்டுகளறமுடிக்கமீண்டு
மடங்கரும்வெண்கேழ்ப்பக்கத்தோதுகவங்கமாதி
யுடங்குதேய்ப்பக்கத்தோதல்விலக்குநாளோதல்வேண்டா.

(இ - ள்.) மடங்கலிற் கன்னிதன்னில் மதிநிறைந்துறுநாள் - ஆவணிமாதத்திலும் புரட்டாசிமாதத்திலும் வருகிற பூர்ணத்திதியில், ஓதத்தொடங்குக - வேதங்களை ஆரம்பித்தல்வேண்டும், மகரத்து அந்நாள் துகள் அறமுடிக்க - தைமாதத்தில் வரும் பூர்ணத்திதியில் குறைவற முடித்தல்வேண்டும், மீண்டும் - மறுபடியும், அடங்கரும் வெண்கேழ்பக்கத்து ஓதுக - நிறைந்த கிரணங்களைப் பரப்பும் சுக்லபக்ஷத்தில் ஆரம்பித்தல் வேண்டும், அங்கமாதி - சிக்ஷைமுதலியவங்கங்களை, உடங்கு தேய்ப்பக்கத்து ஓதல் - கூடியகலைதேயுங் கிருஷ்ணபக்ஷத்திலாரம்பித்தல்வேண்டும், விலக்குநாள் ஓதல்வேண்டா - விலக்கிய நாள்களில் ஓதுதல்வேண்டாம். (எ - று)

ஆவணி புரட்டாசி மாதங்களில் வரும் பூரணையி லாரம்பித்துத் தைமாதம் பூரணைத் திதியில் முடிக்கவேண்டும். மீளவும் சுக்லபக்ஷத்தில் வேதங்களையும் அமரபக்ஷத்தில் அங்கமுதலானவைகளையு மோதல்வேண்டும். விலக்குநாள்களில் ஓதக்கூடாதெனக.

விலக்குநாள்களாவன-பிரதமை சப்தமி அஷ்டமி பௌர்ணமி அமாவாசை கிரஹணகாலம், உத்தராயணம்-தக்ஷிணாயனம் இந்நாட்களிலமுற்றும் ஓதுதல்கூடாது. சதுர்த்தி திரியோதசி இந்தத்திதிகளில் பிரதோஷகாலங்களில் ஓதுதல் கூடாவெனக.

அங்கமாதி என்றது - சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், ஜோதிஷம், கல்பம் இவ்வாறையுங் கூட்டி [illegible] என வருதலாற் கண்க. (௧௦)

செவ்விநா ணுடையே தண்டந் திகழ்முந் நூலுத் தரீய
மவ்வவர் தமக்கு வெவ்வே றருமறை விதித்த வாற்றா
லெவ்வமி லிம்மறை யோரா திமூவரு மியல்பிற் கொள்க
செவ்வழல் விதியி னோம்பி யணிகவத் திருவெண் ணீறே.

(இ - ள்.) எவ்வம் இல்மறையோர் ஆதிமூவரும் - தத்தமக்கு விதித்த ஒழுக்கங்களிற் றவறாத அந்தணர் முதலிய மூவரும், செவ்வி நாண் உடை தண்டம் திகழ்முந்நூல் உத்தரீயம் - அழகிய அரைநாணும் ஆடையும் தண்டமும் விளங்கு முப்புரிநூலும் மேல் உத்தரீயமும் (ஆகிய இவைகளெல்லாம்). அவ்வவர் தமக்கு வெவ்வேறு அருமறைவிதித்த ஆற்றல் - அவரவர்களுக்கு வெவ்வேறாக வேதங்களில் விதித்த விதிவழியாக, இயல்பில்கொள்க - தாம்தாம் உரிமையாகக் கொள்ளக்கடவர், விதியின் செவ்வழல் ஓம்பி திருவெண்ணீறு அணிக-விதிப்படி ஓமாக்னியை வளர்த்தி அதிலுண்டாகிய வெள்ளிய திருநீற்றை அணியக்கடவர். (எ - று)

அந்தணர்முதலிய மூவரும் அரைநாண்முதலியவற்றை அவ்வவ் வருணத்தவர்க்கு விதித்தவிதி வழியாகக் கொள்ளக்கடவர் ஓமாக்னியிலுண்டாகிய பஸ்மாவை யணியக்கடவரெனக. (௧௧)

முன்னிடை கடையின் றன்றப் பவதிச்சொன் மொழிந்து பார்ப்பார்
மன்னவர் வணிகர் பிச்சை யேற்பது மரபா மாயுண்
முன்னுறு மிளையர் தம்மின் மூத்தரைப் பணிக தாழ்ந்த
பின்னவர் தமக்கு மூத்தோர் வாழ்த்துரை பேசல் வேண்டும்.

(இ - ள்) முன்னிடை கடையின் பவதிச்சொல் ஒன்ற மொழிந்து - முதல் இடைகடை என்கிற மூன்றிடத்தும் பவதியென்கிற பதம் பொருந்த மொழிந்து, பார்ப்பார் மன்னர் வணிகர் பிச்சை ஏற்பது மரபாம் - அந்தணர் அரசர் வைசியர் ஆகிய மூவரும் பிச்சையேற்பது முறைமையாம், ஆயுள்முன்னுறும் இளையர் - வயதிற் குறைந்த இளையவர், தம்மின் மூத்தவர்பணிக - தம்மினும் ஆயுளில் மூத்தவர்களை வணங்கக்கடவர், தாழ்ந்தபின்னவர் தமக்கு - வணங்கிய தம்மில் இளையவருக்கு, மூத்தோர் வாழ்த்துரை பேசல்வேண்டும் - மூத்தவர்கள் ஆசிகூறல்வேண்டும். (எ - று)

அந்தணர்முதலிய மூவரும் பிக்ஷையேற்கும் பொழுது, "பிக்ஷை" என்னும் பதத்திற்குடைய முதலிடை கடைகளில் "பவதி" என்னும் பதத்தை முறையானே கூட்டி பிக்ஷையெடுப்பது மரபாகும், இளையவர் மூத்தவரைக் காணின் வணங்கக்கடவர், மூத்தவர் இளையவரைக் காணின் ஆசிகூறக்கடவரெனக.

"பவதிபிக்ஷாந்தேஹி" என அந்தணரும், பிக்ஷாம்பவதி தேஹி என க்ஷத்திரியரும், பிக்ஷாம்தேஹிபவதி என - வசியரும் பிக்ஷையேற்பது விதியாதலால் பார்ப்பார், மன்னவர், வணிகர் முன்னிடைகடையினென்ற பவதிச்சொன்மொழிந்து பிச்சையேற்பது மரபாம் எனவும், இளைவர் மூத்தவரைக்கண்டு வணங்காமையும், மூத்தவர் இளையவரைக்கண்டுழி ஆசிபுகலாமையும் உடையராயின் அவர்களுக்கு ஆயுள் செல்வமுதலியனகுன்றுமாகலான் வேண்டுமென்றார், அல்லதூஉம் பணிவோர் ஆசிபுகறலும் ஆசிபுகல்வோர் பணிதலுஞ் செய்வாராயின் ஆயுள்முதலிய குன்றுமென்பது துணிபாகலான் அத்துணிபுதோன்ற இளையவர் பணிக, மூத்தவர் வாழ்த்துரை பேசல் வேண்டுமென்று வலியுறுத்தினரெனினுமமையும். (கஉ)

ஓதியபிரமசாரியொழுக்கினில்வழாதுநின்று
மூதருமறைநூல்கற்றோர்முனிவர்தங்கடனிற்றீர்ந்து
வேதமாமூலத்தெங்கோன்றிருவருண்மேவப்பெற்றுப்
பேதமில்பெருவீட்டின்பப்பேற்றினுக்குரியராவார்.

(இ - ள்.) ஓதியபிரமசாரி ஒழுக்கினில் வழாதுநின்று-சொல்லப்பட்ட பிரமசரியவொழுக்கவழியினிற்றவராது நிலைபெற்றுநின்று, மூதருமறைநூல் கற்றோர் - அநாதியாகிய அரியவேதநூலைக் கற்றுணர்ந்தவராகிய (பிரமசாரிகள்) முனிவர்தம் கடனில் தீர்ந்து - முனிவர் களுடையகடனினின்று நீங்கி, வேதமாமூலத்து எங்கோன் திருவருள் மேவபெற்று - வேதவடிவமாகிய மாவிருக்கத் தடியில் வீற்றிருக்கும் எமது பெருமானுடைய திருவருள் வரப்பெற்று, பேதம் இல் பெரு வீட்டின்பட்பேற்றினுக்கு உரியராவார் - அத்வைதானந்தமாகிய பெரியமுத்திப்பயனுக்கு உரிமையாளராவர். ()

பிரமசரிய நிலையிற் றவராதுநின்று வேதநூலைக் கற்றுணர்ந்த பிரமசாரிகள் முனிவர்கடனின்று நீங்கி இறைவன் திருவருள் வாய்க்கப்பெற்று அத்வைதானந்தமாகிய பேற்றினுக்குரியராவாரென்க.

பிரமசரிய வொழிக்கத்தினின்றுந் தவறிச் சொன்மாத்திரையானே பிரமசாரியென்னும் பெயருடையார்க்கு வேதப்பொருள் உள்ளத்திலமையப்பெறுதல் அரிதென்பது தோன்ற பிரமசாரியொழிக்கினில் வழாதுநின்று மறைநூல்கற்றோர் எனவும், "முனிவர்கடன் கேள்வியாற்றீரும்" என்பது விதியாதலால் ஒழுக்கினின்றும் வழாது இவர் மறைநூலுணர்வாராயின் முனிவர்மனமகிழ்வரென்னும் அவ்விதி தோன்ற முனிவர்தங்கடனிற்றீர்ந்து எனவும், நல்லாசிரியன்வழி வேதமோதப்பெற்றவர்க்குத் திருவருள் ஞானங்கிடைத்தல் நிச்சயமென்பது தோன்ற திருவருண் மேவப்பெற்று எனவும், திருவருள் ஞானமாகிய சிவஞானம் பெற்றவர்க்குத் தற்றெரிசனமும் தன்னையுடையானாகிய தலைவன் தெரிசனமுமுண்டாய்ச் சிவத்வாபிவியக்திவிளையு மென்பது தோன்ற பேதமில் பெருவீட்டின்பப் பேற்றினுக்குரிய ராவாரெனவுங் கூறினர்.

இதனானே ஒழுக்கினில் வழுவினர் நூற்பொருளுணரப்பெறா ரெனவும், அது பெறாதவர் திருவருள் கூடாரெனவும், அது கூடாதவர் பேரின்பமடையாரெனவுங் குறிப்பாற் கொள்ளக்கிடந்தமைகாண்க. (கங)

வேறு.

பின்னவர்கள்பற்றிகந்துபத்தியினாற்றிருக்காஞ்சிப்பேரூர்வாழ்க்கை
மன்னுதல்வேட்டனராயினேகம்பன்றனக்கணித்தாமிருக்கைவைகிப்
பின்னருஞ்சீர்க்கண்டிகைநீறுடல்வயங்கச்செப்பணிகள்பலவுமாற்றித்
துன்னியமாந்தருமூலச்சுடரொளியைமுட்டாதுதொழுதுவாழ்வார்.

(இ - ள்.) பின்னவர்கள் பற்று இகந்து பத்தியினால் திரு காஞ்சி பேரூர் வாழ்க்கை மன்னுதல் வேட்டனராயின் - சூத்திரர்கள் உலகப்பற்றொழிந்து சிவபக்தியினால் சிறந்த பெரியகாஞ்சி என்னும் பதியில் நிலைபெற்றிருக்கும் வாழ்க்கையை விரும்புவாராயின், ஏகம்பன் தனக்கு அணித்தாம் இருக்கை வைகி - திருவேகம்பவாணருக்குச் சமீபமாயுள்ள விடத்திற்றங்கி, உடல் பன்னரும சீர் நீறு கண்டிகை வயங்க செய்பணிகள் பலவும் ஆற்றி - சரீரத்தில் சொல்லுதற்கரிய சிறப்பு வாய்ந்த பஸ்ம உருத்திராக்கங்கள் பொலிவுபெற்று விளங்கச் செய்யத்தகும் பணிகள் யாவுஞ்செய்து, மா தரு மூலந்துன்னிய சுடரொளியை - மாவிருக்க மூலத்தைப் பிரியாது வீற்றிருக்கும் சிவபரஞ்சுடரை, முட்டாது தொழுது வாழ்வார் - (காலந்தோறும்) தவராமற் சென்று வணங்கி வாழ்ந்திருப்பர். (எ - று)

சூத்திரர்கள் உலகவாழ்வை வெறுத்துப் பத்தியினாலே காஞ்சிப்பதியில் வசித்திருக்க விரும்புவாராயின் ஏகம்பவாணர் ஆலயத்துக்குச் சமீபமாயுள்ள விடத்திலிருந்து திருவேடந் தாங்கித் திருப்பணிசெய்து திருவேகம்பரைக் காலந்தோறுந்தெரிசனஞ்செய்து வாழ்வரென்க.

நிலைநிலையாமையை யுணர்ந்து உலகவின்பங் கானனீரெனக்கண் டொருவியவழி தோன்றுவதுபதியினிடத் தன்பேயாகலானும் அவ்வன்பின் முதிர்ச்சியினால் அவ்விறைவன் வாழும்பதியில் வாழ அவாவுதலே இயல்பாகலானும் பின்னர் அவ்விறைவன் திருவேடம் புனைந்து இறைபணியினிற்றலே அவ்வவாவாற்பெறும் பேறாகலானும் பற்றிகந்து பத்தியினால பேரூர்வாழ்க்கை மன்னுதல் வேட்டு அணித்தாம் இருக்கைவைகி கண்டிகை நீறுடல் வயங்கச்செய்பணிகள் பலவும் ஆற்றி சுடரொளியை முட்டாது தொழுதுவாழ்வார் என்றார். வேதமோதலாதியவைகட்கே மூவரதிகாரிகளென்றதன்றி இறைபணிக்குப்பற்றிகந்தார் யாவரும் அதிகாரிகளே என்பார் பின்னவருந் தொழுதுவாழ்வாரென்றார். (௧௪)

கலிவிருத்தம்.

வற்றருமறையவ்வாறோதிவாழ்க்கையிற்
பற்றிலனாயிடிற்குரவன்பாலென்று
முற்றினிதுறைகபற்றுடையனேயெனிற்
பெற்றியினருட்குருவிசைவுபெற்றரோ.

(இ - ள்.) வற்றருமறை - அளவில்லாத வேதங்களை, அவ்வாறோதி - முற்கூறிய விதிப்படி கற்றுணர்ந்து, வாழ்க்கையில் பற்றிலன் ஆயிடின் - இல்வாழ்க்கையில் பற்றில்லாதவனானால், குரவன்பால் என்றும் உற்று இனிது உறைக - ஆசிரியனிடத்தில் எந்நாளுமடைந்து இனிதாகப்பொருந்தி வசிக்கக்கடவன், பற்றுடையனே எனில் இல்வாழ்க்கையில் பற்றுடையவனேயானால், பெற்றியின் அருட்குரு இசைவுபெற்று - நற்குணத்தின் உரிமையினால் ஒழுகுவித்த அருட்குருவினிடத்தில் உத்தரவுபெற்று. ()

(முன்னர்க்கூறிய பிரமசாரி) விரிசையாது ஓதி பின்னர் மனைவியோடு கூடி வாழ்வதில் விருப்பமிலனாயின் ஆசிரியனை விடாது அவருடன் வாழக்கடவன். விருப்பமுடையனாயின் ஆசிரியன்பால் விடைபெற்று எனக.

பிரமசரிய நிலையில் நின்றவாறே காமப்பற்றற்று ஞானநெறியடைய விரும்புவனாயின் அவன் ஆசிரியனைவிட்டு நீங்கின் அந்நெறிகூடாதென்பார்பற்றிலனாயிற் குரவன்பாலென்றுமுற்றினிதுறைக எனவும், காமப்பற்றுடையனாயின் பிறனில் விழைதலாகிய தீக்குணங்களுளவாய்ப் பிரமசரிய நிலையைப் போக்குவதேயன்

றப்பாவத்தை விளைவிக்குமாகலான் அவ்வின்பத்தை அறத்தின் வழியே யனுப விக்க விதித்திருக்கும இல்வாழ்க்கையை ஆசிரியனனுஞையின்வழியடையின் அது சால் புடைத்தென்பார் பற்றுடையனேயெனி னருட்குருவிசைவுபெற்றுஎனவுங்கூறினர்.

அன்றியும் பிரமசரிய நிலையினின்று செல்லத்தக்கதாகிய இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் வேண்டிய நன்னெறியை யுணர்த்தவல்லவராதலால் அருட்குரு எனவும், இருநெறிக்கும் நன்னெறியுணர்க்க வல்ல நல்லாசிரியரனுஞை பெறாது சென்ருல் அந்நெறி தீநெறியே யாதலால் பெற்றியினிசைவு பெற்றெனவுங் கூறினர். (கரு)

கடவுளர்பிதிரர்தங்கடன்கணீக்குவான்
வடுவறுமிலக்கணமாண்டகறபினின்
மிடலுடைக்கிழத்தியைவிதியின்வெட்டுப்பி
னெடுமனைவாழ்க்கையிெனழுகனீதியெ.

(இ - ள்.) கடவுளர் பிதிரர் தங்கடன்கள் நீக்குவான் - தேவர் கடனையும் பிதிரர் கடனையும் கழிக்க, வடு அறும் இலக்கணம் மாண்ட கற்பினில் மிடல் உடை கிழத்தியை - குற்றமற்ற இலக்கணத்தினும் சிறந்த கற்புநிலையினும் வன்மைபெற்றுள்ள ஓர் கன்னிகையை, விதியின் வேட்டு - விதிப்படி கல்யாணஞ்செய்துகொண்டு,பின் நெடு மனை வாழ்க்கையில் ஒழுகல் நீதி - பின்னர் அறத்திற் சிறந்த இல்லறவாழ்க்கையி லொழுகுதல் நீதியாகும். (எ - று)

தெய்வம் தென்புலத்தார் என்னு மிருவர் கடனுந் தீர்த்தற்பொருட்டு இலக்கணத்தினுங் கற்பினுஞ் சிறந்த ஓர் பெண்ணை விதிவழி மணம்புணர்ந்து இல்லறத்தை நடத்தல் நீதியாமென்க.

உறுப்புகள் குற்றமுடையதாயின் பாபத்தையும், கற்புவன்மை பெற்றிலதாயின் - நற்குணநற்செய்கைகளின்மையும் விளக்குமாகலான் வடுவறுமிலக்கணமாண்டகற்பினின் மிடலுடைக்கிழத்தியை வேட்டு என்றார். "அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை" என்னுஞ் சிறப்புதம்தான்ற நெடுமனைவாழ்க்கை யென்றார். (கசு)

கருதுமுப்பதிறுஇருகவளமெனபத
மருதுபொழுதுண்டலுமெய்சமையகை
புரிதலுமவிதித்தநாண்மனைவிபூண்முலை
மருவலுமினையவுமிவாககுமாணுமே.

(இ - ள்) இவர்க்கு - இல்லறவியலுடைய இவர்களுக்கு, கருதும் மெனபதம் முப்பதிற்று இருகவளம இருபொழுது உண்டலும் - சொல்லப்பட்ட உண்ணும்பதமுள்ள அன்னத்தை முப்பத்திரண்டுகவளமாகப் பகலிரவென்னுமிரண்டுகாலத்தி லுண்ணுதலும், ஐவகை எச்சம புரிதலும் - தெய்வயாகமுதலிய ஐவகையாகங்களைச் செய்தலும், விதித்தநாள் மனைவி பூணமுலை மருவலும் - விதித்த நாட்களில் மனைவியினுடைய ஆபரணமணிந்த தனங்களை அணைதலும, இனையவும் மாணும் - ஆகிய இவைகளுஞ் சிறப்பாகும். (எ - று)

இல்லறததார்க்கு முப்பத்திரண்டுகவளமாக அன்னத்தை உண்ணுதலும் ஐவகையாகங்களைச் செய்தலும் விதித்தநாட்களில் மனைவியையததழுவுதலு சிறப்பாமென்க.

உண்ணு மன்னம் மிக்க வுட்டினமும் தண்மையுமின்றி யிருத்தல் வேண்டுமென்பார் மென்பதமென்றார். (கஎ)

ஓதெரிசமிதையி னோம்பறெய்வமா
மேதமில்பிதிருக் கீதலன்னதாம
பூதருக்கிடுபலி பூதவெச்சமே
வேதியர்க்கோதன மீதன்மானுடம்.

(இ - ள்.) ஓது எரி சமிதையின் ஓம்பல் தெய்வமாம் - வேதங்களிற் சொல்லப்பட்ட மூவகை அக்னியில் சமிதைகளால் ஓமித்தல் தெய்வயாகமாம், ஏதமில் பிதிருக்கு ஈதல் அன்னதாம்-குற்றமில்லாத பிதிரர்களுக்கு நீரால் தர்ப்பித்தல் பிதர்யாகமாம், பூதருக்கு இடு பலி பூதஎச்சம் - பூதங்களுக்குப் பலியிடுதல் பூதயாகமாம், வேதியர்க்கு ஓதனம் ஈதல் மானுடம்-அந்தணர்களுக்கு அன்னமிடுதல்மானுடயாகமாம்.

இச்செய்யுள் ஐவகையாகங்களுள் நால்வகையாகங்களை விளக்கியதென்க. ()

பெருமறையோதுதல் பிரமவெச்சமிவ்
விருமகமைந்தனுட் பிரமவெச்சந்தான்
றிருமிகச்சிறத்தலிற் றெய்வவேதிய
ரொருதலையாகவோம் பல்வேண்டுமால்.

(இ - ள்.) பெருமறை யோதுதல் பிரமயெச்சம் - சிறந்த வேதங்களை யோதுதல் பிரமயாகமாம், இ இருமகம் ஐந்தனுள் - இப்பெரிய யாகமைந்தனுள், பிரமவெச்சந்தான் திருமிக சிறத்தலின் - பிரமயாகம் மிகவுஞ் சிறந்திருத்தலின், ஈது தெய்வவேதியர் ஒருதலை யாக ஓம்பல்வேண்டும் - இந்தப்பிரமயாகத்தை தெய்வத்தன்மையுடைய அந்தணர்கள் கடைப்பாடாகச் செய்தல் வேண்டும். (எ - று)

இச்செய்யுள் ஐந்தாவதாகிய பிரமயெச்சம் சிறந்ததென்றும் அதனை வேதியர்கைக்கொள்ளுதல் இன்றியமையாத செயலென்றுங் கூறியதென்க. (கக)

வைகறையெழுந்துசெய் வினைகண்மாண்டகச்
செய்துமாநகர்ப்புறத் தொழுகுதெய்வநீ
ரெய்தினர்குடைந்துவெண் டுகிலிரண்டுடுத்
தைதுறுகண்டிகை நீறணிந்துபின்.

(இ - ள்) வைகறை எழுந்து - விடியற்காலையிலெழுந்து, செய்வினைகள் மாண்டகச்செய்து-செய்யத்தகுவனவாகிய சௌசமுதலிய செயல்களை விதிமுறையாகச் செய்து, மாநகர்புறத்து ஒழுகும் தெய்வநீர் எய்தி குடைந்து - பெரிய நகர்ப்புறத்தில் செல்லும் தெய்வத்தன்மையுடைய ஆற்றையடைந்து நீராடி, வெண்துகில் இரண்டு உடுத்து வெண்மையாகிய இரண்டுவஸ்திரங்களை இடையிற்றரித்து, ஐதுறு கண்டிகை நீறு அணிந்து-அழகிய உருத்திராக்கமணியும் திருநீறும்புனைந்து,பின்-பின்னர். (எ-று)

சூரியன் உதிப்பதற்கு ஐந்து நாழிகை என்னும்பொழுது துயிலொழிந்தெழுந்து "செந்துவர் படரு" மென்னுஞ் செய்யுளிற் கூறியவாறு செய்யுங் கன்மங்களையெல்லாஞ் சிறக்கச்செய்து நகர்ப்புறத்திற்சென்று தெய்வநதியினீராடி வெண்மையாகிய இரண்டாடை யுடுத்து கண்டிகையுந் திருநீறுமணிந்து பின்னர் என்க. (உ0)

மண்டுநற்றருப்பையைமேல் வைகிமும்முறை
மொண்புனலமேந்தங்களு வப்பவாசமித்
தெண்பெறவாய்த்துடைத் தியல்பிற்பண்டிபே
பண்பயின்மறைநூலைப் படித்தல்வேண்டுமால்.

(இ - ள்.) வண் தருப்பை புதல் மேல் வைகி - வண்மையையுடைய தருப்பாசனத்தின் மேலிருந்து, மும்முறை ஒண்புனல் வேதங்கள் உவப்ப ஆசமித்து - மூன்று தரம் சுத்தசலத்தால் வேதங்கள் மகிழ ஆசமனஞ்செய்து, எண்பெறவாய் துடைத்து இயல் பில் நீண்டி - விதித்த அளவாக அதரந்துடைத்து பொருந்த நியாசஞ் செய்து, பண்பயில் மறைகளை படித்தல்வேண்டும், பண்ணுலாவும் வேதங்களை யோதல் வேண்டும். (எ - று)

தருப்பாசனத்தின்மேலிருந்து வேதங்கள் மகிழ ஆசமனம் அதரசுத்தி நியாச முதலியவைகளைச்செய்து வேதங்களைப் படித்தல்வேண்டுமென்க. (உக)

மாதவப்பேற்றினன் மறைகளண்ணலைச்
சூதமாய்நிழற்றலிற் சொல்லையேகம்ப
நாதனுக்கினியதிப் பிரமநன்மக
மேதகுமறங்களு ணுண்மிக்கதாகுமால்.

(இ - ள்) மறைகள் மாதவப்பேற்றினால் அண்ணலை சூதமாய் நிழற்றலில் - வேதங்கள் பெரியதவப்பேற்றினால் இறைவருக்கு மாமரமாய்நின்று நிழலைச்செய்கின்றசனால், சொல்லை ஏகம்பநாதனுக்கு இ பிரமநன்மகம் இனியது - அநாதியாயுள்ள ஏகாம்பரநாதருக்கு, இந்தநல்லபிரமயாகம் மிகவும் இனிமையுடையது, மேதகும் அறங்களுள் மிக்கது ஆகும் - (அன்றியும்) மேன்மைபெற்ற தருமங்களுக்குள் சிறந்த தருமமாகும்.

வேதங்கள் தவப்பேற்றினால் சூதவிருக்ஷமாய் நின்று இறைவருக்கு நிழலைத் தருவதால் பிரமயாகம் ஏகாம்பரநாதருக்கு மிகவும் இனிமையையுடையதும் தருமங்களுட் சிறந்ததுமாகுமென்க. (உஉ)

ஆற்றலுக்கியையவெவ்வளவைத்தாயினும்
போற்றருமறையினைப்போற்றிமேதகச்
சாற்றுகாயத்திரிசதவுருத்திர
மேற்றவைந்தெழுத்திவைவிதியினெண்ணியே.

(இ - ள்.) ஆற்றலுக்கு இயைய எவ்வளவைத்தாயினும் - தன்னளவுக்கியல எவ்வளவாயினும், போற்றரு மறையினைப்போற்றி - ஓதுதற்கரியவேதத்தை யோதி, மேதக சாற்றும் காயத்திரி சதஉருத்திரம் ஏற்ற ஐந்தெழுத்து இவை விதியில்எண்ணி - மேன்மையாகச்சொல்லுங் காயத்திரி அதனினு மேன்மையாகுஞ் சதஉருத்திரம் அதனினும் ஏற்றமாகியபஞ்சாக்கரம் ஆகிய இவைகளைவிதிப்படிகணித்து. (எ - று.)

தன்னளவுக்கியல வேதங்களை யோதி மேன்மையிற் சிறந்த காயத்திரி சத உருத்திரம் பஞ்சாக்ஷரம் ஆகிய இவைகளை விதிப்படிக் கணித்தென்க. (உ௩)

அனைத்தினுநிறைந்துறையடிகள்பூசனை
தனக்குறு திருப்பள்ளித்தாமங்கொய்துபோய்
மனைத்தலைவைத்துமேல்வொழுக்கைக்கேய்ந்தன
வெனைத்துளகருமமுமியல்பினொடியே.

(இ - ள்.) அனைத்தினும் நிறைந்து உறை அடிகள் பூசனை தனக்கு - எல்லாவற்றுள்ளும் பரிபூரணமாயிருக்கின்ற இறைவருடைய அருச்சனைக்கு, உறுதிருப்பள்ளித்தாமம் கொய்துபோய் மனைத்தலைவைத்து - பொருந்திய திருப்பள்ளித் தாமங்களைப்

பறித்துக் கொண்டுபோய் இல்லின்கண்வைத்து, மேல்வாழ்க்கைக்கு ஏய்ந்தனவெனைத்துள கருமமும் இயல்பின் நாடிப்பின்னர் இல்வாழ்க்கைக்கு - பொருந்திய எல்லாக்கருமங்களையு முறைமையிலெண்ணிச் செய்து. (எ - று)

இறைவருடைய அருச்சனைக்கு மலர்கொய்து இல்லின்கண்வைத்து பின்னர் இல்வாழ்க்கைக்குப்பொருந்திய எல்லாக் கருமங்களையு மெண்ணிச்செய்தென்க. (உ௪)

கதிரவனுச்சியினணுருங்காலையின்
முதுசிவகங்கைநீர்முறையின்மூழ்குபு
மதியுறுநியதிகண்முடித்துமாநிழ
லதிபனைமுறையுளியணைந்துபோற்றியே.

(இ - ள்.) கதிரவன் உச்சியின் அணுகும் காலையில் - சூரியன் நடுவில் வருங் காலத்தில், முது சிவகங்கைநீர் முறையில் மூழ்குபு - பெருமை பொருந்திய சிவகங்கைத்தீர்த்தத்தில் விதிமுறை ஸ்நானஞ்செய்து, மதி உறுநியதிகள் முடித்து-அறிவிற் பொருந்திய நியதிகளைச் செய்துமுடித்து, மாநிழல் அதிபனை முறையுளி அணைந்து போற்றி - மாநிழலிலெழுந்தருளியிருக்கின்ற இறைவனை ஆலயதரிசன விதிப்படி சென்றடைந்து தோத்திரஞ் செய்து. (எ - று)

உச்சிக்காலத்தில் சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து நியதிமுடித்து ஏகம்பவாணனை முறையே யடைந்து துதித்தென்க.

நியதிகள் யாவும் அறிவினுலெண்ணிச் செய்வனவாகலான் மதியுறு நியதிகளென்றார். (உ௫)

மீண்டுதன்மனைவயின்மேவித்தற்பொருட்
டீண்டியவருட்குறியிறைவனர்ச்சனை
பூண்டபேரன்பினிற்புரிந்துபூசனைக்
காண்டுறுப்பெனப்படுமழலுமோம்பியே.

(இ - ள்.) மீண்டு தன் மனைவயின் மேவி - மீளவும் தன்மனையின்கண் வந்து, தன்பொருட்டு ஈண்டிய அருட்குறி இறைவன் - தன்பொருட்டு எளிவந்தலிங்க மூர்த்தியாயிருக்கின்ற இறைவனை, பூண்டபேர் அன்பினில் அருச்சனைபுரிந்து - தன்னுள்ளெழுந்த பேரன்பினால் அருச்சனைசெய்து, பூசனைக்கு உறுப்பு எனப்படும் அழலும் ஆண்டு ஓம்பி - பூசனைக்கு அங்கமாகச் சொல்லப்படும் சிவாக்கினையையு மப்பொழுது செய்து. (எ - று)

மீளவும் வீட்டின்கண்வந்து ஆன்மார்த்த மூர்த்தியைத் தன்னுள்ளெழுந்தவன்பின் மிகுதியினாலருச்சித்து அதற்கங்கமெனப்படும் சிவாக்கினியையுஞ் செய்தென்க

அறமுதலிழிஞரீறனவற்றினுக்
குறுபலியுதவியூங்கெச்சமைவகை
முறையுளியாற்றியவ்வேலைமுன்னிய
பெறலருவிருந்தினர்ப்பேணியூட்டியே.

(இ - ள்.) அறமுதல் இழிஞர் ஈறுனவற்றினுக்கு - காக்கைமுதல் இழிஞரீறனவைகளுக்கு, உறுபலி உதவி - இடத்தகும் பலியையிட்டு, ஊங்கு - பின்னர், ஐவகை எச்சம் முறையுளி ஆற்றி-ஐவகை யாகங்களை முறைப்படிசெய்து, அவ்வேலை

முன்னிய - அச்சமயத்தில் வந்த, பெறல் அரு விருந்தினர் பேணிஊட்டி - பெறுதற்கரிய விருந்தினரை விரும்பி உண்பித்து. (எ - று.)

காக்கைமுதல் இழிஞர்முனைவர்களுக்கிடத்தகுப்பலியையிட்டு ஐவகை யர்கங்களைச்செய்து அக்காலததில்வந்தவிருந்தினரைவிரும்பியுண்பித்தென்க (உஎ)

நீத்தவர்க்கையமுநேர்ந்துநோயினர்
வாய்த்தவெஞ்சூன்முதிர்மகளிர்பிள்ளைகள்
மூத்துறுகிழவரைமுந்தவூட்டிப்பின்
ஏத்துறுகிளைஞரோடுண்டலேயுமால்.

(இ - ள்.) நீத்தவர்க்கு ஐயமும் நேர்ந்து - துறந்தவர்களுக்குப் பிச்சையிட்டு, நோயினர்வாய்த்த வெஞ்சூல் முதிர் மகளிர் பிள்ளைகள் மூத்துறு கிழவரை முந்த ஊட்டி - பிணியாளரையும் விருப்பமவாய்ந்த கருமுதிர்கின்ற மகளிரையும் மக்களையும் முதிர்ந்த கிழவரையும் முன்னர் உண்பித்து, பின் ஏத்துறு கிளைஞரோடு உண்ணல் ஏயும் - பின்னர் புகழ்கின்ற சுற்றத்தாரோடுண்டல் விதியாகும். (எ - று)

துறவிகளுக்குப் பிக்ஷையிட்டு நோயாளிகள்-கருப்பஸ்திரீசள்-மக்கள் கிழவர் ஆகிய இவர்களுக்கு முன்னருண்பித்துப்பின் சுற்றத்தாரோடுண்ண வேண்டுமென்க.()

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

கங்கைவார்சடிலக்கடவுளைநினைந்துகறிதயிர்நெய்யுடனாவி
யங்கியையெழுப்பியாகுதிசெய்கையாகமுப்பதிற்றிருகவளம்
பங்கமில்விதியாலுண்டுகைபூசிப்பாகடைதின்றதன்பினனர்ப்
பொங்குபேரன்பினொக்கலோடமர்ந்திப்புராணமேகேட்டிடல்வேண்டும்.

(இ - ள்) கங்கைவார்சடிலக்கடவுளைநினைந்து - கங்கையையணிந்த நீண்ட சடைமுடியையுடைய இறைவனைத் தியானித்து, ஆவி அங்கியை யெழுப்பி - பிராண வாயுவினால் குண்டலியிலிருக்கும் அனலை யெழுப்பி, கறி தயிர் நெய்யுடன் ஆகுதி செய்கையாக முப்பதிற்றிருகவளம் பங்கமில் விதியாலுண்டு - கறி தயிர் நெய் முதலிய வற்றை ஓமத்தீயிலிடும் செய்கையைப்போல முப்பத்திரண்டு கவளத்தையும் குற்றமில்லாத விதிப்படி யுண்டு, கைபூசிபாகடைதின்று - கைசுத்திசெய்து தாம்பூலந் தரித்து, அதன்பின்னர் பொங்குபேர் அன்பின் ஒக்கலோடு அமர்ந்து - அதன்பின்மேலேழும் அன்பினால் சுற்றத்தாரோடிருந்து, இப்புராணமே கேட்டிடல் வேண்டும் - இக் காஞ்சிபபுராணத்தையே கேட்கவேண்டும். (எ - று)

கங்காதரனைச் சிந்தித்து பிராணவாயுவினால் குண்டலியிலிருக்குங் கனலை யெழுப்பி கறி தயிர் நெய் முதலியவற்றை ஒமத்திலிடும் செய்கையைப்போல முப்பத்திரண்டு கவளமாக விதிப்படி யுண்டு கை சுத்திசெய்து தாம்பூலந்தரித்து அதன்பின் அன்பினால் சுற்றத்தாரோடிருந்து இப்புராணத்தைக் கேட்கவேண்டுமென்க. (உகூ)

நான்மறைப்பொருளாய்க்கதைக்கெலாமிடனாய்நாற்பயனுதவுமேகம்பன்
மேன்மையுங்காமநோக்குடையிறைவிமேன்மையும்விளக்குவதிதுவே
நான்முறைவருணநிலைகளினொழுக்கநுண்ணிதிற்றெரிப்பதுமிதுவாம்
பான்மையாற்காஞ்சிப்புராணமேநாளும்பயில்வுறக்கேட்பதுமரபால்.

(இ - ள்.) நான்மறைப்பொருளாய் கதைக்குஎல்லாம் இடனாய் நாற்பயன்உதவும் ஏகம்பன் மேன்மையும்-நான்குவேதங்களின் பொருளாய்ப் புராணங்களுக்கெல்லா மாதாரமாய் அறமுதலிய நாற்பயனையும் கொடுக்கும் ஏகம்பவாணருடைய பெருமை

யையும், காமநோக்குடை இறைவிமேன்மையும் இதுவே விளக்குவது - காமாக்ஷியினுடைய பெருமையினையும் இப்புராணமே விரித்துச் சொல்வதாகும், நூல் முறை வருணநிலைகளின் ஒழுக்கம் நுண்ணிதில் தெரிப்பதும் இதுவாம் - இதுவேயுமன்றி நூல் முறைமைகளில் விதித்தநான்குவருணங்களின ஒழுக்கநிலைமைகளை நுட்பமாகத் தெரிவிப்பதும் இதுவேயாகும், பான்மையால் காஞ்சிப்புராணமே நாளும் பயில்வுறகேட்பது மரபால் - பெருமையினுல் காஞ்சிப்புராணத்தையே நாடோறுஞ் சொல்லக்கேட்பது முறைமையாம். (எ - று)

ஏகாம்பரநாதன் பெருமையையுங் காமாக்ஷியம்மையினுடைய பெருமையையும் விளக்குவதேயல்லாமல் நான்முறைகளில் விதித்த வருணச்சிரமங்களின் நிலைகளை நுண்ணிதாகத் தெரிவிக்குந்தன்மையினுல் இக்காஞ்சிப்புராணத்தையே நன்ருய் விளங்கக்கேட்பது முறைமையாமென்க. (௯0)

அலர்கதிரென்றாழ்மறைந்திடுங்காறுமான்றவர்படித்திடக்கேட்டுக்
குலவுசீரந்திசெய்கடன்முற்றிக்கோயிலைக்குறுகியேகம்பத்
தலைவனைத்தொழுதுமனைவயினணுகிச்சமிதையினங்கிவேட்டமர்ந்து
பலருடனருந்திமனைவியோடிரவிற்பள்ளியின்மேவுதல்விதியே.

(இ - ள்) அலர்கதிர் என்றாழ் மறைந்திடுங்காறும் - கிரணங்களைப்பரப்புஞ் சூரியன் அத்தமனமாகுமளவும், ஆன்றவர் படித்திடக்கேட்டு குலவுசீர் அந்திசெய் கடன்முற்றி - மேலோர்சொல்லக்கேட்டு விளங்குஞ் சிறப்பினையுடைய அந்தியில் செய்கடனைமுடித்து, கோயிலைக்குறுகி ஏகம்பத்தலைவனை தொழுது - ஆலயத்தை யடைந்து ஏகாம்பரநாதனை வணங்கி, மனைவயின் அணுகி சமிதையின் அங்கிவேட்டு - இல்லத்தின்கண்வந்து சேர்ந்து சமிதையால் நித்தியவோமஞ்செய்து, அமர்ந்து பலருடன் அருந்தி இரவில் மனைவியோடு பள்ளியில் மேவுதல் விதி - பின்னிருந்து பலரோடு உண்டு இராக்காலத்தில் மனையாட்டியோடு சயனத்தையடைதல் விதியாகும். (எ - று)

சூரியனத்தமாகுமளவும் மேலோர் இப்புராணத்தைச் சொல்லக்கேட்டு அந்தியிற் செய்கடனை முடித்து ஆலயத்தில் ஏகம்பநாதனை வணங்கி மனையையடைந்து சமிதையால் நித்யவோமஞ்செய்து பலரோடுண்டு இரவில் மனையாளோடு சயனித்தல் விதியாகுமென்க. (௯க)

நறுக்குறுவனப்பிற்பிறர்க்குரியவரைத்தவ்வையிற்றங்கையிற்காண்க
வுருத்திரகணிகைமகளிரைத்தாயினுமுவகையினவைமடவா
ரருப்பிளங்கொங்கைத்தாதிகண்மாட்டுமன்னதேயாகவின் [illegible]
விருப்பினையவர்பான்மறப்பினுமெண்ணலோம்புக [illegible]

(இ - ள்) நன்னெறி விழைவார் நறுக்குறுவனப்பின் பிற [illegible] வைவையில் தங்கையில் காண்க - நல்லொழுக்கத்தை விரும்புவர்கள் பேரழகுவாய்ந்திருக்கும் பிறர்க்குரிய மனைவியரைத் தமக்கையைப்போலும் தங்கையைப்போலுங் காணக்கடவர், உருத்திரகணிகை மகளிரை தாயின் உவப்புக - இறைவனுக்கடிமையாக விருக்கின்ற உருத்திரகணிகையரை தாயைப்போலும் நினைக்கக்கடவர், வைணவமடவார் அருப்பிளங்கொங்கை தாதிகள் மாட்டும் - வைணவப்பெண்களிடத்தும் தாமரையரும்புபோலுமிளங்கொங்கைகளைப்படைத்த தாதிகளிடத்தும், அன்னதேயாகவின் புணர்ச்சிவிருப்பினை அவர்பால்மறப்பினும் எண்ணல் ஓம்புக-தாயைப்போலவேயாயின

ணவேண்டுமெனக்கருதின் இணைவிழைச்சை அவரிடத்து மறந்தேனு மெண்ணுதலை யொழி யக்கடவர். (எ - று)

நல்லொழுக்கத்தை விரும்பினவர்கள் அழகிற் சிறந்த பிறர்மனைவியரைத் தவ்வைதங்கையைப்போலவும், உருத்திரகணிகையரையும் வைணவப்பெண்களையும் தாதிகளையும் தாயைப்போலவும் நினைத்து புணர்ச்சிவிருப்பினை யவர்பாலெண்ணலை யொழியக்கடவரென்க. (௬௨)

இருட்சுரிகருமென்மலர்க்குழன் மனையாளிளமுலைப்போகமுமகவின்
பொருட்டெனக்கொண்டேவிலக்குநாளொழித்துப்புணர்ந்தபினீங்கிவெம் [பாந்த
ளரைக்கசைத்தருளுமடிகளீரடியுமகந்தழீஇத்துயிலுகமற்றீங்
குரைத்தவாறென்றுமொழுகுநரெங்கோன்றிருவருட்குரியவராவார்.

(இ - ள்.) இருள் சுரி கரு மெல் மலர்க்குழல் மனையாள் இளமுலைப் போகமும் - இருளடைந்த கரிய மெல்லிய மலரணிந்த கூந்தலையுடைய மனைவியின் இளமுலைப்போகத்தை விரும்புதலும், மகவின் பொருட்டே என கொண்டு-மகப்பேற் றின் பொருட்டென்றே உட்கொண்டு, விலக்கு நாள் ஒழித்து - புணர்ச்சியாகாவென வொழித்த நாளில் அப்போகத்தை யொழித்து, புணர்ந்தபின் நீங்கி - கூடியபின்ன ரங்கொழிந்து வேறிடத்திருந்து, வெம்பாந்தள் அரைக்கு அசைத்தருளும் அடிகள் ஈரடியும்-கொடியபாம்பை இடையில் உதரபந்தனமாகக்கட்டுமெ இறைவருடைய இரு பதங்களையும், அகம் தழீஇ துயிலுக - உள்ளத்திற்கொண்டு உறங்கக்கடவர், ஈங்கு உரைத்த ஆறு - இவ்விடத்திற் சொல்லியவாறு, என்றும் ஒழுகுனர் - எந்நாளும் நடக் கத்தக்கவர்கள், எங்கோன்திருவருட்கு உரியவர் ஆவார் - எமதிறைவருடைய திருவரு ளுக்குரியவராவார்கள். (எ - று)

மனைவியின்போகத்தை விரும்புதலும் மகவின்பொருட்டே என்றெண்ணி ஒழிக்குநாள்களிலொழித்துக் கூடியபின் வேறிடத்திருந்து இறைவனடிகளை யுள்ளத் திற் கொண்டுறங்கக்கடவர். இவ்வாறு எந்நாளும் நடப்பவர்கள் எமதிறைவனுடைய வருளுக்குரியராவார்களென்க. (௬௩)

கச்சிமாநகரிற்கம்பநாயகன்முன்கரிசறுத்தான்றவர்முகப்ப
வச்சுவமாடையூண்முதற்றானமாதரித்திியைந்தவையளித்தல் [யைப்பி
பொச்சமிலவ்வக்கொடைப்பெரும்பயனொன்றனந்தமாய்ப்பொலியுமவ்வ
னச்சிமெய்யுணர்வுகொளுத்துவோன்வீடுநணுகுமேம்பட்டதித்தானம்.

(இ - ள்.) கச்சிமாநகரில் - பெரியகாஞ்சிநகரத்தில், கம்பநாயகன் முன் - ஏகாம்பரநாதர் சந்நிதியின்முன், கரிசு அறுத்து ஆன்றவர் முகப்ப - குற்றமற்ற பெரி யோர்கள்கொள்ள, அச்சுவம் ஆடை ஊண்முதல் தானம்-அஸ்வதானம் வஸ்திரதானம். அன்னதானமுதலிய தானங்கள், ஆதரித்துஇயைந்தவை அளித்தல் - அன்போடு தனக் கமைந்தனவற்றைக்கொடுத்தல், பொச்சம் இல் அவ்வக்கொடை பெரும்பயன் - பொய் மையில்லாமல் அந்தந்த தானங்களால் வரும்பெரியபயன, ஒன்று அனந்தமாய் பொலி யும் - ஒன்று கோடியாக வளரும், அ வரைப்பில் - அக்காஞ்சிநகரத்தில், மெய்யுணர்வு நச்சி கொளுத்துவோன் - சிவஞானத்தை விரும்பி விளங்க அறிவிக்கின்றவன், வீடு நணுகும் - மோக்ஷத்தையடைவான, மேம்பட்டது இத்தானம் - இக்காரணத்தால் இந்த க்ஷேத்திரம் மேம்பாட்டினையுடையதாகும். (எ - று)

காஞ்சிநகரத்தில் ஏகம்பவாணன் சந்நிதியில் பெரியோர்கள்கொள்ள அஸ்வ முதலிய தானங்கள் கொடுத்தால் அவை ஒன்றனந்தமாய்ப் பொலியும். அவ்விடத்தில்

மெய்ஞ்ஞானம் அறிவிற்றேன்ற வுபதேசிப்பவர் முத்தியையடைவர். இக்காரணங்களான் இக்காஞ்சித்தளி சிறப்புடைத்தென்க.

அஸ்வமுதலிய மா தானங்களோடு ஞானதானமுங் கூறினமையான் ஞானத்திற்குரிய அதிகாரம் அங்ஙகரிலுள்ளார்பாலேதக்காது ஞானோபதேசஞ்செய்யவேண்டுமென்பது பெறப்பட்டது. எனவே, அஸ்வதானமுதலியன பிறர்க்கீதற்பொருட்டன்றித் தாமடையவிரும்பிய துறக்கமுதலிய பதங்களை எய்தற்பொருட்டென்றேதெள்ளிதினறியக்கிடத்தல்போல், முத்திப்பதத்தையடைய விரும்புவாரும் அங்நாட்டிலுள்ளார்க்கு ஞானேதயமுண்டாகச் செய்வாராயின் முத்திப்பதத்தையடைவரென்று குறித்ததென்க. (௬௪)

ஓதல்வேள்வீகையோதுவித்திடல்வேட்பித்தலேற்றலுமுறுமறையோர்க்
காதியின்மூன்றேடளித்திடலூர்திபடைத்தொழிலரசருக்குரிய
வாதியின்மூன்றுவாணிகம்பசுவேர்வணிகருக்காகுமங்கவற்று
ளாதியின்மூன்றுமல்லவைமுறையேயவ்வவர்விருத்திகட்காமால்.

(இ - ள்.) மறையோர்க்கு ஓதல் வேள்வி ஈகை ஓதுவித்திடல் வேட்பித்தல் ஏற்றலும் உறும், அந்தணர்கட்குத் தாம் ஓதுதலும் யாகஞ்செய்தலும் கொடுத்தலும் பிறர்க்குத் தாம் ஓதுவித்தலும் பிறர்க்குத் தாம் யாகஞ்செய்வித்தலும் பிறரிடத்துத் தாமேற்றலும் (ஆகிய இவ்வாறும்) பொருந்திய விதியாகும், அரசருக்கு ஆதியின் மூன்றேடு அளித்திடல் ஊர்தி படைத்தொழில் உரிய - வேந்தர்கட்கு முன்னர்க்கூறிய ஓதலாதியாகிய மூன்றுடன் உலகை நீதிவழியிற்காத்தலும் யானையேற்றமுதலியபயிற்சிகளும் போர்க்குரிய படைத்தொழிலில் வன்மையும் ஆகிய மூன்றும் உரியனவாம், வணிகருக்கு ஆதியின்மூன்றும் வாணிகம் பசு ஏர் ஆகும்—வைசியருக்கு முன்னர்க்கூறிய ஓதல் முதலியமூன்றுடன் வாணிகமும் பசுக்காத்தலும் ஏருழுதலும் (ஆகிய மூன்றும்) உரியனவாம், ஆங்கவற்றுள்—(அந்தணர்முதலிய மூவர்க்குங்கூறிய) அவ்வாறனுள், ஆதியில் மூன்றும் அல்லவை-முதலிற்கூறிய மூன்றுமல்லாதவைகள் முறையே அவ்வவர் விருத்திகட்காம் - முறையாக அவரவருடைய தொழில் முறைமைக்கேற்றவாறு கைக்கொள்ளல் உரிமையுடையனவாம் (எ - று.)

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றன் முதலிய அறுவகைக்கும் உரியவர் அந்தணரெனவும், ஓதுவித்தல், வேட்பித்தல், ஏற்றலாகிய மூன்றுமொழிந்த ஓதல் வேட்டல் ஈதன் முதலியவற்றேடு காத்தல் ஊர்திபயிறல் படைத்தொழிலியற்றன் முதலிய மூன்றுக்குமுரியவர் க்ஷத்திரியரெனவும், க்ஷத்திரியருக் குரிமையாகக்கூறிய ஓதன் முதலிய மூன்றேடு வாணிகம் பசுக்காத்தல் ஏருழுதல் முதலிய மூன்றுக்கும் உரியவர் வைசியரெனவும், இம்மூவரும் முறையே ஓதுவித்தல் முதலிய மூன்றுனும் காத்தல் முதலிய மூன்றுனும் வாணிக முதலிய மூன்றுனும் விருத்தி செய்துக்கொள்ளல் முறைமையெனவும் வகுத்துக்காட்டியதென்க.

பிரமஞானத்தை யுணர்ந்தோதியுரைத்தற்குரியராவாரும் சற்பாத்திரராவாரும் அந்தணரேயாகலின் ஓதல்வேள்வீகை யோதுவித்திடல் வேட்பித்தலேற்றலு முறுமறையோர்க்கு எனவும், அரசன், அந்தணரை ஏவுதற்கர்த்தாவாகக்கொண்டு தான் இயற்றுதற்கர்த்தாவாகவிருந்து செங்கோல் செலுத்தற்குரியனுகலான் அவனுக்கு சிஷ்டபரிபாலனத்தின்பொருட்டு ஓதல், வேட்டல், ஈதல், காத்தலும், துஷ்டநிக்ரகத்தின் பொருட்டு ஊர்திமுதலியனவும் வேண்டுமாகலின் ஊர்திபடைத்தொழில் அரசருக்

குரிய எனவும், அந்தணரரசருக்கு விதித்த அறுதொழில்களும் வாணிகமுதலியமூன்று மில்லாதொழியின் அவ்வறுதொழிலு நிலவப்பெற்றுப் பயனுறாவாகலான் அவை பயன்பெறும்பொருட்டு வாணிகம் பசுக்காத்தல் உழவுத்தொழில் செய்தல் இம்மூன் றுனும் ஈட்டும்பொருளை அறத்தின்வழியே யீட்டி அறத்தின்வழிச்செலுத்த ஓதல் முதலியனவேண்டுமாகலின் ஆதியின் மூன்றுவாணிகம்பசுவோர் வணிகருக்காகுமென வும், இங்ஙனம் ஒவ்வொரு வருணத்தாருக்குங்கூறிய அறுவகையில் ஓதல்வேள்வீகை யொழிந்த மும்மூன்றும் முறையே அவ்வவர்கட்கு விருத்தியாகலின் ஆங்கவற்றுள் ஆதியின் மூன்று'மல்லவைமுறையே யவ்வவர் விருத்திகட்காமெனவுங் கூறினர். ஆம் எனவே அந்தணன் - வேந்தர் வைசியர்கட்குரிய விருத்திகளினும், வேந்தர் - வேதியர் வைசியர்கட்குரிய விருத்திகளினும், வைசியர் - வேதியர் வேந்தர்கட்குரிய விருத்தி களினுஞ் செல்லுதலாகாவென்பது தானே போதரல் காண்க.

இதனுனே அந்தணர்முதலிய மூவர்க்கும் ஓதல் வேட்டல் ஈதன் முதலிய மூன்றும் பொதுவெனவும், ஓதுவித்தல் வேட்பித்தல் ஏற்றன்முதலிய மூன்றும் அந்த ணர்க்குச் சிறப்பெனவும், காத்தல் ஊர்திபயிறல் படைதொழிலியற்றன் முதலிய மூன்றும் அரசருக்குச் சிறப்பெனவும் வாணிகஞ்செய்தல் பசுக்காத்தல் ஏருழுதன் முதலிய மூன்றும் வைசியருக்குச் சிறப்பெனவுங் கொள்ளக்கிடந்தமைகாண்க. (கரு)

இருதமோடமிர்தவிருத்தியுமான்றோர்க்கிசைவனமிருதமுமாகும்
தருபிரமிருதஞ்சத்தியாநிருதந்தழுவலுமொன்றுநாய்விருத்தி
யொருவலேவேண்டுமுஞ்சநல்விருத்தியிருதமாமொன்றிரவாமல்
வருவதேயமிர்தமிரந்துறன்மிருதமுழவின்வந்துறல்பிரமிருதம்.

(இ - ள்.) இருதமோடு அமிர்தவிருத்தியும் ஆன்றோர்க்கு இசைவன—இரு தவிர்த்தியுடன் அமிர்தவிர்த்தியும் மேலாகிய அந்தணர்களுக் குரிமையுடையனவாம், மிருதமும் தருபிரமிருதம் சத்தியாநிருதம் தழுவலும்ஆகும் - (இதுவேயுமன்றி) மிரு தம் பிரமிருதம் சத்தியாநிருதமென்பவைகளையும மேற்கூறியவைகளோடு தழுவிக் கொள்ளலுமாம், நாய் விருத்தி ஒன்று ஒருவலேவேண்டும்—நாய் விருத்தியென்று சொல்லப்படுவதொன்றை நீக்கவேவேண்டும், உஞ்சநல்விருத்தி இருதம் ஆம் - உஞ்ச விருத்தி இருதமெனறுசொல்லப்படும், ஒன்று இரவாமல் வருவதே அமிர்தம் - ஒரு சிறிதும் யாசிக்காமல் வருவதே அமிர்தமென்று சொல்லப்படும், இரந்துறல் மிருதம்- யாசித்துவருவது மிருதமென்று சொல்லப்படும, உழவின் வந்துறல் பிரமிருதம் - ஏரு முதலால் வருவது பிரமிருதமென்று சொல்லப்படும். (எ - று)

விருத்தி - இருதம் அமிர்தம் மிருதம் பிரமிருதம் சத்தியாநிருதம் நாய்விருத் தி என அறுவகை. இவற்றுள் நாய்விருத்தியொழித்து ஒழிந்த ஐவகைவிருத்திகளும் அந்தணர்கள் செய்தற்குரியன. இருதமென்பது உஞ்சவிருத்தி, அமிர்தமென்பது பிறர் பால் குறைகூறியாசியாத விருத்தி, மிருதமென்பது யாசிக்கும் விருத்தி, பிரமிருத மென்பது ஏருழுதலாகிய விருத்தியென்க.

உஞ்சவிருத்தியாவது விளைநிலத்தில் வீழ்ந்து சிதறியிருக்குநெற்களைச்சிறிது சிறிதாய்ச் சேகரித்து அதனுற்சீவிப்பதொன்று, அந்நிலத்தில் உழவர்கள் நெற்கட்டுக ளைக்கொண்டுபோகப் பின்னர் சிதறியிருக்கும் நெற்களைக்கூட்டி அதுகொண்டு சீவிப்ப தொன்று. (கசு)

சத்தியாநிருதம்வாணிகவிருத்திதாழ்வுறுஞ்சேவகஞ்செய்யல்
வைத்தநாய்விருத்தியாதலினதனை மாற்றிமேயிருபிறப்பாள
ரொத்ததோர்தூயவிருத்தியாற்றம்மைமேயோம்பிமெய்ந்நூல்பலபயின்று
தத்தமக்குரியநியதியினொழுகித்தங்குதன்மரபெனப்படுமால்.

(இ - ள்.) வாணிகவிருத்தி சத்தியாநிருதம் - வணிகவிருத்தியால் வருவது சத்தியாநிருதமென்றுசொல்லப்படும்,தாழ்வுறும் சேவகம் செய்யல் வைத்தநாய்விருத்தி, தாழ்வுபொருந்திய சேவகஞ்செய்தலால் வருவது நாய்விருத்தியென்றுசொல்லப்படும், ஆதலின் - ஆகையினால், இருபிறப்பாளர் அதனை மாற்றி - அந்தணாகள் அந்தநாய்விருத்தியை யொழித்து, ஒத்ததோர்தூயவிருத்தியால் தம்மை ஓம்பி - ஏனையதொழில்களுள் தங்களுக்கொத்ததாகிய ஒருநல்லதொழிலால் தம்மைக்காத்துக்கொண்டு, மெய்நூல் பலபயின்று தத்தமக்குரிய நியதியினொழுகி - உண்மைநூல் பலவற்றைக் கற்றுணர்ந்து தத்தமக்குவிதித்த நியதியிற் றவறாதுநடந்து, தங்குதல் மரபுஎனப்படும் - வாழ்தல் முறைமையென்று சொல்லப்படும். (எ - று.)

சத்தியாநிருதவிருத்தியென்பது வணிகவிருத்திசெய்வதாகும், நாய்விருத்தியென்பது பிறருக்குத்தாழ்ந்து அவரேவிய ஏவலைச்செய்வதாகும், வேதியர் இவ்விருதொழிலையுமொழித்துத் தம்முடைய ஒழுக்கத்துக்கு முரணாகாத தொழிலால் தம்மைப் பாதுகாத்து மெய்ந்நூல்களைப் பயின்று தமக்குரிய ஒழுக்கத்தினின்று நீங்காதிருத்தல் அந்தணர்மரபாகுமென்க.

ஒத்தது எனவே தத்தமக்கு அமைந்துள்ள சரீரவன்மை, ஆயுளளவு, ஆசாரம், கல்வி, வேடம், பிறர்க்குப்போதித்தலாகிய போதகாசிரியத்தன்மை, புத்தி ஆகிய இவைகளுக்கு மாறுபாடில்லாததெனவும், ஓர் தூயவிருத்திஎனவே முன்னர் இருதமுதலாகக்கூறிய ஐந்தனுளொன்றுனும் அன்றி அஜிம்ஹாம் அசடாம் எனவே பிறர்க்கு எத்திறத்தும் துன்பமில்லாமலும் குரூரமில்லாமலும் ஆர்ச்சிப்பதாகிய ஆர்ச்சிதத்தானும், அன்றி அரசனிடத்தினும், யாகஞ்செய்பவரிடத்தினும், தம்மிடத்தில் கல்வி கற்றவர்களிடத்தினும் யாசிப்பதாகிய யாசகத்தானும் சீவிப்பதெனவுங் கொள்க.

"நீடுபெராசத்திநிகழிச்சாஞானநிறைகிரியைதரவதனை நிமலன்மேவி, நாடரிய கருணைதிருவுருவமாகிநவின்றுபலகலைவிந்துவாதி, கூடுமொளிவள்ர்குடிலைமாயைமேவிக்கொடுவினைகொடனுகரணபுவனபோகம், பீடுபெறநிறுவியவையொடுக்குமேனி பிறங்கிய நிட்களசகளப்பெற்றியாமே." எனவும் "ஈங்கிதுவென்றதுகடந்தவியல்பினுனுமீறு முதனடுவொன்றுமிலாமையானு, மோங்கிவளர்ஞானமயனுதலானுமுண்மை பிறர்க்கறிவரியவொருமையானுந், தாங்கரியவெறுப்பினொடுவிருப்புமெல்லாஞ்சார்வரிய தனிமுதல்வனுதலானு,நீங்கலருமுயிர்க்குரியாய்நிற்றலானுநிறுத்திவெனினைந்தவருநிமலன்றனே." எனவும், "உலகமெலாமொருவனொடொருத்தியொன்றென்றுளதாகி நின்றளவிலொடுங்கும்பின்னு, மலமதனுலுளதாகுமுருவமாறிவருவதுபோவதுசெல்வதாதலானு, மலைவிலசேதனமாயையாதலானுமணுக்களுருவடையுமறிவிலாமையானு, நிலவுதொழின்மருவியுருநிற்றலானுநின்றவையுமளித்திவெனிமலன்றனே." எனவும் நிட்களசகளமாய் விளங்கும் ஐஸ்வர்ய உருவ இலக்கணமுடைமையும் பின்னர் உயிர்க்குயிராய் நிற்றலாகிய அத்வைத விலக்கணமுடைமையும் அதன்பின்னர் பசுபாசங்களையியக்குதலாகிய சுதந்தர முடைய பதியிலக்கணமுடைமையுங் கூறிய பரமசிவவிலக்கணமும், "எண்ணரிதாய்நித்தமாயிருண்மலத்திலழுந்தியிருவினையின்றன்மைகளுக்கீடானயாக்கை, யண்ணலருளானண்ணியவையவரா(ய)யதனுலலகினிகழ்போகங்களா

க்தீமாற்றாற், பண்ணியபாவம்புரிந்துபோக்குவரவுடைத்தாய்ப்புணருமிருண்மலபாகம் பொருந்தியக்காலருளா, லுண்ணிலவுமொளியதனாலிருளகற்றிப்பாதமுற்றிடுநற்பசுவரு க்கமெனவுரைப்பருணர்ந்தோர்." எனக்கூறிய பசுவிலக்கணமும், "ஏகமாய்த்தங்கால வெல்லைகளின்மீளுமெண்ணரியசத்தியதாயிருளொளிரவிருண்ட, மோகமாய்ச்செம்பி லூறுகளிம்பேய்ந்துநித்தமூலமலமாயறிவுமுழுதினையுமறைக்கும்." எனவும், "உருவாதி சதுவிதமாயொன்றொன்றாவ்வாவுண்மையதாய்நித்தமாயொன்றாயென்றும், அருவாகி க்கன்மமாரணுக்களியார்க்குமாவாரமாயசித்தாயசலமாகி, விரிவாயதன்செயலின்வியாபி யாயெல்லாம்விரிந்தவகைபுரிந்தடைவின்மேவியவையொடுங்க, வருகாலமுயிர்களெல் லாமருவிடமாய்மலமாய்மன்னியிடுமெரனருளான்மாயைதானே" எனவும், "நண்ணி யிடுமுருவதனுக்கேதுவாகிநானாபோகங்களாய்நாசோற்பத்தி, பண்ணிவருமாதலாலநாதி யாகிப்பலவாகியணுக்கடொறும்படர்வதாதி, யெண்ணிவருமனவாசகன்மத்தாலியற்று மியல்பினதாய்மதிகதமாயிருபயனும்பாவ, புண்ணியமாய்ப்புலர்காலைமாயைமேவிப் பொருந்துமிதுகன்மமலம்புகலுமாறே" எனவுங்கூறிய பாசத்திரயவிலக்கணமும்நன்கு விளக்கும் மெய்ந்நூல்கள் பலபயின்றாலன்றி மறுபிறப்பும் இருவினைப்பயனுங்கடவுளும் உளவெனக்கொண்டு நியதியினொழுகிச் செய்யும் உணர்ச்சிதோன்றாவாகலான் மெய்ந் நூல் பலபயின்று தததமக்குரிய நியதியினொழுகித் தங்குதன்மரபெனப் படுமாலென் றார். மரபெனப்படுமென்ற துணிவானே மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையென்றுணரச்செய்யும் விபரீதவுணர்வைப் பயபபிக்கும் மயக்கநூல் பலபயின்று அந்நூல்வழிப்பட்டு நியதிகளைக்கைவிடுதல் மரபன்றெனவும் அங்ஙனங்கொண்டவர் மரபினரன்றெனவுங் கொள்ளக்கிடநதன. (கூஎ)

**கைசெவிசென்னிகழுத்தினெப்போதுங்கண்டிகையணிதல்வெண்ணீறு**
**மெய்யெலாம்பூசியைந்துமூவிடநதுமவிலங்குமுப்புண்டரம்பொறித்தல்**
**வைதிகநிலையோர்மரபெனமறைநூலவகுததிடுமாதலினிவற்றைக்**
**கைவிடாதென்றுங்கடைப்பிடிததிடுகவிகழ்ந்திடிற்கடையரேயாவர்.**

(இ - ள்.) கை செவி சென்னி கழுத்தின் எப்போதும் கண்டிகையணிதல்-கை காது தலை கண்டமென்னு அங்கங்களில் எடபொழுதும் உருத்திராக்கத்தை விதிப்படி தரித்தலும், வெண்ணீறுமெய்யெலாம்பூசி ஐந்தமூவிடத்தும் இலங்கும் முப்புண்டரம் பொறித்தல் - திருநீற்றைச் சரீரமுற்றும் உத்தூளனஞ்செய்து எட்டிடத்தும் (அல்லது பதினைந்திடத்தும்) விளங்காநின்ற திரிபுண்டரமணிதலும், வைதிகநிலையோர் மரபுஎன- வேதநெறியில் நிற்கின்றவர்களுடைய மரபாமென்று, மறைநூல்வகுத்திடும் ஆதலின், வேதம் வகுத்துச்சொல்லுமாகையினால், இவற்றை என்றும் கைவிடாது கடைப்பிடித் திடுக - திருநீறுகண்டிகைகளை எக்காலத்திலுங்கைவிடாமலுறதியாகப் பிடிக்ககடவர் இகழ்ந்திடில் கடையரேயாவர் - இவற்றை யிகழ்வரேயாயின் கடைப்பட்ட பிறப் பினரேயாவர். (எ - று.)

திருநீறுகண்டிகைகளை விதிப்படிதரித்தல் வைதிகநிலையோர் மரபென வே தம் வகுத்துச்சொல்வதனால் என்றுங்கைவிடாதுறுதியாகப் பிடிக்கக்கடவர். இவற்றை யிகழ்ந்திடில் கடைப்பட்ட பிறப்பினரேயாவரென்க.

பஸ்மருத்திராக்க திரிபுண்டர நீங்கலான ஏனைய சின்னங்களெல்லாம் வே தத்தினால் திரஸ்கரிக்கப்பட்டு அவைதிகமென வோதப்பட்டதாகலான் எப்போதுங் கண்டிகையணிதல் வெண்ணீறு முப்புண்டரம் பொறித்தல் வைதிகநிலையோர் மரபெ னவும், ஏனையவெல்லாஞ்சாபத்தினாலுண்டாக்கப்பட்டனவாய் சிவசின்னங்களொன்றே

வேதங்களால் வரையறுத்துக்கூறப்பட்டனவாய் விளங்கலான் மறைநூல்வகுத்திடு மெனவும், ஊழ்வகையினாலே சிவசின்னந்தாங்கப்பெறாத குலங்களிற் பிறந்தவருயர்ந் தவரேயாயினும் அவரெல்லாம் வேதங்களால் பாஹ்யரெனத் தள்ளப்பட்டவராகலான் ஆதலினிவற்றைக் கைவிடாதென்றுங் கடைப்பிடித்திடுக விகழ்ந்திடிற் கடையரேயாவ ரெனவுங் கூறினார். இதனானே திருநீறுமுதலிய சிவசின்னங்களுக்கு வேதப் பிர மாணமுண்டெனவும், ஏனைய சின்னங்களுக்கு அஃதின்றெனவும் அதனால் எப்பொழு தும் எக்கருமங்களையும் சிவசின்னங்களோடு கூடியிருந்தே செய்யவேண்டுமெனவுங் கொள்ளக்கிடந்தமைகாண்க.

எட்டிடமென்றது - சிரம் நெற்றி கண்டம் மார்பு தோள் நாபி முழந்தாண் முதுகு என்பன. பதினைந்திடமென்றது எட்டங்கத்தோடு காது முழங்கை மணிபந்த முதலியன. (கூஅ)

வைதிகசைவநெறிகளைப்பற்றுமாண்பிலாச்சூத்திரர்முதலோர்க்
கைதுமீப்போயபுண்டரமாதியணியலாமேனையர்க்காகா
மெய்திகழ்மறைகளாகமம்விதித்தகருமமற்றினையனபிறவு
முய்தியைவேட்டோராசிரித்தொழுகிவிலக்கினவொழிவதுமுறையே.

(இ - ள்.) வைதிகசைவநெறிகளைப் பற்று மாண்பு இல்லாத சூத்திரர் முத லோர்க்கு - வைதிகசைவமார்க்கங்களைக் கடைப்பிடித்தொழுகுஞ் சீலமில்லாத சூத் திரர் முதலானவர்களுக்கு, ஐது மீ போயபுண்டரம் ஆதி அணியலாம் - அழகுபெற்று மேலோங்கிய புண்டரமுதலியவைகளணிந்துகொள்ள விதியுளவாம், ஏனையர்க்கு ஆகா - மற்றையோர்க்கவ்விதியிழுக்காம், உய்தியை வேட்டோர் - உய்யுநெறியை விரு ம்பினவர்கள், மெய்திகழ்மறைகள் ஆகமம்விதித்தகருமம் - உண்மைவிளங்கும் வேதாக மங்களில் விதித்தவிதிகளையும், இனையனபிறவும்-இவைபோல்வனவாகிய பிறவிதிகளை யும், ஆசிரித்து ஒழுகி - கடைப்பிடித்துநடந்து, விலக்கின ஒழிவது-விலக்கினவைகளா கிய நிஷேதங்களைவிட்டொழிதல் முறைமையாம். (எ - று.)

வைதிகசைவநெறிகளுக்கருகரல்லாத அசற்சூத்திரர் ஊர்த்துவபுண்டர முத லியவற்றையணியவிதியுளதெனவும்,சற்சூத்திரருக்கு அவ்விதியின்றெனவும்,உய்தியை யடைய விரும்பினோர் மறைகள் ஆகமம் இவ்விரண்டையும் தழுவியநூல்களாகிய இவையிற்றிற் கூறியவழியே யொழுகி விலக்கினவற்றை யொழிதல் முறைமையாமெ னவுங் கூறியதென்க. விலக்கினவை யென்பது பின்வரும் ஏழுசெய்யுளிற்காண்க.

மாண்பிலாச்சூத்திரர் முதலோரென்றது வேதாகமநெறியில் நிற்க வியலாத அசற் சூத்திரர் முதலாயினாரை. ஏனையோரென்றது-அந்நெறியில் நிற்கவல்ல சற்சூத் திரர் முதலாயினாரை. இனையனபிறவுமென்றது வேதாகமநெறிகளுக்குமுரண்படாத ஸ்மிருதியாதிகளிற் கூறும்விதிகளை. முத்திநெறிவிரும்பினோர்க்கு வேதநெறிமுதலியன வேண்டாமென்பாரை மறுத்தற்கு முத்தியைவேட்டோ ராசிரித்தொழுகிவிலக்கின வொழிவது முறைஎன்றார். (கக)

தவத்தினாற்செருக்கல்கண்டதுவிளம்பல்பொய்யுரைசாற்றுதலைந்து
மவித்தவந்தணரையிகழுதல்யாதுமளித்ததுபுகழ்ந்தெடுத்துரைத்த
லெவற்றினையானுங்கொலைசெயல்பிறர்பாலிடுக்கணையுறுத்துதல்குறளை
செவிப்புகப்புகறல்பூப்புடைமனையைத்தீண்டலும்வழுவெனப்படுமால்.

(இ - ள்.) தவத்தினால் செருக்கல் - தவத்தினாலே இறுமாப்படைதலும், கண்டதுவிளம்பல் - தான்கண்டமறைப்பொருளை பிறரறியச்சொல்லுதலும், பொய்யுரை சாற்றுதல் - பொய்வார்த்தைகளெடுத்துச் சொல்லுதலும், ஐந்தும் அவித்த அந்தணரை இகழுதல்-ஐம்புலன்களையுங்கெடுத்த பெரியோரை யிகழ்ச்சிசெய்தலும், யாதும் அளித்தது புகழ்ந்தெடுத்துரைத்தல் - யாதொன்றைக்கொடுத்தாலும் அதனைப் புகழ்ந்து மேலாகக்கூறுதலும், எவற்றினையானுங் கொலைசெயல் - எந்தவுயிரையாயினுங் கொலைசெய்தலும், பிறர்பால் இடுக்கணையுறுத்துதல் - பிறரிடத்தில் துன்பம் வந்து பொருந்தச்செய்தலும், குறளை செவி புக புகறல் - கோட்சொல்லைக்காதில் கேட்கச்சொல்லுதலும், பூப்புடைமனையை தீண்டலும் - இல்லிகந்த மனைவியைத் தீண்டுதலும் - வழுவெனப்படும் - குற்றமென்று சொல்லப்படும். (எ - று)

செருக்கடையாமையே தவமாமெனவும், வெளிப்படுத்தலல்லாதனவற்றை வெளிப்படுத்தின் அது துன்பந்தருமாகலான் அவற்றை விளம்பாமையே கண்டதுவிளம்பலாமெனவும், பொய்யாமையே வாய்மையாமெனவும், அந்தணரை யிகழாமையே புகழாமெனவும், கொடுத்தது யாதேனும் புகழ்ந்தெடுத்துரையாமையே ஈகையினாற் பெறும் பயனுமெனவும், எவ்வுயிரையுங்கொல்லாமையே விரதமாமெனவும், பிறர்பாலிடுக்கணுறுத்தாமையே தன்பால்வரும் இடுக்கண்வராவண்ணங் காப்பதாமெனவும், பிறர்பால்கோட்சொல்லாமையே தன்னைப் பிறர் புறங்கூறாமைக்குக்காரணமாமெனவும், பூப்புடை மனைவியைத் தீண்டாமையே சீலங்களிற் சிறந்ததாமெனவுங் கொள்ளல் வேண்டுமென்க. (சo)

மனைவியோடுண்டலவளுடன் றுயிறன்மனைவியாவித்துழிப்பசிப்பில்
வினையிகந்தியல்பானிருப்புழியுண்ணும்வேலையுமாங்கவட்பார்த்தல்
கனைகதிர்த்தேவைக்கிழக்கெழுங்காலைமேல்கடற்பால்விழுங்காலைப்
பனிவிசும்புச்சியுற்றிடுங்காலைபார்த்தலும்பழுதெனப்படுமால்.

(இ - ள்.) மனைவியோடு உண்டல் அவளுடன்துயிறல் - மனைவியோடிருந்துண்ணுதலும் அவளுடனொன்றுயுறங்குதலும், மனைவி ஆவித்துழி பசிப்பில் வினையிகந்து இயல்பான் இருப்புழி உண்ணும்வேலையும் ஆங்கு அவள்பார்த்தல் - மனையாட்டி கொட்டாவிவிடும்போதும் பசித்திருக்கும்போதும் தொழில்செய்யாது வாளாவிருக்கும்போதும் உண்ணும்போதுமாகிய வக்காலங்களில் அவளைப்பார்த்தலும், கனைகதிர்த்தேவை - ஒளிவீசுஞ்சூரியனை, கிழக்கு எழும்காலை மேல் கடற்பால் விழுங்காலை பனிவிசும்புச்சி உற்றிடும்காலை பார்த்தலும் - கீழ்க்கடலிலுதயமாகும்போதும் மேற்கடலில் அத்தமிக்கும்போதும் குளிர்ந்த ஆகாயத்தினடுவில் வரும்போதும் கண்ணால் நோக்குதலும், பழுதெனப்படும் - குற்றமென்று சொல்லப்படும். (எ - று)

மனைவியை உண்டல் முதலிய ஆறுகாலங்களினும் சூரியமூர்த்தியை முக்காலங்களினும் பார்த்தல் குற்றமெனக் கூறியதென்க. இதனானே மனைவியை அவ்வாறுகாலம் நீங்கலாகிய ஏனையகாலங்களினும், சூரியமூர்த்தியை அம்முக்காலங்களுமொழிந்த ஏனையகாலங்களினும் பார்த்தல் குற்றமன்றென்க. (சக)

உடையொழிந்திருநீராடுதலாடையொன்றுடுத்துண்டலீரியக்க
நடைவழிச்சாம்பராணிலைதீநீர்நள்ளுறவிடுதலாங்குமிழ்த
லுடையிலாமாதைநோக்குதலிருகாலொளிர்ந்தசெங்கனலிடைக்காய்ச்ச
லிடையுறுமந்திவேலையினருந்தலிவைகளும்விலக்கெனப்படுமால்.

(இ - ள்.) உடைஒழிந்து இருநீர் ஆடுதல் ஆடை ஒன்று உடுத்துண்டல - வஸ்திரமில்லாமல் நீராடுதலும் ஒரு ஆடையோடுபோசனஞ்செய்தலும், இரு இயக்கம் நடைவழிசாம்பர் ஆன் நிலை தீ நீர் நள்ளுறவிடுதல் ஆங்கு உமிழ்தல்-மலசலங்களை நடக்கின்ற மார்க்கத்திலும் சாம்பல் பசுக்களிருக்கும் தொழுவம் நெருப்பு நீர் ஆகியவிவைகளிடுவிலும் போசனஞ்செய்தலும் அவ்விடங்களி லெச்சிலுமிழ்தலும், உடை இலாமாதைநோக்குதல் - ஆடையில்லாதமாதரைப்பார்த்தலும, இருகால் ஒளிர்ந்த செங்கனலிடை காய்ச்சல் - இரண்டுகால்களை எரிகின்றநெருப்பினிடத்தில் காய்ச்சலும், அந்தி இடையுறும் வேலையின் அருந்தல் இவைகளும் விலக்கெனப்படும் - அந்திக்காலத்திலுண்ணுதலுமாகிய விவைகளெல்லாம் விலக்கென்றுசொல்லப்படும். (எ - று.)

நீராடுங்காலத்து ஆடையின்றியும், உண்ணுங்காலத்து ஒற்றுடையோடும், மலசலவுபாதியினால் நடைவழி முதலியவற்றைப்பாராது போசனஞ்செய்தலும், நோக்காது எச்சிலுமிழ்தலும், ஆடையற்ற மாதரைப்பார்க்க விரும்புதலும், நெருப்பைத் தெய்வமாகப் பாராது காலைக்காட்டுதலும், தொழில்வினையினால் அந்திக்காலநோக்காதுண்டலும் விலக்கென்று சொல்லப்படுமென்க. (சஉ)

இந்திர திருவில்விசும்பிடைநோக்கியேனையர்க்கறிவுறக்காட்ட
னிந்தையின்வாளாபேரிகல்விளைத்தல்கையிணைகுவித்துநீரருந்தல்
செந்தழற்கடவுள்வான்பசுபார்ப்பார்தேவர்கண்ஞாயிறுகுரவ
ரிந்துவின்முன்னரிச்சையாறிருத்தலின்னவுந்தீங்கெனப்படுமால்.

(இ - ள்.) விசும்பிடை இந்திரதிருவில்நோக்கி ஏனையர்க்கு அறிவுறக்காட்டல் - ஆகாயத்தினிடத்தில் இந்திரதனுசைத் தானும்பார்த்து மற்றையோர்க்குத் தெரியக்காட்டலும், நிந்தையில் வாளா பேர் இகல்விளைத்தல்-தன்னைப் பிறர்நிந்திக்காமலிருக்க வீணாகப்பிறரிடத்துப் பெரும்போரை விளைத்தலும், கை இணை குவித்து நீர் அருந்தல் - இரண்டுகைகளையுஞ் சேர்த்துக்குவித்து நீரையுண்ணுதலும், செந்தழல் கடவுள் வான் பசு பார்ப்பார் தேவர்கள் ஞாயிறு குரவர் இந்துவின் முன்னர் - அக்னிதேவர் ஆகாயம் பசு அந்தணர்கள் தேவர்கள் சூரியன் ஆசிரியர் சந்திரன் ஆகிய இவர்களுக்குமுன், இச்சையாறு இருத்தல் இன்னவும் தீங்கு எனப்படும் - தன்னிச்சைவழியே இருத்தலுமாகிய இவைகளும் தீங்கு என்று சொல்லப்படும். (எ - று)

இதனானே காட்டவேண்டிய தல்லாதனவற்றைக் காட்டுதலும், பகைமை கொள்ளாவிடத்துக் கொள்ளுதலும், அருந்து முறையன்றி யருந்தலும், இச்சைவழியே இருக்குமிட மறியாதிருத்தலும் குற்றமெனக் காட்டியதென்க. (சங)

கேழுகிருரோமந்துணித்திடலுகிராற்பல்லினைக்கிளைத்திடறனியே
பாழ்மனைதுயிறல்கண்படையெழுப்பன்முடிவடபாலின்வைத்துறங்க
லாழ்துரும்பொடித்தலோட்டினையடித்தறனிவழிச்செலல்பிறரணிந்த
காழகஞ்செருப்புமுதலியவணிதலினையவுங்கடிந்திடப்படுமால்.

(இ - ள்.) கேழ் உகிர் உரோமம் துணித்திடல் உகிரால் பல்லினை கிளைத்திடல் - நிறமுள்ள நகத்தையும் உரோமத்தையும் அறுத்தலும் நகத்தினால் பல்லைக் கீண்டலும், பாழ்மனை தனியே துயிறல் கண்படை எழுப்பல் முடிவடபாலின்வைத்து உறங்கல் - பாழடைந்தவீட்டில் தனித்துறங்குதலும் உறங்குகின்றவர்களை யெழுப்புதலும் வடதிசையில் தலைவைத்துறங்குதலும், ஆழ்துரும்பு ஒடித்தல் ஓட்டினையடித்தல் தனிவழிச்செலல் - சிறுதுரும்பை யொடித்தலும் ஓட்டைத்தட்டுதலும் தனியே

வழிச்செல்லுதலும், பிறர் அணிந்த காழகம் செருப்பு முதலிய அணிதல் இனையவும் கடிந்திடப்படும் - பிறரணிந்த வாடை செருப்புமுதலியவைகளை யணிதலுமாகியவிவை களையும் விலக்கப்படும். (எ - று)

வினை அறுக்கக்கூடாத பொருளும், தீண்டக்கூடாதவிடமும், தனியே யுறங்கக்கூடாத விடமும், தலைவைத்துறங்கக்கூடாததிசையும், ஒடித்தலடித்தல் கூடாதபொருளும், மார்க்கத்திற் செல்லக்கூடாத முறையும், பிறரணியத்தக்கபொருள்களுள் தாம் தாம் அணியக்கூடாத பொருள்களும் இது விதுவெனக் காட்டியதென்க.

அறக்கடைமிகுமூர்பெறும்பிணியுறுமூரமரிழிகுலத்தவர்பதிதர் [றைத
மறக்கொடுந்தொழிலோர்துவன்றுமூர்வைகல்வரையிடைநெடும்பொழுது
இறப்பருமிசும்பினேறுதலிழிதலிளவெயிற்காய்தனீராடா
துறப்பெருஞ்சிவலிங்கார்ச்சனைபுரியாதுண்டலும்வழுவெனப்படுமே.

(இ - ள்.) அறக்கடை மிகுமூர் பெறும் பிணியுறுமூர் - பாவம்வளருமூரிலும் நீங்காதுபிணிவருமூரிலும், அமர் இழிகுலத்தவர் பதிதர் மறக்கொடுந்தொழிலோர் துவன்றுமூர் வைகல் - இழிந்தகுலத்தவரும் பதிதர்களும் பாவத்தொழிலைச் செய்கின்றோரும் ஆகிய இவர்கள் நெருங்கி வாழுமூரிலுந்தங்குதலும், வரைஇடை நெடும்பொழுது உறைதல் இறப்பருமிசும்பில் ஏறுதல் இழிதல் இளவெயில்காய்தல் - மலையில் நெடுங் காலம் வசித்தலும் மிகவும் நீண்டமாளிகை மரமுதலியவற்றில் ஏறுதலு மிறங்குதலும் இளவெயிலிலுடம்புகாய்தலும், நீராடாது உறப்பெரும் சிவலிங்கார்ச்சனைபுரியாது உண்டலும் வழுவெனப்படும் - நீராடிச்செய்யவேண்டுவதாகிய சிவபூசையைச் செய் யாமலுண்ணுதலுங் குற்றமென்று சொல்லப்படும். (எ - று)

இதனானே தங்கிவாழ்தற்குக் கூடாத ஊர்களும், நெடுநேரம் இருத்தற்குக் கூடாதவிடமும், ஏறுவதற்கும் இழிவதற்கும் எண்ணக்கூடாத விடமும், வெய்யலிற் காயக்கூடாதகாலமும், உண்ணக்கூடாதநெறியும் வகுத்துக்காட்டியதென்க. (சகு)

பூத்தவன்பதிதனிழிஞனையழுத்தைப்புத்தனைத்திகிரிமேற்பொறித்த
மூர்த்தியைத்தீண்டல்காண்டலும்விலக்கேயிலங்குமுப்புண்டரமின்றி
மீத்திகழ்வடிவமுதலியபொறித்தவேதியர்முகத்தினைமறந்தும்
பார்த்துளோர்கம்பத்தலைவனைப்படர்ந்துகண்ணுறினண்ணுவர்தூய்மை.

(இ - ள்.) பூத்தவன் பதிதன் இழிஞனை அழுத்தை புத்தனை திகிரிமேல்பொறித்த மூர்த்தியைத் தீண்டல் காண்டலும் விலக்கே - இல்லிகந்தவளையும் ஒழுக்கங்களிற் றவறினவனையும் சண்டாளனையும் பிணத்தையும் புத்தனையும் சக்கிராங்கிதங்கள் பொறித்த பிம்பங்களையும் தொடுதலுங்காணுதலும் விலக்கேயாகும், இலங்குமுப்புண்டரம் இன்றிமீதிகழ்வடிவமுதலிய பொறித்த வேதியர் முகத்தினைமறந்தும் பார்த்துளோர் - விளங்குந் திரிபுண்டரத்தைக் குறியாக வணியாமல் மேன்முகமாகவிளங்கும் திருமாலவதாரங்களைக் காட்டுகின்றவடிவ முதலியவைகளைக் குறியாகவிட்ட அந்தணர்களுடைய முகங்களை மறந்தாயினும் பார்த்தவர்கள், கம்பத்தலைவனைப்படர்ந்து கண்ணுறின் தூய்மை நண்ணுவர் - ஏகம்பநாதனையடைந்து தெரிசனஞ்செய்தால் பரிசுத்தமடைவார்கள். (எ - று)

இதனானே கண்ணுற்காணக்கூடாதவரிவரெனவும், திரிபுண்டர மில்லாதவரைக் காணப்பெறின் இயற்றிக்கொள்ளும் பரிகாரம் இதுவெனவுங் கூறியதென்க.

பூத்தவர் முதலியோரைப்பார்ப்பதும் இழுக்கென்றதனால் ஒழுக்கமுடையார் அவரோடிணங்கி நட்பாடல்முதலியனசெய்வாராயின் அவரவ்வொழுக்கத்தை யிகழ்ந்தவரெனவும், முப்புண்டரமன்றி மீத்திகழ்வடிவமுதலிய பொறித்த வேதியர் முகத்தினைமறந்தும் பார்த்தலோர் கம்பநதலைவனைப்படர்ந்து கண்ணுறினண்ணுவர் தூய்மையென்றதனால் வேதவழியால்வந்த திரிபுண்டரத்தை யொழித்துச் சாபவழியாய் வந்த ஊர்த்துவபுண்டர முதலியவற்றைத் தரிப்பவர் வேதியரேயாயினும் அவரைக் காணப்பெறுவார்க்குப்பரிகாரவியல்கூறும்நூல்களிற் பரிகாரமேயின்றெனவுங்கொள்க.

மறையுடனேனைநூல்களையெச்சந்தன்னுடன் மற்றைநல்வினையைக்
கறையறும்பார்ப்பாரோடுஞ்சூத்திரரைக்காஞ்சியினொடும்பிறநகரைப்
பிறைமுடிக்கடவுளோடரியயனையொப்பெனப்பேசற்கபேசிற்
குறைவருநிரயக்குழியினீடூழிகுளிப்பதற்கையமொன்றிலையே.

(இ - ள்.) மறையுடன் ஏனைநூல்களை - வேதத்தோடுமற்றநூல்களையும், எச்சந்தன்னுடன் மற்றை நல்வினையை - சைவயாகத்தோடு ஏலைய நல்லறங்களையும், கறைஅறும் பார்ப்பாரோடும் சூத்திரரை - குற்றமற்ற அந்தணரோடு சூத்திரரையும், காஞ்சியினொடும் பிறநகரை - காஞ்சி நகரத்தோடு ஏனைய நகரங்களையும், பிறைமுடிக் கடவுளோடு அரி அயனை - சந்திரசேகரராகிய சிவபெருமானுடனே பிரமவிஷ்ணுக் களையும், ஒப்பு என பேசற்க - ஒப்பென்றுசொல்லற்க, பேசின் குறைவரு நிரயக்குழியில் நீடூழி குளிப்பதற்கு ஐயம் ஒன்று இல்லை-சொன்னால் அளவில்லனவாகிய நரகக்குழி களில் பன்னெடுங்கால மூழ்கியிருப்பதற்கொருசந்தேகமுமில்லை. (எ - று.)

இதனானே, நூல்களிற் சிறந்தது வேதமெனவும், நல்வினைகளிற் சிறந்தது யாகமெனவும், குலங்களிற் சிறந்தது வேதியர்குலமெனவும், நகரங்களிற் சிறந்தது காஞ்சியெனவும், கடவுளர்களிற் சிறந்தவர் சிவனாரெனவும் வரையறுத்தமைகாண்க.

வேதம் பதிவாக்காதலினானும், யாகம்முத்தியையும் முத்திப்பதங்களையுந் தருதலினானும், வேதியர் சுருதிமிருதியாசாரங்களில் ஊக்கமுடையவராதலினானும், காஞ்சிப்பதி அறம்பொருளின்பங்களைக் கோடிகோடியாகத்தரும் ஆற்றலுடையதாத லினானும், சிவபெருமான் பிறந்திறவாத புகழுடையனாதலினானும், இவ்விலக்கணங்க ளமையப்பெறாத நூல்களையும் நல்வினைகளையுங் குலங்களையும் நகரங்களையும் கடவு ளரையும் ஒப்பெனப்பேசுதல் பெரும்பாவமாகலின பேசற்க எனவும், பேசிற்குறை வரு நிரயக்குழியினீடூழி குளிப்பதற்கையமொன்றிலை எனவுமெடுத்துக்கூறியதென்க.

இன்னனபிறவுமறைமுதனூல்கள்விலக்கிடுமிவற்றினையொழிக
பன்னருமறையின்புறத்துநூலனைத்துங்கெடுதியேபயக்குமாதலினா
லன்னவைவிடுத்துமறைநெறிவழுவாதொழுகிநீளலர்பொழிற்காஞ்சி
தன்னிலேகம்பநாயகனடியார்தம்மொடுங்குலாவுதன்முறையே.

(இ - ள்.) இன்னன பிறவும் மறைமுதல்நூல்கள் விலக்கிடும் இவற்றினை ஒழிக-இவைபோல்வனவாகிய பிறவற்றையும் வேதமுதலியநூல்கள் நிஷேதங்களாக விலக் குகின்றவற்றை தங்களிடத்தினிகழாவண்ணம் ஒழிக்கக்கடவர், பன்னரு மறையின் புறத்துநூல் அனைத்துங் கெடுதியே பயக்கும் (எனெனில்) சொல்லுதற்கரிய வேதத் திற்குப் புறம்பாயுள்ள நூல்களெல்லாம் கேட்டையேதரும், ஆதலினால் அன்னவை விடுத்து மறைநெறி வழுவாது ஒழுகி - ஆகையினால் அந்நூலொழுக்கங்களைக் கொள் ளுதல்விடுத்து வேதநெறியிற்கூறும் ஒழுக்கத்திற்றவறாது நடந்து, நீள்அலர்பொழில்

காஞ்சிதன்னில் - மலர்கள்நிறைந்த சோலைசூழ்ந்த காஞ்சிநகரத்தில், ஏகம்பநாயகன் அடியார் தம்மொடும்-ஏகம்பநாதருடைய அடியார்களுடன், குலாவுதல்முறை - அளவளாவிக்கூடியிருத்தல் முறைமையாம். (எ - று.)

வைதிகசைவமார்க்கங்களைக்கூறும் வேதமுதலியபதிநூல்களால்விலக்கப்பட்டனவற்றையும், கெடுதியொன்றனையேபயக்கும் புறச்சமையநூல்களையும் ஒழித்து வைதிகசைவமார்க்கத்தினின்று ஏகம்பநாதனடியாரோடுவாழ்தலேமுறைமையென்க.()

இருமுதுகுரவரிறந்திமெதிநாளாண்டுதோறெய்துழியுகாதி
வருமனுவாதியுவாமுதற்றினத்தின்வயங்குதென்புலத்தவர்க்குறித்துத்
திருமறையவர்க்குமுறையினூட்டிடுகவேனைமாத்தலங்களிற்செய்யும்
பெருநலமனைத்துங்காஞ்சியினூட்டும்பேற்றினைச்சிறிதுமொவ்வாவால்.

(இ - ள்.) இருமுதுகுரவர் இறந்திமெதிநாள் ஆண்டுதோறு எய்துழி - தாய்தந்தையர்களிறந்துபோன மாதமுந் திதியும் வருடந்தோறும் வருங்காலத்திலும், யுகாதி வரும் மனுவாதி உவாமுதல் தினத்தில் வயங்குதென்புலத்தவர் குறித்து - யுகாதிகளினும் மனுவாதிகளினும் அமாவாசைமுதலியதினங்களினும் விளங்கும் பிதுர்க்களைக் குறித்து, திருமறையவர்க்கு முறையின் ஊட்டிடுக - அழகிய வேதியர்க்கு விதிப்படி அன்னதானஞ்செய்யக்கடவர், ஏனைமாதலங்களில் செய்யும் பெருநலம் அனைத்தும் - ஏனைய பெரியதலங்களிற் செய்யும் பெரியநன்மைகளெல்லாம், காஞ்சியின் ஊட்டும் பேற்றினை சிறிதும் ஒவ்வா - காஞ்சியின்கணுண்பிக்கும் பேற்றினுக்கோரணுவளவுமொப்பாகா. (எ - று)

பிதுர்க்களைக்குறித்துத் திருப்திசெய்யுநாள்களிவையென்பதும் அதன் பயன் பெரிதாகத்தருவது காஞ்சிப்பதி எனவுங் கூறியதென்க.

புரட்டாசி மாசி மாதங்கள் மாதப்பிறப்பு கிரகணகாலம் கிருஷ்ணங்கார சதுர்த்தி அக்ஷயதிரிதியை ஆகிய இவைகளும் பிதுர்களுக்குச் சிறந்தனவென்பார் உவாமுதற்றினத்தினெனவும், குருக்ஷேத்திரம கயை கேதாரம் புஷ்கரம் முதலிய புண்ணியக்ஷேத்திரங்களில் மேற்கூறியநாட்களில் அந்தணருட் சற்பாத்திரமாகச்சொல்லப்பட்ட ஆயிரம் அந்தணர்களுக்கு அன்னதானஞ் செய்வதினுல் வரும்பயன் காஞ்சியில் சத்தசத்தென்னும் பகுதிநோக்காது எவர்க்கேயாயினும் ஒருவருக்கு அன்னதானஞ் செய்வதனுல் வரும்பயனுக்கொவ்வாதென்பார் ஏனைமாத்தலங்களிற்செய்யும்பெருநலமனைத்துங்காஞ்சியினூட்டும்பேற்றினைச்சிறிதுமொவ்வாவெனவுங் கூறினூர். (சக)

தென்புலத்தவர்தாமயன்றருமரீசிமுதலியோர்சிறுவாங்கவருளின்புறுமரீசிவிராட்டுவைமுதலோரீன்றவர்சுராசுரர்முதலோர்க்
கன்புடைப்பிதிரராகுவர்கவியோடங்கிராப்புலத்தியன்வசிட்ட
னென்பவர்க்குதித்தோர்மறையவரரசர்வணிகர்வேளாளருக்கிவைவர்.

(இ - ள்.) தென்புலத்தவர்தாம்-பிதுரராவார்,அயன்தரும் மரீசி முதலியோர் சிறுவர் - பிரமன்பெற்றமரீசிரிஷிமுதலியோரும் அவர்கள் பிள்ளைகளுமாம்,அங்கவருள் இன்புறும் மரீசி - அவ்விருவகுப்பினருள் மகிழ்ச்சியையுடைய மரீசியாதிகளும், விராட்டுவை முதலோர் ஈன்றவர்-பிரமன்முதலானவர்களும் பெற்றபிள்ளைகள்,சுரர் அசுரர்முதலோர்க்கு - சுரர் அசுரர் முதலானவர்கட்கு, அன்புடை பிதுரர் ஆகுவர் - அன்புடைய பிதுர்க்களாவார்கள், கவியோடு அங்கிராபுலத்தியன் வசிட்டன் என்பவர்க்கு உதித்,

தோர்-கவியோடு அங்கிரா புலத்தியன் வசிட்டனென்று சொல்லப்பட்ட இருடிகளுக்குப் பிறந்தபிள்ளைகள், மறையவர் அரசர் வணிகர் வேளாளருக்கு இயைவர்-அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர் என்று சொல்லப்பட்ட விவர்களுக்குரிய பிதுர்க்களாவார்கள்.

பிதுர்க்களென்று சொல்லப்படுவோர் பிரமபுத்திரர்களான மரீசிமுதலியவர்களும் அம்மரீசிபுத்திரர்களுமாம். அவர்களில் மரீசிபுத்திரர்களான அக்னிஷ்வாத்தாதிகள் தேவர்களுக்கும், பிரமபுத்திரரான மரீசியாதிகள் அசுரர்களுக்கும் கவி அங்கிரா புலத்தியன் வசிட்டனென்பவருடைய பிள்ளைகள் முறையே அந்தணரரசர் வைசிய சூத்திரர்களுக்கும் பிதுர்க்களாவார்களென்க. விராட்டுவை - ஐ சாரியை. (௬0)

முனிவரிற்பிறந்தார்தென்புலத்தவரம்முதல்வரிற்சுராசுரர்பிறந்தார்
புனிதவிண்ணவரிற்சராசரமனைத்தும்புகரறத்தோன்றினமுறையா
லினையசீர்ப்பிதிரர்தமைக்குறித்தீசனிணையடிக்கன்புடைமறையோர்
நனியுளங்களிப்பவுறுதிபாற்காஞ்சிநகர்வயினூட்டுதல்கடனே.

(இ - ள்.) முனிவரில் தென்புலத்தவர் பிறந்தார் - முனிவர்களிடத்தில் பிதுர்க்கள் பிறந்தார்கள், அம்முதல்வரில் சுராசுரர்பிறந்தார் - அத்தென்புலத்து முதல்வரிடத்தில் சுரர்களு மசுரர்களும் பிறந்தார்கள், புனிதவிண்ணவரில் - புனிதமாகிய தேவர்களிடத்தில், சராசரம் அனைத்தும் புகர்அற முறையால் தோன்றின - சராசரங்களனைத்தும் குற்றமில்லாமல் முறைப்படிதோன்றின, இனையசீர்பிதிரர்தமைக்குறித்து- இத்தன்மையவாகிய சிறப்பினையுடைய பிதுர்க்களைக்குறித்து, ஈசன் இணை அடிக்கு அன்புடைய மறையோர நனி உளங்களிப்ப - சிவபெருமானுடைய திருவடியிலன்புடைய வேதியர்கள் மிகவு மனங்களிக்க,காஞ்சிநகர்வயின் உறுதியால் ஊட்டுதல் கடன்- காஞ்சிநகரத்தில் மனவுறுதியோடு அன்னமூட்டுதல்கடனும். (எ - று.)

முனிவர்களிடத்துப் பிதுர்க்களும் அப்பிதுர்க்களின் முதல்வரிடத்தில் தேவர்களும் அசுரர்களும். அத்தேவர்களிடத்தில் சராசரங்களுந் தோன்றின. இத்தன்மையான பிதிரர்களைக்குறித்துச் சிவனடியார்களாகிய வேதியர்களுக் கன்னம் மனங்களிக்க இக்காஞ்சியினூட்டுதல் கடனென்க

"வற்றருமறை" என்பது முதலாக முப்பத்தேழு செய்யளானுந் திருகத்த நெறியைக் கூறியதென்க. (௬௧)

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

இம்முறையில்லின்வைகியிடைப்படுங்காற்கூறாயுள்
செம்மையிற்கழிப்பிப்பின்னர்ச்செறிமயிர்நரைப்புக்காணு
மம்மரினறிவுமிக்கார்மனைவியைமகன்பால்வைத்து
வம்மெனவுடன்கொண்டேனுமவனத்திடைச்சேறல்வேண்டும்.

(இ - ள்.) இம்முறை இல்லின் வைகி - இவ்விதியாக இல்வாழ்க்கையிலிருந்து, இடைப்படும் கால்கூறு ஆயுள் செம்மையிற்கழிப்பி - (நால்வகைஆச்சிரமத்துக்கு நான்காகப்பகுத்த ஆயுளில்) ஒன்றிடைப்பட்ட காற்கூறாகிய பகுதியை நல்லறத்திற் கழித்து, பின்னர் செறிமயிர் நரைப்புக்காணும் அம்மரின் - பின்புசெறிந்த மயிர்கள் நரைப்புண்டாகுஞ்சமயத்தில், அறிவுமிக்கார் - அறிவிற்சிறந்தவர், மனைவியை மகன் பால்வைத்தும் - மனையாட்டியை மகனிடத்து வைத்தாயினும், வம்மெனஉடன்கொண்டேனும் (இணங்காதாயின்) வாவென்று உடன்கொண்டாயினும், வனத்திடைசேறல் வேண்டும் - காட்டகத்திற்போய்ச சேரவேண்டும். (எ - று.)

இல்வாழ்க்கைக்குக்கூறிய நெறியில் காற்கூறுயுளைக் கழித்து நரைமுதலியன தோன்றும் பருவமாகிய ஐம்பதாமாண்டெக்குமேல் மனையாட்டியை மகனுழையில் வைத்தாயினும் தன்னுடன்கொண்டாயினும் வனத்திடைச்சேறல்வேண்டுமென்க.

உம்மை இறந்ததுதழீஇயது. வம்மினென்புழிஈறுதொகுக்கும்வழிதொகுத்தல் பெற்றது. (௫உ)

விழைதருகாஞ்சிமூதூர்ப்புறனிலவரைப்பின்மேவித்
தழைபொதிசாலைவைகிவேனிலைந்தழலினுப்பண்
மழையினிற்பனியினீருள்வதிந்துமாதவங்களாற்றிக்
குழைவுறுமனத்தாலுஞ்சவிருத்திகொண்டுறைகமாதோ.

(இ - ள்.) விழைதரு காஞ்சிமூதூர் புறன் நிலவரைப்பில் மேவி - விரும்பத்தகும் பெரிய காஞ்சிநகரத்திற்குப் புறம்பாயுள்ள இடத்தையடைந்து, தழைபொதி சாலைவைகி - அவ்விடத்தில் தழைகளினுற் பொதித்த பன்னசாலையிற்றங்கி, வேனில் ஐந்தழலின் நாப்பண்-வேனிற்காலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலும், மழையினில் பனியில் நீருள்வதிந்து - மழைக்காலத்திலும் பனிக்காலத்திலும் சலத்துள்ளுமிருந்து, மாதவங்கள் ஆற்றி - பெரியதவங்களைச் செய்து, குழை உறுமனத்தால் உஞ்சவிருத்திகொண்டு உறைக - குழைந்தமனத்தால் உஞ்சவிருத்திசெய்து வாழக்கடவர். (எ - று.)

வனத்திடைச்சார்ந்த வானப்பிரத்தன் ஊரைவிட்டு நெடுந்தூரஞ்செல்லாது ஊர்ப்புறத்திற்றனே ஓர்பன்னசாலையமைத்து அதிற்றங்கி உட்டிணகாலத்தில் நெருப்பினும் மழை பனிக்காலங்களில் தண்ணீரினுஞ் சரீரத்தைத் தவத்தினிலைபெற நிறுத்தித் தன்மனத்தை வாட்டமுறச்செய்யாமல் பிறரை வேண்டுவதும் வருத்துவதுமில்லாத உஞ்சவிருத்தியால் பசிப்பிணியைமாற்றி வாழக்கடவனென்க. (௫௩)

கண்டிகைநீறுதாங்கிக்கம்பனைக்காமநோக்கி
னொண்டொடிப்பிராட்டிதன்னையுன்னியஞ்செழுத்துமெண்ணி
யண்டர்கோன்பூசையாற்றியன்னமவதிந்தபின்னர்
மீண்டரும்வனத்தின்வாழ்க்கைமெய்த்தவமுதிர்ச்சியாலே.

(இ - ள்). கண்டிகை நீறுதாங்கி - உருத்திராக்கமணியுந் திருநீறுமுடம்பிற்றங்கி, கம்பனை காமநோக்கின் ஒண்தொடி பிராட்டிதனை உன்னி - ஏகம்பநாதனையுங் காமாக்ஷியாகிய வொள்ளிய வளையலையணிந்த பிராட்டியாரையுஞ்சிந்தித்து, அஞ்செழுத்தும் எண்ணி - பஞ்சாக்கரத்தையுங்கணித்து, அண்டர்கோன் பூசையாற்றி - சிவபெருமானைப் பூசைசெய்து, அன்னணம் வதிந்தபின்னர் மீண்டரும் வனத்தின்வாழ்க்கை மெய்தவமுதிர்ச்சியால் - அவ்வாறு வாசஞ்செய்தபின்னெருபொழுதுமிருத்தற்கொண்ணுத வனத்தினகணிருந்து வாழ்தலாகிய மெய்த்தவமுதிர்ச்சியினுல். (எ - று.)

வசித்தற்கருமையான வனத்தின்கண் சிவவேடஞ் சிவசிந்தனை சிவபஞ்சாக்ஷர செபம் சிவபூசைமுதலியவற்றை விடாதியற்றி வந்த வுண்மைத்தவமுதிர்ச்சியாலென்க.

இம்மூன்றுசெய்யுளாலும் வானப்பிரத்தநெறியைக் கூறியதென்க. (௫௪)

அற்றமிலறிஞிற்றூயராகியிவ்வுலகவாழ்வும்
பொற்றபூங்கமலவாழ்க்கைப்புண்ணியன்முதலோர்வாழ்வும்
பற்றறவெறுத்துவிட்டினவாவறும்பான்மைபெற்றுன்
முற்றுறத்துறவினெய்திமறைமுடிபுணர்தல்வேண்டும்.

(இ - ள்.) அற்றமில் அறிவில் தூயராகி - மனவிகற்பங்களாற் சோர்வில்லாத நிச்சயஞானத்தாற் சித்தசுத்தியுடையவராகி, இவ்வுலகவாழ்வும் பொற்றபூங்கமல வாழ்க்கைபுண்ணியன் முதலோர் வாழ்வும்-இவ்வுலகின்கண்வாழும் வாழ்வையும், அழகிய தாமரைமலரில் வாழ்கின்றவாழ்க்கையையுடைய பிரமன் முதலியோருலகின்கண் வாழும் வாழ்வையும், பற்றறவெறுத்து - சிறிதும் ஆசையில்லாமல் வெறுத்து, வீட்டின் அவாவுறும் பான்மைபெற்றால்-முத்தியையடையவிரும்புந்தன்மையைப்பெற்றால், முற்றுற துறவின் எய்தி - அவைமுற்றுப்பெறத் துறவறநிலையையடைந்து, மறைமுடிபு உணர்தல்வேண்டும் - வேதாந்தவுண்மையை யறிதல்வேண்டும். (எ - று.)

சித்தசுத்தியடைந்து இகபரலோகவாழ்வைச்சிறிதும்விரும்பாதுவெறுத்து முத்தியடையவேண்டுமென்னுங்காமமிகுமாயின் அம்முத்திநிலை கைகூடத் துறவறத்தை யடைந்து வேதாந்தவிசாரஞ்செய்யவேண்டுமென்க.

பற்றுச்சிறிதேயுளதாயினும் அது சிறிது சிறிதாய்ப்பெரிதாகி இகபரலோக வாழ்வி லாசைமுதிரச்செய்யுமாகலின் பற்றற வெறுதலெனவும், துறவறம்பூண்டன்றி வேதாந்த விசாரஞ்செய்யக்கூடாதென்பது விதியாகலினானும் ஆசைவழியே செல்லுதற்குத் தடையாய்நிற்கும் வேலியாகலினானும் துறவினெய்தி மறைமுடிபுணர்தல் வேண்டுமெனவுங்கூறினார். (கஎ)

ஐந்தவித்துயர்ந்தவாசான்றன்புடையருணூல்கேட்டுச்
சிந்தனைசெய்துமாணத்தெளிந்துபினிட்டைமேவு
மிந்தவாறடைவினெய்துமியல்பினைத்தலைநின்றேறா
ரந்தணனிருதாளென்றுமகந்தழீஇயொழுகலாறே.

(இ - ள்.) ஐந்து அவித்து உயர்ந்த ஆசான்தன்புடை அருள்நூல்கேட்டு - ஐம்புலன்களைவென்று அறிவிற்சிறந்த ஆசிரியன்பக்கலில் சிவாகமங்களைச் சிரவணஞ்செய்து, சிந்தனைசெய்து - அதனைப் பின்னர்ச்சிந்தித்து, மாணதெளிந்து - ஐயுணர்வின்றித் தெளிந்து, பின் நிட்டைமேவும் - பின்னர் நிட்டைகூடும், இந்தவாறு - இந்த வகையில், அடைவின் எய்தும் இயல்பினை தலைநின்று - சோபானமாக வடையுமியல்பினையுடையவனாய் அவ்வவ்வழியினின்று, ஏறார் அந்தணன் இருதாள் - இடபவூர்தியைச்செலுத்தும் இறைவருடைய திருவடிகளை, என்றும் அகம்தழீஇ ஒழுகல் ஆறு - எந்நாளும் உள்ளத்தின்கண் தழுவப்பெற்று ஒழுகுதல் சன்மார்க்கமாம். (எ - று.)

நல்லாசிரியன்பால்கேட்டல் பின்னர் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் நான்கினுந் தலையாகநின்று சிவபெருமான்றிருவடியையிதயத்துட்கொள்வதே விதியென்று கூறியதென்க.

இதனானே வேதாந்தநிலையைக்கேட்கும் கேட்டலாதி முறைமையும் அந்நிலையாற் பெறும்பயனும் வகுத்துக்கூறியதென்க.

அருணூலென்றது வேதசாரமாகிய சிவாகமத்தை. உயர்ந்த ஆசான் என்றது அச்சிவாகமத்தி னனுபவமுடைய ஆசிரியனை. இந்தவாறடைவினெய்துமியல்பென்றது சிவாகமத்தினனுபவமுடைய அத்தேசிகரருளிச்செய்யு முபதேசத்தாற் கேட்டறிவதும் கேட்டதற்கனுகூலமான வளவையாற் சிந்தித்தறிவதும் சிந்தித்தவதனைத் தன்னறிவின் கண்ணே சிவஞானத்தான் மாசறத்தெளிவதும் அதனாற் பாசக்ஷயம் பண்ணி நிட்டைகூடுவதுமாகிய இயல்பை. தலைநின்று என்றது இங்ஙனங் கூறிவந்த அடைவினாலெய் தப்பெற்ற சமாதிநிலையிற் றலைப்படும் சிவானந்தானுபூதியை. ஏறாரந்தணனிருதாளை

ன்றுமகந்தழீஇ என்றது அச்சிவாநந்தானுபூதியிற் சீவபாவனையற்றுச் சிவபாவனைமே விடும் அதிசயகாலத் தனுசந்திக்கப்படுஞ் சோகம் பாவனையை. ஒழுகலாறு என்றது அச் சோகம்பாவனையையுடைய பெரியோர் கைப்பற்றியொழுகுவதாகிய சன்மார்க்கநெறி யைக் காட்டுஞ் சித்தாந்தமார்க்கத்தையென்க. கேட்டன்முதலிய நான்குக்குங் கூறிய வடைவை "அருளினுலாகமத்தேயறியலாம்" என்ற சிவஞானசித்தியார் திருவிருத்தத் துக் கிந்நூலாசிரியரெழுதிய வுரையாற்காண்க.

அல்லதூஉம் அநாசாரியரை மறுத்தற்கு ஐந்துவித்தயாந்த வாசானெனவும் அருணெறிகாட்டாத நூல்களை மறுத்தற்கு அருணூலெனவும், கேட்டன்முதலியன வாகக்கூறிய முறையானே யுணரப்பெறுதாரை மறுத்தற்குக் கேட்டுச் சிந்தனைசெய்து மாணத்தெளிந்து பின்னிட்டை மேவுமிந்தவாறடைவெனவும், இச்சாதனங்களைத்தங்க ளறிவிற்கேற்றவாறு கொள்வாரைமறுத்தற்குத் தலைநின்றெனவும், பரசிவத்தை நிட் டையிற்கூடும் பரப்பிரமப் பொருளாகக்கொள்ளக் கூசுவாரை மறுத்தற் கேறூரந்தண னெனவும், அப்பரசிவத்தினது ஞானக்கிரியா சொரூபமாகிய திருவடிநிலையே சீவ னது ஞானக்கிரியைக ளடங்குமிடமென்று கூறவறியாது வேறுநிலைகூறுவாரை மறுத் தற்கிருதாளென்றுமகந்தழீஇயெனவுங்கூறினர். அல்லதூஉம் திருவடியாகிய திருவரு ளைத் தழுவிச் சோகமெனச் சிவத்தை யநுசந்தானஞ்செய்யும் ஆறு (வழி) யறியாது அகந்தழுவி அகம்பிரமமென வெஞ்ஞான்று மனுசந்தானஞ் செய்வோரை மறுத்தற்கிரு தாளென்று மகந்தழீஇ என்றதே யமைபா தொழுகலாறே யெனத்தேற்றேகாரத்தாற் கூறினரெனக்கொள்ளலுமொன்று. என்றுமகந்தழீஇ என்றதனால் விளக்கற்றம் பார்க் கும் இருள்போல் அறிவற்றம் பார்ப்பது அஞ்ஞானவிருளாகலான் ஈண்டது அணுகா வண்ணங் காத்தற்பொருட்டென்றலுமாமென்க. (௫௬)

அடற்கொடும்பாசமாற்றிப்பசுக்களையருள்வீட்டுய்ப்பப்
படைத்தளித்தழித்துநோக்கும்பரம்பொருள்சிவனேயென்ற
லுடற்றுநர்க்கரியவேதவுள்ளுறையாவதென்னத்
தொடக்கமீறெழுவாயானவிலிங்கத்தாற்றுணிதல்கேள்வி.

(இ - ள்.) உடற்றுனர்க்கு - சிரவணமுதலியவற்றால் வருந்துவார்க்கு, அடல் கொடும் பாசமாற்றி - வன்மைமிக்க ஆணவபாசத்தைப்போக்கி, பசுக்களை அருள்வீடு உய்ப்ப - ஆன்மாக்களை முத்திவீட்டின்கண் செலுத்த, படைத்து அளித்து அழித்து, நோக்கும் பரம்பொருள்சிவனே என்றல் - ஆக்கியளித்தழித்து அவரது பரிபாகத்தை நோக்கும் பரம்பொருள் சிவனேயென்றுணர்தலும், அரியவேத உள்ளுறையாவது என்ன - (அதுவே) அருமைபாகிய வேதத்தின் உட்கிடைப்பொருளாயுள்ளதென்று, தொடக்கம் ஈறு எழுவாய் ஆன இலிங்கத்தால் துணிதல் கேள்வி, உபக்கிரமமுபசங் காரம் முதலனவாகக்கூறும் ஆறுலிங்கங்களாற்றணிதலுஞ்சிரவணமாம். (எ - று)

கேள்வியில் முயல்வார்க்கு பாசமோசனஞ்செய்து முத்தியிற்கூட்டுபவன் சிரு ட்டியாதிக ளியற்றிக் கருணைபாலிக்கும் பரம்பொருளாகிய சிவனேயென்றுணர்தலும் அதுவே வேதவுட்கிடைப்பொருளா யுள்ளதென்று உபக்கிரமமுதலாகக்கூறும் அறு விதலிங்கதாத்பரியங்களாற் றுணிதலுமே கேள்வியென்க.

பாசத்தைக் கயிற்றரவைப்போற் பிராந்தியாகவும், பசுவைப் பிரதிபிம்பம் போல்தோற்றன்மாத்திரையாகவும், முத்தியைத் தசமனைப்போல் தன்னையே பிரமமா கக் காண்கையாகவுங் கூறும் பசுஞானிகள் கூற்றை முறையே யொழித்தற்குப் பாசம் பிராந்தியன்று வன்மைபெற்றுள்ள வேறு பொருளென்பது தோன்ற அடற்கொடும்

பாசமெனவும், பசு அந்தக்கரணத்திற் பிரதிபிம்பம்போலுந்தோற்றன்மாத்திலையாயத் தோன்றுவதன்று அந்தக்கரணத்துக்கு வேறாயுள்ள வேறுபொருளென்பது தோன்றப் பாசமாற்றிப் பசுக்களையெனவும், பசுவாகியதன்னைப் பிரமமாகக் காண்பதன்று பசுவுக்கு வேறாயுள்ள பதியாகிய சிவத்தையே பிரமப்பொருளாகக் காணவேண்டுமென்பது தோன்றப் பரம்பொருள் சிவனே எனவும், இங்ஙனங் கூறிவந்தமுறையே வேத சம்மதமென்பது தோன்ற வேதவுள்ளுறை யாவதெனவும், பாசபசுபதி யென்னு முப்பொருளிலக்கணங்களையிங்ஙனங்கூறியவாறுணராராய்த தாம்பசுவன்றெனவும் தமக்குப்பாசமென்பதேதெனவும் தாமேபிரமமெனவுங்கூறுவார் கூற்றெல்லாம் வேதத்தாற் கொள்ளப்படாதபொருளென்று துணிதற்களந்தறிகருவியாயுள்ள வளவைகளுண்டென்பதுதோன்றத்தொடக்க மீறெழுவாயான விலிங்கத்தாற் றுணிதலெனவுங்கூறினர்.

இதனானே சிவமே பிரமமென்று கூறும் வேதவுள்ளுறையுணராது அதுபுறனாக்கழித்த அகத்தைப்பிரமமென்று கூறும் அகம்பிரமக்காரர் மதத்தைமறுத்தவாறு. எங்ஙனமெனின் அகம்பிரமவாதிகளாற் கழிக்கப்பட்ட சிவனையுஞ் சீவனையுஞ் சகத்தையும், அவ்வவற்றிற்குரிய விலக்

எனவேசிவனைப்பரம்பொருளெனவும், சீவனைப் பசுவெனவும் சகத்தைப் பாசமெனவும், சிவத்திற்குப் பாசமின்மைதோன்ற அருள்வீடெய்ப்பப் படைத்தளித்தழித்து, நோக்கும் பரமபொருளெனவும், ஆன்மாவுக்குப் பாசமுடைமைதோன்றப் பசுவெனவும், பாசத்தின் கொடுமைதோன்ற அடற்கொடியபாசமெனவுங்கூறியவாறென்க. இம்முப்பொருளுண்மை நிலைபெறவும் அவற்றில் சிவனே பரம்பொருளெனத் துணியவும் பாசம் - உபக்கிரம முபசங்காரப்படு முறைமையுடைதென்பதையும், பசு - பெத்தமுத்திகளையடைந்து இடையிடுபடுங்காலத் தப்பியசிக்குஞ் சாதனமுடைமை யுடைத்தென்பதையும், அச்சாதனத்திற் கொள்ளப்படும் பிரமாண இலக்கணங்களையும் இவ்விரண்டிற்குஞ் சான்றாயமைந்து கிடப்பனவற்றை யறியுமுறைமை யுடைத்தென்பதையும், பதி - பாசபசுக்களுக்குக்கூறிய வுபக்கிரம முதலியன வில்லாமையை யர்த்த விசாரத்தாலுணர்ந்து பின்னர் அதுவே பரம்பொருளெனத் தெளியக்கிடக்குந் தன்மையுடைத்தென்பதையும நன்குவிளக்குவன உபக்கிரமம் உபசங்காரம் அப்பியாசம் அபூர்வதை பலம் அர்த்தவாதமென்னும் ஆறிலிங்கங்களேயாகலான் தொடக்கமீறெழுவாயானவிலிங்கததாற் றுணிதலென்றார். இதனைச் சனற்குமாரபடலம் (ருக) செய்யுளினுங்காண்க. (கஎ)

> உவமையினேதுத்தன்னாற்கேட்டதையுள்ளங்கொள்ள
> வவமறச்சிந்தைசெய்தலசிந்தனையதனைப்பலகாற்
> சிவணுறப்பயிற்சிசெய்கைதெளிதலாம்விளங்கக்காண்ட
> றவலறுநிட்டையென்றுசாற்றுவர்புலமைசான்றோர்.

(இ - ள்.) கேட்டதை உவமையில் ஏதுத் தன்னால் - ஆசிரியனிடத்துக் கேட்டதை உவமானத்தினாலும் ஏதுவினாலும், உள்ளங்கொள்ள அவமறச்சிந்தை செய்தல் சிந்தனை - மனத்துட்கொள்ள நன்றாகச் சிந்தனைசெய்வது மனனமாகும், அதனை பல்கால் சிவணுறப்பயிற்சி செய்கைதெளிதலாம் - சிந்தனைசெய்ததைப் பலமுறையுந் தன்னறிவிற் பொருந்தப் பழகுதல் நிதித்தியாசனமாம், விளங்கக்காண்டல் தவல் அறு நிட்டை என்று புலமைசான்றோர் சாற்றுவர் - தெளிந்தபொருளை ஆன்மாவில் விளங்கக்காணுதல் குறமற்றநிட்டையாமென்று அறிவிற்சிறந்த பெரியோர்கூறுவர். (எ - று)

கேட்ட வேதாந்தப்பொருளை யுவமானமுகத்தானும் ஏது முகத்தானு மைய விபரீதவுணர்வுக்கிடனின்றி யறிவுகொள்ளச் சிந்தனைசெய்வதே மனனமென்றும் உவமான ஏதுக்களுக்கு மாறுபடாமலெடுத்துக்கொண்ட பொருளைப் பலமுறையுந்தூக்கி யனுபவமாகக்கண்டுதெளியும் முயர்சியே தெளிதலென்றும் அம்முயற்சியாற் றெளிந்தபின் "பாசமகலாமற் பதியிற்கலவாமல் மாசில் சமத்து முத்தி" விளங்கக்காண்டலே தவலறு நிட்டையென்றுஞ் சொல்லப்பட்டதென்க.

உவமையும் ஏதுவும் அளவை யிலக்கணங் கூறுமிடத்திற் காண்க. (௩௮)

இத்திறம்பயின் றுவைகியிருவகைப்பற்றுநீத்த
வுத்தமத்துறவின்மேலோரூர்வயிற்பிச்சையேற்றுச்
சுத்தநீரலம்பிமுக்கட்சுடரினுக்கூட்டிப்பின்ன
ரத்தகுவிதியினோர்போதெண்பிடியருந்தல்வேண்டும்.

(இ - ள்.) இத்திறம் பயின்று வைகி - இங்ஙனம் கூறிவந்த விலக்கணமுறையே பழகி அறிவுநிலைபெற்று, இருவகைப்பற்று நீத்த உத்தமத்துறவின் மேலோர் - அகம்புறமென்னும் இருவகைப்பற்றுகளையு மொழித்து உத்தமமாகிய துறவின்கண் சிறந்த பெரியோர், ஊர்வயின் பிச்சையேற்று - ஊரின்கண்சென்று பிச்சையேற்று வந்து, சுத்தநீர் அலம்பி - அதனைச் சுத்தமாகிய நீரினாற் சுத்திசெய்து, முக்கட்சுடரினுக்கு ஊட்டி - சோமசூரியாக்கினிகளாக விளங்கும் கண்களையுடைய இறைவருக்கு நிவேதனஞ்செய்து, பின்னர் அத்தகுவிதியின் - பின்பு அவ்வாச்சிரமத்துக்கு விதித்த விதிப்படி, ஓர்போது எண்பிடி அருந்தல் வேண்டும் - ஒருபொழுது எட்டுப்பிடி அன்னம் உண்ணவேண்டும். (எ - று.)

பதிஞான மெய்தப்பெற்ற பெரியதுறவினர் உண்டியேற்றுண்பித்துத் தாமுண்ணுமுறைமையைக் கூறியதென்க. (௩௯)

அல்லவைமுழுதுநீக்கலான்றவர்கழித்ததூசு
கல்லசும்பெற்றிக்கோடல்காழ்மரத்தடியின்மேவல்
பல்லவுமொப்பக்காண்டறமியனாய்ப்படர்தல்வேற்றுப்
புல்லியரிணக்கநீர்தல்பொறிவழிமனஞ்செல்லாமை.

(இ - ள்.) அல்லவைமுழுதும் நீக்கல்-இரவில் அன்னமேவுண்ணாதிருத்தலும் ஆன்றவர்கழித்த தூசு கல் அசும்பு எற்றி கோடல் - சீலமுடைய பெரியோருடுத்துக் கழித்த வாடையைக் கல்லிற்றோய்த்துப் புனிதமாக்கி அணியக்கொள்ளுதலும், காழ் மரத்து அடியில் மேவல் - வயிரமபொருந்திய மரத்தடியில் தங்கியிருத்தலும், பல்லவும் ஒப்பக்காண்டல் - ஓடும்பொன்னும் ஒப்பாகப்பார்த்தலும், தமியனாய்ப் படர்தல் - தனியே செல்லுதலும், வேற்றுப்புல்லியர் இணக்கம் நீர்தல் - தன்னிலைமைக்கு வேறுயுள்ள அறிவிலிகளுடைய கூட்டுறவை யொழிந்திருத்தலும், பொறிவழி மனஞ்செல்லாமை - ஐம்பொறிகளின் வழிமனஞ்செல்லாதிருத்தலும். (எ - று.)

ஒருபொழுதன்றி யிருபொழுதுண்டலும், கழித்தவாடையன்றி புதியவாடை கொள்ளுதலும், மரத்தடியன்றி மாளிகையிற்றங்கலும், ஒப்பக்காண்டலன்றி பொன்னென்றும் ஓடென்றுங்காண்டலும், தனியேயன்றி துணையோடேகலும், நல்லோரிணக்கமன்றிப் புல்லியரிணக்கங்கோடலும், அறிவின்வழியன்றி பொறியின்வழி செல்லுதலுமென்க. (௪௰)

அடித்துணைநிலத்தினோக்கிமிதித்திடலறுவைதன்னில்
வடித்தநீர்பருகனெஞ்சிற்றூயதுமாண்கோடல்
படிற்றுரையின்றிக்கூறனன்மையேபயப்பப்பேச
லெடுத்துரைபிறவுமூத்தனிலக்கணமென்பமன்னோ.

(இ - ள்.) அடித்துணைநோக்கி நிலத்தில் மிதித்திடல் - தனதுகாலடிகளைப் பார்த்து பூமியிலடியெடுத்துவைத்தலும், அறுவைதன்னில் வடித்த நீர்பருகல் - ஆடையில் வடித்தெடுத்த நீரைக்குடித்தலும், நெஞ்சில் தூயதுமாண கோடல் - மனத்தில் நன்மைபயப்பதையே சிறப்பாககொள்ளுதலும், படிற்றுரை யின்றி கூறல் - வஞ்சவார்த்தையின்றி மெய்மையேசொல்லுதலும், நன்மையேபயப்ப பேசல் - பிறர்க்குநன்மையுண்டாகவே பேசுதலும், எடுத்துரை பிறவும் மூத்தன் இலக்கணம் என்ப - (இவைபோலு மின்னும்) எடுத்துச்சொல்லப்பட்டபிறவுஞ்சிவனமுதரிலக்கணமென்றேசொல்லுவர்.

நிலத்தினும் நீரினும் உயிர்கள் சரிப்பதாகலான் நிலத்தைநோக்கி நடக்கவேண்டுமெனவும், நீரைவடித்துண்ணவேண்டுமெனவும், மனத்திற்கொள்வது நல்லதன்றாயின் அது தீமைபயக்குமாகலின் தூயதுமாணக்கோடலெனவும், வஞ்சவார்த்தை பிறருக்குக் கேடுபயக்குமாகலின் படிற்றுரையின்றிக் கூறலெனவும், தன்னைப்புகழ்வார்பால் நன்மைபயக்குஞ் சொல்லையே பாராட்டுவதுபோல் தன்னை யிகழ்வார்மாட்டும் பாராட்டாராயின் அது விருப்பு வெறுப்புடைமையைக் காட்டுமாகலின் நன்மையேபயப்பப் பேசலெனவும், இதுபோல் தனக்குப் பிறர்பால் விருப்பு வெறுப்புத்தோன்றலும் பிறர்க்குத் தன்பால் அவை தோன்றச்செய்தலு மில்லாதனவாகிய சொல்லுஞ் செயலுமிலராயின் அவை பெத்தரிலக்கணத்தைக் காட்டுமாகலின் எடுத்துரை பிறவுமெனவுங் கூறினர். (கூக)

உறையுளோடங்கிபேணல்கல்வியினுடலையோம்பல்
சிறையுடற்பொருட்டுச்சீற்றஞ்செய்திடல்சாலப்பேசல்
புறனுரையிகழ்ச்சிபிச்சைப்பொருட்டலதூர்க்குட்சேறன்
மிறையுறுத்திம்மைசெய்வோர்தம்மையும்வெகுளலாகா.

(இ - ள்) உறையுள் அங்கிபேணல் கல்வியின் உடலையோம்பல் - தனக்கென்று ஓரிடத்தைக்கொள்ளுதலும் அகனிகாரியஞ்செய்தலுங் கல்வி கற்பித்துச் சரீரத்தைப் பாதுகாத்தலும், சிறையுடல் பொருட்டு சீற்றம் செய்திடல் சாலப்பேசல் புறனுரை இகழ்ச்சி - சிறைக்களமாயுள்ள வுடலின்பொருட்டுக் கோபஞ்செய்தலும் அதிகமாகப் பேசுதலும் புறங்கூறுதலும் நிந்தைகூறுதலும், பிச்சைபொருட்டு அலது ஊர்க்குள்சேறல் - பிச்சையின்பொருட்டேயல்லாமல் வேறு காரியமாய் வேற்றூர்க்குச்செல்லுதலும், மிறையுறுத்து இம்மைசெய்வோர் தம்மையும் வெகுளல் ஆகா - குற்றமுண்டாக்கித் துன்பஞ்செய்வோரையுங் கோபித்தலுமாகாவாம். (எ - று)

உறையுள்வேண்டின் பெண்மேல்விருப்பும் அங்கிபேணின்நல்லுணவில்லவாவுதலும் கல்வியினுடலையோம்பின் பொருண்மேல் விருப்பும் உடற்பொருட்டுச் சீற்றஞ்செய்யின் தேகாபிமானமும் சாலப்பேசல் புறனுரை இகழ்ச்சி இம்மூன்றும் பல்லோர் பகையும், பிச்சையன்றியூர்க்குட்சேறல் பலவிகாரத்தொடக்கும இம்மைசெய்வார்பால் வெகுளின் மேன்மேற்றுன்பமுமுண்டாமாகலினவையாவு மாகாவென்க. (கூஉ)

சினவிண்டக்கடவுட்பூசைகண்டிகைதிருவெண்ணீறு
கனவினுமிகழாதோம்பல்கதிரொளியுலோகமல்லாப்

புனிதபாசனத்தினீராற்றூய்மைகள்பொருந்தக்கோடல்
வினையிகந்தவர்க்காமென்பவேள்வியிற்சமசம்போலும்.

(இ - ள்.) சினவிடை கடவுள்பூசை கண்டிகை திருவெண்ணீறு கனவி னும் இகழாது ஓம்பல் - தறுகண்ணையுடைய விடையையூரும் இறைவர்பூசை உருத்திராக்கமணி திருநீறு ஆகிய இவற்றைக் கனவின்கண்ணுநீக்கா துடம்பிலிருக்கச்செய்தலும், வேள்வியில் சமசம்போலும் - யாகத்தில் மண் மரமுதலியவற்றாற்செய்த பாத்திரங்களைப் புனிதமாகக்கொள்ளல்போலும், கதிரொளி உலோகம் அல்லாத, மிக்க வொளியையுடைய பொன் வெள்ளியல்லாத, புனிதபாசனத்தின் நீரால் தூய்மைகள் பொருந்த கோடல் - பரிசுத்தமாகிய மண் மரமுதலியவற்றாலாகியபாத்திரங்களிலுள்ள சலத்தினுல் தேகசுத்தி முதலியவைகளைச் செய்துகொள்ளலும், வினையிகந்தவர்க்கு ஆம் என்ப - வினையில்லாதபெரியோர்களுக்குவிதியாகுமென்றுகூறுவர்.

உறையுள் முதலியன கூடாவொழுக்கமென இகந்த துறவிகள் கனவினுமிகழாது கொள்ளத்தக்க பொருள்கள் திருவெண்ணீறுமுதலியனவென்க.

கிருகத்தாச்சிரமிகளுக்குச் சமசமென்னும் யாகத்தில் மண்தாருமுதலியவற்றுலாகிய பாத்திரங்கள் எப்படி புனிதமோ அதுபோலும் அப்பாத்திரங்கள் சந்நியாசிகளுக்கு எப்பொழுதும் புனிதமாகுமென்பார் வேள்வியிற் சமசம்போலும் உலோகமல்லாப்புனிதபாசனத்தினீராற்றூய்மைகள்பொருந்தக்கோடல்வினையிகந்தவர்க்காமென்ப வென்றார். (௬௩)

என்பினைநரம்பிற்பின்னிக்குடர்வழும்பிறைச்சிமெத்திப்
புன்புழுப்பொதிந்துசெந்நீர்ப்புண்ணசும்பொழுகிநாறித்
துன்பநோயெவற்றினுக்குமுறையுளாய்ப்புறந்தோன்மூடும்
வன்புலையுடம்பேயாவிவருத்திடும்பிணிவேறில்லை.

(இ - ள்) என்பினை நரம்பிற் பின்னி - எலும்பை நரம்பினுற் பின்னி, குடர் வழும்பு இறைச்சி மெத்தி - குடராலும வழும்பாலு மிறைச்சியாலும் மெழுகென வைத்து, புன் புழு பொதிந்து - புல்லிய புழுக்களைநிறைந்து, செந்நீர் புண்ணசும்பு ஒழுகி நாறி - புண்களிலுதிர நீர்பெருகி வொழுக்கெடுத்து நாற்றமுண்டாகி, துன்ப நோய் எவற்றினுக்கும் உறையுளாய் - துன்பஞ்செய்யும் பல நோய்களுக்கு முறைவிடமாகி, புறம் தோல் மூடும்-புறத்தில் தோலால் மூடப்பட்டிருக்கும, வன்புலை உடம்பே ஆவி வருத்திடும் பிணி - அசுத்தமிக்க இந்த வுடம்பே உயிரைவருத்தும் நோயாகும், வேறு இல்லை - பிறிதொன்றில்லை. (எ - று)

என்பு முதலியவற்றாற் சமைந்ததாயும், துன்பநோய் முதலியவற்றிற் குறையுளாயுமுள்ள விவ்வுடம்பே வுயிரை யருத்தும் பிணியன்றி வேறு பிணியில்லையெனக.

பெரும்பிணியிதனைதீர்க்குமருத்துவன்பிறவியில்லாப்
பரமபொருளானமுக்கட்பரமனேயென்றுதேறி
முரண்பயில்விடையோன்றென்பான்முகத்தினைச்சரணமெய்தி
விரும்பிவீடுறுதற்பாலர்பிறப்பினைவெருவப்பெற்றார்.

(இ - ள்.) பிறப்பினை வெருவ பெற்றார் - பிறவிக்கஞ்சினவர், பெரும்பிணி இதனை தீர்க்கும் மருத்துவன் - பெரிய நோயாகிய இதனைப்போக்கும் வயித்தியன், பிறவி இல்லாத பரம்பொருளான முக்கண்பரமனே என்று தேறி - என்றும் பிறவியணுகாத பரம்பொருளாகிய மூன்று கண்களையுடைய இறைவனேயென்று தெளி

ந்து, மூரண்பயில்விடையோன் தென்பால் முகத்தினை சரணம் எய்தி - போரினை விரும்பும் விடையையுடைய அவ்விறைவனது அகோரமுகத்தை யடைக்கலம்புகுந்து, விரும்பி வீடுறுதற் பாலர் - (அவ்விறைவனையே) விரும்பி முத்தியையடையுந் தன்மையுடையவராவர். (எ - று)

பிறவிக்கஞ்சினவர் இவ்வுடம்பாகிய பெரியநோயைத் தீர்க்கும் மருத்துவன் இறைவனென்றுணர்ந்து அவனைச் சரணமெய்தி முத்தியடையக்கடவரென்க

பிறவிப்பந்தம் தொன்றுதொட்டுவருதலான் பெரும்பிணிக்கு மருத்துவன் தூயவுடம்பினனென்பது துணிபாகலான் பிறவியில்லாப் பரம்பொருளான முக்கட்பரமனே யென்று தேறினவும், தெளிந்தபின்னர் சரணடைந்து வழிபட்டாலன்றி வீடு கூடாதாகலான் சரணமெய்தி விரும்பிவீடுறுதற் பாலரெனவுங்கூறினார்

பிறவியைப்பிணியாக்கினமையான் சிவனைமருத்துவனென்றார். இதனானே இவ்வுடம்பை இனியபொருளாகவெண்ணி விரும்பாது இதனைப்பிணியென்றும், இவ்வுடற்சம்பந்தமுடையார் யாவராயினும் அவரெல்லாம் பிணியாளரேயென்றும், தெய்வமாவான் முக்கட்பரமனொருவனேயென்றும், அவ்விறைவனது ஐந்து முகத்தில் ஞானத்தை விளக்கு முகம் அகோரமுகமென்றும், அந்த ஞானத்துக்குச் சாதனம் வழிபாடென்றும்இச்சாதனத்தைக்கொள்பார்பிறவிக்கஞ்சினவரென்றுங் கொள்ளக்கிடந்தன.

கலிநிலைத்துறை.

மற்றைத்தெய்வங்களெவற்றையும்விடுத்துமாநீழற்
கற்றைச்செஞ்சடைப்பிரான்சரண்சரணெனுங்கருத்தே
பற்றிச்சாவினும்வாழ்வினுங்களிப்பிகல்படாமை
யெற்றைப்போதுமொத்தொழுகலேதுறந்தவர்க்கியல்பாம்.

(இ - ள்.) மற்றை தெய்வங்கள் எவற்றையும் விடுத்து - வேறு தெய்வங்களென்று சொல்லப்பட்டவையெல்லாம் (வழிபடுதலை) விட்டு, மாநீழல் கற்றை செஞ்சடை பிரான் சரண் சரண் என்னும் கருத்தே பற்றி - மாநிழலிலெழுந்தருளியிருக்கின்ற கற்றையாகிய சடையினையுடைய இறைவன் சரணங்களே அடைக்கலமாயுள்ளதென்னுங் கருத்தையே மாறாதுபற்றி, சாவினும் வாழ்வினுங் களிப்பு இகல்படாமை - இறந்தாலும் இருந்தாலும் சுகமுந் துக்கமுமடையாமல், எற்றைப்போதும் ஒத்து ஒழுகலே - எப்பொழுது மொருதன்மைத்தாகி நடத்தலே, துறந்தவர்க்கியல்பாம் - துறவிகளுக்கிலக்கணமாகும். (எ - று)

சிவபெருமானல்லாத ஏனைய தெய்வங்களையெல்லாங் கைவிட்டு அவன் சரணத்தையடையப்பெற்ற கருத்தையே துணையாகக்கொண்டு எப்போதும் விருப்பு வெறுப்பின்றிவாழ்தலே துறவிகளிலக்கணமென்க.

பற்றற்றவர்க்குப் பற்றற்றான்பற்றே பற்றைப்போக்கும் ஏனைய தெய்வப்பற்று பற்றைவளர்க்குமென்பார் தெய்வங்களெவற்றையும் விடுத்துச் செஞ்சடைப்பிரான் சரண்சரணெனுங் கருத்தேபற்றிஎன்றார் - இதனை, "பற்றுகபற்றற்றான்பற்றினையப்பற்றைப்-பற்றுகபற்றுவிடற்கு" என்னுந்திருக்குறளானுமறிக. (கூசு)

பொறுமைகல்விமெய்தூய்மையம்பொறிதெறலடக்க
மூறுதிகாண்வெகுளாமைகள்ளாமையொண்பூதி
மறுவில்சாதனஞ்சிவார்ச்சனைதியானம்வண்பதினைன்
கறமுநல்லறம்புரிபவர்க்கிலக்கணமாமால்.

(இ - ள்.) பொறுமை கல்வி மெய் தூய்மை ஐம்பொறிசெறல் அடக்கம் - பொறுமையுங்கல்வியும் உண்மையும் சுத்தமும் ஐம்பொறிகளை வெல்லுதலும் அடக்கமுடைமையும், உறுதி நாண் வெகுளாமை கள்ளாமை-மனவுறுதியும் நாணமும் வெகுளாமையுங் கள்ளாமையும், ஒண்பூதி மறு இல் சாதனம் சிவார்ச்சனை தியானம் - ஒள்ளிய திருநீறுங் குற்றமில்லாத அஞ்சாக்கரமும் சிவார்ச்சனையுந் தியானமும், ஒண்பதின்ஒன்கு அறமும் நல்லறம்புரிபவர்க்கு இலக்கணம் ஆம் - ஆகிய அழிவில்லாத பதினான்கறங்களு நல்ல சிவதருமஞ் செய்கின்றவர்களுக்கு விதிக்கப்பட்ட இலக்கணமாம். (எ-று.)

பொறுமைமுதலாகக்கூறியபதினான்குஞ்சிவதருமம்புரிபவர்க்கிலக்கணமென்க.

ஆசிரியன்பால் உண்மைப்பொருளைக் கற்குங்கால் 'களிப்பும் மடி மானம் காமம் கள்ளம் பிணக்கு சினமுதலிய இவற்றிலொன்று தோன்றுமாயினும் அது கண்டு வெகுளுங்கால் பொறுமையின் கல்வி நிரம்பாதாகலான் பொறுமையும் அக்கல்வி நிரப்பினும் நடைபொய்ப்படுமாயின் உண்மைப்பொருள் கூடாதாகலான்மெய்ம்மையும் அந்நடை மனமொழிமெய்களாகிய மூன்றஞ் சுத்தமுடைமையாயிருந்தாலன்றி நிலைபெறுவாகலான் தூய்மையும் மனமுதலிய முக்கரணங்களிலைபெறவொட்டாது மாறுபடுக்கும் ஐம்பொறிகளை அடக்கினாலன்றி முக்கரணங்கள் ஒருவழிப்படாவாகலான் ஐம்பொறிசெறலும் பொறிகளடங்கியவழிமனம் அவாவினின்று நீங்கினாலன்றி அறிவு தோன்றுவாகலான் அடக்கமும் அறிவுதோன்றியவழி பாவமும் பழியுங்கேடு முதலியவற்றைத்தருந் தீயவுணர்ச்சியைக் கடியும் வன்மையுண்டானாலன்றி அஞ்சப்படுவதனை யஞ்சாமையாகிய பேதமை நீங்காதாகலான் உறுதியும் அவ்வுறுதிதோன்றியவழி உயர்ந்தோர்க் கொவ்வாத கருமங்களில் நாணமுண்டானாலன்றி அவ்வுறுதி அரணில்லா தொழியுமாகலான் நாணும் நாணாகிய அரணுண்டாயவழிதோன்றுஞ் சினத்தைச்செல்லுமிடங்களிற்செல்லவொட்டாதுகாக்கும் வெகுளாமையுமுண்டானாலன்றி நாண் நிலைபெறாதாகலான் வெகுளாமையும், இங்ஙனங்கூறிவந்த முறைமையான் அறிவுக்குப் பேதமையைப்போக்கி உறுதியைப் பயப்பித்து அதற்கு பிறழாவண்ணம் நாணாகிய அரணுண்டாக்கி அவ்வரண்சிதையாவாறு வெகுளாமையைக்கொண்டபின்னர் ஆசிரியன்பால் கொள்ளத்தக்க மெய்ப்பொருளைக் கொள்ளுமிடத்து வழிபட்டு அவர் மனமகிழக்கொள்ளாது வஞ்சனையொழுக்கத்தாற்கொள்வனாயின் அது பிறன்பொருளைக் கொள்ளைகொண்டதனோடொக்குமாதலான் கள்ளாமையும் அதனாற் கைக்கொண்ட மெய்ப்பொருளாலடையத்தக்க பூதிமுதலிய செல்வத்தினனுபவத்தை யடையப்பெறுமாயின் மெய்ப்பொருளை யறியாதவனோடொப்பானாகலின் ஒண்பூதி மறுவில் சாதனஞ் சிவார்ச்சனை தியானம் நல்லறம்புரிபவர்க்கிலக்கணமெனக்கூறினார். (சுஎ)

சொன்ன நால்வகைய றங்களிற் றுரிச றவொழுகிக்
கன்னிமா நிழற் கண்ணுத லகந்தொழுப ராற்றி
மன்னி நீடிய காஞ்சிமா நகர்வயின் வதிவோர்
துன்னு மும்மலத் தளறுத் தின்பவீடுறுவார்.

(இ - ள்) சொன்ன நால்வகையறங்களில் துரிசு அற ஒழுகி, வேதங்களிற் சொல்லப்பட்ட பிரமசரிய முதலிய நால்வகை நிலைகளில் குற்றமறநடந்து, கன்னிமா நிழல்கண்ணுதல் அகம் தொழும்பு ஆற்றி-அழிவில்லாதமா நிழலில் வீற்றிருக்குமிறைவருடைய வகத்தடிமைசெய்து, மன்னி நீடிய காஞ்சிமாநகர்வயின்வதிவோர் - என்னாளு நிலைபெற்ற பெரியகாஞ்சிநகரத்தில் வாழ்கின்றவர்கள், துன்னு மும்மலத்துகள் அறுத்து இன்பவீடு உறுவார் - பொருந்திய மும்மலக்குற்றங்களை யொழித்துப்பேரின்ப வீட்டையடைவார்கள். (எ - று)

பிரமசரியமுதலிய ஆச்சிரமங்களிற்றவராது ஏகம்பவாணரடித்தொண்டிற்பிழைபடாது காஞ்சிநகரத்தில் வசிப்பராயின் அவர்பேரின்ப வீட்டையடைவரென்க.

புறத்தொழும்புமாத்திரையே பொருளாகக்கொண்டு வசிப்பவர்களுக்கு முத்தியின்பங்கூடாதென்பார் அகத்தொழும்பாற்றி வதிவோரின்ப வீடுறுவாரென்றார். (சஅ)

ஒழுக்கப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - உகூஉ௯.

---

# சிவபுண்ணியப்படலம்.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

கச்சிநகரமர்ந்துறையுநியதியராயேகம்பக்கடவுள்பாதச்
செச்சைமலர்வழிபடுவோர்மேம்பாடுநானேயோதெரிக்கவல்லேன்
முச்சகமும்புகழ்ந்தேத்தும்பன்னிரண்டுபெயர்படைத்தமூதூர்வைப்பிற்
பொச்சமறச்செய்தக்கசிவதருமத்திறனுமினிப்புகலக்கேண்மின்.

(இ - ள்) கச்சிநகர் அமர்ந்துறையும் நியதியாராய் - காஞ்சிநகரில் நிலைபெற்றுவாழும் நியதியுடையவராய், ஏகம்பக்கடவுள் பாதசெச்சைமலர் வழிபடுவோர் - ஏகம்பவாணருடைய வெட்சிமலர்போன்ற திருவடிகளை வணங்குவோருடைய, மேம்பாடு நானேயோ தெரிக்கவல்லேன் - பெருமையை அறிவிலியாகிய யானோ எடுத்துச்சொல்லவல்லேன், முச்சகமும் புகழ்ந்து ஏத்தும் பன்னிரண்டு பெயர்படைத்த மூதூர் வைப்பில் - மூன்றுலகமும் புகழ்ந்து சொல்லவல்ல புவனசாரமுதலிய பன்னிரண்டு திருப்பெயர்புனைந்த பெரிய அந்தக் காஞ்சிநகரத்தில், பொச்சம் அற செய்தக்க சிவதருமத்திறனும் - மறதியில்லாமல் செய்யத்தகுவனவாகிய சிவதருமங்களின் திறத்தையும், இனி புகல கேண்மின் - இனி எடுத்துச்சொல்லக்கேளுங்கள். (எ - று)

காஞ்சியில் வாழ்வோரருமையைக்கூறி மேல் அந்நகரத்திற் செய்யத்தகுவனவாகிய சிவபுண்ணியங்களையுங் கூறுகின்றேனென்று சூதமுனிவர் கூறுகின்றாரென்க.

எவ்வறமுந்திருக்காஞ்சிக்கடிநகரிற்புரிகிற்பினேற்றமெய்து
மவ்வறத்துட்சிவதன்மமதிகமவைசிவலிங்கப்பிரதிட்டையேனைச்
செவ்வியுடைத்திருமேனிதிருக்கோயிற்பணிபூசைசிறப்புமற்று
மௌவியந்தீர்மெய்யடியார்திருத்தொண்டுமுதற்பலவாமவற்றுண்மாதோ.

(இ - ள்) எ அறமும் திருக்காஞ்சி கடிநகரில் புரிகின் - எத்தருமங்களையுங் காஞ்சிநகரத்திற் செய்தால், பின் ஏற்றம் எய்தும் - பின்னர் அது சிறந்து வளரும், அ அறத்துள் சிவதருமம் அதிகம் - அத்தருமங்களுக்குள் சிவதருமம் மேலானதாகும், அவை சிவலிங்கபதிட்டை ஏனை செவ்வியுடை திருமேனி திருக்கோயிற்பணி பூசை சிறப்பு ஔவியம் தீர் மெய்யடியார் திருத்தொண்டு முதல்பலவாம் - அச்சிவதருமங்கள் சிவலிங்கப்பதிட்டையும் ஏனைய அழகுடைய திருவுருப்பிரதிட்டைகளும் திருக்கோயிற் றிருப்பணிகளும் காலங்கள்தோறுந் தவறின்றிச்செய்யும் பூசைச்சிறப்பும் அழுக்காறு முதலிய தீக்குணங்களில்லாத மெய்யடியாருடைய தொண்டுகளும் இவைபோன்றனவாகிய தருமங்கள் பிறவுமாம், அவற்றுள் - அவைகளுக்குள். (எ - று)

காஞ்சிநகரத்தில் தருமத்தைச்செய்யின் அத்தருமம் ஒன்றுபலவாம், அத்தருமங்களுக்குள் சிறந்தது சிவதருமம். அவை சிவலிங்கப்பதிட்டை முதலாகச் சொல்லப் பட்டவைகளாம் அவற்றுளொன்க. (௨)

கயக்கமுறுமறக்கடையின்சிமிழ்ப்பறுத்துப்பிரமாண்டக்கனத்தைநூறி
மயக்கமிகும்வினைப்பகையும்பெரும்பிறவிப்பழம்பகையுமறுகமாட்டி.
வயக்மமுறுசிவபதத்தினுய்க்குமிலங்கயில்வாளாய்மாறாவாழ்வு
பயக்குநுதல்விழிக்கடவுணயக்குமருட்சிவலிங்கப்பதிட்டையம்மா.

*(இ - ள்.) நுதல்விழிக்கடவுள் நயக்கும் அருட்சிவலிங்கப்பதிட்டை - நெற்றிக்கண்ணுயுடைய இறைவர் விரும்பும் அருட்குறியாகிய சிவலிங்கப்பதிட்டை, கயக்கமுறும் அறக்கடையின் சிமிழ்ப்பு அறுத்து - அறிவினை மயக்கும் ஆணவமலத்தின் கட்டறுத்து, பிரமாண்ட கனத்தை நூறி - அண்டகோடிகளாய் நிறைந்திருக்கின்ற மாயாமலத்தின் திமிரதத்தைப் பொடியாக்கி, மயக்கமிகும் வினைப்பகையும் - மாறிமாறி மயக்கத்தைச்செய்யவல்ல கன்மமலத்தின் பகையும், பெரும்பிறவி பழம்பகையும்-அதனால் தொன்றுதொட்டுவரும் பிறவிப்பகையும், இலங்கு அயில் வாளாய் மறுக மாட்டி-விளங்குங் கூறிய வாளாயுதமாகி அறவொழித்து, வயக்கமுறு சிவபதத்தில் உய்க்கும் - நிலைபெற்ற சிவபதத்தில் செலுத்தும், மாறா வாழ்வு பயக்கும் - மாறுபடாத பேரின்பவாழ்வைக்கொடுக்கும். (எ - று)

சிவலிங்கப்பதிட்டையானது மும்மலங்களைச் சேதித்து, சிவபதத்திற் செலுத்தி இன்பவாழ்வை யளிக்குமென்க. (௩)

விரைமலரோன்மணிவண்ணன்முகிலூர்திமுனிவர்சித்தர்விண்ணோர்யாரும்
வரைகளினும்வனங்களினும்வார்ந்தநதிப்புடைகளினுமணிநீர்வேலைக்
கரைகளினுமெங்கெங்குங்கண்ணுதலோன்சிவலிங்கப்பதிட்டையொன்றே
யுரைவிளங்கச்செய்தமைத்தாரன்றிவேறெவன்செய்தாருணர்வான்மிக்கீர்.

(இ - ள்.) உணர்வான் மிக்கீர்-அறிவிற்சிறந்த முனிவர்களே, விரைமலரோன் மணிவண்ணன் - கமலாசனனாகிய பிரமனும், நீலவண்ணனாகிய திருமாலும், முகிலூர்தி விண்ணோர் - மேகவாகனனாகிய இந்திரனும் தேவர்களும், முனிவர் சித்தர் யாரும் - முனிவர்களும் சித்தர்களுமாகிய யாவரும், வரைகளினும் வனங்களினும் வார்ந்த நதிப்புடைகளினும் மணிநீர் வேலைக்கரைகளினும் எங்கெங்கும் - மலைகளினும் ஆரணியங்களினும் பெரிய நதிக்கரைகளினும் மணிகளையுடைய நீர்மயமாகிய கடற்கரைகளினும் ஆகிய இவ்விடங்களிலெல்லாம், கண்ணுதலோன் சிவலிங்கப்பதிட்டை ஒன்றே - இறைவனது அருட்குறியாகிய சிவலிங்கப்பதிட்டை யொன்றையே, உரைவிளங்கச் செய்தமைத்தார் அன்றி - தத்தம் புகழ்விளங்கச்செய்தமைத்தார்களேயன்றி, வேறு எவன் செய்தார் - வேறு எது செய்தார்கள். (எ - று)

முனிவர்களே! திருமான் முதலிய யாவரும் மலைமுதலிய எவ்விடங்களினுஞ் சிவலிங்கப்பிரதிட்டையேயல்லாமல் வேறு என்ன செய்தார்களென்க. (௪)

மேதகையதவந்தீர்த்தங்கொடைவேள்விதுறவுநிலைவிரதம்யாவு
மோதுசிவக்குறிநிறுவும்பயன்கோடிபடுங்கூற்றினொன்றுக்கொவ்வா
வாதலினிச்சிவலிங்கம்வேதிகையினெடுஞ்சிலையாணமைப்போர்யாரு
மேதமறுத்தவ்வுடம்பின்வீடெய்தப்பெறுவரிதற்கையுறேன்மின்.

(இ - ள்) மேதகைய தவம் தீர்த்தம் கொடை வேள்வி துறவுநிலை விரதம் யாவும் - மேன்மையாகிய தவங்கள் தீர்த்தயாத்திரைகள் கோதானமுதலிய தானங்கள் அசுவமேத முதலிய யாகங்கள் முற்றத்துறத்தலாகிய துறவறநிலை சாந்திராயண முதலிய விரதங்கள் ஆகிய இவைகளெல்லாம், ஓது சிவக்குறி நிறவும் பயன் - சொல்லப்பட்ட சிவலிங்கப்பதிட்டை செய்வதனால் வரும பயன், கோடிபடும் கூற்றின் ஒன்றுக்கு ஒவ்வா - கோடிபங்கில் ஒருபங்கிற்கேனும ஒப்பாகமாட்டா, ஆதலின் - ஆகையினால், இச்சிவலிங்கம் சிலையான் வேதிகையினோடும் அமைப்போர யாரும் - இச்சிவலிங்கமூர்த்தியைக் கல்லினாற்செய்த வேதிகையோடு பிரதிட்டைசெய்வோர் யாவரும், ஏதம் அறுத்து அ உடம்பின் வீடு எய்தப்பெறுவர் - இருவினைக்குற்ற மொழிந்து எடுத்த அவ்வுடம்பிற்றானே முத்தியடையப்பெறுவார்கள், இதற்கு ஐயுறேன்மின -(முனிவர்களே) இதற்குச் சந்தேகங்கொள்ளாதீர்கள். (எ - று)

தவமுதலியவைகளைச் செய்வதனால் வரும் பயன்கள் சிவலிங்கப்பதிட்டை ஒன்றினால் வரும் பயனில் கோடியிலொருகூற்றுக்கேனும் இணையாகமாட்டா ஆகையினால் சிவலிங்கப்பதிட்டை செய்வார் இனிவரும் பிறப்பின்றி அப்பிறப்பிற்றானே முத்தியடைவர் இதிலையமில்லையென்க. (ரு)

இம்முறையிற்றாபித்தசிவலிங்கமிறைஞ்சுநருமவிமானமேல்கொண்
டம்மலர்ப்பூங்குழற்பணைத்தோளரமபையாசாமரையிரட்டவமரர்போற்ற
வெம்மருங்குமிசைமுழங்கப்பெருந்தேவரழுக்கறுப்பவினிதினேகிச்
செம்மலருட்சிவலோகத்தானந்தந்திளைத்துறைவார்பிறவுங்கேண்மோ.

(இ - ள்.) இம்முறையிற்றாபித்த சிவலிங்கம் இறைஞ்சுநரும் - வேதிகையுடன் பிரதிட்டைசெய்த சிவலிங்கமூர்த்தியை வணங்கப்பெற்றவரும, விமானமேல் கொண்டு அம்மலர்பூங்குழல் பணைநதோள அரமபையர் சாமரை இரட்ட - விமானத்திலேறி கற்பகமலரணிந்த கூந்தலையும் மூங்கிலையொதத தோளையுமுடைய அரம்பையர்கள் சாமரை யசைக்கவும், அமரர் போற்ற எம்மருங்குமஇசைமுழங்க - தேவர்களெதிரே நின்று தோத்திரஞ்செய்யவும் எப்பக்கங்களிலுங் கீதங்கள பாடவும், பெருந்தேவர் அழுக்கறுப்ப இனிதின ஏகி - தேவர்களிற சிறந்த அரிபிரமாக்கள் தங்களுள்ளத்தில் அழுக்காறு அறுப்பவும் இனிதாகச்சென்று, சிவலோகதது செம்மல் அருள ஆனந்தந்திளைத்து உறைவார் - சிவலோகத்தில் இறைவனருளும் ஆனநதத்தின் மூழ்கி வாழ்வார்கள், பிறவும் கேண்மோ - (முனிவர்களே) ஏனையவற்றையுங் கேட்பீர்களாக.

இதனானே சத்திபீடத்தோடு பிரதிட்டைசெய்த சிவலிங்கமூர்த்தியை வணங்கினவரடையும பயன் கூறப்பட்டதென்க. பிறவென்றது இனிவருஞ் செய்யுண் முறையிற்காண்க. (சு)

வேறு.

அடலிற்கொதிக்கும்படையாழியண்ணன்முதலோரேத்தெடுப்பத்
தடவுச்சியப்பிடர்த்தலையிற்கவினுமணிப்பூந்தவிசும்பா
கடவுட்பிராட்டியுடனிருப்பக்கதிர்வேறகாளைநள்ளிருப்ப
நடலைப்பிறவிமருந்தாகிவைகுநாதன்றிருவுருவம்.

(இ - ள்.) அடலிற்கொதிக்கும் படையாழி அண்ணல் முதலோர் ஏத்தெடுப்ப-போர்முகத்திற்கொதித்தெழும் சக்கரப்படையையுடைய திருமால் முதலிய தேவர்கள்தோத்திரஞ்செய்ய,தடவுசியம் பிடர்த்தலையில் கவினும மணிபூந்தவிசு உம்பா-பெரு

மைபொருந்திய சிங்கத்தின் மத்தகத்தில் அழகுசெய்யும் ரத்நபீடத்தின்மேல், கடவுட் பிராட்டி உடங்கு இருப்ப - பார்வதியாரிடப்பாகத்தில் குடியிருக்க, கதிர் வேல் காளை நன் இருப்ப - கதிர்வேலேந்திய முருககடவுள் நடுவே யிருப்ப, நடலை பிறவி மருந் தாகி-துன்பஞ்செய்யும் பிறவிநோய்க்கு ஔடதமாகி,வைகும் நாதன் திருவுருவம்-வீற் றிருக்கும் இறைவனுடைய திருவுருவமும். (எ - று)

திருமால் முதலிய தேவர்கள்துதிக்கத் சிங்காதனத்தின்மேல் தனதிடப்பா கத்திலம்மையும நடுவில் முருககடவுளுமாக வீற்றிருக்கின்ற உருவமும் என்க.

இச்செய்யுள சோமாஸ்கந்த உருவத்தைக் கூறியதென்க. (எ)

அடிப்பாரக்கருளு மொருதாளு மம்பொற்கமலவிழிமூன் றும்
படப்பாம்பணிந்தபுயநானகுஞ்சூலப்படையுமெழில்வயங்க
விடப்பாலரியைவலத்தயனை யெழுநாற்கோடியுருத்திரரை
நடுப்பாற்றோற்றியையைந்துவடிவுமுடனுநலம்பிறங்கி.

(இ - ள்.) அடிப்பார்க்கு அருளும் ஒருதாளும் - அடுத்தவருக்கனுக்கிரகஞ் செய்யும் ஒருபாதமும், அம்பொன்கமல விழிமூன்றும் படம்பாம்பு அணிந்தபுயம் நான் கும்-சிவந்த தாமரைமலர்போன்ற கண்கள் மூன்றும் படம்பொருந்திய பாம்பைக் கங்க ணமாகவணிந்த நான்கு புயங்களும், சூலப்படையும் எழில்வயங்க-சூலாயுதமும் அழகு பெற்றுவிளங்க, இடப்பால் அரியை வலத்து அயனை - இடப்பாகத்தில் திருமாலையும் வலப்பாகத்திற பிரமனையும, நடுப்பால் எழுநாற்கோடி உருத்திரரை தோற்றி-நடுவில் இருபத்தெட்டுக்கோடி யுருத்திரர்களையுந் தோன்றச்செய்து,ஐயைந்து வடிவும் உட னும் நலம்பிறங்கி - (ஐயை) இருபத்தைந்து திருவுருவங்களும தன்னிடமாய் விளங் கும் அழகினைக்காட்டி. (எ - று) (அ)

புகன்றவிடப்பாற்பகுதியினைப்புந்தித்தலத்திற்புந்தியினை
யகங்காரத்தினுறுதன்மாத்திரையிற்பொறியினவ்வவற்றைத்
தகுந்தாள்குய்யமுந்திகளந்தலையிற்பார்நீரனலவளிவான்
மிகுஞ்சீர்விழியினிடத்திரவிவெண்கேழ்மதியைப்படைத்தருளி.

(இ - ள்.) புகன்ற இடப்பால் பகுதியினை-முன் சொல்லிய இடதுபக்கத்தில் பிரகிருதி தத்வத்தையும், புந்தி தலத்தில் புந்தியினை - இருதயத்தில் புத்திதத்துவத் தையும், அகங்காரத்தில் உறுதன்மாத்திரையில் பொறியில் அவ்வவற்றை - அகங்காரத் திற்றோன்றுவன வாகிய தன்மாத்திரைகள் பொறிகளாகிய அவ்வவ்விடங்களில் சாத்து வீக அகங்காரமுதலிய அகங்காரங்கள் சத்தமுதலிய தன்மாத்திரைகள் சுரோத்திரமுத லிய பொறிகள் ஆகிய இவைகளையும், தகும் தாள் குய்யம் உந்தி களம் தலையில் - தகுதி யமைந்த பாதம் குய்யம நாபி கண்டம் தலை என்றஐந்திடங்களில், பார் நீர் அனல் வளி வான் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமுதலிய பூதங்களையும்,மிகும் சீர் விழியினி டத்து - சிறப்பு மிக்க கண்களினிடத்தில், இரவி வெண் கேழ் மதியை படைத்தருளி- சூரியன் வெள்ளிய சந்திரன் என்னும் இருவரையுமுண்டாக்கி. (எ - று) (கூ)

அடியினடங்குங்கீழுலகமனைத்துமடியினுறத்தோற்றி
முடியினடங்குமேலுலகமுழுதுமுடிப்பாலளித்தருளிப்
படியிலகருணைபழுமபாகிபயகுமடியாரகவிளக்காய்க்
கொடியமலநோயரட்டொதுங்குஞ்சோணைப்பெருமான்றிருவுருவம்.

(இ - ள்.) அடியில் அடங்கும் கீழ் உலகம் அனைத்தும் அடியில் உறத்தோற்றி - பூமியின்கீழடங்கி யிருக்கத்தக்க கீழுலகமெல்லாந்தனது பாதத்தினின்று முண்டாக்கி, முடியில் அடங்கும் மேல் உலகம் முழுதும் முடிப்பால் அளித்தருளி - பூமியின்மே லடங்கி யிருக்கத்தக்க மேலுலகமெல்லாம் தனது முடியினின்றுமுண்டாக்கி, படியில் கருணை பிழம்பாகி பாசும் அடியார் அகவிளக்காய் கொடியமலநோய் அரட்டு ஒதுக்கும்- ஒப்பில்லாத கருணைத்திரளாகித் தன்னைத்துதிக்கும அடியாருள்ளத் தொளிவிடும் உள்விளக்காய்க் கொடுமையாகிய ஆணவமலநோயின் செயலை யொதுக்கும், கோணை பெருமான் திருவுருவம் - அழிவில்லாத விறைவனுடையதிருவுருவமும். (எ - று)

இம்மூன்று செய்யுளும் ஏகபாத வுருவத்தைக் கூறியதெனக.

இது இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாகிய உலகங்கள் படைப்புக்காலத்து இறைவன் திருமேனியில் அவ்வவ்வுறுப்புக்களினின்றுந் தோன்றுமுறைமையைக் காட்டுந்திருவுருவமெனக. இதனை வாதுளாகமத்திற்காண்க.

நலம்பிறக்கி, படைத்தருளி, கருணைப்பிழம்பாகி மலநோயரட்டொதுக்குங் கோணைம்பெருமான் றிருவுருவம் எனக்கூட்டுக. (௧௦)

ஓவாவின்பப்பெருங்கருணையொன்றும்வதனமோரிரண்டும்
பூவார்கமலப்பதமூன்றும்போகுகூர்ங்கோடொருநான்குங்
காவாயென்பார்மலமைந்துமறுமாறளிக்குங்கரமேழுந்
தாவாவருளும்படைத்துடையவெச்சத்தலைவன்றிருவுருவம்.

(இ - ள்.) ஓவா இன்பம் பெருங்கருணை ஒன்றும் ஓரிரண்டு வதனமும்-எப்பொழுது நீங்காத பேரானந்தந்தரும் பெருங்கருணை பொருந்திய இரண்டு திருமுகமும், கமலம் பூ ஆர் பதமூன்றும்-தாமரைமலர்போன்ற மூன்று திருவடியும், போகு கூர் ஒரு நான்குகோடும் - நீண்டு கூரிய ஒப்பற்ற நான்கு கொம்பும், காவாய் என்பார் மலம் ஐந்தும் அறுமாறு அளிக்கும் கரம்ஏழும்-காத்தியென்பாருடைய பஞ்சமலங்களு நீங்குமாறு வீசவல்ல வெழுதிருக்கரமும், தாவா அருளும் படைத்துடைய - நீங்காத அருளுமுடைய, எச்சத்தலைவன் திருவுருவம் - எஞ்ஜபதியினுடைய திருவுருவமும். (எ-று

இச்செய்யுள் எஜ்ஞேஸ்வரவுருவத்தைக் கூறியதென்க. (௧௧)

இகலியெதிர்ந்தோர்குடர்குழம்பவிடியின்முழங்கியெற்றெதிர்ந்த
தொகுவெம்படைகண்முழுதுழக்குந்தோலாமதுகைச்சூர்த்தவிழிப்
புகரில்காட்சிவெள்ளிவரைநடந்தாலனையபோர்விடைமேற்
றிகழுமலைமாதுடனுறையுந்தேவதேவன்றிருவுருவம.

(இ - ள்.) இகலி எதிர்ந்தோர் குடர்குழம்ப இடியின் முழங்கி - பகைத்தெதிர்ந்தவருடைய குடர்குழம்பும்படி இடிபோல் முழக்கமிட்டு, எற்றெதிர்ந்த தொகு வெம்படைகள்முழுதும் உழக்கும் தோலாமதுகை சூர்த்தவிழி-பகைமேற்கொண்டெதிர்த்துக்கூடும் வெவ்விய படைகளையெல்லாங் கலங்கச்செய்யும் அழியாதவன்மை படைத்த கொடியபார்வையையுடைய, புகர் இல் காட்சிவெள்ளிவரைநடந்தால் அனைய போர்விடைமேல்-களங்கமற்ற வொளிவீசும்கயிலாயமலை நடந்தாலொத்தவிடபத்தின் மேல், மலைமாதுடன் திகழ உறையும் தேவதேவன் திருவுருவம்-பிராட்டியாருடன் எழுந்தருளியிருக்குந் தேவதேவனுடைய திருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் பகைத்தெதிர்ந்தவர் குடரைக்குழப்பவல்ல முழக்கத்தையும் அப்பகைப்படை முழுவதையும் உழக்கவல்ல கூர்த்தவிழியையுமுடைய விடபத்தின் மேல்உமாதேவியாருடன்வரும்விடபாரூடருடையதிருவுருவத்தைக்கூறியதென்க.

உடையாளொருபால்வீற்றிருக்குஞ்செவ்விநோக்கியுள்புக்கு
மிடையாநின்றபெருந்தேவர்விலகப்புடைக்கும்வேத்திரத்திண்
படையார்குடங்கைத்திருநந்திபகவன்றனக்குவரமுதவிப்
புடையார்கணங்கள்போற்றிசைப்பவைகும்புராணன்றிருவுருவம்.

(இ - ள்.) உடையாள் ஒருபால் வீற்றிருக்கும் செவ்விநோக்கி-உமாதேவியார் வாமபாகத்தில் எழுந்தருளியிருக்குஞ் சமையம்பார்த்து, உள்புக்குமிடையாநின்ற பெருந்தேவர் விலக-உள்ளேபுகுந்து நெருங்காநின்ற பெரியதேவர்களெல்லாம் சந்நிதானம் விட்டிருக்க, புடைக்கும் வேத்திரத்திண் படையார் குடங்கை - அடிக்கும்பிரம்பாகிய திண்ணியபடையேந்திய திருக்கரத்தையுடைய,திருநந்திபகவன் தனக்கு வரம் உதவி-திருநந்திதேவருக்கு வரந்தந்து,புடையார்கணங்கள் போற்றிசைப்ப வைகும் புராணன் திருவுருவம் - இருபக்கங்களிலுஞ் சிவகணங்களைத்தெடுப்ப வெழுந்தருளியிருக்கும் அநாதியானவன் றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் நந்திபகவானுக்கு அநுக்கிரகஞ்செய்யும் சந்திரசேகரர் திருவுருவத்தைக்கூறியதென்க. (கரு)

சிலம்பினொலிகேட்டருகணையுஞ்செங்காலன்னப்பெடைமானப்
புலம்புமணிப்பூண்முலையுமையாண்மகிழ்ந்துநோக்கிப்புடைநிற்ப
வலம்பிமறைகளோலமிடவும்பர்பழிச்சமுடிக்கங்கை
யலம்பவழகார்பெருந்திருக்கூத்தாடும்பெருமான்றிருவுருவம்.

(இ - ள்.) சிலம்பின் ஒலிகேட்டு அருகு அணையும் செங்கால் அன்னப்பெடைமான-மாதர் சிலம்போசையைக்கேட்டு அருகே வந்தணையும் சிவந்தகாலையுடைய பெடையன்னத்தைப்போல, புலம்புமணிப்பூண் முலை உமையாள் மகிழ்ந்துநோக்கி புடைநிற்ப-அசைந்தொலிக்கின்ற முத்தாரமணிந்த தனங்களைப் படைத்தவுமாதேவியார் மகிழ்ந்து பார்த்தவண்ணமா யருகேநிற்கவும், உலம்பிமறைகள் ஓலமிட உம்பர்பழிச்ச - பேரோசையோடு வேதங்கள் முறையிடவும தேவர்கள் துதிக்கவும், முடி கங்கை அலம்ப அழகார்பெருந் திருக்கூத்து ஆடும்பெருமான் திருவுருவம்-சடைமுடியில் கங்கையசைய அழகுபொருந்தியபெரியநடனஞ்செய்யும் இறைவன்றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் நடராசர் திருவுருவத்தைக்கூறியதென்க. (கசா)

வடாதுமலையிற்புயநான்குமலர்கண்மூன்றுமுருத்திரமுந்
தடாயபடப்பாப்பரைநாணுங்கபாலக்கரமுந்தழலன்றிக்
கடாதுசிவந்தசரிபங்கிகவின்றமுடியும்வெண்ணிறமுங்
கெடாதவனப்பிறபெருங்கோலங்கெழீஇயபெருமான்றிருவுருவம்.

(இ - ள்.) வடாது மலையின் புயநான்கும் மலர்கண்மூன்றும் உருத்திரமும் - பொன்மலைபோன்ற நான்கு புயங்களும் மலர்ந்த மூன்றுகண்களும் உக்கிரமும், தடாய படம் பாம்புஅரை நாணும் கபாலம்கரமும் - பரந்தபடத்தையுடைய சர்ப்பவரை ஞாணுங்கபாலமேந்திய திருக்கரமும், தழல் கடாது சிவந்த சரிபங்கி கவின்ற முடியும் வெண்ணிறமும் - அக்கினிபோற் பரந்து சிவந்த சடையினாலாகிய அழகுபெற்ற முடியும்,

வெள்ளியநிறமும், கெடாதவனப்பின் பெருங்கோலங் கெழுமிய பெருமான் திருவுருவம் - அழிவில்லாத வழகினையுடைய பெரியகோலத்தோடுகூடிய இறைவன்றிருவுருவமும். (எ - று) (௧௫)

புரசைக்களிறட்டுரிபோர்த்தகோலப்பொலிவும்புகைவடிவு
மரசச்சீயவுரிகொண்டவுத்தரீயத்தனியழகும்
பிரசக்கமலமெனச்சிவந்தவிழிகண்மூன்றும்பிறங்குலகம்
பரசத்தகுவெண்டலைத்தண்டம்பரிந்தகரமுங்கூரெயிறும்.

(இ - ள்.) புரசை களிறு அட்டு உரி போர்த்த கோலம் பொலிவும் புகைவடிவும்-கட்டுத்தறியிற் பூட்டிய யானையைக்கொன்றதன்றோலை போர்த்திருக்குங் கோலத்தினழகும் புகைநிறமும், அரசு சீய வுரி கொண்ட உத்தரீயம் தனியழகும்-சிறந்த ஆண்சிங்கத்தின்றோலை யுத்தரீயமாகக்கொண்ட வொப்பற்றவழகும், பிரசம் கமலம் என சிவந்த விழிகள் மூன்றும்-தேனிறைந்ததாமரைபோற் சிவந்த மூன்றுகண்களும், பிறங்கும் உலகம் பரசு தகும் வெண்தலை தண்டம் பரித்த கரமும் கூர் எயிறும்-விளங்குமுலகந் துதிக்குந்தகுதியையுடைய வெண்டலையையும் தண்டத்தையும் தாங்கியிருக்குங் கரங்களும் கோரதந்தங்களும். (எ - று) (௧௬)

மருவிற்பொலிந்தமலர்க்கிழவன்வகுத்தவண்டபனைத்தினையும்
பொரியிற்கொறித்துக்கொறித்துமிழும்பூட்கைக்குராண்டப்பெயரானைச்
செருவிற்படுத்தவெள்ளிறகுதிங்கட்குழவிக்கதிர்கிளைத்திட்
டுருவுற்றெழுந்தாலெனமாட்டொளிரச்செருகுந்திருமுடியும்.

(இ - ள்.) மருவில் பொலிந்த மலர்க்கிழவன் வகுத்த அண்டம் அனைத்தினையும் - நறுமணத்தாற் பொலிவுபெற்ற கமலாசனனாகியபிரமன்சிருட்டித்தவெல்லாவண்டங்களையும், பொரியில் கொறித்து கொறித்து உமிழும் பூட்கை குராண்டப்பெயரானை-நெற்பொரியைப்போல் கொறித்துக்கொறித்துமிழும் துதிக்கைபோனீண்ட மூக்கினையுடைய பகாசுரனை, செருவிற்படுத்த வெள் இறகு திங்கள்குழவி கதிர்கிளைத்திட்டு உருவுற்று எழுந்தால்அன்ன-போரிற்கொன்று அவனதுவெள்ளிய இறகினை இளஞ்சந்திரன் கதிர்களைப்பரப்பி யுருவுகொண்டெழுந்தாற்போல, மாடு ஒளிர செருகும் திருமுடியும்-அச்சந்திரன்பக்கலிலொளிசெய்யச் செருகுஞ் சடைமுடியும். (எ - று) (௧௭)

திருமால்பணிலக்கோவைநிரைவயங்கும்புயமுந்தெரித்தருளிப்
பெருநீரளக்கர்வாய்மடுத்துமுங்காரப்பேரொலிவிளைத்தும
வெருவாவீரம்படநகைத்தும்பூதகணங்கண்மிடைந்தேத்த
வருளானந்தநடங்குயிற்றுமண்டர்பெருமான்றிருவுருவம்.

(இ - ள்.) திருமால் பணிலம் கோவை நிரைவயங்கும் புயமும் தெரித்தருளி-பலவிஷ்ணுக்களுடைய சங்குமாலைகள் விளங்குமதோள்களையும் யாவருங்காணக்காட்டி, பெருநீர் அளக்கர் வாய்மடுத்தும்-பெரிய கடனீரைவாய்மடுத்துண்டும், உங்காரம் பெரு ஒலிவிளைத்தும்-உம்மென்று பெரிய ஓசையிட்டும், வெருவாவீரம்பட நகைத்தும்-அஞ்சாத வீரநகைசெய்தும், பூதகணங்கள் மிடைந்து ஏத்த-பூதகணங்கள் நெருங்கித் தோத்திரஞ்செய்ய, அருளானந்த நடங்குயிற்றும் அண்டர்பெருமான் திருவுருவம் - கருணைமயமாகிய ஆனந்தநடனஞ்செய்யும் தேவதேவன் றிருவுருவமும். (எ - று)

இந்நான்கு செய்யுளும் உக்ரமூர்த்திகள் திருவுருவங்களைக்கூறியதென்க.

உமையுந்தானும்வேறன்மையுருவினிடத்துந்தெளிப்பான்போ
லிமயமயிலையொருபாதிவடிவினிறுவிநாற்கரத்து
மமையவனசந்திரிசூலமபயவரதமிவைதாங்கி
நமையுமுய்யக்கொண்டருளுநாரிபாகன்றிருவுருவம்.

(இ - ள்.) உமையும்தானும் வேறன்மை உருவினிடத்தும் தெளிப்பான் போல் - சத்தியாகிய உமாதேவியும் சிவமாகியதாமும் வேறல்லாத தன்மையை வடிவத்தினிடத்துந் தெரிவிக்கின்றவன்போல, இமயமயிலை ஒருபாதி வடிவில் நிறுவி-பார்வதியாரைத் தன்பாதித் திருவுருவினிலைபெறச்செய்து, நாற்கரத்தும் வனசம் திரிசூலம் அபயம்வரதம் இவை அமையத்தாங்கி - நான்கு திருக்கரங்களிலும் தாமரைமலர் அழகியசூலம் பயமின்மை வேண்டியவற்றைத் தருதலாகிய இவற்றைத்தாங்கி, நமையும் உய்யக்கொண்டருளும் நாரிபாகன் திருவுருவம் - அறிவிற்சிறிய நம்மையு முய்யுமாற டிமைகொள்ளும் பார்வதிபாகனது திருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் அர்த்தநாரீஸ்வரர் திருவுருவத்தைக் கூறியதென்க. (கக)

அடுத்தங்குடனும்பரம்பொருளையன்றேவிரவவொட்டாமற்
றடுத்துமுக்கூற்றுயிருணர்வைத்தகையுமவிச்சைமுழுதிரிய
மடுத்தகருணைத்திருநோக்கின்மாணுக்கருக்குப்பொருளுரைப்ப
வெடுத்தகரத்தான்வீற்றிருக்குமிலகுளீசன்றிருவுருவம்.

(இ - ள்.) அங்கு அடுத்து உடனும் பரம்பொருளை - (உயிர்கள் ஆணவத்தால் சிமிழ்ப்புண்டு கிடக்கும்)அவ்விடத்தில்விடாது அநாதியே வேறாகாதுடனிருக்கும்பரசிவப்பொருளை, முக்கூற்று உயிர் உணர்வை அன்றே விரவவொட்டாமல் தடுத்து தகையும் அவிச்சை முழுதும் இரிய - விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னும் மூவகை ஆன்மாக்களுடைய வறிவை அநாதியே கலக்கவொட்டாமற் றடைசெய்து நிற்கும் அஞ்ஞானவிருள் முழுவது நீங்க, கருணைமடுத்த திருநோக்கின் மாணுக்கருக்கு பொருள் உரைப்ப எடுத்த கரத்தான் - கருணைநிறைந்ததிருப்பார்வையால் மாணுக்கர்களுக்கு ஞானப்பொருளையெடுத்துச்சொல்லவெடுத்தகரத்தினையுடையனாய்,வீற்றிருக்கும் இலகுளீசன் திருவுருவம்-எழுந்தருளியிருக்குமிலகுளீசன்றிருவுருவமும். (எ-று)

இச்செய்யுள் துந்துபிமுதலாகச் சொல்லப்பட்டவர்களுக்கு ஞானப்பொருள் கூறிய லகுளீசர் திருவுருவத்தைக் கூறியதென்க. (உ0)

நவிலோநீலகண்டாயநமவென்றியம்புமெட்டெழுத்து
நுவல்வார்மீளமலக்கூட்டினுழையாவாறுபெறவிமையோர்
கவலாதிரங்கியாலாலங்கதிர்ப்பூங்கரத்தினேந்தியரிச
சுவலாரணையின்வீற்றிருக்குஞ்சோதிச்சுடரோன்றிருவுருவம்.

(இ - ள்) நவில் ஓம் நீலகண்டாயநம என்று இயம்பும் எட்டெழுத்து நுவல்வார் - சொல்லப்படும் ஓம் நீலகண்டாயநமவென்று வேதங்கள் கூறும் அட்டாக்கரத்தை யுச்சரிப்பவர், மீளமலம் கூட்டில் நுழையாவாறுபெற - மீண்டும் மலசரீரத்திற் புகாவண்ணந் திருவருளடைய, இமையோர் கவலாது இரங்கி ஆலாலம் கதிர்பூங்கரத்தின் ஏந்தி - தேவர்கள் வருந்தாவண்ண மிரக்கமுற்றுவிடத்தை ஒளிவீசுமழகிய திருக்கரத்திலேந்தி, அரி சுவலார் அணையில் வீற்றிருக்கும் சோதி சுடரோன் திருவுருவம் - சிங்காதனத்திலெழுந்தருளியிருக்குஞ் சோதிமயாய்விளங்குமிறைவன்றிருவுருவமும்.

இச்செய்யுள் விஷாபஹரணமூர்த்தியின் திருவுருவத்தைக்கூறியதென்க. ()

இருகூறுகச்சலந்தரனையிறுத்துமாட்டியவ்வடிவ
மருகேதோன்றச்சுதரிசனமங்கைத்தலத்தின்மிசையேந்தி
முருகார்கடுக்கைத்தண்ணறும்பூந்தொடையல்வாகைமுடிவிளங்கத்
திருவார்காட்சியளித்தருளுந்தேவர்கோமான்றிருவுருவம்

(இ - ள்.) சலந்தரனை இருகூறுக இறுத்துமாட்டி - சலந்தராசுரனை இருபிளவாகப் பிளவுபடச்செய்து, அ வடிவம் அருகுதோன்ற சுதரிசனம் அங்கை தலத்தில் மிசைஏந்தி-அச்சலந்தரன்வடிவப்பக்கலிற்காணச்சுதரிசனமென்னுஞ்சக்கரத்தைத் திருக்கரத்திலேந்தி, முருகு ஆர்கடுக்கை தண் நறுமபூம் தொடையல் வாகை முடிவிளங்க-நறுமணங்கமழுங் கொன்றைமலராற் றொடுத்தணிந்தநல்ல பூமாலையாகிய வெற்றிமாலை திருமுடியின் கண்விளங்க, திருஆர் காட்சி அளித்தருளும் தேவர்கோமான்திருவுருவம்- அழகிற்சிறந்த திருக்கோலப்பொலிவைக்காட்டியருளுமிறைவன்றிருவுருவமும். (எ-று)

இச்செய்யுள்சலந்தராவதமூர்த்தியின்றிருவுருவத்தைக்கூறியதென்க. (உஉ)

வழிதீஞ்சுவைக்கள்வாய்மடுத்துமழலைச்சுரும்பரிசைமிழற்றுஞ்
செழிபூங்கமலமொன்றினுக்குத்திருந்துகாதன்மெய்யன்பின்
விழிசூன்றடியினருச்சித்தவிறன்மாயனுக்குச்சுதரிசனங்
கழிபேரருளாலீந்தருளுங்கடவுட்பெருமான்றிருவுருவம்.

(இ - ள்.) வழி தீம் சுவை கள் வாய்மடுத்து மழலை சுரும்பர் இசைமிழற்றும் செழி பூ கமலம் ஒன்றினுக்கு - பெருக்கெடுத்தொழுகுமினிய சுவைமிக்க தேனைப்பருகி இளவண்டுகளிசைபாடும் வளமிக்கஒருதாமரைமலருக்கு, திருந்துகாதல் மெய் அன்பின் விழி சூன்று அடியில் அருச்சித்த விறல் மாயனுக்கு - கெடாத ஆசையினால் மெய்யன்புடையனாய் கண்ணினைத் தோண்டி திருவடியிற்சாத்திய பராக்கிரமமுடைய திருமாலுக்கு, சுதரிசனம் கழிபெரு அருளால் ஈந்தருளும் கடவுள் பெருமான் திருவுருவம்-சுதரிசனமென்னுஞ் சக்கரத்தைமிகுந்த கருணையாற் கொடுத்தருளிய இறைவன் றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் சக்ரதானமூர்த்தியின்றிருவுருவத்தைக் கூறியதென்க. (உ௩)

வெருவாநிகும்பன்மிசையொருதாளூன்றிநின்றுவெஞ்சூலத்
தொருகூர்ப்பரம்வைத்தொருகரத்தாலுமையைத்தழுவிக்கைகூப்பி
யருகேநிற்குமந்தகனைநோக்கியரவச்சிலம்பணிந்து
திருமான்முதலோர்தொழுதேத்தச்சிறக்குமிறையோன்றிருவுருவம்.

(இ - ள்.) வெருவா நிகும்பன்மிசை ஒருதாள் ஊன்றிநின்று - அஞ்சாத நிகும்பாசுரன் மேலொருபாதத்தை யூன்றிநின்று, வெம்சூலத்து ஒருகூர்ப்பரம்வைத்து - கொடியசூலத்தின்மேல் ஒருமுழங்கையைவைத்து, ஒருகரத்தால் உமையை தழுவி - ஒருதிருக்கரத்தாலுமாதேவியாரைத்தழுவி, கைகூப்பி அருகே நிற்கும் அந்தகனை நோக்கி - அஞ்சலிசெய்து பக்கலில் நிற்கும் அந்தகனைப்பார்த்து, திருமால்முதலோர்தொழுது ஏத்த - விண்டுமுதலியோர் வணங்கித் தோத்திரஞ்செய்ய, அரவம் சிலம்பு அணிந்து சிறக்கும் இறையோன் திருவுருவம் - சர்ப்பநூபுரமணிந்து சிறப்புற்றிருக்குமிறைவன்றிருவுருவமும். (எ - று.)

இச்செய்யுள் அந்தகாசுரஹரணமூர்த்தியின்றிருவுருவத்தைக்கூறியதென்க.

பொருப்புச்சிலையில்வாசுகிநாண்பூட்டியரிகோல்வளியீர்க்கு
நெருப்புக்கூராம்படைதொடுத்துப்பிரமவலவனெடுமறைமா
விருப்பிற்செலுத்துநிலத்தேர்மேனின்றுதெவ்வூர்வெந்தவிய
வருப்புக்குறுவெண்ணகைமுகிழ்த்தவந்தணளன்றிருவுருவம்.

(இ - ள்.) பொருப்பு சிலையில் வாசுகிநாண்பூட்டி - பொன்மலையாகிய வில்லில் வாசுகியாகிய நாணைப்பூட்டி, வளியீர்க்கு நெருப்புகூர் அரிகோலாம்படை தொடுத்து-வாயுதேவனை அலகாகவும் அக்னிதேவனைக் கூர்மையாகவுமுடைய திருமாலாகிய பாணத்தைத்தொடுத்து, பிரமவலவன் நெடுமறை மா விருப்பிற் செலுத்தும் நிலத்தேர்மேல் நின்று - பிரமன் சாரதியாகிப் பெரியவேதமாகிய குதிரையை ஆசையினுற் செலுத்தும் பூமியாகியரதத்தினமேல் நின்றருளி, தெவ்வூர் வெந்து அவிய அரும்பு குறுவெள நகை முகிழ்த்த அந்தணாளன் திருவுருவம் - பகைவரது முப்புரமும் வெந்து நீருக புன்னகையரும்பிய கருணைகரனுகிய இறைவன்றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் திரிபுராந்தக மூர்த்தியின்றிருவுருவத்தைக் கூறியதென்க.

விசும்பினின்றும்வெகுண்டார்த்துமுழங்கிக்கொதித்துவீழ்தந்த
வசும்புதிரைநீர்வான்யாற்றையங்கோர்வேணிமயிர்நுதியிற்
பசும்புலறுகிற்பனியுறைபோற்றாங்கிவைகிப்பாவவினை
யிசும்புகடக்கும்பகீரதனின்றிரப்பமகிழ்வான்றிருவுருவம்.

(இ - ள்) விசும்பில் நின்றும் வெகுண்டு ஆர்த்து முழங்கி கொதித்து வீழ்தந்த அசும்பு திரைநீர்வான்யாற்றை - ஆகாயத்தினின்றுங் கோபங்கொண்டு ஆரவாரித்து முழக்கமிட்டுக் கொதித்துவீழ்ந்து மோதும் அலைகளையுடைய நீர்மயமாகிய ஆகாயகங்கையை, அங்கு ஓர் வேணி மயிர் நுதியில் பசும்புல் அறுகில் பனிஉறைபோல் தாங்கி வைகி - அப்பொழுதுசடையிலுள்ள ஒருரோமநுனியில் பசிய அறுகம்புல்லிற்றங்கிய நீர்த்துளிபோற் றுங்கிவீற்றிருந்து, பாவவினை இசும்பு கடக்கும் பகீரதன்நின்று இரப்பமகிழ்வான் திருவுருவம் - பாவவினையாகியகணவாய்கடக்கவல்ல பகிரதனின்று யாசிக்க மகிழ்கின்ற இறைவன்றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் கங்காதரமூர்த்தியின்றிருவுருவத்தைக் கூறியதென்க. (உசு)

கணங்கள்கலுழிமதக்கடவுள்கதிர்வேற்குரிசிலெழுமாதர்
நிணங்கொடிகிரிப்படையேந்தனிலவெண்டோட்டுமலர்புத்தே
ளணங்குநவகோண்முனிவரர்சூழ்ந்தணுகக்ராகப்பொலந்தவிசி
னிணங்குமாவற்சகாயனெனுமிறைமைப்பெருமான்றிருவுருவம்.

(இ - ள்) கணங்கள் கலுழிமதக்கடவுள் கதிர்வேல் குரிசில் எழுமாதர் நிணங்கொள் திகிரிப்படை ஏந்தல் நிலவுவெள்தோடு மலர்புத்தேள் அணங்கு நவகோள்முனிவரர் சூழ்ந்து அணுக - சிவகணங்களும் மதவெள்ளம் பொழிகின்ற யானைமுகக் கடவுளும் ஒளிவீசும்வேலேந்திய முருகக்கடவுளும் அபிராமிமுதலிய சத்த மாதர்களும் புலால்கமழுஞ்சக்கரப்படையேந்திய திருமாலும் வெண்ணிலவெரியு மிதழ்களையுடையகமலத்தையாசனமாகவுடைய பிரமனும் தெய்வத்தன்மைபொருந்திய சூரியன் முதலிய நவக்கிரகங்களும் முனிவர்களுஞ்சூழ்ந்தருகிலிருக்க, பொலந்தவிசில் இணங்கும் ஆபத்சகாயன் என்னும் இறைமை பெருமான் திருவுருவம் - பொன்மயமாகிய

வாசனத்தில் வீற்றிருக்கும் ஆபத்சகாயரென்னும் தலைமைத்தன்மைபெற்ற இறைவன் திருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் ஆபத்சகாயமூர்த்தியின் திருவுருவத்தைக் கூறியதென்க.(உஎ)

கடைக்கால்வெள்ளப்பெரும்புணரிநாப்பட்கதிர்த்தசுடரிலிங்கத்
திடைப்பான்மதியமுடிவயங்கத்தோன்றிவிசும்பினெகினமுங்கீழ்த்
தொடைப்பூந்துளபச்சூகரமுந்துலங்கமுடிமேற்கரங்குவித்துப்
படைப்பான்முகுந்தன்வலமிடமும்பரவத்திகழ்வோன்றிருவுருவம்.

(இ - ள்.) கடைக்கால் வெள்ளம் பெரும்புணரி நாப்பண்-பிரளயகாலத்தில் பெருவெள்ளமாய் வருங் கடல்நடுவில், கதிர்த்த சுடர் இலிங்கத்து இடைப்பால் மதியம் முடிவயங்க தோன்றி-சோதிமயமாகிய விலிங்கமூர்த்தியினிடத்தில் சந்திரன்முடியில் விளங்கவெளிப்பட்டு, விசும்பின் எகினமும் கீழ் பூந்துளப தொடை சூகரமும் துலங்க - ஆகாயத்திலன்னப்பட்சியும்பாதலத்தில் துளபமலர் மாலையணிந்தவராகமும் விளங்கும்படியாக, படைப்பான்முகுந்தன்முடிமேல் கரம் குவித்துவலம் இடமும் பரவ திகழ்வோன் திருவுருவம் - பிரமனுந் திருமாலும் முடிமேல் கைகளைக்கூப்பி வலப்பக்கத்திலுமிடப்பக்கத்திலுநின்று தோத்திரஞ்செய்ய விளங்குகின்ற இறைவன்றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் சோதிலிங்கமூர்த்தியின் திருவுருவத்தைக்கூறியதென்க. (உஅ)

வானம்பழிச்சவலைமாக்கள்வடிவுதாங்கிவலம்புரிக்கை
மீனம்படுத்துவிழிசூன்றுவிரன்மோதிரத்தினெவ்வுயிர்க்கு
ஞானம்பயப்பக்குருவிந்தநலங்கேழ்மணிபோற்பதித்தணிந்த
கானம்படித்துச்சுரும்புளருங்கடுக்கைத்தொடையோன்றிருவுருவம்.

(இ - ள்.) வானம்பழிச்ச வலைமாக்கள் வடிவுதாங்கி - தேவர்களெல்லாந் துதிக்க வலைஞர் வடிவங்கொண்டு, வலம்புரி கை மீனம்படுத்து விழிசூன்று - வலம்புரிச்சங்கேந்தியதிருமாலவதாரமாகிய மச்சத்தைச் சங்கரித் ததன்கண்ணைப்பறித்து, எவ்வுயிர்க்கும் ஞானம்பயப்ப நலங்கேழ் குருவிந்த மணிபோல் விரன்மோதிரத்தில் பதித்து அணிந்த - எல்லாவுயிர்க்கும் (தாமே இறைவனென்னும்) ஞானமூண்டாகக் குற்றமற்ற குருவிந்தமணிபோல் விரலிலணிந்த மோதிரத்திற் பதித்தணிந்தருளிய, கானம் படித்து சுரும்பு உளரும் கடுக்கை தொடையோன் திருவுருவம் - இசைபாடும்வண்டுகள் கிளரும் கொன்றைமாலையுடைய இறைவன்றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் மச்ச சம்ஹாரமூர்த்தியின் திருவுருவத்தைக்கூறியதென்க. ()

மகரந்திளைக்குங்கடலேழுமலங்கக்கலக்கும்பசுந்துளவ
முகைவிண்டலர்தாராமைதனைப்பற்றித்தகர்த்தமுதுகோடு
நகுவெண்டலைமாலிகையணிக்குநடுநாயகமாக்கோத்தணிந்து
புகரின்றுயர்ந்தோர்தொழப்பொலிந்தபுத்தேள்செல்வத்திருவுருவம்.

(இ - ள்.) மகரம்திளைக்கும் கடல் ஏழும் மலங்க கலக்கும்பசுந்துளவம் முகை விண்டு அலர்தார் ஆமைதனை-மகரமீன்களுலாவு மெழுகடலும் புரளக்கலக்கும் பசிய துளவரும்பு விரிந்தலர்ந்த மாலையையுடைய திருமாலாகிய கூர்மத்தை, பற்றிதகர்த்த முதுகு ஓடு நகு வெண்தலை மாலிகை அணிக்கு நடுநாயகமாக கோத்து அணிந்து-பிடிக்

தொடித் . ததன்முதுகோட்டைச் சிரிக்கும் வெண்டலைமாலையாகிய வாபரணத்து க்கு நடுவிற்பதிக்கும் நாயகமணியாகக் கோத்தணிந்து, புகர் இன்று உயர்ந்தோர்தொழ பொலிந்த புத்தேள் செல்வத்திருவுருவம் - குற்றமற்ற மேலோர்கள் வணங்கப் பொலிவுபெற்ற இறைவனது செல்வத்திருவுருவமும். (எ, - று)

இச்செய்யுள் கூர்மசங்காரமூர்த்தியின் றிருவுருவத்தைக்கூறியதென்க. (௬0)

சுழிக்கும்புனலேழ்கடல்சுவற்றிமலைகளேழுந்துகள்படத்தீ
விழிக்குங்கடவுட்பன்றியினைவிறல்வேடுருக்கொண்டெழுந்தருளி
யழித்தங்கொருவெண்கோடுபறித்தணிந்துமற்றையிடக்கோடு
பழிச்சுந்துதிகேட்டுளமிரங்கிவிடுத்தபகவன் றிருவுருவம்.

(இ - ள்.) சுழிக்கும் புனல் எழ்கடல்சுவற்றி மலைகள் எழும் துகள்பட-சுழித்துச்செல்லும் நீர்மயமாகிய எழுகடலும் வற்றி எழுமலைகளும்பொடியாக, தீவிழிக்கும் கடவுள்பன்றியினை - தீப்பொறிசிதறப்பார்க்குந் திருமாலாகிய வராகத்தை, அங்கு விறல்வேடுருக்கொண்டு எழுந்தருளி அழித்து - அப்பொழுது வெற்றியுடைய வேடவுருவங்கொண்டு சென்று தண்டித்து, ஒருவெண்கோடு பறித்து அணிந்து - ஒப்பற்ற வெள்ளிய வலக்கொம்பினை பிடுங்கியணிந்து, பழிச்சுந்துதிகேட்டு உளமிரங்கி மற்றை இடக்கோடு விடுத்த பகவன் திருவுருவம் - பின்னர் புகழெடுத்துப் பாடுந்தோத்திரங்களைக்கேட்டிரங்கி மற்றொன்றாகிய இடக்கொம்பினைப் பறியாது விடுத்த இறைவன் றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் வராகஹரணமூர்த்தியின் றிருவுருவத்தைக்கூறியதென்க. (௬க)

நன்னாலிரண்டுதிருவடியுநனிநீள்வாலுமுகமிரண்டுங்
கொன்னார்சிறகுமுருத்திரமுங்கொடும்பேரார்ப்புமெதிர்தோற்றிச்
செந்நீர்பருகிச்செருக்குநரமடங்கலாவிசெகுத்துரிகொண்
டொன்னார்குலங்கண்முழுதழிக்குமுடையான் சரபத்திருவுருவம்.

(இ - ள்.) நல்நாலிரண்டு திருவடியும்நனிநீள்வாலும் முகம் இரண்டும் கொன் ஆர் சிறகும் உருத்திரமும் கொடு பெரு ஆர்ப்பும் எதிர்தோற்றி-அழகிய எட்டுத்திருவடியும் மிகவும் நீண்டவாலும் இரண்டு திருமுகமும் அச்சந்தரும் சிறகுகளும் உக்ரமும் கொடியபேரோசையுமுடைய திருவுருவத்தோடுதோன்றி, செந்நீர்பருகி செருக்கும் நரமடங்கல் ஆவிசெகுத்து - இரணியனுதிரபானஞ்செய்து செருக்கடைந்த நரசிங்கத்தினுடைய வுயிரைக்கொன்று, உரிகொண்டு ஒன்னார்குலங்கள் முழுது அழிக்கும்உடையான் சரபத்திருவுருவம் - அதன்றோலைப்போர்த்து பகைவர்குலமுழுவது மழிக்கவல்ல இறைவனது சரபத்திருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் சிம்ஹாக்நமூர்த்தியின்றிருவுருவத்தைக் கூறியதென்க. (௬உ)

குறளாயணைந்துமூவடிமண்கொண்டுநெடுகிமூவுலகுந்
திறலானளந்துமாவலியைச்சிறைநீிற்படுத்துமியக்காளை
யிறவேசவட்டிவெரிநெலும்பையெழிற்கங்காளப்படையென்ன
வறவேவார்வழுத்தக்கைக்கொண்டவங்கணாளன் றிருவுருவம்.

(இ - ள்.) குறளாய் அணைந்து மூவடி மண்கொண்டு நெடுகி மூவுலகும் திறலான் அளந்து மாவலியைச் சிறையிற்படுத்து வியக்தானை - வாமனவடிவங்கொண்டு

சென்று மூன்றடி மண்ணைத்தானமாகவேற்று நீண்டவுருவங்கொண்டோங்கி மூன்றுல கையும் தன் வன்மையினலளந்து மாவலியென்னுமசுரனைச் சிறையுட்படுத்தித்தன்னை யதிசயித்த திருமாலே, இற சவட்டி வெரின் எலும்பை எழில் கங்காளப்படை என்ன அறவோர் வழுத்த-நன்ருயழித்து முதுகெலும்பைஅழகிய கங்காளப்படையாமென்று பெரியோர் சொல்ல, கைகொண்ட அங்கணன் திருவுருவமும்-திருக்கரத்திலேந்திய கருணைநோக்குடைய இறைவன்றிருவுருவமும். (எ - று.)

இச்செய்யுள் கங்காளமூர்த்தியின்றிருவுருவத்தைக் கூறியதென்க. (௩௩)

பொலங்கொள்பங்கிமுகரோமமபொலியவுமையோடம்புயம்போ
லலர்ந்தவிழிகளிரண்டுமதுமுகிழ்த்தாலனைய நுதல்விழியு
மிலங்கவிரவிநடுவிளங்கியிருவரிகல்போதயன்சிரங்கொய்
தலங்குமுகிரான்மருங்கமரவமர்ந்தபெருமான்றிருவுருவம்.

(இ - ள்.) இருவர் இகல் போது - பிரமனுந் திருமாலுந் தாம் பிரமமென்று போர்புரியும்போது, பொலம்கொள் பங்கி முகரோமம் பொலிய-பொன்மயமாகிய சடையும் முகரோமமும் பொலிவுபெற, உமையோடு அம்புயம்போல் அலர்ந்தவிழிகள் இரண்டும் அது முகிழ்த்தால் அனைய நுதல் விழியும் இலங்க - உமாதேவியாருடன் தாமரைபோல் மலர்ந்தவிரண்டு நேத்திரங்களும் அது குவிந்தாற்போன்ற நெற்றிக்கண்ணும்விளங்க,இரவி நடுவிளங்கி அலங்கும்உகிரால் அயன் சிரம் கொய்து மருங்கு அமர அமர்ந்தபெருமான் திருவுருவம் - சூரியமண்டல நடுவிற்றோன்றி யொளிவிடும் நகத்தினுல் பிரமன் சிரத்தைக்கொய்து அவன் தன்பககலிலிருக்க வீற்றிருந்த இறைவன் றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் காலபைரவமூர்த்தியின்றிருவுருவைக் கூறியதென்க. (௩௪)

அடியிற்றொடுத்தபாதுகையுமசைந்தநடையுமிசைமிடறும்
வடிவிற்சிறப்பநடந்தருளிமூழைழேந்திமருங்கணைந்த
தொடியிற்பொலிதோண்முனிமகளிர்சுரமங்கையரைமயல்பூட்டிப்
படியிட்டெழுதாப்பேரழகாற்பலிதேர்பகவன்றிருவுருவம்.

(இ - ள்) அடியில்தொடுத்த பாதுகையும் அசைந்தநடையும் இசைமிடறும் வடிவில் சிறப்ப நடந்தருளி - திருவடியிற் றொடுத்த திருவடிநிலையும் அசைந்து செல்லும்நடையும் இசைகாட்டுங்கண்டமும் தமது அழகிய திருவுருவத்திற் சிறப்புற் றிருக்கநடந்து, மூழை ஏந்தி மருங்கு அணைந்த தொடியின்பொலிதோள் முனிமகளிர் சுரமங்கயரை மயல்பூட்டி - பாததிரங்களிற் பிச்சைகொண்டு பக்கலிலணிணித்துவந்த வளைமுதலியவற்று லழகுபெற்ற கைகளையுடைய முனிவர் பதனிகளாகிய தெய்வப் பெண்களைக் காமத்துக்குள்ளாக்கி, படியிட்டு எழுதாத பெரு அழகால் பலிதேர் பகவன் திருவுருவம் - ஒப்பெழுதவொண்ணுத பேரழகினுற் பலியேற்கவந்த விறைவன் றிருவுருவமும். (எ - று)

இச்செய்யுள் பிக்ஷாடனமூர்த்தியின்றிருவுருவைக் கூறியதென்க. (௩௫)

என்றுமறையாகமம்வகுக்குமின்னோரன்னதிருவுருவு
மொன்றுகாஞ்சித்திருநகரிலுடையபெருமானேகம்ப
மன்றல்கமழுமலர்வாவிமதில்சூழ்கோயிலகவயைப்பி
ணன்றுமகிழ்ந்துவிதியாற்றுற்பதிட்டைபுரிந்தநலமுடையோர்.

(இ - ள்.) என்றுமறை ஆகமம் வகுக்கும் இன்னோரன்ன திருவுருவுருவுள் ஒன்று - என்று வேதாகமங்கள் வகுத்துக்கூறு மித்தன்மையவாகிய விக்கிரகங்களி லொன்றை, காஞ்சி திருநகரில் மன்றல் கமழும் மலர்வாவி மதில்சூழ் - காஞ்சித்தலத்தில் நறுமணங்கமழும் தாமரைத் தடாகங்களும் புரிசைகளுஞ்சூழ்ந்த, உடைய பெருமான் ஏகம்பம் கோயில் அகவரைப்பில் - என்னையாளாகவுடைய ஏகாம்பரநாதர்கோயிலுள்ளிடத்தில், நன்றுமகிழ்ந்து விதியாற்றால் பதிட்டைபுரிந்த நலமுடையோர் - மிகவுமகிழ்ந்து விதிமுறையாகப் பதிட்டைசெய்த நன்மையுடையவர்கள். (எ - று)

ஏகாம்பரநாதர் திருக்கோயிலுள்ளே மேற்கூறிய திருவுருவங்களுளொன்றைப் பதிட்டைசெய்த புண்ணியமுடையவர்களென்க. (௩௬)

எண்ணில்கோடியிளம்பரிதிகுழீஇக்கொண்டெழுந்தாலெனவயங்கி
விண்ணைவிழுங்கும்வளரொளிசூழ்விமானமேல்கொண்டிருமருங்கும்
வண்ணமணிசாமரையிரட்டவானோர்முடிகளடிவருடத்
தண்ணெனறும்பூமழைபொழியத்தனிவெண்கவிகைமிசைநிழற்ற.

(இ - ள்.) எண்ணில்கோடி இளம்பருதிகுழுவிகொண்டு எழுந்தால் என்ன வயங்கி - அளவிறந்த இளஞ்சூரியர்களொருங்குகூடி யெழுந்தாற்போல விளங்கி, விண்ணைவிழுங்கும் வளர் ஒளிசூழ் விமானம் மேலகொண்டு - ஆகாயத்தின் பரப்பிடமெல்லாம் விழுங்கும் பரந்தவொளிசூழ்ந்தவிமானத்தி லிவர்ந்து, இருமருங்கும் வண்ணமணிசாமரை இரட்ட - இரண்டுபக்கங்களிலும் அழகிய இரத்தினங்களாலிழைக்கப்பட்ட காம்பினையுடைய சாமரைகளசைக்கவும, வானோர்முடிகள் அடிவருட - தேவர்களுடைய முடிகளெல்லாம் பாததததைத தடவவும, தண்ணென் நறும்பூ மழைபொழிய - குளிர்ச்சிபொருந்திய நல்லவாசம் வீசும்மலர் மாரியைப் பொழியவும், தனி வெண்கவிகை மிசைநிழற்ற - ஒப்பற்ற சந்திரவட்டக்குடை மேலே நிழலைச் செய்யவும். (எ-று)

கோடிசூரியருதித்தாற்போல விளங்கும் விமானத்தின்மேல் வீற்றிருக்கப்பெற்று அரம்பையர்கள் சாமரையிரட்டவும் வானோர்முடிகளடியிற்படவும் பூமழைபொழியவும் வெண்கொற்றக்குடை நிழலைச்செய்யவுமென்க. (௩௭)

மிதுனம்பயிலுங்கின்னரங்கள்மெய்சோர்ந்தணுகிப்புடைவீழப்
பொதுளுந்தருக்கள்கனிந்துருகிப்புதுப்பூங்கொம்பர்தலைகுரங்க
மதுரங்கனிந்தமென்மொழிமடவார்பாடுமிடற்றிசையு
முதிருஞ்சுவைதீங்குழலிசையுமுதல்யாழிசையுந்தலைமயங்க.

(இ - ள்) கின்னரங்கள் பயிலும் மிதுனம்மெய்சோர்ந்து அணுகிப்புடைவீழ - யாழைப்பாடுகின்ற மிதுனராசி உடல்சோர்ந்துநெருங்கிப்பக்கத்தில் விழவும், பொதுளுந் தருக்கள் கனிந்து உருகி புது பூகொம்பர் தலைகுரங்க - நெருங்கியிருக்கும் கற்பகத்தருக்கள்மனங்கனிந்துருகப்புதியமலர்கள்நிறைந்த கிளைகளாகிய தலைகளைச் சாய்க்கவும், மதுரம் கனிந்த மென்மொழி மடவார்பாடும் மிடறுஇசையும் - சுவைகனிந்த மென்சொல்லையுடைய அரம்பையர் பாடுகின்ற கண்டத்தொலியும், முதிரும் சுவை தீம் குழல் இசையும் முதல்யாழிசையும் தலைமயங்க - மிக்க சுவையுடைய குழலினினிய வொலியும் முதன்மையாயுள்ள யாழ்வொலியும் ஆகிய இவைகளின் ஓசை இன்னதென்று தெரியாது தலைமயங்கவும். (எ - று)

மிதுனராசி மெய்சோர்ந்து விழவும் கற்பகவிருக்ஷங்கள் மனமுருகிச் சாயவும் அரம்பையர் பாடுங்கண்டத் தொலியும் யாழ்முதலிய வாத்தியவொலியு முறைமைப் பெறாது தடுமாறவுமென்க. (௩௮)

பண்ணின்மழலைத்தேன்றுளிப்பப்பனிப்பூங்கதுப்பிற்றேன்றுளிப்பக்
கண்ணும்விரலும்புடைபெயரக்கண்டோர்மனமும்புடைபெயர
வண்ணமணிமேகலையிரங்கமறுகுமிடைக்குவேளிரங்க
விண்ணின்வாழ்க்கைமெல்லியலார்மின்னுக்கொடிபோலெதிர்நடிப்ப.

(இ - ள்.) பண்ணின்மழலை தேன்துளிப்ப - பண்போலுஞ் சுவையுடைய மழலைச்சொல்லென்னுந் தேன்துளிக்கவும், பனிபூங் கதுப்பில் தேன்துளிப்ப-குளிர்ச்சி பொருந்திய மலரணிந்த கூந்தலிற் றேன்றுளிக்கவும், கண்ணும்விரலும் புடைபெயர - கண்களும் விரல்களும் மாறிமாறியசையவும், கண்டோர்மனமும் புடைபெயர-கண்டவர்களுடைய மனமும் நிலைதடுமாறவும், வண்ணமணி மேகலைஇரங்க - அழகிய மணிகளாலிழைக்கப்பட்ட மேகலாபரணமொலிக்கவும், மறுகும் இடைக்குவேள் இரங்க - வாடும் இடைக்கு மன்மதனிரங்கவும், விண்ணின்வாழ்க்கைமெல் இயலார் - பொன்னுலக வாழ்க்கையுடைய அரம்பையர்கள், மின்னும் கொடிபோல் எதிர்நடிப்ப- மின்னற்கொடிபோலெதிரேநின்று நடனஞ்செய்யவும். (எ - று)

அரம்பையர்களெதிரேநின்று அவர் சொல்லும் கூந்தலிலுள்ள மலருந்தேன் றுளிக்கவும், கண்ணும் விரலும் கண்டோர்மனமும் புடைபெயரவும், மணிமேகலையும் மன்மதனு மிரங்கவும் நடனஞ்செய்யவுமென்க. (௬௯)

சென்றுசேர்ந்துபன்னெடுநாட்சிவலோகத்திற்பரபோக
நன்றுநுகர்ந்துபின்னெடுமானளினக்கிழவன்வாசவன்சீ
ரொன்றுமேனைப்பெருந்தேவருலகமனைத்துமணைந்தணைந்து
மன்றநெடுநாளாங்காக்குப்போகநுகர்ந்துவைகியபின்.

(இ - ள்.) சிவலோகத்தில் சென்றுசேர்ந்து பலநெடுநாள் பரபோகம் நன்று நுகர்ந்து - இத்தன்மையான சிறப்போடும் கைலாசத்திற் சென்றடைந்து பலநாள் சிவபோக நீங்காதனுபவித்து, பின் - பின்னர், நெடுமால் நளினக்கிழவன் வாசவன் ஏனைபெருந்தேவர் சீர் ஒன்றும் உலகம் அனைத்தும் - திருமால் பிரமன் இந்திரன் ஏனையதேவர்கள்வாழ்கின்ற சிறப்பினையுடைய எல்லாவுலகங்களையும், அணைந்து அணைந்து - அடைந்தடைந்து, நெடுநாள் ஆங்கு ஆங்குபோக நுகர்ந்து மன்ற வைகிய பின் - அநேககாலம் அவரவருலகங்களிலுள்ள போகங்களையனுபவித்து வாழ்ந்தபின்னர்.

மேற்கூறிய சிறப்போடு ஸ்ரீகைலாயத்தை யடைந்து சிவபோகநுகர்ந்துப் பின் திருமால்முதலிய பதங்களினுஞ் சென்றங்குள்ள போகங்களையு நுகர்ந்துவாழ்ந்த பின்னரென்க. (௭௦)

முந்நீர்வரைப்பினவதரித்துஞாலமுழுதுமொருகுடைக்கீழ்ப்
பன்னாளாண்டுமறுவலுஞ்சீரபரவுங்காஞ்சித்திருநகரிற்
பொன்னார்வேணியேகம்பப்புத்தேளடிக்கீழ்வழிபட்டு
மின்னேர்பாகன்றிருவருளான்மீளாவீட்டினிலைபெறுவார்.

(இ - ள்.) முந்நீர் வரைப்பில் அவதரித்து ஞாலமுழுதும் ஒருகுடைக்கீழ்ப்பன்னாள் ஆண்டு - கடல்சூழ்ந்த இந்நிலவுலகிற்பிறந்து மண்ணுலக முழுவதுந் தனதொருகுடைநிழலின்கண்வாழ அளவிறந்த நாளரசாட்சிசெய்து, மறுவலும் சீர்பரவும் காஞ்சித் திருநகரில் - மீளவும்புகழ்ந்துரைக்கப்பட்ட காஞ்சித்தளியில், பொன்னார்வேணி ஏகம்பத்தேள் அடிக்கீழ் வழிபட்டு - பொன்னார்ந்த சடையையுடைய ஏகம்பவாணர

திருவடிக்கீழ் வழிபாடுசெய்து, மின்னேர்பாகன் திருவருளால் மீளாவீட்டில்நிலைபெறு வார் - மின்னல்போன்ற பார்வதிபாகராகிய இறைவர் திருவருளால் பிறவாநெறியாகிய முத்தியில் நிலைபெற்றிருப்பார்கள். (எ - று)

இம்மண்ணுலகத்திற் பிறந்து பேரரசனுயிவ்வுல கெல்லாமாண்டு ஏகம்பநா தர் திருவடிக்காளாய் முத்திவீட்டில் நிலைபெற்றிருப்பரென்க. (௬௧)

எழுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

ஓங்குயர்விழுச்சீர்க்கம்பனார்கோயிலுள்ளுறநந்தியெம்பிரானை
யாங்கவர்திருமுன்வெள்ளியங்கயிலையமர்ந்தெனத்தருமவெள்விடையை
வாங்குவில்வரையார்வாய்தலினிருபால்வாயில்காப்பாளரையமைப்போர்
தேங்கியசெல்வச்சிவபுரியணுகித்திருநலந்திளைத்துவீடடைவார்.

(இ - ள்.) ஓங்கு உயர் விழுச்சீர் கம்பனார்கோயில் உள்ளுற நந்தி எம்பிரானை - எத்திறத்திலு மேம்பட்டுயர்ந்த பெருமையுடைய திருவேகம்பர் கோயிலுள் எமது பெருமானாகிய நந்தி தேவரையும், ஆங்கவர்திருமுன் வெள்ளியங்கயிலை அமர்ந்தென தருமவெள்விடையை - அத்தேவருக்குமுன் கயிலாயமலை வந்திருத்தாற்போலவெள்ளிய தரும விடையையும், வாங்கு வில் வரையார் வாய்தலின் இருபால் வாயில் காப்பாளரை - பொன்மலையை வில்லாகவளைத்தவருடைய திருவாய்தலின் இருபக்கத்தில் துவாரபாலகரையும், அமைப்போர் தேங்கிய செல்வ சிவபுரி அணுகி - பதிட்டைசெய் கின்றவர்கள் செல்வந்ததும்புஞ் சிவபுரத்தையடைந்து, திருநலம் திளைத்து வீடு அடைவார் - அங்குள்ள சுத்தபோகங்களை யனுபவித்து முத்தியடைவார்கள். (எ-று)

திருவேகம்பர் கோயிலுக்குள் நந்திதேவரையும் அவருக்குமுன் தருமவிடை யையும் வாய்தலில் துவாரபாலகரையும் பதிட்டைசெய்கின்றவர்கள் கயிலாயத்தை யடைந்து சுத்தபோகநுகர்ந்து முத்தியடைவார்களென்க. (௬௨)

அங்குசபாசம்வரதமோடபயநாற்கரத்தமைவரக்கலைமான்
பங்கயக்கிழத்திபாங்கியர்சூழபத்திரபீடமேல்வைகு
மெங்கணாயகிதன்றிருவுருப்பிறவுமியற்றிவண்காஞ்சியினமைப்போர்
தங்கிளைகுளிர்ப்பநெடிதுநாள்வாழ்ந்துகடைமுறைதாளிணைசேர்வார்.

(இ - ள்) அங்குசம்பாசம் வரதமோடு அபயம் நாற்கரத்து அமைவர - அங்குச மும் பாசமும் வரதமும் அபயமும் நான்குகரத்தினுமமைந்திருக்க, கலைமான் பங்கயக் கிழத்திபாங்கியர்சூழ - கலைமகளு மிலக்குமியுமாகிய தோழியர்கள் சூழ்ந்திருக்க, பத்திர பீடமேல் வைகும் - பத்திராசனத்தின்மேல் வீற்றிருக்கும், எங்கண் நாயகி தன் திருவுரு பிறவும் இயற்றி வண்காஞ்சியில் அமைப்போர் - எங்கள்பெருமாட்டியினது திருவுரு வத்தையும் மற்றுமிவைபோல்வனவாகிய திருவுருவங்களையுஞ்செய்து வளப்பம்பொ ருந்திய காஞ்சிநகரத்தில் பதிட்டைசெய்கின்றவர்கள், தங்கிளைகுளிர்ப்ப நெடிதுநாள் வாழ்ந்து - தமது சுற்றத்தார் நிறைந்திருக்க அளவிறந்தகாலம்வாழ்ந்து, கடைமுறை தாளிணை சேர்வார் - இறுதிநாளிலிறைவனடியிணையைச் சேர்வார்கள். (எ - று)

கலைமகளுந்திருமகளும் வலமிடங்களிலிருக்க அங்குசபாச வரதாபயங்க ளோடு பத்திராசனத்தின்மேல் வீற்றிருக்கும் அம்மை திருவுருவத்தையும் ஏனைய திருவுருவங்களையும் பதிட்டைசெய்கின்றவர்கள் சுற்றத்தாரோடு கூடிவாழ்ந்து இறுதி யில்முத்தியடைவார்களென்க (௬௩)

ஐங்கரப்பெருமானறுமுகக்குரிசிலறிவிலான்வேள்விபாழ்படுத்த
வன்கழல்வீரன்கேத்திரபாலவயிரவர்தம்மையாங்கமைப்போர்
செங்கதிர்துற்கைமாயனையயனைத்திருத்தகநிறுவினர்தாமும்
புங்கவர்வழுத்துமவ்வவருலகம்புகூஉப்பெரும்பயனுகர்ந்தமர்வார்.

(இ - ள்.) ஐங்கரப்பெருமான் அறுமுகக்குரிசில் அறிவிலான் வேள்விபாழ்படுத்த வன்கழல் வீரன் கேத்திரபால வயிரவர் தம்மை ஆங்கு அமைப்போர் - விநாயகக்கடவுளும் சண்முகக்கடவுளும் அறிவிலியாகியதக்கனயாகத்தைப் பாழாக்கிய வலிய வீரகண்டையணிந்த வீரபத்திரக்கடவுளும் க்ஷேத்திரபாலகராகிய வைரவக்கடவுளுமாகிய இவர்களை யவ்விடத்தில் பதிட்டைசெய்பவர்களும், செங்கதிர் துற்கை மாயனை அயனை திருத்தக நிறுவினர்தாமும் - செவ்விய கிரணத்தைப் பரப்பும் துற்காதேவியையும் திருமாலையும் பிரமனையும் அழகுபெறப்பதிட்டைசெய்தவர்களும், புங்கவர் வழுத்தும் அவ்வவர் உலகம் புக்குபெரும்பயன்நுகர்ந்து அமர்வார் - மேலோர்கள் புகழும் அவ்வக்கடவுளருடைய உலகத்தையடைந்து பெரிய சுகத்தை யனுபவித்து வாழ்ந்திருப்பார்கள். (எ - று)

காஞ்சிநகரத்தில் ஐங்கரக்கடவுள் முதலாயினரைப் பதிட்டைசெய்தவர்கள் அவரவருலகம் புகுந்து பெரும்பயனுகர்ந்து வாழ்வார்களென்க. (சச)

அறநெறியொழுகிச்சிவாகமமறைநூலஞ்செழுத்துண்மைதேர்ந்துணர்ந்து
முறையுளிவழாதுகண்டிகைபூண்டுமுழுதுநீறணிந்துவெள்விடையூ
ரிறையவனடிக்கீழ்ப்பொதுவறுசிறப்பினெண்வகைமுழுவலன்புடையார்
மறையவர்வேந்தர்வணிகர்வேளாளர்மற்றையர்யாவரேயாக.

(இ - ள்.) அறநெறியொழுகி ஆகமம் மறைநூல் அஞ்செழுத்து உண்மைதேர்ந்து உணர்ந்து - தருமத்தின் வழிநடந்து வேத சிவாகமங்களினுள்ளீடாய் நிற்கும் பஞ்சாக்கரத்தினுண்மையை யாராய்ந்து தெளிந்து, முறையுளிவழாது கண்டிகை பூண்டு முழுதும் நீறு அணிந்து - விதிதவறாது ருத்திராக்க மணியை அங்கங்கள் தோறு மணிந்து உடன் முழுவதுந்திருநீறு பூசி, வெள்விடையூர் இறையவன் அடிக்கீழ் - வெள்ளிய இடபத்தைச்செலுத்துமிறைவருடைய திருவடியின்கீழ், பொது அறு சிறப்பின் எண்வகை முழுவலன் புடையார் - பொதுவினின்று நீங்கிய சிறந்த எட்டு வகைப்பட்ட நிறைந்த அன்புடையவர்கள், மறையவா வேந்தர்வணிகா வேளாளர் மற்றையர் யாவரேயாக - அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர்களிவரொழிந்தவேனையவருணத்தர் ஆகிய இவர்களெவரேனுமாகுக. (எ - று)

தத்தமக்குவிதித்த தருமவழியினின்று அஞ்செழுத்துண்மை யுணர்ந்து திருநீறுகண்டிகை புனைந்து இறைவர் திருவடிக்கீழ் சிறப்புவகையான் கணணீரரும்பல் முதலிய எண்வகை அன்புடையவர்கள் அந்தணர்முதலியயாவரேயாயினும் மற்றெவரேயாயினுமென்க. (சரு)

மன்னியபிரமசரியமில்வாழ்க்கைவனம்புரிநிலையினராக
வன்னவர்தமக்குமனைநிலையீகையாதியவளித்துவெண்காஞ்சித்
தொன்னகர்வரைப்பிற்கவலையின்றிருத்துந்தூயவர்கறைமிடற்றிறைவன்
றன்னருள்வடிவம்பதிட்டைசெய்தவர்க்குசசாற்றியபயன்முழுதடைவார்.

(இ - ள்.) மன்னிய பிரமசரியம் இல்வாழ்க்கை வனம்புரி நிலையினராக - நிலைபெற்ற பிரமசரியம் கிரகத்தம் வானப்பிரத்தமென்னும் ஆச்சிரமமுடையவராயினுமா

குக, அன்னவர்தமக்கு மனை நிலை ஈகை ஆதிய அளித்து - அவர்களுக்கு வீடு பொன் முதலியன கொடுத்து, வண்காஞ்சி தொல்நகர் வரைப்பில் - அழகியாய் வளப்ப முடைய காஞ்சிநகர எல்லைக்குள், கவலையின்றி இருத்தும் தூயவர் - சிறிதும் மனக் கவலையில்லாமல் வாழவைக்குஞ் சுத்தான்மாக்கள், கறைமிடறு இறைவன்றன் அருள் வடிவம் பதிட்டைசெய்தவர்க்கு - நீலகண்டனாகிய இறைவனுடைய திருவுருவத்தைப் பிரதிட்டைசெய்தவர்களுக்கு, சாற்றியபயன் முழுதுமஅடைவார - சொல்லிய பயன்க ளெல்லாமடைவார்கள். (எ - று)

முன்னர்க்கூறியவரேயன்றி எவ்வெவ்வாச்சரிமகளாயினும் அவர்களுக்கு இடமும் பொருளுந் தந்து காஞ்சித்தலத்தில் வாழவைத்தவர்கள் இறைவன்றிருவுரு வத்தைப் பிரதிட்டைசெய்தவர்களடையும் பயனையடைவார்களென்க. (௬௬)

பற்றெலாமீசன்றிருவடித்தலத்தே பதித்துடற்சார்பறநீத்த
வற்றமில்காட்சிப்பெருந்துறவுடையாரடியிணைதொழுதுபோற்றிசைத்து
சுற்றுபூம்பொதும்பர்த்தடம்புனற்காஞ்சிச்சூழலுட்பயிக்கநன்குதவப்
பெற்றவர்பெறும்பேறிற்றெனக்கிளத்தல்பெரும்பணித்தலைவற்குமரிதே.

(இ - ள்.) பூ பொதும்பர் தடம் புனல்சுற்று காஞ்சி சூழலுள் - பூஞ்சோலை களும் நீர்மயமாகிய பெரிய தடாகங்களுஞ்சூழ்ந்த காஞ்சியெல்லைக்குள், பற்று எல்லாம் ஈசன் திருவடி தலத்தே பதித்து - (தமது மனவாக்குக்காயங்களாற் பற்றும்) பற்றெல் லாம் (பற்றற்ற) இறைவன் திருவடிக்கண்ணே பற்றச்செய்து, உடல் சார்பு அற நீத்த அற்றம் இல் காட்சி பெரு துறவுடையார் - உடற்சார்பொருங்கே யொழித்து மயக்க மின்றித் தெளிந்த சிறந்த துறவறமுடையவர், அடியிணை தொழுது போற்றிசை த்து - அடிகளை வணங்கித் தோத்திரஞ்செய்து, பயிக்கம் நன்கு உதவ பெற்றவர் பெ றும்பேறு - அவர்க்குப பிச்சை நன்றாகக் கொடுக்கப்பெற்றவரடையும் பயனை, இற் றெனக் கிளத்தல் பெரு பணி தலைவற்கும் அரிது - இவ்வளவினதென்று கூறுதல் பெரிய படத்தையுடைய ஆதிசேடனுக்குமருமையாம் (எ - று)

காஞ்சித்தலத்தில் உடற்பற்றகன்று இறைவனடியிணைப் பற்றுடைய துறவி கட்கு அன்னமிட்டவரடையும் பயனை ஆதிசேடனாலுஞ் சொல்லொணாதென்க. (௬௭)

பொருணிலைக்கேற்பவோவியத்தலத்திற்புகரறுபடாந்தனிலனைய
திருவடிவங்களெழுதிவைப்பவருந்தீவினைதுணித்துவீடடைவா
ரருமறைமிருதிசிவாகமபுராணமனைத்தினுமபுகன்றவாபுகன்று
மருணிலைகழித்தமாசறுதவத்தோமற்றுளதருமமும்புகல்வாம்.

(இ - ள்.) பொருள்நிலைக்கு ஏற்ப ஓவியம் தலத்தில் புகர் அற படாந்தனில் - பொருளளவுக்கேற்பச் சித்திரரூபமாக நல்லசுவரிலாவது குற்றமற்ற படச்சீலையிலாவது, அனையதிருவடிவங்கள் எழுதிவைப்பவரும - முன்னர்க்கூறிய திருவுருவங்களை எழுதி வைப்பவர்களும், தீவினை துணித்து வீடு அடைவார - அறக்கடையொழித்து முத்தி யையடைவார்கள், அருமறைமிருதி சிவாகமம் புராணம் அனைத்தினும் புகன்றவாறு புகன்றும் - அரிய சுருதிமிருதிகளினுஞ் சிவாகம புராணங்களினுஞ் சொல்லியபடி சொன்னோம், மருள் நிலைகழித்த மாசு அறு தவத்தீர் - மயக்கமில்லாத குற்றமற்ற தவத்தையுடையவர்களே, மற்றும் உள்ள தருமமும புகல்வாம் - மற்றுமுள்ள தரு மங்களையுஞ் சொல்லுகின்றோங்கேளுங்கள். (எ - று)

தங்கள் பொருளளவுக்கேற்பச் சுவர்த்தலத்திலாவது படத்திலாவது சிவமூர்த்தங்களைச் சித்திரரூபத்திலெழுதி வைப்பவர்களும் முத்தியடைவார்கள்; இவையாங் கூறுவதன்று சுருதி முதலியவைகளாற் கூறினவைகளாகும் முனிவர்களே ஏனைய தருமங்களையுங் கேளுங்களென்க. (௬௮)

கலிநிலைத்துறை.

வளங்கொள்கச்சிமாநகர்மறுகிடைவிளையாடு
மிளஞ்சிறூர்களும்புழுதியிற்சிவாலயமியற்றிக்
கிளர்ந்துபோற்றினுஞ்சிவபுரங்கெழுமுவரென்றால்
விளங்குகாஞ்சியிற்சிவாலயமெடுப்பதேவேண்டும்.

(இ - ள்.) வளங்கொள் கச்சிமாநகர் மறுகிடை விளையாடும் இளஞ்சிறூர்களும் - வளப்பங்கொண்ட பெரிய காஞ்சிநகரிலுள்ள வீதியில் விளையாடுகின்ற இளம் பிள்ளைகளும், புழுதியில் சிவாலயம் இயற்றி கிளர்ந்துபோற்றினும் - அவ்வீதியிலுள்ள புழுதியால் சிவாலயம்போற் செய்து திரளாகக்கூடி யாடினாலும், சிவபுரம் கெழுமுவர் என்றால் - சிவபுரத்தை யடைவார்களென்று சொன்னால், விளங்கு காஞ்சியில் - சிவாலயம் எடுப்பதே வேண்டும் - எப்பதிகளினும் சிறந்து விளங்குங் காஞ்சியிற் சிவாலயமுண்டாகுதலையே தொடங்கல்வேண்டும். (எ - று)

காஞ்சிமாநகரத்தில் விளையாடுஞ் சிறுகுழவிகளும் புழுதியினால் சிவாலயமியற்றிப் போற்றுவாராயின் அவர்களை சிவபதத்தை யடைவார்களென்று சொன்னால் அவ்விடத்திற் சிவாலயத்தைக் கட்டவேவேண்டுமென்க. (௬௯)

ஈட்டுகின்றதம்பொருள்வருவாயினுக்கிசைய
வூட்டருஞ்சுடர்மணிகளிற்கனகத்திலொட்பங்
காட்டுதாதுவில்வெள்ளியிற்சுதையினிற்கனலின்
வாட்டுசெங்கலின்மரத்தினின்மண்ணினாதல்.

(இ - ள்.) ஈட்டுகின்ற தம்பொருள் வருவாயினுக்கிசைய - தான் தேடும் பொருள் வருவாய்க்கிணங்க, ஊட்டறும் சுடர்மணிகளில் கனகத்தில் ஒட்பங்காட்டும் தாதுவில் வெள்ளியில் சுதையினில் கனலில் வாட்டுஞ் செங்கலில் மரத்தினில் மண்ணின் ஆதல் - காண்டற்கரிய ஒளிவீசுமிரத்தினங்களினாலாவது பொன்னினாலாவது பொன்னொளிகாட்டுஞ்செம்பினாலாவது வெள்ளியினாலாவது சுண்ணச்சாந்தினாலாவது நெருப்பிற சுட்ட செங்கல்லினாலாவது மரத்தினாலாவது மண்ணினாலாவது. (எ - று)

தம்பொருளளவுக்கேற்ப மணி பொன் தாது வெள்ளி சுதை செங்கல் மரம் மண் இவைகளினாலாவது என்க. (௭௦)

கந்தமாதனம்பனிவரைநீலம்வான்கயிலை
மந்தரந்திகழேமகூடம்வளர்நிடதம்
முந்துபொன்வரைமுதற்குலவரைப்பெயரொன்றாற்
சந்தமேனிலைக்கோபுரமண்டபந்தயங்க.

(இ - ள்.) கந்தமாதனம் பனிவரை நீலம் வான் கயிலை மந்தரம் திகழ் ஏமகூடம் வளர்நிடதம் முந்து பொன்வரை முதல்குலவரைப்பெயர் ஒன்றால் - கந்தமாதன மலை இமயமலை நீலமலை சிறந்த கயிலைமலை மந்தரமலை விளங்கும் ஏமகூடமலை வளர்ச்சியுடைய நிடதமலைமுதன்மையாகிய மேருமலை முதலாகச் சொல்லப்பட்ட சிறந்த

மலைகளின் பெயரொன்றினால், சந்தம் மேல்நிலை கோபுரம் மண்டபம் தயங்க-அழகிய மேனிலைகளையுடைய கோபுரங்களும் மண்டபங்களும் விளங்கும்படியாக. (எ - று)

கந்தமாதன முதலாகச் சொல்லப்பட்ட மலைகளின் பெயரொன்றினால் கோபுரங்களும் மண்டபங்களும் விளங்கும்படியாகவென்க. (௫௧)

விளங்குநாகரத்திராவிடம்வேசரமற் றுங்
கிளந்தவற் றுளோர்பெற்றியிறகெழுவுபேரன்பாற்
றுளங்குவெண்டிரைக்கருங்கடற்சுடுவிடம்பருகிக்
களங்கறுத்தவனாலயங்காண்டகவெடுப்போர்.

(இ - ள்.) விளங்கும் நாகரம் திராவிடம் வேசரம் மற்றுங் கிளந்தவற்றுள் ஒரு பெற்றியின் - வழங்குகின்ற நாகரம் திராவிடம் வேசரம் இப்பாஷைகளிலாவது இதுவன்றிச் சொல்லும் பாஷைகளிலாவது அமைந்துள்ள விதிப்படி, கெழுவுபெரு அன்பால் - நிறைந்த அன்பினால், துளங்கு வெண்டிரை கருங்கடல் சுடுவிடம் பருகி களம் கறுத்தவன் - அசைகின்ற வெள்ளிய அலைகளையுடைய கரிய கடலிலெழுந்த சுடுகின்ற் விடத்தைப்பருகிக் கண்டங்கறுத்த விறைவருடைய, ஆலயம் காண்டக எடுப்போர் - ஆலயத்தைக் காட்சி பெறும்படியாகச்செய்கின்றவர்கள். (எ - று)

அவரவர்க்கும் விளங்க நாகரமுதலாகிய பாஷைகளில் விதிக்கப்பட்டுள்ள விதிப்படி ஆலயப்பணி செய்கின்றவர்களென்க. (௫௨)

மேவுமவ்வமால்வரைநிகர்விமானமேல்கொண்டு
தேவர்மாலயன்முனிவரர்சித்தரேத்தெடுப்பக்
காவிநேர்மிடற்றெம்பிரான்கயிலையைநண்ணி
யோவரும்பெரும்போகமுண்டுறைந்துவீடடைவார்.

(இ - ள்.) அவ்வமால்வரை நிகர் மேவும் விமானமேல் கொண்டு - அந்தந்த பெரிய மலைகளுக்கொப்பாக வமைக்கப்பட்டுள்ள விமானத்தின்மேற்கொண்டு, தேவர் மால் அயன் முனிவரர் சித்தர் ஏதெடுப்ப - தேவர்கள் திருமால் பிரமன் முனிவர்கள் சித்தர்கள் முதலாகச் சொல்லப்பட்ட யாவரும் தோத்திரஞ்செய்ய, காவி நேர் மிடற்று எம்பிரான் கயிலையை நண்ணி - நீலமலர்போன்ற கரிய கண்டத்தையுடைய எமது பெருமானுடைய கயிலாயத்தை யடைந்து, ஓவரும் பெரும்போகம் உண்டு உறைந்து - ஒழியாத பெரிய சுத்தபோகத்தை அனுபவித்து வாழ்ந்து, வீடு அடைவார்-பின் முத்தியை யடைவார்கள். (எ - று)

கந்தமாதன முதலாகச் சொல்லப்பட்ட பர்வதங்கள்போல் கோபுர மண்டபங்களைச் செய்தவர்கள் அந்தந்த மலைகள்போன்ற விமானத்தின்மேலாரோகணித்துத் தேவர் முதலானவர்கள் தோத்திரஞ்செய்ய கயிலாயத்தை யடைந்து அங்குள்ள சுத்த போகத்தைத் துய்த்துப் பின் மோக்ஷத்தை யடைவார்களென்க. (௫௩)

முரிநதுவீழ்ந்தனவெடித்தனவுடைந்தனமுதிய
செரிந்தவாகியகோபுரநெடுமதில்பிறவுந்
தெரிநதுமுன்னையிற்சீர்பெறப்புதுக்குவோர்பண்டு
புரிந்துளோர்பெறும்புண்ணியநான்மடங்குறுவார்.

(இ - ள்.) முரிந்து வீழ்ந்தன வெடித்தன உடைந்தன முதிய செரிந்தவாகிய கோபுரம் நெடுமதில் பிறவும் தெரிந்து - முரிபட்டும் வீழ்ந்தும் வெடித்தும் உடைந்•

தும் மிகவு செரிந்துமிருக்கின்றனவாகிய கோபுரங்கள் பெரிய மதில்கள் முதலானவை களையும் பார்த்து, முன்னையின் சீர்பெற புதுக்குவோா - முன்னிருந்ததைப்பார்க்கினுஞ் சிறந்திருக்கச்செய்கின்றவர்கள், பண்டு புரிந்துளோர் பெறும் புண்ணியம் நான்மடங்கு உறுவார் - முன் செய்தவர்கள் பெற்ற புண்ணியத்தினும் இவர்கள் நான்குபங்கடைவார்கள். (எ - று)

சீர்ணோத்தாரணஞ் செய்தவர்களடையும் பயன் பெரிதென்று கூறியதென்க.

மெய்யனாலயப்பணியுடலவிருத்தியைக்குறித்துச
செய்துளோர்பெறும்பயனுமொளிமகமெலாஞ்செய்தா
ரெய்துமாறரிதென்றிடினுறுதியோடியற்று
முய்தியாளருக்குரைத்திடவேண்டுவதெவனோ.

(இ - ள்.) மெய்யன் ஆலயம் பணி உடல் விருத்தியை குறித்து செய்துளோர் பெறும் பயனும் - அழிவில்லாத இறைவனுடைய ஆலயப்பணிகளைச் சீவனத்தின்பொருட்டுக் கூலியாளாகச் செய்கின்றவர்களடையும் பயனையும், ஒள் மகம் எல்லாம் செய்தார் எய்துமாறு அரிது என்றிடில் - புகழ்பொருந்திய யாகங்களெல்லாஞ் செய்தவர்களு மடைதலரிதென்று சொன்னால், உறுதியோடு இயற்றும உய்தியாளருக்கு உரைத்திடவேண்டுவது எவன்-கடப்பாடென்றெண்ணி மனவுறுதியோடு செய்யு முய்யுந் திறமுடையவர்க்குச் சொல்லத்தக்கதென்னையுள. (எ - று)

சிவபணியையுறுதியோடியற்றுமவரடையும்பயன்பெரிதென்றுகூறியதென்க.

எட்டுச்செங்கலினாயினுமீாம்புனல்வேணி
வட்டச்சென்னியானாலயத்திருப்பணிவகுத்த
லொட்டிப்பெற்றவிவ்வுடற்பயனாவதென்றுணர்வீ
ரட்டுத்தீவினையைந்தவித்தொழுகுமந்தணர்காள்.

(இ - ள்.) தீவினை அட்டு ஐந்து அவித்து ஒழுகும் அந்தணர்காள் - தீவினையைச்சுட் டைம்புலன்களை யவித்து நன்னெறியிற் செல்லும் முனிவர்களே, எட்டு செங்கல்லின் ஆயினும் ஈரம் புனல்வேணி வட்டம் சென்னியான் ஆலயம் திருப்பணி வகுத்தல் - (தனக்கெளிதாகக் கிடைக்கப்பெற்ற) எட்டுச் செங்கல்லினாலேனுங் குளிர்ந்த கங்கையை யணிந்த சடைமுடியுடைய இறைவனுடைய வாலயத்திருப்பணிசெய்தல், ஒட்டி பெற்ற இ உடல் பயனாவது என்று உணர்வீர் - முன் நல்வினைக்கீடாகப்பெற்ற விவ்வுடம்பின் பயனாவதென்றறியுங்கள். (எ - று)

சிவபணிசெய்தலே இவ்வுடம்பினாற் பெறும் பயனெனக. (௯௬)

ஏற்றின்மேலவனாலயத்திருப்பணியியற்று
மாற்றலில்லருங்கோயிலினகம்புறமெங்கும்
போற்றிநுண்ணுயிர்மெல்லெனவலகிடல்புரித
னூற்றுநூறுசாந்திராயணகிரிச்சரநோக்கும்.

(இ - ள்.) ஏற்றின் மேலவன் ஆலயம் திருப்பணி இயற்றும் ஆற்றல் இல்லரும் - இடபத்தின்மேல் வீற்றிருக்கின்ற இறைவனுடைய ஆலயத்திருப்பணி செய்ய வன்மையில்லாதவரும், கோயிலின் அகம் புறம் எங்கும்-திருக்கோயிலினுள்ளும் புறம்புமாகிய எவ்விடத்திலும், நுண் உயிர் போற்றி மெல்லென அலகிடல் புரிதல் - ஊர்வனவாகிய நுண்ணிய வுயிர்களிறவாவண்ணந் திருவலகினால் மெல்லென விளக்குதல்

செய்வார்ராயின், நூறுநூறு சாந்திராயண விரிச் சரம் நோக்கும்-பதினாயிரஞ் சாந்திராயணவிரதம் இருச்சரமத்தோடு செய்வதற்குமேலாகும். (எ - று)

அலகிடும்பணி சாந்திராயணத்தினுஞ் சிறந்ததென்க. (௫௭)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

குடம்புரைசெருத்தற்றீம்பால்சொழித்திடுங்கபிலையாப்பி
யிடம்படும்விசும்பினேந்திவடித்தநீர்வாக்கியென்று
மடம்பணிசடிலத்தெங்கோனாலயமெழுகுவோர்க்குப்
படும்பயனதனினூறுமடங்கெனப்பகருநூல்கள்.

(இ - ள்.) குடம்புரை செருத்தல் தீம்பால் சொழித்திடும் கபிலை ஆப்பி-குடம்போலு மடியையுடைத்தாயினிய பாலைச்சொரியும் கபிலைப்பசுவின் கோமயத்தை, இடம் படும் விசும்பில் எந்திவடித்த நீர் வாக்கி-பூமியில் விழுவதற்கு முன் அவ்விடைவெளியிற்றானே கையிலேந்தி வடித்தெடுத்த சுத்த நீரைவார்த்து, அடம் பணி சடிலத்து எங்கோன் ஆலயம் என்றும் மெழுகுவோர்க்கு - ஊருகின்ற பாம்பணிந்த சடையையுடைய எமமிறைவனாலயத்தை நாடோறு மெழுகுவார்க்கு, படும் பயன் அதனில் நூறுமடங்கு என நூல்கள் பகரும்-உண்டாகும்பயன் முன்னலகிடுவார்க்குக் கூறிய பயனிலும் நூறுபங்கென்று ஆகமங்கள் சொல்லும். (எ - று)

மெழுகல் அலகிடும் பணியினுஞ் சிறந்ததென்க. (௫௮)

ஒலிமலர்த்தொடரிபெம்மானொண்ணிலாக்குழவிவேய்ந்த
வலர்முடிச்சடையிற்சாத்தனூற்றுநூறதிகமாகு
மலர்தொறுமுவகைபூத்துவானவர்வதிவாரந்த
நலமிகுமலர்கொண்டேத்தனாதனுக்கினிதெனவோர்வீர்.

(இ - ள்.) ஒள் நிலா குழவி வேய்ந்த பெம்மான் அலர்முடி சடையில்-ஒள்ளிய விளஞ்சந்திரனையணிந்த இறைவனுடைய பரந்தசடை முடியில், அரி ஒலி மலர் தொடு சாத்தல் - வண்டுகளொலிக்கு மலரைத்தொடுத்துச் சாத்துதல், நூறுநூறு அதிகம் ஆகும்-பதினாயிரம் பங்கதிகமாம், அந்த மலர்தொறும் உவகை பூத்து வானவர் வதிவார்-அம்மலர்கடோறும் மனமகிழ்ந்து தேவர்கள் வாசஞ்செய்வார்கள், நலமிகும் மலர்கொண்டு ஏத்தல் நாதனுக்கு இனிது என்று ஓர்வீர் - (ஆகையால்) நன்மை மிகுந்த மலர்களைக்கொண்டருச்சித்தல் இறைவனுக்கு மிகவுமினிமை யென்றறியுங்கள். (எ - று)

பூமாலைதொடுத்துச் சாத்தல் மெழுகிடுதலினுஞ் சிறந்ததென்க. (௫௯)

கன்னிகாரத்தில்வாணியலரியிற்கமலப்புத்தேள்
வன்னியில்வன்னிநந்திநந்தியாவட்டப்பூவிற்
புன்னையில்வளிநமேருப்பூவினிற்கணங்களேடு
துன்னியவெருக்கினங்கித்தோன்றல்செண்பகத்துச்செவ்வேள்.

(இ - ள்.) கன்னிகாரத்தில் வாணி - கோங்குமலரில் சரசுவதியும், அலரியில் கமலம் புத்தேள் - அலரிப்பூவில் பிரமனும், வன்னியில் வன்னி - வன்னிமலரிலக்கினி தேவனும், நந்தியாவட்டம் பூவில்நந்தி - நந்தியாவர்த்தமலரில் நந்திதேவரும், புன்னையில் வளி - புன்னைமலரில் வாயுதேவனும், நமேருபூவினில் கணங்கள் - நமேருமலரிற் சிவகணங்களும், எடுதுன்னிய எருக்கில் அங்கித்தோன்றல் இதழ்கள் செறிந்த

வெருக்குமலரில் விநாயகக்கடவுளும், செண்பகத்து செவ்வேள் - செண்பகப்பூவில் முருகக்கடவுளும். (எ - று)

அங்கித்தோன்றல் விநாயகக்கடவுளென வருதல் வடமொழியிற்காண்க. (௩0)

திருமகள்வில்லந்தன்னிற்சிறந்தகொக்கிறகின்மாயோன்
வருணன்வாருணமென்போதில்வகுளத்திற்சுயசைமற்று
நிருதிமென்சிரீடப்பூவிற்சாதியினிகழீசானன்
பரிதிசெங்கழுநீர்ப்பூவிற்குமுததத்திறபனிவெண்டிங்கள்.

(இ - ள்.) வில்வந்தன்னில் திருமகள்-வில்வததிலிலக்குமியும், சிறந்த கொக்கிறகில்மாயோன் - சிறப்புப்பொருந்திய கொக்கிறகில் திருமாலும், வாருணமென் போதில் வருணன் - மெல்லிய வருணமலரில் வருணனும், வகுளததில் சுயசை - மகிழமலரில் சுயசையும, மென் சிரீடப்பூவில நிருதி-மெல்லிய வாகைப்பூவில் நிருதியும், சாதியில் நிகழ் ஈசானன் - சாதிமல்லிகையில் முன்னுசுகிகழு மீசானமூர்த்தியும், செஙகழுநீர் பூவில் பருதி - செங்கழு நீர்மலரில் சூரியனும், குமுதத்தில் பனிவெண் திங்கள் - அல்லிமலரில் சந்திரனும். (எ - று). (௩க)

இந்திரன்மந்தாரத்தினியக்கர்கோன்பொலம்பூமத்தத்
தந்தகனபாமார்கத்தினூரருள்கூர்ந்துவாழ்வார்
கந்தமென்கமலப்போதிற்கண்ணுதலிறையேவைகும்
பைந்துகணீலப்பூவிற்பனிவரைப்பிராட்டிமேவும்.

(இ - ள்.) மந்தாரத்தில் இந்திரன் - மந்தாரமலரிலிந்திரனும், பொலம் பூ மத்தத்து இயக்கர்கோன் - பொன்னூமத்தைமலரில் குபேரனும், அபாமார்க்கத்தில் அந்தகன் - நாயுருவியிலியமனும், ஆர் அருள்கூர்ந்து வாழ்வார் - மிக்ககருணையோடு நிறைந்துவாழ்வார்கள், கந்தம் மெல் கமலம் போதில் கண்ணுதல் இறை வைகும்-நறுமணங்கமழு மெல்லியதாமரைமலரில் நெறறிக்கண்ணையுடைய கடவுள்வாழும், பை துகள் நீலம் பூவில் பனிவரை பிராட்டிமேவும் - பசியமகரந்தங்களையுடைய நீலமலரில் பார்வதியார் வாழ்வர். (எ— று)

இம்மூன்றுசெய்யுளால்அவ்வம்மலர்களில்வசிக்குந்தெய்வங்களைக்கூறியதென்க.

மேதகுவாசத்தெல்லாமலைமகள்விரும்பிவைகு
தலாலிணையபூக்களமைந்தவைகொண்டுசெய்யும்
பாதபூசனைக்கேகம்பப்பரம்பொருள்கருணைகூரும்.
போதணிபுயத்தின்மேலாம்பூந்தொடைதொடுத்துச்சாத்தல்.

(இ - ள்.) மேதகு வாசதது எல்லாம் மலைமகள் விரும்பி வைகும் ஆதலால் - மேன்மைபொருந்திய வாசனையுள்ள வெல்லாமலர்களிலும் பார்வதியார் விருப்பத்தோடு வீற்றிருப்பராகையிறைல், இணையபூக்கள் அமைந்தவைகொண்டு செய்யும் பாத பூசனைக்கு-இத்தன்மையவாகிய மலர்களில கிடைத்த மலர்களைக்கொண்டியற்றுந் திருவடியருச்சனைக்கு, பரம்பொருள் ஏகம்பம் கருணைகூரும - பிரமப்பொருளாகிய திருவேகம்பருருள்பாலிப்பர், போது அணிபுயததில் பூதொடை தொடுதது சாததல் மேலாம் - (ஆகையால்) மலர்களாலழகுபெற்றிருக்குந்தோள்களில் அமமலர்களை மாலையாகத்தொடுத்தணிதல் சிறந்ததாகும். (எ - று)

தனித்தனியே மலர்களாலருச்சிப்பதினு மாலையாகத் தொடுத்துச்சாத்தல் சிறந்ததென்க.

அவற்றினுமதிகமாகுமலர்ந்தபுண்டரிகமாலை
யெவற்றினுஞ்சிறந்தமேன்மையெழிற்கருங்குவளைப்போது
நிவப்புறுநூற்றுப்பத்தாலெடுந்தொடைமாலைசாத்திற்
பவத்தொகையிரியநூறிமுத்தியேபயக்குமம்மா.

(இ - ள்.) அலர்ந்தபுண்டரிகமாலை அவற்றினும் அதிகமாகும்-மலர்ந்ததாமரை யாற்றொடுத்தமாலை பலமலர்களாற் றொடுத்தமாலையினுஞ் சிறந்ததாகும், எவற்றினும் சிறந்த மேன்மை எழில் கருங்குவளை போது - எல்லா மலரினுஞ் சிறந்த மேம்பாடுடைய அழகிய நீலோற்பலமலரை, நிவப்புறு நூற்றுப்பத்தால் நெடு தொடைமாலை சாத்தில் - உயர்ந்திருக்கும் ஆயிரமெண்ணுள்ள மாலையாகத்தொடுத்துச் சாத்தினால், பவத்தொகை இரிய நூறி முத்தியே பயக்கும் - (அப்புண்ணியம்) பிறவித்தொகைகளை நுண்பொடியாக்கி மோக்ஷவின்பத்தைத் தவறாமற் கொடுக்கும். (எ - று)

ஏனையமலராற்றொடுத்துச்சாத்துவதினால்வரும் பயனிலுந் தாமரைமலர்மாலையைச் சாத்துதலால்வரும்பயன் அதிகமாகும் ஆயிர நீலோற்பல மலர்மாலையைச் சாத்தினால் அது பிறவித்துன்பத்தையொழித்து முத்தியின்பத்தைத்தருமென்க. (கூச)

ஓங்குயர்திருவேகம்பமுடையவன்றிருமுன்வாசம்
வீங்குநெய்விளக்குத்தூபமவிளைத்திடின்முருகுநாறிப்
பாங்கொளிபரப்புமேனிபடைத்துவெண்கயிலைநண்ணித்
தேங்கருட்பரமானந்தவேலையுட்டிளைத்துவாழ்வார்.

(இ - ள்) ஓங்கு உயர் திருவேகம்பம் உடையவன் திருமுன் - எல்லாத்தளிகளினுஞ் சிறந்துவிளங்குந்திருவேகம்பமுடையவர்சந்நிதானத்தின் முன், வாசம் வீங்கு நெய்விளக்கு தூபம் விளைத்திடில் - வாசனைமிகுந்த நெய்விளக்கும் தூபமும் எங்கும் விளங்கிக் கமழும்படிசெய்தால், முருகு நாறி பாங்கு ஒளி பரப்பும் மேனி படைத்து-வாசனைவீசிப் பக்கங்களிலொளிபரப்பும் சரீரத்தைப் படைத்து, வெண் கயிலை நண்ணி - வெள்ளியங்கிரியை யடைந்து, தேங்கு அருள் பரமானந்த வேலையுள் திளைத்து வாழ்வார் - அருணிறைந்த பரமானந்தக்கடலில் மூழ்கிவாழ்வார்கள். (எ - று)

தீபமுந்தூபமு நறுநெய்யாலும் நறும்புகையாலும் திருவேகம்பர் சந்நிதானத்தின்முன் என்றும் நடக்கும்படிச் செய்வாராயின் அவர்மேனி தீபம்போல் பிரகாசித்துத் தூபம்போல் நறுமணங்கமழப்பெற்றுக் கயிலாயத்தையடைந் தானந்தசாகரத்துள் மூழ்கிவாழ்வார்களென்க.

மட்டவிழ்பொழில்சூழ்கம்பவனைப்பிடைமதிதேய்பக்கத்
தட்டமிபதினான்கானதினங்களினன்புகூர்ந்து
கட்டெழிற்கபிலையானெய்கலந்தகுங்கிலியத்தூப
மிட்டவர்செய்தகுற்றமாயிரம்பொறுப்பனெங்கோன்.

(இ - ள்) மட்டு அவிழ் பொழில்சூழ் கம்பவனைப்பிடை - நறுமணங்கமழுஞ் சோலைசூழ்ந்த திருவேகம்பத்தினெல்லையில், மதிதேய் பக்கத்து அட்டமி பதினான்கான தினங்களில் - கிருஷ்ணபட்சத் தட்டமி சதுர்த்தசி திதிகளில், அன்புகூர்ந்து கட்டு எழில் கபிலை ஆன் நெய் கலந்த குங்கிலியத்தூபம் இட்டவர் செய்த குற்றம் ஆயிரம் - அன்புமேலிட் டழகு கெடாத்கபிலைப் பசுவி னெய்கலந்த குங்கிலியத் தூபமிட்டவர்க ளியற்றிய ஆயிரங்குற்றங்களை, எங்கோன் பொறுப்பன்-எமதுபெருமான் பொறுத்திருள்வன். (எ - று)

திருவேகம்பத்தில் பசுவினெய்கலந்த குங்கிலியத்தூபம் கிருஷ்ணாட்டமி சதுர்த்தசிதினங்களி லிடுவோராயினவர் குற்றமாயிர பொறுப்ப னிறைவனென்க.(சுசு)

வடித்தநீர்வாசம்பெய்துவள்ளலுக்காட்டல்செய்யிற
படித்தலைப்பத்துநூறுபரிமேதஞ்செய்தபேறாங்
கடிச்செழுந்தயிலமாநெய்கமழுமைந்தமிர்தமெம்மா
னடித்துணைக்குறுமானைந்துமொன்றினொன்றதிகமாமால்.

(இ - ள்.) வடித்த நீர்வாசம் பெய்துவள்ளலுக்கு ஆட்டல்செய்யின் - வடித்தெடுத்த திருமஞ்சனத்தில் வாசனைகலந்து இறைவனுக் கபிடேகஞ்செய்தால், படிதலை நூறுபத்து பரிமேதம் செய்த பேறு ஆம் - (அது) இவ்வுலகின்க ணாயிரம் அஸ்வமேதஞ்செய்த பலனாகும், கடி செழுந்தயிலம் ஆன் நெய் கமழும் ஐந்து அமிர்தம் எம்மான் அடி துணைக்கு உறும் ஆன் ஐந்தும் - நறுமணங்கமழு நல்லெண்ணெயும் பசுவினெய்யும் வாசம்வீசும் பஞ்சாமிர்தமும எமதிறைவன்றிருவடிக்குப் பொருந்திய பஞ்சகவ்யமும், ஒன்றின் ஒன்று அதிகம் ஆம் - ஒன்றுக்கொன்று மேம்பாடுடையனவாகும்.

நல்லவாசனையூட்டிய திருமஞ்சனத்தை யாட்டினால் அது ஆயிரம் அசுவமேத பலனைத்தரும். தயிலம் நெய் பஞ்சாமிர்தம் பஞ்சகவ்யம் இவையொன்றுக்கொன்று ஏற்றமுடைத்தென்க. (சுஎ)

மண்டுபேரன்பினான்பான் மணிமுடிக்காட்டுவோர்பா
லண்டர்தம்பெருமான்மேன்மேலளவிலாமகிழ்ச்சிகூரும்
வெண்டயிர்கருப்பஞ்சாறுவிளைமதுப்பிறவுமாட்டி
னெண்டரும்வேள்வியெல்லாமியற்றியபெரும்பேறெய்தும்.

(இ - ள்.) மண்டு பெரு அன்பின் ஆனபால் மணிமுடிக்கு ஆட்டுவோர்பால் அண்டர்தம் பெருமான் மேன்மேல் அளவிலா மகிழ்ச்சிகூரும் - நிறைந்தபேரன்பினால் பசுவின்பாலால் அழகிய திருமுடிக்கு அபிடேகஞ்செய்கின்றவர்களிடத்தில் தேவர்கட்கரசனாகிய இறைவன் எல்லையில்லாத ஆனந்தக்களிப்படைவன், வெண் தயிர் கருப்பஞ்சாறு விளைமது பிறவும் ஆட்டின் - வெள்ளியதயிரும கரும்பின சாறும் சுவை விளைகின்றதேனும் ஏனைய பொருள்களையும் அபிடேகஞ் செய்தால், எண் தரும் வேள்வி எல்லாம் இயற்றிய பெரும்பேறு எய்தும் - அளவிறந்த யாகங்களெல்லாஞ் செய்த பெரும்பயனுண்டாகும். (எ - று)

பாலபிடேகஞ் செய்தவர்களிடத்தில் இறைவனுக்கு மகிழ்ச்சி வளரும், தயிர் முதலியவற்றை யாட்டினால் யாகங்களெல்லாஞ் செய்த பயனுண்டாமென்க. (சுஅ)

மந்திரத்திருவொற்றுடைசாந்திமான்மதங்கற்பூரஞ்
சந்தனக்கலவைசாத்திச்சாந்தாற்றிப்பணிசெய்கிற்போர்
தந்திருமாபிற்கோடிதமர்களைநரகினீக்கி
யிந்துவாழ்சடிலத்தெந்தையிணையடிநீழல்வாழ்வார்.

(இ - ள்) மந்திரம் திருவொற்றுடை சாத்தி - மந்திரத்தினாற் சுத்திசெய்த ஒற்றுடையினாற் பெருமானையொற்றி, மான்மதம் கர்ப்பூரம் சந்தனக்கலவை சாத்தி சாந்தாற்றி பணிசெய்கிற்போர் - மிருகமதமும் பச்சைக்கர்ப்பூரமுங் கலந்த சந்தனக் குழம்பையப்பி விசிறியினா லசைக்கும் பணியைச்செய்கின்றவர்கள், தம் திருமரபில் கோடிதமர்களை நரகில் நீக்கி - தங்களுடைய நல்லமரபில் கோடிபேர் சுற்றத்தாரை

நரகினின்று மீட்பித்து, இந்துவாழ் சடிலத்து எந்தை இணையடி நீழல் வாழ்வார் - சந்திரன்றவழுஞ் சடைமுடியுடைய எமது பெருமான்றிருவடிநிழலில் வாழ்வார்கள்.

(திருமஞ்சனமாட்டிய பின்னர்) திருவொற்றாடை சாத்திச் சந்தனக்குழம்பை யப்பிச் சாந்தாற்றியினால் ஏரம்புலர்த்துந்திருப்பணிசெய்வோர்நரகிற்கிடக்குந்தமது சுற்றத்தார்கோடியரை அந்நரகினின்றுமீட்பித்து இறைவன்றிருவடிநிழலில்வாழ்வார்கள்.

நுழையுநூற்கலிங்கம்வெண்கேழ்நுரைபுரைநறும்பூம்பட்டு
விழைதகுநீவிற்றந்தவிசித்திரபடங்களன்பா
னிழைமிடற்றிறைக்குச்சாத்தின்மழுவலானுலகிலோரோ
ரிழையினுக்கியம்புகற்பமாயிரமினிதுவாழ்வார்.

(இ - ள்.) நூல் நுழையும் கலிங்கம் வெண்கேழ் நுரைபுரை நறும் பூம்பட்டு விழை தகு நீவில் தந்த விசித்திரப்படங்கள்-பருத்திநூலால் வனைந்தவாடையும் வெண்ணிறமுடைய நுரைபோன்ற நல்லபூம்பட்டாடையும் விரும்புஞ்சிறப்பினையுடைய நீவுகளினினறுங்கொண்டுவந்தபலவிசித்திரவாடைகளையும், அன்பால் மழைமிடறு இறைக்கு சாத்தில்-அன்பினால நீலகண்டனாகிய இறைவனுக்குச் சாத்தினால்,மழுவலான் உலகில் ஒரு ஒரு இழையினுக்கு இயம்பும் கற்பம் ஆயிரம் இனிது வாழ்வார் - பரசாயுதமேந்திய இறைவனுடைய வுலகில் ஒவ்வோரிழைக்குச சொல்லப்படும் ஆயிரங்கற்பகாலமினிமையாக வாழ்வார்கள். (எ - று)

இறைவனுககு நூலாடை முதலியவற்றை யணிவோர் ஒரு நூலிழைக்கு ஆயிரங் கற்பகாலஞ் சிவலோகததில் வாழ்வார்களென்க. (எ0)

நால்விரலளவைகொண்டநல்லிழைதொண்ணூற்றாறிற்
சால்புறமுமமூன்றாக்கிமூன்றுறசசமைத்தபூணூல்
சீலமோடென்றுஞ்சாத்துநதிருமறைவயவரைக்கண்டான்
மாலுடைப்புலையாதாமுமறுமையின்மறையோராவார்.

(இ - ள்.) நால்விரல் அளவைகொண்ட நல் இழை தொண்ணூற்றாறில் சால்புறமும் மூன்று ஆக்கி மூன்றுறச் சமைத்த பூணூல் - நான்கு விரலளவையினாற் கொள்ளப்பட்ட நல்ல தொண்ணூற்றாறிழையில் மேம்பாடாகவதனை ஒன்பதிழையாக்கிப் பின்னர் அதனை மூன்றாகச் செய்த முப்புரிநூலை, சீலமோடு என்றும் சாததும் திருமறையவரை - ஆசாரததோடு நாடோறுஞ் சாத்துகின்ற அந்தணர்களை, மால்உடைபுலையர்தாமும் கண்டால் மறுமையில் மறையோர் ஆவார் - மதுமயக்கமுடைய புலையருங்காணப் பெறுவராயின்(அவர்)மறுபிறப்பிலந்தணராகப்பிறப்பார்கள.

இறைவனுக்குப் பூணூல்சாத்தும் அந்தணரைப் புலையன் காணப்பெறுவானாயினும் அவன் அந்தணனாவனெனக. (எக)

இமமிளவுசெம்பொனெம்பிரான்முடியிற்சாததி
னம்மவாங்கவர்பெறும்பேறநந்தற்குமளத்தல்செல்லா
விம்மியசெல்வர்கோடிவீசனும்மவறியோர்தன்ன
முண்மையினளித்தற்கொவ்வாவுறுதியன்புடைமைபெற்றால்.

(இ - ள்.) உறுதி அன்புடைமைபெற்று-நிலைபெற்ற அன்புடைமையைப்பெற்று, இம்மியின் அளவு சொம்பொன் எம்பிரான்முடியில் சாத்தில் - ஓரிம்மியினளவாகிய சிறிய செம்பொன்னை எமதுபெருமான்றிருமுடியிற் சாத்தினால், ஆங்கு அவர்

பெறும்பேறு அனந்தற்கும் அளத்தல் செல்லா அம்ம-மேலுலகி லவர்களடையும் பய ஆதிசேடனுக்கும் அளவிடுதற்குக்கூடா இதுவென்ன வாச்சரியம், விம்மிய செல்வர் கோடி வீசலும் - (அஃதென்போலுமெனின்)பெரியசெல்வவானகள் பொருளைக்கோடி யளவாக வாரி வீசிக்கொடுத்தாலும், வறியோர் உண்மையில் தன்னம் அளித்தற்கு ஒவ் வாது-(அது) பொருளில்லாதவர் ஈகையினுண்மையுணர்ந்த மெய்மையினால் ஒரு சிறிது கொடுத்தற் கிணையாகாதது போலுமாம். (எ - று)

இறைவனுக்கொருபொருள் அன்புடைமையானும் அஃதின்மையானுங் கொ டுத்தலால் வரும்பயன் இன்னதன்மைத்தாமென்க.

இதனால் ஈகை யுண்மையுணரார் ஈந்தும்பயன்பெறார் அன்பில்லார் சிவபு ண்ணிய மியற்றியும் பேறுபெறாரென்ற வுண்மையையுணர்த்தியதெனக. விம்மிய செல் வர் கோடிவீசலு மென்றதனால் அவரது அறிவின் வறுமையும், வறியோர் தன்னமுண் மையினளித்த லென்றதனால் இவரது அறிவின் செல்வத்தையுங்குறித்ததுமாமென்க.

வெறிமலரிண்டைமாலைவிரைகமழ்தூபதீப
மறுசுவையடிசிலான்றவெள்ளிலைபழுக்காய்மற்று
முறுகுடைகவரியாதிபூசனைக்குரியவெல்லா
முறுகுபேரன்பினெந்தைக்காக்குவோர்முத்தராவார்.

(இ - ள்.) வெறிமலர் இண்டைமாலை - நறுமணங்கமழும் இண்டைமாலையை யும், விரைகமழ் தூபதீபம் - நறுமணங்கமழுந் தூபமுந்தீபமும், அறுசுவை அடிசில் - அறுசுவையோடுகூடியவன்னமும், ஆன்ற வெள்ளிலை பழுக்காய் மற்றும் - சிறந்த வெற்றிலையும் பாக்குமுதலானவைகளும, முறுகுடைகவரியாதி - முறுக்கமைந்த சாம ரை முதலானவைகளுமாகிய, பூசனைக்கு உரிய எல்லாம் - பூசனைக்குரிய வுபகரணங்க ளெல்லாம், முறுகு பெரு அன்பில் எந்தைக்கு ஆக்குவோர் முத்தர் ஆவார்-முறுகிய பே ரன்பினாலெமது பெருமானுக்காகும்படிச் செய்கின்றவர்கள் சீவன முத்தராவார்கள்.

பூமாலை முதலிய பூசனைக்குவேண்டிய உபகரணங்களைச் செய்து வைத்தவர் சீவன் முத்தராவரென்க. (எ௯)

நித்தியத்திருநாள்பக்கவிழாநிகழ்திங்கட்சாறும்
புத்தலரிளவேனிற்கட்பொருவருமவசந்தங்கோடை
மெத்தியமுதுவேனிற்கண்மிதவைநீராட்டுமாரி
மொய்த்தகார்ப்பருவந்தன்னிற்பவித்திரமுதுவிழாவும்.

(இ - ள்.) நித்தியத்திருநாள் - நித்தியோற்சவமும், பக்கவிழா - பக்ஷோற்ச வமும், நிகழ்திங்கள் சாறும் - நிகழ்கின்ற மாதந்தோறுஞ் செய்யும் மாசோற்சவமும், புத்து அலர் இளவேனிற்கண் பொருவரும்வசந்தம் - புதியமலர்கள் மலர்கின்ற வேனிற் காலத்தில் ஒப்பில்லாத வசந்தோற்சவமும், கோடைமெத்திய முதுவேனிற்கண்-மெல் லியகாற்றுலாவும் கோடையாகிய முதிர்வேனிற்காலத்தில், மிதவைநீர் ஆட்டும் - தெப் பவுற்சவமும், மாரிமொய்த்த கார்பருவந்தன்னில் - மிகுந்த மழைபொழியும் மாரிக் காலத்தில், பவித்திர முதுவிழாவும் - பெரிய பவித்திரோற்சவமும். (எ - று) (எ௪)

அன்புறுகூதிர்க்காலையைப்பசிப்பூரச்சாறு
முன்பனிப்பருவந்தன்னில்வைகறைமுகிழ்த்தபூசை

௩௭

சபின்பனிப்பருவந்தன்னிற்பிறங்குபொன்னூசலாட்டு
மென்பனசிறப்புமாணவியற்றுவோர்வீடுசேர்வார்.

(இ - ள்.) கூதிர்காலே அன்புறு ஐப்பசி பூரச்சாறும் - கூதிர்காலமாகிய ஐப்பசி மாதத்தில் அன்புபொருந்திய பூரத்திருவிழாவும், முன்பனி பருவம் தன்னில் வைகறை முகிழ்த்த பூசை - முன்பனிக்காலத்தில் விடியற்காலத்திலியற்றும் பூசையும், பின்பனி பருவந்தன்னில் பிறங்கு பொன் ஊசலாட்டும் - பின்பனிக்காலத்தில் சிறந்துவிளங்கும் திருப்பொன்னூசற்றிருவிழாவும், என்பன சிறப்புமாண இயற்றுவோர் வீடு சேர்வார்- என்று சொல்லப்படுவனவாகிய உற்சவங்களைச் சிறந்துவிளங்கச் செய்கின்றவர்கள் முத்தியடைவார்கள். (எ - று)

இவ்விரண்டு செய்யுளால் நித்யோற்சவமுதலியன அவ்வக்காலங்களிற் செய்கின்றவர்கள் முத்தியடைவரென்றுகூறியதென்க. (எ௫)

பொங்கரிபரந்தவுண்கட்பூவையோடொருமாநீழற்
றங்கியபெருமானார்க்குச்சார்தருமாண்டுதோறும்
பங்குனித்திருநாட்செய்கைபழுதறுசிறப்பின்மல்க
மங்கலவிதியினாற்றல்விடைக்கொடிவயங்கவேற்றி.

(இ - ள்.) பொங்கு அரிபரந்த உண்கண் பூவையோடு - விளங்குஞ் செவ்வரிபரந்தமையுண்ட கண்களையுடைய வுமாதேவியாரோடு, ஒருமாநீழல் தங்கிய பெருமானார்க்கு - ஒப்பற்றமாவினீழலி லெழுந்தளியிருக்கின்ற ஏகம்பவாணருக்கு, சார்தரும் ஆண்டுதோறும் பங்குனி திருநாள் செய்கை - வருகின்ற வருடந்தோறும் பங்குனித் திருவிழாவாகிய திருக்கலியாணச் செயலே, பழுதறு சிறப்பின்மல்க மங்கலவிதியின் ஆற்றல் விடைகொடிவயங்க ஏற்றி - குற்றமற்ற சிறப்பினால் நிறைந்திருக்கக் கலியாணத்துக்குரிய விதிமுறையாக இடபத்துவசத்தை உலகினரெல்லாம் கலியாண மகோற்சவம் வந்ததென்று தெரிந்துகொள்ள ஆரோகணஞ்செய்து. (எ - று)

காமாக்ஷியம்மையோடு வீற்றிருக்கின்ற திருவேம்பநாதருக்கு வருடந்தோறும் வரும் பங்குனித் திருவிழாவில் திருக்கலியாணவுற்சவம் விதிமுறையாகத் துவசாரோகணஞ் செய்தென்க. (எ௬)

கலிவிருத்தம்.

முழவந்திண்டிமம்பேரிமுரசுசீ
ரொழுகுகாகளமாதிபுலம்புவ
கழிபெருங்கடல்காட்டவதனிடைக்
குழுமுபேனமொத்தொண்குடைபம்பிட.

(இ - ள்.) முழவம் திண்டிமம் பேரி முரசு சீர் ஒழுகு காகளம் ஆதி புலம்புவ - மத்தளம் தம்பட்டம பேரிகை முரசு சிறப்புப்பொருந்திய எக்காளம் ஆகிய வாச்சியங்களெல்லா மொலிப்பன, கழி பெரு கடல்காட்ட - மிகப்பெரிய கடலைக்காட்டவும் அதனிடை குழுமு பேனம் ஒத்து ஒண்குடை பம்பிட - அக்கடலினிடத்திற் கூடும் நுரையைப்போல வொளிவீசுங்குடைக ணெருங்கிவரவும். (எ - று)

முழவமுதலிய வாச்சியங்களும் குடைகளும் கடலையும் நுரையையு மொத்திருந்தனவென்க. (எஎ)

அன்னமாக்கடற்கீருன்றியவாரமிழ்
தென்னமாதர்மிடறுறிசைப்பாடலு

நன்னர்மங்கலநாதமும்வேதமு
மன்னுமன்பர்கள்பாட்டுமலிந்தெழ.

(இ - ள்.) அன்ன மாகடல் தோன்றிய ஆர் அமிழ்து என்ன மாதர்மிடறு இசைபாடலும் - அக்கடலிற பிறந்த நிறைந்த வமிர்தபோல் நாடகப்பெண்களுடைய கண்டத்தி லெழுகின்ற பாட்டிசையும், நன்னர் மங்கலநாதமும் வேதமும் மன்னும் அன்பர்கள் பாட்டும் மலிந்து எழ - நல்லமங்கலவாச்சியங்களி னோசையும் வேதவோசையும் நிலைபெற்ற அன்பர்களுடைய பாட்டோசையும் நெருங்கி யெழவும். (எ - று)

மாதர்பாட்டிசை முதலாகக்கூறிய வினியவோசைகளெல்லாம் அக்கடலிற் றோன்றிய அரிய வமிர்தத்தை யொத்திருந்தனவென்க. (௭௮)

இமயமாதியவீகையங்குன்றெலாந்
தமதிருங்குடித்தையனல்லாளொடும்
விமலர்கொள்ளும்விழாவணிகாணவந்
தமைவுகொண்டெனத்தேர்களலங்குற.

(இ - ள்.) இமயம் ஆதிய ஈகை அம் குன்று எல்லாம் - இமயமலை முதலாகச் சொல்லப்பட்ட அழகிய பொன்மலை முதலியனவெல்லாம், தமது இருங்குடி தையல் நல்லாளொடும்-தங்களுடைய பெரிய குடியிற் பிறந்த பார்வதியாருடன், விமலர்கொள்ளும் விழா அணி காண - நின்மலசொரூபியாகிய விறைவர்கொள்ளுந் திருமணக்கோலத்தைக் காண, வந்து அமைவு கொண்டென தேர்கள் அலங்குற - வந்து வடிவங்கொண்டமைந் திருத்தல்போல அலங்காரத்தேர்கள் அங்கங்கு நிலைபெற்றுவிளங்கவும்.

இமயமுதலிய மலைகளெல்லாந் தமதினத்தவராகிய பார்வதியாரோடு இறைவன் றிருமணக்கோலங்கொள்வதைக் காணவந்து தங்கியிருத்தல்போலும் நிலைத்தேர்கள் விளங்கினவென்க. (௭௯)

பொன்னங்கிண்கிணிபூஞ்சிலம்பின்னொலி
மின்னுமேகலையார்ப்பொலிமிக்குற
வன்னமன்னவணங்கனையார்குழா
துன்னியெங்கணுமாடற்றொடங்கிட.

(இ - ள்.) பொன்னம் கிண்கிணிபூம் சிலம்பின் ஒலி - பொன்னாற்செய்த கிண்கிணியோசையு மழகியசிலம்பினினிய வோசையும், மின்னுமேகலையார்ப்பு ஒலி மிக்குற - மின்னுகின்ற மேகலாபரணத்தினோசையுங் கலந்து பேரோசையாக வொலிக்க, அன்னம் அன்ன அணங்கு அனையார் குழாம் துன்னி எங்கணும் ஆடல்தொடங்கிட - அன்னத்தைப்போலும் நடைவாய்ந்த தெய்வமங்கையனையொத்த நாடகப்பெண்கள் கூட்டமாகக்கூடி எவ்விடத்து நடனஞ்செய்யத தொடங்கவும். (எ - று)

நாடகப்பெண்கள் காலணி முதலியன வொலிக்க நடனஞ்செய்யத்தொடங்கினரென்க. (௮0)

சிகரமாளிகைத்தெற்றிதொறும்பயின்
மகரதோரணப்பன்னிறமாமணி
நுகளில்பேரொளிதுன்றியவீதியும
புகரில்சித்திரந்தீட்டியபோலுற.

(இ - ள்.) சிகரம் மாளிகை தெற்றிதொறும் பயில் மகரதோரணம் பலநிறம் மாமணி - சிகரங்களையுடைய மேலுப்பரிகையி லமைந்துள்ள சித்திரகூடங்கடோறுங் கட்டியிருக்கு மகரதோரணங்களிலிழைக்கப்பட்டுள்ள பெரியநவரத்தினங்கள், துகளில் பேரொளி துன்றிய வீதியும் புகரில் சித்திரம் தீட்டியபோல உற - வீசுகின்ற குற்ற மற்றபேரொளியானது நெருங்கியிருக்கின்ற வீதிகளிலுங் குற்றமில்லாத சித்திரத்தை யெழுதிவைத்ததுபோல் நிறைந்திருக்கவும். (எ - று)

மேன்மாளிகையிற் கட்டிய மகரதோரணங்களிற் பதித்திருக்கும் பலமணி களின் பேரொளியினால் வீதிகளுஞ் சித்திர கூடஙகளாகவே பொலிவுபெற்றிருந்தன வென்க. (அக)

பூகமும்பசும்பொற்குலைவாழையு
மாகமுந்திடநாட்டிவயக்கிய
போகுபந்தரும்பூரணகும்பமு
மேகுமவ்விடந்தோறுமிலகிட.

(இ - ள்.) பூகமும் பசும் பொன்குலை வாழையும் - கமுகமரங்களும் பசும்பொன் னாற்செய்த நல்ல வாழை மரங்களும், மாகம் முந்திடநாட்டி வயக்கிய போகுபந்தரும் பூரண கும்பமும் - ஆகாயத்தை யளாவநாட்டி விளங்கச்செய்த நீண்ட பெரிய பந்தர் களும் பூரண கும்பங்களும், ஏகும் அவ்விடம் தொறும் இலகிட - செல்லுமிடங்களி லெல்லாம் பிரகாசித்துக்கொண்டிருக்கவும். (எ - று)

பொன்னாற்செய்த கமுகுமுதலியவைகள் செல்லுமிடங்கடோறும் விளங்கின வென்க. (அஉ)

வளியுலாமதர் மாளிகைகுளிர்க
குளிர்கொண்மண்டபங்கோபுரமீதெலா
நளிமலைத்தலைநன்கொடிபூத்தெனக்
களிமடக்கொடியார்களுமீண்டெழ.

(இ - ள்). வளி உலா மாதர்மாளிகை குளிகை குளிர்கொள் மண்டபம் கோபு ரம் மீது எல்லாம் - தென்றல் நீங்காதுலவுகின்ற மாளிகைகள் முன்னிறப்புகள் குளி ர்ச்சிபொருந்திய மண்டபஙகள் கோபுரங்கள் முதலிய வெல்லாவிடங்களிலும், நளி மலைதலை நல்கொடி பூத்தது என்ன - பெரிய மலைகளில் பூங்கொடிமலர்ந்தாற்போல், களிமடம் கொடியார் களுமீண்டெழ - களிப்பினையுடைய இளங்கொடிபோன்ற மங்கையரெல்லா நெருங்கி வணஙகவும். (எ - று)

மலைகளில் பூங்கொடிபடர்ந்து மலர்ந்திருத்தல்போல மாளிகை முதலிய விடங்களில் மங்கையர் நெருங்கித தொழுதிருந்தனரென்க. (அங)

குங்குமக்குழம்புங்குளிர்சாந்தமும்
பொங்குவாசப்புதுப்பனிநீரொடு
வெங்கண்மங்கையர்பந்தினிலவீசுவ
வெங்குமல்கியடிகளிழுக்குற.

(இ - ள்.) குங்குமம் குழம்பும் குளிர்சாந்தமும் பொங்குவாசம் புது பனி நீரோடு - குங்குமக் குழம்பும் குளிர்ச்சிபொருந்திய சந்தனமும் ஆகிய இயற்கை நறுமணங்கமழும் புதிய பனி நீரோடு கலந்து, வெம் கண்மங்கையர் பந்தினில் வீசுவ-

விருப்பந்தரும் கண்களையுடைய மங்கையர்கள் பந்தைப்போல் வீசுவன, எங்கு மல்கி அடிகள் இழுக்குற - எவ்விடத்து நிறைந்து கால்கள் வழுக்கவும். (எ - று)

மங்கையர்கள் சந்தனத்தைப் பனிநீரோடு கலந்து பந்தைப்போல் வீதிகளில் வீசுவதனால் நடப்பவருடைய வடிகள் வழுக்கவென்க. (அ௯)

முடிகடம்மினராவிமுழுமணி
படியிலுக்கன பாறினங்கொண்மினென்
றுடையமாந்தர்க்கறிவுறுத்தாங்கவ
ரடிகள்பேதுறுத்தங்கங்கவிர்தர.

(இ - ள்.) முடிகள் தம்மில் முழுமணி அராவிபடியில் உக்கன பாறினம் - கிரீடங்களொன்றோடொன்று தாக்குவதனால் பதித்திருக்கும் பெரியவிரத்தினங்களுராய்ந்து சிதறிக்கிடக்கின்றன (யாங்கள்) அப்புறமகன்றனம்என்று, உடையமாந்தர்க்கு கொண்மின் என்று அறிவுறுத்தாங்கு - அதனையுடையவர்களுக்கு இதனை யெடுத்துக்கொள்ளுங்களென்று அறிவிக்கின்றவர்கள்போல, அவர் அடிகள் பேதுறுத்து அங்கங்கு அவிர்தர - அவர்களடிபெயர்த்து வைக்கக்கூடாமல் அங்கங்கும் ஒளிவிட்டெரிக்கவும். (எ - று)

முடிகளினின்றுஞ் சிதறிய மாணிக்கங்கள் நடக்கின்றவரை நடக்கவொட்டாமற் றடுத்து ஒளிவிட்டெரிக்கின்றன வென்க. (௯௰)

இளிந்தபூகத்திருங்கனிவெள்ளிலை
யொளிர்ந்தபொன்மணியொண்பொரிபன்மல
ரளிந்தபல்பழமாதியிறைப்பன
குளிர்ந்துவீதிகுழீஇத்திடர்செய்திட.

(இ - ள்.) பூகத்து இளிந்த இரும் கனி வெள் இலை - கமுகமரத்திற் பழுத்த பழுக்காய் வெற்றிலை, ஒளிர்ந்த பொன் மணி ஒள் பொரி பன்மலர் அளிந்த பல்பழம் ஆதி இறைப்பன-ஒளி வீசும்பொன் மணிகள் வெண்பொரி பலமலர்கள் கனிந்த பல பழங்கள் முதலியனவாக இறைக்கின்றவைகள், வீதிகுழுவி குளிர்ந்து திடர் செய்திட - குளிர்ச்சியடைந்து வீதியெங்கு நெருங்கிக் குளிர்ந்து திட்டை செய்திடவும். (எ-று)

வீதியெங்கும்பழுக்காய்முதலியவைகணிறைந்து திடராகவிருக்கின்றனவென்க.

கவளயானைக்கடாமழைத்தாரையு
மிவுளிவாயினிழிந்தவிலாழியு
முவரியாகியுயர்ந்தவத்திட்டையைத்
திவளமோதிப்படர்ந்தனசெல்லவே.

(இ - ள்.) கவளயானை கடாமழை தாரையும் - கவளமுண்ணும் யானைகளின் மதநீர்ப்பெருக்கும், இவுளிவாயின் இழிந்த விலாழியும் உவரியாகி - குதிரைவாயினின்று மொழுகுகின்ற வாய்நுரையும் கடல்போலாகி, உயர்ந்த அத்திட்டையை திவள மோதி படர்ந்து செல்ல-மேலோங்கிய வத்திட்டைகளைத் துவளும்படி மோதிப்பரந்து செல்லவும். (எ - று)

யானைகளின் மதநீரும் குதிரைகளின் வாய்நுரையும் கடல்போற் பெருகி முன் பழுக்காய் முதலியவற்றாலாகிய திட்டைகளை யழித்துச்சென்றனவென்க. (௯௨)

௯௫

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

கல்வரைப்பிராட்டிசெவ்வேளைங்கரன் கணங்கள்சூழப்
பல்வகையூர்தியும்பர்ப்படரொளியரசவீதி
யெல்லையிலுயிர்கட்கெல்லாமெண்ணருங்கருணைபூத்துப்
புல்கொளித்திருவேகம்பன்றிருவுலாபபோதச்செய்வோர்.

(இ - ள்) கல்வரைப்பிராட்டி செவ்வேள் ஐங்கரன் கணங்கள்சூழ - பார்வதியாரும் முருகக்கடவுளும் விநாயகக்கடவுளும் சிவகணங்களுஞ் சூழ்ந்துவர, பல்வகை ஊர்தி உம்பர்படர் ஒளி அரசவீதி - பலவகைப்பட்ட வாகனங்களின்மேல் ஒளி வீசும் ராசவீதியில், எல்லையில் உயிர்கட்கு எல்லாம் எண்ணரும கருணைபூத்து - அளவில்லாதனவாகிய ஆன்மாக்களுக்கெல்லாம அளவுபடுத்தற் கொண்ணாதவருள் பாலித்து, புல்கு ஒளி திருவேகமபன - செறிந்தசோதி சொரூபனாகிய ஏகம்பவாணன், திருஉலா போத செயவோா - சிறநத உலாவாக வெழுந்தருளி வரச்செய்கின்றவர்கள். (எ - று)

சிவசக்தி சிவகுமாரர்கள் சிவகணங்கள் முதலிய யாவரும் தங்டங்களுக்குரிய வாகனரூடராய்ச் சூழ்ந்துவர ஏகாம்பரநாதர் அவ்வவ்வான்மாக்களுக் கேற்றவாறு அருள்பாலித்து வருதலாகிய உலாததிருவிழாவை அரசவீதியில் செய்விக்கின்றவர்களென்க. (அஅ)

மேதகுதவந்தானங்கள்வேள்விகளனைத்துஞ்செய்தோர்க்
கோதியபயத்திற்கோடியுடையராய்க்கோடிகோடி
யேதமிலருளத்திலேனுமெமபிரானுலகினவாழ்நது
சாதலுமபிறப்புமிலலாததததுவநதலைபபடடுய்வார.

(இ - ள்.) மேதகு தவம் தானங்கள் வேள்விகள அனைத்தும் செய்தோர்க்கு - மேன்மையாகிய பஞ்சாக்கினிமத்தியில நிற்றல முதலிய தவங்கள கோதான முதலிய தானங்கள் அஸ்வமேத முதலிய யாகங்கள் என்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும் குறைவறசசெய்து முடித்தவர்களுக்கு, ஓதிய பயத்தில் கோடியுடையராய - சொலலியிருக்கிற பிரயோசனத்தில கோடிபங்குடையவர்களாய, கோடிகோடி ஏதம இல ருலகத்திலேனுமெ எமபிரான உலகில வாழ்நது - எண்ணிறந்த குற்றமிலலாத பந்தங்களுடன் எமதிறைவனுடைய சிவலோகத்தில வாழ்ந்திருந்து, சாதலும் பிறப்பும இல்லாத தத்துவமை தலைபபட்டு உய்வார - ஜனனமரணங்களையுடைய கெட்டதவுணவமற ஞானத்தில மேம்பட்டு முத்தியடைவார்கள். (எ - று)

திருவுலா செயவிப்பவர் தவமுதலியன செயவோர்க்கு வரும்பலனில் கோடிபங்குடையராய் பேயறியப்படாத பந்தங்களுடன் சிவலோகத்திலிருந்து ஞானிகளாய வீட்டடைவரென்க. (அகூ)

இக்கதையும் புக்கநாதனையுந்தாவோரு
மத்தநதிப்புனல் மூழ்கித்தக்கநோயிலாரும்
மைந்தபாயமாம் மூவிலையோனைமெயாழியொருவாண்மேய
விக்தகனைதியமாயிறைக்காணநாதராயார்.

(இ - ள்) அக்கதை கேட்ட கடவுள் காஞ்சிநோக்கி இறைஞ்சுவோரும் - அக்காஞ்சி காதையில் நிதானமையாகிய தெய்வீக உலாவிழாவைக் கண்டு வணங்குவோரும், அந்த விழவின் பாலுள்ள தீர்த்த நீர் ஆடுவோரும் - அத்தன்மையாகிய

திருவிழாவின் கடைநாளாகிய தீர்த்தவாரியில் ஸ்நானஞ்செய்கின்றவரும், பைத்த பாட அல்குல் செவ்வாய் பனிமொழி ஒருபால் மேய வித்தகன் கயிலைநண்ணி - பாம்பின் படம்போன்ற அல்குலையும் சிவந்த வாயையும் மதுரமொழியையுமுடைய உமாதேவியார் ஒருபாகத்தி லமர்ந்திருக்கப்பெற்ற இறைவனுடைய கயிலாயத்தை யடைந்து, விறல்கணநாதர் ஆவார் - வெற்றியிற்சிறந்த சிவகணநாதராவர். (எ - று)

திருவிழாவைக்கண்டு வணங்குவாரும் தீர்த்தவாரியில் ஸ்நானஞ்செய்வாருஞ் சிவலோகத்தில் சிவகணநாதராய் வாழ்வார்களென்க. (௧௦)

ஏழுயர்ந்தேழுமண்டோய்ந்திலக்கணநிரம்பும்வேழங்
காழ்மணியணிகள்பூட்டிக்கவின்பெறவிருத்தியோடுங்
கோழுழைத்தனிமாநீழற்குழகனுக்குதவப்பெற்றோர்
பாழ்வினைச்சிமிழ்ப்பிற்றீர்ந்துதிருவருள்பற்றுவாரால்.

(இ - ள்.) ஏழுஉயர்ந்து ஏழுமண் தோய்ந்து இலக்கணம் நிரம்பும் வேழம் - ஏழுமுழமுயர்ந்து ஏழுறுப்புகணிலத்திற்படிந்து ஏனைய விலக்கணங்களிலுங் குறைவுபடாத யானையை, காழ்மணி அணிகள் பூட்டி கவின்பெற விருத்தியோடும்-நல்லமணி முகபடாமுதலிய அணிகளால் அழகுபெறப்பூட்டி அதற்கு என்றும் வேண்டிய சீவனத்துடன், கோழ் உழை தனிமா நீழல் குழகனுக்கு உதவ பெற்றோர்-கொழுவிய தளை யுடைய ஒரு மாவினீழலில் வாழ்கின்ற அழகனுக்குத் தானஞ்செய்யப்பெற்றவர், பாழ் வினை சிமிழ்ப்பில் தீர்ந்து திருவருள்பற்றுவார் - பாழாகிய இருவினைக்கட்டென்னும் பற்றினின்றுங் கழலப்பெற்றுத் திருவருட்பற்றுடையவராவர். (எ - று)

யானையை அலங்கரித்து அதற்குரிய வுணவுக்கு நியமனஞ்செய்து ஏகம்பநாதனுக்குத் தானஞ்செய்பவர் அவர் திருவருளுக்குரியவராவரென்க.

நிலத்திற்படியும் ஏழுறுப்பாவன - கால் நான்கு, துதிக்கையொன்று, கோசமொன்று, வாலொன்று. ஏனைய விலக்கணங்களென்றதை,—

"காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும், வாலுருப் போடேழு மாநிலந்தோயப்
பாலுஞ் சங்கும் போலுங்காலு கிரது, காலினு ளொன்ற வொருதனிக் கையினும்
வாலினும் வாயினு மருப்பினுங் கோறல்,வல்லது மதின்மூன்று முழச்சுற் றுடைத்தாய்
யேழுமுழமுயர்ந்தொன்பதுமுழநீண்டது,தீயுமிழ்சிறுகண் ணுஞ்செம்புகருமுடைத்தா
முன் புயர்ந்து பின்பணிந்த தாயின், அவ்வியல் யானையை யரசுவா வென்ப"—என
வருந்திவாகரநிகண்டானுணர்க. (௧௧)

நலமிகும்பரிமாவாக்கணாடகக்கணிகைநல்லார்
நிலநகர்நாடுமற்றுநெடுமறைமாவின்மூலத்
தலைவனுக்கினிதுநல்குந்தவத்தினோர்கயிலைநண்ணி
யலகில்பல்லூழிவாழ்ந்தருங்கரும்பெறல்வீடுசேர்வார்.

(இ - ள்.) நலமிகும் பரிமா ஆக்கள் நாடகக்கணிகை நல்லார் நிலம் நகர் நாடு மற்றும் - நல்ல இலக்கணம்வாய்ந்த குதிரைகள் பசுக்கள் நாடகப்பெண்கள் விளைநிலங்கள் நகரங்கள் நாடுகள் இவைபோல்வன பிறவும், நெடுமறைமாவின் மூலத் தலைவனுக்கு - பெரிய வேத சொருபமாகிய ஆம்பரநாதருக்கு, இனிது நல்கும் தவத்தினோர் - மகிழ்ச்சியோடு கொடுக்குந் தவமுடையவர், கயிலை நண்ணி அங்கு அலகில் பல் ஊழிவாழ்ந்து அரு பெறல் வீடுசேர்வார் - கயிலாயத்தையடைந்து அவ்விடத்தில்

நரனணிறந்த பல ஊழிக்காலம் வாழ்ந்திருந்து பின்னர் பெறுதற்கரிய முத்தியை யடைவார்கள். (எ - று)

ஏகம்பவாணருக்குக் குதிரை முதலியன மகிழ்ந்தளிப்பவர் சிவலோக போகத்தையும் முத்திப் பயனையுமடைவார்களென்க. (௬௨)

மாயிருமறைகண்மற் றும்புத்தகத்தெழுதிக்கம்பக்
கோயிலினமைப்போர்வெள்ளிக்குன்றிடையெழுத்தொவ்வொன்றற்
காயிரங்கற்பம்வாழ்வார்சிவாகமமமைக்கும்பேறு
மேயினோரெய்தும்பேற்றையாவரேவிளம்பவல்லார்.

(இ - ள்.) மா இருமறைகள் மற்றும் புத்தகத்து எழுதி கம்பக்கோயிலின் அமைப்போர் - மிகப்பெரிய வேதங்களையும் ஆறங்கங்களையும் புத்தகங்களி லெழுதி ஏகம்பவாணராலயத்தில் வைப்பவர், எழுத்து ஒவ்வொன்றற்கு வெள்ளிக்குன்றிடை ஆயிரம் கற்பம் வாழ்வார் - ஒவ்வோரெழுத்துக்குக் கயிலையங்கிரியில் ஆயிரங் கற்பகாலம் வாழ்வார்கள், சிவாகமம் அமைக்கும்பேறு மேயினோர் எய்தும் பேற்றை - சிவாகமங்களை யெழுதிவைக்கும் பேற்றையடையப் பெற்றவர் பெறும்பேற்றை, யாவரே விளம்பவல்லார் - எவர் சொல்லும் வன்மையுடையவர். (எ - று)

ஏகம்பவாணராலயத்தில் வேதசிவாகமங்களெழுதிவைத்தோர் பெறும்பயன் யாவராற் கூறப்படுமென்க. (௬௩)

வண்டுளர்தனிமாநீழல்வள்ளலுக்கன்புகூர்ந்து
பண்டுளோராக்குமின்னவறங்களைப்பாதுகாப்போ
ரொண்டிறலன்னோர்பேற்றிற்பதின்மடங்குறுவர்மையல்
கொண்டிவைகாவாவேந்தர்நிரயமேகுளிப்பருண்மை.

(இ - ள்.) வண்டு உளர் தனிமாநீழல் வள்ளலுக்கு அன்புகூர்ந்து - வண்டுகள் தடவும் ஒப்பற்ற மாவினீழலில் வாழ்கின்ற வள்ளலாருக்கன்புமிகுந்து, பண்டுளோர் ஆக்கும் இன்ன அறங்களை பாதுகாப்போர்-பெரியோர்களாற் செய்துவைத்த இவ்வறங்களை யழிவுறாது காததருளுகின்றவர்கள், ஒண்திறல் அன்னோர் பேற்றின் பதின்மடங்குறுவர்-புகழ்ச்சிறந்த அப்பெரியோரடையும் பயனிலும் பத்துப்பங்கதிகமாகப் பயன் பெறுவார்கள், மையல்கொண்டு இவை காவா வேந்தர் நிரயமே குளிப்பர் உண்மை - அறிவிலிகளாயித்தருமங்களைப் பாதுகாவாத அரசர்கள் நரகத்திலேயே மூழ்கியிருப்பார்கள் இது சத்தியம். (எ - று)

முன்னோர்செய்த தருமங்களைப் பின்னோர் பாதுகாப்பராயின் அவரினும் பதின்மடங்கு பலனையடைவார்கள், அவ்வாறு காவாத அரசர் நரகத்தில்மூழ்குவ துண்மையென்க. (௬௪)

அனந்த்ராலவற்றொன்றேனுங்கவருநரையமின்றி
யினம்பயில்கடுமபினோடுங்கெடுவராலிவையதீராற்
றனங்களுங்கிளோபுக்துன்றத்தங்குதல்விழையுயவேந்தர்
கனமபயில்பொழிலசூழ்காஞ்சிபுறநியிவைபாதுகாத்தல்.

(இ - ள்) அனந்தரால் - மந்திரியக்குத்தரால், அவற்று ஒன்றேனும் கவருநர் ஐயம் இன்றி இனம்பயில் கடும்பினோடும் கெடுவர்-குதிரைமுதலியவாகக் கூறியவற்று ளொன்றையேனுங் கவர்ந்தவர்கள் சந்தேகமில்லாமல் உறவினராகிய சுற்றத்தாரோடு

மழிவர், இனையநீரால் தனங்களும் கிளையுந்தன்ற தங்குதல்விழையும் வேந்தர் - ட காரணத்தினால் செல்வங்களும் பந்துவர்க்கங்களும் நீங்காதிருக்கவிரும்புமரசர்கள், தனம் பயில் பொழில் சூழ் காஞ்சி உறுதியின் வழாதுகாத்தல் - மேகங்கள் தவழுஞ் சோலை சூழ்ந்தகாஞ்சித்தளியில் மனவுறுதியுடையவரா யறத்தினின்றுந் தவறாது அப் பொருள்களைக்காக்கக்கடவர். (எ - று)

சிவத்திரவியங்களிற் சிறிதேனுந் தனக்கெனக்கொள்வோர் நரகின்கண்வீழ் தல் நிச்சயமாதலால் செல்வமுதலியவற்றை நிரம்பி வாழவிரும்புமரசர் காஞ்சித்தளியில் சிவத்திரவியங்களைக் கொள்ளநினையாது காக்கநினைக்கக்கடவரென்க. (கரு)

கச்சியின்வாவிகூவல்கடிபொழில்வகுத்துப்பேணிப்
பொச்சமில்சிவநேசர்க்குப்பொருணிலம்வதுவையீவோர்
நிச்சலுமன்னதானநிகழ்த்துவோரெய்துமபேறு
பச்சிளங்கொடியினோர்பாற்பகவனையறியுமன்றே.

(இ - ள்.) கச்சியின் வாவிகூவல் கடிபொழில் வகுத்து பேணி - காஞ்சிநக ரத்தில் தடாகங்கள் கிணறுகள் நறுமணங்கமழும் சோலைகளாகிய இவைகளையுண்டாக் கிப் பாதுகாத்து, பொச்சம இல் சிவநேசர்க்கு பொருள் நிலம் வதுவை ஈவோர் - மறதி யில்லாத சிவநேசமுடைய அடியார்களுக்குப் பொன்னும் மண்ணும் பெண்ணும் தான மாகக்கொடுப்பவர்களும், நிச்சலும்அன்னதானம் நிகழ்த்துவோர் எய்தும்பேறு-நாடோறு மன்னதானத்தைச் செய்கின்றவர்களுமடையும்பயனை, பச்சிளம்கொடியின் ஓர்பால் பகவனே யறியும் - பசிய விளங்கொடிபோன்ற உமாதேவியை யொருபாகத்திலுடைய இறைவனே அறியத்தக்கவன். (எ - று)

தடாகமுதலியவற்றைப் பாதுகாத்துச் சிவனை மறவாத நேசர்க்குப் பொ ருண்முதலியன கொடுப்பவர்களும் அன்னதானஞ்செய்கின்வர்களு மடையும் பயனை இறைவனே யறிவனென்க. (கசு)

சொல்லுமித்தருமவாய்மைத்தொகுதியுள்யாதொன்றேனும்
வல்லுநர்வல்லாராகமதிபொதிவேணியார்க்கு
நல்லரசிருக்கையாயகாஞ்சிமாநகரினோர்நா
ளல்லதோர்கணமேயானுமமர்ந்திடிற்பிறப்புநீப்பார்.

(இ - ள்.) சொல்லும் இ தருமவாய்மைத் தொகுதியுள்-சொல்லப்பட்ட விவ் வுண்மையாகிய தருமங்கள் பலவற்றுள், யாதொன்றேனும் வல்லுநர் வல்லாராக - யா தொன்றாயினும் செய்யக்கூடுமானவர்கள் செய்யக்கடவர், மதி பொதிவேணியார்க்கு- (அல்லாதவர்) சந்திரனையணிந்த சடைமுடியுடைய இறைவனுக்கு, நல்லரசு இருக் கையாய காஞ்சிமாநகரில் - சிறந்த வரசிருக்கையாய் விளங்குங் காஞ்சிப்பதியில், ஓர் நாள் அல்லது ஓர்கணமேயானும் அமர்ந்திடில் - ஒருநாளாயினும் அன்றியொருகணப் பொழுதாயினுந் தங்கியிருக்கப்பெறுவாராயின், பிறப்புநீப்பார்-பிறவித்துன்பநீங்குவர்.

மேற்கூறிய தருமங்களில் செய்யக்கூடுமானதொன்றைப் பொருளுடையரா செய்யக்கடவர். அஃதில்லாதார் அக்காஞ்சிநகரில் ஓர்நாள் அல்லது ஓர்கணம் [illegible]ர்ந்திருக்கப்பெறுவாராயின் பிறவிப்பெருங்கடலை நீந்துவரென்க. (கஎ)

[illegible]டிகைநீறுதாங்கிக்காலையுமாலைபோது
[illegible]டர்கோனடிகள்போற்றியடியவாபூசையாற்றித்

தாண்டிறலங்கண்வைகுந்தூயவர்தமக்கேகம்பத்
தொண்டொடிபாகனெங்கோன்கருணைகூர்ந்துதவுமுத்தி.

(இ - ள்.) கண்டிகை நீறுதாங்கி - உருத்திராக்கமாலையுந் திருநீறுமணியப் பெற்று, காலையும் மாலைபோதும் - காலைப்பொழுதிலும் மாலைப்பொழுதிலும், அண்டர் கோன் அடிகள்போற்றி - தேவர்கோனாகிய ஏகாம்பரநாதருடைய திருவடிகளை வழி பட்டு, அடியவர் பூசையாற்றி - அடியார்பூசையுஞ்செய்து, தொண்டிறல் அங்கண் வைகும் தூயவர் தமக்கு - ஏனைய அடித்தொண்டுகளையுமுடையவராய்க்காஞ்சியில்வா ழும் சுத்தஞானிகளுக்கு, ஏகம்பத்து ஒண்தொடிபாகன் எங்கோன் - திருவேகம்பத்திலெ ழுந்தருளியிருக்கின்ற ஒள்ளிய வளையையணிந்த பார்வதிபாகனாகிய எமது பெருமா னார், முத்திகருணைகூர்ந்து உதவும் - பரமானந்த வீட்டைக்கருணைமேலிட்டுக்கொடுப்பர்.

விபூதிருத்திராக்கங்களைத்தரித்துக் காலைமாலையாகிய இருபொழுதிலும் ஏகம் பநாதரடிகளைப்போற்றி அவரடியவர் பூசையுமியற்றி ஏனைய அடித்தொண்டுகளையும் விடாது அக்காஞ்சியிலொழுகும் சிவஞானிகளுக்கு அவ்விறைவர்கருணை கூர்ந்து முத் தியைத்தருவரென்க. (௬௪)

பற்பலபேசியென்னேபருவருநிரயத்துன்புந்
துற்றபல்யோனிதோறுஞ்சுழன்றுழல்பிறவிநோயு
முற்றிடுமாண்டாண்டெய்துமுறுதுயர்பலவுநோக்கி
மற்றிவையொழிதல்வேட்டோர்காஞ்சியின்வதிதல்வேண்டும்.

(இ - ள்.) பலபலபேசி என்னே - பலபலவாக இனி எடுத்துச் சொல்வதினால் பயனென்னை, - பருவரும் நிரயத்துன்பும் - அருவருக்கும் நரகத்துன்பமும், துற்றபல் யோனிதோறும் சுழன்று உழல்பிறவிநோயும் - நெருங்கிய பலயோனிகடோறு மாறி யுழலும் பிறவித்துன்பமும், உற்றிடும் ஆண்டாண்டு எய்தும் உறுதுயர்பலவும் நோக்கி - செல்லுகின்ற அவ்வப்பதங்களினும் வந்தகூடும் துன்பங்கள் பலவற்றையுமாராய்ந் தெண்ணி, இவையொழிதல் வேட்டோர் - இத்துன்பங்களெல்லாம் தம்மைவிட்டுக்க ழிய விருப்பினவர், காஞ்சியில் வதிதல்வேண்டும் - காஞ்சிநகரத்தில் வசிக்கவேண்டும்.

இனிப்பலவாக வெடுத்துச்சொல்வதினாற் பயனென்னை. நரகத்துன்பம் பிறவித்துன்பம் எவ்விடத்தும் வந்தெய்து மிருவினைத்துன்பம் ஆகிய பலதுன்பங் களை யெண்ணி யவையொழிய விரும்புவோர் காஞ்சியில் வசிக்கவேண்டுமென்க. (௬௫)

கலிவிருத்தம்.

காமருஞ்சிவிகைகள்காவியாயினுந்
தோமுறுபிறர்சுமைசுமந்திட்டாயினுஞ்
சாமியென்றிழிஞர்தம்பணிசெய்தாயினு
மாமதிற்காஞ்சியின்வதிதல்வேண்டுமால்.

(இ - ள்.) காமரும் சிவிகைகள் காவியாயினும் தோமுறுபிறர்சுமை சுமந் திட்டாயினும் - காவடிகளாயினுங் குற்றம்பொருந்திய பிறர்சுமைகளைச் சுமந்தாயினும், சாமி என்று இழிஞர் தம் பணி செய்தாயினும் - நீயே எங்கள் கடவுளென்று கூறி இழிந் த பிறப்பினருடைய வேலையைச்செய்தாயினும், மாமதில் காஞ்சியில் வதிதல்வேண் டும் - பெரியமதில்சூழ்ந்த காஞ்சிநகரத்தில் நீங்காது வசித்தல்வேண்டும். (எ - று)

காஞ்சியில் வாழவிரும்புவோர் செய்யக்கூடாத பலதொழில்களைச்செய்தாயி னும் பசிப்பிணியகற்றி வசிக்கவேண்டுமென்க. (௬௬)

கழுதைமேய்த்தாயினுமற்றுங்காழ்படு
மிழிதொழிலியற்றியுமிரந்துண்டாயினு
மொழிவறுபத்தியினுறுதியாளராய்
வழுவறுகாஞ்சியின்வதிதல்வேண்டுமால்.

(இ - ள்.) கழுதை மேய்த்தாயினும் மற்றுங் காழ்படும் இழிதொழில் இயற்றியும் இரந்துண்டாயினும்- கழுதைகளை மேய்த்தாயினும் (வேறு) தள்ளப்படுவதாகக் கூறப்பட்ட இழி தொழில்களைச் செய்தாயினும் ஐயமேற்றுண்டாயினும், ஒழிவு அறு பத்தியில் உறுதி யாளராய் வழுவறு காஞ்சியில் வதிதல் வேண்டும் - கேடாத பத்தியினால் திண்ணிய அறிவுடையவராய்க் குற்றமற்ற காஞ்சிநகரத்தில் வசிக்கவேண்டும். (எ - று)

கழுதைமேய்த்தாயினும் அதுவுங்கூடாதாயின் இழிந்தோரிடத்து அதனினு மிழிந்ததொழிலைச் செய்தாயினும் யாதொருதொழிலுஞ்செய்யப்பெறாரேல் ஐயமேற் றுண்டாயினும் இறைவர்பால்வைத்த அன்பொழியப்பெறாது உறுதியுடையவராய்க் காஞ்சியில்வசிக்கவேண்டுமென்க. (௧0௧)

பாதகமிகுதியோர்பதிதர்மூர்க்கர்கள்
போதமிலகயவர்கள்புலையராயினு
மாதர்வண்காஞ்சியின்வதிவராயிற்
கோதறுகலியினின்முத்திகூடுவார்.

(இ - ள்.) பாதக மிகுதியோர் பதிதர் மூர்க்கர்கள் போதம் இல் கயவர்கள் புலையர் ஆயினும் - அதிபாதக முதலியவற்றைச் செய்தவர் விரதாதிகளை யிடையே விட்டவர் மூர்க்கர்கள் அறிவில்லாத மூடர்கள் இழிந்த சண்டாளர்கள் என்று சொல்லப்பட்ட இவர்களாயினும், மாதர் வண்காஞ்சியில் வதிவர் ஆயிடின் - அழகிய வளப்பத்தை யுடைய காஞ்சிப்பதியில் வாசஞ்செய்யப் பெறுவாராயின், கலியினில் கோதறு முத்தி கூடுவர் - கலியுகத்தில் குற்றமற்ற முத்தியடைவார்கள். (எ - று)

இக்கலியுகத்தில் பாதகமிகுதியோர் முதலானவர்கள் யாவராயினுங் காஞ்சி யில் வசிக்கப்பெறுவாராயின் முத்தியடைவார்களென்க. (௧0௨)

ஔவியங்கொலைகளவாதிமிக்குடைக்
கௌவைகூர்கொடுந்திறற்கலியுகத்திடை
தெய்வதக்காஞ்சியந்தேயத்தன்றிமற்
றெவ்விடத்தெய்தினுமுத்தியில்லையே.

(இ - ள்.) ஔவியம் கொலைகளவு ஆதி மிக்குடை கௌவைகூர் கொடுந் திறல் கலியுகத்திடை - பொறாமை கொலைகளவு முதலிய தீக்குணங்களையும் தீச்செ யல்களையு மிகுதியாகவுடைய துன்பந்தருங்கொடிய பாதகங்கள் மிகுந்த கலியுகத்தில், தெய்வதம் காஞ்சியம் தேயத்து அன்றி-தெய்வத்தன்மை பொருந்திய காஞ்சி நகரத்தி லல்லாமல். மற்று எவ்விடத்து எய்தினும் முத்தி இல்லை - வேறெந்தவிடத்திற் சென்ற போதினும் வீடுபேறில்லை. (எ - று)

பொறாமை முதலிய தீக்குணங்களும் கொலை முதலிய தீச்செயல்களும் மிகுதியாகவுடைய கலியுகத்தில் காஞ்சிநகரமன்றி வேறு நகரங்களில் முத்தியில்லை யாமென்க. (௧0௩)





இல்லைவைதிகநெறியில்லைநல்லற
மில்லைநால்வருணமாச்சிரமமில்லையா
மில்லைமாணாக்கர்களில்லையாரிய
ரில்லைநல்லொழுக்கமுங்கலியினென்பவே.

(இ - ள்.) கலியில் வைதிக நெறி இல்லை நல்லறம் இல்லை நால் வருணம் ஆச்சிரமம் இல்லை யாம் - கலியுகத்தில் வேதவொழுக்கமுமின்று நல்ல தருமங்களுமின்று அந்தணர்முதலிய நான்கு வருணங்களும் பிரமசரியமுதலிய வாச்சிரமங்களுமின்றாம், மாணாக்கர்கள் இல்லை ஆரியர் இல்லை நல் ஒழுக்கமும் இல்லை - நல்லசீடர்களுமின்று ஆசாரியர்களுமின்று நல்லொழுக்கமுமின்று. (எ - று)

கலியுகத்தில் வேதநெறியும் அந்நெறியிற்கூறும் நல்லற முதலியனவுமின்றாமென்க. (கoசு)

வைதிகசைவநூன்மானக்கோளிலை
பொய்யிலைந்தெழுத்திற்கண்மணியிற்பூதியி
லைமுகப்பிரானிடத்தன்புமிவ்வுகத்
தெய்திமிருபிறப்பாளர்க்கில்லையே.

(இ - ள்.) இவ்வுகத்து எய்திம் இருபிறப்பாளர்க்கு - இக்கலியுகத்திற் பிறக்கு மந்தணர்களுக்கு, வைதிக சைவநூல்மானம் கோள் இல்லை - வேதாகம நூற்பிரமாணங்களை கொள்ளுதலுமின்று, பொய்யில் ஐந்தெழுத்தில் கண்மணியில் பூதியில் ஐமுகப்பிரானிடத்து அன்பும் இல்லை-அழிவில்லாத வைந்தெழுத்தில் உருத்திராக்கமணியில் விபூதியில் சதாசிவமூர்த்தியாகிய விறைவனிடத்தி லன்புண்டாதலுமின்று.(எ-று)

கலியில் அந்தணர்களுக்கு வேதமுதலியவற்றி லன்புண்டாத லின்றாமென்க.

தாபதப்பிருகுமெய்த்ததீசிகௌதமன்
சாபமன்றியுங்கலிதோடத்தான்மிகத்
தேய்பொருட்பாஞ்சராத்திரமபவுத்தமாம்
பாபநூலுறுதியேபனவர்க்குண்டரோ.

(இ - ள்.) பனவர்க்கு தாபத பிருகு மெய்ததீசி கௌதமன் சாபம் அன்றியும்- பார்ப்பாருக்குச் சடைமுடியுடைய பிருகுமுனிவர் மெய்ந்நெறியுடைய ததீசிமுனிவர் கௌதம முனிவராகிய விவர்களுடைய சாபமல்லாமலும், கலிதோடத்தால் மிகதேய் பொருள் பாஞ்சராத்திரம் பௌத்தம் ஆம் பாவ நூல் உறுதியே உண்டு - கலிதோடத்தினாற் பொருள் சிறிதுமில்லாத பாஞ்சராத்திரம் பௌத்தமாகிய பாவ நூல்களிற் கூறும் வன்மொழிகளிலேயே நிச்சயமுண்டாகும். (எ - று)

பார்ப்பாருக்குப் பிருகு முதலியோரிட்ட சாபத்தினாலும் கலிதோடத்தினாலு முண்மைப்பொருள் சிறிதுமிலலாத பஞ்சராத்திர முதலிய பாபநூல்களிற் கூறும் பொருளுண்மையிலேயே மனநிலைபெறறிருக்குமென்க. (கoஅ)

யாதுகொல்கலியதனியல்புமங்கதற்
கேதமுமதன்மிறைகாஞ்சிக்கின்மையு
மோதுதிவிரித்தெமக்கெனவுரைத்தலுஞ்
சூதமாமுனிமுனிவராக்குரைசொல்லினான்.

(இ - ள்.) கலியதன் இயல்பும் - கலியுகத்தினுடைய தருமமும், அங்கு அதற்கு ஏதமும் யாது-அதற்குண்டாகிய குற்றமும் என்னை, அதன்மிறை காஞ்சிக்கு இன்மையும் - அந்தயுகத்தின் துன்பங்காஞ்சிநகரத்துக்கில்லாமையும், எமக்கு விரித்து ஓதுதிஎன உரைத்தலும் - எங்களுக்கு விரித்துச் சொல்லவேண்டுமென்றுகேட்கவும், சூதமாமுனி முனிவரர்க்குச் சொல்லினன் - சூதமுனிவர், நைமிசாரணியமுனிவரர்களுக்குக் கூறததொடங்கினர். (எ - று)

நைமிசாரணிய முனிவர்கள் கலியினியல்பு முதலானவற்றைக் கேட்கச் சூதமுனிவர் கூறத்தொடங்கினரென்க. (கoஎ)

கலிநிலைத்துறை.

சகமெலாமலைமாதொடுந்தன்னகத்தொடுக்கிப்
பகலிராவுளதிலதெனும்பகுப்பிலக்காலைப்
புகழ்படைத்ததானொருவனேவைகிமுன்போல
வகிலலோகமும்படைத்திடக்கருணைசெய்தருளி.

(இ- ள்.) சகம் எல்லாம் மலைமாதொடும் தன் அகத்து ஒடுக்கி - எல்லாவுலகங்களையும் பார்வதியாரொடு தன்னுளொடுக்கி, பகல் இரா உளது இலது எனும் பகுப்பு இல் அக்காலை-பகற்பொழுதென்று மிராப்பொழுதென்று முள்ளதிதுவென்றுமில்லாததிதுவென்று மறியப்படும் பகுதியில்லனவாயிருக்குமச்சங்காரகாலத்தில், புகழ்படைத்ததான் ஒருவனே வைகி - அழிவில்லாதவனென்று புகழ்பெற்றதானொருகடவுளே நிலைபெற்று, முன்போல அகிலலோகமும் படைத்திட கருணைசெய்தருளி - முன்போலஎல்லாவுலகங்களையுமுண்டாக்கத்திருவுளத்திலெண்ணி. (எ - று.)

தன் சத்தியினின்றுந் தோன்றிய வுலகங்களை அச்சத்தியோடு தன்னுளொடுக்கிநிற்கும் அச்சங்காரகாலத்தில் தானொருவனே நின்று புனருற்பவஞ்செய்வானெண்ணியென்க. (கoஅ)

அறிவும்விச்சையுஞ்செய்கையுமடைவுறத்தோற்றி
வெறிமலர்த்தவிசிருக்கைவேதியனைமுன்படைத்து
மறைகளீந்துபின்மாயனையும்பரையுலகை
முறையினீன்றளித்தருளினன்முக்கணெம்பெருமான்.

(இ - ள்) முக்கண் எம்பெருமான் இச்சையும் அறிவும்செய்கையும் அடைவுற தோற்றி - மூன்றுகண்ணுடைய எமதிறைவன் இச்சை ஞானம் கிரியையென்னு மூன்று சத்திகளையும் முறையே தோற்றுவித்து, வெறிமலர் தவிசு இருக்கைவேதியனை முன் படைத்து மறைகள் ஈந்து - நறுமணங்கமழுங் கமலாசனத்தையுடைய பிரமனை முன்னர்ப்படைத்து அவனுக்கு வேதங்களைக்கொடுத்து, பின்மாயனை உம்பரை உலகை முறையில் ஈன்றளித்தருளினன் - பின்னர் திருமாலையுந் தேவர்களையு மெல்லாவுலகங்களையும் முறைமையாகச் சிருட்டித்துக் காத்தருளினன். (எ - று)

சங்கார கருத்தாவாய்நின்ற இறைவன் இச்சைமுதலிய சத்திகளையும் பிரமன் முதலாயினரையுந் தோற்றுவித்தனனென்க. (கoக)

மன்னுநான்மறைவேதியர்மன்னவர்வணிகர்
பின்னுமேனாருடன்வீடறம்பெருமபொருள்காம

பெருமநீபகுத்தெங்களுக்கருளெனப்பேசித்
திருவடித்துணைபழிச்சலுஞ்சேவுடைக்கொடியோன்.

(இ - ள்.) பனிவரை தென்பால் நரகும் வானமும் நல்கிடும் கருமபூமியை - இமமலைக்குத்தென்பக்கலிலுள்ள நரகதுன்பத்தையும் சுவர்க்கபோகத்தையுங் கொடுக்குங் கருமபூமியை, யாம்பகுத்து ஆளகருத்துடையேம் - நாங்கள் நால்வரும்பகுத்து ஆளவேண்டுமென்னுங் கருத்துடையவராயிருக்கின்றோம், பெரும - எங்கள் பெருமானே! நீ எங்களுக்கு பகுத்து அருள்எனப் பேசி - தேவரீரே அடியேங்களுக்கதனைப் பாகுபடுத்தித்தருவீரென்று பிரார்த்தித்து, திருவடித்துணை பழிச்சலும்- இரண்டு திருவடிகளைத் தோத்திரஞ்செய்யவும், சே உடை கொடியோன்-விடபக்கொடியையுடைய இறைவனார். (எ - று)

இமமலைக்குத் தென்பாலுள்ள கரும பூமியை நாங்கள் பகுத்தாளவேண்டினோம் அருள் செய்வாயென்ன விறைவனார் கூறுவரென்க. (கக௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கருமநிகழ்பாரதமாம்வருடமிசைக்காலப்பேரிறைமைநும்பா
லிருவினைமாண்டளவையொன்றொழிந்தபதினொருநான்கிலக்கமேலா
லிருபதினாயிரமுறுகவிங்கிவற்றைநால்வீர்க்குமேயுமாற்றால்
வருமுறையிற்கூறுபடுத்துதவுதுமென்றருள்செய்துவகுக்கலுற்றான்.

(இ - ள்.) கருமநிகழ் பாரதமாம் வருடமிசை - இருவினையியங்கும் பரதகண்டத்தில், நும்பால் காலப்பேர் இறைமை இருவினை - உங்களிடத்தில் காலமென்கின்ற பெரிய அரசத்தன்மையிருக்கத்தந்தோம், ஆண்டளவை- அக்காலத்தினளவை, ஒன்றொழிந்த பதினொருநான்கு இலக்கமேலால் இருபதினாயிரம் உறுக - நாற்பத்துமூன்று லக்ஷத்து இருபதினாயிரம் வருடமென வழங்கக்கடவது, இங்கு இவற்றை நால்வீர்க்கும் ஏயும் ஆற்றால் - இவ்வெண்ணுடைய வருடங்களை உங்கள் நால்வருக்கும் பொருந்தும்வகையாக, வருமுறையிற் கூறுபடுத்து உதவுதும் என்று அருள் செய்து வகுக்கலுற்றான்-வருகின்ற முறைமையினால் பங்கிட்டுக்கொடுக்கின்றோமென்றருள்செய்து அதனை வகுத்துச் சொல்லத்தொடங்கினார் (எ - று)

இப்பரதகண்டத்தில் உங்களுக்குக் காலமென்கிற பேரரசத்தன்மையைத் தந்தோம். அக்காலம் நாற்பத்துமூன்று லக்ஷத்து இருபதினாயிரம். இவற்றை உங்களுக்குப் பகுத்துக் கொடுக்கின்றோமென்க. (ககச)

அருள்பயக்கும்வீடுதவுங்கான்முளையாங்கிருதயுகமூத்தோயாதி
தெருள்பயக்குமறம்பயக்குந்திரேதாநீயிளையோய்காண்செப்புங்காலைப்
பொருள்பயக்குந்துவாபரநீயிளையகிளையாயபொலிவுபெறுகாமமீன்ற
மருள்பயக்குங்கலியுகநீமருக்குமிளையோயாய்வயங்குவாயால்.

(இ - ள்.) செப்புங்காலை - நான்கு யுகங்களையும் நோக்கிக் கூறும்பொழுது கிருதயுக-கிருதயுகமேநீ, அருள்பயக்கு வீடுதவும் கான்முளையாம்-அருளையுண்டாக்கு முத்திநெறியைத் தரும் புத்திரனீயாகலான், ஆதி மூத்தோய் - ஏனைய மூவர்க்கும் மூத்தவனுவாய், திரேதாநீ-திரேதாயுகமே நீ, தெருள்பயக்கும அறம்பயக்கும இளையோய் காண் - முத்திநெறிக் கேதுவாகிய ஞானத்தை யுண்டாக்குந் தருமத்தைக் கொடுக்குந் தன்மையினால் கிருதயுகனுக் கிளையனுவாய், துவாபரநீ - துவாபரயுகமே நீ, பொ

ருளபயக்கும - அத்தருமத்திற் கேதுவாகிய பொருளைக்கொடுக்குந்தன்மையினுல்-இவர்க்கு இளையாய் - மேற்கூறிய இருவர்க்கு மிளையவனுவாய், கலியுகம் நீ - கலியுகமே நீ, பொலிவுபெறு காமம் ஈன்ற மருள் பயக்கும் - பொலிபெற்ற காமத்தினுலுண்டாகும் மயக்கத்தைக் கொடுக்குந்தன்மையினுல், மூவருக்கு மிளையோயாய் வயங்குவாய்- ஏனைய மூவர்க்குங் கடைப்பட்டவனுய் விளங்குவாய், (எ - று)

கிரேதாயுகம் முத்திக்கேதுவாயும், திரேதாயுகம் அவ்வீட்டைக்கூட்டும் அறத்திற்கேதுவாயும், துவாபரயுகம் அவ்வறத்தை வளர்க்கும் பொருளுக்கேதுவாயும் கலியுகம் அப்பொருளை யீட்டுமிடையிற் சிற்றின்பத்தில் மயக்கத்தைத் தருந்தன்மையாயுமிருத்தலி னம்முறையே மூத்தோயிளையோயென வகுத்ததென்க. (ககடு)

வேதியனேகிருதயுகம்வேல்வேந்தன்றிரேதாமெய்வணிகன்றுனே
யோது துவாபரமேனுன்கலியாகுமிம்முறையாலுமக்குவைத்த
வேதமிலிந்நாற்பத்துமூன்றிலக்கத்திருபதினுயிரமாமாண்டும்
பேதமுறமீரைந்துகூறுகப்பகுத்தந்தப்பிரிவின்மன்னே.

(இ - ள்.) கிருதயுகம் வேதியன் திரேதா வேல் வேந்தன் ஓது துவாபரம் மெய்வணிகன் ஏனேன் கலியாகும் - கிருதயுகமே நீ அந்தணனுவாய் திரேதாயுகமே நீ வேலேந்திய அரசனுவாய் சொல்லப்பட்ட துவாபரமே நீ உண்மையையுடைய வைசியனுவாய் கலியுகமே நீ சூத்திரனுவாய், இம்முறையால் உமக்குவைத்த ஏதம் இல் இந் நாற்பத்து மூன்றிலக்கத்து இருபதினுயிரம் ஆம் ஆண்டும் - இம்முறைமையினுலுங்களுல் வருக்கும் வகுத்த குற்றமில்லாத இந்நாற்பத்து மூன்று லக்ஷத்திருபதினுயிரமாகிய வருடங்களையும், ஈரைந்து கூறுக பேதமுறப்பகுத்து அப்பிரிவில் - பத்துப்பங்காக்கி அதனை வெவ்வேருகப் பங்கிட்டு அப்பங்கில். (எ - று)

யுகங்களைச் சேஷ்டகனிஷ்டமுறையாக வைத்ததே யல்லாமல் நான்கு வருணங்களாகவும் வகுத்து அவைகளுக்கு வகுத்த ஆண்டுகளையும் பங்கிட்டு அப்பங்கிலென்க. (ககசு)

கிருதமோர்நாற்கூறுமுக்கூறுதிரேதாவுங்கிளந்துகூறு
மிருகூறுதுவாபரமுமொருகூறுகலியுகமுமெய்துவீராற்
பெருவாய்மைமறையாகநாற்குலத்துமனைவியர்பாற்பெறுஞ்சேய்கட்கு
வருகூறுமிவ்வாறேநான்குமூன்றிரண்டொன்றுவழக்கமாமால்.

(இ - ள்.) கிருதம் ஓர்நாற்கூறும் திரேதா முக்கூறும் துவாபரம் கிளந்து கூறும் இருகூறும் கலியுகம் ஒருகூறும் எய்துவீர் - கிருதனே நீ நான்கு பங்கினையும் திரேதனே நீ மூன்றுபங்கினையும் துவாபரனே நீ வகுத்துச்சொல்லுமிரண்டு பங்கினையும் கலியனே நீயொருபங்கினையு மடையுங்கள், பெருவாய்மை மறையாக நாற்குலத்து மனைவியர்பால் பெறும் சேய்கட்கு-பெரிய வேதத்திலுண்மையாக விதித்த விதி முறையாக அந்தணர்முதலாகச் சொல்லப்பட்ட நான்கு குலப்பெண்களிடத்திலுண்டாகும் பிள்ளைகட்கு, வருகூறும் இவ்வாறே நான்கு மூன்று இரண்டு ஒன்று வழக்கம் ஆம் - வருகின்ற பங்குமிப்படியே நான்காகவும் மூன்றுகவு மிரண்டாகவுமொன்றுகவும் பகுத்துக்கொடுப்பது வழக்காகும். (எ - று)

வருணங்களை நான்காக வகுத்ததுபோல் ஆண்டுகளையும் வகுத்ததாம் நாற்குலத்து மனைவியர் பெறும் பிள்ளைகட்கும் நான்கு மூன்றிரண்டொன்றுக வகுப்பதே வேதவிதியாமென்க. (கக௭)

இவ்விடையேற்றக்கடவுண்முறையானேயெழிற்கிருதமு
லெவ்வமறுநாற்பாதமுப்பாதமிருபாதமொருபாதத்தா
லௌவையறநடத்திடநீர்காசினியைநடாத்திடுமின்முதன்
மூவர்க்குமௌவியமிலம்புயத்தோனிரவிமாலிவர்முறையேயிறைவரா.

(இ - ள்.) எழில் கிருத முதலீர் இவ்விடை ஏறு அறக்கடவுள் - அழகுபொருந்திய கிருதமுதலானவர்களே நமக்கூர்தியாயிருக்கின்ற இந்தவிடபமாகிய தருமதேவதை, நும்மை முறையானே எவ்வம் அறு நாற்பாதம் முப்பாதம் இருபாதம் ஒருபாதத்தால் ஔவை அறநடத்திட - உங்களுல்வரையுமுறையே குற்றமில்லாமல் நான்குபாதத்தாலும் மூன்றுபாதத்தாலு மிரண்டுபாதத்தாலு மொருபாதத்தாலுந் துன்பமில்லாமனடத்த, நீர் காசினியை நடாத்திடுமின் - நீங்களுலகத்தை நடத்துங்கள், முதல் மூவிர்க்கும் ஔவியம் இல் அம்புயத்தோன் இரவி மால் இவர் முறையே இறைவர் ஆவார்-கிரேதமுதலிய மூவர்க்கும் பொறாமையில்லாத பிரமன் சூரியன் திருமால் என்னுமிவர்கள் முறைமையாகக் கடவுளாவர். (எ - று)

யுகங்களே நம்முடைய வூர்தி தரும தேவதையாகும் உங்களை இத்தருமதேவதை நான்கு மூன்றிரண்டொன்றென்னும் பாதமாக நடத்தும் தன்மூவர்கு அதிதேவதை முறையே பிரமன் சூரியன் திருமாலாவரென்க. (கக அ)

தீமையேமிகப்படைத்தகலியிவராற்காப்பரியதிறத்தாலிந்த
நாமநெடுங்கலிநாளின்மன்பதைகள்புரப்பதற்குநாமேயுள்ளேங்
காமருசீருகங்காண்மற்றின்னுமொருமொழிகேண்மின்காதல்கூர்ந்தி
யாமினிதுமகிழ்ந்துறையுங்காஞ்சியிடைநும்மவத்தையெய்தாதாக.

(இ - ள்.) தீமையே மிகப்படைத்த கலி - பாபங்களை மிகவு முடைய கலியுகமானது, இவரால் காப்பரிய திறத்தால் - இத்தேவர்களால் காத்தற்கரிய கொடுமையுடையதாகலான், நாமநெடு இந்த கலிநாளில் - அச்சத்தை விளைவிக்கின்ற இந்தப்பெரிய கலியுகத்தில், மன்பதைகள் புரப்பதற்கு நாமேயுள்ளேம் - மக்களுயிரைப் பாதுகாத்தற்கு நாமே கடவுளாக விருக்கின்றேம், காமருசீர் யுகங்காள்-யாவராலும் விரும்புஞ் சிறப்பினையுடைய யுகங்களே, இன்னும் ஒருமொழி கேண்மின் - இன்னும் ஒருவார்த்தை சொல்லுகின்றேன் கேளுங்கள், காதல்கூர்ந்து யாம் இனிது மகிழ்ந்து உறையும் காஞ்சியிடை- ஆசைமிகுந்து யாம் இனிமையாக மகிழ்ந்து வசிக்கும் காஞ்சிநகரத்தில், நும் அவத்தை எய்தாது - உங்களுடைய அவத்தைகள்வந்து பொருந்தாது.

கலியுகமானது மிகவுங்கொடுமையுடையதாகலான் தேவரால் காத்தற்கரிது ஆகலின் இக்கலியில் உயிர்களைப் பாதுகாத்தற்கு நாமே சிவனாக விருக்கின்றேம். அன்றியும் யுகங்களே நாம் மகிழ்ந்துறையுங் காஞ்சிநகரத்தில் உங்களுடைய வேறுபாடுகள் அங்குண்டாகமாட்டாவென்க. (கககூ)

வெய்யகொடுங்கலித்தீமைசிறிதுமிவணுறல்வேண்டாவிவ்வாறென்று
மையகலநம்மாணைவழியொழுகியுய்மினெனவரங்களீந்து
கையொளிருமழுப்படையோனருள்செய்தானுதலினிக்கலிநாண்முத்தி
யெய்திடும்விழைவுடையோர்திருக்காஞ்சியிடம்பிரியாதிருத்தல்வேண்டும்.

(இ - ள்.) வெய்யகொடுங்கலித்தீமை இவண் சிறிதும் உறல்வேண்டா - கொடுமைமிகுந்த கலியுகத்தின் தீமையானது இக்காஞ்சியில் சிறிதேனும்வந்தணுகக்கூடா

ருள்பயக்கும் - அத்த ஐ அகல நம் ஆணை [illegible] உய்மின்-இவ்வனையாக [illegible] ர்க்கு இளையாய் - மேலாமல் நம்முடைய ஆ[illegible] -ழிநடந்து பிழையுங்கள் [illegible] நீ, பொலிவுபெறு றவரங்களைக்கொடுத்து, கையொளிரும் மழுப்படையோன் [illegible] கும் மயக்கத்தை பரசாயுதமோதிய இறைவர், அருள்செய்தாராதலின் - [illegible] எனைய மூவர்ஞல், இ கலிநாள்முத்திபெய்திடும் விழைவுடையோர்-இக்கலியுகத் தில் முத்தியடைதல் வேண்டுமென்னும் விருப்பமுடையோர், திருக்காஞ்சியிடம் [illegible] யாதிருத்தல்வேண்டும் - காஞ்சிநகரியில் நீங்காதிருத்தல்வேண்டும். (எ - று)

கொடுமைசிறந்த கலியுகத்தினுடைய சீமை இர்காஞ்சியில் சிறிதும் வரத் ணுகக்கூடாது இது நம்முடைய ஆணை. இவ்வாணையின்வழி நீங்கள் நடந்து பிழை யுங்கள் என்று வரந்தந்தமையாலின் இக்கலியுகத்தில் முத்தியடைய விரும்புவோர் காஞ்சி நகரத்தைப் பிரியாதிருத்தல் வேண்டுமென்க. (௧௨௭)

நந்திபிரானருள்பெற்றுச்சனற்குமரனவின்றபடி வியாதமேலோ
னிந்துவாழ்சடைப்பெருமான்றிருவடிகாண்பதற்கேதுவிதுவேயென்ன
வந்திலெனக்குரைசெய்தவரும்பொருளிங்குமக்குரைத்தேனறிவின்றூ
சிந்தையீர்தெளிமினெனசூதமுனிமுனிவரர்க்குத்தெருட்டினுன்.

(இ - ள்.) சனற்குமரன் நந்திபிரானருள்பெற்று நவின்றபடி - சனற்குமார முனிவர் நந்தியெம்பெருமானுடைய திருவருளபெற்றுச் சொல்லிய முறைப்படி, வியாதமேலோன - மேலோராகிய வியாச முனிவர், இந்துவாழ் சடைப்பெருமான் திருவடி காண்பதற்கு ஏது இதுவே என்ன - சந்திரன் வாழ்கின்ற சடை முடியுடைய இறைவரது திருவடியைக் காணுதற்கு இதுதான் ஏதுவென்று, எனக்கு உரைசெய்த அரும்பொருள்-அவ்விடத்தில் எனக்கு உபதேசித்த பொருளை, இங்கு உமக்கு உரைத் தேன் - இவ்விடத்தில் உங்களுக்கு எடுத்துச் சொன்னேன், அறிவின் ஆன்ற சிந்தை யீர் தெளிமின்என - அறிவிற்சிறந்த சிந்தையுடையவர்களே தெளியுங்களென்று, சூதமுனி முனிவரர்க்குத் தெருட்டினுன் - சூதமுனிவர் நைமிசாரணியத்திற்கூடிய வசிட்டர் முதலான முனிவர்களுக்குச் சொல்லியருளினர். (எ - று)

நந்திபெருமான் திருவருள்பெற்றுச் சனற்குமார முனிவர் வியாசமுனிவருக் கோத அம்முனிவர் இறைவன் திருவடி காண்பதற்கு ஏதுவாயுள்ளது இதுவே என்று எனக்கருள யான உங்களுக்கு அவ்வுண்மை தெளியச் சொன்னேனென்று சூதமுனி வர் வசிட்டர் முதலிய முனிவர்களுக்குத் தெளிவுபடக் கூறினரென்க. (௧௨௮)

சிவபுண்ணியப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஎ௯௯.

## முதற்காண்டம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவஞானதேசிகன் திருவடி வாழ்க